# மகாத்மா காந்தி நூல்கள்

## மூன்றும் தொகுப்பு





'' சுடுதலும் குளிரும் உயிர்க் கில்லை ;
சோர்வு வீழ்ச்சிகள் தொண்டருக் கில்லை ;
எடுமினோ, அறப் போரினை !'' என்றான்
எம்கோ மேதகம் ஏந்திய காந்தி !

—பாரதியார்

# மகாத்மா காந்தி நூல்கள்

## 3

மகாத்மா காந்தி எழுதிய சுய சரிதையாகிய 'சத்திய சோதனை', 1920-ஆம் ஆண்டிற்குப் பின் அவர் அமரத்துவம் அடைந்தது வரையில் அவர் வாழ்க்கைக் குறிப்புகள், லண்டனில் மாணவராயிருந்தபோது அவர் எழுதிய நாட் குறிப்பு, கடிதங்கள் முதலிய பல விவரங்களையும் கொண்டது இந்நூல்.


வெளியிடுவோர் :

**காந்தி நூல் வெளியீட்டுக் கழகம்**

[ தமிழ் நாடு காந்தி நினைவு நிதி ஆதரவில் ]

சர்க்கார் எஸ்டேட், மவுண்ட் ரோடு,

சென்னை-2.

# சுய சரிதை

மகாத்மா காந்தி
எழுதியது

தமிழாக்கம் :
ரா. வேங்கடராஜுலு

# பதிப்புரை

**கா**ந்தி நூல்களின் மூன்ருவது தொகுதி இப்பொழுது வெளியாகிறது. இத் தொகுதி, காந்தி அடிகள் எழுதிய 'சுய சரிதை' அல்லது 'சத்திய சோதனை'யின் மொழி பெயர்ப்பு. இப் புத்தகம் தமிழில் முன்னமே வெளியாகி யிருப்பினும், இதில் காணப்பெறும் பல புதிய அம்சங் கள் இதை முற்றிலும் புதிய வெளியீடாக்கியிருக்கின்றன. காந்திஜி தம் புத்தகத்தில் குறிப்பிட்டிருக்கும் சம்பவங் கள், நபர்கள், இடங்கள், நூல்களைப் பற்றிப் பல்வேறு புத்தகங்களிலிருந்து திரட்டப்பெற்ற விஷயங்கள் அடிக் குறிப்புகளாகவும் பின்சேர்க்கையிலும் கொடுக்கப்பட்டி ருக்கின்றன. அவர் குறிப்பிட்டிருக்கும் கடிதங்களின் முழு விவரங்களுடன், அவர் எழுதியிருக்கும் சம்பவங் களைப்பற்றி அவருடன் நெருங்கிப் பழகியவர்கள் கொடுத் திருக்கும் விவரங்களும் அங்கங்கே காணுவது அச்சம்ப வங்களைப் பற்றிப் புது வெளிச்சம் கொடுக்கின்றது.

காந்திஜி, தமது சத்திய சோதனையின் வரலாற்றை 1920–ஆம் ஆண்டுடன் நிறுத்தியிருக்கிருர். அவ்வாறு நிறுத்திவிட்டதற்குக் காரணத்தையும் இந்நூலின் கடைசி அத்தியாயத்தில் மகாத்மா கூறியிருக்கிருர். ஆனல், அவர் அதற்குப் பின் சுமார் கால் நூற்ருண்டுகளுக்கு அதிகமாகத் தம் மகத்தான சேவையை தாய்நாட்டிற்கும் உலகிற்கும் அளித்திருக்கிருர். அவற்றைப் பற்றி அறிந்து கொள்ளுவதற்கு உதவியாக இருக்கும் பொருட்டு, அவர் அமரத்துவம் அடைந்தது வரையுள்ள வரலாற்றுக் குறிப் புகள் வருட வாரியாகப் புத்தகத்திற்கு அனுபந்தமாகச் சேர்க்கப்பட்டிருப்பதை நேயர்கள் வரவேற்பார்கள் என்று நம்புகிரேம். அத்துடன் அவர் மேற்கொண்ட உண்ணுவிரதங்கள், செய்த சிறைவாசங்கள், நடத்திய சத்தியாக்கிரகங்கள் முதலியனவும் எளிதாக யாவரும் அறிந்துகொள்ளும் பொருட்டுத் தனியாகக் கொடுக்கப் பட்டிருக்கின்றன. இதைத் தவிர இப்புத்தக காலத்திற் குச் சம்பந்தப்பட்ட காந்திஜி எழுதிய லண்டன் டயரியும், அவர் தயாரித்த நேட்டால் இந்தியர் காங்கிரஸ் அறிக்கை,

விதிகள் முதலியனவும் பலரும் படித்துப் பயன்படக் கூடிய அம்சங்களாக அமைந்திருப்பது, முன் பிரசுரமாகி யிருக்கும் புத்தகத்தைவிட இப்புத்தகம் பலவிதங்களில் சிறப்பாகவும் புதிதாகவும் அமையச் செய்திருக்கிறது.

இப் புத்தகத்தையும் தொகுத்து மொழிபெயர்த்தவர் ஸ்ரீ ரா. வேங்கடராஜுலு. அவர் மிகுந்த பக்தியுடனும் விடா முயற்சியுடனும் இப் பணியை மேற்கொண்டு செய்து வருவது பாராட்ட வேண்டிய விஷயமாகும்.

இத் தொகுதியில் விசேடப் பதிப்புடன் மலிவுப் பதிப்பு ஒன்றும் எளிய விலைக்கு வெளியிட வேண்டும் என்று நினைத்ததுண்டு. அடுத்த தொகுதியிலிருந்தாவது அங்ஙனம் செய்ய இயலுமென்று நம்புகிறோம்.

முன் தொகுப்புகளைப் போல் இப் புத்தகத்தையும் தமிழ்நாடு வரவேற்று பயன் பெறப் பிரார்த்திக்கிறோம்.

காந்தி நூல் வெளியீட்டுக் கழகம்,
சென்னை-2, 14—1—1959

தி. சு. அவினாசிலிங்கம்

# பொருளடக்கம்

## மூன்றும் பாகம்

## நான்காம் பாகம்

## ஐந்தாம் பாகம்

## 1920 - ஆம் ஆண்டிலிருந்து காந்திஜியின் வாழ்க்கைக் குறிப்புகள்

# படங்களின் விளக்கம்



இந்தியா - 1917-இல்
எல்லைப்புற மாகாணம்
காஷ்மீரம்
பஞ்சாப்
டில்லி
பலுசிஸ்தானம்
ராஜபுதனம்
நேப்பாளம்
ஐக்கிய மாகாணம்
லட்சுமணபுரி
கோரக்பூர்
அலகாபாத்
சம்பாரன்
அஸ்ஸாம்
பீகார்
காசி
மத்திய இந்தியா
வங்காளம்
கல்கத்தா
பர்மா
போர்பந்தர்
பம்பாய் மாகாணம்
மத்திய மாகாணம்
பம்பாய்
ஹைதராபாத்
ராங்கூன்
சென்னை மாகாணம்
அரபிக் கடல்
வங்காள விரிகுடா
சென்னை
மைசூர்
பிரிட்டிஷ் இந்தியா
சுதேச சமஸ்தானங்கள்

# முன்னுரை

நாலேந்து ஆண்டுகளுக்குமுன்,' என் சுய சரிதையை நான் எழுதவேண்டும் என்று என் நெருங்கிய சகாக்கள் சிலர் யோசனை கூறியதன் பேரில், நானும் எழுத ஒப்புக்கொண்டேன்; எழுதவும் ஆரம்பித்தேன். ஆனால், முதல் பக்கத்தை எழுதி முடிப்பதற்குள்ளேயே பம்பாயில் கலவரம்* மூண்டுவிட்டதால் அவ் வேலை தடைப்பட்டுவிட்டது. பிறகு ஒன்றன்பின் ஒன்ருகப் பல சம்பவங்கள் நடந்து எராவ்டாவில் என் சிறை வாசத்தில் முடிந்தது.† அங்கே என்னுடன் கைதியாக இருந்த ஸ்ரீ ஜயராம்தாஸ், என்னுடைய மற்ற எல்லா வேலைகளையும் கட்டி

---

* வேல்ஸ் இளவரசர் 1921, நவம்பர், 17–ஆம் தேதி பம்பாயில் வந்திறங்கிய போது நடந்த கலவரங்களையே காந்திஜி இங்கே குறிப்பிடுகிருர். அப்பொழுது மகாத்மா பம்பாயில் இருந்தார். அன்று நடந்த ஒரு பெரிய பொதுக்கூட்டத்தில் அந்நியத் துணிகளை ஏராளமாகப் போட்டுக் கொளுத்தினர். அமைதியோடு இருக்க வேண்டியதன் அவசியத்தை மக்களுக்கு மகாத்மா வற்புறுத்திச் சொன்ஞர். ஆயினும் அன்று பம்பாயின் பல பகுதிகளில் கலவரம் மூண்டது. வேல்ஸ் இளவரசர் வருகையைப் பகிஷ்கரிக்கப் பம்பாயில் ஹர்த்தால் வெற்றிகரமாக அன்று நடந்தபோதிலும் பார்ஸி சமூகத்தினர் வரவேற்பில் கலந்து கொண்டனர். இதனுல் ஆத்திரமடைந்த கூட்டத்தினர், நகரின் பல பகுதிகளிலும் பார்ஸிகளைத் தாக்கினர். அவர்கள் அணிந்திருந்த அந்நிய நாட்டுத் துணிகளைக் கிழித்தெறிந்தனர். பல மதுபானக் கடைகளையும் சில டிராம் வண்டிகளையும் கொளுத்திவிட்டனர். ஒரு போலீஸ் ஸ்டேஷனுக்கும் மற்ருெரு கட்டடத்திற்கும் தீ வைத்துவிட்டார்கள். நான்கு போலீஸாரை அடித்துக் கொன்றுவிட்டார்கள். இச்சம்பவங்களில் பலவற்றை மகாத்மா நேரில் சென்று பார்த்தார். அவர் அடைந்த மனவேதனைக்கு அளவே இல்லை. பார்டோலியில் சத்தியாக்கிரகத்தை ஆரம்பிக்க அங்கே போக இருந்ததைக் காந்திஜி நிறுத்திவிட்டார். சட்ட மறுப்பு ஏற்பாடுகளை நிறுத்தி வைக்க மறுநாளே தன் மகன் தேவதாஸைச் சூரத்திற்கு அனுப்பினுர். பம்பாயில் கலகம் நின்றபாடில்லை. கலக வெறியருக்குத் தம் மகனையே பலி கொடுக்க நிறுத்துவதென்று முடிவு செய்து, சூரத் சென்ற தேவதாஸையும் திரும்ப அழைத்தார். நவம்பர் 19–ஆம் தேதி உண்ணுவிரதத்தை மேற்கொண்டார். இந்த உண்ணுவிரதத்திலிருந்தே சுயராஜ்யம் பெறும்வரை ஒவ்வொரு திங்கட்கிழமையும் 24 மணி நேரம் உண்ணுவிரதம் இருப்பது என்று பிரதிக்ஞை செய்துகொண்டார். பிறகு பம்பாயில் அமைதி ஏற்படவே காந்திஜி நவம்பர், 22-ஆம் தேதி தமது உண்ணுவிரதத்தை நிறுத்தினுர்.

† மகாத்மா காந்தியையும் ஸ்ரீ சங்கரலால் பாங்கரையும் 1922, மார்ச், 10–ஆம் தேதி சாபர்மதி ஆசிரமத்தில் கைதுசெய்து, சாபர்மதி சிறைக்குக் கொண்டு போயினர். 'எங் இந்தியா' பத்திரிகையில் எழுதிய நான்கு கட்டுரைகளுக்காகவே கைது செய்தனர். மார்ச், 18-ஆம் தேதி அகமதாபாத் செஷன்ஸ் நீதிபதி ஸ்ரீ சி. என். புரும்பீல்டு முன்பு வழக்கு விசாரணைக்கு வந்தது. (விசாரணையின் போது காந்திஜி கொடுத்த வாக்குமூலத்தை 'மகாத்மா காந்தி நூல்கள்' இரண்டாவது தொகுப்பில் 236–ஆம் பக்கத்தில் காண்க.) நீதிபதி மகாத்மாவுக்கு ஆறு ஆண்டுகள் வெறுங்காவல் தண்டனை விதித்தார். மார்ச், 20–ஆம் தேதி இரவு 10 மணிக்குச் சாபர்மதி சிறையிலிருந்து காந்திஜியைத் தனி ரெயிலில் கொண்டுபோய்க் கிர்க்கி ஸ்டேஷனில் இறக்கி, போலீஸ் மோட்டாரில்

வைத்துவிட்டுச் சுய சரிதையை எழுதி முடிக்கும்படி கேட்டுக் கொண்டார். நானோ சிறையில் பல நூல்களைப் படிப்பது என்று திட்டமிட்டிருந்தேன். அந்த வேலையை முடிப்பதற்கு முன்னால் நான் வேறு எதுவும் செய்வதற்கில்லை என்று அவருக்குப் பதில் சொன்னேன்.* எராவ்டாவில் என் சிறைத் தண்டனைக் காலம் முழுவதையும் அனுபவித்திருப்பேனாயின், சுய சரிதையையும் எழுதி முடித்தே இருப்பேன். ஆனால், அவ்வேலையை முடிப்பதற்கு இன்னும் ஓராண்டுக் காலம் இருந்த போதே நான் விடுதலை அடைந்துவிட்டேன்.† சுவாமி ஆனந்தர்‡ அந்த யோசனையைத் திரும்ப என்னிடம் கூறினார். தென்னாப் பிரிக்க சத்தியாக்கிரக சரித்திரத்தை§ எழுதி முடித்துவிட்டே னாகையால், சுய சரிதையை 'நவஜீவ'னுக்கு எழுதும் ஆர்வம் எனக்கு உண்டாயிற்று. தனி நூலாகப் பிரசுரிப்பதற்கென்றே அதை நான் எழுத வேண்டும் என்று சுவாமி விரும்பினார். ஆனால், அதற்கு வேண்டிய ஓய்வு நேரம் எனக்கு இல்லை. வாரத்திற்கு ஓர் அத்தியாயம் வீதமே என்னால் எழுத முடியும். வாரந்தோறும் 'நவஜீவ'னுக்கு நான் ஏதாவது எழுதியாக வேண்டும். அப்படி எழுதுவது சுய சரிதையாக ஏன் இருக்கக்

---

எராவ்டா சிறைக்குக் கொண்டு போயினர். இச்சிறை அனுபவத்தைக் குறித்து 1922 ஏப்ரல், 14–ஆம் தேதி எழுதிய நீண்ட கடிதத்தில் அவர் விவரித்திருக்கிறார். அதை இந் நூலின் 'பின் சேர்க்கைப் பகுதி'யில் காண்க.

* எராவ்டாச் சிறை வாசத்தின்போது மதம், இலக்கியம், சமூக இயற்கை சாத்திரம் ஆகியவைகளைப் பற்றிய 100 நூல்களை மகாத்மா படித்தார். முதல் தடவை யாக மகாபாரதம் முழுவதையும், ஹிந்து தருமத்தின் ஆறு வகை வேதாந்தங்களையும் குஜராத்தி மொழியில் இங்கேதான் படித்தார். பூலர் எழுதிய மனுஸ்மிருதி, மாக்ஸ் முல்லரின் உபநிஷதங்கள் ஆகியவைகளையும் படித்தார். கீதையைப்பற்றிய சங்கரர், ஞானேசுவரர், திலகர், அரவிந்தர் விளக்கங்களையும் வாசித்தார். புத்த தருமம், சீக்கிய தருமம், இஸ்லாம், கிறிஸ்தவ தருமங்கள் பற்றியும் காந்திஜி பல நூல்களைப் படித்தார். கெதே, டாகுர், பெர்னார்ட்ஷா ஆகியவர்களின் சில நூல்களையும் படித்தார்.

† மகாத்மா எராவ்டாச் சிறையிலிருந்து வந்தபோது அவருக்குத் திடீரெனக் குடல் அனுபந்த நோய் உண்டாயிற்று. 1924, ஜனவரி, 11-ஆம் தேதி அவரைச் சிறையிலிருந்து பூனா சாஸுன் ஆஸ்பத்திரிக்கு மாற்றினர். மறுநாள் இரவு 10 மணிக்கு அவருக்குச் சர்ஜன்-ஜெனரல் கர்னல் மாடாக் ஆபரேஷன் செய்தார். பிறகு பிப்ரவரி 5-ஆம் தேதி ஆஸ்பத்திரியிலிருந்தே காந்திஜியை விடுதலை செய்தனர். மகாத்மா அத்தடவை ஒரு வருடம், பத்து மாதம், இருபத்தைந்து நாட்கள் எராவ்டா சிறையில் இருந்திருக்கிறார்.

‡ சுவாமி ஆனந்தர்: மகாத்மாவின் விருப்பப்படி நவஜீவன் அச்சகத்தை நிர் வகித்து வந்தவர். அவ்வேலையிலேயே முழுவதும் ஈடுபட்டு அச்சக வேலையைக் கவனித்து வந்தார்.

'நவஜீவன்' முதலில் குஜராத்தி மாதப் பத்திரிகையாக இருந்தது. இந்துலால் யாக்னிக் முதலியவர்கள் அதை நடத்தி வந்தனர். அப்பத்திரிகையை அவர்கள் காந்திஜி யிடம் ஒப்படைக்கவே அவர் அதை வாரப் பத்திரிகை ஆக்கினார். மகாத்மாவின் நிர்வா கத்தில் முதல் 'நவஜீவன்' வெளியீடு 1919, அக்டோபர் 2-ஆம் தேதி வெளிவந்தது. மறுநாள் 'எங் இந்தியா' என்ற ஆங்கில வாரப் பத்திரிகை வெளியாயிற்று.

§ மகாத்மா எழுதிய 'தென்னாப்பிரிக்க சத்தியாக்கிரகம்' என்ற நூல், 'மகாத்மா காந்தி நூல்கள்' முதல் தொகுப்பில் அடங்கியுள்ளது.

கூடாது? இந்த யோசனைக்குச் சுவாமியும் சம்மதித்தார்; நானும் எழுத ஆரம்பித்துவிட்டேன்.

ஆனால், தெய்வ பக்தியுள்ள ஒரு நண்பருக்கு இதில் சில சந்தேகங்கள் உண்டாயின. என் மௌன விரத நாளில் அவற்றை அவர் என்னிடம் கூறினார். "இம்முயற்சியில் இறங்க நீங்கள் எப்படித் துணிந்தீர்கள்?" என்று அவர் கேட்டார். "சுய சரிதை எழுதுவது என்பது மேற்கத்திய நாட்டினருக்கே உரிய பழக்கம். கிழக்கத்திய நாடுகளில் மேற்கத்திய நாட்டு நாகரிக வயப்பட்டவர்களைத் தவிர வேறு யாருமே சுய சரிதை எழுதியிருப்பதாக எனக்குத் தெரியவில்லை. மேலும், நீங்கள் என்னதான் எழுதுவீர்கள்? உங்கள் கொள்கைகள் என்று நீங்கள் இன்று கொண்டிருப்பவைகளை நாளைக்கு நிராகரித்து விடுகிறீர்கள் என்று வைத்துக்கொள்வோம். அல்லது, இன்று நீங்கள் வைத்திருக்கும் திட்டங்களை நாளைக்கு மாற்றிக்கொள்ளு கிறீர்கள் என்றும் வைத்துக்கொள்வோம். அப்போது, நீங்கள் பேசியவை அல்லது எழுதியவைகளை ஆதாரமாகக் கொண்டு தங்கள் வாழ்க்கையை அமைத்துக்கொண் டிருப்பவர்களுக்குத் தவறான வழியைக் காட்டிவிட்டதாக ஆகிவிடாதா? சுய சரிதை போன்ற ஒன்றை, இப்போதைக்காவது எழுதாமலிருப்பது நல்ல தல்லவா?" என்று அவர் கேட்டார்.

இந்த வாதத்தில் ஓரளவு உண்மை இருக்கிறது என்பதை உணர்ந்தேன். ஆனால், உண்மையில் சுய சரிதை எழுதுவது என்பதல்ல என் நோக்கம். நான் நடத்தி வந்திருக்கும் சத்திய சோதனைகள் பலவற்றின் கதையைச் சொல்லவே விரும்பு கிறேன். என் வாழ்க்கையிலும் இந்தச் சோதனைகளைத் தவிர வேறு எதுவுமே இல்லை. ஆகையால், இக்கதை ஒரு சுய சரி தையாகவே அமையும் என்பது உண்மை. ஆனால், அதன் ஒவ்வொரு பக்கமும் என்னுடைய சோதனைகளைப்பற்றி மாத் திரமே கூறுமானால், அதைக் குறித்து நான் கவலைப்படமாட் டேன். இந்தச் சோதனைகள் அனைத்தையும் பற்றிய தொடர்ச் சியானதொரு வரலாறு வாசகர்களுக்குப் பலனளிக்காமற் போகாது என்று நம்புகிறேன்; அல்லது அந்த நம்பிக்கையுடன் என்னை நானே பாராட்டிக்கொள்ளுகிறேன். ராஜீயத் துறையில் நான் செய்திருக்கும் சோதனைகள், இந்தியாவுக்கு மாத்திர மல்ல, ஓரளவுக்கு 'நாகரிக' உலகத்திற்கும் இப்பொழுது தெரிந்தே இருக்கின்றன. என்னளவில் அவற்றை நான் முக்கிய மாகக் கருதவில்லை. அவை எனக்குத் தேடித் தந்திருக்கும் 'மகாத்மா' பட்டத்தையும் நான் மதிக்கவில்லை. அப்பட்டம் எனக்கு எப்பொழுதும் மனவேதனையையே தந்திருக்கிறது. அப்பட்டத்தினால் நான் எந்தச் சமயத்திலும் ஒரு கண நேர மாவது பரவசம் அடைந்ததாக எனக்கு நினைவு இல்லை. ஆனால், ஆன்மிகத் துறையில் நான் நடத்திய சோதனையைப் பற்றிச் சொல்லவே நிச்சயமாக விரும்புவேன். அவை

எனக்கு மாத்திரமே தெரிந்தவை. ராஜீயத் துறையில் வேலை செய்து வருவதற்கு எனக்கு இருந்துவரும் சக்தியையும் நான் அதனிடமிருந்தே பெற்றிருக்கிறேன். இந்தச் சோதனைகள் உண்மையிலேயே ஆன்மிகமானவைகளாக இருப்பின் இதில் தற்புகழ்ச்சி என்பதற்கே எந்த விதமான இடமும் இல்லை. அவை என்னுடைய அடக்கத்தையே அதிகமாக்கும். இது வரை செய்திருப்பவற்றை நினைத்துப் பார்க்கப் பார்க்க, அவற்றைக் குறித்துச் சிந்திக்கச் சிந்திக்க, என் குறைபாடு களையே நான் தெளிவாக உணருகிறேன்.

நான் விரும்புவதும், இந்த முப்பது ஆண்டுகளாக நான் பாடுபட்டு வந்திருப்பதும், ஏங்கியதும், என்னை நானே அறிய வேண்டும் என்பதற்கும், கடவுளை நேருக்கு நேராகக் காண வேண்டும் என்பதற்கும், மோட்சத்தை அடைய வேண்டும் என்பதற்குமே. இந்த லட்சியத்தை அடைய வேண்டும் என் பதற்காகவே நான் வாழ்கிறேன்; நடமாடுகின்றேன். நான் இருப்பதும் அதற்காகவேதான். நான் பேசுவன, எழுதுவன, ராஜீயத்துறையில் முயற்சி செய்வன ஆகிய யாவும் இக்குறிக் கோளைக் கொண்டவையே. ஆனால், ஒருவருக்குச் சாத்திய மாவது எல்லோருக்குமே சாத்தியமாகும் என்பதை நெடுகிலும் நம்பி வந்திருக்கிறேனாகையால், என்னுடைய சோதனைகளை ஒளிமறைவாகச் செய்யாமல் பகிரங்கமாகவே செய்து வந் திருக்கிறேன். இதனால், அவற்றின் ஆன்மிக மதிப்பு எந்த வகையிலும் குறைந்துவிட்டதாக நான் கருதவில்லை. தனக்கும், தன்னைப் படைத்த கடவுளுக்கும் மாத்திரமே தெரிந்தவையாக உள்ள சில விஷயங்கள் உண்டு. அவற்றை ஒருவர் மற்றொரு வருக்கு விண்டு சொல்லுவதென்பது சாத்தியமில்லாத காரியம். நான் சொல்லப் போகும் சோதனைகள் அப்படிப்பட்டவை அல்ல. ஆனால், அவை ஆன்மிகமானவை; அதைவிடச் சன்மார்க்க மானவை என்றே சொல்லிவிடலாம். ஏனெனில், சன்மார்க்கமே மதத்தின் சாரம்

வயது முதிர்ந்தவர்கள் மட்டுமின்றி, குழந்தைகளும் புரிந்து கொள்ளக்கூடிய மத விஷயங்கள் மாத்திரமே இக்கதையில் சேர்க்கப்படும். பாரபட்சமற்ற வகையில், அடக்க உணர்ச்சி யோடு அவற்றை நான் விவரிப்பேனாயின், இத்தகைய சோதனை களில் ஈடுபட்டிருக்கும் மற்றும் பலரும் தங்கள் முன்னேற்றத் திற்கு வேண்டிய ஆதாரங்களை இதில் காண்பார்கள். இச் சோதனைகள், குறைகளே இன்றிப் பூரணமானவை என்று நான் சொல்லிக்கொள்ளுவதாக யாரும் கருதிவிட வேண்டாம். ஒரு விஞ்ஞானி, தம் ஆராய்ச்சிகளை எவ்வளவோ கணக்காகவும் முன்யோசனையின் பேரிலும், நுட்பமாகவும் நடத்துகிறார். ஆனால், அதன் பலனைத் தாம் கண்ட முடிவுகளே முடிந்த முடிவுகள் என்று அவர் கொள்வதில்லை. தாம் அறிந்துகொள் ளாதவையும் இருக்கக்கூடும் எனக் கருதி, அவற்றையும்

தெரிந்துகொள்ளத் தயாராக இருக்கிறார். அத்தகைய விஞ் ஞானியின் நிலைதான் என் நிலையும். என்னை நானே ஆழ்ந்து சோதித்து வந்திருக்கிறேன். என்னுள்ளேயே நான் துருவித் துருவித் தேடிப் பார்க்காத இடமில்லை. என் மனநிலை ஒவ் வொன்றையும் சோதித்து அலசிப் பார்த்திருக்கிறேன். என்றா லும், நான் கண்ட முடிவுகள் குறையற்றவை, முடிவானவை என்று சொல்லிக்கொள்ளும் நிலைக்கு நான் வந்து விடவில்லை. ஒன்று மாத்திரம் சொல்லிக்கொள்ளுகிறேன். அதாவது, அந்த முடிவுகள் முற்றும் சரியானவையாகவே எனக்குத் தோன்றுகின் றன; இப்போதைக்கு முடிவானவை என்றும் தோன்றுகின்றன. ஏனெனில், அவை அவ்வாறு தோன்றாது போனால், அவற்றின் அடிப்படையில் நான் எதையும் செய்ய முடியாது. ஆனால், ஒவ் வொரு கட்டத்திலும், ஏற்றுக்கொள்ளுவது அல்லது நிராகரித்து விடுவது என்ற முறையை அனுசரித்து அதன்படி நடந்தும் வந் திருக்கிறேன். என்னுடைய செயல்கள், என் அறிவுக்கும் உள் ளத்திற்கும் ஏற்றவையாக இருக்கும் வரையில், நான் என் ஆரம்ப முடிவுகளையே கடைப்பிடித்தாக வேண்டும்.

கொள்கைகளைப்பற்றிய சித்தாந்தங்களை மட்டுமே விவாதிப் பது என்றால், நான் சுயசரிதை எழுதும் முயற்சியில் இறங்கி யிருக்க வேண்டியதே இல்லை. ஆனால், எனது நோக்கமோ, இக் கொள்கைகள் நடைமுறையில் பல வகையிலும் அனுசரிக்கப் பட்டு வந்திருப்பதன் வரலாற்றைக் கூறுவதாகும். ஆகவே, நான் எழுதப் போகும் இந்த அத்தியாயங்களுக்கு 'நான் செய்த சத்திய சோதனையின் கதை' என்று தலைப்புக் கொடுத்திருக்கிறேன். அகிம்சை, பிரம்மச்சரியம் முதலிய ஒழுக்க நெறிகளைப் பற்றிய சோதனைகளும் இவற்றில் அடங்கி யிருக்கும். இந்த ஒழுக்க நெறிகள் வேறு, சத்தியம் வேறு என்று கருதப்படுகிறது. ஆனால், சத்தியமே தலையாய தருமம், அதில் மற்றும் பல தருமங்களும் அடங்கியிருக்கின்றன என்று நான் கருதுகிறேன். இந்தச் சத்தியம் என்பது உண்மை பேசுவது மாத்திரம் அல்ல; உள்ளத்திலும் உண்மையோடு இருப்பது என்பதையும் இது குறிக்கும். அத்துடன் நமக்குத் தோன்றும் சத்தியத்தை மட்டுமின்றி, சுத்த சுயம்புவான சத்தி யமும், நித்தியத்துவமுமான கடவுளையும் அது குறிக்கும். கடவுளைப்பற்றிய விளக்கங்கள் கணக்கில் அடங்காதவை. ஏனென்றால், அவர் காட்சி தரும் ரூபங்களும் எண்ணற்றவை. இவைபற்றி எண்ணும்போது ஆச்சரியத்திலும் அச்சத்திலும் அமிழ்ந்துவிடுகிறேன்; ஒரு கணம் பிரமித்தும் போய்விடுகிறேன். ஆனால், கடவுள் என்றால் உண்மை மாத்திரமே எனக் கருதி நான் வழிபடுகிறேன். அவருடைய தரிசனம் எனக்கு இன்னும் கிட்ட வில்லை. ஆயினும், அவரைத் தேடிக் கொண்டே இருக்கிறேன். இம்முயற்சியில் வெற்றி பெறுவதற்காக எனக்கு இனியதான எதையுமே தத்தஞ் செய்துவிடத் தயாராயிருக்கிறேன். என்

உயிரையே இதற்காகத் தியாகஞ் செய்துவிட வேண்டியிருந் தாலும், அதைக் கொடுக்கவும் நான் தயாராக இருப்பேன் என்றே நம்புகிறேன். ஆனால், இந்தச் சுத்த சத்திய சொரூபியை நான் அடையும் வரையில், எனக்குத் தெரிந்ததாகவுள்ள சாதாரண சத்தியத்தையே நான் பற்றுக்கோடாகக் கொண்டாக வேண்டும். இதற்கு மத்தியில் இந்தச் சத்தியமே எனக்கு வழி காட்டும் ஒளியாகவும், பாதுகாக்கும் கேடயமாகவும், மார்புக் கவசமாகவும் இருந்தாக வேண்டும். இந்தச் சத்திய வழி, நேரானதாகவும், குறுகலானதாகவும், கத்தி முனையைப்போல் கூர்மையானதாகவும் இருந்த போதிலும், இதுவே எனக்கு மிகச் சீக்கிரத்தில் செல்லக்கூடிய. மிக எளிதான வழியாக இருந்து வந்திருக்கிறது. இவ்வழியிலிருந்து பிறழாமல் நான் கண்டிப்பாக நடந்து வந்திருப்பதால், ஹிமாலயம் போன்ற என் பெரிய தவறுகளெல்லாங்கூட எனக்கு அற்பமானவையாகத் தோன்றுகின்றன. ஏனெனில், இவ்வழியே என்னைத் துன்பங்களிலிருந்து காத்து வருகின்றது. இதில் என் உள்ளொளிக்கு ஏற்ப நான் முன்னேறிச் சென்றிருக்கிறேன். என் முற்போக்கில், சுத்த சத்தியமான கடவுளின் மங்கலான தோற்றங்களை நான் அடிக்கடி காண்கிறேன். 'மெய்ப்பொருள் அவர் ஒருவரே; மற்றவை யாவும் பொய்யே' என்ற திடநம்பிக்கை நாளுக்கு நாள் எனக்கு வளர்ந்துகொண்டும் வருகிறது. என்னுள் இந்த உறுதி எவ்விதம் வளர்ந்திருக்கிறது என்பதை விருப்பமுள்ளோர் உணரட்டும்; அவர்களால் முடிந்தால் சோதனைகளில் பங்கு கொண்டு எனது திடநம்பிக்கையிலும் பங்கு கொள்ளட்டும். எனக்குச் சாத்தியமானது ஒரு சிறு குழந்தைக்கும் சாத்தியமானதாகவே இருக்கும் என்ற மற்றொரு நம்பிக்கையும் என்னுள் வளர்ந்து வருகிறது. இவ்விதம் நான் கூறுவதற்குத் தக்க காரணங்களும் இருக்கின்றன. சத்தியத்தை அடைவதற்கான சாதனங்கள் எப்படிக் கஷ்டமானவையோ, அப்படி எளிமையானவையாகவும் இருக்கின்றன. இறுமாப்பைக் கொண்ட ஒருவனுக்கு அவை முற்றும் சாத்தியமில்லாதவையாகத் தோன்றலாம்; ஆனால், கபடமற்ற ஒரு குழந்தைக்கு அவை சாத்தியமானவை. சத்தியத்தை நாடிச் செல்பவர், தூசிக்கும் தூசியாகப் பணிவு கொள்ள வேண்டும். உலகம் தூசியைக் காலின் கீழ் வைத்து நசுக்குகிறது. ஆனால், சத்தியத்தை நாடுகிறவரோ, அத்தூசியும் தம்மை நசுக்கும் அளவுக்குத் தம்மைப் பணிவுள்ளவராக்கிக்கொள்ள வேண்டும். அப்பொழுதுதான்—அதற்கு முன் அல்ல—ஒளியைக் கணப்பொழுதாவது காணமுடியும். வசிஷ்டருக்கும் விசுவாமித்திரருக்கும் நடந்த வாக்குவாதம்* இதை மிகத் தெளிவாக்குகிறது.

* வசிஷ்ட-விசுவாமித்திர வாக்குவாதம்: ஒரு சமயம் இந்திரன் தனது சபையில் கூடியிருந்த முனிவர்களை நோக்கி, பூலோகத்தில் உண்மை தவறாத உத்தமன் ஒருவன் இருக்கிறானா என்று கேட்க, அயோத்தியில் அரிச்சந்திரன் என்ற மன்னன் ஒருவன் இருக்கிறான் என்று வசிஷ்டர் கூற, அவன் பொய்யன் என்று விசுவாமித்திரர் அடித்துச்

கிறிஸ்தவமும், இஸ்லாமுங்கூட இதை நன்கு எடுத்துக் காட்டு கின்றன.

இப்பக்கங்களில் நான் எழுதப் போவதில் ஏதாவது ஒன்று தற்பெருமையோடு கூறப்பட்டதுபோல் வாசகருக்குத் தோன்று மாயின், என் சத்தியத் தேட்டத்தில் ஏதோ கோளாறு இருக் கிறது என்றும், எனக்குத் தோன்றும் காட்சிகளும் கானல் நீரைப் போன்றவையே ஒழிய உண்மையானவை அல்ல என்றுந் தான் அவர் கொள்ள வேண்டும். என்னைப் போன்றவர்கள் நூற் றுக் கணக்கில் அழித்தாலும் சரி, சத்தியம் நிலைக்கட்டும். தவறே இழைக்கவல்ல என் போன்றவர்களின் தன்மையைக் கண்டறி வதற்காக, சத்தியத்தின் பெருமையை மயிரிழையும் குறைத்து விடாமல் இருப்போமாக.

இனி வரும் அத்தியாயங்களில் ஆங்காங்கே காணப்படும் புத்திமதிகள் அதிகார பூர்வமானவை என யாரும் கருதிவிட மாட்டார்கள் என்றே நம்புகிறேன். அப்படிக் கருதிவிடக்கூடாது என்பதே என் பிரார்த்தனையு மாகும். கூறப்பட்டிருக்கும் சோதனைகளை உதாரணங்கள் என்றே கொள்ள வேண்டும். அவற்றை அனுசரித்து ஒவ்வொருவரும், தத்தம் நோக்கப்படியும், தகுதிக்கு ஏற்றவாறும் சொந்தச் சோதனைகளை மேற்கொள்ள லாம். இந்தக் குறிப்பிட்ட அளவு வரையில் இந்த உதாரணங் கள் உண்மையில் பயனுள்ளவையாகும் என நம்புகிறேன். ஏனெ னில், சொல்லியாக வேண்டிய ஆபாசமான விஷயங்களைக்கூட நான் மறைக்கப்போவதில்லை; குறைத்துக் கூறப்போவதில்லை. என்னுடைய எல்லாக் குற்றங்களையும், தவறுகளையும் வாசக ருக்கு அறிவிப்பேன் என்றே நம்புகிறேன். என் நோக்கம் சத்தி யாக்கிரக சாத்திரத்தில் நடத்திய சோதனைகளை விவரிப்பதே யன்றி, நான் எவ்வளவு நல்லவன் என்பதைச் சொல்லுவது அன்று. என்னுடைய நன்மை தீமைகளை மதிப்பிடுவதில் சத் தியத்தைப் போல அதிகக் கண்டிப்பாக இருக்கவே நான் முயல்வேன். மற்றவர்களும் அவ்விதமே இருக்க வேண்டுமென்று விரும்புகிறேன். அந்த அளவுகோலைக் கொண்டு என்னை நானே அளவிடும்போது, சூரதாஸ்* என்னும் பக்தர் பாடியது போல நானும், “என்னைப் போல் கொடிய, வெறுக்கத்தக்க பாவி வேறு எவர் உண்டு? படைத்த பரமனையே மறந்திடும் நன்றி

---

சொல்ல, இந்த இரு முனிவர்களும் வெகு நேரம் தத்தம் கூற்றை வலியுறுத்தி வாதம் செய்தார்கள் என்றும் அரிச்சந்திரனைப் பொய்யனுக்குவதற்கு விசுவாமித்திரர் அவனைப் பல துன்பங்களுக்கு ஆளாக்கியும் இறுதியில் தோல்வியே அடைந்தார் என்றும் அரிச் சந்திர புராணத்தில் காணப்படும் கதையையே காந்திஜி இங்கே குறிப்பிடுகிருர் என்று தோன்றுகிறது.

* சூரதாஸ், வட இந்தியாவில் இருந்த அந்தகரான ஹிந்திக் கவி. இவர் பதினரும் நூற்ருண்டில் இருந்தவர். ஸ்ரீ கிருஷ்ண பகவானின் கதையைக் கூறும் இவ ருடைய காவியமான ‘சூரசாகரம்’ ஹிந்தி பேசும் மக்களிடையே அதிக முக்கியமாகப் போற்றப்பட்டு வருகிறது.

கெட்டவன் ஆனேன் நான்'" என்று கதறவேண்டும். ஏனெனில், என் வாழ்வின் ஒவ்வொரு சுவாசத்தையுமே பரிபாலிப்பவனும், என்னை ஈன்றெடுத்தவனுமான ஆண்டவனுக்கு இன்னும் வெகு தொலைவிலேயே நான் இருந்து வருவது எனக்கு இடையருத சித்திரவதையாக இருக்கிறது. என்னுள் இருக்கும் தீய குணங்களே என்னை அவனுக்குத் தொலை தூரத்தில் கொண்டு வந்து வைத்திருக்கின்றன என்பதை நான் அறிவேன். என்ருலும், அவற்றிலிருந்து என்னல் விடுபட முடியவில்லை.

முன்னுரையை இங்கே நான் முடிக்க வேண்டும். அடுத்த அத்தியாயத்திலிருந்து என் கதையைத் தொடங்குவேன்.

ஆசிரமம், சாபர்மதி,
*26*, நவம்பர், *1925.*

**மோ. க. காந்தி**

முதல் பாகம்

# 1

# பிறப்பும் தாய் தந்தையரும்

காந்தி வமிசத்தினர் வணிக (வைசிய) குலத்தைச் சேர்ந்தவர்கள். ஆதியில் மளிகை வியாபாரிகளாக இருந்திருக்கிருர்கள் எனத் தெரிகிறது.* ஆனல், என் தாத்தா காலத்திலிருந்து மூன்று தலைமுறைகளாக கத்தியவாரிலுள்ள சுதேச சமஸ்தானங்கள் பலவற்றில் முதன் மந்திரிகளாக இருந்திருக்கின்றனர்†. ஓதா காந்தி என்ற உத்தம சந்திர காந்தி, என்னுடைய பாட்டனர். தாம் கொண்ட கொள்கையில் மிக்க உறுதியுடையவராக அவர் இருந்திருக்க வேண்டும். அவர் போர்பந்தரில் திவானக இருந்தார். ராஜாங்கச் சூழ்ச்சிகளினல் அவர் போர்பந்தரை‡ விட்டுப் போய் ஜூனகட்டில் அடைக்கலம் புக நேர்ந்தது. அங்கே அவர் நவாபுக்கு இடது கையினல் சலாம் செய்தார். மரியாதைக் குறைவான இச்செய்கையைப் பார்த்துக்கொண்டிருந்த ஒருவர், அப்படிச் செய்ததற்குக் காரணம் கேட்டதற்கு, “என் வலக் கரம் முன்பே போர்பந்தருக்கு அர்ப்பணம் செய்யப்பட்டுவிட்டது” என்ருர் உத்தம சந்திர காந்தி.

---

* மகாத்மா காந்தி வணிக சமூகத்தில் மோத் வணிகர் வகுப்பில் பிறந்தவர். இவர்கள் பலசரக்கு வியாபாரிகள். ‘காந்தி’ என்பதற்குப் பலசரக்கு விற்பவர் என்பது பொருள்.

† காந்திஜியின் மூதாதைகளைப் பற்றிய வரலாற்று விவரங்களை ஸ்ரீ பிரபுதாஸ் காந்தி, தாம் எழுதியிருக்கும் ‘காந்திஜியுடன் என் குழந்தைப் பருவம்’ என்ற நூலில் கொடுத்திருக்கிருர். அப்பகுதி, இத்தொகுப்பின் கடைசியிலுள்ள பின்சேர்க்கைப் பகுதியில் ‘1. காந்திஜியின் குடும்ப வரலாறு’ என்ற தலைப்பில் கொடுக்கப்பட்டிருக்கிறது. அவர்களுடைய உறுதியைக் காட்டும் சில முக்கியமான சம்பவங்களை அந்த வரலாற்றில் காணலாம்.

‡ அரைச் சந்திர வட்டத்திலிருக்கும் சௌராஷ்டிரத்தின் கடற்கரையில் பல துறைமுகங்கள் உண்டு. காந்திஜி பிறந்த போர்பந்தர் அவற்றில் பெரிய துறைமுகம். பிரிட்டிஷாரும், போர்ச்சுகீசியரும் வருவதற்கு வெகு காலத்திற்கு முன்னலிருந்தே போர்பந்தருக்கும், ஈரான், அரேபியா, ஆப்பிரிக்கா இவற்றுக்கும் இடையே வர்த்தகத் தொடர்பு இருந்திருக்கிறது. போர்பந்தர் இன்று வளர்ந்து பெரிய பட்டணமாகி வருகிறது. இப்பொழுது அதில் சிமெண்டுத் தொழிற்சாலை, தீக்குச்சித் தொழிற்சாலை முதலியவைகளும் இருக்கின்றன. அரபிக் கடலின் அலைகள் வீசிக்கொண்டிருக்கும் கடலோரத்தில் நெடுக ஒரு நல்ல சாலை உண்டு; அதற்கு ஒரு பக்கத்தில் போர்பந்தர் பட்டணம். கடற்கரையிலிருந்து கால் மைல் தூரத்தில் மகாத்மா பிறந்த வீடு இருக்கிறது. அதை 1777–ஆம் ஆண்டில் காந்திஜியின் கொள்ளுப் பாட்டனரான ஸ்ரீ ஹரி ஜீவன் காந்தி விலைக்கு வாங்கினர். கையினல் செய்த காகிதத்தில் எழுதப்பட்ட அந்தக் கிரய சாசனம் இன்னும் இருக்கிறது. அது தேவநாகரி எழுத்தில் குஜராத்தி மொழியில் எழுதப்பட்டது.

ஓதா காந்திக்கு மனைவி இறந்துவிடவே இரண்டாம் தாரம் மணந்துகொண்டார். மூத்த மனைவிக்கு நான்கு குழந்தைகள்; இரண்டாம் மனைவிக்கு இரு பிள்ளைகள். ஓதா காந்தியின் இப்பிள்ளைகளெல்லாம் ஒரே தாய் வயிற்றுப் பிள்ளைகளல்ல என்று என் குழந்தைப் பிராயத்தில் நான் உணர்ந்ததுமில்லை; அறிந்ததுமில்லை. இந்த ஆறு சகோதரர்களில் ஐந்தாமவர் கரம்சந்திர காந்தி என்ற கபா காந்தி; ஆறும் சகோதரர் துளசிதாஸ் காந்தி. இவ்விரு சகோதரர்களும் ஒருவர்பின் மற்றொருவராகப் போர்பந்தரில் பிரதம மந்திரிகளாக இருந்தனர். கபா காந்தியே என் தந்தை* ராஜஸ்தானிக மன்றத்தில் இவர் ஓர் உறுப்பினர். அந்த மன்றம் இப்பொழுது இல்லை. ஆனால், அந்தக் காலத்தில் சமஸ்தானாதிபதிகளுக்கும் அவர்களுடைய இனத்தினருக்குமிடையே ஏற்படும் தகராறுகளைத் தீர்த்துவைப்பதில் இந்த மன்றம் அதிகச் செல்வாக்குள்ள ஸ்தாபனமாக விளங்கியது. என் தந்தை, ராஜ்கோட்டில் கொஞ்ச காலமும் பிறகு வாங்கானேரிலும் பிரதம மந்திரியாக இருந்தார். இறக்கும்போது ராஜ்கோட் சமஸ்தானத்திலிருந்து உபகாரச் சம்பளம் பெற்று வந்தார்.

ஒவ்வொரு தரமும் மனைவி இறக்க, கபா காந்தி நான்கு தாரங்களை மணந்தார்.† அவருடைய முதல் இரண்டு மனைவிகளுக்கும் இரு பெண் குழந்தைகள்.‡ அவருடைய

---

* காந்திஜியின் தந்தை கழுத்தில் தங்கச் சங்கிலி அணிந்திருப்பாராம். அவருக்குப் போர்பந்தரில் ஒரு வீடும், ராஜ்கோட்டில் மற்றொரு வீடும், குதியானுவில் இன்னும் ஒரு வீடும் இருந்தன. ஆனால், அவர் நோயுற்றிருந்த கடைசி மூன்று ஆண்டுகளும் ராஜ்கோட் மன்னர் அளித்த பென்ஷன் தொகையைக் கொண்டே வாழ்ந்து வந்தார்.

† தம் தந்தை கபா காந்தி நான்கு மனைவியரை மணந்ததாகக் காந்திஜி கூறுகிறார். இதைக் குறித்து ஸ்ரீ பிரபுதாஸ் காந்தி எழுதியிருப்பதாவது: "இதைப் பற்றிக் குடும்பத்தில் முதியவரான ஒருவரை விசாரித்ததில், கபா காந்தி காலத்தில் தாரம் இழந்தவராக நீண்ட காலம் இருந்துவிட முடியாது என்று கூறுகிறார். தாரம் இழந்த பிறகு மறுமணம் செய்து கொள்ளாமல் இருப்பதென்பது அப்பொழுது அசாத்தியமாகும். கபா காந்தியின் முதல் மணம், அவருக்கு 14 வயதாக இருந்தபோது நடந்தது எனத் தெரிகிறது. 25 வயதில் திவானாக இருந்தபோது இரண்டாம் தாரத்தை மணந்தார். அவருக்கு நடந்த மூன்றும் விவாகத்தைப்பற்றிப் போர்பந்தரில் குடும்பத்தில் பெரியவர்களாக இருப்பவர்களுக்குத் தெரியவில்லை. இரண்டாம் மணத்திற்குப் பிறகு புத்லி பாயின் மணத்தையே அவர்கள் கூறுகிறார்கள். காந்திஜியோ, நான்கு விவாகங்கள் என்கிறார். இது ஒரு முரண்பாடு. கணக்கிட்டுப் பார்த்தால் புத்லி பாயைக் கபா காந்தி மணந்தபோது அவருக்கு 37 அல்லது 38 வயது இருக்கும். அப்பொழுது புத்லி பாய்க்கு 15 வயது இருக்கலாம். அநேகமாக அவர் 1845-இல் பிறந்திருக்கக்கூடும். அவருக்கு 1857-இல் மணமாயிற்று என்று ஒரு முதியவர் கூறுகிறார். இதை ஒப்புக்கொள்ளுவதானால், இந்த மணத்தின் போது கபா காந்திக்கு 34 அல்லது 35 வயதே இருக்க வேண்டும்."

‡ காந்திஜியின் தந்தைக்கு முதல் இரு மணங்களில் பிறந்த பெண்கள், முலி பென், பங்குன்வார் பென் ஆகிய இருவர். பங்குன்வார் பென்னின் கணவர் தாம்ஜி மேதா, கபா காந்தியின் செல்வாக்கினால் போர்பந்தர் சமஸ்தானத்தில் நல்ல உத்தியோகத்தில் இருந்தார். முலி பென்னுக்கு ஆனந்தபென் என்ற ஒரு குமாரி உண்டு.



காந்திஜியின் தந்தை கரம்சந்திர உத்தம சந்திர காந்தி.
இப்படத்தில் கீழே காந்திஜியே தம் கையால், ''அவர் திருவடியில்
அவர் மகன்—மோகனதாஸ்'' என்று எழுதியிருக்கிருர்.

கடைசி மனைவியான புத்லி பாய், ஒரு பெண்ணையும் மூன்று ஆண் குழந்தைகளையும் பெற்றெடுத்தார்.* நானே அதில் கடைசிப் பையன்.

என் தந்தையார் தம் வம்சத்தாரிடம் அதிகப் பற்றுடையவர்; சத்திய சீலர்; தீரமானவர்; தயாளமுள்ளவர். ஆனால், கொஞ்சம் முன்கோபி. அவர் ஓரளவுக்குச் சிற்றின்ப உணர்ச்சி மிகுந்தவராகவும் இருக்கக் கூடும். ஏனெனில், தமக்கு நாற்பது வயதுக்கு மேலான பிறகே அவர் நான்காம் தாரத்தை மணந்துகொண் டிருக்கிறார். ஆனால், எதனாலும் அவரை நெறி தவறிவிடச் செய்துவிட முடியாது. தமது குடும்ப விஷயத்தில் மட்டுமன்றி வெளிக் காரியங்களிலும் பாரபட்சமின்றி நடந்துகொள்ளுவதில் கண்டிப்பானவர் என்று புகழ் பெற்றவர். சமஸ்தானத்தினிடம் அவருக்கு இருந்த அளவுகடந்த விசுவாசம் பிரபலமானது. தம் சமஸ்தானாதிபதியான ராஜ்கோட் தாகூர் சாஹிபை ஒரு சமயம் உதவி ராஜீய ஏஜெண்டு அவமதித்துப் பேசிவிடவே, அதைக் கபா காந்தி ஆட்சேபித்துக் கண்டித்தார். உடனே ஏஜெண்டுக்குக் கோபம் வந்துவிட்டது. மன்னிப்புக் கேட்டுக்கொள்ளும்படி கபா காந்தியிடம் கேட்டார். அப்படி மன்னிப்புக் கேட்க மறுத்துவிடவே அவரைச் சில மணி நேரம் காவலில் வைத்துவிட்டனர். என்றாலும், மன்னிப்புக் கேட்பதில்லை என்று கபா காந்தி உறுதியுடன் இருப்பதை ஏஜெண்டு கண்டதும் அவரை விடுதலை செய்ய உத்தரவிட்டார்.

பணம் திரட்ட வேண்டும் என்ற ஆசை என் தந்தைக்கு என்றுமே இருந்ததில்லை. மிகக் கொஞ்சமான சொத்தையே எங்களுக்கு அவர் வைத்துவிட்டுப் போனார்.

அனுபவத்தைத் தவிர அவருக்குப் படிப்பு ஒன்றும் இல்லை. அதிகப்பட்சம் குஜராத்தி ஐந்தாம் வகுப்பு வரையில் படித்

---

இம்மகனின் குமாரரே பம்பாயில் பிரபல ராஜீய ஊழியரான ஸ்ரீ மதுரதாஸ் திரிகம்ஜி. இவர் ஒரு சமயம் பம்பாய்க் கார்ப்பரேஷன் மேயராகவும் இருந்தார். ஸ்ரீ மகாதேவ் தேசாய்க்கு முன்னாலேயே இவர் காந்திஜி எழுதியவைகளையெல்லாம் திரட்டி வந்தார். காந்திஜியைக் குறித்துக் குஜராத்தியில் மூன்று நூல்களை இவர் எழுதியிருக்கிறார். 1951-இல் காலமானார்.

* புத்லி பாய்க்கு இரண்டாவது குழந்தையாக 1863-இல் பிறந்த பெண் ராலியா பென். காந்திஜியின் இந்த மூத்த சகோதரி ராஜ்கோட்டில் கபா காந்தியின் பழைய வீட்டிலேயே வசித்து வந்து 1960-இல் காலமானார். இவர் காந்திஜிக்கு 7 ஆண்டுகள் மூத்தவர். இவருக்கு வீட்டில் 'கோகி' என்பது செல்லப் பெயர். தமது மிகுந்த வயோதிகப் பருவத்திலும், தம் வீட்டுக் காரியங்களை இவரே கவனித்து வந்தார். மிக்க வைதிக மனப் போக்குள்ளவர். ஹரிஜனங்களுடன் சேர்ந்து வாழ்வதா என்ற ஆட்சேபத்தினாலேயே இவர் காந்திஜியின் சாபர்மதி ஆசிரமத்தில் தங்கவில்லை. இவர் சாபர்மதி ஆசிரமத்திற்கு மும்முறை சென்றிருக்கிறார். ஒரு ஹரிஜனப் பெண்ணைக் காந்திஜி தம் பெண்ணாக ஏற்றுக்கொண்டுவிட்டதால் இவர் அங்கே தங்க மறுத்துவிட்டார். தோற்றம், தொனி, பேச்சு முதலியவைகளிலெல்லாம் இவர் காந்திஜியைப் போன்றே இருப்பார்.

திருந்தார் என்றே சொல்லலாம். சரித்திரம், பூகோள சாத்திரம் ஆகியவைபற்றி அவருக்கு எதுவுமே தெரியாது. ஆனால், நடைமுறைக் காரியங்களில் அவருக்கு இருந்த சிறந்த அநுபவம், அதிகச் சிக்கலான பிரச்னைகளைத் தீர்ப்பதிலும், நூற்றுக்கணக்கானவர்களை வைத்து நிர்வகிப்பதிலும் அவருக்குத் திறமையை அளித்தது. சமயத் துறையிலும் அவருக்கு இருந்த பயிற்சி மிகக் கொஞ்சம். ஆனால், அடிக்கடி கோயில்களுக்குப் போவதாலும், சமயப் பிரசங்கங்களைக் கேட்பதாலும் அநேக ஹிந்துக்களுக்குச் சாதாரணமாக என்ன சமய ஞானம் உண்டாகுமோ, அது அவருக்கும் இருந்தது. குடும்பத்தின் நண்பரான படித்த பிராமணர் ஒருவரின் தூண்டுதலின் பேரில் அவர் தமது கடைசிக் காலத்தில் கீதையைப் படிக்க ஆரம்பித்தார். தினந்தோறும் பூஜை செய்யும்போது கீதையிலிருந்து சில சுலோகங்களை அவர் வாய்விட்டுப் பாராயணம் செய்வதுண்டு.

என் தாயாரைப்பற்றி நான் நினைக்கும்போது முக்கியமாக அவருடைய தவ ஒழுக்கமே என் நினைவுக்கு வருகிறது.* அவர் மிகுந்த மதப்பற்றுக் கொண்டவர். தாம் செய்யவேண்டிய அன்றாட பூஜையை முடிக்காமல் அவர் சாப்பிடமாட்டார். அவருடைய நித்தியக் கடமைகளில் ஒன்று, விஷ்ணு கோயிலுக்குப் போய்த் தரிசித்துவிட்டு வருவது. ஒரு தடவையேனும் சாதுர்மாச விரதத்தை† அனுசரிக்க அவர் தவறியதாக எனக்கு ஞாபகம் இல்லை. அவர் கடுமையான விரதங்களையெல்லாம் மேற்கொள்ளுவார். அவற்றை நிறைவேற்றியும் தீரு

---

* எராவ்டாச் சிறையில் 1932-இல் மகாத்மாவுடன் மகாதேவ தேசாய் இருந்தபோது மகாத்மாவின் சுய சரிதையின் மாணவர் பதிப்பு அச்சு ஏடுகளைப் பிழை திருத்திக் கொண்டிருந்தார். அப்பொழுது தேசாய், "உங்கள் தாயாரின் கடுமையான விரதங்களைப் பற்றிக் கூறும்போது தவ ஒழுக்கம் என்ற சொல்லை உபயோகித்திருக்கிறீர்கள். 'கடும் விரதங்கள்' என்ற சொல்லே அதிகப் பொருத்தமாக இருக்குமல்லவா?" என்று கேட்டதற்கு மகாத்மா பின் வருமாறு பதில் கூறினார்: "அப்படி அல்ல; தவ ஒழுக்கம் என்ற சொல்லை வேண்டுமென்றுதான் நான் உபயோகித்திருக்கிறேன். விரதம் என்பது வெளித் துறவு, கஷ்டங்களைச் சகிப்பது என்றாகும். சில சமயங்களில் இது வேஷமாகவும் இருக்கலாம். ஆனால், தவ ஒழுக்கம், ஆன்மாவின் உள் தன்மை. என் தாயாரின் உள் வாழ்வின் எதிரொலியே அவருடைய விரதங்கள். என்னிடம் ஏதாவது தூய்மையை நீங்கள் கண்டீர்களாயின், அது என் தாயாரிடமிருந்து எனக்குக் கிடைத்ததேயன்றி என் தந்தையிடமிருந்து வந்ததல்ல. தாயார், இளம் பிராயத்தில், நாற்பதாவது வயதிலேயே இறந்துவிட்டார். வாலிபத்தில் அவருடைய குணங்களைக் கவனித்து வந்திருக்கிறேன். வீண் ஆடம்பரங்களில் பிரியத்தையோ, அழகுபடுத்திக் கொள்ளுவதில் ஆசையையோ, அல்லது வாழ்க்கை இன்பங்களில் இச்சையையோ அவரிடம் நான் கண்டதே இல்லை. அவரைக் குறித்து என் மனத்தில் பதிந்து போயிருக்கும் ஒரே நினைவு அவருடைய தவ ஒழுக்கமே"—'மகாதேவ தேசாயின் தினக் குறிப்பு' என்ற நூலிலிருந்து.

† சாதுர்மாச என்பது நான்கு மாதங்கள் எனப் பொருள்படும். மாரிக்காலமான அம்மாதங்களில் ஒரு வேளை மாத்திரம் சாப்பிட்டும், நாள் முழுதும் சாப்பிடாமலும் விரதம் அனுசரிப்பதையே சாதுர்மாச விரதம் என்பார்கள்.

வார். நோயுற்றாலும் விரதத்தை மாத்திரம் விட்டுவிட மாட்டார். சாந்திராயண விரதமிருந்தபோது* அவர் நோயுற்றிருந்தது எனக்கு நினைவிருக்கிறது. ஆனால், விரதத்தை விடாமல் அவர் அனுஷ்டித்து முடித்தார். தொடர்ந்து இரண்டு மூன்று உபவாச விரதங்கள் இருப்பதென்பதும் அவருக்குப் பிரமாதம் அல்ல. சாதுர்மாச காலத்தில் ஒரே வேளை ஆகாரத்தோடு இருப்பது அவருக்குப் பழக்கம். அது போதாதென்று ஒரு சாதுர்மாசத்தின்போது ஒன்றுவிட்டு ஒரு நாள் உபவாசம் இருந்துவந்தார். மற்றொரு சாதுர்மாச விரதத்தின்போது சூரிய தரிசனம் செய்யாமல் சாப்பிடுவதில்லை என்று விரதம் கொண்டிருந்தார். அந்த நாட்களில் குழந்தைகளாகிய நாங்கள் வெளியில் போய் நின்றுகொண்டு, சூரியன் தெரிந்ததும் தாயாரிடம் போய்ச் சொல்லுவதற்காக ஆகாயத்தைப் பார்த்தபடியே இருப்போம். கடுமையான மழைக் காலத்தில் அடிக்கடி சூரிய பகவான் தரிசனமளிக்கக் கருணை கொள்ளுவதில்லை என்பது எல்லோருக்கும் தெரிந்ததே. சில நாட்களில் திடீரென்று சூரியன் தோன்றுவான்; தாயாருக்கு இதைத் தெரிவிப்பதற்காக ஓடுவோம். தாமே தரிசிப்பதற்காக அவர் வெளியே ஓடி வந்து பார்ப்பார். ஆனால், சூரியன் அதற்குள் மறைந்து, அன்று அவர் சாப்பிட முடியாதபடி செய்துவிடுவான். ''அதைப்பற்றிப் பரவாயில்லை'' என்று மகிழ்ச்சியோடுதான் தாயார் கூறுவார். ''நான் இன்று சாப்பிடுவதைப் பகவான் விரும்பவில்லை'' என்பார். பின்னர் வீட்டுக்குள் போய்த் தம் அலுவல்களைக் கவனித்துக் கொண்டிருப்பார்.

என் தாயாருக்கு அனுபவ ஞானம் அதிகமாக உண்டு. சமஸ்தானத்தைப் பற்றிய விவகாரங்களெல்லாம் அவருக்கு நன்றாகத் தெரியும். அவருடைய புத்தி கூர்மைக்காக ராஜ குடும்பத்தைச் சேர்ந்த பெண்கள் அவரிடம் அதிக மதிப்பு வைத்திருந்தார்கள். நான் குழந்தை என்ற சலுகையை வைத்துக்கொண்டு அடிக்கடி என் தாயாருடன் அரண்மனைக்குப் போயிருக்கிறேன். தாகூர் சாஹிபின் விதந்துவான தாயாருடன் என் தாயார் உற்சாகத்தோடு விவாதித்ததெல்லாம் எனக்கு இன்னும் நினைவிருக்கிறது.

இந்தப் பெற்றோருக்குச் சுதாமாபுரி என்று கூறப்படும் போர்பந்தரில் 1869, அக்டோபர் 2-ஆம் தேதி நான் பிறந்தேன்.† குழந்தைப் பருவத்தில் போர்பந்தரிலேயே இருந்

---

* சாந்திராயண விரதம் என்பது சந்திரனின் வளர்பிறையையும் தேய்பிறையையும் ஒட்டி அனுசரிக்கப்படும் ஒரு விரதம். வளர்பிறைக் காலத்தில், உட்கொள்ளும் உணவின் அளவைக் கொஞ்சங் கொஞ்சமாக அதிகரித்துக் கொள்ளுவதும், தேய்பிறைக் காலங்களில் சந்திரன் தேய்வதற்கு ஏற்றாற்போல உணவின் அளவைக் குறைத்துக் கொண்டே போவதும் இந்த விரதத்திலே முக்கியமாகும்.

† மகாத்மா, போர்பந்தரில் மூன்று மாடியுள்ள தம் குடும்ப வீட்டில் வலது பக்கத்துக் கோடியிலுள்ள ஓர் அறையில் பிறந்தார். அந்த அறை 11 அடி அகலமும் 19½ அடி நீளமும், 10 அடி உயரமும் உள்ளது.

தேன். அங்கே என்னைப் பள்ளிக்கூடத்தில் வைத்தது எனக்கு நினைவிருக்கிறது.* கொஞ்சம் சிரமத்தின் பேரில்தான் பெருக்கல் வாய்ப்பாட்டை நெட்டுருப் போட்டேன். மற்றச் சிறுவர்களுடன் சேர்ந்துகொண்டு எங்கள் உபாத்தியாயரை ஏளனஞ் செய்து திட்டக் கற்றுக்கொண்டேன் என்பதைத் தவிர அந்த நாட்களைக் குறித்து வேறு எதுவுமே எனக்கு நினைவில்லை.† இதிலிருந்து அப்பொழுது நான் மந்தபுத்தியுள்ளவனாக இருந்தேன் என்றும், எனக்கு ஞாபக சக்தி போதாமல் இருந்தது என்றும் யூகிக்க முடிகிறது.

---

மகாத்மா பிறந்த ஆண்டில் நடந்த முக்கியமான சம்பவங்களில் சில: சூயஸ் கால்வாய் அந்த ஆண்டிலேயே கப்பல் போக்குவரத்திற்குத் திறக்கப்பட்டது. மின்சார விளக்கு முதலிய அநேக புதுமைகளைக் கண்டுபிடித்தவரான தாமஸ் ஆல்வா எடிஸன் அந்த ஆண்டிலேயே தாம் முதல் முதல் கண்டுபிடித்ததை உரிமைப்படுத்திக் கொண்டார். நெப்போலியனின் நூற்றாண்டு ஜனன தினத்தைப் பிரான்ஸ் கொண்டாடியது. காரல் மார்க்ஸ் தாம் எழுதி முடித்த 'காபிடல்' என்ற நூலை அப்பொழுதுதான் வெளியிட்டார்.

காந்திஜி பிறந்தபோது கபா காந்திக்கு வயது 47. புத்லி பாய்க்கு 25 வயதுகூட ஆகவில்லை. காந்திஜி இங்கிலாந்துக்குச் சென்ற போது அவருக்கு வயது 44. பிறகு 47-ஆம் வயதில் இறந்துவிட்டார்.

* காந்திஜி குறிப்பிடும் பாடசாலை, அவர் வீட்டிலிருந்து மிகக் கொஞ்ச தூரத்தில் இருந்தது. பழைய நாட்டுப்புற வாத்தியார் ஒருவர் அங்கே குழந்தைகளுக்கு எழுத்துக்களை எழுதச் சொல்லிக் கொடுத்து வந்தார். தமிழ்நாட்டுப் பழைய திண்ணைப் பள்ளிக்கூடங்களில் மணலைப் பரப்பிக் குழந்தைகளை அதில் எழுதும்படி செய்வது வழக்கம். குஜராத்தில் மணலுக்குப் பதில் தூசைப் பரப்பி அதில் எழுதச் செய்வதுண்டு. அதனால் அங்கே அப்பள்ளிக்கூடங்களுக்கு 'தூலிசாலா' (தூசுப்பள்ளி) என்று பெயர்.

† காந்திஜியின் குழந்தைப் பருவத்தைக் குறித்து அவருடைய அக்காள் கூறிய பழைய நினைவுகளைத் தொகுத்து ஸ்ரீ பிரபுதாஸ் காந்தி வருமாறு கூறுகிறார்: "குழந்தையாக இருந்தபோது 'மோனியா' என்பது காந்தியின் செல்லப் பெயர். அவன் எப்பொழுதும் குதூகலத்துடன் இருக்கும் குழந்தை. விளையாட அடிக்கடி வீட்டை விட்டு ஓடிவிடுவான். ரம்பா, எப்பொழுதும் உஷாராக இருக்கவேண்டியிருந்தது. ஒரு நாள் சில சிறு பெண்களுடன் நகருக்கு வெளியில் தனியே இருக்கும் கோயிலுக்குப் போய்விட்டான். அக் குழந்தைகளுடன் இவனும் போய்விட்டதை யாரும் பார்க்கவில்லை. எங்கும் தேடினார்கள். அப் பெண்களில் ஒருத்தி மோனியாவை வீட்டுக்கு அழைத்துக்கொண்டு வரும் வரையில் எல்லோருக்கும் பெருந் திகில் ஆகிவிட்டது. அதற்குப் பிறகு ரம்பா எப்பொழுதும் அவனைத் தன் கண் முன்னாலேயே வைத்திருப்பது வழக்கம்.

"மோனியாவுக்கு வீட்டுக்குள் இருப்பதே பிடிப்பதில்லை. சாப்பாட்டுக்கு வருவான்; பிறகு பக்கத்திலிருக்கும் கோயில் மதிலுக்குள் விளையாட ஓடிவிடுவான். மரத்தில் ஏறியும், மற்ற வகையிலும் விளையாடிக்கொண்டிருப்பான். தன் சகோதரரில் யாராவது மரத்திலிருந்து தள்ளிவிட்டாலோ, அடித்தாலோ தாயிடம் போய் முறையிடுவான். அடித்தவனை ஏன் திருப்பி அடிக்கவில்லை என்று தாயார் கேட்பார். 'பிறரை அடிக்கும்படி நீங்கள் எனக்குச் சொல்லித் தருவதா? என் அண்ணனை நான் ஏன் அடிக்கவேண்டும்? யாரைத்தான் நான் ஏன் அடிக்க வேண்டும்?' என்று பதில் சொல்லுவான் காந்தி.

# 2
# குழந்தைப் பருவம்

எனக்குச் சுமார் ஏழு வயது இருக்கலாம். ராஜஸ்தானிக மன்றத்தில் உறுப்பினராவதற்காக என் தந்தையார், போர்பந் தரிலிருந்து ராஜ்கோட்டுக்குச் சென்ருர். அங்கே என்னை ஓர் ஆரம்பப் பாடசாலையில் சேர்த்தார்கள். அந்த நாட்களில் எனக் குப் பாடம் சொல்லிக் கொடுத்த உபாத்தியாயர்களின் பெயர் கள் உட்பட எல்லா விவரங்களுமே எனக்கு நன்ருக ஞாபகம் இருக்கின்றன. போர்பந்தரில் இருந்ததைப் போன்றே இங்கும் என்னுடைய படிப்பைப்பற்றி முக்கியமாகக் குறிப்பிடக்கூடியது எதுவுமில்லை. சாதாரண நடுத்தர மாணவனுகவே நான் இருந் திருப்பேன். இந்தப் பள்ளிக்கூடத்திலிருந்து நகரை அடுத் திருந்த வேறு ஒரு பள்ளிக்கு என்னை அனுப்பினர்கள். பன்னி ரண்டு வயதாகிவிடவே பிறகு உயர்தரப் பள்ளியில் சேர்த்தனர். இந்தக் குறுகிய காலத்தில் என் ஆசிரியர்களிடத்திலோ, என் பள்ளித் தோழர்களிடத்திலோ ஒரு பொய்யேனும் எப்பொழுதும் நான் சொன்னதாக எனக்கு ஞாபகமில்லை. எனக்குக் கூச்சம் அதிகம்; யாருடனும் சேரமாட்டேன். என் புத்தகங்களும் என் பாடங்களுமே எனக்கு உற்ற தோழர்கள். சரியான நேரத்தில் பள்ளிக்கூடத்துக்குப் போய்விடுவது, பள்ளிக்கூடம் விட்டதும் வீட்டுக்கு ஓடி வந்துவிடுவது—இதுவே எனது அன்ருடப் பழக்கம். யாருடனும் பேசவே பிடிக்காதாகையால் உண்மை யில் ஓட்டமாகத்தான் வீடு வந்து சேருவேன்.* இல்லாவிட்டால் வழியில் யாராவது என்னைக் கேலி செய்துவிடுவார்களோ என்று பயம்.

---

சகோதரர்கள் ஒருவருக்கொருவர் அடித்துக்கொள்ளுவதில் ஒரு தவறும் இல்லை என்று தாயார் சொன்னல், அதற்கு, 'அண்ணன் மூத்தவர்; ஆகையால், அவர் என்னை அடிக்கலாம்; நான் திருப்பி அடிக்கக்கூடாது. நான் அடிக்கக் கூடாது என்று கண்டித்துச் சொல்லுவதற்குப் பதிலாகத் திருப்பி அடிக்கும் படி எனக்குச் சொல்லுகிறீர்களே! திருப்பி அடிக்கும்படி அடிபட்டவனிடம் கூறுவதற்குப் பதிலாக, அடிக்க வேண்டாம் என்று அடித்தவனிடம் நீங்கள் சொல்லக்கூடாதா?' என்பான். இவ்வளவு புத்திசாலித்தனமான வாதங்க ளெல்லாம் தம் மகனுக்கு எப்படித் தெரிந்தன என்று எண்ணிப் புத்லி பாய் ஆச்சரியப்படுவார்.''

* பலாத்காரத்தில் வெறுப்பும் அகிம்சை உணர்ச்சியும் சிறு வயதி லிருந்தே காந்திஜிக்கு இருந்திருக்கின்றன என்பதற்குத் தாம் சமீபத்தில் சந்தித்த போர்பந்தர் வயோதிக வியாபாரி ஒருவர் கூறிய சில பழைய நினைவுகளை ஸ்ரீ பிரபுதாஸ் காந்தி குறிப்பிட்டிருக்கிருர். அந்த வியாபாரி வருமாறு கூறினராம்:

''காந்திஜி பெரிய வீட்டுப் பிள்ளையானதாலும், அவரிடம் எல்லோருக்கும் மரியாதை இருந்ததாலும், சிறு வயதில் அவரை எல்லோரும் 'மோகன் பாய்'

உயர்தரப் பள்ளியில் நான் படித்த முதல் ஆண்டில் பரீட்சை யின்போது நிகழ்ந்த சம்பவம் ஒன்று உண்டு. அது இங்கே குறிப்பிடத்தக்கது. கல்வி இலாகா இன்ஸ்பெக்டர் ஸ்ரீ கைல்ஸ் அப்பள்ளிக்கூடச் சோதனைக்காக வந்திருந்தார். எழுத்துக்கூட்டி எழுதும் பயிற்சிக்காக அவர் எங்களுக்கு ஐந்து சொற்களைக்கூறி அவற்றை எழுதச் சொன்னார். அதில் ஒரு சொல் 'கெட்டில்' (Kettle) என்பது. அதை நான் தவறாக எழுதி விட்டேன். உபாத்தியாயர் தம் கால் பூட்ஸ் முனையால் என் காலைச் சீண்டித் தூண்டினார். நான் புரிந்துகொள்ளவில்லை. நாங்கள் பக்கத்துப் பையனைப் பார்த்துக் 'காபி' அடிக்காமல் பார்த் துக்கொள்ளுவதற்காகவே ஆசிரியர் அங்கே இருக்கிறார் என்று நான் எண்ணிக்கொண் டிருந்தேன். ஆகையால், என் பக்கத் துப் பையனின் சிலேட்டைப் பார்த்து அப்பதத்தின் எழுத்துக் களைக் காப்பியடிக்க அவர் என்னைத் தூண்டுகிறார் என்பதை நான் அறியவில்லை. இதன் பலன் என்னவெனில், என்னைத் தவிர மற்ற எல்லாப் பிள்ளைகளும் அப்பதத்தைச் சரியாக எழுதியிருந்தனர். நான் ஒருவனே முட்டாளாக இருந்துவிட் டேன். இந்த முட்டாள்தனத்தை நான் உணரும்படி செய்வதற்கு ஆசிரியர் பிறகும் முயற்சி செய்தார். ஆனால், அதனாலும் பய னில்லை. 'காபி' அடிக்கும் வித்தையை நான் என்றுமே கற்றுக் கொள்ள முடியவில்லை.

என்றாலும், என் ஆசிரியரிடம் நான் கொண்டிருந்த மதிப்பை இச்சம்பவம் கொஞ்சமும் குறைத்துவிடவில்லை. பெரியவர்க ளிடம் இருக்கும் குறைகளைக் காண்பதில் குருடனாகவே இருந்து விடுவது எனது சுபாவம். இதே ஆசிரியரின் வேறு பல குறை பாடுகளையும் பின்னால் அறியலானேன். என்றாலும், அவரிடம் நான் வைத்திருந்த மதிப்பு மாத்திரம் குறையவே இல்லை. ஏனெ னில், பெரியவர்களின் கட்டளைகளை நிறைவேற்றிவிட்டு, அவர் களுடைய செய்கைகளைக் கவனிக்காமல் இருந்துவிட நான் கற் றுக்கொண் டிருந்தேன்.

---

என்றே அழைப்பார்கள். யாரும் அவரிடம் நெருங்கிப் பழகுவதுமில்லை; வம்புக்குப் போவதுமில்லை. நான் சிறுவனாக இருந்தபோது மிகவும் விஷமக் காரன். நானோ அல்லது என்னைப் போன்ற வேறு யாரோ அவரைத் தொந்தரவு செய்யப் போனால், அவர் கண்ணியமாகக் கையைக் கட்டிக்கொண்டு விஷமம் செய்ய முடியாதபடி செய்துவிடுவார். ஒரு தடவை கோபத்தில் மோகன் பாயை நான் அறைந்துவிட்டேன். அவர் எனக்கு மூன்று வயது மூத்தவராக இருந்தும், அவர் என்னைத் திருப்பி அடிக்கவில்லை; என்னைத் தம் தந்தையிடம் அழைத்துச் சென்றார். அவரோ என்னை எச்சரித்துப் போகச் சொல்லிவிட்டார். விளையாடும்பொழுது மற்றச் சிறுவர்கள் ஒருவருக்கொருவர் முரட்டுத்தனமாக நடந்துகொள்ளுவது தமக்குப் பிடிக்கவில்லையென்றால் மோகன் பாய், 'நீங்கள் விளையாடிக்கொள்ளுங்கள்; நான் உங்களோடு இருக்கமுடியாது' என்று சொல்லிவிடுவார். யாராவது அதிக முரட்டுத்தனமாக நடந்தால் அவர் உறுதி யோடு குறுக்கிட்டுச் சரியாக நடந்துகொள்ளும்படி சொல்லுவார்.''




போர்பந்தரில் இந்த வீட்டிலேயே மகாத்மா காந்தி 1869 அக்டோபர் 2–ஆம் தேதி பிறந்தார்.



மகாத்மா பிறந்த அறை. மலர்களால் சுவஸ்திகா அடையாளமிட்டிருக்கும் இடத்திலேயே அவர் பிறந்தார்.

அதே காலத்தில் நடந்த மற்றும் இரு சம்பவங்கள் என் நினைவில் என்றும் அப்படியே இருந்துவருகின்றன. என் பாடப் புத்தகங்களைத் தவிர வேறு எதையும் படிப்பதில் எனக்குப் பொதுவாக விருப்பம் இருந்ததில்லை. அன்றாடம் பாடங்களைச் சரிவரப் படித்துவிட வேண்டும்; ஏனெனில், சரியாகப் படிக்காததற்காக ஆசிரியரின் கண்டன தண்டனைகளுக்கு ஆளாவது எனக்குப் பிடிக்காது என்பதுடன் அவரை ஏமாற்றவும் நான் விரும்பவில்லை. ஆகையால், பாடங்களைக் கட்டாயம் படித்துவிடுவேன். ஆனால், அவற்றில் அடிக்கடி என் புத்தி செல்லாது. இவ்வாறு பாடங்களையே சரியாகப் படிக்காமல் இருக்கும்போது மேற்கொண்டு வேறு புத்தகங்களைப் படிப்பது என்பதற்கே இடமில்லை. ஆனால், என் தந்தையார் வாங்கியிருந்த 'சிரவணனின்* பிதிர் பக்தி நாடகம்' (இது சிரவணன் பெற்றோரிடம் கொண்டிருந்த பக்தியைப் பற்றிய நாடகம்) என்ற புத்தகம் என் கண்ணில் எப்படியோ பட்டது. தீவிரமான சிரத்தையுடன் அப்புத்தகத்தைப் படித்தேன். அந்தச் சமயத்தில் எங்கள் ஊருக்குப் படங்களைக் காட்டுவோரும் வந்திருந்தார்கள். நான் பார்த்த படங்களில் ஒன்று, கண்ணிழந்த தன்னுடைய தாய்தந்தையரைச் சிரவணன் கூடையில் வைத்துக் காவடியாகத் தோளில் சுமந்து கொண்டு போனதைக் காட்டுவது. அப்புத்தகமும் இப் படமும் என் மனத்தில் அழியாத முத்திரை போட்டுவிட்டன. 'நீ பின்பற்றுவதற்கு இது ஒரு சரியான உதாரணம்' என்று எனக்கு நானே சொல்லிக் கொண்டேன். சிரவணன் இறந்ததால் புத்திர சோகத்தோடு

---

* சிரவணன் : இவனுடைய பெற்றோர்கள் கண் பார்வை இல்லாதவர்கள். அவர்களை இவன் ஒரு காவடியில் வைத்துத் தூக்கிக்கொண்டு செல்லுவது வழக்கம். ஒரு சமயம் அவர்களை நடுக்காட்டில் இறக்கி வைத்துவிட்டு, தண்ணீர் கொண்டு வருவதற்காக ஒரு நதிக்குச் சென்றான். நதியில் இவன் நீர் மொண்ட சப்தம் கேட்டு, மறைவிடத்தில் மிருகங்களை எதிர்பார்த்து ஒளிந்திருந்த தசரதன், அத்திசையில் ஓர் அம்பை எய்யவே, அது சிரவணன் மீது பாய்ந்தது. உடனே அவன் அலறினான். அந்த மனிதக் குரலைக் கேட்டதும் தசரதன் ஓடிப்போய் பார்த்தான். கீழே கிடந்து உருண்டு துடிக்கும் சிறுவனைப் பார்த்து, "நீ யார்?" என்று தசரதன் கேட்க, சிறுவன் தன்னுடைய குலம் கோத்திரங்களையும், கண் தெரியாத பெற்றோருக்குத் தான் தண்ணீர் எடுத்துச் செல்ல வந்ததையும் சொல்லிவிட்டு இறந்து போனான். அவனுடைய தாய் தந்தையருக்குத் தசரதனே தண்ணீர் கொண்டு போனான். அவர்களிடம், "நான் அயோத்தி வேந்தன் தசரதன். வேட்டையாட வந்த இடத்தில் உங்கள் குமாரன் நீர் மொண்ட சப்தம் கேட்டு, யானைதான் தண்ணீர் குடிக்க வந்திருக்கிறது என்று எண்ணி மறைவிடத்திலிருந்து நான் எய்த அம்பினால் அவன் இறந்துவிட்டான். நான் நேரில் பார்க்காமல் இவ்வாறு அம்பு எய்த குற்றத்தைப் பொறுத்தருள வேண்டும்" என்று வேண்டினான். சிரவணனை இழந்த பெற்றோர்கள் அழுது புலம்பினார்கள். இறுதியில் "மகனை இழந்ததால் நாங்கள் இப்போது உயிர் துறக்கப் போகிறோம். இதுபோல நீயும் உன் மகன் உன்னைவிட்டுப் பிரிவதன் காரணமாக உயிர் இழப்பாய்" என்று சாபம் கொடுத்துவிட்டு இறந்தார்கள். அதன்படி பிற்காலத்தில் ராமன் காட்டுக்குப் போனபோது தசரதன் அந்தத் துயரம் பொறுக்காமல் இறந்தான் என்பது ராமாயணத்தில் காணும் கதை.

பெற்றோர் வருந்திப் பிரலாபித்தது என் நினைவில் இன்னும் அப்படியே இருந்து வருகிறது. சோகம் மிகுந்த அந்தக் கீதம் என் உள்ளத்தை உருக்கிவிட்டது. என் தந்தை, எனக்காக வாங்கியிருந்த வாத்தியத்தில் அந்தக் கீதத்தை வாசித்தேன்.

மற்றொரு நாடக சம்பந்தமாகவும் இதே போன்ற ஒரு சம்பவம் உண்டு. ஏறக்குறைய அதே சமயத்தில், ஒரு நாடகக் குழுவினர் நடத்தி வந்த ஒரு நாடகத்தைப் பார்க்க என் தந்தையாரின் அனுமதி பெற்றேன். 'அரிச்சந்திரன்' என்ற இந் நாடகம், என் உள்ளத்தைக் கொள்ளைகொண்டது. எத்தனை தரம் அதைப் பார்த்தாலும் எனக்குச் சலிப்பு ஏற்படாது. ஆனால், அதைப்போய்ப் பார்க்க எத்தனை தடவைதான் என்னை அனுமதிப்பார்கள்? அது சதா என் நினைவில் இருந்து வந்தது. எண்ணற்ற சமயங்களில் எனக்குள் நானே அரிச்சந்திரனாக நடித்திருப்பேன். 'அரிச்சந்திரனைப் போல எல்லோரும் ஏன் சத்திய சீலர்கள் ஆகக்கூடாது?' என்று அல்லும் பகலும் என்னை நானே கேட்டுக்கொள்ளுவேன். சத்தியத்தைக் கடைப்பிடிப்பதும், அதற்காக அரிச்சந்திரன் அனுபவித்த துன்பங்களையெல்லாம் அனுபவிப்பதுமாகிய லட்சியமே ஒரு புத்துணர்ச்சியை உண்டாக்கியது. அரிச்சந்திரனின் கதை, உண்மையிலேயே நடந்த ஒன்று என்றே நான் நம்பிவிட்டேன். அதை நினைத்துப் பல சமயங்களில் அழுதும் விடுவேன். அரிச்சந்திரன் சரித்திர புருஷனாக இருந்திருக்க முடியாது என்று என் பகுத்தறிவு இன்று எனக்குக் கூறுகிறது. என்றாலும், என்னைப் பொறுத்தவரையில் அரிச்சந்திரனும் சிரவணனும் வாழ்வின் உண்மைகள். அந்த நாடகங்களைத் திரும்ப இன்று நான் படித்தாலும், முன்போலவே என் மனம் உருகிவிடும் என்பது நிச்சயம்.

## 3

# குழந்தை மணம்

இந்த அத்தியாயத்தை நான் எழுத நேர்ந்திருக்கக் கூடாது என்றே விரும்புவேன். இந்த வரலாற்றைக் கூறி முடிப்பதற்குள் கசப்பானவை பலவற்றை நான் விழுங்கித்தான் ஆக வேண்டும் என்பதை அறிவேன். நான் சத்தியத்தை வழிபடுபவனாக இருப்பதென்றால், வேறு விதமாக நடந்துகொள்வதற்கில்லை. எனது பதின்மூன்றாவது வயதில் எனக்கு மணமாயிற்று என்பதைக் கூறியாக வேண்டியது, வேதனையோடு கூடிய என் கடமையாகிறது. என்னைச் சுற்றிலும் என் பராமரிப்பில் இருக்கும் அதே வயதுடைய சிறுவர்களைப் பார்த்துவிட்டு என் விவாகத்தையும் எண்ணும்போது என்னைப்பற்றி நானே பரிதாபப்பட்டுக்கொள்ளத் தோன்றுகிறது ; என் கதிக்கு ஆளாகிவிடாமல்

தப்பிவிட்ட அவர்களை ஆசீர்வதிக்கவும் தோன்றுகிறது. அப்படிப்பட்ட அக்கிரமமான குழந்தைக் கல்யாணம் சரி என்று கூறுவதற்கு ஒழுக்கரீதியான வாதம் எதுவும் இருப்பதை நான் காணவில்லை.

எனக்கு ஆனது விவாகமே அன்றி நிச்சயதார்த்தம் அன்று என்பதை வாசகர்கள் தெள்ளத் தெளிவாகத் தெரிந்துகொள்ள வேண்டும். ஏனெனில், கத்தியவாரில் நிச்சயதார்த்தம், விவாகம் என்ற இரண்டு வெவ்வேறு சடங்குகள் உண்டு. நிச்சயதார்த்தம் என்பது, ஒரு பையனுக்கும் ஒரு பெண்ணுக்கும் விவாகம் செய்வதென்று அவ்விருவரின் பெற்றோர்களும் ஆரம்ப நிச்சயம் செய்து கொள்ளுவது. அது மீறிவிட முடியாதது அல்ல. பையன் இறந்துவிட்டால் பெண் விதவை ஆகி விடுவதும் இல்லை. பெற்றோரைப் பொறுத்தவரை செய்துகொள்ளும் ஓர் ஒப்பந்தமே இது. குழந்தைகளுக்கு இதில் எந்தச் சம்பந்தமும் இல்லை. அப்படி நிச்சயதார்த்தம் ஆகியிருக்கிறது என்பதை அநேகமாக அக்குழந்தைகளுக்கு அறிவிப்பதும் இல்லை. எனக்குத் தெரியாமலேயே எனக்கு மும்முறை நிச்சயதார்த்தம் ஆகியிருந்தது என்று தெரிகிறது. எனக்கு என்று நிச்சயம் செய்திருந்த இரு பெண்கள் ஒருவர் பின் ஒருவராக இறந்துவிட்டனர் என்பதை அறிந்தேன். எனது ஏழாவது வயதில் மூன்றாவது நிச்சயதார்த்தம் நடந்ததாக இலேசாக நினைவிருக்கிறது. ஆனால், அதைப்பற்றி எனக்கு யாரும் தெரிவித்திருந்ததாக நினைவு இல்லை. இந்த அத்தியாயத்தில் என் விவாகத்தைப்பற்றியே நான் கூறுகிறேன். அதைப்பற்றிய ஞாபகம் எனக்குத் தெளிவாக இருக்கிறது.

நாங்கள் சகோதரர்கள் மூவர் என்பது நினைவிருக்கும். மூத்தவருக்கு* முன்னாலேயே மணம் ஆகிவிட்டது. அடுத்த சகோதரர் எனக்கு இரண்டு அல்லது மூன்று வயது மூத்தவர். இந்த இரண்டாவது சகோதரருக்கும் எனக்கும், எனக்கு ஒரு வயது மூத்தவரான பெரியப்பா பிள்ளைக்கும், ஒரே சமயத்தில் மணம் முடித்துவிடுவது என்று பெரியவர்கள் முடிவு செய்தனர்.

---

* காந்திஜியின் மூத்த சகோதரரான லட்சுமிதாஸ் என்ற காளிதாஸ் 1860-இல் பிறந்தவர். அவருடைய உதவியினாலேயே காந்திஜி படிக்க இங்கிலாந்திற்குப் போக முடிந்தது. லட்சுமிதாஸ் தமது கடைசி நாட்களில் போர்பந்தரில் சமஸ்தான கஜானாக்காரராக வேலைபார்த்து வந்தார். அவர் தாராளமாக செலவிடுபவர். தமது குமாரிகளுக்கு ராஜாக்கள்போல் டாம்பீகமாகச் செலவு செய்து விவாகம் செய்து கொடுத்தார். அவருடைய மூத்த குமாரரான ஸ்ரீ சாமளதாஸ் காந்தி, பம்பாயில் பிரபலமாக நடந்து வந்த குஜராத்திப் பத்திரிகையான 'வந்தே மாதரத்'திற்கு ஆசிரியராக இருந்தார். ஜுனாகட் சமஸ்தானாதிபதி பாகிஸ்தானுடன் தனது சமஸ்தானத்தைச் சேர்த்துவிட முயன்றபோது ஸ்ரீ சாமளதாஸ் காந்தி, ஆயுதபாணிகளான ஒரு தொண்டர் படையுடன் ஜுனாகட்டிற்குள் பிரவேசித்தார். நவாப் வெளியேறி ஓடிவிட்டதும் அவர் முதல் ஜனநாயக அரசாங்கத்தை அமைத்தார். லட்சுமிதாஸுக்கு அடுத்த சகோதரர் 1866–இல் பிறந்தவர். கர்ஸன்தாஸ் என்பது அவர் பெயர். அவருக்கும் காந்திஜிக்கும் ஒரே சமயத்தில் மணமாயிற்று. அவர் போர்பந்தரில் போலீஸ் இலாகாவில் வேலையில் இருந்தார். அவர் சொற்ப வருவாயுள்ளவர். அவ்விரு சகோதரர்களும் காந்திஜி உயிருடன் இருக்கும்போதே இறந்துவிட்டனர்.

இப்படி முடிவு செய்ததில் எங்களுடைய நன்மையைக் குறித்தோ, எங்கள் விருப்பத்தைப்பற்றியோ அவர்களுக்குச் சிந்தனையே இல்லை. அவர்கள் சௌகரியத்தையும் சிக்கனத்தையும் மாத்திரமே பற்றிய விஷயம் அது.

ஹிந்துக்களின் கல்யாணம் என்றால் சாதாரண விஷயம் அன்று. பெரும்பாலான மாப்பிள்ளை வீட்டாரும், பெண் வீட்டாரும் விவாகத்தினாலேயே தங்களுக்கு நாசத்தைத் தேடிக்கொள்ளுகின்றனர். அவர்கள் தங்கள் சொத்தையும் வீணாக்குகிறார்கள்; காலத்தையும் வீணாக்குகிறார்கள். ஆடைகள் தயாரிப்பது, நகைகள் செய்வது, விருந்துகளுக்கு வேண்டிய திட்டங்கள் போடுவது என்ற வகையில் முன்னேற்பாடுகளுக்கே பல மாதங்கள் ஆகிவிடுகின்றன. விருந்துப் பட்சணங்கள் தயாரிப்பதில், அளவிலும் வகையிலும், ஒவ்வொருவரும் மற்றவரை மிஞ்சிவிட வேண்டும் என்று முயல்கிறார்கள். பெண்களுக்குக் குரல் நன்றாக இருக்கிறதோ இல்லையோ, ஏகக் கூப்பாடு போட்டுப் பாடுகிறார்கள்; நோய்வாய்ப்படவும் செய்கிறார்கள்; அண்டை வீட்டுக்காரர்கள் அமைதியோடு இருக்க முடியாதபடியும் செய்துவிடுகிறார்கள். இத்தகைய கூச்சல் குழப்பங்களையும், விருந்து இலைகளில் மிஞ்சியதையும், குப்பையையும், மற்றும் சகல ஆபாசங்களையும் பக்கத்து வீட்டுக்காரர்களும் சகித்துக் கொள்ளுகிறார்கள். ஏனெனில், தாங்களும் அவ்வாறே நடந்து கொள்ள வேண்டிய ஒரு சமயம் வரும் என்பது அவர்களுக்குத் தெரியும்.

இந்தத் தொல்லைகளெல்லாம் ஒரே சமயத்தில் தீர்ந்து போவது எவ்வளவோ நல்லது என்று என் பெரியோர்கள் எண்ணினர். இப்படிச் செய்தால் செலவும் குறைவாக இருக்கும்; ஆடம்பரமும் அதிகமாயிருக்கும். மூன்று தடவைகளில் செலவழிப்பதற்குப் பதிலாக ஒரே தடவையில் செலவிடுவதானால் பணத்தையும் தாராளமாகச் செலவிடலாம். என் தந்தைக்கும் பெரியப்பாவுக்கும் வயதாகிவிட்டது. அவர்கள் விவாகம் செய்து வைக்க வேண்டியிருந்த கடைசிக் குழந்தைகள் நாங்கள். தங்கள் கடைசிக் காலத்தில் சந்தோஷமான காரியத்தைச் செய்துவிட்டுப் போவோமே என்றும் அவர்கள் எண்ணியிருக்கக்கூடும். இவற்றையெல்லாம் முன்னிட்டு மூன்று விவாகங்களையும் ஒரே சமயத்தில் முடித்துவிடுவது என்று முடிவு செய்தனர். நான் முன்பே கூறியிருப்பதைப்போல, இவற்றிற்கான ஏற்பாடுகளையெல்லாம் செய்து முடிப்பதற்கு மாதங்கள் பல ஆயின.

இத்தகைய முன்னேற்பாடுகளையெல்லாம் பார்த்தபிறகே, நடைபெற இருக்கும் சம்பவங்களைப்பற்றி நாங்கள் அறியலானோம். உடுத்துக்கொள்ள நல்ல ஆடைகள் கிடைக்கும்; மேளதாளங்கள் இருக்கும்; கல்யாண ஊர்வலங்கள் இருக்கும்; பிரமாதமான விருந்து நடக்கும்; இவற்றுடன், சேர்ந்து

விளையாடுவதற்கு விசித்திரப் பெண் ஒருத்தியும் கிடைப்பாள் என்பதைத் தவிர, விவாகம் என்பதைப்பற்றி எனக்கு அப்பொழுது வேறொன்றுமே தெரியாது. சிற்றின்ப இச்சை பிறகுதான் ஏற்பட்டது. குறிப்பிடக்கூடிய சில விவகாரங்களைத் தவிர நான் வெட்கப்படவேண்டிய பிறவற்றை மறைத்துவிடவே விரும்புகிறேன். இந்த விவரங்களைப் பிற்பாடு சொல்லுகிறேன். ஆனால், இவற்றிற்கும், இந்தக் கதையை நான் எழுதுவதன் முக்கியமான நோக்கத்திற்கும் கொஞ்சமும் சம்பந்தமில்லை.

ஆகவே, என் அண்ணனையும் என்னையும் ராஜ்கோட்டி லிருந்து போர்பந்தருக்கு அழைத்துச் சென்றனர். முடிவான நாடகத்துக்குப் பூர்வாங்கமாக எங்கள் உடம்பெல்லாம் அரைத்த மஞ்சளைப் பூசியது போன்ற சில வேடிக்கையான விவரங்களும் உண்டு. ஆனால், அவற்றையெல்லாம் நான் கூறாமல் விட்டுவிடவேண்டியதுதான்.

என் தந்தையார் ஒரு திவான். ஆனாலும் ஓர் ஊழியர்தான். அவரிடம் தாகூர் சாஹிப் விசேஷ அபிமானம் வைத்திருந்த தனால், அவர் கொஞ்சம் அதிகப்படியாகவே ஊழியம் புரிந்தார். தாகூர் சாஹிப் கடைசி நிமிஷம் வரையிலும் என் தந்தையாரைப் போக விடவில்லை. போக அனுமதித்தபோது, பிரயாண காலத்தில் இரண்டு தினங்கள் குறைவதற்காக, விசேஷக் குதிரை வண்டிகளை என் தந்தைக்கு ஏற்பாடு செய்ய அவர் உத்தரவிட்டார். ஆனால், விதி வேறுவிதமாக இருந்துவிட்டது. ராஜ்கோட்டிலிருந்து போர்பந்தருக்கு 120 மைல்கள். சாதாரண வண்டியில் வந்தால் ஐந்து நாட்கள் ஆகும். என் தந்தையோ மூன்றே நாட்களில் வந்துவிட்டார். ஆனால், மூன்றாவது கட்டத்தில் வந்துகொண்டிருந்தபோது அவர் வந்த குதிரை வண்டி குடைசாய்ந்து, அவர் பலத்த காயமடைந்தார். காயங் களுக்காக, உடம்பெல்லாம் கட்டுப் போட்டுக்கொண்டு வந்து சேர்ந்தார். நடைபெறவிருக்கும் வைபவத்தில் அவருக்கும் எங்களுக்கும் இருந்திருக்க வேண்டிய சிரத்தையில் பாதி இதனால் போய்விட்டது. ஆயினும் எப்படியும் வைபவம் நடந்தாக வேண்டும். முகூர்த்தத் தேதிகளை மாற்ற முடியுமா? குழந்தை களுக்குக் கல்யாணத்தில் இயல்பாக ஏற்படும் சந்தோஷம் எனக்கும் ஏற்பட்டிருந்தது. அதில் மூழ்கியதன் காரணமாக, என் தந்தையின் காயங்களால் அடைந்த மனக்கிலேசத்தை மறந்திருந்தேன்.

என் பெற்றோரிடம் எனக்குப் பக்தியுண்டு. அதே அள வுக்குச் சதை உணர்ச்சிகளிலும் எனக்கு ஈடுபாடு உண்டு. என் பெற்றோருக்கு நான் ஆற்ற வேண்டிய பக்தியோடு கூடிய பணிக்காக எல்லாச் சுகங்களையும், இன்பங்களையும் நான் தியாகம் செய்துவிட வேண்டும் என்பதை அப்பொழுது நான் அறிந்திருக்கவில்லை. , எனினும், இன்ப நுகர்ச்சியில் நான்

கொண்டிருந்த ஆசைக்குத் தண்டனையாக ஒரு சம்பவம் நிகழ்ந்தது. அப்பொழுதிலிருந்து அந்தச் சம்பவம் என் மனத்தில் உறுத்திக்கொண்டே இருக்கிறது. அதைப்பற்றிப் பிறகு சொல்லுகிறேன். 'ஆசைகளைத் துறக்காமல், ஆசைக்குரிய பொருள்களைத் துறப்பதென்பது, நீ எவ்வளவு முயன்றாலும், அற்பாயுசில் முடிந்துவிடக் கூடியதே' என்று நிஷ்குலானந்தர் பாடியிருக்கிறார். இப்பாடலை நான் பாடும்போதெல்லாம், பாடக் கேட்கும்போதெல்லாம், வெறுக்கத்தக்க கசப்பான அந்தச் சம்பவம் உடனே என் நினைவுக்கு வந்து, நான் வெட்கப் படும்படி செய்கிறது.

என் தந்தைக்குப் பலமான காயங்கள் ஏற்பட்டிருந்தும் சமாளித்துக்கொண்டு தைரியமாகவே காணப்பட்டார். மண வைபவங்களிலும் கலந்துகொண்டார். பல தரப்பட்ட சடங்குகளில் அவர் கலந்துகொண்டபோது, எந்த எந்த இடங்களில் உட்கார்ந்திருந்தார் என்பதைக்கூட இன்றும் என் மனக்கண் முன்பு கொண்டுவர முடியும். நான் குழந்தையாக இருந்த போதே எனக்கு விவாகம் செய்துவிட்டதற்காக என்றாவது ஒரு நாள் நான் என் தந்தையைக் கடுமையாகக் குறை கூறுவேன் என்று அப்பொழுது நான் கனவிலும் எண்ணவில்லை. அன்று நடைபெற்றவை யாவும் சரியானவை, நியாயமானவை, மகிழ்ச்சி கரமானவை என்றே அந்த நாளில் எனக்குத் தோன்றின. விவாகம் செய்துகொண்டுவிட வேண்டும் என்ற ஆர்வம் எனக்கே இருந்தது. அப்பொழுது என் தந்தை செய்வன எல்லாம் சரியான காரியமாகவே எனக்குத் தோன்றியதால் அவற்றைப்பற்றிய நினைவு என் ஞாபகத்தில் அப்படியே இருந்து வருகின்றது. மணவறையில் நாங்கள் எவ்விதம் அமர்ந்திருந்தோம், சப்தபதிச் சடங்குகளை * எவ்விதம் நிறைவேற்றினோம், புதிதாக மணமான கணவனும் மனைவியும் இனிப்புக் கன்ஸாரை† எவ்விதம் ஒருவருக்கொருவர் வாயில் ஊட்டிக்கொண்டோம், நாங்கள் இருவரும் எவ்விதம் கூடி வாழத் தலைப்பட்டோம் என்பனவற்றையெல்லாம் இன்றுங்கூட என் உள்ளத்தில் நினைத்துப் பார்க்கவும் முடியும். மேலும் அந்த முதல் இரவு! எதுவுமே அறியாத இரு குழந்தைகள், எந்தச் சிந்தனையும் இல்லாமல் வாழ்க்கைச் சாகரத்தில் தாமே குதித்தன. முதல் இரவில் நான் எப்படியெல்லாம் நடந்துகொள்ள வேண்டும் என்பதைப் பற்றி என் அண்ணன் மனைவி எனக்கு முழுப் போதனையும் செய்து வைத்திருந்தார். என் மனைவியைத் தயார்

---

* சப்தபதிச் சடங்கு என்பது மணமக்கள் இருவரும் ஏழு தடவைகள் அடி எடுத்து வைப்பதாகும். அந்தச் சமயத்தில், பரஸ்பரம் விசுவாசத்தோடு வாழ்வதாகவும் வாக்குறுதி செய்து கொள்ளுவார்கள். இந்தச் சப்தபதிச் சடங்குகளுக்குப் பின்னரே அவ்விருவரும் கணவன் மனைவியாகின்றனர்.

† கன்ஸார்: இது கோதுமையால் செய்யப்படும் ஒரு தின்பண்டம். சப்தபதிச் சடங்குகளுக்குப் பிறகு மணமக்கள் இருவரும் சேர்ந்து இதைச் சாப்பிடுவார்கள்.

செய்திருந்தவர் யார் என்று எனக்குத் தெரியாது. அதைப் பற்றி அவளை நான் கேட்டதே இல்லை; இப்பொழுது கேட்கும் உத்தேசமும் இல்லை. ஒருவரையொருவர் சந்திப்பதில் எங்களுக்கு ஒரே நடுக்கந்தான். இதைப்பற்றி வாசகர்களுக்குச் சந்தேகமே தேவையில்லை. உண்மையிலேயே எங்களுக்கு அளவு கடந்த கூச்சம். அவளுடன் நான் எப்படிப் பேசுவது? என்ன சொல்வது? சொல்லிக் கொடுத்திருந்த பாடம் அந்த அளவுக்கு உதவவில்லை. ஆனால், இத்தகைய காரியங்களில் உண்மையில் எந்தவிதமான போதனையுமே அவசியமில்லை. ஜன்மாந்தர வாசனைகளே, எல்லாவிதமான போதனைகளும் அனாவசியமானவை என்று ஆக்கிவிடக் கூடியவை. நாளடைவில் ஒருவரையொருவர் அறிந்துகொண்டோம். ஆனால், கணவன் என்ற அதிகாரத்தை நான் உடனே மேற்கொண்டுவிட்டேன்.

## 4

## கணவன் அதிகாரம்

எனக்கு விவாகமான அந்தக் காலத்தில், காலணா அல்லது ஒரு தம்படி விலையில் (எவ்வளவு விலை என்று இப்பொழுது எனக்குச் சரியாக நினைவில்லை) சிறு பிரசுரங்கள் வெளியாகி வந்தன. தாம்பத்தியக் காதல், சிக்கனம், குழந்தை மணங்கள் முதலிய விஷயங்களை யெல்லாம் பற்றி அவைகளில் விவாதிக்கப்பட்டிருக்கும். அவை எனக்குக் கிடைத்த போதெல்லாம் ஒரு வரி விடாமல் அவற்றைப் படிப்பேன். எனக்குப் பிடிக்காதவற்றை மறந்துவிடுவதும், பிடித்தமானவற்றை அனுபவத்தில் நிறைவேற்றி வருவதும் என்னிடம் இருந்த பழக்கமாகும். மனைவியிடம் வாழ்நாள் முழுவதும் விசுவாசத்துடன் இருந்து வர வேண்டியது ஒரு கணவனின் கடமை என்று இப்பிரசுரங்களில் கூறப்பட்டிருந்தது என் உள்ளத்தில் நிரந்தரமாகப் பதிந்து நிலைத்துவிட்டது. அத்துடன் சத்திய வேட்கையும் என்னுள் இருந்ததால், மனைவியிடம் உண்மைக்கு மாறாக நடந்து கொள்வது என்பதற்கே இடமில்லை. மேலும், அந்தச் சிறு வயதில் மனைவிக்குத் துரோகம் செய்யச் சந்தர்ப்பமும் கிடையாது.

ஆனால், மனைவியிடம் உண்மையோடு நடந்துகொள்ள வேண்டும் என்ற பாடத்தினால் எதிரிடையான ஒரு விளைவு ஏற்பட்டது. ‘நான் என் மனைவியிடம் உண்மையோடு நடந்து கொள்ளுவதென்றால், அவளும் என்னிடம் உண்மையோடு நடந்து கொள்ள வேண்டும்’ என்று எனக்குள் சொல்லிக்கொண்டேன். இந்த எண்ணம் என்னைச் சந்தேகம் கொண்ட கணவன் ஆக்கி விட்டது. அவள் உண்மையோடு நடப்பவளாக இருக்கும்படி செய்வதற்கு, அவளுடைய கடமையை எளிதில் என் உரிமையாக ஆக்கிக்கொண்டேன். அந்த உரிமை விஷயத்தில் நான்

விழிப்புடன் இருந்து வலியுறுத்துவது என்றும் தீர்மானித்தேன். அவளுடைய பக்தி விசுவாசத்தில் நான் சந்தேகம் கொள்ளு வதற்குக் காரணமே இல்லை. ஆனல், காரணங்களுக்காகச் சந்தேகம் காத்துக் கொண்டிருப்பதில்லை. ஆகவே, அவள் செய்வதையெல்லாம் எப்பொழுதுமே கவனித்து வரவேண்டியது அவசியம் அல்லவா? என் அனுமதியின்றி அவள் எங்குமே போகக்கூடாது என்று கட்டுப்பாடு விதித்தேன். இது எங்களுக்குள் கடுமையான சச்சரவுக்கு விதை ஊன்றிவிட்டது. நான் விதித்திருந்த கட்டுப்பாடு உண்மையில் அவளுக்கு ஒரு வகையான சிறைத் தண்டனையே. இத்தகைய காரியத்திற்கு உடன்பட்டுவிடக்கூடிய பெண்ணல்ல கஸ்தூரி பாய். தான் விரும்பிய இடங்களுக்கு விரும்பியபோதெல்லாம் அவள் பிடிவாதமாகப் போய்க்கொண்டுதான் இருந்தாள். நான் கட்டுப்பாடுகளை அதிகமாக விதிக்க விதிக்க, அவள் தன் இஷ்டம் போல் நடப்பதும் அதிகமாகிக்கொண்டே வந்தது. அதனல் எனக்கு ஆத்திரமும் அதிகமாகிக்கொண்டே போயிற்று. குழந்தைத் தம்பதிகளான எங்களுக்குள் ஒருவரோடொருவர் பேசாமல் இருந்துவிடுவது என்பது சர்வ சாதாரணம் ஆகிவிட்டது. என்னுடைய கட்டுத்திட்டங்களைக் கஸ்தூரி பாய் மீறியதில் யாதொரு தவறுமில்லை என்றே நான் இன்று எண்ணுகிறேன். கோயிலுக்குப் போகக்கூடாது என்றும், தன் தோழிகளைப் போய்ப் பார்க்கக்கூடாது என்றும் தடை விதித்தால், கபடமற்ற ஒரு பெண், அவற்றை எப்படிச் சகிப்பாள் ? அவளுக்குக் கட்டுத் திட்டங்களையெல்லாம் விதிக்க எனக்கு உரிமை இருக்கிறதென்ருல், அதேபோன்ற உரிமை அவளுக்கும் உண்டு அல்லவா ? இவையெல்லாம் இன்று எனக்குத் தெளிவாகப் புரிகின்றன. ஆனல், அப்பொழுதோ, கணவனுக்குரிய அதிகாரங்களைச் செலுத்தி யாகவேண்டும் என்றே நினைத்து வந்தேன்!

என்ருலும், எங்களுடைய வாழ்க்கை மாருத கசப்பு நிறைந்த வாழ்க்கையாகவே இருந்தது என்று வாசகர்கள் நினைத்துவிட வேண்டாம். நான் அவளிடம் கடுமையாக நடந்து கொண்டதற்கெல்லாம் அன்பே காரணம். மனைவி என்ருல் எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு அவள் உதாரணமாக விளங்கும்படி செய்யவே நான் விரும்பினேன். அவள் தூய வாழ்க்கை நடத்தி, நான் கற்றவைகளை அவளும் கற்பதன் மூலம் எங்கள் இருவருடைய வாழ்க்கையும் எண்ணங்களும் ஒன்ருக இருக்கும்படி செய்ய வேண்டும் என்பதே என் அபிலாஷை.

கஸ்தூரி பாய்க்கு அப்படிப்பட்ட அபிலாஷை ஏதாவது இருந்ததா என்ப்து எனக்குத் தெரியாது. அவள் எழுதப்படிக்கத் தெரியாதவள். சுபாவமாகவே அவள் கபடமற்ற தன்மையும், சுயேச்சை நோக்கும், விடாமுயற்சியும் உடையவள். குறைந்த பட்சம் என் விஷயத்தில் மாத்திரம் பேச வெட்கப்படுபவள். தன்னுடைய அறியாமையைக் குறித்து அவளுக்குக் கவலையே இல்லை.

நான் படித்து வந்தது, கூடத் தானும் படிக்க வேண்டும் என்ற முயற்சியில் ஈடுபடும் உற்சாகத்தை அவளுக்கு அளித்ததாக எனக்கு ஞாபகமில்லை. ஆகையால், நான் கொண்டிருந்த அபிலாஷையெல்லாம் என்னோடுதான் நின்றது என்று எண்ணுகிறேன். அவள் ஒருத்திமீதே நான் என் முழு ஆசையையும் வைத்திருந்ததுபோல அவளும் என்மீது ஆசை வைக்க வேண்டும் என்று நான் விரும்பினேன். அப்படி அவள் ஆசை வைக்காது போனாலும் வாழ்க்கை மீளாத் துன்பமாக இருந்திருக்க முடியாது. ஏனெனில், ஒரு பக்கத்திலாவது தீவிரமான அன்பு இருந்தது.

அவளிடம் எனக்கு அடங்காப் பிரேமை என்பதை நான் சொல்லவே வேண்டும். பள்ளிக்கூடத்தில் கூட எனக்கு அவள் நினைப்புத்தான். இரவானதும் அவளைச் சந்திக்கலாம் என்ற எண்ணம் எப்பொழுதும் மனத்தில் தோன்றிக்கொண்டே இருக்கும். பிரிந்திருப்பது என்பதோ சகிக்க முடியாததாகும். இரவில் நெடுநேரம் வரையில் ஏதேதோவெல்லாம் பேசி, அவளைத் தூங்க விடமாட்டேன். இத்தகைய அடங்காத காமவெறிக்கு மாற்றாகக் கடமையில் தீவிரமான பற்றுமட்டும் எனக்கு இல்லாதிருந்தால், நான் நோய்வாய்ப்பட்டு அகால மரணத்தை அடைந்திருப்பேன்; இல்லையானால், பிறருக்குப் பாரமாக இருந்து வாழவேண்டியவனாகி யிருப்பேன். ஆனால், ஒவ்வொரு நாளும் காலையில் எனக்கென்றிருந்த வேலைகளை நான் செய்து தீர வேண்டி யிருந்தது. யாரிடமும் பொய் சொல்வது என்பதோ என்னால் ஆகவே ஆகாது. கடைசியாகச் சொன்ன இந்தக் குணமே படுகுழியில் விழாமல் பல தடவைகளிலும் என்னைக் காத்தது.*

---

* உண்மையைப் பேசும் குணம் மிகச் சிறுவராக இருந்தபோதிலிருந்தே காந்திஜிக்கு இருந்திருக்கிறது என்பதற்கு அவருடைய தமக்கை மற்றொரு சம்பவத்தையும் கூறுகிறார். அது வருமாறு :

"போர்பந்தரில் பல சிறு கோயில்கள் உண்டு. காந்தியின் குழந்தைப் பருவத்தில் இக் கோயில்கள் இப்பொழுது இருப்பதைவிட அதிக முக்கியமாக விளங்கின. பெரியவர்கள் செய்வதைப் பார்த்து இன்று குழந்தைகளும் கொடிகள் முதலியவைகளையெல்லாம் எடுத்துக்கொண்டு ஊர்வலம் போவதைப்போலவே அக்காலத்திலும் குழந்தைகள் மண்ணால் சாமி சிலைகளைச் செய்துவைத்து விளையாடுவது உண்டு. மண் சாமிகளை வைத்து விளையாடுவதைவிடப் பக்கத்திலிருக்கும் கோயில்களிலுள்ள சிலைகளையே எடுத்துவந்து வைத்து விளையாடலாம் என்று ஒரு நாள் மோகனின் சகா முடிவு செய்தான். எல்லாக் குழந்தைகளுக்கும் அந்த யோசனை பிடித்தது. அவர்களில் மிகச் சிறியவனாக இருந்தவனைக் கோயிலுக்குள் அனுப்பிச் சிலைகளை எடுத்துவரச் செய்தனர். அச்சிறுவன் பெயர் சந்து என்று வைத்துக்கொள்வோம். பூசாரி சாப்பிடப் போயிருந்த சமயத்தில் அவன் கர்ப்பக்கிருகத்திற்குள் போய்விட்டான். அங்கிருந்த சிறு பித்தளைச் சிலைகளை அவன் எடுத்தபோது சப்தம் உண்டாகவே அது பூசாரியின் மனைவிக்குக் கேட்டுவிட்டது. அவள் தன் கணவனை அழைத்தாள். சந்து ஓட்டம் பிடித்தான்; அச்சிலைகளைப் பக்கத்துக் கோயிலில் போட்டு

கஸ்தூரி பாய் எழுத்து வாசனை இல்லாதவள் என்பதை முன்பே கூறியிருக்கிறேன். அவளுக்குக் கல்வியறிவு புகட்ட வேண்டும் என்று நான் மிகவும் ஆவலோடு இருந்தேன். ஆனால், காமமே மேலோங்கி நிற்கும் காதலினால் அதற்கு நேரமே இல்லாது போயிற்று. அவளுக்குப் படிப்புச் சொல்லிக் கொடுப்பதானால், அவளுடைய இஷ்டத்திற்கு மாறாக, அதுவும் இரவில் தான் சொல்லிக்கொடுக்க முடியும். பெரியவர்கள் இருக்கும் போது அவளைச் சந்திப்பதற்கே எனக்குத் துணிவு இல்லையென்றால், அவளுடன் பேசுவது எப்படி? கத்தியவாரில் அப்பொழுது ஒரு விசித்திரமான, உபயோகமற்ற, காட்டுமிராண்டித்தனமான பர்தா முறை (கோஷா முறை) இருந்தது; இப்பொழுதுங்கூட அது ஓரளவுக்கு இருந்துவருகிறது. இவ்விதம் சந்தர்ப்பங்கள் சாதகமானவையாக இல்லை. ஆகையால், வாலிபப் பருவத்தில் கஸ்தூரி பாய்க்குக் கல்வி கற்பிக்க நான் செய்த முயற்சிகளெல்லாம் வெற்றி பெறவில்லை என்பதை நான் ஒப்புக்கொண்டே ஆக வேண்டும். காமத் தூக்கத்திலிருந்து நான் விழித்தெழுவதற்கு முன்பே பொது வாழ்க்கையில் இறங்கிவிட்டேன். ஆகையால், எனக்குப் போதிய ஓய்வு நேரம் இல்லாமல் போய்விட்டது. தனிப்பட்ட உபாத்தியாயர்களைக் கொண்டு போதிக்கவும் தவறிவிட்டேன். இதன் பயனாக, இன்று கஸ்தூரி பாய் சிரமத்தின் பேரில் சாதாரணக் கடிதங்களை எழுதிக்கொள்ளவும், எளிய குஜராத்தி மொழியைப் புரிந்து கொள்ளவுமே முடியும். நான் அவளிடம் கொண்டிருந்த அன்பு, காமக் கலப்பே இல்லாததாக இருந்திருக்குமாயின், இன்று அவள் சிறந்த படிப்பாளியாக இருப்பாள். ஏனென்றால், படிப்பதில் அவளுக்கு இருந்த வெறுப்பையும் அப்பொழுது நான் போக்கியிருக்க முடியும். பரிசுத்தமான அன்பினால் ஆகாதது எதுவுமே இல்லை என்பதை நான் அறிவேன்.

காமம் மிகுந்த அன்பினால் ஏற்படும் நாசங்களிலிருந்து என்னை அநேகமாகக் காப்பாற்றிய ஒரு சந்தர்ப்பத்தை மட்டும் இங்கே சொன்னேன். குறிப்பிடத்தக்க மற்றொன்றும் உண்டு. நோக்கம் மாத்திரம் தூயதாக இருக்குமாயின் ஒருவனை இறுதியில் எப்படியும் கடவுள் காத்தருளுவார் என்பதை எத்தனையோ உதாரணங்கள் எனக்கு எடுத்துக் காட்டியிருக்கின்றன. ஹிந்து சமூகத்தில் குழந்தைகளுக்குக் கல்யாணம்

---

விட்டு ஓடினான். பூசாரி விரட்டவே, மற்றவர்களும் ஓடி வீட்டில் மறைந்து விட்டனர். அக் குழந்தைகளில் பலர் காந்தி குடும்பத்தினர். பூசாரி எங்கள் வீட்டுக்கு வந்து சந்துவின் தந்தையிடம் முறையிட்டார். அவர் மோகனின் பெரியப்பா பிள்ளை; அதிகக் கோபக்காரர்; வைதிக பக்தர்; அடாத செயலை அவர் சகிக்கவே மாட்டார். எல்லாப் பிள்ளைகளையும் அழைத்துக் கேட்டார். எல்லோரும் தங்களுக்கு ஒன்றுமே தெரியாது என்று சொல்லிவிட்டனர். மோகனை அழைத்துக் கேட்டதும் சிறு மோகன், கொஞ்சமும் பயப்படாமல் உண்மையை அப்படியே கூறிவிட்டான்.''

செய்துவைத்துவிடும் கொடிய வழக்கம் இருந்தாலும், அதனால் ஏற்படக்கூடிய தீமைகளை ஓரளவுக்குக் குறைக்கக்கூடிய மற்றொரு வழக்கமும் அதனிடம் இருந்தது. இளம் தம்பதிகள் நீண்ட காலம் சேர்ந்து இருக்கப் பெற்றோர்கள் விடுவதில்லை. குழந்தைப் பருவ மனைவி, பாதிக்காலத்தைத் தன் பெற்றோரின் வீட்டிலேயே கழித்துவிடுகிறாள். எங்கள் விஷயத்திலும் இப்படியே ஆயிற்று. அதாவது, எங்கள் மணவாழ்க்கையின் முதல் ஐந்து ஆண்டு களில் (அதாவது 13-இலிருந்து 18-ஆம் வயது வரையில்) மொத்தம் மூன்று ஆண்டுகளுக்கு மேல் நாங்கள் சேர்ந்திருந்த தில்லை. ஆறு மாத காலத்தை ஒன்றாக இருந்து கழித்திருப்போம். அதற்குள் என் மனைவியை அவளுடைய பெற்றோர்கள் அழைத் துப் போய்விடுவார்கள். அப்படி அழைத்துக்கொண்டு போய் விடுவது அந்தச் சமயத்தில் எனக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கா மல்தான் இருந்தது. ஆனாலும், அவ்விதம் அழைத்துச் சென்றதே எங்கள் இருவரையும் காப்பாற்றியது. பதினெட்டாவது வய தில் நான் இங்கிலாந்துக்குப் போனேன். இதனால் ஏற்பட்ட நீண்ட பிரிவு, எங்களுக்கு நன்மையாகவே முடிந்தது. இங்கி லாந்திலிருந்து நான் திரும்பி வந்த பிறகும்கூட ஆறு மாதங் களுக்குமேல் நாங்கள் சேர்ந்து வாழ்ந்ததில்லை. ஏனெனில், ராஜ்கோட்டுக்கும் பம்பாய்க்கும் நான் ஓடிக் கொண்டிருக்க வேண்டி யிருந்தது. பிறகு நான் தென்னாப்பிரிக்கா போக நேர்ந்தது. அந்தச் சமயத்தில் நான் சிற்றின்ப இச்சையிலிருந்து பெரிதும் விடுபட்ட நிலையில் இருந்தேன்.

# 5

# உயர்நிலைப் பள்ளியில்

எனக்கு மணமானபோது நான் உயர்நிலைப்பள்ளியில் படித்துக் கொண்டிருந்தேன் என்று முன்பே கூறியிருக்கிறேன். நாங்கள் அண்ணன் தம்பிமார் மூன்று பேரும் ஒரே பள்ளிக் கூடத்தில் படித்துக் கொண்டிருந்தோம். மூத்த அண்ணன் மிக வும் உயர்ந்த வகுப்பில் படித்தார். என்னோடு விவாகமான அண்ணனே, எனக்கு ஒரு வகுப்பு மேலே படித்தார். விவாகத் தால் எங்கள் இருவருக்கும் ஓர் ஆண்டு வீணாயிற்று. இதன் பலன் என் அண்ணனுக்கு பின்னும் மோசமானதாகவே இருந் தது. அவர் படிப்பையே முற்றும் விட்டுவிட்டார். அவரைப் போல எத்தனை இளைஞர்கள் இதே கதிக்கு ஆளாகியிருக்கிறார் கள் என்பதைக் கடவுளே அறிவார்.* இன்றைய நமது ஹிந்து

---

* குழந்தைப் பருவத்திலேயே விவாகஞ் செய்துவிடும் வழக்கம் ஒழிய வேண்டும் என்ற உறுதி பிறகு காந்திஜிக்குப் பலமாக இருந்து வந்தது. இதற்கு ஓர் உதாரணம், குழந்தைக் கல்யாணத்தைத் தடுக்க வேண்டும் என்று வந்த சாரதா மசோதாவை அவர் பலமாக ஆதரித்ததாகும். வைதிக ஹிந்துக்களெல்லாம் அம்மசோதாவைப் பலமாக எதிர்த்தனர். மௌலானா முகமது அலியும் அம்மசோதாவை எதிர்த்துத் தீவிரமான

சமூகத்தில் மட்டுமே படிப்பும் கல்யாணமும் ஏககாலத்தில் நடைபெறுகின்றன.

நான் தொடர்ந்து படித்தேன். உயர்நிலைப் பள்ளியில் என்னை மந்தமானவன் என்று யாரும் எண்ணவில்லை. என் உபாத்தியாயர்கள் என்னிடம் எப்பொழுதும் அன்போடு இருந்தார்கள். என் படிப்பின் அபிவிருத்தி, நடத்தை ஆகியவைபற்றி ஆண்டுதோறும் பெற்றோருக்கு நற்சாட்சிப் பத்திரம் அனுப்பப்படும். கெடுதலான பத்திரம் என்னைக் குறித்து ஒரு தடவையேனும் வந்ததில்லை. உண்மையில், நான் இரண்டாம் வகுப்புத் தேறிய பிறகு பரிசுகளையும் பெற்றேன். ஐந்தாம், ஆறும் வகுப்புக்களில் முறையே நான்கு ரூபாயும், பத்து ரூபாயும் உபகாரச் சம்பளங்களாகப் பெற்றேன். இவைகளை நான் அடைந்ததற்கு என் திறமையைவிட என்னுடைய நல்லதிருஷ்டமே காரணம். ஏனெனில், இந்த உபகாரச் சம்பளம் எல்லோருக்கும் உரியதன்று. கத்தியவாரில் சோராத் பகுதியிலிருந்து வரும் சிறந்த மாணவர்களுக்கு மாத்திரமே அது உண்டு. அந்த நாட்களில் நாற்பது முதல் ஐம்பது பேர் வரையில் கொண்ட ஒரு வகுப்பில் சோராத்திலிருந்து வரும் மாணவர்கள் பலர் இருப்பதில்லை.

என் திறமையில் எனக்குப் பிரமாதமான மதிப்பு இருந்ததில்லை என்பதே ஞாபகம். எனக்குப் பரிசுகளும் உபகாரச் சம்பளங்களும் கிடைக்கும்போதெல்லாம் நான் ஆச்சரியப்படுவது வழக்கம். ஆனால், எனது நன்னடத்தையை நான் சர்வ ஜாக்கிரதையாகக் காப்பாற்றி வந்தேன். இதில் ஒரு சிறிது குறை ஏற்பட்டாலும் கண்ணீர் விட்டு அழுதுவிடுவேன். கண்டிக்கப்பட்டாலோ கண்டிக்கப்பட வேண்டியவன் என்று

---

கிளர்ச்சி செய்ததோடு அதிலிருந்து முஸ்லிம்களுக்கு விலக்களிக்க வேண்டும் என்றும் வைசிராயிடம் தூது சென்றார். ஆனால், அம்மசோதாவையும் பெண்களின் சமத்துவ உரிமையையும் பலமாக ஆதரித்த மகாத்மா 1929, அக்டோபர், 17–இல் 'எங் இந்தியா'வில் எழுதியதாவது : "பெண்கள் விஷயத்தில் ஆண்கள் செய்யும் அட்டூழியங்களைக் குறித்து ஆத்திரமடைவதற்கு நான் பெண்ணாக இருக்க வேண்டும் என்ற அவசியமே இல்லை. சொத்து வாரிசு உரிமைச் சட்டம் போக்குவதைவிட இன்னும் அதிகமானதான தீமையைப் போக்குவதைப் பற்றியது சாரதா சட்டம்...."

1927 ஜூலை 13-ஆம் தேதி மகாத்மா காந்தி பெங்களூரில் இருந்தபோது அவ்வூர் சமூக அபிவிருத்திச் சங்கத்தினர் அளித்த உபசாரத்திற்குப் பதிலளிக்கையிலும் குழந்தை மணங்களை வெறுத்துக் கூறினார். அவர் சொன்னதாவது: "நூற்றுக்கணக்கான பெண்களைப் பார்த்திருக்கிறேன். ஆனால், நான் சென்ற இடங்களில் பார்த்த பதின்மூன்று வயதுக்கு மேற்பட்ட பெண்களில், இரண்டு மூன்று பேரைத் தவிர மணமாகாதவர்களை நான் பார்த்ததில்லை. தனது மடியில் உட்காரவே தகுதியான பெண்ணை ஒருவர் மணந்து கொள்ளுவது என்பது மதமே அன்று; மோசமான மதவிரோதச் செய்கை இது. பதினாறு வயதுக்கு உட்பட்ட பெண்களை மணப்பதில்லை என்று ஒவ்வோர் இளைஞரும் பிரதிக்ஞை செய்து கொள்ளுவார்கள் என்று எதிர்பார்க்கிறேன் "

உபாத்தியாயர் கருதிவிட்டாலோ, என்னால் சகிக்க முடியாது. ஒரு தடவை அடிபட்டதாக எனக்கு நினைவிருக்கிறது. அடி பட்டதற்காக நான் வருத்தப்படவில்லை; நான் அடிபட வேண்டியவன் என்று கருதப்பட்டதே எனக்கு அதிக வருத்தத்தை அளித்தது. அதற்காகப் பரிதாபகரமாக அழுதேன். முதல் வகுப்பிலோ, இரண்டாம் வகுப்பிலோ படித்தபோது நடந்தது அது. நான் ஏழாம் வகுப்பில் படித்துக்கொண்டிருந்த போது அத்தகைய மற்றொரு சம்பவம் நிகழ்ந்தது. அச்சமயம் தோராப்ஜி எதுல்ஜி ஜிமி தலைமையாசிரியராக இருந்தார். மாணவர்களுக்கெல்லாம் அவரிடம் அதிகப் பிரியம். அதே சமயத்தில் கட்டுத் திட்டங்களில் மிகக் கண்டிப்பானவர்; குறிப்பிட்ட முறைப்படி காரியங்களைச் செய்பவர்; நன்றாகப் போதிப்பவருங் கூட. அவர் மேல் வகுப்புப் பையன்களுக்குத் தேகாப்பியாசத்தையும், கிரிக்கெட்டையும் கட்டாயமாக்கிவிட்டார். இந்த இரண்டும் எனக்குப் பிடிக்கவில்லை. இவை கட்டாயமாக்கப்படுவதற்கு முன்னால் நான் தேகாப்பியாசம் செய்ததோ, கிரிக்கெட் அல்லது கால் பந்து விளையாடியதோ இல்லை. ஒன்றிலும் சேராமல் நான் ஒதுங்கி இருந்துவிட்டதற்கு எனக்கிருந்த கூச்சம் ஒரு காரணம். அப்படி இருந்துவிட்டது தவறு என்பதை இப்பொழுது அறிகிறேன். படிப்புக்கும் தேகப்பயிற்சிக்கும் சம்பந்தமே இல்லை என்ற தவறான கருத்தும் அப்பொழுது எனக்கு இருந்தது. ஆனால், இன்று, பாடத் திட்டத்தில் மனப் பயிற்சிக்கு எவ்வளவு இடம் அளிக்கப்படுகிறதோ அவ்வளவு, உடற்பயிற்சிக்கும் அளிக்கப்பட வேண்டும் என்பதை அறிவேன்.

என்றாலும், தேகப் பயிற்சியில் கலந்துகொள்ளாமல் இருந்துவிட்டதனால் எனக்கு அதிகத் தீமை எதுவும் ஏற்பட்டுவிடவில்லை என்றும் கூறுவேன். இதற்கு ஒரு காரணம் உண்டு. திறந்த வெளியில் நீண்ட தூரம் நடப்பதால் ஏற்படக் கூடிய நன்மைகளைக் குறித்துப் புத்தகங்களில் படித்திருந்தேன். இந்த யோசனை எனக்குப் பிடித்ததால் நீண்ட நேரம் நடக்கும் பழக்கம் எனக்கு ஏற்பட்டது. அப்பழக்கம் இன்னும் எனக்கு இருக்கிறது. இதன் பயனாக என் உடல் நன்கு வலுப் பெற்றது.

தேகாப்பியாச வகுப்புக்குப் போக நான் விரும்பாததற்குக் காரணம், என் தந்தைக்குப் பணிவிடை செய்ய வேண்டும் என்று எனக்கு இருந்த ஆர்வமேயாகும். பள்ளிக்கூடம் விட்டதும் நேரே அவசரமாக வீட்டுக்குப் போய் அவருக்குப் பணிவிடை செய்வேன். இந்தச் சேவை செய்வதற்குக் கட்டாயத் தேகப் பயிற்சி இடையூறாக இருந்தது. என் தந்தைக்கு நான் பணி விடை செய்ய வேண்டுமாகையால் தேகப் பயிற்சி வகுப்புக்குப் போகாதிருக்க அனுமதிக்குமாறு ஸ்ரீ ஜிமியிடம் கோரினேன். ஆனால், அவர் என் வேண்டுகோளை ஏற்றுக்கொள்ள மறுத்து

விட்டார். ஒரு நாள் சனிக்கிழமை; அன்று காலையில் பள்ளிக் கூடத்திற்குப் போக வேண்டும். மாலை 4 மணிக்குத் தேகப் பயிற்சிக்காக நான் வீட்டிலிருந்து திரும்பவும் பள்ளிக்கூடம் போக வேண்டும். நான் பள்ளிக்கூடம் போய்ச் சேருவதற்கு முன்னால் அங்கிருந்த பிள்ளைகளெல்லாம் போய்விட்டார்கள். வந்திருந்தோரின் கணக்கை ஸ்ரீ ஜிமி மறுநாள் தணிக்கை செய்து பார்த்தபோது நான் வரவில்லை என்று குறித்திருந்ததைக் கண்டார். ஏன் வரவில்லை என்று என்னைக் கேட்டதற்கு நடந்ததைச் சொன்னேன். நான் கூறியதை நம்ப அவர் மறுத்துவிட்டார். ஓரணுவோ அல்லது இரண்டணுவோ (எவ்வளவு என்று எனக்குச் சரியாக நினைவில்லை) அபராதம் செலுத்த வேண்டும் என்று உத்தரவிட்டார்.

பொய் சொன்னதாக நான் தண்டிக்கப்பட்டேன்! இது எனக்கு மிகுந்த மனவேதனை யாகிவிட்டது. நான் குற்றமற்றவன் என்பதை நிரூபிப்பது எப்படி? அதற்கு வழியே இல்லை. வேதனை தாங்காமல் கதறி அழுதேன். உண்மையுள்ளவன் எச்சரிக்கையுடன் இருப்பவனுகவும் இருக்க வேண்டியது முக்கியம் என்பதை உணர்ந்தேன். பள்ளிக்கூடத்தில் நான் அசட்டையாக நடந்துகொண்ட முதல் சந்தர்ப்பமும், கடைசிச் சந்தர்ப்பமும் இதுதான்.* முடிவில் அந்த அபராதம் ரத்துச் செய்யப்பட்டுவிட்டதில் நான் வெற்றியடைந்தேன் என்று இலேசாக ஞாபகம் இருக்கிறது. பள்ளிக்கூடம் விட்டதும் நேரே வீட்டுக்கு நான் வந்துவிட வேண்டும் என்று தாம் விரும்புவதாகத் தலைமை ஆசிரியருக்கு என் தந்தையே எழுதியதன் பேரில், தேகாப்பியாசத்திற்குப் போகவேண்டும் என்பதில் இருந்து விலக்குப் பெற்றேன்.

தேகாப்பியாசத்தில் அசட்டையாக இருந்துவிட்டதனுல் எனக்குத் தீமை ஏற்படாது போனுலும், மற்றொரு விஷயத்தில் நான் அசட்டையாக இருந்துவிட்டதன் பலனை இப்பொழுதும் அனுபவித்துக்கொண்டு வருகிறேன். கையெழுத்து நன்ருக இருக்க வேண்டும் என்பது படிப்பில் ஒரு பகுதியல்ல என்ற கருத்து எனக்கு எங்கிருந்து உண்டாயிற்று என்று

---

* காலந் தாழ்த்தாமல் நேரத்தில், பள்ளிக்கூடம் போய்விட வேண்டும் என்பதில் சிறுவர் காந்தி அதிக அக்கறையுடன் இருந்தார் என்று அவருடைய தமக்கை ராலியாத் பென் கூறுகிருர். தந்தை நோயுற்றிருந்த போது அவரைக் கவனித்துக்கொள்ளுவதே தாயாருக்கும் வேலையாக இருக்குமாம். காந்திஜியின் அண்ணியே சமையல் செய்வாராம். பள்ளிக்கூடத்துக்குப் புறப்படும் முன்பு சாப்பாடு தயாராகி விட்டதா என்று காந்திஜி அண்ணியைக் கேட்பாராம். சமைத்துக் கொண்டிருப்பதாக அண்ணி சொன்னதும், இரவில் சமைத்ததில் மிஞ்சியிருந்ததைப் போடச் சொல்லிச் சாப்பிட்டுவிட்டு அவசரமாகப் பள்ளிக்குப் போய்விடுவாராம். கொஞ்சம் இருந்து சரியாகச் சாப்பிட்டுப் போகுமாறு அவர் தந்தை பன்முறை கூறியிருக்கிருராம். ஆனுல், உரிய காலத்தில் பள்ளிக்கூடம் போய்விட வேண்டும் என்பதுதான் அவருக்குக் குறியாக இருக்குமாம்.

தெரியவில்லை. நான் இங்கிலாந்துக்குப் போகும் வரையில் இந்த அபிப்பிராயமே எனக்கு இருந்தது. பிறகு, முக்கியமாகத் தென்னாப்பிரிக்காவில், இளம் வக்கீல்களும், தென்னாப்பிரிக்காவில் பிறந்து, அங்கேயே படித்த இளைஞர்களும் மிக அழகாக எழுதுவதைக் கண்டபோது என்னைக் குறித்து நானே வெட்கப்பட்டதோடு ஆரம்பத்தில் அசிரத்தையுடன் இருந்துவிட்டதற்காக வருந்தவும் செய்தேன். மோசமான கையெழுத்தை, அரைகுறையான படிப்புக்கு அறிகுறியாகக் கொள்ளவேண்டும் என்று கருதினேன். கையெழுத்து நன்றாக இருக்கும்படி செய்யப் பிறகு முயன்றேன். ஆனால், அதற்குக் காலம் கடந்து போய்விட்டது. இளமையில் அசட்டையாக இருந்துவிட்டதனால் ஏற்பட்ட தீமையைப் பிறகு என்றுமே நிவர்த்தி செய்துகொள்ள இயலவில்லை. ஒவ்வோர் இளைஞரும் இளம் பெண்ணும், என்னுடைய உதாரணத்தைக் கண்டாவது எச்சரிக்கையுடன் இருக்கட்டும்; கையெழுத்து நன்றாக இருக்க வேண்டியதும் படிப்பின் ஒரு பகுதி என்பதை அறியட்டும். குழந்தைகளுக்கு எழுத்துக்களை எழுதுவதற்குக் கற்றுக் கொடுப்பதற்கு முன்னால் சித்திரம் வரையக் கற்றுக் கொடுக்க வேண்டும் என்று இப்பொழுது கருதுகிறேன். பூக்கள், பறவைகள் போன்றவைகளைக் குழந்தை பார்த்தே தெரிந்து கொள்ளுவதைப் போல, எழுத்துக்களையும் அது பார்த்தே தெரிந்துகொள்ளட்டும். பொருள்களைப் பார்த்து அவற்றை வரையக் கற்றுக்கொண்ட பிறகு எழுத்துக்களை எழுதக் கற்கட்டும். அப்பொழுது அக்குழந்தையின் கையெழுத்து அழகாக அமையும்.

என் பள்ளிக்கூட நினைவுகளில் குறிப்பிடத்தக்கவை மற்றும் இரண்டு உண்டு. என் விவாகத்தினால் எனக்கு ஒரு வருடப் படிப்பு வீணாகிவிட்டது. ஒரு வகுப்புத் தாண்டி மேல் வகுப்பில் என்னைத் தூக்கிப் போட்டு எனக்கு அந்த நஷ்டத்தை ஈடு செய்துவிட ஆசிரியர் விரும்பினார். நன்றாக உழைத்துப் படிக்கும் பிள்ளைகளுக்கே இந்தச் சலுகையை அளிப்பது வழக்கம். நான் மூன்றும் வகுப்பில் ஆறு மாதங்களே படித்தேன். கோடை விடுமுறைக்கு முன்னால் நடக்கும் பரீட்சைகளுக்குப் பிறகு என்னை நான்காம் வகுப்புக்கு அனுப்பிவிட்டார்கள். நான்காம் வகுப்பிலிருந்து பல பாடங்கள் ஆங்கிலத்திலேயே போதிக்கப்பட்டன. எனக்கோ திக்குத் திசை தெரியவில்லை. க்ஷேத்திர கணிதம் புதுப்பாடம். ஏற்கனவே அது எனக்கு அவ்வளவு நன்றாகத் தெரியாது. அதை ஆங்கிலத்திலும் போதிக்க ஆரம்பித்துவிட்டதால் எனக்கு இன்னும் அதிகக் கஷ்டமாயிற்று. ஆசிரியர் இப்பாடத்தை மிக நன்றாகவே சொல்லிக் கொடுத்தார். ஆனால், என்னால் விளங்கிக் கொள்ள இயலவில்லை. பன்முறையும் மனச்சோர்வடைந்து விடுவேன். மூன்றும் வகுப்புக்கே திரும்பிப் போய்விடலாமா என்றும் எண்ணுவேன். இரண்டு வருடப் படிப்பை ஒரே

வருடத்தில் படித்துவிடலாம் என்பது அதிகப்படியான ஆசை என்றும் எனக்குத் தோன்றும். ஆனால், அப்படி மூன்றாம் வகுப்புக்கே போய்விடுவது எனக்கு மாத்திரமல்ல, ஆசிரியருக்கும் அவமானம். ஏனெனில், கஷ்டப்பட்டுப் படிக்கக் கூடியவன் நான் என்று நம்பியே என்னை மேல் வகுப்பில் சேர்க்க அவர் சிபார்சு செய்தார். இந்த இரண்டு அவமானங்களையும் குறித்து எனக்கு ஏற்பட்ட பயத்தினால் விடாப்பிடியாகப் படிக்கலானேன். அதிகச் சிரமத்தின் பேரில் யூக்ளிட்டின்* பதின்மூன்றாவது பாடத்திற்கு வந்த பிறகு அந்தப் பாடம் மிக எளிதானது என்று திடீரென்று எனக்குத் தோன்றியது. பகுத்தறிவின் சக்தியைக் கொண்டு மாத்திரமே கற்றுவிட முடியும் ஒரு பாடம் கஷ்டமானதாகவே இருக்க முடியாது. அச்சமயத்திலிருந்து க்ஷேத்திர கணிதம் எனக்குச் சுலபமானதாகவும் சுவையுள்ளதாகவும் ஆயிற்று.

என்றாலும், சமஸ்கிருத பாடம் அதிகக் கஷ்டமாகத்தான் இருந்தது. க்ஷேத்திர கணிதத்தில் மனப்பாடம் செய்ய வேண்டியது எதுவும் இல்லை. ஆனால், சமஸ்கிருதத்திலோ ஒவ்வொன்றையும் மனப்பாடம் செய்ய வேண்டும் என்று எண்ணினேன். இந்தப் பாடமும் நான்காம் வகுப்பிலிருந்தே சொல்லிக் கொடுக்கப்பட்டது. ஆனால், வகுப்புக்குப் போனதும் மனச்சோர்வு அடைந்துவிட்டேன். அந்த ஆசிரியரோ கடுமையாக வேலை வாங்குகிறவர். பையன்களை நிர்ப்பந்தப் படுத்துவதில் அவருக்கு ஒரே ஆசை என்றும் நினைத்தேன். சமஸ்கிருத ஆசிரியருக்கும் பர்ஸிய பாஷை ஆசிரியருக்கும் ஒரு வகைப் போட்டியே இருந்து வந்தது. 'பர்ஸிய பாஷை போதித்த ஆசிரியர் மாணவர்களிடம் அப்படிக் கண்டிப்பில்லாதவர்; பர்ஸிய பாஷை இலகுவானது: அந்த ஆசிரியரும் நல்லவர்; மாணவர்களை வருத்துவதில்லை' என்று பையன்கள் அடிக்கடி தங்களுக்குள் பேசிக்கொள்ளுவார்கள். 'சுலபம்' என்பதில் மயங்கிவிட்டேன். ஒரு நாள் பர்ஸிய வகுப்பிலேயே போய் உட்கார்ந்துகொண்டேன். நான் இவ்விதம் செய்ததற்காகச் சமஸ்கிருத ஆசிரியர் வருத்தப்பட்டார். என்னை அழைத்துப் பக்கத்தில் வைத்துக்கொண்டு பின் வருமாறு சொன்னார்: "நீ ஒரு வைஷ்ணவரின் மகன் என்பதை எப்படி மறந்துபோனாய்? உன் மதத்தின் மொழியை நீ கற்க வேண்டாமா? இதில் உனக்கு ஏதேனும் கஷ்டமிருந்தால் என்னிடம் வந்து சொல்லுவதற்கென்ன? என்னால் ஆன வரையில் சிரமப்பட்டு மாணவர்களான உங்களுக்குச் சமஸ்கிருதம் சொல்லிக்கொடுக்க வேண்டும் என்பதே என் விருப்பம். மேலே போகப் போக மனத்தைக் கவரும் விஷயங்கள் இம்மொழியில் இருப்பதை

* யூக்ளிட்: கி. மு. 3-ஆம் நூற்றாண்டில் கிரேக்க நாட்டில் வாழ்ந்த கணித மேதை. இவருடைய ஆராய்ச்சி முடிவுகள் அடங்கிய நூல்தான் இந்த நூற்றாண்டு வரையிலும் க்ஷேத்திரக் கணித பாடப் புத்தகமாக இருந்து வந்திருக்கிறது.

மகாத்மா—ஏழாவது வயதில்



மகாத்மா—பதினான்காம் வயதில்

# 6

# ஒரு துக்கமான சம்பவம்

உயர்தரப் பள்ளியில் பல சமயங்களிலும் எனக்கு இருந்த நண்பர்கள் மிகச் சிலரே; அவர்களில் இருவர் நெருங்கிய நண்பர்கள் எனலாம். அவர்களில் ஒருவருடைய நட்பு வெகு காலம் நீடிக்கவில்லை. அவரை நான் கைவிடவில்லை. மற்றவர்களுடன் நான் நட்புக் கொண்டிருந்ததற்காக அவர்தான் என்னைக் கைவிட்டுவிட்டார். பின்னால் ஏற்பட்ட இந்த நட்பை, என் வாழ்க்கையில் நேர்ந்த ஒரு துக்கமான சம்பவமாகவே நான் கருதுகிறேன். இந்நட்பு நீண்ட காலம் நீடித்தது. சீர்திருத்த வேண்டும் என்ற உணர்ச்சியின் பேரிலேயே இவருடன் நட்புக் கொண்டேன்.

இந்த நண்பர், முதலில் என் அண்ணனின் நண்பர். இருவரும் ஒன்றாகப் படித்தவர்கள். அவரிடமிருந்த குறைபாடுகளை நான் அறிவேன். ஆயினும், விசுவாசமுள்ள நண்பர் என்று அவரைக் கருதினேன். எனக்குக் கெட்ட சகவாசம் ஏற்பட்டிருக்கிறது என்று என் தாயார், என்ன மூத்த அண்ணன், என் மனைவி முதலியவர்கள் எல்லோரும் எனக்கு எச்சரிக்கை செய்தார்கள். என் மனைவியின் எச்சரிக்கையை நான் மதிக்கவில்லை. ஆனால், என் தாயார், மூத்த அண்ணன் ஆகியோருடைய கருத்துக்கு விரோதமாக நான் நடக்கத் துணியவில்லை. ஆகவே, அவர்களுக்குப் பின் வருமாறு சமாதானம் கூறினேன்: "நீங்கள் கூறும் குறைகளெல்லாம் அவரிடம் இருக்கின்றன என்பதை அறிவேன். ஆனால், அவரிடம் இருக்கும் நற்குணங்கள் உங்களுக்குத் தெரியா. அவரைத் திருத்திவிட வேண்டும் என்பதற்காகவே நான் அவருடன் பழகுவதால் அவர் என்னைக் கெடுத்துவிட முடியாது. அவர் தம்முடைய வழிகளை மாத்திரம் திருத்திக்கொண்டு விட்டால் மிகச் சிறந்தவராகிவிடுவார் என்பது நிச்சயம். ஆகையால், எனக்காக நீங்கள் கவலைப்பட வேண்டாம் என்று உங்களை வேண்டிக்கொள்ளுகிறேன்."

நான் இவ்விதம் கூறியது அவர்களுக்குத் திருப்தியளித்திருக்கும் என்று நான் எண்ணவில்லை. என்றாலும் அவர்கள் என் சமாதானத்தை ஏற்றுக்கொண்டு என் வழியே போக என்னை அனுமதித்து விட்டார்கள்.

நான் அப்பொழுது எண்ணியதெல்லாம் தவறு என்பதைப் பிறகு கண்டேன். சீர்திருத்த முற்படுகிறவர், யாரைச் சீர்திருத்த விரும்புகிறாரோ அவரிடம் நெருங்கிய சகவாசம் வைத்துக்கொள்ள லாகாது. ஆன்ம ஒருமைப்பாடே உண்மையான நட்பு. ஆனால், அத்தகைய நட்பை இவ்வுலகில் காண்பது அரிது. ஒரேவித சுபாவமுள்ளவர்களிடையே ஏற்படும் நட்பே

முற்றும் சிறந்ததாகவும் நீடித்ததாகவும் இருக்கும். நண்பர்களில் ஒருவர் குணம் இன்னொருவருக்குப் படிகிறது. ஆகவே, நட்பினால் சீர்திருத்துவது என்பதற்கு அதிக இடமே இல்லை. தனிப்பட்டு அன்னியோன்னியமாக நெருங்கிப் பழகுவதையெல்லாம் தவிர்க்க வேண்டும் என்பதே என் அபிப்பிராயம். ஏனெனில், மனிதனிடம் நற்குணங்களைவிடத் தீய குணங்களே எளிதில் படிந்துவிடுகின்றன. கடவுளோடு தோழமை கொள்ள விரும்புவோர் தனியே விலகி இருக்க வேண்டும்; அல்லது உலகம் முழுவதையுமே தமது நண்பனாக்கிக்கொள்ள வேண்டும். நான் கூறுவது தவறாக இருக்கலாம். என்றாலும், ஒரு நெருங்கிய நட்பை வளர்த்துக்கொள்ள நான் செய்த முயற்சியில் தோல்வியே ஏற்பட்டது.*

ராஜ்கோட் முழுவதிலும் 'சீர்திருத்தம்' என்ற அலையின் வேகம் மிகுந்திருந்த சமயத்திலேயே இந்த நண்பரை முதல் முதலில் நான் சந்தித்தேன். எங்கள் ஆசிரியர்களில் பலர் ரகசியமாக மதுவும் மாமிசமும் சாப்பிடுகிறார்கள் என்று இந்த நண்பர் என்னிடம் கூறினார். ராஜ்கோட்டிலிருக்கும் பல பிரமுகர்களின் பெயர்களைச் சொல்லி, அவர்களும் இந்த ரகத்தில் சேர்ந்தவர்களே என்றார். உயர்நிலைப் பள்ளி மாணவர்களில் சிலரும் இப்படிச் செய்கிறார்கள் என்றார்.

இதைக் கேட்டு நான் ஆச்சரியமும் மனவேதனையும் அடைந்தேன். அவர்கள் இவ்விதமானதற்குக் காரணம் என்ன என்று நான் கேட்டதற்குப் பின் வருமாறு அவர் சொன்னார்: "புலால் உண்ணாததால் நாம் பலமில்லாதவர்களாக இருக்கிறோம். புலால் உண்பவர்களாக இருப்பதனாலேயே ஆங்கிலேயரால் நம்மை ஆள முடிகிறது. நான் எவ்வளவு திடகாத்திரத்துடன் இருக்கிறேன் என்பதை நீயே பார்க்கிறாய். ஓட்டப் பந்தயத்தில் நான் வல்லவன் என்பதும் உனக்குத் தெரியும். இதற்குக்

* காந்திஜி தென்னாப்பிரிக்காவில் இருந்தபோதும் இந்த நண்பர் அவருடன் இருந்திருக்கிறார். இந்த நண்பரின் மகாமோசமான கெட்ட நடத்தைக்குச் சரியான ருசுவைத் தாமே நேரில் காணும் வரையில் அவர்மீது கூறப்பட்ட புகார்களையெல்லாம் தாம் எவ்விதம் அலட்சியம் செய்து வந்தார் என்பதைக் காந்திஜியே இச்சுயசரிதையில், 'குடித்தனக்காரனாக' என்ற அத்தியாயத்தில் குறிப்பிடுகிறார். இங்கிலாந்தில் காந்திஜி இருந்த சமயம், இந்நண்பருக்கு உதவுவதற்காகத் தமக்குத் தேவையானவைகளை எவ்வளவோ குறைத்துக் கொண்டு மிகமிகச் சிக்கனமாக வாழ்ந்திருக்கிறார். காந்திஜிக்கு இந்நண்பரிடம் ஏன் அவ்வளவு பரிவு இருந்து வந்தது என்பதற்கு ஸ்ரீ பிரபுதாஸ் காந்தி தமது நூலில் பின்வருமாறு காரணம் கூறுகிறார்:

"இதைக் குறித்து நான் விசாரித்ததில், இந்நண்பரிடம் அவருக்கு இருந்த விசுவாசத்திற்கு இவரிடம் காந்திஜி கொண்ட ஒரு சிறிதளவு நன்றியறிதலும் காரணம் எனத் தெரிகிறது. இவர்கள் இருவரும் சேர்ந்து படித்த பள்ளிக்கூடத்தில் இந்த முஸ்லிம் நண்பர், பலவீனமாயிருக்கும் நண்பர்களின் கட்சியில்தான் எப்பொழுதுமே இருப்பாராம். தாம் பலசாலியாக இருந்ததால், முரட்டுப் பையன்கள், தங்கள் இஷ்டப்படி எதையும் செய்துவிட விடமாட்டாராம். இத்தகைய வீரமுள்ள வாலிபன் சீர்திருந்தவேண்டுமென்று மோகன் விரும்பியிருக்கிறார்."

காரணம் நான் புலால் உண்பதுதான். மாமிசம் உண்போருக்குக் கட்டிச் சிரங்குகள், கொப்பளங்கள் முதலியன வருவதில்லை; எப்பொழுதாவது அவர்களுக்கு வந்துவிட்டாலும் சீக்கிரத்தில் குணமாகிவிடுகின்றன. புலால் உண்ணும் நமது உபாத்தியாயர்களும் மற்ற முக்கியஸ்தர்களும் முட்டாள்கள் அல்ல. அதிலிருக்கும் நன்மை அவர்களுக்குத் தெரியும். நீயும் அவர்களைப்போல சாப்பிட வேண்டும். சோதனை செய்து பார்ப்பதைப்போல நல்லது எதுவும் இல்லை. சாப்பிட்டு அது எவ்வளவு பலத்தைக் கொடுக்கிறது என்று பார்."

புலால் உண்பதை வற்புறுத்திச் சொல்லப்பட்ட இவை யாவும் ஒரே சமயத்தில் கூறப்பட்டவை அல்ல. என் மனத்தில் படும்படி செய்வதற்காக என் நண்பர் பல சமயங்களில் நீண்ட, விரிவான வாதம் புரிந்திருக்கிறார். அதன் சாரமே இது. என் மூத்த சகோதரர் இதற்கு முன்னாலேயே அந்தப் படுகுழியில் விழுந்துவிட்டார். ஆகையால் நண்பரின் வாதங்களை அவரும் ஆதரித்துப் பேசினார். என் அண்ணனோடும், இந்த நண்பரோடும் ஒப்பிடும்போது, நான் நிச்சயமாக நோஞ்சலாகவே இருந்தேன். அவர்கள் இருவரும் திடகாத்திரம் உடையவர்கள்; பலசாலிகள்; அதிக தைரியசாலிகள். இந்த நண்பரின் பராக்கிரமச் செயல்களைக் கண்டு மயங்கிவிட்டேன். அவர் நீண்ட தூரம் ஓடுவார்; அத்துடன் அசாதாரணமான வேகத்துடனும் ஓடுவார். உயரத்திலும் நீளத்திலும் தாவிக் குதிப்பதில் சமர்த்தர். எவ்வளவு அடி கொடுத்தாலும் சரி, தாங்கிக்கொள்ளுவார். இந்தப் பராக்கிரமச் செயல்களையெல்லாம் அவர் அடிக்கடி என்னிடம் செய்து காட்டுவார். தமக்கு இல்லாத திறமையைப் பிறரிடம் காணும்போது யாரும் பிரமித்துவிடுவது இயல்பு. அதேபோல நண்பரின் பராக்கிரமச் செயல்களைப் பார்த்து நானும் பிரமித்துப் போனேன். அவரைப்போல் நானும் இருக்க வேண்டும் என்ற ஆசை உண்டாயிற்று. என்னால் தாண்டவோ, ஓடவோ முடியாது. அவரைப்போன்றே நானும் ஏன் பலமுள்ளவனாக இருக்கக் கூடாது?

மேலும், அப்பொழுது நான் ஒரு கோழையாகவும் இருந்தேன். திருடர்கள் பயமும், பிசாசுகள், பாம்புகள் ஆகியவற்றின் பயமும் எனக்கு இருந்தன. இரவில் வீட்டைவிட்டு வெளியே வரவே மாட்டேன். இருட்டு என்றாலே எனக்குப் பயங்கரமாக இருக்கும். ஒரு பக்கத்திலிருந்து பிசாசுகளும், மற்றொரு பக்கத்திலிருந்து திருடர்களும், வேறொரு பக்கத்திலிருந்து பாம்புகளும் வருவது போலக் கற்பனை செய்துகொண்டிருக்கும் காரணத்தால், இருட்டில் தூங்குவதென்பது என்னால் முடியாத காரியம். எனவே, அறையில் விளக்கு இல்லாமல் என்னால் தூங்க இயலாது. என் மனைவி அப்பொழுது குழந்தையல்ல; வாலிபப் பருவத்தையடையும் தறுவாயில் இருந்தாள். அவள் என் பக்கத்தில் படுத்துத் தூங்கிக் கொண்டிருப்பாள்

எனக்கு இருந்த பயங்களையெல்லாம் அவளிடம் எப்படிச் சொல்லுவது? என்னைவிட அவள் தைரியசாலி என்பதை நான் அறிவேன். இதனால் என்னைக் குறித்து நானே வெட்கப்படுவேன். பாம்பு, பிசாசு என்ற பயம் அவளுக்கு இல்லை. இருட்டில் எங்கே வேண்டுமானாலும் போவாள். என்னிடமிருந்த இந்தப் பலவீனங்களையெல்லாம் என் நண்பர் அறிவார். உயிரோடு பாம்பைத் தாம் கையில் பிடிக்க முடியும் என்றும், திருடர்களை எதிர்த்து விரட்டத் தம்மால் முடியும் என்றும், பிசாசுகள் உண்டு என்றே தாம் நம்புவதில்லை என்றும் அவர் என்னிடம் கூறுவார். இவ்வளவும் புலால் உண்பதன் பலன்கள் என்பார்.

குஜராத்திக் கவியான நர்மத்தின் சிந்துப் பாடல் ஒன்றைப் பள்ளிச் சிறுவர்கள் பாடுவார்கள். அது பின் வருமாறு:

''பிரம்மாண்டமான ஆங்கிலேயனைப் பார்,
சின்னஞ் சிறிய இந்தியனை அவன் ஆளுகிறான்.
காரணம்: புலால் உண்பதால்
அவன் ஐந்து முழ உயரம் இருப்பதே.''

இவையெல்லாம் தமக்குரிய விளைவை என்னிடம் உண்டு பண்ணிவிட்டன. நான் தோற்றுப் போனேன். 'புலால் உணவு நல்லது; அது என்னைப் பலமுள்ளவனாகவும் தைரியசாலியாகவும் மாற்றும்; நாடு முழுவதுமே புலால் உணவு கொள்ள ஆரம்பித்து விட்டால் ஆங்கிலேயரையே வென்றுவிடலாம்' என்ற எண்ணங்கள் என்னுள் வளர்ந்தன.

அதன் பேரில், பரிசோதனையைத் தொடங்குவதற்கு ஒரு நாளும் குறிக்கப்பட்டது. அது ரகசியமாக நடைபெற வேண்டும். காந்தி சமூகத்தினர் வைஷ்ணவர்கள். முக்கியமாக என் பெற்றோர்கள் தீவிர வைஷ்ணவர்கள். நாள் தவறாமல் அவர்கள் விஷ்ணு கோயிலுக்குப் போவார்கள். குடும்பத்திற்கென்றே சொந்தமான கோயில்களும் உண்டு. ஜைன சமயம் குஜராத்தில் பலமாகப் பரவி இருந்தது. அதன் செல்வாக்கு எங்கும் எல்லாச் சமயங்களிலும் உணரப்பட்டது. குஜராத்தில் ஜைனர்களிடத்திலும், வைஷ்ணவர்களிடத்திலும் புலால் உணவுக்கு இருந்த அவ்வளவு பலமான எதிர்ப்பையும், அதன்மீது இருந்த கடுமையான வெறுப்பையும்போல இந்தியாவிலோ, வெளிநாடுகளிலோ காண முடியாது. இத்தகைய சூழ்நிலையில் பிறந்து வளர்ந்தவன் நான். அதோடு என் பெற்றோரிடம் எனக்கு மிகுந்த பக்தியும் உண்டு. நான் புலால் உண்டேன் என்பதை அறிந்த கணத்திலேயே அவர்கள் அதிர்ச்சியினால் செத்துவிடுவார்கள் என்பதையும் அறிவேன். மேலும் சத்தியத்தில் நான் கொண்டிருந்த பற்று, என்னை அதிகப்படியான எச்சரிக்கையுடன் இருக்கும்படியும் செய்தது. மாமிசம் சாப்பிட ஆரம்பித்துவிடுவேனாயின், என் பெற்றோரை நான்

ஏமாற்றவேண்டியிருக்கும் என்பது எனக்கு அப்பொழுது தெரியாது என்று சொல்லுவதற்கில்லை. ஆனால், என் புத்தியெல்லாம் 'சீர்திருத்த'த்தில் ஈடுபட்டிருந்தது. ருசிக்குச் சாப்பிடுவது என்பதே அதில் இல்லை. அதற்குத் தனிப்பட்ட நல்ல ருசி இருப்பதாக எனக்குத் தெரியாது. பலசாலியாகவும் தைரியசாலியாகவும் ஆகவேண்டும் என்று விரும்பினேன். ஆங்கிலேயரைத் தோற்கடித்து இந்தியா சுதந்திரமடையும்படி செய்வதற்கு என் நாட்டினரும் அப்படி ஆகவேண்டும் என்று ஆசைப்பட்டேன். 'சுயராஜ்யம்' என்ற சொல்லை அதுவரை நான் கேட்டதில்லை. ஆனால், சுதந்திரம் என்றால் என்ன என்பது எனக்குத் தெரியும். 'சீர்திருத்த'த்தில் இருந்த உற்சாகம் என்னைக் குருடனாக்கிவிட்டது. ரகசியமாகவே இருக்கப்போகிறது என்பது நிச்சயமாகிவிடவே, இக்காரியத்தை என் பெற்றோருக்குத் தெரியாதபடி மறைத்து வைப்பது சத்தியத்தினின்று தவறியதாகாது என்றும் என்னையே சமாதானப்படுத்திக் கொண்டேன்.

## 7

# ஒரு துக்கமான சம்பவம்

**[தொடர்ச்சி]**

முடிவில் அந்த நாள் வந்தது. அப்பொழுது நான் இருந்த நிலையை முழுவதும் விவரிப்பதென்பது கஷ்டம். ஒருபக்கத்தில் 'சீர்திருத்த' ஆர்வம்; வாழ்க்கையில் முக்கியமான மாறுதலைச் செய்யும் புதுமை. மறு பக்கத்தில், இந்தக் காரியத்தைத் திருடனைப்போல் ஒளிந்துகொண்டு செய்யவேண்டியிருக்கிறதே என்ற வெட்கம். இந்த இரண்டில் எது என்னிடம் மேலோங்கி இருந்தது என்பதை என்னால் சொல்ல முடியாது. ஆற்றங்கரையில் தன்னந்தனியான இடத்தைத் தேடி அங்கே சென்றோம். அங்கே என் வாழ்க்கையிலேயே முதல் தடவையாக மாமிசத்தைப் பார்த்தேன். கடை ரொட்டியும் அதோடு இருந்தது. அந்த இரண்டும் எனக்குப் பிடிக்கவில்லை. ஆட்டிறைச்சி, தின்பதற்குத் தோலைப்போல் கடினமாக இருந்தது. என்னால் அதைத் தின்னவே முடியவில்லை. எனக்கு அருவருப்பாக இருந்தது. தின்ன முடியாதென்று விட்டுவிட்டேன்.

அதன் பிறகு அன்றிரவெல்லாம் எனக்குத் தூக்கமே வரவில்லை. ஒரு பயங்கரம் எனக்குச் சதா இருந்துகொண்டிருந்தது. கொஞ்சம் கண் அயரும்போதெல்லாம், உயிரோடு ஓர் ஆடு என் வயிற்றுக்குள் இருந்துகொண்டு கத்துவதுபோல் தோன்றும். திடுக்கிட்டு எழுவேன். செய்துவிட்ட காரியத்திற்காக மனம் உறுத்திக்கொண்டே இருக்கும். ஆனால், புலால் உண்பது ஒரு

கடமை என்று எனக்கு நானே நினைவு படுத்திக்கொள்வேன்; உற்சாகத்தையும் அடைவேன்.

என் நண்பர் பிடித்த பிடியைச் சாமானியத்தில் விட்டு விடக் கூடியவர் அல்ல. இறைச்சியை ருசியுள்ள பலகாரங்க ளாகத் தயார் செய்து, அவை கண்ணுக்கும் அழகாக இருக்கும்படி செய்ய ஆரம்பித்தார். அவற்றைச் சாப்பிடுவதற்கு இப்பொழுதெல்லாம் ஆற்றங்கரையில் தன்னந்தனியான இடத்தைத் தேடிப் போவதும் இல்லை. ராஜாங்க மாளிகை ஒன்று கிடைத்தது. மேஜை நாற்காலிகளெல்லாம் போடப்பட்டிருந்த அம்மாளிகையின் போஜன மண்டபத்தை, அங்கிருந்த தலைமைச் சமையற்காரனுடன் பேசி, அந்த நண்பர் ஏற்பாடு செய்திருந்தார்.

இந்தத் தூண்டிலில் நான் விழுந்துவிட்டேன். கடை ரொட்டியிடம் எனக்கு இருந்த வெறுப்பையும், ஆடுகளிடம் கொண்டிருந்த இரக்கத்தையும் ஒருவாறு போக்கிக்கொண்டு விட்டேன். தனி மாமிசம் எனக்குப் பிடிக்கவில்லையென்றாலும் மாமிசப் பலகாரங்களை ருசித்துச் சாப்பிட்டு வந்தேன். இவ்விதம் சுமார் ஓராண்டு நடந்து வந்தது. ஆனால், ஆறு தடவைகளுக்கு மேல் இத்தகைய விருந்துகளை நாங்கள் சாப்பிட்டுவிடவில்லை. ஏனெனில், தினந்தோறும் எங்களுக்கு ராஜாங்க மாளிகை கிடைக்கவில்லை. அத்துடன் மாமிசப் பலகாரங்களைத் தயாரிப்பது அதிகச் செலவுள்ளதாகையால் அடிக்கடி தயாரிப்பது என்பதி லும் கஷ்டங்கள் இருந்தன. இந்தச் 'சீர்திருத்த'த்திற்குக் கொடுக்க என்னிடம் பணம் இல்லை. ஆகையால், இந்தச் செலவுக்கு வேண்டியதையெல்லாம் என் நண்பர்தான் தேடிக் கொள்ள வேண்டி யிருந்தது. அவருக்கு எப்படிப் பணம் கிடைத்தது என்பதும் எனக்குத் தெரியாது. என்னை மாமிசம் தின்பவனாக்கிவிட வேண்டும் என்பதில் அவர் உறுதியுடன் இருந்ததால் இதற்கு அவர் எப்படியோ பணம் சம்பாதித்து வந்தார். ஆனால், இதில் அவருடைய சக்திக்கும் ஓர் அளவு இருந்திருக்கவே வேண்டும். எனவே, இந்த விருந்துகள் சுருக்க மாகவும், நீண்ட நாட்களுக்கு ஒரு முறையும் தானே நடைபெற முடியும்?

இந்த ரகசிய விருந்துகளைச் சாப்பிடும் சந்தர்ப்பம் கிடைக் கும்போதெல்லாம் இரவில் வீட்டில் சாப்பிடுவது என்பது இயலாத காரியம். வந்து சாப்பிடும்படி வழக்கம்போல என் தாயார் கூப்பிடுவார். வேண்டாம் என்று கூறுவதற்குக் காரணம் என்ன என்றும் கேட்பார். 'எனக்கு இன்று பசியே இல்லை, ஏதோ வயிற்றில் கோளாறு இருக்கிறது' என்று சொல்லிவிடு வேன். இவ்விதம் நான் சாக்குப் போக்குச் சொல்லும்போது என் மனம் வேதனைப்படாமல் இராது. நான் பொய் சொல்லு கிறேன், அதுவும் தாயாரிடம் பொய் சொல்லுகிறேன் என்பதை அறிவேன். அதோடு, நான் மாமிசம் சாப்பிடுகிறேன் என்பது

என் தாயாருக்கும் தந்தைக்கும் தெரிந்துவிடுமாயின் அவர்கள் அதிர்ச்சியடைந்து வருந்துவார்கள் என்பதும் எனக்குத் தெரியும். இவற்றை நான் அறிந்திருந்தது, என் உள்ளத்தை அரித்துத் தின்றுகொண்டே இருந்தது.

ஆகவே, எனக்கு நானே பின்வருமாறு சொல்லிக்கொண்டேன்: 'மாமிசம் சாப்பிடவேண்டியது முக்கியந்தான்; நாட்டின் சாப்பாட்டில் சீர்திருத்தம் செய்ய வேண்டியதும் அவசியமே. என்றாலும், தாயிடமும் தந்தையிடமும் பொய் சொல்லி ஏமாற்றிக் கொண்டிருப்பது மாமிசம் சாப்பிடாததைவிட அதிக மோசமானது. ஆகையால், அவர்கள் உயிரோடு இருக்கும் வரையில் நான் மாமிசம் சாப்பிடுவதற்கில்லை. அவர்களுக்குப் பிற்காலம் நான் சுதந்திரம் பெற்றுவிடுவேன். அப்பொழுது நான் மாமிசத்தைப் பகிரங்கமாகவே சாப்பிடுவேன். ஆனால், அச்சமயம் வரும் வரையில் நான் அதைச் சாப்பிடாமல் இருந்துவிடுவேன்.'

நான் செய்துகொண்ட இந்த முடிவை என் நண்பருக்குத் தெரிவித்தேன். அதன் பின்னர் மாமிசத்தை நான் சாப்பிட்டதில்லை. தங்கள் குமாரர்களில் இருவர் மாமிசம் சாப்பிடுகிறவர்கள் ஆகிவிட்டனர் என்பது என் பெற்றோருக்குத் தெரியவே தெரியாது.

பெற்றோரிடம் பொய் சொல்லக்கூடாது என்ற எனது புனிதமான ஆசையின் காரணமாகவே மாமிசம் சாப்பிடுவதை நான் விட்டேன். ஆனால், என் நண்பருடன் பழகுவதை மாத்திரம் விடவில்லை. அவரைச் சீர்திருத்த வேண்டுமென்று நான் கொண்ட ஆர்வம் எனக்கே பெருந் தீங்காக விளைந்தது. இந்த உண்மையை அப்பொழுதெல்லாம் நான் அறிந்து கொள்ளவே இல்லை.

இதே சிநேகம், என் மனைவிக்கே நான் துரோகஞ் செய்யும்படியும் செய்திருக்கும். ஆனால், ஏதோ ஒரு சிறு மயிரிழையில் தப்பிக்கொண்டேன். என் நண்பர் ஒரு நாள் என்னை ஒரு விபசாரி வீட்டிற்கு அழைத்துச் சென்றார். அங்கே நான் எவ்விதம் நடந்துகொள்ள வேண்டும் என்பதையெல்லாம் சொல்லிக்கொடுத்து என்னை உள்ளே அனுப்பினார். எல்லாம் முன் கூட்டியே ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. கொடுக்கவேண்டிய பணத்தையும் கொடுத்தாயிற்று. பாவத்தின் வாய்க்குள் போய் விட்டேன். ஆனால், கடவுள் தமது எல்லையில்லாக் கருணையினால் என்னைத் தடுத்துக் காத்தார். இந்தப் பாவக்குழிக்குள் போனதுமே பார்வையை இழந்தவன்போல் ஆகிவிட்டேன். பேசவும் நா எழவில்லை. படுக்கையில் அப்பெண்ணின் பக்கத்தில் உட்கார்ந்தேன். ஆனால், ஒரு வார்த்தைகூட என்னால் பேச முடியவில்லை. ஆகவே, அவள் பொறுமையை இழந்துவிட்டாள். என்னைத் திட்டி, அவமதித்து, வெளியே போகச்

சொல்லிவிட்டாள். எனது ஆண்மைக்கே இதனல் இழுக்கு ஏற்பட்டுவிட்டதாக அப்பொழுது நினைத்தேன். இந்த அவ மானத்தினுல் நான் பூமிக்குள் புதைந்துவிட வேண்டும் என்றும் விரும்பினேன். ஆனல், என்னைக் காத்தருளியதற்காக அப்பொழுதிலிருந்து நான் கடவுளுக்கு நன்றி தெரிவித்து வருகிறேன். என் வாழ்க்கையில் இதுபோலவே நடந்த மற்றும் நான்கு சம்பவங்களும் எனக்கு நினைவிருக்கின்றன. அநேகமாக இவற்றிலெல்லாம் என்னளவில் நான் செய்த முயற்சியைவிட எனது நல்லதிருஷ்டமே என்னைக் காத்தது. கண்டிப்பான அறநெறியைக்கொண்டு கவனித்தால், இந்தச் சம்பவங்களை யெல்லாம் ஒழுக்கத் தவறுகள் என்றே சொல்ல வேண்டும். ஏனெனில், மனத்தில் சிற்றின்ப இச்சை இருந்தது; அது காரியத்தைச் செய்துவிட்டதற்குச் சமமே. ஆனல், சாதாரண நோக்கோடு கவனிப்பதாயின், உடலினுல் ஒரு பாவகாரியத்தைச் செய்துவிடாதவன் காப்பாற்றப்பட்டவனே என்று கருதப்படு வான். நான் காப்பாற்றப்பட்டேன் என்பதும் இந்த அர்த்தத் திலேயே.

சில செயல்களிலிருந்து தப்புவது, அப்படித் தப்புகிறவ னுக்கும் அவனைச் சுற்றியிருப்போருக்கும் தெய்வாதீனமாக நிகழும் ஒரு காரியமாக இருக்கிறது. அவனுக்கு நல்லது இன்ன தென்பதில் திரும்ப உணர்வு ஏற்படும்போது, அவ்விதம் தப்பி விட்டதற்காகக் கடவுளின் கருணைக்கு நன்றியுள்ளவனுகிருன். மனிதன் என்னதான் முயன்ருலும், அது முடியாமல் அடிக்கடி ஆசையின் வலையில் சிக்கிக்கொண்டு விடுகிருன் என்பதை நாம் அறிவோம். அப்படி அவன் சிக்கிக்கொண்டாலும், கடவுள் குறுக்கிட்டு அவனைக் காத்துவருவதும் உண்டு என்பதையும் அறிவோம். இவையெல்லாம் எவ்விதம் நிகழ்கின்றன? மனிதன் எவ்வளவு தூரம் தன் இஷ்டம்போல் நடந்துகொள்ளக் கூடிய வனுக இருக்கிருன்? எவ்வளவு தூரம் சந்தர்ப்பங்களுக்கு அவன் அடிமையாயிருக்கிருன்? விதி எங்கே வந்து புகுகிறது? என் பனவெல்லாம் நம்மால் அறிய இயலாத மர்மங்கள்; அவை என் றும் மர்மங்களாகவே இருந்துவரும்.

இனிக் கதையைத் தொடர்ந்து கவனிப்போம். என் நண்ப ரின் சகவாசம் தீமையானது என்பதை அறிய இந்த விபசாரி நிகழ்ச்சி கூட என் கண்களைத் திறந்துவிடவில்லை. எனவே, நான் எதிர்பாராத வகையில் அவரிடம் இருக்கும் சில குறைகளை என் கண்ணலேயே கண்ட பிறகுதான் என் கண் திறந்தது. அதுவரையில் நான் மற்றும் பல கசப்பான மருந்துகளை விழுங்கி யாக வேண்டியிருந்தது. நாம் காலவாரியாகப் போய்க்கொண் டிருக்கிருே மாகையால், அவற்றைக் குறித்துப் பின்னுல் கூறு கிறேன்.

என்ருலும், ஒரு விஷயம் அதே சமயத்தில் நடந்ததானை யால் அதைப் பற்றி இப்பொழுது நான் கூறவே வேண்டும்.

என் மனைவிக்கும் எனக்கும் ஏற்பட்ட அபிப்பிராய பேதங்களுக்கு ஒரு காரணம், இந்த நண்பரோடு நான் சேர்ந்திருந்ததே என்பதில் சந்தேகமில்லை. மனைவியிடம் அளவற்ற அன்பும் சந்தேகமும் கொண்ட கணவன் நான். என் மனைவிமீது நான் கொண்டிருந்த சந்தேகத் தீயை இந்த நண்பர் ஊதி வளர்த்து விட்டார். அவருடைய கூற்று உண்மைதானு என்று நான் சந்தேகிக்கவே இல்லை. அவர் கூறியவைகளைக் கேட்டுவிட்டு என் மனைவியை அடிக்கடி துன்புறுத்தி வந்தேன். இவ்வாறு இம்சை புரிந்த குற்றத்திற்காக என்னை நான் ஒருபோதும் மன்னித்துவிடவில்லை. அநேகமாக ஒரு ஹிந்து மனைவியே இத்தகைய கஷ்டங்களையெல்லாம் பொறுமையோடு சகித்துக் கொள்ளக்கூடும். இதனுலேயே பெண்ணைப் பொறுமையின் அவதாரம் என்று போற்றுகிறேன். ஒரு வேலைக்காரனைத் தவருகச் சந்தேகித்து விட்டால், அவன் வேலையைவிட்டுப் போய்விடுவான்; அதே போல மகனைச் சந்தேகித்தால் தந்தையின் வீட்டைவிட்டே வெளியேறி விடுவான். நண்பனைத் தவருகச் சந்தேகித்தால் நட்பை முறித்துக் கொள்ளுவான். மனைவி, தன் கணவன் பேரில் சந்தேகம் கொண்டால் சும்மா இருந்துவிடுவாள். ஆனல், அவள்மீது கணவன் சந்தேகங் கொண்டுவிட்டாலோ அவளுக்கு நாசமே. அவள் எங்கே போவது? ஒரு ஹிந்து மனைவி, கோர்ட்டு மூலம் விவாக ரத்துப் பெற முடியாது. சட்டத்தில் அவளுக்குப் பரிகாரம் இல்லை. என் மனைவியையும் நான் இத்தகைய நிர்க்கதியான நிலைமைக்குக் கொண்டு போய்விட்டதை என்னல் மறக்கவே முடியாது; என்னை மன்னித்துவிடவும் முடியாது.

அகிம்சா தருமத்தை, அதன் எல்லா அம்சங்களிலும் நான் உணர்ந்த பின்னரே, சந்தேகத்தின் புரை என்னைவிட்டு ஒழிந்தது. அப்பொழுதுதான் பிரம்மச்சரியத்தின் மகிமையை உணர்ந்தேன். அப்பொழுதுதான் மனைவி, கணவனின் வாழ்க்கைத் துணைவியும் தோழியுமேயன்றி அவனுக்கு அவள் அடிமையல்ல என்பதையும், அவனுடைய சுக துக்கங்களில் எல்லாம் அவனேடு சமபங்கு வகிப்பவள் என்பதையும், கணவனைப் போலத் தன் வழியில் நடந்துகொள்ள அவளுக்குச் சுதந்திரம் உண்டு என்பதையும் தெரிந்துகொண்டேன். அவநம்பிக்கைகளும் சந்தேகங்களும் நிரம்பிய அந்த இருளான நாட்களைக் குறித்து எண்ணும் போதெல்லாம், என்னுடைய தவறுக்காகவும் காமக் குரூரத்துக்காகவும் என்னையே நான் வெறுத்துக்கொள்ளுகிறேன். என் நண்பரிடம் நான் கொண்டிருந்த குருட்டுத்தனமான ஈடுபாட்டுக்காகவும் வருந்துகிறேன்.

# 8
# திருட்டும் பரிகாரமும்

புலால் உண்ட காலத்திலும், அதற்கு முன்னும், நான் செய்த வேறு சில தவறுகளையும் சொல்ல வேண்டியிருக்கிறது. இவை என் விவாகத்திற்கு முன்போ, விவாகமான உடனேயோ நடந்தவை.

நானும் என் உறவினர் ஒருவரும் புகை பிடிப்பதில் விருப்பம் கொண்டோம். பீடி பிடிப்பதில் நல்லது உண்டு என்று நாங்கள் கண்டதோ, பீடி புகையின் வாசனை எங்களுக்குப் பிரியமாக இருந்ததோ இதற்குக் காரணம் அல்ல. எங்கள் வாய்களிலிருந்து ஏராளமாகப் புகைவிடுவதில் ஒருவகையான இன்பம் இருப்பதாகக் கற்பனை செய்து கொண்டோம். என் சிற்றப்பாவுக்குப் பீடி பிடிக்கும் பழக்கம் உண்டு. அவர் புகை பிடிப்பதைப் பார்த்தபோது நாங்களும் அவரைப்போல் செய்ய வேண்டும் என்று நினைத்தோம். ஆனால், எங்களிடம் காசு இல்லை. ஆகவே, என் சிற்றப்பா பிடித்துவிட்டுப் போடும் பீடித் துண்டுகளைத் திருடி உபயோகிக்க ஆரம்பித்தோம்.

ஆனால், பீடித் துண்டுகள் எப்பொழுதும் கிடைப்பதில்லை; கிடைத்தாலும் அதிலிருந்து அதிகப் புகை வருவதும் இல்லை. ஆகவே, பீடி வாங்க வேலைக்காரன் பணத்திலிருந்து காசு திருடக் கிளம்பினோம். பீடியை வாங்கி எங்கே வைப்பது என்ற பிரச்னை வந்தது. பெரியவர்கள் முன்னிலையில் நாங்கள் பீடி பிடிக்க முடியாது. சில வாரங்கள் வரையில் திருடிய காசுகளைக் கொண்டே ஒருவாறு சமாளித்துக்கொண்டோம். இதற்கு மத்தியில் ஏதோ ஒரு செடியின் தண்டு துவாரங்கள் உள்ளது என்றும், பீடியைப் போல அதைப் பிடிக்கலாம் என்றும் கேள்விப்பட்டோம். அதைத் தேடிப்பிடித்து இந்த வகையான புகை பிடிக்கலானோம்.

இவை போன்றவைகளினாலெல்லாம் எங்களுக்குத் திருப்தி உண்டாகவே இல்லை. எங்கள் இஷ்டம்போல் செய்ய எங்களுக்குச் சுதந்திரம் இல்லையே என்ற உணர்ச்சி மனத்தில் எழுந்தது. பெரியவர்களின் அனுமதியில்லாமல் எதையுமே நாங்கள் செய்ய முடியாதிருந்தது, பொறுக்க முடியாததாகத் தோன்றியது. கடைசியாக வாழ்வே முற்றும் வெறுத்துப் போய்த் தற்கொலை செய்து கொண்டுவிடுவது என்ற முடிவுக்கு வந்துவிட்டோம்!

ஆனால், தற்கொலை செய்துகொள்ளுவது எப்படி? விஷம் எங்கிருந்து எங்களுக்குக் கிடைக்கும்? ஊமத்தம் விதை சரியான விஷமுள்ளது என்று கேள்வியுற்றோம். அவ்விதையைத் தேடிக்

கொண்டு காட்டுக்குப்போய் அதைக் கொண்டுவந்து விட்டோம். மாலை நேரமே இதற்கு நல்ல வேளை என்றும் முடிவாயிற்று. கேதார்ஜி கோயிலுக்குப் போய் அங்கே விளக்குக்கு நெய் வார்த்தோம்; சுவாமி தரிசனம் செய்துகொண்டோம். பிறகு ஒதுக்குப்புறமான ஒரு மூலைக்குப் போனோம். ஆனால், எங்களுக்குத் துணிச்சல் வரவில்லை. உடனேயே செத்துப் போகாமல் இருந்துவிட்டால்? அதோடு தற்கொலை செய்துகொள்ளுவதால்தான் என்ன நன்மை? சுதந்திரமின்மையைத்தான் ஏன் சகித்துக்கொள்ளக்கூடாது? என்றாலும் இரண்டு, மூன்று விதைகளை விழுங்கிவிட்டோம். இன்னும் அதிகமாகத் தின்னத் தைரியமில்லை. எங்கள் இருவருக்குமே சாவதற்குப் பயம். மனத்தைத் தேற்றிக்கொள்ள ராம்ஜி கோயிலுக்குப் போய்த் தற்கொலை எண்ணத்தையே விட்டுவிடுவது என்று முடிவு செய்தோம்.

தற்கொலை செய்துகொள்ள எண்ணுவதைப் போலத் தற்கொலை செய்துகொண்டு விடுவது அவ்வளவு எளிதானதே அல்ல என்பதைப் புரிந்துகொண்டேன். அதிலிருந்து, யாராவது தற்கொலை செய்துகொள்ளுவதாக மிரட்டிக் கொண்டிருக்கிறார்கள் என்று நான் அறிந்தால், நான் கொஞ்சமும் பயப்படுவதே இல்லை.

தற்கொலை எண்ணத்தினால் முடிவாக ஒரு நன்மையும் உண்டாயிற்று. துண்டுப் பீடிகளைப் பொறுக்கிப் புகை பிடிக்கும் வழக்கத்தையும், புகை பிடிப்பதற்காக வேலைக்காரனின் காசைத் திருடுவதையும் நாங்கள் இருவரும் விட்டுவிட்டோம்.

நான் வயதடைந்துவிட்ட பின்பு, புகை பிடிக்க வேண்டும் என்று நான் விரும்பியதே இல்லை. புகை பிடிக்கும் பழக்கம், காட்டுமிராண்டித்தனமானது, ஆபாசமானது, தீமையை விளைவிப்பது என்று நான் எப்பொழுதும் கருதி வந்திருக்கிறேன். உலகம் முழுவதிலுமே புகை பிடிப்பதில் இவ்வளவு வெறி ஏன் இருக்கிறது என்பது எனக்கு விளங்கவே இல்லை. புகை பிடிப்பவர்கள் நிரம்பிய வண்டியில் பிரயாணம் செய்யவே எனக்குச் சகிப்பதில்லை. எனக்கு மூச்சுத் திணறிவிடுகிறது.*

---

* சுருட்டுப் பிடிக்கும் வழக்கத்தில் மகாத்மா காந்திக்கு வெறுப்பு எப்பொழுதுமே இருந்து வந்தது. 1927, செப்டம்பர், முதல் வாரத்தில் சென்னையில் ஒரு கூட்டத்தில் பேசிய காந்திஜி பின்வருமாறு கூறினார்:

"சுருட்டும், சிகரெட்டும் வெளிநாட்டுச் சரக்குகளாக இருந்தாலும் சரி, உள்நாட்டுச் சரக்குகளாக இருந்தாலும் சரி, அவற்றை ஒழித்துவிட வேண்டும். சிகரெட்டுக் குடி, மயக்க மருந்து போன்றது; சுருட்டுப் புகையில் அபினைப் போன்ற குணம் இருக்கிறது. அவை நரம்புகளையே பாதிப்பதால், அவற்றை அப்புறம் விட்டுவிட முடிவதில்லை. டால்ஸ்டாயின் கதையில் வரும் குடிகாரன் ஒருவன், சுருட்டுப் பிடிக்காத வரையிலும் கொலை செய்ய வேண்டும் என்ற தன் நோக்கத்தை நிறைவேற்றத்

இந்தத் திருட்டையும்விட மிக மோசமான ஒன்று, அதற்குக் கொஞ்சம் பின்னால் நான் செய்த குற்றமாகும். பன்னிரண்டு அல்லது பதின்மூன்று வயதிருக்கும்போது காசுகள் திருடினேன்; வயது எனக்கு இன்னும் குறைவாகவும் இருந்திருக்கலாம். நான் செய்த மற்றொரு திருட்டோ, எனக்குப் பதினைந்து வயதாக இருக்கும்போது. இச்சமயம், மாமிசம் தின்னும் என் அண்ணனின் கைக்காப்பிலிருந்து கொஞ்சம் தங்கத்தைத் திருடினேன். இந்த அண்ணன் இருபத்தைந்து ரூபாய் கடன் பட்டிருந்தார். அவர் கையில் கெட்டித் தங்கக் காப்பு அணிந்திருந்தார். அதிலிருந்து கொஞ்சம் தங்கத்தை வெட்டி எடுத்துவிடுவது கஷ்டமன்று.

சரி, அப்படியே செய்யப்பட்டது; கடனும் தீர்ந்தது. ஆனால், இக்குற்றம் என்னால் பொறுக்க முடியாததாயிற்று. இனித் திருடுவதே இல்லை என்று முடிவு கட்டிக்கொண்டேன். இக்குற்றத்தை என் தந்தையாரிடம் ஒப்புக்கொண்டுவிடுவது என்றும் தீர்மானித்தேன். ஆனால், சொல்லத் துணிவு வரவில்லை. என் தந்தையார் என்னை அடிப்பார் என்று நான் பயப்படவில்லை. எங்களில் யாரையுமே அவர் அடித்ததாக எனக்கு ஞாபகமில்லை. அவருக்கு நான் உண்டாக்கக்கூடிய மனவேதனையைக் குறித்தே அஞ்சினேன். அதற்கும் துணிந்துதான் ஆகவேண்டும் என்று எனக்குத் தோன்றியது. எல்லாவற்றையும் அவரிடம் சொல்லிவிட்டாலன்றிப் பாவம் தீராது என்றும் கருதினேன்.

என் குற்றத்தை ஒரு கடிதத்தில் எழுதி என் தந்தையிடம் கொடுத்து, மன்னிப்புக் கேட்பதென்று கடைசியாகத் தீர்மானித்தேன். ஒரு துண்டுக் காகிதத்தில் அதை எழுதி நானே என் தந்தையாரிடம் கொடுத்தேன். அக் குறிப்பில் நான் என் குற்றத்தை ஒப்புக் கொண்டிருந்ததோடு அதற்குத் தக்க தண்டனையை எனக்குக் கொடுக்குமாறும் கேட்டிருந்தேன். என் குற்றத்திற்காக அவர் தம்மையே தண்டித்துக்கொள்ள வேண்டாம் என்றும் முடிவில் அவரைக் கேட்டுக் கொண்டிருந்தேன்.

---

தயங்கிக்கொண்டிருக்கிறான். ஆனால், சுருட்டுப் புகையை ஊதியதும், புன்னகை செய்துகொண்டே எழுந்து நின்று, 'நான் எவ்வளவு கோழையாக இருக்கிறேன்' என்று சொல்லுகிறான். உடனே வாளை எடுத்து, அந்தக் காரியத்தைச் செய்துவிடுகிறான். டால்ஸ்டாய் சொந்த அனுபவத்தில் காணாத எதையும் எழுதியதில்லை. அவர் குடியைவிடச் சுருட்டையும், சிகரெட்டையுமே அதிகமாக எதிர்க்கிறார். அதற்காகப் புகையிலையைவிடக் குடியைக் குறைந்த தீமையாக நினைத்துவிடாதீர்கள். உண்மை அதுவல்ல. சிகரெட் பேய் என்றால், குடி சைத்தான்."

82 வருடங்கள் வாழ்ந்த டால்ஸ்டாய் தமது 58-ஆவது வயதில் புகை பிடிப்பதை அறவே நிறுத்திவிட்டார் என்பது இங்கே குறிப்பிடத்தக்கதாகும். [புகைப் பிடிப்பதைக் குறித்து டால்ஸ்டாய் கூறிய மேற்கண்ட கருத்தை இந்நூலில் 'பிரமாதமான கன்காட்சி' என்ற தலைப்பிலுள்ள 23-ஆவது அத்தியாயத்திலும் காந்திஜி கூறியிருக்கிறார்.]

'இனித் திருடுவது இல்லை' என்றும் நான் பிரதிக்ஞை செய்து கொண்டேன்.

குற்றத்தை ஒப்புக்கொண்டு எழுதியிருந்த காகிதத்தை என் தந்தையாரிடம் நான் கொடுத்தபோது என் உடலெல்லாம் நடுங்கியது. அப்பொழுது அவர் பவுத்திர நோயினால் பீடிக்கப் பட்டுப் படுத்த படுக்கையாக இருந்தார். சாதாரண மரப் பல கையே அவர் படுக்கை. என் கடிதத்தை அவரிடம் கொடுத்து விட்டு, அப்பலகைக்கு எதிரில் உட்கார்ந்தேன்.

அவர் முழுவதையும் படித்தார். முத்துத் துளிகள்போல் அவர் கன்னங்களில் கண்ணீர் வழிந்து, காகிதத்தை நனைத்தது. ஒரு கணம் கண்ணை மூடிக்கொண்டு சிந்தித்தார். பிறகு கடிதத் தைக் கிழித்தெறிந்தார். அக் கடிதத்தைப் படிப்பதற்காக எழுந்து உட்கார்ந்தவர், திரும்பவும் படுத்துக்கொண்டார். நானும் கதறி அழுதேன். என் தந்தையார் அநுபவித்த வேத னையை நான் காண முடிந்தது. நான் ஓவியக்காரனாக இருந்தால் அக்காட்சி முழுவதையுமே இன்று சித்திரமாக எழுதிவிட முடியும். அது இப்பொழுதும் மனத்தில் தெளிவாக இருந்து வருகிறது*.

முத்துப் போன்ற அந்த அன்புத்துளிகள் என் உள்ளத்தைச் சுத்தப்படுத்தி, என் பாவத்தையும் அலம்பிவிட்டன. அத்தகைய அன்பை அனுபவித்தவர்கள் மட்டுமே, அது இன்னது என்பதை அறிய முடியும். 'அன்புக் கணைகளினால் எய்யப்பட்டவன் எவனோ, அவனே அறிவான் அதன் சக்தியை' என்று ஒரு பாடலும் கூறு கிறது.

---

* தங்கக் காப்பில் தங்கம் திருடிய இச்சம்பவத்தைக் குறித்துக் காந்திஜியின் தமக்கை தம்மிடம் கூறியதாக ஸ்ரீ பிரபுதாஸ் காந்தி தமது நூலில் வேறு ஒரு விவரத் தைக் கூறியிருக்கிறார். அதற்கும் காந்திஜி கூறியிருக்கும் மேலே கண்ட விவரத்திற்கும் சிறிது மாறுபாடு இருக்கிறது. காந்திஜி குழந்தையாக இருந்தபோது வீட்டில் எல் லோரும் அவரை 'மோனியா' என்ற செல்லப் பெயரால் அழைப்பது உண்டாம். தங்கம் திருடிய சம்பவம் பற்றிக் காந்திஜியின் தமக்கை கூறினதாகச் சொல்லப்பட்டிருப்ப தாவது:

"ஒரு நாள் மோனியா வீட்டிற்குத் திரும்பியபோது அவன் போட்டிருந்த தங்கக் காப்பில் இருந்த பூ முகப்பைக் காணோம். அதைக் குறித்து அம்மாவும் அப் பாவும் கேட்டதற்கு, 'அது என்னவாயிற்று என்று எனக்குத்தெரியாது' என்று சொல்லி விட்டான். அதை அத்தோடு விட்டுவிட்டார்கள். மோனியா படிக்கப் போய்விட்டான். ஆனால், உடனே தாயாரிடம் திரும்பி வந்து உண்மையைச் சொன்னான். தான் செய்த குற்றத்திற்காக அப்பா அடிப்பாரா என்று கேட்டான். 'தந்தை கண்டிக்கமாட்டார்' என்று தாயார் தைரியம் கூறி, நடந்ததைத் தந்தையாரிடமே போய் ஒப்புக்கொண்டு விடும்படி சொன்னார். அடிக்க வேண்டாமென்று தானே அப்பாவிடம் சொல்லுவ தாகவும் அம்மா கூறினார். மோனியாவோ, இது தான் செய்த தவறாகையால் தந்தை யாரிடம் தானே போய்ச் சொல்ல வேண்டும் என்று கூறினான். சிறிது நேரத்திற் கெல்லாம் தன் குற்றத்தை எழுதித் தந்தையாரிடம் கொடுத்தான். கடிதத்தைப் பார்த்து தந்தை மனம் உருகிப் போனார். மோனியாவை அன்போடு அழைத்துத் தாம் அவனைத் தண்டிக்கப் போவதில்லை என்றும் சொன்னார்."

அகிம்சா தருமத்தை அறிவதற்கு இது எனக்குச் சரியானதோர் பாடமாயிற்று. இதில் தந்தையின் அன்பைத் தவிர வேறு எதையும் நான் அப்பொழுது காணவில்லை. ஆனல், இன்ரூ, அதுதான் சுத்தமான அகிம்சை என்று அறிகிறேன். அத்தகைய அகிம்சை எல்லாவற்றிலும் வியாபிப்ப தாகிவிடும் போது, அது தொட்டதை யெல்லாம் தன்மய மாக்கிவிடுகிறது. அதனுடைய சக்திக்கு ஓர் எல்லையே இல்லை.

இவ்விதமான உயர்வான மன்னிக்கும் குணம் என் தந்தைக்கு இயல்பானதன்று. கோபமடைவார்; கடுஞ்சொற்களைக் கூறுவார்; தலையில் அடித்துக்கொள்ளுவார் என்றெல்லாம் நான் நினைத்திருந்தேன் ஆனல், அவரோ அவ்வளவு அற்புதமாக அமைதியுடன் இருந்தார். மறைக்காமல் எல்லாவற்றையும் நான் ஒப்புக்கொண்டதே இதற்குக் காரணம் என்று நம்புகிறேன். மன்னிப்பு அளிப்பதற்கு உரிமை உள்ளவரிடம் குற்றத்தை ஒளியாது ஒப்புக்கொண்டு விடுவதோடு, இனி அத்தகைய பாவத்தைச் செய்வதில்லை என்றும் உறுதிமொழி கூறுவதே செய்த குற்றத்திற்காகச் சரியான வகையில் வருத்தப்படுவதாகும். என் குற்றத்தை நான் ஒப்புக்கொண்டு விட்டது, என்னைப் பற்றிக் கவலையே இல்லை என்று என் தந்தையாரை உணரும்படி செய்தது என்பதை அறிவேன்; என் மீதுள்ள அவரது அன்பையும் அளவுகடந்து அதிகரிக்கும்படி இது செய்தது.

## 9

## தந்தையின் மரணமும் என் இரு அவமானங்களும்

நான் இப்பொழுது கூறப் போகின்றவை என்னுடைய பதினறுவது வயதில் நடந்தவை. பவுத்திர நோயினல் என் தந்தை படுத்த படுக்கையாக இருந்தார் என்பதை முன்பே கண்டோம். அவருக்கு வேண்டிய பணிவிடைகளை என் தாயாரும் வீட்டு வேலைக்காரரான ஒரு கிழவரும் நானும் செய்து வந்தோம். என்னுடையன ஒரு தாதிக்குரிய வேலைகள். முக்கியமாகப் புண்ணுக்கு மருந்து வைத்துக் கட்டுவது, என் தந்தைக்கு மருந்து கொடுப்பது, வீட்டிலேயே தயாரிக்க வேண்டியிருந்த மருந்துகளைச் சேர்த்துத் தயாரிப்பது ஆகியவை அவை. ஒவ்வொரு நாள் இரவும் அவருக்குக் கால் பிடித்துவிடுவேன். போகுமாறு அவர் சொன்னதுமோ, அவர் தூங்கிய பிறகோ தான் போய்ப் படுத்துக்கொள்வேன். இப்பணி செய்வதற்கு நான் பிரியப்பட்டேன். இதில் நான் எப்பொழுதேனும் அசட்டையாக இருந்துவிட்டதாக எனக்கு நினைவில்லை. எனது அன்ருடக் கடமைகளை நிறைவேற்றியது போக, பாக்கியிருக்கும் நேரத்தைப்

பள்ளிக்கூடத்துக்குப் போவதிலும், என் தந்தையாருக்குப் பணிவிடை செய்வதிலும் கழிப்பேன். அவர் என்னை அனுமதிக்கும்போதோ, அவருக்கு உடம்பு கொஞ்சம் நன்ருக இருக்கும் போதோ மாத்திரம் மாலையில் உலாவிவிட்டு வரப் போவேன்.*

அது என் மனைவி, பிள்ளைப்பேற்றை எதிர்பார்த்திருந்த சமயமும் ஆகும். அந்த ஒரு சந்தர்ப்பத்தை இன்று நான் எண்ணிப் பார்க்கும்போது, அது எனக்கு இரட்டை அவமானம் என்பதை உணருகிறேன். அச்சமயத்தில் நான் பள்ளி மாணவனுகையால் நான் புலனடக்கத்தைக் கைக்கொண்டிருக்க வேண்டும். ஆனல், அப்படிச் செய்யாது போனது ஓர் அவமானம். படிப்பு விஷயத்தில் என் கடமையென நான் கருதியதையும், என் பெற்ருேரிடம் பக்தியுடனிருப்பது அதையும்விட இன்னும் பெரிய கடமை என நான் கொண்டிருந்ததையும் மறக்கும்படி காமவெறி செய்துவிட்டது, இரண்டாவது அவமானமாகும். சிரவணன்போல் இருக்க வேண்டும் என்பது குழந்தைப் பருவம் முதலே என் லட்சியமாக இருந்தது. ஒவ்வோர் இரவும், என் தந்தையாரின் பாதங்களை என் கைகள் பிடித்துவிட்டுக்கொண்டிருக்கும்போது என் மனம் மாத்திரம் என் படுக்கையறையை வட்டமிட்டுக்கொண் டிருக்கும். அதுவும் மதம், வைத்திய சாத்திரம், பகுத்தறிவு ஆகியவைகளெல்லாம் ஒருமித்து 'மனைவியுடன் உடல் சேர்க்கை கூடாது' என்று தடுக்கும் ஒரு சமயத்தில் எனக்கு அந்த மனநிலை. என் வேலையிலிருந்து விடுபடும்போதெல்லாம் மிக்க மகிழ்ச்சி யுறுவேன். தந்தைக்கு வணக்கம் செலுத்திவிட்டு நேரே படுக்கை அறைக்குப் போவேன்.

அதே சமயத்தில் என் தந்தையின் நிலையும் நாளுக்கு நாள் மோசமாகிக் கொண்டு வந்தது. ஆயுர்வேத வைத்தியர்கள் தங்கள் களிம்புகளை யெல்லாம் போட்டுப் பார்த்துவிட்டனர். ஹக்கீம்கள் தங்கள் பிளாஸ்திரிகளையெல்லாம் போட்டுப் பார்த்துவிட்டார்கள். உள்ளூர் அரைகுறை வைத்தியர்களும் தங்கள் தனி உபாயங்களையெல்லாம் கையாண்டு விட்டனர். ஓர் ஆங்கில சர்ஜனும் தமது திறமையைப் பிரயோகித்துப் பார்த்துவிட்டார். சத்திர சிகிச்சை ஒன்றே கடைசியாகச் செய்யக்கூடிய ஒரே காரியம் என்று அவர் சிபார்சு செய்தார். ஆனல், குடும்ப வைத்தியர் இதை ஆட்சேபித்தார். அவ்வளவு

---

* சுகம், ஆடம்பரம் என்பதையெல்லாம் காந்திஜி சிறு பையனுக இருக்கும்போதிலிருந்தே துறந்திருக்கிருர் என்று தெரிகிறது. அவர் தமது குமாரன் மணிலாலுக்கு 1901–இல் எழுதிய கடிதம் ஒன்றில் பின் வருமாறு குறிப்பிட்டிருக்கிருர்:

"இன்று நீ இருப்பதைவிடச் சிறுவனுக நான் இருந்த காலத்தில், என் தந்தைக்குப் பணிவிடை செய்வதிலேயே உண்மையான இன்பம் இருக்கிறது என்பதைக் கண்டேன். எனக்குப் பன்னிரண்டு வயதாகும் வரையில் வேடிக்கை அல்லது இன்பம் என்பதே எனக்குத் தெரியாது...."

முதிர்ந்த வயதில் சத்திர சிகிச்சை செய்வதை அவர் ஒப்புக்கொள்ளவில்லை. அந்த வைத்தியர் திறமை வாய்ந்தவர்; பிரபலமானவர். ஆகையால், அவர் யோசனையே ஏற்றுக்கொள்ளப்பட்டது. சத்திர சிகிச்சை கைவிடப்பட்டது. அதற்காக வாங்கிய மருந்துகளுக்கு அளவே இல்லை. சத்திர சிகிச்சைக்கு வைத்தியர் அனுமதித்திருந்தால் புண் எளிதில் ஆறியிருக்கும் என்பது என் எண்ணம். இந்தச் சிகிச்சையையும் பம்பாயில் அப்பொழுது பிரபலமாக இருந்த ஒரு சர்ஜன் செய்யவேண்டும். ஆனால், கடவுள் சித்தம் வேறு விதமாக இருந்துவிட்டது. சாவு நிச்சயம் என்று இருக்கும்போது சரியான பரிகாரம் யாருக்குத் தோன்றும்? சத்திர சிகிச்சைக்குச் சேகரிக்கப்பட்டு, இப்பொழுது வீணுகப் போன பொருளுடன் என் தந்தை பம்பாயிலிருந்து திரும்பினுர். இனி அதிக காலம் உயிரோடிருப்போம் என்ற நம்பிக்கை அவருக்கும் இல்லாமல் போயிற்று. மேலும் மேலும் பலவீனமாகிக்கொண்டு வந்தார். இதனுல் மலஜலங்களைப் படுக்கையில் இருந்தவாறே கழிக்கும்படி அவருக்குச் சொல்லவேண்டியதாயிற்று. ஆனுல், கடைசி நேரம் வரையில் அவர் அப்படிச் செய்ய மறுத்துவிட்டார். அதிக சிரமத்துடன் பிடிவாதமாகப் படுக்கையிலிருந்து எழுந்து போயே மலஜலம் கழித்து வந்தார். வைஷ்ணவ தருமத்தின் புறத் தூய்மையைப் பற்றிய விதிகள் அவ்வளவு கண்டிப்பானவை.

இத்தகைய சுத்தம் முற்றும் அவசியமே என்பதில் சந்தேகம் இல்லை. ஆனுல், சுத்தத்தைக் கண்டிப்பாக அனுசரித்தும், நோயாளிக்குக் கொஞ்சமேனும் அசௌகரியம் இல்லாமல், படுக்கையையும் கொஞ்சமும் அப்பழுக்கு இல்லாமல் வைத்துக்கொண்டு, குளிப்பது உள்பட எல்லாக் காரியங்களையும் படுக்கையிலேயே செய்யலாம் என்பதை மேனுட்டு வைத்திய சாத்திரம் நமக்குக் கற்றுக்கொடுத் திருக்கிறது. அத்தகைய சுத்தம் வைஷ்ணவ தருமத்திற்கு முற்றும் பொருத்தமானது என்றே நாம் கருத வேண்டும். ஆனுல், படுக்கையைவிட்டு எழுந்து போயே ஆகவேண்டும் என்று என் தந்தையார் வற்புறுத்தியது அப்பொழுது எனக்கு ஆச்சரியத்தையே உண்டாக்கியது. அதை நான் வியந்தேனேயன்றி வேறு விதமாகக் கருதவில்லை.

பயங்கரமான அந்த இரவும் வந்தது. என் சிறிய தகப்பனுர் அப்பொழுது ராஜ்கோட்டில் இருந்தார். என் தந்தையின் தேக நிலை மோசமாகிக்கொண் டிருக்கிறதென்ற செய்தியறிந்து அவர் ராஜ்கோட்டுக்கு வந்ததாக எனக்குக் கொஞ்சம் ஞாபகம். இந்தச் சகோதரர்கள் ஒருவருக்கொருவர் பலமான அன்பு கொண்டவர்கள். என் சிற்றப்பா, நாளெல்லாம் என் தந்தையாரின் படுக்கைக் கருகிலேயே உட்கார்ந்திருப்பார். எங்களையெல்லாம் தூங்கப் போகச் சொல்லிவிட்டு, அவர் மட்டும் என் தந்தையாரின் படுக்கைக்குப் பக்கத்திலேயே பிடிவாதமாகப்

படுத்துக்கொள்வார். தந்தையாரின் நிலை என்னவோ ஆபத்தாகவே இருந்தது. ஆனால், அது நமனின் இரவாக இருக்கும் என்று யாரும் கனவுகூடக் காணவில்லை.

அப்பொழுது இரவு 10-30 அல்லது 11 மணி. நான் தந்தையாருக்குக் கால் பிடித்துக்கொண் டிருந்தேன். எனக்குப் பதிலாக அவ்வேலையைத் தாம் பார்த்துக்கொள்ளுவதாக என் சிறிய தகப்பனார் கூறினார்; மகிழ்ச்சியுற்றேன். நேரே படுக்கையறைக்குப் போனேன். பாவம், என் மனைவி அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தாள். ஆனால், நான் அங்கே போன பிறகு அவள் எவ்வாறு தூங்க முடியும்? அவளை எழுப்பினேன். ஐந்து அல்லது ஆறு நிமிடங்களுக்கெல்லாம் வேலைக்காரன் கதவைத் தட்டினான். திகிலுடன் துடித்து எழுந்தேன். ''கிளம்புங்கள்; அப்பாவுக்குக் கடுமையாக இருக்கிறது'' என்றான். அவருடைய தேக நிலை மிகவும் மோசமாகவே இருந்தது என்பதை நான் அறிவேன். ஆகவே, அச்சமயத்தில், 'கடுமையாக இருக்கிறது' என்றால் அதன் பொருள் இன்னதென்பதை ஊகித்துக்கொண்டேன். படுக்கையிலிருந்து குதித்தெழுந்தேன். ''என்ன விஷயம், சொல்?'' என்றேன். ''தந்தை காலமாகிவிட்டார்'' என்றான்.

ஆகவே, எல்லாம் முடிந்து போயிற்று! என் கைகளைப் பிசைந்துகொண்டேன். அளவு கடந்த வெட்கத்தையும் வேதனையையும் அடைந்தேன். என் தந்தையார் இருந்த அறைக்கு ஓடினேன். காம வெறி மாத்திரம் என்னைக் குருடனாக்கா திருந்திருக்குமாயின், கடைசி நேரத்தில் தந்தையாரிடமிருந்து பிரிந்ததால் விளைந்த சித்திரவதை எனக்கு நேர்ந்திராது என்பதைக் கண்டேன். அவருடைய பாதங்களைப் பிடித்து விட்டுக்கொண்டிருப்பேன்; என் கரங்களிலேயே அவர் ஆவி பிரிந்திருக்கும். இப்பொழுதோ அந்தப் பாக்கியம் என் சிறிய தகப்பனாருக்குக் கிடைத்தது. அண்ணனிடம் அவருக்கு அளவற்ற பக்தி இருந்ததனால், அவருக்குக் கடைசிச் சேவைகளைச் செய்யும் கௌரவத்தை அவர் தேடிக்கொண்டார்! மரணம் நெருங்கிவிட்டதென்பதை என் தந்தையார் அறிந்துகொண்டு, பேனாவும் காகிதமும் கொண்டு வருமாறு சமிக்ஞை செய்திருக்கிறார். 'இறுதிக் கிரியைகளுக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யுங்கள்' என்று எழுதியிருக்கிறார். பிறகு தம் கையில் அணிந்திருந்த காப்பையும் தங்கத் துளசி மணி மாலையையும் கழற்றித் தூரத்தில் வீசிவிட்டு, ஒரு கண நேரத்தில் உயிரை நீத்திருக்கிறார்.

முந்திய ஓர் அத்தியாயத்தில் எனக்கு ஏற்பட்ட அவமானத்தைப்பற்றிக் கூறினேன். என் தந்தை சாகும் தறுவாயிலிருந்த நெருக்கடியான நேரத்தில் நான் விழித்திருந்து பணிவிடைசெய்ய வேண்டியிருக்க, எனக்குக் காம வெறி ஏற்பட்டதைப்பற்றிய

அவமானமே அது. இது என் வாழ்க்கையில் ஏற்பட்ட கறை. இதை என்றும் என்னல் அழிக்கவோ, மறக்கவோ முடிந்ததில்லே. என் பெற்ரேரிடம் எனக்கு எல்லேயற்ற பக்தி உண்டெனினும், அதற்காக எதையும் தியாகம் செய்திருப்பேனுயினும், சோதித்துப் பார்த்ததில் அந்தப் பக்தி மன்னிக்க முடியாத வகையில் குறைபாட்டுடனேயே இருந்தது. ஏனெனில், அதே சமயத்தில் என் மனம் காமத்தின் பலமான பிடிப்பில் இருந்து வந்தது. இதை எப்பொழுதும் நினைத்துப் பார்ப்பேன். ஆகையால், நான் விசுவாசமுள்ள கணவனுக இருந்தாலும் காம வெறியன் என்றே என்னை என்றும் கருதலானேன். காமத்தின் விலங்கிலிருந்து விடுபட எனக்கு அதிக காலமாயிற்று. அதை வெல்லுவதற்குள் நான் எத்தனையோ கடுஞ் சோதனைகளைக் கடக்கவேண்டியிருந்தது.

எனது இரு அவமானங்களைப்பற்றிய இந்த அத்தியாயத்தை முடிக்கு முன்பு, என் மனைவியின் வயிற்றில் பிறந்த அந்தப் பரிதாபகரமான சிசு மூன்று, நான்கு நாட்கள்கூட உயிரோடு இருக்கவில்லை என்பதையும் நான் கூறவேண்டும். இதைத் தவிர வேறு எதையும் எதிர்பார்ப்பதற்கில்லை. மணமாகியிருப்பவர்களெல்லாம் என்னுடைய உதாரணத்தைக் கண்டு எச்சரிக்கை அடைவார்களாக.

## 10

# சமய அறிவின் உதயம்

எனது ஆறு அல்லது ஏழாவது வயதிலிருந்து பதினரும் பிராயம் வரையில் நான் பள்ளிக்கூடத்தில் படித்து வந்தேன். மதத்தைத் தவிர மற்ற எல்லா விதமான விஷயங்களைப்பற்றியும் எனக்குப் போதித்தார்கள். உபாத்தியாயர்கள், தங்கள் அளவில் எவ்விதமான சிரமமுமின்றி எனக்குச் சொல்லிக் கொடுத்திருக்கக்கூடியவை எனக்குக் கிடைக்கவில்லை என்றே கூறுவேன். என்ருலும், அக்கம்பக்கங்களிலிருந்து கொஞ்சங் கொஞ்சமாக சமய ஞானம்பற்றி நான் அறிந்து வந்தேன். 'சமயம்' என்பதை, அதன் விரிவான கருத்தில்— தன்னைத் தானே அறிதல் அல்லது ஆன்ம ஞானம் என்ற பொருளிலேயே – நான் உபயோகிக்கிறேன்.

வைஷ்ணவக் குடும்பத்தில் பிறந்தவனுகையால் நான் அடிக்கடி விஷ்ணு கோயிலுக்குப் போகவேண்டியிருந்தது. ஆனல், அது என் மனத்தை ஒருபோதும் கவரவில்லை. அதன் பகட்டும் ஆடம்பரமும் எனக்குப் பிடிக்கவே இல்லை. அதோடு ஒழுக்கவீனமான காரியங்கள் பல அங்கே நடக்கின்றன என்ற

வதந்திகளையும் கேள்விப்பட்டேன். ஆகவே, கோயிலுக்குப் போவதில் எனக்குச் சிரத்தையில்லை. இதனால், விஷ்ணு கோயிலிலிருந்து நான் எதையும் பெறவில்லை.

ஆனால், கோயிலில் நான் பெற முடியாது போனதை, எங்கள் குடும்ப வேலைக்காரக் கிழவியான என் செவிலித்தாயிடமிருந்து பெற்றேன். ரம்பா என்பது அவள் பெயர். அவளுக்கு என் மீதிருந்த பிரியம் இன்றும் என் நினைவில் இருக்கிறது. எனக்குப் பேய், பிசாசுகளின் பயம் இருந்தது என்று முன்பே கூறியிருக்கிறேன். ராமநாமத்தைத் திரும்பத் திரும்ப உச்சரிப்பதே அந்தப் பயத்தைப் போக்குவதற்கான மருந்து என்று எனக்கு ரம்பா யோசனை கூறினாள். அவள் கூறிய பரிகாரத்தில் எனக்கு இருந்த நம்பிக்கையைவிட அவளிடம் எனக்கு அதிக நம்பிக்கையுண்டு. ஆகையால், பேய் பிசாசுகளிடம் எனக்கு இருந்த பயத்தைப் போக்கிக்கொள்ளுவதற்கு இளம் பிராயத்திலிருந்தே ராம நாம ஜபம் செய்வேன். இது தொடர்ந்து நடக்கவில்லை. ஆனால், குழந்தைப் பருவத்தில் விதைக்கப்பட்ட அந்த நல்ல விதை வீணாகப் போய்விடவில்லை. அந்த நல்ல பெண்மணியான ரம்பா விதைத்த விதையினாலேயே ராம நாமம் இன்று எனக்குப் பொய்க்காத அருமருந்தாக இருந்து வருகிறது என்று நினைக்கிறேன்.

இந்தச் சமயத்தில், ராமாயண பக்தரான என் பெரியப்பா பிள்ளை ஒருவர், நானும் என் சின்ன அண்ணனும் ராமரட்சை கற்றுக்கொள்வதற்கு ஏற்பாடு செய்தார். அதை மனப்பாடம் செய்தோம். ஒவ்வொரு நாளும் காலையில் குளித்த பிறகு வழக்கமாக அதைப் பாராயணம் செய்து வந்தோம். நாங்கள் போர்பந்தரில் இருந்த வரையில் அது நடந்து வந்தது. நாங்கள் ராஜ்கோட்டை அடைந்ததும் அதை மறந்துவிட்டோம். ஏனெனில், அதில் எனக்கு அவ்வளவாக நம்பிக்கை இல்லை. நான் அதைப் பாராயணம் செய்துவந்ததற்கு ஒரு காரணம், சுத்தமான உச்சரிப்புடன் ராமரட்சையை என்னால் பாராயணம் செய்ய முடிகிறது என்பதில் நான் கொண்டிருந்த பெருமையே யாகும்.

என்றாலும், என்னுள் ஆழ்ந்த கவர்ச்சியை உண்டாக்கியது என் தந்தையார் எதிரில் ராமாயணம் படிக்கப்பட்டு வந்ததாகும். என் தந்தை நோயுற்றிருந்த சமயம் கொஞ்ச காலம் போர்பந்தரில் இருந்தார். அங்கே மாலை நேரத்தில் ராமாயணத்தைப் படிக்கச் சொல்லிக் கேட்பார். அவ்விதம் ராமாயணம் வாசித்து வந்தவர் சிறந்த ராம பக்தர். அவர் பிலேஸ்வரைச் சேர்ந்த லதா மகராஜ் என்பவர். அவருக்குக் குஷ்ட நோய் இருந்து குணமாகிவிட்டது. எந்த மருந்தினாலும் அவருக்குக் குணமாகிவிடவில்லை என்றும், பிலேஸ்வரர் கோயிலில் மகாதேவர் சிலைக்கு அர்ச்சனை செய்து, பிறகு தூரப் போடப்

படும் வில்வ இலைகளைத் தமது உடலில், குஷ்டத்தால் பாதிக்கப்பட்ட இடங்களில் வைத்துக் கட்டியதாலும், விடாமல் ராமநாம ஜபம் செய்ததாலுமே அந்நோய் அவருக்குக் குணமாயிற்று என்றும் சொல்லுவார்கள். அவருடைய நம்பிக்கை அவர் நோயைப் போக்கியது என்பார்கள். நாங்கள் என்னவோ இக்கதையை நம்பினோம். லதா மகராஜ் எங்கள் வீட்டில் ராமாயணம் வாசிக்க ஆரம்பித்தபோது அவர் உடலில் குஷ்ட நோய் என்பதே இல்லை என்பது உண்மை. அவருக்கு இனிமையான சாரீரம் இருந்தது. கண்ணிகளையும் விருத்தங்களையும் பாடுவார். அவற்றை விளக்கிப் பொருள் சொல்லுவார். சொல்லும்போதே மெய்ம் மறந்து அவர் பரவசமாகிவிடுவதோடு கேட்போரையும் மெய்ம் மறந் திருக்கச் செய்துவிடுவார். அப்பொழுது எனக்குப் பதின்மூன்று வயது இருக்கும். என்றாலும், அவர் வாசிப்பதைக் கேட்டு நான் பரவசமாகிவிட்டது எனக்கு இன்னும் நினைவிருக்கிறது. ராமாயணத்தினிடம் எனக்கு ஆழ்ந்த பக்தி ஏற்படுவதற்கு அடிகோலியதே அதுதான். பக்தி நூல்களிலெல்லாம் தலையாய நூல் துளசிதாஸரின் ராமாயணமே என்று நான் இன்று கருதுகிறேன்.

இதற்குச் சில மாதங்கள் கழித்து நாங்கள் ராஜ்கோட்டிற்கு வந்தோம். ராமாயண பாராயணம் எதுவும் இங்கே நடைபெறவில்லை. ஒவ்வோர் ஏகாதசி தினத்தன்றும் பாகவதம் படிப்பது வழக்கம். சில சமயங்களில் நான் கேட்கப் போவேன். ஆனால், அதைப் படித்தவரோ, கேட்போருக்கு உருக்கம் உண்டாக்கக் கூடியவர் அன்று. பாகவதம் சமய உணர்ச்சியை உண்டாக்க வல்ல நூல் என்பதை இன்று நான் காணுகிறேன். அதைத் தீவிரமான சிரத்தையுடன் குஜராத்தி மொழியில் படித்திருக்கிறேன். ஆனால், என்னுடைய இருபத்தொரு நாள் உண்ணாவிரத காலத்தில்* பாகவதத்தின் மூலத்திலிருந்து சில பகுதி

---

* ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமைக்காக 1924-இல் டில்லியில் தாம் மேற்கொண்ட 21 நாள் உண்ணாவிரதத்தையே காந்திஜி இங்கே குறிப்பிடுகிறார். நாடெங்கும் ஹிந்து-முஸ்லிம் கலவரங்கள் மிகுந்தன. 1924, செப்டம்பரில் கோஹட்டில் பெரும் கலகம் மூண்டது; அதில் மாண்டவர்களும் காயமடைந்தோரும் 155 பேர். ரூ. 9 லட்சம் பெறுமான சொத்துக்கள் நாசமாயின. செப்டம்பர், 18-ஆம் தேதி புதன்கிழமை மகாத்மா இருபத்தொரு நாள் உண்ணாவிரதத்தை மேற்கொண்டார். மௌலானா முகம்மது அலி வீட்டிலிருந்து காந்திஜி அப்பொழுது வெளியிட்ட அறிக்கையில் தமது விரதம் அக்டோபர் 6 ஆம் தேதி முடியும் என்றும் அறிவித்தார். எல்லாக் கட்சிகளையும் சேர்ந்த தலைவர்கள் டில்லிக்கு விரைந்தனர். செப்டம்பர் 26-ஆம் தேதி பண்டித மோதிலால் நேருவின் தலைமையில் ஒற்றுமை மகாநாடு ஆரம்பமாயிற்று. இதற்கு இந்தியாவின் பிரதம பாதிரியார் டாக்டர் வெஸ்ட்காட், ஸ்ரீமதி அன்னி பெஸண்ட், மௌலானா ஷவுகத் அலி, ஹக்கீம் அஜ்மல்கான், சுவாமி சிரத்தானந்தர், சிந்தாமணி முதலியவர்களும் வந்திருந்தனர். மகாத்மா நீடு வாழ வேண்டும் என்ற பிரார்த்தனையுடன் ஆரம்பமான அந்த மகாநாட்டின் முதல் நாள் கூட்டத்தில், காந்திஜியின் ஒத்துழைப்பு அந்த மகாநாட்டிற்குக் கிடைப்பதை முன்னிட்டு, அவர் உடனே உண்ணாவிரதத்தை நிறுத்த வேண்டும் என்று கோரினார்கள். ஆனால், "மேற்கொண்டுவிட்ட விரதத்தை

களைப் பண்டித மதன் மோகன மாளவியா* படிக்க நான் கேட்டேன். பண்டித மாளவியாவைப்போன்ற ஒரு பக்தர் அதைப் படிக்கச் சிறுவயதிலேயே நான் கேட்டிருந்தால் அப்போதிருந்தே அதன்மீது எனக்கு விருப்பம் ஏற்பட்டிருக்கும் என்பது தெரிந்தது. அந்த வயதில் உருவாகும் அபிப்பிராயங்கள் ஒருவருடைய சுபாவத்தில் ஆழ வேரூன்றி விடுகின்றன. அந்தக் காலத்தில் இதுபோன்ற மற்றும் பல நல்ல நூல்களைப் படிக்கக் கேட்கும் பாக்கியம் எனக்கு இல்லாது போயிற்றே என்ற வருத்தம் என்னை விட்டு என்றும் நீங்காது.

என்றாலும், ஹிந்து சமயத்தின் எல்லா உட்பிரிவுகள் சம்பந்தமாகவும், மற்றச் சகோதர சமயங்கள் விஷயத்திலும் சகிப்புத் தன்மையுடன் இருக்கும் ஆரம்பப் பயிற்சியும் எனக்கு ராஜ்கோட்டிலேயே கிடைத்தது. ஏனெனில், என் தந்தையும் தாயாரும் விஷ்ணு கோயிலுக்குப் போவதோடு சிவன் கோயிலுக்கும், ராமர் கோயிலுக்கும் போவார்கள். அங்கெல்லாம் சிறுவர்களாகிய எங்களையும் அழைத்துப்போவார்கள்; அனுப்புவார்கள். ஜைன பிட்சுக்கள் அடிக்கடி என் தந்தையைப் பார்க்க வருவார்கள். ஜைனர்கள் அல்லாத எங்கள் வீட்டில் சாப்பிடும் அளவுக்கும் அவர்கள் தாராளமாக நடந்துகொள்ளுவார்கள். சமய விஷயங்களைக் குறித்தும், உலக விவகாரங்களைக் குறித்தும் என் தந்தையுடன் அவர்கள் பேசுவார்கள்.

இதல்லாமல் அவருக்கு முஸ்லிம், பார்ஸி நண்பர்களும் உண்டு. தங்கள் சமயங்களைப் பற்றி அவர்கள் இவரிடம் பேசுவார்கள். எப்பொழுதுமே அவர்கள் கூறுவனவற்றிற்கு மதிப்புக் கொடுத்தும், பெரும்பாலும் சிரத்தையுடனும் அவர் கேட்பார். என் தந்தையாருக்கு நான் பணிவிடை செய்து வந்ததால் அவர்கள் பேசிக்கொண்டிருப்பதைக் கேட்கும் வாய்ப்பு எனக்கு அடிக்கடி கிட்டியது. மற்றச் சமயங்களிடம் சகிப்புத் தன்மையுடன் நடந்துகொள்ளும் பண்பை இவைகளெல்லாம் சேர்ந்தே என்னுள் வளர்த்தன.

---

நிறுத்தக்கூடாது என்று என் தருமம் கூறுகிறது" என்று கூறி, உண்ணாவிரதத்தை நிறுத்த மகாத்மா மறுத்துவிட்டார். 21 நாள் விரதத்தையும் காந்திஜி பூர்த்தி செய்தார். நாட்டிலும் ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை உணர்ச்சி வளர்ந்தது.

* பண்டித மதன் மோகன மாளவியா பிரபல ஹிந்துத்தலைவர் மாத்திரமல்ல, தேசியத் தலைவரும் ஆவார். 1861 டிசம்பர் 25-ஆம் தேதி அலகாபாத்தில் பிறந்தவர். இவர் இளமையில் பள்ளிக்கூடத்து உபாத்தியாயராக இருந்து பின்னர் பத்திரிகையாளரானார். 1902 முதல் 1912 வரை மாகாண சட்டசபை உறுப்பினராக இருந்தார். பிறகு பல ஆண்டுகள் இம்பீரியல் சட்டசபையிலும், 1924 முதல் 1930 வரை மத்திய சட்டசபையிலும் உறுப்பினராக இருந்து, ஏகாதிபத்தியச் சலுகை அளிக்கப்பட்டதை எதிர்த்து ராஜிநாமாச் செய்தார். காசி ஹிந்து சர்வகலாசாலையை ஸ்தாபித்தவர் இவரே. அதன் உப அத்தியட்சகராகவும் இருந்தார். ஹிந்து மகாசபையின் தலைவராக இருந்தார். 1908, 1918-ஆம் ஆண்டுகளில் இந்திய தேசீய காங்கிரஸின் தலைவராக இருந்தார். சட்ட மறுப்பு இயக்கத்தில் ஈடுபட்டு, இருமுறை சிறை சென்றார்.

அச்சமயம் கிறிஸ்தவ மதம் மாத்திரம் இதற்கு ஒரு விலக்காக இருந்தது. அதனிடம் எனக்கு ஒருவகை வெறுப்பு இருந்தது. அதற்கு ஒரு காரணமும் உண்டு. அக்காலங்களில் கிறிஸ்தவப் பாதிரிமார்கள், உயர்நிலைப் பள்ளிக்கு அருகில் தெருத் திருப்பத்தில் நின்றுகொண்டு ஹிந்துக்களையும் அவர்களுடைய தெய்வங்களையும் தூஷித்துக்கொண்டிருப்பார்கள். இதை என்னால் சகிக்க முடிவதில்லை. அவர்கள் சொல்வதைக் கேட்க ஒரே ஒரு தடவை மாத்திரமே நான் அங்கே நின்றிருப்பேன். இந்தப் பரீட்சை இனி வேண்டாம் என்று நான் தீர்மானித்து விட்டதற்கு அது ஒன்றே போதுமானதாயிற்று. ஏறக்குறைய அதே சமயத்தில் பிரபலமான ஹிந்து ஒருவர், கிறிஸ்தவத்திற்கு மதம் மாற்றப் பெற்றார் என அறிந்தேன். அவர் 'ஞானஸ்நானம்' செய்விக்கப்பெற்ற போது, மாட்டிறைச்சி தின்று, மதுபானமும் செய்யவேண்டியிருந்தது என்றும், தமது உடையையும் அவர் மாற்றிக் கொள்ள வேண்டியதாயிற்று என்றும் ஊரெங்கும் ஒரே பேச்சாக இருந்தது. அது முதல் அவர் ஐரோப்பிய உடையுடன் தொப்பியும் போட்டுக்கொண்டு அங்குமிங்கும் போக ஆரம்பித்தாராம். இவையெல்லாம் எனக்கு வெறுப்பை உண்டாக்கின. 'மாட்டிறைச்சி தின்ன வேண்டும் என்றும், குடிக்க வேண்டும் என்றும், தமது சொந்த உடையை மாற்றிக்கொண்டுவிடவேண்டும் என்றும் ஒருவரைக் கட்டாயப் படுத்தும் ஒரு மதம், மதம் என்ற பெயருக்கே நிச்சயமாக அருகதையில்லாதது' என்று நான் எண்ணினேன். புதிதாக மதம் மாறியவர், தமது மூதாதையரின் மதத்தையும், பழக்க வழக்கங்களையும், நாட்டையும் தூஷித்துப் பேசவும் தலைப்பட்டுவிட்டார் என்றும் கேள்விப்பட்டேன். இவைகளெல்லாம் கிறிஸ்தவத்தின் மீது எனக்கு வெறுப்பை உண்டாக்கின.

மற்றச் சமயங்களிடம் சகிப்புத் தன்மை கொள்ள நான் கற்றிருந்தேன் என்றால், உண்மையில் எனக்குக் கடவுளிடம் திடமான நம்பிக்கை இருந்தது என்பது பொருளல்ல. அந்தச் சமயத்தில் மனுஸ்மிருதியையும் நான் படிக்க நேர்ந்தது. படைப்பைப் பற்றியும், அதுபோன்ற விஷயங்களைக் குறித்தும் அதில் கூறப்பட்டிருந்த கதை எனக்கு அவ்வளவாக நம்பிக்கை ஊட்டுவதா யில்லை. இதற்கு மாறாக நாஸ்திகத்தை நோக்கி ஓரளவுக்கு என்னைச் சாயும்படியும் அது செய்தது.

என் பெரியப்பா பிள்ளை ஒருவர் உண்டு. அவர் இன்றும் இருக்கிறார். அவருடைய அறிவாற்றலில் எனக்கு அபார மதிப்பு உண்டு. எனக்கு இருந்த சந்தேகங்களை யெல்லாம் குறித்து அவரிடம் கேட்டேன். ஆனால், அவற்றைத் தீர்த்துவிட அவரால் இயலவில்லை. "உனக்கு வயதானதும் இந்தச் சந்தேகங்களை யெல்லாம் நீயே தீர்த்துக்கொண்டு விடுவாய். இந்த வயதில் இப்படிப்பட்ட சந்தேகங்கள் உனக்குத் தோன்றலாகாது" என்று பதில் சொல்லி, அவர் என்னை அனுப்பிவிட்டார். என் வாய் அடைபட்டுப் போயிற்று. ஆயினும், மனம் திருப்தியடைய

வில்லை. மனுஸ்மிருதியில் உணவுபற்றியும் அது போன்றவை குறித்தும் கூறப்பட்டிருந்தவை, தினசரி வழக்கத்திற்கு மாறுபட்டவை என எனக்குத் தோன்றின. இதில் எனக்கு உண்டான சந்தேகத்திற்கும் அதே பதில்தான் கிடைத்தது. 'அறிவு வளர வளர, அதிகமாகப் படிக்கப் படிக்க, அதை நான் நன்ருகப் புரிந்து கொள்வேன்' என்று எனக்கு நானே சொல்லிக் கொண்டேன்.

மனுஸ்மிருதி, அக்காலத்தில் அகிம்சா தருமத்தை எனக்குப் போதிக்கவில்லை என்பது மாத்திரம் உண்மை. நான் புலால் உண்ட கதையைக் கூறியிருக்கிறேன். அதை மனுஸ்மிருதி ஆதரிப்பதாகத் தோன்றியது. பாம்புகள், மூட்டைப்பூச்சி முதலியவைகளைக் கொல்லுவது முற்றும் நியாயமானதே என்று கருதினேன். மூட்டைப்பூச்சிகள் போன்ற ஜந்துக்களைக் கொல்லுவது ஒரு கடமை எனக் கருதி அந்த வயதில் அவற்றை நான் கொன்றது எனக்கு நினைவிருக்கிறது.

ஆனல், ஒன்று மாத்திரம் என்னுள் ஆழ வேரூன்றியது: 'ஒழுக்கமே எல்லாவற்றிற்கும் அடிப்படை; சத்தியமே ஒழுக்கமெல்லாவற்றின் சாரமும்' என்று நான் கொண்ட உறுதியே அது. சத்தியம் என் ஒரே லட்சியமாயிற்று. ஒவ்வொரு நாளும் அதன் மகிமை வளரலாயிற்று. அதற்கு நான் கொண்ட பொருளும் விரிவாகிக்கொண்டே வந்தது.

அதேபோல நன்னெறியைப் போதிக்கும் ஒரு குஜராத்திப் பாடலும் என் அறிவையும் உள்ளத்தையும் கொள்ளைகொண்டது. 'தீமை செய்தோருக்கும் நன்மையே செய்' என்ற அப்பாடலின் போதனை, என் வாழ்க்கையில் வழி காட்டும் தருமமாயிற்று. அதில் எனக்கு அதிகப் பிரேமை உண்டாகி விட்டதால் அதை மேற்கோளாகக் கொண்டு பற்பல சோதனைகளையும் செய்யத் தொடங்கினேன். மிக அற்புதமானவை என நான் எண்ணும் அப் பாடலின் வரிகள் இவை:

'உண்ணும் நீர் தந்த ஒருவனுக்குக் கைம்மாருய்
விண்ணமுதைப் போல்அன்னம் விரும்பிப் படைத்திடுவாய்.
அன்போடு கும்பிட்டால் அடிபணிந்து நீதொழுவாய்.
செம்பான காசுக்குச் செம்பொன்னைத் தந்திடுவாய்.
உயிர்காத்தோன் துன்பத்தை உயிர்கொடுத்து நீ துடைப்பாய்.
செயலாலும் சொல்லாலும் சிந்தையினுலும் பெரியோர்
சின்னஞ் சிறு உதவி செய்தவர்க்கு எந்நாளும்
ஒன்றுக்குப் பத்தாய் உவந்துசெய்வர் பேருதவி.
வையத்தார் எல்லோரும் ஒன்றெனவே மாண்புடையோர்
ஐயப்பா டின்றி அறிந்திருக்கும் காரணத்தால்
இன்ன செய்தாரை ஒறுக்க, அவர் நாண
நன்னயம் செய்து விடுவர் இந் நானிலத்தே.'

# 11

# இங்கிலாந்து போக ஆயத்தம்

**1887** - இல் நான் மெட்ரிகுலேஷன் பரீட்சையில் தேறினேன்.* அப்பொழுது அகமதாபாத், பம்பாய் ஆகிய இரு இடங்களில் அப்பரீட்சை நடப்பது வழக்கம். நாட்டின் பொதுவான வறுமை நிலை காரணமாக, இயற்கையாகவே சமீபத்தில் இருக்கும், அதிகச் செலவில்லாத இடத்திற்கே கத்தியவார் மாணவர்கள் சென்றனர். என் குடும்பத்தின் வறுமையினால் நானும் அவ்விதமே செய்யவேண்டிய தாயிற்று. ராஜ் கோட்டிலிருந்து அகமதாபாத்துக்கு முதல் முதலாக, அதிலும் துணையின்றி, நான் பிரயாணம் செய்தது அப்பொழுது தான்.

மெட்ரிகுலேஷன் பரீட்சையில் தேறிய பின் நான் கல்லூரியில் சேர்ந்து தொடர்ந்து படித்துவர வேண்டும் என்று வீட்டிலிருந்த பெரியவர்கள் விரும்பினர். பவநகரில் ஒரு கல்லூரி இருந்தது; பம்பாயிலும் இருந்தது. பவநகரில் படித்தால் செலவு அதிகமாகாதாகையால் அங்கே போய்ச் சாமளதாஸ் கல்லூரியில் சேருவதென முடிவு செய்தேன். அவ்வாறே சென்று சேர்ந்தும் விட்டேன். ஆனால், அங்கே எனக்குத் திக்குத் திசை புரியவில்லை. எல்லாமே எனக்குக் கஷ்டமாக இருந்தது. நான் சிரத்தை எடுத்துக்கொள்ளவில்லை என்பது இருக்கட்டும், முதலில் பேராசிரியர்களின் பிரசங்கங்களே எனக்குப் புரியவில்லை. இது அப்பேராசிரியர்களின் குற்றமன்று. அக் கல்லூரிப் பேராசிரியர்கள் முதல்தரமானவர்கள் என்று பெயர் பெற்றவர்கள். ஆனால், நான்தான் கல்லூரிப் படிப்புக்குப் பண்படுத்தப்படாதவனா யிருந்தேன். ஆறு மாதமானதும் வீடு திரும்பினேன்.

மாவ்ஜி தவே என்ற கல்வியறிவுள்ள பிராமணர், எங்கள் குடும்பத்திற்கு நண்பரும் ஆலோசகருமாக இருந்தார். அவர் புத்தி கூர்மையுள்ளவர். என் தந்தையார் இறந்த பிறகுங்கூட அவர் எங்கள் குடும்பத்துடன் தொடர்பு வைத்திருந்தார். விடு முறைக்கு நான் ஊர் போயிருந்தபோது ஒரு முறை அவர் எங்கள் வீட்டுக்கு வந்தார். என் தாயாருடனும் என் தமையனுருடனும் பேசிக்கொண்டிருந்தபோது என் படிப்பைப் பற்றியும் விசாரித்தார். நான் சாமளதாஸ் கல்லூரியில் படிக்கிறேன் என்பதை அறிந்ததும் அவர் பின்வருமாறு கூறினர்: "இப்பொழுது காலம் மாறிப் போய்விட்டது. தக்க படிப்பு இல்லாமல் உங்களில்

---

* காந்திஜி 1887 டிசம்பரில் மெட்ரிகுலேஷன் பரீட்சை எழுதினர். அப் பரீட்சையில் அவருக்குக் கிடைத்த மார்க்குகளின் விவரம் வருமாறு: ஆங்கிலத்தில் 100-க்கு 89; சுதேச பாஷையில் 45½; கணக்கில் 59; பொது அறிவுப் பாடங்களில் 54; ஆக மொத்தம் 247½.

யாரும் உங்கள் தந்தையின் பதவிக்கு வர முடியாது. இப்பொழுது இப்பையன் இன்னும் தொடர்ந்து படித்துக் கொண்டிருப்பதால், அப்பதவிக்கு இவனைத் தயார் செய்வதில் கவனம் செலுத்த வேண்டும். இவன் பி. ஏ. பட்டத்தைப் பெறுவதற்கு நான்கு அல்லது ஐந்து ஆண்டுகளாவது ஆகும். அப்படிப் பெறும் பட்டம், இவனை ஓர் அறுபது ரூபாய்ப் பதவிக்குத்தான் தகுதியுடையவனுக்குமே யன்றித் திவான் பதவிக்குத் தகுதியுடையவனுக்காது. என் மகனைப்போல இவனும் சட்டம் படித்துத் தேர்ச்சி பெறவும் அதிக காலமாகும். அதற்குள் திவான் பதவியைப் பெற முயலும் வக்கீல்கள் ஏராளமாகிவிடுவார்கள். இதையெல்லாம்விட இவனை இங்கிலாந்துக்கு அனுப்புவது எவ்வளவோ மேல் என்று எனக்குத் தோன்றுகிறது. பாரிஸ்டராவது மிக எளிது என்று என் மகன் கேவல்ராம் கூறுகிறான். மூன்று வருடங்களில் இவன் திரும்பிவிடலாம். செலவும் நான்கு முதல் ஐயாயிரத்திற்கு மேல் ஆகாது. இங்கிலாந்திலிருந்து இப்பொழுதுதான் வந்திருக்கும் அந்தப் பாரிஸ்டரைப் பாருங்கள். எவ்வளவு நாகரிகமாக அவன் வாழ்க்கை நடத்துகிறான்! கேட்டால் போதும், அவனுக்குத் திவான் பதவி கிடைத்துவிடும். இவ்வருடமே மோகனதாஸை இங்கிலாந்துக்குக் கட்டாயம் நீங்கள் அனுப்பிவிட வேண்டும் என்றே நான் கூறுவேன். இங்கிலாந்தில் கேவல்ராமுக்கு அநேக நண்பர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கெல்லாம் அவன் அறிமுகக் கடிதங்கள் கொடுப்பான். மோகனதாஸ் அங்கே சுகமாக இருந்துவிட்டு வரலாம்!"

மாவ்ஜி தவேயை ஜோஷிஜி என்று சொல்லுவது வழக்கம். அவர் என்னைத் திரும்பிப் பார்த்து, "இங்கே படிப்பதைவிட இங்கிலாந்துக்குப் போகவே நீ விரும்புகிறாயல்லவா?" என்று முழு நம்பிக்கையுடன் கேட்டார். இதைவிட எனக்கு மகிழ்ச்சி தரக்கூடியது வேறு எதுவும் இருக்க முடியாது. கஷ்டமான கல்லூரிப் படிப்புடன் நான் தொல்லைப்பட்டுக்கொண்டிருந்தேன். ஆகையால், இந்த யோசனையை உடனே ஏற்றுக்கொண்டு, "என்னை எவ்வளவு சீக்கிரத்தில் அனுப்புகிறீர்களோ அவ்வளவுக்கு நல்லது" என்றேன்.* "சீக்கிரத்தில் பரீட்சைகளில் தேறிவிடுவது என்பது எளிதான வேலையே அல்ல. எனவே, என்னை வைத்தியத் தொழில் பயிற்சிக்கு அனுப்பக் கூடாதா?" என்று கேட்டேன்.

---

* படிப்பதற்கு லண்டன் போவது என்ற யோசனை பிறப்பதற்கு முன்னாலேயே லண்டனைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை காந்திஜிக்கு இருந்திருக்கிறது. அதைக் குறித்து அவரே கூறியிருப்பதை, இந்நூலின் பின் சேர்க்கைப் பகுதியில் உள்ள அவருடைய நாட்குறிப்பில் காணலாம்.

லண்டனுக்குச் செல்ல வேண்டும் என்ற ஆர்வத்தில், அதற்கு வேண்டிய அனுமதிக்கும் பண உதவிக்கும் அவர் பட்ட பாட்டையும் அந்த நாட்குறிப்பில் காந்திஜி விவரமாக வருணித்திருக்கிறார்.

என் சகோதரர் உடனே குறுக்கிட்டு இவ்வாறு கூறினர்: "அது தந்தைக்குப் பிடிப்பதே யில்லை. அவர் உன்னை மனத்தில் வைத்துக்கொண்டே, 'பிணங்களை அறுத்துச் சோதிப்பது வைஷ்ணவர்களாகிய நமக்குத் தகாது' என்று சொன்னர். நீ வக்கீல் ஆகவேண்டும் என்றுதான் அவர் விரும்பினர்."

ஜோஷிஜி இடை மறித்துக் கூறியதாவது: "காந்திஜியைப் போல் வைத்தியத் தொழில் கூடாது என்பவனல்ல நான். நமது சாத்திரங்களும் அதற்கு விரோதமாகக் கூறவில்லை. ஆனல், ஒரு வைத்தியப் பட்டம் உன்னைத் திவான் ஆக்கிவிடாது. நீ திவானக வேண்டும்; சாத்தியமானல் இன்னும் பெரிய பதவியையும் பெறவேண்டும் என்று நான் விரும்புகிறேன். அப்படி ஆனல் தான் உன்னுடைய பெரிய குடும்பத்தை நீ காப்பாற்ற முடியும். காலம் வேகமாக மாறிக்கொண்டே போகிறது. நாளுக்கு நாள் கஷ்டமாகிக்கொண்டும் வருகிறது. ஆகையால், மிகப் புத்திசாலித்தனமான காரியம் பாரிஸ்டராகி விடுவதுதான்!" என் தாயாரைப் பார்த்து அவர் கூறியதாவது: "இப்பொழுது நான் புறப்பட வேண்டும். நான் கூறியதை நன்ருக யோசிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். நான் திரும்ப இங்கே வரும்போது, இங்கிலாந்துக்குப் புறப்படுவதற்கான ஏற்பாடுகளைக் குறித்து நான் அறியலாம் என்று எதிர்பார்க்கிறேன். ஏதாவது ஒருவகையில் நான் உதவி செய்ய முடியுமென்ருல் நிச்சயமாக எனக்குத் தெரிவியுங்கள்."

ஜோஷிஜி போய்விட்டார்; நானும் மனக்கோட்டைகள் கட்டலானேன்.

என் மூத்த சகோதரரின் மனம் மிகப் பரபரப்படைந்து விட்டது. என்னை அனுப்புவதற்கு வேண்டிய பணத்திற்கெல்லாம் என்ன வழி செய்வது? என்னைப்போன்ற ஓர் இளைஞனை நம்பித் தன்னந்தனியாக வெளி நாடுகளுக்கு அனுப்புவது சரியா?

என் தாயாருக்கும் ஒரே மனக்குழப்பம் ஆகிவிட்டது. என்னை விட்டுப் பிரிய அவர் விரும்பவில்லை. ஆகவே, எனக்குச் சாக்குப் போக்குச் சொல்லிவிட முயன்ருர். "இப்பொழுது சிறிய தகப்பனர்தான் நம் குடும்பத்தில் பெரியவர். அவரை முதலில் கலந்து ஆலோசிக்க வேண்டும். அவர் ஒப்புக்கொண்டால் இவ் விஷயத்தைப்பற்றி யோசிப்போம்" என்ருர்.

என் சகோதரருக்கு இன்னும் ஒரு யோசனை தோன்றிற்று. அவர் என்னிடம் பின் வருமாறு கூறினர்: "போர்பந்தர் சமஸ்தானத்தினிடம் உதவியை எதிர்பார்க்க நமக்கு உரிமை இருக்கிறது. ஸ்ரீ லேலி அதற்கு நிர்வாக அதிகாரி. நம் குடும்பத்தினிடம் அவருக்கு நல்ல மதிப்பு உண்டு. நமது சிறிய தகப்பனரிடமும் அவர் பிரியமாக இருக்கிருர். இங்கிலாந்தில் நீ படிப்

பதற்காக உனக்கு ஏதாவது சமஸ்தான உதவி அளிக்க அவர் சிபார்சு செய்வது சாத்தியமாகலாம்."

இந்த யோசனை எனக்கும் பிடித்தமானதாக இருந்தது. போர்பந்தருக்கு உடனே புறப்படுவதற்குத் தயாரானேன். அந்தக் காலத்தில் ரெயில் கிடையாது. மாட்டு வண்டியில் ஐந்து நாட்கள் போக வேண்டும். நான் பயங்காளி என்பதை முன்னு லேயே கூறியிருக்கிறேன். இங்கிலாந்துக்குப் போக வேண்டும் என்ற ஆசையே என்னை முற்றும் அப்பொழுது ஆட்கொண் டிருந்ததால் அதன் முன்னுல் என் பயங்காளித் தனமெல்லாம் ஓடி மறைந்துவிட்டது. தோராஜி வரைக்கும் ஒரு மாட்டு வண் டியை அமர்த்திக்கொண்டேன். போர்பந்தருக்கு ஒரு நாள் முன்னுடியே போய்விடவேண்டும் என்பதற்காகத் தோராஜியில் ஓர் ஒட்டகத்தை அமர்த்தினேன். ஒட்டகத்தில் நான் சவாரி செய்தது அதுதான் முதல் முறை.

கடைசியாகப் போர்பந்தர் போய்ச் சேர்ந்தேன். என் சிறிய தகப்பனுரை சாஷ்டாங்கமாய் வணங்கி எல்லாவற்றையும் அவ ரிடம் சொன்னேன். அதைப்பற்றி அவர் யோசித்துவிட்டுப் பின் வருமாறு கூறினுர்: "மத தருமம் கெடாமல் ஒருவர் இங்கிலாந்தில் இருப்பது சாத்தியம் என்பது எனக்கு நிச்சயமில்லை. நான் கேள்விப்பட்டிருப்பவைகளைக் கொண்டு பார்த்தால் எனக்குச் சந்தேகமாகத்தான் இருக்கிறது. இந்தப் பெரிய பாரிஸ்டர்களை நான் பார்க்கும்போது, இவர்கள் வாழ்க்கைக்கும் ஐரோப்பியர் வாழ்க்கைக்கும் எந்த வித்தியாசத்தையும் நான் காணவில்லை. இவர்கள் எந்த உணவையும் சாப்பிடுகிருர்கள். இவர்கள் வாயில் சுருட்டு இல்லாமல் இருப்பதே இல்லை. வெட்கமில்லாமல் ஆங்கிலேயரைப்போலவே உடை உடுத்துகிருர்கள். இவை யெல்லாம் நம் குடும்ப பாரம்பரியத்திற்குப் பொருந்தாதவை. சீக்கிரத்தில் நான் க்ஷேத்திர யாத்திரைக்குப் புறப்படப் போகிறேன். இன்னும் பல வருடங்களுக்கு நான் உயிரோ டிருக்கப் போவதில்லை. மரணத்தின் தறுவாயில் இருக்கும் நான், இங்கிலாந்திற்குப் போகவும், கடல் கடக்கவும் உனக்கு அனுமதி கொடுக்க எப்படித் துணிவேன்? ஆனல், உன் வழியில் குறுக்கிடமாட்டேன். இதற்கு முக்கியமாக வேண்டியது உன் தாயாரின் அனுமதி. அவர் அனுமதி கொடுத்துவிட்டால், சுகமாகப் போய் வா. இதில் நான் குறுக்கிடமாட்டேன் என்று அவருக்குத் தெரிவி. என் ஆசி உனக்கு எப்பொழுதும் இருக்கும்."

"இதைவிட அதிகமாக எதையும் நான் உங்களிடமிருந்து எதிர்பார்க்க முடியாது" என்றேன். "என் தாயாரின் சம்மதத் தைப் பெற முயல்கிறேன். ஸ்ரீ லேலிக்கு என்னைப்பற்றி நீங்கள் சிபார்சு செய்கிறீர்களா?" என்று கேட்டேன்.

"அதை நான் எப்படிச் செய்ய முடியும்?" என்ருர் அவர். "ஆனல், அவர் நல்லவர். உனது உறவு முறையைத் தெரிவித்து,

அவரை நீ பார்க்க விரும்புவதாகக்கேள்; நிச்சயமாகப் பார்ப்பார். உனக்கு உதவி செய்யவும் கூடும்'' என்றார்.

என் சிறிய தகப்பனர் எனக்கு ஏன் சிபார்சுக் கடிதம் கொடுக்கவில்லை என்பதைப்பற்றி என்னால் கூற முடியாது. நான் இங்கிலாந்துக்குப் போவது மத விரோதமான காரியம் என்ற கருத்து அவருக்கு இருந்ததால் நான் போவதில் நேரடியாக ஒத்துழைக்க அவர் தயங்கினர் என்று ஏதோ கொஞ்சம் எனக்கு ஞாபகம் இருக்கிறது.

ஸ்ரீ லேலிக்கு எழுதினேன். தமது வீட்டில் வந்து பார்க்கும் படி அவர் அறிவித்தார். மாடிப் படிக்கட்டு ஏறிக்கொண்டிருந்த போதே அவர் என்னைப் பார்த்தார். ''முதலில் நீ பி. ஏ. பாஸ் செய். பிறகு வந்து என்னைப் பார். இப்பொழுது உனக்கு எந்த உதவியும் செய்வதற்கில்லை'' என்று சுருக்கமாகச் சொல்லிவிட்டு வேகமாகப் படியேறிப் போய்விட்டார். அவரைச் சந்திப்பதற் காக எவ்வளவோ விரிவான முன்னேற்பாடுகளை யெல்லாம் செய் திருந்தேன். அவரிடம் பேசச் சில வாக்கியங்களைக் கவனமாகக் கற்று வைத்திருந்தேன். தாழ்ந்து தலை வணங்கி, இரு கரங்களா லும் சலாம் போட்டேன். ஆனல், அவை யெல்லாம் ஒன்றுக்கும் பயன்பட வில்லை.

பிறகு என் மனைவியின் நகைகளைப்பற்றி நினைத்தேன். என் மூத்த அண்ணன் நினைவும் வந்தது. அவரிடம் எனக்கு முழு நம்பிக்கையும் உண்டு. அவர் தாராளமான மனமுடையவர். என்னைத் தம் மகன் போலவே கருதி அன்பு கொண்டிருந்தார்.

போர்பந்தரிலிருந்து ராஜ்கோட்டுக்குத் திரும்பி, அங்கே நடந்ததையெல்லாம் தெரிவித்தேன். ஜோஷிஜியைக் கலந்து ஆலோசித்தேன். அவரோ, அவசியமானல் கடன் வாங்கும் படியும் யோசனை கூறினர். என் மனைவியின் நகைகளை விற்றால் இரண்டாயிரம் அல்லது மூவாயிரம் ரூபாய் கிடைக்கும். அவற்றை விற்றுவிடும் யோசனையையும் கூறினேன். எப்படியும் பணம் தேடிவிடுவதாக என் சகோதரர் வாக்களித்தார்.

என் தாயார் மாத்திரம் இன்னும் என்னை இங்கிலாந்துக்கு அனுப்ப விரும்பாமலேயே இருந்தார். நுட்பமாக எல்லா விவரங் களையும் விசாரித்துக் கொண்டிருந்தார். வாலிபர்கள் இங்கிலாந்துக்குப் போய்க் கெட்டுவிடுகிறார்கள் என்று யாரோ ஒருவர் அவருக்குச் சொல்லிவிட்டார். இன்னும் யாரோ ஒருவர், 'அவர்கள் மாமிசம் சாப்பிட ஆரம்பித்துவிடுகிறார்கள்' என்று சொல்லிவிட்டார். 'குடிக்காமல் அங்கே அவர்களால் இருக்கவே முடியாது' என்று இன்னும் ஒருவர் சொல்லியிருந்தார். ''இவை களுக்கெல்லாம் நீ என்ன சொல்லுகிறாய்?'' என்று என் தாயார் என்னைக் கேட்டார். நான், ''என்னை நீங்கள் நம்ப

மாட்டீர்களா? உங்களிடம் பொய் சொல்லமாட்டேன். 'அவைகளில் எதையும் தீண்டுவதில்லை' என்று உங்களுக்குச் சத்தியம் செய்து கொடுக்கிறேன். அங்கே அப்படிப்பட்ட அபாயம் ஏதாவது இருந்தால் ஜோஷிஜி என்னைப் போகவிடுவாரா?" என்றேன்.

"உன்னை நான் நம்பலாம். ஆனல், நீ தொலைவான நாட்டில் இருக்கும்போது எப்படி நம்புவது? எனக்கு ஒரே குழப்பமாக இருக்கிறது; என்ன செய்வது என்பதே புரியவில்லை. பேச்சர்ஜி சுவாமியைக் கேட்கிறேன்" என்ருர், அன்னை.

பேச்சர்ஜி சுவாமி முன்பு மோத் வணிகர். இப்பொழுது ஜைன சந்நியாசி யாகிவிட்டார். ஜோஷிஜியைப் போல இவரும் குடும்பத்திற்கு வேண்டிய ஆலோசனைகளைக் கூறிவருவார். அவர் எனக்கு உதவினர். "மூன்று விரதங்களை அவன் அனுசரிப்பதாக அவனிடம் சத்தியம் வாங்கிக்கொள்ளுகிறேன். பிறகு அவனைப் போகச் சொல்லலாம்" என்ருர். அவர் என்னிடம் அப்படியே பிரமாணம் வாங்கினர். மதுபானம், பெண், மாமிசம் ஆகியவைகளைத் தொடுவதில்லை என்று சத்தியஞ் செய்து கொடுத்தேன். உடனே என் அன்னை அனுமதி தந்தார்.

என்னைக் கௌரவிப்பதற்காக உயர்நிலைப்பள்ளியில் எனக்கு ஒரு பிரிவுபசாரம் நடத்தினர். ராஜ்கோட்டைச் சேர்ந்த ஒரு வாலிபன், இங்கிலாந்துக்குப் போகிருன் என்ருல் அது சாமானிய விஷயமன்று! நன்றி தெரிவிப்பதற்கென்று சில வார்த்தைகள் எழுதி வைத்திருந்தேன். அதைப் படிக்க நான் எழுந்தபோது எனக்கு எவ்விதம் தலை சுற்றியது, உடம்பெல்லாம் எவ்விதம் நடுங்கியது என்பது இன்னும் நினைவிருக்கிறது.*

எங்கள் வீட்டுப் பெரியவர்களின் ஆசீர்வாதத்தைப் பெற்று நான் பம்பாய்க்குப் புறப்பட்டேன். ராஜ்கோட்டிலிருந்து நான் பம்பாய்க்குச் சென்றது இதுவே முதல் முறை. என் சகோதரரும் என்னுடன் வந்தார். கைக்கு எட்டியது வாய்க்கு எட்டுவதற்குள் எத்தனையோ விபத்துக்களும், சமாளித்தாக வேண்டிய கஷ்டங்களும் பம்பாயில் காத்திருந்தன.

---

* காந்திஜியின் சக மாணவர்கள் 1888-ஆம் வருஷம், ஜூலை மாதம், 4-ஆம் தேதியன்று ராஜ்கோட் ஆல்பிரட் உயர்நிலைப்பள்ளியில் இந்தப் பிரிவுபசாரத்தை நடத்தியபோது, காந்திஜிக்கு வயது 18. அன்று அவர் பேசிய சில வார்த்தைகள், ஜூலை, 12-ஆம் தேதி வெளிவந்த 'கத்தியவார் டைம்ஸ்' என்ற குஜராத்திப் பத்திரிகையில் பின்வருமாறு பிரசுரமாயிருந்தன:

"உங்களில் சிலர் என்னைப் பின்பற்றி இங்கிலாந்துக்கு வருவீர்கள் என்றும், அங்கிருந்து திரும்பி வந்த பிறகு இந்தியாவில் பெரிய சீர்திருத்தங்களைச் செய்ய முழு மனத்துடன் பாடுபடுவீர்கள் என்றும் நான் நம்புகிறேன்." (இதுவே காந்திஜியின் முதல் பிரசங்கமாக இருக்கக்கூடும்.)

# 12

# சாதிக் கட்டுப்பாடு

பிறந்து சில மாதங்களே ஆன குழந்தையுடன் என் மனைவியை விட்டுவிட்டு, என் தாயாரின் அனுமதியையும் ஆசீர்வாதங்களையும் பெற்றுக்கொண்டு நான் குதூகலமாகப் பம்பாய்க்குப் புறப்பட்டேன். அங்கே போய்ச் சேர்ந்ததும், ஜூன், ஜூலை மாதங்களில் இந்து மகா சமுத்திரத்தில் கொந்தளிப்பு அதிகமாக இருக்கும் என்றும், நான் இப்பொழுதுதான் முதல் முறையாகக் கப்பல் பிரயாணம் செய்வதால் நவம்பர் மாதம் வரையில் நான் கப்பலேற அனுமதிக்கக்கூடாது என்றும் நண்பர்கள் என் சகோதரரிடம்கூறினர். 'இப்பொழுதுதான் புயல்காற்றினால் ஒரு கப்பல் முழுகிவிட்டது' என்றும் யாரோ சொன்னார்கள். இதனால் என் சகோதரருக்கு மனக்கலக்கம் உண்டாயிற்று. உடனே கப்பல் பிரயாணம் செய்ய என்னை அனுமதிக்கும் அபாயத்திற்கு உடன்பட அவர் மறுத்துவிட்டார். என்னைப் பம்பாயில் ஒரு நண்பரிடம் விட்டுவிட்டுத் தம் வேலைகளைக் கவனிக்க அவர் ராஜ்கோட்டுக்குத் திரும்பினார். என் பிரயாணச் செலவுக்கென்று வைத்திருந்த பணத்தை ஒரு மைத்துனரிடம் கொடுத்து, வைத்திருக்கச் சொல்லிவிட்டு, எனக்குத் தேவையான உதவிகளையெல்லாம் செய்யுமாறு சில நண்பர்களிடம் சொல்லிப்போனார்.

பம்பாயில் நாளை எண்ணிக்கொண்டே காலங் கழித்தேன். இங்கிலாந்துக்குப் போகப்போவதைப் பற்றி ஓயாமல் கனவு கண்டு கொண்டிருந்தேன்.

இதற்கு மத்தியில் நான் வெளிநாட்டுக்குப் போகப் போவதைக் குறித்து என் சாதியினர் பரபரப்படைந்தார்கள். மோத் வணிக சாதியைச் சேர்ந்த யாரும் இதுவரை இங்கிலாந்துக்குப் போனதில்லை. நான் போகத் துணிந்தால், எனக்குத் தக்க சிட்சை விதிக்க வேண்டும்! சாதியினரின் பொதுக்கூட்டம் ஒன்றைக் கூட்டினர். அதன் முன்னால் ஆஜராகுமாறு எனக்குக் கட்டளை அனுப்பினர். நானும் போனேன். திடீரென்று எனக்கு எப்படி அவ்வளவு தைரியம் வந்தது என்பது எனக்கே தெரியவில்லை. எதற்கும் அஞ்சாமல், கொஞ்சமும் தயக்கமின்றிக் கூட்டத்திற்கு முன்னால் போனேன். சாதி நாட்டாண்மைக்காரரான சேத் எனக்குத் தூர பந்து. என் தந்தையாருக்கு மிகவும் வேண்டியவராயிருந்தவர். என்னைப் பார்த்து அவர் பின் வருமாறு கூறினார்:

"இங்கிலாந்துக்குப் போவதென்று நீ ஏற்பாடு செய்திருப்பது சரியல்ல என்பது நம் சாதியினரின் அபிப்பிராயம். வெளிநாடுகளுக்குக் கப்பல் பிரயாணம் செய்வதை நம் மதம் அனுமதிக்க

வில்லை. நம் மத தருமங்களைக் கைவிடாமல் அங்கே வசிப்பதே சாத்தியமில்லை என்று நாங்கள் கேள்விப்பட்டிருக்கிருேம். ஐரோப் பியருடன் சேர்ந்து சாப்பிடவும் குடிக்கவும் வேண்டி வரும்!''

இதற்கு நான் சொன்ன பதிலாவது: ''இங்கிலாந்துக்குச் செல்வது நம் மதத்திற்கு விரோதம் என்றே நான் கருதவில்லை. மேற்கொண்டு படிப்பதற்காகவேதான் நான் அங்கே போக உத் தேசித்திருக்கிறேன். நீங்கள் எவற்றைக் குறித்து அதிகமாகப் பயப்படுகிறீர்களோ அந்த மூன்றையும் தீண்டுவதில்லை என்று என் தாயார் முன்னிலையில் சத்தியம் செய்து கொடுத்திருக் கிறேன். அந்தப் பிரதிக்ஞை என்னைப் பாதுகாக்கும் என்று நான் நிச்சயமா யிருக்கிறேன்.''

இதற்குச் சேத், ''அங்கே நமது மதாசாரங்களைக் கடைப் பிடித்து நடப்பது சாத்தியமே அல்ல என்று நாங்கள் சொல்லு கிருேம். எனக்கும் உன் தந்தைக்கும் இருந்த உறவு, உனக்குத் தெரியும். ஆகவே, நான் கூறும் புத்திமதியை நீ கேட்க வேண் டும்" என்ருர்.

''அந்த உறவுகளையெல்லாம் நான் அறிவேன். நீங்கள் எனக் குப் பிதாவைப் போன்றவர். ஆனல், இதில் நான் வேறு எதுவும் செய்வதற்கில்லை. இங்கிலாந்துக்குச் செல்வதென்று தீர்மானித்து விட்டதை நான் மாற்றுவதற்கில்லை. என் தந்தையின் நண்பரும் ஆலோசகருமான கற்றறிந்த ஒரு பிராமணர், நான் இங்கிலாந்து செல்வதில் எந்தவித ஆட்சேபமும் இருப்பதாகச் சொல்லவில்லை. என் தாயாரும் சகோதரரும் எனக்கு அனுமதிகொடுத்திருக் கிருர்கள்'' என்றேன்.

''என்ருலும், சாதிக் கூட்டத்தின் கட்டளையை நீ மீறி நடக் கப் போகிருயா?''

''எனக்கு வேறு வழியில்லை. இவ்விஷயத்தில் சாதி தலை யிடக்கூடாது என்றே நான் நினைக்கிறேன்.''

இதைக் கேட்டதும் சேத்துக்குக் கோபம் வந்துவிட்டது. கடுமையாகப் பேசினர். அதற்கெல்லாம் அசையாமல் உட்கார்ந் திருந்தேன். எனவே, சேத் வருமாறு உத்தரவு பிறப்பித்தார்: ''இன்று முதல் இப்பையனைச் சாதிப்பிரஷ்டம் செய்யப்பட் டவனை நடத்த வேண்டும். இவனுக்கு யார் உதவி செய்தாலும், இவனை வழியனுப்ப யார் துறைமுகத்திற்குச் சென்ருலும், அவர் ஒரு ரூபாய் நான்கணு அபராதம் விதிக்கப்படுவார்!''

இந்த உத்தரவைக் கேட்டு நான் கலங்கிவிடவில்லை. சேத்திடம் விடை பெற்றுக்கொண்டு திரும்பினேன். இதை என் சகோதரர் எப்படி ஏற்பாரோ என்றே பயந்திருந்தேன்.

அதிருஷ்டவசமாக, அவர் உறுதியுடன் இருந்தார். சேத்தின் கட்டளை எதுவானுலும், நான் போவதைத் தாம் அனுமதிப்ப தாகக் கடிதம் எழுதி எனக்கு உறுதி கூறினர்.

என்ருலும், கப்பல் ஏறிவிடவேண்டும் என்ற என் ஆர்வத்தை இச் சம்பவம் அதிகமாக்கிவிட்டது. என் சகோதரரைக் கட்டா யப்படுத்தி அவர் மனத்தை மாற்றிவிடுவதில் அவர்கள் வெற்றி பெற்றுவிட்டால் என்னவாகும்? எதிர்பாராதது ஏதோ நிகழ்ந்து விடுகிறதென்று வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது? எனக் குள்ள சங்கடத்தைக் குறித்து இப்படியெல்லாம் எண்ணி நான் சஞ்சலப்பட்டுக் கொண்டிருந்தபோது, பாரிஸ்டர் ஆவதற்காக ஜுனுகத் வக்கீல் ஒருவர், செப்டம்பர், 4-ஆம் தேதி புறப்படும் கப்பலில் இங்கிலாந்துக்குப் போகிருர் என்று கேள்வி யுற்றேன். என்னைக் கவனித்துக்கொள்ளுமாறு என் சகோதரர் சொல்லிப் போயிருந்த நண்பர்களைச் சந்தித்து, விஷயத்தைக் கூறினேன். அத்தகைய துணையுடன் போவதற்கு வாய்த்த சந்தர்ப்பத்தை இழந்துவிடக் கூடாது என்று அவர்களும் ஒப்புக் கொண்டார்கள். காலம் தாழ்த்துவதற்கே இல்லை. அனுமதி யளிக்குமாறு என் சகோதரருக்குத் தந்தி கொடுத்தேன். அவரும் அனுமதித்தார். பணத்தைக் கொடுக்கும்படி என் மைத் துனரைக் கேட்டேன். ஆனுல், அவரோ, சேத்தின் உத்தரவைக் குறிப்பிட்டு, தாம் சாதிப் பிரஷ்டன் ஆக முடியாது என்று சொல்லிவிட்டார். பிறகு நான் குடும்ப நண்பர் ஒருவரை நாடி னேன். கப்பல் கட்டணத்துக்கும் சில்லறைச் செலவுக்கும் வேண்டிய அளவுக்கு எனக்குப் பண உதவி செய்யுமாறும், அக் கடனை என் சகோதரரிடமிருந்து வாங்கிக்கொள்ளும்படியும் கேட்டுக்கொண்டேன். இந்த நண்பர் என் கோரிக்கைக்கு ஒப்புக் கொண்டதோடு என்னை உற்சாகப்படுத்தியும் அனுப்பினர். அவரிடம் மிக்க நன்றி யுடையவனுனேன். அந்தப் பணத்தில் ஒரு பகுதியைக்கொண்டு உடனே கப்பல் டிக்கெட் வாங்கினேன். பின்பு பிரயாணத்திற்கு எனக்கு வேண்டியவைகளைத் தயாரிக்க லானேன். இவ்விஷயத்தில் அனுபவம் வாய்ந்த மற்றெரு நண்பர் இருந்தார். உடைகளையும் மற்றவைகளையும் அவர் தயாரித்துக் கொடுத்தார். உடைகளில் சில எனக்குப் பிடித்தமா யிருந்தன; சில எனக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. கழுத்தில் ‘டை’ கட்டிக்கொள்ளுவதில் பின்னுல் நான் பெருமகிழ்ச்சி யடைந்ததுண்டு. ஆனுல், அப்பொழுது அது எனக்கு வெறுப் பாயிருந்தது. குட்டைச் சட்டை அணிவது, வெட்கத்தைவிட்டுச் செய்யும் காரியம் என்று கருதினேன். இங்கிலாந்துக்குப் போக வேண்டும் என்ற ஆர்வமே என்னிடம் மேலோங்கி நின்றதால், அதன் எதிரே இந்த வெறுப்பெல்லாம் மேலோங்கவில்லை. கப்ப லில் ஜுனுகத் வக்கீல் ஸ்ரீ திரியம்பக்ராய் மஜ்முதார் செல்ல இருந்த அதே அறையிலேயே நண்பர்கள் எனக்கும் ஏற்பாடு செய்திருந்தனர். என்னைக் கவனித்துக் கொள்ளுமாறும் அவ

ரிடம் கூறினர். அவர் அனுபவமுள்ளவர்; நல்ல வயதுவந்தவர்; உலகமறிந்தவர். நானே, உலக அனுபவமே இல்லாத பதினெட்டு வயதுச் சிறுவன். என்னைப்பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை என்று ஸ்ரீ மஜ்முதார் என் நண்பர்களுக்குக் கூறினார்.

கடைசியாகச் செப்டம்பர், 4-ஆம் தேதி பம்பாயிலிருந்து நான் கப்பலில் புறப்பட்டேன்.

## 13

# முடிவாக லண்டனில்

கப்பல் பிரயாணத்தில் எனக்கு மயக்கம் எதுவும் வரவே இல்லை. ஆனால், நாளாக ஆக எனக்கு அலுப்புத்தான் அதிகமாக இருந்தது. பிரயாணிகளின் சாப்பாட்டு வசதிக் காரியஸ்தரிடம் பேசக்கூட எனக்குக் கூச்சமாக இருந்தது. ஆங்கிலத்தில் பேசி, எனக்குப் பழக்கமே இல்லை. நாங்கள் இருந்த இரண்டாம் வகுப்பில் ஸ்ரீ மஜ்முதாரைத் தவிர மற்றெல்லோரும் ஆங்கிலேயர்கள். அவர்களுடன் என்னால் பேச முடியவில்லை. அவர்கள் என்னிடம் வந்து ஏதேனும் பேசினால், அவர்கள் சொல்வது என்ன என்பதைப் புரிந்துகொள்ளுவதும் கஷ்டமாக இருந்தது. புரிந்துகொண்டாலும் என்னால் பதில் சொல்ல முடியவில்லை. பேசுவதற்கு முன்னால் ஒவ்வொரு வாக்கியத்தையும் மனத்திற்குள் நான் சொல்லிப் பார்த்துக்கொள்ள வேண்டியிருந்தது. கத்தியையும் முள்ளையும் கொண்டு எடுத்துச் சாப்பிடவும் எனக்குத் தெரியாது. பரிமாறப் போகும் உணவு வகையைக் குறிப்பிடும் சீட்டில் கண்டவைகளில் மாமிசம் கலவாத பண்டம் எது என்று கேட்டுத் தெரிந்து கொள்ளவும் அப்பொழுது எனக்குத் தைரியமில்லை. ஆகையால், சாப்பாட்டு அறைக்குச் சென்று உட்கார்ந்து நான் சாப்பிடவே இல்லை. என் அறையிலேயே சாப்பிட்டுவிடுவேன். நான் சாப்பிட்டதெல்லாம் பெரும்பாலும் நான் உடன் கொண்டுவந்திருந்த மிட்டாயும் பழங்களுமே. ஸ்ரீ மஜ்முதாருக்கு இத்தகைய சங்கடம் எதுவுமே தோன்றவில்லை. அவர் எல்லோருடனும் சகஜமாகப் பழகிக்கொண்டிருந்தார். நாளெல்லாம் நான் அறைக்குள்ளேயே அடைபட்டுக் கிடப்பேன். மேல் தளத்தில் அதிகம் பேர் இல்லாத போதுதான் அங்கே போகத் துணிவேன். ஆனால், ஸ்ரீ மஜ்முதாரோ மேல் தளத்திற்கு அடிக்கடி போய் உலாவுவார். பிரயாணிகளுடன் கூடிப் பழகி, அவர்களுடன் தாராளமாகப் பேசும்படி அவர் எனக்கு அடிக்கடி சொல்லுவார். வக்கீல்களுக்குப் பேச்சுச் சாமர்த்தியம் இருக்க வேண்டும் என்பார்; வக்கீல் தொழிலில் தமது அனுபவங்களையும் எடுத்துக் கூறுவார். ஓர் அந்நிய மொழியில் பேசும்போது தவறு ஏற்படுவது சகஜம்

என்றும், ஆகையால், அதைப் பொருட்படுத்தாமல் சாத்தியமான ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் ஆங்கிலத்திலேயே பேசும்படியாகவும் எனக்கு அவர் புத்திமதி கூறினர். ஆனல், அவர் என்ன சொல்லியும் எனக்கு இருந்த கூச்சத்தை மாத்திரம் போக்கடிக்கவே முடியவில்லை.

ஆங்கிலப் பிரயாணி ஒருவர், என்மீது பிரியங்கொண்டு, என்னைப் பேச்சுக்கு இழுத்தார். அவர் என்னைவிட மூத்தவர். நான் என்ன சாப்பிட்டேன், நான் யார், நான் எங்கே போகிறேன், நான் இப்படிக் கூச்சப்படுவது ஏன் என்றெல்லாம் அவர் என்னை விசாரித்தார். சாப்பாட்டு அறைக்கு வந்து, எல்லோருடனும் சாப்பிடும்படியும் சொன்னர். மாமிசம் சாப்பிடுவதில்லை என்று நான் பிடிவாதமாகக் கூறியதைக் கேட்டுச் சிரித்தார். நாங்கள் செங்கடலை அடைந்ததும் அவர் நட்பு முறையில் பின்வருமாறு கூறினர்: "அதெல்லாம் இதுவரை மிகவும் சரி. ஆனல், பிஸ்கே குடாக்கடல் போய்ச் சேர்ந்ததும் உம்முடைய தீர்மானத்தையெல்லாம் மாற்றிக்கொண்டுவிட வேண்டியதுதான். இங்கிலாந்தில் குளிர் அதிகமாகையால் மாமிசம் சாப்பிடாமல் அங்கே யாருமே உயிர் வாழமுடியாது."

"அங்கும் மாமிசம் சாப்பிடாமல் மனிதர் இருக்க முடியும் என்று கேள்விப்பட் டிருக்கிறேன்" என்றேன்.

"அதெல்லாம் வெறுங் கதை. இதை நிச்சயமாக நம்பும். புலால் உண்ணுமல் அங்கே இருப்பவர், எனக்குத் தெரிந்த வரையில் யாருமே இல்லை. நான் குடிக்கிறேன். ஆனல், உம்மையும் குடிக்குமாறு நான் சொல்லவில்லை யல்லவா? மாமிசம் சாப்பிடாமல் அங்கே உயிர் வாழ முடியாதாகையால் நீர் புலால் உண்டே ஆக வேண்டும் என நினைக்கிறேன்" என்ருர்.

"உங்கள் அன்பான புத்திமதிக்கு என் நன்றி. ஆனல், புலாலைத் தீண்டுவதில்லை என்று என் அன்னைக்கு நான் சத்தியம் செய்து கொடுத்துவிட்டு வந்திருக்கிறேன். ஆகையால், அதைத் தின்னுவது என்பதை நான் நினைப்பதற்கும் இல்லை. அதைத் தின்னமல் இருப்பது சாத்தியமில்லை என்று கண்டால் நான் இந்தியாவுக்குத் திரும்பிவிடுவேனே யன்றி அங்கே இருக்க வேண்டும் என்பதற்காக மாமிசம் தின்னமாட்டேன்" என்றேன்.

பிஸ்கே குடாக்கடலை அடைந்தோம். மாமிசம் தின்பதும் குடிப்பதும் அவசியம் என்ற உணர்ச்சி அப்பொழுதும் எனக்கு ஏற்படவில்லை. மாமிசமே சாப்பிடாமல் இருந்ததற்கு அத்தாட்சிப் பத்திரங்களைச் சேகரித்து வைத்துக்கொள்ளுமாறு சொல்லியிருந்தார்கள். ஆதலால், அத்தகைய அத்தாட்சி ஒன்று எழுதித் தருமாறு அந்த ஆங்கில நண்பரிடம் கேட்டேன். அவரும் மகிழ்ச்சியுடன் கொடுத்தார். அதைக் கொஞ்ச காலம் பத்திரமாக

வைத்தும் இருந்தேன். ஆனால், மாமிசம் சாப்பிடுகிறவர்களும் அத்தகைய அத்தாட்சியைப் பெற்றுவிட முடியும் என்பதை நான் பின்னால் கண்டதும் அத்தாட்சிப் பத்திர விஷயத்தில் எனக்கிருந்த மோகம் போய்விட்டது. என் வார்த்தையில் நம்பிக்கை இல்லையென்றால் இவ்விஷயத்தில் அத்தாட்சிப் பத்திரம் வைத்திருந்துதான் என்ன பயன்?

முடிவாக, சௌத்தாம்டன் துறைமுகம் போய்ச் சேர்ந்தோம். அன்று சனிக்கிழமை என்றே எனக்கு ஞாபகம். கப்பலில் இருந்த போது கறுப்பு உடை தரித்திருந்தேன். என் நண்பர்கள் தயாரித்துக் கொடுத்திருந்த வெள்ளைக் கம்பளி உடையைக் கப்பலிலிருந்து இறங்கும்போது போட்டுக்கொள்ளுவது என்று வைத்திருந்தேன். இறங்கும்போது வெள்ளை உடை அணிந்தால் அழகாயிருக்கும் என்று நினைத்தேன்.

ஆகவே, வெள்ளைக் கம்பளி ஆடை உடுத்துக்கொண்டு இறங்கினேன். அப்பொழுது செப்டம்பர் மாதக் கடைசி. அத்தகைய உடை உடுத்தியவன் நான் ஒருவனே என்பதைக் கண்டேன். மற்றவர்களெல்லாம் கிரிண்ட்லே கம்பெனியின் ஏஜெண்டிடம் தங்கள் சாமான்களை எல்லாம் ஒப்படைத்துவிட்டு இறங்கினார்கள். நானும் அப்படியே செய்ய வேண்டும் என்று என் சாமான்களை - சாவி உள்பட - அந்த ஏஜெண்டிடம் ஒப்பித்தேன்.

என்னிடம் நான்கு அறிமுகக் கடிதங்கள் இருந்தன. டாக்டர் பி. ஜே. மேத்தா*; ஸ்ரீ தளபத்ராம் சுக்லா, ராஜகுமாரர் ரஞ்சித் சிங்ஜி, தாதாபாய் ஆகிய நால்வருக்குமே அக் கடிதங்கள். லண்டனில் விக்டோரியா ஹோட்டலில் போய்த் தங்கும்படி கப்பலில் யாரோ ஒருவர் சொன்னார். அதன்படி நானும் ஸ்ரீ மஜ்முதாரும் அங்கே போனோம். நான் ஒருவனே வெள்ளை உடையுடன் இருப்பது எனக்குப் பெரிய அவமானமாக இருந்தது. மறுநாள் ஞாயிற்றுக்கிழமை. ஆகையால், என் சாமான்களைக் கிரிண்ட்லே கம்பெனியார் அதற்கு மறுநாளே கொண்டு வந்து சேர்ப்பார்கள் என்று ஹோட்டலில் கூறியதும் எனக்கு ஆத்திரம் வந்துவிட்டது.

டாக்டர் மேத்தாவுக்குச் சௌத்தாம்டனிலிருந்து தந்தி கொடுத்திருந்தேன். அன்றிரவு எட்டு மணிக்கு அவர் என்னைப் பார்க்க வந்தார். மிக்க அன்புடன் எனக்கு முகமன் கூறினார். நான் வெள்ளைக் கம்பளி உடை தரித்திருப்பதைப் பார்த்துச்சிரித்தார். நாங்கள் பேசிக்கொண்டிருந்தபோது அவருடைய உயரத் தொப்பியை எடுத்தேன். அது எவ்வளவு மிருதுவாக இருக்கிறது என்பதை அறிய அதைத் தடவிப் பார்த்தேன். தெரியாமல்

---

* இதே டாக்டர் மேத்தா பிறகும் காந்திஜியுடன் நெருங்கிய தொடர்பு வைத்திருந்தார். 1912-இல் 'காந்தியும் தென்னாப்பிரிக்க இந்தியர் பிரச்னையும்' என்ற ஒரு நூலையும் இவர் எழுதினர்.

எதிர்ப்புறமாகத் தடவி விட்டேன். அது ஒரு பிராணியின் மிருதுவான ரோமத்தால் ஆனது. எனவே, நான் தடவியதனல் அந்த ரோமமெல்லாம் கலேந்துவிட்டது. நான் செய்ததையெல்லாம் ஒரு மாதிரி கோபத்துடன் டாக்டர் மேத்தா பார்த்துவிட்டு, என்னைத் தடுத்தார். ஆனல், விஷமம் நடந்தது நடந்துவிட்டது. இச் சம்பவம் வருங்காலத்திற்கு எனக்கு ஓர் எச்சரிக்கையாயிற்று. ஐரோப்பிய மரியாதைச் சம்பிரதாயங்களில் நான் கற்ற முதல் பாடம் இது. அந்தச் சம்பிரதாய விவரங்களைப்பற்றி டாக்டர் மேத்தா வேடிக்கையாகவே எனக்குப் பாடம் கற்பித்தார் "பிறருடைய சாமான்களைத் தொடாதீர்" என்ருர். "ஒருவர் முதல் முதலில் அறிமுகமானதும் இந்தியாவில் கேட்பதுபோல் அவரிடம் கேள்விகளெல்லாம் போடாதேயும்; இரைந்து பேசக்கூடாது; பேசிக் கொண்டிருக்கையில் இந்தியாவில் நாம் கூப்பிடுவதைப்போல யாரையும், 'ஸார்' என்று கூப்பிடக்கூடாது. வேலைக்காரர்களும் கீழிருப்பவர்களும் மாத்திரமே அப்படிக் கூப்பிடுவார்கள்" என்ருர். இப்படியெல்லாம் பல விஷயங்களை எனக்குப் போதித்தார். ஹோட்டலில் தங்கினல் செலவு அதிகமாகும் என்றும், தனிப்பட்ட ஒரு குடும்பத்தினருடன் தங்கியிருப்பதே நல்லது என்றும் சொன்னர். அதைப்பற்றித் திங்கட்கிழமை யோசிப்பதென்று ஒத்தி வைத்தோம்.

ஹோட்டல் வாசம் - எனக்கும் சரி, ஸ்ரீ மஜ்முதாருக்கும் சரி - சங்கடமானதாக இருந்தது. அதோடு, செலவும் அதிகமாயிற்று. மால்டாவிலிருந்து எங்களுடன் கப்பலில் வந்த ஒரு சிந்திக்காரர், ஸ்ரீ மஜ்முதாருக்கு நண்பரானர். லண்டன் அவருக்குப் புதிதல்ல. ஆகவே, நாங்கள் தங்குவதற்கு அறை பார்த்துத் தருவதாக அவர் சொன்னர். நாங்களும் ஒப்புக்கொண்டோம். திங்கட்கிழமை எங்கள் சாமான்கள் வந்து சேர்ந்ததும் ஹோட்டல் கணக்கைத் தீர்த்துவிட்டு. சிந்தி நண்பர் எங்களுக்காக வாடகைக்கு அமர்த்திய அறைகளில் இருக்கப் போய்விட்டோம். ஹோட்டலுக்கு நான் 3 பவுன் கொடுக்க வேண்டி வந்தது! அந்தத் தொகையைக் கண்டதும் நான் அதிர்ச்சி யடைந்தேன் என்பது எனக்கு நினைவிருக்கிறது. செலவு இவ்வளவு அதிகமாக இருந்ததே ஒழிய, அங்கே நான் எதுவும் சாப்பிடாமல் பட்டினி கிடந்தேன் என்றே சொல்ல வேண்டும்! அங்கே கொடுத்த சாப்பாட்டில் எதுவுமே எனக்குப் பிடிக்கவில்லை. ஓர் உணவு வகை எனக்குப் பிடிக்கவில்லை என்று வேருென்றைக் கொண்டுவரச் சொன்னல், இரண்டுக்கும் சேர்த்துப் பணம் கொடுக்க வேண்டி வந்தது. இதெல்லாம் இப்படி இருக்க, உண்மை என்னவென்ருல் பம்பாயிலிருந்து கொண்டு வந்த ஆகாராதிகளைக்கொண்டே நான் காலம் கழிக்கலானேன்.

புது அறையிலும் எனக்கு மன நிம்மதியே இல்லை. வீட்டு நினைவும் நாட்டு நினைவுமே எனக்கு இடைவிடாமல் இருந்துகொண்

டிருந்தன. என் அன்னையின் அன்பு அடிக்கடி என் நினைவுக்கு வரும். இரவில் கண்ணீர் பெருகி, கன்னங்களில் அருவியாக வழியும். வீட்டைப் பற்றிய எல்லாவித நினைவுகளும் வந்து விடவே தூங்கவே முடியவில்லை.† என் துயரத்தை யாரிடமாவது சொல்லி, ஆறுதல் அடையலாம் என்றால் அதற்கும் வழியில்லை. என் துயரத்தை யாரிடமாவது சொல்லிக்கொள்ள முடிந்திருந் தாலும் அதனாலும் ஒரு பயனும் இராது. ஏனெனில், எனக்கு எதுவும் ஆறுதல் அளிக்க முடியாது என்பதை நான் அறிவேன். மக்கள், அவர்களுடைய பழக்க வழக்கங்கள், அவர்களுடைய வீடுகள் எல்லாமே விசித்திரமாக இருந்தன. ஆங்கில மரியாதை முறைகள் விஷயத்திலோ எனக்கு எதுவுமே தெரியாது. ஆகை யால், எங்கே தவறு செய்துவிடுவேனோ என்பதற்காக எப் பொழுதும் எச்சரிக்கையாகவே இருக்க வேண்டியிருந்தது. சைவ உணவு விரதமோ அதிகப்படியானதோர் அசௌகரியம். நான் சாப்பிடக்கூடிய ஆகார வகைகளும் ருசியற்றவைகளாகவும் சப்பென்றும் இருந்தன. எனவே, இருதலைக் கொள்ளி எறும்பு போல் ஆனேன். இங்கிலாந்து வாசத்தை என்னால் சகிக்க முடியவில்லை. ஆனால், இந்தியாவுக்குத் திரும்பிவிடுவது என் பதையோ நினைக்கக்கூட முடியாது. வந்தது வந்துவிட்டேன்; மூன்று ஆண்டுகள் இருந்து முடித்துவிட வேண்டும் என்று கூறி யது, என் அந்தராத்மா.

---

† சகோதரரிடமிருந்து கடிதம் வராததும் காந்திஜிக்குப் பெருங் கவலை அளித் திருக்கிறது என்பது, அவர் லண்டன் சேர்ந்த சிறிது காலத்திற்கெல்லாம் தமது சகோ தரர் லட்சுமிதாஸ் காந்திக்கு 1888, நவம்பர், 9-ஆம் தேதி, குஜராத்தியில் எழுதிய பின் கண்ட கடிதத்திலிருந்து தெரிகிறது :

''என் மதிப்பிற்குரிய சகோதரருக்கு,

சென்ற இரண்டு, மூன்று வாரங்களாக உங்களிடமிருந்து கடிதமே இல்லாதது குறித்து வருந்துகிறேன். என்னிடமிருந்து கடிதம் இல்லாததே நீங்கள் எனக்கு எழுதாமல் இருந்துவிட்டதற்குக் காரணமாயிருக்கலாம். ஆனால், நான் லண்டன் சேரு வதற்கு முன்னால் உங்களுக்குக் கடிதம் எழுதுவது முடியாத காரியம். அதற்காக நீங்களும் எழுதவில்லை என்பது எனக்கு ஆச்சரியமாகவே இருக்கிறது. நான் வெகு தொலைவில் இருப்பதால் கடிதங்களின் மூலமே நாம் சந்திக்க முடியும். கடிதம் வரவில்லை யென்றால் எனக்கு அதிக மனக்கவலை யாகிவிடுகிறது. ஆகையால், வாரந்தோறும் தவறாமல் ஒரு தபால் கார்டு எழுதிவிடுங்கள். என் விலாசம் உங்களுக்குத் தெரியாமல் இருந்தால் நான் இவ்வளவு கவலைப்பட்டிருக்கமாட்டேன். எனக்கு இரு கடிதங்கள் எழுதிய பிறகு எழுதுவதை நிறுத்திவிட்டதனாலேயே அதிக வருத்தமடைகிறேன். பாரிஸ்டர் பரீட்சைக்குப் படிக்க, சென்ற செவ்வாயன்று இன்னர் டெம்பிளில் சேர்ந் தேன். உங்கள் கடிதம் பார்த்து, அடுத்த வாரம் விவரமாக எழுதுகிறேன். இங்கே குளிர் அவ்வளவு கடுமையாக இல்லை. கடுமையான குளிரும் இங்கே அதிக காலம் இருப்பதில்லை. குளிர் இருந்தும் மாமிசமோ, மதுபானமோ எனக்கு அவசியமில்லா திருப்பதால் என் உள்ளத்தில் ஆனந்தம் பொங்குவதோடு, கடவுளுக்கும் நான் நன்றி செலுத்துகிறேன். எனக்கு உடம்பு நன்றாகவே இருக்கிறது. எனது வணக் கத்தைத் தாயாருக்கும் அண்ணியாருக்கும் தெரிவியுங்கள்.''

[ஸ்ரீ டி. ஜி. டெண்டுல்காரின் ''மகாத்மா'' என்ற நூலில் வெளியாகியுள்ள குஜராத்திக் கடிதத்தின் போட்டோவிலிருந்து.]

# 14

# விரும்பி மேற்கொண்ட விரதம்

விக்டோரியா ஹோட்டலில் என்னைப் பார்க்கலாம் என்று எதிர்பார்த்துத் திங்கட்கிழமையன்று டாக்டர் மேத்தா அங்கே சென்றார். அங்கிருந்து நாங்கள் போய்விட்டோம் என்பதை அறிந்தார். எங்கள் புது விலாசத்தைத் தெரிந்துகொண்டு, எங்கள் அறைகளுக்கு வந்து என்னைப் பார்த்தார். கப்பலில் நான் செய்துவிட்ட தவறினால் என் உடம்பில் படை வந்து விட்டது. அலம்புவதற்கும் குளிப்பதற்கும் கப்பலில் கடல் நீரையே உபயோகித்து வந்தோம். அந்நீரில் சவக்காரம் கரையாது. சோப்பு உபயோகிப்பது நாகரிகத்திற்கு அழகு என்று கருதி நான் சோப்புத் தேய்த்துக் கடல் நீரில் குளித்தேன். அதன் பலனாக உடம்பு சுத்தமாவதற்குப் பதிலாகப் பிசுபிசுப்பாயிற்று. இதனால், உடம்பில் படை வந்துவிட்டது. அதை டாக்டர் மேத்தாவுக்குக் காட்டினேன். அவர் காடித் திராவகத்தைப் போடச் சொன்னார். அதைப் போட்டதும் ஒரே எரிச்சலெடுத்து, நான் கதறி அழுதது எனக்கு இன்னும் நினைவிருக்கிறது. டாக்டர் மேத்தா, என் அறையையும் அதில் நான் சாமான்கள் வைத்திருந்ததையும் பார்த்தார். அதில் தமக்குக் கொஞ்சமும் திருப்தியில்லை என்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தார். ''இந்த இடம் உதவாது'' என்றார். ''நாம் இங்கிலாந்துக்கு வருவது படிப்பிற்கு மாத்திரம் அல்ல. முக்கியமாக ஆங்கிலேயரின் வாழ்க்கையிலும், பழக்க வழக்கங்களிலும் அனுபவம் பெறுவதற்காகவும் வருகிறோம். இதற்கு நீர் ஓர் ஆங்கிலக் குடும்பத்துடன் வசிப்பது நல்லது. ஆனால், நீர் அப்படி வசிப்பதற்கு முன்னால் ........என்பவருடன் சிறிது காலம் இருந்து பயிற்சி பெற வேண்டும் என்று நான் நினைக்கிறேன். அவரிடம் உம்மை அழைத்துப் போகிறேன்'' என்றும் கூறினார்.

அவருடைய யோசனையை நன்றியறிதலுடன் ஏற்றுக் கொண்டு, அந்த நண்பரின் அறைகளுக்கே குடிபோனேன். அவர் முழு அன்புடன் என்னைக் கவனித்துக்கொண்டார். தமது சொந்த சகோதரனைப்போலவே பாவித்து என்னை நடத்தினர். ஆங்கிலேயரின் நடை உடை பாவனைகளை யெல்லாம் எனக்குக் கற்றுக் கொடுத்தார். ஆங்கில மொழியில் பேசவும் கற்றுக் கொடுத்தார். என்றாலும், என் சாப்பாட்டு விஷயந்தான் சங்கடமான பிரச்னையாயிற்று. உப்போ, மசாலையோ இல்லாமல் வேக வைத்த காய்கறிகள் எனக்குப் பிடிக்கவே இல்லை. எனக்காக என்ன சமைப்பதென்று புரியாமல் எங்களுக்கு உணவளித்த வீட்டு அம்மாள் திகைத்தார். காலை ஆகாரத்திற்கு ஓட்ஸ் தானியக் கஞ்சி இருக்கும். அது கூடியவரை வயிற்றை நிரப்பும். ஆனால், மத்தியானச் சாப்பாட்டிலும் இரவுச் சாப்பாட்டிலும்

எப்பொழுதும் எனக்குப் பட்டினிதான். அந்த நண்பர் மாமிசம் சாப்பிடும்படி ஓயாமல் எனக்கு எடுத்துக் கூறிக்கொண்டே இருந்தார். என் விரதத்தை அதற்குச் சமாதானமாகக் கூறிவிட்டுப் பேசாமல் இருந்துவிடுவேன். மத்தியானச் சாப்பாட்டிற்கும் இரவு உணவுக்கும் எங்களுக்குப் பசலைக் கீரையும் ரொட்டியும் ஜாமும் இருக்கும். நானோ நன்ருகச் சாப்பிடுகிறவன்; பெருவயிறு படைத்தவன். ஆனால், இரண்டு மூன்று ரொட்டித் துண்டுகளுக்கு அதிகமாகக் கேட்பது சரியல்லவென்று தோன்றியதால் அதிகமாகக் கேட்கவும் எனக்கு வெட்கம். போதாததற்கு மத்தியானத்திலும் இரவிலும் சாப்பாட்டில் பாலும் கிடையாது. இந்த நிலைமையைக் கண்டு அந்த நண்பருக்கு வெறுத்துப் போய் விட்டது. அவர் பின்வருமாறு சொன்னார்: "நீர் என் சொந்தச் சகோதரராக இருந்தால் மூட்டை கட்டி ஊருக்கு அனுப்பியிருப்பேன். இங்குள்ள நிலையை அறியாமல், எழுத்து வாசனையே இல்லாத ஒரு தாயாரிடம் செய்து கொடுத்த சத்தியத்திற்கு என்ன மதிப்பு உண்டு? அது ஒரு விரதமே அல்ல. சட்டப்படி அதை ஒரு விரதமாகவும் கருதுவதற்கில்லை. அத்தகைய ஒரு சத்தியத்தில் விடாப்பிடியாக இருப்பது மூடநம்பிக்கையைத் தவிர வேறொன்றுமில்லை. மேலும் இந்தப் பிடிவாதத்தினால் இங்கே உமக்கு எந்தவிதப் பயனும் உண்டாகாது என்பதையும் உமக்குக் கூறுகிறேன். மாமிசத்தை முன்பு சாப்பிட்டதாகவும், அது உமக்குச் சுவையாக இருந்தது என்றும் ஒப்புக்கொள்ளுகிறீர்; எங்கே முற்றும் அவசியமில்லையோ அங்கே நீர் அதைச் சாப்பிட்டிருக்கிறீர். அவசியமான இடத்தில் உண்ணமாட்டேன் என்கிறீர். இது என்ன பரிதாபம்!"

ஆனால், நான் பிடிவாதமாக இருந்தேன். நாள் தவருமல் அவர் இதைக் குறித்து என்னிடம் தர்க்கம் செய்துகொண்டே இருப்பார். முடியாது என்று எப்பொழுதும் அவருக்குப் பதில் சொல்லிவிடுவேன். அவர் தர்க்கம் செய்யச் செய்ய நானும் அதிகப் பிடிவாதக்காரனுவேன். கடவுளின் பாதுகாப்பைக் கோரித் தினமும் பிரார்த்திப்பேன்; அதை அடையவும் அடைவேன். கடவுளைப் பற்றிய ஞானம் அப்பொழுதே எனக்கு இருந்தது என்பதல்ல; நம்பிக்கைதான் அது. எனக்குச் செவிலித் தாயாக இருந்த அந்த நல்ல ரம்பா விதைத்த நம்பிக்கையின் விதையே வேலை செய்து வந்தது.

ஒரு நாள் அந்த நண்பர், பெந்தாம் எழுதிய 'பயன்படுவதன் தத்துவம் (Theory of Utility)' என்ற நூலை எனக்குப் படித்துக் காட்டினர். எனக்கு ஒன்றுமே புரியவில்லை. அதன் நடை, நான் புரிந்து கொள்ள முடியாத அளவுக்குக் கடினமாக இருந்தது. அதன் பொருள்களை விளக்கவும் ஆரம்பித்தார். அப்பொழுது நான் சொன்னேன்: "தயவுசெய்து என்னை மன்னித்துவிடுங்கள். இந்த நுட்பமான விஷயங்களெல்லாம் எனக்கு விளங்கமாட்டா.

மாமிசம் சாப்பிடுவது அவசியம் என்பதை ஒப்புக்கொள்ளு கிறேன். ஆனால், நான் கொண்ட விரதத்திற்குப் பங்கம் செய்ய முடியாது. இதைப்பற்றி என்னால் விவாதிக்கவும் முடியாது. அப்படியே உங்களோடு விவாதித்தாலும் வெற்றிபெற முடியா தென்பதும் நிச்சயம். நான் முட்டாள், பிடிவாதக்காரன் என்று என்னை விட்டுவிடுங்கள். என்மீது நீங்கள் கொண்டிருக்கும் அன்பை உணருகிறேன். என் நலத்தில் நீங்கள் அக்கறை கொண்டிருக்கிறீர்கள் என்பதையும் அறிகிறேன். எனக்காக நீங்கள் கவலைப்படுவதனாலேயே இதைப்பற்றி அடிக்கடி எனக் குக் கூறி வருகிறீர்கள் என்பதையும் அறிவேன். ஆனால், நான் உங்கள் புத்திமதிப்படி நடக்க முடியாது. விரதம் விரதமே. அதற்குப் பங்கம் செய்ய என்னால் ஆகாது.''

அந்த நண்பர் ஆச்சரியத்தோடு என்னை உற்றுப் பார்த்தார். புத்தகத்தை மூடி வைத்துவிட்டு, ''நல்லது. இனிமேல் உம்மிடம் வாதம் செய்ய மாட்டேன்'' என்றார். நான் மகிழ்ச்சியடைந் தேன். பிறகு இது விஷயமாக என்னிடம் அவர் விவாதிக்கவே இல்லை. ஆனால், என் விஷயத்தில் கவலைப்படுவதை மாத்திரம் அவர் விட்டுவிட வில்லை. அவர் புகை பிடிப்பார்; குடிப்பார். ஆனால், அப்படிச் செய்யுமாறு என்னை அவர் கேட்டதே இல்லை. உண்மையில் அந்த இரண்டு பழக்கங்களும் எனக்குக் கூடாது என்றே சொல்லி வந்தார். மாமிசம் சாப்பிடாவிடில் நான் பல வீன மாகிவிடுவேன், அதனால், இங்கிலாந்தில் நான் சுகமாக வசிக்க முடியாது போகும் என்பது ஒன்றே அவருடைய கவலை யெல்லாம்.

இப்படி ஒரு மாதம் நான் பயிற்சி பெற்றேன். நண்பரின் வீடு ரிச்மாண்டில் இருந்தது. வாரத்தில் இரண்டொரு முறை களுக்குமேல் லண்டனுக்குப் போவது சாத்தியமில்லை. ஆகவே, லண்டனுக்கு அருகில் உள்ள ஏதாவது ஒரு குடும்பத்தோடு என் னைத் தங்கவைக்கவேண்டும் என்று டாக்டர் மேத்தாவும் ஸ்ரீ தளபத்ராம் சுக்லாவும் முடிவுசெய்தனர். மேற்குக் கென்சிங் டனில் ஓர் ஆங்கிலோ - இந்தியரின் வீட்டைக் கண்டுபிடித்து, ஸ்ரீ சுக்லா என்னை அங்கே கொண்டுபோய் விட்டார். அந்த வீட் டுக்கார அம்மாள் விதவை. என்னுடைய விரதத்தைக் குறித்து அவரிடம் கூறினேன். என்னைச் சரியாகக் கவனித்துக் கொள்ளுவ தாக அம் மூதாட்டி வாக்களித்தார். அவர் வீட்டில் வசிக்கலா னேன். அங்குங்கூட அநேகமாக நான் பட்டினி கிடக்கவே நேர்ந் தது. மிட்டாயும் பலகாரங்களும் அனுப்புமாறு வீட்டுக்கு எழுதி யிருந்தேன். ஆனால், எதுவும் இன்னும் வந்து சேரவில்லை. அங்கே கொடுத்த சாப்பாடெல்லாம் எனக்குச் சப்பென்று இருந்தது. சாப்பாடு பிடித்திருக்கிறதா என்று அம் மூதாட்டி தினமும் என் னைக் கேட்பார். ஆனால், அவர்தான் என்ன செய்வார்? முன்பு இருந்ததுபோலவே இன்னும் எனக்குக் கூச்சம் அதிகமாகவே இருந்தது. முதலில் பரிமாறியதைவிட அதிகமாக எதையும்

கேட்கும் துணிவு எனக்கு இல்லை. அந்த அம்மாளுக்கு இரு பெண்கள். அதிகப்படியாக இரண்டொரு ரொட்டித் துண்டுகளை அப் பெண்கள் வற்புறுத்தி எனக்கு வைப்பார்கள். ஆனால், ஒரு முழு ரொட்டிக்குக் குறைந்த எதனாலும் என் வயிறு நிரம்பாது என்பது அவர்களுக்குத் தெரியவே இல்லை.

ஆனால், இதற்குள் எனக்குக் கால் முளைத்துவிட்டது. இன்னும் என் பாடங்களை நான் படிக்க ஆரம்பிக்கவில்லை. ஸ்ரீ சுக்லா தூண்டியதன் பேரில் அப்பொழுதுதான் பத்திரிகைகளைப் படிக்க ஆரம்பித்தேன். இந்தியாவில் நான் செய்திப் பத்திரிகைகளைப் படிப்பதே இல்லை. இங்கே தொடர்ந்து படித்து வந்ததால் பத்திரிகைகளைப் படிப்பதில் எனக்குச் சுவை ஏற்பட்டது. 'டெய்லி நியூஸ்', 'டெய்லி டெலகிராப்', 'பால்மால் கெஜட்' ஆகிய பத்திரிகைகளை எப்பொழுதும் மேலெழுந்தவாரியாகப் படிப்பேன். இதற்கு ஒரு மணி நேரத்திற்கு மேல் ஆகாது. ஆகவே, அங்கும் இங்கும் சுற்ற ஆரம்பித்தேன். சைவச் சாப்பாட்டு விடுதி எங்காவது இருக்கிறதா என்று தேட முற்பட்டேன். அத்தகைய சாப்பாட்டு விடுதிகள் நகரில் இருக்கின்றன என்று நான் தங்கியிருந்த வீட்டுக்கார அம்மாள் கூறியிருந்தார். தினம் பத்துப் பன்னிரண்டு மைல் தூரம் சுற்றுவேன். மலிவான சாப்பாட்டு விடுதிக்குப் போய் அங்கே வயிறு நிறைய ரொட்டியைத் தின்பேன். என்றாலும், எனக்குத் திருப்தி ஏற்படாது. இவ்வாறு சுற்றி அலைந்து வரும்போது, ஒரு நாள் பாரிங்டன் தெருவில் ஒரு சைவச் சிற்றுண்டிச் சாலையைக் கண்டுபிடித்தேன். அதைக் கண்டதும், தன் மனதுக்கு இனியதைக் கண்டதும் ஒரு குழந்தைக்கு என்ன குதூகலம் ஏற்படுமோ அவ்வளவு ஆனந்தம் எனக்கு உண்டாயிற்று. அதற்குள் போகும் முன்பு, கதவுக்கு அருகில் கண்ணாடி ஜன்னலில் விற்பனைக்காகப் புத்தகங்கள் வைக்கப் பட்டிருந்ததைக் கண்டேன். அவற்றில் சால்ட் எழுதிய 'சைவ உணவின் முக்கியத்துவம்' என்ற புத்தகமும் இருந்தது. ஒரு ஷில்லிங் கொடுத்து, அதை வாங்கிக்கொண்டு நேரே சாப்பாட்டு அறைக்குச் சென்றேன். இங்கிலாந்துக்கு வந்த பிறகு நான் வயிறார உண்ட முதல் சாப்பாடு இதுதான். கடவுள் எனக்குத் துணை செய்துவிட்டார்.

சால்ட் எழுதிய அந்த நூலை ஒரு வரிவிடாமல் படித்து முடித்தேன். அது என் மனத்தைப் பெரிதும் கவர்ந்தது. அந்தப் புத்தகத்தைப் படித்த நாள் முதற்கொண்டே, என் இஷ்டத்தின் பேரில் நான் சைவ உணவு விரதம் பூண்டவனானேன் என்று நான் சொல்லிக்கொள்ள முடியும். என் தாயாரின் முன்பு நான் விரதம் எடுத்துக்கொண்ட நாளை வாழ்த்தினேன். சத்தியத்தைக் காப்பாற்ற வேண்டும் என்பதற்காகவும், நான் எடுத்துக்கொண்டிருந்த விரதத்திற்காகவுமே இதுவரை நான் புலால் உண்ணாமல் இருந்து வந்தேன். ஆனால், அதே சமயத்தில் ஒவ்வோர் இந்தியரும் மாமிசம் சாப்பிடுபவராக

வேண்டும் என்று விரும்பி வந்தேன். ஒரு நாள் நானும் தாராளமாகவும் பகிரங்கமாகவும் அப்படிச் சாப்பிடுபவன் ஆக வேண்டும் என்றும், மற்றவர்களேயும் இதற்குத் திருப்ப வேண்டும் என்றும் கருதி, அந்த நாளே ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். ஆனல், இப்பொழுது நான் சைவ உணவு விரதத்தை விரும்பி மேற்கொண்டு விட்டதால், இதைப் பரப்பு வதே என் வாழ்வின் லட்சியமாயிற்று.

# 15

# ஆங்கிலக் கனவானுக நடிப்பு

சைவ உணவில் நான் கொண்ட நம்பிக்கை நாளுக்கு நாள் வளர்ந்து வந்தது. உணவு சம்பந்தமான ஆராய்ச்சி நூல்களேப் படிக்க வேண்டும் என்ற பசியை, சால்டின் புத்தகம் எனக்கு உண்டாக்கிற்று. சைவ உணவைப் பற்றிக் கிடைத்த புத்தகங்களே யெல்லாம் வாங்கிப் படித்தேன். ஹோவார்டு வில்லியம்ஸ் எழுதியிருந்த ‘உணவு முறையின் தருமம் (The Ethics of Diet)’ என்ற நூல், ஆதி காலத்திலிருந்து இன்றைய வரையில் மனிதரின் உணவு வகையைப் பற்றி எழுதப் பெற்ற எல்லாப் புத்தகங்களின் வரலாற்றுச் சரித்திரத்தையும் கூறுகிறது. பித்தகோரஸ், ஏசுநாதரிலிருந்து தற்காலத்தில் வாழ்கிறவர்கள் வரை, எல்லாத் தத்துவஞானிகளும் தீர்க்கதரிசிகளும் சைவ உணவு உட்கொள்ளுபவர்களாகவே இருந்திருக்கிருர்கள் என்பதைக் காட்டவும் இந்த நூல் முயன்றிருக்கிறது. டாக்டர் அன்ன கிங்ஸ்போர்டு எழுதிய ‘உணவு முறையில் சரியான வழி (The Perfect Way in Diet)’ என்ற நூலும் கவர்ச்சிகரமானது. தேகாரோக்கியத்தையும் சுகாதாரத்தையும் குறித்து, டாக்டர் அல்லின்ஸன் எழுதியிருந்தவையும் அதே போல உதவியாக இருந்தன. நோயாளியின் ஆகாரத்தை ஒழுங்கு படுத்துவதன் மூலமே, நோயைக் குணமாக்கும் முறையை அந்த நூலில் அவர் எடுத்துக் கூறியிருந்தார். அவர் சைவ உணவு மாத்திரமே சாப்பிடுகிறவர். ஆகையால், தம்மிடம் வரும் நோயாளிகளுக்கும் கண்டிப்பான சைவ உணவு யோசனையைச் சொல்லி வந்தார். இந்த நூல்களே யெல்லாம் படித்ததன் பலனுக, உணவாராய்ச்சி செய்வதும் என் வாழ்க்கையில் முக்கியமான இடம் பெற்றுவிட்டது. ஆரம்பத்தில் தேக சுகத்தை முக்கியமாகக் கருதியே பெரும்பாலும் இந்தச் சோதனைகளேச் செய்து வந்தேன். ஆனல், பிறகோ சமயப் பற்று, இச் சோதனைகளுக்குப் பிரதானமான நோக்கமாயிற்று.

இதன் நடுவில், என் நண்பர் என்னைப்பற்றிக் கவலேப்படுவதை விடவில்லே. மாமிசம் சாப்பிடுவதில் எனக்கு இருக்கும் ஆட்சேபங்களில் நான் பிடிவாதமாகவே

இருந்து வந்தால், என் உடல் இளைத்துப் போவதோடு நான் மண்டுவாகவும் இருந்துவிடுவேன் என்று கருதினர். ஏனெனில், மாமிசம் சாப்பிடாதிருந்தால் ஆங்கிலேய சமூகத்தில் நான் சகஜமாகப் பழக முடியாது என்றும் அவர் நினைத்தார். என் மீது அவர் கொண்டிருந்த அன்பினாலேயே இப்படியெல்லாம் எண்ணினர். சைவ உணவின் பெருமையைப் பற்றிக் கூறும் நூல்களில் கவனஞ் செலுத்த நான் தலைப்பட்டுவிட்டேன் என்பதை அறிந்ததும், அப் புத்தகங்கள் என் புத்தியைக் குழப்பிவிடுமே என்று பயந்தார். என் படிப்பை மறந்துவிட்டு, அந்த ஆராய்ச்சிகளிலெல்லாம் இறங்கிப் பித்தனாகிவிடுவேன் என்றும் அஞ்சினர். ஆகையால், என்னைச் சீர்திருத்துவதற்காகக் கடைசி முயற்சி ஒன்றையும் செய்தார். ஒரு நாள், நாடகம் பார்க்கப் போகலாம் என்று என்னை அழைத்தார். நாடகம் பார்க்கும் முன்பு இருவரும் ஹால்பர்ன் போஜன விடுதியில் சாப்பிடுவது என்றும் ஏற்பாடு செய்திருந்தார். அந்தப் போஜன விடுதியின் கட்டடம் அரண்மனை போன்றே எனக்குத் தோன்றியது. மேலும், விக்டோரியா ஹோட்டலிலிருந்து வந்து விட்ட பிறகு, நான் சாப்பிடப்போன முதல் பெரிய விடுதியும் இதுதான். அந்த ஹோட்டலில் இருந்தபோது நான் திக்குத் திசை தெரியாதவனாகவே இருந்ததால் அங்கே ஏற்பட்ட அனுபவம் எதுவும் எனக்கு இங்கே உதவியாக இருந்துவிட வில்லை. சங்கோஜத்தினால் நான் கேள்வி எதுவும் கேட்கமாட்டேன் என்று எண்ணியே என் நண்பர் என்னை இந்த விடுதிக்கு அழைத்து வரத் திட்டமிட்டிருந்தார் என்று தெரிந்தது. அநேகர் அங்கே சாப்பிட்டுக்கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு மத்தியில் நானும் என் நண்பரும் ஒரு மேஜையின் முன் சாப்பிட உட்கார்ந்தோம். முதலில் 'சூப்' வந்தது. அது என்ன சூப் என்பது தெரியாமல் திகைத்தேன். ஆனால், அதைப்பற்றி நண்பரிடம் கேட்கும் தைரியம் எனக்கு வரவில்லை; ஆகவே, பரிசாரகரைக் கூப்பிட்டேன். நண்பர் நிலைமையைக் கவனித்துக்கொண்டார். என்ன விஷயம் என்று என்னைக் கடுமையாகக் கேட்டார். "சூப் சைவ சூப் தானா என்று விசாரிக்க விரும்பினேன்" என்று அதிகத் தயக்கத்துடனேயே சொன்னேன். "நாகரிகமான சமூகத்தில் பழகுவதற்கு நீர் கொஞ்சமும் தகுதியில்லாதவர்" என்று அவர் ஆத்திரத்தோடு கூறினர். "இங்கே சரியானபடி நடந்து கொள்ள உம்மால் முடியாது என்றால் வெளியே போய்விடும். வேறு ஏதாவது ஒரு சாப்பாட்டு விடுதியில் சாப்பிட்டுவிட்டு வந்து, எனக்காக வெளியில் காத்திரும்" என்றார். இதைக் கேட்டு நான் மகிழ்ச்சியடைந்தேன். வெளியிலும் போய் விட்டேன். பக்கத்திலேயே சைவ உணவு விடுதி ஒன்று இருந்தது. ஆனால், அது அப்பொழுது மூடப்பட்டு விட்டது. ஆகையால், அன்றிரவு சாப்பாடே இல்லாமல் பட்டினி கிடந்தேன். அந்த நண்பருடன் நாடகத்திற்குச் சென்றேன். ஆனால், நான் செய்துவிட்ட அசந்தர்ப்பமான காரியத்



ராஜ்கோட்டில் மகாத்மா காந்தியின் குடும்பம் வசித்த வீட்டில் காந்திஜியின் அறை

தைக்குறித்து அவர் ஒரு வார்த்தைகூட பேசவில்லை. என்னைப் பொறுத்த வரையிலோ, நான் சொல்லுவதற்கு எதுவும் இல்லை.

எங்களிடையே நட்பு முறையில் ஏற்பட்ட கடைசிப் பூசல் இதுவே. எங்களுக்குள் இருந்த உறவை இது கொஞ்சமும் பாதித்துவிடவில்லை. என் நண்பர் எடுத்துக்கொண்ட முயற்சிகளுக்கெல்லாம் காரணம், அவர் என் மீது கொண்டிருந்த அன்பே என்பதை நான் அறிய முடிந்தது. அந்த அன்பைப் போற்றவும் போற்றினேன். எண்ணத்திலும் செயலிலும் எங்களுக்குள் வேற்றுமை இருந்தது உண்மை என்றாலும் அவர்மீது நான் அதிக மதிப்புக் கொண்டேன்.

அதனால், எனக்காக அவர் கொண்டிருந்த கவலையைப் போக்கிவிட வேண்டும் என்று தீர்மானித்தேன். 'இனி நாகரிகக் குறைவாக நடந்துகொள்ள மாட்டேன்; சைவ உணவு விரதம் கொண்டிருப்பதால் என்னிடம் இருந்த குறைக்கு ஈடு செய்ய நாகரிக சமூகத்திற்குத் தகுதியான மற்றக் காரியங்களையெல்லாம் அனுசரித்து, நாகரிகமாக நடந்து கொள்ளுபவன் ஆகிவிட்டேன்' என்று அவருக்கு உறுதியளிக்க வேண்டும் என்பதே என் முடிவு. இதற்காக ஆங்கிலக் கனவானுகவே ஆகிவிடுவதற்கு வேண்டிய அசாத்தியமான காரியங்களையெல்லாம் செய்ய முற்பட்டேன்.

பம்பாயில் தைத்த உடைகளையே தரித்துக் கொண்டிருந்தேன். அந்த உடை ஆங்கில சமூகத்திற்குப் பொருத்தமானதன்று என்று எண்ணினேன். ராணுவக் கடற்படை ஸ்டோரில் புதிய உடை வாங்கினேன். பத்தொன்பது ஷில்லிங் விலையில் ஒரு 'சிம்னிபாட்' தொப்பி வாங்கினேன். அந்தக் காலத்தில் அது மிகவும் அதிகமான விலை. லண்டனில் நாகரிக வாழ்க்கைக்கு மத்திய இடமான பாண்ட் தெருவில் மாலையில் போட்டுக் கொள்ளும் உடுப்பு ஒன்று வாங்கிப் பத்துப் பவுனைப் பாழாக்கினேன். உத்தமரும் உயர் குணம் படைத்தவருமான என் சகோதரருக்கு எழுதி, கடிகார இரட்டை வடத் தங்கச் சங்கிலி ஒன்றை அனுப்பிவைக்கும்படியும் செய்தேன். கடையில் கட்டி விற்கும் கழுத்து 'டை' அணிவது நாகரிகத்திற்குச் சரியல்லவாகையால், 'டை'யை நானே கட்டிக்கொள்ளும் வித்தையையும் கற்றுக்கொண்டேன். இந்தியாவில் குடும்ப நாவிதர் எனக்கு க்ஷவரம் செய்து விடும் போது மாத்திரமே முகக்கண்ணாடியைப் பார்க்கும் ஆடம்பரம் எனக்கு அனுமதிக்கப்பட்டிருந்தது. இங்கோ, ஒரு பெரிய கண்ணாடி முன்னால் நின்று, என்னைப் பார்த்துக் கொள்ளுவதிலும், 'டை'யைச் சரிப்படுத்திக் கொள்ளுவதிலும், நாகரிகத்திற்கு ஏற்றாற்போல் தலைவாரிக் கொள்ளுவதிலும் தினம் பத்து நிமிட நேரத்தை வீணாக்குவேன். என் தலை மயிர் மிருதுவானதன்று. ஆகவே, அதைச் சீவிச் சரியாகப் படிய வைப்பது தினமும் ஒரு பெரும் போராட்டமாகிவிட்டது. ஒவ்வொரு முறையும் தலையில் தொப்பியை வைக்கும்போதும், எடுக்கும்போதும் தலைமயிரைச் சரிபார்க்கக் கை தானாகவே தலைக்குப் போய்விடும். நாகரிக சமூகத்தினரின் நடுவே உட்கார்ந்திருக்கும்போது, ஒவ்வொரு

சமயமும் கை இதற்காகவே தலையில் வேலை செய்து கொண்டிருக்கும் மற்றொரு நாகரிகப் பழக்கத்தைப் பற்றியோ சொல்லவே வேண்டியதில்லை.*

நாகரிகத் தோற்றம் அளிப்பதற்கு இவ்வளவும் போதாதென்று, ஆங்கிலக் கனவானாவதற்கு வேண்டியவை எனக் கருதப்பட்ட மற்ற அம்சங்களிலும் கவனத்தைச் செலுத்தினேன். நடனம் ஆடக் கற்றுக் கொள்ளுவதும், பிரெஞ்சு மொழி கற்பதும், பிரசங்க வன்மையும் ஓர் ஆங்கிலக் கனவானுக்கு அவசியம் என்றார்கள். பிரெஞ்சு, பக்கத்து நாடான பிரான்ஸின் மொழி என்பது மாத்திரம் அல்ல; ஐரோப்பா கண்டத்தில் ஒரு நாட்டினர் மற்றொரு நாட்டினருடன் பேசுவதற்குப் பொது மொழியாகவும் இருந்தது. எனக்கு அக்கண்டம் முழுவதையும் சுற்றிப் பார்க்க வேண்டும் என்ற ஆசை இருந்தது. ஒரு நடனப் பயிற்சி வகுப்பில் சேர்ந்து நடனம் கற்றுக்கொள்ளுவதெனத் தீர்மானித்து, சில மாதங்களுக்கு 3 பவுன் கட்டணமும் செலுத்தினேன். மூன்று வாரங்களில் இதில் ஆறு பாடங்களைக் கற்றிருப்பேன். ஆனால், தாள கதிக்கு ஏற்ப நடனமாடுவது என்பது என்னால் ஆகவில்லை. பியானோ வாத்திய இசையைப் பின்பற்ற முடியாது போகவே தாளத்தை அனுசரிக்கவும் இயலவில்லை. அப்படியாயின் பிறகு என்ன செய்வது? ஒரு சந்நியாசி, எலி உபத்திரவத்தைப் போக்க ஒரு பூனை வளர்த்தார் என்றும், பூனைக்குப் பால் வேண்டுமே என்பதற்காகப் பிறகு ஒரு பசுவும் வளர்த்தார் என்றும், பசுவைக் கவனிக்க ஓர் ஆள் வைத்தார் என்றும், அப்புறம் சந்நியாசி ஒரு பெரிய குடும்பஸ்தர் ஆகிவிட்டார் என்றும் ஒரு கதை உண்டு. துறவியின் குடும்பம் வளர்ந்ததைப் போல என்னுடைய ஆசைகளும் வளர்ந்தன. மேனாட்டுச் சங்கீதத்தை ரசிக்கத் தெரிந்துகொள்வதற்காக நான் பிடில் வாசிக்கக் கற்றுக்கொள்ள வேண்டும் என்று எண்ணினேன். ஆகவே 3 பவுன் கொடுத்துப் பிடில் வாங்கினேன். அதைச் சொல்லிக் கொடுக்க அதைவிட அதிகத் தொகை கொடுத்தேன். பிரசங்கத் திறமை வரப் போதிப்பதற்காக மூன்றாவது ஆசிரியர் ஒருவரைப் பிடித்து,

---

* லண்டனில் காந்திஜியின் நவநாகரிக உடைக் கோலத்தை 1890 பிப்ரவரியில் பிக்காடல்லி சர்க்கஸில் டாக்டர் சச்சிதானந்த சின்ஹா நேரில் பார்த்திருக்கிறார். டாக்டர் சின்ஹாவும் அப்போது லண்டனில் மாணவராக இருந்தார். அவர் தமது பழைய ஞாபகங்களிலிருந்து பின்வருமாறு கூறியிருக்கிறார் :

''அந்தச் சமயத்தில் காந்தி, பள பள் என்று பிரகாசிக்கும் உயரமான பட்டுத் தொப்பியும், கஞ்சி போட்டுத் தேய்த்த விறைப்பான காலரும் (இந்தக் காலருக்குக் கிளாட்ஸ்டன் காலர் என்று அப்போது பெயர்), வானவில்லின் வர்ணங்களை யெல்லாம் கொண்ட பளபளப்பான 'டை'யும், அழகிய கோடுகளுடன் கூடிய பட்டுச் சட்டையும் அணிந்திருந்தார். இவற்றிற்கு மேலே காலை நேரக் கோட்டு ஒன்றும். இரட்டை மார்புடைய அரைக் கோட்டும். இவற்றிற்குப் பொருத்தமான கறுப்புக் கோடிட்ட நிஜாரும், உயர்ந்த தோலில் செய்யப்பட்ட பூட்சும், ஸ்டாக்கிங்ஸூம் தரித்திருந்தார். கையில் தோல் உறைகள் இருந்தன. வெள்ளிப் பூண் கட்டிய பிரம்பு வைத்திருந்தார். ஆனால். மூக்குக்கண்ணாடி இல்லை. அவருடைய உடைகள் அந்தக் காலத்தில் நகரத்தில் வசித்த இளைஞர்கள் அணியத்தக்க நவநாகரிக உடைகளாகவே கருதப்பட்டன. லண்டனில் சட்டப் படிப்புப் படித்த இந்திய இளைஞர்கள் பெரும்பாலும் இந்த உடைகளையே அணிந்திருந்தார்கள்.''

அவருக்கு ஆரம்பக் கட்டணமாக ஒரு கினி (21 ஷில்லிங்) கொடுத்தேன். இதற்குப் பாடப் புத்தகமாக பெல் எழுதிய 'ஸ்டாண்டர்டு எலக்யூஷனிஸ்ட்' என்ற புத்தகத்தை அவர் சிபாரிசு செய்தார். அதையும் வாங்கினேன். பிட்டின்* பிரசங்கம் ஒன்றைப் படிக்கத் தொடங்கினேன்.

ஆனல், ஸ்ரீ பெல் என் காதில் எச்சரிக்கை மணியை அடித்தார்.‡ நானும் விழித்துக் கொண்டுவிட்டேன்.

வாழ்நாளெல்லாம் நான் இங்கிலாந்திலேயே இருக்கப்போவதில்லை என்பதை எனக்கு நானே சொல்லிக் கொண்டேன். அப்படியிருக்க, பேச்சு வன்மையைக் கற்றுக் கொள்ளுவதால் என்ன பயன்? அதோடு நாட்டியமாடுவது என்னை எப்படி ஒரு கனவான் ஆக்கிவிடும்? பிடில் வாசிக்க நான் இந்தியாவிலும் கற்றுக் கொள்ளலாம். நானோ மாணவன், ஆகவே என் படிப்பையே நான் கவனித்துக்கொண்டு போக வேண்டும். பாரிஸ்டராவதற்கு வேண்டிய தகுதியையே நான் அடையவேண்டும். என்னுடைய ஒழுக்கம் என்னைக் கனவானுக்கினல் அதுவே போதும். இல்லையானல் அந்த ஆசையை நான் விட்டுவிட வேண்டியதே.

இவையும், இவை போன்ற எண்ணங்களும் என்னைப் பற்றிக்கொண்டன. பிரசங்கப் பயிற்சிக்காக நான் அமர்த்திக் கொண்டிருந்த ஆசிரியருக்கு இந்த என் எண்ணங்களையெல்லாம் ஒரு கடிதத்தில் எழுதினேன். மேற்கொண்டு பாடம் கற்றுக் கொள்ள வராததற்கு மன்னிக்குமாறுகேட்டுக்கொண்டேன். நான் கற்றுக்கொண்டதெல்லாம் இரண்டு மூன்று பாடங்களே. இதே போல் நடன ஆசிரியருக்கும் எழுதிவிட்டேன். பிடில் வாத்தியாரிடம் நேரில் போய், வந்த விலைக்குப் பிடிலை விற்றுவிடுமாறு கேட்டுக் கொண்டேன். அப்பெண்மணி என்னிடம் நட்புடன் பேசினர். ஆகவே, நான் தவருன வழியில் போய்க் கொண்டிருக்கிறேன் என்பதை உணர்ந்த விதத்தை அவரிடம் கூறினேன். முற்றும் உரு மாறுதல் அடைந்து விடவேண்டும் என்பதில் நான் கொண்டிருந்த முடிவை ஏற்று அவர் உற்சாகப்படுத்தினர்.

ஆங்கிலக் கனவான் ஆகிவிட வேண்டும் என்பதில் எனக்கு இருந்த மோகம் சுமார் மூன்று மாதங்கள் இருந்திருக்கும். அதற்குப்பின் நான் மாணவன் ஆகிவிட்டேன். உடை, சம்பிரதாய பூர்வமாக இருக்க வேண்டும் என்பதில் கவனஞ் செலுத்துவது மாத்திரம் பல ஆண்டுகள் தொடர்ந்து என்னிடம் இருந்துவந்தது.

---

* வில்லியம் பிட் (1759-1806): மிக மிக அரிய பிரசங்கத் திறனுடைய இவர் தமது 21-ஆவது வயதிலேயே பிரிட்டிஷ் பார்லிமெண்ட் அங்கத்தினராகி, 24-ஆவது வயதில் பிரதம மந்திரியானர். 17 வருஷ காலம் அந்தப் பதவியை வகித்தார். இங்கிலாந்தில் பிறந்த மிகப் பெரிய ராஜீய ஞானிகளில் ஒருவராக இவர் போற்றப் படுகிருர்.

‡ பெல் (Bell) என்ற ஆங்கிலப் பதத்திற்கு மணி என்று பொருள். காந்திஜி படித்துத் தெளிவு பெற்ற நூல் பெல் என்பவர் எழுதியதாகையால், அதை வேடிக்கையாக, "பெல் என் காதில் எச்சரிக்கை மணியை அடித்தார்" என்று கூறுகிருர்.

# 16

# மாறுதல்கள்

நாட்டியத்திலும் அது போன்றவைகளிலும் நான் செய்த சோதனை, என் வாழ்க்கையில் நெறி தவறிப் போய்விட்ட ஒரு கட்டம் என்று யாரும் ஊகித்துக் கொண்டுவிட வேண்டாம். அச்சமயத்திலுங்கூட நான் மதி மயங்கிப் போய் விடவில்லை என்பதை வாசகர்கள் கவனித்திருப்பார்கள். ஆங்கிலக் கனவானுவதில் எனக்கு மோகம் இருந்த அந்தக் காலத்திலுங்கூட, என் வரையில் ஓரளவுக்கு என்னுள் ஆன்ம சோதனையும் இல்லாது போகவில்லை. நான் செலவு செய்த ஒவ்வொரு பார்த்திங் (காலணு)குக்கும் கணக்கு வைத்திருந்தேன். செலவு செய்வதைத் தீர யோசித்தே செய்து வந்தேன். வண்டிச் சத்தம், தபால் செலவு, பத்திரிகை வாங்கச் செலவிட்ட சில காசுகள் போன்ற சிறு செலவினங்களையுங்கூடக் கணக்கில் எழுதுவேன். தினந்தோறும் படுக்கப் போவதற்கு முன்னால் கணக்கைக் கூட்டி இருப்புக் கட்டுவேன். அப்பொழுதிலிருந்தே இப்பழக்கம் என்னிடம் நிலைத்துவிட்டது. இதன் பலனுக, பொதுப் பணத்தை லட்சக்கணக்கில் நான் கையாள நேர்ந்தபோது அதை செலவிடுவதில் கண்டிப்பான சிக்கனத்தை அனுசரிக்க என்னால் முடிந்ததோடு, நான் நடத்திய எல்லா இயக்கங்கள் சம்பந்தமாகவும், வெளிக் கடன் எதுவும் இல்லாமல் எப்பொழுதுமே கையில் மிச்சத் தொகையே இருந்திருக்கிறது என்பதை அறிவேன். என் வாழ்க்கையின் இந்த அனுபவத்தை ஒவ்வோர் இளைஞரும் பாடமாகக் கொண்டு தம்மிடம் வரும் தொகை ஒவ்வொன்றுக்கும், தாம் செலவிடுவதற்கும் கணக்கு வைக்க வேண்டியதை ஒரு கடமையாகக் கொள்ளட்டும். அப்படிச் செய்தால் என்னைப் போல் முடிவில் நன்மையையே அடைவார்கள்.

என் வாழ்வு முறையை நானே கண்டிப்பாகக் கவனித்து வந்ததால், செலவில் சிக்கனம் செய்ய வேண்டியதன் அவசியத்தை நான் அறிய முடிந்தது. ஆகையால், எனக்கு ஆகும் செலவைப் பாதியாகக் குறைத்துவிடுவது என்று தீர்மானித்தேன். போக்குவரத்துக்கு வண்டிச் சத்தம் கொடுப்பதிலேயே அதிகத் தொகை செலவாகிறது என்பது கணக்கிலிருந்து தெரிந்தது. அதோடு, ஒரு குடும்பத்தில் நான் வசித்து வந்ததால் வாரந்தோறும் தவருமல் குறிப்பிட்ட தொகை, அவர்களுக்குக் கொடுக்க வேண்டியிருந்தது. அத்துடன் அக்குடும்பத்தினரை மரியாதைக்காக ஹோட்டலுக்கு அழைத்துச் செல்வது, அவர்களுடன் விருந்துகளுக்குப் போவது போன்ற வகையிலும் செலவாகி வந்தது. முக்கியமாகக் கூட வரும் நண்பர், பெண்மணியாக இருந்தால், எல்லாச் செலவுகளையும் ஆணே செய்ய வேண்டும் என்பது அவர்கள் வழக்கம். இதனுலெல்லாம் போக்குவரத்

துச் செலவு மிக அதிகமாக இருந்தது. வெளியில் சாப்பிடு வதனால்—வீட்டில் சாப்பிடாமல் இருந்ததற்காக—வாராந்தரக் கணக்கில் எதுவும் குறைத்துக் கொடுக்க முடியாதாகையால், அதிகப்படி செலவாயிற்று. கௌரவம் என்ற தவறான எண்ணம் காரணமாக என் பணம் செலவாகிவிடுவதை நிறுத்துவதைப் போன்றே இந்தச் செலவுகளையும் குறைத்துவிடலாம் என்று எனக்குத் தோன்றிற்று.

ஆகவே, இனி ஒரு குடும்பத்துடன் வசிப்பதற்குப் பதிலாகத் தனியாக அறைகளை வாடகைக்கு அமர்த்திக்கொள்ளுவது என்று முடிவு செய்தேன். எனக்கு இருக்கும் வேலையை அனுசரித்து, என் குடியிருப்பையும் ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு மாற்றிக்கொள்ளவும், அதே சமயத்தில் அதனால் அனுபவம் பெறவும் தீர்மானித்தேன். எனக்கு வேலையிருக்கும் இடத்திற்கு அரை மணி நேரத்தில் நடந்து போய்விடக் கூடியதாகவும், அதனாலும் செலவு குறைவதாகவும் இருக்கும் வகையிலும், அறைகளைத் தேர்ந்தெடுக்க வேண்டும். இதற்கு முன்னால் நான் எங்காவது வெளியில் போவதாயிருந்தால் ஏதாவது ஒரு வண்டியை அமர்த்திக்கொள்ளுவேன். இனி நடந்தே போவதென்றால் நடப்பதற்கு வேண்டிய அவகாசத்தையும் தேடிக்கொள்ள வேண்டும். புதிய ஏற்பாட்டில் நடையும் சிக்கனமும் சேர்ந்திருந்தன. அதன்படி வண்டி வாடகை கொடுத்தது மிச்சமானதோடு தினம் எட்டு அல்லது பத்து மைல் நடையும் எனக்குக் கிடைத்தது. முக்கியமாக நீண்ட தூரம் நடந்த இந்தப் பழக்கத்தினால், இங்கிலாந்தில் இருந்த வரையில், நான் நோயே இல்லாமல் இருந்தேன்; என் உடலும் உரம் பெற்றது.

இவ்வாறு நான் இரண்டு அறைகளுள்ள ஓர் இடத்தை வாடகைக்கு அமர்த்திக்கொண்டேன். அதில் ஓர் அறை, உட்கார்ந்து வேலை செய்வதற்கு; மற்றொன்று படுக்கையறை. எனது லண்டன் வாழ்க்கையில் இது இரண்டாவது கட்டம். மூன்றாவது கட்டம் இனிமேல்தான் வரவேண்டும்.

இந்த மாறுதல்களினால் என் செலவுகள் பாதியாகக் குறைந்தன. ஆனால், எனக்கிருந்த அவகாசத்தை எப்படிப் பயன்படுத்திக்கொள்ளுவது? பாரிஸ்டர் பரீட்சைக்கு அதிகமாகப் படிக்க வேண்டியதில்லை என்பது எனக்குத் தெரியும். ஆகையால், நேரத்திற்குப் பஞ்சம் இருப்பதாகத் தோன்றவில்லை. ஆங்கில மொழியில் எனக்குத் திறன் போதாமல் இருந்ததே எனக்குத் தீராக் கவலையாக இருந்து வந்தது. 'முதலில் பி. ஏ. பட்டம் பெற்று, பிறகு என்னிடம் வா' என்று ஸ்ரீ (பிற்காலத்தில் ஸர் பிரடரிக்) லேலி சொன்ன சொற்கள் இன்னும் என் செவிகளில் ஒலித்துக்கொண்டே இருந்தன. பாரிஸ்டர் பரீட்சையில் தேறுவதோடு மாத்திரமின்றி இலக்கியக் கல்வியிலும் நான் ஏதாவது

ஒரு பட்டத்தைப் பெற வேண்டும் என்று எண்ணினேன். ஆக்ஸ் போர்டு, கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலைகளின் படிப்பு முறைகளைப் பற்றி விசாரித்தேன். சில நண்பர்களையும் கலந்து ஆலோசித்தேன். இந்த இரு சர்வகலாசாலைகளில் ஒன்றில் சேருவது என்று நான் முடிவு செய்தால், அதனால் செலவு அதிகமாவதோடு, இங்கிலாந்தில் தங்குவதற்கு நான் தயாராயிருக்கும் காலத்தைவிட அதிக காலம் தங்கவும் நேரும் என்று கண்டேன். கஷ்டமான தொரு பரீட்சையில் தேறிவிட்டேன் என்று திருப்திப்பட நான் விரும்பினால், லண்டன் மெட்ரிகுலேஷன் பரீட்சையில் நான் தேறி விடலாம் என்று ஒரு நண்பர் யோசனை கூறினார். அப்படியானால், அதிகக் கஷ்டப்பட்டு உழைக்க வேண்டியிருக்கும்; பொது அறிவும் விருத்தியாகும். இதற்குச் செலவு அதிகப்படியாக ஒன்றும் ஆகிவிடாது என்பது தெரிந்தது. இந்த யோசனை எனக்குப் பிடித்திருந்தது. ஆனால், அப்பரீட்சைக்குப் படிக்க வேண்டியிருந்த பாடங்களோ என்னைப் பயமுறுத்திவிட்டன. லத்தீனையும், தற்கால ஐரோப்பிய மொழி ஒன்றையும் கட்டாயமாகப் படித்தாக வேண்டும்! லத்தீனைப் படிப்பது எப்படி? ஆனால், அந்த நண்பரோ, அம்மொழியைப் படித்தாக வேண்டும் என்று பரிந்து பேசினார்; 'வக்கீல்களுக்கு லத்தீன் மிகவும் பயனுள்ள மொழி. சட்டப் புத்தகங்களைப் புரிந்துகொள்ள லத்தீன் தெரிந்திருப்பது உபயோகமாக இருக்கும். ரோமன் சட்டம் பற்றிய ஒரு பரீட்சை முழுவதையும் லத்தீன் மொழியில்தான் எழுத வேண்டியிருக்கும். லத்தீன் படித்துவிட்டால் ஆங்கில மொழியிலும் நல்ல ஆற்றல் இருக்கும்' என்றார். நண்பர் கூறியது நல்லது என்றே தோன்றியது. என்னதான் கஷ்டமாக இருந்தாலும் சரி, லத்தீன் படித்துவிடுவது என்று தீர்மானித்தேன். இதற்கு முன்னாலேயே பிரெஞ்சு மொழி படிக்க ஆரம்பித்துவிட்டேன். ஆகவே, நான் படித்தாகவேண்டிய இக்கால மொழியாக அதையே வைத்துக்கொள்ளலாம் என்று நினைத்தேன். மெட்ரிகுலேஷனுக்குத் தயார் செய்வதற்கென்று தனிப்பட்டவர் வைத்திருந்த வகுப்பில் சேர்ந்தேன். பரீட்சைகள் ஆறு மாதங்களுக்கு ஒருமுறை நடக்கும். அடுத்த பரீட்சைக்குப் போவதற்கு எனக்கு ஐந்து மாதங்களே இருந்தன. இது அசாத்தியமான வேலை என்று எனக்குத் தோன்றிற்று. ஆங்கிலக் கனவானைப்போல் ஆகிவிட வேண்டும் என்று ஆசைப்பட்டுக் கொண்டிருந்த நான், இப்பொழுது கருத்துள்ள மாணுக்கனாக என்னை மாற்றிக்கொண்டு விட்டேன். என் கால அட்டவணையை நிமிஷக் கணக்கு வரையில் துல்லியமாக வகுத்துக்கொண்டேன். ஆனால், குறிப்பிட்ட காலத்திற்குள் மற்றப் பாடங்களுடன் லத்தீனையும், பிரெஞ்சு மொழியையும் நான் படித்துவிட முடியும் என்பதற்கு என் அறிவோ, திறமையோ துணை செய்வதாயில்லை. இதன் பலனாக லத்தீன் பரீட்சையில் தவறிவிட்டேன். இதற்காக வருத்தப்பட்டேனாயினும் மனம் தளர்ந்து விடவில்லை. இதற்குள் லத்தீன் மொழியில் இன்னும் ஒரு பரீட்சைக்குப் போனால் நன்றாயிருக்கும் என்று எண்ணினேன்.

விஞ்ஞானப் பகுதியில் மட்டும் ஒரு புது விஷயத்தை எடுத்துக் கொண்டு படிப்பது என்று முடிவு செய்தேன். விஞ்ஞானத்தில் நான் படித்தது ரசாயனம். மிகமிகக் க்வர்ச்சிகரமான படிப்பாக இருந்திருக்க வேண்டிய அது, எனக்கு ருசிக்காமல் போனதற்குக் காரணம், சோதனைகள் நடத்துவதற்கு இடமில்லாது போனதே. இந்தியாவில் அது கட்டாயப் பாடங்களில் ஒன்றாக இருந்தது. ஆகவே, லண்டன் மெட்ரிகுலேஷன் பரீட்சைக்கு அதைப் பாடமாக எடுத்துக்கொண்டேன். என்றாலும், இத் தடவை ரசாயனத்திற்குப் பதிலாக வெப்பம், வெளிச்சத்தைப் பற்றிப் படிப்பதென முடிவு செய்தேன். இதைப் படிப்பது சுலபம் என்றார்கள்; எனக்கும் சுலபமாகவே இருந்தது.

மற்றொரு சோதனைக்கு நான் என்னைத் தயார் செய்து கொண்டதோடு மேற்கொண்டும் என் வாழ்க்கையை எளிமையானதாக்கிக் கொள்ளவும் முயன்றேன். அடக்கமான என் குடும்ப நிலைமைக்கு ஏற்றதாக என் வாழ்க்கை முறை இல்லை என்பதை உணர்ந்தேன். பண உதவி வேண்டும் என்று அடிக்கடி நான் தெரிவிக்கும்போதெல்லாம் என் சகோதரர் பெருந்தன்மையோடு பணம் அனுப்பிக்கொண்டே இருந்தார். இப்படிப் பணம் அனுப்புவதற்காக அவர் அனுபவிக்கும் அநேக கஷ்டங்களை எண்ணிப் பார்த்தேன். அது மனத்திற்குப் பெரும் வேதனையாக இருந்தது. மாதத்திற்கு எட்டு முதல் பதினைந்து பவுன் வரையில் செலவு செய்துகொண் டிருந்தவர்களில் அநேக மாணவர்களுக்கு உபகாரச் சம்பள வசதி* இருந்தது என்பதை அறிந்தேன். மிக எளிய வாழ்க்கை நடத்திக்கொண் டிருந்த மாணவர்களின் உதாரணமும் என் முன்னால் இருந்தது. என்னைவிட எளிய வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்த பல ஏழை மாணவர்களையும் நான் பார்க்க நேர்ந்தது. அவர்களில் ஒரு மாணவர், சேரிப் பகுதியில் வாரத்திற்கு இரண்டு ஷில்லிங்குகளுக்கு ஓர் அறையை அமர்த்திக்கொண்டு, அதில் இருந்து வந்தார். லோகார்ட்டிலிருக்கும் மலிவான கோக்கோக் கடைகளில் வேளைக்கு இரண்டு பென்ஸ் செலவில் கோக்கோ குடித்து, ரொட்டி தின்று, தம் சாப்பாட்டை முடித்துவிடுவார். அவரைப் பின்பற்றுவதென நினைப்பதே என்னால் முடியாதது. ஆனால், இரண்டு அறைகளை வைத்துக் கொண்டிருப்பதற்குப் பதிலாக ஓர் அறையை அமர்த்திக் கொள்ளலாம் என்று நினைத்தேன். அப்படிச் செய்தால் மாதத்திற்கு நான்கிலிருந்து ஐந்து பவுன் மிச்சப்படும். எளிய வாழ்க்கை நடத்துவதைப் பற்றிய புத்தகங்கள் சிலவற்றைப் படித்தேன். இரண்டு அறை ஜாகையை விட்டுவிட்டு, ஓர் அறையை அமர்த்திக்கொண்டேன். ஒரு 'ஸ்டவ்' அடுப்பும் வாங்கினேன். காலை ஆகாரத்தை வீட்டிலேயே

---

* காந்திஜி லண்டனில் படித்துக்கொண்டிருந்தபோது, பண உதவி கேட்டுக் கத்தியவார் பிரிட்டிஷ் ஏஜெண்டு ஸ்ரீ லேலிக்கும், ராஜீய ஏஜெண்டு கர்னல் வாட்ஸனுக்கும் எழுதிய கடிதங்களையும், பிரிட்டிஷ் ஏஜெண்டுக்கு எழுதிய கடிதத்துடன் தமது சகோதரருக்கு எழுதிய குறிப்பையும் பின்சேர்க்கைப் பகுதியில் காண்க.

சமைத்துக் கொள்ளவும் ஆரம்பித்தேன். நான் சமைக்க வேண்டியிருந்த தெல்லாம் ஓட்ஸ் கஞ்சி வைப்பதும், கோக்கோவுக்கு நீர் கொதிக்க வைப்பதுமே யாகையால் அதற்கு இருபது நிமிடங்களுக்கு மேல் ஆகாது. மத்தியான ஆகாரத்தை வெளியில் சாப்பிட்டுக்கொள்ளுவேன். இரவில் வீட்டில் ரொட்டி தின்று, கோக்கோ குடிப்பேன். இவ்விதம் தினத்திற்கு ஒரு ஷில்லிங் மூன்று பென்ஸ் செலவில் என்னால் வாழ முடிந்தது. அது கடுமையாகப் படிக்க வேண்டியிருந்த சமயமும் கூட. எளிய வாழ்க்கையை நான் மேற்கொண்டதால், படிப்பதற்கு எனக்கு நேரம் அதிகமாக இருந்ததோடு நான் பரீட்சையிலும் தேறினேன்.

இவ்விதம் வாழ்ந்து வந்ததால் என் வாழ்க்கை எந்த வகையிலும் இன்பமற்ற தாயிற்று என்று வாசகர்கள் எண்ணிவிட வேண்டாம். இதற்கு மாறாக, இத்தகைய மாறுதல் என் அக வாழ்வையும், புற வாழ்வையும் ஒருமைப்படுத்தியது. அதோடு இந்த வாழ்க்கை, என் குடும்ப நிலைமைக்கும் ஒத்ததாக இருந்தது; முன்பு இருந்ததைவிட அதிகமான உண்மையோடும் கூடியதாயிற்று. என் ஆன்மா அடைந்த ஆனந்தத்திற்கு எல்லையே இல்லை.

# 17

# உணவில் பரிசோதனைகள்

மேலும் மேலும் ஆழ்ந்து, நான் ஆன்ம பரிசோதனை செய்யச் செய்ய, எனது அகவாழ்விலும் புறவாழ்விலும் அதிக மாறுதல்களைச் செய்துகொள்ள வேண்டியது அவசியம் என்ற உணர்ச்சி என்னிடம் வளரலாயிற்று. என் செலவுகளிலும் வாழ்க்கை முறைகளிலும் மாறுதல்களைச் செய்தேன். இதற்கு முன்னாலேயே, என் உணவிலும் மாறுதல்களைச் செய்ய ஆரம்பித்திருந்தேன். சைவ உணவின் முக்கியத்துவத்தைக் குறித்து எழுதிய நூலாசிரியர்கள், அவ் விஷயத்தை வெகு நுட்பமாகப் பரிசீலனை செய்திருந்ததைக் கண்டேன். இவ்விஷயத்தின் மத, விஞ்ஞான, அனுபவ, வைத்திய அம்சங்களையெல்லாம் அவர்கள் ஆராய்ந்திருந்தனர். தருமக் கோட்பாட்டின் ரீதியில் அவர்கள் ஒரு முடிவுக்கும் வந்தனர். தாழ்வான உயிரினங்களிலும் மனிதன் உயர்வானவன் என்றால், தாழ்ந்த உயிரினங்களைத் தின்று மனிதன் உயிர் வாழ்வது என்பது அவ்வுயர்வின் நோக்கம் அல்ல. உயர்ந்த இனங்கள் தாழ்ந்த இனங்களைப் பாதுகாக்க வேண்டும். மனிதனுக்கு மனிதன் உதவிக் கொள்ளுவதைப்போல, அவ்விரு இனங்களும் தம்மிடையே பரஸ்பரம் உதவிக்கொள்ள வேண்டும் என்பது அந் நூலாசிரியர்கள் கண்ட முடிவு. மனிதன் உண்பது, உயிர் வாழ்வதற்கேயன்றி, சுகானுபவத்திற்காக அல்ல என்பதையும் அவர்கள் தெளிவுபடுத்தி யிருந்தார்கள். இதை அனுசரித்து, அவர்களில் சிலர், புலால் உண்ணாமல் இருப்பதோடு முட்டை, பால் சாப்பிடுவதும் கூடாது என்று சொன்னார்கள்;

அதன்படி சாப்பிடாமலும் இருந்தார்கள். மற்றுஞ் சிலர், விஞ்ஞான ரீதியில் வேறு ஒரு முடிவுக்கும் வந்தனர். மனிதனின் உடலமைப்பை ஆராய்ந்தால், அவன் உணவைச் சமைத்துத் தின்னப் படைக்கப்பட்டவன் அல்ல என்பதும், பச்சையாகத் தின்று வாழவேண்டிய பிராணியே என்பதும் தெளிவாகின்றன என்றுர் கள். மனிதன் ஆரம்பத்தில் தாய்ப் பாலை மட்டுமே அருந்த வேண்டும்; பிறகு பல் முளைத்ததும் கடினமான உணவுகளைச் சாப்பிட வேண்டும் என்றும் இவர்கள் கருதினர். வைத்திய சாத்திரத்தின்படி மசாலைகள், ஊறுகாய்களை விலக்கிவிட வேண்டும் என்றும் யோசனை கூறினர். அனுபவ, பொருளாதார விவாதத்தின் பிரகாரம் சைவ உணவு சாப்பிடுவதால் ஏற்படும் செலவே மிகக் குறைவு என்பதையும் அவர்கள் நிரூபித்திருந் தனர். இந்தக் காரணங்களெல்லாம் என் மனத்தில் மாறுதலை உண்டாக்கின. இத்தகைய பலவகைப்பட்ட சைவ உணவு வாதிகளையும் சைவ உணவு விடுதிகளில் சந்தித்தேன். இங்கிலாந்தில் சைவ உணவினர் சங்கமும் ஒன்று இருந்தது. அவர்கள் சொந்தமாக ஒரு வாரப் பத்திரிகையையும் நடத்தினர்கள். அப் பத்திரிகைக்கு நான் சந்தாதாரனுனேன். அச் சங்கத்திலும் சேர்ந்து வெகு சீக்கிரத்திலேயே அதன் நிர்வாகக் குழுவிலும் உறுப்பினனுனேன். சைவ உணவுப் பிரசார இயக்கத்தின் தூண்கள் என்று கருதப்பட்ட முக்கியஸ்தர்களுடன் இச் சங்கத்தில் எனக்குப் பழக்கம் ஏற்பட்டது. உணவில் என் சொந்தச் சோதனைகளையும் செய்ய முற்பட்டேன்.

வீட்டிலிருந்து தருவித்திருந்த மிட்டாய்களையும் ஊறுகாய் களையும் சாப்பிடுவதை நிறுத்திவிட்டேன். மனம் வேறு வழியில் திரும்பிவிட்டதால், மசாலை மீதிருந்த மோகம் போய்விட்டது. மசாலையின்றிச் சமைத்த கீரை, அப்பொழுது ரிச்மண்டு ஹோட்டலில் ‘சப்’பென்று ருசியற்றிருந்தது. இப்பொழுதோ, சும்மா வேகவைத்த கீரையே எனக்கு ருசியாக இருந்தது. ருசி யெல்லாம் எண்ணத்தில்தான் இருக்கிறதேயன்றி நாவில் இல்லை என்பதை இதுபோன்ற பல பரீட்சைகள் எனக்குப் போதித்தன.

சிக்கனத்தைக் கவனிக்க வேண்டும் என்பதும் எப்பொழுதும் என் நினைவில் இருந்து வந்தது. தேயிலை, காப்பி போன்ற பானங்கள் தீமை விளைவிப்பவை என்றும், கோக்கோ குடிப்பது நல்லதென்றும் கருதியவர்கள் அக்காலத்தில் அநேகர் உண்டு. உடலுக்கு நன்மையானவைகளை மாத்திரமே ஒருவர் சாப்பிட வேண்டும் என்று நான் திடமாக நம்பியிருந்ததால் தேயிலை, காப்பி போன்ற பானங்களைச் சாப்பிடுவதை விட்டுவிட்டு, அவற்றிற்குப் பதிலாகக் கோக்கோ சாப்பிடலானேன்.

நான் சாப்பிடப் போன உணவு விடுதிகளில் இரண்டு பிரிவுகள் உண்டு. அவற்றில் ஒரு பிரிவில் பல வகையான உணவுகள் பரிமாறப்படும். ஒருவர், அவற்றில் தாம் விரும்புவதைச் சாப்பிட்டுவிட்டு அதற்குரிய பணத்தைக் கொடுக்க வேண்டும். இத்

தகைய இரவுச் சாப்பாட்டுக்கு ஒன்றிலிருந்து இரண்டு ஷில்லிங் வரை செலவாகும். சுமாராகப் பணக்காரராக இருப்போர் இப்பிரிவுக்கே போவார்கள். மற்ரெரு பிரிவிலோ, ஆறு பென் ஸுக்குச் சாப்பாடு கொடுப்பார்கள். அதில் ஒரு ரொட்டித் துண்டுடன் மூன்று வகைப் பண்டங்கள் பரிமாறுவர். நான் அதிகக் சிக்கனமான வாழ்க்கையை நடத்தி வந்தபோது, இந்த இரண்டாவது பிரிவில்தான் சாப்பிடுவது வழக்கம்.

பிரதானமான உணவுப் பரிசோதனையோடு பல சிறு சோதனைகளையும் நடத்தி வந்தேன். உதாரணமாக, மாவுப் பண்டங்கள் எல்லாவற்றையும் ஒரு சமயம் விலக்கியிருந்தேன். மற்ரெரு சமயத்திலோ, ரொட்டியும் பழமும் மாத்திரம் சாப்பிட்டு வந்தேன். ஒரு சமயம், பால்கட்டி, பால், முட்டைகள் மாத்திரம் சாப்பிட்டுக்கொண் டிருந்தேன். இந்தக் கடைசிச் சோதனையைக் குறித்துக் கொஞ்சம் கவனிப்பது முக்கியம். இச்சோதனை இரு வாரங்கள் வரையிலுங்கூட நீடிக்கவில்லை. மாவு கலந்த பண்டங்களைத் தின்னக்கூடாது என்று சொன்ன சீர்திருத்தக்காரர், முட்டைகளின் மேன்மையைக் குறித்துப் பிரமாதமாகச் சொன்னதோடு அவை மாமிசமாகா என்றும் கூறினர். முட்டையைத் தின்பதால் உயிருள்ள எதற்கும் துன்பம் விளைவித்து விடவில்லை என்பது வெளிப்படையாகத் தெரிந்தது. இந்த வாதத்தில் மயங்கி, என் விரதத்தையும் மறந்துவிட்டு, நான் முட்டை தின்ன ஆரம்பித்தேன். ஆனால், நான் இதில் செய்த தவறு தற்காலிகமானதே. நான் கொண்டிருந்த விரதத்திற்குப் புதியதொரு வியாக்கியானத்தையே நான் அனுசரிக்க வேண்டும். மாமிசம் என்பதைப் பற்றிய என் தாயாருடைய கருத்தில் முட்டையும் சேர்ந்ததே என்பதை நான் அறிவேன். இவ்விதம் விரதத்தின் உண்மைக் கருத்தை நான் கண்டுகொண்டதுமே, முட்டை சாப்பிடுவதையும், அப் பரீட்சையையும் ஒருமிக்க விட்டுவிட்டேன்.

இந்த வாதத்தில் அடங்கிய, கவனிக்கத்தக்க நுட்பமான விஷயம் ஒன்று உண்டு. இங்கிலாந்தில் புலால் என்பதற்கு மூன்று வகையான வியாக்கியானங்கள் கூறப்படுவதை அறியலானேன். இதில் முதல் வியாக்கியானப்படி, மாமிசம் என்பது பறவைகள், மிருகங்களின் இறைச்சியே. இந்த வியாக்கியானத்தை ஒப்புக்கொள்ளும் .சைவ உணவுவாதிகள், பட்சிகள், மிருகங்களின் மாமிசத்தை உண்ணமாட்டார்கள். ஆனால், மீன் சாப்பிடுவார்கள்; முட்டைகளும் சாப்பிடுவார்கள் என்பதைச் சொல்லவே வேண்டியதில்லை. இரண்டாவது வியாக்கியானப்படி மாமிசம் என்ருல், எல்லா உயிர்ப் பிராணிகளின் புலாலுமே யாகும். ஆகையால், இக்கருத்துக் கொண்டவர்கள், மீனும் சாப்பிடமாட்டார்களெனினும் முட்டை சாப்பிடுவார்கள். மூன்ருவது வியாக்கியானமோ, உயிர் வாழ்வன எல்லாவற்றின் புலாலும், அவைகளிடமிருந்து கிடைப்பவைகளும் மாமிசம் என்று முடிவு

கட்டியிருந்தது. இதன்படி, பால், முட்டைகள் முதலியனவும் மாமிசம் ஆகிவிடுகின்றன. முதல் வியாக்கியானத்தை ஒப்புக் கொள்ளுவதாயின், முட்டை சாப்பிடுவதோடு மாத்திரமல்ல, மீனும் தின்னலாம். ஆனால், என் அன்னையாரின் வியாக்கியானம் ஒன்றே என்னைக் கட்டுப்படுத்தும் வியாக்கியானம் என்பதில் நான் நிச்சயமாயிருந்தேன். ஆகையால், நான் மேற்கொண்ட விரதத்தின்படி நான் முட்டைகள் தின்னலாகாது; அப்படியே செய்தேன். இதனால் ஒரு கஷ்டம் உண்டாயிற்று. சைவ உணவு விடுதிகளில்கூடப் பல உணவு வகைகளிலும் முட்டை சேர்க்கிறார்கள் என்பது, விசாரித்ததில் தெரியவந்ததுதான் அக்கஷ்டம். பலவகையான களிகள், கேக்குகள் ஆகியவைகளில் முட்டைக் கலப்பு உண்டு. எனவே இன்னதில் இன்னது இருக்கிறது என்பது முன்னதாகவே தெரிந்திருந்தாலன்றி, ஒரு குறிப்பிட்ட உணவில் முட்டை கலந்திருக்கிறதா, இல்லையா என்பதைக் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டிய சங்கடமான முறையையும் நான் அனுசரிக்க வேண்டியதாயிற்று. என் கடமையை உணர்ந்ததன் காரணமாக எனக்கு இந்தச் சங்கடம் ஏற்பட்டதெனினும், இது என் உணவை இன்னும் எளிதாக்கிவிட்டது. இவ்விதம் எளிதானது எனக்கு இன்னுமொரு தொல்லையையும் உண்டாக்கியது. நான் ருசித்துச் சாப்பிடத் தொடங்கிய பல உணவு வகைகளையும் கைவிட நேர்ந்ததே அத் தொல்லை. இந்தச் சங்கடங்களெல்லாம் சீக்கிரத்தில் மறைந்துவிட்டன. ஏனெனில், விரதத்தைக் கண்டிப்பாக அனுசரித்து வருகிறோம் என்பது எனக்கு உள்ளூற ஒரு ருசியை உண்டாக்கியது. நாவின் ருசியை விட உள்ளத்தின் இந்த ருசி, தெளிவாக அதிக இன்பத்தையும் சுகத்தையும் தந்ததோடு நிரந்தரமானதாகவும் இருந்தது.

என்றாலும், உண்மையான அவதி இனிமேல்தான் ஏற்பட இருந்தது. மற்றொரு விரதத்தைப்பற்றியதே அது. கடவுளின் அருளைப் பெற்றோருக்கு யார்தான் தீங்கு இழைத்துவிட முடியும்?

விரதங்கள் அல்லது பிரதிக்ஞைகளைக் குறித்து இங்கே சில விஷயங்களைக் கூறுவது பொருத்தமற்றதாகாது. பிரதிக்ஞைகளுக்கு வியாக்கியானம் கூறுவதிலேயே உலகமெங்கும் சச்சரவுகள் உண்டாகின்றன. பிரதிக்ஞை என்னதான் தெளிவானதாக இருந்தாலும் சரி, தங்களுடைய காரியத்திற்கு ஏற்றவகையில் அதைப் புரட்டித் திரித்துக் கூறிவிடுகிறார்கள். அப்படிச் செய்கிறவர்களைப் பணக்காரர்களிலிருந்து ஏழைகள் வரையில், அரசர்களிலிருந்து உழவர் வரையில், சமூகத்தின் எல்லா வகுப்பினரிடையேயும் காணலாம். சுயநலம் அவர்களைக் குருடர்கள் ஆக்கிவிடுகிறது. தெளிவற்ற ஒரு மனோபாவத்தினால் அவர்கள் தங்களைத் தாங்களே ஏமாற்றிக்கொள்ளுவதுடன் உலகத்தையும், கடவுளையுங்கூட, ஏமாற்றப் பார்க்கிறார்கள். ஒரு பிரதிக்ஞையை மேற்கொள்ளும்படி செய்தவர் யாரோ, அவர், அந்தப் பிரதிக்ஞைக்கு

யோக்கியமாகக் கூறும் வியாக்கியானத்தை ஒப்புக்கொண்டு விடுவதுதான் இதில் சிறந்த வழியாகும். இரண்டு வகையான வியாக்கியானங்கள் சாத்தியமாகும்போது, பலவீனராயிருக்கும் கட்சியினர் கூறும் வியாக்கியானத்தை ஏற்றுக்கொள்ளுவது மற்ருேர் சிறந்த வழி. இரண்டு விதிகளேயும் நிராகரித்து விடும்போது அசத்தியத்தின் பலனுன சச்சரவுகளும் துன்பங்களும் எழுகின்றன. எவன் சத்தியத்தை நாடுகிருனே அவன் ஒருவனே சரியான விதியைப் பின்பற்றுகிருன். வியாக்கியானத்திற்காக அவன் படித்தவர்களின் ஆலோசனேயை நாட வேண்டியதில்லே. மாமிசம் எது என்பதற்கு என் அன்னே கொண்ட வியாக்கியானமே –சரியான வழியின்படி–எனக்கு உண்மை வியாக்கியானம். இது வன்றி, என்னுடைய அனுபவ முதிர்ச்சியோ, நான் அதிக அறிவு படைத்துவிட்டேன் என்ற அகம்பாவமோ, எனக்குப் போதித்திருக்கக்கூடிய வியாக்கியானம் உண்மையாகாது.

இங்கிலாந்தில் நான் செய்த உணவுச் சோதனேகளெல்லாம், சிக்கனத்தையும், தேகாரோக்கியத்தையுமே குறிக்கோளாகக் கொண்டு செய்யப்பட்டவை. உணவுப் பிரச்னேக்கும் மதத்துக்கும் உள்ள சம்பந்தத்தைப்பற்றி நான் தென்னுப்பிரிக்காவுக்குப் போகும் வரையில் சிந்திக்கவே இல்லே. அங்கேதான் நான் கடுமையான சோதனேகளே மேற்கொண்டேன். அவற்றைக் குறித்துப் பின்னுல் கூறுகிறேன். என்ருலும், இவைகளுக்கெல்லாம் இங்கிலாந்திலேயே விதை விதைக்கப்பட்டு விட்டது.

ஒரு மதத்தில் பிறந்தவர்களேவிட, அம்மதத்திற்குப் புதிதாக மாறியவர்களுக்கு, அம்மதத்தினிடம் அதிக அன்பு இருப்பது இயல்பு. சைவ உணவு என்பது அப்பொழுது இங்கிலாந்துக்கு ஒரு புதிய தருமம். எனக்கும் அப்படியே. ஏனெனில், மாமிசம் சாப்பிட வேண்டியது அவசியம் என்பதில் திட நம்பிக்கையுள்ளவனுக நான் அங்கே சென்றேன். ஆனுல், அறிவாராய்ச்சியின் மூலம் சைவ உணவே சிறந்தது என்ற கொள்கைக்குப் பிறகு மாறிவிட்டேன் என்பதை முன்னுல் கவனித்தோம். சைவ உணவு சம்பந்தமாகப் புதிதாக மதம் மாறியவனுக்கு இருக்கும் உற்சாகம் எனக்கும் இருந்ததால், நான் வசித்து வந்த பகுதியான பேஸ்வாட்டரில் ஒரு சைவ உணவுச் சங்கத்தை ஆரம்பிக்கத் தீர்மானித்தேன். ஸர் எட்வின் அர்னுல்டு அங்கேதான் வசித்தார். சங்கத்திற்கு உப தலேவராக இருக்குமாறு அவரைக் கேட்டுக்கொண்டேன். ‘வெஜிடேரியன்’ என்ற சைவ உணவுப் பத்திரிகைக்கு ஆசிரியரான டாக்டர் ஓல்டுபீல்டு சங்கத் தலேவரானுர். நான் அதற்குச் செயலாளனுனேன். கொஞ்ச காலம் சங்கம் சரிவர நடந்து வந்தது. ஆனுல், சில மாதங்களில் எல்லாம் கலேந்து போய்விட்டது. அடிக்கடி ஓர் இடத்திலிருந்து வேறு ஓர் இடத்திற்கு மாறிவிடும் என் பழக்கப்படி, அப்பகுதியிலிருந்து நான் குடி பெயர்ந்துவிட்டதே சங்கம் கலேந்துவிட்டதற்குக் காரணம். என்ருலும், இந்தக்

கொஞ்ச காலச் சாதாரணமான அனுபவமே, ஸ்தாபனங்களை உருவாக்கி நடத்துவதில் எனக்குச் சிறிது பயிற்சியை அளித்திருந்தது.

## 18

## கூச்சமே எனது பாதுகாப்பு

சைவ உணவாளர்கள் சங்கத்தின் நிர்வாகக் குழுவிற்கு நான் தேர்ந்தெடுக்கப் பெற்றேன். இக்குழுவின் கூட்டம் ஒவ்வொன்றுக்கும் நான் தவருமல் போய்க்கொண்டிருந்தேன். ஆனால், கூட்டங்களில் நான் பேசுவது மாத்திரம் இல்லை. டாக்டர் ஓல்டுபீல்டு என்னிடம் ஒரு சமயம், 'நீங்கள் என்னிடம் நன்ருகப்பேசிக் கொண்டிருக்கிறீர்களே! அப்படியிருக்க, கமிட்டிக் கூட்டங்களில் மாத்திரம் நீங்கள் ஏன் வாய் திறப்பதே இல்லை? தேனீக்களில் நீங்கள் ஆண் ஈ போன்றிருக்கிறீர்கள்' என்ருர். அவர் இவ்விதம் என்னைக் கேலி செய்ததைப் பாராட்டினேன். தேனீக்கள் எப்பொழுதும் சுறுசுறுப்பாக இருக்கின்றன. ஆண் ஈயோ முற்றும் சோம்பேறியாக இருக்கிறது. இக் கூட்டங்களில் மற்றவர்களெல்லாம் தங்கள் கருத்துக்களை எடுத்துச் சொல்லும் போது நான் மாத்திரம் பேசாமல் சும்மா உட்கார்ந்திருந்தது பெரிய விசித்திரமே. பேசுவதற்கு எனக்கு ஆசை இல்லாமல் இல்லை; ஆனால், பேசத் தெரியாத குறைதான். மற்ற உறுப்பினர்கள் எல்லோரும் என்னைவிட விஷயங்களை நன்கு அறிந்தவர்கள் என்று எனக்குத் தோன்றிற்று. பிறகு வேறு ஒன்றும் நிகழ்ந்துவிடுவது உண்டு. தைரியப்படுத்திக்கொண்டு பேச ஆரம்பிப்பது என்று நான் எண்ணியதும், கூட்டத்தில் அந்த விஷயம் போய், ஒரு புது விஷயம் ஆலோசனைக்கு வந்துவிடும். இப்படியே நீண்ட காலம் நடந்துகொண்டு வந்தது.

இதற்கு மத்தியில் ஒரு முக்கியமான விஷயம் விவாதத்திற்கு வந்தது. கூட்டத்திற்குப் போகாமல் இருந்துவிடுவது தவறு என்று நினைத்தேன். எதுவும் பேசாமல், 'வோட்டு'ப் போட்டுவிட்டு மாத்திரம் வந்துவிடுவது கோழைத்தனம் என்றும் தோன்றிற்று. பின் வரும் ரீதியில் அந்த விவாதம் எழுந்தது. சங்கத்திற்கு ஸ்ரீ ஹில்ஸ் தலைவராக இருந்தார். அவர் தேம்ஸ் இரும்புத் தொழிற்சாலையின் சொந்தக்காரர். நல்லொழுக்க விஷயத்தில் அவர் கண்டிப்பான கொள்கையுடையவர். அவருடைய பொருளுதவியைக்கொண்டே சங்கம் நடந்து வந்தது என்று சொல்லவேண்டும். கமிட்டியின் உறுப்பினர்களில் பலர் அவருடைய ஆதரவில் வாழ்ந்து வருபவர்கள். சைவ உணவு இயக்கத்தில் பிரசித்தி பெற்றவரான டாக்டர் அல்லின்ஸனும் இக் கமிட்டியில் ஓர் உறுப்பினர். அச்சமயம் புதிதாகக் கிளம்பிய கர்ப்பத்தடை இயக்கத்தை ஆதரிப்பவர் இவர். கர்ப்பத்

தடை முறைகளை அவர் தொழிலாளரிடையே பிரசாரம் செய்து வந்தார். இம் முறைகள் ஒழுக்கத்தின் வேரையே அறுப்பவை யாகும் என்று ஸ்ரீ ஹில்ஸ் கருதினர். உணவுச் சீர்திருத்தத்தோடு ஒழுக்கச் சீர்திருத்தமும் சைவ உணவாளர் சங்கத்தின் நோக்கம் என்பது அவருடைய அபிப்பிராயம். டாக்டர் அல்லின்ஸன் போன்ற ஒழுக்கத்திற்கு விரோதமான கருத்துள்ளவர்களைச் சங்கத்தில் இருக்க அனுமதிக்கக்கூடாது என்றும் அவர் எண்ணினர். ஆகவே, அவரை நீக்கிவிட ஒரு தீர்மானம் கொண்டு வரப்பட்டது. இவ்விஷயம் என் கவனத்தை அதிகமாகக் கவர்ந்தது. கர்ப்பத்தடைக்குச் செயற்கை முறைகளை அனுசரிப்பதைப் பற்றி டாக்டர் அல்லின்ஸன் கொண்டிருந்த கருத்து ஆபத்தானது என்றே நானும் கருதினேன். ஒழுக்க நெறியைக் கடைப்பிடிப்பவர் என்ற வகையில் டாக்டர் அல்லின்ஸனை எதிர்க்க ஸ்ரீ ஹில்ஸுக்கு உரிமை உண்டு என்றும் நான் கருதினேன். அதோடு ஸ்ரீ ஹில்ஸிடமும், அவருடைய உதார குணத்திடமும் எனக்கு அதிக மதிப்பு இருந்தது. ஆனால், ஒழுக்கக் கொள்கைகளும், சைவ உணவாளர் சங்கத்தின் நோக்கங்களில் ஒன்று என்று ஒப்புக்கொள்ள ஒருவர் மறுக்கிறார் என்பதற்காக, அவரை அச் சங்கத்திலிருந்து நீக்கிவிடுவதென்பது சரியானதல்ல என்றும் நான் எண்ணினேன். ஒழுக்கக் கொள்கைக்கு எதிரானவர்களைச் சங்கத்திலிருந்து விலக்கிவிட வேண்டும் என்ற ஸ்ரீ ஹில்ஸின் கருத்து, அவருடைய சொந்த அபிப்பிராயமே. சங்கத்தின் தெளிவான கொள்கைக்கும் இதற்கும் எந்தவிதமான சம்பந்தமும் இல்லை. சங்கத்தின் நோக்கம் சைவ உணவுக் கொள்கையைப் பரப்புவதேயன்றி எந்த ஒழுக்க முறையையும் பரப்புவதன்று. ஆகையால், மற்ற ஒழுக்கங்களைப் பொறுத்தவரையில் ஒருவர் என்ன கருத்துக் கொண்டிருந்தாலும், சைவ உணவு மாத்திரமே சாப்பிடும் யாரும் இச்சங்கத்தில் அங்கத்தினராக இருக்கலாம் என்று நான் அபிப்பிராயப்பட்டேன்.

என்னைப் போன்ற அபிப்பிராயம் கொண்ட மற்றும் சிலரும் கமிட்டியில் இருந்தனர். ஆயினும், என் சொந்த அபிப்பிராயத்தைக் கூறிவிடவேண்டியது என்னைப் பொறுத்தவரையில் என் கடமை என்று உணர்ந்தேன். அதை எப்படிச் செய்வது என்பதுதான் பிரச்னை. கூட்டத்தில் பேசும் தைரியம் எனக்கு இல்லை. ஆகையால் என் எண்ணங்களையெல்லாம் எழுதிவிடுவது என்று முடிவு செய்தேன். அவ்வாறே எழுதி என் சட்டைப் பைக்குள் வைத்துக்கொண்டு கூட்டத்திற்குப் போனேன். ஆனல், எழுதிவைத்திருந்ததைப் படிக்கும் துணிவுகூட எனக்கு வரவில்லை என்றே எனக்கு ஞாபகம். தலைவர் வேறொருவரைக் கொண்டு அதைக் கூட்டத்தில் படிக்கச் செய்தார். முடிவில் டாக்டர் அல்லின்ஸனின்கட்சி தோற்றுப்போயிற்று. இவ்விதம் இது போன்ற முதல் போராட்டத்திலேயே தோற்கும் கட்சியில் சேர்ந்தவனாக நான் இருந்ததைக் கண்டேன். என்றாலும் என்

கட்சி நியாயமானது என்ற திருப்தி எனக்கு இருந்தது. இந்தச் சம்பவத்திற்குப் பிறகு அந்தக் கமிட்டியிலிருந்து நான் ராஜி நாமாச் செய்துவிட்டதாகவே எனக்கு அரைகுறையாக ஞாபகம் இருக்கிறது.

நான் இங்கிலாந்தில் இருந்த காலம் முழுவதிலும் எனக்கு இந்தக் கூச்சம் இருந்துவந்தது. சாதாரணமாக, நண்பர்களைப் பார்த்துவரச் செல்லும் இடங்களில்கூட, அங்கே ஐந்தாறு பேரோ அதற்கு அதிகமானவர்களோ இருந்துவிட்டால், நான் ஊமை யாகப் போய்விடுவேன்.

ஒரு நாள் ஸ்ரீ மஜ்முதாருடன் வெண்ட்னருக்குச் சென்றேன். அங்கே சைவ உணவுக் குடும்பம் ஒன்றுடன் தங்கினோம். 'உணவு முறையின் தருமம்' என்ற நூலின் ஆசிரியரான ஸ்ரீ ஹோவார்டும் அதே கடலோர ஊரில் தங்கியிருந்தார். நாங்கள் அவரைச் சந்தித்தோம். சைவ உணவைப் பரப்புவதற்காக நடந்த ஒரு கூட்டத்தில் பேசுமாறு அவர் எங்களை அழைத்தார். ஒருவர், தாம் கூட்டத்தில் பேச வேண்டியதை எழுதிப் படிப்பது தவருகக் கருதப்படமாட்டாது என்பதை விசாரித்துத் தெரிந்து கொண்டேன். தாங்கள் கூறவேண்டியதை, முன்பின் பொருத்த மாகவும் சுருக்கமாகவும் சொல்லுவதற்காகப் பலர் இவ்விதம் எழுதிப் படிப்பது உண்டு என்பதையும் நான் அறிவேன். நினைவில் இருந்தபடியே பேசுவது என்பது என்னால் முடியாத காரியம். ஆகையால், நான் செய்ய வேண்டிய பிரசங்கத்தை முதலில் எழுதி வைத்துக்கொண்டேன். கூட்டத்தில் அதைப் படிப்பதற்கு எழுந்தேன்; என்னால் முடியவில்லை. நான் எழுதிவைத்திருந்த பிரசங்கம் ஒரே தாளில் அடங்கிவிட்டது. என்றாலும் கண் மங்க லாகிவிட்டது; உடம்பெல்லாம் நடுங்கியது. எனக்காக ஸ்ரீ மஜ்மு தார் அப்பிரசங்கத்தைப் படிக்க வேண்டியதாயிற்று. அவர் சொந்தமாகப் பேசியதோ அற்புதமாக இருந்தது. கேட்டவர்கள் கரகோஷம் செய்து, குதூகலமாக வரவேற்றனர். என்னுடைய திறமையின்மைக்காக மனம் வருந்தியதோடு என்னைக் குறித்து நானே வெட்கப்பட்டுக் கொண்டேன்.

இங்கிலாந்தில் பொதுக்கூட்டத்தில் பேச நான் கடைசியாக முயன்றது, அங்கிருந்து தாய்நாடு திரும்பிய சமயத்தில்தான். இத் தடவையும் நான் என்னைப் பிறரின் நகைப்புக்கு உரியவனா கச் செய்துகொள்ளுவதில்தான் வெற்றி பெற்றேன். எனது சைவ உணவு நண்பர்களை, முன்னால் கூறியிருக்கும் ஹால்பார்ன் ஹோட்டலுக்கு ஒரு விருந்துக்கு அழைத்தேன், 'சைவ உணவு விடுதிகளில் சைவ உணவு விருந்து வைக்க முடியும் என்பது சரி. ஆனால், மாமிசச் சாப்பாடு போடும் ஹோட்டலில் சைவ உணவு விருந்து ஏன் சாத்தியமாகாது போகும்?' என்று எனக்குள் நானே சொல்லிக் கொண்டேன். அதன்பேரில் ஹால்பார்ன் ஹோட்டலின் நிர்வாகியிடம் பேசி, சுத்த சைவ உணவு விருந் துக்கு ஏற்பாடு செய்தேன். இப் புதிய பரீட்சையை சைவச்

சாப்பாட்டுக்காரர்கள் சந்தோஷமாகப் பாராட்டினர்கள். விருந்துகளெல்லாம் இன்பத்திற்காகவே வைக்கப்படுகின்றன. ஆனல், மேலே நாடுகளிலோ, விருந்தையும் ஓர் அருங்கலையாக வளர்த்திருக்கிருர்கள். அங்கே விருந்துகள் ஆடம்பரமாகவும், சங்கீதம், பிரசங்கங்கள் ஆகியவைகளுடனும் நடத்தப்படுகின்றன. நான் நடத்திய அச் சிறிய விருந்திலும் இந்த ஆடம்பரங்கள் இல்லாது போகவில்லை. ஆகையால், அதில் பிரசங்கங்களும் இருந்தாக வேண்டியதாயிற்று. நான் பேச வேண்டிய சமயம் வந்தபோது பேசுவதற்கு எழுந்து நின்றேன். சில வாக்கியங்களை மாத்திரமே கொண்ட ஒரு சிறு பிரசங்கம் செய்வதென்று அதற்காக யோசித்தும் வைத்திருந்தேன். ஆனல், முதல் வாக்கியம் பேசிய பிறகு மேற்கொண்டு பேச்சு வரவே இல்லை. பார்லிமென்டு காமன்ஸ் சபையில் அடிஸன்* செய்ய முயன்ற முதல் பிரசங்கத்தைக் குறித்து நான் படித்திருக்கிறேன். 'நான் கருதுகிறேன் (I Conceive)' என்று மும்முறை திரும்பத் திரும்ப அவர் சொன்னர். அதற்கு மேல் அவரால் பேச முடியவில்லை. அப்பொழுது ஒரு கேலிக்காரர் எழுந்து, 'இக் கனவான் மும்முறை கருத்தரித்தார்; ஆனல், எதுவுமே வெளியே வரவில்லை' என்று சொன்னர்.† இந்த வரலாற்றை வைத்துக்கொண்டு தமாஷ் பிரசங்கம் ஒன்றை செய்துவிடுவது என்று யோசித்து வைத்திருந்தேன். ஆகையால், அக் கதையைச் சொல்ல ஆரம்பித்தேன். முதலிலேயே தடைப்பட்டு என் பேச்சு நின்று விட்டது. எனக்கு ஞாபக சக்தி அடியோடு இல்லாது போய்விட்டது. தமாஷான பிரசங்கம் ஒன்று செய்ய முயன்று, என்னையே கேலிக்கு இடமாக ஆக்கிக்கொண்டேன். 'கனவான்களே, என் அழைப்பிற்கு இணங்கிவந்ததற்காக உங்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்' என்று மாத்திரம் சொல்லிவிட்டு உட்கார்ந்துவிட்டேன்.‡

---

* ஜோஸப் அடிஸன் (1672–1719) – இங்கிலாந்தில் சிறந்த எழுத்தாளராகவும் ராஜீயவாதியாகவும் புகழ் பெற்று விளங்கியவர். பல மந்திரி சபைகளிலும் முக்கியமான பதவிகளை வகித்தார். இவருடைய நண்பர் ஸ்டீல் என்பவர் ஆரம்பித்த 'டாட்லர்' என்ற பத்திரிகையில் அடிக்கடி எழுதி வந்தார். அவருடன் சேர்ந்து 'ஸ்பெக்டேட்டர்' என்ற பத்திரிகையையும் ஆரம்பித்தார். இவர் எழுதிய 'காடோ' என்ற துன்பியல் நாடகம் மிகப் பிரபலமாக விளங்கியது.

† 'I Conceive' என்ற ஆங்கில வாசகத்துக்கு, 'கருதுகிறேன்' என்ற பொருளுடன் "கருத்தரிக்கிறேன்" என்ற பொருளும் உண்டு. இந்தப் பொருளில் தான் அடிஸனைப் பார்லிமெண்டில் ஒருவர் கேலி செய்து அவ்வாறு பேசினர்.

‡ ஹால்பார்ன் ஹோட்டலில், காந்திஜி நடத்திய பிரிவு விருந்தைக் குறித்து, 'வெஜிடேரியன்' பத்திரிகையின் 13—6—1891-ஆம் தேதி இதழில் பின்வருமாறு செய்தி பிரசுரமாகி இருந்தது:

'அது ஒருவகைப் பிரிவுபசார விருந்தாக இருந்தபோதிலும் வருத்தத்தின் அறிகுறியையே அதில் காணவில்லை. ஸ்ரீ காந்தி இந்தியாவுக்குத் திரும்பிப் போகிருரெனினும் சைவ உணவு சம்பந்தமாக அதிக வேலைகளைச் செய்வதற்கே அவர் அங்கே செல்கிருர் என்பதே அதற்குக் காரணம். மேலும், அவர் தமது வக்கீல் படிப்பை வெற்றிகா

தென்னுப்பிரிக்காவில்தான் இந்தக் கூச்சம் என்னை விட்டுப் போயிற்று. என்ருலும், அங்கும் அது முற்றும் போய்விட வில்லை. முன்னுல் தயார் செய்துகொள்ளாமல் பிரசங்கம் செய்வ தென்பதும் என்னுல் முடியாது. முன்பின் தெரியாத ஒரு கூட் டத்தின் முன்னுல் பேசுவதற்கு நான் தயங்கினேன். முடிந்தால் பிரசங்கம் செய்யாமலும் தப்பித்துக் கொண்டு விடுவேன். இன் றுங்கூட நண்பர்களின் கூட்டத்தில் வெறும் பேச்சுப் பேசிக் கொண்டிருக்க என்னுல் முடியும் என்று நான் நினைக்கவில்லை; அப்படி செய்யவும் மாட்டேன்.

ஆனுல், இன்னும் ஒன்றையும் நான் சொல்லவே வேண்டும். என் உடம்புடன் ஒட்டியதாயிருந்த கூச்சத்தினுல் சில சமயங் களில் என்னைக் குறித்துப் பிறர் நகைப்பதற்கு இடம் வைத்துக்கொண்டேன் என்பதைத் தவிர அதனுல் எனக்கு எவ்விதத்திலும் கெடுதி உண்டாகவில்லை. அதற்கு மாருக, உண்மையில் அது எனக்கு நன்மையே செய்திருக்கிறது என் பதைக் காண்கிறேன். பேச்சில் எனக்கு இருந்த தயக்கம், ஒரு சமயம் கவலை தருவதாக இருந்திருந்தாலும், இப்பொழுது அது இன்பமானதாக இருக்கிறது. சொற்களைச் சிக்கனமாக உப யோகிக்க எனக்குக் கற்றுக் கொடுத்ததே அதனுல் ஏற்பட்ட மிகப் பெரிய நன்மை. என்னுடைய எண்ணங்களைக் கட்டுப் படுத்திக்கொள்ளும் பழக்கமும் இயற்கையாகவே எனக்கு உண் டாயிற்று. சரியாகச் சிந்திக்காத சொல் எதுவும் என் நாவி லிருந்தோ, பேனுவிலிருந்தோ வெளிவருவதே இல்லை. இந்த விஷயத்தில் இப்பொழுது நானே எனக்கு நற்சாட்சிப் பத்திரம் அளித்துக்கொள்ள முடியும். நான் பேசியது அல்லது எழுதியது எதற்காகவும் நான் பின்னுல் வருத்தப்பட நேர்ந்ததாக எனக்கு நினைவில்லை. இவ்விதம் பல தவறுகளிலிருந்தும் நான் தப்பி னேன். வீண் கால விரயமும் எனக்கு நேராதிருந்தது. சத்தி யத்தை நாடுகிறவர் அனுசரிக்க வேண்டிய ஆன்மிகக் கட்டுத் திட்டங்களில் மௌனமும் ஒரு பகுதி என்பதை அனுபவம் எனக் குப் போதித்திருக்கிறது. உண்மையை அறிந்தோ அறியாமலோ, மிகைப்படுத்தியும் மறைத்தும் திரித்தும் கூறுவது, மனிதனுக்கு இயற்கையாகவே இருக்கும் ஒரு குறைபாடு. அதனின்றும் தப்புவதற்கு மௌனம் அவசியமானது. அதிகமாகப் பேசாத வர், யோசியாமல் பேச வாய்ப்பு இருக்காது. ஒவ்வொரு

---

மாக முடித்துக்கொண்டு செல்வதால், அவருக்கு வாழ்த்துக் கூறவேண்டுமேயன்றிச் சொந்தத் துக்கங்களைப் பாராட்டிக் கொண்டிருக்கக் கூடாது என்றும் கருதப்பட்டது.

'இவ் வைபவத்தின் முடிவில் ஸ்ரீ காந்தி, பயத்துடன் என்ருலும், அழகாகச் செய்த பிரசங்கத்தால் வந்திருந்தோரை வரவேற்ருர். இங்கிலாந்தில் புலால் மறுப்புப் பழக்கம் வளர்ந்து வருவதைக் குறித்துத் தாம் இப்போது ஆனந்தமடைவதாகக் கூறி யதோடு லண்டன் சைவ உணவுச் சங்கத்துடன் தமக்குத் தொடர்பு ஏற்பட்ட விதத்தை யும் சொன்னுர். அதோடு ஸ்ரீ ஓல்டுபீல்டுக்கு ('வெஜிடேரியன்' பத்திரிகையின் ஆசிரியர் டாக்டர் ஜோஸியா ஓல்டுபீல்டு) தாம் எவ்வளவு தூரம் கடமைப்பட்டிருக்கிருர் என்பதையும் உருக்கமாகக் கூறினுர்.'

சொல்லையும் அவர் நிறுத்தியே பேசுவார். பேச வேண்டும் என்று பெருத்த ஆசையுடன் இருப்போர் பலரைப் பார்க்கிறோம். தம்மையும் பேச அனுமதிக்க வேண்டும் என்று வற்புறுத்தி வரும் பல சீட்டுக்களைப் பெருத எந்தக் கூட்டத் தலைவரையும் காண முடியாது. பேச அனுமதி கொடுத்துவிட்டாலோ, தங்களுக்கு அளித்த நேரத்தையும் தாண்டி, இன்னும் அதிக நேரம் வேண்டும் எனக் கேட்டு, அனுமதியின்றியும் இவர்கள் பேசிக் கொண்டே போகிருர்கள். இத்தகைய பேச்சுக்களினுலெல்லாம் உலகிற்கு எந்தவிதப் பயனும் இருப்பதாகச் சொல்லவே முடியாது. காலத்தை வீணுக்குவதுதான் அது. உண்மையில் எனக்கு இருந்த கூச்சமே, எனக்குக் கேடயமாகவும், கவசமாகவும் ஆயிற்று. நான் வளர்ச்சியடைய அது அனுமதித்தது. சத்திய ஆராய்ச்சியில் அது எனக்கு உதவியையும் செய்தது.

## 19

# பொய்ம்மை ரணம்

இக்காலத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, நாற்பது ஆண்டுகளுக்கு முன்னல் இங்கிலாந்தில் இந்திய மாணவர்கள் சொற்பமாகவே இருந்தனர். தங்களுக்கு மணமாகியிருந்தாலும் மணமாகாதவர்கள்போல் நடித்து வருவது அவர்களிடம் இருந்த பழக்கம். படிப்புக்கு மணவாழ்க்கை ஏற்றதல்ல என்று அங்கே கருதப்படுகிறது. ஆகையால், பள்ளிக்கூட அல்லது கல்லூரி மாணவர்கள் எல்லோரும் மணமாகாதவர்கள். நம் நாட்டில் சிறந்திருந்த பழங்காலத்திலும் இந்தப் பழக்கமே இருந்தது. அக் காலத்தில் மாணவர்கள் பிரம்மச்சாரிகள் என்றே சொல்லப்பட்டு வந்தனர். ஆனல், இன்ரே குழந்தைப் பருவத்திலேயே விவாகம் செய்துவைத்துவிடும் வழக்கம் நம்மிடம் இருக்கிறது. இப்பழக்கம் இங்கிலாந்தில் இல்லவே இல்லை. ஆகையால், தங்களுக்கு மணமாகிவிட்டது என்று ஒப்புக்கொள்ள இங்கிலாந்தில் இருந்த இந்திய இளைஞர்கள் வெட்கப்பட்டார்கள். இவ்விதம் இவர்கள் பாசாங்கு செய்து வந்ததற்கு மற்ருெரு காரணமும் உண்டு. இவர்களுக்கு மணமாகிவிட்டது என்று தெரிந்துவிட்டால், இங்கிலாந்தில் இவர்கள் எந்தக் குடும்பத்தினருடன் வசிக்கிருர்களோ அக் குடும்பங்களின் இளம் பெண்களுடன் வெளியே உலாவப் போவதும், சல்லாபம் செய்வதும் முடியாது போகும். சல்லாபம் அநேகமாகக் குற்றமற்றதே யாகும். பெற்ருேர்களே இதற்கு ஆதரவளிக்கிருர்கள். அந்நாட்டில் ஒவ்வோர் இளைஞனும் தனது வாழ்க்கைத் துணைவியைத் தானே தேர்ந்து கொள்ள வேண்டியவனுகிருன். அப்படியிருப்பதால், வாலிபப் பையன்களும் வாலிபப் பெண்களும் அத்தகைய உறவு கொள்ளுவது அங்கே அவசியமாகக்கூட இருக்கலாம். ஆனல், ஆங்கில இளைஞர்களுக்கு முற்றும் இயற்கையானதாக இருக்கும்

இத்தகைய உறவுகளில், இங்கிலாந்துக்கு வந்ததும் இந்திய இளைஞர்களும் ஈடுபட்டுவிடுவார்களாயின், அதன் முடிவு ஆபத்தில் முடிந்துவிடக் கூடும். அப்படியே ஆகியும் விடுகிறது. நமது வாலிபர்கள், உணர்ச்சி வயப்பட்டுப் போய்ப் பெண்களுடன் தோழமை கொள்ளுவதற்காகப் பொய்யான வாழ்க்கை நடத்தி வருவதைக் கண்டேன். இத்தகைய தோழமை ஆங்கில இளைஞர்கள் விஷயத்தில் என்னதான் குற்றமில்லாததாக இருந்தாலும், இவர்களுக்கு அது விரும்பத் தகாததே. இத் தொத்து நோய் என்னையும் பற்றிக்கொண்டது. எனக்கு மணமாகி, ஒரு குழந்தைக்கும் நான் தந்தையாக இருந்தபோதிலும், மணமாகாதவன்போல் நடித்துவர நானும் தயங்கவில்லை. ஆனால், பாசாங்கு செய்பவனாக இருந்தது எனக்கு இன்பமாயும் இல்லை. எனக்கு இருந்த கூச்சமும் அடக்கமுமே இவ்விஷயத்தில் இன்னும் அதிக தூரம் போய்விடாதவாறு என்னைத் தடுத்தன. நான் வாய் திறந்து பேசவே இல்லை என்றால், என்னுடன் பேசவேண்டும் என்றோ, உலாவப் போகவேண்டும் என்றோ எந்தப் பெண்ணும் எண்ணுவதற்கில்லை.

கூச்சத்தோடு நான் ஒதுங்கியிருந்ததற்கு ஏற்றாற்போல என்னிடம் கோழைத்தனமும் இருந்தது. வெண்ட்னரில் ஒரு குடும்பத்தினருடன் நான் வசித்து வந்தேன். அத்தகைய குடும்பங்களில் வீட்டுக்கார அம்மாளின் மகள் விருந்தினரை உலாவ அழைத்துச் செல்லுவது வழக்கம். என் வீட்டு அம்மாளின் மகள், ஒரு நாள் என்னை வெண்ட்னரைச் சுற்றியுள்ள அழகான மலைகளுக்கு அழைத்துச் சென்றாள். நானோ வேகமாக நடப்பவன்; அப்பெண்ணோ, என்னையும்விட வேகமாக நடந்தாள். அவளுக்குப் பின்னால் என்னை இழுத்துக்கொண்டு போனாள் என்றே சொல்லலாம். வழியெல்லாம் ஏதேதோ பேசிக்கொண்டே போனாள். அவளுடைய ஓயாத பேச்சுக்குச் சில சமயம், 'ஆம்' அல்லது 'இல்லை' என்று மாத்திரம் மெல்லிய தொனியில் பதில் சொல்லுவேன். அதிகமாக நான் பேசினால், 'ஆம். எவ்வளவு அழகாயிருக்கிறது!' என்பேன். அவள் பறவை போல் பறந்து கொண்டிருந்தாள். நானோ, 'எப்பொழுது வீடு திரும்பப் போகிறோம்?' என்று திகைத்துக் கொண்டிருந்தேன். இவ்வாறு மலையின் உச்சிக்குப் போய் விட்டோம். திரும்ப எப்படிக் கீழே இறங்குவது என்பதே பிரச்னை. குதி உயர்வான பூட்ஸ் போட்டிருந்தும், இருபத்தைந்து வயதுள்ள சுறுசுறுப்பான அப் பெண், அம்புபோலப் பாய்ந்து குன்றிலிருந்து இறங்கிவிட்டாள். கீழே நின்றுகொண்டு சிரித்தாள்; இறங்கி வரும்படி என்னை உற்சாகப் படுத்தினாள்; 'வந்து இழுத்து வரட்டுமா?' என்றும் கேட்டாள். நான் அவ்வளவு கோழையாக இருப்பது எப்படி? எவ்வளவோ கஷ்டத்துடன், சில சமயம் ஊர்ந்தும்கூட, எப்படியோ கீழே போய்ச் சேர்ந்து விட்டேன். 'சபாஷ்' என்று அவள் உரக்கச் சிரித்தாள். அவளால் முடிந்த வரையில் நான் அதிக வெட்கப் படும்படி செய்துவிட்டாள்.

ஆனல், நான் தீங்குருமல் எங்குமே தப்பிவிட முடியாது. ஏனெனில், புரையோடும் பொய்ம்மைப் புண்ணிலிருந்து என்னைக் காக்கக் கடவுள் திருவுளம் கொண்டார். வெண்ட்னரைப் போல நீர் நிலையத்தை அடுத்த மற்ருேர் ஊரான பிரைட்டனுக்குப் போயிருந்தேன். அது நான் வெண்ட்னருக்குப் போவதற்கு முன்னல், அங்கே ஒரு ஹோட்டலில் சாதாரண வசதிகளுடைய ஒரு கிழ விதவையைச் சந்தித்தேன். என் இங்கிலாந்து வாசத்தின் முதலாண்டில் நடந்தது இது. ஹோட்டலில் சாப்பாட்டுக்குப் பரிமாற இருக்கும் உணவு வகைகளைக் குறிக்கும் பட்டியல் பிரெஞ்சு மொழியில் எழுதப்பட் டிருந்ததால் எனக்குப் புரியவில்லை. அக் கிழவி உட்கார்ந்திருந்த மேஜையிலேயே நானும் உட்கார்ந்திருந்தேன். நான் அந்த இடத்திற்குப் புதியவன், ஆகையால் விழிக்கிறேன் என்பதை அம்மூதாட்டி கண்டுகொண்டார். எனக்கு உதவி செய்யவும் முன்வந்தார். “நீர் இவ்விடத்திற்குப் புதியவர் என்று தோன்றுகிறது. இன்னது வேண்டும் என்று ஏன் கேட்காமல் இருக்கிறீர்?” என்று கேட்டார். அப்பட்டியலை எழுத்துக் கூட்டிப் படித்து, அதில் கண்டவைகளில் என்னென்ன சேர்க்கப்பட்டிருக்கின்றன என்று பரிசாரகரைக் கேட்டுத் தெரிந்துகொள்ள நான் தயார் ஆகிக்கொண்டிருந்த சமயத்தில் அந்த நல்ல மூதாட்டி, மேற்கண்டவாறு குறுக்கிட்டார். நான் அவருக்கு நன்றி செலுத்தினேன். எனக்கு இருந்த கஷ்டத்தையும் விளக்கினேன்: “பிரெஞ்சு மொழி எனக்குத் தெரியாததனல் பரிமாறப்படுவதில் எது மாமிசக் கலப்பில்லாதது என்று எனக்கு விளங்கவில்லை” என்றேன்.

“நான் உமக்கு உதவி செய்கிறேன். அப் பட்டியலை உமக்கு விளக்கிக் கூறி, நீர் எதைச் சாப்பிடலாம் என்பதையும் காட்டுகிறேன்” என்ருர் அம் மூதாட்டி. வந்தனத்துடன் அவர் உதவியைப் பயன்படுத்திக்கொண்டேன். எங்களுக்குள் ஏற்பட்ட பழக்கத்தின் ஆரம்பம் இது. பின்னர் இது நட்பாக வளர்ந்தது. நான் இங்கிலாந்தில் இருந்தவரையிலும், அதற்குப் பிறகு நீண்ட காலமுங்கூட, இந்த நட்பு தொடர்ந்து இருந்து வந்தது. அவர் தமது லண்டன் விலாசத்தையும் எனக்குக் கொடுத்ததோடு ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் இரவில் தம் வீட்டுக்குச் சாப்பிட வருமாறு அழைத்தார். விசேஷ சந்தர்ப்பங்களிலும் அவர் என்னை அழைப்பார். என் கூச்சத்தைப் போக்கிக்கொள்ள உதவி செய்வார். இளம் பெண்களை எனக்கு அறிமுகம் செய்து வைத்து, அவர்களுடன் நான் பேசும்படியும் செய்வார். இவ்விதம் பேசுவதில் ஈடுபட்ட பெண்களில் முக்கியமாகக் குறிப்பிட வேண்டியவள், அம் மூதாட்டியின் வீட்டிலேயே வசித்து வந்த ஒருத்தியாவாள். அடிக்கடி நாங்கள் இருவர் மட்டும் தனியாக இருக்கும்படியும் விடப்படுவோம்.

இவையெல்லாம் முதலில் எனக்கும் பெரும் சங்கடமாகவே இருந்தன. பேச்சை முதலில் தொடங்க என்னுல் முடியாது. விகடமாகப் பேசி, நகைப்பை உண்டாக்கவும் என்னுல் ஆகாது. ஆனுல், அப்பெண் எனக்குக் கற்றுக் கொடுத்தாள். நானும் கற்றுக்கொள்ள ஆரம்பித்தேன். நாளாக ஆக, 'ஞாயிற்றுக்கிழமை எப்பொழுது வரும்?' என்று ஆவலுடன் எதிர்பார்க்கலானேன். அந்த இளம் பெண்ணுடன் பேசிக்கொண்டிருப்பதையும் விரும்பத் தலைப்பட்டேன்.

அம் மூதாட்டி நாளுக்கு நாள் தமது வலையை விரிவாகப் பரப்பிக்கொண்டே போனுர். எங்கள் சந்திப்பில் அவர் அதிகச் சிரத்தை கொள்ளலானுர். எங்கள் இருவரைக் குறித்தும் அவருடைய சொந்தத் திட்டம் ஏதாவது இருந்திருக்கக் கூடும்.

என் நிலைமை அதிகச் சங்கடமான தாயிற்று. 'எனக்கு மண மாகிவிட்டது என்பதை முன்னுலேயே அந்த நல்ல மூதாட்டிக்குத் தெரிவித்திருக்கக் கூடாதா?' என்று எனக்கு நானே சொல்லிக் கொண்டேன். அப்பொழுது அவர், எங்கள் இருவருக்கும் விவாக நிச்சயம் செய்ய எண்ணியிருக்க மாட்டார். என் பிழையைத் திருத்திக்கொள்ள இன்னும் காலம் கடந்து போய்விட வில்லை. உண்மையைச் சொன்னுல் இனிமேலாவது துயரத்திற்கு உள்ளாகாமல் நான் காப்பாற்றப்பட்டு விடுவேன். என் மனதில் இத்தகைய எண்ணங்களுடன் அவருக்கு ஒரு கடிதம் எழுதினேன். அக் கடிதம் ஏறக்குறையப் பின்வருமாறு இருந்தது:

'நாம் பிரைட்டனில் சந்தித்ததிலிருந்து நீங்கள் என்னிடம் அன்புடன் இருந்திருக்கிறீர்கள். தாய், தனது மகனைக் கவனிப்பது போல என்னைக் கவனித்தும் வந்திருக்கிறீர்கள். எனக்கு மணம் ஆகவேண்டும் என்றும் நீங்கள் எண்ணுகிறீர்கள். அந்த நோக்கத்துடன் இளம் பெண்களை எனக்கு அறிமுகம் செய்து வைத்தீர்கள். விஷயம் முற்றுவதற்கு முன்னுல், உங்கள் அன்புக்குத் தகுதியற்றவனுக இருந்திருக்கிறேன் என்பதை நான் உங்களிடம் ஒப்புக்கொண்டுவிட வேண்டும். நான் உங்கள் வீட்டுக்கு வர 'ஆரம்பித்தபோதே, எனக்கு மணம் ஆகிவிட்டது என்பதை நான் உங்களுக்குச் சொல்லியிருக்க வேண்டும். இங்கிலாந்தில் இருக்கும் இந்திய மாணவர்கள், தங்களுக்கு மணம் ஆகிவிட்டது என்ற உண்மையை மறைத்து விடுகிருர்கள் என்பதை நான் அறிவேன். நானும் அப்படியே செய்தேன். அப்படி நான் செய்திருக்கவே கூடாது என்பதை இப்பொழுது உணருகிறேன். இன்னும் ஒன்றையும் நான் கூறவேண்டும் சிறு பையனுக இருக்கும்போதே எனக்கு மணம் ஆகிவிட்டது; ஒரு பையனுக்கு நான் தந்தை. இவ்வளவு காலமும் இதையெல்லாம் உங்களுக்குத் தெரியாமல் வைத்திருந்துவிட்டதற்காக நான் மனம் நோகிறேன். ஆனுல், உண்மையைச் சொல்லிவிடும் தைரியத்தை எனக்குக் கடவுள் இப்பொழுதாவது அளித்ததற்காக

மகிழ்ச்சியடைகிறேன். என்னை நீங்கள் மன்னிப்பீர்களா? நீங்கள் அன்போடு எனக்கு அறிமுகம் செய்துவைத்த இளம் பெண்ணிடம் எந்தவிதமான தகாத வழியிலும் நான் நடந்து கொண்டதில்லை என்று உங்களுக்கு உறுதி கூறுகிறேன். நான் எவ்வளவு தூரம் போகலாம் என்பதை அறிவேன். நீங்களோ, எனக்கு மணம் ஆகிவிட்டது என்பதை அறியாமல் எங்களுக்குள் விவாக நிச்சயம் ஆகவேண்டும் என்று இயற்கையாகவே விரும்பினீர்கள். இப்பொழுதுள்ள கட்டத்திற்குமேல் விஷயங்கள் போய்விடாமல் இருப்பதற்காக நான் உங்களிடம் உண்மையைச் சொல்லிவிட வேண்டும்.

'இக்கடிதம் உங்களுக்குக் கிடைத்த பிறகு, நீங்கள் காட்டிய அன்புக்கு அருகதையற்றவனாக நான் இருந்திருக்கிறேன் என்று நீங்கள் உணர்ந்தால், அது தவறு என்று நான் எண்ணமாட்டேன் என்று உங்களுக்கு உறுதி கூறுகிறேன். உங்களுடைய அன்பினாலும், நீங்கள் என்னிடம் காட்டிய சிரத்தையினாலும் நிரந்தரமான நன்றியறிதலுக்குக் கடமைப்பட்டவனாக என்னைச் செய்திருக்கிறீர்கள். இக் கடிதத்திற்குப் பிறகும், நீங்கள் என்னை நிராகரித்துவிடாமல் உங்களுடைய அன்பான வீட்டிற்கு வரத் தகுதியுடையவனாகவே என்னைக் கருதுகிறீர்கள் என்றால், அதற்கு உரியவனாவதற்குப் பாடுபட நான் தவறமாட்டேன்; இயற்கையாகவே மகிழ்ச்சியடைவேன். அதை உங்கள் அன்பின் மற்றோர் அறிகுறியாகவும் கொள்ளுவேன்.'

இத்தகைய கடிதத்தை ஒரே சமயத்தில் நான் எழுதியிருக்க முடியாது என்பதை வாசகர் அறியவேண்டும். அதை நான் நிச்சயமாகத் திரும்பத் திரும்பப் பன்முறை திருத்தி எழுதியிருக்க வேண்டும். ஆனால், அதை எழுதிய பிறகு, என் உள்ளத்தை அழுத்திக்கொண்டிருந்த பெருஞ் சுமை நீங்கியது. அநேகமாக அடுத்த தபாலிலேயே அம்மூதாட்டியிடமிருந்து எனக்குப் பதிலும் வந்தது. அது ஏறக்குறையப் பின் வருமாறு :

'எதையும் ஒளிக்காமல் நீங்கள் எழுதிய கடிதம் கிடைத்தது. நாங்கள் இருவருமே மகிழ்ச்சியடைந்ததோடு சந்தோஷத்துடன் சிரித்தும்விட்டோம். நீங்கள் செய்துவிட்ட, உண்மையை மறைத்த குற்றம் என்று நீங்கள் கூறும் செயல், மன்னிக்கத்தக்கது. ஆனால், உண்மை நிலைமையை எங்களுக்கு நீங்கள் தெரிவித்துவிட்டது நல்லதே. என் அழைப்பு இன்னும் இருந்து வருகிறது. அடுத்த ஞாயிற்றுக்கிழமை உங்களை நிச்சயமாக எதிர்பார்க்கிறோம். அதோடு உங்கள் குழந்தைக் கல்யாணத்தைப் பற்றிய விவரங்களையெல்லாம் அறிந்து, உங்கள் சங்கடத்தில், நாங்கள் சிரித்து இன்புறுவதையும் எதிர்நோக்குகிறோம். இச் சம்பவத்தினால் நமது நட்பு, ஒரு சிறிதேனும் பாதிக்கப்படவில்லை என்று நான் உறுதி கூறவும் வேண்டுமா?'

இவ்வாறு நான் என்னிடமிருந்து, பொய்ம்மையின் புரையோடிய புண்ணைப் போக்கிக்கொண்டேன். அதற்குப் பிறகு, அவசியமாகும் இடங்களிலெல்லாம், எனக்கு மணம் ஆகிவிட்டதைக் குறித்துப் பேச நான் தயங்கியதே இல்லை.

# 20

# சமயங்களுடன் தொடர்பு

**நா**ன் இங்கிலாந்தில் இருந்த இரண்டாம் ஆண்டின் இறுதியில், பிரம்மஞான சங்கத்தைச் சேர்ந்த இரு சகோதரர்களுடன் எனக்குப் பழக்கம் உண்டாயிற்று. அவர்கள் இருவரும் மணம் ஆகாதவர்கள். அவர்கள் கீதையைக் குறித்து என்னிடம் பேசினர். ஸர் எட்வின் அர்னால்டு* மொழிபெயர்த்திருந்த கீதையை அவர்கள் படித்துக் கொண்டிருந்தனர். அசல் நூலைத் தங்களுடன் சேர்ந்து படிக்க வருமாறு என்னை அழைத்தார்கள். அத் தெய்விக நூலைச் சமஸ்கிருதத்திலோ, குஜராத்தியிலோ நான் படித்ததில்லையாகையால் எனக்கு வெட்கம் ஆகிவிட்டது. நான் கீதையைப் படித்ததேயில்லை. ஆனாலும், அவர்களோடு சேர்ந்து மகிழ்ச்சியுடன் அதைப் படிப்பேன் என்பதை நான் அவர்களிடம் சொல்லியாக வேண்டியதாயிற்று. சமஸ்கிருதத்தில் எனக்கு இருந்த ஞானம் சொற்பமேயெனினும், மொழி பெயர்ப்பு எந்த இடத்தில் அதன் பொருளைச் சரியாகக் கொண்டுவரத் தவறியிருக்கிறது என்பதைக் கூறும் அளவுக்கு மூலநூல் எனக்கு விளங்கும் என்றும் அவர்களிடம் சொன்னேன். அவர்களோடு சேர்ந்து கீதையைப் படிக்க ஆரம்பித்தேன். அதன் இரண்டாவது அத்தியாயத்தில் காணும் சில சுலோகங்களின் கருத்து இது :

இந்திரிய விஷயங்களைத் தியானிக்கிற மனிதனுக்கு
　அவற்றினிடம் பற்றுதல் உண்டாகிறது ;
பற்றுதலிலிருந்து ஆசை உண்டாகிறது ;
　ஆசையிலிருந்து குரோதம் வளருகிறது.
குரோதத்திலிருந்து மனக்குழப்பம் உண்டாகிறது ;
　குழப்பத்திலிருந்து நினைவின்மையும்,
நினைவின்மையிலிருந்து புத்தி நாசமும் உண்டாகின்றன ;
　புத்தி நாசத்தினால் மனிதன் அழிந்து போகிறான்.†

---

* ஸர் எட்வின் அர்னால்டு (1832–1904) : இந்த ஆங்கில அறிஞர் பகவத் கீதையையும் கீத கோவிந்தத்தையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்திருப்பதுடன், புத்தரின் பெருமையை எடுத்துக் கூறும் 'ஆசியாவின் ஜோதி' என்ற நூலையும், அல்லாவின் திருநாமங்களுக்குரிய பொருளை விளக்கும் கவிதைகள் அடங்கிய நூலையும், வேறு சில நூல்களையும் இயற்றியிருக்கிறார். இவர் வடமொழியிலும் புலமை பெற்றவர். 1856-ஆம் ஆண்டிலிருந்து ஐந்து வருட காலம் புனா சமஸ்கிருதக் கல்லூரியின் தலைவராகவும் இவர் இருந்திருக்கிறார்.

† பகவத் கீதை: அத். 2: ஸாங்கிய யோகம்: 62, 63.

இந்தச் சுலோகங்கள் என் மனதில் ஆழப் பதிந்தன. அவை இன்னும் என் காதுகளில் ஒலித்துக்கொண் டிருக்கின்றன. அந்நூல் விலை மதிப்பைக் கடந்த மாணிக்கமாக எனக்குத் தோன்றியது. அதிலிருந்து இந்தக் கருத்து எனக்கு வலுப் பட்டுக்கொண்டே வந்தது. இதன் பலனாக, 'சத்தியமான ஞானத்தைப் போதிக்கும் மிகச் சிறந்த நூல் இது' என்று நான் எண்ணி வருகிறேன். எனக்கு மனச்சஞ்சலங்கள் ஏற்படும் சமயங் களில் இந்நூல் மதித்தற்கரிய உதவியாக இருந்திருக்கிறது. அநேகமாகக் கீதையின் ஆங்கில மொழிபெயர்ப்புக்கள் எல்லா வற்றையும் படித்திருக்கிறேன். அவற்றி லெல்லாம் ஸர் எட்வின் அர்னால்டின் மொழிபெயர்ப்பே மிகச் சிறந்தது என்று நான் கருதுகிறேன். மூலத்தின் கருத்து ஒரு சிறிதும் மாறுபடாத வகையில் அவர் மொழிபெயர்த்திருக்கிறார்; அது மொழிபெயர்ப் பாகவே தோன்றவில்லை. இந்த நண்பர்களுடன் சேர்ந்து, அப் பொழுது கீதையை நான் படித்தபோதிலும் அதைத் தீரக் கற்றேன் என்று நான் பாசாங்கு செய்வதற்கில்லை. சில ஆண்டுகள் சென்ற பின்னரே நான் தினந்தோறும் கீதையைப் படிக்க லானேன்.

ஸர் எட்வின் அர்னால்டு எழுதிய, 'ஆசியாவின் ஜோதி' என்ற நூலையும் படிக்கும்படி அச் சகோதரர்கள் என்னிடம் கூறினர். பகவத் கீதையின் மொழிபெயர்ப்பாளர் என்று மாத்திரமே ஸர் அர்னால்டை அதுவரையில் எனக்குத் தெரியும். பகவத் கீதையையும்விட இன்னும் அதிகக் கவனத்துடன் அந்நூலைப் படித்தேன். படிக்கக் கையில் எடுத்துவிட்டால் பிறகு அதைக் கீழே வைத்துவிட முடிவதில்லை. அச்சகோதரர்கள் ஒரு சமயம் என்னைப் பிளாவட்ஸ்கி விடுதிக்கு அழைத்துச் சென்று, பிளாவட்ஸ்கி அம்மையாரையும் ஸ்ரீமதி பெஸன்டையும் எனக்கு அறிமுகம் செய்துவைத்தனர். ஸ்ரீமதி பெஸன்ட்* அப்பொழுது

---

* ஸ்ரீமதி பெஸன்ட் அம்மையார் இங்கிலாந்தில் 1847-ஆம் ஆண்டில் பிறந்து 1933-இல் இந்தியாவில் உயிர் நீத்தார். ஸ்ரீ வுட் எனும் கிறிஸ்தவப் பாதிரியாருக்கு வாழ்க்கைப்பட்டு, இரு குழந்தைகளுக்குத் தாயானார். இவர் நாத்திகத்தில் நம்பிக்கை யுடையவராக இருந்ததால் கணவனுடன் ஒத்து வாழ முடியாமல் பிரிந்தார். தம் குழந் தைகள், தம்மிடம் இருக்க வேண்டும் என்று நீதி மன்றத்தில் வாதாடித் தோல்வியுற் றார். அவர் நாத்திகப் பிரசாரம் செய்ததுடன், பேபியன் (Fabian) சங்கத்தின் மூலம் சோஷலிஸப் பிரசாரமும் செய்தார். பிரபல நாத்திகர் சார்லஸ் பிராட்லாவுடன் சேர்ந்து, 'நேஷனல் ரிபார்மர்' என்னும் சஞ்சிகையை வெளியிட்டார். 'தத்துவத்தின் பயன்கள்' என்னும் நூலைப் பிராட்லாவுடன் சேர்ந்து வெளியிட்டார். இந்நூல் ஒழுக்கச் சீர்கேட் டைத் தூண்டும் என்று இவர்கள் மீது அரசாங்கம் வழக்குத் தொடர்ந்தது. இதில் இவர்களே வெற்றியடைந்தனர். பிளாவட்ஸ்கி அம்மையார் தலைமையில் நடந்த பிரம்மஞான சபையில் 1889-இல் இவர் சேர்ந்தார். 1907-இலிருந்து இறக்கும் வரை யில் இதன் தலைவராக இருந்தார். இச் சபையில் சேர்ந்ததிலிருந்து இந்தியாவிலேயே வசித்தார். 1898-இல் காசி மத்திய ஹிந்துக் கல்லூரியை ஸ்தாபித்தார். இதுவே பின்னர் சர்வகலாசாலையாக மாறிற்று. 1916-இல் ஹோம்ரூல் சங்கம் அமைத்துத் தீவிரப் பிரசாரம் செய்தார். இதன் விளைவாகச் சென்னை அரசாங்கத்தார் இவரையும் இவரது சகாக்களான வாடியா, அருண்டேல் இருவரையும் உதகமண்டலத்தில் மூன்று

தான் பிரம்மஞான சங்கத்தில் சேர்ந்திருந்தார். அவர் இவ்விதம் மாறிவிட்டதைக் குறித்து நடந்த வாதப் பிரதிவாதங்களைச் சிரத்தையுடன் கவனித்து வந்தேன். இச் சங்கத்தில் சேரும்படி நண்பர்கள் எனக்கும் யோசனை கூறினர். 'என் மதத்தைப் பற்றியே நான் இன்னும் சரியாகத் தெரிந்துகொள்ளாமல் இருக்கும்போது, மத சம்பந்தமான எந்த ஒரு ஸ்தாபனத்திலும் சேர நான் விரும்பவில்லை' என்று மரியாதையுடன் கூறி, மறுத்துவிட்டேன். அந்தச் சகோதரர்கள் சொன்னதன் பேரில் பிளாவட்ஸ்கி அம்மையார் எழுதிய, 'பிரம்ம ஞானத் திறவுகோல்' என்னும் நூலை நான் படித்ததாகவும் எனக்கு நினைவு இருக்கிறது. ஹிந்து சமயத்தைப் பற்றிய நூல்களைப் படிக்கும் ஆர்வத்தை இந்நூல் எனக்கு மூட்டியது. ஹிந்து சமயத்தில் மூடநம்பிக்கைகளே மலிந்து கிடக்கின்றன என்று பாதிரிகள் செய்த பிரசாரத்தினால் எனக்கு உண்டாகி யிருந்த தவறான எண்ணத்தையும் இந்நூல் போக்கியது.

அதே சமயத்தில் மான்செஸ்டரிலிருந்து வந்த ஓர் உத்தமமான கிறிஸ்தவரை சைவ உணவு விடுதி ஒன்றில் நான் சந்தித்தேன். கிறிஸ்தவத்தைப் பற்றி அவர் என்னிடம் பேசிக்கொண்டிருந்தார். ராஜ்கோட்டில் கிறிஸ்தவப் பாதிரிமார் நடத்தி வந்த பிரசாரத்தைக் குறித்த என்னுடைய பழைய நினைவுகளை அவரிடம் கூறினேன். அதைக் கேட்டு அவர் மனவேதனை அடைந்தார். 'நான் சைவ உணவு மாத்திரமே சாப்பிடுபவன்; மதுபானமும் அருந்துவதில்லை. கிறிஸ்தவர்கள் அநேகர் மாமிசம் சாப்பிடுகிறார்கள், குடிக்கிறார்கள் என்பதில் சந்தேகமே இல்லை. ஆனால், மது மாமிசம் சாப்பிடும்படி எங்கள் வேதம் சொல்லவில்லை. தயவு செய்து பைபிளைப் படியுங்கள்' என்றார். அவருடைய யோசனையை ஏற்றுக்கொண்டேன். அவர் எனக்குப் பைபிள் பிரதி ஒன்றும் வாங்கிக் கொடுத்தார். அவரே பைபிள் பிரதிகளை விற்று வந்ததாகவும், படங்கள், அரும்பத அகராதி முதலிய விளக்கங்கள் அடங்கிய ஒரு பைபிள் பிரதியை அவரிடம், நான் வாங்கியதாகவும் எனக்குக் கொஞ்சம் நினைவு இருக்கிறது. அதைப் படிக்க ஆரம்பித்தேன். ஆனால், பழைய ஏற்பாட்டைப் படித்துப் புரிந்துகொள்ள என்னால் இயலவில்லை. ஆதி ஆகமத்தையும் அதையடுத்த அத்தியாயங்களையும் படிக்க ஆரம்பித்ததுமே எனக்குத் தூக்கம் வந்துவிடும். ஆனால், பைபிளைப் படித்திருக்கிறேன்

---

மாத காலம் காவலில் வைத்திருந்தனர். 1917-இல் கல்கத்தாவில் நடந்த காங்கிரஸ் மகாசபைக்கு இவர் தலைமை தாங்கினார். காசி சர்வகலாசாலையில் காந்திஜி செய்த பிரசங்கம் ஒன்றில், அங்கே கூடியிருந்த சுதேச மன்னர்களின் ஆடம்பரத்தைக் கண்டித்துப் பேசியது இவருக்கு வருத்தத்தை அளித்தது. ஒத்துழையாமை இயக்கத்தை இவர் விரும்பாததனால் அதை எதிர்த்தார். பேச்சுத் திறமையில் மிக வல்லவர்; சென்னை உயர் நீதி மன்றத்தில் இவர் மீது தொடரப்பட்ட வழக்குகளில் தாமே வாதாடிப் புகழ் பெற்றார். 'நியூ இந்தியா', 'காமன்வீல்' முதலிய பத்திரிகைகளுக்கு ஆசிரியராக இருந்தார். 'இந்தியா எப்படிச் சுதந்திரத்திற்குப் போராடியது?' 'கீதையின் ஆங்கில மொழி பெயர்ப்பு' ஆகியவை இவர் எழுதிய நூல்களில் சில.

என்று சொல்லிக்கொள்ள இயலவேண்டும் என்பதற்காகச் சிரமத் தோடேயே மற்றப் பகுதிகளையும் மேலெழுந்தவாரியாகப் படித்து முடித்தேன். அதில் எனக்குக் கொஞ்சமும் சிரத்தை ஏற்படவில்லை; எனக்கு அது விளங்கவும் இல்லை. 'எண்ணுகமம்' என்ற பகுதியைப் படிப்பதற்கே எனக்கு வெறுப்பாக இருந்தது.

ஆனல், புதிய ஏற்பாட்டைப் படித்தபோது எனக்கு முற்றும் மாருன உணர்ச்சி ஏற்பட்டது. முக்கியமாக மலைப்பிரசங்கம் நேரடியாகவே என் உள்ளத்தைக் கவர்ந்துவிட்டது. அதைக் கீதையுடன் ஒப்பிட்டுப் பார்த்தேன். 'தீமைக்குப் பதிலாகத் தீமையைச் செய்யாதே என்று உங்களுக்குக் கூறுகிறேன். உன்னை வலது கன்னத்தில் யாராவது அறைந்தால் மற்றொரு கன்னத்தையும் திருப்பிக் காட்டு. எவனுவது உன் சட்டையை எடுத்துக்கொண்டுவிட்டானுயின் உன் போர்வையையும் அவனுக் குக் கொடு' என்பன போன்ற உபதேசங்கள் எனக்கு அளவு கடந்த ஆனந்தத்தை அளித்தன. 'உண்ணும் நீர் தந்த ஒருவ னுக்குக் கைம்மாருய், விண்ணமுதைப்போல் அன்னம் விரும்பிப் படைத்திடுவாய்' என்ற ஷாமல் பட்டின் பாடல் உடனே என் நினைவுக்கு வந்தது. 'கீதை', 'ஆசிய ஜோதி', 'மலைப்பிரசங்கம்' ஆகிய மூன்றும் ஒன்றே என்று கருத என் இளம் மனம் முயன்றது. துறவே, சமயத்தின் தலை சிறந்த அம்சம் என்பது என் மனத்தை மிகவும் கவர்ந்தது.

இவைகளைப் படித்ததனல் மற்றச் சமயாசாரியர்களின் வாழ்க்கை வரலாறுகளையும் படிக்க வேண்டும் என்ற பசி எனக்கு உண்டாகிவிட்டது. கார்லைல்* எழுதிய, 'வீரர்களும் வீரர் வழி பாடும்' என்ற நூலைப் படிக்குமாறு ஒரு நண்பர் கூறினர். வீரனைத் தீர்க்கதரிசியாகக் கூறும் அத்தியாயத்தைப் படித்து, முகமது நபியின் பெருமையையும் வீரத்தையும் எளிய வாழ்க்கையையும் பற்றித் தெரிந்துகொண்டேன்.

பரீட்சைக்குப் படிக்கவேண்டி யிருந்தது. மற்ற வெளி விஷயங்களைக் குறித்துப் படிக்க நேரம் கிடைப்பதே இல்லை. ஆகையால், சமயங்களைப்பற்றி இன்னும் அதிகமாக நான் தெரிந்துகொள்ள முடியவில்லை. ஆனல், சமய நூல்களை இன்னும் அதிகமாகப் படிக்க வேண்டும், முக்கியமான மதங்களைப் பற்றி யெல்லாம் நன்கு தெரிந்துகொள்ள வேண்டும் என்று என் மனத் திற்குள் முடிவு செய்து கொண்டேன்.

---

* கார்லைல் (1795–1881): ஸ்காத்லாந்தில் பிறந்த தாமஸ் கார்லைல் என்னும் இந்த அறிஞர், எடின்பரோ சர்வ கலாசாலையில் பயின்று, 1824–இல் லண்டனில் குடியேறி, கலை, இலக்கியம், தத்துவம், வரலாறு சம்பந்தமான நூல்களை எழுதினர். 1837-இல் பல சொற்பொழிவுகளும் நிகழ்த்தினர். ஜெர்மனியின் இலக்கிய, தத்துவக் கொள்கைகள் ஆங்கில நாட்டில் பரவுவதற்குப் பெரிதும் காரணமாக இருந்தவர் என்று இவரைப் பற்றிக் கூறுவதுண்டு. இவருடைய பிரசித்தி பெற்ற நூல்களில் 'பிரெஞ்சுப் புரட்சி' என்பதும் ஒன்று.

நாத்திக வாதத்தைக் குறித்தும் நான் ஒரு சிறிது தெரிந்து கொள்ளாமல் இருப்பது எப்படி? பிராட்லாவின்* பெயரையும், நாத்திகம் என்று கூறப்படும் அவர் வாதத்தையும் ஒவ்வோர் இந்தியரும் அறிவர். அதைக் குறித்து ஏதோ ஒரு புத்தகத்தைப் படித்தேன். அதன் பெயரை மறந்துவிட்டேன். அதற்கும் முன்னாலேயே நாத்திகம் என்ற பாலைவனத்தைக் கடந்துவிட்டேனாகையால், அப் புத்தகம் என் மனத்தை மாற்றிவிடவில்லை. அச்சமயம் ஸ்ரீமதி பெஸன்டின் பெயர், எங்கும் பிரபலமாக இருந்தது. அவர் நாத்திகத்திலிருந்து ஆத்திகத்திற்குத் திரும்பி விட்டார். 'நான் பிரம்மஞான சங்கத்தில் சேர்ந்தது ஏன்?' என்று அவர் எழுதியிருந்த நூலையும் படித்தேன்.

ஏறக்குறைய அந்தச் சமயத்தில்தான் பிராட்லா காலமானார். அவர் சடலத்தை 'வோகிங்' கல்லறையில் அடக்கஞ் செய்தனர். இச் சவ அடக்கச் சடங்கிற்கு நானும் போயிருந்தேன். லண்டனில் இருந்த இந்தியர் எல்லோருமே அதற்குச் சென்றிருந்தனர் என்று நம்புகிறேன். அவருக்குக் கடைசி மரியாதை செய்வதற்காகப் பாதிரிமார் சிலரும் வந்திருந்தனர். அச் சடங்கிலிருந்து திரும்பும்போது ரெயிலுக்காக நிலையத்தில் நாங்கள் காத்திருக்கவேண்டி யிருந்தது. அப்பொழுது அக் கூட்டத்தில் இருந்த ஒரு தீவிர நாத்திகர், பாதிரிகளில் ஒருவரைக் கேள்வி கேட்க ஆரம்பித்துவிட்டார்.

"சரி, கடவுள் ஒருவர் இருக்கிறார் என்று நீங்கள் நம்புகிறீர்கள் அல்லவா?" என்று அவர் கேட்டார்.

"ஆம்" என்று அடக்கமான குரலில் அந்த நல்ல மனிதர் பதில் சொன்னார்.

"இப்பூமியின் சுற்றளவு 28,000 மைல்கள் என்றும் நீங்கள் ஒப்புக்கொள்ளுகிறீர்கள் அல்லவா?" என்று அந்த நாத்திகர் தன்னம்பிக்கையுடன் சிரித்துக்கொண்டே கேட்டார்.

"ஆமாம்" என்றார், பாதிரியார்.

"அப்படியானால், உங்கள் கடவுளின் உருவம் என்ன, அவர் எங்கே இருப்பார் என்பதையும் தயவுசெய்து சொல்லுங்கள்."

---

* பிராட்லா (1833–1891): இங்கிலாந்தில் பிறந்தவர். நாத்திகம், சமூகச் சீர்திருத்தம் முதலியவைகளில் நாட்டம் கொண்டவர். பெண்களின் வோட்டுரிமைக்காகத் தீவிரமாக உழைத்தார். குடும்பக் கட்டுப்பாடு, தொழிலாளர் சங்கம் அமைக்கும் உரிமை முதலியவைகளுக்காகப் பாடுபட்டார். இவர் சோஷலிஸத்தை எதிர்த்ததனால் பெஸன்ட் அம்மையார் இவரிடமிருந்து பிரிய நேர்ந்தது. பார்லிமென்டுக்கு இவர் தேர்ந்தெடுக்கப்பட்டார். சபையில் அமருமுன், 'பைபிள் சாட்சியாக உண்மையாக உழைக்கிறேன்' என்று பிரமாணம் எடுத்துக்கொள்ள வேண்டும். இப்படிச் செய்ய மறுத்து இவர் வழக்குத் தொடுத்தார். அதில் வெற்றி பெற்றார். பார்லிமென்டில் பைபிளை வைத்துப் பிரமாணம் செய்யாமலே அங்கம் வகித்தார்.

"சரி; நம்மால் அறிய மாத்திரம் முடிந்தால், அவர் நம் இருவர் உள்ளங்களிலும் வீற்றிருக்கிறார்."

"இதோ பாருங்கள், என்னைக் குழந்தை என்று நினைத்துவிட வேண்டாம்" என்றார், அத் தீவிரவாதி. அதோடு வெற்றிப் பார்வையுடன் எங்களை நோக்கினார்.

பாதிரியாரோ அடக்கத்துடன் மௌனமாக இருந்து விட்டார். இந்த வாக்குவாதம் நாத்திகத்திடம் எனக்கு இருந்த வெறுப்பை மேலும் அதிகமாக்கிவிட்டது.

## 21

## 'திக்கற்றவர்க்குத் தெய்வமே துணை'*

ஹிந்து தருமத்தைக் குறித்தும் மற்ற உலக சமயங்களைப் பற்றியும் ஓரளவுக்குத் தெரிந்துகொண் டிருந்தேன். என்றாலும், எனக்கு ஏற்படும் சோதனைகளிலிருந்து என்னைக் காப்பாற்ற அவை போதா என்பதையும் நான் அறிந்திருக்க வேண்டும். சோதனைகளிலிருந்து ஒருவன் சமாளித்து நிற்கும்படி செய்வது எது என்பதை மனிதன் அறிவதில்லை; அதுவும் அச் சமயத்தில் அதைப்பற்றிய அறிவே இருப்பதில்லை. கடவுள் நம்பிக்கை இல்லாதவனாயின், தான் தற்செயலாகத் தப்பிவிட்டதாகச் சொல்லிக்கொள்ளுவான். கடவுள் நம்பிக்கை உள்ளவனானால், கடவுளே தன்னைக் காத்தார் என்பான். தனக்கு இருந்த சமய ஞானமோ, ஆன்மிகக் கட்டுப்பாடோதான், ஆண்டவன் தன்னிடம் கருணை காட்டியதற்குக் காரணம் என்ற முடிவுக்கு வருவான்; அல்லது வரக்கூடும். ஆனால், அவன் ரட்சிக்கப்படும் சமயத்தில் தன்னைக் காத்தது தன்னுடைய ஆன்மிகக் கட்டுப் பாடுதானா, வேறு ஒன்றா என்பதை அவன் அறியான். தனக்கு ஆன்மிக பலம் அதிகம் இருக்கிறது என்று அகம்பாவம் கொண் டிருந்து, முடிவில் அது தூசாகிப் போனதைக் காணாதவர் யார்? சமயஞானம் வேறு; சாதனை வேறு. ஆகவே, சாதனை இல்லாத சமய ஞானம், சோதனை ஏற்படும் சமயங்களில் வெறும் உமி யாகவே தோன்றுகிறது.

சமய ஞானத்தினால் மட்டும் பயனில்லை என்பதை இங்கி லாந்தில்தான் நான் முதல் முதலில் கண்டுகொண்டேன். இதற்கு முன்னால் நிகழ்ந்த சோதனைகளில் நான் எவ்வாறு காப்பாற்றப் பட்டேன் என்பதை என்னால் அவ்வளவாகக் கூற முடியாது. ஏனெனில், அப்பொழுது நான் மிகச் சிறியவன். ஆனால், இப்பொழுதோ எனக்கு வயது இருபது. கணவன், தந்தை என்ற வகையில் எனக்குச் சிறிது அனுபவமும் ஏற்பட்டிருந்தது.

---

* சூரதாஸரின் பிரபலமான கீதம் ஒன்றில், 'திக்கற்றவர்க்குத் தெய்வமே துணை, பலம் இல்லாதார்க்கு அவனே பலம்' என்று வருகிறது. மகாத்மா இந்த அத்தியாயத் திற்கு அந்த கீதத்தில் காணும் அடியையே தலைப்பாகக் கொடுத்திருக்கிறார். சுயசரிதத் தின் ஆங்கிலப் பதிப்பிலும் ஹிந்தியில், 'நிர்பல்கே பல் ராம்' என்றே தலைப்புக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

எனக்கு நினைவிருக்கும் அளவில், நான் இங்கிலாந்தில் இருந்த காலத்தில், கடைசி ஆண்டில், அதாவது 1890–இல், சைவ உணவாளர்கள் மகாநாடு ஒன்று போர்ட்ஸ்மவுத்தில் நடந்தது. அதற்கு ஓர் இந்திய நண்பரும், நானும் அழைக்கப்பட்டிருந்தோம். போர்ட்ஸ்மவுத் துறைமுகம், மாலுமித் தொழிலில் ஈடுபட்டவர்களையே பெரும்பாலும் கொண்ட பட்டணம். அங்கே தீய நடத்தையுள்ள பெண்களைக் கொண்ட வீடுகள் பல உண்டு. இப்பெண்கள் விபசாரத்தையே தொழிலாகக் கொண்டவர்கள் அல்ல. என்றாலும், தங்கள் கற்பு நெறியைக் குறித்து அவர்கள் அவ்வளவாகக் கவலைப்படாதவர்கள். இப்படிப்பட்ட வீடுகளில் ஒன்றில் நாங்கள் தங்கியிருந்தோம். இதைப்பற்றி வரவேற்புக் கமிட்டிக்கு எதுவுமே தெரியாது என்பதைக் குறித்து நான் சொல்லத் தேவையில்லை. போர்ட்ஸ்மவுத் போன்ற ஒரு பட்டணத்தில் தங்குவதற்கு நல்ல இடம் எது, கெட்ட இடம் எது என்பதைக் கண்டுபிடிப்பது எங்களைப்போல் எப்பொழுதோ ஒரு சமயம் அங்கே போகிறவர்களுக்குக் கஷ்டமாகவே இருந்திருக்கும்.

மகாநாட்டிலிருந்து மாலையில் திரும்பினோம். இரவுச் சாப்பாட்டிற்குப் பிறகு ரப்பர் பிரிட்ஜ் என்ற ஒருவிதச் சீட்டாட்டம் ஆட உட்கார்ந்தோம். அவ்வீட்டுக்கார அம்மாளும் எங்களுடன் சீட்டாடினர். இப்படி வீட்டுக்கார அம்மாளும் சேர்ந்து சீட்டாடுவது இங்கிலாந்தில் கௌரவமான குடும்பங்களிலும் வழக்கம். ஆட்டத்தில் ஈடுபட்டிருப்பவர் ஒவ்வொருவரும், குற்றமற்ற வகையில் கேலியாகப் பேசுவது சாதாரணமானது. ஆனால், இங்கோ என் சகாக்களும் அவ்வீட்டு அம்மாளும் ஆபாசமான பேச்சுக்களைப் பேச ஆரம்பித்தார்கள். என் நண்பர், அக்கலையில் கைதேர்ந்தவர் என்பது எனக்குத் தெரியாது. அது என்னையும் பிடித்துக்கொண்டு விட்டது; நானும் அவ்விதப் பேச்சுக்களில் கலந்து கொண்டேன். சீட்டையும் சீட்டாட்டத்தையும் விட்டுவிட்டு, எல்லை மீறி நான் போய்விட இருந்த சமயத்தில் அந்த நல்ல சகாவின் மூலம் கடவுள் எனக்குத் தெய்வீகமான எச்சரிக்கையைச் செய்தார். 'தம்பி! உன்னுள் இந்தப் பிசாசு எங்கிருந்து வந்து புகுந்தது? எழுந்து போய்விடு, சீக்கிரம்!' என்று அவர் சொன்னதே அந்த எச்சரிக்கை.

நான் வெட்கம் அடைந்தேன். எச்சரிக்கைப்படி நடந்தேன். நண்பருக்கும் என்னுள்ளே நன்றியறிதலைத் தெரிவித்துக் கொண்டேன். என் அன்னையின் முன்னிலையில் நான் மேற்கொண்டிருந்த விரதத்தை நினைவுபடுத்திக் கொண்டு அவ்விடத்திலிருந்து ஓடிவிட்டேன். தடுமாறிக்கொண்டே, நடுங்கிக்கொண்டே என் அறைக்குச் சென்றேன். துரத்திய வேடனிடம் இருந்து தப்பிய மிருகம்போல் என் இருதயம் துடிதுடித்தது.

என் மனைவியைத் தவிர வேறு ஒரு பெண், என் மனத்தில் காம இச்சையைத் தூண்டிவிட்டது இதுவே முதல் தடவை

என்று நினைக்கிறேன். அன்று இரவெல்லாம் எனக்குத் தூக்கமே வரவில்லை. என்ன என்னவோ எண்ணங்களெல்லாம் எனக்கு உண்டாயின. 'அந்த வீட்டிலிருந்தே போய்விடுவதா? அந்த இடத்தைவிட்டே ஓடிவிடுவதா? நான் செய்தது என்ன? கொஞ்சம் புத்தி கெட்டுப் போயிருந்தால் என் கதி என்ன ஆகியிருக்கும்?' இனி மிகுந்த எச்சரிக்கையுடன் நடந்து கொள்ளுவ தென்ற முடிவைச் செய்து கொண்டேன். அவ்வீட்டை விட்டுப் போய்விடுவது மாத்திரம் அல்ல, எப்படியாவது அவ்வூரை விட்டே போய்விடுவது என்றும் தீர்மானித்தேன். மகாநாடு இரண்டு நாட்களே நடந்தது. அடுத்த நாள் மாலையே போர்ட்ஸ் மவுத்திலிருந்து நான் புறப்பட்டு விட்டதாக ஞாபகம். என் நண்பர் மாத்திரம் சில நாட்கள் அங்கே தங்கினர்.

சமயத்தின் சாரத்தைப்பற்றியோ, கடவுளைப்பற்றியோ, அவர் நம்முள் எப்படி வேலை செய்கிருர் என்பதைப் பற்றியோ எனக்கு அப்பொழுது தெரியாது. அச்சமயம் கடவுள் என்னைக் காப்பாற்றினர் என்பதை மாத்திரம் தெளிவற்ற முறையில் நான் அறிந்தேன். சோதனை நேர்ந்த சமயங்களிலெல்லாம் அவரே என்னைக் காத்தார் 'கடவுள் காப்பாற்றினர்' என்ற சொற்றொட ருக்கு நான் இன்று ஆழ்ந்த பொருள் கொள்ளுகிறேன் என்பதை அறிவேன். என்றாலும், அதன் முழுப் பொருளையும் நான் இன் னும் அறிந்து கொள்ளவில்லை என்றே உணருகிறேன். அதன் முழுப் பொருளையும் அறிந்து கொள்ளுவதற்கு, மேலான அனு பவம் ஒன்றே உதவ முடியும். என்றாலும் ஆன்மிகத் துறையிலும், வக்கீலாக இருந்தபோதும், ஸ்தாபனங்களை நடத்தியபோதும், ராஜீய விஷயத்திலும் எனக்குச் சோதனைகள் நேர்ந்த சமயங் களிலெல்லாம் கடவுளே என்னைக் காப்பாற்றினர் என்று நான் சொல்ல முடியும். நம்பிக்கைக்கே ஒரு சிறிதும் இடம் இல்லாத போதும், உதவுவோர் உதவத் தவறித் தேற்றுவாரும் ஓடிவிட்ட சமயத்திலும், எப்படியோ அந்த உதவி வந்துவிடுவதைக் காண் கிறேன். ஆனல், எங்கிருந்து அது வருகிறது என்பதை நான் அறியேன். இறைவனை வேண்டுவதும் பூசிப்பதும் பிரார்த்திப் பதும் மூட நம்பிக்கைகள் அல்ல. உண்பதும் பருகுவதும் அமருவதும் நடப்பதும் எவ்விதம் உண்மையான செயல்களோ 'அவற்றை விடவும் அதிக உண்மையான செயல்கள் அவை. அவை மட்டுமே உண்மையானவை; மற்றவை யாவும் பொய்யா னவை என்று சொல்லுவதும் மிகையாகாது.

அத்தகைய வழிபாடு அல்லது பிரார்த்தனை, வாக்கு வன்மை யைக் காட்டுவதற்கு உரியதன்று. உதட்டிலிருந்து எழும் வணக்க மும் அல்ல அது. இருதயத்திலிருந்து எழுவதே பிரார்த்தனை. ஆகையால், அன்பு ஒன்றைத் தவிர வேறு எதுவுமே அங்கே இல்லாதவாறு, உள்ளத் தூய்மையை நாம் அடைந்து விடுவோ மாயின், எல்லாத் தந்திகளையும் தக்க சுருதியில் கூட்டி வைத்து விடுவோமாயின், தானே இனிய கீதம் எழுந்து இறைவன் அருளைக் கூட்டுவிக்கும் பிரார்த்தனைக்குப் பேச்சுத் தேவையில்லை.

புலன்களின் முயற்சி எதுவும் அதற்கு வேண்டியதில்லை. உள்ளத்திலிருந்து காமக் குரோதாதிகளையெல்லாம் போக்கிப் புனிதமாக்கிக் கொள்ளுவதற்குத் தகுந்த சாதனை, பிரார்த்தனையே என்பதில் எனக்குச் சிறிதளவும் சந்தேகமே இல்லை. ஆனால், அத்துடன் முழுமையான அடக்கமும் கலந்திருக்க வேண்டும்.

# 22
# நாராயண ஹேமசந்திரர்

ஏறக்குறைய அச்சமயத்தில்தான் நாராயண ஹேமசந்திரர் இங்கிலாந்துக்கு வந்தார். அவர் எழுத்தாளர் என்று கேள்விப்பட்டிருந்தேன். தேசீய இந்திய சங்கத்தைச் சேர்ந்த குமாரி மானிங் வீட்டில் நாங்கள் இருவரும் சந்தித்தோம். எல்லோருடனும் கலந்து பழகும் குணம் எனக்கு இல்லை என்பது குமாரி மானிங்குக்குத் தெரியும். நான் அவர் வீட்டுக்குப் போனால் வாய் பேசாமல் உட்கார்ந்திருப்பேன். என்னிடம் யாராவது பேசினால் மட்டும் அதற்குப் பதில் சொல்வேன். நாராயண ஹேமசந்திரரை அப்பெண்மணி எனக்கு அறிமுகம் செய்து வைத்தார். அவருக்கோ ஆங்கிலம் தெரியாது. அவருடைய உடைகளும் விசித்திரமாக இருந்தன. அவருடைய கால்சட்டை விகாரமானது. பார்ஸி மோஸ்தரில் இருந்த அவருடைய பழுப்புநிறச் சட்டை, கசங்கிப்போய், அழுக்காக இருந்தது. கழுத்தில் 'டை'யோ, 'காலர்'ரோ இல்லை. குஞ்சம் வைத்த கம்பளித் தொப்பியைத் தலையில் வைத்திருந்தார். நீண்ட தாடியும் வளர்த்துக் கொண்டிருந்தார்.

அவர் ஒல்லியாகவும் குள்ளமாகவும் இருப்பார். வட்டமான அவர் முகம் முழுவதிலும் அம்மைத் தழும்புகள். அவர் மூக்கு, கூரியதென்றோ சப்பையானதென்றோ சொல்ல முடியாதது. எப்பொழுதும் தமது தாடியைக் கையினால் உருவிவிட்டுக் கொண்டே இருந்தார்.

நாகரிகமானவர்கள் கூடியுள்ள இடத்தில் இத்தகைய விசித்திரத் தோற்றத்தோடும் வேடிக்கையான உடையோடும் இருப்பவர் மீதே எல்லோருடைய கவனமும் செல்லும்.

"உங்களைக் குறித்து நான் நிரம்பக் கேள்விப்பட்டிருக்கிறேன்" என்று அவரிடம் சொன்னேன். "நீங்கள் எழுதிய நூல்கள் சிலவற்றையும் படித்திருக்கிறேன். நான் இருக்கும் இடத்திற்கு அன்புகூர்ந்து வருவீர்களாயின் மகிழ்ச்சியடைவேன்" என்றேன்.

நாராயண ஹேமசந்திரரின் குரல், கொஞ்சம் கம்மலாக இருக்கும். சிரித்த முகத்துடன் அவர், "வருகிறேன். நீங்கள் எங்கே இருக்கிறீர்கள்?" என்று கேட்டார்.

“ஸ்டோர் வீதியில்” என்றேன்.

“அப்படியானல் நாம் பக்கத்தில்தான் இருக்கிறோம். நான் ஆங்கிலம் கற்றுக்கொள்ள விரும்புகிறேன். எனக்குக் கற்றுக் கொடுக்கிறீர்களா?”

“என்னல் முடிந்த எதையும் கற்றுக்கொடுக்க எனக்கு மகிழ்ச்சியே. என்னல் முடிந்தவரை முயலுகிறேன். நீங்கள் விரும்பினல் உங்கள் இடத்திற்கே வருகிறேன்.”

“வேண்டியதில்லை. உங்கள் இடத்திற்கே நான் வருகிறேன். என்னுடன் மொழிபெயர்ப்புப் பயிற்சிப் புத்தகம் ஒன்றும் கொண்டு வருகிறேன்.”

இவ்விதம் ஏற்பாடு செய்துகொண்டோம். சீக்கிரத்தில் நாங்கள் நெருங்கிய நண்பர்கள் ஆகிவிட்டோம்.

நாராயண ஹேமசந்திரருக்கு இலக்கணம் என்பதே தெரியாது. ‘குதிரை’ என்பது வினைச்சொல் என்பார். ‘ஓடு’ என்பது பெயர்ச்சொல் என்பார். இப்படிப்பட்ட வேடிக்கையான பல சம்பவங்கள் எனக்கு நினைவு இருக்கின்றன. ஆனல், தம்முடைய இத்தகைய அறியாமைக்காக அவர் கவலைப்படுவதே இல்லை. இலக்கணத்தில் எனக்கு இருந்த சிறிது அறிவும் அவர் விஷயத்தில் பயன்படவில்லை. இலக்கணத்தைக் குறித்துத் தமக்கிருந்த அறியாமை, வெட்கப்பட வேண்டியது என்று அவர் கருதியதே இல்லை என்பது நிச்சயம்.

அவர் கொஞ்சமேனும் கவலைப்படாமல் என்னிடம், “உங்களைப்போல் நான் பள்ளிக்கூடத்திற்குப் போனதே இல்லை. என் கருத்துக்களை எடுத்துச் சொல்லுவதற்கு இலக்கணம் அவசியம் என்று நான் உணர்ந்ததும் இல்லை. அது சரி; உங்களுக்கு வங்காளி மொழி தெரியுமா? எனக்கு அது தெரியும். நான் வங்காளத்தில் பிரயாணம் செய்திருக்கிறேன். மகரிஷி தேவேந்திரநாத தாகூரின் நூல்களைக் குஜராத்தி பேசும் உலகத்துக்கு அளித்தவனே நான்தான். மற்றும் பல மொழிகளில் இருக்கும் பொக்கிஷங்களையெல்லாம் குஜராத்தியில் மொழி பெயர்க்க நான் விரும்புகிறேன். மூலத்திற்கு நேரான மொழிபெயர்ப்பை நான் செய்வதில்லை என்பது உங்களுக்குத் தெரியும். மூலத்தின் கருத்தைக் கொண்டுவருவதோடு நான் திருப்தியடைந்து விடுகிறேன். என்னைவிட அறிவில் சிறந்தவர்கள் பிற்காலத்தில் இன்னும் அரிய வேலைகளைச் செய்யலாம். ஆனல், இலக்கணத்தின் உதவி இல்லாமலேயே நான் இதுவரை செய்திருப்பதில் திருப்தியடைகிறேன். எனக்கு மராத்தி, ஹிந்தி, வங்காளி ஆகிய மொழிகள் தெரியும். இப்பொழுது ஆங்கிலம் கற்றுக்கொள்ளத் தொடங்கியிருக்கிறேன். ஏராளமான சொற்கள் தெரிந்திருக்கவேண்டும் என்பதே என் விருப்பம். என் ஆசை இதோடு முடிந்துவிட்டதென்று எண்ணுகிறீர்களா? இல்லவே இல்லை. பிரான்ஸுக்குப்

போய்ப் பிரெஞ்சு மொழி கற்க விரும்புகிறேன். அம்மொழியில் இலக்கியச் செல்வம் ஏராளம் என்று கேள்விப்படுகிறேன். சாத்தியமானல், ஜெர்மனிக்குப் போய் ஜெர்மன் மொழியையும் கற்பேன்'' என்று சொன்னர்.

இவ்விதம் அவர் விடாமல் பேசிக்கொண்டே போவார். பிற மொழிகளைக் கற்பதிலும், வெளிநாடுகளில் சுற்றுப்பிரயாணம் செய்வதிலும் அவருக்கு இருந்த ஆசைக்கு எல்லையே இல்லை.

“அப்படியானல் நீங்கள் அமெரிக்காவுக்கும் போவீர்கள் அல்லவா?''

''நிச்சயமாகப் போவேன். புதிய உலகத்தைப் பார்க்காமல் நான் எப்படி இந்தியாவுக்குத் திரும்பிவிட முடியும்?"

''ஆனல், இதற்கெல்லாம் பணத்திற்கு என்ன செய்வீர்கள்?''

''எனக்குப் பணம் எதற்காக? உங்களைப்போல நான் நாசூக்கானவன் அல்ல. எனக்குக் குறைந்த அளவு சாப்பாடும் குறைந்த அளவு உடையும் போதும். என் புத்தகங்களின் விற்பனையில் இருந்தும், என் நண்பர்களிடம் இருந்தும் கிடைப்பதே இதற்குப் போதுமானது. நான் எப்பொழுதும் மூன்றும் வகுப்பு வண்டியிலேயே பிரயாணம் செய்கிறேன். அமெரிக்காவுக்குப் போகும்போதும் கப்பலில் கடைசி வகுப்பிலேயே நான் போவேன்.''

நாராயண ஹேமசந்திரரின் எளிய வாழ்க்கை அவருக்கே உரியது. அந்த எளிய வாழ்க்கைக்கு ஏற்றாற்போல் இருந்தது. அவருடைய கபடமற்ற தன்மையும். கர்வம் என்பதே அவரிடம் கொஞ்சமேனும் இல்லை. ஆனல், நூலாசிரியர் என்பதில் மாத்திரம் தம்முடைய திறமையைப்பற்றிக் கொஞ்சம் அதிகப்படியாகவே அவர் எண்ணிக்கொண் டிருந்தார்.

நாங்கள் தினந்தோறும் சந்திப்போம். எங்கள் இருவருடைய எண்ணங்களும் செயல்களும் அநேக விஷயங்களில் ஒரேமாதிரி இருந்தன. நாங்கள் இருவரும் சேர்ந்து, மத்தியான வேளைகளில் சாப்பிடுவோம். வாரத்திற்கு 17 ஷில்லிங் செலவில் வாழ்ந்து நானே சமைத்துக்கொண்ட சமயம் அது. சில சமயங்களில் அவர் இருந்த இடத்திற்கு நான் போவேன்; சில சமயங்களில் அவர் நான் இருந்த இடத்திற்கு வருவார். ஆங்கில தோரணையில் நான் சமையல் செய்து வந்தேன். இந்திய முறைச் சமையல் தவிர வேறு எதுவுமே அவருக்குப் பிடிக்காது. பருப்பு இல்லாமல் அவருக்குச் சரிப்படாது. காரட் முதலியவைகளைக் கொண்டு நான், 'சூப்' தயாரிப்பேன். எனக்கு இப்படியும் ருசி கெட்டுப் போய்விட்டதே என்று அவர் பரிதாபப்படுவார். ஒரு நாள் இந்தியக் காராமணியை எங்கோ தேடிப் பிடித்துச் சமைத்து, அதைக் கொண்டுவந்தார். நான் மகிழ்ச்சியுடன்

அதைச் சாப்பிட்டேன். அதிலிருந்து ஒருவர்க்கொருவர் கொடுப்பதும் வாங்கிக்கொள்ளுவதுமான முறை ஆரம்பமாயிற்று. நான் சமைத்ததை அவருக்குக் கொண்டுபோய்க் கொடுப்பேன்; அவர் சமைத்ததை எனக்குக் கொண்டுவந்து கொடுப்பார்.

அச் சமயத்தில் கார்டினல் மானிங்கின்* பெயர் எங்கும் பிரசித்தமாக இருந்தது. ஜான் பர்ன்ஸ்†, கார்டினல் மானிங் ஆகிய இருவரின் முயற்சியினல் துறைமுகத் தொழிலாளர் வேலை நிறுத்தம் சீக்கிரத்தில் முடிவுற்றது. கார்டினலின் எளிய வாழ்க்கையைக் குறித்து, டிஸ்ரேலி‡ பாராட்டிக் கூறியிருக்கிருர் என்று நாராயண ஹேமசந்திரரிடம் சொன்னேன். "அப்படியானல், அந்த முனிவரை நான் பார்க்க வேண்டும்" என்ருர், அவர்.

"அவரோ மிகப் பெரிய மனிதர். அப்படியிருக்க அவரை எப்படிப் பார்க்க முடியும் என்று எதிர்பார்க்கிறீர்கள்?" என்றேன்.

"ஏன் பார்க்க முடியாது? எப்படிப் பார்ப்பது என்பது எனக்குத் தெரியும். எனக்காக என் பெயரில் அவருக்கு நீங்கள் எழுத வேண்டும். நான் ஒரு நூலாசிரியர் என்றும், அவருடைய ஜீவகாருண்ய சேவைகளுக்காக அவரை நேரில் கண்டு வாழ்த்துக் கூற விரும்புகிறேன் என்றும் எழுதுங்கள். எனக்கு ஆங்கிலம் தெரியாததனல் எனக்கு மொழிபெயர்ப்பாளராக உங்களையும் உடன் அழைத்து வரவேண்டி யிருக்கிறது என்றும் எழுதுங்கள்" என்ருர்.

---

* கார்டினல் மானிங் (1808-1892): இவருடைய முழுப் பெயர் கார்டினல் ஹென்றி எட்வர்டு மானிங் என்பதாகும். 1875-இலிருந்து 1892 வரை வெஸ்ட்மின்ஸ்டர் தலைமைக் குருவாக இவர் இருந்தார். ஆங்கிலிகன் கிறிஸ்தவத் திருச்சபையின் பிரதான உறுப்பினராக இருந்த இவர் 1851-இல் ரோம் திருச்சபையில் சேர்ந்தார். எளிய வாழ்வில் இன்பம் கண்டவர். ஏழைகளிடம் அன்பு மிக்கவர்.

† ஜான் பர்ன்ஸ் (1858-1943): பிரிட்டிஷ் பார்லிமென்டில், தொழிலாளர் பிரதிநிதியாக இருந்தவர். இவர் 1889-இல் துறைமுகத் தொழிலாளர்களின் மாபெரும் வேலை நிறுத்தத்தின் போது பிரபலம் அடைந்தவர். 1892-இலிருந்து 1913 வரை பார்லிமென்டில் பேட்டர்ஸீ தொகுதியின் பிரதிநிதியாக இருந்தார். 1905 - இலிருந்து 1914 வரை ஸ்தல ஸ்தாபன போர்டுத் தலைவராகவும், 1924-இல் வர்த்தக போர்டுத் தலைவராகவும் பதவி வகித்தார்.

‡ டிஸ்ரேலி (1804-1881) : பெஞ்சமின் டிஸ்ரேலி என்ற இந்தப் பிரிட்டிஷ் ராஜீய நிபுணர் தம் 21-ஆம் வயதிலேயே 'விவியன் கிரே' என்ற நாவலை எழுதிப் பெரும் புகழ் சம்பாதித்தார். இரண்டு தடவைகள் பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக இருந்தார். இரண்டாவது முறையாக இவர் பிரதமர் பதவியை வகித்தபோது (1874-1880) சூயஸ் கால்வாய் பங்குகளைப் பிரிட்டன் விலைக்கு வாங்கியது; பிரிட்டிஷ் ராணிக்கு இந்தியச் சக்கரவர்த்தினி என்ற பட்டம் சூட்டப்பட்டது. இவர் நாவன்மை படைத்த சொற்பொழிவாளர். விக்டோரியா மகாராணியின் நண்பர். இவருடைய கொள்கைகளை மகாராணி ஆதரித்து வந்தார். இவர் எழுதிய மற்றப் பிரபலமான நாவல்கள் 'கோனிங்ஸ்பி', 'ஸிபில்' என்பனவாகும்.

அப்படியே நான் கடிதம் எழுதினேன். இரண்டு மூன்று நாட்களில் நாங்கள் சந்திப்பதற்கு நேரத்தைக் குறிப்பிட்டு, கார்டினல் மானிங்கிடமிருந்து கடிதம் வந்தது. ஆகவே, நாங்கள் இருவரும் கார்டினலிடம் போனோம். யாரையாவது பார்க்கப் போகும்போது உடுத்துக்கொள்ளும் சம்பிரதாய உடையை அணிந்துகொண்டு, நான் போனேன். ஆனால், நாராயண ஹேம சந்திரரோ எப்பொழுதும்போல் அதே சட்டையையும் கால் சட்டையையும் போட்டுக்கொண்டே வந்தார். இதைக் குறித்து நான் கேலி செய்தபோது அவர் கூறியதாவது :

"நாகரிகம் படைத்த நீங்கள் எல்லாம் கோழைகள். மகான் கள், ஒருவருடைய வெளித்தோற்றத்தைக் கண்டு மதிப்பதே இல்லை. அவருடைய உள்ளத்தைப்பற்றியே அவர்கள் நினைக் கிறார்கள்."

கார்டினலின் மாளிகைக்குள் சென்றோம். நாங்கள் போய் உட்கார்ந்ததும், மெலிந்த, உயரமான கிழக் கனவான் ஒருவர் வந்து, எங்களுடன் கை குலுக்கினார். நாராயண ஹேமசந்திரர் பின்வருமாறு தமது வாழ்த்தைக் கூறினார்: "உங்கள் நேரத்தை அதிகம் வீணாக்க நான் விரும்பவில்லை. உங்கள் பெருமையைக் குறித்து, நான் எவ்வளவோ கேள்விப்பட்டிருக்கிறேன். வேலை நிறுத்தம் செய்திருந்தவர்களுக்கு நீங்கள் செய்த சிறந்த சேவைக் காக உங்களிடம் வந்து, நன்றி தெரிவிக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றியது. உலகத்திலுள்ள மகான்களை யெல்லாம் தரிசிப்பது என் வழக்கம். இதனாலேயே தங்களுக்கு நான் இந்தத் தொந்தரவைக் கொடுத்துவிட்டேன்."

குஜராத்தியில் அவர் சொன்னதை நான் மேற்கண்டவாறு மொழிபெயர்த்துச் சொன்னேன்.

"நீங்கள் வந்ததற்காக நான் அதிக மகிழ்ச்சி அடைகிறேன். லண்டன் வாழ்க்கை உங்களுக்கு ஒத்துக்கொள்ளும் என்றும், இங்குள்ள மக்களுடன் நீங்கள் பழகுவீர்கள் என்றும் நம்புகிறேன். ஆண்டவன் உங்களுக்கு அருள்புரிவானாக" என்றார், கார்டினல்.

இவ்வாறு கூறிவிட்டுக் கார்டினல் எழுந்து நின்று எங்களுக்கு விடையளித்தார்.

ஒரு நாள் நாராயண ஹேமசந்திரர் வேட்டி கட்டி, ஒரு சட்டையை மாத்திரம் அணிந்துகொண்டு, என் இருப்பிடத்திற்கு வந்தார் அச்சமயம் இருந்த வீட்டு அம்மாள் புதியவர். நாராயண ஹேமசந்திரரை அவருக்குத் தெரியாது. இந்த நிலையில் அவர்தான் ஹேமசந்திரருக்குக் கதவைத் திறந்துவிட்டார். அவர் பயந்து போய், என்னிடம் ஓடோடியும் வந்து, "பைத்தியம்போல் இருக்கும் ஒருவர் உங்களைப் பார்க்க விரும்புகிறார்!" என்றார். நான் கதவண்டை போனேன். நாராயண ஹேமசந்திரரைப் பார்த்து, வியப்படைந்தேன். அவருடைய கோலத்தைக் கண்டு

திடுக்கிட்டும் போனேன். ஆனால், அவருடைய முகத்திலோ வழக்கமாக இருக்கும் புன்னகையைத் தவிர வேறு எதுவுமே இல்லை.

“தெருவிலுள்ள சிறுவர்கள் உங்களைத் தொடர்ந்து வந்து, உங்கள் துணிகளைக் கிழிக்க முற்படவில்லையா?” என்று அவரைக் கேட்டேன். “ஆம், குழந்தைகள் என் பின்னால் ஓடி வந்தனர். அவர்களை நான் பொருட்படுத்தவில்லை. பிறகு சும்மா இருந்து விட்டார்கள்” என்றார்.

நாராயண ஹேமசந்திரர், லண்டனில் சில மாதங்கள் தங்கி யிருந்துவிட்டுப் பிறகு பாரிஸுக்குச் சென்றார். பிரெஞ்சு மொழி படிக்கவும் பிரெஞ்சு நூல்களை மொழிபெயர்க்கவும் ஆரம்பித்தார். அவருடைய மொழிபெயர்ப்பைத் திருத்துவதற்குப் போதுமான அளவுக்கு எனக்குப் பிரெஞ்சு மொழி தெரியும். ஆகவே, அதைப் படித்துப் பார்க்க அவர் என்னிடம் கொடுத்தார். அது சாராம் சமேயன்றி மொழிபெயர்ப்பன்று.

கடைசியாக அமெரிக்கா போவது என்ற தமது உறுதியையும் அவர் நிறைவேற்றிவிட்டார். அதிகக் கஷ்டப்பட்டே கப்பலில் மூன்றும் வகுப்பு டிக்கட் அவருக்குக் கிடைத்தது. அமெரிக்காவில் இருந்தபோது ஒருநாள் வேட்டியும் உள் சட்டையும் மாத்திரம் அணிந்துகொண்டு, அவர் வெளியே வந்துவிடவே, ‘ஆபாசமான உடை அணிந்திருந்த’ குற்றத்திற்காக அவரைக் கைது செய்து வழக்குத் தொடுத்தனர். விசாரணைக்குப் பிறகு அவர் விடுதலை யடைந்தார் என்றே எனக்கு ஞாபகம்.

## 23

## மகத்தான கண்காட்சி

**1899**-இல் பாரிஸில் மகத்தான கண்காட்சி ஒன்று நடந்தது. அதற்காகச் செய்யப்பட்டு வந்த விமரிசையான ஏற்பாடுகளைக் குறித்துப் பத்திரிகையில் படித்திருந்தேன். எனக்குப் பாரி ஸைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை அதிகமாக இருந்தது. ஆகையால், இச் சமயத்தில் அங்கே போனால் இரண்டை யுமே பார்த்ததாகும் என்று எண்ணினேன். கண்காட்சியில் முக்கியமாகப் பார்க்க வேண்டி இருந்தது, எப்பீல் கோபு ரம்.* அது முழுக்க முழுக்க இரும்பினால் கட்டப்பட்டது. சுமார் ஆயிரம் அடி உயரம் இருக்கும். கவர்ச்சியான மற்றும் பல பொருள்களும் காட்சியில் இருந்தன. ஆனால், எல்லாவற்றிலும்

---

* எப்பீல் கோபுரம்: இது 1889-இல் நடைபெற்ற பாரிஸ் பொருட்காட்சியில் அலெக்ஸாந்திரே குஸ்தாவ் எப்பீல் என்ற பிரெஞ்சு எஞ்சினீயரால் கட்டப்பட்டது. முழுவதும் இரும்பினாலேயே கட்டப்பட்ட இந்தக் கோபுரத்தின் உயரம் 985 அடி; எடை சுமார் 7000 டன்.

மிக முக்கியமானதாக இருந்தது அந்தக் கோபுரமே. ஏனெனில், அவ்வளவு உயரமான ஒரு கட்டுக்கோப்பு, விழுந்து விடாமல் எப்போதும் நிற்க முடியாது என்று அதுவரையில் கருதப்பட்டு வந்தது.

பாரிஸில், சைவ உணவு விடுதி ஒன்று உண்டு என்று கேள்விப்பட்டிருந்தேன். அங்கே ஓர் அறையை அமர்த்திக் கொண்டு, ஏழு நாட்கள் தங்கினேன். பாரிஸுக்குப் பிரயாணம் செய்ததிலும், அதைச் சுற்றிப் பார்த்ததிலும் மிகச்சிக்கனமாகவே செலவழித்துச் சமாளித்துக் கொண்டேன். பாரிஸின் அமைப்புப் படத்தையும், கண்காட்சியின் விவரங்களும் படமும் அடங்கிய புத்தகத்தையும் வைத்துக்கொண்டு, அவற்றின் உதவியால் பெரும்பாலும் நடந்தே சென்று, எல்லாவற்றையும் பார்த்தேன். முக்கியமான தெருக்களுக்கும், பார்க்கவேண்டிய இடங்களுக்கும் வழி தெரிய, அவைகளே போதுமானவை.

கண்காட்சி மிகப் பெரியது. பலவகையான பொருள்கள் வைக்கப்பட்டிருந்தன என்பதைத் தவிர வேறு எதுவும் எனக்கு இப்பொழுது நினைவு இல்லை. எப்பீல் கோபுரத்தில் இரண்டு, மூன்று தடவை நான் ஏறியதால் அது மாத்திரம் எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. அதன் முதல் அடுக்கில் ஒரு சாப்பாட்டு விடுதி இருந்தது. வெகு உயரத்தில் நான் மத்தியானச் சாப்பாடு உண்டேன் என்று சொல்லிக்கொள்ளுவது சாத்தியமாக வேண்டும் என்ற திருப்திக்காக மாத்திரம் ஏழு ஷில்லிங்கை அங்கே தொலைத்தேன்.

பாரிஸிலுள்ள புராதனமான கிறிஸ்தவாலயங்கள் இன்னும் என் நினைவில் இருக்கின்றன. அவற்றின் கம்பீரமான தோற்றமும் அங்கிருந்த அமைதியும் என்றும் மறக்க முடியாதவை. நோத்ர தாம் கோயிலின் அற்புதமான அமைப்பும், உள்ளே செய்யப் பட்டிருக்கும் விமரிசையான சித்திர வேலைகளும், அழகான சிலைகளும் என்றும் மறக்க முடியாதவை. இத்தகைய தெய்விக மான கோயில்களைக் கோடிக் கணக்கில் செலவிட்டுக் கட்டியவர் களின் உள்ளங்களில் நிச்சயமாகக் கடவுள் பக்தி இருந்திருக் கவே வேண்டும் என்றும் எண்ணினேன்.

பாரிஸ் நகரின் நாகரிக வாழ்க்கையைக் குறித்தும், களி யாட்டங்களைப்பற்றியும் நான் நிரம்பப் படித்திருந்தேன். அவற்றிற்கான அறிகுறிகள் ஒவ்வொரு தெருவிலும்தென்பட்டன. ஆனால், இக் காட்சிகளுக்கெல்லாம் புறம்பானவைகளாகவே கிறிஸ்தவாலயங்கள் இருந்தன. இக் கோயில்கள் ஒன்றினுள் ஒருவன் போய்விடுவானாயின், வெளியிலுள்ள சப்தங்களையும் சந்தடிகளையும் அவன் மறந்தே போவான். உடனே அவனுடைய தன்மையே மாறிவிடும். கன்னி மேரியின் சிலை முன்பு மண்டி யிட்டுத் தொழும் ஒருவனைக் கடந்து சென்றதுமே அவன் கண்ணியமாகவும் பக்தியோடும் நடந்துகொண்டு விடுவான்.

இவ்விதம் முழந்தாள் இடுவதும், பிரார்த்தனை செய்வதும் வெறும் மூட நம்பிக்கைகளாக இருக்க முடியாது. கன்னி மேரியின் முன், பயபக்தியுடன் மண்டியிட்டுக்கொண்டு வணங்கியவர்கள் வெறும் சலவைக் கல்லை மாத்திரம் வணங்கியவர்களாக இருக்க முடியாது என்று அப்பொழுது எனக்கு ஏற்பட்ட உணர்ச்சி, அது முதலே என்னுள் வளர்ந்து கொண்டு வந்தது. அவர்கள் கல்லை வணங்கவில்லை; உண்மையான பக்தியால் பரவசம் அடைந்து, அக் கல் எதற்கு அறிகுறியாக நின்றதோ அந்தத் தெய்விக சக்தியையே அவர்கள் வணங்கினார்கள். இத்தகைய பிரார்த்தனைகளினால் அவர்கள் கடவுளின் மகிமையை வளர்த்தார்களே யல்லாமல் குறைத்துவிடவில்லை என்றும் அப்பொழுது எனக்குத் தோன்றியதாக நினைவிருக்கிறது.

எப்பீல் கோபுரத்தைப்பற்றியும் இங்கே ஒரு வார்த்தை கூற வேண்டும். அந்தக் கோபுரம் இன்று எவ்விதம் பயன்படுகிறது என்பது எனக்குத் தெரியாது. ஆனால், அதைக் குறித்துப் பலர் குறை கூறினர் என்றும், மற்றும் பலர் போற்றினர் என்றும் அப்பொழுது அறிந்தேன். அதைக் குறை கூறியவர்களில் முக்கியமானவர் டால்ஸ்டாய்.* எப்பீல் கோபுரம் மனிதன் செய்யும் தவறுக்கு ஒரு சின்னமேயன்றி அவனுடைய அறிவிற்குச் சின்னம் அல்ல என்று அவர் கூறினார். போதை தரும் பொருள்களிலெல்லாம் மிக மோசமானது புகையிலை என்று டால்ஸ்டாய் கூறினார். புகையிலைப் பழக்கம் உள்ளவனை, குடிகாரன் கூடச் செய்யத் துணியாத குற்றங்களைச் செய்துவிடும்படி புகையிலை தூண்டிவிடுகிறது என்றார். மதுபானம் ஒருவனைப் பித்தன் ஆக்கிவிடுகிறது; புகையிலையோ, அவன் புத்தியை மயக்கி, ஆகாயக்கோட்டை கட்டும்படி செய்கிறது என்றார். அத்தகைய மதி மயக்கத்தில் மனிதன் சிருஷ்டிப்பவை

* டால்ஸ்டாய் (1828 - 1910) : உலகப் புகழ் பெற்ற இந்த ருஷ்ய எழுத்தாளரின் முழுப் பெயர் லியோ நிக்கொலாயேவிச் டால்ஸ்டாய் என்பதாகும். யாஸ்னயா போல்யானா என்ற ஊரில், பிரபு குடும்பத்தில் பிறந்த இவர், இளம் வயதில் ராணுவத்தில் சேர்ந்து யுத்தத்தின் பயங்கரங்களையும், கொடுமைகளையும் கண்கூடாகப் பார்த்தார். கிரிமியாவில் ஒரு ராணுவ முகாமில் இருந்து, இவர் எழுதிய 'செபாஸ்டபூல் கதைகள்' என்ற நூல், இவருக்கு இலக்கியப் புகழைத் தேடிக் கொடுத்தது. ருஷ்யாவில் பண்ணை அடிமைகளை விடுவிக்கும் சட்டம் வருவதற்கு முன்பாகவே தமது பண்ணையின் அடிமைகளை இவர் விடுவித்துவிட்டார். பிரபுத்துவ வாழ்க்கையைத் துறந்து, குடியானவனைப் போலவே வாழவும், அவனுடைய பாஷையிலேயே பேசவும் தொடங்கினார். உலகத்திலேயே இணையற்றது என்று போற்றப்படும் 'போரும் அமைதியும்' என்ற நாவலையும், 'அன்னா கரீனீனா', 'புத்துயிர்' போன்ற சிறந்த நாவல்களையும் எழுதிய இந்த இலக்கிய மேதை தமது அந்திய காலத்தில் சமய ஆராய்ச்சியில் ஈடுபட்டு, அன்பு, அகிம்சை போன்ற உயர்ந்த கொள்கைகளைப் பரப்பும் நூல்களையும் எழுதலானார். அவற்றுள் 'ஆண்டவன் ராஜ்யம் உனக்குள்ளே' என்ற நூல் காந்திஜியை மிகவும் கவர்ந்தது. டால்ஸ்டாய் தமது 82-ஆவது வயதில் அஸ்டபோவோ என்ற ஊரின் ரயில்வே ஸ்டேஷன் மாஸ்டர் வீட்டில் காலமானார். அந்த ஸ்டேஷனுக்கு இப்போது டால்ஸ்டாயின் பெயரே சூட்டப் பெற்றுள்ளது.

களில் ஒன்றே எப்பீல் கோபுரம் என்றும் டால்ஸ்டாய் கூறினர். எப்பீல் கோபுரத்தில் கலைத் திறன் எதுவும் இல்லை. கண்காட்சி யின் உண்மையான அழகை இது எந்த விதத்திலும் அதிகரித்த தாகவும் சொல்லுவதற்கில்லை. இதைப் பார்ப்பதற்கு ஏராள மான மனிதர்கள் கூடினர். அது புதுமையாகவும், இணையற்ற வகையில் பெரிதாகவும் இருந்ததால், மனிதர்கள் அதில் ஏறியும் பார்த்தனர். கண்காட்சியில் அதை ஒரு விளையாட்டுப்பொம்மை என்றே சொல்லலாம். நாம் குழந்தைகளாக இருந்துகொண் டிருக்கும் வரையில், பொம்மைகள் நமக்குக் கவர்ச்சியாகவே இருக்கும். விளையாட்டுப் பொருள்களைக் கண்டு மயங்கும் குழந் தைகளே நாம் எல்லோரும் என்ற உண்மையை அக் கோபுரம் நன்ருக எடுத்துக்காட்டுவதாக இருந்தது. அதுவே எப்பீல் கோபுரத்தினல் ஏற்பட்ட பயன் என்றும் சொல்லிக் கொள்ளலாம்.

## 24

# பாரிஸ்ட ரானேன்; ஆனல் பிறகு...?

பாரிஸ்டர் ஆவதற்காகவே நான் இங்கிலாந்துக்குச் சென் றேன். ஆனல், அதைப்பற்றி இதுவரை ஒன்றும் சொல்லாம லேயே தள்ளிவைத்து வந்திருக்கிறேன். அதைப்பற்றிச் சுருக்கமா கச் சொல்ல வேண்டிய சமயம் வந்துவிட்டது.

ஒரு மாணவன், பாரிஸ்டர் ஆவதற்குப் பூர்த்தி செய்யவேண் டிய நிபந்தனைகள் இரண்டு உண்டு. இதில் ஒன்று, 'முறையை அனுசரிப்பது'. இத்தகைய பன்னிரண்டு முறைகள் சுமார் மூன்று ஆண்டுகளுக்குச் சமம். மற்ருென்று, 'பரீட்சைகளில் தேறுவது'. 'முறையை அனுசரிப்பது' என்ருல் முறைப்படி தின்பது. அதா வது, ஒரு கால அளவில் நடக்கும் சுமார் இருபத்து நான்கு விருந் துகளில் குறைந்தது ஆறு விருந்துகளுக்காவது போக வேண் டும். விருந்தில் கலந்துகொள்ளுவ தென்ருல் சாப்பிட்டாக வேண் டும் என்பது அல்ல. குறிப்பிட்ட நேரத்தில் வந்துவிட்டதாக அறிவித்துக் கொண்டு, விருந்து முடியும் வரை அங்கேயே இருக்க வேண்டும். உண்மையில் ஒவ்வொருவரும் சாப்பிட்டார் கள்; குடித்தார்கள். நல்ல உணவு வகைகளும், உயர்ந்த மது பானங்களும் அங்கே வழங்கப்படும். ஒரு சாப்பாட்டுக்கு இரண் டரை ஷில்லிங்கிலிருந்து மூன்றரை ஷில்லிங் வரையில் ஆகும்; அதாவது இரண்டு, மூன்று ரூபாய் ஆகும். ஒருவர் ஹோட்ட லில் சாப்பிட்டால் மதுபானத்திற்கு மாத்திரம் அவ்வளவு தொகை கொடுக்க வேண்டி வரும். ஆகையால் இது மிதமானது என்றே கருதப்பட்டது. சாப்பாட்டின் விலையைவிட மதுபானச் செலவு அதிகமாவது என்பது இந்தியாவிலுள்ள நமக்கு—நாம் 'நாகரிகம்' அடையாதவர்களாக இருந்தால்—ஆச்சரியமாக இருக் கும். முதல் முதலாக எனக்கு இந்த விவரம் தெரிந்தபோது

நான் திடுக்கிட்டே போனேன். குடியில் இவ்வளவு பணத்தை வாரி இறைத்துவிட அவர்களுக்கு எப்படித்தான் மனம் வருகிறது என்று ஆச்சரியப்பட்டேன். பிறகு நான் இதைப் புரிந்துகொண்டேன். இந்த விருந்துகளில் அநேகமாக நான் எதுவும் சாப்பிடுவதில்லே. ஏனென்ருல், நான்சாப்பிடக்கூடியவை ரொட்டியும், வேக வைத்த உருளைக் கிழங்கும், முட்டைக் கோஸுமே. இவையும் எனக்குப் பிடிப்பதில்லே யாகையால் ஆரம்பத்தில் இவைகளையும் நான் சாப்பிடுவதில்லே. பின்னல் இவை எனக்கு ருசியாயிருக்க ஆரம்பித்ததும், வேறு பண்டங்களும் வேண்டும் என்று கேட்கும் துணிச்சலும் எனக்கு உண்டாயிற்று.

மாணவர்களுக்கு அளிக்கப்பட்ட விருந்தைவிட, நீதிபதிகளுக்கு அளிக்கும் விருந்து மிகவும் உயர்ந்ததாக இருக்கும். என்னைப்போல ஒரு பார்ஸி மாணவரும் மாமிசம் சாப்பிடாதவர். நீதிபதிகளுக்குப் பரிமாறும் சைவ உணவு வகைகளை எங்களுக்கும் பரிமாற வேண்டும் என்று நாங்கள் இருவரும் மனுச் செய்துகொண்டோம். எங்கள் மனு அங்கீகரிக்கப் பெற்றது. நீதிபதிகளின் மேஜைகளிலிருந்து பழங்களும் மற்றக் கறிகாய்களும் எங்களுக்குக் கிடைக்கத் தொடங்கின.

நான்கு பேர் அடங்கிய ஒரு குழுவிற்கு, இரண்டு பாட்டில் 'ஒயின்' என்ற வகையில் மதுபானம் கொடுத்தனர். நான் அதைத் தொடுவதே இல்லே. ஆகையால், என்னுடன் இருக்கும் மற்ற மூவருக்கு இரண்டு 'ஒயின்' பாட்டில்களைக் காலி செய்ய வசதி இருந்தது. இதற்காக என்னைத் தத்தம் குழுவில் சேர்த்துக் கொள்ளுவதற்குப் பலர் விரும்பியதால், எனக்கு எப்பொழுதும் கிராக்கி இருந்து வந்தது. ஒவ்வொரு காலப் பகுதியிலும் இந்த நிகழ்ச்சியில் 'பெரிய விருந்து' என்று ஒன்று நடக்கும். 'போர்ட்', 'ஷெர்ரி' ஒயின்களுடன் அதிகமாக, 'ஷாம்பேன்' போன்ற ஒயின்களும் கொடுக்கப்படும். ஆகையால், அதற்கு வருமாறு எனக்கு விசேஷக் கோரிக்கைகள் வரும். அந்தப் பெரிய விருந்து நாட்களில் எனக்குக் கிராக்கி வெகு அதிகம் இருக்கும்.

இத்தகைய விருந்துகள், பாரிஸ்டராவதற்கு மாணவர்களை எவ்விதம் தகுதியுடையவர்கள் ஆக்குகின்றன என்பதை நான் அப்பொழுதும் உணரவில்லே, அதற்குப் பின்னரும் உணரவில்லே. மிகச் சில மாணவரே இத்தகைய விருந்துகளில் கலந்துகொள்ளும் காலம் ஒன்று இருந்தது. அப்பொழுது இம் மாணவர்களும் நீதிபதிகளும் கலந்து பேசுவதற்குச் சந்தர்ப்பங்கள் இருந்தன; பிரசங்கங்களும் நடந்தன. இத்தகைய சந்தர்ப்பங்களினுல் அவர்களுக்கு உலக ஞானத்துடன், ஒருவகையான மெருகும் நாகரிகமும் உண்டாவதற்கும் வசதி இருந்தது; பேச்சுத் திறனையும் வளர்த்துக்கொள்ள முடியும். என் காலத்திலோ, நீதிபதிகளுக்கு என்று தனியாகவே விருந்து மேஜைகள் போடப்பட்

டிருந்ததால் அத்தகைய வாய்ப்பு ஒன்றுமே எனக்குக் கிடைக்க வில்லை. இந்த வழக்கத்திற்கு நாளாவட்டத்தில் பொருள் இல்லா மலே போயிற்று. என்றுலும், பழைமையில் பற்றுக் கொண்ட இங்கிலாந்து, அதை விடாமல் வைத்துக்கொண்டிருந்தது.

பரீட்சைக்கு உரிய பாடங்கள் மிகச் சுலபமானவை. பாரிஸ் டர்களை, 'விருந்து பாரிஸ்டர்கள்' என்றும் வேடிக்கையாக அழைப்பது உண்டு. உண்மையில் பரீட்சைகள் ஒரு பயனும் இல் லாதவை என்பது எல்லோருக்கும் தெரியும். என் காலத்தில் ரோமன் சட்டப் பரீட்சை, பொதுச் சட்டப் பரீட்சை என்ற இரு பரீட்சைகள் உண்டு. இவற்றிற்கு இன்னவை பாடப் புத்தகங் கள் என்றும் குறிப்பிடப்பட்டிருந்தன. தனித்தனிப் பகுதிகளுக் கும் பரீட்சை எழுதலாம். அப்பாடப் புத்தகங்களை அநேகமாக யாரும் படிப்பதே இல்லை. இரண்டே வாரங்களில் ரோமன் சட்டத்திற்குப் போட்டிருக்கும் குறிப்புக்களை மாத்திரம் மேலெ ழுந்தவாரியாகப் பார்த்துவிட்டு, ரோமன் சட்டப் பரீட்சையில் பலர் தேறிவிட்டதை நான் அறிவேன். அதே போலப் பொதுச் சட்டத்திற்குள்ள குறிப்புக்களை மாத்திரம், இரண்டுமூன்று மாதங் களில் படித்துவிட்டு, அப்பரீட்சையிலும் தேறிவிடுவார்கள். கேள்விகள் சுலபமானவை; மாணவர்கள் அளிக்கும் பதில்களுக்கு மார்க் கொடுப்பவர்களும் தாராளமாக நடந்து கொண்டார்கள். ரோமன் சட்டப் பரீட்சைக்குச் செல்பவர்களில் 100-க்கு 95முதல் 99 வரையிலும் தேறிவிடுவர். முடிவான பரீட்சையிலும் 100-க்கு 75 அல்லது அதற்கு அதிகமானவர்கள் கூடத் தேறிவிடுவார்கள். ஆகையால், பரீட்சையில் தேறுமல் போய்விடுவோமோ என்ற பயமே இல்லை. பரீட்சைகளும் ஆண்டுக்கு ஒரு முறை அல்ல, நான்கு முறைகள் நடந்தன! இதில் கஷ்டம் இருப்பதாகவே யாரும் நினைப்பதற்கில்லை.

ஆனல், நான் மாத்திரம் அவற்றைச் சிரமமானவையாகச் செய்துகொண்டு விட்டேன். பாடப் புத்தகங்கள் எல்லாவற் றையும் படிக்க வேண்டும் என்று கருதினேன். அவைகளைப் படிக் காமல் இருந்துவிடுவது ஒரு மோசடி என்று எண்ணினேன். அவைகளை வாங்குவதில் அதிகப் பணமும் செலவிட்டேன். ரோமன் சட்டத்தை, லத்தீன் மொழியிலே படிப்பது என்று தீர் மானித்தேன். லண்டன் மெட்ரிகுலேஷன் பரீட்சைக்காக நான் லத்தீன் படித்தது எனக்கு உதவியாக இருந்தது. நான் இவ் விதம் படித்ததெல்லாம், தென்னுப்பிரிக்காவில் ரோமன் டச்சு பொதுச் சட்டமாக இருந்ததால். அந்நாட்டில் இருந்தபோது எனக்கு நன்மையை அளித்தது. ஜஸ்டினியனைப் படித்தது, தென்னுப்பிரிக்காவின் சட்டங்களைப் புரிந்து கொள்ளுவதில் எனக்கு அதிக உதவியாக இருந்தது.

இங்கிலாந்தின் பொதுச் சட்டங்களை நான் கஷ்டப்பட்டுப் படித்து முடிக்க ஒன்பது மாத காலம் ஆயிற்று. புரூம் எழுதிய 'பொதுச் சட்டம்' என்ற நூல் பெரியதாயினும் சுவாரஸ்யமானது. அதைப் படித்து முடிக்க அதிகக் காலம் ஆகிவிட்டது. ஸ்னெல்

எழுதிய 'ஈக்விடி' என்ற நூல் சிறந்த விஷயங்களைக் கொண்டது. ஆனால், புரிந்து கொள்ளுவதுதான் சிரமம். ஒயிட்டும் டூடரும் எழுதிய 'முக்கியமான வழக்குகள்' என்ற நூலில், சில வழக்கு களும் பாடங்கள். இவை கவர்ச்சியானவைகள் ஆகவும், விஷய ஞானத்தைப் போதிப்பவைகள் ஆகவும் இருந்தன. வில்லியமும் எட்வர்டும் எழுதிய 'உண்மையான சொத்து', குடவேயின் 'சொந் தச் சொத்து' ஆகிய நூல்களையும் படித்தேன். வில்லியத்தின் புத்தகத்தைப் படிப்பது கதை படிப்பதுபோல் இருந்தது. நான் இந்தியாவுக்குத் திரும்பியதும் அதேபோல் குறையாத சிரத்தை யுடன் நான் படித்த ஒரே புத்தகம் மேய்னே எழுதிய 'ஹிந்துச் சட்டம்' என்பதாக எனக்கு ஞாபகம். இந்தியச் சட்ட புத்த கங்களைப்பற்றிச் சொல்ல இது இடமன்று.

பரீட்சைகளில் தேறினேன். 1891, ஜூன், 10-ஆம் தேதி என்னைப் பாரிஸ்டர் ஜாபிதாவில் சேர்த்துக் கொண்டனர்; ஜூன், 11-ஆம் தேதி, ஹைகோர்ட்டில் பாரிஸ்டராகப் பதிவு செய்துகொண்டேன். 12-ஆம் தேதி இந்தியாவுக்குக் கப்பல் ஏறினேன்.

நான் என்னதான் படித்திருந்தேனாயினும், எனக்குள் இருந்த பயத்திற்கும், சக்தியற்றிருக்கிறேன் என்ற உணர்ச்சிக்கும் முடிவே இல்லை. வக்கீல் தொழிலை நடத்துவதற்குத் தகுதி பெற்றுவிட்டதாக நான் உணரவே இல்லை. எனது இந்தச் சக்தி யின்மையைப்பற்றி விவரிக்க ஒரு தனி அத்தியாயமே வேண்டும்.

## 25

# எனது சக்தியின்மை

பாரிஸ்டர் ஆகிவிடுவது எளிதாகவே இருந்தது. ஆனால், பாரிஸ்டர் தொழிலை நடத்துவதுதான் மிகக் கஷ்டமாக இருந் தது. நான் சட்டங்களைப் படித்திருந்தேன். ஆனால், சட்டவாதம் செய்யும் முறையைக் கற்றுக் கொள்ளவில்லை. சட்டக் கோட் பாடுகளையெல்லாம் சிரத்தையுடன் படித்திருந்தேன். அவற்றை என் தொழிலில் எப்படிப் பயன்படுத்திக் கொள்ளுவது என்பது மட்டும் எனக்குத் தெரியவில்லை. 'மற்றவர்களின் சொத்துக் களுக்குக் கெடுதல் ஏற்படாத வகையில் உன் சொத்தைப் பயன் படுத்திக்கொள்' என்பது அத்தகைய கோட்பாடுகளில் ஒன்று. ஆனால், ஒரு கட்சிக்காரரின் நலனுக்கு ஏற்றவாறு இந்தக் கோட் பாட்டை எப்படிப் பயன்படுத்துவது என்பது எனக்குத் தெரிய வில்லை. இந்தக் கோட்பாட்டின்மேல் எழுந்த முக்கியமான பெரிய வழக்குகளின் விவரங்களையெல்லாம் படித்துப் பார்த் தேன். என்றாலும் வழக்குகளில் அதை அனுசரிக்க முடியும் என்ற நம்பிக்கை எனக்கு ஏற்படவில்லை.

இதுவல்லாமல் இந்தியச் சட்டத்தைக் குறித்து நான் எதுவுமே கற்றுக் கொள்ளவில்லை. ஹிந்து, முகமதியச் சட்டங்களைப் பற்றியோ எனக்கு ஒன்றுமே தெரியாது. ஒரு பிராதைத் தயாரிப்பது எப்படி என்பதையும் நான் தெரிந்து கொள்ளவில்லை. எனவே, திக்குத் திசை தெரியாமல் தவித்தேன். ஸர் பிரோஸ்ஷா மேத்தா, கோர்ட்டுகளில் சிங்கம்போல் கர்ஜிப்பவர் என்று கேள்விப்பட்டிருந்தேன். அந்த வித்தையை இங்கிலாந்தில் அவர் எப்படிக் கற்றுக் கொண்டிருக்க முடியும் என்று ஆச்சரியப்பட்டேன். அவருடைய சட்ட ஞானத்தை, நான் என்றாவது அடைய முடியும் என்பதற்கே இடமில்லை. ஆனால், இந்தத் தொழிலில் என் ஜீவனத்திற்கு வேண்டியதாவது கிடைக்குமா என்பதே எனக்குச் சந்தேகமாக இருந்தது.

நான் சட்டம் படித்துக் கொண்டிருந்தபோது இந்தச் சந்தேகங்களும் கவலைகளுமே என்னைப் பிய்த்துக் கொண்டிருந்தன. என்னுடைய இக்கஷ்டங்களை நண்பர்கள் சிலரிடம் கூறினேன். தாதாபாய் நௌரோஜியிடம்* போய், அவர் யோசனையைக் கேட்கவேண்டும் என்று ஒரு நண்பர் எனக்குக்கூறினார். நான் இங்கிலாந்துக்குச் சென்றபோது தாதாபாய்க்கும் ஓர் அறிமுகக் கடிதம் வைத்திருந்தேன் என்பதை முன்பே கூறியிருக்கிறேன். அதை வெகுகாலம் கழித்தே நான் பயன்படுத்திக் கொண்டேன். பேட்டி காண வேண்டும் என்று, அத்தகைய பெரியவரைக் கஷ்டப்படுத்துவதற்கு எனக்கு எந்தவித உரிமையும் இல்லை என்று எண்ணினேன். அவர் எங்காவது பேசப் போகிறார் என்று அறிவிக்கப்பட்டால், அக்கூட்டங்களுக்கு நான் போவேன். மண்டபத்தின் ஒரு மூலையில் இருந்து கொண்டு, அவர் பிரசங்கத்தைக் கேட்டுவிட்டு என் கண்களுக்கும் காதுகளுக்கும் கிடைத்த அவ்விருந்தோடு வீடு திரும்புவேன். மாணவர்களுடன் நெருங்கிய தொடர்பு வைத்துக் கொள்ளுவதற்காக அவர் ஒரு சங்கத்தை ஆரம்பித்தார். அதன் கூட்டங்களுக்கு நான் போவேன். மாணவர்கள் விஷயத்தில் தாதாபாய் கொண்டிருந்த சிரத்தையையும், அவர்கள் அவரிடம் கொண்டிருந்த மரியாதையையும் கண்டு மகிழ்ந்தேன். நாளாவட்டத்தில் தைரியப்படுத்திக்கொண்டு என்னிடம் இருந்த அறிமுகக் கடிதத்தை அவரிடம் சமர்ப்பித்தேன். "நீர் எப்பொழுது வேண்டுமானாலும்

---

* தாதாபாய் நௌரோஜி: பார்ஸி சமூகத்தைச் சேர்ந்தவர். 'இந்தியாவின் முதுபெருங் கிழவர்' என இந்திய மக்களால் போற்றப்பட்டவர். 1886, 1893, 1906 ஆகிய மூன்று ஆண்டுகளில் காங்கிரஸ் அக்கிராசனராக இருந்தார். பிரிட்டனில் மத்திய பின்ஸ்பரி (Central Finsbury) என்னும் தொகுதியிலிருந்து, பிரிட்டிஷ் பார்லிமென்டிற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டதைப் பாராட்டியே, தாதாபாய் இரண்டாம் முறை காங்கிரஸின் அதிபராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். "இந்தியாவின் லட்சியம், சுயராஜ்யம் அடைவதே" என முதல் முறையாகச் 'சுயராஜ்யம்' என்ற பதத்தை 1906-ஆம் ஆண்டு கல்கத்தாவில் நடந்த காங்கிரஸில் பிரகடனம் செய்த பெருமை இவருக்கே உரியது. தாதாபாயின் பேத்தியான குர்ஷித் பென் என்பவர் மகாத்மா காந்தியின் கீழ் சேவை செய்து வந்தார்.

வந்து என் புத்திமதியைக் கேட்கலாம்'' என்று அவர் கூறினர். ஆனல், அவர் இவ்விதம் கூறியதைப் பயன்படுத்திக் கொண்டு, நான் ஒரு தரமும் அவரிடம் போகவில்லை. மிக முக்கியமான அவசியம் இருந்தாலன்றி அவருக்குத் தொந்தரவு கொடுக்கக்கூடாது என்று நினைத்தேன். ஆகையால், எனக்குள்ள கஷ்டங்களைக் குறித்துத் தாதாபாயிடம் கூறுவது என்ற என் நண்பரின் யோசனையை ஏற்றுக்கொள்ள அச் சமயம் நான் துணியவில்லை. ஸ்ரீ பிரடரிக் பின்கட்டைச் சந்திக்குமாறு எனக்கு யோசனை சொன்னது இதே நண்பர்தானு, வேறு ஒருவரா என்பது எனக்கு நினைவு இல்லை. ஸ்ரீ பின்கட், கன்சர்வேடிவ் கட்சியைச் சேர்ந்தவர். ஆனல், இந்திய மாணவர்களிடம் அவர் கொண்டிருந்த அன்போ புனிதமானது; சுயநலமற்றது. பல மாணவர்கள் அவருடைய ஆலோசனையை நாடுவார்கள். உத்தியோகங்களுக்கும் அவரிடம் மனுச் செய்துகொள்ளுவார்கள். அவரும் வேண்டியதைச் செய்வார். நான் அவரைச் சந்தித்துப் பேசியதை என்றுமே மறக்க முடியாது. ஒரு நண்பனுகவே என்னை அவர் வரவேற்று முகமன் கூறினர். எனக்கு இருந்த நம்பிக்கையின்மையை நான் சொல்லக் கேட்டதும் அவர் சிரித்துவிட்டார். ''ஒவ்வொருவரும் பிரோஸ்ஷா மேத்தாவாக* இருக்க வேண்டும் என்று நீர் நினைக்கிறீரா? பிரோஸ்ஷாக்களும் பத்ருதீன்களும்† அபூர்வமாகவே இருப்பார்கள். சாதாரண வக்கீல்களாக இருப்பதற்கு அசாதாரண ஆற்றல் எதுவும் அவசியமில்லை என்பதை நிச்சயமாக நம்பும். பொதுவான யோக்கியப் பொறுப்பும் உழைப்பும் இருந்தால், ஒருவர் தம்முடைய ஜீவனத்திற்குச் சம்பாதித்துக்கொள்ள அவையே போதும். வழக்குகள் எல்லாமே சிக்கலானவை அல்ல. பொது அறிவை வளர்த்துக்கொள்ளுவதற்கு எந்த அளவு படித்திருக்கிறீர்? அதைச் சொல்லும், பார்ப்போம்'' என்ருர்.

என்னுடைய சொற்பமான படிப்பை நான் அவருக்குத் தெரிவித்ததும் அவர் ஏமாற்றம் அடைந்தார் என்பதைக் கண்டேன். ஆனல், அந்த ஏமாற்றம் அவருக்குக்

---

* ஸர் பிரோஸ்ஷா மேத்தா: பார்ஸி வகுப்பைச் சேர்ந்த பிரபல பாரிஸ்டர். இவரைச் சுற்றிக் கைகட்டிக் கொண்டு எப்பொழுதும் பல இளம் வக்கீல்கள் இருப்பர். இவர் பம்பாய்க் கார்ப்பரேஷன் தலைவராக இருந்திருக்கிருர். 'காங்கிரஸின் தொடக்கத்திலிருந்து அதனுடன் தொடர்பு கொண்டு, அதன் கொள்கைகளையும் திட்டங்களையும் உருவாக்கியவர்' என்று காங்கிரஸ் வரலாற்று ஆசிரியர் டாக்டர் பட்டாபி இவரைப் பற்றிக் குறிப்பிடுகிருர். 1890-ல் நடந்த ஆருவது காங்கிரஸின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1909-இல் லாகூரில் நடந்த காங்கிரஸின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டும் சபை கூடுவதற்கு ஆறு நாட்களுக்கு முன் தமது பதவியை ராஜிநாமாச் செய்துவிட்டார்.

† பத்ருதீன் தயாப்ஜி: இவர் முஸ்லிம் பிரமுகர். 1887-இல், சென்னையில் நடந்த காங்கிரஸுக்குத் தலைவராயிருந்தார். பின்னர் இவரைப் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் உயர் நீதி மன்ற நீதிபதியாக நியமித்தனர். அதிலிருந்து ராஜீயத்திலிருந்து விலகி இருந்த இவர் 1904-இல் பம்பாயில் நடந்த காங்கிரஸிற்குத்தான் விஜயம் செய்தார். காங்கிரஸ், எல்லா வகுப்பினருக்கும் பிரதிநிதியாக இருக்கிறது என்பதை தமது தலைமை உரையில் நன்கு விளக்கிக் கூறினர்.

கணத்தில் மாறிவிட்டது. உடனே அவர் முகத்தில் அழகிய புன்னகை மலர்ந்தது. அவர் கூறியதாவது: "உமக்குள்ள கஷ்டத்தை நான் அறிகிறேன். உமது பொது அறிவுப் படிப்பு மிகக் கொஞ்சம். ஒரு வக்கீலுக்கு இன்றியமையாததான உலக ஞானம் உமக்கு இல்லை. இந்தியாவின் சரித்திரத்தைக்கூட நீர் இன்னும் படிக்கவில்லை. மனித சுபாவத்தையும் ஒரு வக்கீல் அறிந்திருக்க வேண்டும். முகத்தைப் பார்த்தே ஒருவன் எப்படிப்பட்டவன் என்பதைத் தெரிந்துகொள்ள அவரால் முடியவேண்டும். ஒவ்வோர் இந்தியரும் இந்திய சரித்திரத்தை அறிந்திருக்க வேண்டும். வக்கீல் தொழிலுக்கும் இதற்கும் சம்பந்தம் இல்லை என்றாலும், இதை நீர் அறிந்திருப்பது அவசியம். 1857 சிப்பாய்க் கலகத்தைக் குறித்துக்* கேயியும் மாலிஸனும் எழுதியிருக்கும் சரித்திரத்தைக்கூட நீர் படித்ததில்லை எனக் காண்கிறேன். அதை உடனே படிப்பதோடு, மனித சுபாவத்தைப் புரிந்துகொள்ளுவதற்கு மற்றும் இரு புத்தகங்களையும் படியும். லவேட்டரும் ஷெம்மல் பென்னிக்கும் முக பாவங்களைக் குறித்து எழுதியிருக்கும் புத்தகங்களே அவை இரண்டும்."

மதிப்பிற்குரிய இந் நண்பரிடம் நான் மிகுந்த நன்றியறிதல் உள்ளவனானேன். அவர் முன்னிலையில் எனக்கு இருந்த பயமெல்லாம் பறந்து ஓடிவிட்டதைக் கண்டேன். ஆனால், அவரை விட்டு வந்ததுமே திரும்பக் கவலைப்பட ஆரம்பித்துவிட்டேன். வீட்டுக்குத் திரும்புகையில் அவ்விரு புத்தகங்களைப்பற்றி நான் எண்ணியபோது, 'ஒருவனுடைய முகத்தைக்கொண்டே அவனுடைய குணங்களை அறிவது எப்படி?' என்பதே என் மனத்தைச் சதா அலைத்துக் கொண்டிருந்தது. மறுநாள் லவேட்டரின் புத்தகத்தை வாங்கினேன். ஷெம்மல்பென்னிக்கின் புத்தகம் கடையில் கிடைக்கவில்லை. லவேட்டரின் புத்தகத்தைப் படித்தேன். 'ஈக்விடி'யைப் பற்றிய ஸ்னெல்லின் புத்தகத்தையும்விட இது அதிகக் கஷ்டமானதாக இருந்ததோடு படிப்பதற்கும் ரசமாக இல்லை. ஷேக்ஸ்பியரின் முக பாவத்தைப் பற்றியும் படித்தேன். ஆனால், லண்டன் தெருக்களில் அங்கும் இங்குமாக நடந்து கொண்டிருக்கும் ஷேக்ஸ்பியர்களின் முக பாவத்தைக் கொண்டு அவர்களைப் புரிந்துகொண்டுவிடும் ஆற்றல் எனக்கு ஏற்படவில்லை.

---

* பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கம்பெனியின் கவர்னர் ஜெனரலாயிருந்த லார்டு டெல்ஹவுஸி 1856-இல் இந்தியாவை விட்டுப் போனார். அப்பொழுதே இந்தியா முழுவதும் நேர்முகமாகவும், மறைமுகமாகவும் பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் வந்துவிட்டது. இவ்விதம் நாடு அடிமைப்பட்டுவிட்டதை எதிர்த்து, மக்கள் போர் தொடுத்தனர். 1857-இல் நடந்த இப்போராட்டத்தை, 'சிப்பாய்க் கலகம்' என்று பிரிட்டிஷார் கூறினாலும், உண்மையில் அதுவே முதல் இந்திய சுதந்திரப் போர். ஜான்ஸி ராணி லட்சுமி பாய், அப் போராட்டத்தில் போர்க்களம் புகுந்து, பிரிட்டிஷ் படைகளுடன் வீரமாகப் போராடிப் போர்க்களத்திலேயே மாண்டார். இப்போராட்டத்தின் நூற்றாண்டு விழாவை இந்தியா சுதந்திரம் அடைந்த பின்னர், 1957-இல் இந்திய மக்கள் அதி விமரிசையாகக் கொண்டாடினர் என்பது இங்கே குறிப்பிடத் தக்கதாகும்.

லவேட்டரின் புத்தகம், எனக்குப் புதிய அறிவு எதையும் புகட்டிவிடவில்லை. ஸ்ரீ பின்கட்டின் புத்திமதிகள் எனக்கு நேரடி யான உதவி எதையும் அளித்துவிடவில்லை. ஆனால், அவருடைய அன்பு, எனக்குத் தைரியத்தை ஊட்டியது. அவரது புன்னகை பூத்த கபடமற்ற முகம், என் நினைவில் பதிந்துவிட்டது. 'வெற்றி கரமான ஒரு வக்கீல் ஆவதற்குப் பிரோஸ்ஷா மேத்தாவுக்குள்ள அறிவுக் கூர்மையும், ஞாபக சக்தியும், ஆற்றலும் இருக்க வேண் டும் என்ற அவசியம் இல்லை, யோக்கியப் பொறுப்பும் உழைப் பும் போதும்' என்று அவர் கூறிய புத்திமதியில் எனக்கு நம் பிக்கை ஏற்பட்டது. கடைசியில் கூறப்பட்ட இவ்விரு குணங் களும் என்னிடம் ஓரளவுக்கு இருந்ததால் நான் ஒருவாறு தைரியம் கொண்டேன்.

கேயியும் மாலிஸனும் சிப்பாய்க் கலகத்தைக் குறித்து எழு திய புத்தகத்தை இங்கிலாந்தில் இருந்தபோது நான் படிக்க முடியவில்லை. ஆனால், கிடைக்கும் முதல் சந்தர்ப்பத்திலேயே படித்துவிட வேண்டும் என்று எண்ணியிருந்ததால் அவற்றைத் தென்னாப்பிரிக்காவில் படித்தேன்.

இவ்விதமான மனச்சோர்வுடனும், அற்ப சொற்பமான நம் பிக்கையுடனும், எஸ். எஸ். அஸ்ஸாம் என்ற கப்பலில் நான் பம் பாய் வந்து இறங்கினேன்.* துறைமுகத்தில் கடல், கொந்தளிப் பாக இருந்தது. ஒரு நீராவிப் படகு மூலமே கப்பலிலிருந்து கரை சேர்ந்தேன்.

---

* இந்தியாவுக்குத் திரும்பியபோது, கப்பலில் தமக்கு ஏற்பட்ட அனுபவங்களைக் குறித்து, அப்பொழுது காந்திஜி 'நான் இந்தியாவுக்குத் திரும்பும் வழியில்' என்ற தலைப்பில் இரு கட்டுரைகள் எழுதினார். அவை லண்டன் "வெஜிடேரியன்" பத்திரிகை யில் 9-4-1892-இலும், 16-4-1892-இலும் பிரசுரமாயின. அக்கட்டுரைகளை இந்நூலின் பின் சேர்க்கைப் பகுதியில் காண்க.

இரண்டாம் பாகம்

# 1

# ராய்ச்சந்திர பாய்

பம்பாய்த் துறைமுகத்தில் கடல் கொந்தளிப்பாக இருந்தது என்று முந்திய அத்தியாயத்தில் கூறினேன். ஜூன், ஜூலை மாதங்களில் அரபுக் கடலில் இவ்விதம் இருப்பது சகஜம். ஏடனிலிருந்து நெடுகவுமே அலை அதிகமாகவே இருந்தது. அநேகமாக எல்லாப் பிரயாணிகளுக்கும் மயக்கமும் வாந்தியுந்தான். நான் ஒருவனே எதுவும் இல்லாமல் சுகமாக இருந்தேன். கப்பலின் மேல் தளத்தில் இருந்து கொண்டு, காற்றின் ஆவேசத்தையும், அலைகள் வேகமாகக் கப்பலில் வந்து மோதுவதையும் பார்த்து ஆனந்தித்துக்கொண் டிருந்தேன். என்னைத் தவிர இரண்டொருவரே காலை ஆகாரம் சாப்பிட வருவார்கள். ஓட்ஸ் கஞ்சித் தட்டை மிக எச்சரிக்கையுடன் மடியில் வைத்துக்கொண்டு சாப்பிடுவோம். கொஞ்சம் உஷாராக இல்லாது போனால் மடியி லெல்லாம் கஞ்சி கொட்டிவிடும்.

வெளிப்புயல் என் அகப் புயலுக்கு ஒரு சின்னமாகவே இருந்தது. வெளிப்புயல் எவ்விதம் என்னைக் கலங்கச் செய்யவில்லையோ அதைப்போலவே அகப் புயலைக் குறித்தும் நான் கலங்கவில்லை என்று சொல்லலாம் என்றே நினைக்கிறேன். சாதிக் கட்டுப்பாட்டுத் தொல்லை வேறு, என்னை எதிர்நோக்கி நின்றது. பாரிஸ்டர் தொழிலைத் தொடங்குவது சம்பந்தமாக எனக்கு இருந்து வந்த அதைரியங்களை முன்பே சொல்லியிருக்கிறேன். மேலும், நான் சீர்திருத்தக்காரன். எனவே, சில சீர்திருத்தங்களை எவ்விதம் ஆரம்பிக்கலாம் என்பதைக் குறித்தும் சிந்தித்துக்கொண் டிருந்தேன். ஆனால், நான் எதிர்பார்த்ததையெல்லாம்விட இன்னும் அதிகக் கஷ்டங்கள் எனக்குக் காத்துக் கொண்டிருந்தன.

என் மூத்த சகோதரர் என்னைச் சந்திப்பதற்காகத் துறைமுகத்திற்கு வந்திருந்தார். அவர், இதற்கு முன்பே டாக்டர் மேத்தாவுடனும் அவருடைய மூத்த சகோதரருடனும் பழக்கமாகிவிட்டார். தமது வீட்டிலேயே நான் தங்க வேண்டும் என்று டாக்டர் மேத்தா வற்புறுத்தியதன் பேரில் நாங்கள் அங்கே சென்றோம். இவ்விதம் இங்கிலாந்தில் ஏற்பட்ட பழக்கம் இந்தியாவிலும் தொடர்ந்து, இரு குடும்பங்களுக்கும் இடையே நிரந்தரமான நட்பாக வளர்ந்துவிட்டது.

என் தாயாரைப் பார்க்க வேண்டும் என்று என் உள்ளம் துடித்துக்கொண்டிருந்தது. என்னைத் திரும்ப வரவேற்று, மார்புடன் தழுவி மகிழ, அவர் தமது பூதவுடலுடன் அப்பொழுது இல்லை என்பது எனக்குத் தெரியவே தெரியாது. அவர் காலமாகிவிட்டார் என்ற துக்கச் செய்தி எனக்கு அறிவிக்கப்பட்டது. அதன்பேரில் செய்ய வேண்டிய கிரியைகளைச் செய்து முடித்தேன். நான் இங்கிலாந்தில் இருந்தபோதே, என் அன்னை இறந்துவிட்டார். இதை என் சகோதரர் எனக்குத் தெரிவிக்கவில்லை. வெளிநாட்டில் இப்பெரும் துக்கத்தின் வேதனை எனக்கு ஏற்பட வேண்டாம் என்று அவர் நினைத்திருக்கிறார். என்றாலும், இப்பொழுதும் அச் செய்தி எனக்குக் கடுமையான அதிர்ச்சியையே உண்டாக்கியது. ஆனால், அதைக் குறித்து நான் அதிகமாக விவரித்துக்கொண்டு போகக்கூடாது. என் தந்தையார் இறந்த போது எனக்கு இருந்த துக்கத்தைவிட இது இன்னும் அதிகத் துக்கம். என் உள்ளத்தில் ஆசையோடு வைத்திருந்த நம்பிக்கைகளெல்லாம் சிதறுண்டு போயின. ஆனால், அழுது புலம்பி என் துக்கத்தை நான் வெளிக்குக் காட்டவில்லை என்பது எனக்கு ஞாபகம் இருக்கிறது. கண்ணீர் பெருகுவதையும் என்னால் தடுத்துவிட முடிந்தது. எதுவுமே நிகழாதது போலவே என் காரியங்களைக் கவனித்து வந்தேன்.

டாக்டர் மேத்தா பல நண்பர்களை எனக்கு அறிமுகம் செய்துவைத்தார். அவர்களில் அவருடைய சகோதரரான ஸ்ரீ ரேவாசங்கர் ஜகஜீவனும் ஒருவர். அவருக்கும் எனக்கும் இடையே வாழ்நாள் முழுவதும் நீடித்த நட்பு வளர்ந்தது. ஆனால், எனக்கு அறிமுகம் செய்துவைக்கப்பட்டவர்களில் ராய்ச்சந்திரர்-ராஜ்சந்திரர்-என்ற கவி முக்கியமானவர் என்பதை நான் குறிப்பிட வேண்டும். அவர், டாக்டர் மேத்தாவின் ஒரு மூத்த சகோதரரின் மாப்பிள்ளை. ரேவாசங்கர் ஜகஜீவன் என்ற பெயரில் நடந்து வந்த நகை வியாபாரத்தில் அவர் ஒரு பங்குதாரர். அவருக்கு அப்பொழுது வயது இருபத்தைந்துக்கு மேல் இராது. ஆனால், அவரை முதல் முதல் பார்த்ததுமே அவர் சிறந்த ஒழுக்கமும் புலமையும் உள்ளவர் என்ற உறுதி எனக்கு ஏற்பட்டுவிட்டது. அவர் சதாவதானி என்றும் பெயர் பெற்றிருந்தார்; (ஏககாலத்தில் நூறு விஷயங்களை நினைவில் வைத்திருக்கும் அல்லது கவனிக்கும் பேராற்றல் படைத்தவர்). அவர் தமது அபாரமான ஞாபக சக்தியால் செய்யும் சில அருஞ்செயல்களைப் பார்க்கும்படியும் டாக்டர் மேத்தா என்னிடம் கூறினார். ஐரோப்பிய மொழிகளில் எனக்கு எத்தனைச் சொற்கள் தெரியுமோ அவ்வளவையும் சொல்லி அவற்றைத் திரும்ப ஒப்பிக்கும்படி அவரிடம் கேட்டேன். நான் அச்சொற்களை எந்த வரிசைக் கிரமத்தில் சொன்னேனோ அந்த வரிசைக் கிரமம் ஒரு சிறிதும் தவறாமல் அவர் ஒப்பித்துவிட்டார். அவருடைய அபார சக்தியில் நான் மயங்கிப் போய்விடவில்லை யாயினும் அந்த

ஆற்றல் எனக்கு இல்லையே என்று பொறுமைப்பட்டேன். ஆனால், அவரைக் குறித்து எனக்குப் பின்னால் தெரியவந்த சில விஷயங்கள் என்னை மயக்கியேவிட்டன. சமய நூல்களில் அவருக்கு இருந்த அபார ஞானமும், அப்பழுக்கற்ற அவருடைய ஒழுக்கமும், ஆத்மானுபூதியை அடைய வேண்டும் என்பதில் அவருக்கு இருந்த தீவிர ஆர்வமுமே என்னை மயக்கியவை. ஆத்மானுபூதியை அடைய வேண்டும் என்ற ஒன்றிற்காகவே அவர் வாழ்ந்து வந்தார் என்பதையும் பிறகு கண்டேன். முக்தானந்தரின் பாடல் ஒன்றை அவர் சதா உச்சரித்துக்கொண்டே இருப்பார். அது அவர் உள்ளத்தில் பதிக்கப்பட் டிருந்தது என்றே சொல்ல வேண்டும். அப் பாடலாவது :

நித்தம் யான்செய் வினையதனில்
நிமலன் தோற்றம் காண்பேனேல்,
அத்தன் அருளுக் குரியோனாய்
ஆனேன் என்று அகமகிழ்வேன் ;
வித்தும் முதலும் ஆதியுமாய்
விளங்கும் நாதன் என் கடவுள் ;
முக்தா னந்தன் வாழ்விற்கு
மூலா தாரம் அவனேகாண்.

ராய்ச்சந்திர பாயின் வியாபாரம் பல லட்சக் கணக்கில் மூல தனம் கொண்டது. முத்து, வைரங்களைச் சோதித்துப் பார்ப்பதில் அவர் கைதேர்ந்தவர். எவ்வளவுதான் சிக்கலான பிரச்னையாக இருந்தாலும், அது அவருக்குக் கஷ்டமானதே அல்ல. ஆனால், அவருடைய வாழ்க்கையில் இவைகளெல்லாம் முக்கியமானவை அன்று. அவரது வாழ்க்கையில் மிகக் கேந்திரமாக இருந்தது, கடவுளை நேருக்கு நேராகக் காணவேண்டும் என்ற ஆர்வம்தான். அவருடைய வியாபார மேஜை மீதிருக்கும் பல நூல்களுள், சில மத நூல்களும், அவருடைய தினக்குறிப்பும் இருக்கும். வர்த்தக வேலை முடிந்ததுமே மத நூல்களையோ, தினக்குறிப்பையோ பிரித்துவிடுவார். அவர் எழுதிப் பிரசுரமாகியிருக்கும் பல நூல்கள் இந்தத் தினக்குறிப்பிலிருந்து எடுக்கப்பட்டவையே. பலமான வர்த்தக பேரங்களையெல்லாம் பேசி முடித்தவுடனேயே, ஆன்மாவில் பொதிந்துகிடக்கும் ரகசியங்களை எழுத ஆரம்பித்து விடுகிறார் என்றால், அவர் உண்மையில் சத்தியத்தை நாடுபவராக இருக்க வேண்டுமே அல்லாமல் வியாபாரியாக இருக்க முடியாது என்பது தெளிவானது ஒரு தடவை, இரண்டு தடவை யன்று ; அநேகமாக எப்பொழுதுமே அவர், வியாபாரத்தின் நடுவில் இருந்துகொண்டே கடவுளைத் தேடும் முயற்சியில் இவ்விதம் ஆழ்ந்திருந்ததைக் கண்டேன். சாந்த நிலையிலிருந்து அவர் மனம் மாறுபட்டதாகவே நான் கண்டதில்லை. எந்த ஒரு வியாபாரமும் சுயநலமும் என்னை அவருடன் பிணைக்கவில்லை. என்றாலும், அவருடன் நெருங்கிய தொடர்பு கொண்டு இன்புற்றேன். அப்பொழுது

நான் வழக்கே இல்லாத வெறும் பாரிஸ்டர். என்ருலும், என்னைப் பார்க்கும் போதெல்லாம் சமய சம்பந்தமான முக்கியமான விஷயங்களைக் குறித்து என்னிடம் அவர் பேசுவார். அச் சமயம் நான் எதிலும் தெளிவில்லாது, இருளில் வழி தெரியாமல் தடவிக்கொண் டிருப்பவனுகவே இருந்தேன். சமய சம்பந்தமான விவாதங்களில் எனக்கு அதிகச் சிரத்தை இருந்ததாகச் சொல்ல முடியாது. என்ருலும், அவர் பேச்சு எனக்குக் கவர்ச்சி அளிப்பதாக இருந்ததைக் கண்டேன். அதற்குப் பிறகு மதத் தலைவர்கள் பலரையும் மத குருக்களையும் நான் சந்தித்திருக்கிறேன். பல மதங்களின் தலைவர்களைச் சந்திக்க முயன்றும் இருக்கிறேன். ராய்ச்சந்திரரைப்போல அவர்களில் யாருமே என் மனத்தைக் கவர்ந்ததில்லை என்பதை நான் சொல்லவேண்டும். அவருடைய சொற்கள், என் உள்ளத்தில் நேரே சென்று பதிந்தன. ஒழுக்க சீலத்தில் அவர் கொண்டிருந்த ஆர்வத்தைப் போலவே அவருடைய அறிவாற்றலும் அவரிடம் நான் பெரு மதிப்பு வைக்கும்படி செய்தது. அவர் விரும்பி என்னைத் தவருன வழியில் செலுத்திவிடமாட்டார், தமது ஆந்தரீக எண்ணங்களையெல்லாம் என்னிடம் எப்பொழுதும் அவர் கூறுவார் என்ற உறுதியும் எனக்குப் பலப்பட்டது. ஆகையால் ஆன்மிகத் துறையில் எனக்குச் சிக்கல் ஏற்பட்ட சமயங்களி லெல்லாம் அவரே எனக்குப் புகலிடமாக விளங்கினுர்.

எனக்கு அவரிடம் எவ்வளவோ மதிப்பு இருந்தும், என் குருநாதராக எனது இதயபீடத்தில் அவரை நான் அமர்த்திக் கொள்ளவில்லை. அந்தச் சிம்மாசனம் இன்னும் காலியாகவே இருக்கிறது; அதில் அமருவதற்கு ஏற்றவரை இன்னும் தேடிக் கொண்டிருக்கிறேன்.*

---

* "நான் ஒரு குருவைத் தேடிக்கொண்டிருக்கிறேன். ஏனெனில் குருதானே மோட்சத்திற்கு வழிகாட்ட முடியும்" என்று காந்திஜி எழுதியதன் பேரில் நேர்ந்த வேடிக்கையான சம்பவத்தைக் குறித்துக் காக்கா கலேல்கார், தாம் எழுதிய "பாபுவின் சில தோற்றங்கள்" என்ற நூலில் பின் வருமாறு குறிப்பிட்டிருக்கிருர்: "இதை எழுதியதும் அவரது நலனில் அக்கறை கொண்டவர்கள் பலர், அவரை எப்படியாவது கடைத்தேற்றிவிட வேண்டுமென்று கருதி அவருக்குக் கடிதம் எழுதத் தொடங்கிவிட்டனர். இம்மாதிரிக் கடிதங்கள் கணக்கின்றி வந்து குவிந்தன. 'இன்ன இடத்தில் இன்ன மகாத்மா இருக்கிருர், அவருடைய பாத கமலங்களில் அமர்ந்து, நலம் பெறலாம். ஏனெனில் அந்த மகாத்மா ஒரு பெரிய யோகி. மனிதருக்குப் புலப்படாத விஷயங்களை அறியும் தெய்வீக சக்தி அவருக்கு இருக்கிறது' என்று ஒருவர் எழுதினுர். பாபுவைக் கடைத்தேற்றிவிட அவரால் முடியாவிட்டால் வேறு யாராலும் முடியாது என்று அவர் எழுதியிருந்தார். மற்றும் ஒரு கடிதத்தில், வேருேர் இடத்திலிருந்த ஒரு மகானின் புகழ் பாடப்பட்டிருந்தது. இவ்விதம் பாபுவின் சார்பாக மக்கள் ஆர்வம் காட்டியதற்கு எல்லையே இல்லை. யாராவது ஒரு குரு, தமது யோக்கியதாம்சங்களைப்பற்றிப் பாபுவுக்கு எழுதியிருந்தாரோ என்னவோ நிச்சயமாகக் கூறுவதற்கில்லை. ஆனுல், பொது மக்கள் உற்சாகமாகப் பாபுவுக்கு உதவி புரிவதில் ஆர்வம் காட்டினர். அவர்களது பரிவைக் கண்டு அச்சமயத்திற்குப் பரவசமடையலா மாயினும் சில காலத்திற்குப் பிறகு அதனுல்

குருவைக் குறித்தும், ஆன்ம ஞானத்தை அடையும் விஷயத்தில் குருவின் அவசியத்தைப்பற்றியும் கூறும் ஹிந்து தத்துவத்தில் எனக்கு நம்பிக்கை உண்டு. குருவின்றி உண்மையான ஞானம் ஏற்பட முடியாது என்ற தத்துவத்திலும் அதிக உண்மை உண்டு என்றே நினைக்கிறேன். உலக விவகாரங்களில் அரை குறையான ஆசானைச் சகித்துக்கொள்ள முடியலாம். ஆனால், ஆன்மிக காரியங்களில் சகிக்க முடியாது. பூரணத்துவம் உள்ள ஒரு ஞானியே குரு பீடத்தில் அமர அருகதை உடையவர். ஆகையால், அந்தப் பூரணத்துவத்தை நாடுவதில் இடைவிடாது பாடு பட வேண்டும். ஏனெனில், அவனவனுக்கு ஏற்ற குருவையே அவனவன் அடைகிறான். பூரணத்துவத்தை அடைய இடைவிடாது பாடுபடுவது ஒருவரின் உரிமை. அதுவே அதனால் அடையும் பலனும் ஆகும். மற்றவை எல்லாம் கடவுளின் சித்தத்தைப் பொறுத்தவை.

இவ்விதம் ராய்ச்சந்திர பாயை என் உள்ளத்தின் சிங்காதனத்தில் குருவாக அமர்த்திக்கொள்ள என்னால் இயலாவிட்டாலும், அவர் அநேக சந்தர்ப்பங்களில் எவ்விதம் எனக்கு வழிகாட்டியாகவும், உதவி செய்பவராகவும் இருந்திருக்கிறார் என்பதைப் போகப் போகப் பார்ப்போம். இக்காலத்தவர்களில் என் உள்ளத்தைக் கவர்ந்து, என் வாழ்க்கையில் ஆழ்ந்த சுவட்டை விட்டுச் சென்றோர் மூவர் ஆவர். ராய்ச்சந்திரர் தமது ஜீவியத் தொடர்பினாலும் டால்ஸ்டாய், ‘ஆண்டவன் ராஜ்யம் உன்னுள்ளேயே’ என்ற தமது நூலினாலும், ரஸ்கின் ‘கடையனுக்கும் கதிமோட்சம்’ என்ற நூலினாலும் அவ்வாறு செய்தனர். இவர்களைப்பற்றி உரிய இடங்களில் விரிவாகக் கூறுகிறேன்.

## 2

# வாழ்க்கையைத் தொடங்கிய விதம்

என் மூத்த சகோதரர் என்னைப்பற்றி எவ்வளவோ அதிக நம்பிக்கைகளையெல்லாம் வைத்திருந்தார். பணம், பெயர், புகழ் ஆகியவைகளில் அவருக்கு ஆசை அதிகம். அவர் விசாலமான உள்ளம் படைத்தவர்; அளவுக்கு மிஞ்சிய தாராள குணமும் உள்ளவர். அதோடு அவர் கபடமற்ற சுபாவமும் உடையவர். ஆதலின் அவருக்குப் பல நண்பர்கள் இருந்தார்கள். அவர்கள் மூலம் என்னிடம் அதிகக் கட்சிக்காரர்கள் வரும்படி செய்யலாம் என்று அவர் நம்பினார். அத்துடன் என் வக்கீல் தொழில் பிரமா

---

சங்கடமே ஏற்பட்டது. இதன் விளைவாகப் பாபு, தமது உண்மையான கருத்தைப் பகிரங்கமாக வெளியிட வேண்டி வந்துவிட்டது. “நான் தேடும் குரு, பகவானைத் தவிர வேறு யாரும் இல்லை. பகவான்தான் எனது குருவாக இருக்க முடியும். நான் இறுதியாக அடைய விரும்பும் குறிக்கோள் அவனை அடைவதுதான். என் எல்லா முயற்சிகளும், நான் உயிர் வாழ்ந்திருப்பது கூட அவனை அடைவதற்காகத்தான்” என்று பாபு தமது கருத்தைச் சந்தேகத்திற்கு இடமின்றி வெளியிட்டார்.

தமான வருவாய் உள்ளதாக இருக்கப் போகிறது என்றும் எண்ணிக்கொண்டார். அந்த எண்ணத்தில் வீட்டுச் செலவு மிதமிஞ்சிப் போகவும் அனுமதித்துவிட்டார். நான் தொழில் நடத்துவதற்குச் செய்யவேண்டிய முன்னேற்பாடுகளில் எதையும் அவர் பாக்கி வைக்கவில்லை.

நான் வெளிநாட்டுப் பிரயாணம் செய்ததைக் குறித்து, என் சாதியார்ரிடையே எழுந்த புயல், இன்னும் இருந்து கொண்டே இருந்தது. அது, சாதியை இரண்டு கட்சிகள் ஆக்கிவிட்டது. இதில் ஒரு கட்சியினர் என்னை உடனேயே சாதியில் சேர்த்துக் கொண்டு விட்டனர். மற்றக் கட்சியாரோ, எனக்கு விதித்திருந்த சாதிக் கட்டுப்பாட்டை நீக்குவதில்லை என்று உறுதி கொண்டிருந்தனர். முதல் கட்சியாருக்குத் திருப்தி அளிக்க வேண்டும் என்பதற்காக என் சகோதரர் ராஜ்கோட்டிற்குப் போகும் முன்பு என்னை நாசிக்குக்கு அழைத்துச் சென்றார். அங்கே புண்ணிய நதியில் என்னை நீராடச் செய்தார். பிறகு ராஜ்கோட்டிற்குப் போனதும், சாதியாருக்கு ஒரு விருந்தும் வைத்தார். இதெல்லாம் எனக்குப் பிடிக்கவே இல்லை. ஆனால், என்னிடம் என் சகோதரருக்கு இருந்த அன்போ எல்லையற்றது. அதேபோல அவரிடமும் எனக்குப் பக்தி உண்டு. ஆகையால், அவர் சொன்னதே சட்டம் என்று மதித்து, அவர் விரும்பியபடியெல்லாம் யந்திரம்போலச் செய்து வந்தேன். இவ்விதம் திரும்பவும் சாதியில் சேர்த்துக்கொள்ளுவதைப்பற்றிய தொல்லை ஒருவாறு தீர்ந்தது.

என்னைச் சாதியில் சேர்த்துக்கொள்ள மறுத்த கட்சியினரிடம் என்னைச் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்பதற்காக நான் முயலவே இல்லை. அக் கட்சியின் தலைவர்களிடம் எனக்கு வெறுப்புத் தோன்றவும் இல்லை. அவர்களில் சிலர் என்னை வெறுத்தனர், ஆனாலும், அவர்கள் மனம் புண்படும் காரியம் எதையும் செய்து விடக் கூடாது என்பதில் எச்சரிக்கையுடன் நடந்துகொண்டேன். சாதிக் கட்டுப்பாடு சம்பந்தமான விதி முறைகளையெல்லாம் மதித்து நடந்துகொண்டேன். அந்தக் கட்டுப்பாடுகளின்படி என் மாமனார், மாமியார், தமக்கை, மைத்துனர் உள்பட என் உறவினர் யாருமே எனக்குச் சாப்பாடு போடக் கூடாது. ஆகையால், அவர்களில் யார் வீட்டிலும் நான் தண்ணீர் குடிப்பதுகூட இல்லை. இந்தக் கட்டுப்பாட்டை ரகசியமாக மீறிவிட அவர்கள் தயாராக இருந்தனர். பகிரங்கமாகச் செய்யாததை ரகசியமாகச் செய்வது என்பது என் இயல்புக்கே நேர் விரோதமானது.

இவ்விதம் என்மீது குறை கூறுவதற்கே கொஞ்சமும் இடம் வைக்காமல் நான் நடந்துகொண்டதன் பலனாக, எனக்குச் சாதித் தொல்லை ஏற்படுவதற்கே சந்தர்ப்பம் இல்லாது போயிற்று. அது மாத்திரம் அல்ல. என்னைச் சாதியிலிருந்து ஒதுக்கி வைக்கப்

பட்டவனாக இன்னும் கருதிக் கொண்டிருந்தவர்களில் பெரும்பாலோர் என்னிடம் அன்போடும் தாராளமாகவும் நடந்துகொண்டார்கள். சாதிக்காக நான் ஏதாவது செய்தாக வேண்டும் என்று எதிர்பாராமலேயே என் தொழிலிலும் அவர்கள் எனக்கு உதவி செய்தார்கள். இந்த நல்ல காரியங்களெல்லாம் என்னுடைய எதிர்ப்பின்மையின் பலனே என்பது எனது திடநம்பிக்கை. சாதியில் என்னைச் சேர்த்துக்கொண்டாக வேண்டும் என்று நான் கிளர்ச்சி செய்திருந்தால், சாதியை இன்னும் பல கட்சிகளாகப் பிரித்துவிட நான் முயன்றிருந்தால், சாதியாருக்கு நான் ஆத்திரத்தை மூட்டியிருப்பின், அவர்களும் நிச்சயம் எதிர்த்துப் பதிலுக்குப் பதில் செய்திருப்பார்கள். இங்கிலாந்திலிருந்து நான் திரும்பியதும், புயலிலிருந்து ஒதுங்கி விடுவதற்குப் பதிலாக, நான் கிளர்ச்சிச் சுழலில் சிக்குண்டு, பொய் நடிப்பை மேற்கொள்ளுவதற்கு உடந்தையாகவும் இருந்திருப்பேன்.*

---

* காந்திஜிக்கு அச் சமயத்தில் எவ்வளவு கவலையும் மனவேதனையும் இருந்தன என்பதை, அப்போது தமது நண்பரான பட்வாரிக்கு எழுதிய ஒரு கடிதமும் தெளிவாக்கும். ரஞ்சோத்லால் பட்வாரிக்கும் காந்திஜிக்கும் நெருங்கிய நட்பு உண்டு. அவருக்கு இவர் அடிக்கடி கடிதம் எழுதி வந்தார். இந்தப் பட்வாரியின் தந்தையே காந்திஜி இங்கிலாந்து செல்வதற்குப் பண உதவி செய்தவர். பட்வாரிக்குக் காந்திஜி பம்பாயிலிருந்து 1892, செப்டம்பர், 5-ஆம் தேதி எழுதிய கடிதமாவது :

'என் அன்புள்ள பட்வாரிக்கு.

'உங்கள் அன்பான கடிதத்துக்கும் ஆலோசனைக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

'என் முந்திய தபால் கார்டில் நான் கூறியவாறு, வக்கீல் தொழில் செய்ய வெளி நாட்டுக்குப் போவதை நான் தள்ளி வைக்க வேண்டியிருக்கிறது. அதை என் சகோதரர் கொஞ்சமும் விரும்பவில்லை. அகடவிகடம் பண்ணாமலே கத்தியவாரில் ஒரு நல்ல வருமானத்தைத் தேடிக்கொள்ள முடியுமா என்று நான் திகைக்க வேண்டியதில்லை என்று அவர் கருதுகிறார். இது எப்படியானாலும் அவர் மிகுந்த நம்பிக்கையோடு இருக்கிறார். எனக்கு ஒவ்வொரு விஷயத்திலும் ஆலோசனை கூறும் உரிமை அவருக்கு உண்டு. அதனால் நான் அவருடைய புத்திமதியையே பின்பற்றுவேன். இங்கும் எனக்குக் கொஞ்சம் வேலை கொடுப்பதாக வாக்களிக்கப்பட்டிருக்கிறது. அதனால் இங்கே குறைந்தது இரண்டு மாத காலமாவது இருக்க உத்தேசித்திருக்கிறேன்.

'இலக்கியம் சம்பந்தமான (உபாத்தியாயர்) உத்தியோகத்தை நான் ஏற்றுக் கொண்டால், அது என் சட்டப் படிப்புக்கு இடைஞ்சலாக இருக்கும் என்று நான் நினைக்கவில்லை. அதற்குப் பதிலாக, இப்படிப்பட்ட வேலை என் அறிவு வளர்ச்சிக்கு உதவும். வக்கீல் தொழிலில் அது மறைமுகமாக எனக்குப் பயன்படாமல் போகாது. மேலும், அதன் மூலம் கவலை எதுவும் இல்லாமல், இன்னும் அதிகமாகக் கவனம் செலுத்தி, நான் வேலை செய்ய முடியும். ஆனால், வேலை எங்கே இருக்கிறது ? வேலை கிடைப்பது சுலபமான விஷயம் அல்ல.

'ராஜ்கோட்டில் இருக்கும்போது நீங்கள் அளித்த வாக்குறுதியின் பேரில்தான் நான் கடன் கேட்டேன். அதைப்பற்றி உங்கள் தகப்பனாருக்குத் தெரியக்கூடாது என்பதில், உங்கள் கருத்தோடு பூரணமாக நான் ஒத்துப்போகிறேன். இப்போது அதைப் பற்றிக் கவலை வேண்டாம். நான் வேறு இடத்தில் முயலுகிறேன். ஒரு வருட வக்கீல் தொழிலில் நீங்கள் அதிக அளவுக்கு மிச்சம் பிடித்திருக்க முடியாது என்பதை நான் இலகுவாகப் புரிந்துகொள்ள முடியும்.

என் மனைவியுடன் எனக்கு இருந்த உறவு, இன்னும் நான் விரும்பிய வகையில் அமையவில்லை. எனக்கு இருந்த சந்தேகக் குணத்தை என் இங்கிலாந்து வாசமும் போக்கக் காணோம். சின்ன விஷயத்திற் கெல்லாங்கூட, என் மனைவிமீது முன்போல் சந்தே கப்பட்டு எரிந்து விழுந்துகொண்டிருந்தேன். ஆகையால், நான் கொண்டிருந்த ஆசைகளெல்லாம் நிறைவேருமலே இருந்தன. என் மனைவி எழுதப் படிக்கக் கற்றுக்கொண்டாக வேண்டும் என்று முடிவு செய்துகொண்டேன். அவளுடைய படிப்புக்கு நான் உதவி செய்ய வேண்டும் என்றும் தீர்மானித்தேன். ஆனல், இதில் என் காமம் வந்து குறுக்கிட்டது. என்னுடைய குறை பாடுகளுக்காக அவள் கஷ்டப்பட வேண்டியதாயிற்று. ஒரு சம யம் அவளை அவளுடைய தந்தையார் வீட்டிற்கு அனுப்பிவிடும் அளவுக்குக்கூடப் போய்விட்டேன். அவளைக் கொடிய மனத் துயரத்திற்கு ஆளாக்கிய பிறகே, திரும்ப அழைத்துக்கொள்ளச் சம்மதித்தேன். இவையெல்லாம் என்னுடைய பெருந் தவறுகள் என்பதைப் பின்னல் உணர்ந்தேன்.

குழந்தைகளுக்குக் கல்வி போதிக்கும் விஷயத்தில் சீர்திருத் தம் செய்யவேண்டும் என்று திட்டம் போட்டிருந்தேன். என் அண்ணனுக்குக் குழந்தைகள் உண்டு. நான் இங்கிலாந்து சென்றபோது, வீட்டில் விட்டுச்சென்ற என் பையனுக்கும் இப்பொழுது சுமார் நான்கு வயது. அச்சிறு குழந்தைகளுக்குத் தேகாப்பியாசம் சொல்லிக்கொடுத்து, அவர்கள் உடல் வலுப்

---

'சாச்சின் நவாப்பின் காரியதரிசியாக என் சகோதரர் சாச்சினில் தங்கிவிட்டார். இப்போது அவர் ராஜ்கோட்டுக்குப் போயிருக்கிருர். சில தினங்களில் திரும்புவார்.

'காசிதாஸ், தண்டகாவிலேயே தங்கிவிடப் போவதாக எழுதியிருக்கிருர். அதைக் குறித்து மகிழ்கிறேன்.

'சாதி எதிர்ப்பு எப்போதும் போல் கடுமையாகவே இருக்கிறது. எல்லாம் ஒரே ஒரு மனிதரைப் பொறுத்திருக்கிறது. என்னைத் திரும்பவும் சாதியில் சேர்த்துக்கொள்ளக் கூடாது என்பதற்காக அவர், தம்மால் முடிந்ததை யெல்லாம் செய்வார். இப்போது நான் எனக்காக அவ்வளவு வருத்தப்படவில்லை. ஒரு மனிதரின் அதிகாரத்துக்குக் கீழ்ப் படிந்து, செம்மறியாடுகள்போல் நடந்துகொள்ளும் சாதிக்காரர்களுக்காகத்தான் நான் வருத்தப்படுகிறேன். அவர்கள் சில அர்த்தமற்ற முடிவுகளுக்கு வந்து, தங்கள் வரம் ம்பையும் மீறி நடந்து கொள்ளுகின்றனர். இதனல் தங்களுக்குள்ள துவேஷ புத்தி யையே வெளிப்படுத்திக்கொண்டு வருகிருர்கள். உள்ளபடியே அவர்களுடைய வாதங் களில், மதத்துக்கு இடமே இல்லை. அவர்களில் ஒருவனுக என்னைக் கருத வேண்டும் என்பதற்காக, இப்படிப்பட்டவர்களைத் தாஜா பண்ணி, முகஸ்துதி செய்வதைக் காட்டி லும், அவர்களோடு யாதொரு தொடர்பும் வைத்துக்கொள்ளாமல் இருந்துவிடுவது விசேஷம் அல்லவா ? எப்படியும் நான் காலத்தோடு ஒத்துப் போக வேண்டும்.

'குஜராத்தில் ஓரிடத்தில் விரஜ்லால்பாய், கார்வார் (நிர்வாக அதிகாரி) பதவியை அடைந்திருப்பதை அறிந்து நான் மிகவும் மகிழ்கிறேன்.

'உங்கள் கையெழுத்து அழகாக இருக்கிறது. அரைகுறையாகவாவது உங்களைப் போல எழுத வேண்டும் என்ற எண்ணம் எனக்கு உண்டாகியிருக்கிறது.

உங்கள் அன்புள்ள,
மோ. க. காந்தி'

பெறச் செய்ய வேண்டும் என்பது என் ஆவல். என்னுடைய நேரான மேற்பார்வையில் அக்குழந்தைகளை வளர்க்க வேண்டும் என்றும் நினைத்தேன். இதில் என் சகோதரரின் ஆதரவும் எனக்கு இருந்ததால் என் முயற்சியில் அநேகமாக வெற்றியும் பெற்றேன். குழந்தைகளுடன் கூடியிருப்பதில் எனக்கு அதிகப் பிரியம். அவர்களுடன் விளையாடி, வேடிக்கை செய்துகொண்டிருக்கும் வழக்கம் இன்றைக்கும் என்னிடம் அப்படியே இருந்து வருகிறது. குழந்தைகளுக்கு நான் நல்ல உபாத்தியாயராக இருப்பேன் என்ற எண்ணம் அப்பொழுது முதலேயே எனக்கு இருந்து வருகிறது.

உணவுச் சீர்திருத்தம் அவசியமானது என்பது தெளிவு. ஏற்கனவே வீட்டில் தேநீரும் காப்பியும் புகுந்துவிட்டன. நான் இங்கிலாந்திலிருந்து திரும்பியதும், ஒருவிதமான ஆங்கிலச் சூழ்நிலை வீட்டில் இருக்கும்படி செய்வதே சரி என்று என் சகோதரர் நினைத்துவிட்டார். அதனால், எப்பொழுதோ விசேட சமயங்களில் மட்டும் உபயோகிப்பதற்கென்று வைத்திருந்த பீங்கான் சாமான்கள் முதலியன தினசரி உபயோகிப்பதற்கே வந்துவிட்டன. என்னுடைய ‘சீர்திருத்தங்கள்’ அதைப் பூர்த்தி செய்தன. தேநீருக்கும் காப்பிக்கும் பதிலாக, ஓட்ஸ் கஞ்சியையும் கோக்கோவையும் புகுத்தினேன். உண்மையில் தேநீருடனும் காப்பியுடனும் இவை அதிகப்படியாகவே சேர்ந்துவிட்டன. ஐரோப்பிய உடையையும் புகுத்தி, ஐரோப்பிய மயமாக்குவதைப் பூர்த்தி செய்தேன்.

இவ்வாறு செலவுகள் அதிகமாகிக்கொண்டே போயின. ஒவ்வொரு நாளும் புதிய சாமான்கள் சேர்க்கப்பட்டு வந்தன. யானையைக் கட்டித் தீனி போடும் கதை ஆகிவிட்டது. இந்தச் செலவுகளுக்கெல்லாம் வேண்டிய பணத்திற்கு எங்கே போவது? ராஜ்கோட்டில் நான் பாரிஸ்டர் தொழிலை ஆரம்பிப்பதென்றால் அது கேலிக்கு இடமானதாகும். தகுதி பெற்ற ஒரு வக்கீலுக்குத் தெரிந்ததுகூட எனக்குத் தெரியாது. என்றாலும், அவருக்குக் கொடுப்பதைவிட எனக்குப் பத்து மடங்கு அதிகக் கட்டணம் கொடுக்க வேண்டும் என்று எதிர்பார்த்தேன்! அப்படி என்னை வக்கீலாக வைத்துக்கொள்ள, எந்தக் கட்சிக்காரரும் முட்டாள் அல்ல. அப்படிப்பட்ட ஒருவர் கிடைத்துவிடுகிறார் என்றே வைத்துக்கொண்டாலும், என்னுடைய அறியாமையுடன் அகம்பாவத்தையும் மோசடியையும் புதிதாகச் சேர்த்து, உலகிற்கு நான் பட்டிருக்கும் கடனை இன்னும் அதிகமாக்கிக்கொள்ளுவதா?

ஹைகோர்ட்டு அனுபவத்தைப் பெறுவதற்கும், இந்தியச் சட்டத்தைப் படித்துக்கொள்ளுவதற்கும், முடிந்த வரையில் வழக்குகள் கிடைக்கும்படி செய்துகொள்ளுவதற்கும் நான் பம்பாய் போவது நல்லது என்று, நண்பர்கள் யோசனை கூறினர். இந்த யோசனையை ஏற்றுக்கொண்டு, அப்படியே பம்பாய்க்குப் போனேன்.

பம்பாயில் என்னைப்போன்றே தகுதியற்றவரான ஒரு சமையற்காரரை வைத்துக்கொண்டு, குடித்தனத்தை ஆரம்பித்தேன். அவர் ஒரு பிராமணர். அவரை வேலைக்காரராகப் பாவித்து நடத்தாமல், குடும்பத்தைச் சேர்ந்த ஒருவராகவே நடத்தினேன். அவர், மேலே தண்ணீரை ஊற்றிக்கொள்ளுவாரேயன்றித் தேய்த்துக் குளிக்கமாட்டார். அவருடைய வேட்டி ஒரே அழுக்காயிருக்கும்; பூணூலும் அப்படித்தான். சாத்திரங்களைப் பற்றியோ அவருக்கு ஒன்றுமே தெரியாது. அவரைவிட நல்ல சமையற்காரர் எனக்குக் கிடைப்பது எப்படி?

ரவிசங்கர் என்பது அவர் பெயர். "ரவிசங்கர், உமக்கு சமையல் தெரியாமல் இருக்கலாம். ஆனால், உமக்குச் சந்தியா வந்தன மந்திரம் முதலியன தெரிந்தே இருக்க வேண்டுமே?" என்று கேட்டேன்.

அதற்கு அவர், "சந்தியாவந்தன மந்திரமா, ஐயா? கலப்பையே எங்கள் சந்தியாவந்தனம்; மண்வெட்டியே எங்கள் அன்றாட அனுஷ்டானம். அந்த வகையைச் சேர்ந்த பிராமணன் நான். உங்கள் கிருபையைக் கொண்டு நான் வாழ வேண்டியவன். இல்லாவிட்டால் எனக்கு விவசாயம் இருக்கவே இருக்கிறது" என்றார்.

ஆகவே, ரவிசங்கருக்கும் நான் ஆசானாக இருக்க வேண்டியதாயிற்று. எனக்கோ, வேண்டிய அவகாசம் இருந்தது. சமையல் வேலையில் பாதியை நானே செய்ய ஆரம்பித்தேன். கறிகாய்ச் சமையலில் ஆங்கிலப் பரிசோதனைகளையெல்லாம் புகுத்தினேன். ஓர் எண்ணெய் அடுப்பு வாங்கினேன். ரவிசங்கருடன் அடுப்பங்கரை வேலைகளைக் கவனிக்கத் தலைப்பட்டேன். பிறருடன் ஒரே பந்தியில் உட்கார்ந்துகொண்டு சாப்பிடுவதில் எனக்கு ஆட்சேபம் இல்லை. ரவி சங்கருக்கும் அது கிடையாது. ஆகவே இருவரும் சேர்ந்து, சுகமாகவே வாழ்க்கை நடத்தி வந்தோம். ஆனால், ஒன்றே ஒன்றுதான் குறுக்கே நின்றது. அதாவது, அழுக்காகவே இருப்பது, உணவையும் சுத்தமில்லாமல் வைப்பது என்று ரவிசங்கர் விரதம் கொண்டிருந்தார்!

செலவு அதிகரித்துக்கொண்டே போயிற்று. அதைச் சரிக்கட்டிக்கொள்ளுவதற்கு வருமானமே இல்லை. ஆகையால், பம்பாயில் நான்கு, ஐந்து மாதங்களுக்கு மேல் காலம் தள்ள என்னால் முடியவில்லை.

இப்படித்தான் நான் என் வாழ்க்கையை ஆரம்பித்தேன். பாரிஸ்டர் தொழில், கொஞ்ச அறிவும் அதிக ஆடம்பரமும் உடைய மோசமான தொழில் என்று எனக்குத் தோன்றியது. எனக்கு இருந்த பொறுப்பை எண்ணி, பெரிதும் கவலைக்கு உள்ளானேன்.

# 3

# முதல் வழக்கு

பம்பாயில் இருந்தபோது, ஒருபுறம் இந்தியச் சட்டத்தைப் படிக்கலானேன்; மற்ருெரு புறமோ, உணவைப்பற்றிய என் ஆராய்ச்சிகள். இதில் வீரசந்திர காந்தி என்ற ஒரு நண்பரும் என்னுடன் சேர்ந்துகொண்டார். என் சகோதரரோ, எனக்குக் கட்சிக்காரர்களைப் பிடிப்பதற்காக அவரளவில் தம்மால் ஆனதை யெல்லாம் செய்துகொண்டிருந்தார்.

இந்தியச் சட்டங்களைப் படிப்பது சங்கடமான வேலையாக இருந்தது. சிவில் நடைமுறைச் சட்டத்தைப் படிக்க என்னுல் முடியவே இல்லை. ஆனுலும், 'சாட்சிகள் சட்ட' விஷயம் அப்படி இல்லை. வீரசந்திர காந்தி சொலிஸிட்டர் பரீட்சைக்குப் படித்துக்கொண்டிருந்தார். பாரிஸ்டர்களையும் வக்கீல்களையும் குறித்து எல்லாவிதமான கதைகளையும் அவர் எனக்குச் சொல்லுவார். "ஸர் பிரோஸ்ஷாவின் ஆற்றலுக்குக் காரணமே, சட்டத்தில் அவருக்கு இருக்கும் அபாரமான ஞானந்தான். 'சாட்சிகள் சட்டம்' அவருக்கு மனப்பாடமாகத் தெரியும். அதன் முப்பத்திரண்டாவது பிரிவு சம்பந்தப்பட்ட வழக்குகள் எல்லாவற்றையும் அறிவார். பத்ருதீன் தயாப்ஜியின் அற்புதமான விவாத சக்தி, நீதிபதிகளை ஆச்சரியத்தில் மூழ்கும்படி செய்து விடுகிறது" என்பார். பெரிய வக்கீல்களைப்பற்றிய இத்தகைய கதைகளெல்லாம் என்னுடைய மனச்சோர்வை அதிகமாக்கிவிட்டன.

அவர் மேலும் கூறுவார்: "ஒரு பாரிஸ்டர் ஐந்து அல்லது ஏழு ஆண்டுகளுக்கு வருவாய் இல்லாமல் காத்திருக்க நேருவது அசாதாரணம் அன்று. அதனுல்தான் நான் சொலிஸிட்டர் பரீட்சைக்குப் போகிறேன். மூன்று ஆண்டுகளில் உம் வாழ்க்கைப் படகை நீரே செலுத்திக்கொள்ள உம்மால் முடிந்துவிட்டால், உம்மை நீர் அதிருஷ்டசாலி என்று கருதிக்கொள்ள வேண்டும்."

மாதத்திற்கு மாதம் செலவு அதிகரித்துக்கொண்டே போயிற்று. உள்ளுக்குள் பாரிஸ்டர் தொழிலுக்குத் தயாராகிக் கொண்டு வரும்போதே, பாரிஸ்டர் என்ற விளம்பரப் பலகையை வெளியில் தொங்கவிடுவது என் மனத்துக்குச் சமாதானம் தராத ஒரு விஷயம். இதனுல் என் படிப்பில் நான் முழுக் கவனத்தையும் செலுத்த இயலவில்லை. சாட்சியத்தைப்பற்றிய சட்டத்தைப் படிப்பதில் ஓரளவுக்கு எனக்கு விருப்பம் பிறந்தது. மேய்னே என்பவர் எழுதிய, 'ஹிந்து சட்ட' புத்தகத்தை ஆழ்ந்த சிரத்தையுடன் படித்தேன். ஆனுலும், ஒரு வழக்கை நடத்துவதற்கான துணிவு எனக்கு இல்லை. சொல்லால் கூற முடியாத அளவுக்கு

நான் அதைரியம் கொண்டிருந்தேன். மாமனார் வீட்டுக்குப் புதிதாக வந்த மருமகளைப்போலத் தவித்தேன்!

அந்த சமயத்தில், மமிபாய் என்ற ஒருவரின் வழக்கை நடத்துவதற்கு எடுத்துக்கொண்டேன். அது, 'ஸ்மால்காஸ்' வழக்கு. அந்த வழக்கைக் கொண்டுவந்து கொடுத்த தரகருக்கு ஏதாவது கொஞ்சம் தரகுப் பணம் தரவேண்டும் என்று சொன்னார்கள். அப்படிக் கொடுப்பதற்கு நான் கண்டிப்பாக மறுத்துவிட்டேன்.

"மாதம் மூவாயிரம், நாலாயிரம் சம்பாதிக்கும் பெரிய கிரிமினல் வக்கீலான இன்னார்கூடத் தரகு கொடுக்கிறாரே!" என்றார்கள்.

"அவரை நான் பின்பற்ற வேண்டியதில்லை" என்றேன். "எனக்கு மாதம் ரூ. 300 கிடைத்தாலே போதும். என் தந்தை அதற்குமேல் சம்பாதிக்கவில்லை" என்றும் கூறினேன்.

"அந்தக் காலமெல்லாம் மலையேறிவிட்டது. இப்பொழுது பம்பாயில், பயப்பட வேண்டிய அளவுக்குச் செலவுகள் கூடிவிட்டன. ஆகையால், நீர் சாமர்த்தியமாக நடந்துகொள்ள வேண்டும்" என்றார்கள்.

நான் பிடிவாதமாக இருந்துவிட்டேன். தரகுப் பணம் கொடுக்கவில்லை என்றாலும் மமிபாயின் வழக்கு என்னிடம் வந்தது. அது மிகவும் சுலபமான வழக்கு. எனக்கு ரூ. 30 கட்டணம் கொடுக்க வேண்டும் என்றேன். கோர்ட்டில் அந்த வழக்கு, ஒரு நாளைக்குமேல் நடக்கும் என்று தோன்றவில்லை.

ஸ்மால்காஸ் கோர்ட்டில் நான் ஆஜராவது அதுவே முதல் தடவை. நான் பிரதிவாதிக்காக ஆஜரானதால் வாதியின் சாட்சிகளை நான் குறுக்கு விசாரணை செய்ய வேண்டும். அதற்காக எழுந்தேன். ஆனால், என் தைரியமெல்லாம் போய், தலை சுற்ற ஆரம்பித்துவிட்டது. கோர்ட்டு முழுவதுமே சுழலுவதாக எனக்குத் தோன்றிற்று. குறுக்கு விசாரணை செய்ய ஒரு கேள்விகூட என் சிந்தனையில் எழவில்லை. நீதிபதி சிரித்திருப்பார்; வக்கீல்களும் இக்காட்சியை ரசித்திருப்பார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால் நானோ, இதில் எதையுமே காணும் நிலையில் இல்லை. பேசாமல் உட்கார்ந்துவிட்டேன். 'இந்த வழக்கை நடத்த என்னால் முடியாது. பட்டேலை அமர்த்திக் கொள்ளலாம். எனக்குக் கொடுத்த கட்டணத்தையும் திருப்பித் தந்துவிடுகிறேன்' என்று ஏஜெண்டிடம் சொன்னேன். ரூ. 51 கட்டணம் கொடுப்பதெனப் பேசி, ஸ்ரீ பட்டேல் வக்கீலாக அமர்த்தப்பட்டார். அவருக்கோ இந்த வழக்கு, குழந்தை விளையாட்டுப் போன்றதாகும்.

என் கட்சிக்காரர் வெற்றி பெற்ருரா, தோற்ருரா என்பது கூட எனக்குத் தெரியாது. கோர்ட்டைவிட்டு அவசரமாகக் கிளம்பினேன். ஆனல், என்னைக் குறித்து எனக்கே வெட்கமாக இருந்தது. வழக்கை நடத்தும் தைரியம் எனக்கு ஏற்படும் வரையில், எந்த வழக்கையும் எடுத்துக்கொள்ளுவதில்லை என்று முடிவு கட்டிக்கொண்டேன். நான் தென்னுப்பிரிக்காவுக்குச் செல்லும் வரையில், திரும்பவும் கோர்ட்டுக்குப் போகவே இல்லை. நான் செய்துகொண்ட தீர்மானத்தில் பாராட்டக் கூடியது எதுவும் இல்லை. அவசியத்தை முன்னிட்டு, வேறு வழி இல்லாமலேயே நான் அந்த முடிவுக்கு வந்தேன். தோற்றுப் போவதற்கு என்று வழக்கை என்னிடம் கொண்டுவந்து ஒப்படைக்க யாரும் அவ்வளவு முட்டாள்களாக இருக்க மாட்டார்கள்!

ஆயினும், பம்பாயில் இன்னும் ஒரு வழக்கு என்னிடம் வரக் காத்திருந்தது. ஒரு விண்ணப்பத்தைத் தயாரிக்க வேண்டி இருந்ததே அது. ஓர் ஏழை முஸ்லிமின் நிலத்தைப் போர் பந்தரில் பறிமுதல் செய்துவிட்டார்கள். பெரிய மனிதரான என் தந்தைக்கு ஏற்ற மகனுக நான் இருப்பேன் என்று எண்ணி, அவர் என்னிடம் வந்தார். அவருடைய கட்சியில் பலம் இல்லை என்றே தோன்றிற்று. என்ருலும், விண்ணப்பத்தை அச்சிடும் செலவை அவர் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கூறி, விண்ணப்பம் தயாரிக்க ஒப்புக்கொண்டேன். அதைத் தயாரித்து, நண்பர்களுக்குப் படித்துக் காட்டினேன். அவர்களும் அதை அங்கீகரித்தார்கள். விண்ணப்பம் தயாரிப்பதிலாவது எனக்குத் தகுதியிருக்கிறது என்ற அளவுக்கு அது எனக்கு நம்பிக்கை ஏற்படும்படி செய்தது. உண்மையிலேயே அந்த ஆற்றல் எனக்கு இருந்தது.

கட்டணம் எதுவுமே வாங்கிக்கொள்ளாமல் நான் விண்ணப்பங்கள் தயாரித்துக் கொடுப்பதாக இருந்தால் என் தொழில் நன்ருக நடக்கும். ஆனல், சாப்பாட்டுக்கு வழி வேண்டுமே? உபாத்தியாயர் தொழிலுக்குப் போய்விடலாமா என்று எண்ணினேன். எனக்கு ஆங்கில ஞானமும் நன்ருக இருந்தது. ஏதாவது ஒரு பள்ளிக்கூடத்தில் மெட்ரிகுலேஷன் மாணவருக்கு ஆங்கிலம் போதிக்கும் வேலை, எனக்குப் பிரியமாக இருந்திருக்கும். இந்த வகையில் என் செலவில் ஒரு பகுதியையாவது நான் சமாளித்தவனுவேன். பத்திரிகைகளில் ஒரு விளம்பரத்தைப் பார்த்தேன்: 'தினம் ஒரு மணி நேரம் போதிப்பதற்கு ஓர் ஆங்கில ஆசிரியர் தேவை. சம்பளம் ரூ. 75' என்று அந்த விளம்பரத்தில் இருந்தது. ஒரு பிரபலமான உயர்நிலைப் பள்ளியின் விளம்பரமே அது. அந்த உத்தியோகத்திற்கு மனுப் போட்டேன். நேரில் சந்தித்துப் பேச அழைப்பும் வந்தது. அதிக உற்சாகத்தோடு அங்கே போனேன். நான் பி.ஏ. பட்டதாரி அல்ல என்பதை அப் பள்ளிக்கூடத் தலைமையாசிரியர்

கண்டுகொண்டதும், என்னை நியமிக்க வருத்தத்துடன் மறுத்து விட்டார்.

"ஆனால், லத்தீனை இரண்டாவது மொழியாகக் கொண்டு நான் லண்டன் மெட்ரிகுலேஷன் பரீட்சையில் தேறியிருக்கிறேனே" என்றேன்.

"உண்மை. ஆனால், எங்களுக்குப் பி. ஏ. பட்டதாரியே வேண்டும்" என்று அவர் சொல்லிவிட்டார்.

ஆகவே, வேறு வழியில்லை. மனம் சோர்ந்துபோய்க் கைகளைப் பிசைந்து கொண்டேன். என் சகோதரரும் அதிகக் கவலைப்பட்டார். பம்பாயில் மேற்கொண்டும் காலத்தை வீணாக்கிக்கொண்டிருப்பதில் பயனில்லை என்ற முடிவுக்கு இருவரும் வந்துவிட்டோம். என் சகோதரர், ராஜ்கோட்டில் ஒரு சின்ன வக்கீல். நானும் அங்கே போய்விடுவது என்று முடிவாயிற்று. மனுக்கள், விண்ணப்பங்கள் தயாரிப்பதில் கொஞ்சம் வேலையை அவர் எனக்குக் கொடுக்கலாம். மேலும் இப்பொழுதே ராஜ்கோட்டில் ஒரு குடித்தனம் இருப்பதால் பம்பாயில் இருக்கும் குடித்தனத்தை எடுத்துவிடுவதால் பணமும் நிரம்ப மிச்சமாகும். இந்த யோசனை எனக்குப் பிடித்தது. இவ்விதம் பம்பாயில் ஆறு மாதங்கள் தங்கியிருந்த பிறகு, அங்கே இருந்த என் குடித்தனத்தைக் கலைத்துவிட்டோம்.

நான் பம்பாயில் இருந்தபோது, தினமும் ஹைகோர்ட்டுக்குப் போவேன். ஆனால், அங்கே ஏதாவது கற்றுக்கொண்டதாக நான் கூறுவதற்கில்லை. அதிகமாகக் கற்றுக்கொள்ளுவதற்கு வேண்டிய சட்ட ஞானம் எனக்கு இல்லை. வழக்குகளின் நடைமுறை எனக்குப் பிடிபடுவதில்லை. ஆகையால் அங்கே தூங்கிவிட்டுத் திரும்புவேன். இதில் எனக்குக் கூட்டாளிகள் பலர் இருந்தனர். ஆகவே, நான் அவ்வளவாக வெட்கப்படுவதில்லை. கொஞ்ச நாட்களுக்குப் பிறகு, ஹைகோர்ட்டில் தூங்குவதே ஒரு நாகரிகம் என்று எண்ணக் கற்றுக்கொண்டு விட்டதும், இருந்த வெட்க உணர்ச்சியுங்கூட என்னை விட்டுப் போய்விட்டது.

பம்பாயில் நான் இருந்ததைப்போல், இந்தத் தலைமுறையிலும், கட்சிக்காரரே இல்லாத பாரிஸ்டர்கள் யாராவது இருப்பார்களானால், வாழ்க்கை நடத்துவதைப்பற்றிச் சில அனுபவ யோசனைகளை அவர்களுக்குக் கூற விரும்புகிறேன். கீர்காமில் நான் குடியிருந்தபோதிலும் நான் வண்டியிலோ, டிராம் வண்டியிலோ போவதே இல்லை. தினமும் ஹைகோர்ட்டுக்கு நடந்தே போவது என்பதை ஒரு விதியாக வைத்துக்கொண்டேன். அங்கே போய்ச் சேர எனக்கு நாற்பத்தைந்து நிமிடங்கள் ஆகும். வீட்டுக்குத் திரும்பும்போதும் அநேகமாக நடந்தே வருவேன். வெயிலில் நடந்து நடந்து, அந்தச் சூடும் என்னை எதுவும் செய்வதில்லை. கோர்ட்டுக்கு நடந்து போய் வந்துகொண்டிருந்ததால் அதிகப் பணம் மிச்சமாயிற்று. மேலும், பம்பாயில் என் நண்பர்

களில் பலர், வழக்கமாக நோயுற்று வந்தபோது, நான் ஒரு தடவையேனும் நோய்வாய்ப் பட்டதில்லை. நான் பணம் சம்பாதிக்க ஆரம்பித்துவிட்ட பிறகுங்கூட, காரியாலயத்திற்கு நடந்தே போய்த் திரும்பும் வழக்கத்தை மாத்திரம் விடவே இல்லை. அப் பழக்கத்தின் நன்மைகளை நான் இன்னும் அனுபவித்து வருகிறேன்.

## 4

## முதல் அதிர்ச்சி

ஏமாற்றத்துடன் பம்பாயிலிருந்து புறப்பட்டேன். ராஜ்கோட்டிற்குப் போய் அங்கே என் அலுவலகத்தை அமைத்துக் கொண்டேன். அங்கே என் தொழில் கொஞ்சம் நன்றாகவே நடந்துவந்தது. மனுக்களும், விண்ணப்பங்களும் தயாரித்துக் கொடுப்பதில் சராசரி மாதத்திற்கு ரூ. 300 எனக்குக் கிடைத்து வந்தது. இதற்கு என் சொந்தத் திறமையைவிட என் சகோதரரின் செல்வாக்குத்தான் முக்கியமான காரணம். அவருடைய கூட்டாளியான வக்கீலுக்குத் தொழில் நன்றாக நடந்து வந்தது. உண்மையில் முக்கியமானவையாக இருக்கும், அல்லது முக்கியமானவை என்று அவருக்குத் தோன்றும் மனுக்களைத் தயாரிக்கும் வேலையை, அவர், பெரிய பாரிஸ்டர்களிடம் கொடுத்துவிடுவார். அவரிடம் வரும் ஏழைக் கட்சிக்காரர்களுக்காகத் தயாரிக்க வேண்டிய விண்ணப்பங்களே என் பங்கில் விழுந்தன.

வழக்குப் பிடித்துத் தருகிறவர்களுக்குத் தரகுப் பணம் கொடுப்பதில்லை என்ற கொள்கையைப் பம்பாயில் நான் கண்டிப்பாகக் கடைப்பிடித்து வந்தேன். ஆனால், அந்தக் கொள்கையை இப்போது நான் விட்டுக்கொடுக்க வேண்டியதாயிற்று என்பதை நான் ஒப்புக்கொள்ள வேண்டும். இந்த இரண்டு நிலைமைகளுக்கும் வித்தியாசம் உண்டு என்றார்கள். பம்பாயில் தரகுப் பணம், வழக்குத் தரகர்களுக்குக் கொடுக்க வேண்டியிருந்தது. ஆனால் இங்கோ, நம்மை அமர்த்தும் வக்கீலுக்குக் கொடுக்க வேண்டும். அதோடு பம்பாயைப் போன்றே, இங்கும் ஒருவர்கூடப் பாக்கியில்லாமல் எல்லாப் பாரிஸ்டர்களும் தரகு கொடுக்கிறார்கள் என்றும் எனக்குச் சொன்னார்கள். என் சகோதரர் கூறிய வாதத்திற்கு என்னால் பதில் சொல்ல முடியவில்லை. அவர் சொன்னார்: "நான் மற்றொரு வக்கீலுடன் கூட்டாளியாக இருக்கிறேன். உன்னால் செய்ய முடியும் வேலைகள் எல்லாவற்றையும் உனக்கே கொடுத்துவிட வேண்டும் என்றுதான் நான் விரும்புவேன். அப்படியிருக்க என் கூட்டாளிக்குத் தரகுத் தொகை கொடுக்க நீ மறுத்துவிட்டால், நிச்சயமாக என் நிலைமை சங்கடமானதாகிவிடும். நீயும் நானும் ஒரே குடும்பமாக இருக்கிறோம், ஆகையால், உனக்குக் கிடைக்கும் ஊதியம் நம் பொது வருமானத்தில் சேர்ந்துவிடுகிறது. எனவே, அதில் எனக்கு ஒரு பங்கு, தானே கிடைத்துவிடுகிறது. ஆனால், என் கூட்டாளியின் நிலைமை என்ன? உனக்

குக் கொடுக்கும் அதே வேலையை, அவர் வேறொரு பாரிஸ்டரிடம் கொடுக்கிறார் என்று வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது இவருக்கு அவரிடமிருந்து நிச்சயமாகத் தரகுப் பணம் கிடைத்து விடும்!'' இந்த வாதம் என்னை மாற்றிவிட்டது. நான் பாரிஸ்டர் தொழிலை நடத்த வேண்டுமானால் இத்தகைய வேலைகளுக்குத் தரகு கொடுப்பதில் என் கொள்கையை வற்புறுத்த முடியாது என்பதை உணர்ந்தேன். இப்படித்தான் எனக்குள்ளேயே நான் விவாதித்துக்கொண்டேன்; உண்மையைச் சொன்னால் என்னை நானே ஏமாற்றிக்கொண்டேன். என்றாலும், இன்னும் ஒன்றும் கூறுவேன். இங்கே கொடுத்ததைத் தவிர வேறு எந்த வழக்குச் சம்பந்தமாகவும் நான் தரகு கொடுத்ததாக நினைவு இல்லை.

இவ்விதம் என் வாழ்க்கைச் செலவுக்குப் போதுமானதை நான் சம்பாதிக்க ஆரம்பித்துவிட்டேன். என்றாலும் இச்சமயத்தில்தான், என் வாழ்க்கையிலேயே முதல் அதிர்ச்சியும் எனக்கு உண்டாயிற்று. ஒரு பிரிட்டிஷ் அதிகாரி என்றால் அவர் எப்படியெல்லாம் இருப்பார் என்பதைக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால், அச் சமயம் வரையில் அப்படிப்பட்ட ஒருவரை நான் நேருக்கு நேராகப் பார்த்ததில்லை.

போர்பந்தரின் காலஞ்சென்ற ராணாசாகிப் பட்டத்திற்கு வருவதற்கு முன்னால், என் சகோதரர் அவருக்குக் காரியதரிசியாகவும் ஆலோசகராகவும் இருந்தார். என் சகோதரர் அந்த உத்தியோகத்தில் இருந்தபோது ராணாவுக்குத் தவறான ஆலோசனைகளைக் கூறிவிட்டார் என்ற ஒரு குற்றச்சாட்டை என் சகோதரரின் தலைமீது இப்பொழுது சுமத்தியிருந்தார்கள். விஷயம் ராஜீய ஏஜெண்டிடம் போய்விட்டது. அவரோ, என் சகோதரரின்மீது கெட்ட அபிப்பிராயம் கொண்டிருந்தார். நான் இங்கிலாந்தில் இருந்தபோது, இந்த அதிகாரியை அறிவேன். ஓர் அளவுக்கு அவர் எனக்கு நண்பராகவும் இருந்தார் என்று சொல்லலாம். அந்தச் சிநேகிதத்தைப் பயன்படுத்திக்கொண்டு, ராஜீய ஏஜெண்டிடம் தம்மைப்பற்றி நான் பேசி, அவருக்கு இருந்த தவறான அபிப்பிராயத்தை நான் போக்க வேண்டும் என்று என் சகோதரர் விரும்பினார். இந்த யோசனை எனக்குக் கொஞ்சமும் பிடிக்கவே இல்லை. இங்கிலாந்தில் ஏற்பட்ட சொற்ப நட்பை நான் பயன்படுத்திக்கொள்ளப் பார்க்கக்கூடாது என்று எண்ணினேன். என் சகோதரர் செய்தது தவறாகவே இருக்குமாயின், என் சிபாரிசினால் என்ன பயன்? அவர் குற்றமற்றவர் என்றால், முறைப்படி விண்ணப்பத்தை அனுப்பிவிட்டுத் தாம் நிரபராதி என்ற தைரியத்துடன், முடிவை எதிர்நோக்குவதே சரியானது. ஆனால், நான் கூறிய இந்த யோசனை என் சகோதரருக்குப் பிடிக்கவில்லை. அவர் சொன்னதாவது: ''உனக்குக் கத்தியவாரைப்பற்றி ஒன்றுமே தெரியாது. உலக அனுபவமும் உனக்குப் போதவில்லை. செல்வாக்கு ஒன்றுதான் இங்கே முக்கியம். உனக்குத் தெரிந்தவரான ஓர் அதிகாரியிடம் என்னைக் குறித்து

நீ ஒரு நல்ல வார்த்தை சொல்ல நிச்சயம் முடியும் என்று இருக்கும்போது, சகோதரனுகிய நீ, உன் கடமையைத் தட்டிக் கழிப்பது சரியல்ல."

அவருக்கு நான் மறுத்துக் கூற முடியாது. அதனல், என் விருப்பத்திற்கு மாருகவே அந்த அதிகாரியிடம் போனேன். அவரிடம் போவதற்கு, எனக்கு எந்தவிதமான உரிமையும் இல்லை என்பதை அறிவேன். என்னுடைய சுயமதிப்பையும் விட்டுத்தான் நான் அவரிடம் போகிறேன் என்பதையும் நான் நன்ருக அறிந்தே இருந்தேன். ஆயினும், பார்க்கவேண்டும் என்று கோரி, அனுமதியும் பெற்றேன். எங்களுக்குள் இருந்த பழைய பழக்கத்தையும் அவருக்கு நினைவூட்டினேன். ஆனல், இங்கிலாந்திற்கும் கத்தியவாருக்கும் வித்தியாசம் அதிகம் என்பதை உடனே கண்டேன். ஓர் அதிகாரி, ஓய்வு பெற்றிருக்கும்போது ஒரு மனிதராகவும், உத்தியோகத்தில் அமர்ந்திருக்கும்போது வேறு மனிதராகவும் ஆகிவிடுகிருர் என்பதையும் அறிந்தேன். என்னைத் தமக்குத் தெரியும் என்பதை ராஜீய ஏஜெண்டு ஒப்புக்கொண்டார். ஆனல், அப்பழக்கத்தை நினைவூட்டியதால் அவருடைய கடுகடுப்பு அதிகமானதாகவே தெரிந்தது. 'அந்தப் பழக்கத்தைத் தவருன வழியில் உபயோகித்துக்கொள்ளுவதற்காக நீர் இங்கே வரவில்லையல்லவா?' என்பதே அவருடைய கடுகடுப்புக்குப் பொருள் போல் தோன்றியது. அது அவர் முகத்திலும் பிரதிபலித்தது. என்ருலும், நான் வந்த காரியத்தை அவரிடம் சொல்ல ஆரம்பித்தேன். அதற்குள் துரை பொறுமையை இழந்துவிட்டார். "உமது சகோதரர் சூழ்ச்சிக்காரர். அவரைப்பற்றி உம்மிடமிருந்து எதையும் கேட்க நான் விரும்பவில்லை. எனக்கு நேரமும் கிடையாது. ஏதாவது சொல்லிக்கொள்ள வேண்டும் என்று உம் சகோதரர் விரும்பினல், முறைப்படி அதை மனுச் செய்துகொள்ளட்டும்" என்ருர். இந்தப் பதில் போதுமானது. இப்படிப்பட்ட பதிலே எனக்குச் சரியானதாகவும் இருக்கலாம். ஆனல், சுயநலம் ஒருவனைக் குருடாக்கிவிடுகிறது. நான், என் கதையைச் சொல்லிக்கொண்டே போனேன். துரை எழுந்து, "இப்பொழுது நீர் போய்விட வேண்டும்" என்ருர்.

"தயவுசெய்து நான் சொல்லுவதை முழுவதும் கேளுங்கள்" என்றேன். இப்படி சொன்னதும் அவருக்குக் கோபம் அதிகமாகிவிட்டது. அவர் தமது சேவகனைக் கூப்பிட்டு, என்னை வெளியே அனுப்பும்படி சொன்னர். அப்பொழுதும் நான் தயங்கிக்கொண்டே நின்றேன். சேவகன் உள்ளே வந்து, என் தோளில் கைபோட்டு, என்னை வெளியே தள்ளிவிட்டான்.

துரையும் சேவகனும் போய்விட்டனர். நானும் புறப்பட்டேன். கோபமும் ஆத்திரமும் என் மனத்தில் பொங்கிக்கொண்டிருந்தன. உடனே ஒரு குறிப்பு எழுதி, அதை அவருக்கு அனுப்பினேன். அக் குறிப்பில், "நீங்கள் என்னை அவமானப் படுத்திவிட்டீர்கள். உங்கள் சேவகனைக் கொண்டு என்னைத் தாக்கிவிட்டீர்கள்.

இதற்குத் தக்க பரிகாரம் செய்யாவிட்டால், நான் உங்கள் மீது வழக்குத் தொடர நேரும்'' என்று எழுதியிருந்தேன்.

உடனே அவருடைய சிப்பாயின் மூலம், எனக்குப் பின்கண்ட பதிலும் கிடைத்தது: ''நீர் என்னிடம் முரட்டுத்தனமாக நடந்து கொண்டீர். போய்விடுமாறு நான் உம்மிடம் கூறியும், நீர் போக வில்லை. உம்மை வெளியே அனுப்புமாறு என் சேவகனுக்கு உத்தரவிடுவதைத் தவிர எனக்கு வேறு வழியில்லை. வெளியே போகுமாறு அவன் சொன்னதற்கும் நீர் போக மறுத்தீர். ஆகவே, உம்மை வெளியே அனுப்புவதற்குப் போதுமான பலாத்காரத்தை அவன் உபயோகிக்க வேண்டியதாயிற்று. உமது விருப்பம்போல் எந்த நடவடிக்கையை வேண்டுமானாலும் நீர் எடுத்துக்கொள்ள லாம்.''

இந்தப் பதிலை என் சட்டைப் பையில் வைத்துக்கொண்டு, இடிந்துபோய் வீடு திரும்பினேன். நடந்ததையெல்லாம் என் அண்ணனிடம் சொன்னேன். அவரும் வருத்தப்பட்டார். ஆனால், என்னைத் தேற்றுவது எப்படி என்பது அவருக்கும் தெரியவில்லை. துரைமீது எப்படி வழக்குத் தொடருவது என்பது எனக்குத் தெரியாதுபோகவே, அவர் தமது வக்கீல் நண்பர்களிடம் இதைக் குறித்துக் கலந்து ஆலோசித்தார். அச் சமயத்தில் ஸர் பிரோஸ்ஷா மேத்தா ராஜ்கோட்டில் இருந்தார். ஏதோ ஒரு வழக்குக்காக அவர் அங்கே வந்திருந்தார். ஆனால், என்னைப் போன்ற ஒரு சின்ன பாரிஸ்டர் அவரைப் போய்ப் பார்க்க எவ்வாறு துணிய முடியும்? அவரை அங்கே ஒரு வழக்கிற்கு அமர்த்தியிருந்த ஒரு வக்கீலின்மூலம் என் வழக்குச் சம்பந்தமான தஸ்தாவேஜுகளை அனுப்பி, அவருடைய ஆலோசனையைக் கோரினேன். அவற்றைப் பார்த்துவிட்டு, அவர் பின்வருமாறு கூறினாராம்: ''அநேக வக்கீல்களுக்கும் பாரிஸ்டர்களுக்கும் இது சாதாரணமான அனுபவம் என்று காந்தியிடம் கூறுங்கள். அவர் இப்பொழுதுதான் இங்கிலாந்திலிருந்து வந்திருக்கிறார். ஆகையால், அவருக்கு ரோஷம் அதிகமாக இருக்கிறது. பிரிட்டிஷ் அதிகாரிகளைக் குறித்து, அவருக்கு இன்னும் தெரியவில்லை. அவர் இங்கே ஏதோ கொஞ்சம் சம்பாதித்துச் சௌக்கியமாக வாழ விரும்பினால், அக் குறிப்பைக் கிழித்தெறிந்துவிட்டு, அவமானத்தையும் சகித்துக்கொள்ளட்டும். துரைமீது வழக்குத் தொடுத்து, அவர் அடையப் போவது எதுவும் இல்லை. அதற்கு மாறாக, தம்மையே நாசப்படுத்திக் கொண்டதாகவும் அது ஆக லாம். வாழ்க்கையைப்பற்றி அவர் இன்னும் நிறையத் தெரிந்து கொள்ளவேண்டி யிருக்கிறது என்பதையும் அவருக்குச் சொல் லுங்கள்.''

இந்தப் புத்திமதி, விஷம்போல எனக்குக் கசப்பாகவே இருந்தது. என்றாலும், இதை நான் விழுங்கியே ஆக வேண்டிய தாயிற்று. அவமானத்தைச் சகித்துக்கொண்டேன். அதனால் பலனையும் அடைந்தேன். 'இனி ஒருகாலும் இத்தகைய சங்கட மான நிலைக்கு என்னை உட்படுத்திக்கொள்ள மாட்டேன்: நட்பை

இவ்விதம் பயன் படுத்திக்கொள்ளவும் முயலமாட்டேன்' என்று எனக்குள்ளே நான் சொல்லிக்கொண்டேன். அதன்பின் இந்த உறுதியிலிருந்து மாறும் குற்றத்தை நான் செய்ததே இல்லை. இந்த அதிர்ச்சி என் வாழ்க்கையின் போக்கையே மாற்றிவிட்டது.

# 5

# ஆப்பிரிக்கா செல்ல ஏற்பாடு

அந்த அதிகாரியிடம் நான் போனதே தவறு என்பதில் சந்தேகமில்லை. ஆனால், அவர் காட்டிய பொறுமையின்மையும், அளவு கடந்த கோபமும் என் தப்புக்கு மிகவும் அதிகப்படியானவையே. வெளியில் பிடித்துத் தள்ள வேண்டியதற்கான தப்பை நான் செய்துவிடவில்லை. அவருடைய நேரத்தில், நான் சொன்னதைக் கேட்க, ஐந்து நிமிடங்களுக்கு மேல் ஆகியிராது. ஆனால், நான் பேசியதே அவருக்குப் பொறுக்கவில்லை. போய்விடும்படி அவர் மரியாதையாக எனக்குச் சொல்லியிருக்கலாம். ஆனால், அவருக்கு அளவுக்கு மீறி அதிகார போதை இருந்தது. பொறுமை என்ற குணத்திற்கும் இந்த அதிகாரிக்கும் வெகு தூரம் என்பது எனக்குப் பின்னால் தெரிந்தது. தம்மைப் பார்க்க வருகிறவர்களை அவமதிப்பதே அவருக்குப் பழக்கமாம். அவருடைய விருப்பத்திற்கு மாறாக ஏதேனும் அற்பக் காரியம் நடந்துவிட்டாலும் அவருக்குக் கோபாவேசம் வந்துவிடுமாம்.

இப்பொழுதோ என் வேலைகளில் பெரும்பாலும் அவருடைய நீதி மன்றத்தில் நடந்தாக வேண்டியவை. அவரைச் சமாதானப் படுத்துவது என்பதும் என்னால் ஆகாதது. எப்படியாவது அவருடைய தயவைத் தேடிக்கொள்ள வேண்டும் என்ற விருப்பமும் எனக்கு இல்லை. உண்மையில் அவர் மீது வழக்குத் தொடருவதாக நான் ஒரு முறை அவரைப் பயமுறுத்திவிட்ட பிறகு, சும்மா இருந்துவிட நான் விரும்பவில்லை.

இதற்கு மத்தியில் நாட்டின் சில்லறை ராஜீய விஷயங்களைக் குறித்தும் கொஞ்சம் தெரிந்துகொண்டேன். கத்தியவார் அநேக சிறு சிறு சமஸ்தானங்களைக் கொண்ட பகுதியாகையால், ராஜீயவாதிகள் ஏராளமாக முளைத்துக் கொண்டிருந்தனர். சமஸ்தானங்கள், ஒன்றுக்கொன்று சூழ்ச்சிகளில் ஈடுபடுவதும், அதிகாரத்திற்காக அதிகாரிகள் சூழ்ச்சிகளில் இறங்குவதும், அங்கே சர்வ சாதாரணம். சமஸ்தானாதிபதிகளோ, எப்பொழுதுமே பிறரை நம்பியிருக்க வேண்டியவர்களாக இருந்தனர். ஆகவே, இச்சகம் பேசுகிறவர்கள் சொல்லுவனவற்றிற்கெல்லாம் சமஸ்தானாதிபதிகள் செவிசாய்த்து வந்தனர். துரையின் சேவகனைக் கூடச் சரிக்கட்டி வைத்துக்கொள்ள வேண்டியிருந்தது. துரையின் சிரஸ்தாரே துரைக்குக் கண்களாகவும், காதுகளாகவும் மொழி பெயர்த்துச் சொல்லுபவராகவும் இருந்ததால், அவர், தம்

எஜமானனைவிட ஒருபடி மேலானவராகவே இருந்தார். சிரஸ்தார் வைத்ததுதான் சட்டம். அவருடைய வருமானம் துரையின் வருமானத்திற்கும் அதிகம் என்பது பிரபலமான விஷயம். இது ஒரு வேளை மிகைப்படுத்திக் கூறப்பட்டதாகவும் இருக்கலாம். என்ருலும் அவர், தமது சம்பளத்திற்கு மிஞ்சிய ஆடம்பர வாழ்க் கையையே நடத்திக் கொண்டிருந்தார்.

இந்தச் சூழ்நிலை, விஷமானது என்று எனக்குத் தோன்றிற்று. இதனால் பாதிக்கப்படாமல் அங்கே எப்படி இருப்பது என்பதே எனக்குத் தீராப் பிரச்னையாயிற்று.

நான் முற்றும் மனச்சோர்வை அடைந்துவிட்டேன். இதை என் சகோதரர் தெளிவாக அறிந்துகொண்டார். எனக்கு ஏதாவது ஓர் உத்தியோகம் கிடைத்துவிட்டால், இந்தச் சூழ்ச்சிச் சூழ்நிலையிலிருந்து நான் விடுதலை பெற்றுவிடுவேன் என்பதை நாங்கள் இருவருமே உணர்ந்தோம். ஆனால், சூழ்ச்சியையும் தந் திரத்தையும் கையாளாமல் ஒரு மந்திரி வேலையோ, நீதிபதி உத்தி யோகமோ கிடைப்பது முடியாத காரியம். துரையுடன் ஏற்பட்ட சச்சரவு, எனது தொழிலை நடத்திக்கொண்டு போவதற்கே இடையூருக நின்றது.

அச் சமயம் போர்பந்தர், பிரிட்டிஷ் அரசாங்கம் நியமித்த அதிகாரி ஒருவரின் நிர்வாகத்தில் இருந்தது. மன்னருக்கு அதிக அதிகாரங்கள் கிடைக்கும்படி செய்வது சம்பந்தமாக அங்கே எனக்குக் கொஞ்சம் வேலை இருந்தது. விவசாயிகளிடமிருந்து நிலத்தீர்வை அதிகப்படியாக வசூலிக்கப்பட்டு வந்தது சம்பந்தமாகவும் நான் அந்த நிர்வாக அதிகாரியைப் பார்க்க வேண்டியிருந்தது. அந்த அதிகாரி ஓர் இந்தியராக இருந்த போதிலும் அகம்பாவத்தில் துரையையும் மிஞ்சியவராக இருக் கக் கண்டேன். அவர் திறமைசாலியே. ஆனால், அவருடைய திறமையினால் விவசாயிகள் எந்த நன்மையையும் அடைந்து விட்டதாகத் தெரியவில்லை. ராணு மேற்கொண்டு சில அதிகாரங் களைப் பெறும்படி செய்வதில் நான் வெற்றி பெற்றேன். ஆனால், விவசாயிகளுக்கோ எந்தவிதமான கஷ்ட நிவாரணமும் ஏற்பட வில்லை. அவர்கள் விஷயம் இன்னது என்பதைக்கூட அந்த அதிகாரி சரிவரக் கவனிக்கவில்லை என்றே எனக் குத் தோன்றியது.

எனவே, இந்த வேலையிலும் நான் ஏமாற்றத்தையே அடைந் தேன் என்று சொல்ல வேண்டும். என் கட்சிக்காரர்களுக்கு நியா யம் வழங்கப்படவில்லை என்று எண்ணினேன். ஆனால், அவர்கள் நியாயத்தை அடையும்படி செய்வதற்கான சக்தி என்னிடம் இல்லை. நான் மேற்கொண்டும் ஏதாவது செய்வதென்ருல் ராஜீய ஏஜெண்டிடமோ, கவர்னரிடமோ முறையிட்டுக் கொள்ளலாம். ஆனால், அவர்களோ, 'இதில் நாங்கள் தலையிடுவதற்கில்லை' என்று என் அப்பீலை நிராகரித்து விடுவார்கள். இத்தகைய

முடிவுகள் சம்பந்தமாக அனுசரிக்க, விதிமுறை ஏதாவது இருந்தால், அதைக் கொண்டாவது ஏதாவது செய்து பார்க்கலாம். ஆனல், இங்கோ, துரையின் இஷ்டமே சட்டம் என்று இருக்கிறது. இதனல் எனக்கு உண்டான ஆத்திரத்தைச் சொல்லி முடியாது.

இதற்கு மத்தியில் போர்பந்தரைச் சேர்ந்த ஒரு மேமன்* வியாபாரக் கம்பெனியார், என் சகோதரருக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார்கள். அதில் அவர்கள் அறிவித்திருந்ததாவது : "தென்னாப்பிரிக்காவில் எங்களுக்கு வியாபாரம் இருக்கிறது. எங்களுடையது பெரிய வியாபாரக் கம்பெனி. எங்களுடைய பெரிய வழக்கு ஒன்று, அங்கே கோர்ட்டில் நடக்கிறது. 40,000 பவுன் வர வேண்டும் என்பது எங்கள் தாவா. இந்த வழக்கு நீண்டகாலமாக நடந்துகொண்டு வருகிறது. பெரிய வக்கீல்களையும் பாரிஸ்டர்களையும் அமர்த்தியிருக்கிறோம். உங்கள் சகோதரரை அங்கே அனுப்புவீர்களானல் எங்களுக்கும் உதவியாக இருக்கும் ; அவருக்கும் உதவியாக இருக்கும். வக்கீல்களுக்கு விஷயங்களை எடுத்துக்கூற, எங்களைவிட அவரால் நன்கு முடியும். அதோடு, உலகத்தில் புதியதொரு பகுதியைப் பார்க்கும் வாய்ப்பு ஏற்படுவதோடு புதிதாகப் பலருடன் பழகும் சந்தர்ப்பமும் அவருக்குக் கிடைக்கும்."

இந்த யோசனையைக் குறித்து, என் சகோதரர் என்னுடன் விவாதித்தார். வக்கீல்களுக்கு நான் விஷயங்களை எடுத்துச் சொல்ல மாத்திரம் வேண்டியிருக்குமா, கோர்ட்டிலும் ஆஜராக வேண்டியிருக்குமா என்பது எனக்குத் தெளிவாகவில்லை.

மேலே சொன்ன தாதா அப்துல்லா கம்பெனியில் ஒரு கூட்டாளியான, காலஞ்சென்ற சேத் அப்துல் கரீம் ஜவேரியை, என் சகோதரர் எனக்கு அறிமுகம் செய்து வைத்தார். "இந்த வேலை கஷ்டமானதாக இராது" என்று சேத் எனக்கு உறுதி கூறினர். "பெரிய வெள்ளைக்காரர்களெல்லாம் எங்கள் நண்பர்கள். அவர்களுடன் நீங்கள் பழக்கம் செய்துகொள்ளலாம். எங்கள் கடைக்கும் நீங்கள் பயன்படுவீர்கள். எங்கள் கடிதப்போக்குவரத்தெல்லாம் பெரும்பாலும் ஆங்கிலத்தில்தான். அதிலும் நீங்கள் எங்களுக்கு உதவி செய்யலாம். நீங்கள் எங்கள் விருந்தினரே. ஆகையால், உங்களுக்கு எந்தவிதமான செலவும் இராது" என்றார்.

"என் சேவை உங்களுக்கு எவ்வளவு காலத்திற்குத் தேவை ? நீங்கள் அதற்கு என்ன கொடுப்பீர்கள் ?" என்று கேட்டேன்.

---

* குஜராத்தில் முஸ்லிம்களிடையே, மேமன், போரா என்ற இரு வகுப்பினர் உண்டு. இந்தக் கம்பெனி மேமன் வகுப்பு முஸ்லிம்களில் சிலருக்குச் சொந்தமானது.

"ஓர் ஆண்டுக்கு மேல் தேவைப்படாது. உங்களுக்குப் போக வர முதல் வகுப்புக் கப்பல் கட்டணமும், மற்ற எல்லாச் செலவும் போக 105 பவுனும் தருகிறோம்" என்றார்.

நான் அங்கே போவது, பாரிஸ்டர் என்ற முறையிலேயே அன்று. அந்தக் கம்பெனியின் ஊழியன் என்ற வகையிலேயே போகிறேன். ஆனால், எப்படியாவது இந்தியாவிலிருந்து போய் விட வேண்டும் என்றும் விரும்பினேன். அதோடு புதிய நாட்டைப் பார்க்கலாம்; புதிய அனுபவங்களைப் பெறலாம் என்ற ஆசையும் இருந்தது. மேலும் 105 பவுனையும் என் சகோதரருக்கு அனுப்பி, குடும்பச் செலவுக்கு உதவி செய்யலாம். எந்தவிதமான பேரமும் பேசாமல் ஒப்புக்கொண்டு, தென்னாப்பிரிக்காவுக்குப் புறப்படுவதற்குத் தயாரானேன்.

## 6

# நேட்டால் சேர்ந்தேன்

இங்கிலாந்திற்குப் புறப்பட்டபோது பிரிவாற்றாமையால் என்ன மனக்கஷ்டம் இருந்ததோ, அத்தகைய உணர்ச்சியெல்லாம், இப்பொழுது தென்னாப்பிரிக்காவுக்குப் புறப்பட்டபோது இல்லை. என் தாயாரோ காலமாகிவிட்டார். எனக்குக் கொஞ்சம் உலக அனுபவமும் ஏற்பட்டுவிட்டது. ராஜ்கோட்டிலிருந்து பம்பாய்க்குப் போவதும் இப்பொழுது மிகச் சாதாரணமாகவே இருந்தது.

இத் தடவை, மனைவியை விட்டுப் பிரிந்து போகிறோமே என்பதைப்பற்றி மாத்திரமே எனக்கு மனக் கஷ்டம் இருந்தது. நான் இங்கிலாந்திலிருந்து திரும்பிய பின்னர், எங்களுக்கு மற்றும் ஒரு குழந்தை பிறந்தது. எங்கள் இருவருக்கும் இடையே இருந்த அன்பு, காமக் கலப்பு இல்லாதது என்று இன்னும் சொல்லிவிடுவதற்கு இல்லை. என்றாலும், அது நாளுக்கு நாள் தூய்மையாகி வந்தது. ஐரோப்பாவிலிருந்து நான் திரும்பி வந்த பிறகு, நாங்கள் இருவரும் சொற்ப காலமே சேர்ந்து வாழ்ந்திருக்கிறோம். அவ்வளவு அதிகச் சிரத்தையுடன் இல்லை என்றாலும், நான் அப்பொழுது அவளுக்கு ஆசிரியன் ஆகியிருந்தேன். சில சீர்திருத்தங்களை அடைவதற்கும் அவளுக்கு உதவி செய்து வந்தேன். அந்தச் சீர்திருத்தங்களைத் தொடர்ந்து அடைவதென்றால் நாங்கள் இருவரும் அதிகமாகச் சேர்ந்து வாழ்ந்து வரவேண்டியது அவசியம் என்பதை இருவருமே உணர்ந்தோம். ஆனால், தென்னாப்பிரிக்கா செல்வதில் ஏற்பட்ட கவர்ச்சி, பிரிந்து வாழ்வதையும் சகிக்கக்கூடிய தாக்கியது. அவளுக்கு ஆறுதலாக இருப்பதற்காக, "நாம் எப்படியும் ஓர் ஆண்டில் மீண்டும் சந்திப்போம்" என்று கூறிவிட்டுப் பம்பாய் செல்ல, ராஜ்கோட்டிலிருந்து புறப்பட்டேன்.

தாதா அப்துல்லா கம்பெனியின் காரியஸ்தர் மூலமாகவே கப்பல் டிக்கெட் கிடைக்கவேண்டியிருந்தது. ஆனால், கப்ப லிலோ இடமில்லை. அப்பொழுது நான் கப்பல் ஏறவில்லையென் ருல் பம்பாயிலேயே தங்கிவிட வேண்டிவரும். "கப்பலில் முதல் வகுப்பில் இடம் பெறுவதற்காக எங்களால் ஆன முயற்சிகளை யெல்லாம் செய்து பார்த்துவிட்டோம். பயனில்லை. மூன்ரும் வகுப்பில் போக நீங்கள் தயாராக இருந்தாலன்றி வேறு வழி யில்லை. உங்கள் சாப்பாட்டுக்கு வேண்டுமானல் முதல் வகுப் பில் ஏற்பாடு செய்துவிடலாம்" என்ருர், அக்காரியஸ்தர். நான் முதல் வகுப்பிலேயே பிரயாணம் செய்துவந்த காலம் அது. ஒரு பாரிஸ்டர், மூன்ரும் வகுப்பில் எவ்விதம் பிரயாணம் செய்ய முடி யும்? ஆகவே, அவர் கூறிய யோசனையை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டேன். முதல் வகுப்பில் இடம் கிடைக்கவில்லை என் பதை நான் நம்பவில்லை. காரியஸ்தரின் நேர்மையில் சந்தேகம் கொண்டேன். அவருடைய சம்மதத்தின் பேரில் கப்பலில் இடம் தேடிக்கொள்ளுவதற்கு நானே கிளம்பினேன். அக் கப்ப லுக்கே போனேன். அதன் பிரதம அதிகாரியையும் கண்டு பேசினேன். அவர் உள்ளதைச் சொல்லிவிட்டார். "வழக்க மாக எங்கள் கப்பலில் இப்படி இட நெருக்கடி ஏற்படுவதில்லை. ஆனல், மொஸாம்பிக்* கவர்னர் ஜெனரல் இக்கப்பலில் வருகிருர். ஆகையால், இடத்தையெல்லாம் அமர்த்திக் கொண்டுவிட்டனர்" என்ருர்.

"என்னையும் எப்படியாவது உள்ளே நுழைத்துவிட உங்க ளால் முடியாதா?" என்று கேட்டேன். அவர் உச்சியிலிருந்து உள்ளங்கால் வரை என்னை ஒரு முறை பார்த்துவிட்டுப் புன் னகை புரிந்தார். பிறகு, "ஒரே வழிதான் இருக்கிறது. என் அறையில் அதிகப்படியாக ஓர் இடம் இருக்கிறது. சாதா ரணமாக அதைப் பிரயாணிகளுக்குக் கொடுப்பதில்லை. ஆனல், அதை உங்களுக்குக் கொடுக்க நான் தயாராக இருக்கிறேன்" என்ருர், கப்பலின் பிரதம அதிகாரி. அவருக்கு நன்றி கூறி விட்டு, அதற்கு வேண்டிய டிக்கெட்டைக் காரியஸ்தரைக் கொண்டு வாங்கச் செய்தேன். ஆகவே, தென்னுப்பிரிக்காவில் என்னுடைய அதிருஷ்டத்தைச் சோதிப்பதென்ற முழு உற்சா கத்துடன் *1893*, ஏப்ரலில் புறப்பட்டேன்.

எங்கள் கப்பல் அடைந்த முதல் துறைமுகம் லாமு† என் பது. சுமார் பதின்மூன்று நாட்களில் அங்கே போய்ச் சேர்ந் தோம். இதற்குள் கப்பல் காப்டனும் நானும் சிறந்த நண்பர்கள்

---

* மொஸாம்பிக்: கிழக்கு ஆப்பிரிக்காவிலுள்ள போர்ச்சுகீசியக் குடியேற்ற நாடு. இதன் விஸ்தீரணம் 2,97,731 சதுர மைல்கள். 1950–ஆம் ஆண்டுக் கணக்கின்படி இதன் ஜனத்தொகை 58,32,767. இதன் தலைநகரம் மோரனிகோ மார்கஸ் என்பது. அப் பிரதேசத்தில் கரும்பு, எண்ணெய் வித்துக்கள், பருத்தி ஆகியவை பயிராகின்றன.

† லாமு: கெனியாவுக்கு அப்பால் உள்ள ஒரு தீவு. இத் தீவில் ஆப்பிரிக்க சுதேசிகளுடன் ஆப்பிரிக்கர் அல்லாத மக்கள் 3,576 பேரும் இருக்கின்றனர்.

ஆகிவிட்டோம். சதுரங்கம் ஆடுவதில் அவருக்கு அதிகப் பிரியம். ஆனால், அந்த ஆட்டம் அவருக்குப் புதியது. ஆகையால், தம்மிலும் அதிகக் கற்றுக்குட்டியாக இருப்பவரையே தம்முடன் விளையாடுவதற்குச் சகாவாக அவர் விரும்பினார். எனவே, சதுரங்கம் ஆட என்னை அழைத்தார். அவ்விளையாட்டைக் குறித்து எவ்வளவோ கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால், நான் விளையாடியது மாத்திரம் இல்லை. 'அதை விளையாடினால் அறிவுக்கு அதிகப் பயிற்சி உண்டு' என்று விளையாடத் தெரிந்தவர்கள் சொல்வார்கள். அதில் எனக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கக் காப்டன் முன்வந்தார். அவருக்கு எல்லையற்ற பொறுமை உண்டு. ஆகையால், நான் நல்ல மாணவன் எனக் கண்டார். ஒவ்வொரு சமயமும் தோற்பவன் நானே. இது, எனக்குச் சொல்லிக்கொடுக்கவேண்டும் என்பதில் அவருக்கு இன்னும் அதிக ஆர்வத்தை உண்டாக்கியது. சதுரங்கம் விளையாடுவது, எனக்கும் பிடித்திருந்தது. ஆனால், அவ்விருப்பத்தை அக் கப்பலோடு விட்டுவிட்டேன். அந்த ஆட்டத்தைப் பற்றி எனக்கு இருந்த ஞானம், காய்களை நகர்த்தி வைப்பதற்கு மேலே போனதே இல்லை.

லாமுவில் கப்பல் மூன்று, நான்கு மணி நேரம் நின்றது. துறைமுகத்தைப் பார்ப்பதற்காக இறங்கினேன். காப்டனும் இறங்கிப் போனார். ஆனால், அத்துறைமுகம் அபாயகரமானது என்றும், முன்னாலேயே திரும்பி வந்துவிட வேண்டும் என்றும், அவர் எனக்கு எச்சரிக்கை செய்திருந்தார்.

லாமு மிகச் சிறிய ஊர். துறைமுகக் காரியாலயத்திற்குச் சென்றேன். அங்கே இந்திய குமாஸ்தாக்கள் இருந்ததைக் கண்டு மகிழ்ச்சி யடைந்தேன். அவர்களுடன் பேசினேன். ஆப்பிரிக்காக்காரர்களையும் அங்கே பார்த்தேன். அவர்களது வாழ்க்கை முறையை அறிந்துகொள்ளுவதில் எனக்கு அதிகச் சிரத்தை உண்டாயிற்று ; அதை அறிந்துகொள்ளவும் முயன்றேன். இதில் கொஞ்சம் நேரமாயிற்று.

அக் கப்பலின் மூன்றாம் வகுப்புப் பிரயாணிகளில் சிலருடன் எனக்குப் பழக்கம் ஏற்பட்டிருந்தது. தரைக்குப் போய்ச் சமைத்து, அமைதியாகச் சாப்பிட்டுவிட்டு வரவேண்டும் என்பதற்காக அவர்களும் இறங்கியிருந்தனர். அவர்கள் கப்பலுக்குத் திரும்பிவிடத் தயாராக இருந்ததைக் கண்டதும் எல்லோரும் ஒரே படகில் ஏறிப் புறப்பட்டோம். துறைமுகத்தில் அலை பலமாக இருந்தது. படகிலோ இருக்கவேண்டியதற்கு அதிகமான பளு இருந்தது. அலைகள் வேகமாக அடித்துக்கொண்டிருந்ததால், கப்பலின் ஏணிக்கு அருகில் படகை நிறுத்துவது என்பது முடியாததாகிவிட்டது. படகு ஏணியைத் தொடும்; உடனே ஒரு பலமான அலை வந்து, படகைத் தூரத்திற்குக் கொண்டுபோய் விடும். கப்பல் புறப்படுவதற்கு, முதல் சங்கும் ஊதியாயிற்று. நான் அதிகச் சஞ்சலம் அடைந்து விட்டேன்.

காப்டன் எங்களுடைய தவிப்பை யெல்லாம், மேல் தளத்தி லிருந்து பார்த்துக்கொண் டிருந்தார். கப்பல், மேற்கொண்டும் ஐந்து நிமிட நேரம் காத்திருக்க உத்தரவிட்டார். கப்பலுக்கு அருகே மற்றொரு படகு இருந்தது. அதை எனக்காக ஒரு நண்பர், பத்து ரூபாய்க்கு அமர்த்தினர். அதிகப் ஜனங்கள் ஏற்றப்பட்டிருந்த படகிலிருந்து என்னை இப் படகு ஏற்றிக்கொண்டது. ஏணியையோ இதற்குள் உயர்த்தி விட்டார்கள். ஆகையால், என்னைக் கயிறு கொண்டு மேலே தூக்கினர்கள். உடனே கப்பலும் கிளம்பிவிட்டது. மற்றப் பிரயாணிகள் ஏற முடியவில்லை. காப்டன் செய்த எச்சரிக்கை, அப்பொழுதுதான் எனக்குப் புரிந்தது.

லாமுவுக்கு அடுத்த துறைமுகம், மொம்பாஸா.* அதன் பிறகு ஜான்ஸிபார் போய்ச் சேர்ந்தோம். அங்கே அதிக காலம்—எட்டு அல்லது பத்து நாள் வரை—தங்கினேம். பிறகு மற்றொரு கப்பலில் ஏறினேம்.

கப்பல் காப்டன் என்னிடம் அதிகப் பிரியங்கொண்டு விட்டார். ஆனல், அந்தப் பிரியம் விபரீதமான முடிவில் கொண்டு போய் விட்டது. 'உல்லாசமாகக் கரைக்குப் போய் வரலாம்' என்று என்னையும் ஓர் ஆங்கில நண்பரையும் அவர் அழைத்தார். அவருடைய படகிலேயே நாங்கள் கரைக்குப் போனேம். 'உல்லாசமாகப் போய் வரலாம்' என்றல் இன்னது என்பதைப் பற்றி எனக்கு எதுவுமே தெரியாது. இத்தகைய விஷயங்களில் நான் எவ்வளவு அனுபவம் இல்லாதவன் என்பதும் காப்டனுக்குத் தெரியாது. ஒரு தரகன் எங்களை நீக்கிரோப் பெண்களின் வீட்டிற்கு அழைத்துச் சென்றன். அங்கே எங்கள் ஒவ்வொருவருக்கும் ஓர் அறையைக் காட்டி, உள்ளே போகச் சொன்னன். நான் உள்ளே போனதும் வெட்கத்தால் வாய் பேசாமல் அப்படியே நின்றேன். என்னைப்பற்றி அப் பெண் என்ன நினைத்திருப்பாள் என்பது ஆண்டவனுக்கே தெரியும். காப்டன் அழைத்ததும் நான் போனபடியே வெளியே வந்துவிட்டேன். ஒரு பாபமும் செய்யாத என் நிலையை அவர் தெரிந்து கொண்டார். எனக்கு முதலில் அவமானமாக இருந்தது. ஆனல், அக் காரியத்தை நினைப்பதும் எனக்குப் பயமாக இருந்ததால் அவமான உணர்ச்சி மறைந்தது. அப் பெண்ணைப் பார்த்ததும் என் புத்தி தடுமாறிவிடாமல் இருந்ததைக் குறித்துக் கடவுளுக்கு நன்றி செலுத்தினேன். எனக்கு இருந்த பலவீனத்திற்காக என்னை நானே வெறுத்தேன். அறைக்குள் போக மறுத்துவிடும் துணிச்சல் எனக்கு இல்லாதுபோனதைக் குறித்து எனக்கு நானே பரிதாபப் பட்டுக்கொண்டேன்.

---

* மொம்பாஸா: கெனியாவின் முக்கியமான துறைமுகம். அதன் ஜனத்தொகை 1,02,000. முக்கியமாக யானைத் தந்தம், விளைபொருள்கள், ரப்பர் ஆகியவை இங்கே இருந்து ஏற்றுமதியாகின்றன.

என்னுடைய வாழ்க்கையில் ஏற்பட்ட இதுபோன்ற சோதனைகளில் இது மூன்ருவதாகும். இளைஞர்களில் பலர், ஆரம்பத்தில் ஒரு பாவமும் அறியாதவர்களாக இருந்தும், அவமானம் என்று தவருக ஏற்பட்டுவிடும் உணர்ச்சியின் காரணமாகப் பாவத்திற்கு இழுக்கப்பட்டு விடுகின்றனர். இதில் தவறிவிடாமல் வெளிவந்து விட்டதற்கு நான் பெருமைப் பட்டுக் கொள்ளக் காரணம் எதுவுமே இல்லை. அறைக்குள் போக நான் மறுத்திருந்தால் அது எனக்குப் பெருமையாக இருந்திருக்கும். என்னைக் காத்தருளியதற்குக் கருணைக் கடலான ஆண்டவனுக்கே நான் நன்றி செலுத்த வேண்டும். இச்சம்பவம் கடவுள் மீதுள்ள என் நம்பிக்கையை அதிகமாக்கியது. அவமானம் என்ற தவருன உணர்ச்சியை ஓரளவுக்கு விட்டொழிக்கவும் இச் சம்பவம் எனக்குப் போதித்தது.

இத் துறைமுகத்தில் நாங்கள் ஒரு வாரம் தங்கவேண்டியிருந்ததால் பட்டணத்தில் வசிக்க ஓர் அறையை அமர்த்திக் கொண்டேன். சுற்றுப்புறங்களை யெல்லாம் நன்ருகச் சுற்றிப் பார்த்தேன். ஜான்ஸிபார்*, செடி கொடிகள் நிறைந்து, இயற்கை வளத்தில், மலையாளத்தைப்போல் இருந்தது எனலாம். பிரம்மாண்டமான மரங்களையும் மிகப் பெரிய பழங்களையும் பார்த்துப் பிரமித்துப் போனேன்.

எங்கள் கப்பல் நின்ற அடுத்த துறைமுகம் மொஸாம்பிக். பிறகு மே மாதக் கடைசியில் நேட்டால் போய்ச் சேர்ந்தோம்.

## 7

# சில அனுபவங்கள்

நேட்டாலின் துறைமுகம், டர்பன். அதை நேட்டால் துறைமுகம் என்பதும் உண்டு. என்னை வரவேற்க அப்துல்லா சேத் துறைமுகத்திற்கு வந்திருந்தார். கப்பல் கரையைத் தொட்டதும், நண்பர்களை வரவேற்கப் பலர் கப்பலுக்கு வருவதைப் பார்த்தேன். அப்படி வருகிறவர்களில் இந்தியர்களுக்கு மரியாதை காட்டப்படுவதில்லை என்பதையும் கவனித்தேன். அப்துல்லா சேத்தை அறிந்தவர்கள், அவரிடம் ஒரு வகையான அகம்பாவத்துடன் நடந்துகொள்ளுவதையும் நான் கவனிக்காது போகவில்லை. அது என் மனத்தை வருத்தியது. ஆனால், அப்துல்லா சேத்துக்கு இதெல்லாம் பழக்கமாகிவிட்டது. என்னைப் பார்த்தவர்களும் அது போலவே ஏதோ விசித்திரப் பொருளைப் பார்ப்பது போலப் பார்த்தனர். நான் அணிந்திருந்த உடை, மற்ற இந்தியரிலிருந்து என்னை வேறுபடுத்திக் காட்டியது. நான் வங்காளிகள் வைத்துக்கொள்ளுவதைப் போன்ற ஒரு தலைப்பாகையை வைத்துக்கொண்டு, மேலங்கியும் அணிந்திருந்தேன்.

---

* ஜான்ஸிபார் : கிழக்கு ஆப்பிரிக்காவில் மொம்பாஸாவுக்குத் தெற்கிலிருக்கும் ஒரு தீவு. 640 சதுர மைல் விஸ்தீரணமுள்ளது. இங்கே லவங்கம், தேங்காய் முதலியன விளைகின்றன. இதன் ஜனத்தொகை 1,37,731.

என்னைக் கம்பெனியின் கட்டடத்திற்கு அப்துல்லா சேத் அழைத்துச் சென்றார். அவருடைய அறைக்குப் பக்கத்து அறையில், நான் தங்குவதற்கு ஏற்பாடு செய்திருந்தனர். அவர் என்னை அறிந்துகொள்ள வில்லை. என்னாலும் அவரை அறிந்து கொள்ள முடியவில்லை. என் வசம் அவருடைய சகோதரர் அனுப்பியிருந்த காகிதங்களைப் படித்துவிட்டு, அவர், இன்னும் அதிகக் குழப்பமடைந்தார். யானையைக் கட்டித் தீனி போடச் சொல்வது போல என்னைத் தம்முடைய சகோதரர் அனுப்பியிருக்கிறார் என்றே எண்ணினர். என்னுடைய உடையின் கோலத்தையும் வாழ்க்கை முறையையும் பார்த்துவிட்டு, ஐரோப்பியர்களைப் போல எனக்கும் அதிகச் செலவாகும் என்று நினைத்துவிட்டார். குறிப்பாக எனக்குக் கொடுக்கக்கூடிய வேலையும் அப்பொழுது எதுவும் இல்லை. அவர்கள் வழக்கோ டிரான்ஸ்வாலில் நடந்து கொண்டிருந்தது. என்னை உடனே அங்கே அனுப்புவது என்பதிலும் அர்த்தமில்லை. என்னுடைய திறமையையும் யோக்கியப் பொறுப்பையும் அவர் எந்த அளவுக்கு நம்ப முடியும்? என்னைக் கண்காணிப்பதற்கு அவர் பிரிட்டோரியாவில் இருந்து வர இயலாது. பிரதிவாதிகள், பிரிட்டோரியாவில் இருக்கின்றனர். அவர்கள் என்னை எந்த வழியிலாவது வசப்படுத்திக்கொள்ளக் கூடும் என்று அவர் கருதினர். சம்பந்தப்பட்ட வழக்கைப் பற்றிய வேலையை என்னிடம் ஒப்படைப்பதற் கில்லையென்றால், வேறு எந்த வேலையை ஒப்படைப்பது? வேறு வேலைகளையெல்லாம், அவருடைய குமாஸ்தாக்களே என்னைவிட நன்றாகச்செய்துவிட முடியும். மேலும், தவறு செய்துவிடும் குமாஸ்தாக்களைக் கண்டிக்க முடியும். நானும் தவறு செய்ய நேர்ந்துவிட்டால், என்னைக் கண்டிக்க முடியுமா? ஆகையால், வழக்குச் சம்பந்தமான வேலை எதையும் என்னிடம் கொடுக்க முடியவில்லையென்றால், ஒரு பயனும் இல்லாமல் என்னை வைத்துக்கொண்டிருக்க நேரும்.

அப்துல்லா சேத், எழுதப் படிக்கத் தெரியாதவர் என்றே சொல்லலாம். ஆனால், மிகுந்த அனுபவ ஞானம் உள்ளவர். அதிகக் கூர்மையான அறிவு படைத்தவர். தமக்குப் புத்திசாலித்தனம் அதிகம் உண்டு என்பதை அவரும் உணர்ந்திருந்தார். பழக்கத்தினால், பேசுவதற்குப் போதுமான அளவு அவருக்கு ஆங்கிலமும் தெரியும். அதைக் கொண்டு அவர், பாங்க் மானேஜர்களிடமோ, ஐரோப்பிய வர்த்தகர்களிடமோ பேசியும், தமது வழக்குச் சம்பந்தமாக வக்கீல்களிடம் தமது கட்சியை விளக்கியும் வியாபாரத்தை நடத்திக்கொண் டிருந்தார். இந்தியர்களுக்கு அவரிடம் உயர்ந்த மதிப்பு உண்டு. அச்சமயம் இந்தியரின் வியாபார ஸ்தலங்களில் அவருடைய கம்பெனியே மிகப் பெரியது; அல்லது பெரியவைகளில் ஒன்று என்றாவது சொல்ல வேண்டும். இவ்வளவு சாதகமான வசதிகளெல்லாம் இருந்தும், அவருக்குப் பிரதிகூலமானதும் ஒன்று உண்டு. அது அவர், சுபாவத்திலேயே சந்தேகப் பிராணியாக இருந்ததுதான்.

இஸ்லாம் மதத்தின் சிறப்பில் அவர் பெருமை கொள்ளுபவர். அம் மதத்தின் தத்துவங்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருப்பதி லும் அவருக்குப் பிரியம் அதிகம். அவருக்கு அரபு மொழி தெரி யாது. என்ருலும் பொதுவாகத் திருக் குர்ஆனிலும், இஸ்லா மிய இலக்கியத்திலும் அவருக்கு ஓரளவு நல்ல ஞானம் உண்டு. அவைகளிலிருந்து ஏராளமான உதாரணங்களை உடனுக்குடன் கூறுவார். அவருடன் பழகியதால் இஸ்லாம் மார்க்கத்தைப் பற்றி நன்ருகத் தெரிந்துகொண்டேன். நாங்கள் இருவரும் நெருங்கிப் பழக ஆரம்பித்த பிறகு, சமய விஷயங்களைக் குறித்து நீண்ட நேரம் விவாதித்தும் வந்தோம்.

நான் நேட்டாலுக்கு வந்த இரண்டாம் நாளோ, மூன்ரும் நாளோ, என்னை டர்பன் நீதிமன்றத்திற்கு அழைத்துச் சென்ருர். அங்கே என்னைப் பலருக்கு அறிமுகம் செய்துவைத்துத் தம் வக் கீலுக்குப் பக்கத்தில் என்னை உட்கார வைத்தார். மாஜிஸ்டி ரேட்டோ, என்னை வெறிக்கப் பார்த்துக்கொண்டே இருந்தார். கடைசியாக என் தலைப்பாகையை எடுக்கும்படி கூறினர். நான் எடுக்க மறுத்து, கோர்ட்டில் இருந்து வெளியே வந்துவிட்டேன். ஆகவே, இங்கும் எனக்குப் போராட்டம் காத்துக்கொண் டிருந்தது.

இந்தியர்களில் சிலர்மட்டும் தங்கள் தலைப்பாகையை எடுத்து விட வேண்டும் என்று ஏன் வற்புறுத்துகின்றனர் என் பதை அப்துல்லா சேத் எனக்கு விளக்கிச் சொன்னர். முஸ்லிம் உடை தரிப்பவர்கள் மாத்திரம் தலைப்பாகைகளை வைத்துக் கொள்ளலாம் என்றும், மற்றவர்கள் தலைப்பாகையை எடுத்துவிடு வது வழக்கமாக நடந்து வருகிறது என்றும் சொன்னர்.

இந்த நுட்பமான பாகுபாடு புரியும்படி செய்வதற்குச் சில விவரங்களை நான் கூறவேண்டியிருக்கிறது. அங்கிருந்த இந்தி யர், பல்வேறு கோஷ்டிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றனர் என் பதை இரண்டு மூன்று நாட்களிலேயே தெரிந்துகொண்டேன். அவர்களில் ஒரு பிரிவு, முஸ்லிம் வர்த்தகர்களைக் கொண்டது. அவர்கள் தங்களை, 'அராபியர்' என்றும் சொல்லிக்கொண்டனர். மற்ருெரு பிரிவினர், ஹிந்து குமாஸ்தாக்கள். பார்ஸி குமாஸ்தாக் களின் பிரிவும் இருந்தது. ஹிந்து குமாஸ்தாக்கள், 'அராபிய' ருடன் சேர்ந்துகொண்டா லன்றி, 'இங்குமில்லை, அங்குமில்லை' என்பதே அவர்கள் கதியாக இருந்தது. பார்ஸி குமாஸ்தாக் களோ, தங்களைப் பாரஸீகர்கள் என்று சொல்லிக்கொண்டனர். இந்த மூன்று பிரிவினருக்குள்ளும் சில சமூக உறவுகள் இருந்தன. இவர்களைத் தவிர பெரிய பிரிவினராக இருந்தவர்கள், ஒப்பந் தத் தொழிலாளர்களாகவும் சுயேச்சையான தொழிலாளரா கவும் இருந்த தமிழரும், தெலுங்கரும், வட இந்தியரும் ஆவர். ஐந்து ஆண்டுகள் வேலை செய்வது என்ற ஒப் பந்தத்தின்பேரில் நேட்டாலுக்குச் சென்றவர்களே ஒப்பந்தத் தொழிலாளிகள். 'கிரிமிதியர்' என்று இவர்கள்

சொல்லப்படுகின்றனர். 'எக்ரிமென்ட்' என்ற ஆங்கிலச் சொல் 'கிரிமித்' என்று திரிந்து, அதிலிருந்து 'கிரிமிதியர்' என்று ஆகியிருக்கிறது. இந்தியர்களுக்குள் இருக்கும் மற்ற மூன்று பிரிவினருக்கும், இவர்களிடம் வர்த்தகத் தொடர்பைத் தவிர எந்தவிதமான தொடர்பும் இல்லை. பெரும்பான்மையான இந்தியர்கள், தொழிலாளர் வகுப்பையே சேர்ந்தவர்கள். ஆகையால், ஆங்கிலேயர்கள் அவர்களைக் 'கூலிகள்' அல்லது, 'சாமிகள்' என்று அழைத்து வந்தனர். எல்லா இந்தியருமே, 'கூலிகள்' அல்லது 'சாமிகள்' என்று அழைக்கப்பட்டனர். 'சாமி' என்பது தமிழர்களின் பெயர்கள் பலவற்றிற்கு விகுதியாக இருப்பது. 'ஸ்வாமி' என்ற சமஸ்கிருதச் சொல்லின் திரிபே 'சாமி'. அச்சொல்லின் பொருள், 'எஜமான்' என்பதே. ஆகையால், தம்மை ஓர் ஆங்கிலேயர், 'சாமி' என்று கூப்பிடும்போது இந்தியர் யாருக்காவது ஆத்திரம் உண்டானல், அவருக்குப் புத்திசாலித்தனமும் இருந்தால், இவ்வாறு ஒரு பதிலைச் சொல்லி வாயடைத்து விடுவார்: ''என்னை, 'சாமி' என்று நீர் கூப்பிடலாம். ஆனல், 'சாமி' என்பதற்கு 'எஜமான்' என்பது பொருள். நான் உம் எஜமான் அல்லவே!'' என்பார். இதைக் கேட்டுச் சில ஆங்கிலேயர்கள் வெட்கிப் போவார்கள். மற்றும் சிலரோ, கோபமடைந்து திட்டுவார்கள்; சமயம் நேர்ந்தால் அடித்தும் விடுவர். ஏனெனில், 'சாமி' என்ற சொல், இழிவு படுத்தும் சொல்லைத் தவிர, அவர்களைப் பொறுத்தவரை வேறு எதுவும் அல்ல. அச்சொல்லுக்கு 'எஜமான்' என்ற பொருளைக் கூறுவது, அவர்களை அவமதிப்பதற்குச் சமம்!

ஆகவே, என்னைக் 'கூலி பாரிஸ்டர்' என்றே அழைத்தார்கள். வர்த்தகர்களும், 'கூலி வர்த்தகர்கள்' என்றே அழைக்கப்பட்டனர். இவ்விதம், 'கூலி' என்ற சொல்லுக்கு உரிய உண்மைப் பொருள் மறந்துபோய், அது எல்லா இந்தியருக்கும் ஓர் அடைமொழி ஆகிவிட்டது. இவ்விதம் அழைக்கப்படுவதைக் கேட்டு முஸ்லிம் வர்த்தகர் ஆத்திரம் அடைவார். 'நான் கூலியல்ல, அராபியன்!' என்பார். அல்லது, 'நான் ஒரு வியாபாரி' என்பார். ஆங்கிலேயர் மரியாதை தெரிந்தவராக இருந்தால், தாம் தவருக அழைத்ததற்கு மன்னிப்புக் கேட்டுக்கொள்ளுவார்.

தலைப்பாகை வைத்துக்கொள்ளும் விஷயம் இந்த நிலைமையில் மிக முக்கியமான ஒன்ருக ஆயிற்று. பிறர் உத்தரவிடுகிருர்கள் என்பதற்காக ஒருவர், தமது இந்தியத் தலைப்பாகையைக் கழற்றி விடுவது என்பது அவமதிப்புக்கு உடன்படுவதாகவே ஆகும். ஆகவே, இந்தியத் தலைப்பாகையை அணிவதை அடியோடு விட்டுவிட்டு, ஆங்கிலத் தொப்பி போட்டுக்கொள்ளுவதே மேல் என்று நினைத்தேன். அப்படிச் செய்துவிட்டால் அவமதிப்பிலிருந்தும், விரும்பத்தகாத விவாதங்களிலிருந்தும் தப்பித்துக் கொள்ளலாம் என்றும் கருதினேன்.

ஆனல், இக் கருத்தை அப்துல்லா சேத் ஒப்புக்கொள்ளவில்லை. ''நீங்கள் அவ்விதம் ஏதாவது செய்வீர்களானல் அதனல்

பெருந் தீங்கே விளையும். 'இந்தியத் தலைப்பாகையை அணிந்தே தீருவோம்' என்று வற்புறுத்தி வருபவர்களை நீங்கள் கைவிட்டவர்களும் ஆவீர்கள். மேலும் இந்தியத் தலைப்பாகையே உங்கள் தலைக்கு அழகாகவும் இருக்கிறது. நீங்கள் ஆங்கிலத் தொப்பி அணிந்துகொண்டால், உங்களை ஒரு ஹோட்டல் வேலைக்காரன் என்றே நினைத்துவிடுவார்கள்!'' என்று அவர் சொன்னார்.

அவர் கூறிய இப் புத்திமதியில் அனுபவ ஞானமும், தேசாபிமானமும் அடங்கியிருந்ததோடு, ஒரு சிறிது குறுகிய புத்திப் போக்கும் கலந்திருந்தது. அனுபவ ஞானம் இருந்தது, தெளிவாகத் தெரிந்த விஷயம். தேசாபிமானம் இல்லாதிருந்தால், அவர் இந்தியத் தலைப்பாகை அணிவதை வற்புறுத்தியிருக்கமாட்டார். ஹோட்டல் வேலைக்காரனைக் கேவலப்படுத்தி அவர் கூறியது, ஒருவகையான குறுகிய புத்திப் போக்கையே வெளிப்படுத்தியது. ஒப்பந்த வேலையாட்களாக வந்த இந்தியரில் ஹிந்துக்கள், முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள் ஆகிய மூன்று வகுப்பார் இருக்கின்றனர். இதில் கிறிஸ்தவர்கள் என்போர், கிறிஸ்தவர்களாக மதம் மாறிவிட்ட ஒப்பந்தத் தொழிலாளரின் சந்ததியினர். 1893-இல் கூட இவர்கள் தொகை அதிகமாகவே இருந்தது. இவர்கள் ஆங்கில உடைகளையே அணிந்துவந்தனர். பெரும்பாலானவர்கள் ஹோட்டல் ஊழியர்களாக வேலை செய்து பிழைத்து வந்தனர். ஆங்கிலத் தொப்பியைக் குறித்து அப்துல்லா சேத் குறைகூறியது, இந்த வகுப்பினரை மனத்திற் கொண்டேயாகும். ஹோட்டலில் பணியாளாக இருப்பது, இழிவான தொழில் என்று கருதப்பட்டது. இன்றுங்கூட அநேகரிடம் இந்த எண்ணம் இருந்து வருகிறது.

மொத்தத்தில் அப்துல்லா சேத்தின் புத்திமதி எனக்குப் பிடித்திருந்தது. தலைப்பாகையைப்பற்றிய சம்பவத்தைக் குறித்துப் பத்திரிகைகளுக்கு எழுதினேன். கோர்ட்டில் நான் தலைப்பாகை அணிந்திருந்தது நியாயமே என்று வாதாடினேன். இவ் விஷயத்தைக் குறித்துப் பத்திரிகைகளில் பலத்த விவாதம் நடந்தது. பத்திரிகைகள் என்னை, 'வேண்டாத விருந்தாளி' என்றும் வர்ணித்தன. இவ்விதம் நான் தென்னாப்பிரிக்காவுக்கு வந்த சில தினங்களுக்குள்ளேயே இச் சம்பவம் எனக்கு எதிர்பாராத விளம்பரத்தை அளித்தது. சிலர் என்னை ஆதரித்தனர்; மற்றுஞ் சிலரோ, 'இது பைத்தியக்காரத்தனமான துணிச்சல்' என்று கூறிப் பலமாகக் கண்டித்தனர்.

நான் தென்னாப்பிரிக்காவில் இருந்த காலம் முழுவதும், கடைசி வரையில் என் தலைப்பாகை என்னிடம் இருந்தது.* தென்னாப்பிரிக்காவில் நான் எப்பொழுது, ஏன், தலையில் எதையுமே அணிவதை விட்டேன் என்பதைக் குறித்துப் பிறகு கவனிப்போம்.

---

* காந்திஜி தலைப்பாகை அணியாவிட்டாலும், அதைப் பத்திரப்படுத்தியே வைத்திருந்தார். அதை அணிந்துகொண்டு கோகலேயை வரவேற்க விரும்பினார். இதைக்

# 8
# பிரிட்டோரியாவுக்குப் போகும் வழியில்

டர்பனில் இருக்கும் இந்தியக் கிறிஸ்தவர்களுடன் எனக்குச் சீக்கிரத்திலேயே தொடர்பு ஏற்பட்டது. கோர்ட்டில் மொழி பெயர்ப்பாளராக இருந்த ஸ்ரீ பால், ஒரு ரோமன் கத்தோலிக்கர். அவருடன் பழக்கம் வைத்துக்கொண்டேன். பிராட்டஸ்டன்டு மிஷனின் கீழ், அப்பொழுது உபாத்தியாயராக இருந்த ஸ்ரீ சுபான் காட்பிரேயும் எனக்குப் பழக்கமானார். *1924*-இல் இந்தியாவுக்கு வந்த தென்னாப்பிரிக்கத் தூது கோஷ்டியினரில் ஒருவராக இருந்த ஸ்ரீ ஜேம்ஸ் காட்பிரேயின் தந்தையே அவர். அதேபோல, காலஞ் சென்ற பார்ஸி ருஸ்தம்ஜி, காலஞ்சென்ற ஆதம்ஜி மியாகான் ஆகியவர்களையும் அச் சமயத்தில் சந்தித்தேன். வியாபார சம்பந்தமாக அல்லாமல் இதற்கு முன்னால் ஒருவரை ஒருவர் இவர்கள் சந்தித்ததே இல்லை. ஆனால், பின்னால் இந்த நண்பர்கள் எல்லோரும் நெருங்கிப் பழக நேர்ந்த விவரத்தை போகப்போகப் பார்ப்போம்.

இவ்வாறு நான் புதிது புதிதாகப் பலருடன் பழக்கம் செய்து கொண்டு வந்த சமயத்தில் கம்பெனிக்கு, அவர்களுடைய பிரிட்டோரியா* வக்கீலிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. வழக்கை நடத்துவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துகொள்ள வேண்டும் என்றும், அப்துல்லா சேத் பிரிட்டோரியாவுக்கு வர வேண்

---

குறித்து ஒரு ருசிகரமான சம்பவத்தைப் பிரபுதாஸ் காந்தி, தமது நூலில் பின்வருமாறு கூறுகிறார் :

''ஒரு நாள் காலையில், மகன் காக்கா (மகன்லால் காந்தி) எப்பொழுதும் வருவதற்கு இரண்டு மணி நேரம் முன்னாலேயே வீட்டிற்கு வந்தார். கஸ்தூரிபாயும் அச்சமயம் எங்களுடன் இருந்தார். மகன் காக்கா அவரிடம், 'பாபுவிடமிருந்து கடிதம் வந்திருக்கிறது. அவருக்குத் தலைப்பாகை வேண்டுமாம். ஸ்ரீ கோகலே வரப்போகிறார், அவரை வரவேற்கப் பாபு, கேப் டவுனுக்குப் போகிறார். துறைமுகத்திற்குப் போகும் போது, ஸ்ரீ கோகலேக்கு மரியாதை செய்வதற்கு அறிகுறியாகத் தாம் தலைப்பாகை வைத்துக்கொள்ள வேண்டும் என்று பாபு கருதுகிறார்'' என்றார்.

"....காந்திஜி வக்கீல் தொழிலை விட்டு, ஒன்றரை ஆண்டுகளுக்கு மேல் ஆயிற்று. தமது காரியாலயத்தை மூடியபோதே தாம் இருந்த வீட்டையும் காலி செய்துவிட்டு, டால்ஸ்டாய் பண்ணையில் உடுத்துக்கொள்ளுவதற்கு வேண்டிய சில துணிகளைத் தவிர மற்றவைகளை யெல்லாம் ஜோகன்னஸ்பர்க்கிலிருந்து போனிக்ஸுக்கு அனுப்பிவிட்டார். தேவையில்லாதவை என்று போட்டுவிட்ட துணிகளில் இருந்த தமது தலைப்பாகையை இப்பொழுது வேண்டும் என்று பாபு விரும்பினார். 'அது பழசாகப் போய் விட்டதால் இப்பொழுது அணிவதற்கு ஏற்றதாயிருக்குமா?' என்று கஸ்தூரி பாய்க்குச் சந்தேகம். என்றாலும், அதை அவர் தேடி எடுத்து, மகன் காக்காவிடம் கொடுத்து, தபால் பார்சலில் காந்திஜிக்கு மறு நாள் அனுப்பச் செய்தார். படகு உருவில் அட்டையால் செய்து, மேலே மெல்லிய கறுப்பு மஸ்லின் துணியால் ஆனது, அத்தலைப்பாகை. அதில் சில இடங்களில் சிலும்பலாகவும் இருந்தது."

* பிரிட்டோரியா : தென்னாப்பிரிக்க யூனியனின் தலைநகரம். டர்பனிலிருந்து 511 மைல் தூரத்தில் இருக்கிறது.

டும் என்றும், இல்லாவிடில் பிரதிநிதியையாவது அனுப்ப வேண்டும் என்றும் வக்கீல் எழுதியிருந்தார்.

அக் கடிதத்தை அப்துல்லா சேத் என்னிடம் கொடுத்துப் படிக்கச் சொன்னர். "பிரிட்டோரியாவுக்குப் போகிறீர்களா?" என்று என்னைக் கேட்டார். "உங்களிடமிருந்து வழக்குச் சம்பந்தமான விவரங்களைக் கேட்டுத் தெரிந்துகொண்ட பிறகே அதைப் பற்றி நான் சொல்ல முடியும்" என்றேன். "இப்பொழுது அங்கே நான் செய்ய வேண்டியது இன்னது என்பது தெரியவில்லை" என்றேன். அதன்பேரில் வழக்குச் சம்பந்தமான விவரங்களை எனக்கு விளக்கிக் கூறுமாறு அவர் தமது குமாஸ்தாக்களிடம் கூறினர்.

இவ் வழக்குச் சம்பந்தமாக நான் அரிச்சுவடியிலிருந்தே ஆரம்பிக்க வேண்டியிருக்கிறது என்பதை வழக்கைப்பற்றித் தெரிந்துகொள்ள ஆரம்பித்ததுமே கண்டுகொண்டேன். கப்பலில் வரும்போது ஜான்ஸிபாரில் சில தினங்கள் தங்கிய சமயத்தில் அங்கே கோர்ட்டு வேலைகள் எப்படி நடக்கின்றன என்பதைப் பார்க்கக் கோர்ட்டுக்குச் சென்றேன். அப்பொழுது ஒரு பார்ஸி வக்கீல், ஒரு சாட்சியை விசாரித்துக்கொண்டிருந்தார். கணக்குப் புத்தகங்களில் கண்ட பற்று, வரவு இனங்களைக் குறித்து, அவர் கேள்விகள் கேட்டு வந்தார். அவையெல்லாம் எனக்குக் கொஞ்சங்கூடப் புரியவில்லை. கணக்கு வைக்கும் முறையைக் குறித்துப் பள்ளிக்கூடத்திலோ, பிறகு இங்கிலாந்தில் இருந்தபோதோ நான் கற்றுக்கொண்டதில்லை. நான் எந்த வழக்குக்காகத் தென்னப்பிரிக்காவுக்கு போயிருந்தேனே அந்த வழக்கு, கணக்கு சம்பந்தமானது. கணக்கு வைக்கும் முறையைத் தெரிந்தவர்கள் மாத்திரமே அதைப் புரிந்துகொள்ளவும், விளக்கவும் முடியும். 'இது பற்று எழுதப்பட்டது', 'இது வரவு வைக்கப்பட்டது' என்றெல்லாம் குமாஸ்தா சொல்லிக்கொண்டே போனர். எனக்கோ மேலும் மேலும் அதிகக் குழப்பமாகிக்கொண்டிருந்தது. பி. நோட்டு (பிராமிசரி நோட்டு) என்ருல் என்ன என்பதே எனக்குத் தெரியாது. அகராதியிலும் இந்த வார்த்தையைக் காணவில்லை. என்னுடைய அறியாமையைக் குமாஸ்தாவுக்கு வெளிப்படுத்தினேன். 'பி. நோட்டு' என்ருல் 'பிராமிசரி நோட்டு' என்று அவர் சொல்ல, நான் தெரிந்துகொண்டேன். கணக்கு வைக்கும் முறையைப்பற்றிய புத்தகம் ஒன்றை வாங்கி அதைப் படித்தேன். அதன் பிறகு எனக்குக் கொஞ்சம் நம்பிக்கை ஏற்பட்டது. வழக்கையும் புரிந்துகொண்டேன். கணக்கு எழுதுவது எப்படி என்பது, அப்துல்லா சேத்துக்கும் தெரியாது. என்ருலும் அவருக்கு இருந்த நல்ல அனுபவ ஞானத்தினுல் கணக்கு முறையில் ஏற்படும் எந்தச் சிக்கலையும் உடனே தீர்த்துவிடும் திறமை அவருக்கு இருந்ததைக் கண்டேன். "பிரிட்டோரியாவுக்குப் போக நான் தயாராக இருக்கிறேன்" என்று அவரிடம் சொன்னேன்.

"நீங்கள் அங்கு எங்கே தங்குவீர்கள்?" என்று சேத் கேட்டார்.

"நான் எங்கே தங்க வேண்டும் என்று விரும்புகிறீர்களோ அங்கே தங்குகிறேன்" என்றேன்.

"அப்படியானுல் நம் வக்கீலுக்கு எழுதுகிறேன். நீங்கள் தங்குவதற்கு வேண்டிய ஏற்பாடுகளை அவர் செய்வார். அதோடு அங்கே இருக்கும் என் மேமன் நண்பர்களுக்கும் எழுதுகிறேன். ஆனுல், 'அவர்களுடன் தங்குங்கள்' என்று உங்களுக்குச் சொல்ல மாட்டேன். எதிர்க் கட்சியினருக்குப் பிரிட்டோரியாவில் அதிகச் செல்வாக்கு உண்டு. நமது அந்தரங்கக் கடிதங்களை அவர்களில் எவராவது படித்துவிட்டால் அதனுல் நமக்கு அதிகத் தீமைகள் ஏற்படும். நீங்கள் எவ்வளவுக் கெவ்வளவு அவர்களுடன் நெருங்கிப் பழகாமல் இருக்கிறீர்களோ அவ்வளவும் நமக்கு நல்லது" என்ருர்.

"உங்கள் வக்கீல் என்னை எங்கே இருக்கச் சொல்கிருரோ அங்கே தங்குகிறேன். இல்லாவிட்டால் நானே என் இருப்பிடத்திற்கு ஏற்பாடு செய்துகொள்ளுகிறேன். நமக்குள் ரகசியமாக இருக்கும் எதையும் மற்றொரு ஆத்மா அறிந்துகொண்டுவிட முடியாது. பிரதிவாதிகளை அறிமுகம் செய்துகொள்ள வேண்டும் என்றே எண்ணியிருக்கிறேன். சாத்தியமானுல், இவ் வழக்கைக் கோர்ட்டுக்கு வெளியிலேயே சமரசம் செய்துவிட விரும்புகிறேன். எப்படியும் தயாப் சேத் உங்கள் உறவினர்தானே" என்றேன். பிரதிவாதியான சேத் தயாப் ஹாஜி கான் முகம்மது, அப்துல்லா சேத்திற்கு நெருங்கிய உறவினர்.

சமரசம் ஏற்படக்கூடும் என்ற சொல்லைக் கேட்டதுமே சேத் திடுக்கிட்டுவிட்டார் என்பதை நான் காண முடிந்தது. நான் டர்பனில் ஆறு, ஏழு நாட்களாக இருந்திருக்கிறேன். நாங்கள் ஒருவரையொருவர் அறிந்து, புரிந்துகொண்டும் இருக்கிருேம். என்னை வைத்திருப்பது இப்போது யானையைக் கட்டித் தீனி போடுவதுபோல் இல்லை. ஆகையால், அவர் சொன்ஞர்: "ஆ...ம், கோர்ட்டுக்கு வெளியிலேயே சமரசமாகப் போய்விடுவதைவிடச் சிறந்தது எதுவும் இல்லைதான். ஆனுல், நாங்கள் எல்லோரும் உறவினர். ஆகையால் ஒருவரையொருவர் நன்ருக அறிந்துகொண்டிருக்கிருேம். தயாப் சேத் அவ்வளவு எளிதில் சமரசத்திற்கு ஒப்புக்கொண்டுவிடக் கூடியவரல்ல. நம்மளவில் நாம் கொஞ்சம் அஜாக்கிரதையாக இருந்தாலும் நம்மிடம் இருக்கும் ரகசியங்களையெல்லாம் தெரிந்துகொண்டு, முடிவில் நம்மையே கவிழ்த்து விடப் பார்ப்பார். ஆகையால், எதையும் தீர யோசித்துச் செய்யுங்கள்."

"அதைப்பற்றி உங்களுக்குக் கவலை வேண்டாம். வழக்கைக் குறித்துத் தயாப் சேத்திடமோ, மற்றவர்களிடமோ நான் பேச வேண்டும் என்ற அவசியம் இல்லை. ஒரு சமரசத்திற்கு வந்து, அனுவசியமான கோர்ட்டு விவகாரக் கஷ்டத்திலிருந்து காப்பாற்

றிக்கொள்ளும்படி மாத்திரமே அவருக்குச் சொல்லுவேன்" என்றேன்.

நான் டர்பன் சேர்ந்த ஏழாவது அல்லது எட்டாவது நாள் அங்கிருந்து புறப்பட்டேன். எனக்கு ரெயிலில் முதல் வகுப்பு டிக்கெட் வாங்கப்பட்டிருந்தது. இரவில் படுக்கையும் வேண்டும் என்றால் அதற்காகத் தனியாக ஐந்து ஷில்லிங் கொடுத்துச் சீட்டுப் பெறுவது அங்கிருந்த வழக்கம். 'எனக்குப் படுக்கைச் சீட்டும் வாங்கிவிட வேண்டும்' என்று அப்துல்லா சேத் வற்புறுத்தினர். ஆனல், பிடிவாதத்திஞலும், கர்வத்திஞலும், ஐந்து ஷில்லிங் மிச்சப்படுத்திவிடலாம் என்ற எண்ணத்திஞலும், அதற்கு நான் மறுத்துவிட்டேன். "இந்நாடு இந்தியா அல்ல என்பதைக் கவனத்தில் வையுங்கள். எங்களுக்குப் போதிய செல்வத்தை ஆண்டவன் அளித்திருக்கிரூர். செலவு செய்யவும் முடியும். உங்களுடைய தேவைக்குச் செலவு செய்துகொள்ளுவதில் தயவு செய்து வீண் சிக்கனம் பிடிக்க வேண்டாம்" என்று சேத் எச்சரிக்கை செய்தார்.

அவருக்கு நன்றி தெரிவித்தேன். "என்னைப்பற்றிக் கவலைப் பட வேண்டாம்" என்றேன்.

நான் சென்ற ரெயில், இரவு 9 மணிக்கு நேட்டாலின் தலைநகரான மாரிட்ஸ்பர்க்* போய்ச் சேர்ந்தது. அந்த ஸ்டேஷனில் பிரயாணிகளுக்குப் படுக்கை கொண்டுவந்து கொடுப்பது வழக்கம். ஒரு ரெயில்வே சிப்பந்தி வந்து, எனக்குப் படுக்கை வேண்டுமா என்று கேட்டார். "வேண்டாம்; என் படுக்கை இருக்கிறது" என்றேன். அவர் போய்விட்டார். ஆனல், ஒரு பிரயாணி அங்கே வந்து, என்னை மேலும் கீழுமாகப் பார்த்தார். நான் 'கறுப்பு மனிதன்' என்பதை அறிந்ததும் அவருக்கு ஆத்திரம் வந்துவிட்டது. உடனே போய்விட்டார். பிறகு இரண்டொரு அதிகாரிகளுடன் திரும்பி வந்தார். அவர்கள் எல்லோரும் பேசாமல் இருந்தபோது, வேறு ஒரு அதிகாரி என்னிடம் வந்து, "இப்படி வாரும். நீர் சாமான்கள் வண்டிக்குப் போக வேண்டும்" என்ருர்.

"என்னிடம் முதல் வகுப்பு டிக்கெட் இருக்கிறதே" என்றேன்.

"அதைப்பற்றி அக்கறையில்லை. நீர் சாமான்கள் வண்டிக்குப் போக வேண்டும் என்று நான் சொல்கிறேன்" என்ருர்.

"நான் உமக்குச் சொல்கிறேன். இந்த வண்டியில் பிரயாணம் செய்ய டர்பனில் அனுமதிக்கப்பட்டிருக்கிறேன். எனவே, இதில்தான் நான் பிரயாணம் செய்வேன்" என்றேன்.

* நேட்டாலின் தலைநகரான பீடர்மாரிட்ஸ்பர்க்கே, சுருக்கமாக மாரிட்ஸ்பர்க் என்று கூறப்படுகிறது. இன்னும் சுருக்கமாக பி. எம். பர்க் என்றும் அவ்வூரைச் சொல்வது உண்டு. டர்பனிலிருந்து அவ்வூர் 71 மைல் தூரத்தில் இருக்கிறது. அக்காலத்தில் குடியேற்ற நாட்டுக் காரியாலயம் அங்கேதான் இருந்துவந்தது.

"இல்லை. நீர் இதில் போகக்கூடாது. இந்த வண்டியிலிருந்து நீர் இறங்கிவிட வேண்டும். இல்லையானால் உம்மைக் கீழே தள்ளப் போலீஸ்காரனை அழைக்க வேண்டி வரும்" என்றார்.

"அழைத்துக்கொள்ளும். நானாக இவ் வண்டியிலிருந்து இறங்க மறுக்கிறேன்" என்று சொன்னேன்.

போலீஸ்காரர் வந்தார். கையைப் பிடித்து இழுத்து என்னை வெளியே தள்ளினார். என் சாமான்களையும் இறக்கிப் போட்டுவிட்டார். சாமான்கள் வண்டிக்குப் போய் ஏற நான் மறுத்துவிட்டேன். ரெயிலும் புறப்பட்டுப் போய்விட்டது. போட்ட இடத்திலேயே என் சாமான்களையெல்லாம் போட்டுவிட்டு, கைப் பையை மாத்திரம் என்னுடன் வைத்துக்கொண்டு, பிரயாணிகள் தங்கும் இடத்திற்குப் போய் உட்கார்ந்தேன். சாமான்கள் ரெயில்வே அதிகாரிகள் வசம் இருந்தன.

அப்பொழுது குளிர்காலம். தென்னாப்பிரிக்காவில் உயரமான பகுதிகளில் குளிர் காலத்தில் குளிர் மிகக் கடுமையாக இருக்கும். மாரிட்ஸ்பர்க் உயரமான இடத்தில் இருந்ததால் அங்கே குளிர் அதிகக் கடுமையாக இருந்தது. என் மேல்அங்கியோ மற்றச் சாமான்களுடன் இருந்தது. அதை ரெயில்வே அதிகாரிகளிடம் போய்க் கேட்க நான் துணியவில்லை. கேட்டால், திரும்பவும் அவமதிக்கப்படுவேனோ என்று பயந்தேன். எனவே, குளிரில் நடுங்கிக்கொண்டு உட்கார்ந்திருந்தேன். அவ்வறையில் விளக்கும் இல்லை. நடுநிசியில் ஒரு பிரயாணி அங்கே வந்தார். அவர் என்னுடன் பேச விரும்புவதுபோல் இருந்தது. ஆனால், பேச விரும்பும் நிலையில் நான் இல்லை.*

என் கடமை என்ன என்பதைக் குறித்துச் சிந்திக்கலானேன். என்னுடைய உரிமைகளுக்காகப் போராடுவதா, இந்தியாவுக்குத் திரும்பிவிடுவதா? இல்லாவிடில் அவமானங்களையெல்லாம் பொருட்படுத்தாமல் பிரிட்டோரியாவுக்குப் போய், வழக்கை முடித்துக்கொண்டு, இந்தியாவுக்குத் திரும்புவதா? என் கடமையை நிறைவேற்றாமல் இந்தியாவுக்கு ஓடிவிடுவது என்பது கோழைத்தனமாகும். எனக்கு ஏற்பட்ட கஷ்டம் இலேசானது; நிறத் துவேஷம் என்ற கொடிய நோயின் வெளி அறிகுறி மாத்திரமே அது. சாத்தியமானால், இந்த நோயை அடியோடு ஒழிக்க நான் முயலவேண்டும்; அதைச்

---

* பல ஆண்டுகளுக்குப் பின்னர் இந்தியாவில் டாக்டர் ஜான் ஆர். மாட் என்ற கிறிஸ்தவப் பாதிரியார் காந்திஜியிடம் பேசிக்கொண்டிருந்த போது, "உங்கள் வாழ்க்கையில் உங்களுக்கு ஏற்பட்ட அனுபவங்களில் அதிக உணர்ச்சியை உண்டாக்குவதாக இருந்த அனுபவம் எது?" என்று கேட்டார். அதற்கு காந்திஜி, மாரிட்ஸ்பர்க் ஸ்டேஷனில் அன்றிரவு நடந்த இந்தக் கதையையே கூறினர்.

செய்வதில் துன்பங்களை அனுபவிக்க வேண்டும். நிறத் துவேஷத்தைப் போக்குவதற்கு அவசியமான அளவு மாத்திரமே, நான் தவறுகளுக்குப் பரிகாரம் பெறப் பார்க்க வேண்டும்.

எனவே அடுத்த வண்டியில் பிரிட்டோரியாவுக்குப் புறப்படுவது என்று தீர்மானித்தேன்.

மறுநாள் காலையில் ரெயில்வே ஜெனரல் மானேஜருக்கு நீண்ட தந்தி ஒன்று கொடுத்தேன். அப்துல்லா சேத்துக்கும் அறிவித்தேன். அவர் உடனே ஜெனரல் மானேஜரைப் போய்ப் பார்த்தார். மானேஜரோ, 'ரெயில்வே அதிகாரிகள் செய்தது சரியே' என்றார். ஆனால், நான் சேர வேண்டிய இடத்திற்குப் பத்திரமாகப் போய்ச் சேரப் பார்க்குமாறு தாம் ஸ்டேஷன் மாஸ்டருக்கு அறிவித்துவிட்டதாக அப்துல்லா சேத்திடம் கூறினார். என்னைச் சந்தித்து, எனக்கு வேண்டியதைச் செய்யுமாறு மாரிட்ஸ்பர்க்கிலும் மற்ற இடங்களிலும் இருந்த இந்திய வர்த்தகர்களுக்கு அப்துல்லா சேத் தந்திகள் கொடுத்தார். வர்த்தகர்கள், என்னைப் பார்க்க ஸ்டேஷனுக்கு வந்தார்கள். தாங்கள் அனுபவித்திருக்கும் கஷ்டங்களையெல்லாம் சொன்னார்கள். எனக்கு நேர்ந்தது, சர்வ சாதாரணமான அனுபவந்தான் என்றுகூறி, எனக்கு ஆறுதல் அளிக்க முயன்றார்கள். முதல் வகுப்பிலும், இரண்டாம் வகுப்பிலும் பிரயாணஞ் செய்யும் இந்தியர்கள், ரெயில்வே அதிகாரிகளிடமிருந்தும் வெள்ளையரிடமிருந்தும் தொல்லையை எதிர்பார்க்கவே நேரும் என்றார்கள். இவ்விதம் துன்பக் கதைகளைக் கேட்பதிலேயே அன்று பொழுது போயிற்று. மாலை வண்டியும் வந்தது. எனக்காக ஏற்பாடு செய்திருந்த இடம் அதில் இருந்தது. டர்பனில் நான் வாங்க மறுத்த படுக்கைச் சீட்டை மாரிட்ஸ்பர்க்கில் வாங்கிக்கொண்டேன். ரெயிலும் என்னைச் சார்லஸ் டவுனுக்கு* கொண்டு போய்ச் சேர்த்தது.

## 9

# மேலும் துன்பங்கள்

ரெயில் காலையில் சார்லஸ் டவுன் சேர்ந்தது. சார்லஸ் டவுனுக்கும் ஜோகன்னஸ்பர்க்குக்கும் இடையே அந்த நாளில் ரெயில் பாதை இல்லை. நான்கு சக்கரக் குதிரைக் கோச் வண்டிகளில்தான் போக வேண்டும். அவ் வண்டி, வழியில் உள்ள ஸ்டாண்டர்ட்டனில் விடியும் வரையில் தங்கும். அவ் வண்டியில் போக என்னிடம் சீட்டு இருந்தது. வழியில் மாரிட்ஸ்பர்க்கில் ஒரு நாள் தங்கிவிட்டதால் அது ரத்துச் செய்யப்பட

---

* சார்லஸ் டவுன்: நேட்டால் எல்லைக்குள், டர்பனிலிருந்து 318 மைல் தூரத்தில் இருக்கும் ஒரு பட்டணம்.

வில்லை. அதுவல்லாமல் சார்லஸ் டவுனிலிருந்த கோச் வண்டி ஏஜெண்டுக்கும் அப்துல்லா சேத், தந்தி கொடுத்திருந்தார்.

ஆனால், அந்த ஏஜெண்டுக்கு என்னை வண்டியில் ஏற்றமறுத்து விடுவதற்கு ஏதாவது ஒரு சாக்குப் போக்குத்தான் தேவையாக இருந்தது. ஆகவே, நான் அவ்விடத்திற்குப் புதியவன் என்று கண்டுகொண்டதும், "உம் டிக்கெட் ரத்தாகி விட்டது" என்றார். நான் அவருக்குத் தக்க பதில் அளித்தேன். எனக்கு இடமில்லை என்று அவர் மறுத்ததற்குக் காரணம் வேறு; வண்டியில் இடமில்லை என்பதல்ல. பிரயாணிகளை வண்டிக்குள்ளேயே உட்கார வைக்க வேண்டும். ஆனால், நானோ 'கூலி'யாகக் கருதப்பட்டேன். அதோடு புதியவனாகவும் தென்பட்டேன். எனவே, என்னை வெள்ளைக்காரப் பிரயாணிகளுடன் உட்கார வைக்காமல் இருப்பதுதான் சரி என்று வண்டித் 'தலைவர்' கருதினார். கோச் வண்டியின் காரியங்களைக் கவனித்து வரும் வெள்ளைக்காரருக்குத் 'தலைவர்' என்பது பட்டம். வண்டியின் பெட்டிமீது வண்டியோட்டிக்கு இரு பக்கங்களிலும் இரு ஆசனங்கள் இருந்தன. அவைகளில் ஒன்றில். 'தலைவர்' உட்கார்ந்து கொள்ளுவது வழக்கம். ஆனால், இன்றோ அவர் உள்ளே உட்கார்ந்துகொண்டு, அவருடைய இடத்தை எனக்குக் கொடுத்தார். அது பெரிய அநியாயமும் அவமதிப்பும் ஆகும் என்பதை அறிவேன். என்றாலும் அதையும் சகித்துக்கொள்ளுவது நல்லது என்று நினைத்தேன். கட்டாயப் படுத்தி, நான் உள்ளே போய் உட்கார்ந்து கொள்ள முடியாது. வெளியில் உட்கார ஆட்சேபித் திருந்தால் என்னை ஏற்றிக் கொள்ளாமலேயே வண்டி போயிருக்கும். அதனால் இன்னும் ஒரு நாள் வீணாகி யிருக்கும். அதற்கு மறுநாள் என்ன நேரும் என்பதையும் கடவுளே அறிவார். ஆகவே, எனக்குள்ளேயே ஆத்திரப் பட்டுக்கொண்டாலும் அதையெல்லாம் காட்டிக் கொள்ளாமல் வண்டியோட்டிக்குப் பக்கத்தில் உட்கார்ந்தேன்.

சுமார் மூன்று மணிக்கு வண்டி, பார்டேகோப் என்ற இடத்திற்குப் போய்ச் சேர்ந்தது. இப்பொழுது, 'தலைவர்', நான் உட்கார்ந்திருந்த இடத்தில் தாம் உட்கார்ந்துகொள்ள விரும்பினார். சுருட்டுப் பிடிக்க விரும்பியதோடு, கொஞ்சம் காற்றோட்டமாக இருக்கவும் அவர் விரும்பியிருக்கக்கூடும். ஆகவே, வண்டியோட்டியிடமிருந்து ஓர் அழுக்குக் கோணித் துண்டை எடுத்து, வண்டியில் ஏறும் கால்படிமீது அதை விரித்தார். பிறகு என்னைப் பார்த்து, "சாமி, இதன்மீது நீர் உட்காரும். வண்டியோட்டியின் பக்கத்தில் நான் உட்காரவேண்டும்" என்றார். இந்த அவமதிப்பை என்னால் சகிக்க முடியவில்லை. "என்னை உள்ளே உட்கார வைக்கவேண்டி யிருந்தும் நீர்தான் என்னை இங்கே உட்காரவைத்தீர். அந்த அவமதிப்பையும் சகித்துக் கொண்டேன். இப்பொழுது நீர் வெளியே உட்கார்ந்து சுருட்டுப்

பிடிக்க விரும்புவதற்காக என்னை உமது காலடியில் உட்காரச் சொல்கிறீர். அப்படி உட்காரமாட்டேன். ஆனால், உள்ளே வேண்டுமானால் உட்காரத் தயார்'' என்று பயந்து கொண்டும் நடுங்கிக்கொண்டும் கூறினேன்.

இவ்விதம் நான் தட்டுத் தடுமாறிச் சொல்லிக்கொண் டிருந்தபோதே அவர் என்னிடம் வந்து, என் கன்னங்களில் ஓங்கி அறையத் தொடங்கினார். என் கையைப் பிடித்து இழுத்துக் கீழே தள்ளவும் முயன்றார். வண்டியின் பித்தளைக் கம்பிகளை நான் கெட்டியாகப் பிடித்துக்கொண்டேன். மணிக்கட்டுகளின் எலும்புகள் முறிந்தாலும் பிடியை மாத்திரம் விடுவதில்லை என்று உறுதிகொண்டேன். அவர் என்னைத் திட்டி, இழுத்து அடிப்பதும், நான் சும்மா இருப்பதுமாகிய இக் காட்சியைப் பிரயாணிகள் பார்த்துக்கொண்டிருந்தனர். அவரோ பலசாலி; நானோ பலவீனமானவன். பிரயாணிகளில் சிலருக்கு இரக்கம் உண்டாயிற்று. ''அவரை விட்டுவிடும்; அடிக்காதேயும், அவர் மீது குற்றம் இல்லை. அவர் செய்தது சரியே. அவர் அங்கே இருக்க முடியாதென்றால் இங்கே வந்து எங்களுடன் உட்கார்ந்துகொள்ளட்டும்'' என்றனர். ''அது முடியாது'' என்று 'தலைவர்' கத்தினார். ஆனாலும், கொஞ்சம் அவமானம் அடைந்து விட்டவர் போலவே காணப்பட்டார். என்னை அடிப்பதை நிறுத்திவிட்டார். என் கையை விட்டுவிட்டு, கொஞ்ச நேரம் திட்டிக்கொண்டிருந்தார். வண்டிப் பெட்டியின் மற்றொரு பக்கத்தில் ஹாட்டன்டாட்* வேலைக்காரர் உட்கார்ந்திருந்தார். எழுந்து படிக்கட்டில் உட்காரும்படி அவருக்குச் சொல்லி, அவர் காலி செய்த இடத்தில் 'தலைவர்' உட்கார்ந்துகொண்டார்.

பிரயாணிகள் ஏறி அவரவர்களிடத்தில் உட்கார்ந்தனர். ஊதியதும், வண்டியும் வேகமாகப் புறப்பட்டுப் போயிற்று. என் இருதயமோ அதி வேகமாக அடித்துக்கொண் டிருந்தது. சேர வேண்டிய இடத்திற்கு உயிருடன் போய்ச் சேர முடியுமா என்று எண்ணித் திகைத்தேன். 'தலைவ'ரோ அடிக்கடி கோபத்துடன் என்னை முறைத்துப் பார்த்துக்கொண்டே இருந்தார். ''இரு, ஸ்டாண்டர்ட்டன் போய்ச் சேர்ந்ததும் என்ன செய்கிறேன் என்பதைக் காட்டுகிறேன்!'' என்று விரலை ஆட்டி, உறுமிக்

---

* ஹாட்டன்டாட் என்பது, ஆப்பிரிக்க சுதேசிகளில் சிலருக்கு 17-ஆம் நூற்றாண்டில் டச்சுக்காரர்கள் இட்ட பெயர். தென்னாப்பிரிக்காவின் கேப் காலனியில் இச் சாதிச் சுதேசிகளே பெரும்பாலும் இருந்து வந்தனர். வெள்ளைக்காரர்கள் புகுந்ததும் அவர்களையெல்லாம் கொள்ளையடித்து அழித்துவிட்டார்கள். தென்மேற்கு ஆப்பிரிக்காவில் மாத்திரம் இப்பொழுது இச்சாதியினர் கொஞ்சம் பேர் மிஞ்சியிருக்கின்றனர் இவர்களைக் காட்டு மனிதர் ரகத்தினர் எனக்கூறிவிட முடியாது. இவர்களிடையே ஒரு வகை நாகரிகமும் வளர்ந்திருந்தது. ஆடுமாடுகளை வளர்ப்பதுடன், விவசாயத்திலும் இம் மக்கள் ஈடுபட்டிருந்தனர். இரும்பை உருக்கிப் பல ஆயுதங்கள், கருவிகள் முதலியன செய்வதையும் வெகு காலத்திற்கு முன்பிருந்தே இச் சாதியார் அறிந்திருந்தார்கள். இவர்கள், வெள்ளையரிடம் அடிமைப்பட்டு வேலைக்காரர்கள் ஆயினர்.

கொண்டே இருந்தார். நான் வாய் திறவாது உட்கார்ந்திருந் தேன். எனக்கு உதவுமாறு கடவுளைப் பிரார்த்தித்தேன்.

இருட்டியதும் ஸ்டாண்டர்ட்டன் போய்ச் சேர்ந்தோம். அங்கே சில இந்திய முகங்களைக் கண்டதும் ஒரு சிறிது ஆறுதல் அடைந்து பெருமூச்சு விட்டேன். நான் வண்டியிலிருந்து இறங் கியதும் அந்த நண்பர்கள், "உங்களை வரவேற்று, ஈஸா சேத்தின் கடைக்கு அழைத்துச் செல்ல இங்கே வந்திருக்கிறோம். தாதா அப்துல்லாவிடமிருந்து எங்களுக்குத் தந்தி வந்திருக்கிறது" என்றார்கள். நான் அதிக மகிழ்ச்சியடைந்தேன். சேத் ஈஸா ஹாஜி ஸுமாரின் கடைக்குச் சென்றோம். சேத்தும் அவருடைய குமாஸ்தாக்களும் என்னைச் சுற்றி உட்கார்ந்து கொண்டார்கள். நான் பட்ட கஷ்டங்களை யெல்லாம் சொன் னேன். கேட்டு அதிக வருத்தப்பட்டார்கள். தங்களுக்கு ஏற் பட்ட மோசமான அனுபவங்களை யெல்லாம் கூறி என்னைத் தேற் றினார்கள்.

நடந்ததை யெல்லாம் கோச்வண்டிக் கம்பெனியின் ஏஜெண் டுக்கு அறிவிக்க விரும்பினேன். எனக்கு நேர்ந்ததை யெல்லாம் எடுத்துக்கூறி, அவருடைய ஆள் என்னை மிரட்டியதையும் அவர் கவனத்திற்குக் கொண்டுவந்து ஒரு கடிதம் எழுதினேன். மறு நாள் காலை நாங்கள் புறப்படும்போது மற்றப் பிரயாணிகளுடன் என்னை உள்ளே உட்கார வைப்பதாக வாக்குறுதி தர வேண்டும் என்றும் அவரிடம் கேட்டேன். இக்கடிதத்திற்கு ஏஜெண்டு பின் வருமாறு பதிலளித்தார்: "ஸ்டாண்டர்ட்டனிலிருந்து வேறு ஆட்களைக் கொண்ட பெரிய வண்டி போகிறது. நீங்கள் புகார் செய்யும் அந்த ஆசாமி நாளைக்கு அங்கே இருக்க மாட்டார். மற்றப் பிரயாணிகளுடன் உங்களுக்கும் இடம் இருக்கும்." இது ஒருவாறு எனக்கு ஆறுதலை அளித்தது. என்னை அடித்த ஆசாமி மீது வழக்கு தொடர வேண்டும் என்ற நோக்கமே எனக்கு இல்லை. ஆகவே, அடிபட்ட அத்தியாயம் அத்தோடு முடிந்தது.

மறுநாள் காலையில் ஈஸா சேத்தின் ஆள் என்னைக் கோச் வண்டிக்கு அழைத்துச் சென்றார். எனக்கு நல்ல ஆசனம் கிடைத்தது. அன்றிரவு பத்திரமாக ஜோகன்னஸ்பர்க்கை* அடைந்தேன்.

ஸ்டாண்டர்ட்டன் சிறு கிராமம்; ஜோகன்னஸ்பர்க்கோ பெரிய நகரம். அப்துல்லா சேத் ஜோகன்னஸ்பர்க்கிற்கும் தந்தி கொடுத்திருந்தார். அங்குள்ள முகம்மது காஸம் கம்ருதீன் கம்பெனியின் விலாசத்தையும் என்னிடம் கொடுத்திருந்தார். என்னைச் சந்தித்து அழைத்துப்போவதற்கு அந்தக் கம்பெனியின் ஆள் ஒருவரும் வண்டி நிற்கும் இடத்திற்கு வந்திருந்தாராம்.

* ஜோகன்னஸ்பர்க்: டிரான்ஸ்வாலில் அதிகச் செல்வம் மிகுந்த தங்கச் சுரங் கங்களைக் கொண்ட விட்வாடர்ஸ்டாண்டு பிரதேசத்திலுள்ள நகரம்.

ஆனல், நான் அவரைப் பார்க்கவும் இல்லை; அவர் என்னைத் தெரிந்துகொள்ளவும் இல்லை. ஆகவே, ஒரு ஹோட்டலுக்குப் போவது என்று முடிவு செய்தேன். பல ஹோட்டல்களின் பெயர்கள் எனக்குத் தெரியும். வண்டியை அமர்த்திக்கொண்டு நேரே கிராண்டு நாஷனல் ஹோட்டலுக்கு ஓட்டச் சொன்னேன். மானேஜரைப் பார்த்து, 'தங்குவதற்கு ஓர் அறை வேண்டும்' என்று கேட்டேன். அவர் என்னைக் கொஞ்ச நேரம் உற்றுப் பார்த்தார். "இடம் நிரம்பிவிட்டது; வருத்தப்படுகிறேன்" என்று மரியாதையாகக் கூறி, என்னை வழியனுப்பி விட்டார். ஆகவே, முகமது காஸம் கம்ருதீன் கடைக்கு ஓட்டுமாறு வண்டிக்காரனிடம் கூறினேன். அங்கே அப்துல் கனி சேத், என்னை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். என்னை அன்போடு வரவேற்றார். ஹோட்டலில் எனக்கு ஏற்பட்ட அனுபவத்தைக் கேட்டுவிட்டு, விழுந்து விழுந்து சிரித்தார். "ஹோட்டலில் இருக்க உங்களை அனுமதிப்பார்கள் என்று எப்படி எதிர்பார்த்தீர்கள்?" என்றார்.

"ஏன் அனுமதிக்கமாட்டார்கள்?" என்று நான் கேட்டேன்.

"நீங்கள் இங்கே சில தினங்கள் தங்கியதும் அதைத் தெரிந்து கொள்ளுவீர்கள்" என்றார். "இது போன்றதோர் நாட்டில் நாங்கள்தான் வசிக்க முடியும். ஏனெனில், பணம் சம்பாதிப்பதற்காக அவமானங்களைச் சகித்துக்கொள்ளுவதைக் குறித்து நாங்கள் கவலைப்படுவதில்லை. ஆகையால், நாங்கள் இங்கே இருக்கிறோம்" என்றார். அதோடு தென்னாப்பிரிக்காவில் இந்தியர் அனுபவித்துவரும் துன்பங்களைப்பற்றிய கதையையும் விரிவாகக் கூறினர். மேலே போகப் போகச் சேத் அப்துல் கனியைக் குறித்து நாம் அதிகமாகத் தெரிந்துகொள்ளுவோம்.

அவர் மேலும் சொன்னதாவது: "உங்களைப் போன்றவர்களுக்கு ஏற்ற நாடல்ல இது. நீங்களோ, நாளை பிரிட்டோரியாவுக்குப் போகவேண்டியிருக்கிறது. மூன்றும் வகுப்பு வண்டியில் தான் நீங்கள் பிரயாணம் செய்தாக வேண்டும். டிரான்ஸ்வாலில் இருக்கும் நிலைமை, நேட்டாலில் இருக்கும் நிலைமையைவிட மகா மோசமானது. இந்தியருக்கு முதல், இரண்டாவது வகுப்பு டிக்கெட்டுகளைக் கொடுப்பதே இல்லை."

"இது சம்பந்தமாக நீங்கள் விடாமல் முயன்றிருக்க மாட்டீர்கள்" என்றேன்.

"விண்ணப்பங்களை அனுப்பியிருக்கிறோம். வழக்கமாக நம்மவர்கள் முதல், இரண்டாம் வகுப்புக்களில் பிரயாணம் செய்ய விரும்புவதில்லை என்பதையும் ஒப்புக்கொள்ளுகிறேன்" என்றார், சேத் கனி.

ரெயில்வே விதிகளைத் தருவித்து, அவற்றைப் படித்துப் படித்துப் பார்த்தேன். விதிகளில் ஓரளவு இடம் இருந்ததைக்

கண்டேன். டிரான்ஸ்வாலின் பழைய சட்டங்களின் வாசகங்கள் அவ்வளவு திட்டவட்டமாக இல்லை. ரெயில்வே விதிகளோ, அதையும்விடத் திட்டவட்ட மில்லாமல் இருந்தன.

"நான் முதல் வகுப்பிலேயே போக விரும்புகிறேன். அப்படிப் போக முடியவில்லை யென்றால், பிரிட்டோரியாவுக்கு முப்பத்து ஏழு மைல் தூரமே யாகையால் கோச் வண்டியில் போகிறேன்" என்று சேத்திடம் சொன்னேன்.

இதனால் ஏற்படக்கூடிய கால தாமதத்தையும் பணச் செலவையும் சேத் அப்துல் கனி, எனக்கு எடுத்துக் கூறினார். ஆனால், முதல் வகுப்பில் பிரயாணம் செய்வதென்ற என் யோசனையை ஒப்புக்கொண்டார். அதன்பேரில் ஸ்டேஷன் மாஸ்டருக்கு ஒரு குறிப்பு அனுப்பினேன். நான் பாரிஸ்டர் என்றும், நான் முதல் வகுப்பிலேயே எப்பொழுதும் பிரயாணம் செய்வது வழக்கம் என்றும் அதில் குறிப்பிட்டேன். பிரிட்டோரியாவுக்குச் சீக்கிரத்தில் நான் போகவேண்டி யிருக்கிறது என்றும், அவருடைய பதிலுக்காகக் காத்திருக்க நேரமில்லை யாகையால் பதிலை ஸ்டேஷனிலேயே நான் வாங்கிக்கொள்ளுவதாகவும், முதல் வகுப்பு டிக்கெட்டை எதிர்பார்க்கிறேன் என்றும் அக் கடிதத்தில் எழுதியிருந்தேன். பதிலை நேரில் வாங்கிக்கொள்ளுவதாக நான் கூறியிருந்ததற்கும் ஒரு காரணம் உண்டு. 'கூலி' பாரிஸ்டர் என்றால் எப்படி இருப்பார் என்பதைக் குறித்து ஸ்டேஷன் மாஸ்டருக்கும் ஒரு வகையான எண்ணம் இருக்கக்கூடும். ஆகையால், எழுத்து மூலம் ஸ்டேஷன் மாஸ்டர் எனக்குப் பதில் அனுப்புவதாக இருந்தால், 'இல்லை' என்றுதான் நிச்சயமாகச் சொல்லிவிடுவார். எனவே, சரியான ஆங்கில உடையில் அவரிடம் போய், நேரில் பேசினால், முதல் வகுப்பு டிக்கெட் கொடுத்துவிடும்படி செய்துவிடக்கூடும் என்று எண்ணினேன். மறுநாள் காலை நாகரிகமான சட்டை, டை முதலியவைகளை அணிந்துகொண்டு, ஸ்டேஷனுக்குப் போய், என் கட்டணத்திற்காக ஒரு சவரனை டிக்கெட் கொடுக்கும் இடத்தில் வைத்து, "முதல் வகுப்பு டிக்கெட் வேண்டும்" என்று கேட்டேன்.

"இக் கடிதத்தை நீங்கள்தானே அனுப்பினீர்கள்?" என்று ஸ்டேஷன் மாஸ்டர் என்னைக் கேட்டார்.

"நான்தான் அனுப்பினேன். எனக்கு ஒரு டிக்கெட் கொடுத்தால் அதிக உபகாரமாக இருக்கும். நான் இன்றே பிரிட்டோரியாவுக்குப் போயாக வேண்டும்" என்றேன்.

அவர் சிரித்தார். பச்சாதாபப் பட்டார். பின்வருமாறு சொன்னார்: "நான் டிரான்ஸ்வால்காரன் அல்ல; ஹாலந்துக்காரன். உங்கள் உணர்ச்சியை நான் மதிக்கிறேன். உங்களிடம் எனக்கு அனுதாபமும் உண்டு. உங்களுக்கு டிக்கெட் கொடுக்கவே விரும்புகிறேன். ஆனால், ஒரு நிபந்தனை : உங்களை மூன்றும் வகுப்பு வண்டிக்குப் போய்விடுமாறு கார்டு கூறினால், என்னை இவ்விஷ

யத்தில் சிக்க வைத்துவிடக் கூடாது. ரெயில்வே கம்பெனிமீது நீங்கள் வழக்குத்தொடுத்துவிடக் கூடாது என்றே கூறுகிறேன். சுகமாகப் போய்ச் சேருங்கள். பார்த்த மாத்திரத்திலேயே நீங்கள் ஒரு கனவான் என்பதைக் காண்கிறேன்.''

இவ்விதம் கூறி அவர் எனக்கு டிக்கெட் கொடுத்தார். அவருக்கு நன்றி செலுத்தினேன். தேவையான உறுதிமொழிகளையும் அவருக்குக் கூறினேன்.

என்னை வழியனுப்புவதற்காக சேத் அப்துல் கனி, ஸ்டேஷனுக்கு வந்திருந்தார். இச் சம்பவம் அவருக்கு மகிழ்ச்சியையும் ஆச்சரியத்தையும் அளித்தது. ஆனல், அவர் ஓர் எச்சரிக்கையையும் செய்தார். ''நீங்கள் தொந்தரவில்லாமல் பிரிட்டோரியா போய்ச் சேர்ந்தால், அது கடவுள் கிருபைதான். முதல் வகுப்பு வண்டியில் உங்களைக் கார்டு விட்டுவைக்க மாட்டார் என்றே அஞ்சுகிறேன். அவர் விட்டு வைத்தாலும் பிரயாணிகள் விட்டு வைக்க மாட்டார்கள்'' என்ருர்.

முதல் வகுப்பு வண்டியில் ஏறி உட்கார்ந்துகொண்டேன். வண்டியும் புறப்பட்டுவிட்டது. ஜெர்மிஸ்டன் என்ற இடத்தில் டிக்கெட்டுகளைப் பரிசோதிப்பதற்காகக் கார்டு வந்தார். நான் அங்கே இருப்பதைக் கண்டதும் கோபம் அடைந்தார். மூன்ரும் வகுப்பு வண்டிக்குப் போய்விடுமாறு விரலாலேயே சமிக்ஞை செய்தார். என்னிடம் இருந்த முதல் வகுப்பு டிக்கெட்டை அவரிடம் காட்டினேன். ''அதைப்பற்றி அக்கறை யில்லை. மூன்ரும் வகுப்பு வண்டிக்குப் போய்விடு'' என்ருர்.

அந்த வண்டியில் என்னைத் தவிர ஆங்கிலப் பிரயாணி ஒருவரும் இருந்தார். அவர் கார்டைக் கண்டித்தார். ''அந்தக் கனவானை ஏன் தொந்தரவு செய்கிறீர்கள்? அவரிடம் முதல் வகுப்பு டிக்கெட் இருப்பதை நீர் பார்க்கவில்லையா? அவர் என்னேடு பிரயாணம் செய்வதைப்பற்றி எனக்குக் கொஞ்சமும் ஆட்சேபம் இல்லை'' என்ருர். பிறகு அவர் என்னைப் பார்த்து, ''நீங்கள் இருக்கும் இடத்திலேயே சௌகரியமாக இருங்கள்'' என்ருர்.

''ஒரு கூலியுடன் பிரயாணம் செய்ய நீங்கள் விரும்பினல் எனக்கு என்ன கவலை?'' என்று கார்டு முணுமுணுத்தார்.

இரவு எட்டு மணிக்கு ரெயில் பிரிட்டோரியாவைச் சேர்ந்தது.

## 10

# பிரிட்டோரியாவில் முதல் நாள்

தாதா அப்துல்லாவின் அட்டர்னியிடமிருந்து யாராவது என்னைச் சந்திக்கப் பிரிட்டோரியா ஸ்டேஷனுக்கு வருவார்கள் என்று எதிர்பார்த்தேன். குறிப்பாக இந்தியர் எவருடைய வீட்

டிலும் தங்கப் போவதில்லை என்று நான் வாக்குறுதி அளித்திருந்தேன். ஆகையால், என்னைச் சந்திக்க இந்தியர் எவரும் ஸ்டேஷனுக்கு வரமாட்டார்கள் என்பது எனக்குத் தெரியும். அட்டர்னியும் யாரையும் அனுப்பவில்லை. நான் அங்கே போய்ச் சேர்ந்த நாள் ஞாயிற்றுக்கிழமை. ஆகையால், அன்று யாரையும் அனுப்ப அவருக்குச் சௌகரியப்படவில்லை என்பதை பின்னால் தெரிந்து கொண்டேன். என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்துப் போனேன். எந்த ஹோட்டலிலும் எனக்கு இடம் கொடுக்க மாட்டார்கள் என்று நான் பயந்ததால் எங்கே போவது என்று புரியாமல் விழித்தேன்.

பிரிட்டோரியா ஸ்டேஷன் *1914*-இல் இருந்ததற்கும் *1893*-இல் இருந்ததற்கும் அதிக வித்தியாசம் உண்டு. அப்பொழுது விளக்குகள் மங்கலாக எரிந்துகொண்டிருந்தன. பிரயாணிகளும் மிகச் சிலரே. மற்றப் பிரயாணிகளெல்லாம் போகட்டும் என்று காத்திருந்தேன். டிக்கெட் வசூலிப்பவர் (டிக்கெட் கலெக்டர்) ஓய்வாக இருக்கும்போது அவரிடம் என் டிக்கெட்டைக் கொடுத்து விட்டு, ஏதாவது ஒரு சிறு ஹோட்டலுக்காவது, நான் தங்கக் கூடிய வேறு இடத்திற்காவது வழி சொல்லும்படி கேட்கலாம் என்று இருந்தேன். அப்படி இல்லையென்றால், இரவு ஸ்டேஷனிலேயே இருந்துவிடுவது என்றும் நினைத்தேன். ஆனால், உண்மையில் இதைக் கேட்பதற்குக்கூட எனக்குப் பயமாக இருந்தது. 'அவர் எங்கே என்னை அவமதித்து விடுவாரோ?' என்று அஞ்சினேன்.

ஸ்டேஷனிலிருந்து எல்லாப் பிரயாணிகளும் போய்விட்டார்கள். நான் டிக்கெட் கலெக்டரிடம் என் டிக்கெட்டைக்கொடுத்து விட்டு விசாரிக்க ஆரம்பித்தேன். அவர் மரியாதையாகவே பதில் சொன்னார். என்றாலும் அவரால் எனக்கு அதிகமாக எந்த உதவியும் ஏற்படாது என்று கண்டேன். ஆனால், பக்கத்தில் நின்று கொண்டிருந்த ஓர் அமெரிக்க நீக்கிரோவரும் பேச்சில் எங்களுடன் கலந்துகொண்டார்.

"நீங்கள் இந்த இடத்திற்கு முற்றும் புதியவர் என்றும், உங்களுக்கு நண்பர்கள் இங்கே யாரும் இல்லை என்றும் தெரிகிறது. நீங்கள் என்னுடன் வந்தால் உங்களை ஒரு சிறு ஹோட்டலுக்கு இட்டுச் செல்கிறேன். அந்த ஹோட்டலின் சொந்தக்காரர் ஓர் அமெரிக்கர். எனக்கு நன்றாகத் தெரிந்தவர். அவர் உங்களை ஏற்றுக்கொள்ளுவார் என்றே நினைக்கிறேன்" என்றார், அவர்.

எனக்குச் சந்தேகமாகவே இருந்தது. ஆனாலும், அவருக்கு நன்றி கூறிவிட்டு, அவருடைய யோசனையை ஏற்றுக்கொண்டேன். என்னை அவர் ஜான்ஸ்டனின் குடும்ப ஹோட்டலுக்கு அழைத்துப் போனார். ஸ்ரீ ஜான்ஸ்டனைத் தனியாக அழைத்துப் பேசினார். அவரும், அன்றிரவு நான் தங்குவதற்கு இடம் தருவதாக ஒப்புக் கொண்டார். ஆனால், அன்றிரவுச் சாப்பாட்டைத் தனியாக என் அறையிலேயே சாப்பிட வேண்டும் என்பது நிபந்தனை.

''எனக்கு நிறத் துவேஷம் எதுவுமே கிடையாது என்பதை உங்களுக்கு உறுதியாகக் கூறுகிறேன். ஆனால், என் ஹோட்டலுக்கு வருபவர்களெல்லோரும் ஐரோப்பியர். போஜன அறையில் சாப்பிட உங்களை நான் அனுமதித்தால் அவர்கள் கோபமடைவார்கள். அவர்கள் இங்கிருந்து போய்விட்டாலும் போய்விடக் கூடும்'' என்றார், ஸ்ரீ ஜான்ஸ்டன்.

அதற்கு நான், '' இன்றிரவுக்கு மாத்திரமே எனக்கு இடம் அளிப்பதாக இருந்தாலும், அதற்காக என் நன்றி. இங்குள்ள நிலைமையை நான் இப்பொழுது அநேகமாகத் தெரிந்துகொண்டிருக்கிறேன். ஆகையால், உங்களுக்கு இருக்கும் கஷ்டங்களையும் அறிகிறேன். என் அறையிலேயே எனக்கு நீங்கள் இரவுச் சாப்பாடு கொடுப்பதைப்பற்றி எனக்குக் கவலையில்லை. நாளைக்கு வேறு ஏதாவது ஏற்பாடு செய்துகொள்ள முடியும் என்று நம்புகிறேன்'' என்று கூறினேன்.

பிறகு அவர் என்னை ஓர் அறைக்கு அழைத்துக்கொண்டு போய்விட்டார். சாப்பாடு வரும் என்று எதிர்பார்த்துக்கொண்டிருந்தேன். நான் தனியாக இருந்ததால் சிந்தனையில் ஆழ்ந்தேன். அந்த ஹோட்டலில் தங்கியவர்கள் அப்பொழுது அதிகம் பேர் இல்லை. ஆகவே, வேலைக்காரன் சீக்கிரமாகவே சாப்பாடு கொண்டு வருவான் என்று எதிர்பார்த்துக்கொண்டிருந்தேன். ஆனால், ஸ்ரீ ஜான்ஸ்டனே அங்கே வந்தார். ''உங்கள் அறையிலேயே நீங்கள் சாப்பிட்டுக்கொள்ள வேண்டும் என்று உங்களிடம் சொன்னது எனக்கே வெட்கமாக இருந்தது. ஆகவே, உங்களைப்பற்றி மற்றவர்களிடம் சொன்னேன். 'சாப்பாட்டு அறைக்கே நீங்களும் வந்து சாப்பிடுவதில் அவர்களுக்கு ஏதாவது ஆட்சேபம் உண்டா?' என்று அவர்களைக் கேட்டேன். தங்களுக்கு எந்தவிதமான ஆட்சேபமும் இல்லை என்றும், நீங்கள் விரும்பும் வரை இங்கே தங்குவதைக் குறித்தும் தங்களுக்குக் கவலையில்லை என்றும் அவர்கள் சொன்னார்கள். ஆகையால், தயவுசெய்து சாப்பாட்டு அறைக்கே வாருங்கள். உங்களுக்கு இஷ்டம் இருக்கும் வரை நீங்கள் இங்கேயே தங்கலாம்'' என்றும் அவர் கூறினார்.

அவருக்கு மீண்டும் நன்றி கூறினேன். சாப்பாட்டு அறைக்குப் போய்த் திருப்தியாகச் சாப்பிட்டேன்.

மறுநாள் காலை அட்டர்னி ஸ்ரீ ஏ. டபிள்யூ. பேக்கரைப் போய்ப்பார்த்தேன். அவரைப்பற்றிய சில விவரங்களை அப்துல்லா சேத் என்னிடம் சொல்லியிருந்தார். ஆகையால், அவர் என்னை அன்போடு வரவேற்றதைக் கண்டு நான் ஆச்சரியப்படவில்லை. என் சுகத்தைக் குறித்தும் பிரியமாக விசாரித்தார். என்னைப் பற்றிய எல்லா விவரங்களையும் சொன்னேன். அதன்பேரில் அவர் கூறியதாவது: ''இந்த வழக்குக்குச் சிறந்த வக்கீலை அமர்த்தியிருக்கிறோம். ஆகையால், பாரிஸ்டர் என்ற வகையில் உங்

களுக்கு எங்களிடம் வேலை இல்லை. இந்த வழக்கு நீண்ட கால மாக நடந்து வருவதோடு மிகவும் சிக்கலானதுங்கூட. அவசிய மான தகவல்களைப் பெறும் அளவுக்கு மாத்திரம் உங்கள் உத வியை ஏற்றுக்கொள்ளுகிறேன். என்னுடைய கட்சிக்காரரிட மிருந்து வேண்டிய விவரங்களையெல்லாம் உங்கள் மூலமே கேட் டுத் தெரிந்துகொள்ள முடியுமாகையால் அவருடன் நான் வைத் துக்கொள்ள வேண்டிய தொடர்பை நீங்கள் எளிதாக்கிவிட்டீர் கள். இது நிச்சயமாக வசதியானதே. நீங்கள் தங்குவதற்கு நான் இன்னும் இடம் பார்க்கவில்லை. உங்களைப் பார்த்த பிறகு ஏற்பாடு செய்வது நல்லது என்று இருந்துவிட்டேன். இங்கே பயப்படக் கூடிய வகையில் நிறத் துவேஷம் இருந்து வருகிறது. ஆகையால், உங்களைப் போன்றவர்கள் தங்குவதற்கு இடம் பார்ப்பதென்பது சுலபமல்ல. ஆனால், எனக்கு ஓர் ஏழைப் பெண்ணைத் தெரியும். அவள் ஒரு ரொட்டிக் கடைக்காரனின் மனைவி. அம் மாது உங்களுக்கு இடம் கொடுப்பாள் என்று நினைக்கிறேன். அதனால் அவளுக்கும் வருவாய் இருக்கும். வாருங்கள், அவள் இருக்கும் இடத்திற்குப் போவோம்.''

அப் பெண்மணியின் வீட்டிற்கு என்னை அவர் அழைத்துச் சென்றார். என்னைக் குறித்துத் தனியாக அவரிடம் பேசினர். வாரத்திற்கு 35 ஷில்லிங் கொடுத்துச் சாப்பிட்டுக்கொண்டு, நான் அங்கே தங்குவதற்கு அப் பெண் சம்மதித்தார்.

ஸ்ரீ பேக்கர், அட்டர்னித் தொழில் செய்து வந்ததோடு மத சம்பந்தமான பிரசங்கங்களும் செய்து வந்தார். அவர் இன்னும் உயிருடன் இருக்கிறார். இப்போது சட்டத் தொழிலை விட்டுவிட்டு மதப் பிரசாரம் மட்டும் செய்து கொண்டிருக்கிறார். அவருக்கு நல்ல சொத்து உண்டு. இப்பொழுதும் எனக்குக் கடிதங்கள் எழுதுகிறார். எழுதும் கடிதங்களிலெல்லாம் ஒரே விஷயத்தையே எழுதிக்கொண்டு வருகிறார். எந்த வகையில் கவனித்தாலும் கிறிஸ்தவ சமயம் ஒன்றே எல்லாவற்றிலும் சிறந்தது என்கிறார். ஏசுநாதர் ஒருவரே கடவுளின் திருக்குமாரர், அவரே மனித வர்க் கத்தின் ரட்சகர் என்பதை ஒப்புக்கொள்ளாத வரையில் நிரந்தர மான சாந்தியை அடையவே முடியாது என்றும் வாதிக்கிறார்.

ஸ்ரீ பேக்கரை நான் முதல் முறை சந்தித்துப் பேசியபோதே, மத சம்பந்தமான என்னுடைய கருத்துக்களைப்பற்றி அவர் விசா ரித்தார். நான் அவருக்குப் பின்வருமாறு சொன்னேன்: “ பிறப் பினல் நான் ஹிந்து. என்றாலும் ஹிந்து தருமத்தைப்பற்றி எனக்கு இன்னும் அதிகமாகத் தெரியாது. மற்ற மதங்களைக் குறித்துத் தெரிந்திருப்பதோ அதைவிடவும் குறைவு. உண்மையில், மத சம் பந்தமாக என் நிலை என்ன, என் நம்பிக்கை எதுவாக இருக்க வேண்டும் என்பதையே நான் அறியேன். என் சொந்த மதத் தைக் குறித்துக் கவனமாகப் படிக்க விரும்புகிறேன். முடிந்த வரையில் பிற சமயங்களைக் குறித்தும் படிக்க எண்ணுகிறேன்.”

இதையெல்லாம் நான் சொல்லக் கேட்டு ஸ்ரீ பேக்கர் சந்தோஷமடைந்தார். அவர். கூறியதாவது: ''தென்னுப்பிரிக்கப் பொதுக் கிறிஸ்தவப் பிரசார சபையில் நானும் ஒரு டைரக்டர். என் சொந்தச் செலவில் ஒரு கிறிஸ்தவாலயம் கட்டியிருக்கிறேன். தவருமல் அதில் சமயப் பிரசங்கங்கள் செய்து வருகிறேன். நிறத் துவேஷம் என்பதே என்னிடம் இல்லே. எனக்குச் சக ஊழியர் சிலர் இருக்கின்றனர். தினம் பகல் ஒரு மணிக்கு நாங்கள் சில நிமிஷ நேரம் கூடிச் சாந்தியும் ஞான ஒளியும் பெறுவதற்குப் பிரார்த்தனே செய்து வருகிருேம். அதில் நீங்களும் கலந்து கொள்ளுவீர்களாயின் மகிழ்ச்சியடைவேன். என் சக ஊழியர்களேயும் உங்களுக்கு அறிமுகம் செய்துவைக்கிறேன். உங்களேச் சந்திப்பதில் அவர்கள் ஆனந்தமடைவார்கள். அவர்களுடன் பழகுவதை நீங்களும் விரும்புவீர்கள் என்று தைரியமாகக் கூறுவேன். அதோடு, நீங்கள் படிப்பதற்குச் சமய நூல்கள் சிலவற்றையும் கொடுக்கிறேன். என்ருலும், நூல்களிலெல்லாம் தலேயாய நூல், பைபிளே யாகையால் முக்கியமாக நீங்கள் அதைப் படிக்க வேண்டும் என்று சிபார்சு செய்கிறேன்.''

ஸ்ரீ பேக்கருக்கு நன்றி கூறினேன். ஒரு மணிக்கு நடக்கும் பிரார்த்தனேக்குச் சாத்தியமானவரை ஒழுங்காக வருவதாகவும் ஒப்புக்கொண்டேன்.

''அப்படியானல், நாளே பகல் ஒரு மணிக்கு உங்களே இங்கே எதிர்பார்க்கிறேன். பிரார்த்தனேக்கு நாம் இருவருமே சேர்ந்து போவோம்'' என்ருர். பிறகு விடைபெற்றுக்கொண்டு பிரிந்தோம்.

இந்தப் பேச்சைப்பற்றித் திரும்பச் சிந்தித்துப் பார்க்க எனக்கு அப்பொழுது அவகாசம் இல்லே. ஸ்ரீ ஜான்ஸ்டனின் ஹோட்டலுக்குச் சென்றேன். அவருக்குக் கொடுக்க வேண்டியிருந்ததைக் கொடுத்துவிட்டு, வசிப்பதற்குப் புதிதாக அமர்த்தியிருந்த இடத்திற்குச் சென்று, அங்கேயே என் மத்தியான ஆகாரத்தையும் சாப்பிட்டேன். அவ்வீட்டு அம்மாள் நல்ல பெண்மணி. எனக்காக அவர் சைவ உணவு சமைத்திருந்தார். வெகு சீக்கிரத்திலேயே அக் குடும்பத்தில் நானும் ஒருவன் ஆகிவிட்டேன்.*

---

* காந்திஜி தாம் சைவ உணவு சாப்பிட்டு வந்ததுடன், தாமிருந்த வீட்டு அம்மாளும் சைவ உணவு விரதம் மேற்கொள்ளும்படி செய்ய முயன்றிருக்கிருர். பிரிட்டோரியாவிலிருந்து காந்திஜி எழுதிய கடிதம் 30—9—1893-இல் வெளியான லண்டன் 'வெஜிடேரியன்' பத்திரிகையில் பிரசுரமாகி யிருக்கிறது. அதில் காந்திஜி கூறுவதாவது:

"காய்கறித் தோட்டம் பயிர் செய்கிறவருக்குத் தென்னுப்பிரிக்காவில் நல்ல வாய்ப்பு இருக்கிறது. நிலவளம் நன்ருக இருந்தும் இந்தச் சாகுபடியை யாரும் சரியாகச் செய்வதில்லே. நான் தங்கியிருக்கும் வீட்டுப் பெண்மணி ஆங்கிலேயர். அவர் சைவ உணவே சாப்பிடுகிறவராவதுடன் அவர் குழந்தைகளேயும் அவ்விதமே வளர்க்க வேண்டும் என்று தூண்டி வெற்றி பெற்றிருக்கிறேன் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன். ஆனல், அந்த உறுதியிலிருந்து அவர் நழுவி விடுவாரோ என்று அஞ்சுகிறேன். இங்கே சரியான காய்கறிகள் கிடைப்பதில்லே. கிடைப்பவையும்

தாதா அப்துல்லா ஒரு நண்பருக்குக் கடிதம் கொடுத்திருந்தார். அடுத்தபடியாக அவரைப் பார்க்கச் சென்றேன். தென்னுப்பிரிக்காவில் இந்தியருக்கு இருந்த கஷ்டங்களைக் குறித்து, இன்னும் அதிகமான விவரங்களை அவரிடமிருந்து தெரிந்துகொண்டேன். தம்முடனேயே தங்கும்படி அவர் என்னை வற்புறுத்தினர். இதற்காக அவருக்கு நன்றி கூறிவிட்டுத் தங்குவதற்கு வேறு ஏற்பாடுகளைச் செய்துவிட்டதாகச் சொன்னேன். எனக்கு ஏதாவது தேவை இருந்தால் அதைக் கேட்கத் தயங்க வேண்டாம் என்றும் அவர் வற்புறுத்திச் சொன்னர்.

இதற்குள் இருட்டிவிட்டது. வீட்டுக்குச் சென்று சாப்பிட்டேன். என் அறைக்குப் போய்ப் படுத்துக்கொண்டு, ஆழ்ந்து சிந்திக்கலானேன். உடனே செய்தாக வேண்டிய வேலை எதுவும் எனக்கு இல்லை. இதைப்பற்றி அப்துல்லா சேத்துக்கு அறிவித்தேன். என்னிடம் ஸ்ரீ பேக்கர் கொண்டிருக்கும் சிரத்தையின் பொருள் என்ன என்பதைப் பற்றிச் சிந்தித்தேன்: ‘அவருடைய சமயச் சகாக்களினல் நான் அடையப்போகும் லாபம் என்ன? கிறிஸ்தவ சமய ஆராய்ச்சியை நான் எந்த அளவுக்கு மேற்கொள்ளுவது? ஹிந்து சமயத்தைப்பற்றிய நூல்களைப் பெறுவது எப்படி? என்னுடைய மதத்தைப்பற்றி முற்றும் தெரிந்து கொள்ளாமல் கிறிஸ்தவத்தைச் சரியான வகையில் நான் எவ்விதம் புரிந்து கொள்ள முடியும்? ஒரே ஒரு முடிவுக்கே நான் வர முடிந்தது: எனக்குக் கிடைப்பதையெல்லாம் விருப்பு வெறுப்பின்றி நான் படிக்க வேண்டும். கடவுள் காட்டும் வழியை அனுசரித்து, ஸ்ரீ பேக்கரின் கோஷ்டியினருடன் பழகவேண்டும். என் மதத்தைப் பற்றி முற்றும் தெரிந்துகொள்ளுவதற்கு முன்னல், மற்றொரு மதத்தில் சேருவதைப்பற்றி நான் எண்ணவும் கூடாது.’

இவ்விதம் சிந்தித்தவாறே தூக்கத்தில் ஆழ்ந்தேன்.

## 11

# கிறிஸ்தவர்களுடன் தொடர்பு

மறுநாள் ஒரு மணிக்கு ஸ்ரீ பேக்கரின் பிரார்த்தனைக் கூட்டத்திற்குச் சென்றேன். அங்கே கன்னி ஹாரிஸ், கன்னி காப், ஸ்ரீ கோட்ஸ் முதலானவர்களுக்கு அவர் என்னை அறிமுகம்

கிராக்கியாக இருக்கின்றன. பழங்களும் கிராக்கி; பாலும் அப்படித்தான். ஆகையால் அப் பெண்மணிக்குப் போதுமான காய்கறி வகைகளைக் கொடுப்பது கஷ்டமாக இருக்கிறது. கறிகாயே சாப்பிட்டு வருவது அதிகச் செலவுள்ளதாயின், அவர் அதையே சாப்பிட்டு வருவது என்பதை நிச்சயமாகக் கைவிட்டுவிடுவார்.........’’

செய்து வைத்தார். பிரார்த்தனை செய்வதற்காக எல்லோரும் முழந்தாள் இட்டனர். நானும் அவ்வாறே செய்தேன். ஒவ்வொரு வரின் விருப்பத்துக்கும் ஏற்றவாறு, பல காரியங்களை முடித்தருள வேண்டுமென்று கடவுளைத் துதிப்பதே பிரார்த்தனை. அன்றைய தினம் அமைதியாகக் கழியவேண்டும் என்பதும், உள்ளத்தின் கதவுகளை ஆண்டவன் திறக்க வேண்டும் என்பதும் சாதாரண மான பிரார்த்தனைகள். என்னுடைய க்ஷேமத்திற்கென்று பின் வருமாறு ஒரு பிரார்த்தனையும் சேர்த்துக்கொள்ளப்பட்டது: "ஆண்டவனே! எங்கள் மத்தியில் வந்திருக்கும் புதிய சகோதரருக்கு வழிகாட்டி அருளும். ஆண்டவனே! எங்களுக்கு நீர் அளித்திருக்கும் சாந்தியை அவருக்கும் அளியும். எங்களைக் காப்பாற்றியிருக்கும் ஏசுநாதர் அவரையும் காப்பாராக; ஏசுவின் பெயராலேயே இவ்வளவும் வேண்டுகிறோம்." இந்தக் கூட்டங்களில் பிரார்த்தனைக் கீதங்கள் பாடுவதோ, வேறு விதச் சங்கீதமோ இல்லை. ஒவ்வொரு நாளும் விசேஷமாக ஏதாவது ஒன்றைக் கோரிப் பிரார்த்திப்போம்; பிறகு கலைந்து விடுவோம். அது மத்தியானச் சாப்பாட்டு வேளை யாகையால் அவரவர்கள் சாப்பிடப் போய்விடுவார்கள். பிரார்த்தனை முடிவதற்கு ஐந்து நிமிடங்களுக்கு மேல் ஆகாது.

ஹாரிஸ், காப் ஆகிய இருவரும் வயது முதிர்ந்த கன்னிப் பெண்கள். ஸ்ரீ கோட்ஸ், குவேக்கர்* என்னும் கிறிஸ்தவ கோஷ்டியைச் சேர்ந்தவர். முதற்கூறிய இருவரும் சேர்ந்து ஒரே இடத்தில் வசித்து வந்தனர். இவர்கள் ஒவ்வொரு ஞாயிற்றுக்

---

* ஜார்ஜ் பாக்ஸ் என்பவர் 17–ஆம் நூற்ருண்டில் கிறிஸ்தவர்களிடையே 'நண்பர்கள் சங்கம்' என்ற மத சம்பந்தமான கோஷ்டியை ஆரம்பித்தார். அந்தக் கோஷ்டியினரே சாதாரணமாகக் 'குவேக்கர்கள்' என்று அழைக்கப்படலாயினர். இச் சங்கத்தின் ஸ்தாபகர் தமது சொற்பொழிவுகளில் அடிக்கடி 'நடுங்குகிறேன்' (Tremble) என்ற சொல்லை உபயோகிப்பாராம். குவேக் (Quake) என்ற ஆங்கிலச் சொல்லிற்கும் 'நடுக்கம்' என்பதே பொருள். இச் சங்க ஸ்தாபகர், 'டிரெம்பிள்' என்ற சொல்லை அடிக்கடி கூறி வந்ததால் அச் சங்கத்தினரை, 'நடுங்குகிறவர்கள்' (குவேக்கர்கள்) என்று அழைக்கலாயினர். சமய நம்பிக்கையில் குவேக்கர்களுக்கும் புராட்டஸ்டண்டு கிறிஸ்தவர்களுக்கும் வித்தியாசம் அதிகமில்லை. வித்தியாசமெல்லாம், பிரார்த்தனை விஷயத்திலேயே. பிரார்த்தனைக்கு குவேக்கர்களிடம் குறிப்பிட்ட முறை எதுவும் இல்லை. கூட்டம் நடக்கும் இடங்களுக்கு வருவார்கள். யாருக்காவது பேச வேண்டும் என்ற 'ஆன்ம உணர்ச்சி எழுந்தால்' மட்டும் பேசுவார்கள். ஆகவே இவர்கள் கூட்டம் பெரும்பாலும் மௌனக் கூட்டமாகவே இருக்கும். ஞானஸ்நானம், தேவனின் விருந்து என்பன போன்ற சடங்குகள் இவர்களுக்குக் கிடையாது. கோர்ட்டு முதலியவைகளில் இவர்கள் கடவுள் பெயரில் பிரமாணம் செய்ய மறுத்து வந்தனர். அப்படிப் பிரமாணஞ் செய்ய மறுப்பது குற்றம் என்று 1833 வரையில் சட்டமிருந்தது. அதன் பிறகு பிரமாணம் செய்யாதிருக்க இவர்கள் அனுமதிக்கப்பட்டனர். எளிய உடைகளையே அணிவார்கள். இக் கோஷ்டியைச் சேர்ந்த பலர், பொது வாழ்விலும் வர்த்தகத் துறையிலும் பிரபலமாக விளங்கினர். கௌரவமாக நடந்து கொள்ளுவார்கள் என்ற பெயர் பொதுவாக இக் கோஷ்டியைச் சேர்ந்தவர்களுக்கு உண்டு. ஆரம்பக் குவேக்கர்களில், பிரபலமாக இருந்தவர்களுள், வில்லியன் பென் என்பவரும் ஒருவர். இச் சங்கம் அமெரிக்காவில் பரவும்படி செய்தவர் இவரே.

கிழமையும் மாலை 4 மணிக்குத் தங்கள் வீட்டுக்குத் தேநீர் சாப்பிட வந்துவிடுமாறு எனக்கு நிரந்தர அழைப்பு விடுத்தனர்.

ஞாயிற்றுக் கிழமைகளில் நாங்கள் சந்திக்கும்போது, அந்த வாரத்தில், சமய ஆராய்ச்சி சம்பந்தமாக நான் தெரிந்து கொண்டவைகளை ஸ்ரீ கோட்ஸிடம் கூறுவேன். நான் படித்த புத்தகங்களையும், அதனால் ஏற்பட்ட கருத்துக்களையும் பற்றி அவருடன் விவாதிப்பேன். அந்தப் பெண்களோ, தங்களுக்கு ஏற்பட்ட இனிமையான அனுபவங்களைப்பற்றிக் கூறுவார்கள். தாங்கள் கண்ட சாந்தியைக் குறித்தும் பேசுவார்கள்.

ஸ்ரீ கோட்ஸ், கபடமற்ற, உறுதியுள்ள இளைஞர். நாங்கள் இருவரும் சேர்ந்து, உலாவப் போவது உண்டு. மற்றக் கிறிஸ்தவ நண்பர்களிடம் அவர் என்னை அழைத்துச் சென்றார்.

நாங்கள் ஒருவருக்கொருவர் நெருங்கிப் பழக ஆரம்பித்துவிடவே, தமக்குப் பிடித்தமான புத்தகங்கள் எனக்குக் கிடைக்கும்படி அவர் செய்தார். இவ்விதம் என்னிடம் நிறையப் புத்தகங்கள் சேர்ந்துவிட்டன. என்மீது புத்தகச் சுமையை அவர் ஏற்றினார் என்றே கூறவேண்டும். உண்மையாகவே அவற்றைப் படிப்பதாக நான் ஒப்புக்கொண்டேன். நான் படிக்கப் படிக்கப் படித்தவைகளைக் குறித்து விவாதித்தும் வந்தோம்.

அத்தகைய புத்தகங்கள் பலவற்றை நான் 1893-இல் படித்தேன். அவை எல்லாவற்றின் பெயர்களும் எனக்கு நினைவில்லை. நான் படித்தவைகளில் சில, ஸிட்டி டெம்பிளைச் சேர்ந்த டாக்டர் பார்க்கர் எழுதிய 'வியாக்கியானம்', ஸ்ரீ பியர்ஸன் எழுதிய 'நிச்சயமான பல ருசுக்கள்', ஸ்ரீ பட்லர் எழுதிய 'உபமானங்கள்' முதலியன. இவற்றில் சில பகுதிகள் எனக்கு விளங்கவே இல்லை; சில விஷயங்கள் எனக்குப் பிடித்திருந்தன; மற்றவை எனக்குப் பிடிக்கவில்லை. 'நிச்சயமான பல ருசுக்கள்' என்ற புத்தகம், பைபிளின் மதத்திற்கு ஆதரவாக, அதன் ஆசிரியர் அறிந்துகொண்ட பலவகை ருசுக்களைக் கொண்டது. இப்புத்தகம் என் மனத்தைக் கவரவில்லை. பார்க்கரின் 'வியாக்கியானம்', ஒழுக்கத்தைத் தூண்டுவதாக இருந்தது. ஆனால், நடைமுறையில் இருக்கும் கிறிஸ்தவக் கோட்பாடுகளில் நம்பிக்கை இல்லாதவர்களுக்கு இந்த நூல் எவ்வகையிலும் பயன்படாது. பட்லரின் 'உபமானங்கள்' ஆழ்ந்த கருத்துக்கள் நிறைந்த கஷ்டமான நூலாக எனக்குத் தோன்றிற்று. அதைச் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டுமானால், நான்கு ஐந்து முறை படிக்க வேண்டும். நாஸ்திகர்களை ஆஸ்திகர்களாகத் திருப்பிவிடும் நோக்கத்துடன் அந்நூல் எழுதப்பட்டிருப்பதாக எனக்குத் தோன்றியது. கடவுள் உண்டு என்பதை நிரூபிப்பதற்காக இப்புத்தகத்தில் கூறப்பட்டுள்ள வாதங்கள் எனக்கு அவசியம் இல்லாதவை. ஏனெனில் சந்தேகிக்கும் அந்தக் கட்டத்தை நான் முன்பே கடந்துவிட்டேன். ஆனால், கடவுளின் ஒரே அவ

தாரம் ஏசுவே, கடவுளிடம் மனிதரைச் சேர்ப்பிக்க வல்லவரும் அவர் ஒருவரே என்பதை நிரூபிப்பதற்காகக் கூறப்பட்டிருந்த வாதங்கள் என் மனத்தைக் கவர்ந்து விடவில்லை.

எனினும், ஸ்ரீ கோட்ஸ் அவ்வளவு சுலபத்தில் தோல்வியை ஒப்புக்கொண்டுவிடக் கூடியவர் அன்று. என்மீது அவருக்கு மிகுந்த அன்பு உண்டு. வைஷ்ணவத்திற்கு அடையாளமான துளசி மணி மாலை, என் கழுத்தில் இருப்பதை அவர் பார்த்தார். அது மூடநம்பிக்கை என்று எண்ணி, அதற்காக மனம் வருந்தினர். "இந்த மூடநம்பிக்கை உங்களுக்கு ஆகாது. வாருங்கள்; அந்த மாலையை நான் அறுத்து எறிந்துவிடுகிறேன்" என்ருர்.

"இல்லை. நீங்கள் அப்படிச் செய்துவிடக் கூடாது. இம் மாலை, என் அன்னை எனக்கு அளித்த தெய்விக வெகுமதி" என்றேன்.

"ஆனல், இதில் உங்களுக்கு நம்பிக்கை இருக்கிறதா?" என்று கேட்டார்.

"இம்மாலையிலிருக்கும் தெய்விக ரகசியம் இன்னது என்பது எனக்குத் தெரியாது. இதை நான் அணியாவிட்டால் எனக்குத் தீமை உண்டாகிவிடும் என்று நான் நினைக்கவும் இல்லை. அன்பினலும், இது என்னுடைய சுகத்திற்கு உதவியாக இருக்கும் என்ற திடநம்பிக்கையுடனும் என் தாயார் இதை என் கழுத்தில் அணிவித்தார். ஆகையால், தக்க காரணமின்றி இதை நான் எறிந்துவிட முடியாது. நாளாவட்டத்தில் இது இற்றுப்போய்த் தானகவே அறுந்துவிடுமானல், புதிதாக ஒன்றைப் போட்டுக்கொள்ள வேண்டும் என்ற விருப்பம் எனக்கு இருக்காது. ஆனல், இந்த மாலையை அறுத்துவிட முடியாது" என்றேன்.

என் மத விஷயத்தில் ஸ்ரீ கோட்ஸுக்கு மதிப்பு இல்லாததனல் என் வாதத்தை அவரால் புரிந்துகொள்ள முடியவில்லை. அஞ்ஞானப் படுகுழியிலிருந்து என்னைக் கரையேற்றிவிட வேண்டுமென்று அவர் ஆவல் கொண்டிருந்தார். மற்ற மதங்களில் ஓரளவுக்கு உண்மை இருந்தாலும் அதைப்பற்றிக் கவலையில்லை, கிறிஸ்தவத்தை நான் ஒப்புக்கொண்டாலன்றி எனக்கு விமோசனமே இல்லை என்பதை நான் உணர்ந்துவிடச் செய்ய அவர் விரும்பினர். எனக்காக ஏசுநாதர் ஆண்டவனிடம் பரிந்து பேசினலன்றிப் பாவங்களிலிருந்து நான் மன்னிப்புப் பெற இயலாது என்றும், செய்யும் நற்காரியங்களெல்லாம் பயனற்றுப் போய்விடும் என்றும் நான் உணரச் செய்ய அவர் முயன்ருர்.

பல புத்தகங்களை அவர் அறிமுகம் செய்துவைத்ததைப் போலவே, தீவிர மதப்பற்றுள்ள கிறிஸ்தவர்கள் என்று அவர் கருதிய நண்பர்கள் பலரையும் அவர் எனக்கு அறிமுகம் செய்து

வைத்தார். இவ்விதம் அறிமுகம் செய்து வைக்கப்பட்டவர்களில் பிளிமத் சகோதரர்கள்* என்ற கிறிஸ்தவப் பிரிவைச் சேர்ந்த குடும்பமும் ஒன்று.

ஸ்ரீ கோட்ஸின் மூலம் எனக்குப் பழக்கமானவர்களில் பலர் மிகவும் நல்லவர்கள். அவர்களில் அநேகர் கடவுளுக்குப் பயந்து நடப்பவர்கள் என்பதைக் கண்டேன். ஆனால், பிளிமத் குடும்பத்தினருடன் எனக்குப் பழக்கம் ஏற்பட்டபோது, பிளிமத் சகோதரர்களில் ஒருவர், என்னிடம் ஒரு வாதத்தை எடுத்துக் கூறத் தொடங்கினர். அதை நான் கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை. அவர் கூறியதாவது:

"எங்கள் மதத்தின் மேன்மையை உங்களால் புரிந்து கொள்ள முடியவில்லை. நீங்கள் செய்துவிட்ட தவறுகளைக் குறித்தே உங்கள் வாழ்க்கையின் ஒவ்வொரு கணத்திலும் நினைத்து வருந்திக்கொண்டும், எப்பொழுதும் அவைகளைத் திருத்திக்கொண்டும், அவற்றிற்காகப் பிராயச்சித்தம் செய்து கொண்டும் நீங்கள் இருப்பதாகச் சொல்வதில் இருந்தே அது தெரிகிறது. இந்த இடையறாத வினைச் சுழல் உங்களுக்கு எவ்விதம் விமோசனம் அளிக்க முடியும்? உங்களுக்கு மனச் சாந்தியே இராது. நாம் எல்லோரும் பாவிகளே என்பதை ஒப்புக் கொள்ளுகிறீர்கள். எங்கள் நம்பிக்கை எவ்வளவு பரிபூரணமானது என்பதை இப்பொழுது பாருங்கள். சீர்திருந்துவதற்கும், பிராயச்சித்தம் பெறுவதற்கும் நாம் செய்யும் முயற்சிகள் எல்லாம் வீணானவை. என்றாலும், நமக்குக் கதி மோட்சம் ஏற்பட வேண்டும். பாவத்தின் சுமையை நாம் எவ்விதம் தாங்க முடியும்? அப் பளுவை நாம் ஏசுநாதர்மீது போட்டுவிடத்தான் முடியும். அவர் ஒருவரே கடவுளின் பாவமற்ற திருக்குமாரர். "என்னை நம்புகிறவர் யாரோ அவரே நித்தியமான வாழ்வை அடைவர்" என்பது அவருடைய திருவாக்கு. கடவுளின் எல்லையற்ற கருணை இதில்தான் இருக்கிறது. நமது பாவங்களுக்கு ஏசுநாதர் பிராயச்சித்தத்தைத் தேடுகிறார் என்பதை நாம் நம்புவதால், நமது பாவங்கள் நம்மைக் கட்டுப்படுத்துவதில்லை. நாம் பாவஞ் செய்யாதிருக்க முடியாது. பாவமே செய்யாமல் இவ்வுலகில் உயிர்வாழ்வது இயலாது. ஆகையால் நமது பாவங்களுக்காக ஏசுநாதர் துன்பங்களை அனுபவித்தார்; மனித வர்க்கத்தின்

* கிறிஸ்தவர்களில் ஒரு பகுதியினர், 'பிளிமத் சகோதரர்கள்' எனப்படுபவர்கள். கிறிஸ்தவ மதத்தின் சடங்குகள், பாதிரியார், ஞானஸ்நானம் செய்வித்தல் போன்ற சம்பிரதாயங்களை விரும்பாதவர்கள் இவர்கள். இந்தப் பெயரில் 1828-இல் டப்ளினிலும், 1820–இல் இங்கிலாந்தில் பிளிமத் என்னும் இடத்திலும் இச் சங்கத்தை அமைத்தனர். பிளிமத்தில் இவர்கள் இச் சங்கத்தை ஆரம்பித்ததனால் இதைச் சேர்ந்தவர்களுக்குப் பிளிமத் சகோதரர்கள் என்னும் பெயர் ஏற்பட்டது. இவர்கள் நீடித்து, ஒரே சங்கத்தினராக இருந்துவிடவில்லை. இவர்களிடையே அபிப்பிராய பேதம் ஏற்பட்டுப் பல கோஷ்டிகளாகப் பிரிந்து, பிறகு பல்வேறு சங்கங்கள் ஆரம்பித்தனர். உதாரணமாக, அமெரிக்காவில் இதே பெயர்கொண்ட எட்டுச் சங்கங்கள் இருக்கின்றன.

எல்லாப் பாவங்களுக்கும் அவர் பிராயச்சித்தம் தேடினர். அவர் வழங்கும் இந்த மகத்தான விமோசனத்தை ஒப்புக்கொள்ளு கிறவர்கள் மாத்திரமே நிரந்தரமான மனச் சாந்தியைப் பெற முடியும். உங்களுடைய வாழ்வு எவ்வளவு அமைதியற்றதாக இருக்கிறது என்பதையும், எங்களுக்கு அமைதி எவ்வளவு நிச்சய மாக இருக்கிறது என்பதையும் சிந்தித்துப் பாருங்கள்.''

இந்த வாதம் எனக்குக் கொஞ்சமும் திருப்தியளிப்பதாக இல்லை. எனவே, பணிவுடன் பின்வருமாறு பதில் சொன்னேன்: ''எல்லாக் கிறிஸ்தவர்களும் அங்கீகரிக்கும் கிறிஸ்தவம் இதுவே யாயின், இதை நான் ஏற்றுக்கொள்ள முடியாது. என்னுடைய பாவங்களின் விளைவுகளிலிருந்து விமோசனம் பெற்றுவிட வேண் டும் என்று நான் நாடவில்லை. பாவத்திலிருந்தே, அதாவது பாவ எண்ணத்திலிருந்தே விமோசனம் பெறுவதைத்தான் நான் நாடு கிறேன். அந்த லட்சியத்தை நான் அடையப் பெறும் வரையில் அமைதியின்றி இருப்பதில் திருப்தி யடைவேன்.''

நான் இவ்வாறு கூறியதற்குப் பிளிமத் சகோதரர், ''உங்கள் முயற்சி பயனற்றது என்று நான் உறுதியாகக் கூறுகிறேன். நான் கூறியதைக் குறித்து, நீங்கள் மீண்டும் சிந்தித்துப் பாருங் கள்'' என்ருர்.

அந்தச் சகோதரர் சொன்னதற்கு ஏற்பவே அவருடைய செயலும் இருந்தது. அறிந்தே அவர் தவறுகளைச் செய்தார். அத் தவறுகளைப்பற்றிய எண்ணம் தம்மைக் கவலைக்கு உள் ளாக்கி விடவில்லை என்பதையும் எனக்குக் காட்டிவிட்டார்.

ஆனல், தவறுகளைப்பற்றிய இத்தகைய சித்தாந்தத்தை எல்லாக் கிறிஸ்தவர்களுமே நம்பிவிடவில்லை என்பதை இந்த நண்பர்களைச் சந்திப்பதற்கு முன்பே நான் அறிவேன். ஸ்ரீ கோட்ஸ், தம்மைப் பொறுத்தவரையில், கடவுளுக்குப் பயந்தே நடந்து வந்தார். அவருடைய உள்ளம் தூய்மையானது. நமக்கு நாமே தூய்மையடைவது சாத்தியம் என்பதில் அவருக்கு நம்பிக்கை உண்டு. ஹேரிஸ், காப் என்ற அவ்விரு பெண்களுக் கும் இதே நம்பிக்கை இருந்தது. நான் படித்த புத்தகங்களில் சில, பக்தி ரசம் மிகுந்தவை. ஆகவே, எனக்கு ஏற்பட்ட கடைசி அனுபவத்தைக் கொண்டு, ஸ்ரீ கோட்ஸ் அதிகக் கவலை அடைந்து விட்டார். என்ருலும், பிளிமத் சகோதரர் கொண்ட தவருன நம்பிக்கையினல் கிறிஸ்தவத்தைக் குறித்து எனக்கு வெறுப்பு ஏற்பட்டுவிடாது என்று நான் ஸ்ரீ கோட்ஸுக்குக் கூறியதோடு அவருக்கு உறுதியளிக்கவும் என்னுல் முடிந்தது*.

---

* கிறிஸ்துவின் உபதேசங்களே எல்லாவற்றிலும் மேன்மையானவை என்று காந்திஜி ஒப்புக்கொள்ளும்படி செய்ய, இன்னும் எத்தனையோ பேர் முயன்றனர். 1940 ஜூலையில் லேடி எமிலி என்பவர், காந்திஜியிடம் வந்து, பைபிளின் மேன்மை, பாவமன்னிப்பின் முக்கியத்துவம் இவற்றைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தார். அப்பொழுது காந்திஜி, தென்னுப்பிரிக்காவில் தமக்குப் பழக்கமான கோட்ஸ்

எனக்குக் கஷ்டங்களெல்லாம் வேறு இடத்திலேயே ஏற்பட்டன. பைபிளையும். பொதுவாக அதற்கு ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கும் வியாக்கியானத்தையும் பற்றியவையே அவை.

# 12

# இந்தியருடன் தொடர்பை நாடினேன்

கிறிஸ்தவர்களுடன் ஏற்பட்ட பழக்கத்தைக் குறித்து மேற்கொண்டும் எழுதுவதற்கு முன்னல், அதே சமயத்தில் எனக்கு உண்டான மற்ற அனுபவங்களையும் நான் குறிப்பிட வேண்டும்.

நேட்டாலில் தாதா அப்துல்லாவுக்கு என்ன அந்தஸ்து இருந்ததோ அதே அந்தஸ்து, சேத் தயாப் ஹாஜி கான் முகம்மதுக்குப் பிரிட்டோரியாவில் இருந்தது. அவர் இல்லாமல் பொதுஜன காரியம் எதுவும் அங்கே நடவாது. முதல் வாரத்திலேயே நான் அவரை அறிமுகம் செய்துகொண்டேன். பிரிட்டோரியாவில் இருக்கும் ஒவ்வோர் இந்தியருடனும் தொடர்பு வைத்துக்கொள்ள நான் விரும்பியதைக் குறித்து அவரிடம் கூறினேன். அங்கே இருக்கும் இந்தியரின் நிலைமையைத் தெரிந்து கொள்ள நான் ஆசைப்படுவதாகவும் அவருக்குத் தெரிவித்தேன். இந்த முயற்சியில் எனக்கு அவருடைய உதவி வேண்டும் என்றும் கோரினேன். உதவியளிக்க அவரும் மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொண்டார்.

பிரிட்டோரியாவில் இருக்கும் எல்லா இந்தியரையும் கூட்டி வைத்து, டிரான்ஸ்வாலில் அவர்களுக்கு இருந்த நிலையை எடுத்துக் கூறுவது என்பது எனது முதல் வேலை. இக்கூட்டம். சேத் ஹாஜி முகமது ஜூஸப் வீட்டில் நடந்தது. அவருக்கு என்னை அறிமுகப்படுத்தும் கடிதம் ஒன்றும் என்னிடம் இருந்தது. இக் கூட்டத்திற்கு மிகச் சில ஹிந்துக்களும் வந்திருந்தனரெனினும் பிரதானமாக மேமன் வர்த்தகர்களே வந்திருந்தார்கள். உண்மையில் பிரிட்டோரியாவில் ஹிந்துக்கள் மிகச் சிலரே இருந்தனர்.

இக் கூட்டத்தில் நான் ஆற்றிய சொற்பெருக்கே என் வாழ்க்கையில் நான் செய்த முதல் பிரசங்கம் எனலாம். அங்கே பேசுவதற்குச் சுமாராக விஷயத்தைத் தயார் செய்துகொண்டே

---

கன்னி காப், கன்னி ஹாரிஸ், ஸ்பென்ஸர் வால்டன், மேயர் ஆகியவர்களைப்பற்றியெல்லாம் கூறியதைக் கேட்டதும் 86 வயதான லேடி எமிலி ஆச்சரியப்பட்டு, "இவ்வளவு காலமாகியும் அந்தக் கிறிஸ்தவர்களை நீங்கள் இன்னும் நினைவில் வைத்திருக்கிறீர்களே!" என்ருர். முடிவாக இப் பெண்மணியிடம் காந்திஜி கூறியதாவது: "என்னிடமுள்ள நூல்களுடன் பைபிளும் இருக்கிறது. பாருங்கள், நான் பகவத் கீதையை மதிப்பது போன்றே அதையும் மதிக்கிறேன். பைபிளில் கூறியிருப்பதற்கும் உபநிஷத்துக்களில் கூறியிருப்பதற்கும் எனக்குப் பேதம் தோன்றவில்லை......."
—('ஹரிஜன்' —4, ஆகஸ்டு 1940).

போனேன். நான் பேசிய விஷயம், வியாபாரத்தில் உண்மையைக் கடைப்பிடித்தலைப் பற்றியது. வியாபாரத்தில் உண்மையாக நடந்துகொள்ளுவதென்பது சாத்தியமானதே அல்ல என்று வர்த்தகர்கள் கூறி வருவதை நான் எப்பொழுதும் கேட்டுவந்திருக்கிறேன். அப்படிச் சாத்தியமில்லை என்று நான் அப்பொழுது நினைத்ததில்லை; இப்பொழுதும் நினைக்கவில்லை. வியாபாரமும் உண்மையும் ஒன்றுக்கொன்று பொருந்தாதவை என்று சொல்லும் வர்த்தக நண்பர்கள் இன்றும் இருக்கிறார்கள். வியாபாரம் முற்றும் உலக விவகாரம் என்றும், சத்தியமோ மதத்தைப் பற்றியது என்றும் சொல்லுகிறார்கள். உலக விவகாரத்திற்கு மத விஷயம் முற்றும் வேறானது என்றும் வாதிக்கின்றனர். ‘வியாபாரத்தில் சுத்தமான உண்மைக்கே இடமில்லை; உசிதமான அளவுக்குத்தான் அதில் உண்மை பேச முடியும்’ என்கின்றனர். அவர்களுடைய அந்தக் கொள்கையை நான் என்னுடைய சொற்பொழிவில் பலமாக எதிர்த்தேன். வர்த்தகர்களுக்கு அவர்களுடைய கடமை உணர்ச்சியை எழுப்பினேன். அக்கடமை இருவகையானது. அங்குள்ள சில இந்தியரின் நடத்தையே, அவர்களுடைய தாய் நாட்டின் கோடிக்கணக்கான சகோதர மக்களின் தன்மையை இந் நாட்டார் அறிவதற்கு அளவுகோல் ஆகிறது. ஆகையால், ஓர் அந்நிய நாட்டில் உண்மையுள்ளவர்களாக இருக்க வேண்டிய பொறுப்பு, அவர்களுக்கு மேலும் அதிகமாகிறது.

சுற்றிலும் இருந்த ஆங்கிலேயருடன் ஒப்பிட்டுப் பார்த்தால் நம் மக்களின் பழக்கங்கள், சுகாதாரக் குறைவாக இருந்ததைக் கவனித்திருந்தேன். ஆகையால், அதை அங்கே கூடியிருந்தவர்களின் கவனத்திற்குக் கொண்டுவந்தேன். ஹிந்துக்கள், முஸ்லிம்கள், பார்ஸிகள், கிறிஸ்தவர்கள், குஜராத்திகள், மதராஸிகள், பஞ்சாபிகள், சிந்திகள், கச்சிக்காரர்கள், சூரத்காரர்கள் என்றெல்லாம் இருக்கும் பாகுபாடுகளையெல்லாம் மறந்துவிட வேண்டியதன் அவசியத்தையும் வற்புறுத்தினேன். முடிவாக, மற்றொரு யோசனையும் கூறினேன். குடியேறியிருக்கும் இந்தியரின் கஷ்டங்களைக் குறித்துச் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு முறையிட்டுக் கொள்ளுவதற்கு ஒரு சங்கத்தை அமைத்துக்கொள்ள வேண்டும் என்றேன். அச் சங்கத்திற்குச் சாத்தியமான அளவுக்கு என் நேரத்தையும் சேவையையும் அளிக்க நான் தயாராக இருக்கிறேன் என்றும் அறிவித்தேன்.

என்னுடைய சொற்பொழிவு அங்கே கூடியிருந்தவர்களின் மனத்தை நன்கு கவர்ந்தது என்பதைக் கண்டேன்.

என் பேச்சைத் தொடர்ந்து விவாதமும் நடந்தது. எனக்கு வேண்டிய விவரங்களைச் சேகரித்துக் கொடுப்பதாகச் சிலர் முன் வந்தனர். இது எனக்கு உற்சாகத்தை அளித்தது. என் சொற்பொழிவைக் கேட்டவர்களில் மிகச் சிலருக்கே ஆங்கிலம் தெரியும் என்பதையும் அறிந்தேன். அந் நாட்டில் ஆங்கிலம் தெரிந்திருப்

பது பயனுள்ளதாக இருக்கும் என்று நான் கருதியதால்அவகாசம் இருப்பவர்கள் ஆங்கிலம் கற்றுக்கொள்ளுமாறு யோசனை கூறினேன். அதிக வயதாகிவிட்ட பிறகுங்கூட ஒரு மொழியைக் கற்றுக்கொண்டுவிடுவது சாத்தியமே என்று நான் அவர்களுக்குச் சொன்னதோடு, அப்படிக் கற்றுக்கொண்ட சிலரைப்பற்றியும் உதாரணமாக எடுத்துக் கூறினேன். அதைச் சொல்லிக் கொடுப்பதற்கென்று ஒரு வகுப்பை ஆரம்பித்தால் அதில் வந்து போதிக்கிறேன் என்றேன். தனிப்பட்டவர்கள் யாராவது அம் மொழியைக் கற்றுக்கொள்ள விரும்பினால் நானே அவர்கள் வீட்டுக்குப் போய்ச் சொல்லிக் கொடுக்கத் தயார் என்றும் கூறினேன்.

இம் மொழியைப் போதிக்க வகுப்பு எதுவும் ஆரம்பிக்கப் படவில்லை. ஆனால், தங்களுக்கு இருக்கும் வசதியைப் பொறுத்துக் கற்றுக்கொள்ளத் தாங்கள் தயாராய் இருப்பதாக மூன்று இளைஞர்கள் அறிவித்தனர். இதற்கு அவர்கள் விதித்த நிபந்தனை, அவர்களுடைய இடத்திற்கு நான் போய்ப் போதிக்க வேண்டும் என்பது. அவர்களில் இருவர் முஸ்லிம்கள் – ஒருவர் நாவிதர்; மற்றொருவர் குமாஸ்தா–மூன்றாமவர் ஹிந்து. இவர் ஒரு சில்லறைக் கடைக்காரர். அவர்களுடைய சௌகரியப்படி போய்ச் சொல்லிக்கொடுக்க ஒப்புக்கொண்டேன். சொல்லிக் கொடுப்பதில் எனக்குள்ள தகுதியைப்பற்றி எனக்கு எந்தவிதமான சந்தேகமும் இல்லை. என் மாணவர்கள் சளைத்துப் போனாலும் போகலாமே ஒழிய, நான் சளைக்க மாட்டேன். சில சமயங்களில் நான் அவர்கள் இருக்கும் இடத்திற்குப் போகும்போது அவர்கள் தங்கள் வேலையில் ஈடுபட்டிருப்பார்கள். என்றாலும், நான் பொறுமையை இழந்து விடுவதில்லை. ஆங்கிலத்தில் புலமை பெறும் வகையில் அதைக் கற்றுக்கொள்ள வேண்டும் என்று இம் மூவரில் எவருக்கும் விருப்பம் இல்லை. ஆனால், இவர்களில் இருவர் சுமார் எட்டு மாத காலத்தில் நல்ல அபிவிருத்தியை அடைந்தனர் என்று சொல்லலாம். இருவர், கணக்கு எழுதவும், வியாபார சம்பந்தமான சாதாரணக் கடிதங்களை எழுதவும் போதுமான அளவுக்கு ஆங்கிலம் கற்றுக்கொண்டார்கள். ஆனால், நாவிதருக்கோ, இம் மொழியைக் கற்பதிலிருந்த ஆசை, தமது வாடிக்கைக்காரர்களிடம் பேசக்கூடிய அளவிற்குத் தெரிந்தால் போதும் என்பதோடு நின்றது. இவ்விதம் படித்ததனால், இம் மாணவர்களில் இருவர், நல்ல வருமானம் பெறுவதற்கான தகுதியை அடைந்தனர்.

முன்னால் கூறிய பொதுக்கூட்டத்தின் பலன் எனக்குத் திருப்தி அளித்தது. இத்தகைய பொதுக்கூட்டங்களை வாரத்திற்கு ஒரு முறை கூட்டுவது என்று முடிவு செய்யப்பட்டது என்றே எனக்கு ஞாபகம். மாதம் ஒரு முறை கூட்டுவது என்றும் முடிவு செய்திருக்கக்கூடும். அநேகமாகத் தவறாமல் கூட்டங்கள் நடந்து வந்தன. அச் சமயங்களில் அவரவர்களின் அபிப்பிராயங்

களைத் தாராளமாக எடுத்துக் கூறி வந்தனர். இதன் பலன் என்னவென்றால், பிரிட்டோரியாவில் எனக்குத் தெரியாத இந்தியர் எவருமே இல்லை என்று ஆகிவிட்டதுதான். அவர்களில் ஒவ்வொருவரின் நிலைமையையுங்கூட நான் அறிந்திருந்தேன். பிரிட்டோரியாவில் இருக்கும் பிரிட்டிஷ் ஏஜெண்டு ஜேகோபஸ் டி வெட்டுடனும் பழக்கம் வைத்துக்கொள்ள வேண்டும் என்று இது என்னை ஊக்குவித்தது. இந்தியரிடம் அவருக்கு அனுதாபம் உண்டு. ஆனால், அவருக்கு இருந்த செல்வாக்கோ மிகச் சொற்பம். என்றாலும் தம்மால் இயன்றவரை உதவி செய்வதாக அவர் ஒப்புக்கொண்டார். நான் விரும்பும்போது தம்மை வந்து பார்க்கும்படியும் என்னை அழைத்தார்.

பிறகு ரெயில்வே அதிகாரிகளுக்கு எழுதினேன். ரெயிலில் பிரயாணம் செய்வது சம்பந்தமாக இந்தியருக்கு இருந்துவரும் கஷ்டங்கள், ரெயில்வேக்களின் விதிகளின்படியும் நியாயமற்றவை என்பதை அவர்களுக்கு எடுத்துக் காட்டினேன். ரெயில்வே அதிகாரிகளிடமிருந்து எனக்குப் பதில் வந்தது. தக்க உடையுடன் இருக்கும் இந்தியருக்கு, முதல், இரண்டாம் வகுப்பு டிக்கெட்டுகள் கொடுக்கப்படும் என்று அந்தப் பதிலில் கூறியிருந்தார்கள். ‘சரியானபடி ஒருவர் உடையணிந்திருக்கிறார்’ என்பதை முடிவு செய்யும் அதிகாரம் ஸ்டேஷன் மாஸ்டரிடமே இருப்பதால் அந்தப் பதில் இந்தியருக்குப் போதுமான கஷ்ட நிவாரணம் அளிப்பதாக இல்லை.

இந்தியர் சம்பந்தமான சில தஸ்தாவேஜுகளைப் பிரிட்டிஷ் ஏஜெண்டு எனக்குக் காட்டினார். இதே போன்ற தஸ்தாவேஜுகளை தயாப் சேத்தும் எனக்குக் கொடுத்திருந்தார். ஆரஞ்சு பிரீ ஸ்டேட்டிலிருந்து இந்தியர் எவ்வளவு கொடூரமாக விரட்டியடிக்கப்படுகிறார்கள் என்பதை அவைகளைக் கொண்டு அறிந்துகொண்டேன்.

சுருங்கச் சொன்னால், டிரான்ஸ்வாலிலும், ஆரஞ்சு பிரீ ஸ்டேட்டிலும் இருக்கும் இந்தியரின் சமூக, பொருளாதார, ராஜீய நிலையைக் குறித்து நன்றாக ஆராய்ந்து தெரிந்துகொள்ளுவதற்கு நான் பிரிட்டோரியாவில் இருந்தது வசதியளித்தது எனலாம். இந்த ஆராய்ச்சி எதிர்காலத்தில் எனக்கு மதிப்பதற்கரிய உதவியாக இருக்கப் போகிறது என்பது அப்பொழுது எனக்குத் தெரியாது. ஆண்டு முடிவிலோ, ஆண்டு முடிவதற்கு முன்னலேயோ, வழக்கு முடிந்துவிட்டால் அதற்கும் முன்பே நான் இந்தியாவுக்குத் திரும்பிவிடலாம் என்றே நினைத்து வந்தேன். ஆனால், கடவுளின் சித்தமோ வேறுவிதமாக இருந்துவிட்டது.

# 13

# கூலியாக இருப்பதன் துன்பம்

டிரான்ஸ்வாலிலும் ஆரஞ்சு பிரீ ஸ்டேட்டிலும் இருந்த இந்தியரின் நிலைமையைக் குறித்து விவரமாகக் கூறுவதற்கு இது இடமன்று. அதைக் குறித்து விவரமாக அறிந்துகொள்ள விரும்புகிறவர்கள் நான் எழுதியிருக்கும் 'தென்னாப்பிரிக்க சத்தியாக்கிரகத்தின் சரித்திரம்' என்ற நூலில் பார்க்குமாறு யோசனை கூறுகிறேன். என்றாலும், அதைக் குறித்து இங்கே சுருக்கமாகக் கூற வேண்டியது அவசியம்.

ஆரஞ்சு பிரீ ஸ்டேட்டில், 1858-இல் செய்யப்பட்ட விசேஷச் சட்டத்தின்படி இந்தியருக்கு முன்னால் இருந்த உரிமைகள் எல்லாமே பறிக்கப்பட்டுவிட்டன. அங்கே இந்தியர் இருக்க விரும்பினால் ஹோட்டல்களில் வேலைக்காரர்களாக மாத்திரமே இருந்து வர முடியும். இல்லாவிடில் இதுபோன்ற கீழ்த்தரமான ஊழியம் செய்து கொண்டிருக்க வேண்டும். சொற்ப நஷ்ட ஈடு கொடுத்து, வியாபாரிகள் விரட்டப்பட்டுவிட்டனர். விண்ணப்பங்களும் மகஜர்களும் அனுப்பினார்கள்; ஒன்றும் பயனில்லை.

டிரான்ஸ்வாலில் 1885-இல் கடுமையான சட்டம் ஒன்றை இயற்றினர். 1886–இல் இச்சட்டத்தில் சிறு மாறுதல்களைச் செய்தார்கள். திருத்தப்பட்ட அச் சட்டத்தின்படி இந்தியர் எல்லோரும் டிரான்ஸ்வாலுக்குள் போவதற்குக் கட்டணமாக ஆளுக்கு 3 பவுன் தலைவரி செலுத்தவேண்டும். அவர்களுக்கென்று ஒதுக்கப்படும் பகுதிகளில் அல்லாமல் அவர்கள் வேறு எங்குமே சொந்தமாக நிலம் வைத்துக்கொள்ளக் கூடாது. ஆனால், அனுபவத்தில் அந்த ஒதுக்கப்பட்ட பகுதிகளிலும் நிலம் அவர்களுக்குச் சொந்தமாவதில்லை. இந்தியருக்கு வாக்குரிமை இல்லை. இவை யாவும் ஆசியாக்காரர்களுக்கு என்று செய்யப்பட்ட விசேஷச் சட்டத்தினால் நடந்தன. கறுப்பர்களுக்கு என்று இயற்றப்பட்ட சட்டங்களும் அவர்கள் விஷயத்தில் அமுல் செய்யப்பட்டன. பின்னால் கூறிய இச் சட்டங்களின்படி, இந்தியர், பொது நடைபாதைகளில் நடக்கக்கூடாது; அனுமதிச் சீட்டு இல்லாமல் இரவு 9 மணிக்குப் பிறகு வீட்டைவிட்டு வெளியே வரவும் கூடாது. இந்தக் கடைசி விதி, இந்தியரைப் பொறுத்த வரையில், சந்தர்ப்பத்திற்கு ஏற்றாற்போல உபயோகிக்கப்பட்டு வந்தது. தங்களை, 'அரபுக்கள்' என்று சொல்லிக் கொண்டவர்களுக்குச் சலுகை காட்டுவதற்காக இந்த விதியிலிருந்து அவர்களுக்கு விலக்களித்தார்கள். இவ்விதம் அளிக்கப்பட்ட விதிவிலக்கும் இயற்கையாகவே போலீஸாரின் இஷ்டத்தைப் பொறுத்ததாகத்தான் இருந்துவந்தது.

அவ்விரு சட்டங்களினாலும் ஏற்பட்ட கஷ்டங்களை நான் அனுபவிக்க நேர்ந்தது. நான் அடிக்கடி இரவில் ஸ்ரீ கோட்ஸுடன்

உலாவ வெளியே போவேன். இரவு 10 மணிக்கு முன்னால் நாங்கள் அநேகமாக வீடு திரும்புவதில்லை. போலீஸார் என்னைக் கைது செய்துவிட்டால் என்ன செய்வது? இவ் விஷயத்தில் என்னைவிட ஸ்ரீ கோட்ஸுக்குத்தான் அதிகக் கவலை. தம்முடைய நீக்கிரோ வேலைக்காரர்களுக்கு அவர் அனுமதிச் சீட்டுக்கொடுக்க வேண்டியிருந்தது. ஆனால், எனக்கும் அவர் எப்படிச் சீட்டுக் கொடுப்பது? வேலைக்காரனுக்குத்தான் எஜமான் இத்தகைய சீட்டுக்கொடுக்கலாம். எனக்கும் ஒரு சீட்டு வேண்டும் என்று கேட்டிருந்தால், அப்படிச் சீட்டுக்கொடுக்க ஸ்ரீ கோட்ஸ் தயாராக இருந்தாலும், அவரால் கொடுக்க முடியாது. ஏனெனில், அவ் விதம் கொடுப்பது மோசடியாகக் கருதப்பட்டிருக்கும்.

ஆகவே, ஸ்ரீ கோட்ஸோ, அவருடைய நண்பர் ஒருவரோ, என்னை அரசாங்க அட்டர்னியான டாக்டர் கிராஸே என்பவரிடம் அழைத்துச் சென்றனர். நாங்கள் இருவரும் ஒரே இடத்தில் பாரிஸ்டரானவர்கள் என்பது தெரிய வந்தது. இரவு 9 மணிக்குப் பிறகு வீட்டிற்கு வெளியே இருப்பதற்கு எனக்கு அனுமதிச்சீட்டு வேண்டியிருக்கிறது என்ற விஷயம் அவருக்கு அதிக வருத்தத்தை அளித்தது. எனக்கு அவர் தமது அனுதாபத்தைத் தெரிவித்துக் கொண்டார். எனக்கு அனுமதிச்சீட்டுக் கொடுப்பதற்கு உத்தர விடுவதற்குப் பதிலாக, எந்த நேரத்திலும் போலீஸாரின் குறுக்கீடு இல்லாமல் நான் வெளியில் நடமாடுவதற்கு எனக்கு உரிமை அளித்து, ஒரு கடிதத்தை எழுதிக் கொடுத்தார். நான் வெளியில் செல்லும் போதெல்லாம் இக் கடிதத்தை எப்பொழுதும் என்னிடம் வைத்திருந்தேன். உண்மையில் அக் கடிதத்தை உபயோகித்துக்கொள்ள வேண்டிய சந்தர்ப்பமே எனக்கு ஏற்படவில்லையென்றால் அது தற்செயலேயன்றி வேறில்லை.

டாக்டர் கிராஸே* என்னைத் தம் வீட்டிற்கு அழைத்தார். நாங்கள் நண்பர்கள் ஆகிவிட்டோம் என்றும் சொல்லலாம். நான் எப்போதாவது அவர் வீட்டிற்குப் போவேன். ஜோகன்னஸ்பர்க்கில் பப்ளிக் பிராசிக்கூடராக இருந்த அவருடைய பிரபலமான சகோதரர், அவர்மூலம் எனக்கு அறிமுகமானார். போயர் யுத்தத்தின்போது, ஓர் ஆங்கில அதிகாரியைக் கொல்ல அவர் சதி செய்தார் என்று ராணுவக் கோர்ட்டில் அவர் மீது வழக்குத் தொடரப்பட்டு, அவர் ஏழு வருடச் சிறைத் தண்டனையை அடைந்தார். அவர் வக்கீல் தொழில் செய்யக் கூடாது என்று நீதிபதிகளும் அவரைத் தடுத்துவிட்டனர்.

---

* இந்த டாக்டர் கிராஸேயின் சகோதரர் காந்திஜியைப்பற்றி எழுதுகையில் அச்சமயம் நடந்த ஒரு சம்பவத்தைப்பற்றிப் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கிறார் :

"என்னுடைய சகோதரர் காந்திஜியை ஒரு நாள் இரவு, விருந்திற்கு அழைத்த பொழுது நிகழ்ந்த ஒரு சம்பவம் எனக்கு ஞாபகம் இருக்கிறது. சாப்பாடு பரிமாறிய ஆப்பிரிக்க சுதேசிகள் ஓர் இந்தியருக்குப் பணிபுரிய முடியாது என்று வாதாடினர். அந் நாட்டுப் பழங்குடி மக்களின் தலைவர்போல் காந்திஜியும் ஒரு பெரிய மனிதர் என்று அவர்களுக்கு விளக்கிக் கூறிய பின்புதான் அவர்கள் தொடர்ந்து பரிமாறினர்."

ஆனால், யுத்தம் முடிந்ததும் அவரை விடுதலை செய்துவிட்டனர். டிரான்ஸ்வாலில் வக்கீலாக இருக்க அவரைக் கௌரவமாக அனுமதித்துவிடவே, வக்கீல் தொழிலை நடத்திவரலானார்.

இந்தத் தொடர்புகள் பின்னால் என்னுடைய ராஜீய வாழ்க்கைக்கு உதவியாக இருந்ததோடு, என் பெரும் பகுதி வேலைகளையும் சுலபமாக்கிவிட்டன.

நடைபாதையில் நடப்பது சம்பந்தமாக இருந்த சட்ட விதிகள் எனக்கு இன்னும் அதிகக் கஷ்டத்தைக் கொடுத்தன. நான் எப்பொழுதுமே உலாவுவதற்குப் பிரஸிடெண்டு தெரு வழியாக ஒரு மைதானத்திற்குப் போவேன். பிரஸிடெண்டு (ஜனாதிபதி) குரூகரின்* வீடு அந்தத் தெருவில்தான் இருந்தது. அது மிகவும் அடக்கமான, ஆடம்பரமில்லாத கட்டடம். அதன் முன்னால் தோட்டமும் இல்லை. பக்கத்தில் இருந்த மற்ற வீடு களுக்கும் அதற்கும் வித்தியாசமே இல்லை. பிரிட்டோரியாவின் லட்சாதிபதிகள் பலருடைய வீடுகள், அவர் வீட்டைப்போல் அல்லாமல் அதிக ஆடம்பரமாக இருந்தன. அவற்றைச் சுற்றித் தோட்டங்களும் இருந்தன. ஜனாதிபதி குரூகரின் எளிய வாழ்வு, மிகப் பிரசித்தமானதாகும். அவர் வீட்டுக்கு முன்னாலிருந்த போலீஸ் காவலைக்கொண்டே அது ஒரு முக்கியமான அதிகாரி யின் வீடு என்பது தெரியும். நான் எப்பொழுதும் அவ் வீட்டிற்கு எதிரிலுள்ள நடைபாதை வழியாக அங்கிருந்த போலீஸ் பாராக்காரனைக் கடந்து செல்வது வழக்கம். எந்தவிதமான தடையோ, தகராறோ ஏற்பட்டதே இல்லை.

அங்கே காவலுக்கு இருந்த போலீஸ்காரனை இப்பொழுது அடிக்கடி மாற்றிவந்தார்கள். ஒரு நாள் அவ்விதம் காவலுக்கு இருந்த போலீஸ்காரர், எனக்குக் கொஞ்சமேனும் எச்சரிக்கை செய்யாமலும், நடைபாதையை விட்டுப் போய்விடும்படி சொல் லாமலும் என்னை உதைத்துத் தெருவில் தள்ளிவிட்டார். நான் திகைத்துப் போனேன். அவர் இவ்விதம் நடந்துகொண்டதைக் குறித்து அவரிடம் நான் கேட்க முற்படுவதற்கு முன்னால் ஸ்ரீ கோட்ஸ் சப்தம் போட்டு என்னைக் கூப்பிட்டார். அவர் அச் சமயம் அந்த வழியாகக் குதிரைமீது வந்துகொண்டிருந்தார். அவர் என்னிடம் வந்து, "ஸ்ரீ காந்தி! நடந்ததை யெல்லாம் நான் பார்த்தேன். அந்த ஆள்மீது நீங்கள் வழக்குத் தொடரு வீர்களானால், கோர்ட்டில் உங்களுக்காக நான் மகிழ்ச்சியுடன்

---

* குரூகரின் முழுப்பெயர், ஸ்டீபன்ஸ் ஜோகன்னஸ் பாலஸ் குரூகர் (1824—1904). இவர் போயரின் தலைவர். டிரான்ஸ்வாலில் பல ஆண்டுகள் அரசியல் போராட் டங்களில் தீவிரமாக ஈடுபட்டார். 1883-லிருந்து 1900 வரை ஜனாதிபதியாக இருந்தார். கறுப்பு நிறத்தவரைக் குறித்து இவர் கொண்டிருந்த மோசமான மனப்போக்கைக் குறித்து, ஸ்ரீ போலக் குறிப்பிடுகையில், 'புத்திசாலித்தனமுள்ள குரங்கை விட கறுப்பு மனிதர் எந்த விதத்திலும் சிறந்தவர் அல்ல' என்று அவர் ஒரு சமயம் கூறினார் என் கிறார். இதே ஜனாதிபதி குரூகர் பிறகு நாடு கடத்தப்பட்டு ஐரோப்பாவில் வாழ்ந்து காலமானார்.

சாட்சி சொல்வேன். இவ்வளவு முரட்டுத்தனமாக நீங்கள் தாக்கப்பட்டதற்காக நான் மிகவும் வருந்துகிறேன்'' என்றார்.

அதற்கு நான், ''நீங்கள் வருந்த வேண்டாம். பாவம், அவருக்கு என்ன தெரியும்? கறுப்பு மனிதர்கள் எல்லோரும் அவருக்கு ஒரேமாதிரிதான். என்னை இப்பொழுது நடத்தியதைப் போல அவர் நீக்கிரோக்களையும் நடத்துகிறார் என்பதில் சந்தேகமில்லை. என்னுடைய சொந்தக் குறை எதற்காகவும் கோர்ட்டுக்குப் போவதில்லை என்பதை நான் ஒரு விதியாகக் கொண்டிருக்கிறேன். ஆகையால், அவர்மீது வழக்குத் தொடரும் உத்தேசமில்லை'' என்றேன்.

உடனே, ஸ்ரீ கோட்ஸ், ''உங்கள் உயரிய குணத்திற்கு அது சரி. ஆனால், அதைக் குறித்து மறுபடியும் சிந்தியுங்கள். இப்படிப்பட்டவனுக்கு நாம் பாடம் கற்பிக்க வேண்டும்'' என்றார். பின்னர் அந்தப் போலீஸ்காரரிடம் பேசினர்; அவரைக் கண்டித்தார். போலீஸ்காரர் போயர் ஆனபடியால் இருவரும் டச்சு மொழியில் பேசினர். அவர்கள் என்ன பேசினார்கள் என்பது எனக்கு விளங்கவில்லை. ஆனால், அவர் என்னிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டார். அப்படிக் கேட்பதற்கு அவசியமே இல்லை. ஏனெனில், அவரை முன்பே நான் மன்னித்துவிட்டேன்.

ஆனால், திரும்பவும் அத் தெரு வழியாக நான் போகவே இல்லை. அந்த ஆள் இருந்த இடத்தில் வேறு ஆள் வந்திருக்கக் கூடும். இந்தச் சம்பவத்தை அறியாமல் புதிதாக இருக்கும் ஆளும் இதேபோல நடந்துகொண்டுவிடக் கூடும். அனாவசியமாக நான் ஏன் இன்னும் ஓர் உதையை வலிய வாங்க வேண்டும்? எனவே, நான் வேறு வழியில் போகத் தொடங்கினேன்.

குடியேறியிருக்கும் இந்தியரிடம் எனக்குள்ள அனுதாபத்தை இச் சம்பவம் அதிகமாக்கிவிட்டது. இத்தகைய சட்ட விதிகள் சம்பந்தமாக முதலில் பிரிட்டிஷ் ஏஜெண்டைப் பார்ப்பது, பிறகு அவசியம் என்று தெரிந்தால் பரீட்சார்த்தமாக ஒரு வழக்கைப் போட்டுப் பார்ப்பது என்பதைக் குறித்து இந்தியர்களுடன் விவாதித்தேன்.

இவ்விதம் அங்கே இந்தியருக்கு இருந்து வந்த மிகக் கஷ்டமான நிலையை, அதைப்பற்றிப் படிப்பதனாலும் கேள்விப்படுவதனாலும் மாத்திரம் அன்றி என் சொந்த அனுபவங்களினாலும் மிக நன்றாக அறிந்துகொண்டேன். தென்னாப்பிரிக்கா, சுயமரியாதையுள்ள இந்தியனுக்கு உகந்த நாடன்று என்பதைக் கண்டேன். இத்தகைய நிலைமையில் மாறுதல் ஏற்படும்படி செய்வது எப்படி என்ற கேள்வியே என் மனத்தில் மேலும் மேலும் எழுந்தவண்ணம் இருந்தது. ஆனால், அப்பொழுது என்னுடைய முதன்மையான கடமை தாதா அப்துல்லாவின் வழக்கைக் கவனிப்பதே.

# 14

# வழக்குக்கான தயாரிப்பு

பிரிட்டோரியாவில் நான் இருந்த அந்த ஓராண்டு, என் வாழ்க்கையிலேயே மிக மதிப்பு வாய்ந்த அனுபவத்தை எனக்கு அளித்தது. பொதுஜனப் பணியைக் கற்றுக்கொள்ளும் வாய்ப்பு எனக்கு இங்கேதான் கிடைத்தது. இங்கே அச் சேவைக்கான ஓரளவு ஆற்றலையும் பெற்றேன். என்னுள் சமய உணர்ச்சி ஜீவ சக்தியுள்ளதாக ஆனதும் இங்கேதான். மேலும், வக்கீல் தொழில் சம்பந்தமான உண்மையான ஞானத்தையும் இங்கேதான் அடைந்தேன். தொழிலுக்குப் புதிதாக வரும் ஒரு பாரிஸ்டர், அனுபவமுள்ள ஒரு பாரிஸ்டரிடம் அறிந்துகொள்ளும் விஷயங்களை இங்கே அறிந்துகொண்டேன். வக்கீல் தொழிலை என்னால் நடத்த முடியும் என்ற நம்பிக்கையும் எனக்கு இங்கேதான் ஏற்பட்டது. அதேபோல ஒரு வக்கீலின் வெற்றிக்கான ரகசியங்களையும் இங்கேதான் அறிந்தேன்.

தாதா அப்துல்லாவின் வழக்கு, சிறிய வழக்கே அல்ல. 40,000 பவுன் கிடைக்க வேண்டும் என்று வழக்குத் தொடரப்பட்டது. வியாபாரத்தின் கொடுக்கல் வாங்கலில் இவ் வழக்கு ஏற்பட்டதால் கணக்குச் சம்பந்தமான நுணுக்கங்கள் இதில் அதிகம் இருந்தன. வழக்கிடப்பட்ட தொகையில் ஒரு பகுதி பிராமிசரி நோட்டுக்காகவும், பிராமிசரி நோட்டுத் தருவதாகக் கூறியதற்கும் வரவேண்டிய தொகை, பிராமிசரி நோட்டுகள் மோசடியாக வாங்கப்பட்டவை, அவற்றிற்குப் போதுமான நியாயம் இல்லை என்பது பிரதிவாதி தரப்பு வாதம். இந்தச் சிக்கலான வழக்கில் உண்மையையும் சட்டத்தையும் பற்றிய விஷயங்கள் ஏராளமாக அடங்கியிருந்தன.

இரு தரப்பாரும் பெரிய அட்டர்னிகளையும் வக்கீல்களையும் அமர்த்தியிருந்தனர். ஆகவே, அவர்கள் வேலை செய்யும் விதத்தைத் தெரிந்துகொள்ளுவதற்கு எனக்குச் சிறந்த வாய்ப்புக் கிடைத்தது. வாதியின் கட்சியை அட்டர்னிக்கு எடுத்துக் கூறுவதும், வழக்குச் சம்பந்தமான ஆதாரங்களைச் சேகரிப்பதுமான வேலை என்னிடம் ஒப்படைக்கப்பட்டது. அவற்றில் அட்டர்னி எந்த அளவுக்கு எடுத்துக்கொள்ளுகிறார், நான் தயாரித்துக் கொடுப்பதில் எதை அவர் நிராகரித்து விடுகிறார் என்பதைக் கவனித்து வருவதே ஒரு போதனையாயிற்று. அதோடு அட்டர்னி தயாரித்துக் கொடுக்கும் விவரங்களில் எவ்வளவை வக்கீல் உபயோகித்துக்கொள்ளுகிறார் என்பதையும் நான் அறிய முடிந்தது. சட்ட நுணுக்கங்களை அறிந்துகொள்ளுவதற்கும், சாட்சியங்களை ஒழுங்குபடுத்துவதற்கும் எனக்குள்ள திறமையை அளந்து அறிவதற்குச் சாத்தியமானதாக இந்த வழக்குத் தயாரிப்பு வேலை உதவுவதையும் கண்டேன்.

இந்த வழக்கில் மிக அதிகமான சிரத்தை எடுத்துக் கொண்டேன். அதில் நான் முற்றும் மூழ்கியிருந்தேன் என்றே சொல்ல வேண்டும். பற்று வரவு சம்பந்தமான எல்லாத் தஸ்தாவேஜுகளையும் படித்தேன். என் கட்சிக்காரர் அதிகத் திறமைசாலி. என்னிடம் முழு நம்பிக்கையும் கொண்டிருந்தார். இதனால் என் வேலை எளிதாயிற்று. கணக்கு வைக்கும் முறையைக் குறித்தும் ஓரளவுக்குப் படித்துத் தெரிந்துகொண் டிருந்தேன். கடிதப் போக்குவரத்துக்களெல்லாம் பெரும்பாலும் குஜராத்தியிலேயே இருந்ததால் அவற்றை நான் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்க வேண்டியதாயிற்று. இதனால் மொழி பெயர்க்கும் ஆற்றலும் எனக்கு அதிகமாயிற்று.

நான் முன்னால் கூறியிருப்பதைப்போல், சமய சம்பந்தமான விஷயங்களிலும் பொது வேலைகளிலும் நான் அதிக சிரத்தை கொண்டிருந்தபோதிலும், என் நேரத்தில் கொஞ்சத்தை அவற்றிற்குச் செலவிட்டு வந்தாலும், அப்பொழுது எனக்கு அதிக முக்கியமானவையாக இருந்தவை அவை அல்ல. எனக்கு இருந்த முக்கியமான சிரத்தையெல்லாம் வழக்குச் சம்பந்தமான வேலைகளைக் கவனிப்பதே. சட்டத்தைப் படிப்பது, அவசியமாகும் போது அச்சட்ட சம்பந்தமான வழக்குகளைத் தேடியெடுப்பது ஆகியவைகளில் ஈடுபட்டு, மிஞ்சிய நேரங்களில்தான் மற்ற வேலைகளைக் கவனிப்பேன். இதன் பலனாக, வழக்கின் இரு தரப்பினரின் தஸ்தாவேஜுகளெல்லாம் என்னிடம் இருந்ததால் கட்சிக்காரர்களையும்விட நன்றாக வழக்கைப்பற்றிய விவரங்கள் எனக்குத் தெரிந்திருந்தன.

காலஞ்சென்ற ஸ்ரீ பின்கட், 'விவரங்களே சட்டத்தில் முக்கால் பாகம்' என்று புத்திமதி கூறியிருந்தார். அதை நான் நினைவு படுத்திக்கொண்டேன். தென்னாப்பிரிக்காவின் பிரபல பாரிஸ்டரான காலஞ்சென்ற ஸ்ரீ லியோனார்டும் இந்த உண்மையைப் பின்னால் உறுதிப்படுத்தினார். என்னிடம் ஒப்படைக்கப்பட்டிருந்த ஒரு வழக்கில் என் கட்சிக்காரர் பக்கம் நியாயம் இருந்தாலும், சட்டம் அவருக்கு விரோதமாக இருப்பதாகத் தோன்றியதைக் கண்டேன். என்ன செய்வதென்று தெரியாமல் ஸ்ரீ லியோனார்டின் உதவியை நாடினேன். அவ் வழக்கின் விவரங்கள் அதிக அனுகூலமாக இருக்கின்றன என்று அவர் கருதினார். அவர் பின் வருமாறு கூறினார்: 'ஒரு விஷயத்தை நான் அறிந்து கொண்டிருக்கிறேன். வழக்கைப்பற்றிய விவரங்களில் மாத்திரம் நாம் ஜாக்கிரதையாக இருந்தால், சட்டம் தன்னைத்தானே கவனித்துக்கொள்ளும். ஆகையால், இந்த வழக்கின் விவரங்களை நாம் இன்னும் ஆழ்ந்து கவனிப்போம்.' அவர் என்னிடம் இவ்விதம் கூறி, வழக்கைப்பற்றி மேலும் ஆராய்ந்துகொண்டு, மீண்டும் தம்மை வந்து பார்க்கும்படி கூறினார். விவரங்களை நான் திரும்ப ஆராய்ந்தபோது அதே விவரங்கள் எனக்குப் புதிய விதமாகத் தென்பட்டன. இதற்கு ஆதரவாக இருக்கக்கூடிய ஒரு பழைய தென்னாப்பிரிக்க வழக்கும் எனக்கு அகப்பட்டது. அதிக ஆனந்

தம் அடைந்தேன். ஸ்ரீ லியோனர்டிடம் சென்று எல்லாவற்றையும் சொன்னேன். ''சரி, வழக்கில் வெற்றி பெற்றுவிடுவோம். ஆனல், எந்த நீதிபதி இதை விசாரிக்கப்போகிருர் என்பதை மாத்திரம் நாம் கவனத்தில் வைத்திருக்க வேண்டும்'' என்ருர்.

தாதா அப்துல்லாவின் வழக்குக்கு வேண்டிய காரியங்களே நான் பார்த்துக் கொண்டிருந்தபொழுது, 'ஒரு வழக்கில் விவரங் களே அதிக முக்கியமானவை' என்பதை நான் முற்றும் உணர்ந்து கொள்ளவில்லே. விவரங்கள் என்பவை உண்மையாக நடந்த செயல்களாகும். நாம் உண்மையை அனுசரித்துப் போனல் இயற்கையாகவே சட்டம் நம் உதவிக்கு வருகிறது. தாதா அப்துல் லாவின் வழக்கில், விவரங்கள் மிகவும் அனுகூலமானவைகளாக இருந்ததால் சட்டமும் நிச்சயமாக அவருக்கு அனுகூலமாகவே இருக்கும் என்பதைக் கண்டேன். வாதியும் பிரதிவாதியும் உற வினர்கள். இருவரும் ஒரே ஊர்க்காரர்கள். ஆனல், விவகாரம் தொடர்ந்து நடத்தப்படுமானல், இரு தரப்பினருமே அழிந்து விடுவார்கள் என்பதையும் கண்டுகொண்டேன். வழக்கு எவ் வளவு காலத்திற்கு நடந்துகொண்டு போகும் என்பது யாருக்கும் தெரியாது. 'கோர்ட்டில் வழக்காடி ஒரு முடிவுக்கு வந்தே தீரு வது' என்று, வழக்கைத் தொடர்ந்து நடக்க விட்டுவிட்டால் கால வரையறையின்றி அது நடந்துகொண்டே போகும். இத ஞல் இரு தரப்பாருக்கும் நன்மை இல்லே. ஆகையால், வழக்கு உடனேயே தீர்ந்துவிடுவது நல்லது என்று இரு தரப்பாரும் விரும்பினர்கள்.

தயாப் சேத்திடம் போய், வழக்கை மத்தியஸ்தத்திற்கு விட் டுத் தீர்த்துக்கொள்ளுமாறு கேட்டுக்கொண்டு, யோசனையும் கூறி னேன். அவர் வக்கீலிடமும் அதைக் குறித்து யோசிக்கும்படி சொன்னேன். இரு தரப்பினருக்கும் நம்பிக்கை வாய்ந்த ஒரு வரை மத்தியஸ்தராக நியமித்துவிட்டால் வழக்கு சீக்கிரத்தில் தீர்ந்துவிடும் என்றும் யோசனே கூறினேன். கட்சிக்காரர்கள் இருவரும் பெரிய வியாபாரிகள். என்ருலும், அவர்களுடைய வசதிகள் எல்லாவற்றையுமே விழுங்கிவிடும் அளவுக்கு, வக்கீல் கட்டணங்கள் பெருகிக்கொண்டே போயின. அவர்கள் இரு வரின் கவனம் முழுவதும் இந்த வழக்கிலேயே ஈடுபட்டிருந்ததால் மற்ற வேலேகளேக் கவனிப்பதற்கு அவர்களுக்கு நேரமே இல்லே. இதற்கிடையே ஒருவருக்கொருவர் விரோதமும் வளர்ந்து கொண்டு போயிற்று. இத் தொழிலில் எனக்கு வெறுப்பும் ஏற்பட்டுவிட்டது. இரு தரப்பு வக்கீல்களும்-அவர்கள் வக்கீல்கள் என்ற முறையில்-அவரவர்கள் தரப்புக்குச் சாதகமான சட்ட நுட் பங்களேக் கிளப்பிக்கொண்டே இருக்க வேண்டியது, அவர்களு டைய கடமையாயிற்று வெற்றி பெறும் கட்சிக்காரர், தாம் செல வழித்த தொகை முழுவதையும் செலவு தொகையாக எதிர்த் தரப்பிலிருந்து பெற்றுவிடுவதில்லே என்பதையும் முதல் முதலாக அப்போதுதான் நான் கண்டேன். கோர்ட்டுக் கட்டணச் சட்டத் தின்படி வாதி பிரதிவாதிகளுக்கு இவ்வளவுதான் செலவு

தொகையாக அனுமதிக்கலாம் என்று விதிகள் நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றன. ஆனால், அட்டர்னிக்குக் கட்சிக்காரர் உண்மையில் கொடுக்கும் தொகையோ, அந்த விதிகளில் கண்டதற்கு மிக அதிகமாக இருந்தது. இதையெல்லாம் என்னால் சகிக்க முடியவில்லை. இரு தரப்பினரிடமும் நட்புக்கொண்டு, இருவரையும் சமரசம் செய்துவைத்து விடுவதுதான் என் கடமை என்று உணர்ந்தேன். சமரசம் செய்துவைத்துவிட என்னாலான முயற்சிகளையெல்லாம் செய்தேன். கடைசியாக தயாப் சேத் சம்மதித்தார். ஒரு மத்தியஸ்தரும் நியமிக்கப்பட்டார். அவர் முன்னிலையில் வழக்கு விவாதிக்கப்பட்டு, தாதா அப்துல்லா வெற்றி பெற்றார்.

ஆனால், அதோடு நான் திருப்தி அடைந்துவிடவில்லை. தீர்ப்பான தொகையை என் கட்சிக்காரர் உடனே வசூலிக்க நடவடிக்கை எடுப்பதென்றால், தீர்ப்புத் தொகை முழுவதையும் உடனே கட்டிவிடுவதென்பது தயாப் சேத்தினால் முடியாத காரியம். மேலும், தென்னாப்பிரிக்காவில் வசித்துவந்த போர்பந்தர் மேமன்களிடம் உறுதியான கொள்கை ஒன்று இருந்தது. பட்ட கடனைச் செலுத்த முடியாமல், 'இன்ஸால்வென்ட்'டாகிவிடுவதை விடச் செத்துவிடுவது மேல் என்பது அவர்கள் கொள்கை. மொத்தத் தொகையான 37,000 பவுனையும், செலவு தொகையையும் உடனே செலுத்திவிடுவது என்பது தயாப் சேத்தினால் முடியாது. ஒரு தம்படியும் குறையாமல் முழுத் தொகையையும் செலுத்திவிடவே அவர் விரும்பினார். 'இன்ஸால்வென்ட்'டாகிவிடவும் அவர் விரும்பவில்லை. இதற்கு ஒரே வழிதான் உண்டு. நியாயமான தவணைகளில் அத் தொகையைப் பெறத் தாதா அப்துல்லா ஒப்புக்கொள்ள வேண்டும். அவரும் இணங்கினார். நீண்டகாலத் தவணையில் தயாப் சேத் பணம் கட்டுவதை அனுமதிக்க ஒப்புக்கொண்டார். வழக்கை, மத்தியஸ்தத்திற்கு விடுவதற்கு இரு தரப்பினரும் சம்மதிக்கும்படி செய்ததைவிடத் தொகையைத் தவணையில் செலுத்துவது என்ற சலுகையைப் பெறுவதில்தான் எனக்கு அதிகச் சிரமம் இருந்தது. ஆனால், ஏற்பட்ட முடிவைக் குறித்து, இரு தரப்பாரும் மகிழ்ச்சி அடைந்தனர் ; பொதுஜனங்களிடையே அவர்களுடைய மதிப்பும் உயர்ந்தது. எனக்கு ஏற்பட்ட ஆனந்தத்திற்கு எல்லையே இல்லை. உண்மையான வக்கீல் தொழிலை நான் கற்றுக்கொண்டேன். பிளவுபட்டிருக்கும் கட்சிக்காரர்களை ஒன்றுக்குவதே வக்கீலின் உண்மையான வேலை என்பதை உணர்ந்து கொண்டேன். இந்தப் பாடம் என்னுள் அழிக்க முடியாதபடி நன்றாகப் பதிந்துவிட்டது. ஆகையால், நான் வக்கீலாகத் தொழில் நடத்திய இருபது ஆண்டுகளில் நூற்றுக்கணக்கான வழக்குகளில், தனிப்பட்ட முறையில் சமரசம் செய்துவைத்துவிடுவதிலேயே என் காலத்தின் பெரும் பகுதி கழிந்தது. இதனால் எனக்கு நஷ்டம் எதுவுமே இல்லை, பண நஷ்டமும் இல்லை ; நிச்சயமாக ஆன்ம நஷ்டம் இல்லவே இல்லை.

# 15

# சமய எண்ணத்தின் எழுச்சி

கிறிஸ்தவ நண்பர்களிடம் எனக்கு ஏற்பட்ட அனுபவங் களைக் குறித்துத் திரும்பவும் சொல்ல வேண்டிய சமயம் இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது.

எனது வருங்காலத்தைப் பற்றிய கவலை ஸ்ரீ பேக்கருக்கு அதிகமாகிக்கொண்டு வந்தது. வெல்லிங்டனில் நடந்த மகாசபைக்கு அவர் என்னை அழைத்துச் சென்றார். சமயத் தெளிவைப் பெறுவதற்கு-அதாவது வேறு விதமாகச் சொன்னால் சுயத் தூய்மையைப் பெறும் பொருட்டு என்று புராட்டஸ்டண்டு கிறிஸ்தவர்கள், இத்தகைய மகாசபைகளை சில ஆண்டுகளுக்கு ஒரு முறை கூட்டுவது வழக்கம். சமயத்தைச் சீராக்குவது அல்லது சமயப் புனருத்தாரணம் என்று இதைச் சொல்லலாம். வெல்லிங்டன் மகாசபையும் இந்த வகையைச் சேர்ந்ததுதான். அந்த மகாசபைக்குத் தலைமை தாங்கியவர் அப்பகுதியில் பிரசித்தமாயிருந்த பாதிரியாரான பூஜ்ய ஆண்ட்ரு மர்ரே என்பவர். அந்த மகாசபையில் இருக்கும் பக்திப் பரவசச் சூழ் நிலையும், அதற்கு வந்திருப்பவர்களின் உற்சாகமும் சிரத்தையும் என்னைக் கட்டாயம் கிறிஸ்தவ மதத்தைத் தழுவும்படி செய்தே தீரும் என்று ஸ்ரீ பேக்கர் நம்பியிருந்தார்.

அவருடைய முடிவான நம்பிக்கையெல்லாம் பிரார்த் தனையின் சக்தியிலேயே இருந்தது. பிரார்த்தனையில் அவர் திடமான நம்பிக்கை வைத்திருந்தார். மனப்பூர்வமான பிரார்த் தனைக்குக் கடவுள் செவி சாய்க்காமல் இருந்துவிட மாட்டார் என்றும் அவர் திடமாக நம்பினார். இதற்குப் பிரிஸ்டலின் ஜார்ஜ் முல்லர் போன்றவர்களின் உதாரணத்தையும் அவர் எடுத்துக் கூறுவார். அவர், தமது அன்றாடத் தேவைகளுக்குக்கூட கடவுளைப் பிரார்த்தித்துவிட்டு, அவரையே நம்பி இருந்து விடுவாராம். பிரார்த்தனையின் சக்தியைக் குறித்து அவர் கூறுவதையெல்லாம் எவ்விதத் துவேஷமும் இல்லாத கவனத் துடன் கேட்டுக்கொண்டிருந்தேன். ‘என் மனச்சாட்சி மாத்திரம் ஆக்ஞாபித்துவிடுமாயின் நான் கிறிஸ்தவ சமயத்தைத் தழுவி விடுவேன். இவ்விதம் நான் செய்வதை எதுவும் தடுத்துவிட முடியாது’ என்று அவரிடம் உறுதி கூறினேன். அந்தராத்மா காட்டும் வழியில் நடக்க, நான் நீண்ட காலமாகவே கற்றுக் கொண்டிருந்ததால், எந்தவிதத் தயக்கமும் இன்றி அவருக்கு இந்த வாக்குறுதியை நான் அளித்தேன். அந்தராத்மாவுக்குப் பணிந்து நடப்பதில் ஆனந்தம் கொண்டேன். அதற்கு விரோத மாக நடப்பதென்றால், முடியாது என்பதோடு, அது எனக்கு வேதனையாகவும் இருக்கும்.

எனவே, நாங்கள் வெல்லிங்டனுக்குச் சென்றோம். என்னைப் போன்ற, 'கறுப்பு' மனிதனை அழைத்துப் போய், அங்கே சமாளிப்பது ஸ்ரீ பேக்கருக்குக் கஷ்டமாகிவிட்டது. முற்றும் என்னாலேயே பல சமயங்களிலும் அசௌகரியங்களை அவர் அனுபவிக்கவேண்டிய தாயிற்று. பிரயாணத்தின் நடுவில் ஞாயிற்றுக் கிழமை குறுக்கிட்டது. ஸ்ரீ பேக்கரும் அவருடைய சகாக்களும் புண்ணிய நாளான ஞாயிற்றுக் கிழமைகளில் பிரயாணம் செய்ய மாட்டார்கள். ஆகவே இடையில் ஒரு நாள் பிரயாணத்தை நிறுத்தவேண்டி வந்தது. ஸ்டேஷன் ஹோட்டல் மானேஜர், எவ்வளவோ விவாதத்திற்குப் பிறகு என்னை ஹோட்டலில் வைத்துக்கொள்ளச் சம்மதித்தபோதிலும், சாப்பாட்டு அறையில் என்னை அனுமதிக்க மாத்திரம் மறுத்து விட்டார். எளிதில் விட்டுக்கொடுக்கிறவர் அல்ல, ஸ்ரீ பேக்கர். ஹோட்டலில் வந்து தங்குகிறவர்களின் உரிமையைக் குறித்து அவர் எவ்வளவோ வாதாடினார். என்றாலும், அவருக்கு இருந்த கஷ்டத்தை நான் அறிய முடிந்தது. வெல்லிங்டனிலும் நான் ஸ்ரீ பேக்கருடனேயே தங்கினேன். என்னால் அவருக்கு ஏற்பட்ட அசௌகரியங்களை மறைக்க அவர் என்ன தான் முயன்றபோதிலும் அவற்றை நான் அறியாமல் இல்லை.

இந்த மகாசபை, பக்தியுள்ள கிறிஸ்தவர்களைக் கொண்டது. அவர்களுக்கு இருந்த நம்பிக்கையைக் கண்டு, நான் மகிழ்ச்சி யடைந்தேன். பூஜ்யர் மர்ரேயையும் சந்தித்தேன். பலர் எனக் காகப் பிரார்த்தனை செய்ததையும் கண்டேன். அவர்களுடைய சில தோத்திர கீதங்கள் எனக்குப் பிடித்திருந்தன. அவை இனிமையாகவும் இருந்தன.

மகாசபை மூன்று நாட்கள் நடந்தது. அதற்கு வந்திருந்தவர் களின் பக்தியை நான் அறியவும் பாராட்டவும் முடிந்தது. ஆனால், என் நம்பிக்கையை– என் மதத்தை-மாற்றிக்கொள்ளு வதற்கு எந்தவிதமான காரணத்தையும் நான் அங்கே காண வில்லை. கிறிஸ்தவனாக ஆகிவிடுவதனால் மாத்திரமே நான் சுவர்க் கத்திற்குப் போக முடியும், முக்தியை அடைய முடியும் என்பதை என்னால் நம்ப முடியவில்லை. நல்லவர்களான கிறிஸ்தவ நண்பர்கள் சிலரிடம் இவ்விதம் நான் மனம் விட்டுச் சொன்ன போது, அவர்கள் திடுக்கிட்டுப் போனார்கள். ஆனால், நான் வேறு எதுவும் செய்வதற்கில்லை.

எனக்கு இருந்த கஷ்டங்கள் மேலும் ஆழமானவை. 'ஏசு நாதர் ஒருவரே கடவுளின் அவதாரமான திருக்குமாரர். அவரிடம் நம்பிக்கை வைப்பவர்கள் மாத்திரமே நித்தியமான வாழ்வை அடைய முடியும்' என்பதை என்னால் நம்ப முடியவில்லை. கடவுளுக்குக் குமாரர்கள் இருக்க முடியும் என்றால் நாம் எல்லோரும் அவருடைய குமாரர்களே. ஏசு நாதர் கடவுளைப் போன்றவர் அல்லது அவரே கடவுள் என்றால், எல்லா மனிதரும் கடவுளைப் போன்றவர்களே என்பதுடன் ஒவ்வொருவருமே

கடவுளாகவும் முடியும். ஏசு நாதர் தமது மரணத்தினுலும், தாம் சிந்திய ரத்தத்தினுலும் உலகத்தைப் பாவங்களிலிருந்து ரட்சித்தார் என்பதை அப்படியே ஒப்புக்கொண்டுவிட என் பகுத்தறிவு தயாராக இல்லே. இதை உருவகமான கூற்ருகக் கொண்டால் இதில் கொஞ்சம் உண்மையும் இருக்கலாம். அதோடு, கிறிஸ்தவ தருமத்தின்படி மனிதருக்கு மாத்திரமே ஆன்மா உண்டேயன்றி மற்ற ஜீவன்களுக்கு ஆன்மா இல்லே. அவைகளுக்குச் சாவு என்பது, அடியோடு மறைந்து விடுவதுதான், நானே, இதற்கு மாறுபட்ட நம்பிக்கை கொண்டிருந்தேன். 'ஏசு நாதர், லட்சியத்துக்காக உயிரைக் கொடுத்தவர்; தியாகமூர்த்தி; தெய்வீகமான போதகர்' என்பதை நான் ஏற்றுக்கொள்ள முடியும். ஆனுல், 'இதுவரையில் தோன்றியவர்களி லெல்லாம் அவரே பரிபூரணர்' என்பதை நான் ஒப்புக்கொள்ளுவதற் கில்லே. சிலுவையில் அவர் மாண்டது, உலகிற்குப் பெரியதோர் உதாரணம். ஆனுல், 'அதில் பெரிய ரகசியம் அல்லது அற்புதத் தன்மை இருக்கிறது' என்பதை என் உள்ளம் ஏற்றுக்கொள்ள முடியாது. மற்றச் சமயங்களேப் பக்தியுடன் பின்பற்றுகிறவர்கள் எனக்கு அளிக்கத் தவறியது எதையும், கிறிஸ்தவர்களின் பக்தி வாழ்க்கை எனக்கு அளித்துவிட வில்லே. கிறிஸ்தவர்க ளிடையே பலர் புண்ணியசீலர்களாகத் திருந்தியிருப்பதாக நான் கேள்விப் பட்டிருக்கிறேன். மற்ற மதங்களேச் சேர்ந்தவர்கள் வாழ்க்கையிலும் அதே மாறுதலே நான் கண்டிருக்கிறேன். தத்துவ ரீதியில் கிறிஸ்தவக் கொள்கைகளில் அசாதாரணமானது எதுவும் இல்லே. தியாகத்தைப் பொறுத்தவரையில் பார்த்தால், ஹிந்துக்கள் இதில் கிறிஸ்தவர்களேயும் மிஞ்சியிருக்கின்றனர். கிறிஸ்தவமே பரிபூரணமான மதம் என்ரே, எல்லா மதங்களிலும் அதுவே தலே சிறந்தது என்ரே நம்ப என்னுல் முடியவில்லே.

என் மனதில் தோன்றிய இந்த எண்ணங்களே யெல்லாம் சமயம் நேர்ந்தபோதெல்லாம் எனது கிறிஸ்தவ நண்பர்களிடம் கூறுவேன். ஆனுல், இவற்றிற்கு அவர்கள் அளிக்கும் பதில்கள் எனக்குத் திருப்தி யளிக்கவில்லே.

கிறிஸ்தவ மதமே பரிபூரணமான மதம் என்ரே, தலேசிறந்த மதம் என்ரே என்னுல் ஒப்புக்கொள்ள முடியவில்லே யென்ருல், ஹிந்து சமயம் பரிபூரணமானது, தலேசிறந்தது என்றும் அப்பொழுது எனக்கு நிச்சயமாகத் தோன்றிவிட வில்லே. தீண்டாமை, ஹிந்து சமயத்தின் ஒரு பகுதியாக இருக்க முடியுமாயின், அது அதன் அழுகிப்போன பகுதியாகவோ அல்லது சதைச் சுரப்பாகவோதான் இருக்கவேண்டும்.* ஏராளமான

* தீண்டாமை ஒழிப்பில் ஆர்வம், தென்னுப்பிரிக்காவுக்குச் சென்ற பிறகு அன்று, குழந்தைப் பருவத்திலேயே காந்திஜிக்கு இருந்து வந்திருக்கிறது என்பதற்கு ஆதாரங்கள் இருக்கின்றன. ஹிந்து மதத்தைச் சீர்திருத்தும் நோக்கத்தில் பிரம்ம சமாஜமும் ஆர்ய சமாஜமும் தீவிரமாகப் பரவி வந்த சமயம் அது. காந்திஜியைப் போன்றே, கத்தியவாரில் பிறந்தவரான சுவாமி தயானந்தரின் கீர்த்தி எங்கும் பரவியிருந்தது. தீண்டாமைக்கு எதிர்ப்பும் தோன்றியிருந்தது. உகா என்ற தோட்டி

பிரிவுகளும் சாதிகளும் இருப்பதற்கான நியாயமும் எனக்கு விளங்கவில்லை. கடவுள் வாக்கே வேதங்கள் என்று சொல்லுவதன் பொருள் என்ன? அவை கடவுளால் கூறப்பட்டவையே என்றால், பைபிளும் குரானும் அப்படிக் கூறப்பட்டவையாக ஏன் இருக்கலாகாது?

என்னை மதம் மாற்றுவதற்குக் கிறிஸ்தவ நண்பர்கள் எவ்விதம் முயன்று வந்தனரோ அதுபோலவே முஸ்லிம் நண்பர்களும் முயன்றனர். இஸ்லாமிய நூல்களைப் படிக்குமாறு அப்துல்லா சேத், விடாமல் என்னைத் தூண்டிக்கொண்டே இருந்தார். எப்பொழுதும் அவர் இஸ்லாமின் சிறப்பைக் குறித்து ஏதாவது சொல்லிக்கொண்டே இருப்பார்.

எனக்கு இருந்த கஷ்டங்களைக் குறித்து ராய்ச்சந்திர பாய்க்கு எழுதிய கடிதத்தில் தெரிவித்திருந்தேன்.* சமயத்

---

வந்து, காந்தி வீட்டுக் கக்கூசுகளைத் தினம் சுத்தம் செய்துவிட்டுப் போவது வழக்கம். அப்பொழுது காந்திஜிக்கு வயது 12. அத் தோட்டியை அவர் தீண்டக்கூடாது. ஆனால், தீண்டாமைக்கு ஹிந்து தருமத்தில் இடம் கிடையாது என்று அப்பொழுதே அவர் தமது தாயாருடன் விவாதிப்பாராம். 'இப்பொழுது தீண்டாதவராகக் கருதப்படும் ஒருவரே, ராமாயணத்தில் ராமரைத் தமது படகில் கங்கைக்கரை தாண்டிக்கொண்டு போய்விட்டிருக்கும்போது, தீண்டாமை எப்படி இருக்க முடியும்?' என்று தாயைக் கேட்டாராம்.

* மத சம்பந்தமாகத் தமக்கு ஏற்பட்ட சந்தேகங்களைக் குறித்துக் காந்திஜி 1894 ஜூன் மாதத்திற்கு முந்தியே ராய்ச்சந்திர பாய்க்குக் கடிதம் எழுதிக் கேட்டிருக்கிறார். அந்த அசல் கடிதம் இப்பொழுது கிடைக்கவில்லை. ஆனால், அதற்கு ராய்ச்சந்திர பாய் எழுதிய பதில் மாத்திரம், 'ஸ்ரீமத் ராஜ சந்திரா' என்ற குஜராத்தி நூலில் கிடைக்கிறது. காந்திஜி ராய்ச்சந்திரரைக் கேட்ட கேள்விகள் அதிலிருந்து எடுக்கப்பட்டிருக்கின்றன. காந்திஜிக்கு அச்சமயம் என்ன என்னவிதமான சந்தேகங்களெல்லாம் தோன்றியிருக்கின்றன என்பதை இக் கேள்விகளைக் கொண்டு அறியலாம். அக் கேள்விகளாவன:

ஆன்மா என்பது என்ன? அதற்குச் செயல் ஏதாவது உண்டா? முன்னால் செய்தவைகள், அதன் அபிவிருத்தியைத் தடைப்படுத்துகின்றனவா, இல்லையா?

கடவுள் என்பது என்ன? பிரபஞ்சத்தைப் படைத்தவர் கடவுள்தானா?

மோட்சம் என்பது என்ன?

தான் மோட்சத்தை அடைய முடியும், முடியாது என்பதை உயிரோடு இருக்கும்போதே ஒருவர் அறிந்துகொண்டு விடுவது சாத்தியமா?

ஒருவன் இறந்த பின்னர், தன்னுடைய கர்மங்களுக்கு ஏற்றாற்போல மிருகமாகவோ, மரமாகவோ, கல்லாகவோகூடத் திரும்பப் பிறக்கிறான் என்பது உண்மையா?

ஆரிய தருமம் என்பது என்ன? எல்லா இந்திய மதங்களும் வேதத்திலிருந்தே பிறந்தனவா?

வேதங்களை எழுதியது யார்? அவை அனாதியானவையா? அப்படியானால் அனாதி என்றால் என்ன?

கீதையின் ஆசிரியர் யார்? அதன் ஆசிரியர் கடவுளேதானா? கடவுள்தான் என்பதற்கு ஏதாவது ஆதாரம் உண்டா?

துறையில் வல்லுநராக இந்தியாவில் இருந்தவர்களுக்கும் எழுதினேன். அவர்களிடமிருந்தும் எனக்குப் பதில்கள் கிடைத்தன. ராய்ச்சந்திரரின் கடிதம் ஓரளவுக்கு எனக்கு மன நிம்மதியை அளித்தது. பொறுமையுடன் இருக்குமாறும், ஹிந்து தருமத்தைக் குறித்து இன்னும் ஆழ்ந்து படிக்குமாறும் அவர் எழுதியிருந்தார். அவர் எழுதியதில் ஒரு வாக்கியம் பின்வருமாறு: 'இவ்விஷயத்தை விருப்பு வெறுப்பின்றிக் கவனித்ததில் ஒன்று எனக்கு நிச்சயமாகத் தெரிகிறது. ஹிந்து மதத்தின் ஆழ்ந்த, அற்புதமான கருத்துக்களும், ஆன்ம ஞானமும், தயையும் வேறு எந்த மதத்திலும் இல்லை என்பதே அது.'

ஸேல்ஸ் என்பவரின் குரான் மொழிபெயர்ப்பு நூலை வாங்கிப் படிக்க ஆரம்பித்தேன். இஸ்லாமைப் பற்றிய வேறு சில நூல்களையும் வாங்கினேன். இங்கிலாந்திலிருந்த கிறிஸ்தவ நண்பர்களுக்கும் எழுதினேன். அவர்களில் ஒருவர், எட்வர்டு மெயிட்லண்டுக்கு என்னை அறிமுகம் செய்துவைத்தார். அவருடனும் கடிதப் போக்குவரத்து வைத்துக்கொண்டேன். 'பரிபூரணமான வழி' என்ற நூலை அவர் எனக்கு அனுப்பினர். அன்னா கிங்ஸ்போர்டுடன் சேர்ந்து, அவர் இந்நூலை எழுதியிருந்தார். இப்பொழுது இருந்துவரும் கிறிஸ்தவ நம்பிக்கைகளை

---

மிருகங்களையும் மற்றவைகளையும் பலி கொடுப்பதனால் ஏதாவது பெருமை உண்டா?

ஒரு சமயமே மற்றெல்லாவற்றிலும் சிறந்தது என்று கூறப்படுமாயின், அப்படிச் சொல்லுகிறவரிடம் அதற்கு ருசுவைக் கூறும்படி நாம் கேட்கக் கூடாதா?

கிறிஸ்தவத்தைக் குறித்து உங்களுக்கு ஏதாவது தெரியுமா? தெரிந்திருந்தால் அதைப்பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

கடவுள் அருளியதே பைபிள் என்றும், கடவுளின் குமாரரே ஏசுவாகையால் அவருடைய அவதாரமே ஏசு என்றும் கிறிஸ்தவர்கள் கூறுகின்றனர். அப்படித்தானா?

பழைய ஆகமத்தில் கூறப்பட்ட தீர்க்கதரிசனங்களெல்லாம் கிறிஸ்துவிடம் நிறைவேற்றப்பட்டனவா?

முந்திய ஜன்மங்களைக் குறித்து ஒருவருக்கு நினைவிருக்க முடியுமா? வரும் ஜன்மங்களைக் குறித்தும் ஏதாவது அறிய முடியுமா? ஆம் என்றால் அறியக்கூடியவர் யார்?

மோட்சமடைந்தவர்கள் எனச் சிலருடைய பெயரை நீங்கள் கூறுகிறீர்கள். அதற்குச் சரியான அத்தாட்சி என்ன?

புத்தரும் மோட்சத்தை அடையவில்லை என்று நீங்கள் எப்படிக் கூறுகிறீர்கள்?

இந்த உலகத்தின் முடிவு என்னவாகும்? உலகம் வருங்காலத்தில் ஒழுக்கத்தில் மேம்படுமா? அடியோடு அழிந்துவிடும் என்பதும் உண்டா?

படிப்பே இல்லாத ஒருவர், பக்தியினால் மாத்திரம் மோட்சத்தை அடைந்துவிட முடியுமா?

ராமரும் கிருஷ்ணரும் கடவுளின் அவதாரங்கள் என்று கூறப்படுகின்றன. அதன் பொருள் என்ன? அவர்கள்தான் கடவுளா அல்லது கடவுளின் ஒரு பாகமா? அவர்களிடம் பக்தி கொள்ளுவதனால் மோட்சமடைய முடியுமா?

பிரம்மா, விஷ்ணு, சிவன் என்பவர்கள் யார்?

இந்நூல் மறுக்கிறது. 'பைபிளுக்குப் புதிய வியாக்கியானம்' என்ற மற்றொரு புத்தகத்தையும் அவர் எனக்கு அனுப்பினர். அவ்விரு புத்தகங்களுமே எனக்குப் பிடித்திருந்தன. அவை, ஹிந்து தருமத்தை ஆதரிப்பனவாகத் தோன்றின. 'உன்னுள்ளேயே ஆண்டவன் ராஜ்யம்' என்ற டால்ஸ்டாயின் நூல், என்னைப் பரவசப்படுத்தி விட்டது. அதில் கண்ட கருத்துக்கள் என் உள்ளத்தில் பலமாகப் பதிந்துவிட்டன. அந் நூலில் கண்ட சுயேச்சையான சிந்தனை, மிகச் சிறந்த ஒழுக்கம், உண்மை ஆகியவற்றின் முன்பு ஸ்ரீ கோட்ஸ் எனக்குக் கொடுத்திருந்த புத்தகங்கள் எல்லாமே ஒளி இழந்து, அற்பமானவைகளாகத் தோன்றின.

இவ்விதம் என்னுடைய ஆராய்ச்சி, கிறிஸ்தவ நண்பர்கள் எதிர்பாராத திக்குக்கு என்னைக் கொண்டு போய்விட்டது. எட்வர்டு மெயிட்லண்டுடன் நீண்ட காலம் கடிதப் போக்கு வரத்து வைத்துக்கொண்டிருந்தேன். ராய்ச்சந்திரபாய் இறக்கும் வரையில் அவருடனும் கடிதப் போக்குவரத்து வைத்திருந்தேன். அவர் அனுப்பிய சில புத்தகங்களையும் படித்தேன். 'பஞ்சீகரணம்', 'மணிரத்தினமாலை', 'யோகவாசிஷ்டத்தின் முமுட்சுப் பிரகரணம்', ஹரிபத்ர சூரியின் 'சத் தரிசன சமுச்சயம்' முதலியவைகளும் அவைகளில் சேர்ந்தவை.

என் கிறிஸ்தவ நண்பர்கள் எதிர்பாராத ஒரு வழியை நான் மேற்கொண்டேனாயினும், என்னுள் அவர்கள் எழுப்பிய சமய வேட்கைக்காக நான் அவர்களுக்கு என்றும் கடப்பாடுடையவனாக இருக்கிறேன். அவர்களுடன் பழகியதைப் பற்றிய நினைவை நான் என்றும் போற்றி வருவேன். இத்தகைய இனிமையான, புனிதமான தொடர்புகள், அதற்குப் பின்னாலும் எனக்கு அதிகமாக இருந்தனவே அன்றிக் குறையவில்லை.

## 16

## நானொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைத்தது

வழக்கு முடிவடைந்துவிட்டதால் நான் பிரிட்டோரியாவில் இருப்பதற்கு எந்தவிதமான காரணமும் இல்லை. ஆகவே, நான் டர்பனுக்குத் திரும்பினேன். தாய்நாட்டுக்குப் புறப்படுவதற்கான ஏற்பாடுகளைச் செய்யலானேன். ஆனல், அப்துல்லா சேத், பிரிவுபசாரம் எதுவும் இல்லாமல் என்னை அனுப்பிவிட இசைபவர் அல்ல. சைடன்ஹாமில் அவர் எனக்கு ஒரு பிரிவுபசார விருந்து நடத்தினர்.

அன்று, நாள் முழுவதையும் அங்கேயே கழிப்பது என்பது ஏற்பாடு. அங்கே கிடந்த பத்திரிகைகளை நான் புரட்டிக்கொண்டிருக்கையில், அதில் ஒன்றின் ஒரு மூலையில், 'இந்தியரின்

வாக்குரிமை' என்ற தலைப்பில் ஒரு சிறு செய்தி என் கண்ணில் பட்டது. அப்பொழுது சட்டசபை முன்பிருந்த ஒரு மசோதாவைப் பற்றியது, அச் செய்தி. நேட்டால் சட்ட சபைக்கு மெம்பர்களைத் தேர்ந்தெடுக்க இந்தியருக்கு இருந்த உரிமையைப் பறிப்பதற்கென்று கொண்டுவரப்பட்டது, அந்த மசோதா. அம் மசோதாவைப்பற்றி எனக்கு ஒன்றுமே தெரியாது. விருந்துக்கு வந்திருந்தவர்களுக்கும் தெரியாது.

அதைக் குறித்து அப்துல்லா சேத்தை விசாரித்தேன். அவர் கூறியதாவது: ''இந்த விஷயங்களைப் பற்றியெல்லாம் எங்களுக்கு என்ன தெரிகிறது? எங்கள் வியாபாரத்தைப் பாதிக்கும் விஷயம் மாத்திரமே எங்களுக்குப் புரிகிறது. ஆரஞ்சு பிரீ ஸ்டேட்டில் எங்களுடைய வியாபார மெல்லாம் அடியோடு போய்விட்டது என்பதை நீங்கள் அறிவீர்கள். அதைக் குறித்துக் கிளர்ச்சி செய்தோம்; ஒன்றும் பயனில்லை. எழுதப் படிக்கத் தெரியாதவர்களாக இருப்பதால் நாங்கள் முடவர்களாகத்தான் இருக்கிறோம். அன்றாட மார்க்கெட் நிலவரம் போன்றவைகளைத் தெரிந்துகொள்ளுவதற்கு மாத்திரமே பொதுவாக நாங்கள் பத்திரிகைகளைப் பார்க்கிறோம். சட்டங்கள் செய்யப்படுவதைக் குறித்து எங்களுக்கு என்ன தெரியும்? எங்களுக்குக் கண்களாகவும் காதுகளாகவும் இருப்பவர்கள் இங்கிருக்கும் ஐரோப்பிய அட்டர்னிகளே.''

''இங்கே பிறந்து, படித்தும் இருக்கும் வாலிப இந்தியர்கள் பலர் இருக்கிறார்கள். அவர்கள் உங்களுக்கு உதவி செய்வதில்லையா?'' என்று கேட்டேன்.

''அவர்களா?'' என்று மனம் சோர்ந்து, அப்துல்லா சேத் கேட்டார். ''அவர்கள் எங்களைப் பொருட்டாக நினைத்து எங்களிடம் வருவதே இல்லை. உங்களிடம் உண்மையைச் சொல்லுகிறேன். அவர்களை நாங்களும் சட்டை செய்வதில்லை. அவர்கள் கிறிஸ்தவர்களாதலால் வெள்ளைக்காரப் பாதிரிகளின் கைக்குள் இருக்கின்றனர். அப் பாதிரிகளோ, அரசாங்கத்திற்கு உட்பட்டவர்கள்'' என்றார்.

அவர் இவ்விதம் கூறியது என் கண்களைத் திறந்தது. இந்த வகுப்பினரை 'நம்மவர்கள்' என்று நாம் உரிமை கொண்டாட வேண்டும் என்று எனக்குத் தோன்றியது. கிறிஸ்தவம் என்பதற்குப் பொருள் இதுதானா? அவர்கள் கிறிஸ்தவர்கள் ஆகிவிட்டதனால் இந்தியர்களாக இல்லாது போய்விட்டனரா?

ஆனால், நானோ தாய்நாட்டிற்குத் திரும்பும் நிலையில் இருந்தேன். ஆகவே, இவ் விஷயத்தில் என் மனத்தில் தோன்றிய எண்ணங்களை வெளிக்குக் கூறத் தயங்கினேன். ''இந்த மசோதா சட்டமாகிவிட்டால், நமது கதியை அது இன்னும் அதிகக் கஷ்டமான தாக்கிவிடும். நமது சவப்பெட்டியில் அடிக்

கப்படும் முதல் ஆணி இது. நமது சுயமதிப்பின் வேரையே இது தாக்குகிறது'' என்று மாத்திரம் அப்துல்லா சேத்திடம் கூறினேன்.

உடனே அவர் கூறியதாவது: ''நீங்கள் சொன்ன நிலைமை ஏற்படலாம். வாக்குரிமை வரலாற்றை உங்களுக்குக் கூறுகிறேன். அதைப்பற்றி எங்களுக்கு எதுவுமே தெரியாது. எங்களுடைய சிறந்த அட்டர்னிகளில் ஒருவரான ஸ்ரீ எஸ்கோம்புதான் இதைப் பற்றி எங்களிடம் சொன்னார். அது நடந்தவிதம் இதுதான்: அவர் தீவிரமாகப் போராடுகிறவர். அவருக்கும் கப்பல் துறை இன்ஜினீயருக்கும் பரஸ்பரம் பிடிக்காது. இன்ஜினீயர், தமக்கு வோட்டுகள் இல்லாதபடி செய்து, தம்மைத் தேர்தலில் தோற் கடித்துவிடுவார் என்று ஸ்ரீ எஸ்கோம்பு நினைத்தார். ஆகையால், எங்களுடைய நிலைமையை எங்களுக்கு அவர் எடுத்துச் சொன்னார். அவர் கூறிய யோசனையின் பேரில் நாங்களெல்லோரும் வாக்காளர்களாகப் பதிவு செய்துகொண்டு, அவருக்கு வோட்டுப் போட்டோம். நீங்கள் அந்த வாக்குரிமை முக்கியமானது என் கிறீர்கள். ஆனால், அது எங்களுக்கு எவ்விதம் முக்கியமல்ல என்பதை நீங்கள் இப்பொழுது அறியலாம். என்றாலும், நீங்கள் கூறுவது எங்களுக்குப் புரிகிறது. சரி, அப்படியானால் நீங்கள் கூறும் யோசனைதான் என்ன?''

விருந்துக்கு வந்திருந்த மற்றவர்களும் நாங்கள் பேசிக் கொண்டிருந்ததைக் கவனமாகக் கேட்டுக்கொண் டிருந்தனர். அவர்களில் ஒருவர், ''செய்யவேண்டியது என்ன என்பதை நான் சொல்லட்டுமா? இந்தக் கப்பலில் நீங்கள் புறப்படுவது என் பதை ரத்துச் செய்துவிடுங்கள். இன்னும் ஒரு மாதம் இங்கே இருங்கள். நீங்கள் கூறுகிறபடி நாங்கள் போராடுகிறோம்'' என்றார்.

மற்றவர்கள் எல்லோரும் ''அதுதான் சரி; அதுதான் சரி. அப்துல்லா சேத்! காந்தியை நிறுத்தி வையுங்கள்'' என்றனர்.

சேத் மிகவும் சாமர்த்தியம் உள்ளவர். அவர் கூறியதாவது: ''இப்பொழுது நான் அவரை நிறுத்தி வைப்பதற்கில்லை. அவரை நிறுத்திவைப்பதற்கு எனக்கு இருக்கும் உரிமை இப்பொழுது உங்களுக்குந்தான் இருக்கிறது. ஆனால், நீங்கள் சொல்லுவது என்னவோ முற்றும் சரியானதே. இங்கே இருக்க வேண்டும் என்று நாம் எல்லோரும் அவரைக் கேட்டுக்கொள்ளுவோம். அவர் ஒரு பாரிஸ்டர் என்பது உங்களுக்கு நினைவிருக்கவேண்டும். அவருக்குக் கொடுக்கவேண்டிய கட்டணத்திற்கு என்ன ஏற்பாடு?''

கட்டணம் என்று சொல்லப்பட்டது எனக்கு வேதனை அளித்தது. எனவே, நான் குறுக்கிட்டுச் சொன்னதாவது: ''அப்துல்லா சேத், என் கட்டணம் என்ற பேச்சுக்கே இட மில்லை. பொதுஜன ஊழியத்திற்குக் கட்டணம் இருக்க முடியாது.

நான் தங்குவதாயின் உங்கள் சேவகன் என்ற முறையில் தங்க முடியும். இந்த நண்பர்கள் எல்லோருடனும் எனக்குப் பழக்கம் இல்லை என்பதையும் நீங்கள் அறிவீர்கள். ஆனால், அவர்கள் ஒத்துழைப்பார்கள் என்று நீங்கள் நம்பினால், மேற்கொண்டும் ஒரு மாதம் தங்குவதற்கு நான் தயாராக இருக்கிறேன். என்றாலும், ஒரு விஷயம் இருக்கிறது. எனக்கு நீங்கள் எதுவும் கொடுக்க வேண்டியதில்லை யென்றாலும், நாம் எண்ணுவதைப் போன்ற வேலையை ஆரம்பத்திலேயே ஏதாவது ஒரு நிதி இல்லாமல் செய்ய முடியாது. நாம் தந்திகள் அனுப்பவேண்டி வரலாம்; சில பிரசுரங்களையும் அச்சிட வேண்டி வரும். கொஞ்சம் சுற்றுப் பிரயாணமும் அவசியமாவதோடு, உள்ளூர் அட்டர்னிகளையும் கலந்து ஆலோசிக்க நேரலாம். இங்குள்ள சட்டங்களைக் குறித்து எனக்கு ஒன்றும் தெரியாதாகையால் அவைகளைப் பார்க்கச் சில சட்டப் புத்தகங்களையும் வாங்கவேண்டி யிருக்கும். இவற்றை யெல்லாம் பணமில்லாமல் செய்ய முடியாது. மேலும் இந்த வேலைக்கு ஒருவர் மாத்திரம் போதாது என்பதும் தெளிவானது. எனக்கு உதவி செய்யப் பலர் முன்வர வேண்டும்.”

உடனே, ஏககாலத்தில் பல குரல்கள் எழுந்தன: ‘‘அல்லாவின் மகிமையே மகிமை! அவன் அருளே அருள். பணம் வந்துவிடும். உங்களுக்கு எவ்வளவு தேவையோ அவ்வளவுக்கு ஆட்களும் இருக்கிறார்கள். தயவுசெய்து நீங்கள் தங்குவதற்கு ஒப்புக்கொள்ளுங்கள். எல்லாம் நன்றாகிவிடும்'' என்றனர்.

இவ்விதம் பிரிவுபசார கோஷ்டி, காரியக் குழுவாக மாறியது. ‘விருந்து முதலியவைகளைச் சீக்கிரமாக முடித்துக்கொண்டு, வீடு திரும்பிவிடுவோம்’ என்று யோசனை கூறினேன். இந்தப் போராட்டத்திற்கு என் மனத்திற்குள்ளேயே ஒரு திட்டம் போட்டுக்கொண்டேன். வாக்காளர் ஜாபிதாவில் யார் யாருடைய பெயர்கள் இருக்கின்றன என்பதைத் தெரிந்துகொண்டேன். மேற்கொண்டும் ஒரு மாத காலம் தங்குவதென்றும் தீர்மானித்தேன்.

இவ்விதம் தென்னாப்பிரிக்காவில் என் வாழ்க்கைக்குக் கடவுள் அடிகோலியதோடு தேசீய சுயமரியாதைக்காக நடத்திய போராட்டத்திற்கு விதையும் ஊன்றினர்.

## 17

# நேட்டாலில் குடியேறினேன்

**1893**-இல் சேத் ஹாஜி முகமது ஹாஜி தாதா, நேட்டால் இந்தியரிடையே தலைசிறந்த தலைவராகக் கருதப்பட்டார். செல்வ விஷயத்தில் பார்த்தால் இந்தியரில் முதன்மையானவர் சேத் அப்துல்லா ஹாஜி ஆதம். ஆனால், இவரும் மற்றவர்களும் பொதுக் காரியங்களில் சேத் ஹாஜி முகமதுவுக்கே முதலிடம் அளித்து

வந்தனர். ஆகவே, அவருடைய தலைமையில், அப்துல்லா சேத்தின் வீட்டில் ஒரு பொதுக்கூட்டம் நடந்தது. வாக்காளர் மசோதாவை எதிர்ப்பது என்று அதில் தீர்மானமாயிற்று.

தொண்டர்கள் சேர்க்கப்பட்டனர். நேட்டாலில் பிறந்தவர்களான இந்தியர் – அதாவது பெரும்பாலும் இந்தியக் கிறிஸ்தவ இளைஞர்கள் – இக் கூட்டத்திற்கு அழைக்கப்பட்டனர். டர்பன் நீதிமன்ற மொழிபெயர்ப்பாளரான ஸ்ரீ பாலும், ஒரு மிஷன் பாடசாலை ஆசிரியரான ஸ்ரீ சுபான் காட்பிரேயும் இக் கூட்டத்திற்கு வந்திருந்தனர். ஏராளமான கிறிஸ்தவ இளைஞர்கள் இக் கூட்டத்திற்கு வருவதற்குப் பொறுப்பாளிகளாக இருந்தவர்கள், இவர்கள் இருவருமே. இவர்கள் எல்லோரும் தொண்டர்களாகப் பதிவு செய்துகொண்டார்கள். உள்ளூர் வர்த்தகர்கள் பலரும் தொண்டர்களாகப் பதிவு செய்துகொண்டார்கள்.

சேத்துகள் தாவூது முகமது, முகமது காசிம் கம்ருதீன், ஆதம்ஜி மியாகான், ஏ. குழந்தைவேலுப் பிள்ளை, ஸி. லச்சிராம், ரங்கசாமிப் படையாச்சி, ஆமத் ஜீவா ஆகியவர்கள் பதிவு செய்துகொண்டவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள். பார்ஸி ருஸ்தம்ஜியும் அவர்களுள் ஒருவராக இருந்தார். சேர்ந்து கொண்ட குமாஸ்தாக்களில் ஸ்ரீமான்கள் மாணேக்ஜி, ஜோஷி, நரசிங்கராம் முதலியவர்களும், தாதா அப்துல்லா கம்பெனி முதலிய பெரிய கம்பெனிகளில் வேலை பார்த்தவர்களும் இருந்தனர். பொதுவேலையில் தாங்களும் பங்கெடுத்துக் கொள்ளுவதைக் குறித்து, இவர்கள் எல்லோரும் மகிழ்ச்சி யடைந்ததோடு ஆச்சரியமும் அடைந்தார்கள். இவ்விதம் பங்குகொள்ள அழைக்கப் படுவது, அவர்களுடைய வாழ்க்கையிலேயே ஒரு புது அனுபவம். சமூகத்திற்கு ஏற்பட்டிருக்கும் ஆபத்தானதோர் வேலையில் உயர்வு, தாழ்வு; சிறியவர்கள், பெரியவர்கள்; எஜமான், வேலைக்காரன்; ஹிந்து, முஸ்லிம்; பார்ஸி, கிறிஸ்தவர், குஜராத்திகள், மதராஸிகள், சிந்துக்காரர்கள் என்ற பாகுபாடுகளை யெல்லாம் மறந்துவிட்டனர். எல்லோரும் ஒரே மாதிரி தாய்நாட்டின் குழந்தைகள்; சேவகர்கள்.

மசோதா இரண்டாம் முறையாகச் சட்டசபையில்நிறைவேறி விட்டது, அல்லது நிறைவேற இருக்கும் தருணத்தில் இருந்தது எனலாம். ‘இத்தகைய கடுமையான மசோதாவுக்கு இந்தியர், தங்களுடைய எதிர்ப்பைத் தெரிவிக்காததிலிருந்தே, வாக்குரிமைக்கு அவர்கள் தகுதியற்றவர்கள் என்பது ருசுவாகிறது’ என்று சட்டசபையில் மசோதாவின்மீது பேசியவர்கள் கூறினர்.

நிலைமையைப் பொதுக்கூட்டத்திற்கு விளக்கிக் கூறினேன். நாங்கள் செய்த முதல் காரியம், சட்டசபையின் சபாநாயகருக்குத் தந்தி கொடுத்ததாகும். மசோதாமீது மேற்கொண்டும் விவாதிப்பதை ஒத்திவைக்குமாறு அவரைக் கோரினோம். அதே போன்ற தந்திகளைப் பிரதமர் ஸர் ஜான் ராபின்ஸனுக்கும், தாதா அப்துல்லாவின் நண்பர் என்ற முறையில் ஸ்ரீ எஸ்கோம்

யுக்கும் அனுப்பினோம். மசோதாவின் விவாதம் இரண்டு தினங்களுக்கு ஒத்திவைக்கப்படும் என்று சபாநாயகர் உடனே பதில் அனுப்பினர். இதனல் மகிழ்ச்சி யடைந்தோம்.

சட்டசபை முன்பு சமர்ப்பிப்பதற்கு மகஜரைத் தயாரித்தோம். அதற்கு மூன்று பிரதிகள் தயாரிக்க வேண்டி இருந்ததோடு பத்திரிகைகளுக்கும் தனியாக ஒரு பிரதி வேண்டியிருந்தது. மகஜரில் எவ்வளவு முடியுமோ அவ்வளவு கையெழுத்துக்களையும் வாங்கிவிடுவதென்றும் உத்தேசிக்கப்பட்டது. இந்த வேலைகளை யெல்லாம் ஒரே இரவில் செய்து முடிக்கவேண்டி யிருந்தது. ஆங்கிலம் தெரிந்த தொண்டர்களும் மற்றும் பலரும் இரவெல்லாம் வேலை செய்தனர். ஸ்ரீ ஆர்தர், வயதானவர். அழகாக எழுதுவதில் பெயர் பெற்றவர். முக்கியப் பிரதியை அவரே எழுதினர். மற்றவைகளை ஒருவர் படித்துச் சொல்ல, மற்றவர்கள் எழுதினர். இவ்விதம் ஒரே சமயத்தில் ஐந்து பிரதிகள் தயாராகி விட்டன. தொண்டர்களான வர்த்தகர்கள் மகஜரில் கையெழுத்து வாங்கத் தங்கள் சொந்த வண்டிகளில் சென்றனர்; வாடகை வண்டிகளில் போனவர்கள் தாங்களே வாடகையைக் கொடுத்து விட்டார்கள். இவைகளெல்லாம் வெகு சீக்கிரத்தில் செய்து முடிக்கப் பெற்றன. மகஜரையும் அனுப்பிவிட்டோம். பத்திரிகைகளும் அதைப் பிரசுரித்து ஆதரவான அபிப்பிராயங்களை எழுதின. இவ்விதம் அது சட்டசபையிலும் சிறிது ஆதரவான அபிப்பிராயத்தை உண்டாக்கியது. மகஜரைக் குறித்துச் சட்டசபையில் விவாதித்தனர். மசோதாவைக் கொண்டு வந்திருந்தவர்கள், மகஜரில் கூறப்பட்டிருந்த வாதங்களுக்குப் பதிலாக நிச்சயமாக நொண்டிச் சமாதானங்களையே கூறினர். என்ருலும் மசோதா நிறைவேறிவிட்டது.

இப்படித்தான் நடக்கப் போகிறது என்பதை நாங்கள் எல்லோரும் அறிவோம். ஆனல், இக் கிளர்ச்சி சமூகத்தினரிடையே ஒரு புத்துயிரை அளித்தது. இந்தியர் யாவரும் பிரிக்கமுடியாத ஒரே சமூகத்தினர்; வர்த்தக உரிமைக்காகப் போராடுவதைப் போலவே தங்கள் ராஜீய உரிமைக்காகவும் போராடியே தீருவர் என்பதை எல்லோரும் உணரும்படியும் இக் கிளர்ச்சி செய்தது.

அச் சமயம் லார்டு ரிப்பன்* குடியேற்ற நாட்டு மந்திரியாக இருந்தார். அவருக்குப் பிரம்மாண்டமான மகஜர் ஒன்றை அனுப்புவது என்று முடிவு செய்தோம். இது சின்ன விஷயமன்று; ஒரே நாளில் செய்துவிடக்கூடியதும் அல்ல. தொண்

---

* லார்டு ரிப்பன் (1827–1909): 1880–ஆம் ஆண்டு முதல் 1884-ஆம் ஆண்டு வரை இந்தியாவில் வைசிராயாக இருந்தார். 1892 முதல் 1895-ஆம் ஆண்டு வரையில் பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளின் மந்திரியாக இருந்தார். இவருக்குப் பிறகே ஸ்ரீ சேம்பர்லேன், குடியேற்ற நாட்டு மந்திரியானர். ஸ்ரீ சேம்பர்லேனிடம் மகாத்மா தூது சென்ற விவரத்தைப் பின்வரும் அத்தியாயம் ஒன்றில் காணலாம்.

டர்களைத் திரட்டினோம். இவ்வேலையில் எல்லோரும் அவரவர்கள் பங்கைச் செய்தனர்.

இந்த மகஜரைத் தயாரிப்பதில் நான் அதிகச் சிரமம் எடுத்துக்கொண்டேன். இவ் விஷயத்தைக் குறித்துக் கிடைத்த புத்தகங்களை யெல்லாம் படித்தேன். ஒரு கொள்கையையும் உசிதத்தையுமே முக்கியமாகக் கொண்டவை, மகஜரில் நான் கூறியிருந்த வாதங்கள். இந்தியாவில் ஒரு வகையான வாக்குரிமை இருந்து வருவதால் நேட்டாலிலும் வாக்குரிமை பெற எங்களுக்கு உரிமை உண்டு என்று வாதித்தேன். வாக்குரிமையை உபயோகித்துக்கொள்ளக்கூடிய இந்தியரின் தொகை மிகக் குறைவே யாகையால், அந்த உரிமை தொடர்ந்து இருந்துவரும் படியாகப் பார்த்துக்கொள்ளுவதே உசிதமானது என்றும் வற்புறுத்தினேன்.

இரண்டு வாரங்களுக்குள் பத்தாயிரம் கையெழுத்துக்களை வாங்கினோம். இந்த வேலையில் ஈடுபட்டவர்கள், இத்தகைய வேலைக்கே முற்றும் புதிதானவர்கள். இதைக்கொண்டு கவனித்தால், மாகாணம் முழுதும் போய், அவ்வளவு ஏராளமான கையெழுத்துக்களை வாங்கியது அற்ப சொற்பமான வேலையல்ல என்பது விளங்கும். விண்ணப்பத்தின் கருத்தை முற்றும் புரிந்துகொள்ளாதவர்கள் யாரிடமும் கையெழுத்து வாங்கக் கூடாது என்று முடிவு செய்திருந்தோம். ஆகையால், விசேஷத் தகுதி பெற்றிருந்த தொண்டர்களையே இந்த வேலைக்குத் தேர்ந் தெடுத்தோம். கிராமங்களோ, ஒன்றுக்கொன்று தொலை தூரத்தில் இருந்தன. அநேக ஊழியர்கள், தங்கள் முழு மனத் தையும் இவ் வேலையில் செலுத்தினால்தான் இவ் வேலை சீக்கிரத் தில் முடியும். அவ்வாறே பலர், முழு மனத்துடன் வேலை செய்தனர். இவ் வரிகளை நான் எழுதும்போது சேத் தாவூது முக மது, ருஸ்தம்ஜி, ஆதம்ஜி மியாகான், ஆமத் ஜீவா ஆகியவர்கள் தெளிவாக என் கண் முன்பு தோன்றுகின்றனர். அதிகப்படி யான கையொப்பங்களை வாங்கி வந்தவர்கள் இவர்களே. தாவூது சேத், நாளெல்லாம் வண்டியில் சென்றவண்ணம் இருந்தார். அவ் வேலையில் இவர்களுக்கு இருந்த அன்பினாலேயே இதை யெல்லாம் செய்தனர். இவர்களில் ஒருவர்கூடத் தங்கள் செல வுக்குப் பணம் வேண்டும் என்று கேட்டதில்லை. தாதா அப்துல் லாவின் வீடு, உடனே ஒரு சத்திரமாகவும் பொதுக் காரியாலய மாகவும் மாறிவிட்டது. எனக்கு உதவி செய்த படித்த நண்பர்கள் பலரும், மற்றும் பலரும், அங்கேதான் சாப்பிட் டார்கள். இவ்விதம் உதவி செய்த ஒவ்வொருவருக்கும் பணச் செலவு அதிகமாயிற்று.

முடிவாக, மகஜரைச் சமர்ப்பித்துவிட்டோம். எல்லோருக்கும் அனுப்புவதற்கும் வினியோகிப்பதற்குமாக அம் மகஜரின் ஆயிரம் பிரதிகளை அச்சிட்டோம். நேட்டாலில் இருந்த தங்கள் நிலைமையைப்பற்றி இந்திய மக்கள் முதல்முதலாக அறியும்படி

இது செய்தது. எனக்குத் தெரிந்த எல்லாப் பத்திரிகைகளுக்கும் பிரமுகர்களுக்கும் மகஜரின் பிரதிகளை அனுப்பினேன்.

'டைம்ஸ் ஆப் இந்தியா' பத்திரிகை, இம் மகஜரைக் குறித்து எழுதிய ஒரு தலையங்கத்தில், இந்தியரின் கோரிக்கையைப் பலமாக ஆதரித்தது. இங்கிலாந்தில் பல கட்சிகளைச் சேர்ந்த பத்திரிகைகளுக்கும் பிரமுகர்களுக்கும் மகஜரின் நகல் அனுப்பினேன். லண்டன் 'டைம்ஸ்' பத்திரிகை எங்கள் கட்சியை ஆதரித்தது. மசோதா நிராகரிக்கப்பட்டுவிடும் என்ற நம்பிக்கையைக் கொள்ளலானோம்.

இச் சமயத்தில் நான் நேட்டாலை விட்டுப் போய்விடுவது என்பது முடியாத காரியம் ஆகிவிட்டது. இந்திய நண்பர்கள் நாலா பக்கங்களிலும் என்னைச் சூழ்ந்துகொண்டிருந்தனர். நிரந்தரமாக அங்கே தங்கிவிடுமாறும் மன்றாடினர். எனக்கு இருந்த கஷ்டங்களை எடுத்துக் கூறினேன். பொதுஜனச் செலவில் அங்கே தங்குவதில்லை என்று முடிவு கட்டிக் கொண்டேன். தனியாக ஒரு ஜாகையை அமர்த்திக்கொள்ள வேண்டியது அவசியம் என்றும் எண்ணினேன். வீடு, நல்லதாக இருக்கவேண்டும்; அதோடு நல்ல இடத்திலும் இருக்க வேண்டும் என்று நினைத்தேன். சாதாரணமாகப் பாரிஸ்டர்களுக்கு உரிய அந்தஸ்தில் நான் வாழ்ந்தாலன்றி இந்திய சமூகத்திற்கு நான் மதிப்பைத் தேடிக் கொடுத்தவன் ஆக முடியாது என்ற எண்ணமும் எனக்கு இருந்தது. வருடத்திற்கு 300 பவுனுக்குக் குறைந்து அத்தகைய குடித்தனத்தை நடத்துவது இயலாது என்றும் எனக்குத் தோன்றியது. ஆகவே, குறைந்த பட்சம் அந்த அளவுக்குச் சட்ட சம்பந்தமான வேலையை எனக்குத் தருவதாக இந்திய சமூகத்தைச் சேர்ந்தவர்கள் எனக்கு உத்தரவாதம் அளித்தால் மாத்திரமே நான் அங்கே தங்க முடியும் என்று முடிவு செய்தேன். இந்த முடிவை அவர்களுக்கு அறிவித்தேன்.

"நீங்கள் செய்யும் பொதுவேலைக்காக அத் தொகையை உங்களுக்குக் கொடுக்க வேண்டும் என்றே நாங்கள் விரும்புவோம். இதை நாங்கள் எளிதாக வசூலித்துவிட முடியும். இது வல்லாமல் தனிப்பட்டவர்களுக்காக நீங்கள் செய்யும் வக்கீல் வேலைக்கு, நீங்கள் தனியாகக் கட்டணம் பெற்றுக்கொள்ளலாம்" என்று அவர்கள் கூறினர்.

"அது முடியாது. பொதுஜன ஊழியத்திற்கு உங்களிடம் பணம் வாங்க முடியாது. இந்த வேலைக்குப் பாரிஸ்டர் என்ற வகையில் என் திறமை அதிகமாகத் தேவையில்லை. உங்களையெல்லாம் வேலை செய்யும்படி செய்வதே முக்கியமாக என் வேலையாக இருக்கும். அப்படியிருக்க, இந்த வேலைக்கு உங்களிடம் எப்படி நான் பணம் வாங்க முடியும்? மேலும் இந்த வேலைக்குப் பணஉதவி செய்யுமாறு உங்களிடம் நான் அடிக்கடி கேட்டுக்கொள்ள வேண்டிவரும். என் சொந்தச் செலவுக்கும்

உங்களிடமிருந்து நான் பணம் வாங்குவதாக இருந்தால், பெருந் தொகை கொடுக்கும்படி உங்களைக் கேட்பது எனக்குச் சங்கட மாக இருக்கும். முடிவாக, அதனுல் நம் வேலை நின்றுவிடும் நிலைக்கு வந்துவிடுவோம். அத்துடன் பொதுவேலைக்கு ஆண்டுக்கு 300 பவுனுக்கு மேல் நம் சமூகம் பணம் திரட்ட வேண்டும் என் றும் நான் விரும்புகிறேன்'' என்று கூறினேன்.

"கொஞ்ச காலமாக உங்களுடன் பழகி உங்களை நன்ருக நாங்கள் அறிந்துகொண்டிருக்கிருேம். உங்களுக்குத் தேவை இல்லாதது எதையும் நீங்கள் பெற்றுக்கொள்ள மாட்டீர்கள் என்பது எங்களுக்கு நிச்சயமாகத் தெரியும். நீங்கள் இங்கே இருக்க வேண்டும் என்று நாங்கள் விரும்பும்போது உங்கள் செலவுக்கு நாங்கள் ஏற்பாடு செய்ய வேண்டாமா?'' என்றும் கேட்டார்கள்.

அதற்கு நான் கூறியதாவது: "நீங்கள் என்னிடம் கொண் டிருக்கும் அன்பும், இப்பொழுது உங்களுக்கு இருக்கும் உற்சாக முமே நீங்கள் இவ்விதம் பேசும்படி செய்கின்றன. இந்த அன்பும் உற்சாகமும் எப்பொழுதும் இப்படியே இருந்துவரும் என்று நாம் எவ்விதம் நிச்சயமாக நம்ப முடியும்? உங்கள் நண்பன், ஊழியன் என்ற வகையில், சில சமயங்களில் உங்களை நான் கடிந்து பேச வும் நேரலாம். அப்பொழுதும் என்னிடம் நீங்கள் அன்புடையவர் களாகவே இருப்பீர்களா என்பது கடவுளுக்குத்தான் வெளிச்சம், ஆனல், உண்மை என்னவெனில், பொது வேலைக்காக நான் சம் பளம் எதுவும் வாங்கிக்கொள்ளக் கூடாது என்பதுதான். நீங்கள் எல்லோரும் உங்களுக்கு இருக்கும் சட்ட வேலையை என்னிடம் ஒப்படைத்தால் அதுவே எனக்குப் போதுமானது. அதுவுங்கூட உங்களுக்குக் கஷ்டமானதாக இருக்கலாம். நான் வெள்ளைக் காரப் பாரிஸ்டர் அல்ல. கோர்ட்டு என்னை மதிக்கும் என்று நான் எப்படி நிச்சயமாகக் கூற முடியும்? வக்கீல் தொழிலில் நான் எவ்வளவு தூரம் திறமையாக நடந்துகொள்ளுவேன் என்பதும் எனக்கு நிச்சயமாகத் தெரியாது. ஆகையால், என்னை உங் களுடைய வக்கீலாக அமர்த்திக்கொள்ளுவதிலும் உங்களுக்குச் சில ஆபத்துக்கள் உண்டு. அந்த வேலையை எனக்குக் கொடுப்ப தைக்கூட உண்மையில் என்னுடைய பொதுவேலைக்குச் சன் மானம் என்றே கருதவேண்டும்.''

இந்த விவாதத்தின் பலனுகச் சுமார் இருபது வர்த்தகர்கள் ஓர் ஆண்டிற்கு என்னைத் தங்கள் வக்கீலாக அமர்த்திக்கொண்டு, அதற்காக எனக்குப் பணம் கொடுத்தார்கள். நான் தாய்நாடு திரும்பும்போது எனக்கு ஒரு பண முடிப்பு அளிப்பதென்று, தாதா அப்துல்லா தீர்மானித்திருந்தார். அந்தப் பணத்தைக் கொண்டு அவர், எனக்குத் தேவையாயிருந்த மேஜை, நாற்காலி முதலியவைகளை வாங்கிக் கொடுத்தார்.

இவ்வாறு நான் நேட்டாலில் குடியேறினேன்.

# 18

# நிறத் தடை

புத்தி கூர்மையுள்ள ஒரு பெண். அவளுக்குக் கண் பார்வை இல்லை; பாரபட்சமற்றவள்; ஒரு தட்டுக்கு மற்றொரு தட்டு ஏற்றத் தாழ்வின்றி நடுநிலையாக வைத்து, ஒரு தராசைக் கையில் ஏந்தியிருப்பாள். இதுவே ஒரு நீதி மன்றத்திற்குச் சின்னம். ஒருவனை, அவனுடைய வெளித் தோற்றத்தைக் கொண்டு அவள் மதித்துவிடக் கூடாது; அவனுடைய உண்மையான உள் யோக்கியதையைக் கவனித்தே முடிவு கூற வேண்டும் என்பதற்காக வேண்டுமென்றே விதி அவளைக் குருடாக்கி யிருக்கிறது. ஆனால், நேட்டால் வக்கீல்களின் சங்கமோ, இந்தக் கொள்கைக்கு முற்றும் மாறாக அந்தச் சின்னத்தைப் பொய்யாக்கும் வகையில் சுப்ரீம் கோர்ட்டு நடக்கும்படி செய்ய முனைந்தது.

சுப்ரீம் கோர்ட்டில் அட்வொகேட்டாகத் தொழில் நடத்த என்னை அனுமதிக்க வேண்டும் என்று மனுச்செய்தேன். பம்பாய் ஹைகோர்ட்டில் நான் வக்கீலாக இருந்ததற்குரிய அத்தாட்சி என்னிடம் இருந்தது. இங்கிலாந்தில், பாரிஸ்டரானதற்கு எனக்குக் கொடுத்த அத்தாட்சிப் பத்திரத்தைப் பம்பாய் ஹைகோர்ட்டில் நான் வக்கீலாகப் பதிவு செய்துகொண்டபோது, அங்கே தாக்கல் செய்துவிட்டேன். சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று மனுப் போடும்போது, அத்துடன் நன்னடத்தை அத்தாட்சிப் பத்திரங்கள் இரண்டும் தாக்கல் செய்யவேண்டியது அவசியம். இந்த அத்தாட்சிப் பத்திரங்கள் ஐரோப்பியர்கள் கொடுத்ததாக இருந்தால், அவற்றிற்கு அதிக மதிப்பிருக்கும் என்று எண்ணி, சேத் அப்துல்லாவின் மூலம் எனக்குத் தெரிந்தவர்களான இரு பிரபல ஐரோப்பிய வர்த்தகர்களிடம் அந்த அத்தாட்சிப் பத்திரங்களை வாங்கினேன். வக்கீலாக இருப்பவர் ஒருவர் மூலமாக இம் மனுவைக் கொடுக்க வேண்டும். எத்தகைய கட்டணமும் வாங்கிக்கொள்ளாமல் அட்டர்னி ஜெனரல் இத்தகைய மனுக்களைச் சமர்ப்பிப்பதுதான் வழக்கம். ஸ்ரீ எஸ் கோம்பு, தாதா அப்துல்லா கம்பெனிக்குச் சட்ட ஆலோசகராக இருந்தார் என்பதை முன்பே படித்தோம். அவர் இப்பொழுது அட்டர்னி ஜெனரல். அவரிடம் சென்றேன். அவரும் என் மனுவைக் கோர்ட்டில் சமர்ப்பிக்க மனம் உவந்து ஒப்புக் கொண்டார்.

நான் எதிர்பாராத விதமாக வக்கீல்கள் சங்கத்தினர் எதிர்க்கக் கிளம்பினர். என்னைச் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று நான் கொடுத்திருந்த மனுவை எதிர்த்து, எனக்கு ஒரு தாக்கீது அனுப்பினர்கள். நேட்டால் வக்கீல் சங்கத்தினர் வெளிப்படையாகக் கூறிய ஓர் ஆட்சேபம், இங்கிலாந்தில் பெற்ற

அசல் அத்தாட்சிப் பத்திரத்தை மனுவுடன் நான் தாக்கல் செய்ய வில்லை என்பது. ஆனால், அவர்களுக்கு இருந்த முக்கியமான ஆட்சேபம், ஒரு கறுப்பு மனிதனும் அட்வொகேட்டாகப் பதிவு செய்துகொள்ள மனுப்போடக்கூடும் என்பதை, அட்வொகேட்டு களை அனுமதிப்பது சம்பந்தமான விதிகளைச் செய்தபோது சிந்தித்திருக்க முடியாது என்பதுதான். 'ஐரோப்பியரின் முயற்சியால்தான் நேட்டால் இன்று வளம் பெற்று வளர்ந்திருக் கிறது. ஆகையால், வக்கீல் தொழிலிலும் ஐரோப்பியர்களே ஆதிக்கம் செலுத்த வேண்டும். வெள்ளையர் அல்லாதவரையும் இத்தொழிலுக்குள் வர விட்டுவிட்டால், நாளாவட்டத்தில் அவர் கள் தொகை ஐரோப்பிய வக்கீல்களின் தொகையைவிட் அதிக மாகிவிடும். அவர்களுக்குப் பாதுகாப்பாக இருக்கும் அரண் தகர்ந்துவிடும்.' இதுவே அவர்களுடைய முக்கியமான ஆட்சேபம்.

தங்களுடைய எதிர்ப்பை ஆதரித்து வாதாட, ஒரு பிரபல மான வக்கீலை, வக்கீல்கள் சங்கத்தினர் அமர்த்தியிருந்தார்கள். அந்த வக்கீலும் தாதா அப்துல்லா கம்பெனியுடன் தொடர் புள்ளவர். ஆகவே, தம்மை வந்து பார்க்குமாறு சேத் அப்துல்லா மூலம் அவர் எனக்குச் சொல்லியனுப்பினார். நான் போனேன். அவர் என்னிடம் மனம் விட்டுப் பேசினார். என்னுடைய பூர்வோத்தரங்களை விசாரித்தார். சொன்னேன். பிறகு அவர் கூறியதாவது:

"உமக்கு விரோதமாக நான் சொல்லக்கூடியது எதுவும் இல்லை. குடியேற்ற நாட்டில் பிறந்த, எதற்கும் துணிந்துவிடும் ஓர் ஆசாமியாக நீர் இருப்பீரோ என்றுதான் நான் பயந்தேன். அசல் அத்தாட்சியை உம்முடைய மனுவுடன் நீர் அனுப்பாதது என் சந்தேகத்தை அதிகமாக்கியது. மற்றவர்களுடைய அத்தாட்சிப் பத்திரங்களைத் தங்களுடையவை எனக் காட்டி ஏமாற்றுபவர் களும் உண்டு. ஐரோப்பிய வியாபாரிகளிடம் வாங்கி, நீங்கள் அனுப்பியிருக்கும் நன்னடத்தை அத்தாட்சிகள் என்னைப் பொறுத்தவரை பயனற்றவை. உங்களைக் குறித்து அவர்களுக்கு என்ன தெரியும்? அவர்களுக்கு உங்களிடம் எவ்வளவு பழக்கம் இருக்க முடியும்?"

"இங்கே எனக்கு எல்லாருமே புதியவர்கள்தான். சேத் அப்துல்லாவும் இங்கேதான் முதல் முதலாக என்னை அறிவார்" என்றேன்.

"ஆனால், அவர் உங்கள் ஊரைச் சேர்ந்தவர் என்கிறீர்களே? உங்கள் தகப்பனார் அங்கே முதல் மந்திரியாக இருந்தார் என்றால் சேத் அப்துல்லாவுக்கு உங்கள் குடும்பம் தெரிந்தே இருக்க வேண்டும். அவரிடமிருந்து உறுதிமொழிப் பத்திரத்தை நீங்கள் தாக்கல் செய்வதாக இருந்தால், எனக்குக் கொஞ்சமும் ஆட் சேபமே இல்லை. அப்பொழுது உங்கள் மனுவை நான் எதிர்த்துப்

பேசுவதற்கில்லை என்று வக்கீல்கள் சங்கத்திற்குச் சந்தோஷமாகவே அறிவித்துவிடுவேன்'' என்றார்.

அவருடைய இந்தப் பேச்சு எனக்கு ஆத்திரத்தை மூட்டியது. ஆனால், என் உணர்ச்சிகளை அடக்கிக்கொண்டேன். என்னுள்ளேயே பின்வருமாறு சொல்லிக் கொண்டேன்: 'தாதா அப்துல்லாவின் அத்தாட்சியை நான் தாக்கல் செய்திருந்தால் அதை நிராகரித்திருப்பார்கள்; ஐரோப்பியரிடமிருந்து அத்தாட்சி வேண்டும் என்றும் கேட்டிருப்பார்கள். நான் அட்வொகேட்டாகப் பதிவு செய்துகொள்ளுவதற்கும், என் பிறப்புக்கும், பூர்வோத்தரங்களுக்கும் என்ன சம்பந்தம்? என் பிறப்பு எளிமையானதாகவோ, ஆட்சேபகரமானதாகவோ இருக்குமாயின், அதை எப்படி எனக்கு எதிராக உபயோகிக்க முடியும்?' ஆனால், என் கோபத்தையெல்லாம் அடக்கிக்கொண்டு அமைதியாக அவருக்குப் பின்வருமாறு பதில் சொன்னேன்:

"அந்த விவரங்களையெல்லாம் கேட்பதற்கு வக்கீல்கள் சங்கத்திற்கு எந்தவிதமான அதிகாரமும் இருப்பதாக நான் ஒப்புக்கொள்ளாவிட்டாலும், நீங்கள் விரும்பும் அத்தாட்சிப் பத்திரத்தைத் தாக்கல் செய்யத் தயாராக இருக்கிறேன்.''

சேத் அப்துல்லாவின் அத்தாட்சியைத் தயாரித்து, வக்கீல்கள் சங்கத்தின் ஆலோசகரிடம் சமர்ப்பித்தேன். தாம் திருப்தியடைந்துவிட்டதாக அவர் சொன்னார். ஆனால், வக்கீல்கள் சங்கத்தினர் திருப்தியடையவில்லை. சுப்ரீம் கோர்ட்டில் என் மனுவை எதிர்த்தார்கள். இந்த எதிர்ப்புக்குப் பதில் சொல்லுமாறு என் மனுவைத் தாக்கல் செய்த ஸ்ரீ எஸ்கோம்பைக்கூட அழைக்காமலே, கோர்ட்டு, அச்சங்க எதிர்ப்பை நிராகரித்துவிட்டது. பிரதம நீதிபதி கூறியதாவது:

"மனுதாரர், தம்முடைய மனுவுடன் அசல் அத்தாட்சிப் பத்திரத்தையும் தாக்கல் செய்யவில்லை என்ற ஆட்சேபம் அர்த்தம் இல்லாதது. அவர் பொய்ப் பிரமாணப் பத்திரம் தாக்கல் செய்திருந்தால், அவர்மீது வழக்குத் தொடுத்து, அவர் குற்றஞ் செய்திருப்பதாக நிரூபிக்கப்பட்டால் வக்கீல் பட்டியலிலிருந்து அவர் பெயரை நீக்கிவிடலாம். வெள்ளையருக்கும் வெள்ளையர் அல்லாதவர்களுக்கும் இடையே எந்தவிதமான பாகுபாட்டையும் சட்டம் கற்பிக்கவில்லை. ஆகவே, ஸ்ரீ காந்தி அட்வொகேட்டாகத் தம்மைப் பதிவு செய்துகொள்ளுவதைத் தடுக்கக் கோர்ட்டுக்கு எந்த அதிகாரமும் இல்லை. அவருடைய மனுவை ஏற்றுக்கொள்ளுகிறோம். ஸ்ரீ காந்தி, இப்பொழுது நீர் பிரமாணம் எடுத்துக்கொள்ளலாம்.''

நான் எழுந்துபோய் ரெஜிஸ்டிரார் முன்பு பிரமாணம் எடுத்துக் கொண்டேன். நான் பிரமாணம் எடுத்துக்கொண்டதும் பிரதம நீதிபதி என்னைப் பார்த்துக் கூறியதாவது:

''ஸ்ரீ காந்தி, நீர் உம்முடைய தலைப்பாகையை இப்பொழுது எடுத்துவிடவேண்டும். தொழில் நடத்தும் பாரிஸ்டர்கள் சம்பந்த மாக உள்ள கோர்ட்டின் விதிகளை அனுசரித்து நீங்கள் நடக்க வேண்டும்.''

எனக்குரிய வரம்புகளை நான் உணரலானேன். ஜில்லா மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் நான் எடுக்க மறுத்த தலைப்பாகை யைச் சுப்ரீம் கோர்ட்டு உத்தரவுக்குப் பணிந்து எடுத்துவிட்டேன். இந்த உத்தரவை நான் எதிர்த்திருந்தால், அந்த எதிர்ப்பு நியாய மானதாக இருந்திருக்காது என்பதல்ல. ஆனால், என் பலத்தைப் பெரிய விஷயங்களில் போராடுவதற்காகச் சேமித்து வைக்க நான் விரும்பினேன். 'தலைப்பாகையை வைத்துக்கொண்டுதான் இருப்பேன்' என்பதை வற்புறுத்துவதில் என்னுடைய ஆற்றலை யெல்லாம் நான் செலவிட்டுவிடக்கூடாது. அது சிறந்த லட்சி யத்திற்காகப் பாடுபடுவதற்கு உரியதாகும்.

நான் பணிந்துவிட்டது (அல்லது என் பலவீனமோ என்னவோ?) சேத் அப்துல்லாவுக்கும் மற்ற நண்பர்களுக்கும் பிடிக்கவில்லை. கோர்ட்டில், வக்கீல் தொழிலை நடத்திவரும் போது என் தலைப்பாகையை வைத்துக்கொள்ள எனக்குள்ள உரிமையை விடாமல் நான் வற்புறுத்தியிருக்க வேண்டும் என்று அவர்கள் கருதினர். என் நியாயத்தை எடுத்துக் கூறி அவர் களுக்குத் திருப்தியளிக்க முயன்றேன். 'ரோமில் இருக்கும் போது ரோமர்கள் செய்வதைப் போலவே நீயும் செய்' என்ற பழ மொழியின் உண்மையை அவர்கள் உணரும்படி செய்ய முயன் றேன். ''இந்தியாவில் ஓர் ஆங்கில அதிகாரியோ, நீதிபதியோ உங்கள் தலைப்பாகையை எடுத்துவிடுமாறு சொன்னால், அதற்கு உடன்பட மறுத்து விடுவது சரியானதாக இருக்கும். ஆனால், நேட்டால் மாகாணத்தில் கோர்ட்டில் இருக்கும் ஒரு வழக்கத்தை அந்தக் கோர்ட்டில் தொழில் செய்யும் நான் மதிக்க மறுப்பது நேர்மையானதல்ல'' என்றும் சொன்னேன்.

இவ்வாறும், இதுபோன்ற வாதங்களினாலும் நண்பர்களை ஒருவாறு சமாதானப்படுத்தினேன். ஆனால், வெவ்வேறான விஷ யங்களை வெவ்வேறான நோக்குடன் கவனித்து முடிவுசெய்ய வேண்டும் என்ற கொள்கையை, இக்காரியத்திலும் அனுசரிப்பது என்பதில் அவர்களுக்கு நான் திருப்தி உண்டாக்கிவிட்டதாகக் கருதவில்லை. எனினும், சத்தியத்தை நான் விடாப்பிடியாகப் பின்பற்றியதால், சமரசத்திலுள்ள அழகை என் வாழ்நாள் முழுவ திலுமே உணரும் சக்தியை அது எனக்கு அளித்துவிட்டது. இந்தச் சமரச உணர்ச்சி, சத்தியாக்கிரகத்தில் ஓர் அத்தியா வசியமான பகுதி என்பதை என் வாழ்க்கையில் நான் பின்னால் கண்டேன். இதனால் அடிக்கடி என் உயிருக்கே ஆபத்தைத் தேடிக்கொள்ளவும், நண்பர்களின் வருத்தத்திற்கு ஆளாகவும் நேர்ந்திருக்கிறது. ஆனால், சத்தியமானது பூத்த மலர்போல் மென்மையானதே ஆயினும், கல்போல் கடினமானதும் ஆகும்.

# 19

# நேட்டால் இந்தியர் காங்கிரஸ்

வக்கீல் தொழில் எனக்கு இரண்டாம் பட்சமான வேலை யாக இருந்து வந்தது. நேட்டாலில் நான் தங்கியது நியாயம் என்ருல், பொதுஜன வேலையில் நான் அதிகக் கவனஞ் செலுத்து வது அவசியம். வாக்குரிமையைப் பறிக்கும் மசோதா சம்பந்த மாக மகஜரை அனுப்பியது மாத்திரம் போதாது. குடியேற்ற நாட்டு மந்திரி, இதில் கவனஞ் செலுத்தும்படி செய்வதற்கு இடைவிடாது கிளர்ச்சி செய்துகொண்டிருப்பதும் அத்தியா வசியம் ஆகும். இக்காரியத்திற்காக ஒரு நிரந்தரமான ஸ்தாபனம் இருப்பது முக்கியம் என்று கருதினேன். சேத் அப்துல்லாவையும் மற்ற நண்பர்களையும் கலந்து ஆலோசித்தேன். நிரந்தரமான ஒரு பொது ஸ்தாபனத்தை ஆரம்பிப்பது என்று நாங்கள் எல் லோரும் முடிவுக்கு வந்தோம்.

இந்தப் புதிய ஸ்தாபனத்திற்கு என்ன பெயர் கொடுப்பது என்பது சதா என் மனத்தை அலட்டிவந்தது. எந்த ஒரு குறிப் பிட்ட கட்சிச் சார்பும் உள்ளதாக இது இருக்கக்கூடாது. ‘காங் கிரஸ்’ என்ற பெயர், இங்கிலாந்தில் இருக்கும் கன்ஸர்வேடிவ் களுக்கு வெறுப்பானதாக இருந்தது என்பதை அறிவேன். என்ருலும், இந்தியாவுக்கு ஜீவனை இருப்பதே காங்கிரஸ்தான். நேட்டாலில் அப்பெயரைப் பிரபலப்படுத்த விரும்பினேன். அப் பெயரை வைக்கத் தயங்குவது கோழைத்தனம் என்று எனக் குத் தோன்றிற்று. ஆகையால், அந்த ஸ்தாபனத்திற்கும், ‘நேட் டால் இந்தியர் காங்கிரஸ்’ எனப் பெயரிட வேண்டும் என்று விரிவான விளக்கத்துடன் நான் சிபார்சு செய்தேன். மே மாதம் 22-ஆம் தேதி, நேட்டால் இந்தியர் காங்கிரஸ் பிறந்தது.*

சேத் அப்துல்லாவின் விசாலமான அறை முழுவதிலும் அன்று ஒரே கூட்டம் நிறைந்துவிட்டது. வந்திருந்தவர்கள் எல்லோரும் காங்கிரஸைக் குதூகலமாக வரவேற்றனர். அதன் அமைப்பு விதி எளிதானது ; சந்தா மாத்திரம் அதிகம். மாதம் ஐந்து ஷில்லிங் கொடுப்பவர் மாத்திரமே அங்கத்தினராகலாம். பண வசதியுள்ளவர்கள், தங்களால் இயன்ற வரையில் தாராள

---

* நேட்டால் இந்தியர் காங்கிரஸின் அமைப்பு விதிகள் முதலியவைகளை காந்திஜியே தமது கைப்பட எழுதித் தயாரித்தார். அந்தக் கையெழுத்துப் பிரதி இன்றும் பத்திரமாக இருக்கிறது. 1895 ஆகஸ்டில் நேட்டால் இந்தியர் காங்கிரஸின் முதலாண்டு அறிக்கையை காந்திஜி தயாரித்தார். இதனுடைய காந்திஜியின் கையெழுத்துப் பிரதி இப்பொழுது, சாபர்மதி சங்கிரகாலயத்தில் இருக்கிறது. இந்த இரண்டிலும் கண்ட விவரங்கள் இந்நூலின் பின்சேர்க்கைப் பகுதியில் கொடுக்கப்பட் டிருக்கின்றன. இவற்றிலிருந்து, அறிக்கையைத் தயாரிப்பதில் மகாத்மா அந்தக் காலத்திலேயே எவ்வளவு நுட்பமாகக் கவனஞ் செலுத்தி யிருக்கிருர் என்பது நன்கு விளங்கும்.

மாகக் கொடுக்கும்படி கேட்டுக்கொள்ளப்பட்டனர். மாதம் இரண்டு பவுன் தருவதாக அப்துல்லா சேத் முதலில் கையெழுத்திட்டார். மற்றும் இரு நண்பர்களும் அதேபோல் கையெழுத்திட்டனர். நானும் என் சந்தா விஷயத்தில் பிசினாரியாக இருக்கக் கூடாது என்று நினைத்து, மாதத்திற்கு ஒரு பவுன் என்று எழுதினேன். என்னைப் பொறுத்தவரை இது சின்னத்தொகை அல்ல. நான் சம்பாதித்து, என் வாழ்க்கையை நடத்திக்கொண்டு போவதெனில், இத் தொகை என் சக்திக்கு மிஞ்சியதன்று என்று எண்ணினேன். கடவுளும் எனக்கு உதவி செய்தார். மாதம் ஒரு பவுன் சந்தா செலுத்தும் உறுப்பினர்கள் பலர் சேர்ந்தனர். மாதம் 10 ஷில்லிங் தருவதாக முன்வந்தவர்களின் தொகையோ இன்னும் அதிகம். இவையெல்லாம் போக நன்கொடையாகக் கொடுக்கப்பட்டதையும் நன்றியுடன் ஏற்றுக்கொண்டோம்.

கேட்ட மாத்திரத்திலேயே யாரும் சந்தாவைச் செலுத்தி விடுவதில்லை என்பது அனுபவத்தில் தெரியலாயிற்று. டர்பனுக்கு வெளியிலிருந்த உறுப்பினர்களிடம் அடிக்கடி போய்க் கேட்பது என்பதும் முடியாதது. ஒரு சமயம் இருக்கும் உற்சாகம் இன்னுமொரு சமயம் இருப்பதில்லை. டர்பனில் இருந்த உறுப்பினர்களிடம்கூடப் பன்முறை விடாமல் கேட்டுத் தொந்தரவு செய்து தான் சந்தா வசூலிக்கவேண்டியிருந்தது.

நானே காரியதரிசி யாகையால், சந்தா வசூலிக்கும் வேலை என்னுடையதாயிற்று. என் குமாஸ்தா, நாளெல்லாம் சந்தா வசூலிக்கும் வேலையிலேயே ஈடுபட்டிருக்க வேண்டிய ஒரு நிலைமை ஏற்பட்டுவிட்டது. அவரும் அலுத்துப் போனார். இந்த நிலைமை மாறவேண்டுமானால், மாதச் சந்தா என்பதற்குப் பதிலாக அதை வருடச் சந்தா வாக்கி, அந்தச் சந்தாவைக் கண்டிப்பாக முன் பணமாகச் செலுத்திவிடச் செய்துவிட வேண்டும் என்று கருதினேன். ஆகவே காங்கிரஸின் கூட்டத்தைக் கூட்டினேன். மாதச் சந்தா என்பதற்குப் பதிலாக, அதை வருடச் சந்தாவாகச் செய்துவிடுவது என்பதையும், குறைந்த பட்ச சந்தா 3 பவுன் என்று நிர்ணயிப்பதையும் எல்லோரும் வரவேற்றனர். இவ்விதம் வசூல் வேலை அதிக எளிதாயிற்று.

கடன் வாங்கி, அந்தப் பணத்தைக் கொண்டு பொது வேலையைச் செய்யக்கூடாது என்பதை ஆரம்பத்திலேயே அறிந்துகொண்டிருந்தேன். மக்களின் வாக்குறுதியை எல்லாவற்றிலும் நம்பலாம்; ஆனால், பண விஷயத்தில் மாத்திரம் நம்பக்கூடாது. கொடுப்பதாகத் தாங்கள் ஒப்புக்கொண்ட பணத்தைச் சீக்கிரத்தில் கொடுக்கக் கூடியவர்களை நான் பார்த்ததே இல்லை. நேட்டால் இந்தியர்களும் இதற்கு விலக்கானவர்கள் அல்ல. எனவே, பணம் இருந்தால் ஒழிய எந்த வேலையையும் செய்வதில்லை யாகையால், நேட்டால் இந்தியர் காங்கிரஸ் கடன் பட்டதே இல்லை.

அங்கத்தினர்களைச் சேர்ப்பதில் என் சக ஊழியர்கள் அதிக உற்சாகத்துடன் வேலை செய்தார்கள். அந்த வேலை அவர்களுடைய மனத்திற்குப் பிடித்ததாக இருந்ததோடு, அது அதிகப் பயனுள்ள அனுபவமாகவும் இருந்தது. ஏராளமானவர்கள் ரொக்கமாகச் சந்தா கொடுத்துச் சேர முன்வந்தனர். தொலைவாக, உள்நாட்டில் இருந்த கிராமங்களின் விஷயத்தில்தான் வேலை கஷ்டமானதாக இருந்தது. பொது வேலையின் தன்மையை மக்கள் அறியவில்லை. என்றாலும், தொலை தூரங்களில் இருந்த இடங்களிலிருந்தும் எங்களுக்கு அழைப்புக்கள் வந்தன. ஒவ்வோர் இடத்திலும் முக்கியமான வியாபாரிகள் எங்களை வரவேற்று, வேண்டிய உதவிகளைச் செய்ய முன்வந்தார்கள்.

இந்தச் சுற்றுப் பிரயாணத்தின்போது ஒரு சமயம் நிலைமை சங்கடமான தாகிவிட்டது. நாங்கள் யாருடைய விருந்தினராகச் சென்றிருந்தோமோ, அவர் ஆறு பவுன் கொடுப்பார் என்று எதிர் பார்த்தோம். ஆனால், அவரோ மூன்று பவுனுக்கு மேல் எதுவும் கொடுக்க மறுத்துவிட்டார். அவரிடமிருந்து அத்தொகையை வாங்கிக்கொண்டோமாயின் மற்றவர்களும் அது மாதிரியே கொடுப்பார்கள். எங்கள் வசூல் கெட்டுவிடும். அன்று இரவு வெகுநேரம் ஆகிவிட்டது. எங்களுக்கோ பசி. ஆனால், 'அவரிடம் வாங்கியே தீருவது' என்று நாங்கள் முடிவு கட்டிக்கொண்ட தொகையை அவரிடம் வாங்காமல் அவர் வீட்டில் நாங்கள் எப்படிச் சாப்பிடுவது? என்ன சொல்லிப் பார்த்தும் பயனில்லை. அவரோ பிடிவாதமாக இருந்தார். அவ்வூரின் மற்ற வர்த்தகர்களும் அவருக்குச் சொல்லிப் பார்த்தார்கள். இரவெல்லாம் அப்படியே எல்லோரும் உட்கார்ந்திருந்தோம். அவரும் பிடிவாதமாக இருந்தார். நாங்களும் பிடிவாதமாக இருந்தோம். என் சக ஊழியர்களில் பலருக்குக் கோபம் பொங்கிற்று. ஆனால், அடக்கிக்கொண்டார்கள். கடைசியாகப் பொழுதும் விடிந்துவிட்ட பிறகு அவர் இணங்கி வந்தார். ஆறு பவுன் கொடுத்து, எங்களுக்கு விருந்துச் சாப்பாடும் போட்டார். இது தோங்காத் என்ற ஊரில் நடந்தது. ஆனால், இச் சம்பவத்தின் அதிர்ச்சி, வடக்கில், கடலோரம் இருக்கும் ஸ்டான்கர் வரையிலும், மத்தியப் பகுதியில் இருக்கும் சார்லஸ் டவுன் வரையிலும் பரவிவிட்டது. அது எங்கள் வசூல் வேலை துரிதமாக முடியும்படியும் செய்தது.

ஆனால், செய்ய வேண்டிய வேலை, நிதி வசூல் செய்வது மாத்திரம் அன்று. உண்மையில், அவசியமானதற்கு மேல் பணம் இருக்கக்கூடாது என்ற கொள்கையை வெகு காலத்திற்கு முன்னாலிருந்தே நான் கற்றுக்கொண் டிருந்தேன்.

கூட்டங்கள் மாதம் ஒரு முறை நடக்கும். அவசியமானால், வாரத்திற்கு ஒரு முறையும் நடப்பது உண்டு. முந்திய கூட்டத்தின் நிகழ்ச்சிகள் அடுத்த கூட்டத்தில் படிக்கப்படும். பல விஷயங்களும் விவாதிக்கப்படும். பொது விவாதங்களில்

பங்கெடுத்துக் கொள்ளுவதிலும் விஷயத்தை ஒட்டிச் சுருக்கமாகப் பேசுவதிலும் மக்களுக்கு அனுபவமே இல்லை. எழுந்து பேச ஒவ்வொருவரும் தயங்கினர். கூட்டங்களின் நடைமுறை விதிகளை அவர்களுக்கு விளக்கிச் சொன்னேன். அவற்றை மதித்து, அவர்களும் நடந்துகொண்டார்கள். அது தங்களுக்கு ஒரு படிப்பு என்பதை உணர்ந்தார்கள். ஒரு கூட்டத்திலும் இதற்கு முன்னால் பேசியே பழக்கம் இல்லாதவர்கள், சந்தித்துப் பொது விஷயங்களைக் குறித்து பகிரங்கமாகப் பேசவும் பழகிக் கொண்டனர்.

பொதுவேலைகளில், சில்லறைச் செலவே சமயத்தில் பெருஞ் செலவாகிவிடும் என்பதை அறிவேன். ஆகையால், ஆரம்பத்தில் ரசீதுப் புத்தகங்களைக்கூட அச்சிடுவதில்லை என்று முடிவு செய்திருந்தேன். என் காரியாலயத்தில் பிரதிகள் எடுக்கும் சைக்ளோஸ்டைல் யந்திரம் ஒன்று இருந்தது. அதிலேயே ரசீதுகளுக்கும் அறிக்கைகளுக்கும் பிரதிகளைத் தயாரித்துக் கொண்டேன். காங்கிரஸினிடம் நிதி அதிகம் இருந்து, அங்கத்தினர்களும் அதிகமாகி, வேலையும் பெருகிய பிறகே அவைகளையெல்லாம் அச்சிட ஆரம்பித்தேன். ஒவ்வொரு ஸ்தாபனத்திற்கும் இத்தகைய சிக்கனம் அவசியம். என்றாலும், அதுதான் அனுசரிக்கப்படுவதில்லை என்பதையும் அறிவேன். இதனாலேயே, சிறிய, ஆனால் வளர்ந்து வருகிற, ஒரு ஸ்தாபனத்தின் விஷயத்தில் ஆரம்பத்தில் இந்தச் சிறு விவரங்களையெல்லாம் கவனிப்பதே சரி என்று எண்ணினேன்.

தாங்கள் கொடுக்கும் பணத்திற்கு ரசீது பெற வேண்டும் என்பதைக் குறித்து மக்கள் கவலைப்படுவதே இல்லை. ஆனால், நாங்கள் வற்புறுத்தி ரசீதுகளைக் கொடுத்து வந்தோம். இவ்விதம் 'ஒவ்வொரு தம்படிக்கும்' சரியாகக் கணக்கு வைக்கப்பட்டது. 1894-ஆம் வருடக் கணக்குப் புத்தகங்களை இன்றுகூட நேட்டால் இந்தியர் காங்கிரஸ் தஸ்தாவேஜுகளில் காணலாம் என்று நான் தைரியமாகக் கூற முடியும். கணக்குகளைச் சரியாக வைத்திருக்க வேண்டியது எந்த ஸ்தாபனத்திற்குமே அத்தியாவசியமானதாகும். இல்லையானல் அந்த ஸ்தாபனத்திற்குக் கெட்ட பெயர் ஏற்பட்டுவிடும். சரியானபடி கணக்கு வைத்திருக்காவிட்டால், உண்மையை அதனுடைய அசல் தூய்மையுடன் வைத்திருப்பதென்பது இயலாத காரியம்.

காங்கிரஸின் மற்றோர் அம்சம், தென்னாப்பிரிக்காவிலேயே பிறந்தவர்களான, படித்த இந்திய இளைஞர்களின் சேவையாகும். அங்கே பிறந்த இந்தியரின் கல்விச் சங்கம் ஒன்று, காங்கிரஸின் ஆதரவில் அமைக்கப்பெற்றது. இந்தப் படித்த இளைஞர்களே பெரும்பாலும் அச் சங்கத்தின் அங்கத்தினர்கள். பெயருக்கு அவர்கள் ஒரு தொகையைச் சந்தாவாகச் செலுத்த வேண்டும். அவர்களுடைய தேவைகளையும் குறைகளையும் எடுத்துக் கூறுவதற்கும், அவர்களிடையே புதிய எண்ணங்களை எழுப்புவதற்கும்,

இந்திய வர்த்தகர்களுடன் அவர்களுக்குத் தொடர்பை உண்டாக்கிச் சமூகத்திற்குச் சேவை செய்யும் வாய்ப்பை அவர்களுக்கு அளிப்பதற்கும் இச் சங்கம் பயன்பட்டது. அது ஒரு வகையான விவாத சபை போன்றது. அங்கத்தினர்கள் அடிக்கடி கூடுவார்கள். பல விஷயங்களைக் குறித்துப் பேசுவார்கள்; எழுதியும் படிப்பார்கள். இச் சங்க சம்பந்தமாக ஒரு சிறு புத்தகசாலையும் ஆரம்பமாயிற்று.

காங்கிரஸின் மூன்ருவது அம்சம், பிரசாரம். நேட்டாலில் இருந்துவரும் இந்தியர் சம்பந்தமான உண்மையான நிலையைத் தென்னுப்பிரிக்காவில் இருக்கும் ஆங்கிலேயரும், இங்கிலாந்தில் இருப்பவரும், இந்திய மக்களும் அறியும்படி செய்வதே இக் காரியம். அந்த நோக்கத்தின் பேரில் நான் இரு துண்டுப்பிரசுரங்களை எழுதினேன். அவற்றுள் ஒன்று, 'தென்னுப்பிரிக்காவில் இருக்கும் ஒவ்வொரு பிரிட்டானியருக்கும் வேண்டுகோள்' என்பது. அது, நேட்டால் இந்தியரின் பொதுவான நிலைமையை ஆதாரங்களுடன் கூறுவதாகும். மற்ருெரு பிரசுரம், 'இந்தியரின் வாக்குரிமை-ஒரு கோரிக்கை' என்ற தலைப்புடையது. நேட்டால் இந்தியரின் வாக்குரிமையைப்பற்றிய சரித்திரம், உண்மை விவரங்களுடனும் புள்ளி விவரங்களுடனும் அதில் சுருக்கமாகக் கூறப்பட்டது. இந்தத் துண்டுப் பிரசுரங்களைத் தயாரிப்பதற்கு நான் அதிகம் படிக்கவேண்டி யிருந்ததோடு அதிகச் சிரமம் எடுத்துக் கொள்ளவும் வேண்டிய தாயிற்று. ஆனல், இதில் உழைப்பிற்கு ஏற்ற பலன் கிடைத்தது. அவைகளை எல்லா இடங்களுக்கும் அனுப்பினேம்.

இத்தகைய நடவடிக்கைகளின் பயனுகத் தென்னுப்பிரிக்காவில் இந்தியருக்கு ஏராளமானவர்கள் நண்பர்கள் ஆயினர். இந்தியாவில் இருந்த எல்லாக் கட்சியினரின் தீவிரமான அனுதாபமும் கிடைத்தது. அத்துடன் தென்னுப்பிரிக்க இந்தியர், திட்டமான நடவடிக்கையில் இறங்குவதற்கு ஒரு வழியும் ஏற்பட்டு, வேலைத் திட்டமும் உருவாயிற்று.

# 20

# பாலசுந்தரம்

மனப்பூர்வமாகக் கொள்ளும் புனிதமான ஆசை எதுவும் நிறைவேறி விடுகிறது. இந்த விதி உண்மையானது என்பதை என் சொந்த அனுபவத்தில் நான் அடிக்கடி கண்டிருக்கிறேன். ஏழைகளுக்குச் சேவை செய்ய வேண்டும் என்பதே என் உள்ளத்தின் அத்தியந்த ஆசை. அந்த ஆசை, என்னை எப்பொழுதும் ஏழைகளின் நடுவில் கொண்டுபோய்ச் சேர்த்தது. அதனல், அவர்களில் ஒருவனுக என்னை ஆக்கிக்கொள்ளவும் முடிந்தது.

தென்னுப்பிரிக்காவிலேயே பிறந்த இந்தியரும் குமாஸ்தாக்கள் வகுப்பினரும், நேட்டால் இந்தியர் காங்கிரஸில் அங்கத்தினர்களாக இருந்தபோதிலும் நுட்பப் பயிற்சிபெருதவர்களான சாதாரணத் தொழிலாளரும், ஒப்பந்தத் தொழிலாளரும் அதில் இன்னும் இடம் பெருமலேயே இருந்துவந்தனர். சந்தா கொடுத்துச் சேர்ந்து, அதன் அங்கத்தினர்கள் ஆகிவிட அவர்களால் இயலாது. அவர்களுக்குச் சேவை செய்வதன் மூலமே, காங்கிரஸ் அவர்களுடைய அன்பைப் பெற முடியும். அதற்கு நானே, காங்கிரஸோ தயாராக இல்லாத தருணத்தில் அதற்கான வாய்ப்பு, தானே வந்து சேர்ந்தது. நான் வக்கீல் தொழிலை நடத்த ஆரம்பித்து மூன்று, நான்கு மாதங்கள்கூட ஆகவில்லை. காங்கிரஸும் இன்னும் அதன் குழந்தைப் பருவத்தில்தான் இருந்தது. அப்பொழுது ஒரு தமிழர், கந்தை அணிந்து, முண்டாசுத் துணியைக் கையில் வைத்துக்கொண்டு, முன்னம் பற்கள் இரண்டும் உடைந்துபோய், ரத்தம் வழியும் கோலத்தில் நடுங்கிக்கொண்டும் அழுதுகொண்டும் என் முன்னே வந்து நின்ருர். அவர், தம்முடைய எஜமானல் கடுமையாக அடிக்கப்பட்டிருந்தார். என் குமாஸ்தா ஒரு தமிழர். அவர் மூலம் எல்லா விவரங்களையும் கேட்டுத் தெரிந்துகொண்டேன். வந்தவரின் பெயர் பாலசுந்தரம். டர்பனில் குடியிருப்பவரான ஒரு பிரபலமான ஐரோப்பியரின் கீழ் அவர் ஒப்பந்தத் தொழிலாளியாக வேலை செய்துவந்தார். அவருடைய எஜமான் அவர்மீது கோபம் கொண்டார். அத்துமீறிப்போய், பாலசுந்தரத்தைப் பலமாக அடித்து, அவருடைய முன்னம் பற்கள் இரண்டை உடைத்துவிட்டார்.

அவரை ஒரு டாக்டரிடம் அனுப்பினேன். அந்த நாளில் வெள்ளைக்கார டாக்டர்களே உண்டு. பாலசுந்தரத்திற்கு ஏற்பட்டிருக்கும் காயங்களின் தன்மையைக் குறித்து, டாக்டரிடமிருந்து ஓர் அத்தாட்சி வேண்டுமென்று கேட்டேன்; அத்தாட்சியைப் பெற்றேன். காயமடைந்தவரை நேரே மாஜிஸ்டிரேட்டிடம் அழைத்துச் சென்றேன். அவரிடம் பாலசுந்தரத்தின் பிரமாண வாக்குமூலத்தைச் சமர்ப்பித்தேன். அதைப் படித்ததும் மாஜிஸ்டிரேட் எரிச்சலுற்ருர். எஜமானுக்குச் சம்மன் அனுப்பினர்.

அந்த எஜமான் தண்டிக்கப்பட வேண்டும் என்பதன்று என் விருப்பம். அவரிடமிருந்து பாலசுந்தரம் விடுதலை பெற வேண்டும் என்றே நான் விரும்பினேன், ஒப்பந்தத் தொழிலாளரைப் பற்றிய சட்டங்களைப் படித்தேன். சாதாரண வேலைக்காரன் ஒருவன் முன்கூட்டி அறிவிக்காமல் வேலையை விட்டுப் போய் விடுவானுயின், எஜமான் அவன்மீது சிவில் கோர்ட்டில் வழக்குத் தொடரலாம். ஆனல், ஒப்பந்தத் தொழிலாளியின் விஷயத்திலோ இம் முறை முற்றும் மாருனது. அதேபோன்ற நிலையில் முன்கூட்டி அறிவிக்காமல் ஓர் ஒப்பந்தத் தொழிலாளி போய்விட்டால், எஜமான் அத் தொழிலாளிமீது கிரிமினல்

கோர்ட்டில் வழக்குத் தொடுத்துத் தண்டித்துச் சிறையில் இட லாம். இதனாலேயே இந்த ஒப்பந்த முறை, அடிமைத்தனத்தைப் போல் மிக மோசமானது என்று, ஸர் வில்லியம் ஹன்டர் கூறினார். ஓர் அடிமையைப் போன்றே ஒப்பந்தக் கூலியும் எஜமானின் சொத்து.

பாலசுந்தரத்தை விடுவிப்பதற்கு இருந்த வழிகள் இரண்டு தான். ஒப்பந்தத் தொழிலாளரின் பாதுகாப்பாளரைக் கொண்டு, பாலசுந்தரத்தின் ஒப்பந்தத்தை ரத்துச் செய்யும்படி செய்ய லாம். அல்லது, வேறு ஓர் எஜமானிடம் அவரை மாற்றிவிடச் செய்யலாம். இல்லையாயின் பாலசுந்தரத்தின் எஜமான் அவரை விடுவித்துவிடுமாறு செய்யலாம். அந்த எஜமானிடம் சென்று, பின்வருமாறு கூறினேன்: "உங்கள் மீது வழக்குத் தொடுத்து, நீங்கள் தண்டனை அடைய வேண்டும் என்று நான் விரும்பவில்லை. அவரைப் பலமாக அடித்துவிட்டீர்கள் என்பதை நீங்கள் உணரு கிறீர்கள் என்றே நம்புகிறேன். அவருடைய ஒப்பந்தத்தை மற்றொருவருக்கு நீங்கள் மாற்றி விடுவீர்களாயின் நான் திருப்தி யடைவேன்." இதற்கு அவர் உடனே சம்மதித்துவிட்டார். பிறகு ஒப்பந்தத் தொழிலாளரின் பாதுகாப்பாளரைப் போய்ப் பார்த் தேன். புதிய எஜமான் ஒருவரை நான் கண்டுபிடிப்பதாக இருந் தால் அதற்குத் தாமும் சம்மதிப்பதாக அவர் கூறினார்.

எனவே, ஓர் எஜமானைத் தேடிப் புறப்பட்டேன். ஒப்பந்தத் தொழிலாளியை இந்தியர் யாரும் வேலைக்கு வைத்துக்கொள்ளக் கூடாதாகையால், நான் தேடும் எஜமான் வெள்ளைக்காரராகவே இருக்க வேண்டும். அப்பொழுது எனக்கு மிகச் சில ஐரோப் பியர்களையே தெரியும். அவர்களில் ஒருவரைச் சந்தித்தேன். பாலசுந்தரத்தை வைத்துக்கொள்ள அவர் மிக அன்புடன் ஒப்புக் கொண்டார். அவருடைய அன்பை நன்றியறிதலோடு ஏற்றுக் கொண்டேன். பாலசுந்தரத்தின் எஜமான் குற்றஞ் செய்திருப்ப தாக மாஜிஸ்டிரேட் முடிவு கூறினார். ஒப்பந்தத்தை வேறு ஒருவ ருக்கு மாற்றிவிட அவர் ஒப்புக்கொண் டிருக்கிறார் என்றும் பதிவு செய்தார்.

பாலசுந்தரத்தின் வழக்கு, ஒப்பந்தத் தொழிலாளர் ஒவ் வொருவருடைய காதுக்கும் எட்டிவிட்டது. அவர்கள் என்னைத் தங்களுடைய நண்பனாகக் கருதினார்கள். இந்தத் தொடர்பைக் குறித்து, நான் அளவற்ற மகிழ்ச்சி யடைந்தேன். ஒப்பந்தத் தொழிலாளர்கள், ஓயாமல் என் காரியாலயத்திற்கு வந்த வண் ணம் இருந்தனர். அவர்களுடைய இன்ப துன்பங்களை அறிந்து கொள்ளுவதற்கு எனக்குச் சிறந்த வாய்ப்பு அதனால் ஏற்பட்டது.

பாலசுந்தரம் வழக்கின் எதிரொலி, தொலை தூரத்தில் இருக்கும் சென்னையிலும் கேட்டது. அம் மாகாணத்தின் பல பகுதிகளில் இருந்தும் ஒப்பந்தத் தொழிலாளராக நேட்டாலுக்கு வந்திருந்தவர்கள், தங்கள் சகோதரத் தொழிலாளர்களின் மூலம் இவ் வழக்கைக் குறித்து அறியலாயினர்.

அவ் வழக்கைப் பொறுத்தவரையில் அதில் அதிக விசேஷ மானது எதுவும் இல்லை. ஆனால், தங்கள் கட்சியை எடுத்துப் பேசுவதற்கும், தங்களுக்காகப் பகிரங்கமாக வேலை செய்வதற்கும் நேட்டாலில் ஒருவர் இருக்கிறார் என்பது, ஒப்பந்தத் தொழிலாள ருக்கு ஆனந்தத்தோடு கூடிய அதிசயமாக இருந்ததோடு, அத னால் அவர்களுக்கு ஒரு நம்பிக்கையும் உண்டாயிற்று.

முண்டாசுத் துணியைக் கையில் வைத்துக்கொண்டு, பால சுந்தரம் என் காரியாலயத்திற்குள் வந்தார் என்று ஆரம்பத்தில் கூறினேன். இதில் நமது மானக்கேட்டைக் காட்டும் துக்ககர மான அம்சம் ஒன்று இருக்கிறது. என் தலைப்பாகையை எடுத்துவிடும்படி கூறப்பட்டதைக் குறித்த சம்பவத்தை முன்பே விவரித்திருக்கிறேன். தலையில் வைத்திருப்பது குல்லாயாக இருந்தாலும், தலைப்பாகையாக இருந்தாலும், தலையில் சுற்றிய ஒரு துண்டாக இருந்தாலும், ஓர் ஐரோப்பியரைப் பார்க்கப் போகும்போது, ஒவ்வோர் ஒப்பந்தத் தொழிலாளியும், புதிதாக வந்த ஒவ்வோர் இந்தியரும், அதைத் தலையிலிருந்து எடுத்தாக வேண்டும்; இரண்டு கைகளால் சலாம் போட்டாலும் போதாது. இந்தப் பழக்கம் நிர்ப்பந்தமாகச் சுமத்தப்பட்டு வந்திருக் கிறது. என் விஷயத்திலும் அதே பழக்கத்தை அனு சரிக்க வேண்டும் என்று பாலசுந்தரம் கருதியிருக்கிறார். அதனாலேயே முண்டாசுத் துணியைக் கையில் எடுத்து வைத்துக் கொண்டு என்னிடம் வந்தார். என் அனுபவத்தில் இவ்விதம் நிகழ்ந்தது இதுவே முதல் தடவை. அவமானத்தினால் என் மனம் குன்றியது. தலையில் முண்டாசைக் கட்டும்படி அவரிடம் கூறினேன். கொஞ்சம் தயங்கிக்கொண்டே அவர் கட்டினார். என்றாலும், அவருக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியை அவர் முகத்தில் நான் காண முடிந்தது.

மனிதர்கள் தங்களுடைய சகோதர மனிதர்களை அவமானப் படுத்துவதன் மூலம் தாங்கள் கௌரவிக்கப்படுவதாக எப்படி நினைக்கிறார்கள் என்பது, எனக்கு என்றுமே புரியாத மர்மமாக இருந்துவருகிறது.

# 21

# மூன்று பவுன் வரி

பாலசுந்தரத்தின் வழக்கினால் ஒப்பந்தத் தொழிலாளருடன் எனக்குத் தொடர்பு ஏற்பட்ட தானாலும், அவர்களுடைய நிலை மையைக் குறித்து ஆழ்ந்து ஆராயும்படி என்னைத் தூண்டியது, கடுமையான விசேஷ வரியை அவர்கள்மீது சுமத்துவதற்குச் செய்யப்பட்ட முயற்சியே யாகும்.

அதே 1894-ஆம் ஆண்டில் நேட்டால் அரசாங்கம் இந்திய ஒப்பந்தத் தொழிலாளருக்கு ஆண்டுக்கு 25 பவுன் வரி விதிக்க முற்பட்டது. இந்த யோசனையைக் கேட்டுத் திகைப்புற்றேன். இவ் விஷயத்தைக் குறித்து விவாதிக்க, இதைக் காங்கிரஸின் முன் கொண்டுவந்தேன். அவசியமான எதிர்ப்புக்கு ஏற்பாடு செய்வதென்று உடனே காங்கிரஸ் தீர்மானித்தது.

இந்த வரியின் பூர்வோத்தரத்தைக் குறித்தும் சுருக்கமாக முதலில் நான் விளக்க வேண்டும். 1860-ஆம் ஆண்டு வாக்கில் நேட்டாலில் இருந்த ஐரோப்பியர்கள், அங்கே கரும்பு சாகுபடிக்கு நல்ல வாய்ப்பு இருக்கிறது என்று கண்டனர். இதற்குத் தொழிலாளர் தேவை என்றும் உணர்ந்தார்கள். இத்தகைய வேலைக்கு நேட்டால் ஜுலுக்கள் பயன்படமாட்டார்கள். கரும்புச் சாகுபடிக்கும், சர்க்கரை தயாரிப்பதற்கும் வெளியில் இருந்து தொழிலாளரைக் கொண்டுவந்தாலன்றிச் சாத்திய மில்லை. அதன்பேரில் நேட்டால் அரசாங்கத்திற்கும் இந்திய அரசாங்கத்திற்கும் கடிதப் போக்குவரத்து நடந்தது. இந்தியத் தொழிலாளரைத் திரட்டிக்கொண்டு வர, நேட்டால் அரசாங்கம் அனுமதி பெற்றது. இவ்விதம் திரட்டப்படும் தொழிலாளர்கள், நேட்டாலில் ஐந்து ஆண்டுகள் வேலை செய்வதாக ஒப்பந்தத்தில் கையெழுத்திட வேண்டும். இந்த ஐந்து வருட காலம் முடிந்ததும் அங்கேயே குடியேறிவிடலாம். முழு உரிமையுடன் அவர்கள் நிலத்தையும் வைத்துக்கொள்ளலாம். அவர்களுக்கு இவ்விதமெல்லாம் ஆசை காட்டப்பட்டது. ஏனெனில், இத் தொழிலாளரின் ஒப்பந்தம் தீர்ந்த பிறகும் இவர்களின் உழைப்பைக் கொண்டே தங்களுடைய விவசாயத் தொழிலை விருத்தி செய்துகொண்டு விடலாம் என்று அப்பொழுது வெள்ளைக்காரர்கள் எண்ணினார்கள்.

இந்தியரோ, அவர்களிடமிருந்து எதிர்பார்க்கப்பட்டதற்கு அதிகமாகவே தென்னாப்பிரிக்காவுக்குப் பயன்பட்டனர். ஏராளமாகக் காய்கறிகளைப் பயிரிட்டார்கள். இந்தியாவிலிருந்து பல ரகக் கறிகாய்களையும் கொண்டு வந்து அங்கே பயிரிட்டனர். அந் நாட்டுக் காய்கறித் தினுசுகளைக் குறைந்த செலவில் பயிரிடுவதையும் சாத்தியமாக்கினர். மாமரத்தையும் அங்கே முதல் முதலில் பயிரிட்டனர். அவர்களுடைய உழைப்பும் முயற்சியும் விவசாயத்தோடு நின்று விடவில்லை. வர்த்தகத்திலும் புகுந்தனர். நிலம் வாங்கி, வீடுகள் கட்டினர். பலர், தொழிலாளர் அந்தஸ்திலிருந்து, நிலத்திற்கும் வீடுகளுக்கும் தாங்கள் சொந்தக்காரர் என்ற நிலைக்கும் உயர்ந்தனர். இவர்களைத் தொடர்ந்து இந்தியாவிலிருந்து வர்த்தகர்களும் அங்கே போய் வியாபாரம் செய்யக் குடியேறினர். இப்படி வந்தவர்களில் முதல் முதலாக வந்தவர் காலஞ்சென்ற சேத் அபூபக்கர் ஆமத். வெகு சீக்கிரத்திலேயே அவர் தமது வர்த்தகத்தைப் பெருக்கிவிட்டார்.

வெள்ளை வர்த்தகர்கள் திகிலடைந்துவிட்டனர். ஆரம்பத்தில் இந்தியத் தொழிலாளர் வேண்டுமென்று விரும்பியபோது, அவர்களுக்கு வர்த்தகத் திறமையும் இருக்கும் என்று அவர்கள் எண்ணவில்லை. சுயேச்சையான விவசாயிகள் என்ற அளவோடு மாத்திரம் இந்தியர்கள் இருந்திருந்தாலும் சகித்துக்கொண்டிருப்பார்கள். ஆனால், வர்த்தகத்திலும் அவர்கள் தங்களுக்குப் போட்டியாக இருப்பதை நினைத்துப் பார்க்கவும் வெள்ளை வர்த்தகருக்குச் சகிக்கவில்லை.

இந்தியர்மீது விரோதத்திற்கு விதை விதைத்தது இதுதான். இது வளருவதற்கு மற்றும் பல விஷயங்களும் உதவியாக இருந்துவிட்டன. நமது மாறுபட்ட வாழ்க்கை முறைகள், நமது எளிய வாழ்க்கை, கொஞ்ச லாபத்தைக் கொண்டு திருப்தியடைந்துவிடும் நம் மனப்பான்மை, சுத்தம் சுகாதாரம் ஆகியவை சம்பந்தமாக நம்மிடம் இருக்கும் அசிரத்தை, நம்மைச் சுற்றி இருப்பவைகளைச் சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டுமென்பதில் நமக்குச் சுறுசுறுப்பு இல்லாமை, வீடுகளைப் பழுதில்லாமல் வைத்திருப்பதில் நமக்கு இருக்கும் கஞ்சத்தனம், இவைகள் எல்லாவற்றுடன் மத வித்தியாசமும் சேர்ந்து விரோதத் தீயை ஊதி வளர்த்தன. இந்த விரோதம், இந்தியரின் வாக்குரிமையை ரத்துச் செய்யும் மசோதாவின் மூலமும், ஒப்பந்த இந்தியருக்கு வரி விதிக்கும் மசோதாவின் மூலமும் சட்ட ரீதியில் வெளிப்பட்டது. சட்டம் இல்லாமலேயே அநேக தொந்தரவுகள் ஏற்கனவே ஆரம்பம் ஆகிவிட்டன.

அத்தொழிலாளரின் ஒப்பந்த காலம் இந்தியாவுக்குப் போன பிறகு முடியக் கூடியவாறு அவர்களைக் கட்டாயமாக இந்தியாவுக்குத் திருப்பி அனுப்பிவிடுவது என்பது முதல் யோசனை. ஆனால், அந்த யோசனையை இந்திய சர்க்கார் ஒப்புக்கொள்ளுவதாக இல்லை. ஆகையால், கீழ்வரும் வகையில் மற்றோர் யோசனை செய்யப்பட்டது :

*1. இந்திய ஒப்பந்தத் தொழிலாளி, ஒப்பந்த காலம் தீர்ந்ததுமே இந்தியாவுக்குத் திரும்பிவிட வேண்டும்.*

*2. அப்படித் திரும்பவில்லை யென்றால், ஒவ்வோர் இரண்டு ஆண்டுகளுக்கும் புதிதாக ஒப்பந்தத்தில் கையெழுத்திட வேண்டும். இவ்விதம் ஒப்பந்தத்தைப் புதுப்பிக்கும் ஒவ்வொரு தடவையிலும் கூலி உயர்வு கொடுக்கப்படும்.*

*3. அப்படியின்றி, இந்தியாவுக்குத் திரும்பிவிடவோ, ஒப்பந்தத்தைப் புதுப்பித்துக்கொள்ளவோ மறுத்தால், அத்தொழிலாளி ஆண்டுக்கு 25 பவுன் வரி செலுத்த வேண்டும்.*

இந்த யோசனைக்கு இந்திய அரசாங்கத்தின் அங்கீகாரத்தைப் பெறுவதற்காக ஸர் ஹென்றி பின்ஸ், ஸ்ரீ மேஸன் ஆகியோர் அடங்கிய ஒரு தூது கோஷ்டியை இந்தியாவுக்கு

அனுப்பினுர்கள். இந்தியாவில் அப்பொழுது லார்டு எல்ஜின்* வைசிராயாக இருந்தார். 25 பவுன் வரி விதிப்ப தென்பதை அவர் அங்கீகரிக்கவில்லே. ஆனல், மூன்று பவுன் தலே வரி விதிப்பது என்பதை அவர் ஒப்புக்கொண்டார். இது வைசிராய் செய்த மோசமான தவறு என்று நான் அப்பொழுது எண்ணினேன்; இன்றும் அப்படியே கருதுகிறேன். தமது அங்கீகாரத்தைக் கொடுத்ததில் அவர் இந்தியாவின் நலன்களேக் குறித்துக் கொஞ்சமும் எண்ணவே இல்லே. நேட்டால் வெள்ளேயருக்கு இவ்விதம் சகாயம் செய்து கொடுக்க வேண்டியது அவருடைய கடமையும் அன்று. மூன்று, நான்கு ஆண்டுகளில் ஒவ்வோர் ஒப்பந்தத் தொழிலாளியும், அவர் மனேவியும், 16 வயதுக்கு மேற்பட்ட ஒவ்வோர் ஆண்மகனும், 13 வயதிற்கு மேற்பட்ட ஒவ்வொரு பெண்ணும் இந்த வரியைச் செலுத்த வேண்டியவர்களாயினர். ஒரு தொழிலாளியின் சராசரி வருமானம் மாதத்திற்கு 14 ஷில்லிங்குக்கு மேல் இல்லே. அப்படியிருக்க, கணவன், மனேவி, இரு குழந்தைகள் ஆகிய நான்கு பேரைக்கொண்ட ஒரு குடும்பத்திற்கு வருடத்திற்கு 12 பவுன் வரி விதிப்பது என்பது அட்டூழியம். இந்த அநியாயத்தை உலகில் வேறு எங்குமே காண முடியாது.

இவ் வரியை எதிர்த்துத் தீவிரமாகக் கிளர்ச்சி செய்தோம். இவ் விஷயத்தில் நேட்டால் இந்தியர் காங்கிரஸ் சும்மா இருந்திருக்குமானல், 25 பவுன் வரியையும் வைசிராய் அங்கீகரித்திருப்பார். இவ்வரி 25 பவுனிலிருந்து 3 பவுனுக்குக் குறைக்கப் பட்டதற்குக் காங்கிரஸ் செய்த கிளர்ச்சி ஒன்றே காரணமாக இருந்திருக்கக்கூடும். ஆனல், நான் அவ்வாறு எண்ணுவது தவருகவும் இருக்கலாம். காங்கிரஸின் எதிர்ப்பைக் கவனிக்காமலேயே இந்திய அரசாங்கம் ஆரம்பம் முதற்கொண்டே 25 பவுன் வரியை ஏற்க மறுத்து, அதை 3 பவுனுக்குக் குறைத்திருக்கவும் கூடும். அது எப்படி இருந்தாலும், இந்திய அரசாங்கத்தைப் பொறுத்த வரையில் இது நம்பிக்கைத் துரோகமாகும். இந்தியாவின் நலனேப் பாதுகாப்பதற்குப் பொறுப்பாளியான வைசிராய், மனிதத் தன்மையே இல்லாததான இந்த வரியை அங்கீகரித்திருக்கவே கூடாது.

அவ் வரி 25 பவுனிலிருந்து 3 பவுனகக் குறைந்ததை, தான் அடைந்த பெரிய வெற்றி என்று காங்கிரஸ் கருதிக்கொள்ளுவதற்கில்லே. இந்திய ஒப்பந்தத் தொழிலாளியின் நலன்களே முற்றும் பாதுகாவாது போனதைக் குறித்துக் காங்கிரஸுக்கு வருத்தமே இருந்தது. அந்த வரி ரத்துச் செய்யப்பட்டுவிட

* லார்டு எல்ஜின் (1894 - 1917): இவர் 1894 முதல் 1899 வரை இந்தியாவில் வைசிராயாக இருந்தார். பிறகு, தென்னுப்பிரிக்க யுத்தம் நடந்த விதத்தைக் குறித்து விசாரிப்பதற்காக நியமிக்கப்பெற்ற ராயல் கமிஷனின் தலேவராக இருந்தார். 1905–ஆம் ஆண்டு முதல் 1908–ஆம் ஆண்டு வரை பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளின் மந்திரியாக இருந்தார்.

வேண்டும் என்பதே எப்பொழுதும் காங்கிரஸின் உறுதியான கொள்கையாக இருந்து வந்தது. ஆனால், அந்தக் கொள்கை நிறைவேறுவதற்கு இருபது ஆண்டுகள் ஆயின. அப்படி அவ் வரி ரத்தானதற்கு, நேட்டால் இந்தியர் மாத்திரம் அல்லாமல், தென்னாப்பிரிக்க இந்தியர் எல்லோருமே சேர்ந்து பாடுபட்டதே காரணம். காலஞ்சென்ற ஸ்ரீ கோபாலகிருஷ்ண கோகலேயிடம் கொடுத்திருந்த வாக்குறுதி மீறப்பட்டதன் காரணமாக, முடிவான ஒரு போராட்டத்தையே நடத்த வேண்டிய தாயிற்று. அப் போராட்டத்தில் இந்திய ஒப்பந்தத் தொழிலாளர்கள் முழுப் பங்கும் எடுத்துக்கொண்டனர். அதிகாரிகள் சுட்டதனால் அவர்களில் சிலர் உயிரையும் இழந்தனர்; பத்தாயிரத்திற்கு அதிகமானவர்கள் சிறைத் தண்டனையையும் அனுபவித்தார்கள்.

ஆனால், முடிவில் சத்தியம் வெற்றி பெற்றது. இந்தியர் அனுபவித்த துன்பங்களில் அந்த சத்தியம் பிரதிபலித்தது. என்றாலும், தளராத நம்பிக்கையும், மிகுந்த பொறுமையும், இடைவிடாத முயற்சியும் இல்லாதிருந்திருக்குமாயின் அது வெற்றி பெற்றிருக்க முடியாது. சமூகம், போராட்டத்தை நடத்தாமல் விட்டிருந்தால், காங்கிரஸ் கிளர்ச்சியைக் கைவிட்டு, 'வரி தவிர்க்க முடியாத ஒன்று' எனப் பணிந்து போயிருக்குமாயின், வெறுக்கப்பட்ட அந்த வரி இன்றளவும் வசூலிக்கப்பட்டு வந்திருக்கும். தென்னாப்பிரிக்க இந்தியருக்கும், இந்தியா முழுமைக்குமே அது நிரந்தரமான அவமானமாகவும் இருந்திருக்கும்.

## 22

## பல மதங்களைக் குறித்து ஆராய்ச்சி

இந்திய சமூகத்தின் சேவையிலேயே நான் முற்றும் மூழ்கி இருந்தேன் என்றால், அதற்கு முக்கியமான காரணம், ஆத்மானுபூதியைப் பெறவேண்டும் என்பதில் நான் கொண்டிருந்த ஆர்வம் தான். சேவையின் மூலமே ஆண்டவனை அடைய முடியும் என்பதை அறிந்தேன். ஆகையால், சேவையையே என்னுடைய மதம் ஆக்கிக்கொண்டேன். என் அளவில் சேவையென்றால், அது இந்தியாவுக்குச் செய்யும் சேவையே. ஏனெனில், அது தேடாமலேயே எனக்குக் கிட்டியதோடு, அதற்கான மன இசைவும் என்னிடம் இருந்தது. பிரயாணம் செய்ய வேண்டும் என்பதற்காகவும், கத்தியவாரின் சூழ்ச்சிகளிலிருந்து தப்புவதற்காகவும், எனக்குப் பிழைப்பைத் தேடிக்கொள்ளுவதற்காகவுமே நான் தென்னாப்பிரிக்காவுக்குச் சென்றேன். ஆனால், நான் முன்னால் கூறியதைப்போல் கடவுளைத் தேடுவதில் நான் ஈடுபட்டிருப்பதையும், ஆன்ம ஞானமடையும் முயற்சியில் முனைந்திருப்பதையும் கண்டேன்.

எனக்கு இருந்த அறிவுப் பசியைக் கிறிஸ்தவ நண்பர்கள் இன்னும் அதிகக் கடுமையானதாக்கிவிட்டார்கள். அப் பசியோ

தணியாப் பசியாகிவிட்டது. நான் அசிரத்தையாக இருந்துவிட விரும்பினாலும் அவர்கள் என்னைச் சும்மா விடவில்லை. டர்பனில் உள்ள தென்னாப்பிரிக்கப் பொது மிஷனின் தலைவரான ஸ்ரீ ஸ்பென்ஸர் வால்டன் என்னைக் கண்டுகொண்டார். நான் அவருடைய குடும்பத்தைச் சேர்ந்த ஒருவனாகவே ஆகிவிட்டேன். பிரிட்டோரியாவில் கிறிஸ்தவர்களுடன் எனக்கு இருந்த தொடர்பே, இப் பழக்கத்திற்குக் காரணமாக இருந்தது என்பதைச் சொல்லத் தேவையில்லை. ஸ்ரீ வால்டனின் போக்கே அலாதியானது. கிறிஸ்தவ சமயத்தில் சேர்ந்துவிடுமாறு எப்பொழுதாவது அவர் என்னை அழைத்ததாக எனக்கு நினைவே இல்லை. ஆனால், அவர் தமது வாழ்க்கையைத் திறந்த புத்தகம் போல் என் முன்பு வைத்துவிட்டார். அவருடைய செயல்கள் யாவற்றையும் நான் காணும்படி செய்தார். ஸ்ரீமதி வால்டன், கண்ணியமுள்ள, திறமைசாலியான பெண்மணி. இத் தம்பதிகளின் போக்கு எனக்கு மிகவும் பிடித்திருந்தது. எங்களுக்குள் இருந்த அடிப்படையான பேதங்களை நாங்கள் அறிந்தோம். எவ்வளவுதான் விவாதித்தாலும் அந்தப் பேதங்கள் மறையமாட்டா. என்றாலும், சகிப்புத் தன்மை, தாராளம், உண்மை ஆகியவை இருக்கும் இடத்தில் பேதங்களும் பயன் அளிப்பவையாகவே உள்ளன. வால்டன் தம்பதிகளின் அடக்கம், விடா முயற்சி, உழைப்பில் ஈடுபாடு ஆகியவை எனக்குப் பிடித்திருந்தன. நாங்கள் அடிக்கடி சந்தித்து வந்தோம்.

இந்த நட்பு எனக்குச் சமய விஷயங்களில் தொடர்ந்து சிரத்தை இருந்துவரும்படி செய்தது. சமய சம்பந்தமான நூல்களைப் படிப்பதற்குப் பிரிட்டோரியாவில் எனக்கு இருந்த ஓய்வு இங்கே கிடைப்பதற்குச் சாத்தியமில்லை. என்றாலும், எனக்குக் கிடைக்கும் கொஞ்ச ஓய்வு நேரத்தையும் நல்வழியில் பயன்படுத்தி வந்தேன். சமய சம்பந்தமாக நான் தொடர்ந்து கடிதப் போக்குவரத்து நடத்திவந்தேன். ராய்ச்சந்திர பாய் எனக்கு வழிகாட்டி வந்தார். நர்மதாசங்கர் எழுதிய ‘தரும விசாரணை’ என்ற நூலை ஒரு நண்பர் எனக்கு அனுப்பினார். அதன் முன்னுரை அதிக உதவியாக இருந்தது. இக் கவி, ஆரம்பத்தில் நடத்தி வந்த துன்மார்க்க வாழ்க்கையைக் குறித்து நான் கேள்விப்பட்டிருக்கிறேன். சமய நூல்களின் ஆராய்ச்சியினால், தமது வாழ்க்கையில் ஏற்பட்ட புரட்சிகரமான மாறுதல்களைக் குறித்து, அவர் முன்னுரையில் விவரித்திருந்தது என் மனத்தைக் கவர்ந்தது. அந் நூல் எனக்குப் பிரியமானதாக இருந்ததால் ஓர் எழுத்து விடாமல் அதைக் கவனமாகப் படித்தேன். மாக்ஸ் முல்லர் எழுதிய, ‘இந்தியா—அது நமக்கு என்ன போதிக்க முடியும்?’ என்ற நூலையும் சிரத்தையுடன் படித்தேன். பிரம்மஞான சங்கத்தினர் வெளியிட்டிருந்த உபநிடதங்களின் மொழிபெயர்ப்பையும் படித்தேன். இவைகளினாலெல்லாம் ஹிந்து மதத்தினிடம் எனக்கு இருந்த மதிப்பு அதிகரித்தது. அதிலிருந்த அழகுகளையும் அதிகமாக உணரலானேன். என்றாலும், இதனால்

மற்ற மதங்களின்மீது நான் துவேஷம் கொள்ளவில்லை. வாஷிங்டன் இர்விங் எழுதிய, 'முகமதுவும் அவருடைய சீடர்களும்' என்ற புத்தகத்தையும் புடித்தேன். முகமது நபியைக் குறித்துக் கார்லைல் எழுதிய புகழுரைகளையும் படித்தேன். இந் நூல்களெல்லாம் முகமதுவிடம் நான் கொண்டிருந்த மதிப்பை மேலும்அதிகப் படுத்தின. 'ஜாரதூஷ்டிரரின் திருவாக்குகள்' என்ற நூலையும் படித்தேன்.

இவ்விதம் பல சமயங்களையும் பற்றிய அறிவு எனக்கு அதிகமாயிற்று. இந்த ஆராய்ச்சி, என் ஆன்ம பரிசோதனையை ஊக்குவித்தது. நான் படிப்பவைகளில் எவையெவை சிறந்தவை என எனக்குத் தோன்றுகின்றனவோ அவற்றை அனுஷ்டானத்தில் கொண்டுவரும் பழக்கமும் எனக்கு உண்டாயிற்று. இவ்விதம் ஹிந்து நூல்களில் யோகாப்பியாசத்தைக் குறித்து நான் படித்து, புரிந்துகொண்டமட்டில் யோக சாதன முறைகள் சிலவற்றைச் சாதகம் செய்யவும் முயன்றேன். ஆனால், இதில் நான் வெகுதூரம் முன்னேற முடியவில்லை. நான் இந்தியாவுக்குத் திரும்பிய பிறகு, ஒரு நிபுணரின் உதவியைக் கொண்டு, அதைப் பின்பற்றுவது என்று தீர்மானித்தேன். அந்த ஆசை நிறைவேறவே இல்லை.

டால்ஸ்டாயின் நூல்களையும் அதிகக் கவனத்துடன் படித்து வந்தேன். 'சுவிசேஷங்களின் சுருக்கம்', 'செய்ய வேண்டியது யாது?' என்ற நூல்களும், மற்றவைகளும் என் மனத்தைக் கவர்ந்தன. பிரபஞ்சத்தில் உள்ள எல்லாவற்றினிடமும் அன்பு செலுத்துவதற்கான எண்ணிறந்த வழிகளை மேலும் மேலும் உணரலானேன்.

அந்தச் சமயத்தில் மற்றொரு கிறிஸ்தவக் குடும்பத்துடனும் எனக்குப் பழக்கம் ஏற்பட்டது. அவர்கள் கூறிய யோசனையின் பேரில் ஞாயிற்றுக்கிழமைதோறும் வெஸ்லியன் கிறிஸ்தவாலயத்திற்குச் சென்று வந்தேன். இத் தினங்களில் தங்கள் வீட்டுக்கு இரவுச் சாப்பாட்டுக்கு வரும்படியும் என்னை அவர்கள் அழைத்திருந்தார்கள். அக் கோயிலுக்குப் போய் வந்ததில் என் மனத்தில் திருப்தி உண்டாகவில்லை. அங்கே செய்யப்பட்ட உபதேசங்கள் பக்தி சிரத்தையை உண்டாக்குபவையாகத் தோன்றவில்லை. அங்கே வந்து கூடியிருந்தவர்களும் முக்கியமாகச் சமய சிரத்தையுடன் வந்திருந்ததாக எனக்குத் தோன்றவில்லை. அக் கூட்டம் பக்திமான்களின் கூட்டம் அன்று. உலகப் பற்றே அதிகமாக உள்ளவர்கள், பொழுது போக்குக்காகவும், பழக்கத்தையொட்டியும் கோயிலுக்கு வந்திருப்பதாகவே தோன்றியது. அங்கே, சில சமயங்களில் என்னையும் அறியாமலேயே எனக்குத் தூக்கம் வந்துவிடுவது உண்டு. இது எனக்கு வெட்கமாக இருக்கும். ஆனால், என் பக்கத்தில் இருப்பவர்களில் சிலரும் அப்படித்தான் தூங்குகிறார்கள் என்பதைப் பார்த்ததும் என் வெட்கம் குறைந்துவிடும். இப்படியே நான் நீண்டகாலம் கோயிலுக்குப் போய்க்கொண்

டிருக்க முடியாது. ஆகவே கோயிலுக்குப் போவதைச் சீக்கிரத்தில் நிறுத்திவிட்டேன்.

ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் நான் போய்க்கொண்டிருந்த குடும்பத்துடன் தொடர்பு திடீரென்று முறிந்தது. உண்மையில், 'இனி வர வேண்டாம்' என்று நான் எச்சரிக்கை செய்யப்பட்டேன் என்றே சொல்லலாம். இது நிகழ்ந்த விதம் இது தான் : அந்த வீட்டு அம்மாள் நல்லவர் ; சூதுவாது இல்லாதவர் ; ஆனால், அவருக்குக் கொஞ்சம் குறுகிய புத்தியும் உண்டு. எப்பொழுதும் நாங்கள் சமய சம்பந்தமான விஷயங்களைக் குறித்து விவாதிப்போம். அச் சமயம் நான் அர்னால்டு எழுதிய 'ஆசிய ஜோதி' என்ற நூலைப் படித்துக் கொண்டிருந்தேன். ஒரு சமயம், ஏசுநாதரின் வாழ்க்கையோடு புத்தபகவானின் வாழ்க்கையை ஒப்பிட்டுப் பேசலானோம். நான் சொன்னேன்: "புத்தரின் அபாரமான கருணையைப் பாருங்கள் ! அக்கருணை, மனித வர்க்கத்தோடு நின்றுவிடவில்லை; எல்லா ஜீவராசிகளிடத்திலும் அக் கருணை பரவியது. அவருடைய தோள்களில் ஆட்டுக்குட்டி ஆனந்தமாகப் படுத்திருந்ததை எண்ணும்போது நம் உள்ளத்தில் அன்பு வெள்ளம் பொங்குகிறதல்லவா ? இவ்விதம் எல்லா ஜீவ ராசிகளிடத்திலும் அன்பு கொள்ளுவது என்பது ஏசுநாதரின் வாழ்க்கையில் காணப்படவில்லை." இவ்விதம் நான் ஒப்பிட்டுக் கூறியது அந்த நல்ல பெண்மணிக்கு மனவருத்தத்தை உண்டாக்கிவிட்டது. அவருக்கு ஏற்பட்ட உணர்ச்சியை நான் அறிந்தேன். அப் பேச்சை நிறுத்திவிட்டேன். பிறகு சாப்பிடப் போனோம். ஐந்து வயதுகூட ஆகாத அவருடைய ஆண் குழந்தையும் எங்களுடன் இருந்தான். குழந்தைகளின் நடுவில் இருக்கும் போது, நான் அதிக ஆனந்தத்துடன் இருப்பேன். நீண்ட நாட்களாகவே அச் சிறுவனும் நானும் நண்பர்கள். சாப்பிடும்போது, அவன் தட்டில் இருந்த மாமிசத்தை இகழ்ச்சியாகவும், என் தட்டில் இருந்த ஆப்பிள் பழத்தைப் பெருமைப்படுத்தியும் பேசினேன். கள்ளங் கபடம் அற்ற அச் சிறுவன் என் பேச்சில் மயங்கிவிட்டான் ; அவனும் ஆப்பிள் பழத்தின் பெருமையைப் பேச ஆரம்பித்துவிட்டான்.*

---

* தென்னாப்பிரிக்காவிலிருந்து காந்திஜி எழுதிய கடிதம் ஒன்று லண்டன் 'வெஜிடேரியன்' பத்திரிகையில் 1894 மே 5-ம் தேதி இதழில் பிரசுரமாகியிருக்கிறது. அதில் ஒரு சிறுவனிடம் சைவ உணவு பற்றித் தாம் விவாதித்ததாகக் காந்திஜி கூறுகிறார். அந்தச் சிறுவன்தான் மேலே காந்திஜி குறிப்பிடும் சிறுவனா என்பது நிச்சயமாகத் தெரியவில்லை. என்றாலும் சிறுவர்களிடத்தில் சைவ உணவுப் பிரசாரஞ் செய்வதில், காந்திஜிக்கு இருந்த ஆர்வத்தை அக் கடிதம் காட்டுவதால் அதன் விவரத்தைக் கீழே கொடுத்திருக்கிறோம். காந்திஜியின் அக் கடிதமாவது :

"தெஸ்விக் கிறிஸ்தவர்களின் பெரிய மகாநாடு ஒன்று, பூஜ்ய ஆண்டுரு முர்ரேயின் தலைமையில் வெல்லிங்டனில் சமீபத்தில் நடந்தது. அன்புள்ள சில கிறிஸ்தவர்களுடன் நானும் அதற்குப் போயிருந்தேன். அவர்களுக்கு ஆறு, ஏழு, வயதுள்ள ஒரு பையன் உண்டு. அச்சமயம் ஒரு நாள் அவன் என்னுடன் வெளியில் உலாவ வந்தான். மிருகங்களிடம் அன்பாக இருப்பதைக் குறித்து சாதாரணமாக அவனுடன் பேசிக்

ஆனால், அவன் தாயாரோ அப்படியே திகைத்துப் போய் விட்டார். அது எனக்கு எச்சரிக்கையாக இருந்தது. என் பேச்சை நிறுத்தி, வேறு விஷயத்தைக் குறித்துப் பேச ஆரம்பித்தேன். வழக்கம்போல் அடுத்த வாரம் அவ் வீட்டுக்குப் போனேன். நடுக்கத்தோடுதான் போனேன். அங்கே போகாமல் இருந்துவிட வேண்டும் என்று எனக்குத் தோன்றவில்லை. அப்படிப் போகாது நின்றுவிடுவது சரி என்றும் எனக்குப் படவில்லை. ஆனால், அந்த நல்ல பெண்மணி எனக்கு வழியை எளிதாக்கிவிட்டார்.

அவர் கூறியதாவது· "ஸ்ரீ காந்தி! உம்முடைய சகவாசம் என் பையனுக்கு நன்மையானதாகாது என்று நான் உங்களுக்குச் சொல்லிவிட வேண்டியிருக்கிறது. இப்படிச் சொல்ல நேர்ந்ததற்காகத் தவறாக நினைத்துக் கொள்ளாதீர்கள். ஒவ்வொரு நாளும் அவன் மாமிசம் சாப்பிடத் தயங்குகிறான். உங்கள் வாதத்தை நினைவுபடுத்திப் பழமே வேண்டும் என்கிறான். காரியம் மிஞ்சிவிட்டது. அவன் மாமிசம் சாப்பிடுவதை விட்டுவிட்டால், அவன் நோயுறாவிட்டாலும் இளைத்தாவது போவான். இதை நான் எப்படிச் சகிப்பது? இனிமேல் உங்களுடைய வாதங்களெல்லாம் பெரியவர்களாகிய எங்களிடம் மட்டும் இருக்கட்டும். அந்த வாதங்களினால் குழந்தைகள் கெட்டுப்போவது நிச்சயம்."

நான் பின்வருமாறு பதில் சொன்னேன் : "அம்மா! நான் மிகவும் வருந்துகிறேன். எனக்கும் குழந்தைகள் இருக்கின்றன. ஆகையால், தாய் என்ற வகையில் உங்களுடைய உணர்ச்சிகளை நான் அறிகிறேன். இத்தகைய வருந்தத்தக்க நிலைமையை நாம் எளிதில் ஒரு முடிவுக்குக் கொண்டுவந்துவிட முடியும். நான் வாயால் சொல்வதைவிட, நான் எதைச் சாப்பிடுகிறேன், எதைச் சாப்பிடாமல் ஒதுக்குகிறேன் என்பதைப் பார்ப்பது, குழந்தையின் மனத்தில் இன்னும் அதிக மாறுதலை உண்டாக்கி

---

கொண்டிருந்தேன். பேச்சோடு பேச்சாக சைவ உணவு உண்பதன் அவசியத்தைப் பற்றியும் விவாதித்தோம். அதிலிருந்து அச்சிறுவன் மாமிசம் சாப்பிடுவதில்லை என்று அறிகிறேன் இம் மகா நாட்டுக்கு முன்னால், நான் காய்கறிகள் மாத்திரமே சாப்பிடுவதை அவன் கவனித்திருக்கிறான். நான் ஏன் மாமிசம் சாப்பிடுவதில்லை என்று கேட்டான். அவனுடைய பெற்றோர்கள் மாமிசம் சாப்பிடுகிறவர்களே. என்றாலும் சைவ உணவுக் கொள்கையில் நம்பிக்கையுள்ளவர்கள். ஆகையால் தங்கள் மகனிடம் சைவ உணவைக் குறித்து நான் பேசுவதைப்பற்றி அவர்கள் கவலைப்படுவதில்லை.

"இதிலுள்ள சிறந்த உண்மையைக் குழந்தைகள் உணர்ந்துகொள்ளுமாறு மிக எளிதில் செய்துவிடலாம். பெற்றோர் மாத்திரம் எதிர்க்காமல் இருந்தால் அக் குழந்தைகள் மாமிசம் தின்னாதவாறு செய்துவிட முடியும் என்பதைக் காட்டுவதற்காகவே இதை எழுதுகிறேன். அச் சிறுவனும் நானும் இப்பொழுது நெருங்கிய நண்பர்கள். என்மீது அவனுக்கு அதிகப் பிரியமிருக்கிறது என்று தோன்றுகிறது.

" 15 வயதுள்ள மற்றொரு பையனுடனும் பேசிக்கொண்டிருந்தேன். அவன் எவ்வுயிரையும் கொல்லமாட்டானாம். ஒரு கோழி கொல்லப்படுவதையும் பார்க்கச் சகிக்க மாட்டானாம். ஆனால், அதைத் தின்பதில் அவனுக்கு ஆட்சேபமில்லை."

விடக் கூடும். ஆகையால் சிறந்த வழி, நான் இங்கே வருவதை நிறுத்திக்கொள்ளுவதே. இது நிச்சயமாக நம் நட்பைப் பாதிக்க வேண்டியதில்லை."

அந்தப் பெண்மணி உடனே பெரிய பாரம் நீங்கியதைப் போல், "உங்களுக்கு நன்றி" என்ருர்.

# 23
# குடித்தனக்காரனுக

ஒரு குடித்தனம் வைப்பதென்பது எனக்குப் புதிய அனுபவம் அன்று. ஆனல், பம்பாயிலும் லண்டனிலும் நான் நடத்திய குடித்தனத்திற்கும் நேட்டாலில் வைத்த குடித்தனத்திற்கும் வித்தியாசம் உண்டு. இத் தடவை செலவில் ஒரு பகுதி, முற்றும் கௌரவத்திற்காக மட்டுமே ஆயிற்று. நேட்டாலில் இருக்கும் இந்தியப் பாரிஸ்டர் என்ற வகையிலும், ஒரு பிரதிநிதி என்ற வகையிலும், என் அந்தஸ்திற்கு ஏற்றதான ஒரு குடித்தனத்தை அமைக்க வேண்டியது அவசியம் என்று எண்ணினேன். பிரபலமான பகுதியில் அழகான ஒரு சிறு வீட்டை அமர்த்தினேன். தக்க வகையில் அதில் மேஜை, நாற்காலி முதலிய சாமான்களெல்லாம் போடப்பட்டன. சாப்பாடு எளிமையானது. ஆனல், ஆங்கில நண்பர்களையும் இந்தியச் சக ஊழியர்களையும் நான் சாப்பிடக் கூப்பிடுவதால் குடித்தனச் செலவு எப்பொழுதும் அதிகமாகவே இருந்தது.*

ஒவ்வொரு குடித்தனத்திற்கும் ஒரு நல்ல வேலைக்காரன் அத்தியாவசியம். ஆனல், ஒருவரை வேலைக்காரனுக வைத்து நடத்துவது எப்படி என்பதைப்பற்றி எனக்கு ஒன்றுமே தெரியாது.

எனக்குச் சகாவாகவும் உதவி செய்பவராகவும் ஒரு நண்பர் இருந்தார். சமையற்காரர் ஒருவர் உண்டு. அவர் குடும்பத்தைச் சேர்ந்தவராகவே ஆகிவிட்டார். என் காரியாலய குமாஸ்தாக்களும் என்னேடு தங்கி, அங்கேயே சாப்பிட்டும் வந்தனர்.

இந்தப் பரிசோதனையில் ஓரளவுக்கு நான் வெற்றி பெற்றேன் என்றே நினைக்கிறேன். ஆனல், வாழ்க்கையின் கசப்பான அனுபவங்களில் ஒரு சிறிது இதில் இல்லாமல் போகவில்லை.

---

* காந்திஜிக்கு வக்கீல் தொழிலில் வருடத்திற்கு ஐயாயிரம், ஆருயிரம் பவுன் வருமானம் வந்துகொண்டிருந்தது என்று தெரிகிறது. இந்த வருமானம் அக்காலத்தில் தென்னுப்பிரிக்காவில் பெரிய வருமானமே. ஒரு சமயம் அவர் டர்பனில் கடற்கரை ஓரமாக அட்டர்னி ஜெனரலின் வீட்டிற்குச் சில வீடுகள் தாண்டி, ஓர் அழகிய பங்களாவை வாடகைக்கு அமர்த்திக் கொண்டு அதில் குடியிருந்தார். அச்சமயம் அவர் வாழ்க்கை, நல்ல வருமானமுள்ள ஒரு பெரிய வக்கீலின் வாழ்க்கையைப் போன்றே இருந்ததாம்.

என்னுடைய சகா அதிக சாமர்த்தியசாலி. அவர் என்னிடம் உண்மையாக நடந்துகொண்டு வருகிறார் என்றே நினைத்திருந்தேன். ஆனால், இதில்தான் நான் ஏமாற்றப்பட்டு விட்டேன். என்னுடன் தங்கியிருந்த ஆபீஸ் குமாஸ்தா ஒருவர்மீது, என்னுடைய அந்தச் சகாவுக்குப் பொறாமை ஏற்பட்டுவிட்டது. குமாஸ்தாமீது நான் சந்தேகம் கொள்ளும் வகையில் அவர் ஒரு வலையை விரித்துவிட்டார். அந்தக் குமாஸ்தா நண்பரோ, அதிக ரோஷக்காரர். தம்மீது எனக்குச் சந்தேகம் ஏற்பட்டுவிட்டது என்பதைக் கண்டதுமே அவர் வீட்டை மாத்திரமே அன்றிக் காரியாலயத்தையும் விட்டுப் போய்விட்டார். இது எனக்கு வருத்தமாக இருந்தது. ஒருவேளை அவருக்கு நான் அநீதி செய்திருக்கக் கூடும் என்று உணர்ந்தேன். என் மனச்சாட்சியும் சதா உறுத்திக்கொண்டே இருந்தது.

இதற்கு மத்தியில் சமையற்காரர், சில தினங்கள் ஓய்வு எடுத்துக்கொண்டதாலோ, வேறு காரணத்திற்காகவோ வீட்டில் இல்லை. அவர் இல்லாதபோது வேறு ஒரு சமையற்காரரை வைக்க வேண்டியது அவசியமாயிற்று. புதிதாக வந்தவர், அசல் போக்கிரி என்பது பின்னால் தெரிய வந்தது. ஆனால், எனக்கோ, அவர் கடவுள் அனுப்பிய தூதர் போன்றே ஆனார். என் வீட்டில் எனக்குத் தெரியாமலேயே சில ஒழுங்கீனங்கள் நடந்து வருகின்றன என்பதை அவர், தாம் வந்த இரண்டு மூன்று நாட்களிலேயே கண்டுபிடித்து விட்டார். இதைக் குறித்து எனக்கு எச்சரிக்கை செய்வதென்றும் தீர்மானித்தார். யாரையும் நான் எளிதில் நம்பி விடக் கூடியவன். ஆனால், நேர்மையானவன் என்ற பெயர் அப்பொழுதே எனக்கு உண்டு. இதனால், அந்தப் புதுச் சமையற்காரர் கண்டு பிடித்த விஷயம், அவருக்கு இன்னும் அதிக அதிர்ச்சியை அளித்தது. தினமும் மத்தியானச் சாப்பாட்டுக்கு ஒரு மணிக்குக் காரியாலயத்திலிருந்து நான் வீடு திரும்புவேன். ஒரு நாள் 12 மணிக்குச் சமையற்காரர் தலைதெறிக்கக் காரியாலயத்திற்கு ஓடி வந்தார். "தயவு செய்து உடனே வீட்டுக்கு வாருங்கள். நீங்கள் பார்க்க வேண்டிய அதிசயம் ஒன்று இருக்கிறது" என்றார்.

"அது என்ன? சங்கதி இன்னது என்பதை நீ இப்பொழுது சொல்லியாக வேண்டும். அதைப் போய்ப் பார்க்க வேண்டும் என்பதற்காக இந்த நேரத்தில் நான் காரியாலயத்தை விட்டு எப்படி வர முடியும்?" என்றேன்.

"நீங்கள் இப்பொழுது வராவிடில் அதற்காகப் பிறகு வருத்தப்படுவீர்கள். அவ்வளவுதான் நான் சொல்ல முடியும்" என்றார், சமையற்காரர்.

அவர் பிடிவாதத்தில் ஏதோ விஷயம் இருக்க வேண்டும் என்று எண்ணினேன். ஒரு குமாஸ்தா உடன்வர வீட்டுக்குப் போனேன். சமையற்காரர் எங்களுக்கு முன்னால், வேகமாகப்

போனுர். என்னை நேரே மேல் மாடிக்கு அழைத்துச் சென்றுர். என் சகாவின் அறையைச் சுட்டிக்காட்டினுர். "அந்தக் கதவைத் திறந்து நீங்களே பார்த்துக்கொள்ளுங்கள்" என்றுர்.

எனக்கு அப்பொழுது எல்லாம் விளங்கிவிட்டன. கதவைத் தட்டினேன். பதில் இல்லை! சுவர்களெல்லாங்கூட அதிரும்படி யாகக் கதவைப் பலமாக இடித்தேன். கதவு திறந்தது. உள்ளே ஒரு விபசாரியைக் கண்டேன். திரும்ப அங்கே அடியெடுத்து வைக்கக்கூடாது என்று கூறி, அவளை வெளியே போகச் சொன்னேன்.

என் சகாவிடம், ''இந்தக் கணத்திலிருந்து உமக்கும் எனக்கும் எந்தவிதச் சம்பந்தமும் இல்லை. நெடுக, நான் ஏமாற்றப் பட்டு வந்திருக்கிறேன். எனக்கு நானே பைத்தியக்காரப் பட்டம் கட்டிக்கொண்டேன். உம்மிடம் நான் வைத்த நம்பிக்கைக்கு நீர் செய்யும் பிரதியுபகாரம் இதுதானு?'' என்றேன்.

அப்பொழுதும் நல்லறிவு பெருத அவர், என் சங்கதிகளை அம்பலப்படுத்திவிடுவதாக என்னை மிரட்டினுர். ''மறைத்து வைக்க என்னிடம் எதுவுமே இல்லை. நான் செய்தது ஏதாவது இருந்தால் அம்பலப்படுத்தும். ஆனுல், இந்தக் கணமே நீர் அந்த இடத்தை விட்டுப் போயாக வேண்டும்" என்றேன். இதைக் கேட்டதும் அவர் இன்னும் அதிகக் கோபாவேசம் கொண்டார். வேறு வழி இல்லாது போகவே, கீழே இருந்த குமாஸ்தாவைக் கூப்பிட்டேன். ''உடனே, போலீஸ் சூப்பரின் டென்டிடம் போய், என் வந்தனங்களை அவருக்குத் தெரிவித்து விட்டு, என்னுடன் வசித்து வந்த ஒருவர், ஒழுங்கீனமாக நடந்து கொண்டார் என்றும், என் வீட்டில் அவரை வைத்துக்கொள்ள நான் விரும்பவில்லை என்றும், அவர் வெளியே போக மறுக்கிறுர் என்றும், போலீஸ் உதவியை அனுப்பினுல் மிக்க நன்றியறிதல் உள்ளவனுவேன் என்றும் அவரிடம் சொல்லும்" என்றேன்.

நான் கண்டிப்பாகத்தான் இருக்கிறேன் என்பதை இது அவ ருக்குக் காட்டியது. அவர் குற்றமே அவரைப் பலவீனப்படுத்தி யும் விட்டது. என்னிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டார். போலீசுக்குத் தெரிவிக்க வேண்டாம் என்று வேண்டிக்கொண் டார். வீட்டைவிட்டு உடனே போய்விடவும் ஒப்புக்கொண்டார். போயும் விட்டார்.

இச் சம்பவம் என் வாழ்க்கையில் தக்க சமயத்தில் செய்த தோர் எச்சரிக்கையாக அமைந்தது. கெட்டிக்காரத்தனமுள்ள இந்தத் தீய ஆசாமி, நெடுக என்னை எவ்வளவு தூரம் ஏமாற்றி வந்திருக்கிறுர் என்பதை இப்பொழுதுதான் என்னுல் தெளிவாகக் காண முடிந்தது. அவர் என்னுடன் இருக்க இடம் கொடுத்தது, நான் ஒரு நல்ல காரியத்திற்குக் கெட்ட முறையை அனுசரித்த தாயிற்று. நெருஞ்சிச் செடியிலிருந்து அத்திப் பழம் எடுக்க லாம் என்று நான் எதிர்பார்த்துவிட்டேன். அந்தத் தோழர்

கெட்ட நடத்தை உள்ளவர் என்பதை நான் அறிந்தே இருந்தேன். என்றாலும், என்னிடம் உண்மையாக நடந்து கொள்ளுவாரென்று நம்பிவிட்டேன். அவரைச் சீர்திருத்துவதற்கு நான் செய்த முயற்சியில் என்னையே நாசப்படுத்திக்கொள்ளும் அளவுக்கு நெருங்கி வந்துவிட்டேன். அன்புள்ள நண்பர்களின் எச்சரிக்கைகளையெல்லாம் உதாசீனம் செய்துவிட்டேன். அவரிடம் நான் கொண்டிருந்த பிரியம் என்னை முற்றும் குருடனாக்கிவிட்டது.*

புதிய சமையற்காரர் காட்டாதிருந்தால், உண்மையை நான் கண்டுகொண்டிருக்கவே மாட்டேன். இச் சம்பவத்திற்குப் பிறகு நான் பற்றற்ற வாழ்க்கையை நடத்த ஆரம்பித்துவிட்டேன். இச் சம்பவத்தை நான் அறியாமல் இருந்திருந்தால், அந்தச் சகா வின் தொடர்பினால் இந்தப் பற்றற்ற வாழ்க்கையை நான் நடத்த

---

* காந்திஜிக்கு இவ்வளவு மனவேதனையைத் தந்துவிட்ட இந்த நண்பர்தான், அவருக்குச் சிறு வயதில் மாமிசம் தின்னச் சொல்லிக் கொடுத்த அவருடைய பள்ளிக் கூட முஸ்லிம் நண்பர். இவரை எப்படியும் சீர்திருத்திவிடுவது என்ற முயற்சியைக் காந்திஜி தென்னாப்பிரிக்கா வந்த பிறகும் விடவில்லை. தென்னாப்பிரிக்காவில் ஓராண்டுக்கும் அதிகமாகத் தங்க நேர்ந்ததும், அந்த நண்பரையும் தென்னாப்பிரிக்காவுக்குக் காந்திஜி அழைத்துக்கொண்டார். வந்தவர் காந்திஜியுடன் தங்கியிருந்த போதே மேலே கண்ட தகாத செயலைச் செய்து விட்டார். ஆனால், தமக்கு மாமிசம் சாப்பிடச் சொல்லிக் கொடுத்த அவரேதான் இவர் என்பதையோ, இவர் பெயரையோ காந்திஜி தம் சுயசரிதையில் குறிப்பிடவில்லை.

அவருடைய பெயர் ஷேக் மேதாப். பின்னால் அவர் தென்னாப்பிரிக்காவிலேயே ஒருத்தியை மணந்துகொண்டு சீர்திருந்தினார். காந்திஜி அங்கே நடத்திய சத்தியாக்கிரகப் போராட்டத்தின்போது அதில் ஈடுபட்ட பெண்களுக்கு ஒரு சாதாரணப் பாடலையும் இவர் எழுதிக் கொடுத்தார். அவருடைய மனைவியும் அப்போராட்டத்தில் ஈடுபட்டுச் சிறை சென்றார்.

அவர் பெயரைக் காந்திஜி இங்கே ஏன் குறிப்பிடவில்லை என்பதைக் குறித்து பின்னால் காகா கலேல்கார் கேட்டதற்குக் காந்திஜி என்ன கூறினார் என்பதை அவர் தமது நூலில் குறிப்பிட்டிருக்கிறார். அது பின்வருமாறு :

"சில விஷயங்களை நீங்கள் வேண்டுமென்றே சுயசரிதையிலிருந்து ஒதுக்கிவிட்டீர்கள் என்று தோன்றுகிறது. உங்களுக்கு எதிராக நிகழ்ந்தவைகளைப் பற்றி அதிக உற்சாகத்துடன் எழுதியிருக்கிறீர்கள். ஆனால், பிறரைப்பற்றி மாத்திரம் எழுதாமல் விட்டுவிட்டீர்கள். உதாரணமாக, உங்களுடன் தங்கிய ஒரு நண்பரைப் பற்றி உங்கள் சுயசரிதையில் எழுதியிருக்கிறீர்கள். நீங்கள் இல்லாத சமயத்தில் அந்த நண்பர், விபசாரியை உங்கள் வீட்டிற்கு அழைத்து வந்ததாகக் கூறியிருக்கிறீர்கள். ஆனால், இதே முஸல்மான் நண்பர்தான் நீங்கள் பள்ளியில் படிக்கையில் உங்களைப் புலால் உண்ணத் தூண்டியவரென்றும், அவருக்கு உதவி செய்வதற்காக ஒரு சமயம் உங்கள் வீட்டிலேயே நீங்கள் திருட நேர்ந்தது என்றும் நீங்கள் ஏன் அங்கே கூறவில்லை?" என்று பாபுவைக் கேட்டேன்.

"அதற்கு பாபு கூறினார் : 'நீங்கள் கூறுவது மிகவும் சரி. அதை வேண்டுமென்றேதான் குறிப்பிடாமல் விட்டேன். என் வரலாற்றை வரையவே நான் விரும்பினேன். அந்த வரலாற்றிற்கு இந்தச் சம்பவத்தைக் குறிப்பிடுவது பொருத்தமல்ல: அவசியமுமில்லை. மேலும், அவர் உயிருடனிருக்கிறார். அவர் என்னுடன் இருந்தவர் என்பதைச் சிலர் அறிவர். இது பற்றிய முழு விவரத்தையும் வெளியிட்டால் அவர்மீது மக்கள் வெறுப்படையக்கூடும்."

முடியாமலும் போயிருக்கக்கூடும். என்னை இருட்டிலேயே வைத்திருந்து, நான் தவறான வழியில் சென்றுவிடும்படி செய்து விடும் சக்தி, அவருக்கு உண்டு.

ஆனால், முன்பு போலவே கடவுள் என்னைக் காத்தருள வந்தார். என் நோக்கங்கள் தூய்மையானவை. ஆகையால், நான் தவறுகள் செய்திருந்தும், காப்பாற்றப்பட்டேன். ஆரம்பத்தில் ஏற்பட்ட இந்த அனுபவம், வருங்காலத்திற்கான ஒரு நல்ல முன்னெச்சரிக்கை யாயிற்று.

அந்தச் சமையற்காரர், கடவுளால் அனுப்பப்பட்ட தூதுவர் போன்றே ஆனார். அவருக்குச் சமையல் வேலை தெரியாது. ஆகையால், சமையற்காரராக அவர் என்னிடத்தில் இருந்திருக்க முடியாது. ஆனால், வேறு யாரும் என் கண்களைத் திறந்திருக்க முடியாது. என் வீட்டிற்குள் அந்த விபசாரி அழைத்துக்கொண்டு வரப்பட்டது, அது முதல் தடவை அன்று என்பதைப் பின்னால் தெரிந்துகொண்டேன். அவள், முன்னால் அடிக்கடி வந்திருக்கிறாள். ஆனால், இந்தச் சமையற்காரருக்கு இருந்த தைரியம் வேறு யாருக்கும் இல்லை. ஏனெனில், கண்ணை மூடிக்கொண்டு அந்தச் சகாவை நான் எவ்வாறு நம்பிவருகிறேன் என்பதை எல்லோரும் அறிவார்கள். இந்தச் சேவையைச் செய்வதற்கென்றே அச் சமையற்காரர் அனுப்பப்பட்டதுபோல் இருந்தது. ஏனெனில், அக் கணத்திலேயே தாம் போய்விடப் போவதாக என்னிடம் அவர் அனுமதி கேட்டார்.

''நான் உங்கள் வீட்டில் இருக்க முடியாது. உங்களைச் சுலபமாகப் பிறர் ஏமாற்றிவிடுகிறார்கள். இது எனக்கு ஏற்ற இடம் அல்ல'' என்று சமையற்காரர் கூறினார். அவர் போக அனுமதியும் கொடுத்துவிட்டேன்.

குமாஸ்தாவைக் குறித்து, எனக்குச் சந்தேகம் ஏற்படும்படி செய்ததும் இந்த என் சகாவைத் தவிர வேறு யாரும் அல்ல என்பதையும் இப்பொழுது கண்டுகொண்டேன். குமாஸ்தாவுக்கு நான் செய்துவிட்ட அநீதிக்குப் பரிகாரம் செய்துவிட நான் எவ்வளவோ கஷ்டப்பட்டு முயன்றேன். அவருக்கு முற்றும் திருப்தி ஏற்படும்படி என்னால் செய்ய முடியாது போனது எனக்கு நிரந்தரமான துக்கமாக இருந்து வருகிறது. ஒரு முறை பிளவு ஏற்பட்டு விட்டால், பிறகு என்னதான் ஒட்டுப்போட்டாலும், பிளவு பிளவுதான்.

# 24

# தாய் நாடு நோக்கி

**நா**ன் தென்னாப்பிரிக்காவுக்கு வந்து, இப்பொழுது மூன்று ஆண்டுகள் ஆயின. அங்கிருந்த மக்களை நான் தெரிந்து கொண்டேன்; அவர்களும் என்னை அறிந்துகொண்டார்கள்.

அங்கே நான் நீண்டகாலம் தங்கவேண்டி யிருக்குமென்று கண்ட தால் ஆறு மாதங்களுக்குத் தாய்நாடு போய் வர 1896-இல் நான் அனுமதி கேட்டேன். வக்கீல் தொழிலும் நன்ருகவே நடந்து வந்தது. நான் இருக்க வேண்டியது அவசியம் என்று மக்கள் உணர்ந்தனர் என்பதையும் கண்டேன். ஆகவே, தாய் நாட்டிற்குச் சென்று, மனைவியையும் குழந்தைகளையும் அழைத்துக்கொண்டு வந்து, அங்கேயே தங்குவது என்று தீர்மானித்துக்கொண்டேன். மேலும், தாய் நாட்டிற்குச் சென்ருல், விஷயங்களைப் பொது மக்களுக்கு எடுத்துக் கூறித் தென்னுப்பிரிக்காவில் இருக்கும் இந்தியர் சம்பந்தமாக அவர்களுக்கு அதிகச் சிரத்தை உண்டா கும்படி செய்து, ஏதாவது பொதுவேலை செய்யலாம் என்றும் நினைத்தேன். மூன்று பவுன் வரி, ஆருப் புண்ணுகை இருந்து வந்தது. அது ரத்துச் செய்யப்படும் வரையில் அமைதி கிட்டுவதற்கில்லை.

ஆனல், நான் இல்லாதபோது காங்கிரஸின் வேலைகளையும், கல்விச் சங்கத்தையும் ஏற்று நடத்துவது யார்? இதற்குத் தகுதி வாய்ந்தவர்களாக ஆதம்ஜி மியாகான், பார்ஸி ருஸ்தம்ஜி ஆகிய இருவரையே நான் நினைக்க முடியும். வர்த்தகர்கள் வகுப்பில் பொதுவேலையில் ஈடுபடக்கூடிய ஊழியர்கள் அப்பொழுது பலர் இருந்தனர். ஆனல், அவர்களில் ஒழுங்காக வேலை செய்து, காரியதரிசியின் கடமையை நிறைவேற்றக் கூடியவர்களும், இந்தியர் சமூகத்தின் மதிப்பைப் பெற்றிருந்தவர்களும் அந்த இருவருமே. காரியதரிசியாக இருப்பவருக்கு ஓரளவு ஆங்கிலம் நிச்சயம் தெரிந்திருக்க வேண்டும். காங்கிரஸுக்குக் காலஞ் சென்ற ஆதம்ஜி மியாகானின் பெயரைச் சிபாரிசு செய்தேன். அவரைக் காரியதரிசியாக நியமிப்பதைக் காங்கிரஸும் அங்கீ கரித்தது. அவரைத் தேர்ந்தெடுத்தது மிகவும் சரியானது என்பது பிறகு அனுபவத்தினல் தெரிந்தது. ஆதம்ஜி மியாகான், விடாமுயற்சி உள்ளவர்; தாராளமானவர்; இனிய தன்மையுள்ளவர்; மரியாதையுள்ளவர். அந்த நற்குணங்களால் அவர் எல்லோருக்கும் திருப்தியளித்தார். அதோடு காரியதரிசி வேலைக்குப் பாரிஸ்டர் பட்டம் பெற்றவரோ, அதிகமாக ஆங்கிலம் படித்தவரோ தேவை யில்லை என்பதையும் அவர் எல்லோருக்கும் நிரூபித்துக் காட்டி விட்டார்.

1896-ஆம் ஆண்டு மத்தியிலே கல்கத்தாவுக்குச் சென்ற, 'பொங்கோலா' என்ற கப்பலில் நான் தாய் நாட்டிற்குப் புறப் பட்டேன்.

கப்பலில் பிரயாணிகள் குறைவாகவே இருந்தனர். அவர் களில் இருவர் ஆங்கில அதிகாரிகள். அவர்களுடன் எனக்கு நெருங்கிய பழக்கம் உண்டாயிற்று. அவர்களில் ஒருவருடன் தினம் ஒரு மணி நேரம் சதுரங்கம் விளையாடுவேன். கப்பல் டாக்டர் எனக்கு, 'தமிழ்ச் சுயபோதினி' என்ற புத்தகத்தைக் கொடுத்தார். அதைப் படிக்க ஆரம்பித்தேன். முஸ்லிம்களுடன் நெருங்கிய

தொடர்பு வைத்துக்கொள்ள வேண்டுமாயின், உருது மொழி தெரிந்திருப்பதும், சென்னை இந்தியருடன் நெருங்கிய பழக்கம் ஏற்படுத்திக்கொள்ளுவதற்குத் தமிழ் தெரிந்திருக்க வேண்டியதும் அவசியம் என்பதை நேட்டால் அனுபவத்திலிருந்து தெரிந்து கொண்டேன்.

அந்த ஆங்கில நண்பரும் என்னுடன் உருது படித்தார். அவர் கேட்டுக்கொண்டதன் பேரில், மூன்றும் வகுப்புப் பிரயாணி களிடையே ஒரு நல்ல உருது முன்ஷியைக் கண்டு பிடித்தேன். எங்களுடைய இப் படிப்பில் நல்ல முன்னேற்றமும் கண்டோம். அந்த அதிகாரிக்கு என்னைவிட ஞாபக சக்தி அதிகம். ஒரு சொல்லைப் பார்த்துவிட்டால் பிறகு அதை அவர் மறக்கவே மாட்டார். உருது எழுத்துக்களை நினைவில் வைத்திருப்பது எனக்குச் சிரமமாக இருந்தது. அதிக விடாமுயற்சியுடனேயே நான் படித்தேன். ஆனால், அந்த அதிகாரியை மிஞ்சிவிட முடியவே இல்லை.

தமிழிலோ, நல்ல அபிவிருத்தி அடைந்து வந்தேன். இதைச் சொல்லிக்கொடுக்க யார் உதவியும் கிடைக்கவில்லை. ஆனால், 'தமிழ்ச் சுயபோதினி' நன்றாகவே எழுதப்பட்ட புத்தகம். இன்னொருவர் உதவி அவசியம் என்று எனக்குத் தோன்றவே இல்லை.

இந்தியாவுக்குப் போய்ச் சேர்ந்த பிறகும், இம் மொழிகளைத் தொடர்ந்து படிக்கலாம் என்று நம்பியிருந்தேன். ஆனால், அது சாத்தியமில்லாது போயிற்று. 1893-க்குப் பிறகு நான் அதிகமாகப் படித்ததெல்லாம் சிறையிலேதான். சிறைகளில், தமிழிலும் உருது விலும் எனக்குக் கொஞ்சம் முன்னேற்றம் ஏற்பட்டது. தென்னாப் பிரிக்கச் சிறைகளில் தமிழ் படித்தேன்; உருது படித்தது எராவ்டா சிறையில். ஆனால், தமிழ் பேசக் கற்றுக்கொள்ளவே இல்லை. நான் படித்த கொஞ்சம் தமிழும், பயிற்சி இன்மையால் துருப் பிடித்துக்கொண்டிருக்கிறது.

தமிழ் அல்லது தெலுங்கு தெரியாமல் இருப்பது எவ்வளவு பெரிய இடையூறு என்பதை இன்னமும் நான் உணர்ந்து வருகிறேன். தென்னாப்பிரிக்காவில் இருந்த திராவிடர்கள் என் மீது பொழிந்த அன்பு, இன்றும் எண்ணிப் போற்றுவதற்கு உரிய நினைவாக இருந்து வருகிறது. தமிழ் அல்லது தெலுங்கு நண்பர் ஒருவரை நான் காணும்போது, தென்னாப்பிரிக்காவில் இருக்கும் அவர்களுடைய இனத்தினரான தமிழரும் தெலுங்கரும் காட்டிய விடாமுயற்சியையும் தன்னலமற்ற தியாகத்தையும் நினைக்காமல் இருக்க என்னால் முடிவதில்லை. அவர்களில் பெரும்பாலானவர்கள் எழுத்து வாசனையே இல்லாதவர்கள். அவர்கள் பெண்களும் அப்படியே. இப்படிப்பட்டவர்களுக்காக நடந்ததே தென்னாப் பிரிக்கப் போராட்டம். எழுதப் படிக்கத் தெரியாத சிப்பாய்களே அப் போரில் ஈடுபட்டனர்; ஏழைகளுக்காக நடந்த போர் அது.

அதில் அந்த ஏழைகள் முழுப் பங்கும் வகித்தனர். என் நாட்டின ரான கள்ளங்கபடமற்ற அந்த நல்ல மக்களின் உள்ளங்களைக் கொள்ளை கொள்ளுவதற்கு, அவர்களுடைய மொழி எனக்குத் தெரியாதது ஓர் இடையூருக இருந்ததே இல்லை. அரைகுறை ஹிந்துஸ்தானியோ, அரை குறை ஆங்கிலமோ அவர்கள் பேசு வார்கள். அதைக் கொண்டு எங்கள் வேலைகளைச் செய்து கொண்டு போவதில் எங்களுக்குக் கஷ்டமே தோன்றியதில்லை. ஆனல், அவர்கள் என்னிடம் காட்டிய அன்புக்கு நன்றியறிதலாகத் தமிழும் தெலுங்கும் கற்றுக்கொண்டுவிட வேண்டும் என்று விரும்பினேன். முன்பே நான் கூறியதுபோல, தமிழ்க் கல்வியில் கொஞ்சம் அபிவிருத்தி யடைந்தேன். ஆனல், இந்தியாவில் தெலுங்கு கற்றுக்கொள்ள முயன்றும் நான் நெடுங் கணக்கைத் தாண்டி அப்பால் போகவில்லை. இம் மொழிகளை நான் இனி கற்றுக்கொள்ளவே முடியாது என்று இப்பொழுது அஞ்சுகிறேன். ஆகையால், திராவிடர்கள் ஹிந்துஸ்தானி கற்றுக்கொள்ளுவார்கள் என்று நம்புகிறேன். தென்னப்பிரிக்காவில் இருக்கும் இவர்களில் ஆங்கிலம் தெரியாதவர்கள், தட்டுத்தடுமாறி யேனும் ஹிந்தி அல்லது ஹிந்துஸ்தானி பேசுகிருர்கள். ஆங்கிலம் பேசுகிறவர்கள் மாத்திரமே-ஆங்கிலம் தெரிந்திருப்பது நமது சொந்த மொழிகளை அறிந்துகொள்ளுவதற்குத் தடையாக இருப்பது போலவே-ஹிந்தி கற்றுக்கொள்ளுவதில்லை

நான் விஷயத்தை விட்டு எங்கோ போய்விட்டேன். என் பிரயாண விவரத்தைக் கூறி முடித்துவிடுகிறேன். ‘பொங்கோலா’க் கப்பலின் காப்டனை நான் உங்களுக்கு அறிமுகம் செய்துவைக்க வேண்டும். நாங்கள் நண்பர்கள் ஆனேம். அந்த நல்ல காப்டன், பிளிமத் சகோதரர்கள் என்ற கிறிஸ்தவ கோஷ்டியைச் சேர்ந்த வர். கப்பல் ஓட்டும் விஷயத்தைக் காட்டிலும், எங்கள் பேச்சு, அதிகமாக ஆன்மிக விஷயங்களைப் பற்றியதாகவே இருந்தது. ஒழுக்கத்திற்கும் சமயத்திற்கும் நடுவே அவர் ஒரு வரம்பை இட்டுவிட்டார். பைபிளில் கண்ட உபதேசங்கள் அவருக்குக் குழந்தை விளையாட்டாகத் தோன்றின. ‘அதன் அழகு, அவற்றின் எளிமையிலேயே இருக்கிறது’ என்ருர். ‘ஆண், பெண், குழந்தை கள் ஆகிய எல்லோரும் ஏசுநாதரிடமும், அவர் தியாகத்திலும் நம்பிக்கை வைக்கட்டும். அவர்கள் பாவங்களிலிருந்து நிச்சயம் விமோசனம் அடைவார்கள்’ என்றும் அவர் கூறுவார். பிரிட்டோரி யாவில் இருந்த பிளிமத் சகோதரர்களின் நினைவு எனக்குத் திரும்ப வரும்படி இந்த நண்பர் செய்தார். ஒழுக்கக் கட்டுத் திட்டங்களை விதிக்கும் எந்த மதமும் பயனற்றது என்பது இவர் கருத்து. இந்த விவாத மெல்லாம் என்னுடைய சைவ உணவின் பேரில் எழுந்தவையே. மாமிசம் ஏன் தின்னக்கூடாது? மாட் டிறைச்சி தின்ருல்தான் என்ன மோசம்? தாவர வர்க்கத்தை மனிதன் அனுபவிப்பதற்கென்றே கடவுள் படைத்திருக்கிருர். மிருகங்கள்போன்ற கீழ் உயிரினங்களையும் அதற்காகவே கடவுள் படைத்திருக்க வில்லையா? இந்தக் கேள்விக ளெல்லாம் அநேக

மாகச் சமய சம்பந்தமான விவாதத்தில் கொண்டுபோய் விட்டன. எங்களில், ஒருவர் கருத்தை மற்றவரால் மாற்றிவிட முடியவில்லை. மதமும் ஒழுக்கமும் ஒன்றே என்ற கருத்தில் நான் உறுதியுடன் இருந்தேன். இதற்கு மாறுபட்டு, தாம் கொண்ட கருத்தே சரியானது என்பதில் காப்டனுக்குக் கொஞ்சமும் சந்தேகம் இல்லை.

இருபத்து நான்காம் நாள் முடிவில் இன்பகரமான அக் கப்பல் பிரயாணம் ஒரு முடிவுக்கு வந்தது. ஹூக்ளி நதியின் அழகைக் கண்டு வியந்தவண்ணம் நான் கல்கத்தாவில் இறங்கினேன். அன்றே பம்பாய் செல்ல ரெயில் ஏறினேன்.

# 25

# இந்தியாவில்

பம்பாய்க்குப் போகும் வழியில் ரெயில் அலகாபாத்தில் நாற்பத்தைந்து நிமிடங்கள் நின்றது. அந்த நேரத்தில் அந் நகரைச் சுற்றிப் பார்த்துவிடலாம் என்று முடிவு செய்தேன். மருந்துக் கடையில் சில மருந்துகள் வாங்கவேண்டி யிருந்தது. மருந்துக் கடைக்காரரோ தூங்கி விழுந்துகொண் டிருந்தார். நான் கேட்ட மருந்தை எடுத்துக் கொடுப்பதில் அநியாயமாக நேரம் கடத்தி விட்டார். இதன் பலன் என்னவென்றால், நான் ஸ்டேஷன் வந்து சேர்ந்தபோது, அப்பொழுதுதான் ரெயில் புறப்பட்டுப் போய்விட்டது. எனக்காக ஸ்டேஷன் மாஸ்டர் அன்போடு ஒரு நிமிட நேரம் வண்டியை நிறுத்தி வைத்திருந்திருக்கிறார். நான் வரவில்லை என்று தெரிந்ததும், உஷாராக என்னுடைய சாமான்களை ரெயிலிலிருந்து இறக்கி வைத்துவிடும்படியும் செய்திருக்கிறார்.

கெல்னர் கட்டடத்தில் ஓர் அறையை அமர்த்திக் கொண்டேன். என் வேலையை அப்பொழுதே ஆரம்பித்துவிடுவது என்று தீர்மானித்தேன். அலகாபாத்திலிருந்து பிரசுரமாகும் 'பயோனீர்' பத்திரிகையைக் குறித்து நான் அதிகமாகக் கேள்விப் பட்டிருந்தேன். இந்தியரின் தேசீயக் கோரிக்கைகளை எதிர்க்கும் பத்திரிகை அது என்றும் அறிந்துகொண்டிருந்தேன். அச்சமயம் ஸ்ரீ செஸ்னே (இளையவர்) அதன் ஆசிரியராக இருந்தார் என்று எனக்கு ஞாபகம். எல்லாக் கட்சியினரின் ஆதரவையும் பெற நான் விரும்பினேன். ஆகவே, ஸ்ரீ செஸ்னேக்கு ஒரு குறிப்பு அனுப்பினேன். அதில், எனக்கு ரெயில் தவறிவிட்ட விவரத்தைக் கூறினேன். மறுநாள் வண்டிக்கு நான் புறப்படுவதற்கு முடியும் வகையில், சந்தித்துப் பேச என்னை அனுமதிக்க வேண்டும் என்றும் அதில் கோரினேன். சந்தித்துப் பேச உடனே அனுமதித்தார்; மகிழ்ந்தேன். முக்கியமாக நான் கூறியதையெல்லாம் அவர் பொறுமையாகக் கேட்டுக் கொண்டதைக்

குறித்து, நான் அதிகச் சந்தோஷம் அடைந்தேன். நான் என்ன எழுதினாலும் அதைக் குறித்துத் தம் பத்திரிகையில் அபிப்பிராயம் எழுதுவதாகவும் கூறினார். அதோடு இன்னும் ஒன்றும் கூறினார். ஆப்பிரிக்காவில் குடியேறியிருக்கும் வெள்ளைக்காரர்களின் கருத்தையும் அறிந்து, அதற்குரிய மதிப்பையும் கொடுக்கத் தாம் கடமைப்பட்டிருப்பதால் இந்தியரின் கோரிக்கைகள் எல்லாவற்றையும் ஆதரிப்பதாகத் தாம் வாக்களிக்க முடியாது என்றார்.

“இப் பிரச்னையை நீங்கள் கவனித்து, அதைக் குறித்துப் பத்திரிகையில் விவாதிப்பதே போதும். நான் கேட்பதும், அடைய விரும்புவதும் எங்களுக்கு உரிய நியாயமான உரிமைகளை மாத்திரமே அன்றி வேறு எதையும் அல்ல” என்றேன்.

அன்றைய மீதிப் பொழுதை, ஊரைச் சுற்றிப் பார்ப்பதிலும், திரிவேணி சங்கமத்தின் அற்புதக் காட்சியைக் கண்டு ஆனந்திப்பதிலும் கழித்தேன். என்னுடைய வேலைத் திட்டத்தைக் குறித்தும் சிந்தித்தேன்.

எதிர்பாராத விதமாக நான் ‘பயோனீர்’ ஆசிரியரைச் சந்தித்துப் பேசியது, தொடர்ந்து நடந்த பல சம்பவங்களுக்கு அடிப்படை ஆயிற்று. இறுதியில் என்னை நேட்டாலில் அடித்துக் கொல்ல முயன்றதில் போய் இது முடிந்தது.

பம்பாயில் தங்காமல் நேரே ராஜ்கோட்டிற்குச் சென்றேன். அங்கே தென்னாப்பிரிக்க இந்தியர் நிலைமையைக் குறித்து, ஒரு துண்டுப் பிரசுரத்தை எழுதுவதற்கான ஏற்பாடுகளைச் செய்ய ஆரம்பித்தேன். அதை எழுதவும் அச்சிடவும் ஒரு மாதம் ஆயிற்று. அதற்குப் பச்சை நிற மேல் அட்டை போடப்பட்டது. ஆகவே, அது, ‘பச்சைத் துண்டுப் பிரசுரம்’ என்று வழங்கலாயிற்று. அதில், தென்னாப்பிரிக்க இந்தியரின் நிலையைக் குறித்து, வேண்டுமென்றே, அடக்கமாக, குறைத்தே கூறியிருந்தேன். முன்னால் நான் இரு துண்டுப் பிரசுரங்களை வெளியிட்டதாகக் கூறியிருக்கிறேன். அவற்றில் இருந்ததைவிட இதில் நிதானமான பாஷையையே உபயோகித்திருந்தேன். ஏனெனில், ஒரு விஷயத்தைத் தூரத்திலிருந்து கேள்விப்படும்போது உள்ளதையும்விடப் பெரியதாகவே அது தோன்றிவிடுகிறது என்பதை நான் அறிவேன்.

பத்தாயிரம் பிரதிகள் அச்சிட்டேன். இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலும் இருக்கும் பத்திரிகைகளுக்கும் தலைவர்களுக்கும் அதை அனுப்பினேன். அதைக் குறித்து முதலில் தலையங்கம் எழுதிய பத்திரிகை, ‘பயோனீர்’. அத் தலையங்கத்தின் சுருக்கத்தை ராய்ட்டர் செய்தி ஸ்தாபனம் இங்கிலாந்துக்குத் தந்தி மூலம் அனுப்பியது. அந்தச் சுருக்கத்திற்கு ஒரு சுருக்கத்தை ராய்ட்டரின் லண்டன் காரியாலயம் நேட்டாலுக்கு அனுப்பிற்று. அந்தத் தந்தி, அச்சில், மூன்று வரிக்குமேல் இல்லை. செய்தி, அவ்வளவு

சிறியதாக இருந்தாலும், நேட்டாலில் இந்தியர்கள் நடத்தப்படும் விதத்தைக் குறித்து, நான் கூறியதை அச் செய்தி மிகைப் படுத்திக் கூறுவதாக இருந்தது. மேலும், அச் செய்தி என் வார்த்தைகளைக் கொண்டு வரையப்பட்டதாகவும் இல்லை. நேட்டாலில் இதன் விளைவு என்னவாயிற்று என்பதைப் பிறகு கவனிப்போம். இதற்கு மத்தியில், முக்கியமான பத்திரிகைகள் எல்லாமே இப் பிரச்னையைக் குறித்து, விரிவாக அபிப்பிராயங்கள் கூறின.

இத் துண்டுப் பிரசுரங்களைத் தபாலில் அனுப்புவதற்குத் தயார் செய்வது சுலபமான வேலையே அல்ல. இவற்றைக் காகிதம் போட்டுச் சுற்றி அனுப்புவது போன்ற வேலைகளுக்குக் கூலி கொடுத்து ஆள் அமர்த்தினால் அதிகச் செலவு ஆகியிருக்கும். ஆகவே, மிக எளிதான உபாயம் ஒன்றைக் கண்டுபிடித்தேன். பக்கத்தில் இருந்த குழந்தைகளையெல்லாம் திரட்டினேன். பள்ளிக் கூடம் இல்லாதபோது காலையில் இரண்டு, மூன்று மணி நேர உழைப்பை வலிய அளிக்க முன்வருமாறு அவர்களைக் கேட்டுக் கொண்டேன். அப்படியே செய்ய, அவர்கள் மனம் உவந்து ஒப்புக் கொண்டார்கள். அவர்களை வாழ்த்தி, நான் சேர்த்து வைத்திருந்த பழைய தபால் ஸ்டாம்புகளை அவர்களுக்குப் பரிசாகக் கொடுப்பதாகவும் கூறினேன். குழந்தைகள் கொஞ்ச நேரத்தில் வேலையை முடித்துவிட்டார்கள். சிறு குழந்தைகளைத் தொண்டர்களாக உபயோகிப்பதில் இதுவே என் முதல் பரீட்சை. அக் குழந்தைகளில் இருவர் இன்று என் சக ஊழியர் களாக இருக்கின்றனர்.

அச் சமயம் பம்பாயில் பிளேக் நோய் பரவியது. இதனால், சுற்றுப்புறங்களில் எல்லாம் ஒரே பீதி ஏற்பட்டது. ராஜ்கோட் டிலும் அந்த நோய் பரவிவிடும் என்ற பயம் இருந்தது. சுகாதார இலாகாவுக்கு நானும் கொஞ்சம் உதவியாக இருக்கலாம் என்று எண்ணினேன். சேவை செய்யத் தயார் என்று அரசாங்கத் திற்கு அறிவித்தேன். அவர்களும் ஏற்றுக் கொண்டனர். அதன் பேரில் இது சம்பந்தமாகக் கவனிக்க நியமித்த ஒரு கமிட்டியில் என்னையும் சேர்த்தனர். கக்கூசுகளைச் சுத்தமாக வைத்திருக்க வேண்டும் என்று நான் முக்கியமாக வற்புறுத்தினேன். ஒவ் வொரு தெருவிலும் கக்கூசுகள் இருக்கும் நிலையைப் போய்ப் பார்வையிடுவது என்று கமிட்டி முடிவு செய்தது. தங்கள் கக்கூசுகளைப் போய்ப் பார்ப்பதை, ஏழைகள் ஆட்சேபிக்கவில்லை. நாங்கள் கூறிய யோசனைகளையும் அவர்கள் நிறைவேற்றிக் கக்கூசு களைச் சுத்தமாக வைத்தனர். ஆனால், பணக்காரர்கள் வீட்டுக் கக்கூசுகளைப் பார்க்க நாங்கள் சென்றபோது, அவர்களில் சிலர், நாங்கள் அவற்றைப் பார்க்க அனுமதிக்கக்கூட மறுத்துவிட்டனர். அப்படியிருக்க, நாங்கள் கூறிய யோசனையை அவர்கள் காது கொடுத்துக் கேட்டார்களா என்பதைப்பற்றிச் சொல்ல வேண்டிய தில்லை. பணக்காரர்கள் வீட்டுக் கக்கூசுகளே அதிக

ஆபாசமாக இருந்தன என்பது எங்கள் பொதுவான அனுபவம். அவை இருண்டிருந்தன; ஒரே துர்நாற்றம்; ஒரே ஆபாசம். புழுக்களும் நெளிந்துகொண் டிருந்தன. செய்யுமாறு நாங்கள் கூறிய அபிவிருத்திகள் மிகச் சுலபமானவை. அதாவது, கழிக்கும் மலம் தரையில் விழாதவாறு அதற்குத் தொட்டி வைக்குமாறு கூறினோம். மூத்திரமும் தரையில் விழுந்து, அந்த இடம் ஒரே ஈரம் ஆகிவிடாமல் அதையும் தொட்டியில் பிடிக்கும்படி சொன்னோம். கக்கூசுகளில் வெளிச்சமும் காற்றோட்டமும் இருப்பதற்காகவும், அவற்றைத் தோட்டி நன்றாகச் சுத்தம் செய்வதற்கு வசதியாக இருப்பதற்காகவும் வெளிச் சுவருக்கும் கக்கூசுக்கும் மத்தியில் இருக்கும் சிறு சிறு தடுப்புக்களையெல்லாம் இடித்து விடுமாறும் கேட்டுக் கொண்டோம். இந்தக் கடைசிச் சீர்திருத்தத்திற்குப் பணக்காரர்கள் ஏராளமான ஆட்சேபங்களைக் கூறினார்கள். அநேகர் நாங்கள் கூறியதைப் பின்பற்றி எதுவுமே செய்யவில்லை.

தீண்டாதார் குடியிருந்த வீடுகளையும் கமிட்டி போய்ப் பார்க்க வேண்டியிருந்தது. அங்கே என்னுடன் வருவதற்குக் கமிட்டி அங்கத்தினர்களில் ஒருவர் மாத்திரமே தயாராக இருந்தார். மற்றவர்களோ, அவ் வீடுகளுக்குப் போவது என்பதே மகா பாதகமான காரியம் என்று நினைத்தனர். அதிலும், அவர்களுடைய கக்கூசைப் போய்ப் பார்ப்பது, இன்னும் அதிக மோசமானது என்று எண்ணினர். ஆனால், அவ் வகுப்பினரின் இருப்பிடங்களைப் பார்த்ததும் நான் ஆச்சரியமும் மகிழ்ச்சியும் அடைந்தேன். அத்தகைய பகுதிகளுக்கு நான் சென்றதே அது தான் முதல் தடவை. அங்கிருந்த ஆண்களும் பெண்களும் நாங்கள் வந்ததைப் பார்த்து, ஆச்சரியம் அடைந்தனர். அவர்களுடைய கக்கூசுகளைப் பார்க்க வேண்டும் என்று நான் கேட்டேன். "எங்களுக்கும் கக்கூசுகளா!" என்று அவர்கள் வியந்தார்கள். பிறகு, "வெளியே திறப்பான இடங்களில் நாங்கள் போய் மலஜலம் கழித்துவிடுவோம். உங்களைப் போன்ற பெரிய மனிதர்களுக்கல்லவா கக்கூசு!" என்றனர்.

"சரி. அப்படியானால் உங்கள் வீட்டுக்குள் வந்து, நாங்கள் பார்ப்பதைப்பற்றி உங்களுக்கு ஆட்சேபம் இல்லையல்லவா?" என்று கேட்டேன்.

"நன்றாக வாருங்கள்; வந்து பாருங்கள், ஐயா. எங்கள் வீடுகளின் ஒவ்வொரு மூலை முடுக்கையும் நீங்கள் பார்க்கலாம். எங்கள் வீடுகள் வீடுகளா? அவை வளைகள்!" என்றனர்.

உள்ளே போனேன். வெளிப்புறத்தில் இருப்பதைப்போலவே உள்ளேயும் சுத்தமாக இருந்ததைக் கண்டு ஆனந்தம் அடைந்தேன். வாசல்களையும் நன்றாக வைத்திருந்தனர். தரையைச் சாணம் கொண்டு அழகாக மெழுகியிருந்தனர். அங்கே இருந்த பானைகளும் தட்டுகளும் கொஞ்சந்தான் என்றாலும் அவை சுத்த

மாகவும் பளபளப்பாகவும் இருந்தன. அப்பகுதியில் பிளேக் நோய் பரவிவிடும் என்ற பயமே இல்லை.

மேல்சாதியினர் வசிக்கும் பகுதியில் நாங்கள் ஒரு கக்கூசைப் பார்த்தோம். அதைப்பற்றிக் கொஞ்சம் சொல்லாமல் இருப்பதற்கு இல்லை. வீட்டின் ஒவ்வோர் அறைக்கும் ஒரு ஜலதாரை இருந்தது. தண்ணீர் விடவும் மூத்திரம் கழிக்கவும் அந்த ஜலதாரை உபயோகிக்கப்பட்டது. அதனால் வீடு முழுவதுமே துர்நாற்றம் இருக்கும். நாங்கள் பார்த்த வீடுகள் ஒன்றில், மாடியிலிருந்த ஒரு படுக்கை அறையையும் பார்த்தோம். அதிலிருந்த ஜலதாரை, மலஜலம் இரண்டும் கழிக்கக் கக்கூசாக உபயோகிக்கப்பட்டு வந்தது. அந்த ஜலதாரை கீழே போக ஒரு குழாயும் இருந்தது. அந்த அறையிலிருந்த துர்நாற்றத்தைச் சகித்துக்கொண்டு அங்கே நிற்கவே முடியவில்லை. அங்கே எப்படித்தான் படுத்துத் தூங்குகிறார்கள் என்பதை வாசகர்களே சிந்தித்துப் பார்த்துக்கொள்ள விட்டுவிடுகிறேன்.

வைஷ்ணவக் கோயிலுக்கும் கமிட்டி போய்ப் பார்த்தது. அந்தக் கோயிலின் அர்ச்சகர் எங்கள் குடும்பத்திற்கு வேண்டியவர். ஆகவே, எல்லாவற்றையும் பார்த்து, நாங்கள் செய்ய விரும்பும் சீர்திருத்தங்களைக் கூறலாம் என்று அவர் ஒப்புக்கொண்டார். அக்கோயிலின் ஒரு பகுதியை அவர்கூடப் பார்த்ததே இல்லை. அந்த இடத்தில்தான் குப்பை கூளங்களையும் எச்சில் இலைகளையும் சுவரைத் தாண்டி வீசிப் போட்டுவிடுவது வழக்கம். காக்கைகளும் பருந்துகளும் அங்கே எப்பொழுதும் இருந்து வந்தன. கக்கூசுகளும் மிக ஆபாசமாக இருந்தன. நாங்கள் கூறிய யோசனைகளை எவ்வளவு தூரம் அந்த அர்ச்சகர் நிறைவேற்றிவைத்தார் என்பதைப் பார்க்க நான் அதிக நாட்கள் ராஜ்கோட்டில் இல்லை.

கடவுளை வழிபடும் இடங்களில்கூட அவ்வளவு அசுத்தங்கள் இருப்பதைக் கண்டு மனவேதனைப்பட்டேன். தெய்விகமானது என்று கருதப்படும் ஓர் இடத்தில் சுகாதார விதிகள் கவனமாக நிறைவேற்றப்பட் டிருக்கும் என்றே யாரும் எதிர்பார்ப்பார்கள். அகம், புறம் ஆகிய இரு தூய்மைகளும் இருக்க வேண்டியது முக்கியம் என்று ஸ்மிருதி கர்த்தாக்கள் மிகவும் வற்புறுத்திக் கூறியிருக்கிறார்கள் என்பதை அப்பொழுதே நான் அறிந்திருந்தேன்.

## 26

# இரு ஆர்வங்கள்

பிரிட்டிஷ் அரசியல் முறைகளிடம் எனக்கு இருந்த அவ்வளவு விசுவாசத்தைப்போல் வேறு யாருக்கும் இருந்ததாக நான் அறிந்ததில்லை. சத்தியத்தினிடம் எனக்கு இருந்த பற்றே இத்

தகைய விசுவாசத்திற்கு அடிப்படையாக இருந்தது என்பதை நான் அப்பொழுது காண முடிந்தது. விசுவாசமோ, வேறு ஒரு நற்குணமோ என்னிடம் இருப்பதாக நடிப்பது என்பது மாத்திரம் என்னுல் என்றுமே ஆகாது; நேட்டாலில் நான் போகும் ஒவ்வொரு பொதுக்கூட்டத்திலும் ராஜ வாழ்த்துக் கீதம் பாடப் படும். அதைப் பாடுவதில் நானும் கலந்துகொள்ள வேண்டும் என்று அப்பொழுது நான் எண்ணினேன். பிரிட்டிஷ் ஆட்சியில் இருக்கும் குறைகளை நான் அறியவில்லை என்பதல்ல. ஆனல், மொத்தத்தில் பார்த்தால் அந்த ஆட்சி, ஏற்றுக்கொள்ளக் கூடியதே என்று நினைத்தேன். பொதுவாக, பிரிட்டிஷ் ஆட்சி, ஆளப்படுவோருக்கு நன்மையானது என்றும் அந்த நாட்களில் நம்பினேன்.

தென்னுப்பிரிக்காவில் நிறவெறியைக் கண்டேன். ஆனல், அது, பிரிட்டிஷ் பாரம்பரிய குணத்திற்கு மாறுபட்டது என்று கருதினேன். அது தாற்காலிகமானது, தென்னுப்பிரிக்காவில் மாத்திரம் இருப்பது என்றும் நம்பினேன். ஆகையால், ஆங்கிலே யருடன் போட்டி போட்டுக்கொண்டு, மன்னரிடம் விசுவாசம் காட்டினேன். ராஜ வாழ்த்துக் கீதத்தின் மெட்டைக் கவனத் துடனும் விடாமுயற்சியுடனும் கற்றுக்கொண்டேன். அக் கீதம் பாடப்படும் போதெல்லாம் நானும் சேர்ந்து பாடி வந்தேன். ஆர்ப்பாட்டமும் வெளிப்பகட்டும் இல்லாமல் ராஜவிசுவாசத்தைத் தெரிவிக்கும் சமயம் வந்தபோதெல்லாம் அதில் நானும் தயங்காது பங்குகொண்டேன்.

இந்த விசுவாசத்தை என் வாழ்க்கையில் என்றுமே நான் பயன்படுத்திக் கொண்டதில்லை. அதைக் கொண்டு சுயலாபத்தை அடைவதற்கு நான் என்றும் நாடியதும் இல்லை. விசுவாசம் காட்ட வேண்டியது என் அளவில் ஒரு கடமையாகவே இருந் தது. வெகுமதி எதையும் எதிர்பாராமல் அதை நான் காட்டி வந்தேன்.

நான் இந்தியாவுக்கு வந்தபோது, விக்டோரியா மகாராணி யின் வைர விழாவைக் கொண்டாடுவதற்கு ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. ராஜ்கோட்டில் இதற்காக அமைக்கப்பட் டிருந்த கமிட்டியில் சேருமாறு என்னை அழைத்தார்கள். அழைப்பை ஏற்றுக்கொண்டேன். ஆனல், கொண்டாட்டம் பெரும்பாலும் பகட்டாக இருக்குமோ என்ற சந்தேகம் எனக்கு இருந்தது. வெளிவேஷமாகவே காரியங்கள் நடந்ததைக் கண்டு, மனவருத்தம் அடைந்தேன். ‘கமிட்டியில் நான் இருக்க வேண் டுமா?’ என்று என்னை நானே கேட்டுக்கொள்ள ஆரம்பித்தேன். ஆனல், முடிவாக, நான் செய்ய வேண்டியதைச் செய்துகொண்டு போவது என்று தீர்மானித்துக்கொண்டேன்.

விழாவை ஒட்டிச் செய்யப்பட்ட யோசனைகளில் ஒன்று, மரம் நடுவது என்பது. அநேகர் இதைப் பகட்டுக்காகவும்,

அதிகாரிகளைத் திருப்தி செய்யவேண்டும் என்பதற்காகவும் செய்ததைக் கண்டேன். மரம் நடுவது, கட்டாயமானது அல்ல என்றும், அது ஒரு யோசனையே என்றும் அவர்களிடம் நான் எவ்வளவோ வாதாடிப் பார்த்தேன். செய்வதானால் சரியாகச் செய்ய வேண்டும்; இல்லாவிட்டால் சும்மா இருந்து விடவேண்டும். என் கருத்தைக்கேட்டு, அவர்கள் நகைத்தார்கள் என்றே எனக்கு ஞாபகம். என் பங்குக்கு ஏற்பட்ட மரத்தை நான் உண்மையான சிரத்தையுடனேயே நட்டு, ஜாக்கிரதையாகத் தண்ணீர் ஊற்றியும் வளர்த்தேன் என்பது எனக்கு நினைவிருக்கிறது.

அதே போல என் குடும்பத்தில் இருந்த குழந்தைகளுக்கு ராஜ வாழ்த்துக் கீதம் பாடக் கற்றுக் கொடுத்தேன். உள்ளூர்ப் போதனா முறைக் கல்லூரி மாணவர்களுக்கும் அதை நான் சொல்லிக்கொடுத்தது நினைவிருக்கிறது. ஆனால், அப்படி நான் சொல்லிக்கொடுத்தது ஜுபிளி சமயத்திலா அல்லது இந்தியாவின் சக்கரவர்த்தியாக ஏழாம் எட்வர்டுக்கு முடி சூட்டு விழா நடந்த போதா என்பது எனக்கு ஞாபகம் இல்லை. பிற்காலத்தில் அப்பாடலின் அடிகள் எனக்கு அருவருப்பை உண்டாக்கின. அகிம்சையைப் பற்றிய என் எண்ணங்கள் வளர்ச்சியடையவே, நான் எண்ணுவதிலும் பேசுவதிலும் அதிக எச்சரிக்கையுடன் இருக்க ஆரம்பித்தேன்.

‘அவள் விரோதிகளைச் சிதறடித்து
அவர்கள் வீழ்ச்சியடையச் செய்யும்;
அவர்களது ராஜ்யம் குழப்பமடைந்து
வஞ்சகமான அவர்கள் தந்திரங்கள் நிறைவேறாது செய்யும்.’

முக்கியமாக அந்தக் கீதத்தின் மேற்கண்ட வரிகளே அகிம்சையைப்பற்றிய என் உணர்ச்சிக்கு முரணாக இருந்தன. என் அபிப்பிராயத்தை டாக்டர் பூத்திடம் தெரிவித்தேன். அகிம்சையில் நம்பிக்கையுள்ள ஒருவர், அந்த வரிகளைப் பாடுவது சரியல்ல என்பதை அவரும் ஒப்புக்கொண்டார். ‘விரோதிகள்’ என்று சொல்லப்படுகிறவர்கள், ‘வஞ்சகர்க’ளாகவும் இருப்பார்கள் என்று நாம் எப்படி எண்ணிக்கொள்வது? விரோதிகள் என்பதனால், அவர்கள் கட்டாயம் தவறு செய்பவர்களாகவும் இருக்க வேண்டுமா? ஆண்டவனிடமிருந்து நாம் நீதியையே கேட்கலாம். டாக்டர் பூத் என் உணர்ச்சிகளைப் பூரணமாக அங்கீகரித்தார். தமது பிரார்த்தனைக் கூட்டத்திற்கு என்று புதியதொரு ராஜ வாழ்த்துக் கீதத்தையும் இயற்றினார். டாக்டர் பூத்தைக் குறித்து மேற்கொண்டும் பிறகு கவனிப்போம்.

ராஜவிசுவாசத்தைப்போலவே, நோயுற்றிருப்போருக்குப் பணிவிடை செய்ய வேண்டும் என்ற ஆர்வமும் என் சுபாவத்திலேயே ஆழ வேர்விட்டிருந்தது. நண்பர்களாக இருக்கட்டும்.

முன்பின் தெரியாதவர்களாக இருக்கட்டும், பிறருக்குப் பணி விடை செய்வதில் எனக்கு ஆசை அதிகம்.

தென்னுப்பிரிக்க இந்தியர் சம்பந்தமான துண்டுப் பிரசுர வேலையில் நான் ராஜ்கோட்டில் தீவிரமாக ஈடுபட்டிருந்த சமயம், பம்பாய்க்கு உடனே போய்த் திரும்ப வேண்டிய சந்தர்ப்பம் நேரிட்டது. தென்னுப்பிரிக்க இந்தியர் விஷயமாக நகரங்களில் பொதுக்கூட்டங்களை நடத்திப் பொதுமக்கள் அந்த நிலைமையை அறியும்படி செய்ய வேண்டும் என்பது என் நோக்கம். இதற்கு முதல் நகரமாகப் பம்பாயைத் தேர்ந்தெடுத்தேன். முதலில், நீதிபதி ரானடேயைச்* சந்தித்தேன். நான் சொன்னதை அவர் கவனமாகக் கேட்டுக்கொண்டார். ஸர் பிரோஸ்ஷா மேத் தாவைச் சந்திக்குமாறு கூறினர். அடுத்தபடியாக நான் சந் தித்த நீதிபதியான பத்ருதீன் தயாப்ஜியும் அதே யோசனைதான் கூறினர். "நீதிபதி ரானடேயும் நானும் உங்களுக்கு அதிகமாக எந்த உதவியும் செய்வதற்கு இல்லை. எங்கள் நிலைமையை நீங்கள் அறிவீர்கள். பொது விஷயங்களில் நாங்கள் தீவிரப் பங்கு எடுத்துக்கொள்ளுவதற்கில்லை. ஆனால், எங்கள் ஆதரவு உங்களுக்கு உண்டு. உங்களுக்குச் சரியானபடி வழிகாட்டக் கூடியவர், ஸர் பிரோஸ்ஷா மேத்தாவே" என்ருர்.

நிச்சயமாக நானும் ஸர் பிரோஸ்ஷா மேத்தாவைப் பார்க்க வேண்டும் என்று தான் இருந்தேன். அவர் யோசனைப்படி நடந்து கொள்ளுமாறு இப் பெரியவர்கள் எனக்குப் புத்திமதி கூறியது, பொதுமக்களிடையே ஸர் பிரோஸ்ஷாவுக்கு இருந்த மகத்தான செல்வாக்கை நான் நன்ருக அறிந்துகொள்ளும்படி செய்தது. பிறகு அவரிடம் சென்றேன். அவர் முன்னிலையில் பயத்தால் திகைத்து நின்றுவிடவும் நான் தயாராய் இருந்தேன். பொதுமக் கள் அவருக்குக் கொடுத்திருந்த பட்டங்களைக் கேள்விப்பட்டிருக் கிறேன். 'பம்பாயின் சிங்க'த்தை, 'மாகாணத்தின் முடி சூடா மன்ன'ரை நான் பார்க்கவேண்டி யிருக்கிறது என்பதையும் அறிவேன். ஆனல், 'மன்னர்' முன்னெச்சரிக்கையுடன் என்னை அடக்கிவிடவில்லை. அன்பு மிக்க ஒரு தந்தை, தம்முடைய வயது வந்த மகனை எவ்விதம் சந்திப்பாரோ அவ்வாறே என்னை அவர் சந்தித்தார். நான் அவரைச் சந்தித்தது, ஹைகோர்ட்டில். அவர் காரியாலயத்தில், பல நண்பர்களும் சீடர்களும் அவரைச் சூழ்ந்து

---

* ரானடே: கோகலேயின் குருநாதரான 'ரானடே, பம்பாய் உயர்நீதி மன்றத் தில் நீதிபதி பதவி வகித்தவர். இவரிடம் கோகலே 14 ஆண்டுகள் குருகுலவாசம் செய்து, படிக்க வேண்டிய நூல்களைப் படித்து உலக விவகாரங்களையும் அறிந்து கொண் டார். "ரானடே நாட்டிற்கு விட்டுப்போன பொக்கிஷம் கோகலே" என்று கூறுவ துண்டு. முன்னுக்கு வரக்கூடிய இளைஞர்களைத் தேர்ந்தெடுப்பதிலும், அவர்களது அறிவை நாட்டுப் பணிக்குப் பண்படுத்துவதிலும் வல்லவர் என்று மகாகனம் சீனிவாச சாஸ்திரியார் ரானடேயைப் பற்றிக் குறிப்பிடுகிருர். இவர் நீதிபதியாக இருந்தும் காங்கிரஸின் காரியங்களில் அக்கறை கொண்டு உதவி செய்து வந்தார்.

கொண்டிருந்தனர். ஸ்ரீ டி. ஈ. வாச்சாவும்* ஸ்ரீ காமாவும் அங்கே இருந்தனர். ஸர் பிரோஸ்ஷா மேத்தா, அவர்களுக்கு என்னை அறிமுகம் செய்து வைத்தார். ஸ்ரீ வாச்சாவைக் குறித்து முன்பே கேள்விப்பட் டிருக்கிறேன். ஸர் பிரோஸ்ஷாவுக்கு அவர் வலக் கரம் போன்றவர் என்று கருதப்பட்டு வந்தார். புள்ளி விவரங் களில் அவர் பெரிய நிபுணர் என்று ஸ்ரீ வீரசந்திர காந்தி எனக் குச் சொல்லியிருக்கிறார். "காந்தி, நாம் திரும்பவும் சந்திக்க வேண்டும்" என்றார் வாச்சா.

இவ்விதம் அறிமுகம் செய்துவைத்த தெல்லாம் இரண்டே நிமிஷங்களில் முடிந்துவிட்டது. நான் கூறியதை யெல்லாம் ஸர் பிரோஸ்ஷா கவனமாகக் கேட்டுக்கொண்டார். நீதிபதிகள் ரானடேயையும், தயாப்ஜியையும் நான் பார்த்தேன் என்றும் சொன்னேன். "காந்தி, உமக்கு நான் உதவி செய்தாக வேண்டும் என்பதைக் காண்கிறேன். இங்கே நான் ஒரு பொதுக்கூட்டத் தைக் கூட்டவேண்டும்" என்று சொல்லிவிட்டுத் தம் காரிய தரிசி ஸ்ரீ முன்ஷியைப் பார்த்து, கூட்டத்திற்குத் தேதியை நிச் சயிக்கும்படி கூறினார். தேதியும் முடிவாயிற்று. பொதுக்கூட் டத்திற்கு முதல் நாள், தம்மை வந்து பார்க்கும்படி கூறி, எனக்கு அவர் விடை கொடுத்து அனுப்பினார். இந்தச் சந்திப்பு அவரிடம் எனக்கிருந்த பயத்தைப் போக்கிவிட்டது. குதூகலத்துடன் வீடு திரும்பினேன்.

இச்சமயம் பம்பாயில் இருந்தபோது அங்கே நோயுற்றிருந்த என் மைத்துனரைப் பார்க்கப்போனேன். அவர் வசதி யுடையவர் அல்ல. என் சகோதரி (அவர் மனைவி) யாலும் அவருக்குப் பணிவிடை செய்ய முடியவில்லை. நோயோ கடுமையானது. அவரை ராஜ்கோட்டுக்கு அழைத்துக்கொண்டு போய்விடுவதாகக் கூறினேன். அவரும் ஒப்புக்கொண்டார். எனவே, என் சகோதரியுடனும் அவர் கணவரோடும் நான் வீடு திரும்பினேன். நான் எதிர்பார்த்ததைவிட அவருடைய நோய் அதிக நாள் நீடித்திருந்தது. என் மைத்துனரை என் அறையில் தங்கச் செய்து, இரவும் பகலும் அவருடனேயே இருந்தேன். இரவில் பாதி நேரம் நான் விழித்திருக்க வேண்டி யிருந்தது. அவருக்குப் பணிவிடை செய்துகொண்டே என் தென்னாப்பிரிக்க வேலைகள் சிலவற்றையும் நான் செய்யவேண்டி யிருந்தது. முடிவாக நோயாளி இறந்து விட்டார். ஆனால்,

---

* ஸ்ரீ டி. ஈ. வாச்சா : பார்ஸி சமூகத்தில் பிறந்த மகாபண்டிதர். முதல் காங்கிரஸி லேயே இவரது பேச்சுத் திறன் பரிமளித்தது. 11-வது காங்கிரஸிற்கும் கல்கத்தாவில், 1901-இல் நடந்த பதினேழாவது காங்கிரஸிற்கும் தலைமை தாங்கினார். 'அனல் கக்கும் பேச்சாளர்' என அச்சமயம் இவர் புகழ் பெற்றார். 1896-இலிருந்து 1913 வரை காங்கிர ஸின் பொதுக் காரியதரிசியாக இருந்தார். 1915-இல் பம்பாயில் நடந்த காங்கிரஸின் வரவேற்புக் கமிட்டித் தலைவராயிருந்தார். இவ்வளவு ஆவேசப் பேச்சாளரா யிருந்தவர் பின்னர் பிரிட்டிஷ் அரசாங்கத்தாரிடம், 'ஸர்' பட்டம் பெற்று மத்திய சட்ட சபையில் நியமன அங்கத்தினரா யிருந்தார்.

அவருடைய கடைசி நாட்களில் அவருக்குப் பணிவிடை செய்யும் வாய்ப்புக் கிடைத்தது, எனக்குப் பெரிய ஆறுதலாக இருந்தது.

நோயாளிகளுக்குப் பணிவிடை செய்வதில் எனக்கு இருந்த விருப்பு, நாளாவட்டத்தில் அடங்காத அவாவாக வளர்ந்து விட்டது. இதன் பலனாக நான் என்னுடைய மற்ற வேலைகளைப் பல சமயங்களில் சரிவரக் கவனிப்பதில்லை. சில சமயம் இவ்விதப் பணிவிடை செய்வதில் என் மனைவிக்கும் வேலை கொடுத்து, வீட்டிலிருந்த எல்லோரையுமே அவ்வேலையில் ஈடுபடுத்தி விடுவேன்.

ஒருவர் இத்தகைய சேவையைச் செய்வதில் இன்பம் கொண்டாலன்றி இதைச் செய்வதில் அர்த்தமே இல்லை. வெளிப்பகட்டுக்காகவோ, பொதுஜன அபிப்பிராயத்திற்குப் பயந்தோ இதைச் செய்வதாயின், அப்படிச் செய்பவரின் ஆன்ம வளர்ச்சியை அது குன்றச் செய்து, உணர்ச்சியையும் நசுக்கிவிடுகிறது. சந்தோஷம் இல்லாமல் செய்யும் சேவையினால் செய்கிறவருக்கும் நன்மை இல்லை; சேவை பெறுகிறவருக்கும் நன்மை இல்லை. மகிழ்ந்து செய்யும் சேவையுடன் ஒப்பிட்டால், மற்றெல்லா இன்பங்களும் உடைமைகளும் பயனற்றவை என்ற வகையில் மங்கிப் போகின்றன.

## 27

## பம்பாய்க் கூட்டம்

என் மைத்துனர் இறந்த அன்றே பொதுக்கூட்டத்திற்காக நான் பம்பாய் போக வேண்டியிருந்தது. நான் அங்கே செய்ய வேண்டிய பிரசங்கத்தைக் குறித்துச் சிந்திக்கக்கூட எனக்கு அவகாசம் இல்லை. இரவும் பகலும் கவலையுடன் விழித்திருக்க நேர்ந்ததால், நான் களைத்துப் போனேன். தொண்டையும் கம்மிப் போயிருந்தது. என்றாலும், கடவுளிடமே முழு நம்பிக்கையையும் வைத்து, நான் பம்பாய்க்குப் போனேன். என் பிரசங்கத்தை முன்னாலேயே எழுதவேண்டி யிருக்கும் என்று நான் கனவிலும் எண்ணவில்லை.

ஸர் பிரோஸ்ஷா கூறியிருந்தபடி, பொதுக்கூட்டம் நடப்பதற்கு முதல் நாள் மாலை 5 மணிக்கு, அவர் காரியாலயத்திற்குப் போனேன்.

“காந்தி, உமது பிரசங்கம் தயாராக இருக்கிறதா?” என்று அவர் என்னைக் கேட்டார்.

“இல்லை, ஐயா. ஞாபகத்தில் இருந்தே கூட்டத்தில் பேசி விடலாம் என்று இருக்கிறேன்” என்று நான் நடுங்கிக்கொண்டே சொன்னேன்.

"பம்பாயில் அது சரிப்படாது. இங்கே நிருபர்கள், பத்திரிகைக்குச் செய்தி அனுப்புவது மோசமாக இருக்கிறது. இந்தக் கூட்டத்தினுல் நாம் பயனடைய வேண்டுமாயின், உமது பிரசங்கத்தை நீர் எழுதிவிட வேண்டும். அதோடு நாளை விடிவதற்குள் அதை அச்சிட்டும் விடவேண்டும். இதைச் செய்துவிட உம்மால் முடியும் என்றே நம்புகிறேன்" என்ருர்.

எனக்கு ஒரே நடுக்கம் எடுத்துவிட்டது. என்ருலும் முயலுவதாகச் சொன்னேன்.

"அப்படியானுல், கையெழுத்துப் பிரதியை வாங்கிக்கொள்ள ஸ்ரீ முன்ஷி உம்மிடம் எந்த நேரத்திற்கு வரவேண்டும் என்பதைச் சொல்லும்" என்ருர்.

"இரவு பதினெரு மணிக்கு" என்றேன்.

அடுத்த நாள் கூட்டத்திற்குப் போனதும், ஸர் பிரோஸ்ஷா கூறிய யோசனை, எவ்வளவு புத்திசாலித்தனமானது என்பதைக் கண்டுகொண்டேன். ஸர் கோவாஸ்ஜி ஜஹாங்கீர் இன்ஸ்டிட்யூட் மண்டபத்தில் பொதுக்கூட்டம் நடந்தது. ஒரு கூட்டத்தில் ஸர் பிரோஸ்ஷா மேத்தா பேசுகிருர் என்ருல் எப்பொழுதுமே மண்டபம் நிறைந்துவிடும். அவர் பிரசங்கத்தைக் கேட்கவேண்டும் என்ற ஆர்வத்தில், முக்கியமாக மாணவர்கள், எள் விழவும் இடமின்றி வந்து கூடிவிடுவார்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். என் அனுபவத்தில் அப்படிப்பட்ட முதல் கூட்டம் இதுதான். நான் பேசுவது, சிலருக்கு மாத்திரமே கேட்கும் என்பதைக் கண்டேன். என் பிரசங்கத்தைப் படிக்க ஆரம்பித்ததுமே என் உடம்பெல்லாம் நடுங்கிற்று. உரக்க, இன்னும் கொஞ்சம் உரக்கப் பேசும்படி கூறி, ஸர் பிரோஸ்ஷா தொடர்ந்து என்னை உற்சாகப்படுத்திக்கொண்டே இருந்தார். அது என்னை உற்சாகப்படுத்துவதற்குப் பதிலாக, என் தொனி மேலும் மேலும் குறைந்துகொண்டு போகும்படியே செய்தது என்பது என் ஞாபகம்.

எனது பழைய நண்பர் ஸ்ரீ கேசவ ராவ் தேஷ்பாண்டே என்னைக் காப்பாற்ற வந்தார். என் பிரசங்கத்தை அவர் கையில் கொடுத்துவிட்டேன். அவர் பேச்சுத் தொனிதான் ஏற்ற தொனி. ஆனுல், கூடியிருந்தவர்களோ, அவர் பேச்சைக் கேட்க மறுத்துவிட்டனர். 'வாச்சா!' 'வாச்சா!' என்ற முழக்கம் எங்கும் எழுந்தது. ஆகவே, ஸ்ரீ வாச்சா எழுந்து என் பிரசங்கத்தைப் படித்தார். அற்புதமான பலனும் ஏற்பட்டது. கூட்டத்தில் இருந்தவர்கள் முற்றும் அமைதியோடு இருந்து, பிரசங்கத்தைக் கேட்டார்கள். அவசியமான இடங்களில் கரகோஷமும், 'வெட்கம்!' என்ற முழக்கமும் செய்தார்கள். இது என் உள்ளத்துக்குக் குதூகலம் அளித்தது.

பிரசங்கம் ஸர் பிரோஸ்ஷாவுக்குப் பிடித்திருந்தது. நான் மட்டற்ற மகிழ்ச்சி யடைந்தேன்.

ஸ்ரீ தேஷ்பாண்டே, ஒரு பார்ஸி நண்பர் ஆகியவர்களின் ஆதரவை இக்கூட்டம் எனக்குத் தேடித் தந்தது. அந்தப் பார்ஸி நண்பர் இன்று உயர்தர அரசாங்க அதிகாரியாக இருப்பதால் அவர் பெயரைக் கூற நான் தயங்குகிறேன். இருவரும் என்னுடன் தென்னாப்பிரிக்காவுக்கு வர முடிவு செய்திருப்பதாக என்னிடம் தெரிவித்தனர். அப்பொழுது ஸ்மால்காஸ் கோர்ட்டு நீதிபதியாக இருந்த ஸ்ரீ சி. எம். குர்ஸேத்ஜி, அந்தப் பார்ஸி நண்பருக்குக் கல்யாணம் செய்துவிடத் திட்டம் போட்டிருந்தார். ஆகவே, அவர் பார்ஸி நண்பரைத் தமது தீர்மானத்தை மாற்றிக் கொள்ளும்படி செய்துவிட்டார். 'கல்யாணமா, தென்னாப்பிரிக்காவுக்குப் போவதா?'—இந்த இரண்டில் ஒன்றை அவர் தீர்மானிக்க வேண்டிய தாயிற்று. அவர் கல்யாணத்தையே ஏற்றுக்கொண்டார். ஆனால், இவ்விதம் அவர் தீர்மானத்தைக் கைவிட்டதற்காக, பிற்காலத்தில் அச் சமூகத்தைச் சேர்ந்த பார்ஸி ருஸ்தம்ஜி பரிகாரம் செய்துவிட்டார். அநேக பார்ஸிப் பெண்கள், கதர் வேலைக்குத் தங்களை அர்ப்பணம் செய்துகொண்டதன் மூலம், அந்தப் பார்ஸி நண்பர் உறுதியை மீறுவதற்குக் காரணமாக இருந்த அவர் மனைவிக்காகப் பரிகாரம் செய்துவிட்டனர். ஆகையால், அத் தம்பதிகளுக்குச் சந்தோஷமாக நான் மன்னிப்பு அளித்துவிட்டேன். ஸ்ரீ தேஷ்பாண்டேக்குக் கல்யாண ஆசை எதுவும் இல்லை. என்றாலும், அவராலும் வர முடியவில்லை. அவர் அப்பொழுது, தம் வாக்குறுதியை மீறியதற்கு, இப்பொழுது தக்க பிராயச்சித்தங்களைச் செய்துகொண்டு வருகிறார். நான் தென்னாப்பிரிக்காவுக்குத் திரும்பிப் போனபோது ஜான்ஸிபாரில் தயாப்ஜி குடும்பத்தைச் சேர்ந்த ஒருவரைச் சந்தித்தேன். என்னுடன் வந்து, எனக்கு உதவி செய்வதாக அவரும் வாக்களித்தார். ஆனால், அவர் வரவே இல்லை. அந்தக் குற்றத்திற்கு ஸ்ரீ அப்பாஸ் தயாப்ஜி, இப்பொழுது பரிகாரம் தேடி வருகிறார். இவ்விதம் சில பாரிஸ்டர்கள் தென்னாப்பிரிக்காவுக்குப் போகும்படி செய்ய நான் செய்த மூன்று முயற்சிகளும் பலன் அளிக்கவில்லை.

இது சம்பந்தமாக ஸ்ரீ பேஸ்தன்ஜி பாத்ஷாவின் நினைவு எனக்கு இருக்கிறது. நான் இங்கிலாந்தில் இருந்த காலம் முதற்கொண்டு அவரிடம் நட்புடன் இருந்தேன். லண்டனில் ஒரு சைவ உணவு விடுதியில் அவரை முதல் முதலில் சந்தித்தேன். அவருடைய சகோதரர் ஸ்ரீ பர்ஜோர்ஜி பாத்ஷா ஒரு 'கிறுக்கர்' என்று பெயர் பெற்றிருந்ததைக் கொண்டு, அவரைக் குறித்தும் எனக்குத் தெரியும். நான் அவரைப் பார்த்ததே இல்லை. அவர் விசித்திரப் போக்குடையவர் என்று நண்பர்கள் சொன்னார்கள். குதிரைகளிடம் இரக்கப்பட்டு அவர் (குதிரை பூட்டிய) டிராம் வண்டிகளில் ஏறுவதில்லை. அவருக்கு ஞாபக சக்தி அபாரமாக இருந்தும், பரீட்சை எழுதிப் பட்டங்களைப் பெற மறுத்துவிட்டார். சுயேச்சையான மனப்போக்கை வளர்த்துக்கொண்டிருந்தார். பார்ஸி வகுப்பினராக இருந்தும் அவர் சைவ

உணவே சாப்பிடுவார். பேஸ்தன்ஜிக்கு இத்தகைய கியாதி இல்லே. ஆனல், அவரது புலமைக்கு லண்டனிலும் பிராபல்யம் இருந்தது. எங்கள் இருவருக்கும் இருந்த ஒற்றுமை சைவ உண வில்தான். புலமையில் அவரை நெருங்குவ தென்பது என் சக்திக்கு அப்பாற்பட்டது.

அவரை நான் பம்பாயில் மீண்டும் சந்தித்தேன். அவர் ஹைகோர்ட்டின் பிரதம குமாஸ்தாவாக வேலே பார்த்து வந்தார். நான் அவரைச் சந்தித்தபோது, அவர் உயர்தரக் குஜராத்தி அகராதி ஒன்று தயாரிக்கும் வேலேயில் ஈடுபட்டிருந்தார். என் தென்னுப்பிரிக்க வேலேயில் எனக்கு உதவி செய்யுமாறு நான் கேட்காத நண்பர் இல்லே. பேஸ்தன்ஜி பாத்ஷா எனக்கு உதவிசெய்ய மறுத்ததோடல்லாமல், இனி தென்னுப்பிரிக்கா வுக்குத் திரும்ப வேண்டாம் என்று எனக்குப் புத்திமதியும் சொன்னர்.

அவர் கூறியதாவது: "உமக்கு உதவி செய்வது சாத்தியமில்லே. நீர் தென்னுப்பிரிக்காவுக்குப் போவது என்பதுகூட எனக்குப் பிடிக்கவில்லே. செய்வதற்கு நம் நாட்டில் வேலேயே இல்லேயா? இப்பொழுது பாரும், நம் மொழிக்குச் செய்ய வேண்டியதே எவ்வளவோ இருக்கிறது. விஞ்ஞான சொற்களே நம் மொழியில் நான் கண்டுபிடிக்க வேண்டியிருக்கிறது. ஆனல், செய்யவேண்டியிருக்கும் வேலேயில் இது ஒரு சிறு பகுதியே. நாட்டில் இருக்கும் வறுமையை எண்ணிப் பாரும். தென்னுப்பிரிக்காவில் இருக்கும் நம் மக்கள் கஷ்டப்படுகிருர்கள் என்பதில் சந்தேகம் இல்லே. ஆனல், உம்மைப்போன்ற ஒருவர் அந்த வேலேக்காகப் பலியிடப்படுவதை நான் விரும்பவில்லே. முதலில் இங்கே சுயாட்சியைப் பெறுவோம். அதனல் அங்கிருக்கும் நம்மவர்களுக்குத் தானே உதவி செய்த வர்கள் ஆவோம். உம் மனத்தை மாற்ற என்னல் ஆகாது என் பதை அறிவேன். என்ருலும், உம்மைப் போன்றவர்கள் யாரும் உம்முடன் சேர்ந்து, உம்மைப்போல் ஆகிவிடுவதற்கு உற்சாகம் ஊட்டமாட்டேன்."

இந்தப் புத்திமதி எனக்குப் பிடிக்கவில்லே. ஆயினும், ஸ்ரீ பேஸ்தன்ஜி பாத்ஷா மீது நான் கொண்டிருந்த மதிப்பை இது அதிகமாக்கியது. நாட்டினிடமும் தாய்மொழியினிடமும் அவர் கொண்டிருந்த பக்தி என் மனத்தைக் கவர்ந்தது. இச் சம்பவம் எங்களே இன்னும் அதிகமாக நெருங்கிப் பழகும்படி செய்தது. என்ருலும், தென்னுப்பிரிக்காவில் எனக்கு இருந்த பணியை நான் விடுவதற்குப் பதிலாக என்னுடைய தீர்மானத்தில் நான் அதிக உறுதி கொள்ளலானேன். தாய்நாட்டிற்குச் செய்ய வேண்டிய வேலேயின் எப் பகுதியையும் தேச பக்தி உள்ள ஒருவர் அலட்சியம் செய்துவிட முடியாது. எனக்கோ, கீதையின் வாசகம் மிகத் தெளிவாகவும் கண்டிப்பாகவும்

இருந்தது : ''நன்ருக அனுஷ்டிக்கப்பட்ட பிறருடைய தருமத்தை விட, குணமற்ற தனது தருமமே சிறந்ததாகும். தனது தரு மத்தை நிறைவேற்றும்போது இறப்பது சிறந்தது. பிறர் தருமம் பயத்தைக் கொடுப்பதாகும்.''*

## 28

## புனுவும் சென்னையும்

என் வேலையை ஸர் பிரோஸ்ஷா எளிதாக்கிவிட்டார். ஆகவே, பம்பாயிலிருந்து புனுவுக்குப் போனேன். அங்கே இரு கட்சியினர் இருந்தார்கள். எல்லா விதக் கருத்துக்களும் கொண்ட எல்லோருடைய உதவியும் எனக்குத் தேவை. முதலில் லோக மான்ய திலகரைப் பார்த்தேன். அவர் கூறியதாவது :

''எல்லாக் கட்சியினரின் உதவியையும் நீங்கள் நாடுவது மிக வும் சரி. தென்னுப்பிரிக்கப் பிரச்னை சம்பந்தமாக அபிப்பிராய பேதமே இருப்பதற்கில்லை. ஆனால், எக் கட்சியையும் சேராத வரான ஒருவர், உங்கள் பொதுக்கூட்டத்திற்குத் தலைவராக இருக்க வேண்டும். பேராசிரியர் பந்தர்காரைச் சந்தியுங்கள். கொஞ்ச காலமாக அவர் பொதுஜன இயக்கம் எதிலும் ஈடுபடுவ தில்லை. அவரைப் பார்த்துவிட்டு அவர் என்ன சொல்லுகிருர் என்பதை என்னிடம் கூறுங்கள். என்னால் ஆன எல்லா உதவி யையும் உங்களுக்குச் செய்ய வேண்டும் என்று விரும்புகிறேன். நீங்கள் விரும்பும் போதெல்லாம் வந்து என்னைத் தாராளமாகப் பார்க்கலாம். வேண்டியதைச் செய்ய எப்பொழுதும் தயாராக இருக்கிறேன்.''

லோகமான்யரை† நான் சந்தித்தது இதுவே முதல் தடவை. பொதுமக்களிடையே அவருக்கு இருந்த இணையில்லாத செல் வாக்கின் ரகசியத்தை இச் சந்திப்பு எனக்கு வெளிப்படுத்தியது.

---

* பகவத் கீதை : அத் 3. கர்ம யோகம், 35

† ''லோகமான்யர்'' என்று இந்திய மக்களால் அன்போடு அழைக்கப்பட்டு வந்த பால கங்காதர திலகர், பம்பாய் மாகாணத்தில் ரத்தினகிரி என்ற இடத்தில் 1856 ஜூலை யில் ஓர் ஏழைப் பள்ளியாசிரியரின் புதல்வராகப் பிறந்தார் சிறு வயதிலேயே சமஸ் கிருதத்தில் அவருக்கு நல்ல தேர்ச்சியுண்டு. புனுவில் பி. ஏ. படித்துப் பிறகு சட்டமும் கற்ருர். சிறு வயது முதலே சமூக சேவையில் நாட்டமுள்ள திலகர், ''கேசரி'' என்ற மராட்டிய வாரப் பத்திரிகையை ஆரம்பித்தார். அக் காலத்தில் இந்நாட்டில் வேறு எந்தப் பத்திரிகைக்கும் இல்லாத செல்வாக்கு, ''கேசரி''க்கு இருந்தது. கோலாப்பூர் அரசாங்கத்தின் அட்டூழியங்களை அம்பலப்படுத்தியதற்காகச் சிறைப்பட்டார். அவர் மீது மக்களுக்கு மதிப்பு அதிகமாயிற்று. இந்தியத் தேசீய காங்கிரஸின் ஆரம்பக் (1885) கூட்டத்திலும் பிந்திய கூட்டங்களிலும், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் தயவுக்குக் கெஞ்சி மனுச் செய்துகொள்ளும் போக்கைப் பலமாகக் கண்டித்தார். ''சுதந்திரம் எனது பிறப் புரிமை; அதை அடைந்தே தீருவேன்'' என்றும் முழங்கினர். 1896, 1897–ஆம் ஆண்டு களில் இந்தியாவில் பஞ்சமும் நோயும் தாண்டவமாடியபோது சர்க்காரின் போக்கைத் திலகர் பலமாகக் கண்டித்ததோடு மக்களின் துயரங்களைப் போக்க அரிய சேவையும் செய்தார். 1897 ஜூனில் சித்பவான் என்ற இடத்தில் ஒரு வாலிபர் இரு பிரிட்டிஷ்

பின்பு கோகலேயைப்* போய்ப் பார்த்தேன். பெர்குஸன் கல்லூரி மைதானத்திலேயே அவரைக் கண்டேன். அன்போடு அவர் என்னை வரவேற்றார். அவருடைய இனிய சுபாவம் அப்பொழுதே என் உள்ளத்தைக் கொள்ளைகொண்டு விட்டது. அவரைச் சந்திப்பதும் இதுதான் முதல் தடவை. என்றாலும், ஏதோ பழைய நட்பை மீண்டும் புதுப்பித்துக்கொள்ளுவதைப் போலவே தோன்றியது. ஸர் பிரோஸ்ஷா எனக்கு இமயமலை போல் தோன்றினர். லோகமான்யரோ எனக்குச் சமுத்திரம் போல் காணப்பட்டார். ஆனல், கோகலேயோ கங்கையைப் போல இருந்தார். அந்தப் புண்ணிய நதியில் யாரும் நீராடி இன்புற முடியும். ஹிமாலயம், ஏறிக் கடப்பதற்கு அரியது. கடலில், யாரும் துணிந்து எளிதில் இறங்கிவிட முடியாது; ஆனல்,

---

அதிகாரிகளைக் கொன்றுவிட்டார். இக் கொலைகளுக்கும் திலகருக்கும் எந்தச் சம்பந்தமுமில்லை என நிரூபிக்கப்பட்டும் அவருக்கு 18 மாதச் சிறைத் தண்டனை விதித்தனர். மிதவாதிகள் கையிலிருந்து வந்த காங்கிரஸைத் தீவிரப் போராட்டக் காங்கிரஸாக 1906-இல் சூரத் மகாநாட்டில் மாற்றிய பெருமை திலகருக்கே உண்டு. அக் கூட்டத்தில் அவர் தலைமீது செருப்புகள் விழுந்தும் அவர் அசையாமல் பொறுமையுடன் இருந்தார்.

பின்னர் 1908-இல் வங்காளத்தில் இரு பிரிட்டிஷ் பெண்களை ஒரு வாலிபன் குண்டு வீசிக் கொன்றதைக் "கேசரி" பத்திரிகையில் திலகர் பாராட்டி எழுதினர். இதற்காக 6 வருடத் தண்டனை அடைந்து பர்மாவில் மாந்தலே சிறையில் கிடந்து அவதியுற்றார். 1919 அமிர்தசரஸ் காங்கிரஸில் மகாத்மா காந்தி பிரவேசித்த காலம் வரையில் காங்கிரஸில் திலகர் முதன்மை ஸ்தானம் வகித்து வந்தார். அடுத்த ஆகஸ்டில் காலமானர்.

* கோகலே : தமது ராஜீய குருநாதர் எனக் காந்திஜி கூறிய கோகலே, காங்கிரஸின் ஆரம்ப காலத்தில் அதன் இணையற்ற தலைவராயிருந்தார். தமது கல்வி முடிந்ததும் சொற்ப சம்பளத்தில் பெர்குஸன் கல்லூரியில் ஆசிரியப் பணி புரிந்தார். நாட்டுப் பணிக்கே முழு நேரத்தையும் செலவிடும் நோக்கத்துடன் இந்திய ஊழியர் சங்கத்தை ஸ்தாபித்தார். 1889-ஆம் ஆண்டு காங்கிரஸில் முதல் முதலாகக் கலந்து கொண்டார். மிகக் கடுமையாகக் கண்டிப்பதையும் மேன்மையான முறையில் செய்யக் கூடியவர் என்று புகழ் பெற்றவர். 1905-இல் காசியில் கூடிய காங்கிரஸுக்குத் தலைமை வகித்தார் காங்கிரஸின் சார்பாக இரு முறை இங்கிலாந்திற்குத் தூது சென்றார். 1909-ஆம் ஆண்டு நடந்த காங்கிரஸில் கோகலே பேசியபோது காந்திஜியைப் பற்றிப் பின்வருமாறு கூறினர் :

"ஸ்ரீ காந்தியுடன் நெருங்கிப் பழகும் பேற்றை நான் பெற்றுள்ளேன். அவரை விடத் தூய்மையான, கண்ணியமான, உன்னத ஆன்மிக சக்தி மிக்கவரை இப்புவியில் காண்பதரிது. தன்னலமற்ற எளிய வாழ்க்கை வாழ்ந்து, மன்னுயிரைத் தன்னுயிராகப் பாவித்து, சத்தியத்திலும் நீதியிலும் தளராத நம்பிக்கை பூண்டு வாழ்ந்து, தங்களைவிடத் தாழ்ந்த மக்களைப் பார்த்த மாத்திரத்தில் அவர்களிடையே புதியதோர் அன்புணர்ச்சி தோன்றும்படி செய்யக்கூடியவர் ஸ்ரீ காந்தி. மனிதர்களுக்குள் உத்தமர், தேசாபிமானிகளுக்குள் உயர்ந்தவர் என்று அவரை மதிக்கலாம். அவர் மூலம் இந்திய சமுதாயமே உச்சநிலை அடைந்துவிட்டது என்று கூறலாம்."

ஸ்ரீ கோகலேயின் வரலாற்றைக் குறித்துக் காந்திஜி 'இந்தியன் ஒப்பீனியன்' பத்திரிகையில் எழுதிய விவரத்தை, 'மகாத்மா காந்தி நூல்கள்' - முதல் தொகுப்பு 762-ஆம் பக்கத்தில் காண்க.

கங்கையோ அரவணைத்துக் கொள்ள எல்லோரையும் அன்புடன் அழைக்கிறது. கையில் துடுப்புடன் படகில் ஏறி, அதில் மிதப்பதே இன்பம். பள்ளிக்கூடத்தில் சேரவரும் ஒரு மாணவனை ஓர் உபாத்தியாயர் எவ்விதம் பரீட்சிப்பாரோ அதேபோலக் கோகலே என்னை நுட்பமாகப் பரீட்சை செய்தார். யாரிடம் போக வேண்டும் என்பதை அவர் எனக்குச் சொன்னார். நான் செய்ய இருக்கும் பிரசங்கத்தை முன்னால் தாம் பார்க்க விரும்புவதாகக் கூறினார். கல்லூரி முழுவதையும் சுற்றிக் காட்டினார். தம்மால் ஆனதைச் செய்யத் தாம் எப்பொழுதும் தயாராக இருப்பதாகவும் எனக்கு உறுதியளித்தார். டாக்டர் பந்தர்காரைச் சந்தித்ததன் முடிவைத் தமக்கு அறிவிக்கச் சொன்னார். மிக்க மகிழ்ச்சியுடன் என்னை அனுப்பினார். அன்று முதல்-ராஜீயத்துறையில்-அவர் ஜீவித்திருந்த காலத்திலும் அதற்குப் பின்னர் இன்றளவும், முற்றும் என் உள்ளத்தில் இணையற்றதான பீடத்தில் கோகலே அமர்ந்துவிட்டார்.

டாக்டர் பந்தர்கார், தந்தைக்கு மகனிடம் இருக்கும் அன்புடன் என்னை வரவேற்றார். நான் அவரைப் பார்க்கப் போனது மத்தியான வேளை. அந்த நேரத்தில்கூட ஓய்வின்றி நான் எல்லோரையும் சந்தித்து வந்தது, சோர்வு என்பதையே அறியாத அப் பண்டிதமணிக்கு என்மீது அதிகப் பரிவை உண்டாக்கியது. பொதுக்கூட்டத்திற்கு எக் கட்சியையும் சேராதவரே தலைவராக இருக்க வேண்டும் என்று நான் வற்புறுத்தியதை உடனே அவர் ஏற்றுக்கொண்டார். ''அதுதான் சரி'', ''அதுதான் சரி'' என்றும் அவராகவே ஆனந்தத்துடன் கூறினார்.

நான் கூறியதை யெல்லாம் கேட்டுக்கொண்ட பிறகு அவர் கூறியதாவது : ''ராஜீய விஷயங்களில் நான் சம்பந்தம் வைத்துக் கொள்ளுவதில்லை என்பதை எல்லோரும் உங்களுக்குச் சொல்வார்கள். ஆனாலும், உங்கள் கோரிக்கையை மறுக்க என்னால் முடியாது. உங்கள் கட்சி மிகவும் நியாயமானது. உங்கள் முயற்சியோ அற்புதமானது. ஆகவே, உங்கள் பொதுக்கூட்டத்தில் பங்கெடுத்துக்கொள்ள நான் மறுத்துவிடுவதற்கில்லை. திலகரையும் கோகலேயையும் நீங்கள் கலந்து ஆலோசித்தது மிகவும் சரியானதே. அவர்களுடைய இரு சபைகளின் கூட்டு ஆதரவில் நடக்கும் பொதுக்கூட்டத்திற்குத் தலைமை வகிப்பதில் நான் மகிழ்ச்சியடைகிறேன் என்று தயவுசெய்து அவர்களிடம் சொல்லுங்கள். கூட்டத்தின் நேரத்தைக் குறித்து, நீங்கள் என்னைக் கேட்க வேண்டியதில்லை. அவர்களுக்குச் சௌகரியப்படும் நேரம், எனக்கும் சௌகரியமானதே.'' இவ்விதம் கூறி எனக்கு வாழ்த்தும் ஆசீர்வாதமும் தந்து, அவர் விடை கொடுத்து அனுப்பினார்.

புலமை மிக்கவர்களும், தன்னலமே இல்லாதவர்களுமான புனாத் தலைவர்கள் குழாத்தினர், எந்தவிதப் படாடோபமும்

இன்றி, ஆடம்பரம் இல்லாத ஒரு சிறு இடத்தில் கூட்டத்தை நடத்தினார்கள். நான் பெரும் மகிழ்ச்சியும், என் வேலையில் மேலும் அதிக நம்பிக்கையும் கொண்டவனாகத் திரும்பும்படி என்னை அனுப்பியும் வைத்தார்கள்.

அடுத்தபடியாக நான் சென்னைக்குச் சென்றேன். அங்கே மக்கள் மட்டற்ற உற்சாகம் கொண்டிருந்தனர். பாலசுந்தரம் பற்றிய சம்பவம், பொதுக்கூட்டத்தில் எல்லோருடைய உள்ளத்தையும் உருக்கிவிட்டது. என் பிரசங்கம் அச்சிடப்பட்டிருந்தது. எனக்கு அது நீண்டதொரு பிரசங்கமே.* ஆனால், கூட்டத்தில் இருந்தவர்கள் ஒவ்வொரு சொல்லையும் கவனமாகக் கேட்டனர். கூட்டத்தின் முடிவில், 'பச்சைத் துண்டுப்பிரசுர'த்திற்கு ஒரே கிராக்கி. சில மாற்றங்களுடன் இரண்டாம் பதிப்பில் 10,000 பிரதிகள் அச்சிட்டேன். அவை ஏராளமாக விற்பனையாயின. என்றாலும், அவ்வளவு அதிகமான பிரதிகளை அச்சிட்டிருக்க வேண்டியதில்லை என்று எண்ணினேன். என் உற்சாகத்தில், இருக்கக்கூடிய தேவையை அதிகப்படியாக மதிப்பிட்டு விட்டேன். நான் பிரசங்கம் செய்தது, பொது ஜனங்களில் ஆங்கிலம் தெரிந்தவர்களுக்கே. சென்னையில் அந்த வகுப்பினர் இவ்வளவு பிரதிகளையும் வாங்கிவிட முடியாது.

சென்னையில் எல்லோரையும்விட அதிகமாக உதவி செய்தவர், 'மதராஸ் ஸ்டாண்டர்டு' பத்திரிகையின் ஆசிரியரான காலஞ்சென்ற ஸ்ரீ ஜி. பரமேசுவரன் பிள்ளையாவார். இப் பிரச்னையை 'அவர் கவனமாக ஆராய்ந்தார். அடிக்கடி தமது காரியாலயத்திற்கு என்னை அழைத்து, வேண்டிய யோசனைகளைக் கூறினார். 'ஹிந்து' பத்திரிகையின் ஸ்ரீ ஜி. சுப்பிரமணியமும்.†

---

* காந்திஜி தாம் சென்னையில் செய்ததாகக் கூறும் அப்பிரசங்கம் 1896 அக்டோபர் 26–ஆம் தேதி நிகழ்த்தப்பட்டதாகும். அக்கூட்டம் பச்சையப்பன் மண்டபத்தில் நடந்தது என்று மகாத்மா கூறுகிறார். "டாக்டர் சுப்பிரமணியம் தலைமையில் நடந்தது, என்றே எனக்கு ஞாபகம்" என்கிறார் காந்திஜி. அக்கூட்டத்தின் விவரம் ஸ்ரீ ஜி. ஏ. நடேசன் வெளியிட்ட 'மகாத்மா காந்தியின் பேச்சுக்களும் எழுத்துக்களும்' என்ற நூலில் பிரசுரமாகியிருக்கிறது. அதில், அக்கூட்டத்திற்கு ஸ்ரீ அனந்தாச்சார்லு தலைமை வகித்தார் என்று கூறப்பட்டிருக்கிறது. காந்திஜி செய்த இப் பிரசங்கத்தின் விவரத்தை, 'மகாத்மா காந்தி நூல்கள் - முதல் தொகுதி' 441 - 446-ஆம் பக்கங்களில் காண்க.

† ஸ்ரீ ஜி. சுப்பிரமணிய ஐயர் : சென்னையில் 'ஹிந்து', 'சுதேசமித்திரன்' ஆகிய இரு பத்திரிகைகளையும் தொடங்கித் திறம்பட நடத்தியவர். முதல் காங்கிரசில் முதல் தீர்மானத்தைப் பேசியவர். தேசிய நிதி, தொழில் வளர்ப்புச் சங்கம் என்னும் ஸ்தாபனத்தை நிறுவியவர்களில் ஒருவர். இதன் மூலம் சுதேசித் தொழில்கள் வளர உதவினார். இவர் பத்திரிகையில் எழுதிய கட்டுரைகள் ராஜத் துரோகத்திற்குத் தூண்டுபவையாக இருக்கின்றன என்று சிறைப்படுத்தப்பட்டார். பின்னர் உடல் நிலை மோசமாயிருந்ததால் விடுதலை செய்துவிட்டனர்.

காந்திஜி 1915-இல் சென்னைக்கு வந்திருந்தபோது, பயங்கரமான நோயில் மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்த ஸ்ரீ ஜி. சுப்பிரமணிய ஐயரை அவருடைய வீட்டில் போய்ப் பார்த்தார். அப்போது ஐயர், காந்திஜியைப் பார்த்து, அவருடைய செயல்கள்

டாக்டர் சுப்பிரமணியமும் அதிக அனுதாபம் காட்டினர்கள். ஸ்ரீ ஜி. பரமேசுவரன் பிள்ளை தமது 'மதராஸ் ஸ்டாண்டர்டு' பத்திரிகையில் நான் எழுதுவதையெல்லாம் தாராளமாகப் பிரசுரிக்க முன்வந்தார். அந்த வாய்ப்பை நானும் தாராளமாகப் பயன்படுத்திக்கொண்டேன். பொதுக்கூட்டம், பச்சையப்பன் மண்டபத்தில் டாக்டர் சுப்பிரமணியம் தலைமையில் நடந்தது என்றே எனக்கு ஞாபகம்.

நான் சந்தித்தவர்களிடமெல்லாம் ஆங்கிலத்திலேயே பேச வேண்டி இருந்தபோதிலும் அந்நியர் நடுவில் இருப்பதாகவே எனக்குத் தோன்றவில்லை. நான் சந்தித்த நண்பர்கள் எல்லோருமே என்மீது அன்பைப் பொழிந்தார்கள். நான் கொண்டிருந்த லட்சியத்திலும் அவர்கள் அதிக உற்சாகம் காட்டினர். அன்பினல் தகர்த்துவிட முடியாத தடையும் உண்டா?

# 29

## 'விரைவில் திரும்புங்கள்'

சென்னையிலிருந்து கல்கத்தாவுக்குப் போனேன். அங்கே சங்கடங்கள் என்னைச் சூழ்ந்துகொண்டன. யாரையுமே அங்கே எனக்குத் தெரியாது. ஆகவே, கிரேட் ஈஸ்டர்ன் ஹோட்டலில் ஓர் அறையை அமர்த்திக்கொண்டேன். 'டெயிலி டெலகிராப்' பத்திரிகையின் பிரதிநிதியுடன் அங்கே எனக்குப் பழக்கம் உண்டாயிற்று. தாம் தங்கியிருந்த ஐரோப்பியரின் 'பெங்கால் கிளப்'க்கு என்னை அழைத்தார். அந்தக் கிளப்பின் பிரதான அறைக்கு இந்தியர் எவரையும் அழைத்துக்கொண்டு போகக் கூடாது என்பது அவருக்குத் தெரியாது. இவ்விதத் தடை இருப்பதை அவர் கண்டுகொண்டதும், தம் அறைக்கு என்னை அழைத்துச் சென்ருர். கல்கத்தாவில் இருக்கும் ஆங்கிலேயர், இத்தகைய துவேஷம் காட்டி வருவதைக் குறித்துத் தமது வருத்தத்தைத் தெரிவித்துக்கொண்டார். பிரதான அறைக்கு என்னை அழைத்துக்கொண்டு போக முடியாது போய் விட்டதற்கு என்னிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டார்.

---

நாட்டுக்குத் தனிப் பெருமை அளித்துள்ளன என்று கூறினர். தம் நோயின் காரணமாக நாட்டுக்குத் தம்மால் எதுவும் செய்ய முடியாதிருக்கிறதே என்று துயரத்துடன் தெரிவித்தார்; உடனே கண்ணீர்விட்டும் அழுதுவிட்டார். இதைக் கண்ட காந்திஜி, அவரைத் தேற்றி, நாட்டுக்கு அவர் ஏற்கனவே மாபெரும் பணி செய்திருப்பதாகவும், அதனல் துயரம் கொள்ளுவதற்கு யாதொரு காரணமும் இல்லை என்றும் ஆறுதல் கூறினர். அப்படிக் கூறும்பொழுதே, காந்திஜி தம் ஆடையின் நுனியால் ஐயரின் புண்களைத் துடைக்க ஆரம்பித்துவிட்டார். இந்த அசாதாரணமான காட்சியைக் கண்டு தாமும் ஸ்ரீ வி. எஸ். ஸ்ரீனிவாச சாஸ்திரியும் மனம் உருகி நின்றதாக ஸ்ரீ ஜி. ஏ. நடேசன் பின்னல் எழுதிய கட்டுரை ஒன்றில் கூறியிருக்கிருர்.

‘வங்காளத்தின் தெய்வம்’ என்று வழங்கப்பட்டு வந்த சுரேந்திரநாத் பானர்ஜியை நான் பார்க்க விரும்பினேன். அவரைச் சந்தித்தேன். பல நண்பர்கள் அவரைச் சூழ்ந்துகொண்டிருந்தனர். அவர் கூறியதாவது :

“உங்கள் வேலையில் மக்கள் சிரத்தை எடுத்துக்கொள்ள மாட்டார்கள் என்றே அஞ்சுகிறேன். இங்கே எங்களுக்கு இருக்கும் கஷ்டங்கள் கொஞ்சம் அல்ல என்பதை நீங்களும் அறிவீர்கள். என்றாலும், உங்களால் முடிந்தவரையில் நீங்கள் முயலவே வேண்டும். மகாராஜாக்களின் ஆதரவை நீங்கள் தேடிக்கொள்ள வேண்டும். பிரிட்டிஷ் இந்தியர் சங்கப் பிரதிநிதிகளைச் சந்திக்கத் தவறிவிடாதீர்கள். ராஜா ஸர் பியாரி மோகன் முக்கர்ஜியையும், மகாராஜா டாகுரையும் நீங்கள் கட்டாயம் பார்க்க வேண்டும். அவர்கள் இருவரும் தாராள மனம் படைத்தவர்கள் ; பொது வேலையில் அவர்களுக்கு நல்ல ஈடுபாடு உண்டு.”

அந்தக் கனவான்களையும் பார்த்தேன். ஆனால், ஒன்றும் பயன் இல்லை. அவர்கள் என்னைச் சரியாக ஏற்றுப் பேசக்கூட இல்லை. கல்கத்தாவில் பொதுக்கூட்டம் நடத்துவது என்பது எளிதான காரியமே அல்ல என்றார்கள். ஏதாவது செய்ய முடியும் என்றால் அது நடப்பது முக்கியமாகச் சுரேந்திரநாத் பானர்ஜியையே பொறுத்தது என்றும் கூறினர்.

என் வேலை வர வர அதிகக் கஷ்டமாகிக் கொண்டு வருவதைக் கண்டேன். ‘அமிர்தபஜார்’ பத்திரிகையின் காரியாலயத்திற்குப் போனேன். அங்கே நான் சந்தித்த ஆசிரியர் கனவான், நான் ஊர் சுற்றித் திரியும் பேர்வழி என்று எண்ணிக்கொண்டு என்னிடம் ஒன்றும் பேசாமலே என்னைப் போகச் சொல்லிவிட்டார். ‘வங்கவாசி’ பத்திரிகையோ இன்னும் கொஞ்சம் அதிகமாகப் போய்விட்டது. அதன் ஆசிரியர் என்னை ஒரு மணி நேரம் காக்க வைத்தார். அவரைக் கண்டு பேசப் பலர் வந்திருந்தார்கள். ஆனால், மற்றவர்களெல்லாம் பேசிவிட்டுப் போன பின்புகூட, என்னைக் கண்ணெடுத்துப் பார்க்க அவருக்குத் தயவு பிறக்கவில்லை. நீண்ட நேரம் காத்துக் கொண்டிருந்த பிறகு அவரைப் பார்த்து, என் விஷயத்தைச் சொல்ல ஆரம்பித்தேன். உடனே அவர், “எங்களுக்கு வேலை தலைக்குமேல் இருக்கிறது என்பதை நீர் பார்க்கவில்லையா? உம்மைப்போல் கண்டு பேச வருகிறவர்களின் தொகைக்கு முடிவே இல்லை. நீர் போய்விடுவதே மேல். நீர் சொல்வதைக் கேட்க எனக்கு இப்பொழுது சௌகரியப்படாது” என்றார். நான் அவமதிக்கப்படுவதாக ஒரு கணம் எண்ணினேன். ஆனால், உடனே ஆசிரியரின் நிலைமையையும் புரிந்துகொண்டேன். ‘வங்கவாசி’யின் புகழைக் குறித்துக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆசிரியரைப் பார்க்க ஓயாமல் பலர் வந்துகொண்டே இருக்கிறார்கள் என்பதையும் இப்போது பார்த்தேன். அவர்கள் எல்லாம் அவருக்குப் பழக்கமானவர்கள். அவருக்கு தம் பத்திரிகையில் எழுதுவதற்கு விஷயங்களுக்கும் பஞ்சம்

இல்லை. தென்னுப்பிரிக்கா விஷயமோ அச் சமயம் இங்கே அவ்வளவு நன்ருகத் தெரியாத சங்கதி.

எந்தக் குறையினுல் ஒருவன் கஷ்டப்படுகிருனே அவனுக்கு அக் குறையே பெரிது என்று தோன்றும். ஆசிரியரின் காரியால யத்திற்குப் படையெடுத்து வரும் அநேகரில் நானும் ஒருவன். அப்படி வரும் மற்றவர்கள் ஒவ்வொருவருக்கும் அவரவர்கள் குறை இருக்கத்தான் இருக்கிறது. எல்லோருக்குமே ஆசிரியர் என்ன செய்ய முடியும்? மேலும், ஆசிரியர், நாட்டில் பெரிய சக்தி வாய்ந் தவர் என்று கஷ்டப்படுகிறவன் நினைக்கிருன். ஆனுல், தமது சக்தி, தம் காரியாலயத்தின் வாசலுக்கு அப்பால் செல்லாது என் பது ஆசிரியருக்கு மாத்திரமே தெரியும். நான் சோர்வடைந்து விடவில்லை. மற்றப் பத்திரிகைகளின் ஆசிரியர்களை விடாமல் பார்த்துக்கொண்டுதான் இருந்தேன். வழக்கம்போல், இந்தியா வில் இருந்த ஆங்கிலேயர் பத்திரிகைகளின் ஆசிரியர்களையும் சந்தித்தேன். 'ஸ்டேட்ஸ்ம'னும், 'இங்கிலீஷ்ம'னும் இப் பிரச்னை யின் முக்கியத்துவத்தை உணர்ந்தன. அப் பத்திரிகை நிருபர் களுக்கு நான் நீண்ட பேட்டிகள் அளித்தேன். அவை முழுவதை யும் அப் பத்திரிகைகள் பிரசுரித்தன.

'இங்கிலீஷ்மன்' பத்திரிகையின் ஆசிரியர் ஸ்ரீ சாண்டர்ஸ் என்னைத் தமது சொந்த மனிதனுகவே கொண்டார். தமது காரி யாலயத்தையும் தமது பத்திரிகையையும் என் இஷ்டத்திற்குப் பயன்படுத்திக்கொள்ளலாம் என்ருர். தென்னுப்பிரிக்க இந்தியர் நிலைமையைக் குறித்து, அவர் எழுதிய தலையங்கங்களின் அச்சு நகல்களை முன் கூட்டியே அவர் எனக்கு அனுப்புவார். அத் தலை யங்கங்களில் நான் விரும்பும் திருத்தங்களைச் செய்துகொள்ளவும் அவர் என்னை அனுமதித்தார். எங்களுக்கிடையே நட்பு வளர்ந்து விட்டது என்று சொல்வதும் மிகையாகாது. தம்மால் இயன்ற உதவிகளையெல்லாம் செய்வதாக அவர் எனக்கு வாக்களித்தார். வாக்களித்தபடியே நிறைவேற்றியும் வந்தார். அவர் கடுமையான நோய் வாய்ப்படும் வரையில் என்னுடன் கடிதப் போக்குவரத் தும் வைத்துக்கொண் டிருந்தார்.

என் வாழ்க்கை முழுவதுமே இவ்விதமான பல நண்பர்களைப் பெறும் பாக்கியம் எனக்கு இருந்திருக்கிறது. இந்தச் சிநேகங் கள் எதிர்பாராத விதமாகத் திடீரென்று ஏற்பட்டவை. மிகைப் படுத்தாமல் உள்ளதை உள்ளபடி கூறும் என் குணமும், உண் மையினிடம் எனக்கு இருந்த பற்றும், ஸ்ரீ சாண்டர்ஸுக்கு என் னிடம் பிரியத்தை உண்டாக்கின. நான் மேற்கொண்ட வேலை யைக் குறித்து, வெகு நுட்பமாகக் குறுக்குக் கேள்விகளெல்லாம் போட்டுத் தெரிந்துகொண்ட பிறகே என் முயற்சிக்கு அனுதாபம் காட்ட அவர் முற்பட்டார். தென்னுப்பிரிக்க வெள்ளையரின் கட் சியையும் பாரபட்சமின்றி அவருக்கு எடுத்துக் காட்டுவதற்குச் சிரமத்தைப் பாராமல் நான் செய்த முயற்சியையும் கண்டார். இதற்காக என்னை அவர் பாராட்டினர்.

எதிர்க் கட்சிக்கு நியாயத்தைச் செய்வதன்மூலம், தன் கட்சிக்கு நியாயம் சீக்கிரத்தில் கிடைக்கிறது என்பதை என் அனுபவம் காட்டியிருக்கிறது.

எதிர்பாராத வகையில் ஸ்ரீ சாண்டர்ஸின் உதவி கிடைத்ததால், முடிவில், 'கல்கத்தாவிலும் பொதுக்கூட்டத்தை நடத்துவதில் வெற்றி பெற முடியும்' என்ற நம்பிக்கை எனக்கு ஏற்பட்டது. அப்பொழுது டர்பனிலிருந்து, 'பார்லிமெண்டு ஜனவரியில் ஆரம்பமாகிறது. விரைவில் திரும்புக' என்ற தந்தி வந்தது.

ஆகவே, பத்திரிகைகளில் பிரசுரிப்பதற்கு ஒரு கடிதம் அனுப்பினேன். திடீரென்று கல்கத்தாவைவிட்டு நான் ஏன் புறப்படவேண்டி யிருக்கிறது என்று அதில் விளக்கிக் கூறிவிட்டுப் பம்பாய்க்குப் புறப்பட்டேன். புறப்படும் முன்பு தாதா அப்துல்லா கம்பெனியின் பம்பாய் ஏஜெண்டுக்கு ஒரு தந்தி கொடுத்து, தென்னுப்பிரிக்காவிற்கு முதலில் புறப்படும் கப்பலில் எனக்கு இடத்திற்கு ஏற்பாடு செய்யுமாறு அறிவித்தேன். தாதா அப்துல்லா அப்பொழுதுதான், 'கோர்லாண்டு' என்ற கப்பலை வாங்கியிருந்தார். அக் கப்பலிலேயே நான் போக வேண்டும் என்று வற்புறுத்தியதோடு என்னையும் என் குடும்பத்தையும் கட்டணம் வாங்காமல் ஏற்றிச் செல்வதாகவும் அறிவித்தார். இதை நன்றியுடன் ஏற்றுக்கொண்டேன். டிசம்பர் ஆரம்பத்தில் இரண்டாம் முறையாக நான் தென்னுப்பிரிக்காவுக்குப் புறப்பட்டேன். இப்பொழுது என் மனைவி, இரு குமாரர்கள், விதந்துவாகிவிட்ட என் சகோதரியின் ஒரே குமாரன் ஆகியவர்களுடன் பயணமானேன். அதே சமயத்தில் 'நாதேரி' என்ற மற்றொரு கப்பலும் டர்பனுக்குப் புறப்பட்டது. அக் கப்பல் கம்பெனிக்கு தாதா அப்துல்லா கம்பெனியே ஏஜெண்டுகள். இந்த இரு கப்பல்களிலும் சுமார் எண்ணூறு பிரயாணிகள் இருந்திருப்பார்கள். அவர்களில் பாதிப் பேர் டிரான்ஸ்வாலுக்குப் போக வேண்டியவர்கள்.

மூன்ரும் பாகம்

# 1

# புயலின் குமுறல்கள்

நான் மனேவியுடனும் குழந்தைகளோடும் கப்பல் பிரயாணம் செய்வது இதுதான் முதல் தடவை. ஹிந்துக்களில் மத்திய தர வகுப்பினரிடையே பால்ய விவாகம் செய்துவிடும் வழக்கம் இருப்பதால், கணவன் படித்திருப்பான், மனேவி கொஞ்சம்கூட எழுத்து வாசனேயே இல்லாதிருப்பாள் என்பதை இச் சரித்திரத்தில் அடிக்கடி கூறி வந்திருக்கிறேன். இவ்விதம் அவர்கள் இருவர் வாழ்க்கைக்கும் இடையே பெரும் அகழ் ஏற்பட்டு, அவர்கள் வாழ்வைப் பிரித்து நின்றது. கணவன், மனேவிக்கு ஆசானுகவும் இருக்க வேண்டியிருந்தது. ஆகையால், என் மனேவியும் குழந்தைகளும் அணிய வேண்டிய உடைகள் யாவை, அவர்கள் சாப்பிட வேண்டியது என்ன, புதிய சூழ்நிலேக்கு ஏற்ப அவர்கள் எந்தவிதமாக நடந்துகொள்ள வேண்டும் என்பனவற்றையெல்லாம் நானே சிந்தித்து முடிவு செய்ய வேண்டியிருந்தது. அந்த நாட்களேப் பற்றிய சில நினேவுகள் இப்பொழுது நகைப்பை ஊட்டுபவைகளாக இருக்கின்றன.

'கணவன் சொல் தவருமல் பணிந்து நடந்துவருவதே தனக்கு உயர்ந்த தருமம்' என்று ஒரு ஹிந்து மனேவி கருதுகிருள். ஒரு ஹிந்துக் கணவனே, மனேவிக்கு எஜமானனும் எல்லாமும் தானே என்று எண்ணுகிருன்; தன் மனேவி, தான் காலால் இட்ட வேலேயைத் தலேயால்செய்யவேண்டியது கடமை என்றும்கருதுகிருன்.

நாம் நாகரிகம் உள்ளவர்களாகத் தோன்ற வேண்டுமாயின் நடை உடை பாவனேகளெல்லாம் சாத்தியமானவரை ஐரோப்பியத் தரத்திற்குப் பொருத்தமாக இருக்க வேண்டும் என்று-எந்தச் சமயத்தைப்பற்றி எழுதுகிறேனே அந்தச் சமயத்தில்-நான் நம்பி வந்தேன். ஏனெனில், அப்படிச் செய்தால்தான் நமக்குக் கொஞ்சம் செல்வாக்காவது இருக்கும்; அந்தச் செல்வாக்கு இல்லாது போனல், சமூகத்திற்குச் சேவை செய்வது சாத்தியமாகாது என்றும் நான் அப்பொழுது எண்ணினேன்.

ஆகையால், என் மனேவியும் குழந்தைகளும் எந்தவிதமான ஆடைகளே அணிவது என்பதில் ஒரு தீர்மானத்திற்கு வந்தேன். அவர்கள் கத்தியவார்ப் பனியாக்கள் என்று கண்டுகொள்ளக் கூடியவாறு அவர்கள் உடை இருப்பதை நான் எப்படி விரும்ப முடியும்? இந்தியர்களில் பார்ஸிகளே, அதிக நாகரிகம் உள்ளவர்களாக அப்பொழுது கருதப்பட்டு வந்தார்கள். ஆனலும், 'முழு

ஐரோப்பிய உடை சரிப்படாது' என்று தோன்றவே, பார்ஸி உடையை அவர்கள் அணிய வேண்டும் என்ற முடிவுக்கு வந்தேன். அதன்படி என் மனைவி பார்ஸிப் புடைவை உடுத்துக் கொண்டாள். சிறுவர்கள், பார்ஸிக் கோட்டும் கால்சட்டைகளும் போட்டுக்கொண்டனர். பூட்ஸும் ஸ்டாக்கிங்கும் இல்லாமல் யாரும் இருப்பதற்கில்லை. அவற்றைப் போட்டுப் பழக்கப் படுவதற்கு என் மனைவிக்கும் குழந்தைகளுக்கும் நீண்ட காலம் பிடித்தது. பூட்ஸ்கள் அவர்கள் காலை நசுக்கின. ஸ்டாக்கிங்குகளோ, வியர்வையால் நாற்றம் எடுத்துவிட்டன. கால்விரல்கள் அடிக்கடி புண்ணாயின. இவைகளை யெல்லாம் சொல்லிஅவற்றைப் போட்டுக் கொள்ள அவர்கள் ஆட்சேபிக்கும் போதெல்லாம் அதற்குச் சமாதானம் கூற நான் பதில்களைத் தயாராக வைத்திருப்பேன். ஆனால், என் பதில்களால் திருப்தியடைந்துவிடாமல், என் அதிகாரத்திற்குப் பயந்தே அவர்கள் விடாமல் அவற்றை அணிந்து வந்தார்கள் என்று நினைக்கிறேன். 'வேறு வழி இல்லை' என்பதனாலேயே அவர்கள் உடை மாற்றத்திற்கும் சம்மதித்தார்கள். அந்த உணர்ச்சி காரணமாகவே, ஆனால் இன்னும் அதிகத் தயக்கத்துடனேயே, கத்தியையும் முள்ளையும் கொண்டு சாப்பிடவும் சம்மதித்தார்கள். இந்தவிதமான நாகரிகச் சின்னங்களின்மீது எனக்கு இருந்த மோகம் குறைந்த பிறகு, அவர்கள் கத்தியையும் முள்ளையும் உபயோகித்துச் சாப்பிடும் வழக்கத்தைக் கைவிட்டார்கள். புதிய முறைகளில் நீண்ட காலம் பழகி விட்டதால், பழைய வழக்கத்திற்குத் திரும்புவதும் அவர்களுக்குச் சங்கடமாகவே இருந்தது. ஆனால், 'நாகரிக'த்தின் இந்தப் பகட்டுகளை யெல்லாம் உதறி எறிந்துவிட்ட பிறகு, நாங்கள் சுமையெல்லாம் நீங்கி விடுதலை பெற்ற உணர்ச்சியோடு இருந்ததை நான் இன்று காண முடிகிறது.

அதே கப்பலில் என் உறவினர்கள் சிலரும், எனக்குப் பழக்கமானவர்களும் இருந்தனர். எனது கட்சிக்காரரின் நண்பருக்கு அக் கப்பல் சொந்தமான தாகையால், அதில் நான் விரும்புகிற இடத்திற் கெல்லாம் தாராளமாகப் போக முடிந்தது. அதனால் இந்த உறவினர் முதலியவர்களையும், மூன்றும் வகுப்பில் வந்த மற்றப் பிரயாணிகளையும் நான் அடிக்கடி சந்தித்து வந்தேன்.

மத்தியில் எந்தத் துறைமுகத்திலும் நிற்காமல், கப்பல், நேரே நேட்டாலுக்குப் போய்க்கொண் டிருந்தது. ஆகையால், எங்கள் பிரயாணம் பதினெட்டு நாட்களில் முடிந்துவிடும். ஆனால், ஆப்பிரிக்காவில் அடிக்கவிருந்த தீவிரமான போராட்டப் புயலைக் குறித்து எங்களுக்கு எச்சரிக்கை செய்வதைப்போல், நேட்டாலுக்கு இன்னும் நான்கு நாள் பிரயாணமே பாக்கி இருந்த சமயத்தில், கடலில் கடுமையான புயல்காற்று வீசியது. அது டிசம்பர் மாதம்; பூமத்திய ரேகைக்குத் தெற்கிலுள்ள பகுதிக்கு அதுவே கோடைக் காலம். ஆகையால், அப் பருவத்தில் தென்

சமுத்திரத்தில், பெரியதும் சிறியதுமாகப் புயல்காற்றுகள் அடிப்பது சகஜம். ஆனால், எங்களைத் தாக்கிய புயலோ மிகக் கடுமையானது. நீண்ட நேரம் அடித்தது. எனவே, பிரயாணிகள் திகில் அடைந்துவிட்டனர். அது பயபக்தி நிறைந்த காட்சியாக இருந்தது. எல்லோருக்கும் பொதுவாக ஏற்பட்ட அபாயத்தில், சகலரும் ஒன்றாகிவிட்டனர். முஸ்லிம்கள், ஹிந்துக்கள், கிறிஸ்தவர்கள் முதலிய எல்லோரும், தங்களுடைய வேற்றுமைகளையெல்லாம் மறந்துவிட்டு-ஒன்றை-ஒரே கடவுளை நினைத்தார்கள். சிலர் அநேக வேண்டுதல்களைச் செய்துகொண்டனர். பிரயாணிகளின் பிரார்த்தனைகளில், கப்பல் காப்டனும் கலந்து கொண்டார். புயல் ஆபத்துக்கு இடமானதுதான் என்றாலும், அதையும்விட மோசமான புயல்களைத் தாம் அனுபவித்திருப்பதாகக் காப்டன் பிரயாணிகளுக்கு உறுதி கூறினார். சரியான வகையில் கட்டப்பட்ட கப்பல், எந்தப் புயலையும் சமாளித்துத் தாங்கிவிடும் என்றும் விளக்கினார். ஆனால், பிரயாணிகளைத் தேற்ற முடியவில்லை. 'கிரீச்' என்ற சப்தமும், முறியும் சப்தமும் கப்பலின் பல பாகங்களிலும் ஒவ்வொரு நிமிடமும் கேட்டுக்கொண்டே இருந்தன. கப்பலில் பிளவு கண்டு, எந்த நேரத்திலும் தண்ணீர் உள்ளே புகுந்துவிடக்கூடும் என்பதை அந்தச் சப்தங்கள் நினைவுபடுத்தி வந்தன. கப்பல் அதிகமாக ஆடியது; உருண்டது; எந்தக் கணத்திலும் கவிழ்ந்துவிடக்கூடும் என்று தோன்றியது. மேல் தளத்தில் இருக்க முடியும் என்ற பேச்சிற்கே இடமில்லை. 'எல்லாம் அவன் சித்தம்போல் நடக்கும்' என்று சொல்லாதவர் இல்லை. இருபத்து நான்கு மணிநேரம், இவ்விதம் அல்லல்பட்டிருப்போம் என்பது என் ஞாபகம். கடைசியாக வானம் நிர்மலமாயிற்று; சூரியனும் காட்சி யளித்தான். 'புயல் போய்விட்டது' என்று காப்டன் அறிவித்தார். கப்பலில் இருந்தவர்களின் முகங்களில் ஆனந்தம் பொங்கியது. ஆபத்து மறைந்ததோடு அவர்களின் நாவிலிருந்து கடவுள் நாமமும் மறைந்தது. திரும்பவும் தின்பது, குடிப்பது, ஆடுவது, பாடுவது என்பவற்றில் அவர்கள் இறங்கிவிட்டார்கள். மரண பயம் போய்விட்டது. ஒரு கணம் மெய்மறந்து ஆண்டவனைத் துதித்த பக்தி போய், அவ்விடத்தை மாயை மூடிக்கொண்டுவிட்டது. வழக்கமான நமாஸ்களும் பிரார்த்தனைகளும் பின்னாலும் நடந்து வந்தன என்பது உண்மையே. ஆனாலும், அந்தப் பயங்கர நேரத்தில் இருந்த பய பக்தி, அவற்றில் இல்லை.

அப் புயல் மற்றப் பிரயாணிகளுடன் என்னை ஒன்றாகப் பிணைத்துவிட்டது. இதுபோன்ற புயல்களின் அனுபவம் எனக்கு இருந்ததால் புயலைப்பற்றிய பயமே எனக்குச் சிறிதும் இல்லை. கடல் பிரயாணம் எனக்குப் பழக்கப்பட்டுப் போனபடியால், எனக்கு மயக்கம் வருவதே இல்லை. ஆகையால், பயமின்றிப் பிரயாணிகளிடையே நான் அங்கும் இங்கும் போக முடிந்தது. அவர்களுக்கு ஆறுதல் கூறி உற்சாகப்படுத்தி வந்தேன். புயல் நிலைமையைக் குறித்துக் காப்டன் கூறிய தகவல்களைப் புயல்

அடித்தபோது மணிக்கு மணி அவர்களுக்குக் கூறுவேன். இவ் விதம் ஏற்பட்ட நட்பு, எவ்வளவு தூரம் எனக்கு உதவியாக இருந்தது என்பதைப் பின்னால் கவனிப்போம்.

டிசம்பர் 18 அல்லது 19-ஆம் தேதி கப்பல் டர்பன் துறை முகத்தில் நங்கூரம் பாய்ச்சியது. 'நாதேரி' என்ற கப்பலும் அன்றே வந்து சேர்ந்தது.

ஆனால், உண்மையான புயல் இனிமேல்தான் அடிக்க வேண்டியிருந்தது !

## 2

## புயல்

டிசம்பர் 18-ஆம் தேதி, இரு கப்பல்களும் டர்பன் துறைமுகம் வந்து சேர்ந்தன என்பதைக் கவனித்தோம். தென்னாப்பிரிக்கத் துறைமுகங்களில், நன்றாக வைத்தியப் பரிசோதனை செய்யப்படுவதற்கு முன், பிரயாணிகள் இறங்க அனுமதிக்கப்படுவதில்லை. தொத்து நோயால் பீடிக்கப்பட்டவர் எவராவது கப்பலில் இருந்தால், அந்தக் கப்பலிலிருந்து யாரை யும் இறங்கவிடாமல் குறிப்பிட்ட காலத்திற்கு வைத்தியக் கண்காணிப்பில், தூரத்தில் நிறுத்தி வைத்து விடுவார்கள். நாங்கள் கப்பல் ஏறிய சமயத்தில் பம்பாயில் பிளேக் நோய் பரவி இருந்ததால், கொஞ்ச காலத்திற்கு இந்தவிதமான 'சுத்தீகரண'த் திற்கு நாங்கள் ஆளாக நேரலாம் என்று பயந்தோம். வைத்தியப் பரிசோதனைக்கு முன்னால், ஒவ்வொரு கப்பலிலும் ஒரு மஞ்சள் நிறக்கொடி பறக்க வேண்டும். யாருக்கும் நோய் இல்லை என்று டாக்டர் அத்தாட்சி கொடுத்த பிறகே அக்கொடி இறக்கப்படும். அந்த மஞ்சள் கொடியை இறக்கிய பின்னரே பிரயாணிகளின் உற்றார் உறவினர்கள் கப்பலுக்குள் வர அனுமதிக்கப்படுவார்கள்.

அதன்படி எங்கள் கப்பலிலும் மஞ்சள் கொடி பறந்தது. டாக்டர் வந்து, எங்களைப் பரிசோதித்துப் பார்த்தார். 'ஐந்து நாட்களுக்கு இக்கப்பலிலிருந்து யாரையும் இறங்க அனுமதிக்கக் கூடாது' என்று டாக்டர் உத்தரவிட்டார். ஏனெனில், பிளேக் கிருமிகள் வளருவதற்கு அதிகபட்சம் இருபத்து மூன்று நாட்கள் ஆகும் என்பது அவர் கருத்து. ஆகையால், எங்கள் கப்பல் பம்பாயிலிருந்து புறப்பட்டு இருபத்து மூன்றும் நாள் முடியும் வரையில் அதிலிருந்து பிரயாணிகளை இறக்காமல் தனித்து வைக்குமாறு உத்தரவிட்டார். இந்த உத்தரவுக்குக் காரணம் சுகாதாரத்தைப்பற்றிய கவலை மட்டும் அல்ல, அதைவிட முக் கியமான வேறு காரணங்களும் உண்டு.

டர்பனில் இருந்த வெள்ளைக்காரர்கள், எங்களைத் திருப்பி அனுப்பிவிட வேண்டும் என்று கிளர்ச்சி செய்துகொண்டிருந்

தார்கள். அந்த உத்தரவுக்கு இக் கிளர்ச்சி ஒரு காரணம். டர்பனில் அன்ருடம் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதைத் தாதா அப்துல்லா கம்பெனியார் தவருமல் எங்களுக்கு அறிவித்துக் கொண்டிருந்தனர். வெள்ளைக்காரர்கள் தினந்தோறும் பெரிய பொதுக்கூட்டங்களை நடத்தி வந்தனர். தாதா அப்துல்லா கம்பெனியை, எல்லா விதங்களிலும் மிரட்டிக் கொண்டிருந்தார்கள். சில சமயங்களில் அக் கம்பெனிக்கு ஆசை வார்த்தைகளையும் கூறிவந்தனர். இரு கப்பல்களும் திருப்பி அனுப்பப்பட்டுவிட்டால் கம்பெனிக்குத் தக்க நஷ்ட ஈடு கொடுத்து விடுவதாகவும் சொன்னர்கள். ஆனல், இந்த மிரட்டல்களுக்கெல்லாம் பயந்துவிடக் கூடியவர்கள் அல்ல, தாதா அப்துல்லா கம்பெனியார். சேத் அப்துல் கரீம் ஹாஜி ஆதம், அச்சமயம் அந்தக் கம்பெனியின் நிர்வாகப் பங்குதாரராக இருந்தார். 'எப்படியும் கப்பல்களைக் கரைக்குக் கொண்டுவந்து, பிரயாணிகளை இறக்கியே தீருவது' என்று அவர் உறுதி கொண்டிருந்தார். அவர் தினந்தோறும் விவரமாகக் கடிதங்களை எழுதி எங்களுக்கு அனுப்பிக்கொண்டிருந்தார். என்னைப் பார்ப்பதற்காக டர்பனுக்கு வந்த காலஞ்சென்ற ஸ்ரீ மன்சுக்லால் நாஸர், அச் சமயம் அதிருஷ்டவசமாக அங்கே இருந்தார். அவர் திறமை வாய்ந்தவர் ; அஞ்சாதவர். இந்திய சமூகத்திற்கு வழிகாட்டி வந்தார். அக் கம்பெனியின் வக்கீலான ஸ்ரீ லாப்டனும் அஞ்சா நெஞ்சம் படைத்தவர். வெள்ளைக்காரர்களின் போக்கை அவர் கண்டித்தார். இந்திய சமூகத்தினிடம் கட்டணம் வாங்கும் வக்கீல் என்ற முறையில் மட்டும் அன்றி அச் சமூகத்தின் உண்மையான நண்பர் என்ற முறையிலும் அவர்களுக்கு அவர் ஆலோசனை கூறிவந்தார்.

இவ்வாறு சம பலம் இல்லாத இரு கட்சியினரின் போர்க்களமாக டர்பன் ஆயிற்று. ஒரு பக்கத்தில் ஒரு சிலரேயான ஏழை இந்தியரும் அவர்களுடைய ஆங்கில நண்பர்கள் சிலரும் ; மற்ருெரு பக்கத்திலோ, ஆயுதங்களிலும், எண்ணிக்கையிலும், படிப்பிலும், செல்வத்திலும் பலம் படைத்திருந்த வெள்ளையர்கள் ! நேட்டால் அரசாங்கமும் அவர்களுக்குப் பகிரங்கமாக உதவி செய்து வந்ததால், அரசாங்கத்தின் பக்க பலமும் அவர்களுக்கு இருந்தது. மந்திரி சபையில் அதிகச் செல்வாக்கு வாய்ந்த அங்கத்தினராயிருந்த ஸ்ரீ ஹாரி எஸ்கோம்பு, வெள்ளையரின் பொதுக்கூட்டங்களில் பகிரங்கமாகக் கலந்து கொண்டார்.

கப்பல் பிரயாணிகளை அல்லது கப்பல் ஏஜெண்டுகளான கம்பெனியை எப்படியாவது மிரட்டி, பிரயாணிகள் இந்தியாவுக்குத் திரும்பிப் போய் விடுமாறு பலவந்தப்படுத்திவிட வேண்டும் என்பதே, கப்பல் கரைக்கு வராமல் நிறுத்தி வைத்ததன் உண்மையான நோக்கம். இப்பொழுது எங்களை நோக்கியும் மிரட்டல்களை ஆரம்பித்து விட்டார்கள். 'திரும்பிப் போய்விடாவிட்டால் நீங்கள் நிச்சயம் கடலில் தள்ளப்படுவீர்கள் ! திரும்பி

விட ஒப்புக்கொள்ளுவீர்களாயின் 'உங்கள் கப்பல் கட்டணத் தொகையும் உங்களுக்குக் கிடைத்துவிடும்' என்று மிரட்டினர். இதற்கெல்லாம் நாங்கள் மசியவில்லை. என்னுடைய சகப் பிரயாணிகளிடம் சதா போய், அவர்களை நான் உற்சாகப்படுத்தி வந்தேன். 'நாதேரி' கப்பலில் இருந்த பிரயாணிகளுக்கும் ஆறுதலான செய்திகளை அனுப்பிக்கொண்டு வந்தேன். அவர்கள் எல்லோருமே அமைதியாகவும் தைரியமாகவும் இருந்து வந்தனர்.

பிரயாணிகளின் பொழுதுபோக்குக்காக எல்லா வகையான விளையாட்டுக்களுக்கும் ஏற்பாடு செய்தோம். கிறிஸ்துமஸ் தினத்தன்று, காப்டன், மேல் வகுப்புப் பிரயாணிகளுக்கு விருந்தளித்தார். விருந்துக்கு அழைக்கப்பட் டிருந்தவர்களில் முக்கியமானவர்கள் நானும் என் குடும்பத்தினரும். விருந்து முடிந்த பிறகு, பிரசங்கங்களும் நடந்தன. அப்பொழுது நான் மேற்கத்திய நாகரிகத்தைப்பற்றிப் பேசினேன். பெரிய விஷயங்களைக் குறித்துப் பேச அது சமயம் அல்ல என்பதை நான் அறிவேன். ஆனல், என் பேச்சு வேறுவிதமாக இருப்பதற்கில்லை. பிறகு நடந்த களியாட்டங்களில் நானும் பங்கெடுத்துக்கொண்டேன். ஆனல், என் மனமெல்லாம் டர்பனில் நடந்துகொண் டிருக்கும் போராட்டத்திலேயே ஈடுபட்டிருந்தது. உண்மையில் அப்போர் என்னை எதிர்த்து நடந்ததே யாகும். என் மீது கூறப்பட்ட குற்றச்சாட்டுகள் இரண்டு:

1. நான் இந்தியாவில் இருந்தபோது நேட்டால் வெள்ளைக்காரர்களை அக்கிரமமாகக் கண்டித்தேன் என்பது.

2. நேட்டாலை இந்திய மயம் ஆக்கிவிடவேண்டும் என்பதற்காக, அங்கே குடியேறுவதற்கு இரு கப்பல்கள் நிறையப் பிரயாணிகளைக் கொண்டுவந்திருக்கிறேன் என்பது.

என் பொறுப்பை நான் அறிவேன். என்னல் தாதா அப்துல்லா கம்பெனியார், பெரிய ஆபத்துக்கு ஆளாகியிருக்கின்றனர், பிரயாணிகளின் உயிர்களுக்கு ஆபத்து இருக்கிறது, என் குடும்பத்தினரையும் அழைத்து வந்ததால் அவர்களையும் ஆபத்தில் வைத்துவிட்டேன் என்பவற்றை யெல்லாம் அறிவேன்.

ஆனல், நான் முற்றும் குற்றம் அற்றவன். நேட்டாலுக்குப் போகுமாறு நான் எவரையும் தூண்டவில்லை. பிரயாணிகள் கப்பல் ஏறியபோது அவர்கள் யார் என்பதே எனக்குத்தெரியாது. என் உறவினர் இருவரைத் தவிர கப்பலில் இருந்த பிரயாணிகளில் ஒருவருடைய பெயர், விலாசம்கூட எனக்குத் தெரியாது. நேட்டாலில் நான் இருந்தபோது வெள்ளைக்காரர்களைக் குறித்து நான் கூருத வார்த்தை ஒன்றையேனும், இந்தியாவில் இருந்தபோது நான் சொன்னதே இல்லை. மேலும், நான் சொன்னது இன்னது என்பதற்கு ஏராளமான சாட்சியங்களும் இருக்கின்றன.

நேட்டால் வெள்ளைக்காரர்கள் எந்த நாகரிகத்தின் கனி களோ, எந்த நாகரிகத்தின் பிரதிநிதிகளாக இருந்து அதை ஆதரிக்கிறார்களோ அந்த நாகரிகத்திற்காக நான் வருந்தினேன். அந்த நாகரிகம் எப்பொழுதும் என் மனத்தில் இருந்து வந்தது. ஆகவே, அச் சிறு கூட்டத்தில் நான் பேசியபோது, அந்த நாகரி கத்தைப்பற்றிய என் கருத்தை எடுத்துக் கூறினேன். காப்ட னும் மற்ற நண்பர்களும் பொறுமையுடன் கேட்டனர். எந்த உணர்ச்சியுடன் நான் பேசினேனோ அதே உணர்ச்சியுடன் என் பிரசங்கத்தை அவர்கள் ஏற்றுக்கொண்டனர். அவர்கள் வாழ்க் கையின் போக்கை அப் பேச்சு எந்த வகையிலாவது மாற்றியதா என்பது எனக்குத் தெரியாது. ஆனால், அதற்குப் பின்னர் காப்டனுடனும் மற்ற அதிகாரிகளோடும் மேனாட்டு நாகரிகத் தைக் குறித்து, நீண்ட நேரம் நான் பேசிக்கொண் டிருந்தேன். கிழக்கத்திய நாகரிகத்தைப்போல் அல்லாமல் மேற்கத்திய நாகரிகம் – முக்கியமாக – பலாத்காரத்தையே அடிப்படையாகக் கொண்டிருக்கிறது என்று என் பிரசங்கத்தில் விவரித்தேன். என் கொள்கையை நானே நிறைவேற்ற முடியுமா என்று சிலர் கேள்வி கேட்டனர். அவர்களில் ஒருவர் காப்டன் என்பது எனக்கு ஞாபகம். அவர் என்னை நோக்கி, "வெள்ளைக்காரர்கள் தங்கள் மிரட்டலை நிறைவேற்றுகிறார்கள் என்று வைத்துக்கொள் ளுவோம். அப்பொழுது உங்களுடைய அகிம்சைக் கொள் கையை எப்படிக் கடைப்பிடிப்பீர்கள்?" என்று கேட்டார். அதற்கு நான் பின்வருமாறு பதில் சொன்னேன். "அவர்களை மன்னித்து, அவர்கள் மீது வழக்குத் தொடராமல் இருந்துவிடும் தீரத்தையும் நற்புத்தியையும் கடவுள் எனக்கு அளிப்பார் என்றே நம்புகிறேன். அவர்கள் மீது எனக்குக் கோபம் இல்லை. அவர்களுடைய அறியாமைக்கும் குறுகிய புத்திக்கும் வருத்தமே கொள்ளுகிறேன். தாங்கள் இன்று செய்துகொண் டிருப்பது சரியானது, நியாயமானது என்று அவர்கள் உண்மையாகவே நம்புகிறார்கள் என்பதை அறிவேன். ஆகையால், அவர்கள்மீது நான் கோபம் கொள்ளுவதற்கு எந்தக் காரணமும் இல்லை."

கேள்வி கேட்டவர் சிரித்தார். ஒருவேளை நான் சொன்னதில் நம்பிக்கை ஏற்படாமல் அவர் சிரித்திருக்கலாம்.

இப்படியாக நாட்கள் ஆயாசத்தை உண்டு பண்ணிய வண்ணம் நீண்டுகொண்டே இருந்தன. இப்படிக் கப்பல் ஒதுக்கி வைக்கப்பட் டிருப்பது எப்பொழுது ரத்தாகும் என்பது நிச்சயம் இல்லாமல் இருந்தது. இப்படிக் கப்பலை நிறுத்தி வைக்க உத்தரவிட்ட அதிகாரியோ, விஷயம் தம் கையை விட்டுக் கடந்துவிட்டது என்றும், அரசாங்கத்தின் உத்தரவு வந்ததுமே கப்பலில் இருந்து இறங்க எங்களை அனுமதித்து விடுவதாகவும் கூறினார்.

கடைசியாக எனக்கும் பிரயாணிகளுக்கும் இறுதி எச்சரிக் கைகள் வந்து சேர்ந்தன. உயிரோடு நாங்கள் தப்பிப் போய்

விட வேண்டுமானால், பணிந்துவிடுமாறு எங்களுக்குக் கூறப்பட்டது. எங்கள் பதிலில், பிரயாணிகளும் நானும் நேட்டால் துறைமுகத்தில் இறங்குவதற்கு எங்களுக்கு உள்ள உரிமையை வற்புறுத்தினேம். என்ன கஷ்டம் நேருவதாயினும், நேட்டாலில் பிரவேசித்தே தீருவது என்று நாங்கள் கொண்டிருந்த உறுதியையும் தெரிவித்தோம்.

இருபத்து மூன்று நாட்கள் கழித்து, எங்கள் கப்பல்கள் துறைமுகத்திற்கு வர அனுமதித்தார்கள். பிரயாணிகள் இறங்குவதை அனுமதிக்கும் உத்தரவுகளும் பிறப்பிக்கப்பட்டன.

## 3
## சோதனை

கப்பல்களைக் கரையோரமாகக் கொண்டுபோய் நிறுத்தினர்; பிரயாணிகளும் இறங்க ஆரம்பித்தார்கள். அப்பொழுது ஸ்ரீ எஸ்கோம்பு, காப்டனுக்கு ஒரு சமாசாரம் சொல்லியனுப்பியிருந்தார்: வெள்ளைக்காரர்கள் என்மீது மிகுந்த கோபத்துடன் இருக்கிறார்கள் என்றும், அதனால் என் உயிர் ஆபத்தில் இருக்கிறது என்றும், நானும் என் குடும்பத்தினரும் இருட்டிய பிறகு கப்பலிலிருந்து இறங்கும்படி சொல்லுமாறும், அப்பொழுது துறைமுக சூப்பரிண்டெண்டென்டு ஸ்ரீ டாட்டம், எங்களைப் பத்திரமாக வீடு கொண்டு போய்ச் சேர்ப்பார் என்றும் சொல்லி எச்சரித்தார். அப்படியே செய்வதாக நானும் ஒப்புக்கொண்டேன். அரை மணி நேரம் கூட ஆகியிராது. ஸ்ரீ லாப்டன், காப்டனிடம் வந்தார். அவர் சொன்னதாவது: "ஸ்ரீ காந்திக்கு ஆட்சேபம் இல்லையென்றால் அவரை என்னுடன் அழைத்துப்போக விரும்புகிறேன். ஸ்ரீ எஸ்கோம்பு உங்களுக்குச் சொல்லியனுப்பி யிருப்பதை நிறைவேற்ற வேண்டிய கடமை உங்களுக்கு இல்லை. கப்பல் ஏஜெண்டான கம்பெனியின் சட்ட ஆலோசகன் என்ற முறையில் இதைக் கூறுகிறேன்."

பிறகு அவர் என்னிடம் வந்து பின்வருமாறுகூறினர்: "நீங்கள் பயப்படவில்லையானல், நான் ஒரு யோசனை கூறுகிறேன். ஸ்ரீமதி காந்தியும் குழந்தைகளும் ஸ்ரீ ருஸ்தம்ஜியின் வீட்டிற்கு வண்டியில் முன்னால் போகட்டும். அவர்களுக்குப் பின்னால் நீங்களும் நானும் நடந்தே போவோம். இரவில் திருடனைப்போல் நகருக்குள் நீங்கள் பிரவேசிப்பது எனக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. உங்களைத் துன்புறுத்திவிடுவார்கள் என்று அஞ்சுவதற்கு இடம் இருப்பதாக நான் நினைக்கவில்லை. இப்பொழுது எல்லாம் அமைதியாக இருக்கிறது. வெள்ளைக்காரர்கள் எல்லோரும் கலைந்து போய்விட்டனர். ஆனால், எப்படியும் நீங்கள் ஒளிந்து கொண்டு, நகருக்குள் வரக்கூடாது என்று மாத்திரம் நான் உறுதியாக எண்ணுகிறேன்." இதற்கு நான் உடனே ஒப்புக்கொண்டேன்.

என் மனைவியும் குழந்தைகளும் வண்டியில் பத்திரமாக ஸ்ரீ ருஸ் தம்ஜியின் இடத்திற்குப் போய்ச் சேர்ந்துவிட்டனர். காப்டனின் அனுமதியின் பேரில் ஸ்ரீ லாப்டனுடன் நான் கப்பலிலிருந்து இறங்கினேன். துறைமுகத்திலிருந்து ஸ்ரீ ருஸ்தம்ஜி வீடு இரண்டு மைல் தூரம்.

நாங்கள் கீழே இறங்கியதும், சில சிறுவர்கள் என்னை அடை யாளம் கண்டுகொண்டனர். ''காந்தி, காந்தி'' என்று சப்தம் போட்டனர். இதைக் கேட்டதும் ஐந்தாறு பேர் அங்கே ஓடி வந்தார்கள். அவர்களும் சேர்ந்து கூச்சல் போட்டனர். கூட்டம் பலத்துவிடக் கூடும் என்று ஸ்ரீ லாப்டன் பயந்தார். பக்கத்தில் நின்ற ஒரு ரிக்ஷாவைக் கூப்பிட்டார். ரிக்ஷாவில் ஏறுவது என் பதே எனக்கு எப்பொழுதும் பிடிப்பதில்லை. அப்படி ஏறியிருந் தால் அதுவே எனக்கு முதல் அனுபவமாக இருந்திருக்கும். ஆனால், நான் ரிக்ஷாவில் ஏறச் சிறுவர்கள்விடவில்லை. ரிக்ஷாக் காரனைக் கொன்றுவிடுவதாக மிரட்டினார்கள். அவன் ஓட்டம் எடுத்துவிட்டான். நாங்கள் போக ஆரம்பித்தோம். கூட்டம் அதிகமாகிக்கொண்டே வந்தது. மேற்கொண்டும் போக முடியாத அளவுக்குக் கூட்டம் பெருகிவிட்டது. முதலில் ஸ்ரீ லாப்டனைப் பிடித்து அப்புறப்படுத்தி எங்களைத் தனித் தனியாகப் பிரித்து விட்டனர். பிறகு என்னைக் கற்களாலும் அழுகிய முட்டைகளா லும் அடித்தார்கள். ஒருவர் என் தலைப்பாகையைப் பிடுங்கிக் கொண்டார். மற்றவர்கள் என்னை அடிக்கவும் உதைக்கவும் ஆரம் பித்தனர். உணர்வு இழந்து, சோர்ந்துவிட்டேன். கீழே விழுந்து விடாமல் இருக்க ஒரு வீட்டின் முன்புறக் கிராதியைப் பிடித்துக் கொண்டேன். சற்று மூச்சுவிடலாம் என்று அங்கே நின்றேன். ஆனால், முடியவில்லை. அங்கே வந்ததும் என்னை முஷ்டியால் குத்தினர்; அடித்தனர். எனக்குத் தெரிந்தவரான போலீஸ் சூப்பரிண்டெண்டென்டின் மனைவியார் அப் பக்கம் வந்தார். அந்த வீரப் பெண்மணி என்னிடம் வந்தார். அப்பொழுது வெயில் இல்லை என்றாலும், தம் கைக்குடையை விரித்துக்கொண்டு எனக் கும் கூட்டத்திற்கும் நடுவில் நின்றுகொண்டார். ஜனக்கூட்டத் தின் கோப வெறியை இது தடுத்தது. போலீஸ் சூப்பரிண்டெண் டென்டான ஸ்ரீ அலெக்ஸாண்டரின் மனைவிக்குத் துன்பம் இழைக் காமல் அந்த வெறியர்கள் என்னை அடிப்பது சிரமம் ஆகிவிட்டது.

இதற்கு மத்தியில் இச் சம்பவத்தைப் பார்த்த ஓர் இந்திய இளைஞர், போலீஸ் ஸ்டேஷனுக்கு ஓடினார். என்னைச் சுற்றி நின்றுகொண்டு, நான் போக வேண்டிய இடத்தில் என்னைக் கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டு வருமாறு கூறிப் போலீஸ் சூப் பரிண்டெண்டென்டான ஸ்ரீ அலெக்ஸாண்டர், போலீஸ்காரர் களை அனுப்பினார். நல்ல சமயத்தில் அவர்களும் வந்து சேர்ந் தனர். போலீஸ் ஸ்டேஷன் நாங்கள் போகும் வழியில் இருந்தது. நாங்கள் அங்கே போனதும், ஸ்டேஷனிலேயே பத்திரமாகத் தங்கி விடுமாறு சூப்பரிண்டெண்டென்டு கூறினார். அவர் யோச

னைக்கு நன்றி கூறினேன். ஆனால், அங்கே தங்க மறுத்து விட்டேன். ''தங்கள் பிழையை உணரும்போது அவர்கள் சாந்தம் அடைந்துவிடுவது நிச்சயம். அவர்களுக்கு நியாய புத்தியும் இருக்கும் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு'' என்றேன். பின்னர், போலீஸ் பாதுகாப்புடன், மேற்கொண்டு எவ்விதத் துன்பமும் இல்லாமல் ஸ்ரீ ருஸ்தம்ஜியின் வீட்டை அடைந்தேன். உடம்பெல்லாம் இசிவு, ஊமைக்காயம். ஓர் இடத்தில் மாத்திரம் தோல் பெயர்ந்து, காயம் ஏற்பட்டிருந்தது. அங்கே இருந்த கப்பலின் டாக்டர் தம்மால் சாத்தியமான எல்லா உதவிகளையும் செய்தார்.*

வீட்டிற்குள் அமைதியாக இருந்தது. ஆனால், வெளியிலோ வெள்ளையர், வீட்டைச் சுற்றி வளைத்துக்கொண்டனர். இரவும் வந்தது. 'காந்தியை வெளியே அனுப்பு!' என்று அந்த ஆவேசக் கூட்டம் கூச்சல் போட்டுக்கொண் டிருந்தது. நிலைமையை உடனே அறிந்துகொண்ட போலீஸ் சூப்பரிண்டெண்டென்டு, கூட்டம் கட்டுக்கடங்காது போய்விடாதபடி ஏற்கனவே வந்து சமாளித்துக்கொண் டிருந்தார். கூட்டத்தை அவர் விரட்டவில்லை. அவர்களிடம் தமாஷ் செய்தே சமாளித்து வந்தார். என்றாலும், நிலைமை அவரும் கவலைப்பட வேண்டியதாகவே இருந்தது. பின்வருமாறு எனக்குச் செய்தி அனுப்பினார்: ''உங்கள் நண்பரின் வீட்டையும் சொத்துக்களையும் உங்கள் குடும்பத்தையும் நீங்கள் பாதுகாக்க விரும்பினால், என் யோசனைப்படி மாறுவேடத்துடன் நீங்கள் வீட்டிலிருந்து தப்பி, வெளியே வந்துவிட வேண்டும்.''

இவ்விதம் ஒரே நாளிலேயே, ஒன்றுக்கொன்று மாறுபட்ட இரு நிலைமைகளை நான் சமாளிக்க வேண்டிய தாயிற்று. உயிருக்கு ஆபத்து நேரலாம் என்று-கற்பனையில் மாத்திரமே-பயந்த ஸ்ரீ லாட்டன், என்னைப் பகிரங்கமாக வெளியில் வருமாறு யோசனை கூறினார். அந்த யோசனையை ஏற்று நடந்தேன். ஆபத்து முற்றும் உண்மையாகவே இருந்த சமயத்தில், மற்றொரு நண்பர் அதற்கு நேர்மாறான யோசனையைக் கூறினார். அதையும் ஏற்று நடந்தேன். என் உயிர் ஆபத்தில் இருக்கிறது என்பதனால் அப்படிச் செய்தேனா, அல்லது என் நண்பரின் உயிருக்கும் சொத்துக்கும் என் மனைவி மக்களின் உயிருக்கும் ஆபத்து ஏற்பட்டுவிட வேண்டாம் என்பதற்காக அப்படிச் செய்தேனா என்பதை யார் கூற முடியும்? மேலே கூறியதுபோல், முதலில், கூட்டத்தை நான் தைரியமாக எதிர்த்து நின்றது, பின்னால் மாறு வேடத்துடன் நான் தப்பியது ஆகிய இரண்டிலும் நான் செய்தது சரிதான் என்று யாரால் நிச்சயமாகச் சொல்ல முடியும்?

---

* இச் சந்தர்ப்பத்தைக் குறித்து ஆக்ஸ்போர்டு சர்வகலாசாலைப் பேராசிரியர் எட்வர்டு தாம்ஸன் எழுதுகையில், "தமது வாழ்நாளின் முடிவு வரையில் காந்தி ஒவ்வொரு வெள்ளை முகத்தையும் வெறுத்திருக்க வேண்டும்'' என்றார். ஆனால் காந்திஜியோ தம்மை அடித்துக் கொல்லவந்த வெள்ளையரை யெல்லாங்கூடப் பெருந்தன்மையோடு மன்னித்தார்.

நடந்து போய்விட்ட சம்பவங்களைக் குறித்து, அவை சரியா, தப்பா என்ற ஆராய்ச்சியில் இப்பொழுது இறங்குவது வீண் வேலை. அவைகளைப் புரிந்துகொள்ளுவதும், சாத்தியமானால் அவைகளிலிருந்து அனுபவம் பெறுவதும் பயன் உள்ளதே. குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில், குறிப்பிட்ட ஒருவர், இவ்வாறுதான் நடந்துகொள்ளுவார் என்று நிச்சயமாகச் சொல்லுவது கஷ்டம். அதோடு, ஒருவருடைய வெளிப்படையான காரியங்களிலிருந்து, அவருடைய குணத்தைச் சந்தேகத்திற்கு இடமின்றிக் கண்டு அறிந்துவிட முடியாது என்பதையும் நாம் காணலாம். ஏனெனில், அவருடைய குணத்தைக் கண்டு அறிந்துவிட, அவருடைய வெளிப்படையான காரியங்கள் மாத்திரம் போதுமான ஆதாரங்கள் ஆகிவிடா.

அது எப்படியாவது இருக்கட்டும். தப்பிப் போய்விடுவதற்குச் செய்த ஏற்பாடுகளில் என் காரியங்களை மறந்துவிட்டேன். சூப்பரிண்டெண்டென்டின் யோசனைப்படி, இந்தியக் கான்ஸ்டபிளின் உடையைப் போட்டுக்கொண்டேன். ஒரு சட்டி மீது மதராஸி அங்கவஸ்திரத்தைச் சுற்றிக் கவசமாகத் தலையில் வைத்துக் கொண்டேன். என்னுடன் இரண்டு துப்பறியும் போலீசார் வந்தனர், அவர்களில் ஒருவர், இந்திய வர்த்தகர் வேடம் போட்டுக் கொண்டார். இந்தியரைப்போல் தெரியவேண்டும் என்பதற்காக அவர், தம் முகத்தில் வர்ணம் பூசிக்கொண்டார். மற்றொருவர் என்ன வேடம் போட்டுக்கொண்டார் என்பது எனக்கு ஞாபகம் இல்லை. ஒரு குறுக்குச் சந்தின் வழியாகப் பக்கத்துக் கடைக்குள் புகுந்தோம். அங்கே அடுக்கிக் கிடந்த சாக்குக் கட்டுகளின் ஊடே சென்று, அக் கடையின் வாசலை அடைந்தோம். அங்கிருந்து கூட்டத்திற்குள் புகுந்து, தெருக்கோடிக்குப் போனோம். அங்கே ஒரு வண்டி எங்களுக்கென்று தயாராக வைக்கப்பட்டிருந்தது. அதில் ஏறி, போலீஸ் ஸ்டேஷனை அடைந்தோம். எனக்கு அடைக்கலம் தருவதாக ஸ்ரீ அலெக்ஸாண்டர் கொஞ்ச நேரத்திற்கு முன்னால் சொன்னதும், அதே போலீஸ் ஸ்டேஷன் தான். அவருக்கும் துப்பறியும் அதிகாரிகளுக்கும் நன்றி கூறினேன்.

இவ்வாறு நான் தப்பி வந்துகொண்டிருந்த சமயத்தில் ஸ்ரீ அலெக்ஸாண்டர், ‘புளிப்பு ஆப்பிள் மரத்தில், கிழட்டுக் காந்தியைத் தூக்கில் போடு’ என்று பாட்டுப் பாடி, அவர்களுக்குச் சுவாரஸ்யம் அளித்துக்கொண்டிருந்தார். நான் போலீஸ் ஸ்டேஷனுக்குப் பத்திரமாகப் போய்ச் சேர்ந்துவிட்டேன் என்பது தெரிந்ததும் அவர், பின்வரும் செய்தியைக் கூட்டத்தினருக்கு வெளியிட்டார்: ‘‘சரி, நீங்கள் தேடும் ஆசாமி, பக்கத்துக் கடை வழியாகத் தப்பிப் போய்விட்டார். ஆகையால், இப்பொழுது நீங்கள் வீட்டுக்குப் போகலாம்.’’ இதைக் கேட்டுச் சிலர் கோபம் அடைந்தனர். மற்றவர்களோ சிரித்தனர். இக் கதையைச் சிலர் நம்பவே மறுத்துவிட்டனர்.

சூப்பரிண்டெண்டென்டு கூறியதாவது: "நான் சொல்லுவதை நீங்கள் நம்பவில்லையென்றால், உங்கள் பிரதிநிதியாக ஒருவரை அல்லது இருவரை நியமியுங்கள். அவர்களை வீட்டிற்குள் அழைத்துப் போக நான் தயார். அவர்கள் காந்தியை அங்கே கண்டுபிடித்துவிட்டால், அவரை உங்களிடம் ஒப்படைத்து விடுகிறேன். அவர்கள் கண்டுபிடிக்கவில்லையென்றால் நீங்கள் கலைந்து போய்விட வேண்டும். ஸ்ரீ ருஸ்தம்ஜியின் வீட்டை நாசப்படுத்த வேண்டும் என்பதோ, ஸ்ரீ காந்தியின் மனைவியையும் குழந்தைகளையும் துன்புறுத்த வேண்டும் என்பதோ உங்கள் நோக்கம் அல்ல என்று நம்புகிறேன்."

வீட்டைச் சோதிக்கக் கூட்டத்தினர் தங்கள் பிரதிநிதிகளை அனுப்பினார்கள். ஏமாற்றச் செய்தியுடன் அவர்கள் சீக்கிரமே திரும்பிவிட்டனர். கடைசியாகக் கூட்டமும் கலைந்தது. அவர்களில் பெரும்பாலானவர், சூப்பரிண்டெண்டென்டு சாமர்த்தியமாக நிலைமையைச் சமாளித்ததைப் பாராட்டினர். மற்றுஞ் சிலரோ, ஆத்திரத்தினால் குமுறிக்கொண்டே போனார்கள்.

காலஞ்சென்ற ஸ்ரீ சேம்பர்லேன், அப்பொழுது குடியேற்ற நாடுகளின் மந்திரியாக இருந்தார். என்னைத் தாக்கியவர்களைக் கைது செய்து, வழக்குத் தொடருமாறு நேட்டால் அரசாங்கத்தைக் கேட்டுக்கொண்டு அவர் தந்தி கொடுத்தார். ஸ்ரீ எஸ்கோம்பு என்னைக் கூப்பிட்டனுப்பினார். எனக்கு ஏற்பட்ட காயங்களுக்காக வருத்தம் தெரிவித்துக் கொண்டார். அவர் கூறியதாவது: "உங்கள் உடம்புக்கு மிகச் சொற்பத் தீங்கு இழைக்கப்படினும் அதற்காக நான் வருந்தாமல் இருக்க முடியாது. இதை நீங்கள் நம்புங்கள். என்ன வந்தாலும் சரி என்று ஸ்ரீ லாப்டனுடைய யோசனையை ஏற்றுக்கொள்ளுவதற்கு உங்களுக்கு உரிமை உண்டு. ஆனால், என் யோசனையை நீங்கள் கொஞ்சம் கவனித்திருப்பீர்களாயின், இந்தத் துக்ககரமான சம்பவங்கள் நிகழ்ந்தே இரா என்பது நிச்சயம். உங்களைத் தாக்கியவர்களை நீங்கள் அடையாளம் காட்டினால், அவர்களைக் கைது செய்து, வழக்குத் தொடர நான் தயாராக இருக்கிறேன். நான் அவ்வாறு செய்ய வேண்டும் என்றே ஸ்ரீ சேம்பர்லேனும் விரும்புகிறார்."

அதற்கு நான் பின்வருமாறு பதில் சொன்னேன்: "யார்மீதும் குற்றஞ் சாட்டி, வழக்குத் தொடர நான் விரும்பவில்லை. அவர்களில் இரண்டொருவரை நான் அடையாளம் கண்டுபிடிப்பதும் சாத்தியமாக இருக்கலாம். ஆனால், அவர்கள் தண்டனை அடையும்படி செய்வதால் என்ன பயன்? மேலும், அடித்தவர்களே குற்றஞ் செய்தவர்கள் என்று நான் கருதவில்லை. நேட்டால் வெள்ளையரைக் குறித்து, இந்தியாவில் இல்லாததும் பொல்லாததையெல்லாம் நான் கூறி, அவர்களை அவமானப்படுத்திவிட்டதாக அவர்கள் எண்ணும்படி செய்யப்பட்டிருக்கின்றனர். இவ்வாறு கூறப்பட்டதை அவர்கள் நம்பினார்கள் என்றால், அவர்கள் ஆத்திரம் அடைந்ததில் ஆச்சரியம் எதுவும் இல்லை. தலைவர்களைப்

பற்றியும் நான் இப்படிக் கூறுவதை நீங்கள் அனுமதிப்பதாக இருந்தால் உங்களையுந்தான் இதற்கெல்லாம் குற்றஞ் சொல்ல வேண்டும். மக்களைச் சரியான வழியில் நீங்கள் நடத்திச் சென்றிருக்கலாம். ஆனால், ராய்ட்டரின் செய்தியை நீங்களும் நம்பி விட்டீர்கள். இல்லாததையெல்லாம் நான் கூறியிருப்பேன் என்று நீங்களும் எண்ணிக்கொண்டீர்கள் யார்மீதும் குற்றஞ் சாட்டி வழக்குத் தொடர நான் விரும்பவில்லை. உண்மை தெரிந்ததும், தாங்கள் நடந்துகொண்டு விட்டதற்கு அவர்களே வருந்துவார்கள் என்பதை நான் நிச்சயமாக அறிவேன்."

"நீங்கள் கூறியதைத் தயவுசெய்து எழுத்து மூலம் கொடுக்கிறீர்களா?" என்று ஸ்ரீ எஸ்கோம்பு கேட்டார். அவர் மேலும் கூறியதாவது: "ஏனெனில், அப்படியே நான் ஸ்ரீ சேம்பர்லேனுக்குத் தந்திமூலம் அறிவித்துவிட வேண்டியிருக்கிறது. அவசரத்தில் நீங்கள் எதையும் எழுதிக் கொடுக்க வேண்டும் என்று நான் விரும்பவில்லை. திட்டமான ஒரு முடிவுக்கு வருவதற்கு முன்னால், நீங்கள் விரும்பினால், ஸ்ரீ லாட்டனையும் மற்ற நண்பர்களையும் கலந்து ஆலோசித்துக்கொள்ளுங்கள். ஆனால், என்னைப் பொறுத்தவரையில் ஒன்றை மாத்திரம் உங்களிடம் ஒப்புக்கொண்டு விடுகிறேன். உங்களைத் தாக்கியவர்கள்மீது குற்றஞ் சாட்டி, வழக்குத் தொடரும் உரிமையை நீங்கள் விட்டுக் கொடுத்துவிடுவீர்களாயின், அமைதியை நிலைநாட்டுவதற்கு அதிக அளவு எனக்கு உதவி செய்தவர்கள் ஆவீர்கள். அதோடு உங்கள் பெருமையையும் உயர்த்திக்கொண்டவர்கள் ஆவீர்கள்."

"உங்களுக்கு நன்றி. நான் யாரையும் கலந்து ஆலோசிக்க வேண்டியதில்லை. உங்களிடம் வருவதற்கு முன்னாலேயே இது சம்பந்தமாக நான் ஒரு முடிவுக்கு வந்துவிட்டேன். என்னைத் தாக்கியவர்கள்மீது குற்றஞ் சாட்டி, வழக்குத் தொடரக்கூடாது என்பது என் கொள்கை. என் தீர்மானத்தை இப்பொழுதே எழுத்து மூலம் கொடுப்பதற்குத் தயாராக இருக்கிறேன்." இப்படிக் கூறி அவசியமான அறிக்கையை எழுதிக்கொடுத்தேன்.

## 4

# புயலுக்குப் பின் அமைதி

இன்னும் போலீஸ் ஸ்டேஷனை விட்டு, நான் வீட்டுக்குப் போகவில்லை. இரண்டு நாள் கழித்துப் போலீஸ் ஸ்டேஷனில் இருந்தபடியே என்னை ஸ்ரீ எஸ்கோம்பிடம் அழைத்துச் சென்றனர். எனக்குப் பாதுகாப்பு, முன் எச்சரிக்கை எதுவுமே தேவை இல்லாதிருந்தும் என் பாதுகாப்புக்காக இரு போலீசாரை என்னுடன் அனுப்பினர்.

கப்பலிலிருந்து இறங்கிய அன்று, மஞ்சள் கொடி இறக்கப்பட்டதும், 'நேட்டால் அட்வர்ட்டைஸர்' பத்திரிகையின் பிரதி

நிதி, என்னைப் பேட்டி காண்பதற்குக் கப்பலுக்கு வந்தார். அவர் என்னைப் பல கேள்விகள் கேட்டார். அவற்றிற்குப் பதில் அளிக்கையில், என்மீது கூறப்பட்ட ஒவ்வொரு குற்றச்சாட்டையும் நான் மறுக்க முடிந்தது. இந்தியாவில் நான் செய்த பிரசங்கங்கள் யாவும் எழுதிப் படித்தவை. இதற்காக ஸர் பிரோஸ்ஷா மேத்தாவுக்கு நான் நன்றி செலுத்த வேண்டும். அந்தப் பிரசங்கங்களின் பிரதிகளும் என்னிடம் இருந்தன. நான் மற்றப்படி பத்திரிகைகளுக்கு எழுதியவைகளுக்கும் நகல் வைத்திருந்தேன். என்னைப் பேட்டி காண வந்த நிருபரிடம் அவைகளை யெல்லாம் கொடுத்தேன். தென்னுப்பிரிக்காவில், அதிகக் கடுமையான பாஷையில் சொல்லாதது எதையும், நான் இந்தியாவில் சொல்லிவிடவே இல்லை என்பதையும் அவருக்குக் காட்டினேன். ‘கோர்லாண்டு’, ‘நாதேரி’ கப்பல்களில், பிரயாணிகள் தென்னுப்பிரிக்காவுக்கு வந்ததில், என் சம்பந்தம் எதுவுமே இல்லை என்பதையும் அவருக்குக் காட்டினேன். அப்பிரயாணிகளில் அநேகர், முன்பே அங்கே வசிப்பவர்கள். மற்றும் பலர் டிரான்ஸ்வாலுக்குப் போகிறவர்களே யன்றி நேட்டாலில் தங்க விரும்புகிறவர்கள் அல்ல. அந்தக் காலத்தில், செல்வம் தேட வருகிறவர்களுக்கு, நேட்டாலைவிட டிரான்ஸ்வால்தான் அதிகச் சௌகரியமானதாக இருந்தது. ஆகையால், இந்தியரில் அநேகர் அங்கே போகவே விரும்பினுர்கள்.

பத்திரிகை நிருபருக்கு அளித்த அந்தப் பேட்டியும், என்னைத் தாக்கியவர்கள்மீது வழக்குத் தொடர நான் மறுத்ததும், மிகச் சிறந்த வகையில் என்பேரில் நல்லெண்ணத்தை உண்டாக்கிவிட்டன. தங்கள் நடத்தைக்காக டர்பன் ஐரோப்பியர்கள் வெட்கப்பட்டனர். நான் ஒரு பாவமும் அறியாதவன் என்று பத்திரிகைகள் கூறின; ஜனக்கூட்டத்தின் செயலைக் கண்டித்தன. இவ்விதம் என்னை ஆத்திரத்துடன் கொல்ல முயன்றது, எனக்கு-அதாவது என் லட்சியத்திற்கு- பெரும் நன்மையாகவே முடிந்தது. தென்னுப்பிரிக்காவில் இந்திய சமூகத்தின் கௌரவம் இதனுல் உயர்ந்தது; என் வேலையையும் இது எளிதாக்கியது.

மூன்று, நான்கு நாட்களில் நான் என் வீட்டிற்குத் திரும்பினேன். சீக்கிரத்திலேயே வழக்கம்போல் வாழ்க்கையை நடத்த ஆரம்பித்துவிட்டேன். மேற்கண்ட சம்பவம் என் வக்கீல் தொழிலிலும் வருமானம் அதிகமாகும்படி செய்தது.

சமூகத்தின் கௌரவத்தை அது அதிகமாக்கியதுடன் சமூகத்தின்மீது இருந்த துவேஷத்தையும் அது வளர்த்துவிட்டது. இந்தியன், ஆண்மையுடன் எதிர்த்தும் போராடுவான் என்பது நிரூபிக்கப்பட்டுவிட்ட உடனே, அவன், தங்கள் நலத்துக்கு ஓர் ஆபத்து என்றும் வெள்ளைக்காரர்கள் கருதலானுர்கள். நேட்டால் சட்டசபையில் இரு மசோதாக்களைக் கொண்டு

வந்தார்கள். அதில் ஒன்று, இந்திய வர்த்தகர்களுக்குப் பாதகம் விளைவிக்கக் கூடியது ; மற்றொன்று, இந்தியர் வந்து குடியேறு வதற்குக் கடுமையான தடைகளை விதிப்பது. வாக்குரிமைக் காக நடத்திய போராட்டத்தினால் அதிருஷ்டவசமாக ஒரு பலன் ஏற்பட்டிருந்தது. அதாவது, நிறம் அல்லது இனத்தைக் குறித்துச் சட்டம் பேதம் காட்டக்கூடாதாகையால், இந்தியர் என்ற வகையில் அவர்களுக்கு விரோதமாக எந்தச் சட்டமும் செய்யக்கூடாது என்று முடிவாகியிருந்தது. ஆகையால், மேற்கண்ட மசோதாக்களின் வாசகம், எல்லோருக்கும் அச் சட்டம் அமுலாகும் என்ற முறையில் இருந்தது. ஆனால், அவர்களுடைய உண்மையான நோக்கம், நேட்டாலில் இருக்கும் இந்தியருக்கு[ மேற்கொண்டும் நிர்ப்பந்தங்களை உண்டாக்குவதே யாகும்.

இம் மசோதாக்கள், எனக்கு இருந்த பொதுவேலையை அதிக அளவுக்கு அதிகமாக்கிவிட்டன. சமூகம் எப்பொழுதையும் விட நன்றாகத் தன் கடமையை உணர்ந்திருக்கும்படியும் இவை செய்தன. அம் மசோதாக்களில் மறைந்திருந்த விஷம நோக் கத்தைச் சமூகத்தினர் அறியும்படி செய்வதற்காக, அவைகளை இந்திய மொழிகளில் மொழிபெயர்த்து, முற்றும் விளக்கியும் வைத்தோம். குடியேற்ற நாட்டு மந்திரிக்கு விண்ணப்பித்துக் கொண்டோம். இதில் தலையிட அவர் மறுத்து விட்டதால், மசோதாக்கள் சட்டம் ஆகிவிட்டன.

நேரம் முழுவதையும் அநேகமாக நான் பொதுவேலைக்கே செலவிட வேண்டியதாயிற்று. நான் முன்பு கூறியதுபோல் ஸ்ரீ மன்சுக்லால் நாஸர், டர்பனுக்கு முன்பே வந்துவிட்டதால், அவர் என்னுடன் தங்கலானார். தம் நேரத்தை அவர் பொது வேலைகளில் செலவிட்டதால் ஓரளவுக்கு எனக்கு இருந்த வேலை குறைந்தது.

நான் இல்லாதிருந்த சமயத்தில் எனக்குப் பதிலாகக் காங்கிரஸ் காரியதரிசியாக இருந்த சேத் ஆதம்ஜி மியாகான், போற்றத்தக்க வகையில் தமது கடமையை நிறைவேற்றி யிருந்தார். அங்கத்தினர்கள் தொகையை அதிகமாக்கியிருந்தார். அதோடு, நேட்டால் இந்தியக் காங்கிரஸின் நிதியிலும் சுமார் ஆயிரம் பவுன் அதிகமாக்கியிருந்தார். இம் மசோதாக்களினாலும், நாங்கள் கப்பலிலிருந்து இறங்கியபோது நடந்த ஆர்ப்பாட்டங் களினாலும் இந்தியரிடையே ஏற்பட்டிருந்த விழிப்பை நான் நல்ல வழியில் பயன்படுத்திக் கொண்டேன். அங்கத்தினர்கள் அதிக மாகச் சேருவதுடன் பணமும் வேண்டும் என்று கோரிக்கை விடுத்தேன். இப்பொழுது நிதி 5,000 பவுன் ஆயிற்று. காங்கி ரஸுக்கு நிரந்தரமான நிதியைத் திரட்டி, அந்த நிதியைக்கொண்டு சொத்துக்களை வாங்கி, அச் சொத்துக்களிலிருந்து கிடைக்கும் வாடகையைக் கொண்டு ஸ்தாபனம் நடந்து வருமாறு செய்ய வேண்டும் என்று விரும்பினேன். ஒரு பொது ஸ்தாபனத்தை

நிர்வகிப்பதில் எனக்கு இது முதல் அனுபவம். என் யோசனையை என் சக ஊழியர்களிடம் அறிவித்தேன். அவர்களும் இதை ஆதரித்தனர். வாங்கிய சொத்து, வாடகைக்கு விடப்பட்டது. கிடைத்த வட்டி, காங்கிரஸின் நடைமுறைச் செலவுக்குப் போதுமானதாக இருந்தது. சொத்தை நிர்வகிப்பதற்குச் செல்வாக்குள்ளவர்களைக் கொண்ட தருமகர்த்தா சபையையும் அமைத்தோம். இன்றுங்கூட அது இருந்து வருகிறது. ஆனால், அது இடைவிடாத சச்சரவுக்கு இடமாகிவிட்டது. இதன் காரணமாக இப்பொழுது அச் சொத்தின் வாடகைப் பணமெல்லாம் கோர்ட்டில் சேர்ந்துகொண்டிருக்கிறது.

இந்தத் துக்ககரமான நிலைமை நான் தென்னாப்பிரிக்காவில் இருந்து வந்த பிறகு உண்டாயிற்று. ஆனால், இந்தத் தகராறு ஏற்படுவதற்கு வெகு காலத்திற்கு முன்பே, பொது ஸ்தாபனங்களுக்கு நிரந்தரமான நிதி இருக்க வேண்டும் என்று எனக்கு இருந்த கருத்து மாறிவிட்டது. இப்பொழுதோ, பல பொது ஸ்தாபனங்களை நான் நிர்வகித்திருப்பதால் எனக்கு அதிக அனுபவம் ஏற்பட்டிருந்தது. 'நிரந்தரமான நிதியின் மூலம் பொது ஸ்தாபனங்களை நடத்துவது நல்லது அல்ல' என்பதே இப்பொழுது என்னுடைய திடமான கருத்தாகிவிட்டது. நிரந்தரமான நிதி ஒரு ஸ்தாபனத்திற்கு இருக்குமாயின் அந்த ஸ்தாபனத்தின் ஒழுக்கச் சிதைவுக்கான வித்தும் அந் நிதியுடன் ஊன்றப்பட்டுவிடுகிறது. பொது மக்களுடைய அங்கீகாரத்தின் பேரில் அவர்கள் அளிக்கும் நிதியைக்கொண்டு நடப்பதே பொது ஸ்தாபனம். அத்தகைய ஸ்தாபனத்திற்குப் பொதுஜன ஆதரவு இல்லையென்றால், பின்னும் நீடிப்பதற்கு அதற்கு எந்த உரிமையும் இல்லை. நிரந்தரமான நிதியைக்கொண்டு நடத்தப்படும் பொது ஸ்தாபனங்கள், பொதுஜன அபிப்பிராயத்திற்கு மாறுபட்ட காரியங்களையும் அடிக்கடி செய்கின்றன. நம் நாட்டில் இதை நாம் ஒவ்வொரு கட்டத்திலும் அனுபவித்துக் கொண்டு வருகிறோம். மத சம்பந்தமான தரும ஸ்தாபனங்கள் என்று கூறப்படும் சில ஸ்தாபனங்கள், கணக்குக் காட்டுவது என்பதையே விட்டுவிட்டன. தருமகர்த்தாக்களே, அச் சொத்துக்களுக்குச் சொந்தக்காரர்கள் ஆகிவிட்டார்கள். அவர்கள் யாருக்கும் பொறுப்பாளிகள் அல்ல. 'இயற்கையைப் போல, அன்றைக்குத் தேவையானதைப் பெற்று வாழ்வதே பொது ஸ்தாபனங்களுக்கு உகந்தது' என்பதில், எனக்கு எந்த விதமான சந்தேகமும் இல்லை. பொதுஜன ஆதரவைப் பெற முடியாத ஸ்தாபனத்திற்கு பொதுஜன ஸ்தாபனமாக இருந்துவரும் உரிமையே இல்லை. வருடந்தோறும் ஒரு ஸ்தாபனத்திற்குக் கிடைக்கும் சந்தாத் தொகை, அதன் செல்வாக்குக்கும், அதன் நிர்வாகம் எவ்வளவு யோக்கியமாக நடந்து வருகிறது என்பதற்கும் சரியான அளவுகோல் ஆகும். ஒவ்வொரு பொது ஸ்தாபனமும் இந்த அளவுகோலுக்கு உட்பட வேண்டும் என்பது என் கருத்து. ஆனால், யாரும் என்னைத்

தவருக எண்ணிக்கொண்டுவிட வேண்டாம். சில ஸ்தாபனங்களை, அவைகளின் தன்மையை அனுசரித்து, நிரந்தரமான கட்டடம் இல்லாமல் நடத்த முடியாது. நான் கூறியவை, அத்தகைய ஸ்தாபனங்களுக்குப் பொருந்தாது. பொது ஸ்தாபனங்களின் நடைமுறைச் செலவுகளை ஒவ்வொரு வருடமும் தானுகக் கிடைக்கும் சந்தாப் பணத்தைக்கொண்டு நிர்வகித்து வரவேண்டும் என்று சொல்லவே நான் விரும்புகிறேன்.

தென்னுப்பிரிக்க சத்தியாக்கிரக நாட்களில் இக் கருத்து ஊர்ஜிதமாயிற்று. அந்த மகத்தான போராட்டம், ஆறு ஆண்டுகள் வரை நடந்தது. அதற்கு லட்சக்கணக்கான ரூபாய் தேவைப்பட்டும் நிரந்தரமான நிதி எதுவும் இல்லாமலேயே அதை நடத்தினேம். சந்தா கிடைக்காவிட்டால் அடுத்த நாளைக்கு என்ன செய்வதென்று எனக்குத் தெரியாமல் இருந்த சமயங்களும் எனக்கு நினைவில் இருக்கின்றன. ஆனல், வருங்காலத்தில் என்ன நேரும் என்பதை நான் இப்பொழுது சொல்லுவதற்கில்லை. இனிக் கூறப்போகும் வரலாற்றில், மேலே சொன்ன கருத்துக்கள் சரியானபடி நிரூபிக்கப்பட்டிருப்பதை வாசகர்கள் காணலாம்.

## 5

## குழந்தைகளின் படிப்பு

**1897** ஜனவரியில், டர்பனில் நான் இறங்கியபோது என்னுடன் மூன்று குழந்தைகள் இருந்தார்கள்: என் சகோதரியின் பத்து வயதான மகன் ஒருவன்; ஒன்பது வயதும், ஐந்து வயதும் உள்ள என் புத்திரர்கள் இருவர். இவர்களை எங்கே படிக்க வைப்பது ?

ஐரோப்பியக் குழந்தைகளுக்கு என்று இருக்கும் பள்ளிக்கூடங்களுக்கு நான் அவர்களை அனுப்பியிருக்கலாம். ஆனல், என் குழந்தைகளுக்குச் சலுகை அளித்து, விதிவிலக்குப் பெற்றுல்தான் அங்கே சேர்த்துக்கொள்ளுவார்கள். வேறு எந்த இந்தியரின் குழந்தைகளையும் அப்பள்ளிக்கூடங்களில் சேர்த்துக்கொள்ளுவதில்லை. இந்தியக் குழந்தைகளுக்கென்று, கிறிஸ்தவப் பாதிரிகள் வைத்திருக்கும் பள்ளிக்கூடங்கள் உண்டு. அந்தப் பள்ளிக்கூடங்களில் அளிக்கப்படும் கல்வி எனக்குப் பிடிக்கவில்லை யாகையால் என் குழந்தைகளை அங்கே அனுப்ப நான் தயாராக இல்லை. இதற்கு ஒரு காரணம், அங்கே ஆங்கிலத்திலேயே எல்லாப்பாடங்களும் போதிக்கப்பட்டு வந்ததாகும். இல்லாவிட்டால், பிழையான தமிழ் அல்லது ஹிந்தியில் போதிப்பார்கள். இதையும் கஷ்டத்தின்பேரில்தான் ஏற்பாடு செய்யவேண்டி இருந்திருக்கும். இதையும் மற்ற அசௌகரியங்களையும் சமாளித்துக்கொண்டு போக என்னுல் முடியாது. இதற்கு மத்தியில் இக் குழந்தைகளுக்கு நானே போதிப்பது என்று சொந்த முயற்சியும் செய்து கொண்டிருந்தேன். ஆனல், நான் சொல்லிக் கொடுப்பது

என்ருல், ஒழுங்காகச் சொல்லிக்கொடுப்பதாக இருக்க முடியாது. தக்க குஜராத்தி உபாத்தியாயரும் எனக்குக் கிடைக்கவில்லை.

ஆகையால், என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்தேன். என் மேற்பார்வையில், குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுக்க ஓர் ஆங்கில உபாத்தியாயர் தேவை என்று விளம்பரம் செய்தேன். இந்த உபாத்தியாயர் ஒழுங்காக ஏதாவது சொல்லிக் கொடுத்துக்கொண்டு வரவேண்டும். மற்றப் படிப்பு விஷயங்களைப் பொறுத்தமட்டும், எனக்கு ஒழிந்தபோது அப்போதைக்கப்போது நான் சொல்லிக்கொடுப்பதோடு, குழந்தைகள் திருப்தியடைய வேண்டியதே என்று முடிவு செய்தேன். ஆகவே, ஓர் ஆங்கில மாதை, மாதம் ஏழு பவுன் சம்பளத்தில், குழந்தைகளுக்குப் படிப்புச் சொல்லிக்கொடுக்க அமர்த்தினேன். இந்த ஏற்பாடு கொஞ்ச காலம் நடந்து வந்தது. ஆனுல், எனக்கு இது திருப்திகரமாக இல்லை. நான் எப்பொழுதும் குழந்தைகளுடன், தாய்மொழியிலேயே பேசிப் பழகி வந்தேன். இதனுல், அவர்களுக்குக் கொஞ்சம் குஜராத்தி தெரிய வந்தது. குழந்தைகளைத் திரும்ப இந்தியாவிற்கு அனுப்பிவிடுவதற்கும் எனக்கு விருப்பம் இல்லை. ஏனெனில், சிறு குழந்தைகளைப் பெற்ருேரிடமிருந்து பிரிக்கவே கூடாது என்று, அந்த நாளிலிருந்தே நான் கருதிவந்தேன்.

ஒழுங்கான ஒரு குடும்பத்தில், குழந்தைகள் இயற்கையாகவே அடையும் கல்விப் பயிற்சியை, மாணவர்களின் விடுதிகளில் அவர்கள் அடைய முடியாது. ஆகையால், என் குழந்தைகளை என்னுடனேயே வைத்துக்கொண்டேன். என் சகோதரியின் மகனையும் என் மூத்த மகனையும், இந்தியாவில் மாணவர்கள் தங்கிப் படிக்கும் ஒரு பள்ளிக்குக் கொஞ்ச காலம் அனுப்பினேன். ஆனுல், சீக்கிரத்திலேயே அவர்களைத் திருப்பி அழைத்துக் கொண்டுவிட வேண்டியதாயிற்று. பிறகு-என் மூத்த மகன் வயதடைந்த வெகு காலத்திற்குப் பிறகு-என்னிடம் மனஸ்தாபம் கொண்டு, இந்தியாவுக்குப் போய்விட்டான். அங்கே அகமதாபாத்தில் ஓர் உயர்தரப் பள்ளியில் சேர்ந்தான். ஆனுல், என் மருமகனே, என்னுல் கொடுக்க முடிந்த கல்வியோடு திருப்தியடைந்து என்னுடனேயே இருந்துவிட்டான் என்று ஞாபகம். நல்ல வாலிபப் பருவத்தில் அவன் துரதிருஷ்டவசமாகச் சிறிது காலம் நோயுற்றிருந்து இறந்து போய்விட்டான்.* என் குமாரர்

---

* காந்திஜி குறிப்பிடும் இந்த மருமகன், அவருடைய சகோதரி ராலியாத் பென்னின் குமாரர். இவர் காந்திஜியுடன் தென்னுப்பிரிக்காவில் சில ஆண்டுகள் இருந்துவிட்டு 1907-ஆம் ஆண்டு இறுதியில் இந்தியா திரும்பிவிட்டார். இவர் பெயர் கோகுல்தாஸ். இந்த இளைஞர் ஊர் திரும்பிய சிறிது காலத்திற் கெல்லாம் இவருக்கு விவாகம் செய்துவிட்டனர். ஆனுல், விவாகமான பதினைந்தாம் நாள் இவர் இறந்துவிட்டார். மருமகன் இறந்துவிட்டதை அறிந்ததும் காந்திஜி 1908 மே 14-ஆம் தேதி ஸ்ரீ குஷால்சந்த் காந்திக்கும் மற்றுமொரு பெரியப்பா குமாரருக்கும் சேர்த்து எழுதிய ஒரு கடிதம், அவருக்கு இருந்த துக்கத்தையும், குழந்தைக் கல்யாணத்தில் இருந்த வெறுப்பையும், அவருடைய உள்ளத்தில் ஏற்பட்ட மாறுதல்களையும் காட்டுகின்றன. அக் கடிதமாவது:

களில் மற்ற மூவரும் பொதுப் பள்ளிக்கூடத்திற்குப் போய்ப் படித்ததே இல்லை. ஆனால், தென்னாப்பிரிக்க சத்தியாக்கிரகத்தில் ஈடுபட்டிருந்தவர்களின் குழந்தைகளுக்கென்று நான் ஆரம்பித்துச் சிறிது காலம் நடத்திக்கொண்டிருந்த வசதிக் குறைவான பள்ளிக்கூடங்களில் இவர்கள் சிறிது காலம் ஒழுங்காகப் படித்து வந்தனர்.

இந்தப் பரிசோதனைகளெல்லாம் அரைகுறையானவைகளே. நான் விரும்பிய அளவு, குழந்தைகளுக்காக என் நேரத்தைச் செலவிட என்னால் முடியவில்லை. அவர்கள் விஷயத்தில் போதிய கவனம் செலுத்த என்னால் முடியாது போனதும், தவிர்க்கமுடியாத வேறு காரணங்களும், அவர்களுக்கு, நான் அளிக்க விரும்பிய இலக்கியக் கல்வியை அளிக்க முடியாதபடி செய்துவிட்டன. இவ்விஷயத்தில் என்மீது என் குமாரர்கள் குறைகூறியிருக்கின்றனர்* எம். ஏ. அல்லது பி. ஏ. படித்தவரையோ அல்லது

---

''உங்கள் கடிதம் கிடைத்தது. எனக்கு ஏற்பட்டிருக்கும் மனநிலையைப் பற்றி என் சகோதரி ராலியாத் பென்னுக்கு எழுதிய கடிதத்தில் தெரிவித்திருக்கிறேன். அக் கடிதத்தை இத்துடன் அடக்கம் செய்திருக்கிறேன். அதைப் படித்துவிட்டுத் தயவு செய்து சிந்தியுங்கள். என் அக்காளுக்கும் படித்துக் காட்டுங்கள். அவர் கர்ஸன் தாஸுடன் இருப்பாராயின் அவருக்கு இக்கடிதத்தை அனுப்பிவிட்டு அவர் எப்படி இருக்கிறார் என்பதைத் தயவுசெய்து எனக்கு அறிவியுங்கள். கோகுல்தாஸோ போய் விட்டான். அவன் உறவை முன்னிட்டு இதை எழுதும்போதே எனக்கு அழத் தோன்றுகிறது. ஆனால், என் மனத்தில் கொஞ்ச காலம் தெளிவில்லாதிருந்த கருத்துக்கள் இப்பொழுது தெளிவடைந்துவிட்டன. நாமெல்லோரும் ஒரு வலையில் சிக்குண்டிருக்கிறோம் என்பதைக் காண்கிறேன். நம் குடும்பத்திற்கு இருக்கும் கஷ்டமான நிலைமைக்கும், நம் நாடு இருக்கும் நிலைமைக்கும் அதிக பேதம் இல்லை. என் மனத்தில் தற்சமயம் முன்னால் நிற்கும் கருத்தையே இங்கே குறிப்பிடுகிறேன்.

''கௌரவமாகப் பிறருக்குத் தோன்ற வேண்டும் என்ற தவறான கருத்தினாலும், அன்பு என்ற தவறான எண்ணத்தினாலும், நம் சிறுவர்களுக்கு அவசரப்பட்டு விவாகம் செய்துவிடுகிறோம். விவாகச் சடங்குகளுக்கும் ஏராளமாகப் பணம் செலவிடுகிறோம். ஆனால், வாலிப விதவைகளின் பரிதாபக் கோலத்தைப் பார்த்துப் பிறகு துக்கமடைகிறோம். விவாகமே கூடாது என்று நான் எப்படி யோசனை சொல்ல முடியும்? ஆனால், இதற்கு ஓர் எல்லை வேண்டும். விவாகம் செய்துவிடுவதால் சிறுவர்களைத் துயரத்திலேயே நாம் பிடித்துத் தள்ளுகிறோம். அவர்களுக்குக் குழந்தை பிறந்ததும் இன்னும் அதிகச் சங்கடத்திற்கு உட்பட்டவர்களாகின்றனர். நமது கொள்கைப்படி விவாகத்தின் முடிவே பிள்ளைப்பேறுதான். மற்றெல்லாம் வெறும் புலனின்ப நுகர்ச்சியே.

“நான் அதிகம் கூற வேண்டியதில்லை. அங்குள்ள சமாசாரங்களை நீங்கள் கூறியிருக்கிறீர்கள். நான் என்ன பதில் சொல்ல முடியும்? எனக்குள்ள உணர்ச்சியையே நான் தெரிவிக்க முடியும். உங்களைவிட நான் சிறுவன். என்றாலும், என் கருத்துக்களை உங்கள் மூலம் குடும்பம் முழுவதற்கும் தெரிவித்துக்கொள்ளுகிறேன். நம் குடும்ப நலனுக்கு இதை நான் செய்யும் உதவியாக நீங்கள் கொள்ளலாம். இவை அதிகப்பிரசங்கித்தனமானவை என்று நீங்கள் கருதினால் என்னை மன்னித்துவிடுங்கள். பதினான்கு ஆண்டுகள் என்னை நான் சோதித்துக்கொண்டு சிந்தித்த பிறகு, ஏழு ஆண்டுகள் அதை அனுசரித்த பின்னர் இதை நான் எழுதுகிறேன்.''

* தங்களுடைய கல்வி சம்பந்தமாகத் தந்தை, தங்களைச் சரிவரக் கவனிக்கவில்லை என்ற குறை குமாரர்களுக்கு இருந்தது, அதைத் தெரிவித்தும் வந்தார்கள் என்பது 1909-ல் காந்திஜி தென்னாப்பிரிக்கச் சிறையிலிருந்தபோது மகன்

மெட்ரிகுலேஷனாவது படித்தவர்களையோ அவர்கள் சந்திக்கும் போதெல்லாம், பள்ளிக்கூடப் படிப்பு இல்லாததன் கஷ்டத்தை அவர்கள் உணருவதாகத் தோன்றுகிறது.

அது எப்படியானாலும் என் அபிப்பிராயம் வேறு. எப்படியாவது அவர்களைப் பொதுப்பள்ளிக்கூடத்தில் பிடிவாதமாகப் படிக்கவைத் திருந்தேனாயின், அனுபவம் என்ற பள்ளிக்கூடத்தில் மாத்திரம் கிடைக்கக் கூடியதான, பெற்றோருடன் இருப்பதால் அடைவதான கல்வி, அவர்களுக்கு இல்லாதுபோயிருக்கும். அவர்களைப்பற்றி நான் இன்று கொஞ்சமும் கவலை இல்லாமல் இருக்கிறேன்; இப்படி இருக்க முடியாமலும் போயிருக்கும். என்னை விட்டுப் பிரிந்து, இங்கிலாந்திலோ, தென்னாப்பிரிக்காவிலோ அவர்கள் பெற்றிருக்கக் கூடிய இயற்கையல்லாத கல்வி, இன்று வாழ்க்கையில் அவர்கள் காட்டிவரும் எளிமையையும், சேவா உணர்ச்சியையும் அவர்களுக்குப் போதித்தே இராது. மேலும், அவர்களுடைய செயற்கை வாழ்க்கை முறை, எனது பொதுவேலைக்குப் பெரிய இடையூறாகவும் இருந்திருக்கும். ஆகையால், என் திருப்திக்கு ஏற்ற வகையிலோ, அவர்கள் திருப்தியடையும் வகையிலோ, அவர்களுக்கு இலக்கியக் கல்வியை அளிக்க என்னால் முடியாது போயிற்று. ஆனாலும் என்னுடைய சக்திக்கு எட்டியமட்டும், அவர்களுக்குச் செய்யவேண்டிய என் கடமையை நான் செய்யாமல் இருந்துவிடவில்லை என்று, என்னுடைய கடந்த ஆண்டுகளைத் திரும்ப எண்ணிப் பார்க்கும்போது நான் நிச்சயமாகக் கருதுகிறேன். 'பொதுப்பள்ளிக்கூடங்களுக்குக் குழந்தைகளை அனுப்பாது போனோமே' என்று நான் வருந்தவே இல்லை. இன்று என் மூத்த மகனிடம், விரும்பத் தகாத குணங்களை நான் காண்கிறேன்.* கட்டுத் திட்டமும்

---

மணிலாலுக்கு எழுதிய கடிதங்களிலிருந்து நன்றாகத் தெரிகிறது. "இனிமேல் வறுமையே நமக்குள்ள நிலை என்பதைத் தயவுசெய்து நினைவுபடுத்திக்கொள்ளவும். இதைப் பற்றி எவ்வளவுக் கெவ்வளவு நான் சிந்திக்கிறேனோ, அவ்வளவுக்கவ்வளவு பணக்காரனாக இருப்பதைவிட ஏழையாக இருப்பதே பாக்கியம் என்பதை நான் உணருகிறேன். செல்வத்தைவிட வறுமையின் பயன்கள் உண்மையானவை" என்று காந்திஜி ஒரு கடிதத்தில் கூறுகிறார். மற்றக் கடிதங்களிலும் இதுபோலவே தம் மகனுக்கு ஆறுதல் சொல்லுகிறார். இக் கடிதங்களை 'மகாத்மா காந்தி நூல்கள்–முதல் தொகுப்பு' 584—591 பக்கங்களில் காண்க.

* மகாத்மாவின் மூத்த மகன் ஹீராலால், தாம் சுயேச்சையாகப் படிக்க வேண்டும் என்று கூறி 1906-இல் இந்தியாவுக்கு வந்துவிட்டார். அங்கே அகமதாபாத் உயர்தரப்பள்ளியில் சேர்ந்து படித்தார். 18 வயதில் விவாகம் செய்துகொள்ள விரும்பினார். காந்திஜியோ, இன்னும் சில ஆண்டுகள் கழித்துக் கல்யாணம் செய்து கொள்ளலாம் என்று கருதினார். தம் மூத்த மகனின் பிடிவாதத்தைக் குறித்து 1906–இல் காந்திஜி தமது சகோதரருக்கு எழுதிய கடிதத்தில், "ஹீராலால் விவாகம் செய்துகொண்டாலும் சரிதான், செய்துகொள்ளாது போனாலும் சரிதான். தற்சமயத்திற்காவது, அவனை என் மகன் என்று நான் கருதவில்லை" என்றார். ஹீராலால் தம் மனைவி உயிருடன் இருந்த வரையிலாவது வெளிக்கு யோக்கியமாக நடந்து வந்தார். ஆனால், 1918-இல் இன்புளூவன்ஸா ஜுரத்தில் மனைவி இறந்துவிடவே மறுதாரம் மணக்க விரும்பினார். காந்திஜி அதைக் கண்டித்தார். அதன் பிறகு அவர் தந்தையை விட்டு அடியோடு விலகிப்

ஒழுங்கும் அற்ற என் இளவயதின் எதிரொலியே அது என்று நான் எப்பொழுதும் உணருகிறேன். என் வாழ்நாளின் அப்பகுதி, அரைகுறையான அறிவும், சுகபோகப் பற்றும் நிரம்பியிருந்த காலம் என்று கருதுகிறேன். அந்தக் காலமும் என் மூத்த மகனுக்கு நன்ருகப் புத்தி தெரிந்த காலமும் ஒன்ருக இருந்தன. அது, நான் அனுபவம் இன்மையிலும் இன்ப நுகர்ச்சியிலும் திளைத்த காலம் என்று கருத இயற்கையாக அவன் மறுத்து விட்டான். அதற்கு நேர்மாருக அதுவே என்னுடைய வாழ்க்கையின் மிகச் சிறந்த காலம் என்றும், பின்னுல் எனக்கு ஏற்பட்ட மாறுதல்கள், அறிவுத் தெளிவு என்று தவருகக் கூறப்படும் மதி மயக்கத்தினுல் ஏற்பட்டவை என்றும் அவன் கருதிவிட்டான். அவன் அப்படியே எண்ணியிருக்கட்டும். என் வாழ்க்கையின் ஆரம்ப காலம், நான் புத்தித் தெளிவு பெற்றிருந்த காலம் என்றும், பெரிய மாறுதல்கள் ஏற்பட்ட பிந்திய காலமே மாயையும், அகந்தையும் நிறைந்த காலம் என்றும் அவன் ஏன் எண்ணக்கூடாது? அடிக்கடி நண்பர்கள் என்னைக் கீழ்வரும் பல கேள்விகளைக் கேட்டு மடக்கப் பார்த்திருக்கின்றனர்: 'உங்கள் குழந்தைகளுக்குக் கலாசாலைப் படிப்பு அளித்திருந்தால் அதனுல் என்ன தீமை விளைந்திருக்கும்?' 'இவ்விதம் அவர்களுடைய சிறகுகளைத் துண்

---

போய்விட்டார். குடியிலும் மற்றத் தீய காரியங்களிலும் இறங்கினர். குடி போதையிலும், பணத்திற்காகவும், தந்தையை வஞ்சம் தீர்த்துக்கொள்ள வேண்டும் என்பதற்காகவும் 'அப்துல்லா' என்ற பெயருடன் தந்தைமீது அபாண்டங்களை எழுதி வெளியிடலானர். முஸ்லிமாகவும் மதம் மாறினர். இம் மத மாற்றத்தையும் குடியையும் பிற செயல்களையும் தந்தையைக் கஷ்டப்படுத்தும் எண்ணத்துடனேயே மேற்கொண்டார்.

ஹீராலால் கல்கத்தாவில் ஆரம்பித்த ஒரு கம்பெனியில் பணம் போட்டு ஏமாந்த ஒருவர் எழுதியதன் பேரில் மகாத்மா 1925 ஜூன் 18-ஆம் தேதி 'எங் இந்தியா'வில் பின்வருமாறு எழுதினர் :

"........அவனுடைய வர்த்தக முயற்சிகளைப்பற்றி எனக்கு எதுவுமே தெரியாது. அவனைத் திருப்ப என்னுல் முடிந்திருந்தால், என்னுடைய பொதுவேலைகள் பலவற்றில் அவனும் ஈடுபட்டு அதே சமயத்தில் ஜீவனத்திற்கு வேண்டியதையும் சம்பாதித்துக் கொண்டிருக்க முடியும். ஆனுல், சுயேச்சையான வழியில் அவன் போய்விட்டான். அப்படிச் செய்ய அவனுக்கு எல்லா உரிமையும் உண்டு. அவனுக்கு ஆசை அதிகம். இன்னும் ஆசையுள்ளவனுகவே இருக்கிருன். பணக்காரனுக, அதுவும் சுலபமாகப் பணக்காரனுகிவிட விரும்புகிருன். பணம், பணம் சம்பாதிக்கும் கீர்த்தி—இரண்டையும் அளிக்கக்கூடிய வழிக்கு அவனையும் என் மற்ற மக்களையும் தகுதியுள்ளவர்களாக ஆக்க நான் தவறிவிட்டேன் என்ற குறை அவனுக்கு இருக்கலாம்........ஹீராலால் என்ன செய்து வருகிருன் என்பது எனக்குத் தெரியாது. எப்பொழுதாவது என்னைச் சந்திப்பான். அவன் காரியங்களில் நான் தலையிடுவதில்லை. அவன் காரியங்கள் மோசமாகவே இருக்கும் என்பதைத் தவிர இப்பொழுது எப்படி இருக்கின்றன என்பது எனக்குத் தெரியாது.......ஹீராலாலின் வாழ்க்கையில் நான் வெறுக்கும் காரியங்கள் பல உண்டு. அவனுக்கும் அது தெரியும். அவன் தவறுகள் செய்தாலும் அவனிடம் எனக்கு அன்பு உண்டு. தந்தையின் உள்ளத்தில் இடம்பெற அவன் முற்படும்போது அந்த உள்ளம் அவனை ஏற்றுக்கொள்ளும். நல்லவர்கள் இருக்கலாம். அவர்கள் குழந்தைகளும் நல்லவர்களாக இருப்பார்கள் என்ற அவசியமில்லை........"

ஹீராலால், மகாத்மா மறைந்த பிறகே காலமானர்

டித்து விடுவதற்கு உங்களுக்கு என்ன உரிமை இருக்கிறது?' 'படித்துப் பட்டம் பெற்று, தங்களுக்கு விருப்பமான வாழ்க்கைத் துறைகளை அவர்கள் மேற்கொள்ளுவதற்கு நீங்கள் ஏன் குறுக்கே நின்றிருக்க வேண்டும்?'

இந்தவிதமான கேள்விகளில் அதிக முக்கியத்துவம் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. எத்தனையோ மாணவர்களுடன் நான் பழகியிருக்கிறேன். கல்வியைக் குறித்து எனக்குள்ள கொள்கைகளை நானாகவோ, மற்றவர்களின் மூலமோ வேறு குழந்தைகளிடமும் அனுசரித்து, அதன் பலனையும் கவனித்திருக்கிறேன். என் புத்திரர்களின் வயதினரான மற்றும் பல இளைஞர்களை எனக்குத் தெரியும். மனிதனுக்கு மனிதன் ஒப்பிட்டுப் பார்த்தால், என் புதல்வர்களைவிட அவர்கள் எந்தவிதத்திலும் மேலானவர்கள் என்றோ, அவர்களிடமிருந்து என் புதல்வர்கள் கற்றுக்கொள்ள வேண்டிய எதுவும் இருப்பதாகவோ நான் எண்ணவில்லை.

ஆனால், என்னுடைய சோதனைகளின் முடிவான பலன், காலத்தின் கருப்பையில் இருக்கிறது. இந்த விஷயத்தை நான் இங்கே விவாதிப்பதற்கு முக்கியமான நோக்கம் ஒன்று உண்டு. நாகரிக வளர்ச்சியின் வரலாற்றை ஆராயும் ஒருவர், கட்டுப்பாட்டோடு கூடிய வீட்டுப் படிப்பிற்கும் பள்ளிக்கூடப் படிப்பிற்கும் உள்ள வித்தியாசத்தையும், பெற்றோர்கள் தங்களுடைய வாழ்க்கையில் செய்யும் மாறுதல்களுக்கு ஏற்ற வகையில் குழந்தைகளிடையே ஏற்படும் மாறுதல்களையும் ஓரளவு அறிந்து கொள்ளக்கூடும் அல்லவா? இந்த அத்தியாயத்தை எழுதுவதற்கு மற்றொரு காரணமும் உண்டு. சத்தியத்தை நாடும் ஒருவர், சத்தியத்தைக் கொண்டு, தாம் செய்யும் சோதனைகளில் எவ்வளவு தூரம் போகவேண்டியிருக்கிறது என்பதையும், சுதந்திரத்தை நாடுபவரிடமிருந்து அக் கண்டிப்பான சுதந்திர தேவி, என்ன என்ன தியாகங்களை எதிர்பார்க்கிறாள் என்பதையும் காட்டுவதே அக் காரணம் ஆகும். எனக்குச் சுயமரியாதை உணர்ச்சி இல்லாதிருந்திருக்குமானால், மற்றவர்களுக்குக் கிட்டாத கல்வி என் குழந்தைகளுக்குக் கிடைப்பதைக் கொண்டு நான் திருப்தியடைந்து விடுபவனாக இருந்திருந்தால், அவர்களுக்கு நல்ல இலக்கியக் கல்வியை அளித்திருப்பேன். ஆனால், சுதந்திரத்திலும் சுயமரியாதையிலும் அவர்கள் பெற்றிருக்கும் அனுபவப் படிப்பு, அவர்களுக்குக் கிடைத்திருக்காது. சுதந்திரம் அல்லது படிப்பு ஆகிய இரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டி வரும்போது படிப்பைவிடச் சுதந்திரமே ஆயிரம் மடங்கு மேலானது என்று யார்தான் கூறமாட்டார்கள்?

இந்திய இளைஞர்களை, அவர்களுடைய அடிமைத்தனத்தின் கோட்டைகளில் இருந்து-அதாவது அவர்களுடைய பள்ளிக்கூடங்களிலும் கல்லூரிகளிலும் இருந்து-வெளியேறிவிடுமாறு 1920-இல் நான் அழைத்தேன். 'அடிமை விலங்குகளுடன் இலக்கியக்

கல்வி கற்கப் போவதைவிட, சுதந்திரம் பெறுவதற்காக எழுத்து வாசனையே இல்லாமல் இருந்து, கல்லுடைத்து வாழ்வதே எவ்வளவோ மேல்' என்று அப்பொழுது அவர்களுக்குச் சொன்னேன். எந்த ஆதாரத்துடன் நான் இந்தப் புத்திமதியைக் கூறினேன் என்பதை இளைஞர்கள் இப்பொழுது கண்டுகொள்ளலாம்.

## 6

# தொண்டில் ஆர்வம்

என்னுடைய வக்கீல் தொழில் நன்றாகவே நடந்து வந்தது. ஆனால், அதைக்கொண்டு மாத்திரம் நான் திருப்தி அடைந்து விடவில்லை. மேற்கொண்டும் என்னுடைய வாழ்க்கையை எளிமை ஆக்கிக்கொள்ள வேண்டும் என்பதும், என்னுடைய சகோதர மக்களுக்கு உருப்படியான தொண்டு எதையாவது செய்ய வேண்டும் என்பதும் என் மனத்தில் இடையறாத ஆர்வமாக இருந்து வந்தன. அந்தச் சமயத்தில் ஒரு குஷ்டரோகி என் வீட்டிற்கு வந்து சேர்ந்தார். ஒருவேளைச் சாப்பாட்டோடு அவரை அனுப்பிவிட எனக்கு மனம் இல்லை. எனவே, என் வீட்டிலேயே அவரை இருக்கச் சொல்லி அவருடைய புண்களுக்கு கட்டுக் கட்டினேன். அவருக்கு வேண்டிய மற்றச் சௌகரியங்களையும் கவனித்து வந்தேன். ஆனால், நான் நிரந்தரமாக இப்படிச் செய்துகொண்டு போக முடியாது. இது என்னால் ஆகாது. எப்பொழுதுமே அவரை என்னுடன் வைத்துக் கொள்ளுவதற்கான உறுதியும் என்னிடம் இல்லை. ஆகவே, ஒப்பந்தத் தொழிலாளருக்காக இருந்த அரசாங்க வைத்திய சாலைக்கு அவரை அனுப்பினேன்.

ஆனால், என் மனம் மாத்திரம் அமைதி இல்லாமலேயே இருந்தது. நிரந்தரமான ஜீவகாருண்யத் தொண்டு செய்ய வேண்டும் என்று என் மனம் அவாவுற்றது.* செயின்ட்

---

* நோயாளிகளுக்குப் பணிவிடை செய்வதில் காந்திஜிக்கு இருந்த விருப்பத்துக்கு அளவே கிடையாது. அது அவருடைய வாழ்நாள் முழுவதும் தணிக்க முடியாத வெறியைப்போலவே இருந்து வந்தது. இதற்குச் சான்றாக அவருடைய வாழ்க்கையிலிருந்து பல சம்பவங்களை ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதிய கட்டுரையொன்றில் கூறியிருக்கிறார்.

1940-இல் காந்திஜியும் வைஸ்ராய் லின்லித்கோவும் நடத்திய பேச்சு வார்த்தைகள் வெற்றியடையவில்லை. அப்பொழுது வைசிராய், "அப்படியானால் நீங்கள் சேகானுக்கு (சேவாகிராமத்துக்கு) எப்பொழுது புறப்படுவீர்கள்?'' என்று மகாத்மாவைக் கேட்டார்.

"முடிந்தால், இன்று சாயங்காலமே புறப்படுவேன். ஆனாலும், நான் இங்கே எவ்வளவு காலம் இருக்கவேண்டுமென்று நீங்கள் விரும்புகிறீர்களோ அவ்வளவு காலமும் நான் இங்கே இருக்க வேண்டியவன்தான். 13-ஆம் தேதி தவிர மற்ற நாட்களில் நான் இங்கே தாராளமாகத் தங்கலாம். ஆனால், நான் இங்கே தங்க வேண்டிய

எயிடானின் மிஷனுக்கு டாக்டர் பூத் தலைவராக இருந்தார். அவர் அன்பு நிறைந்த உள்ளம் படைத்தவர். தம்மிடம் வரும் நோயாளிகளுக்கு இலவசமாக அவர் வைத்தியம் செய்து வந்தார். பார்ஸி ருஸ்தம்ஜியின் தருமத்தைக் கொண்டு, டாக்டர் பூத்தின் நிர்வாகத்தின் கீழ், ஒரு சிறு தரும வைத்தியசாலையை ஆரம்பிக்க முடிந்தது. அந்த வைத்தியசாலையில், நோயாளிகளுக்குப் பணி விடை செய்ய வேண்டும் என்ற ஆர்வம் எனக்குப் பலமாக இருந்தது. மருந்து கலந்து கொடுக்கும் வேலை தினமும் இரண்டொரு மணி நேரத்திற்கு இருக்கும். அந்த அளவுக்கு என் காரியாலயத்தின் வேலையைக் குறைத்துக்கொண்டு, அங்கே 'கம்பவுண்ட'ராக இருப்பது என்று தீர்மானித்தேன். என் வக்கீல் தொழில் சம்பந்தமான வேலை, பெரும்பாலும் என் ஆபீஸிலேயே கவனிக்க வேண்டிய வேலைதான். சாஸனப் பத்தி ரங்களை எழுதுவதும் மத்தியஸ்தம் செய்வதுமே இந்தத் தொழி லில் என் முக்கியமான அலுவல். மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் எனக்குச் சில வழக்குகள் இருக்கும். ஆனால், அவை பெரும்பா லும் அதிக விவாதத்திற்கு இடம் இல்லாதவைகளாக இருக்கும்.

---

அவசியம் இல்லை என்றால், உடனே சேகானுக்குப் புறப்படத்தான் நான் விரும்புவேன். என் உள்ளம் அங்கேதான் இருக்கிறது. அங்கே அநேக நோயாளிகளை விட்டுவிட்டு வந்திருக்கிறேன். அவர்கள், என் முக்கியமான சக ஊழியர்களில் சிலர்; அவர்களோடு இருக்கும்போது நான் மிகச் சந்தோஷமாக இருக்கிறேன்" என்று காந்திஜி கூறினார்.

காந்திஜி தாம் வாழ்ந்த சேவா கிராமத்தையே ஓர் ஆஸ்பத்திரி என்று ஒரு கட்டுரையில் தமாஷாகக் கூறியிருக்கிறார். குஜராத்தி மொழியில் எழுதப்பட்ட அக்கட்டுரைப் பகுதி பின்வருமாறு:

"சேவா கிராமத்தின் தனிமை எனக்குத் தேவையாக இருந்தது. நான் வாழும் இடத்தைச் சுற்றியுள்ள இயல்பான சூழ்நிலையிலிருந்து உத்வேகம் அடைவதுதான் என் அனுபவமாக இருந்து வந்திருக்கிறது. சத்தியாக்கிரகத்தைக் கண்டுபிடித்த பின், ஆசிரமங்கள் என்று அழைக்கப்படும் இடங்களில்தான் நான் வசித்து வந்திருக்கிறேன். என் சாதனங்களை அங்கே தொடர்ந்து செய்து வந்தேன். ஆனால், சேவா கிராமத்தை ஆசிரமம் என்ற பெயரால் அழைக்க நான் தயங்கினேன். சேவா கிராமத்தில் ஏகாந்தமாக வசிக்க வேண்டும், ஏகாந்தமாக வேலை செய்ய வேண்டுமென்றுதான் நான் ஆரம்பத்தில் நினைத்தேன். ஆனால், அந்த இடமோ, எவ்விதச் சட்ட திட்டங்களையும் அனுசரிக்காமல் ஓர் ஆசிரமமாகவே வளர்ந்து விட்டது. மென்மேலும் அது வளர்ந்து கொண்டு வருகிறது. புதிய குடிசைகள் தோன்றிக்கொண்டே இருக்கின்றன. இன்று அது ஓர் ஆஸ்பத்திரியாக ஆகிவிட்டது. அதை, 'பலவீனர்களின் விடுதி (Home for the Invalids)' என்று நான் தமாஷாக அழைத்தேன். நான் உடம்பிலும் உள்ளத்திலும் பலவீனமானவன். இப்போது என்னைச் சுற்றிப் பலவீனர்களின் கூட்டம் ஒன்றைத் திரட்டியிருக்கிறேன்.

"அதை ஒரு பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கும்கூட நான் ஒப்பிட்டிருக்கிறேன். இந்த ஒப்புமை எந்த வகையிலும் பொருத்தமானதுதான். ராட்டையின் மூலம் சுயராஜ்யம் பெறுவதென்பது ஒரு பைத்தியக்காரனின் திட்டமாகத்தான் இருக்கமுடியும். ஆனால், அதிருஷ்டவசமாகப் பைத்தியக்காரர்களுக்குத் தங்கள் பைத்தியம் தெரியாது. அதனால்தான் நான் என்னைப் பைத்தியக்காரன் என்று நினைக்கவில்லை.''

இந்த நோயாளிகளும், பலவீனர்களும், பைத்தியக்காரர்கள் எனப்படுகிறவர்களும் தான் அவருக்கு உத்வேகம் பிறக்கக் காரணமாக இருந்தவர்கள் என்று மகாதேவ தேசாய் கூறுகிறார்.

என்னுடன் தென்னப்பிரிக்காவுக்கு வந்து, அப்போது என்னேடேயே வசித்து வந்த ஸ்ரீ கான், நான் இல்லாத சமயத்தில் என் வழக்குகளைக் கவனித்துக் கொள்ளுவதாகக் கூறியிருந்தார். ஆகவே, அச் சிறு வைத்தியசாலையில் சேவை செய்வதற்கு எனக்கு அவகாசம் இருந்தது. அதாவது, காலையில் வைத்திய சாலைக்குப் போகவும் வரவும் உள்ள நேரத்தைச் சேர்த்து, தினம் இரண்டு மணி நேரம். இந்த ஊழியம் என் மனத்திற்குக் கொஞ்சம் சாந்தியை அளித்தது. வரும் நோயாளிகளின் நோயைக் குறித்து விசாரிப்பது, அந்த விவரங்களை டாக்டருக்குக் கூறுவது, மருந்துகளைக் கலந்து கொடுப்பது ஆகியவையே அந்த வேலை. அது துன்பத்தை அனுபவித்துக் கொண்டிருக்கும் இந்தியருடன், நான் நெருங்கிப் பழகும்படி செய்தது. அவர்களில் அநேகர் ஒப்பந்தத் தொழிலாளர்களான தமிழர், தெலுங்கர் அல்லது வட இந்தியர் ஆவர்.

போயர் யுத்தத்தின் போது நோயுற்றவர்களுக்கும் காயம் அடைந்தோருக்கும் பணிவிடை செய்வதற்கு, என் சேவையை அளிக்க நான் முன்வந்தபோது, இந்த அனுபவம் எனக்கு அதிக உதவியாக இருந்தது.

குழந்தைகளை எவ்விதம் வளர்ப்பது என்ற பிரச்னை எப்பொழுதும் என் முன்பு இருந்துவந்தது. தென்னப்பிரிக்காவில் எனக்கு இரு புதல்வர்கள் பிறந்தார்கள். அவர்களை வளர்ப்பது சம்பந்தமான பிரச்னையைத் தீர்க்க நான் வைத்தியசாலையில் செய்து வந்த தொண்டு பயனுள்ளதாயிற்று. என்னுடைய சுயேச்சை உணர்ச்சி, எனக்கு அடிக்கடி சோதனைகளைக் கொடுத்து வந்தது. என் மனைவியின் பிரசவ காலத்தில் சிறந்த வைத்திய உதவியை ஏற்பாடு செய்து கொள்ளுவது என்று நானும் என் மனைவியும் தீர்மானித்திருந்தோம். ஆனல், சமயத்தில் டாக்டரும் தாதியும் எங்களைக் கைவிட்டுவிட்டால் நாங்கள் என்ன செய்வது? அதோடு தாதி, இந்தியப் பெண்ணாகவும் இருக்க வேண்டும். பயிற்சிபெற்ற இந்தியத் தாதி கிடைப்பது இந்தியாவிலேயே கஷ்டம் என்றால் தென்னப்பிரிக்காவில் எவ்வளவு கஷ்டம் என்பதைப்பற்றிச் சொல்லவேண்டியதில்லை. எனவே, பிரசவ சிகிச்சை சம்பந்தமாகத் தெரிந்திருக்க வேண்டியவைகளையெல்லாம் நானே படித்துக்கொண்டேன். டாக்டர் திரிபுவன தாஸ் எழுதிய 'தாய்க்குப் புத்திமதி' என்ற நூலைப் படித்தேன். மற்ற இடங்களில் அங்கும் இங்குமாக நான் பெற்ற அனுபவங்களையும் வைத்துக்கொண்டு, அந்த நூலில் கூறப்பட்டிருந்த முறைகளை அனுசரித்து, என் இரு குழந்தைகளையும் வளர்த்தேன். ஒவ்வொரு பிரசவ சமயத்திலும் குழந்தையைக் கவனிக்க ஒரு தாதியை அமர்த்துவோம். ஆனல், இரண்டு மாதங்களுக்கு மேல் அந்தத் தாதியை வைத்துக்கொள்ளுவதில்லை. தாதியை அமர்த்துவதும் என் மனைவியைக் கவனித்துக் கொள்ளுவதற்கேயன்றி, குழந்தைகளை பராமரிப்பதற்கு அன்று. அந்த வேலையை நானே பார்த்துக்கொண்டேன்.

கடைசிக் குழந்தையின் பிரசவந்தான் என்னை மிகவும் கடுமையான வேதனைக்கு உள்ளாக்கி விட்டது. திடீரென்று பிரசவ வேதனை ஏற்பட்டது. உடனே வைத்தியர் கிடைக்க வில்லை. மருத்துவச்சியை அழைத்து வரவும் கொஞ்ச நேரம் ஆகிவிட்டது. அவள் வந்திருந்தாலும் பிரசவத்திற்கு அவள் உதவி செய்திருக்க முடியாது. சுகப்பிரசவம் ஆகும்படி நானே கவனித்துக் கொள்ள வேண்டியதாயிற்று. டாக்டர் திரிபுவன தாஸின் நூலை நான் நன்ருகப் படித்து வைத்திருந்தது எனக்கு அதிக உதவியாக இருந்தது. எனக்குக் கொஞ்சமேனும் பயமே ஏற்படவில்லை.

குழந்தைகளைச் சரியானபடி வளர்க்க வேண்டுமானுல், சிசுக்களைப் பேணும் முறை, பெற்ருேருக்குத் தெரிந்திருக்க வேண்டியது அவசியம் என்று நான் நிச்சயமாகக் கருதுகிறேன். இது விஷயமாக நன்ருகப் படித்திருந்தது எவ்வளவு பயன் உள்ளதாக இருந்தது என்பதை ஒவ்வொரு கட்டத்திலும் நான் பார்த்திருக்கிறேன். இதைக் குறித்து நான் ஆராய்ந்து, அந்த அறிவைப் பயன்படுத்தியிராது போனுல், என் குழந்தைகள் இன்று இருப்பதைப் போல் இவ்வளவு உடல் நலத்துடன் இருந் திருக்கமாட்டார்கள். குழந்தை, அதன் ஐந்து வயது வரையில் கற்றுக்கொள்ள வேண்டியது எதுவும் இல்லை என்ற ஒரு மூடநம்பிக்கை இருந்து வருகிறது. இதற்கு மாருக உண்மை என்னவென்ருல், ஒரு குழந்தை அதன் முதல் ஐந்து வயதிற்குள் கற்றுக்கொள்ளாததைப் பின்னுல் எந்தக் காலத்திலும் கற்றுக் கொள்ளுவதே இல்லை. கருவில் இருக்கும் போதே ஒரு குழந் தையின் படிப்பு ஆரம்பம் ஆகிவிடுகிறது. கருத் தரிக்கும் போது, பெற்ருேருக்கு இருக்கும் உடல், மன நிலைகளே குழந்தைக்கும் ஏற்பட்டு விடுகின்றன. கர்ப்பத்தில் இருக்கும் போது, தாயின் மனநிலைகள், ஆசாபாசங்கள், தன்மைகள் ஆகியவைகளால் குழந்தை பாதிக்கப்படுகிறது. பின்னர் குழந்தை பிறந்ததும், பெற்ருேர்களைப் போலவே எதையும் செய்ய அது கற்றுக்கொள்ளுகிறது. அப்புறம் அதிக காலம் வரையில் குழந்தையின் வளர்ச்சி, பெற்ருேரைப் பொறுத்த தாகவே இருக்கிறது.

இந்த உண்மைகளையெல்லாம் அறிந்துகொள்ளும் தம்பதி கள், தங்களுடைய காம இச்சையைத் தீர்த்துக் கொள்ளுவதற் காக உடற் கலப்பு வைத்துக்கொள்ளவே மாட்டார்கள். குழந் தைப் பேறு வேண்டும் என்று விரும்பும்போது மாத்திரமே கூடுவார்கள். உண்பதையும் உறங்குவதையும் போல் ஆண்-பெண் சேர்க்கையும் அவசியமான செயல்களில் ஒன்று என நம்புவது அறியாமையின் சிகரமே ஆகும் என்று நான் கருது கிறேன். உலகம் நிலைத்திருப்பது, சந்ததி விருத்திச் செயலைப் பொறுத்திருக்கிறது. உலகமோ ஆண்டவனின் திருவிளையாட்டு ஸ்தலம்; அவனுடைய மகிமையின் பிரதிபிம்பம். எனவே, இந்த உலகத்தின் ஒழுங்கான வளர்ச்சிக்கு ஏற்றவகையிலேயே சந்ததி

விருத்திச் செயல் இருக்க வேண்டும். இதை உணருகிறவர்கள் எப் பாடுபட்டும் தங்கள் காம உணர்ச்சியைக் கட்டுப்படுத்திக் கொள்ளுவார்கள்; தங்கள் குழந்தைகளின் உடல் நலனுக்கும் மன நலனுக்கும் ஆன்ம நலனுக்கும் வேண்டிய அறிவைப் பெற்றுக் கொள்ளுவார்கள்; பெற்றுக் கொண்ட அறிவின் பயனைச் சந்ததிகளுக்கு அளிப்பார்கள்.

# 7

# பிரம்மச்சரியம்-1

இவ் வரலாற்றில், பிரம்மச்சரிய விரதத்தை மேற்கொள்ளுவதைப்பற்றி நான் தீவிரமாக நினைக்கத் தொடங்கிய கட்டத்திற்கு இப்பொழுது நாம் வந்திருக்கிறோம். எனக்கு மணமான காலத்தில் இருந்தே நான் ஏகபத்தினி விரதத்தில் உறுதிகொண்டிருந்தேன். என் மனைவியிடம் உண்மையோடு நடந்துகொள்ளுவது என்பது, சத்தியத்தினிடம் நான் கொண்டிருந்த பக்தியின் ஒரு பகுதியாயிற்று. ஆனால், என் மனைவி சம்பந்தமாகக் கூட நான் பிரம்மச்சரியத்தை அனுசரிக்க வேண்டியது முக்கியம் என்பதைத் தென்னாப்பிரிக்காவிலேயே நான் உணர ஆரம்பித்தேன். இந்த வழியில் என் எண்ணத்தைத் திருப்பியது எந்தச் சந்தர்ப்பம் அல்லது நூல் என்பதை என்னால் திட்டமாகக் கூற முடியாது. ராய்ச்சந்திரபாயைக் குறித்து நான் முன்பே எழுதியிருக்கிறேன். அவருடைய நட்பே இதில் முக்கியமான அம்சமாக இருந்திருக்கக்கூடும் என்பது என் ஞாபகம். ஸ்ரீமதி கிளாட்ஸ்டன், தமது கணவரிடம் வைத்திருந்த அபார பக்தியைக் குறித்து புகழ்ந்து ஒரு சமயம் ராய்ச்சந்திரபாயிடம் சொல்லிக் கொண்டிருந்தேன். ஸ்ரீ கிளாட்ஸ்டன்* பார்லிமெண்டுக் கூட்டத்தில் இருக்கும் போதுகூட அவருக்குத் தம் கையினாலேயே தேயிலைப் பானம் தயாரித்துக் கொடுக்க வேண்டும் என்று அவர் மனைவி வற்புறுத்திவந்தார் என்று நான் எங்கோ படித்திருந்தேன். புகழ் பெற்ற இத்தம்பதிகளின் ஒழுங்குபடுத்தப்பட்ட வாழ்க்கையில் இது ஒரு நியதியாக ஆகிவிட்டதாம். இதைக் கவிஞரிடம் நான் கூறியதோடு, சாதாரணமாகச் சதிபதிகளின் காதல் வாழ்வைப் பற்றியும் புகழ்ந்து பேசினேன். அதன் பேரில் ராய்ச்சந்திரபாய் என்னைப் பின்வருமாறு கேட்

---

*கிளாட்ஸ்டன் : 1809–இலிருந்து 1908 வரை வாழ்ந்த பிரிட்டிஷ் ராஜதந்திரி. இவர், நான்கு முறை அந்நாட்டின் பிரதம மந்திரியா யிருந்திருக்கிறார். இவர் சிறந்த பேச்சாளரும் நிதி நிபுணருமாவார். அயர்லாந்துக்குச் சுய ஆட்சி அளிக்க வேண்டும் என்று கூறி ஒரு தரம் இதற்காகத் தமது பிரதமர் பதவியையே துறந்திருக்கிறார். 'இந்தியாவில் நமது அதிகாரம் நீடிக்க வேண்டுமா, வேண்டாமா என்பதை இந்தியாவில் வாழும் 24 கோடி மக்களே முடிவு செய்ய வேண்டும்' என்று இவர் கூறியுள்ளார். இந்தியத் தாய்மொழிப் பத்திரிகைகளைப் பாதிக்கும் வகையில் நிறைவேற்றப்பட்ட அச்சுச் சட்டத்தை இவர் ரத்துச் செய்தார்.

டார்: 'ஸ்ரீமதி கிளாட்ஸ்டன், மனைவி என்ற முறையில் தம் கணவரிடம் கொண்ட அன்பு பெரிதா? ஸ்ரீ கிளாட்ஸ்டனிடம் அவருக்கு உள்ள உறவு எதுவானாலும் அதைப் பற்றிய சிந்தனையின்றி ஸ்ரீமதி கிளாட்ஸ்டன் அவருக்குப் பக்தியோடு செய்து வந்த சேவை பெரிதா? இந்த இரண்டில் எதைப் பெரிது என்று நீங்கள் எண்ணுகிறீர்கள்? அப்பெண்மணி, அவருடைய சகோதரி என்றோ, வேலைக்காரி என்றோ வைத்துக் கொள்ளுவோம். இதே கவனிப்போடு அப்போதும் தொண்டு செய்திருந்தால் அப்பொழுது நீங்கள் அந்தச் சேவையைப் பற்றி என்ன கூறுவீர்கள்? இத்தகைய அன்புள்ள சகோதரிகளையும் வேலைக்காரர்களையும் பற்றி நாம் கேள்விப்பட்டதில்லையா? அதே அன்பு நிறைந்த பக்தியை ஒரு வேலைக்காரனிடம் காண்கிறீர்கள் என்று வைத்துக் கொள்ளுவோம். அப்பொழுது ஸ்ரீமதி கிளாட்ஸ்டனின் விஷயத்தில் திருப்தியடைவதைப் போல் திருப்தியடைவீர்களா? நான் கூறிய இக்கருத்தைக் கொண்டு, விஷயத்தைச் சிந்தித்துப் பாருங்கள்.'

ராய்ச்சந்திரபாயும் விவாகம் ஆனவரே. அவர் கூறியவை, கொஞ்சம் கடுமையாக இருந்ததாக அப்பொழுது எனக்குத் தோன்றின என்பது என் நினைவு. ஆனால், அவர் கூறியவை என் உள்ளத்தில் மிகவும் ஆழப் பதிந்துவிட்டன. கணவனிடம் மனைவி கொள்ளும் பக்தி விசுவாசத்தை விட, வேலைக்காரனின் பக்தி, ஆயிரம் மடங்கு போற்றற்கு உரியது என்று நான் எண்ணினேன். கணவனுக்கும் மனைவிக்கும் இடையே பிரிக்க முடியாத பந்தம் இருக்கிறது. ஆகையால், கணவனிடம் மனைவி பக்தி கொள்ளுவதில் ஆச்சரியம் எதுவும் இல்லை. இந்தப் பக்தி முற்றிலும் இயற்கையானது. ஆனால், எஜமானனுக்கும் வேலைக்காரனுக்கும் இடையே இதற்கு இணையான ஒரு பக்தியை வளர்ப்பதற்கே விசேட முயற்சி அவசியம் ஆகிறது. கவிஞரின் கருத்து, எனக்கு மெள்ள மெள்ள விளங்கலாயிற்று.

'அப்படியானால், எனக்கும் என் மனைவிக்கும் இடையே இருக்கும் உறவு, எப்படி இருக்க வேண்டும்?' இவ்வாறு என்னை நானே கேட்டுக் கொண்டேன். அவளிடம் உண்மையோடு நடந்து கொள்ளுவது என்பதில், என்னுடைய காம இச்சைக்கு அவளைக் கருவியாக்கிக் கொள்ளுவது என்பதும் அடங்கியிருக்கிறதா? காம இச்சைக்கு நான் அடிமையாக இருக்கும் வரையில், மனைவியிடம் நான் உண்மை அன்போடு இருக்கிறேன் என்பதற்கு மதிப்பே இல்லை. என் மனைவியைப் பொறுத்தவரை நேர்மையாகச் சொல்லுவதானால், காம இச்சைக்கு என்னைத் தூண்டுபவளாக அவள் என்றுமே இருந்ததில்லை என்றே கூற வேண்டும். ஆகையால், எனக்குத் திடமான உறுதி மாத்திரம் இருந்திருந்தால், பிரம்மச்சரிய விரதம் கொள்ளுவது எனக்கு மிக எளிதான காரியம். எனக்கு மன உறுதி இல்லாததுதான் அல்லது காம இச்சைதான் இதற்குத் தடையாக இருந்தது.

இவ் விஷயத்தில் என் மனச்சாட்சி விழிப்படைந்துவிட்ட பிறகுங்கூட, இரு தடவைகளில் நான் தவறிவிட்டேன். முயற்சிக்குத் தூண்டுதலாக இருந்த நோக்கம், உயர்வானதாக இல்லாது போனதனுலேயே நான் தவறினேன். மேற்கொண்டு குழந்தைகளைப் பெருமல் இருக்கவேண்டும் என்பதே என் முக்கியமான நோக்கமாக இருந்தது. இங்கிலாந்தில் இருந்த போது, செயற்கைக் கர்ப்பத்தடை முறைகளைக் குறித்து ஏதோ படித்திருந்தேன். சைவ உணவைப் பற்றிய அத்தியாயத்தில் டாக்டர் அல்லின்ஸனின் கர்ப்பத்தடை பிரசாரத்தைக் குறித்து, முன்பே கூறியிருக்கிறேன். அப்பிரசாரத்தினுல் என் மனம் செயற்கைக் கர்ப்பத்தடை முறைகளில் சிறிதளவு சென்றிருந்தாலும், அத்தகைய முறைகளை ஸ்ரீ ஹில் எதிர்த்துக் கூறியது என் மனத்தை உடனே மாற்றிவிட்டது. 'வெளி உபாயங்களுக்குப் பதிலாக உள் முயற்சியே, அதாவது புலன் அடக்கமே சிறந்தது' என்று அவர் கூறியது, என் மனத்தில் ஆழப் பதிந்ததோடு நாளாவட்டத்தில் மனத்தை ஆட்கொண்டும் விட்டது. ஆகையால், மேற்கொண்டும் குழந்தைகள் வேண்டும் என்ற ஆசை எனக்கு இல்லை என்பதைக் கண்டதும், புலனடக்கத்திற்கான முயற்சியில் ஈடுபட ஆரம்பித்தேன். ஆனுல், இம் முயற்சியில் கணக்கில்லாத கஷ்டங்கள் இருந்தன. தனித்தனிப் படுக்கைகளில் தூங்க ஆரம்பித்தோம். நாளெல்லாம் நன்ருக உழைத்துக் களைத்துப் போன பிறகே படுக்கைக்குப் போவது என்று தீர்மானித்தேன். இந்த முயற்சிகளெல்லாம் அதிகப் பலன் தரவில்லை. ஆனுல், வெற்றி பெருது போன இத்தகைய எல்லா முயற்சிகளின் ஒருமித்த பயனே, முடிவான தீர்மானமாக உருவாகியது என்று, அக்காலத்தைப் பற்றி நான் இப்பொழுது எண்ணிப் பார்க்கும்போது உணருகிறேன்.

இப்படியே காலம் கடந்து வந்து, *1906*-ம் ஆண்டில்தான் இறுதியான தீர்மானத்திற்கு வர என்னுல் முடிந்தது. சத்தியாக்கிரகம் அப்பொழுது ஆரம்பம் ஆகிவிடவில்லை. அப் போராட்டம் வரும் என்ற எண்ணங்கூட எனக்குச் சிறிதும் இல்லை. போயர் யுத்தத்தைத் தொடர்ந்து, நேட்டால் 'ஜுலுக் கலகம்' ஆரம்பம் ஆயிற்று. அப்பொழுது நான் ஜோகன்னஸ்பர்க்கில் வக்கீல் தொழில் நடத்திக் கொண்டிருந்தேன். அச்சமயம் எனது சேவையைத் தேசீய சர்க்காருக்கு அளிக்க வேண்டும் என்று எண்ணினேன். என் சேவை ஏற்றுக்கொள்ளப்பட்டது. அதைக் குறித்து மற்ருேர் அத்தியாயத்தில் கவனிப்போம். ஆனுல், அவ் வேலை புலன் அடக்கத் துறையில் என்னை வெகு தீவிரமாகச் சிந்திக்கச் செய்தது. வழக்கம் போல இதைக் குறித்தும் என் சக ஊழியர்களுடன் கலந்து ஆலோசித்தேன். பிள்ளைப்பேறும், அதன் விளைவாக ஏற்படும் குழந்தை வளர்ப்பும் பொதுஜன சேவைக்கு உகந்தவை அல்ல என்பது, எனக்கு உறுதியாகப் பட்டது. 'கலக'த்தின் போது சேவை செய்வதற்குச் சௌகரியமாக இருப்பதற்காக ஜோகன்னஸ்பர்க்கில் இருந்த என் குடித்

தனத்தைக் கலைத்துவிட வேண்டியதாயிற்று. சேவை செய்ய நான் ஒப்புக்கொண்ட ஒரு மாதத்திற்குள், எவ்வளவோ சிரமப் பட்டு வேண்டிய வசதிகளையெல்லாம் நான் செய்து வைத்திருந்த வீட்டைக் காலி செய்துவிட வேண்டி வந்தது. என் மனைவியை யும் குழந்தைகளையும் போனிக்ஸுக்குக் கொண்டுபோய் விட்டு விட்டு, நேட்டால் படையுடன் சேர்க்கப்பட்டிருந்த இந்திய வைத்தியப் படைக்குத் தலைவனாகச் சென்றேன். அதிகக் கஷ்டங் களுடன் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு அணி வகுத்துச் செல்ல நேர்ந்த அச்சமயத்தில்தான், முடிவான எண்ணம் என் மனத்தில் பளிச்சென்று உதயமாயிற்று. அதாவது, சமூகத்தின் சேவைக்கே என்னை இந்த வகையில் அர்ப்பணம் செய்துகொள்ள விரும்பினால், பிள்ளைப் பேற்றில் அவாவையும், பொருள் ஆசை யையும் அறவே ஒழித்துவிட்டுக் குடும்பக் கவலையினின்றும் நீங்கியதான வானப்பிரஸ்த வாழ்க்கையை நான் மேற்கொள்ள வேண்டும் என்ற எண்ணம் உதயமாயிற்று.

அக் 'கலக' சம்பந்தமாக எனக்கு ஆறு வார காலமே வேலை இருந்தது. ஆனால், இந்தக் குறுகிய காலம், என் வாழ்க்கையில் மிகவும் முக்கியமானதாயிற்று. விரதங்களின் முக்கியத்துவம் முன்பு இருந்ததை விட எனக்கு இன்னும் அதிகத் தெளிவாக விளங்கியது. ஒரு விரதம், உண்மையான சுதந்திரத்தின் கதவை அடைத்துவிடுவதற்குப் பதிலாக அக் கதவைத் திறந்து விடுகிறது என்பதை உணர்ந்தேன். போதிய அளவு உறுதி, என்னிடம் இதற்கு முன்னால் இல்லை; என்னிடத்திலேயே எனக்கு நம்பிக்கை இல்லை; கடவுளின் அருளிலும் எனக்கு நம் பிக்கை இல்லை; என் மனம் சந்தேகமாகிய அலை பொங்கும் கடலில் அங்கும் இங்கும் அலைப்புண்டு, அல்லல்பட்டுக் கொண் டிருந்தது. இதனாலேயே அச்சமயம் வரையில் நான் வெற்றி யடையவில்லை. ஒரு விரதத்தை மேற்கொள்ள மறுப்பதனால் மனிதன் ஆசை வலைக்கு இழுக்கப்பட்டு விடுகிறான். ஒரு விரதத் தினால் கட்டுண்டு விடுவது, நெறியற்ற வாழ்க்கையிலிருந்து உண்மையான ஏகபத்தினி மண வாழ்வுக்கு செல்வதைப் போன் றது என்பதை அறிந்து கொண்டேன். 'முயற்சி செய்வதில் எனக்கு நம்பிக்கை உண்டு. அதனால் விரதங்களினால் என்னைக் கட்டுப்படுத்திக்கொள்ள விரும்பவில்லை' என்பது, பலவீனத்தின் புத்திப் போக்கு. எதை விலக்க வேண்டும் என்று இருக்கி றோமோ அதனிடம் உள்ளுக்குள் ஆசை இருந்து வருகிறது என் பதையே இது வெளிப்படுத்துகிறது. இல்லையானால், முடிவான தீர்மானத்திற்கு வந்துவிடுவதில் என்ன கஷ்டம் இருக்க முடியும்? பாம்பு என்னைக் கடித்துவிடும் என்பது எனக்குத் தெரியும். அதனிடமிருந்து ஓடிவிடுவது என்று விரதம் கொள்ளு கிறேன். அதனிடமிருந்து ஓடிவிட வெறும் முயற்சி செய்வதோடு நான் இருந்துவிடுவதில்லை. வெறும் முயற்சிதான் என்றால், பாம்பு என்னைக் கட்டாயம் கடித்துவிடும் என்ற நிச்சயமான உண்மையை அறியாமல் இருக்கிறேன் என்பதுதான் பொருள்.

ஆகையால், வெறும் முயற்சியைக் கொண்டே நான் திருப்தி அடைந்துவிடுவது, திட்டமான செயலின் அவசியத்தை நான் இன்னும் உணர்ந்துகொள்ளவில்லை என்பதையே காட்டுகிறது. வருங்காலத்தில் என் கருத்துக்கள் மாறிவிடுகின்றன என்று வைத்துக்கொள்ளுவோம். அந் நிலைமையில் என்னை விரதத்தினல் எப்படிக் கட்டுப்படுத்திக் கொள்ளுவது? இத்தகைய சந்தேகமே நம்மை அடிக்கடி தடுத்துவிடுகிறது. குறிப்பிட்ட ஒன்றைத் துறந்தாக வேண்டும் என்பதில் தெளிவான எண்ணம் இன்னும் ஏற்படவில்லை என்பதையே அந்தச் சந்தேகம் காட்டுகிறது. இதனுலேயே, 'ஒன்றில் வெறுப்பு ஏற்படாத துறவு நிலைத்திராது' என்று நிஷ்குலானந்தர் பாடியிருக்கிருர். எங்கே ஆசை அற்றுவிடுகிறதோ அங்கே துறவின் விரதம் இயல்பான, தவிர்க்க முடியாத பலனுக இருக்கும்.

## 8

## பிரம்மச்சரியம்-2

தீர விவாதித்து, ஆழ்ந்து சிந்தித்த பிறகே, 1906-ஆம் ஆண்டில் நான் பிரம்மச்சரிய விரதத்தை மேற்கொண்டேன். இது சம்பந்தமாக எனக்கு இருந்த எண்ணங்களைக்குறித்து, அது வரையில் என் மனைவியிடம் நான் எதுவும் கூறவில்லை. விரதத்தை மேற்கொண்ட சமயத்தில் மாத்திரமே அவளைக் கலந்து ஆலோசித்தேன். அவளுக்கு எவ்வித ஆட்சேபமும் இல்லை. ஆனல், முடிவான தீர்மானத்திற்கு வருவதில் எனக்கு அதிகக் கஷ்டம் இருந்தது. அதற்கு வேண்டிய மன பலம் என்னிடம் இல்லை. எனது சிற்றின்ப இச்சையை அடக்குவது எப்படி? ஒருவன் தன்னுடைய மனைவியிடங் கூடச் சிற்றின்ப உறவைப் போக்கிக் கொண்டுவிடுவது என்பது விசித்திரமானதாகவே அப்பொழுது தோன்றிற்று. ஆனல், ஆண்டவனின் அருள் பலத்தில் பூரண நம்பிக்கை வைத்து, துணிந்து விரதத்தை மேற்கொண்டேன்.

அந்த விரதத்தை அனுசரித்து வந்திருக்கும் இருபது ஆண்டுக் காலத்தை நான் இப்பொழுது எண்ணிப் பார்க்கும் போது, எனக்கு அளவற்ற ஆனந்தமும் ஆச்சரியமுமே உண்டாகின்றன. புலன் அடக்கத்தில் ஏறக்குறைய வெற்றிகரமாக அனுசரித்து வந்திருக்கும் பயிற்சி 1901-ஆம் ஆண்டிலிருந்தே நடந்து வருகிறது. ஆனல், விரதத்தை அனுசரித்த பிறகு எனக்கு ஏற்பட்ட சுதந்திரத்தையும் ஆனந்தத்தையும் 1906-ஆம் ஆண்டிற்கு முன்னல் நான் அனுபவித்ததில்லை. விரதம் கொள்ளுவதற்கு முன்னல் எந்தச் சமயத்திலும் ஆசைக்கு அடிமை ஆகிவிடக் கூடும் என்ற நிலையில் நான் இருந்தேன். ஆனல், இப்பொழுதோ எந்த ஆசையினின்றும் என்னைக் காக்கும் நிச்சயமான கேடயமாக விரதம் இருந்து வருகிறது. பிரம்மச்சரியத்தின் அபார சக்தி,

நாளுக்கு நாள் எனக்குப் புலனுகி வந்தது. நான் போனிக்ஸில் இருந்தபோது, இவ்விரதத்தை மேற்கொண்டேன். வைத்தியப் படை வேலை நீங்கியதும் போனிக்ஸுக்குப் போனேன். பிறகு ஜோகன்னஸ்பர்க்கிற்குத் திரும்பிவிட வேண்டியதாயிற்று. நான் அங்கே திரும்பிய ஒரு மாதத்திற்கெல்லாம் சத்தியாக்கிரகப் போராட்டத்திற்கு அடிகோலப்பட்டது. பிரம்மச்சரிய விரதம், எனக்குத் தெரியாமலே என்னைச் சத்தியாக்கிரகத்திற்குத் தயார் செய்து கொண்டிருந்ததுபோல இருந்தது. சத்தியாக்கிரகம், முன்னுலேயே யோசித்துச் செய்யப்பட்ட திட்டம் அன்று. நான் விரும்பாமலே அது தானுக வந்தது. ஆனுல், என்னுடைய முந்திய காரியங்களெல்லாம் அந்த லட்சியத்தில் கொண்டு போய் விட்டன என்பதைக் காண்கிறேன். ஜோகன்னஸ்பர்க்கில் அதிகமாக இருந்து வந்த வீட்டுச் செலவுகளையெல்லாம் குறைத்து விட்டேன். பிரம்மச்சரிய விரதத்தை மேற்கொள்ளுவதற்கென்றே போனதைப்போல் போனிக்ஸுக்குச் சென்றேன்.

'பிரம்மச்சரியத்தைப் பூரணமாக அனுசரிப்பதே பிரம்மத்தை அடைவதற்கு மார்க்கம்' என்ற அறிவு, சாத்திரங்களைப் படித்ததனுல் ஏற்பட்டதன்று. அனுபவத்தினுல் இந்த அறிவு எனக்கு நாளாவட்டத்தில் மெள்ள மெள்ள வளர்ந்தது. இது சம்பந்தமான சாத்திர நூல்களை என் வாழ்க்கையில் பின்னுல்தான் நான் படித்தேன். உடல், மனம், ஆன்மா ஆகியவைகளைக் காப்பதிலேயே பிரம்மச்சரியம் இருக்கிறது. விரதத்தின் ஒவ்வொரு நாளும் என்னை இந்த அறிவுக்குப் பக்கத்தில் கொண்டு போயிற்று. ஏனெனில், பிரம்மச்சரியம், ஒரு கடுமையான தவ முறையாக எனக்கு இல்லை. ஆறுதலையும் ஆனந்தத்தையும் எனக்கு அளிப்பதாகவே அது இருந்தது. ஒவ்வொரு நாளும் அதில் ஒரு புதிய அழகைக் கண்டேன்.

தினந்தோறும் ஆனந்தத்தை அதிகமாக்கும் விஷயமாகவே அது இருந்தாலும், அது எனக்கு எளிதாக இருந்துவிட்டது என்று யாரும் எண்ணிவிட வேண்டாம். எனக்கு ஐம்பத்தாறு வயது ஆகிவிட்ட பிறகுங்கூட, அது எவ்வளவு கஷ்டமான காரியம் என்பதை அறிகிறேன்.* கத்தியின் முனைமீது நடப்பதைப்

---

* மகாத்மா, பிரம்மச்சரிய விரதம் பூண்டு 36 ஆண்டுகளான பிறகு, அதாவது 1942–ஆம் ஆண்டில் அதைக் குறித்துத் தமது அனுபவத்தை எழுதுகையில் கூறியதாவது :

''பிரம்மச்சரியத்திற்கு நான் கொள்ளுகிற பொருளில் முழுப் பிரம்மச்சரியத்தையும் நான் அடைந்துவிட்டதாகச் சொல்லமுடியாது. ஆனுல், அதை நோக்கிப் பெருமளவு முன்னேற்றம் அடைந்திருக்கிறேன் என்பதே என் கருத்து. கடவுள் அருள் இருந்தால் இந்த வாழ்விலேயே இதில் நான் பூரணத்துவத்தை அடைந்துவிட முடியும்.......... இம்முயற்சிக்கு முப்பத்தாறு ஆண்டுகள் அதிக நீண்டகாலம் என்று நான் கருதவில்லை, வெகுமானம் எவ்வளவுக் கெவ்வளவு உயர்வானதோ அதற்கு ஏற்ருற்போன்றே அதற்காகச் செய்யவேண்டிய முயற்சியும் இருக்கும். இதன் நடுவே பிரம்மச்சரியத்தின் அவசியத்தைக் குறித்த என் கருத்துக்கள் பலமடைந்திருக்கின்றன. என்னுடைய சோதனைகளில் சில, பொதுமக்களுக்கு நன்மை பயக்கும் முறையில் அவர்களுக்கு

போன்றது அது என்பதை, ஒவ்வொரு நாளும் மேலும் மேலும் அதிகமாக உணருகிறேன். என்றைக்குமே விழிப்புடன் இருந்து வர வேண்டியது அவசியம் என்பதையும் காண்கிறேன்.

இந்த விரதத்தை அனுசரிப்பதில் அவசியமான முதல் காரியம், ருசி உணர்ச்சியை அடக்குவதாகும். ருசியை முற்றும் அடக்கிவிடுவது, பிரம்மச்சரிய விரதத்தை அனுசரிப்பதை எளிதாக்கிவிடுகிறது என்று கண்டேன். ஆகவே, சைவ உணவுக்காரன் என்ற வகையில் மாத்திரம் அன்றி பிரம்மச்சாரி என்ற வகையிலும் எனது உணவுப் பரிசோதனைகளை மேற்கொண்டும் நடத்தலானேன். இந்தச் சோதனைகளின் பலனாக, பிரம்மச்சாரியின் உணவு, ஓர் அளவுக்கு உட்பட்டதாகவும், எளிமையானதாகவும், மசாலை முதலியவைகள் கலக்காததாகவும், சாத்தியமானால் சமைக்கப்படாததாகவும் இருக்க வேண்டும் என்பதைக் கண்டேன்.

பிரம்மச்சாரிக்கு ஏற்ற சிறந்த உணவு, பழங்களும் கொட்டைப் பருப்பு வகைகளுமே என்பதை ஆறு வருட அனுபவத்தில் அறிந்துகொண்டேன். இத்தகைய ஆகாரம் மாத்திரமே சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது, சிற்றின்ப இச்சை இல்லாத நிலையை நான் அனுபவித்ததைப்போல் அந்த உணவை மாற்றிவிட்ட பிறகு நான் அனுபவித்ததில்லை. தென்னாப்பிரிக்காவில் பழங்களையும் கொட்டைப் பருப்புகளையும் மாத்திரமே நான் புசித்து வந்தபோது, பிரம்மச்சரியத்திற்கு என் அளவில் எந்தவித முயற்சியும் தேவைப்படவில்லை. ஆனால், நான் பால் சாப்பிட ஆரம்பித்த பிறகு, அதிக முயற்சியின் பேரிலேயே பிரம்மச்சரிய விரதத்தைக் காக்கவேண்டியிருந்தது. என் பழ ஆகாரத்திலிருந்து திரும்பவும் பால் சாப்பிட வேண்டிய நிலைமை எப்படி ஏற்பட்டது என்பதைக் குறித்து அதற்கு உரிய இடத்தில் பிறகு கவனிப்போம். பால் ஆகாரம் பிரம்மச்சரிய விரதத்தை அதிகக் கஷ்டமானதாக்குகிறது என்பதை மாத்திரம் இங்கே சொன்னால் போதுமானது. இதிலிருந்து 'பிரம்மச்சாரிகளெல்லாம் பால் சாப்பிடுவதை விட்டுவிட வேண்டும்' என்ற முடிவுக்கு யாரும் வந்துவிட வேண்டாம். பலவகையான ஆகாரங்களும், பிரம்மச்சரியத்தை எவ்விதம் பாதிக்கின்றன என்பதை, அநேக சோதனைகளின் பிறகே முடிவு செய்ய முடியும். பாலைப்போல் தசையை நன்றாக வளர்க்கக்கூடியதும், எளிதில் ஜீரணிக்கக் கூடியதுமான பழம் எதையும் நான் இன்னும் கண்டுபிடித்து விடவில்லை. இது சம்பந்தமாக டாக்டர்கள், வைத்தியர்கள், ஹக்கீம்கள் முதலிய பலரைக் கேட்டும் என்னால் அறிந்துகொள்ள முடியவில்லை. ஆகையால், பால், காம உணர்ச்சி

---

முன்னால் வைக்கும் கட்டத்தை இன்னும் அடைந்துவிடவில்லை; நான் திருப்தியடையும் அளவுக்கு அவைகளில் வெற்றி கண்டால் ஒரு நாளைக்கு அவைகளை மக்கள் முன்பு வைக்கலாம் என்று நம்புகிறேன். இந்த வெற்றி, பிரம்மச்சரியத்தில் மற்றவர்கள் வெற்றியடைவதை எளிதாக்கக்கூடும்."

யைத் தூண்டக்கூடியதுதான் என்றாலும், பாலை விட்டுவிடுமாறு இப்போதைக்கு யாருக்கும் நான் யோசனை கூறமாட்டேன்.

பிரம்மச்சரியத்திற்கு உணவைத் தேர்ந்தெடுப்பதும் கட்டுப்படுத்துவதும் எவ்விதம் அவசியமோ, அதேபோல் அதன் புற உதவிக்கு, உண்ணாவிரதம் அவசியம். புலன் உணர்ச்சிகள் கட்டுக்கு அடங்காதவை. மேலும், கீழும், எல்லாப் பக்கங்களிலும் சரியாகத் தடுத்துவைத்தால்தான் அவற்றை அடக்கிவைக்க இயலும். 'பசி வந்திடப் பத்தும் பறந்து போம்' என்பது அனைவரும் அறிந்ததே. ஆகையால், உண்ணாவிரதம் இருப்பது புலன்களை அடக்குவதில் அதிக உதவியாக இருக்கும் என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகமே இல்லை. ஆனால், சிலர் விஷயத்தில் பட்டினி விரதம் பயன்படுவதில்லை. ஏனெனில், சாப்பிடாமல் இருப்பதனால் மாத்திரம் புலன் அடக்கம் கைகூடிவிடும் என்று அவர்கள் நினைத்து விடுகிறார்கள். இவர்கள் உடம்பைத்தான் பட்டினி போடுகிறார்களே அன்றி, உள்ளத்திற்கு விருந்து அளித்துக் கொண்டுதான் இருக்கிறார்கள். 'பட்டினி விரதம் முடிந்ததும் என்ன என்ன ருசியான ஆகாரங்களைத் தின்பது, என்ன என்ன ருசியான பானங்களைப் பருகுவது?' என்பதைக் குறித்து எண்ணியவாறே இருக்கிறார்கள். இத்தகைய பட்டினி விரதங்கள், ருசியைக் கட்டுப்படுத்தவோ, காம இச்சையைக் கட்டுப்படுத்தவோ அவர்களுக்கு உதவுவதில்லை. பட்டினி கிடக்கும் உடலோடு, உள்ளமும் ஒத்து உழைத்தால்தான் பட்டினி விரதம் பயனுள்ளதாகும். அதாவது, உடலுக்கு எவை மறுக்கப்படுகின்றனவோ அவைகளின்மீது பட்டினி விரதம் வெறுப்பை வளர்க்க வேண்டும். எல்லாப் புலன் உணர்ச்சிகளுக்கும் வேராக இருப்பது மனம். ஆகையால், பட்டினி விரதம் ஒரு குறிப்பிட்ட அளவுக்குத்தான் பயன் தரும். பட்டினி விரதம் இருக்கும் ஒருவர், காமக் குரோத உணர்ச்சிகளுக்குத் தொடர்ந்து வயப்பட்டிருப்பவராகவே இருந்துவிடவும் கூடும். என்றாலும், பட்டினி விரதத்தை அனுசரிக்காமல் சிற்றின்ப இச்சையை அழித்துவிடுவது சாத்தியமில்லை என்பது பொதுவான விதி என்று சொல்லலாம். அது பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடிப்பதற்கு அத்தியாவசியம் என்றும் சொல்லலாம். பிரம்மச்சரியத்தை அனுசரிக்க முற்படுகிறவர்களில், பலர் தவறி விடுகின்றனர். இவர்கள் மற்றப் புலன்களை உபயோகிப்பதில் பிரம்மச்சாரிகளாக இல்லாமல் இருப்பதுதான் இவர்கள் தோல்வியடைவதற்குக் காரணம். ஆகவே, இவர்களுடைய முயற்சி, தகிக்கும் வெயில் காலத்தில், குளிர்காலத்தின் நடுக்கும் குளிரை அனுபவிக்கச் செய்யும் முயற்சியைப் போன்றதாகிறது. பிரம்மச்சாரியின் வாழ்க்கைக்கும், பிரம்மச்சாரிகள் அல்லாத மற்றவர்கள் வாழ்க்கைக்கும் தெள்ளத் தெளிவான வேறுபாடு இருக்க வேண்டும். இவ்விரு பிரிவினரின் வாழ்க்கையும் ஒன்றுபோல் இருப்பதெல்லாம் வெளித்தோற்றத்தில்தான். ஆனால், வித்தியாசம் பட்டப் பகல்போல் வெட்ட வெளிச்சமாக இருந்தாக வேண்டும். பிரம்மச்சாரி, பிரம்மச்சாரி அல்லாதவர் ஆகிய இருவரும் கட்புலனை உபயோகித்தே பார்க்கின்றனர். கடவுளின்

மகிமையைக் காண்பதற்கே, பிரம்மச்சாரி கட்புலனைப் பயன் படுத்துகிறான். ஆனால், மற்றவனோ, தன்னைச் சுற்றிலும் உள்ள அற்பத்தனங்களைப் பார்க்கவே அதை உபயோகிக்கிறான். இரு வரும் தங்கள் காதுகளை உபயோகிக்கின்றனர். இதில் ஒருவன், கடவுளின் புகழுரையைத் தவிர வேறு எதையும் செவி கொடுத்துக் கேட்பதில்லை. மற்றவனுக்கோ, ஆபாசப் பேச்சுக்களைக் கேட்பதே செவிக்கு விருந்தாக இருக்கிறது. இருவரும் இரவில் நீண்ட நேரம் கண் விழிக்கின்றனர். ஒருவன், அந்நேரத்தைப் பிரார்த்தனையில் செலவிடுகிறான்; மற்றவனோ, வெறித்தனமான வீண் களியாட்டங்களில் பாழாக்குகிறான். அந்தராத்மாவுக்கு இருப்பிடமான உடலாகிய திருக்கோயிலுக்கே இருவரும் உணவளிக்கின்றனர். ஒருவன், ஆண்டவனின் திருக்கோயிலைப் பழுதுபடாமல் நல்ல நிலையில் வைத்திருப்பதற்கே அதைச் செய்கிறான். மற்றொருவனோ, கண்டவைகளையெல்லாம் அதில் போட்டு நிரப்பி, அந்தத் தெய்விகப் பாத்திரத்தைத் துர்நாற்றம் அடிக்கும் சாக்கடை ஆக்கிவிடுகிறான். இவ்விதம் ஒருவருக்கொருவர் எவ்விதச் சம்பந்தமும் இன்றித் தொலைவிலேயே வாழ்கின்றனர். நாளாக ஆக இருவருக்கும் இடையே இருக்கும் தூரம் அதிகமாகுமே அன்றிக் குறையாது.

பிரம்மச்சரியம் என்பது மனம், வாக்கு, செயல் ஆகிய மூன்றிலும் புலன்களை அடக்குவதேயாகும். மேற்கண்டதைப் போன்ற புலன் அடக்கத்தின் அவசியத்தை ஒவ்வொரு நாளும், மேலும் மேலும் நான் நன்றாக அறிந்து வருகிறேன். பிரம்மச்சரியத்திற்கான சாத்தியங்கள் எவ்விதம் எல்லையற்று இருக்கின்றனவோ, அதேபோல் துறவுக்கும் எல்லையில்லாச் சாத்தியங்கள் உண்டு. அத்தகைய பிரம்மச்சரியத்தை ஒரு வரையறைக்கு உட்பட்ட முயற்சியினால் அடைந்துவிடுவது சாத்தியம் அல்ல. அநேகருக்கு அது வெறும் லட்சியமாக மாத்திரமே இருக்கமுடியும். பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடித்து ஒழுக விரும்புகிறவர், தம்மிடம் உள்ள குறைபாடுகளை எப்பொழுதும் உணர்ந்தவராக இருப்பார். தமது அடிமனத்தின் மூலை முடுக்குகளில் இருக்கும் ஆசைகளைத் தேடிப் பிடித்து, அவற்றைப் போக்கிக்கொள்ளுவதற்கு இடைவிடாது பாடுபட்டு வருவார். எண்ணங்கள் முற்றும் உறுதி பெற்றாலன்றிப் பூரணமான பிரம்மச்சரியம் சித்திக்காது. தானாகத் தோன்றும் எண்ணம், உள்ளத்தின் ஓர் இச்சையாகும். ஆகையால், எண்ணத்தை அடக்குவது என்பது மனத்தை அடக்குவது தான் என்று ஆகிறது. மனத்தை அடக்குவதோ, காற்றை அடக்குவதைவிட இன்னும் அதிகக் கஷ்டமானது. என்றாலும், உள்ளத்தினுள் ஆண்டவன் இருந்துவருவதால் மனத்தை அடக்குவதும் சாத்தியமாகிறது. ‘அது கஷ்டமாக இருப்பதால் அது சாத்தியமானதே அல்ல’ என்று யாரும் எண்ணிவிட வேண்டாம். அது மிக உயர்வான லட்சியம். ஆகவே, அதை அடைவதற்கு மிக அதிகமான முயற்சி தேவையாவதில் ஆச்சரியம் எதுவும் இல்லை.

ஆனால், அத்தகைய பிரம்மச்சரியத்தை மனிதப் பிரயத்தனத்தினால் மட்டும் அடைந்துவிடுவது முடியாத காரியம் என்பதை நான் இந்தியாவிற்கு வந்த பிறகே அறியலானேன். 'அதுவரையில், பழ ஆகாரத்தினால் மாத்திரமே, எல்லா ஆசைகளையும் போக்கிக்கொண்டுவிட முடியும்' என்ற மயக்கத்தில் இருந்துவிட்டேன். அதற்கு மேல் நான் செய்ய வேண்டியது எதுவும் இல்லை என்ற நம்பிக்கையில், எனக்குள் நானே பெருமையும் பட்டுக்கொண்டேன்.

என்னுடைய போராட்டங்களைப்பற்றிய அத்தியாயத்தை நான் முன்கூட்டி இங்கே விவரித்துவிடக் கூடாது. இதற்கு மத்தியில் ஒரு விஷயத்தைத் தெளிவாகக் கூறிவிடுகிறேன். கடவுளை அடைவது என்ற நோக்கத்துடன் பிரம்மச்சரியத்தை மேற்கொள்ளுகிறவர்களுக்குத் தங்களுடைய முயற்சியில் எவ்வளவு நம்பிக்கை இருக்கிறதோ அவ்வளவு நம்பிக்கை கடவுளிடமும் இருக்குமாயின், அவர்கள் மனச்சோர்வு அடைய வேண்டியதே இல்லை.

'இந்திரியங்களைத் தடுத்து வைப்பவனுக்கு விஷயானுபவங்கள் இல்லை; ஆனால், ஆசைமட்டும் இருக்கும். பரமாத்மாவைத் தரிசித்த பிறகு அவனுடைய ஆசையும் அழிகிறது.'*

ஆகவே, மோக்ஷத்தை நாடுகிறவனுக்கு ஆண்டவனுடைய திருநாமமும், ஆண்டவனுடைய பேரருளுமே கடைசி ஆதாரங்கள். இந்தியாவுக்குத் திரும்பிய பின்னரே இந்த உண்மை எனக்குப் புலனாயிற்று.

## 9
# எளிய வாழ்க்கை

எனது ஆரம்ப வாழ்க்கை சுகமானதாகவும் சௌகரியமானதாகவுமே இருந்தது. ஆனால், அந்தப் பரிசோதனை நீடித்து நிற்கவில்லை. அதிகக் கவனத்துடன் வசதிக்கான சாமான்களையெல்லாம் வீட்டில் வாங்கிப் போட்டிருந்தேன். என்றாலும் அவற்றில் எனக்குப் பற்று ஏற்படவில்லை. ஆகவே, அந்த வாழ்க்கையை ஆரம்பித்ததுமே, செலவுகளைக் குறைக்கவும் ஆரம்பித்துவிட்டேன். சலவைச் செலவு அதிகமாகிக்கொண் டிருந்தது. அதோடு ஒழுங்காகக் காலாகாலத்தில் வராமல் இருப்பதிலும் அந்தச் சலவைக்காரர் பெயர் பெற்றவர். இதனால் இருபது முப்பது சட்டைகளும் காலர்களும் இருந்தாலும் அவையும் எனக்குப் போதா என்ற நிலைமை ஏற்பட்டுவிட்டது. காலர்களைத் தினந்தோறும் மாற்றி யாகவேண்டும்; சட்டையைத் தினமும் மாற்றாவிட்டாலும் ஒன்றுவிட்டு ஒரு நாளாவது மாற்றியாக வேண்டும். இதனால் எனக்கு இரட்டிப்புச் செலவு ஆயிற்று.

* பகவத்கீதை: அத். 2: 59.

அது அனுவசியமான செலவு என்று எனக்குத் தோன்றிற்று. ஆகையால், அந்தப் பணத்தை மிச்சப்படுத்துவதற்காக நானே சலவைச் சாதனங்களைச் சேகரித்துக்கொண்டேன். சலவை யைப்பற்றிய ஒரு புத்தகத்தை வாங்கிப் படித்து, அக் கலையைக் கற்றுக்கொண்டதோடு, என் மனைவிக்கும் சொல்லிக்கொடுத் தேன். இதனால் எனக்கு வேலை அதிகமாயிற்று என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால், அத்தொழில் எனக்குப் புதுமையான தாகையால் அதைச் செய்வது இன்பமாகவே இருந்தது.

நானே சலவை செய்து போட்டுக்கொண்ட முதல் கழுத் துப்பட்டை (காலர்)யை நான் என்றும் மறந்துவிட முடியாது. தேவைக்கு அதிகமாகக் கஞ்சி போட்டுவிட்டேன். தேய்க்கும் பெட்டியின் இரும்பில் போதுமான சூடு இல்லை. கழுத்துப் பட்டை எங்கே பொசுங்கிவிடுமோ என்ற பயத்தில் அதைச் சரியாக நான் அழுத்தித் தேய்க்கவும் இல்லை. இதன் பலன் என்னவெனில், கழுத்துப்பட்டை ஓரளவு விறைப்பாகத்தான் இருந்தது என்றாலும், அதிகப்படியாக அதற்குப் போட்டுவிட்ட கஞ்சி, அதிலிருந்து உதிர்ந்துகொண்டே இருந்தது. அந்தக் கழுத்துப்பட்டையைக் கட்டிக்கொண்டு, கோர்ட்டுக்குப் போனேன். மற்றப் பாரிஸ்டர்களின் பரிகாசத்துக்கு ஆளானேன். ஆனால், அந்த நாளிலேயே நான் பரிகாசத்துக்கும் பயப்படாத வன் ஆகிவிட்டேன்.

“என் கழுத்துப்பட்டைகளை நானே சலவை செய்துகொள் ளுவதில், இது என் முதல் பரிசோதனை. அதனால்தான் கஞ்சி உதிர்ந்துகொண் டிருக்கிறது. அது எனக்கு எந்தவிதத் தொல்லையையும் கொடுக்கவில்லை. அதோடு நீங்கள் இவ்வளவு சிரித்து, இன்புறுவதற்கு இது காரணமாகவும் இருக்கிறது” என்றேன்.

“ஆனால், இங்கே சலவைக் கடைகளுக்குப் பஞ்சமே இல்லையே?” என்று ஒரு நண்பர் கேட்டார்.

“சலவைச் செலவு அதிகமாகிறது. ஒரு கழுத்துப்பட்டை யின் விலை எவ்வளவோ அவ்வளவு ஆகிவிடுகிறது, அதைச் சலவை செய்யும் கூலி. அப்படியானாலும் ஆகட்டும் என்றால், என் றென்றைக்கும் சலவைத் தொழிலாளியையே நம்பி வாழவேண் டியதாக இருக்கிறது. ஆகையால், என் துணிகளை நானே சலவை செய்துகொள்ளுவது மேல் என்று எண்ணுகிறேன்” என்றேன்.

ஆனால், தம் வேலைகளைத் தாமே செய்துகொள்ளுவதில் உள்ள இன்பத்தை என் நண்பர்கள் உணரும்படி செய்ய என்னால் ஆகவில்லை. என் சொந்த வேலையைப் பொறுத்தவரை யில் நாளாவட்டத்தில் சலவைத் தொழிலில் நான் அதிகத் தேர்ச்சி பெற்றவன் ஆகிவிட்டேன். என்னுடைய சலவை, சலவைத் தொழிலாளியின் சலவைக்கு எந்தவிதத்திலும் குறை

வானதாகவும் இல்லை. என்னுடைய கழுத்துப்பட்டைகள், மற்றவர்களுடைய கழுத்துப் பட்டைகளைவிட விறைப்பிலும் பளபளப்பிலும் குறைந்தனவாகவும் இல்லை.

கோகலே, தென்னாப்பிரிக்காவுக்கு வந்தபோது, அவர் ஓர் அங்கவஸ்திரம் வைத்திருந்தார். அதை மகாதேவ கோவிந்த ரானடே, அவருக்கு அன்பளிப்பாகத் தந்திருந்தார். அந்த அருமையான ஞாபகச் சின்னத்தைக் கோகலே மிகவும் போற்றிக் கவனத்துடன் பாதுகாத்து வந்தார். விசேட சமயங்களில் மாத்திரமே அதை அவர் உபயோகிப்பார். அப்படிப்பட்ட விசேட சந்தர்ப்பம் ஒன்று வந்தது: ஜோகன்னஸ்பர்க் இந்தியர், கோகலேக்கு அளித்த விருந்துபசாரமே அந்தச் சந்தர்ப்பம். இதற்கு அந்த அங்கவஸ்திரத்தைப் போட்டுக்கொண்டு போக, கோகலே விரும்பினர். ஆனால், அது கசங்கிப் போயிருந்ததால், 'இஸ்திரி' போடவேண்டி இருந்தது. சலவைத் தொழிலாளியிடம் அனுப்பி, 'இஸ்திரி' போட்டுக்கொண்டு வருவதற்கு நேரம் இல்லை. எனவே, அதில் என்னுடைய கைத்திறமையைக் காட்டுவதாகக் கூறினேன்.

"வக்கீல் தொழிலில் என்றால் உம்முடைய திறமையில் நான் நம்பிக்கை வைக்க முடியும். ஆனால், சலவைத் தொழிலில் உமக்குத் திறமை இருப்பதாக நம்புவதற்கில்லை" என்றார் கோகலே. "அதைக் கெடுத்து விடுவீராயின் என்ன செய்வது? அது எனக்கு எவ்வளவு அருமையான பொருள் என்பது தெரியுமா?" என்றும் கூறினர். இவ்விதம் சொல்லி, அந்த அன்பளிப்பு தமக்குக் கிடைத்த வரலாற்றையும் அதிக ஆனந்தத்தோடு கூறினர். நானே அவ்வேலையைச் செய்வதாக மீண்டும் வற்புறுத்தினேன். வெகு நன்றாகச் செய்துகொடுப்பதாகவும் வாக்களித்தேன். பிறகு அதை, 'இஸ்திரி'போட அனுமதி கிடைத்தது. அதைச் செய்து முடித்து, அவருடைய பாராட்டையும் பெற்றேன். அதற்குப் பிறகு அவ்வேலைத் திறமைக்கு எனக்கு நற்சாட்சிப் பத்திரம் அளிக்க உலகமே மறுத்துவிட்டாலும் எனக்குக் கவலை இல்லை.

சலவைத் தொழிலாளிக்கு அடிமையாக இருப்பதிலிருந்து என்னை நான் விடுவித்துக் கொண்டதைப்போலவே க்ஷவரத் தொழிலாளியை எதிர்பார்ப்பதையும் போக்கிக்கொண்டு விட்டேன். இங்கிலாந்துக்குப் போகிறவர்கள் எல்லோரும் க்ஷவரம் செய்துகொள்ளவாவது கற்றுக்கொள்ளுகின்றனர். ஆனால், நான் அறிந்தவரையில், தங்கள் தலை முடியையும் தாங்களே கத்தரித்துக்கொள்ளுவது என்பதை யாரும் கற்றுக்கொண்டதில்லை. நான் இதையும் கற்றுக்கொண்டுவிட வேண்டியதாயிற்று. நான் ஒரு சமயம் பிரிட்டோரியாவில் ஆங்கிலேயர் ஒருவரிடம் முடி வெட்டிக்கொள்ளப் போனேன். அவர், அதிக வெறுப்புடன் என் தலை மயிரை வெட்ட மறுத்துவிட்டார். எனக்கு இது அவமரியாதையாக இருந்தது. உடனே மயிர்க்

கத்திரி ஒன்றை வாங்கினேன். கண்ணாடி முன்பு நின்றுகொண்டு, என் தலை மயிரை நானே கத்தரித்துக்கொண்டேன். முன் மயிரை வெட்டிக்கொள்ளுவதில் ஓரளவுக்கு வெற்றி பெற்றேன். ஆனால், பின்பக்கத்து மயிரை வெட்டிக் கெடுத்துவிட்டேன். கோர்ட்டில் இருந்த நண்பர்கள் அதைப் பார்த்துவிட்டுக் குலுங்கக் குலுங்கச் சிரித்தார்கள்.

"உமது தலை மயிருக்கு என்ன ஆபத்து வந்தது, காந்தி? எலிகள் ஏதாவது வேலைசெய்துவிட்டனவா?" என்று கேட்டனர்.

"அப்படியெல்லாம் ஒன்றும் இல்லை. வெள்ளைக்காரரான க்ஷவரத் தொழிலாளி என் கறுப்பு மயிரைத் தொட இஷ்டப்பட வில்லை. ஆகவே, எவ்வளவு மோசமாக இருந்தாலும் சரி, என் மயிரை நானே வெட்டிக்கொள்ளுவது என்று வெட்டிக்கொண்டு விட்டேன்'' என்றேன்.

என் பதில் அந்த நண்பர்களுக்கு ஆச்சரியத்தை உண்டாக்க வில்லை. என் தலைமயிரை வெட்ட மறுத்தது அந்த க்ஷவரத் தொழிலாளியின் குற்றம் அல்ல. கறுப்பு மனிதருக்கு அவர் மயிர் வெட்டிவிடுவா ரானல், வெள்ளைக்காரர்கள் அவரிடம் மயிர் வெட்டிக்கொள்ள வர மறுத்துவிடக் கூடும். நமது தீண்டாத சகோத ரர்களுக்கு க்ஷவரம் செய்ய, நம் க்ஷவரத் தொழிலாளியை நாம் அனுமதிப்பதில்லையே! இந்தப் பாவத்திற்கு உரிய பலனை நான் தென்னாப்பிரிக்காவில் ஒரு தடவை அல்ல, பல தடவைகளில் அனுபவித்தேன். 'இதெல்லாம் நாம் செய்த பாவத்திற்குத் தண்டனையே' என்ற நம்பிக்கை எனக்கு இருந்ததால் நான் கோபம் அடையவில்லை.

எனக்கு வேண்டியவைகளை யெல்லாம் நானே செய்துகொள் ளுவது என்பதிலும், எளிய வாழ்க்கையிலும், எனக்கு இருந்த ஆர்வம் எவ்வளவு தீவிரமான முறைகளில் வெளிப்பட்டது என் பதைப்பற்றிய விவரங்களை அதற்குரிய இடம் வரும்போது கூறு கிறேன். விதை, நீண்ட காலத்திற்கு முன்பே போடப்பட்டு விட்டது. வேர் இறங்கி, அது பூத்துக் காய்க்க, அதற்குத் தண்ணீர் ஊற்றவேண்டியதே பாக்கியாக இருந்தது. அதற்குத் தண்ணீர் பாய்ச்சுவதும் உரிய காலத்தில் நடந்தது.

## 10

# போயர் யுத்தம்

**1894**-ஆம் ஆண்டுக்கும் 1899-ஆம் ஆண்டுக்கும் இடையே ஏற்பட்ட மற்றும் பல அனுபவங்களை யெல்லாம் விட்டுவிட்டு, நான் நேரே போயர் யுத்தத்திற்கு வரவேண்டும்.

அந்தப் போர் ஆரம்பம் ஆனபோது என் சொந்தக் கருத்துக் களை வற்புறுத்தும் உரிமை எனக்கு இல்லை என்றே நான்

நம்பினேன். இது சம்பந்தமாக என் உள்ளத்தில் அப்பொழுது ஏற்பட்ட போராட்டத்தைக் குறித்து, நான் எழுதியிருக்கும் 'தென்னுப்பிரிக்கச் சத்தியாக்கிரக சரித்திர'த்தில் விவரமாகக் கூறியிருக்கிறேன். அந்த வாதங்களை இங்கே திரும்பவும் சொல்லிக்கொண் டிருக்க வேண்டியதில்லை. அதை அறிய விரும்புவோர் அப் புத்தகத்தில் பார்த்துக்கொள்ளுவார்களாக. பிரிட்டிஷ் ஆட்சியிடம் நான் கொண்டிருந்த விசுவாசம், அப் போரில் பிரிட்டிஷ் பக்கம் என்னைச் சேரும்படி செய்துவிட்டது என்பதைச் சொல்லுவது மட்டும் இங்கே போதுமானது. பிரிட்டிஷ் பிரஜை என்ற வகையில் நான் உரிமைகளைக் கோரினல், அந்தப் பிரஜை என்ற வகையில், பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் பாதுகாப்புக்காகப் போரில் ஈடுபட வேண்டியதும் என் கடமை என்றே நான் கருதினேன். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் தயவி னுலேயே, அந்த ஏகாதிபத்தியத்துக்கு உட்பட்டு, தனது பூரண மான கதிமோட்சத்தை இந்தியா அடைய முடியும் என்பதும் அப்பொழுது என் கருத்து. ஆகையால், என்னல் முடிந்த வரையில் தோழர்களைத் திரட்டினேன். அவர்களைக்கொண்டு வைத்திய உதவிப் படையும் அமைத்து, கஷ்டப்பட்டு, அப் படையின் சேவையைப் பிரிட்டிஷார் ஏற்றுக்கொள்ளும்படியும் செய்தேன்.

'இந்தியன் பயங்காளி, ஆபத்துக்குத் துணியாதவன், உடனடியான தனது சொந்த நன்மையைத் தவிர வேறு எதை யும் எண்ணமாட்டான்' என்பதே பொதுவாக ஆங்கிலேயர் களின் அபிப்பிராயம். ஆகையால், நான் என் யோசனையைக் கூறியதும், பல ஆங்கில நண்பர்கள் என்னை அதைரியப்படுத் தினர். ஆனல், டாக்டர் பூத், என் திட்டத்தை மனமார ஆதரித் தார். வைத்திய உதவிப் படை வேலைக்கு, அவர் எங்களுக்குப் பயிற்சியும் அளித்தார். சேவைக்குத் தகுதி வாய்ந்தவர்கள் என்பதற்கு வைத்திய அத்தாட்சிப் பத்திரம் எங்களுக்குக் கிடைக்கவும் உதவினர். ஸ்ரீ லாப்டனும், காலஞ்சென்ற ஸ்ரீ எஸ்கோம்பும் இத் திட்டத்திற்கு உற்சாகத்துடன் ஆதர வளித்தார்கள். கடைசியாகப் போர்முனையில் சேவை செய்வதாக மனுச்செய்து கொண்டோம். அரசாங்கம், வந்தனத்துடன் எங்கள் மனுவை ஏற்றுக்கொண்டது. ஆனல், எங்கள் சேவை அப்போதைக்குத் தேவையில்லை என்று கூறிவிட்டது.

இந்த மறுதலிப்புக் கிடைத்ததோடு திருப்தியடைந்து நான் சும்மா இருந்துவிடவில்லை. டாக்டர் பூத்தின் உதவியின் பேரில் நேட்டால் பிஷப்பிடம் (பாதிரியாரிடம்) சென்றேன். எங்கள் வைத்திய உதவிப் படையில் இந்தியக் கிறிஸ்தவர்கள் பலர் இருந்தனர். என் திட்டத்தை அறிந்து, பிஷப் மகிழ்ச்சி யடைந்தார். எங்கள் சேவை அங்கீகரிக்கப்படுவதற்கு உதவி செய்வதாகவும் வாக்களித்தார். காலமும் எங்களுக்கு உதவியாக இருந்தது. எதிர்பார்த்ததைவிட அதிகத் தீரத்தோடும்

உறுதியுடனும், திறமையாகவும் போயர்கள் போராடினுர்கள். ஆகவே, முடிவில் எங்கள் சேவையும் அவசியமாயிற்று.

எங்கள் படை 1,100 பேரையும் 40 தலைவர்களையும் கொண்டது. இவர்களில் சுமார் முந்நூறு பேர் சுயேச்சையான இந்தியர்; மற்றவர்கள் ஒப்பந்தத் தொழிலாளர்கள். டாக்டர் பூத்தும் எங்களுடன் இருந்தார். படையும் நன்ருக வேலைசெய்து, புகழ் பெற்றது. துப்பாக்கிப் பிரயோக எல்லைக்கு வெளியில் தான் எங்கள் வேலை என்று இருந்தும், செஞ்சிலுவைப் படையின் பாதுகாப்பு எங்களுக்கு இருந்தும், நெருக்கடியான சமயம் வந்த போது, துப்பாக்கிப் பிரயோக எல்லைக்குள்ளும் போய்ச் சேவை செய்யும்படி எங்களுக்குக் கூறப்பட்டது. மேலே கூறப்பட்ட வரையறை, நாங்கள் விரும்பிப் பெற்றது அன்று. துப்பாக்கிப் பிரயோக எல்லைக்குள் நாங்கள் இருப்பதை அதிகாரிகள் விரும்ப வில்லை. ஸ்பியன் காப் என்ற இடத்தில் பிரிட்டிஷ் படைகள் முறியடிக்கப்பட்டதும் அந்த நிலைமை மாறிவிட்டது. ஜெனரல் புல்லர் ஒரு செய்தி அனுப்பினுர். 'ஆபத்திற்கு உடன்பட நீங்கள் கடமைப்பட்டிராவிடினும், நீங்கள் அவ்விதம் செய்து, போர்க் களத்திலிருந்து காயம்பட்டவர்களைக் கொண்டுவருவீர்களானுல் அரசாங்கம் நன்றியறிதல் உள்ளதாக இருக்கும்' என்று அச் செய்தி கூறியது. இதற்கு நாங்கள் தயங்கவே இல்லை. இவ்விதம் ஸ்பியன் காப் யுத்தத்தின் பயனுக, நாங்கள் துப்பாக்கிப் பிரயோக எல்லைக்குள்ளாகவே வேலை செய்ய லானேம்.* காயம் பட்டவர்களை, டோலியில் வைத்துத் தூக்கிக் கொண்டு அந்த நாட்களில் நாங்கள் தினந்தோறும் இருபது, இருபத்தைந்து

* ஸ்பியன்காப் யுத்தத்தின்போது போர்க்களத்துக்குச் சென்ற சமயத்தில் காந்தி ஜியைத் தாம் சந்தித்ததுபற்றி ''பிரிட்டோரியா நியூஸ்" பத்திரிகையின் பிரிட்டிஷ் ஆசிரியர் ஸ்ரீ வீயர் ஸ்டெண்ட், 1911–ஆம் வருடம் ஜூலை மாதம் வெளிவந்த ஜோகன் னஸ்பர்க் பத்திரிகையான ''இல்லஸ்ட்ரேட்டட் ஸ்டார்''ரில் எழுதிய ஒரு கட்டுரையில் பின்வருமாறு கூறியிருக்கிருர் :

''இரவில் செய்த வேலையால் பெரிய ஆகிருதி கொண்ட ஆட்களெல்லாம் அப் படியே சோர்ந்து விழுந்துவிட்டார்கள். வேலை முடிந்தபின் அதிகாலையில் காந்தியை ஒரு சாலையோரத்தில் நான் சந்தித்தேன். அவர் அங்கே உட்கார்ந்து ராணுவ உண வான பிஸ்கோத்தைச் சாப்பிட்டுக்கொண் டிருந்தார். ஜெனரல் புல்லருடைய பட்டாளத்தைச் சேர்ந்த ஒவ்வொருவரும் உற்சாகமின்றிச் சோர்ந்துபோயிருந்தார்கள். எதைக் கண்டாலும் அவர்களுக்கு எரிச்சலாக இருந்தது. ஆனுல், காந்தி மட்டும், இன்ப துன்பங்களை உணராதவரைப்போல உற்சாகத்துடன் இருந்தார். அவருடைய சம்பாஷணைகளில் நம்பிக்கை தொனித்தது; கண்களில் கருணை இருந்தது. யாருக்கும் அவர் நன்மையே செய்துவந்தார். சம்பிரதாய பூர்வமாக எங்களுக்குள் அறிமுகம் ஆயிற்று; அது நட்புக்கு வழி செய்துவிட்டது. அவரையும் அவருடைய கட்டுத் திட்டங்க ளற்ற படையையும் நேட்டால் போராட்டத்தின்போது பல போர்களில் நான் பார்த் திருக்கிறேன். உதவியும் சிகிச்சையும் தேவைப்படும் இடங்களி லெல்லாம் அவர்கள் இருந்தார்கள். அவர்கள் தற்பெருமை இல்லாதவர்கள்; அஞ்சா நெஞ்சம் படைத்தவர் கள். இதன் காரணமாக அவர்களில் பலர் உயிரை இழக்கும்படி நேர்ந்தது. அதனுல் துப்பாக்கி சுடும் எல்லைக்குள் அவர்கள் பிரவேசிக்கக் கூடாது என்று ஓர் உத்தரவும் பிறப்பிக்கப்பட்டது."

மைல் தூரம் நடக்கவேண்டி யிருந்தது. காயம் அடைந்தவர்களில் ஜெனரல் வுட்கேட் போன்ற போர்வீரர்களைத் தூக்கிச் சென்ற கௌரவமும் எங்களுக்குக் கிடைத்தது.

ஆறு வாரங்கள் சேவை செய்த பிறகு, எங்கள் படை கலைக்கப்பட்டுவிட்டது. ஸ்பியன் காப்பிலும், வால்கிரான்ஸிலும் ஏற்பட்ட தோல்விகளுக்குப் பிறகு, லேடி ஸ்மித் என்ற இடத்தையும் மற்ற இடங்களையும் அவசர நடவடிக்கைகளினால் மீட்பதற்கு முயலுவதைப் பிரிட்டிஷ் தளபதி கைவிட்டுவிட்டார். இங்கிலாந்திலிருந்தும் இந்தியாவிலிருந்தும் மேற்கொண்டு உதவிக்குப் படைகள் வந்து சேரும்வரையில் மெதுவாகவே முன்னேறுவது என்று முடிவு செய்தார்.

எங்களுடைய சொற்ப சேவை, அச்சமயம் வெகுவாகப் பாராட்டப் பெற்றது. இந்தியரின் கௌரவமும் உயர்ந்தது. 'எப்படியும் நாம் எல்லோரும் ஏகாதிபத்தியத்தின் புத்திரர்களே' என்பதைப் பல்லவியாகக் கொண்ட பாராட்டுப் பாடல்களைப் பத்திரிகைகள் பிரசுரித்தன. இந்திய வைத்தியப்படையின் சேவையை, ஜெனரல் புல்லர், தமது அறிக்கையில் பாராட்டியிருந்தார். இப்படையின் தலைவர்களுக்கும் யுத்தப் பதக்கங்களை வழங்கினார்கள்.

இந்திய சமூகம் அதிகக் கட்டுப்பாடுடையதாயிற்று. ஒப்பந்தத் தொழிலாளருடன் எனக்கு நெருக்கமான பழக்கம் உண்டாயிற்று. அவர்களும் அதிகமாக விழிப்படைந்தார்கள். 'ஹிந்துக்கள், முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள், தமிழர்கள், குஜராத்திகள், சிந்திகள் என்ற எல்லோரும் இந்தியரே; ஒரே தாய் நாட்டின் மக்களே' என்ற உணர்ச்சி இவர்களிடையே ஆழ வேர் ஊன்றியது. இந்தியரின் குறைகளுக்கு இனி நிச்சயமாகப் பரிகாரம் ஏற்படும் என்ற நம்பிக்கை, ஒவ்வொருவருக்கும் உண்டாயிற்று. வெள்ளைக்காரரின் போக்கும் தெளிவாக மாறுதலை அடைந்துவிட்டது என்றே அச்சமயம் தோன்றியது. யுத்த சமயத்தில் வெள்ளையருடன் இந்தியருக்கு இனிமையான வகையில் நட்பும் ஏற்பட்டிருந்தது. ஆயிரக்கணக்கான வெள்ளைக்காரச் சிப்பாய்களுடன் அப்பொழுது நாங்கள் பழகினோம். அவர்கள் எங்களுடன் நண்பர்களாகப் பழகினர்; தங்களுக்குச் சேவை செய்வதற்காக நாங்கள் அங்கே இருப்பதைக் குறித்து நன்றியுள்ளவர்களாகவும் இருந்தனர்.

சோதனை ஏற்படும் சமயங்களில், மனித சுபாவம் எவ்வளவு உயர்ந்த விதத்தில் தென்படுகிறது என்பதற்கு, நினைத்தாலும் இன்பம் தருவதாக உள்ள ஒரு சம்பவத்தின் உதாரணத்தை நான் இங்கே குறிப்பிடாமல் இருப்பதற்கில்லை. சீவ்லி முகாமை நோக்கி நாங்கள் போய்க்கொண் டிருந்தோம். லார்டு ராபர்ட்ஸின் மகனை லெப்டினெண்டு ராபர்ட்ஸ் அங்கே படுகாயமடைந்து இறந்தார். போர்க்களத்திலிருந்து அவருடைய சவத்தைத் தூக்கி வந்தது

எங்கள் படையே. அன்று வெயிலின் புழுக்கம் அதிகமாக இருந்தது. ஒவ்வொருவரும் தாகத்தினல் தண்ணீருக்குத் தவித்துக் கொண்டிருந்தனர். தாகத்தைத் தணித்துக்கொள்ள வழியில் ஒரு சிற்ருேடை இருந்தது. ஆனல், அதில் யார் முன்னல் இறங்கித் தண்ணீர் குடிப்பது? 'வெள்ளைக்காரச் சிப்பாய்கள் குடித்துவிட்டு வந்த பிறகே நாங்கள் நீர் அருந்துவது' என்று தீர்மானித்திருந்தோம். ஆனல், அவர்கள் முன்னல் போகவில்லை. முன்னல் இறங்கி நீர் அருந்துமாறு எங்களை வற்புறுத்தினர். இவ்விதம் யார் முன்னல் போய்த் தண்ணீர் குடிப்பது என்பது பற்றிக் கொஞ்ச நேரம் அங்கே மகிழ்ச்சி தரும் போட்டியே நடந்தது.

## 11

## சுகாதாரச் சீர்திருத்தமும் பஞ்ச நிவாரணமும்

சமூகத்தைச் சேர்ந்த எந்த ஓர் உறுப்பினரும், அந்தச் சமூகத்திற்குப் பயன்படாதவராக இருப்பதைச் சகித்துக் கொண்டிருக்க என்னல் எப்பொழுதுமே முடிவதில்லை. சமூகத்தில் இருக்கும் குறைபாடுகளை மறைப்பதையோ அக் குறைகளுக்கு உடந்தையாக இருப்பதையோ நான் எப்பொழுதுமே வெறுத்து வந்திருக்கிறேன். சமூகத்தின் குற்றங் குறைகளைப் போக்கிக் கொள்ளாமல் அதன் உரிமைகளைப் பெற மாத்திரம் போராடுவதும் எனக்குப் பிடிக்காது. இந்திய சமூகத்தின் ஒரு குறையைக் குறித்து அதன்மீது குற்றஞ் சாட்டப்பட்டு வந்தது. அக் குற்றச் சாட்டில் ஓரளவு உண்மை இல்லாமலும் இல்லை. ஆகையால், நான் நேட்டாலில் குடியேறியது முதல் அக் குற்றச்சாட்டிலிருந்து நம் சமூகத்தை விடுவிக்க முயன்று வந்தேன். 'இந்தியர் சுத்தத்தைக் குறித்துக் கவலைப்படாதவர்கள்; தங்கள் வீடுகளையும் சுற்றுப் புறங்களையும் அவர்கள் சுத்தமாக வைத்துக்கொள்ளுவதில்லை' என்று இந்தியர்மீது குறைகூறப்பட்டது. சமூகத்தில் முக்கியமானவர்களான இந்தியர்கள் தங்கள் வீடு வாசல்களைச் சுத்தமாக வைத்துக்கொள்ள முன்னமேயே ஆரம்பித்துவிட்டனர். ஆனல், டர்பனில் பிளேக் ஏற்படக்கூடும் என்று அறிவிக்கப்பட்ட போதுதான் வீடுதோறும் சென்று பார்க்க ஆரம்பித்தோம். 'இதில் எங்களுடைய ஒத்துழைப்பு வேண்டும்' என்று நகரசபை உறுப்பினர்கள் விரும்பினர். ஆகவே, அவர்களைக் கலந்து ஆலோசித்து, அவர்கள் அங்கீகாரமும் கிடைத்த பின்னரே இந்த வேலையில் இறங்கினேம். எங்கள் ஒத்துழைப்பு, அவர்களுடைய வேலையை எளிதாக்கியதோடு, எங்களுடைய சிரமங்களையும் குறைத்தது. ஏனெனில், தொத்துநோய்கள் பரவும்போதெல்லாம் நிர்வாக அதிகாரிகள் வெகு சீக்கிரத்தில் பொறுமையை இழந்துவிடுகிருர்கள். கடுமையான நடவடிக்கைகளையும் எடுத்துக்கொள்ளுகின்றனர்.

தங்களுக்குப் பிடிக்காதவர்களிடம் அவர்கள் அதிகக் கடுமையாக நடந்துகொள்ளுவதும் பொதுவான வழக்கம். இந்திய சமூகம், தானே வலியச் சுகாதார முறைகளை அனுசரிக்க முற்பட்டதால் இப்படிப்பட்ட கொடுமையில் சிக்காமல் மீண்டது.

ஆனால், எனக்கு வருந்தத்தக்க அனுபவங்கள் சில ஏற்படாது போகவில்லை. உரிமையைக் கோருவதில் சமூகத்தின் உதவியைப் பெறுவது எளிது. ஆனால், சமூகம் தன்னுடைய கடமையை நிறைவேற்றச் செய்ய வேண்டும் என்பதில் அதே சமூகத்தின் உதவியை, நான் எவ்வளவு எளிதாகப் பெற்றுவிட முடியாது என்பதைக் கண்டேன். சில இடங்களில் அவமதிக்கப்பட்டேன். மற்ற இடங்களிலோ என்னிடம் மரியாதை காட்டினார்கள். ஆனால், நான் கூறிய யோசனைகளை அவர்கள் பொருட்படுத்த வில்லை. தங்களைச் சுற்றியுள்ள இடங்களைச் சுத்தமாக வைத்திருக்க வேண்டும் என்பதில் முயற்சி எடுத்துக்கொள்ளுவது, மக்களுக்கு அதிகக் கஷ்டமாகவே இருந்தது. இந்த வேலைக்கு அவர்கள் பணம் செலவு செய்வார்கள் என்று எதிர்பார்ப்பதற்கே இல்லை. அளவற்ற பொறுமையினால் அன்றி இந்த மக்கள் எந்த வேலையையும் செய்யும்படியாகச் செய்வது முடியாத காரியம் என்பதை, மற்றெல்லாவற்றையும்விட இந்த அனுபவங்கள், எனக்கு நன்றாகப் போதித்தன. சீர்திருந்த வேண்டும் என்ற கவலை, சீர்திருத்தக்காரருக்குத்தான் உண்டு. சமூகம் அதைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. ஆனால் அவர், சமூகத்தினிடமிருந்து எதிர்ப்பையும், வெறுப்பையும், உயிருக்கே அபாயமான கொடுமைகளையும் தவிர வேறு எதையும் எதிர்பார்ப்பதற்கில்லை. சீர்திருத்தக்காரர், தம் உயிரினும் முக்கியமானது என்று கருதும் ஒரு சீர்திருத்தத்தை மிகவும் பிற்போக்கானது என்றுகூடச் சமூகம் கருதிவிடலாம் அல்லவா?

என்றாலும், இந்தக் கிளர்ச்சியின் பயனாக இந்திய சமூகத்தினர், தங்கள் வீடு வாசல்களையும் சுற்றுப்புறங்களையும் சுத்தமாக வைத்திருக்க வேண்டியதன் அவசியத்தை ஒருவாறு கற்றுக் கொண்டார்கள். அதிகாரிகளின் நன்மதிப்பும் எனக்கு ஏற்பட்டது. இருக்கும் குறைகளை எடுத்துக் கூறி உரிமைகளை வற்புறுத்துவதே என் வேலையாக இருந்தாலும், சுயத்தூய்மையைச் சமூகம் அடையவேண்டும் என்பதிலும் நான் சிரத்தையுடனும் விடாப்பிடியாகவும் இருந்ததை அவர்கள் கண்டார்கள்.

ஆயினும், செய்து தீரவேண்டிய ஒரு வேலை, இன்னும் பாக்கியாகவே இருந்தது. நாடுகடந்து வந்திருக்கும் இந்தியர்கள், தாய்நாட்டுக்குத் தாங்கள் செய்தாக வேண்டிய கடமையை உணரும்படி செய்வதே அந்த வேலை. இந்தியா ஏழை நாடு. செல்வத்தைத் தேடுவதற்காக இந்தியர்கள் தென்னாப்பிரிக்காவுக்கு வந்தார்கள். தாய்நாட்டு மக்களுக்குக் கஷ்டம் ஏற்படும் சமயத்தில், இந்த இந்தியர், தங்கள் வருவாயில் ஒரு பகுதியை

அளித்துத் தாய்நாட்டுக்கு உதவ வேண்டியது அவர்களுடைய கடமையாகும். 1897, 1899-ஆம் ஆண்டுகளில் இந்தியாவில் பயங்கரமான பஞ்சம் ஏற்பட்டபோது, தென்னாப்பிரிக்க இந்தியர்கள், இந்த உதவியைச் செய்தனர். பஞ்ச நிவாரண வேலைகளுக்குத் தாராளமாகப் பண உதவி செய்தார்கள். 1897-ஆம் ஆண்டில் செய்ததைவிட 1899-ஆம் ஆண்டில் அதிக உதவி செய்தனர். இதற்கு ஆங்கிலேயரும் பண உதவி செய்ய வேண்டும் என்று கோரினேம். அவர்களும் தாராளமாக உதவ முன்வந்தனர். இந்திய ஒப்பந்தத் தொழிலாளரும், தங்கள் பங்கைக் கொடுத்து உதவினர். இந்தப் பஞ்சங்கள் தோன்றிய சமயத்தில் ஏற்பட்ட இந்த உதவி முறை, அப்பொழுதிலிருந்து தொடர்ந்து நடந்துகொண்டு வருகிறது. இந்தியாவில் பெரிய துன்பங்கள் ஏற்படும்போ தெல்லாம் பெருந் தொகையை இந்தியாவுக்கு அனுப்பி உதவுவதற்குத் தென்னாப்பிரிக்க இந்தியர் தவறுவதே இல்லை.

இவ்விதம், தென்னாப்பிரிக்க இந்தியரிடையே நான் செய்து வந்த சேவை, ஒவ்வொரு கட்டத்திலும், சத்தியத்தின் புதிய தன்மைகளை எப்பொழுதும் எனக்குக் காட்டி வந்தது. சத்தியம் என்பது ஒரு பெரிய மரத்தைப் போன்றது. அதை நீர் ஊற்றி நாம் வளர்க்க வளர்க்க அது மேலும் மேலும் கனிகளை அதிகமாகக் கொடுத்துக்கொண்டே இருக்கிறது. சத்தியத்தின் சுரங்கத்தில் மேலும் ஆழத்தில் போய், நாம் தேடத் தேட அதில் பொதிந்து கிடக்கும், மேலும் மேலும் அதிக விலை மதிப்புள்ள ரத்தினங்களைக் காண்கிறேம். பல வகைகளிலும் சேவை செய்வதற்கு ஏற்படும் வாய்ப்புகளே அந்த ரத்தினங்க ளாகும்.

## 12

# இந்தியாவுக்குத் திரும்ப முடிவு

யுத்த சேவையிலிருந்து நான் விடுவிக்கப்பட்டதும், 'இனி நான் செய்ய வேண்டிய வேலை, இந்தியாவில்தானே அன்றி, தென்னாப்பிரிக்காவில் அல்ல' என்பதை உணர்ந்தேன். இப்படி நான் எண்ணியதற்குக் காரணம், தென்னாப்பிரிக்காவில் இனிச் செய்வதற்கு ஏதுவுமே இல்லை என்பது அல்ல. ஆனல், அங்கே என் முக்கியமான வேலை, பணம் சம்பாதிப்பதாகவே ஆகிவிடும் என்று அஞ்சினேன்.

தாய்நாட்டில் இருந்த நண்பர்களும், திரும்பி வந்துவிடுமாறு என்னை வற்புறுத்திக்கொண் டிருந்தார்கள். இந்தியாவில் நான் அதிகமாகச் சேவை செய்ய முடியும் என்றும் எண்ணினேன். தென்னாப்பிரிக்காவிலிருக்கும் வேலைகளுக்கோ, ஸ்ரீ கானும், ஸ்ரீ மன்சுக்லால் நாஸரும் இருக்கிறர்கள். ஆகையால், என்னை விடுவிக்குமாறு எனது சக ஊழியர்களைக் கேட்டுக்கொண்டேன். என் கோரிக்கை அதிகச் சிரமத்தின் பேரிலும், ஒரு நிபந்தனையின்

பேரிலும் ஒப்புக்கொள்ளப்பட்டது. ஓர் ஆண்டிற்குள் தென்னுப் பிரிக்க இந்தியர் சமூகம் என்னை விரும்பினுல், தென்னுப்பிரிக்கா வுக்குத் திரும்பிவிட நான் தயாராக இருக்க வேண்டும் என்பதே அந்த நிபந்தனை. இது கஷ்டமான நிபந்தனை என்று கருதினேன். ஆயினும், சமூகத்தினுடன் என்னைப் பிணைத்திருந்த அன்பின் காரணமாக அந்த நிபந்தனைக்கு ஒப்புக்கொண்டேன். 'அன் பெனும் நூலிழையினுல் கண்ணன் என்னைக் கட்டிவிட்டான். நானும் அவனுக்கு முழு அடிமையாகிவிட்டேன்' என்று மீராபாய் பாடினுள். சமூகத்துடன் என்னைப் பிணைத்திருந்த அன்பெனும் நூல் இழை, என்னைப் பொறுத்த வரையிலும்கூட, அறுந்துவிட முடியாததாகப் பலம் உள்ளதாகத்தான் இருந்தது. பொதுஜன வாக்கே கடவுள் வாக்கு. இங்கே நண்பர்களின் வாக்கு, மனப் பூர்வமான உண்மை வாக்காக இருந்ததால் அதைத் தட்டிவிடவும் முடியவில்லை. நிபந்தனைக்கு ஒப்புக்கொண்டு, புறப்படுவதற்கு அவர்களுடைய அனுமதியைப் பெற்றேன்.

அச் சமயம் எனக்கு நேட்டாலுடன் மாத்திரமே நெருங்கிய தொடர்பு இருந்தது. நேட்டால் இந்தியர் அன்பு என்ற அமிர்தத்தை என்மீது பொழிந்துவிட்டார்கள். ஒவ்வோர் இடத் திலும் பிரிவுபசாரக் கூட்டம் நடத்தினுர்கள். விலையுயர்ந்த வெகுமதிகளையும் எனக்கு அளித்தார்கள்.

*1899*-இல் நான் இந்தியாவுக்குப் புறப்பட்டபோதும் இத் தகைய வெகுமதிகளை எனக்குக் கொடுத்தனர். ஆனுல், இத் தடவையிலோ, பிரிவுபசாரம் அளவு கடந்ததாக இருந்தது. வெள்ளி, தங்கச் சாமான்களும் அன்பளிப்பில் அடங்கியிருந்த தோடு, விலையுயர்ந்த வைரச் சாமான்களும் இருந்தன.

இந்த வெகுமதிகளை யெல்லாம் ஏற்றுக்கொள்ள எனக்கு என்ன உரிமை இருக்கிறது? இவைகளை யெல்லாம் வாங்கிக் கொண்ட பிறகு, ஊதியம் பெருமல் சமூகத்திற்குச் சேவை செய்துவந்திருப்பதாக நான் எண்ணிக்கொள்ளுவது எப்படி? என் கட்சிக்காரர்கள் கொடுத்த சில வெகுமதிகளைத் தவிர மற்றவை யாவும், சமூகத்திற்கு நான் செய்த சேவைக்கு என்றே முற்றும் எனக்கு அளிக்கப்பட்டவை ஆகும். என் கட்சிக்காரர் களும் பொதுவேலையில் எனக்கு உதவி செய்திருக்கிருர்கள். அப்படி இருக்கும்போது, கட்சிக்காரர்கள் வேறு, பொது ஊழியர்கள் வேறு என்று பாகுபாடு செய்துகொள்ளுவதற்கும் இல்லை.

கிடைத்த வெகுமதிகளில் ஒன்று, தங்கச் சங்கிலி. அது 52 பவுன் பெறுமானம் உள்ளது. என் மனைவிக்கு என்று அதை அளித்தனர். ஆனுல், அதுவுங்கூட என்னுடைய பொதுச் சேவைக்கு அளிக்கப்பட்ட வெகுமதியே. ஆகையால் மற்றவை களிலிருந்து அதை நான் தனியாகப் பிரித்துவிட முடியாது.

ஒரு நாள் மாலை, இந்த வெகுமதிகளில் பெரும் பகுதியை எனக்கு அளித்தார்கள். அன்று இரவெல்லாம் என்னால் தூங்கவே முடியவில்லை. என் அறையில் அங்கும் இங்கும் இரவெல்லாம் உலாவினேன்; தீவிரமாகச் சிந்தித்தேன். ஆனால், ஒரு முடிவுக்கும் வர முடியவில்லை. ஆயிரக்கணக்கில் மதிப்புள்ள இந்த வெகுமதிகளை வேண்டாம் என்று துறந்துவிடுவது எனக்குக் கஷ்டமாக இருந்தது. அவைகளை வைத்துக்கொள்ளுவதோ இன்னும் அதிகக் கஷ்டமாக இருந்தது. அவைகளை நான் வைத்துக்கொள்ளுகிறேன் என்றாலும் என் குழந்தைகளின் சங்கதி என்ன? என் மனைவியின் விஷயம் என்ன? சேவைக்கு வேண்டிய வாழ்க்கை நடத்த அவர்கள் பயிற்சி பெற்றிருக்கிறார்கள். சேவை ஒன்றே அதற்குரிய சன்மானம் என்றும் அவர்களுக்குச் சொல்லி வந்திருக்கிறேன்.

வீட்டில் என்னிடம் விலை உயர்ந்த நகை எதுவும் இல்லை. எங்கள் வாழ்க்கையையே விரைவாக எளிமை ஆக்கிக்கொண்டு வந்திருக்கிறோம். அப்படியிருக்கத் தங்கக் கடிகாரங்களை நாங்கள் எவ்வாறு வைத்துக்கொள்ள முடியும்? தங்கச் சங்கிலிகளையும் வைர மோதிரங்களையும் நாங்கள் எவ்வாறு அணிந்துகொள்ள முடியும்? மக்கள் நகைகளின்மீது இருக்கும் ஆசையை விட்டுவிட வேண்டும் என்று பல தடவை நான் மக்களுக்கு உபதேசம் செய்தும் இருக்கிறேன். அப்படியிருக்க என்னிடம் வந்திருக்கும் நகைகளை நான் என்ன செய்வது?

இந்த வெகுமதிகளையெல்லாம் நான் வைத்துக்கொள்ளக் கூடாது என்ற முடிவுக்கு வந்தேன். இவற்றையெல்லாம் சமூகத்திற்கே சொந்தமானதாக்கி, இதற்குச் சில தருமகர்த்தாக்களை நியமித்து, ஒரு கடிதம் எழுதினேன். பார்ஸி ருஸ்தம்ஜியையும் மற்றுஞ் சிலரையும் தருமகர்த்தாக்களாக நியமித்தேன். காலையில் என் மனைவியுடனும் குழந்தைகளோடும் ஆலோசனையை நடத்தி இப் பெரும் பாரத்தை நிவர்த்தி செய்துகொண்டேன்.

இதற்கு என் மனைவியைச் சம்மதிக்கச் செய்வதில் கொஞ்சம் சிரமம் இருக்கும் என்பதை அறிவேன். குழந்தைகளைப் பொறுத்த வரையில் எந்தவிதமான கஷ்டமும் இராது என்பதும் எனக்குத் தெரியும். ஆகவே, அவர்களையே என் வக்கீல்கள் ஆக்கிக் கொண்டுவிடுவது என்ற முடிவுக்கு வந்தேன்.

என் யோசனையைக் குழந்தைகள் உடனே ஏற்றுக்கொண்டு விட்டனர். ''இந்த விலையுயர்ந்த வெகுமதிகள் நமக்குத் தேவையில்லை. ஆகையால், அவற்றைச் சமூகத்திற்குத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டியதே. அவை நமக்கு எப்பொழுதாவது தேவைப்பட்டால் நாம் அவற்றை எளிதில் விலைக்கு வாங்கிக் கொள்ளலாம்'' என்று குழந்தைகள் கூறினர்.

நான் ஆனந்தம் அடைந்தேன். ''அப்படியானால், உங்கள் தாயாரிடம் இதைக் குறித்து எடுத்துக் கூறி, அவளும் இதற்குச்

சம்மதிக்கச் செய்வீர்கள் அல்லவா?'' என்று கேட்டேன். ''நிச்சயமாகச் செய்வோம். அது எங்கள் வேலை. அம்மாவுக்கு நகைகள் வேண்டியதில்லை. அவைகளை எங்களுக்காக வைத்திருக்க வேண்டும் என்றே அவர் விரும்புவார். எங்களுக்கு அவை தேவையில்லை என்று நாங்கள் கூறும்போது, அவைகளைக் கொடுத்துவிட அம்மா ஏன் சம்மதிக்க மாட்டார்?'' என்றும் கூறினர்கள்.

பேச்சளவில் இது எளிதாகத்தான் இருந்தது. ஆனல், காரியத்திலோ அது அதிகக் கஷ்டமாக இருந்தது. என் மனைவி கூறியதாவது: ''இவையெல்லாம் உங்களுக்குத் தேவைப்படாமல் இருக்கலாம். உங்கள் குழந்தைகளுக்கும் அவை வேண்டாம் என்று இருக்கலாம். அவர்களை நீங்கள் தட்டிக் கொடுத்தால், உங்கள் இஷ்டப்படியெல்லாம் அவர்கள் கூத்தாடுவார்கள். நகைகளை நான் போட்டுக்கொள்ள, நீங்கள் அனுமதிக்காமல் இருப்பதை நான் புரிந்துகொள்ளுகிறேன். ஆனல், என் மருமகப் பெண்கள் வரும்போது அவர்கள் விஷயம் என்ன? நிச்சயம் அவர்களுக்கு நகைகள் வேண்டியிருக்கும். நாளைக்கு நம் நிலைமை எப்படி இருக்கும் என்பது யாருக்குத் தெரியும்? அதிக அன்போடு அளிக்கப்பட்ட இந்த வெகுமதிகளைத் திருப்பிக் கொடுத்துவிட நான் ஒருபோதும் சம்மதிக்கவே மாட்டேன்.''

இவ்வாறு அவள், வாதங்களைச் சண்டமாருதமாகப் பொழிந்தாள். முடிவில் கண்ணீர் வடித்தும் அவற்றைப் பலப்படுத்தினள். ஆனல், குழந்தைகளோ உறுதியுடன் இருந்தார்கள். நானும் அசையவில்லை. நான் சாந்தமாகப் பின்வருமாறு கூறினேன்: ''குழந்தைகளுக்கு இனிமேல்தான் விவாகம் நடக்க வேண்டும். அவர்கள் குழந்தைகளாக இருக்கும்போதே விவாகம் செய்து வைத்துவிட நாம் விரும்பவில்லை. அவர்கள் வளர்ந்ததும், அவர்கள் காரியங்களை அவர்களே கவனித்துக் கொள்ளுவார்கள். மேலும், நகைப் பித்துப் பிடித்த பெண்களை நம் குமாரர்களுக்கு நாம் மணம் செய்துவைக்கப் போவதில்லை என்பதும் நிச்சயம். அவர்களுக்கு நகை போடவேண்டிய அவசியம் ஏற்பட்டாலும் அவற்றை வாங்கிக் கொடுக்க நான் இருக்கிறேன். அப்பொழுது நீ என்னைக் கேள்.''

அதற்கு அவள், ''உங்களைக் கேட்பதா? இவ்வளவு நாள் பழகியும் உங்களை எனக்குத் தெரியாதா? என் நகைகளைப் பிடுங்கிக்கொண்டீர்கள். அவற்றை நான் போட்டுக்கொண்டு நிம்மதியாக இருக்கவும் நீங்கள் என்னை விடவில்லை. இப்படிப்பட்ட நீங்கள் மருமக்கள்மார்களுக்கு நகை வேறு செய்துபோட்டுவிடப் போகிறீர்களாக்கும்! முடியாது. நகைகளை நான் திருப்பிக் கொடுக்கப் போவதில்லை. மேலும். என்னுடைய கழுத்துச் சரத்தைக் கேட்க, உங்களுக்கு என்ன உரிமை இருக்கிறது?'' என்றாள்.

"ஆனல், அந்தக் கழுத்துச் சரத்தை, உனக்குக் கொடுத்தது என் சேவைக்காகவா, உன் சேவைக்காகவா?" என்று நான் கேட்டேன்.

"உங்கள் சேவைக்காகவே என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனல், நீங்கள் செய்த சேவை, நான் செய்த சேவையே அல்லவா? உங்களுக்காக இரவு பகல் நான் பாடுபட்டு உழைத்திருக்கிறேன். அதெல்லாம் சேவை யல்லவா? போகிறவர்கள் வருகிறவர்களை யெல்லாம் வீட்டுக்கு அழைத்து வந்து, அவர்களுக்கெல்லாம் உழைத்து, நான் கண்ணீர் வடிக்கச் செய்தீர்கள். அவர்களுக்கெல்லாம் அடிமையாக உழைத்தேனே!" என்ருள், என் மனைவி.

இச் சொல்லம்புகள் என் உள்ளத்தில் தைத்தன. அவற்றுள் சில ஆழப் பதிந்தன. ஆனலும், நகைகளைத் திருப்பிக் கொடுத்து விடுவது என்று நான் உறுதி கொண்டுவிட்டேன். இதற்கு அவளும் முடிவாகச் சம்மதித்துவிடும்படி செய்வதில் எப்படியோ வெற்றி பெற்றேன். *1896*, *1901*-ஆம் ஆண்டுகளில் கொடுக்கப் பட்ட அன்பளிப்புகள் யாவும் திருப்பிக் கொடுக்கப்பட்டு விட்டன. ஒரு தருமகர்த்தாப் பத்திரம் தயாரித்தேன். அந்த வெகுமதிகளை யெல்லாம் ஒரு பாங்கில் ஒப்படைத்தேன். என் விருப்பப்படியோ, தருமகர்த்தாக்களின் விருப்பப்படியோ, இந் நிதியைச் சமூகத்தின் சேவைக்குப் பயன்படுத்துவது என்று ஏற்பாடு செய்தேன்

பொதுஜன காரியங்களுக்கு நிதி எனக்குத் தேவைப்பட்டு, 'இந்தத் தரும நிதியிலிருந்து எடுத்துக்கொள்ள வேண்டியதே' என்று நான் எண்ணிய போதெல்லாம், தேவைக்கு வேண்டிய பணத்தை வெளியிலேயே வசூல் செய்துகொள்ள என்னல் முடிந்திருக்கிறது. ஆகையால், அந்த நிதி அப்படியே செலவாகாமல் இருந்தது. அந்த நிதி இன்னும் இருந்து வருகிறது. தேவைப்படும்போது செலவிட்டு வருகிருர்கள். ஒழுங்காக அந் நிதி சேர்ந்துகொண்டும் வருகிறது.

இவ்வாறு இந் நிதியை உண்டாக்கியதற்காக நான் என்றும் வருந்தியதே இல்லை. சில ஆண்டுகளானதும், அப்படிச் செய்ததுதான் புத்திசாலித்தனமானது என்பதை என் மனைவியும் அறிந்துகொண்டாள். எத்தனையோ ஆசைகளிலிருந்து அது எங்களைப் பாதுகாத்தது.

பொதுஜன சேவையில் ஈடுபட்டிருப்பவர்கள், விலையுயர்ந்த வெகுமதிகளை ஏற்றுக்கொள்ளவே கூடாது என்பது என்னுடைய திடமான அபிப்பிராயம்.

# 13

# திரும்பவும் இந்தியாவில்

ஆகவே, நான் தாய்நாட்டிற்குப் பயணமானேன், மத்தியில் கப்பல் நின்ற துறைமுகங்களில் மொரீஷியஸ் (மோரிஸ்)* தீவும் ஒன்று. அங்கே கப்பல் கொஞ்சம் அதிகமாகத் தாமதித்ததால் நான் கரையில் இறங்கி, அத்தீவிலிருந்த நிலைமையை ஓரளவுக்குத் தெரிந்துகொண்டேன். ஒரு நாள் இரவு அந்தக் காலனியின் கவர்னர் ஸர் சார்லஸ் புரூஸின் விருந்தினனாக இருந்தேன்.

இந்தியாவுக்கு வந்து சேர்ந்ததும் நாட்டைச் சுற்றிப் பார்ப்பதில் கொஞ்ச காலத்தைக் கழித்தேன். அது 1901-ஆம் ஆண்டு. அப்போது கல்கத்தாவில் ஸ்ரீ (பிறகு ஸர்) தின்ஷா வாச்சாவின் தலைமையில் காங்கிரஸ் மகாநாடு நடந்தது. நானும் மகாநாட்டிற்குப் போயிருந்தேன். காங்கிரஸைப்பற்றிய என் முதல் அனுபவம் அதுதான்.

தென்னாப்பிரிக்க நிலையைக் குறித்து, ஸர் பிரோஸ்ஷா மேத்தாவுடன் நான் பேசவேண்டியிருந்ததால், பம்பாயிலிருந்து அவர் பிரயாணம் செய்த அதே ரெயிலில் நானும் பிரயாணம் செய்தேன். அவர் எவ்விதமான ராஜபோக வாழ்க்கையை நடத்தி வந்தார் என்பதை நான் அறிவேன். தமக்கு என்று அவர் எல்லா வசதிகளும் உள்ள தனிப்பெட்டி ஒன்றை ரெயிலில் அமர்த்திக்கொண்டிருந்தார். குறிப்பிட்ட இரு ஸ்டேஷன்களுக்கு இடையில் அவருடைய தனிப்பெட்டியில் நான் பிரயாணம்செய்து, நான் சொல்லவேண்டியதைச் சொல்லிக்கொள்ளலாம் என்பது எனக்கு இடப்பட்டிருந்த கட்டளை. ஆகவே, குறிப்பிட்ட ஸ்டேஷனில் அவருடைய தனிப்பெட்டிக்குப் போய், நான் வந்திருப்பதை அவருக்குத் தெரிவித்துக்கொண்டேன். அவருடன் ஸ்ரீ வாச்சாவும் ஸ்ரீ (இப்பொழுது ஸர்) சிமன்லால் சேதல்வாடும்† இருந்தனர். ராஜீய விஷயங்களைக் குறித்து அவர்கள் விவாதித்துக்கொண்டிருந்தார்கள். ஸர் பிரோஸ்ஷா என்னைப் பார்த்ததும் பின்வருமாறு கூறினர்: "காந்தி, உமக்கு எதுவும் என்னால் செய்ய முடியாதுபோல் தோன்றுகிறது. ஆனால், நீர் விரும்பும் தீர்மானத்தை நாங்கள் நிறைவேற்றுவோம். நம் சொந்த நாட்டிலேயே நமக்கு என்ன உரிமை இருக்கிறது? நம் நாட்டில் நமக்கு எந்தவிதமான அதிகாரமும் இல்லாதிருக்கும் வரையில், காலனிகளில் நீங்கள் சுகமடைய முடியாது என்றே நான் நம்புகிறேன்."

---

* மொரீஷியஸ்: மோரீஸ் தீவு, இந்துமகா சமுத்திரத்தில் மடகாஸ்கருக்கு 500 மைல் கிழக்கில் இருக்கிறது. இது பிரிட்டிஷ் ஆட்சிக்கு உட்பட்டது. இதன் விஸ்தீரணம் 720 சதுர மைல்கள். இதில் 5 லட்சம் பேர் வசிக்கின்றனர். இத் தீவில் சர்க்கரை அதிகமாக உற்பத்தியாகிறது.

† ஸர் சிமன்லால் சேதல்வாட்: இவர் பிரபல வக்கீலாக இருந்தவர். இப்போது (1958) இந்திய அரசாங்கத்தின் அட்டர்னி ஜெனரலாயிருப்பவரின் தந்தை.

இதைக் கேட்டு நான் திடுக்கிட்டுப்போனேன். அக் கருத்தை ஸ்ரீ சேதல்வாடும் அங்கீகரிப்பதாகத் தோன்றியது. ஸ்ரீ வாச்சா, என்னைப் பரிதாப நோக்குடன் பார்த்தார். பிரோஸ்ஷாவிடம் என்னுடைய கட்சியை எடுத்துக்கூற முயன்றேன். ஆனால், பம்பாயின் முடிசூடா மன்னரான அவரை, என்னைப்போன்ற ஒருவன், தனது கட்சியை ஏற்றுக்கொள்ளுமாறு செய்துவிடுவதென்பதற்கு இடமே இல்லை. என்னுடைய தீர்மானத்தைக் கொண்டுவர அனுமதிக்கப்படுவேன் என்பதைக் கொண்டு திருப்தி யடைந்தேன்.

"தீர்மானத்தை முன்னதாகவே காட்டுவீர்கள் அல்லவா?" என்று என்னை உற்சாகப்படுத்துவதற்காக ஸ்ரீ வாச்சா கேட்டார். அவருக்கு நன்றி தெரிவித்தேன். ரெயில் அடுத்த ஸ்டேஷனில் நின்றதும் அந்தப் பெட்டியிலிருந்து இறங்கி, என் பெட்டிக்குப் போய்விட்டேன்.

கல்கத்தா போய்ச் சேர்ந்தோம். வரவேற்புக் கழகத்தினர், அக்கிராசனரை மிகுந்த சிறப்புடன், அவருடைய முகாமுக்கு அழைத்துச் சென்றனர். நான் எங்கே போகவேண்டும் என்று ஒரு தொண்டரைக் கேட்டேன். என்னை ரிப்பன் கல்லூரிக்கு அழைத்துச் சென்றார். அங்கே பல பிரதிநிதிகள் தங்குவதற்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். அதிருஷ்டம் எனக்கு உதவியது. நான் இருந்த பகுதியிலேயே லோகமான்யரின் ஜாகையும் இருந்தது. அவர் ஒரு நாள் பிந்தி வந்தார் என்று எனக்கு ஞாபகம்.

லோகமான்யர் இருக்குமிடத்தில் வழக்கம்போல் அவருடைய தர்பார் நடக்காமல் இருக்காது. படுக்கையில் அவர் உட்கார்ந்திருந்த சமயத்தில் நான் அவரைப் பார்த்தேன். அந்தக் காட்சி முழுதும் இன்று என் நினைவில் அப்படியே இருந்து வருகிறது. நான் ஓவியக்காரனாக இருந்தால், அக் காட்சியை அப்படியே சித்திரமாகத் தீட்டிவிடுவேன். அவரைப் பார்த்துப் பேசக் கணக்கற்றவர்கள் வந்தனர். அவர்களில் ஒருவரை மாத்திரமே இப்பொழுது எனக்கு நினைவிருக்கிறது. 'அமிர்த பஜார்' பத்திரிகையின் ஆசிரியரான காலஞ்சென்ற பாபு மோதிலால் கோஷே* அவர். அவர்களுடைய பலத்த சிரிப்பும், ஆளும் இனத்தினரின் தவறான செய்கைகளைப்பற்றி அவர்கள் பேசிக்கொண்டிருந்ததும் என்றுமே மறந்துவிடக்கூடியன அல்ல.

இந்த முகாமின் நிலைமையைக் குறித்துக் கொஞ்சம் விவரமாகத் தெரிவிக்க விரும்புகிறேன். தொண்டர்கள் ஒருவரோடொருவர் சச்சரவிட்டுக்கொண் டிருந்தனர். அவர்களில்

---

* மோதிலால் கோஷ்: திலகரிடம் அதிகப் பக்தி கொண்டவர். இவரை ஆசிரியராகக் கொண்டிருந்த 'அமிர்த பஜார்' பத்திரிகை, முதலில் வங்காளி மொழியில்தான் வெளிவந்துகொண்டிருந்தது. வைசிராய் லார்டு லிட்டன் செய்த சுதேச மொழிப் பத்திரிகைகள் சட்டம், தாய்மொழிப் பத்திரிகைகளைப் பாதித்ததனால் இரவோடு இரவாகத் தமது பத்திரிகையை ஆங்கில இதழாக இவர் மாற்றிவிட்டார்.

ஒருவரிடம் ஏதாவது செய்யுமாறு நீங்கள் கூறினால், அதை அவர் இன்னொருவரிடம் சொல்லுவார். அப்படிச் சொல்லப்பட்டவர், மூன்றாமவரிடம் கூறுவார். இப்படிப் போய்க் கொண்டே இருக்கும். பிரதிநிதிகளைப் பொறுத்தவரையில், அவர்கள் திக்குத் திசை தெரியாமல் தவித்தனர்.

தொண்டர்கள் சிலருடன் சிநேகம் செய்துகொண்டேன். தென்னாப்பிரிக்காவைப்பற்றி அவர்களிடம் சில விஷயங்களைக் கூறினேன். அவர்கள் கொஞ்சம் வெட்கம் அடைந்தனர். சேவையின் ரகசியத்தை அவர்கள் அறியும்படி செய்ய முயன்றேன். அவர்கள் உணர்ந்ததாகவே தோன்றியது. ஆனால், தொண்டு என்பது கண்டபடியெல்லாம் உடனே முளைத்துவிடக் கூடியதன்று. இதற்கு, முதலில் மனத்தில் விருப்பம் வேண்டும். பிறகு அனுபவமும் தேவை. நல்லவர்களான, கள்ளங் கபடமற்ற அந்த இளைஞர்களைப் பொறுத்தவரையில் விருப்பத்திற்குக் குறைவில்லை. ஆனால், அனுபவந்தான் அவர்களுக்கு இல்லை. காங்கிரஸ், ஆண்டுக்கு ஒரு முறை மூன்று நாட்கள் கூடிவிட்டுப் பிறகு தூங்கிவிடும். ஆண்டுக்கு ஒரு முறை நடக்கும் மூன்று நாள் திருவிழாவில் ஒருவருக்கு என்ன அனுபவம் ஏற்பட முடியும்? தொண்டர்களைப் போன்றே பிரதிநிதிகளும் இருந்தார்கள். இவர்களைவிட அவர்களுக்கு மேலான நீண்ட பயிற்சி எதுவும் இல்லை. அவர்கள் தாங்களாக எதுவுமே செய்யமாட்டார்கள். அதனால், "தொண்டரே! இதைச் செய்யும்", "தொண்டரே! அதைச் செய்யும்" என்று அவர்கள் இடைவிடாமல் கட்டளையிட்டுக்கொண் டிருப்பார்கள்.

இங்கும்கூட ஓரளவுக்கு நான் தீண்டாமையை நேருக்கு நேராகக் கண்டேன். தமிழர்களின் சமையல்கூடம் மற்றவர்களின் சமையல்கூடத்திற்குத் தொலைவில் தனியாக இருந்தது. தாங்கள் சாப்பிடுவதைப் பிறர் பார்த்துவிட்டால்கூடத் தோஷம் என்று, தமிழ்ப் பிரதிநிதிகள் கருதினார்கள். எனவே, அவர்களுக்கு என்று தனியான சமையல்கூடத்தைக் கல்லூரி மைதானத்தில் அமைத்திருந்தார்கள். நாற்புறமும் தட்டி வைத்து, இந்தக் கூடம் கட்டப்பட் டிருந்தது. அதில் ஒரே புகை; யாரையும் மூச்சுத் திணறச் செய்துவிடும். சமைப்பது, சாப்பிடுவது, கையலம்புவது எல்லாம் அதற்குள்ளேதான். திறப்பே இல்லாத இரும்புப் பெட்டிபோல் இருந்தது அந்த இடம். இது வருண தருமத்தின் சீர்கேடாகவே எனக்குத் தோன்றிற்று. காங்கிரஸின் பிரதிநிதிகளுக் குள்ளேயே இத்தகைய தீண்டாமை இருந்து வருகிறதென்றால், இவர்கள் யாருக்குப் பிரதிநிதிகள் என்று வந்திருக்கிறார்களோ அந்த மக்களிடம் தீண்டாமை இன்னும் எவ்வளவு மோசமாக இருந்து வருகிறது என்பதைத் தெரிந்துகொள்ளலாம் என்று எனக்குள்ளேயே சொல்லிக்கொண்டேன். இதை எண்ணியதும் பெருமூச்சு விட்டேன்.

அங்கே இருந்த சுகாதாரக் கேட்டிற்கோ எல்லையே இல்லை. எங்கும் தண்ணீர், குட்டை குட்டையாகத் தேங்கிக் கிடந்தது. சில கக்கூசுகளே இருந்தன. அங்கிருந்த நாற்றத்தை இப்பொழுது நினைத்தாலும் எனக்கு வெறுப்பாக இருக்கிறது. இதைப்பற்றித் தொண்டர்களிடம் சொன்னேன். “அது எங்கள் வேலை அல்ல, தோட்டிகளின் வேலை” என்று அவர்கள் திட்டவட்டமாகப் பதில் சொல்லிவிட்டார்கள். விளக்குமாறு ஒன்று வேண்டும் என்று கேட்டேன். உடனே அந்த மனிதர் ஆச்சரியத்தோடு என்னை விழித்துப் பார்த்தார். ஒரு விளக்குமாற்றைத் தேடிப் பிடித்துக் கக்கூசைச் சுத்தம் செய்தேன். ஆனால், எனக்காகவே நான் சுத்தம் செய்துகொண்டேன். கூட்டமோ, மிகவும் அதிகம்; கக்கூசுகளோ மிகக் கொஞ்சம். ஆகையால், அடிக்கடி சுத்தம் செய்ய வேண்டியது அவசிய மாயிற்று. ஆனால், அந்த வேலை நான் ஒருவனாகச் செய்துவிடக் கூடியது அல்ல. ஆகவே என் காரியத்தை நான் பார்த்துக்கொள்ளுவதோடு திருப்தியடைய வேண்டியவனானேன். மற்றவர்கள், துர்நாற்றத்தைக் குறித்தோ, அசுத்தத்தைப்பற்றியோ கவலைப்பட்டதாகவே தெரியவில்லை.

அதோடு போகவில்லை. சில பிரதிநிதிகள், தாங்கள் இருந்த அறைகளுக்கு வெளிப்புறமிருந்த தாழ்வாரத்தில் இரவு நேரத்தில் கொஞ்சமும் கவலைப்படாமல் மலஜலம் கழித்து வந்தார்கள். காலையில் அந்த இடங்களைத் தொண்டர்களுக்குக் காண்பித்தேன். சுத்தம் செய்யும் வேலையை மேற்கொள்ள யாரும் தயாராக இல்லை. அதைச் செய்யும் கௌரவத்தில் என்னுடன் பங்கு கொள்ள யாரும் கிடைக்கவில்லை. நிலைமை இப்பொழுது அதிக அபிவிருத்தியடைந்திருக்கிறது. ஆனால், தங்கள் இஷ்டப்படியெல்லாம் கண்ட கண்ட இடங்களில் மலஜலம் கழித்து ஆபாசப்படுத்திவிடும் யோசனையற்ற பிரதிநிதிகள் இன்றுங்கூட இல்லாது போகவில்லை. அவர்கள் அவ்விதம் செய்துவிட்ட இடங்களை உடனே சுத்தம் செய்துவிட எல்லாத் தொண்டர்களும் தயாராக முன்வந்துவிடுவதும் இல்லை.

காங்கிரஸ் மகாநாடு மேலும் சில நாட்கள் நீடித்து நடக்க வேண்டி வந்தால், அங்கே தொத்து நோய் உண்டாவதற்குரிய நிலைமை ஏற்பட்டுவிடும் என்பதையும் கண்டேன்.

## 14

## குமாஸ்தா வேலையும் பணியாள் வேலையும்

காங்கிரஸ் மகாநாடு ஆரம்பமாவதற்கு இன்னும் இரண்டு நாட்கள் இருந்தன. கொஞ்சம் அனுபவம் பெறுவதற்காகக் காங்கிரஸ் காரியாலயத்திற்கு என் சேவையை அளிப்பது என்று

முடிவு செய்துகொண்டேன். கல்கத்தாவுக்கு வந்து, அன்றுடக் கடன்களை முடித்துக்கொண்டதும், நேரே காங்கிரஸ் காரியாலயத்திற்குச் சென்றேன்.

பாபு பூபேந்திரநாத வசுவும்,* ஸ்ரீகோஷாலும் காரியதரிசிகள். பூபேன் பாபுவிடம் சென்று, நான் தொண்டு செய்ய விரும்புவதாகச் சொன்னேன். அவர் என்னை உற்றுப் பார்த்துவிட்டு, "உமக்குக் கொடுப்பதற்கு என்னிடம் வேலை இல்லை. கோஷால் பாபுவிடம் ஏதாவது வேலை இருக்கக் கூடும். தயவுசெய்து அவரைப் போய்ப் பாரும்" என்றார்.

ஆகவே, அவரிடம் போனேன். அவர் என்னை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, "உமக்குக் குமாஸ்தா வேலைதான் கொடுக்க முடியும். அதை நீர் செய்வீரா?" என்று சிரித்துக்கொண்டே கேட்டார்.

"நிச்சயம் செய்கிறேன். என் சக்திக்கு உட்பட்ட எந்தப் பணியையும் இங்கே செய்வதற்காகவே வந்திருக்கிறேன்" என்றேன்.

"இளைஞரே, அதுதான் சரியான மனப்பான்மை" என்றார். தம்மைச் சுற்றிலும் இருந்த தொண்டர்களை விளித்து, "இந்த இளைஞர் என்ன சொன்னார் என்பது உங்களுக்குக் கேட்டதா?" என்றார்.

பிறகு என்னைப் பார்த்து அவர் கூறியதாவது: "அப்படியானால் சரி, இங்கே கடிதங்கள் பெருங் குவியலாகக் கிடக்கின்றன. அந்த நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு, அவற்றைக் கவனியுங்கள். நூற்றுக்கணக்கானவர்கள் என்னைப் பார்க்க வருகிறார்கள் என்பதை நீங்களும் கவனிக்கிறீர்கள். நான் என்ன செய்வது? அவர்களைச் சந்தித்துப் பேசுவதா அல்லது இந்த வேலையற்றவர்கள் எழுதிக் குவித்துக் கொண்டிருக்கும் கடிதங்களுக்கெல்லாம் பதில் எழுதிக் கொண்டிருப்பதா? இந்த வேலையை ஒப்படைப்பதற்கு என்னிடம் குமாஸ்தாக்கள் இல்லை. இக் கடிதங்களில் பலவற்றில் ஒன்றுமே இருக்காது என்றாலும், அவற்றை நீங்கள் படித்துப் பாருங்கள். அவசியம் என்று தோன்றும் கடிதங்களுக்கு அவை கிடைத்ததாகப் பதில் எழுதுங்கள். கவனித்துப் பதில் எழுத வேண்டியவை என்று தோன்றும் கடிதங்களை என்னிடம் காட்டுங்கள்."

அவர் என்னிடம் வைத்த நம்பிக்கையைக் குறித்து மகிழ்ச்சியடைந்தேன். ஸ்ரீ கோஷால், இவ்வேலையை என்னிடம் கொடுத்தபோது என்னை அவருக்குத் தெரியாது. பிறகே என்னைப்பற்றி விசாரித்துத் தெரிந்துகொண்டார்.

---

* பூபேந்திரநாத் வசு: வங்காளத்தைச் சேர்ந்த சிறந்த பேச்சாளர். 1914–இல் சென்னையில் நடந்த காங்கிரசுக்கு இவர் தலைமை வகித்தார். கல்கத்தாவில் பிரபல சொலிஸிடரா யிருந்துகொண்டு பொதுஜன சேவை செய்து வந்தார்.

அக் கடிதக் குவியலைப் பைசல் செய்யும் வேலை மிக எளிதானது என்பதைக் கண்டேன். சீக்கிரத்திலேயே அவ் வேலையை முடித்துவிட்டேன். ஸ்ரீ கோஷால் அதிக சந்தோஷம் அடைந்தார். அவர் ஓயாது பேசும் சுபாவ முள்ளவர். மணிக் கணக்கில் பேசித் தீர்த்துவிடுவார். என்னுடைய வரலாற்றைக் குறித்து என்னைக் கேட்டுக் கொஞ்சம் தெரிந்துகொண்டதும், எனக்குக் குமாஸ்தா வேலை கொடுத்ததற்காக வருத்தப்பட்டார். அதற்கு நான், "இதைப் பற்றித்தயவுசெய்து நீங்கள் கவலைப்பட வேண்டாம். தங்களுக்கு முன்பு நான் எம்மாத்திரம்? காங்கிரஸ் தொண்டிலேயே வயது முதிர்ந்து நரைத்துப்போனவர்கள் நீங்கள். ஆனால், நானோ, அனுபவமில்லாத இளைஞன். இந்த வேலையை நீங்கள் என்னிடம் கொடுத்ததற்காக உங்களுக்கு நன்றி செலுத்த நான் கடமைப்பட்டிருக்கிறேன். ஏனெனில், நான் காங்கிரஸ் வேலை செய்ய விரும்புகிறேன். நீங்களோ, விவரங்களை அறிந்துகொள்ளுவதற்கான அரிய வாய்ப்பை எனக்கு அளித்திருக்கிறீர்கள்" என்று அவருக்குக் கூறினேன்.

"உண்மையைச் சொல்லுவதென்றால், ஒருவருக்கு இருக்க வேண்டிய சரியான மனோபாவம் இதுதான். ஆனால், இக்கால இளைஞர்கள் இதை உணருவதில்லை. காங்கிரஸ் பிறந்ததிலிருந்தே நான் அதை அறிவேன். உண்மையில், காங்கிரஸைத் தோற்றுவித்ததில் ஸ்ரீ ஹியூமுடன்* எனக்கும் சிறிதளவு பங்கு உண்டு" என்றார், ஸ்ரீ கோஷால்.

இவ்வாறு நாங்கள் சிறந்த நண்பர்களானோம். மத்தியானத்தில் தம்முடன் சாப்பிடுமாறு அவர் என்னை வற்புறுத்தி வந்தார்.

ஸ்ரீ கோஷாலின் சட்டைக்கு அவருடைய வேலைக்காரன்தான் பித்தான் போட்டுவிடுவது வழக்கம். அப்பணியாளின் வேலையை நான் செய்ய முன்வந்தேன். பெரியவர்களிடம் எப்பொழுதுமே எனக்கு அதிக மரியாதை உண்டு. ஆகையால், இப்பணியைச் செய்ய நான் விரும்பினேன். இதை ஸ்ரீ கோஷால் அறிய

---

* ஏ. ஓ. ஹியூம்: இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியில் சிவில் சர்வீஸ் உத்தியோகஸ்தரா யிருக்கும்போதே இந்நாட்டு மக்கள் எல்லாத் துறைகளிலும் மேம்பாடு அடைய உழைத்தவர். குறிப்பாக மதுவை ஒழிக்கப் பாடுபட்டார். சர்வகலாசாலைப் பட்டம் பெற்றவர்களில் 50 பேர், நாட்டுக்குத் தன்னலமற்ற சேவை செய்தால் மக்கள் நலமடைவர் எனக் கருதி 1—3—1888—இல் கல்கத்தா பல்கலைக்கழகப் பட்டதாரிகளுக்கு வேண்டுகோள் விடுத்தார். காங்கிரஸை ஸ்தாபிக்க இவரே மூல காரணமாக யிருந்தார் எனக் கூறலாம். காங்கிரஸ், சமூக சேவை ஸ்தாபனமாக இருக்க வேண்டும் என்பது இவர் ஆதியில் கொண்ட கருத்து. ஆனால், அச்சமயம் வைசிராயாக இருந்த லார்டு டப்ரினின் யோசனையின் பேரில், அதை அரசியல் ஸ்தாபனமாக அமைத்தார். இவருடைய இந்திய அபிமானத்தின் காரணமாக இவர் வகித்துவந்த அரசாங்கக் காரியதரிசிப் பதவியை இழக்க நேரிட்டது. பின்னர் இவருக்கு லெப்டினன்ட் கவர்னர் பதவி அளித்தபோது அதை ஏற்க இவர் மறுத்துவிட்டார்.

நேர்ந்தபோது, அவருக்குத் தொண்டாக இதுபோன்ற சிறு காரியங்களை நான் செய்வதை அவர் ஆட்சேபிக்கவில்லை. உண்மையில் இதற்காக அவர் மகிழ்ச்சியே அடைந்தார். தம் சட்டைக்குப் பித்தான் போடச் சொல்லி அவர் என்னிடம், "பாருங்கள், காங்கிரஸ் காரியதரிசிக்குத் தமது சட்டைக்குப் பித்தான் போட்டுக்கொள்ளக்கூட நேரம் இல்லை. அவருக்கு எப்பொழுதும் ஏதாவது வேலை இருந்துகொண்டே இருக்கிறது" என்பார். அவருடைய கபடமில்லாத பேச்சு, எனக்கு வேடிக்கை யாகத்தான் இருந்ததே யன்றி, அப்படிப்பட்ட சேவைகளில் எனக்கு வெறுப்பை உண்டாக்கிவிட வில்லை. இத்தகைய சேவையினால் நான் அடைந்த நன்மை அளவிட முடியாதது.

சில தினங்களுக்குள், காங்கிரஸின் நடைமுறையைப்பற்றி யெல்லாம் தெரிந்துகொண்டு விட்டேன். தலைவர்களில் பெரும் பாலோரைச் சந்தித்தேன். கோகலே, சுரேந்திரநாத் போன்ற பெருந் தலைவர்களை அருகில் இருந்தும் பார்த்தேன். நேரம், அநியாயமாக வீணாக்கப்படுவதையும் கவனித்தேன். நமது காரியங்களில், ஆங்கில மொழி வகித்துவரும் பிரதான ஸ்தா னத்தை அன்றுகூட வருத்தத்துடன் கவனித்தேன். சக்தியை வீணாக்காமல் இருக்க வேண்டும் என்று யாருமே கவலைப்பட வில்லை. ஒருவர் செய்யக்கூடிய வேலையைப் பலர் செய்தனர். முக்கியமான பல வேலைகளைக் குறித்து யாருமே சிரத்தை எடுத் துக்கொள்ளவில்லை.

இவ்வாறு என் மனம் குறைகளைக் கவனித்துக்கொண் டிருந்தது. என்றாலும், பிறர் கஷ்டங்களை உணரும் சுபாவமும் எனக்கு உண்டு. ஆகவே, இருந்த நிலைமையில் இதற்கு மேல் நன்றாகச் செய்திருக்க முடியாது என்று எப்பொழுதும் நான் எண்ணிக்கொள்ளுவேன். எந்த வேலையையும் குறைவாக மதிப் பிட்டுவிடும் துர்க்குணத்திலிருந்து இந்த இயல்பே என்னைக் காத்தது.

## 15

## காங்கிரஸில்

கடைசியாகக் காங்கிரஸ் மகாநாடு நடந்தது. பிரம்மாண்ட மான பந்தலும், தொண்டர்கள் கம்பீரமாக அணிவகுத்து நின்றதும், மேடைமீது தலைவர் வீற்றிருந்ததும் என்னைப் பிரமிக் கச் செய்தன. இந்தப் பிரம்மாண்டமான மகாசபையின் முன்பு நான் எம்மாத்திரம் என்று எண்ணி வியப்புற்றேன்.

தலைவரின் பிரசங்கம் ஒரு தனிப் புத்தகமாகவே இருந்தது. அதை ஆரம்பம் முதல் கடைசி வரையில் படிப்பது என்பது முடியாத காரியம். ஆகையால், அதிலிருந்து சில பகுதிகள் மாத்திரமே படிக்கப்பட்டன. அதன் பிறகு விஷயாலோசனைக்

கமிட்டித் தேர்தல். கமிட்டிக் கூட்டங்களுக்குக் கோகலே என்னை அழைத்துப் போனார்.

என் தீர்மானத்தை அனுமதிப்பதாக ஸர் பிரோஸ்ஷா ஒப்புக்கொண்டிருந்தார். ஆனால், விஷயாலோசனைக் கமிட்டி முன்பு அதை யார், எப்பொழுது கொண்டுவருவார்கள் என்று திகைத்துக்கொண்டிருந்தேன். ஏனெனில், ஒவ்வொரு தீர்மானத்தின் பேரிலும் நீண்ட சொற்பொழிவுகள் நடந்தன. எல்லாம் முழுக்க முழுக்க ஆங்கிலத்தில் தான். ஒவ்வொரு தீர்மானத்தையும் யாராவது ஒரு பிரபலமான தலைவர் ஆதரித்து வந்தார். முக்கியஸ்தர்களின் பேரிகை முழக்கத்தின் நடுவே, என் குரல் ஈனக்குரலாக இருந்தது. இரவும் நெருங்கவே என் நெஞ்சு படபடத்துக் கொண்டிருந்தது. கடைசியாக ஆலோசனைக்கு வந்த தீர்மானங்களை, மின்னல் வேகத்தில் முடிவு செய்து கொண்டு போனார்கள் என்றே எனக்கு ஞாபகம். வெளியே போவதற்கு ஒவ்வொருவரும் அவசரப்பட்டுக் கொண்டிருந்தனர். அப்பொழுது இரவு 11 மணி. எழுந்து பேச எனக்குத் துணிவு இல்லை. முன்னாலேயே கோகலேயைப் பார்த்தேன். என் தீர்மானத்தை அவர் பார்த்தும் இருக்கிறார். அவர் உட்கார்ந்திருந்த இடத்திற்கு அருகே போய், ''தயவுசெய்து எனக்கு ஏதாவது செய்யுங்கள்'' என்று குசுகுசுவென்று சொன்னேன். ''உங்கள் தீர்மானத்தை நான் மறந்துவிடவில்லை. தீர்மானங்களை எவ்வளவு வேகத்தில் அடித்துக்கொண்டு போகிறார்கள் என்பதைப் பாருங்கள். ஆனால், அவர்கள் உங்கள் தீர்மானத்தை விட்டுவிட்டு, அப்பால் போய்விடாமல் நான் பார்த்துக்கொள்ளுகிறேன்'' என்றார், கோகலே.

''ஆகவே, எல்லாவற்றையும் முடித்துவிட்டோமல்லவா?'' என்றார், ஸர் பிரோஸ்ஷா மேத்தா.

''இல்லை, இல்லை. தென்னாப்பிரிக்கா பற்றிய தீர்மானம் பாக்கியாக இருக்கிறது. ஸ்ரீ காந்தி நீண்ட நேரமாகக் காத்துக் கொண்டிருக்கிறார்'' என்று உரக்கக் கூறினார், கோகலே.

''நீங்கள் தீர்மானத்தைப் பார்த்தீர்களா?'' என்று கேட்டார், ஸர் பிரோஸ்ஷா.

''பார்த்தேன்.''

''அது உங்களுக்குப் பிடித்திருக்கிறதா?''

''மிக நன்றாகவே இருக்கிறது.''

''அப்படியானால், அதை எடுத்துக் கொள்ளுவோம். காந்தி, அதைப் படியும்.''

நான் நடுங்கிக்கொண்டே அதைப் படித்தேன். கோகலே அதை ஆமோதித்தார். ''ஏகமனதாக நிறைவேறியது'' என்று எல்லோரும் கூவினார்கள்.

"காந்தி, இத்தீர்மானத்தின்மீது நீர் ஐந்து நிமிட நேரம் பேசலாம்" என்றார், ஸ்ரீ வாச்சா.

இந்த நடைமுறை எனக்குக் கொஞ்சமும் திருப்தியளிக்கவே இல்லை. தீர்மானத்தைப் புரிந்துகொள்ள யாருமே கவலைப்பட வில்லை. ஒவ்வொருவரும் போவதற்கு அவசரப்பட்டுக்கொண் டிருந்தார்கள். இத் தீர்மானத்தைக் கோகலே பார்த்துவிட்டார் என்பதனால் மற்றவர்கள் அதைப் பார்க்கவேண்டியதோ, புரிந்துகொள்ள வேண்டியதோ அவசியம் என்று எண்ணவில்லை!

காங்கிரஸில் நான் செய்யவேண்டிய பிரசங்கத்தைப்பற்றியே காலையில் கவலைப்பட்டுக்கொண்டிருந்தேன். ஐந்து நிமிடங்களில் நான் எதைச் சொல்லுவது? ஓரளவுக்கு நன்றாகவே நான் தயார் செய்துகொண்டிருந்தேன். ஆனால், சமயத்தில் சொற்கள்தான் எனக்கு வருவதில்லை. என் பிரசங்கத்தை எழுதிப் படிப்ப தில்லை; நினைவிலிருந்தே பேசுவது என்று முடிவு செய்துகொண் டிருந்தேன். பேசுவதற்குத் தென்னாப்பிரிக்காவில் நான் பெற்றி ருந்த ஆற்றல் அச் சமயம் என்னைவிட்டுப் போய்விட்டதென்றே தோன்றியது.

என் தீர்மானம் வந்ததும் ஸ்ரீ வாச்சா, என் பெயரைச்சொல்லி அழைத்தார். நான் எழுந்து நின்றேன். எனக்குத் தலை சுற்றியது. எப்படியோ தீர்மானத்தைப் படித்துவிட்டேன். வெளிநாடு களுக்குப் போய்க் குடியேறுவதைப் புகழ்ந்து ஒருவர் கவி பாடி, அதை அச்சிட்டுப் பிரதிநிதிகளுக்கு விநியோகம் செய்திருந்தார். அப் பாட்டை வாசித்துவிட்டுத் தென்னாப்பிரிக்காவில் குடியேறி யிருப்பவர்களின் குறைகளைப்பற்றிக் குறிப்பிட்டேன். அந்தச் சமயத்தில் ஸ்ரீ வாச்சா மணியை அடித்தார். நான் ஐந்து நிமிட நேரம் பேசி விடவில்லை என்பது எனக்கு நிச்சயமாகத் தெரியும். இன்னும் இரண்டு நிமிடங்களே பாக்கி இருக்கின்றன; அதற்குள் நான் பேச்சை முடித்துவிடவேண்டும் என்று என்னை எச்சரிக்கை செய்வதற்காகவே மணி அடிக்கப் பட்டது என்பது எனக்குத் தெரியாது. மற்றவர்கள் அரை மணி, முக்கால் மணி நேரம் பேசியும் மணியடிக்கப்பட்டதில்லை என்பதையும் அறிவேன். ஆகவே, நான் அவமதிக்கப்பட்டதாக உணர்ந்தேன். மணியடித் ததுமே உட்கார்ந்துவிட்டேன். ஆனால், ஸர் பிரோஸ்ஷாவுக்குச் சரியான பதில் அப்பாடலில் அடங்கியிருக்கிறது என்று குழந்தை போன்ற என் புத்தி எண்ணியது. தீர்மானம் நிறைவேறி விட்டது என்பதைக் குறித்துச் சொல்லவேண்டியதில்லை. அந்த நாட்களில் காங்கிரஸ் மகாநாட்டிற்கு வேடிக்கை பார்க்க வருவோருக்கும் பிரதிநிதிகளுக்கும் அதிக வித்தியாசம் எதுவும் இல்லை. ஒவ்வொருவரும் கையைத் தூக்குவார்கள்; எல்லாத் தீர்மானங்களும் ஏகமனதாக நிறைவேறும். என் தீர்மான விஷயத்திலும் இதேதான் நடந்ததாகையால் அதன் முக்கி யத்துவம் போய்விட்டதாகவே நான் கருதினேன். என்றாலும், காங்கிரஸில் அது நிறைவேறியது என்பது மாத்திரமே என்

மனத்திற்கு மகிழ்ச்சியை அளிக்கப் போதுமானதாக இருந்தது. காங்கிரஸ், முத்திரை வைத்துவிட்டதென்றால், அதை நாடு முழுவதும் அங்கீகரித்துவிட்டது என்று ஆகுமாகையால் எவருக்கும் மகிழ்ச்சியளிக்க அதுவே போதும்.

## 16

# லார்டு கர்ஸானின் தர்பார்

காங்கிரஸ் மகாநாடு முடிந்தது. ஆனால், தென்னாப்பிரிக்காவிலிருந்த வேலை சம்பந்தமாக வர்த்தகச் சங்கத்தையும் மற்றும் பலரையும் நான் காணவேண்டியிருந்ததால் கல்கத்தாவில் ஒரு மாத காலம் தங்கினேன். இத்தடவை ஹோட்டலில் தங்கவில்லை. அதற்குப் பதிலாக, 'இந்தியா கிளப்' பில் ஓர் அறையில் தங்குவதற்கு வேண்டிய அறிமுகத்தைப் பெற ஏற்பாடு செய்துகொண்டேன். அந்தக் கிளப் உறுப்பினர்களில் சில பிரபலமான இந்தியரும் உண்டு. அவர்களுடன் தொடர்பு கொண்டு, தென்னாப்பிரிக்காவில் இருக்கும் வேலையில் அவர்களுக்குச் சிரத்தையை உண்டாக்க வேண்டும் என்றும் எண்ணினேன். 'பிலியர்டு' விளையாடுவதற்காகக் கோகலே இந்தக் கிளப்புக்கு அடிக்கடி வருவதும் உண்டு. நான் கல்கத்தாவில் கொஞ்ச காலம் தங்க வேண்டியிருந்தது என்பதை அவர் அறிந்ததும், தம்முடன் வந்து தங்குமாறு அவர் என்னை அழைத்தார். இந்த அழைப்பை நன்றியறிதலுடன் ஏற்றுக்கொண்டேன். ஆனால், நானாக அங்கே போவது சரியல்ல என்று எண்ணினேன். அவர் இரண்டொரு நாள் பொறுத்துப் பார்த்தார். நான் வராது போகவே அவரே நேரில் வந்து என்னை அழைத்துச் சென்றார். கூச்சப்படும் என் சுபாவத்தைக் கண்டு கொண்டதும், அவர் கூறியதாவது: "காந்தி, நீங்கள் இந்நாட்டில் இருக்க வேண்டியவர். ஆகவே, இப்படிக் கூச்சப்பட்டுக்கொண்டிருந்தால் காரியம் நடக்காது. எவ்வளவு பேரோடு பழகுவது சாத்தியமோ அவ்வளவு பேரோடும் நீங்கள் பழக்கம் வைத்துக்கொள்ள வேண்டும். நீங்கள் காங்கிரஸ் வேலை செய்ய வேண்டும் என்று நான் விரும்புகிறேன்."

கோகலேயுடன் நான் தங்கியதைப் பற்றிக் கூறுமுன்பு இந்தியா கிளப்பில் நடந்த ஒரு சம்பவத்தைக் குறிப்பிட விரும்புகிறேன். அந்தச் சமயம் லார்டு கர்ஸான்* தமது தர்

---

* லார்டு கர்ஸான்: 1891-இல் பிரிட்டிஷ் மந்திரி சபையில் இந்தியா உதவி மந்திரியாகவும், 1895-இல் அயல் நாட்டிலாகா உதவி மந்திரியாகவும், 1899-இலிருந்து 1905 வரையில் இந்தியாவில் வைசிராயாகவும், 1915-16-இல் பிரிட்டிஷ் அயல் நாட்டு மந்திரியாகவும் இருந்தவர். இவர் செய்த வங்காளப் பிரிவினையினால் நாட்டில் சுதேசி இயக்கம் தோன்றி வலுப் பெற்றது. அப்போது இந்தியாவில் பிரிட்டிஷ் ராணுவ தளபதியாயிருந்த லார்டு கிச்னருக்கும் இவருக்கும் அபிப்பிராய பேதம் ஏற்பட்டதனால் இவர் வைசிராய் பதவியைத் துறந்து இங்கிலாந்துக்குத் திரும்பிவிட்டார்.

பாரை நடத்தினர். தர்பாருக்கு அழைக்கப் பெற்றிருந்த ராஜாக்களும், மகாராஜாக்களில் சிலரும் இந்தக் கிளப்பில் அங்கத்தினர்கள். கிளப்பில் இருக்கும்போது அவர்கள், எப்பொழுதும் வங்காளிகள் வழக்கமாக அணியும் உயர்ந்த வேஷ்டி கட்டி, சட்டையும் அங்கவஸ்திரமும் போட்டிருப்பார்கள். ஆனல், தர்பார் தினத்தன்று அவர்கள், வேலைக்காரர்கள் அணிவதைப் போன்ற கால்சட்டைகளைப் போட்டுக்கொண்டு, பளபளப்பான பூட்ஸுகளும் அணிந்திருந்ததைக் கண்டேன். இதைப் பார்த்து என் மனம் வேதனையடைந்தது. இந்த உடை மாற்றத்திற்குக் காரணம் என்ன என்று அவர்களில் ஒருவரை விசாரித்தேன்.

"எங்களுடைய துர்ப்பாக்கிய நிலைமை எங்களுக்குத்தான் தெரியும். எங்கள் செல்வத்தையும் பட்டங்களையும் காப்பாற்றிக்கொள்ளுவதற்காக எவ்வளவு அவமானங்களுக்கெல்லாம் நாங்கள் உள்ளாகவேண்டியிருக்கிறது என்பதையும் நாங்கள் மட்டுமே அறிவோம்'' என்று அவர் பதில் கூறினர்.

"ஆனல், வேலைக்காரர்கள் அணியக்கூடிய இந்தக் கால்சட்டையும் பளபளப்பான பூட்ஸுகளும் எதற்காக?'' என்றேன்.

"எங்களுக்கும் வேலைக்காரர்களுக்கும் ஏதாவது வித்தியாசம் இருப்பதாகக் காண்கிறீர்களா?'' என்று அவர் சொல்லிவிட்டு, மேலும் கூறியதாவது: "அவர்கள் எங்கள் வேலைக்காரர்கள்; நாங்களோ, லார்டு கர்ஸானின் வேலைக்காரர்கள். தர்பாருக்கு நான் போகாமல் இருந்துவிட்டால், அதன் விளைவுகளை நான் அனுபவிக்க நேரும். நான் எப்பொழுதும் அணியும் ஆடையுடன் அதற்குப் போனல், அது ஒரு குற்றமாகிவிடும். லார்டு கர்ஸானுடன் பேசும் சந்தர்ப்பத்தைப் பெறுவதற்காக நான் அங்கே போகிறேன் என்று நினைக்கிறீர்களா? அதெல்லாம் ஒன்றுமே இல்லை!"

இவ்விதம் மனம்விட்டுப் பேசிய அந் நண்பருக்காகப் பரிதாபப் பட்டேன். இது மற்றொரு தர்பாரை எனக்கு நினைவூட்டுகிறது.

ஹிந்து சர்வகலாசாலைக்கு லார்டு ஹார்டிஞ்சு* அஸ்திவாரக் கல் நாட்டியபோது அங்கே ஒரு தர்பார் நடந்தது. ராஜாக்களும் மகாராஜாக்களும் குழுமியிருந்தனர். இந்த விழாவுக்கு வருமாறு பண்டித மாளவியாஜி என்னைப் பிரத்தியேகமாக அழைத்திருந்தார். நானும் போயிருந்தேன்.

---

* லார்டு ஹார்டிஞ்சு (1858–1944) : 1910-ஆம் ஆண்டு முதல் 1916 வரையில் இந்தியாவில் வைசிராயாக இருந்தார். இதற்கு முன்னல் பிரிட்டிஷ் ராஜதந்திரியாகப் பல முக்கியமான பதவிகளை வகித்தார். 1906 முதல் 1910 வரையிலும், பிறகு 1916 முதல் 1920-ஆம் ஆண்டு வரையிலும் பிரிட்டிஷ் வெளிநாட்டு விவகார இலாகா உதவி மந்திரியாகவும் இருந்தார். 1920 முதல் இரண்டு ஆண்டுகள் பாரிஸில் பிரிட்டிஷ் ஸ்தானிகராக இருந்தார்.

மகாராஜாக்கள், பெண்களைப்போல ஆடை அலங்காரங்கள் செய்துகொண்டு வந்திருப்பதைப் பார்த்து, மனம் வருந்தினேன். அவர்கள் பட்டுக் கால்சட்டை போட்டுக் கொண்டு, பட்டுச் சட்டைகளும் அணிந்திருந்தனர். கழுத்தைச் சுற்றி முத்துமாலை தரித்திருந்ததோடு, கைகளில் கொலுசுகளும் போட்டிருந்தார்கள். அவர்களுடைய தலைப்பாகைகளில் முத்து, வைரப் பதக்கங்கள் இருந்தன. இவ்வளவும் போதாதென்று தங்கப் பிடி போட்ட பட்டாக் கத்திகள், அவர்களுடைய அரைக் கச்சைகளிலிருந்து தொங்கிக் கொண்டிருந்தன.

இந்த ஆடை, அலங்காரங்களெல்லாம் அவர்களுடைய அடிமைத்தனத்தின் சின்னங்களேயன்றி அவர்களது ராஜ சின்னங்கள் அல்ல என்பதைக் கண்டேன். தங்களுடைய பேடித்தனத்தைக் காட்டும் இப் பட்டயங்களையெல்லாம் இவர்கள் தங்கள் இஷ்டப்படி விரும்பி அணிந்திருந்தார்கள் என்று நான் எண்ணியிருந்தேன். ஆனால், இந்த ராஜாக்கள் தங்களுடைய ஆபரணங்களையெல்லாம் இத்தகைய வைபவங்களுக்கு அணிந்துகொண்டு வர வேண்டும் என்பது கட்டாயம் என்பதைப் பின்னால் அறிந்து கொண்டேன். இப்படி நகைகளையெல்லாம் அணிவதைச் சில ராஜாக்கள் மனப்பூர்வமாக வெறுக்கிறார்கள் என்பதையும், இந்தத் தர்பார் போன்ற சமயங்களில் அல்லாமல் வேறு எப்பொழுமே அவைகளை அவர்கள் அணிவதில்லை என்பதையும் அறிந்தேன்.

எனக்குக் கிடைத்த இந்த விவரங்கள் எவ்வளவு தூரம் உண்மையானவை என்பது எனக்குத் தெரியாது. ஆனால், மற்றச் சமயங்களிலும் அவைகளை அவர்கள் அணிந்தாலும் அணியாது போயினும் சில பெண்கள் மாத்திரமே அணியக்கூடிய நகைகளை அணிந்து கொண்டுதான் அவர்கள் வைசிராயின் தர்பாருக்குப் போக வேண்டியிருக்கிறது என்பது ஒன்றே மனத்தை நோகச் செய்வதற்குப் போதுமானதாகும்.

செல்வம், அதிகாரம், அந்தஸ்து ஆகியவைகளுக்காக மனிதன் எவ்வளவு பெரிய பாவங்களையும் அநீதிகளையும் செய்ய வேண்டியவனாகிறான்.*

---

* காந்திஜி இங்கே குறிப்பிட்டிருக்கும் ஹிந்து சர்வகலாசாலை அஸ்திவாரக் கல் நாட்டு விழா, காசியில் 1916 பிப்ரவரியில் நடந்தது. இந்த வைபவம் மூன்று நாட்கள் நடந்தது. 1892-இல் டாக்டர் அன்னிபெஸன்ட் காசியில் ஒரு பள்ளிக்கூடத்தை ஆரம்பித்தார். பண்டித மாளவியாவின் உதவியின் பேரில் அது ஹிந்து சர்வகலாசாலை மத்தியக் கல்லூரியாக வளர்ந்தது. அதற்கு அஸ்திவாரக் கல் நாட்டு விழாவையே லார்டு ஹார்டிஞ்சு நடத்திவைத்தார். பிரகாசமாக அலங்கரிக்கப்பட்டிருந்த பந்தலில் ஆடை, ஆபரண அலங்காரங்களுடன் ராஜாக்களும், பெரிய அதிகாரிகளும் வீற்றிருக்க, பிப்ரவரி 4–ஆம் தேதி மகாத்மா காந்தி அக் கூட்டத்தில் பேசினார். அன்று காந்திஜி பேசியதைப் போன்று அதற்கு முன்னால் யாருமே அப்படி ஒளிவு மறைவு இன்றிப் பட்டவர்த்தனமாகப் பேசியதில்லை. காந்திஜி அப்பொழுது கூறியதை இச்சமயத்தில் கவனிப்பது முக்கியமாகும். காந்திஜி கூறியதன் சாரமாவது :

# 17

# கோகலேயுடன் ஒரு மாதம்-1

நான் கோகலேயுடன் வசிக்க ஆரம்பித்த முதல் நாளிலிருந்தே என் சொந்த வீட்டில் வசிப்பதுபோல் நான் உணரும்படி அவர் செய்துவிட்டார். தமது சொந்தத் தம்பியைப் போன்றே பாவித்து, அவர் என்னை நடத்தினர். என் தேவைகள் யாவை என்பதையெல்லாம் அறிந்துகொண்டார். எனக்கு வேண்டியவை யாவும் கிடைக்கவும் ஏற்பாடு செய்தார். அதிருஷ்டவசமாக எனக்குள்ள தேவைகளோ மிகக் கொஞ்சம். அதோடு எனக்கு வேண்டியதையெல்லாம் நானே செய்துகொள்ளுவது என்ற பழக்கத்தையும் வளர்த்துக் கொண்டிருந்தேன். ஆகையால், வேலைக்காரரின் உதவி எனக்குத் தேவையே இல்லை. என் காரியங்களையெல்லாம் நானே செய்துகொண்டதும், நான் சுத்தமாக இருந்ததும், என்னிடமிருந்த விடா முயற்சி, ஒழுங்கு முதலிய குணங்களும் அவர் மனத்தைக் கவர்ந்துவிட்டன. அவர் அடிக்கடி என்னை மிகவும் புகழ்ந்து பேசுவார்.

தமது காரியம் எதையும் எனக்குத் தெரியாமல் அவர் ரகசியமாக வைத்திருந்ததாகத் தெரியவில்லை. தம்மைப் பார்க்க

---

"இக்கூட்டத்திற்கு நேற்றுத் தலைமை வகித்த மகாராஜா, இந்தியாவின் ஏழ்மை நிலையைக் குறித்து கூறினர். பேசிய மற்றவர்களும் இதை முக்கியமாகக் குறிப்பிட்டார்கள். ஆனால், வைசிராய் (லார்டு ஹார்டிஞ்சு) அஸ்திவாரக் கல்நாட்டு விழாவை நடத்தியபோது இப் பெரிய பந்தலில் நாம் கண்டது என்ன? கம்பீரமான அந்தக் காட்சி, நகைகளின் காட்சி, பாரிஸிலிருந்து வந்திருந்த மிகப் பெரிய நகை வியாபாரியின் கண்களுக்கு நிச்சயமாக அற்புதமான விருந்தாகவே அது இருந்தது. விலையுயர்ந்த ஆடை ஆபரணங்கள் அணிந்த இந்தக் கனவான்களைக் கோடிக்கணக்கான ஏழைகளுடன் நான் ஒப்பிட்டுப் பார்க்கிறேன். அந்தக் கனவான்களிடம் பின்வருமாறு கூறவேண்டும் என்றே உணருகிறேன்: "நீங்கள் அணிந்திருக்கும் நகைகளையெல்லாம் கழற்றி இந்தியாவின் மக்களுக்குத் தரும நிதியாக அவற்றை நீங்கள் வைத்தாலன்றி இந்தியாவுக்கு விமோசனமே இல்லை."

காந்திஜி இவ்விதம் கூறியதும் கூட்டத்திலிருந்த மாணவர்கள், அதை வரவேற்றுச் சந்தோஷ ஆரவாரம் செய்தனர். ஆனால், பலர் அவர் கூறியதை வெறுத்தனர். மன்னர்களில் பலர் கூட்டத்திலிருந்து வெளியேறிவிட்டனர். என்றாலும், காந்திஜி தொடர்ந்து மேலும் கூறியதாவது:

"பிரிட்டிஷ் இந்தியாவில் இருக்கும் ஒரு நகரிலோ, சுதேச மன்னரின் ஆட்சிக்கு உட்பட்ட பகுதியில் ஒரு நகரிலோ ஓர் அரண்மனை கட்டப்படுகிறது என்று நான் கேள்விப்படும்போது உடனே பொறாமையடைகிறேன். அது நம் விவசாயிகளிடமிருந்து வந்த பணம் என்கிறேன். நம் விவசாயிகளின் உழைப்பின் பலன் முழுவதையும் நான் எடுத்துக்கொண்டுவிட்டால், பிறர் எடுத்துக்கொண்டுவிட அனுமதித்தால், நம்மிடம் சுயஆட்சி உணர்ச்சி என்பதே இருக்க முடியாது. விவசாயிகளிடமிருந்தே நமக்கு விமோசனம் கிடைக்க முடியும். வக்கீல்களோ, டாக்டர்களோ, பெரிய நிலச்சுவான்தார்களோ அதை அடையச் செய்யப் போவதே இல்லை.''

இவ்விதம் காந்திஜி பேசிக்கொண்டே போனபோது கூட்டத்தில் குழப்பம் மிகுந்துவிடவே அவர் தமது பேச்சை நிறுத்திவிட்டார்.

வரும் முக்கியமானவர்கள் இடமெல்லாம் என்னை அறிமுகம் செய்துவைப்பார். இவ்விதம் அறிமுகம் செய்துவைக்கப்பட்ட வர்களில் என் நினைவில் முக்கியமாக நிற்பவர் டாக்டர் (இப் பொழுது ஸர்) பி. ஸி. ராய்.* கோகலேயின் ஜாகைக்கு வெகு கிட்டத்திலேயே அவர் வசித்து வந்தார். ஆகையால், அடிக்கடி வருவார். "இவர்தான் பேராசிரியர் ராய். இவருக்கு மாதச் சம்பளம் ரூ. 800. அதில் தமக்கென்று ரூ. 40 வைத்துக்கொண்டு மீதியைப் பொதுக் காரியங்களுக்குப் பயன்படுத்துகிறார். இவ ருக்கு விவாகம் ஆகவில்லை. விவாகம் செய்துகொள்ள விரும்பவும் இல்லை" என்று சொல்லி அவரை எனக்கு அறிமுகம் செய்து வைத்தார்.

டாக்டர் ராய், இன்று இருப்பதற்கும் அன்று இருந்ததற்கும் எந்த வித்தியாசத்தையும் நான் காணவில்லை. அவருடைய ஆடையும் இப்பொழுது இருப்பதுபோலவே அப்பொழுதும் எளிமையானதாக இருந்தது. ஆனால், ஒரு வித்தியாசம் உண்டு. அந்த நாளில் இந்திய மில்துணி ஆடை அணிந்துவந்தார். இப் பொழுது கதர் உடுத்துகிறார். கோகலேயும் டாக்டர் ராயும் பேசிக் கொண்டிருப்பதை எவ்வளவு நேரம் கேட்டாலும் எனக்கு அலுப்புத் தட்டுவதே இல்லை. ஏனெனில், அப் பேச்சு பொது நன்மையைப் பற்றியதாக இருக்கும். இல்லாவிட்டால் அறிவை ஊட்டுவதாக இருக்கும். சில சமயங்களில் இப் பேச்சு, பொது ஜனத் தலைவர்களின் நடத்தையைக் கண்டிப்பதாகவும் இருக்கும். அப்பொழுது அதைக் கேட்டது, மனத்திற்கு வேதனையைத் தரும். இதன் பயனாக, முக்கியமான வீரர்களாக எனக்குத் தோன்றிவந்தவர்களில் சிலர், மிகவும் சின்ன மனிதர்களாகத் தோன்ற ஆரம்பித்தனர்.

கோகலே, வேலை செய்வதைப் பார்ப்பது இன்பம் தருவதாக மாத்திரமின்றி, ஒரு போதனையாகவும் இருக்கும். ஒரு நிமிட நேரத்தைக்கூட அவர் வீணாக்குவதில்லை. அவருடைய தனிப் பட்ட உறவுகள், நட்புகள் எல்லாமே பொது நன்மையை உத் தேசித்துத்தான் இருக்கும். அவர் பேசுவதெல்லாம் நாட்டின் நன்மையைக் குறித்தே. அதில் உண்மையல்லாததையோ, கபட மானதையோ ஒரு சிறிதேனும் காண முடியாது. அவருக்கிருந்த பெரிய கவலையெல்லாம், இந்தியாவின் வறுமையும் அடிமைத் தனமும் எப்படி ஒழியும் என்பதே ஆகும். வேறு பல விஷயங் களிலும் அவருக்குச் சிரத்தை உண்டாகும்படி செய்யப் பலர் முயல்வார்கள். ஆனால், அவர்கள் ஒவ்வொருவருக்கும் பின் வருமாறு ஒரே பதிலையே அவர் கூறுவார்: "அக் காரியத்தை நீங்களே செய்யுங்கள். என் வேலையை நான் செய்துகொண்டிருக்

* பிரபுல்ல சந்திர ராய்: கல்கத்தா சர்வகலாசாலையில் ரசாயனப் பேராசிரியரா யிருந்தவர். காந்திஜி ஆரம்பித்த கதர் இயக்கத்தில் மிகுந்த அக்கறைகொண்டவர். இவருடைய அபிமான மாணவர் சதீஷ் சந்திரதாஸ் குப்தா, பின்னர் காதி பிரதிஸ்தான் அமைத்துச் சிறந்த தொண்டாற்றினார்.

கிறேன். நான் விரும்புவதெல்லாம் நாடு சுதந்திரமடைய வேண்டும் என்பதே. இதில் வெற்றி பெற்றுவிடுவோமானல் மற்றவைகளைப் பற்றி நான் சிந்திக்கலாம். இன்று என் முழு நேரத்தையும் சக்தியையும் ஈடுபடுத்துவதற்கு இந்த ஒன்றே போதுமானது.''

ரானடேயிடம் அவர் கொண்டிருந்த அபார பக்தியை ஒவ்வொரு நிமிடமும் காணலாம். ஒவ்வொரு விஷயத்திலும் ரானடேயின் கருத்துத்தான் இவருக்கு வேத வாக்காக இருந்தது. ஒவ்வொரு கட்டத்திலும் ரானடேயின் கருத்தை எடுத்துக் காட்டுவார். நான் கோகலேயுடன் தங்கியிருந்த போது, ரானடேயின் சிரார்த்த தினம் (அல்லது பிறந்த தினமா என்பது எனக்கு நினைவு இல்லை) வந்தது. கோகலே, இத் தினத்தைத் தவருமல் அனுசரித்து வந்தார். அப்பொழுது அவருடன் என்னைத் தவிர அவருடைய நண்பர்களான பேராசிரியர் கதாவடே, ஒரு சப்ஜட்ஜ் ஆகியவர்களும் இருந்தனர். அத் தின வைபவத்தில் கலந்து கொள்ள எங்களைக் கோகலே அழைத்தார். அப்பொழுது அவர் பேசிய போது, ரானடேயைப் பற்றிய தமது நினைவுகளை எங்களுக்கு எடுத்துக் கூறினர். அச்சமயம் ரானடே, திலாங், மண்டலிக் ஆகியவர்களை ஒப்பிட்டுச் சொன்னர். திலாங்கின் அழகிய எழுத்து நடையைப் பாராட்டினர். சீர்திருத்தவாதி என்ற வகையில் மண்டலிக்கின் பெருமையைச் சொன்னர். இவர் தமது கட்சிக்காரர்களின் விஷயத்தில் எவ்வளவு சிரத்தை காட்டி வந்தார் என்பதற்கு ஓர் உதாரணத்தையும் குறிப்பிட்டார். அவர், வழக்கமாகப் போக வேண்டிய ரெயில் ஒரு நாள் தவறி விட்டதாம். தமது கட்சிக்காரரின் நன்மையை முன்னிட்டுக் குறிப்பிட்ட நேரத்தில் தாம் கோர்ட்டில் இருக்க வேண்டும் என்பதற்காக அவர் தனி ரெயிலுக்கு ஏற்பாடு செய்துகொண்டு போய்ச் சேர்ந்தாராம். ஆனல், இவர்கள் எல்லோரையும்விட ரானடே தலை சிறந்தவர் என்றும், எல்லாவற்றிலும் சிறந்த மேதாவி என்றும் கோகலே சொன்னர். அவர் சிறந்த நீதிபதி என்பது மாத்திரம் அல்ல, அதேபோல் சிறந்த சரித்திராசிரியரும், பொருளாதார நிபுணரும், சீர்திருத்தக்காரரு மாவார் என்ருர். அவர் நீதிபதியாக இருந்தும், கொஞ்சமும் பயப்படாமல் காங்கிரஸ் மகாநாட்டிற்குச் சென்ருர். அவருடைய அறிவாற்றலில் எல்லோருக்கும் நம்பிக்கை உண்டாகையால் அவர் கூறும் முடிவுகளை எல்லோரும் எந்தவித ஆட்சேபமும் கூருமல் ஏற்றுக் கொண்டு விடுவார்களாம். தமது குருவின் உள்ளத்திலும் அறிவிலும் இருந்த இந்த அபூர்வ குணுதிசயங்களை விவரித்துக் கூறும் போது, கோகலேக்கு ஏற்பட்ட ஆனந்தத்திற்கு அளவே இல்லை.

அந்த நாளில் கோகலே ஒரு குதிரை வண்டி வைத்திருந்தார். குதிரை வண்டி அவருக்கு என்ன காரணத்தினல் அவசியமாயிற்று என்பது எனக்குத் தெரியாது. ஆகவே, இதைக் குறித்து அவரிடம் வாதாடினேன். ''தாங்கள் டிராம் வண்டியில்

போய் வரக் கூடாதா? அப்படிப் போய் வந்தால், தலைவர் கௌரவத்திற்கு இழுக்கு ஏற்பட்டுவிடுமா?'' என்றேன்.

இக் கேள்வி அவருக்குக் கொஞ்சம் மன வருத்தத்தையே உண்டாக்கி விட்டது. அவர் கூறியதாவது: "அப்படியானால் நீங்களும் என்னை அறிந்துகொள்ளத் தவறிவிட்டீர்கள்! கவுன்ஸில் அங்கத்தினர் என்பதற்காக எனக்குக் கிடைக்கும் படிப் பணத்தை நான் சொந்தச் சௌகரியத்திற்காக உபயோகித்துக் கொள்ளுவதில்லை. டிராம் வண்டிகளில் போய் வருவதில் உங்களுக்கு இருக்கும் சுதந்திரத்தைக் கண்டு நான் பொறாமைப் படுகிறேன். அப்படி நானும் போய் வர முடியவில்லையே என்று வருத்தப்படுகிறேன். என்னைப் போல் நீங்களும் எல்லோருக்கும் தெரிந்திருக்கும் வகையில் விளம்பரத்தைப் பெற்றுவிடும் துர்ப் பாக்கியத்தை அடைந்துவிடும்போது, டிராம் வண்டிகளில் நீங்கள் போய் வருவது அசாத்தியம் என்று ஆகாவிட்டாலும் கஷ்டமானதாகவே இருக்கும். தலைவர்கள் செய்வதெல்லாம் தங்கள் சொந்தச் சௌகரியத்திற்காகவே என்று ஊகித்துக் கொண்டுவிடுவதற்கு எவ்விதமான காரணமும் இல்லை. உங்களுடைய எளிய பழக்கங்கள் எனக்குப் பிடித்திருக்கின்றன. என்னால் இயன்றவரை எளிய வாழ்க்கையை நடத்தி வருகிறேன். ஆனால், என்னைப் போன்ற ஒருவருக்குச் சில செலவுகள் தவிர்க்க முடியாதவை."

என்னுடைய புகார்களில் ஒன்றுக்கு இவ்வாறு அவர் திருப்தியளிக்கும் வகையில் பதில் சொல்லி விட்டார். ஆனால், மற்றொரு புகாருக்கோ எனக்குத் திருப்தி உண்டாகும் வகையில் அவரால் பதில் சொல்லிவிட முடியவில்லை.

"நீங்கள் உலாவுவதற்குக் கூடப் போவதில்லை! நீங்கள் எப்பொழுதும் நோயுற்றே இருப்பதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது? பொது வேலையில் ஈடுபடுவதனால் தேகாப்பியாசத்திற்கு நேரமே இல்லாது போக வேண்டுமா?'' என்றேன்.

"உலாவப் போவதற்கு எனக்கு எங்காவது நேரம் இருப்பதைப் பார்க்கிறீர்களா?'' என்று பதிலளித்தார் கோகலே.

கோகலேயிடம் எனக்கு அபாரமான மதிப்பு இருந்தது. ஆகையால், அவரை எதிர்த்துப் பேச எனக்குத் துணிவு வருவதில்லை. மேற்கண்ட பதில் எனக்குத் திருப்தியளிக்க வில்லையெனினும் மௌனமாக இருந்து விட்டேன். ஒருவருக்கு என்னதான் அதிகமான வேலை இருந்தாலும் சரி, அவர் சாப்பிடுவதற்கு எப்படி நேரம் வைத்துக் கொள்ளுகிறாரோ அதேபோலத் தேகாப்பியாசம் செய்வதற்கும் அவகாசம் தேடிக் கொள்ள வேண்டும் என்று அப்பொழுது கருதினேன். இன்றும் அவ்வாறே கருதுகிறேன். அப்படிச் செய்வது, ஒருவனுடைய வேலைசெய்யும் சக்தியைக் குறைத்து விடுவதற்குப் பதிலாக அதிகப்படுத்தவே செய்கிறது என்பது எனது பணிவான அபிப்பிராயம்.

# 18

# கோகலேயுடன் ஒரு மாதம்-2

நான் கோகலேயுடன் தங்கியிருந்த போது எப்பொழுதும் வீட்டிலேயே இருந்து விடாமல் வெளியிலும் சுற்றிக் கொண்டிருந்தேன். இந்தியாவில் இந்தியக் கிறிஸ்தவர்களைச் சந்தித்து அவர்களுடைய நிலைமையையும் தெரிந்துகொள்ளுவேன் என்று தென்னாப்பிரிக்க கிறிஸ்தவ நண்பர்களிடம் சொல்லியிருந்தேன். பாபு காளிசரண் பானர்ஜி*யைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தேன். அவரிடம் எனக்குப் பெரு மதிப்பும் இருந்தது. காங்கிரஸின் நடவடிக்கைகளில் அவர் முக்கியப் பங்கு எடுத்துக்கொண்டார். சாதாரணமாக இந்தியக் கிறிஸ்தவர்கள், காங்கிரஸில் சேராமல் ஒதுங்கி இருந்து விடுகிறார்கள்; ஹிந்துக்கள், முஸ்லிம்களுடன் கலந்து கொள்ளாமல் ஒதுங்கி இருந்து விடுகின்றனர் என்ற சந்தேகம் எனக்கு இருந்தது. ஆனால், பாபு காளிசரண் பானர்ஜி விஷயத்தில் அத்தகைய சந்தேகம் எதுவும் எனக்கு இல்லை. அவரைச் சந்திக்க எண்ணியிருக்கிறேன் என்று கோகலேயிடம் சொன்னேன். "நீங்கள் அவரைப் பார்ப்பதால் என்ன பயன்? அவர் மிகவும் நல்லவர். ஆனால், உங்களுக்குத் திருப்தியளிக்க மாட்டார் என்றே அஞ்சுகிறேன். அவரை எனக்கு நன்றாகத் தெரியும். என்றாலும், நீங்கள் விரும்பினால் அவரைப் பார்த்து விட்டு வாருங்கள்" என்றார்.

அவரைப் பார்க்க விரும்புவதாக அனுமதி கோரி எழுதினேன். அவரும் உடனே பதில் அனுப்பினார். நான் அவரைப் பார்க்கச் சென்ற அன்று அவருடைய மனைவி மரணத் தறுவாயில் இருந்தார் என்பதை அறிந்தேன். காங்கிரஸில் அவரை நான் பார்த்த போது கால் சட்டையும் கோட்டும் போட்டுக் கொண்டிருந்தார். ஆனால், இப்பொழுதோ, ஒரு வங்காளி வேட்டி கட்டிக் கொண்டு சட்டை போட்டிருந்ததைக் கண்டு சந்தோஷமடைந்தேன். அச்சமயம் நான் கால் சட்டையும் பார்ஸிக் கோட்டும் அணிந்திருந்த போதிலும் அவருடைய எளிய உடை எனக்குப் பிடித்திருந்தது. அனாவசியப் பேச்சு எதுவும் வைத்துக் கொள்ளாமல் எனக்கு இருந்த சந்தேகங்களை நேரடியாக அவருக்குக் கூறினேன். "மனிதன் ஆரம்பத்தில் பாவம் செய்தே கேடுற்றான் என்ற தத்துவத்தில் உங்களுக்கு நம்பிக்கை உண்டா?" என்று அவர் என்னைக் கேட்டார். "ஆம். நம்பிக்கை உண்டு" என்றேன்.

---

* காளிசரண் பானர்ஜி: 1930-இல் லண்டனில் நடந்த வட்டமேஜை மகாநாட்டில் காந்திஜி பேசுகையில், "தூய மனம் படைத்த இந்தியரில் காளிசரண் பானர்ஜியைவிடச் சிறந்தவர் ஒருவரைக் காணமுடியாது என்று நான் சொல்லுவேன். அவர் காங்கிரஸின் சேவையில் ஈடுபட்டவர்" எனக் கூறியுள்ளார். நீதி, நிர்வாக இலாகாப் பிரிவினை, பிரஜா உரிமைகள், கல்வி சம்பந்தமான பல பிரச்னைகள் ஆகியவற்றைப் பற்றி இவர் பல காங்கிரஸ் மகா நாடுகளில் பேசியிருக்கிறார். 1890—இல் காங்கிரஸின் சார்பாக இங்கிலாந்துக்குச் சென்ற தூது கோஷ்டியின் உறுப்பினரில் இவரும் ஒருவர்.

"அப்படியானால் சரி. ஹிந்து மதம் அதற்கு விமோசனம் அளிப்பதில்லை, கிறிஸ்தவ மதம் அளிக்கிறது" என்று அவர் சொல்லிவிட்டு, மேலும் கூறியதாவது: "பாவத்தின் ஊதியம் மரணமே யாகும். ஏசுவினிடம் அடைக்கலம் புகுவது ஒன்றே அதனின்றும் விடுதலை பெறுவதற்குள்ள ஒரே மார்க்கம் என்று பைபிள் கூறுகிறது."

பகவத் கீதை கூறும் பக்தி மார்க்கத்தைக் குறித்து நான் சொன்னேன். ஆனால், அது பயன்படவில்லை. அவர் என்னிடம் காட்டிய அன்பிற்கு நன்றி கூறிவிட்டு, விடை பெற்றுக்கொண்டேன். எனக்குத் திருப்தியளிக்க அவர் தவறிவிட்டார். ஆனால், இச் சந்திப்பினால் நான் பயன் அடைந்தேன்.

இந்த நாட்களில் நான் கல்கத்தாத் தெருக்களில் இங்கும் அங்குமாகத் திரிந்துகொண்டிருந்தேன். அநேக இடங்களுக்கு நடந்தே போய்வருவேன். எனது தென்னாப்பிரிக்காவின் வேலைக்கு நீதிபதி மித்தர், ஸர் குருதாஸ் பானர்ஜி ஆகியவர்களின் உதவி எனக்கு வேண்டியிருந்தது. அவர்களைப் போய்ப் பார்த்தேன். அதே சமயத்தில் ஸர் பியாரி மோகன் முக்கர்ஜியையும் சந்தித்தேன்.

காளி கோயிலைப்பற்றிக் காளி சரண் பானர்ஜி என்னிடம் கூறினார். முக்கியமாக, புத்தகங்களிலும் அதைக் குறித்து நான் படித்திருந்ததால் அதைப் பார்க்க ஆவலுடன் இருந்தேன். ஆகவே, ஒரு நாள் அங்கே போனேன். அதே பகுதியில்தான் நீதிபதி மித்தரின் வீடும் இருந்தது. எனவே, நான் அவரைப் போய்ப் பார்த்த அன்றே காளி கோயிலுக்கும் போனேன். காளிக்குப் பலி கொடுப்பதற்காக ஆடுகள், மந்தை மந்தையாகப் போய்க்கொண்டிருந்ததை வழியில் பார்த்தேன். கோயிலுக்குப் போகும் சந்தின் இரு பக்கங்களிலும் வரிசையாகப் பிச்சைக்காரர்கள் இருந்தனர். அவர்களில் சில சாதுக்களும் இருந்தனர். உடல் வலுவுடன் இருக்கும் யாசகர்களுக்குப் பிச்சை போடுவதில்லை என்ற கொள்கையில் நான் அந்த நாளிலேயே உறுதியுடன் இருந்தேன். அவர்களில் ஒரு கூட்டம் என்னை விரட்டிக்கொண்டு வந்தது. சாதுக்களில் ஒருவர் ஒரு தாழ்வாரத்தில் உட்கார்ந்துகொண்டிருந்தார். அவர் என்னை நிறுத்தி, "தம்பி, நீ எங்கே போகிறாய்?" என்று கேட்டார். நான் கோயிலுக்குப் போகிறேன் என்றதும், என்னையும் என்னுடன் வந்தவரையும் உட்காரும்படி சொன்னார். அப்படியே உட்கார்ந்தோம்.

"இந்த உயிர்ப்பலியை மதம் என்று நீங்கள் கருதுகிறீர்களா?" என்று கேட்டேன்.

"மிருகங்களைக் கொல்லுவதை மதம் என்று யாராவது கருதுவார்களா?" என்றார், அவர்.

“அப்படியானால், அதை எதிர்த்து நீங்கள் ஏன் பிரசாரம் செய்யக்கூடாது?”

“அது என் வேலை அல்ல. கடவுளை வழிபடுவதே நமது வேலை.”

“கடவுளை வழிபடுவதற்கு உங்களுக்கு வேறு இடம் கிடைக்கவில்லையா?”

“எங்களுக்கு எந்த இடமும் நல்ல இடந்தான். மக்கள், ஆடுகளைப்போலத் தலைவர்கள் இட்டுச் செல்லும் இடங்களுக்குப் போய்க்கொண் டிருக்கின்றனர். சாதுக்களாகிய எங்கள் வேலை அதுவன்று.”

இந்த விவாதத்தை நாங்கள் வளர்த்துக்கொண் டிருக்கவில்லை. கோயிலுக்குப் போனோம். ரத்த ஆறுகள் எங்களை எதிர்கொண்டு அழைத்தன. அங்கே நிற்கவே என்னால் முடியவில்லை. நான் ஆத்திர மடைந்தேன்; அமைதியையும் இழந்து விட்டேன். அந்தக் காட்சியை என்றும் நான் மறக்கவே இல்லை.

அன்று மாலை சில வங்காளி நண்பர்கள் என்னை விருந்துக்கு அழைத்திருந்தார்கள். அங்கே ஒரு நண்பரிடம், இந்தக் கொடூரமான வழிபாட்டு முறையைக் குறித்துச் சொன்னேன். அதற்கு அவர் கூறியதாவது: “ஆடுகளுக்குத் துன்பமே தெரியாது. பேரிகை முழக்கமும் மற்றச் சப்தங்களும் அவைகளுக்குத் துன்ப உணர்ச்சியே இல்லாதபடி செய்துவிடுகின்றன.”

இதை ஒப்புக்கொண்டுவிட என்னால் முடியவில்லை. “ஆடுகளுக்கு வாயிருந்தால் அவை வேறு கதையைச் சொல்லும்” என்றேன். அக் கொடூரமான பழக்கம் நின்றாக வேண்டும் என்றும் எண்ணினேன். புத்தரின் கதையை நினைத்தேன். ஆனால், இவ்வேலை என் சக்திக்கு அப்பாற்பட்டது என்பதையும் கண்டேன்.

அன்று எனக்கு இருந்த அபிப்பிராயமே இன்றும் இருக்கிறது. மனிதனுடைய உயிரைவிட ஓர் ஆட்டுக்குட்டியின் உயிர் எந்த வகையிலும் குறைவானதாக எனக்குத் தோன்றவில்லை. மனித உடலுக்காக ஓர் ஆட்டின் உயிரைப் போக்குவதற்கு நான் உடன்பட முடியாது. ஒரு பிராணி எவ்வளவுக் கெவ்வளவு ஆதரவற்றதாக இருக்கிறதோ அவ்வளவுக்கு அது, மனிதனின் கொடுமையிலிருந்து காக்கப்படுவதற்கு உரிமை பெற்றிருக்கிறது என்று கருதுகிறேன். அத்தகைய சேவையைச் செய்வதற்குத் தன்னைத் தகுதியாக்கிக் கொள்ளாதவர், அதற்கு எந்தவிதப் பாதுகாப்பையும் அளித்துவிட முடியாது. ‘அக்கிரமமாகப் பலியிடப்படுவதிலிருந்து இந்த ஆடுகளைக் காப்பாற்றிவிடலாம்’

என்று நான் நம்புவதற்கு முன்னல் 'நான் அதிக சுயத்தூய்மை யையும் தியாக உணர்ச்சியையும் அடைந்தாக வேண்டும். 'இந்தத் தூய்மையையும் தியாகத்தையும் அடையப் பாடுபடு வதில் நான் உயிர்துறக்க வேண்டும்' என்று இன்று எண்ணுகி றேன். இத்தகைய கோரமான பாவத்திலிருந்து நம்மை விடு வித்து, கோயிலையும் புனிதப்படுத்துவதற்குத் தெய்வீகக் கருணை யுடன் கூடிய ஒரு பெரிய ஆன்மா, ஆணுகவோ பெண்ணுகவோ இப்புவியில் பிறக்க வேண்டும் என்பதே என்னுடைய இடை விடாத பிரார்த்தனை. எவ்வளவோ அறிவும் தியாகமும் உணர்ச்சி வேகமும் கொண்ட வங்காளம், இப் படுகொலைகளை எப்படிச் சகித்துக்கொண் டிருக்கிறது ?

## 19

## கோகலேயுடன் ஒரு மாதம் - 3

மதத்தின் பெயரால் காளிக்கு அளிக்கப்பட்ட கொடூரமான பலி, வங்காளிகளின் வாழ்க்கையை அறிந்துகொள்ள வேண்டும் என்று எனக்கு இருந்த ஆர்வத்தை அதிகமாக்கி விட்டது. பிரம்ம சமாஜத்தைக் குறித்து அதிகமாகப் படித்திருக்கிறேன்; நிறையக் கேள்விப்பட்டும் இருக்கிறேன். பிரதாப் சந்திர மஜூம் தாரின் வாழ்க்கையைப்பற்றியும் சிறிது அறிவேன். அவர் பேசிய சில கூட்டங்களுக்கும் போயிருக்கிறேன். கேசவ சந்திர சேனரின் வரலாற்றைக் குறித்து, அவர் எழுதிய நூலை வாங்கி அதிகச் சிரத்தையுடன் படித்தேன். சாதாரணப் பிரம்ம சமாஜத் திற்கும் ஆதி பிரம்ம சமாஜத்திற்கும் உள்ள வித்தியாசத்தைத் தெரிந்துகொண்டேன். பண்டித சிவநாத சாஸ்திரியைச் சந் தித்தேன். பேராசிரியர் கதாவடேயுடன் மகரிஷி தேவேந்திரநாத டாகுரையும் பார்க்கப் போனேன். அச்சமயம் அவரைப் பார்க்க யாரும் அனுமதிக்கப்படாததனல் அவரைச் சந்திக்க முடிய வில்லை. ஆனல், அவர் இருப்பிடத்தில் நடந்த பிரம்ம சமாஜ விழாவுக்கு அழைக்கப்பட்டிருந்தோம். அங்கே இனிய வங்காளி சங்கீதத்தைக் கேட்கும் வாய்ப்புக் கிடைத்தது. அது முதல், நான் வங்காளி சங்கீதப் பிரியனனேன்.

பிரம்ம சமாஜத்தைக் குறித்து வேண்டிய அளவு தெரிந்து கொண்டேன். ஆனல், சுவாமி விவேகானந்தரை*ப் பார்க்காமல்

---

* சுவாமி விவேகானந்தர்: இளம் பிராயத்திலேயே ஸ்ரீ ராமகிருஷ்ண பரம ஹம்சரின் சீடராகச் சேர்ந்து துறவறம் பூண்டவர். அமெரிக்காவில் நடைபெற்ற சர்வ சமய மகாநாட்டில், ஹிந்து மதம், அதன் தத்துவம் முதலியவற்றைப்பற்றி ஆற்றிய சொற்பொழிவுகள் மூலம் மேற்கத்திய நாட்டு மக்களின் உள்ளங்களைக் கொள்ளை கொண்டார். அதன் விளைவாக அங்கெல்லாம் இன்னும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பெயரால் மடங்கள் நடைபெறுகின்றன. இவருடைய அமெரிக்கப் பிரயாணத்திற்கு உதவியவர், அக்காலத்தில் இருந்த ராமநாதபுரம் ராஜா. அமெரிக்காவில் வெற்றி பெற்றுத் திரும்புகையில் தமிழ் நாடெங்கும் சுவாமிகளுக்கு ராஜ உபசாரம் நடந்தது.

என்னால் திருப்தியடைய முடியவில்லை. ஆகவே, அதிக உற்சாகத்தோடு பேளூர் மடத்திற்குப் போனேன். அநேகமாக, முழுத்தூரமும் நடந்தே அங்கே சென்றதாக ஞாபகம். மடம் அமைந்திருந்த ஏகாந்தமான இடம், என் மனத்தைக் கவர்ந்து இன்பம் ஊட்டியது. சுவாமி, தமது கல்கத்தா வீட்டில் இருக்கிறார், நோயுற்றிருப்பதால் அவரைக் காண்பதற்கில்லை என்று சொல்லக் கேட்டு ஏமாற்றமும் வருத்தமும் அடைந்தேன்.

பிறகு சகோதரி நிவேதிதா* இருக்கும் இடத்தை விசாரித்துத் தெரிந்துகொண்டு, சௌரிங்கி மாளிகையில் அவரைச் சந்தித்தேன். அவரைச் சுற்றியிருந்த ஆடம்பரங்கள் என்னைத் திடுக்கிடச் செய்தன. அவரிடம் பேசிய பிறகு நாங்கள் இருவரும் அநேக விஷயங்களில் ஒத்துப் போவதற்கு இல்லை என்பதைக் கண்டேன். இதைக் குறித்துக் கோகலேயிடம் பேசினேன். அவரைப் போன்ற உணர்ச்சி வேகமுள்ள † ஒருவருக்கும் எனக்கும் எந்த ஒரு விஷயத்திலும் கருத்து ஒற்றுமை ஏற்பட முடியாது போனதில் ஆச்சரியமில்லை என்று கோகலே கூறினார்.

ஸ்ரீ பேஸ்தன்ஜி பாத்ஷாவின் வீட்டில் மீண்டும் நிவேதிதாவைச் சந்தித்தேன் பேஸ்தன்ஜியின் வயதான தாயாருடன் சகோதரி நிவேதிதா பேசிக்கொண் டிருந்த சமயத்தில் நான் அங்கே போக நேர்ந்தது. ஆகவே, அவ்விருவருக்கும் மொழி பெயர்த்துக் கூறுபவனானேன். அவருடன் எந்த ஒருமைப்பாட்டுக்கும் என்னால் வர முடியவில்லையென்றாலும், ஹிந்து தருமத்தினிடம் அவருக்கு இருந்த அளவு கடந்த அன்பைக் கண்டு வியக்காமல் இருக்க என்னால் முடியவில்லை. அவர் எழுதிய நூல்களைக் குறித்துப் பின்னால்தான் அறிந்தேன்.

தென்னாப்பிரிக்காவில் இருக்கும் வேலை சம்பந்தமாகக் கல்கத்தாவில் இருக்கும் முக்கியமானவர்களைச் சந்தித்துப் பேசுவதிலும் நகரில் இருக்கும் மத சம்பந்தமான பொது ஸ்தாபனங்களுக்குச் சென்று, அவற்றை அறிந்துகொள்ளுவதிலும் ஒவ்வொரு நாளும் என் நேரத்தைச் செலவிட்டு வந்தேன். டாக்டர் மல்லிக்கின்

---

* நிவேதிதா: மார்கரெட் நோபிள் என்னும் ஆங்கிலப் பெண்மணி, சுவாமி விவேகானந்தர் பிரிட்டனுக்குச் சென்றிருந்தபோது அவருடைய தத்துவ விளக்கத்தில் மனத்தைப் பறிகொடுத்து அவருடைய சிஷ்யையானார். இந்தியாவிற்கு வந்து ஹிந்து சமயத்திற்குத் தொண்டு புரிந்தார். சுவாமிகள் அவரைத் தமது ஞான புத்திரியாகக் கொண்டு அவருக்கு நிவேதிதை எனப் பெயர் சூட்டினார். தமக்குத் தேசாபிமானப் பால் ஊட்டியது நிவேதிதா தேவி என்று மகாகவி பாரதியாரும் எழுதியுள்ளார்.

† 'உணர்ச்சி வேகமுள்ள' என்ற சொல்லுக்கு 'Volatile' என்ற ஆங்கிலப் பதம் மகாத்மாவின் சுய சரிதை ஆங்கில மொழிபெயர்ப்பில் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. இச்சொல்லை 'மாடர்ன் ரெவியூ' பத்திரிகை ஆட்சேபித்தது. அதன்பேரில் மகாத்மா, 1927 ஜூன் 30-ந் தேதி, 'எங் இந்தியா' இதழில் 'அவருடைய நினைவின் நியாயத்திற்காக' என்ற தலைப்பில் எழுதியிருந்த பதிலின் விவரம் இந்நூலின் 'பின்சேர்க்கைப் பகுதி'யில் கொடுக்கப்பட்டிருக்கிறது.

தலைமையில் நடந்த ஒரு கூட்டத்தில், போயர் யுத்தத்தில் இந்திய வைத்தியப் படையினர் செய்த வேலைகளைக் குறித்துப் பேசினேன். 'இங்கிலீஷ்மன்' பத்திரிகையுடன் எனக்கு ஏற்பட்டிருந்த அறிமுகம் இச் சமயத்தில் எனக்கு உதவியாக இருந்தது. அப்பொழுது அதன் ஆசிரியர் ஸ்ரீ சாண்டர்ஸ் நோயுற்றிருந்தார். என்றாலும், 1890-இல் உதவி செய்ததைப் போன்றே அதிக உதவியைச் செய்தார். என் பிரசங்கம் ஸ்ரீ கோகலேக்கு அதிகமாகப் பிடித்திருந்தது. டாக்டர் ராய், அதைப் புகழ்ந்து பேசியதைக் கேட்டு, அதிக மகிழ்ச்சியடைந்தார்.

கோகலேயுடன் நான் தங்கியிருந்ததனால் இவ்வாறு கல்கத்தாவில் என் வேலைகள் மிகவும் எளிதாயின. முக்கியமான வங்காளிக் குடும்பங்களுடன் எனக்குப் பழக்கம் ஏற்பட்டது. வங்காளத்துடன் நான் நெருங்கிய தொடர்பு கொள்ளுவதற்கு இது ஆரம்பமாகவும் அமைந்தது.

மறக்க முடியாத அந்த மாதத்தைப்பற்றிய மற்றும் பல நினைவுகளைக் கூறாமல் தாண்டிச் செல்ல வேண்டியவனாகவே நான் இருக்கிறேன். இதற்கிடையில் பர்மாவுக்குப் போய்விட்டுச் சீக்கிரமே திரும்பியதைக் குறித்தும், அங்கிருக்கும் பொங்கி* களைப்பற்றியும் மாத்திரம் கொஞ்சம் குறிப்பிட்டுவிட்டு, மேலே செல்லுகிறேன். பொங்கிகள் என்னும் அந்தச் சந்நியாசிகளின் சோம்பல் வாழ்க்கையைக் கண்டு என் மனம் வேதனைப்பட்டது. அங்கே தங்கக் கோபுரத்தையும் பார்த்தேன். கோயிலில் எண்ணற்ற சிறு மெழுகுவத்திகள் கொளுத்தி வைக்கப்பட்டிருந்தது எனக்குப் பிடிக்கவில்லை. கர்ப்பக் கிருகத்தில் எலிகள் அங்குமிங்கும் ஓடிக்கொண் டிருந்தன. இது, மோர்வியில் சுவாமி தயானந்தருக்கு ஏற்பட்ட அனுபவத்தை எனக்கு நினைவூட்டியது. பர்மியப் பெண்களின் சுயேச்சையும் சுறுசுறுப்பும் என்னைக் கவர்ந்தன. ஆனால், பர்மிய ஆண்களின் மந்தப் போக்கோ எனக்கு மனக்கஷ்டத்தை அளித்தது. நான் பர்மாவிலிருந்த சில தினங்களுக்குள்ளேயே ஒன்று தெரிந்துகொண்டேன். அதாவது, 'பம்பாய் எவ்விதம் இந்தியா ஆகிவிடாதோ அதேபோல ரங்கூன் பர்மா ஆகிவிடாது' என்பதை அறிந்தேன். இந்தியாவிலிருக்கும் நாம், எவ்விதம் பிரிட்டிஷ் வர்த்தகர்களின் தரகர்களாக இருக்கிறோமோ அதேபோல் பர்மாவிலும் நம்மவர்கள், ஆங்கில வியாபாரிகளுடன் சேர்ந்துகொண்டு, பர்மிய மக்களைத் தமது தரகர்களாக்கி யிருக்கிறார்கள் என்பதையும் கண்டு கொண்டேன்.

பர்மாவிலிருந்து நான் திரும்பி வந்ததும் கோகலேயிடம் விடை பெற்றுக்கொண்டேன். அவரிடமிருந்து பிரிவது எனக்கு

* பொங்கிகள் என்போர் பர்மிய பௌத்த சந்நியாசிகள். பௌத்த மதத்தினரான பர்மியர்களிடையே இப் பொங்கிகளுக்கு அதிக ஆதிக்கம் உண்டு.

மிகவும் வருத்தமாக இருந்தது. ஆனால், வங்காளத்தில், முக்கியமாகக் கல்கத்தாவில் எனக்கு இருந்த வேலைகள் முடிந்துவிட்டன. இனியும் அங்கே நான் தங்குவதற்கு எவ்வித முகாந்தரமும் இல்லை.

ஓரிடத்தில் நிலையாகத் தங்கிவிடுவதற்கு முன்னால், இந்தியா முழுவதையும் மூன்றும் வகுப்பு ரெயிலில் பிரயாணம் செய்து பார்த்து, மூன்றும் வகுப்புப் பிரயாணிகளின் கஷ்டங்களை நானே அறிந்துகொள்ளுவது என்று எண்ணினேன். இதைப் பற்றிக் கோகலேயிடம் பேசினேன். ஆரம்பத்தில் என் யோசனையை அவர் பரிகசித்தார். நான் காண விரும்புவது இன்னது என்பதை அவருக்கு விளக்கிக் கூறியதும் அவரும் உற்சாகமாக என் யோசனையை அங்கீகரித்தார். ஸ்ரீமதி அன்னிபெஸன்ட் நோயுற்று, அப்பொழுது காசியில் இருந்துவந்தார். அவருக்கு எனது வணக்கத்தைச் செலுத்துவதற்கு முதலில் காசிக்குப் போவது என்று திட்டமிட்டேன்.

மூன்றும் வகுப்பு வண்டிப் பிரயாணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளை நான் புதிதாகச் செய்துகொள்ள வேண்டியதாயிற்று. கோகலே எனக்கு ஒரு பித்தளைச் சாப்பாட்டுப் பாத்திரத்தைக் கொடுத்தார். அதில் மிட்டாய்களையும் பூரியையும் நிறைய வைத்தார். பன்னிரண்டு அணுக் கொடுத்து, ஒரு கித்தான் பை வாங்கினேன். சாயா* கம்பளியினலான மேற்சட்டை ஒன்றையும் வாங்கிக்கொண்டேன். இந்தச் சட்டை, ஒரு வேட்டி, ஒரு துண்டு, ஓர் உள் சட்டை ஆகியவற்றை வைத்துக்கொள்ள அந்தக் கித்தான் பை. போர்த்துக்கொள்ள ஒரு துப்பட்டியும், தண்ணீர் வைத்துக்கொள்ளுவதற்குச் செம்பும் என்னிடம் இருந்தன. இவ்விதமான ஏற்பாடுகளுடன் நான் பிரயாணத்திற்குத் தயாரானேன். என்னை வழியனுப்புவதற்காகக் கோகலேயும் டாக்டர் ராயும் ஸ்டேஷனுக்கு வந்திருந்தார்கள். ஸ்டேஷனுக்கு வரும் சிரமம் அவர்களுக்கு வேண்டாம் என்றே அவர்கள் இருவரையும் கேட்டுக்கொண்டேன். ஆனல், அவர்கள் கேட்கவில்லை. 'நீங்கள் முதல் வகுப்பில் சென்றால் நான் வந்திருக்க மாட்டேன். இப்பொழுதோ நான் கட்டாயம் வரவே வேண்டும்' என்றார், கோகலே.

கோகலே, பிளாட்பாரத்திற்குள் வந்தபோது அவரை யாரும் தடுக்கவில்லை. அவர் வேட்டி கட்டிக்கொண்டு, பட்டுத் தலைப்பாகையும் குட்டைச் சட்டையும் போட்டிருந்தார். டாக்டர் ராய், வங்காளி உடையில் வந்தார். அவரை டிக்கெட் பரிசோதகர் நிறுத்திவிட்டார். அவர் தமது நண்பர் என்று கோகலே சொன்ன பிறகே அவரை அனுமதித்தார். இவ்விதம் அவர்களுடைய நல்லாசியுடன் என் பிரயாணம் ஆரம்பமாயிற்று.

---

* சாயா: போர்பந்தர் சமஸ்தானத்திலுள்ள ஒரு கிராமம்; முரட்டுக் கம்பளித் துணிகள் தயாரிப்பதில் அப் பகுதியில் அவ்வூர் பெயர்பெற்றது.

# 20
# காசியில்

கல்கத்தாவிலிருந்து ராஜ்கோட்டுக்கு என் பிரயாணம். வழியில் காசி, ஆக்ரா, ஜெயப்பூர், பாலன்பூர் ஆகிய ஊர்களில் தங்குவது என்று திட்டமிட்டேன். இவைகளைத் தவிர அதிக ஊர்களைப் பார்க்க எனக்கு அவகாசம் இல்லை. ஒவ்வோர் ஊரிலும் ஒரு நாள் தங்கினேன். பாலன்பூர் தவிர மற்ற ஊர்களில் சாதாரண யாத்திரிகர்களைப்போல் தரும சத்திரங்களிலோ, பண்டாக்கள் வீடுகளிலோ இருந்தேன். இந்த யாத்திரையில் ரெயில் கட்டணம் உள்பட ரூ. 31-க்கு அதிகமாக நான் செலவு செய்யவில்லை என்பதே எனக்கு ஞாபகம்.

ரெயிலில் சாதாரண வண்டிகளைவிட மெயில் வண்டிகளில் கூட்டம் அதிகம்; கட்டணமும் அதிகம் என்பதை அறிவேன். அதனால், மூன்றும் வகுப்புப் பிரயாணத்தில் மெயில் ரெயில்களை விடச் சாதாரண ரெயிலிலேயே நான் பிரயாணம் செய்தேன்.

மூன்றும் வகுப்பு வண்டிகள் இப்பொழுது எவ்வளவு அசுத்தமாக இருக்கின்றனவோ அவ்வளவு அசுத்தமாகவே அப்பொழுதும் இருந்தன. கக்கூசுகளும் இப்போதிருப்பதைப் போலவே அப்பொழுதும் அசுத்தமாக இருந்தன. இப்பொழுது ஏதோ கொஞ்சம் அபிவிருத்தி இருக்கக்கூடும். ஆனால், முதல் வகுப்புப் பிரயாணிக்கு அளிக்கப்படும் வசதிக்கும், மூன்றும் வகுப்புப் பிரயாணிக்கு அளிக்கப்படும் வசதிக்கும் உள்ள வித்தியாசம், இவ்விரு வகுப்புகளின் கட்டணங்களுக்கும் உள்ள வித்தியாசத்திற்குக் கொஞ்சமும் பொருத்தம் இல்லாததாக இருக்கிறது. மூன்றுவது வகுப்புப் பிரயாணிகள் ஆடுகளாகவேநடத்தப்படுகின்றனர். அவர்களுக்குள்ள வசதிகளும் ஆடுகளுக்கு இருக்கும் வசதிதான். ஐரோப்பாவில், நான் மூன்றும் வகுப்பிலேயே பிரயாணம் செய்து வந்தேன். முதல் வகுப்புப்பிரயாணம் எப்படி இருக்கிறது என்பதைப் பார்க்க ஒரே ஒரு தடவை மாத்திரம் முதல் வகுப்பில் பிரயாணம் செய்தேன். ஆனால், முதல் வகுப்புக்கும் மூன்றும் வகுப்புக்கும் இங்கே இருப்பதைப்போன்ற பேதத்தை நான் அங்கே காணவில்லை. தென்னாப்பிரிக்காவில் மூன்றும் வகுப்புப் பிரயாணிகள் அநேகமாக நீக்ரோக்களே. ஆயினும், இங்கே இருப்பதைவிட அங்கே மூன்றும் வகுப்பு வசதிகள் நன்றாக இருக்கின்றன. தென்னாப்பிரிக்காவின் சில பகுதிகளில் மூன்றும் வகுப்பு வண்டிகளில், பிரயாணிகள் தூங்குவதற்குரிய இடவசதியும், மெத்தை தைத்த ஆசனங்களும் உண்டு. கூட்டம் அதிகமாகி, இடநெருக்கடி ஏற்பட்டுவிடாதபடியும் பார்த்துக் கொள்ளப்படுகிறது. ஆனால், இங்கேயோ, மூன்றும் வகுப்பு வண்டிகளில் குறிப்பிட்ட தொகைக்கு அதிகமாகப் பிரயாணம் செய்வதே வழக்கமாக இருந்துவருகிறது.

மூன்ரும் வகுப்புப் பிரயாணிகளின் சௌகரியங்களைக் கவனிப்பதில் ரெயில்வே அதிகாரிகளுக்கு இருந்துவரும் அசிரத்தை ஒருபுறம்; மற்ெருரு புறத்தில், பிரயாணிகளின் ஆபாசமான, யோசனையில்லாத பழக்கங்கள். இந்த இரண்டும் சேர்ந்து, சுத்தமான பழக்க வழக்கமுள்ள ஒருவருக்கு மூன்ரும் வகுப்பில் பிரயாணம் செய்வதை ஒரு சோதனை யாக்கிவிடுகின்றன. கூட இருக்கும் பிரயாணிகளின் சௌகரியம், சுகம் ஆகியவைகளைக் குறித்துக் கொஞ்சமேனும் கவனிக்காமல், வண்டிக்குள்ளேயே கண்டபடியெல்லாம் குப்பையைப் போடுவது, நினைத்தபோதெல்லாம் நினைத்த இடத்திலெல்லாம் சுருட்டுப் பிடிப்பது, வெற்றிலை பாக்குப் புகையிலை போட்டு வண்டி முழுவதையும் எச்சில் படிக்கமாக்கிவிடுவது, கூச்சல் போட்டுப் பேசுவது, கத்துவது, ஆபாசமாகப் பேசுவது போன்றவை பிரயாணிகளிடம் பொதுவாக இருக்கும் பழக்கங்களாகும். 1902-இல் மூன்ரும் வகுப்பில் பிரயாணம் செய்தேன். 1915 முதல் 1919 வரையில் இடைவிடாமல் மூன்ரும் வகுப்பில் சுற்றுப்பிரயாணம் செய்தேன். இந்த இரு தடவைகளிலும், மூன்ரும் வகுப்புப் பிரயாணத்தில் எனக்கு ஏற்பட்ட அனுபவத்தில் எந்தவிதமான வித்தியாசத்தையும் நான் காணவில்லை.

பயங்கரமான இந்த நிலையைச் சீர்திருத்துவதற்கு எனக்கு ஒரே ஒரு வழிதான் தோன்றுகிறது. படித்தவர்கள், மூன்ரும் வகுப்பில்தான் பிரயாணஞ் செய்வது என்று முடிவு செய்துகொண்டு, மக்களின் பழக்கங்களைச் சீர்திருத்துவதே அந்த வழி. அதோடு, ரெயில்வே அதிகாரிகளை நிம்மதியாக இருக்க விடக்கூடாது. அவசியமாகும்போதெல்லாம் புகார்களை அனுப்ப வேண்டும். தங்களுக்கு வசதியைத் தேடிக்கொள்ளுவதற்காக லஞ்சம் கொடுப்பதுபோன்ற சட்ட விரோதமான காரியங்களை இந்தப் படித்தவர்கள் செய்யாதிருக்க வேண்டும். விதிகளை யார் மீறி நடந்தாலும் அதைச் சகித்துக்கொண்டு இருந்துவிடக் கூடாது. இவற்றையெல்லாம் செய்தால், அதிக அபிவிருத்தி ஏற்படும் என்று நான் நிச்சயமாக நம்புகிறேன்.

1918-19-இல் நான் கடுமையான நோய்வாய்ப் பட்டதால், எனது மூன்ரும் வகுப்புப் பிரயாணத்தைத் துரதிருஷ்டவசமாகக் கைவிடும்படி நேர்ந்தது. இது எனக்கு இடைவிடாத மனவேதனையாகவும் வெட்கமாகவும் ஆகிவிட்டது. ஏனெனில், முக்கியமாக மூன்ரும் வகுப்புப் பிரயாணிகளின் கஷ்டங்களைப் போக்கியாக வேண்டும் என்ற கிளர்ச்சி வலுவடைய ஆரம்பித்த சமயத்தில் இவ்வாறு நேர்ந்தது. ஏழைகளான ரெயில்வே, கப்பல் பிரயாணிகளின் கஷ்டங்கள், அக் கஷ்டங்களை அப் பிரயாணிகளின் பழக்கங்கள் அதிகமாக்குவது, வெளிநாட்டு வர்த்தகத்திற்கு அரசாங்கம் அனுமதித்து வரும் அக்கிரமமான வசதிகள் இவை போன்றவை முக்கியமான விஷயங்களாகும். விடா முயற்சியும்

திறமையும் உள்ள இரண்டொரு பொதுஜன ஊழியர்கள் தங்கள் முழு நேரத்தையும் செலவிட்டு, வேலை செய்வதற்கு இவை ஏற்ற துறைகளாகும்.

ஆனால், மூன்றாம் வகுப்புப் பிரயாணிகளை இதோடு விட்டு விட்டுக் காசியில் எனக்கு ஏற்பட்ட அனுபவங்களுக்கு இனி வருகிறேன். காலையில் அங்கே போய்ச்சேர்ந்தேன். ஒரு பண்டாவின் வீட்டில் தங்குவது என்று தீர்மானித்தேன். ரெயிலிலிருந்து இறங்கியதுமே, அநேக பிராமணர்கள் என்னைச் சுற்றி வளைத்துக் கொண்டுவிட்டனர். அவர்களுள் கொஞ்சம் சுத்தமாகவும், மற்றவர்களைவிடச் சுமாராகவும் தோன்றிய ஒருவரைத் தேர்ந்தெடுத்துக் கொண்டேன். அவர் வீட்டுக்குச் சென்றேன். நான் சரியாகவே தேர்ந்தெடுத்திருந்தேன் என்பது நிரூபிக்கப்பட்டுவிட்டது. அவருடைய வீட்டு முற்றத்தில் ஒரு பசு கட்டியிருந்தது. நான் தங்குவதற்குக் கொடுத்திருந்த இடம் மாடியில். கங்கைக்குப் போய் வைதிக முறைப்படி ஸ்நானம் முதலிய அனுஷ்டானங்களையெல்லாம் முடித்துக்கொள்ளாமல் சாப்பிட நான் விரும்பவில்லை. இதற்கு வேண்டிய ஏற்பாடுகளைப் பண்டா செய்தார். அவருக்கு ஒரு ரூபாய் நான்கணுவுக்கு மேல் எக்காரணத்தை முன்னிட்டும் தட்சிணை கொடுக்கமாட்டேன் என்பதை முன்கூட்டியே அவரிடம் சொல்லிவிட்டேன். ஆகையால், இதை மனத்தில் வைத்துக் கொண்டே ஏற்பாடுகளைச் செய்யும்படியும் சொன்னேன்.

பண்டா மறு வார்த்தை பேசாமல் ஒப்புக்கொண்டார். "யாத்திரிகர் ஏழையாக இருந்தாலும், பணக்காரராக இருந்தாலும் எங்கள் சேவை ஒரே மாதிரிதான். ஆனால், எங்களுக்குக் கிடைக்கும் தட்சிணை, யாத்திரிகரின் இஷ்டத்தையும் சக்தியையும் பொறுத்தது" என்றார். வழக்கப்படி செய்ய வேண்டியவைகளைப் பண்டா என் விஷயத்தில் சுருக்கிவிட்டதாகவும் நான் காணவில்லை. பன்னிரண்டு மணிக்குப் பூஜை முடிந்தது. நான் சுவாமி தரிசனத்திற்காகக் காசி விஸ்வநாதர் கோயிலுக்குப் போனேன். அங்கே நான் கண்டவை எனக்கு மனவேதனையைத் தந்தன. 1891-இல் நான் பம்பாயில் பாரிஸ்டராக இருந்த சமயம், பிரார்த்தனை சமாஜ மண்டபத்தில் 'காசிக்கு யாத்திரை' என்பது பற்றி நடந்த ஒரு பிரசங்கத்தைக் கேட்க நேர்ந்தது. ஆகையால், ஓரளவு ஏமாற்றத்திற்கு நான் தயாராகவே இருந்தேன். ஆனால், உண்மையில் நான் அடைந்த ஏமாற்றம், நான் எதிர்பார்த்திருந்ததைவிடப் பன்மடங்கு அதிகமாக இருந்தது.

குறுகலான, வழுக்கும் ஒரு சந்தின் வழியாகவே கோயிலுக்குப் போகவேண்டியிருந்தது. அங்கோ அமைதி என்பதே இல்லை. ஈக்கள் ஏகமாக மொய்த்தன. கடைக்காரர்களும் யாத்திரிகர்களும் போட்ட சப்தம் சகிக்க முடியாததாக இருந்தது. தியானத்திற்கும் தெய்வசிந்தனைக்கும் ஏற்ற சூழ்நிலை இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கத்தக்க அந்த இடத்தில் அது

இல்லவே இல்லை. அந்தச் சூழ்நிலையை ஒருவர் தம் உள்ளத்தினுள்ளேதான் தேடிக்கொள்ள வேண்டும். சுற்றுப்புறத்தைப் பற்றிய பிரக்ஞையின்றி, மெய்ம் மறந்தவர்களாகச் சகோதரிகள் தியானத்தில் ஈடுபட்டிருந்ததைப் பார்த்தேன். இதற்காகக் கோயில் நிர்வாகிகளை யாரும் பாராட்டிவிடுவதற்கில்லை. கோயிலைச் சுற்றிலும் சுத்தமான, இனிய, சீரிய சூழ்நிலையை உள்ளும் புறமும் உண்டாக்கி, அது நிலைத்திருக்கச் செய்வது, நிர்வாகிகளின் பொறுப்பு. இதற்குப் பதிலாகக் கபடஸ்தர்களான கடைக்காரர்கள், மிட்டாய்களையும், புது நாகரிக விளையாட்டுப் பொம்மைகளையும் விற்கும் கடைத் தெருவையே நான் அங்கே கண்டேன்.

நான் கோயிலுக்குள் போனதும் வாசலில் அழுகி நாற்றமெடுத்த பூக்குவியலே எனக்கு வரவேற்பளித்தது. உயர்ந்த சலவைக் கற்களாலான தரை. ஆனால், அழகு உணர்ச்சியே இல்லாத ஒரு பக்தர், சலவைக் கற்களை ஆங்காங்கே உடைத்து அவற்றில் ரூபாய் நாணயங்களைப் பதித்து விட்டார். அந்த ரூபாய்கள் அழுக்குச் சேருவதற்குச் சிறந்த இடங்கள் ஆகிவிட்டன.

ஞானவாவி (ஞானக் கிணறு)க்குப் பக்கத்தில் போனேன். அங்கே கடவுளைக் காணலாம் என்று தேடினேன். ஆனால், நான் காணவில்லை. ஆகையால், எனக்கு மனநிலை நன்றாயில்லை. ஞான வாவியைச் சுற்றிலும்கூட ஆபாசமாகவே இருப்பதைக் கண்டேன். தட்சிணை கொடுக்கவே எனக்கு விருப்பமில்லை. ஆகையால், ஒரு தம்படி கொடுத்தேன். அங்கே இருந்த பண்டாவுக்குக் கோபம் வந்து அந்தத் தம்படியை வீசி எறிந்துவிட்டார். “இந்த அவமரியாதை உன்னை நேரே நரகத்திற்குத் தான் கொண்டு போகும்!” என்று கூறி என்னைச் சபித்தார்.

இதைக்கேட்டு நான் பரபரப் படைந்து விடவில்லை. “மகராஜ்! என் விதி எப்படியானாலும் சரி. ஆனால், இப்படியெல்லாம் பேசுவது உங்களைப் போன்றதோர் வகுப்பினருக்குத் தகாது. விருப்பமிருந்தால் அந்தத் தம்படியை எடுத்துக்கொள்ளுங்கள். இல்லாவிட்டால் அதையும் நீங்கள் இழந்துவிடுவீர்கள்” என்றேன்.

“போய்த் தொலை. உன் தம்படி எனக்கு வேண்டாம்” என்றார். தொடர்ந்து வசைமாரி பொழிந்தார்.

தரையில் கிடந்த தம்படியை எடுத்துக்கொண்டு நான் நடக்க ஆரம்பித்தேன். பிராமணர் ஒரு தம்படியை இழந்தார்; எனக்கு ஒரு தம்படி மிச்சம் என்று என்னைப் பாராட்டிக் கொண்டேன். ஆனால், மகராஜ், அந்த தம்படியையும் விட்டு விடக்கூடியவர் அல்ல. என்னைத் திரும்பக் கூப்பிட்டார். “அது

சரி, அந்தத் தம்படியை இங்கே கொடுத்துவிட்டுப் போ. உன்னைப் போலவே நானும் இருந்துவிட முடியாது. உன் தம்படியை வாங்கிக்கொள்ள நான் மறுத்துவிட்டால் அது உனக்குக் கெடுதல் ஆகிவிடும்'' என்றார். நான் ஒன்றும் சொல்லாமல் அந்தத் தம்படியை அவரிடம் கொடுத்தேன். அப்புறம் ஒரு முறை பெருமூச்சு விட்டுக்கொண்டு அப்பால் போய்விட்டேன்.

அதற்குப் பிறகு இரு முறை காசி விஸ்வநாதர் கோயிலுக்குப் போயிருக்கிறேன். ஆனால், அது 'மகாத்மா' பட்டம் என்னைப் பீடித்த பிறகு. ஆகவே, நான் மேலே கூறியிருப்பதைப் போன்ற அனுபவங்கள் அப்பொழுது ஏற்படுவது அசாத்தியமாயின. என்னைத் தரிசிப்பதற்கு ஆர்வத்துடன் இருக்கும் மக்கள், கோயிலில் சுவாமியை நான் தரிசிப்பதற்கு என்னை அனுமதிக்க மாட்டார்கள். 'மகாத்மா'க்களின் துயரங்கள் 'மகாத்மா'க்களுக்கு மாத்திரமே தெரியும். மற்றப்படி அழுக்கும் சப்தமும் முன்பு இருந்ததுபோலவே இருந்தன.

கடவுளின் எல்லையற்ற கருணையில் யாருக்காவது சந்தேகம் இருக்குமாயின், அவர்கள் இப்புண்ணிய க்ஷேத்திரங்களுக்குப் போய்ப் பார்ப்பார்களாக. மகா யோகியான கடவுள், தம் தெய்விகப் பெயரைக்கொண்டே செய்யப்படும் எவ்வளவு வஞ்சகங்களையும் அதர்மங்களையும் சகித்துக் கொண்டிருக்கிறார்! ''யே யதா மாம் ப்ரபத்யந்தே தாம்ஸ்ததைவ பஜாம்யஹம்'' (மனிதன் எதை விதைக்கிறானோ அதையே அறுவடை செய்கிறான்) என்று ஆண்டவனே கூறியிருக்கிறார். கரும பலனை அனுபவிக்காமல் யாரும் தப்பிவிடவே முடியாது. ஆகையால், இதில் ஆண்டவன் தலையிடுவதற்கு அவசியமே இல்லை. அவர் இச்சட்டத்தை இயற்றிவிட்டு விலகிக் கொண்டார் என்றே சொல்லலாம்

கோயிலுக்குப் போய்வந்த பின்னர் ஸ்ரீமதி பெஸண்டைப் பார்க்கப் போனேன். அவர் நோயுற்றிருந்து அப்பொழுதுதான் குணமடைந்தார் என்பதை அறிவேன். என் பெயரை எழுதி உள்ளே அனுப்பினேன். அவர் உடனே வந்தார். அவருக்கு என் வணக்கத்தைச் செலுத்த வேண்டும் என்று மாத்திரமே நான் விரும்பினேன். ஆகையால், ''தங்களுக்கு உடல் நலமில்லை என்பதை அறிவேன். என் வணக்கத்தைத் தங்களுக்குச் செலுத்திக்கொள்ள மாத்திரமே விரும்பினேன். தங்களுக்குச் சரீர சுகம் இல்லாதிருந்தும் என்னைப் பார்க்க அன்புடன் தாங்கள் இசைந்ததற்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இதற்குமேல் தங்களுக்குத் தொந்தரவு கொடுக்க நான் விரும்பவில்லை'' என்று கூறி அவரிடம் விடை பெற்றுக் கொண்டேன்.

# 21

# பம்பாயில் குடியேறினேன் ?

நான் பம்பாயில் குடியேறி, வக்கீல் தொழிலை நடத்திக் கொண்டு பொதுவேலையில் தமக்கு உதவியாக இருக்கவேண்டும் என்று கோகலே அதிக ஆவலுடன் இருந்தார். அந்த நாளில் பொதுவேலை என்றால் காங்கிரஸ் வேலையே. கோகலேயின் உதவியினால் ஆரம்பமான ஸ்தாபனத்தின் முக்கியமான வேலையும் காங்கிரஸின் நிர்வாகத்தை நடத்திக்கொண்டுபோவதுதான்.

கோகலேயின் யோசனை எனக்குப் பிடித்திருந்தது. ஆனால், பாரிஸ்டராக இருந்து வெற்றி பெறமுடியும் என்பதில் எனக்கு அதிக நம்பிக்கை இல்லை. முன்னால் இதில் நான் கண்ட தோல்வியின் வருந்தத் தக்க நினைவுகள் இன்னும் எனக்கு இருந்து வந்தன. கட்சிக்காரர்களைப் பெறுவதற்காக முகஸ்துதி செய்வதை விஷம்போல நான் இன்னும் வெறுத்தே வந்தேன்.

ஆகையால், முதலில் ராஜ்கோட்டில் தொழிலை ஆரம்பிப்பது என்று முடிவு செய்தேன். முன்னாலிருந்தே என் நலனை விரும்பு கிறவரும், நான் இங்கிலாந்துக்குப் போக வேண்டும் என்று தூண்டியவருமான கேவல்ராம் மாவ்ஜி தவே அங்கே இருந்தார். அவர் உடனேயே ஆரம்பமாக மூன்று வக்காலத்துக்களைக் கொடுத்தார். அவைகளில் இரண்டு, கத்தியவார் ராஜீய ஏஜெண்டின் நீதி உதவியாளர் முன்பு செய்யப்பட் டிருந்த அப்பீல்கள். மற்றொன்று, ஜாம்நகரில் அசல் வழக்கு. கடைசி யாகச் சொன்ன இந்த வழக்கே மிகவும் முக்கியமானது. இந்த வழக்கைத் திறம்பட நான் நடத்த முடியும் என்று எனக்கு நம்பிக்கை ஏற்படவில்லை என்று சொன்னேன். உடனே கேவல்ராம் தவே, "வெற்றி பெறுவது, தோல்வியடைவது என்பதைப்பற்றி உமக்குக் கவலை வேண்டியதில்லை. உம்மால் முடிந்தவரையில் முயன்று பாரும். உமக்கு உதவி செய்வதற்கு நான் இருக்கவே இருக்கிறேன்'' என்றார்.

எதிர்த்தரப்பு வக்கீல் காலஞ்சென்ற ஸ்ரீ சமர்த். ஓரளவுக்கு நான் நன்றாகவே அவ்வழக்கு சம்பந்தமாகத் தயார் செய்து வைத்திருந்தேன். இந்தியச் சட்டம் எனக்கு அதிகம் தெரியும் என்பதல்ல; ஆனால், கேவல்ராம் தவே அவ்வழக்குச் சம்பந்தமாக எனக்கு முழுவதும் சொல்லிக்கொடுத்திருந்தார். 'ஸர் பிரோஸ்ஷா மேத்தாவுக்குச் சாட்சியைப் பற்றிய சட்டம் முழுவதும் தலைகீழ்ப் பாடமாகத் தெரியும். அவருடைய வெற்றியின் ரகசியமே அது தான்' என்று நான் தென்னாப்பிரிக்கா போவதற்கு முன்னால் நண் பர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். இதை மனத்திலேயே வைத் தும் இருந்தேன். எனவே, என் கப்பல் பிரயாணத்தின் போது இந்திய சாட்சியச் சட்டத்தை, அதைப்பற்றிய விளக்கங்களுடன்

சேர்த்துக் கவனமாகப் படித்திருந்தேன். அதோடு தென்னுப் பிரிக்காவில் வக்கீல் தொழிலில் எனக்கு ஏற்பட்ட அனுபவமும் சாதகமாக இருந்தது.

இவ் வழக்கில் வெற்றி பெற்றேன். கொஞ்சம் நம்பிக்கையும் உண்டாயிற்று. அப்பீல்களைக் குறித்து எனக்குப் பயமே இல்லை. அவற்றிலும் வெற்றி பெற்றேன். பம்பாயில் தொழில் நடத்தினலும் நான் தோல்வியடைய மாட்டேன் என்ற ஒரு நம்பிக்கையை இவை யெல்லாம் எனக்கு உண்டாக்கின.

பம்பாய்க்குப் போய்விடுவது என்று நான் தீர்மானித்ததைக் குறித்த சந்தர்ப்பங்களைப்பற்றிச் சொல்லும் முன்பு, பிறர் கஷ்டத்தை உணராத ஆங்கில அதிகாரிகளின் போக்கைக்குறித்தும், அவர்களுடைய அறியாமையைப்பற்றியும் எனக்கு ஏற்பட்ட அனுபவத்தைக் கூற விரும்புகிறேன். நீதி உதவியாளரின் கோர்ட்டு ஓர் இடத்திலிருந்து மற்ருேர் இடத்திற்குப் போய்க்கொண்டே இருக்கும். அந்த நீதிபதி சதா சுற்றுப் பிரயாணம் செய்துகொண்டே இருப்பார். வக்கீல்களும் கட்சிக்காரர்களும், அவர் முகாம் போடும் இடத்திற்கெல்லாம் போய்க்கொண் டிருக்கவேண்டி யிருக்கும். தலைமை ஸ்தானத்தை விட்டு வெளியூர் போகவேண்டும் என்ருல் வக்கீல்கள் அதிகக் கட்டணம் கேட்பார்கள். இதனல், கட்சிக்காரர்களுக்குச் சகஜமாகவே செலவு இரட்டிப்பு ஆகும். இவர்களுக்கு ஏற்படும் அசௌகரியங்களைப்பற்றி நீதிபதிக்குக் கவலையே இல்லை.

நான் மேலே சொன்ன அப்பீல் விசாரணை வேராவலில் போடப்பட் டிருந்தது. அவ்வூரிலோ பிளேக் நோய் கடுமையாகப் பரவியிருந்தது. 5,500 பேரையே கொண்ட அவ்வூரில் தினமும் 50 பேருக்கு அந்நோய் கண்டுகொண் டிருந்தது என்பதாக எனக்கு ஞாபகம். உண்மையில், அந்த ஊரில் யாருமே இல்லை எனலாம். அவ்வூரிலிருந்து கொஞ்ச தூரத்திலிருந்த ஆளில்லாத தரும சத்திரத்தில் நான் தங்கினேன். ஆனல், கட்சிக்காரர்கள் எங்கே தங்குவது? அவர்கள் ஏழையாக இருந்துவிட்டால், கடவுளின் கருணையில் நம்பிக்கை வைத்திருப்பதைத் தவிர அவர்களுக்கு வேறு கதி இல்லை.

இதே கோர்ட்டில் என் நண்பர் ஒருவருக்கும் வழக்குகள் இருந்தன. வேராவலில் பிளேக் நோய் பரவி இருப்பதால் கோர்ட்டை வேறு இடத்திற்கு மாற்றுமாறு கோரி மனுச்செய்து கொள்ளும்படி அவர் எனக்குத் தந்தி கொடுத்திருந்தார். இந்த மனுவை நான் கொடுத்ததன் பேரில் துரை, "உங்களுக்குப் பயமாக இருக்கிறதா?" என்று கேட்டார்.

"எனக்குப் பயமாயிருக்கிறதா, இல்லையா என்பது விஷயமல்ல. நான் எப்படியாவது வெளியில் இருந்துவிட முடியும். ஆனல், கட்சிக்காரர்களின் நிலைமை என்ன?" என்று பதில் சொன்னேன்.

இதற்குத் துரை கூறியதாவது: ''பிளேக் இந்தியாவில் நிரந்தரமான தாகிவிட்டது. அப்படியிருக்கப் பயப்படுவானேன்? வேராவலின் சீதோஷ்ண நிலை மிகவும் நன்ருக இருக்கிறது. (துரை டவுனுக்கு வெகு தொலைவில் கடற்கரையில் அமைக்கப் பட்டிருந்த அரண்மனைபோன்ற ஒரு கூடாரத்தில் தங்கியிருந் தார்.) இவ்வாறு திறந்த வெளியில் வசிப்பதற்கு மக்கள் நிச்சயம் கற்றுக்கொள்ளவேண்டும்.''

இப்படிப்பட்ட வேதாந்தத்திற்கு எதிராக விவாதித்துப் பயனில்லை. கடைசியாக, துரை தமது சிரஸ்தேதாரிடம், "காந்தி கூறுவதைக் கவனித்துக்கொள்ளும். வக்கீல்களுக்கோ, கட்சிக்காரர்களுக்கோ அதிக அசௌகரியமாக இருக்கிறதென் ருல் எனக்கு அறிவியும்'' என்ருர்.

சரியானது என்று தாம் நினைத்ததைத் துரை யோக்கிய மாகச் செய்தார். ஆனல், ஏழை இந்தியரின் கஷ்டங்களைக் குறித்து அவருக்கு எப்படித் தெரிய முடியும்? மக்களின் தேவை கள், குணதிசயங்கள், பைத்தியக்காரத்தனங்கள், பழக்கங்கள் ஆகியவைகளை அவர் எப்படிப் புரிந்துகொள்ள முடியும்? தங்க நாணயங்களைக் கொண்டே பொருள்களை மதிப்பிட்டுக்கொண் டிருந்த ஒருவர், திடீரென்று சின்னச் செப்புக் காசுகளைக் கொண்டு எப்படிக் கணக்கிடுவார்? யானைக்கு எறும்பினிடம் நல்லெண்ணமே இருக்கலாம். ஆனல், எறும்பின் தேவையையும் சௌகரியத்தையும் கொண்டு சிந்திக்கும் சக்தி எவ்வாறு யானைக்கு இல்லையோ அதேபோல இந்தியருக்குச் சௌகரிய மான வகையில் சிந்திக்கவோ, சட்டம் செய்யவோ ஆங்கிலேய ருக்குச் சக்தியில்லை.

இனித் திரும்பவும் கதைக்கு வருவோம். வக்கீல் தொழிலில் நான் வெற்றிபெற்ற போதிலும், இன்னும் கொஞ்சகாலம் ராஜ் கோட்டில் இருப்பது என்றே எண்ணிக்கொண் டிருந்தேன். அப்பொழுது ஒரு நாள் கேவல்ராம் தவே என்னிடம் வந்தார். "காந்தி, நீங்கள் இங்கே அதிகமாக வேலையில்லாதிருப்பதை நாங்கள் சகித்துக்கொண்டிருக்க முடியாது. நீங்கள் பம்பாய்க்குக் குடிபோய்விட வேண்டும்'' என்ருர்.

" ஆனல், அங்கே எனக்கு யார் வேலை தேடிக் கொடுப்பார் கள்? என் செலவுக்கு வேண்டிய ஏற்பாடுகளை நீங்கள் செய்வீர் களா?'' என்று கேட்டேன்.

இதற்கு அவர் கூறியதாவது: ''சரி, நான் செய்கிறேன். பம்பாயிலிருந்து பெரிய பாரிஸ்டர் வருகிருர் என்று சில சமயங் களில் உம்மை இங்கே கொண்டு வருவோம். மனுத் தயாரிப்பது போன்ற வேலையை அங்கேயே அனுப்புகிருேம். ஒரு பாரிஸ் டரைப் பெரியவ ராக்குவதோ, ஒன்றுமில்லாதபடி செய்து விடுவதோ வக்கீல்களாகிய எங்கள் கையில் இருக்கிறது. உமது திறமையை ஜாம்நகரிலும் வேராவலிலும் நிருபித்துக் காட்டி

விட்டீர். ஆகையால், உம்மைப்பற்றி எனக்குக் கொஞ்சமும் கவலையே இல்லை. நீர் பொதுஜன சேவைக்கென்றே பிறந்திருப்பவர். நீர் கத்தியவாரில் புதைந்துகிடந்துவிட நாங்கள் அனுமதிக்கமாட்டோம் எனவே, எப்பொழுது பம்பாய் போகிறீர்? சொல்லும்.''

''நேட்டாலிலிருந்து பணத்தை எதிர்பார்த்துக்கொண் டிருக்கிறேன். அது வந்ததும் நான் போகிறேன்'' என்றேன்.

இரண்டு வாரங்களில் பணம் வந்துவிட்டது. நானும் பம்பாய் சென்றேன். பேய்னே, கில்பர்ட், சயானி ஆபீஸ் கட்டடத்தில் என் அலுவலகத்தை அமைத்துக்கொண்டேன். அங்கேயே நான் ஸ்திரமாகக் குடியேறிவிட்டதாகவே தோன்றியது.

## 22

# கொள்கைக்கு நேர்ந்த சோதனை

கோட்டையில் அலுவலகத்திற்கு அறைகளையும், கீர்காமில் வீட்டையும் அமர்த்திக்கொண்டேன். ஆயினும் அமைதியாக நிலைபெற்றிருக்க ஆண்டவன் என்னை விடவில்லை. புதிய வீட்டுக்குக் குடி போனவுடனேயே என்னுடைய இரண்டாவது மகன் மணிலாலுக்குக் கடுமையான அஸ்தி சுரம் (டைபாய்டு) கண்டு விட்டது. அத்துடன் கபவாத சுரமும் (நிமோனியா) கலந்துகொண்டது. இரவில் ஜன்னி வேகத்தினுல் பிதற்றல் போன்ற அறிகுறிகளும் இருந்தன. சில ஆண்டுகளுக்கு முன்னுல் இவன் வைசூரியால் கடுமையாகப் பீடிக்கப்பட்டவன்.

டாக்டரை அழைத்து வந்தேன். மருந்தினுல் அதிகப் பயன் ஏற்படாது என்றும், முட்டையும். கோழிக் குஞ்சு சூப்பும் கொடுப்பது நல்லது என்றும் அவர் கூறினுர். மணிலாலுக்கு வயது பத்துத்தான். ஆகையால், அவனுடைய விருப்பத்தைக் கேட்டு எதுவும் செய்வது என்பதற்கில்லை. அவனுக்கு நானே போஷகனுகையால், நான்தான் முடிவுக்கு வரவேண்டும். டாக்டர் பார்ஸி வகுப்பைச் சேர்ந்தவர், மிகவும் நல்லவர். நாங்கள் சைவ உணவே சாப்பிடுகிறவர்கள் என்றும், ஆகவே அவர் கூறிய அந்த இரண்டில் என் மகனுக்கு எதுவும் கொடுப்பதற்கில்லை என்றும் சொன்னேன். எனவே, கொடுக்கக்கூடியதான வேறு எதையாவது அவர் கூறுகிருரா என்றும் கேட்டேன்.

இதற்கு அந்த டாக்டர் கூறியதாவது; ''உங்கள் மகனின் உயிர் அபாய நிலையில் இருக்கிறது. பாலில் நீரைக் கலந்து அவனுக்குக் கொடுக்கலாம். ஆனுல், அது அவனுக்கு வேண்டிய போஷணையைத் தராது. எத்தனையோ ஹிந்துக் குடும்பங்களில் என்னைக் கூப்பிடுகிருர்கள். நோயாளிக்குக் கொடுக்கும்படி நான் கூறுவது எதையும் அவர்கள் ஆட்சேபிப்பதில்லை.

உங்கள் மகன் விஷயத்தில் நீங்கள் இவ்வளவு கடுஞ் சித்தத்தோடு இல்லாமல் இருந்தால் நன்ருயிருக்கும் என்று நினைக்கிறேன்.''

இதற்கு நான் பின்வருமாறு கூறினேன்: ''நீங்கள் கூறுவது முற்றும் சரியானதே. டாக்டர் என்ற வகையில் நீங்கள் வேறு எதுவும் செய்வதற்கில்லை. ஆனல், என் பொறுப்பு மிகவும் அதிகமானது. பையன் வயது வந்தவனுக இருந்தால், அவனுடைய விருப்பத்தை அறிய நான் நிச்சயம் முயன்று அதன்படி நடந்திருப்பேன். ஆனல், இப்பொழுதோ அவனுக்காக நானே சிந்தித்து முடிவு செய்ய வேண்டியவனுக இருக்கிறேன். இது போன்ற சமயங்களிலே ஒருவருடைய நம்பிக்கை சோதனைக்கு உள்ளாகிறது என்று கருதுகிறேன். சரியோ, தவறே மனிதன் மாமிசம், முட்டை போன்றவைகளைத் தின்னக்கூடாது என்பதை என்னுடைய மதக்கொள்கைகளில் ஒரு பகுதியாகக் கொண்டிருக்கிறேன். நாம் உயிர் வாழ்வதற்கென்று மேற்கொள்ளும் சாதனங்களுக்கும் ஓர் எல்லை இருக்க வேண்டும். உயிர் வைத்திருப்பதற்கு அவசியம் என்ருலும் சில காரியங்களை நாம் செய்யக் கூடாது. இத்தகைய சமயங்களில்கூட, நானே அல்லது என்னைச் சேர்ந்தவர்களோ மாமிசம், முட்டை போன்றவைகளை உபயோகிப்பதை என் மதம், நான் அறிந்துகொண்டிருக்கிற வரையில், அனுமதிக்கவில்லை. ஆகையால். ஏற்பட்டுவிடக் கூடும் என்று நீங்கள் கூறும் ஆபத்துக்கும் நான் தயாராக இருக்க வேண்டியதுதான். ஆனல், உங்களை ஒன்று வேண்டிக் கொள்ளுகிறேன். உங்களுடைய சிகிச்சையை நான் பயன் படுத்திக்கொள்ள முடியாததனல், எனக்குத் தெரிந்திருக்கும் நீர்ச் சிகிச்சை முறைகளைக் கையாண்டு பார்க்கப் போகிறேன். ஆனல், சிறுவனின் நாடித் துடிப்பு, இருதயம், நுரையீரல் ஆகியவைகளைச் சோதித்துப் பார்த்து நிலையை அறிந்து கொள்ள எனக்குத் தெரியாது. தாங்கள் அவ்வப்போது வந்து அவனைச் சோதித்துப் பார்த்து இருக்கும் நிலையை எனக்கு அறிவிப்பீர்களாயின் நான் நன்றியுள்ளவனுவேன்.''

நல்லவரான அந்த டாக்டர் எனக்கிருந்த கஷ்டங்களை உணர்ந்துகொண்டார். என் கோரிக்கைக்கும் சம்மதித்தார். இதில் ஒரு முடிவுக்கு வருவதற்கான வயது மணிலாலுக்கு இல்லையாயினும், நானும் டாக்டரும் பேசிக் கொண்டிருந்ததை அவனுக்குக் கூறி அவன் அபிப்பிராயத்தைக் கேட்டேன். ''உங்களுடைய நீர்ச் சிகிச்சையையே செய்யுங்கள். எனக்கு முட்டையோ, கோழிக் குஞ்சு சூப்போ வேண்டாம்'' என்ருன்.

இந்த இரண்டில் அவனுக்கு நான் எதைக் கொடுத்திருந்தாலும் அவன் சாப்பிட்டிருப்பான் என்பது எனக்குத் தெரியும். என்ருலும், அவன் சொன்னது எனக்கு மகிழ்ச்சியை அளித்தது.

கூனே என்பவரின் சிகிச்சை முறை எனக்குத் தெரியும். நான் அதைச் செய்தும் பார்த்திருக்கிறேன். பட்டினி போடு

வதையும் பயனுள்ள வகையில் உபயோகித்துக் கொள்ளலாம் என்பதும் எனக்குத் தெரியும். ஆகவே கூனேயின் முறைப்படி மணிலாலுக்கு ஆசனக்குளிப்புச் (Hip Baths) செய்வித்தேன். தொட்டியில் அவனை மூன்று நிமிடங்களுக்குமேல் வைத்திருப்ப தில்லை. அத்துடன் ஆரஞ்சுப் பழரசத்துடன் தண்ணீர் கலந்து மூன்று நாட்கள் கொடுத்து வந்தேன்.

ஆனால், சுரம் குறையவில்லை; 104 டிகிரிக்கும் ஏறியது. இர வில் ஜன்னி வேகத்தில் பிதற்றிக் கொண்டிருந்தான். எனக்கு ஒரே கவலையாகிவிட்டது. என்னை ஊரார் என்ன சொல்லுவார் கள்? என்னைப்பற்றி என் தமையனார்தான் என்ன நினைத்துக் கொள்ளுவார்? வேறு ஒரு டாக்டரையாவது கூப்பிடக்கூடாதா? ஆயுர்வேத வைத்தியரை ஏன் கொண்டு வரக்கூடாது? தங்களு டைய கொள்கைப் பித்துகளையெல்லாம் குழந்தைகள்மீது சுமத் தப் பெற்றோருக்கு என்ன உரிமை இருக்கிறது?

இதுபோன்ற எண்ணங்களெல்லாம் ஓயாமல் என்னை அலைக் கழித்துக் கொண்டிருந்தன. பிறகு இதற்கு நேர்மாறான எண் ணங்களும் தோன்றும். எனக்கு என்னவிதமான சிகிச்சையை நான் செய்து கொள்ளுவேனோ அதையே என் மகனுக்கும் செய் வது குறித்துக் கடவுள் நிச்சயம் திருப்தியடைவார். நீர்ச் சிகிச்சையில் எனக்கு நம்பிக்கை இருந்தது. மாற்று மருந்து கொடுக்கும் வைத்திய முறையில் எனக்கு நம்பிக்கை இல்லை. குணமாகிவிடும் என்று டாக்டர்களாலும் உத்தரவாதம் அளிக்க முடியாது. அவர்களால் முடிகிற காரியம், பரிசோதனைசெய்து பார்ப்பதுதான். உயிர் இருப்பதும் போவதும் கடவுள் சித்தத் தைப் பொறுத்தது. அதை அவரிடம் ஒப்படைத்துவிட்டு அவர் பெயரால் எனக்குச் சரியென்று தோன்றும் சிகிச்சை முறையை ஏன் அனுசரிக்கக் கூடாது?

இவ்விதம் இருவகையான எண்ணங்களுக்கிடையே என் மனம் அல்லல்பட்டுக் கொண்டிருந்தது. அப்பொழுது இரவு வேளை. மணிலாலின் படுக்கையில் அவன் பக்கத்தில் படுத்துக் கொண்டிருந்தேன். ஈரத்துணியை அவன் உடம்பில் சுற்றி வைப் பது என்று தீர்மானித்தேன். எழுந்து ஒரு துப்பட்டியை நனைத் துப் பிழிந்தேன். அதை, அவன் முகத்தை மாத்திரம் விட்டு விட்டு உடம்பெல்லாம் சுற்றினேன். பிறகு மேலே இரண்டு கம்பளிகளைப் போட்டுப் போர்த்துவிட்டேன். தலைக்கும் ஒரு ஈரத்துணியைப் போட்டேன். பழுக்கக் காய்ச்சிய இரும்பு போல அவன் உடம்பெல்லாம் கொதித்தது. ஒரே வறட்சியாக வும் இருந்தது. கொஞ்சங்கூட வேர்வையே இல்லை.

நான் மிகவும் களைத்துப் போனேன். மணிலாலைப் பார்த் துக் கொள்ளுமாறு அவன் தாயாரிடம் விட்டுவிட்டு வெளியே கொஞ்சம் உலாவி வரலாம் என்று சௌபாத்தி கடற்கரைக்குப்

போனேன். அப்பொழுது இரவு பத்து மணி இருக்கும். அங்கே இரண்டொருவரே நடமாடிக் கொண்டிருந்தனர். அவர்களை நான் பார்க்கக்கூட இல்லை. ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கினேன். ''ஆண்டவனே, இச் சமயத்தில், என் மானத்தைக் காப்பது உன் பொறுப்பு" என்று எனக்குள் நானே சொல்லிக் கொண்டேன். என் உதடுகள் ராமநாமத்தை உச்சரித்தவண்ணம் இருந்தன. சிறிது நேரத்திற்கெல்லாம் வீட்டுக்குத் திரும்பினேன். இருதயம் படபடவென்று அடித்துக் கொண்டிருந்தது.

மணிலால் படுத்திருந்த அறைக்குள் நான் நுழைந்ததுமே அவன், ''வந்துவிட்டீர்களா, பாபு ?'' என்றான்.

''ஆம், கண்ணே'' என்றேன்.

''என் உடம்பெல்லாம் எரிகிறது. தயவுசெய்து என்னை வெளியே எடுத்துவிடுங்கள்."

''உனக்கு வேர்க்கிறதா, குழந்தாய் ?''

''வேர்வையில் ஊறிப்போய்க் கிடக்கிறேன். என்னை வெளியே எடுத்துவிடுங்கள்.''

நெற்றியைத் தொட்டுப் பார்த்தேன். முத்து முத்தாக வேர்த்திருந்தது. சுரமும் குறைந்துகொண்டு வந்தது. கடவுளுக்கு நன்றி செலுத்தினேன்.

''மணிலால், உன் சுரம் நிச்சயமாகக் குறைந்துவிடும். இன்னும் கொஞ்சம் வேர்க்கட்டும். பிறகு உன்னை வெளியே எடுத்துவிடுகிறேன்'' என்று கூறினேன்.

''வேண்டாம், அப்பா. இந்த உலையிலிருந்து என்னை இப்பொழுதே எடுத்துவிடுங்கள். வேண்டுமானால், அப்புறம் எனக்குச் சுற்றிவிடுங்கள்'' என்றான்.

வேறு பேச்சுக் கொடுத்துக்கொண்டே மேலும் சில நிமிடங்கள் அப்படியே போர்த்தியவாறு அவனை வைத்திருந்தேன். வேர்வை அவன் தலையிலிருந்து அருவியாக வழிந்தது. அவனுக்குச் சுற்றியிருந்த துணிகளையெல்லாம் எடுத்துவிட்டு, உடம்பு உலரும்படி செய்தேன். ஒரே படுக்கையில் தகப்பனும் மகனும் தூங்கிப் போனோம்.

இருவரும் மரக்கட்டை போலவே தூங்கினோம். மறுநாள் காலையில் மணிலாலுக்குச் சுரம் குறைந்திருந்தது. இவ்விதம் நாற்பது நாட்கள் நீர் கலந்த பாலும் ஆரஞ்சு ரசமுமே சாப்பிட்டு வந்தான். இப்பொழுது அவனுக்குச் சுரம் இல்லை. அது மிகவும் பிடிவாதமான வகையைச் சேர்ந்த சுரம். ஆயினும், அது கட்டுப்படுத்தப்பட்டுவிட்டது.

என் புதல்வர்களில் மணிலாலே இன்று நல்ல தேக சுகம் உள்ளவனாக இருக்கிறான். அவன் பிழைத்தது கடவுள் அருளி

னுலா? அல்லது நீர்ச் சிகிச்சையாலா? இல்லாவிட்டால் ஆகாரத்தில் எச்சரிக்கையுடன் இருந்ததாலும் நல்ல பணிவிடையாலுமா? இதில் எது என்று யாரால் சொல்ல முடியும்? அவரவர்கள் தத்தம் நம்பிக்கைக்கு ஏற்ற வகையில் முடிவு செய்து கொள்ளட்டும். என்னைப் பொறுத்தவரையில் என் மானத்தைக் கடவுளே காப்பாற்றினுர் என்றுதான் நான் நிச்சயமாக எண்ணுகிறேன். அந்த நம்பிக்கை இன்றளவும் எனக்கு மாருமல் இருந்து வருகிறது.

# 23

# மீண்டும் தென்னுப்பிரிக்காவுக்கு

மணிலாலுக்கு உடம்பு குணமாகிவிட்டது. ஆனல், கீர்காமில் குடியிருந்த வீடு வசிப்பதற்கு ஏற்றது அல்ல என்பதைக் கண்டேன். அது ஈரம் படிந்த வீடு; நல்ல வெளிச்சமும் இல்லை. எனவே, ஸ்ரீ ரேவாசங்கர் ஜகஜ்ஜீவனுடன் கலந்து ஆலோசித்து, பம்பாய்க்குச் சுற்றுப்புறத்தில் காற்ருேட்டமான ஒரு பங்களாவை வாடகைக்கு அமர்த்திக்கொள்ளுவது என்று தீர்மானித்தேன். பாந்தராவிலும், சாந்தா குருஸிலும் தேடி அலைந்தேன். பாந்தராவில் மிருகங்களைக் கசாப்புக் கடைக்காகக் கொல்லுமிடம் இருந்ததால் அந்த இடம் வேண்டாம் என்று முடிவு செய்தோம். காட்கோபரும் அதை அடுத்த இடங்களும் கடலுக்கு வெகு தொலைவில் இருந்தன. கடைசியாகச் சாந்தா குருஸில் ஓர் அழகான பங்களா கிடைத்தது. சுகாதாரத்தைப் பொறுத்தவரையில் அதுவே மிகச் சிறந்தது என்று அதை வாடகைக்கு அமர்த்தினேம்.

சாந்தா குருஸிலிருந்து சர்ச்கேட்டுக்குப் போய் வர முதல் வகுப்பு ரெயில் 'ஸீஸன் டிக்கெட்' வாங்கிக் கொண்டேன். என் வண்டியில் நான் ஒருவனே முதல் வகுப்புப் பிரயாணியாக இருப்பதைக் குறித்து நான் அடிக்கடி ஒருவகையான பெருமை கொண்டதாக எனக்கு ஞாபகம் இருக்கிறது. அடிக்கடி பாந்தராவுக்கு நடந்தே போவேன். நேராக அங்கிருந்து சர்ச்கேட்டுக்குப் போகும் வேகமான ரெயிலில் செல்வதற்காகவே நான் அங்கே போய்விடுவேன்.

வக்கீல் தொழிலில் நான் எதிர்பார்த்ததைவிட அதிகமாகவே எனக்கு வருமானம் கிடைத்து வந்தது. எனது தென்னுப்பிரிக்கக் கட்சிக்காரர்கள். அவ்வப்போது எனக்கு ஏதாவது வேலை கொடுத்துக்கொண் டிருந்தார்கள். கிடைத்த வருமானம், என் வாழ்க்கையை நடத்திக்கொண்டு போவதற்குப் போதுமானதாக இருந்தது.

ஹைகோர்ட்டு வழக்கு எதுவும் எனக்கு இன்னும் கிடைத்தபாடில்லை. அக் காலத்தில் பயிற்சிக்காக நடந்துவந்த சட்ட

விவாதக் கூட்டங்களில் பங்கெடுத்துக்கொள்ள நான் என்றுமே துணிந்ததில்லை யெனினும் அக் கூட்டங்களுக்குப் போய்க்கொண் டிருந்தேன். அவைகளில் ஜமியத்ராம் நானுபாய் முக்கியமாகப் பங்கெடுத்துக்கொண்டது எனக்கு நினைவிருக்கிறது. மற்றப் புதுப் பாரிஸ்டர்களைப்போலவே நானும், ஹைகோர்ட்டில் நடக்கும் விசாரணைகளைக் கவனிக்கப்போவதை வழக்கமாக்கிக் கொண்டேன். அப்படி அங்கே போய்க்கொண் டிருந்ததன் நோக்கம், என் அறிவை வளர்த்துக்கொள்ளுவதைவிடக் கடலி லிருந்து நேராக அங்கே அடித்துக்கொண் டிருக்கும், நித்திரையை அளிக்கும், இன்பக் காற்றை வாங்குவதற்குத்தான். இந்தச் சுகத்தை அனுபவித்து வந்தவன் நான் ஒருவன் மாத்திரம் அல்ல என்பதையும் கவனித்தேன். அது ஒரு நாகரிகச் செயலாகவே ஆகிவிட்டதால் அதைக் குறித்து வெட்கப்படவேண்டியது எதுவும் இல்லை.

என்ருலும், ஹைகோர்ட்டுப் புத்தகசாலையைப் பயன்படுத் திக்கொண்டேன். பலருடன் புதிதாகப் பழக்கமும் ஏற்பட்டது. சீக்கிரத்திலேயே எனக்கு ஹைகோர்ட்டிலும் வேலை இருக்கும் என்று தோன்றிற்று.

இவ்வாறு ஒருபுறத்தில் என் தொழில் சம்பந்தமான கவலையே நீங்கிவிட்டதாகக் கருதலானேன். மற்ருெரு புறத் திலோ, என் மீது சதா கண் வைத்திருந்தவரான கோகலே, எனக்காகத் தமது சொந்தத் திட்டங்களைப் போடுவதில் சுறு சுறுப்பாக இருந்து வந்தார். ஒவ்வொரு வாரமும் இரண்டு மூன்று தடவைகள் என் அலுவலகத்திற்கு வருவார். நான் அறிந்திருக்க வேண்டும் என்று அவர் கருதும் நண்பர்களுட னேயே அவர் எப்பொழுதும் வருவார். தாம் செய்து வரும் வேலை யின் தன்மையைக் குறித்து அவ்வப்போது எனக்குச் சொல்லி வருவார்.

என் சொந்தத் திட்டங்கள் எவையும் நிலைத்திருக்கக் கட வுள் என்றுமே அனுமதித்ததில்லை என்றே சொல்லவேண்டும். என் திட்டங்களை அவர் வழியில் அவர் பைசல் செய்துகொண் டிருந்தார்.

நான் எண்ணியவாறு நான் பம்பாயில் நிலைத்துவிட்டதாகத் தோன்றிய சமயத்தில் எதிர்பாராதவிதமாகத் தென்னுப்பிரிக்கா விலிருந்து எனக்கு ஒரு தந்தி வந்தது. “சேம்பர்லேன் இங்கே எதிர்பார்க்கப்படுகிருர். தயவுசெய்து உடனே திரும்பி வாருங் கள்” என்பதே அந்தத் தந்தி. நான் வாக்களித்திருந்தது நினை வுக்கு வந்தது. பிரயாணத்திற்கு எனக்குப் பணம் அனுப் பியதுமே நான் புறப்படத் தயாராக இருப்பதாகப் பதில் தந்தி கொடுத்தேன். அவர்களும் உடனே பணம் அனுப்பிவிட்டார்கள். என் அலுவலகத்தைக் கைவிட்டுவிட்டுத் தென்னுப்பிரிக்கா வுக்குப் புறப்பட்டேன்.

அங்கிருந்த வேலை முடிய ஓர் ஆண்டாவது ஆகும் என்று எண்ணினேன். எனவே, பம்பாயில் பங்களாவை அப்படியே வைத்துக்கொண்டு என் மனைவியையும் குழந்தைகளையும் அங்கேயே விட்டுச் சென்றேன்.

நாட்டில் ஒரு வேலையும் அகப்படாமல் கஷ்டப்படும் ஊக்கமுள்ள இளைஞர்கள், மற்ற நாடுகளில் குடியேறிவிட வேண்டும் என்று அப்பொழுது நம்பினேன். ஆகையால், அப்படிப்பட்ட இளைஞர்கள் நான்கு, ஐந்து பேரை என்னுடன் அழைத்துச் சென்றேன். அதில் ஒருவர் மகன்லால் காந்தி.

காந்தி குடும்பம் எப்பொழுதுமே பெரிய குடும்பம். பழைய சுவட்டிலேயே போய்க்கொண் டிருக்க விரும்பாதவர்களைக் கண்டுபிடித்து வெளிநாடுகளுக்குத் துணிந்து போகும்படி செய்ய விரும்பினேன். இவர்களில் அநேகரை என் தந்தையார் சமஸ்தான உத்தியோகங்களில் அமர்த்தி வந்தார். அத்தகைய உத்தியோக மோகத்திலிருந்து அவர்களை விடுவிக்க விரும்பினேன். அவர்களுக்கு வேறு வேலை தேடிக் கொடுக்கவும் என்னால் முடியாது. அவர்கள் சுயநம்பிக்கையில் வாழ்பவர்களாக இருக்க வேண்டும் என்று விரும்பினேன்.

ஆனால், என் லட்சியங்கள் உயர்வானவை ஆக ஆக, என் லட்சியங்களையே ஏற்றுக்கொள்ளும்படி அந்த இளைஞர்களைத் தூண்ட முயன்றேன். மகன்லால் காந்திக்கு வழிகாட்டிய வகையில் என் முயற்சி மிகப் பெரும் வெற்றியை அடைந்தது. இதைப் பற்றிப் பிறகு கூறுகிறேன்.

மனைவி, குழந்தைகளை விட்டுப் பிரிவது, நிலையான குடித்தனத்தை நடுவில் குலைப்பது, நிச்சயமானதொரு நிலையிலிருந்து நிச்சயமற்ற நிலைக்குப் போவது ஆகிய இவை யாவும் ஒரு கணம் எனக்கு வேதனை தருவனவாகவே இருந்தன. ஆனால், நிச்சயமற்றதான வாழ்வைக் கண்டு அஞ்சாத தன்மை எனக்கு இருந்தது. சத்தியமாக இருக்கும் கடவுளைத் தவிர மற்ற எல்லாமே நிச்சயமற்றதாயிருக்கும் இவ்வுலகத்தில் நிச்சயமான வாழ்வை எதிர்பார்ப்பது தவறு என்று எண்ணுகிறேன். நம்மைச் சுற்றிலும் தோன்றுபவை, நிகழ்பவை ஆகிய எல்லாமே நிச்சயமற்றவையும் அநித்தியமானவையுமே ஆகும். ஆனால், இவற்றி லெல்லாம் மறைந்திருக்கும் எல்லாவற்றிலும் மேலானதான பரம்பொருள் ஒன்றே நிச்சயமானது. அந்த நிச்சயமான பரம்பொருளை ஒரு கணமேனும் தரிசித்து, அதனுடன் தன்னை இணைத்துக்கொண்டு விடுபவனே பெரும் பாக்கியசாலி. அந்தச் சத்தியப் பொருளைத் தேடுவதே வாழ்வின் நித்தியானந்த மாகும்.

சரியான தருணத்தில் நான் டர்பன் போய்ச் சேர்ந்தேன். அங்கே வேலை எனக்காகக் காத்துக்கொண் டிருந்தது. சேம்பர்லேனிடம் தூது செல்வதற்குத் தேதியும் நிச்சயிக்கப்பட்டிருந்தது. அவரிடம் சமர்ப்பிப்பதற்கு மகஜரைத் தயாரிப்பதோடு நானும் தூதுகோஷ்டியுடன் சென்று அவரைப் பார்க்கவேண்டும்.

நான்காவது பாகம்

# 1

# அன்பின் உழைப்பு வீணு?

தென்னுப்பிரிக்காவிடமிருந்து மூன்றரைக் கோடி பவுன் நன்கொடையைப் பெறுவதற்கும், அங்கிருக்கும் ஆங்கிலேயர், போயர்கள் இவர்களின் மனத்தைக் கவருவதற்குமே ஸ்ரீ சேம்பர் லேன்* வந்திருந்தார். ஆகவே, இந்தியரின் தூதுகோஷ்டிக்கு அவர் திருப்திகரமான பதில் கூறவில்லை. ''சுயாட்சி பெற்றுள்ள குடியேற்ற நாடுகளின்மீது பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு அதிகாரம் எதுவும் இல்லை என்பது உங்களுக்குத் தெரியும். உங்கள் குறைகள் நியாயமானவை என்றே தோன்றுகிறது. என்னுல் முடிந்ததைச் செய்கிறேன். ஆனல், ஐரோப்பியரின் மத்தியிலிருந்து வாழ நீங்கள் விரும்பினல், அவர்கள் உங்களிடம் பிரியங்கொள்ளும்படி செய்ய நீங்கள் முயல வேண்டும்'' என்று அவர் கூறினர்.

இந்தப் பதில், தூது சென்ற இந்தியரின் உற்சாகத்தைக் குலைத்துவிட்டது. நானும் ஏமாற்ற மடைந்தேன். எங்கள் எல்லோருக்குமே இது கண்களைத் திறந்துவிடுவதாக இருந்தது. இனித் தீவிரமாக வேலையை ஆரம்பித்துவிட வேண்டியதே என்று கண்டேன். என் சகாக்களுக்கு நிலைமையை விளக்கிக் கூறினேன்.

உண்மையில் ஸ்ரீ சேம்பர்லேனின் பதிலில் தவருனது ஒன்றும் இல்லை. விஷயத்தைக் குழப்பாமல் உள்ளதை உள்ளபடியே அவர் சொன்னது நல்லதே யாகும். 'வல்லவன் வகுத்ததே வாய்க்கால்' அல்லது, 'வாளெடுத்தவன் வகுத்ததே சட்டம்' என்பதை அவர் நயமான முறையில் எங்களுக்குத் தெரிவித்து விட்டார். ஆனல், எங்களிடமோ வாளே இல்லை. வாளினல் வெட்டுப்படுவதற்கு வேண்டிய துணிச்சலும் உடல் வலுவுங்கூட எங்களுக்கு இல்லை.

இந்த உபகண்டத்தில் ஸ்ரீ சேம்பர்லேன் கொஞ்ச காலமே இருப்பதாக முடிவு செய்திருந்தார். ஸ்ரீநகருக்கும் கன்னியா

---

* சேம்பர்லேன் என்று இங்கே காந்திஜி குறிப்பிடுவது ஜோஸப் சேம்பர்லேன் என்னும் பிரிட்டிஷ் ராஜதந்திரியையே யாகும். இவர் 1895-லிருந்து 1903 வரை பிரிட்டனின் குடியேற்ற நாட்டிலாகா மந்திரியாக இருந்தவர். சாம்ராஜ்யம் விரிவடைவதில் ஆர்வம் கொண்டவர். 1899-இலிருந்து 1902 வரை நடந்த போயர் யுத்தத்திற்கு இவரே மறைமுகக் காரணம் என்று சிலர் குறைகூறினர். ஆனல், போயர்களைத் திருப்தி செய்ய இவர் வெகுவாகப் பாடுபட்டார். இதற்காகவே தென்னுப்பிரிக்காவுக்குச் சென்ருர்.

குமரிக்கும் 1,900 மைல் தூரம் என்ருல், டர்பனுக்கும் கேப் டவுனுக்கும் 1,100 மைல் தூரத்திற்குக் குறைவில்லே. ஸ்ரீ சேம்பர்லேன் இந்தத் தொலே தூரத்தைச் சண்டமாருத வேகத்தில் சுற்ற வேண்டி யிருந்தது.

நேட்டாலிலிருந்து அவசரமாக டிரான்ஸ்வாலுக்குச் சென்ருர். அங்கிருக்கும் இந்தியருக்காகவும் நான் ஒரு விண்ணப்பத்தைத் தயாரித்து அவரிடம் சமர்ப்பிக்கவேண்டி யிருந்தது. ஆனல், நான் பிரிட்டோரியாவுக்குள் போய்ச் சேருவது எப்படி? உரிய காலத்தில் என்னேத் தங்களிடம் தருவித்துக்கொள்ளுவதற்கு வேண்டிய சட்ட வசதிகளேப் பெறும் நிலேயில் அங்கிருந்த நம் மக்கள் இல்லே. போயர் யுத்தம் டிரான்ஸ்வாலே வனந்தர மாக்கி விட்டது. உணவுப் பொருள்களோ, துணிமணியோ அங்கே கிடைப்பதில்லே. கடைகளெல்லாம் காலியாகவோ, மூடப் பட்டோ கிடந்தன. அவை திறக்கப்பட்டு, சாமான்கள் விற்க ஆரம்பிக்கும் என்று எதிர்பார்க்கப் பட்டதெனினும், அதற்கு நாளாகும். கடைகள் திறக்கப்பட்டு உணவுத் தானியங்கள் விற்கப்படும் வரையில், முன்னல் அங்கிருந்து ஓடிப் போய்விட்ட வர்களேக்கூடத் திரும்பி வர அனுமதிக்க முடியாது. ஆகையால், டிரான்ஸ்வால் வாசி ஒவ்வொருவரும் உள்ளே நுழைய அனுமதிச் சீட்டுப் பெறவேண்டி யிருந்தது. இது, ஐரோப்பியருக்கு எந்தவித மான கஷ்டமும் இல்லாமல் கிடைத்துவிடும். ஆனல், இந்தியருக்கோ இது மிகக் கஷ்டமான தாயிற்று.

யுத்தத்தின்போது இந்தியாவிலிருந்தும் இலங்கையிலிருந்தும் அநேக அதிகாரிகளும் சிப்பாய்களும் தென்னப்பிரிக்காவுக்கு வந்திருந்தனர். அவர்களில் அங்கேயே குடியேறிவிட விரும்புகிறவர்களுக்கு ஏற்பாடுகளேச் செய்துகொடுக்க வேண்டியது, பிரிட்டிஷ் அதிகாரிகளின் கடமை என்று கருதப்பட்டது. எப்படியும் அவர்கள் புதிதாக அதிகாரிகளே நியமிக்கவேண்டி யிருந்தது. அனுபவம் வாய்ந்த அவர்கள் இருந்தது சௌகரிய மாயிற்று. அவர்களில் சிலரின் சுறுசுறுப்பான புத்திக் கூர்மையினல் ஒரு புதிய இலாகர்வையே சிருஷ்டித்துவிட்டார்கள். இது அவர்களுடைய சாமர்த்தியத்தைக் காட்டியது. நீக்ரோவர்களுக்கென்று ஒரு தனி இலாகா இருந்தது. அப்படியானல், ஆசியாக்காரர்களுக்கென்றும் ஒரு தனி இலாகா ஏன் இருக்கக்கூடாது? இந்த வாதம் நியாயமானதாகவே தோன்றியது. நான் டிரான்ஸ்வாலே அடைந்ததற்கு முன்னலேயே இந்த இலாகா ஆரம்பமாகி தன்னுடைய அதிகாரத்தை நாலா பக்கங்களிலும் பரப்பி வந்தது. அனுமதிச் சீட்டுகளேக் கொடுக்கும் அதிகாரிகள், வெளியேறியிருந்து இப்பொழுது திரும்புகிறவர்கள் எல்லாருக்குமே அனுமதிச் சீட்டுகளேக் கொடுக்கலாம். ஆனல், திரும்பி வரும் ஆசியாக்காரர்களுக்குப் புதிய இலாகாவின் குறுக்கீடு இல்லாமல் அவர்கள் எப்படிக் கொடுத்துவிட முடியும்? புதிய இலாகாவின் சிபார்சின் பேரிலேயே அனுமதிச்சீட்டுக் கொடுப்பதென்ருல், அனுமதிச் சீட்டுக் கொடுக்கும் அதிகாரிகளின் சில

பொறுப்புகளும், பாரமும் குறைந்துவிடும். இவ்வாறே அவர்கள் வாதித்தார்கள். ஆனல், உண்மை என்னவென்ருல், புதிய இலாகாவுக்கு ஏதாவது வேலே வேண்டும் என்பதுதான். அதோடு அந்த ஆட்களுக்குப் பணமும் வேண்டும். அவர்களுக்கு வேலே இல்லேயென்ருல், அந்த இலாகா அவசியமில்லே என்று ஆகிவிடும்; அதை எடுத்தும் விடுவார்கள். ஆகையால், இந்த வேலேயை அவர்களே தங்களுக்குத் தேடிக்கொண்டார்கள்.

இந்தியர், அனுமதிச் சீட்டுக்கு இந்த இலாகாவிடம் மனுச் செய்துகொள்ளவேண்டும். பல நாட்கள் கழித்தே பதில் கிடைக்கும். டிரான்ஸ்வாலுக்குத் திரும்ப விரும்பியவர்களின் தொகை ஏராளமானதாக இருந்துவிடவே, இதற்குத் தரகர் கட்டணம் மிகவும் வளர்ந்துவிட்டது. அதிகாரிகளுடன் சேர்ந்து இத் தரகர்கள் ஏழை இந்தியர்களிடமிருந்து ஆயிரக் கணக்கில் கொள்ளேயடித்தனர். சிபார்சு இல்லாமல் அனுமதிச் சீட்டே கிடைக்காது என்பதை அறிந்தேன். சிபார்சு வைத்தும் சிலர் விஷயத்தில் நூறு பவுன் வரையில் பணமும் கொடுக்க வேண்டியிருந்ததாம். இந்த நிலேயில் நான் டிரான்ஸ்வாலுக்குப் போவதற்கு வழி இருப்பதாகவே தோன்றவில்லே. எனது பழைய நண்பரான டர்பன் போலீஸ் சூப்பரின்டென்டென்டிடம் போனேன். "தயவுசெய்து அனுமதிச் சீட்டு அதிகாரிக்கு என்னே அறிமுகம் செய்துவைத்து எனக்கு அனுமதிச் சீட்டுக் கிடைக்க உதவுங்கள். நான் டிரான்ஸ்வாலில் வசித்திருக்கிறேன் என்பதை நீங்கள் அறிவீர்கள்" என்று அவரிடம் கூறினேன். உடனே, அவர் தொப்பியை எடுத்து வைத்துக்கொண்டு புறப்பட்டு என்னுடன் வந்து எனக்கு அனுமதிச் சீட்டை வாங்கிக் கொடுத்தார். நான் புறப்பட வேண்டிய ரெயில் கிளம்புவதற்கு அரை மணி நேரமே இருந்தது. என் சாமான்களேயெல்லாம் முன்பே தயாராக வைத்திருந்தேன். சூப்பரின்டென்டென்ட் அலெக்ஸாண்டருக்கு நன்றி தெரிவித்துவிட்டு பிரிட்டோரியாவுக்குப் புறப்பட்டேன்.

என் முன்னுலிருக்கும் கஷ்டங்கள் எவ்வள்வு என்பதைக் குறித்து ஒருவாறு நான் இப்பொழுது தெரிந்துகொண்டேன். பிரிட்டோரியா போய்ச் சேர்ந்ததும் விண்ணப்பத்தைத் தயார் செய்தேன். சேம்பர்லேனேச் சந்திக்கப் போகும் பிரதிநிதிகளின் பெயரை முன்கூட்டியே சமர்ப்பிக்க வேண்டும் என்று டர்பனில் கேட்கப்பட்டதாக எனக்கு ஞாபகம் இல்லே. ஆனல், இங்கோ புது இலாகா இருந்தது; அது முன்கூட்டி அறிவிக்க வேண்டும் என்று கேட்டது. என்னேப் பிரதிநிதிகளில் ஒருவனுக இருக்க விடாமல் செய்ய அதிகாரிகள் விரும்பினர்கள் என்பதைப் பிரிட்டோரியா இந்தியர் அப்பொழுதே அறிந்திருந்தனர்.

வேடிக்கையானதே யென்ருலும், வேதனேயான இச் சம்பவத்திற்கு மற்ருேர் அத்தியாயமும் அவசியம்.

# 2

# ஆசியாவிலிருந்து வந்த எதேச்சாதிகாரிகள்

நான் டிரான்ஸ்வாலுக்குள் பிரவேசித்துவிட்டது எப்படி என்பது புதிய இலாகாவின் தலைமை அதிகாரிகளுக்கு விளங்க வில்லை. தங்களிடம் வரும் இந்தியரிடம் இதைப்பற்றி விசாரித் தார்கள். ஆனால், அவர்களாலும் நிச்சயமாக எதுவும் சொல்ல முடியவில்லை. எனக்குள்ள பழைய தொடர்பை வைத்துக் கொண்டு அனுமதிச் சீட்டு இல்லாமலேயே நான் நுழைந்திருக்க வேண்டும் என்று ஊகித்துக்கொண்டுவிடவே அதிகாரிகள் முற்பட்டனர். அப்படித்தான் என்றால், நான் கைது செய்யப் படவேண்டிய குற்றத்தைச் செய்தவனாவேன்!

ஒரு பெரிய யுத்தம் முடிந்ததுமே, அப்போது அதிகாரத்தி லிருக்கும் அரசாங்கத்திற்கு விசேட அதிகாரங்களைக் கொடுப்பது பொதுவான வழக்கம். தென்னாப்பிரிக்கா விஷயத் திலும் அதுவே நடந்தது. சமாதானப் பாதுகாப்பு அவசரச் சட்டம் ஒன்றை அரசாங்கம் நிறைவேற்றியது. அதன் படி, அனுமதி இல்லாமல் டிரான்ஸ்வாலுக்குள் வரும் யாரையும் கைது செய்து சிறைத் தண்டனை விதிக்கலாம். அச் சட்டத் தின் இந்த விதியின்கீழ் என்னைக் கைது செய்யலாமா என்று அதிகாரிகள் யோசித்தார்கள். ஆனால், அனுமதிச் சீட்டைக் காட்டும்படி என்னைக் கேட்கும் தைரியம் யாருக்கும் வரவில்லை. எனினும், அதிகாரிகள் டர்பனுக்கு தந்தி கொடுத்து விசாரித்தார்கள். அனுமதிச் சீட்டின் பேரிலேயே நான் வந்திருக்கிறேன் என்று அறிந்ததும் ஏமாற்ற மடைந்தனர். ஆனால், இத்தகைய ஏமாற்றங்களினால் தோல்வியடைந்து விடக்கூடியவர்கள் அல்ல அவர்கள். டிரான்ஸ்வாலுக்குள் வந்து விடுவதில் நான் வெற்றி பெற்றுவிட்டாலும் ஸ்ரீ சேம்பர்லேனிடம் நான் தூது போக முடியாதபடி அவர்கள் என்னை வெற்றி கரமாகத் தடுத்துவிட முடியும்.

ஆகவே, தூது செல்லப்போகும் பிரதிநிதிகளின் பெயரைச் சமர்ப்பிக்குமாறு சமூகத்தினரைக் கேட்டார்கள். தென்னாப்பி ரிக்காவில் எங்குமே நிறவெறி இருந்து வருகிறது என்பதை நான் அறிவேன். ஆனால், இந்தியாவில் நான் கண்ட இழிவான தந்திரங்களும் கீழ்த்தரமான உபாயங்களும் இங்கும் அதிகாரி களிடம் இருக்கும் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை. தென் னாப்பிரிக்காவில் பொது இலாகாக்கள் மக்களின் நன்மைக்கு என்றே இருந்தன. அவை பொதுஜன அபிப்பிராயத் திற்கும் பதில் சொல்லக் கடமைப்பட்டவை. ஆகையால் அதிகாரிகள் மரியாதையுடனும் அடக்கத்தோடும் நடந்து

கொள்ளுவார்கள். இதனால், வெள்ளையர் அல்லாதாருக்கும் ஓரளவுக்கு நன்மை இருந்துவந்தது. ஆசியாவிலிருந்து அதிகாரிகள் வந்து சேர்ந்ததும், அவர்களுடன் எதேச்சாதிகாரமும், அங்கே எதேச்சாதிகாரிகள் பெற்றிருந்த பழக்கங்களும் கூடவே வந்துவிட்டன. தென்னாப்பிரிக்காவில் ஒருவகையான பொறுப்பாட்சி அல்லது ஜனநாயகம் இருந்தது. ஆனால், ஆசியாவிலிருந்து இறக்குமதியான இந்தச் சரக்குகளோ, கலப்பற்ற எதேச்சாதிகார மயமானவை. ஏனெனில், ஆசியாக்காரர்களை அந்நிய அரசாங்கமே ஆண்டு வருவதால் அவர்களுக்குப் பொறுப்பாட்சி எதுவும் இல்லை. தென்னாப்பிரிக்காவிலிருந்த ஐரோப்பியர், அந்த நாட்டில் குடியேறி நிரந்தரக் குடிகள் ஆகிவிட்டவர்கள். அவர்கள் தென்னாப்பிரிக்கப் பிரஜைகளானதால், இலாகா அதிகாரிகளின் மீது அவர்களுக்கு ஆதிக்கம் இருந்தது. ஆனால், இப்பொழுதோ ஆசியாவிலிருந்து எதேச்சாதிகாரிகள் வந்துவிட்டார்கள். இதன் பயனாக இந்தியர் இருதலைக்கொள்ளி எறும்புபோல் ஆயினர்.

இந்த எதேச்சாதிகாரத்தின் கொடுமையை நான் நன்றாக அனுபவித்திருக்கிறேன். இலாகாவின் பிரதம அதிகாரியை வந்து பார்க்குமாறு முதலில் எனக்குக் கட்டளை வந்தது. அந்த அதிகாரி இலங்கையிலிருந்து வந்தவர். பிரதம அதிகாரியின் 'கட்டளை வந்தது' என்று நான் சொல்லுவது, விஷயத்தை நான் மிகைப்படுத்திக் கூறுவதாகத் தோன்றிவிடக்கூடும். எனவே, இதைத் தெளிவுபடுத்த விரும்புகிறேன். எழுத்து மூலமான உத்தரவு எதுவும் எனக்கு வரவில்லை. ஆசியாக்காரர்களின் அதிகாரிகளை இந்தியத் தலைவர்கள் அடிக்கடி சந்திக்கவேண்டியிருந்தது. அப்படிச் சந்தித்தவர்களில் ஒருவர் காலஞ்சென்ற சேத் தயாப் ஹாஜிகான் முகமது. அந்தக் காரியாலயத்தின் பிரதம அதிகாரி, நான் யார்? நான் எதற்காக அங்கே வந்திருக்கிறேன்? என்று அவரைக் கேட்டார். "அவர் எங்கள் ஆலோசகர். நாங்கள் கேட்டுக்கொண்டதன்பேரில் அவர் வந்திருக்கிறார்" என்றார், தயாப் சேத்.

"அப்படியானால், நாங்கள் இங்கே எதற்காக இருக்கிறோம்? உங்களைப் பாதுகாப்பதற்கென்றே நாங்கள் நியமிக்கப்பட்டிருக்கவில்லையா? இங்கிருக்கும் நிலைமையைப்பற்றிக் காந்திக்கு என்ன தெரியும்?" என்று கேட்டார், எதேச்சாதிகாரி.

இக் குற்றச்சாட்டுக்குத் தயாப் சேத் தம்மால் இயன்ற வரையில் பதில் சொன்னார். அது பின்வருமாறு: "நீங்கள் இருக்கிறீர்கள் என்பது உண்மைதான். ஆனால், காந்தி எங்கள் மனிதர். அவருக்கு எங்கள் மொழி தெரியும். எங்களைப் புரிந்து கொண்டிருக்கிறார். எப்படியும் நீங்கள் அதிகாரிகள்தானே?"

என்னைத் தம் முன்னால் கொண்டுவருமாறு துரை, தயாப் சேத்துக்கு உத்தரவு போட்டார். தயாப் சேத் முதலியவர்களுடன் நான் துரையிடம் போனேன். எங்களை உட்காரச்

சொல்லவில்லை. நாங்கள் எல்லோரும் நின்றுகொண்டே இருந்தோம்.

“இங்கே நீர் வந்தது எதற்காக?” என்று துரை என்னைப் பார்த்துக் கேட்டார்.

“எனது சகோதர இந்தியர், தங்களுக்கு ஆலோசனை கூறி உதவ வேண்டும் என்று கேட்டுக்கொண்டதன் பேரில் நான் வந்தேன்” என்று பதில் கூறினேன்.

“இங்கே வர உமக்கு உரிமை கிடையாது என்பது உமக்குத் தெரியாதா? நீர் வைத்திருக்கும் அனுமதிச் சீட்டு, தவருக உமக்குக் கொடுக்கப்பட்டுவிட்டது. இங்கே குடியேறிய இந்தியராக உம்மைக் கருத முடியாது. நீர் திரும்பிப் போய்விட வேண்டும். ஸ்ரீ சேம்பர்லேனிடம் நீர் தூது போகக்கூடாது. முக்கியமாக இங்கிருக்கும் இந்தியரின் பாதுகாப்புக்கென்றே ஆசியாக்காரர்களின் இலாகா ஆரம்பிக்கப் பட்டிருக்கிறது. சரி, நீர் போகலாம்” என்று கூறித் துரை எங்களை அனுப்பிவிட்டார். பதில் சொல்லுவதற்குச் சந்தர்ப்பமே அளிக்கவில்லை.

ஆனல், என்னுடன் வந்தவர்களை மாத்திரம் அங்கே காக்க வைத்தார். அவர்களைக் கண்டபடி திட்டி, என்னை அனுப்பி விடுமாறு அவர்களுக்கு யோசனை கூறி அனுப்பினர். அதிக எரிச்சலுடன் அவர்கள் திரும்பி வந்தார்கள். இவ்விதம் நாங்கள் எதிர்பாராத புதிய நிலைமை ஒன்று எங்கள் முன் குறுக்கிட்டது.

## 3

# அவமதிப்புக்கு உட்பட்டேன்

அந்த அவமரியாதை என் மனத்தை அதிகமாக வருத்தியது. ஆனல், இதற்கு முன்னல் இத்தகைய அவமரியாதைகள் பலவற்றைச் சகித்திருக்கிறேனுகையால், அவைகளால் நான் பாதிக்கப்படாதவன் ஆகிவிட்டேன். எனவே, இப்பொழுது கடைசியாக ஏற்பட்ட இந்த அவமதிப்பையும் மறந்துவிடுவதெனத் தீர்மானித்தேன். இவ் விஷயத்தில் விருப்பு வெறுப்பின்றிக் கவனித்து, எந்த வழி சரியெனத் தோன்றுகிறதோ அதன்படி நடப்பதென்றும் முடிவு செய்தேன்.

ஆசியாக்காரர்கள் இலாகாவின் பிரதம அதிகாரிகளிடமிருந்து எங்களுக்கு ஒரு கடிதம் வந்தது. ஸ்ரீ சேம்பர்லேனை நான் டர்பனில் கண்டிருக்கிறேனுகையால், அவரைச் சந்திக்கப் போகும் தூது கோஷ்டியிலிருந்து என் பெயரை நீக்கிவிட வேண்டியது அவசியமாகிறது என்று அக் கடிதம் கூறியது. அக் கடிதத்தை என் சகாக்களினல் சகித்துக்கொள்ள முடியவில்லை. தூது போவது என்ற யோசனையையே அடியோடு கைவிட்டுவிடுவது என்று அவர்கள் அபிப்பிராயப்பட்டார்கள். அதனல்,

சமூகத்திற்கு ஏற்படக்கூடிய சங்கடமான நிலைமையை அவர்களுக்கு எடுத்துக் கூறினேன்.

"ஸ்ரீ சேம்பர்லேனிடம் நீங்கள் உங்கள் குறைகளை எடுத்துக் கூறுது போனால், உங்களுக்குக் குறைகளே இல்லை என்று கருதப்பட்டுவிடும். எப்படியும் நாம் சொல்லப் போவதை எழுத்து மூலமே சொல்லப் போகிறோம். அதையும் நாம் தயாரித்து வைத்திருக்கிறோம். அதை அவர் முன்பு நான் படிக்கிறேனா, வேறு ஒருவர் படிக்கிறாரா என்பது அவ்வளவு முக்கியமான விஷயமே அல்ல. ஸ்ரீ சேம்பர்லேன் இந்த விஷயத்தைக் குறித்து நம்மிடம் விவாதிக்கப் போவதில்லை. இந்த அவமரியாதைக்கு உட்பட்டுத் தீர வேண்டியதுதான் என்று எண்ணுகிறேன்" என்றேன்.

நான் இவ்விதம் சொல்லி முடிப்பதற்குள் தயாப் சேத் பின்வருமாறு ஆத்திரத்தோடு கூறினர்: "உங்களுக்கு ஏற்பட்ட அவமரியாதை சமூகத்திற்கே ஏற்பட்ட அவமரியாதை அல்லவா? நீங்கள் எங்கள் பிரதிநிதி என்பதை நாங்கள் எப்படி மறந்துவிட முடியும்?"

"உண்மையே. சமூகமுங்கூட இதுபோன்ற அவமரியாதைகளுக்கு உட்பட்டுவிட வேண்டியே இருக்கிறது. இதைத் தவிர நமக்கு வேறு வழி ஏதாவது இருக்கிறதா?" என்று கேட்டேன்.

"என்ன வந்தாலும் வரட்டும். புதிதாக ஓர் அவமரியாதைக்கு நாம் உட்படுவானேன்? இதையும்விட மோசமானது எதுவும் நமக்கு நேர்ந்துவிடப் போவதில்லை. மேற்கொண்டும் நாம் இழந்துவிடுவதற்கு நம்மிடம் இன்னும் ஏதாவது உரிமை பாக்கி இருக்கிறதா?" என்று கேட்டார், தயாப் சேத்.

அது ரோஷமான பதில்தான். ஆனால், அதனால் என்ன பிரயோசனம்? இந்திய சமூகத்தினிடமுள்ள சக்தி இன்னதுதான் என்பதை நான் நன்றாக அறிந்திருந்தேன். நண்பர்களைச் சாந்தப்படுத்தினேன். தூதுக் குழுவில் எனக்குப் பதிலாக இந்தியப் பாரிஸ்டரான ஸ்ரீ ஜார்ஜ் காட்பிரேயைச் சேர்த்துக் கொள்ளுமாறு யோசனை கூறினேன்.

ஆகவே, ஸ்ரீ காட்பிரே தூதுக் குழுவுக்குத் தலைவராகச் சென்றார். ஸ்ரீ சேம்பர்லேன் தமது பதிலில், நான் தூதுக் குழுவிலிருந்து விலக்கப்பட்டிருப்பதைப் பற்றியும் சொன்னார். "திரும்பத் திரும்ப அதே பிரதிநிதி சொல்லுவதைக் கேட்டுக்கொண்டிருப்பதைவிடப் புதிதாக ஒருவர் இருப்பது நல்லதல்லவா?" என்று கூறி, இந்தியருக்கு ஏற்பட்டிருந்த மனப்புண்ணை ஆற்ற முயன்றார்.

ஆனால், இவைகளினாலெல்லாம் காரியம் சரியாக முடிந்துவிடவில்லை. ஆனால், சமூகமும் நானும் செய்யவேண்டிய வேலையையே

இவை அதிகப்படுத்தின. நாங்கள் அடியிலிருந்து வேலையைத் தொடங்கவேண்டி யிருந்தது. "நீங்கள் சொன்னதன் பேரில் தானே சமூகம் யுத்தத்தில் உதவி செய்தது! அதன் பலனை இப்பொழுது நீங்கள் பார்க்கிறீர்கள்" என்று சிலர் என்னைக் குத்திக் காட்டினார்கள். அதனால் நான் பாதிக்கப்பட்டுவிட வில்லை. "அப்பொழுது நான் கூறிய யோசனைக்காக இப்பொழுது நான் வருத்தப்படவில்லை" என்றேன். "யுத்தத்தில் நாம் பங்கெடுத்துக்கொண்டதில் நாம் சரியான காரியத்தையே செய்தோம் என்பதை நான் இப்பொழுதும் கூறுகிறேன். அப்படிச் செய்ததில் நம் கடமையைத் தான் நாம் நிறைவேற்றினோம். கடமையை முன்னிட்டுச் செய்த பணிக்கு நாம் வெகுமதியை எதிர்பார்க்கக் கூடாது. என்றாலும், எந்த நல்ல காரியமும் முடிவில் பலனளித்தே தீரும் என்பது என் திடமான நம்பிக்கை. நடந்து போனதை மறந்துவிட்டு நம் முன்னால் இப்பொழுது இருக்கும் வேலை என்ன என்பதைக் கவனிப்போம்" என்று நான் கூறியதை மற்றவர்களும் ஒப்புக்கொண்டார்கள்.

நான் மேலும் கூறியதாவது: "உண்மையைச் சொன்னால், நீங்கள் எந்த வேலைக்காக என்னை அழைத்திருந்தீர்களோ அந்த வேலை இப்பொழுது முடிந்துவிட்டது. நான் தாய் நாடு திரும்புவதற்கு என்னை நீங்கள் அனுமதிப்பது சாத்தியமே என்று இருந்தாலும் நான் டிரான்ஸ்வாலை விட்டுப்போகக்கூடாது என்று எண்ணுகிறேன். முன்போல நேட்டாலில் இருந்துகொண்டு என் வேலையைச் செய்துகொண்டிருப்பதற்குப் பதிலாக, இங்கிருந்துகொண்டே நான் அதைச் செய்து வர வேண்டும். ஓர் ஆண்டுக்குள் இந்தியாவுக்குத் திரும்புவது என்று நான் இனியும் எண்ணிக்கொண் டிருப்பதற்கில்லை. டிரான்ஸ்வால் சுப்ரீம் கோர்ட்டில் வக்கீலாக நான் பதிவு செய்துகொள்ள வேண்டியதே. இப்புதிய இலாகாவைச் சமாளித்துக்கொண்டுவிட முடியும் என்ற நம்பிக்கையும் எனக்கு இருக்கிறது. இதை நாம் செய்யவில்லை யென்றால், சமூகம் அடியோடு கொள்ளையடிக்கப்பட்டு விடுவதோடு இந் நாட்டிலிருந்து விரட்டியடிக்கப்பட்டும் விடும். ஒவ்வொரு நாளும் புதுப் புது அவமரியாதைகள் சமூகத்தின்மீது வந்து குவிந்துகொண்டும் இருக்கும். ஸ்ரீ சேம்பர்லேன் என்னைப் பார்க்க மறுத்ததையும், அந்த அதிகாரி என்னை அவமதித்ததையும், இந்திய சமூகம் முழுமைக்கும் இருந்து வரும் அவமதிப்போடு ஒப்பிட்டுப் பார்த்தால் ஒன்றுமே இல்லை என்றுதான் சொல்லவேண்டும். கேவலம் நாயின் வாழ்வை நாம் நடத்திக்கொண் டிருக்க வேண்டும் என்று நாம் எதிர்பார்க்கப்படுகிறோம். இதைச் சகித்துக்கொண் டிருக்கவே முடியாது."

எனவே, நான் வேலையைச் செய்துகொண்டு போக ஆரம்பித்தேன். பிரிட்டோரியாவிலும் ஜோகன்னஸ்பர்க்கிலும் இருக்கும் இந்தியருடன் விஷயங்களை விவாதித்தேன். முடிவாக ஜோகன்னஸ்பர்க்கில் எனது அலுவலகத்தை அமைப்பது என்று தீர்மானித்தேன்.

டிரான்ஸ்வால் சுப்ரீம் கோர்ட்டில் என்னை வக்கீலாகப் பதிவு செய்துகொள்ளுவார்களா என்பது சந்தேகமாகவே இருந்தது. ஆனால், வக்கீல்கள் சங்கம் என் மனுவை எதிர்க்கவில்லை. கோர்ட்டும் அங்கீகரித்துவிட்டது. தகுதியான இடத்தில் அலுவலகத்திற்கு அறைகளை அமர்த்திக்கொள்ளுவது என்பது இந்தியருக்குக் கஷ்டமானதாகவே இருந்தது. ஸ்ரீ ரிச் என்பவர் அப்பொழுது அங்கே வர்த்தகராக இருந்தார். அவருடன் எனக்கு நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. அவருக்குத் தெரிந்த வீட்டுத் தரகர் ஒருவருடைய முயற்சியின் பேரில் நகரில் வக்கீல்கள் இருக்கும் பகுதியில் என் அலுவலகத்திற்குத் தகுதியான அறைகள் எனக்குக் கிடைத்தன. என் தொழில் சம்பந்தமான வேலையையும் தொடங்கினேன்.

## 4

# தியாக உணர்ச்சி மிகுந்தது

டிரான்ஸ்வாலில் குடியேறிய இந்தியரின் உரிமைக்காகவும், ஆசியாக்காரர் இலாகாவின் சம்பந்தமாகவும் நடந்த போராட்டத்தைக் குறித்து நான் கூறும் முன்பு, என் வாழ்க்கையின் வேறு சில அம்சங்களைப்பற்றியும் நான் கூற வேண்டும்.

இதுவரையில் எனக்குக் கலப்பானதோர் ஆர்வமே இருந்து வந்தது. தன்னலத் தியாகம் செய்ய வேண்டும் என்ற உணர்ச்சியை, வருங்காலத்திற்கு ஏதாவது பொருள் சேர்த்துவைக்க வேண்டும் என்ற ஆர்வம் மிதப்படுத்திக்கொண் டிருந்தது.

பம்பாயில் நான் என் அலுவலகத்தை அமைத்த சமயம், ஓர் அமெரிக்க இன்ஷூரன்ஸ் ஏஜெண்டு அங்கே வந்தார். அவர் நல்ல முகவெட்டும் இனிக்கப் பேசும் திறமையும் உள்ளவர். நாங்கள் ஏதோ வெகு காலம் பழகிய நண்பரைப்போல அவர் என்னிடம் என் வருங்கால நலனைக் குறித்து விவாதித்தார். "அமெரிக்காவில் உங்கள் அந்தஸ்தில் உள்ளவர்கள் எல்லோரும் தங்கள் ஆயுளை இன்ஷூர் செய்திருக்கிறார்கள். எதிர்காலத்தை முன்னிட்டு நீங்களும் இன்ஷூர் செய்துகொள்ள வேண்டாமா? வாழ்வு நிச்சயமில்லாதது. அமெரிக்காவிலுள்ள நாங்கள், இன்ஷூர் செய்துகொண்டுவிட வேண்டியதை ஒரு மதக் கடமையாகவே கருதுகிறோம். நீங்களும் ஒரு சிறு தொகைக்கு இன்ஷூர் செய்துகொள்ளுமாறு நான் உங்களைத் தூண்டக் கூடாதா?" என்றார், அவர்.

இந்தச் சமயம் வரையில், தென்னாப்பிரிக்காவிலும் இந்தியாவிலும், நான் சந்தித்த இன்ஷூரன்ஸ் ஏஜெண்டுகள் கூறியதற்கெல்லாம் செவி கொடுக்காமல் இருந்திருக்கிறேன். ஆயுள் இன்ஷூர் செய்வதென்பது பயத்தையும், கடவுளிடம் நம்பிக்கையின்மையையும் காட்டுவதாகும் என்று நான் எண்ணினேன்.

ஆனல், இப்பொழுதோ அமெரிக்க ஏஜெண்டு காட்டிய ஆசைக்குப் பலியாகி விட்டேன். அவர் தமது வாதத்தைச் சொல்லிக்கொண்டிருந்தபோது என் மனக் கண்ணின் முன்பு என் மனைவியும் குழந்தைகளும் நின்றனர். 'உன் மனைவியின் நகைகள் எல்லாவற்றையுமே நீ விற்றுவிட்டாய்' என்று எனக்கு நானே சொல்லிக்கொண்டேன். 'உனக்கு ஏதாவது நேர்ந்துவிட்டால், அவளையும் குழந்தைகளையும் பராமரிக்கும் பாரம், உன் ஏழைச் சகோதரர் தலைமீது விழும். அவரோ, உனக்குத் தந்தைபோல் இருந்து எவ்வளவோ பெருந்தன்மையுடன் நடந்து வந்திருக்கிறார். அப்படியிருக்க மேலும் அவர்மீது பாரத்தைச் சுமத்துவது உனக்குத் தகுமா?' இதுவும் இதுபோன்ற வாதங்களும் என்னுள் எழுந்தன. இவை, ரூ. 10,000-க்கு இன்ஷூர் செய்யுமாறு என்னைத் தூண்டிவிட்டன.

ஆனல், தென்னப்பிரிக்காவில் என் வாழ்க்கை முறை மாறியதோடு என் மனப்போக்கும் மாறுதலடைந்தது. சோதனையான இக்காலத்தில் நான் செய்த ஒவ்வொரு காரியத்தையும் கடவுளின் பெயரால், அவர் பணிக்கு என்றே செய்து வந்தேன். தென்னப்பிரிக்காவில் நான் எவ்வளவு காலம் இருக்கவேண்டியிருக்கும் என்பது தெரியாது. இந்தியாவுக்குத் திரும்ப முடியாமலே போய்விடுமோ என்ற ஒரு பயமும் எனக்கு இருந்தது. ஆகவே, என் மனைவியையும் குழந்தைகளையும் என்னுடன் வைத்துக்கொண்டு அவர்களைப் பராமரிப்பதற்கு வேண்டியதைச் சம்பாதிப்பது என்று தீர்மானித்தேன். இத்திட்டம் நான் ஆயுள் இன்ஷூரன்ஸ் செய்திருந்ததற்காக வருந்தும்படி செய்தது. இன்ஷூரன்ஸ் ஏஜெண்டின் வலையில் விழுந்துவிட்டதற்காக வெட்கப்பட்டேன். என் சகோதரர் உண்மையாகவே என் தந்தையின் நிலையில் இருப்பதாக இருந்தால், என் மனைவி விதவை யாகிவிடும் நிலைமையே ஏற்பட்டாலும், அவளைப் பாதுகாப்பதை அதிகப்படியான சுமை என்று அவர் கருதமாட்டார். மற்றவர்களைவிட நான் சீக்கிரத்தில் இறந்து போவேன் என்று நான் எண்ணிக்கொள்ளுவதற்குத்தான் என்ன காரணம் இருக்கிறது? பார்க்கப்போனல், உண்மையில் காப்பாற்றுகிறவர் எல்லாம் வல்ல கடவுளே யன்றி நானே, என் சகோதரரோ அல்ல. நான் ஆயுள் இன்ஷூரன்ஸ் செய்ததனல், என் மனைவியும் குழந்தைகளும் சுய பலத்தில் நிற்க முடியாதவாறு செய்துவிட்டேன். அவர்கள், தங்களைத் தாங்களே கவனித்துக்கொள்ளுவார்கள் என்று ஏன் எதிர்பார்க்கக் கூடாது? உலகத்தில் இருக்கும் எண்ணற்ற ஏழைக் குடும்பங்களுக்கு என்ன நேர்ந்திருக்கிறது? அவர்களில் நானும் ஒருவனே என்று நான் ஏன் கருதிக்கொள்ளக் கூடாது?' இவ்வாறு எனக்கு நானே சொல்லிக்கொண்டேன்.

இவ்விதமான எண்ணற்ற எண்ணங்கள் என் மனத்தில் தோன்றிக்கொண்டிருந்தன. ஆனல், அவற்றின்படி நானே

உடனேயே ஒன்றும் செய்துவிடவில்லை. தென்னாப்பிரிக்காவுக்குத் திரும்பிய பிறகு இன்ஷூரன்ஸுக்கு ஒரு தவணையாவது பணம் கட்டியதாகவே எனக்கு ஞாபகம்.

இவ்விதமான எண்ணப் போக்குக்கு வெளிச் சந்தர்ப்பங்களும் உதவியாக இருந்தன. நான் முதல் தடவை தென்னாப்பிரிக்காவில் தங்கியபோது, கிறிஸ்தவர்களின் தொடர்பே சமய உணர்ச்சி என்னுள் குன்றாமல் இருக்கும்படி செய்து வந்தது. இப்பொழுதோ, பிரம்மஞான சங்கத்தினரின் தொடர்பு, அதற்கு அதிக பலத்தை அளித்தது. ஸ்ரீ ரிச், பிரம்ம ஞான சங்கத்தைச் சேர்ந்தவர். ஜோகன்னஸ்பர்க்கிலிருக்கும் அச் சங்கத்துடன் எனக்குத் தொடர்பு ஏற்படும்படி அவர் செய்தார். அதற்கும் எனக்கும் அபிப்பிராய பேதம் இருந்ததால், அச் சங்கத்தில் நான் அங்கத்தினன் ஆகவில்லை. ஆனால், அநேகமாக அச் சங்கத்தினர் ஒவ்வொருவருடனும் நான் நெருங்கிப் பழகினேன். ஒவ்வொரு நாளும் சமய சம்பந்தமாக அவர்களுடன் விவாதிப்பேன். பிரம்மஞான நூல்களிலிருந்து சில பகுதிகளை அங்கே படிப்போம். சில சமயங்களில் அவர்கள் கூட்டங்களில் பேசும் வாய்ப்பும் எனக்கு இருந்தது. பிரம்ம ஞான சங்கத்தின் முக்கியமான விஷயம், சகோதரத்துவ எண்ணத்தை வளர்த்துப் பரப்புவதாகும். இதைக் குறித்து எவ்வளவோ விவாதித்திருக்கிறோம். அங்கத்தினர்களின் நடத்தை, அவர்களுடைய கொள்கைக்குப் பொருத்தமானதாக இல்லாத சமயங்களில் அவர்களை நான் குறை கூறுவேன். இவ்விதம் குறைகூறி வந்ததால், என்னளவில் நன்மை ஏற்படாமல் போகவில்லை. என்னையே நான் சோதனை செய்து பார்த்துக்கொள்ளுமாறு அது செய்தது.

## 5

## ஆன்ம சோதனையின் பலன்

**1893**-இல் கிறிஸ்தவ நண்பர்களுடன் எனக்குத் தொடர்பு ஏற்பட்டபோது நான் ஒன்றும் தெரியாதவனாகவே இருந்தேன். ஏசுவின் உபதேச மேன்மையை நான் உணர்ந்து அதை ஏற்றுக்கொண்டுவிடும்படி செய்வதற்கு அவர்கள் பெரு முயற்சி எடுத்துக்கொண்டார்கள். நானோ, திறந்த மனத்துடன் அவர்கள் கூறியதையெல்லாம் அடக்கத்தோடும் மரியாதையோடும் கேட்டுக்கொண்டேன். அச்சமயம் என் சக்திக்கு எட்டிய வரையில் இயற்கையாகவே ஹிந்து சமயத்தைக் குறித்து நான் படித்து வந்ததோடு மற்றச் சமயங்களைப்பற்றியும் புரிந்துகொள்ள முயன்று வந்தேன்.

*1903*-ஆம் ஆண்டிலோ, நிலைமை ஓரளவுக்கு மாறுதல் அடைந்து விட்டது. பிரம்மஞான சங்க நண்பர்கள், என்னை அச் சங்கத்திற்குள் இழுத்துவிட நிச்சயமாக முயன்றே

வந்தனர். ஹிந்து என்ற முறையில் என்னிடமிருந்து ஏதாவது அறிந்துகொள்ளலாம் என்ற நோக்கத்தின் பேரிலேயே அவ்வாறு முயன்றார்கள். பிரம்மஞான சங்க நூல்களில் ஹிந்து தருமத்தைப்பற்றிய விஷயங்கள் நிறைந்திருக்கின்றன. ஆகையால், நான் அவர்களுக்கு உதவியாக இருக்கக்கூடும் என்று இந்த நண்பர்கள் கருதினார்கள். சமஸ்கிருத மொழி எனக்கு அவ்வளவாக நன்றாகத் தெரியாது என்றும், ஹிந்து சமய நூல்களை நான் மூல மொழியில் படித்ததில்லை என்றும், மொழி பெயர்ப்புக்களை நான் படித்ததுகூட மிகக் குறைவே என்றும் அவர்களுக்கு விளக்கிச் சொன்னேன். ஆனால், சம்ஸ்காரம் அல்லது பூர்வ ஜன்ம வாசனை, மறுபிறப்பு ஆகியவைகளில் அவர்கள் நம்பிக்கையுள்ளவர்களாகையால், நான் கொஞ்சமாவது தங்களுக்கு உதவியாக இருக்க முடியும் என்று அவர்கள் எண்ணினார்கள். ஆகவே, 'ஆலையில்லா ஊருக்கு இலுப்பைப் பூ சர்க்கரை' என்பது போலானேன். இந்த நண்பர்கள் சிலருடன் சேர்ந்து சுவாமி விவேகானந்தரின் 'ராஜயோகம்' என்ற நூலைப் படிக்க ஆரம்பித்தேன். எம். என். துவிவேதி எழுதிய 'ராஜயோகம்' என்ற நூலை, வேறு சிலருடன் சேர்ந்து படித்தேன். ஒரு நண்பருடன் பதஞ்சலியின் யோக சூத்திரங்களையும், மற்றும் பலருடன் பகவத்கீதையையும் நான் படிக்க வேண்டியதாயிற்று. ஒரு வகையான மெய் நாடுவோர் சங்கத்தை நாங்கள் அமைத்துக் கொண்டு ஒழுங்காக நூல்களைப் படித்து வந்தோம். கீதையினிடம் இதற்கு முன்பே எனக்குப் பக்தி இருந்தது; அது என் உள்ளத்தைக் கவர்ந்தும் இருந்தது. அதை ஆழ்ந்து படிக்க வேண்டியதன் அவசியத்தை இப்பொழுது உணர்ந்தேன். என்னிடம் கீதையின் இரண்டொரு மொழிபெயர்ப்புக்கள் இருந்தன. அவற்றைக்கொண்டு சமஸ்கிருத மூல நூலைப் புரிந்துகொள்ள முயன்றேன். தினம் இரண்டொரு சுலோகத்தை மனப்பாடம் செய்துவிடுவது என்றும் தீர்மானித்தேன். எனது காலைக் கடன்களைச் செய்யும் நேரத்தை இதற்குப் பயன் படுத்திக்கொண்டேன். இவ்வேலைகளை முடிப்பதற்கு எனக்கு முப்பத்தைந்து நிமிடங்களாகும். பல் துலக்குவதற்குப் பதினைந்து நிமிடங்கள்; குளிக்க இருபது நிமிடங்கள். மேனாட்டு வழக்கத்தை அனுசரித்து, நின்றுகொண்டே பல் துலக்குவேன். அப்போது எதிரேயுள்ள சுவரில் கீதையின் சுலோகங்களை எழுதிய காகிதத்தை ஒட்டிவிடுவேன். நினைவுபடுத்திக்கொள்ள அவ்வப்போது அதைப் பார்த்துக்கொள்ளுவேன். அன்றாடம் மனப்பாடம் செய்துகொள்ள வேண்டிய சுலோகங்களை மனப்பாடம் செய்துகொள்ளுவதற்கும், முன்னால் மனப்பாடம் செய்திருந்த சுலோகங்களை நினைவுபடுத்திக்கொள்ளுவதற்கும் எனக்கு அந்த நேரம் போதுமானதாக இருந்தது. இவ்வாறு பதின்மூன்று அத்தியாயங்களை மனப்பாடம் செய்துவிட்டதாக எனக்கு ஞாபகம். ஆனால், வேறு வேலைகள் அதிகமாகிவிட்ட போது கீதையை மனப்பாடம் செய்வதை விட்டுவிட வேண்டியதாயிற்று. சிந்திப்பதற்கு எனக்கு இருந்த நேரத்தையெல்லாம்,

சத்தியாக்கிரகத்தின் பிறப்பும் அதன் வளர்ச்சியும் கிரகித்துக் கொண்டு விட்டன. இன்றுவரை நிலைமை அவ்வாறே இருந்து வருகிறது எனலாம்.

கீதையைப் படித்தது, மற்ற நண்பர்களிடையே என்ன மாறுதலை உண்டாக்கியது என்பதை அவர்களே கூற முடியும். ஆனால், என்னைப் பொறுத்தவரையில், எனக்கு வழிகாட்டும் தவறாத் துணையாகக் கீதை ஆகிவிட்டது. சந்தேகம் தோன்றும் போதெல்லாம் புரட்டிப் பார்த்துக்கொள்ளும் அகராதிபோல அது எனக்கு ஆயிற்று. தெரியாத ஆங்கிலச் சொற்களின் பொருளை அறிவதற்கு நான் ஆங்கில அகராதியைப் புரட்டிப் பார்ப்பதுபோல், எனக்கு ஏற்படும் கஷ்டங்களுக்கும் சோதனைகளுக்கும் உடனே பரிகாரங்களைக் கண்டுகொள்ள இந்த ஒழுக்க நெறி அகராதியைப் புரட்டுவேன். அபரிக்கிரகம் (உடைமை வைத்துக்கொள்ளாமை), சமபாவம் (சமத்துவம்) போன்ற சொற்கள் என் உள்ளத்தைக் கவர்ந்தன. அந்தச் சமபாவத்தை எப்படி வளர்ப்பது, எப்படிப் பாதுகாப்பது என்பதே பிரச்னை. சிலர் நம்மை அவமதிப்பவர்கள்; மற்றும் சிலர் லஞ்சம் வாங்கும் அதிகாரிகள்; நேற்றுச் சக ஊழியர்களாக இருந்தவர்கள் இன்று அர்த்தமில்லாத எதிர்ப்புக்களையெல்லாம் கிளப்புகிறார்கள்; இவர்க ளல்லாமல் எப்பொழுதுமே நல்லவர்களாக இருந்து வருபவர்களும் இருக்கிறார்கள் - இவர்கள் எல்லோரையுமே ஒருவர் சமபாவத்துடன் நோக்குவது எப்படி? உடைமை எதுவுமே இல்லாதிருப்பதும் எவ்வாறு? நம் உடம்பே ஓர் உடைமை அல்லவா? மனைவியும் குழந்தைகளும் உடைமைகளல்லவா? என்னிடம் அலமாரி நிறைய இருக்கும் புத்தகங்களையெல்லாம் நான் கொளுத்திவிட வேண்டுமா? எனக்கு இருப்பவற்றை யெல்லாம் விட்டுவிட்டுக் கடவுளைப் பின்பற்ற வேண்டுமா? இதற்கெல்லாம் உடனே நேரான பதில் கிடைத்தது. 'என்னிடம் இருப்பவைகளை யெல்லாம் நான் துறந்துவிட்டாலன்றிக் கடவுள் நெறியை நான் பின்பற்ற முடியாது' என்பதே அந்தப் பதில். ஆங்கிலச் சட்டத்தைக் குறித்து நான் படித்திருந்ததும் எனக்கு உதவி செய்தது. சம நீதியின் தத்துவத்தைக் குறித்து ஸ்னெல் எழுதியிருந்த விளக்கம் என் நினைவுக்கு வந்தது. கீதையின் உபதேசத்தை அனுசரித்துக் கவனித்தபோது 'தருமகர்த்தா' என்ற சொல்லின் பொருள் எனக்கு மிகத் தெளிவாகவிளங்கியது. நீதி சாத்திரத்தினிடம் எனக்கு இருந்த மதிப்பு அதிகரித்தது. மத தருமத்தை நான் அதில் கண்டேன். உடைமை கூடாது என்று கீதை உபதேசிப்பதன் உண்மைக் கருத்தையும் உணர்ந்தேன். 'மோட்சத்தை அடைய விரும்புகிறவர்கள், தம்மிடம் இருக்கும் உடைமைகள் விஷயத்தில் தருமகர்த்தா போன்று நடந்துகொள்ள வேண்டும்; தருமகர்த்தாவின் ஆதிக்கத்தில் எவ்வளவுதான் சொத்துக்க ளிருந்தாலும் அதில் ஒரு சிறிதும் தனக்குச் சொந்தமான தல்ல என்று அவர் எண்ணுவது போல எண்ண வேண்டும்' என்பதே அதன் பொருள் எனக்

கண்டேன். உடைமையின்மைக்கும், எல்லோரையும் சமமாகப் பாவிப்பதற்கும், மனமாற்றமும், நடத்தையில் மாறுபாடும் ஏற்படுவது முதல் அவசியம் என்று பட்டப்பகல் போல எனக்கு வெட்ட வெளிச்சமாகப் புலனாயிற்று. என் மனைவியையும் குழந்தைகளையும் என்னையும் படைத்த கடவுள், எங்களைக் காப்பாற்றிக்கொள்ளுவார் என்பதில் திடமான உறுதி கொண்டேன். உடனே நான் ரேவாசங்கர்பாய்க்கு எழுதி, இன்ஷூரன்ஸுக்கு மேற்கொண்டு பணம் கட்ட வேண்டாம் என்று அறிவித்தேன். இதுவரை கட்டிய பணத்தில் கிடைக்கக் கூடியதைப் பெறப் பார்க்கும்படியும், இல்லாவிட்டால் அத் தொகையைப் போனதாகவே வைத்துக்கொள்ளும்படியும் எழுதினேன். எனக்குத் தந்தையேபோல் இருந்து வந்தவரான என் சகோதரருக்கும் கடிதம் எழுதினேன். அதுவரையில் நான் மிச்சமாக வைக்க முடிந்ததையெல்லாம் நான் அவருக்கே கொடுத்துவிட்டதாகவும், இனி என்னிடமிருந்து அவர் வேறு எதுவும் எதிர்பார்ப்பதற்கு இல்லை என்றும், மேற்கொண்டும் என்னிடம் ஏதாவது மீதமிருக்குமானால் அதை இந்திய சமூகத்தின் நன்மைக்காகவே செலவிட வேண்டியிருக்கிறது என்றும் அவருக்கு விளக்கினேன்.

என் சகோதரர் இதை எளிதாக அறிந்துகொள்ளும்படி செய்ய என்னால் ஆகவில்லை. அவருக்கு நான் செய்யக் கடமைப்பட்டிருப்பதை விளக்கி அவர் எனக்குக் கடுமையான பாஷையில் கடிதம் எழுதினார். எங்கள் தந்தையைவிட நான் அதிகப் புத்திசாலியாகி விட்டதாக எண்ணிக்கொண்டுவிட வேண்டாம் என்றார். தாம் செய்ததைப் போன்றே நானும் குடும்பத்தைப் பராமரிக்க வேண்டும் என்று எழுதினார். தந்தையார் என்ன செய்தாரோ அதையே நான் செய்துவருகிறேன் என்பதைக் குறிப்பிட்டு அவருக்கு எழுதினேன்* 'குடும்பம்' என்பதன் பொருளைக் கொஞ்சம் விரிவுபடுத்திக்கொண்டால், நான் மேற்கொண்ட காரியத்தின் விவேகம் நன்கு தெளிவாகும்.

---

* காந்திஜி, தமது தமையனார் லட்சுமிதாஸ் காந்திக்கு அப்பொழுது எழுதிய கடிதம் இதுதான் :

ஜோகன்னஸ்பர்க்,
27—5—1906

"மதிப்பிற்குரிய சகோதரருக்கு,

ஏப்ரல் 17-ஆம் தேதியிட்ட தங்கள் கடிதம் கிடைக்கப் பெற்றேன். என்ன சொல்லுவதென்று எனக்குத் தெரியவில்லை. தாங்கள் என்னைப் பற்றித் தவறாக நினைத்துவிட்டீர்கள். தப்பெண்ணத்துக்கு மாற்று மருந்தே கிடையாது. நான் எதுவும் செய்ய இயலாதவனாக இருக்கிறேன். தங்கள் கடிதத்துக்குப் பூரணமாகப் பதில் எழுதத்தான் என்னால் முடியும்.

1. தங்களிடமிருந்து பிரிந்துவிட வேண்டுமென்ற எண்ணம் எதுவும் எனக்கு இல்லை.

2. அங்குள்ள எதனிடமும் நான் உரிமை கொண்டாடவில்லை.

என் சகோதரர் என்னைக் கைவிட்டு விட்டார். கடிதம் எழுதுவதைக்கூட அடியோடு நிறுத்திவிட்டார். இதனால், அதிக மான வருத்தம் அடைந்தேன். ஆனால், என் கடமை என்று நான் கருதியதைக் கைவிடுவ தென்பதோ இன்னும் அதிக மன வேதனையைத் தருவ தாகிவிடும். ஆகையால், குறைவான மனக்

---

3. எதையும் எனக்குச் சொந்தம் என்று நான் உரிமை கொண்டாடவில்லை.

4. என்னிடமுள்ள எல்லாமே பொதுக்காரியங்களுக்குப் பயன்படுத்தப்பட்டு வருகிறது.

5. பொதுப்பணியில் தங்களை ஈடுபடுத்திக்கொள்ளும் உறவினர்களும் அதைப் பயன்படுத்திக்கொள்ளலாம்.

6. என்னுடைய அனைத்தையுமே நான் பொதுஜன உபயோகத்துக்கு அர்ப் பணித்திராவிட்டால், தங்கள் பண விருப்பத்தை நான் பூர்த்தி செய்திருக்க முடியும்.

சகோதரர்களுக்கோ, மற்ற உறவினர்களுக்கோ நான் நிறையச் செய்திருப்பதாக ஒருபோதும் கூறியதில்லை. என்னால் மிச்சப்படுத்த முடிந்ததையெல்லாம் அவர்களுக்கு நான் கொடுத்தேன். இதையும் நான் நண்பர்களிடம் மட்டுமே சொன்னேன்; அதுவும் பெருமையோடு சொன்னதில்லை.

ஒருவேளை தாங்கள் எனக்கு முன்னதாகக் காலமாகிவிடும் பட்சத்தில் குடும்ப பாரத்தை நான் மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொள்ளுவேன். இதைப் பற்றித் தங்களுக்குச் சந்தேகமோ, பயமோ வேண்டியதில்லை.

தாங்கள் விரும்புகிறபடி நான் பணம் அனுப்பும் நிலையில் தற்சமயம் இல்லை.

ஹரிலால் கல்யாணம் செய்துகொண்டால் அது நல்லதுதான்; செய்துகொள்ளா விட்டாலும் நல்லதுதான். இப்போது அவனை ஒரு மகன் என்றே நான் நினைக்கவில்லை

சாத்தியமானால் மணியின் கல்யாணத்துக்காக நான் இந்தியாவுக்கு வர விருப்ப முடையவனாக இருக்கிறேன். ஆனால், எனது இன்றைய நிலை பற்றித் தங்களுக்கு நான் எதுவும் கூற இயலாது. நேரம் கிடைக்காமல் நான் மிகவும் கஷ்டப்படுகிறேன். என்ன செய்வது என்றுகூட எனக்குத் தெரியவில்லை. தயவுசெய்து கல்யாணத் தேதியைத் தெரிவித்துத் தந்தி கொடுங்கள். சாத்தியமானால் புறப்படுவதற்கு நான் தயார் செய்து கொள்ளலாம் அல்லவா?

ரேவாசங்கர்பாயிடம் நான் கடன்பட்டிருக்கிறேன் என்பதைத் தங்களுக்குத் தெரிவிக்கலாம் என்று நினைக்கிறேன்.

என்னைத் தாங்கள் புறக்கணித்து உதறிவிடக் கூடும். ஆனாலும், நான் எப்பொழு தும் போலவே தங்கள் விஷயத்தில் நடந்துகொள்ளுவேன்.

நான் அங்கே இருந்தபோது தங்களிடமிருந்து பிரிந்துவிட விரும்புவதாகச் சொன்னதாக எனக்கு ஞாபகம் இல்லை. அப்படிச் சொல்லியிருந்த போதிலுங்கூட, இப்போது என் மனம் மிகுந்த தெளிவோடு இருக்கிறது; என் அபிலாஷைகள் உயர்ந் தவையாக இருக்கின்றன. எந்தவிதமான உலக இன்பங்களிலும் எனக்கு இப்போது ஆசை இல்லை.

என்னுடைய தற்போதைய நடவடிக்கைகள் வாழ்க்கைக்கு அத்தியாவசிய மானவை என்று நான் கருதுவதால் அவற்றில் ஈடுபட்டிருக்கிறேன். இதில் எனக்கு மரணம் சம்பவிப்பதாக இருந்தாலும், அதையும் மனச்சஞ்சலமின்றி ஏற்றுக்கொள்ளு வேன். இப்பொழுது எனக்குப் பயம் என்பதே இல்லை.

உள்ளத்தில் தூய்மையோடு இருப்பவர்களை நான் விரும்புகிறேன். சின்ன வரான கல்யாணதாஸ், ஜகமோகன்தாஸின் குமாரர் மன உணர்ச்சியில் பிரகலாதனைப் போல இருக்கிறார். அதனால் எனக்கு மகனாகப் பிறந்துவிட்ட ஒருவனைவிட அவர் அதிகமாக என் அன்பிற்குரியவராக இருக்கிறார்.

—மோ. க. காந்தி."

கஷ்டத்தை அளிப்பதாக இருப்பதைச் செய்தேன். ஆனால், அது என் சகோதரரிடம் எனக்கு இருந்த பக்தியைப் பாதிக்கவில்லை. அது எப்பொழுதும்போல் தூயதாகவும் அதிகமாகவுமே இருந்து வந்தது. என்மீது அவர் வைத்திருந்த அபாரமான அன்பே அவருடைய துயரத்திற் கெல்லாம் காரணம். குடும்பத்தின் விஷயத்தில் நான் சரியாக நடந்துகொள்ள வேண்டும் என்று விரும்பினாரே யன்றி என் பணத்தைப்பற்றி அவர் அவ்வளவாகக் கவலைப்பட வில்லை. அவருடைய வாழ்நாளின் அந்திய காலத்தில் என்னுடைய கருத்தின் சிறப்பை அவர் உணர்ந்தார். மரணத் தறுவாயிலிருந்த சமயம். நான் செய்ததே சிறந்த காரியம் என்பதைத் தெரிந்துகொண்டு எனக்கு உருக்கமான கடிதம் ஒன்றும் எழுதினார். தந்தை தனயனிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுவதைப்போல் அவர் என்னிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். தமது புதல்வர்களை என்னிடம் ஒப்படைப்பதாகவும் எனக்குச் சரி என்று தோன்றும் வழியில் அவர்களை வளர்க்குமாறும் அறிவித்தார். என்னைப் பார்க்க வேண்டும் என்ற ஆர்வத்தால் துடித்துக்கொண் டிருப்பதாகவும் எழுதினார். தென்னாப்பிரிக்காவுக்கு வரத் தாம் விரும்புவதாகத் தந்தி கொடுத்தார். அவரை வருமாறு பதிலுக்குத் தந்தி கொடுத்தேன். ஆனால், கடவுள் சம்மதம் இல்லாமல் போயிற்று. அவருடைய புதல்வர்களைக் குறித்து அவர் விரும்பியதும் நிறைவேற வில்லை. தென்னாப்பிரிக்காவுக்குப் புறப்படுவதற்கு முன்பே அவர் இறந்துவிட்டார்* அவருடைய குமாரர்கள் பழைய சூழ்நிலையில் வளர்ந்தவர்கள்.

---

* தமது சகோதரர் இறந்துவிட்டார் என்பதை அறிந்ததும் மனவேதனை மிகுந்தவராய் கால்லென்பாக்குக்கு மகாத்மா எழுதிய கடிதம் வருமாறு :

"7, பிட்டன்சிங்கிள், கேப் டவுன்,
மார்ச் 16, '14

"கற்பனை செய்து பார்க்கக்கூடாத மிகப் பெரிய துக்கத்துக்கு நான் ஆளாகியிருக்கிறேன். நேற்று என் சகோதரர் காலமாகிவிட்டார். கடைசி மூச்சு வரையிலும் அவர் என்னைப்பற்றியே நினைத்துக்கொண்டு இருந்திருப்பார் என்று எண்ணுகிறேன் என்னைப் பார்க்க வேண்டுமென்று அவர் எவ்வளவு தாகத்துடன் இருந்தார்! இந்தியாவுக்கு வெகு சீக்கிரத்தில் சென்று, அவருடைய பாதங்களில் விழுந்து, அவருக்குப் பணிவிடை செய்ய வேண்டும் என்பதற்காக ஒவ்வொரு வேலையையும் மிகத் துரிதமாகச் செய்துகொண்டிருந்தேன். ஆனால், அதற்கு வழியில்லாமல் போய்விட்டது. இப்போது விதவைகளாக உள்ள ஒரு குடும்பத்துக்குத்தான் நான் போக வேண்டும். அந்தக் குடும்பத்துக்கு இப்போது இந்த ஏழை ஆத்மாதான் தலைவன். இந்தியக் குடும்ப முறைகளைப் பற்றித் தெரியாத உங்களால் இதன் பொருள் என்ன என்பதை உணர்ந்து கொள்ள முடியாது. எப்படியும் இந்தியாவுக்குப் போக வேண்டுமென்ற ஆசை எப்போதையும்விட இப்போது எனக்கு அதிகமாக இருக்கிறது. அதை யார்தான் அறிவார்கள்? அந்த ஆசை எப்போதாவது நிறைவேறுமா என்பது எனக்கு மிகவும் சந்தேகமாகவே இருக்கிறது. ஆனாலும், நான் யாத்திரைக்குத் தயார் செய்தே யாகவேண்டும். அதன்பின் யாத்திரையைச் சர்வவல்லமையுள்ள ஆண்டவனின் கரங்களில் ஒப்படைத்து விட வேண்டும்.

இந்த அதிர்ச்சிகள் மரணத்தினிடம் எனக்குள்ள பயமின்மையை வலுப்படுத்துகின்றன. மரண சம்பவம் யாரையும் ஏன் கலங்க வைக்க வேண்டும்? துக்கத்திலேயே

ஆகையால், அவர்கள் தங்களுடைய வாழ்க்கையின் போக்கை மாற்றிக்கொள்ள முடியவில்லை. அவர்களை என்பால் இழுத்துக் கொள்ளவும் என்னால் ஆகவில்லை. அது, அவர்கள் குற்றமன்று. இயற்கையான குணத்தை மாற்றிவிட யாரால்தான் முடியும்? பிறப்போடேயே வந்துவிட்ட எண்ணங்களை யார்தான் மாற்றிக் கொண்டுவிட முடியும்? தாம் வளர்ச்சி பெற்ற வகையிலேயே தம் புதல்வர்களும், தமது பராமரிப்பில் இருப்போரும் வளர்ச்சி யடைவார்கள் என்று எதிர்பார்ப்பது வீண் ஆசை. பெற்றோரா யிருப்பது எவ்வளவு பயங்கரமான பொறுப்பு என்பதைக் காட்டு வதற்கு இந்த உதாரணம் ஓரளவுக்குப் பயனுள்ளதாகிறது.

# 6

# சைவ உணவுக் கொள்கைக்கு இட்ட பலி

தியாகம், எளிமை என்ற லட்சியங்கள் என் அன்றாட வாழ்க் கையில் மேலும் மேலும் அதிகமாக நிறைவேறி வந்தன. சமய உணர்ச்சியும் மேலும் மேலும் துரிதமாக எனக்கு ஏற்பட்டு வந் தது. அதே சமயம், சைவ உணவுக் கொள்கையைப் பரப்ப வேண்டுமென்ற ஆர்வமும் அதிகரித்துக் கொண்டே வந்தது. ஒரு கொள்கையைச் சரியானபடி பரப்ப வேண்டுமானால் அதற்கு எனக்குத் தெரிந்தது ஒரே ஒரு வழிதான். அந்தக் கொள்கையை நானே கடைப்பிடித்துக் காட்டுவதும், அறிவை வளர்த்துக்கொள்ள ஆராய்ச்சி செய்பவர்களுடன் விவாதிப் பதுமே அந்த வழி.

---

ஒரு சுயநலத்தன்மையும் இருக்கிறது. மரணம் அடைவதற்கு நான் தயாராக இருந் தால் வாழ்க்கையில் தலைசிறந்த, வரவேற்கத்தக்க நெருக்கடியாக மரணத்தை நான் கருதினால், என் சகோதரர் இறந்தது ஒரு நஷ்டமல்ல. நமது மரணத்தை எண்ணி நாம் அதிகமாகப் பயப்படுவதால்தான், மற்றவர்களின் மரணத்திற்காகக் கண்ணீர் சொரிகிறோம். சரீரம் அழியக்கூடியது என்றும், ஆன்மா அழிவற்றது என்றும் அறிந்த நான், ஆன்மாவிடமிருந்து சரீரம் பிரிந்ததற்காக எப்படித் துக்கப்பட முடியும்? ஆனால், அந்த நிலை, உண்மையான நம்பிக்கையுடனும், ஆறுதல் அளிக்கும் கோட்பாட்டுடனும் இணைக்கப்பட்டதாக இருக்கிறது. அதை நம்புகிறவன் சரீரத்தின் சுகானுபவங்களுக்கு இடம் கொடுக்காமல், சரீரத்தை அடக்கி ஆளுபவனாக இருக்க வேண்டும். அவன் தன்னுள் குடிகொண்டிருப்பவனுக்குப் பணி புரியக்கூடிய வகையில் தன்னுடைய தேவைகளை ஒழுங்குபடுத்திக்கொள்ள வேண்டுமே ஒழிய, சரீரம் தன்னை அடக்கியாளு வதற்கு விட்டுவிடக்கூடாது. பிறருடைய மரணத்துக்காகத் துக்கப்படாமல் இருப்பது, அநேகமாக நிரந்தரமான துக்கம் நிலவும் ஒரு நிலையை ஏற்றுக்கொள்ளுவதாக ஆகும். சரீரத்துக்கும் ஆன்மாவுக்குமிடையே உள்ள இந்தத் தொடர்பே துக்ககரமானதுதான்.

'இவையே, என்னை இப்போது ஆட்கொண்டுள்ள எண்ணங்களாகும். இப் போதைக்கு என்னால் மற்றொரு கடிதம் எழுத முடியாது. இந்தக் கடிதம் தன்னைத் தானே எழுதிக்கொண்டுவிட்டது.

—மோ. க. காந்தி."

ஜோகன்னஸ்பர்க்கில் ஒரு ஜெர்மானியர் சைவ உணவு விடுதி ஒன்றை நடத்திக் கொண்டிருந்தார். கூனேயின் நீர்ச் சிகிச்சையிலும் அந்த ஜெர்மானியர் நம்பிக்கை உடையவர். நான் அந்த விடுதிக்குப் போவது உண்டு. ஆங்கில நண்பர்களை அங்கே அழைத்துக் கொண்டு போயும் அதற்கு உதவி செய்தேன். ஆனால், அவ் விடுதி என்றுமே பணக் கஷ்டத்தில் இருந்ததால் அது நீடித்து நடக்க முடியாது என்பதைக் கண்டேன். அதற்கு எவ்வளவு தூரம் உதவி செய்யலாமோ அவ்வளவும் செய்தேன். கொஞ்சம் பணத்தையும் அதற்காகச் செலவிட்டேன். ஆயினும், கடைசியாக அதை மூடும்படியாயிற்று.

அநேகமாக எல்லாப் பிரம்மஞான சங்கத்தினரும் சைவ உணவுக்காரர்கள். அச் சங்கத்தைச் சேர்ந்த உற்சாகமுள்ள ஒரு பெண்மணி, சைவச் சாப்பாட்டு விடுதி ஒன்றைப் பெரிய அளவில் ஆரம்பிக்க முன்வந்தார். அவர் கலைகளில் அதிகப் பிரியமுள்ளவர். ஊதாரிக் குணமுள்ளவர். கணக்கு வைப்பதைப்பற்றி அவருக்கு ஒன்றுமே தெரியாது. அவருக்கு நண்பர்கள் அநேகர் உண்டு. முதலில் அவ் விடுதியைச் சிறிய அளவில் ஆரம்பித்தார். பிறகு அதை விரிவுபடுத்திப் பெரிய அறைகளை வாடகைக்கு அமர்த்திக்கொள்ள விரும்பினார். உதவி செய்யுமாறு என்னைக் கேட்டார். இவ்விதம் அவர் என் உதவியை நாடியபோது அவருடைய செல்வ நிலையைப்பற்றி எனக்கு எதுவுமே தெரியாது. ஆனால், அவருடைய திட்டம் அநேகமாகச் சரியாகவே இருக்கும் என்று நம்பினேன். அவருக்கு உதவி செய்யக் கூடிய நிலையில் நான் இருந்தேன். என்னுடைய கட்சிக்காரர்கள் பெருந் தொகைகளை என்னிடம் கொடுத்து வைப்பது வழக்கம். இதில் ஒரு கட்சிக்காரருடைய அனுமதியின் பேரில், என்னிடமிருந்த அவர் பணத்திலிருந்து சுமார் ஆயிரம் பவுனை அப் பெண்மணிக்குக் கொடுத்தேன். இந்தக் கட்சிக்காரர் பெருங்குணம் படைத்தவர்; நம்பக்கூடியவர். ஆரம்பத்தில் இவர் ஒப்பந்தத் தொழிலாளியாக தென்னாப்பிரிக்காவுக்கு வந்தவர். "நீங்கள் விரும்பினால் பணத்தைக் கொடுங்கள். இவ்விஷயங்களைப்பற்றி எனக்கு எதுவும் தெரியாது. எனக்கு உங்களைத்தான் தெரியும்" என்றார். இவர் பெயர் பத்ரி. பின்னால் இவர் சத்தியாக்கிரகப் போராட்டத்தில் தீவிர பங்கு எடுத்துக் கொண்டதோடு சிறைத் தண்டனையையும் அனுபவித்தார். இந்தச் சம்மதமே போதுமானது என்று கருதி அவருடைய பணத்தை அப் பெண்மணிக்குக் கொடுத்தேன்.

கொடுத்த பணம் வசூலாகாது என்று இரண்டு மூன்று மாதங்களில் எனக்குத் தெரிந்தது. இவ்வளவு பெரிய நஷ்டத்தை நான் பொறுக்க முடியாது. இத் தொகையை வேறு எத்தனையோ காரியங்களுக்கு நான் உபயோகித்திருக்கலாம். கடன் திரும்பி வரவே இல்லை. ஆனால், நம்பிய பத்ரி நஷ்டமடைய எப்படி அனுமதிக்க முடியும்? அவர் என்னை மாத்திரமே அறிவார். எனவே, அவர் நஷ்டத்தை ஈடுசெய்தேன்.

இந்தக் கொடுக்கல் வாங்கலைக் குறித்து நண்பரான ஒரு கட்சிக்காரரிடம் நான் கூறியபோது, அவர் நயமாக என் அசட்டுத்தனத்தைக் கண்டித்தார். அதிருஷ்டவசமாக நான் அப்பொழுது 'மகாத்மா' ஆகிவிடவில்லை. 'பாபு' (தந்தை) ஆகிவிடவுமில்லை. நண்பர்கள் அன்போடு என்னை 'ப்ராய்' (சகோதரர்) என்றே அழைத்து வந்தார்கள். அந்த நண்பர் கூறியதாவது: ''நீங்கள் இப்படிச் செய்திருக்கக் கூடாது. நாங்கள் எத்தனையோ காரியங்களுக்கு உங்களை நம்பியிருக்கிறோம். இத் தொகை உங்களுக்குத் திரும்பக் கிடைக்கப் போவதில்லை. உங்கள் கையிலிருந்து நீங்கள் அவருக்குக் கொடுத்துவிடுவீர்கள். ஆனால், உங்கள் சீர்திருத்தத் திட்டங்களுக்கெல்லாம் உங்கள் கட்சிக்காரர்களின் பணத்தைக் கொண்டு உதவி செய்து கொண்டே போவீர்களானால், அக் கட்சிக்காரர்கள் அழிந்து போவதோடு நீங்களும் சீக்கிரத்தில் பிச்சையெடுக்கும் நிலைமைக்கு வந்துவிடுவீர்கள். ஆனால், நீங்கள் எங்கள் தருமகர்த்தா. இதை நீங்கள் அறிவீர்கள். நீங்கள் பிச்சைக்காரராகிவிட்டால், நமது பொதுவேலைகளெல்லாம் நின்று போய்விடும்."

இந்த நண்பர் இன்னும் உயிருடன் இருக்கிறார் என்பதைச் சந்தோஷத்துடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். தென்னாப்பிரிக்காவிலோ, வேறு எங்குமோ, அவரைப் போலத் தூய்மையானவரை நான் இன்னும் கண்டதில்லை. தாம் யார் மீதாவது சந்தேகம் கொள்ள நேர்ந்து, தாம் சந்தேகித்தது சரியல்ல என்று பிறகு கண்டுகொண்டால், அவர் அவர்களிடம் போய் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு தம் மனத்தைத் தூய்மைப்படுத்திக் கொள்ளுவார். இதை அவர் பன்முறை செய்து நான் பார்த்திருக்கிறேன்.

அவர் எனக்குச் சரியானபடி எச்சரிக்கை செய்திருக்கிறார் என்பதைக் கண்டேன். ஏனெனில், பத்ரிக்கு ஏற்பட்ட நஷ்டத்தை நான் ஈடு செய்துவிட்டேனாயினும், இதே போன்ற வேறு நஷ்டத்தை நான் சமாளிக்க முடியாமல் போயிருக்கும். அந் நிலைமையில் நான் கடன்பட நேர்ந்திருக்கும். கடன்படுவது என்பதை என் வாழ்க்கையில் நான் என்றுமே செய்ததில்லை. அத்துடன் கடன்படுவதை எப்பொழுதுமே நான் வெறுத்தும் வந்திருக்கிறேன். ஒருவருடைய சீர்திருத்த உற்சாகம்கூட, அவர் தம் எல்லையை மீறிப் போய்விடும்படி செய்துவிடக்கூடாது என்பதை நான் உணருகிறேன். பிறர் நம்பிக் கொடுத்திருந்த பணத்தை இன்னொருவருக்குக் கடன் கொடுத்ததன் மூலம், கீதையின் முக்கியமான உபதேசத்தை மீறி நடந்துவிட்டேன் என்றும் கண்டேன். "பயனை எதிர்பாராது உன் கடமையைச் செய்'' என்பதே கீதையின் உபதேசம். இத் தவறு என்னை எச்சரிக்கும் சுடரொளிபோல ஆயிற்று.

சைவ உணவுக் கொள்கை என்ற பீடத்தில் இட்ட இந்தப் பலி மனமாரச் செய்ததும் அன்று; எதிர்பார்த்ததும் அல்ல. வேறு வழியில்லாமல் நடந்துவிட்டதே அது.

# 7

# மண், நீர் சிகிச்சை

என் வாழ்க்கை முறையை நான் எளிதாக்கிக் கொண்டுவர வர, மருந்துகளின்மீது எனக்கு நாளாவட்டத்தில் வெறுப்பும் அதிகரித்துக் கொண்டு வந்தது. டர்பனில் நான் வக்கீல் தொழில் நடத்தி வந்தபோது, பலவீனத்தினாலும், வாத சம்பந்தமான எரிச்சலினாலும் சிறிதுகாலம் பீடிக்கப்பட்டிருந்தேன். என்னைப் பார்க்க வந்த டாக்டர் பி. ஜே. மேத்தா எனக்குச் சிகிச்சை செய்தார். நானும் குணமடைந்தேன். அதன் பிறகு நான் இந்தியாவுக்குத் திரும்பிய காலம் வரையில், குறிப்பிடக்கூடிய வியாதி எதனாலும் நான் பீடிக்கப்பட்டிருந்ததாக எனக்கு ஞாபகம் இல்லை.

ஆனால், ஜோகன்னஸ்பர்க்கில் இருந்தபோது மலச்சிக்கலும், அடிக்கடி தலைவலி உபத்திரவமும் இருந்து வந்தன. எப்பொழுதாவது பேதி மருந்து சாப்பிட்டும், சாப்பாட்டை ஒழுங்குபடுத்திக்கொண்டும் என் தேகநிலை கெடாமல் பார்த்து வந்தேன். ஆனால், நான் நல்ல தேக சுகத்துடன் இருந்தேன் என்று சொல்ல முடியாது. 'இந்தப் பேதி மருந்துகளின் பிடியிலிருந்து எப்பொழுதுதான் விடுபடுவோமோ ?' என்று எப்பொழுதும் ஆச்சரியப்பட்டுக் கொண்டும் இருப்பேன்.

அந்தச் சமயத்தில் மான்செஸ்டரில், 'காலை ஆகார மறுப்புச் சங்கம்' என ஒன்று ஆரம்பமாகியிருப்பதாகப் படித்தேன். இச் சங்கத்தை ஆரம்பித்தவர்களின் வாதம் இதுதான் : ஆங்கிலேயர்கள் அடிக்கடியும் அதிகமாகவும் சாப்பிடுகிறார்கள் ; நடுநிசி வரையில் அவர்கள் சாப்பிடுகின்றனர். ஆகையால், வைத்தியச் செலவு அதிகமாகிறது; இந்த நிலைமை சீர்ப்பட வேண்டும் என்று அவர்கள் விரும்பினால், காலை ஆகாரத்தையாவது அவர்கள் கைவிட வேண்டும். இந்த விஷயங்களையெல்லாம் என் விஷயத்திலும் சொல்லிவிட முடியாதென்றாலும், ஓரளவுக்கு இந்த வாதம் என்னளவிலும் பொருந்துவதாகிறது என்று எண்ணினேன். மாலையில் தேநீர் குடிப்பதோடு தினம் மூன்று வேளை நன்றாகச் சாப்பிட்டும் வந்தேன். நான் குறைவாகச் சாப்பிடுகிறவன் அல்ல. சைவ உணவாகவும் மசாலை சேராததாகவும் இருந்தால், எத்தனை வகைப் பதார்த்தங்கள் இருந்தாலும் நன்றாகச் சாப்பிடுவேன். காலையில் ஆறு, ஏழு மணிக்கு முன்னால் எழுந்திருப்பதில்லை. ஆகையால், நானும் காலை ஆகாரம் சாப்பிடாமல் இருந்துவிட்டால், எனக்குத் தலைவலி ஏற்படாமல் இருக்கக் கூடும் என்று எண்ணினேன். ஆகவே, இதை அனுசரித்துப் பார்த்தேன். சில தினங்களுக்கு இது கஷ்டமாகவே இருந்தது. ஆனால், தலைவலி அடியோடு மறைந்து போய்விட்டது. இதிலிருந்து, எனக்குத் தேவையானதற்கு அதிகமாக நான் சாப்பிட்டு வந்திருக்கிறேன் என்ற முடிவுக்கு வந்தேன்.

ஆயினும், இந்த மாறுதலினால் எனக்கு இருந்த மலச்சிக்கல் உபத்திரவம் நீங்கியபாடில்லை. கூனேயின் ஆசனக் குளியல் முறையை அனுசரித்துப் பார்த்தேன். இதனால் கொஞ்சம் குணம் தெரிந்ததென்றாலும் முழுவதும் குணமாகவில்லை. இதற்கு மத்தியில் சைவ உணவுச் சாப்பாட்டு விடுதி வைத்திருந்த ஜெர்மானியரோ அல்லது வேறு ஒரு நண்பரோ—யார் என்பதை மறந்துவிட்டேன் — ஜஸ்ட் என்பவர் எழுதிய 'இயற்கைக்குத் திரும்புக' என்ற புத்தகத்தை எனக்குக் கொடுத்தார். மண் சிகிச்சையைக் குறித்து இப் புத்தகத்தில் படித்தேன். மனிதனுக்கு இயற்கையான உணவு பழங்களும் கொட்டைகளுமே என்று அதன் ஆசிரியர் கூறியிருந்தார். பழங்கள் மாத்திரமே சாப்பிடுவது என்ற பழக்கத்திற்கு நான் உடனே போய்விடவில்லை. ஆனால், மண் சிகிச்சை முறைகளை உடனே பரீட்சிக்க ஆரம்பித்தேன். அற்புதமான பலனைக் கண்டேன். சுத்தமான மண்ணைக் குளிர்ந்த நீரில் நனைத்துப் பிறகு அதை மெல்லிய துணியில் நன்றாகத் தடவி அதை எடுத்து அடி வயிற்றில் கட்டிக்கொள்ளுவது என்பது மண் சிகிச்சை முறைகளுள் ஒன்று. படுக்கப் போகும்போது இவ்வாறு அடிவயிற்றில் கட்டிக்கொள்ளுவேன். பிறகு இரவிலோ அல்லது காலையிலோ நான் விழித்துக்கொள்ளும் போது அதை நீக்கிவிடுவேன். இதனால் நல்ல குணம் ஏற்பட்டது. அது முதல் இந்த சிகிச்சையை என்னுடைய நண்பர்களுக்கும் செய்து வந்திருக்கிறேன். இதற்காக வருத்தப்படுவதற்கு எவ்விதக் காரணமும் ஏற்பட்டதே இல்லை. அதே நம்பிக்கையுடன் இந்தச் சிகிச்சை முறையை அனுசரித்துப் பார்க்க என்னால் முடியாது போயிற்று. இதற்கு ஒரு முக்கியமான காரணம், இந்தச் சோதனைகளைச் செய்து பார்ப்பதற்கு ஓர் இடத்தில் நான் தங்கி நிலை பெற்றிருக்க முடியாது போனதே யாகும். என்றாலும் நீர், மண் சிகிச்சையில் எனக்கு இருக்கும் நம்பிக்கை மாத்திரம் எப்பொழுதும் போல மாறாமல் இருந்துகொண்டிருக்கிறது. இன்றுங்கூட ஓரளவுக்கு எனக்கு மண் சிகிச்சை செய்துகொண்டு தான் வருகிறேன். சமயம் நேரும் பொழுதெல்லாம் என் சக ஊழியர்களுக்கும் இந்தச் சிகிச்சை முறையைச் சிபார்சு செய்து கொண்டும் வருகிறேன்.

என் வாழ்நாளில் இரு முறை கடுமையான நோய்க்கு நான் ஆளாகியிருக்கிறேன். என்றாலும் மருந்து சாப்பிட வேண்டிய அவசியமே மனிதனுக்கு இல்லை என்றுதான் நான் கருதுகிறேன். நோயுறுவோரில் ஆயிரத்திற்கு 999 பேரைச் சரியான பத்தியச் சாப்பாடு, நீர், மண் சிகிச்சை, இதேபோன்ற குடும்ப வைத்திய முறை ஆகியவற்றினாலேயே குணப்படுத்திவிட முடியும். சிறு நோய் வந்துவிட்டாலும் டாக்டர், வைத்தியர் அல்லது ஹக்கீமிடம் ஓடி எல்லா வகையான தாவர, உலோக வகை மருந்துகளையெல்லாம் விழுங்கிக் கொண்டிருப்பவர்கள், தங்கள் ஆயுளைக் குறைத்துக்கொள்ளுவது மாத்திர மல்ல. உடலுக்கு எஜமானர்களாக இருப்பதற்குப் பதிலாக அதற்கு அடிமை

களும் ஆகிவிடுகின்றனர். புலனடக்கத்தை இழந்து, மனிதர்களாக இல்லாதும் போகிருர்கள்.

நோயுற்றிருக்கும் சமயத்தில் இதை நான் எழுதுவதால் நான் கூறியிருப்பவைகளை யாரும் அலட்சியமாகக் கருதிவிட வேண்டாம். என் நோய்களுக்கு காரணம் என்ன என்பதை நான் அறிவேன். அவைகளுக்கு நானே பொறுப்பாளி என்பதையும் நன்ருக அறிந்தே இருக்கிறேன். அப்படி அறிந்திருப்பதனுலேயே நான் பொறுமையை இழந்துவிடவில்லை. உண்மையில், அவை எனக்குப் பாடங்கள் என்பதற்காகக் கடவுளுக்கு நன்றி செலுத்தினேன். ஏராளமான மருந்துகளைச் சாப்பிடும் ஆசையை எதிர்த்தும் வெற்றி பெற்றிருக்கிறேன். என் பிடிவாதம் அடிக்கடி டாக்டர்களுக்குச் சங்கடமாக இருந்திருக்கிறது என்பதை அறிவேன். அவர்களும் அன்புடன் சகித்துக்கொள்ளுகிருர்கள். என்னைக் கைவிட்டுவிடுவதில்லை.

என்ருலும், விஷயத்தைவிட்டு நான் நெடுந்தூரம் போய்விடக்கூடாது. மேற்கொண்டும் கதையைக் கூறுவதற்கு முன்னுல் வாசகர்களுக்கு எச்சரிக்கையாக ஒன்று சொல்ல விரும்புகிறேன். இந்த அத்தியாயத்தைப் படித்துவிட்டு ஜஸ்ட் என்பவர் எழுதியிருக்கும் புத்தகத்தை வாங்குகிறவர்கள், அதில் கூறப்பட்டிருப்பது எல்லாமே வேத வாக்கு என்று எடுத்துக் கொண்டுவிடக் கூடாது. ஓர் ஆசிரியர் எப்பொழுதுமே ஒரு விஷயத்தில் ஓர் அம்சத்தை மாத்திரமே எடுத்துக்காட்டுவார். ஆனுல், ஒரே விஷயத்தைக் குறைந்தது ஏழு வெவ்வேறு நிலைகளிலிருந்தும் காண முடியும். எல்லாமே அவையவைகளின் அளவில் சரியானவையாகவும் இருக்கலாம். ஆனுல், அவை அனைத்தும் அதே சமயத்தில், அதே சந்தர்ப்பத்தில் சரியாக இல்லாமலும் இருக்கக் கூடும். அதோடு அநேக புத்தகங்கள், நிறைய விற்க வேண்டும் என்பதற்காகவும், பேரும் புகழும் சம்பாதித்துக் கொள்ளுவதற்காகவும் எழுதப்படுகின்றன. இத்தகைய புத்தகங்களைப் படிக்கிறவர்கள் பகுத்தறிவோடு படிப்பார்களாக. அவற்றில் கூறப்பட்டிருக்கும் ஏதாவது ஒரு முறையைப் பரீட்சித்துப் பார்ப்பதற்கு முன்னுல் கொஞ்சம் அனுபவம் உள்ளவரின் ஆலோசனையையும் கேட்டுக்கொள்ள வேண்டும்; அல்லது புத்தகங்களைப் பொறுமையுடன் படித்துவிட்டு, அதில் கூறியிருக்கிறபடி செய்வதற்கு முன்னுல் அதில் கூறியிருப்பது இன்னது என்பதை நன்ருகப் புரிந்துகொள்ள வேண்டும்.

## 8

## ஓர் எச்சரிக்கை

அடுத்த அத்தியாயத்திற்கு வரும் வரையில் நான் வேறு விஷயத்திற்குத்தான் போய்க்கொண்டிருக்கவேண்டியிருக்கும் என்று அஞ்சுகிறேன். மண், நீர் சிகிச்சை முறைகளில் நான்

சோதனை நடத்தியதோடு உணவு சம்பந்தமான சோதனைகளையும் சேர்த்துச் செய்துகொண்டிருந்தேன். அதைப்பற்றிப் பின்னால் குறிப்பிட எனக்குச் சமயம் இருக்குமென்றாலும், உணவுச் சோதனையைக் குறித்து இங்கே சில விஷயங்களைக் கூறுவது பொருத்தமற்றதாகாது.

நான் நடத்திய உணவுச் சோதனைகளைக் குறித்து இப்பொழுதோ அல்லது இனிமேலோ நான் விவரமாகக் கூறிக்கொண்டிருக்கவேண்டியிராது. ஏனெனில், இதைக் குறித்துக் குஜராத்தியில் பல கட்டுரைகள் எழுதியிருக்கிறேன். அவை பல ஆண்டுகளுக்கு முன்னால் 'இந்தியன் ஒப்பீனிய'னில் வெளிவந்தன. பின்னர் அவை 'ஆரோக்கிய வழி' என்ற பெயருடன் புத்தக ரூபமாகவும் வெளிவந்திருக்கின்றன. என்னுடைய சிறிய நூல்களில் அதுவே கீழை நாடுகளிலும் மேலை நாடுகளிலும் ஏராளமானவர்களால் படிக்கப்பட்டு வந்திருக்கிறது. இதன் ரகசியம் என்ன என்பதை இதுவரையிலும் என்னால் கண்டுபிடிக்க முடியவில்லை. அக்கட்டுரைகள் 'இந்தியன் ஒப்பீனியன்' வாசகர்களுக்காக எழுதப்பட்டவை. ஆனால், 'இந்தியன் ஒப்பீனி'யனைப் பார்த்தேயிராத கிழக்கு நாடுகளிலும் மேற்கு நாடுகளிலும் உள்ள அநேகருடைய வாழ்க்கையில் அச்சிறு பிரசுரம் பிரமாதமான மாறுதலை உண்டாக்கியிருக்கிறது என்பதை அறிவேன். ஏனெனில், இவ்விஷயத்தைக் குறித்து அநேகர் என்னுடன் கடிதப் போக்குவரத்து வைத்துக்கொண்டிருக்கின்றனர். ஆகையால், அச் சிறு புத்தகத்தைப் பற்றிச் சில விஷயங்களை இங்கே கூறவேண்டியது அவசியமாகிறது. ஏனெனில், அதில் நான் கூறியிருக்கும் அபிப்பிராயத்தை மாற்றிக்கொள்ளுவதற்கு எந்தக் காரணமும் இருப்பதாக நான் காணவில்லையாயினும், என் நடைமுறைப் பழக்கத்தில் சில பெரிய மாறுதல்களைச் செய்துகொண்டிருக்கிறேன். அப்புத்தகத்தைப் படிப்பவர்கள் எல்லோருக்கும் அது தெரிந்திருக்காது. அதை அவர்களுக்குத் தெரிவித்துவிட வேண்டும் என்று நான் விரும்புகிறேன்.

நான் எழுதியிருக்கும் மற்றெல்லாவற்றையும் போலவே அச் சிறு புத்தகத்தையும் ஆன்மார்த்த நோக்கத்துடனேயே எழுதியிருக்கிறேன். அந்த நோக்கமே என் செயல்கள் ஒவ்வொன்றிற்கும் ஆக்கம் அளித்திருக்கிறது. ஆகையால், அப்புத்தகத்தில் கூறப்பட்டிருக்கும் சில தத்துவங்களை இன்று நான் அனுசரிக்க முடியாமல் இருப்பது எனக்கு ஆழ்ந்த துயரத்தை அளித்து வருகிறது.

குழந்தையாக இருக்கும்போது உண்ணும் தாய்ப் பாலைத் தவிர மனிதன் பால் சாப்பிட வேண்டிய அவசியமே இல்லை என்பது என்னுடைய திடமான நம்பிக்கை. சூரிய வெப்பத்தினால் பக்குவமான பழங்களையும் கொட்டைகளையும் தவிர மனிதனுடைய உணவில் வேறு எதுவுமே இருக்கக்கூடாது. திராட்சை போன்ற பழங்களிலிருந்தும், பாதாம்பருப்பு போன்ற கொட்டை

களிலிருந்தும் மனிதன் தசைகளுக்கும் நரம்புகளுக்கும் வேண்டிய போஷணையைப் போதுமான அளவு பெற முடியும். இத்தகைய உணவோடு இருக்கும் ஒருவருக்குச் சிற்றின்ப இச்சை போன்ற இச்சைகளை அடக்குவது எளிதாகிறது. "ஒருவன் எதைச் சாப்பிடுகிறானே அதுபோலவே ஆகிறான்" என்ற இந்தியப் பழமொழியில் அதிக உண்மை இருக்கிறது என்பதை நானும் என் சக ஊழியர்களும் அனுபவத்தில் கண்டிருக்கிறோம். இக்கருத்தே அப் புத்தகத்தில் விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது.

ஆனால், துரதிருஷ்டவசமாக இந்தியாவில் என்னுடைய கொள்கைகளில் சிலவற்றை, என் நடைமுறையில் எனக்கு நானே மறுத்துக்கொள்ள வேண்டியவனாகிறேன். போருக்காகப் படைக்கு ஆள் சேர்க்கும் பிரசாரத்தில் கேடாவில் நான் ஈடுபட்டிருந்த சமயத்தில் உணவில் ஏற்பட்ட ஒரு தவறு, என்னைப் படுக்க வைத்துவிட்டது. இறக்க வேண்டிய நிலைமைக்கும் வந்து விட்டேன். அதனால், சிதைந்து போன உடலைப் பால் சாப்பிடாமலேயே தேற்றிக்கொண்டுவிட நான் வீணில் முயன்றேன். பாலுக்குப் பதிலாக வேறு ஒன்றை எனக்குக் கூறுமாறு எனக்குத் தெரிந்த டாக்டர்கள், வைத்தியர்கள், விஞ்ஞானிகள் ஆகியவர்களையெல்லாம் கேட்டேன். மூங்கு நீர்.* மௌரா எண்ணெய்,† பாதாம்–பால் ஆகியவைகளைச் சாப்பிடலாம் என்று சிலர் யோசனை கூறினர். இவைகளையெல்லாம் சாப்பிட்டுச் சோதனை செய்து, என் உடல் நிலையை மேலும் கெடுத்துக்கொண்டேன். நோயிலிருந்து எழ எதுவும் எனக்கு உதவி செய்யவில்லை. ஆயுர்வேத வைத்தியர்கள், சரகர் வைத்திய சாத்திரத்திலிருந்து சில பாடல்களை எனக்குப் படித்துக் காட்டினர். நோயாளிகளுக்கு உணவு கொடுப்பதில் மதக் கோட்பாடுகளைக் கவனிக்கக்கூடாது என்று அவை கூறின. ஆகவே, பால் சாப்பிடாமலேயே வாழ்வதற்கு எனக்கு உதவி செய்ய அவர்களை எதிர்பார்த்துப் பயனில்லை. மாட்டு மாமிச சூப்பையும் பிராந்தியையும் சாப்பிடுமாறு தயக்கமின்றிச் சிபார்சு செய்கிறவர்கள், பால் இல்லாத ஆகாரத்தைக் கொண்டு நான் உயிர் வாழ உதவி செய்வார்கள் என்று எவ்வாறு எதிர்பார்க்க முடியும்?

பசுவின் பாலையோ, எருமைப் பாலையோ நான் சாப்பிடுவதற்கில்லை. ஏனென்றால், அவற்றைச் சாப்பிடுவதில்லை என்று விரதம் கொண்டுவிட்டேன். எந்தப் பாலையுமே சாப்பிடுவதில்லை என்பதுதான் விரதம் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், நான் இந்த விரதத்தை மேற்கொண்ட சமயத்தில் தாய்ப் பசுவும் தாய் எருமையுமே என் மனத்தில் இருந்ததாலும், உயிர்வாழ நான் விரும்பியதாலும், விரதத்தின் தன்மையை

---

* மூங்கு நீர் என்பது பச்சைப்பயற்றை வேக வைத்து அதிலிருந்து எடுத்து உபயோகிக்கும் நீராகும்.

† இலுப்பை எண்ணெய்.

வற்புறுத்துவதில் எப்படியோ என்னை நானே ஏமாற்றிக்கொண்டு ஆட்டுப் பால் சாப்பிடத் தீர்மானித்தேன். ஆட்டுப் பாலை நான் சாப்பிட ஆரம்பித்தபோதே என்னுடைய விரதத்தில் அடங்கி யிருந்த உணர்ச்சி நாசமாக்கப்பட்டுவிட்டது என்பதை நான் முற்றும் உணர்ந்தே இருந்தேன்.

ரௌலட் சட்டத்திற்கு எதிரான கிளர்ச்சிக்குத் தலைமை வகித்து நடத்த வேண்டும் என்ற எண்ணமே அப்பொழுது என்னை ஆட்கொண்டிருந்தது. அதோடு, உயிரோடு இருக்க வேண்டும் என்ற ஆசையும் வளர்ந்தது. இதன் விளைவாக என் வாழ்க்கையின் மிகப் பெரிய சோதனை ஒன்று அதோடு நின்று போயிற்று.

ஆன்மா, எதையும் சாப்பிடுவதுமில்லை; குடிப்பதும் இல்லை. ஆகையால், ஒருவர் எதைச் சாப்பிடுகிறார், குடிக்கிறார் என்பதற்கும் ஆன்மாவுக்கும் எந்தவிதச் சம்பந்தமும் இல்லை என்று விவாதிக்கப்படுகிறது என்பதை அறிவேன். நாம் எதை உள்ளே போடுகிறோம் என்பது முக்கியம் அல்ல; உள்ளிருந்து - பேச்சினாலும் நடவடிக்கையினாலும் - எதை வெளியே விடுகிறோம் என்பதுதான் முக்கியம் என்றும் அவர்கள் கூறுகிறார்கள். இந்த வாதத்தில் ஓரளவு அர்த்தம் இருக்கிறது என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால், இந்த வாதத்தை ஆராய்ந்து கொண்டிருப்பதை விட என்னுடைய உறுதியான நம்பிக்கை இன்னது என்பதைத் தெரிவிப்பதோடு திருப்தியடைகிறேன். கடவுளுக்கு அஞ்சி வாழ்ந்து அதன்மூலம் கடவுளை நாடுபவருக்கும், கடவுளை நேருக்கு நேராகக் காண விரும்புகிறவருக்கும், எண்ணத்திலும் பேச்சிலும் கட்டுத்திட்டம் இருக்கவேண்டியது எப்படி அவசியமோ அதே போல அவருடைய சாப்பாட்டின் அளவிலும் தன்மையிலுங்கூடக் கட்டுத்திட்டம் இருக்க வேண்டியது முக்கியம் என்பதே எனது திடமான நம்பிக்கை.

என்றாலும், என்னுடைய தத்துவத்தை நானே நடத்திக் காட்ட முடியாமல் இருக்கும் ஒரு விஷயத்தில், அத் தகவலை நான் கூறிவிடுவதோடு அதைக் கையாளுவதைக் குறித்துக் கடுமை யான எச்சரிக்கையையும் நான் செய்யவேண்டும். ஆகையால், நான் கூறிய தத்துவத்தை ஆதாரமாக வைத்துக்கொண்டு பால் சாப்பிடுவதை விட்டுவிட்டவர்கள், ஒவ்வொரு வகையிலும் அது அனுகூலமாக இருப்பதாக அவர்களே கண்டாலன்றி, அனுபவ முள்ள வைத்தியர்கள் அவர்களுக்கு ஆலோசனை கூறியிருந்தாலொழிய, அந்தப் பரிசோதனையில் பிடிவாதமாக இருக்கவேண்டாம் என்று வற்புறுத்துகிறேன். இதுவரையில் என்னுடைய அனுபவம் ஒரு விஷயத்தைக் காட்டிவிட்டது. ஜீரணசக்தி பலமாக இல்லாதவர்களுக்கும், படுத்த படுக்கையாக இருக்கிறவர்களுக்கும், பாலுக்கு இணையான, எளிதில் ஜீரணிக்கக்கூடிய போஷாக்குள்ள ஆகாரம் வேறு எதுவுமே இல்லை என்பதுதான் அது.

இந்த அத்தியாயத்தைப் படிக்க நேரும் இத்துறையில் அனுபவமுள்ளவர்கள் யாராவது, தாம் படித்ததனுல் அல்லாமல் அனுபவத்தின் மூலம் பாலைப்போலப் போஷிக்கக் கூடியதும், போஷாக்குள்ளதுமான ஒரு தாவரப் பொருளைப் பாலுக்குப் பதிலாகக் கூறுவாராயின், அப்படிப்பட்டவருக்கு நான் மிகவும் கடமைப்பட்டவனுவேன்.

## 9

# அதிகாரத்துடன் சிறு போர்

இப்பொழுது ஆசியாக்காரர்கள் இலாகாவுக்குத் திரும்புவோம். ஆசியாக்காரர்கள் இலாகாவின் அதிகாரிகளுக்கு ஜோகன்னஸ்பர்க்கே கோட்டை. இந்தியர், சீனர், மற்றவர்களைப் பாதுகாப்பதற்குப் பதிலாக இந்த அதிகாரிகள், அவர்களை நசுக்கிப் பிழிந்துகொண்டு வந்ததை நான் கவனித்துக்கொண்டு வந்தேன். ஒவ்வொரு நாளும் இதுபோன்ற புகார்கள் எனக்கு வந்துகொண்டிருந்தன. 'நியாயமாக வர வேண்டியவர்கள் அனுமதிக்கப் படுவதில்லை. ஆனுல், வருவதற்கு உரிமையே இல்லாதவர்கள் 100 பவுன் கொடுத்தால் அவர்கள் திருட்டுத்தனமாக உள்ளே கொண்டுவரப் படுகிறுர்கள். இந்த அக்கிரமமான நிலைமைக்கு நீங்கள் பரிகாரம் தேடாவிட்டால் வேறு யார்தான் தேடப் போகிறுர்கள்?' – இதுவே புகார். எனக்கும் அதே உணர்ச்சி ஏற்பட்டது. இந்தத் தீமையை ஒழிப்பதில் நான் வெற்றி பெருது போவேனுயின், டிரான்ஸ்வாலில் நான் வீணுக்கு வாழ்பவனே ஆவேன். ஆகவே, சாட்சியங்களைச் சேகரிக்க ஆரம்பித்தேன். ஓரளவுக்குச் சாட்சியங்களைச் சேகரித்ததும் போலீஸ் கமிஷனரிடம் போனேன். அவர் நியாயமானவராகவே தோன்றினுர். என்னை அலட்சியமாகப் புறக்கணித்துவிடாமல் நான் கூறியவைகளையெல்லாம் பொறுமையுடன் கேட்டுக்கொண்டார். என் வசமிருந்த சாட்சியங்களை யெல்லாம் தமக்குக் காட்டும்படியும் கேட்டார். சாட்சிகளைத் தாமே விசாரித்துத் திருப்தியும் அடைந்தார். ஆனல், தென்னுப்பிரிக்காவில் வெள்ளைக்கார ஜூரிகள், கறுப்பு மனிதருக்குச் சாதகமாக வெள்ளைக்காரக் குற்றவாளிக்குத் தண்டனை அளிப்பது கஷ்டமானது என்பதை நான் அறிந்திருந்தது போலவே அவரும் அறிந்திருந்தார். ஆனல், "எப்படியும், முயன்று பார்ப்போம். ஜூரிகள் விடுதலை செய்துவிடுவார்களே என்று பயந்துகொண்டு குற்றவாளிகளைச் சும்மா விட்டுவிடுவது என்பது சரியல்ல. அவர்களை நான் கைது செய்துவிடுகிறேன். என்னுலான முயற்சி எதையும் நான் செய்யாது விடமாட்டேன் என்று உங்களுக்கு உறுதி கூறுகிறேன்" என்றுர், போலீஸ் கமிஷனர்.

வாக்குறுதி எனக்குத் தேவையில்லை. பல அதிகாரிகளின் மீது எனக்குச் சந்தேகம் இருந்தது. ஆனுல், அவர்கள் மீதெல்

லாம் ஆட்சேபிக்க முடியாத சாட்சியங்கள் என்னிடம் சரிவர இல்லை. ஆகையால், குற்றஞ் செய்தவர்கள் என்பதில் யார் மீது எனக்குச் சிறிதளவேனும் சந்தேகமே கிடையாதோ அப்படிப்பட்ட இருவரை மாத்திரம் கைது செய்ய வாரண்டுகள் பிறப்பிக்கப்பட்டன.

என்னுடைய நடமாட்டத்தை எப்பொழுதும் ரகசியமாக வைத்திருப்பதற்கில்லை. அநேகமாக ஒவ்வொரு நாளும் நான் போலீஸ் கமிஷனரிடம் போய்க்கொண்டிருக்கிறேன் என்பது அநேகருக்குத் தெரியும். எந்த இரு அதிகாரிகளைக் கைது செய்ய வாரண்டுகள் பிறப்பிக்கப்பட்டனவோ அந்த இரு அதிகாரிகளுக்கும், ஓரளவுக்குத் திறமை வாய்ந்த ஒற்றர்கள் இருந்தனர். அவர்கள் என் அலுவலகத்தைக் கண்காணித்துக் கொண்டிருந்து என்னுடைய நடமாட்டத்தைக் குறித்து அந்த அதிகாரிகளுக்கு அடிக்கடி அறிவித்துக்கொண்டிருந்தார்கள். இன்னுமொன்றையும் நான் ஒப்புக்கொள்ள வேண்டும். அந்த இரு அதிகாரிகளும் மிகவும் கெட்டவர்களாகையால், அவர்களுக்குப் பல ஒற்றர்கள் இருந்திருக்க முடியாது. இந்தியரும் சீனரும் எனக்கு உதவி செய்யாமல் இருந்திருந்தால் அவர்களைக் கைது செய்திருக்கவே முடியாது.

இவர்களில் ஒருவர் எங்கோ போய் மறைந்துவிட்டார். அவரை வெளிமாகாணத்திலும் கைது செய்துகொண்டு வருவதற்கான வாரண்டைப் போலீஸ் கமிஷனர் பெற்றார். அவரைக் கைதுசெய்து டிரான்ஸ்வாலுக்குக் கொண்டு வந்தார். அவர்கள் மீது விசாரணை நடந்தது. அவர்களுக்கு எதிரான சாட்சியங்கள் பலமாக இருந்தும், எதிரிகளில் ஒருவர் ஓடி ஒளிந்திருந்தார் என்ற சாட்சியம் ஜூரிகளுக்குக் கிடைத்திருந்தும், இருவரும் குற்றவாளிகள் அல்ல என்று கூறி விடுதலை செய்துவிட்டார்கள்.

நான் மிகுந்த ஏமாற்றம் அடைந்தேன். போலீஸ் கமிஷனரும் மிகவும் வருத்தப்பட்டார். வக்கீல் தொழிலிலேயே எனக்கு வெறுப்புத் தோன்றிவிட்டது. குற்றத்தை மறைத்துவிடுவதற்கும் அறிவைப் பயன்படுத்தலாம் என்பதைக் கண்டேன். ஆகவே, அறிவின் பேரிலேயே எனக்கு வெறுப்பு ஏற்பட்டுவிட்டது.

அவ்விரு அதிகாரிகளும் விடுதலை யடைந்துவிட்டன ரெனினும், அவர்கள் செய்த குற்றம் அதிக வெளிப்படையானதாக இருந்ததால், அரசாங்கம் அவர்களை வேலைக்கு வைத்துக்கொள்ள முடியவில்லை. அவர்கள் இருவரும் உத்தியோகத்திலிருந்து நீக்கப்பட்டனர். ஆசியாக்காரர் இலாகாவும் ஓரளவுக்குத் தூய்மை பெற்றது. இந்திய சமூகத்திற்கும் கொஞ்சம் நம்பிக்கை பிறந்தது.

இச் சம்பவம் என் மதிப்பை உயர்த்தியது. என் தொழிலும் விருத்தியடைந்தது. அக்கொள்ளையில் சமூகம் மாதந்தோறும்

வீணுக்கிக் கொண்டிருந்த நூற்றுக்கணக்கான பவுன்கள்—எல்லாமே என்று சொல்ல முடியாவிட்டாலும் பெரும்பகுதி—காப்பாற்றப்பட்டன. யோக்கியப் பொறுப்பற்றவர்கள் தங்கள் லஞ்சத் தொழிலை இன்னும் செய்துகொண்டுதான் இருந்தார்களா கையால் எல்லாவற்றையுமே காப்பாற்றிவிட முடியாது. ஆனல், யோக்கியர் யோக்கியமாகவே இருப்பது இப்பொழுது சாத்திய மாயிற்று.

அந்த அதிகாரிகள் மிகவும் கெட்டவர்களாக இருந்தபோதிலும், அவர்களிடம் தனிப்பட்ட முறையில் எனக்கு எந்தவித விரோதமும் இல்லை என்பதையும் நான் சொல்ல வேண்டும். இது அவர்களுக்கும் தெரியும். அவர்களுக்குக் கஷ்டம் நேர்ந்து என்னிடம் வந்த சமயங்களில் அவர்களுக்கு நான் உதவி செய்திருக்கிறேன். அவர்களுக்கு உத்தியோகம் கொடுக்கும் யோசனையை நான் எதிர்க்காமல் இருந்ததால் ஜோகன்னஸ்பர்க் முனிஸிபாலிடியில் அவர்களுக்கு உத்தியோகம் கிடைக்கக்கூடிய வாய்ப்பு இருந்தது. அவர்களின் நண்பர் ஒருவர், இது சம்பந்த மாக வந்து என்னைப் பார்த்தார். அவர்களுக்கு இடையூறு செய்யாதிருக்கச் சம்மதித்தேன். அவர்களுக்கு உத்தியோகமும் கிடைத்தது.

நான் கொண்டிருந்த இவ்வித மனேபாவத்தின் காரண மாக, நான் தொடர்பு கொண்டிருந்த அதிகாரிகள் என்னேடு நன்ருகவே பழகி வந்தார்கள். அவர்களுடைய இலாகாவுடன் நான் அடிக்கடி போராட வேண்டியிருந்தபோதிலும், அதிகாரிகள் மாத்திரம் என்னுடன் நட்புடனேயே பழகிக்கொண்டிருந்தார்கள். அவ்விதம் நடந்துகொள்ளுவது என் சுபாவத்தில் சேர்ந்தது என்பதை அப்பொழுது நான் நன்ருக அறிந்துகொண்டிருக்க வில்லை. இது சத்தியாக்கிரகத்தின் அவசியமானதோர் பகுதி என்பதையும், அகிம்சையின் இயல்பே இதுதான் என்பதையும் நான் பின்னுல் தெரிந்துகொண்டேன்.

மனிதனும் அவனுடைய செயல்களும் வெவ்வேருனவை. நற்செயலைப் பாராட்ட வேண்டும்; தீய செயலைக் கண்டிக்க வேண்டும். செயலைச் செய்யும் மனிதர் நல்லவராயிருப்பினும் தீயவராயிருந்தாலும், செயலின் தன்மைக்கு ஏற்றவாறு மரியாதைக்கும் பரிதாபத்திற்கும் உரியவராகிருர். 'பாவத்தை வெறுப்பாயாக. ஆனல், பாவம் செய்பவரை வெறுக்காதே' என்பது உபதேசம். இது புரிந்துகொள்ள எளிதானதாகவே இருந்தாலும், நடைமுறையில் இதை அனுசரிப்பதுதான் மிக அரிதாக இருக்கிறது. இதனுலேயே பகைமை என்ற நஞ்சு உலகத்தில் பரவுகிறது.

இந்த அகிம்சையே சத்தியத்தை நாடுவதற்கு அடிப்படையானதாகும். இவ்விதம் நாடுவது அகிம்சையையே அடிப்படையாகக் கொண்டதாக இல்லாது போகுமாயின், அம் முயற்சியே வீண் என்பதை ஒவ்வொரு நாளும் நான் உணர்ந்து வருகிறேன்.

ஒரு முறையை எதிர்ப்பதும், அதைத் தாக்குவதும் முற்றும் சரியானதே. ஆனால், அம் முறையை உண்டாக்கிய கர்த்தாவையே எதிர்த்துத் தாக்குவது என்பது தன்னையே எதிர்த்துக்கொள்ளுவதற்கு ஒப்பாகும். ஏனெனில், நாம் எல்லோரும் ஒரே மண்ணைக்கொண்டு செய்த பாண்டங்கள்; ஒரே கடவுளின் புத்திரர்கள். ஆகவே நம்முள் இருக்கும் தெய்விக சக்தியும் மகத்தானது. தனி ஒரு மனிதரை அலட்சியம் செய்வது அந்தத் தெய்விக சக்திகளை அலட்சியம் செய்வதாகும். அப்போது அம் மனிதருக்கு மட்டுமின்றி உலகம் முழுவதற்குமே தீங்கு செய்வதாக ஆகும்.

# 10

# புனித ஞாபகமும் பிராயச்சித்தமும்

எனது வாழ்க்கையில் ஏற்பட்ட பலவிதமான சம்பவங்கள், பல மதங்களையும் பல சமூகங்களையும் சேர்ந்தவர்களுடன் நான் நெருங்கிய தொடர்புகொள்ளும்படி செய்துவிட்டன. இவர்களுடனெல்லாம் எனக்கு ஏற்பட்ட அனுபவத்திலிருந்து நான் ஒன்று கூற முடியும். உறவினர் என்றோ, வேற்று மனிதர் என்றோ, என் நாட்டினர் என்றோ, பிற நாட்டினர் என்றோ, வெள்ளையர் வெள்ளையரல்லாதார் என்றோ, ஹிந்துக்கள் மற்ற மதத்தினரான இந்தியர் என்றோ, முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள், பார்ஸிகள், யூதர்கள் என்றோ வேற்றுமை உணர்ச்சி எனக்கு இருந்ததே இல்லை. இவ்விதப் பாகுபாடு எதையும் கற்பித்துக் கொள்ள முடியாததாக என் உள்ளம் இருந்தது என்று சொல்லலாம். இது என் சுபாவத்தோடு ஒட்டியதாகவே இருந்ததால், இதை எனக்கு இருந்த விசேட குணம் என்று நான் கூறிக் கொள்ளுவதற்கில்லை. என்னளவில் எந்தவிதமான முயற்சியும் இல்லாமலேயே அது எனக்கு ஏற்பட்டதாகும். ஆனால், அகிம்சை, பிரம்மச்சரியம், அபரிக்கிரகம் (உடைமை வைத்துக் கொள்ளாமை), புலனடக்கம் ஆகிய நற்குணங்களை வளர்த்துக் கொள்ளுவதற்காக நான் இடைவிடாது முயன்று வந்தேன் என்பதையும் முற்றும் உணர்ந்திருக்கிறேன்.

டர்பனில் நான் வக்கீல் தொழில் நடத்தி வந்தபோது, என் அலுவலகக் குமாஸ்தாக்கள் பெரும்பாலும் என்னுடனேயே தங்குவார்கள். அவர்களில் ஹிந்துக்களும் கிறிஸ்தவர்களும் இருந்தனர். மாகாணவாரியாகச் சொல்லுவதாயின், அவர்கள் குஜராத்திகளும், தமிழர்களும் ஆவார்கள். அவர்களும் என் உற்றார் உறவினர்களே என்பதைத் தவிர அவர்களை வேறுவிதமாக நான் எப்பொழுதாவது கருதியதாக எனக்கு ஞாபகம் இல்லை. என் குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகவே அவர்களைப் பாவித்து நடத்தி வந்தேன். இவ்விதம் நான் நடத்துவதற்கு என் மனைவி எப்பொழுதாவது குறுக்கே நின்றால், அப்பொழுது

எங்களுக்குள் மனஸ்தாபம் ஏற்படும். குமாஸ்தாக்களில் ஒருவர் கிறிஸ்தவர்; தீண்டாத வகுப்பைச் சேர்ந்த பெற்றோருக்குப் புதல்வராகப் பிறந்தவர்.

நான் குடியிருந்த வீடு மேற்கத்திய நாகரிகத்தை யொட்டிக் கட்டப்பட்டிருந்தது. அறைகளிலிருந்து அழுக்கு நீர் வெளியே போவதற்கு அவற்றில் வழி வைக்கப் பட்டிருக்கவில்லை. ஆகையால், ஒவ்வோர் அறையிலும் அழுக்கு நீருக்கு எனத் தனித் தனிப் பானைகள் உண்டு. இப் பானைகளை வேலைக்காரரோ, தோட்டியோ சுத்தம் செய்வதற்குப் பதிலாக அந்த வேலையை என் மனைவியோ, நானோ செய்து வந்தோம். வீட்டில் இருந்து பழகிவிட்ட குமாஸ்தாக்கள், அவரவர்கள் அறையிலிருக்கும் பானைகளை அவர்களே சுத்தம் செய்துகொள்ளுவார்கள். ஆனால், கிறிஸ்தவ குமாஸ்தாவோ, புதிதாக வந்தவர். அவருடைய படுக்கை அறையைக் கவனித்துக்கொள்ள வேண்டியது, எங்கள் வேலையாயிற்று. மற்றவர்களுடைய பானைகளையெல்லாம் சுத்தம் செய்வதில் என் மனைவிக்கு ஆட்சேபமில்லை. ஆனால், பஞ்சமராக இருந்த ஒருவர் உபயோகித்த பானையைச் சுத்தம் செய்வதென்பது அவளுடைய வரம்புக்கு மீறியதாக இருந்தது. ஆகவே எங்களுக்குள் தகராறு ஏற்பட்டது; அப் பானைகளை நான் சுத்தம் செய்வதென்பதையும் அவளால் சகிக்க முடியவில்லை. பானையும் கையுமாக அவள் ஏணியின் வழியாக இறங்கி வந்து கொண்டிருந்தாள். என்னைக் கடிந்துகொண்டாள். கோபத்தில் அவளுடைய கண்களெல்லாம் சிவந்திருந்தன. அவளுடைய கன்னங்களில் முத்துப்போலக் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது. அந்தக் காட்சியை நான் இன்றும் அப்படியே நினைவுபடுத்திக் கொள்ள முடியும். நானோ, அன்போடு கொடூரமும் நிறைந்த கணவன். அவளுக்கு நானே உபாத்தியாயர் என்று கருதி வந்தேன். எனவே, அவளிடம் எனக்கு இருந்த குருட்டுத்தனமான அன்பின் காரணமாக அவளை மிகவும் துன்பப்படுத்தினேன்.

அவள் பானையை எடுத்துச் சென்றதனால் மாத்திரம் நான் திருப்தியடைந்துவிடவில்லை. அவள் அவ் வேலையைச் சந்தோஷத்துடன் செய்ய வேண்டும் என்று விரும்பினேன். ஆகவே, உரத்த சப்தத்துடன், “அம்மாதிரியான மடத்தனத்தையெல்லாம் என் வீட்டில் சகிக்க மாட்டேன்” என்றேன்.

இச்சொற்கள் கூரிய அம்புகளாக அவள் உள்ளத்தில் தைத்துவிட்டன. “உங்கள் வீட்டை நீங்களே வைத்துக்கொள்ளுங்கள். என்னைத் தொலைத்துவிடுங்கள்” என்று அவள் திருப்பிக் கூச்சல் போட்டாள். நான் என்னையே மறந்துவிட்டேன். என் உள்ளத்திலிருந்த இரக்க ஊற்று வற்றிப்போய்விட்டது. அவள் கைகளைப் பிடித்து, அத் திக்கற்ற மாதை ஏணிக்கு எதிரிலிருந்த வாயிற்படிக்கு இழுத்துக் கொண்டு போனேன். அவளை வெளியே பிடித்துத் தள்ளிவிடுவதற்காகக் கதவைத் திறக்கப்

போனேன். அவளுடைய கன்னங்களின் வழியே கண்ணீர் தாரை தாரையாக வழிந்தது. அழுது கொண்டே அவள் கூறிய தாவது: "உங்களுக்கு வெட்கம் என்பதே இல்லையா? இப்படியும் உங்களுக்குச் சுய உணர்வு அற்றுப் போய்விட வேண்டுமா? எனக்கு போக்கிடம் எங்கே இருக்கிறது? எனக்குப் புகலிடம் அளிப்பதற்கு இங்கே என் பெற்றோர்களாவது, உறவினர்களா வது இருக்கிறார்களா? நான் உங்கள் மனைவி என்பதனால் அடித் தாலும் உதைத்தாலும் நான் பொறுத்துக்கொள்ள வேண்டியது தான் என்று நினைக்கிறீர்கள். உங்களுக்குப் புண்ணியமாகப் போகிறது, நல்ல விதமாக நடந்து கொள்ளுங்கள். கதவை மூடுங்கள். நம்மைப் பார்த்து யாராவது சிரிக்கப் போகிறார்கள்!"

இதைக் கேட்ட நான் என் முகத்தைக் கம்பீரமாக வைத்துக் கொண்டேன். ஆனால், உண்மையில் வெட்கமடைந்தேன். கதவையும் மூடினேன். என்னை விட்டு என் மனைவி போய்விட முடியாது என்றால், அவளை விட்டு நானும் பிரிந்துவிட முடியாது. எங்களுக்குள் எத்தனையோ சச்சரவுகள் இருந்திருக்கின்றன. ஆனால், அவற்றின் முடிவில் எங்களுக்குள் சமாதானமே நிலவும். சகிப்புத் தன்மையின் இணையில்லாத சக்தியினால் எப்பொழுதும் வெற்றி பெறுகிறவள் மனைவியே.

இச் சம்பவம் அதிருஷ்டவசமாக, நான் கடந்து வெளிவந்து விட்ட ஒரு காலத்தைப் பற்றியது. ஆகையால், இச் சம்பவத்தை எந்தவிதமான பற்றுமில்லாமல் சொல்லக்கூடிய நிலையில் நான் இன்று இருக்கிறேன். குருடனான, வெறி கொண்ட கணவனாக நான் இப்பொழுது இல்லை; என் மனைவியின் உபாத்தியாயராக வும் இல்லை. கஸ்தூரிபாய் விரும்பினால், நான் முன்னால் அவ ளுக்கு எவ்வளவு தொல்லை அளித்து வந்தேனோ அவ்வளவு தொல்லையையும் அவள் எனக்கு இன்று அளிக்க முடியும். சோதனைக்கு உட்பட்டுத் தேறிய நண்பர்கள் நாங்கள். இப் பொழுது நாங்கள் ஒருவரை ஒருவர் காம இச்சையின் இலக்கா கக் கருதவில்லை. நான் நோயுற்றிருந்த போதெல்லாம் அவள் எனக்குப் பக்தியுள்ள தாதியாக இருந்து, எவ்விதக் கைம்மாறை யும் எதிர்பாராமல் பணிவிடை செய்து வந்திருக்கிறாள்.

மேலே நான் சொன்ன சம்பவம் 1898-இல் நடந்தது. பிரம் மச்சரிய எண்ணமே எனக்கு இல்லாமல் இருந்த காலம் அது. கணவனுக்கு மனைவி உதவியாகவுள்ள சிநேகிதி, தோழி, கண வனின் இன்ப துன்பங்களில் பங்காளி என்பதற்குப் பதிலாக அவள் கணவனின் காம இச்சைக்குரிய அடிமை, கணவன் இட்ட வேலையைச் செய்வதற்கென்றே பிறந்திருப்பவள் என்று நான் எண்ணிக் கொண்டிருந்த காலம், அது.

1900-ஆம் ஆண்டில்தான் இக் கருத்துக்கள் தீவிரமான மாறு தலை அடைந்தன. ஆனால், அதைப்பற்றி அதற்கேற்ற சந்தர்ப்

பத்தில் சொல்லலாம் என்று இருக்கிறேன். ஒன்று மாத்திரம் இப்பொழுது சொன்னால் போதும். காமப் பசி என்னிடமிருந்து நாளாவட்டத்தில் மறைய மறைய, என்னுடைய குடும்ப வாழ்க்கை மேலும் மேலும் அமைதியாகவும், இனிமையானதாக வும், சந்தோஷகரமானதாகவும் ஆயிற்று; ஆகிக் கொண் டிருக்கிறது.

புனிதமான இந்த நினைவைப் பற்றிய வரலாற்றைக்கொண்டு, நானும் என் மனைவியும் பிறர் பின்பற்றுவதற்கான லட்சியத் தம் பதிகளாக இருந்தோம் என்றோ, எங்களுக்கு லட்சியத்தில் ஒரே விதமான கருத்து இருந்தது என்றோ யாரும் எண்ணிக் கொண்டு விட வேண்டாம். எனக்கு இருந்த லட்சியங்களைத் தவிர தனக் குத் தனியாக ஏதாவது லட்சியம் இருந்ததுண்டா என்பது ஒரு வேளை கஸ்தூரிபாய்க்கே தெரியாமல் இருக்கலாம். நான் செய் யும் காரியங்கள் பல இன்றுகூட அவளுக்குப் பிடிக்காமல் இருக் கலாம். அவைகளைக் குறித்து நாங்கள் விவாதிப்பதே இல்லை. அவைகளை விவாதிப்பதில் எவ்வித நன்மை இருப்பதாகவும் நான் காணவில்லை. ஏனெனில், அவளைப் படிக்க வைத்திருக்க வேண்டிய சமயத்தில் அவளுடைய பெற்றோரும் படிக்க வைக்க வில்லை; நானும் அதைச் செய்யவில்லை. ஆனால், அவளிடம் ஒரு பெரிய அருங்குணம் மிகுந்த அளவில் இருக்கிறது. ஹிந்து மனைவிகள் பெரும்பாலாரிடம் ஓரளவுக்கு இருக்கும் குணமே அது. அதாவது, விரும்பியோ விரும்பாமலேயோ, அறிந்தோ அறியாமலேயோ என் அடிச்சுவட்டைப் பின்பற்றித் தான் நடப் பதே தனக்குப் பாக்கியம் என்று அவள் கருதி வந்திருக்கிறாள். புலனடக்க வாழ்க்கையை நடத்த நான் செய்த முயற்சிக்கு அவள் எப்பொழுதும் குறுக்கே நின்றதே இல்லை. ஆகையால் அறிவுத் துறையில் எங்களுக்கிடையே அதிகப் பேதம் இருந்த போதிலும், எங்களுடைய வாழ்க்கை திருப்தியும், சந்தோஷமும், முற்போக்கும் உள்ளதாக இருந்து வருகிறது என்றே நான் எப் பொழுதும் உணருகிறேன்.

## 11

# ஐரோப்பியருடன் நெருங்கிய தொடர்பு

இந்த அத்தியாயம், என்னை ஒரு கட்டத்திற்குக் கொண்டு வந்திருக்கிறது. ஒவ்வொரு வாரமும் இக் கதை எவ்விதம் எழு தப்படுகிறது என்பதைக் குறித்து வாசகர்களுக்கு நான் விளக்க வேண்டியது இங்கே அவசியமாகிறது.

இதை எழுத ஆரம்பித்தபோது எந்த முறையில் இதை எழுதுவது என்பதைக் குறித்து நான் எந்தத் திட்டமும் போட் டுக் கொள்ளவில்லை. என்னுடைய சோதனைகளின் கதையை எழுதுவதற்கு ஆதாரமாகக் கொள்ள என்னிடம் எந்தவிதமான

நாட் குறிப்போ, வேறு ஆதாரங்களோ இல்லை. எழுதும்போது கடவுள் எவ்வழியில் என்னை நடத்திச் செல்கிருரோ அவ் வழியில் எழுதுகிறேன். என்னுடைய மனமார்ந்த எண்ணங்களும் செயல்களும் இறைவனுல் தூண்டப்பட்டவையே என்று நிச்சய மாக நான் அறிவேன் என்றும் நான் சொல்லிக்கொள்ளவில்லை. ஆனுல், என் வாழ்க்கையில் நான் செய்திருக்கும் மிகப் பெரிய காரியங்களையும், மிகச் சிறியவை என்று கருதக்கூடிய காரியங் களையும் பரிசீலனை செய்து பார்க்கும்போது, அவைகளெல்லாம் கடவுளால் நடத்திவைக்கப்பட்டவைதான் என்று சொல்லுவது தவருகாது என்றே எண்ணுகிறேன்.

கடவுளை நான் கண்டதுமில்லை; அறிந்ததுமில்லை. உலகமெல் லாம் அவர்மீது வைத்திருக்கும் நம்பிக்கையையே என் நம்பிக்கை யாக்கிக் கொண்டிருக்கிறேன். அந்த என் நம்பிக்கை அழிக்க முடியாதது. ஆகையால் அந்த நம்பிக்கை அனுபவத்திற்குச் சமம் என்று கருதுகிறேன். என்ருலும், நம்பிக்கையை அனுப வம் என்று விவரிப்பது உண்மைக்கு ஊறு செய்வதாகும் என்று சொல்லக்கூடு மாகையால் கடவுளிடம் எனக்குள்ள நம்பிக் கையை எடுத்துக்கூற என்னிடம் சொற்கள் இல்லை என்று சொல்லுவதே மிகவும் சரியானதாக இருக்கக்கூடும்.

கடவுள் தூண்டும் வழியில் இக்கதையை நான் எழுதுகிறேன் என்று நான் ஏன் நம்புகிறேன் என்பதைப் புரிந்துகொள்ளுவது ஓரளவுக்கு இப்பொழுது எளிதாக இருக்கக்கூடும். முந்திய அத்தியாயத்தை நான் எழுத ஆரம்பித்தபோது, இந்த அத்தியா யத்திற்குக் கொடுத்திருக்கும் தலைப்பையே அதற்கும் கொடுத் தேன். ஆனுல், அதை நான் எழுதிக்கொண் டிருந்த போது ஐரோப்பியருடன் பழகிய அனுபவத்தைப் பற்றிக் கூறுவதற்கு முன்னுல் முகவுரையாகச் சில விஷயங்களைச் சொல்ல வேண்டும் என்பதை உணர்ந்தேன். அதையே செய்து தலைப்பையும் மாற்றினேன்.

திரும்பவும் இப்பொழுது இந்த அத்தியாயத்தை எழுத ஆரம்பித்தபோது ஒரு புதிய பிரச்னை என் முன்பு நிற்பதைக் காண்கிறேன். ஆங்கில நண்பர்களைக் குறித்தே நான் எழுதப் போகிறேன். அவர்களைக் குறித்து எதைக் கூறுவது, எதைக் கூருதிருப்பது என்பதே கஷ்டமான அப் பிரச்னை. பொருத்த மான விஷயங்களைக் கூருதுபோனுல் சத்தியத்தின் ஒளி மங்கி விடும். இந்தச் சரித்திரத்தை எழுதுவதிலுள்ள பொருத்தத் தைக் குறித்தே நான் நிச்சயமாக அறியாதபோது, பொருத்த மானது எது என்பதை நேரே முடிவு செய்துவிடுவ தென்பது கஷ்டமானதாகும்.

எல்லாச் சுயசரிதைகளும் சரித்திரங்க ளாவதற்கு ஏற்றவை யல்ல என்பதை வெகு காலத்திற்கு முன்பே படித்திருக்கிறேன். இதை இன்று அதிகத் தெளிவாக அறிகிறேன். எனக்கு

நினைவிருப்பவை எல்லாவற்றையும் இக் கதையில் நான் கூறவில்லை. உண்மையின் முக்கியத்தை முன்னிட்டு நான் எவ்வளவு கூறலாம், எவ்வளவு கூறாமல் விடலாம் என்பதை யார் கூற முடியும்? என் வாழ்க்கையில் ஏற்பட்ட ஒரு சம்பவத்தைக் குறித்து நான் கூறும் அரை குறையானதும், ஒருதலைப்பட்சமானதுமான சாட்சியங்களுக்கு ஒரு நீதி மன்றத்தின் முன்பு என்ன மதிப்பு இருக்கும்? நான் இதுவரையில் எழுதியிருக்கும் அத்தியாயங்களின் பேரில், குறும்புத்தனமானவர் யாரேனும் குறுக்கு விசாரணை செய்வதாக இருந்தால், அவைகளைக் குறித்து மற்றும் பல விவரங்கள் வெளியாகலாம். இது விரோத உணர்ச்சியுடன் குறை கூறுபவரின் குறுக்கு விசாரணையாக இருந்தால், என்னுடைய பாசாங்குகளில் பலவற்றை வெளிப்படுத்திவிட்டதாக அவர் பெருமை யடித்துக்கொள்ளலாம்.

ஆகையால், இந்த அத்தியாயங்களை எழுதாமல் இருப்பது கூட நல்லதல்லவா என்ற எண்ணமும் எனக்கு ஒரு கணம் உண்டாகிறது. ஆனால், என்னுள் இருக்கும் அந்தராத்மாவின் தடை எதுவும் இல்லாதிருக்கும் வரையில் நான் தொடர்ந்து எழுதியே ஆகவேண்டும். ஒரு காரியத்தைச் செய்ய ஒரு முறை தொடங்கிவிட்டால், அது ஒழுக்கத் தவறானது என்று நிரூபிக்கப் பட்டாலன்றி அதைக் கைவிடவே கூடாது என்ற முனிவரின் உபதேசத்தை நான் பின்பற்ற வேண்டும்.

விமர்சகர்களைத் திருப்தி செய்வதற்காக நான் சுயசரிதையை எழுதிக் கொண்டிருக்கவில்லை. இதை எழுதுவது கூடச் சத்திய சோதனையில் ஓர் அம்சமேயாகும். இதை எழுதுவதன் நோக்கங்களில் ஒன்று, நிச்சயமாக என் சக ஊழியர்களுக்குச் சிறிது மன ஆறுதலையும், சிந்தனை செய்வதற்குரிய விஷயத்தையும் அளிப்பதுதான். அவர்களுடைய விருப்பத்திற்கு உடன்பட்டே இதை எழுத ஆரம்பித்தேன் என்பதில் சந்தேகமில்லை. ஸ்ரீ ஜெயராம் தாஸும்* சுவாமி ஆனந்தும் இந்த யோசனையை வற்புறுத்தாதிருந்தால் இதை எழுதியே இருக்கமாட்டேன். ஆகையால்,

* சுயசரிதையைப் பூர்த்தி செய்துவிடும்படி தம்முடன் சிறையிலிருந்த ஜெயராம் தாஸ் கேட்டுக்கொண்டதாகக் காந்திஜி முன்னுரையில் எழுதியிருப்பதும் இதே ஸ்ரீ ஜெயராம் தாஸைக் குறித்துத்தான். இவரது முழுப் பெயர் ஜெயராம்தாஸ் தௌலத்ராம். சிந்து மாகாணத்திலுள்ள ஹைதராபாத்தில் 1892–ஆம் ஆண்டில் இவர் பிறந்தார். 1915-இல் சட்டப் பரீட்சையில் தேறினார். 1919-இல் ஒத்துழையாமை இயக்கத்தில் சேர்ந்தார். பல ஆண்டுகள் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி உறுப்பினராகவும், 1931-34–இல் காங்கிரஸின் பொதுக் காரியதரிசியாகவும், 1928-இலிருந்து 1941 வரை காரியக் கமிட்டி அங்கத்தினராகவும் இருந்தார். 1921-இல் கராச்சியிலிருந்து வெளிவந்துகொண்டிருந்த 'ஹிந்து' பத்திரிகையின் ஆசிரியரா யிருந்தார். 1925–26-இல் பம்பாய் சட்டசபை அங்கத்தினராக இருந்தார். 1930-34-இல் பன்முறை சுதந்திரப் போராட்டத்தில் சிறைவாசம் செய்திருக்கிறார். அரசியல் நிர்ணய சபை உறுப்பினரா யிருந்தார். 1947-இல் பீகார் கவர்னராகவும் பின்னர் அஸ்ஸாம் கவர்னராகவும் பணியாற்றினார். மத்திய அரசாங்கத்தில் உணவு, விவசாய இலாகாவின் மந்திரியாகவும் சேவை செய்துள்ளார்.

நான் சுயசரிதையை எழுதியது தவறு என்றால் அத்தவறில் அவர்களும் பங்கு கொள்ளவேண்டும்.

இனி, தலைப்பில் குறிப்பிட் டிருக்கும் விஷயத்திற்கு வருவோம். என் குடும்பத்தைச் சேர்ந்தவர்களாக என்னுடன் இந்தியர் வசித்துக்கொண் டிருந்ததைப் போலவே டர்பனில் ஆங்கில நண்பர்களும் என்னுடன் வசித்துக்கொண்டிருந்தார்கள். என்னுடன் வசித்தவர்கள் எல்லோருக்கும் இது பிடித்திருந்தது என்பதல்ல. ஆனால், அவர்கள் என்னுடன் இருக்கவேண்டும் என்று நான்தான் வற்புறுத்தினேன். இவ்விதம் செய்தது எல்லோருடைய விஷயத்திலும் புத்திசாலித்தனமானதாக முடியவுமில்லை. சிலர் விஷயத்தில் மிகவும் கசப்பான அனுபவமும் ஏற்பட் டிருக்கிறது. அவர்களில் இந்தியரும் உண்டு; ஐரோப்பியரும் உண்டு. இந்த அனுபவங்களுக்காக நான் வருத்தப்படவில்லை. இவை போன்றவை இருந்தபோதிலும், நண்பர்களுக்கு அசௌகரியங்களையும் மனக்கவலையையும் அநேக சமயங்களில் நான் உண்டாக்கியிருக்கிறேன் என்றாலும், என் பழக்கத்தை நான் இன்னும் மாற்றிக்கொண்டு விடவில்லை. நண்பர்களும் அன்புடன் என்னைச் சகித்துக்கொண்டுதான் வந்திருக்கிறார்கள். புதிதாக வருபவர்களுடன் எனக்கு ஏற்படும் தொடர்பு நண்பர்களுக்கு மனவேதனையை அளிப்பதாக இருக்கும்போதெல்லாம் அவர்களைக் குறைகூற நான் தயங்கியதே இல்லை. தங்களுள் காணும் கடவுளை மற்றவர்களிடமும் காண வேண்டும் என்பதை நம்புகிறவர்கள், எல்லோருடனும் விருப்பு, வெறுப்பின்றி வாழ முடிந்தவர்களாகவும் இருக்க வேண்டும் என்று நான் கருதுகிறேன். இத்தகைய தொடர்புகளுக்குத் தேடாமலேயே கிடைக்கும் வாய்ப்புகளை ஒதுக்கித் தள்ளிவிடாமல், சேவை உணர்ச்சியுடன் அந்தச் சந்தர்ப்பங்களை வரவேற்று, அவைகளினா லெல்லாம் மன அமைதி கெடாமல் பார்த்துக் கொள்ளுவதன் மூலமே அவ்விதம் வாழ்வதற்கு வேண்டிய ஆற்றலைப் பெற முடியும்.

ஆகையால், போயர் யுத்தம் ஆரம்பமானபோது என் வீடு நிறைய ஆட்கள் இருந்தார்கள் என்றாலும் ஜோகன்னஸ்பர்க்கிலிருந்து வந்த இரு ஆங்கிலேயரையும் அழைத்துக்கொண்டேன். இருவரும் பிரம்மஞான சங்கத்தினர். இவர்களில் ஒருவர் ஸ்ரீ கிட்சின். இவரைக் குறித்து அதிகமாகத் தெரிந்துகொள்ளப் பின்னால் சந்தர்ப்பம் இருக்கும். இந்த நண்பர்களினால் என் மனைவி அடிக்கடி கண்ணீர் வடிக்கவேண்டி வந்தது. துரதிருஷ்டவசமாக என்னால் அவளுக்கு இது போன்ற சோதனைகள் பல ஏற்பட்டன. ஆங்கில நண்பர்கள், குடும்பத்தினர்போல் என்னுடன் நெருக்கமாக வசிப்பது இதுவே முதல் தடவை. நான் இங்கிலாந்தில் இருந்தபோது ஆங்கிலேயரின் வீடுகளில் தங்கியிருக்கிறேன். அங்கே அவர்களுடைய வாழ்க்கை முறையை நானும் அனுசரித்து வந்தேன். ஏறக்குறையச் சாப்பாட்டு விடுதியில் தங்குவதைப் போன்றதே அது. இங்கோ, அது முற்றும் மாறானது. ஆங்கில நண்பர்கள் என் குடும்பத்தைச் சேர்ந்தவர்க

ளாயினர். பல விஷயங்களில் அவர்கள் இந்தியரின் முறைகளை மேற்கொண்டனர். நடைமுறை போன்றவைகளில் மேனாட்டு முறையே அனுசரிக்கப்பட்டாலும் உள் வாழ்க்கை முற்றும் இந்திய மயமானதாகவே இருந்தது. குடும்பத்துடன் சேர்ந்தவர்களாக அவர்களை வைத்துக் கொண்டிருப்பதால் சில கஷ்டங்கள் இருந்தன என்பது எனக்கு நினைவு இருக்கிறது. என்றாலும், என் வீட்டில் தங்கள் சொந்த வீடுபோன்றே அவர்கள் இருந்து வருவதில் அவர்களுக்கு எந்தவிதமான கஷ்டமுமே இல்லை என்பதை நான் நிச்சயமாகக் கூற முடியும். டர்பனில் இருந்ததைவிட ஜோகன்னஸ்பர்க்கில் இவ்விதமான தொடர்புகள் இன்னும் அதிகமாயின.

# 12

## ஐரோப்பியரின் தொடர்பு (தொடர்ச்சி)

ஜோகன்னஸ்பர்க்கில் ஒரு சமயம் என்னிடம் நான்கு இந்தியக் குமாஸ்தாக்கள் இருந்தனர். குமாஸ்தாக்கள் என்பதை விட அவர்கள் என் புத்திரர்கள் போலவே இருந்தனர் எனலாம். ஆனால், எனக்கு இருந்த வேலைக்கு அவர்கள் போதவில்லை. டைப் அடிக்காமல் எதுவும் செய்ய இயலாது. எங்களில் யாருக்காவது டைப் அடிக்கத் தெரியுமென்றால் அது எனக்குத்தான். குமாஸ்தாக்களில் இருவருக்கு அதைச் சொல்லிக் கொடுத்தேன். ஆனால், அவர்களுக்கு ஆங்கிலம் நன்றாகத் தெரியாததனால் அவர்கள் அதில் போதிய திறமை பெறவில்லை. அவர்களுள் ஒருவரை நல்ல கணக்கராகப் பயிற்சி செய்துவிடவும் விரும்பினேன். அனுமதிச் சீட்டுப் பெறாமல் டிரான்ஸ்வாலுக்குள் யாரும் வர முடியாதாகையால், நேட்டாலிலிருந்து நான் எவரையும் கொண்டு வருவதற்கும் முடியவில்லை. என்னுடைய சொந்தச் சௌகரியத்திற்காக அனுமதிச் சீட்டு அதிகாரியின் தயவை நாடுவதற்கு நான் விரும்பவுமில்லை.

என்ன செய்வதென்றே எனக்குப் புரியவில்லை. வேலை பாக்கியாகிக் குவிந்து கொண்டே போயிற்று. ஆகையால் நான் என்னதான் முயன்றாலும், தொழில் சம்பந்தமான வேலைகளுடன் பொதுவேலையையும் செய்து சமாளித்துக் கொண்டு விடுவது அசாத்தியம் என்று எனக்குத் தோன்றியது. ஓர் ஐரோப்பியக் குமாஸ்தாவை வைத்துக் கொள்ள நான் தயாராகவே இருந்தேன். ஆனால், என்னைப் போன்ற ஒரு கறுப்பு மனிதனிடம் வேலை செய்ய ஒரு வெள்ளைக்கார ஆணோ, பெண்ணோ வருவார்கள் என்ற நிச்சயம் எனக்கு இல்லை. என்றாலும், முயன்று பார்ப்பது என்று தீர்மானித்தேன். எனக்குத் தெரிந்த டைப் ரைட்டர் தரகர் ஒருவரிடம் சென்றேன். சுருக்கெழுத்தும் தெரிந்து டைப் அடிப்பவர் ஒருவர் எனக்குத் தேவை என்று அவரிடம் கூறினேன். பெண்கள் கிடைப்பார்கள் என்றும், ஒரு பெண்ணை

ஏற்பாடு செய்வதாகவும் அவர் சொன்னர். ஸ்காட்லாந்திலிருந்து அப்பொழுதுதான் வந்தவரான குமாரி டிக் என்ற பெண்ணைப் பார்த்து அவர் விசாரித்தார். அப் பெண்ணுக்குப் பணம் தேவை. ஆகையால், யோக்கியமான பிழைப்பு எங்கே கிடைத்தாலும் வேலை பார்ப்பதில் அவளுக்கு ஆட்சேபமில்லை. எனவே, அந்தத் தரகர் அப் பெண்ணை என்னிடம் அனுப்பினர். அப் பெண்ணைப் பார்த்ததுமே எனக்குப் பிடித்துப் போய்விட்டது.

"இந்தியரின் கீழ் ஊழியம் பார்ப்பதில் உமக்கு ஆட்சேப முண்டா?" என்று அப்பெண்ணைக் கேட்டேன்.

"இல்லவே இல்லை" என்று அவர் உறுதியாகக் கூறினர்.

"என்ன சம்பளம் நீர் எதிர்பார்க்கிறீர்?"

"ஏழரைப் பவுன் கேட்டால் அது உங்களுக்கு அதிகமான தாக இருக்குமா?"

"உம்மிடமிருந்து நான் விரும்பும் வேலையை அளிப்பீரானல் அச்சம்பளம் அதிகமானதாகாது. எப்பொழுது வேலைக்கு வர முடியும்?"

"நீங்கள் விரும்பினல் இந்த நிமிடத்திலேயே."

நான் அதிகத் திருப்தி அடைந்துவிட்டேன். எழுத வேண்டிய கடிதங்களை அவருக்கு அப்பொழுதே சொல்ல ஆரம்பித்து விட்டேன்.

அப் பெண், டைப் அடிப்பவர் என்பதற்குப் பதிலாக வெகு சீக்கிரத்திலேயே எனக்கு ஒரு மகள் அல்லது சகோதரி போல் ஆகிவிட்டார். அவர் செய்த வேலையைப் பற்றிக் குறைகூற எந்தக் காரணமும் எனக்கு இல்லை. ஆயிரக்கணக்கான பவுன் தொகையை நிர்வகிக்கும் பொறுப்பும் அடிக்கடி அவரிடம் ஒப்படைக்கப்பட்டது உண்டு. கணக்குகள் வைத்துக் கொள்ளுவதும், அவர்தான். என் முழு நம்பிக்கையையும் அவர் பெற்றுவிட்டார். இன்னும் அதிக முக்கியமானது என்னவென்றல், அவர் தமது மனத்திற்குள்ளிருந்த எண்ணங்களையும் உணர்ச்சிகளையுங்கூட என்னிடம் கூறிவந்தார். முடிவாகத் தமக்குக் கணவனைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுவதில் என் ஆலோசனையையும் நாடினர். அவரைக் கன்னிகாதானம் செய்து கொடுக்கும் பாக்கியமும் எனக்குக் கிடைத்தது. குமாரி டிக், ஸ்ரீமதி மெக்டானல்டு ஆனதும் என்னைவிட்டுப் போய்விட வேண்டியதாயிற்று. ஆனல், விவாகமான பிறகும்கூட வேலை அதிகமாக இருக்கும்போது கூப்பிட்டால் தவருமல் வந்து செய்துவிட்டுப் போவார்.

ஆனல், அவருடைய ஸ்தானத்தில் நிரந்தரமான ஒரு டைப் குமாஸ்தா இப்பொழுது அவசியமாயிற்று. மற்றேர் பெண் எனக்குக் கிடைத்ததில் நான் அதிருஷ்டசாலியானேன். குமாரி ஷிலேஸின் என்பவரே இவர். இவரை ஸ்ரீ கால்லென்பாக் எனக்கு அறிமுகம் செய்துவைத்தார். ஸ்ரீ கால்லென்பாக் பற்றி

உரிய இடத்தில் வாசகர் அறிந்து கொள்ளுவர். இப் பெண்மணி இப்பொழுது டிரான்ஸ்வாலில் ஓர் உயர்நிலைப் பள்ளியில் உபாத்தி யாயினியாக இருக்கிறார். இவர் என்னிடம் வந்த போது சுமார் பதினேழு வயது இருக்கும். இப் பெண்ணிடம் சில விசித்திரமான சுபாவங்கள் உண்டு. சில சமயங்களில் எனக்கும் ஸ்ரீ கால்லென் பாக்குக்கும் அதைப் பொறுக்க முடியாது போகும். டைப் அடிக்கும் குமாஸ்தாவாக வேலை செய்வதைவிட, அதற்கான அனுபவம் பெறுவதற்கு என்றே இப்பெண் முக்கியமாக வேலைக்கு வந்தார். நிறத் துவேஷம் என்பது இவருடைய சுபா வத்திற்கே விரோதமானது. வயதுக்கோ, அனுபவத்திற்கோ இவர் மதிப்புக் கொடுப்பதில்லை. ஒருவரை அவமதிப்பதாகுமே என்பதைக் கூடப் பொருட்படுத்த மாட்டார்; அவரைக் குறித் துத் தாம் நினைப்பதை நேருக்கு நேராகத் தயக்கமின்றிக் கூறி விடுவார். இவருடைய அதிதீவிரப் போக்கு, பல சமயங்களில் என்னைச் சங்கடத்தில் கொண்டுபோய் விட்டுவிடும். ஆனால், இவருடைய கபடமற்ற வெள்ளை மனப்போக்கோ, சங்கடம் ஏற்பட்டவுடனே அச்சங்கடத்தை போக்கியும் விடும். இவரு டைய ஆங்கில ஞானம் என்னுடையதைவிட மேலானது என்று கருதினேன். அதோடு இவருடைய விசுவாசத்தில் எனக்கு முழு நம்பிக்கையும் இருந்தது. ஆகையால், இவர் டைப் அடிக்கும் கடிதங்களைத் திரும்பப் படித்துப் பாராமலேயே கையெழுத் திட்டுவிடுவேன்.

இவர் செய்திருக்கும் தியாகம் மகத்தானது. வெகு காலம் வரையில் இவர் ஆறு பவுனுக்கு மேல் வாங்கிக்கொள்ள எப் பொழுதும் மறுத்துவிட்டார். கொஞ்சம் அதிகமாக வாங்கிக் கொள்ளுமாறு நான் வற்புறுத்தும் போது என்னைத் திட்டிவிடு வார். "உங்களிடம் சம்பளம் வாங்குவதற்காக நான் இங்கே இல்லை. உங்களுடன் வேலை செய்ய விரும்புகிறேன்; உங்கள் கொள்கைகளும் எனக்குப் பிடித்திருக்கின்றன என்பதனா லேயே இங்கே இருக்கிறேன்" என்பார்.

ஒரு சமயம் என்னிடம் நாற்பது பவுன் வாங்கிக் கொண்டார். ஆனால், அதை கடனாகவே பாவிக்க வேண்டும் என்று வற்புறுத் தினார். சென்ற ஆண்டு முழுத் தொகையையும் திருப்பி அனுப்பி விட்டார். அவருடைய தியாகத்திற்குச் சமமானவை அவர் தைரி யமும், பளிங்கு போன்ற மாசற்ற ஒழுக்கமும். போர்வீரனும் வெட்கமடையும்படி செய்யும் தீரம் கொண்ட சில பெண்களுடன் பழகும் பாக்கியமும் எனக்குக் கிடைத்தது. அத்தகைய பெண் களில் இவரும் ஒருவர். இப்பொழுது இவர் வயது முதிர்ந்த மாது. இவர் என்னிடம் இருந்தபோது நான் அறிந்திருந்தது போல, இப்பொழுது இவர் மன நிலையைப்பற்றி நான் அறியேன். ஆனால், இந்த யுவதியுடன் ஏற்பட்ட பழக்கம், எனக்கு என்றென்றும் புனிதமானதொரு நினைவாகவே இருந்து வரும். ஆகையால், இவரைப் பற்றி எனக்குத் தெரிந்தவைகளைக் கூறாமல் விடுவே னாயின் நான் சத்தியத்திற்குத் துரோகம் செய்தவனாவேன்.

லட்சியத்திற்காக உழைப்பதில் இவருக்கு இரவென்றும் பகலென்றும் தெரியாது. நள்ளிரவில் தன்னந்தனியாக வெளி இடங்களுக்குச் செய்தி கொண்டுபோவார். துணைக்கு ஆள் அனுப்புவதாகச் சொன்னால், கோபத்தோடு அதை மறுத்து விடுவார். ஆயிரக்கணக்கான தீரமான இந்தியர், இவருடைய புத்திமதியை எதிர்நோக்கி நின்றனர். சத்தியாக்கிரக சமயத்தில் தலைவர்கள் எல்லோரும் சிறையில் இருந்தபோது இவர் தன்னந் தனியாக இயக்கத்தை நடத்திவந்தார். அப்பொழுது ஆயிரக் கணக்கானவர்களை வைத்துக்கொண்டு இவர் நிர்வகிக்க வேண்டி யிருந்தது. கவனிக்க வேண்டிய கடிதப் போக்குவரத்துக் களும் ஏராளமாக இருந்தன. ‘ இந்தியன் ஒப்பீனியன் ’ பத்திரி கையையும் இவரே நடத்த வேண்டியிருந்தது. என்றாலும், இவர் சோர்வடைந்துவிட்டதே இல்லை.

குமாரி ஷிலேஸினைக் குறித்து முடிவில்லாமல் நான் எழுதிக் கொண்டே போக முடியும். எனினும், இவரைக் குறித்துக் கோகலே கொண்டிருந்த அபிப்பிராயத்தைக் கூறி இந்த அத்தி யாயத்தை முடிக்கிறேன். என் சக ஊழியர்கள் ஒவ்வொரு வரையும் கோகலே நன்கு அறிவார். அவர்களில் பலரை அவருக்குப் பிடித்திருந்தது. அவர்களைப்பற்றித் தமது அபிப் பிராயத்தையும் கூறுவார். எல்லா இந்திய, ஐரோப்பிய சக ஊழியர்களிலும் குமாரி ஷிலேஸினுக்கு அவர் முதலிடம் கொடுத் தார். “ குமாரி ஷிலேஸினிடம் நான் கண்ட தியாகம், தூய்மை, அஞ்சாமை ஆகியவைகளைப் போல வேறு யாரிடமும் நான் கண்டதில்லை” என்றார், அவர். “உங்களுடைய சக ஊழியர்களி டையே குமாரி ஷிலேஸின் முதலிடம் வகிக்கிறார் என்பதே என் அபிப்பிராயம்” என்றும் கூறினார்.

## 13

## ‘ இந்தியன் ஒப்பீனியன் ’

மற்றும் பல ஐரோப்பியருடனும் ஏற்பட்ட நெருங்கிய தொடர்பைக் குறித்துச் சொல்லுவதற்கு முன்னால் இரண்டு மூன்று முக்கியமான விஷயங்களை நான் குறிப்பிட வேண்டும். என்றாலும், ஒருவருடன் ஏற்பட்ட தொடர்பைக் குறித்து இப்போதே சொல்லிவிட வேண்டும். என் வேலைக்குக் குமாரி டிக்கை நியமித்தது மாத்திரம் போதவில்லை. எனக்கு மேற் கொண்டும் உதவி தேவையாயிற்று. முந்திய அத்தியாயங்களில் ஸ்ரீ ரிச் என்பவரைப்பற்றிக் கூறியிருக்கிறேன். அவரை எனக்கு நன்றாகத் தெரியும். ஒரு வர்த்தக ஸ்தாபனத்தில் அவர் நிர்வாகி யாக இருந்தார். அந்த வர்த்தக ஸ்தாபனத்தை விட்டுவிட்டு என் கீழ் வக்கீல் வேலைக்குப் பயிற்சி பெறுமாறு யோசனை

கூறினேன். அதன்படி அவர் செய்து எனக்கு இருந்த வேலைப் பளுவைப் பெரிதும் குறைத்தார்.

அந்தச் சமயம் ஸ்ரீ மதன்ஜித், 'இந்தியன் ஒப்பீனிய'னை ஆரம்பிக்கும் திட்டத்துடன் என்னிடம் வந்து என் ஆலோசனையைக் கேட்டார். அப்பொழுதே அவர் ஓர் அச்சகத்தை நடத்திக் கொண்டிருந்தார். அவருடைய திட்டத்தை நான் அங்கீகரித்தேன். இப் பத்திரிகை *1904*-இல் ஆரம்பமாயிற்று. ஸ்ரீ மன்சுக்லால் நாஸர் அதன் முதல் ஆசிரியரானார். எல்லாச் சமயங்களிலும் நானே அப் பத்திரிகையை நடத்தி வரவேண்டி வந்ததால் வேலை முழுவதும் என் தலையிலேயே விழுந்தது. அவ்வேலையைச் செய்து கொண்டு போக ஸ்ரீ மன்சுக்லாலினால் முடியாது என்பதல்ல. இந்தியாவில் இருந்தபோது ஓரளவுக்குப் பத்திரிகையாளராக அவர் அனுபவம் பெற்றிருக்கிறார். ஆனால், நான் அங்கே இருக்கும் போது சிக்கலான தென்னாப்பிரிக்கப் பிரச்னைகளைக் குறித்து அவர் எழுத முற்படுவதில்லை. என்னுடைய விருப்பு, வெறுப்பற்ற தன்மையில் அவருக்குப் பரிபூரண நம்பிக்கை உண்டு. ஆகவே, தலையங்கங்களை எழுதும் பொறுப்பை அவர் என்மீது போட்டு விட்டார். இன்றளவும் அது வாரப் பத்திரிகையாகவே இருந்து வருகிறது. ஆரம்பத்தில் அது குஜராத்தி, ஹிந்தி, தமிழ், ஆங்கிலம் ஆகிய மொழிகளில் பிரசுரமாயிற்று. ஆனால், ஹிந்திப் பகுதியும் தமிழ்ப் பகுதியும் பெயரளவுக்குத்தான் இருந்தனவே ஒழிய, எந்த நோக்கத்தின் பேரில் அவை ஆரம்பிக்கப் பட்டனவோ அதை அவை நிறைவேற்றவில்லை. ஆகையால், அந்தப் பகுதிகளைத் தொடர்ந்து வெளியிட்டுக் கொண்டிருப்பது ஓரளவுக்கு ஏமாற்றுவதாகும் என்று நான் உணர்ந்ததால் அவற்றை நிறுத்திவிட்டேன்.

இந்தப் பத்திரிகைக்கு நான் பணம் எதுவும் போடவேண்டி வரும் என்று நினைக்கவே இல்லை. ஆனால்,பண உதவி இல்லாமல் அது நடந்துகொண்டு போக முடியாது என்பதைச் சீக்கிரத்தி லேயே கண்டுகொண்டேன். பெயரைப் பொறுத்த வரையில் இப் பத்திரிகைக்கு நான் ஆசிரியன் அல்ல என்றாலும் அதை நடத்துவதற்கு முழுப் பொறுப்பாளியாக இருப்பது நான்தான் என்பதை இந்தியரும், ஐரோப்பியரும் நன்கு அறிவார்கள். இப் பத்திரிகையை ஆரம்பிக்காமலேயே இருந்தாலும் பரவாயில்லை. ஆனால், ஆரம்பித்துவிட்ட பிறகு அதை நிறுத்தி விடுவதென்பது நஷ்டத்தோடு வெட்கக்கேடுமாகும். ஆகவே, என் பணத்தை அதில் போட்டுக்கொண்டே போனேன். முடிவில் நான் மிச்சம் பிடித்து வைத்திருந்த பணத்தையெல்லாம் அதிலேயே போட்டு விட நேர்ந்தது. ஒரு சமயம் மாதத்திற்கு 75 பவுன் நான் அனுப்பவேண்டியிருந்ததும் எனக்கு நினைவிருக்கிறது.

இப் பத்திரிகை சமூகத்திற்கு நல்ல சேவை செய்திருக்கிறது என்பதை இத்தனை ஆண்டுகளுக்குப்பிறகும் நான் உணருகிறேன். லாபத்திற்கு நடத்தும் வர்த்தக ஸ்தாபனமாக அது இருக்க

வேண்டும் என்ற நோக்கம் என்றும் இருந்ததில்லை. என்னால் நடத்தப்பட்டு வந்தவரையில் அப் பத்திரிகையில் ஏற்பட்ட மாறுதல்கள், என்னிடம் ஏற்பட்ட மாறுதல்களுக்கு அடையாளங் களாக இருந்தன. இப்பொழுது ‘எங் இந்தியா’வும் ‘நவஜீவ’ னும் இருப்பதைப்போல் அந்த நாளில் ‘இந்தியன் ஒப்பீ னியன்’ என் வாழ்க்கையின் ஒரு பகுதியைக் காட்டும் கண்ணாடி போல் இருந்து வந்தது. அதன் பத்திகளில் பிரதி வாரமும் என் ஆன்ம உணர்ச்சிகளைக் கொட்டி வந்தேன். சத்தியாக்கிரகக் கொள்கையையும் அதன் அனுஷ்டானத்தையும் நான் அறிந் திருந்த வகையில் அதில் வெளியிட்டு வந்தேன். பத்து வருட காலத்தில், அதாவது 1914-ஆம் ஆண்டு வரையில், சிறைச் சாலைக்குள் எனக்குக் கிடைத்த கட்டாய ஓய்வைத் தவிர மற்றச் சமயங்களில், என்னுடைய கட்டுரை இடம்பெறாத ‘இந்தியன் ஒப்பீனியன்’ இதழே இல்லை. நான் தீர யோசிக்காமலோ, வேண்டும் என்றே மிகைப்படுத்தியோ, திருப்திப்படுத்துவதற்கு மாத்திரம் என்றோ அக்கட்டுரைகளில் ஒரு வார்த்தையைக் கூட எழுதியதாக எனக்கு நினைவு இல்லை. எனக்கு அப்பத்திரிகை தன்னடக்கத்திற்கு ஒரு பயிற்சியாக இருந்தது என்பதில் சந்தேகம் இல்லை. நண்பர்களுக்கோ, என் கருத்துடன் தொடர்பு கொள்ளுவதற்கு அது ஒரு சாதனமாக இருந்தது. குற்றங் கண்டுபிடிப்பவர்களுக்கு, அதில் ஆட்சேபிக்கத் தக்க விஷயங்கள் அதிகம் கிடைப்பதில்லை. உண்மையில் ‘இந்தியன் ஒப்பீனிய’னின் நேர்மையான போக்கு, குற்றங் கூறுவோரும் தங்கள் பேனாவை அடக்கிக்கொள்ளும்படி செய்தது. ‘இந்தி யன் ஒப்பீனியன்’ இல்லாமல் சத்தியாக்கிரகம் சாத்திய மில்லாமலும் இருந்திருக்கக்கூடும். சத்தியாக்கிரகப் போராட் டத்தின் நம்பிக்கையான விவரங்களையும், தென்னாப்பிரிக்காவில் இந்தியரின் உண்மையான நிலைமையையும் அறிவதற்கு வாச கர்கள் இப் பத்திரிகையை ஆவலுடன் எதிர்நோக்கினர். ஆசிரி யருக்கும் வாசகர்களுக்கும் இடையே நெருங்கிய, தூய சம்பந் தத்தை உண்டாக்கிக்கொள்ள வேண்டுமென்று நான் எப்பொழு தும் முயன்றுவந்தேன். ஆகையால், நான் மனித சுபாவத்தின் எல்லாவிதத் தோற்றங்களையும் சாயல்களையும் கற்றறிவதற்கு இப் பத்திரிகை ஒரு நல்ல சாதனமாயிற்று. இதய அந்தரங்க உணர்ச்சிகளைப் பொழிந்து எழுதிய கடிதங்கள் ஏராளமாக, பிரவாகமாக எனக்கு வந்து குவிந்துகொண்டிருந்தன. எழுதிய வரின் மனப்போக்கை ஒட்டிச் சில, சிநேக முறையில் இருந்தன ; சில குற்றங் கூறுவனவாகவோ, கசப்பானவை யாகவோ இருந் தன. இந்தக் கடிதங்களையெல்லாம் படித்து, விஷயத்தை அறிந்து கொண்டு பதில் சொல்வது எனக்கு நல்ல படிப்பாக அமைந்தது. என்னுடன் நடத்திய இக் கடிதப் போக்குவரத்தின் மூலம் சமூகம் தன்னுடைய எண்ணத்தை எனக்கு அறிவிப்பது போலவே இருந்தது. ஒரு பத்திரிகையாளரின் பொறுப்பை முழுவதும் நான் அறிந்துகொள்ளுமாறும் அது செய்தது. இந்த வகையில் நான் சமூகத்தில் அடைந்த செல்வாக்கு, வருங்காலப்

போராட்டத்தைக் காரிய சாத்தியமானதாகவும், கண்ணியமான தாகவும், எதிர்க்க முடியாததாகவும் ஆக்கியது.

பத்திரிகைத் தொழிலின் ஒரே நோக்கம் சேவையாகவே இருக்கவேண்டும் என்பதை 'இந்தியன் ஒப்பீனியன்' ஆரம்பமான முதல் மாதத்திலேயே அறிந்துகொண்டேன். பத்திரிகை, ஒரு பெரிய சக்தி. ஆனால், கரையில்லாத நீர்ப் பிரவாகம் எவ்விதம் கிராமப் புறங்களையெல்லாம் மூழ்கடித்துப் பயிர்களையும் நாச மாக்கிவிடுமோ அதேபோலக் கட்டுத்திட்டத்திற்கு உட்படாத பேனாவும் நாச வேலைக்குத்தான் பயன்படும். கட்டுத்திட்டம் வெளியிலிருந்தே வருவதாயிருந்தால், கட்டுத்திட்டமில்லாததை விட அது அதிக விஷமானதாகும். கட்டுத்திட்டம் உள்ளுக்குள் ளிருந்தே வருவதாக இருந்தால்தான் அதனால் லாபம் உண்டு. இந்த நியாயமே சரியானது என்றால், உலகில் இப்பொழுது இருக்கும் பத்திரிகைகளில் எத்தனை இந்தச் சோதனையில் தேறும்? ஆனால், பயனில்லாதவைகளாக இருப்பவைகளை யார் நிறுத்துவார்கள்? மேலும் இதில் முடிவு கூறுவது யார்? பொது வாக "நல்லதையும் தீயதையும் போலப் பயனுள்ளவையும் பய னில்லாதவையும் கலந்து இருந்துகொண்டுதான் வரும். மனிதனே அதில் சிறந்ததைத் தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டும்.

## 14

# கூலிகளின் ஒதுக்கலிடங்கள்

நமக்கு மிகப் பெரிய சேவை செய்து வரும் வகுப்பினர் உண்டு. ஆனால், ஹிந்துக்களாகிய நாம், அவர்களைத் 'தீண்டா தார்' என்று சொல்லுகிறோம். பட்டணம் அல்லது கிராமத்தின் ஒதுக்குப் புறமான இடங்களில் அவர்களை ஒதுக்கியும் வைத்தி ருக்கிறோம். அப்படிப்பட்ட சேரிகள் குஜராத்தியில் 'டேட் வாடா' என்று சொல்லப்படுகின்றன. அப்பெயருக்கு இழிவை யும் கற்பித்திருக்கிறோம். கிறிஸ்தவ ஐரோப்பாவில் இப்படித் தான் யூதர்கள் ஒரு சமயம் 'தீண்டாதார்' ஆக இருந்தனர். அவர்கள் குடியிருக்க ஒதுக்கப்பட்டிருந்த இடத்தைக் 'கெட் டோக்கள்' என்ற இழிவான பெயர்கொண்டும் கூறிவந்தார்கள். அதே வழியில் இன்று நாம் தென்னாப்பிரிக்காவில் தீண்டாதவர் களாக இருக்கிறோம். ஆண்டரூஸின் தியாகமும், சாஸ்திரியாரின் மந்திரக்கோலும்* நம் கஷ்டங்களைப் போக்குவதற்கு எவ்வளவு

---

* தீனபந்து ஆண்டரூஸ், மகாத்மா இந்தியாவுக்குத் திரும்பிய பிறகும் தென்னாப் பிரிக்க இந்தியரின் பிரச்னையைத் தீர்ப்பதற்கு அரும்பாடுபட்டார். 1927–இல் தென்னாப்பிரிக்காவுக்கு இந்திய அரசாங்கத்தின் ஏஜென்டாக நியமிக்கப்பட்ட மகாகனம் சீனிவாச சாஸ்திரியார், காந்தி–ஸ்மட்ஸ் ஒப்பந்தத்தை அனுசரித்துத் தென்னாப்பிரிக்க சர்க்கார் நடக்கும்படி செய்வதற்குத் தீவிர முயற்சிகளைச் செய்தார். அவற்றையே மகாத்மா இங்கே குறிப்பிடுகிறார்.

தூரம் பயன்படப் போகின்றன என்பது இனிமேல்தான் தெரிய வேண்டும்.

புராதன யூதர்கள், தாங்களே கடவுளின் அன்புக்குப் பாத்திர மான மக்கள் என்றும், மற்றவர்களெல்லாம் அப்படி யல்ல என்றும் எண்ணிக் கொண்டார்கள். இதன் காரணமாக அவர்களுடைய சந்ததியார் விசித்திரமானதும் அநீதியானதுமான வினைப்பயனை அனுபவித்தாக வேண்டியவர்களாயினர். அநேகமாக அதே மாதிரியே ஹிந்துக்கள், தாங்கள் ஆரியர்கள் அல்லது நாகரிகமானவர்கள் என்று எண்ணிக் கொண்டனர். தமது சொந்த உற்ருர் உறவினரேயான ஒரு பகுதியினரை, அநாரியர்கள் அல்லது தீண்டாதார் என்று ஒதுக்கித் தள்ளினர். இதன் பயனாக அநீதியானதே யென்ருலும் விசித்திரமான கர்ம பலன், தென்னுப்பிரிக்காவில் ஹிந்துக்களின் தலைமீது மாத்திரமல்ல, தங்கள் ஹிந்து சகோதரர்களைப்போல் அதே நிறத்தினரான முஸ்லிம்கள், பார்ஸிகள் ஆகியவர்கள் தலைமீதும், அவர்கள் ஒரே நாட்டைச் சேர்ந்தவர்கள் என்பதனுல், இப்பொழுது விடிந்திருக்கிறது.

இந்த அத்தியாயத்தை 'ஒதுக்கலிடங்கள்' என்ற தலைப்புடன் ஆரம்பித்தேன். அதன் பொருளை ஓரளவுக்கு வாசகர் இப்பொழுது புரிந்துகொண்டிருப்பார். தென்னுப்பிரிக்காவில் 'கூலிகள்' என்ற கேவலமான பெயரை நாம் பெற்றிருக்கிருேம். இந்தியாவில் 'கூலி' என்ருல், சுமை தூக்குகிறவர், கூலிக்கு வேலை செய்பவர் என்றுதான் பொருள். ஆனுல், தென்னுப்பிரிக்காவிலோ, அதற்கு அவமரியாதையான பொருள் இருக்கிறது. 'பறையன்' 'தீண்டாதான்' என்ற சொல்லுக்கு நாம் என்ன பொருள் கொள்ளுகிருேமோ அப்பொருளே தென்னுப்பிரிக்காவில் 'கூலி' என்பதற்குக் கொடுக்கப்படுகிறது. 'கூலி'களுக்குக் குடியிருக்கக் கொடுக்கப்பட்டிருக்கும் இடங்கள் 'கூலி ஒதுக்கலிடங்கள்' என்று சொல்லப்படுகின்றன. அப்படிப்பட்ட ஓர் ஒதுக்கலிடம் ஜோகன்னஸ்பர்க்கில் இருக்கிறது. ஆனுல், ஒதுக்கலிடமுள்ள மற்ற இடங்களில் இந்தியருக்குச் சாசுவதக் குடிவார உரிமை இருப்பதுபோல் இங்கே இல்லை. ஜோகன்னஸ்பர்க்கில் அப் பகுதியில் இந்தியர் மனைகளை 99 வருடக் குத்தகைக்கு வாங்கிக் கொண்டிருக்கின்றனர். அப்பகுதியில் ஜனத்தொகை அதிகரிப்பதற்கு ஏற்ருற்போல விஸ்தீரணம் அதிகரிக்கப்படவில்லை. ஆகையால், அவ்விடத்தில் மக்கள் நெருக்கமாகவே வசிக்க நேர்ந்தது. அரைகுறையான வகையில் கக்கூசுகளைச் சுத்தம் செய்ய ஏற்பாடு செய்திருந்ததைத் தவிர முனிஸிபாலிடி அப் பகுதியில் வேறு எந்தவிதமான சுகாதார வசதியையும் செய்யவே இல்லை. அங்கே நல்ல பாட்டைகளோ, விளக்குகளோ இல்லை. அங்கே குடியிருந்தவர்களின் நலனிலேயே அது சிரத்தை இல்லாமல் இருந்தபோது, அப்பகுதியின் சுகாதாரத்தை அது பாதுகாக்கும் என்பதற்கு இடமே இல்லை. அங்கே குடியிருந்தவர்களோ, நகர

சபையின் சுகாதார விதிகளையும் சுகாதாரத்தையும்பற்றி ஒன்றுமே அறியாதவர்கள். ஆகையால், நகரசபையின் உதவி அல்லது கண் காணிப்பு இல்லாமல் அவர்கள் எதுவும் செய்துகொள்ள முடியாது. தென்னுப்பிரிக்காவுக்குச் சென்ற இந்தியர், ராபின்ஸன் குருஸோக்களாக* இருந்திருப்பார்களாயின், அவர்கள் கதை வேறுவிதமாக இருந்திருக்கும். ஆனல், ராபின்ஸன் குருஸோக்களாகக் குடியேறிய நாடு ஒன்றேனும் உலகில் இருப்பதாக நாம் அறியோம். பொதுவாகச் செல்வத்தையும் வர்த்தகத்தையும் தேடிக்கொண்டே மக்கள் வெளிநாடுகளில் போய்க் குடியேறுகிறார்கள். ஆனல், தென்னுப்பிரிக்காவுக்குச் சென்ற இந்தியரில் பெரும்பாலானவர்கள், ஒன்றும் தெரியாத பரம ஏழை விவசாயிகள். ஆகையால் அவர்களுக்கு அளிக்க வேண்டிய எல்லாக் கவனமும் பாதுகாப்பும் அவர்களுக்குத் தேவை. அவர்களைத் தொடர்ந்து அங்கே சென்ற வியாபாரிகளும், படித்த இந்தியரும் மிகச் சிலரே.

நகரசபையின் அக்கிரமமான அசிரத்தையும், அப்பகுதியில் குடியேறியிருக்கிற இந்தியரின் அறியாமையும் சேர்ந்து, அவர்கள் குடியிருந்த இடத்தை முற்றும் சுகாதாரக் கேடானதாக்கி விட்டன. அப் பகுதியின் நிலைமை அபிவிருத்தி யடையும்படி நகரசபை ஒன்றுமே செய்யாமல் இருந்ததோடு, தங்களுடைய சொந்த அசிரத்தையினல் ஏற்பட்ட சுகாதாரக் கேட்டை, அப் பகுதியையே அழித்துவிடுவதற்கு ஒரு சாக்காகவும் உபயோகித்துக் கொண்டது. அந்த இடத்தில் குடியிருக்கும் உரிமையை இந்தியரிடமிருந்து பறித்துவிட உள்ளூர்ச் சட்டசபையின் அதிகாரத்தையும் பெற்றது. நான் ஜோகன்னஸ்பர்க்கில் குடியேறிய போது அங்கே இருந்த நிலைமை இதுவே.

குடியேறியிருந்தவர்களுக்குத் தங்கள் சொந்த நிலத்தில் சொத்துரிமை இருந்ததால் இயற்கையாகவே நஷ்டஈடு பெற வேண்டியவர்களாகின்றனர். நில ஆர்ஜித வழக்குகளை விசாரிப்பதற்கு என்று ஒரு விசேட நீதி மன்றம் அமைத்தார்கள். நகரசபை கொடுக்க முன்வரும் தொகையை ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லாத இந்தியருக்கு அந்த நீதி மன்றத்திடம் அப்பீல் செய்துகொள்ள உரிமை உண்டு. அந்த நீதி மன்றம் தீர்ப்பளிக்

* ராபின்ஸன் குருஸோ : இவன், டேனியல் டிபோ (1660–1731) என்ற ஆங்கில ஆசிரியர் எழுதிய 'ராபின்ஸன் குருஸோ' என்ற உலகப் புகழ்பெற்ற நாவலின் கதாநாயகன்; பெரிய அசகாய சூரன். இவன் இளம் வயதிலேயே கடற்பிரயாணம் செய்யவும், துணிகரமான செயல்களில் ஈடுபடவும் ஆசைப்பட்டுப் பெற்ரேரின் சொல்லைக் கேட்காமல் ரகசியமாக வீட்டைவிட்டு ஓடிக் கடல் யாத்திரை செய்தபோது மனித சஞ்சாரமில்லாத ஒரு தீவுக்குப் போய், அங்கே தான் வாழ்வதற்கு வேண்டிய வசதிகளையெல்லாம் தானே தேடிக்கொண்டு பல வருடங்கள் வாழ்ந்து, அநேக வீரதீரச் செயல்களை யெல்லாம் புரிந்து, அதன்பின் வேறு சில நாடுகளுக்கும் யாத்திரை செய்து, இறுதியில் இங்கிலாந்துக்குத் திரும்பி வந்து கல்யாணம் செய்துகொண்டு குழந்தை குட்டிகளுடன் சௌக்கியமாக வாழ்ந்தான் என்பது கதை.

கும் தொகை, நகரசபை கொடுக்க முன்வந்த தொகையைவிட அதிகமானதாக இருந்தால், நகரசபையே செலவுத் தொகையையும் கொடுக்க வேண்டும்.

அங்கே குடியிருந்தவர்களான இந்தியரில் பெரும்பாலானவர்கள் என்னையே சட்ட ஆலோசகராக வைத்துக்கொண்டனர். இந்த வழக்குகளின் மூலம் பணம் சம்பாதிக்க எனக்கு விருப்பமில்லை. ஆகையால், அவர்களிடம் ஒன்று கூறினேன். வழக்கில் வெற்றி பெற்றால், நீதி மன்றம் என்ன செலவுத் தொகைக்குத் தீர்ப்புச் செய்கிறதோ அதுவே எனக்குப் போதும்; வழக்கின் முடிவு எதுவானாலும் ஒவ்வொரு வழக்கிற்கும் எனக்குப் பத்துப் பவுன் கட்டணம் கொடுக்க வேண்டும் என்று கூறினேன். அவர்கள் இவ்விதம் கொடுக்கும் பணத்தில் ஒரு பாதியை ஏழைகளுக்கு வைத்தியசாலையோ அல்லது அத்தகைய வேறு ஸ்தாபனமோ ஆரம்பிக்க ஒதுக்கி வைத்துவிடப் போகிறேன் என்பதையும் அவர்களிடம் சொன்னேன். இயல்பாகவே இது அவர்கள் எல்லோருக்கும் திருப்தி யளித்தது.

எழுபது வழக்குகளில் ஒன்றுதான் தோற்றுப் போயிற்று. ஆகவே, பெருந்தொகையே கட்டணமாகக் கிடைத்தது. வந்ததை யெல்லாம் விடாமல் விழுங்கிக்கொண் டிருக்க 'இந்தியன் ஒப்பீனியன்' பத்திரிகை இருந்தது. இதுவரையில் அது 1,600 பவுன் விழுங்கியிருக்கிறது என்பது எனக்கு ஞாபகம். இந்த வழக்குகளுக்காக நான் கஷ்டப்பட்டு வேலை செய்தேன். கட்சிக்காரர்கள் எப்பொழுதும் என்னைச் சூழ்ந்துகொண் டிருப்பார்கள். இவர்களில் பெரும்பான்மையோர் முன்னால் பீகாரிலிருந்தும் அதன் சுற்றுப்புறங்களிலிருந்தும், தென்னிந்தியாவிலிருந்தும் வந்தவர்கள். தங்களுடைய குறைகளுக்குப் பரிகாரம் தேடிக்கொள்ளுவதற்கு என்று சுயேச்சையான இந்திய வர்த்தகர்களின் சங்கத்தின் தொடர்பு இல்லாமல் தனியாக ஒரு சங்கத்தை அமைத்துக்கொண் டிருந்தார்கள். இவர்களில் சிலர், கபடமில்லாதவர்கள்; தாராள குணம் உள்ளவர்கள்; உயர்ந்த ஒழுக்கம் உள்ளவர்கள். இவர்களுடைய தலைவர்கள், சங்கத்தின் தலைவரான ஸ்ரீ ஜெயராம் சிங்கும், சங்கத் தலைவரைப்போன்றே இருந்த ஸ்ரீ பத்ரியும் ஆவர். அவர்கள் இருவரும் இப்பொழுது காலமாகிவிட்டனர். அவர்கள் எனக்குப் பெரும் அளவு உதவியாக இருந்தார்கள். ஸ்ரீ பத்ரி என்னுடன் நெருங்கிப் பழகியதோடு சத்தியாக்கிரகத்திலும் முக்கியமான பங்கு எடுத்துக்கொண்டார். அவர்களையும் மற்ற நண்பர்களையும் கொண்டு வடக்கிலிருந்தும், தென்னிந்தியாவிலிருந்தும் வந்து குடியேறியிருந்த அநேக இந்தியருடன் எனக்கு நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. வெறும் சட்ட ஆலோசகர் என்பதைவிட அவர்களுக்கு நான் சகோதரனாகவே ஆகிவிட்டேன். மறைவாகவும், பகிரங்கமாகவும் அவர்கள் அனுபவித்த துக்கங்களிலும் கஷ்டங்களிலும் நானும் பங்குகொண்டேன்.

அங்கே இந்தியர் என்னை எப்படி அழைத்து வந்தார்கள் என்பதை அறிவது கொஞ்சம் ருசிகரமானதாகவே இருக்கக்கூடும். காந்தி என்று என்னைக் கூப்பிட அப்துல்லா சேத் மறுத்துவிட்டார். அதிருஷ்டவசமாக யாரும் என்னை 'சாஹேப்'(துரை) என்று கருதவோ, அப்படி அழைத்து என்னை அவமதிக்கவோ இல்லை. அப்துல்லா சேத், சிறந்த சொல் ஒன்றைக் கண்டுபிடித்தார். 'பாய்' அதாவது சகோதரர் என்பதுதான் அச்சொல். மற்றவர்களும் அதையே பின்பற்றி, நான் தென்னாப்பிரிக்காவிலிருந்து வந்துவிடும்வரையில் என்னை 'பாய்' என்றே கூப்பிட்டு வந்தார்கள். முன்னால் ஒப்பந்தத் தொழிலாளராக இருந்த இந்தியர் இப் பெயரால் என்னை அழைத்தபோது அதில் இனிமையானதொரு மணம் கமழ்ந்தது.

## 15

## கறுப்புப் பிளேக்—1

இந்தியர் குடியிருந்த ஒதுக்கல் இடங்களை நகரசபை வாங்கிக்கொண்டதுமே அவ்விடத்திலிருந்து இந்தியர் அகற்றப்பட்டுவிடவில்லை. அவர்களை அப்புறப்படுத்துவதற்கு முன்னால் அவர்களுக்கு ஏற்றதான புது இடங்களைத் தேடவேண்டியிருந்தது. நகரசபை இதைச் சுலபத்தில் செய்துவிட முடியாமல் இருந்ததனால், அந்த ஆபாசப் பகுதியிலேயே இந்தியர்கள் இருந்து கஷ்டப்பட வேண்டியதாயிற்று. முன்னால் இருந்ததைவிட அவர்கள் நிலைமை இப்போது மிகவும் மோசமானதாக இருந்தது என்பதுதான் இதில் வித்தியாசம். சொந்தக்காரர்கள் என்று இல்லாதுபோய்விட்டதால் அவர்கள் நகரசபையின் இடத்தில் வாடகைக்கு இருப்பவர்களாயினர். இதன் பலனாக அவர்களுடைய சுற்றுப் புறங்களெல்லாம் முன்னால் இருந்ததைவிட அதிக ஆபாசமாயின. அவர்களே சொந்தக்காரர்களாக இருந்தபோது சட்டத்திற்குப் பயந்துகொண்டாவது, ஏதோ ஒரு வகையில் சூழ்நிலை சுத்தமாக இருக்கும்படி செய்யவேண்டியிருந்தது. நகரசபைக்கோ, அப்படிப்பட்ட பயம் எதுவும் இல்லை! அங்கே குடியிருந்தோர் தொகை அதிகமாயிற்று. அதோடு ஆபாசமும் ஒழுங்கீனமும் பெருகின.

நிலைமை இவ்வாறு இருந்துவந்ததைக் குறித்து இந்தியர் கொதிப்படைந்திருந்த சமயத்தில் அங்கே திடீரென்று கறுப்புப் பிளேக் நோய் பரவியது. இந்த நோயை நிமோனிக் பிளேக் என்றும் கூறுவது உண்டு. புபோனிக் பிளேக்கைவிட இது மகா பயங்கரமானதும் பிராணாபாயமானதுமாகும்.

இந்த நோய் பரவுவதற்குக் காரணமாக இருந்த இடம் அதிருஷ்டவசமாக இந்தியர் குடியிருப்பு இடமன்று. ஜோகன்னஸ்பர்க்குக்குப் பக்கத்தில் இருந்த தங்கச் சுரங்கம் ஒன்

தென்னாப்பிரிக்க சத்தியாக்கிரகப் போராட்டத்தில் ஈடுபட்டு
உயிரைப் பலிகொடுத்த வீரப் பெண்மணி வள்ளியம்மாள்

தென்னாப்பிரிக்காவிலும் இந்தியாவிலும் மகாத்மாவுடனேயே
இருந்து, அவர் வகுத்த திட்டங்களையெல்லாம் நிறைவேற்றி
வைத்த ஸ்ரீ மகன்லால் காந்தியும் அவர் மனைவியாரும்



நோயாளிகளுக்குப் பணிவிடை செய்வதிலேயே அதிக இன்பங் காண்பவரான மகாத்மா,
சேவாகிராமத்தில் ஒரு குஷ்டரோகிக்குப் பணிவிடை செய்கிறார்.

றிலிருந்தே இந்த நோய் பரவியது. அச்சுரங்கத்தின் தொழிலாளர்கள் பெரும்பாலும் நீக்ரோக்கள். அவர்கள் சுத்தமாக இருப்பதற்குப் பொறுப்பு ஏற்க வேண்டியவர்கள் அவர்களுடைய வெள்ளைக்கார எஜமானர்களே. அங்கே இச் சுரங்க சம்பந்தமான வேலையில் சில இந்தியர்களும் இருந்தனர். இவர்களில் இருபத்து மூன்று பேருக்கு இந் நோய் கண்டது. ஒரு நாள் மாலை இந் நோயினால் கடுமையாகப் பீடிக்கப்பட்ட இவர்கள், இந்தியர் குடியிருப்புப் பகுதியிலிருந்த தங்கள் வீடுகளுக்குத் திரும்பினர். 'இந்தியன் ஒப்பீனிய'னுக்கு அப்பொழுது சந்தாச் சேர்த்துக் கொண்டிருந்த ஸ்ரீ மதன்ஜித், அப்பொழுது அப் பகுதிக்குப் போயிருந்தார். அவர், அச்சம் என்பதை ஒரு சிறிதும் அறியாதவர். கொள்ளை நோய்க்குப் பலியான இத் துர்ப்பாக்கியர்களைப் பார்த்ததும் அவர் உள்ளம் பதறியது. பென்ஸிலினால் எழுதி எனக்குப் பின்வருமாறு ஒரு குறிப்பு அனுப்பினார்; "திடீரென்று கறுப்புப் பிளேக் நோய் கண்டிருக்கிறது. தாங்கள் உடனே வந்து அவசரமாக நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். இல்லாது போனால் மகா மோசமான விளைவுகளுக்கு நாம் தயாராக வேண்டியிருக்கும். தயவு செய்து உடனே வாருங்கள்."

காலியாக இருந்த ஒரு வீட்டின் பூட்டை உடைத்து ஸ்ரீ மதன்ஜித் தைரியமாகத் திறந்தார். நோயால் பீடிக்கப்பட்டிருந்தவர்களை யெல்லாம் அவ் வீட்டில் கொண்டுபோய்ச் சேர்த்தார். அப் பகுதிக்கு நான் உடனே சைக்கிளில் போனேன். எந்தச் சந்தர்ப்பத்தை முன்னிட்டு அந்த வீட்டை எடுத்துக் கொள்ள நேரிட்டது என்பதைக் குறித்து நகரசபை நிர்வாகிக்கு உடனே எழுதினேன்.

இச் செய்தியை அறிந்ததும் ஜோகன்னஸ்பர்க்கில் வைத்தியத் தொழில் செய்து வந்த டாக்டர் வில்லியம் காட்பிரே உதவிக்கு விரைந்து வந்துசேர்ந்தார். நோயாளிகளுக்கு அவரே டாக்டரும் தாதியுமானார். ஆனால், இருபத்து மூன்று நோயாளிகளை நாங்கள் மூன்று பேர் கவனித்துக் கொண்டுவிட முடியாது.

ஒருவருடைய உள்ளம் மாத்திரம் பரிசுத்தமானதாக இருக்குமாயின், துன்பம் வந்ததுமே அதைச் சமாளிக்க உடனே ஆட்களும் கிடைப்பார்கள், சாதனங்களும் கிட்டும் என்பது அனுபவத்தின் அடிப்படையில் எனக்கு ஏற்பட்டிருக்கும் நம்பிக்கை. அச் சமயம் என் அலுவலகத்தில் நான்கு இந்தியர்கள் இருந்தனர். அவர்களில் மூவரின் பெயர்கள் ஸ்ரீ கல்யாண்தாஸ், மாணிக்கலால், குணவந்தராய் என்பவையாகும். மற்றொருவரின் பெயர் என் ஞாபகத்திற்கு வரவில்லை. கல்யாண்தாஸை அவர் தந்தை என்னிடம் ஒப்படைத்திருந்தார். பரோபகார குணத்திலும், சொன்ன மாத்திரத்தில் சொன்னதை மனமுவந்து பணிவுடன் செய்வதிலும் கல்யாண்தாஸைவிடச் சிறந்தவர்கள் யாரையும் நான் தென்னாப்பிரிக்காவில் கண்டதில்லை. அதிருஷ்டவசமாக

அவருக்கு அப்பொழுது மணமாகவில்லை. எவ்வளவுதான் மகத்தானவை யாயினும் ஆபத்தை விளைவிக்கக்கூடிய கடமைகளை அவர்மீது சுமத்த நான் தயங்கவே இல்லை. மாணிக்கலால், ஜோகன்னஸ்பர்க்கில் எனக்குக் கிடைத்தார். இவருக்கும் மணமாகவில்லை என்றுதான் எனக்கு ஞாபகம். ஆகவே, அந்த நால்வரையும்-அவர்களைக் குமாஸ்தாக்கள் என்று சொன்னாலும் சரி, சக ஊழியர்கள் அல்லது என் புதல்வர்கள் என்று சொன்னாலும் சரி-தியாகம் செய்துவிடத் தீர்மானித்தேன். கல்யாண்தாஸைக் கலந்து ஆலோசிக்கவேண்டிய அவசியமே இல்லை. மற்றவர்களும்-அவர்களிடம் நான் கூறியதுமே-சம்மதித்துவிட்டனர். "நீங்கள் எங்கே இருப்பீர்களோ அங்கே நாங்களும் இருப்போம்" என்பதே அவர்களுடைய சுருக்கமான, இனிமையான பதில்.

ஸ்ரீ ரிச்சின் குடும்பம் பெரியது. அவரும் இதில் குதித்துவிடத் தயாராக இருந்தார். ஆனால், அவரை நான் தடுத்தேன். அவரை இந்த ஆபத்திற்கு உட்படுத்த எனக்கு மனம் வரவில்லை. ஆபத்துப் பிராந்தியத்திற்கு வெளியே இருந்த வேலைகளை அவர் கவனித்துக்கொண்டார்.

கண்விழித்துப் பணிவிடை செய்த அன்றிரவு மிகப் பயங்கரமான இரவு. அதற்கு முன்னால் எத்தனையோ நோயாளிகளுக்கு நான் பணிவிடை செய்திருக்கிறேன். ஆனால், கறுப்புப் பிளேக் நோய் கண்டவர்களில் யாருக்கும் நான் பணிவிடை செய்ததே இல்லை. டாக்டர் காட்பிரேயின் தீரம் மற்றவர்களையும் தொத்திக் கொண்டது. பணிவிடை செய்வது என்பது அதிகமாகத் தேவைப்படவில்லை. அப்போதைக்கப்போது மருந்து கொடுத்து வருவது, நோயாளிகளின் தேவைகளைக் கவனிப்பது, அவர்களுடைய படுக்கைகளைச் சுத்தமாக வைத்திருப்பது, அவர்கள் உற்சாகமாக இருக்கும்படி பார்த்துக்கொள்ளுவது ஆகியவையே நாங்கள் செய்யவேண்டியிருந்தவை.

வேலை செய்த இளைஞர்கள் காட்டிய தளராத உற்சாகத்தையும் பயமின்மையையும் கண்டு, அளவு கடந்த ஆனந்தமடைந்தேன். டாக்டர் காட்பிரேயின் தைரியத்தையும், அனுபவம் மிக்கவரான ஸ்ரீ மதன்ஜித்தின் தீரத்தையும் யாரும் அறிந்துகொள்ள முடியும். ஆனால், இன்னும் வயது வராதவர்களான இந்த இளைஞர்களின் உற்சாகத்தை என்னென்று கூறுவது ?

அன்றிரவு எல்லா நோயாளிகளையும் காப்பாற்றிவிட்டோம் என்பதுதான் எனக்கு ஞாபகம். ஆனால், அச் சம்பவம்-அதிலுள்ள பரிதாபம் ஒரு புறமிருக்க-உள்ளத்தைக் கவரும் முக்கியத்துவம் உடையதாகும். எனக்கு அது பாரமார்த்திக மதிப்பு வாய்ந்தது. ஆகையால், அதை விவரிக்க மேலும் இரு அத்தியாயங்களை நான் எழுதவேண்டும்.

# 16

# கறுப்புப் பிளேக்-2

காலி வீட்டை எடுத்துக்கொண்டு, நோயாளிகளையும் கவனித்துக்கொண்டதற்காக நகரசபை நிர்வாகி எனக்கு நன்றி தெரிவித்து எழுதினர். இப்படிப்பட்டதோர் அவசர நிலைமையைச் சமாளிப்பதற்கு நகரசபையிடம் உடனே செய்வதற்கான சிகிச்சை முறைகள் எவையும் இல்லை என்பதையும், அவர் மனம்விட்டு ஒப்புக்கொண்டார். நகரசபை தனது கடமையைக் குறித்து விழிப்படைந்தது; துரிதமான நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளுவதில் காலதாமதம் செய்யவில்லை.

மறுநாள், காலியாக இருந்த ஒரு கிடங்கை என்னிடம் ஒப்படைத்தார்கள். நோயாளிகளை அங்கே கொண்டுபோய் வைத்துக்கொள்ளலாம் என்றும் யோசனை கூறினர். ஆனால், அந்த இடத்தைச் சுத்தம் செய்யும் வேலையை நகரசபை எடுத்துக்கொள்ளவில்லை. அக்கட்டடம் மிகவும் அசுத்தமாகவும் வசதியில்லாமலும் இருந்தது. அதை நாங்களே சுத்தம் செய்து கொண்டோம். தரும சிந்தனையுள்ள இந்தியரின் உதவியைக் கொண்டு சில படுக்கைகளையும், தேவையான மற்றவைகளையும் சேகரித்தோம். இவ்வாறு அதைத் தாற்காலிகமானதோர் வைத்தியசாலை யாக்கிக்கொண்டோம். நகரசபை, உதவிக்கு ஒரு தாதியை அனுப்பியது. பிராந்தி முதலிய மற்ற ஆஸ்பத்திரிச் சாதனங்களுடன் அவர் வந்தார். டாக்டர் காட்பிரேயே இன்னும் பொறுப்பு வகித்து வந்தார்.

தாதி மிகுந்த அன்பானவர். தாமே நோயாளிகளுக்குப் பணிவிடை செய்ய விரும்பினர். நோய் அவருக்கும் தொத்திவிடக் கூடும் என்பதற்காக நோயாளிகளைத் தொட அவரை நாங்கள் விடவில்லை.

நோயாளிகளுக்கு அடிக்கடி பிராந்தி கொடுக்குமாறு எங்களுக்கு அறிவிக்கப்பட்டிருந்தது. நோய்த் தடுப்பு முறையாகத் தாதியும் அடிக்கடி பிராந்தி சாப்பிட்டார். அதேபோல எங்களையும் சாப்பிடச் சொன்னர். ஆனல், எங்களில் யாரும் அதைத் தொடவில்லை. நோயாளிகளுக்குக்கூட அது பயனளிக்க வல்லது என்ற நம்பிக்கை எனக்கு இல்லை. டாக்டர் காட்பிரேயின் அனுமதியின்பேரில் பிராந்தி சாப்பிடாமலேயே இருக்கத் தயாராயிருந்த மூன்று நோயாளிகளுக்கு மண் சிகிச்சை அளித்து வந்தேன். அவர்களுடைய தலைக்கும் மார்புக்கும் ஈர மண் வைத்துக் கட்டினேன். அவர்களில் இருவர் பிழைத்துக்கொண்டார்கள். கிடங்கிலிருந்த மற்ற இருபது பேர் இறந்துவிட்டனர்.

இதன் நடுவே நகரசபை மற்ற நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ளுவதில் தீவிரமாக இருந்தது. ஜோகன்னஸ்பர்க்கிலிருந்து ஏழு மைல் தூரத்தில் தொத்துநோய் கண்டவர்களை வைப்

பதற்கு என்று ஓர் இடம் இருந்தது. பிழைத்திருந்த இருவரையும் அங்கிருந்த கூடாரங்களுக்குக் கொண்டுபோயினர். புதிதாக நோய்கண்டவர்களை அங்கே கொண்டுபோவதற்கும் ஏற்பாடு செய்தார்கள். இவ்விதம் இவ் வேலையிலிருந்து நாங்கள் விடுவிக்கப்பட்டோம்.

சில தினங்களுக்கெல்லாம் அந்த நல்ல தாதி அந் நோய் கண்டு இறந்துவிட்டார் என்று கேள்விப்பட்டோம். நோயாளி களில் அந்த இருவர் மாத்திரம் எப்படிப் பிழைத்தார்கள், எங் களுக்கு மாத்திரம் அந்நோய் எப்படிப் பற்ருமல் இருந்தது என்பதைக் கூறுவது சாத்திய மில்லை. ஆனுல், இதில் ஏற்பட்ட அனுபவம், மண் சிகிச்சையில் எனக்கு இருந்த நம்பிக்கையை அதிகப்படுத்தியது. மருந்து என்ற வகையில்கூட, பிராந்தியின் ஆற்றலில் எனக்கு இருந்த நம்பிக்கையின்மை பலப்பட்டது. இந்த நம்பிக்கையோ அல்லது இந்த நம்பிக்கையின்மையோ எந்த உறுதியான ஆதாரத்தையும் கொண்டது அல்ல என்பதை நான் அறிவேன். ஆனுல், அன்று நான் பெற்ற கருத்து இன்றும் எனக்கு அப்படியே இருந்து வருகிறது. ஆகையால், அதை இங்கே குறிப்பிட வேண்டியது அவசியம் என்று கருதினேன்.

பிளேக் நோய் கண்டதும் நகரசபையைக் கண்டித்துப் பத்திரிகைகளுக்குக் கடிதம் எழுதினேன். இந்தியர் குடியிருந்த பகுதி நகரசபைக்குச் சொந்த மாகிவிட்ட பிறகு அச் சபை அசட்டையாக இருந்துவிட்ட குற்றத்தைச் செய்திருக்கிறது என்றும், பிளேக் தோன்றியதற்கே அவர்கள்தான் பொறுப்பு என்றும் அதில் எழுதினேன். அந்தக் கடிதத்திஞல் ஸ்ரீ ஹென்றி போலக் எனக்குக் கிடைத்தார். காலஞ் சென்ற பூஜ்யர் ஜோஸப் டோக்கின் நட்பு ஏற்பட்டதற்கும் அதுவே ஓரளவுக்குப் பொறுப்பாயிற்று.

ஒரு சைவ உணவு விடுதியில் நான் சாப்பிடுவது வழக்கம் என்று முந்திய அத்தியாயம் ஒன்றில் சொல்லியிருக்கிறேன். அங்கேதான் ஸ்ரீ ஆல்பர்ட்வெஸ்ட்டைச் சந்தித்தேன். ஒவ்வொரு நாள் மாலையிலும் இந்த விடுதியில் நாங்கள் சந்தித்துச் சாப்பிட்ட பிறகு உலாவப் போவது வழக்கம். ஒரு சிறு அச்சகத்தில் ஸ்ரீ வெஸ்ட் கூட்டாளி. பிளேக் நோய் ஏற்பட்டதைக் குறித்து நான் எழுதியிருந்த கடிதத்தை அவர் பத்திரிகையில் படித்தார். என்னை அந்த விடுதியில் காணுது போகவே அவருக்குக் கவலை யாகிவிட்டது.

தொத்து நோய் ஏற்படும் காலங்களில் சாப்பாட்டைக் குறைத்துக்கொண்டுவிடுவது என்பதை நீண்டகாலமாகவே நான் வழக்கமாகக் கொண்டிருந்தேன். பிளேக் நோய் ஏற்பட்டதும் நானும் என் சக ஊழியர்களும் எங்கள் சாப்பாட்டைக் குறைத் துக்கொண்டுவிட்டோம். ஆகையால், இந்த நாட்களில் மாலையில் சாப்பிடுவதை விட்டுவிட்டேன். மத்தியானச் சாப்பாட்டைக்

கூட மற்ற விருந்தினர் வருவதற்கு முன்னால் சாப்பிட்டுவிடுவேன். அந்தச் சாப்பாட்டு விடுதியின் சொந்தக்காரரை எனக்கு நன்றாகத் தெரியும். 'பிளேக் நோயாளிகளுக்குப் பணிவிடை செய்யும் வேலையில் நான் ஈடுபட்டிருப்பதால் சாத்தியமான வரையில் நண்பர்களைச் சந்திப்பதைத் தவிர்த்துக்கொள்ளுவது என்று இருக்கிறேன்' என்று அவரிடம் தெரிவித்திருந்தேன்.

சாப்பாட்டு விடுதியில் இரண்டொரு நாட்கள் என்னைக் காணாதுபோகவே ஸ்ரீ வெஸ்ட், ஒரு நாள் காலையில் என் வீட்டிற்கு வந்தார். உலாவப் போவதற்கு அப்பொழுதுதான் நான் தயாராகிக்கொண்டிருந்தேன். நான் கதவைத் திறந்ததும் ஸ்ரீ வெஸ்ட் கூறியதாவது: "உங்களைச் சாப்பாட்டு விடுதியில் காணவில்லை. எனவே, உங்களுக்கு ஏதாவது நேர்ந்துவிட்டதோ என்று பயந்துவிட்டேன். ஆகையால், உங்களை வீட்டிலாவது போய்ப் பார்ப்போம் என்பதற்காகக் காலையில் புறப்பட்டு வந்தேன். இப்பொழுது நீங்கள் சொல்லும் பணியைச் செய்ய நான் சித்தமாக இருக்கிறேன். நோயாளிகளுக்குப் பணிவிடை செய்வதில் உதவி செய்யத் தயாரா யிருக்கிறேன். என்னால் பராமரிக்கப்பட வேண்டியவர்கள் யாருமில்லை என்பதுதான் உங்களுக்குத் தெரியுமே."

என்னுடைய நன்றியை அவருக்குத் தெரிவித்துக்கொண்டேன். ஒரு விநாடிகூடச் சிந்திக்காமல் பின்வருமாறு பதில் சொன்னேன்: "உங்களை நோயாளிகளுக்குப் பணிவிடை செய்ய நான் எடுத்துக்கொள்ளப் போவதில்லை. மேற்கொண்டும் புதிய நோயாளிகள் இல்லை என்றால், இரண்டொரு நாளில் எங்களுக்கே வேலையிராது. ஆனால், நீங்கள் செய்யக்கூடியது ஒன்று இருக்கிறது."

"அது என்ன?" என்று அவர் கேட்டார்.

"டர்பனிலிருக்கும் 'இந்தியன் ஒப்பீனியன்' அச்சக நிர்வாகத்தை ஏற்றுக்கொள்ளுவீர்களா? ஸ்ரீ மதன்ஜித்துக்கு இங்கே வேலை இருக்கிறது. டர்பனில் யாராவது இருக்க வேண்டியிருக்கிறது. உங்களால் அங்கே இருக்க முடியுமானால் எனக்கு அந்தக் கவலை நீங்கியதாக எண்ணுவேன்" என்றேன்.

"எனக்கும் ஓர் அச்சகம் இருக்கிறது என்பதை நீங்கள் அறிவீர்கள். அநேகமாக நான் அங்கே போவது சாத்தியமாகலாம். ஆனால், என் முடிவான பதிலை இன்று மாலை கூறலாமல்லவா? மாலையில் நாம் உலாவப் போகும்போது அதைக் குறித்துப் பேசுவோம்" என்றார்.

நான் மகிழ்ச்சி யடைந்தேன். மாலையில் பேசினோம். போவதற்குச் சம்மதித்தார். சம்பளத்தைப் பற்றி அவருக்குக் கவலை இல்லை. ஏனெனில், பணம் அவர் நோக்கமல்ல. என்றாலும், மாதம் 10 பவுன் சம்பளமும், ஏதாவது லாபம் வந்தால் அதில் ஒரு பங்கும் என்ற முடிவுக்கு வந்தோம். தமக்கு வரவேண்டிய

பணத்தை வசூலிக்கும் வேலையை என்னிடம் விட்டுவிட்டு அன்று மாலை மெயில் ரெயிலிலேயே ஸ்ரீ வெஸ்ட், டர்பனுக்குப் புறப்பட்டார். அன்று முதல், தென்னாப்பிரிக்காவிலிருந்து நான் கப்பலேறிய வரையில், அவர் என்னுடைய இன்ப துன்பங்களில் பங்காளியாக இருந்துவந்தார்.

லௌத்தில் (லின்கன்ஷயர்] ஒரு விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்தவர், ஸ்ரீ வெஸ்ட். சாதாரணப் பள்ளிப் படிப்புத்தான் அவர் பெற்றிருந்த கல்வி. ஆனால், அனுபவம் என்ற பள்ளியிலும், திடமான சுயமுயற்சியினாலும் அவர் எவ்வளவோ அறிந்து கொண்டிருந்தார். அவர் எப்பொழுதும் தூய்மையும், நிதானமும், காருண்யமும், கடவுள் பக்தியுமுள்ள ஆங்கிலேயராக இருக்கக் கண்டேன்.

இனி வரும் அத்தியாயங்களில் அவரையும் அவருடைய குடும்பத்தையும்பற்றி அதிகமாகக் கவனிப்போம்.

# 17
# ஒதுக்கலிடம் எரிந்தது

நோயாளிகளைக் கவனித்துக்கொள்ள வேண்டிய வேலை எனக்கும் என் சக ஊழியர்களுக்கும் இல்லாது போயிற்று என்றாலும், கறுப்புப் பிளேக்கினால் ஏற்பட்ட பல காரியங்களை நாங்கள் இன்னும் கவனிக்க வேண்டியிருந்தது.

இந்தியர் குடியிருப்பு ஒதுக்கப் பகுதி சம்பந்தமாக நகர சபை சிரத்தையின்றி இருந்துவிட்டதைக் குறித்து முன்னால் கூறியிருக்கிறேன். ஆனால், வெள்ளைக்காரரின் சுகாதாரத்தைப் பற்றிய வரை அச்சபை அதிக விழிப்புடனேயே இருந்தது. வெள்ளைக்காரரின் தேகநிலை கெடாமல் இருக்கும்படி பார்த்துக் கொள்ளுவதற்காக நகரசபை ஏராளமான தொகையைச் செலவிட்டு வந்தது. இப்பொழுது பிளேக் நோயை ஒழிப்பதற்குப் பணத்தைத் தண்ணீர்போல வாரி இறைத்தது. இந்தியர் விஷயத்தில் அச் சபை செய்தது, செய்யாமல் இருந்துவிட்டது ஆகியவைகளைக் குறித்து அநேக குற்றச்சாட்டுகளை நான் அதன் மீது சுமத்தியிருந்தபோதிலும், நகரிலிருந்த வெள்ளைக்கார மக்களின் நலன் விஷயத்தில் அது காட்டிய அக்கறையை நான் பாராட்டாமல் இருக்க முடியாது. அதனுடைய சிறந்த முயற்சிக்கு என்னால் இயன்ற உதவிகளைச் செய்தேன். நகர சபைக்கு என்னுடைய ஒத்துழைப்பை அளிக்காதிருந்திருப்பேனாயின், அதனுடைய வேலைகள் அதிகக் கஷ்டமானதாகியிருக்கும் என்று நினைக்கிறேன். அப்பொழுது ஆயுதந் தாங்கிய படை பலத்தை உபயோகிக்கவும், இன்னும் மோசமான முறைகளைக் கையாளவும் அச் சபை தயங்கியிராது.

ஆனல், அப்படி எதுவும் நடவாதபடி செய்துவிட்டோம். இந்தியர் நடந்துகொண்ட விதத்தைக் குறித்து நகரசபையினர் சந்தோஷம் அடைந்தார்கள். பிளேக் சம்பந்தமான எதிர்கால வேலைகள் பலவும் சுலபமாக்கப்பட்டன. நகரசபை விரும்பு பவைகளுக்கெல்லாம் இந்தியர் உடன்பட்டு நடந்துகொள்ளும் படி செய்வதில் இந்திய சமூகத்தினரிடம் எனக்கு இருந்த முழுச் செல்வாக்கையும் உபயோகித்துக்கொண்டேன். எல்லாவற்றிற் குமே உடன்பட்டுச் செய்துகொண்டு போவது என்பது இந்திய ருக்குக் கஷ்டமாகவே இருந்தது. ஆனல், என் ஆலோசனையை எந்த இந்தியரும் மறுதலித்ததாக எனக்கு ஞாபகம் இல்லை.

அந்த ஒதுக்கல் குடியிருப்புப் பகுதிக்குப் பலமான காவல் போட்டுவிட்டார்கள். அனுமதியில்லாமல் உள்ளே போவதோ, உள்ளே இருந்து வெளியே வருவதோ இயலாது. நானும் என் சக ஊழியர்களும் மாத்திரம் நினைத்தபோது உள்ளே போய் வருவதற்கு அனுமதிச் சீட்டுகள் கொடுத்திருந்தார்கள். அப் பகுதியில் குடியிருந்தவர்களை யெல்லாம் காலி செய்துவிடச் செய்வது, அவ்விதம் காலி செய்துவிட்டவர்க ளெல்லாம் ஜோகன்னஸ்பர்க்கிலிருந்து பதின்மூன்று மைல் தூரத்திலுள்ள ஒரு திறந்த மைதானத்தில் கூடாரங்களில் வசிக்கும்படி செய்வது. பிறகு இந்த ஒதுக்கல் பகுதிக்கே தீ வைத்துவிடுவது என்று தீர்மானிக்கப்பட்டது. உணவுப் பொருள்கள் போன்ற அவசியமான பொருள்களுடன் இவர்களைக் கூடாரங்களில் போய் வசிக்கும்படி செய்யக் கொஞ்ச காலம் ஆகும். ஆகவே, இதற்கு நடுவில் காவல் போடவேண்டியது அவசியமாயிற்று.

மக்களோ, மிகவும் பயந்து போயிருந்தனர். ஆனல், நான் அடிக்கடி போய்க்கொண் டிருந்தது அவர்களுக்குக் கொஞ்சம் ஆறுதலாக இருந்தது. ஏழைகள் பலர், தங்களிடமிருந்த சிறு பொருள்களை யெல்லாம் புதைத்து வைத்துவிடுவது வழக்கம். அவற்றையெல்லாம் தோண்டி எடுக்கவேண்டி யிருந்தது. அவர் களுக்குப் பாங்கிகள் இல்லை. பாங்கி என்பது இன்னது என்றே அவர்களுக்குத் தெரியாது. நானே அவர்களுடைய பாங்கியானேன். ஏராளமான பணம் வந்து என் அலுவலகத்தில் குவிந்தது. இத்தகையதோர் நெருக்கடியில் என் உழைப்புக் காக எந்தக் கட்டணமும் விதிப்பதற்கில்லை. எப்படியோ இந்த வேலைகளையும் சமாளித்துக்கொண்டேன். நான் கணக்கு வைத் திருந்த பாங்கியின் நிர்வாகியை நான் நன்றாக அறிவேன். இப் பணத்தை யெல்லாம் அவர் பாங்கியில் நான் போட்டுவைக்க வேண்டி யிருக்கிறது என்று அவரிடம் கூறினேன். செப்புக் காசுகளையும் வெள்ளிப் பணத்தையும் ஏராளமாக வாங்கிக் கொள்ளுவது சிரமமானதால் வாங்கிக்கொள்ள அவர்கள் விரும் புவதில்லை. பிளேக் நோய் பரவியிருக்கும் பகுதியிலிருந்து வருகிற பணம் என்பதனல், அதைத் தொடுவதற்கும் பாங்கிக்

குமாஸ்தாக்கள் மறுத்துவிடக் கூடும் என்ற பயமும் இருந்தது. ஆனால், பாங்கி நிர்வாகி எல்லா வகையிலும் எனக்குச் சௌகரியம் செய்து கொடுத்தார். அப்பணத்தை யெல்லாம் பாங்கிக்கு அனுப்புவதற்கு முன்னால் அவற்றில் விஷக் கிருமிகள் இல்லாதபடி மருந்து கொண்டு சுத்தம் செய்து அனுப்புவது என்று தீர்மானித்தோம். சுமார் அறுபதாயிரம் பவுன் வரையில் பாங்கியில் கட்டினேம் என்பது எனக்கு ஞாபகம். பணம் அதிகமாக வைத்திருந்தவர்களை—குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகே வாங்குவது என்ற முறைப்படி—டிபாசிட்டில் போடும்படி சொன்னேன். அவர்களும் என் யோசனையை ஏற்றுக்கொண்டார்கள். இதன் பலனாக, பணத்தைப் பாங்கியில் போட்டுவைக்கும் வழக்கத்தைச் சிலர் கைக்கொண்டார்கள்.

ஒதுக்கல் பகுதியில் இருந்தவர்களைத் தனி ரெயில் ஜோகன்னஸ்பர்க்குக்கு அருகில் கிளிப்ஸ் புரூயிட் பண்ணைக்குக் கொண்டு போயினர். அங்கே அவர்களுக்கு நகரசபை தனது சொந்தச் செலவில் உணவுப் பொருள்களை அளிக்க ஏற்பாடு செய்தது. கூடாரங்களினு லாகிய இந்த நகரம், ஒரு ராணுவ முகாம் போலத் தோன்றியது. மக்கள், கூடாரங்களில் வாழ்ந்து பழக்கமில்லாததனால் எப்படி இருக்குமோ என்று கஷ்டத்துடன் இருந்தார்கள். ஆனால், அங்கே செய்யப்பட்டிருந்த ஏற்பாடுகளைக் கண்டு திகைத்துப் போயினர். குறிப்பிடத்தக்க அசௌகரியம் எதுவும் அவர்களுக்கு இல்லை. தினமும் சைக்கிளில் அந்த இடத்திற்குப் போய்வருவேன். அங்கே குடியேறிய இருபத்து நான்கு மணி நேரத்திற்குள் மக்கள் தங்கள் துன்பங்களை யெல்லாம் மறந்து குதூகலமாக வாழ ஆரம்பித்துவிட்டனர். நான் அங்கே போன சமயங்களிலெல்லாம் அவர்கள் பாடிக்கொண்டும் சிரித்துக்கொண்டும் இருப்பதையே கண்டேன். திறந்த வெளியில் மூன்று வாரங்கள் வசித்ததால் அவர்களுடைய தேகநிலையும் விருத்தியடைந்தது.

இவர்களை யெல்லாம் வெளியேற்றிவிட்ட மறுநாளே அந்த ஒதுக்கல் பகுதி தீயிடப்பட்டுவிட்டது என்றுதான் எனக்கு ஞாபகம். தீக்கு இரையாகாமல் எதையும் காப்பாற்றிக்கொள்ள வேண்டுமென்ற எண்ணம் நகரசபைக்கு ஒரு சிறிதேனும் இல்லை. அதே சமயத்தில்தான்—இதே காரணத்திற்காகவே—மார்க்கெட்டிலிருந்த நகரசபையின் மர உத்திரங்கள் எல்லாவற்றையும் கொளுத்திவிட்டார்கள். இதனால், நகரசபைக்குப் பத்தாயிரம் பவுன் போல் நஷ்டம். மார்க்கெட்டில் எலிகள் செத்துக் கிடக்கக் கண்டதே இத்தீவிரமான நடவடிக்கைக்குக் காரணம்.

நகரசபைக்குச் செலவு ஏராளமாக ஆயிற்று. என்றாலும், மேற்கொண்டும் பிளேக் பரவாதபடி வெற்றிகரமாகத் தடுத்து விட்டார்கள். நகர மக்களும் பயம் தீர்ந்து பெருமூச்சு விட்டனர்.

# 18

# ஒரு நூலின் மந்திர சக்தி

கறுப்புப் பிளேக், ஏழை இந்தியரிடையே என் செல்வாக்கை அதிகரிக்கச் செய்தது. அதனால், என் தொழில் வருவாயும் அதிகமானதோடு என் பொறுப்பும் அதிகமாயிற்று. புதிதாகத் தொடர்பு ஏற்பட்ட ஐரோப்பியருடன் நெருங்கிப் பழகியதனால் எனக்கு ஒழுக்க ரீதியான கடமைகள் அதிகமாயின.

சைவச் சாப்பாட்டு விடுதியில் ஸ்ரீ வெஸ்ட் எனக்குப் பழக்க மானது போல, ஸ்ரீ போலக்கும் அங்கே பழக்கமானர். ஒரு நாள் மாலை, என் மேஜைக்குக் கொஞ்ச தூரத்தில் உட்கார்ந்து சாப் பிட்டுக்கொண்டிருந்த ஓர் இளைஞர், என்னைப் பார்க்க விரும்புவ தாக ஒரு சீட்டு அனுப்பினர். என் மேஜைக்கே வருமாறு அழைத் தேன். அவ்வாறே வந்தார்.

"நான், 'கிரிடிக்' என்ற பத்திரிகையில் உதவி ஆசிரியன். என் பெயர் போலக். பிளேக் சம்பந்தமாகப் பத்திரிகைகளுக் குத் தாங்கள் எழுதிய கடிதத்தைப் பார்த்தது முதல் தங்களைப் பார்க்க வேண்டும் என்று எனக்குப் பலமான ஆர்வம் ஏற்பட் டது. இந்தச் சந்தர்ப்பம் கிடைத்ததற்காக மகிழ்ச்சி யடைகி றேன்" என்ருர், அவர்.

ஸ்ரீ போலக்கின் கபடமற்ற தன்மை என்னை அவர்பால் இழுத்துவிட்டது. அன்று மாலை நாங்கள் ஒருவரை யொருவர் நன்ருக அறிந்துகொண்டோம். வாழ்க்கையின் முக்கியமான விஷயங்களிலெல்லாம் நாங்கள் இருவரும் ஒருவிதக் கருத் துடையவர்களாக இருப்பதாகத் தோன்றியது. அவர் எளிய வாழ்க்கை நடத்தி வந்தார். தமது புத்திக்குப் பிடித்தமாக இருக்கும் எதையும் உடனே நடைமுறையில் கொண்டுவந்து விடும் அற்புதமான ஆற்றல் அவருக்கு இருந்தது. தம் வாழ்க் கையில் அவர் செய்துகொண்ட மாறுதல்கள், தீவிரமானவை களாக இருந்ததைப் போன்றே துரிதமாகவும் செய்துகொள்ளப் பட்டவைகளாகும்.

'இந்தியன் ஒப்பீனியன்' பத்திரிகைக்கு நாளுக்கு நாள் செலவு அதிகமாகிக்கொண்டு வந்தது. ஸ்ரீ வெஸ்ட் அனுப்பி யிருந்த முதல் அறிக்கையே பீதி தருவதாக இருந்தது. அவர் எழுதியதாவது: "லாபம் வரக்கூடும் என்று நீங்கள் நினைத்தது போல இந்த ஸ்தாபனம் லாபம் தரும் என்று நான் எதிர்பார்க்க வில்லை. நஷ்டமும் வரலாம் என்று அஞ்சுகிறேன். கணக்குகள் சரிவர இல்லை. வசூலாக வேண்டிய பாக்கி ஏராளமாக இருக் கிறது. அவைகளின் விவரத்தையே புரிந்துகொள்ள முடியவில்லை. எல்லாவற்றையும் அடியோடு மாற்றியாக வேண்டும். ஆனல், இதையெல்லாம் கேட்டு நீங்கள் பீதியடைந்துவிட வேண்டாம்.

என்னால் முடிந்தவரையில் எல்லாவற்றையும் ஒழுங்காக்க முயலுகிறேன். லாபம் இருந்தாலும், இல்லாது போனாலும், நான் இங்கே வேலை பார்க்கவே போகிறேன்.''

அதில் லாபம் எதுவும் வராது என்று கண்டதுமே ஸ்ரீ வெஸ்ட் அந்த வேலையை விட்டுப் போயிருக்கலாம். அவர்மீது நான் குறை சொல்ல முடியாது. உண்மையில் போதுமான ருசுக்கள் இல்லாமல் அந்த ஸ்தாபனம் லாபம் தரக்கூடியதென்று நான் வருணித்ததற்காக என்மீது குற்றஞ் சொல்லவும் அவருக்கு உரிமை உண்டு. ஆனால், அவ்வாறு ஒரு வார்த்தையேனும் அவர் புகார் சொல்லவில்லை. என்றாலும், தாம் கண்டுபிடித்த நிலைமை, நான் எவரையும் எளிதில் நம்பிவிடக்கூடியவன் என்று என்னை எண்ணும்படி ஸ்ரீ வெஸ்ட்டைச் செய்திருக்கும் என்பதே என் அபிப்பிராயம். ஸ்ரீ மதன்ஜித் கூறியதைப் பரிசீலனை செய்து பார்க்காமலேயே நான் ஏற்றுக்கொண்டு விட்டேன். அதைக் கொண்டு லாபம் வரும் என்று ஸ்ரீ வெஸ்ட்டிடம் சொல்லிவிட்டேன்.

தமக்கு நிச்சயமாகத் தெரியாதவைகளை வைத்துக்கொண்டு பொதுஜன ஊழியர் எதையும் சொல்லிவிடக்கூடாது என்பதை நான் இப்பொழுது உணருகிறேன். அதிலும் சத்தியத்தை நாடுபவர் இதில் அதிக எச்சரிக்கையாக இருக்க வேண்டும். தான் பரிசீலனை செய்து நிச்சயமாகத் தெரிந்துகொள்ளாத விஷயத்தைக் கூறி மற்றொருவரை நம்பும்படி செய்துவிடுவது சத்தியத்திற்கு ஊறு செய்வதே யாகும். ஒரு விஷயத்தை ஒப்புக்கொண்டுவிட வேண்டியிருப்பதற்காக மனம் வருந்துகிறேன். இந்த அனுபவம் எனக்கு இருந்தும், பிறரைச் சுலபத்தில் நம்பிவிடும் என் சுபாவத்தை நான் இன்னும் போக்கிக் கொண்டுவிடவில்லை. நான் சமாளிக்கக் கூடியதைவிட அதிகமான வேலையைச் செய்துவிட எனக்கு இருக்கும் ஆசையே இதற்குக் காரணம். இந்த ஆசை, என்னைவிட என் சக ஊழியர்களுக்கே அதிகத் தொந்தரவாக முடிந்துவிடுகிறது.

ஸ்ரீ வெஸ்ட்டின் கடிதம் கிடைத்ததும் நேட்டாலுக்குப் புறப்பட்டேன். ஸ்ரீ போலக் என் முழு நம்பிக்கைக்கும் பாத்திரமானவர் ஆகிவிட்டார். என்னை வழியனுப்ப ஸ்டேஷனுக்கு வந்திருந்தார். பிரயாணத்தின் போது படிக்க எனக்கு ஒரு புத்தகம் கொடுத்துவிட்டுப் போனார். அது எனக்குப் பிடித்தமான புத்தகமாக இருக்கும் என்றும் சொன்னார். ரஸ்கின் எழுதிய 'கடையனுக்கும் கதிமோட்சம்' என்ற நூலே அது.*

இந்நூலைப் படிக்க ஆரம்பித்த பின் நடுவில் கீழே வைக்கவே முடியவில்லை. அது என் உள்ளம் முழுவதையும் கவர்ந்துகொண்டு

* காந்திஜிக்குப் போலக் கொடுத்த ரஸ்கினின் அந்த நூலை காந்திஜி படித்துப் பெரும் மாறுதலை அடைந்ததோடு அப் புத்தகத்தைக் கடைசி வரையில் பத்திரப்படுத்தியும் வைத்திருந்தார். அப் புத்தகம் இப்பொழுது டில்லியில் அமைக்கப்பட்டிருக்கும் காந்திஜியின் பொருள்கள் காட்சிசாலையில் வைக்கப்பட்டிருக்கிறது.

விட்டது. ஜோகன்னஸ்பர்க்கிற்கும் டர்பனுக்கும் இருப்பது நான்கு மணி நேரப் பிரயாணம். ரெயில் அங்கே மாலையில் போய்ச் சேர்ந்தது. அன்றிரவு என்னால் தூங்கவே முடியவில்லை. அந் நூலில் கண்ட லட்சியங்களுக்கு ஏற்ற வகையில் என் வாழ்க் கையை மாற்றிக்கொண்டுவிடுவது என்று தீர்மானித்தேன்.

ரஸ்கினின் நூல்களில் நான் படித்த முதல் நூல் இதுவே. நான் பள்ளிக்கூடத்தில் படித்துவந்த காலத்தில் பாடப் புத்த கங்களைத் தவிர அநேகமாக வேறு புத்தகங்களை நான் படித்த தில்லை எனலாம். சேவை வாழ்க்கையில் இறங்கிவிட்ட பிறகு படிப்பதற்கு எனக்கு நேரமே இருப்பதில்லை. ஆகையால், நூல் களைப் படித்த அறிவு எனக்கு உண்டென்றே சொல்லிக்கொள்ளு வதற்கில்லை. என்றாலும், இந்தக் கட்டாயமான தடையால் நான் அதிகமாக நஷ்டம் அடைந்துவிடவில்லை என்றே கருதுகிறேன். ஆனால், இதற்கு மாறாக நான் கொஞ்சமாகப் படித்தது, நான் படித்ததெல்லாம் அப்படியே முற்றும் கிரகித்துக்கொண்டு விடுவதற்கு உதவியாக இருந்தது. அத்தகைய நூல்களில், என் வாழ்க்கையில் உடனேயே நடைமுறையான மாறுதலை உண்டாக் கிய நூல், ‘கடையனுக்கும் கதி மோட்சம்’ என்ற நூலேயாகும். பின்னர் அதைக் குஜராத்தியில் மொழி பெயர்த்து, ‘சர்வோ தயம்’ (சர்வஜன நலம்) என்ற பெயருடன் வெளியிட்டேன். ரஸ் கினுடைய இம் மகத்தான நூலில் என் உள்ளத்தில் உறுதிப் பட்டிருந்த கொள்கைகள் பிரதிபலித்திருப்பதை நான் கண்டு கொண்டதாகவே நினைக்கிறேன். அதனால்தான் அது என்னை ஆட்கொண்டதோடு என் வாழ்க்கையையும் மாற்றிக்கொள்ளும் படி செய்தது. மனித உள்ளத்திலிருக்கும் நல்ல தன்மையை எழுப்பிவிட வல்லவனே கவி. ஆனால், கவிகள், எல்லோரின் உள்ளங்களிலும் இதே போன்ற மாறுதல்களை உண்டாக்கி விடுவ தில்லை. ஏனெனில், எல்லோரும் சரிசமமான வளர்ச்சியை அடைந்திருக்கவில்லை.

‘கடையனுக்கும் கதிமோட்சம்’ என்ற நூல் பின் வருபவை களைப் போதிக்கிறது என்று எனக்குத் தோன்றுகிறது.

1. எல்லோருடைய நலனில்தான் தனிப்பட்டவரின் நலனும் அடங்கியிருக்கிறது.

2. தங்கள் உழைப்பினால் ஜீவனோபாயத்தைத் தேடிக் கொள்ளுவதற்கு எல்லோருக்குமே ஒரே மாதிரியான உரிமை இருப்பதால், க்ஷவரத் தொழிலாளியின் வேலைக்கு இருக்கும் அதே மதிப்புத்தான் வக்கீலின் வேலைக்கும் உண்டு.

3. ஒரு பாட்டாளியின் வாழ்க்கையும், அதாவது நிலத்தில் உழுது பாடுபடும் குடியானவரின் வாழ்க்கையும், கைத்தொழில் செய்பவரின் வாழ்க்கையுமே வாழ்வதற்கு உகந்த மேன்மையான வாழ்க்கைகள்.

இவைகளில் முதலில் கூறப்பட்டதை நான் அறிவேன். இரண்டாவதாகக் கூறப்பட்டிருந்ததை அரைகுறையாகவே அறிந்து கொண்டிருந்தேன். மூன்ருவதாகக் கூறப்பட்டதோ, என் புத்தியில் தோன்றவே இல்லே. இரண்டாவதும் மூன்ருவதும், முதலாவதாகக் கூறப்பட்டிருப்பதிலேயே அடங்கியிருக்கின்றன என்பதைக் 'கடையனுக்கும் கதிமோட்சம்' பட்டப்பகல் போல் எனக்கு வெட்ட வெளிச்சமாகிவிடும்படி செய்தது. பொழுது புலர்ந்ததும் நான் எழுந்து இக் கொள்கையை நடைமுறையில் கொண்டுவரத் தயாரானேன்.

# 19
# போனிக்ஸ் குடியிருப்பு

எல்லாவற்றையும் குறித்து ஸ்ரீ வெஸ்ட்டுடன் பேசினேன். 'கடையனுக்கும் கதிமோட்சம்' என்ற நூல் என் உள்ளத்தில் உண்டாக்கியிருக்கும் மாறுதலே அவருக்கு விவரித்துச் சொன்னேன். 'இந்தியன் ஒப்பீனியன்' பத்திரிகையை ஒரு பண்ணைக்கு மாற்றிவிட வேண்டும், அப் பண்ணையில் ஒவ்வொருவரும்உழைக்க வேண்டும், வாழ்க்கைக்கு வேண்டிய ஒரே மாதிரியான ஊதியத்தை எல்லோரும் பெறவேண்டும், ஓய்வு நேரங்களில் அச்சக வேலையைக் கவனிக்க வேண்டும் என்று ஒரு யோசனையை அவரிடம் கூறினேன். இந்த யோசனையை ஸ்ரீ வெஸ்ட் அங்கீகரித்தார். எந்த நிறத்தினராக இருந்தாலும், எந்த நாட்டினராக இருந்தாலும், ஒவ்வொருவருக்கும் மாத ஊதியம் மூன்று பவுன் தான் என்றும் நிர்ணயிக்கப்பட்டது.

ஆனல், அச்சகத்தில் வேலே செய்யும் பத்துப் பன்னிரண்டு பேரும் அந்த ஏற்பாட்டிற்கு ஒப்புக்கொள்ளுவார்களா? எங்கோ மூலே முடுக்கிலிருக்கும் ஒரு பண்ணைக்குப் போய்க் குடியேறி, உயிர் வாழ்வதற்கு மாத்திரமே போதுமான ஊதியத்தை மட்டுமே பெற்றுக்கொள்ளுவார்களா? இதுவே பிரச்னேயாயிற்று. ஆகையால், ஒரு யோசனே செய்தோம். புதிய திட்டத்தை ஒப்புக்கொள்ள முடியாதவர்கள், இப்பொழுது பெறும் சம்பளத்தையே தொடர்ந்து வாங்கிக்கொள்ளுவது, நாளாவட்டத்தில் குடியேற்றத்தின் உறுப்பினராகும் லட்சியத்தை அடைய முடிவு செய்வது என்பதே அந்த யோசனே.

இந்தத் திட்டத்தையொட்டி ஊழியர்களிடம் பேசினேன். ஸ்ரீ மதன்ஜித்திற்கு இந்த யோசனே பிடிக்கவே இல்லே. என் திட்டம் பைத்தியக்காரத்தனமானது என்ருர். தமக்குள்ள சகலத்தையும், நான் ஈடுபட்டிருக்கும் இந்த முயற்சி நாசமாக்கிவிடும் என்ருர். ஊழியர்களெல்லோரும் ஓடிப்போய்விடுவார்கள் என்றும், 'இந்தியன் ஒப்பீனியன்' நின்றுவிடும் என்றும், அச்சகத்தையும் மூடிவிட வேண்டியதாகிவிடும் என்றும் கூறினர்.

அச்சகத்தில் வேலை செய்து வந்தவர்களில் என் சிற்றப்பா பிள்ளையான மகன்லால் காந்தியும் ஒருவர். என் யோசனையை ஸ்ரீ வெஸ்ட்டிடம் கூறியபோதே அவரிடமும் சொன்னேன். அவருக்கு மனைவியும் குழந்தைகளும் இருந்தனர். ஆனால், அவர், குழந்தைப் பருவத்திலிருந்தே என்னிடம் பயிற்சி பெற்று என்னிடம் வேலை செய்ய விரும்பி வந்தவர், என்னிடம் அவருக்குப் பூரணமான நம்பிக்கை உண்டு. ஆகவே, எந்தவித வாதமும் செய்யாமல் என் திட்டத்தை ஒப்புக்கொண்டார். அது முதல் என்னுடனேயே இருக்கிறார். யந்திரத்தை ஓட்டுபவரான கோவிந்தசாமியும் என் திட்டத்திற்குச் சம்மதித்தார். மற்றவர்கள் இத் திட்டத்தில் சேர்ந்துகொள்ளவில்லை. ஆனால், அச்சகத்தை எங்கே நான் கொண்டுபோனாலும் அங்கே வருவதாக அவர்கள் ஒப்புக்கொண்டார்கள்.

இந்த விஷயங்களையெல்லாம், ஆட்களுடன் இரண்டு நாட்களில் பேசி முடித்துவிட்டேன் என்று நினைக்கிறேன். அதன் பிறகு, டர்பனுக்குப் பக்கத்தில் ஒரு ரெயில்வே ஸ்டேஷனுக்குப் பக்கமாக இருக்கக்கூடிய நிலம் விலைக்குத் தேவை என்று பத்திரிகைகளில் விளம்பரம் செய்தேன். போனிக்ஸ்* சம்பந்தமாகப் பதில் வந்தது. அந்தப் பண்ணையைப் பார்த்து வர ஸ்ரீ வெஸ்ட்டும் நானும் போனோம். ஒரு வாரத்திற்குள் இருபது ஏக்கர் நிலம் வாங்கினோம். அதில் இனிய, சிறிய நீர் ஊற்று ஒன்றும், ஆரஞ்சுச் செடிகளும், மாமரங்களும் இருந்தன. அந்த நிலத்திற்கு அடுத்தாற்போல எண்பது ஏக்கர் நிலப்பகுதி ஒன்றும் இருந்தது. அதில் மேலும் பல பழ மரங்களும், இடிந்துபோன ஒரு பழைய குடிசையும் இருந்தன. அந்த நிலத்தையும் வாங்கிவிட்டோம். எல்லாம் சேர்ந்து ஆயிரம் பவுன் விலையாயிற்று.

இதுபோன்ற என் முயற்சிகளிலெல்லாம் காலஞ்சென்ற ஸ்ரீ ருஸ்தம்ஜி எப்பொழுதும் எனக்கு ஆதரவு அளித்து வந்தார். இந்தத் திட்டம் அவருக்குப் பிடித்திருந்தது. ஒரு பெரிய கிடங்கிலிருந்து எடுத்த பழைய இரும்புத் தகடுகளையும், வீடு கட்டுவதற்கான மற்றச் சாமான்களையும் அவர் எனக்குக் கொடுத்தார்.

---

* போனிக்ஸ் குடியேற்ற இடம்: நேட்டாலில் கிழக்குக் கரையோரத்திற்கு ஆறு மைல் மேற்கில் இருக்கிறது. வடக்குக் கடலோர ரெயில் பாதையில் டர்பனிலிருந்து அப்பொழுது ஏழாவது ஸ்டேஷன் போனிக்ஸ். காந்திஜி அங்கே குடியேற்றம் செய்த சமயம், அவ்விடத்தைச் சுற்றிக் கரும்புத் தோட்டங்கள் இருந்தன. அங்கே விளையும் கரும்பைப் போனிக்ஸ் ஸ்டேஷனில் ஏற்றிக்கொண்டு போவார்கள். காந்திஜி வாங்கிய நிலம், அந்த ஸ்டேஷனுக்கு இரண்டரை மைல் தூரத்திலிருந்தது. எந்தச் சாமான் வாங்க வேண்டுமாயினும் டர்பனுக்கு 14 மைல் போகவேண்டும்.

போனிக்ஸ் என்பது கிரேக்க புராணங்களில் வரும் பறவை. இப்பெயர் காந்திஜிக்குப் பிடித்திருந்தது. அப் பறவையின் குணம், புனிதத் தன்மை, தியாகம், சாவின்மை என்று கூறப்பட்டிருக்கிறது. அப் பறவை தோழமையின்றித் தனித்தே இருக்குமாம். அது தன்னைத் தானே கொன்றுகொண்டு பின்னர் தன் அஸ்தியிலிருந்தே புனர்ஜனனமாகிவிடுமாம்.

அவற்றைக் கொண்டு வேலையை ஆரம்பித்தோம். போயர் யுத்தத்தில் என்னோடு வேலை செய்தவர்களான சில இந்தியத் தச்சர்களும், கொத்து வேலைக்காரர்களும் அச்சகத்திற்கு ஒரு கொட்டகை போட எனக்கு உதவி செய்தனர். 75 அடி நீளமும் 50 அடி அகலமும் உள்ள இக் கொட்டகை ஒரு மாதத்திற்குள்ளேயே கட்டி முடிக்கப்பட்டுவிட்டது. ஸ்ரீ வெஸ்ட்டும் மற்றவர்களும், தங்களுக்கு ஏற்படக்கூடிய ஆபத்துக்களையும் பொருட்படுத்தாமல் தச்சர்களுடனும் கொத்து வேலைக்காரர்களுடனும் தங்கினர். அந்த இடம், இதற்கு முன்பு மனித சஞ்சாரமே இல்லாமல் இருந்த இடம். புல்லும் காடாக மண்டிப் போயிருந்தது. அங்கே பாம்புகள் ஏராளமாக இருந்ததால் வசிப்பதற்கு ஆபத்தான இடம். முதலில் எல்லோரும் கூடாரங்களில் வசித்து வந்தோம். ஒரு வாரத்தில் எங்கள் சாமான்களை யெல்லாம் வண்டிகளில் ஏற்றிப் போனிக்ஸுக்குக் கொண்டுவந்துவிட்டோம். அந்த இடம் டர்பனிலிருந்து பதினான்கு மைல் தூரத்தில் இருக்கிறது. போனிக்ஸ் ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து இரண்டரை மைல் தூரம்.

‘இந்தியன் ஒப்பீனிய’னின் ஓர் இதழை மாத்திரமே வெளியில் ‘மெர்க்குரி அச்சக’த்தில் அச்சிட வேண்டியிருந்தது.

சம்பாதிக்கும் நோக்கத்தோடு இந்தியாவிலிருந்து என்னுடன் தென்னாப்பிரிக்காவுக்கு வந்திருந்த என் உறவினர்களையும் நண்பர்களையும் போனிக்ஸுக்கு இழுத்துவிட இப்பொழுது முயன்றேன். அவர்கள் பலவகையான வியாபாரங்களில் ஈடுபட்டிருந்தார்கள். அவர்கள் செல்வம் திரட்ட வந்தவர்களாகையால் அவர்களை இங்கே வந்துவிடும்படி செய்வது மிகவும் கஷ்டமாக இருந்தது. ஆனால், சிலர் ஒப்புக்கொண்டார்கள். அப்படி ஒப்புக்கொண்டவர்களில் மகன்லால் காந்தியின் பெயரை மாத்திரம் நான் முக்கியமாகக் கூறுவேன். மற்றவர்கள் திரும்பவும் வியாபாரம் செய்யப் போய்விட்டனர். மகன்லால் காந்தி மட்டும் வியாபாரத்திற்கு முழுக்குப் போட்டுவிட்டு என்னோடு வந்து சேர்ந்துகொண்டார். தார்மிகத் துறையில் நான் செய்த சோதனைகளில் என் ஆரம்ப சக ஊழியர்களாக இருந்தவர்கள் சிலர் உண்டு. அவர்களுள், திறமையிலும் தியாகத்திலும் பக்தியிலும் தலை சிறந்து விளங்கியவர் இவரே. கைத்தொழில்களை இவர் தாமே கற்றுக்கொண்டார். அதனால், கைத்தொழிலாளிகளிடையே இவர் வகித்த ஸ்தானம் இணையில்லாதது.

இவ்விதம் போனிக்ஸ் குடியிருப்பு 1904-இல் ஆரம்பமாயிற்று. எவ்வளவோ கஷ்டங்களெல்லாம் ஏற்பட்டபோதிலும் ‘இந்தியன் ஒப்பீனியன்’ அங்கிருந்தே பிரசுரிக்கப்பட்டு வருகிறது.

ஆரம்பத்தில் ஏற்பட்ட கஷ்டங்கள், செய்யப்பட்ட மாறுதல்கள், நம்பிக்கைகள், ஏமாற்றங்கள் ஆகியவைகளுக்கு ஒரு தனி அத்தியாயமே அவசியமாகிறது.

# 20

# முதல் இரவு

போனிக்ஸிலிருந்து 'இந்தியன் ஒப்பீனிய'னின் முதல் இதழை வெளியிடுவது எளிதான காரியமாகவே இல்லை. இரு முன்னெச்சரிக்கையான காரியங்களை நான் செய்யாது இருந்திருப்பேனாயின், முதல் இதழை நிறுத்திவிடவே நேர்ந்திருக்கும்; அல்லது வெளியாவது தாமதப்பட்டிருக்கும். அச்சு யந்திரத்தை ஓட்ட ஓர் இன்ஜின் வைத்துவிடுவது என்ற யோசனை எனக்குப் பிடிக்கவில்லை. விவசாய வேலையையும் கையினாலேயே செய்ய வேண்டியிருக்கும் ஓர் இடத்தில், அச்சு யந்திரமும் கையினாலேயே சுற்றப்படுவதாக இருப்பதே அந்தச் சூழ்நிலைக்குப் பொருத்தமானதாக இருக்கும் என்று நினைத்திருந்தேன். ஆனால், இந்த யோசனை சரியானதாகத் தோன்றாது போகவே ஓர் எண்ணெய் இன்ஜினை அமைத்தோம். இன்ஜின் சரியாக வேலை செய்யாது போனால், உடனே செய்வதற்கான வேறு ஏற்பாடும் தயாராக இருக்கட்டும் என்று வெஸ்ட்டுக்கு யோசனை கூறியிருந்தேன். ஆகவே, கையினால் சுற்றக்கூடிய ஒரு சக்கரத்தையும் அவர் தயார் செய்து வைத்திருந்தார். பத்திரிகையின் அளவு, தினப் பத்திரிகையின் அளவாக இருப்பது, போனிக்ஸ் போன்ற ஒதுக்குப் புறமான இடத்திற்கு வசதியானதல்ல என்று யோசிக்கப்பட்டது. அவசர நிலைமை ஏற்பட்டால் 'டிரடில்' அச்சு யந்திரத்திலேயே பத்திரிகையை அச்சிட்டுவிடுவதற்குச் சௌகரியமாக இருக்கட்டும் என்பதற்காகப் பத்திரிகை, 'பூல்ஸ்காப்' அளவுக்குக் குறைக்கப்பட்டது.*

ஆரம்ப காலங்களில் பத்திரிகை வெளியாவதற்கு முன்னால் நாங்கள் இரவில் வெகு நேரம் கண் விழிக்கும்படி ஆயிற்று. இளைஞர்களும், கிழவரும், ஒவ்வொருவரும் பத்திரிகைத் தாள்களை மடிக்க உதவவேண்டியிருந்தது. வழக்கமாக இரவு பத்து மணிக்கு மேல் பன்னிரண்டு மணிக்குள் வேலையை முடிப்போம். ஆனால், முதல் நாள் இரவு என்றுமே மறக்க முடியாதது. பக்கங்களை முடுக்கி யாயிற்று; யந்திரமோ வேலை செய்ய மறுத்து விட்டது. இன்ஜினை முடுக்கி அதை ஓட்டிக் கொடுப்பதற்காக டர்பனிலிருந்து ஓர் இன்ஜினீயரைத் தருவித்து வைத்திருந்தோம். அவரும் வெஸ்ட்டும் எவ்வளவோ கஷ்டப்பட்டுப் பார்த்தார்கள். ஆனால், ஒன்றும் பயன்படவில்லை. எல்லோருக்கும் ஒரே கவலை யாகிவிட்டது. எல்லா முயற்சியும் முடியாது போய்க் கடைசியாகக் கண்களில் நீர் வழிய வெஸ்ட் என்னிடம் வந்தார். "இன்ஜின் வேலை செய்யாது. உரிய காலத்தில் பத்திரிகையை நாம் வெளியிட முடியாது என்றே அஞ்சுகிறேன்" என்றார்.

---

* போனிக்ஸில் 'இந்தியன் ஒப்பீனியன்' முதல் இதழ் 'டிரடில்' யந்திரத்திலேயே ஒரே தாளில் 1904 டிசம்பர் 24-ஆம் தேதி வெளிவந்துள்ளது.

"அதுதான் நிலைமை யென்றால் இதில் நாம் செய்வதற்கு எதுவுமில்லை. கண்ணீர் விட்டு ஒரு பயனும் இல்லை. மனிதப் பிரயத்தனத்தில் சாத்தியமானதை யெல்லாம் செய்வோம். கைச்சக்கரம் இருக்கிறதல்லவா ?" என்று அவருக்கு ஆறுதல் அளித்துச் சொன்னேன்.

"அதைச் சுற்றுவதற்கு நம்மிடம் ஆட்கள் எங்கிருக்கிறார்கள்?" என்று அவர் கேட்டார். "அந்த வேலையைச் செய்வதற்கு நாம் போதாது. நான்கு நான்கு பேராக மாற்றி மாற்றிச் சுற்ற வேண்டும். நம் ஆட்களோ, களைத்துப் போயிருக்கின்றனர்" என்றார்.

கட்டட வேலை இன்னும் முடிந்துவிட வில்லை. ஆகையால், தச்சர்கள் அந்த வேலையைச் செய்துவந்தனர். அவர்கள் அச்சுக் கூடத்திலேயே படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். நான் அவர்களைச் சுட்டிக்காட்டி, "இந்தத் தச்சர்களை நாம் பயன் படுத்திக்கொள்ள முடியாதா ? நமக்கு இரவு முழுவதும் வேலை இருக்கும். இந்த உபாயம் நமக்குப் பாக்கியாக இருக்கிறது என்று நினைக்கிறேன்" என்றேன்.

"தச்சர்களை எழுப்ப எனக்குத் தைரியமில்லை. நம் ஆட்களோ, உண்மையில் மிகவும் களைத்துப் போயிருக்கின்றனர்" என்றார், வெஸ்ட்.

"சரி, அவர்களோடு நான் பேசிக்கொள்ளுகிறேன்" என்றேன்.

"அப்படியானால், வேலையை முடித்துவிடுவது சாத்தியமே" என்றார், வெஸ்ட்.

தச்சர்களை எழுப்பினேன். ஒத்துழைக்க வேண்டும் என்று அவர்களைக் கேட்டுக்கொண்டேன். அவர்களை வற்புறுத்த வேண்டிய அவசியமே ஏற்படவில்லை. "அவசரத்திற்கு எங்களைக் கூப்பிட்டுக் கொள்ளுவதற்கில்லையென்றால் நாங்கள் இங்கே இருந்துதான் என்ன பயன்? நீங்கள் கொஞ்சம் இளைப் பாறுங்கள். சக்கரத்தைச் சுற்றும் வேலையை நாங்கள் பார்த்துக்கொள்ளுகிறோம். அது எங்களுக்குச் சுலபம்" என்றார்கள். எங்கள் சொந்த ஆட்களும் தயாராக இருந்தனர்.

வெஸ்ட்டுக்கு ஒரே ஆனந்தம். நாங்கள் வேலை செய்ய ஆரம்பித்ததும் அவர் ஒரு தோத்திரப் பாடலைப் பாட ஆரம்பித்து விட்டார். தச்சர்களுடன் நானும் சேர்ந்துகொண்டேன். மற்றவர்களெல்லாம் அவரவர்கள் முறையில் கலந்துகொண்டு வேலை செய்தார்கள். இவ்வாறு காலை ஏழு மணி வரையில் வேலை செய்தோம். இன்னும் வேலை எவ்வளவோ பாக்கியாக இருந்தது. ஆகவே, வெஸ்ட்டிடம் ஒரு யோசனை கூறினேன். இன்ஜினீயரை எழுப்பி யந்திரத்தை ஓட்டச் சொல்லிப் பார்க்கலாம் என்றேன். இன்ஜின் ஓட ஆரம்பித்து விட்டால் காலத்தில் வேலையை முடித்துவிடலாம்.

வெஸ்ட் அவரை எழுப்பினர். எழுந்ததும் இன்ஜின் அறைக்குப் போனர். என்ன ஆச்சரியம் பாருங்கள்! அவர் தொட்டவுடனேயே இன்ஜின் ஓட ஆரம்பித்துவிட்டது. அச்சுக்கூடம் முழுவதும் ஒரே சந்தோஷ ஆரவாரமாக இருந்தது. "இது எப்படி? இரவெல்லாம் நாம் கஷ்டப்பட்டும் முடியாது போயிற்று. ஆனல், இன்று காலையிலோ அதில் எந்தவிதமான கோளாறுமே இல்லாதது போல அது வேலை செய்ய ஆரம்பித்துவிட்டதே!" என்று விசாரித்தேன்.

"இது எப்படி என்று கூறுவது கஷ்டம். நம்மைப் போலவே தனக்கு ஓய்வு தேவை என்பதுபோல யந்திரமும் சில சமயம் நடக்க ஆரம்பித்து விடுகிறது போல் இருக்கிறது" என்று வெஸ்ட்டோ, இன்ஜினீயரோ கூறினர்கள். சொன்னது யார் என்பதை மறந்துவிட்டேன்.

இன்ஜின் கோளாறு ஆகிவிட்டது எங்கள் எல்லோருக்கும் ஒரு சோதனையாக ஆயிற்று என்றும், எங்களுடைய யோக்கியமான, மனப்பூர்வமான உழைப்பின் பலனகவே இன்ஜின் வேலை செய்யத் தொடங்கியது என்றும் எனக்குத் தோன்றிற்று.

பிரதிகள் உரிய காலத்தில் அனுப்பப்பட்டன. எல்லோரும் மகிழ்ச்சியடைந்தோம்.

ஆரம்பத்தில் காட்டிய இந்தப் பிடிவாதம், பத்திரிகை ஒழுங்காக வெளிவந்துகொண்டிருக்கும் என்பதை உறுதிப்படுத்தியது. போனிக்ஸில் சுய பலத்தில் நிற்கும் சூழ்நிலையையும் உண்டாக்கியது. வேண்டுமென்றே இன்ஜினை உபயோகிப்பதை நாங்கள் நிறுத்திவிட்டு, ஆள் பலத்தைக்கொண்டே வேலை செய்த சமயமும் உண்டு. போனிக்ஸில் குடியேறி யிருந்தவர்களின் தார்மிக குணம் உச்ச நிலைக்கு எட்டியிருந்த சமயமே அது என்பது என் கருத்து.

# 21

# போலக் துணிந்து இறங்கினர்

போனிக்ஸில் நான் குடியேற்றத்தை ஆரம்பித்துவிட்டபோதிலும் அங்கே நான் நிரந்தரமாக வசிக்க முடியாமல் இருந்தது எப்பொழுதும் எனக்கு வருத்தத்தைக் கொடுத்தது. நாளாவட்டத்தில் வக்கீல் தொழிலிலிருந்து விலகி, இக் குடியேற்றத்தில் வசித்து, என் உடலுழைப்பினல் என் ஜீவனத்திற்கு வேண்டியதைச் சம்பாதித்துக் கொண்டு, போனிக்ஸ் பூரணத்துவத்தை அடைய நான் செய்யும் சேவையின் இன்பத்தை அனுபவிக்க வேண்டும் என்பதே என்னுடைய ஆரம்ப எண்ணம். ஆனல், அது நிறைவேறவில்லை. நாம் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைக்கிறது என்பதை நான் அனுபவத்தில் கண்டிருக்கிறேன். ஆனல், அதே சமயத்தில் முடிவான லட்சியம்,

சத்தியத்தை நாடுவதாக மாத்திரம் இருந்துவிடுமானல், மனிதன் போடும் திட்டம் எவ்வளவுதான் தவறிப் போனலும், முடிவு தீமையானதாக ஆவது இல்லை என்பதுடன், சில சமயங்களில் எதிர்பார்த்ததைவிட அதிக நன்மையானதாகவும் முடிந்து விடுகிறது. போனிக்ஸ் குடியேற்றம் எதிர்பாராதவிதமாக மாறுதல் அடைந்ததும், எதிர்பாராமல் நேர்ந்த சில நிகழ்ச்சிகளும், நாங்கள் ஆரம்பத்தில் எதிர்பார்த்ததைவிட மேலாக முடிந்தன என்று சொல்லுவது கஷ்டமேயானலும், தீமையாக மாத்திரம் முடியவில்லை.

நாங்கள் எல்லோரும், 'உடல் உழைப்பினலேயே ஜீவனம் செய்வது சாத்தியமாக வேண்டும்' என்பதற்காக அச்சுக்கூடத்தைச் சுற்றி இருந்த நிலத்தை ஆளுக்கு மூன்று ஏக்கர் வீதம் பிரித்துக்கொண்டோம். இதில் ஒரு பகுதி என் பங்குக்கு விழுந்தது. இந்த ஒவ்வொரு பகுதி நிலத்திலும் எங்கள் விருப்பத்திற்கு மாருகவே இரும்புத் தகடு போட்டு வீடுகளைக் கட்டினேம். நாங்கள் விரும்பியதெல்லாம், வைக்கோல் வேய்ந்த மண் குடிசைகளைக் கட்டிக்கொள்ளுவதுதான். இல்லாவிட்டால், சாதாரண விவசாயி வசிக்கக் கூடிய வகையில் சிறு செங்கல் வீடுகளைக் கட்டிக்கொள்ளுவது என்பதே. ஆனல், அது நிறைவேறவில்லை. அப்படிக் கட்டுவதாக இருந்தால் அதிகச் செலவாகும்; அதிக காலமும் பிடிக்கும். நாங்களோ, கூடுமான வரையில் சீக்கிரத்திலேயே குடியேற்றத்தில் நிலை பெற்றுவிட வேண்டும் என்பதில் அதிக ஆவலுடன் இருந்தோம்.

மன்சுக்லால் நாஸரே இன்னும் பத்திரிகை ஆசிரியராக இருந்தார். புதிய திட்டத்தை அவர் ஏற்றுக்கொள்ளவில்லை. 'இந்தியன் ஒப்பீனிய'னுக்கு டர்பனில் ஒரு கிளைக் காரியாலயம் இருந்தது. அங்கே இருந்து கொண்டே அவர் இப் பத்திரிகைக்கு வேலைசெய்து வந்தார். அச்சுக் கோப்போருக்குச் சம்பளம் கொடுத்து வந்தோம். ஆனல், குடியேற்றத்தைச் சேர்ந்த ஒவ்வொருவரும், அச்சுக்கோக்கக் கற்றுக்கொண்டு விட வேண்டும் என்பது என் அபிப்பிராயம். அச்சுக்கூடத்தில் இந்த வேலை அலுப்புத் தட்டும் வேலையானலும் சுலபமான வேலையே. ஆகையால், இதற்கு முன்னல் இந்த வேலையைக் கற்றுக்கொள்ளாதிருந்தவர்கள், இப்பொழுது கற்றுக்கொண்டோம். ஆனல், இந்த வேலையில் நான் கடைசி வரையில் திறமை இல்லாதவனகவே இருந்தேன். மகன்லால் காந்தி இதில் எங்களெல்லோரையும்விட முதன்மையாய் இருந்தார். இவர், இதற்கு முன்னல் அச்சுக்கூடத்தில் வேலையே செய்ததில்லையென்றாலும், அச்சுக் கோப்பதில் அதிக சமர்த்தராகிவிட்டார். அதிக வேகமாக அச்சுக்கோப்பவராகி விட்டதோடு மாத்திரமல்லாமல், அச்சுக் கூடத்தின் எல்லா வேலைகளையுமே வெகு விரைவில் கற்றுக் கொண்டுவிட்டார். இது எனக்கு அதிக ஆச்சரியத்தையும் மகிழ்ச்சியையும் அளித்தது. அவருடைய ஆற்றல் அவருக்கே தெரியாது என்பதுதான் எப்பொழுதும் என் அபிப்பிராயம்.

கட்டடங்களைக் கட்டி முடித்து நாங்கள் அங்கே நிலை பெற ஆரம்பித்தவுடனேயே, புதிதாக அமைத்திருந்த கூட்டை விட்டு விட்டு நான் ஜோகன்னஸ்பர்க்கிற்குப் போக வேண்டிய தாயிற்று. அங்கே இருந்த வேலைகளை நான் கவனிக்காமலேயே அதிக காலத்திற்கு விட்டுவைத்துவிட என்னால் ஆகவில்லை.

ஜோகன்னஸ்பர்க்கிற்குத் திரும்பியதும், நான் செய்திருக்கும் முக்கியமான மாறுதல்களைக் குறித்து ஸ்ரீ போலக்கிடம் கூறினேன். அவர் இரவல் கொடுத்த புத்தகம் இவ்வளவு பலனுள்ளதாக ஆயிற்று என்பதை அறிந்ததும் அவர் அடைந்த ஆனந்தத்திற்கு எல்லையே இல்லை. ''இப் புதிய முயற்சியில் நானும் பங்கெடுத்துக்கொள்ளச் சாத்தியப்படாதா?'' என்று கேட்டார். ''நிச்சயமாகச் சாத்தியமே. நீங்கள் விரும்பினால் நீங்களும் குடியேற்றத்தில் சேர்ந்துகொள்ளலாம்'' என்றேன். ''என்னைச் சேர்த்துக்கொள்ளுவதாக இருந்தால் நான் தயாராக இருக்கிறேன்'' என்றார்.

அவருடைய உறுதி என்னைக் கவர்ந்துவிட்டது. 'கிரிடிக்' பத்திரிகையில் தாம் செய்து வந்த வேலையிலிருந்து ஒரு மாதத்தில் விலகிக்கொள்ள அனுமதிக்குமாறு பிரதம ஆசிரியருக்கு எழுதினார். பின்னர் அதிலிருந்து விலகிப் போனிக்ஸுக்கு வந்து சேர்ந்தார். தமது இனிய சுபாவத்தினாலும், எல்லோருடனும் நன்றாகப் பழகும் குணத்தினாலும், வெகு சீக்கிரத்தில் அவர் எல்லோருடைய மனத்தையும் கவர்ந்துவிட்டார்; எங்கள் குடும்பத்தில் ஒருவராகவும் ஆகிவிட்டார். எளிமை அவருடைய சுபாவத்திலேயே இருந்தது. போனிக்ஸ் வாழ்க்கை அவருக்கு விசித்திரமானதாகவோ, கஷ்டமானதாகவோ தோன்றவில்லை. நீரிலிருப்பது மீனுக்கு எவ்விதம் இயற்கையோ அதேபோல இவ் வாழ்க்கை அவருக்கு ஒத்ததாக இருந்தது. ஆனால், அவரை அங்கேயே அதிக காலம் நான் வைத்திருப்பதற்கு இல்லை. இங்கிலாந்துக்குப் போய்த் தமது சட்டப் படிப்பை முடிக்க ஸ்ரீ ரிச் விரும்பினார். எனவே, என் அலுவலகத்தின் வேலைப் பளுவை நான் ஒருவனே சமாளித்துவிடுவதென்பது அசாத்தியம். ஆகவே, என் அலுவலகத்தில் சேர்ந்து அட்டர்னியாகப் பயிற்சி பெறுமாறு போலக்குக்கு யோசனை கூறினேன். முடிவில் நாங்கள் இருவருமே அத் தொழிலிலிருந்து விலகிப் போனிக்ஸில் நிலைத்துவிடலாம் என்று எண்ணியிருந்தேன். ஆனால், அது நிறைவேறாமலேயே போய்விட்டது. நம்பும் சுபாவமுள்ளவர் போலக். ஒரு நண்பரிடம் நம்பிக்கை வைத்துவிடுவாரானால் அவரோடு விவாதித்துக்கொண் டிருப்பதைவிட ஒத்துப்போகவே அவர் முயலுவார். போனிக்ஸிலிருந்து எனக்கு எழுதினார். அங்கே இருக்கும் வாழ்க்கை தமக்கு இன்பமாக இருக்கிறதென்றாலும், தாம் சந்தோஷமாகவே இருப்பினும், குடியேற்றத்தை அபிவிருத்தி செய்யலாம் என்று நம்பினாலும், இதை விட்டுவிட்டுக் காரியாலயத்தில் சேர்ந்து அட்டர்னிக்குப் பயிற்சி பெறுவதனால்

நாங்கள் எங்கள் லட்சியத்தை வெகு சீக்கிரத்தில் அடைந்துவிட முடியும் என்று நான் நினைத்தால் அப்படியே செய்யத் தாம் தயார் என்று எழுதினர். இக் கடிதத்தை நான் மனப்பூர்வமாக வரவேற்றேன். போலக், போனிக்ஸிலிருந்து கிளம்பி ஜோகன்னஸ்பர்க்கிற்கு வந்து பயிற்சி பெறத் தஸ்தாவேஜில் கையெழுத்தும் இட்டார்.

அதே சமயத்தில், ஸ்காட்லாந்துக்காரரான ஒரு பிரம்ம ஞான சங்கத்தினரையும் போலக்கைப் பின்பற்றும்படி அழைத்தேன். உள்ளூர்ச் சட்டப் பரீட்சைக்குப் போவதற்காக அவர் என்னிடம் முன்பு பயிற்சி பெற்றுவந்தார். இப்பொழுது என் அழைப்பை ஏற்றுக்கொண்டு வக்கீல் குமாஸ்தாவாகச் சேர்ந்தார். ஸ்ரீ மெக்கின்டயர் என்பது அவர் பெயர்.

இவ்வாறு, போனிக்ஸில் லட்சியங்களைச் சீக்கிரத்தில் அடைந்துவிட வேண்டும் என்ற உயரிய நோக்கத்தின் பேரில், நான் வேறு ஒரு திக்கில் மேலும் மேலும் தீவிரமாகப் போய்க்கொண்டிருக்கிறேன் என்று தோன்றியது. கடவுள் மாத்திரம் வேறுவிதமாக எனக்கு அருள் செய்யாதிருந்தால், எளிய வாழ்க்கையின் பெயரால் விரித்திருந்த வலையில் நான் சிக்கிக்கொண்டிருந்திருப்பேன்.

யாருமே எண்ணியோ, எதிர்பார்த்தோ இராத வகையில், நானும் என்னுடைய லட்சியங்களும் எவ்வாறு காப்பாற்றப்பட்டன என்பதை இன்னும் சில அத்தியாயங்களுக்குப் பிறகு நான் விவரிப்பேன்.

## 22

## கடவுள் யாரைக் காக்கிறார்

வருங்காலத்தில் இந்தியாவுக்குத் திரும்புவது என்ற நம்பிக்கையையெல்லாம் இப்பொழுது அடியோடு கைவிட்டுவிட்டேன். ஓர் ஆண்டில் திரும்பி வந்துவிடுவேன் என்று என் மனைவிக்கு வாக்களித்திருந்தேன். நான் திரும்புவதற்கான ஏது எதுவுமில்லாமலேயே அந்த ஓராண்டும் முடிந்துவிட்டது. ஆகையால், அவளையும் குழந்தைகளையும் வரவழைத்துக் கொள்ளுவது என்று தீர்மானித்தேன்.

அவர்கள் தென்னப்பிரிக்காவுக்கு வந்துகொண்டிருந்த கப்பலில் என் மூன்றாவது மகன் ராமதாஸ், கப்பல் காப்டனுடன் விளையாடிக் கொண்டிருக்கையில் விழுந்து கையை முறித்துக் கொண்டான். காப்டன் அவனை நன்றாகக் கவனித்துக்கொண்டதோடு கப்பல் டாக்டர் அவனுக்குச் சிகிச்சை செய்யும்படியும் ஏற்பாடு செய்தார். கட்டுப்போட்ட கையோடு ராமதாஸ் கப்பலிலிருந்து இறங்கினான். வீட்டுக்குப் போனதும் தக்க டாக்டர் ஒருவரைக் கொண்டு அவன் காயத்திற்குக் கட்டுக் கட்ட வேண்

டும் என்று கப்பல் டாக்டர் ஆலோசனை கூறினர். மண் சிகிச்சையில் நான் பூரணமாக நம்பிக்கை வைத்திருந்த சமயம் அது. என்னுடைய அரைகுறை வைத்தியத்தை நம்பிய என் கட்சிக்காரர்கள் சிலரையும் மண், நீர் சிகிச்சை செய்து கொள்ளும்படி தூண்டி வந்தேன்.

இந்த நிலைமையில் ராமதாஸ் விஷயத்தில் நான் என்ன செய்வது? அப்பொழுது அவனுக்கு எட்டு வயது. அவனுக்கு நான் கட்டுக் கட்டிவிடுவதில் சம்மதந்தானு என்று அவனைக் கேட்டேன். அவன் சிரித்துக் கொண்டு சம்மதம் என்ருன். தனக்கு நல்லது இன்னது என்பதை அந்த வயதில் அவன் முடிவு செய்து கொள்ளுவது சாத்தியமில்லை. ஆனால், அரைகுறையான வைத்தியத்திற்கும் சரியான வைத்திய சிகிச்சைக்கும் உள்ள பேதம் அவனுக்குத் தெரியும். என்னுடைய வீட்டு வைத்தியப் பழக்கத்தை அவன் அறிவான். தன்னை என்னிடம் ஒப்படைத்து விடுவதில் அவனுக்கு நம்பிக்கையும் இருந்தது. பயந்து நடுங்கிக் கொண்டே அவனுக்குப் போட்டிருந்த கட்டை அவிழ்த்தேன். புண்ணை அலம்பினேன். அதன்மீது சுத்தமான மண் பற்றும் போட்டேன். பிறகு கைக்குக் கட்டுப் போட்டேன். புண் முற்றும் ஆறிவிடும் வரையில் ஒரு மாத காலம் இவ்விதம் கட்டுப் போடுவது தினந்தோறும் நடந்துவந்தது. எந்தத் தொந்தரவுமே இல்லை. சாதாரண சிகிச்சையினுல் எவ்வளவு காலத்தில் இப் புண் ஆறிவிடும் என்று கப்பல் டாக்டர் கூறியிருந்தாரோ அதை விட இப்பொழுது அது ஆறுவதற்கு அதிக காலம் ஆகவில்லை.

இதுவும் என்னுடைய மற்றப் பரீட்சைகளும், வீட்டு வைத்திய முறையில் எனக்கு இருந்த நம்பிக்கையை அதிகப்படுத்தின. நான் இப்பொழுது அதிகத் தன்னம்பிக்கையுடன் இம் முறைகளை மேற்கொண்டும் கையாளலானேன். மற்றும் பல நோய்களுக்கும் இம் முறையைக் கையாண்டேன். புண்கள், ஜுரங்கள், அஜீரணம், காமாலை ஆகிய நோய்களுக்கெல்லாம் மண், நீர் வைத்தியம் செய்து வந்தேன். அநேகமாகக் குணமாகிக் கொண்டே வந்தன. ஆனல், தென்னுப்பிரிக்காவில் இதில் எனக்கு இருந்த நம்பிக்கை இப்பொழுது இல்லை. இந்தச் சிகிச்சைகளில் அபாயங்களும் உண்டு என்பதை அனுபவத்தில் அறிந்திருக்கிறேன்.

ஆகையால், இந்தச் சோதனைகளைக் குறித்து நான் இங்கே கூறியிருப்பது, அவற்றின் வெற்றியை எடுத்துக் காட்டுவதற்காக அன்று. எந்தச் சோதனையும் முழுமையான வெற்றியைக் கண்டது என்று நான் கூறிக் கொள்ளுவதில்லை. வைத்தியர்கள்கூட, தங்கள் யோசனை பூரண வெற்றியை அளித்தது என்று சொல்ல முடியாது. புதிய சோதனைகளைச் செய்ய முற்படுகிறவர், முதலில் அவற்றைத் தம்மிடமே செய்து கொண்டு பரீட்சிக்க வேண்டும் என்பதை எடுத்துக் காட்டுவதே என் நோக்கம். இதனுல்,

உண்மையைத் துரிதமாகக் கண்டுபிடிப்பது சாத்தியமாகிறது. அத்துடன் யோக்கியமாகப் பரிசோதனை செய்பவரைக் கடவுள் எப்பொழுதும் காப்பாற்றுகிறார்.

இயற்கை வைத்திய சோதனையில் எவ்வளவு ஆபத்துக்கள் உண்டோ, அவ்வளவு ஆபத்துக்கள் ஐரோப்பியர்களுடன் நெருங்கிய தொடர்பை வளர்த்துக்கொள்ளுவதற்குச் செய்யும் சோதனைகளிலும் இருக்கின்றன. அந்த அபாயங்கள் வேறுவகையானவை என்று மட்டுமே சொல்லலாம். ஆனால், இந்தத் தொடர்புகளை உண்டாக்கிக் கொள்ளுவதற்குச் செய்த முயற்சியில் ஆபத்துக்கள் இருக்குமென்று நான் நினைக்கவே இல்லை.

என்னுடன் வந்து தங்குமாறு போலக்கை அழைத்தேன். சொந்தச் சகோதரர்கள்போல நாங்கள் வாழ ஆரம்பித்தோம். சீக்கிரத்தில் ஸ்ரீமதி போலக் ஆகவிருந்த பெண்ணுக்கும் அவருக்கும் சில ஆண்டுகளுக்கு முன்பே விவாகம் நிச்சயமாகியிருந்தது. ஆனால், அனுகூலமான வேளையை எதிர்பார்த்துத் திருமணம் ஒத்தி வைக்கப்பட்டிருந்தது. மண வாழ்க்கையில் நிலைபெறுவதற்கு முன்னால் கொஞ்சம் பணம் சம்பாதித்து வைத்துக் கொள்ளலாமென்று ஸ்ரீ போலக் விரும்பினார் என்பது என் அபிப்பிராயம். ரஸ்கினின் நூலை என்னைவிட அவர் நன்றாகப் படித்திருந்தார். ஆனால், அவருடைய மேனாட்டுச் சூழ்நிலை, ரஸ்கினின் உபதேசங்களை உடனே அனுபவத்திற்குக் கொண்டுவருவதற்குத் தடையாக இருந்தது. அவரிடம் நான் பின்வருமாறு கூறி வாதாடினேன்: "உங்கள் விஷயத்தில் உங்கள் இருவருக்கும் இத்தகைய ஒற்றுமை ஏற்பட்டிருக்கும்போது, பொருளாதாரக் காரணங்களுக்காக விவாகத்தை ஒத்தி வைத்துக்கொண்டு போவது நியாயமே அல்ல. வறுமை ஒரு தடையாக இருக்குமாயின், ஏழைகள் மணம் செய்து கொள்ளவே முடியாது. மேலும், இப்பொழுது நீங்கள் என்னுடன் தங்கியிருக்கிறீர்கள். வீட்டுச் செலவைப்பற்றிய கவலையும் இல்லை. ஆகையால், எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு சீக்கிரத்தில் நீங்கள் மணம் செய்து கொண்டுவிட வேண்டும்." முந்திய ஓர் அத்தியாயத்தில் நான் கூறியிருப்பதைப்போல, ஸ்ரீ போலக்குடன் ஒரு விஷயத்தைக் குறித்து நான் இரு முறை விவாதிக்க வேண்டி வந்ததே இல்லை. என் வாதத்திலுள்ள நியாயத்தை அவர் ஒப்புக்கொண்டார். அச் சமயம் இங்கிலாந்தில் இருந்த ஸ்ரீமதி போலக்குக்கு இதைக் குறித்து உடனே கடிதம் எழுதினார். அவரும் இந்த யோசனையைச் சந்தோஷமாக ஏற்றுக்கொண்டார். சில மாதங்களில் ஜோகன்னஸ்பர்க் வந்துசேர்ந்தார். கல்யாணத்திற்குச் செலவு செய்யும் எண்ணம் இல்லை. விசேட ஆடைகள் அவசியம் என்றும் கருதப்படவில்லை. தமது பந்தத்திற்கு முத்திரையிட இவர்களுக்கு எந்த மதச் சடங்குகளுங்கூட அவசியப்படவில்லை. ஸ்ரீமதி போலக் பிறப்பினால் கிறிஸ்தவர்; போலக், யூதர். நீதியின் தருமமே இவர்கள் இருவருக்கும் பொதுவான மதம்.

இந்த விவாக சம்பந்தமாக நடந்த ஒரு வேடிக்கையான சம்பவத்தைக் குறித்துச் சிறிது கூற விரும்புகிறேன். டிரான்ஸ்வாலில் இருக்கும் ஐரோப்பியரின் கல்யாணங்களைப் பதிவு செய்துகொள்ளும் அதிகாரி, கறுப்பு அல்லது மற்ற நிறத்தினரின் விவாகங்களைப் பதிவு செய்யக்கூடாது. இந்தக் கல்யாணத்தில் நான் மாப்பிள்ளைத் தோழனுக இருந்தேன். இதற்கு ஓர் ஐரோப்பியர் எங்களுக்குக் கிடைக்கமாட்டார் என்பது அல்ல. ஆனுல், அந்த யோசனையைப் போலக் ஒப்புக்கொள்ளவில்லை. ஆகையால், நாங்கள் மூவரும் கல்யாணப் பதிவு அதிகாரியிடம் சென்ருேம். நான் மாப்பிள்ளைத் தோழனுக இருந்த ஒரு விவாகத்தில், தம்பதிகள் வெள்ளைக்காரர்கள்தான் என்று அவர் எப்படி நிச்சயமாக நம்பிவிட முடியும்? தம்பதிகள் வெள்ளையர் தானு என்பதை விசாரிப்பதற்காக விவாகப் பதிவை ஒத்தி வைப்பதாக அந்த அதிகாரி கூறினுர். மறுநாளோ, ஞாயிற்றுக்கிழமை. அதற்கு அடுத்த நாள் புது வருடப் பிறப்பு நாளாதலால் விடுமுறை நாள். பக்தியுடன் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த ஒரு திருமணத்துக்கு இத்தகைய அற்பமான சாக்குப்போக்குக் கூறித் தேதியை ஒத்திவைப்பதென்ருல், அதை யாரும் சகித்துக்கொண்டிருக்க முடியாது. பதிவு இலாகாவின் தலைவரான பிரதம மாஜிஸ்டிரேட்டை எனக்குத் தெரியும். தம்பதிகளுடன் அவர் முன்பு சென்றேன். அவர் சிரித்தார். பதிவு அதிகாரிக்கு ஒரு குறிப்பும் கொடுத்தார். அதன்பேரில் முறைப்படி திருமணம் பதிவாயிற்று.

இதுவரையில் எங்களுடன் வசித்துவந்த ஐரோப்பியர்கள், அநேகமாக எனக்கு ஏற்கனவே தெரிந்தவர்கள்தான். ஆனுல், இப்பொழுதோ எங்களுக்கு முற்றும் புதியவரான ஓர் ஆங்கிலப் பெண் எங்கள் குடும்பத்தில் பிரவேசித்தாள். புதிதாக மணமான இத் தம்பதிகளுக்கும் எங்களுக்கும் எப்பொழுதேனும் அபிப்பிராய பேதம் ஏற்பட்டதாக எனக்கு ஞாபகம் இல்லை. ஸ்ரீமதி போலக்குக்கும் என் மனைவிக்கும் சில மனஸ்தாபங்கள் அவ்வப்போது இருந்தது உண்டு* ஆனுல், அவை, சிறந்த

---

* கஸ்தூரி பாய்க்குக் கல்வி கற்பிக்க முயன்றது அவ்வளவாகப் பயனளிக்கவில்லை என்று அடிகள் கூறியிருக்கிருர். இங்கே ஸ்ரீமதி போலக்குக்கும் அவருக்கும் மனஸ்தாபங்கள் ஏற்படும் என்கிருர். ஆகவே கஸ்தூரிபாய்க்கு ஆங்கிலம் பேசத் தெரியுமா? பிறர் ஆங்கிலத்தில் பேசுவதை அவர் புரிந்துகொள்ளுவார். இலக்கண சுத்தமில்லாவிட்டாலும் கொச்சை ஆங்கிலத்தில் அவரால் தமது கருத்தை வெளியிட முடியும் என்று ஸ்ரீமதி போலக் கூறுகிருர். இதற்கு ஓர் உதாரணமும் அவர் கூறுகிருர்: "எக் காரணத்தாலோ ஸ்ரீ போலக் காந்திஜியிடம் நான்கு நாட்களுக்குச் சேர்ந்தாற் போல் ஒரு வார்த்தைகூடப் பேசாமல் இருந்தார். மாலையில் நாங்கள் யாவரும் எங்கள் அறையில் இருந்தோம். மனத்தாங்கலால் நிலைமை சற்றுச் சங்கடமாயிருந்தது. ஸ்ரீமதி காந்தி, ஆங்கிலத்தில் "What is the matter Mr. Polak?" (என்ன காரணம், போலக் ஒரு மாதிரி இருக்கிருரே?) என்று என்னைக் கேட்டார்! "அவர் பாபுவிடம் கோபமாயிருக்கிருர்" என்று நான் பதில் கூறினேன். "What for he cross Babu? What Babu done?" (ஏன் அவர் பாபுவிடம் கோபமாயிருக்கிருர்? பாபு என்ன செய்துவிட்டார்?) என்று அவர் (ஆங்கிலத்தில்) கேட்டார் காரணத்தை நான் விளக்கிக்

வகையில் ஒழுங்காகவும் ஒற்றுமையாகவும் உள்ள குடும்பங்களில் சாதாரணமாக ஏற்படும் மனஸ்தாபங்களைவிட எந்த விதத்திலும் அதிகமானவை அல்ல. இன்னும் ஒன்றும் நினைவில் இருக்க வேண்டும். முக்கியமாக என் குடும்பம் பற்பல வகையானவர்கள் சேர்ந்த கலப்புக் குடும்பம் என்றே கருதவேண்டும். எல்லா வகை யானவர்களும், வெவ்வேறு குணாதிசயங்க ளுள்ளவர்களும் தாராள மாக இதில் சேர்த்துக்கொள்ளப்பட்டனர். இதைக் குறித்து நாம் நினைக்கும்போது ஒரே சாதி, வெவ்வேறு இனம் என்பதற் கிடையே உள்ள பேதமெல்லாம், வெறும் கற்பனையே என்பதைக் கண்டுகொள்ளுகிறோம். நாம் எல்லோரும் ஒரே குடும்பமே.

வெஸ்ட்டின் விவாகத்தையும் இந்த அத்தியாயத்திலேயே நடத்திவிடுகிறேன். என் வாழ்க்கையில் இந்தக் கட்டத்தில் பிரம்மச்சரியத்தைப்பற்றிய என் எண்ணம் பூரணமாக வளர்ச்சி யடையவில்லை. ஆகவே, என் பிரம்மச்சரிய நண்பர்கள் எல்லோ ருக்கும் மணமாகிவிடவேண்டும் என்பதில் நான் அதிகச் சிரத்தை கொண்டேன். வெஸ்ட், தமது பெற்றோரைப் பார்த்துவிட்டு வருவ தற்காக லௌத்துக்கு யாத்திரை சென்றார். சாத்தியமானால் விவாகம் செய்துகொண்டு திரும்புமாறு அவருக்குச் சொல்லி யனுப்பினேன். போனிக்ஸ் எங்கள் எல்லோருக்கும் பொது வீடு. நாங்கள் எல்லோரும் விவசாயிகளாகவே ஆகிவிட்டதாக எண் ணிக்கொண்டதால், விவாகத்தைப்பற்றியும், அதன் சாதாரண மான விளைவுகளைக் குறித்தும் நாங்கள் பயப்படவில்லை. வெஸ்ட், ஸ்ரீமதி வெஸ்ட்டுடன் திரும்பி வந்தார். அவர், லீஸ்டரைச் சேர்ந்த அழகிய இளம் பெண். லீஸ்டர் தொழிற்சாலையில் செருப்புத் தயாரிக்கும் வேலை செய்யும் ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர். அத் தொழிற்சாலையில் வேலை செய்து ஸ்ரீமதி வெஸ்ட்டுக்கும் கொஞ்சம் அனுபவம் உண்டு. 'அழகிய பெண்' என்று நான் அவரைக் கூறியது, அவருடைய குண சீலத்தின் அழகு என்னை உடனே கவர்ந்திருந்ததனால்தான். உள்ளத்தின் தூய்மையிலேயே உண்மையான அழகு இருக்கிறது. ஸ்ரீ வெஸ்ட்டுடன் அவருடைய மாமியாரும் வந்தார். அவ் வயோதிக மாது இன்றும் உயிருடன் இருக்கிறார். தமது உழைப்பு, உற் சாகம், சந்தோஷமான சுபாவம் ஆகியவைகளினால் அவர், நாங்கள் எல்லோரும் வெட்கப்படும்படி செய்துவிட்டார்.

விவாகம் செய்துகொள்ளுமாறு இந்த ஐரோப்பிய நண்பர் களை நான் தூண்டியதைப் போன்றே, இந்தியாவிலிருக்கும் தங்கள் குடும்பங்களைத் தருவித்துக்கொள்ளுமாறு இந்திய நண்பர் களையும் உற்சாகப்படுத்தினேன். இவ்விதம் போனிக்ஸ் ஒரு சிறு கிராமமாக வளர்ந்தது. ஆறு குடும்பங்கள் அங்கே வந்து குடி யேறி வளர ஆரம்பித்தன.

---

கூறினேன். ''ஓ அப்படியா'' (Oh! Oh!) என்று கூறிவிட்டு விவகாரத்தைப்பற்றி எவ்வித அபிப்பிராயமும் கூறாமல் இருந்துவிட்டார். ஆனால், இவ்விஷயத்தில் தம் கணவரிடம் போலக் கோபமாயிருந்தது தவறில்லை என்று அவர் கருதியது போல எனக்குப் பட்டது.''

# 23
# குடும்பக் காட்சி

வீட்டுச் செலவு அதிகமாக இருந்தபோதிலும், எளிய வாழ்க்கை நடத்தவேண்டும் என்ற மனப்போக்கு டர்பனிலேயே ஆரம்பம் ஆகிவிட்டது என்பதை முன்பே கவனித்திருக்கிறோம். ஆனால், ரஸ்கினின் உபதேசங்களை அனுசரித்து ஜோகன்னஸ்பர்க் வீடே கடுமையான மாறுதலை அடைந்தது.

ஒரு பாரிஸ்டரின் வீட்டில் எவ்வளவு எளிமையைப் புகுத்துவது சாத்தியமோ அவ்வளவையும் செய்தேன். ஓரளவுக்கு மேஜை நாற்காலிகள் இல்லாமல் இருக்க முடியாது. புறத்தில் ஏற்பட்ட மாறுதலைவிட அகத்தில் ஏற்பட்ட மாறுதலே அதிகம். உடலுழைப்பு வேலைகளையெல்லாம் நாமே செய்துகொள்ளவேண்டும் என்ற ஆவல் வளர்ந்தது. ஆகையால், என் குழந்தைகளையும்கூட இவ்விதமான கட்டுத் திட்டங்களின்கீழ் வளர்க்க ஆரம்பித்தேன்.

கடையில் ரொட்டி வாங்குவதை நிறுத்தினோம். கூனேயின் முறைப்படி தவிடு போக்காத கோதுமையைக் கொண்டு வீட்டிலேயே ரொட்டி தயாரிக்க ஆரம்பித்தோம். இதற்குக் கடையில் விற்கும் மில் மாவு பயனில்லை. கையினாலேயே அரைத்த மாவை உபயோகிப்பது அதிக எளிமையாவதோடு உடம்புக்கும் நல்லதாகவும் சிக்கனமாகவும் இருக்கும் என்று எண்ணினோம். எனவே, கையினால் மாவு அரைக்கும் யந்திரம் ஒன்றை ஏழு பவுன் கொடுத்து வாங்கினேன். அதன் இரும்புச் சக்கரத்தை ஒருவரே சுற்றுவது கஷ்டம். இரண்டு பேர் சுலபத்தில் சுற்றலாம். வழக்கமாகப் போலக்கும் நானும் குழந்தைகளும் அந்த யந்திரத்தில் மாவு அரைப்போம்;* நாங்கள் மாவு அரைக்கும் நேரந்தான் சாதாரணமாக என் மனைவி அடுப்பங்கரை வேலையைப் பார்க்கப் போகும் நேரம். என்றாலும், மாவு அரைப்பதில் அவ்வப்போது அவளும் எங்களுக்கு உதவி செய்ய

---

* மகாத்மா 1932-இல் எரவ்டா சிறையிலிருந்தபோது உடனிருந்த ஸ்ரீ மகாதேவ தேசாய், "போனிக்ஸுக்கு நீங்கள் குடி போவதற்கு முன்னால் எப்பொழுதுமே சமையற்காரரை வைத்திருந்தீர்களா?" என்று கேட்டார். அதற்கு மகாத்மா பின்வருமாறு கூறியதாக ஸ்ரீ தேசாய் தமது நாட்குறிப்பில் எழுதியிருக்கிறார் :

'இல்லை. கடைசியாக இருந்த சமையற்காரர், மிளகாயை உபயோகிக்க நான் அனுமதிப்பதில்லை என்பதற்காகப் போய்விட்டார். பிறகு சமையற்காரர் இல்லாமலேயே சமாளித்து வந்தோம். சமையல், துணி துவைப்பது, கக்கூசுகளைச் சுத்தம் செய்வது, மாவு அரைப்பது ஆகியவைகளை யெல்லாம் குடும்பத்தி விருப்பவர்கள்தான் செய்து கொண்டு வந்தோம். 6 பவுன் விலையுள்ள, கையினால் சுற்றும் இரும்பு மாவரைக்கும் யந்திரம் எங்களிடம் இருந்தது. அதைச் சுற்ற இரண்டு பேர் வேண்டும். காலையில் நான் செய்யும் முதல் வேலை மாவு அரைப்பது. சக ஊழியர்களில் கிடைப்பவர்களை உதவிக்கு அழைத்துக்கொள்ளுவேன். நின்றுகொண்டுதான் அரைக்க வேண்டும். கால் மணி நேரத்தில் ஒரு நாளுக்குத் தேவையான மாவை அரைத்துவிடுவோம்."

வருவாள். ஸ்ரீமதி போலக் வந்து சேர்ந்த பிறகு அவரும் எங்களு டன் சேர்ந்துகொள்ளுவார். மாவு அரைப்பது குழந்தைகளுக்கு நன்மை தரும் தேகப் பயிற்சியாக இருந்தது. இந்த வேலே யையோ, வேறு எந்த வேலேயையோ செய்ய வேண்டும் என்று குழந்தைகள் கட்டாயப்படுத்தப்படுவதில்லே. தாங்களே வந்து, இதில் எங்களுக்கு உதவி செய்வது குழந்தைகளுக்கு ஒரு விளே யாட்டு. களேத்துப் போனுல் அவர்கள் போய்விடலாம். குழந்தைகள்-பின்னுல் உங்களுக்கு நான் அறிமுகம் செய்து வைக்கப் போகிறவர்கள் உள்பட-எனக்கு உதவி செய்ய வராமல் இருந்ததே இல்லே. இவ் வேலேயில் பின்தங்கியவர்களும் சிலர் உண்டு. ஆனுல், அநேகர் உற்சாகமாகவே வேலே செய்தனர். அந்த நாளில் இளேஞர்கள், வேலே செய்யத் தயங்கியதாகவோ, களேப்பாயிருப்பதாகச் சொன்னதாகவோ எனக்கு நினேவு இல்லே.

வீட்டு வேலேகளேக் கவனித்துக்கொள்ளுவதற்காக ஒரு வேலேக்காரரை நியமித்திருந்தோம். குடும்பத்தில் ஒருவராக அவரும் எங்களுடன் வசித்தார். அவருடைய வேலேகளில் குழந்தைகளும் அவருக்கு உதவியாக இருப்பார்கள். முனிசிபல் தோட்டி மலத்தை அப்புறப்படுத்திவிடுவார். ஆனுல், கக்கூசுகளே அலம்பும் வேலேயை வேலேக்காரர் செய்யும்படி விடாமல், அவர் செய்வதை எதிர்பார்த்துக் கொண்டிராமல், நாங்களே செய்து வந்தோம். குழந்தைகளுக்கு இது நல்ல பயிற்சி யாயிற்று. இதன் பலனுக, என் புதல்வர்கள் எல்லோருக்கும் தோட்டி வேலேயில் அருவருப்பு ஏற்படாமல் இருந்தது. சுகாதார விதிகள் சம்பந்த மாகவும் நல்ல பயிற்சி பெற்ருர்கள். ஜோகன்னஸ்பர்க் வீட்டில் யாருக்கும் நோய் என்பதே இல்லே. யாருக்காவது நோய் வந்தால் குழந்தைகள் மனம் உவந்து பணிவிடை செய்வார்கள். குழந்தைகளின் புத்தகப் படிப்பு விஷயத்தில் நான் அசிரத்தை யாக இருந்தேன் என்றும் சொல்லமாட்டேன். என்ருலும், அதைத் தியாகம் செய்துவிட நிச்சயமாக நான் தயங்கவில்லே. ஆகையால், என் புதல்வர்கள் என்மீது குறை சொல்லுவதற்குக் கொஞ்சம் காரணமும் இருக்கிறது. சில சமயங்களில் இதை அவர்கள் தெரிவித்தும் இருக்கிருர்கள். இதில் ஓரளவுக்கு என் குற்றத்தையும் நான் ஒப்புக்கொள்ளவே வேண்டும். அவர் களுக்கு இலக்கியக் கல்வி அளிக்க வேண்டும் என்ற ஆசை எனக்கு இருந்தது. நானே அதைச் சொல்லிக்கொடுக்கவும் முயன்றேன். ஆனுல், ஒவ்வொரு சமயமும் இதற்கு ஏதாவது ஓர் இடையூறு வந்துகொண்டே இருந்தது. வீட்டில் அவர்களுக்குப் போதிக்க நான் வேறு எந்த ஏற்பாடும் செய்யவில்லே. என்ருலும், தினமும் என் அலுவலகத்திற்குப் போகும்போதும் வீடு திரும்பும் போதும், அவர்கள் என்னுடன் நடந்துவரும்படி செய்துவந்தேன். இப்படி நடக்கும் தூரம் மொத்தம் ஐந்து மைல்கள். இது எனக் கும் அவர்களுக்கும் நல்ல தேகாப்பியாச மாயிற்று. இவ்விதம் நடந்து போகும்போது, வேறு யாரும் என் கவனத்தைக் கவராது போனுல், பேசிக்கொண்டே போவதன் மூலம் அவர்

களுக்குக் கல்வி போதிக்க முயலுவேன். இந்தியாவில் தங்கி யிருந்த மூத்த மகன் ஹரிலாலைத் தவிர மற்ற என் புதல்வர்கள் எல்லோரும் ஜோகன்னஸ்பர்க்கில் இந்த வகையில் வளர்ந்தவர் கள்தான். தினமும் ஒரு மணி நேரம் ஒழுங்காக அவர்களுடைய இலக்கியப் படிப்புக்குச் செலவிட என்னால் முடிந்திருக்குமானால், மிகச் சிறந்த படிப்பை நான் அவர்களுக்கு அளித்திருப்பேன் என்பது என் கருத்து. அவர்களுக்குப் போதுமான இலக்கியப் பயிற்சியை அளிக்க நான் தவறிவிட்டது, அவர்களுக்கும் எனக் கும் கூடத் துயர் தருவ தாயிற்று. என் மூத்த மகன் தனது வருத்தத்தைத் தனிமையில் என்னிடத்திலும், பகிரங்கமாகப் பத்திரிகைகளிலும் அடிக்கடி தெரிவித்து வந்திருக்கிறான். ஆனால், என் மற்றப் புதல்வர்கள், என் தவறு தவிர்க்க முடியாதது என்று எண்ணித் தாராளத்துடன் என்னை மன்னித்துவிட்டனர். இதற் காக நான் மனம் உடைந்து போய்விடவில்லை. இதில் எனக்கு ஏதாவது வருத்தமிருந்தால், அது 'ஒரு தந்தை எப்படி இருக்க வேண்டுமோ அப்படி, நான் இல்லாது போய்விட்டேனே' என் பதற்காகத்தான். சமூகத்திற்குச் சேவை என்று நான் எதை நம்பினேனோ அது தவறானதாகவும் இருக்கக்கூடும். என்றாலும், நான் உண்மையாகவே நம்பிய அந்தச் சேவையில் என் புதல்வர் களின் இலக்கியப் பயிற்சியை நான் தியாகம் செய்துவிட்டேன் என்றே கருதுகிறேன். அவர்களுடைய ஒழுக்கத்தை வளர்ப் பதற்கு அவசியமானவை எவையோ அவைகளை நான் அலட்சியம் செய்துவிட்டதில்லை என்பது நிச்சயம். இதற்குச் சரியான ஏற்பாடு செய்யவேண்டியதே ஒவ்வொரு பெற்றோரின் முக்கிய மான கடமையும் என்று நம்புகிறேன். இதில் நான் எவ்வளவு முயன்றிருந்தும், என் புதல்வர்களிடம் குறைபாடுகள் தோன்றும் போதெல்லாம் அவற்றைக் குறித்து எனக்கு நிச்சயமாகத் தோன்றும் முடிவு ஒன்று உண்டு. அவர்களுடைய குறைபாடு களுக்குக் காரணம், நான் போதிய கவனஞ் செலுத்தத் தவறியது அல்ல. ஆனால், அவர்களுடைய பெற்றோர் இருவரிடமும் இருக் கும் குறைகள்தான் என்பதே என் உறுதியான முடிவு.

குழந்தைகள், பெற்றோரின் உடற்கூற்றை மாத்திரமேயன்றி அவர்களுடைய குணத்தின் தன்மைகளையும் பிதுரார்ஜிதமாகப் பெறுகின்றனர். சுற்றுச் சார்பிலுள்ள நிலைமைகளும் குழந்தை களின் குணங்கள் அமைவதில் முக்கியமான காரணங்களாக இருக்கின்றன. என்றாலும், குழந்தைகள், மூதாதைகளிடமிருந்து அடைந்ததையே ஆரம்ப மூலதனமாகக் கொண்டு வாழ்க்கையை ஆரம்பிக்கின்றன. மூதாதைகளிடமிருந்து பெறும் தீய தன்மை களை வெற்றிகரமாகத் தள்ளிவிட்டு வளரும் குழந்தைகளையும் பார்த்திருக்கிறேன். ஆன்மாவுக்குத் தூய்மையே இயற்கையான குணமாக இருப்பதனால் இது சாத்தியமாகிறது.

குழந்தைகளுக்கு ஆங்கிலக் கல்வி அளிப்பது விரும்பத் தக்கதா என்பதைக் குறித்துப் போலக்கும் நானும் அடிக்கடி கடுமையான விவாதம் செய்திருக்கிறோம். ஆங்கிலத்திலேயே

சிந்தித்து, ஆங்கிலத்திலேயே பேசுமாறு தங்கள் குழந்தைகளுக்குப் பயிற்சியளிக்கும் இந்தியப் பெற்ருேர், தங்கள் குழந்தைகளுக்கும் நாட்டுக்கும் துரோகம், செய்தவர்களாவார்கள்என்பது எப்பொழுதுமே என் திடமான அபிப்பிராயமாக இருந்து வந்திருக்கிறது.* இதன் மூலம் நாட்டின் ஆன்மிக, சமூக பாரம்பரியச் செல்வம் குழந்தைகளுக்கு இல்லாது போகும்படி செய்து, அந்த அளவுக்கு நாட்டின் சேவைக்குத் தகுதியில்லாதவர்களாகவும் அவர்களேச் செய்துவிடுகிருர்கள். இவ்விதத் திடமான கருத்துக்களே நான் கொண்டிருந்ததால், குழந்தைகளிடம் குஜராத்தியில்தான் பேசுவது என்று வைத்துக்கொண்டேன். இது போலக்குக்கு பிடிப்பதே இல்லே. அவர்களுடைய எதிர்காலத்தை நான் நாசமாக்குகிறேன் என்று அவர் கருதினர். தம் முழு வலிமையுடனும், அன்புடனும் என்னேடு விவாதிப்பார். ஆங்கிலம் போன்ற, உலகம் முழுவதும் பரவியுள்ள ஒரு மொழியை, மழலேப் பருவத்திலிருந்தே குழந்தைகள் கற்றுக்கொள்ளுவதாக இருந்தால், வாழ்க்கைப் போராட்டத்தில் மற்றவர்களேவிட அதிக அனுகூலங்களேச் சுலபமாக அவர்கள் பெறுவார்கள் என்பார், போலக். ஆனல், என் மனத்தை அவரால் மாற்ற முடியவில்லே. என் போக்குத்தான் சரி என்பதை அவர் அறிந்துகொள்ளும்படி செய்துவிட்டேனு அல்லது நான் அதிகப் பிடிவாதக்காரன் என்று அவர்தான் விட்டுவிட்டாரா என்பது எனக்கு இப்பொழுது ஞாபகமில்லே. இது, இருபது ஆண்டுகளுக்கு முன்னல் நடந்தது. என் கருத்துக்கள் அனுபவத்தினல் இப்பொழுது அதிகப் பலப்பட்டே இருக்கின்றன. முழு இலக்கியப் படிப்பும் இல்லாததனல் என் புதல்வர்கள் நஷ்டமடைந் திருந்தாலும், இயற்கையாகவே தாய் மொழியில் அவர்கள் அடைந்த அறிவு, அவர்களுக்கும் நாட்டுக்கும் நன்மையானதாகவே இருக்கிறது. இதனலேயே, தங்கள் சொந்த நாட்டில் அந்நியரைப் போல் தோன்றியிருக்க வேண்டியவர்கள், இன்று அப்படித் தோற்றமளிக்கா திருக்கிருர்கள். இயற்கையாகவே அவர்கள் இரு மொழிகளே அறியலாயினர். ஏராளமான ஆங்கில நண்பர்களுடன் தினமும் தொடர்புகொள்ள வேண்டியிருந்ததாலும், முக்கியமாகப் பேசப்படும் மொழி ஆங்கிலமாகவே இருந்த நாட்டில் அவர்கள் இருந்ததாலும், எளிதில் ஆங்கிலத்தில் எழுதவும் பேசவும் கூடியவர்களாக இருக்கின்றனர்.

---

* தாய்மொழியிடம் கொள்ளவேண்டிய பற்றைக் குறித்து மகாத்மா காந்தி, 1909 செப்டம்பர் 17–ஆம் தேதி லண்டனில் ஒரு கட்டுரை எழுதினர். அச்சமயம் குஜராத்தி இலக்கிய சங்கத்தின் மூன்ருவது மகாநாடு ராஜ்கோட்டில் நடந்தது. அதற்கே இக்கட்டுரையைக் காந்திஜி எழுதினர். போனிக்ஸ் பள்ளிக்கூடத்தில் ஆங்கிலம் முக்கியம் என்று தாம் வற்புறுத்தாத காரணத்தை அதில் விளக்கியிருக்கிருர். அந்த நீண்ட கட்டுரையில் மகாத்மா ஆரம்பத்திலேயே கூறியிருப்பதாவது :

"இன்று இந்தியாவில் ஹிந்துக்கள், முஸ்லிம்கள், பார்ஸிகள் முதலியவர்களெல்லோரும் 'நம் நாடு' என்றே பேசுகிருர்கள். இப்பொழுது அதை நாம் ராஜீயக் கண்ணேட்டத்துடன் கவனிக்கவில்லே. 'நம் நாடு' நம்முடையது என்று நாம் சொல்லுவதற்கு முன்னல், மொழியைப் பற்றிய வரையில். நமது மொழிகளிடம் அன்பும் மரியாதையும் நம் உள்ளங்களில் பிறந்திருக்க வேண்டியது அவசியமாகும்......"

# 24
# ஜுலுக் 'கலகம்'

ஜோகன்னஸ்பர்க்கில் நான் நிலைபெற்றுவிட்டேன் என்று நினைத்த பிறகும் எனக்கு நிலையான வாழ்க்கை ஏற்படவில்லை. இனிமேல் கொஞ்சம் அமைதியாக இருக்க முடியும் என்று நான் எண்ணிய சமயம், எதிர்பாராத ஒரு சம்பவம் நிகழ்ந்தது. நேட்டாலில் ஜுலுக் 'கலகம்' ஆரம்பமாயிற்று என்று பத்திரிகைகளில் செய்தியைப் படித்தேன். ஜுலுக்களிடம் எனக்கு எந்தவிதமான விரோதமும் இல்லை. அவர்கள் இந்தியருக்குத் தீமை செய்து விடவுமில்லை. 'கலகம்' என்று சொல்லப்பட்டதைக் குறித்து எனக்குச் சந்தேகம் இருந்தது. ஆனால், பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் உலகத்தின் நன்மைக்காகவே இருக்கிறது என்று நான் அப்பொழுது நம்பினேன். எனக்கு இருந்த உண்மையான விசுவாசம், அந்தச் சாம்ராஜ்யத்திற்கு ஒரு கெடுதலைக்கூட எண்ண முடியாதபடி என்னைத் தடுத்தது. ஆகையால், 'கலகம்' நியாயமானதுதானா, நியாயமில்லாததா என்பதுகூட என்னுடைய தீர்மானத்தைப் பாதித்துவிடவில்லை. நேட்டாலில் தொண்டர் பாதுகாப்புப் படை ஒன்று இருந்தது. அதில் அதிகம் பேரைச் சேர்த்துக் கொள்ளுவதற்கு இடமிருந்தது. 'கலக'த்தை அடக்குவதற்காக இப்படை பயன்படுத்தப்பட்டு வருகிறது என்றும் பத்திரிகைகளில் படித்தேன்.

நேட்டாலுடன் நான் நெருங்கிய தொடர்பு கொண்டவன். ஆகையால், என்னை அதன் பிரஜையாகவே கருதினேன். எனவே, அவசியமானால் இந்திய வைத்தியப் படை ஒன்றை அமைக்க நான் தயாராக இருக்கிறேன் என்று அறிவித்துக் கவர்னருக்கு எழுதினேன். என் யோசனையை ஏற்றுக்கொண்டு அவர் உடனே பதில் எழுதினார்.

இவ்வளவு சீக்கிரமே என் யோசனை ஏற்றுக்கொள்ளப்பட்டு விடும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. அதிருஷ்டவசமாக, கடிதம் எழுதுவதற்கு முன்னாலேயே, அவசியமான எல்லா ஏற்பாடுகளையும் செய்து வைத்திருந்தேன். என் யோசனை ஏற்கப்பட்டுவிடுமானால், ஜோகன்னஸ்பர்க் ஜாகையை எடுத்துவிடுவது, வேறு ஒரு சிறு வீட்டுக்குப் போலக் குடி போய்விடுவது, என் மனைவி போனிக்ஸுக்குப் போய் அங்கேயே இருப்பது என்று நான் தீர்மானித்தேன். இம் முடிவு குறித்து என் மனைவி பூரண சம்மதம் அளித்தாள். இதுபோன்ற காரியங்களில் என் தீர்மானத்திற்கு அவள் என்றாவது ஒரு சமயமேனும் குறுக்கே நின்றதாக எனக்கு ஞாபகமே இல்லை. ஆகையால், கவர்னரிடமிருந்து பதில் வந்ததுமே, வீட்டைக் காலி செய்வதற்கு வீட்டுச் சொந்தக்காரருக்கு வழக்கமான ஒரு மாத முன்னறிவிப்புக் கொடுத்

தேன். வீட்டிலிருந்த சாமான்களில் சிலவற்றைப் போனிக்ஸுக்கு அனுப்பிவிட்டு மீதியைப் போலக்கிடம் விட்டுச் சென்றேன்.

டர்பனுக்குச் சென்று, ஆள் தேவை என்று கோரிக்கை வெளியிட்டேன். பெரிய படை எதுவும் தேவைப்படவில்லை. இருபத்து நான்கு பேரைக் கொண்ட ஒரு குழு எங்கள் படை. இதில் என்னைத் தவிர மற்றும் நான்கு குஜராத்திகள் இருந்தனர். சுயேச்சையான ஒரு பட்டாணியரைத் தவிர மற்றவர்களெல்லாம் தென்னிந்தியாவைச் சேர்ந்தவர்கள்; முன்னால் ஒப்பந்தத் தொழிலாளராக இருந்தவர்கள்.

எனக்கு ஓர் அந்தஸ்தை அளிப்பதற்காகவும், வேலை எளிதாக நடப்பதற்காகவும், அப்பொழுது இருந்த சம்பிரதாயத்தை அனுசரித்தும், பிரதம வைத்திய அதிகாரி என்னைத் தாற்காலிக சார்ஜண்டு மேஜராக நியமித்தார். நான் தேர்ந்தெடுத்த மூவரை சார்ஜண்டுகளாகவும், ஒருவரைக் கார்ப்பொரலாகவும் நியமித்தார். இவற்றிற்குரிய ஆடைகளையும் அரசாங்கத்தினர் எங்களுக்கு அளித்தனர். எங்கள் படை ஆறு வாரம் சேவை செய்தது. 'கலக'ப் பிரதேசத்தை அடைந்ததும், 'கலகம்' என்ற பெயர் அதற்குச் சரி என்பதற்கான நியாயம் எதையும் நான் அங்கே காணவில்லை. கண்ணால் பார்க்கக்கூடிய வகையில் எதிர்ப்பு என்பதே இல்லை. சிறு கலவரம், பெரிய புரட்சியாக மிகைப்படுத்தப்பட்டதன் காரணம் இதுதான்: ஜூலுக்கள் மீது புது வரி விதித்தார்கள். அதைக் கொடுக்க வேண்டாம் என்று ஒரு ஜூலுத் தலைவர் தம் மக்களுக்குக் கூறினார். வரி வசூலிக்கப் போன ஒரு சார்ஜண்டை ஈட்டியால் குத்திவிட்டனராம். விஷயம் எப்படி இருந்தாலும், என் அனுதாபம் ஜூலுக்கள் பக்கமே இருந்தது. எங்களுடைய முக்கியமான வேலை, காயமடைந்த ஜூலுக்களுக்குப் பணிவிடை செய்வதே என்று, தலைமை காரியாலயத்திற்குப் போனதும் நான் அறிந்து ஆனந்தமடைந்தேன். அங்கிருந்த வைத்திய அதிகாரி எங்களை வரவேற்றார். காயமடைந்த ஜூலுக்களுக்கு வெள்ளைக்காரர்கள் மனமாரப் பணிவிடைகள் செய்வதில்லை என்றும், அவர்கள் புண்கள் அழுகிக் கொண்டுவருகின்றன என்றும், என்ன செய்வதென்றுதெரியாமல் தாம் திகைத்துக் கொண்டிருந்ததாகவும் அந்த அதிகாரி கூறினார். நாங்கள் வந்தது, ஒரு பாவமும் அறியாத ஜூலுக்களுக்குத் தெய்வ சகாயம்போல் ஆயிற்று என்று அவர் ஆனந்தம் அடைந்தார். புண்களுக்கு மருந்து வைத்துக் கட்டுவதற்கு வேண்டியவைகளையும், கிருமி ஒழிப்பு மருந்துகளையும் எங்களுக்குக்கொடுத்தார். தாற்காலிக ஆஸ்பத்திரிக்கும் எங்களை அழைத்துச் சென்றார். எங்களைப் பார்த்ததும் ஜூலுக்கள் மகிழ்ச்சியடைந்தனர். எங்களுக்கும் வெள்ளைக்காரச் சிப்பாய்கள் இருந்த இடத்திற்கும் மத்தியில் கம்பிக்கிராதி போட்டிருந்தனர். அதன் வழியே வெள்ளைக்காரச் சிப்பாய்கள் எங்களை எட்டிப்பார்த்து, ஜூலுக்களுக்குச்

சிகிச்சை செய்ய வேண்டாம் என்று எங்களைத் தூண்ட முயன்றனர். அவர்கள் சொல்வதை நாங்கள் கேட்காது போகவே ஜூலுக்களைச் சொல்லொணுத கேவலமான பாஷையில் திட்டினுர்கள்.

நாளாவட்டத்தில் இந்தச் சிப்பாய்களுடன் நான் நெருங்கிப் பழகலானேன். பிறகு எங்கள் வேலையில் தலையிடுவதை அவர்கள் நிறுத்திவிட்டனர். ராணுவத்தில் பெரிய உத்தியோகத்தில் கர்னல் ஸ்பார்க்ஸும், கர்னல் வைலியும் இருந்தனர். 1896-இல் இவர்கள் என்னை அதிகக் கடுமையாக எதிர்த்தவர்கள். இப்பொழுது என் போக்கைக் கண்டு ஆச்சரியமடைந்தனர். என்னைப் பார்ப்பதற்கென்றே வந்து, எனக்கு நன்றியும் தெரிவித்தனர். ஜெனரல் மெக்கன்ஸியையும் எனக்கு அறிமுகம் செய்து வைத்தனர். இவர்கள் எல்லோரும் ராணுவசேவையையே தொழிலாகக் கொண்டவர்கள் என்று வாசகர்கள் எண்ணிவிட வேண்டாம். கர்னல் வைலி, டர்பனில் பிரபலமான வக்கீல். கர்னல் ஸ்பார்க்ஸ், டர்பனில் ஒரு பெரிய கசாப்புக்கடையின் சொந்தக்காரர் என்ற வகையில் பிரபலமானவர். ஜெனரல் மெக்கன்ஸி, நேட்டாலில் பிரபல விவசாயி. இவர்கள் எல்லோரும் தொண்டர்களாகப் படையில் சேர்ந்தவர்கள். இதனுல், ராணுவப் பயிற்சியையும் அனுபவத்தையும் இவர்கள் பெற்றனர்.

எங்கள் பராமரிப்பில் இருந்த காயம்பட்டோர், யுத்தத்தில் காயமடைந்தவர்களல்ல. இவர்களில் ஒரு பகுதியினரைச் சந்தேகிக்கப்பட்டவர்கள் என்று சிறைப்படுத்தினர். இவர்களுக்குச் சவுக்கடி தண்டனை அளிக்கும்படி ஜெனரல் தீர்ப்பளித்தார். சவுக்கடியால் இவர்களுக்குப் பலமான புண்கள் ஏற்பட்டன. புண்களுக்கு எந்தச் சிகிச்சையுமே செய்யாது போனதால் அழுகிவிட்டன. மற்றவர்களோ, சிநேகமான ஜூலுக்கள். விரோதிகளிலிருந்து இவர்களைப் பிரித்துக் காட்டுவதற்காக இவர்களுக்குப் பட்டைகள் கொடுக்கப்பட்டிருந்தும் தவருக இவர்களைச் சிப்பாய்கள் சுட்டுவிட்டனர்.

இந்த வேலையல்லாமல், வெள்ளைக்காரச் சிப்பாய்களுக்கு மருந்து கலந்து கொடுக்கும் வேலையும் எனக்கு இருந்தது. டாக்டர் பூத்தின் சிறிய வைத்தியசாலையில் ஒரு வருடம் இதில் நான் பயிற்சி பெற்றிருந்ததால், இந்த வேலை எனக்கு எளிதாக இருந்தது. இந்த வேலையின் காரணமாக அநேக ஐரோப்பியருடன் எனக்கு நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது.

அதிக வேகமாக ஓர் இடத்திலிருந்து மற்ருேர் இடத்திற்குப் போய்க்கொண்டிருந்த ஒரு படையுடன் நாங்கள் இணைக்கப்பட்டிருந்தோம். எங்கெங்கே ஆபத்து இருப்பதாகத் தெரிந்ததோ அங்கே போகும்படி இப் படைக்கு உத்தரவிடப்பட்டது. இதில் பெரும் பகுதியினர் குதிரை வீரர்கள். எங்கள் முகாம் நகர்ந்ததும், காயமடைந்தவர்களைத் தூக்குவதற்குள்ள டோலிகளைத்

தோளில் சுமந்துகொண்டு நாங்கள் நடந்தே போக வேண்டும். இரண்டு மூன்று தடவைகளில் ஒரே நாளில் நாற்பது மைல்கள் நாங்கள் நடந்து போகவேண்டி வந்தது. ஆனால், நாங்கள் சென்ற இடங்களி லெல்லாம் எங்களுக்குத் தெய்விகத் தொண்டு இருந்ததற்காக நன்றியுள்ளவனாகிறேன். தவறுதலாகச் சுடப் பட்டுவிடும் சிநேக ஜுலுக்களை நாங்கள் டோலிகளில் தூக்கிக் கொண்டு முகாம்களுக்குப் போய்த் தாதிகளாக அவர்களுக்குப் பணிவிடை செய்துவந்தோம்.

## 25

# இதய சோதனை

ஜுலுக் 'கலக'த்தில் நான் அநேக புது அனுபவங்களைப் பெற்றேன். அது என்னை ஆழ்ந்து சிந்திக்கும்படியும் செய்தது. போரின் பயங்கரங்களைக் குறித்து ஜுலுக் 'கலக'த்தில் நான் அறிந்துகொண்டதைப் போல், போயர் கலகத்தின்போது நான் தெரிந்துகொள்ளவில்லை. இது மனித வேட்டையேயன்றிப் போர் அல்ல. இது என்னுடைய அபிப்பிராயம் மாத்திர மல்ல, நான் இதைக் குறித்துப் பேச நேர்ந்த ஆங்கிலேயர் பலரும் இதே அபிப்பிராயத்தையே கூறினார்கள். ஒரு பாவமும் அறியாத மக்கள் வாழ்ந்த குக்கிராமங்களில், சிப்பாய்களின் துப்பாக்கிகள் பட்டாசுகள்போல் வெடித்தன என்ற செய்தியை ஒவ்வொரு நாள் காலையிலும் கேட்டுக்கொண்டு, அவர்கள் மத்தியிலும் வசித்து வருவது என்பது, பெருஞ் சோதனையாகவே இருந்தது. ஆனால், இந்த வேதனையை நான் ஒருவாறு சகித்துக்கொண்டேன். ஏனெனில், முக்கியமாகக் காயமடைந்த ஜுலுக்களுக்குப் பணி விடை செய்வது என்பது மாத்திரமே எங்கள் படையின் வேலை. நாங்களும் இல்லாதிருந்தால், அந்த ஜுலுக்களை யாருமே கவனித் திருக்க மாட்டார்கள் என்பதையும் கண்டேன். ஆகவே, இந்த வேலை என் மனத்திற்குச் சமாதானமாக இருந்தது.

ஆனால், சிந்திக்க வேண்டிய வேறு விஷயங்களும் அநேகம் இருந்தன. அந் நாட்டில் மிகக் குறைவான ஜனத்தொகையைக் கொண்ட பகுதி அது. குன்றுகளிலும் பள்ளத்தாக்குகளிலும், ஒன்றுக்கொன்று தொலை தூரத்தில் 'அநாகரிகர்கள்' என்று சொல்லப்படும் ஜுலுக்களின் கிரால்கள் எனப்படும் கிராமங்கள் சிதறிக் கிடந்தன. காயமடைந்தவர்களைத் தூக்கிக்கொண்டோ, சும்மாவோ இந்த ஏகாந்தமான பகுதிகளில் நடந்து போகும் போதே அடிக்கடி தீவிரமான சிந்தனையில் ஆழ்ந்துவிடுவேன்.

பிரம்மச்சரியத்தைக் குறித்தும்,அதன் விளைவுகளைப்பற்றியும் யோசித்தேன். அது சம்பந்தமான என் கருத்துக்கள் ஆழ வேர் ஊன்றின. எனது சக ஊழியர்களுடன் அதைக் குறித்து விவா தித்தேன். ஆன்ம ஞானத்தை அடைவதற்குப் பிரம்மச்சரியம் எவ்வளவு இன்றியமையாதது என்பதை அப்பொழுது நான்

அறிந்துகொண்டிருக்கவில்லை. ஆனால், தனது முழு ஆன்ம சக்தியுடன் மனித வர்க்கத்திற்குச் சேவை செய்ய வேண்டும் என்று விரும்புகிறவர், பிரம்மச்சரியம் இல்லாமல் அதைச் செய்ய முடியாது என்பதை நான் தெளிவாகக் கண்டேன். பிரம்மச்சரியத்தை அனுசரித்தால், நான் செய்துவருவதைப் போன்ற தொண்டுக்கு மேலும் மேலும் சந்தர்ப்பங்கள் ஏற்படும் என்பதையும், குடும்ப வாழ்க்கையின் இன்பத்திலும், பிள்ளைகளைப் பெறுவதிலும், அவற்றை வளர்ப்பதிலுமே நான் ஈடுபட்டிருந்தேனாயின் என் வேலைக்கு நான் தகுதியுடையவனாகமாட்டேன் என்பதையும் உணர்ந்தேன்.

சுருங்கச் சொன்னால், உடலை நாடுவது அல்லது ஆன்மாவை நாடுவது இந்த இரண்டில் ஏதாவது ஒன்றிற்காகவே நாம் வாழ முடியும். உதாரணமாக, இச்சமயம் என் மனைவி பிள்ளைப் பேற்றை எதிர்பார்க்கும் நிலையில் இருந்திருப்பாளாயின், இப்போரின் சேவையில் நான் குதித்திருக்க முடியாது. பிரம்மச்சரியத்தை அனுசரிக்காத குடும்ப சேவை, சமூக சேவைக்குப் பொருந்தாததாகவே இருக்கும். பிரம்மச்சரியத்தை அனுசரித்தால் அது முற்றும் பொருந்துவதாக இருக்கும்.

இவ்வாறு சிந்தித்ததனால் முடிவான விரதம் கொண்டுவிட வேண்டும் என்று ஒருவகையில் அவசரப்பட்டுக் கொண்டிருந்தேன். இவ்விரதத்தை மேற்கொள்ளப் போகிறோம் என்ற எண்ணமே ஒரு வகையான ஆனந்தத்தை உண்டாக்கியது. கற்பனை சக்தியும் சுதந்திரமாக வேலை செய்ய ஆரம்பித்தது. சேவை செய்வதற்கு எல்லையற்ற துறைகள் தோன்றலாயின.

இவ்வாறு கடுமையான உடலுழைப்பின் நடுவிலும், மன உழைப்பின் நடுவிலும் இருந்த சமயத்தில், 'கலக'த்தை அடக்கும் வேலை அநேகமாக முடிந்துவிட்டது என்றும், நாங்கள் சீக்கிரத்தில் திருப்பி அனுப்பப்பட்டுவிடுவோம் என்றும் ஒரு செய்தி வந்தது. இரண்டொரு நாட்களுக்குப் பிறகு நாங்கள் விடுவிக்கப்பட்டோம். பிறகு சில தினங்களில் எங்கள் வீடுகளுக்குத் திரும்பினோம்.

கொஞ்ச நாட்கள் கழித்துக் கவர்னரிடமிருந்து எனக்கு வந்த கடிதத்தில், எங்கள் வைத்தியப் படையின் சேவைக்குப் பிரத்தியேகமாக நன்றி கூறியிருந்தார்.

போனிக்ஸ் போய்ச் சேர்ந்ததும் பிரம்மச்சரிய விஷயத்தைக் குறித்து, சகன்லால், மகன்லால், வெஸ்ட் முதலியவர்களிடம் பேசினேன். இந்த யோசனை அவர்களுக்கும் பிடித்திருந்தது. இவ்விரதத்தை மேற்கொள்ள வேண்டிய தன் அவசியத்தை ஒப்புக்கொண்டார்கள். ஆனால், அதிலிருக்கும் கஷ்டங்களையும் எடுத்துக் கூறினர். சிலர், இதை அனுசரிக்கத் தைரியமாக முன்வந்தார்கள். இதில் சிலர் வெற்றி பெற்றார்கள் என்பதையும் அறிவேன்.

நானும் துணிந்து இறங்கினேன். வாழ்நாள் முழுவதும் பிரம்மச்சரியத்தை அனுசரிப்பது என்று விரதம் பூண்டேன். ஆனால், நான் மேற்கொண்ட இக்காரியம் எவ்வளவு மகத்தானது, கடுமையானது என்பதை அப்பொழுது நான் உணரவில்லை. அதிலுள்ள கஷ்டங்கள் இன்றுங்கூட என் எதிரே மிரட்டிக் கொண்டிருக்கின்றன. இந்த விரதத்தின் முக்கியத்துவமும் நாளுக்கு நாள் எனக்கு நன்ருகப் புலனுகிக்கொண்டு வருகிறது. பிரம்மச்சரியம் இல்லாத வாழ்க்கை, சாரமற்றதாகவும் மிருகத் தனமாகவும் எனக்குத் தோன்றுகிறது. மிருகத்திற்கு இயற்கையிலேயே புலனடக்கம் என்பது இன்னதென்பது தெரியாது. இதற்குரிய சக்தி இருப்பதனுல், புலனடக்கத்தை அனுசரிக்கும் வரையிலும், மனிதன் மனிதனுக இருக்கிருன். பிரம்மச்சரியத்தின் பெருமையைக் குறித்து நமது மத நூல்களில் புகழ்ந்து கூறப்பட்டிருப்பதெல்லாம் மிகைப்படுத்திக் கூறப்பட்டிருப்பதாக முன்பெல்லாம் நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனல், பிரம்மச்சரியத்தைக் குறித்து நாளுக்கு நாள் நான் தெளிவடைந்து வருவதால், சமய நூல்கள் கூறுவதெல்லாம் சரியானவையே என்பதையும், அனுபவத்தில் கண்டு கூறப்பட்ட உண்மைகள் என்பதையும் இன்று காண்கிறேன்.

எவ்வளவோ அற்புதமான சக்தியையுடையதான பிரம்மச்சரியம், எளிதான காரியமும் அன்று என்பதையும் கண்டேன். அது நிச்சயமாக உடலைப்பற்றிய விஷயம் மாத்திரம் அல்ல. உடலின் அடக்கத்தோடு அது ஆரம்பமாகிறது. ஆனல், அதோடு அது முடிந்துவிடுவதில்லை. பூரணமான பிரம்மச்சரியம், அசுத்தமான எண்ணத்திற்கே இடம் தராது. உண்மையான பிரம்மச்சாரி, சரீர இச்சைகளைப் பூர்த்தி செய்துகொள்ளக் கனவிலும் எண்ணமாட்டான். அந்த நிலையை அவன் எய்திவிட்டாலன்றிப் பிரம்மச்சரியத்தை அடைவதற்கு அவன் வெகு தூரம் கடக்கவேண்டியிருக்கும்.

எனக்கோ, சரீர அளவில் பிரம்மச்சரியத்தை அனுசரிப்பதிலுங்கூடக் கஷ்டங்கள் அதிகம் இருந்தன. அநேகமாக அபாய எல்லையைத் தாண்டிவிட்டேன் என்று நான் இன்று சொல்லலாம். ஆயினும், இதில் மிகவும் அத்தியாவசியமான—சிந்தையை வசப்படுத்துவதில்-நான் இன்னும் முழு வெற்றியையும் அடைந்துவிடவில்லை. இதில் உறுதியோ, முயற்சியோ இல்லாமலில்லை. ஆனல், விரும்பத்தகாத எண்ணங்கள் எங்கிருந்து எழுந்து வஞ்சகமாகப் படையெடுக்கின்றன என்பதை அறிந்து கொள்ளுவது இன்னும் எனக்கு ஒரு பிரச்னையாகவே இருந்து வருகிறது. விரும்பத்தகாத எண்ணங்களைத் தடுத்து மனக் கதவைப் பூட்டிவிடுவதற்கு ஒரு சாவி இருக்கிறது என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. ஆனல், ஒவ்வொருவரும் அதை அவரவரே தேடிக் கண்டுபிடித்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. மகான்களும் முனிவர்களும் தங்கள் அனுபவங்களை நமக்குச் சொல்லிப் போயிருக்கிருர்கள். ஆனல், எல்லோருக்கும் ஏற்ற

தாகவும், தவருமல் பலிக்கக்கூடியதாகவுமுள்ள மருந்து எதையும் அவர்கள் குறிப்பிடவில்லை. பரிபூரணத்துவம் அல்லது தவறே இழைக்காமலிருக்கும் சக்தி, கடவுளின் அருளினல் மாத்திரமே கைகூடும். அதனுலேயே கடவுளை நாடிய பக்தர்களும் ஞானிகளும், தங்களுடைய தவ வலிமையினுலும் தூய்மையினுலும் சக்திபெற்ற ராமநாமம் போன்ற மந்திரங்களை நமக்கு அளித்திருக்கிருர்கள். அவன் அருளை நாடி அவனே கதி என்று பரிபூரணமாக அடைக்கலம் புகுந்துவிட்டா லன்றிச் சிந்தையை முற்றிலும் அடக்கிவிடுவது என்பது சாத்தியமே இல்லை. சிறந்த சமய நூல் ஒவ்வொன்றும் இதையே போதிக்கிறது. பூரணமான பிரம்மச்சரியத்தை அடைந்துவிடுவதற்காக நான் பாடுபடும் ஒவ்வொரு கணத்திலும் இந்த உண்மையை உணர்ந்து வருகிறேன்.

அந்த முயற்சி, போராட்டம் ஆகியவற்றின் சரித்திரத்தில் ஒரு பகுதியை இனி வரும் அத்தியாயங்களில் கூறுகிறேன். இம் முயற்சியை எப்படித் தொடங்கினேன் என்பதை மாத்திரம் சுட்டிக் காட்டி இந்த அத்தியாயத்தை முடிக்கிறேன். உற்சாகத்தின் ஆரம்ப வேகத்தில் பிரம்மச்சரியத்தை அனுசரிப்பது வெகு எளிதானது என்பதைக் கண்டேன். என் வாழ்க்கை முறையில் நான் செய்த முதல் மாறுதல், என் மனைவியுடன் ஒரே படுக்கையில் படுப்பதையும், அவளுடன் தனிமையை நாடுவதையும் விட்டுவிட்டதாகும்.

இவ்வாறு *1900*-ஆம் ஆண்டிலிருந்து விரும்பியும் விரும்பாமலும் நான் அனுசரித்துவந்த பிரம்மச்சரியத்திற்கு, *1906*-ஆம் ஆண்டு மத்தியிலிருந்து ஒரு விரதத்தின் மூலம் முத்திரையிட்டேன்.

## 26

## சத்தியாக்கிரகத்தின் பிறப்பு

என்னளவில் நான் மேற்கொண்ட பிரம்மச்சரியமாகிய ஆன்மத் தூய்மை, சத்தியாக்கிரகத்திற்குப் பூர்வாங்கமானதாகும்படி செய்வதற்காக ஜோகன்னஸ்பர்க்கில் சம்பவங்கள் தாமாகவே உருவாகிக்கொண்டு வந்தன. பிரம்மச்சரிய விரதத்தில் முடிந்த என் வாழ்க்கையின் முக்கியமான சம்பவங்கள் எல்லாமே அந்த ரங்கத்தில் என்னைச் சத்தியாக்கிரகத்திற்குத் தயார் செய்து வந்தன என்பதை இப்பொழுது நான் காண முடிகிறது. 'சத்தியாக்கிரகம்' என்ற சொல் கண்டுபிடிக்கப்படுவதற்கு முன்னுலேயே அத் தத்துவம் தோன்றிவிட்டது. அது பிறந்தபோது, அதை இன்னதென்று சொல்ல எனக்கே தெரியவில்லை. குஜராத்தியிலுங்கூட அதைக் கூற ஆங்கிலச் சொற்ருெடரான 'பாஸிவ் ரெஸிஸ்ட்டன்ஸ் (Passive Resistance—சாத்விக எதிர்ப்பு)' என்பதையே உபயோகித்தோம். ஐரோப்பியர்களின் கூட்டமொன்றுக்குச் சென்றிருந்தபோது, 'சாத்விக எதிர்ப்பு'

என்பதற்கு மிகக் குறுகிய பொருளே உண்டு என்பதைக் கண்டேன். மேலும் அது பலவீனர்களின் ஆயுதமாகவும் கருதப் பட்டது. அதில் பகைமைக்கு இடம் உண்டு என்பதையும், முடிவில் அதுவே பலாத்காரமாக வளர்ந்துவிடக்கூடும் என்பதையும் அறிந்தேன். இந்தக் கருத்துக்களை யெல்லாம் நான் மறுத்துக் கூறி, இந்தியரின் இயக்கத்தினுடைய உண்மையான தன்மையை விளக்கவேண்டியிருந்தது. இப் போராட்டத்தைக் குறிப்பிடுவதற்கு ஒரு புதிய சொல்லை இந்தியர் கண்டுபிடித்தாக வேண்டும் என்பது தெளிவாயிற்று.

நான் எவ்வளவோ முயன்று பார்த்தும் ஒரு புதிய பெயரைக் கண்டுபிடிக்க என்னால் முடியவில்லை. ஆகவே, இது சம்பந்தமாகச் சிறந்த யோசனையைக் கூறுபவருக்கு ஒரு சிறு பரிசு அளிப்பதாக 'இந்தியன் ஒப்பீனியன்' பத்திரிகை மூலம் அறிவித்தேன். இதன் பயனாக மகன்லால் காந்தி, 'சதாக்கிரகம்' (சத்—உண்மை ; ஆக்கிரகம்—உறுதி) என்ற சொல்லைச் சிருஷ்டித்துப் பரிசைப் பெற்றார். ஆனால், அது இன்னும் தெளிவானதாக இருக்கட்டும் என்பதற்காக அதைச் 'சத்தியாக்கிரகம்' என்று மாற்றினேன். அதிலிருந்து அப்போராட்டத்திற்குக் குஜராத்தியில் அச்சொல் வழங்கலாயிற்று.

இந்தப் போராட்டத்தின் சரித்திரமே, என்னுடைய தென்னாப்பிரிக்க வாழ்க்கையின் சரித்திரமும்-முக்கியமாக அந்த உபகண்டத்தில் நான் நடத்திய சத்திய சோதனையின் சரித்திரமும்-ஆகும். இந்தச் சரித்திரத்தின் பெரும் பகுதியை எராவ்டாச் சிறையில் இருக்கும்போது எழுதினேன். நான் விடுதலையான பிறகு மீதத்தைப் பூர்த்தி செய்தேன். அது 'நவ ஜீவ'னில் பிரசுரமாகிப் பின்னர் புத்தக ரூபமாக வெளிவந்தது, 'கரண்ட் தாட்' பத்திரிகைக்காக ஸ்ரீ வால்ஜி கோவிந்தஜி தேசாய், அதை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வருகிறார். சீக்கிரத்தில் அதைப் புத்தக ரூபத்தில் வெளியிடுவதற்காக ஏற்பாடு செய்துகொண்டிருக்கிறேன். தென்னாப்பிரிக்காவில் நான் செய்த மிகவும் முக்கியமான சோதனைகளை அறிய விரும்புவோருக்கு உதவியாக இருக்கட்டும் என்பதற்காகவே இந்த ஏற்பாடு. இன்னும் படிக்காதவர்கள் நான் எழுதிய 'தென்னாப்பிரிக்கச் சத்தியாக்கிரக'த்தைப் படிக்கும்படி சிபார்சு செய்வேன். * அதில் எழுதியிருப்பதை இங்கே நான் திரும்பச் சொல்லப்போவதில்லை. ஆனால், பின்வரும் சில அத்தியாயங்களில் அந்தச் சரித்திரத்தில் கூறப்படாத என் வாழ்க்கையின் சொந்தச் சம்பவங்கள் சிலவற்றை மாத்திரமே கூறுவேன். இவற்றைச் சொல்லி முடித்ததும், இந்தியாவில் நான் செய்த சில சோதனைகளைக் குறித்து உடனே கூற ஆரம்பிப்பேன். ஆகையால் இந்தச் சோதனையை வரிசைக் கிரமத்தில் கவனிக்க விரும்புகிறவர்கள், தென்னாப்பிரிக்கச் சத்தியாக்கிரக சரித்திரத்தை முன்னால் வைத்துக்கொள்ளுவது நல்லது.

---

* மகாத்மா எழுதிய "தென்னாப்பிரிக்கச் சத்தியாக்கிரகம்" என்ற நூல், "மகாத்மா காந்தி நூல்கள்—முதல் தொகுப்""பில் அடங்கியிருக்கிறது.

# 27

# மேலும் உணவுப் பரிசோதனைகள்

மனம், வாக்கு, செயல் ஆகிய மூன்றிலும் பிரம்மச்சரியத்தை அனுசரிக்க வேண்டும் என்பதில் நான் ஆர்வத்துடனிருந்தேன். அதேபோல் சத்தியாக்கிரகப் போராட்டத்திற்கே அதிக அளவு என் காலத்தைச் செலவிடவும், தூய்மையை வளர்த்துக்கொண்டு அதற்கு என்னைத் தகுதியுடையவனாக்கிக் கொள்ளவும் ஆர்வம் கொண்டிருந்தேன். ஆகையால், என் உணவு சம்பந்தமாக மேலும் பல மாறுதல்களைச் செய்து கொண்டு, எனக்கு நானே அதிகக் கட்டுப்பாடுகளையும் விதித்துக்கொள்ள வேண்டியதாயிற்று. முன்னால் செய்த மாறுதல்களெல்லாம் பெரும்பாலும் தேகாரோக்கியத்தை முன்னிட்டுச் செய்தவை. ஆனால், புதிய சோதனைகளோ, சமய நோக்கத்தில் செய்தவை.

உண்ணாவிரதமும், ஆகாரக் கட்டுப்பாடும் என் வாழ்க்கையில் இப்பொழுது முக்கியமானவைகளாயின. நாவின் சுவையில் அவாவுடையவனிடமே பெரும்பாலும் காமக் குரோதங்கள் இயல்பாகக் குடிகொள்ளும். என் விஷயத்திலும் அவ்வாறே இருந்தது. காம இச்சையையும் நாவின் ருசியையும் அடக்க முயன்றதில் நான் எத்தனையோ கஷ்டங்களை அனுபவிக்கவேண்டியிருந்தது. அவைகளை முற்றும் அடக்கிவிட்டேன் என்று நான் இன்னும் சொல்லிக்கொள்ளுவதற்கில்லை. என்னைப் பெருந்தீனிக்காரனாகக் கருதிவந்தேன். எனது கட்டுத்திட்டம் என்று நண்பர்கள் எதை நினைத்தார்களோ அது கட்டுத்திட்டமாக எனக்கு என்றும் தோன்றவில்லை. நான் இன்று கொண்டிருக்கும் அளவுக்குக் கட்டுத்திட்டங்களை வளர்த்துக்கொள்ளத் தவறியிருப்பேனாயின், மிருகங்களிலும் இழிந்த நிலைக்கு நான் தாழ்ந்து போய் வெகு காலத்திற்கு முன்பே நாசமடைந்திருப்பேன். என்றாலும், என்னுடைய குறைபாடுகளைப் போதிய அளவுக்கு நான் அறிந்திருந்ததால், அவைகளைப் போக்கிக்கொண்டுவிடப் பெரும் முயற்சிகளை நான் செய்தேன். இந்த முயற்சிகளின் பலனாக இவ்வளவு காலமும் இவ்வுடலுடன் காலந்தள்ளி வருவதோடு அதைக் கொண்டு என்னால் இயன்ற பணியையும் செய்து வருகிறேன்.

என் குறைகளை நான் அறிந்திருந்ததோடு மனத்துக்கிசைந்த சகாக்களின் தொடர்பும் எதிர்பாராத விதமாக ஏற்பட்டது. ஏகாதசி தினத்தன்று பழங்கள் மாத்திரமே சாப்பிடுவது அல்லது பட்டினி விரதம் இருப்பது என்று ஆரம்பித்தேன். ஜன்மாஷ்டமி முதலிய விரத தினங்களையும் அனுஷ்டிக்கத் தொடங்கினேன்.

முதலில் பழ ஆகாரத்துடன் ஆரம்பித்தேன். ஆனால், நாவின் சுவையடக்கத்தைப் பொறுத்தவரையில் பழ ஆகாரத்திற்கும்

தானிய ஆகாரத்திற்கும் எந்தவிதமான வித்தியாசமும் எனக்குத் தோன்றவில்லை. தானிய ஆகாரத்தைப் போலவே பழ ஆகாரத்திலும் நாவின் சுவை இன்பத்திற்கு இடமுண்டு என்பதைக் கண்டேன். பழ ஆகாரத்தில் பழக்கப்பட்டுவிட்டால் அதில் ருசி இன்பம் இன்னும் அதிகமாகிவிடவும் கூடும். ஆகையால், பட்டினி இருப்பது அல்லது விடுமுறை நாட்களில் ஒரே வேளைச் சாப்பாட்டுடன் இருப்பது என்பதற்கு அதிக முக்கியத்துவம் அளித்தேன். பிராயச்சித்தம் செய்துகொள்ளுவது போன்ற சந்தர்ப்பம் வந்தால், அதையும் பட்டினி கிடப்பதற்கு வாய்ப்பாகப் பயன்படுத்திக்கொண்டேன்.

உபவாசத்தினால் உடலிலிருந்து கழிவுப்பொருள்கள் நன்றாக வெளியேறிவிடுவதால் சாப்பாடு அதிக ருசியாக இருந்தது; நன்றாகப் பசி எடுத்தது. பட்டினியைப் புலன் அடக்கத்துக்கு மட்டுமன்றிப் புலன் நுகர்ச்சிக்கும் சக்தி வாய்ந்த சாதனமாகப் பயன்படுத்தலாம் என்பது அப்பொழுது எனக்குத் தெரிந்தது. நான் கண்ட இந்தத் திடுக்கிடும் உண்மைக்கு, பின்னால் எனக்கு ஏற்பட்ட இதே போன்ற அனுபவங்களையும் மற்றவர்களின் அனுபவங்களையும் சான்றுகளாகக் காட்டலாம். என் உடல் நிலையை அபிவிருத்தி செய்யவும், அதற்குப் பயிற்சி அளிக்கவும் விரும்பினேன். ஆனால், இப்பொழுது எனது முக்கியமான நோக்கம், கட்டுத் திட்டங்களும் சுவையடக்கமுமே யாகையால், முதலில் ஓர் ஆகாரத்தையும், பிறகு மற்றோர் ஆகாரத்தையும் தேர்ந்தெடுத்துச் சோதித்தேன். அதே சமயத்தில் அளவையும் குறைத்தேன். ஆனால், சுவை இன்பம் மாத்திரம் எனக்கு முன்பு இருந்ததைப் போன்றே இருந்தது. ஒன்றை விட்டுவிட்டு மற்றொன்றைச் சாப்பிட ஆரம்பித்தபோது, முன்னால் சாப்பிட்டதைவிடப் பின்னால் சாப்பிட்டது புதிதாகவும் அதிக ருசியுள்ளதாகவும் எனக்குத் தோன்றிற்று.

இச் சோதனைகளைச் செய்வதில் எனக்குப் பல தோழர்களும் இருந்தனர். இவர்களில் முக்கியமானவர் ஹெர்மான் கால்லென்பாக். இந்த நண்பரைக் குறித்துத் தென்னாப்பிரிக்கச் சத்தியாக்கிரக சரித்திரத்தில் முன்பே எழுதியிருக்கிறேன். ஆகையால், அதைப்பற்றி நான் இங்கே திரும்பச் சொல்லப் போவதில்லை. பட்டினியானாலும் சரி, உணவு மாற்றமானாலும் சரி, கால்லென்பாக் எப்பொழுதும் என்னுடன் இருப்பார்.* சத்தியாக்கிரகப்

---

* சுவாமி ஆனந்தர், 1932–இல் சிறையிலிருந்த மகாத்மாவுக்கு எழுதிய கடிதத்தில், தாம் காந்திஜியுடனிருக்கும் பாக்கியம் இல்லாததைக் குறித்து வருந்தியிருந்தார். அதற்கு மகாத்மா எழுதிய பதிலில், கால்லென்பாக் எவ்விதம் எப்பொழுதும் தம்முடனேயே நெருங்கி இருந்துவர விரும்பியும் முடியாது போயிற்று என்பதைக் குறிப்பிட்டார். 1932 ஜூலை 1–ஆம் தேதி மகாத்மா எழுதிய கடிதத்தில் கூறியதாவது :

''என்னுடன் நெருங்கியிருந்தும் தூரத்தில் இருப்பதுபோன்ற உணர்ச்சியை என் சகோதர ஊழியர்கள் பலர் அனுபவித்திருக்கின்றனர். அத்தகைய நிலைமையிலிருந்து என்ன கிடைக்குமோ அதை நீங்கள் கிரகித்துக் கொள்ளவேண்டும். கால்லென்பாக் முதல் முதலில் என்னுடன் தொடர்பு கொண்டபோது, என்னைத் தினமும்

போராட்டம் உச்ச நிலையில் இருந்தபோது, அவருடைய இடத்தில் நான் அவருடன் வசித்துவந்தேன். எங்கள் உணவு மாறுதல்களைக் குறித்து விவாதிப்போம். பழைய சாப்பாட்டை விடப் புதிய சாப்பாட்டில் அதிக இன்பத்தை அனுபவிப்போம். இப்படிப்பட்ட பேச்சுக்கள் அந்த நாளில் அதிக இன்பமானவைகளாக இருந்தன. அவை தகாத பேச்சுக்களாக எனக்குத் தோன்றவே இல்லை. ஆனல், உணவின் சுவையில் கவனம் செலுத்துவது தவறு என்பதை அனுபவம் எனக்குப் போதித்தது. நாவின் சுவையைத் திருப்தி செய்வதற்காகச் சாப்பிடக்கூடாது; உடலை வைத்திருப்பதற்கு என்று மாத்திரமே சாப்பிடவேண்டும். உணர்ச்சி தரும் ஒவ்வோர் உறுப்பும், உடலுக்கும் உடலின் மூலம் ஆன்மாவுக்கும் ஊழியம் செய்யும்போது, அதனதன் இன்ப நுகர்ச்சி மறைந்து போகிறது. அப்பொழுதுதான் அதற்கென்று இயற்கை வகுத்திருக்கும் கடமையை அது செய்ய ஆரம்பிக்கிறது.

இயற்கையோடு இசைந்த இந்த நிலையை அடைவதற்கு எத்தனைதான் பரிசோதனைகள் நடத்தினாலும் போதுமானவையாக மாட்டா; எந்தத் தியாகமும் இதற்கு அதிகமாகாது. ஆனல், துரதிருஷ்டவசமான இக்காலத்தின் போக்கோ இதற்கு எதிரிடையான திக்கில் பலமாக ஓடிக்கொண் டிருக்கிறது. அழியும் உடலை அலங்கரிப்பதற்காகவும், மிகச் சொற்ப காலம் அது நீடித்திருப்பதற்கு முயலுவதற்கும், ஏராளமான மற்ற உயிர்களைப் பலியிட நாம் வெட்கப்படுவதில்லை. இதன் பலனாக நம்மையே உடலோடும், ஆன்மாவோடும் மாய்த்துக்கொள்ளுகிறோம். பழைய நோய் ஒன்றைப் போக்கிக்கொள்ள முயன்று, நூற்றுக்கணக்கான புதிய நோய்களுக்கு இடந் தருகிறோம். புலன் இன்பங்களை அனுபவிக்க முயன்று முடிவில் இன்பானுபவத்திற்கான நமது சக்தியையும் இழந்துவிடுகிறோம். இவை யாவும் நம் கண் முன்னலேயே நடந்துகொண் டிருக்கின்றன. ஆனல், இவற்றைப் பார்க்காமல் இருப்பவர்களைப் போன்ற குருடர்கள் வேறு யாரும் இல்லை.

உணவுச் சோதனைகளின் நோக்கத்தையும், அவற்றிற்குக் காரணமாக இருந்த கருத்துக் கோவையையும் இதுவரை எடுத்துக் காட்டினேன். இனி உணவுச் சோதனைகளைக் குறித்துக் கொஞ்சம் விவரமாகவே கூற நினைக்கிறேன்.

---

பார்த்து, என்னைப் பார்க்க விரும்பும்போதெல்லாம் எவ்வளவு நேரம் என்னோடு பேச முடியுமோ அவ்வளவு நேரமும் பேசவேண்டும் என்று ஆசைப்பட்டார். நாங்கள் பிறகு நெருங்கிப் பழகி, ஒரே இடத்தில் வசிக்க ஆரம்பித்த பிறகு, ஒரே இடத்தில் படுத்து, ஒரே இடத்தில் சாப்பிட்டோமேயன்றி ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ள நேரமே இல்லை. காரியாலயத்திலிருந்து நான் வீட்டிற்கு வந்தால், என்னுடன் பேச வேறு யாராவது காத்திருப்பார்கள். இது கால்லென்பாக்குக்கு தினசரிப் புகாராகிவிட்டது. என்னுடன் நெருங்கியிருப்பவர்கள் தூரத்தில் வசிப்பவர்களாகிவிடுகின்றனர் என்ற முடிவுக்கு வந்துவிட்டார். இம்முடிவு சரியானது என்றேன். என்னை அவர் நன்கு அறிந்திருப்பதால் எவ்வளவு நெருங்கியவரானர் என்றேன். ஆகையால் இன்னும் என்னுடன் நெருங்கிப் பழகவேண்டியவர்களாக இருப்பவர்களுக்கு இல்லாமல் என்னுடைய நேரத்தை அதிகமாக எடுத்துக் கொள்ளுவதற்கு அவருக்கு உரிமையில்லை, கொடுப்பதற்கு எனக்கும் உரிமையில்லை என்றும் சொன்னேன்........"

# 28

# கஸ்தூரிபாயின் தீரம்

என் மனைவி தனது வாழ்க்கையில் மும்முறை கடுமையான நோய்வாய்ப்பட்டு மரணத்திலிருந்து தப்பிப் பிழைத்தாள். குடும்ப வைத்திய முறைகளினாலேயே அவள் குணமடைந்தாள். சத்தியாக்கிரகம் நடந்துகொண் டிருந்தபோதோ அல்லது ஆரம்பமாவதற்கிருந்த சமயத்திலோ அவள் முதல் முறை கடுமையாக நோயுற்றாள். அவளுக்கு அடிக்கடி ரத்த நஷ்டம் ஏற்பட்டு வந்தது. ரண சிகிச்சை செய்வது அவசியம் என்று ஒரு வைத்திய நண்பர் ஆலோசனை கூறினார். முதலில் கொஞ்சம் தயங்கினாளெனினும் பிறகு சம்மதித்தாள். அவள் அதிகப் பலவீனமாக இருந்ததால் மயக்க மருந்து கொடுக்காமல் டாக்டர் ரண சிகிச்சை செய்ய வேண்டியிருந்தது. சிகிச்சை வெற்றிகரமான தாயிற்று. ஆனால், அவள் அதிக நோவை அனுபவிக்க நேர்ந்தது. நானே அதிசயிக்கத்தக்க தீரத்துடன் அதை அவள் சகித்துக்கொண்டாள். டாக்டரும், அவருக்குத் தாதியாக இருந்து பணிவிடை செய்த அவருடைய மனைவியும் அதிகக் கவனத்துடன் அவளைப் பார்த்துக்கொண்டார்கள். இது டர்பனில் நடந்தது. பிறகு நான் ஜோகன்னஸ்பர்க் போக டாக்டர் அனுமதித்தார். அவளைக் குறித்துக் கவலைப்பட வேண்டாம் என்றும் சொன்னார்.

ஆனால், அவளுடைய உடல்நிலை அதிக மோசமாகிவிட்டது என்று சில தினங்களுக்கெல்லாம் எனக்குக் கடிதம் வந்தது. படுக்கையில் உட்காருவதற்குக்கூட அவளுக்குப் பலமில்லையென்றும், ஒரு சமயம் பிரக்ஞை இல்லாமல் இருந்தாள் என்றும் அறிந்தேன். என்னுடைய சம்மதமில்லாமல் அவளுக்கு மதுவாவது, மாமிசமாவது கொடுக்கக் கூடாது என்பது டாக்டருக்குத் தெரியும். எனவே, ஜோகன்னஸ்பர்க்கில் இருக்கும் என்னுடன் டெலிபோனில் பேசி, அவளுக்கு மாட்டு மாமிச சூப் கொடுக்க அவர் அனுமதி கேட்டார். இதற்கு நான் அனுமதி கொடுக்க முடியாது என்று அவருக்குப் பதில் சொல்லிவிட்டேன். ஆயினும், இது விஷயமாக அபிப்பிராயம் கூறக்கூடிய நிலையில் அவள் இருந்தால், அவளைக் கலந்து ஆலோசிக்கலாம் என்றும், அவள் இஷ்டம்போல் செய்து கொள்ளலாம் என்றும் சொன்னேன். ஆனால், டாக்டரோ, "இவ் விஷயத்தில் நோயாளியின் விருப்பத்தைக் கேட்க நான் மறுக்கிறேன். நீங்கள்தான் இதில் அபிப்பிராயம் கூற வேண்டும். நான் கொடுக்க விரும்பும் ஆகாரத்தைக் கொடுக்கும் சுதந்திரத்தை எனக்கு அளிக்க நீங்கள் மறுப்பதானால், உங்கள் மனைவியின் உயிருக்கு நான் பொறுப்பாளியாக மாட்டேன்" என்றார்.

அன்றே ரெயிலில் டர்பனுக்குப் புறப்பட்டேன். அங்கே போனதும் டாக்டரைச் சந்தித்தேன். அவர் நிதானத்துடன்

சமாசாரத்தை என்னிடம் கூறினர். "தங்களுடன் டெலிபோனில் பேசுவதற்கு முன்னுலேயே ஸ்ரீமதி காந்திக்கு மாட்டு மாமிசசூப் கொடுத்துவிட்டேன்" என்ருர்.

"டாக்டர், நீங்கள் செய்தது பெரும் மோசம்" என்றேன்.

"ஒரு நோயாளிக்கு மருந்தோ, ஆகாரமோ இன்னது கொடுப்பதென முடிவு செய்வதில் மோசம் என்பதற்கே இடமில்லை. நோயுற்றிருப்போரையோ, அவர்கள் உறவினரையோ இவ்விதம் ஏமாற்றி விடுவதன் மூலம் நோயாளியின் உயிரைக் காப்பாற்ற முடிவதாயின், டாக்டர்களாகிய நாங்கள் ஏமாற்றுவதையே புண்ணியமாகக் கருதுகிருேம்" என்ருர், டாக்டர்.

இதைக் கேட்டதும் நான் பெரிதும் மனவேதனை அடைந்தேன். என்ருலும், அமைதியுடன் இருந்தேன். டாக்டர் நல்லவர்; என் சொந்த நண்பர். அவருக்கும், அவருடைய மனைவிக்கும் நான் எவ்வளவோ கடமைப் பட்டிருக்கிறேன். என்ருலும், அவருடைய வைத்திய தருமத்தைச் சகித்துக்கொள்ள நான் தயாராயில்லை.

"டாக்டர், இப்பொழுது என்ன செய்வதாக உத்தேசம் என்பதைச் சொல்லுங்கள். என் மனைவி சாப்பிட விரும்பினுலன்றி, என் மனைவிக்கு ஆட்டிறைச்சி அல்லது மாட்டிறைச்சி கொடுப்பதை நான் அனுமதிக்கவே மாட்டேன். இதனுல், அவள் இறந்துவிட நேர்ந்தாலும் சரிதான்" என்றேன்.

"உங்களுடைய தத்துவத்தை நீங்கள் தாராளமாக வைத்துக் கொள்ளுங்கள். உங்களுடைய மனைவி என்னிடம் சிகிச்சையில் இருக்கும் வரையில் நான் விரும்பும் எதையும் அவருக்குக் கொடுக்கும் உரிமை எனக்கு இருக்க வேண்டும். இது உங்களுக்குப் பிடிக்கவில்லை யானுல், அவரை அழைத்துக்கொண்டு போய்விடும்படியே வருத்தத்துடன் நான் கூறவேண்டி யிருக்கும். என் வீட்டில் அவர் சாக நான் பார்த்துக்கொண்டிருக்க முடியாது" என்ருர், டாக்டர்.

"அப்படியானுல், அவளை உடனே அழைத்துக்கொண்டு போய்விட வேண்டும் என்கிறீர்களா?"

"அவரை அழைத்துக்கொண்டு போய்விட வேண்டும் என்று நான் எப்பொழுது சொன்னேன்? இதில் எனக்குப் பூரண உரிமையை நீங்கள் கொடுக்க வேண்டும் என்றே கூறுகிறேன். அப்படிக் கொடுத்தால் நானும் என் மனைவியும் அவருக்காக எங்களாலானதை யெல்லாம் செய்யத் தயாராக இருக்கிருேம். அவரைப் பற்றி நீங்களும் கொஞ்சங்கூடக் கவலைப்படாமல் திரும்பிப் போகலாம். இந்தச் சிறு விஷயத்தை நீங்கள் புரிந்து கொள்ளவில்லை யென்ருல், என் இடத்திலிருந்து அவரை அழைத்துக் கொண்டு போய்விடுங்கள் என்று சொல்ல என்னைக் கட்டாயப் படுத்தியவர்களாவீர்கள்."

என் புதல்வர்களில் ஒருவனும் என்னுடன் இருந்தான் என்று நினைக்கிறேன். என் கருத்தை அவனும் முற்றும் ஆதரித்தான். தன் தாயாருக்கு மாட்டு மாமிச சூப் கொடுக்கக் கூடாது என்ருன். பிறகு நான், கஸ்தூரிபாயிடமே இதைக் குறித்துப் பேசினேன். உண்மையில் அவள் அதிகப் பலவீனமாக இருந்தாள். இதுபற்றிக் கலந்து ஆலோசிக்கும் நிலையிலும் அவள் இல்லை. என்ருலும், அவளுடன் ஆலோசிக்க வேண்டியது என் வருந்தத் தக்க கடமை என்று எண்ணினேன். டாக்டரும் நானும் பேசிக் கொண்டிருந்த விவரத்தை அவளிடம் கூறினேன். அவள், தீர் மானமாகப் பதில் சொல்லிவிட்டாள். “நான் மாட்டு மாமிச சூப் சாப்பிட மாட்டேன். இவ்வுலகில் மானிடராய்ப் பிறப்பதே அரிது. அப்படியிருக்க இத்தகைய பாதகங்களினுல் இவ் வுடலை அசுத்தப்படுத்திக் கொள்ளுவதைவிட உங்கள் மடியிலேயே இறந்து போய்விட நான் தயார்” என்ருள்.

அவளுக்குச் சொல்லிப் பார்த்தேன். என்னைப் பின்பற்றித் தான் நடக்க வேண்டும் என்ற கட்டாயம் எதுவும் இல்லை என்றேன். மதுவையும் மாமிசத்தையும் மருந்தாகச் சாப்பிடுவதில் தவறு இருப்பதாக நினைக்காமல் நண்பர்களான ஹிந்துக்கள் சிலர் சாப்பிட்டிருக்கும் உதாரணங்களையும் அவளுக்கு எடுத்துக் கூறினேன். அவள் பிடிவாதமாக இருந்தாள். “தயவு செய்து என்னை இங்கிருந்து அழைத்துச் சென்று விடுங்கள்” என்ருள்.

நான் மிகுந்த ஆனந்தமடைந்தேன். எனக்குக் கொஞ்சம் மனக்கலக்கமும் ஏற்பட்டது. என்ருலும், அவளை எடுத்துக் கொண்டு போய்விடத் தீர்மானித்தேன். நான் செய்துவிட்ட இம் முடிவை டாக்டருக்கு அறிவித்தேன். அவருக்கு ஒரே கோபம் வந்துவிட்டது. அவர் சொன்னதாவது: “எவ்வளவு ஈவிரக்க மில்லாத மனிதர் நீங்கள்! இப்பொழுது அவருக்கு இருக்கும் தேக நிலையில் இந்த விஷயத்தை அவரிடம் சொல்லவே நீங்கள் வெட்கப்பட்டிருக்க வேண்டும். இங்கிருந்து எடுத்துக் கொண்டு போகக் கூடிய நிலையில் உங்கள் மனைவி இல்லை என்பதை உங்களுக்குச் சொல்லுகிறேன். கொஞ்சம் உடம்பு அசங்கினுலும் அவரால் தாங்க முடியாது. வழியிலேயே அவர் இறந்துவிட நேர்ந்தாலுங்கூட நான் ஆச்சரியப்படமாட்டேன் அப்படியிருந்தும் நீங்கள் பிடிவாதம் செய்வதாஞல், உங்கள் இஷ்டம் போல் செய்து கொள்ளுங்கள். அவருக்கு மாட்டு மாமிச சூப் கொடுக்கக்கூடாது என்ருல், அவரை ஒரு நாள்கூட என் இடத்தில் வைத்துக்கொண்டு அந்த ஆபத்துக்கு உடன்பட நான் தயாராக இல்லை.”

ஆகவே, அந்த இடத்தைவிட்டு உடனே புறப்பட்டுவிட முடிவு செய்தோம். மழை தூறிக்கொண் டிருந்தது. ரெயில்வே ஸ்டேஷனுக்குக் கொஞ்ச தூரம் போக வேண்டும். டர்பனிலிருந்து போனிக்ஸுக்கு ரெயிலில் போய் அங்கிருந்து எங்கள்

குடியிருப்புக்கு இரண்டரை மைல் போகவேண்டும். நான் பெரும் அபாயகரமான காரியத்தையே மேற்கொண்டேன் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. ஆனால், கடவுளிடம் நம்பிக்கை வைத்து இவ் வேலையில் இறங்கினேன். முன்கூட்டிப் போனிக்ஸுக்கு ஓர் ஆள் அனுப்பினேன். ஓர் ஏணை, ஒரு புட்டி சூடான பால், ஒரு சுடுநீர்ப் புட்டி ஆகியவைகளுடன் ஸ்டேஷனுக்கு வந்து எங்களைச் சந்திக்குமாறு வெஸ்ட்டுக்குச் சொல்லியனுப்பினேன். ஏணையில் வைத்துக் கஸ்தூரிபாயைத் தூக்கிச் செல்ல ஆறு ஆட்களும் வேண்டும் என்று அறிவித்தேன். அடுத்த ரெயிலில் கஸ்தூரி பாயை அழைத்துச் செல்ல ரெயில்வே ஸ்டேஷனுக்குப் போக ஒரு ரிக்ஷாவை அமர்த்தினேன். அபாய நிலையிலிருந்த அவளை அதில் வைத்துக்கொண்டு புறப்பட்டேன்.

கஸ்தூரிபாயை உற்சாகப்படுத்த வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. அதற்குப் பதிலாக அவள் எனக்கு ஆறுதல் கூறினாள். ''எனக்கு ஒன்றும் நேர்ந்துவிடாது. நீங்கள் கவலைப் படாதீர்கள்'' என்றாள்.

பல நாட்களாக ஆகாரமே இல்லாததனால் அவள் எலும்பும் தோலுமாக இருந்தாள். ஸ்டேஷன் பிளாட்பாரம் மிகப் பெரியது. ரிக்ஷாவைப் பிளாட்பாரத்திற்குள் கொண்டு போக முடியாததனால் கொஞ்ச தூரம் நடந்துதான் ரெயில் நிற்கும் இடத்திற்குச் செல்ல வேண்டும். ஆகையால், அவளை என் கைகளிலேயே தூக்கிக்கொண்டு போய் ரெயில் வண்டியில் ஏற்றினேன். போனிக்ஸ் ஸ்டேஷனிலிருந்து ஏணையில் வைத்துக் கொண்டு போனோம். அங்கே நீர்ச் சிகிச்சை செய்ததில் கொஞ் சம் கொஞ்சமாகப் பலம் பெற்றுவந்தாள்.

நான் போனிக்ஸ் போய்ச் சேர்ந்த இரண்டு மூன்று நாட் களுக்கெல்லாம் ஒரு சாமியார் அங்கே வந்து சேர்ந்தார். டாக்டர் கூறிய யோசனையை ஏற்றுக்கொள்ள நாங்கள் எவ்விதம் பிடிவாத மாக மறுத்துவிட்டோம் என்பதை அவர் அறிந்தார். கஸ்தூரி பாயின் நிலைக்காக அனுதாபம் கொண்டு, எங்களுடன் வாதாடி எங்களைத் திருப்பிவிடுவதற்காகவே அவர் வந்தார். சாமியார் அங்கே வந்தபோது என் இரண்டாவது மகன் மணிலாலும், மூன்றாவது மகன் ராமதாஸும் அங்கே இருந்ததாக எனக்கு ஞாபகம். மாமிசம் சாப்பிடுவது மத விரோதமாகாது என்று அவர் வாதித்தார். இதற்கு மனுஸ்மிருதியிலிருந்து ஆதாரங்களையும் எடுத்துக் கூறினார். என் மனைவியின் முன்னிலையில் அவர் இவ்வாறு விவாதஞ் செய்தது எனக்குப் பிடிக்கவே இல்லை. ஆனால், மரியாதைக்காக நான் அவரைத் தடுக்காமல் இருந்தேன். மனுஸ்மிருதியின் சுலோகங்கள் எனக்குத் தெரியும். என்னுடைய நம்பிக்கையைப் பொறுத்த வரையில் அவை தேவையும் இல்லை. இந்தச் சுலோகங்களெல்லாம் இடைச் செருகல்கள் என்று கருதும் ஒரு சாராரும் இருக்கிறார்கள். அப்படி இவை இடைச் செருகல்கள் அல்ல என்றே வைத்துக்கொண்டாலும், என்னுடைய

சைவ உணவுக் கொள்கை சமய நூல்களை ஆதாரமாகக் கொள்ளாமல் சுயேச்சையாகக் கைக்கொள்ளப்பட்டதாகும். கஸ்தூரி பாயின் மன உறுதியும் அசைக்க முடியாதது. சாத்திரங்களைப் பற்றி அவள் எதுவுமே அறியாள். தன்னுடைய மூதாதையரின் பாரம்பரிய தருமமே அவளுக்குப் போதுமானதாக இருந்தது. குழந்தைகளும் தந்தையின் கொள்கையில் உறுதிகொண்டிருந்தன. ஆகையால், அவர்கள் சாமியாரின் வாதங்களை அலட்சியமாகக் கருதி எதிர்த்துப் பேசினர். இந்தச் சம்பாஷணைக்குக் கஸ்தூரிபாய் உடனே ஒரு முடிவு கட்டிவிட்டாள். "சுவாமிஜி, நீங்கள் என்ன சொன்னாலும் சரி, மாட்டு மாமிச சூப் சாப்பிட்டுக் குணமடைய நான் விரும்பவில்லை. தயவுசெய்து என்னை மேற்கொண்டும் தொந்தரவு செய்யாதீர்கள். நீங்கள் விரும்பினால் என் கணவருடனும் குழந்தைகளோடும் விவாதித்துக்கொள்ளுங்கள். ஆனால், நான் ஒரு தீர்மானம் செய்துகொண்டுவிட்டேன்" என்று சொல்லி விட்டாள்.*

# 29

# குடும்ப சத்தியாக்கிரகம்

சிறை வாழ்க்கையில் முதல் அனுபவம் எனக்கு ஏற்பட்டது 1908-ஆம் ஆண்டில். கைதிகள் அனுசரித்தாக வேண்டிய சில கட்டுத்திட்டங்கள், ஒரு பிரம்மச்சாரி அதாவது புலனடக்கம் செய்துகொள்ள விரும்புகிறவர் தாமாகவே அனுபவிக்க வேண்டியவைகளாக இருந்தன என்பதைக் கண்டேன். உதாரணமாக, அத்தகையதோர் கட்டுத்திட்டம், தினம் கடைசிச் சாப்பாட்டைச் சூரியன் மறைவதற்கு முன்னால் முடித்துக்கொண்டுவிட வேண்டும் என்பது. இந்தியக் கைதிகளுக்கோ, ஆப்பிரிக்கக் கைதிகளுக்கோ தேநீரோ அல்லது காப்பியோ கொடுப்பதில்லை. சமைத்த உணவில் வேண்டுமானால் அவர்கள் உப்புச் சேர்த்துக் கொள்ளலாம். ஆனால் ருசியைத் திருப்தி செய்வதற்காக என்று மாத்திரம் அவர்கள் எதையும் சாப்பிடக்கூடாது. எங்களுக்குக் கறி மசாலைப் பொடி கொடுக்கும்படியும், உணவைச் சமைக்கும்

* உப்புச் சத்தியாக்கிரகப் போராட்டத்தின்போது கஸ்தூரிபாய் காந்தியைத் தண்டித்த மாஜிஸ்டிரேட் முதலில் அவரை 'ஸி' வகுப்புக் கைதியாக நடத்த உத்தரவிட்டார். அச்சமயம் சிறையிலிருந்த காந்திஜியிடம் சர்தார் பட்டேல், இதைக்குறித்துப் பேசிக்கொண்டிருந்தபோது. "அகிம்சையின் சரியான உருவே 'பா' (கஸ்தூரிபாய்). வேறு எந்தப் பெண்ணின் முகத்திலும் அத்தகைய அகிம்சையை நான் கண்டதில்லை, பாவின் அடக்கமும் எளிமையும் பிரமிக்கவேண்டியதாகும்'' என்றார். அதற்குக் காந்திஜி: "வல்லபபாய்! நீங்கள் சொல்லுவது முற்றிலும் சரி. பாவிடமிருக்கும் மிகச் சிறந்த நற்குணம் அவளுக்கு இருக்கும் தீரமாகும். அவளிடம் வெடு வெடுப்புக் குணம் உண்டு. அவளுக்குக் கோபம் வரும், பொறுமையும் உண்டு. ஆனால், தென்னாப்பிரிக்காவில் வசித்த காலம் முதற்கொண்டு இன்றுவரை மொத்தமாகக் கவனித்தால், அவளுக்கு இருக்கும் தீரம் ஒன்றே மிகச் சிறந்ததாகும்" என்றார்.

போதே அதில் உப்பைச் சேர்த்துக்கொள்ள அனுமதிக்குமாறும் சிறை வைத்திய அதிகாரியைக் கேட்டேன். அதற்கு அவர் கூறியதாவது: "ருசி பார்த்துச் சாப்பிடுவதற்காக நீங்கள் இங்கே இல்லை. உடல் நலனைப் பொறுத்தவரையில் கறி மசாலைப் பொடி அவசியமே இல்லை. சமைக்கும்போது உப்பைச் சேர்ப் பதற்கும் பின்னால் உப்புப் போட்டுக்கொள்ளுவதற்கும் எந்த வித்தியாசமும் இல்லை."

அதிகக் கஷ்டத்தின் பேரிலேயே யாயினும், பின்னால் இந்தத் தடைகளுக் கெல்லாம் விமோசனம் ஏற்பட்டது. ஆனால், அவை இரண்டும் புலனடக்கத்திற்குச் சிறந்த விதிகள். வெளியிலிருந்து விதிக்கப்படும் கட்டுப்பாடுகள் அநேகமாக வெற்றி பெறுவ தில்லை. ஆனால், அந்தக் கட்டுப்பாடுகள் தமக்குத் தாமே விதித் துக்கொண்டவையாக இருப்பின், நிச்சயமாக நல்ல பலனை அளிக்கின்றன. ஆகவே சிறையிலிருந்து விடுதலையானாலும் அவ் விரு விதிகளையும் எனக்கு நானே விதித்துக்கொண்டேன். சாத்தியமான வரையில் தேநீர் சாப்பிடுவதை நிறுத்திவிட்டேன். கடைசிச் சாப்பாட்டைச் சூரியன் மறைவதற்கு முன்னால் முடித்து விடுவேன். இவ்விரண்டையும் அனுசரிப்பதற்கு இப்பொழுது எந்த முயற்சியுமே எனக்குத் தேவையில்லை.

உப்பை அடியோடு விட்டுவிட வேண்டிய சந்தர்ப்பமும் எனக்கு ஏற்பட்டது. இந்தத் தடையைப் பத்து ஆண்டு காலம் தொடர்ந்து அனுசரித்து வந்தேன். மனிதனுடைய உணவில் உப்பு அவசியமான பொருள் அல்ல என்று சைவ உணவைப் பற்றிய ஏதோ ஒரு புத்தகத்தில் படித்தேன். உப்பு இல்லாத உணவே உடலின் சுகத்திற்கு நல்லது என்றும் அதில் கூறப்பட் டிருந்தது. இதிலிருந்து பிரம்மச்சாரிக்கு உப்பில்லாத உணவு நல்லது என்ற முடிவுக்கு வந்தேன். பலவீனமான உடம்பைக் கொண்டவர்கள் பருப்பு வகைகளைத் தவிர்க்க வேண்டும் என்று நான் படித்திருந்ததோடு அதன் உண்மையை அறிந்துமிருந் தேன். எனக்கோ, பருப்பு வகைகளில் அதிகப் பிரியம்.

ரணசிகிச்சைக்குப் பிறகு குணமடைந்துவந்த கஸ்தூரிபாய்க் குத் திரும்பவும் ரத்த கஷ்டம் ஏற்பட ஆரம்பித்தது. இந்த நோய் சுலபத்தில் குணமாகாது என்றும் தோன்றிற்று. நீர்ச் சிகிச்சையினாலும் குணம் ஏற்படவில்லை. என்னுடைய சிகிச்சை முறைகளை அவள் எதிர்க்கவில்லை யாயினும் அவற்றில் அவளுக்கு அவ்வளவாக நம்பிக்கையில்லை. ஆனாலும் வெளி வைத்திய உதவி வேண்டும் என்று அவள் கேட்கவே இல்லை. ஆகவே என் வைத்திய முறைகளெல்லாம் பயன்படாது போய்விட்டதால் உப்பையும் பருப்பு வகைகளையும் தள்ளிவிடும்படி அவளைக் கேட்டுக்கொண்டேன். தக்க ஆதாரங்களை யெல்லாம் எடுத்துச் சொல்லி நான் எவ்வளவோ விவாதித்துப் பார்த்தும் இதற்கு அவள் சம்மதிக்க மறுத்துவிட்டாள். கடைசியாக அவள், எனக்கு

ஒரு சவாலும் விட்டாள். உப்பையும் பருப்பையும் விட்டுவிடுமாறு எனக்கு யாராவது யோசனை கூறினாலும் அவற்றை என்னாலும் விட்டுவிட முடியாது என்றாள். இதைக் கேட்டு நான் வருந்தினேன். என்றாலும் அதே சமயத்தில் மகிழ்ச்சியும் அடைந்தேன். அவளிடம் எனக்குள்ள அன்பைப் பொழிவதற்கு ஒரு வாய்ப்புக் கிடைத்தது என்பதே மகிழ்ச்சிக்குக் காரணம். நான் அவளிடம் சொன்னேன்: "நீ தவருக நினைத்துவிட்டாய். நோயுற்று இருந்து, இவற்றையும் மற்றவைகளையும் தவிர்த்துவிடுமாறு வைத்தியர் யோசனை கூறினல், கொஞ்சமும் தயங்காமல் அப்படியே செய்வேன். அது போகட்டும். வைத்திய ஆலோசனை எதுவும் இல்லாமலேயே, நீ விட்டாலும் விடாது போனாலும், உப்பையும் பருப்புக்களையும் ஓர் ஆண்டுக்கு நான் கைவிடுகிறேன்."

இதைக் கேட்டதும் அவள் திடுக்கிட்டுப் போனாள். மிகுந்த துயரத்தோடு அவள் கூறியதாவது: "தயவு செய்து என்னை மன்னித்துவிடுங்கள். உங்கள் இயல்பு தெரிந்திருந்தும் நான் இப்படி உங்களுக்குக் கோபம் மூட்டியிருக்கக் கூடாது. உப்பையும் பருப்பையும் சாப்பிடுவதில்லை என்று உறுதி கூறுகிறேன். கடவுள் ஆணை; உங்களை வேண்டிக்கொள்ளுகிறேன். இந்த விரதத்தை மட்டும் நீங்கள் விட்டுவிடுங்கள். இப்படி நீங்கள் என்னைத் தண்டிக்கக் கூடாது."

"உப்பையும் பருப்பையும் சாப்பிடாமல் இருப்பது உனக்கு மிகவும் நல்லது. அவை இல்லாமல் நீ நன்றாகவே இருப்பாய் என்பதில் எனக்குக் கொஞ்சமும் சந்தேகமில்லை. என்னைப் பொறுத்தவரையில், நான் நிச்சயமாக எடுத்துக்கொண்டுவிட்ட விரதத்தைக் கைவிட முடியாது. இது எனக்கும் நன்மையே செய்வது நிச்சயம். ஏனெனில், ஒரு கட்டுத்திட்டம், அது எக் காரணத்தினால் ஏற்பட்ட தாயினும், மனிதருக்கு நல்லதே. ஆகையால், என்னைப் பற்றிக் கவலைப்படாதே. இது எனக்கு ஒரு சோதனை. அதோடு நமது தீர்மானத்தை நிறைவேற்றுவதற்கு இது உனக்கு ஓர் தார்மிக ஆதரவாகவும் இருக்கும்" என்றேன்.

எனவே, என்னை மாற்றுவதற்கில்லை என்று விட்டுவிட்டாள். "நீங்கள் மிகுந்த பிடிவாதக்காரர். யார் சொன்னாலும் கேட்க மாட்டீர்கள்" என்று கூறிக் கண்ணீர் வடித்து ஆறுதல் அடைந்தாள்.

இந்தச் சம்பவத்தைச் சத்தியாக்கிரகத்திற்கு ஓர் உதாரணமாகவே கொள்ள விரும்புவேன். என்னுடைய வாழ்க்கையின் இனிமையான நினைவுகளில் இது ஒன்று.

இதற்குப் பிறகு கஸ்தூரிபாயின் தேகநிலை வெகு வேகமாகக் குணமடைந்து வந்தது. இவ்விதம் குணம் ஏற்பட்டது, உப்பும், பருப்பு வகையும் இல்லாத சாப்பாட்டினாலா? அல்லது அதன் பலனாக அவளுடைய ஆகாரத்தில் ஏற்பட்ட மற்ற மாறு

தல்களினுலா? வாழ்க்கை சம்பந்தமான மற்ற விதிகளில் சரியாக நடக்கும்படி செய்வதில் நான் கவனமாக இருந்ததன் காரணமாகவா? அல்லது, அந்தச் சம்பவத்தினுல் உள்ளத்தில் உண்டான ஆனந்தத்தின் பலனுலா? அப்படித்தான் என்ருல் எந்த அளவுக்கு? இதை என்னுல் சொல்லிவிட முடியாது. ஆனுல், அவள் துரிதமாய்க் குணமடைந்து வந்தாள். ரத்த நஷ்டம் அடியோடு நின்றுவிட்டது. அரைகுறை வைத்தியன் என்று எனக்கு இருந்த மதிப்பும் அதிகமாயிற்று.

என்னைப் பொறுத்தவரையில், உப்பையும் பருப்பையும் தவிர்த்துக்கொண்டதால் நன்மையே அடைந்தேன். விட்டு விட்ட பொருள்களைத் தின்னவேண்டும் என்ற ஆசையும் எனக்கு வரவில்லை. ஒரு வருடமும் விரைவில் கடந்துவிட்டது. முன்னுல் இருந்ததைவிட என் புலன்கள் கட்டுக்கு அடங்கியவைகளாக இருந்ததைக் கண்டேன். இந்தப் பரீட்சை, புலனடக்க ஆர்வத்தை அதிகரித்தது. நான் இந்தியாவுக்குத் திரும்பி வெகு காலம் வரையிலும் உப்பையும் பருப்பு வகைகளையும் தின்னுமலேயே இருந்து வந்தேன். 1914-இல் லண்டனில் இருந்தபோது, ஒரே ஒரு முறை மாத்திரம் அந்த இரண்டையும் நான் சாப்பிட வேண்டிய தாகிவிட்டது. அந்தச் சந்தர்ப்பத்தைக் குறித்தும், இந்த இரண்டையும் நான் எவ்விதம் திரும்பவும் சாப்பிட ஆரம்பித்தேன் என்பதுபற்றியும் பிந்திய அத்தியாயம் ஒன்றில் கூறுகிறேன்.

தென்னுப்பிரிக்காவில் எனது சக ஊழியர்கள் பலரிடத்திலுங்கூட, உப்பும் பருப்புமில்லாத உணவை நான் சோதனை செய்து நல்ல பலனையே கண்டிருக்கிறேன். இத்தகைய உணவின் நன்மையைக் குறித்து வைத்திய ரீதியில் இரு வகையான அபிப்பிராயங்கள் இருக்கக் கூடும். ஆனுல், தார்மிக ரீதியில் தன்மறுப்பு எல்லாமே ஆன்மாவுக்கு நல்லதுதான் என்பதில் எனக்கு எவ்விதச் சந்தேகமும் இல்லை. புலனடக்கத்துடன் இருப்பவருக்கும், புலன் நுகர்ச்சிகளில் ஈடுபட்டிருப்பவருக்கும் எவ்விதம் வாழ்க்கை வழிகளில் வேறுபாடு இருக்குமோ அதேபோல, அவ்விரு தரத்தினரின் உணவிலும் வேறுபாடு இருக்க வேண்டும். பிரம்மச்சரியத்தை அடைய விரும்புகிறவர்கள், சுகபோக வாழ்விற்கு ஏற்ற அனுஷ்டானங்களைக் கைக்கொண்டே தங்கள் லட்சியத்தில் தோல்வியை அடைந்துவிடுகிருர்கள்.

# 30

# புலனடக்கத்தை நோக்கி

என் உணவில் சில மாறுதல்களைச் செய்வதற்குக் கஸ்தூரிபாயின் தேக அசௌக்கியம் எவ்வாறு காரணமாக இருந்தது என்பதை முந்திய அத்தியாயத்தில் விவரித்திருக்கிறேன்.

பிந்திய கட்டமொன்றில், பிரம்மச்சரியத்திற்கு உதவியாக இருக்கவேண்டும் என்பதற்காக மற்றும் பல மாறுதல்கள் செய்யப்பட்டன.

இவற்றில் முதலாவது, பால் சாப்பிடுவதை விட்டுவிட்டது. பால் மிருக உணர்ச்சியைத் தூண்டுகிறது என்று ராய்ச் சந்திர பாயிடமிருந்தே முதல் முதலில் அறிந்தேன். சைவ உணவைப் பற்றிய புத்தகங்களும் இக்கருத்தைப் பலப்படுத்தின. ஆனால், நான் பிரம்மச்சரிய விரதத்தை மேற்கொள்ளாமல் இருந்த வரையில் பால் சாப்பிடுவதை விட்டுவிட நான் துணியவில்லை. உடலை வளர்ப்பதற்குப் பால் அவசியமானது அல்ல என்று நான் முன்னமே அறிந்திருந்தேன். ஆனால், அதை விட்டுவிடுவது எளிதாக இல்லை. புலனடக்கத்திற்காகப் பாலைத் தவிர்த்துவிட வேண்டும் என்ற அவசியம் எனக்கு வளர்ந்துவிட்டபோது கல்கத்தாவிலிருந்து வந்த சில பிரசுரங்களை நான் காண நேர்ந்தது. பசுக்களையும் எருமைகளையும் அவற்றின் சொந்தக்காரர்கள் எவ்வளவு கொடுமைப்படுத்துகிறார்கள் என்பது அவற்றில் விவரிக்கப்பட்டிருந்தது. இது என்னிடம் ஆச்சரியகரமான பலனை உண்டு பண்ணியது. ஸ்ரீ கால்லென்பாக்குடன் இதைக் குறித்து விவாதித்தேன்.

‘தென்னாப்பிரிக்கச் சத்தியாக்கிரக சரித்திரம்’ என்ற புத்தகத்தில் ஸ்ரீ கால்லென்பாக்கை வாசகர்களுக்கு நான் அறிமுகம் செய்துவைத்திருந்தபோதிலும், முந்திய ஒரு அத்தியாயத்தில் அவரைப்பற்றிக் குறிப்பிட்டிருந்தாலும், அவரைக்குறித்து இங்கே மேலும் கொஞ்சம் சொல்லவேண்டியது அவசியம் என்று எண்ணுகிறேன். முதல் முதலில் தற்செயலாகவே நாங்கள் சந்தித்தோம். அவர், ஸ்ரீ கானுக்கு நண்பர். அவருடைய உள்ளத்தின் ஆழத்தில் பர உலகப் பற்று இருப்பதை ஸ்ரீ கான் கண்டுபிடித்ததால், அவரை எனக்கு அறிமுகம் செய்துவைத்தார்.

அவரை அறிய ஆரம்பித்ததும், சுகபோக வாழ்க்கையிலும் ஆடம்பரத்திலும் அவருக்கு இருந்த ஆர்வத்தைக் கண்டு திடுக்கிட்டுப் போனேன். ஆனால், எங்களுடைய முதல் சந்திப்பிலேயே சமய சம்பந்தமாக மிகவும் நுணுக்கமான கேள்விகளையெல்லாம் அவர் கேட்டார். பேச்சின் நடுவில் கௌதமபுத்தரின் துறவைப்பற்றியும் பேசினோம். எங்களுடைய பழக்கம் சீக்கிரத்தில் நெருங்கிய நட்பாகக் கனிந்தது. எங்கள் இருவரின் எண்ணங்களும் ஒன்றுபோல் ஆயின. என் வாழ்க்கையில் நான் செய்துகொள்ளும் மாறுதல்களைத் தாமும் தமது வாழ்க்கையில் அனுசரிக்க வேண்டும் என்று உறுதிகொண்டார்.

அச்சமயம் அவருக்கு மணமாகவில்லை. வீட்டு வாடகையைச் சேர்க்காமல் தமக்கு மாத்திரம் மாதம் ரூ. 1,200 செலவழித்து வந்தார். இப்பொழுதோ, மாதம் ரூ. 120 மாத்திரம் செலவு செய்துகொள்ளும் அளவுக்குத் தமது வாழ்க்கையை எளிமை

யாக்கிக்கொண்டுவிட்டார். என் குடித்தனத்தை எடுத்துவிட்ட பிறகு, முதல் தட்வை சிறையிலிருந்து விடுதலையான பின்னர், நாங்கள் இருவரும் சேர்ந்து வசிக்கத் தொடங்கினோம். நாங்கள் நடத்தியது மிகவும் கஷ்டமான வாழ்க்கையே.

இந்தச் சமயத்தில்தான் பாலைப்பற்றி நாங்கள் விவாதித்தோம். ஸ்ரீ கால்லென்பாக் கூறியதாவது : " பாலினால் ஏற்படக் கூடிய தீய விளைவுகளைக் குறித்து நாம் ஓயாமல் பேசிக் கொண்டிருக்கிறோம். அப்படியானால், நாம் ஏன் அதை விட்டு ஒழித்து விடக்கூடாது ? நிச்சயமாக அது அவசியமானதே அல்ல." இந்த யோசனையைக் கேட்டு எனக்கு ஆச்சரியமும் திருப்தியும் ஒருங்கே ஏற்பட்டன. அதைச் சந்தோஷமாக வரவேற்றேன். அப்பொழுதிலிருந்தே பால் சாப்பிடுவதை விட்டுவிடுவதென்று இருவரும் பிரதிக்ஞை செய்துகொண்டோம். இது நடந்தது டால்ஸ்டாய் பண்ணையில், *1912*-ஆம் ஆண்டில்.

ஆனால், பாலை மறுப்பது மாத்திரம் எனக்குப் போதிய திருப்தி யளித்துவிடவில்லை. இதற்குப் பின் சீக்கிரத்திலேயே, பழ ஆகாரத்தை மாத்திரம், அதுவும் சாத்தியமான வரையில் மலிவான பழங்களை மட்டும் சாப்பிட்டு வாழ்வது என்று தீர்மானித்தேன். மிகுந்த வறுமையிலிருக்கும் மக்களின் வாழ்க்கையையே நாங்களும் வாழ வேண்டும் என்பது எங்கள் விருப்பம்.

பழ ஆகாரம் அதிகச் சௌகரியமானதாகவும்கூட இருந்தது. சமைப்பது என்ற வேலையே இல்லை. பச்சை நிலக்கடலை, வாழைப் பழங்கள், பேரீச்சம் பழங்கள், எலுமிச்சம் பழங்கள், ஆலிவ் எண்ணெய் ஆகியவையே எங்கள் வழக்கமான சாப்பாடு.

பிரம்மச்சரியத்தை அடைய விரும்புவோருக்கு இங்கே ஓர் எச்சரிக்கையைச் செய்யவேண்டியிருக்கிறது. பிரம்மச்சரியத்திற்கும் உணவுக்கும் நெருங்கிய தொடர்பு இருக்கிறது என்று நான் எடுத்துக்காட்டியிருந்த போதிலும், இதில் மனமே மிகவும் முக்கியமானது என்பது நிச்சயம். தான் அறிய அசுத்தமானதாக இருக்கும் மனத்தைப் பட்டினியினால் சுத்தம் செய்துவிட முடியாது. உணவில் செய்கிற மாறுதல்கள் அதனிடம் பலனை உண்டாக்காது. மனத்திலிருக்கும் காம விகாரங்களைத் தீவிரமான ஆன்ம சோதனையினாலும், ஆண்டவனிடம் அடைக்கலம் புகுவதனாலும், அவன் அருளினாலுமன்றிப் போக்கிக்கொண்டு விடவே முடியாது. ஆனால், உடலுக்கும் உள்ளத்திற்கும் நெருங்கிய தொடர்பு இருக்கிறது. சிற்றின்ப இச்சை கொண்டுள்ள மனம், சுவையானவைகளையும் சுகபோகத்திற்கானவைகளையுமே எப்பொழுதும் நாடும். இந்தப் புத்திப் போக்கைப் போக்கிக் கொள்ளுவதற்கு உணவுக் கட்டுத்திட்டங்களும், பட்டினி இருப்பதும் அவசியமானவை என்று தோன்றலாம். சிற்றின்ப வயப்பட்டுள்ள மனம், உணர்ச்சிகளை அடக்குவதற்குப் பதிலாக

அவற்றிற்கு அடிமையாகிவிடுகிறது. ஆகையால், உணர்ச்சியைத் தூண்டிவிடாத சுத்தமான உணவும், அவ்வப்போது பட்டினி இருந்து வருவதும் உடலுக்கு அவசியம்.

உணவுக் கட்டுத்திட்டங்களையும் பட்டினி இருப்பதையும் அலட்சியம் செய்கிறவர்களைப் போலவே, எல்லாவற்றையும் இவற்றிற்காகத் தத்தஞ் செய்கிறவர்களும் தவறையே செய்கின்றனர். புலனடக்கத்தை நோக்கிப் போகும் மனமுடையவர்களுக்கு, உணவுக் கட்டுத் திட்டங்களும் பட்டினியும் அதிகப் பலனளிப்பவை என்று என் அனுபவம் போதிக்கிறது. உண்மையில் இவற்றின் உதவியினாலன்றி உள்ளத்திலிருக்கும் காம விகாரங்களை அடியோடு போக்கிக்கொண்டு விடவே முடியாது.

# 31
# பட்டினி விரதம்

பால் சாப்பிடுவதையும் தானிய வகைகள் உண்பதையும் விட்டுவிட்டுப் பழ ஆகார சோதனையை ஆரம்பித்த அதே சமயத்தில், புலனடக்கத்திற்கு ஒரு சாதனமாகப் பட்டினி விரதம் இருக்கவும் தொடங்கினேன். இதில் என்னுடன் ஸ்ரீ கால்லென்பாக்கும் சேர்ந்துகொண்டார். இதற்கு முன்னால் அவ்வப்போது நான் பட்டினி விரதம் இருந்து வந்ததுண்டு. ஆனால், அந்த விரதம் முற்றும் தேக ஆரோக்கியத்திற்காகத்தான். புலனடக்கத்திற்கும் பட்டினி அவசியம் என்பதை ஒரு நண்பரின் மூலம் அறிந்தேன்.

நான் வைஷ்ணவக் குடும்பத்தில் பிறந்தவனாதலாலும், என் தாயாரும் கடுமையான விரதங்களையெல்லாம் அனுசரித்து வந்ததாலும், இந்தியாவில் இருந்தபோது ஏகாதசி போன்ற விரதங்கள் இருந்திருக்கிறேன். ஆனால், அப்பொழுதெல்லாம் என் தாயாரைப்போல் நடக்க வேண்டும் என்பதற்காகவும், என் பெற்றோரை மகிழ்விப்பதற்காகவுமே அந்த விரதங்கள் இருந்தேன்.

பட்டினி விரதத்தின் நன்மை அந்தக் காலங்களில் எனக்குத் தெரியாது. அதில் எனக்கு நம்பிக்கையும் இல்லை. ஆனால், நான் மேலே குறிப்பிட்ட நண்பர், பிரம்மச்சரியத்திற்குச் சாதனமாகப் பட்டினி விரதத்தை அனுசரித்து நன்மை பெற்றிருக்கிறார் என்பதை அறிந்ததும், அந்த உதாரணத்தை நானும் பின்பற்றி ஏகாதசி விரதம் இருந்து வந்தேன். ஹிந்துக்கள் இத்தகைய விரத தினங்களில் பாலும் பழமும் மாத்திரம் சாப்பிடுவது உண்டு. ஆனால், அந்த விரதத்தை நான் தினமும் அனுசரித்து வந்ததால், நீரைத்தவிர எதுவும் சாப்பிடுவதில்லை என்று விரதத்தைத் தொடங்கினேன்.

இந்தச் சோதனையை நான் ஆரம்பித்தபோது, ஹிந்துக்களின் சிராவண மாதமும், முஸ்லிம்களின் ரம்ஜான் மாதமும் ஒரே சமயத்தில் வந்தன. காந்தி வமிசத்தினர், வைஷ்ணவ விரதங்களைமட்டுமன்றிச் சைவ விரதங்களையும் அனுசரிப்பது உண்டு. சிவ ஆலயங்களுக்கும் விஷ்ணு ஆலயங்களுக்கும் போவார்கள். குடும்பத்தைச் சேர்ந்த சிலர், சிராவண மாதத்தில் பிரதோஷ விரதம் (மாலை வரையில் பட்டினி இருப்பது) அனுசரிப்பதும் உண்டு. இந்த விரதத்தை நானும் அனுசரிப்பது என்று தீர்மானித்தேன்.

இந்த முக்கியமான சோதனைகளை யெல்லாம் டால்ஸ்டாய் பண்ணையில் இருந்தபோதே மேற்கொண்டோம். அங்கே ஸ்ரீ கால்லென்பாக்கும் நானும் சில சத்தியாக்கிரகிகளின் குடும்பங்களுடன் இருந்தோம். சில இளைஞர்களும் குழந்தைகளும் கூட எங்களுடன் இருந்தார்கள். இக் குழந்தைகளுக்கு ஒரு பள்ளிக்கூடம் வைத்திருந்தோம். அவர்களில் நான்கு ஐந்து பேர் முஸ்லிம்கள். தங்கள் மத சம்பந்தமான நோன்புகளை யெல்லாம் அனுசரித்து வருமாறு அவர்களை நான் உற்சாகப்படுத்தி வந்தேன். நாள்தோறும் அவர்கள் நமாஸ் செய்து வருமாறும் கவனித்துக் கொண்டேன். கிறிஸ்தவ, பார்ஸிச் சிறுவர்களும்கூட அங்கே இருந்தார்கள். அவர்களும் தங்கள் தங்கள் மத சம்பந்தமானவைகளை அனுசரிக்கும்படி செய்ய வேண்டியது என் கடமை என்று கருதினேன்.

ஆகையால், அந்த மாதத்தில் ரம்ஜான் பட்டினி விரதத்தை அனுசரிக்கும்படி முஸ்லிம் சிறுவர்களைத் தூண்டினேன். என் அளவிலோ, பிரதோஷ விரத மிருப்பதென்று தீர்மானித்தேன். ஆனல், ஹிந்து, கிறிஸ்தவ, பார்ஸிச் சிறுவர்களையும் என்னுடன் சேர்ந்து விரத மிருக்கும்படி கூறினேன். விரதானுஷ்டானம் போன்றவைகளில் மற்றவர்களுடன் சேர்ந்துகொள்ளுவது நல்லது என்று அவர்களுக்கு விளக்கிக் கூறினேன். பண்ணையில் இருந்தவர்கள் பலர் என் யோசனையை வரவேற்ருர்கள். ஹிந்து, பார்ஸிச் சிறுவர்கள், விரதத்தின் எல்லாச் சிறு விவரங்களிலும் முஸ்லிம்களைப் பின்பற்றவில்லை; அது அவசியமும் அல்ல. பகலெல்லாம் பட்டினி இருந்துவிட்டுச் சூரியன் மறையும்போதே முஸ்லிம் சிறுவர்கள் சாப்பிடுவார்கள். ஆனல் மற்றவர்களோ, அப்படிச் சூரிய அஸ்தமனத்திற்குக் காத்திருப்பதில்லை. ஆகவே, இவர்கள் தங்கள் முஸ்லிம் நண்பர்களுக்கு இனிய பண்டங்களைத் தயாரித்துப் பரிமாற முடிந்தது. அதோடு மறுநாள் காலையில் சூரியன் உதயமாவதற்கு முன்னல் முஸ்லிம் குழந்தைகள் சாப்பிடுவார்கள். அதேபோல ஹிந்து, பார்ஸிக் குழந்தைகள் சாப்பிடுவதில்லை. முஸ்லிம்களைத் தவிர மற்றவர்கள் பகலில் தண்ணீர் குடிப்பார்கள்.

இந்தச் சோதனைகளின் பலனுகை, பட்டினி விரதத்தின் நன்மையை எல்லோரும் உணர்ந்தார்கள். இவர்களிடையே அற்புதமான தோழமையும் வளர்ந்தது.

டால்ஸ்டாய் பண்ணையில் நாங்கள் எல்லோருமே சைவ உணவு சாப்பிடுகிறவர்கள். இதில் எல்லோரும் என் உணர்ச்சியை மதித்து நடந்துகொண்டதை நான் நன்றியறிதலுடன் ஒப்புக்கொள்ளவே வேண்டும். முஸ்லிம் சிறுவர்கள் வழக்கமாகச் சாப்பிட்டு வந்த மாமிச உணவை ரம்ஜான் காலத்தில் விட்டுவிட வேண்டி வந்தது. ஆனால், அதைக் குறித்து அவர்களில் யாரும் என்னிடம் சொன்னதே இல்லை. சைவச் சாப்பாட்டை அவர்கள் சுவைத்துச் சாப்பிட்டு இன்புற்றனர். பண்ணையின் எளிய வாழ்வை அனுசரித்து ஹிந்து இளைஞர்கள் அவர்களுக்கு அடிக்கடி சைவப் பட்சணங்கள் செய்து கொடுப்பார்கள்.

இந்த இன்பகரமான நினைவுகளை நான் வேறு எந்த இடத்திலும் கூற முடியாதாகையால், வேண்டுமென்றே பட்டினி விரதத்தைப்பற்றிய இந்த அத்தியாயத்தின் மத்தியில் கூறியிருக்கிறேன். என்னுடைய ஒரு குணாதிசயத்தையும் நான் மறைமுகமாகக் கூறியிருக்கிறேன். அதாவது, நல்லது என்று எனக்குத் தோன்றியவைகளிலெல்லாம் என் சக ஊழியர்களும் என்னைப் பின்பற்றும்படி செய்வதில் எனக்கு எப்பொழுதுமே ஆசை. அவர்களுக்குப் பட்டினி விரதம் புதியது. ஆனால், பிரதோஷ, ரம்ஜான் விரதங்களின் காரணமாகப் புலனடக்கத்திற்கு ஓர் உபாயமாகப் பட்டினி இருப்பதில் அவர்களுக்குச் சிரத்தை ஏற்படும்படி செய்வது எனக்கு எளிதாயிற்று.

இவ்வாறு புலனடக்கச் சூழ்நிலை இயற்கையாகவே பண்ணையில் தோன்றிவிட்டது. பண்ணை வாசிகள் யாவரும் எங்களுடன் சேர்ந்து அரைப்பட்டினி, முழுப்பட்டினி விரதங்களை யெல்லாம் அனுசரித்தார்கள். இது முற்றும் நன்மைக்கே என்று நான் நிச்சயமாகக் கருதுகிறேன். ஆனால், இந்த விரதங்கள் எவ்வளவு தூரம் அவர்களுடைய உள்ளங்களைத் தொட்டு, உடலின்ப இச்சையை அடக்குவதில் அவர்களுக்கு உதவியாக இருந்தன என்பதை நான் திட்டமாகக் கூறிவிட முடியாது. என்றாலும், என்னளவில் உடல் சம்பந்தமாகவும், ஒழுக்க சம்பந்தமாகவும் நான் அதிக நன்மையை அடைந்தேன் என்பது நிச்சயம். பட்டினியும் மற்றக் கட்டுத் திட்டங்களும் எல்லோரிடத்திலும் அதேவிதமான பலனை உண்டாக்க வேண்டும் என்பதில்லை. இதையும் நான் அறிவேன்.

புலனடக்கத்தையே நோக்கமாகக் கொண்டு பட்டினி விரதமிருந்தால்தான் மிருக இச்சையை அடக்குவதற்கு அது பயன்படும். இத்தகைய விரதங்களுக்குப் பின்னால் நாவின் ருசிப்புலனும் மிருக இச்சையும் அதிகரித்துவிட்டதை என் நண்பர்கள் சிலர் தங்கள் அனுபவத்தில் கண்டுமிருக்கிறார்கள். அதாவது, புலனடக்கத்தில் இடையறாத ஆர்வமும் சேர்ந்து இருந்தாலன்றிப் பட்டினி விரதத்தினால் மாத்திரம் எவ்விதப் பயனுமில்லை. இதன் சம்பந்தமாகப் பகவத் கீதை இரண்டாவது அத்தியாயத்தின் பிரபலமான சுலோகம் குறிப்பிடத்தக்கதாகும்:

"இந்திரியங்களைத் தடுத்து வைப்பவனுக்கு விஷயானுபவங்கள் அற்றுப் போய்விடுகின்றன.

ஆனல், ஆசை எஞ்சி நிற்கிறது.

பரமாத்மாவைத் தரிசித்தபின் அவனுடைய ஆசையும் அழிகிறது." *

ஆகையால், பட்டினி விரதமிருப்பதும் அதுபோன்ற கட்டுத் திட்டங்களும் புலனடக்கத்திற்கான சாதனங்களில் ஒன்ருகும். அதே எல்லாமும் அல்ல. உடலோடு சேர்ந்து உள்ளமும் பட்டினி விரதத்தை அனுஷ்டிக்காவிட்டால், அது நயவஞ்சகத்திலும் அழிவிலுமே முடியும்.

# 32

# பள்ளி ஆசிரியனுக

தென்னுப்பிரிக்கச் சத்தியாக்கிரகச் சரித்திரத்தில் சொல்லாத அல்லது சுருக்கமாக மாத்திரம் குறிப்பிட்டுச் சென்றுவிட்ட விஷயங்களை மட்டுமே நான் இந்த அத்தியாயங்களில் கூறி வருகிறேன் என்பதை வாசகர்கள் நினைவில் வைத்திருப்பார்கள் என்று நம்புகிறேன். அப்படி நினைவில் வைத்திருந்தால், சமீபத்திய அத்தியாயங்களுக்கிடையே இருக்கும் தொடர்பை அவர்கள் எளிதில் காண முடியும்.

பண்ணை வளர்ந்து வரவே அதிலிருந்த சிறுவர்களுக்கும், சிறுமிகளுக்கும் படிப்புக்கு ஏதாவது ஏற்பாடு செய்தாக வேண்டியது அவசியமாயிற்று. இவர்களில் ஹிந்து, முஸ்லிம், பார்ஸி, கிறிஸ்தவச் சிறுவர்களும், சில ஹிந்துப் பெண்களும் இருந்தனர். இவர்களுக்குத் தனியாக உபாத்தியாயர்களை வைப்பது சாத்தியமல்ல. அப்படிச் செய்வது அவசியம் என்று நான் எண்ணவுமில்லை. தகுதி பெற்ற இந்தியப் பள்ளி ஆசிரியர்கள் கிடைப்பதில்லை. ஆகையால், ஆசிரியர்களை நியமிப்பது சாத்தியமில்லை. அப்படியே ஆசிரியர்கள் கிடைத்தாலும், குறைந்த சம்பளத்தில் ஜோகன்னஸ்பர்க்கிலிருந்து 21 மைலுக்கு அப்பால் போக யாரும் தயாராக இருக்கமாட்டார்கள். அவர்களுக்குக் கொடுக்க எங்களிடம் பணமும் ஏராளமாக இல்லை. மேலும் பண்ணைக்கு வெளியிலிருந்து உபாத்தியாயர்களை இறக்குமதி செய்யவேண்டியது அவசியம் என்றும் நான் கருதவில்லை. அப்பொழுது நடைமுறையிலிருந்த கல்வி முறையிலும் எனக்கு நம்பிக்கை இல்லை. அனுபவத்தினுலும், சோதனைகளினுலும், உண்மையானதொரு கல்வி முறையைக் கண்டுபிடிக்க வேண்டும் என்ற எண்ணமும் எனக்கு இருந்தது. ஒன்றை மாத்திரம் நான் அறிவேன். அதாவது, மிகவும் சிறப்பான ஒரு நிலையில், பெற்றோரினுலேயே உண்மையான

* பகவத் கீதை: அத். 2: 59.

கல்வியை அளிக்க முடியும். இதற்கு வெளி உதவி மிகக் குறைவாகவே இருக்க வேண்டும். டால்ஸ்டாய் பண்ணையோ, ஒரு குடும்பம். அதில் தந்தையின் ஸ்தானத்தை நான் வகித்தேன். ஆகையால், சிறுவர்களுக்குப் பயிற்சி அளிக்கும் பொறுப்பைச் சாத்தியமான வரையில் நானே ஏற்றுக்கொள்ள வேண்டும்.

மேற்கண்ட யோசனையில் குறைகளும் இல்லாமல் இல்லை. எல்லா இளைஞர்களும் சிறு வயதிலிருந்தே என்னுடன் இருந்து வந்தவர்களல்ல. அவர்கள் மாறுபட்ட நிலையிலும், சூழ்நிலையிலும் வளர்ந்தவர்கள். அவர்கள் ஒரே மதத்தைச் சேர்ந்தவர்களும் அல்ல. இத்தகைய நிலையிலிருக்கும் சிறுவர்களுக்கு நான் குடும்பத்தின் தந்தை என்ற ஸ்தானத்தை வகித்தாலும், எவ்விதம் முழுப் பயிற்சியையும் நான் அளித்துவிட முடியும்?

ஆனால், உள்ளத்தின் பண்பு அல்லது சன்மார்க்கத்தை வளர்த்துக்கொள்ளுவதற்கே எப்பொழுதும் நான் முதல் இடம் கொடுத்து வந்தேன். அவர்களுடைய வயதிலும், அவர்கள் வளர்ந்த விதத்திலும் என்னதான் வித்தியாசம் இருந்தாலும், எல்லோருக்கும் ஒரே விதமான சன்மார்க்கப் பயிற்சியை அளித்துவிட முடியும் என்பதில் நான் நம்பிக்கை கொண்டிருந்தேன். ஒரு நாளில் இருபத்து நான்கு மணி நேரமும் அவர்களுடைய தந்தையாக அவர்களிடையே இருந்து வருவது என்றும் தீர்மானித்தேன். அவர்கள் பெறும் கல்விக்குச் சரியான அடிப்படை அவர்கள் ஒழுக்கத்தை வளர்த்துக்கொள்ளுவதே என்று கருதினேன். அந்த அடிப்படையைப் பலமாகப் போட்டுவிட்டால், மற்ற விஷயங்களையெல்லாம் அவர்களாகவோ அல்லது நண்பர்களின் உதவியாலோ அவர்கள் கற்றுக்கொண்டு விடுவார்கள் என்பதும் என் கருத்து.*

அதோடு இலக்கியப் பயிற்சி இருக்கவேண்டியது அவசியம் என்பதை உணர்ந்ததால் ஸ்ரீ கால்லென்பாக், ஸ்ரீ பிரக்ஜி தேசாய் ஆகியவர்களின் உதவியுடன் சில வகுப்புக்களையும் ஆரம்பித்தேன். உடலை வளர்க்க வேண்டியதன் முக்கியத்துவத்தையும் நான் குறைத்து எண்ணிவிட வில்லை. அன்றாடம் வழக்கமாக அவர்கள் செய்துவந்த காரியங்களினால் இந்த உடல் வளர்ச்சியை

---

* காந்திஜி நடத்திய பள்ளிக்கூடத்தின் நோக்கத்தைக் குறித்து அவர், 1909 ஜனவரி 9–ஆம் தேதி 'இந்தியன் ஒப்பீனியன்' பத்திரிகையில் கீழ் வருமாறு எழுதினார்:

"இப் பள்ளிக்கூடத்தின் முக்கியமான நோக்கம் மாணவர்களின் ஒழுக்கத்தை வளர்ப்பதாகும். படிப்பு, குழந்தைகளுக்கு உண்மையான பயிற்சி என்று கூறப்படுகிறது. படிப்பின் மூலமே அவர்கள் அறிவுக்கு ஆர்வத்தை விருத்தி செய்து கொள்ளுகிறார்கள். ஆனால், அறிவில் பல வகைகள் உண்டு. அவற்றில் சில தீமையானவை. மாணவர்களுக்கு ஒழுக்கம் உருவாகவில்லையென்றால், அவர்கள் தவறான வகையில்தான் அறிவை அடைந்துவிடக்கூடும். திட்டமோ, முறையோ இல்லாமல் போதித்தால் சிலர் கடவுளே இல்லை என்று வாதிப்பவர்களாகி விடுகின்றனர், மற்றவர்களோ, படிப்பிருந்தும் ஒழுக்கம் இல்லாதவர்களாகி விடுகிறார்கள். ஆகையால், இந்தப் பள்ளிக்கூடத்தின் முக்கியமான நோக்கம், அவர்களுடைய ஒழுக்க உணர்ச்சியைப் பலப்படுத்துவதேயாகும்........"

அவர்கள் பெற்று வந்தார்கள். ஏனெனில், பண்ணையில் வேலைக்காரர்களே இல்லை. சமையலிலிருந்து தோட்டி வேலை வரையில் எல்லாவற்றையும் பண்ணைவாசிகளே செய்துவந்தனர். பழ மரங்கள் பலவற்றைக் கவனித்துக்கொள்ளவும் வேண்டியிருந்தது. தோட்ட வேலையும் அதிகமிருந்தது. தோட்டவேலையில் ஸ்ரீ கால்லென்பாக்குக்கு அதிக ஆர்வம். அரசாங்கத்தின் மாதிரித் தோட்டம் ஒன்றில் இருந்ததனால் அவருக்கு இதில் அனுபவமும் இருந்தது. சமையல் வேலையில் ஈடுபடாத மற்ற எல்லாக் குழந்தைகளும், பெரியவர்களும், கொஞ்ச நேரம் தோட்ட வேலை செய்தாக வேண்டியது, அவர்களுடைய கடமை யாயிற்று. இவ்வேலையில் பெரும் பகுதியைக் குழந்தைகளே செய்து வந்தனர். குழிகளைத் தோண்டுவது, மரம் வெட்டுவது, தூக்குவது போன்றவைகளை அவர்களே செய்தார்கள். இவை அவர்களுக்கு நல்ல தேகப் பயிற்சியை அளித்தன. இவ் வேலைகளை அவர்கள் சந்தோஷத்தோடு செய்துவந்தனர். ஆகையால், அவர்களுக்கு வேறு தேகப் பயிற்சியோ, விளையாட்டுக்களோ பொதுவாகத் தேவைப்படவில்லை. இக் குழந்தைகளில் சிலர்-சிற்சில சமயங்களில் எல்லாக் குழந்தைகளுமே - வேலைக்குச் சோம்பியதும் உண்டு. சில சமயங்களில் இதைப் பார்க்காததுபோல இருந்துவிடுவேன். ஆனால், அநேகமாக அவர்களிடம் நான் கண்டிப்பாகவே இருப்பேன். இந்தக் கண்டிப்பை அவர்கள் விரும்புவதில்லை என்றே சொல்லுவேன். என்றாலும், என் கண்டிப்பை அவர்கள் ஒரு சமயமாவது எதிர்த்ததாக எனக்கு ஞாபகமில்லை. நான் அவர்களிடம் கண்டிப்பாக இருந்த சமயங்களில், ஒருவர் செய்ய வேண்டிய வேலை விஷயத்தில் விளையாட்டாக இருந்துவிடக்கூடாது என்று எடுத்துக்காட்டி அவர்கள் உணரும்படி செய்வேன். ஆனால், அந்த உறுதி அவர்களிடம் கொஞ்ச நேரத்திற்குத்தான் இருக்கும். அடுத்த கணம் அவர்கள் வேலையைப் போட்டுவிட்டு விளையாடப் போய்விடுவார்கள். என்றாலும், நாங்கள் சமாளித்துக்கொண்டு வந்தோம். அவர்கள் நல்ல உடற்கட்டும் அடைந்து வந்தார்கள். பண்ணையில் நோய் என்பதே இல்லை. நல்ல காற்றும், நீரும், உரிய வேளையில் சாப்பிடுவதும் இதற்குக் காரணங்களாகும் என்றும் சொல்ல வேண்டும்.

கைத்தொழில் பயிற்சியைப் பற்றியும் கூற வேண்டும். சிறுவர்களில் ஒவ்வொருவருக்கும் பயனுள்ள ஏதாவது ஒரு கைத்தொழிலைச் சொல்லிக் கொடுக்க வேண்டும் என்பது என் நோக்கம். ஸ்ரீ கால்லென்பாக், செருப்புத் தைக்கும் தொழிலைக் கற்றுக்கொண்டுவந்தார். இந்த வித்தையை நானும் கற்றுக்கொண்டு, அதைக் கற்றுக்கொள்ள விரும்பியவர்களுக்கும் சொல்லிக் கொடுத்தேன்.* ஸ்ரீ கால்லென்பாக்குக்குத் தச்சு வேலையி

* மகாத்மா 1932-இல் எராவ்டா சிறையிலிருந்தபோது, செருப்புத் தைப்பதில் தமக்குள்ள திறமையைக் குறித்துச் சர்தார் பட்டேலிடம் கூறினார் என்று ஸ்ரீ மகாதேவ தேசாய் தமது நாட்குறிப்பில் குறிப்பிட்டிருக்கிறார். சிறையில் இருக்கும் செருப்பைத் தைப்பவர் நன்றாகத் தைக்கவில்லை என்று சர்தார் பட்டேல் புகார் கூறியபோது

லும் கொஞ்சம் அனுபவம் உண்டு. அத் தொழிலறிந்த மற்றொருவரும் பண்ணையில் இருந்தார். ஆகவே, தச்சுத் தொழில் கற்றுக்கொடுக்கவும் ஒரு சிறு வகுப்பு ஆரம்பித்தோம். சமையல் வேலையோ, அநேகமாக எல்லாச் சிறுவர்களுக்குமே தெரியும்.

இவை யாவும் அவர்களுக்குப் புதியவை. ஒரு நாளைக்கு இவைகளை யெல்லாம் தாங்கள் கற்றுக்கொள்ள வேண்டியிருக்கும் என்று அவர்கள் கனவு கண்டதுகூட இல்லை. பொதுவாகத் தென்னாப்பிரிக்காவில் இந்தியச் சிறுவர்கள் பெற்று வந்த ஒரே பயிற்சி, படிப்பதும் எழுதுவதும், கணக்குப் போடுவதுந்தான்.

டால்ஸ்டாய் பண்ணையில் உபாத்தியாயர்கள் எதைத் தாம் செய்யவில்லையோ, அவற்றைச் செய்யுமாறு சிறுவர்களிடம் சொல்லக்கூடாது என்பதை ஒரு விதியாக்கிவிட்டோம். ஆகையால், ஒரு வேலையைச் செய்யுமாறு குழந்தைகளிடம் கூறினால், ஓர் உபாத்தியாயரும் அவர்களுடன் இருந்து அந்த வேலையைச் செய்துகொண்டிருப்பார். எனவே, சிறுவர்கள் எதைக் கற்றுக் கொண்டாலும் அதை மகிழ்ச்சியுடன் கற்றுக்கொண்டார்கள்.

இலக்கியப் பயிற்சியைப் பற்றியும் ஒழுக்கத்தை வளர்ப்பது பற்றியும் பின்னால் வரும் அத்தியாயங்களில் கவனிப்போம்.

## 33

# இலக்கியப் பயிற்சி

டால்ஸ்டாய் பண்ணையில் தேகப் பயிற்சிக்கு ஏற்பாடு செய்ததோடு தற்செயலாகத் தொழிற்கல்வியும் போதித்து வந்ததைக் குறித்து முந்திய அத்தியாயத்தில் கவனித்தோம். எனக்குத் திருப்தி யளிக்கக்கூடிய வகையில் இவை நடந்தன

---

காந்திஜி, கொஞ்சம் தோல் கிடைத்தால் தாமே செருப்புத் தைத்துச் சர்தாருக்குக் கொடுப்பதாகக் கூறினாராம். மகாத்மா மேலும் கூறியதாவது: "நீண்ட காலத்திற்கு முன்பு நான் கற்றுக்கொண்ட கலை, இன்னும் என்னிடம் இருக்கிறதா என்பதையும் பார்த்துவிடுவோம். நான் நன்றாகச் செருப்புத் தைப்பவன். என் கைத்திறமைக்கு அடையாளமாக ஒரு ஜதை செருப்பைச் சோதேப்பூரிலுள்ள காதிப் பிரதிஸ்தானக் காட்சிச் சாலையில் பார்த்துக்கொள்ளலாம். ஸோராப்ஜி அடாஜணியா இந்தியாவுக்கு வந்தபோது, சத்தியானந்த போஸ் அவர் மீது அன்பைப் பொழிந்துவிட்டார். ஆகையால், நான் தைத்த செருப்பில் ஒரு ஜதையைச் சத்தியானந்திற்கு அனுப்புமாறு என்னைக் கேட்டார். ஒரு ஜதை அனுப்பினேன், ஆனால் சத்தியானந்த பாபுவோ, அதிக அடக்கமான குணமுள்ளவர். அதைத் தாம் காலுக்குப் போட்டுக்கொள்ளக்கூடாது என்றும் தம் தலைக்கே அதை அணியாகத் தரிக்க முடியும் என்றும் சொல்லிவிட்டார். ஆகவே, அதைக் காட்சிச்சாலைக்கு அனுப்பிவிட்டார்.''

மகாத்மா தைத்த ஒரு ஜதை செருப்பை ஜெனரல் ஸ்மட்ஸுக்கு அனுப்பிய விவரத்தை 'மகாத்மா காந்தி நூல்கள் — முதல் தொகுப்'பில் 317-ஆம் பக்கத்தில் காண்க.

என்று சொல்ல முடியாவிட்டாலும் ஏறக்குறைய வெற்றிகரமாக நடந்தன என்றே சொல்லலாம். ஆனால், இலக்கியக் கல்வி அளிப்பது அதிகக் கஷ்டமான விஷயமாக இருந்தது. அதற்கு வேண்டிய வசதிகளோ, தேவையான இலக்கிய ஞானமோ என்னிடம் இல்லை. அதோடு, இத்துறையில் செலவிட வேண்டும் என நான் விரும்பிய அளவு அவகாசமும் எனக்குக் கிடைக்க வில்லை. உடல் உழைப்பில் நான் ஈடுபட்டு வந்ததால், மாலையில் முற்றும் களைத்துப் போய்விடுவேன். இவ்விதம் எனக்கு ஓய்வு மிகவும் அவசியம் என்றிருக்கும் நேரத்தில்தான் வகுப்புகளை நான் நடத்தவேண்டியிருந்தது. ஆகையால், வகுப்புகளை நடத்துவதற்கு எனக்கு மன உற்சாகம் இராது. தூங்கிவிடாமல் விழித்துக் கொண்டிருப்பதற்கே அதிகச் சிரமப்பட வேண்டியதாயிற்று. காலை நேரமெல்லாம் பண்ணை வேலைக்கும், வீட்டு வேலைகளுக்கும் சரியாகப் போய்விடும். எனவே, மத்தியானச் சாப்பாட்டிற்குப் பிறகே பள்ளிக்கூடத்திற்குரிய நேரமாக வைத்துக்கொள்ள வேண்டியதாயிற்று. இதைத் தவிரப் பள்ளிக்கூடத்திற்குத் தகுதியான நேரம் கிடைக்கவில்லை.

இலக்கியப் பயிற்சிக்கு அதிகப் பட்சம் மூன்று பாட நேரங்களை ஒதுக்கினோம். ஹிந்தி, தமிழ், குஜராத்தி, உருது மொழிகள் போதிக்கப்பட்டன. சிறுவர்களின் மொழியிலேயே அவர்களுக்குப் பாடங்களைப் போதித்தோம். ஆங்கிலமும் கற்பித்து வந்தோம். குஜராத்தி ஹிந்துக் குழந்தைகளுக்குக் கொஞ்சமாவது சமஸ்கிருதமும் சொல்லிக்கொடுக்க வேண்டியது அவசியமாயிற்று. எல்லாக் குழந்தைகளுக்குமே சரித்திரம், பூகோளம், கணக்கு இவைகளில் ஆரம்பப் பாடங்களையாவது போதிக்க வேண்டியிருந்தது.

தமிழும் உருதுவும் சொல்லிக்கொடுப்பதை நான் ஏற்றுக் கொண்டேன். எனக்குத் தெரிந்த சொற்பமான தமிழ், என் கப்பல் பிரயாண காலத்திலும், சிறையிலும் கற்றுக்கொண்ட தாகும். போப் என்பவர் எழுதிய சிறந்த தமிழ்ப் பாடப் புத்தகத்தைத் தவிர வேறொன்றையும் நான் படித்ததில்லை. ஒரு கப்பல் பிரயாணத்தில் நான் கற்றுக்கொண்டதே, உருது எழுத்துக்களைக் குறித்து எனக்கு இருந்த ஞானம். முஸ்லிம் நண்பர்களுடன் பழகியதால், நான் தெரிந்துகொண்ட சாதாரணமான பர்ஸிய, அரபுச் சொற்களே உருதுவில் எனக்குத் தெரிந்ததெல்லாம் ஆகும். உயர்தரப் பள்ளியில் நான் படித்ததற்கு மேல் எனக்குச் சமஸ்கிருதமும் தெரியாது. பள்ளிக்கூடத்தில் படித்துக் கற்றுக்கொண்டதற்கு அதிகமானது மல்ல, என் குஜராத்தி மொழி ஞானம்.

இத்தகைய மூலதனத்தைக் கொண்டே நான் சமாளித்துக் கொள்ள வேண்டியதாயிற்று. இலக்கியத் தகுதியில் என் சகாக்கள் என்னைவிட அதிக வறுமையில் இருந்தனர். ஆனால், என் நாட்டு மொழிகளில் எனக்கு இருந்த ஆசை, உபாத்தியாயராக

இருக்க முடியும் என்பதில் எனக்கு இருந்த நம்பிக்கை, என் மாணவர்களின் அறியாமை, அதைவிட அவர்களுடைய தாராள மனப்பான்மை ஆகியவைகளெல்லாம் சேர்ந்து என் வேலையை எளிதாக்கின.

தமிழ்ச் சிறுவர்கள் எல்லோரும் தென்னாப்பிரிக்காவில் பிறந்தவர்கள். ஆகையால், அவர்களுக்குத் தமிழ் அவ்வளவாகத் தெரியாது. தமிழ் எழுத்துக்கள் அவர்களுக்குக் கொஞ்சமும் தெரியாது. ஆகவே, அவர்களுக்கு நான் தமிழ் எழுத்துக்களையும் ஆரம்ப இலக்கண விதிகளையும் சொல்லிக்கொடுக்க வேண்டியிருந்தது. இது மிகவும் எளிதானதே. தமிழில் பேசுவதில் என்னை எப்பொழுதும் தாங்கள் தோற்கடித்துவிட முடியும் என்பதை என் மாணவர்கள் அறிவார்கள். ஆங்கிலம் தெரியாத தமிழர்கள் என்னைப் பார்க்க வந்தபோது அம் மாணவர்கள் என் மொழிபெயர்ப்பாளர்களாக இருந்தனர். எனக்கிருந்த அறியாமையை என் மாணவர்களுக்குத் தெரியாமல் மறைக்க நான் என்றுமே முயன்றதில்லையாகையால், நான் சந்தோஷமாகவே சமாளித்து வந்தேன். உண்மையாகவே எல்லா விஷயங்களிலும் நான் எவ்விதம் இருக்கிறேன் என்பதை அவர்களுக்குக் காட்டி வந்தேன். ஆகையினால், அம் மொழியில் எனக்கு ஒன்றுமே தெரியாமல் இருந்த போதிலும் அவர்களுடைய அன்பையும் மரியாதையையும் மாத்திரம் நான் என்றுமே இழந்ததில்லை. முஸ்லிம் சிறுவர்களுக்கு உருது சொல்லிக்கொடுப்பது இதைவிட எளிதாக இருந்தது. அம் மொழியின் எழுத்துக்கள் அவர்களுக்குத் தெரியும். படிக்கும்படியும், கையெழுத்தை விருத்தி செய்து கொள்ளுமாறும் அவர்களை உற்சாகப்படுத்துவதே நான் செய்ய வேண்டியிருந்ததெல்லாம்.

இச் சிறுவர்களில் பெரும்பாலானவர்கள், எழுத்து வாசனையையே இதற்கு முன்னால் அறியாதவர்கள்; பள்ளிக்கூடங்களுக்குச் சென்றும் அறியாதவர்கள். ஆனால், அவர்களுக்கு இருந்த சோம்பலைப் போக்கி, அவர்கள் படிக்கும்படி மேற்பார்வை பார்ப்பதைத் தவிர அவர்களுக்கு நான் சொல்லிக்கொடுக்க வேண்டியது அதிகமில்லை என்பதை அனுபவத்தில் கண்டேன். இவ்வளவோடு நான் திருப்தியடைந்துவிட்டதால், பல வயதையுடையவர்களையும், வெவ்வேறு பாடங்களைப் படிப்பவர்களையும் ஒரே வகுப்பில் வைத்துச் சமாளிப்பது சாத்தியமாயிற்று.

பாடப் புத்தகங்களின் அவசியத்தைக் குறித்துப் பிரமாதமாகக் கூறப்படுகிறது. ஆனால், அவை அவசியம் என்று எனக்குத் தோன்றவே இல்லை. கிடைத்த பாடப் புத்தகங்களைக்கூட நான் அவ்வளவாகப் பயன்படுத்திக் கொண்டதாக எனக்கு நினைவு இல்லை. ஏராளமான புத்தகங்களைப் பிள்ளைகளின் மேல் சுமத்துவது அவசியம் என்பதையும் நான் காணவில்லை. மாணவருக்கு உண்மையான பாடப் புத்தகம் உபாத்தியாயரே என்

பதை நான் எப்பொழுதும் உணர்ந்து வந்தேன். என் உபாத்தியாயர்கள் புத்தகங்களிலிருந்து எனக்குச் சொல்லிக்கொடுத்த எதுவும் எனக்கு நினைவில் இல்லை. ஆனால், புத்தகங்களைக் கொண்டல்லாமல் தனியாக அவர்கள் எனக்குச் சொல்லிக் கொடுத்தவையெல்லாம் இப்பொழுதுங்கூடத் தெளிவாக என் நினைவில் இருக்கின்றன.

எப்பொழுதுமே குழந்தைகள் கண்ணால் பார்த்துத் தெரிந்து கொள்ளுவதைவிட அதிகமாகவும், கஷ்டமின்றியும் காதால் கேட்டுத் தெரிந்துகொள்ளுகின்றனர். என் பையன்களுடன் நான் எந்தப் புத்தகத்தையும் முதல் பக்கத்திலிருந்து கடைசிப் பக்கம் வரையில் படித்து முடித்ததாக எனக்கு ஞாபகம் இல்லை. ஆனால், பல புத்தகங்களிலும் நான் படித்துத் தெரிந்துகொண்டவைகளை யெல்லாம் என்னுடைய சொந்த நடையில் அவர்களுக்குச் சொல்லி வந்தேன். அவை இன்னும் அவர்கள் ஞாபகத்தில் இருந்து வருகின்றன என்று நான் தைரியமாகச் சொல்லுவேன். புத்தகங்களிலிருந்து படிப்பவைகளை நினைவில் வைத்துக்கொள்ளுவது அவர்களுக்குச் சிரமமாக இருந்தது. ஆனால், நான் வாய்மொழியாகச் சொன்னவைகளை யெல்லாம் வெகு எளிதாக அவர்கள் திரும்பச் சொல்லிவிட முடிந்தது. புத்தகத்தைப் படிப்பது அவர்களுக்குக் கடினமாக இருந்தது. ஆனால், சொல்லுகிற விஷயத்தை அவர்களுக்குச் சுவையாக இருக்கும்படி மாத்திரம் நான் சொல்லிவிடுவேனாயின், அவைகளைக் கேட்பதே அவர்களுக்கு இன்பமாக இருந்தது. நான் பேசியதைக் கேட்டுவிட்டு, அதன் பேரில் அவர்கள் கேட்ட கேள்விகளிலிருந்து, அவர்கள் நான் கூறியதை எவ்வளவு தூரம் புரிந்துகொண் டிருக்கிறார்கள் என்பதை நான் அளந்தறிய முடிந்தது.

## 34

# ஆன்மப் பயிற்சி

சிறுவர்களின் உடல், அறிவுப் பயிற்சியைவிட அவர்களுடைய ஆன்மிகப் பயிற்சியே இன்னும் அதிகக் கஷ்டமானதாக இருந்தது. ஆன்மப் பயிற்சிக்கு நான் சமய நூல்களை அவ்வளவாக நம்பியிருக்க வில்லை. என்றாலும் ஒவ்வொரு மாணவனும் தன் சமயத்தைக் குறித்த மூலாதாரமான விஷயங்களை அறிந்திருப்பதோடு அச் சமய சம்பந்தமான நூல்களைப்பற்றியும் பொதுவாகத் தெரிந்திருப்பது அவசியம் என்று கருதினேன். ஆகவே, என்னால் இயன்றவரையில், அத்தகைய அறிவு அவர்களுக்கு இருக்கும்படி செய்து வந்தேன். ஆனால், அது அறிவுப் பயிற்சியின் ஒரு பகுதியே என்பது என் கருத்து. டால்ஸ்டாய் பண்ணையில் சிறுவர்களுக்குக் கல்வி போதிக்கும் பணியை நான் மேற்கொள்ளுவதற்கு வெகு காலத்திற்கு முன்பே, ஆன்மப் பயிற்சி அதனளவில்

தனியானது என்பதை அறிந்திருந்தேன். ஆன்மாவை வளர்ப்பது என்பது, ஒழுக்கத்தை வளர்த்து கடவுளைப் பற்றிய ஞானத்தை அடைவதற்கு ஒருவரைப் பாடுபடும்படி செய்வதோடு தன்னைத் தானே அறியச் செய்வதுமாகும். இளைஞருக்கு அளிக்கவேண்டிய பயிற்சியில் இது முக்கியமானதோர் பகுதி என்று கருதினேன். ஆன்ம வளர்ச்சியோடு தொடர்பில்லாத எல்லாப் பயிற்சியும் பயனற்றது என்றும், அது தீமையாகவும் ஆகக்கூடும் என்றும் எண்ணினேன்.

வாழ்க்கையில் நான்காவது நிலையான சன்னியாச ஆசிரமத்தை அடைந்த பிறகே ஆன்ம ஞானத்தை அடையமுடியும் என்ற மூட நம்பிக்கை இருந்துவருகிறது என்பதை நான் நன்கு அறிவேன். ஆனால், மதிப்பதற் கரியதான இந்த அனுபவத்திற்கு வேண்டிய முயற்சியை வாழ்க்கையின் கடைசிக் கட்டத்தை அடையும் வரையில் தள்ளிவைத்துக்கொண்டு போனால், பிறகு அடைவது கிழப்பருவத்தையே யன்றி ஆன்ம ஞானத்தை அன்று. பரிதாபகரமான இரண்டாவது குழந்தைப் பருவத்திற்குச் சமமான அந்த முதுமைப் பருவம், பூமிக்குப் பாரமாக வாழ்வதேயாகும். நான் குழந்தைகளுக்குப் பாடம் கற்பித்தபோதே 1911–12-ம் ஆண்டிலேயே, இக் கருத்தைக் கொண்டிருந்தேன் என்பது எனக்கு நன்றாக நினைவில் இருக்கிறது. ஆனால், என்னுடைய இக் கருத்துக்களை இதே முறையில் நான் அப்பொழுது எடுத்துச் சொல்லாமல் இருந்திருக்கக் கூடும்.

அப்படியானால், ஆன்மப் பயிற்சியை அளிப்பது எப்படி? குழந்தைகள், தோத்திரப் பாடல்களை மனப்பாடம் செய்து பாடும்படி செய்தேன். நல்லொழுக்கத்தைப் போதிக்கும் நூல்களிலிருந்து அவர்களுக்குப் படித்துச் சொன்னேன். ஆனால், இவை யெல்லாம் எனக்குத் திருப்தி யளிக்கவில்லை. குழந்தைகளுடன் நான் நெருங்கிப் பழக ஆரம்பிக்கவே, நூல்களின் மூலம் அவர்களுக்கு ஆன்மப் பயிற்சியை அளித்துவிட முடியாது என்பதைக் கண்டேன். எவ்விதம் தேகாப்பியாசங்களின் மூலமே உடற்பயிற்சியும், அறிவு அப்பியாசங்களினாலேயே அறிவுப் பயிற்சியும் அளிக்க முடியுமோ அவ்வாறே ஆன்ம சாதனங்களினாலேயே ஆன்மப் பயிற்சியை அளிக்க முடியும். ஆன்ம சாதனப் பயிற்சியோ, முழுக்க முழுக்க உபாத்தியாயரின் வாழ்க்கையையும் ஒழுக்கத்தையும் பொறுத்தது. ஓர் உபாத்தியாயர், குழந்தைகளின் நடுவில் இருக்கும்போதும் சரி, தனியாக இருக்கும்போதும் சரி, தம்முடைய குணத்திலும் செயலிலும் எப்பொழுதும் அதிகக் கவனத்துடன் இருக்க வேண்டும்.

ஓர் உபாத்தியாயர் மாணவர்களுக்குப் பல மைல்கள் தொலைவில் இருக்கும்போதும், தமது வாழ்க்கை முறையைக் கொண்டு அம்மாணவர்களின் ஆன்மப் பயிற்சிக்கு உதவவோ, தீமை செய்யவோ முடியும். நான் பொய்யனாக இருந்துகொண்டு உண்மை பேசும்படி மாணவர்களுக்குப் போதிப்பது என்பது

வீண் வேலை. தாம் கோழையாக இருக்கும் ஓர் உபாத்தியாயர், தம்மிடம் படிக்கும் மாணவர்களை வீரர்களாக்கிவிடவே முடியாது. புலனடக்கம் என்பதே தெரியாத ஓர் ஆசிரியர், புலனடக்கத்தை மாணவர்களுக்குப் போதித்துவிடவும் முடியாது. ஆகையால், என்னுடன் இருக்கும் பிள்ளைகளுக்கும் பெண்களுக்கும் நானே எப்பொழுதும் உதாரண பாடமாக இருக்கவேண்டும் என்பதைக் கண்டேன். இவ்விதம் அவர்கள் என் உபாத்தியாயர் களாயினர். அவர்களுக்காகவேனும் நான் நல்லவனாக இருந்து நேர்மையுடன் வாழவேண்டும் என்பதை நான் கற்றுக் கொண்டேன். டால்ஸ்டாய் பண்ணையில் இருந்தபோது எனக்கு நானே அதிகமாக விதித்துக்கொண்ட கட்டுத்திட்டங்களும் புலனடக்கங்களும், பெரும்பாலும் என் பாதுகாப்பிலிருந்த குழந்தைகளுக்காகவே என்றும் சொல்லலாம்.

அங்கே இருந்த பையன்களில் ஒருவன் முரடன்; அடங்காப் பிடாரி; அவன் பொய் சொல்லுவான்; யாருடனும் சண்டை போடுவான். ஒரு நாள் அவன் துஷ்டத்தனம் எல்லை மீறிப்போய் விட்டது. எனக்கு ஒரே கவலையாகிவிட்டது. சிறுவர்களை நான் தண்டித்ததே இல்லை. ஆனால், அச்சமயத்தில், எனக்கு அதிகக் கோபம் வந்துவிட்டது. அவனுக்குப் புத்திமதி கூறித் திருத்தப் பார்த்தேன். அவனோ, பிடிவாதமாக இருந்ததோடு என்னையும் எதிர்த்து மிதமிஞ்சிப் போகப் பார்த்தான். கடைசியாகப் பக்கத்திலிருந்த ரூல் கழியை எடுத்து அவன் கையில் ஓர் அடி கொடுத்தேன். அவனை அடித்தபோதே என் உடம்பெல்லாம் நடுங்கியது. இதை அவனும் பார்த்திருக்கவே வேண்டும். அவர்கள் எல்லோருக்குமே இது புதிய அனுபவம். அப் பையன் கதறி அழுதான். தன்னை மன்னிக்குமாறு வேண்டினான். அவன் அழுதது, பட்ட அடி அவனுக்கு வேதனையாக இருந்ததனால் அல்ல. அவன் பதினேழு வயதுள்ள திடகாத்திரமானவன். விரும்பியிருந்தால், என்னை அவன் திருப்பி அடித்திருக்கவும் கூடும். ஆனால், அடிக்க வேண்டிய நிலைமை எனக்கு ஏற்பட்டதைக் குறித்து நான் அடைந்த மனவேதனையை அவன் அறிந்து கொண்டான். இச் சம்பவத்திற்குப் பிறகு அவன் எனக்குப் பணியாமல் இருந்ததே கிடையாது. என்றாலும், பலாத்காரத்தை உபயோகித்ததற்காக நான் இன்னும் வருத்தப்படுகிறேன். அன்று அவனுக்கு முன்னால் என்னுள் இருக்கும் ஆன்ம உணர்ச்சிக்குப் பதிலாக மிருக உணர்ச்சியையே காட்டிவிட்டேன் என்று அஞ்சுகிறேன்.

அடிப்பது போன்ற தண்டனையே கூடாது என்று நான் எப்பொழுதும் எதிர்த்து வந்திருக்கிறேன். என் குமாரர்களில் ஒருவனை ஒரே தடவை மாத்திரம் நான் அடித்துவிட்டதாக எனக்கு ஞாபகம். ஆகையால், அன்று நான் ரூல் தடியை உபயோகித்தது சரியா, தவறா என்பதில் நான் இன்னும் ஒரு முடிவுக்கு வர முடியாதவனாகவே இருக்கிறேன். கோபத்தினாலும்

தண்டிக்க வேண்டும் என்ற ஆர்வத்தினாலும் தூண்டப் பெற்று நான் அவ்விதம் செய்ததால் ஒரு வேளை அது தவறானதாக இருக்கலாம். என் மனவேதனையை வெளிப்படுத்துவதாக மாத்திரமே அது இருக்குமாயின், அது நியாயமானதே என்று நான் கருதியிருப்பேன். ஆனால், இவ்விஷயத்தில் நோக்கம், கலப்பானதாகவே இருந்தது.

இச் சம்பவம், என்னை ஆழ்ந்து சிந்திக்கும்படி செய்தது. மாணவர்களை திருத்துவதற்குச் சிறந்த முறையையும் அது எனக்குப் போதித்தது. ஆனால், அம்முறை நான் கூறிய அந்தச் சந்தர்ப்பத்தில் எவ்வளவு தூரம் பயன்பட்டிருக்கும் என்று நான் கூற முடியாது. இளைஞன் சீக்கிரத்திலேயே அச்சம்பவத்தை மறந்து விட்டான். எப்பொழுதேனும் அவனிடம் அதிக அபிவிருத்தி காணப்பட்டதாகவும் எனக்குத் தோன்றவில்லை. ஆனால், இச் சம்பவம் மாணவர்கள் விஷயத்தில் உபாத்தியாயரின் கடமை என்ன என்பதை நான் நன்றாக அறிந்துகொள்ளும்படி செய்தது.

சிறுவர்கள் தவறாக நடந்துகொண்டுவிட்ட சம்பவங்கள் இதற்குப் பிறகும் நடந்தது உண்டு. ஆனால், அடி கொடுக்கும் தண்டனையில் அதன் பிறகு நான் இறங்கியதே இல்லை. இவ்விதம் என்னிடம் இருந்த சிறுவர் சிறுமியருக்கு ஆன்மிகப் பயிற்சி அளிக்க நான் செய்த முயற்சியில் ஆன்மாவின் சக்தியை மேலும் மேலும் நன்றாக அறியலானேன்.

# 35

# தானியத்தில் பதர்

அதற்கு முன்னால் எனக்கு என்றுமே தோன்றாத ஒரு பிரச்னையை டால்ஸ்டாய் பண்ணையில் ஸ்ரீ கால்லென்பாக் என் கவனத்திற்குக் கொண்டு வந்தார். பண்ணையிலிருந்த பையன்களில் சிலர் கெட்டவர்கள், கட்டுக்கடங்காதவர்கள் என்பதை முன்பே கூறியிருக்கிறேன். இவர்களில் ஒன்றுக்குமே உதவாதவர்களும் இருந்தனர். இவர்களுடன் என் குமாரர்கள் மூவரும் சேர்ந்து பழகி வந்தார்கள். என் குமாரர்களின் தரத்திலிருந்த மற்றச் சிறுவர்களும் அது போலவே பழகி வந்தார்கள். இது ஸ்ரீ கால்லென்பாக்குக்குக் கவலையாகி விட்டது. ஆனால், என் குமாரர்களை அடங்காப் பிடாரிகளான அச்சிறுவர்களுடன் சேர்த்து வைப்பது சரியல்ல என்பதிலேயே அவருடைய கவனமெல்லாம் ஈடுபட்டிருந்தது.

ஒரு நாள் அவர் மனம்விட்டுச் சொல்லிவிட்டார். "உங்கள் குமாரர்களைக் கெட்டவர்களுடன் பழகவிடும் உங்கள் முறை எனக்குப் பிடிக்கவே இல்லை. இதனால் ஏற்படக்கூடிய பலன் ஒன்றே ஒன்றுதான். இந்தக் கெட்ட சகவாசத்தினால் அவர்களும் கெட்டுப்போவார்கள்" என்றார்.

இப் பிரச்னை அச் சமயம் எனக்குக் கலக்கத்தை உண்டாக்கியதா என்பது எனக்கு நினைவு இல்லை, ஆனால், அவருக்கு நான் பதில் சொன்னேன் என்பது எனக்கு ஞாபகமிருக்கிறது: "என் பிள்ளைகளுக்கும், துஷ்டர்களாக இருக்கும் பிள்ளைகளுக்கும் நான் எவ்வாறு வேற்றுமை பாராட்ட முடியும்? இரு தரப்பார் விஷயத்திலும் நான் சமமான பொறுப்பை வகிப்பவன். நான் அழைத்ததன் பேரிலேயே இக் குழந்தைகள் இங்கே வந்திருக்கிறார்கள். கொஞ்சம் பணம் கொடுத்து அவர்களை நான் போகச் சொல்லி விட்டால் அவர்கள் திரும்ப ஜோகன்னஸ்பர்க்கிற்கு ஓடிப்போய்த் தங்கள் பழைய வழிகளிலேயே நடக்கத் தலைப்பட்டுவிடுவார்கள். ஓர் உண்மையை உங்களுக்குச் சொல்லுகிறேன். அவர்கள் இங்கே வந்திருப்பதனால் எனக்கு ஏதோ நன்மையைச் செய்திருப்பதாக அவர்களும், அவர்களுடைய பெற்றோர்களும் நினைத்திருக்கக்கூடும். இங்கே அவர்கள் பலவிதமான அசௌகரியங்களுக்கு உள்ளாக வேண்டியிருக்கிறது என்பதை நீங்களும் நானும் நன்றாக அறிவோம். ஆனால், என் கடமை தெளிவானது. அவர்களை நான் இங்கே வைத்திருக்க வேண்டும். ஆகையால், என் குமாரர்களும் அவர்களுடன் சேர்ந்து அவசியம் வாழ்ந்தே ஆகவேண்டும். மற்றச் சிறுவர்களைவிடத் தாங்கள் உயர்வானவர்கள் என இன்றிலிருந்து உணரும்படி என் புத்திரர்களுக்கு நான் போதிக்க வேண்டும் என்று நிச்சயமாக நீங்கள் விரும்பமாட்டீர்கள். அந்த உயர்வு எண்ணத்தை அவர்கள் புத்தியில் புகுத்துவது அவர்களைத் தவறான வழியில் செலுத்துவதேயாகும். மற்றச் சிறுவர்களுடன் அவர்கள் பழகுவது அவர்களுக்கு நல்ல ஒழுங்கு முறையை அளிப்பதாக இருக்கும். நல்லது இன்னது, கெட்டது இன்னது என்பதை அவர்கள் தாங்களாகவே தெரிந்துகொள்ளுவார்கள். என் புதல்வர்களிடம் உண்மையாகவே ஏதாவது நல்லது இருக்குமாயின் அவர்களுடன் பழகுகிறவர்களிடமும் அது பிரதி பலிக்கும் என்று நாம் ஏன் நம்பக்கூடாது? அது எப்படியானாலும் சரி, அவர்களை நான் இங்கேதான் வைத்திருக்க வேண்டும். அதில் சிறிது ஆபத்து இருந்தபோதிலும், அதற்கும் நாம் தயாராக இருக்க வேண்டியதே" என்றேன்.

ஸ்ரீ கால்லென்பாக் தலையை அசைத்துக்கொண்டார். இதன் பலன் தீமையானதாக இருந்தது என்று நான் நினைக்கவில்லை. இந்தச் சோதனையினால் என் குமாரர்கள் எந்தக் கெடுதலையும் அடைந்துவிட்டதாகவும் நான் கருதவில்லை. ஆனால், இதற்கு மாறாக அவர்கள் சில நன்மைகளையும் அடைந்தார்கள் என்பதை நான் காண முடிகிறது. தாங்கள் உயர்வானவர்கள் என்ற எண்ணம் அவர்களிடம் சிறிதளவு இருந்திருந்தாலும் அது அழிந்துவிட்டது. எல்லாவிதமான குழந்தைகளுடனும் தாராளமாகக் கலந்துகொள்ள அவர்கள் கற்றுக்கொண்டார்கள்; அவர்கள் சோதிக்கப்பட்டுக் கட்டுப்பாடுகளையும் பெற்றனர்.

கெட்ட குழந்தைகளுடன் சேர்த்து நல்ல குழந்தைகளுக்குப் போதித்தால், அவர்களுடன் சேர்ந்திருக்கும்படி செய்தால்,

இந்தப் பரீட்சை, பெற்றோர் அல்லது போஷகரின் ஜாக்கிரதையான கண்காணிப்பில் மாத்திரம் நடப்பதாக இருந்தால், நல்ல குழந்தைகள் எதையும் இழந்து விடுவதில்லை. இதுவும் இது போன்ற மற்றச் சோதனைகளும் இதையே எனக்குக் காட்டியிருக்கின்றன.

வெளிக் காற்றே படக்கூடாது என்று குழந்தைகளைப் பத்திரமாக மூடிவைத்து வளர்த்து விடுவதால் மாத்திரம், அவர்களை ஆசாபாசங்களோ, தீமைகளோ பற்றாமல் இருந்து விடுவதில்லை. ஆனல், பலவிதமான முறைகளில் வளர்க்கப்பட்ட சிறுவர், சிறுமிகளைச் சேர்த்து வைத்து அவர்களுக்குப் போதிக்கும்போது பெற்றோரும் உபாத்தியாயர்களும் கடுமையான சோதனைக்கு ஆளாகிறார்கள் என்பது மாத்திரம் உண்மை. அவர்கள் எப்பொழுதுமே உஷாராக இருக்க வேண்டியிருக்கிறது.

## 36

# பிராயச்சித்தமாகப் பட்டினி

பையன்களையும் பெண்களையும் சரியான வழியில் வளர்த்து அவர்களுக்குக் கல்வி போதிப்பது எவ்வளவு கஷ்டமானது என்பது நாளுக்கு நாள், மேலும் மேலும், எனக்குத் தெளிவாகிக் கொண்டு வந்தது. அவர்களுக்கு உண்மையான உபாத்தியாயராகவும் பாதுகாப்பாளனகவும் இருக்க வேண்டுமாயின், நான் அவர்களுடைய உள்ளங்களைத் தொடவேண்டும். அவர்களுடைய இன்ப துன்பங்களில் நான் பங்குகொள்ள வேண்டும். அவர்களுக்கு ஏற்படும் பிரச்னைகளைத் தீர்ப்பதில் நான் உதவி செய்ய வேண்டும். இளமையின் காரணமாக அவர்களுக்கு எழும் அபிலாஷைகளையெல்லாம் சரியான வழிகளில் நான் கொண்டு செலுத்த வேண்டும்.

சிறையிலிருந்து சில சத்தியாக்கிரகிகள் விடுதலையாகவே டால்ஸ்டாய் பண்ணையில் வசிப்பவர்களின் தொகை மிக அதிகமாகிவிட்டது. அங்கேயே இருந்த சிலர் போனிக்ஸைச் சேர்ந்தவர்கள். ஆகவே, அவர்களை நான் அங்கேயே அனுப்பிவிட்டேன். இங்கே அதிகக் கஷ்டமான நிலைமையைச் சமாளிக்க வேண்டியதாயிற்று.

அந்த நாட்களில் நான் ஜோகன்னஸ்பர்க்கிற்கும் போனிக்ஸுக்கும் போய்வந்த வண்ணம் இருக்க வேண்டியதாயிற்று. ஒரு சமயம் நான் போனிக்ஸில் இருந்தபோது, ஆசிரம வாசிகளில் இருவர் ஒழுக்கம் தவறி நடந்து விட்டார்கள் என்ற செய்தி எனக்கு எட்டியது. சத்தியாக்கிரகப் போராட்டத்தில் ஒரு தவறு அல்லது ஒரு தோல்வி போன்ற செய்திகூட எனக்கு அவ்வளவு அதிர்ச்சியை உண்டாக்கியிராது. ஆனல், இச் செய்தியோ, எனக்கு இடி விழுந்ததுபோல் ஆயிற்று. அன்றே போனிக்

ஸுக்குப் போக ரெயிலில் புறப்பட்டேன். ஸ்ரீ கால்லென்பாக்கும் என்னுடன் வருவதாகப் பிடிவாதமாகக் கூறினர். அப்பொழுது நான் எந்தவிதமான நிலைமையில் இருந்தேன் என்பதை அவர் கவனித்தார். எனக்கு இவ்வளவு கலக்கத்தை உண்டாக்கி விட்ட செய்தியைக் கொண்டு வந்தவர் அவரேயாகையால் நான் தனியாக அங்கே போவது என்பதை எண்ணவும் அவரால் முடியவில்லை.

என் கடமை என்ன என்பது பிரயாணத்தின் போது எனக்குத் தெளிவாகத் தோன்றியது. தமது பாதுகாப்பில் இருப்பவர்கள் அல்லது தம்மிடம் மாணவர்களாக இருப்பவர்கள் செய்து விடும் தவறுக்குப் பாதுகாப்பாளர் அல்லது உபாத்தியாயர், ஓரளவுக்காவது பொறுப்பாளியாவார் என்பதை உணர்ந்தேன். எனவே, சம்பந்தப்பட்ட சம்பவம் சம்பந்தமாக என் பொறுப்பு இன்னதென்பது எனக்குப் பட்டப்பகல் போல் தெளிவாயிற்று. இவ் விஷயத்தில் என் மனைவி எனக்கு முன்பே எச்சரிக்கை செய்திருந்தாள். ஆனல், நான் எல்லோரையும் நம்பிவிடும் சுபாவமுள்ளவனகையால் அந்த எச்சரிக்கையை அலட்சியம் செய்து விட்டேன். குற்றம் செய்துவிட்டவர்கள், என் மன வேதனையையும், தாங்கள் செய்துவிட்டது எவ்வளவு பெரிய குற்றம் என்பதையும் உணரும்படி செய்வதற்குள்ள ஒரே வழி, பிராயச்சித்தத் தவத்தை நான் மேற்கொள்ளுவதுதான் என்பதை அறிந்தேன். ஆகையால், ஏழு நாட்களுக்கு உண்ணாவிரதம் இருப்பது, நாலரை மாத காலத்திற்குத் தினம் ஒரு வேளையே சாப்பிடுவது என்று விரதம் எடுத்துக்கொண்டேன். நான் இவ்விதம் செய்யாதிருக்கும்படி என் மனத்தை மாற்ற ஸ்ரீ கால்லென்பாக் முயன்றும் பயன்படவில்லை. என்னுடைய இப் பிராயச்சித்தத் தவம் சரியானதே என்பதை அவர் முடிவில் ஒப்புக்கொண்டார். தாமும் அவ் விரதத்தை மேற்கொள்ளப் போவதாகப் பிடிவாதம் செய்தார். அவருடைய தெள்ளத் தெளிவான அன்பை எதிர்க்க என்னல் ஆகவில்லை.

நான் செய்துகொண்ட இத் தீர்மானம் என் மனத்திலிருந்து பெரும் பாரத்தை நீக்கியதால் நான் அதிக மன ஆறுதலை அடைந்தேன். குற்றம் செய்துவிட்டவர்கள்மீது இருந்த கோபம் குறைந்தது. அதற்குப் பதிலாக அவர்கள் மீது எனக்குப் பரிசுத்தமான இரக்கமே உண்டாயிற்று. இவ்வாறு எவ்வளவோ மன ஆறுதல் அடைந்தவனக நான் போனிக்ஸ் போய்ச் சேர்ந்தேன். அச் சம்பவத்தைக் குறித்து மேற்கொண்டும் விசாரித்தேன். நான் அறிய வேண்டிய மற்றும் பல விவரங்களையும் தெரிந்து கொண்டேன்.

எனது பிராயச்சித்தத் தவம் எல்லோருக்கும் மனக் கஷ்டத்தை உண்டாக்கியது. ஆனல், அதனல் நிலைமை தெளிவடைந்தது. பாவம் செய்துவிடுவது எவ்வளவு பயங்கரமான காரியம் என்பதை ஒவ்வொருவரும் உணர்ந்து கொண்டார்கள்.

பையன்கள், பெண்கள், ஆகியோருக்கும் எனக்கும் இருந்த பந்தமும் பலமானதாகவும், உண்மையானதாகவும் ஆயிற்று. இச்சம்பவத்தினுல் ஏற்பட்ட ஒரு நிலைமையின் காரணமாகக் கொஞ்ச காலத்திற்குப் பிறகு பதினுன்கு நாட்கள் உண்ணுவிரதத்தை நான் மேற்கொள்ள வேண்டியதாயிற்று. அதன் பலன்கள் நான் எதிர்பார்த்ததையும்விட அதிகமாகவே இருந்தன.

மாணவர்கள் ஏதாவது தகாத காரியத்தைச் செய்துவிட்டால் அதற்காக உண்ணுவிரதம் இருக்க வேண்டியது உபாத்தியாயரின் கடமை என்பதை இச் சம்பவங்களிலிருந்து எடுத்துக்காட்டுவது அல்ல என் நோக்கம். என்ருலும், சில சமயங்களில் இவ்விதக் கடுமையான பரிகாரம் அவசியமாகிறது என்று நான் கருதுகிறேன். ஆனுல், இப்பரிகாரத்தை மேற்கொள்ளுவதற்குத் தெளிவான நோக்கமும் ஆன்மிகத் தகுதியும் இருக்க வேண்டியது அவசியம். உபாத்தியாயருக்கும் மாணவருக்குமிடையே உண்மையான அன்பு இல்லாதபோது, மாணவர் செய்துவிட்ட தவறைக் குறித்து மனப்பூர்வமான துயரம் உபாத்தியாயருக்கு ஏற்படாதபோது, உபவாசம் பொருந்தாது. அது தீமையானதாகவும் ஆகக்கூடும். இத்தகைய விஷயங்களில் உண்ணுவிரதம் இருப்பது என்பது சரிதாஞ என்பதைச் சந்தேகிக்க இடமிருந்த போதிலும், மாணவர்களின் தவறுக்கு உபாத்தியாயர்கள் பொறுப்பாளிகளாவார்கள் என்பதில் மாத்திரம் சந்தேகமே இல்லை.

முதல் பிராயச்சித்த விரதம் எங்களில் யாருக்கும் கஷ்டமானதாக இல்லை. என்னுடைய வழக்கமான காரியங்களில் எதையும் நான் நிறுத்தி வைக்கவோ, நிறுத்திவிடவோ நேரவில்லை. இந்தப் பிராயச்சித்தத் தவம் இருந்த காலம் முழுவதும் நான் பழ ஆகாரம் மட்டுமே சாப்பிட்டு வந்தேன் என்பதை நினைவுபடுத்த வேண்டும். இரண்டாவது உபவாச காலத்தின் பிற்பகுதியில் எனக்கு அதிகக் கஷ்டமாகவே இருந்தது. ராம நாமத்தின் அற்புதமான சக்தியை அச்சமயம் நான் முற்றும் அறிந்திருக்கவில்லை. கஷ்டத்தைச் சகித்துக் கொள்ளுவதற்கு வேண்டிய சக்தி, அந்த அளவுக்கு என்னிடம் குறைவாகவே இருந்தது. அதோடு பட்டினி விரதத்தின் முறைகளையும் நான் அப்பொழுது நன்கு அறிந்தவனல்ல. பட்டினிக் காலத்தில் தண்ணீர் குடிப்பது எவ்வளவுதான் குமட்டலை உண்டாக்குவதாகவும் ருசியற்றதாகவும் இருந்தாலும், நிறையத் தண்ணீர் குடிக்க வேண்டியது முக்கியமானது என்பதும் எனக்குத் தெரியாது. மேலும், முதல் உண்ணுவிரதம் எளிதாக இருந்தது, இரண்டாவது உண்ணுவிரத விஷயத்தில் நான் அலட்சியமாக இருக்கும்படி செய்துவிட்டது. முதல் உண்ணுவிரதத்தின்போது டாக்டர் கூனேயின் முறைப்படி நான் தினமும் குளித்து வந்தேன். ஆனுல், இரண்டாவது உண்ணுவிரதத்தின் போது, இரண்டு மூன்று நாட்களுக்குப் பிறகு அவ்வாறு குளிப்பதை விட்டுவிட்டேன். தண்ணீர் குடிக்கப் பிடிக்காததனுலும், குடித்தால்

குமட்டல் உண்டானதனுலும் மிகக் குறைவாகவே தண்ணீர் குடித்தேன். இதனல், தொண்டை வறண்டு பலவீன மாயிற்று. கடைசி நாட்களில் மிகவும் மெல்லிய குரலிலேயே என்னல் பேச முடிந்தது. என்ருலும், நான் செய்ய வேண்டிய வேலைகளைச் செய்து வந்தேன். எழுதவேண்டிய அவசியம் வந்தபோது, நான் சொல்லிப் பிறரை எழுதச் செய்தேன். ராமாயணம் முதலிய சமய நூல்களைப் படிக்கச் சொல்லித் தவருமல் கேட்டு வந்தேன். அவசரமான காரியங்களைக் குறித்து விவாதிப்பதற்கும் ஆலோசனை கூறுவதற்கும் வேண்டிய பலம் எனக்கு இருந்தது.

# 37
# கோகலேயைச் சந்திக்க

தென்னுப்பிரிக்கா பற்றிய நினைவுகள் பலவற்றைக் கூருமல் விட்டுவிட்டே நான் மேலே செல்ல வேண்டும். *1914*-ல் சத்தியாக்கிரகப் போராட்டம் முடிவடைந்த சமயம், லண்டன் வழியாக இந்தியாவுக்குத் திரும்புமாறு கோகலே எனக்கு அறிவித்திருந்தார். ஆகவே, ஜூலையில் நானும் கஸ்தூரிபாயும் கால்லென்பாக்கும் இங்கிலாந்துக்குப் பிரயாணமானேம்.

சத்தியாக்கிரகத்தின்போது மூன்ரும் வகுப்பு வண்டியில் பிரயாணம் செய்ய ஆரம்பித்தேன். ஆகவே, இந்தப் பிரயாணத்திற்கும் மூன்ரும் வகுப்பிலேயே ஏற்பாடு செய்திருந்தேன். ஆனல், இந்த வழியில் செல்லும் கப்பல்களில் மூன்ரும் வகுப்பில் இருக்கும் வசதிகளுக்கும், இந்தியாவில் கடலோரக் கப்பல்களிலும் ரெயில் வண்டிகளிலும் மூன்ரும் வகுப்பில் இருக்கும் வசதிகளுக்கும் அதிகமான வித்தியாசம் உண்டு. இந்தியாவிலிருக்கும் மூன்ரும் வகுப்பில் தூங்குவதற்கு மாத்திரமல்ல, உட்காருவதற்குக்கூடப் போதுமான இடம் இல்லை; சுத்தமும் கிடையாது. ஆனல், இதற்கு மாருக லண்டனுக்குச் சென்றபோது, கப்பலில் மூன்ரும் வகுப்பில் போதுமான இடவசதி இருந்ததோடு சுத்தமாகவும் இருந்தது, கப்பல் கம்பெனியாரும் எங்களுக்கு விசேஷ வசதிகளைச் செய்து கொடுத்தனர். கம்பெனியார், எங்களுக்கென்று தனிக் கக்கூசு வசதியைச் செய்து கொடுத்தனர். நாங்கள் பழ உணவு மாத்திரமே சாப்பிடுகிறவர்களாகையால் பழங்களும் கொட்டைப் பருப்புகளும் மாத்திரம் எங்களுக்குக் கொடுக்க ஏற்பாடு செய்திருந்தனர். வழக்கமாக மூன்ரும் வகுப்புப் பிரயாணிகளுக்குப் பழமும் கொட்டைகளும் தருவதில்லை. இந்த வசதிகளெல்லாம் இருந்ததால் எங்கள் பதினெட்டு நாள் கப்பல் யாத்திரை சௌகரியமாகவே இருந்தது.

இப் பிரயாணத்தின்போது நடந்த சில சம்பவங்கள் குறிப்பிடத் தக்கவை. தொலைவிலுள்ளதைப் பார்க்க உபயோகிக்கும் ‘பைனுக்குலர்’ என்ற தூர திருஷ்டிக் கண்ணுடிகளில் ஸ்ரீ கால்

லென்பாக்குக்கு விருப்பம் அதிகம். அவர் இரண்டொரு விலை யுயர்ந்த தூரதிருஷ்டிக் கண்ணாடிகள் வைத்திருந்தார். இவற்றில் ஒன்றைக் குறித்து நாங்கள் தினமும் விவாதித்து வந்தோம். இவை களை வைத்துக்கொண் டிருப்பது, நாங்கள் அடைய ஆசைப்பட் டுக் கொண்டிருந்த எளிய வாழ்க்கைக்கு உகந்தது அல்ல என் பதை அவர் உணரும்படி செய்யவேண்டும் என்று நான் முயன்று வந்தேன். ஒரு நாள் நாங்கள் எங்கள் அறையின் காற்றுத் துவா ரத்திற்கு அருகில் நின்று பேசிக்கொண் டிருந்தபோது இந்த வாதம் உச்ச நிலைக்கு வந்துவிட்டது. "நமக்குள் இத் தகரா றுக்கு இடம் தருவதாக இத் தூரதிருஷ்டிக் கண்ணாடிகள் இருந்து வருவதைவிட இவற்றைக் கடலில் எறிந்துவிட்டு அதோடு ஏன் விவகாரத்தை முடித்துவிடக்கூடாது?" என்றேன்.

"இந்தச் சனியன்களை எறிந்தே விடுங்கள்" என்றார், ஸ்ரீ கால்லென்பாக்.

"நான் சொல்லுவதும் அதுதான்" என்றேன்.

"நானும் அதைத்தான் சொல்லுகிறேன்" என்று உடனே பதில் சொன்னார் அவர்.

அதை உடனே கடலில் நான் வீசி எறிந்துவிட்டேன். அக் கண்ணாடியின் பெறுமானம் ஏழு பவுன்தான். ஆனால், ஸ்ரீ கால் லென்பாக்குக்கு அதன்மீது இருந்த மோகத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தால் இந்த ஏழு பவுன் மிகக் குறைவான விலை மதிப்புத் தான். என்றாலும், அதை விட்டொழித்த பிறகு அதற்காக அவர் வருத்தப்படவே இல்லை.

ஸ்ரீ கால்லென்பாக்குக்கும் எனக்கும் இடையே ஏற்பட்ட சம்பவங்கள் பலவற்றுள் ஒன்றுதான் இது.

நாங்கள் இருவரும் சத்திய மார்க்கத்தில் செல்ல முயன்று வந்ததால் இவ்விதமாக ஒவ்வொரு நாளும் நாங்கள் ஏதாவது ஒரு புதிய உண்மையை அறிந்து வந்தோம். சத்தியத்தை நாடிச் செல்லும்போது கோபம், சுயநலம், துவேஷம் முதலியன இயற் கையாகவே நீங்கிவிடுகின்றன. ஏனெனில், அவை நீங்காவிட் டால் சத்தியத்தை அடைவது இயலாததாகும். ஒருவர் மிகவும் நல்லவராக இருக்கலாம்; உண்மையே பேசுகிறவ ராகவும் இருக் கக் கூடும். ஆனால், காமக் குரோத உணர்ச்சிகளுக்கு மாத்தி ரம் வயப்பட்டவராக அவர் இருந்தாராயின் சத்தியத்தை அவர் காணவே முடியாது. அன்பு-பகை, இன்பம்-துன்பம் ஆகிய இந்த இரண்டு வகையானவைகளி லிருந்தும் முற்றும் விடுபடு வது ஒன்றே சத்தியத்தை வெற்றிகரமான வகையில் தேடுவ தாகும்.

நாங்கள் இந்தக் கப்பல் யாத்திரை புறப்பட்டபோது, நான் உண்ணாவிரதமிருந்து அதிக காலம் ஆகிவிடவில்லை. பழைய பலத்தை நான் இன்னும் அடைந்துவிட வில்லை. எனக்கு நல்ல பசி எடுக்க வேண்டும் என்பதற்காகவும், சாப்பிட்டது ஜீரண

மாக வேண்டும் என்பதற்காகவும் தேகாப்பியாசம் இருக்கட்டும் எனக் கருதிக் கப்பலின் மேல் தளத்தில் கொஞ்சம் உலாவி வருவேன். ஆனால், இந்த நடையைக் கூட என் உடல் தாங்கவில்லை. கெண்டைக் கால்களில் வலி ஏற்பட்டுவிடும். ஆகவே, நான் லண்டன் சேர்ந்தபோது என் தேகநிலை நன்றாக இருப்பதற்குப் பதிலாக மோசமாகவே இருந்தது. அங்கே டாக்டர் ஜீவராஜ மேத்தா எனக்கு அறிமுகமானார். எனது உண்ணாவிரதத்தின் சரித்திரத்தையும், அதன் பிறகு எனக்கு ஏற்பட்ட வலியைப் பற்றியும் அவரிடம் கூறினேன். "சில தினங்களுக்கு நீங்கள் முழு ஓய்வு எடுத்துக்கொள்ளாது போனால் உங்கள் கால்கள் முற்றும் பயனற்றவைகளாகிவிடக் கூடும்" என்று அவர் சொன்னார். நீண்ட உபவாசம் இருந்துவிட்ட பிறகு இழந்த பலத்தைத் திரும்பப் பெற அவசரப்படக் கூடாது, பசியைக்கூடக் கட்டுப் படுத்திக்கொள்ள வேண்டும் என்பதை அப்பொழுதுதான் நான் அறிந்துகொண்டேன். உண்ணாவிரதம் இருந்துகொண்டிருக்கும் போது இருப்பதைவிட அதிக எச்சரிக்கையும், கட்டுத் திட்டங்களும் உண்ணாவிரதத்தை நிறுத்துவதற்கு வேண்டும்.

எந்த நேரத்திலும் பெரும் போர் மூண்டுவிடக் கூடும் என்று மடீராவில்* நாங்கள் கேள்விப்பட்டோம். ஆங்கிலக் கால்வாயில் எங்கள் கப்பல் போய்க்கொண் டிருந்தபோது யுத்தமே மூண்டு விட்டது என்ற செய்தி கிடைத்தது. எங்கள் கப்பல் சிறிது காலம் நிறுத்திவைக்கப்பட்டது. ஆங்கிலக் கால்வாய் நெடுக நீர் மூழ்கிக் கப்பல்கள் கடற்கண்ணிகளைப் போட்டிருந்தன. அவற்றில் மோதிவிடாமல் கப்பலை ஓட்டிச் செல்வது எளிதான காரிய மன்று. ஆகவே, செளதாம்டன் போய்ச் சேர இரண்டு நாட்களாயின.

யுத்தம் ஆகஸ்டு நான்காம் தேதி பிரகடனமாயிற்று. நாங்கள் ஆறும் தேதி லண்டன் சேர்ந்தோம்.

## 38

# போரில் என் பங்கு

பாரிஸிலிருந்து லண்டனுக்குத் திரும்பி வர முடியாமல் கோகலே சிக்கிக்கொண்டார் என்று நான் லண்டன் போய்ச் சேர்ந்ததும் அறிந்தேன். தேக சுகத்தை முன்னிட்டு அவர் பாரிஸுக்குப் போயிருந்தார். பாரிஸுக்கும் லண்டனுக்கும் இடையே எல்லாப் போக்குவரத்துமே துண்டிக்கப்பட்டு விட்டதால் அவர் எப்பொழுது திரும்புவார் என்பதைப் பற்றியும் எதுவும் தெரியவில்லை. அவரைப் பார்க்காமல் இந்தியாவுக்குத்

* மடீரா, அட்லாண்டிக் சமுத்திரத்திலுள்ள ஒரு போர்ச்சுகீசியத் தீவு. இது 315 சதுர மைல்கள் விஸ்தீரணமுள்ளது. 1950-இல் இதன் ஜனத்தொகை 2,69,179. தென்னாப்பிரிக்காவிலிருந்து இங்கிலாந்திற்குப் போகும் கப்பல்கள், வழியில் இத் தீவில் தங்கிப் போவதுண்டு.

திரும்ப நான் விரும்பவில்லை. ஆனல், அவர் எப்பொழுது வரு வார் என்பதையும் யாரும் சொல்ல முடியவில்லை.

இதற்கு மத்தியில் நான் என்ன செய்வது? போர் சம்பந்த மாக என் கடமை என்ன? என்னுடைய சிறைத் தோழரும் சத்தி யாக்கிரகியுமான சோராப்ஜி அடாஜணியா, அப்பொழுது வக்கீல் தொழிலுக்காக லண்டனில் படித்துக்கொண் டிருந்தார். அவர் சிறந்த சத்தியாக்கிரகிகளில் ஒருவர். ஆகையால், தென்னுப் பிரிக்காவுக்குத் திரும்பியதும் என் ஸ்தானத்தை வகிப்பதற்காக அவர் வக்கீல் தொழிலுக்குப் படித்து வர இங்கிலாந்துக்கு அனுப்பப்பட்டிருந்தார். அவருக்கு ஆகும் செலவுக்கு டாக்டர் பிராண ஜீவன்தாஸ் மேத்தா பணம் கொடுத்து வந்தார். அவ ருடனும், அவர் மூலமும், இங்கிலாந்தில் அப்பொழுது படித்துக் கொண்டிருந்த டாக்டர் ஜீவராஜ மேத்தாவுடனும் மற்றவர்களுட னும் நான் கலந்துபேசினேன். அவர்களுடன் கலந்து ஆலோ சித்து, இங்கிலாந்திலும், அயர்லாந்திலும் இருக்கும் இந்தியரின் கூட்டமொன்று கூட்டப்பட்டது. அக் கூட்டத்தின் முன்பு என் கருத்தைத் தெரிவித்தேன்.

இங்கிலாந்தில் வசித்துவரும் இந்தியர், யுத்தத்திற்குத் தங்க ளாலான உதவியைச் செய்யவேண்டும் என்று நான் கருதினேன். ஆங்கில மாணவர்கள் ராணுவத்தில் சேவை செய்யத் தொண்டர் களாக முன்வந்திருக்கிருர்கள். அவ்வளவாவது இந்தியரும் செய்ய வேண்டும். இவ்விதமான என் வாதத்திற்குப் பலவித மான ஆட்சேபங்கள் எழுந்தன. இந்தியருக்கும் ஆங்கிலேயருக் கும் எவ்வளவோ பேதம் இருக்கிறது என்ருர்கள். நாம் அடிமை களாக இருக்கிருேம், அவர்களோ எஜமானர்கள் என்ருர்கள். எஜமானனுக்குத் தேவைப்படும் நேரம் வந்துவிடும் போது மாத் திரம் ஓர் அடிமை எஜமானனுடன் எப்படி ஒத்துழைத்துவிட முடியும்? எஜமானனுக்கு ஏற்பட்டிருக்கும் அவசியத்தைத் தனக்கு ஒரு வாய்ப்பாக அடிமை பயன்படுத்திக் கொண்டு சுதந் திரமடையப் பார்ப்பது அடிமையின் கடமை யல்லவா? இந்த வாதம் நியாயமானதாக அப்பொழுது எனக்குத் தோன்றவில்லை. இந்தியனுக்கும் ஆங்கிலேயனுக்கும் அந்தஸ்தில் இருக்கும் வித்தி யாசத்தை நான் அறிவேன். ஆனல், அடிமை நிலைக்கு நாம் கொண்டு வரப்பட்டு விட்டோம் என்பதை நான் நம்பவில்லை. தவறுகளுக் கெல்லாம் தனிப்பட்ட பிரிட்டிஷ் அதிகாரிகள்தான் காரணமே யன்றிப் பிரிட்டிஷ் முறை அல்ல என்றும், அவர்களை யும் அன்பினல் மாற்றிவிடலாம் என்றும் நான் எண்ணினேன். பிரிட்டிஷாரின் ஒத்துழைப்பினுலும் உதவியினுலுமே நமது அந் தஸ்தை நாம் உயர்த்திக்கொள்ளுவதாக இருந்தால், அவர்களுக் குக் கஷ்டம் ஏற்பட்டிருக்கும் நேரத்தில் அவர்களுக்குப் பக்கத் துணையாக இருந்து அவர்களுடைய தயவைப் பெறவேண்டியது நமது கடமை. பிரிட்டிஷ் முறையே தவருனதாக இருந்தாலும், அது இன்று எனக்குத் தோன்றுவதுபோல் சகிக்க

முடியாததாக அப்பொழுது எனக்குத் தோன்றவில்லை. ஆனால், பிரிட்டிஷ் முறையில் எனக்கு நம்பிக்கையில்லாது போய்விட்டதால் இன்று நான் பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் ஒத்துழைக்க மறுக்கிறேன் என்றால், பிரிட்டிஷ் ஆட்சி முறையில் மாத்திரமே யன்றி அதன் அதிகாரிகளிடமும் நம்பிக்கையை இழந்துவிட்ட அந்த நண்பர்கள் எப்படி ஒத்துழைப்பார்கள்?

இந்தியர் கோரிக்கைகளைக் குறித்துத் தைரியமாகக் கூறுவதற்கும், இந்தியரின் அந்தஸ்தை உயர்த்திக்கொள்ளுவதற்கும் ஏற்ற சமயம் அதுதான் என்று, என் யோசனையை எதிர்த்த நண்பர்கள் கூறினார்கள். இங்கிலாந்தின் கஷ்டத்தை நமக்கு ஏற்ற வாய்ப்பாக மாற்றிக்கொண்டுவிடக் கூடாது என்று நான் எண்ணினேன். போர் நடந்துகொண்டிருக்கும் வரையில் நமது கோரிக்கைகளை வற்புறுத்தாமலிருப்பதே அதிக யோக்கியமானது, முன்யோசனையோடு கூடியது என்றும் கருதினேன். ஆகையால், நான் கூறிய யோசனையை வலியுறுத்தித் தொண்டர்களாகச் சேர முன்வருகிறவர்களை வருமாறு அழைத்தேன். அநேகர் முன்வந்தார்கள். அப்படி வந்தவர்களில் எல்லா மாகாணத்தினரும், மதத்தினரும் இருந்தனர்.

இந்த விவரங்களையெல்லாம் எடுத்துக்கூறி லார்டு கிரிவேக்குக் கடிதம் எழுதினேன். எங்கள் சேவையை ஏற்றுக்கொள்ளும் முன்பு நாங்கள் வைத்தியப்படை வேலைகளில் பயிற்சி பெறுவது அவசியம் என்றால், அப் பயிற்சியைப் பெறவும் தயாராக இருக்கிறோம் என்று அதில் அறிவித்தேன். கொஞ்சம் தயக்கத்திற்குப் பிறகு லார்டு கிரிவே எங்கள் சேவையை ஏற்றுக்கொள்ளச் சம்மதித்தார். நெருக்கடியான அந்த நேரத்தில் சாம்ராஜ்யத்திற்கு எங்கள் சேவையை அளித்ததற்காக நன்றியும் தெரிவித்தார்.

காயம்பட்டவர்களுக்கு முதல் வைத்திய உதவி செய்யும் பயிற்சியைப் பிரபலமான டாக்டர் காண்ட்லீயின் ஆதரவில் தொண்டர்கள் பெற்றனர். ஆறு வாரக் குறுகிய காலப் பயிற்சியே அது. ஆனால், முதல் உதவி சம்பந்தமான எல்லாமே அதில் கற்றுக்கொடுக்கப்பட்டது.

எங்கள் வகுப்பில் நாங்கள் எண்பது பேர் இருந்தோம். ஆறு வாரங்களில் எங்களுக்குப் பரீட்சை நடந்து ஒருவர் தவிர மற்றெல்லோரும் தேறிவிட்டோம். அவர்களுக்கு ராணுவக் கவாத்து முதலிய பயிற்சிகளுக்கு அரசாங்கம் ஏற்பாடு செய்தது. இந்த வேலை கர்னல் பேக்கரிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது.

அந்த நாட்களில் பார்ப்பதற்கு லண்டன் அற்புதக் காட்சியாக இருந்தது. மக்களிடையே பீதியே இல்லை. ஆனால், தங்களாலியன்ற உதவியைச் செய்யவேண்டும் என்பதில் எல்லோரும் சுறுசுறுப்பாக இருந்தனர். வயது வந்த திடமான ஆண்களெல்லாம், போரில் சிப்பாய்களாகப் பயிற்சி பெறப்

போய்விட்டனர். ஆனால், வயோதிகர்களும், பலவீனர்களும், பெண்களும் என்ன செய்வது? அவர்கள் செய்ய விரும்பினால் அவர்களுக்கும் போதுமான வேலைகள் இருந்தன. துணிகளை வெட்டி ஆடைகள் தயாரிப்பது, காயமடைந்தவர்களுக்குக் கட்டுக் கட்டுவது போன்ற வேலைகளில் அவர்கள் ஈடுபட்டார்கள்.

லைஸியம் என்ற பெண்களின் சங்கம், தங்களால் எவ்வளவு முடியுமோ அவ்வளவு ஆடைகளைச் சிப்பாய்களுக்குத் தைத்துக் கொடுப்பது என்ற வேலையை ஏற்றுக்கொண்டது. இந்தச் சங்கத்தில் ஸ்ரீமதி சரோஜினி நாயுடு * ஓர் உறுப்பினர். இவர் அவ் வேலையில் முழு மனத்துடன் ஈடுபட்டிருந்தார். முதன் முதலாக அப்பொழுதுதான் அவருடன் எனக்குப் பழக்கம் ஏற்பட்டது. தைப்பதற்காக வெட்டப்பட்டிருந்த ஒரு துணிக் குவியலை அவர் என்னிடம் கொடுத்து அவைகளையெல்லாம் தைத்துக் கொண்டு வந்து தம்மிடம் கொடுக்கும்படி சொன்னார். அவருடைய கோரிக்கையை ஏற்றுக்கொண்டேன். முதல் உதவிக்கு நான் பயிற்சி பெற்று வந்த காலத்தில் நண்பர்களின் உதவியைக் கொண்டு எவ்வளவு ஆடைகளைத் தைக்க முடியுமோ அவ்வளவையும் தைத்துக் கொண்டுபோய் அவரிடம் கொடுத்தேன்.

---

* ஸ்ரீமதி சரோஜினி நாயுடு : இளமையிலேயே கவிதை புனைவதில் மேதையாயிருந்தவர். ஆயுள் பூராவும் நாட்டுப் பணிக்குத் தமது வாழ்க்கையை அர்ப்பணித்தவர். மகாத்மாவின் ஆழ்ந்த அன்புக்கும் நம்பிக்கைக்கும் பாத்திரமானவர். காந்திஜியின் யோசனைப்படி 1924-இல் தென்னாப்பிரிக்கா, கிழக்கு ஆப்பிரிக்கா முதலிய இடங்களில் சுற்றுப் பிரயாணம் செய்து, அங்கே வாழ்ந்த இந்தியரின் நலனுக்குப் பாடுபட்டார். 1925-இல் கான்பூரில் நடந்த காங்கிரஸுக்குத் தலைமை தாங்கினார். 1930-இல் உப்புச் சத்தியாக்கிரகத்தில் மகாத்மா, அப்பாஸ் தயாப்ஜி இருவரும் கைது செய்யப்பட்ட பிறகு தர்சனா உப்பள முற்றுகையை நடத்திக் கைதானார். நீண்ட காலம் காங்கிரஸ் காரியக் கமிட்டி அங்கத்தினராக இருந்தார். நாடு சுதந்திரமடைந்த பின்னர் உத்தரப் பிரதேசக் கவர்னராக இருந்த சமயம் உயிர் நீத்தார். இவரது புதல்வி பத்மஜா நாயுடு தற்போது (1961) மேற்கு வங்கக் கவர்னரா யிருக்கிறார். கேட்போர் பரவசமடையும் முறையில் சொற்பொழிவு ஆற்றும் திறனுள்ளவர். முதல் முதலில் தாம் காந்திஜியைச் சந்தித்த ரஸமான சம்பவத்தைச் சரோஜினி தேவியார் பின்வருமாறு வருணிக்கிறார் :

"முதல் மகாயுத்த காலம் அது. தென்னாப்பிரிக்காவிலிருந்து இங்கிலாந்திற்கு ஒரு விசித்திர மனிதர் வரப்போவதாகக் கேள்விப்பட்டோம். அவரைப் பார்ப்பதற்கு எல்லோரும் ஆவலாயிருந்தனர். அவர் பெயர் காந்தி.

"லண்டனில் கவர்ச்சியற்ற பகுதியில் ஒரு வீட்டின் படிக்கட்டுகளில் நான் ஏறிச் சென்றேன். திறந்த கதவுக் கருகில், ஒரு கறுப்புக் கம்பளிமீது ஒருவர் உட்கார்ந்திருப்பதைக் கண்டேன். அவரைச் சுற்றிப் பல விசித்திரமான சிறு பெட்டிகள் இருந்தன. ஒரு மரத் தட்டிலிருந்து ஒரு மரக் கரண்டியினால் எடுத்து, பார்க்க அருவருப்பாயிருக்கும் பலவகைத் தானியங்களை அவர் சாப்பிட்டுக்கொண் டிருந்தார்.

"என்னை ஏறிட்டுப் பார்த்து, 'ஓ! நீங்களா?' என்று கேட்டார். 'நான் தான் என்று நான் பதிலளித்தேன். 'என்னுடன் சாப்பிடுகிறீர்களா?' என்று அவர் கேட்டார். 'நிச்சயமாக நான் சாப்பிட விரும்பவில்லை. உங்கள் உணவு பயங்கரமாகத் தோன்றுகிறது' என்று நான் பதிலளித்தேன். இதைக் கேட்டு அவர் சிரித்தார். அன்று முதல் எங்களுக்குள் உறவு ஏற்பட்டு, வளர்ந்து, நீடித்து வந்திருக்கிறது."

# 39

# ஓர் ஆன்மிகக் குழப்பம்

மற்ற இந்தியருடன் என் சேவையை யுத்தத்திற்கு அளிக்க முன்வந்திருக்கிறேன் என்ற செய்தி தென்னாப்பிரிக்காவுக்கு எட்டியதும் எனக்குத் தந்திகள் வந்தன. அதில் ஒன்று ஸ்ரீ போலக்கிடமிருந்து வந்தது. எனது கொள்கையான அகிம்சைக்கும் நான் செய்யும் காரியத்திற்கும் எப்படிப் பொருத்தமாகும் என்று அவர் கேட்டிருந்தார்.

இந்த ஆட்சேபத்தை நான் ஓரளவுக்கு எதிர்பார்த்தே இருந்தேன். இப் பிரச்னையைக் குறித்து 'ஹிந்த் சுயராஜ்'* (இந்திய சுயராஜ்யம்) என்ற நூலில் விவாதித்திருக்கிறேன். அதல்லாமல் தென்னாப்பிரிக்காவில் நண்பர்களுடனும் இதைக் குறித்து அடிக்கடி விவாதித்து வந்திருக்கிறேன். யுத்தத்தில் இருக்கும் அதருமத்தை எல்லோருமே ஒப்புக்கொண்டிருக்கிறோம். என்னைத் தாக்கியவரைக் கைதுசெய்து வழக்குத் தொடர நான் தயாராக இல்லாதபோது, போரில் ஈடுபட்டிருக்கிறவர்களின் லட்சியம் நியாயமானதா, இல்லையா என்பதுபற்றி எனக்கு எதுவுமே தெரியாமல் இருக்கும்போது, யுத்தத்தில் ஈடுபடுவதற்கு நான் தயாராக இருப்பதற்கில்லை. என்றாலும், முன்பு போயர் யுத்தத்தில் நான் சேவை செய்திருக்கிறேன் என்பது நண்பர்களுக்குத் தெரியும். ஆயினும், அதன் பிறகு என் கருத்துக்கள் மாறுதலை அடைந்திருக்கின்றன என்று அவர்கள் எண்ணிக்கொண்டார்கள்.

உண்மையில் போயர் யுத்தத்தில் நான் பங்குகொள்ளும்படி எந்தவிதமான வாதங்கள் என்னைத் தூண்டினவோ அதே விதமான வாதங்களே இச் சமயமும் என்னை இம் முடிவுக்கு வரும்படி செய்தன. யுத்தத்தில் ஈடுபடுவது அகிம்சைக்குக் கொஞ்சமும் பொருத்தமானதல்ல என்பது எனக்குத் தெளிவாகவே தெரிந்திருந்தது. ஆனால், தன்னுடைய கடமை என்ன என்பதை யாரும் தெளிவாக அறிந்துகொண்டுவிட முடிவதில்லை. அதிலும் சத்தியத்தை நாடுகிறவர் அடிக்கடி இருட்டில் தடவிக்கொண்டிருக்க வேண்டியே வருகிறது.

அகிம்சை என்பது விரிவான பொருள்களைக் கொண்டதோர் கொள்கை. நாமெல்லோரும் இம்சையாகிய தீயில் சிக்கிக் கொண்டு உதவியற்றுத் தவிக்கும் மாந்தரே யாவோம். ஓர் உயிரைத் தின்றே மற்றோர் உயிர் வாழ்கிறது என்று சொல்லப்படுவதில் ஆழ்ந்த பொருள் உண்டு. மனிதன், வெளிப்படையாக இம்சையை, அறிந்தோ அறியாமலோ செய்யாமல் ஒரு கணமும்

---

* மகாத்மா குறிப்பிடும் 'ஹிந்த் சுயராஜ்' என்ற அவருடைய நூல் 'மகாத்மா காந்தி நூல்கள்—முதல் தொகுப்'பில் அடங்கியிருக்கிறது.

வாழ முடியாது. வாழ்வது என்ற ஒன்றிலேயே, உண்பது, குடிப்பது, நடமாடுவது ஆகியவைகளில், என்னதான் மிகச் சிறியதாயிருப்பினும் ஏதாவது இம்சை அல்லது உயிரைக் கொல்லுவது அவசியமாக இருந்துதான் தீருகிறது. ஆகையால், அகிம்சை விரதம் கொண்டவர், அந்தத் தருமப்படி உண்மையோடு நடப்பதாயின், அவருடைய ஒவ்வோர் செயலும் கருணையிலிருந்தே எழுவதாக இருக்கவேண்டும். மிக மிகச் சிறிய உயிரையுங்கூடக் கொல்லாமல் தம்மால் முடிந்த வரையில் அதை அவர் காப்பாற்ற வேண்டும். இவ்விதம் இம்சையின் மரணப் பிடியிலிருந்து விடுபடவும் இடைவிடாது முயன்றுவர வேண்டும். புலனடக்கத்திலும் கருணையிலும் அவர் இடைவிடாது வளர்ந்துகொண்டும் இருப்பார். ஆனாலும், புற இம்சையிலிருந்து மாத்திரம் அவர் என்றுமே பூரணமாக விடுபட்டுவிட முடியாது.

மேலும், எல்லா ஜீவராசிகளின் ஒருமைப்பாடே அகிம்சையின் அடிப்படை யாகையால், ஒன்றின் தவறு மற்றெல்லாவற்றையும் பாதிக்காமல் இருக்க முடியாது. ஆகவே, மனிதன் இம்சையிலிருந்து முற்றும் விடுபட்டுவிட இயலாது. ஒரு சமூகத்தைச் சேர்ந்தவராக ஒருவர் இருந்துகொண்டிருக்கும் வரையில், அச் சமூகத் தொடக்கத்திலிருந்தே ஏற்படுவதான இம்சையில் அவரும் கலந்துகொண்டு விடாமல் இருப்பதற்கில்லை. இரு நாட்டினர் போராடிக் கொண்டிருக்கும்போது, யுத்தத்தை நிறுத்துவதே அகிம்சைவாதியின் பொறுப்பு. அப் பொறுப்பை நிறைவேற்ற இயலாதவர், யுத்தத்தை எதிர்ப்பதற்கான சக்தி இல்லாதவர். யுத்தத்தை எதிர்ப்பதற்கு வேண்டிய தகுதியை அடையாதவர்—இவர்களும் அப்போரில் ஈடுபடக்கூடும். அப்படிப் போரில் ஈடுபட்டாலும் தம்மையும் தம் நாட்டையும் உலகத்தையும் போரிலிருந்து மீட்க முழு [மனத்துடன் முயற்சி செய்ய வேண்டும்.

பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின்மூலமே என் அந்தஸ்தையும், என் நாட்டு மக்களின் அந்தஸ்தையும் உயர்த்திக்கொள்ளலாம் என்று நான் நம்பியிருந்தேன். இங்கிலாந்தில் நான் இருந்தபோது பிரிட்டிஷ் கடற்படையின் பாதுகாப்பை நான் அனுபவித்து வந்தேன். பிரிட்டனின் ஆயுத பலத்தின் கீழ் நான் பத்திரமாகவும் இருந்து வந்தேன். நான் இவ்விதம் இருந்ததன் மூலம் அதனுடைய பலாத்கார சக்தியில் நான் நேரடியாகப் பங்கு கொண்டு வருகிறேன். ஆகையால், சாம்ராஜ்யத்துடன் எனக்கு இருக்கும் தொடர்பை வைத்துக்கொண்டு அதன் கொடியின் கீழ் வாழ நான் விரும்பினால், நான்கு காரியங்களில் ஏதாவது ஒன்றன்படியே நான் நடக்க வேண்டும்: யுத்தத்திற்கு என்னுடைய பகிரங்கமான எதிர்ப்பைத் தெரிவிக்கலாம்; சத்தியாக்கிரக விதிகளின்படி சாம்ராஜ்யம் அதன் ராணுவக் கொள்கையை மாற்றிக்கொள்ளும் வரை அதைப் பகிஷ்கரித்து விடலாம்; அல்லது மீறுவதற்கு ஏற்றவையான அதன் சட்டங்களை

மீறுவதன் மூலம் சட்ட மறுப்பைச் செய்து சிறைப்பட முற்படலாம்; இல்லாவிட்டால், சாம்ராஜ்யத்தின் சார்பில் யுத்தத்தில் ஈடுபட்டு, அதன் மூலம் யுத்த பலாத்காரத்தை எதிர்ப்பதற்கு வேண்டிய பலத்தையும் தகுதியையும் பெறலாம். இத்தகைய ஆற்றலும் தகுதியும் எனக்கு இல்லை. ஆகவே, அவற்றை அடைவதற்கு யுத்தத்தில் ஈடுபடுவதைத் தவிர வேறு வழி இல்லை என்று எண்ணினேன்.

அகிம்சை நோக்குடன் கவனித்தால், போர்ச் சேவையில் ஈடுபட்டிருக்கிறவர்களில் போர்க்களத்தில் போராடும் சிப்பாய்களுக்கும் மற்றவர்களுக்கும் வேற்றுமையை நான் காணவில்லை. கொள்ளைக்காரர்களுக்கு மூட்டை தூக்கவோ, அவர்கள் கொள்ளையடித்துக் கொண்டிருக்கும்போது காவல் இருக்கவோ, அவர்கள் காயமடையும்போது அவர்களுக்குப் பணிவிடை செய்யவோ ஒப்புக்கொள்ளுகிறவனும், கொள்ளைக்காரர்களைப்போல் கொள்ளைக் குற்றம் செய்தவனேயாவான். அதேபோலப் போரில் காயமடைந்தவர்களுக்குச் சிகிச்சை செய்வதோடு மாத்திரம் இருந்துவிடுகிறவர்களும் போர்க் குற்றத்திலிருந்து விடுபட்டவர்கள் ஆக முடியாது.

போலக்கிடமிருந்து தந்தி வருவதற்கு முன்னாலேயே இந்த வகையில் இதையெல்லாம் குறித்து என்னுள்ளேயே நான் விவாதித்துக்கொண்டேன். அத் தந்தி வந்த பிறகும் இதைக் குறித்துப் பல நண்பர்களுடன் விவாதித்தேன். போரில் சேவை செய்ய முன்வருவது என் கடமை என்ற முடிவுக்கே வந்தேன். பிரிட்டிஷ் உறவுக்குச் சாதகமாக நான் அப்பொழுது கொண்டிருந்த கருத்தைக்கொண்டு கவனிக்கும்போது, அந்தவிதமான விவாதப் போக்கில் எந்தத் தவறும் இருப்பதாக இன்றும் நான் கருதவில்லை; அப்பொழுது நான் செய்ததற்காக வருத்தப்படவும் இல்லை.

என் நிலைமை சரியானதே என்பதை என் நண்பர்கள் எல்லோருமே ஒப்புக்கொள்ளும்படி செய்ய என்னால் அப்பொழுதும் முடியவில்லை என்பதை அறிவேன். இப் பிரச்னை மிகவும் நுட்பமானது. இதில் கருத்து வேற்றுமை இருந்துதான் தீரும். ஆகையால், அகிம்சையில் நம்பிக்கை யுள்ளவர்களுக்கும், வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் அதை அனுசரிக்கத் தீவிரமாக முயன்று வருகிறவர்களுக்கும் என்னால் இயன்ற அளவு தெளிவாக என்னுடைய வாதங்களை எடுத்துக் கூறினேன். சத்தியத்தின் பக்தர், சம்பிரதாயம் என்பதற்காக எதையும் செய்துவிட முடியாது. தாம் திருத்தப்படுவதற்கு அவர் எப்பொழுதும் தயாராக இருக்க வேண்டும். தாம் செய்தது தவறானது என்பதைக் கண்டுகொள்ளும்போது, என்ன நேருவ தாயினும் பொருட்படுத்தாது, அதை ஒப்புக்கொண்டு அதற்குப் பரிகாரம் தேட வேண்டும்.

# 40

# குட்டிச் சத்தியாக்கிரகம்

இவ்விதம் கடமை என்று கருதியதனுல் போரில் நான் கலந்துகொண்டேன். ஆயினும், அதில் நான் நேரடியாக ஈடுபட முடியாது போயிற்று. அதோடு அந்த நெருக்கடியான நிலைமையிலும்கூட, ஒரு குட்டிச் சத்தியாக்கிரகம் என்று சொல்லக் கூடியதையும் செய்ய வேண்டிய கட்டாயம் எனக்கு ஏற்பட்டது.

எங்கள் பெயர்கள் அங்கீகரிக்கப்பட்டுப் பதிவானவுடன் எங்களுக்கும் பயிற்சியளிப்பதைக் கவனிப்பதற்காக ஓர் அதிகாரியும் நியமிக்கப்பட்டார் என்று நான் முன்பே கூறியிருக்கிறேன். இந்த அதிகாரி, பயிற்சி சம்பந்தமான விஷயங்களில் மட்டுமே எங்களுக்குத் தலைவர் என்றும், மற்ற விஷயங்களி லெல்லாம் அப் படைக்கு நானே தலைவன் என்றும்,அதனுடைய உள்கட்டுத் திட்டங்களைப் பொறுத்தவரை எனக்கே நேரடியான பொறுப்பு உண்டு என்றும் நாங்கள் எல்லோரும் எண்ணியிருந்தோம். அதாவது, அந்த அதிகாரி இப் படை விஷயத்தில் என் மூலமே எதையும் செய்ய வேண்டும் என்று கருதினேம். ஆனல், இந்தப் பிரமை இருந்துவர அந்த அதிகாரி ஆரம்பத்திலிருந்தே விட்டு வைக்கவில்லை.

ஸ்ரீ சோராப்ஜி அடாஜணியா மிக்க புத்திக் கூர்மையுள்ளவர். அவர் என்னை எச்சரிக்கை செய்தார்: "அந்த ஆசாமி விஷயத்தில் எச்சரிக்கையுடன் இருங்கள். நம்மீது ஆதிக்கம் செலுத்த அவர் விரும்புகிருர் என்று தோன்றுகிறது. அவர் கட்டளையை ஏற்று நடக்க நாங்கள் தயாரா யில்லை. நமக்குப் போதிப்பவர் என்று அவரை ஏற்றுக்கொள்ள நாங்கள் தயார். ஆனல் நமக்குப் போதிப்பதற் கென்று அவர் நியமித்திருக்கும் இளைஞர்கள்கூட நமக்குத் தாங்கள் எஜமானர்களாக வந்திருப்பதாக எண்ணிக்கொள்ளுகின்றனர்" என்றுர்.

அந்த இளைஞர்கள் ஆக்ஸ்போர்டு மாணவர்கள். எங்களுக்குச் சொல்லிக்கொடுக்க வந்திருந்தனர். அந்தத் தலைமை அதிகாரி, அவர்களை எங்கள் படைப் பிரிவின் தலைவர்களாக நியமித்தார்.

தலைமை அதிகாரியின் மிதமிஞ்சிய செய்கைகளை நானும் கவனிக்காமலில்லை. என்றுலும், அதைப்பற்றிக் கவலைப்பட வேண்டாமென்று சோராப்ஜியிடம் கூறி அவரைச் சமாதானப் படுத்த முயன்றேன். ஆனல், அவர் எளிதில் சமாதானமடைந்து விடுகிறவர் அல்ல.

"நீங்கள் எல்லோரையும் நம்பிவிடுகிறீர்கள். இவர்கள் பசப்புப் பேச்சினல் உங்களை ஏமாற்றிவிடுவார்கள். ஏமாற்றி

விட்டார்கள் என்பது கடைசியாக உங்களுக்குத் தெரியும்போது சத்தியாக்கிரகம் செய்யும்படி எங்களிடம் கூறுவீர்கள். இவ் விதம் நீங்கள் துன்பப்படுவதோடு உங்களோடு சேர்ந்து நாங் கள் எல்லோரும் துன்பப்பட நேரும்'' என்று அவர் சிரித்துக் கொண்டே சொன்னர்.

''நீங்கள் என்னுடன் சேர்ந்துவிட்ட பிறகு துன்பத்தைத் தவிர வேறு எதை எதிர்பார்க்கிறீர்கள்? சத்தியாக்கிரகி ஏமாற்றப்படவே பிறந்திருக்கிருன். இப் பிரதம அதிகாரி நம்மை ஏமாற்றட்டும். 'ஏய்ப்பவனே முடிவில் ஏமாற்றப்படுகிருன்' என்று உங்களுக்கு எத்தனையோ முறை நான் சொல்ல வில்லையா?" என்றேன்.

சோராப்ஜி உடனே உரக்கச் சிரித்தார். ''அப்படியானல் சரி, தொடர்ந்து ஏமாற்றப்பட்டு வாருங்கள். என்ருவது ஒரு நாள் நீங்கள் சத்தியாக்கிரகத்திலேயே மரணமடைவீர்கள். அப்பொழுது எங்களைப்போன்ற அப்பாவிகளையும் உங்களுக் குப் பின்னல் இழுத்துக்கொண்டு போவீர்கள்'' என்ருர்.

இந்தச் சொற்கள், ஒத்துழையாமையைக் குறித்துக் குமாரி எமிலி ஹாப்ஹவுஸ் எனக்கு எழுதியதை என் நினைவில் கொண்டு வருகின்றது. ''சத்தியத்திற்காக என்ருவது ஒரு நாள் நீங்கள் தூக்குமேடைக்குப் போக நேர்ந்தால் நான் ஆச்சரியப்படமாட் டேன். கடவுள் உங்களுக்குச் சரியான வழியைக் காட்டிப் பாது காப்பாராக" என்று அவர் எழுதினர்.

தலைமை அதிகாரி நியமிக்கப்பட்ட வுடனேயே எனக்கும் சோராப்ஜிக்கு மிடையே மேற்கண்ட பேச்சு நடந்தது. சில தினங்களுக் கெல்லாம் அவருடன் எங்களுக்கிருந்த சம்பந்தம் துண்டித்துப் போய்விடும் கட்டம் ஏற்பட்டது. பதினன்கு நாள் உண்ணுவிரதத்தில் இழந்த பலத்தை நான் இன்னும் பெற்றுவிட வில்லை. எனினும் கவாத்தில் நான் பங்கெடுத்துக்கொண்ட தோடு நான் குடியிருந்த இடத்திலிருந்து அதற்கெனக் குறிப் பிட்டிருந்த இடத்திற்கு இரண்டுமைல் தூரம் நடந்தே போவேன். இதனல் நுரையீரலில் புண் ஏற்பட்டு நான் நோய்வாய்ப்பட் டேன். இந்த நிலைமையில் வாரக் கடைசியில் நடக்கும் முகாம் களுக்கும் போகவேண் டியிருந்தது. மற்றவர்கள் அங்கேயே தங்கி விடுவார்கள்; நான் மட்டும் வீடு திரும்புவேன். இங்கேதான் சத்தியாக்கிரகத்திற்கு ஒரு சந்தர்ப்பம் ஏற்பட்டது.

தலைமை அதிகாரி தம்முடைய அதிகாரத்தை கண்டபடி யெல்லாம் பிரயோகிக்க ஆரம்பித்தார். ராணுவ சம்பந்தமானது, ராணுவ சம்பந்தமில்லாதது ஆகிய எல்லா விஷயங்களிலும் அவரே எங்களுக்குத் தலைவர் என்று நாங்கள் அறிந்துகொள்ளும் படி அவர் செய்ததோடு, தமது அதிகாரம் எப்படி இருக்கும் என்பதையும் எங்களுக்குக் காட்டத் தொடங்கி விட்டார்.

உடனே சோராப்ஜி என்னிடம் வந்தார். அந்த அதிகாரியின் எதேச்சாதிகாரத்திற்கு உடன்பட்டுவிட அவர் கொஞ்சங்கூடத் தயாராயில்லை. அவர் சொன்னதாவது: "எங்களுக்கு வரும் உத்தரவுகளெல்லாம் உங்கள் மூலமே வரவேண்டும். நாங்கள் இன்னும் பயிற்சி முகாமிலேயே இருக்கிறோம். இப்பொழுதே எங்களுக்கு எல்லாவித அபத்தமான உத்தரவுகளெல்லாம் இடப்படுகின்றன. நமக்கும், நமக்கு இடையே சொல்லிக்கொடுப்பதற்கென்று நியமிக்கப்பட்டிருக்கும் அந்த இளைஞர்களுக்கும், எரிச்சலை மூட்டும் பாரபட்சமான வேற்றுமைகளெல்லாம் காட்டப்படுகின்றன. இதைக் குறித்துத் தலைமை அதிகாரியுடன் பேசி ஒரு முடிவுக்கு வந்தாக வேண்டும். இல்லையானால் எங்களால் மேற்கொண்டு எதுவும் செய்ய முடியாது. நம் படையில் சேர்ந்திருக்கும் இந்திய மாணவர்களும் மற்றவர்களும், அபத்தமான உத்தரவுகளுக் கெல்லாம் கீழ்ப்படியப் போவதில்லை. சுயமரியாதையை முன்னிட்டு மேற்கொண்டிருக்கும் ஒரு கடமையில் சுயமரியாதையை இழப்பது என்பதைச் சகித்துக் கொண்டிருக்கவே முடியாது."

தலைமை அதிகாரியிடம் போனேன். எனக்கு வந்திருக்கும் புகார்களைக் குறித்து அவரிடம் கூறினேன். இப்புகார்களை எழுத்து மூலம் தமக்கு தெரிவிக்கும்படி அவர் சொன்னார். அதோடு, "இப்பொழுது நியமிக்கப்பட்டிருக்கும் படைப் பகுதித் தலைவர்கள் மூலம் புகார்களைத் தெரிவிக்க வேண்டும். அவர்கள் அவற்றை எனக்கு அறிவிப்பார்கள். இதுதான் புகார்களை அனுப்புவதற்கான சரியான வழி என்பதைப் புகார் கூறுவோர் அறியச் செய்யுங்கள்" என்றும் அவர் எனக்குக் கூறினார்.

இதற்கு நான், "எனக்கு அதிகாரம் எதுவும் இருப்பதாக நான் உரிமை கொண்டாடவில்லை. ராணுவ ரீதியில் மற்றவர்களைப்போலவே நானும். ஆயினும், இத்தொண்டர் படையின் தலைவன் என்ற முறையில் அவர்கள் பிரதிநிதியாக நடந்து கொள்ள உத்தியோகச் சார்பற்ற முறையில் நான் அனுமதிக்கப்படுவேன் என்று நம்பிவந்தேன்" என்று சொன்னேன். என் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்ட குறைகளையும் கோரிக்கைகளையும் எடுத்துக் கூறினேன். படையைச் சேர்ந்தவர்களின் உணர்ச்சியைச் சிறிதும் மதிக்காமலேயே படைப் பகுதித் தலைவர்கள் நியமிக்கப்பட் டிருக்கிறார்கள்: அவர்களை எடுத்துவிட்டுத் தலைமை அதிகாரியின் அங்கீகாரத்திற்கு உட்பட்டுப் படையினரே படைப் பிரிவுத் தலைவர்களைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளச் சொல்ல வேண்டும் என்பவையே அந்தக் குறைகளும் கோரிக்கைகளும்.

இது தலைமை அதிகாரிக்குப் பிடிக்கவில்லை. படையினரே படைப் பகுதித் தலைவர்களைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளுவது என்பது எல்லாவித ராணுவக் கட்டுத் திட்டங்களுக்கும் விரோதமானது என்றார். நியமிக்கப்பட்டுவிட்டவர்களை நீக்கிவிட வேண்

டும் என்று கேட்பது எல்லாக் கட்டுத்திட்டங்களையும் கவிழ்ப்ப தாகும் என்றும் சொன்னர்.

எனவே, நாங்கள் ஒரு கூட்டம் போட்டுப் படையிலிருந்து விலகிக்கொண்டு விடுவது என்று தீர்மானித்தோம். சத்தியாக் கிரகத்தினல் ஏற்படக்கூடிய மோசமான விளைவுகளைக் குறித்து எல்லோருக்கும் எடுத்துக் கூறினேன். ஆயினும் மிகப் பெரும் பகுதியினர் தீர்மானத்தை ஆதரித்தார்கள். இதுவரையில் நிய மிக்கப்பட்டிருக்கும் கார்ப்பொரல்களை நீக்காவிடில், தங்கள் சொந்தக் கார்ப்பொரல்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளப் படையினருக்குச் சந்தர்ப்பம் அளிக்காது போனல், இதைச் சேர்ந்தவர்கள் மேற்கொண்டும் கவாத்துகளுக்கும், வாரக் கடைசி முகாம்களுக்கும் போகாமல் இருக்கவே நேரும் என்று தீர்மானம் கூறியது.

பிறகு, நான் தலைமை அதிகாரிக்கு ஒரு கடிதம் எழுதினேன். என் யோசனையை நிராகரித்து அவர் எழுதியது எவ்வளவுபெரிய ஏமாற்றத்தை உண்டாக்கிவிட்டது என்பதை அதில் கூறினேன். அதிகாரம் செலுத்த வேண்டும் என்னும் ஆசை எதுவும் எனக்கு இல்லை என்றும், சேவை செய்ய வேண்டும் என்றே நான் மிகுந்த ஆர்வத்துடன் இருப்பதாகவும் அவருக்கு உறுதி கூறினேன். என் யோசனையைப் போல் முன்னல் நடந்தது ஒன்றையும் அவ ருக்கு எடுத்துக் காட்டினேன். போயர் யுத்தத்தின் போது தென்னுப்பிரிக்க இந்திய வைத்தியப் படையில் உத்தியோக ஸ்தானம் எதையும் நான் வகிக்காதிருந்தாலும், கர்னல் கால் வேக்கும் படைக்கும் எந்தவிதமான தகராறுமே இருந்ததில்லை என்றும், படையினரின் கருத்தைத் தெரிந்துகொள்ளுவதற்காக என்னைக் கலந்து ஆலோசிக்காமல் அக் கர்னல் எதுவுமே செய்த தில்லை என்றும் குறிப்பிட்டேன். முந்திய நாள் மாலையில் நாங்கள் நிறைவேற்றிய தீர்மானத்தின் பிரதி ஒன்றையும் அக் கடிதத் தோடு அனுப்பினேன்.

அந்த அதிகாரியின் விஷயத்தில் இக் கடிதம் எந்த நல்ல பலனையும் உண்டாக்கவில்லை. கூட்டம் போட்டதும், தீர்மானம் செய்ததும் கட்டுத் திட்டங்களை மீறிய பெருங்குற்றங்கள் என்று அவர் கருதினர்.

அதன்பேரில் இந்தியா மந்திரிக்கு ஒரு கடிதம் எழுதினேன். எல்லா விவரங்களையும் அவருக்குத் தெரிவித்ததோடு தீர்மானத் தின் பிரதி ஒன்றையும் அனுப்பினேன். அவர் எனக்கு எழுதிய பதிலில், தென்னுப்பிரிக்காவில் நிலைமை வேறு என்று விளக்கி யிருந்தார். விதிகளின்படி, படைப் பிரிவுத் தலைவர்கள் தலைமை அதிகாரிகளினலேயே நியமிக்கப்படுகின்றனர் என்பதை என் கவனத்திற்குக் கொண்டுவந்தார். ஆனல், இப்பிரிவுத் தலைவர் களை இனி நியமிக்கும்போது தலைமை அதிகாரி என் சிபார்சைக் கவனிப்பார் என்றும் எனக்கு உறுதி கூறினர்.

இதற்குப் பிறகு எங்களுக்கிடையே கடிதப் போக்குவரத்து ஏராளமாக நடந்தது. ஆனல், கசப்பான இக் கதையை நீட்டிக் கொண்டு போக நான் விரும்பவில்லே. இந்தியாவில் தினந் தோறும் நான் அடைந்து வரும் அனுபவத்தை ஒத்ததாகவே அங்கே எனக்கு ஏற்பட்ட அனுபவமும் இருந்தது என்று சொல்லுவதே போதும். மிரட்டல்களினுலும் சாதுர்யத்தினுலும் தலேமை அதிகாரி எங்கள் படையைச் சேர்ந்தவர்களிடையே பிளவை உண்டாக்கிவிட்டார். தீர்மானத்திற்குச் சாதகமாக வோட்டுச் செய்திருந்தவர்களில் சிலர், தலேமை அதிகாரியின் மிரட்டல்களுக்கு அல்லது வற்புறுத்தல்களுக்கு உடன்பட்டுப் போய்த் தங்கள் வாக்குறுதியையே மீறிவிட்டனர்.

அந்தச் சமயத்தில் எதிர்பாராதவிதமாக ஏராளமான காயமடைந்த சிப்பந்திகள் நெட்லி வைத்தியசாலேக்கு வந்து சேர்ந்தனர். அவர்களுக்குப் பணிவிடை செய்ய எங்கள் படையின் சேவை கோரப்பட்டது. தலேமை அதிகாரியின் வற்புறுத்தலுக்கு உடன்பட்டவர்கள் நெட்லிக்குப் போனுர்கள். மற்றவர்கள் போக மறுத்துவிட்டனர். அப்பொழுது நான் படுத்த படுக்கையாக இருந்தேன். என்ருலும், அப்படையைச் சேர்ந்தவர்களுடன் கடிதத் தொடர்பு வைத்துக்கொண்டிருந்தேன். உதவி இந்தியா மந்திரி ஸ்ரீ ராபர்ட்ஸ், அந்த நாட்களில் பன்முறை என்னேப் பார்க்க வந்து எனக்குக் கௌரவமளித்தார். மற்றவர்களேயும் சேவை செய்யப் போகுமாறு நான் தூண்ட வேண்டும் என்று வற்புறுத்தினுர். அவர் ஒரு யோசனேயும் கூறினுர். நாங்கள் ஒரு தனிப் படையாக இருக்க வேண்டும் என்றும், நெட்லி வைத்திய சாலேயில் இப்படை அங்கிருக்கும் தலேமை அதிகாரிக்கு மாத்திரமே பொறுப்பு வாய்ந்ததாக இருக்கும் என்றும் சொன்னுர். அப்படிச் செய்வதால் சுயமரியாதையை இழப்பதென்பதும் இல்லே, அரசாங்கத்தையும் சமாதானப்படுத்தியதாகும், ஆஸ்பத்திரிக்கு வரும் காயமடைந்த ஏராளமானவர்களுக்கு உதவியான சேவை செய்ததாகவும் ஆகும் என்பதே அவர் கூறிய யோசனே. இந்த யோசனே எனக்கும் என் தோழர்களுக்கும் பிடித்திருந்தது. இதன் பலனுக நெட்லிக்குப் போகாமல் இருந்துவிட்டவர்களும் அங்கே சென்றனர்.

நான் மாத்திரம் போகவில்லே. படுத்த படுக்கையாக இருந்துகொண்டு என்னுல் ஆனதைச் செய்துவந்தேன்.

## 41

# கோகலேயின் தாராளம்

இங்கிலாந்தில் எனக்கு நுரையீரலுக்குப் பக்கத்தில் ரணமாகி நான் நோயுற்றிருந்ததைக் குறித்து முன்பே கூறியிருக்கிறேன். சில நாட்களுக்கெல்லாம் கோகலே லண்டனுக்குத் திரும்பிவிட்டார். கால்லென்பாக்கும் நானும் தவருமல் அவரைப்

போய்ப் பார்த்துக்கொண் டிருந்தோம். பெரும்பாலும் யுத்தத்தைக் குறித்தே பேசுவோம். கால்லென்பாக், ஜெர்மனியின் நாட்டு அமைப்பு முழுவதையும் வெகு நன்ருக அறிந்திருந்ததாலும், ஐரோப்பாவில் அதிகமாகச் சுற்றுப்பிரயாணம் செய்திருந்ததாலும், யுத்தம் சம்பந்தப்பட்ட பல இடங்களையும் பூகோளப் படத்தில் கோகலேக்குக் காட்டுவது வழக்கம்.

எனக்கு இந்த நோய் வந்த பிறகு இதைக் குறித்துத் தினந்தோறும் பேசுவோம். எனது உணவுப் பரிசோதனைகள் அப்பொழுதும் தொடர்ந்து நடந்துகொண்டுதான் இருந்தன. அப்பொழுது நான் மற்றவைகளுடன் நிலக்கடலை, பழுத்த, பழுக்காத வாழைப்பழங்கள், எலுமிச்சம்பழம், ஆலிவ் எண்ணெய், தக்காளி, திராட்சைப் பழங்கள் ஆகியவைகளையும் சாப்பிட்டு வந்தேன். பால், தானியங்கள், பருப்பு வகைகள் முதலியவைகளை அடியோடு தள்ளிவிட்டேன்.

டாக்டர் ஜீவராஜ மேத்தா எனக்கு வைத்தியம் செய்து வந்தார். பாலும் தானியங்களும் சாப்பிடும்படி என்னை அவர் வற்புறுத்தி வந்தார். ஆனல், அதற்குச் சம்மதிக்கப் பிடிவாதமாக மறுத்து வந்தேன். இவ் விஷயம் கோகலேயின் காதுக்கு எட்டியது. பழ உணவுதான் சிறந்தது என்று நான் கொண்டிருந்த கொள்கையில் அவருக்கு அவ்வளவாக மதிப்பில்லை. என் தேகநிலைக்குச் சரியானது என்று டாக்டர் என்ன சொல்லுகிருரோ அதை நான் சாப்பிடவேண்டும் என்ருர் கோகலே.

கோகலேயின் வற்புறுத்தலுக்கு நான் இணங்காமல் இருப்பதென்பது எனக்கு அவ்வளவு எளிதான காரியம் அல்ல. நான் மறுதலிப்பதை அவர் ஒப்புக்கொள்ளாத போது, அவ் விஷயத்தைப்பற்றிச் சிந்திக்க எனக்கு இருபத்து நான்கு மணி நேர அவகாசம் கொடுக்கும்படி கேட்டுக்கொண்டேன். அன்று மாலை நானும் கால்லென்பாக்கும் வீடு திரும்பியபோது என் கடமை என்ன என்பதைக் குறித்து விவாதித்தோம். என்னுடைய சோதனைகளில் அவரும் என்னுடன் ஈடுபட்டு வந்தார். அதில் அவருக்குப் பிரியமும் இருந்தது. ஆனல், என் தேக நிலைமைக்கு அவசியம் என்றிருந்தால் உணவுச் சோதனையைக் கைவிடுவது அவருக்கும் சம்மதமே என்பதைக் கண்டேன். ஆகவே, என் அந்தராத்மா இடும் ஆணைக்கு ஏற்ப இதில் எனக்கு நானே முடிவு செய்துகொள்ளவேண்டி யிருந்தது.

இரவெல்லாம் இந்த விஷயத்தைக் குறித்தே சிந்தித்தேன். உணவுச் சோதனையைக் கைவிடுவது என்ருல், அத்துறையில் எனக்குள்ள கருத்துக்களை யெல்லாம் கைவிடவேண்டி வரும். ஆனல், அந்தச் சோதனைகளில் எந்தக் குறைபாடுகளையும் நான் காணவில்லை. இப்பொழுது பிரச்னையெல்லாம், அன்போடு கூடிய கோகலேயின் வற்புறுத்தல்களுக்கு எந்த அளவுக்கு நான் உடன்படுவது, என் தேக நிலையின் நன்மையை முன்னிட்டு என்னுடைய

சோதனைகளை எந்த அளவுக்கு மாற்றிக்கொள்ளுவது என்பதே. கடைசியாக இதில் ஒரு முடிவுக்கு வந்தேன். முக்கியமாக ஆன்மிகத்தையே நோக்கமாகக் கொண்டு நான் கைக்கொண்ட உணவுச் சோதனைகளை மட்டும் பின்பற்றி வருவது; வேறு நோக்கம் கொண்டதான உணவுச் சோதனைகளை வைத்தியரின் ஆலோசனையின்படி விட்டுவிடுவது என்பதே நான் செய்துகொண்ட முடிவு. பால் சாப்பிடுவதை விட்டதற்கு மிக முக்கியமான நோக்கம் ஆன்மிகமானதே யாகும். பசுக்கள், எருமைகளின் மடிகளிலிருந்து கடைசிச் சொட்டு வரையிலும் பாலைக் கறந்துவிடுவதற்குக் கல்கத்தாவில் மாட்டுக்காரர்கள் அனுசரித்த கொடிய முறைகள் என் மனக் கண்முன் காட்சியளித்தன. மாமிசம் எவ்விதம் மனிதனின் உணவல்லவோ, அதே போல மிருகங்களின் பாலும் மனிதனின் உணவாக இருப்பதற்கில்லை என்ற ஓர் எண்ணமும் எனக்கு இருந்துவந்தது. ஆகையால், பால் சாப்பிடுவதில்லை என்ற என் தீர்மானத்தில் உறுதியுடன் இருந்துவருவது என்ற முடிவுடனேயே காலையில் படுக்கையிலிருந்து எழுந்தேன். இது என் மனத்திற்கும் அதிக ஆறுதலாக இருந்தது. கோகலேயிடம் போவதற்கே எனக்குப் பயமாக இருந்தது. ஆனால், என் தீர்மானத்தை அவர் மதிப்பார் என்று நம்பினேன்.

மாலையில் கால்லென்பாக்கும் நானும் நாஷனல் லிபரல் கிளப்புக்குப் போய்க் கோகலேயைப் பார்த்தோம். அவர் கேட்ட முதல் கேள்வி, ''டாக்டரின் ஆலோசனையை ஏற்றுக்கொள்ளுவது என்ற தீர்மானத்திற்கு வந்துவிட்டீர்களா?'' என்பதே.

மரியாதையோடு, ஆனால் உறுதியோடு, நான் கூறியதாவது: "ஒன்றைத் தவிர மற்றவைகளிலெல்லாம் இணங்கிவிட நான் தயாராக இருக்கிறேன். அந்த ஒன்றைப் பற்றி மாத்திரம் என்னை வற்புறுத்த வேண்டாம் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். பாலையும், பாலிலிருந்து தயாரானவைகளையும், மாமிசத்தையும் மாத்திரம் நான் சாப்பிடமாட்டேன். இவைகளைச் சாப்பிடாததனால் நான் சாக நேருமாயின், அதற்கும் தயாராவது நல்லதே என்று கருதுகிறேன்."

"இதுவே உங்கள் முடிவான தீர்மானமா?'' என்று கோகலே கேட்டார்.

''வேறுவிதமான முடிவுக்கு நான் வருவதற்கில்லை என்றே அஞ்சுகிறேன். என்னுடைய இத் தீர்மானம் தங்களுக்கு மனவருத்தத்தை உண்டாக்கும் என்பதை அறிவேன். அதற்காக என்னை மன்னிக்க வேண்டுகிறேன்'' என்றேன்.

கொஞ்சம் மனவருத்தத்துடனும், ஆனால் மிகுந்த அன்போடும் கோகலே கூறியதாவது: "உங்கள் தீர்மானம் சரி என்று நான் ஒப்புக்கொள்ளுவதற்கில்லை. இதில் ஆன்மிக அவசியம் எதுவும் இருப்பதாகவும் நான் கருதவில்லை. ஆனால், மேற்

கொண்டும் நான் உங்களை வற்புறுத்தமாட்டேன்." இவ்விதம் என்னிடம் கூறிவிட்டு, டாக்டர் ஜீவராஜ் மேதாவைப் பார்த்து அவர் சொன்னதாவது: "தயவு செய்து இனி அவரைத் தொந்தரவு செய்யாதீர்கள். அவர் தமக்கென வகுத்துக்கொண்டிருக்கும் வரம்புக்கு உட்பட்டு உணவைப் பற்றி அவருக்கு ஏதாவது யோசனை கூறுங்கள்."

என் தீர்மானத்தைத் தாம் ஒப்புக்கொள்ளுவதற்கில்லை என்றார், டாக்டர். என்றாலும், அவர் வேறு எதுவும் செய்வதற்கில்லை. பச்சைப் பயற்றுச் சூப்பில் கொஞ்சம் பெருங்காயம் போட்டுச் சாப்பிடும்படி அவர் எனக்கு யோசனை கூறினர். இதற்கு நான் சம்மதித்தேன். இரண்டொரு நாள் அதைச் சாப்பிட்டேன். ஆனல், எனக்கிருந்த வலி அதிகமாயிற்று. அது எனக்கு ஒத்துக்கொள்ளவில்லை என்பதைக் கண்டதும் திரும்பவும் பழங்களையும் கொட்டைகளையும் சாப்பிட ஆரம்பித்தேன். மேலுக்குச் செய்துவந்த சிகிச்சையை டாக்டர் தொடர்ந்து செய்து வந்தார். இதனல், வலி கொஞ்சம் குறைந்தது. ஆனல், என்னுடைய கட்டுப்பாடுகள் இடையூருக இருந்தன என்று அவர் எண்ணினர்.

இதற்கிடையில் லண்டனில் அக்டோபர் மாத மூடுபனியைச் சகிக்க முடியாததனல் கோகலே தாய்நாட்டுக்குத் திரும்பினர்.

# 42

# நோய்க்குச் சிகிச்சை

நுரையீரலுக்கு அருகில் இருந்த ரணத்தினல் ஏற்பட்ட என் நோய், குணமாகாமல் இருந்துவந்தது கொஞ்சம் கவலையை அளித்தது. ஆனல், உள்ளுக்கு மருந்து சாப்பிடுவதனல் இது குணமாவதில்லை என்பதையும், உணவில் செய்துகொள்ளும் மாறுதல்களினலும் வெளிப் பரிகாரங்களினலுமே குணமாகும் என்பதையும் அறிவேன்.

டாக்டர் அலிஸன் பிரபலமான சைவ உணவு வாதி. அவரை அழைத்துவரச் செய்தேன். அவர், உணவு மாறுதல்களின் மூலமே பல நோய்களுக்குச் சிகிச்சை செய்து வந்தார். *1890*-ஆம் ஆண்டிலும் அவரைச் சந்தித்திருக்கிறேன். அவர் என்னை முற்றும் பரிசோதனை செய்து பார்த்தார். பால் சாப்பிடுவதே இல்லை என்று நான் விரதம் எடுத்துக்கொண்டிருப்பது பற்றியும் அவரிடம் சொன்னேன். அவர் என்னை உற்சாகப்படுத்திவிட்டுச் சொன்னதாவது: "நீங்கள் பால் சாப்பிட வேண்டியதே இல்லை. உண்மையில், சில நாட்களுக்கு நீங்கள் கொழுப்புச் சத்து எதையுமே சாப்பிடக்கூடாது என்றே நான் விரும்புகிறேன்." சாதாரணப் பழுப்பு ரொட்டி, பீட் ரூட், முள்ளங்கி, வெங்காயம், மற்றும் கிழங்குகள் போன்றவற்றைப் பச்சையாகவும், கீரைகளை

யும், பழங்களையும், முக்கியமாக ஆரஞ்சுப் பழங்களையும் சாப்பிட்டு வருமாறு அவர் எனக்கு யோசனை கூறினர். கறி காய்களைச் சமைக்கக்கூடாது; அப்படியே பச்சையாக மென்று தின்ன என்னுல் முடியாவிட்டால் நுட்பமாகத் திருகி வைத்துக்கொண்டு சாப்பிடச் சொன்னர்.

இதன்படி மூன்று நாட்கள் சாப்பிட்டேன். ஆனல், பச்சைக் காய் கறிகள் எனக்கு ஒத்துக்கொள்ளவில்லை. இந்தப் பரீட்சையை முற்றும் அனுசரித்துப் பார்க்கும் வகையில் என் உடல் நிலை இல்லை. பச்சைக் கறி காய்களைச் சாப்பிடுவதற்கு எனக்குப் பயமாகவே இருந்தது.

அதோடு, என் அறையின் சன்னல்களையெல்லாம் எப்பொழுதும் திறந்தே வைக்கும்படியும், வெது வெதுப்பான நீரில் குளிக்குமாறும், நோயுள்ள பகுதிகளில் எண்ணெய் தடவித் தேய்க்கும்படியும், பதினைந்து நிமிடங்களிலிருந்து முப்பது நிமிட நேரம் வரை திறந்த வெளியில் நடக்குமாறும் டாக்டர் அலிஸன் எனக்குக் கூறினர்.

என் அறையின் சன்னல்கள், பிரெஞ்சு முறையிலானவை. ஆகவே, முழுவதும் திறந்து வைத்துவிட்டால் மழை நீரெல்லாம் உள்ளே வந்துவிடும். விசிறி போன்றிருந்த சன்னல் கதவைத் திறக்கவே முடியவில்லை. ஆகவே, நல்ல காற்று உள்ளே வரட்டும் என்பதற்காக அதன் கண்ணாடிகளை உடைத்துவிட்டேன். மழை நீர் உள்ளே வராதவகையில் ஒருவாறு சன்னலையும் திறந்து வைத்தேன். இந்த முறைகளெல்லாம் ஓரளவுக்கு என் தேக நிலையில் அபிவிருத்தியை அளித்தன. என்ருலும், பூரணமாகக் குணமாகிவிடவில்லை.

அச் சமயம் லேடி செஸிலியா எப்பொழுதாவது என்னைப் பார்க்க வருவதுண்டு. நாங்கள் நண்பர்களானேம். நான் பால் சாப்பிடும்படி செய்துவிட வேண்டும் என்று அவர் மிகவும் முயன்ருர். ஆனல், நான் பிடிவாதமாக மறுத்துவிடவே பாலுக்குப் பதிலாகச் சாப்பிடக்கூடிய ஒன்றைத் தேடிப் பிடிப்பதற்காக அலைந்தார். பாலும் தானியச் சத்தும் கலந்ததான 'மால்ட்டட் மில்க்' சாப்பிடலாம் என்று யாரோ ஒரு நண்பர் அவருக்குக் கூறினர். அதில் பால் கலப்பே கிடையாது என்றும், பால் சத்து இருக்கும் வகையில் ரசாயன முறையில் அது தயாரிக்கப்பட்டது என்றும், உண்மையை அறியாமலேயே அந்த நண்பர் அவருக்கு உறுதி கூறிவிட்டார். லேடி செஸிலியா, என்னுடைய சமயக் கொள்கை சம்பந்தமான நம்பிக்கைகளை மதித்து நடப்பவர் என்பதை அறிவேன். ஆகவே, அவர் சொன்னதை அப்படியே நம்பிவிட்டேன். அந்தப் பொடியை நீரில் கலந்து சாப்பிட்டேன். அதன் சுவை பாலின் சுவை போன்றே இருக்கக் கண்டேன். பிறகு புட்டியின் மீது ஒட்டியிருந்த சீட்டில் எழுதியிருப்பதைப் படித்துப் பார்த்தேன். பாலிலிருந்து தயாரிக்கப்படுவதே அது

என்பதை அறிந்தேன். சாப்பிட்ட பிறகுதான் இதெல்லாம் தெரிந்தது. ஆகவே, அதைச் சாப்பிடுவதை விட்டுவிட்டேன்.

நான் கண்டுபிடித்துவிட்டதைக் குறித்து லேடி செஸிலியாவுக்கு அறிவித்து அதைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம் என்றும் கேட்டுக்கொண்டேன். அவரோ, தனது வருத்தத்தைத் தெரிவித்துக்கொள்ள விரைந்தோடி வந்தார். அவருக்குச் சொன்ன நண்பர், புட்டிமீது ஒட்டியிருந்த சீட்டைப் படித்துப் பார்க்கவே இல்லை. இதைக் குறித்துக் கவலைப்படவே வேண்டாம் என்று அவரை மிகவும் வேண்டிக் கொண்டேன். எவ்வளவோ சிரமப்பட்டுத் தேடிக் கொண்டு வந்தவைகளை நான் பயன்படுத்திக் கொள்ள முடியாமைக்கு என் வருத்தத்தையும் தெரிவித்துக் கொண்டேன். தெரியாததனல் தவருகப் பால் சாப்பிட்டுவிட்டதற்காக, குற்றஞ் செய்து விட்டதாக எண்ணி நான் வருத்தப்படவில்லை என்றும் அவருக்கு உறுதி கூறினேன்.

லேடி செஸிலியாவுடன் ஏற்பட்ட தொடர்பைப் பற்றிய மற்றும் பல இனிய ஞாபகங்களெல்லாம் உண்டு. அவற்றையெல்லாம் கூருமல் மேலே செல்ல வேண்டியவனுகிறேன். எத்தனையோ சோதனைகளுக்கும் ஏமாற்றங்களுக்கும் இடையே எனக்குப் பெரும் ஆறுதல் அளிப்பவர்களாக இருந்துவந்த அநேக நண்பர்களைப்பற்றி நான் எண்ணிப் பார்க்க முடியும். இவ்விதம் கடவுள் துயரங்களையும் இன்பமானவைகளாக்கி விடுகிருர். இதில் நம்பிக்கையுள்ளவர்கள், கருணைக் கடலான கடவுளின் அந்த அருளையே அந் நண்பர்களிடமும் காண்பார்கள்.

டாக்டர் அலிஸன் அடுத்த முறை என்னைப் பார்க்க வந்தபோது, ஆகாரத்தில் எனக்கு விதித்திருந்த கட்டுத்திட்டங்களைத் தளர்த்திவிட்டார். கொழுப்புச் சத்துக்காக நிலக்கடலை வெண்ணெய் அல்லது ஆலிவ் எண்ணெய் சேர்த்துக்கொள்ளும்படியும் கறிகாய்களைச் சமைத்து, நான் விரும்பினல் அரிசிச் சாதத்துடன் சாப்பிடுமாறும் கூறினர். இந்த மாறுதல்கள் எனக்குப் பிடித்தன. ஆனல், இவைகளினலும் பூரண குணம் ஏற்படவில்லை. அதிக ஜாக்கிரதையான பணிவிடை அவசியமாகவே இருந்தது. பெரும்பாலும் நான் படுக்கையிலேயே இருக்க வேண்டியிருந்தது.

என்னைப் பரிசோதித்துப் பார்ப்பதற்காக டாக்டர் மேத்தா அவ்வப்போது வருவதுண்டு. தாம் சொல்லுகிறபடி கேட்பதாயிருந்தால், என் நோயைக் குணப்படுத்திவிடுவதாக அவர் எப்பொழுதும் சொல்லிவந்தார்.

நிலைமை இவ்வாறு இருந்துவரும்போது ஒரு நாள் ஸ்ரீ ராபர்ட்ஸ் என்னைப் பார்க்க வந்தார். தாய்நாட்டுக்குத் திரும்பிவிடுமாறு அவர் வற்புறுத்திச் சொன்னர். "இந்த நிலைமையில் நீங்கள் நெட்லிக்குப் போவது சாத்தியமே இல்லை. இனி வரப்போவது கடுமையான குளிர்காலம். இந்தியாவில்தான் நீங்கள் பூரணமாகக் குணமடைய முடியுமாகையால் அங்கே நீங்கள்

போய்விடவேண்டும் என்று உங்களுக்குக் கண்டிப்பாகக் கூறு கிறேன். அங்கே நீங்கள் குணமடைந்த பிறகு அப்பொழுதும் யுத்தம் தொடர்ந்து நடந்து கொண்டிருந்தால், நீங்கள் உதவி செய்ய அங்கே அநேக வாய்ப்புகள் இருக்கின்றன. இப்பொழுது கூட, நீங்கள் இதுவரை செய்திருப்பது எந்த விதத்திலும் அற்ப மானது என்று நான் கருதவில்லை."

அவருடைய யோசனையை ஏற்றுக்கொண்டேன். இந்தியா வுக்குத் திரும்புவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய லானேன்.

# 43
# தாய்நாடு நோக்கி

இந்தியாவுக்குப் போவதற்காக ஸ்ரீ கால்லென்பாக் என் னுடன் இங்கிலாந்துக்கு வந்தார். இருவரும் ஒன்றாகவே வசித்து வந்தோம். ஒரே கப்பலிலேயே புறப்படவும் விரும்பினோம். அப் பொழுது ஜெர்மானியர்மீது கண்காணிப்புக் கடுமையாக இருந்து வந்தது. ஆகையால், ஸ்ரீ கால்லென்பாக்குக்குப் பிரயாண அனு மதிச் சீட்டுக் கிடைக்குமா என்பது எனக்குச் சந்தேகமாகவே இருந்தது. அதைப் பெற்று விடுவதற்காக என்னாலான வரை யில் முயன்றேன். அவருக்கு அனுமதிச் சீட்டுக் கொடுப்பதற்கு ஸ்ரீ ராபர்ட்ஸ் ஆதரவாக இருந்தார். இதைக் குறித்து வைசி ராய்க்கும் அவர் தந்தி கொடுத்தார். "வருந்துகிறோம். அத் தகைய அபாயம் எதற்கும் உட்பட இந்திய அரசாங்கம் தயாரா யில்லை" என்று லார்டு ஹார்டிஞ்சிடமிருந்து நேரடியான பதில் வந்துவிட்டது. அந்தப் பதிலில் அடங்கியிருந்த நியாயத்தை நாங் கள் எல்லோரும் உணர்ந்துகொண்டோம்.

ஸ்ரீ கால்லென்பாக்கை விட்டுப் பிரிவது எனக்கு மிகுந்த வேதனையாக இருந்தது. அவருக்கு இருந்த துயரம் இன்னும் அதிகம் என்பதைக் கண்டேன். அவர் இந்தியாவுக்கு வர முடிந் திருந்தால், அவர் இன்று ஒரு குடியானவனாகவும், நெசவாளியாக வும் இன்பமான எளிய வாழ்க்கையை நடத்திக்கொண்டிருப்பார். இப்பொழுது அவர் தென்னாப்பிரிக்காவில் இருக்கிறார். அவர் பழைய வாழ்க்கையை நடத்திக்கொண்டு கட்டடச் சிற்பியாக நல்ல வருமானத்துடன் தொழில் நடத்தி வருகிறார்.

கப்பலில் மூன்றாம் வகுப்பில் பிரயாணம் செய்யவே விரும்பி னோம். ஆனால், பி. அண்டு ஓ. கம்பெனிக் கப்பல்களில் மூன்றாம் வகுப்பு இல்லாததால் இரண்டாம் வகுப்பில் சென்றோம். தென் னாப்பிரிக்காவிலிருந்து நாங்கள் கொண்டுவந்திருந்த உலர்ந்த பழங்களை உடன்கொண்டு போனோம். இவை கப்பலில் கிடைக்க மாட்டா. ஆனால், புதுப் பழங்கள் தாராளமாகக் கிடைக்கும்.

என் விலா எலும்புகளுக்கு டாக்டர் ஜீவராஜ் மேத்தா, 'மெடேஸ் பிளாஸ்திரி' போட்டுக் கட்டிவிட்டதோடு செங்கடல் போகும் வரையில் அதை நீக்கக்கூடாது என்றும் சொன்னர். இதனல் உண்டான தொல்லையை இரண்டு நாள் சகித்துக் கொண்டுவிட்டேன். அதற்குமேல் என்னல் சகிக்க முடியவில்லை. அதிகச் சிரமப்பட்டே அந்தப் பிளாஸ்திரியை அவிழ்க்க என்னல் முடிந்தது. அதன் பிறகு உடம்பைச் சுத்தம் செய்துகொள்ளவும் குளிக்கவும் மீண்டும் சுதந்திரம் பெற்றேன்.

பெரும்பாலும் பழங்களையும் கொட்டைப் பருப்புகளையுமே சாப்பிட்டு வந்தேன். நாளுக்கு நாள் நான் குணம் அடைந்து வருவதாக உணர்ந்தேன். சூயஸ் கால்வாய்க்குள் பிரவேசித்த போது, அதிக தூரம் குணமடைந்து விட்டதாக எனக்குத் தோன்றிற்று. நான் பலவீனமாகவே இருந்தேனயினும் ஆபத்தைக் கடந்து விட்டதாக எண்ணினேன். என் தேகாப்பியாசத்தையும் நாளுக்கு நாள் அதிகமாக்கிக்கொண்டு வந்தேன். நடுத்தரமான வெப்பமுள்ள பிரதேசத்தின் சுத்தமான காற்றே என் தேக நிலையில் ஏற்பட்ட அபிவிருத்திக்குக் காரணம் என்று கருதினேன்.

கப்பலிலிருந்த இந்தியப் பிரயாணிகளும் ஆங்கிலப் பிரயாணிகளும் நெருங்கிப் பழகாமல் தொலைவாகவே இருந்து வந்ததைக் கவனித்தேன். தென்னுப்பிரிக்காவிலிருந்து நான் கப்பலில்சென்ற சமயங்களில்கூட, இப்படி இருந்ததாக நான் கண்டதில்லை. எனக்கு இவ்விதம் தோன்றியது, முந்திய அனுபவங்களினலா, வேறு காரணத்தினலா என்பது எனக்குத் தெரியாது. சில ஆங்கிலேயருடன் நான் பேசிக்கொண்டிருந்தேன். ஆனல், அது வெறும் சம்பிரதாயப் பேச்சே. தென்னுப்பிரிக்கக் கப்பல்களில் சென்றபோது இருந்ததைப்போன்ற அன்னியோன்யமான சம்பாஷணைகளே இந்தத் தடவை இல்லை. இதற்கு ஒன்று காரணமாக இருக்கக்கூடும் என்று நான் எண்ணுகிறேன். தாங்கள் ஆளும் இனத்தைச் சேர்ந்தவர்கள் என்ற எண்ணம், அறிந்தோ அறியாமலேயோ, ஆங்கிலேயரின் உள்ளத்திற்குள் இருந்திருக்கக்கூடும். அடிமைப்பட்ட இனத்தினர் தாங்கள் என்ற எண்ணம் இந்தியரின் உள்ளத்திற்குள்ளும் இருந்திருக்கலாம். இத்தகைய சூழ்நிலையிலிருந்து விடுபட்டு வீடுபோய்ச் சேர்ந்துவிட வேண்டும் என்று நான் அதிக ஆர்வத்துடனிருந்தேன்.

ஏடன் சேர்ந்ததுமே தாய்நாட்டுக்கு வந்துவிட்டதைப் போன்ற உணர்ச்சி எங்களுக்கு உண்டாயிற்று. ஸ்ரீ கெகோபாத் காவாஸ்ஜி தின்ஷா, ஏடனைச் சேர்ந்தவர். அவரை டர்பனில் சந்தித்திருக்கிறேம். அவருடனும் அவர் மனைவியோடும் நெருங்கிப் பழகியும் இருக்கிறேம். ஆகையால், ஏடன் வாசிகளைப்பற்றி எங்களுக்கு நன்றாகத் தெரியும்.

சில தினங்களுக்கெல்லாம் பம்பாய் வந்தடைந்தோம். பத்து ஆண்டுகள் பிற நாடுகளில் இருந்துவிட்ட பின்பு தாய் நாட்டிற்குத் திரும்பியது பெரிய ஆனந்தமளித்தது.

கோகலேயினுடைய யோசனையின் பேரில் பம்பாயில் எனக்கு வரவேற்பு ஏற்பாடு செய்திருந்தார்கள். தமது தேகநிலை சரியாக இல்லாதிருந்தும் கோகலேயும் பம்பாய்க்கு வந்திருந்தார். அவரோடு நான் ஐக்கியமாகி விடுவதன் மூலம் கவலையற்றிருக்கலாம் என்ற திடமான நம்பிக்கையுடனேயே நான் இந்தியாவுக்கு வந்தேன். ஆனால், விதியோ முற்றும் வேறுவிதமாக இருந்துவிட்டது.

# 44

# வக்கீல் தொழில் பற்றிய நினைவுகள்

இந்தியாவில் என் வாழ்க்கை எந்தப் போக்கில் போயிற்று என்பதைப் பற்றிச் சொல்ல ஆரம்பிக்கும் முன்பு, இதுவரையில் வேண்டுமென்றே நான் கூறாமல் இருந்து வந்திருக்கும் தென்னாப்பிரிக்கா பற்றிய மற்றும் சில செய்திகளை ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டியது அவசியம் என்று கருதுகிறேன்.

வக்கீல் தொழிலைப் பற்றிய என் நினைவுகளைக் கூறுமாறு சில வக்கீல் நண்பர்கள் கேட்கிறார்கள். அத்தகைய நினைவுகள் ஏராளமானவை. அவைகளையெல்லாம் சொல்லுவதானால் அதுவே ஒரு புத்தகமாகிவிடும்; அது என் நோக்கத்திற்கும் மாறானது. ஆனால், அவைகளில் உண்மையைக் கடைப்பிடிப்பது சம்பந்தமான சில நினைவுகளை மாத்திரம் கூறுவது தவறாக இல்லாமலும் இருக்கக் கூடும்.

எனக்கு நினைவிருக்கும் வரையில், எனது வக்கீல் தொழிலில் பொய்யை அனுசரித்ததே இல்லை என்று முன்பே சொல்லியிருக்கிறேன். நான் நடத்திய வழக்குகளில் பெரும் பகுதி, பொதுஜன நன்மைக்காக நடத்தப்பட்டது. என் கையைவிட்டுச் செலவு செய்த பணத்திற்கு அதிகமாக அந்த வழக்குகளுக்கு நான் பணம் வாங்குவதே இல்லை. அவற்றில் கூட சில சமயங்களில் என் சொந்தப் பணத்தையும் செலவு செய்தது உண்டு. இதை முன்பே சொல்லிவிட்டதன் மூலம், என் வக்கீல் தொழிலைக் குறித்துச் சொல்லுவதற்கு அவசியமானவைகளை யெல்லாம் நான் சொல்லிவிட்டதாகவே எண்ணினேன். இன்னும் அதிகமாகச் சொல்ல வேண்டும் என்று நண்பர்கள் விரும்புகின்றனர். வக்கீல் தொழிலில் சத்தியத்தினின்றும் தவறிவிடமறுத்து நான் உறுதியுடனிருந்த சந்தர்ப்பங்களில் சிலவற்றைக் குறித்துச் சிறிதளவேனும் நான் விவரித்துச் சொன்னால் வக்கீல் தொழிலில் ஈடுபட்டிருப்போர் அதனால் பயனடையக்கூடும் என்று அந்த நண்பர்கள் நினைக்கிறார்கள் என்று தெரிகிறது.

வக்கீல் தொழில் பொய்யர்களின் தொழில் என்று சொல்லப் பட்டதை நான் மாணவனுக இருந்தபோது கேட்டிருக்கிறேன். பொய் சொல்லிப் பணத்தையோ, அந்தஸ்தையோ சம்பாதித்துக் கொண்டுவிட வேண்டும் என்ற நோக்கம் எனக்கு இல்லாததனுல் அதெல்லாம் என் மனத்தை மாற்றிவிடவே இல்லே.

தென்னுப்பிரிக்காவில் என் கொள்கைகள் பன்முறைகளிலும் சோதனைக்கு உள்ளானது உண்டு. என் எதிர்க் கட்சிக்காரர்கள், சாட்சிகளுக்குச் சொல்லிக்கொடுத்துத் தயார் செய்திருக்கிருர் கள் என்பதைப் பல தடவைகளிலும் நான் அறிந்திருக்கிறேன். என் கட்சிக்காரரையோ, அவருடைய சாட்சிகளேயோ பொய் சொல்ல மாத்திரம் நான் உற்சாகப்படுத்தியிருந்தால், நாங்கள் சில வழக்குகளில் வெற்றி பெற்றிருப்போம். ஆனுல், அத்தகைய ஆசையை நான் எப்பொழுதும் எதிர்த்தே வந்திருக்கிறேன். ஒரு வழக்கில் வெற்றி பெற்றுவிட்ட பிறகு என் கட்சிக்காரர் என்னே ஏமாற்றிவிட்டார் என்று நான் சந்தேகித்த ஒரே ஒரு சம்பவம் எனக்கு ஞாபகம் இருக்கிறது. என் கட்சிக்காரரின் வழக்கில் நியாயமிருந்தால்தான் அதில் வெற்றி கிடைக்க வேண்டும் என்று என் உள்ளத்திற்குள் எப்பொழுதும் விரும்பி வந்தேன். வழக்குக்கு என் கட்டணத்தை நிர்ணயிப்பதில் கூட, அதில் வெற்றி பெற்ருல் இவ்வளவு கொடுக்க வேண்டும் என்று நான் நிபந்தனை போட்டதாகவும் எனக்கு நினைவில்லே. கட்சிக்காரர் வெற்றி பெற்ருலும் தோற்ருலும், என் கட்டணத்திற்கு அதிக மாகவோ, குறைவாகவோ எதையும் நான் எதிர்பார்ப்பதில்லே.

பொய் வழக்கை நடத்துவேன் என்ருே, சாட்சிகளுக்குச் சொல்லிக்கொடுத்துத் தயார் செய்வேன் என்ருே, என்னிடம் எதிர்பார்க்க வேண்டாம் என்று புதிதாக வரும் கட்சிக்காரரிடம் ஆரம்பத்திலேயே கூறிவிடுவேன். இதன் பலனுக, எனக்கு ஒரு பெயர் ஏற்பட்டு என்னிடம் பொய் வழக்கே வருவதில்லே. என்னுடைய கட்சிக்காரர்களில் சிலர், பொய்க் கலப்பில்லாத வழக்குகளே மாத்திரம் என்னிடம் கொண்டுவந்து, சந்தேகத்திற்கு இடமுள்ளதான வழக்குகளுக்கு வேறு வக்கீல்களே அமர்த்திக் கொள்ளுவார்கள்.

ஒரு வழக்கு மிகவும் கடுமையான சோதனேயாகிவிட்டது. என்னுடைய கட்சிக்காரர்களில் மிகச் சிறந்தவரான ஒருவ ருடைய வழக்கு அது; அதிகச் சிக்கலான கணக்கு வழக்கு களேப்பற்றிய நடவடிக்கை அது; நீண்ட காலம் நடந்தும் வந்தது. பல கோர்ட்டுகளும் அவ் வழக்கைக் கொஞ்சம் கொஞ்சம் விசா ரித்திருந்தன. முடிவாக அவ்வழக்கில் சம்பந்தப்பட்ட கணக்குத் தகராறுகளேத் தகுதி வாய்ந்த கணக்கர்களின் மத்தியஸ்தத் திற்குக் கோர்ட்டு விட்டுவிட்டது. இந்த மத்தியஸ்தர்களின் முடிவு என் கட்சிக்காரருக்குச் சாதகமாயிற்று. ஆனுல், மத்தியஸ்தர்கள் கூட்டிப் போட்டதில் அறியாமலேயே ஒரு தவறைச் செய்துவிட்டார்கள். தவறு சிறியதேயாயினும், பற்று

வைக்க வேண்டிய தொகை வரவாக வைக்கப்பட்டு விட்டதால் அது முக்கியமான தவறேயாயிற்று. இத் தீர்ப்பை, எதிர்த் தரப்பினர் இக் காரணத்திற்காக ஆட்சேபிக்காமல் வேறு காரணங்களைக் கூறி ஆட்சேபித்தார்கள். இவ்வழக்கில் என் கட்சிக்காரருடைய பெரிய வக்கீலின் கீழ் நான் உதவி வக்கீலாகவே இருந்தேன். நடந்திருந்த தவறைப் பெரிய வக்கீல் அறிந்ததும், அதை ஒப்புக்கொள்ள எங்கள் கட்சிக்காரர் கடமைப்பட்டவரல்ல என்று கூறினர். தம் கட்சிக்காரருக்கு விரோதமான எதையும் ஏற்றுக்கொண்டுவிடும் கடமை எந்த வக்கீலுக்கும் இல்லை என்பது அவருடைய தெளிவான அபிப்பிராயம். நானே, தவறை ஏற்றுக்கொண்டுவிட வேண்டும் என்றேன்.

ஆனல், பெரிய வக்கீல் பின்வருமாறு விவாதித்தார்: "தவறு நடந்திருப்பதாக நாம் ஏற்றுக்கொண்டால், மத்தியஸ்தர்களின் தீர்ப்பு முழுவதையுமே கோர்ட்டு ரத்து செய்துவிடக்கூடும். சித்த சுவாதீனமுள்ள எந்த வக்கீலும் தம் கட்சிக்காரனின் வழக்குக்கு அந்த அளவுக்கு ஆபத்தை உண்டாக்கிவிட மாட்டார். எப்படியானுலும் சரி, அத்தகைய அபாயத்திற்கு நான் உடன்படவே மாட்டேன். திரும்பவும் புதிதாக விசாரிக்கும்படி வழக்கு அனுப்பப்பட்டுவிட்டால் நம் கட்சிக்காரருக்கு எவ்வளவு பணம் செலவாகும், முடிவு என்னவாகும் என்று யார்தான் சொல்ல முடியும்?"

இவ்விதம் நாங்கள் பேசிக்கொண்டிருந்த போது கட்சிக்காரரும் அங்கிருந்தார்.

நான் கூறியதாவது: "இதில் ஆபத்திருந்தாலும் அதற்கு நாமும் நமது கட்சிக்காரரும் உடன்பட வேண்டியதே என்றுதான் நான் கருதுகிறேன். நடந்திருக்கும் ஒரு தவறை நாம் ஏற்றுக்கொள்ளாததனுலேயே தவருனதோர் தீர்ப்பைக் கோர்ட்டு அங்கீகரித்துவிடும் என்பதற்கு என்ன நிச்சயம் இருக்கிறது? நாம் தவறை ஏற்றுக்கொள்ளுவதால் நம் கட்சிக்காரருக்கு கஷ்டமே ஏற்படுவதாயிருந்தாலும் அதனுல் என்ன தீங்கு நேர்ந்துவிடும்?"

"ஆனல், நாமாகப் போய் ஏன் அதிலிருக்கும் தவறை ஏற்றுக்கொள்ள வேண்டும்?" என்று கேட்டார், பெரிய வக்கீல்.

"அத் தவறைக் கோர்ட்டு கண்டுபிடித்துவிடாது, எதிர்த் தரப்பினரும் கண்டுகொண்டுவிட மாட்டார்கள் என்பது என்ன நிச்சயம்?" என்றேன், நான்.

"ஆனல், இந்த வழக்கின்மீது கோர்ட்டில் விவாதிக்க நீங்கள் தயாரா? நீங்கள் கூறுகிற வகையில் அந்த வழக்கில் விவாதிக்க நான் தயாராயில்லை" என்று தீர்மானமாகப் பதில் சொன்னர், பெரிய வக்கீல்.

இதற்கு நான் பணிவுடன் பின்வருமாறு பதில் சொன்னேன்: "நீங்கள் விவாதிக்க வில்லையானால், நம் கட்சிக்காரர் விரும்பினால், நான் விவாதிக்கத் தயாரா யிருக்கிறேன். தவறை ஏற்றுக்கொள் ளாவிட்டால் இந்த வழக்கில் நான் எந்தவித சம்பந்தமும் வைத் துக்கொள்ளப் போவதில்லை."

இவ்விதம் கூறிவிட்டு என் கட்சிக்காரரைப் பார்த்தேன். அவர் நிலைமை கொஞ்சம் சங்கடமாகவே இருந்தது. ஆரம்பத்தி லிருந்தே நான் இந்த வழக்கை நடத்தி வருகிறேன். கட்சிக்கார ருக்கு என்மீது பூரண நம்பிக்கை உண்டு. என்னை அவர் மிக நன்ருக அறிவார். அவர் சொன்னர்: "அப்படியானல் சரி, வழக் கில் கோர்ட்டில் நீங்கள் விவாதியுங்கள். தவறையும்ஏற்றுக்கொள் ளுங்கள். அதுதான் நம் கதி என்ருல் இதில் தோற்றுப் போன லும் போகட்டும். நியாயத்தைக் கடவுள் பாதுகாப்பார்."

நான் ஆனந்தமடைந்தேன். இந்தப் பெருங் குணத்தைத் தவிர வேறு எதையும் என் கட்சிக்காரரிடம் நான் எதிர்பார்க்க வில்லை. பெரிய வக்கீல் என்னை மீண்டும் எச்சரிக்கை செய்தார். என் பிடிவாதத்தைக் கண்டு பரிதாபப்பட்டார். ஆனல், அதே சமயத்தில் எனக்கு வாழ்த்தும் கூறினர்.

கோர்ட்டில் என்ன நடந்தது என்பதை அடுத்த அத்தியா யத்தில் கவனிப்போம்.

# 45

# மோசடியான வேலையா?

**நா**ன் கூறிய யோசனை சிறந்தது என்பதில் எனக்குச் சிறி தளவும் சந்தேகமே இல்லை. ஆனல், இந்த வழக்கைச் சரியான படி நடத்திவிட என்னல் முடியுமா என்று அதிக தூரம் ஐயுற் றேன். சுப்ரீம் கோர்ட்டின் முன்பு இத்தகையதொரு கஷ்டமான வழக்கில் விவாதிக்க முற்படுவது மிகுந்த துணிச்சலானகாரியமே என்று எண்ணினேன். பயத்துடன் நடுங்கிக்கொண்டே நீதிபதி களின் முன்பு எழுந்து நின்றேன்.

கணக்கில் ஏற்பட்டுவிட்ட தவறைப்பற்றி நான் கூறியதும் நீதிபதிகளில் ஒருவர், "இது மோசடியான வேலையல்லவா, ஸ்ரீ காந்தி?" என்று கேட்டார்.

அவர் இவ்வாறு கூறக் கேட்டதும் என் உள்ளம் கொதித்து விட்டது. காரணம் எதுவுமே இல்லாதபோது, மோசடியான வேலை செய்திருப்பதாகக் குற்றஞ் சாட்டப்படுவது சகிக்க முடி யாதது. 'இவ்விதம் ஆரம்பத்திலேயே ஒரு நீதிபதி துவேஷம் கொண்டிருக்கும்போது இந்தக் கஷ்டமான வழக்கில் வெற்றி பெறுவதற்குச் சந்தர்ப்பமே இல்லை' என்று எனக்கு நானே சொல்லிக்கொண்டேன். என்ருலும், மனத்தைச் சாந்தப்படுத்திக்

கொண்டு, “நான் கூறுவதை முழுவதும் கேட்டுக்கொள்ளா மலேயே இதில் மோசடியான வேலே இருப்பதாக நீதிபதி யவர்கள் சந்தேகிப்பதைக் குறித்து ஆச்சரியமடைகிறேன்” என்றேன்.

‘‘அப்படி நான் குற்றஞ் சாட்டவில்லே. அது மாதிரி இருக் குமா என்ற யோசனைதான்’’ என்ருர், நீதிபதி.

‘‘அப்படி யோசிப்பது இந்த இடத்தில் குற்றச்சாட்டுக்கே சமமானதாகும் என்று எனக்குத் தோன்றுகிறது. நான் சொல் லப்போவது முழுவதையும் கேட்டுவிட்டு அதன் பிறகு காரண மிருந்தால் என்மீது குற்றஞ் சாட்டும்படி கேட்டுக்கொள்ளு கிறேன்’’ என்றேன்.

அதற்கு நீதிபதி, ‘‘இடையில் குறுக்கிட்டதற்காக வருந்து கிறேன். கணக்கில் ஏற்பட்டிருக்கும் தவறைக் குறித்து உங்கள் சமாதானத்தைத் தொடர்ந்து சொல்லுங்கள்’’ என்ருர்.

நான் கூற வேண்டிய சமாதானத்திற்குப் போதுமான ஆதா ரங்கள் என்னிடம் இருந்தன. நீதிபதி இந்தப் பிரச்னையைக் கிளப் பியது நல்லதாயிற்று. ஆரம்பம் முதலே என்னுடைய வாதங் களை நீதிபதிகள் கவனிக்கும்படி செய்வது எனக்குச் சாத்தியமா யிற்று. நான் அதிக உற்சாகமடைந்ததோடு என்னுடைய சமா தானத்தை விவரமாக எடுத்துக் கூற இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டேன். நீதிபதிகளும் நான் கூறியதைக் கவனமாகக் கேட்டுக்கொண்டார்கள். கணக்கில் ஏற்பட்ட தவறு, கவனக் குறைவினுல் ஏற்பட்டதே யன்றி வேறல்ல என் பதை நீதிபதிகள் ஒப்புக்கொள்ளும்படி செய்வதும் என்னுல் முடிந்தது. ஆகையால், அதிகச் சிரமப்பட்டுச் செய்யப்பட்ட மத்தியஸ்தர் தீர்ப்பு முழுவதையுமே தள்ளிவிட வேண்டும் என்று அவர்கள் கருதவில்லே.

தவறு ஒப்புக் கொள்ளப்பட்டு விட்டபடியால் தாம் அதிக மாக வாதம் செய்யவேண்டிய அவசியமில்லே என்ற நம்பிக்கை யில் எதிர்த் தரப்பு வக்கீல் இருந்தார் என்று தோன்றியது. ஆனுல், நேர்ந்துவிட்ட கணக்குத் தவறு கைத்தவறே என்றும், அதைச் சுலபத்தில் திருத்திக்கொண்டுவிடலாம் என்றும் நீதிபதி கள் கருதினர். இதனுல், எதிர்த் தரப்பு வக்கீலே அடிக்கடி இடை மறித்துக் கேள்விகள் கேட்டனர். மத்தியஸ்தர் தீர்ப்பே தவ ருனது என்று கூறி அதைத் தாக்க அந்த வக்கீல் அதிகச் சிரமம் எடுத்துக்கொண்டார். ஆனுல், ஆரம்பத்தில் என்னிடம் சந் தேகம் கொண்ட நீதிபதி, இப்பொழுது நிச்சயமாக என் கட்சிக் குத் திரும்பிவிட்டார்.

‘‘ஸ்ரீ காந்தி, கணக்கிலிருந்த தவறை ஒப்புக்கொண் டிருக்க வில்லே என்று வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது நீங்கள் என்ன செய்திருப்பீர்கள்?” என்று நீதிபதி, அவரைக் கேட்டார்.

“நாங்கள் நியமித்தவரைவிட அதிகத் திறமை வாய்ந்த, யோக்கியமான கணக்கர் வேறு யாரும் எங்களுக்குக் கிடைத்திருக்க மாட்டார்” என்றூர், அந்த வக்கீல்.

“உங்கள் கட்சி உங்களுக்கு நன்ருகத் தெரிந்திருக்க வேண்டும் என்றே கோர்ட்டு எண்ண வேண்டும். நிபுணராக உள்ள எந்தக் கணக்கரும் செய்துவிடக்கூடிய தவறைத் தவிர வேறு எதையும் உங்களால் குறிப்பிட முடியவில்லை என்ருல், வெளிப்படையான இந்தத் தவறுக்காகத் திரும்பவும் புதிதாக வழக்கை நடத்தும்படியும், புதிதாகச் செலவு செய்யுமாறும் கட்சிக்காரர்களைக் கட்டாயப்படுத்தக் கோர்ட்டு விரும்பவில்லை. இச் சிறு தவறை எளிதில் திருத்திவிடலாம் என்று இருக்கும்போது இவ் வழக்கை மறு விசாரணைக்கு அனுப்ப நாங்கள் உத்தரவிட வேண்டி யிருக்காது” என்று தொடர்ந்து சொன்னூர், நீதிபதி.

இவ்வாறு எதிர்த் தரப்பு வக்கீலின் ஆட்சேபம் நிராகரிக்கப்பட்டது. கணக்குத் தவறைத் தானே திருத்திவிட்டு மத்தியஸ்தர் தீர்ப்பைக் கோர்ட்டு ஊர்ஜிதம் செய்ததா அல்லது திருத்தும்படி மத்தியஸ்தருக்கு உத்தரவிட்டதா என்பது எனக்குச் சரியாக நினைவில் இல்லை.

நான் மிகுந்த மகிழ்ச்சியடைந்தேன். என் கட்சிக்காரரும், எங்கள் பெரிய வக்கீலுங்கூட, மகிழ்ச்சி யடைந்தனர். உண்மைக்கு விரோதமில்லாமல் வக்கீல் தொழிலை நடத்துவது அசாத்தியமானது அல்ல என்ற என் நம்பிக்கையும் உறுதியாயிற்று.

ஆனூல், ஒரு விஷயத்தை வாசகர் நினைவில் வைக்கவேண்டும். வக்கீல் தொழிலை நடத்துவதில் உண்மையோடு நடந்து கொண்டாலும், அத்தொழிலைச் சீரழித்து வரும் அடிப்படையான குறைபாட்டைப் போக்கிவிட முடியாது.

## 46

# கட்சிக்காரர்கள் சகாக்க ளாயினர்

நேட்டாலில் வக்கீல் தொழில் நடத்துவதற்கும், டிரான்ஸ்வாலில் அத் தொழிலை நடத்துவதற்கும் வித்தியாசம் உண்டு. நேட்டாலில் வக்கீல் தொழில் கூட்டானது. ஓர் அட்வொகேட்டின் ஸ்தானத்தில் ஏற்றுக்கொள்ளப்படும் ஒரு பாரிஸ்டர், அட்டர்னியாகவும் அங்கே தொழில் நடத்தலாம். ஆனூல் டிரான்ஸ்வாலிலோ, பம்பாயில் இருப்பதைப்போல, அட்டர்னிகளுக்கும் அட்வொகேட்டுகளுக்கும் உள்ள பொறுப்புக்கள் வெவ்வேருனவை. ஒரு பாரிஸ்டர், தம் இஷ்டப்படி அட்டர்னியாகவோ, அட்வொகேட்டாகவோ தொழிலை நடத்தலாம். ஆகவே, நேட்டாலில் நான் அட்வொகேட்டாக ஏற்றுக்கொள்ளப் பட்டேன். ஆனூல், டிரான்ஸ்வாலில் அட்டர்னியாக இருக்க அனுமதிக்குமாறு கோரினேன். ஏனெனில், அட்வொகேட் என்ற முறையில்

நான் இந்தியருடன் நேரடியான தொடர்பு வைத்துக்கொள்ளுவ தற்கில்லை. தென்னுப்பிரிக்காவிலிருக்கும் வெள்ளைக்கார அட்டர்னிகள் என்னை வக்கீலாக அமர்த்திக்கொண்டிருக்க மாட்டார்கள்.

ஆனால், டிரான்ஸ்வாலில்கூட அட்டர்னிகள், மாஜிஸ்டிரேட்டுகளுக்கு முன்னுல் ஆஜராகி விவாதிக்கலாம். ஒரு சமயம் ஜோகன்னஸ்பர்க்கில் ஒரு மாஜிஸ்டிரேட்டின் முன்னுல் நான் ஒரு வழக்கை நடத்திக்கொண்டிருக்கையில், என் கட்சிக்காரர் என்னை ஏமாற்றி விட்டார் என்பதைக் கண்டுகொண்டேன். சாட்சிக் கூண்டில் ஏற்றி விசாரித்தபோது அவர் திக்குமுக்காடியதைப் பார்த்தேன். ஆகவே, அந்த வழக்கின்மீது நான் விவாதிக்காமல் அவ் வழக்கைத் தள்ளிவிடுமாறு மாஜிஸ்டிரேட்டைக் கேட்டுக்கொண்டேன். இதைப் பார்த்து எதிர்த் தரப்பு வக்கீல் ஆச்சரியப்பட்டுப் போனுர். மாஜிஸ்டிரேட் திருப்தியடைந்தார். என்னிடம் பொய் வழக்கைக் கொண்டுவந்ததற்காக என் கட்சிக்காரரைக் கண்டித்தேன். பொய் வழக்குகளை நான் எடுத்துக்கொள்ளுவதே இல்லை என்பது அவருக்குத் தெரியும். இதை அவருக்கு நான் எடுத்துச் சொன்னபோது, அவர் தமது தவறை ஒப்புக்கொண்டார். தமக்கு விரோதமாகத் தீர்ப்புக் கூறிவிடும்படி நான் மாஜிஸ்டிரேட்டைக் கேட்டுக்கொண்டதைக் குறித்தும் அவர் என் மீது கோபம் அடையவில்லை என்பது எனக்கு ஞாபகம். அது எப்படியாயினும், இந்த வழக்கில் நான் நடந்துகொண்ட விதத்தினுல் என் தொழிலுக்கு எந்தவிதமான பாதகமும் ஏற்பட்டுவிடவில்லை. உண்மையில் இதனுல் என் வேலை மிக எளிதாயிற்று. உண்மையினிடம் நான் கொண்டிருந்த பற்று மற்ற வக்கீல்களிடையே என் மதிப்பை அதிகப்படுத்தியது என்பதையும் கண்டேன். நிறத்தின் காரணமாக எனக்கு இடையூறுகள் இருந்தபோதிலும் சில சந்தர்ப்பங்களில் அவர்களுடைய அன்பைப் பெறுவது எனக்குச் சாத்தியமாயிற்று.

வக்கீல் தொழில் சம்பந்தமான வேலையில் கட்சிக்காரர்களிடமும் சகாக்களிடமும் என் அறியாமையை ஒளிக்கும் வழக்கமே எனக்கு இல்லை. எனக்குத் தெரியாதது என்று நான் உணரும் போது வேறு யாராவது வக்கீலிடம் கலந்து ஆலோசிக்கும்படி கட்சிக்காரரிடம் கூறிவிடுவேன். என்னையே வக்கீலாக வைத்துக் கொள்ளவேண்டும் என்று கட்சிக்காரர் பிடிவாதமாக விரும்பினுல், பெரிய வக்கீலை உதவிக்கு வைத்துக்கொள்ள அக்கட்சிக் காரரிடம் அனுமதி கேட்பேன். ஒளிவு மறைவில்லாத என்னுடைய இந்த நடத்தையினுல் கட்சிக்காரர்களின் அளவற்ற அன்பிற்கும் நம்பிக்கைக்கும் பாத்திரமானேன். பெரிய வக்கீலின் யோசனையைக் கேட்பது அவசியம் என்று இருக்கும்போதெல்லாம் அதற்குள்ள கட்டணத்தைக் கொடுக்க அவர்கள் எப்பொழுதும் தயாராயிருந்தார்கள். இந்த அன்பும் நம்பிக்கையும் பொதுவேலைகளில் எனக்கு அதிக உதவியாக இருந்தன.

தென்னப்பிரிக்காவில் நான் வக்கீல் தொழில் செய்து வந்த தன் நோக்கம் சமூகத்திற்குச் சேவை செய்வதே என்பதை முந்திய அத்தியாயங்களில் குறிப்பிட் டிருக்கிறேன். இக் காரியத் திற்கும் மக்களின் நம்பிக்கையைப் பெறுவது இன்றியமையாத தாகும். பணத்திற்காக வக்கீல் தொழிலில் நான் செய்த வேலை களையும், சேவை என்றே, பெரிய மனம்படைத்த இந்தியர் மிகைப் படுத்திக்கொண்டனர். தங்களுடைய உரிமைகளுக்காகச் சிறை வாசக் கஷ்டத்தையும் ஏற்குமாறு நான் அவர்களுக்கு யோசனை கூறியபோது, அவர்களில் அநேகர் என் யோசனையை மகிழ்ச்சி யுடன் ஏற்றுக்கொண்டார்கள். அவர்கள் இவ்விதம் செய்தது, என்மீது அவர்கள் கொண்டிருந்த நம்பிக்கையினாலும் அன்பின லுமே யன்றி, அம் முறையே சரியானது என்று அவர்கள் ஆராய்ந்து பார்த்து முடிவுக்கு வந்ததனால் அன்று.

இதை நான் எழுதும்போது இனிமையான நினைவுகள் எத்த னையோ என் உள்ளத்தில் எழுகின்றன. நூற்றுக்கணக்கான கட் சிக்காரர்கள், என் நண்பர்களாகவும், பொதுச் சேவையில் சக ஊழியர்களாகவும் ஆயினர். துன்பங்களும் அபாயங்களும் நிறைந்திருந்த வாழ்க்கையை அவர்களின் கூட்டுறவு இனிதாக் கியது.

# 47

# கட்சிக்காரரைக் காப்பாற்றிய விதம்

பார்ஸி ருஸ்தம்ஜியின் பெயர் இதற்குள் வாசகருக்குப் பழக்கமான பெயராகியிருக்கும். அவர் உடனடியாக என் கட்சிக் காரராகவும் சக ஊழியராகவும் ஆகிவிட்டவர்களில் ஒருவர். முதலில் அவர் என் சக ஊழியராகி, அதன் பிறகு என் கட்சிக் கார ரானர் என்று சொல்வதே உண்மையாகவும் இருக்கலாம். அதிக அளவு நான் அவருடைய நம்பிக்கைக்குப் பாத்திரமாகி விட்டேன். அதனல், அவர் தமது சொந்தக் குடும்ப விஷயங் களில்கூட என் ஆலோசனைகளைக் கேட்டு அதன்படி நடந்து வந்தார். எங்கள் இருவரின் வாழ்க்கை முறைக்கும் அதிக வித்தி யாசம் இருந்தபோதிலும் அவர் நோயுற்றிருக்கும்போது, என் உதவியைத்தான் நாடுவார். அரை குறை வைத்தியனை என்னு டைய சிகிச்சை முறைகளை ஏற்றுக்கொள்ளவும் அவர் தயங்குவ தில்லை.

இந்த நண்பர் ஒரு சமயம் பெரிய சங்கடத்தில் சிக்கிக் கொண்டார். அநேகமாக தாம் செய்துவரும் காரியங்களை யெல் லாம் அவர் என்னிடம் கூறி வந்தாரெனினும், ஒரு விஷயத்தை மாத்திரம் என்னிடம் சொல்லாமல் சாமர்த்தியமாக மறைத்து வைத்திருந்தார். பம்பாயிலிருந்தும், கல்கத்தாவிலிருந்தும் ஏராளமாகச் சாமான்களைத் தருவித்துவரும் பெரிய வியாபாரி அவர். அடிக்கடி சுங்க வரி கொடுக்காமல் திருட்டுத்தனமாகச்

சாமான்களை அவர் கடத்திவிடுவதும் உண்டு. ஆனால், சுங்க அதிகாரிகளுடன் நல்ல நட்பிருந்ததால் அவர்மீது யாரும் சந்தேகப்படுவதில்லை. தீர்வை விதிக்கும்போது அவர் காட்டும் பட்டியல்களை நம்பி, அதன்படியே தீர்வையும் விதிப்பார்கள். அவருடைய திருட்டுத்தனம் தெரிந்து சிலர் அதற்கு உடந்தையாகவும் இருந்திருக்கக்கூடும்.

குஜராத்திக் கவியான அகோ என்பவர் கூறியிருக்கும் சிறந்த உவமையோடு சொல்லுவதென்றால், பாதரசத்தைப்போலவே திருட்டையும் வெகு நாளைக்கு மறைத்துவிட முடியாது. பார்ஸி ருஸ்தம்ஜி விஷயத்திலும் அது உண்மையாயிற்று. அந்த நல்ல நண்பர் ஒரு நாள் என்னிடம் ஓடி வந்தார். கன்னத்தில் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது, "பாய், நான் உங்களை ஏமாற்றி விட்டேன். என் குற்றத்தை இன்று கண்டுபிடித்து விட்டார்கள். நான் திருட்டுத்தனமாகச் சாமான்களை இறக்குமதி செய்து அகப்பட்டுக்கொண்டேன். என் கதி அதோகதிதான். நான் சிறை சென்று அழிந்தே போய்விடுவேன். இந்த ஆபத்திலிருந்து நீங்கள் ஒருவர்தான் என்னைக் காப்பாற்றக் கூடும். இதைத் தவிர வேறு எதையுமே உங்களிடம் கூறாமல் நான் ஒளித்ததில்லை. ஆனால், வியாபார தந்திரங்களைப்பற்றிய இந்த விஷயங்களை யெல்லாம் உங்களிடம் சொல்லி, உபத்திரவப்படுத்த வேண்டாம் என்று எண்ணியே இந்தக் கள்ளக்கடத்தலைப்பற்றி உங்களுக்கு நான் சொல்லவில்லை. அதற்காக நான் இப்பொழுது மிகமிக வருந்துகிறேன்!" என்றார்.

அவரைச் சாந்தப்படுத்தினேன். "உங்களைக் காப்பதும் காவாததும் கடவுள் கையில் இருக்கிறது. என்னைப் பொறுத்த வரையில் என் வழி இன்னது என்பது உங்களுக்குத் தெரியும். நீங்கள் குற்றத்தை ஒப்புக்கொண்டு விடுவதன் மூலமே உங்களைக் காப்பாற்ற நான் முயலக் கூடும்" என்று அவருக்குக் கூறினேன்.

இதைக் கேட்டதும் அந்த நல்ல பார்ஸி அடியோடு மனம் இடிந்து போய்விட்டார். "உங்கள் முன்பு நான் குற்றத்தை ஒப்புக்கொண்டுவிட்டது போதாதா?" என்று கேட்டார்.

"நீங்கள் தவறிழைத்தது அரசாங்கத்திற்கே யன்றி எனக்கு அன்று. அப்படியிருக்க என்னிடம் குற்றத்தைஒப்புக்கொள்ளுவது மாத்திரம் எப்படிப் போதும்?" என்று சாந்தமாக அவருக்குப் பதில் சொன்னேன்.

"உங்கள் புத்திமதியின்படியே நடக்கிறேன். ஆனால், என்னுடைய பழைய வக்கீலான ஸ்ரீ.....................என்பவரிடம் நீங்கள் கலந்து ஆலோசிப்பீர்களா? அவரும் நண்பரே" என்றார் ருஸ்தம்ஜி.

விசாரித்ததில், திருட்டுத்தனமாகச் சரக்குகளை இறக்குமதி செய்வது நீண்ட காலமாகவே நடந்து வந்திருக்கிறது என்பது

தெரிந்தது. ஆனல், இப்பொழுது கண்டுபிடிக்கப்பட்டது ஒரு சிறு தொகையைப் பொறுத்ததே யாகும். அவருடைய வக்கீலிடம் போனேம். அவர் தஸ்தாவேஜுகளைப் படித்துப் பார்த்தார். அவர் கூறியதாவது: "இந்த வழக்கு ஜூரிகளின் முன்னல் விசாரிக்கப்படும். நேட்டால் ஜூரிகள் இந்தியரைத் தண்டிக்காமல் விடமாட்டார்கள். ஆயினும், நான் நம்பிக்கையை இழந்துவிடவில்லை" என்ருர்.

இந்த வக்கீலை எனக்கு அவ்வளவு நன்ருகத் தெரியாது. பார்ஸி ருஸ்தம்ஜி குறுக்கிட்டு, "உங்களுக்கு என் நன்றி. இந்த வழக்கில் ஸ்ரீ காந்தி கூறும் யோசனையின்படி நான் நடந்துகொள்ள விரும்புகிறேன். அவர், என்னை நன்ருக அறிவார். அவசியமாகும்போது நீங்கள் அவருக்கு ஆலோசனை கூறுங்கள்" என்ருர். வக்கீல் விஷயத்தை இவ்விதமாக முடிவு செய்துகொண்டு நாங்கள் பார்ஸி ரும்தம்ஜியின் கடைக்குச் சென்ருேம்.

இது சம்பந்தமாக என் கருத்தை விளக்கி அவரிடம் பின்வருமாறு கூறினேன்: "இந்த வழக்குக் கோர்ட்டுக்கே போகக்கூடாது என்று நினைக்கிறேன். உங்கள்மீது வழக்குத் தொடருவதோ, தொடராமல் விட்டுவிடுவதோ சுங்க அதிகாரியைப் பொறுத்திருக்கிறது. அவரோ, அட்டர்னி ஜெனரலின் ஆலோசனைப்படி நடக்க வேண்டியவராக இருக்கிருர். இந்த இருவரையும் சந்தித்துப் பேச நான் தயாராயிருக்கிறேன். அவர்கள் விதிக்கும் அபராதத்தைச் செலுத்திவிட நீங்கள் தயாரர்யிருக்க வேண்டும். அநேகமாக இந்த ஏற்பாட்டிற்கு அவர்கள் சம்மதித்துவிடக்கூடும். இதற்கு அவர்கள் சம்மதிக்கவில்லை யென்ருல் சிறை செல்லுவதற்கு நீங்கள் தயாராக இருக்க வேண்டியதுதான். அவமானம், குற்றம் செய்வதில்தான் இருக்கிறதே யன்றி, அக்குற்றத்திற்காகச் சிறை செல்லுவதில் அல்ல என்பதே என் அபிப்ராயம். அவமானத்திற்கான காரியமோ முன்பே செய்யப்பட்டுவிட்டது. அதற்குப் பிராயச்சித்தம் என்றே சிறைவாசத்தை நீங்கள் கருதவேண்டும். இதில் உண்மையான பிராயச்சித்தம், இனித் திருட்டுத்தனமாகச் சரக்குகளைக் கடத்துவதில்லை என்று தீர்மானித்துக்கொண்டு விடுவதே யாகும்."

நான் கூறிய இந்தப் புத்திமதி முழுவதையும் பார்ஸி ருஸ்தம்ஜி சந்தோஷத்துடன் ஏற்றுக்கொண்டார் என்று நான் சொல்லுவதற்கில்லை. அவர் மிகுந்த தைரியசாலியே. ஆனல், அந்தச் சமயத்தில் அவருக்குத் தைரியமே இல்லை. அவருடைய நற்பெயருக்கும் கீர்த்திக்கும் ஆபத்து ஏற்பட்டுவிட்டது. எவ்வளவோ கவனமாகவும் சிரமப்பட்டும் அவர் கட்டியிருந்த அக்கட்டடம் சுக்குச் சுக்காகச் சிதறிவிடுவ தென்ருல் பிறகு அவர் கதி என்ன?

"சரி, என்னை உங்களிடம் முற்றும் ஒப்படைத்துவிட்டேன் என்று உங்களிடம் சொல்லிவிட்டேன். உங்கள் விருப்பம்போல் செய்யுங்கள்" என்ருர்.

பிறரிடம் விவாதித்து என் பக்கம் திருப்புவதற்கு எனக்கு எவ்வளவு சக்தி உண்டோ அவ்வளவையும் நான் இந்த வழக்கில் உபயோகித்தேன். சுங்க அதிகாரியைப் போய்ப் பார்த்தேன். அவரிடம் முழுவதையும் தைரியமாக எடுத்துக் கூறினேன். கணக்குப் புத்தகங்கள் முழுவதையும் அவரிடமே ஒப்படைத்து விடுவதாகவும் வாக்களித்தேன். தாம் செய்துவிட்ட தவறுக்காகப் பார்ஸி ருஸ்தம்ஜி எவ்வளவு வருத்தப்படுகிறார் என்பதையும் எடுத்துக் கூறினேன்.

சுங்க அதிகாரி கூறியதாவது : " அந்தப் பார்ஸியிடம் எனக்குப் பிரியம் உண்டு. இவ்விதம் முட்டாள்தனமான காரியத்தை அவர் செய்துவிட்டதற்காக வருந்துகிறேன். இதில் என் கடமை இன்னது என்பது உங்களுக்கே தெரியும். அட்டர்னி ஜெனரல் கூறும் வழியில் நான் நடக்க வேண்டியவன். ஆகவே, உங்கள் முயற்சியை யெல்லாம் அவரிடம் செய்யும்படி உங்களுக்கு யோசனை கூறுகிறேன்."

" பார்ஸி ருஸ்தம்ஜியைக் கோர்ட்டுக்கு இழுத்துவிட வேண்டும் என்று நீங்கள் பிடிவாதம் செய்யாமல் இருந்தால் நன்றியறிதல் உள்ளவனுவேன்" என்றேன்.

இந்த வாக்குறுதியை அவரிடம் பெற்றுக்கொண்டு பிறகு அட்டர்னி ஜெனரலுடன் கடிதப் போக்குவரத்து நடத்தினேன். அவரை நேரிலும் போய்ப் பார்த்தேன். நான் கபடமின்றி நடந்துகொண்டதை அவர் பாராட்டினர் என்று கூறச் சந்தோஷமடைகிறேன். நான் எதையுமே மறைக்கவில்லை என்பதை அவர் நிச்சயமாக அறிந்துகொண்டார். " இல்லை என்ற பதிலை நீங்கள் ஏற்றுக்கொள்ளவே மாட்டீர்கள் என்பதைக் காண்கிறேன் " என்று அவர் சொன்னர். என்னுடைய விடாமுயற்சியையும் கபடமின்மையையும் குறித்து அவர் இவ்விதம் கூறியது, இந்த வழக்கில்தானு அல்லது வேறு வழக்கிலா என்பது இப்பொழுது எனக்கு ஞாபகமில்லை.

பார்ஸி ருஸ்தம்ஜி மீதிருந்த வழக்கில் சமரசம் ஏற்பட்டது. தீர்வை செலுத்தாமல் கடத்தியதாக அவர் ஒப்புக்கொண்ட தொகைக்கு இரு மடங்கான தொகையை அவர் அபராதமாகச் செலுத்தினர். இந்த வழக்குச் சம்பந்தமான முழு விவரங்களையும் அவர் எழுதினர். அப்படி எழுதியதைக் கண்ணுடி போட்டுத் தமது அலுவலகத்தில் தொங்கவிட்டார். தமது சந்ததியாருக்கும் மற்ற வியாபாரிகளுக்கும் நிரந்தரமான எச்சரிக்கையாக இருக்கட்டும் என்பதற்காகவே அவர் இவ்விதம் செய்தார்.

செய்துவிட்ட குற்றத்திற்காகப் பார்ஸி ருஸ்தம்ஜி வருந்துவது தாற்காலிகமானதே யன்றி நிரந்தரமானதாக இராது என்று அவருடைய நண்பர்கள் என்னை எச்சரிக்கை செய்தனர். இந்த எச்சரிக்கையைக் குறித்து நான் ருஸ்தம்ஜியிடம் கூறியபோது, "உங்களை நான் ஏமாற்றினல் என் கதி என்ன ஆவது ? " என்று கூறினர்.

ஐந்தாம் பாகம்

# 1

# முதல் அனுபவம்

நான் தாய்நாட்டிற்கு வந்து சேருவதற்கு முன்னுலேயே போனிக்ஸிலிருந்து புறப்பட்டவர்கள், இந்தியா சேர்ந்துவிட்டனர். நாங்கள் முதலில் போட்டிருந்த திட்டத்தின்படி நான் முன்னுல் வந்து சேர்ந்திருக்க வேண்டும். ஆனுல், யுத்தம் காரணமாக இங்கிலாந்தில் எனக்கு ஏற்பட்ட வேலைகளினுல் எங்கள் திட்டங்களெல்லாம் மாறிவிட்டன. இந்தியாவுக்கு எப்பொழுது போவேன் என்ற நிச்சயம் இல்லாமல் நான் இங்கிலாந்தில் இருக்க வேண்டி வந்தபோது, போனிக்ஸிலிருந்து வந்தவர்களுக்கு இந்தியாவில் இடம் தேடவேண்டிய பிரச்னை எனக்கு ஏற்பட்டது. சாத்தியமானுல் அவர்கள் எல்லோரும் இந்தியாவில் ஒரே இடத்தில் தங்கி, போனிக்ஸில் நடத்தியதைப் போன்ற வாழ்க்கையை நடத்த வேண்டும் என்று விரும்பினேன். நான் அவர்களைப் போய்த் தங்கும்படி சொல்லுவதற்கு ஏற்ற ஆசிரமம் எதுவும் இருந்ததாகவும் எனக்குத் தெரியாது. ஆகையால், ஸ்ரீ ஆண்டுரூஸைச் சந்தித்து அவர் கூறுகிற யோசனையின்படி நடந்து கொள்ளுமாறு அவர்களுக்குத் தந்தி கொடுத்தேன்.

ஆகவே, ஸ்ரீ ஆண்டுரூஸ் அவர்களை முதலில் கங்கிரி குருகுலத்திற்கு அழைத்துச் சென்றுர். காலஞ் சென்ற சுவாமி சிரத்தானந்தர், அவர்களை அங்கே தமது சொந்தக் குழந்தைகளாகவே கருதி நடத்தினுர். அதன் பிறகு அவர்கள் சாந்திநிகேதன ஆசிரமத்தில் தங்கினுர்கள். அங்கும் கவியும் அவருடைய ஆட்களும் அதே போல் அவர்கள் மீது அன்பைப் பொழிந்தனர். இந்த இரண்டு இடங்களிலும் அவர்கள் பெற்ற அனுபவங்கள், அவர்களுக்கும் எனக்கும் அதிக உதவியாக இருந்தன.

கவி ரவீந்திரர், சிரத்தானந்தஜி, தலைமைப் பேராசிரியர் சுசீல் ருத்ரா ஆகிய மூவரும் ஆண்டுரூஸின் திரிமூர்த்திகள் என்று நான் அடிக்கடி அவரிடம் கூறுவது உண்டு. தென்னுப்பிரிக்காவில் இருந்தபோது அவர்களைப் பற்றிப் பேசுவதென்றுல் ஸ்ரீ ஆண்டுரூஸ் சலிப்படைவதே இல்லை. தென்னுப்பிரிக்காவைப் பற்றிய எனது இனிய நினைவுகளில், இந்தத் திரிமூர்த்திகளைக் குறித்து ஸ்ரீ ஆண்டுரூஸ் இரவு பகலாக என்னிடம் பேசியவை அதிக இனிமையுடையனவாகும். அவை என் உள்ளத்தில் அப்படியே பதிந்தும் இருந்தன. இயற்கையாகவே ஸ்ரீ ஆண்டுரூஸ், போனிக்ஸிலிருந்து வந்தவர்களைத் தலைமைப் பேராசிரியர் ருத்ராவுக்குப் பழக்கப்படுத்தி வைத்தார். அவருக்குத் தனி ஆசிரமம்

இல்லே. ஆனல், தமது வீட்டையே போனிக்ஸிலிருந்து வந்த குடும்பத்தினர் தங்குவதற்கு முற்றும் விட்டுவிட்டார். வந்து சேர்ந்த ஒரு நாளேக்குள்ளேயே தங்கள் சொந்த வீட்டில் வாழ்வ தாகவே உணரும்படி ஸ்ரீ ருத்ராவைச் சேர்ந்தவர்கள் செய்துவிட் டனர். ஆகையால், தாங்கள் போனிக்ஸில் இருப்பதாகவே அவர்கள் எண்ணினர்.

போனிக்ஸ் கோஷ்டியினர் சாந்திநிகேதனத்தில் இருக்கின்ற னர் என்பது நான் பம்பாயில் வந்து இறங்கிய பிறகுதான் எனக் குத் தெரியும். ஆகவே, கோகலேயைப் பார்த்துவிட்டு, எவ் வளவு சீக்கிரத்தில் சாத்தியமோ அவ்வளவு சீக்கிரமாக அவர் களைப் போய்ப் பார்க்கவேண்டும் என்று நான் அவசரப்பட்டேன்.

பம்பாயில் எனக்கு நடந்த வரவேற்புகள், ஒரு சின்னச் சத்தி யாக்கிரகம் என்று சொல்லக்கூடிய ஒன்றை நடத்தும் சந்தர்ப் பத்தை எனக்கு அளித்தன. என்னைக் கௌரவிப்பதற்காக ஸ்ரீ ஜஹாங்கீர் பெடிட்டின் இல்லத்தில் நடந்த விருந்தின் போது குஜராத்தியில் பேச நான் துணியவில்லே. வாழ்நாளின் சிறந்த காலத்தையெல்லாம் ஒப்பந்தத் தொழிலாளருடன் வாழ்வதில் கழித்த நான், அரண்மனே போன்று இருந்த அந்த ஆடம்பரச் சூழ்நிலேயில், ஒரு முழுப் பட்டிக்காட்டான்போல் இருப்பதாகவே எண்ணிக்கொண்டேன். அப்பொழுது நான் கத்தியவாரிகளேப் போல் வேட்டி கட்டிக்கொண்டு சட்டையும் போட்டிருந்தேன். எனவே, நான் இப்பொழுது இருப்பதைவிட அப்பொழுது அதிக நாகரிகமுள்ளவனுகவே தோன்றினுலும், பெடிட் மாளிகையின் ஆடம்பரமும் பிரகாசமும் என்னேத் திக்குமுக்காடச் செய்து விட்டன. என்றாலும், ஸர் பிரோஸ்ஷாவின் பாதுகாப்பின் கீழ் தைரியமடைந்து ஒருவாறு ஒழுங்காகவே சமாளித்துக்கொண் டேன்.

அதன் பிறகு குஜராத்தியரின் வரவேற்பு நடந்தது. எனக்கு ஒரு வரவேற்பு உபசாரம் நடத்தியே தீருவதென்று அவர்கள் தீர் மானித்துவிட்டார்கள். காலஞ்சென்ற உத்தமலால் திரிவேதி, இந்த வரவேற்பு ஏற்பாடுகளேச் செய்தார். அக் கூட்டத்தின் நிகழ்ச்சி முறை இன்னது என்பதை முன்னுடியே அறிந்து கொண்டேன். ஸ்ரீ ஜின்னுவும் குஜராத்தி யாகையால் அவரும் வந்திருந்தார். அங்கே அவர் தலேமை வகித்தாரா, முக்கியப் பேச்சாளராக இருந்தாரா என்பது எனக்கு ஞாபகம் இல்லே. அவர் ஆங்கிலத்தில் சுருக்கமாகவும் இனிமையாகவும் பேசினுர். பேசிய மற்றவர்களும் அநேகமாக ஆங்கிலத்திலேயே பேசி னுர்கள் என்றுதான் எனக்கு ஞாபகம். நான் பேச வேண்டிய சமயம் வந்தபோது, என் வந்தனத்தைக் குஜராத்தியில் தெரிவித் துக்கொண்டேன். குஜராத்தியினிடமும் ஹிந்துஸ்தானியினிடமும் எனக்குப்பற்று அதிகம் என்றும் விளக்கினேன். குஜராத்திகளேக் கொண்ட ஒரு கூட்டத்தில் ஆங்கிலம் பேசப்படுவதைக் குறித்து என்னுடைய பணிவான ஆட்சேபத்தையும் தெரிவித்துக்

கொண்டேன். கொஞ்சம் தயக்கத்துடனேயே இந்த ஆட்சேபத்தை நான் தெரிவித்தேன். ஏனெனில், நீண்ட நாள் வெளி நாடுகளில் இருந்துவிட்டுத் திரும்பியிருக்கும் ஒருவன், நீண்ட காலமாக வழக்கமாகப் போய்விட்ட காரியங்களைக் கண்டிப்பது மரியாதைக் குறைவான செய்கை என்று கருதப்பட்டு விடுமோ என்று அஞ்சினேன். குஜராத்தியிலேயே பதிலளிப்பதென்பதில் நான் பிடிவாதமாக இருந்ததைக் குறித்து யாரும் தவருக எண்ணிக்கொண்டதாகத் தோன்றவில்லை. ஒவ்வொருவரும் என் கண்டனத்தைக் குறித்துத் தாங்களே சமாதானமடைந்தார்கள் என்பதைக் கண்டு உண்மையில் நான் மகிழ்ச்சியடைந்தேன்.

புது மாதிரியான என்னுடைய எண்ணங்களை என் நாட்டு மக்களின் முன்பு கொண்டுவருவதில் எனக்குக் கஷ்டம் இராது என்று எண்ண அக்கூட்டம் எனக்குத் தைரியமளித்தது. பம்பாயில் சிறிது காலம் தங்கி, இவ்விதமான ஆரம்ப அனுபவங்களை நிறையப் பெற்றுப் புனாவுக்குச் சென்றேன். அங்கே வருமாறு கோகலே என்னை அழைத்திருந்தார்.

## 2

## புனாவில் கோகலேயுடன்

கவர்னர் என்னைப் பார்க்க விரும்புகிறார் என்று நான் பம்பாய் வந்து சேர்ந்ததுமே கோகலே எனக்குத் தகவல் அனுப்பியிருந்தார். நான் புனாவுக்குப் புறப்படுவதற்கு முன்னால் கவர்னரைப் போய்ப் பார்த்துவிட்டு வருவது நல்லது என்றும் தெரிவித்திருந்தார். அதன்படி கவர்னரைப் போய்ப் பார்த்தேன். சுகங்களைக் குறித்து வழக்கமாக விசாரிப்பது முடிந்த பிறகு என்னிடம், “உங்களை நான் ஒன்று கேட்டுக்கொள்ளுகிறேன். அரசாங்க சம்பந்தமாக நீங்கள் எந்த நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளுவதற்கு முன்னால் நீங்கள் என்னை வந்து பார்க்க வேண்டும் என்று விரும்புகிறேன்” என்றார்.

அதற்கு நான் பின்வருமாறு பதில் சொன்னேன்: “அந்த வாக்குறுதியை எளிதில் நான் உங்களுக்கு அளிக்க முடியும். ஏனெனில், எதிராளியின் கருத்து இன்னது என்பதை அறிந்து கொண்டு, சாத்தியமான வரையில் அவருடன் ஒத்துப்போவது என்பதே சத்தியாக்கிரகி என்ற முறையில் என்னுடைய தருமமாகும். இந்தத் தருமத்தைத் தென்னாப்பிரிக்காவில் கண்டிப்பான வகையில் அனுசரித்து வந்தேன். இங்கும் அப்படியே செய்வதென்றும் இருக்கிறேன்.”

லார்டு வில்லிங்டன் எனக்கு நன்றி தெரிவித்துவிட்டுக் கூறியதாவது: “நீங்கள் விரும்பும்போதெல்லாம் என்னிடம் வரலாம். என் அரசாங்கம் வேண்டுமென்று எந்தத் தவறையும் செய்யாது என்பதை நீங்கள் காண்பீர்கள்.”

அதன் பிறகு நான் புனுவுக்குப் போனேன். அந்த அருமையான நாட்களைப் பற்றிய என் நினைவுகளை யெல்லாம் இங்கே கூறிவிடுவது என்பது இயலாத காரியம். கோகலேயும் இந்திய ஊழியர் சங்கத்தின் மற்ற அங்கத்தினர்களும் என்னைத் தங்கள் அன்பு வெள்ளத்தில் மூழ்கடித்து விட்டனர். என்னைச் சந்திப்பதற்காக அவர்களை யெல்லாம் கோகலே அங்கே வர வழைத்திருந்தார் என்றுதான் எனக்கு ஞாபகம். எல்லா விஷயங்களைப்பற்றியும் அவர்களுடன் நான் மனம் விட்டுத் தாராளமாக விவாதித்தேன்.

அச் சங்கத்தில் நான் சேர்ந்துவிட வேண்டும் என்பதில் கோகலே ஆவலுடன் இருந்தார். எனக்கும் அந்த விருப்பம் இருந்தது. ஆனல், என்னுடைய கொள்கைகளுக்கும் வேலை முறைக்கும் அவர்களுடையவைகளுக்கும் அதிகப் பேதம் இருந்ததால் அச்சங்கத்தில் நான் சேருவது சரியன்று என்று மற்ற அங்கத்தினர்கள் கருதினர். கோகலேயோ, என்னுடைய கொள்கைகளில் நான் பிடிவாதமாக இருந்தபோதிலும், அவர்களுடைய கொள்கைகளைச் சகித்துக்கொள்ளவும் என்னல் முடியும் என்றும்,நான் தயாராயிருக்கிறேன் என்றும் நம்பினர்.அவர் கூறியதாவது; ''சமரசம் செய்துகொள்ளத் தயாராயிருக்கும் உங்கள் குணத்தைச் சங்கத்தின் அங்கத்தினர்கள் இன்னும் சரியாகத் தெரிந்துகொள்ள வில்லை. அவர்கள் தங்கள் கொள்கையில் பிடிவாதமுள்ளவர்கள்; சுயேச்சைப் போக்குள்ளவர்கள்; உங்களை அவர்கள் ஏற்றுக் கொள்ளுவார்கள் என்றே நம்புகிறேன். உங்களை ஏற்றுக்கொள்ள வில்லை யென்ருல், அவர்களுக்கு உங்களிடம் மதிப்பும் அன்பும் இல்லை என்று ஒரு கணமேனும் நீங்கள் எண்ணிவிடக்கூடாது. அவர்கள் உங்கள்மீது அதிக மதிப்பு வைத்திருக்கிருர்கள். அதற்கு எங்கே பங்கம் ஏற்பட்டுவிடுமோ என்ற அச்சத்தினலேயே உங்களை ஏற்றுக்கொள்ள அவர்கள் தயங்குகிருர்கள். நீங்கள் அங்கத்தினராகச் சேர்த்துக் கொள்ளப்பட்டாலும், சேர்த்துக்கொள்ளப் படாவிட்டாலும் உங்களை ஓர் அங்கத்தினர் என்றே நான் பாவிக்கப்போகிறேன்.''

என்னுடைய உத்தேசங்கள் யாவை என்பதைக் கோகலே யிடம் கூறினேன். என்னை இந்திய ஊழியர் சங்கத்தில் அங்கத்தினனகச் சேர்த்துக்கொண்டாலும், சேர்க்காது போயினும், ஓர் ஆசிரமத்தை அமைத்து, அதில் என் போனிக்ஸ் குடும்பத்துடன் வாழ விரும்பினேன். குஜராத்தில் எங்காவது ஆசிரமத்தை அமைப்பதே உத்தேசம். நான் குஜராத்தி யாகையால், குஜராத்துக்குச் சேவை செய்து அதன் மூலம் நாட்டுக்குச் சேவை செய்ய எண்ணினேன். இந்த என் உத்தேசம் கோகலேக்குப் பிடித்திருந்தது. அவர் கூறியதாவது: ''நீங்கள் நிச்சயம் அப்படியே செய்ய வேண்டும். அங்கத்தினர்களுடன் நீங்கள் பேசியதன் பலன் எதுவாக இருந்தாலும் சரி, உங்கள் ஆசிரமத்தை என் சொந்த ஆசிரமமாகவே கருதுவேன். ஆசிரமத்தின் செலவுக்கு நீங்கள் என்னையே எதிர்பார்க்க வேண்டும்.''

இதைக் கேட்டு நான் அளவு கடந்த ஆனந்த மடைந்தேன். நிதி திரட்டும் பொறுப்பிலிருந்து விடுபடுவது ஓர் ஆனந்தமே. அதோடு, நான் தன்னந்தனியாக இந்த வேலையில் ஈடுபட வேண்டியதில்லை என்றும், எனக்குக் கஷ்டம் ஏற்படும்போது நிச்சய மான துணை எனக்கு இருக்கிறது என்றும் எண்ணியபோது பெரிய பாரம் நீங்கியதுபோல இருந்தது.

ஆகவே, காலஞ்சென்ற டாக்டர் தேவ் என்பவரைக் கோகலே அழைத்து, எனக்காகச் சங்கத்தில் கணக்கு வைக்கும்படியும், ஆசிரமத்திற்கும் பொதுச் செலவிற்கும் எனக்குத் தேவைப்படு வதையெல்லாம் கொடுக்கும்படியும் கூறினர்.

அதன் பிறகு சாந்திநிகேதனத்திற்குப் புறப்படத் தயா ரானேன். நான் புறப்படுவதற்கு முன்னுல் கோகலே எனக்கு ஒரு விருந்து வைத்தார். அதற்குக் குறிப்பிட்ட சில நண்பர்களை மாத்திரம் அழைத்திருந்ததோடு எனக்குப் பிடித்தமான பழங்க ளுக்கும், கொட்டைப் பருப்புகளுக்கும் ஏற்பாடு செய்திருந்தார். அவருடைய அறையிலிருந்து சில அடி தூரத்திலேயே இந்த விருந்து நடந்தது. என்றுலும், அந்தக் கொஞ்ச தூரமும் நடந்து வந்து அவ் விருந்தில் கலந்துகொள்ள முடியாத நிலையில் அவர் இருந்தார். ஆனல், என்னிடம் கொண்டிருந்த அன்பினுல் அதை யெல்லாம் பொருட்படுத்தாமல் விருந்துக்கு வந்தே தீருவதென்று பிடிவாதமாக இருந்தார். அப்படியே வந்தும்விட்டார். ஆனல், அவர் மூர்ச்சையடைந்துவிடவே அவரைத் தூக்கிச் செல்லும்படி நேர்ந்தது. இவ்விதம் அவர் மூர்ச்சையடைந்துவிடுவது புதிதல்ல. எனவே, தமக்குப் பிரக்ஞை வந்ததும் விருந்தைத் தொடர்ந்து நடத்தும்படி எங்களுக்குச் சொல்லி அனுப்பினர்.

இந்த விருந்து, சங்கத்தின் விருந்தினர் விடுதிக்கு எதிரில் திறந்த வெளியில், நண்பர்களுடன் கலந்து பேசுவதற்கு வாய்ப் பளிப்பதற்காக நடந்ததே யன்றி வேறன்று. அதில் நண்பர்கள், நிலக்கடலை, பேரீச்சம்பழம், மற்றப் பழங்கள் இவற்றைச் சாப் பிட்டுக்கொண்டே ஒருவருக்கொருவர் மனம்விட்டுப் பேசினர். ஆனல், திடீரென்று கோகலே மூர்ச்சையடைந்தது, என் வாழ்க் கையில் சாதாரணமான சம்பவமாகிவிடவில்லை.

## 3

# அது ஒரு பயமுறுத்தலா?

புனவிலிருந்து ராஜ்கோட்டுக்கும் போர்பந்தருக்கும் போனேன். காலஞ்சென்ற என் சகோதரரின் மனைவியையும் மற்ற உறவினர்களையும் பார்ப்பதற்கே அங்கே சென்றேன்.

தென்னுப்பிரிக்காவில் சத்தியாக்கிரகத்தின்போது ஒப்பந் தத் தொழிலாளரின் உடைக்குப் பொருத்தமானதாகவே என்

உடையும் இருக்கவேண்டும் என்பதற்காக என் உடைகளை மாற்றிக்கொண் டிருந்தேன். இங்கிலாந்தில்கூட வீட்டுக்குள் இருக்கும்போது அதே உடையில்தான் இருந்துவந்தேன். பம்பா யில் வந்து இறங்கியபோது உள் சட்டை, மேல் சட்டை, வேட்டி, அங்க வஸ்திரம் ஆகியவைகளைக் கத்தியவாரி முறைப்படி அணிந்துகொண்டேன். இத் துணிகளெல்லாம் இந்திய மில்களில் தயாரானவை. ஆனால், பம்பாயிலிருந்து ரயிலில் மூன்றும் வகுப் பில் நான் பிரயாணம் செய்யவேண்டி யிருந்ததால், அங்க வஸ்திர மும் மேல்சட்டையும் அனாவசியமான இடையூறுகள் என்று கருதி அவற்றைப் போட்டுவிட்டேன். எட்டு அணா, பத்தணா விலையில் ஒரு காஷ்மீரித் தொப்பி வாங்கிக் கொண்டேன். இத்தகைய உடை அணிந்திருப்பவரை ஏழை என்றே கருதுவார்கள்.

அச்சமயம் பிளேக் நோய் பரவி இருந்ததால் வீரம்காமிலோ அல்லது வத்வானிலோ-எந்த ஊர் என்பதை மறந்துவிட்டேன்- மூன்றும் வகுப்புப் பிரயாணிகளை வைத்தியப் பரிசோதனைசெய்து வந்தனர். எனக்குச் சுரம் கொஞ்சம் இருந்தது. எனக்குச் சுரம் இருக்கிறது என்பதை இன்ஸ்பெக்டர் கண்டதும் ராஜ்கோட் வைத்திய அதிகாரியிடம் போய் ஆஜராகும்படி என்னிடம் கூறி என் பெயரையும் பதிவு செய்துகொண்டார்.

நான் வத்வான் வழியாகப் போய்க்கொண் டிருக்கிறேன் என்று யாரோ சொல்லியிருக்க வேண்டும். ஏனெனில், அவ்வூரில் பிரபல பொதுஜன ஊழியரும், தையற்காரருமான மோதிலால் ஸ்டேஷனுக்கு வந்து என்னைப் பார்த்தார். வீரம்காம் சுங்க வரியைப்பற்றி அவர் என்னிடம் சொன்னார். அதனால், ரெயில்வேப் பிரயாணிகள் அனுபவிக்க வேண்டியிருக்கும் துயரங்களையும் கூறி னார். எனக்குச் சுரம் இருந்ததால், பேசுவதற்கே எனக்கு விருப்ப மில்லை. சுருக்கமாகப் பதில் சொல்லிவிட முயன்றேன். என்னு டைய பதில் ஒரு கேள்வியாக அமைந்தது. ''சிறை செல்ல நீங்கள் தயாராக இருக்கிறீர்களா?'' என்பதே என்னுடைய கேள்வி.

தாங்கள் பேசுவது இன்ன தென்பதைச் சிந்திக்காமலேயே சிலர் பேசிவிடுவார்கள். அப்படிப்பட்ட ஆவேச உணர்ச்சியுள்ள வாலிபர்களில் மோதிலாலும் ஒருவர் என்று நான் எண்ணினேன். ஆனால், அவர் அப்படிப்பட்டவர் அன்று. உறுதியுடன் தீர்மான மாக அவர் பின்வருமாறு பதில் கூறினார்:

''நீங்கள் எங்களுக்குத் தலைமை வகித்து இயக்கம் நடத்து வதாயின் நாங்கள் நிச்சயமாகச் சிறை செல்வோம். கத்தியவா ரைச் சேர்ந்தவர்கள் என்ற முறையில் எங்களுக்கு உங்கள்மீது முதல் உரிமை உண்டு. என்றாலும், இப்பொழுது உங்களை, இங்கே தாமதிக்கச் செய்யும் உத்தேசம் எங்களுக்கு இல்லை. ஆனால் திரும்பும்போது இங்கே தங்கிச் செல்லுவதாக வாக்குறுதியளிக்க வேண்டும். நமது வாலிபர்கள் செய்துவரும் வேலையையும் அவர்

களுக்குள்ள உணர்ச்சியையும் பார்த்து நீங்கள் மகிழ்ச்சியடை வீர்கள். எங்களுக்குக் கட்டளையிட்ட மாத்திரத்தில் நாங்கள் முன்வருவோம் என்பதை நீங்கள் நம்பலாம்.''

மோதிலால் என்னைக் கவர்ந்துவிட்டார். அவரைப்பற்றி அவருடைய தோழர் ஒருவர் பின் வருமாறு பாராட்டிக் கூறினர்: "இந்த நண்பர் சாதாரணத் தையற்காரரே. தமது தொழிலில் மிக வும் திறமைசாலி. ஆகையால், தமக்குத் தேவையான ரூபாய் பதினைந்தை, தினத்திற்கு ஒரு மணி நேரம் வேலை செய்து, ஒரு மாதத்தில் சம்பாதித்துக்கொண்டு விடுகிறார். மீதமுள்ள தமது நேரத்தையெல்லாம் பொதுச் சேவைக்குச் செலவிடுகிறார். எங் களுக்கெல்லாம் அவர்தான் தலைவர். படித்தவர்களாகிய நாங் கள் அவரைக் கண்டு வெட்கமடைகிறோம்.''

பின்னால் மோதிலாலுடன் நான் நெருங்கிப் பழக நேர்ந்ததும், இந்தப் பாராட்டுரையில் மிகைப்படுத்திக் கூறப்பட்டது எதுவும் இல்லை என்பதைக் கண்டேன். ஆசிரமத்தை ஆரம்பித்த காலத் தில், ஒவ்வொரு மாதமும் சில நாட்கள் அவர் அங்கே தங்குவார். ஆசிரமக் குழந்தைகளுக்கு அவர் தையல் வேலை சொல்லிக் கொடுத்ததோடு ஆசிரமத்திற்கு வேண்டிய துணிமணிகளையும் தைத்துக் கொடுப்பார். ஒவ்வொரு நாளும் வீரம்காமைப்பற்றி என்னிடம் பேசுவார். பிரயாணிகளின் துயரங்களையும் சொல்லு வார். அக் கஷ்டங்கள் அவருக்கு முற்றும் சகிக்க முடியாதவை யாகி விட்டன. திடீரென்று நோயுற்று, அவர் நல்ல இளம் வய தில் காலமானார். வத்வானின் பொதுவாழ்வுக்கு அவருடைய பிரி வினால் அதிக நஷ்டம் ஏற்பட்டது.

ராஜ்கோட் போய்ச் சேர்ந்ததும் மறுநாள் காலை வைத்திய அதிகாரியிடம் போனேன். அங்கே எல்லோருக்கும் என்னைத் தெரிந்திருந்தது. நான் தம்மிடம் வர நேர்ந்ததைக் குறித்து டாக் டர் வெட்கப்பட்டதோடு இன்ஸ்பெக்டர்மீதும் கோபமடைந்தார். இன்ஸ்பெக்டர் தமது கடமையையே செய்தாராகையால், இக் கோபம் அனாவசியமானது. அவருக்கு என்னைத் தெரியாது. என்னைத் தெரிந்திருந்தாலும் அவர் வேறுவிதமாக நடந்து கொண்டிருக்க முடியாது. இனித் தம்மிடம் வர வேண்டியதில்லை என்று வைத்திய அதிகாரி கூறிவிட்டார். அதற்குப் பதிலாக என்னிடம் ஓர் இன்ஸ்பெக்டரை அனுப்பினார்.

அத்தகைய சந்தர்ப்பங்களில் சுகாதாரக் காரணங்களுக்காக மூன்றாம் வகுப்புப் பிரயாணிகளைப் பரிசோதிப்பது அவசியமே யாகும். பெரிய மனிதர்கள், மூன்றாம் வகுப்பில் பிரயாணம் செய்ய முற்படுவார்களாயின், வாழ்க்கையில் அவருடைய நிலை எதுவாக இருப்பினும், ஏழைகள் என்ன என்ன கட்டுத்திட்டங்களுக்கு உட்பட வேண்டியிருக்கின்றதோ அவைகளுக்கெல்லாம் அவர் களும் விரும்பிக் கட்டுப்பட வேண்டும். அதிகாரிகளும் பாரபட் சம் காட்டாமல் நடந்துகொள்ள வேண்டும். அதிகாரிகளோ,

மூன்ரும் வகுப்புப் பிரயாணிகளும் தம்மைப் போல மனிதர்களே என்று கருதாமல் செம்மறி ஆடுகளாகப் பாவிக்கிருர்கள் என்பதே என் அனுபவம். அப் பிரயாணிகளிடம் அவமதிக்கும் தோரணையிலேயே பேசுகிருர்கள். அவர்கள் ஏதாவது பதில் சொல்லிவிட்டாலோ, விவாதித்து விட்டாலோ, அதிகாரிகள் சகிப்பதில்லை. மூன்ரும் வகுப்புப் பிரயாணிகள், அதிகாரிகளின் வேலைக்காரர்களைப்போல அவர்களுக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும். மூன்ரும் வகுப்புப் பிரயாணிகளை அதிகாரிகள் அடிக்கலாம்; பயமுறுத்திப் பணம் பறிக்கலாம்; சாத்தியமான எல்லா வித அசௌகரியங்களையும் பிரயாணிகளை அனுபவிக்கும்படி செய்துவிட்ட பிறகே அவர்களுக்கு டிக்கெட்டும் கொடுக்கலாம். இவ்விதம் டிக்கெட்டு வாங்குவதற்குள் ரெயிலும் போய் விடும். என்ருலும், இதற்கெல்லாம் கேள்வி முறையே இல்லை. இவற்றையெல்லாம் நான் என் கண்ணுலேயே பார்த்திருக்கிறேன். படித்தவர்களும் பணக்காரர்களுமான சிலர், ஏழைகளின் அந்தஸ்தை விரும்பி ஏற்றுக்கொண்டு மூன்ரும் வகுப்பில் பிரயாணம் செய்தாலன்றி, ஏழைகளுக்கு மறுக்கப்படும் வசதிகளை அனுபவிக்க இவர்கள் மறுத்துவிட்டாலல்லாமல், தவிர்க்கக் கூடிய கஷ்டங்களையும், அவமதிப்புகளையும், அநீதிகளையும் அனுபவிக்க வேண்டியதே என்று சும்மா இருந்துவிடாமல் அவைகளை ஒழிப்பதற்காகப் போராடினுலன்றி இந் நிலைமையில் சீர்திருத்தமே சாத்தியமில்லை.

கத்தியவாரில் நான் சென்ற இடங்களிலெல்லாம் வீரம்காம் சுங்கத் தொல்லைகளைப் பற்றிய புகார்களையே கூறினர். ஆகையால், லார்டு வில்லிங்டன் அளித்திருந்த வாக்குறுதியை உடனே பயன்படுத்திக்கொள்ளுவது என்று முடிவு செய்தேன். இது சம்பந்தமாகக் கிடைத்த பிரசுரங்கள் யாவற்றையும் சேகரித்துப் படித்தேன். புகார்களெல்லாம் உண்மையானவை என்று நான் திருப்தியடைந்த பிறகு பம்பாய் அரசாங்கத்திற்குக் கடிதம் எழுத ஆரம்பித்தேன். லார்டு வில்லிங்டனின் அந்தரங்கக் காரிய தரிசியைக் கண்டு பேசினேன். கவர்னரையும் சந்தித்தேன். கவர்னர், தமது அனுதாபத்தைத் தெரிவித்தார். ஆனல், தவறுக்கு டில்லி அரசாங்கத்தின்மீது பழி போட்டார். "இது எங்கள் கையில் இருந்தால் சுங்கத்தை எடுத்திருப்போம். இந்திய அரசாங்கத்தினிடமே நீங்கள் போக வேண்டும்" என்ருர், காரியதரிசி.

இந்திய அரசாங்கத்திற்கு எழுதினேன். ஆனல், என் கடிதம் கிடைத்தது என்பதற்கு ஓர் அத்தாட்சி வந்ததேயன்றி வேறு பதிலே இல்லை. பின்னல் லார்டு செம்ஸ்போர்டைச் சந்திக்கும் சமயம் வந்த பிறகே பரிகாரத்தை அடைய முடிந்தது. இதைப் பற்றிய விவரம் முழுவதையும் அவருக்கு நான் எடுத்துக்கூறிய போது அவர் ஆச்சரியப்பட்டுவிட்டார். இதைப்பற்றி அவருக்கு ஒன்றுமே தெரியாமல் இருந்தது. நான் கூறியவைகளையெல்

லாம் பொறுமையுடன் கேட்டுக்கொண்டார்.. வீரம்காம் பற்றிய தஸ்தாவேஜுகளை எல்லாம் அனுப்பும்படி அப்பொழுதே டெலி போனில் உத்தரவிட்டார். அதிகாரிகள் தக்க சமாதானம் கூறு விட்டால், அல்லது இருப்பதே சரி என்று காட்டாவிடில், சுங் கத்தை நீக்கிவிடுவதாகவும் வாக்களித்தார். நான் வைசிராயைக் கண்டு பேசிய சில தினங்களுக்கெல்லாம், வீரம்காம் சுங்கம் நீக் கப்பட்டுவிட்டதெனப் பத்திரிகைகளில் படித்தேன்.

இந்தியாவில் சத்தியாக்கிரகத்திற்கு இச் சம்பவம் ஆரம்பம் என்று நான் கருதினேன். ஏனெனில், கத்தியவாரில் பகஸ்ரா என்ற இடத்தில் நான் செய்த பிரசங்கத்தில் சத்தியாக்கிரகத் தைப்பற்றிக் கூறியிருந்தேன். பம்பாய் அரசாங்கத்தின் காரிய தரிசியை நான் சந்தித்துப் பேசியபோது, நான் சத்தியாக்கிர கத்தைப்பற்றி அப் பிரசங்கத்தில் கூறியதை ஆட்சேபித்தார். “அது பயமுறுத்தல் அல்லவா?'' அன்று அவர் கேட்டார். ''பலம் பொருந்திய அரசாங்கம் பயமுறுத்தல்களுக்கு விட்டுக் கொடுத்துவிடும் என்று நினைக்கிறீர்களா?'' என்றார்.

அதற்கு நான் கூறிய பதிலாவது: “இது பயமுறுத்தலே அல்ல. மக்களுக்குப் போதிப்பதே இது; குறைகளை நிவர்த்தி செய்துகொள்ளுவதற்குள்ள எல்லா நியாயமான உபாயங்களை யும் மக்களுக்கு எடுத்துக்காட்ட வேண்டியது என் கடமை. சுதந்திரத்தை அடைய விரும்பும் ஒரு நாட்டு மக்கள், அந்தச் சுதந்திரத்திற்கான எல்லா வழிகளையும் முறைகளையும் அறிந் திருக்க வேண்டும். அவ் வழிகளில் சாதாரணமாகக் கடைசி யான வழியாக இருந்துவருவது பலாத்காரம். ஆனால், அதற்கு நேர்மாறாகச் சத்தியாக்கிரகமோ, முற்றும் அகிம்சையோடு கூடிய ஆயுதம். அதன் உபயோகத்தைக் குறித்தும், அதில் உள்ள குறைபாடுகளைப்பற்றியும் விளக்கிக் கூறவேண்டியது என் கடமை என்று கருதுகிறேன். பிரிட்டிஷ் அரசாங்கம் பலமுள்ள அரசாங்கம் என்பதில் சந்தேகமே இல்லை. ஆனால், சத்தியாக்கிர கமே மிகச் சிறந்த பரிகாரம் என்பதிலும் எனக்கு எந்தவிதமான சந்தேகமும் இல்லை.''

கெட்டிக்காரரான அந்தக் காரியதரிசி, நான் கூறியதை ஒப் புக்கொள்ளத் தயங்கும் முறையில் தலையை அசைத்து, ''பார்ப் போம்'' என்றார்.

## 4

## சாந்திநிகேதனம்

ராஜ்கோட்டிலிருந்து சாந்திநிகேதனத்திற்குச் சென்றேன். அங்கே ஆசிரியர்களும் மாணவர்களும் என்னை அன்பில் மூழ் கடித்துவிட்டனர். எளிமையும் அன்பும் அழகாகக் கலந்ததாக இருந்தது, வரவேற்பு. இங்கேதான் காக்கா சாகிபை நான் முதல் முதலாகச் சந்தித்தேன்.

கலேல்காரை 'காக்கா சாகிப்' என்று ஏன் அழைக்கிறார்கள் என்பது அப்பொழுது எனக்குத் தெரியாது. பிறகே அதன் விவரம் எனக்குத் தெரிந்தது. நான் இங்கிலாந்தில் இருந்த காலத்தில் அங்கே இருந்தவரும், அங்கே என் நெருங்கிய நண்பருமான ஸ்ரீ கேசவராவ் தேஷ்பாண்டே, பரோடா சமஸ்தானத்தில் 'கங்காநாதர் வித்தியாலயம்' என்ற பள்ளிக்கூடம் ஒன்றை நடத்தி வந்தார். அப் பள்ளிக்கூடத்தில் ஒரு குடும்பத்தின் சூழ்நிலை இருந்து வரவேண்டும் என்பதற்காக, ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர்களின் உறவுப் பெயர்களை அவர் ஆசிரியர்களுக்கு வைத்திருந்தார். ஸ்ரீ கலேல்காரும் அங்கே ஓர் ஆசிரியர். அவரை அங்கே 'காக்கா' (சிற்றப்பா) என்றே அழைத்து வந்தனர். பட்கேயை 'மாமா' என்று அழைத்தார்கள். ஹரிஹர சர்மாவை 'அண்ணா' என்று அழைத்தனர். மற்றவர்களுக்கும் இவை போன்ற பெயர்கள் உண்டு. காக்காவின் நண்பராக ஆனந்தானந்தரும் (சுவாமி), மாமாவின் நண்பராகப் பட்டவர்த்தனரும் (அப்பா) பிறகு அக்குடும்பத்தில் சேர்ந்தார்கள். இவர்களெல்லோரும் நாளாவட்டத்தில் ஒருவர் பின் ஒருவராக எனது சக ஊழியர்களானார்கள். ஸ்ரீ தேஷ்பாண்டேயைச் 'சாகிப்' என்று அழைத்து வந்தனர். வித்தியாலயத்தைக் கலைத்துவிடவேண்டி வந்தபோது அக் குடும்பமும் கலைந்துவிட்டது. ஆனால், அவர்கள் தங்களுடைய ஆன்மிக உறவையோ, அங்கே வழங்கிய உறவுப் பெயர்களையோ விட்டுவிடவே இல்லை.

பல ஸ்தாபனங்களையும் பார்த்து அனுபவம் பெறுவதற்காகக் காக்கா சாகிப் அப்பொழுது பிரயாணம் செய்து வந்தார். நான் சாந்திநிகேதனத்திற்குச் சென்றபோது அவர் அங்கே இருந்தார். அதே கூட்டத்தைச் சேர்ந்தவரான சிந்தாமணி சாஸ்திரியும் அப்பொழுது அங்கே இருந்தார். இருவரும் சமஸ்கிருதம் கற்பிப்பதில் உதவி செய்து வந்தார்கள்.

போனிக்ஸ் குடும்பத்தினருக்குச் சாந்திநிகேதனத்தில் தனி இடம் கொடுத்திருந்தார்கள். அக் குடும்பத்திற்குத் தலைவராக இருந்தார், மகன்லால் காந்தி. போனிக்ஸ் ஆசிரமத்தின் விதிகள் யாவும் அங்கேயும் கண்டிப்பாக அனுசரிக்கப்பட்டு வருகின்றனவா என்று கவனிப்பதை அவர் தமது வேலையாகக் கொண்டார். அவர் தமது அன்பினாலும், அறிவினாலும், விடாமுயற்சியினாலும் தம்முடைய புகழ்மணம் சாந்திநிகேதனம் முழுவதிலும் கமழும்படி செய்திருந்ததைக் கண்டேன்.

ஆண்டுரூஸ் அங்கே இருந்தார். பியர்ஸனும் இருந்தார். வங்காளி ஆசிரியர்களில் ஜகதானந்த பாபு, நேபால் பாபு, சந்தோஷ் பாபு, க்ஷிதி மோகன் பாபு, நாகேன் பாபு, சரத் பாபு, காளி பாபு ஆகியவர்களுடன் ஓரளவுக்கு நெருங்கிய பழக்கம் எங்களுக்கு ஏற்பட்டது.

என்னுடைய வழக்கப்படி அங்கே இருந்த ஆசிரியர்களுட னும் மாணவர்களுடனும் நான் சீக்கிரத்தில் ஒன்றிப் போய்விட் டேன். அவரவர்களின் காரியங்களை அவரவர்களே செய்துகொள் ளுவதைக் குறித்து அவர்களுடன் விவாதித்தேன். ஆசிரியர் களுக்கு ஒரு யோசனை கூறினேன். சம்பளத்திற்கு வைத்திருக் கும் சமையற்காரர்களை அனுப்பிவிட்டு, ஆசிரியர்களும் மாணவர் களுமே தங்கள் உணவைச் சமைத்துக் கொள்ளுவ தானல், சிறுவர்களின் உடலுக்கும் ஒழுக்கத்துக்கும் ஏற்ற வகையில் சமையலறையை நிர்வகிக்க ஆசிரியர்களால் முடியும் என்றேன். இது, தங்கள் காரியங்களைத் தாங்களே செய்துகொள்ள வேண்டும் என்பதில் மாணவருக்கு ஓர் அனுபவப் பாடமாகவும் இருக்கும் என்றேன். ஆசிரியர்களில் இரண்டொருவர், அது ஆகாத காரியம் என்று தலையை அசைத்தார்கள். சிலர், என் யோசனையைப் பலமாக ஆதரித்தார்கள். சிறுவர்களும் அதை வரவேற்றனர். புதுமை யான காரியங்களில் சுபாவமாகச் சிறுவர்களுக்கு இருக்கும் ருசியே இதற்குக் காரணமாக இருக்கலாம். ஆகவே, நாங்கள் இப்பரீட்சையில் இறங்கினோம். இதுபற்றித் தமது கருத்தைத் தெரிவிக்குமாறு கவியை நான் கேட்டதற்கு, அதை ஆசிரியர்கள் ஆதரிப்பதா யிருந்தால், தமக்கு ஆட்சேபமில்லை என்று கூறினர். ''இந்தச் சோதனையில் சுயராஜ்யத்தின் திறவுகோல் அடங்கி யிருக்கிறது'' என்று அவர் சிறுவர்களிடம் கூறினர்.

இந்தப் பரீட்சை வெற்றி பெற வேண்டும் என்பதற்காக ஸ்ரீ பியர்ஸன் தமது உடலை வருத்திப் பாடுபட்டார்; அதிக உற்சா கத்தோடு இவ் வேலைகளில் ஈடுபட்டார். காய்கறிகளை நறுக்குவ தற்கு ஒரு கோஷ்டி, தானியத்தைச் சுத்தம் செய்வதற்கு ஒரு கோஷ்டி என்று இவ்விதம் ஒவ்வொரு வேலைக்கும் ஒவ்வொரு கோஷ்டி அமைக்கப்பட்டது. சமையலறையையும் அதன் சுற்றுப் புறங்களையும் சுத்தமாக வைத்திருக்கும் வேலையை நாகேன் பாபுவும் மற்றவர்களும் மேற்கொண்டனர். கையில் மண்வெட்டி யுடன் அவர்கள் வேலை செய்வதைப் பார்க்க எனக்கு ஆனந்த மாக இருந்தது.

அங்கே நூற்றிருபத்தைந்து பையன்களும் அவர்களின் ஆசிரி யர்களும் இருந்தனர். அவர்கள் எல்லோரும், உடலுழைப்பான இந்த வேலையைச் சுலபமாக ஏற்றுக்கொண்டு விடுவார்கள் என்று எதிர்பார்த்துவிட முடியாது. தினமும் விவாதங்கள் நடந்து வந்தன. சிலர் சீக்கிரத்திலேயே சோர்வடைந்து விட்டனர் என்பது தெரிந்தது. ஆனல், அப்படிச் சோர்ந்து விடக்கூடியவ ரன்று பியர்ஸன். எப்பொழுதும் புன்னகை பூத்த முகத்துடன் சமையலறையிலோ, அதன் பக்கத்திலோ அவர் ஏதாவது ஒரு வேலையைச் செய்துகொண் டிருப்பதைக் காணலாம். பெரிய பாத்திரங்களை யெல்லாம் சுத்தம் செய்யும் வேலையை அவர் மேற்கொண்டார். பாத்திரங்களைத் துலக்குகிற வர்களுக்கு அந்த வேலையில் சலிப்புத் தோன்ருமல் இருப்பதற்

காகச் சில மாணவர்கள் அவர்களுக்கு முன்னால் சித்தார் வாத்தியம் வாசிப்பார்கள். எல்லோருமே இந்த வேலையில் உற்சாகத்துடன் ஈடுபட்டனர். தேனீக்கள் சுறுசுறுப்பாக இருக்கும் தேன் கூடுபோல் இருந்தது, சாந்திநிகேதனம்.

இத்தகைய மாறுதல்கள் ஒரு முறை ஆரம்ப மாகிவிட்டால் எப்பொழுதும் வளர்ந்துகொண்டே இருக்கும். போனிக்ஸ் கோஷ்டியினர் தாங்களே சமைத்துக் கொண்டனர். அவர்கள் சாப்பாடு மிகவும் எளிமையாகவும் இருந்தது. மசாலைச் சாமான்களே அந்தச் சாப்பாட்டில் இல்லை. அரிசி, பருப்பு, கறி காய் மாத்திரமே யன்றிக் கோதுமை மாவுகூட, ஒரே சமயத்தில் ஒரே பாத்திரத்தில் நீராவியில் சமைக்கப்பட்டன. வங்காளிச் சமையலில் சீர்திருத்தம் செய்வதற்காகச் சாந்தி நிகேதனத்தின் பையன்கள் அதேபோன்ற சமையலைத் தொடங்கினார்கள். இரண்டொரு உபாத்தியாயர்களும் சில மாணவர்களும் இச் சமையலைச் செய்து வந்தார்கள்.

கொஞ்ச காலத்திற்குப் பிறகு இப்பரீட்சை நிறுத்தப்பட்டு விட்டது. பிரபலமான இந்த ஸ்தாபனம், மத்தியில் கொஞ்ச காலத்திற்கு இந்தப் பரீட்சையை நடத்தியதால் அதற்கு எந்த விதமான நஷ்டமும் இல்லை என்பதே என் அபிப்பிராயம். இதனால், ஏற்பட்ட சில அனுபவங்கள் உபாத்தியாயர்களுக்குப் பலனுள்ளதாகவே இருந்திருக்க முடியும்.

சாந்திநிகேதனத்தில் கொஞ்ச காலம் தங்கவேண்டும் என்று விரும்பினேன். ஆனால், விதியோ வேறுவிதமாக இருந்து விட்டது. நான் அங்கே வந்து ஒரு வாரம்கூட ஆகவில்லை. இதற்குள், கோகலே காலமாகிவிட்டார் என்று புனாவிலிருந்து எனக்குத் தந்தி வந்தது. சாந்திநிகேதனம் துக்கத்தில் ஆழ்ந்தது. அங்கிருந்தவர்கள் எல்லோரும் என்னிடம் வந்து துக்கம் விசாரித்தார்கள். தேசத்திற்கு ஏற்பட்ட நஷ்டத்தைக் குறித்துத் துக்கப்படுவதற்காக ஆசிரமத்தின் கோயிலில் ஒரு விசேடக் கூட்டம் நடந்தது. மிகுந்த பக்தியுடன் அது நடந்தது. அன்றே நான் என் மனைவியோடும் மகன்லாலுடனும் புனாவுக்குப் புறப்பட்டேன்.* மற்றவர்கள் எல்லோரும் சாந்திநிகேதனத்திலேயே தங்கினார்கள்.

ஆண்டுரூஸ், பர்த்வான் வரையில் என்னுடன் வந்தார். "இந்தியாவில் சத்தியாக்கிரகத்தை நடத்துவதற்கு ஒரு சமயம் வரும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? அப்படி வருமென்றால் அது எப்பொழுது வரும் என்பது குறித்து உங்களுக்கு ஏதாவது தோன்றுகிறதா?" என்று என்னைக் கேட்டார்.

---

*கோகலேயிடம் காந்திஜிக்கு இருந்த பக்திக்கு மற்றோர் முக்கியமான உதாரணம், அவர் காலமானார் என்று அறிந்ததும் ஓராண்டுக் காலம் வரையில் தாம் காலுக்கு எதுவுமே அணியாமல் வெறுங்காலுடனே நடப்பது என்று அவர் விரதம் பூண்டதாகும். இதனால் காந்திஜிக்கு எவ்வளவோ சிரமம் ஏற்பட்டது. என்றாலும், அந்த விரதத்தைக் கடைசி வரையில் விடாது கடைப்பிடித்தார்.

நான் கூறியதாவது: "இதற்குப் பதில் சொல்லுவது கஷ்டம். ஏனெனில், ஓர் ஆண்டுக்கு நான் எதுவும் செய்வதற்கில்லை. கோகலே என்னிடம் ஒரு வாக்குறுதி வாங்கியிருக்கிருர். அனுபவம் பெறுவதற்காக நான் இந்தியாவில் சுற்றுப்பிரயாணம் செய்ய வேண்டும் ; அது முடியும் வரையில் பொது விஷயங்களைக் குறித்து நான் எந்த விதமான அபிப்பிராயமும் கூறக்கூடாது என்பது அவர் என்னிடம் வாங்கிய வாக்குறுதி. அந்த ஓராண்டு முடிந்து விட்ட பிறகுங்கூட, என் கருத்துக்களை வெளியிடுவதற்கு நான் அவசரப்படப் போவதில்லை. ஆகையால், ஐந்தாண்டுகளுக்கோ அல்லது அதற்கு அதிகமான காலத்திற்கோ, சத்தியாக்கிரகத்திற்கான சமயம் ஏற்படும் என்று நான் நினைக்கவில்லை."

இந்தச் சந்தர்ப்பத்தில் ஒரு விஷயத்தைக் குறிப்பிட விரும்புகிறேன். 'ஹிந்த் சுயராஜ் (இந்திய சுயராஜ்யம்)' என்ற நூலில் நான் வெளியிட்டிருந்த சில கருத்துக்களைக் குறித்துக் கோகலே சிரிப்பது வழக்கம். "நீங்கள் இந்தியாவில் ஓராண்டு தங்கியிருந்த பிறகு உங்கள் கருத்துக்கள் தாமாகத் திருந்திவிடும்" என்று அவர் கூறுவார்.

## 5

# மூன்ரும் வகுப்புப் பிரயாணிகளின் துயரங்கள்

மூன்ரும் வகுப்புப் பிரயாணிகள், டிக்கெட்டுகளை வாங்குவதற்குக்கூட என்ன கஷ்டங்களையெல்லாம் அனுபவிக்க வேண்டியிருக்கிறது என்பதைப் பர்த்வானில் நாங்கள் நேரில் காண நேர்ந்தது. "மூன்ரும் வகுப்பு டிக்கெட்டுகளை இதற்குள் கொடுக்க முடியாது" என்று எங்களுக்குச் சொல்லிவிட்டனர். ஸ்டேஷன் மாஸ்டரைக் கண்டு பிடிப்பது கஷ்டமாக இருந்தாலும் அவரைப் போய்ப் பார்த்தேன். அவர் இருக்கும் இடத்தை யாரோ ஒருவர் எனக்கு அன்புடன் காட்டினர். எங்களுக்கு இருந்த கஷ்டத்தை ஸ்டேஷன் மாஸ்டரிடம் எடுத்துக் கூறினேன். அவரும் அதே பதிலைத்தான் சொன்னர். டிக்கெட் கொடுக்கும் இடத்தின் சன்னலைத் திறந்ததும் டிக்கெட்டுகளை வாங்குவதற்கு அங்கே சென்றேன். ஆனல், டிக்கெட்டுகளை வாங்குவது அவ்வளவு எளிதான காரியமாக இல்லை. அங்கே வல்லவன் வகுத்ததே சட்டமாக இருந்தது. பலமுள்ளவர்களும், மற்றவர்களைப்பற்றிய கவலையே இல்லாதவர்களுமான பிரயாணிகள், ஒருவர் பின் மற்ருெருவராக வந்து என்னை இடித்து வெளியே தள்ளிக்கொண்டே இருந்தனர். ஆகையால், முதல் கும்பலில் கடைசியாக டிக்கெட் வாங்கியவன் நான்தான்.

ரெயில் வந்து நின்றது. அதில் ஏறுவது மற்ருெரு பெரும் சோதனையாகிவிட்டது. ரெயிலுக்குள் முன்பே இருந்த பிரயாணி

களும் ஏற முயன்றவர்களும் பரஸ்பரம் திட்டுவதும், பிடித்துத் தள்ளுவதுமாக இருந்தார்கள். பிளாட்பாரத்தில் மேலும் கீழும் ஓடினோம். ஆனால், "இங்கே இடம் இல்லை" என்ற ஒரே பதில் தான் எங்களுக்கு எங்குமே கிடைத்தது. கார்டிடம் போனேன். "முடிந்தால் ஏறிக்கொள்ள முயற்சி செய்யுங்கள். முடியாது போனால் அடுத்த ரெயிலில் வாருங்கள்" என்று அவர் கூறினார்.

"எனக்கு அவசரமான வேலை இருக்கிறதே" என்று நான் மரியாதையுடன் பதில் சொன்னேன். ஆனால், நான் சொன்னதைக் கேட்டுக்கொண் டிருக்க அவருக்கு அவகாச மில்லை. இன்னது செய்வது என்று தெரியாமல் திகைத்தேன். எங்கே சாத்தியமோ அங்கே ஏறிக்கொள்ளுமாறு மகன்லாலிடம் கூறிவிட்டு, நானும் என் மனைவியும் இன்டர் வகுப்பு வண்டியில் ஏறிக்கொண்டோம். நாங்கள் அவ் வண்டியில் ஏறுவதைக் கார்டு பார்த்தார். அஸன்ஸால் ஸ்டேஷனை அடைந்ததும், எங்களிடம் அதிகப்படிக் கட்டணத்தை வசூலிப்பதற்காக அவர் எங்களிடம் வந்தார். அவரிடம் பின்வருமாறு கூறினேன்: "எங்களுக்கு இடம் தேடித் தர வேண்டியது உங்கள் கடமை. எங்களுக்கு இடம் கிடைக்காததால் நாங்கள் இங்கே உட்கார்ந்திருக்கிறோம். மூன்றாம் வகுப்பு வண்டியில் எங்களுக்கு இடம் கொடுப்பதானால் நாங்கள் அங்கே போய்விடச் சந்தோஷத்துடன் தயாரா யிருக்கிறோம்."

இதற்குக் கார்டு, "உம்முடன் விவாதிக்க நான் தயாரா யில்லை. உமக்கு நான் இடம் தேடிக்கொடுக்க முடியாது. அதிகப் படியான கட்டணத்தை நீர் செலுத்தவேண்டும். இல்லாவிட்டால் இறங்கிவிடும்" என்றார்.

எப்படியும் புனா போய்ச் சேர்ந்துவிட விரும்பினேன். ஆகையால், கார்டுடன் சண்டை போட்டுக்கொண் டிருக்க நான் தயாராக இல்லை. அவர் கேட்ட அதிகப்படிக் கட்டணத்தை, அதாவது புனா வரையில் கொடுத்துவிட்டேன். என்றாலும், அந்த அநியாயத்தைக் குறித்து ஆத்திரம் அடைந்தேன்.

காலையில் மொகல்ஸாரைக்குப் போய்ச் சேர்ந்தோம். மூன்றாம் வகுப்பில் மகன்லால் இடம் பிடித்துவிட்டதால் அந்த வண்டியில் போய் ஏறிக்கொண்டேன். டிக்கெட் பரிசோதகருக்கு இந்த விஷயங்களையெல்லாம் கூறினேன். மொகல்ஸாரையில் மூன்றாம் வகுப்பு வண்டியில் நான் ஏறிக்கொண்டுவிட்டதாக எனக்கு அத்தாட்சி கொடுக்குமாறு அவரிடம் கேட்டேன். ஆனால், அதைக் கொடுக்க அவர் மறுத்துவிட்டார். இதில் பரிகாரம் பெறுவதற்காக ரெயில்வே அதிகாரிகளுக்கு எழுதினேன். அதற்குப் பின்வருமாறு எனக்குப் பதில் வந்தது: "அத்தாட்சியை அனுப்பியிருந்தா லன்றி அதிகப்படியாக வசூலித்திருந்த கட்டணத்தைத் திருப்பிக் கொடுப்பது எங்களுக்கு வழக்க மில்லை. ஆனால், உங்கள் விஷயத்தில் ஒரு விதி விலக்குச் செய்கிறோம். என்றாலும், பர்த்வானிலிருந்து மொகல்ஸாரை வரையில் வாங்கிய



1915-இல் இந்தியா திரும்பியதும் மகாத்மா



1915-இல் சென்னையில் மகாத்மாவும் கஸ்தூரிபாவும்.
நிற்பவர்கள் மௌலானா யாகுப் ஹாஸனும் ஸ்ரீ ஜி. ஏ. நடேசனும்

அதிகப்படிக் கட்டணத்தைத் திருப்பிக் கொடுப்பது சாத்திய மில்லை.''

மூன்ரும் வகுப்புப் பிரயாணத்தைக் குறித்து இது முதல் எனக்கு ஏற்பட்ட அனுபவத்தை யெல்லாம் நான் எழுதுவதாக இருந்தால் அதுவே ஒரு பெரிய புத்தகமாகிவிடும். ஆனல், அந்த அனுபவங்களைக் குறித்து இந்த அத்தியாயங்களில் ஆங்காங்கே குறிப்பாகச் சிலவற்றையே நான் சொல்ல முடியும். உடல் நிலை சரியாக இல்லாததன் காரணமாக மூன்ரும் வகுப்புப் பிரயாணத்தை நான் கைவிட நேருவது, எனக்கு அதிகத் துயரம் அளித்திருக்கிறது. இது எப்பொழுதும் எனக்கு அதிகத் துயரம் அளிப்பதாகவே இருக்கும்.

மூன்ரும் வகுப்புப் பிரயாணிகளின் துயரங்க ளெல்லாம், ரெயில்வே அதிகாரிகளின் திமிரினுல்தான் ஏற்படுகின்றன என்பதில் சந்தேகமே இல்லை. ஆயினும், பிரயாணிகளின் முரட்டுத் தனம், ஆபாசமான பழக்கங்கள், சுயநலம், அறியாமை ஆகியவைகளையும் குற்றங்கூருமல், இருப்பதற்கில்லை. இதிலுள்ள பரிதாபம் என்னவென்ருல், தாங்கள் தவருகவும், ஆபாசமாகவும், சுயநலத்தோடும் நடந்துகொள்ளுவதை அவர்கள் உணராமல் இருப்பதே. தாங்கள் செய்வதெல்லாம் இயல்பானதே என்று அவர்கள் கருதுகிருர்கள். இவைகளுக் கெல்லாம் முக்கியமான காரணம், 'படித்தவர்க'ளாகிய நாம் அவர்களிடம் கொள்ளும் அசிரத்தையே யாகும்.

மிகவும் களைத்துப் போய்விட்ட நிலையில் நாங்கள் கல்யாண் போய்ச் சேர்ந்தோம். மகன்லாலும் நானும் ஸ்டேஷன் தண்ணீர்க் குழாயிலிருந்து கொஞ்சம் தண்ணீர் பிடித்துக் குளித்தோம். என் மனைவி குளிப்பதற்கு வேண்டிய ஏற்பாட்டைச் செய்வதற்கு நான் போய்க்கொண் டிருந்தபோது இந்திய ஊழியர் சங்கத்தைச் சேர்ந்த ஸ்ரீ கௌல் எங்களைத் தெரிந்துகொண்டார். அவர் எங்களிடம் வந்தார். அவரும் புனுவுக்குத்தான் போய்க்கொண் டிருந்தார். இரண்டாம் வகுப்புப் பிரயாணிகள் குளிக்கும் இடத்திற்கு என் மனைவியை அழைத்துப் போவதாக அவர் சொன்னுர். மரியாதையோடு அவர் அளிக்க முன்வந்த இந்த உதவியை ஏற்றுக்கொள்ள நான் தயங்கினேன். இரண்டாம் வகுப்புப் பிரயாணிகள் குளிக்குமிடத்தை உபயோகித்துக்கொள்ள என் மனைவிக்கு உரிமை இல்லை என்பதை அறிவேன். என்ருலும், முறையற்ற அச் செய்கைக்கு முடிவில் நானும் உடந்தையானேன். சத்தியத்தை அனுசரிப்பவருக்கு இது அழகல்ல என்பதையும் அறிவேன். அந்த ஸ்நான அறைக்குப் போய்த்தான் குளிக்க வேண்டும் என்று என் மனைவிக்கு ஆவலும் இல்லை. ஆனல், சத்தியத்தினிடம் இருந்த பற்றை, மனைவியினிடம் கணவனுக்கு இருந்த பாசம் வென்றுவிட்டது. சத்தியத்தின் முகம், மாயையின் தங்கத் திரையினுல் மூடப்பட்டிருக்கிறது என்று உபநிடதம் கூறுகிறது.

# 6

# நயந்துகொள்ள முயற்சி

நாங்கள் புனா வந்து சேர்ந்தோம். சிரார்த்தச் சடங்குகளெல்லாம் முடிந்த பிறகு இந்திய ஊழியர் சங்கத்தின் எதிர் காலத்தைக் குறித்தும், நான் அச்சங்கத்தில் சேருவதா, இல்லையா என்பதைக் குறித்தும் விவாதங்கள் எழுந்தன. அச் சங்கத்தில் நான் அங்கத்தினனாவது என்ற விஷயம் எனக்கு மிகவும் சங்கட மான பிரச்னையாக இருந்தது. கோகலே இருந்தபோது அதில் அங்கத்தினன் ஆவதற்கு நான் முற்பட வேண்டிய அவசியமே இல்லை. அவர் விருப்பம் எதுவோ அதை அப்படியே பணிவுடன் நிறைவேற்றி வந்திருப்பேன். அத்தகையதோர் நிலையில் இருக்க வேண்டும் என்பதுதான் என் பிரியமும். இந்தியப் பொது வாழ்க்கை என்ற கொந்தளிப்பான கடலில் பிரயாணம் செய்வ தற்குச் சரியான மாலுமி ஒருவர் எனக்குத் தேவைப்பட்டார். கோகலேயை நான் அத்தகைய மாலுமியாகக் கொண்டிருந்த தோடு, 'அவர் இருக்கப் பயமில்லை' என்ற தைரியத்துடனும் இருந் தேன். இப்பொழுதோ, அவர் போய்விட்டதால் என் சக்தியைக் கொண்டே நான் இருக்க வேண்டியவனாகிவிட்டேன். ஆகவே, அச் சங்கத்தில் அங்கத்தினனாகிவிட வேண்டியது என் கடமை என்பதை உணர்ந்தேன். அப்படிச் செய்தால் கோகலேயின் ஆன் மாவும் திருப்தியடையும் என்று எண்ணினேன். ஆகவே, தயக்கம் எதுவும் இல்லாமல், அதே சமயத்தில் உறுதியுடனும், அச் சங் கத்தின் அங்கத்தினர்களை நயந்து கொள்ளும் முயற்சியில் இறங் கினேன்.

இச் சமயத்தில் அச் சங்கத்தின் அங்கத்தினரில் பெரும்பா லானவர்கள் புனாவில் இருந்தார்கள். என்னைச் சேர்த்துக் கொள்ளுமாறு அவர்களைக் கேட்டுக்கொண்டேன். என்னைக் குறித்து அவர்களுக்கு இருந்த பயத்தை யெல்லாம் போக்கு வதற்கு முயன்றேன். ஆனால், என்னைச் சேர்த்துக்கொள்ளும் விஷயத்தில் அவர்களிடையே பிளவு இருந்தது என்பதைக் கண் டேன். அவர்களில் ஒரு பகுதியினர், என்னைச் சேர்த்துக்கொள்ளு வதற்கு ஆதரவாக இருந்தார்கள். மற்றொரு பகுதியினரோ, அதைப் பலமாக எதிர்த்து வந்தனர். என்னிடம் கொண்டிருந்த அன்பில் இந்த இரு சாராரும் ஒருவருக்கொருவர் சளைத்தவர்கள் அல்ல என்பதை நான் அறிவேன். ஆனால், சங்கத்தினிடம் அவர்களுக்கு இருந்த விசுவாசம், என்னிடம் அவர்கள் கொண் டிருந்த அன்பைவிட அதிகமாக இருந்திருக்கலாம். என்மீது கொண்ட அன்பைவிடக் குறைவாகவாவது இல்லாமல் இருந் திருக்கும். ஆகையால், எந்தவிதமான மனக்கசப்புமின்றியே விவாதித்து வந்தோம். அந்த விவாதம் முழுவதும் கொள்கை யைப் பற்றியதாகும். என்னை அங்கத்தினனாகச் சேர்த்துக்

கொள்ளுவதை எதிர்த்தவர்கள், அநேக விஷயங்களில் நானும் அவர்களும் வட துருவம் தென் துருவம்போல் வெகு தொலைவில் இருப்பதாகக் கூறினர். என்னை அங்கத்தினனாகச் சேர்த்துக் கொண்டுவிட்டால், எந்த நோக்கத்திற்காக அச்சங்கம் ஆரம்பிக் கப்பட்டதோ அந்த நோக்கத்திற்காக ஆபத்து நேர்ந்துவிடும் என்று எண்ணினார்கள். இயற்கையாகவே இத்தகைய ஆபத்தை அவர்களால் தாங்க முடியாதுதான்.

நீண்ட நேரம் விவாதித்த பிறகு நாங்கள் கலைந்துவிட்டோம், முடிவான தீர்மானத்திற்கு வரும் விஷயம் பிந்திய தேதிக்கு ஒத்திவைக்கப்பட்டுவிட்டது.

அதிகப் பரபரப்பு அடைந்துவிட்ட நிலையிலேயே நான் வீடு திரும்பினேன். பெரும்பான்மை வோட்டுக்களின் மூலம் நான் அங்கத்தினனாகச் சேர்த்துக்கொள்ளப்படுவது எனக்குச் சரியா? கோகலேயிடம் நான் கொண்டிருந்த பக்திக்கு அது பொருத்த மானதாக இருக்குமா? ஒரு விஷயம் எனக்குத் தெளிவாகத் தோன்றியது. என்னை அங்கத்தினனாகச் சேர்த்துக்கொள்ளு வதில் அச் சங்கத்தின் அங்கத்தினர்கள் இடையே அபிப்பிராய பேதம் இவ்வளவு கடுமையாக இருக்கும்போது, சேர்த்துக் கொள்ளக் கோரும் என் மனுவை வாபஸ் வாங்கிக்கொண்டு, என்னை எதிர்ப்பவர்களுக்கு இருக்கும் சங்கடத்திலிருந்து அவர் களைத் தப்புவிப்பது ஒன்றே நான் செய்யக்கூடிய சரியான காரியம். சங்கத்தினிடமும் கோகலேயிடத்திலும் நான் கொண் டிருந்த பக்திக்கு ஏற்ற காரியமும் அதுதான் என்று எண்ணி னேன். இந்த யோசனை பளிச்சென்று எனக்குத் தோன்றியதும், ஒத்திவைக்கப்பட்ட கூட்டத்தைக் கூட்டவே வேண்டாம் என்று உடனே ஸ்ரீ சாஸ்திரிக்கு எழுதினேன். என் மனுவை எதிர்த்த வர்கள், நான் செய்த தீர்மானத்தை முற்றும் பாராட்டினர். இது, ஒரு சங்கடமான நிலையிலிருந்து அவர்களைக் காப்பாற்றியது. எங்களுக்குள் நட்பையும் இன்னும் அதிகப் பலமான தாக்கியது. மனுவை வாபஸ் வாங்கிக்கொண்டது, உண்மையில் என்னை அச் சங்கத்தின் அங்கத்தினனாக்கியது.

அச் சங்கத்தில் சாதாரணமாக நான் அங்கத்தினன் ஆகாம லிருந்தது சரியானதே. நான் அங்கத்தினன் ஆவதை ஆட்சேபித் தவர்களின் எதிர்ப்பும் நியாயமானதே என்பதை, அனுபவம் இப் பொழுது தெளிவாக்குகிறது. கொள்கையைப் பற்றிய விஷயங் களில் எங்கள் கருத்துக்கள் முற்றும் மாறுபட்டவை என் பதையும் அனுபவம் காட்டிவிட்டது. ஆனால், இந்த மாறுபாட்டை அறிந்ததனால் எங்களிடையே எந்தவிதமான மனஸ்தாபமோ, மனக் கசப்போ இல்லை. சகோதரர்களாகவே இருந்து வந்திருக் கிறோம். புனாவிலுள்ள சங்கத்தின் இல்லம் எனக்கு என்றுமே யாத்திரைக் குரிய புண்ணிய ஸ்தலமாகவே இருந்து வரு கிறது.

அச் சங்கத்தின் விதிகளின்படி நான் அதில் அங்கத்தினன் ஆகவில்லை என்பது உண்மை. ஆனல், ஆன்ம உணர்ச்சியில் என்றும் அதன் அங்கத்தினனாகவே இருந்து வருகிறேன். உடல் உறவைவிட ஆன்ம உறவு அதிக மேன்மையானது. ஆன்ம உறவில்லாத வெறும் உடல் உறவு உயிரில்லாத உடல் போன்றதேயாகும்.

## 7
## கும்ப மேளா

அடுத்தபடியாக, டாக்டர் மேத்தாவைச் சந்திப்பதற்காக ரங்கூனுக்குப் போனேன். போகும் வழியில் கல்கத்தாவில் தங்கினேன். அங்கே காலஞ் சென்ற பாபு பூபேந்திரநாத வசுவின் விருந்தினனாகத் தங்கினேன். வங்காளிகளின் விருந்தோம்பல் குணம் இங்கே உச்ச நிலையை எட்டிவிட்டது. அந்த நாளில் நான் பழங்களைத் தவிர வேறு எதையும் சாப்பிடுவதில்லை, ஆகவே, கல்கத்தாவில் கிடைக்கக்கூடிய எல்லாப் பழங்களும் கொட்டைப் பருப்புகளும் எனக்காகத் தருவிக்கப்பட்டன. அவ் வீட்டுப் பெண்மணிகள் இரவெல்லாம் கண் விழித்துப் பலவிதமான கொட்டைகளையும் உடைத்து உரித்தார்கள். பழங்களை இந்திய முறையில் பக்குவம் செய்து, பரிமாறுவதற்கும் எவ்வளவோ சிரமம் எடுத்துக்கொண்டார்கள். என்னுடன் வந்தவர்களுக்கென்று எத்தனையோ வகையான பலகாரங்கள் செய்யப்பட் டிருந்தன. என்னோடு என் மகன் ராமதாஸும் வந்திருந்தான். அன்போடு நடந்த இந்த விருந்தோம்பலை நான் எவ்வளவோ பாராட்டக் கூடும். ஆயினும், இரண்டு மூன்று விருந்தினரை உபசரிப்பதற்காக ஒரு குடும்பம் முழுவதுமே வேலை செய்வதை என்னல் சகிக்க முடியவில்லை. என்றாலும், இவ்விதமான சங்கடமான உபசரிப்புகளிலிருந்து தப்பும் வழியும் அப்பொழுது எனக்குத் தெரிந்திருக்கவில்லை.

ரங்கூனுக்குப் போகும்போது கப்பலில் மூன்றாம் வகுப்பிலேயே பிரயாணம் செய்தேன். ஸ்ரீ வசுவின் வீட்டில் அதிகப்படியான உபசாரம் எங்களுக்குச் சங்கடமாக இருந்தது. ஆனல், கப்பலில் எங்களுக்கு ஏற்பட்ட கதியோ? மூன்றாம் வகுப்புப் பிரயாணிகளின் சாதாரண வசதிகளைக்கூட கவனிப்பார் இல்லாமல் இருந்தது. குளிக்கும் அறை என்று சொல்லப்பட்ட இடம், சகிக்க முடியாத வகையில் ஆபாசமாக இருந்தது. கக்கூசு ஒரே நாற்றமெடுத்தது. கக்கூசுக்குப் போவதாக இருந்தால் மலத்தையும் மூத்திரத்தையும் மிதித்துக்கொண்டுதான் போக வேண்டும். இல்லையானல், தாண்டிக்கொண்டு செல்ல வேண்டும்.

இந்த ஆபாசங்களைச் சகித்துக்கொண்டு என்னல் இருக்க முடியவில்லை. கப்பலின் பிரதம அதிகாரியிடம் முறையிட்டும்

பயனில்லை. இந்த விதமான ஆபாசங்களும் நாற்றங்களும் போதாவென்று பிரயாணிகளும் தங்களுடைய புத்திகெட்ட பழக்கங்களினால் மேலும் ஆபாசப்படுத்தினார்கள். உட்கார்ந்த இடத்தில் இருந்தபடியே துப்பிவைத்தனர். சாப்பிட்டதில் மிஞ்சியது, புகையிலை, வெற்றிலை ஆகியவைகளைக் கழித்தது-ஆகியவற்றையெல்லாம் சுற்றிலும் போட்டார்கள். அவர்கள் போட்ட கூச்சல்களுக்கோ முடிவே இல்லை. முடிந்த அளவு அதிக இடத்தைப் பிடித்துக்கொண்டுவிட ஒவ்வொருவரும் முயன்றனர். அவர்களைவிட அவர்களுடைய சாமான்களே அதிக இடத்தை அடைத்துக்கொண்டு விட்டன. இவ்விதம் இரண்டு நாட்கள் எங்களுக்கு மிகவும் கடுமையான சோதனையாகிவிட்டது.

ரங்கூனுக்குப் போனதும் கப்பல் கம்பெனியின் ஏஜெண்டுக்கு எழுதினேன். இருந்த நிலைமை முழுவதையும் அவருக்குத் தெரிவித்தேன். இந்தக் கடிதத்தினாலும், டாக்டர் மேத்தாவின் முயற்சியினாலும், திரும்புகையில் மூன்றும் வகுப்புப் பிரயாணம் அவ்வளவு மோசமாக இல்லை.

எனது பழ ஆகார விரதம் ரங்கூனிலும் டாக்டர் மேத்தாவின் வீட்டினருக்கு அதிகப்படியான சங்கடத்தை விளைவித்தது. டாக்டர் மேத்தாவின் வீடு என் சொந்த வீடு மாதிரி. ஆகவே, ஆகார வகைகள் மிக அதிகமாகிப் போய்விடாதவாறு ஓரளவுக்குக் கட்டுப்படுத்த என்னால் முடிந்தது. என்றாலும், இத்தனை வகையான உணவுதான் சாப்பிடுவது என்பதற்கு நான் இன்னும் ஒரு வரம்பை விதித்துக் கொள்ளவில்லை. ஆகவே, பரிமாறப்பட்டவைகளை ஓரளவோடு நிறுத்திக்கொள்ளுவதற்கு என் சுவை உணர்ச்சியும், கண்களும் மறுத்துவிட்டன. சாப்பாட்டுக்குக் குறிப்பிட்ட நேரம் என்பதும் இல்லை. என்னைப் பொறுத்தவரையில் கடைசிச் சாப்பாட்டை இருட்டுவதற்கு முன்னால் முடித்துக்கொண்டுவிடவே நான் விரும்பினேன். ஆனால், அநேகமாக இரவு எட்டு, ஒன்பது மணிக்கு முன்னால் சாப்பிட்டு முடிவதில்லை.

அது 1915-ஆம் ஆண்டு. கும்ப உற்சவம் நடக்க வேண்டிய ஆண்டு அது. இந்தத் திருவிழா பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை ஹரித்துவாரத்தில் நடக்கிறது. அத் திருவிழாவைப் பார்க்க வேண்டும் என்ற ஆர்வம் எனக்கு இல்லை. என்றாலும், மகாத்மா முன்ஷிராம்ஜியை, அவருடைய குருகுலத்திற்குப் போய்ப் பார்க்க வேண்டும் என்ற ஆவலுடன் இருந்தேன். கும்பத் திருவிழாவில் சேவை செய்வதற்கென்று கோகலேயின் சங்கத்தினர் ஒரு தொண்டர் படையை அனுப்பியிருந்தார்கள். அத் தொண்டர் படைக்குப் பண்டித ஹிருதயநாத குன்ஸ்ரு தலைவர்; காலஞ்சென்ற டாக்டர் தேவ், வைத்திய அதிகாரி. தங்களுக்கு உதவி செய்யப் போனிக்ஸ் கோஷ்டியினரை அனுப்புமாறு என்னைக் கேட்டிருந்தார்கள். எனவே, மகன்லால் காந்தி

எனக்கு முன்னாலேயே அங்கே போயிருந்தார். ரங்கூனிலிருந்து திரும்பியதும் நானும் அவர்களுடன் சேர்ந்துகொண்டேன்.

கல்கத்தாவிலிருந்து ஹரித்துவாரத்திற்கு ரெயில் பிரயாணம் மிகவும் கஷ்டமாக இருந்தது. சில சமயங்களில் வண்டிகளில் விளக்குகளே இல்லை. சகரன்பூரிலிருந்து நாங்கள், சாமான்களை யும் கால்நடைகளையும் ஏற்றும் வண்டிகளில் அடைக்கப்பட்டிருந் தோம். இந்த வண்டிகளுக்கு மேல் கூரை இல்லை. மேலே தகிக் கும் வெயில்; கீழேயோ, கொதிக்கும் இரும்புத் தளம். இவற் றிற்கு நடுவே நாங்கள் வறுபட்டுப் போனவர்கள் போல் ஆகிவிட் டோம். இத்தகைய பிரயாணத்தினால் ஏற்பட்ட நீர் வேட்கை யில்கூட வைதிக ஹிந்துக்கள், முஸ்லிம்களிடமிருந்து தண்ணீர் வாங்கிக் குடிக்க மறுத்தனர். 'ஹிந்து தண்ணீர்' கிடைக்கும் வரையில் அவர்கள் காத்துக்கொண்டுதான் இருந்தார்கள். ஆனால், இதே ஹிந்துக்கள் நோயுற்றுவிடும்போது டாக்டர் தங் களுக்குக் கொடுக்கும் சாராயத்தையும் மாட்டிறைச்சிச் சூப்பை யும் குடிக்கத் தயங்குவதில்லை. தங்களுக்கு மருந்துத் தண்ணீர் கொடுப்பவர் கிறிஸ்தவக் கம்பவுண்டரா, முஸ்லிம் கம்பவுண்டரா என்பதைக் குறித்து விசாரிப்பதும் இல்லை என்பது கவனிக்க வேண்டியதாகும்.

தோட்டி வேலையே இந்தியாவில் எங்களுடைய விசேஷ வேலையாக இருக்க வேண்டும் என்பதைச் சாந்திநிகேதனத்தில் தங்கியதிலிருந்து நாங்கள் அறிந்துகொண்டோம். ஹரித்துவா ரத்தில் தொண்டர்கள் தங்குவதற்கு ஒரு தருமசாலையில் கூடாரங் கள் அமைக்கப்பட்டிருந்தன. கக்கூசுகளாக உபயோகிப்பதற்கு டாக்டர் தேவ் அங்கே சில குழிகளைத் தோண்டியிருந்தார். அவைகளைச் சுத்தம் செய்வதற்கு, கூலி பெறும் தோட்டிகளையே அவர் எதிர்பார்க்க வேண்டியிருந்தது. போனிக்ஸ் கோஷ்டி யினர் வேலை செய்வதற்கு இங்கே சந்தர்ப்பம் ஏற்பட்டது. மலத்தை மண் போட்டு மூடிப் பிறகு அங்கிருந்து அகற்றிச் சுத் தம் செய்துவிடும் வேலையை நாங்கள் செய்வதாக முன்வந்தோம். டாக்டர் தேவ் மகிழ்ச்சியுடன் இதை ஏற்றுக்கொண்டார். இந்த வேலையைச் செய்வதாகச் சொன்னது நான்தான் என்றா லும் அதை மகன்லால் காந்தியே நிறைவேற்ற வேண்டிய தாயிற்று. கூடாரத்தில் உட்கார்ந்துகொண்டு 'தரிசனம்' கொடுப்பதும், என்னைப் பார்க்க அங்கே வந்த அநேக யாத்திரி கர்களுடன் மத சம்பந்தமாகவும் மற்றவைகளைக் குறித்தும் விவாதிப்பதுமே பெரும்பாலும் என் வேலையாக இருந்தது. இதனால், என் வேலை எதையும் கவனித்துக்கொள்ளுவதற்கு எனக்கு நேரமே இல்லை. என்னைப் பார்க்க வந்தவர்கள், நான் நீராட ஸ்நான கட்டத்திற்குச் சென்றபோதும் என்னை விடாது பின் தொடர்ந்தார்கள். நான் சாப்பிடும்போதுகூட அவர்கள் என்னைத் தனியாக விட்டுவைப்பதில்லை. தென்

ஹப்பிரிக்காவில் நான் செய்த சாதாரணச் சேவைகள் இந்தியா முழுவதும் எவ்வளவு ஆழ்ந்த கவர்ச்சியை உண்டாக்கியிருந்தன என்பதை இவ்விதம் ஹரித்துவாரத்திலேயே நான் அறியலானேன்.

ஆனால், இது யாரும் பொறாமைப்பட வேண்டிய நிலைமை அன்று. இருதலைக் கொள்ளி எறும்பின் நிலையில் நான் இருப்பதாகவே எண்ணினேன். என்னை யாரும் தெரிந்து கொள்ளாத இடங்களில், ரெயில்வே பிரயாணம் போன்ற சமயங்களில், இந்நாட்டு மக்களில் கோடிக்கணக்கானவர்களுக்கு ஏற்படும் கஷ்டங்களை நானும் அனுபவிக்க வேண்டியிருந்தது. ஆனால், என்னைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பவர்கள் என்னைச் சுற்றிக்கொண்டிருக்கும்போது, அவர்களுடைய தரிசனப் பித்துக்குப் பலியாக வேண்டியவனாக இருக்கிறேன். இந்த இரு நிலைமைகளில் எது அதிகப் பரிதாபகரமானது என்பதை எப்பொழுதுமே நிச்சயமாகக் கூற என்னால் முடிந்ததில்லை. ஆனால், ஒன்றை மாத்திரம் நான் அறிவேன். இந்தத் தரிசனப் பித்தர்களின் குருட்டு அன்பு, பல தடவைகளிலும் எனக்குக் கோபத்தையும், அடிக்கடி மன வேதனையையுமே உண்டாக்கி வந்திருக்கிறது. ஆனால், ரெயில் பிரயாணமோ, மிகவும் கஷ்டமானதாகவே இருந்த போதிலும், ஆன்மத் தூய்மையைத்தான் அளித்து வந்ததேயன்றி எனக்கு ஒருபோதும் கோபத்தை மூட்டியதில்லை.

எவ்வளவு தூரமாயினும் ஊரெல்லாம் சுற்றித் திரிவதற்கு வேண்டிய பலம், அந்த நாளில் எனக்கு இருந்தது. அதிருஷ்டவசமாக நான் அவ்வளவு தூரம் ஊருக்கெல்லாம் தெரிந்தவனாகவும் ஆகிவிடவில்லை. ஆகையால், எவ்விதப் பரபரப்பையும் உண்டாக்கிவிடாமல் அப்பொழுது தெருவில் போய்க்கொண்டிருக்க என்னால் முடிந்தது. அவ்விதம் சுற்றித் திரிந்ததில் பல விஷயங்களைக் கவனித்தேன். யாத்திரிகர்களிடம் பக்தியைக் காட்டிலும் கவனக் குறைவும், வெளிவேஷமும், துப்புக்கெட்டதனமுமே அதிகமாக இருந்ததைப் பார்த்தேன். சாதுக்கள் கூட்டங் கூட்டமாக அங்கே வந்திருந்தார்கள். உலக வாழ்க்கையின் இன்பங்களையெல்லாம் அனுபவிப்பதற்கென்று பிறந்திருப்பவர்களாகவே அவர்கள் தோன்றினர்.

இங்கே ஐந்துகால்களோடுகூடிய ஒரு பசுவையும் பார்த்தேன்! நான் ஆச்சரியப்பட்டுப் போனேன். ஆனால், விஷயம் தெரிந்தவர்கள், சீக்கிரத்தில் எனக்கு ஏற்பட்டிருந்த பிரமையைப் போக்கிவிட்டனர். அந்தப் பரிதாபகரமான ஐந்து கால் பசு, கொடியவர்களின் பேராசைக்குப் பலியானதேயன்றி வேறு அல்ல. உயிருடன் இருந்த ஒரு கன்றின் காலைத் துண்டித்து, இப் பசுவின் தோலில் பொருத்தியிருந்தார்கள். அதுதான் இந்த ஐந்தாவது காலே ஒழிய வேறு ஒன்றும் இல்லை என்பதை அறிந்தேன்! இவ்வித இரட்டைக் கொடுமையின் பலனைக் கொண்டு, ஒன்றும் அறி

யாதவர்களின் பணத்தைப் பறித்து வந்தார்கள். இந்த ஐந்து கால் பசுவைப் பார்க்க ஆவல் கொள்ளாத ஹிந்துவே இல்லை. இந்த அற்புதப் பசுவிற்குத் தாராளமாகத் தருமஞ் செய்யாத ஹிந்துவும் இல்லை.

உற்சவ தினமும் வந்தது. இது எனக்கு மிக முக்கியமான தினமாகவும் ஆயிற்று. நான் ஹரித்துவாரத்திற்கு யாத்திரை நோக்கத்துடன் போகவில்லை. புண்ணியத்தை நாடி யாத்திரை ஸ்தலங்களுக்குப் போய்க்கொண்டிருக்க வேண்டும் என்று நான் எண்ணியதே இல்லை. ஆனால், அங்கே கூடியிருந்ததாகக் கூறப் பட்ட பதினேழு லட்சம் மக்களில் எல்லோருமே வெளிவேஷக் காரர்களோ, வெறும் வேடிக்கை பார்க்க வந்தவர்களோ அல்ல. அவர்களில் எண்ணற்றவர்கள், புண்ணியத்தைத் தேடவும், ஆன் மத் தூய்மையை அடையவுமே வந்தார்கள் என்பதில் எனக்கு எவ்விதச் சந்தேகமும் இல்லை. ஆனால், இப்படிப்பட்ட நம்பிக்கை எந்த அளவுக்கு ஆன்மாவை மேன்மைப்படுத்துகிறது என்ப தைச் சொல்வது இயலாதது அல்ல என்றாலும், சொல்வது கஷ்டம்.

ஆகையால், ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியவாறே அன்றிரவைக் கழித்தேன். தங்களைச் சூழ்ந்திருந்த வெளிவேஷத்திற்கு நடுவில் பக்தியுள்ள ஆன்மாக்களும் இருந்தன. ஆண்டவனின் சந்நிதா னத்தில் அவர்கள் குற்றமற்றவர்களே. ஹரித்துவாரத்திற்கு வந்ததே, அதனளவில் பாவச் செயல் என்றால், ஹரித்துவார யாத் திரையை நான் பகிரங்கமாகக் கண்டித்துக் கூறிவிட்டுக் கும்ப தினத்தன்றே அங்கிருந்து புறப்பட்டிருக்க வேண்டும். ஹரித்து வார யாத்திரையை மேற்கொண்டதும், கும்ப உற்சவத்திற்கு வந்ததும் பாவச் செயலன்று என்றால், அங்கே நடக்கும் அக்கிர மங்களுக்குப் பிராயச்சித்தமாக நான் ஏதேனும் எனக்கு நானே மறுத்துக்கொண்டு என்னைத் தூய்மைப்படுத்திக்கொள்ள வேண் டும். இது எனக்கு மிகவும் இயல்பானது. என் வாழ்க்கையே கட்டுத் திட்டங்களடங்கிய முடிவுகளை அடிப்படையாகக் கொண் டது. கல்கத்தாவிலும் ரங்கூனிலும் நான் தங்கிய வீட்டினர், ஏராளமாகச் செலவு செய்து எனக்கு விருந்தளித்தார்கள். அவர் களுக்கு நான் அனாவசியமான தொந்தரவுகளைக் கொடுத்து விட்டதாக எண்ணினேன். ஆகையால், என் ஆகாரத்தில் இத்தனை பண்டங்களைத்தான் சாப்பிடுவது என்று கட்டுப் படுத்திக் கொள்ளுவதோடு கடைசிச் சாப்பாட்டை இருட்டு வதற்கு முன்னால் முடித்துக்கொண்டு விடுவது என்றும் தீர்மா னித்தேன். எனக்கு இத்தகைய தடைகளை நானே விதித்துக் கொள்ளாவிட்டால், இனி என்னை அதிதியாக ஏற்பவர்களுக்கு அநேக இடைஞ்சல்களை நான் உண்டாக்க நேரும். சேவை யில் நான் ஈடுபடுவதற்கு மாறாக அவர்களை எனக்குச் சேவை செய்வதில் ஈடுபடுத்திக்கொள்ளவும் வேண்டி வரும். ஆகை யால், இந்தியாவில் இருக்கும்போது இருபத்து நான்கு மணி நேரத்தில் ஐந்துக்கு அதிகமான பொருள்களை நான் சாப்பிடுவ

தில்லை என்றும், இருட்டிய பிறகு சாப்பிடுவதில்லை என்றும் விரதம் எடுத்துக்கொண்டேன். இதனால் எனக்கு ஏற்படக் கூடிய கஷ்டங்களைக் குறித்துத் தீரச் சிந்தித்தேன். ஆனால், இதில் எந்தவிதச் சந்தேகத்திற்கும் பின்னால் இடம் வைத்துவிட நான் விரும்பவில்லை. நான் நோய்வாய்ப்பட்டு, மருந்தும் உணவுப் பொருள்களில் ஒன்றாகி, அச்சமயம் விசேஷமாகச் சாப்பிட வேண்டிய ஆகாரத்திற்காக விதிவிலக்கு எதுவும் செய்யாது போனால், அப்பொழுது என்ன ஆகும் என்பதைக் குறித்தும் யோசித்தேன். என்னவானாலும் சரி, இந்த விரதத்திலிருந்து எந்த விலக்கும் செய்துகொள்ளுவதில்லை என்று முடிவாகத் தீர் மானித்துக்கொண்டேன்.

இந்த விரதத்தை இப்பொழுது நான் பதின்மூன்று ஆண்டுக ளாக அனுசரித்து வருகிறேன். இதனால் எனக்குப் பல கஷ்டங் கள் ஏற்பட்டதும் உண்டு. ஆயினும் இந்த விரதம் எனக்குப் பாதுகாப்பாகவும் இருந்தது என்பதை நிச்சயமாகக் கூறமுடியும். இது என் வாழ்நாட்களில் சில ஆண்டுகளை அதிகமாக்கியது; நான் பற்பல நோய்களுக்கு உள்ளாகாதவாறும் என்னைக் காப் பாற்றியது என்பதே என் அபிப்பிராயம்.

## 8

## லட்சுமணன் பாலம்

ஹரித்துவாரத்திலிருந்து மகாத்மா முன்ஷிராம்ஜியின் குரு குலத்திற்குச் சென்று ஆஜானுபாகுவான அவரைச் சந்தித்ததில் எனக்கு மன ஆறுதல் ஏற்பட்டது. குருகுலத்திலிருந்த அமைதிக் கும் ஹரித்துவாரத்திலிருந்த இரைச்சலுக்கும் இடையே இருந்த அற்புதமான வித்தியாசத்தை அங்கே சென்றதுமே உணர்ந்தேன்.

மகாத்மா தமது அன்பினால் என்னை ஆட்கொண்டுவிட்டார். பிரம்மச்சாரிகள், எனக்கு வேண்டிய வசதிகளை யெல்லாம் செய்துகொடுத்தார்கள். இங்கேதான் முதன் முதலில் ஆச்சாரிய ராம தேவஜியைச் சந்தித்தேன். அவரிடம் எவ்வளவு அபாரமான சக்தி இருந்தது என்பதை உடனேயே கண்டுகொண்டேன். பல விஷயங்களிலும் நாங்கள் மாறுபட்ட கருத்துடையவர்கள். என்றாலும், எங்கள் பழக்கம் சீக்கிரத்திலேயே நட்பாகக் கனிந்தது. குருகுலத்தில் கைத்தொழில் பயிற்சியை ஆரம்பிப் பதன் அவசியத்தைக் குறித்து ஆச்சாரிய ராமதேவஜியுடனும் மற்றப் பண்டிதர்களுடனும் நீண்ட நேரம் விவாதித்தேன். அங்கி ருந்து புறப்பட்டுவிட வேண்டிய நேரம் வந்தபோது பிரிவது மனத் திற்கு அதிக வருத்தமாகவே இருந்தது.

லட்சுமண ஜூலாவைப் (கங்கைமீது போடப்பட்டிருந்த தொங்கும் பாலம்) பற்றிப் பலர் புகழ்ந்து பேச நான் கேட்டிருந்

தேன். இது ரிஷீகேசத்திலிருந்து கொஞ்ச தூரத்தில் இருக்கிறது. அந்தப் பாலத்தைப் போய்ப் பார்க்காமல் ஹரித்துவாரத்திலிருந்து திரும்பிவிட வேண்டாம் என்று பல நண்பர்கள் என்னிடம் வற்புறுத்திச் சொன்னார்கள். நடந்துபோயே இந்த யாத்திரையை முடிக்க விரும்பினேன். ஆகையால், மத்தியில் ஓர் இடத்தில் தங்கி அங்கே போய்ச் சேர்ந்தேன்.

ரிஷீகேசத்தில் சந்நியாசிகள் பலர் என்னைப் பார்க்க வந்தார்கள். அவர்களில் ஒருவர் என்னிடம் அதிக அபிமானம் கொண்டிருந்தார். போனிக்ஸ் கோஷ்டியினர் அங்கே இருந்தனர். அவர்களைக் குறித்து அந்தச் சுவாமி என்னைப் பல கேள்விகள் கேட்டார். சமய சம்பந்தமாக நாங்கள் விவாதித்தோம். அதில் இருந்து சமய சம்பந்தமான சிரத்தை எனக்கு அதிகம் உண்டு என்பதைத் தெரிந்துகொண்டார். கங்கையில் நீராடி விட்டு உடம்பில் சட்டையில்லாமல், தலையில் தொப்பியில்லாமல் நான் வந்துகொண்டிருந்தபோது அவர் என்னைப் பார்த்தார். தலையில் உச்சிக் குடுமியும், உடம்பில் பூணூலும் இல்லாமல் நான் இருந்ததைக் கண்டு அவருக்கு மனவேதனை யாகிவிட்டது. “ஹிந்து தருமத்தில் நம்பிக்கையுள்ள நீங்கள், பூணூல் அணியாமலும் உச்சியில் குடுமி இல்லாமலும் இருப்பதைக் காண என் மனம் வேதனைப்படுகிறது. இவை இரண்டும் ஹிந்து தருமத்தின் புறச் சின்னங்கள். ஒவ்வொரு ஹிந்துவுக்கும் அவை இருந்தாக வேண்டும்” என்றார்.

இந்த இரண்டையும் நான் எவ்வாறு விட்டுவிட்டேன் என்பதே ஒரு தனிச் சரித்திரமாகும். நான் பத்து வயதுச் சிறுவனாக இருந்தபோது, பிராமணச் சிறுவர்கள் தாங்கள் அணிந்திருந்த பூணூலில் சாவிக் கொத்துக்களைக் கோத்துத் தொங்கவிட்டுக் கொண்டிருப்பதைப் பார்த்து நான் பொறாமைப்படுவது உண்டு. நானும் அப்படிச் செய்யவேண்டும் என்று ஆசைப்பட்டேன். கத்தியவாரிலிருக்கும் வைசியக் குடும்பத்தினர் அக்காலத்தில் சாதாரணமாகப் பூணூல் அணிந்துகொள்ளுவதில்லை. ஆனால், முதல் மூன்று வருணத்தினரும் பூணூல் அணிய வேண்டியது அவசியம் என்று வற்புறுத்தும் இயக்கம் ஒன்று அப்பொழுதுதான் ஆரம்பமாகி இருந்தது. இதன் காரணமாகக் காந்தி சாதியைச் சேர்ந்த பலர் பூணூல் போட்டுக்கொண்டனர். எங்களில் இரண்டு மூன்று சிறுவர்களுக்கு ராம ரட்சை போதித்து வந்த பிராமணர், எங்களுக்கும் பூணூல் போட்டுவிட்டார். நான் சாவிக்கொத்து வைத்துக்கொள்ளச் சந்தர்ப்பம் ஏற்படாவிட்டாலும், ஒரு சாவிக் கொத்தைச் சம்பாதித்து என் பூணூலில் மாட்டிக்கொண்டேன். பிறகு பூணூல் அறுந்து போய் விட்டது. அது போய்விட்டதே என்று அப்பொழுது நான் வருத்தப்பட்டேனா என்பது எனக்கு ஞாபகம் இல்லை. ஆனால், புதிதாகப் பூணூலைத் தேடி நான் போட்டுக்கொள்ளவில்லை என்பதை அறிவேன்.

நான் பெரியவன் ஆகிவிட்ட பிறகு, இந்தியாவிலும் தென்னுப்பிரிக்காவிலும் பலர், நல்ல எண்ணத்தின் பேரிலேயே, நான் பூணூல் போட்டுக்கொள்ளும்படி செய்ய முயன்றார்கள். ஆனால், அவர்கள் முயற்சி வெற்றியடையவில்லை. சூத்திரர்கள் பூணூல் போட்டுக்கொள்ளக் கூடாது என்றால், மற்ற வருணத்தினருக்கு மாத்திரம் அதைப் போட்டுக்கொள்ளுவதற்கு என்ன உரிமை இருக்கிறது என்று விவாதித்தேன். பூணூல் போட்டுக்கொள்ளுவது அனாவசியமான பழக்கம் என்பது என் கருத்து. ஆகையால், அதை அணிய வேண்டும் என்பதற்குப் போதுமான நியாயம் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. பூணூலைப் பொறுத்த வரையில் எனக்கு எந்தவித ஆட்சேபமும் இல்லை. ஆனால், அதை அணிய வேண்டும் என்பதற்குரிய நியாயந்தான் எனக்குத் தென்படவில்லை.

வைஷ்ணவன் என்ற முறையில் என் கழுத்தில் துளசி மாலை அணிந்திருந்தேன். குடுமி வைத்திருப்பது அவசியம் என்று வீட்டில் பெரியவர்கள் கருதி வந்தார்கள். ஆயினும், நான் இங்கிலாந்துக்குப் புறப்படவிருந்த தருணத்தில் உச்சிக் குடுமியை எடுத்துவிட்டேன். எடுக்காமல் இருந்தால், தலையில் தொப்பி யில்லாதபோது அதை யாராவது பார்த்துவிட்டால் பரிகாசம் செய்வார்கள் என்றும், நான் ஒரு காட்டுமிராண்டி என்று ஆங்கிலேயருக்குத் தோன்றும் என்றும் அப்பொழுது நான் எண்ணினேன். இக்கோழைத்தன உணர்ச்சியின் காரணமாக, தென்னுப்பிரிக்காவில் மத நம்பிக்கையுடன் குடுமி வைத்திருந்த என் சகோதரரின் மகனை சகன்லால் காந்தியையும் அதை எடுத்துவிடும்படி செய்தேன். அவருடைய பொதுஜன சேவைக்கு அக்குடுமி இடையூறாக இருக்கும் என்று அஞ்சினேன். ஆகையால், அவர் மனத்துக்குக் கஷ்டமாக இருக்குமே என்பதைக்கூடக் கவனிக்காமல், அவர் அக்குடுமியை எடுத்துவிடும்படி செய்தேன்.

எனவே, எல்லா விவரங்களையும் சுவாமிக்கு எடுத்துக் கூறிவிட்டு நான் மேலும் கூறியதாவது : “கணக்கற்ற ஹிந்துக்கள் பூணூல் அணியாமலேயே ஹிந்துக்களாக இருந்துவர முடிகிறது. பூணூல் போட்டுக்கொண்டாக வேண்டும் என்பதற்கு எந்த நியாயமும் இருப்பதாக நான் காணவில்லை யாகையால், அதை நான் போட்டுக் கொள்ளப் போவதில்லை. மேலும், பூணூல் ஆன்மிகப் புனர்வாழ்வுக்குச் சின்னமாக இருக்க வேண்டும். அதை அணிகிறவர், உயரிய தூய வாழ்க்கை நடத்துவதற்கு முயலுபவராகவும் இருக்க வேண்டுவது அவசியம். ஆனால், ஹிந்து சமயமும் இந்தியாவும் இன்றுள்ள நிலைமையில், அத்தகைய பொருளோடு கூடிய ஒரு சின்னத்தை அணிந்து கொள்ளத் தங்களுக்கு உரிமை உண்டென்று ஹிந்துக்கள் காட்ட முடியுமா என்பதைச் சந்தேகிக்கிறேன். ஹிந்து சமயத்திலிருந்து தீண்டாமை ஒழிந்து, உயர்வு, தாழ்வு என்ற பேதங்களெல்லாம்

போய், அதில் இப்பொழுது மலிந்து கிடக்கும் பலவிதமான தீமைகளும் வேஷங்களும் நீங்கிய பிறகே ஹிந்துக்களுக்கு அந்த உரிமை ஏற்பட முடியும். ஆகையால், பூணூல் போட்டுக்கொள்ளுவது என்ற கருத்தையே என் மனம் வெறுக்கிறது. ஆனால், குடுமியைப்பற்றி நீங்கள் கூறும் யோசனை சிந்திக்கத் தக்கதே. ஒரு சமயம் குடுமி வைத்திருந்து, வெட்கம் என்று தவறான எண்ணத்தால் அதை எடுத்துவிட்டேன். ஆகவே, திரும்பவும் அதை வளர்த்துவிட வேண்டும் என்று உணருகிறேன். என் தோழர்களுடன் இதைக் குறித்து விவாதிக்கின்றேன்.''

பூணூலைக் குறித்து என்னுடைய நிலையைச் சுவாமியார் ஒப்புக்கொள்ளவில்லை. அதை அணியவேண்டியதில்லை என்பதற்கு எனக்கு எவை நியாயங்களாகத் தோன்றினவோ அவையே அணிய வேண்டும் என்பதற்குக் காரணங்களாக அவருக்குத் தோன்றின. இவ்விஷயத்தில் ரிஷீகேசத்தில் நான் கொண்டிருந்த கருத்து எதுவோ அதுவே இன்றும் என் கருத்தாகும். சமயங்கள் பல இருந்துவரும் வரையில், ஒவ்வொரு சமயத்திற்கும் வெளிப்படையான சின்னம் ஏதாவது அவசியமாக இருக்கலாம். ஆனால், அந்தச் சின்னமே பிரமாதமாக்கப்பட்டு, இன்னொரு மதத்தைவிடத் தன் மதமே உயர்வானது என்று காட்டுவதற்கு அது பயன்படுத்தப்படுமாயின், அப்பொழுது அச் சின்னம் புறக்கணிக்கப்படுவதற்கே ஏற்ற தாகும். ஹிந்து சமயத்தை மேன்மைப்படுத்துவதற்கான சாதனமாகப் பூணூல் இன்று எனக்குத் தோன்றவில்லை. ஆகையால், அதில் எனக்குச் சிரத்தையும் இல்லை.

குடுமியைப் பற்றியவரையில் அதை நான் எடுத்துவிட்டதற்குக் கோழைத்தனமே காரணமாக இருந்ததால், நண்பர்களுடன் கலந்து ஆலோசித்த பிறகு திரும்பவும் குடுமி வளர்க்க முடிவு செய்தேன்.

இப்பொழுது லட்சுமண ஜூலாவைக் குறித்துக் கவனிப்போம். ரிஷீகேசம், லட்சுமண ஜூலா ஆகியவற்றின் இயற்கைக் காட்சிகள் என் மனத்தைக் கவர்ந்தன. நமது மூதாதைகளின், இயற்கை அழகை அனுபவிக்கும் உணர்ச்சிக்குத் தலை வணங்கினேன். ஏனெனில், இயற்கையின் அழகிய தோற்றங்களுக்கு அவர்கள் முன்யோசனையின்பேரில் சமய பூர்வமான முக்கியத்துவம் அளித்திருந்தார்கள்.

ஆனால், இயற்கைக் காட்சிகள் மிகுந்த இந்த இடங்களை மனிதர் உபயோகித்துவந்த விதங்கள் என் மனத்திற்குச் சங்கடத்தை உண்டாக்கின. ஹரித்துவாரத்தைப்போல ரிஷீகேசத்திலும் மக்கள் ரஸ்தாக்களையும் அழகிய கங்கைக் கரைகளையும் ஆபாசப்படுத்தி வந்தனர். கங்கையின் புனித நீரையும் அசுத்தப்படுத்த அவர்கள் தயங்கவில்லை. கொஞ்ச தூரம் போனால் ஜன நடமாட்ட மில்லாத இடங்களுக்கு எளிதாகப் போயிருக்கக் கூடுமெனினும், அப்படிச் செய்யாமல் பாட்டைகளிலும் நதிக்

கரைகளிலும் மக்கள் மலஜலம் கழித்ததைக் கண்டு என் மனம் அதிக வேதனை யடைந்தது.

லட்சுமண ஜூலா என்பது கங்கைமீது போடப்பட்டிருந்த தொங்கும் இரும்புப் பாலமே தவிர வேறு ஒன்றும் இல்லை என்பதைக் கண்டேன். முன்பு அந்த இடத்தில் சிறந்த கயிற்றுப் பாலம் ஒன்று இருந்ததாம். ஆனால், தரும சிந்தனையுள்ள ஒரு மார்வாரியின் மூளையில், அக் கயிற்றுப் பாலத்தை நாசப்படுத்தி விட்டு அதற்குப் பதிலாக ஓர் இரும்புப் பாலத்தைப் போடும் யோசனை எப்படியோ பிறந்துவிட்டது. ஏராளமான செலவில் அப்பாலத்தைப் போட்டு, அதன் சாவியை அவர் அரசாங்கத்திடம் ஒப்படைத்து விட்டார். கயிற்றுப் பாலத்தை நான் பார்த்த தில்லை. ஆகையால், அதைக் குறித்து நான் எதுவும் சொல்லுவதற்கில்லை. ஆனால், இரும்புப் பாலமோ, அங்கிருக்கும் சூழ்நிலைக்குக் கொஞ்சமும் பொருத்தமில்லாதது. அதோடு அங்கிருக்கும் அழகையும் அது கெடுத்துவிடுகிறது. யாத்திரிகர்கள் செல்வதற்கு என்றுள்ள அப் பாலத்தின் சாவியை அரசாங்கத்தினிடம் கொடுத்துவிட்டதை, எனக்கு அதிக ராஜவிசுவாசம் இருந்த அந்த நாளில்கூட, என்னால் பொறுக்க முடியவில்லை.

பாலத்தைக் கடந்தால் சுவர்க்காசிரமம் போகலாம். சுவர்க்காசிரமம் என்பது மிகவும் மோசமான இடம். இரும்புத் தகட்டுக் கூரை போட்ட சில ஆபாசமான கொட்டகைகளைத் தவிர அங்கே வேறு எதுவுமே இல்லை. அவை சாதகர்களுக்கு என்று கட்டப்பட்டனவாம். அச்சமயம் அங்கே சாதகர்கள் யாருமே இல்லை. அங்கிருந்த முக்கியமான கட்டடத்தில் இருந்தவர்களோ, பார்ப்போருக்கு நல்ல அபிப்பிராயம் உண்டாகும்படி செய்யக் கூடியவர்களாகவும் இல்லை.

ஆனால், ஹரித்துவார அனுபவங்கள் எனக்கு மதிப்பதற்கரிய பயன்களை அளித்தன. நான் எங்கே வசிப்பது, நான் செய்ய வேண்டியது என்ன என்பவைகளில் முடிவுக்கு வருவதற்கு அந்த அனுபவங்கள் அதிக அளவில் எனக்கு உதவியாக இருந்தன.

## 9

# ஆசிரமத்தின் ஆரம்பம்

கும்பமேளாவிற்காக ஹரித்துவாரத்திற்கு யாத்திரை செய்தது, நான் அந்த இடத்திற்குச் சென்றது இரண்டாவது தடவை யாகும்.

சத்தியாக்கிரக ஆசிரமம் 1915 மே 15-ஆம் தேதி ஆரம்பமாயிற்று. ஹரித்துவாரத்திலேயே நான் தங்கிவிட வேண்டும்

என்று சிரத்தானந்தஜி விரும்பினர். வைத்தியநாத தாமில் தங்கி விடலாம் என்று சில கல்கத்தா நண்பர்கள் யோசனை கூறினர். மற்றவர்களோ, ராஜ்கோட்டே சரியான இடம் என்று என்னிடம் வற்புறுத்திக் கூறினர். ஆனல், நான் அகமதாபாத் வழியாகச் சென்றபோது அங்கேயே குடியேறிவிடுமாறு பல நண்பர்கள் வற்புறுத்தினர். ஆசிரமத்தின் செலவுக்கு வேண்டியதற்கும், நாங்கள் வசிப்பதற்கு வீட்டுக்கும் ஏற்பாடு செய்வதாகவும் அவர்கள் கூறினர்.

மற்ற இடங்களை யெல்லாம் விட அகமதாபாத் என் மனத்திற்குப் பிடித்திருந்தது. நான் குஜராத்தியானதால் குஜராத்தி மொழியின் மூலம் நாட்டிற்கு அதிக அளவு சேவை செய்ய முடியுமென்று எண்ணினேன். மேலும் அகமதாபாத், கைத்தறி நெசவுக்கு புராதனப் பெயர் பெற்ற இடமாகையால், கையினல் நூற்கும் குடிசைத் தொழிலுக்குப் புத்துயிர் அளிப்பதற்கு அது வசதியான இடமாக இருக்கும் என்றும் தோன்றியது. குஜராத்திற்கு அந் நகரம் தலைநகர மாகையால், மற்ற இடங்களை யெல்லாம் விட அங்குள்ள பணக்காரர்கள் அதிகப் பணவுதவி செய்வார்கள் என்ற நம்பிக்கையும் இருந்தது.

அகமதாபாத் நண்பர்களுடன் பல விஷயங்களையும் குறித்து விவாதித்தேன். இயற்கையாகவே தீண்டாமை விஷயத்தைப் பற்றியும் அப்பொழுது விவாதித்தேன். ஒரு தீண்டாதவர் மற்ற வகைகளில் தகுதியுடையவராக இருப்பாராயின் முதல் சந்தர்ப்பத்திலேயே அவரையும் ஆசிரமத்தில் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்பதையும் நான் அவர்களுக்குத் தெளிவாக எடுத்துக் கூறினேன்.

"உங்களுடைய நிபந்தனைகளை யெல்லாம் திருப்தி செய்யக் கூடிய தீண்டாதார் ஒருவர் உங்களுக்கு எங்கிருந்து கிடைக்கப் போகிறீர்?" என்று ஒரு வைஷ்ணவ நண்பர் கேட்டார். அப்படி ஒருவர் கிடைக்க மாட்டார் என்பது அவருடைய நம்பிக்கை.

ஆசிரமத்தை அகமதாபாத்தில் ஆரம்பிப்பது என்று கடைசியாக முடிவு செய்தேன்.

ஆசிரமத்தை அமைப்பதற்கு இடத்தைப் பொறுத்தவரையில் எனக்கு முக்கியமாக உதவி செய்தவர் அகமதாபாத் பாரிஸ்டரான ஸ்ரீ ஜீவன்லால் தேசாய். தமது கோச்ராப் பங்களாவை வாடகைக்கு விட அவர் முன்வந்தார். நாங்களும் வாடகைக்கு அமர்த்திக் கொள்ளத் தீர்மானித்தோம்.

ஆசிரமத்திற்கு என்ன பெயர் வைப்பது என்பதை முதலில் முடிவுசெய்யவேண்டி யிருந்தது. 'சேவாசிரமம்', 'தபோவனம்' முதலிய பெயர்களை வைக்கலாம் என்று கூறினர். 'சேவாசிரமம்' என்ற பெயர் எனக்குப் பிடித்திருந்த தெனினும்



1915 மே 25-ஆம் தேதி அகமதாபாத்தில் மகாத்மாவின் சத்தியாக்கிரக ஆசிரமம்
ஆரம்பமான கோச்ராப் பங்களா



1917-இல் சாபர்மதி நதிக்கரையில் ஆரம்பமான சாபர்மதி ஆசிரமத்தில்
1930 வரையில் மகாத்மாவும் கஸ்தூரிபாவும் குடியிருந்த இடம்

சேவையின் முறை இன்னதென்பதைப் பற்றிய விளக்கம் அதில் இல்லை. 'தபோவனம்' என்பது மிகைப்படுத்திக் கூறும் பெயர் என்று தோன்றியது. ஏனெனில், தவம் எங்களுக்குப் பிரியமானதுதான் என்றாலும் நாங்கள் தபஸ்விகள் என்று எண்ணிக்கொண்டுவிட முடியாது. சத்தியத்தில் பற்றுடன் இருப்பதே எங்கள் கோட்பாடு. சத்தியத்தை நாடி, சத்தியத்தையே கட்டாயமாக அனுசரிப்பது எங்கள் வேலை. தென்னாப்பிரிக்காவில் நான் கையாண்ட முறையை இந்தியாவுக்கும் அறிமுகப்படுத்த நான் விரும்பினேன். அம்முறையை அனுசரிப்பது இந்தியாவில் எவ்வளவு தூரம் சாத்தியம் என்பதைச் சோதிக்கவும் ஆசைப்பட்டேன். ஆகையால், எங்கள் லட்சியத்தையும், எங்களுடைய சேவையின் முறையையும் காட்டுவதான 'சத்தியாக்கிரக ஆசிரமம்' என்ற பெயரையே நானும் என் சகாக்களும் தேர்ந்தெடுத்தோம்.

ஆசிரமத்தை நடத்துவதற்கு விதிகளையும், ஒழுக்க முறைகளையும், வகுக்க வேண்டியது அவசிய மாயிற்று. இதற்கு ஒரு நகலைத் தயாரித்தோம். அதன் மீது நண்பர்களின் அபிப்பிராயத்தையும் கேட்டறிந்தோம். எங்களுக்குக் கிடைத்த அபிப்பிராயங்களில் ஸர் குருதாஸ் பானர்ஜி அனுப்பியிருந்தது இன்னும் என் நினைவில் இருக்கிறது. நாங்கள் தயாரித்த விதிகள் அவருக்குப் பிடித்திருந்தன. ஆனால், இளம் சந்ததியாரிடம் வருந்தத் தக்க வகையில் அடக்கம் என்பது இல்லாமல் இருப்பதால் ஒழுக்க முறைகளில் அதையும் ஒன்றாகச் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று அவர் யோசனை கூறியிருந்தார். இக் குறைபாட்டை நானும் கவனித்து வந்திருக்கிறேன். ஆயினும், அடக்கம் என்பது விரதமாகக் கொள்ள வேண்டிய விஷயமாகிவிடும் மாத்திரத்திலேயே அது அடக்கமாக இல்லாது போய்விடும் என்று அஞ்சினேன். 'நான்' என்ற அகந்தையைப் போக்கிக் கொண்டுவிடுவதுதான், அடக்கம் என்பதற்குரிய உண்மையான பொருள். 'நான்' என்பது அற்றுப் போவதே மோட்சம். இது அதனளவில் ஓர் ஒழுக்க முறையாக இருக்க முடியாதெனினும் இதை அடைவதற்கு மற்ற ஒழுக்க முறைகளை அனுசரிப்பது அவசியமாகும். மோட்சத்தை அடைய விரும்புகிறவரின் அல்லது ஒரு தொண்டரின் நடவடிக்கைகளில் அடக்கமோ, அகந்தையின்மையோ இல்லையென்றால், மோட்சத்திலோ அல்லது தொண்டிலோ அவருக்கு ஆர்வம் இல்லை என்றே ஆகும். அடக்க மில்லாத சேவை, சுயநலமும் அகம்பாவமுமே யன்றி வேறல்ல.

அச்சமயத்தில் எங்கள் கோஷ்டியில் பதின்மூன்று தமிழர்கள் இருந்தார்கள். ஐந்து தமிழ் இளைஞர்கள் தென்னாப்பிரிக்காவிலிருந்து என்னுடன் வந்தவர்கள். மற்றவர்கள் நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் வந்து சேர்ந்தனர். நாங்கள் மொத்தம் ஆண்களும் பெண்களுமாக இருபத்தைந்து பேர்.

இவ்வாறே ஆசிரமம் ஆரம்பமாயிற்று. எல்லோருக்கும் பொதுவான ஒரே சமையலுடன் ஒரே குடும்பமாக வாழ முயன்று வந்தோம்.

# 10

# ஆரம்பக் கஷ்டங்கள்

ஆசிரமம் ஆரம்பமாகிச் சில மாதங்களே ஆயிற்று. அதற்குள் நான் எதிர்பார்த்தே இராத வகையில் நாங்கள் சோதனைக்கு ஆளானோம். அமிர்தலால் தக்கரிடமிருந்து கீழ்வருமாறு ஒரு கடிதம் வந்தது: "அடக்கமும் நேர்மையும் உள்ள ஒரு தீண்டாதாரின் குடும்பம் உங்கள் ஆசிரமத்தில் சேர்ந்துகொள்ள விரும்புகிறது. அவர்களை நீங்கள் ஏற்றுக்கொள்ளுவீர்களா?" நான் கலக்கமடைந்தேன். தீண்டாதாரின் குடும்பம் ஒன்று, தக்கர் பாபா போன்ற ஒரு முக்கியமானவரிடமிருந்து அறிமுகக் கடிதத்துடன் எங்கள் ஆசிரமத்தில் சேர மனுச் செய்துகொள்ளும் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை. அக் கடிதத்தை என் சகாக்களுக்குக் காட்டினேன். அவர்கள் அதை வரவேற்றார்கள்.

அமிர்தலால் தக்கருக்குப் பதில் எழுதினேன். அக்குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் எல்லோருமே ஆசிரமத்தின் விதிகளுக்கு* உட்பட்டு நடக்கச் சம்மதிப்பதாக இருந்தால் அக்குடும்பத்தை ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிறோம் என்று அவருக்குத் தெரிவித்தேன்.

தூதாபாய், அவருடைய மனைவி தானி பென், அப்பொழுது தவழும் குழந்தையாக இருந்த அவர்கள் பெண் லட்சுமி ஆகியவர்களைக் கொண்டது, அக் குடும்பம். தூதாபாய் பம்பாயில் உபாத்தியாயராக இருந்தார். விதிகளுக்கு உட்பட்டு நடந்து கொள்ள அவர்கள் ஒப்புக்கொண்டார்கள். நாங்களும் அவர்களை ஏற்றுக்கொண்டோம்.

---

* ஆசிரமத்திற்கு விதிகள் அமைக்கப்பட்டிருந்தன: ஆசிரமத்தின் நோக்கம், தாய் நாட்டிற்குச் சேவை செய்வது. சத்தியம், அகிம்சை, பிரம்மச்சரியம், திருடாமை, சொத்து வைத்துக் கொள்ளாமை, நாவின் சுவையை அடக்குதல் ஆகியவைகளில் ஆசிரமவாசி பிரதிக்ஞைகளும் எடுத்துக்கொள்ள வேண்டும். ஆசிரமத்தில் சேர வருகிறவர்கள் இப் பிரதிக்ஞைகளை எடுத்துக்கொள்ளாவிடினும், இவைகளை அனுசரித்து நடக்க வேண்டும் என்று எதிர்பார்க்கப்பட்டது. பதினன்கு வயதிற்குட்பட்ட சிறுவர் சிறுமியர்களை ஆசிரமத்தில் மாணவராகச் சேர்த்துக்கொண்டனர். ஆனால், அவர்கள்மீதுள்ள ஆதிக்கத்தைப் பெற்றோர்கள், ஆசிரமத்தினிடம் ஒப்படைத்துவிட வேண்டும். எல்லோரும் ஒரே வகையான எளிய உடைகளையே உடுத்த வேண்டும். தினம் மூன்று வேளை கொடுக்கும் உணவு மிகவும் எளிமையானது. மிளகாயை உபயோகிப்பதே இல்லை. உப்பு, மிளகு, மஞ்சளைத் தவிர வேறு மசாலைச் சாமான்களையும் உபயோகிப்பதில்லை. இவ்விதம் சத்தியாக்கிரக ஆசிரமத்தில் பல விதி முறைகள் அனுசரிக்கப்பட்டு வந்தன.

ஆனல், அவர்களைச் சேர்த்துக்கொண்டது, ஆசிரமத்திற்கு உதவி செய்துவந்த நண்பர்களிடையே பெரும் பரபரப்பை உண்டாக்கிவிட்டது. கிணற்றை உபயோகிப்பது சம்பந்தமாக முதலில் கஷ்டம் ஏற்பட்டது. அந்தக் கிணற்றை அந்தப் பங்களாவின் சொந்தக்காரரும் உபயோகித்து வந்தார். அதிலிருந்து தண்ணீர் இறைப்பதற்காக நியமிக்கப்பட் டிருந்தவர், எங்கள் வாளியிலிருந்து தண்ணீர்த் துளிகள் விழுவதால் தமக்குத் தீட்டுப்பட்டுப் போகும் என்று கூறி ஆட்சேபித்தார். ஆகவே, எங்களைத் திட்டினர்; தூதாபாயைத் தொந்தரவும் செய்தார். அவர் திட்டுவதை யெல்லாம் சகித்துக்கொண்டு என்ன வந்தாலும் சரி என்று கிணற்றிலிருந்து தண்ணீர் எடுத்துக்கொண் டிருக்கும்படி எல்லோரிடமும் கூறினேன். தாம் திட்டினலும் நாங்கள் திருப்பித் திட்டுவதில்லை என்பதைக் கண்டதும் அவருக்கே வெட்கமாகப் போய்விட்டது. எங்களுக்குத் தொந்தரவு கொடுப்பதை விட்டுவிட்டார்.

என்ருலும், எங்களுக்குக் கிடைத்துக்கொண் டிருந்த உதவி யெல்லாம் நின்றுவிட்டது. ஆசிரம விதிகளை யெல்லாம் அனுசரிக்கக்கூடிய ஒரு தீண்டாதார் கிடைப்பாரா என்று கேள்வி கேட்ட நண்பர், அப்படிப்பட்ட ஒரு தீண்டாதார் ஆசிரமத்தில் சேர முன் வருவார் என்று எதிர்பார்க்கவே இல்லை.

பண உதவியை யெல்லாம் நிறுத்திவிட்டதோடு எங்களைச் சமூக பகிஷ்காரம் செய்வதற்கும் யோசிக்கிருர்கள் என்றும் வதந்திகள் கிளம்பின. இவைகளினல் நாங்கள் கலக்கமடைந்தோம். நாம் பகிஷ்காரம் செய்யப்பட்டுச் சாதாரண வசதிகளெல்லாம் மறுக்கப்பட்டாலும் அகமதாபாத்தைவிட்டு நாம் போய்விடக் கூடாது என்று என் சகாக்களுக்குக் கூறினேன். வெளியேறி விடுவதைவிடத் தீண்டாதாரின் இடத்திலேயே போய் வசித்து, உடலை வருத்தி வேலை செய்வதால் கிடைப்பதைக்கொண்டு வாழ்வதே மேல் என்றும் கூறினேன்.

“நம்மிடம் பணம் இல்லை. அடுத்த மாதச் செலவுக்கு நம்மிடம் ஒன்றும் கிடையாது” என்று ஒரு நாள் மகன்லால் காந்தி எனக்கு அறிவித்துவிட்டார். நிலைமை அத்தகைய நெருக்கடியான கட்டத்திற்கு வந்துவிட்டது. “அப்படியானல், தீண்டாதார் வசிக்கும் இடத்திற்கே நாம் போய்விடுவோம்” என்று நான் அமைதியோடு பதில் சொன்னேன்.

இதுபோன்ற சோதனை எனக்கு ஏற்பட்டது இது முதல் தடவை அல்ல. இத்தகைய நிலைமைகளி லெல்லாம் கடைசி நேரத்தில் கடவுளே எனக்கு உதவியை அனுப்பியிருக்கிருர். எங்களுக்கு ஏற்பட்டுவிட்ட பணக்கஷ்டத்தைக் குறித்து மகன்லால் எனக்கு எச்சரிக்கை செய்த பிறகு ஒரு நாள் காலை, குழந்தைகளில் ஒன்று ஓடி வந்து, ஒரு சேத் வெளியில் மோட்டாரில் இருக்கிருர் என்றும், என்னைப் பார்க்க விரும்புகிருர்

என்றும் கூறியது. அவரைப் பார்க்க வெளியே போனேன். ''ஆசிரமத்திற்குக் கொஞ்சம் உதவி செய்ய விரும்புகிறேன். அதை நீங்கள் ஏற்றுக்கொள்ளுவீர்களா?'' என்று அவர் என்னைக் கேட்டார்.

''நிச்சயமாக ஏற்றுக்கொள்ளுவோம். எங்கள் கையில் இருந்த தெல்லாம் செலவழிந்து போய்விட்ட நிலையில் நாங்கள் இருக் கிறோம் என்பதையும் உங்களிடம் கூறுகிறேன்'' என்றேன்.

''நாளை இதே நேரத்தில் இங்கு வருகிறேன். நீங்கள் இருப் பீர்களல்லவா?'' என்றார்.

''ஆம்'' என்று நான் சொன்னதும் அவர் போய்விட்டார்.

அடுத்த நாள், சரியாக அந்த நேரத்தில் நாங்கள் இருந்த இடத்திற்கு அருகில் மோட்டார் வந்து நின்றது. வந்ததற்கு அறி குறியாகச் சப்தம் கொடுக்கப்பட்டது. குழந்தைகளும் ஓடி வந்து சமாசாரத்தைச் சொன்னார்கள். சேத் உள்ளே வரவில்லை; நானே அவரைப் பார்க்கப் போனேன். அவர் என் கையில் ரூ. 13,000-க்கு நோட்டுக்களைக் கொடுத்துவிட்டுப் போய்விட்டார்.

இந்த உதவியை நான் எதிர்பார்க்கவே இல்லை. எப்படிப் பட்ட புதிய வகையில் உதவி! அந்தக் கனவான் இதற்கு முன் னால் ஆசிரமத்திற்கு வந்ததே இல்லை. ஒரே ஒரு முறைதான் அவரை நான் சந்தித்திருக்கிறேன் என்று எனக்கு ஞாபகம். உள்ளே வரவும் இல்லை; விசாரிக்கவும் இல்லை! உதவியை மாத் திரம் செய்துவிட்டுப் போய்விட்டார். எனக்கு இது ஒப்பற்ற தோர் அனுபவம். தீண்டாதார் வசிக்கும் இடத்திற்குப் போய் விடுவதை இந்த உதவி தடுத்தது. இனி ஓர் ஆண்டுக்குக் கவலை இல்லை என்று இப்பொழுது உணர்ந்தோம்.

வெளியில் புயல் இருந்துவந்ததைப் போன்றே ஆசிர மத்திற்குள்ளும் புயல் இருந்துவந்தது. தீண்டாத வகுப்பைச் சேர்ந்த நண்பர்கள் தென்னாப்பிரிக்காவில் என் வீட்டிற்கு வந்து இருப்பதுடன் என்னுடன் சாப்பிடுவதும் வழக்கமாக இருந்தது. இருந்தும், இங்கே ஆசிரமத்தில் தீண்டாத நண்பர்களைச் சேர்த் துக்கொண்டது என் மனைவிக்கும் மற்றப் பெண்களுக்கும் அவ் வளவாகப் பிடிக்கவில்லை. தானி பென்னிடம் அவர்கள் கொண் டிருந்த வெறுப்பை, அல்லது அசிரத்தையை என் காதுகளும் கண் களும் எளிதில் கண்டுகொண்டன. பணக் கஷ்டங்கூட எனக்கு அவ்வளவு கவலையை உண்டு பண்ணவில்லை. ஆனால், உள்ளுக்குள் ளேயே இருந்த இப்புயலை என்னால் சகிக்க முடியவில்லை. தானி பென் ஒரு சாதாரணப் பெண். தூதாபாய் கொஞ்சம் படிப்பு உள்ளவர்; அதோடு நல்ல அறிவும் உள்ளவர். அவருடைய பொறுமை எனக்குப் பிடித்திருந்தது. சில சமயங்களில் அவர் கோபமடைந்துவிடுவதும் உண்டு. என்றாலும், மொத்தத்தில் அவருடைய சகிப்புத் தன்மை என் மனத்தைக் கவர்ந்தது.

சில்லறை அவமதிப்புக்களை யெல்லாம் பொருட்படுத்த வேண்டாம் என்று அவரைக் கேட்டுக்கொண்டேன். இதற்கு அவர் உடன்பட்டது மாத்திரம் அல்ல, அவர் மனைவியையும் அதே போலப் பொறுமையுடன் இருக்கும்படி செய்தார்.

இந்தக் குடும்பத்தைச் சேர்த்துக்கொண்டது, ஆசிரமத்திற்குச் சிறந்ததொரு படிப்பினை யாயிற்று. ஆசிரமம் தீண்டாமையைப் பாராட்டாது என்பதை ஆரம்பத்திலேயே உலகிற்கு எடுத்துக் காட்டினோம். ஆசிரமத்திற்கு உதவ விரும்பியவர்களுக்கு இவ்விதம் எச்சரிக்கை செய்துவிட்டோம். இவ்வழியில் ஆசிரமத்தின் வேலைகள் அதிக அளவுக்குச் சுலபமாகி விட்டன. தினந்தோறும் அதிகரித்துக்கொண்டே போன ஆசிரமத்தின் செலவுகளுக் கெல்லாம், உண்மையில் வைதிகர்களான ஹிந்துக்களே பணம் கொடுத்து வந்தார்கள். இந்த உண்மை, தீண்டாமையின் அடிப்படையே ஆட்டங்கண்டுவிட்டது என்பதற்குத் தெளிவான அறிகுறியாகவும் இருக்கக்கூடும். உண்மையில் இதற்கு மற்றும் பல சான்றுகளும் உண்டு. என்றாலும், தீண்டாதாருடன் சேர்ந்து சாப்பிடும் அளவுக்குக்கூடப் போய்விடும் ஓர் ஆசிரமத்திற்கு உதவி செய்ய நல்ல ஹிந்துக்கள் தயங்குவதில்லை என்பது மிகச் சிறந்த சான்றாகும்.

இந்த விஷயத்தைப் பற்றிய அநேக சமாசாரங்களைக் கூறாமல் விட்டுவிட்டு மேலே போக வேண்டி யிருப்பதற்காக வருந்துகிறேன். முக்கியமான இவ் விஷயத்தின்மீது எழுந்த கஷ்டமான பிரச்னைகளை யெல்லாம் எப்படிச் சமாளித்தோம்? எதிர் பாராத சில கஷ்டங்களையெல்லாம் எவ்விதம் சமாளித்துச் சென்றோம் என்பன போன்ற பல விஷயங்களை, சத்திய சோதனையில் விவரிப்பதற்குப் பொருத்தமானவைகளை, கூறாமல் விட்டுவிட்டே நான் மேலே போகவேண்டி யிருக்கிறது.' இனி வரும் அத்தியாயங்களிலும் இதே போன்ற குறைகள் இருக்கும். முக்கியமான விவரங்களை நான் விட்டுவிடவே வேண்டி யிருக்கும். ஏனெனில், இவ் வரலாற்றில் சம்பந்தமுடையவர்களில் அநேகர் இன்னும் உயிருடன் இருக்கிறார்கள். அவர்கள் சம்பந்தப்பட்ட சம்பவங்களைக் கூறும்போது, அவர்களுடைய அனுமதியைப் பெறாமல் அவர்கள் பெயரை உபயோகிப்பது சரியல்ல. அவர்களுடைய சம்மதத்தைப் பெறுவதென்பதோ, சம்பந்தப்பட்ட அத்தியாயங்களை அப்போதைக்கப்போது அவர்களுக்குக் காட்டிச் சரி பார்த்து வெளியிடுவதோ, அனுபவ சாத்தியமானதும் அன்று. மேலும், அத்தகைய முறையை அனுசரிப்பது இந்தச் சுய சரிதையின் எல்லைக்குப் புறம்பான காரியமும் ஆகும். ஆகையால், மீதமிருக்கும் வரலாறு, சத்தியத்தை நாடுவோருக்கு மிக முக்கியமானது என்பதே என் கருத்தாயினும், தவிர்க்க முடியாத விலக்குகளுடனேயே அதைக் கூறவேண்டி யிருக்கும் என்று அஞ்சுகிறேன். என்றாலும், கடவுள் அருள் இருந்தால், இவ் வரலாற்றை ஒத்துழையாமை நாட்கள் வரைக்கும் கொண்டுவந்துவிட வேண்டும் என்பதே என் ஆசையும், நம்பிக்கையுமாகும்.

# 11

# ஒப்பந்தத் தொழிலாளி முறை ஒழிப்பு

வெளிப் புயல்களையும் உட்புயல்களையும் ஆரம்பத்திலேயே சமாளிக்க வேண்டியதாயிருந்த ஆசிரமத்தின் கதையை இப் போதைக்கு நிறுத்திவிட்டு அப்பொழுது என் கவனத்தைக் கவர்ந்திருந்த மற்றொரு விஷயத்தைக் கொஞ்சம் கவனிப்போம்.

ஐந்து ஆண்டுகளுக்கும், அதற்குக் குறைவான காலத்திற்கும் வேலை செய்வது என்று ஒப்பந்தம் செய்துகொண்டு, அதன் பேரில் வெளிநாடுகளுக்குச் சென்றவர்களே ஒப்பந்தத் தொழி லாளர்கள். நேட்டாலுக்கு ஒப்பந்தப்படி சென்றிருந்தவர்களுக்கு விதித்திருந்த மூன்று பவுன் வரி, *1914*-இல் ஏற்பட்ட ஸ்மட்ஸ்-காந்தி ஒப்பந்தத்தின்படி ரத்தாயிற்று. என்றாலும், இந்தியாவி லிருந்து வெளிநாடுகளுக்குச் செல்லும் விஷயமே கவனிக்கவேண் டியதாக இருந்தது.

ஒப்பந்தத் தொழிலாளர் முறையை ரத்துச் செய்துவிட வேண்டும் என்று *1916* மார்ச்சில் பண்டித மதனமோகன மாளவியா* இம்பீரியல் சட்டசபையில் ஒரு தீர்மானம் கொண்டு வந்தார். தீர்மானத்தை லார்டு ஹார்டிஞ்சு† ஏற்றுக்கொண்டார். அதோடு அம்முறையை, "உரிய காலத்தில் ரத்துச் செய்துவிடுவ

---

* பண்டித மதன மோகன மாளவியா : சிறந்த ஹிந்துவாயிருந்தும் பிற மதத் தினரிடம் அன்பு காட்டுபவர். ஆசார சீலராயினும் அன்பு உள்ளம் படைத்தவர். காசி ஹிந்து பல்கலைக் கழகத்தை ஸ்தாபித்து, அதைப் பேணி வளர்த்தவர். பொது நிதிக்கு இவர் பணம் கேட்டால் இல்லை என யாரும் கூறுவதில்லை என்பார்கள். பழைய சட்டசபையில் நீண்ட காலம் அங்கம் வகித்துச் சிறந்த நாட்டுப் பணி புரிந்திருக் கிறார். பிஜியில் ஒப்பந்தக் கூலி முறையை ஒழிக்கப் பாடுபட்ட பிரபலஸ்தர்களில் இவர் ஒருவர். 1886-ஆம் ஆண்டிலிருந்து காங்கிரஸின் சேவையில் ஈடுபட்டு வந்திருக்கிறார் மாளவியாஜி. 1909-ஆம் ஆண்டு லாகூரில் நடந்த 24-ஆவது காங்கிரசிற்கும், 1918-இல் டில்லியில் நடந்த 33-ஆவது காங்கிரசிற்கும் தலைமை தாங்கினார். 1920-இல் ஒத்துழை யாமையை எதிர்த்தாராயினும் 1930-இல் சட்டத்தை மீறிச் சிறை சென்றார். லண்டன் வட்டமேஜை மகாநாட்டிற்கு அரசாங்க அழைப்பின் மீது சென்றிருந்தார். அயல் நாட்டிலும் தமது ஆசாரத்தை இவர் கைவிடவில்லை.

† லார்டு ஹார்டிஞ்சு : 1911-இலிருந்து 1916-வரை இந்தியாவில் வைசிராயாக இருந்தவர். தென்னாப்பிரிக்காவில் காந்திஜி செய்த சேவைக்காகக் 'கேஸரி ஹிந்த்' தங்கப் பதக்கம் அளித்தவர். லார்டு கர்ஸானின் திட்டமும் லார்டு ஆம்தில் நிறை வேற்றியதுமான வங்காளப் பிரிவினையை இவர் காலத்தில் மன்னர் டில்லியில் நடத்திய தர்பாரில் ரத்துச் செய்தார். இதே தர்பாரில் மத்திய அரசாங்கம், கல்கத்தாவிலிருந்து டில்லிக்கு மாற்றப்பட்டதாக அறிவிக்கப்பட்டது. டில்லிக்குள் யானைமீது இவர் ஊர்வல மாக நுழைகையில் இவர் மீது யாரோ ஒருவர் குண்டு வீசிவிட்டார். தெய்வாதீனமாக இவர் உயிர் தப்பினார். இவர் உயிர் தப்பியதைப் பாராட்டிக் காங்கிரசில் தீர்மானம் செய்யப்பட்டது, 1915-ஆம் ஆண்டு பம்பாயில் நடந்த காங்கிரசில், இவரது ஆட்சி நீடிக்க வேண்டும் என்னும் தீர்மானம் நிறைவேறியது.

தாகப் பிரிட்டிஷ் அரசாங்கத்திடமிருந்து வாக்குறுதி கிடைத்திருக்கிறது'' என்றும் அறிவித்தார். ஆயினும், இவ்விதமான திட்டமில்லாத ஒரு வாக்குறுதியைக் கொண்டு இந்தியா திருப்தி அடைந்துவிட முடியாது என்றும், அம்முறையை உடனே ரத்துச் செய்துவிட வேண்டுமெனக் கிளர்ச்சி செய்ய வேண்டும் என்றும் கருதினேன். அசிரத்தையினாலேயே அம் முறையை இந்தியா சகித்து வந்திருக்கிறது; அதற்குப் பரிகாரம் வேண்டும் என்று மக்கள் வெற்றிகரமாகக் கிளர்ச்சி செய்ய வேண்டிய சமயம் வந்து விட்டது என்றும் கருதினேன். தலைவர்களில் சிலரைச் சந்தித்துப் பேசினேன்; பத்திரிகைகளுக்கும் எழுதினேன். அம் முறையை உடனே ரத்துச் செய்யவேண்டும் என்பதற்கு ஆதாரமாகவே பொதுஜன அபிப்பிராயம் இருக்கிறது என்பதையும் கண்டேன். சத்தியாக்கிரகம் செய்வதற்கு இது ஏற்ற விஷயமா? ஏற்ற விஷயமே என்பதில் எனக்கு எந்தவிதமான சந்தேகமும் இல்லை. ஆனால், அதை எம்முறையில் நடத்துவது என்பதுதான் எனக்குத் தெரியவில்லை.

இதற்கிடையில் வைசிராய், ''முடிவாக ரத்துச்செய்வது'' என்பதன் பொருள் இன்னதென்பதைக் குறித்து எந்த ஒளிவு மறைவும் செய்யவில்லை. ''இதற்கு மாறானதொரு ஏற்பாட்டைக் கொண்டுவருவதற்கு நியாயமாக வேண்டிய காலத்திற்குப் பிறகு அம்முறை ரத்துச் செய்யப்படும்'' என்று அவர் கூறினார்.

ஆகவே, அம் முறையை உடனே ரத்துச் செய்வதற்கு ஒரு மசோதாவைக் கொண்டுவரப் பண்டித மாளவியாஜி 1917 பிப்ரவரியில் அனுமதி கோரினார். அனுமதி கொடுக்க லார்டு செம்ஸ்போர்டு* மறுத்துவிட்டார். இந்தியா முழுவதிலும் இதைக் குறித்துக் கிளர்ச்சி செய்வதற்காக நான் சுற்றுப்பிரயாணம் செய்ய வேண்டியதாயிற்று.

கிளர்ச்சியை ஆரம்பிப்பதற்கு முன்னால் வைசிராயைக் கண்டு பேசுவதே முறை என்று கருதினேன். கண்டு பேச விரும்புவதாக எழுதினேன். வைசிராயும் உடனே அனுமதி கொடுத்தார். ஸ்ரீ மேபி (இப்பொழுது ஸர் ஜான் மேபி) அப்பொழுது வைசிராயின் அந்தரங்கக் காரியதரிசி. அவருடன் நெருங்கிய தொடர்பு கொண்டேன். லார்டு செம்ஸ்போர்டுடன் நான் பேசியது திருப்திகரமாகவே இருந்தது. திட்டமாகச் சொல்லாமல், தாம் உதவியாக இருப்பதாக அவர் வாக்களித்தார்.

---

* லார்டு செம்ஸ்போர்டு: முதல் மகாயுத்த காலத்தில் இந்தியாவில் வைசிராயாக இருந்தவர். இவர் காலத்தில்தான் அடக்கு முறை அளவுக்கு மீறித் தாண்டவமாடியது. இவர் ஆட்சியில்தான் பாஞ்சாலத்தில் ஜெனரல் டயர் என்பவன் ஜாலியன்வாலா பாக்கில் மக்களைப் படுகொலை செய்தான். இதை அனுமதித்ததற்காக இவரைப் பதவியிலிருந்து நீக்க வேண்டுமென 1919-ஆம் ஆண்டு அமிருதசரஸில் கூடிய காங்கிரஸ் கோரியது. இவரும் இந்தியா மந்திரி மாண்டேகு என்பவரும் சேர்ந்து இந்தியாவுக்கு வழங்கிய சீர்திருத்தந்தான் இரட்டை ஆட்சி முறை என அழைக்கப்பட்டது.

என் சுற்றுப்பிரயாணத்தைப் பம்பாயிலிருந்து ஆரம்பித்தேன். ஏகாதிபத்தியப் பிரஜாவுரிமைச் சங்கத்தின் ஆதரவில் அங்கே ஒரு பொதுக்கூட்டத்தை நடத்த ஸ்ரீ ஜஹாங்கீர் பெடிட் ஒப்புக்கொண்டார். அக் கூட்டத்தில் கொண்டுவர வேண்டிய தீர்மானத்தைத் தயாரிப்பதற்காக அச் சங்கத்தின் நிர்வாகக் கமிட்டி முதலில் கூடியது. டாக்டர் ஸ்டான்லி ரீட்*, ஸ்ரீ (இப்பொழுது ஸர்) லல்லுபாய் சாமளதாஸ், ஸ்ரீ நடராஜன்,† பெடிட் ஆகியவர்கள் கமிட்டிக் கூட்டத்திற்கு வந்திருந்தார்கள். ஒப்பந்தத் தொழிலாளர் முறையை எந்தக் காலத்திற்குள் நீக்கிவிட வேண்டும் என்று சர்க்காரைக் கேட்பது என்பதை நிர்ணயிப்பதைப்பற்றியே விவாதம் நடந்தது. மூன்று யோசனைகள் கூறப்பட்டன. 'முடிந்த வரையில் சீக்கிரமாக ரத்துச் செய்வது', 'ஜூலை 31-ஆம் தேதிக்குள் ரத்துச் செய்வது', 'உடனே ரத்துச் செய்வது' என்பவையே அந்த மூன்று யோசனைகள். குறிப்பிட்ட ஒரு காலத்திற்குள் அரசாங்கம் நமது கோரிக்கைக்கு இணங்கத் தவறிவிட்டால் அதன் பிறகு என்ன செய்வது என்பதை நாங்கள் அப்போது முடிவு செய்ய இயலும் என்ற நிலையில், திட்டமான தேதி ஒன்றைக் குறிப்பிட்டுவிட வேண்டும்' என்று கூறினேன். 'உடனே ரத்துச் செய்துவிடவேண்டும் என்பதை ஸ்ரீ லல்லுபாய் கூறினர். ஜூலை 31-ஆம் தேதியைவிட மிகக் குறைந்த காலத்தையே 'உடனே' என்ற சொல் குறிக்கிறது என்ருர், அவர். 'உடனே' என்ற சொல்லை மக்கள் புரிந்துகொள்ள மாட்டார்கள் என்று நான் விளக்கினேன். அவர்கள் ஏதாவது செய்யும்படி பார்க்கவேண்டும் என்று நாம் விரும்பினல், இன்னும் திட்டவட்டமான சொல் அவர்களுக்கு வேண்டும் என்றேன். 'உடனே' என்ற சொல்லுக்கு ஒவ்வொருவரும் அவரவர்கள் இஷ்டம்போல் வியாக்கியானம் செய்துகொள்ளுவார்கள். அரசாங்கம் ஒரு வழியிலும், மக்கள் மற்ருெரு வழியிலும் பொருள் கொள்ளுவர். 'ஜூலை 31-ஆம் தேதிக்குள்' என்பதை யாரும் தவருகப் புரிந்துகொண்டு விடுவதற்கில்லை. அத் தேதிக்குள் ஒன்றும் செய்யப்படவில்லையென்ருல், நாம் மேற்கொண்டும் செய்ய வேண்டியதைக் கவனிக்க முடியும். என்னுடைய வாதத்தில் நியாயம் இருப்பதை டாக்டர் ரீட் கண்டு கொண்டார். முடிவாக ஸ்ரீ லல்லுபாயும் சம்மதித்தார். அம் முறையை ரத்துச்செய்வதை அறிவித்துவிட வேண்டும் என்பதற்கு ஜூலை 31-ஆம் தேதியை இறுதியாக நிர்ணயித்தோம். அதே மாதிரி பொதுக்கூட்டத்திலும் ஒரு தீர்மானம் நிறைவேறியது. இந்தியா முழுவதிலும் நடந்த பொதுக்கூட்டங்களும் இதே போன்று தீர்மானம் செய்தன.

---

* டாக்டர் ஸ்டான்லி ரீட்: 'டைம்ஸ் ஆப் இந்தியா' பத்திரிகையின் ஆசிரியராயிருந்தவர்.

† கே. நடராஜன்: பம்பாயில் வாழ்ந்த தமிழர். சமூகச் சீர்திருத்தத்திற்காகத் தீவிரமாக உழைத்தவர்- 'இந்தியன் சோஷல் ரிபார்மர்' என்னும் சிறந்த பத்திரிகையின் ஆசிரியராயிருந்தவர்.

வைசிராயிடம் பெண்கள் தூதுகோஷ்டி ஒன்று போவதற்கு ஏற்பாடு செய்வதில் முழுச் சிரத்தையையும் ஸ்ரீமதி ஜெய்ஜி பெடிட் எடுத்துக் கொண்டார். பம்பாயிலிருந்து தூது சென்ற பெண்களில் லேடி டாட்டா, காலஞ்சென்ற தில்ஷாத் பீகம் ஆகியோரின் பெயர்கள் எனக்கு ஞாபகம் இருக்கின்றன. அத் தூதுகோஷ்டி சென்றதால் அதிக நன்மை ஏற்பட்டது. நம் பிக்கை ஏற்படும் வகையில் வைசிராய் அத் தூதுகோஷ்டிக்குப் பதில் சொன்னார்.

கராச்சி, கல்கத்தா முதலிய அநேக இடங்களுக்கு நான் சென்றேன். அங்கெல்லாம் சிறப்பான பொதுக்கூட்டங்கள் நடந் தன. எங்கும் எல்லையற்ற உற்சாகம் இருந்தது. இதுபோலெல் லாம் இருக்கும் என்று, கிளர்ச்சியை ஆரம்பித்தபோது நான் எதிர்பார்க்கவில்லை.

அந்த நாளில் நான் தனியாகவே பிரயாணம் செய்தேன். ஆகையால், அற்புதமான அனுபவங்கள் எனக்கு ஏற்பட்டன. ரகசியப் போலீஸார் என் பின்னால் வந்துகொண்டே இருந்தனர். ஆனால், ஒளிப்பதற்கு என்னிடம் எதுவுமே இல்லாததால், அவர் கள் என்னைத் தொந்தரவு செய்யவில்லை. அவர்களுக்கும் நான் எந்தவிதமான கஷ்டமும் கொடுக்கவில்லை. அதிருஷ்டவசமாக நான் அப்பொழுது 'மகாத்மா பட்ட' முத்திரையைப் பெற்றுவிட வில்லை. ஆனால், என்னைத் தெரிந்த இடங்களில் மக்கள் அப் பெயர் சொல்லிக் கோஷிப்பது சர்வ சாதாரணமாக இருந்தது.

ஒரு சமயம் ரகசியப் போலீஸார் பல ஸ்டேஷன்களிலும் என்னைத் தொந்தரவு செய்துவிட்டார்கள். என்னிடமிருந்த டிக் கெட்டைக் காட்டச் சொல்லி, அதன் நம்பரைக் குறித்துக் கொண்டனர். நானோ, அவர்கள் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் உடனே பதில் சொல்லிவந்தேன். என்னுடன் அந்த வண்டியில் இருந்த பிரயாணிகள், நான் யாரோ 'சாது' அல்லது 'பக்கிரி' என்று எண்ணிக்கொண்டு விட்டனர். ஒவ்வொரு ஸ்டேஷனிலும் நான் தொந்தரவு செய்யப்படுகிறேன் என்பதைக் கண்டதும் அவர்கள் ஆத்திரமடைந்து ரகசியப் போலீஸாரைத் திட்டினார் கள். "அனாவசியமாக அந்தச் சாதுவை ஏன் தொந்தரவு செய் கிறீர்கள்?" என்றும் கேட்டனர். "இந்தப் பாதகர்களிடம் உங் கள் டிக்கெட்டைக் காட்டாதீர்கள்" என்றும் அவர்கள் எனக்குக் கூறினர்.

"என்னுடைய டிக்கெட்டை அவர்களிடம் காட்டுவதில் எனக்குக் கஷ்டம் எதுவும் இல்லை. அவர்கள், அவர்களுடைய கடமையைச் செய்கிறார்கள்" என்று நான் சாந்தமாக அவர்களுக் குச் சமாதானம் கூறினேன். ஆனால், பிரயாணிகள் சமாதானம் அடையவில்லை. என்னிடம் மேலும் மேலும் அனுதாபம் கொண் டார்கள். ஒரு பாவமும் அறியாதவர்கள் இவ்விதம் தொந் தரவு செய்யப்படுவதைப் பலமாகக் கண்டித்தார்கள்.

ஆனல், ரகசியப் போலீஸாரின் தொல்லே பெரிய தொல்லே அல்ல. உண்மையான கஷ்டமெல்லாம் மூன்றும் வகுப்புப் பிரயாணந்தான். லாகூரிலிருந்து டில்லிக்குப் போனபோதுதான் எனக்கு மிகுந்த கஷ்டமான அனுபவம் ஏற்பட்டது. கராச்சியிலிருந்து லாகூர் வழியாகக் கல்கத்தாவுக்குப் போய்க்கொண்டிருந்தேன். லாகூரில் வண்டி மாறி ஏறவேண்டும். வண்டியில் கொஞ்சமும் இடம் கிடைக்கவில்லே. வண்டி நிறையக் கூட்டம் இருந்தது. வண்டிக்குள் ஏற முடிந்தவர்கள், இடித்துத் தள்ளிக்கொண்டு பலவந்தமாக ஏறியவர்களே. கதவுகள் பூட்டப்பட்டிருந்த வண்டிகளில் ஜன்னல் வழியாகச் சிலர் ஏறிக் குதித்தனர். பொதுக்கூட்டத்திற்குக் குறிப்பிட்டிருந்த தேதியில் நான் கல்கத்தாவுக்குப் போய்ச் சேர்ந்தாக வேண்டும். இந்த வண்டியை நான் விட்டுவிட்டால் உரிய காலத்தில் நான் கல்கத்தா போய்ச் சேர முடியாது. உள்ளே புகுந்துவிடமுடியும் என்ற நம்பிக்கையையெல்லாம் விட்டுவிட்டேன். நான் ஏறிக்கொள்ளுவதை அனுமதிக்க யாரும் தயாராயில்லே. நான் இவ்விதம் திண்டாடுவதைக் கண்ட ஒரு போர்ட்டர், என்னிடம் வந்து, "எனக்குப் பன்னிரண்டு அணுக் கொடுங்கள். நான் உங்களுக்கு ஓர் இடம் தேடித் தருகிறேன்" என்ருர். "சரி; எனக்கு இடம் தேடிக் கொடுத்துவிட்டால் உமக்குப் பன்னிரண்டு அணுத் தருகிறேன்" என்றேன். அந்த வாலிபர், வண்டி வண்டியாகப் போனர். பிரயாணிகளேக் கெஞ்சிக் கேட்டார். ஆனல், ஒருவர் கூட அவர் கெஞ்சலுக்குச் செவிசாய்க்கவில்லே. ரெயில் புறப்படவிருந்த சமயத்தில் சில பிரயாணிகள், "இங்கே இடம் கிடையாது; வேண்டுமானல், அவரை உள்ளே தள்ளு; அவர் நின்றுகொண்டுதான் வர வேண்டும்" என்ருர்கள். "என்ன சொல்லுகிறீர்கள்?" என்று வாலிபப் போர்ட்டர் என்னேக் கேட்டார். நான் உடனே சம்மதித்தேன். என்னே அவர் அப்படியே தூக்கி ஜன்னல் வழியாக உள்ளே தள்ளினர். இவ்வாறு உள்ளே புகுந்தேன்; போர்ட்டரும் பன்னிரண்டு அணுச் சம்பாதித்துவிட்டார்.

இரவு பெருஞ் சோதனே யாகிவிட்டது. மற்றப் பிரயாணிகள் எப்படியோ சமாளித்து உட்கார்ந்திருந்தார்கள். மேல்தட்டின் சங்கிலியைப் பிடித்துக்கொண்டு இரண்டு மணி நேரம் நின்றுகொண்டே இருந்தேன். இதன் நடுவில் சில பிரயாணிகள், இடைவிடாமல் என்னேத் தொந்தரவு செய்துகொண்டே இருந்தனர். "கீழே உட்காருகிறதுதானே?" என்று என்னேக் கேட்டனர். உட்காருவதற்கு இடமே இல்லே என்று அவர்களுக்குச் சமாதானம் கூற முயன்றேன். அவர்கள் மேல்தட்டுகளில் நன்ருகக் காலே நீட்டிக்கொண்டு படுத்திருந்தபோதிலும், நான் நின்றுகொண்டிருப்பதை அவர்களால் சகிக்கமுடியவில்லே. என்னே ஓயாமல் தொந்தரவு செய்துகொண்டே இருந்தார்கள். நானும் சளேக்காமல் சாந்தமாக அவர்களுக்குப் பதில் சொல்லிக்கொண்டே வந்தேன். கடைசியில் ஒருவாறு சமாதானம் அடைந்தார்கள்' அவர்களில் சிலர், என் பெயர் என்ன என்று விசாரித்

தனர். நான் அதைச் சொன்னதும் வெட்க மடைந்தனர். என்னிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டதோடு எனக்கு இடமும் ஒழித்துத் தந்தார்கள். இவ்விதம் பொறுமைக்குப் பலன் கிடைத்தது. நான் அதிகக் களைப்படைந்துவிட்டேன். தலை சுற்ற ஆரம்பித்துவிட்டது. உதவி மிகவும் தேவையாக இருந்த நேரத்தில் கடவுள் உதவியை அனுப்பினுர்.

இவ்விதமாக ஒருவாறு டில்லி சேர்ந்தேன்; பின்னர்க் கல்கத்தாவுக்குப் போய்ச் சேர்ந்தேன். கல்கத்தாப் பொதுக்கூட்டத்திற்குத் தலைமை வகித்த காஸிம்பஜார் மகாராஜாவின் விருந்தினுகத் தங்கியிருந்தேன். கராச்சியில் இருந்ததைப் போன்றே இங்கும் மக்கள் அளவில்லாத உற்சாகம் கொண்டிருந்தனர். அக் கூட்டத்திற்கு அநேக ஆங்கிலேயர்களும் வந்திருந்தார்கள்.

இந்தியாவிலிருந்து ஒப்பந்தத்தின் பேரில் தொழிலாளரை அனுப்புவது நிறுத்தப்பட்டுவிட்டது என்று ஜுலை 31-ஆம் தேதிக்கு முன்னுலேயே அரசாங்கம் அறிவித்துவிட்டது.

இம் முறையை ஆட்சேபித்து நான் முதல் மனுவைத் தயாரித்தது *1894*-ஆம் ஆண்டில். இம் முறையைக் குறித்து ஸர் ஹண்டர் கூறி வந்ததுபோல 'பாதி அடிமைத்தனமான' இது ஒரு நாளைக்கு ஒழிக்கப்பட்டே ஆக வேண்டும் என்று நான் அப்பொழுதே நம்பினேன்.

*1894*-இல் ஆரம்பமான கிளர்ச்சிக்கு உதவி செய்தவர்கள் அநேகர். ஆனுல், இம்முறையை ஒழிப்பதற்குச் சத்தியாக்கிரகத்தை ஆரம்பிப்பது என்ற உறுதியே அது சீக்கிரத்தில் ஒழியும்படி செய்துவிட்டது என்பதை நான் சொல்லாமல் இருப்பதற்கில்லை.

இக் கிளர்ச்சியைப்பற்றிய விவரங்களையும் அதில் யார் பங்கு எடுத்துக்கொண்டார்கள் என்பது பற்றியும் அறிவதற்கு நான் எழுதிய 'தென்னுப்பிரிக்கச் சத்தியாக்கிரகம்' என்ற நூலை வாசகர் படிக்கவும்.

## 12

## அவுரிச் சாகுபடி அநீதி

ஜனக மகாராஜன் ஆண்ட நாடு, சம்பாரண். அங்கே மாந்தோப்புக்கள் ஏராளமாக இருப்பதைப் போலவே, *1917*-ஆம் ஆண்டு வரையில், அவுரித் தோட்டங்களும். நிறைய இருந்து வந்தன. சம்பாரண் குடியானவர் ஒவ்வொருவரும், தாம் சாகுபடி செய்யும் நிலத்தின் இருபதில் மூன்று பாகத்தில் தமது நிலச்

சுவான்தாருக்காக அவுரியைக் கட்டாயம் பயிர் செய்தாக வேண்டும் என்று சட்டம் இருந்தது. இதற்கு 'தீன் கதியா' முறை என்று பெயர். இருபது 'கதியா'க்கள் கொண்டது ஒரு ஏக்கர். அதில் மூன்று 'கதியா'வில் அவுரிச் சாகுபடி செய்ய வேண்டும் என்று இருந்ததால் அம்முறைக்குத் 'தீன் கதியா' என்று பெயர்.

சம்பாரண் இருக்கும் இடம் மாத்திரம் அல்ல, அப் பெயர் கூட, எனக்கு அப்பொழுது தெரியாது என்பதை நான் ஒப்புக் கொள்ளவே வேண்டும். அவுரித் தோட்டங்களைப் பற்றியும் எனக்கு எதுவும் தெரியாது. அவுரிப் பொட்டணங்களைப் பார்த்திருக்கிறேன். ஆனால், சம்பாரணில் ஆயிரக்கணக்கான விவசாயிகளுக்குப் பெருந்துன்பங்களை விளைவித்து அவுரியைப் பயிரிட்டுத் தயாரிக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியாது.

இத் துன்பங்களை அனுபவித்து வந்த விவசாயிகளில் ஒருவர் ராஜ்குமார் சுக்லா. தம்மைப்போல மற்றும் ஆயிரக்கணக்கான விவசாயிகள் அனுபவித்து வரும் அநீதியை எப்படியும் போக்க வேண்டும் என்ற ஆர்வம் மிகுந்தவர் அவர்.

1916-ஆம் ஆண்டில் காங்கிரஸ் மகாநாட்டிற்கு நான் லட்சுமணபுரி போயிருந்தபோது அவர் என்னைப் பிடித்துக்கொண்டார். "எங்கள் துயரங்களைப்பற்றிய விவரங்களை யெல்லாம் வக்கீல் பாபு உங்களுக்குக் கூறுவார்" என்று அவர் சொன்னார். சம்பாரணுக்கு வருமாறும் என்னை வற்புறுத்தினர். "வக்கீல் பாபு" என்று அவர் சொன்னது, பாபு பிரஜ்கிஷோர் பிரசாத்தையே.* அவர் சம்பாரணில் எனக்கு மிகச் சிறந்த சக ஊழியரானார். பீகாரில் பொதுஜன சேவைக்கு உயிராகவும் அவர் இருந்தார். ராஜ்குமார் சுக்லா, அவரை என் கூடாரத்திற்கு அழைத்து வந்தார். அவர் கால்சட்டை அணிந்து, கறுப்பு மேல்சட்டையும் போட்டிருந்தார். அப்பொழுது பிரஜ்கிஷோர் பாபு எனக்கு அவ்வளவாக ஒரு நல்ல அபிப்பிராயத்தை உண்டாக்கவில்லை. ஒன்றும் தெரியாத விவசாயிகளை ஏமாற்றிப் பிழைக்கும் ஒரு வக்கீலாக அவர் இருக்கக்கூடும் என்றே நான் எண்ணினேன். சம்பாரணைப் பற்றி அவர் வாய்மொழிமூலம் கேட்டறிந்ததும், என் வழக்கத்தையொட்டி, "நிலைமையை நேரில் பார்ப்பதற்கு முன்னால் நான் எந்தவித அபிப்பிராயமும் கூறுவதற்கில்லை. காங்கிரஸில் தயவு செய்து நீங்களே தீர்மானத்தைக் கொண்டுவாருங்கள். இப்போதைக்கு என்னைச் சும்மா விட்டு விடுங்கள்" என்றேன். காங்கிரஸிடமிருந்தும் கொஞ்சம் உதவியைப் பெற ராஜ்குமார் சுக்லா விரும்பினர். சம்பாரண் மக்களிடம் அனுதாபம் தெரிவிக்கும் தீர்மானம் ஒன்றைப் பாபு பிரஜ்கிஷோர் பிரசாத் கொண்டு வந்தார். அத் தீர்மானம் காங்கிரஸில் ஏகமனதாக நிறைவேறியது.

---

* பிரஜ்கிஷோர் பாபு : பீகாரில் பிரபல வக்கீல். கயாவில் 1922–இல் நடந்த காங்கிரசுக்கு வரவேற்புக் கழகத் தலைவராயிருந்தவர்.

ராஜ்குமார் சுக்லா மகிழ்ச்சி யடைந்தாரெனினும் திருப்தி அடைந்துவிட வில்லை. நானே நேரில் சம்பாரணுக்கு வந்து விவசாயிகளின் துயரங்களைப் பார்க்க வேண்டும் என்று விரும்பினர். நான் செய்யவிருந்த சுற்றுப்பிரயாணத்தில் சம்பாரணையும் சேர்த்துக்கொள்ளுவதாகவும், இரண்டொரு நாள் அங்கே இருப்பதாகவும் சொன்னேன். "ஒரு நாளே போதும். அங்கே நடப்பதையெல்லாம் உங்கள் கண்ணாலேயே நீங்கள் காணலாம்" என்றார், அவர்.

லட்சுமணபுரியிலிருந்து கான்பூருக்குப் போனேன். ராஜ்குமார் சுக்லா அங்கும் என்னுடன் வந்தார். "இங்கிருந்து சம்பாரண் அருகிலேயே இருக்கிறது. அங்கே வருவதற்கென்று ஒரு நாள் ஒதுக்குங்கள்" என்று அவர் வற்புறுத்தினர். "தயவுசெய்து இந்தத் தடவை மன்னித்துவிடுங்கள். ஆனல்' நான் பிறகு நிச்சயமாக வருகிறேன்" என்று கூறி மேற்கொண்டும் என்னைக் கட்டுப்படுத்திக்கொண்டேன்.

பிறகு ஆசிரமத்திற்குத் திரும்பினேன் விடாக்கண்டரான ராஜ்குமார் அங்கேயும் வந்துவிட்டார். "நீங்கள் வரும் நாளைத் தயவு செய்து இப்பொழுதே குறிப்பிட்டுவிடுங்கள்" என்றார். 'சரி, இன்ன தேதியில் நான் கல்கத்தாவில் இருக்கவேண்டியிருக்கிறது. அப்பொழுது வந்து என்னைச் சந்தித்து, அங்கே அழைத்துப் போங்கள்" என்றேன். நான் போக வேண்டியது எங்கே, செய்யவேண்டியது என்ன, பார்க்க வேண்டியது எது என்பதெல்லாம் எனக்குத் தெரியாது.

கல்கத்தாவில் பூபேன் பாபுவின் வீட்டிற்கு நான் போய்ச் சேருவதற்கு முன்னாலேயே ராஜ்குமார் சுக்லா அங்கே போய் எனக்காகக் காத்துக்கொண்டிருந்தார். இவ்விதம் கள்ளங்கபடமற்ற, எளிய, ஆனல் மிக்க உறுதியுடைய இந்த விவசாயி என்னைப் பிடித்துக்கொண்டுவிட்டார்.

ஆகவே, 1917-ஆம் ஆண்டு ஆரம்பத்தில் நாங்கள் கல்கத்தாவிலிருந்து சம்பாரணுக்குப் புறப்பட்டோம். நாங்கள் இருவரும் பட்டிக்காட்டு ஆசாமிகளாகவே தோற்றம் அளித்தோம். அங்கே போக எந்த ரெயிலில் ஏறுவது என்பதுகூட எனக்குத் தெரியாது. அவர்தான் என்னை வண்டிக்கு அழைத்துப்போனர். இருவரும் சேர்ந்தாற்போலப் பிரயாணம் செய்து காலையில் பாட்னா போய்ச் சேர்ந்தோம்.

பாட்னாவுக்கு அப்பொழுதுதான் முதல்முறையாக நான் சென்றேன். அங்கே தங்கலாம் என்றால், எனக்கு நண்பர்களோ, தெரிந்தவர்களோ யாரும் இல்லை. ராஜ்குமார் சுக்லா சாதாரணக் குடியானவரே யாயினும் பாட்னாவில் அவருக்குக் கொஞ்சம் செல்

வாக்கு இருக்கக்கூடும் என்று எண்ணினேன். பிரயாணத்தின் போது அவரை இன்னும் கொஞ்சம் அதிகமாகத் தெரிந்து கொண்டேன். ஆனால், பாட்னு போய்ச்சேர்ந்ததும் அவரைப் பற்றி எனக்கு எந்தவிதமான மயக்கமும் இல்லாது போய்விட்டது. அவருக்கு எதைப்பற்றியும் எதுவுமே தெரியாது. தம் நண்பர்கள் என்று அவர் எண்ணியிருந்த வக்கீல்கள், அப்படி ஒன்றும் அவர் நண்பர்கள் அல்ல. ஏழை ராஜ்குமார், அநேகமாக அவர்களுக்குக் குற்றேவல் செய்பவராகவே இருந்தார். இத்தகைய விவசாயிகளான குடியானவர்களுக்கும் அவர்களுடைய வக்கீல்களுக்கு மிடையே, பிரவாக சமயத்தில் கங்கை இருப்பதைப் போன்று, அகலமான அகழ் இருந்து வந்தது என்றே சொல்ல வேண்டும்.

ராஜ்குமார் சுக்லா, பாட்னுவில் ராஜேந்திர பாபு வீட்டிற்கு என்னை அழைத்துச் சென்ருர். அச் சமயம் ராஜேந்திர பாபு பூரிக்கோ, வேறு எங்கோ போய்விட்டார். எங்கே என்பது எனக்கு நினைவு இல்லை. பங்களாவில் இரண்டொரு வேலைக்காரர்களே இருந்தார்கள். அவர்கள் எங்களைத் திரும்பிப் பார்க்கவே இல்லை. சாப்பிட என் வசம் கொஞ்சம் ஆகாரம் இருந்தது. பேரீச்சம்பழம் வேண்டும் என்றேன். அவர் கடைக்குப் போய் அதை வாங்கிக்கொண்டுவந்து கொடுத்தார்.

தீண்டாமை, பீகாரில் மிகக் கடுமையாக அனுசரிக்கப்பட்டு வந்தது. கிணற்றிலிருந்து வேலைக்காரர்கள் தண்ணீர் எடுத்துக் கொண்டிருக்கும்போது, நான் தண்ணீர் எடுக்கக்கூடாது என்றனர். அப்படி எடுத்தால் என் வாளியிலிருந்து நீர்த் துளிகள் சிதறி, தாங்கள் தீட்டாகிவிடுவார்கள் என்றனர். ஏனெனில், நான் இன்ன சாதியைச் சேர்ந்தவன் என்பது அவர்களுக்குத் தெரியாது. வீட்டிற்குள்ளிருந்த கக்கூசுக்குப் போகும்படி ராஜ்குமார் எனக்குக் காட்டினர். ஆனல், வேலைக்காரர்களோ, வெளியிலிருந்த கக்கூசுக்குப் போகும்படி கூறிவிட்டனர். இத்தகைய அனுபவங்கள் எனக்குப் பழக்கப்பட்டுப் போய்விட்டதால், இவைகளைக்கண்டு நான் ஆச்சரியப்படவுமில்லை. கோபமடையவுமில்லை. தாங்கள் என்ன செய்ய வேண்டும் என்று ராஜேந்திரப் பிரசாத் விரும்புவார் என்று அவ்வேலைக்காரர்கள் எண்ணினர்களோ, அந்தக் கடமையை அவர்கள் செய்தனர்.

அந்தச் சுவாரஸ்யமான அனுபவங்களினல் ராஜ்குமார் சுக்லாவைக் குறித்துச் சரியாக நான் தெரிந்துகொள்ள முடிந்தது. அதே சமயத்தில் அவர்மீது எனக்கிருந்த மதிப்பும் அதிகமாயிற்று. ராஜ்குமாரினல் எனக்கு வழிகாட்ட முடியாது; லகானை நானே கையில் பிடித்துக்கொள்ள வேண்டியதுதான் என்பதை இப்பொழுது கண்டுகொண்டேன்.

# 13

# சாதுவான பீகாரி

மௌலானா மஜருல் ஹக்* லண்டனில் வக்கீல் தொழிலுக்குப் படித்துக்கொண்டிருந்தபோது அவரை எனக்குத் தெரியும். பிறகு 1915-இல் காங்கிரஸில் அவரைச் சந்தித்தேன். அந்த ஆண்டு அவர் முஸ்லிம் லீகின் தலைவராக இருந்தார். அப்பொழுது மீண்டும் பழக்கம் ஏற்பட்டபோது, நான் பாட்னாவுக்கு எப்பொழுதாவது வந்தால் தம்முடன் தங்குமாறு அவர் அழைத்திருந்தார். இப்பொழுது அது எனக்கு ஞாபகம் வந்தது. நான் வந்திருக்கும் நோக்கத்தை அறிவித்து அவருக்கு ஒரு சீட்டு அனுப்பினேன். உடனே அவர் தமது மோட்டாரில் வந்து, தம்முடன் வந்து தங்குமாறு வற்புறுத்தினார். அவருக்கு நன்றி கூறிவிட்டு நான் போக வேண்டிய இடத்திற்குப் புறப்படும் முதல் வண்டியிலேயே என்னை அனுப்பும்படி அவரைக் கேட்டுக் கொண்டேன். அவ்விடத்திற்கு என்னைப்போன்று முற்றும் புதிதான ஒருவரால் ரெயில்வே 'வழி காட்டி'யைக் கொண்டு எதுவும் தெரிந்து கொள்ள முடியவில்லை. எனவே, ராஜ்குமார் சுக்லாவுடன் பேசினார். நான் முஜாபர்பூருக்கு முதலில் போக வேண்டு மென்று யோசனை கூறினார். அங்கே போக அன்று மாலையிலேயே ஒரு வண்டி இருந்தது. அதில் அவர் என்னை ஏற்றி அனுப்பினார்.

பிரின்ஸிபால் கிருபளானி அப்பொழுது முஜாபர்பூரில் இருந்தார். ஹைதராபாத்திற்கு (சிந்து) நான் போயிருந்த போதிலிருந்து அவரை நான் அறிவேன். அவருடைய பெரும் தியாகங்களைக் குறித்தும், அவருடைய எளிய வாழ்க்கையைப் பற்றியும், பேராசிரியர் கிருபளானி அளித்து வரும் நிதியைக்கொண்டு தாம் ஆசிரமம் நடத்தி வருவதைப்பற்றியும் டாக்டர் சோயித்ராம் என்னிடம் கூறியிருந்தார். கிருபளானி, முஜாபர்பூர் அரசாங்கக் கல்லூரியில் பேராசிரியராக இருந்தார். நான் அங்கே போவதற்குக் கொஞ்சம் முன்னால்தான் அவர் அந்த உத்தியோகத்தை ராஜினாமாச் செய்துவிட்டார். நான் அங்கே வருவது குறித்து அவருக்குத் தந்தி மூலம் அறிவித்திருந்தேன். ரெயில், நடுநிசியில் அங்கே போனபோதிலும் ஒரு மாணவர் கூட்டத்துடன் வந்து

---

* மஜ்ருல் ஹக் : பீகாரைச் சேர்ந்த பிரபல வக்கீல். மிண்டோ-மார்லி சீர்திருத்தத்தில் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவ முறை அளிக்கப்பட்டதை 1910-ஆம் ஆண்டு காங்கிரஸில் இவர் எதிர்த்தார். இங்கிலாந்து சென்ற காங்கிரஸ் தூதுகோஷ்டியில் இவரும் ஓர் உறுப்பினராக நியமிக்கப்பட்டார். மிகுந்த மதப்பற்றுள்ளவ ராயினும் சிறந்த தேசாபிமானி. சிறந்த முஸ்லிமாயிருந்தாலும் உயர்ந்த நாட்டுப் பற்றுள்ளவர்களாக இருக்க வேண்டும் என்று முஸ்லிம் லீக் தலைவராகப் பணியாற்றுகையில் கூறினார். பெரிய தனவந்தரா யிருந்தும் இறுதிக் காலத்தில் பரம ஏழைபோல் வாழ்க்கையை நடத்தினர்.

அவர் என்னை ரெயில்வே ஸ்டேஷனில் சந்தித்தார்.* அவருக்குச் சொந்த ஜாகை எதுவும் இல்லை. பேராசிரியர் மல்கானியுடன் அவர் வசித்து வந்தார். ஆகையால், நானும் மல்கானியின் விருந்தினன் ஆனேன். என்னைப் போன்ற ஒருவனுக்கு, அரசாங் கத்தில் வேலை பார்க்கும் பேராசிரியர் ஒருவர் இடம் கொடுத்து உபசரிப்பது என்பது அந்தக் காலத்தில் மிகவும் அபூர்வமான விஷயமாகும்.

பீகாரில் முக்கியமாக திர்ஹுத் பகுதியில் இருந்துவந்த சகிக்க முடியாத மோசமான நிலைமையைக் குறித்துப் பேராசிரியர் கிருபளானி எனக்கு விவரமாகக் கூறினர். நான் மேற்கொண்டிருக் கும் வேலை எவ்வளவு கஷ்டமானது என்பதையும் தெரிவித்தார். அவர் பீகாரிகளுடன் நெருங்கிப் பழகி நல்ல தொடர்பு வைத்திருந் தார். நான் பீகாருக்கு வந்திருக்கும் வேலையைக் குறித்து முன் னடியே அவர்களுடன் பேசியும் இருந்தார்.

காலையில் சில வக்கீல்கள் சேர்ந்து என்னைப் பார்க்க வந்தார்கள். அவர்களில் ஒருவரான ராமநவமிப் பிரசாத்தை இன்னும் எனக்கு நினைவிருக்கிறது. முக்கியமாக அவர் கொண் டிருந்த சிரத்தை என் மனத்தைக் கவர்ந்தது. "நீங்கள் என்ன காரியத்திற்காக இங்கே வந்திருக்கிறீர்களோ அதை நீங்கள் இங்கே (பேராசிரியர் மல்கானியின் வீட்டில்) தங்கினல் செய் யவே முடியாது. நீங்கள் எங்களில் யாராவது ஒருவருடன் வந்து தங்க வேண்டும். கயா பாபு இங்கே பிரபலமான வக்கீல்.

---

*ஆச்சாரிய கிருபளானி மாணவர் கூட்டத்துடன் காந்திஜியை வரவேற்க ரெயில்வே ஸ்டேஷன் சென்றபோது நடந்த சம்பவத்தைக் குறித்து பாபு ராஜேந்திரப் பிரசாத் தாம் எழுதியுள்ள 'அண்ணல் காந்தி அடிச்சுவட்டில்' என்ற நூலில் பின் வரு மாறு குறிப்பிட்டிருக்கிருர்: ''கிருபளானி, தமது மாணவர்கள் சிலருடன் மகாத்மாவை வரவேற்பதற்காக ரெயில்வே ஸ்டேஷனுக்கு வந்திருந்தார். ஆனல், காந்தியடிகளின் வாழ்க்கை விவரங்களைப்பற்றி அவருக்குத் தெரியாது. எனவே அவர் மேல்வகுப்பு வண்டியில்தான் இருப்பார் என்று எண்ணி, காந்திஜியை அங்கெல்லாம் ஸ்ரீ கிருபளானி யும் மாணவர்களும் தேடினர்கள். ஆனல், காந்திஜியோ, கையில் ஒரு சிறு மூட்டை யுடன் மூன்ரும் வகுப்பு வண்டியிலிருந்து இதற்குள் இறங்கிவிட்டார். ராஜ்குமார் சுக்லா வுடன் பிளாட்பாரத்திலிருந்து வெளியே போகும் வழியை நோக்கி அவர் போய்க் கொண்டுமிருந்தார். மகாத்மாவைத் தாங்கள் காணுது போகவே, கிருபளானியும் அவருடைய மாணவர்களும் அவரைக் கண்டுபிடிப்பதற்காகப் பிளாட்பாரத்தில் அங்கு மிங்குமாக அவசர அவசரமாக ஓடிக்கொண் டிருந்தனர். அவர்களைப் பார்த்த ராஜ் குமார் சுக்லா, அவர்கள் மகாத்மாவைத் தேடிக்கொண்டிருக்கக்கூடும் என்று ஊகித்துக் கொண்டார். ஒரு மாணவரைப் பார்த்து, "நீங்கள் யாரைத் தேடுகிறீர்கள்?" என்று கேட்டார். இவரை யாரோ கிராமத்தான் என்று எண்ணிக் கொண்ட அந்த மாணவர், ராஜ்குமார் சுக்லாவின் கேள்விக்குப் பதிலே சொல்லவில்லை. உடனே ராஜ்குமார் சுக்லா, ''கர்ம வீரர் காந்தியைத் தேடுகிறீர்களா? அப்படியானல் அவர் என்னுடன் இருக்கிருர்'' என்ருர். இவ் வார்த்தையைக் கேட்டதும் எல்லோரும் காந்திஜியை ச் சுற்றிக்கொண்டு விட்டார்கள். இடுப்பில் வேட்டி, ஒரு சட்டை, குல்லாயுடன் விளங்கினர் காந்தியடிகள். கையில் ஒரு சிறு மூட்டை; அதைப் பக்கத்தில் அணைத்துக்கொண் டிருந்தார். மற்ருேர் கையிலோ, ஒரு சிறு தகரப் பெட்டி; அதில் கொஞ்சம் பேரீச்சம் பழமும் நிலக்கடலையும் இருந்தன........"

அவருடன் நீங்கள் வந்து தங்க வேண்டும் என்று அவர் சார்பாக உங்களை அழைப்பதற்காக நான் வந்திருக்கிறேன். நாங்கள் எல்லோரும் அரசாங்கத்திடம் பயப்படுகிறவர்கள் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். என்ருலும், எங்களாலான உதவியை நாங்கள் செய்வோம். ராஜ்குமார் சுக்லா உங்களிடம் கூறியவை பெரும்பாலும் உண்மையே. எங்கள் தலைவர்கள் இன்று இங்கே இல்லாதுபோனது வருந்தத்தக்கது. ஆயினும், பாபு பிரஜ்கிஷோர் பிரசாத், பாபு ராஜேந்திரப் பிரசாத் ஆகிய இருவருக்கும் தந்தி கொடுத்திருக்கிறேன். அவர்கள் சீக்கிரத்திலேயே இங்கே வந்து உங்களுக்குத் தேவையான தகவல்களை யெல்லாம் கூறுவதோடு அதிக அளவு உதவியும் செய்வார்கள் என்றே எதிர்பார்க்கிறேன். தயவுசெய்து கயா பாபுவின் வீட்டிற்கு வாருங்கள்'' என்று கூறி ராமநவமிப் பிரசாத் அழைத்தார்.

கயா பாபுவுக்குத் தொந்தரவு கொடுப்பானேன் என்று அஞ்சி நான் தயங்கியபோதிலும் இந்த வேண்டுகோளை என்னல் மறுக்க முடியவில்லை. ஆனல், அப்படி ஒன்றும் தொந்தரவு இல்லை என்று அவர் கூறியதன் பேரில் அவருடன் இருக்கப் போனேன். அவரும் அவருடைய வீட்டினரும் என்னிடம் அளவு கடந்த அன்பு காட்டினர்.

தர்பங்காவிலிருந்து பிரஜ்கிஷோர் பாபுவும், பூரியிலிருந்து ராஜேந்திர பாபுவும் இதற்குள் வந்து சேர்ந்துவிட்டனர். லட்சுமணபுரியில் நான் சந்தித்த பாபு பிரஜ்கிஷோர் பிரசாத் அல்ல, இந்தப் பிரஜ்கிஷோர் பாபு. இத் தடவை பீகாரிகளுக்கு இயற்கையாக உள்ள அடக்கம், எளிமை, நல்ல தன்மை, அளவு கடந்த நம்பிக்கை ஆகியவைகளை அவரிடம் கண்டேன். இவைகள் என்னைக் கவர்ந்ததால், என் உள்ளம் அதிக ஆனந்த மடைந்தது. பீகார் வக்கீல்கள் அவரிடம் கொண்டிருந்த மதிப்பு, எனக்கு ஓரளவு ஆச்சரியத்தையும் மகிழ்ச்சியையும் அளித்தது.

இந்த நண்பர்களின் கூட்டத்தோடு ஆயுள் முழுவதற்கும் நட்புத் தளையில் நான் பிணைக்கப்பட்டு வருவதாகச் சீக்கிரத்திலேயே நான் உணர்ந்தேன். அங்கிருந்த நிலைமையைக் குறித்து எல்லா விவரங்களையும் பிரஜ்கிஷோர் பாபு எனக்குக் கூறினர். ஏழை விவசாயிகளின் வழக்குகளை அவர் நடத்துவது வழக்கம் என்றும் அறிந்தேன். நான் அங்கே சென்றபோது, அத்தகைய வழக்குகளில் இரண்டு கோர்ட்டில் விசாரணையில் இருந்தன. அப்படிப்பட்ட வழக்குகளில் அவர் வெற்றி பெற்றுவிட்டால், அந்த ஏழை மக்களுக்குத் தாம் ஏதோ கொஞ்சம் உதவி செய்ததாக எண்ணி அவர் ஆறுதல் அடைவாராம். ஒன்றும் தெரியாத அந்த விவசாயிகளிடம் அவர் கட்டணம் வாங்காமல் இல்லை. வழக்குகளுக்குப் பணம் வாங்காவிட்டால், தாங்கள் குடும்பத்தை நடத்த முடியாது என்றும், அதனல், ஏழைகளுக்குச் சரியானபடி தாங்கள் உதவி செய்ய முடியாது போகும் என்றும் பொதுவாக வக்கீல்கள் எண்ணி வந்தனர். வழக்குகளுக்கு

இவர்கள் வாங்கி வந்த கட்டணத் தொகையும், வங்காளத்திலும் பீகாரிலும் பாரிஸ்டர்கள் வாங்கி வந்த கட்டணங்களும் என்னைத் திகைக்கும்படி செய்துவிட்டன.

"இன்னாரின் அபிப்பிராயத்தைக் கேட்பதற்காக அவருக்கு ரூ. 10,000 கொடுத்தோம்" என்று என்னிடம் சொன்னார்கள். யாருக்கும் ஆயிரத்திற்குக் குறைவான தொகையே இல்லை. இதைக் குறித்து நான் அன்புடன் கண்டித்துப் பேசியதை அந் நண்பர்கள் கேட்டுக்கொண்டார்கள். என்னைத் தவறாக அவர்கள் எண்ணிக்கொண்டு விடவில்லை.

அவர்களிடம் நான் கூறியதாவது: "நிலைமையை நான் அறிந்துகொண்டதிலிருந்து கோர்ட்டுகளுக்குப் போவது என்பதை நாம் நிறுத்திக்கொண்டுவிட வேண்டும் என்ற முடிவுக்கு வந்திருக்கிறேன். இத்தகைய வழக்குகளைக் கோர்ட்டுக்குக் கொண்டு போவதால், எந்தவிதமான நன்மையும் இல்லை. விவசாயிகள் இவ்விதம் நசுக்கப்பட்டுப் பயமடைந்திருக்கும்போது, கோர்ட்டுகள் பயனற்றவை. அவர்களுக்கு உண்மையான பரிகாரம், பயத்திலிருந்து அவர்களை விடுவிப்பதே. 'தீன் கதியா' முறையைப் பீகாரிலிருந்து விரட்டியடித்துவிடும் வரையில் நாம் சும்மா உட்கார்ந்திருக்க முடியாது. இரண்டு நாட்களில் இங்கிருந்து புறப்பட்டுவிட முடியும் என்று எண்ணியிருந்தேன். ஆனால், இந்த வேலையை முடிக்க இரண்டு ஆண்டுகளும் ஆகக் கூடும் என்பதை இப்பொழுது நான் அறிகிறேன். அவசியமானால், அவ்வளவு காலம் இருக்கவும் நான் தயாரா யிருக்கிறேன். நான் செய்ய வேண்டியிருக்கும் வேலை இன்னதென்பதை இப்பொழுது உணருகிறேன். ஆனால், உங்கள் உதவி எனக்கு வேண்டும்."

பிரஜ்கிஷோர் பாபு, இணையற்ற வகையில் நிதானத்துடன் இருந்ததைக் கண்டேன். அவர் அமைதியோடு, "எங்களால் முடிந்த உதவிகளை யெல்லாம் நாங்கள் செய்கிறோம். ஆனால், உங்களுக்கு எந்தவிதமான உதவி தேவை என்பதைத் தயவு செய்து சொல்லுங்கள்" என்றார்.

இவ்வாறு நடுநிசி வரையில் உட்கார்ந்து பேசினோம். நான் அவர்களிடம் கூறியதாவது: "உங்களுடைய சட்ட ஞானம் எனக்கு ஒருவிதப் பிரயோசனமும் இல்லை. எழுத்து வேலைக்கும், மொழி பெயர்க்கும் வேலைக்குமே எனக்கு உதவி தேவை. சிறை செல்லவேண்டிய அவசியமும் ஏற்படலாம். அந்த அபாயத்திற்கும் நீங்கள் தயாராக இருக்க வேண்டும் என்றே நான் விரும்புவேன். ஆனால், எவ்வளவு தூரம் போகமுடியும் என்று நீங்கள் எண்ணுகிறீர்களோ அந்த அளவுக்கு மாத்திரம் நீங்கள் போகலாம். நீங்கள் குமாஸ்தாக்க ளாகிவிடுவதும், நிச்சயமற்ற காலம் வரையில் தொழிலை விட்டுவிட்டு வருவதும் சாமான்யமான விஷயமே அல்ல. இப் பகுதியில் பேசப்படும் ஹிந்தியைப் புரிந்துகொள்ளுவது எனக்குக் கஷ்டமாக இருக்கிறது. கெய்தி அல்லது உருது

மொழிப் பத்திரிகைகளையும் என்னால் படிக்கமுடியாது. இவற்றை மொழிபெயர்த்து எனக்குச் சொல்ல உங்கள் உதவி வேண்டியிருக்கும். இந்த வேலைக்குச் சம்பளம் கொடுத்து ஆள் வைக்க நம்மால் ஆகாது. அன்பிற்காகவும் சேவை உணர்ச்சியின் பேரிலுமே இவைகளெல்லாம் செய்யப்பட வேண்டும்.''

பிரஜ்கிஷோர் பாபு நான் கூறியதை உடனே நன்கு அறிந்துகொண்டார். இப்பொழுது அவர், என்னையும் தமது சகாக்களையும் முறையாகக் கேள்விகள் கேட்டுக் குறுக்கு விசாரணை செய்தார். தங்கள் சேவை எவ்வளவு காலத்திற்கு வேண்டியிருக்கும், தங்களில் எத்தனை பேர் வேலைக்கு வேண்டும், தாங்கள் முறை போட்டுக்கொண்டு வந்து சேவை செய்யலாமா என்பன போன்ற கேள்விகளையெல்லாம் அவர் கேட்டார். அவற்றின் மூலம் நான் கேட்ட உதவியின் தன்மையைத் தெளிவாக்கிக் கொள்ள முயன்றார். பிறகு தியாகத்திற்குத் தங்களுக்குள்ள சக்தியைக் குறித்து வக்கீல்களைக் கேட்டார்.

முடிவாக அவர்கள் எனக்கு இந்த வாக்குறுதியை அளித்தார்கள்: ''எங்களில் இத்தனை பேர் நீங்கள் சொல்லுகிறபடியெல்லாம் செய்யத் தயாராக இருக்கிறோம். எங்களில் சிலர், நீங்கள் விரும்புங்காலம் வரையில் உங்களுடனேயே இருப்போம். ஆனால், சிறை செல்வதற்குத் தயாராவது என்பது எங்களுக்குப் புதியதொரு விஷயம். அதற்கும் எங்களைப் பக்குவப்படுத்திக் கொள்ள முயல்கிறோம்.''

## 14

# அகிம்சையுடன் நேருக்கு நேர்

சம்பாரண் விவசாயிகளின் நிலைமையையும், அவுரித் தோட்ட முதலாளிகளுக்கு எதிராக அவர்களுக்கு இருந்த குறைகளையும் விசாரித்து அறிந்துகொள்ளுவதே என்னுடைய நோக்கம். ஆயிரக் கணக்கான விவசாயிகளை நான் சந்தித்தாகவேண்டியது இக் காரியத்திற்கு அவசியமாயிற்று. ஆனால், என்னுடைய விசாரணையை ஆரம்பிப்பதற்கு முன்னால், இவ் விஷயத்தில் தோட்ட முதலாளிகளின் கட்சி இன்னது என்பதைத் தெரிந்துகொள்ளுவதும், அந்த டிவிஷனின் கமிஷனரைக் கண்டு பேசுவதும் மிக முக்கியம் என்று கருதினேன். இவ்விருவரையும் கண்டு பேச அனுமதி கேட்டு அதையும் பெற்றேன்.

தோட்ட முதலாளிகளின் சங்கக் காரியதரிசியைக் கண்டு பேசினேன். நான் வெளியான் என்றும், தோட்ட முதலாளிகளுக்கும் அவர்களுடைய சாகுபடியாளருக்கும் இடையே தலையிடுவதற்கு எனக்கு எவ்வித உரிமையும் இல்லை என்றும் அவர் ஒளிவு மறைவு இன்றிச் சொல்லிவிட்டார். ஆனால், நான் சொல்லிக்கொள்ள வேண்டியது ஏதாவது இருந்தால்,

அதை எழுத்துமூலம் தெரிவித்துக்கொள்ளுமாறும் என்னிடம் கூறிவிட்டார். வெளியான் என்று நான் என்னை எண்ணிக்கொள்ள வில்லை என்றும், சாகுபடியாளர்கள் தங்கள் நிலைமையைப்பற்றி நான் விசாரிக்க வேண்டும் என்று விரும்புவார்களாயின் அப்படி விசாரிப்பதற்கு எனக்கு எல்லாவிதமான உரிமையும் இருக் கிறது என்றும் அவரிடம் பணிவாகச் சொன்னேன்.

கமிஷனரையும் போய்ப் பார்த்தேன். அவர் என்னை உருட்டி மிரட்டத் தொடங்கினார். திர்ஹூத்திலிருந்து உடனே போய் விடுமாறும் அவர் எனக்குப் புத்திமதி சொன்னார்.

இவை யெல்லாவற்றையும் என் சக ஊழியர்களுக்குத் தெரி வித்தேன். மேற்கொண்டும் நான் செல்ல முடியாதபடி அரசாங்கம் என்னைத் தடுத்துவிடக்கூடும் என்றும், ஆகவே நான் எதிர்பார்த்த தற்கும் முன்னாலேயே நான் சிறை சென்றுவிட நேரலாம் என்றும், நான் கைது செய்யப்பட்டால், அப்படிச் செய்யப்படுவது பேதியா வில் சாத்தியமானால் நடக்க வேண்டும்; அல்லது மோதிகாரியில் நடப்பது மிகச் சிறந்தது என்றும் சொன்னேன். ஆகையால், சாத்தியமான வரையில் சீக்கிரத்திலேயே நான் அந்த இடங்களுக் குப் போவதே நல்லது என்றும் கூறினேன்.

திர்ஹூத் டிவிஷனில் சம்பாரண் ஒரு ஜில்லா; மோதிகாரி அதன் தலைநகரம். ராஜ்குமார் சுக்லாவின் ஊர் பேதியாவுக்குப் பக்கத்தில் இருந்தது. அதற்குப் பக்கத்திலிருந்த கிராமங்களைச் சேர்ந்த விவசாயிகளே, அந்த ஜில்லாவில் மிகவும் ஏழைகள். அவர்களை நான் பார்க்க வேண்டும் என்று ராஜ்குமார் சுக்லா விரும்பினார்; நானும் அவர்களைப் பார்க்க வேண்டும் என்று ஆவ லுடன் இருந்தேன்.

ஆகவே, அன்றே என் சக ஊழியர்களுடன் நான் மோதி காரிக்குப் புறப்பட்டேன். அங்கே பாபு கோரக் பிரசாத் எங் களுக்குத் தம் வீட்டில் தங்க இடம் கொடுத்தார். இதனால் அவர் வீடு ஒரு சத்திரம்போல் ஆகிவிட்டது. நாங்கள் எல்லோ ரும் தங்குவதற்கு அந்த வீட்டில் இடம் போதவில்லை. மோதி காரிக்கு ஐந்து மைல் தூரத்தில் ஒரு விவசாயி துன்புறுத்தப்பட் டார் என்று அன்றே நாங்கள் கேள்விப்பட்டோம். அடுத்த நாள் காலையில் பாபு தரணீதர் பிரசாத்துடன் நான் அங்கே போய் அந்த விவசாயியைப் பார்ப்பது என்று முடிவு செய்தோம். அதன்படி யானைமீது ஏறி நாங்கள் அவ்விடத்திற்குப் புறப்பட் டோம். குஜராத்தில் மாட்டு வண்டி எப்படிச் சர்வ சாதாரணமோ அதேபோலச் சம்பாரணில் யானை சர்வ சாதாரணம். பாதி தூரங்கூடப் போயிருக்க மாட்டோம். அதற்குள் போலீஸ் சூப்பரின்டெண்டென்டிடமிருந்து வந்த ஓர் ஆள் எங்களைப் பிடித் தார். போலீஸ் சூப்பரின்டெண்டென்ட் தமது வந்தனத்தை எனக்கு அனுப்பியதாக அந்த ஆள் கூறினர். அவர் கூறியதன்

கருத்தை நான் அறிந்துகொண்டேன். போக இருந்த இடத்திற்குத் தரணீதர் பிரசாத்தை மாத்திரம் போகச் சொல்லிவிட்டு, அந்த ஆள் கொண்டுவந்திருந்த வாடகை வண்டியில் நான் ஏறிக் கொண்டேன். சம்பாரணிலிருந்து நான் போய்விட வேண்டும் என்ற உத்தரவைப் பிறகு அந்த ஆள் எனக்குச் சாதரா செய்து, என்னை நான் தங்கியிருந்த இடத்துக்குக் கொண்டுவந்து விட்டு விட்டார். உத்தரவைப் பெற்றுக்கொண்டதற்குக் கையெழுத்துப் போட்டுத் தரும்படி அவர் கேட்டார். அந்த உத்தரவுக்கு நான் கீழ்ப்படியப்போவதில்லை என்றும், என் விசாரணை முடியும் வரையில் நான் சம்பாரணிலிருந்து போகப் போவதில்லை என்றும் எழுதிக்கொடுத்தேன். அதன் பேரில் சம்பாரணைவிட்டுப் போய்விட வேண்டும் என்ற உத்தரவை மீறிவிட்ட குற்றத்திற்காக விசாரிப்பதற்கு மறுநாள் கோர்ட்டுக்கு வருமாறு எனக்குச் சம்மன் வந்தது.

அன்று இரவு முழுதும் விழித்திருந்து கடிதங்கள் எழுதினேன்;* பாபு பிரஜ்கிஷோர் பிரசாத்துக்கு அவசியமான யோசனைகளை யெல்லாம் கூறினேன்.

எனக்கு உத்தரவிடப்பட்டதும், சம்மன் வந்திருப்பதும் காட்டுத் தீப்போல் எங்கும் பரவிவிட்டன. மோதிகாரி இதற்கு முன்னால் என்றுமே கண்டறியாத காட்சியை அன்று கண்டது

---

* அன்றிரவு முழுதும் தூங்காமல் காந்திஜி செய்த வேலைகளைக் குறித்து பாபு ராஜேந்திர பிரசாத் தமது நூலில் கூறியிருப்பதாவது :

"அன்றிரவெல்லாம் மகாத்மா சிரமப்பட்டு வேலைகளையெல்லாம் செய்து முடித்தார். அவர் செய்த முதல் காரியம், அங்கே ஏற்பட்டிருக்கும் நிலைமையைப் பற்றித் தமது நண்பர்களுக்கும் சகாக்களுக்கும் தந்திமூலம் அறிவித்ததே. இதேவிதமாக எனக்கு ஒரு தந்தியும், ஸ்ரீ போலக்குக்கு ஒரு தந்தியும் கொடுத்தார். ஸ்ரீ போலக், மகாத்மா தென்னாப்பிரிக்காவி லிருந்தபோது அவருடனிருந்து வேலை செய்த நண்பர். அப்பொழுது அவர் அலகாபாத்தில் இருந்தார். வைசிராய் லார்டு செம்ஸ்போர்டுக்கும் ஒரு கடிதம் காந்திஜி எழுதினார். பிரிட்டிஷ் காலனி நாடுகளிலிருந்த இந்தியரின் நிலைமை பற்றிய பிரச்னை சம்பந்தமாக மகாத்மா அவரை முன்னாடியே அறிவார். இக்கடிதத்தில் இங்கே நடந்தது என்ன என்பதை விவரித்துவிட்டு, சர்க்காருடன் தமக்குள்ள நீண்ட காலத் தொடர்பை ஞாபகப்படுத்தி, தாம் செய்து வந்திருக்கும் பொதுஜன சேவையையும், இதற்காகத் தமக்குக் கேஸரி ஹிந்த் தங்கப் பதக்கம் கொடுக்கப்பட்டிருப்பதையும் குறிப்பிட்டார். இதைத் தமக்களித்த ஒரு பெரிய கௌரவம் என்று தாம் கருதுவதாகவும், ஆனால் சம்பாரணில் பொதுஜன சேவை செய்ய அனுமதிக்கும் அளவுக்குச் சர்க்காருக்குத் தம்மீது நம்பிக்கை இல்லாதபோது அப் பதக்கத்தைத் தம்முடன் வைத்துக்கொள்ளுவது சரியல்ல என்றே தாம் கருதுவதாகவும் அக்கடிதத்தில் எழுதினார். அப் பதக்கத்தைப் பத்திரமாக வைத்திருக்கும்படி ஒருவரிடம் ஒப்படைத்திருப்பதாகவும். அதை வைசிராய்க்கு அனுப்பிவிடும்படி அவருக்கு அறிவித்திருப்பதாகவும் தெரிவித்தார். பிறகு மகாத்மா தமது நண்பர்கள் பலருக்கும் கடிதம் எழுதி, இங்கே ஏற்பட்டிருக்கும் நிலைமையை விளக்கினார். கடைசியாக மறுநாள் விசாரணையின் போது கோர்ட்டில் தாம் வாசிப்பதற்காக ஒரு வாக்குமூலத்தையும் எழுதித் தயாரித்துக் கொண்டார். இந்த வேலைகளிலேயே இரவின் பெரும் பகுதி கழிந்துவிட்டது. தந்திகள், கடிதங்கள், வாக்குமூலம் ஆகியவைகளை எழுதியதோ டல்லாமல் அவைகளுக்குப் பிரதிகளையும் எழுதிக்கொண்டார்."

என்று சொன்னார்கள். கோரக் பாபுவின் வீட்டிலும், கோர்ட்டிலும் சொல்ல முடியாத அளவுக்கு ஒரே ஜனக்கூட்டம். அதிருஷ்டவசமாக என் வேலைகளையெல்லாம் இரவிலேயே செய்து முடித்துவிட்டதால் அப்பெருங் கூட்டத்தைச் சமாளிக்க என்னால் முடிந்தது. என் சகாக்கள் எனக்கு அதிக உதவியாக இருந்தார்கள். நான் போன இடத்திற்கெல்லாம் கூட்டம் பின்தொடர்ந்து வந்து கொண்டிருந்ததால் அக்கூட்டத்தை ஒழுங்கு படுத்தும் வேலையில் என் சகாக்கள் ஈடுபட்டிருந்தனர்.

கலெக்டர், மாஜிஸ்டிரேட், போலீஸ் சூப்பரின்டென்டென்ட் ஆகிய அதிகாரிகளுக்கும் எனக்கும் இடையே ஒருவகையான நட்பு ஏற்பட்டது. எனக்குப் பிறப்பிக்கப்பட்டிருந்த உத்தரவைச் சட்ட ரீதியில் நான் ஆட்சேபித்திருக்கலாம். ஆனால், அதற்கு மாறாக நான் அவற்றையெல்லாம் பெற்றுக்கொண்டேன். அதிகாரிகள் விஷயத்தில் நான் தவறில்லாமலும் நடந்துகொண்டேன். இதிலிருந்து தனிப்பட்டவகையில் தங்களை அவமதிக்கும் நோக்கம் எனக்கு இல்லை என்றும், அவர்களுடைய உத்தரவைச் சாத்விகமாக எதிர்க்கவே நான் விரும்புகிறேன் என்றும் அவர்கள் கண்டு கொண்டனர். இந்த வகையில் அவர்கள் கவலையற்றவர்களாயினர். என்னைத் தொந்தரவு செய்வதற்குப் பதிலாகக் கூட்டத்தை ஒழுங்குபடுத்துவதற்கு என் ஒத்துழைப்பையும், என் சகாக்களின் ஒத்துழைப்பையும் மகிழ்ச்சியுடன் பயன்படுத்திக் கொண்டார்கள். என்றாலும், தங்களுடைய அதிகாரம் ஆட்டம் கண்டுவிட்டது என்பதற்கு அது கண்கூடான சாட்சியாக அவர்களுக்கு இருந்தது. அந்த நேரத்தில் மக்கள், தண்டனையைப் பற்றிய பயத்தை யெல்லாம் இழந்துவிட்டார்கள். தங்கள் புதிய நண்பர்கள் காட்டிய அன்பின் சக்திக்கே பணிந்தனர்.

சம்பாரணில் யாருக்கும் என்னைத் தெரியாது என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். விவசாயிகள் எல்லோரும் ஒன்றுமே அறியாதவர்கள். சம்பாரண், கங்கைக்கு வடக்கில் வெகு தூரத்திலும், இமயமலை அடிவாரத்தில் நேபாளத்திற்குப் பக்கத்திலும் இருப்பதால், இந்தியாவின் மற்றப் பகுதியிலிருந்து துண்டிக்கப்பட்டிருக்கிறது. அப்பகுதியில் இருப்பவர்களுக்குக் காங்கிரஸைப் பற்றி ஒன்றுமே தெரியாது. காங்கிரஸ் என்ற பெயரைக் கேட்டிருப்பவர்கள் கூட, அதில் சேருவதற்கும், அதன் பெயரைச் சொல்லுவதற்குங்கூடப் பயந்து கொண்டிருந்தனர். இப்பொழுதோ, காங்கிரஸும் அதன் அங்கத்தினர்களும், காங்கிரஸின் பெயரால் அல்லாவிட்டாலும் அதைவிட இன்னும் அதிக உண்மையான வகையில் அப் பகுதியில் பிரவேசித்துவிட்டார்கள்.

காங்கிரஸின் பெயரால் எதையும் செய்ய வேண்டாம் என்று என் சக ஊழியர்களுடன் கலந்து ஆலோசித்து முடிவு செய்துவிட்டேன். நாங்கள் விரும்பியதெல்லாம், 'வேலையையே யன்றிப் பெயரை யல்ல; பொருளையே யல்லாமல் நிழலையல்ல. ஏனெனில்,

அரசாங்கத்திற்கும், அந்த அரசாங்கத்தை இஷ்டம் போல் ஆட்டி வந்தவர்களான தோட்ட முதலாளிகளுக்கும், காங்கிரஸ் என்ற பெயரே வேப்பங்காயாக, வெறுப்பாக இருந்தது. காங்கிரஸ் என்பதற்கு, வக்கீல்களின் தந்திர வாதங்கள், சட்டத்தில் இருக்கும் இடுக்குகளைக்கொண்டு சட்டத்தைப் பின்பற்ருதிருப்பது, வெடி குண்டுக்கு மற்ெருரு பெயர், அராஜகக் குற்றம், தந்திரம், நயவஞ்சகம் என்றெல்லாம் அவர்கள் பொருள் கற்பித்துக் கொண்டிருந்தனர். இந்த இரு தரப்பாரிடமிருந்தும் இந்தத் தப்பு அபிப்பிராயத்தைப் போக்க வேண்டும். ஆகவே, காங்கிரஸின் பெயரையே சொல்லுவதில்லை, காங்கிரஸ் என்ற ஸ்தாபனத்தைப் பற்றி விவசாயிகளுக்குத் தெரிவிப்பதில்லை என்று நாங்கள் முடிவு செய்துகொண்டோம். காங்கிரஸின் பெயரைவிட அதன் கருத்தை அறிந்து அவர்கள் நடந்துகொண்டாலேபோதும் என்று நாங்கள் எண்ணினோம்.

ஆகையால், காங்கிரஸின் சார்பாகப் பகிரங்கமாகவோ, ரகசியமாகவோ அங்கே வேலை செய்து, எங்கள் வருகைக்காக முன்னேற்பாடுகளைச் செய்துவைக்க அங்கே தூதர்கள் யாரும் அனுப்பப்படவில்லை. ஆயிரக்கணக்கான விவசாயிகளிடம் போய்ப் பிரசாரம் செய்வதற்கு வேண்டிய சக்தியும் ராஜ்குமார் சுக்லாவுக்கு இல்லை. அதுவரையில் அம் மக்களிடையே எந்தவிதமான ராஜீய வேலையும் நடந்தது கிடையாது. சம்பாரணுக்கு வெளியில் உலகம் இருக்கிறது என்பதே அவர்களுக்குத் தெரியாது. என்றாலும், ஆயுளெல்லாம் தங்களுக்கு நண்பனாக இருந்தவனைப் போல அவர்கள் என்னை வரவேற்றார்கள். இவ்விதம் விவசாயிகளை நான் சந்தித்ததில், கடவுளையும், அகிம்சையையும், சத்தியத்தையும் நேருக்கு நேராக நான் தரிசித்தேன் என்று கூறுவது அப்படியே உண்மையே யன்றி எவ்விதத்திலும் மிகைப்படுத்திக் கூறுவதாகாது.

இந்தத் தரிசனத்தை நான் பெறுவதற்கு என்னை உரியவனாக்கியது எது என்பதை நான் ஆராயும் போது, மக்களிடம் கொண்ட அன்பைத் தவிர வேறு எதுவும் அல்ல என்பதைக் காண்கிறேன். இந்த அன்பு, அகிம்சையில் நான் கொண்டிருக்கும் அசைக்க முடியாத உறுதியின் வெளித் தோற்றமே யன்றி வேறு அன்று.

சம்பாரணில் அந்த நாள், என் வாழ்க்கையில் மறக்கவே முடியாத நாள்; விவசாயிகளுக்கும் எனக்கும் அது மிகவும் முக்கியமான நாளாகும்.

சட்டப்படி விசாரணைக்கு உட்பட வேண்டியவன் நான். ஆனால், உண்மையில், குற்றவாளியின் கூண்டில் ஏறி நின்றது அரசாங்கமே என்று சொல்ல வேண்டும். என்னைப் பிடிக்க விரித்திருந்த வலையில் அரசாங்கம் சிக்கிக்கொள்ளும்படி செய்வதிலேயே கமிஷனர் வெற்றி பெற்றார்.

# 15

# வழக்கு வாபசாயிற்று

விசாரணை ஆரம்பமாயிற்று. அரசாங்க வக்கீல், மாஜிஸ்டிரேட் முதலிய அதிகாரிகள் எல்லாம் திகைத்துக் கொண்டிருந்தார்கள். என்ன செய்வது என்பதே அவர்களுக்குப் புரியவில்லை. வழக்கை ஒத்திவைத்துவிடும்படி மாஜிஸ்டிரேட்டை அரசாங்க வக்கீல் வற்புறுத்திக்கொண்டிருந்தார். ஆனால், நான் குறுக்கிட்டேன். சம்பாரணைவிட்டுப் போய்விட வேண்டும் என்ற உத்தரவை மீறிய குற்றத்தை நான் செய்திருப்பதாக ஒப்புக்கொள்ள விரும்புகிறேனாகையால், வழக்கை ஒத்திவைக்கவேண்டாம் என்று மாஜிஸ்டிரேட்டைக் கேட்டுக்கொண்டேன். பின்வருமாறு சுருக்கமாக என் வாக்குமூலத்தையும் படித்தேன் :

"கி.பு.கோ. 144-வது பிரிவின் கீழே பிறப்பிக்கப்பட்ட தடை உத்தரவை நான் மீறிவிட்டதாகத் தோன்றும் இக் கடுமையான நடவடிக்கையை நான் ஏன் மேற்கொண்டேன் என்பதைக் காட்ட, கோர்ட்டாரின் அனுமதியின் பேரில், சுருக்கமான ஒரு வாக்கு மூலத்தைக் கொடுக்க விரும்புகிறேன். உள்ளூர் அதிகாரிகளுக்கும் எனக்கும் உள்ள மாறுபட்ட அபிப்பிராயத்தைப் பற்றிய விஷயமே இது என்பதுதான் என் தாழ்மையான அபிப்பிராயம். ஜீவகாருண்ய தேசீய சேவை செய்வது என்ற நோக்கத்தின்பேரில் நான் நாட்டில் பிரவேசித்தேன். அவுரித்தோட்ட முதலாளிகள் தங்களை ஒழுங்காக நடத்தவில்லை என்று விவசாயிகள் திடமாகக் கூறுகின்றனர். வந்து உதவி செய்யவேண்டும் என்று அவர்கள் வற்புறுத்தி அழைத்ததன் பேரில் நான் இங்கே வந்தேன். பிரச்னையை ஆராய்ந்து பாராமல் நான் எந்தவிதமான உதவியையும் செய்துவிட முடியாது. ஆகையால், சாத்தியமானல் அரசாங்க நிர்வாகிகள், தோட்ட முதலாளிகள் இவர்களின் ஒத்துழைப்புடன் நிலைமையை ஆராயவே நான் வந்திருக்கிறேன். இதைத் தவிர எனக்கு வேறு எந்தவிதமான நோக்கமும் இல்லை. நான் வந்திருப்பதால் பொதுஜன அமைதிக்குப் பாதகம் ஏற்படும் என்றோ, உயிர்ச்சேதம் ஏற்பட்டுவிடும் என்றோ நான் நம்ப முடியாது. இத்தகைய விஷயங்களில் எனக்கு அதிக அனுபவம் உண்டு. ஆனால், அதிகாரிகளோ, வேறுவிதமாக எண்ணிவிட்டார்கள். அவர்களுக்குள்ள கஷ்டங்களையும் நான் முற்றும் உணருகிறேன். தங்களுக்குக் கிடைத்த தகவல்களைக்கொண்டே அவர்கள் நடவடிக்கை எடுக்க வேண்டியிருக்கிறது என்பதையும் ஒப்புக்கொள்ளுகிறேன். சட்டத்திற்குக் கட்டுப்பட்டு நடக்கும் பிரஜை நான். ஆகவே, எனக்குப் பிறக்கப்பட்டிருக்கும் உத்தரவுக்குக் கீழ்ப்படிய வேண்டும் என்பதே எனக்கு ஏற்படும் முதல் எண்ணம். ஆனல், நான் யாருக்காக வந்திருக்கிறேனே அவர்களுக்கு ஆற்ற வேண்டிய கடமையை நான் சட்டத்தை மீருமல் செய்துவிட முடியாது. அவர்களுக்கு நடுவில் நான் இருப்பதனலேயே அவர்களுக்கு நான் இப்பொழுது சேவை செய்ய முடியும் என்று உணருகிறேன். ஆகையால், இங்கிருந்து நானாக விலகிப் போய்விட முடியாது. இவ்வாறு முரண்பட்ட கடமைகள் ஏற்பட்டிருக்கும்போது அவர்களிடமிருந்து என்னை அப்புறப்படுத்திவிடும் பொறுப்பை நான் அதிகாரிகளின்மீதே போட முடியும். இந்தியாவின் பொதுவாழ்க்கையில் என்னைப் போன்றதோர் நிலையில் இருப்பவன், பிறர் பின்பற்றுவதற்கான

காரியத்தைச் செய்வதில் அதிக ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்பதை முற்றும் அறிந்தே இருக்கிறேன். நாங்கள் இன்று ஒரு சிக்கலான அரசியல் அமைப்பின் கீழ் வாழ்கிறோம். இதில் சுயமதிப்புள்ள ஒருவன், எனக்கு ஏற்பட்டிருப்பதைப் போன்ற சந்தர்ப்பத்தில், அனுசரிக்கக் கூடிய பத்திரமான, கௌரவமான முறை, நான் செய்ய முடிவு செய்திருப்பதைப்போன்று தடை உத்தரவை மீறி, அதற்குரிய தண்டனையை மனப்பூர்வமாக ஏற்றுக்கொள்ளுவதேயாகும்.

"இந்த வாக்குமூலத்தைக் கொடுக்க நான் முற்பட்டிருப்பதன் நோக்கம், எனக்குக் கொடுக்கவிருக்கும் தண்டனையை எந்த விதத்திலும் குறைத்துக் கொள்ளும் முயற்சி அன்று. தடை உத்தரவை மதிக்க நான் மறுத்திருப்பது, சட்டப்படி ஏற்பட்டிருக்கும் அதிகாரத்தினிடம் எனக்கு மதிப்பு இல்லாததனால் அல்ல; சட்டங்களுக்கெல்லாம் மேலான சட்டமாகிய மனச்சாட்சியின் குரலுக்குக் கீழ்ப்படிந்தே இவ்விதம் செய்கிறேன் என்பதைக் காட்டுவதற்கே யாகும்."

இவ்விதம் நான் வாக்குமூலம் கொடுத்துவிட்ட பிறகு விசாரணையை ஒத்திவைப்பதற்குக் காரணமில்லை. ஆனால், நான் இப்படி வாக்குமூலம் கொடுப்பேன் என்று எதிர்பாராததனால் மாஜிஸ்டிரேட், அரசாங்கவக்கீல் ஆகிய இருவருமே திடுக்கிட்டுப் போனார்கள். மாஜிஸ்டிரேட், தீர்ப்புக் கூறுவதை ஒத்திவைத்தார். இதற்கு மத்தியில் முழு விவரங்களையும் நான் வைசிராய்க்கும், பாட்னா நண்பர்களுக்கும், பண்டித மதன மோகன மாளவியாவுக்கும் மற்றவர்களுக்கும் தந்தி மூலம் அறிவித்தேன்.

தண்டனையை ஏற்றுக்கொள்ளுவதற்கு நான் கோர்ட்டில் ஆஜராவதற்கு முன்னாலேயே மாஜிஸ்டிரேட் எழுத்து மூலம் எனக்குத் தகவலை அனுப்பிவிட்டார். என் மீதுள்ள வழக்கை வாபஸ் வாங்கிக் கொள்ளும்படி கவர்னர் உத்தரவிட்டிருக்கிறார் என்று அதில் அவர் கூறியிருந்தார். கலெக்டரும் எனக்கு ஒரு கடிதம் எழுதினார். நான் நடத்தவிருந்த விசாரணையை நான் தாராளமாக நடத்திக்கொண்டு போகலாம் என்றும், எனக்கு வேண்டிய உதவி அதிகாரிகளிடமிருந்து கிடைக்கும் என்றும் அவர் தெரிவித்தார். இவ்வளவு விரைவில், இவ்விஷயம் இப்படி மகிழ்ச்சிகரமான வகையில் தீர்ந்துவிடும் என்று எங்களில் யாரும் எதிர்பார்க்கவே இல்லை.

கலெக்டர் ஸ்ரீ ஹேகாக்கைப் பார்க்கப் போனேன். அவர் நல்லவராகவும், நியாயத்தைச் செய்யவேண்டும் என்பதில் ஆவலுள்ளவராகவுமே காணப்பட்டார். பார்க்க விரும்பும் தஸ்தாவேஜுகளை நான் கேட்கலாம் என்றும், நான் விரும்பும்போதெல்லாம் தம்மை வந்து காணலாம் என்றும் அவர் கூறினார்.

இவ்விதம் சாத்விகச் சட்ட மறுப்பில் முதல் உதாரண பாடத்தை நாடு பெற்றது. சம்பாரணில் எங்கும் இதைக் குறித்தே பேசினர். பத்திரிகைகளும் தாராளமாக எழுதின. இதனால், நான் மேற்கொண்ட விசாரணைக்கு எதிர்பாராத விளம்பரமும் கிடைத்தது.

அரசாங்கம் நடுநிலைமை வகிக்க வேண்டியது என் விசாரணைக்கு மிகவும் அவசியமானது. ஆனால், பத்திரிகை நிருபர்களின் உதவியும், பத்திரிகைகளில் தலையங்கம் எழுதி ஆதரிப்பதும் இந்த விசாரணைக்குத் தேவையில்லை. உண்மையில் சம்பாரணில் இருந்த நிலைமை, மிக ஜாக்கிரதையாகக் கையாள வேண்டிய கஷ்டமான நிலைமை. ஆகையால் அதிகப்படியாகக் கண்டித்து எழுதி விடுவதோ, மிகைப்படுத்திவிடும் செய்திகளோ, நான் அடைய முற்பட்டிருந்த லட்சியத்திற்குத் தீமை விளைவித்து விடக் கூடும். எனவே, முக்கியமான பத்திரிகைகளின் ஆசிரியர்களுக் கெல்லாம் கடிதம் எழுதினேன். பிரசுரிக்க வேண்டியது அவசியம் என்று இருப்பதை நானே எழுதுவதாகவும், நிலைமையை அப்போதைக்கப்போது அவர்களுக்குத் தெரிவித்துக் கொண்டிருப்பதாகவும் நான் எழுதியதோடு, நிருபர்களை அனுப்பும் சிரமம் அவர்களுக்கு வேண்டாம் என்றும் கேட்டுக் கொண்டேன்.

நான் சம்பாரணில் இருப்பதை அங்கீகரித்துவிட்ட அரசாங்கத்தின் போக்கு, தோட்ட முதலாளிகளுக்கு அதிக அதிருப்தியை உண்டாக்கிவிட்டது என்பதை அறிவேன். அதிகாரிகள் பகிரங்கமாக எதுவும் சொல்ல முடியாவிட்டாலும், இந்த நிலைமையை அவர்களும் உள்ளூற விரும்பமாட்டார்கள் என்பதும் எனக்குத் தெரியும். ஆகையால், தவறான, தப்பான அபிப்பிராயத்தை உண்டாக்கிவிடக்கூடிய செய்திகள் பிரசுரமாவதால், அவர்களுடைய குரோதமே மேலும் அதிகமாகும். அவர்களுடைய ஆத்திரம் என்மீது பாய்வதற்குப் பதிலாக, இப்பொழுதே பயந்து நடுங்கிக்கொண் டிருக்கும் ஏழை விவசாயிகள்மீதே பாய்ந்துவிடும். அதோடு அங்கிருக்கும் நிலைமையைப்பற்றிய உண்மையைக் கண்டுகொள்ள நான் முற்பட்டிருப்பதற்கும் இடையூறு ஏற்படும்.

இவ்வளவு தூரம் முன்னெச்சரிக்கையுடன் நான் நடந்து கொண்டும், தோட்டக்காரர்கள் எனக்கு எதிராக விஷமமான கிளர்ச்சிகளையெல்லாம் செய்தார்கள். என்னைப்பற்றியும் என் சக ஊழியர்களைக் குறித்தும் எல்லாவிதமான புளுகுகளும் பத்திரிகைகளில் பிரசுரமாயின. ஆனால், நான் மிகவும் தீவிரமான முன்ஜாக்கிரதையுடன் இருந்ததாலும், மிகச் சிறிய விஷயத்தில் கூட உண்மையை நான் வற்புறுத்தி வந்ததாலும்,அவர்களுடைய பிரசாரம் அவர்களுக்கே தீமையாக முடிந்துவிட்டது.

பிரஜ்கிஷோர் பாபுவின் பெயரைக் கெடுத்துவிடத் தோட்ட முதலாளிகள் சகலவிதமான முயற்சிகளையும் செய்தார்கள். ஆனால், அவர்மீது எவ்வளவுக் கெவ்வளவு அவர்கள் அவதூறுகளைக் கூறினார்களோ அவ்வளவுக் கவ்வளவு அவருக்கு மக்களிடையே மதிப்பு அதிகரித்தது.

இப்படி அதிக ஜாக்கிரதையாகக் காரியம் செய்ய வேண்டியிருந்த நிலையில், மற்ற மாகாணங்களிலிருந்து தலைவர்கள்

யாரையும் அழைப்பது சரியல்ல என்று எண்ணினேன். தமக்குத் தகவல் அனுப்பியதும், நான் விரும்பும்போது உடனே வரத் தயாராக இருப்பதாகப் பண்டித மாளவியா எனக்கு வாக்குறுதி அனுப்பியிருந்தார். ஆனால், அவருக்கு நான் தொந்தரவு கொடுக்கவில்லை. இப் போராட்டம் ஒரு ராஜீயப் போராட்டம் ஆகிவிடாதபடி பார்த்துக்கொண்டேன். ஆனால், தலைவர்களுக்கும், முக்கியமான பத்திரிகைகளுக்கும் - பிரசுரிப்பதற்காக அல்ல- அவர்கள் அறிந்திருக்க வேண்டும் என்பதற்காக, அப்போதைக்கப்போது சமாசாரத்தை அறிவித்துவந்தேன். ராஜீயக் கலப்பில்லாத ஒரு போராட்டத்தின் முடிவு, ராஜீய பலனுடையதாகவே இருக்கலாம். ஆயினும், அப்போராட்டத்திற்கு ராஜீயத் தோற்றத்தை அளித்துவிடுவதனால், அதற்குத் தீமையையே உண்டாக்கிவிடுகிறோம் என்பதைப் பார்த்திருக்கிறேன். ஆகவே ராஜீயக் கலப்பில்லாமல் வைத்திருப்பதனாலேயே அதற்கு உதவி செய்ய முடியும். மக்களுக்குத் தன்னலமற்ற வகையில் எந்தத் துறையில் தொண்டு செய்தாலும்,முடிவில் அது நாட்டிற்கு ராஜீய வகையில் உதவி செய்வதாகவே ஆகும். இந்த உண்மைக்குச் சம்பாரண் போராட்டம் ஒரு ருசுவாகும்.

# 16

# வேலை முறைகள்

சம்பாரண் விசாரணையின் முழு விவரத்தையும் கூறுவதென்றால், சம்பாரண் விவசாயிகள் அச்சமயத்தில் இருந்த நிலைமையைப்பற்றிக் கூறுவதாகவே அது ஆகும். ஆனால், இந்த அத்தியாயங்களுக்கு அது பொருத்தம் இல்லாதது. சம்பாரண் விசாரணை, சத்தியம், அகிம்சை ஆகியவற்றில் ஒரு தைரியமான சோதனையேயாகும். அந்த நோக்கத்துடன் பார்க்கும்போது, எழுதத்தக்கவை என்று எனக்குத் தோன்றுகிறவைகளை மாத்திரமே நான் வாரந்தோறும் எழுதிக்கொண்டு வருகிறேன். இந்த விசாரணையைக் குறித்து மேலும் விவரமாக அறிய விரும்புவோர் ஹிந்தியில் ஸ்ரீ ராஜேந்திரப் பிரசாத் எழுதியிருக்கும் 'சம்பாரண் சத்தியாக்கிரகம்' என்ற நூலைப் பார்க்கவும். அதன் ஆங்கிலப் பதிப்பும் இப்பொழுது அச்சாகிக்கொண்டு வருகிறது என்பதை அறிகிறேன்.*

இந்த அத்தியாயத்திற்கு உரிய விஷயத்தை இனிக் கவனிப்போம். கோரக் பாபு தம் வீட்டைக் காலிசெய்துவிட்டு, வேறிடத்திற்குச் செல்லும்படி செய்யாமல் அவர் வீட்டிலேயே இந்த விசாரணையை நடத்திவருவது என்பது இயலாத காரியம். எங்களுக்குத் தங்கள் வீட்டை வாடகைக்குக் கொடுக்கும் அளவுக்கு மோதிகாரி மக்களுக்கு இன்னும் பயம் போய்விடவில்லை. என்று

* இந்நூலின் ஆங்கிலப் பதிப்பு, பிறகு வெளியாயிற்று. அது அகமதாபாத் நவஜீவன் டிரஸ்டிடம் இப்பொழுது கிடைக்கும்.

லும், பிரஜ்கிஷோர் பாபு சாமர்த்தியமாக ஒரு வீட்டைப் பிடித்து விட்டார். அதைச் சுற்றித் திறந்த இடம் நிறைய உண்டு. அவ் வீட்டிற்கு நாங்கள் மாறினோம்.

பணம் இல்லாமல் வேலையை நடத்திக்கொண்டு போவது என்பதும் சாத்தியமாக இல்லை. இதுபோன்ற வேலைக்குப் பண உதவி செய்யுமாறு பொதுமக்களுக்கு வேண்டுகோள் வெளி யிடும் வழக்கமும் இதுவரை இல்லை. பிரஜ்கிஷோரும் அவர் நண்பர்களும் முக்கியமான வக்கீல்கள். அவர்களே பணம் கொடுத்து வந்தார்கள். சமயம் நேர்ந்தபொழுதெல்லாம் நண்பர் களிடமிருந்தும் பெற்று வந்தனர். பணம் கொடுக்கக்கூடிய வசதி யில் தாங்களும், தங்களைப் போன்றவர்களுமே இருக்கும்போது, பண உதவி செய்யுமாறு பொதுமக்களை அவர்கள் எப்படிக் கேட்க முடியும்? அதுவே சரியான வாதம் என்று தோன்றியது. சம்பாரண் விவசாயிகளிடமிருந்து எந்தவிதமான பண உதவியை யும் ஏற்றுக்கொள்ளுவதில்லை என்று முடிவு செய்துகொண்டு விட்டேன். ஏனெனில், தவறான அபிப்பிராயம் ஏற்படுவதற்கு அது நிச்சயம் இடம் கொடுத்துவிடும். இந்த விசாரணையை நடத்துவதற்காக என்று பண உதவி கோரிப் பொதுவாகத் தேச மக்களுக்கு வேண்டுகோள் வெளியிடுவதில்லை என்றும் உறுதி செய்துகொண்டேன். ஏனெனில், அவ்விதம் தேசமக்களுக்கு வேண்டுகோள் விடுத்தால், இது அகில இந்திய விஷயமாகவும், ராஜீய விஷயமாகவும் ஆகிவிடக் கூடும். பம்பாயிலிருந்து நண் பர்கள் ரூ. 15,000 கொடுப்பதாகக் கூறினர். ஆனால், அவர்களுக்கு வந்தனம் கூறி, அதை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டேன். பிரஜ் கிஷோர் பாபுவின் உதவியைக் கொண்டு சம்பாரணுக்கு வெளி யிலிருக்கும் பணக்காரர்களான பீகாரிகளிடமிருந்து எவ்வளவு முடியுமோ அவ்வளவு வசூலித்துக்கொள்ளுவது, மேற்கொண்டும் தேவைப்பட்டால் ரங்கூனிலிருந்த என் நண்பர் டாக்டர் பி. ஜே. மேத்தாவிடம் கேட்பது என்று முடிவு செய்துகொண்டேன். எவ்வளவு தேவைப்பட்டாலும் அனுப்புவதாக டாக்டர் மேத்தா உடனே ஒப்புக்கொண்டார். இவ்விதம் பணத்தைப் பற்றிய கவ லையே எங்களுக்கு இல்லாது போயிற்று. சம்பாரணில் வறுமை நிலைமைக்கு ஏற்ற வகையில் மிகவும் சிக்கனமாகவே செலவு செய்வது என்று நாங்கள் உறுதி கொண்டதால், பெருந்தொகை எங்களுக்குத் தேவைப்படுவதற்கும் இல்லை. உண்மையில், பெருந்தொகை எங்களுக்குத் தேவைப்படவில்லை என்பதையே முடிவிலும் கண்டோம். மொத்தத்தில் மூவாயிரம் ரூபாய்க்கு மேல் நாங்கள் செலவு செய்யவில்லை என்றே எனக்கு ஞாபகம். நாங்கள் வசூலித்ததில் சில நூறு ரூபாய்களை மீதப்படுத்தியும் விட்டோம்.

ஆரம்ப நாட்களில் என்னுடைய சகாக்கள் விசித்திரமான வகையில் வாழ்க்கையை நடத்தி வந்தனர். இதைக் குறித்து நான் இடைவிடாமல் அவர்களைப் பரிகாசம் செய்துவந்தேன்.

அந்த வக்கீல்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு வேலைக்காரன், ஒரு சமையற்காரன். ஆகையால், ஒவ்வொருவருக்கும் தனித் தனிச் சமையல். இரவில் நடு நிசியில்கூடச் சாப்பிடுவார்கள். அவர்கள், தங்கள் செலவுக்குத் தாங்களே ஏற்பாடு செய்துகொண்ட போதிலும், கால நேர ஒழுங்கின்றி அவர்கள் நடந்துகொண்டு வந்தது எனக்கு ஒரே கவலையாக இருந்தது. நாங்கள் மிகவும் நெருங்கிய நண்பர்கள் ஆகிவிட்டதால், எங்களுக்குள் தவறான அபிப்பிராயங்கள் ஏற்பட்டுவிடும் என்பதற்கில்லை. நான் பரிகாசம் செய்ததை நல்ல உணர்ச்சியுடனேயே அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள். முடிவில், வேலைக்காரர்களை யெல்லாம் அனுப்பி விடுவது, எல்லாச் சமையல்களையும் ஒன்றாக்கிவிடுவது, குறிப்பிட்ட கால முறையை அனுசரிப்பது என்று ஒப்புக்கொண்டார்கள். அவர்கள் எல்லோருமே சைவ உணவு சாப்பிடுகிறவர்கள் அல்ல. ஆனால், இரண்டு வகைச் சமையல் என்றால், செலவு அதிகமாகும். ஆதலால் பொதுவான சைவச் சமையலே வைத்துக் கொள்ளுவது என்றும் தீர்மானமாயிற்று. சாப்பாடு எளிமையாக இருக்க வேண்டும் என்று வற்புறுத்துவது அவசியம் என்றும் கருதப்பட்டது.

இந்த ஏற்பாடுகள், எங்கள் செலவை அதிக அளவுக்குக் குறைத்துவிட்டன. அதோடு ஏராளமான நேரமும் உழைப்பும் மீதமாயின. இவை இரண்டும் நாங்கள் மேற்கொண்டிருந்த வேலைக்கு மிகவும் தேவையாகவும் இருந்தன. எங்களிடம் வாக்குமூலம் கொடுக்க விவசாயிகள் கூட்டங்கூட்டமாக வந்தார்கள். அப்படி வந்தவர்களுடன் அவர்களுடைய தோழர்களும் ஏராளமாக வந்தனர். நாங்கள் இருந்த வீட்டைச் சுற்றியிருந்த திறந்த வெளியிலும் தோட்டத்திலும் இருக்க இடம் போதாத வகையில் பெருங்கூட்டம் இருந்து வந்தது. என்னைத் தரிசிப்பதற்கென்று வருபவர்களிடமிருந்து என்னைக் காப்பதற்காக என் சகாக்கள் எடுத்துக்கொண்ட முயற்சி அடிக்கடி பயன் பெறுவதில்லை. ஆகையால், குறிப்பிட்ட நேரத்தில் என்னை தரிசனத்திற்குக் காட்சிப் பொருள்போல் வைக்கவேண்டி யிருந்தது. வாக்குமூலங்களை எழுதிக்கொள்ளுவதற்கு மாத்திரம் ஐந்து முதல் ஏழு தொண்டர்கள் வேண்டியிருந்தது. அப்படியும் வந்தவர்களில் சிலர் வாக்குமூலம் கொடுக்க முடியாமலே மாலையில் வீடு திரும்ப வேண்டியதாயிற்று. இந்த வாக்குமூலங்கள் எல்லாமே முக்கியமானவை அல்ல; முன்னால் சிலர் சொன்னவற்றையே சிலர் திரும்பத் திரும்பச் சொல்லியிருந்தார்கள். என்றாலும், தாங்களும் வாக்குமூலம் கொடுக்காவிட்டால், அம் மக்கள் திருப்தியடையமாட்டார்கள். இவ் விஷயத்தில் அவர்களுடைய உணர்ச்சியை நான் பாராட்டினேன்.

வாக்குமூலங்களைப் பதிவு செய்துகொண்டவர்கள், சில விதிகளை அனுசரிக்க வேண்டும். ஒவ்வொரு விவசாயியையும் சரியானபடி குறுக்கு விசாரணை செய்து, அந்தச் சோதனையில்

திருப்திகரமாக இல்லாதவர்களின் வாக்குமூலங்கள் நிராகரிக்கப்பட்டன. இவ்விதம் செய்வதில் அதிக நேரம் செலவானபோதிலும் பதிவான வாக்குமூலங்களில் பெரும்பாலானவை சிறிதும் ஆட்சேபிக்க முடியாதவைகளாயின.

இந்த வாக்குமூலங்களைப் பதிவு செய்யும்போது, ரகசியப் போலீஸைச் சேர்ந்த ஓர் அதிகாரி எப்பொழுதும் அங்கே இருந்து கொண்டிருப்பார். அவர் அவ்விதம் அங்கில்லாதபடி நாங்கள் தடுத்திருக்க முடியும். ஆனால், ரகசியப் போலீஸ் அதிகாரிகள் இருப்பதை நாங்கள் பொருட்படுத்தாமல் இருந்துவிடுவதோடு, அவர்களை மரியாதையாகவும் நடத்தி, அவர்களுக்குத் தெரிவிக்கக் கூடிய தகவல்களையெல்லாம் தெரிவிப்பது என்றும் ஆரம்பத்திலிருந்தே நாங்கள் முடிவு செய்திருந்தோம். இதனால், எங்களுக்கு எந்தவிதமான தீங்கும் நேர்ந்துவிடவில்லை. இதற்கு மாறாக, ரகசியப் போலீஸ் அதிகாரிகளுக்கு முன்னாலேயே வாக்குமூலங்கள் பதிவு செய்யப்படுகின்றன என்பது, குடியானவர்களை மேலும் பயம் இல்லாதவர்களாக்கியது. ரகசியப் போலீஸைக் குறித்து விவசாயிகளுக்கு இருந்த அளவுகடந்த பயம் ஒரு புறத்தில் அவர்கள் மனத்தில் இருந்து விரட்டப்பட்டதோடு மற்றொரு புறத்தில் அந்த அதிகாரிகள் இருந்ததால் வாக்குமூலத்தை மிகைப்படுத்திக் கூறிவிடாதிருப்பதற்கும் விவசாயிகளுக்கு அது இயற்கையாகவே ஒரு தடையாகவும் இருந்தது. மக்களை வலையில் சிக்கவைத்து விடுவது ரகசியப் போலீஸ் நண்பர்களின் வேலை. ஆகவே, விவசாயிகள் எச்சரிக்கையுடன் இருப்பது அவசியமாயிற்று.

தோட்ட முதலாளிகளுக்கு எரிச்சலை உண்டாக்க நான் விரும்பவில்லை. ஆனால், கௌரவமாக நடந்துகொள்ளுவதன் மூலம் அவர்கள் மனத்தைக் கவர நான் விரும்பினேன். ஆகையால் எந்தத் தோட்ட முதலாளிகள்மீது கடுமையான குற்றச்சாட்டுகள் கூறப்பட்டனவோ அவர்களுக்கு எழுதுவது, அவர்களைச் சந்தித்துப் பேசுவது என்று வைத்துக்கொண்டேன். தோட்டக்காரர்கள் சங்கத்தினரையும் சந்தித்தேன். விவசாயிகளின் குறைகளை அவர்களுக்கு எடுத்துக் கூறியதோடு தோட்ட முதலாளிகளின் கருத்தையும் தெரிந்துகொண்டேன். இந்தத் தோட்ட முதலாளிகளில் சிலர் என்னை வெறுத்தார்கள்; சிலர் என்னை அலட்சியம் செய்தனர்; மற்றுஞ் சிலரோ, என்னை மரியாதையுடன் நடத்தினார்கள்.

## 17

## என் சகாக்கள்

பிரஜ்கிஷோர் பாபுவும் ராஜேந்திர பாபுவும் இணையே இல்லாத ஒரு ஜோடி. அவர்களுக்கு இருந்த அபார பக்தியின் காரணமாக, அவர்களுடைய உதவி இல்லாமல் நான் ஓர் அடியும்

எடுத்துவைக்க முடியாமல் இருந்தது. அவர்களுடைய சீடர்கள் அல்லது சகாக்களான சம்பு பாபு, அனுக்கிரக பாபு, தரணி பாபு, ராம நவமி பாபு இவர்களும் மற்ற வக்கீல்களும் எப்பொழுதும் எங்களுடன் இருந்து வந்தனர். விந்தியா பாபுவும் ஜனக்தாரி பாபுவும் அப்போதைக்கப்போது வந்து எங்களுக்கு உதவி செய்வார்கள். இவர்கள் எல்லோரும் பீகாரிகள். இவர்களுக்கு இருந்த முக்கியமான வேலை, விவசாயிகளிடமிருந்து வாக்குமூலங்களைப் பதிவு செய்துகொள்ளுவது.

பேராசிரியர் கிருபளானியும் எங்களோடு வந்து சேர்ந்துகொள்ளாமல் இருந்துவிட முடியாது. அவர் சிந்திக்காரர். என்றாலும், பீகாரில் பிறந்ததைவிட உண்மையான பீகாரியாக அவர் இருந்தார். வேறு மாகாணத்தில் குடியேறி, அந்த மாகாணத்திற்குத் தங்களை அர்ப்பணம் செய்துகொண்டுவிடும் ஊழியர்கள் சிலரையே நான் கண்டிருக்கிறேன். அப்படிப்பட்டவர்கள் சிலரில் ஆச்சாரிய கிருபளானியும் ஒருவர். வேறு மாகாணத்தைச் சேர்ந்தவர் என்று யாருமே உணர முடியாதபடி அவர் செய்து வந்தார். என்னுடைய பிரதான வாசற்காப்பாளர் அவர். என்னைத் தரிசிப்பதற்கென்று வருபவர்களிடமிருந்து என்னைப் பாதுகாப்பதை அவர் அப்போதைக்குத் தமது வாழ்க்கையின் லட்சியமாகவும் முடிவாகவும் கொண்டிருந்தார். அவருக்கு வற்றாத நகைச்சுவை உண்டு. அந்த நகைச்சுவையின் உதவியைக் கொண்டும், சில சமயங்களில் தமது அகிம்சையோடு கூடிய மிரட்டல்களைக் கொண்டும் ஜனங்களைத் தடுத்துவந்தார். இரவானதும் அவர் தமது உபாத்திமைத் தொழிலை மேற்கொண்டுவிடுவார். தமது சகாக்களுக்குத் தமது சரித்திரப் படிப்பையும் ஆராய்ச்சிகளையும் எடுத்துக்கூறி உற்சாகப்படுத்துவார். அங்கே வருகிறவர்களில் பயங்காளியாக இருக்கும் யாரையும் வீரர் ஆக்கிவிடுவார்.

எனக்கு அவசியமாகும்போது வந்து உதவி செய்வதாக வாக்குறுதி யளித்திருந்தவர்களில் மௌலானா மஜ்ருல் ஹக்கும் ஒருவர். மாதம் இரண்டொரு முறை அவர் வந்து எங்களைப் பார்த்துவிட்டுப் போவார். அவர் அந்தக் காலத்தில் வாழ்ந்த ஆடம்பர, ஆர்ப்பாட்ட வாழ்க்கைக்கும் இன்றுள்ள அவருடைய எளிய வாழ்க்கைக்கும் அதிக வித்தியாசம் உண்டு. அவர் எங்களுடன் பழகிய விதம், அவரும் எங்களில் ஒருவரே என்று நாங்கள் எண்ணும்படி செய்தது. ஆனால், புதிதாக வருபவர்களுக்கு, அவருடைய நாகரிகப் பழக்கங்களைப் பார்த்துவிட்டு வேறுவிதமான எண்ணமே ஏற்படும்.

பீகாரைப் பற்றிய அனுபவம் எனக்கு அதிகமானதும், கிராமக் கல்வி இருந்தாலன்றி நிரந்தரமான வகையில் வேலை எதுவும் செய்வது சாத்தியமில்லை என்ற உறுதியான முடிவுக்கு வந்தேன். விவசாயிகளின் அறியாமையோ மிகப் பரிதாபகரமாக இருந்தது. அவர்கள் தங்கள் குழந்தைகளை ஒன்று, இஷ்டம் போல் திரியவிட்டு வந்தார்கள்; இல்லையானால், காலையிலிருந்து இரவு வரை

யில், தினத்திற்கு இரண்டு செப்புக் காசுக்காக, அவுரித் தோட்டங்களில் உழைக்கும்படி செய்துவந்தார்கள். அந்த நாட்களில் ஓர் ஆண் தொழிலாளிக்கு இரண்டரை அணுவுக்கு மேல் கூலி இல்லை; பெண் தொழிலாளிக்கு ஒன்றரை அணுவுக்கு மேல் இல்லை. நான்கு அணுச் சம்பாதிப்பதில் யாராவது வெற்றி பெற்று விடுவார்களானல், அவர் மிகுந்த அதிருஷ்டசாலி என்றே கருதப்படுவார்.

என்னுடைய சகாக்களுடன் கலந்து ஆலோசித்துவிட்டு ஆறு கிராமங்களில் ஆரம்பப் பாடசாலைகளை ஆரம்பிப்பது என்று முடிவு செய்தேன். கிராமத்தினருக்கு நாங்கள் விதித்த நிபந்தனைகளில் ஒன்று, உபாத்தியாயர்களுக்கு இருக்க இடத்திற்கும் சாப்பாட்டிற்கும் அவர்கள் ஏற்பாடு செய்ய வேண்டும், மற்றச் செலவுகளை நாங்கள் பார்த்துக்கொள்ளுகிறோம் என்பதாகும். கிராம மக்களிடம் பணம் என்பதே கிடையாது. என்றாலும், அவர்களால் உணவுப் பொருள்களைத் தாராளமாகக் கொடுக்க முடியும். உண்மையில் தானியங்களும் மற்றப் பொருள்களும் கொடுக்கத் தயாராயிருப்பதாக முன்கூட்டியே அவர்கள் தங்கள் சம்மதத்தைக் கூறிவிட்டனர்.

ஆனல், உபாத்தியாயர்களுக்கு எங்கே போவது என்பதே பெரிய பிரச்னையாக இருந்தது. சம்பளம் என்பதே இல்லாமல் சாப்பாட்டுக்கு வேண்டியதை மாத்திரமே பெற்றுக்கொண்டு வேலை செய்ய, உள்ளூரில் உபாத்தியாயர்களைக் கண்டுபிடிப்பது கஷ்டமாக இருந்தது. சாதாரணமாக உபாத்தியாயர்களிடம் குழந்தைகளை ஒப்படைக்கவே கூடாது என்பது என் கருத்து. உபாத்தியாயர்களின் ஒழுக்கத் திடம்தான் முக்கியமே யன்றி அவர்களுடைய இலக்கியத் தகுதி முக்கியம் அன்று.

ஆகவே, தொண்டு செய்ய முன்வரும் உபாத்தியாயர்கள் வேண்டும் என்று பொதுக் கோரிக்கை ஒன்றை வெளியிட்டேன். உடனே பலர் முன்வந்தார்கள். பாபா சாஹிப் ஸோமன், புண்டலீகர் ஆகிய இருவரையும் ஸ்ரீ கங்காதர ராவ் தேஷ் பாண்டே அனுப்பினர். பம்பாயிலிருந்து ஸ்ரீமதி அவந்திகாபாய் கோகலே வந்தார். புனவிலிருந்து ஸ்ரீமதி ஆனந்திபாய் வைஷம்பாயண் வந்தார். சோட்டாலால், சுரேந்திரநாத், என் மகன் தேவதாஸ் ஆகியவர்களை வருமாறு ஆரசிமத்திற்கு எழுதினேன். இதற்குள் மகாதேவ தேசாயும், நரஹரி பரீக்கும் தத்தம் மனைவியர்களுடன் என்னோடு இருந்து வேலை செய்ய வந்துவிட்டார்கள். கஸ்தூரிபாயும் இவ் வேலைக்காக அழைக்கப்பட்டாள். இவ்விதம் நல்ல தொண்டர் கூட்டம் சேர்ந்துவிட்டது. ஸ்ரீமதி அவந்திகா பாயும் ஸ்ரீமதி ஆனந்தி பாயும் போதிய அளவு படித்தவர்கள். ஆனல், ஸ்ரீமதி துர்க்கா தேசாய்க்கும் ஸ்ரீமதி மணிபென் பரீக்குக்கும் குஜராத்தி மாத்திரமே எழுதப் படிக்கத் தெரியும். கஸ்தூரி பாய்க்கு அதுவும் தெரியாது. இப் பெண்கள் குழந்தைகளுக்கு ஹிந்தியில் எப்படிப் போதிப்பது?

இலக்கணமும், எழுதப் படிக்கவும், கணக்குப் போடவும் குழந்தைகளுக்குச் சொல்லிக்கொடுப்பது அவ்வளவு முக்கிய மல்ல என்றும், சுத்தமாக இருக்க வேண்டியதையும், நல்ல பழக்க வழக்கங்களையும் அவர்களுக்குப் போதிப்பதே முக்கியம் என்றும் அவர்களுக்கு விளக்கிச் சொன்னேன். எழுத்துக்களைச் சொல்லிக் கொடுப்பதில்கூட, அவர்கள் நினைக்கிறபடி, குஜராத்தி, ஹிந்தி, மராத்தி மொழிகளின் எழுத்துக்களுக்கு வித்தியாசம் அதிகம் இல்லை. ஆரம்ப வகுப்புகளைப் பொறுத்தவரையில், எழுத்துக்களையும் எண்களையும் சொல்லிக்கொடுப்பது கஷ்ட மான காரியம் அல்ல என்றும் விளக்கினேன். இதன் பலன் என்னவென்றால், இந்தப் பெண்கள் சொல்லிக்கொடுத்த வகுப் புக்களே மிகவும் வெற்றிகரமானவைகளாக இருந்தன. இந்த அனுபவத்தினால் அவர்களுக்கு நம்பிக்கையும், வேலையில் சிரத் தையும் உண்டாயின. ஸ்ரீமதி அவந்திகா பாயின் பள்ளிக்கூடம், மற்றப் பள்ளிக்கூடங்களுக்கு உதாரணமாக விளங்கியது. அவர் தமது வேலையில் முழு மனத்துடன் ஈடுபட்டார். தமக்கு இருந்த அரிய ஆற்றல்களை அவர் இவ் வேலையில் உபயோகித்தார். இப் பெண்களின் மூலம் கிராமப் பெண்களை நாங்கள் ஓரளவுக்கு அணுக முடிந்தது.

ஆனால், ஆரம்பக் கல்வியை அளிப்பதோடு நின்றுவிட நான் விரும்பவில்லை. கிராமங்களில் சுகாதாரம் மிகவும் சீர்கேடான நிலையில் இருந்தது; சந்துகளிலெல்லாம் ஒரே ஆபாசம். கிணறு களைச் சுற்றிலும் ஒரே சேறும் குப்பை நாற்றமும். முற்றங்களோ சகிக்க முடியாத அளவுக்கு ஒரே ஆபாசமாக இருந்தன. சுத்த மாக இருக்க வேண்டும் என்பதில் முதியவர்களுக்குப் போதனை மிகவும் அவசியமாக இருந்தது. எல்லோருமே பல வகையான சரும நோய்களால் பீடிக்கப்பட் டிருந்தனர். ஆகையால், சாத் தியமான வரையில் சுகாதார சம்பந்தமான வேலையைச் செய்து, மக்கள் வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் புகுந்து வேலை செய்வது என்று முடிவு செய்தோம்.

இந்த வேலைக்கு டாக்டர்கள் தேவைப்பட்டனர். காலஞ் சென்ற டாக்டர் தேவின் சேவையைக் கொடுத்து உதவுமாறு இந்திய ஊழியர் சங்கத்தைக் கேட்டுக்கொண்டேன். நாங்கள் இருவரும் சிறந்த நண்பர்கள். ஆறு மாதங்கள் வந்திருந்து சேவை செய்வதாக அவர் உடனே ஒப்புக்கொண்டார். உபாத் தியாயர்களான ஆண்களும், பெண்களும்கூட அவருக்குக் கீழி ருந்து வேலை செய்ய வேண்டும்.

தோட்ட முதலாளிகளிடம் அம்மக்களுக்கு இருந்த குறைகள் சம்பந்தமாகவோ, ராஜீய விஷயங்களிலோ தலையிடவே வேண் டாம் என்று அவர்கள் எல்லோருக்கும் தெளிவாக அறிவித்திருந் தோம். ஜனங்களில் யாருக்காவது ஏதாவது குறை இருந்தால், அவர்களை என்னிடம் அனுப்பிவிட வேண்டும். தங்களுக்கு விதித்

திருக்கும் வேலைக்கு அப்பாற்பட்டதில் தலையிடக்கூடாது என்றும் தெரிவித்திருந்தோம். இந்தக் கட்டளைகளை யெல்லாம் அற்புதமான விசுவாசத்துடன் அவர்கள் நிறைவேற்றி வைத்தார்கள். கட்டுத் திட்டங்களுக்கு மீறிய காரியம் ஒன்ருவது நடந்ததாக எனக்கு நினைவு இல்லை.

# 18

# கிராமங்களுக்குள் பிரவேசம்

சாத்தியமான வரையில் ஓர் ஆண், ஒரு பெண் இவர்களின் மேற்பார்வையில் ஒவ்வொரு பள்ளிக்கூடத்தையும் வைத்தோம். இந்தத் தொண்டர்களே வைத்திய உதவி செய்து, சுகாதாரத்தையும் கவனித்துக்கொள்ள வேண்டும். கிராமப் பெண்களிடையே பெண்கள் மூலம் சேவை செய்ய வேண்டும்.

மிகவும் சாதாரணமானதே வைத்திய உதவி. விளக்கெண்ணெய், கொயினை, கந்தகக் களிம்பு ஆகியவையே தொண்டர்களிடம் கொடுத்த மருந்துகள். ஒரு நோயாளிக்கு அழலை படிந்திருந்தாலோ, மலச்சிக்கல் இருப்பதாக அவர் கூறினாலோ, அவருக்கு விளக்கெண்ணெய் கொடுக்க வேண்டும், சுரம் இருந்தால், முதலில் விளக்கெண்ணெய் கொடுத்துவிட்டுப் பிறகு கொயினை கொடுக்க வேண்டும். கட்டிச் சிரங்கோ, சொறி சிரங்கோ இருந்தால், பாதிக்கப்பட்டிருந்த இடத்தில் நன்ருக அலம்பிவிட்டுக் கந்தகக் களிம்பைத் தடவவேண்டும். மருந்தை வீட்டுக்குக் கொண்டு போக நோயாளி யாரும் அனுமதிக்கப்படுவதில்லை. நோய் சிக்கலானதாக இருந்தால், டாக்டர் தேவின் ஆலோசனையைக் கேட்டுக்கொள்ள வேண்டும். டாக்டர் தேவ், வாரத்தில் குறிப்பிட்ட ஒரு நாளில் ஒவ்வொரு முக்கியமான கிராமத்திற்கும் போய் வருவார்.

இந்த எளிய வைத்திய உதவியை ஏராளமான மக்கள் பெற்று வந்தனர். கிராம மக்களுக்கு இருந்த நோய்கள் மிகச் சிலவே. நிபுணர்களின் உதவியின்றிச் சாதாரணமான சிகிச்சையினாலேயே குணமாகிவிடக் கூடியவை அவை. இதை நினைவில் வைத்துக்கொண்டால் எங்களுடைய வேலைத்திட்டம் விசித்திரமாகத் தோன்றுவதற்கில்லை. மக்களைப் பொறுத்த வரையில் அவர்களுக்கு இதனால் அற்புதமான வகையில் நன்மை ஏற்பட்டது.

சுகாதாரத்தைப் போதிப்பதே மிகவும் கஷ்டமாக இருந்தது. எதையும் தாங்களே செய்துகொள்ள மக்கள் தயாராயில்லை. வயல்களில் வேலை செய்யும் தொழிலாளர்கள்கூட, தங்கள் குப்பைகளைத் தாங்களே கூட்டி எடுத்துச் சுத்தம் செய்துகொள்ள விரும்புவதில்லை. ஆனால், டாக்டர் தேவ் எளிதில் உற்சாகம் இழந்துவிடக் கூடியவர் அன்று. மற்றக் கிராமங்களுக்கெல்லாம்

உதாரணமாகும் வகையில் ஒரு கிராமத்தை அதிகச் சுத்தமாக வைத்திருப்பதில் அவரும் தொண்டர்களும் தங்கள் முழுச் சக்தியையும் உபயோகித்தனர். சாலைகளையும் வீட்டு வாசல்களையும் பெருக்கிச் சுத்தம் செய்தனர். கிணறுகளைச் சுத்தம் செய்து, அவற்றிற்குப் பக்கத்திலிருந்த குண்டு குழிகளை யெல்லாம் மண் போட்டுச் சமப்படுத்தினார்கள். இவ் வேலைகளைச் செய்யத் தங்களுக்குள்ளே தொண்டர்களைத் திரட்டிக்கொள்ளுமாறு அன்போடு கிராமவாசிகளைத் தூண்டினர். சில கிராமங்களில் ஜனங்கள் வெட்கமடைந்து, தாங்களும் இவ் வேலையில் ஈடுபட்டுவிடும்படி செய்தனர். மற்றக் கிராமங்களிலோ, மக்கள் அதிக உற்சாகத்துடன் வேலை செய்தார்கள். என் மோட்டார் ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குச் செல்லுவதற்கான சாலைகளைக் கூடப் போட்டுவிட்டார்கள்! இவ் விதமான இனிய அனுபவங்களுடன் மக்களின் அசிரத்தையினால் உண்டான கசப்பான அனுபவங்களும் இல்லாது போகவில்லை. இத்தகைய வேலைகளைச் செய்வது தங்களுக்கு அருவருப்பாக இருக்கிறதென்று கிராமவாசிகளில் சிலர் கூறிவிட்டதும் எனக்கு ஞாபகம் இருக்கிறது.

ஓர் அனுபவத்தைக் குறித்து இங்கே குறிப்பிடுவது மிகையாகாது. இதைப்பற்றி இதற்கு முன் நான் பல கூட்டங்களிலும் சொல்லியிருக்கிறேன். பீதிகர்வா என்பது ஒரு சிறிய கிராமம். அங்கே எங்கள் பள்ளிக்கூடம் ஒன்று இருந்தது. அதற்குப் பக்கத்திலுள்ள இன்னும் ஒரு சிறிய கிராமத்திற்கு நான் போயிருந்தபோது, சில பெண்கள் மிகவும் அழுக்காயிருந்த ஆடைகளை உடுத்தியிருந்ததைக் கண்டேன். அப்பெண்கள் தங்கள் ஆடைகளை ஏன் துவைத்துக் கட்டுவதில்லை என்று கேட்கும்படி என் மனைவியிடம் சொன்னேன். அவள், அவர்களோடு பேசினாள். அதில் ஒரு பெண் என் மனைவியைத் தனது குடிசைக்குள் அழைத்துச் சென்று பின்வருமாறு கூறினாள்: "வேறு ஆடைகள் வைத்திருக்கும் பெட்டியோ, அலமாரியோ இங்கே இருக்கிறதா பாருங்கள். எனக்கு இருப்பது நான் கட்டியிருக்கும் இந்தப் புடவை ஒன்றுதான்; இதை எப்படித் துவைப்பது? மகாத்மாவிடம் எனக்கு இன்னொரு புடவை கொடுக்கச் சொல்லுங்கள். அப்பொழுது தினமும் நான் குளித்துத் துணிகளைச் சுத்தமாக வைத்திருப்பதாக வாக்குறுதி யளிக்க முடியும்."

இந்தக் குடிசையிலிருந்த இந்த நிலைமை அபூர்வமானது அன்று. இந்தியக் கிராமங்கள் பலவற்றில் இதே போன்ற நிலைமையைக் காணலாம். இந்தியாவில் எண்ணற்ற குடிசைகளில் மக்கள் எந்தவிதமான தட்டுமுட்டுச் சாமான்களோ, மாற்றிக் கட்டிக் கொள்ளுவதற்கு வேறு துணியோ இல்லாமல் தங்கள் மானத்தை மறைப்பதற்கு வெறும் கந்தையுடனேயே வாழ்ந்து வருகின்றனர்.

வேறோர் அனுபவத்தையும் இங்கே குறிப்பிடுகிறேன். சம்பாரணில் மூங்கிலுக்கும் நாணலுக்கும் குறைவே இல்லை. பீதி

கர்வாவில் பள்ளிக்கூடத்திற்கு மூங்கிலேயும் நாணலேயும் கொண்டே குடிசை போட்டிருந்தார்கள். யாரோ ஒருவர்-பக்கத்துத் தோட்ட முதலாளியின் ஆளாக இருக்கக்கூடும்-ஒரு நாள் இரவு குடிசைக்குத் தீ வைத்து விட்டார். எரிந்துபோன குடிசைக்குப் பதிலாக மூங்கிலேயும் நாணலேயுமே கொண்டு மற்ருெர் குடிசை கட்டுவது உசிதமன்று என்று கருதப்பட்டது. ஸ்ரீ சோமனும் கஸ்தூரி பாயுமே அப்பள்ளிக்கூடத்தை நடத்தி வந்தார்கள். பள்ளிக்கூடத்திற்குச் செங்கல் கட்டடமே கட்டிவிடுவதென்று ஸ்ரீ சோமன் முடிவு செய்தார். உழைப்பில் அவர் காட்டிய உற்சாகம் மற்றவர்களேயும் தொற்றிக்கொண்டு விட்டதால், பலர் அவருடன் உழைத்தார்கள். சீக்கிரத்திலேயே ஒரு செங்கல் வீடு தயாராகிவிட்டது. இக் கட்டடம் கொளுத்தப்பட்டு விடும் என்ற பயமே பிறகு இல்லே.

இவ்விதம் தொண்டர்கள், தங்கள் பள்ளிக்கூடங்கள், சுகாதார வேலே, வைத்திய உதவி ஆகியவைகளினுல் கிராம மக்களின் நம்பிக்கையையும் மதிப்பையும் பெற்றனர். அவர்களிடையே இத் தொண்டர்களுக்கு நல்ல செல்வாக்கும் ஏற்பட்டது.

ஆனுல், இந்த ஆக்க வேலேயை நிரந்தரமான அடிப்படையில் அமைத்துவிட வேண்டும் என்று எனக்கிருந்த நம்பிக்கை நிறைவேறவில்லே என்பதை வருத்தத்துடன் நான் ஒப்புக்கொள்ளவே வேண்டும். தொண்டர்கள் எல்லோரும் அங்கே கொஞ்ச காலத்திற்கே ஊழியம் செய்ய வந்தார்கள். ஊதியமின்றி நிரந்தரமாக அங்கிருந்து வேலே செய்யப் பீகாரிலிருந்து தொண்டர்கள் கிடைக்கவில்லே. சம்பாரணில் என் வேலே முடிந்ததுமே, இதற்கு மத்தியில் எனக்காக உருவாகி வந்த வெளிவேலே, என்னே இழுத்துக்கொண்டு போய்விட்டது. என்றுலும், சம்பாரணில் சில மாதங்கள் செய்த வேலே ஆழ வேர்க்கொண்டு விட்டதால் அதன் பயனே இன்றுகூட ஏதாவது ஒருவகையில் அங்கே காணலாம்.

## 19

# கவர்னர் நல்லவராகும்போது

முந்திய அத்தியாயங்களில், நான் விவரித்திருப்பதைப் போல் ஒரு பக்கத்தில் சமூக சேவை நடந்துகொண்டிருக்க, மற்ருெரு பக்கத்தில் விவசாயிகளின் குறைகளேப்பற்றிய வாக்குமூலங்களேத் தயார் செய்யும் வேலேயும் வேகமாக நடந்து கொண்டு வந்தது. ஆயிரக்கணக்கான வாக்குமூலங்கள் பதிவாயின. இதனுல், பலன் இல்லாது போகாது. வாக்குமூலம் கொடுக்க விவசாயிகள் அதிகமாக வர வர, தோட்ட முதலாளிகளுக்குக் கோபம் அதிகமாயிற்று. என்னுடைய விசாரணேக்கு விரோதமாகத் தங்களால் ஆனதை யெல்லாம் செய்ய அவர்கள் முற்பட்டனர்.

ஒரு நாள் பீகார் அரசாங்கத்தினிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. ‘உங்கள் விசாரணை நீண்ட காலத்திற்கு வளர்ந்துகொண்டு போய்விட்டது. அதை முடித்துவிட்டு, இப்பொழுது நீங்கள் பீகாரைவிட்டுப் போய்விடலாமல்லவா?’ என்ற முறையில் அக்கடிதம் இருந்தது. கடிதம் மரியாதையாகவே எழுதப்பட் டிருந்தாலும், அதன் பொருள் என்றும் தெளிவானதே.

இதற்கு நான் பதில் எழுதினேன். விசாரணை நீண்ட காலம் நடப்பதாகவே இருக்க முடியும் என்றும், மக்களுக்குக் கஷ்ட நிவாரணம் அளிப்பதில் அது முடிந்தாலன்றிப் பீகாரை விட்டுப் போய்விடும் நோக்கம் எனக்கு இல்லை என்றும் அதில்கூறினேன். விவசாயிகளின் குறைகள் உண்மையானவை என்பதை ஒப்புக்கொண்டு, அவர்களுக்குக் கஷ்ட நிவாரணம் கிடைக்கும்படி அரசாங்கம் செய்யலாம்; அல்லது சர்க்காரே உடனே இதில் விசாரணையை நடத்துவதற்கான அவசியத்தை விவசாயிகள் நிரூபித்து விட்டார்கள் என்பதை அரசாங்கம் ஒப்புக்கொள்ளலாம்; இவ்விதம் செய்வதன் மூலம் என் விசாரணையை அரசாங்கம் முடித்து விடலாம் என்றும் அக் கடிதத்தில் குறிப்பிட்டேன்.

லெப்டினென்ட் கவர்னர் ஸர் எட்வர்டு கெயிட், தம்மை வந்து பார்க்குமாறு எனக்கு எழுதினார். விசாரணைக்கு ஏற்பாடு செய்ய விரும்புவதாக அவர் கூறியதோடு விசாரணைக் கமிட்டியில் ஓர் அங்கத்தினராக இருக்கும்படியும் என்னை அழைத்தார். கமிட்டியின் மற்ற அங்கத்தினர்கள் இன்னார் என்பதைக்கேட்டுத் தெரிந்துகொண்டேன். என் சக ஊழியர்களையும் கலந்து ஆலோசித்தேன். பிறகு ஒரு நிபந்தனையின் பேரில் கமிட்டியில் இருக்கச் சம்மதித்தேன். அந்த விசாரணை நடக்கும்போது என் சகாக்களைக் கலந்து ஆலோசித்துக்கொள்ள எனக்கு உரிமை இருக்க வேண்டும்; கமிட்டியில் அங்கத்தினராக நான் இருப்பதனால், விவசாயிகளின் கட்சியை எடுத்துக் கூறி வாதிக்கும் உரிமையை நான் இழந்தவன் ஆகமாட்டேன் என்பதை அரசாங்கம் ஒப்புக்கொள்ள வேண்டும்; இந்த விசாரணையின் பலன் எனக்குத் திருப்தி யளிக்காது போகுமானால், பிறகு விவசாயிகள் என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்பதைக் குறித்து அவர்களுக்கு ஆலோசனை கூறவும், வழி காட்டவும் எனக்கு உரிமை இருக்க வேண்டும். இவைகளே நான் கேட்ட நிபந்தனைகள். ஸர் எட்வர்டு கெயிட், இந்த நிபந்தனைகள் நியாயமானவை, சரியானவை என்று கூறி அவற்றை ஏற்றுக்கொண்டார். விசாரணையைக் குறித்தும் அறிக்கை வெளியிட்டார். காலஞ்சென்ற ஸர் பிராங்க் ஸ்லையை அக் கமிட்டியின் தலைவராக நியமித்தார்.

விவசாயிகளின் கட்சி நியாயமானது என்று கமிட்டியினர் கண்டனர். அவர்களிடமிருந்து தோட்ட முதலாளிகள் பணம்

பறித்து வந்தது, சட்ட விரோதமானது என்று கமிட்டி கண்டு, அதில் ஒரு பகுதியைத் தோட்ட முதலாளிகள் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும் என்றும் கமிட்டி சிபார்சு செய்தது. சட்டத்தின் மூலம் 'தீன் கதியா' முறையை ரத்துச் செய்துவிட வேண்டும் என்றும் கமிட்டி கூறியது.

கமிட்டி, ஒருமனமான ஓர் அறிக்கையை வெளியிடும்படி பார்ப்பதிலும், கமிட்டியின் சிபார்சுகளை அனுசரித்து விவசாயிகள் மசோதா நிறைவேறும்படி செய்வதிலும் ஸர் எட்வர்டு கெயிட் பெரும் பங்கு எடுத்துக்கொண்டார். அவர் உறுதியோடு இல்லாமல் இருந்திருந்தால், இவ் விஷயத்தில் தமது சாமர்த்தியம் முழுவதையும் உபயோகிக்காமல் இருந்திருந்தால், கமிட்டியின் அறிக்கையே ஒரு மனமானதாக இருந்திருக்காது. விவசாயிகள் சட்டம் நிறைவேறியும் இருக்காது. தோட்ட முதலாளிகளுக்கிருந்த சக்தி அளவற்றது. கமிட்டியின் அறிக்கையையும் பொருட்படுத்தாமல், மசோதாவை விடாப்பிடியாக எதிர்த்து வந்தனர். ஆனால், ஸர் எட்வர்டு கெயிட் கடைசி வரையில் உறுதியுடன் இருந்தார். கமிட்டியின் சிபார்சுகளை யெல்லாம் நிறைவேற்றி வைத்தார்.

ஒரு நூற்றாண்டுக் காலம் இருந்து வந்த 'தீன் கதியா' முறை இவ்விதம் ஒழிக்கப்பட்டுவிட்டது. அதோடு, தோட்ட முதலாளிகளின் ராஜ்யமும் ஒழிந்தது. நெடுகவும் நசுக்கப்பட்டுக் கிடந்த விவசாயிகள், இப்பொழுது சுதந்திர மடைந்தனர். அவுரிக் கறையை அழித்துவிடவே முடியாது என்ற மூட நம்பிக்கையும் பொய்யாகிவிட்டது.

இன்னும் பல பள்ளிக்கூடங்களை வைத்து, சரியானபடி கிராமங்களில் புகுந்து வேலை செய்து, சில ஆண்டுகளுக்கு ஆக்க வேலையைத் தொடர்ந்து செய்துகொண்டு வர வேண்டும் என்பது என் ஆவல். இதற்கு வேண்டிய அடிப்படையும் போட்டாகிவிட்டது. ஆனால், இதற்கு முன்னால் அடிக்கடி நடந்திருப்பதைப் போல, என்னுடைய திட்டங்கள் நிறைவேறும்படி அனுமதிக்கக் கடவுளுக்கு விருப்பமில்லை. விதி வேறுவிதமாக முடிவு செய்து, வேறிடத்தில் பணியை மேற்கொள்ள என்னை அங்கே விரட்டிவிட்டது.

# 20

# தொழிலாளருடன் தொடர்பு

கமிட்டியில் என் வேலை முடிந்தும் முடியாமலும் இருக்கும் போதே ஸ்ரீ மோகன்லால் பாண்டியா, ஸ்ரீ சங்கர்லால்பரீக் இவர்களிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. கேடா ஜில்லாவில் விளைவு இல்லாது போய்விட்டது என்றும், நிலவரியைக் கொடுக்க முடியாமல் இருக்கும் விவசாயிகளுக்கு நான் வழி காட்ட

வேண்டும் என்றும் அவர்கள் எழுதியிருந்தார்கள். அந்த இடத்துக்கு நேரில் போய் விசாரிக்காமல் யோசனை கூறும் விருப்பமோ, ஆற்றலோ, தைரியமோ எனக்கு இல்லை.

அதே சமயத்தில் அகமதாபாத் தொழிலாளர் நிலைமையைக் குறித்து ஸ்ரீமதி அனுசூயா பாயிடமிருந்து ஒரு கடிதமும் வந்தது. தொழிலாளர் பெற்று வந்த கூலி மிகக் குறைவு; கூலி உயர்வு செய்ய வேண்டும் என்று தொழிலாளர் நீண்ட காலமாகக் கிளர்ச்சி செய்துகொண்டு வந்தனர். முடிந்தால், அவர்களுக்கு வழிகாட்டி நடத்த வேண்டும் என்ற விருப்பம் எனக்கு இருந்தது. இந்தச் சிறு காரியத்தையும் அவ்வளவு தூரத்தில் இருந்து கொண்டு நடத்தும் துணிவு எனக்கு இல்லை. ஆகவே, முதல் வாய்ப்புக் கிடைத்ததுமே அகமதாபாத்துக்குப் போனேன். இந்த இரு விஷயங்களையும் சீக்கிரமாகவே முடித்துவிட்டு, சம்பாரணில் ஆரம்பிக்கப்பட்டிருந்த ஆக்க வேலையைக் கண்காணிக்க நான் அங்கே திரும்பிவிட முடியும் என்று நம்பியிருந்தேன்.

ஆனல், நான் விரும்பியவாறு காரியங்கள் துரிதமாக நடைபெறவில்லை. நான் சம்பாரணுக்குத் திரும்பவும் போக முடியாது போயிற்று. இதன் பலனைப் பள்ளிக்கூடங்கள் ஒவ்வொன்ருக மூடப்பட்டுவிட்டன. என் சக ஊழியர்களும் நானும் எத்தனையோ ஆகாயக் கோட்டைகளைக் கட்டி வந்தோம். ஆனல், அவைகளெல்லாம் அப்போதைக்கு மறைந்து போய்விட்டன.

நாங்கள் கட்டிய ஆகாயக் கோட்டைகளில் ஒன்று, கிராம சுகாதாரத்துடனும் கல்வியோடும் சம்பாரணில் பசுப் பாதுகாப்பு வேலையையும் கவனிப்பது என்பது. அங்கே பசுப் பாதுகாப்பும், ஹிந்திப் பிரசாரமும் மார்வாரிகளுக்கே தனி உரிமையான வேலையாக இருந்து வந்ததை என் பிரயாணங்களின்போது கண்டேன். நான் பேதியாவுக்குச் சென்றபோது, ஒரு மார்வாரி நண்பர் தமது தருமசாலையில் நான் தங்குவதற்கு இடம் கொடுத்திருந்தார். அவ்வூரிலிருந்த மற்ற மார்வாரிகள், தங்களுடைய கோசாலையை (பால் பண்ணையை) எனக்குக் காட்டி, அதில் எனக்குச் சிரத்தை ஏற்படும்படி செய்தனர். பசுப் பாதுகாப்பைக் குறித்து எனக்குத் திட்டமான எண்ணங்கள் அப்பொழுதே தோன்றிவிட்டன. இந்த வேலையைக் குறித்து அன்று ஏற்பட்ட எண்ணமே இன்றும் எனக்கு இருந்து வருகிறது. பசுப் பாதுகாப்பு என்பதில் கால் நடை வளர்ப்பு, பசுவின் இனத்தைச் சிறந்த தாக்குவது, காளை மாடுகளை ஜீவகாருண்யத்துடன் நடத்துவது, சிறந்த முறையில் பால் பண்ணைகளை அமைப்பது ஆகியவைகளும் அடங்கியிருக்கின்றன என்பதே என் அபிப்பிராயம். இந்த வேலையில் தங்களுடைய முழு ஒத்துழைப்பையும் அளிப்பதாக மார்வாரி நண்பர்கள் வாக்களித்திருந்தார்கள். ஆனல், சம்பாரணில் நான் நிலைத்துத் தங்க முடியாது போய்விட்டதால், இத் திட்டத்தை நிறைவேற்ற முடியவில்லை.

பேதியாவில் கோ சாலை இன்னும் இருக்கிறது. ஆனல், அது மற்றவர்களுக்கு உதாரணமாக இருக்கக்கூடிய பால் பண்ணையாக இல்லை. சம்பாரண் காளை மாடுகளிடம் அவைகளின் சக்திக்கு மிஞ்சி இன்னும் வேலை வாங்கியே வருகிருர்கள். ஹிந்துக்கள் என்று சொல்லிக்கொள்ளுவோர், அப் பரிதாபகரமான பிராணிகளை இன்னும் அடித்துத் துன்புறுத்தித் தங்கள் மதத்திற்கே அவமானத்தை உண்டுபண்ணுகின்றனர்.

இந்த வேலை நிறைவேருது போனது எனக்கு எப்பொழுதுமே மன வருத்தத்தை அளித்து வருகிறது. சம்பாரணுக்கு நான் போகும்போதெல்லாம் அங்குள்ள மார்வாரி, பீகாரி நண்பர்கள், கண்ணியமாக இதற்காக என்னைக் கண்டிக்கின்றனர், திடீரென்று கைவிட்டுவிட நேர்ந்த அவ் வேலைத் திட்டத்தை எண்ணி நானும் பெருமூச்சு விடுகிறேன்.

படிப்புச் சம்பந்தமான வேலை மாத்திரம் ஏதேனும் ஒருவகையில் இன்னும் பல இடங்களில் நடந்துகொண்டுதான் வருகிறது. ஆனல், பசுப் பாதுகாப்பு வேலை நன்ருக வேர் கொள்ளவில்லையாகையால், உத்தேசித்திருந்தபடி அவ்வேலை முன்னேறவில்லை.

கேடா விவசாயிகளின் பிரச்னை விவாதிக்கப்பட்டு வந்த சமயத்திலேயே அகமதாபாத் மில் தொழிலாளரின் விஷயத்தை நான் எடுத்துக்கொண்டுவிட்டேன். நான் மிகவும் தரும சங்கடமான நிலையிலேயே இருந்தேன். ஆலைத் தொழிலாளரின் கட்சி மிகவும் நியாயமானது. ஸ்ரீமதி அனுசூயா பாய் தமது சொந்தச் சகோதரரும், மில் சொந்தக்காரர்களின் சார்பாக அப்போராட்டத்தை நடத்தி வந்தவருமான ஸ்ரீ அம்பாலால் சாராபாயை எதிர்த்துப் போராடவேண்டியதாயிற்று. ஆலை முதலாளிகளுடன் நான் சிநேகமாகப் பழகிவந்தேன். இதனுலேயே அவர்களுடன் போராடுவது என்பது அதிகக் கஷ்டமாக இருந்தது. அவர்களுடன் கலந்தாலோசித்தேன். இத் தகராறை மத்தியஸ்தர் முடிவுக்கு விட்டுவிடுமாறு அவர்களைக் கேட்டுக் கொண்டேன். ஆனல், மத்தியஸ்தர் முடிவுக்கு விடுவது என்ற கொள்கையை அங்கீகரிக்கவே அவர்கள் மறுத்துவிட்டார்கள்.

ஆகையால், வேலை நிறுத்தம் செய்யும்படி தொழிலாளருக்கு நான் ஆலோசனை கூற வேண்டிய தாயிற்று. அப்படி அவர்கள் வேலை நிறுத்தம் செய்வதற்கு முன்னல், அவர்களுடனும் அவர்களுடைய தலைவர்களோடும் நான் மிகவும் நெருங்கிய தொடர்பு வைத்துக்கொண்டேன். வேலை நிறுத்தம் வெற்றிகரமாவதற்கு உள்ள கீழ்க்கண்ட நிபந்தனைகளையும் அவர்களுக்கு விளக்கிச் சொன்னேன் :

1. எந்த நிலைமையிலும் பலாத்காரத்தில் இறங்கிவிடவே கூடாது.

2. கட்டுப்பாட்டை மீறி வேலைக்குப் போகிறவர்களைத் தொந்தரவு செய்யக்கூடாது.

3. பிறர் இடும் பிச்சையை எதிர்பார்த்திருக்கக் கூடாது.

4. வேலை நிறுத்தம் எவ்வளவு காலம் நீடிப்பதாக இருந்தாலும் உறுதியுடன் இருக்க வேண்டும். யோக்கியமாக வேறு எந்த வகையிலாவது உடலை உழைத்து வேலை நிறுத்தக் காலத்தில் ஜீவனத்தை நடத்திக்கொள்ள வேண்டும்.

வேலை நிறுத்தத் தலைவர்கள், இந்த நிபந்தனைகளை நன்கு அறிந்துகொண்டு ஏற்றுக்கொண்டார்கள். தங்கள் கோரிக்கைகள் அங்கீகரிக்கப்படும் வரையில், அல்லது இத் தகராறை மத்தியஸ்தர் முடிவுக்கு விட மில்காரர்கள் சம்மதிக்கும் வரையில், தாங்கள் வேலைக்குத் திரும்புவதில்லை என்று தொழிலாளர்கள் பொதுக்கூட்டத்தில் பிரதிக்ஞை செய்துகொண்டனர்.

இந்த வேலை நிறுத்தத்தின் போதுதான் ஸ்ரீ வல்லபபாய் பட்டேலையும்* ஸ்ரீ சங்கரலால் பாங்கரையும்† நான் நன்றாக அறியலானேன். ஸ்ரீமதி அனுசூயா பாயை இதற்கு முன்னாலேயே எனக்கு நன்றாகத் தெரியும்.

---

* வல்லபபாய் பட்டேல்: இவர் குஜராத்தில் மகாத்மாவின் வலக்கரம் எனலாம். கேடா, பர்டோலி, போர்சாத் சத்தியாக்கிரகங்களில் தலைமை தாங்கி நடத்தினார். மகாத்மாவுடன் சிறையில் இருந்திருக்கிறார். காந்தீயத்தில் ஆழ்ந்த பற்றுள்ளவர். 1931–இல் கராச்சியில் கூடிய காங்கிரசின் தலைவராயிருந்தார். காங்கிரஸ் காரியக் கமிட்டியில் நீண்ட காலம் அங்கம் வகித்தார். சுதந்திர இந்தியாவில் உதவிப் பிரதமராகவும், உள்நாட்டிலாகா, ராஜ்ய இலாகா மந்திரியாகவும் இருந்திருக்கிறார். சுதேச சமஸ்தானங்களையும், ஐந்தே நாட்களில் ஹைதராபாத்தையும் இந்தியாவுடன் இணைத்து விட்ட பெருமை இவரையே சாரும். காந்திஜியை முதன் முதலில் தாம் சந்தித்ததைப் பற்றி இவரே கூறுகிறார்:

''இங்கிலாந்திலிருந்து திரும்பியதும் வக்கீல் தொழிலில் கவனம் செலுத்திப் பணம் சம்பாதிப்பதில் கருத்தாயிருந்தேன். நாட்டு அரசியல் நிலையை ஆராய்ந்து அறிந்துகொண்டு வந்தேன். நமது லட்சியம் கைகூடுவதற்கான வகையில் நம்மை நடத்திச் செல்லத்தக்க தலைவர்கள் இல்லை என்பதை உணர்ந்தேன். நமது தலைவர்களெல்லாம் வாய்ப் பேச்சில் வல்லவர்களேயொழிய செயல் திறன் உள்ளவர்கள் அல்ல. ஆகையால், அவர்கள் என்னைக் கவரவில்லை. மாலைப் பொழுதைப் பாரிஸ்டர்கள் கிளப்பில் சீட்டாடுவதில் கழித்தேன்; சுருட்டும் சிகரெட்டும் புகைப்பதிலேயே இன்பம் கண்டேன். எங்களிடம் தலைவர்கள் பிரசங்கம் செய்ய வந்தால், அவர்களை மடக்கி, நையாண்டி செய்வதில் மகிழ்ச்சி அடைந்தேன். ஒரு நாள் காந்திஜி எங்களுடைய கிளப்பிற்கு வந்தார். அவரைப் பற்றி நான் பத்திரிகைகளில் படித்திருந்தேன். என்னுடைய வழக்கமான அலட்சிய பாவமுள்ள நையாண்டி முறையில் அவர் சொற்பொழிவுக்குச் செவி மடுத்தேன். அவர் பேசிக்கொண்டிருந்தார். நான் புகை பிடித்துக் கொண்டிருந்தேன். கடைசியாக இந்த மனிதர் வீண் பேச்சுப் பேசுபவரல்ல என்பதை உணர்ந்தேன். இவர் செயல் புரியப் போகிறார் என்பதை அறிந்துகொண்டேன். இவர் விஷயத்தில் ஆர்வம் கொண்டேன். இயன்ற பொழுதெல்லாம் இவரைச் சந்தித்து வந்தேன்.

"........கண்ணை மூடிக்கொண்டு நான் அவரைப் பின்பற்றுகிறேன் எனச் சிலர் என்னைக் கேலி செய்கிறார்கள். அதை நான் பொருட்படுத்தவில்லை. அவரது தலைமையை ஏற்றபின் அவரைப் பின்பற்றுவது வேடிக்கையல்ல என்பதை நான் அறிவேன். என் முகத்தில் மக்கள் காறி உமிழும் சமயம் வந்தாலும், முகம் கடுக்காமல் அதைப் பொறுத்துக்கொள்ள வேண்டும் என்பதையும் நான் அறிவேன். நான் செய்த முடிவு பற்றி என்றும் வருந்தியதில்லை. காந்திஜி வழி காட்டுகிறார். அவருடைய ஞானத்தில் பூரண நம்பிக்கையுடன் நான் அவரைப் பின்பற்றுகிறேன்.''

சாபர்மதி நதிக்கரையில் ஒரு மரத்தின் நிழலில் தினமும் வேலை நிறுத்தக்காரர்களின் பொதுக்கூட்டத்தை நடத்தி வந்தோம். இக் கூட்டங்களுக்குத் தொழிலாளர் ஆயிரக்கணக்கில் வருவார்கள். என்னுடைய பேச்சில், அவர்களுடைய பிரதிக்ஞையைக் குறித்தும், அமைதியையும் சுயமதிப்பையும் காப்பாற்ற வேண்டிய பொறுப்பைப் பற்றியும் அவர்களுக்கு ஞாபக மூட்டி வந்தேன். இத் தொழிலாளர்கள் தினமும் நகரின் தெருக்களில், 'பிரதிக்ஞையை அனுசரியுங்கள்' என்று எழுதிய கொடியுடன் அமைதியாக ஊர்வலம் வருவார்கள்.

வேலை நிறுத்தம் இருபத்தொரு நாட்கள் நடந்தது. வேலை நிறுத்தம் நடந்துகொண் டிருந்தபோது, அப்போதைக் கப்போது ஆலை முதலாளிகளைச் சந்தித்துத் தொழிலாளருக்கு நியாயத்தைச் செய்யும்படி கேட்டுக்கொண்டேன். "எங்களுக்கும் ஒரு பிரதிக்ஞை உண்டு" என்று அவர்கள் சொன்னார்கள். அவர்கள் மேலும் கூறியதாவது: "எங்களுக்கும் தொழிலாளருக்கும் இருக்கும் உறவு, பெற்றோருக்கும் குழந்தைகளுக்கும் உள்ள உறவைப் போன்றது. ஆகவே, மூன்றாமவர்கள் இதில் தலையிடுவதை நாங்கள் எவ்வாறு சகிக்க முடியும்? மத்தியஸ்தத்திற்கு இதில் எங்கே இடமிருக்கிறது?"

# 21

# ஆசிரமத்தில் கண்ணோட்டம்

தொழிலாளர் தகராறைப்பற்றி நான் மேலே விவரிப்பதற்கு முன்னால், ஆசிரம விஷயத்தைக் குறித்தும் ஒரு கண்ணோட்டம் செலுத்துவது முக்கியமாகும். சம்பாரணில் நான் இருந்த சமயம் முழுவதிலும், ஆசிரமம் என் மனத்தைவிட்டு விலகினதே இல்லை. அவசரமாகச் சில சமயம் அங்கே போய்ப் பார்த்து விட்டும் வருவேன்.

---

மகாத்மா மரணம் அடைவதற்குச் சில நிமிஷங்களுக்கு முன்பு கூட சர்தார் பட்டேல், அவருக்குப் போலீஸ் பாதுகாப்பு அளிப்பதற்கு அனுமதி கோரினார். அதை மகாத்மா மறுத்தார். தேசத்திற்காக உழைத்து உழைத்து உயிர் நீத்த மாவீரரே வல்லபபாய்.

சர்தார் வல்லபபாய், அகமதாபாத் முனிசிபல் சபைத் தலைவராகப் பல்லாண்டு பணி புரிந்திருக்கிறார். 1923, மே மாதத்தில் நாகபுரிக் கொடி சத்தியாக்கிரகம் தொடங்கி அதில் வெற்றி பெற்றார். 1921-இல் அகமதாபாத்தில் நடந்த காங்கிரசுக்கு வரவேற்புக் கழகத் தலைவராயிருந்தார். 'இந்தியாவின் இரும்பு மனிதர்' என இவரை அயல் தேச அரசியல் விமர்சகர்கள் கூறுவார்கள்.

† சங்கர்லால் பாங்கர்: காந்திஜியின் ஆரம்ப சகாக்களில் ஒருவர். ஸ்ரீ பாங்கர் பல்லாண்டுகள் அகில இந்திய சர்க்கா சங்க காரியதரிசியா யிருந்தார். 'எங் இந்தியா' பதிப்பாசிரியராகவும் இருந்தார். இப்போது காலமாகிவிட்டார்.

அச்சமயம் ஆசிரமம் அகமதாபாத்திற்கு அருகிலுள்ள கோச்ராப் என்ற சிறு கிராமத்தில் இருந்தது. இக்கிராமத்தில் பிளேக் நோய் உண்டாயிற்று. அதனால் ஆசிரமக் குழந்தைகளுக்கு ஆபத்து ஏற்படக்கூடும் என்று கண்டேன். ஆசிரமத்திற்குள் சுத்தத்தின் விதிகளை என்னதான் ஜாக்கிரதையாக அனுசரித்தாலும், சுற்றிலும் உள்ள சுகாதாரக் கேடான நிலைமையினால், ஆசிரமத்தில் இருப்பவர்கள் பாதிக்கப்படாமல் இருந்துவிட முடியாது. கோச்ராப் மக்கள் இந்தச் சுகாதார விதிகளை அனுசரிக்கும்படி செய்யும் நிலையிலோ, வேறு வகையில் அவர்களுக்குச் சேவை செய்யும் நிலையிலோ நாங்கள் அப்பொழுது இல்லை. ஆசிரமம், பட்டணத்திற்கும் கிராமத்திற்கும் கொஞ்சம் தூரத்திலேயே இருக்க வேண்டும்; என்றாலும், இந்த இரண்டுக்கும் போக முடியாத தொலை தூரத்திலும் இருக்கக் கூடாது என்பது எங்கள் கொள்கை. என்றாவது ஒரு நாள், எங்களுக்குச் சொந்தமான நிலத்திலேயே ஆசிரமத்தை அமைப்பது என்றும் தீர்மானித்திருந்தோம்.

கோச்ராப்பைவிட்டுப் போய்விட வேண்டும் என்பதற்கு அங்கே பரவிய பிளேக் நோயே போதுமான முன்னெச்சரிக்கை என்று எனக்குத் தோன்றிற்று. அகமதாபாத் வர்த்தகரான ஸ்ரீ பூஞ்சாபாய் ஹிராசந்துக்கு ஆசிரமத்துடன் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. புனிதமான, தன்னலமற்ற எண்ணத்தின் பேரில் அவர் பல விஷயங்களிலும் எங்களுக்குச் சேவை செய்து வந்தார். அகமதாபாத் காரியங்களில் அவருக்கு அதிக அனுபவம் உண்டு. எங்களுக்குத் தகுந்த இடம் தேடித் தருவதாக அவர் முன்வந்தார். இடம் தேடிக்கொண்டு நானும் அவருடன் கோச்ராப்புக்குத் தெற்கிலும் வடக்கிலுமாகப் போனேன். மூன்று நான்கு மைல் வடக்கில் ஓர் இடத்தைப் பார்க்குமாறு அவருக்கு யோசனை சொன்னேன். பிறகு அவர், இப்பொழுது ஆசிரமம் இருக்கும் இடத்தைத் தேர்ந்தெடுத்தார். இந்த இடம், சாபர்மதி மத்திய சிறைக்கு அருகாமையில் இருந்தது, எனக்கு முக்கியமாகக் கவர்ச்சியளித்தது. சிறைப்படுவதே சாதாரணமாகச் சத்தியாக்கிரகிகளின் கதி என்று கருதப்பட்டதால், இந்த இடம் எனக்குப் பிடித்திருந்தது. பொதுவாகச் சுற்றுப்புறங்கள் சுத்தமாக இருக்கும் இடங்களையே சிறைச்சாலைகளை அமைப்பதற்குத் தேர்ந்தெடுக்கிறார்கள் என்பதையும் நான் அறிவேன்.

எட்டு நாட்களில் அந்த நிலத்திற்குக் கிரய சாசனம் பூர்த்தியாகிவிட்டது. அந்த நிலத்தில் எந்தவிதக் கட்டடமோ, மரமோ இல்லை. நதிக்கரையில் இருக்கிறது, ஏகாந்தமான இடத்தில் இருக்கிறது என்பவை முக்கியமான சௌகரியங்கள். முதலில் கூடாரங்கள் போட்டுக்கொண்டு அங்கே வசிக்க ஆரம்பித்துவிடுவது என்று முடிவு செய்தோம். நிரந்தரமான கட்டடம் கட்டும்வரையில் சமையலுக்கு ஒரு தகரக் கொட்டகை போட்டுக்கொள்ளுவது என்றும் தீர்மானித்தோம்.

ஆசிரமம் மெள்ள வளர்ந்துகொண்டு போயிற்று. ஆண்கள், பெண்கள், குழந்தைகள் உள்பட அப்பொழுது நாங்கள் நாற்பது பேர். எல்லோருக்கும் பொதுவான ஒரு சமையல். ஆசிரமத்தைப் புது இடத்திற்குக் கொண்டுபோய்விடுவது என்ற யோசனை என்னுடையது. வழக்கம் போலவே அந்த யோசனையை மகன்லால் நிறைவேற்றி வைத்தார். குடியிருக்க நிரந்தரமான வீடுகளைக் கட்டி முடிப்பதற்கு முன்னால், நாங்கள் எவ்வளவோ சிரமப்பட வேண்டியதாயிற்று. மழைக் காலம் வரும் சமயம். சாப்பாட்டுக்கு வேண்டிய சாமான்களை, நான்கு மைல்களுக்கு அப்பால் இருக்கும் அகமதாபாத்திலிருந்து வாங்கிவர வேண்டும். அந்நிலம் வெகு காலமாகத் தரிசாகக் கிடந்த தாகையால், அங்கே பாம்புகள் அதிகம். இத்தகைய நிலைமையில் அங்கே சிறு குழந்தைகளையும் வைத்துக்கொண்டு வசிப்பதென்பது பெரிய ஆபத்தாகும். எங்களில் யாரும் இத்தகைய விஷ ஜந்துக்களைப் பற்றிய பயத்தை விட்டொழித்துவிட்டவர்கள் அல்ல; இப்பொழுதும் நாங்கள் அவற்றிற்குப் பயப்படாதவர்கள் அல்ல என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். ஆயினும், பாம்புகளைக் கொல்வதில்லை என்பது எங்கள் பொதுவான விதி.

விஷ ஜந்துக்களைக் கொல்வதில்லை என்ற விதி, போனிக்ஸ், டால்ஸ்டாய்ப் பண்ணை, சாபர்மதி ஆசிரமம் ஆகியவற்றில் பெரும்பாலும் அனுசரிக்கப்பட்டு வந்தது. இந்த இடங்கள் ஒவ்வொன்றிலும் தரிசாகக் கிடந்த நிலத்திலேயே நாங்கள் குடியேறினோம். என்றாலும், பாம்பு கடித்ததனால் எங்களில் யாரும் இறந்ததில்லை. கருணைக் கடலான கடவுளின் கிருபையையே இதில் நான் நம்பிக்கைக் கண்ணோடு காண்கிறேன். இதைக் கொண்டு, கடவுள் பாரபட்சமுடையவராக இருக்கவே முடியாது என்றும், மனிதரின் சாமான்ய விஷயங்களிலெல்லாம் தலையிட்டுக் கொண்டிருக்க கடவுளுக்கு அவகாசம் இருக்குமா என்றும் யாரும் குதர்க்கம் பேசக் கிளம்பிவிட வேண்டாம். இவ்விஷயத்தில் இருக்கும் உண்மையை, எனக்கு ஏற்பட்ட ஒரே மாதிரியான இந்த அனுபவத்தை, வேறு விதமாக நான் சொல்லுவதற்கில்லை. கடவுளின் வழிகளை விவரிக்க மனிதனின் மொழிகள் தகுந்தவை அல்ல, பகுத்தறிய முடியாதவை; அவர் வழிகள் விவரிக்க முடியாதவை —இயலாதவை—என்ற உண்மையை நான் உணருகிறேன். ஆனால், அவற்றை விவரித்துக் கூறிவிட மனிதன் துணிவானாயின், அதற்கு அவனுடைய தெளிவில்லாத பேச்சைத் தவிர வேறு எந்த சாதனமுமே கிடையாது. கொல்வதில்லை என்ற வழக்கத்தை அநேகமாக, ஒழுங்காக நாங்கள் அனுசரித்து வந்திருந்தும் இருபத்தைந்து ஆண்டுகளாகப் பாம்புகளால் எங்களுக்குத் தீமை ஏற்பட்டதே இல்லை என்பது, கடவுள் அருளேயன்றி அதிருஷ்டவசமான தொரு சம்பவம் அல்ல என்று கருதுவது ஒரு மூட நம்பிக்கையாக இருந்தாலும், அந்த மூட நம்பிக்கையை இனியும் நான் விடாமல்தான் இருப்பேன்.

அகமதாபாத் ஆலைத் தொழிலாளர் வேலை நிறுத்த சமயத்தில் ஆசிரமத்தின் நெசவுக் கொட்டகைக்குக் கடைகால் போட்டோம். ஏனெனில், அச்சமயம் ஆசிரமத்தில் முக்கியமாக நடந்து வந்த வேலை, கை நெசவு. கையினுல் நூற்பதை ஆரம்பிப்பது அதுவரையில் எங்களுக்குச் சாத்தியமாகவில்லை.

# 22

# உண்ணுவிரதம்

முதல் இரு வாரங்கள் வரையில் ஆலைத் தொழிலாளர்கள் அதிக தீரத்தோடும், தன்னடக்கத்துடனும் நடந்துகொண்டார்கள். தினந்தோறும் பெரிய பொதுக்கூட்டங்களும் நடந்தன. அச்சமயங்களில் அவர்களுடைய பிரதிக்ஞைகளைக் குறித்து அவர்களுக்கு ஞாபகப்படுத்துவேன். 'உயிரை விட்டாலும் விடுவோமேயன்றி அளித்த வாக்கை மாத்திரம் மீறிவிடமாட்டோம்' என்று அவர்கள் உரக்கக் கூறி எனக்கு உறுதி கூறுவார்கள்.

ஆனுல், கடைசியாக அவர்கள் சோர்வின் அறிகுறியைக் காட்டத் தலைப்பட்டுவிட்டனர். உடம்பு பலவீனமாக ஆக மனிதன் சீக்கிரத்தில் கோபப்படுவதுபோல, வேலை நிறுத்தம் பலவீனம் அடைவதாகத் தோன்றியதும், கட்டுப்பாட்டை, மீறி வேலைக்குப் போகிறவர்கள் விஷயத்தில் தொழிலாளர்கள் கொண்ட போக்கு மேலும் மேலும் ஆபத்தானதாகிக்கொண்டு வந்தது. எங்கே முரட்டுத்தனமான செய்கைகளில் இறங்கிவிடுவார்களோ என்று பயப்பட்டேன். தினந்தோறும் கூட்டத்திற்கு வரும் தொழிலாளரின் தொகையும் குறைந்து வந்தது. கூட்டத்திற்கு வந்தவர்களும், சோர்வும் கிலேசமும் அடைந்திருந்தார்கள் என்பது அவர்களுடைய முகக்குறிகளிலிருந்து தெரிந்தது. கடைசியாகத் தொழிலாளர் உறுதி குலைந்து வருகின்றனர் என்று எனக்குத் தகவல் கிடைத்தது. இதனுல், பெரும் கவலை அடைந்தேன். இந் நிலைமையில் என் கடமை என்ன என்பதைக் குறித்துத் தீவிரமாகச் சிந்திக்கலானேன். தென்னுப்பிரிக்காவில் மகத்தானதொரு வேலை நிறுத்தம் நடத்திய அனுபவம் எனக்கு உண்டு. ஆனுல், இங்கே எனக்கு ஏற்பட்ட நிலைமை முற்றிலும் மாறுனது. நான் கூறிய யோசனையின் பேரிலேயே ஆலைத் தொழிலாளர்கள் பிரதிக்ஞை செய்துகொண்டனர். தினந்தோறும் அதை என் முன்னுல் மீண்டும் மீண்டும் உறுதிப்படுத்தியும் கூறிவந்தார்கள். அப்படியிருக்க அப்பிரதிக்ஞையை மீறி, அவர்கள் நடந்துகொண்டு விடக்கூடும் என்பதை என்னுல் நினைக்கவும் முடியவில்லை. எனக்கு ஏற்பட்ட இந்த உணர்ச்சிக்கு அடிப்படைக் காரணமாக இருந்தது, என் தற்பெருமையா, தொழிலாளர்களிடம் நான்

கொண்டிருந்த அன்பா, அல்லது சத்தியத்தினிடம் எனக்கு இருந்த ஆர்வத்தோடு கூடிய பற்ரு என்பதை யார் சொல்ல முடியும்?

இவ்வாறு திகைத்துத் தெளிவான வழி காண முடியாமல் நான் தத்தளித்துக்கொண் டிருந்த சமயத்தில், ஒரு நாள் காலை, ஆலைத் தொழிலாளர்களின் கூட்டத்தில் திடீரென்று எனக்கு ஓர் ஒளி தோன்றிற்று. முன்கூட்டி எண்ணிப் பாராமலேயே என் நாவில் பின்வரும் சொற்கள் பிறந்தன : "வேலை நிறுத்தம் செய்திருப்பவர்கள் திடம்கொண்டு ஒரு சமரச முடிவு ஏற்படும் வரையில் வேலை நிறுத்தத்தைத் தொடர்ந்து நடத்தினு லன்றி அல்லது இப்போது வேலைக்குப் போகிறவர்கள் எல்லோரும் ஆலைகளிலிருந்து வெளிவந்துவிடும் வரையில், நான் உணவு கொள்ளப் போவதில்லை'' என்று அக்கூட்டத்தில் கூறினேன்.

இதைக் கேட்டதும் தொழிலாளர்கள் இடி விழுந்ததைப் போல் திகைத்துப் போயினர். அனுசூயா பென்னின் கண்களிலிருந்து நீர் வழிந்து ஓடியது. "நீங்கள் உண்ணுவிரதம் இருக்க வேண்டாம்; நாங்கள் உண்ணுமல் இருக்கிறோம். நீங்கள் பட்டினி இருப்பதைப் போன்ற பெருங் கொடுமை வேறு இல்லை. நாங்கள் செய்துவிட்ட தவறுகளுக்கு எங்களை மன்னித்து விடுங்கள். இனி இறுதிவரையில் பிரதிக்ஞையில் நிச்சயமாக உறுதியுடன் இருக்கிறோம்'' என்று தொழிலாளர் எல்லோரும் ஒரே முகமாகக் கூறினர்.

நான் அப்பொழுது அவர்களுக்குக் கூறியதாவது: "நீங்கள் உண்ணுவிரதம் இருக்கவேண்டிய அவசியமில்லை. உங்களுடைய பிரதிக்ஞையிலிருந்து வழுவாமல் நீங்கள் இருந்தாலே போதும். நம்மிடம் நிதி இல்லை என்பது உங்களுக்குத் தெரியும். பொதுஜனங்களிடம் பிச்சையெடுத்து, அதைக் கொண்டு வேலை நிறுத்தத்தைத் தொடர்ந்து நடத்திக்கொண்டு போக நாம் விரும்பவில்லை. ஆகையால், வேலை நிறுத்தம் எவ்வளவு காலத்துக்குத் தொடர்ந்து நடந்தாலும், அதைப்பற்றிய கவலையே இல்லாமல் நீங்கள் இருந்து வருவதற்கு ஏதாவது ஒரு வேலையைச் செய்து ஜீவனத்திற்கு வேண்டியதைத் தேடிக்கொள்ள நீங்கள் முயல வேண்டும். என்னுடைய உண்ணுவிரதத்தைப் பொறுத்த வரையில் வேலை நிறுத்தம் முடிந்த பிறகே நான் அதைக் கைவிடுவேன்.''

இதற்கு மத்தியில் வேலை நிறுத்தம் செய்திருந்த தொழிலாளருக்கு முனிசிபாலிடியின் கீழ் ஏதாவது வேலை தேடிக் கொடுப்பதற்கு வல்லபபாய் முயன்று வந்தார். ஆனல் இதில் வெற்றி பெற முடியும் என்பதற்கு அதிக நம்பிக்கை எதுவும் இல்லை. மகன்லால் காந்தி ஒரு யோசனை கூறினர்: "நமது ஆசிரம நெசவுப் பள்ளிக்கூட அடித்தளத்தை நிரப்புவதற்கு நமக்கு

மணல் வேண்டியிருக்கிறது. இந்த வேலையில் பலரை அமர்த்திக் கொள்ளலாம்'' என்றார். இந்த யோசனையைத் தொழிலாளர் களும் வரவேற்றார்கள். அனுசூயா பென், தமது தலையில் முதலில் ஒரு கூடையைச் சுமந்து, அவர்களுக்கு வழிகாட்டினார். அவரைப் பின்பற்றித் தொழிலாளர்கள் வரிசை வரிசையாக ஆற்றிலிருந்து மணலை வாரிக் கூடைகளைத் தங்கள் தலைகளில் சுமந்துகொண்டு வந்து கொட்டிய வண்ணம் இருந்தனர். அது காண்பதற்கரிய காட்சியாக இருந்தது. தங்களுக்கு ஏதோ புதிய பலம் வந்திருப்பதாகவே தொழிலாளர்கள் உணர்ந்தனர். அவர்களுக்குச் சம்பளத்தைப் பட்டுவாடா செய்து சமாளிப்பதே கஷ்டமாக இருந்தது.

என்னுடைய உண்ணாவிரதத்தில் பெரிய குறைபாடும் இல் லாது போகவில்லை. நான் முந்திய அத்தியாயத்தில் கூறியிருப் பதைப்போல, ஆலை முதலாளிகளிடம் நெருங்கிய தொடர்பும், அன்பான உறவும் எனக்கு இருந்துவந்தது. ஆகவே, என்னுடைய உண்ணாவிரதம் அவர்களுடைய தீர்மானத்தைப் பாதிக்காமல் இருக்க முடியாது. அவர்களை எதிர்த்து நான் உண்ணாவிரதம் இருக்கக்கூடாது என்பதைச் சத்தியாக்கிரகி என்ற வகையில் நான் அறிவேன். தொழிலாளர் செய்திருக்கும் வேலை நிறுத்தம் ஒன்றைக்கொண்டே அவர்கள் சுயேச்சையான முடிவுக்கு வரும் படி விட்டிருக்க வேண்டும். நான் உண்ணாவிரதம் இருக்க முற் பட்டது, ஆலை முதலாளிகள் செய்துவிட்ட தவறுக்காக அன்று. தொழிலாளர்கள் பிரதிக்ஞையிலிருந்து தவறிவிட்டதற்காகவே உண்ணாவிரதம் இருந்தேன். அவர்களுடைய பிரதிநிதி என்ற வகையில், அவர்கள் செய்த தவறில் எனக்கும் பங்கு இருக்கிறது என்று கருதினேன். ஆலை முதலாளிகளிடம் நான் வேண்டிக் கொள்ளலாம். ஆனால், அவர்களுக்கு விரோதமாக உண்ணாவிரதம் இருப்பதென்பது அவர்களை நிர்ப்பந்தப்படுத்துவதாகும். என்னு டைய உண்ணாவிரதம் அவர்களை நிர்ப்பந்தப்படுத்தியே தீரும் என்பதை நான் அறிந்திருந்தும்-உண்மையிலேயே அது அவர் களை நிர்ப்பந்தப்படுத்தியது-உண்ணாவிரதம் இருப்பதைத் தவிர எனக்கு வேறு வழியில்லை என்று எண்ணினேன். உண்ணாவிரதம் இருக்கவேண்டியதே என் கடமை என்று எனக்குத் தெளிவாகத் தோன்றியது.

ஆலை முதலாளிகளுக்குச் சமாதானம் கூற முயன்றேன். ''உங்களுடைய நிலைமையிலிருந்து எனக்காக நீங்கள் மாறியாக வேண்டிய அவசியம் கொஞ்சமேனும் இல்லை'' என்று அவர்களுக் குச் சொன்னேன். ஆனால், என் வார்த்தைகளால் அவர்கள் சமாதானம் அடையவில்லை. நயமான மொழிகளால், உள்ளம் வருந்தும்படியாக என்னை ஏளனம்கூடச் செய்தனர். அவ்விதம் செய்ய அவர்களுக்கு முழு உரிமையும் உண்டு.

வேலை நிறுத்தம் சம்பந்தமாக ஆலை முதலாளிகள் விட்டுக் கொடுக்காமல் பிடிவாதமாக இருந்து வந்ததற்கு மூலகாரணமாக

இருந்தவர், சேத் அம்பாலால். அவருடைய தளராத உறுதியும், கபடமற்ற இயல்பும் அற்புதமானவை. அவை என் உள்ளத்தைக் கவர்ந்தன. அவரை எதிர்த்துப் போராடுவது என்பதே மகிழ்ச்சி அளிப்பதாகும். ஆகவே, அவரைத் தலைவராகக்கொண்ட எதிர்க் கட்சிக்கு என்னுடைய உண்ணாவிரதம் உண்டாக்கிய சங்கடமான நிலைமையைக் குறித்து நான் அதிக மனவேதனை அடைந்தேன். அவருடைய மனைவி சரளா தேவி, உடன் பிறந்த சகோதரியைப் போல் என்னிடம் அன்பு கொண்டிருந்தார். என்னுடைய செய்கையினால், அவர் மனவருத்தம் அடைந்ததைக் காண எனக்குச் சகிக்கவில்லை.

அனுசூயா பென்னும், நண்பர்கள் பலரும், தொழிலாளரும், முதல் நாள் என்னுடன் சேர்ந்து உண்ணாவிரதம் இருந்தார்கள். ஆனால், அவர்கள் மேற்கொண்டும் உண்ணாவிரதம் இருப்பதைக் கொஞ்சம் சிரமத்தின் பேரிலேயே நிறுத்திவிடும்படி செய்தேன்.

இதனாலெல்லாம் ஏற்பட்ட பலன், எல்லோரிடமும் நல்லெண்ணச் சூழ்நிலை ஏற்பட்டதாகும். ஆலை முதலாளிகளின் மனமும் இரங்கியது. சமரசத்திற்கான வழியைக் காண அவர்கள் முன்வந்தார்கள். அனுசூயா பென்னின் வீட்டில் அவர்களுடைய விவாதங்கள் நடந்தன. ஸ்ரீ அனந்த சங்கர துருவாவும் இதில் தலையிட்டார். முடிவில் அவரையே மத்தியஸ்தராகவும் நியமித்தனர். நான் உண்ணாவிரதத்தை ஆரம்பித்து மூன்று நாட்களுக்குப் பிறகு வேலை நிறுத்தமும் முடிவுற்றது. இந்த நல்ல முடிவைக் கொண்டாடுவதற்காக ஆலை முதலாளிகள், தொழிலாளருக்கு மிட்டாய்கள் வழங்கினர். இவ்விதம் இருபத்தொரு நாட்கள் வேலை நிறுத்தம் நடந்த பிறகு சமரச முடிவு ஏற்பட்டது.

இந்தச் சமரச முடிவைக் கொண்டாடுவதற்காக நடந்த கூட்டத்திற்கு ஆலை முதலாளிகளும் கமிஷனரும் வந்திருந்தனர். இவ் வைபவத்தில் தொழிலாளருக்குப் புத்திமதி கூறிய கமிஷனர், "ஸ்ரீ காந்தி கூறும் புத்திமதியை அனுசரித்தே நீங்கள் எப்பொழுதும் நடந்துகொள்ள வேண்டும்" என்றார். இந்தச் சம்பவங்களெல்லாம் முடிந்தவுடனேயே இதே கனவானிடம் நான் ஒரு தகராறில் ஈடுபட வேண்டியதாயிற்று. ஆனால், நிலைமையோ இதற்கு மாறானது. அந்த நிலைமையை அனுசரித்து அவரும் மாறுதல் அடைந்துவிட்டார். அப்பொழுது அவர், என் புத்திமதியைக் கேட்டு நடந்துவிட வேண்டாம் என்று கேடா பட்டாதார்களுக்கு எச்சரிக்கை செய்தார்!

ஒரு சம்பவத்தைக் குறிப்பிடாமல் நான் இந்த அத்தியாயத்தை முடித்துவிடக்கூடாது. அச்சம்பவம் எவ்வளவு வேடிக்கையானதோ அவ்வளவு பரிதாபகரமானதுமாகும். மிட்டாய் வினியோகத்தில் நடந்த சம்பவம் அது. மில் முதலாளிகள் மிட்டாயை ஏராளமாகத் தருவித்திருந்தார்கள். பல்லாயிரக்கணக்கான

தொழிலாளரிடையே அதை எப்படி வினியோகிப்பது என்பதே பெரிய பிரச்னையாகிவிட்டது. வேறு எந்த இடத்திலும் அவர்களை யெல்லாம் ஒன்றுகக் கூட்டி வைப்பது என்பது முற்றும் அசௌ கரியமாக இருந்தது. ஆகையால், திறந்த வெளியில், அதுவும் அவர்கள் எந்த மரத்தின் அடியில் இருந்து பிரதிக்ஞை செய்தார் களோ அதே மரத்தின் அடியில், அவர்களுக்கு மிட்டாயை வினி யோகிப்பதுதான் சரி என்று தீர்மானிக்கப்பட்டது.

இருபத்தொரு நாட்கள் கண்டிப்பான கட்டுப்பாட்டை அனு சரித்து வந்திருக்கும் தொழிலாளர்கள், எந்த விதமான கஷ்டமும் இன்றி ஒழுங்காக நின்று, வினியோகிக்கப்படும் மிட்டாயை வாங் கிக்கொள்ளுவார்கள், மிட்டாய் வாங்கப் போட்டி போட்டுக் கொண்டு மேலே விழமாட்டார்கள் என்று நிச்சயமாக நம்பி இருந்துவிட்டேன். ஆனல், இதைச் சோதிக்கும் சமயம் நேர்ந்த போது, வினியோகிப்பதற்கு அனுசரித்த எல்லா முறைகளும் பலிக்காது போயின. வினியோகிக்க ஆரம்பித்த இரண்டு நிமிஷங்களுக்குள் அவர்கள் வரிசை யெல்லாம் கலைந்துவிடும்; மீண்டும் மீண்டும் குழப்ப நிலைமை உண்டாகிவிடும். மில் தொழி லாளர்களின் தலைவர்கள், ஒழுங்கை நிலைநிறுத்த என்ன முயன் றும் பயனில்லை. குழப்பமும், நெருக்கித் தள்ளுவதும், போட் டியும் முடிவில் தாங்க முடியாதவையாகிவிட்டன. இக் குழப் பத்தில் காலில் மிதியுண்டு ஏராளமான மிட்டாய்கள் பாழாயின. கடைசியாகத் திறந்த வெளியில் வினியோகிப்பதென்பதையே கைவிட்டுவிட்டனர். மிஞ்சிய மிட்டாய்களைச் சிரமப்பட்டு மிர்ஜா பூரிலிருந்த சேத் அம்பாலாலின் பங்களாவுக்குக் கொண்டு போனேம். மறுநாள் அந்தப் பங்களாத் தோட்டத்தில் எந்த விதக் கஷ்டமும் இல்லாமல் மிட்டாய் வினியோகிக்கப்பட்டது.

இச்சம்பவத்தின் வேடிக்கையான அம்சம் தெளிவானதே. ஆனல், இதிலுள்ள பரிதாபப் பகுதியைக் குறித்துக் கொஞ்சம் சொல்ல வேண்டும். பின்னல் இதைப் பற்றி விசாரித்ததில் உண்மை வெளியாயிற்று. பிரதிக்ஞை எடுத்துக்கொண்ட மரத் தடியில் மிட்டாய்கள் வினியோகிக்கப் போகிறார்கள் என்பதை அறிந்துகொண்டுவிட்ட அகமதாபாத்திலிருந்த பிச்சைக்காரர்கள் எல்லோரும் அங்கே ஏராளமாகப் போய்க் கூடிவிட்டார்கள். பட்டினியால் வாடிய அவர்கள், மிட்டாய்களைப் பெற முண்டி யடித்துக்கொண்டு போனதே அங்கே ஏற்பட்ட குழப்பத்திற்கும் ஒழுங்கின்மைக்கும் காரணம்.

நம் நாட்டில் வறுமையும் பட்டினியும் மக்களை வாட்டி வருகின் றன. இதனல், ஆண்டுதோறும் பிச்சைக்காரர்களின் தொகை பெருகிக்கொண்டே போகிறது. இவர்கள் வேறு கதியின்றி வயிற்றுச் சோற்றுக்காகப் போராடுவது, நேர்மை, சுயமரியாதை ஆகிய உணர்ச்சிகளே இல்லாதவர்களாக அவர்களை ஆக்கிவிடு கிறது. நமது தருமப் பிரபுக்கள், அவர்களுக்கு வேலை கொடுப் பதற்கு வேண்டிய காரியங்களைச் செய்யாமல், வயிற்றுப் பாட்

டுக்கு வேலை செய்தாக வேண்டும் என்று அவர்களை வற்புறுத்தாமல், அவர்களுக்குப் பிச்சை போடுகிறார்கள்!

# 23

# கேடாச் சத்தியாக்கிரகம்

கொஞ்சம் ஓய்ந்து மூச்சுவிடுவதற்குக்கூட எனக்கு அவகாசமில்லை. அகமதாபாத் ஆலைத் தொழிலாளர் வேலை நிறுத்தம் முடிவுற்றவுடனேயே நான் கேடாச் சத்தியாக்கிரகப் போராட்டத்தில் ஈடுபட வேண்டியதாயிற்று.

கேடா ஜில்லாவில் எங்கும் விளைவே இல்லாது போய்விட்டதனால், பஞ்சம் வரக்கூடிய நிலைமை ஏற்பட்டுவிட்டது. அந்த ஆண்டு நிலவரி வசூலை நிறுத்தி வைத்துவிடும்படி செய்வது எப்படி என்பதைக் குறித்துக் கேடாப் பட்டாதார்கள் யோசித்துக்கொண்டிருந்தார்கள்.

விவசாயிகளுக்கு நான் திட்டமான ஆலோசனையைக் கூறுவதற்கு முன்பே ஸ்ரீ அமிர்தலால் தக்கர் அங்கிருந்த நிலைமையைப் பற்றி விசாரித்தறிந்து, அப்பிரச்னையைக் குறித்துக் கமிஷனருடன் நேரில் விவாதித்திருந்தார். ஸ்ரீ மோகனலால் பாண்டியாவும், ஸ்ரீ சங்கரலால் பரீக்கும் இப் போராட்டத்தில் ஈடுபட்டனர். ஸ்ரீ வித்தல்பாய் பட்டேல், காலஞ்சென்ற ஸர் கோகுலதாஸ் ககன்தாஸ் பரீக் ஆகியவர்களைக் கொண்டு பம்பாய்ச் சட்டசபையில் கிளர்ச்சியையும் ஆரம்பித்திருந்தனர். இது சம்பந்தமாகப் பன்முறை கவர்னரிடமும் தூது சென்றனர்.

இந்தச் சமயத்தில் நான் குஜராத்தி சபைக்குத் தலைவனாக இருந்தேன். இச்சபை, அரசாங்கத்திற்கு மனுக்களையும் தந்திகளையும் அனுப்பியது. கமிஷனர் செய்த அவமரியாதைகளையும், கமிஷனரின் மிரட்டல்களையும் சகித்துக் கொண்டது. இச்சந்தர்ப்பத்தில் அதிகாரிகளின் நடத்தை மிகக் கேவலமாகவும் கேலிக் கூத்தாகவும் இருந்தது. அவை இன்று நம்பக்கூடாத அளவுக்கு அவ்வளவு மோசமானவை.

விவசாயிகளின் கோரிக்கை, பட்டப்பகல் போல அவ்வளவு தெளிவானது; மிகவும் மிதமானது. ஆகவே, அதை ஏற்றுக் கொள்ள வேண்டியதுதான் நியாயமாக இருந்தது. மகசூல், சாதாரணமாகக் கிடைக்க வேண்டியதில் கால்வாசியும் அதற்குக் குறைவாகவுமே இருந்துவிடுமானால், அந்த ஆண்டுக்கு நிலத் தீர்வை வசூலை நிறுத்திவைக்கும்படி, நிலத்தீர்வை விதிகளின்படி விவசாயிகள் கேட்கலாம். கால்வாசிக்கும் அதிகமாக மகசூல் இருக்கிறது என்பது சர்க்காரின் கணக்கு. விவசாயிகளோ, கால்வாசிக்கும் குறைவாகவே மகசூல் கிடைத்திருக்கிறது என்றார்கள். ஆனால், இவர்கள் கூறுவதைக் கேட்டுக்கொள்ளும் புத்திப்போக்கில் அரசாங்கம் இல்லை. மத்தியஸ்தர் முடிவுக்கு விட்டுவிட

வேண்டும் என்ற பொதுஜனக் கோரிக்கையை ஏற்பது தங்களுடைய கௌரவத்திற்குக் குறைவானது என்று அரசாங்கம் கருதியது. முடிவாக மனுக்களும் கோரிக்கைகளும் பயனில்லாது போய்விடவே, நான் என் சக ஊழியர்களைக் கலந்து ஆலோசித்துக்கொண்டு, சத்தியாக்கிரகத்தை மேற்கொள்ளுமாறு பட்டாதார்களுக்கு யோசனை கூறினேன்.

இந்தப் போராட்டத்தில் கேடாத் தொண்டர்களே யன்றி எனக்கு முக்கியமான தோழர்களாக இருந்தவர்களான ஸ்ரீ வல்லபபாய் பட்டேல், சங்கரலால் பாங்கர், ஸ்ரீமதி அனுசூயா பென், ஸ்ரீ இந்துலால் யாக்ஞிக், மகாதேவ தேசாய்* முதலியவர்களும் மற்றோரும் ஆவர். இப்போராட்டத்தில் சேர்ந்ததால் ஸ்ரீ வல்லபபாய் பட்டேல், ஏராளமான வருமானத்தை அளித்ததும், வளர்ந்துகொண்டு வந்ததுமான தமது வக்கீல் தொழிலை நிறுத்தி வைத்துவிட நேர்ந்தது. பிறகு அத்தொழிலை அநேகமாக அவர் மேற்கொள்ள முடியாமலே போய்விட்டது.

நதியாத்திலிருந்த அனாதாசிரமத்தை எங்கள் தலைமை ஸ்தலம் ஆக்கிக்கொண்டோம். நாங்கள் எல்லோரும் தங்குவதற்குப் போதுமானதாக இதைவிடப் பெரிய இடம் எங்களுக்குக் கிடைக்கவில்லை. சத்தியாக்கிரகிகள் கீழ்க்கண்ட பிரதிக்ஞையில் கையெழுத்திட்டனர் :

''எங்கள் கிராமங்களில் மகசூல் கால் பாகத்திற்கும் குறைவாக இருக்கிறது என்பதை அறிந்தே அடுத்த ஆண்டுவரையில்

---

* 1917-இல் கோத்ராவில் நடந்த குஜராத்தி ராஜீய மகாநாட்டிற்குச் சில நாட்களுக்கு முன்னால் மகாத்மாவைப் பார்க்க மகாதேவ தேசாய் வந்தார். ஸ்ரீ தேசாய் சட்டப் பரீட்சை தேறியிருந்தும் வக்கீலாகவில்லை. பம்பாய் மொழிபெயர்ப்புக் காரியாலயத்தில் சில நாட்கள் வேலை செய்தார். பின்னர் ஸர் லல்லுபாய் சாமளதாஸின் சிபார்சின் பேரில் கூட்டுறவுச் சங்கங்களின் இன்ஸ்பெக்டராக நியமிக்கப்பட்டார். பிறகு கொஞ்ச காலம் யாரோ ஒரு முக்கியஸ்தருக்கு அந்தரங்கக் காரியதரிசியாகவும் வேலை பார்த்தார். அப்பொழுது காந்திஜியிடம் அவருக்குக் கவர்ச்சி ஏற்பட்டுவிடவே அவரிடம் போய், ''என்னை உங்களுடன் வைத்துக்கொள்ளுவதாக இருந்தால், உங்களுக்குக் காரியதரிசியாக இருந்து பணியாற்றுகிறேன்'' என்றார். தமது முந்திய எஜமானருக்காகத் தாம் தயாரித்த ஒரு பிரசங்கத்தின் நகலையும் காந்திஜிக்குக் காட்டினார். கையெழுத்து அழகாக இருந்தது. பத்து நிமிஷங்கள் பேசிக்கொண்டிருந்த பின்னர், காந்திஜி அவரை ஏற்றுக்கொண்டுவிட்டார். அன்று முதல், 1942 ஆகஸ்டு 15-ஆம் தேதி காலை ஆகாகான் அரண்மனையில் சிறைப்பட்டிருந்தபோது திடீரென மாரடைப்பால் இறக்கும் வரையில், மகாத்மாவின் இணைபிரியாத அந்தரங்கக் காரியதரிசியாக இருந்தார். அப்பொழுது உடனிருந்த மகாத்மாவே, மகாதேவ தேசாயின் உடலைக் குளிப்பாட்டிச் சந்தனமிட்டுச் சிதை அடுக்கி, அதில் வைத்து அவரே தீ மூட்டி தகனம் செய்தார். அப்பொழுது மகாத்மா, ''மகாதேவ்! இதையெல்லாம் எனக்கு நீ செய்வாய் என்று இருந்தேன். இப்பொழுது உனக்கு நான் செய்ய வேண்டியவனாகிவிட்டேன்'' என்று கூறி கண்ணீர் வடித்தார். "மகாதேவ் என் மகன்" என்றும் கூறினார். மகாதேவ தேசாய், மகாத்மாவுடன் நிழல்போல் இருந்து, அவருடைய சம்பாஷணைகள் முதலியவைகளைக் குறித்து ஏராளமாகக் குறிப்புகள் எடுத்துவைத்தார். அந்தக் குறிப்புகள் குஜராத்தியில் நான்கு தொகுப்புக்களும், ஆங்கிலத்தில் ஒரு தொகுப்பும் இதுவரை பிரசுரமாகியிருக்கின்றன.

நிலத்தீர்வை வசூலை நிறுத்திவைக்குமாறு அரசாங்கத்தைக் கேட்டுக்கொண்டோம். ஆனால், எங்களுடைய வேண்டுகோளை அரசாங்கம் ஏற்றுக்கொள்ளவில்லை: ஆகையால், கீழே கையொப்பம் இட்டிருப்பவர்களாகிய நாங்கள், இவ் வருடத்திற்கு முழுத் தீர்வையையோ, பாக்கியாக இருக்கும் தீர்வையையோ அரசாங்கத்திற்கு நாங்களாகக் கொடுப்பதில்லை என்று இதன் மூலம் சத்தியம் செய்துகொள்ளுகிறோம். அரசாங்கம், தனக்குச் சரியெனத் தோன்றும் எல்லாச் சட்ட நடவடிக்கைகளையும் எடுத்துக்கொள்ள அனுமதிப்பதோடு நாங்கள் தீர்வை செலுத்தாததால் ஏற்படக்கூடிய விளைவுகளை மகிழ்ச்சியுடனும் அனுபவிப்போம். எங்கள் நிலங்கள் பறிமுதல் ஆகிவிட விட்டுவிடுவோமே யன்றி நாங்களாக வலியத் தீர்வையைச் செலுத்தி, எங்கள் கட்சி பொய்யானது என்று கருதப்பட்டுவிடுவதற்கோ, எங்கள் சுய மதிப்புக்கு இழுக்கு நேர்ந்துவிடுவதற்கோ, நாங்கள் அனுமதிக்க மாட்டோம். என்றாலும், ஜில்லா முழுவதிலும் நிலத்தீர்வையின் இரண்டாவது தவணையை வசூலிப்பதை நிறுத்திவைக்க அரசாங்கம் சம்மதிக்குமானால், எங்களில் வரி செலுத்துவதற்குச் சக்தியுள்ளவர்கள், முழு நிலவரியையோ அல்லது பாக்கியாக இருக்கும் நிலத்தீர்வையின் மீதத்தையோ செலுத்திவிடுவோம். தீர்வையைச் செலுத்திவிடக் கூடியவர்கள், இன்னும் செலுத்தாமல் இருந்து வருவதற்குக் காரணம், அவர்கள் செலுத்திவிட்டால் ஏழைகளாக இருக்கும் விவசாயிகள் பீதியடைந்து தங்கள் தீர்வைப் பாக்கியைச் செலுத்துவதற்காகத் தங்களிடமிருக்கும் தட்டு முட்டுச் சாமான்களை யெல்லாம் விற்றோ, கடன்பட்டோ தங்களுக்கு மேலும் துயரத்தைத் தேடிக்கொண்டு விடுவார்கள் என்பதே. இந்த நிலைமையில் ஏழைகளின் நன்மையை முன்னிட்டு, வரி செலுத்தச் சக்தியுள்ளவர்கள்கூட, நிலத்தீர்வையைச் செலுத்தாமல் இருப்பது அவர்கள் கடமை என்று நாங்கள் உணருகிறோம்.''

இந்தப் போராட்டத்தைக் குறித்துப் பல அத்தியாயங்களை நான் எழுதுவதற்கில்லை. ஆகையால், இதன் சம்பந்தமான அநேக இனிமையான நினைவுகளை யெல்லாம் அப்படியே விட்டுவிட்டு நான் செல்ல வேண்டியிருக்கிறது. இந்த முக்கியமான போராட்டத்தைக் குறித்து முழுவதையும் விவரமாகத் தெரிந்து கொள்ள விரும்புவோர், கேடாவிலுள்ள கத்தலாலைச் சேர்ந்த ஸ்ரீ சங்கரலால் பரீக் எழுதியிருக்கும் ஆதாரபூர்வமான 'கேடாச் சத்தியாக்கிரகம்' என்ற நூலைப் படிப்பார்களாக.

## 24
## 'வெங்காயத் திருடர்'

சம்பாரண், இந்தியாவில் தொலைவான ஒரு முடுக்கில் இருக்கிறது. அங்கே நடந்த போராட்டத்தைப் பற்றிப் பத்திரிகை

களில் விளம்பரம் ஆகவில்லை. அதனால், வெளியிலிருந்து அங்கே அதிகம் பேர் வரவில்லை. ஆனால், கேடாப் போராட்டம் அப்படி யல்ல. அங்கே நடந்து வந்தவை யாவும் அன்றுடம் பத்திரிகை களில் வெளியாகிவந்தன. குஜராத்திகளுக்கு இப்போராட்டம் முற்றிலும் புதியதான ஒரு சோதனை. ஆகையால், அவர்கள் இதில் அதிக சிரத்தை கொண்டிருந்தனர். இந்த லட்சியம் வெற்றி யடைவதற்காகத் தங்களுடைய செல்வத்தையெல்லாம் கொண்டு வந்து கொட்ட அவர்கள் தயாராயிருந்தார்கள். சத்தியாக்கிரகத் தைப் பணத்தினால் மாத்திரமே நடத்திவிட முடியாது என்பதை அவர்கள் சுலபமாக அறிந்துகொள்ள முடியவில்லை. சத்தியாக்கிர கத்திற்குத் தேவையானவற்றில் பணம், கடைசி ஸ்தானத்தையே வகிக்கிறது. வேண்டாம் என்று நான் சொல்லியும் கேட்காமல் பம்பாய் வர்த்தகர்கள் எங்களுக்கு அவசியமானதற்கும் அதிக மாகப் பணம் அனுப்பினார்கள். இதனால் அப்போராட்டத்தின் முடிவில் எங்களிடம் கொஞ்சம் பணம் மீதமாக இருந்தது. அதே சமயத்தில் சத்தியாக்கிரகத் தொண்டர்கள், புதிய பாடமான எளிமையைக் கற்றுக்கொள்ளவேண்டி யிருந்தது. அவர்கள் அப் பாடத்தை முழுவதும் கற்றுக்கொண்டு விட்டனர் என்று சொல்ல முடியாது. என்றாலும், அவர்கள் தங்கள் வாழ்க்கை முறையைப் பெரிதும் மாற்றிக்கொண்டார்கள்.

செய்யவேண்டி யிருந்த முக்கியமான காரியம், விவசாயிக ளின் பயத்தைப் போக்குவது. அதிகாரிகள், வரி செலுத்துவோர் கொடுக்கும் பணத்திலிருந்தே சம்பளம் பெறுவதால் அவர்கள் மக்களின் சேவகர்களே யன்றி மக்களுக்கு எஜமானர்கள் அல்ல என்பதை விவசாயிகள் உணரும்படி செய்து அவர்கள் பயத்தைப் போக்க வேண்டி யிருந்தது. அஞ்சாமை என்பதை அவர்கள் உணரும்படி செய்வது அசாத்தியமான காரியமாகவே இருந்தது. அதிகாரிகளிடம் அவர்களுக்கு இருந்த பயம் போய்விட்ட பிறகு, பதிலுக்குப் பதில் அதிகாரிகளை அவர்கள் அவமதிக்காமல் இருக் கும்படி செய்வது எப்படி? மேலும், மரியாதைக் குறைவாக நடந்து கொள்ள முற்பட்டுவிடுவார்க ளாயின், பாலில் ஒரு சொட்டு விஷம் கலந்து விட்டதைப்போன்று சத்தியாக்கிரகம் கெட்டுவிடும். மரி யாதையாக நடந்துகொள்ளும் பாடத்தை, நான் எதிர்பார்த்ததை விட மிகக் குறைவாகவே அவர்கள் அறிந்து கொண்டார்கள் என் பதை நான் பின்னால் அறிந்தேன். பிறரிடம் மரியாதையாக நடப் பது என்பது சத்தியாக்கிரகத்தின் மிகக் கடுமையான பகுதி என் பதை அனுபவம் எனக்குப் போதித்திருக்கிறது. மரியாதையாக நடப்பது என்பதற்கு, அச் சமயத்திற்கு ஏற்பப் பழகி வைத்துக் கொள்ளும் நயமான வெளிப்பேச்சு என்பதல்ல, இங்கே பொருள். பெருந்தன்மை, மனப்பூர்வமாக ஏற்பட்டதாக இருப்பதோடு எதி ரிக்கும் நல்லதைச் செய்யும் விருப்பமும் இருக்கவேண்டும். சத்தி யாக்கிரகியின் ஒவ்வொரு செயலிலும் இது வெளிப்படுவதாகவும் இருக்க வேண்டும்.

ஆரம்பக் கட்டங்களில் மக்கள் அதிகத் தைரியங் காட்டினுர்களெனினும், கடுமையான நடவடிக்கை எடுத்துக்கொள்ள அரசாங்கம் விரும்பியதாகத் தோன்றவில்லே. ஆனல், மக்களின் உறுதி தளர்ந்துவிடும் என்பதற்கான அறிகுறி எதுவும் தோன்ருது போகவே அரசாங்கம் அடக்கு முறையைக் கைக்கொள்ளக் கிளம்பியது. ஜப்தி அதிகாரிகள், மக்களின் கால்நடைகளை ஏலம் போட்டனர். அபராத அறிவிப்புகளைப் பிறப்பித்தனர்; சிலருடைய மகசூல்களையும் ஜப்தி செய்தார்கள். இவை யெல்லாம் விவசாயிகளின் உறுதியைக் குலைத்துவிட்டன. சிலர் தங்கள் வரிப் பாக்கியைச் செலுத்திவிட்டார்கள். மற்றும் சிலரோ, தங்கள் வரிப் பாக்கிக்காக ஜப்தி செய்துகொண்டு போகட்டும் என்று, பத்திரமான தங்கள் ஜங்கம சொத்துக்கள், அதிகாரிகள் கையில் அகப்படும் வகையில் வைத்துவிட விரும்பினுர்கள். ஆனல், இதற்கு மாருக மற்றுஞ் சிலரோ, கடைசி வரையில் போராடியே தீருவது என்று உறுதியுடன் இருந்தார்கள்.

இப்படி யெல்லாம் நடந்துகொண் டிருந்த சமயம், ஸ்ரீ சங்கரலால் பரீக்கின் சாகுபடியாளர்களில் ஒருவர், தம்மிடமிருந்த நிலத்திற்குரிய தீர்வையைச் செலுத்திவிட்டார். இதனல், பெரும் பரபரப்பு ஏற்பட்டது. தமது சாகுபடியாளர் செய்துவிட்ட தவறுக்கு ஸ்ரீ சங்கரலால் பரீக் உடனே தக்க பரிகாரம் செய்துவிட்டார். எந்த நிலத்திற்கு வரி செலுத்தப்பட்டுவிட்டதோ அந்த நிலத்தை அவர் தருமத்திற்குக் கொடுத்துவிட்டார். இவ்விதம் அவர் தமது கௌரவத்தைக் காத்துக்கொண்டதோடு மற்றவர்களுக்கும் சிறந்த உதாரணமானுர்.

பயமடைந்துவிட்டவர்களின் உள்ளத்தில் உறுதி ஏற்படும்படி செய்வதற்காக, ஸ்ரீ மோகனலால் பாண்டியாவின் தலைமையிலிருந்த மக்களுக்கு, நான் ஒரு யோசனை கூறினேன். ஒரு நிலத்தில் மகசூல் நியாயமின்றி ஜப்தி செய்யப்பட்டிருக்கிறது என்பது என் அபிப்பிராயம். அந்த வயலிலிருந்த வெங்காய மகசூலே அப்புறப்படுத்திவிடும்படி கூறினேன். இதைச் சாத்விகச் சட்ட மறுப்பு என்று நான் கருதவில்லை. இது சாத்விகச் சட்ட மறுப்பாகவே இருந்தாலும், நிலத்தில் இருக்கும் மகசூலே ஜப்தி செய்வது சட்டப்படி சரியானதாகவே இருப்பினும், ஒழுக்க ரீதியில் அது தவருனது; கொள்ளையைத் தவிர அது வேறு எதுவும் அல்ல என்று நான் கூறினேன். ஆகையால், ஜப்தி உத்தரவு இருந்தாலும், அந்த நிலத்திலிருந்து வெங்காய மகசூலே அப்புறப் படுத்திவிட வேண்டியது மக்கள் கடமை என்றேன். அபராதம் விதிக்கப்படுவது அல்லது தண்டனை அடைவது என்பது இத்தகைய சட்ட மறுப்பின் அவசியமான பின்விளைவாகும். ஆகையால், அபராதம் விதிக்கப்படுவது அல்லது தண்டனையை அடைவது என்பதன் மூலம் புதியதொரு பாடத்தைக் கற்றுக்கொள்ளுவதற்கு மக்களுக்கு இது சிறந்த வாய்ப்பு. ஸ்ரீ மோகன

லால் பாண்டியாவுக்கோ இது மனத்திற்குப் பிடித்த காரியம். சத்தியாக்கிரகக் கொள்கைக்குப் பொருத்தமான வகையில் யாராவது ஒருவர் ஏதாவது ஒன்றைச் செய்து சிறைவாச உருவில் துன்பத்தை அனுபவிக்காமல் இப் போராட்டம் முடிந்து விடுவதை அவர் விரும்பவில்லை. ஆகையால், அந் நிலத்திலிருந்த வெங்காய மகசூலைத் தாமே அப்புறப்படுத்திவிடுவதாக அவர் முன்வந்தார். இதில் மற்றும் ஏழு, எட்டு நண்பர்களும் அவருடன் சேர்ந்து கொண்டார்கள்.

இவர்களைச் சும்மா விட்டுவிடுவது என்பது அரசாங்கத்தினுல் முடியாத காரியம். ஸ்ரீ மோகனலாலும் அவருடைய சகாக்களும் கைதானதால் மக்களின் உற்சாகம் அதிகமாயிற்று. ஜெயிலுக்குப் பயப்படுவ தென்பது போய்விட்ட பிறகு அடக்குமுறை மக்களுக்குத் தைரியத்தை ஊட்டிவிடுகிறது. விசாரணை நாளன்று கோர்ட்டில் ஏராளமான மக்கள் கூடிவிட்டனர். பாண்டியாவும் அவருடைய சகாக்களும் சொற்ப காலச் சிறைத் தண்டனை அடைந்தார்கள். தண்டனை விதித்தது தவறு என்பது என் அபிப்பிராயம். ஏனெனில், வெங்காய மகசூலை அப்புறப்படுத்தியது, குற்றச் சட்டத்தின்படி 'திருட்டு' ஆகாது. ஆனுல், கோர்ட்டுக்குப் போவதைத் தவிர்ப்பது என்பதே கொள்கை யாகையால் அப்பீல் செய்யவில்லை.

'கைதி'களைச் சிறைக்குக் கொண்டுபோனபோது, அவர்கள் முன்னுல் மக்கள் ஊர்வலம் ஒன்றும் சென்றது. அன்று மக்கள் ஸ்ரீ மோகனலாலுக்கு 'வெங்காயத் திருடர்' என்ற பட்டத்தை அளித்து கௌரவித்தனர். இன்னும் அப் பட்டப் பெயர் அவருக்கு இருந்து வருகிறது. கேடாச் சத்தியாக்கிரகத்தின் முடிவை அடுத்த அத்தியாயத்தில் கவனிப்போம்.

## 25

## கேடாச் சத்தியாக்கிரக முடிவு

இப் போராட்டம், எதிர்பாராத வகையில் முடிவுற்றது. மக்கள் களைத்துப் போய்விட்டனர் என்பது தெளிவாகத் தெரிந்தது. ஆகவே, பணியாமல் உறுதியுடன் இருந்தவர்களைச் சர்வநாசத்திற்குக் கொண்டு போய்விடுவதற்குத் தயங்கினேன். சத்தியாக்கிரகி ஏற்றுக்கொள்ளக் கூடிய வகையில், கௌரவமான முறையில் போராட்டத்தை முடிப்பதற்கான வழியைத் தேடிக்கொண் டிருந்தேன். எதிர்பாராத வகையில் அத்தகைய வழி ஒன்று தென்பட்டது. நதியாத் தாசில்தார் எனக்கு ஒரு தகவல் அனுப்பினுர். பண வசதியுள்ள பட்டாதார்கள் வரியைச் செலுத்திவிட்டால் ஏழைகளிடமிருந்து வரி வசூலிப்பது நிறுத்தி வைக்கப்படும் என்ருர், அவர். அவ்விதம் செய்யப்படும் என்று எழுத்து மூலம் கொடுக்கும்படி அவரைக் கேட்டேன். அவரும் அப்படியே கொடுத்தார். தாசில்தார், தமது தாலுக்காவுக்கு

மாத்திரமே பொறுப்பு வாய்ந்தவராக இருக்கமுடியும். ஜில்லா முழுவதற்கும் கலெக்டரே உறுதிமொழி கொடுக்கமுடியும். முழு ஜில்லாவுக்கும் தாசில்தாரின் உறுதிமொழி அமல் ஆகுமா என்று கலெக்டரிடம் விசாரித்தேன். தாசில்தாரின் கடிதத்தில் கண்ட முறையில் தீர்வை வசூலை நிறுத்திவைக்குமாறு அறிவித்து உத்தரவு பிறப்பிக்கப்பட்டு விட்டது என்று அவர் பதில் அளித்தார். அது அப்பொழுது எனக்குத் தெரியாது. உத்தரவு பிறப்பிக்கப் பட்டு விட்டது உண்மையானால், மக்களின் பிரதிக்ஞை நிறைவேறிவிட்டது. இந்தக் காரியத்தை நோக்கமாகக் கொண்டதே அப் பிரதிக்ஞை என்பது நினைவிருக்கலாம், ஆகவே, உத்தரவில் எங்களுக்குத் திருப்தி என்று அறிவித்தோம்.

என்றாலும், நான் மகிழ்ச்சியடையும்படி முடிவு இல்லை. ஏனெனில், ஒவ்வொரு சத்தியாக்கிரகப் போராட்டத்தின் முடிவையும் தொடர்ந்து வரவேண்டியதான பெருமிதம் அதில் இல்லை. சமரசத்திற்காக தாம் எதுவுமே செய்யாதவரைப் போலவே கலெக்டர் காரியங்களைச் செய்துகொண்டு போனார். ஏழைகளிடமிருந்து தீர்வை வசூலிப்பது நிறுத்திவைக்கப்பட வேண்டும். ஆனால், அந்தச் சகாயம் அவர்களுக்குக் கிடைக்கவே இல்லை. ஏழைகள் என்பது இன்னார் என்பதை நிர்ணயிப்பது மக்களுக்குள்ள உரிமை. ஆனால், அந்த உரிமையைச் செயல்படுத்த அவர்களால் முடியவில்லை. உரிமையை நிலைநாட்டுவதற்கு வேண்டிய பலம் அவர்களுக்கு இல்லாததைக் குறித்துத் துக்கம் அடைந்தேன். ஆகையால், அப்போராட்டத்தின் முடிவு, சத்தியாக்கிரகத்தின் வெற்றி என்று கொண்டாடப்பட்டதாயினும், முழு வெற்றிக்கு வேண்டிய முக்கியமான அம்சங்கள் அதில் இல்லாததனால், அதைக் குறித்து நான் உற்சாகம் அடைய முடியவில்லை.

சத்தியாக்கிரகத்தின் முடிவில் சத்தியாக்கிரகிகள் மேலும் பலமுள்ளவர்களாகவும், ஆரம்பத்தில் இருந்ததைவிட அதிக உற்சாகமுள்ளவர்களாகவும் இருக்க முடிந்தால்தான் சத்தியாக்கிரகப் போராட்டம் பயனுள்ளதாயிற்று என்று சொல்லமுடியும்.

ஆயினும், இப் போராட்டத்தினால், மறைமுகமான பலன்களும் இல்லாது போகவில்லை. இப் பலன்களை இன்று நாம் காண முடிவதோடு அதன் பயன்களை அனுபவித்தும் வருகிறோம். கேடாச் சத்தியாக்கிரகம், குஜராத் விவசாயிகளிடையே விழிப்பு ஏற்படுவதற்கு ஆரம்பமாக இருந்தது. உண்மையான ராஜீயக் கல்விக்கு அதுவே ஆரம்பமாகும்.

டாக்டர் பெஸன்டின் சிறந்த சுயாட்சிக் கிளர்ச்சி, உண்மையில் விவசாயிகளிடையே ஓரளவுக்கு விழிப்பை உண்டாக்கியிருந்தது. ஆனால், கேடாப் போராட்டமே, விவசாயிகளின் உண்மையான வாழ்க்கையுடன் தொடர்பு கொள்ளும்படி படித்த பொதுஜன ஊழியர்களைக் கட்டாயப்படுத்தியது. விவசாயிகளுடன் சேர்ந்தவர்களே தாங்களும் என்பதை அவர்கள் அறிய

லானுர்கள். தாங்கள் வேலே செய்வதற்கு ஏற்ற இடத்தையும் கண்டுகொண்டனர். அவர்களுடைய தியாகத் திறனும் அதிக ரித்தது. இந்தப் போராட்டத்தில்தான் வல்லபபாய், தம்மைத் தாமே கண்டுகொண்டார் என்பது, அதனளவில் சாமான்யமான பலன் அன்று. அதன் பலன் எவ்வளவு பிரமாதமானது என் பதைச் சென்ற ஆண்டு நடந்த வெள்ளக் கஷ்ட நிவாரண வேலே யில் இருந்தும், இந்த ஆண்டு நடந்த பார்டோலி சத்தியாக்கிரகத் திலிருந்தும் நாம் அறிய முடியும். குஜராத்தில் பொதுஜன சேவை வாழ்க்கை புதிய சக்தியையும் ஊக்கத்தையும் பெற்றது. பட்டாதாரரான விவசாயி, தம்முடைய பலத்தை மறக்க முடியாத வகையில் உணரலானுர். மக்களின் கதிமோட்சம், அவர்களேயும், துன்பங்களே அனுபவிப்பதற்கும் தியாகத்துக்கும் அவர்களுக் குள்ள தகுதியையும் பொறுத்தே இருக்கிறது. இந்த பாடம், அழியமுடியாத வகையில் பொதுமக்களின் மனத்தில் பதிந்து விட்டது. கேடாப் போராட்டத்தின் மூலம் சத்தியாக்கிரகம் குஜராத்தின் மண்ணில் ஆழ வேர் ஊன்றிவிட்டது.

ஆகையால், சத்தியாக்கிரகம் முடிவடைந்ததைக் குறித்து நான் உற்சாகமடைவதற்கு எதுவும் இல்லேயென்ருலும், கேடா விவசாயிகள் குதூகலமடைந்தார்கள். ஏனெனில், தங்கள் தங்கள் முயற்சிக்கு ஏற்ற பலனே அடைந்துவிட்டதாக அவர்கள் அறிந்த தோடு, தங்களுடைய குறைக்ளேப் போக்கிக்கொள்ளுவதற்கு உண்மையான, தோல்வியே யில்லாத ஒரு முறையையும் அவர் கள் கண்டுகொண்டனர். இதை அவர்கள் அறிந்திருந்தது ஒன்றே, அவர்கள் அடைந்த குதூகலம் நியாயமானது என்பதை காட்டுவதற்குப் போதுமானது.

என்ருலும், சத்தியாக்கிரகத்தின் உட்பொருளேக் கேடா விவசாயிகள் முற்றும் அறிந்துகொள்ளவில்லே. இதனுல் அவர் களுக்கு ஏற்பட்ட கஷ்டத்தைக் கொண்டே இதை அவர்கள் கண்டுகொண்டனர். அதைக் குறித்துப் பின் வரும் அத்தியா யங்களில் கவனிப்போம்.

## 26

## ஒற்றுமையில் ஆர்வம்

ஐரோப்பாவில் நாசகரமான யுத்தம் நடந்துகொண்டு வந்தபோதுதான் கேடாப் போராட்டம் ஆரம்பமாயிற்று. அப் போராட்டம் முடிந்த பிறகு, யுத்தத்தில் ஒரு நெருக்கடியான நிலேமை உண்டாயிற்று. வைசிராய் டில்லியில் ஒரு யுத்த மகா நாட்டைக் கூட்டி, அதற்குப் பல தலேவர்களேயும் அழைத்திருந் தார். வைசிராய் லார்டு செம்ஸ்போர்டுக்கும் எனக்கும் நெருங்கிய நட்பு இருந்ததைக் குறித்து முன்பே கூறியிருக் கிறேன்.

அந்த அழைப்பிற்கு இணங்கி நான் டில்லிக்குச் சென்றேன். ஆனால், அம் மகாநாட்டில் நான் கலந்துகொள்ளுவது சம்பந்தமாக எனக்குச் சில ஆட்சேபங்கள் இருந்தன. அவற்றில் முக்கியமானது, அலி சகோதரர்கள்* போன்ற தலைவர்களை அம் மகாநாட்டிற்கு அழைக்கவில்லை என்பது. அப்பொழுது அவர்கள் சிறையில் இருந்தார்கள். அவர்களைக் குறித்து நான் நிறையக் கேள்விப்பட்டிருந்தேனாயினும் இரண்டொரு முறையே அவர்களைச் சந்தித்திருந்தேன். அவர்களுடைய சேவையைக் குறித்தும், தீரத்தைப் பற்றியும் என்னிடம் எல்லோரும் மிகவும் பாராட்டிக் கூறியிருந்தார்கள். ஹக்கீம் சாகிபுடன்† அப்பொழுது எனக்கு நெருங்கிய பழக்கம் இல்லை. ஆனால், பிரதமப் பேராசிரியர் ருத்திராவும் தீனபந்து ஆண்டுரூஸும், அவருடைய பெருமையைக் குறித்து என்னிடம் அதிகம் கூறியிருந்தனர். ஸ்ரீ ஷுவாயிப் குரேஷியையும், ஸ்ரீ குவாஜாவையும் கல்கத்தாவில் முஸ்லிம் லீகில் சந்தித்திருந்தேன். டாக்டர் அன்ஸாரியுடனும்‡ டாக்டர் அப்துர் ரஹ்மானுடனும் எனக்குப்

---

* அலி சகோதரர்கள்: மௌலானா ஷௌகத் அலியும் அவர் சகோதரர் மௌலானா முகமது அலியுமே அலி சகோதரர்கள் என்று அழைக்கப்பட்டு வந்தனர். இவர்கள் இந்திய முஸ்லிம்களின் முக்கியத் தலைவர்கள். கிலாபத், ஒத்துழையாமைக் காலங்களில் இச் சகோதரர்கள் மகாத்மாவுக்கு முக்கியமான பக்க துணையாக இருந்து போராடிய சிறந்த தேசபக்தர்களாவர். காக்கினடா காங்கிரசுக்கு மௌலானா முகமது அலி தலைமை வகித்தார். 1911 – '13-இல் நடந்த துருக்கி – இத்தாலிய யுத்தம், பால்கன் யுத்தங்களின் போது, உலக முஸ்லிம்கள் ஒன்றுபட வேண்டும் என்ற இயக்கம் இந்தியாவிலும் பலம் பெற்றது. இந்த இயக்கத்திற்கு இந்தியாவில் அலி சகோதரர்கள் தலைவர்களாக இருந்து நடத்தினர்கள். முதல் உலக யுத்தம் ஆரம்பமான பின்னர் அலி சகோதரர்களை சிறை வைத்துவிட்டனர். வைசிராய் கூட்டிய யுத்த மகாநாட்டிற்குச் சிறையிலிருந்த அலி சகோதரர்களை அழைக்காதது குறித்தே மகாத்மா அம் மகாநாட்டில் கலந்துகொள்ள முதலில் ஆட்சேபித்தார். ஹிந்து–முஸ்லிம் ஒற்றுமைக்கு அலி சகோதரர்களும், தாமும் ஒரு சரியான எடுத்துக்காட்டு என்று மகாத்மா அடிக்கடி கூறிவருவார். "நாங்கள், எங்கள் மதங்களில் ஆழ்ந்த பக்தியுள்ளவர்கள். ஆயினும் நாங்கள் சகோதரர்களாகவே இருக்கிறோம்" என்று மகாத்மா கூறுவது வழக்கம்.

† ஹக்கீம் சாகிப்; டில்லியில் வாழ்ந்த பிரபல யூனானி வைத்தியரான ஹக்கீம் அஜ்மல்கானைத் தான் 'ஹக்கீம் சாகிப்' என மகாத்மா அன்புடன் அழைப்பது வழக்கம். 1918–இல் டில்லியில் மாளவியாஜி தலைமையில் நடந்த காங்கிரசுக்கு இவர் வரவேற்புக் கமிட்டித் தலைவராயிருந்தார். 1921–இல் அகமதாபாத்தில் நடந்த காங்கிரசுக்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட தேசபந்து தாஸ் சிறையிலிருந்ததனால் ஹக்கீம் சாகிப் தலைமை தாங்கினர். ஹிந்து – முஸ்லிம் ஒற்றுமையின் அவதாரம் எனக் கருதப்பட்ட இவரை டில்லியில் கூடிய ஹிந்து மகாசபையினர் தலைவராகத் தேர்ந்தெடுத்தனர். 1922–இல் லட்சுமணபுரியில் கூடிய அ. இ. கா. கமிட்டிக் கூட்டத்தில் சட்ட மறுப்பு நடத்த நாடு தகுதி பெற்றிருக்கிறதா என்பதை விசாரிப்பதற்கு ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது. அந்தக் கமிட்டிக்கு ஹக்கீம் அஜ்மல்கான் தலைவராயிருந்தார்.

‡ டாக்டர் அன்ஸாரி: டில்லியில் பிரபல டாக்டராயிருந்த இவர் இல்லத்தில் தான் அக்காலத்தில் டில்லி செல்லுகையில் மகாத்மா தங்குவது வழக்கம். 1898-இல் இவர் சென்னையில் வைத்தியக் கல்லூரியில் படித்தார். 1912–இல் செஞ்சிலுவைச் சங்கத்தின் சார்பாக வைத்திய உதவி செய்வதற்கு ஐரோப்பாவில் பால்கன் நாடுகளுக்குச் சென்றார். கலீபா என்ற முறையில் துருக்கி சுல்தானுடைய ஆதிபத்தி

பழக்கம் இருந்தது. உத்தமமான முஸ்லிம்களின் நட்பை நான் நாடினேன். முஸ்லிம்களின் புனிதமான, அதிக தேசாபிமானமுள்ள பிரதிநிதிகளுடன் தொடர்புகொண்டு அதன் மூலம் முஸ்லிம்களின் மனத்தைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்று ஆவலுடன் இருந்தேன். ஆகையால், அப்படிப்பட்டவர்களுடன் நெருங்கிய தொடர்பு வைத்துக்கொள்ளுவதற்காக, அவர்கள் என்னை எங்கே அழைத்துச் சென்ருலும் போவேன். அதற்கு எந்தவிதமான வற்புறுத்தலும் தேவையே இல்லை.

ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையே உண்மையான நட்பு இல்லை என்பதைத் தென்னுப்பிரிக்காவில் வெகு காலத்திற்கு முன்பே நான் தெரிந்து கொண்டேன். ஒற்றுமைக்குத் தடையாக இருப்பவைகளைப் போக்குவதற்குக் கிடைக்கும் எந்த வாய்ப்பையும் நான் தவற விட்டுவிடுவதில்லை. முகஸ்துதியாகப் பேசியோ, சுயமதிப்புக்குப் பாதகமான வகையில் நடந்தோ ஒருவரைச் சமாதானப்படுத்திக் கொண்டுவிடுவது என்பது என் சுபாவத்திற்கே விரோதமானது. ஹிந்து—முஸ்லிம் ஒற்றுமை விஷயத்தில்தான் என்னுடைய அகிம்சை கடுமையான சோதனைக்கு உள்ளாக நேரும் என்பதை எனது தென்னுப்பிரிக்க அனுபவம் எனக்குத் தெளிவாகக் காட்டியிருந்தது. அதோடு, இவ்விஷயமே என்னுடைய அகிம்சையின் சோதனைகளுக்கு மிக விஸ்தாரமான இலக்கை அளிக்கிறது என்றும் அறிந்திருந்தேன். அந்த உறுதியே இன்னும் இருந்து வருகிறது. என் வாழ்நாளின் ஒவ்வொரு கணத்திலும் கடவுள் என்னைச் சோதித்து வருகிருர் என்பதையும் உணருகிறேன்.

தென்னுப்பிரிக்காவிலிருந்து திரும்பியபோது இவ் விஷயத்தில் இவ்விதமான உறுதியான கொள்கையுடன் நான் இருந்ததனுல், அலி சகோதரர்களுடன் தொடர்பு பெறுவது மிகவும் முக்கியம் என்று மதித்தேன். ஆனுல், நெருக்கமான பழக்கம்

---

யத்திற்குப் பங்கம் விளைவிக்கலாகாது என்று கேட்டுக்கொள்ள வைசிராயிடம் சென்ற தூது கோஷ்டியில் இவரும் ஒருவர். சட்ட .மறுப்பு விசாரணைக் கமிட்டியில் இவரும் ஓர் அங்கத்தினராக நியமிக்கப்பட்டார். 1925–இல் காங்கிரஸின் பொதுக் காரியதரிசியாயிருந்தார். 1927–இல் சென்னையில் நடந்த காங்கிரசுக்குத் தலைமை தாங்கினுர். 1928–இல் நடந்த சர்வ கட்சி மகாநாட்டிற்குத் தலைமை வகித்தார். வட்டமேஜை மகாநாட்டிற்குக் காங்கிரஸ் பிரதிநிதிகளில் ஒருவராக இவரை அனுப்ப வைசிராய் லார்டு இர்வின் ஒப்புக்கொண்டும் பின்னர் வந்த லார்டு வில்லிங்டன் அதற்கு இசையாததற்காக அம் மகாநாட்டுக்குத் தாம் செல்லப் போவதில்லை என மகாத்மா அறிவித்தார். உப்புச் சத்தியாக்கிரகத்தில் மகாத்மா கைதானதும் பின்பு இயக்கத்தை நடத்துவதற்கு நியமிக்கப்பட்ட சர்வாதிகாரிகளில் இவரும் ஒருவர். சுயராஜ்யக் கட்சி மீண்டும் உயிர் பெற்று வேலை செய்வதற்காக 1933–இல் நடந்த மகாநாட்டிற்கு இவர் தலைவராயிருந்தார். தமது யோசனைக்கு மகாத்மாவின் அங்கீகாரத்தைப் பெற்ருர், அன்சாரி.

ஏற்படுவதற்கு முன்னால் அவர்களைத் தனிமையில் வைத்துவிட்டனர். கடிதம் எழுத ஜெயிலர்கள் அனுமதிக்கும் போதெல்லாம் மௌலானா முகமது அலி, பேதூலிலிருந்தும் சிந்துவாடியிலிருந்தும் எனக்கு நீண்ட கடிதங்களை எழுதிக் கொண்டிருந்தார். அவர்களைப் போய்ப் பார்க்க அனுமதி கோரி விண்ணப்பித்துக் கொண்டேன். ஆனால், அனுமதி கிடைக்கவில்லை.

அலி சகோதரர்கள் சிறைப்பட்ட பின்னரே, கல்கத்தாவில் நடந்த முஸ்லிம் லீக் மகாநாட்டிற்கு முஸ்லிம் நண்பர்கள் என்னை அழைத்திருந்தார்கள். அங்கே பேசும்படி என்னைக் கேட்டுக் கொண்டபோது, அலி சகோதரர்கள் விடுதலையாகும்படி செய்ய வேண்டியது முஸ்லிம்களின் கடமை என்று பேசினேன். இதற்குச் சில நாட்களுக்குப் பிறகு இந்த நண்பர்கள், அலிகாரிலுள்ள முஸ்லிம் கல்லூரிக்கு என்னை அழைத்துச் சென்றனர். அங்கே பேசுகையில், தாய்நாட்டிற்குச் சேவை செய்வதற்காக இளைஞர்கள் பக்கிரிகள் ஆகவேண்டும் என்று அழைத்தேன்.

பிறகு அலி சகோதரர்கள் விடுதலைக்காக அரசாங்கத்துடன் கடிதப் போக்குவரத்து வைத்துக் கொண்டேன். இது சம்பந்தமாக, கிலாபத்*பற்றி அலி சகோதரர்கள் கொண்டிருந்த கருத்துக்களையும், அவர்களுடைய நடவடிக்கைகளையும் ஆராய்ந்தேன். முஸ்லிம் நண்பர்களுடனும் விவாதித்தேன். இதனால் ஒன்றை உணர்ந்தேன். நான் முஸ்லிம்களின் உண்மையான நண்பனாக வேண்டுமானால், அலி சகோதரர்களின் விடுதலையைப் பெறுவதற்காகவும், கிலாபத் பிரச்னையில் நியாயமான முடிவு ஏற்படுவதற்காகவும், சாத்தியமான எல்லா உதவிகளையும் நான் செய்யவேண்டும் என்பதே அது. அவர்களுடைய கோரிக்கையில் தரும விரோதமானது எதுவும் இல்லையென்றால், அதன் முழு நியாயங்களையும் குறித்து நான் ஆராய்ந்துகொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை. மத சம்பந்தமான விஷயங்களில் நம்பிக்கைகள் மாறுபடுகின்றன. அவரவர்களின் நம்பிக்கைதான் அவரவர்களுக்கு மேலானதாகும். மத சம்பந்தமான விஷயங்களிலெல்லாம் எல்லோருக்கும் ஒரே விதமான நம்பிக்கை இருக்குமானால், உலகில் ஒரே ஒரு மதம்

---

* துருக்கி சுல்தானே கலீபா. துருக்கி, திரேஸ், மெஸபடோமியா, அரேபியா, சிரியா, பாலஸ்தீனம் ஆகிய முஸ்லிம் நாடுகளின் மதத் தலைவரும் அவரே. இவ்விதம் முஸ்லிம் நாடுகளின்மீது கலீபாவான துருக்கி சுல்தானுக்கு இருக்கும் கிலாபத்துக்கு எந்த விதமான குந்தகமும் ஏற்படாது என்று, 1914-இல் நடந்த முதல் உலக யுத்தத்தின்போது, பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக இருந்த ஸ்ரீ லாயிட் ஜார்ஜ் இந்திய முஸ்லிம்களுக்கு வாக்குறுதி யளித்தார். அதன் பேரிலேயே துருக்கிக்கு எதிரான இந்த யுத்தத்தில் பிரிட்டிஷாருக்கு இந்திய முஸ்லிம்கள் உதவியளித்தனர். ஆனால் யுத்தம் முடிந்ததும் இந்த வாக்குறுதி நிறைவேற்றப்படவில்லை. துருக்கி நாட்டின் ஆசியப் பகுதிகளை பிரிட்டனும் பிரான்ஸும் பங்கு போட்டுக்கொண்டன. இந்திய முஸ்லிம்களிடையே பெரும் கிளர்ச்சியை உண்டாக்கிய கிலாபத் இயக்கத்தின் ஆரம்பம் இதுவே. இந்த இயக்கத்திற்கு ஹிந்துக்கள், மற்ற முஸ்லிமல்லாதவர்களின் ஆதரவைத் தேட மகாத்மா காந்தி அரும்பாடுபட்டார்.

தான் இருக்கும். கிலாபத் சம்பந்தமான முஸ்லிம்களின் கோரிக்கையில் தருமத்திற்கு விரோதமானது எதுவும் இல்லை என்பதோடு மாத்திரம் அல்ல, முஸ்லிம்களுடைய கோரிக்கையின் நியாயத்தைப் பிரிட்டிஷ் பிரதம மந்திரியே ஒப்புக் கொண்டிருக்கிறார் என்பதைப் பின்னால் அறிந்துகொண்டேன். ஆகையால், பிரதம மந்திரியின் வாக்குறுதி நிறைவேற்றப்படும்படி செய்வதற்கு என்னால் முடிந்த உதவியைச் செய்ய நான் கடமைப்பட்டிருக்கிறேன் என்று கருதினேன். மிகவும் தெளிவான முறையில் அந்த வாக்குறுதி அளிக்கப்பட்டிருந்ததால், என்னுடைய மனச்சாட்சியைத் திருப்தி செய்து கொள்ளுவதற்கு மாத்திரமே முஸ்லிம்களுடைய கோரிக்கையின் தகுதியைக் குறித்து நான் பரிசீலனை செய்துகொள்ள வேண்டியிருந்தது.

கிலாபத் பிரச்னையில் நான் கொண்ட போக்கைக் குறித்து நண்பர்களும் மற்றவர்களும் குற்றஞ் சொல்லியிருக்கின்றனர். அவர்கள் கண்டித்திருந்த போதிலும், என் கருத்தை மாற்றிக் கொள்ளுவதற்கு எந்தக் காரணமும் இருப்பதாக நான் எண்ணவில்லை. முஸ்லிம்களுடன் ஒத்துழைத்ததற்காக நான் வருந்தவும் இல்லை. இதேபோன்ற சமயம் இனி ஏற்படுமானால், அதே போக்கைத்தான் நான் அனுசரிக்க வேண்டும். ஆகையால், நான் டில்லிக்குச் சென்றபோது, முஸ்லிம்களின் கட்சியை வைசிராய்க்கு எடுத்துச் சொல்ல வேண்டும் என்ற முழு எண்ணத்துடனேயே சென்றேன். கிலாபத் பிரச்னை, பின்னால் அது கொண்ட உருவை அப்பொழுது அடைந்துவிடவில்லை.

ஆனால், நான் டில்லியை அடைந்ததும், மகாநாட்டிற்கு நான் செல்வதற்கு எதிராக மற்றொரு கஷ்டமும் ஏற்பட்டது. யுத்த மகாநாட்டில் நான் கலந்துகொள்ளுவது தருமமாகுமா என்ற கேள்வியைத் தீனபந்து ஆண்டுரூஸ் எழுப்பினார். இங்கிலாந்துக்கும் இத்தாலிக்கும் ஏற்பட்ட ரகசிய ஒப்பந்தங்களைப்பற்றிப் பிரிட்டிஷ் பத்திரிகைகளில் நடந்துவந்த விவாதங்களைக் குறித்து அவர் எனக்குக் கூறினார். இன்னுமொரு ஐரோப்பிய வல்லரசுடன் பிரிட்டன் ரகசியமாக ஒப்பந்தங்கள் செய்து கொண்டிருக்குமானால், இம் மகாநாட்டில் எப்படி நான் கலந்துகொள்ள முடியும் என்று ஸ்ரீ ஆண்டுரூஸ் கேட்டார். ஒப்பந்தங்களைப்பற்றி எனக்கு எதுவுமே தெரியாது. தீனபந்து ஆண்டுரூஸ் சொன்னதே எனக்குப் போதுமானது. ஆகவே, மகாநாட்டில் கலந்துகொள்ள நான் தயங்குவதன் காரணத்தை விளக்கி லார்டு செம்ஸ்போர்டுக்குக் கடிதம் எழுதினேன். இதைக் குறித்து என்னுடன் விவாதிப்பதற்காக அவர் என்னை அழைத்தார். அவருடனும் அவருடைய அந்தரங்கக் காரியதரிசி ஸ்ரீ மாபியுடனும் நீண்ட நேரம் விவாதித்தேன். அதன்பேரில் மகாநாட்டில் கலந்துகொள்ளச் சம்மதித்தேன். வைசிராய் வாதத்தின் சாராம்சம் இதுதான்: “பிரிட்டிஷ் மந்திரி சபை செய்யும் ஒவ்வொன்றும் வைசிராய்க்குத் தெரியும் என்று நிச்சயமாக நீங்கள்

நம்பிவிடமாட்டீர்கள். பிரிட்டிஷ் அரசாங்கம் தவறே செய்யாது என்று நான் சொல்லவில்லை; யாரும் சொல்லவுமில்லை. ஆனால், மொத்தத்தில் சாம்ராஜ்யம் நல்லதற்கான ஒரு சக்தி என்பதை நீங்கள் ஒப்புக்கொள்ளுகிறீர்கள் என்றால், இந்தியா, பிரிட்டிஷ் சம்பந்தத்தினால் மொத்தத்தில் நன்மை யடைந்திருக்குமாயின், சாம்ராஜ்யத்திற்கு ஆபத்து ஏற்பட்டிருக்கும் இச் சமயத்தில் அதற்கு உதவி செய்யவேண்டியது ஒவ்வொரு இந்தியரின் கடமை என்பதை ஒப்புக்கொள்ளுவீர்களல்லவா? ரகசிய ஒப்பந்தங்களைக் குறித்துப் பிரிட்டிஷ் பத்திரிகைகள் என்ன கூறுகின்றன என்பதை நானும் படித்தேன். இந்தப் பத்திரிகைகள் கூறுவதற்கு மேல் எனக்கு எதுவும் தெரியாது என்று உங்களுக்கு உறுதி கூறுகிறேன். அதோடு, அடிக்கடி பத்திரிகைகள் கதை கட்டிவிடுகின்றன என்பதையும் நீங்கள் அறிவீர்கள். பத்திரிகைச் செய்திகளை மாத்திரம் ஆதாரமாக வைத்துக்கொண்டு இது போன்ற ஒரு நெருக்கடியான சமயத்தில் சாம்ராஜ்யத்திற்கு உதவிசெய்ய நீங்கள் மறுக்கலாமா? இன்று அல்ல, இந்த யுத்தம் முடிந்த பிறகு, எந்தத் தார்மிகப் பிரச்னையில் வேண்டுமானாலும் உங்கள் இஷ்டப்படி நீங்கள் ஆட்சேபங்களைக் கிளப்பி எங்களுக்குச் சவால் விடலாம்.''

வாதம் புதியது அன்று. ஆனால், அது கூறப்பட்ட முறையினாலும், கூறப்பட்ட நேரத்தின் காரணமாகவும் அது புதியதாக எனக்குத் தோன்றியது. மகாநாட்டில் கலந்துகொள்ளுவதற்கும் சம்மதித்தேன். முஸ்லிம்களின் கோரிக்கையைப் பொறுத்த வரையில் வைசிராய்க்கு நான் கடிதம் எழுதுவது என்பதும் முடிவாயிற்று.

## 27

# படைக்கு ஆள் திரட்டல்

ஆகவே நான் மகாநாட்டிற்குச் சென்றேன். படைக்கு ஆள் திரட்டுவது சம்பந்தமான தீர்மானத்தை நான் ஆதரிக்க வேண்டும் என்பதில் வைசிராய் அதிகச் சிரத்தையுடன் இருந்தார். ஹிந்துஸ்தானியில் நான் பேச அனுமதிக்க வேண்டும் என்று கேட்டேன். என் கோரிக்கைக்கு வைசிராய் அனுமதியளித்தார். ஆனால், நான் ஆங்கிலத்திலும் பேச வேண்டும் என்று யோசனை கூறினார். நான் நீளமான பிரசங்கம் செய்ய எண்ணவில்லை. பேசினேன். "என் பொறுப்பைப் பூரணமாக உணர்ந்தே நான் இத் தீர்மானத்தை ஆதரிக்கிறேன்'' என்ற ஒரே வாக்கியமே நான் பேசியது.

ஹிந்துஸ்தானியில் நான் பேசியதற்காகப் பலர் என்னைப் பாராட்டினார்கள். இத்தகைய கூட்டத்தில் ஹிந்துஸ்தானியில் பேசியது அதுவே முதல் தடவை என்றும் அவர்கள்

கூறினர்கள். இப் பாராட்டுக்களும், வைசிராய் கூட்டமொன்றில் ஹிந்துஸ்தானியில் முதல் முதல் பேசியது நானே என்பது கண்டு பிடிக்கப்பட்டதும், என்னுடைய தேசீய கௌரவத்தைப் பாதித் தன. எனக்கு நானே குன்றிப் போய்விட்டதாக உணர்ந்தேன். நாட்டில், நாடு சம்பந்தமான வேலையைப் பற்றிய கூட்டங்களில், நாட்டின் மொழி தடுக்கப்பட்டிருப்பதும், என்னைப் போன்ற யாரோ ஒருவர் அங்கே ஹிந்துஸ்தானியில் பேசிவிட்டது பாராட் டுதற்குரிய விஷயமாக இருப்பதும், எவ்வளவு பெரிய துக்ககர மான விஷயம்! நாம் எவ்வளவு இழிவான நிலைமையை அடைந் திருக்கிறோம் என்பதை இதுபோன்ற சம்பவங்கள் நினைவூட்டு கின்றன.

மகாநாட்டில் நான் பேசியது ஒரே ஒரு வாக்கியமேயாயினும் எனக்கு அது அதிக முக்கியமான பொருளைக் கொண்டதாகும். அம் மகாநாட்டையோ, அதில் நான் ஆதரித்த தீர்மானத்தையோ மறந்துவிடுவது எனக்குச் சாத்தியமல்ல. செய்வதாக நான் ஏற்றுக்கொண்டிருந்த ஒரு காரியத்தை டில்லியிலிருந்தபோதே நான் நிறைவேற்றியாக வேண்டியிருந்தது. வைசிராய்க்கு நான் கடிதம் எழுதவேண்டியிருந்தது. எனக்கு இது எளிதான காரிய மன்று. அரசாங்கம், மக்கள் ஆகிய இரு தரப்பினரின் நன்மையை யும் முன்னிட்டு, எப்படி, ஏன் அம் மகாநாட்டுக்கு வந்தேன் என்பதை அக் கடிதத்தில் விளக்கிச் சொல்லி, அரசாங்கத்தினிட மிருந்து மக்கள் எதிர்பார்ப்பது என்ன என்பதையும் தெளிவாக எடுத்துக் காட்டவேண்டியது என் கடமை என்பதை உணர்ந் தேன்.

லோகமான்ய திலகர், அலி சகோதரர்கள் போன்ற தலைவர் கள் மகாநாட்டிற்கு அழைக்கப்படாமல் விலக்கப்பட்டிருந்தது குறித்து என் வருத்தத்தை அக் கடிதத்தில் தெரிவித்தேன். மக்களின் குறைந்தபட்ச ராஜீயக் கோரிக்கையைக் குறித்தும், யுத்தத்தினல் ஏற்பட்ட நிலைமையின் காரணமாக உண்டாகி யிருக்கும் முஸ்லிம்களின் கோரிக்கையைப் பற்றியும் அதில் கூறி னேன். அக் கடிதத்தைப் பிரசுரிக்கவும் அனுமதி கேட்டேன். வைசிராயும் மகிழ்ச்சியுடன் அனுமதியளித்தார்.

மகாநாடு முடிந்தவுடனேயே வைசிராய் சிம்லாவுக்குப்போய் விட்டதால், அக் கடிதத்தை அங்கே அனுப்பவேண்டியிருந்தது. எனக்கோ, அக் கடிதம் அதிக முக்கியத்துவம் வாய்ந்தது. தபால் மூலம் அனுப்புவதாயிருந்தால் தாமதம் ஆகிவிடவும் கூடும். சீக்கி ரத்தில் கடிதம் போய்ச் சேர வேண்டும் என்று விரும்பினேன். ஆனல், அதைக் கண்டவர்களிடம் கொடுத்தனுப்பிவிடவும் எனக்கு மனமில்லை. புனிதமான ஒருவர் அதை எடுத்துச் சென்று வைசிராய் மாளிகையில் அவரிடம் நேரில் சேர்ப்பிக்க வேண்டும் என்று விரும்பினேன். கேம்பிரிட்ஜ் மிஷனைச் சேர்ந்த புனித பாதிரியாரான பூஜ்ய அயர்லாந்திடம் கொடுத்தனுப்பலாம் என்று தீனபந்து ஆண்டுரூஸும், பிரதமப் பேராசிரியர் ருத்திரா

வும் யோசனை கூறினர். கடிதத்தைப் படித்துப் பார்த்து, அது நல்லது என்று தமக்குத் தோன்றினல் அதைக் கொண்டு போவ தாக அவர் ஒப்புக்கொண்டார். அக்கடிதம் ரகசியமானதல்ல வாகையால் அதை அவர் படித்துப் பார்ப்பதில் எனக்கு ஆட் சேபமில்லை. கடிதத்தை அவர் படித்தார்; அது அவருக்குப் பிடித் திருந்தது. அதைக் கொண்டுபோய்ச் சேர்க்க ஒப்புக்கொண்டார். அவருக்கு இரண்டாம் வகுப்பு ரெயில் கட்டணம் கொடுப்பதாகக் கூறினேன். ஆனல், இன்டர் வகுப்பில் பிரயாணம் செய்வது தான் தமக்குப் பழக்கம் என்று கூறி அதை வாங்கிக்கொள்ள மறுத்துவிட்டார். இரவுப் பிரயாணமாக இருந்தும் இன்டர் வகுப்பிலேயே சென்றூர். அவருடைய எளிமையும், நேரிய, ஒளிவு மறைவு இல்லாத போக்கும் என்னைக் கவர்ந்துவிட்டன. இவ் விதம் தூய்மையான உள்ளம் படைத்த ஒருவர் மூலம் அனுப்பப் பெற்ற கடிதம், நான் எண்ணியவாறே விரும்பிய பலனைத் தந்தது. அது என் மனத்திற்கு ஆறுதல் அளித்ததோடு நான் செல்ல வேண்டிய வழியையும் தெளிவுபடுத்தியது.

செய்வதாக நான் ஏற்றுக்கொண்ட கடமையின் மற்றெரு பகுதி, படைக்கு ஆள் திரட்டுவது. இந்த வேலையைக் கேடா வைத் தவிர நான் வேறு எங்கே ஆரம்பிப்பது? முதலில் சைனி யத்தில் சேருபவராக இருக்கும்படி என் சொந்த சக ஊழியர் களைத் தவிர வேறு யாரை நான் அழைக்க முடியும்? ஆகவே, நதியாத்துக்கு நான் போனதுமே வல்லபபாயையும் மற்ற நண் பர்களையும் அழைத்துப் பேசினேன். அவர்களில் சிலர் என் யோச னையை எளிதில் ஏற்றுக்கொண்டுவிட வில்லை. என் யோசனை பிடித்திருந்தவர்களுக்கோ, அது வெற்றி பெறுமா என்பதில் சந்தேகம் இருந்தது. எந்த வகுப்பினருக்கு நான் கோரிக்கை வெளியிட விரும்பினேனே அந்த வகுப்பாருக்கு அரசாங்கத்தி னிடம் அன்பு இல்லை. அரசாங்க அதிகாரிகளிடம் அவர்கள் அடைந்த கசப்பான அனுபவம் அவர்கள் மனத்தில் இன்னும் அப்படியே இருந்து வந்தது.

என்றூலும், வேலையைத் தொடங்குவதற்கு அவர்கள் ஆதர வாக இருந்தார்கள். என் வேலையை நான் ஆரம்பித்ததுமே என் கண்கள் திறந்துவிட்டன. நான் கொண்டிருந்த நம்பிக்கை, பயங்கரமான அதிர்ச்சியை அடைந்தது. நிலவரிப் போராட்டத் தின் போது மக்கள் தங்கள் வண்டிகளை வாடகை வாங்கிக்கொள் ளாமலேயே தாராளமாகக் கொடுக்க முன்வந்தார்கள். ஒரு தொண்டர் வேண்டுமென்றபோது, இரண்டு பேர் தொண்டர் களாக வந்தார்கள். அப்படியிருக்க இப்பொழுதோ, வாட கைக்கும் ஒரு வண்டி கிடைக்கவில்லை யென்றுல் தொண்டர்கள் விஷயத்தைச் சொல்லத் தேவையில்லை. ஆயினும், நாங்கள் அதைரியம் அடைந்துவிடவில்லை. வண்டிகளில் போவது என் பதையே விட்டுவிட்டு நடந்தே பிரயாணஞ் செய்வது என்று தீர்மானித்தோம். இவ்விதம் நாங்கள் தினம் இருபது மைல் நடக்க வேண்டியவர்களானேம். வண்டியே கிடைப்பதில்லை

யென்றால், அம் மக்கள் எங்களுக்குச் சாப்பாடு போடுவார்கள் என்று எதிர்பார்ப்பதும் வீண் வேலை. சாப்பாடு போடுமாறு கேட்பதும் சரியல்ல. ஆகவே, ஒவ்வொரு தொண்டரும் தமக்கு வேண்டிய சாப்பாட்டைக் கையில் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று தீர்மானித்தோம். அது கோடைக்காலம். ஆகையால் படுக்கையோ, போர்வையோ தேவைப்படவில்லை.

சென்ற இடங்களிலெல்லாம் கூட்டங்களை நடத்தினோம். அவற்றிற்கு மக்கள் வந்தார்கள். ஆனால், ஒருவர் இருவர்கூட ராணுவத்தில் சேர முன்வரவில்லை. "நீங்கள் அகிம்சையை அனுசரிக்கிறவர்கள். அப்படியிருக்க ஆயுதங்களை ஏந்துமாறு எங்களை நீங்கள் எப்படிக் கேட்கலாம்?" "எங்கள் ஒத்துழைப்பைப் பெறுவதற்கு அரசாங்கம் இந்தியாவுக்கு என்ன நன்மையைச் செய்துவிட்டது?"—இவை போன்ற கேள்விகளையெல்லாம் எங்களைக் கேட்டார்கள். என்றாலும், நிதானமாக நாங்கள் வேலை செய்துகொண்டுபோனது பயன் தர ஆரம்பித்தது. பலர் தங்கள் பெயர்களைப் பதிவு செய்துகொண்டனர். முதல் கோஷ்டி அனுப்பப்பட்டதுமே தொடர்ந்து ஆட்களை அனுப்பிக்கொண்டிருப்பது சாத்தியமாகும் என்று நம்பினோம். படைக்குச் சேரும் ஆட்களை எங்கே தங்கச் செய்வது என்பதைப் பற்றிக் கமிஷனருடன் ஆலோசிக்கவும் தொடங்கினேன்.

டில்லியில் நடந்த மகாநாட்டை அனுசரித்து, ஒவ்வொரு டிவிஷனிலும் கமிஷனர்கள் மகாநாடுகளை நடத்தினார்கள். அத்தகைய மகாநாடு ஒன்று குஜராத்தில் நடந்தது. என் சக ஊழியர்களையும் என்னையும் அதற்கு அழைத்திருந்தார்கள். நாங்கள் போயிருந்தோம். ஆனால், டில்லி மகாநாட்டில் எனக்கு இருந்த இடங்கூட இதில் எனக்கு இல்லை என்பதை உணர்ந்தேன். அடிமை உணர்ச்சியே நிலவியிருந்த அச் சூழ்நிலை எனக்குச் சங்கடமாக இருந்தது. அங்கே கொஞ்சம் விரிவாகவே பேசினேன். நான் சொன்னதில் அதிகாரிகளுக்குக் கஷ்டமாக இருக்கக்கூடிய இரண்டொரு விஷயங்கள் நிச்சயமாக இருந்தனவேயன்றி அவர்களுக்குத் திருப்தியளிக்கும்படி நான் எதுவும் சொல்ல முடியவில்லை.

படையில் சேரும்படி மக்களைக் கேட்டுக்கொண்டு நான் துண்டுப் பிரசுரங்களை வெளியிட்டு வந்தேன். அவற்றில் நான் உபயோகித்த வாதங்களில் ஒன்று கமிஷனருக்குப் பிடிக்கவில்லை. அந்த வாதம் இதுதான்: "இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி செய்திருக்கும் தவறான பல செய்கைகளில், தேச மக்கள் எல்லோருக்குமே ஆயுதப் பயிற்சி இல்லாது போகும்படி செய்திருக்கும் சட்டமே மிகவும் மோசமானது என்று சரித்திரம் கூறும். ஆயுதச் சட்டம் ரத்தாக வேண்டும் என்று நாம் விரும்பினால், ஆயுதங்களை உபயோகிப்பதை நாம் கற்றுக்கொள்ள விரும்பினால், அதற்குப் பொன்னான வாய்ப்பு இதோ இருக்கிறது. அரசாங்கத்திற்குக் கஷ்டம் ஏற்பட்டிருக்கும் இச் சமயத்தில்,

மத்தியதர வகுப்பினர் வலிய வந்து அதற்கு உதவி செய்வார்களாயின், அவநம்பிக்கை மறைந்துவிடும்; ஆயுதங்கள் வைத்துக் கொள்ளுவதற்கு இருக்கும் தடையும் ரத்தாகிவிடும்.'' கமிஷனர் இதைப் பற்றிக் குறிப்பிட்டு, எங்களுக்குள் அபிப்பிராய பேதமிருந்தும் நான் மகாநாட்டிற்கு வந்ததைப் பாராட்டினர். ஆகவே, என்னல் முடிந்தவரையில் மரியாதையுடன் என் கட்சியிலிருக்கும் நியாயத்தை நான் எடுத்துக்கூற வேண்டியதாயிற்று.

வைசிராய்க்கு நான் எழுதிய மேலே குறிப்பிட்டிருக்கும் கடிதம் இதுவே :

''26-ஆம் தேதி (ஏப்ரல்) தங்களுக்கு ஒரு கடிதம் எழுதினேன். அதில் கண்ட காரணங்களைப்பற்றிக் கவனமாகச் சிந்தித்ததன் பேரில் நான் மகாநாட்டிற்குவரமுடியாமல் இருக்கிறது என்பதை அக்கடிதத்தில் குறிப்பிட்டிருந்தேன். ஆனல், அதன் பிறகு நீங்கள் எனக்கு அளித்த பேட்டிக்குப் பின்னர், மகாநாட்டில் கலந்துகொள்ளுவது என்று என்னையே திடப்படுத்திக்கொண்டேன். இதற்கு வேறு காரணமில்லாது போயினும், தங்களிடம் நான் கொண்டிருந்த பெரும் மதிப்பே அதற்குக் காரணம். மகாநாட்டுக்கு வருவதில்லை என்று நான் எண்ணியதற்கு ஒரு காரணம்-முக்கியமான காரணம்-பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்குவதற்கு அதிகச் சக்தி வாய்ந்த தலைவர்கள் என்று நான் கருதும் லோகமான்ய திலகர், ஸ்ரீமதி பெஸன்ட், அலி சகோதரர்கள் ஆகியவர்களை அம்மகாநாட்டிற்கு அழைக்காததுதான். மகாநாட்டுக்கு வருமாறு அவர்களை அழைக்காது போனது பெரிய தவறு என்றே நான் இன்னும் கருதுகிறேன். அதைத் தொடர்ந்து மாகாண மகாநாடுகள் நடக்கப் போகின்றன என்று அறிகிறேன். அந்த மகாநாடுகளுக்காவது வந்து, அரசாங்கத்திற்கு ஆலோசனை கூறி உதவுமாறு அத் தலைவர்கள் அழைக்கப்படுவார்களானல், நடந்துவிட்ட தவறை நிவர்த்தித்துக்கொள்ள வழி ஏற்படும் என்ற யோசனையைப் பணிவுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இத் தலைவர்கள், ஏராளமான பொதுமக்களின் பிரதிநிதிகளாக உள்ளவர்கள். அரசாங்கத்துடன் மாறுபட்ட கருத்துள்ளவர்களாக அவர்கள் இருந்தபோதிலும், எந்த அரசாங்கமும் தலைவர்களை அலட்சியம் செய்துவிடமுடியாது என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். மகாநாட்டின் கமிட்டிகளில் எல்லாக் கட்சிகளும் தங்கள் அபிப்பிராயத்தைத் தாராளமாக எடுத்துக்கூற அனுமதிக்கப்பட்டது என்பது அதே சமயத்தில் எனக்கு மகிழ்ச்சியை அளிக்கிறது. என்னைப் பொறுத்தவரையில், நான் இருந்த கமிட்டியிலோ, மகாநாட்டிலோ, வேண்டுமென்றேதான் நான் என் அபிப்பிராயத்தைக் கூருமல் இருந்துவிட்டேன். மகாநாட்டில் கொண்டுவரப்பட்ட தீர்மானத்திற்கு என் ஆதரவை அளிப்பதோடு இருப்பது மாத்திரமே, மகாநாட்டின் நோக்கத்திற்குச் சிறந்த சேவை செய்ததாகும் என்று கருதினேன். அதையே மனப்பூர்வமாகச் செய்தேன். என்னுடைய உதவித் திட்டம் ஒன்றை இத்துடன் தனிக் கடிதத்தில் அனுப்பியிருக்கிறேன். அதை அரசாங்கம் ஏற்றுக்கொண்டதுமே மகாநாட்டில் நான் கூறியதைக் காரியத்தில் சீக்கிரத்தில் நிறைவேற்றலாம் என நம்புகிறேன்.

''மற்றக் குடியேற்ற நாடுகளைப்போன்று நாங்களும், சுயராஜ்யத்துடன் கூடிய சீக்கிரத்தில் பங்காளிகளாக ஆகிவிட வேண்டும் என்று ஆசைப்பட்டுக் கொண்டிருக்கிறேம். ஆகையால், இந்தச் சாம்ராஜ்யத்திற்கு ஆபத்து ஏற்பட்டிருக்கும் இச்சமயத்தில், இப்பொழுது நாங்கள் அளிக்கத் தீர்மானித்திருப்பது

போன்று, எந்தவிதமான தயக்கமும் இல்லாமல் பூரணமான ஆதரவை அளிக்க வேண்டும் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். இவ்வாறு உதவி செய்ய முன் வந்திருப்பதற்குக் காரணம், இன்னும் அதிக விரைவில் நமது லட்சியத்தை யடைய முடியும் என்று எதிர்பார்ப்பதுதான் என்பதே உண்மை. அந்த வகையில் கடமையைச் செய்வதானலும், அப்படிச் செய்வோர், அதே சமயத்தில் உரிமையையும் தானே பெறுகின்றனர். ஆகையால், சீக்கிரத்தில் வரப் போவதாக உங்கள் பிரசங்கத்தில் நீங்கள் குறிப்பிட்டிருக்கும் அரசியல் சீர்திருத்தங்கள், முக்கிய அம்சங்களில் காங்கிரஸ்-லீக் திட்டத்தை அனுசரித்தவையாக இருக்கும் என்று எண்ண மக்களுக்கு உரிமை உண்டு. இந்த நம்பிக்கையே அரசாங்கத்திற்கு மனப்பூர்வமான ஒத்துழைப்பை மகாநாட்டில் அளிக்கும்படி பலரைச் செய்தது என்பதில் சந்தேகம் இல்லே.

"முன் வைத்த காலைப் பின் வாங்கிக்கொள்ளும்படி என் தேச மக்களைச் செய்ய என்னல் முடியுமானல், காங்கிரஸ் தீர்மானங்களை யெல்லாம் அவர்கள் வாபஸ் வாங்கிக்கொண்டு, யுத்தம் நடந்து கொண் டிருக்கும் வரையில் 'சுயாட்சி' 'பொறுப்பாட்சி' என்ற பேச்சைப் பேசக்கூடாது என்று சொல்லி, அவர்கள் அவ்விதமே செய்யும்படியும் செய்வேன். சாம்ராஜ்யத்திற்கு நெருக்கடியான சமயம் ஏற்பட்டிருக்கும் இந்த நேரத்தில், உடல் வலுவுள்ள தம் புதல்வர்கள் எல்லோரையும் இந்தியா, சாம்ராஜ்யத்திற்குத் தியாகஞ் செய்துவிட முன் வரும்படியும் செய்வேன். இச் செய்கை ஒன்றினலேயே, சாம்ராஜ்யத்தில் இந்தியா அதிகச் சலுகைகளுடன்கூடிய பங்காளியாகிவிடுவதோடு நிறபேதங்க ளெல்லாம் என்ரே இருந்தவை என்ருகிவிடும் என்பதையும் நான் அறிவேன். ஆனல், அனுபவத்தில், படித்த இந்தியர் எல்லோருமே இதைவிடக் குறைந்த பலனுள்ள முறையையே தீர்மானித் திருக்கின்றனர். பொது மக்களிடையே படித்த இந்தியருக்கு எந்தவிதமான செல்வாக்குமே இல்லே என்று சொல்லி விடுவது இனியும் சாத்தியமானதன்று. நான் தென்னுப்பிரிக்காவிலிருந்து திரும்பியது முதல் விவசாயிகளுடன் மிகவும் நெருங்கிய தொடர்பு வைத்துக் கொண்டு வருகிறேன். சுயாட்சி ஆர்வம் அவர்கள் இடையேயும் அதிகமாகப் பரவியிருக்கிறது என்பதை உங்களுக்கு உறுதியாகக் கூற விரும்புகிறேன். சென்ற காங்கிரஸ் மகாநாட்டிற்குப் போயிருந்தேன். பார்லிமென்டு நிறைவேற்றும் சட்டத்தின் மூலம் திட்டமாகத் தேதியைக் குறிப்பிட்டு, அந்தக் காலத்திற்குள் பிரிட்டிஷ் இந்தியாவுக்கு முழுப்பொறுப்பாட்சியும் அளித்துவிட வேண்டும் என்று காங்கிரஸில் தீர்மானம் நிறைவேறியதில் என் பங்கும் உண்டு. அதைச் செய்வது தைரியமான காரியமே என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனல், சாத்தியமான அளவு குறைந்த காலத்திற்குள் சுயாட்சியை அடைய முடியும் என்ற திட்டமான எண்ணம் ஏற்படுவதைத் தவிர வேறு எதுவும் இந்திய மக்களைத் திருப்தி செய்யாது என்பதை நிச்சயமாக அறிகிறேன். இந்த லட்சியத்தை அடைவதற்குச் செய்யும் எந்தத் தியாகமும் பெரிய தாகாது என்று எண்ணுகிறவர்கள் இந்தியாவில் அநேகர் இருக்கிருர்கள் என்பதை அறிவேன். அதேசமயத்தில் எந்தச் சாம்ராஜ்யத்தில் முடிவான அந்தஸ்தை அடைய நினைக்கிருர்களோ, விரும்புகிருர்களோ, அந்தச் சாம்ராஜ்யத்திற்காகத் தங்களையே தியாகம் செய்யவும் தயாராக இருக்க வேண்டும் என்பதையும் விழிப்புடன் அவர்கள் அறிந்தே இருக்கிருர்கள். ஆகவே சாம்ராஜ்யத்தை மிரட்டி வரும் அபாயத்திலிருந்து அதைக் காப்பாற்றுவதற்காக, மௌனமாக வும் மனப் பூர்வமாகவும் பாடுபடுவதனல் லட்சியத்தை நோக்கிச் செல்லும் நமது பிரயாணத்தைத் துரிதப்படுத்தி விடலாம் என்று ஆகிறது. சாதாரண

மானதான இந்த உண்மையை அறியாது போவது தேசியத் தற்கொலையே ஆகும். சாம்ராஜ்யத்தைக் காப்பாற்றுவதற்கு நாம் பணி புரிந்தால், அப்பணியிலேயே நாம் சுய ஆட்சியை அடைந்தவர்களாகிறோம் என்பதை நாம் கண்டு கொள்ள வேண்டும்.

“ஆகையால், சாம்ராஜ்யத்தின் பாதுகாப்புக்கு நாம் அழைக்கக்கூடிய ஒவ்வொருவரையும் அழைக்க வேண்டும் என்பது எனக்குத் தெளிவாகிறது. ஆனால், பொருளுதவியைப் பொறுத்தவரையில் அவ்வாறு நான் சொல்ல முடியாது என்றே அஞ்சுகிறேன். இந்தியா, தன்னுடைய சக்திக்கு அதிகமாகவே சாம்ராஜ்யத்தின் பொக்கிஷத்திற்குக் கொடுத்திருக்கிறது என்று, விவசாயிகளிடம் நான் கொண்டிருக்கும் நெருங்கிய தொடர்பினால் நிச்சயமாகக் கருதுகிறேன். நான் இவ்விதம் கூறுவது, என் நாட்டு மக்களின் பெரும்பான்மையோரின் அபிப்பிராயத்தைக் கூறுவதாகும் என்பதை அறிவேன்.

“டில்லியில் நடந்த யுத்த மகாநாடு, பொதுவானதோர் லட்சியத்திற்காக எங்கள் வாழ்க்கையை அர்ப்பணம் செய்துகொள்ளுவதில் ஒரு முக்கியமான காரியம் உண்டு என்று நான் கருதுகிறேன். எங்களில் மற்றும் பலரும் அவ்வாறே கருதுகிறார்கள் என்று நம்புகிறேன். ஆனால், எங்கள் நிலைமையோ மிகவும் விசித்திரமானது. இன்று நாங்கள் சாம்ராஜ்யத்தில் சம பங்காளிகளாக இல்லை. வருங்காலத்தில் அவ்வாறு ஆகலாம் என்ற நம்பிக்கையின் பேரில் எங்களை அர்ப்பணம் செய்திருக்கிறோம். அந்த நம்பிக்கை என்ன என்பதைத் தெளிவாகவும் சந்தேகத்திற்கு இடமில்லாத வகையிலும் உங்களுக்கு நான் கூறாதுபோனால், உங்களுக்கும் என் நாட்டிற்கும் உண்மையாக நடந்துகொண்டவனாக மாட்டேன். அது நிறைவேற்றப்படவேண்டும் என்பதற்காக நான் பேரம் பேசவில்லை. ஆனால், நம்பிக்கையில் ஏமாற்றம் என்பது, நம்பிக்கையையே ஒழிப்பதாகும் என்பதை நீங்கள் அறிய வேண்டும். இன்னுமொரு விஷயத்தை நான் சொல்லாமல் இருக்கக்கூடாது. நமது சொந்த வித்தியாசங்களையெல்லாம் மறந்துவிடுமாறு எங்களை நீங்கள் கேட்டுக்கொண்டீர்கள். அதிகாரிகளின் கொடுமைகளையும் அக்கிரமங்களையும் சகித்துக்கொள்ள வேண்டும் என்பதும் உங்கள் வேண்டுகோளுக்குப் பொருள் என்றால், அதற்கு இணங்க நான் அசக்தனாவேன். கட்டுப்பாடான கொடுமையை நான் கடைசிவரை எதிர்த்தே தீருவேன். ஒருவரைக்கூடத் துன்புறுத்தக் கூடாது என்றும், இதற்கு முன்னால் செய்து வந்ததைப்போல் அல்லாமல் பொதுஜன அபிப்பிராயத்தை மதித்து, அவர்களைக் கலந்து ஆலோசித்து நடக்க வேண்டும் என்றும் அதிகாரிகளுக்கு அந்த வேண்டுகோள் கூற வேண்டும். சம்பாரணில் நெடுங்காலமாக இருந்து வந்த கொடுமையை எதிர்த்ததன் மூலம், பிரிட்டிஷ் நீதியின் முடிவான சிறப்பை நான் காட்டியிருக்கிறேன். கேடாவில் அரசாங்கத்தை மக்கள் சபித்துக்கொண் டிருந்தார்கள். ஆனால், இன்றோ உண்மைக்காகத் துன்பங்களை அனுபவிக்கவும் தாங்கள் தயாராகும்போது சக்தி தாங்களேயன்றி அரசாங்கம் அல்ல என்பதை அதே மக்கள் இப்பொழுது உணருகிறார்கள். ஆகவே அம் மக்களிடமிருந்து மனக்கசப்பு மறைந்து வருகிறது. அநீதிகளை உணரும்போது ஒழுங்கான, மரியாதையான சட்ட மறுப்பை மக்கள் ஆட்சி சகிப்பதால் அரசாங்கம் மக்களின் அரசாங்கமாகவே இருக்க வேண்டும் என்று அம்மக்கள் தங்களுக்குத் தாங்களே சொல்லிக்கொள்ளுகின்றனர். இவ்விதம் சம்பாரண், கேடாக் காரியங்கள், யுத்தத்திற்கு நான் நேரடியாக, திட்டமாகச் செய்த விசேட உதவிகளாகும். அத் துறையில் என்னுடைய நடவடிக்கைகளை நிறுத்தி வைக்குமாறு கேட்பது என் உயிரையே நிறுத்தி

வைத்துவிடுமாறு நீங்கள் கேட்ப தாகும். மிகுந்த பலத்திற்குப் பதிலாக ஆத்ம சக்தியை, அதாவது அன்பின் சக்தியை எல்லோரும் அனுசரிக்கும்படி நான் செய்ய முடியுமானல், உலகம் முழுவதும் அதனல் முடிந்ததை யெல்லாம் செய்தாலும், அதையும் எதிர்த்து நிற்கக்கூடிய இந்தியாவை உங்களுக்கு நான் காட்ட முடியும். ஆகையால், துன்பத்தைச் சகிப்பது என்னும் இந்த நிரந்தர மான தருமத்தை என் வாழ்க்கையில் வெளிக்காட்டும் வகையில் என்னையே நான் கட்டுத் திட்டங்களுக்கு உட்படுத்திக் கொள்ளுவேன். அதில் சிரத்தை யுள்ளோ ரெல்லாம் இத் தருமத்தை ஏற்றுக்கொள்ளுமாறு உபதேசிப்பேன். நான் வேறு ஏதாவது நடவடிக்கைகளில் ஈடுபடுவேனுயின், அதன் நோக்கம் இந்தத் தருமத்தின் இணையில்லாத உயர்வைக் காட்டுவதற்கே யாகும்.

''கடைசியாக, முஸ்லிம் ராஜ்யங்கள் சம்பந்தமாகத் திட்டமான வாக் குறுதியை அளிக்குமாறு பிரிட்டிஷ் மந்திரிகளை நீங்கள் கேட்கவேண்டும் என்று விரும்புகிறேன். ஒவ்வொரு முகம்மதியரும் இவைகளில் ஆழ்ந்த சிரத்தை கொண்டிருக்கிருர் என்பதை நீங்கள் அறிவீர்கள். ஹிந்து என்ற வகையில் நான் அவர்களுடைய விஷயத்தில் அசட்டையாக இருந்துவிடக் கூடாது. அவர் களுடைய துயரங்கள் எங்கள் துயரங்க ளாகவே இருக்க வேண்டும். அந்த ராஜ்யங்களின் உரிமைகளை முற்றும் மதிப்பதிலும், முஸ்லிம்களின் புண்ணிய ஸ்தலங்கள் சம்பந்தமாக அவர்களுடைய உணர்ச்சிகளை மதிப்பதிலும், சுயாட்சி சம்பந்தமான இந்தியாவின் கோரிக்கையை நியாயமாகவும், தக்க காலத்திலும் நிறைவேற்றி வைப்பதிலுமே சாம்ராஜ்யத்தின் பாதுகாப்பு இருக்கிறது. ஆங்கில நாட்டு மக்களை நான் நேசிக்கிறேன். ஆங்கிலேயரிடம் ஒவ்வோர் இந்தியருக்கும் விசுவாசத்தை உண்டுபண்ண வேண்டும் என்று விரும்புகிறேன். அதனுலேயே இதை எழுதுகிறேன்.”

## 28

# மரணத்தின் வாயிலருகில்

படைக்கு ஆள் திரட்டும் வேலையில் என் உடம்பையே அநேகமாக நாசப்படுத்திக்கொண்டு விட்டேன். அந்த நாட் களில் நிலக்கடலை வெண்ணெயும் எலுமிச்சம் பழமுமே என் முக் கியமான உணவு. அந்த வெண்ணெயையே அதிகமாகச் சாப் பிட்டுவிட்டால், அதனல் உடம்புக்குத் தீமை உண்டாகும் என் பது எனக்குத் தெரியும். என்ருலும், அதை நான் அளவுக்கு மிஞ் சியே சாப்பிட்டுவிட்டேன். இதனல் எனக்கு இலேசாகச் சீத பேதி ஏற்பட்டது. அதை நான் அதிகமாகப் பொருட்படுத்தாம லேயே அன்று மாலை ஆசிரமத்திற்குச் சென்றேன். அடிக்கடி ஆசி ரமத்திற்கு நான் போய்வருவது வழக்கம். அந்த நாட்களில் நான் மருந்து எதுவும் சாப்பிடுவதில்லை. ஒரு வேளை பட்டினி போட்டு விட்டால் உடம்பு குணமாகிவிடும் என்று எண்ணினேன். மறு நாள் காலை சாப்பிடாமல் இருந்ததால் உண்மையில் உடம்பு

குணமாகி யிருப்பதாகவே உணர்ந்தேன். ஆனால், முழுவதும் குணமடைந்துவிட வேண்டுமானால் நீடித்து உபவாசம் இருந்து வர வேண்டும். ஏதாவது சாப்பிடுவதா யிருந்தாலும் பழரசத்தைத் தவிர வேறு எதுவுமே சாப்பிடக்கூடாது என்பதை அறிவேன்.

அன்று ஏதோ பண்டிகை நாள். மத்தியானம் நான் எதுவும் சாப்பிடப் போவதில்லை என்று கஸ்தூரிபாயிடம் கூறியிருந்தேன். ஆனால், சாப்பிடும் ஆசையை அவள் தூண்டிவிட்டாள். அதற்குப் பலியாகிவிட்டேன். பாலையோ, பாலினால் ஆனவைகளையோ சாப்பிடுவதில்லை என்று நான் விரதம் கொண்டிருந்ததால், நெய்க்குப் பதிலாக எண்ணெய் விட்டு அவள் எனக்காகக் கோதுமைத் தித்திப்புப் பலகாரம் செய்திருந்தாள். ஒரு கிண்ணம் நிறையப் பயற்றங் கஞ்சியும் வைத்திருந்தாள். இவைகளை உண்பதில் எனக்கு அதிகப் பிரியம் உண்டு. அவைகளைச் சாப்பிட்டேன். கஸ்தூரிபாயைத் திருப்தி செய்து, என் நாவின் ருசிக்கும் திருப்தி அளிக்கும் அளவு சாப்பிட்டால் கஷ்டப்பட வேண்டி வராது என்றும் நம்பினேன். ஆனால், ருசிப் பிசாசோ, எப்பொழுது சந்தர்ப்பம் கிடைக்கும் என்று காத்துக்கொண்டிருந்தது. மிகக் கொஞ்சமாகச் சாப்பிடுவதற்குப் பதிலாக வயிறு நிரம்பச் சாப்பிட்டுவிட்டேன். இதுவே எமனுக்குப் போதுமான அழைப்பாகிவிட்டது. ஒரு மணி நேரத்திற் கெல்லாம் சீதபேதி கடுமையாகத் தோன்றிவிட்டது.

அன்று மாலையே நான் நதியாத்திற்குத் திரும்ப வேண்டியிருந்தது. சாபர்மதி ஸ்டேஷனுக்குப் பத்து பர்லாங்கு தூரம் தான். என்றாலும், அதிகக் கஷ்டத்தின் பேரிலேயே அங்கே நடந்து சென்றேன். ஸ்ரீ வல்லபபாய், அகமதாபாத்தில் வந்து என்னோடு சேர்ந்துகொண்டார். நான் உடல் குணமின்றி இருப்பதைக் கண்டார். என்றாலும், வலி எவ்வளவு கடுமையாக இருந்தது என்பதை நான் அவருக்குக் காட்டிக்கொள்ளவே இல்லை.

இரவு பத்து மணிக்கு நதியாத் போய்ச் சேர்ந்தோம். எங்கள் தலைமை ஸ்தானமாக நாங்கள் கொண்டிருந்த ஹிந்து அனாதாசிரமம் ரெயிலடியிலிருந்து அரை மைல் தூரந்தான். ஆனால், அது எனக்குப் பத்து மைல் தூரம்போல் இருந்தது. எப்படியோ சமாளித்துக்கொண்டு அங்கே போய்ச் சேர்ந்து விட்டேன். ஆனால், வயிற்றிலிருந்த கடுப்பு வலி அதிகரித்துக்கொண்டே போயிற்று. வழக்கமாகப் போகும் கக்கூசு, தூரத்தில் இருந்ததால், பக்கத்து அறையிலேயே ஒரு மலச்சட்டி கொண்டு வந்து வைக்கும்படி கூறினேன். இதைக் கேட்க எனக்கு வெட்கமாக இருந்தபோதிலும் வேறு வழியில்லை. ஸ்ரீ பூல்சந்திரர், ஒரு மலச்சட்டியைத் தேடிக்கொண்டுவந்து வைத்தார். நண்பர்கள் எல்லோரும் அதிகக் கவலையுடன் என்னைச் சூழ்ந்துகொண்டார்கள். அவர்கள் என்னிடம் முழு அன்பையும் காட்டி என்னைக் கவனித்

தூக்கொண்டனர். ஆனால், எனக்கிருந்த வேதனையை அவர்களால் போக்கிவிட முடியாது. என்னுடைய பிடிவாதம் வேறு அவர்களால் ஒன்றும் செய்ய முடியாதபடி செய்துவிட்டது. வைத்திய உதவி எதையும் பெற நான் மறுத்துவிட்டேன். நான் மருந்தும் சாப்பிடுவதில்லை. நான் செய்துவிட்ட தவறுக்குத் தண்டனையை அனுபவிக்கவே விரும்பினேன். ஆகையால், அவர்கள் எதுவுமே செய்ய இயலாதவர்களாகப் பிரமித்து நின்றனர். இருபத்து நான்கு மணி நேரத்தில் முப்பது, நாற்பது தடவை பேதி யாகிவிட்டது. ஆரம்பத்தில் பழ ரசமும் சாப்பிடாமல் பட்டினி இருந்தேன். பசியே இல்லாது போயிற்று. என் உடல் இரும்புபோலப் பலமானது என்று நீண்ட காலமாக நான் எண்ணி வந்தேன். ஆனால், இப்பொழுதோ, இவ்வுடல் வெறும் களிமண் பிண்டம்போல் ஆகிவிட்டதைக் கண்டேன். நோயை எதிர்க்கும் சக்தியை யெல்லாம் அது இழந்துவிட்டது. டாக்டர் கனுகா வந்து மருந்து சாப்பிடுமாறு வேண்டினார். மறுத்துவிட்டேன். ஊசியினால் குத்தி மருந்தை ஏற்றுவதாகச் சொன்னார். அதற்கும் நான் மறுத்துவிட்டேன். ஊசியினால் குத்தி மருந்தை ஏற்றுவதைப்பற்றி அக்காலத்தில் எனக்கு ஒன்றுமே தெரியாமல் இருந்தது சிரிப்புக்கு இடமாகும். ஊசியினால் குத்தி ஏற்றும் மருந்து, ஏதோ பிராணியின் நிணநீராகவே இருக்க வேண்டும் என்று நம்பினேன். ஊசியினால் குத்தி எனக்கு ஏற்றுவதாக டாக்டர் சொன்ன மருந்து, ஏதோ மூலிகையின் சத்து என்பது எனக்குப் பின்னால்தான் தெரிந்தது. இதைக் காலங்கடந்தே நான் அறிந்து கொண்டதால் அதனால் பலனில்லாது போயிற்று. தொடர்ந்து வயிற்றுப்போக்கு இருந்தது. நான் முற்றும் களைத்துப் போனேன். களைப்பின் காரணமாக ஜுரமும் பிதற்றலும் ஏற்பட்டன. நண்பர்கள் மேலும் பீதியடைந்துவிட்டனர். வேறு பல வைத்தியர்களையும் அழைத்து வந்தார்கள். ஆனால், வைத்தியர்களுடைய யோசனைகளை யெல்லாம் கேட்கமாட்டேன் என்று இருக்கும் நோயாளிக்கு அவர்களால் என்ன செய்ய முடியும்?

சேத் அம்பாலால் தமது உத்தம பத்தினியுடன் நதியாத்திற்கு வந்து என் சக ஊழியர்களுடன் கலந்து ஆலோசித்தார். அகமதாபாத்தில் இருக்கும் தமது மீர்ஜாப்பூர் பங்களாவுக்கு என்னை மிகவும் ஜாக்கிரதையாகக் கொண்டு போனார். இந்த நோயின்போது நான் பெற்ற அன்பு நிறைந்த தன்னலமற்ற தொண்டைப்போன்று வேறு யாரும் பெற்றிருக்க முடியாது, ஆனால், ஒரு வகையான உள் ஜுரம் மாத்திரம் இருந்துகொண்டே வந்தது. இதனால். நாளுக்கு நாள் உடல் மெலிந்தது. நோய் நீண்ட காலம் நீடித்து இருந்து வரும், அநேகமாக மரணத்திலேயே முடிந்துவிடக்கூடும் என்று எண்ணினேன். அம்பாலால் சேத்தின் வீட்டில் என்மீது சொரியப்பட்ட அன்பிற்கும் கவனத்திற்கும் எல்லையே இல்லை. என்றாலும் என் மனம் அமைதியே இல்லாதிருந்தது. என்னை ஆசிரமத்திற்குக் கொண்டு போய்

விடும்படி அவரை வற்புறுத்தினேன். என் வற்புறுத்தலுக்கு அவர் இணங்கவேண்டியதாயிற்று.*

ஆசிரமத்தில் இவ்விதம் நான் வலியால் படுக்கையில் புரண்டு கொண்டிருக்கையில், ஜெர்மனி அடியோடு தோற்கடிக்கப்பட்டு விட்டது என்றும், படைக்கு ஆள் திரட்டுவது இனி அவசிய மில்லை என்று கமிஷனர் சொல்லி அனுப்பியிருக்கிறார் என்றும் ஸ்ரீ வல்லபபாய் செய்தி கொண்டு வந்தார். படைக்கு ஆள்

---

* ஸ்ரீ அம்பாலாலின் பங்களாவிலிருந்து காந்திஜி ஆசிரமத்திற்குப் போய்விட்டார் என்பதை அறிந்த பாபு ராஜேந்திரப் பிரசாத் உடனே அங்கே போய் அவரைப் பார்த்தார். அப்பொழுது மகாத்மா இருந்த நிலையைக் குறித்து ராஜன் பாபு தாம் எழுதியுள்ள 'அண்ணல் காந்தி அடிச்சுவட்டில்' என்ற நூலில் பின்வருமாறு எழுதியிருக்கிறார்:

"அப்பொழுது ஆசிரமத்தில் சில வீடுகள் கட்டப்பட்டிருந்தன. அதிகாலையில் நான் பார்க்கப் போனபோது, அந்த வீடுகளில் ஒன்றில் ஒரு பாயின் பேரில் மகாத்மா அமைதியின்றிக் கஷ்டப்பட்டுக்கொண்டு படுத்திருந்ததைப் பார்த்தேன். ஸ்ரீ சகன்லால் காந்தியும் உள்ளே இருந்தார். பிறகு மகாத்மா பேசினார்: 'எனக்கு ஜுரம் இருந்த போதிலும் பிடிவாதமாகவே நான் இங்கே வந்துவிட்டேன். மிர்ஜாப்பூரில் அந்தப் பெரிய மாளிகையில் நான் தங்கியிருந்தபோது, என் இடம் ஆசிரமமே யாகையால் அங்கே எனக்கு எந்த வேலையும் இல்லை என்று எண்ணினேன். ஆசிரமத்திற்குப் போய்விடும் வரையில் எனக்கு மன அமைதி இருக்காது என்றும் தோன்றியது. நான் இங்கே வந்த பிறகு நீண்ட நேரம் பின் வருமாறு சிந்தித்துக்கொண்டே படுத்திருந்தேன்: 'இது வரையில் என்ன செய்து வந்திருக்கிறேன்? கையிலிருக்கும் வேலையை முடிப்பதற்கு முன்னால் இன்னொன்றை எடுத்துக்கொண்டு விடுகிறேன். இரண்டாவது வேலையை முடிக்கும் முன்பு மூன்றாவது வேலைக்குப் போய்விடுகிறேன். எவ்வளவோ நம்பிக்கையின் பேரிலும் உற்சாகத்தோடும் இந்த ஆசிரமத்தை ஆரம்பித்தேன். இது உதாரணமான ஆசிரமமாக இருக்க வேண்டும், இதில் இருப்பவர்களை உதாரண புருஷர்கள் ஆக்கவேண்டும் என்று விரும்பினேன். ஆனால், சரியான வகையில் ஆரம்பிப்பதற்கு முன்னால் நான் சம்பாரணுக்குப் போக நேர்ந்ததோடு இதை நிர்வகிக்கும் பாரத்தை எல்லாம் உங்கள் தலைமீது சுமத்த வேண்டிய தாயிற்று. ஆசிரமம் ஆரம்ப மான தேதியில்கூட நான் இங்கே இருக்க முடியாது போயிற்று....மேலும் அகமதாபாத் மில் தொழிலாளரிடையே வேலை செய்ய ஆரம்பித்தேன். பிறகு அதை விட்டுவிட்டு வேறு காரியங்களில் ஈடுபட நேர்ந்தது. இப்படி அரைகுறையான வேலைகளைச் செய்வதிலேயே என் வாழ்நாள் கழியப் போகிறதா? நேற்று அந்தப் பெரிய மாளிகையில் எனக்கு எந்த நிம்மதியும் இல்லை. உண்மையைச் சொன்னால், அங்கே வசிப்பதனால் குற்றஞ் செய்வதாகவே எனக்குப் பட்டது. இதனாலேயே ஜுரமிருந்தும் ஆசிரமத்திற்குப் போயாக வேண்டும் என்று வற்புறுத்தினேன். இரவெல்லாம் திரும்பத் திரும்ப இதையே சிந்தித்துக்கொண் டிருந்தேன். அடுத்தபடி என்ன நடக்கப் போகிறது என்பது எனக்குத் தெரியவில்லை.'

"மகாத்மா உணர்ச்சி வசப்பட்டிருந்தார். கண்களிலிருந்து நீர் வந்துகொண்டிருந்தது. குழந்தைபோல் அழ ஆரம்பித்துவிட்டார். நாங்கள் அசைவற்று உட்கார்ந்திருந்தோம். என்ன சொல்லுவது? எப்படி அவரைத் தேற்றுவது என்பதே எங்களுக்குத் தோன்றவில்லை. என்றாலும், சிறிது நேரத்திற்கெல்லாம் அவரே சாந்தமடைந்து தேறி, பின்வருமாறு கூறினார்: 'இந்தக் கண்ணீர் என் மனத்திற்குக்கொஞ்சம் சாந்தியை அளித்திருக்கிறது. கடவுள் சம்மதம் எதுவோ அது நடக்கும்.' சிறிது நேரம் அமைதியாகப் படுத்திருந்தார். பிறகு எங்களைப் பார்த்து ஆசிரமத்தைப்பற்றிப் பேச ஆரம்பித்தார். அதற்கப்புறமே நான் பாட்னாவுக்குப் புறப்பட அனுமதி யளித்தார்."

திரட்டுவதைக் குறித்து நான் மேற்கொண்டும் கவலைப்படவேண்டியதில்லை என்பது எனக்கு அதிக ஆறுதலை அளித்தது.

அப்பொழுது நான் நீர்ச் சிகிச்சை செய்துகொண்டுவந்தேன். அதில் எனக்குக் கொஞ்சம் சுகம் தெரிந்தது. ஆனால், உடம்பு தேறும்படி செய்வது மிகவும் கஷ்டமான வேலையாக இருந்தது. வைத்தியர்கள் பலர் எனக்கு ஏராளமாக ஆலோசனை கூறி வந்தார்கள். ஆனால், அவற்றில் எதையும் அனுசரிக்க எனக்கு விருப்பமில்லை. பால் சாப்பிடுவதில்லை என்ற விரதம் கெடாமல் மாமிச சூப் சாப்பிடலாம் என்றும் இரண்டு, மூன்று வைத்தியர்கள் யோசனை கூறினர். இந்த ஆலோசனைக்கு ஆயுர்வேதத்திலிருந்தும் மேற்கோள்களைக் காட்டினர். அவர்களில் ஒருவர், முட்டைகளைச் சாப்பிடும்படி பலமாகச் சிபார்சு செய்தார். ஆனால், அவர்களெல்லோருக்கும், "முடியாது" என்ற ஒரே பதிலையே நான் கூறிவந்தேன்.

ஆகாரத்தைப்பற்றிய விஷயம், எனக்குச் சாத்திரங்களின் ஆதாரங்களைக் கொண்டு முடிவு செய்யவேண்டியது அன்று. என் வாழ்க்கையின் போக்கு, வெளி ஆதாரங்களை மேற்கொண்டும் நம்பியிராத கொள்கைகளின் வழியை அனுசரித்தது. அதனுடன் பின்னியிருப்பது எனது உணவு விஷயம். அக் கொள்கைகளைப் புறக்கணித்துவிட்டு வாழும் ஆசை எனக்கு இல்லை. என் மனைவி, குழந்தைகள், நண்பர்கள் இவர்கள் விஷயத்தில் இரக்கமற்ற வகையில் நான் வற்புறுத்தி வந்திருக்கும் ஒரு கொள்கையை என் விஷயத்தில் மாத்திரம் நான் எப்படிக் கைவிட்டுவிட முடியும்.

என் வாழ்க்கையில் எனக்கு முதல் முதல் ஏற்பட்ட நீண்ட நாள் தொடர்ந்த நோய் இதுதான். இந் நோய், என் கொள்கைகளைப் பரிசீலனை செய்து சோதிக்கும் வாய்ப்பை இவ்வாறு எனக்கு அளித்தது. ஒரு நாள் இரவு நான் நம்பிக்கையை அடியோடு இழந்துவிட்டேன். மரணத்தின் வாயிலில் நிற்கிறேன் என்றே எனக்குத் தோன்றியது. அனுசூயா பென்னுக்குச் சொல்லியனுப்பினேன். அவர் ஆசிரமத்திற்குப் பறந்தோடி வந்தார். வல்லபபாய், டாக்டர் கனுகாவுடன் வந்து சேர்ந்தார். டாக்டர், என் நாடியைப் பிடித்துப் பார்த்துவிட்டு, "உங்கள் நாடியெல்லாம் நன்றாகவே இருக்கிறது. அபாயம் எதுவும் இல்லவே இல்லை. பலவீனம் அதிகமாக இருப்பதால் ஏற்பட்டிருக்கும் ஆயாசம் இது" என்றார். ஆனால், எனக்கு மட்டும் நம்பிக்கை உண்டாகவில்லை. அன்று இரவெல்லாம் எனக்கு தூக்கமே வரவில்லை.

சாவு வராமலேயே பொழுது விடிந்துவிட்டது. ஆனால், முடிவு சமீபித்துவிட்டது என்ற உணர்ச்சி மாத்திரம் விடாமல் எனக்கு இருந்தது. ஆகவே, ஆசிரமவாசிகளைக் கீதையைப் படிக்கச் சொல்லிக் கேட்பதிலேயே விழித்திருக்கும் நேரம் முழு

வதையும் கழித்து வந்தேன். என்னால் படிக்க முடியாது. பிற ரிடம் பேசும் விருப்பமும் எனக்கு இல்லை. கொஞ்சம் பேசினாலும் மூளைக்குக் களைப்பாயிருந்தது. வாழ்வதற்காகவே வாழவேண் டும் என்ற விருப்பம் எனக்கு என்றுமே இல்லையாகையால், வாழ் வில் எல்லாச் சுவையும் போய்விட்டது. ஒன்றும் செய்யமுடியா மல் நண்பர்களிடமும் சக ஊழியர்களிடமும் வேலை வாங்கிக் கொண்டு உடல் மெள்ளத் தேய்ந்துகொண்டே போவதைக் காணும் மோசமான நிலைமையில் வாழ்ந்துகொண்டிருப்பது எனக்கு மிகுந்த துன்பமாகவே இருந்தது.

இவ்விதம் சதா சாவை எதிர்பார்த்துக்கொண்டு நான் படுத் திருந்தபோது, டாக்டர் தல்வல்கர், ஒரு விசித்திர ஆசாமியை அழைத்துக்கொண்டு அங்கே வந்தார். மகாராஷ்டிரத்தைச் சேர்ந்தவர், அந்த ஆசாமி. அவர் பிரசித்தமானவர் அன்று. ஆனால், அவரைப் பார்த்த மாத்திரத்திலேயே அவரும் என்னைப் போன்ற ஒரு பைத்தியம் என்பதைக் கண்டுகொண்டேன். தம் முடைய சிகிச்சை முறையை என்னிடம் சோதித்துப் பார்ப்பதற் காகவே அவர் வந்தார். கிரான்ட் வைத்தியக் கல்லூரியில் அவர் அநேகமாகப் படித்து முடித்துவிட்டார். ஆனால், இன்னும் பட் டம் பெறவில்லை. அவர் பிரம்ம சமாஜத்தில் ஓர் அங்கத்தினர் என்று பின்னால் எனக்குத் தெரிந்தது. ஸ்ரீ கேல்கர் என்பது அவர் பெயர். சுயேச்சையான, பிடிவாதப் போக்குள்ளவர், அவர். பனிக்கட்டிச் சிகிச்சையில் அவருக்கு அதிக நம்பிக்கை. அந்தச் சிகிச்சையை என்னிடம் பரீட்சிக்க விரும்பினார். அவருக்குப் ‘பனிக்கட்டி டாக்டர்’ என்று பெயர் வைத்தோம். தேர்ந்த டாக்டர்களுக்கும் தெரியாது போன சில விஷயங்களைத் தாம் கண்டுபிடித்திருப்பதாக அவருக்குத் திடமான நம்பிக்கை உண்டு. தமது சிகிச்சையில் அவர் கொண்டிருந்த நம்பிக்கை என்னையும் தொத்திக்கொள்ளும்படி செய்ய முடியாது போனது, எங்கள் இருவருக்குமே பரிதாபகரமான விஷயமாகும். ஒரு குறிப்பிட்ட அளவு வரையில், அவருடைய சிகிச்சை முறையை நான் நம்பு கிறேன். ஆனால், அவர் அவசரப்பட்டே சில முடிவுகளுக்கு வந்து விட்டார் என்று அஞ்சுகிறேன்.

அவர் கண்டுபிடித்திருப்பவைகளின் குணாதிசயங்கள் எது வாக இருந்தாலும், என் உடலில் அவற்றைப் பரிசோதிக்க அவரை நான் அனுமதித்தேன். உடலுக்கு வெளியில் செய்யும் சிகிச்சையைப்பற்றி எனக்கு ஆட்சேபமில்லை. உடம்பு முழு வதற்கும் பனிக்கட்டி வைத்துக் கட்டுவதே அவருடைய சிகிச்சை. அவருடைய சிகிச்சையினால் என் உடம்பில் ஏற்பட்ட குணத்தைக் குறித்து அவர் சொல்லிக்கொண்டதை அங்கீகரிக்க என்னால் முடியாவிட்டாலும், எனக்கு ஒரு புதிய நம்பிக்கை யையும் பலத்தையும் என்னுள் அது நிச்சயமாக உண்டாக்கியது. இயற்கையாகவே, மனநிலை உடம்பிலும் பிரதிபலித்தது. எனக்குப் பசியெடுக்க ஆரம்பித்தது. ஐந்து முதல் பத்து நிமிடங்கள் வரை

மெள்ள நடக்கவும் தொடங்கினேன். அப்பொழுது அவர் என் ஆகாரத்தில் ஒரு சீர்திருத்தம் செய்ய யோசனை கூறினர். அவர் கூறியதாவது: "நீங்கள் பச்சை முட்டைகளைச் சாப்பிட்டால் அதிகச் சக்தியைப் பெற்றுச் சீக்கிரமாகப் பழைய பலத்தை அடைவீர்கள் என்று உறுதியாகக் கூறுகிறேன். முட்டைகள், பாலைப்போலத் தீங்கில்லாதவை. நிச்சயமாக முட்டை புலால் ரகத்தைச் சேர்ந்த தல்ல. முட்டைகள் எல்லாமே குஞ்சு பொரிக்கக் கூடியவை அல்ல என்பது உங்களுக்குத் தெரியுமா? அவ்விதம் குஞ்சு பொரிக்காதவைக ளாக்கப்பட்ட முட்டைகளும் விற்கின்றன." என்றாலும், குஞ்சு பொரிக்காதவைகள் ஆக்கப் பட்டுவிட்ட முட்டைகளைச் சாப்பிடவும் நான் தயாராயில்லை. ஆனால், என் உடல் நிலையில் ஏற்பட்ட அபிவிருத்தி, பொதுக் காரியங்களில் நான் சிரத்தை கொள்ளுவதற்குப் போதுமான தாக இருந்தது.

# 29

# ரௌலட் மசோதாக்கள்: என் மனக் குழப்பம்

**மா**தேரானுக்குப் போய் அங்கே தங்கினால், சீக்கிரத்தில் என் உடம்பு தேறும் என்று டாக்டர்களும் நண்பர்களும் கூறினர் கள். ஆகவே, நான் அங்கே போனேன். ஆனால், மாதேரானில் தண்ணீர் உப்பாக இருந்ததால் அங்கே நான் தங்குவது கஷ்ட மாகிவிட்டது. வயிற்றுக் கடுப்பு நோய் ஏற்பட்டு நான் கஷ்டப் பட்டுவிட்டதால் என் ஆசனவாய் மென்மை யாகிவிட்டது. இதனால் மலம் கழிக்கும்போது ஆசனவாயில் எனக்குத் தாங்க முடியாத வலி இருந்தது. ஆகையால், சாப்பிடுவது என்று நினைத்தாலே எனக்கு ஒரே பயமாக இருந்தது. ஒரு வாரம் முடி வதற்கு முன்னாலேயே மாதேரானிலிருந்து நான் போய்விட வேண்டிய தாயிற்று. அப்பொழுது சங்கரலால் பாங்கர் என் உடல் நிலையின் காவலராக இருந்து வந்ததால், டாக்டர் தலாலைக் கலந்து ஆலோசிக்குமாறு என்னை வற்புறுத்தினர். அதன் பேரில் டாக்டர் தலாலை அழைத்து வந்தனர். உடனுக்குடனேயே முடிவுக்கு வந்துவிடுவதில் அவருக்கு இருந்த ஆற்றல் என்னைக் கவர்ந்தது.

அவர் கூறியதாவது: 'நீங்கள் பால் சாப்பிட்டாலன்றி உங்கள் உடம்பு தேறும்படி செய்வது என்னால் முடியாது. அதோடு அயம், ஆர்ஸனிக் ஆகிய மருந்துகளை ஊசிமூலம் குத்திக் கொள்ளுவீர்களானால் உங்கள் உடம்பைத் தேற்றிவிடுவதாக நான் முற்றும் உத்தரவாதம் அளிக்க முடியும்."

அதற்கு நான், "ஊசி குத்தி மருந்தை நீங்கள் ஏற்றலாம். ஆனால், பால் சாப்பிடுவது என்பது வேறு விஷயம். பால் சாப்பிடுவதில்லை என்று விரதம் பூண்டிருக்கிறேன்" என்றேன். அதன் பேரில் டாக்டர், "உங்கள் விரதத்தின் தன்மைதான் என்ன?" என்று கேட்டார்.

பசுவையும் எருமையையும் பால் கறப்பதற்கு பூக்கா* முறையை அனுசரிக்கிறார்கள் என்று எனக்குத் தெரிந்ததிலிருந்து நான் இந்த விரதத்தை மேற்கொண்டதைப்பற்றிய வரலாற்றையும், அவ் விரதத்தின் காரணத்தையும் அவருக்கு எடுத்துக் கூறினேன். "பால் என்றாலே எனக்குப் பலமான வெறுப்பு ஏற்பட்டுவிட்டது. மேலும் பால் மனிதனுக்கு இயற்கையான ஆகாரம் அல்ல என்றே எப்பொழுதும் கருதி வந்திருக்கிறேன். ஆகையால், அதை உபயோகிப்பதை அடியோடு நிறுத்திவிட்டேன்" என்றேன். அப்பொழுது கஸ்தூரிபாய் என் படுக்கைக்கு அருகில் நின்றுகொண்டு நாங்கள் பேசிக்கொண் டிருந்ததை யெல்லாம் கவனித்துக்கொண் டிருந்தாள். "அப்படியானால், ஆட்டுப் பால் சாப்பிடுவதற்கு உங்களுக்கு எவ்விதமான ஆட்சேபமும் இருப்பதற்கில்லை" என்று குறுக்கிட்டுச் சொன்னாள்.

டாக்டரும் அவள் கூறியதைத் தொடர்ந்து பிடித்துக்கொண்டார். "நீங்கள் ஆட்டுப்பால் சாப்பிட்டால் அதுவே எனக்குப் போதும்" என்றார், அவர்.

நானும் உடன்பட்டுவிட்டேன். சத்தியாக்கிரகப் போராட்டத்தை நடத்த வேண்டும் என்று எனக்கு இருந்துவந்த தீவிர ஆர்வம், நான் உயிரோடிருக்க வேண்டும் என்ற பலமான ஆசையை என்னுள் உண்டாக்கிவிட்டது. எனவே, விரதத்தைச் சொல்லளவில் மாத்திரம் அனுசரித்துவிட்டு, அதன் உட்கருத்தைத் தத்தம் செய்துவிட என்னையே திருப்தி செய்துகொண்டேன். நான் விரதம் எடுத்துக்கொண்டபோது பசுவின் பாலும் எருமைப் பாலுமே என் எண்ணத்தில் இருந்தன வென்றாலும், அதன் இயற்கையான பொருளின்படி, எல்லா மிருகங்களின் பாலும் அதில் அடங்கியதே. மேலும், பால், மனிதனின் இயற்கையான ஆகாரம் அல்ல என்ற கருத்து எனக்கு இருக்கும் வரை, எந்தப் பாலையும் நான் சாப்பிடுவது சரியே அல்ல. இவைகளை யெல்லாம் அறிந்திருந்தும் ஆட்டுப் பால் சாப்பிடச் சம்மதித்தேன். உயிரோடு இருக்க வேண்டும் என்பதில்

---

* மாடுகளை ஊதிக் கறப்பது என்ற அக்கிரமமான "பூக்கா" முறை வங்காளத்தில் இருக்கிறது. 22 அங்குல நீளமும் 3 அங்குலச் சுற்றளவுமுள்ள மூங்கில் குழாய் அல்லது இரும்புக் குழாயை மாட்டின் மர்ம ஸ்தானத்தின் வழியாக உள்ளே செலுத்தி விடுகின்றனர். பிறகு ஒருவர் அக்குழாய் வழியாக உள்ளே காற்றை ஊதவே உட்புறம் வீங்கி விடுகிறது. இந்த வீக்கம் மாட்டின் தசையில் அதிக அழுத்தத்தை உண்டாக்குவதால் பால்காரன் கடைசிச் சொட்டுப் பாலையும் கறந்துவிட முடிகிறதாம். பால் கறப்பதையும் சில ரத்தச் சொட்டுக்கள் வரும் வரையில் கறக்கிறார்களாம்.



மகாத்மா கடைசி நாட்களில் நூற்று வந்த சர்க்கா



காந்திமகான் வைத்திருந்த சொத்துக்கள்

சாப்பிடும் சட்டிகள், மரக்கரண்டிகள், பிரசித்திபெற்ற பீங்கான் குரங்குப் பொம்மைகள், நாட்குறிப்புப் புத்தகம், பிரார்த்தனை நூல், கடிகாரம், படிக்கம், காகிதம் வெட்டும் கத்திகள், இரு ஜதை பாதரட்சைகள் ஆகியவையே மகாத்மா தமது என்று வைத்திருந்த சொத்துக்க

கொண்ட உறுதி, சத்தியத்தினிடம் கொண்ட பற்றைவிடப் பலமானதாக நிரூபிக்கப்பட்டு விட்டது. சத்தியாக்கிரகப் போராட்டத்தை நடத்த வேண்டும் என்ற ஆர்வத்தினுல், சத்தியத்தை வற்புறுத்தி வந்த நான், தெய்விகமான கொள்கையை விட்டுக் கொடுத்துவிட்டேன். இச் செய்கையின் நினைவு இன்னும் என் உள்ளத்தில் உறுத்திக்கொண்டிருப்பதோடு எனக்கு மனச் சஞ்சலத்தையும் உண்டாக்கி வருகிறது. ஆட்டுப் பால் சாப்பிடுவதை எப்படி விட்டுவிடுவது என்பதைக் குறித்துச் சதா சிந்தித்தும் வருகிறேன். ஆனுல், சேவை செய்ய வேண்டும் என்ற மிகுந்த, அடக்கமான ஆசை எனக்கு இன்னும் இருந்துகொண்டுதான் வருகிறது. அதிலிருந்து விடுபட இன்னும் என்னுல் முடியவில்லை.

அகிம்சை ஆராய்ச்சியின் ஒரு பகுதியாகவுள்ள என்னுடைய ஆகார சோதனைகள் எனக்கு மிகவும் முக்கியமானவை. அவை என் மனத்திற்கு ஆறுதலையும் ஆனந்தத்தையும் அளிக்கின்றன. ஆனுல், நான் ஆட்டுப்பால் சாப்பிட்டு வருவது வாக்குறுதியை மீறியதே யாதலால், அகிம்சையை ஒட்டிய ஆகார வகையில் அல்ல, சத்திய வகையில், இன்று எனக்கு அதிகச் சங்கடமாக இருந்து வருகிறது. அகிம்சையின் லட்சியத்தைவிட சத்தியத்தின் லட்சியத்தையே நான் நன்ருகப் புரிந்துகொள்ளுகிறேன் என்று எனக்குத் தோன்றுகிறது. சத்தியத்தில் எனக்கு இருக்கும் பிடிப்பை நான் விட்டுவிடுவே னுயின், அகிம்சையின் புதிரை அறிந்து கொள்ள என்னுல் என்றுமே முடியாது என்பதை அனுபவம் எனக்குக் கூறுகிறது. மேற்கொள்ளும் விரதங்களை அதன் சொல்லுக்கும் பொருளுக்கும் ஏற்ப நிறைவேற்றி வைக்க வேண்டியது, சத்தியத்தின் லட்சியத்திற்கு அவசியமாகிறது. இந்த விஷயத்திலோ, என் விரதத்தின் பொருளை அதன் ஆன்மாவைக் கொன்றுவிட்டு அதன் வெளித் தோற்றத்தை மாத்திரமே அனுசரிக்கிறேன். எனக்கு இதுதான் வேதனை யளிக்கிறது. ஆனுல், இதை நான் தெளிவாக அறிந்திருந்தும், நேரான வழி என் முன்னுல் எனக்குத் தென்படவில்லை. இன்னும் சொன்னுல், நேரான வழியைப் பின்பற்றுவதற்கு வேண்டிய தைரியம் எனக்கு இல்லை. அடிப்படையில் இரண்டுக்கும் பொருள் ஒன்றுதான். ஏனெனில், எப்பொழுதுமே, நம்பிக்கை இல்லாததனுலும் பலவீனத்தினுலுமே சந்தேகம் உண்டாகிறது. ஆகவே, “ஆண்டவனே! எனக்கு நம்பிக்கையைக் கொடு” என்று நான் இரவு பகலாகப் பிரார்த்தித்துக்கொண்டு வருகிறேன்.

நான் ஆட்டுப் பால் சாப்பிட ஆரம்பித்ததுமே டாக்டர் தலால் எனக்கு ஆசனவாய்க் கோளாறுக்கு வெற்றிகரமான ரண சிகிச்சை செய்து முடித்தார். என் உடல் பலம் பெற்று வரவே, முக்கியமாகக் கடவுள் நான் செய்வதற்கென்று வேலையைத் தயாராக வைத்திருந்ததால், உயிர் வாழ வேண்டும் என்ற ஆசை எனக்குத் திரும்பவும் பிறந்தது.

குணமடைந்து வருகிறேன் என்று நான் உணர ஆரம்பித்ததுமே, ரௌலட் கமிட்டியின் அறிக்கையை* தற்செயலாகப் பத்திரிகையில் படித்தேன். அந்த அறிக்கை அப்பொழுதுதான் வெளியாகி யிருந்தது. அக் கமிட்டியின் சிபார்சுகள் என்னைத் திடுக்குறச் செய்தன. சங்கரலால் பாங்கரும், உமார் சோபானியும் என்னிடம் வந்து, இவ்விஷயத்தில் நான் உடனே ஏதாவது நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று யோசனை கூறினார்கள். ஒரு மாதத்தில் நான் அகமதாபாத்திற்குப் போனேன். அநேகமாகத் தினமும் என்னைப் பார்ப்பதற்கு வல்லபபாய் வருவார். அவரிடம் எனக்கு இருந்த சந்தேகங்களைக் கூறினேன். "ஏதாவது செய்தாக வேண்டும்" என்றேன். அதற்கு அவர், "இந்த நிலைமையில் நாம் என்ன செய்ய முடியும்?" என்று என்னைக் கேட்டார். நான் சொன்னது: "அம் மசோதாக்களை† எதிர்ப்பது என்ற பிரதிக்ஞையில் கையெழுத்திட ஒரு சிலர் கிடைத்தாலும் போதும். அதையும் பொருட்படுத்தாமல் சட்டம் செய்யப்பட்டுவிடுமானால், நாம் உடனே சத்தியாக்கிரகத்தை ஆரம்பித்துவிட வேண்டியதே. நான் இதுபோல் நோயுற்றுக் கிடக்காமல் இருந்தால், மற்றவர்கள் என்னைப் பின்பற்றுவார்கள் என்று எதிர்பார்த்து நானே தன்னந்தனியாக அதை எதிர்த்துப் போராடுவேன். ஆனால், நான் இப்பொழுது இருக்கும் இத் திக்கற்ற நிலைமையில் அந்த வேலை என்னால் ஆகாது என்றே எண்ணுகிறேன்."

இவ்விதம் நாங்கள் பேசியதன் பேரில், என்னுடன் தொடர்பு வைத்துக்கொண் டிருந்தவர்களை யெல்லாம் அழைத்து ஒரு கூட்டம் கூட்டுவது என்று முடிவாயிற்று. ரௌலட் கமிட்டி அறிக்கையில் பிரசுரமாகியிருக்கும் சாட்சியங்களைக் கொண்டு பார்த்தால், அக் கமிட்டியின் சிபார்சுகள் அவசிய மில்லாதவை என்று எனக்குத் தோன்றியது. மானமுள்ள யாரும் அந்தச் சிபார்சுகளுக்கு உடன்பட்டு இருந்துவிட முடியாது என்றும் உணர்ந்தேன்.

---

* ரௌலட் கமிட்டி யாதாஸ்து: ஸர் ஸிட்னி ரௌலட் என்பவரைத் தலைவராகவும், சென்னை உயர்நீதிபதி ஸ்ரீ குமாரசாமி சாஸ்திரி, புரொவேஷ் சந்திர மித்தர் இருவரையும் அங்கத்தினர்களாகவும் கொண்ட கமிட்டியை 1917–இல் அரசாங்கத்தார் நியமித்தனர். புரட்சி இயக்கம் சம்பந்தமாக நடைபெறும் சதிகளைப்பற்றி விசாரித்து, அவைகளைத் தடுப்பதற்கான யோசனைகள் கூறுவதே இந்தக் கமிட்டிக்கு இடப்பட்ட பணி. இதன் சிபார்சுகளின் பேரில்தான் ரௌலட் சட்டம் இயற்றப்பட்டது. அந்தச் சட்டத்தை எதிர்த்துச் சத்தியாக்கிரகம் செய்ய காந்திஜி திட்டமிட்டார்.

† ரௌலட் கமிட்டி அறிக்கையின் பேரில் தயாரான இரு மசோதாக்கள் 1919 பிப்ரவரியில் வெளியாயின இதில் ஒரு மசோதா தாற்காலிகமானது. இந்தியப் பாதுகாப்புச் சட்டம் ரத்தாவதால், அதற்குப் பதிலாகக் கொண்டு வரப்பட்டது அது. இரண்டாவது மசோதா, நாட்டின் குற்றச்சட்டத்தில் நிரந்தரமான மாறுதலைச் செய்யக் கொண்டுவரப் பட்டதாகும். பிரசுரிக்கும் அல்லது விநியோகிக்கும் நோக்கத்தோடு மாத்திரமே ராஜ நிந்தனையான பிரசுரங்களை வைத்திருந்தாலும், சிறைத் தண்டனை விதிக்கும் வகையில் இம் மசோதா கொண்டுவரப் பட்டது. இம் மசோதாக்களைப்பற்றிக் கூறிய காந்திஜி, "ஆளும் ஸ்தாபனத்திற்கு உள்ளுக்குள், ஆழத்தில் கண்டுவிட்ட நோயின் நிச்சயமான அறிகுறிகளே இந்த மசோதாக்கள்" என்றார்.

முடிவாக அக் கூட்டமும் ஆசிரமத்தில் நடந்தது. இருபது பேர்கூட அக் கூட்டத்திற்கு அழைக்கப்படவில்லை. வல்லப பாயைத் தவிர ஸ்ரீமதி சரோஜினி நாயுடு, ஸ்ரீ ஹார்னிமன்,* காலஞ் சென்ற ஸ்ரீ உமார் சோபானி, ஸ்ரீ சங்கரலால் பாங்கர், ஸ்ரீமதி அனுசூயா பென் ஆகியவர்களே அக் கூட்டத்திற்கு வந்திருந்தார்கள் என்றே எனக்கு ஞாபகம். சத்தியாக்கிரகப் பிரதிக்ஞை நகலை† இக் கூட்டத்தில் தயாரித்தோம். வந்திருந்தவர்கள் எல்லோரும் அதில் கையெழுத்திட்டார்கள் என்றும் எனக்கு ஞாபகம். அச்சமயம் நான் எந்தப் பத்திரிகையையும் நடத்தவில்லை. ஆனால், என் கருத்துக்களை எப்பொழுதாவது தினப் பத்திரிகைகள் மூலம் வெளியிட்டு வருவேன். இச்சமயமும் அவ்வாறே செய்தேன். சங்கரலால் பாங்கர் இக் கிளர்ச்சியில் தீவிரமாக இறங்கிவிட்டார். வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து, உறுதியுடன் விடாமல் வேலை செய்வதில் அவருக்கு இருந்த அற்புதமான ஆற்றலைப்பற்றி முதல் தடவையாக அப்பொழுதுதான் நான் தெரிந்துகொண்டேன்.

சத்தியாக்கிரகத்தைப் போன்ற புதிதானதோர் ஆயுதத்தை, அப்பொழுது இருந்த ஸ்தாபனங்களில் எதுவும் அனுசரிக்கும் என்ற நம்பிக்கை யெல்லாம் வீண் என்று எனக்குத் தோன்றியது. ஆகவே, என்னுடைய யோசனையின்பேரில் சத்தியாக்கிரக சபை என்ற ஒரு தனி ஸ்தாபனம் ஆரம்பமாயிற்று.‡ அதன் முக்கியமான

---

* பி. ஜி. ஹார்னிமன் : ஹார்னிமன் என்னும் ஆங்கிலேயர், 'பம்பாய் கிரானிகிள்' பத்திரிகைக்கு ஆசிரியராயிருந்து சுதந்திர இயக்கத்திற்கு அதிக உதவி புரிந்தார். பாஞ்சாலத்தில் படைக்கு ஆள் சேர்க்கும் முறையைக் கண்டித்து இவர் எழுதினர். பிறகு நாடு கடத்தப்பட்டார். இவருக்குக் காங்கிரசிலும் ஈடுபாடு உண்டு. இங்கிலாந்தில் பிரசாரம் செய்ய 1917–இல் அனுப்பப்பட்ட காங்கிரஸ் கோஷ்டியில் இவர் இடம் பெற்றார். இவர் நாடு கடத்தப்பட்டபின் 'பம்பாய் கிரானிகிள்' நின்று போய்விட்டதால் அதன் ஆசிரியப் பொறுப்பைக் காந்திஜி ஏற்க வேண்டும் என்று யோசனை கூறப்பட்டது. ஆனால், காந்திஜி 'எங் இந்தியா'வின் ஆசிரியப் பொறுப்பை ஏற்றார். அதன் விவரத்தை மகாத்மாவே பிந்திய அத்தியாயத்தில் கூறுகிறார்.

† காந்திஜி தயாரித்த பிரதிக்ஞை நகலில் அக் கூட்டத்திற்கு வந்திருந்தவர்கள் கையெழுத்திட்டனர். அப்பிரதிக்ஞையின் நகல் பின்வருமாறு : "இந்தியக் கிரிமினல் சட்டத்(திருத்த) 1919–ஆம் வருட 1–ஆம் மசோதாவும் கிரிமினல் சட்ட (அவசர அதிகார) 1919 ஆம் வருட 2வது மசோதாவும் அநியாயமானவை. சுதந்திரக் கொள்கையையும் நீதியையும் பாதிப்பவைகளாக இவை இருப்பதோடு சமூகத்தின் பாதுகாப்புக்கு வேண்டிய தனிப்பட்டவரின் ஜீவாதார உரிமைகளையும் பாதிப்பனவாக இவை இருக்கின்றன என்று மனமாரக் கருதுகிறோம். ஆகையால், இம் மசோதாக்கள் சட்டங்களானால் அவை ரத்துச் செய்யப்படும் வரையில், இந்தச் சட்டங்களுக்கும், மீற வேண்டியவை என்று இனி நியமிக்கப்படும் கமிட்டி கருதும் சட்டங்களுக்கும் சாத்வீக முறையில் உடன்பட மறுப்பதென்று உறுதியுடன் பிரதிக்ஞை செய்துகொள்ளுகிறோம். இந்தப் போராட்டத்தில் சத்தியத்தைக் கைவிடாமல் அனுசரித்து நடப்பதுடன், உயிருக்கும் உடலுக்கும் சொத்துக்கும் பலாத்காரம் விளைவிக்காமல் இருப்போம் என்றும் பிரதிக்ஞை செய்து கொள்ளுகிறோம்."

‡ பம்பாயில் ஆரம்பிக்கப் பெற்ற சத்தியாக்கிரக சபையில் ஸ்ரீமதி சரோஜினி நாயுடு, ஹார்னிமன், ஜம்னுதாஸ் துவாரகதாஸ், எல். ஆர். டெயிர்ஸி, சங்கரலால்

அங்கத்தினர்க ளெல்லாம் பம்பாயைச் சேர்ந்தவர்கள். ஆகையால், அதன் தலைமைக் காரியாலயம் அங்கே அமைக்கப்பட்டது. அச்சங்கத்தில் சேர ஏராளமானவர்கள் விரும்பிப் பிரதிக்ஞையில் கையெழுத்திட்டார்கள். துண்டுப் பிரசுரங்களை வெளியிட்டோம். பொதுக்கூட்டங்கள் எல்லா இடங்களிலும் நடந்தன. கேடாச் சத்தியாக்கிரகப் போராட்டத்தின் முக்கியமான அம்சங்களை இவையெல்லாம் நினைவூட்டின.

சத்தியாக்கிரக சபைக்கு நான் தலைவனானேன். இச் சபையில், படித்த அறிவாளிகள் என்று இருந்தவர்களுக்கும் எனக்கும் அபிப்பிராய ஒற்றுமை இருப்பதற்கில்லை என்பதைச் சீக்கிரத்திலேயே கண்டுகொண்டேன். சபையில் குஜராத்தி மொழியையே உபயோகிக்க வேண்டும் என்று வற்புறுத்தினேன். அதோடு, என்னுடைய மற்றும் சில வேலை முறைகளும் அவர்களுக்கு விசித்திரமாகத் தோன்றியதோடு அவர்களுக்குக் கவலையையும் சங்கடத்தையும் உண்டாக்கின. ஆனால், அவர்களில் அநேகர் பெரிய மனத்தோடு என்னுடைய விசித்திரப் போக்குகளையெல்லாம் சகித்துக்கொண்டார்கள் என்பதையும் நான் சொல்லவே வேண்டும்.

ஆனால், சபை நீண்ட காலம் உயிரோடு இருக்காது என்பது ஆரம்பத்திலிருந்தே எனக்குத் தெளிவாகத் தெரிந்துவிட்டது. சத்தியத்தையும் அகிம்சையையும் நான் வற்புறுத்தி வந்தது அச்சபையின் அங்கத்தினர்களில் சிலருக்குப் பிடிக்கவில்லை என்பதையும் நான் கண்டுகொள்ள முடிந்தது. என்றாலும், ஆரம்பக் கட்டங்களில் எங்களுடைய புதிய நடவடிக்கை அதிக வேகமாக நடந்துகொண்டு வந்தது; இயக்கமும் தீவிரமாகப் பரவலாயிற்று.

## 30

## அந்த அற்புதக் காட்சி!

இவ்வாறு ஒரு பக்கம் ரௌலட் கமிட்டி அறிக்கையை எதிர்த்து நடந்த கிளர்ச்சி வளர்ந்து, தீவிரமாகிக்கொண்டு வந்த சமயத்தில், மற்றொரு பக்கத்தில் அரசாங்கம், அக் கமிட்டியின் அறிக்கையை அமலுக்குக் கொண்டுவருவதில் மேலும் மேலும் அதிக உறுதி கொண்டது. ரௌலட் மசோதாவையும் பிரசுரித்தார்கள். இந்திய சட்டசபைக் கூட்டத்திற்கு என் வாழ்நாளில் ஒரே ஒரு முறை நான் போயிருக்கிறேன். அது, இந்த மசோதாவின் பேரில் அந்தச் சபையில் விவாதம் நடந்தபோது

---

பாங்கர், வல்லபபாய் பட்டேல் முதலிய பலர் உறுப்பினர்கள். பிரதிக்ஞையில் கையெழுத்து வாங்கும் வேலை தீவிரமாக நடந்தது. இரு வாரங்களில் பன்னிரண்டாயிரம் பேர் கையெழுத்திட்டனர்.

தான். அப்பொழுது சாஸ்திரியார்* ஆவேசமாகப் பேசினர். அரசாங்கத்திற்குப் பலமான எச்சரிக்கையும் செய்தார். வைசிராய் பிரமித்துப்போய் அப் பேச்சைக் கேட்டுக்கொண்டிருந்த தாகத் தோன்றியது. சாஸ்திரியார் தமது சூடான பேச்சு வன்மையைப் பொழிந்து கொண்டிருந்தபோது வைசிராய், கண் கொட்டாமல் அவரையே பார்த்துக்கொண்டிருந்தார். அவருடைய பேச்சில் உண்மையும் உணர்ச்சியும் நிறைந்திருந்தன.

ஒருவர் உண்மையிலேயே தூங்கிக்கொண்டிருந்தால் அவரை எழுப்பிவிட முடியும். ஆனல், தூங்குவதாகப் பாசாங்குதான் செய்கிருர் என்ருல், அப்படிப்பட்டவரை என்னதான் முயன்ருலும் எழுப்பிவிட முடியாது. அரசாங்கத்தின் உண்மையான நிலைமையும் அதுதான். அது, முன்னலேயே இதில் ஒரு தீர்மானம் செய்துகொண்டு விட்டது. இதற்குச் சட்ட ரீதியான சடங்குகளை நிறைவேற்றிவிட வேண்டும் என்பதில் மாத்திரமே அது கவலை கொண்டிருந்தது. ஆகையால், சாஸ்திரியாரின் உண்மையான எச்சரிக்கை அரசாங்கத்தினிடம் ஒரு மாறுதலையும் உண்டுபண்ணவில்லை.

இத்தகையதோர் நிலைமையில் என் பேச்சு வனாந்தரத்தில் இட்ட ஓலமாகவே முடியும். வைசிராயை நான் மன்ருடிக் கேட்டுக்கொண்டேன். அந்தரங்கமாகவும் பகிரங்கமாகவும் அவருக்குக் கடிதங்கள் எழுதினேன். அரசாங்கத்தின் செய்கையால், சத்தியாக்கிரகத்தை மேற்கொள்ளுவதைத் தவிர எனக்கு வேறு வழியே இல்லாமல் போகிறது என்று அக் கடிதங்களில் கூறினேன். ஆனல், ஒன்றும் பயன்படவே இல்லை.

மசோதாக்கள் இன்னும் சட்டங்களாகக் கெஜட்டில் பிரசுரமாகவில்லை. நானே, அதிக பலவீனமான நிலையில் இருந்தேன். என்ருலும், சென்னையிலிருந்து எனக்கு அழைப்பு வந்ததும், அந்த நீண்ட பிரயாணத்தினல் ஏற்படக்கூடிய அபாயத்திற்கும் துணி

---

* சாஸ்திரியார்: வலங்கைமான் ஸ்ரீ சீனிவாஸ சாஸ்திரியாரையே காந்திஜி குறிப்பிடுகிருர். உபாத்தியாயராக வாழ்க்கையைத் தொடங்கித் திருவல்லிக்கேணி ஹிந்து உயர்நிலைப் பள்ளியின் தலைமை ஆசிரியராக இருந்த ஸ்ரீ சாஸ்திரியாருக்குக் கோகலேபால் மனம் நாடியது. அவர் அமைத்த இந்திய ஊழியர் சங்கத்தில் சேர்ந்து கோகலேக்குப் பின்னர் அதன் தலைவராஞர். முதல் மகா யுத்தத்தின்போது வைசிராய் லார்டு பெண்ட்லண்டு இவரைச் சட்டசபை உறுப்பினராக நியமித்தார். மாண்டேகு-செம்ஸ்போர்டு சீர்திருத்தத்தின் கீழ் மீண்டும் சட்ட சபைக்கு நியமனம் பெற்ருர். 1921–இல் சாம்ராஜ்ய மகாநாட்டிற்கு இந்தியாவின் பிரதிநிதியாக அரசாங்கத்தினரால் நியமிக்கப்பட்டார். பின்னர் பிரிவி கவுன்ஸில் உறுப்பினராக நியமிக்கப்பட்டு 'மகாகனம்' சாஸ்திரியாராஞர். அங்கே செய்த சொற்பொழிவுகளால் தென்னுப்பிரிக்கா நீங்கலாக மற்றச் சாம்ராஜ்ய நாடுகள் இவரை அழைத்தன. இந்தச் சுற்றுப் பிரயாணச் செலவுக்காக அரசினர் ரூ. 60,000 அனுமதித்தனர். 1927–இல் தென்னுப்பிரிக்காவில் இந்தியாவின் ஏஜண்டு ஜெனரலாக நியமிக்கப்பட்டார். முதல் ஒத்துழையாமை இயக்கத்தின் விளைவாக மகாத்மா சிறையில் குடல் அனுபந்தத்திற்காக ரண சிகிச்சை நடக்கையில் மகாத்மாவின் அழைப்பின் பேரில் ஆஸ்பத்திரியில் இருந்து, காந்திஜியின் உடல்நிலை பற்றி அறிக்கை வெளியிட்டார். ராஜீயத்தில் மிதவாதப் போக்குடையவர்.

வது என்று முடிவு செய்தேன். அச்சமயம் பொதுக்கூட்டங்களில் போதிய அளவு உரக்கப் பேச என்னால் முடியாது. பொதுக் கூட்டங்களில் நின்றுகொண்டு பேசுவதற்கும் இயலாது. அந்த நிலைமை எனக்கு இப்பொழுதும் இருந்து வருகிறது. நின்று கொண்டு நீண்ட நேரம் பேச முயல்வேனாயின் என் உடம்பு முழுவதும் நடுக்க மெடுக்கும்; மூச்சுத் திணறும்.

தென்னாடு எப்பொழுதுமே எனக்குச் சொந்த வீடுபோல் தோன்றும். தென்னாப்பிரிக்காவில் நான் செய்த வேலையின் காரணமாகத் தமிழர்மீதும் தெலுங்கர்மீதும் எனக்கு ஒரு வகை யான தனி உரிமை இருப்பதாகவே நான் உணர்ந்தேன். தென் னாட்டின் நல்ல மக்கள், என் நம்பிக்கையை என்றும் பொய்ப் பித்தது இல்லை. காலஞ்சென்ற ஸ்ரீ கஸ்தூரிரங்க ஐயங்காரின்* கையொப்பத்துடன் அழைப்பு வந்தது. ஆனால், அந்த அழைப் புக்கு முக்கியமான காரணஸ்தராக இருந்தவர் ராஜகோபாலாச் சாரியாரே என்பதைப் பிறகு நான் சென்னைக்குப் போகும் வழி யில் தெரிந்துகொண்டேன். அவருடன் எனக்குப் பழக்கம் ஏற்பட்டது அதுவே முதல் தடவை என்று சொல்லலாம். அது எப்படியாயினும், முதல் தடவையாக ஒருவரை யொருவர் நேரில் அறிந்துகொண்டது அப்பொழுதுதான்.

காலஞ்சென்ற ஸ்ரீ கஸ்தூரிரங்க ஐயங்கார் போன்ற நண் பர்கள் வற்புறுத்தி அழைத்ததன் பேரிலும், பொதுவாழ்க்கையில் மேலும் தீவிரமான பங்கு வகிக்கலாம் என்ற நோக்கத்தின் பேரி லும், அப்பொழுது கொஞ்ச காலத்திற்கு முன்னால்தான் ராஜ கோபாலாச்சாரியார் சென்னையில் வக்கீல் தொழிலை நடத்தச் சேலத்திலிருந்து வந்திருந்தார். சென்னையில் அவரோடேயே நாங்கள் தங்கினோம். ஆனால், அவருடன் இரு தினங்கள் தங்கி யிருந்ததற்குப் பின்னாலேயே இதை நான் கண்டுபிடித்தேன். ஏனெனில், நாங்கள் தங்கியது ஸ்ரீ கஸ்தூரிரங்க ஐயங்காருக்குச் சொந்தமான பங்களாவாகையால் அவருடைய விருந்தினராகவே நாங்கள் தங்கியிருக்கிறோம் என்று எண்ணினேன். ஆனால், மகா தேவ தேசாய் எனக்கு விஷயத்தைக் கூறினார். அவர் வெகு சீக்கிரத்தில் ராஜகோபாலாச்சாரியாருடன் நெருங்கிய பழக்கம் கொண்டுவிட்டார். ராஜகோபாலாச்சாரியாரோ, தமது சங்கோஜத் தன்மையினால் எப்பொழுதும் பின்னுக்கே இருந்து

* கஸ்தூரிரங்க ஐயங்கார்: 'ஹிந்து' பத்திரிகையின் ஆசிரியராயிருந்து சிறந்த சேவை செய்தவர். ஹோம்ரூல் இயக்கம் மும்முரமா யிருக்கையில் இவரை அழைத்த கவர்னர் லார்டு பென்ட்லண்டிடம் நாட்டின் நிலை பற்றிய உண்மையைத் தைரியமாக எடுத்துக் கூறினார். ஒத்துழையாமை ஆரம்ப காலத்தில் அதை எதிர்த்தாலும் பின்னர் ஆதரித்தவர். சட்ட மறுப்பு பற்றி விசாரிக்க காங்கிரஸ் நியமித்த கமிட்டியில் இவரும் ஓர் உறுப்பினர். முதல் மகா யுத்தத்தின்போது போர் அரங்கைப் பார்வையிட அரசாங்கத்தாரால் அழைக்கப்பட்ட ஐந்து பத்திரிகை ஆசிரியர்களில் இவரும் ஒருவர். அச்சமயமும் பிரிட்டனில் நம் நாட்டின் நிலைமைபற்றி ஒளிமறைவின்றிப் பேசினார்.

வந்தார். ஆனல், மகாதேவ தேசாய் எனக்கு யோசனை சொன்னர்: ''இவருடன் நீங்கள் நெருங்கிய பழக்கம் வைத்துக் கொள்ள வேண்டும்'' என்று அவர் ஒரு நாள் சொன்னர்.

அவ்வாறே செய்தேன். போராட்டத்தின் திட்டங்களைக் குறித்துத் தினமும் சேர்ந்து விவாதித்தேன். ஆனல், பொதுக் கூட்டங்களை நடத்துவதைத் தவிர வேறு எந்த வேலைத் திட்டமும் எப்பொழுதும் எனக்குத் தோன்றவில்லை. ரௌலட் மசோதா முடிவில் சட்டமாக்கப்பட்டுவிடுமானல், அதை எதிர்த்துச் சாத்விகச் சட்ட மறுப்புச் செய்வது எப்படி என்பது எனக்கு விளங்கவே இல்லை. சட்டத்தை மறுப்பதற்கு அரசாங்கம் சந்தர்ப்பம் அளித்தால்தான் அச் சட்டத்தை ஒருவர் மீற முடியும். அதில்லாது போனல், மற்றச் சட்டங்களை நாம் சாத்விக முறையில் மீற முடியுமா? அப்படிச் செய்வதாயின் அதற்கு எந்த இடத்தில் வரம்பை நிர்ணயிப்பது? இதையும் இதுபோன்ற பல விஷயங்களையும் குறித்து நாங்கள் விவாதித்தோம்.

விஷயத்தை நன்கு பரிசீலனை செய்து முடிவுக்கு வருவதற்காக ஸ்ரீ கஸ்தூரிரங்க ஐயங்கார், தலைவர்கள் அடங்கிய சிறு கூட்டம் ஒன்றைக் கூட்டினர். அதில் முக்கியமான பங்கெடுத்துக் கொண்டவர்களில் ஸ்ரீ விஜயராகவாச்சாரியாரும்* ஒருவர். சத்தியாக்கிரக சரித்திரத்தின் நுட்பமான விவரங்கள் அடங்கிய விரிவான குறிப்பு நூல் ஒன்றை நான் தயாரிக்க வேண்டும் என்று அவர் யோசனை கூறினர். அந்த வேலை என் சக்திக்குப் புறம்பானது என்பதை உணர்ந்தேன். அதை அவரிடம் தெரிவித்தும்விட்டேன்.

---

* விஜயராகவாச்சாரியார்: தாதாபாய் நௌரோஜி காலமான பிறகு 'இந்தியாவின் முதுகிழவர்' என அழைக்கப்பட்ட விஜயராகவாச்சாரியார், செங்கல்பட்டு ஜில்லா பொன்விளைந்த களத்தூரில் பிறந்து சேலம் ஜில்லாவில் பிரபல வக்கீலாயிருந்தார். காந்தியடிகளின் சிறை செல்லும் முறை தோன்றும் முன்னமே பொது நலத்திற்காகச் சிறை சென்றவர். சேலத்தில் ஹிந்து-முஸ்லிம் கலகம் ஏற்பட்டபொழுது, ஹிந்துக்களின் தலைவராயிருந்தார் என்று இவரை அரசாங்கத்தார் சிறைப்படுத்தினர். உயர்நீதி மன்றத்தில் அப்பீல் செய்து விடுதலை அடைந்தார். இதற்கிடையில் அரசாங்கத்தார் அவரை முனிசிபல் சபை அங்கத்தினர் பதவியிலிருந்து நீக்கியதனல் ஆட்சியினர்மீது தாவா செய்து நஷ்ட ஈடு பெற்ருர். அரசியல் அமைப்புச் சட்டத்தில் மகா நிபுணர். காங்கிரஸில் ஜீவாதார உரிமைப்பட்டியல் தயாரிக்க வேண்டுமென வற்புறுத்தி வெற்றி பெற்றவர். 1883-இல் சென்னையில் நடந்த மூன்ருவது காங்கிரஸிலிருந்து அதனுடன் தொடர்பு பெற்று 1920-இல் நாகபுரியில் நடந்த காங்கிரசுக்குத் தலைமை தாங்கினர். ஆதியில் அரசியலில் திலகரைப் பின்பற்றியவராதலால் காங்கிரஸ் மிதவாதிகளின் நிர்வாகத்தில் இருக்கையில் அதில் கலந்துகொள்ளவில்லை. பஞ்சாப், கிலாபத் அநீதிகளை எதிர்த்து ஒத்துழையாமைத் திட்டத்தைக் காந்திஜி தொடங்குகையில் சுயராஜ்யம் பெறுவதையும் தக்க குறிக்கோளாகக் கொள்ளவேண்டுமென்று இவர் கூறிய யோசனையைக் காந்திஜி ஒப்புக்கொண்டார். சட்டசபைப் பகிஷ்காரத்தை ஒத்துழையாமைத் திட்டத்திலிருந்து நீக்கவேண்டும் என்று மோதிலால் நேரு, தேசபந்து தாஸ் முதலியோர் வற்புறுத்துகையில் ஆச்சாரியார் அதை பலமாக எதிர்த்தார்.

இந்த ஆலோசனைகளெல்லாம் நடந்துகொண் டிருக்கையில், ரௌலட் மசோதா சட்டமாகப் பிரசுரமாகிவிட்டது என்ற செய்தி கிடைத்தது.* அதைப்பற்றி யோசித்தவாறே அன்றிரவு தூங்கிவிட்டேன். மறுநாள் அதிகாலையில் வழக்கமாக எழுவதற்குக் கொஞ்சம் முன்பாகவே எழுந்துவிட்டேன். தூக்கத்திற்கும் விழிப்பிற்கும் இடையேயுள்ள நிலையில் நான் இருக்கும்போது திடீரென்று எனக்கு ஒரு யோசனை தோன்றியது. அது கனவைப் போன்றே இருந்தது. காலையில் அதன் விவரம் முழுவதையும் ராஜகோபாலாச்சாரியாரிடம் கூறினேன்.

"நேற்றிரவு கனவில் ஒரு யோசனை வந்தது. பொது ஹர்த்தாலை நடத்த வேண்டும் என்று தேச மக்களைக் கேட்டுக்கொள்ளுவது என்பதே அது. ஆன்மத் தூய்மை செய்துகொள்ளும் ஒரு முறையே சத்தியாக்கிரகம். நம்முடைய போராட்டமோ, ஒரு புனிதமான போராட்டம். ஆகையால், அதை ஆன்மத் தூய்மை செய்துகொள்ளுவதோடு ஆரம்பிப்பதே சரி என்று எனக்குத் தோன்றுகிறது. எனவே, இந்திய மக்கள் எல்லோரும் அன்று தங்கள் வேலைகளையெல்லாம் நிறுத்திவிட்டு உபவாசம் இருந்து பிரார்த்தனை செய்யட்டும். முஸ்லிம்கள் ஒரு நாளைக்குமேல் பட்டினி விரதம் இருக்கமாட்டார்கள். ஆகவே, பட்டினி விரதம் இருக்கும் நேரம் 24 மணி என்று இருக்கவேண்டும். இந்த நமது கோரிக்கையை எல்லா மாகாணங்களுமே ஏற்றுக்கொண்டு நடத்தும் என்று சொல்லுவதற்கில்லை. ஆனால், பம்பாய், சென்னை, பீகார், சிந்து ஆகிய மாகாணங்கள் அனுசரிப்பது நிச்சயம் என்று எண்ணுகிறேன். இந்த இடங்களி லெல்லாம் ஹர்த்தால் சரியானபடி அனுஷ்டிக்கப்பட்டாலும் நான் திருப்தியடையக் காரணம் உண்டு என்றே கருதுகிறேன்."

என்னுடைய இந்த யோசனையை ராஜகோபாலாச்சாரியார் உடனே ஏற்றுக்கொண்டார். பிறகு இதை மற்ற நண்பர்களுக்கு அறிவித்தபோது அவர்களும் வரவேற்றார்கள். சுருக்கமான வேண்டுகோள் ஒன்றை நான் தயாரித்தேன். 1919 மார்ச் 30-ஆம் தேதி ஹர்த்தால் அனுஷ்டிப்பது என்று முதலில் நிர்ணயிக்கப்பட்டது. ஆனால், பிறகு ஏப்ரல் 6-ம் தேதி என்று மாற்றினோம். இவ்விதம் மக்களுக்குச் சொற்ப கால அவகாசத்துடனேயே அறிவித்தோம். நீண்ட காலத்திற்கு முன்னால் அறிவிப்பது சாத்தியமில்லை.

இதெல்லாம் எவ்விதம் நடந்த தென்பதை யார் அறிவார்கள்? இந்தியா முழுவதிலும் ஒரு மூலையிலிருந்து மற்றோர் மூலை வரையில் பட்டணங்களும் கிராமங்களும் அன்று பூரணமான ஹர்த்தாலை அனுஷ்டித்தன. அது மிகவும் அற்புதமான காட்சியாக இருந்தது.

---

* ரௌலட் இரண்டாவது மசோதா 1919 மார்ச் 18-ஆம் தேதி சட்டமாகக் கெஜட்டில் பிரசுரமாயிற்று.

# 31

# மறக்க முடியாத அந்த வாரம் ! – 1

தென்னிந்தியாவில் சில நாட்கள் சுற்றுப்பிரயாணம் செய்து விட்டுப் பம்பாய் போய்ச் சேர்ந்தேன்.* அது ஏப்ரல் 4-ஆம் தேதி என்று நினைக்கிறேன். ஏப்ரல் 6-ஆம் தேதி வைபவங்களுக்கு நான் பம்பாயில் இருக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டு ஸ்ரீ சங்கரலால் பாங்கர் எனக்குத் தந்தி கொடுத்திருந்தார்.

ஆனால், இதற்கு மத்தியில் டில்லி, மார்ச் 30-ஆம் தேதியே ஹர்த்தாலை அனுஷ்டித்துவிட்டது. காலஞ்சென்ற சுவாமி சிரத்தானந்தஜி,† ஹக்கீம் அஜ்மல்கான் சாகிப் ஆகிய இருவர் சொல்லுவதுதான் அங்கே சட்டம். ஹர்த்தால் தினம் ஏப்ரல் 6-ஆம் தேதிக்கு ஒத்திவைக்கப்பட் டிருக்கிறது என்ற தந்தி அங்கே தாமதமாகப் போய்ச் சேர்ந்தது. அதைப்போன்ற ஹர்த்தாலை டில்லி அதற்கு முன்னால் என்றும் கண்டதே இல்லை. ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒரே மனிதனைப்போல் ஒன்றுபட்டுவிட்டதாகவே தோன்றியது. ஜும்மா மசூதியில் கூட்டத்தில் பேசும்படி சுவாமி சிரத்தானந்தஜியை அழைத்திருந்தார்கள். அவரும் போய்ப் பேசினார். இவைகளெல்லாம் அதிகாரிகள் சகித்துக் கொண்டுவிடக் கூடியவை அன்று. ஹர்த்தால் ஊர்வலம் ரெயில்வே ஸ்டேஷனை நோக்கிப் போய்க்கொண்டிருந்தபோது

---

* தென்னிந்தியாவில் ஹர்த்தாலை நடத்துவதற்கு வேண்டிய தயாரிப்புகளுக்காக மகாத்மா 1919 மார்ச் 24-ஆம் தேதி தஞ்சாவூரிலும், 30 ஆம் தேதி திருச்சிராப்பள்ளியிலும் பேசினார். அவருடைய இருதயம் பலவீனமாக இருந்ததால், அவரால் பேசக்கூட இயலவில்லை. என்றாலும், ரௌலட் சட்டத்தின்மீது அவருக்கு இருந்த அளவு கடந்த வெறுப்பினால் அக்கூட்டங்களில் பேசினார். "தென்னாப்பிரிக்காவில் வள்ளியம்மா, நாகப்பன், நாராயணசாமி, முகமது ஆகியவர்களுக்குச் சாத்தியமானது இன்று உங்களில் ஒவ்வொருவருக்கும் சாத்தியமே என்பதில் எனக்கு எந்த விதமான சந்தேகமும் இல்லை. அவர்களுடைய அடிச்சுவட்டை நீங்களும் பின்பற்றி நடந்து, சத்தியாக்கிரகப் பிரதிக்ஞையில் கையெழுத்திட்டு அச் சட்டங்கள் ரத்து செய்யப்படும்படி பார்க்குமாறு உங்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன்" என்றார், மகாத்மா.

† சுவாமி சிரத்தானந்தர் : ஆரிய சமாஜத் தலைவர். கங்கிரியிலுள்ள இவருடைய குருகுலத்திற்குத் தமது போனிக்ஸ் ஆசிரமவாசிகளில் சிலரை காந்திஜி அனுப்பினார். மகாத்மா முன்ஷிராம் எனும் இவரைப்பற்றி இந்தப் பகுதி எட்டாவது அத்தியாயத்தில் காந்திஜி குறிப்பிடுகிறார். 1926-ஆம் ஆண்டில் கௌஹாத்திக் காங்கிரஸ் கூட இருக்கையில், இவர் நோய்வாய்ப்பட்டிருந்தபோது, ஒரு முஸ்லிம் இவரைக் குத்திக் கொன்றுவிட்டான். அந்த ஆண்டு காங்கிரசில் இவர் மரணத்திற்குத் துக்கம் தெரிவித்துக் கொணர்ந்த தீர்மானத்தைக் காந்திஜி பிரரேபிக்க மௌலானா முகம்மது அலி ஆமோதித்தார். அங்கே பேசுகையில் காந்திஜி கூறியதாவது : "சுவாமிஜியைக் கொன்ற அப்துல் ரஷீதைச் சகோதரன் என்று நான் ஏன் அழைத்தேன் என்பதை நீங்கள் புரிந்துகொண்டிருப்பீர்கள். சுவாமிஜியைக் கொன்ற குற்றவாளி இவனல்ல என்றுகூட நான் கூறுவேன். ஒருவருக்கொருவர் துவேஷங் கொள்ளத் தூண்டியவர்களே குற்றவாளிகள்."

போலீஸார் தடுத்துச் சுட்டதால் பலர் மாண்டு காயமும் அடைந்தார்கள். அடக்குமுறை ஆட்சி டில்லியில் ஆரம்பமாயிற்று.* சிரத்தானந்தஜி, டில்லிக்கு அவசரமாக வருமாறு என்னை அழைத்தார். பம்பாயில் ஏப்ரல் 6-ஆம் தேதி வைபவங்கள் முடிந்தவுடனேயே நான் டில்லிக்குப் புறப்படுவதாக அவருக்குப் பதில் தந்தி கொடுத்தேன்.

டில்லியில் நடந்த அதே கதையே லாகூரிலும், அமிர்தசரஸிலும் சில வித்தியாசங்களுடன் நடந்தன. அமிர்தசரஸிலிருந்து டாக்டர் சத்தியபாலும், டாக்டர் கிச்சலுவும் உடனே அங்கே வருமாறு வற்புறுத்தி என்னை அழைத்தார்கள். அச் சமயம் அவர்களுடன் எனக்குக் கொஞ்சமும் பழக்கமே இல்லை. என்றாலும், டில்லிக்குப் போய்விட்டு அமிர்தசரஸுக்கு வர உத்தேசித்திருக்கிறேன் என்று அவர்களுக்குத் தெரிவித்தேன்.

ஆறும் தேதி காலை பம்பாய் நகர மக்கள் கடலில் நீராடுவதற்காகச் சௌபாத்திக்கு ஆயிரக்கணக்கில் சென்றனர். நீராடிய பிறகு ஊர்வலமாகத் தாகூர்துவாருக்குப் போனார்கள். ஊர்வலத்தில் ஓரளவுக்குப் பெண்களும் குழந்தைகளும் இருந்தனர். முஸ்லிம்களும் ஏராளமாக ஊர்வலத்தில் கலந்துகொண்டார்கள். ஊர்வலத்திலிருந்த எங்களில் சிலரை, முஸ்லிம்நண்பர்கள், தாகூர்துவாருக்குப் பக்கத்திலிருந்த மசூதிக்கு அழைத்துச் சென்றார்கள். அங்கே என்னையும் ஸ்ரீமதி நாயுடுவையும் பேசும்படியும் செய்தார்கள். சுதேசி விரதத்தையும், ஹிந்து—முஸ்லிம் ஒற்றுமைப் பிரதிக்ஞையையும் மக்கள் அந்த இடத்திலேயே எடுத்துக்கொள்ளும்படி செய்யவேண்டும் என்று ஸ்ரீ விட்டல்தாஸ் ஜேராஜானி யோசனை கூறினர். ஆனால், அந்த யோசனைக்கு நான் சம்மதிக்கவில்லை. பிரதிக்ஞைகளை அவசரத்தில் கூறி, அவற்றை மக்கள் மேற்கொள்ளும்படி செய்யக்கூடாது என்றும், இதுவரையில் மக்கள் செய்திருப்பதைக்கொண்டே நாம் திருப்தியடைய வேண்டும் என்றும் சொன்னேன். ஒரு முறை செய்துகொண்டுவிட்ட பிரதிக்ஞையை மீறி நடக்கக் கூடாது. ஆகையால், சுதேசி விரதத்தின் உட்கருத்துக்களை மக்கள் தெளிவாக அறிய வேண்

* அச்சமயம் பம்பாயில் நடந்த பொதுக் கூட்டத்தில் மகாத்மா பேசுகையில், டில்லிச் சம்பவங்களைக் குறித்துப் பின்வருமாறு குறிப்பிட்டார்: "சுடப்பட்ட பிறகும் 40,000 பேர் அடங்கிய பொதுக்கூட்டத்தை நடத்திவிடும் உறுதியும் துணிவும் டில்லி மக்களுக்கு இருந்தது அற்புதமான சம்பவமாகும். இதனால் டில்லி மக்கள் பெருங் கீர்த்தியை அடைந்து விட்டார்கள். ரௌலட் சட்டத்திற்கு எதிரான போராட்டத்தில் ஈடுபடும் மக்கள், தைரியமாகவும் அமைதியாகவும் இருக்கவேண்டும் என்று நான் எப்பொழுதும் வற்புறுத்தி வந்திருக்கிறேன். ஆனால், மக்கள் துன்பத்தை அனுபவிக்க வேண்டியிராது என்று நான் சொன்னதில்லை. இத்தகைய துயரங்கள் சத்தியாக்கிரகங்களுக்கு வரவேற்க வேண்டியவையே. டில்லியில் இதுவரையில் நான்கு முஸ்லிம்களும் ஐந்து ஹிந்துக்களும் இறந்திருக்கிறார்கள் என்று சுவாமி சிரத்தானந்தர் எனக்குத் தந்தி மூலம் அறிவித்திருக்கிறார். பலத்த காயமடைந்து 13 பேர் ஆஸ்பத்திரியில் இருக்கிறார்களாம். சத்தியாக்கிரகிகளுக்கு இது நல்ல ஆரம்பமே. தியாகமின்றி எந்த நாடும் சுதந்திரமடைந்ததில்லை."

டும் என்றும், ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமையைப்பற்றிய பிரதிக்ஞையினால் ஏற்படக் கூடிய பெரும் பொறுப்புக்களைச் சம்பந்தப்பட்ட எல்லோரும் முற்றும் உணர்ந்திருக்க வேண்டும் என்றும் கூறினேன். முடிவாக ஒரு யோசனையும் சொன்னேன். பிரதிக்ஞை எடுத்துக்கொள்ள விரும்புகிறவர்கள், அதற்காக மறுநாள் காலையில் திரும்பவும் அங்கே கூடவேண்டும் என்றேன்.

பம்பாயில் ஹர்த்தால் பூரண வெற்றியுடன் நடந்தது என்பதைச் சொல்லத் தேவையில்லை. சாத்விகச் சட்ட மறுப்பை ஆரம்பிப்பதற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்திருந்தோம். இதன் சம்பந்தமாக இரண்டு, மூன்று விஷயங்கள் விவாதிக்கப்பட்டன. பொதுமக்களால் எளிதில் மீறக்கூடியவைகளாக இருக்கும் சட்டங்கள் விஷயத்தில் மாத்திரமே சட்ட மறுப்புச் செய்வது என்று முடிவாயிற்று. உப்பு வரிமீது மக்களுக்கு மிகுந்த வெறுப்பு இருந்தது. அச் சட்டத்தை ரத்துச் செய்யும்படி பார்க்க வேண்டும் என்பதற்குப் பலமான இயக்கம் ஒன்றும் கொஞ்ச காலமாக நடந்துவந்தது. ஆகையால், உப்புச் சட்டங்களை மீறி மக்கள் தங்கள் வீடுகளிலேயே கடல்நீரைக் கொண்டு உப்புத் தயாரிக்கும்படி செய்யலாம் என்று யோசனை கூறினேன். என்னுடைய மற்றொரு யோசனை, அரசாங்கம் தடுத்திருக்கும் பிரசுரங்களை விற்கலாம் என்பது. நான் எழுதிய புத்தகங்களில் இரண்டு 'ஹிந்த் சுயராஜ்', 'சர்வோதயா' (ரஸ்கின் எழுதிய "கடையனுக்கும் கதிமோட்சம்' என்ற நூலைத் தழுவிக் குஜராத்தியில் எழுதியது). இவை இரண்டையும் அரசாங்கம் தடுத்திருந்தது. இக் காரியத்திற்கு அவ்விரு புத்தகங்களையும் உடனே எடுத்துக்கொள்ளலாம். அவற்றை அச்சிட்டுப் பகிரங்கமாக விற்பனை செய்வது, சாத்விகச் சட்ட மறுப்புச் செய்வதற்கு எளிதான வழி என்று தோன்றியது. ஆகவே, இதற்குப் போதுமான பிரதிகள் அச்சிடப்பட்டன. பட்டினி விரதம் முடிந்த பிறகு அன்று மாலை நடக்கவிருந்த பிரம்மாண்டமான பொதுக் கூட்டத்தில் அப் புத்தகங்களை விற்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

அதன்படி ஆறும் தேதி மாலை, தடுக்கப்பட்டிருந்த அப்புத்தகங்களைப் பொதுமக்களிடையே விற்பதற்கு அப்பிரசுரங்களுடன் ஏராளமான தொண்டர்கள் வெளிவந்தனர். ஸ்ரீமதி சரோஜினி தேவியும் நானும் மோட்டாரில் வெளியே சென்றோம். எல்லாப் பிரதிகளும் உடனே விற்றுப் போயின. விற்று வந்த பணத்தைச் சட்ட மறுப்பு இயக்கத்திற்காகவே செலவிடுவது என்பது ஏற்பாடு. இவ் விரு புத்தகங்களுக்கும், பிரதி நான்கு அணா என்று விலை வைத்தோம். ஆனால், அந்தப் பிரதிகளை என்னிடமிருந்து யாரும் நாலணா மாத்திரமே கொடுத்து வாங்கியதாக எனக்கு நினைவு இல்லை. ஏராளமானவர்கள் தங்கள் கையிலிருந்த பணம் முழுவதையும் அப்படியே கொடுத்துவிட்டு, அப் புத்தகங்களை வாங்கினார்கள். ஒரு பிரதியை வாங்க ஐந்து ரூபாய், பத்து ரூபாய்

நோட்டுகள் வந்து குவிந்தன. ஒரு பிரதியை ஐம்பது ரூபாய்க்கு நான் விற்றதாகவும் நினைவிருக்கிறது! தடுக்கப்பட்டிருக்கும் இப் புத்தகங்களை வாங்குவதற்காக அவர்கள் கைது செய்யப் பட்டுச் சிறையிலும் அடைக்கப்படக் கூடும் என்பதும் பொது மக்களுக்கு எடுத்துக் கூறப்பட்டது. ஆனால், அத் தருணம் அவர்கள், சிறை செல்லும் பயம் முழுவதையுமே அடியோடு ஒழித் திருந்தார்கள்.

தான் தடுத்திருந்த இப்புத்தகங்கள் இவ்வாறு விற்பனை செய்யப்பட்டது சம்பந்தமாக அரசாங்கம் தனக்குச் சௌகரிய மானதோர் கருத்தை மேற்கொண்டது என்பதை நான் பிறகே அறிந்தேன். உண்மையில் விற்கப்பட்ட புத்தகங்கள் தன்னால் தடுக்கப்பட்ட புத்தகங்கள் அல்ல என்றும், ஆகவே நாங்கள் விற்றவை 'தடுக்கப்பட்ட புத்தகங்கள்' என்ற விளக்கத்தின் கீழ் வந்தவை என்று கருதப்படவில்லை என்றும் அரசாங்கம் கரு தியதாம். புதியதாக அச்சிட்டது, தடுக்கப்பட்டிருந்த புத்த கத்தின் மறு பதிப்பே யாகையால், அவற்றை விற்பது சட் டப்படி குற்றமாகாது என்று அரசாங்கம் கருதியது. இச் செய்தி பொதுவாக ஏமாற்றத்தையே அளித்தது.

மறுநாள் காலை சுதேசி, ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமைப் பிரதிக்ஞைகளைச் செய்துகொள்ளுவதற்காக மற்றோர் கூட்டம் நடந்தது. மின்னுவதெல்லாம் தங்கம் ஆகிவிடாது என்பதை முதல் தடவையாக விட்டல்தாஸ் ஜேராஜானி உணர்ந்துகொண் டார். அக் கூட்டத்திற்கு மிகச் சிலரே வந்திருந்தார்கள். அச் சமயம் வந்திருந்த சில சகோதரிகளை எனக்கு நன்றாக நினை விருக்கிறது. அக் கூட்டத்திற்கு வந்த ஆண்களும் ஒரு சிலரே. நான் பிரதிக்ஞை நகலை முன்னாடியே தயாரித்துக் கொண்டு வந்திருந்தேன். அப் பிரதிக்ஞையை எடுத்துக்கொள்ளுமாறு வந்திருந்தவர்களிடம் சொல்லுவதற்கு முன்னால், அதன் பொருளை அவர்களுக்கு நன்றாக விளக்கிச் சொன்னேன். கூட்டத்திற்குச் சிலரே வந்திருந்தது எனக்கு வியப்பையோ, ஆச்சரியத்தையோ உண்டாக்கவில்லை. ஏனெனில், பொதுஜனப் போக்கிலிருக்கும் வழக்கமான ஒரு தன்மையை நான் கவனித்து வந்திருக்கிறேன். ஆவேசம் தரும் வேலையென்றால் பிரியப்படுவார்கள், அமைதி யான ஆக்க வேலை என்றாலோ அவர்களுக்கு வெறுப்பு. அந்தத் தன்மை இன்றைக்கும் இருந்து வருகிறது.

ஆனால், இவ்விஷயத்தைக் குறித்து நான் ஓர் அத்தியாயமே எழுத வேண்டும். எனவே, தொடர்ந்து கதைக்கே திரும்பு வோம். டில்லிக்கும் அமிர்தசரஸுக்கும் போக 7-ஆம் தேதி இரவு புறப்பட்டேன். 8-ஆம் தேதி மதுராவை அடைந்ததும் நான் கைது செய்யப்படலாம் என்ற வதந்திகள் இருப்பதாக முதல் முதலாக அறிந்தேன். மதுராவுக்கு அடுத்தபடி ரெயில்

நின்ற இடத்தில் என்னைப் பார்க்க ஆச்சாரிய கித்வானி* வந்தார். என்னைக் கைது செய்யப் போகிறார்கள் என்ற திடமான செய்தியை அவர் சொன்னதோடு நான் இடும் வேலையைச் செய்யத் தாம் தயாராக இருப்பதாகவும் கூறினார். இதற்காக அவருக்கு நன்றி கூறினேன். அவசியமாகும்போது அவருடைய சேவையைப் பயன்படுத்திக்கொள்ளத் தவறமாட்டேன் என்றும் அவருக்கு உறுதி சொன்னேன்.

ரெயில், பால்வால் ஸ்டேஷனை அடைவதற்கு முன்னாலேயே எழுத்து மூலமான உத்தரவு ஒன்றை எனக்குக் கொடுத்தார்கள். பாஞ்சாலத்திற்குள் நான் போனால் அங்கே அமைதி கெட்டுவிடுமாகையால் பாஞ்சாலத்தின் எல்லைக்குள் நான் போகக்கூடாது என்று தடுக்கப்பட்டிருப்பதாக அந்த உத்தரவு கூறியது. ரெயிலிலிருந்து இறங்கும்படியும் என்னிடம் போலீஸார் கூறினர். "வற்புறுத்தி அழைக்கப்பட்டிருப்பதன்பேரிலேயே நான் பாஞ்சாலத்திற்குப் போகிறேன். நான் அங்கே போவது அமைதியை உண்டாக்குவதற்கே; அமைதியைக் கெடுப்பதற்காக அல்ல. ஆகையால், இந்த உத்தரவுக்கு உடன்பட என்னால் முடியாமல் இருப்பதற்காக வருந்துகிறேன்" என்று கூறி வண்டியிலிருந்து இறங்க மறுத்துவிட்டேன்.

கடைசியாக ரெயில் பால்வாலை அடைந்தது. மகாதேவ் என்னுடன் இருந்தார். டில்லிக்கு நேரே போய், என்ன நடந்தது என்பதைச் சுவாமி சிரத்தானந்தஜியிடம் கூறி, மக்களை அமைதியாக இருக்கும்படி கேட்டுக்கொள்ளுமாறு அவருக்குச் சொன்னேன். எனக்குப் பிறப்பித்த உத்தரவை மீறி, மீறியதற்குரிய தண்டனையை ஏற்றுக்கொள்ள நான் முடிவு செய்தேன் என்பதையும், எனக்கு எந்தத் தண்டனை விதிக்கப்பட்டாலும், ஜனங்கள் மாத்திரம் பூரண அமைதியுடன் இருந்து வருவார்களானால், அதுவே நமக்கு வெற்றியை அளிக்கும் என்பதையும் மக்களுக்கு அவர் விளக்கிச் சொல்லவேண்டும் என்றும் கூறினேன்.

பால்வால் ரெயில்வே ஸ்டேஷனில் என்னை ரெயிலிலிருந்து இறக்கிப் போலீஸ் பாதுகாப்பில் வைத்தார்கள். கொஞ்ச நேரத்திற்கெல்லாம் டில்லியிலிருந்து ரெயில் வந்தது. என்னை ஒரு மூன்றாம் வகுப்பு வண்டியில் ஏற்றினார்கள். போலீஸ் கோஷ்டியும் என்னுடன் வந்தது. மதுராவை அடைந்ததும் என்னைப் போலீஸ் முகாமுக்குக் கொண்டு போனார்கள். என்னை என்ன செய்யப் போகிறார்கள், என்னை அடுத்தபடி எங்கே

---

* கித்வானி: சிந்துவாசியான இவர், ஒத்துழையாமை இயக்கத்தில் ஈடுபட்டார். 1923-இல் நடந்த நாபா சத்தியாக்கிரகத்தில் அகாலிகளின் வேதமாகிய அகண்டபந்தைப் படிப்பதற்காகச் சென்ற கோஷ்டியில் இவரும் ஒருவர். அச்சமயம் கைது செய்யப்பட்டார். பாகிஸ்தான் பிரிவினைக்குப் பின் இந்தியாவில் வந்திருந்து அரசியலில் பங்குகொண்டு சிறந்த பணியாற்றினார்.

கொண்டுபோகப் போகிறார்கள் என்பதைச் சொல்ல எந்தப் போலீஸ் அதிகாரியாலும் முடியவில்லை. அடுத்த நாள் காலை 4 மணிக்கு என்னை எழுப்பினார்கள். பம்பாயை நோக்கிப் போய்க் கொண்டிருந்த சாமான்கள் ரெயில் ஒன்றில் என்னை ஏற்றினார்கள். மத்தியானம் சாவாய் மாதப்பூரில் என்னை இறக்கினர். லாகூரிலிருந்து மெயில் ரெயிலில் வந்த போலீஸ் இன்ஸ்பெக்டர் ஸ்ரீ பௌரிங், இப்பொழுது என்னைக் கண்காணிப்பதை ஏற்றுக் கொண்டார். அவரோடு என்னை முதல் வகுப்பு வண்டியில் ஏற்றினார்கள். நான் சாதாரணக் கைதி என்பதிலிருந்து 'பெரிய மனித'க் கைதியாகிவிட்டேன். அந்த அதிகாரி, ஸர் மைக்கேல் ஓட்வியரைக் குறித்து நீண்ட புகழ்மாலை பாட ஆரம்பித்துவிட்டார். ஸர் மைக்கேலுக்கு என்மீது எந்தவிதமான விரோதமும் இல்லை என்றும், பாஞ்சாலத்திற்குள் நான் போனால் அங்கே அமைதி கெட்டுவிடும் என்றுதான் அவர் பயப்படுகிறார் என்றும் கூறினார். இன்னும் ஏதேதோ சொன்னார். கடைசியாகப் பம்பாய்க்குத் திரும்பிப் போய்விட நானாகவே ஒப்புக்கொண்டு விடுவதோடு பாஞ்சால எல்லையைத் தாண்டி உள்ளே வருவதில்லை என்பதற்குச் சம்மதிக்கும்படியும் அந்த அதிகாரி என்னைக் கேட்டுக் கொண்டார். அந்த உத்தரவுக்கு நான் உடன்பட்டுவிட முடியாது என்றும், நானாகத் திரும்பிப் போய்விடவும் தயாராயில்லை என்றும் அவருக்குப் பதில் சொன்னேன். அதன் பேரில் அந்த அதிகாரி, வேறு வழி இல்லாது போகவே என்மீது சட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்தாக வேண்டியிருக்கிறது என்றார். "என்னை என்னதான் செய்யப் போகிறீர்கள்?" என்று அவரைக் கேட்டேன். அது தமக்கே தெரியவில்லை என்றும், மேற்கொண்டு வரும் உத்தரவை எதிர்பார்ப்பதாகவும் அவர் சொன்னார். "தற்போதைக்கு உங்களை நான் பம்பாய்க்கு அழைத்துப் போய்க்கொண்டிருக்கிறேன்" என்றார்.

நாங்கள் சூரத் போய்ச் சேர்ந்தோம். அங்கே என்னை மற்றொரு போலீஸ் அதிகாரியிடம் ஒப்படைத்தனர். நாங்கள் பம்பாயை அடைந்ததும், "இனி நீங்கள் உங்கள் இஷ்டம்போல் போகலாம்" என்று அந்த அதிகாரியே என்னிடம் கூறினார். "ஆனால், நீங்கள் மாரின் லயன்ஸ் ஸ்டேஷனுக்கு அருகில் இறங்கிவிடுவது நல்லது. உங்களுக்காக அங்கே ரெயில் நிற்கும்படி செய்கிறேன். கொலாபாவில் பெருங்கூட்டம் இருக்கக்கூடும்" என்று கூறினார். அவர் விருப்பப்படியே செய்வதில் எனக்குச் சந்தோஷந்தான் என்று அவருக்குச் சொன்னேன். அவரும் மகிழ்ச்சியடைந்தார்; எனக்கு நன்றியும் கூறினார். அவர் யோசனைப்படியே நான் மாரின் லயன்ஸ் ஸ்டேஷனில் இறங்கினேன். அப்பொழுதுதான் ஒரு நண்பரின் வண்டி அப் பக்கமாகப் போயிற்று. அந்த வண்டியில் ஏறி ரேவா சங்கர ஜவேரியின் வீடு சேர்ந்தேன். நான் கைது செய்யப்பட்ட செய்தி பொதுமக்களுக்கு ஆத்திரத்தை மூட்டி அவர்களை வெறிகொண்டவர்களாகச் செய்திருக்கிறது என்று அந்த நண்பர் கூறினார்.

“பைதுனிக்கு அருகில் எந்த நேரத்திலும் கலகம் மூண்டுவிடக் கூடும் என்று பயப்படுகிருர்கள். மாஜிஸ்டிரேட்டும் போலீஸாரும் இதற்குள்ளாகவே அங்கே போய்விட்டனர்” என்றும் அவர் கூறினர்.

நான் ரேவாசங்கரின் வீடு போய்ச் சேர்ந்ததுமே, உமார் ஸோபானியும் அனுசூயா பென்னும் அங்கே வந்து, உடனே பைதுனிக்கு மோட்டாரில் வருமாறு அழைத்தனர். “பொதுமக்கள் பொறுமை இழந்துபோய் அதிக ஆத்திரம் அடைந்திருக்கிருர்கள். அவர்களைச் சாந்தப்படுத்த எங்களால் முடியவில்லை. நீங்கள் வந்தால்தான் அதைச் செய்ய முடியும்” என்ருர்கள்.

நான் மோட்டாரில் ஏறினேன். பைதுனிக்கு அருகில் பெருங் கூட்டம் கூடியிருந்ததைக் கண்டேன். என்னைக் கண்டதும் மக்கள் ஆனந்தத்தால் பைத்தியங்கொண்டவர்கள் போல் ஆகிவிட்டனர். உடனேயே ஓர் ஊர்வலமும் உருவாகிவிட்டது. “வந்தே மாதரம்” “அல்லாஹோ அக்பர்” என்ற கோஷங்கள் வானை அளாவி ஒலித்தன. பைதுனியில் குதிரைப் போலீஸ் படை ஒன்றைக் கண்டோம். மேலிருந்து கற்கள் சரமாரியாகப் பொழிந்து கொண்டிருந்தன. அமைதியாக இருக்கும்படி கூட்டத்தினரைக் கேட்டுக் கொண்டேன். ஆனல், கற்கள் மாரியிலிருந்து நாங்கள் தப்பமுடியாது என்றே தோன்றியது. ஊர்வலம் அப்துர் ரஹ்மான் தெருவைத் தாண்டிக் கிராபோர்டு மார்க்கெட்டை நோக்கிப் போக இருந்த சமயத்தில், திடீரென்று குதிரைப் போலீஸ் படையொன்று எதிர்த்து நின்றது. ஊர்வலம் கோட்டையை நோக்கி மேலும் போகாதபடி தடுக்கவே அப்படை அங்கே இருந்தது. கூட்டமோ, அதிக நெருக்கமானது. போலீஸ் அணியைப் பிளந்து கொண்டும் கூட்டம் புகுந்துவிட்டது என்றே சொல்ல வேண்டும். அப்படிப்பட்ட பிரம்மாண்டமானதோர் கூட்டத்தில் என் குரல் கேட்பதற்கு இடமே இல்லை. இப்படிப்பட்ட நிலைமையில் குதிரைப் படைக்குத் தலைமை வகித்த அதிகாரி, கூட்டத்தைக் கலைக்கும்படி அப் படையினருக்கு உத்தரவிட்டார். உடனே குதிரை வீரர்கள், தங்களுடைய ஈட்டிகளை வீசியவண்ணம் கூட்டத்தினரைத் தாக்கினர். நானும் காயமடைந்துவிடுவேன் என்று ஒரு கணம் தோன்றியது. ஆனல், நான் பயந்தபடி ஆகிவிடவில்லை. குதிரை வீரர்கள், வேகமாகச் சென்றபோது அவர்கள் ஈட்டி எங்கள் மோட்டார் மீதுதான் உராய்ந்தது. ஊர்வலத்தில் மக்களின் வரிசையெல்லாம் சின்ன பின்னமாகிவிட்டன. கூட்டத்தில் எங்கும் ஒரே குழப்ப நிலை. பிறகு மக்கள் ஓடத் தொடங்கிவிட்டனர். சிலர், குதிரை, மக்கள் இவர்களின் காலடியில் மிதிபட்டுப் போயினர். மற்றவர்களோ, நசுக்குண்டு காயப்பட்டுவிட்டனர். எங்கும் ஒரே ஜனமயமான அக் கூட்டத்திற்கிடையே குதிரைகள் போவதற்கே இடமில்லை. மக்கள் கலைவதென்ருல், அவர்கள் வெளியேறுவதற்கும் வழியில்லை. ஆகவே, ஈட்டி வீரர்கள் கண்மூடித்தனமாகக் கூட்டத்

திற்குள் புகுந்து சென்றனர். தாங்கள் செய்தது இன்னது என்பது அவர்களுக்குத் தெரியுமா என்பதே எனக்குச் சந்தேகம். அங்கிருந்த நிலைமை முழுவதுமே மிகவும் பயங்கரமான காட்சியாக இருந்தது. வெறிபிடித்த குழப்பத்தில் குதிரை வீரர்களும் மக்களும் ஒன்ருகக் கலந்து போய்விட்டனர்.

இவ்வாறு கூட்டத்தைக் கலைத்து அது மேற்கொண்டும் போக முடியாதபடி தடுத்துவிட்டனர். எங்கள் மோட்டாரை மட்டும் போக அனுமதித்தார்கள். கமிஷனர் ஆபீசுக்கு எதிரில் மோட்டாரை நிறுத்தச் செய்தேன். போலீஸாரின் நடத்தையைக் குறித்துக் கமிஷனரிடம் புகார் கூற அதிலிருந்து இறங்கினேன்.

## 32

## மறக்க முடியாத அந்த வாரம்!–2

கமிஷனர் ஸ்ரீ கிரிபித்தின் காரியாலயத்திற்குச் சென்றேன். அக் காரியாலயத்திற்குப் போகும் மாடிப் படிக்கட்டுகளிலெல்லாம் சிப்பாய்கள், உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால் வரையில் முற்றும் ஆயுதபாணிகளாக இருந்ததைக் கண்டேன். ராணுவ நடவடிக்கைக்குத் தயாராக இருப்பதுபோல் அவர்கள் இருந்தனர். தாழ்வாரத்திலும் சிப்பாய்கள் அதிகம் பேர் இருந்தார்கள். உள்ளே செல்ல என்னை அனுமதித்தனர். நான் உள்ளே சென்றபோது ஸ்ரீ கிரிபித்துடன் ஸ்ரீ பௌரிங்கும் உட்கார்ந்திருந்ததைக் கண்டேன்.

நான் நேரில் கண்ட காட்சிகளையெல்லாம் கமிஷனருக்கு விவரித்துச் சொன்னேன். அவர் பின்வருமாறு சுருக்கமாகப் பதில் கூறினர்: "ஊர்வலம் கோட்டைக்குப் போனல், அங்கே நிச்சயமாகக் கலகம் நேர்ந்திருக்கு மாகையால், கோட்டையை நோக்கி ஊர்வலம் போவதை நான் விரும்பவில்லை. கேட்டுக் கொள்ளுவதற்குக் கூட்டத்தினர் செவிசாய்க்க மாட்டார்கள் என்பதைக் கண்டேன். ஆகையால், கூட்டத்திற்குள் புகுந்து தாக்கும்படி குதிரைப் படையினருக்கு நான் உத்தரவிடுவது அவசியமாயிற்று."

அதற்கு நான், "ஆனல், அதன் விளைவு என்னவாகும் என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கவே வேண்டும். குதிரைகள் மக்களை மிதித்தே தீரும். அந்தக் குதிரைப் படையை அனுப்பியிருக்க வேண்டிய அவசியமே இல்லை என்றே நினைக்கிறேன்" என்றேன்.

ஸ்ரீ கிரிபித் கூறியதாவது: "அதை நீங்கள் தீர்மானிக்க முடியாது. உங்கள் உபதேசத்தினல் மக்களிடையே என்ன பலன் ஏற்படும் என்பதை உங்களைவிடப் போலீஸ் அதிகாரிகளாகிய நாங்கள் நன்கு அறிவோம். ஆரம்பத்திலேயே கடுமை

யான நடவடிக்கைகளை நாங்கள் எடுத்துக்கொள்ளவில்லையென்றால் நிலைமை மீறிப் போய்விடும். உங்கள் கட்டுக்கும் ஜனங்கள் அடங்காதவர்களாகப் போய்விடுவது நிச்சயம் என்பதை உங்களுக்குச் சொல்லுகிறேன். சட்டத்தை மீறி நடப்பதென்பது வெகு சீக்கிரத்தில் அவர்களுக்குப் பிடித்தமான தாகிவிடும். ஆனால், அமைதியாக இருக்க வேண்டிய கடமையை அவர்களால் தெரிந்துகொள்ள முடியாது. உங்களுடைய நோக்கங்கள் நல்லவையே என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. ஆனால், பொதுஜனங்கள் அவற்றைப் புரிந்துகொள்ள மாட்டார்கள். அவர்களுடைய இயற்கையான சுபாவத்தை அனுசரித்துத்தான் அவர்கள் நடப்பார்கள்.''

''இதில்தான் உங்கள் கருத்துக்கு நான் மாறுபடுகிறேன். பொதுஜனங்கள் இயற்கையாகவே அமைதியானவர்களேயன்றிப் பலாத்கார சுபாவம் உடையவர்கள் அல்ல'' என்றேன்.

இவ்வாறு நீண்ட நேரம் விவாதித்தோம். முடிவாகக் கிரிபித், "உங்கள் போதனைகளை மக்கள் ஏற்றுக்கொள்ளவில்லை என்பதை நீங்கள் நிச்சயமாகத் தெரிந்துகொள்ளுகிறீர்கள் என்று வைத்துக் கொள்ளுவோம், அப்பொழுது என்ன செய்வீர்கள்?'' என்று கேட்டார்.

''எனக்கு நிச்சயமாகத் தெரிந்தால் சாத்விகச் சட்ட மறுப்பை நான் நிறுத்தி வைத்துவிடுவேன்'' என்றேன்.

''அப்படியா சொல்லுகிறீர்கள்? நீங்கள் விடுதலையானதுமே பாஞ்சாலத்திற்குப் போவீர்கள் என்று ஸ்ரீ பௌரிங்கிடம் கூறினீர்களே'' என்று ஸ்ரீ கிரிபித் கேட்டார்.

''ஆம். அடுத்த ரெயிலிலேயே புறப்பட்டுவிட விரும்பினேன். ஆனால், இன்று அது ஆகாத காரியம்."

''நீங்கள் பொறுமையுடன் இருப்பீர்களாயின், உங்கள் போதனைகளை மக்கள் கேட்கவில்லை என்ற நிச்சயம் உங்களுக்குக் கட்டாயம் ஏற்படும். அகமதாபாத்தில் என்ன நடக்கிறது என்பது உங்களுக்குத் தெரியுமா? அமிர்தசரஸில் என்ன நடந்திருக்கிறது? எல்லா இடங்களிலுமே மக்கள் வெறிகொண்டு விட்டார்கள். எல்லா விவரங்களும் இன்னும் எனக்கு வந்து சேரவில்லை. சில இடங்களில் தந்திக் கம்பிகள் அறுக்கப்பட்டிருக்கின்றன. இந்தக் கலவரங்களுக்கெல்லாம் பொறுப்பு உங்களையே சாரும் என்று நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்" என்றார் ஸ்ரீ கிரிபித்.

அதற்கு நான் பின்வருமாறு கூறினேன்: ''அவ்வாறு நான் கண்டால், அதன் பொறுப்பைத் தயங்காமல் நான் ஏற்றுக்கொள்ளுவேன் என்று உங்களுக்கு உறுதி கூறுகிறேன். ஆனால், அகமதாபாத்தில் கலவரங்கள் நடந்தன என்று நான் கண்டால் மிகவும் மனவேதனை அடைவதோடு ஆச்சரியமும் படுவேன். அமிர்த

சரஸில் நடந்ததுபற்றி நான் எதுவும் சொல்லுவதற்கில்லை. அங்கே நான் போனதே இல்லை. அங்கே யாருக்கும் என்னைத் தெரியாது. ஆனால், பாஞ்சாலத்தைப் பற்றியுங்கூட ஒரு விஷயத்தை நான் நிச்சயமாக அறிவேன், பாஞ்சாலத்திற்குள் நான் போவதைப் பாஞ்சால அரசாங்கம் தடுக்காமல் இருந்திருக்குமாயின், அங்கே அமைதி நிலவும்படி செய்வதற்கு நான் பெரும் அளவு உதவியாக இருந்திருப்பேன். என்னைத் தடுத்ததன் மூலம் அனாவசியமாக மக்களுக்கு ஆத்திரம் மூட்டிவிட்டார்கள்.''

இவ்விதம் மேலும் மேலும் விவாதித்துக் கொண்டே போனோம். இருவர் கருத்தும் ஒத்துப் போவதற்குச் சாத்தியமே இல்லை. சௌபாத்தியில் ஒரு பொதுக்கூட்டத்தில் பேசி, அமைதியாக இருக்குமாறு மக்களைக் கேட்டுக்கொள்ளுவது என்று இருக்கிறேன் என்று அவரிடம் கூறிவிட்டு விடைபெற்றுக் கொண்டேன். சௌபாத்திக் கடற்கரையில் பொதுக்கூட்டம் நடந்தது. அகிம்சையின் கடமையைக் குறித்தும், சத்தியாக்கிரகத்தின் எல்லைகளைக் குறித்தும் விரிவாக எடுத்துக் கூறினேன். "முக்கியமாகச் சத்தியாக்கிரகம், உண்மையோடிருப்பவர்களுக்கே ஆயுதம். சத்தியாக்கிரகி, அகிம்சையை அனுசரிக்கப் பிரதிக்ஞை செய்துகொண்டிருக்கிறான். இதை மக்கள் எண்ணத்திலும், சொல்லிலும், செயலிலும் அனுசரித்தாலன்றிப் பொது ஜன சத்தியாக்கிரகத்தை நான் நடத்த முடியாது'' என்றும் சொன்னேன்.

அகமதாபாத்தில் கலவரங்கள் நடந்ததாக அனுசூயா பென்னுக்கும் செய்திகள் கிடைத்தன. அவரையும் கைது செய்துவிட்டார்கள் என்று யாரோ வதந்தியைக் கிளப்பிவிட்டார்கள். அவர் கைதானர் என்ற வதந்தியைக் கேட்டு மில் தொழிலாளர்கள் வெறிகொண்டு வேலை நிறுத்தம் செய்ததோடு பலாத்காரச் செயல்களையும் செய்துவிட்டார்கள். ஒரு சார்ஜண்டு அடித்துக் கொல்லப்பட்டுவிட்டார்.

நான் அகமதாபாத்துக்குச் சென்றேன். நதியாத் ரெயில்வே ஸ்டேஷனுக்கு அருகில் தண்டவாளங்களைப் பெயர்த்துவிட முயற்சிகள் நடந்தன என்றும், வீரம்காமில் அரசாங்க அதிகாரி ஒருவர் கொல்லப்பட்டார் என்றும், அகமதாபாத்தில் ராணுவச் சட்டம் அமுலுக்குக்கொண்டு வரப்பட்டிருக்கிறது என்றும் அறிந்தேன். பொதுஜனங்கள் பயப்பிராந்தியில் இருந்தனர். பலாத்காரச் செயல்களில் அவர்கள் ஈடுபட்டுவிட்டார்கள். அவர்கள் அதற்கு வட்டியும் சேர்த்து அனுபவிக்கும்படி செய்யப்பட்டுவிட்டனர்.

கமிஷனர் ஸ்ரீ பிராட்டிடம் என்னை அழைத்துக்கொண்டு போவதற்காக ஒரு போலீஸ் அதிகாரி ஸ்டேஷனில் காத்துக் கொண்டிருந்தார். கோபத்தினால் அவர் துடிதுடித்துக் கொண்டிருந்ததைக் கண்டேன். அவரிடம் சாந்தமாகவே பேசினேன்.

நடந்துவிட்ட கலவரங்களுக்காக என் வருத்தத்தையும் தெரிவித்துக்கொண்டேன். ராணுவச் சட்டம் அனாவசியமானது என்று நான் சொன்னதோடு, அமைதியை நிலைநாட்டுவதற்கான முயற்சிகளிலெல்லாம் ஒத்துழைக்கத் தயாராக இருக்கிறேன் என்றும் சொல்லி சாபர்மதி ஆசிரம மைதானத்தில் ஒரு பொதுக்கூட்டத்தை நடத்த அனுமதிக்கும்படியும் கேட்டேன். இந்த யோசனை அவருக்குப் பிடித்திருந்தது. பொதுக்கூட்டமும் நடந்தது. அது ஏப்ரல் 13-ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை என்று நினைக்கிறேன். அன்றோ, அதற்கு மறுநாளோ, ராணுவச் சட்ட ஆட்சியும் ரத்தாயிற்று. பொதுக்கூட்டத்தில் பேசுகையில், மக்கள் தாங்கள் செய்துவிட்ட தவறை உணரும்படி செய்ய முயன்றேன். அவர்களுடைய செய்கைகளுக்குப் பிராயச்சித்தமாக மூன்று நாட்கள் உண்ணாவிரதம் இருக்கப் போகிறேன் என்றும் தெரிவித்தேன். அதேபோல் ஒரு நாளைக்கு உண்ணாவிரதம் இருக்குமாறு மக்களைக் கேட்டுக்கொண்டேன். பலாத்காரச் செயல்களைச் செய்துவிட்டவர்கள், தங்களுடைய குற்றத்தை ஒப்புக்கொள்ள வேண்டும் என்றும் அவர்களுக்கு யோசனை கூறினேன்.

என்னுடைய கடமை என்ன என்பது பட்டப்பகல்போல் எனக்கு விளங்கியது. அகமதாபாத் தொழிலாளரிடையே நான் அதிக காலம் செலவிட்டிருக்கிறேன். அவர்களுக்குச் சேவையும் செய்திருக்கிறேன். அவர்களிடமிருந்து சிறந்த காரியங்களை நான் எதிர்பார்த்திருக்கும் போது, அத்தொழிலாளர்கள் கலகங்களில் ஈடுபட்டது என்னால் சகிக்க முடியாததாயிற்று. அவர்களுடைய குற்றத்தில் எனக்கும் பங்கு உண்டு என்பதை உணர்ந்தேன்.

மக்கள் தாங்கள் செய்துவிட்ட குற்றத்தை ஒப்புக்கொண்டுவிட வேண்டும் என்று அவர்களுக்கு நான் கூறியது போலவே, அக்குற்றங்களை மன்னித்துவிடுமாறு அரசாங்கத்திற்கும் யோசனை கூறினேன். இரு சாராரும் என் யோசனையை ஏற்றுக்கொள்ளவில்லை.

காலஞ்சென்ற ஸர் ராமாபாயும், அகமதாபாத் நகரவாசிகள் சிலரும், என்னிடம் வந்து சத்தியாக்கிரகத்தை நிறுத்திவைக்குமாறு என்னைக் கேட்டுக்கொண்டார்கள். அமைதியின்மையின் படிப்பினையை மக்கள் அறிந்துகொள்ளும் வரையில் சத்தியாக்கிரகத்தை நிறுத்தி வைப்பதென்று நான் தீர்மானித்துக்கொண்டுவிட்டதால், அவர்களுடைய வேண்டுகோளுக்கே அவசியமில்லை. அந்த நண்பர்கள் மகிழ்ச்சியுடன் திரும்பினர்.

ஆனால், நான் செய்துவிட்ட இத்தீர்மானத்தைக் குறித்துத் துக்கப்பட்டவர்களும் உண்டு. எல்லா இடங்களிலுமே அமைதி நிலவ வேண்டும் என்று நான் எதிர்பார்த்தால், சத்தியாக்கிரகத்தை ஆரம்பிப்பதற்கு முன்னால் இருந்தாக வேண்டிய நிபந்தனை என்று நான் அதைக் கருதுவதானால், பொதுஜன சத்தியாக்-

கிரகம் என்பதே அசாத்தியமானதாகிவிடும் என்று அவர்கள் கருதினர்கள். அவர்களுடன் மாறுபட்ட கருத்தை நான் கொள்ள வேண்டி யிருந்ததற்காக வருந்தினேன். நான் யாருடன் இருந்து வேலே செய்துவந்தேனே அவர்கள், அகிம்சைக்கும் துன்பங்களே அனுபவிப்பதற்கும் தயாரா யிருப்பார்கள் என்று நான் எதிர் பார்த்தவர்களே, அகிம்சையை அனுசரிக்க முடியவில்லே யென் ருல், சத்தியாக்கிரகம் நிச்சயமாகச் சாத்திய மில்லாததே. சத்தி யாக்கிரகத்திற்கு மக்களே நடத்திச் செல்ல விரும்புகிறவர்கள், அகிம்சையின் குறிப்பிட்ட எல்லேக்குள் மக்களே வைக்க முடிந்த வர்களாக இருக்க வேண்டும் என்பதில் நான் உறுதியான கருத் துக் கொண்டிருந்தேன். அதே அபிப்பிராயமே எனக்கு இன் றைக்கும் இருந்து வருகிறது.

# 33

# ஒரு ஹிமாலயத் தவறு

அகமதாபாத் கூட்டம் முடிந்தவுடனேயே நதியாத்திற்குச் சென்றேன். 'ஹிமாலயத் தவறு' என்ற சொல்லே நான் முதல் முதலில் அங்கேதான் உபயோகித்தேன். அச்சொல் பின்னல் அதிகப் பிரபலமாயிற்று. அகமதாபாத்தில் கூட, நான் செய்து விட்ட தவறை லேசாக உணர ஆரம்பித்துவிட்டேன். ஆனல், நதியாத்திற்குச் சென்று அங்கே இருந்த உண்மையான நிலேமை யைப் பார்த்து, கேடா ஜில்லாவைச் சேர்ந்தவர்கள் ஏராளமா கக் கைது செய்யப்பட்டுவிட்டனர் என்பதைக் கேள்விப்பட்ட பிறகே, நான் பெரும் தவறைச் செய்துவிட்டேன் என்பது திடீ ரென்று எனக்குப் பட்டது. கேடா ஜில்லாவின் மக்களேயும், மற்ற இடங்களில் இருந்தவர்களேயும், அதற்கு வேண்டிய பக்கு வத்தை அவர்கள் அடைவதற்கு முன்னலேயே சாத்விகச் சட்ட மறுப்பை ஆரம்பிக்கும்படி சொல்லிவிட்டது பெருந் தவறு என்று இப்பொழுது எனக்குத் தோன்றியது. நான் ஒரு பொதுக்கூட் டத்தில் இவ்விதம் கூறினேன். இவ்விதம் தவறை நான் ஒப்புக் கொண்டதைக் குறித்து நான் பரிகசிக்கப்பட்டது கொஞ்சமல்ல. ஆனல் அவ்வாறு தவறை ஒப்புக்கொண்டதைக் குறித்து நான் வருத்தப்பட்டதே இல்லே. ஏனெனில், ஒருவர் தாம் செய்யும் தவறுகளேப் பூதக்கண்ணுடி கொண்டு பார்த்து, பிறர் தவறுகள் விஷயத்தில் அவ்விதம் பார்க்காமல் இருந்தால்தான், இரண்டை யும் நியாயமாக அவர் மதிப்பிட முடியும் என்று நான் எப்பொழு தும் கருதி வந்திருக்கிறேன். அதோடு சத்தியாக்கிரகியாக இருக்க விரும்புகிறவர், இந்த விதியை மனப்பூர்வமாகவும் தவரு மலும் அனுசரித்து வரவேண்டும் என்றும் நான் நம்புகிறேன்.

நான் செய்துவிட்ட ஹிமாலயத் தவறு என்ன என்பதை இனிக் கவனிப்போம். சாத்விகச் சட்ட மறுப்பைச் செய்வதற்கு ஒருவர் தகுதியை அடைவதற்கு முன்னல், அவர் அரசாங்கச்

சட்டங்களுக்கு விரும்பி மரியாதையுடன் பணிந்து நடந்தவராக இருக்கவேண்டும். ஏனெனில், சட்டத்தை மீறி நடந்துவிட்டால் அதற்குரிய தண்டனையை அடைய நேருமே என்ற பயத்தினுலேயே பெரும்பாலும் அத்தகைய சட்டங்களுக்குப் பணிந்து நடக்கிறோம். அதிலும் ஒழுக்க நெறி சம்பந்தப்படாத சட்டங்கள் விஷயத்தில் இது பெரிதும் உண்மையே யாகும். உதாரணமாக, திருடுவதற்கு எதிரான சட்டம் இருந்தாலும், இல்லாது போனுலும், யோக்கியமும் கௌரவமும் உள்ள ஒருவர், திடீரென்று திருட முற்பட்டுவிட மாட்டார். ஆனல் இவரே, இருட்டிய பிறகு சைக்கிளில் விளக்கு வைத்துக்கொண்டே வெளியில் போக வேண்டும் என்ற விதியை மீறி நடந்துவிடுவதைக் குறித்துக் கவலைப்படுவதில்லை. இது சம்பந்தமாக அதிக ஜாக்கிரதையாக இருக்கும்படி புத்தி கூறினுல், அதையாவது அன்போடு ஏற்றுக்கொள்ளுவாரா என்பதும் சந்தேகம். ஆனல், இந்த விதியை மீறினுல் குற்றஞ்சாட்டி வழக்குத் தொடரப்படும் அசௌகரியத்திலிருந்து தப்புவதற்கு மாத்திரம், கட்டாயமான இதுபோன்ற விதியை அவர் அனுசரித்து நடப்பார். அவ்விதம் சட்டத்திற்கு உடன்படுவது ஒரு சத்தியாக்கிரகி விருப்பத்துடன் தானே உடன்பட வேண்டியதைப் போன்ற தாகாது. ஒரு சத்தியாக்கிரகி, சமூகத்தின் சட்டங்களுக்குப் புத்திசாலித்தனமாகவும், தமது சுயேச்சையான விருப்பத்தின்பேரிலும் உடன்பட்டு நடக்கிறுர். ஏனெனில், அவ்விதம் செய்வது தமது புனிதமான கடமை என்று அவர் கருதுகிறுர். இவ்விதம் சமூகத்தின் சட்டங்களுக்கு ஒருவர் தவருமல் பணிந்து நடந்தால்தான், எந்தக் குறிப்பிட்ட விதிகள் நல்லவை, நியாயமானவை, எவை அநியாயமானவை, பாவமானவை என்பதைச் சீர்தூக்கிப் பார்க்கக்கூடிய தகுதி அவருக்கு ஏற்படும். அப்பொழுதுதான் தெளிவான சில குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் சில சட்டங்களைச் சாத்விக முறையில் மீறுவதற்கான உரிமை அவருக்கு ஏற்படும். அவசியமான இந்த எல்லையைக் கவனிக்காமல் போனதுதான் நான் செய்த தவறு. இவ்வாறு மக்கள் தங்களைத் தகுதியாக்கிக் கொள்ளுவதற்கு முன்னுல் சாத்விகச் சட்ட மறுப்பை ஆரம்பிக்குமாறு அவர்களைக் கேட்டுக்கொண்டு விட்டேன். இத் தவறு, ஹிமாலயத்தைப்போன்று பெரியது என்றே எனக்குத் தோன்றுகிறது. கேடா ஜில்லாவில் பிரவேசித்ததுமே, கேடா சத்தியாக்கிரகத்தைப்பற்றிய பழைய நினைவுகளெல்லாம் எனக்குத் திரும்ப வந்தன. எனவே, அவ்வளவு தெளிவான விஷயத்தை நான் எப்படிப் புரிந்துகொள்ளாது போனேன் என்று ஆச்சரியப்பட்டேன். சாத்விகச் சட்ட மறுப்புச் செய்வதற்கு வேண்டிய தகுதியை மக்கள் பெறுவதற்கு முன்னுல், அதன் ஆழ்ந்த உட்பொருள்களை அவர்கள் முற்றும் அறிந்து கொண்டிருக்க வேண்டியது அவசியம் என்பதை நான் தெரிந்துகொண்டேன். எனவே, பொதுஜன அளவில் சாத்விகச் சட்ட மறுப்பைத் திரும்பவும் ஆரம்பிப்பதற்கு முன்னுல் நன்ருகப் பண்பட்ட சத்தியாக்கிரகத்தின் கண்டிப்பான நிபந்தனைகளை நன்ருகப் புரிந்துகொண் டிருக்கும், புனித உள்ளம் படைத்த

தொண்டர்கள் படை இருக்கும்படி செய்யவேண்டியது அவசியம். இவைகளை அவர்கள் மக்களுக்கு எடுத்துச் சொல்லவும், தூக்க மின்றி உஷாராக இருப்பதன் மூலம் மக்களைச் சரியான வழியில் நடக்கும்படி செய்யவும் அவர்களால் முடியும்.

என் மனத்தில் இவ்விதமான எண்ணங்களுடன் நான் பம்பாய் போய்ச் சேர்ந்தேன். அங்கிருந்த சத்தியாக்கிரக சபையின் மூலம் சத்தியாக்கிரகப் படையைத் திரட்டினேன். சத்தியாக்கிரகத்தின் பொருள் சம்பந்தமாகவும், அதன் உள்ளிருக்கும் முக்கியத்துவத்தையும் பொதுமக்கள் அறியும்படி செய்யும் வேலையை அத் தொண்டர்களின் உதவியைக்கொண்டு ஆரம்பித்தேன். இவ் விஷயத்தைப் போதிக்கும் துண்டுப் பிரசுரங்களை வெளியிட்டே முக்கியமாக இந்த வேலை நடந்தது.

இந்த வேலை நடந்துகொண் டிருந்தபோது ஒரு விஷயத்தை நான் காண முடிந்தது. சத்தியாக்கிரகம் சம்பந்தமான சமாதான வேலையில் மக்கள் சிரத்தைகொள்ளும்படி செய்வது மிகவும் கஷ்டமான காரியம் என்பதைக் கண்டேன். தொண்டர்களும் பெருந்தொகையில் வந்து சேரவில்லை; சேர்ந்த தொண்டர்களோ, ஒழுங்காக முறைப்படி பயிற்சியைப் பெறவு மில்லை. நாளாக ஆகப் புதிதாக வந்து சேருகிறவர்களின் தொகை அதிகமாவதற்குப் பதிலாகக் குறைந்துகொண்டே போயிற்று. சாத்விகச் சட்ட மறுப்புப் பயிற்சியின் அபிவிருத்தி, நான் ஆரம்பத்தில் எதிர்பார்த்ததைப்போலத் துரிதமானதாக இருக்கப்போவதில்லை என்பதையும் தெரிந்துகொண்டேன்.

## 34

## ‘நவ ஜீவன்’, ‘எங் இந்தியா’

இவ்வாறு அகிம்சையைப் பாதுகாப்பதற்கான இயக்கம், மெதுவாகவே யெனினும் நிதானமாக, ஒரு பக்கம் அபிவிருத்தியடைந்துகொண்டு வந்த சமயத்தில், மற்றோர் பக்கத்தில் அரசாங்கத்தின் சட்ட விரோதமான அடக்குமுறைக் கொள்கை அதிகத் தீவிரமாக இருந்துவந்தது. பாஞ்சாலத்தில் அந்த அடக்குமுறை, தனது பூரண சொருபத்தையும் காட்டி வந்தது. தலைவர்கள் கைது செய்யப்பட்டனர். ராணுவச் சட்டம் அமுல் நடத்தப்பட்டது. அதாவது, சட்டம் என்பதே இல்லை என்றாயிற்று. விசேட நீதி மன்றங்களை அமைத்தார்கள். இந்த விசேட நீதி மன்றங்கள், எதேச்சாதிகாரியின் இஷ்டத்தை யெல்லாம் நிறைவேற்றி வைக்கும் கருவிகளாகத்தான் இருந்தனவே யன்றி உண்மையில் நீதி வழங்கும் மன்றங்களாக இல்லை. நீதிமுறைக் கெல்லாம் முற்றும் மாறாகச் சாட்சியத்திற்குப் பொருந்தாத வகையில் தண்டனைகள் விதிக்கப்பட்டன. அமிர்தசரஸில் ஒரு பாவமும் அறியாத ஆண்களும் பெண்களும், புழுக்களைப்போல் வயிற்றிலேயே ஊர்ந்து செல்லும்படி செய்யப்பட்டனர். ஜாலியன்

வாலாபாக் கொலையே* உலகத்தின் கவனத்தையும், முக்கியமாக இந்திய மக்களின் கவனத்தையும் அதிகமாகக் கவர்ந்ததென்றாலும், இந்த அட்டூழியத்தின் முன்பு அப் படுகொலைகூட என் கண்ணுக்கு அவ்வளவு பெரியதாகத் தோன்றவில்லை.

என்ன நேர்ந்தாலும் பொருட்படுத்தாமல் உடனே பாஞ்சாலத்திற்குப் போகும்படி வற்புறுத்தப்பட்டேன். அங்கே செல்ல அனுமதி யளிக்குமாறு வைசிராய்க்கு எழுதினேன்; தந்தியும் அடித்தேன். ஆனால், ஒரு பலனும் இல்லை. அவசியமான அனுமதியில்லாமல் நான் போவேனாயின், பாஞ்சால எல்லையைத் தாண்டி உள்ளே போக நான் அனுமதிக்கப்படமாட்டேன். சாத்விகச் சட்ட மறுப்புச் செய்தேன் என்ற திருப்தியோடு இருந்துவிட வேண்டியதுதான். இவ்விதம் என்ன செய்வதென்று தோன்றாமல் குழம்பிக்கொண் டிருந்தேன். இருந்த நிலைமைப்படி பார்த்தால், பாஞ்சாலத்திற்குள் பிரவேசிக்கக் கூடாது என்ற தடை உத்தரவை மீறுவது சாத்விகச் சட்டமறுப்பு ஆகாது என்றே எனக்குத்

---

* 1919 ஏப்ரல் 13-ஆம் தேதி 4-30 மணிக்கு ஜாலியன்வாலா பாக் தோட்டத்தில் பொதுக்கூட்டம் நடக்கும் என்று அறிவித்திருந்தனர். அக் கூட்டம் நடக்காதபடி தடுக்க ஜெனரல் டயர் எந்த விதமான நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளவில்லை. ஆனால், கூட்டம் ஆரம்பமானதும், அந்த இடத்திற்கு ஆயுத மோட்டார்கள் துருப்புகளுடன் சென்று, எச்சரிக்கை செய்யாமல், கையிலிருந்த குண்டுகள் தீரும் வரையில் சுடும்படி உத்தரவிட்டான். அந்த அக்கிரமக் காட்சியை ஸர் வாலண்டைன் சிரோல் பின்வருமாறு வருணித்திருக்கிறார்:

''ஜாலியன்வாலா பாக்கை ஒருவர் நேரில் பார்த்தாலன்றி அங்கு நடந்தது எவ்வளவு பெரிய பயங்கரச் செயல் என்பதை அறிந்து கொள்ளவே முடியாது. அந்த இடம் ஒரு சமயம் தோட்டமாக இருந்தது. ஆனால், பிறகு வெட்ட வெளியாகவே இருந்தது. லண்டன் டிரபால்கர் ஸ்கொயர் அளவினதான அங்கே சந்தைகள், பொதுக்கூட்டங்கள் இவை நடந்து வந்தன. அதற்குச் சுற்றிலும் மதில்கள், மதில்களுக்கு அப்பால் அடர்த்தியாக வீடுகள். ஐம்பது துப்பாக்கிகளுடன் ஜெனரல் டயர் எந்த சந்தின் வழியாக உள்ளே போனானோ அதே சந்தின் வழியாகவே நானும் அத்தோட்டத்திற்குள் போனேன். ஜெனரல் டயர் சென்றபோது உள்ளே மக்கள் பெருங்கூட்டமாக இருந்தனர். தலைவர்கள் பேசிக்கொண்டிருந்தார்கள். அங்கே எந்த உயரமான இடத்தில் இருந்துகொண்டு எந்த எச்சரிக்கையும் செய்யாமல் சுட்டானோ அந்த இடத்தின்மேல் நின்றுகொண்டே நானும் பார்த்தேன். கூட்டத்தில் 6,000 பேர் இருந்தார்கள் என்பது டயர் கணக்கு. 10,000-க்கு மேல் இருந்தார்கள் என்பது மற்றவர்கள் மதிப்பு. நிராயுதபாணிகள், எவ்விதப் பாதுகாப்பும் இல்லாதவர்கள். கதி கலங்கிவிட்ட கூட்டத்தினர், உடனே கலைந்து ஓடத் தலைப்பட்டனர். அப்பெருங்கூட்டத்தின் மீது பத்து நிமிடங்கள் ஓயாமல் 1,650 தோட்டாக்களைப் பொழிந்தான். மக்கள் பொறியில் சிக்கியவர் போல் ஆகிவிட்டனர். குறுகலான வழி மூலம் தப்பி ஓடிவிட முயன்று, முடியாமல் பலர், குண்டு மாரியிலிருந்து தப்ப தரையில் படுத்தனர். கூட்டம் அதிகமாக இருந்த இடத்தை நோக்கிச் சுடச் சொன்னான். பத்து நிமிடங்களில் கொண்டு வந்திருந்த தோட்டாக்களெல்லாம் தீர்ந்து விடவே தன் சிப்பாய்களுடன் டயர் வந்த வழியே திரும்பிவிட்டான். பின்னால் அரசாங்கத்தின் வாயிலிருந்தே பறிக்கப்பட்ட தகவல்களிலிருந்து, 379 பேரைக் கொன்றுவிட்டான் என்பது வெளியாயிற்று. அநேகம் பேர் காயம்பட்டுக் கிடந்தனர். அவர்களைக் கவனிப்பது என் வேலை என்று நான் கருதவில்லை' என்றான், அவன்.''

தோன்றிற்று. ஏனெனில், நான் எந்த வகையான அமைதியான சூழ்நிலையை விரும்பினேனே அதை என்னைச் சுற்றிலும் நான் காணவில்லை. பாஞ்சாலத்தில் நடந்துவந்த அக்கிரமமான அடக்குமுறையோ மக்களின் ஆத்திரத்தை மேலும் அதிகமாக்கி விட்டது. ஆகையால், அப்படிப்பட்ட சமயத்தில் நான் சாத்விகச் சட்ட மறுப்புச் செய்வது சாத்தியமென்றாலும், அது எரியும் நெருப்பில் எண்ணெயை வார்த்ததுபோன்றே ஆகும் என்று எண்ணினேன். எனவே, போகுமாறு நண்பர்கள் கூறியபோதிலும், பாஞ்சாலத்திற்குப் போவதில்லை என்று தீர்மானித்துக் கொண்டேன். இத்தகைய முடிவுக்கு நான் வரவேண்டியிருந்தது எனக்கே அதிகக் கஷ்டமாகத்தான் இருந்தது. அட்டூழியங்களையும் அநீதிகளையும் பற்றிய செய்திகள் தினமும் வந்து கொண்டே இருந்தன. ஆனால், நானே எதுவும் செய்ய இயலாதவனாக உட்கார்ந்துகொண்டு பல்லை நறநறவென்று கடித்துக் கொண்டிருக்க வேண்டியதாயிற்று.

அச்சமயத்தில் ஸ்ரீ ஹார்னிமனின் கையில் 'பம்பாய்க் கிரானிகிள்' பத்திரிகை பலமான சக்தியாக இருந்து வந்தது. அதிகாரிகள் திடீரென்று அவரைப் பிடித்து வெளியேற்றிவிட்டார்கள். அரசாங்கத்தின் இச் செய்கை ஆதிசயம் நிறைந்த காரியம் என்று எனக்குத் தோன்றியது. அச் செய்கையை இப்பொழுதும் மிக்க அருவருப்பான செய்கையாகவே எண்ணுகிறேன். சட்ட விரோதமான கலவரங்களை ஸ்ரீ ஹார்னிமன் என்றும் விரும்பியதில்லை என்பதை நான் அறிவேன். பாஞ்சால அரசாங்கம் எனக்குப் பிறப்பித்த தடை உத்தரவைச் சத்தியாக்கிரகக் கமிட்டியின் அனுமதியில்லாமல் நான் மீறியது அவருக்குப் பிடிக்கவில்லை. சாத்விகச் சட்ட மறுப்பை நிறுத்திவைப்பது என்ற முடிவை அவர் பூரணமாக ஆதரித்தார். சட்ட மறுப்பை நிறுத்திவைப்பதாக நான் அறிவிப்பதற்கு முன்னாலேயே, சட்ட மறுப்பை நிறுத்தி வைக்குமாறு யோசனை கூறி அவர் எனக்குக் கடிதமும் எழுதினர். நான் அப்பொழுது அகமதாபாத்தில் இருந்ததால், பம்பாய்க்கும் அதற்கும் உள்ள தூரத்தின் காரணமாக நான் அறிவித்த பிறகே அக் கடிதம் எனக்குக் கிடைத்தது. ஆகவே, அவர் திடீரென்று நாடு கடத்தப்பட்டது எனக்கு மன வேதனை மட்டுமின்றி ஆச்சரியத்தையும் அளித்தது.

இவ்விதமான நிலைமைகள் ஏற்பட்டுவிடவே 'பம்பாய்க் கிரானிகி'ளின் டைரக்டர்கள், பத்திரிகையை நடத்தும் பொறுப்பை ஏற்றுக்கொள்ளும்படி என்னைக் கேட்டுக்கொண்டார்கள். ஸ்ரீ பிரெல்வி ஏற்கனவே அப் பத்திரிகையில் இருந்தார். ஆகவே, நான் செய்யவேண்டியது அதிகமில்லை. ஆனால், என் சுபாவத்தை அனுசரித்து இப் பொறுப்பு என்னுடைய சிரமத்தை அதிகமாக்கியது.

ஆனால், எனக்குச் சிரமம் இல்லாதபடி செய்ய வந்ததுபோல் அரசாங்கமும் முன்வந்துவிட்டது. அரசாங்கத்தின் உத்தரவினால்

'கிரானிகிள்' பத்திரிகையை நிறுத்திவைத்துவிட வேண்டிய தாயிற்று.

'கிரானிகிள்' நிர்வாகத்தை நடத்தி வந்த நண்பர்களான ஸ்ரீ உமார் ஸோபானியும், ஸ்ரீ சங்கரலால் பாங்கரும், இதே சமயத்தில் 'எங் இந்தியா' என்ற பத்திரிகையையும் நிர்வகித்து வந்தார்கள். 'கிரானிகிள்' நிறுத்திவைக்கப்பட்டுவிட்டதால், அதனுல் ஏற்பட்டிருக்கும் குறை நீங்குவதை முன்னிட்டு, 'எங் இந்தியா'வின் ஆசிரியர் பதவியை நான் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று சொன்னுர்கள். வாரப் பத்திரிகையாக நடந்துவந்த 'எங் இந்தியா'வை, வாரம் இருமுறைப் பத்திரிகையாக்கலாம் என்றூர்கள். நானும் அதைத்தான் எண்ணினேன். சத்தியாக்கிரகத்தின் உட்பொருளைப் பொதுமக்களுக்கு விளக்கிச் சொல்ல வேண்டும் என்று நான் ஆவலோடு இருந்தேன். அதோடு இம் முயற்சியால் பாஞ்சால நிலைமையைக் குறித்தும் ஓரளவுக்கு என் கடமையைச் செய்யலாம் என்றும் நம்பினேன். ஏனெனில், நான் என்ன எழுதினுலும், அதன் முடிவு சத்தியாக்கிரகமே. அரசாங்கத்திற்கும் அது தெரியும். ஆகையால், இந் நண்பர்கள் கூறிய யோசனையை உடனே ஏற்றுக்கொண்டுவிட்டேன்.

ஆனல், ஆங்கிலத்தை உபயோகித்து, சத்தியாக்கிரகத்தில் பொதுமக்களுக்கு எவ்வாறு பயிற்சி அளிக்க முடியும்? நான் முக்கியமாக வேலை செய்து வந்த இடம் குஜராத். ஸ்ரீ ஸோபானி, ஸ்ரீ பாங்கர் கோஷ்டியுடன் அச் சமயம் ஸ்ரீ இந்துலால் யாக்ஞிக்கும் இருந்தார். குஜராத்தி மாதப் பத்திரிகையான 'நவஜீவ'னை அவர் நடத்தி வந்தார். இந்த நண்பர்கள் அதற்கும் பணவுதவி செய்து வந்தார்கள். அந்த மாதப் பத்திரிகையையும் அந் நண்பர்கள் என்னிடம் ஒப்படைத்தனர். ஸ்ரீ இந்துலாலும் அதில் வேலை செய்வதாகக் கூறினுர். அந்த மாதப் பத்திரிகை வாரப் பத்திரிகையாக மாற்றப்பட்டது.

இதற்கு மத்தியில் 'கிரானிகிள்' புத்துயிர் பெற்றெழுந்தது. ஆகையால், 'எங் இந்தியா' முன்பு போலவே வாரப் பத்திரிகையாயிற்று. இரண்டு வாரப் பத்திரிகைகளை, இரண்டு இடங்களிலிருந்து பிரசுரிப்பதென்பது, எனக்கு அதிக அசௌகரியமானதோடு செலவும் அதிகமாயிற்று. 'நவஜீவன்' முன்பே அகமதாபாத்திலிருந்து பிரசுரமாகி வந்ததால், என் யோசனையின் பேரில் 'எங் இந்தியா'வும் அங்கேயே மாற்றப்பட்டது.

இந்த மாற்றத்திற்கு இதல்லாமல் வேறு காரணங்களும் உண்டு. இத்தகைய பத்திரிகைகளுக்குச் சொந்தமாக அச்சகம் இருக்க வேண்டியது அவசியம் என்பதை 'இந்தியன் ஒப்பீனியன்' அனுபவத்திலிருந்து அறிந்திருந்தேன். மேலும், இந்தியாவில் அப்பொழுது கடுமையான அச்சுச் சட்டங்கள் அமுலிலிருந்தன. ஆகையால், என்னுடைய கருத்துக்களைத் தங்கு தடையின்றி வெளியிட நான் விரும்பினுல், லாபம் கருதியே நடத்தப்

பட்டவையான அப்பொழுதிருந்த அச்சகங்கள், அவற்றைப் பிர சுரிக்கத் தயங்கும். எனவே, சொந்தத்தில் ஓர் அச்சகத்தை அமைத்துக்கொள்ள வேண்டியது மிகவும் அத்தியாவசிய மாயிற்று. அகமதாபாத்திலேயே சௌகரியமாக அச்சகத்தை அமைத்துக்கொள்ளலா மாகையால், 'எங் இந்தியா'வையும் அங்கே கொண்டுபோனோம்.

சத்தியாக்கிரகத்தைக் குறித்துப் பொதுமக்களுக்கு இப் பத்திரிகைகளின் மூலம் என்னால் இயன்ற வரையில் போதிக்கும் வேலையைத் தொடங்கினேன். இரு பத்திரிகைகளுக்கும் ஏராள மானவர்கள் சந்தாதாரர்களாயினர். ஒரு சமயம் ஒவ்வொரு பத்திரிகையும் நாற்பதினாயிரம் பிரதிகள் செலவாயின. 'நவ ஜீவன்' சந்தாதாரர்கள் தொகை ஒரேயடியாகப் பெருகிய போதி லும், 'எங் இந்தியா'வின் சந்தாதாரர்கள் தொகை நிதானமாகவே அதிகரித்தது. நான் சிறைப்பட்ட பிறகு, இரு பத்திரிகைகளின் சந்தாதார் தொகையும் அதிகமாகக் குறைந்துவிட்டது. இன்று எண்ணாயிரம் பிரதிகளே போகின்றன.

இப் பத்திரிகைகளில் விளம்பரங்களைப் பிரசுரிப்பதை ஆரம் பத்திலிருந்தே மறுத்துவிட்டேன். இதனால், அப் பத்திரிகைகள் எந்த நஷ்டத்தையும் அடைந்துவிட்டதாக நான் நினைக்கவில்லை. ஆனால் இதற்கு மாறாக, அப் பத்திரிகைகள் சுதந்தரமாக இருந்து வருவதற்கு என் தீர்மானம் பெரிய அளவுக்கு உதவியாக இருந் தது என்பதே என் நம்பிக்கை.

என் அளவில் நான் மன அமைதியை அடைவதற்கும் இப் பத்திரிகைகள் எனக்கு உதவியாக இருந்தன. சாத்விகச் சட்ட மறுப்பை உடனே ஆரம்பிப்பதற்கு இடமில்லை என்று ஆகிவிட்ட போது, என் கருத்துக்களைத் தாராளமாக எடுத்துக் கூறவும், மக் களுக்குத் தைரியம் ஊட்டவும் அவை உதவியாக இருந்தன. மக் களுக்கு அதிகக் கடுமையான சோதனை ஏற்பட்டுவிட்ட காலத் தில் அவர்களுக்கு இவ்விரு பத்திரிகைகளும் சிறந்த சேவை செய்ததோடு ராணுவ ஆட்சிக் கொடுமையைத் தணிக்கவும் தங் களாலானதை அவை செய்தன என்று எண்ணுகிறேன்.

# 35

# பாஞ்சாலத்தில்

பாஞ்சாலத்தில் நடந்தவைகளுக் கெல்லாம் நானே பொறுப் பாளி என்று ஸர் மைக்கேல் ஓட்வியர்* கூறினர். ஆத்திர

* ஸர் மைக்கேல் ஓட்வியர்: 1918-வது ஆண்டில் பாஞ்சால கவர்னராயிருந்தவர். காங்கிரஸ் இயக்கம் அங்கே பரவாமல் தடுக்கக் கடுமையான அடக்கு முறையை கையாண் டவர். இதனால் மனம் கொதித்தெழுந்த மக்களை அடக்குவதற்காக ராணுவச் சட்டத்தை

மடைந்த சில இளம் பஞ்சாபிகளும், ராணுவச் சட்ட அமுலுக்குப் பொறுப்பாளி நான்தான் என்றனர். சாத்விகச் சட்ட மறுப்பை நான் நிறுத்திவைக்காமல் இருந்தால், ஜாலியன்வாலா பாக் படு கொலையே நடந்திராது என்று அவர்கள் சொன்னார்கள். அவர்களில் சிலரோ, பாஞ்சாலத்திற்கு வந்தால், என்னைக் கொன்று விடுவதாகப் பயமுறுத்தும் அளவுக்கும் போய்விட்டார்கள். ஆனால், நான் செய்தது சரியானது என்றும், ஆட்சேபிக்க முடியாதது என்றும் எண்ணினேன். புத்தியுள்ளவர்கள் யாரும் அதைத் தவறாகப் புரிந்துகொள்ளுவதற்கில்லை என்றும் கருதினேன்.

பாஞ்சாலத்திற்குப் போக வேண்டும் என்று நான் பரபரப்புடன் இருந்தேன். இதற்கு முன் நான் அங்கே போனதே இல்லை. இதனாலேயே அங்கே போய் நிலைமையை நேரில் பார்க்க வேண்டும் என்ற ஆர்வம் எனக்கு அதிகமாயிற்று. பாஞ்சாலத்திற்கு வருமாறு என்னை அழைத்த டாக்டர் சத்தியபால், டாக்டர் கிச்லு,* பண்டித ராம்பாஜ் தத் சௌத்ரி ஆகியோர் அச்சமயம் சிறையில் இருந்தார்கள். ஆனால், அவர்களையும் மற்றக் கைதிகளையும் அரசாங்கம் நீண்ட காலம் சிறையில் வைத்திருக்கத் துணிய முடியாது என்று கருதினேன். நான் பம்பாயிலிருந்த சமயங்களில் ஏராளமான பஞ்சாபிகள் என்னை வந்து பார்த்துக் கொண்டிருந்தார்கள். அப்பொழுதெல்லாம் நான் அவர்களுக்கு ஆறுதல் கூறி உற்சாகப்படுத்தி வந்தேன். அது அவர்களுக்கும் ஆறுதலை அளித்தது. அச் சமயம் எனக்கு இருந்த தன்னம்பிக்கை மற்றவர்களுக்கும் தொத்திக்கொண்டு விடுவதாக இருந்தது.

---

அமல் நடத்தினர். ஜாலியன்வாலா பாக்கில் கூடிய மக்களைச் சுட்டுக்கொன்ற ஜெனரல் டயரின் செயலை ஆதரித்தார். நிலைமை மிஞ்சியதும் பதவியைவிட்டு விலகித் தன் நாடு சென்றார். இவரது ஆட்சிக் கொடுமையைக் கண்டிப்பதற்கு அறிகுறியாக மத்திய ஆட்சியின் நிர்வாக அங்கத்தினராயிருந்த (காங்கிரஸ் முந்திய தலைவர்) ஸர் சங்கரன் நாயர் தமது பதவியை ராஜிநாமாச் செய்தார். ஸ்ரீ நாயர் எழுதிய 'காந்தியும் அராஜகமும்' எனும் நூலில் தம்மை அவதூறாக எழுதியிருப்பதாக ஸர் மைக்கேல் லண்டனில் வழக்குத் தொடர்ந்து மூன்று லட்ச ரூபாய் மான நஷ்ட ஈடாகப் பெற்றார்.

* டாக்டர்கள் சத்தியபால், கிச்லு : பாஞ்சாலத்தில் சத்தியாக்கிரக இயக்கம் பரவாமல் தடுப்பதற்கு 1919-இல் அந்த மாகாண கவர்னராயிருந்த ஸர் மைக்கேல் ஓட்வியர் முயன்றார். டாக்டர் சத்தியபால், கிச்லு ஆகிய இருவரையும் 10-4-1919-ல் நகர மாஜிஸ்டிரேட் அழைத்துக் கைது செய்து காவலில் வைத்துவிட்டார். சத்தியபால் என்பவர் வைத்தியர்; கிச்லு என்பவர் பாரிஸ்டர். மாஜிஸ்டிரேட்டின் இந்தச் செயலை எதிர்த்து மக்கள் அவர் வீட்டின் முன் ஆர்ப்பாட்டம் செய்தனர். சத்தியபால், காங்கிரஸ் சரித்திரம் பற்றி ஒரு நூல் எழுதியிருக்கிறார். சைமன் கமிஷன் பகிஷ்கார இயக்கத்தில் ஈடுபட்டார். கராச்சியில் நடந்த கிலாபத் மகாநாட்டில் ராஜத்துவேஷப் பிரசங்கம் செய்ததாகக் கிச்லு கைது செய்யப்பட்டார். 1923-இல் நாபா மகாராஜா முடி துறக்கச் செய்யப்பட்டது சம்பந்தமான கிளர்ச்சியில் கிச்லு மீண்டும் கைது செய்யப்பட்டார். 1932-இல் சத்தியாக்கிரகப் போராட்டத்தை நடத்தும் சர்வாதிகாரிகளில் ஒருவராகக் கிச்லு நியமிக்கப்பட்டார். தற்சமயம் இவர் உலக சமாதானத்திற்காக உழைத்து வருகிறார்.

ஆனல், நான் பாஞ்சாலத்திற்குப் போவதை அடிக்கடி ஒத்திப் போடவேண்டியதாயிற்று. அங்கே போவதற்கு நான் அனுமதி கேட்கும் போதெல்லாம் வைசிராய், "பொறுங்கள்!" என்று கூறி வந்தார். ஆகையால், நான் போவது காலங் தள்ளிக் கொண்டே வந்தது.

இதற்கு மத்தியில் ராணுவச் சட்டத்தின் கீழ் பாஞ்சால அரசாங்கம் செய்தவைகளின் சம்பந்தமாக விசாரணை நடத்துவதற்கு ஹண்டர் கமிட்டி நியமிக்கப்பட்டிருப்பதாக அறிவிக்கப்பட்டது. ஸ்ரீ ஸி. எப். ஆண்டுரூஸ் இதற்குள் அங்கே போய்விட்டார். அங்கே இருந்த நிலைமையைக் குறித்து அவர் எழுதிய கடிதங்கள் உள்ளத்தைப் பிளப்பனவாக இருந்தன. ராணுவச் சட்ட அமுல் அட்டூழியங்கள், பத்திரிகைகளில் வெளியான விவரங்களைவிடப் படுமோசமாக இருக்கின்றன என்ற அபிப்பிராயம் எனக்கு உண்டாயிற்று. உடனே புறப்பட்டு வரும்படி அவர் என்னை வற்புறுத்தினர். அதே சமயத்தில் மாளவியாஜியும், உடனே பாஞ்சாலத்திற்குப் புறப்படுமாறு எனக்குத் தந்தி கொடுத்தார். "இப்போதாவது நான் பாஞ்சாலத்திற்குப் போகலாமா?" என்று மற்றோர் முறையும் வைசிராய்க்குத் தந்தி கொடுத்துக் கேட்டேன். ஒரு தேதியைக் குறிப்பிட்டு அந்தத் தேதிக்குப் பிறகு நான் பாஞ்சாலத்திற்குப் போகலாம் என்று பதில் வந்தது. எனக்கு இப்பொழுது அத்தேதி சரியாக ஞாபகம் இல்லையென்றாலும், அக்டோபர் 17-ஆம் தேதி என்று நினைக்கிறேன்.

நான் லாகூர் போய்ச் சேர்ந்ததும் கண்ட காட்சியை என் ஞாபகத்திலிருந்து என்றும் அழித்துவிட முடியாது. ரெயில்வே ஸ்டேஷனில் ஒரு கோடியிலிருந்து மற்றோர் கோடிக்கு ஒரே ஜன சமுத்திரம். நீண்ட காலம் பிரிந்திருந்துவிட்ட உறவினரைச் சந்திப்பதற்குக் கிளம்பிவிடுவதைப்போல லாகூர் மக்கள் எல்லோரும் வீட்டைவிட்டுக் கிளம்பி வந்து, ஆர்வத்துடன் என்னை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஆனந்த மிகுதியால் அவர்கள் தலை கால் புரியாதவர்களாகிவிட்டனர். நான், காலஞ் சென்ற பண்டித ராம்பாஜ் தத்தின் பங்களாவில் தங்கினேன். என்னை உபசரிக்கும் பாரம் ஸ்ரீமதி சரளாதேவிக்கு ஏற்பட்டது. உண்மையில், அது பெரிய பாரமே யாகும். ஏனெனில், இப்பொழுது இருப்பதைப் போன்று அக் காலத்திலும் நான் தங்கும் இடம் பெரிய சத்திரமாகவே ஆகிவந்தது.

பாஞ்சாலத்தின் முக்கியமான தலைவர்களெல்லோரும் சிறையில் இருந்ததால், அவர்களுடைய ஸ்தானங்களைப் பண்டித மாளவியா, பண்டித மோதிலால்ஜி, காலஞ்சென்ற சுவாமி சிரத்தானந்தஜி ஆகியோர் பொருத்தமாகவே வகித்து வந்தார்கள். சுவாமி சிரத்தானந்தஜியையும் மாளவியாவையும் இதற்கு

முன்பே நான் நன்றாக அறிவேன். ஆனால் மோதிலால்ஜியுடன்* முதல் முதலாக இப்பொழுதுதான் நான் நெருங்கிப் பழகினேன். இந்தத் தலைவர்களும், சிறை செல்லும் பாக்கியத்திலிருந்து தப்பிய உள்ளூர்த் தலைவர்களும், தங்கள் மத்தியில் நான் என் சொந்த வீட்டில் இருப்பதாகவே உணரும்படி செய்தனர். இதனால், அவர்களின் நடுவே நான் அந்நியனாக உணரவே இல்லை.

ஹண்டர் கமிட்டியின் முன்பு விசாரணைக்குச் சாட்சியம் அளிப்பதில்லை என்று நாங்கள் ஏகமனதாக முடிவு செய்த விஷயம், இப்பொழுது சரித்திரப் பிரசித்தமானது. இவ்விதம் முடிவு செய்ததற்கான காரணங்கள், அப்பொழுது வெளியிடப் பட்டிருக்கின்றன. ஆகையால், அவற்றை இங்கே திரும்பக் கூறிக்கொண்டிருக்க வேண்டியதில்லை. ஒன்றை மாத்திரம்

---

* மோதிலால் என்பவர் பண்டித மோதிலால் நேரு. உலகக் கீர்த்தி பெற்றுள்ள இந்தியப் பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேருவின் புகழ் பெற்ற தந்தையே மோதிலால் நேரு. காஷ்மீரிலிருந்து குடியேறிய பிராமணக் குடும்பத்தில் பிறந்து, பிரபல வக்கீலாயிருந்து, அரசர் போல் வாழ்ந்தவர். சுதந்திரப் போராட்டத்தில் தலையாய பங்கு கொண்டு சுதந்திரத்திற்காக உயிர் நீத்தவர். பாரத நாட்டிற்குத் தமது மாளிகை 'ஆனந்த பவன'த்தையும், தமது ஏகப் புத்திரரையும் அளித்தவர்.

புகழ் பெற்ற சூரத் காங்கிரஸில் பங்கு கொண்ட மோதிலால் நேரு. 1916 வரையில் அதில் அதிகப் பங்குகொள்ளவில்லை. 1919-இல் அமிர்தசரஸ் காங்கிரசுக்கும், 1928-இல் கல்கத்தா காங்கிரசுக்கும் தலைமை தாங்கினார். 1919-இல் நடந்த பாஞ்சாலக் கொடுமைபற்றி விசாரிப்பதற்காகக் காங்கிரஸ் நியமித்த கமிட்டியில் இவர் ஓர் அங்கத்தினர். இந்தியாவுக்கேற்ற அரசியல் அமைப்பு தயாரிப்பதற்காக நியமிக்கப்பட்ட சர்வ கட்சிக் கமிட்டியின் தலைவர். ஒத்துழையாமையை முதலில் எதிர்த்துப் பின்னர் அதை ஆதரித்தார். மோதிலால் நேரு, தேசபந்து தாஸ் இருவருமாகச் சேர்ந்து சட்டசபைப் பிரவேசத்தை ஆதரித்துச் சுயராஜ்யக் கட்சியைத் தொடங்கினர். அக்கட்சியின் சார்பாகத் தேர்ந்தெடுக்கப் பெற்று மத்திய சட்டசபையில் தீரமாகப் போராடினார். பன்முறை சிறை சென்றதனால் உடல் நலிவுற்று 3—2—1931 இல் காலமானார். அச்சமயம் காந்திஜி உடனிருந்தார். உயிர் பிரியும் முன் அவர் வெளியிட்ட கருத்துக்கள் பின்வருமாறு :

"இந்தியாவின் எதிர்காலத்தை 'சுயராஜ்ய பவன'த்தில் முடிவு செய்யுங்கள். அதை என் முன்னர் தீர்மானம் செய்யுங்கள். என் தாய்நாட்டின் எதிர்காலத்தை நிர்ணயிப்பதில் எனக்கும் பங்கிருக்கட்டும். நான் அடிமை நாட்டிலில்லாமல் சுதந்திர நாட்டில் கண்மூட விரும்புகிறேன்."

மோதிலாலின் பிரிவைப் பற்றிக் காந்திஜி கூறியதாவது :

"மோதிலால் மரணமடைந்த முறையைப் பற்றி ஒவ்வொரு தேசாபிமானியும் பெருமைப்பட வேண்டும். தமது யாவற்றையும் அவர் நாட்டிற்குத் தத்தம் செய்தார். கடைசி மூச்சுவரை நாட்டைப் பற்றியே நினைத்தார். அவருடைய தியாகத்தைப் போற்றும் தகுதி பெற வேண்டுமானால், சுதந்திரத்திற்காக நாம் இயன்றவரை தியாகம் செய்ய வேண்டும்.

"எனது நிலை விதவையின் நிலையைவிடப் பரிதாபமானது. கணவனிடம் விசுவாசம் குன்றாமல் வாழ்வதன் மூலம் அவள் தன் பதியின் சிறப்பை அடையலாம். ஆனால், நான் எதையும் அடையமுடியாது. மோதிலாலின் மரணத்தின் மூலம் நான் அடைந்த நஷ்டம் ஈடு செய்ய முடியாதது. பூமிதேவியே பிளந்து வழிவிடு. உன்னுள் நான் மறைந்துகொள்ளுகிறேன்."

சொன்னாலே போதும். இவ்வளவு காலமான பிறகும் அந்த நிகழ்ச்சிகளைக் குறித்து எண்ணிப் பார்க்கும்போது, அக் கமிட்டியைப் பகிஷ்கரிப்பதென்று நாங்கள் செய்த முடிவு முற்றும் சரியானதும் பொருத்தமானதுமாகும் என்றே இப்பொழுதும் நான் எண்ணுகிறேன்.

ஹண்டர் கமிட்டியைப் பகிஷ்கரிப்பதென்று* நாங்கள் முடிவு செய்துவிட்டதன் விளைவாகக் காங்கிரஸின் சார்பாக அதேபோல விசாரணையை நடத்த உத்தியோகஸ்த ரல்லாதவர்களைக் கொண்ட ஒரு கமிட்டியை நியமிப்பது என்று தீர்மானித்தோம். பண்டித மோதிலால் நேரு, காலஞ் சென்ற தேசபந்து ஸி. ஆர். தாஸ், ஸ்ரீ அப்பாஸ் தயாப்ஜி,† ஸ்ரீ எம். ஆர். ஜெயகர், ‡ நான் ஆகியோர் அக்கமிட்டிக்கு உறுப்பினர்களாக நியமிக்கப் பட்டோம். உண்மையில் எங்களை நியமித்தவர் பண்டித மாளவியாஜியே. விசாரிப்பதற்காக நாங்கள் பிரிந்து வெவ்வேறு இடங்களுக்குச் சென்றோம். கமிட்டியின் வேலைகளை ஒழுங்கு

---

* ஹண்டர் கமிஷன் பகிஷ்காரம்: பாஞ்சாலத்தில் ராணுவச் சட்ட அமுல் சம்பந்தமாக நிகழ்ந்த சம்பவங்கள் பற்றி விசாரிக்க லார்டு ஹண்டர் தலைமையில் ஒரு கமிஷன் அரசாங்கத்தினரால் அமைக்கப்பட்டது. இதை காங்கிரஸ் பகிஷ்கரித்துவிட்டு அதற்குப் பதிலாக வேறு விசாரணைக் கமிட்டியை அமைத்தது. இப்படிப் பகிஷ்கரித்ததன் காரணம் வருமாறு: ராணுவச் சட்டத்தின் கீழ் தண்டனையடைந்தவர்களை வரவழைத்து விசாரிக்க வேண்டும் எனக் காங்கிரஸ் கோரியது. இந்தக் கோரிக்கை நிராகரிக்கப்பட்டது. இதன் பேரில் அரசாங்கத்திற்கும் இந்தியா மந்திரிக்கும் அப்பீல் செய்தும் பயன்படவில்லை. மேலும் ஹண்டர் கமிஷன் விசாரிக்க வேண்டிய விஷயங்களும் குறுகலான நோக்கங்கள் கொண்ட முறையில் குறிக்கப்பட்டிருந்தன. ஆகையால் ஹண்டர் கமிஷன் விசாரணையைப் பகிஷ்கரிப்பது எனத் தீர்மானிக்கப்பட்டது.

† அப்பாஸ் தயாப்ஜி: இவர் பரோடாவில் உயர் நீதிபதியாயிருந்து ஓய்வு பெற்றவர். மகாத்மாவின் ஒத்துழையாமை இயக்கத்தின் தொடக்கத்திலேயே அதில் ஈடுபட்டவர். உப்புச் சத்தியாக்கிரக இயக்கத்தில் காந்திஜி தண்டி யாத்திரையில் கைது செய்யப்பட்ட பின் அந்தப் போராட்டத்தில் தலைவராகக் காந்திஜியே இவரை நியமித்தார். 1930, ஏப்ரல் 12-ஆம் தேதி கைது செய்யப்பட்டார். காந்திஜிக்கு அவரிடம் மிகுந்த அன்பு உண்டு. இவர்கள் இருவரும் சந்திக்கும்போது அன்பு மிகுதியால் குழந்தைகள் போல் விளையாடிக்கொள்வர்.

‡ எம். ஆர். ஜெயகர்: மகாராஷ்டிரர்; அரசியல் சட்ட நிபுணர்; இலக்கியப் பண்டிதர்; பிரபல வக்கீல்; பிரிவி கவுன்சில் நீதிபதியாகவும் இருந்திருக்கிறார். பஞ்சாப் படுகொலை சம்பந்தமாகக் காங்கிரஸ் அமைத்த விசாரணைக் கமிட்டியில் இவர் ஓர் அங்கத்தினர். 1922-இல் சர் சங்கரன் நாயர் தலைமையில் பம்பாயில் நடந்த சர்வ கட்சி மகாநாட்டின் காரியதரிசிகளில் இவர் ஒருவர். சுயராஜ்யக் கட்சியினர் சட்ட சபையில் பிரவேசித்தபோது இவர் மத்திய சட்டசபை அங்கத்தினராயிருந்தார். அரசாங்கம் இணங்கி வந்தால் நாம் பதவி ஏற்கலாம் என்று கருதினார். அதன் விளைவாகச் சுயராஜ்யக் கட்சியுடன் மாறுபட்டதனால் தம் பதவியை ராஜிநாமாச் செய்தார். உப்புச் சத்தியாக்கிரகம் தொடங்கிய பின் மகாத்மாவுக்கும் அரசாங்கத்திற்கும் உடன்பாடு ஏற்படுவதற்காக இவரும் சப்ருவும் சலியாமல் உழைத்து காந்தி — இர்வின் ஒப்பந்தம் ஏற்படும்படி செய்தனர்.

படுத்தும் பொறுப்பு எனக்கு ஏற்பட்டது. அதோடு அதிகப் படியான இடங்களில் விசாரிக்கும் பாக்கியமும் எனக்குக் கிடைத்தது. இதனுல் பாஞ்சால மக்களேயும், பாஞ்சாலத்தின் கிராமங் களேயும் நெருங்கிப் பழகி அறிந்துகொள்ளும் அரிய வாய்ப்பு எனக்கு ஏற்பட்டது.

இந்த விசாரணையை நான் நடத்தி வந்தபோது பாஞ்சாலத் தின் பெண்களிடமும் நான் நெருங்கிப் பழகலானேன். எவ் வளவோ காலமாக ஒருவருக் கொருவர் நன்ருகத் தெரிந்தவர் களேப் போன்றே நாங்கள் பழகினேம். நான் சென்ற இடங்களி லெல்லாம் பெண்கள் ஏராளமாக வந்து கூடினுர்கள். அவர்கள், தங்கள் கையினுல் நூற்ற நூல்களேயும் என் முன்பு கொண்டு வந்து குவித்தார்கள். கதர் வேலேக்குப் பாஞ்சாலத்தில் அதிக இடமுண்டு என்ற உண்மையை, நான் செய்து வந்த விசாரணை வேலேயின் மூலம் தெரிந்துகொண்டேன்.

மக்களுக்கு இழைக்கப்பட்டிருந்த அட்டுழியங்களேக் குறித்த என் விசாரணையை மேலும் மேலும் நான் நடத்திக்கொண்டு போகப் போக, அரசாங்கத்தின் கொடுமைகளேப்பற்றியும், அதன் அதிகாரிகளின் எதேச்சாதிகார அக்கிரமங்களேக் குறித் தும், ஏராளமான விவரங்களே அறியலானேன். இவற்றையெல் லாம் அறியவே எனக்கு மனவேதனே அதிகமாயிற்று. பாஞ் சாலம், யுத்தத்தின்போது பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு ஏராள மான சிப்பாய்களேக் கொடுத்துதவிய மாகாணம். அப்படியிருக்க, இந்த மாகாணம் இவ்வளவு மிருகத்தனமான அட்டுழியங்களுக்கு எப்படிப் பணிந்து பொறுத்துக்கொண்டிருந்தது என்பதே எனக்குப் பெரிய ஆச்சரியமாக இருந்தது. இப்பொழுதுங்கூட அது எனக்கு ஆச்சரியமாகத்தான் இருக்கிறது.

கமிட்டியின் அறிக்கையைத் தயாரிக்கும் வேலேயும் என் னிடம் ஒப்படைக்கப்பட்டது. பாஞ்சால மக்களிடம் எந்தவித மான அட்டுழியங்க ளெல்லாம் செய்யப்பட் டிருக்கின்றன என் பதைக் குறித்துத் தெரிந்துகொள்ள விரும்புவோர், இக் கமிட்டி யின் அறிக்கையைப் பார்க்கும்படி சிபார்சு செய்கிறேன். அதைக் குறித்து இங்கே நான் சொல்ல விரும்புவ தெல்லாம், அந்த அறிக்கையில் மனமார மிகைப்படுத்திக் கூறப்பட்டிருப்பது ஒன்றுமே இல்லே. அதில் கூறப்பட்டிருப்பது ஒவ்வொன்றும் சாட்சியங்களேக் கொண்டே நிரூபிக்கப்பட்டிருக்கின்றது என்பது தான். மேலும், பிரசுரமாகியிருக்கும் சாட்சியங்கள், கமிட்டியி னிடமிருக்கும் சாட்சியங்களில் மிகச் சிலவேதான். எங்களிடம் கொடுக்கப்பட்ட வாக்குமூலங்களில் ஒரு சிறிது சந்தேகத்திற்கு இடமுள்ளதாக இருந்த எதுவும், அறிக்கையில் வர நாங்கள் அனுமதிக்க வில்லே. உண்மை ஒன்றையே, அசல் உண்மையை மாத்திரமே, வெளிக்குக் கொண்டுவர வேண்டும் என்ற ஒரே நோக்கத்தின் பேரில் இந்த அறிக்கை தயாரிக்கப்பட்டது. ஆகையால், பிரிட்டிஷ் அரசாங்கம் தன்னுடைய ஆட்சி நிலேத்

திருக்கும்படி செய்வதற்காக எந்த அளவுக்குப் போகக்கூடிய தாக இருக்கிறது, எவ்வளவு ஜீவகாருண்யமற்ற, காட்டு மிராண் டித்தனமான காரியங்களைச் செய்யக்கூடியது என்பதை இந்த அறிக்கையைப் படிப்பவர்கள் அறிய முடியும். எனக்குத் தெரிந்த வரையில், இந்த அறிக்கையில் கூறப்பட்ட ஒரு விஷயமாவது, தவருனது என்று இதுவரையில் நிரூபிக்கப்படவில்லை.

## 36

# பசுப் பாதுகாப்புக்கு பதிலாகக் கிலாபத்?

பாஞ்சாலத்தில் நடந்த அட்டூழியங்களைத் தற்சமயத்திற்கு நாம் நிறுத்திவிட்டு மற்ற விஷயங்களைக் கவனிக்க வேண்டும்.

பாஞ்சாலத்தில் நடந்த டயர் ஆட்சிக் கொடுமைகளைக் குறித் துக் காங்கிரஸ் விசாரணையைத் தொடங்கிய அச் சமயத்தில் எனக்கு ஓர் அழைப்பு வந்தது. கிலாபத் பிரச்னையைக் குறித்து ஆலோசிப்பதற்காக டில்லியில் நடக்கவிருந்த ஹிந்து, முஸ்லிம் கூட்டு மகாநாட்டுக்கு வருமாறு என்னை அழைத்திருந்தார்கள். அந்த அழைப்பில் கையொப்பமிட்டிருந்தவர்களில் காலஞ்சென்ற ஹக்கீம் அஜ்மல்கான் சாகிபும் ஸ்ரீ ஆஸப் அலியும்* இருந்தனர். காலஞ் சென்ற சுவாமி சிரத்தானந்தஜியும் அம் மகாநாட்டுக்கு வருவார் என்று கூறப்பட்டது. அந்த வருடம் நவம்பரில் கூட விருந்த மகாநாட்டிற்கு அவர் உப தலைவராக இருப்பது என்று இருந்ததாகவும் எனக்கு ஞாபகம். கிலாபத் விஷயமாகச் செய்யப்பட்ட நம்பிக்கைத் துரோகத்தினுல் ஏற்பட்ட நிலைமை யைக் குறித்தும், யுத்த சமாதான வைபவங்களில் ஹிந்துக்களும் முஸ்லிம்களும் கலந்துகொள்ளுவதா என்பதைப் பற்றியும் அம் மகாநாடு விவாதிக்க இருந்தது. அழைப்புக் கடிதத்தில் இன்னு மொன்றும் கூறியிருந்தார்கள். மகாநாட்டில் கிலாபத் விஷயம் மாத்திரமே யன்றிப் பசுப்பாதுகாப்பைப் பற்றிய விஷயமும் விவாதிக்கப்படும் என்றும் கூறியிருந்தனர். பசுப் பிரச்னையைக் குறித்து இப்படிக் குறிப்பிடப்பட்டிருந்தது எனக்குப் பிடிக்க வில்லை. அழைப்புக்குப் பதிலளித்து நான் எழுதிய கடிதத்தில், மகாநாட்டுக்கு வருவதற்கு என்னுலான முயற்சியைச் செய்வ தாகக் கூறினேன். அதோடு, இந்த இரண்டு விஷயங்களையும் ஒன்ருகக் கலக்கவோ அல்லது பேரம்பேசும் உணர்ச்சியுடன் அவற் றைக் கவனிப்பதோ சரியல்ல என்றும், அதனதன் தகுதிக்கு ஏற்

---

* ஆஸப் அலி: பாரிஸ்டர். 1888 இல் பிறந்தார். பல காலம் காங்கிரஸ் காரியக் கமிட்டி அங்கத்தினராயிருந்தார். 1935-இலிருந்து 1947 வரை மத்திய சட்ட சபை உறுப்பினராகவும், 1947-48-இல் அமெரிக்காவில் இந்திய ஸ்தானிகராயும் 1948-இல் ஒரிஸ்ஸா கவர்னராயும் பதவி வகித்தார். அச்சமயம் காலமானுர். 1909 செப்டம்பரில் லண்டனில் இவர் மாணவராயிருந்த பொழுது, விநாயக தாமோதர சாவர்க்கர் காந்தியடிகளுக்குத் தசரா விருந்தளிக்கையில் இவர் காந்திஜியைச் சந்தித்தார்.

பத் தனித்தனியாக இவ் விஷயங்களை விவாதித்து முடிவுக்கு வரவேண்டும் என்றும் எழுதினேன்.

இவ்விதமான எண்ணங்களோடேயே நான் அம் மகாநாட்டிற்குச் சென்றேன். அதற்குப் பின்னால் நடந்த மகாநாடுகளுக்கு பத்தாயிரக் கணக்கானவர்கள் வந்திருந்தார்கள். அவைகளைப் போல் இம் மகாநாடு இல்லாவிட்டாலும், இதற்கும் அநேகர் வந்திருந்தார்கள். காலஞ்சென்ற சுவாமி சிரத்தானந்தஜியும் மகாநாட்டுக்கு வந்திருந்தார். மேலே சொன்ன விஷயத்தைக் குறித்து அவருடன் விவாதித்தேன். என்னுடைய வாதத்தை அவரும் ஏற்றுக்கொண்டார். மகாநாட்டில் அதை எடுத்துக்கூறும் வேலையை அவர் எனக்கே அளித்தார். இதே போலக் காலஞ்சென்ற ஹக்கீம் சாகிபிடமும் இதைப்பற்றி விவாதித்தேன். மகாநாட்டின் முன்பு நான் பேசியபோது கூறியதாவது: ''கிலாபத் பிரச்னைக்குள்ள அடிப்படை, நியாயமானது, நீதியானது என்று நம்புகிறேன். அப்படி இருக்குமாயின், அரசாங்கம் மோசமான அநீதியையே இதற்கு முன்னால் செய்திருக்கிறது என்றால், கிலாபத் தவறுக்குப் பரிகாரம் செய்யவேண்டும் என்று கோருவதில் முஸ்லிம்களுடன் ஒன்றுபட்டு நிற்க ஹிந்துக்களும் கடமைப்பட் டிருக்கிறார்கள். கிலாபத் பிரச்னைக்கு ஹிந்துக்களின் ஆதரவைப் பெறுவதற்கு விலை கொடுப்பது போலப் பசுவைக் கொல்லுவதில்லை என்று முஸ்லிம்கள் சொல்லுவது எவ்விதம் சரியல்லவோ, அதேபோல் முஸ்லிம்களுடன் இதில் ஒரு சமரஸத்திற்கு வர இச் சந்தர்ப்பத்தை ஹிந்துக்கள் பயன்படுத்திக்கொள்ளுவதும் அழகல்ல. ஆகையால், இதன் சம்பந்தமாகப் பசுப் பிரச்னையைக் கொண்டுவருவதே முறையாகாது. ஆனால், ஹிந்துக்களின் மத உணர்ச்சியை மதித்தும், அக்கம் பக்கத்திலிருப்பவர்கள், ஒரே நாட்டின் மக்கள் என்ற வகையில் அவர்கள்பால் கொள்ள வேண்டிய கடமை உணர்ச்சியினாலும், முஸ்லிம்கள் தாங்களாகவே விரும்பிப் பசுவைக் கொல்லுவதை நிறுத்திவிடுவார்க ளானால், அது முற்றும் வேறான விஷயம். இது முஸ்லிம்களுக்குப் பெருந்தன்மை யாவதோடு அவர்களுக்கு அதிகக் கௌரவத்தையும் அளிக்கும். இவ்விதம் ஒரு சுயேச்சையான முடிவுக்கு வருவது முஸ்லிம்களின் கடமை. இது அவர்கள் நடத்தையின் கௌரவத்தையும் உயர்த்தும். ஆனால், அக்கம் பக்கத்தில் இருப்பவர்களுக்குத் தாங்கள் ஆற்ற வேண்டிய கடமை என்ற வகையில் முஸ்லிம்கள், பசுக்களைக் கொல்லுவதை நிறுத்துவதாயிருந்தால், கிலாபத் விஷயத்தில் ஹிந்துக்கள் அவர்களுக்கு உதவி செய்தாலும், செய்யாவிட்டாலும் அவ்விதம் செய்ய வேண்டும். நிலைமை இதுவாகையால், இவ்விரு விஷயங்களையும் தனித்தனியாக விவாதித்து முடிவுக்கு வரவேண்டும். இந்த மகாநாட்டில் கிலாபத் பிரச்னையைக் குறித்து மாத்திரமே விவாதிக்க வேண்டும்.''

மகாநாட்டிற்கு வந்திருந்தவர்களுக்கு என்னுடைய வாதம் சரி என்று பட்டது. இதன் பலனாக, பசுப் பாதுகாப்பு விஷயம்

இம் மகாநாட்டில் விவாதிக்கப்படவில்லை. ஆனால், என்னுடைய எச்சரிக்கையையும் பொருட்படுத்தாமல் மௌலானா அப்துல் பாரி சாகிப், ''நமக்கு ஹிந்துக்கள் உதவி செய்தாலும் உதவி செய்யாது போனாலும் சரி, நாம் ஹிந்துக்களின் நாட்டினர் என்ற வகையில், ஹிந்துக்களின் மத உணர்ச்சியை மதித்து முஸ்லிம்கள் பசுக்களைக் கொல்லுவதை விட்டுவிட வேண்டும்'' என்றார். பசுக்களைக் கொல்லுவதை அவர்கள் அடியோடு விட்டுவிடுவார்கள் என்றே அநேகமாகத் தோன்றியது.

கிலாபத் தவறு பற்றிய விஷயத்துடன் பாஞ்சால விஷயத்தையும் பிணைத்துவிட வேண்டும் என்று சிலர் ஒரு யோசனை கூறினார்கள். அந்த யோசனையை நான் எதிர்த்தேன். பாஞ்சாலப் பிரச்னை உள்நாட்டு விஷயமாகையால், யுத்த சமாதான வைபவங்களில் கலந்துகொள்ளுவதா, இல்லையா என்று நாம் முடிவுக்கு வருவதற்கு இது நமக்குப் பொருத்தமானதாகாது என்றேன். கிலாபத் பிரச்னை, யுத்த சமாதான ஒப்பந்தம் காரணமாக நேரடியாக எழுந்துள்ளது. அதில் போய் உள்நாட்டு விஷயத்தையும் கலந்துவிடுவோமாயின், பகுத்தறியாத பெருங் குற்றத்தைச் செய்தவர்களாவோம் என்றேன். என்னுடைய வாதத்தை எல்லோரும் எளிதில் ஏற்றுக்கொண்டுவிட்டனர்.

அக் கூட்டத்தில் மௌலானா ஹஸரத் மோகானி* பிரசன்னமாகியிருந்தார். அதற்கு முன்பே அவரை நான் அறிவேன். ஆனால், அவர் எவ்வளவு சிறந்த போராட்ட வீரர் என்பதை நான் அங்கேதான் தெரிந்துகொண்டேன். ஆரம்பம் முதற்கொண்டே நாங்கள் இருவரும் மாறுபட்ட கருத்துக் கொண்டவர்களாக இருந்தோம். அநேக விஷயங்களில் இக்கருத்து வேற்றுமைகள் தொடர்ந்து இருந்து வந்தன.

இம் மகாநாட்டில் பல தீர்மானங்கள் நிறைவேறின. அத்தீர்மானங்களில் ஒன்று, ஹிந்துக்களும் முஸ்லிம்களும் சுதேசி விரதம் கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொண்டதோடு, அதை அனுசரிப்பதை யொட்டி, அந்நியச் சாமான்களைப் பகிஷ்கரிக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டது. அப்பொழுது கதர் இன்னும் அதற்குரிய ஸ்தானத்தை அடைந்துவிடவில்லை. ஹஸரத் சாகிப் ஒப்புக்கொண்டுவிடக் கூடிய தீர்மானமன்று இது. கிலாபத் விஷயத்தில் நீதி மறுக்கப்படுமானால், பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் மீது வஞ்சம் தீர்த்துக்கொள்ள வேண்டும் என்பதே அவர் நோக்கம். ஆகையால், முடிந்த வரையில் பிரிட்டிஷ் சாமான்களை மாத்திரமே பகிஷ்கரிக்க வேண்டும் என்று போட்டித் தீர்மானம் ஒன்றை அவர் கொண்டுவந்தார். அந்தக் கொள்கையே தவறானது என்றும், அது அனுபவ சாத்தியமில்லை

---

* மௌலானா ஹஸரத் மோகானி: காங்கிரசில் இவர்தான் பூரண சுதந்திரத் தீர்மானத்தைப் பிரேரேபித்துப் பேசியவர். பின்னர் முஸ்லிம் லீக் வாதியாக மாறிப் பாகிஸ்தான் பிரிவினையை ஆதரித்தார்.

என்றும் கூறி நான் அத் தீர்மானத்தை எதிர்த்தேன். நான் அப்பொழுது கூறிய வாதங்கள் இப்பொழுது எல்லோருக்கும் தெரிந்தவை. அகிம்சையைப்பற்றிய என் கருத்துக்களையும் மகாநாட்டில் கூறினேன். நான் கூறிய வாதங்கள் கூட்டத்தில் இருந்தோரின் உள்ளங்களை மிகவும் கவர்ந்தன என்பதைக் கண்டேன். எனக்கு முன்னால் ஹஸரத் மோகானி பேசினார். அவருடைய பேச்சுக்குப் பலத்த ஆரவாரமான வரவேற்புகள் இருந்ததால் என் பேச்சு எடுபடாமலேயே போய்விடுமோ என்று அஞ்சினேன். என் கருத்தை மகாநாட்டின் முன்கூறாது போனால், கடமையில் தவறியவனாவேன் என்று நான் கருதியதனாலேயே பேசத் துணிந்தேன். ஆனால், அங்கிருந்தவர்கள் என் பிரசங்கத்தை அதிகக் கவனமாகக் கேட்டதோடு, மேடையில் இருந்தவர்கள் அதற்கு முழு ஆதரவையும் அளித்தது எனக்கு வியப்பும் ஆச்சரியமுமாக இருந்தது. ஒருவர் பின் ஒருவராகப் பலர் எழுந்து என் கருத்தை ஆதரித்துப் பேசினார்கள். பிரிட்டிஷ் சாமான்களை மாத்திரம் பகிஷ்கரிப்பதென்றால், அந்த நோக்கம் நிறைவேறாது போவதோடு, தாங்கள் நகைப்புக்கு இடமானவர்களாகவும் ஆகிவிட நேரும் என்பதைத் தலைவர்கள் காண முடிந்தது. பிரிட்டிஷ் சாமான் ஏதாவது ஒன்றேனும் தம் உடம்பில் இல்லாதவர் ஒருவர் கூட அம் மகாநாட்டில் இல்லை. ஆகையால், தாங்களே அனுசரிக்க முடியாத ஒரு தீர்மானத்தை நிறைவேற்றுவதால் தீமையைத் தவிர வேறு எதுவும் இராது என்பதைக் கூட்டத்திலிருந்த அநேகர் உணர்ந்து கொண்டனர்.

"அந்நியத் துணியைப் பகிஷ்கரிப்பது என்பது மாத்திரம் நமக்குத் திருப்தியளித்துவிட முடியாது. ஏனெனில், அந்நியத் துணியை நாம் சரியானபடி பகிஷ்கரிப்பதற்கு, நமக்குத் தேவையான சுதேசித் துணிகளை நாமே தயாரித்துக்கொள்ள இவ்வளவு காலம் பிடிக்கும் என்பதை யாரால் சொல்ல முடியும்? பிரிட்டிஷாரை உடனே பாதிக்கக்கூடிய ஏதாவது ஒன்று நமக்கு வேண்டும். உங்கள் அந்நியத் துணிப் பகிஷ்காரம் வேண்டுமானால், அப்படியே இருக்கட்டும். அதைப் பற்றி எங்களுக்குக் கவலையில்லை. ஆனால், அதோடு அதைவிடத் துரிதமான, வேகமான ஒன்றையும் எங்களுக்குக் கொடுங்கள்" என்று மௌலானா ஹஸரத் மோகானி பேசினார். அவர் பேச்சை நான் கேட்டுக் கொண்டிருந்தபோதே, அந்நியத் துணியைப் பகிஷ்கரிப்பது என்பதற்கு மேலாக மற்றொரு புதிய திட்டமும் அவசியம் வேண்டும் என்பதை உணர்ந்தேன். அந்நியத் துணியை உடனே பகிஷ்கரித்துவிடுவது என்பது அச்சமயம் அசாத்தியமானது என்றும் எனக்குத் தோன்றியது. நாம் விரும்பினால், நமது துணித் தேவைக்குப் போதுமான துணி முழுவதற்கும் வேண்டிய கதரை நாம் உற்பத்தி செய்ய முடியும் என்பது எனக்கு அப்பொழுது தெரியாது. இதைப் பின்னால்தான் கண்டு பிடித்தேன். மேலும், அந்நியத் துணிப் பகிஷ்காரத்திற்கு ஆலைகளை மாத்திரம் நம்பி இருப்போமாயின், நாம் ஏமாற்றப்பட்டுவிடு

வோம் என்பதை அப்பொழுதே நான் அறிவேன். மௌலானா தமது பிரசங்கத்தை முடித்த சமயத்தில் நான் இன்னும் இந்த மனக் குழப்பத்திலேயே இருந்து வந்தேன்.

பேசுவதற்கு எனக்கு ஹிந்தி அல்லது உருதுமொழியில் தக்க சொற்கள் அகப்படாமல் இருந்தது பெரிய இடையூறாக இருந்தது. முக்கியமாக வடநாட்டு முஸ்லிம்களைக் கொண்ட ஒரு கூட்டத்தின் முன்பு, விவாதங்களோடு கூடிய பிரசங்கத்தை நான் செய்ய நேர்ந்தது இதுவே முதல் தடவையாகும். கல்கத்தாவில் முஸ்லிம் லீக் கூட்டத்தில் நான் உருதுவில் பேசியிருக்கிறேன். ஆனால், அங்கே பேசியது சில நிமிடங்களே. அதோடு உணர்ச்சியோடு கூடிய ஒரு கோரிக்கையை அங்கே கூடியிருந்தோருக்கு வெளியிடுவதே அப் பேச்சின் நோக்கம். அதற்கு நேர் மாறாக இங்கே, விரோதமான கூட்டத்தினரல்லவாயினும் குற்றங் குறை கண்டுபிடிக்கக் கூடியதான ஒரு கூட்டத்தைச் சமாளிக்க வேண்டியிருந்தது. அவர்களுக்கு என் கருத்தை விளக்கிக் கூறி அவர்களை ஒப்புக்கொள்ளும்படி செய்ய வேண்டியும் இருந்தது. ஆனால், எனக்கு இருந்துவந்த சங்கோஜத்தையெல்லாம் முன்பே விட்டுவிட்டேன். குற்றமற்ற நாசுக்கான டில்லி உருதுவில் பிரசங்கம் செய்வதற்காக நான் அங்கே போனவன் அல்ல. ஆனால், எனக்குத் தெரிந்த அரைகுறை ஹிந்தியில் என் கருத்துக்களைத் தெரிவிப்பதற்காகவே அங்கே சென்றேன். இதில் நான் வெற்றியும் பெற்றேன். ஹிந்தி—உருது மாத்திரமே இந்தியாவின் பொது மொழியாக இருக்க முடியும் என்ற உண்மைக்கு இக் கூட்டம் எனக்கு நேரடியான ருசுவாக இருந்தது. கூட்டத்தில் இருந்தவர்களின் மனத்தை நான் எவ்வளவு தூரம் கவர்ந்தேனோ அதேபோல, நான் ஆங்கிலத்தில் பேசியிருந்தால் கவர்ந்திருக்க முடியாது. மௌலானா தமது சவாலை வெளியிட வேண்டிய தன் அவசியத்தை உணர்ந்திருக்கவும் மாட்டார். அப்படியே அவர் வெளியிட்டிருந்தாலும், அதைப் பெரிதாக நான் எடுத்துக் கொண்டும் இருக்கமாட்டேன்.

புதிய கருத்தை எடுத்துச் சொல்லுவதற்கு வேண்டிய ஹிந்தி அல்லது உருதுச் சொற்கள் எனக்கு அகப்படவில்லை. இது ஓரளவுக்கு எனக்குக் கஷ்டமாகவே இருந்தது. கடைசியாக, அக்கருத்தை 'நான்-கோவாப்பரேஷன்' (ஒத்துழையாமை) என்ற ஆங்கிலச் சொல்லால் விவரித்தேன். முதல் முதலாக இக் கூட்டத்திலேயே இச் சொல்லை நான் உபயோகித்தேன். மௌலானா பேசிக்கொண்டிருக்கும் போதே எனக்கு ஓர் எண்ணம் தோன்றியது. அரசாங்கத்தை ஆயுதங்களைக் கொண்டு எதிர்ப்பதென்பது அசாத்தியமானது, விரும்பத் தக்கதல்ல என்றால், அநேக காரியங்களில் அந்த அரசாங்கத்துடன் அவர் ஒத்துழைத்துக்கொண்டிருக்கும்போது, சரியானபடி அதை எதிர்ப்பது என்று அவர் பேசிக்கொண்டிருப்பது வீண் காரியம் என்று எண்ணினேன். ஆகையால், அந்த அரசாங்கத்துடன் ஒத்துழைக்காமல் இருந்துவிடுவது ஒன்றே அதற்கு உண்மையான

எதிர்ப்பாகும் என்றும் எனக்குத் தோன்றியது. இவ்விதம் ‘ஒத்துழையாமை’ என்ற சொல்லைப் பிரயோகித்தேன். ஆனால், அச் சொல்லில் அடங்கியுள்ள அநேக விளைவுகளைக் குறித்து அப்பொழுது எனக்குத் தெளிவான கருத்து எதுவும் இல்லை. ஆகையால், நான் விவரங்களைப்பற்றிக் கவனிக்கவே இல்லை. பின் வருமாறு மாத்திரம் சொன்னேன்: “முஸ்லிம்கள் மிக முக்கிய மானதோர் தீர்மானத்தை நிறைவேற்றி யிருக்கிறார்கள். யுத்த சமாதான ஷரத்துக்கள் அவர்களுக்குச் சாதகமில்லாதவைகளாக இருக்குமாயின்-ஆண்டவன் அதைத் தவிர்ப்பாராக-அரசாங்கத் துடன் ஒத்துழைப்பதை அவர்கள் நிறுத்திவிடுவார்கள். இவ் விதம் ஒத்துழைப்பை நிறுத்திவிடுவது மக்களுக்குள்ள பறிக்க முடியாத ஓர் உரிமை யாகும். அரசாங்கம் அளித்திருக்கும் பட்டங்களையும் கௌரவங்களையும் தொடர்ந்து வைத்துக்கொண் டிருக்கவோ, அரசாங்க உத்தியோகத்தில் தொடர்ந்து இருந்து கொண்டிருக்கவோ நாம் கடமைப்பட்டிருக்கவில்லை. கிலாபத் போன்ற மிகப் பெரியதோர் லட்சியத்தில் அரசாங்கம் நமக்குத் துரோகம் செய்யுமாயின், அதனுடன் நாம் ஒத்துழையாமை செய் யாமல் இருப்பதற்கில்லை. ஆகையால், நமக்கு அரசாங்கம் துரோகம் செய்யுமானால், அதனுடன் ஒத்துழைக்காமல் இருக்க நமக்கு உரிமை உண்டு.”

ஆனால், ஒத்துழையாமை என்ற சொல் எங்கும் பழக்கத் துக்கு வரச் சில மாதங்களாயின. அப்போதைக்கு அது அம் மகாநாட்டின் நடவடிக்கைகளில் மறைந்து போயிற்று. உண்மை யில் ஒரு மாதத்திற்குப் பின்னால், அமிர்தசரஸில் கூடிய காங் கிரஸ் மகாநாட்டில் ஒத்துழைப்புத் தீர்மானத்தை நான் ஆதரித்த போது, துரோகம் செய்யவேமாட்டார்கள் என்ற நம்பிக்கையின் பேரிலேயே அவ்வாறு செய்தேன்.

## 37

# அமிர்தசரஸ் காங்கிரஸ்

ராணுவ ஆட்சிக்காலத்தில் சிறையில் அடைக்கப்பட்டிருந்த நூற்றுக்கணக்கான பஞ்சாபிகளைப் பாஞ்சால அரசாங்கம் நீண்ட காலம் சிறையில் வைத்திருந்துவிட முடியாது. இவர்கள் எல்லாம், பெயரளவிலேயே கோர்ட்டுகளாக இருந்த மன்றங் களில் அரைகுறையான சாட்சியங்களைக் கொண்டு சிறைத் தண்டனை விதிக்கப்பட்டவர்கள். இப்பெரிய அநீதியைக் குறித்து எங்கே பார்த்தாலும் கண்டனங்கள் எழுந்ததால், அவர்களை மேற் கொண்டும் சிறையில் அடைத்துவைத்திருப்பது அசாத்தியம் என்று ஆகிவிட்டது. காங்கிரஸ் மகாநாடு ஆரம்பமாவதற்கு முன் னாலேயே சிறையில் இருந்தவர்களில் பெரும்பாலோர் விடுதலை செய்யப்பட்டுவிட்டனர். காங்கிரஸ் மகாநாடு நடந்துகொண்

டிருந்த போதே லாலா ஹரிகிருஷ்ணலாலும்* மற்றத் தலைவர்களும் விடுதலையாயினர். அலி சகோதரர்களும் சிறையிலிருந்து நேரே காங்கிரஸுக்கு வந்தார்கள். மக்கள் அடைந்த ஆனந்தத்திற்கு எல்லையே இல்லை. பண்டித மோதிலால் நேரு, தமக்கு ஏராளமான வருமானத்தை அளித்து வந்த வக்கீல் தொழிலைத் தியாகம் செய்துவிட்டுப் பாஞ்சாலத்தையே தமது தலைமை ஸ்தானமாகக் கொண்டு மகத்தான சேவை செய்திருந்தார். காங்கிரஸ் மகாநாட்டுக்கு அவரே தலைவர். காலஞ்சென்ற சுவாமி சிரத்தானந்தஜி வரவேற்புக் கமிட்டித் தலைவராக இருந்தார்.

இந்தச் சமயம் வரையில் காங்கிரஸின் வருடாந்தர நடவடிக்கையில் நான் கொண்ட பங்கு, தேசீய மொழியில் என் பிரசங்கத்தைச் செய்து ஹிந்தியை அனுசரிக்கும்படி வற்புறுத்தி வந்ததேயாகும். அந்தப் பிரசங்கங்களில் வெளிநாடுகளிலிருக்கும் இந்தியர் குறைகளைக் குறித்தும் எடுத்துக் கூறிவந்தேன். இந்த ஆண்டு அதைவிட நான் அதிகமாக எதுவும் செய்ய வேண்டியிருக்கும் என்றும் நான் எதிர்பார்க்கவில்லை. ஆனால், இதற்கு முன்னால் அநேக சமயங்களில் நேர்ந்திருப்பதைப் போன்றே இச் சமயமும் பொறுப்பான வேலை எனக்கு வந்து சேர்ந்தது.

புதிய அரசியல் சீர்திருத்தங்களைக் குறித்து மன்னரின் அறிவிப்பு அப்பொழுதுதான் வெளியாயிற்று. எனக்குக்கூட அது முற்றும் திருப்தியளிப்பதாக இல்லை. மற்றவர்கள் ஒவ்வொருவருக்கும் அது திருப்தியை அளித்தது. அளிக்கப்பட்ட சீர்திருத்தங்கள் குறைபாடுடையவைகளே யாயினும் ஏற்றுக்கொள்ளக் கூடியவையே என்று அச்சமயம் நான் எண்ணினேன். மன்னரின் அறிக்கையிலும், அதன் பாஷையிலும் லார்டு சின்ஹா† வின் கைத்திறன் இருப்பதாக எனக்குத் தோன்றியது. இது எனக்குச் சிறிதளவு நம்பிக்கையையும் அளித்தது. ஆனால்,

---

*லாலா ஹரிகிருஷ்ணலால்: 1919-இல் பாஞ்சாலக் கலவரங்கள் நடந்தபொழுது அரசாங்கத்தார் இவரைக் கைது செய்து தீவாந்திர சிட்சை அளித்து, நாற்பது லட்ச ரூபாய் பெறுமானமுள்ள இவரது சொத்துக்களைப் பறிமுதல் செய்தனர். அக்காலத்தில் சிறந்த காங்கிரஸ்காரராயிருந்த பணக்காரர்களில் இவர் ஒருவர். மாண்டேகு-செம்ஸ்போர்டு சீர்திருத்தம் என்னும் இரட்டையாட்சி முறை துவங்கியதும் 1921-இல் இவர் விடுதலை செய்யப்பட்டுச் சில காலம் அம்மாகாண மந்திரிகளில் ஒருவராக இருந்தார்.

† லார்டு சின்ஹா: சர் ஸத்தியேந்திரப் பிரசன்ன சின்ஹா என்னும் பிரபல வங்காள வக்கீல்தான் இறுதியில் லார்டு சின்ஹாவாகி 1918-இல் பிரிட்டிஷ் அரசாங்கத்தில் உதவி இந்தியா மந்திரியாயிருந்தார். 1896-ஆம் ஆண்டு நடந்த பன்னிரண்டாவது காங்கிரஸில் அதனுடன் தொடர்பு கொண்டார். 1910-இல் மத்திய அரசாங்கத்தில் சட்ட இலாகா மந்திரியாயிருக்கையில் அச்சகச் சட்டத்தை நிறைவேற்றினர். மந்திரி பதவியை ராஜிநாமா செய்த பிறகு 1915-இல் பம்பாயில் கூடிய காங்கிரசுக்குத் தலைமை வகித்தார். 1917-இல் சாம்ராஜ்ய யுத்த மாநாட்டிற்கு இந்தியாவின் பிரதிநிதியாக அரசாங்கத்தாரால் நியமிக்கப்பட்டார். பீகார் – ஒரிஸா மாகாணத்தின் கவர்னராகச் சில காலம் இருந்தார்.

காலஞ்சென்ற லோகமான்யர், தேசபந்து சித்தரஞ்சன் தாஸ்* போன்ற அனுபவமுள்ள தீரர்களோ, அந்தச் சீர்திருத்தங்கள் ஏற்றுக்கொள்ளக் கூடியவை யல்ல என்று தலையை அசைத்து விட்டார்கள். பண்டித மாளவியாஜி நடுநிலைமை வகித்தார்.

பண்டித மாளவியாஜி, தமது சொந்த அறையிலேயே நான் தங்கும்படி செய்தார். ஹிந்து சர்வகலாசாலை அஸ்திவார விழாச் சமயம் அவருடைய எளிய வாழ்க்கையைக் குறித்து நான் கொஞ்சம் தெரிந்துகொண்டிருந்தேன். ஆனால், இச்சமயம் அவருடைய அறையிலேயே அவருடன் இருந்துவந்ததால், அவருடைய அன்றாட வாழ்க்கை முறையை மிகவும் நுட்பமாகக் கவனிக்க என்னால் முடிந்தது. நான் கண்டவை, எனக்கு ஆனந்தத்தையும் ஆச்சரியத்தையும் அளித்தன. ஏழைகளெல்லோரும் தாராளமாக வந்து இருக்கக்கூடிய தரும சத்திரத்தைப் போன்றே அவரது அறை காட்சி யளித்தது. அந்த அறையில் ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குப் போய்விட முடியாது. உள்ளே அவ்வளவு கூட்டம். எந்த நேரத்திலும் யாவரும் அவர் அறைக்குள் போகலாம். விரும்பும் வரையில் அவருடன் தாராளமாகப் பேசிக் கொண்டிருந்துவிட்டும் போகலாம். அந்த அறை

---

* தாஸ்: தேசபந்து தாஸ் என மக்கள் அன்புடனும் மரியாதையோடும் அழைத்து வந்த சித்தரஞ்சன தாஸ், இரு வகைகளில் பிரபலமடைந்தார். ராஜத் துரோகக் குற்றத்திற்காகக் கைது செய்யப்பட்ட மகான் அரவிந்தகோஷின் சார்பாகக் கோர்ட்டில் வக்கீலாக ஆஜராகி அவரது விடுதலையைப் பெற்றதன் மூலம் பிரபல வக்கீலானார். தமது தந்தை பட்ட கடன்கள் இன்ஸால்வென்ட் சட்ட மூலம் தீர்ந்து போயிருந்தும் முழுக் கடனையும் தாமே சம்பாதித்து தீர்த்ததன் காரணமாக அறத்துறையில் கீர்த்தி பெற்றார். 1917–ஆம் ஆண்டு கல்கத்தாவில் நடந்த காங்கிரசுக்கு டாக்டர் பெஸன்டம்மையாரைத் தலைவராக்க முயன்று வெற்றி பெற்றார். 1919 டிசம்பரில் அமிர்தசரஸில் நடந்த காங்கிரசில் மாண்டேகு – செம்ஸ்போர்டு சீர்திருத்தத்தை நிராகரிக்க வேண்டும் என வாதாடினார். 1920-இல் செப்டம்பரில் கல்கத்தாவில் நடந்த விசேஷ காங்கிரசிலும், 1920–இல் நாகபுரியில் நடந்த காங்கிரசிலும், ஒத்துழையாமையை எதிர்த்தபோதிலும் நாகபுரி விஷயாலோசனைக் கமிட்டி அதை அங்கீகரித்ததும் தாமே அதைப் பொதுச் சபையில் கொண்டு வந்தார். 1921–இல் அகமதாபாத் காங்கிரசுக்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டும் அச்சமயம் சிறையிலிருந்ததனால் அவர் தலைமை தாங்க முடியவில்லை. 1922-இல் கயா காங்கிரஸில் தலைவராக இருந்து, சட்டசபை பகிஷ்காரத்தை ரத்துச் செய்ய வேண்டும் என்னும் இவர் யோசனை ஏற்கப்படாததனால் பின்னர் நடந்த காங்கிரஸ் கமிட்டி கூட்டங்களில் இவர் கலந்துகொள்ளவில்லை. பண்டித மோதிலாலும் இவரும் சுயராஜ்யக் கட்சியைத் தொடங்கினர். வங்கச் சட்ட சபையில் அரசியல் சீர்திருத்தத்திற்கு முட்டுக்கட்டை போட்டார். 1925–இல் இவர் காலமாவதற்கு முன் தமது ரஸ்ஸா ரோடு இல்லத்தை நாட்டுக்கு அர்ப்பணம் செய்தார். பின்னர் மகாத்மா காந்தி பத்து லட்ச ரூபாய் நிதி திரட்டி இதை ஆஸ்பத்திரியாக அமைத்தார். இவரது மரணத்தைக் குறித்து காந்திஜி கூறுகையில் “அவருடைய ஞாபகம் நீடித்து நிற்பதற்கு நாம் என்ன செய்ய வேண்டும்? நம்மில் ஹிந்துக்கள், முஸ்லிம்கள், பார்ஸிகள், கிறிஸ்தவர்கள் ஆகிய எல்லா இந்தியரும், அவர் எதற்காக உழைத்து உயிர் நீத்தாரோ அதற்காகப் பணிபுரிவதெனப் பிரதிக்ஞை செய்து கொண்டால்தான் அவரது ஞாபகம் பசுமையாயிருப்பதற்கு ஓரளவாவது உழைத்தவர்களாவோம்” என்று உருக்கமாகக் கூறினர்.

யின் ஒரு மூலையில் என்னுடைய சார்ப்பாய் (நார்க் கட்டில்) மிகவும் கம்பீரமாகக் கிடந்தது. ஆனால், மாளவியாஜியின் வாழ்க்கை முறையை இந்த அத்தியாயத்தில் நான் வருணித்துக் கொண்டிருப்பதற்கில்லை. நான் கூற வந்த விஷயத்திற்கே நான் திரும்ப வேண்டும்.

இவ்வாறு தினமும் மாளவியாஜியுடன் நான் பழக முடிந்தது. ஒரு மூத்த சகோதரரைப்போன்று அவர், பல திறப்பட்ட கட்சியினரின் கருத்துக்களையும் அன்போடு எனக்கு விளக்கிச் சொல்லி வந்தார். அரசியல் சீர்திருத்தத்தைப் பற்றிய தீர்மானத்தின்மீது மகாநாட்டின் நடவடிக்கைகளில் நான் கலந்துகொண்டாக வேண்டியது தவிர்க்க முடியாதது என்பதைக் கண்டேன். பாஞ்சால அட்டூழியங்களைக் குறித்த காங்கிரஸின் அறிக்கையைத் தயாரிக்கும் பொறுப்பில் நானும் பங்குகொண்டிருந்ததால், அதன் சம்பந்தமாக இனிமேல் செய்ய வேண்டியவைகளையும் நான் கவனித்தே ஆகவேண்டும் என்பதை உணர்ந்தேன். அது சம்பந்தமாக அரசாங்கத்துடன் விவகாரம் நடத்தியாக வேண்டும். அதே போல கிலாபத் பிரச்னையும் இருந்தது. மேலும் ஸ்ரீ மாண்டேகு, இந்தியாவின் லட்சியத்திற்குத் துரோகம் செய்யமாட்டார், துரோகம் செய்யப்படுவதற்கு அனுமதிக்கமாட்டார் என்றும் அச்சமயம் நான் நம்பியிருந்தேன். அலி சகோதரர்களும் மற்றக் கைதிகளும் விடுதலை செய்யப்பட்டது நல்ல சகுனம் என்றும் எனக்குத் தோன்றியது. இந்த நிலைமையில் அரசியல் சீர்திருத்தங்களை நிராகரிக்காமல் ஏற்றுக்கொள்ளும் தீர்மானத்தைச் செய்வதே சரியான காரியம் என்றும் எண்ணினேன். ஆனால், தேசபந்து சித்தரஞ்சன தாஸோ, அரசியல் சீர்திருத்தங்கள் போதுமானவை யல்ல, திருப்திகரமானவை யல்ல என்று அடியோடு நிராகரித்துவிட வேண்டியதே என்ற கருத்தில் உறுதியுடன் இருந்தார். காலஞ்சென்ற, லோகமான்யரோ, அநேகமாக நடுநிலைமையே வகித்தார். ஆனால், தேசபந்து அங்கீகரிக்கும் எந்தத் தீர்மானத்திற்குச் சாதகமாகவும் தமது ஆதரவை அளித்துவிடுவதென்றும் தீர்மானித்திருந்தார்.

இத்தகைய அனுபவமுள்ள, நீண்ட காலம் சிறந்த தேசத் தொண்டாற்றி மக்களின் மதிப்பைப் பெற்றிருந்த தலைவர்களின் கருத்துக்கு மாறான கருத்தை நான் கொள்ளுவது என்ற எண்ணமே என்னால் சகிக்க முடியாததாக இருந்தது. ஆனால், அதே சமயத்தில் என்னுடைய மனச்சாட்சியின் குரலும் எனக்குத் தெளிவாக ஒலித்தது. காங்கிரஸிலிருந்து ஓடிப் போய்விடவே நான் முயன்றேன். காங்கிரஸில் இனி நடக்கவிருக்கும் நடவடிக்கைகளில் நான் கலந்துகொள்ளாது இருந்துவிடுவதே எல்லோருக்கும் நன்மையாக இருக்கும் என்று பண்டித மாளவியாஜியிடமும் மோதிலால்ஜியிடமும் சொன்னேன். அவ்வாறு நான் செய்தால், மதிப்பிற்குரிய தலைவர்களுக்கு மாறான கருத்தை

நான் காட்டிக்கொள்ளுவதிலிருந்து நான் காப்பாற்றப்பட்டவனும் ஆவேன் என்றேன்.

ஆனல், என் யோசனையை இவ்விரு தலைவர்களும் அங்கீகரிக்கவில்லை. என்னுடைய இந்த யோசனை எப்படியோ லாலா ஹரிகிருஷ்ண லாலின் காதுகளுக்கும் எட்டிவிட்டது. ''அப்படிச் செய்யவே கூடாது. பாஞ்சாலத்தினரின் உணர்ச்சிகளை அது மிகவும் புண்படுத்தும்" என்றார் அவர். இவ்விஷயத்தைக் குறித்து லோகமான்யர், தேசபந்து, ஸ்ரீ ஜின்னு* ஆகியவர்களுடன் விவாதித்தேன். ஆனல், எந்த வழியையும் காண முடியவில்லை. முடிவாக என் துயர நிலைமையை மாளவியாஜியிடம் எடுத்துக் கூறினேன். ''சமரசம் ஏற்படும் என்பதற்கான எதையும் நான் காணவில்லை. என் தீர்மானத்தை நான் கொண்டு வருவதாயின், அதன்மீது வாக்கெடுக்க வேண்டி வரும். ஆனல், அதற்கு வேண்டிய ஏற்பாடு எதுவும் அங்கிருப்பதாக நான் காணவில்லை. காங்கிரஸ் மகாநாட்டில் இதுவரையில் கை தூக்கச்சொல்லி வாக்கெடுக்கும் முறையே அனுசரிக்கப்பட்டு வந்திருக்கிறது. பிரதிநிதிகளுக்கும், மகாநாட்டை வேடிக்கை பார்க்க வந்திருப்பவர்களுக்கும் உள்ள வித்தியாசங்களெல்லாம் அப்பொழுது போய்விடுவதும் வழக்கமாக இருந்து வந்திருக்கிறது. இத்தகைய பெரிய கூட்டங்களில் வாக்குகளை எண்ணுவதற்கான சாதனங்களும் நம்மிடம் இல்லை. வோட்டு எடுக்க வேண்டும் என்று நான் விரும்பினுலும், அதற்கு வேண்டிய வசதியும் நம்மிடம் இல்லை. அதில் அர்த்தமும் இல்லை'' என்று சொன்னேன். லாலா ஹரிகிருஷ்ணலாலே இதில் கைகொடுக்க முன் வந்தார். வேண்டிய ஏற்பாடுகளைத் தாம் செய்வதாக ஒப்புக் கொண்டார். ''வாக்கெடுக்கும் தினத்தன்று, வேடிக்கை பார்க்க வந்திருப்பவர்களைக் காங்கிரஸ் பந்தலில் அனுமதிக்க மாட்டோம். வாக்குகளை எண்ணிக் கணக்கிடுவதைப் பொறுத்த வரையில் நான் கவனித்துக்கொள்ளுகிறேன். ஆனல், நீங்கள் மாத்திரம் காங்கிரஸுக்கு வராமல் இருந்துவிடக் கூடாது'' என்றார், அவர்.

நான் உடன்பட்டேன். என் தீர்மானத்தைத் தயாரித்தேன். உள்ளத்தில் நடுங்கிக்கொண்டே அதைப் பிரேரிக்கவும் முற்பட்

---

* ஜின்னு : 'ஹிந்து—முஸ்லிம் ஒற்றுமையின் தூதர்' எனச் சரோஜினி தேவியாரால் ஒரு காலத்தில் போற்றப்பட்ட ஸ்ரீ ஜின்னு, ஹிந்து வேறு இனம், முஸ்லிம் வேறு இனம் எனப் பேசி இந்தியாவை இரு பகுதியாக்கிப் பாகிஸ்தான் அமைத்து, அதன் தலைவராயிருந்து உயிர் நீத்தார். 1910–ஆம் ஆண்டு காங்கிரஸில், வகுப்புவாரிப் பிரதிநிதித்துவ முறையை எதிர்த்தார். ஹோம் ரூல் கிளர்ச்சியைத் தொடங்கியதற்காக டாக்டர் பெஸன்ட் அம்மையார் காவலில் வைக்கப்பட்டதைக் கண்டித்து, இவரே பம்பாயில், ''ஹோம் ரூல் லீக்"கைத் தொடங்கி அதன் தலைவராகவும் இருந்தார். அக்காலம் பம்பாய்க் கவர்னராயிருந்த லார்டு வில்லிங்டனை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தார். பார்ஸி பெண்மணி பெடிட் என்பவரை மணந்துகொண்டார். நீண்ட காலம் மத்திய சட்டசபை அங்கத்தினராயிருந்து பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்த்து வந்தார். இவர் விஜயம் செய்த கடைசிக் காங்கிரஸ் 1920–இல் நாகபுரியில் நடந்ததுதான். "காய்தே ஆஜம்" என முஸ்லிம்களாலும் காந்திஜியாலும் அழைக்கப்பட்டார்.

டேன். பண்டித மாளவியாஜியும் ஸ்ரீ ஜின்னாவும் அதை ஆதரிக்க இருந்தனர். எங்களுடைய கருத்து வேற்றுமையில் மனக் கசப்பு என்பது ஒரு சிறிதேனும் இல்லாமல் இருந்தபோதிலும், நியாயத்தை எடுத்துக் கூறியதைத் தவிர எங்கள் பிரசங்கங்களில் வேறு எதுவுமே இல்லை யென்றாலும், அபிப்பிராய பேதம் இருக்கிறது என்பதை மக்கள் சகிக்கவே இல்லை. அது, அவர்களுக்கு வேதனையை அளித்தது என்பதைக் கண்டேன். பூரணமான ஒற்றுமையையே அவர்கள் விரும்பினார்கள்.

ஒரு பக்கம் பிரசங்கங்கள் செய்யப்பட்டு வந்த அதே சமயத்தில் மற்றொரு பக்கத்தில், அபிப்பிராய பேதத்தில் சமரசம் செய்துவைப்பதற்கு மேடையில் முயற்சிகள் நடந்துகொண்டு வந்தன. அதற்காக, தலைவர்கள் தங்கள் தங்கள் கருத்துக்களைத் தாராளமாகப் பரிமாறிக்கொண்டு வந்தனர். ஒற்றுமையை உண்டாக்குவதற்கு மாளவியாஜி எல்லா முயற்சிகளையும் செய்து வந்தார். அச்சமயத்தில் ஜெயராம்தாஸ், தீர்மானத்திற்குத் தமது திருத்தத்தை என்னிடம் கொடுத்தார். தமக்குள்ள இனிய சுபாவத்துடன், பிளவு ஏற்படும் இப் பெரிய தொல்லையிலிருந்து பிரதிநிதிகளைக் காப்பாற்றும்படியும் என்னைக் கேட்டுக்கொண்டார். அவருடைய திருத்தம் எனக்குப் பிடித்திருந்தது. இதற்கிடையில் நம்பிக்கைக்கு எங்காவது இடம் இருக்கிறதா என்று மாளவியாஜியின் கண் தேடிக்கொண்டே இருந்தது. ஜெயராம் தாஸின் திருத்தம் இரு தரப்பாரும் ஏற்றுக்கொள்ளக் கூடியதாக எனக்குத் தோன்றுகிறது என்று அவரிடம் நான் கூறினேன். அடுத்தபடியாக அத் திருத்தம், லோகமான்யரிடம் காட்டப்பட்டது. ''ஸி. ஆர். தாஸ் ஒப்புக்கொள்ளுவதாக இருந்தால், எனக்கு எந்தவித ஆட்சேபமும் இல்லை" என்றார் அவர். முடிவாக தேசபந்து தாஸும் தமது பிடியைத் தளர்த்தி அங்கீகாரத்திற்காக ஸ்ரீ விபின சந்திரபாலை* நோக்கினார். மாளவியாஜிக்கு

* வி. ஸி. பால்: விபின சந்திர பாலர். சுதேசி இயக்க ஆரம்பத்தில் இந்திய அரசியல் திரிமூர்த்திகளான லால் – பால - பால் (லஜபதி, பால கங்காதர திலகர், விபின சந்திர பால்) என்பவருள் ஒருவராக இருந்தார். நூல் நிலைய குமாஸ்தாவாயிருக்கையில் பல்வேறு நூல்களையும் படித்துத் தலைசிறந்த பேச்சாளரானார். 1903-4 இல் 'நியூ இந்தியா' என்னும் சஞ்சிகை மூலம் தேசீயம், தேசீயக் கல்வி, புதிய உத்வேகம் முதலியவற்றைப்பற்றித் தீவிரமாக எழுதி வந்தார். 1906-இல் கல்கத்தாவில் தாதாபாய் தலைமை வகித்த காங்கிரசில் பகிஷ்காரம் என்றால் 'அந்நியச் சரக்குகளைத் துறப்பதுமட்டும் அல்ல; அரசாங்கத் தொடர்பையும் அறுத்துக்கொள்ளுவதே' என் வியாக்கியானம் செய்தார். அரவிந்தர்மீது நடந்த ராஜத்துவேஷ வழக்கில் சாட்சியம் கூற மறுத்து ஆறு மாதச் சிறை தண்டனை பெற்றார். ஆந்திராவிலும் தமிழ்நாட்டிலும் 1907-இல் சுற்றுப்பிரயாணம் செய்து சுதேசியத்தைப் பரப்பினார். தமிழ் நாட்டுத் திரிமூர்த்திகளான சிதம்பரம் பிள்ளை, சுப்பிரமணிய சிவா, சுப்பிரமணிய பாரதியார் ஆகியவர்கள் இவருடைய சிறந்த சீடர்கள். சென்னையிலிருக்கையில் இவரை அரசாங்கத்தினர் வெளியேற்றினர். வெடிகுண்டு தத்துவத்தைப்பற்றி இவர் எழுதிய கட்டுரைக்காக வழக்குத் தொடருகையில் மன்னிப்புக் கோரினார். 1917-இல் பாஞ்சாலம், டில்லி முதலிய இடங்களுக்கு வரலாகாது எனத் தடை செய்யப்பட்டார். 1918 இல் லட்சுமணபுரியில் நடந்த சர்வ கட்சி மகா

நம்பிக்கை ஏற்பட்டது. திருத்தத்தைக் கொண்ட காகிதச் சீட்டை அவர் பிடுங்கிக்கொண்டு, "சரி" என்று தேசபந்து திட்டமாகத் தமது ஆதரவை அறிவிப்பதற்கு முன்னாலேயே, "சகோதரப் பிரதிநிதிகளே! சமரசம் ஏற்பட்டு விட்டது என்பதை அறிய நீங்கள் ஆனந்தமடைவீர்கள்" என்று கோஷித்தார். பிறகு அங்கே கண்ட காட்சி வருணிக்க முடியாததாகும். கூடியிருந்தவர்களின் கரகோஷம் பந்தலையே பிளந்துவிடும்போல் எழுந்தது. இதுகாறும் கவலை தேங்கியிருந்த முகங்கள் ஆனந்தத்தால் பிரகாசமடைந்தன.

திருத்தத் தீர்மானத்தைக் குறித்து இங்கே கூறிக்கொண்டிருக்க வேண்டிய அவசியம் இல்லை. இந்த அத்தியாயங்களில் நான் விவரித்து வரும் என்னுடைய சத்திய சோதனையின் ஒரு பகுதியாக மேற்கண்ட தீர்மானத்தை எவ்வாறு நான் கொண்டு வர நேர்ந்தது என்பதை விவரிப்பதே இங்கே என்னுடைய நோக்கமாகும். இந்தச் சமரசம் என்னுடைய பொறுப்பை மேலும் அதிகரித்தது.

# 38

# காங்கிரஸ் பணி ஆரம்பம்

அமிர்தசரஸ் காங்கிரஸ் நடவடிக்கைகளில் நான் கலந்துகொண்டது, காங்கிரஸின் ராஜீய காரியங்களில் என்னுடைய உண்மையான பிரவேசம் என்றேநான் கொள்ளவேண்டும். இதற்கு முந்திய காங்கிரஸ் மகாநாடுகளுக்கு நான் போனதெல்லாம் காங்கிரஸினிடம் எனக்குள்ள பக்தியை ஆண்டுதோறும் புதுப்பித்துக்கொள்ளுவதைப் போன்றதே யன்றி வேறல்ல. அந்தச் சமயங்களில் காங்கிரஸின் சாதாரணப் போர் வீரன் என்றுதான் நான் இருந்தேனே யல்லாமல் எனக்கென்று குறிப்பிட்ட வேலை எதுவும் இல்லை. சாதாரணச் சிப்பாய் என்பதற்கு அதிகமாக எதையும் நான் விரும்பியதும் இல்லை. இரண்டொரு காரியங்களைச் செய்யும் தன்மை என்னிடம் இருக்கக்கூடும்; அது காங்கிரஸுக்குப் பயன்படும் என்று அமிர்தசரஸ் அனுபவம் காட்டியது. பாஞ்சால விசாரணை சம்பந்தமாக நான் செய்த வேலை, காலஞ்சென்ற லோகமான்யர், தேசபந்து, பண்டித மாளவியாஜி ஆகியவர்களுக்குத் திருப்தியளித்தது என்பதை அதற்கு முன்னாலேயே என்னால் காண முடிந்தது. விஷயாலோசனைக் கமிட்டிக்கு அனுப்பும் தீர்மானங்களைக் குறித்து ஆலோசித்த தலைவர்களின் தனிக்கூட்டங்களுக்கு வழக்கமாக என்னையும் அழைப்பார்கள். தலைவர்களின் விசேட நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்களையும், யாருடைய சேவை தங்களுக்குத்

---

நாட்டில் கலந்துகொண்டார். 1920-இல் கல்கத்தா விசேஷ காங்கிரசிலும், நாகபுரி காங்கிரசிலும் ஒத்துழையாமைத் திட்டத்தை எதிர்த்தார். இங்கிலாந்துக்குச் சென்று சிறந்த பேச்சாளர் எனப் புகழ் பெற்றார்.

தேவைப்படுகின்றதோ அவர்களையும் மாத்திரமே அத்தகைய கூட்டங்களுக்கு அழைப்பார்கள். அவ்விதம் அழைக்கப்படாத வர்கள் சிலரும் சில சமயங்களில் இக் கூட்டங்களுக்கு வந்து விடுவதும் உண்டு.

அடுத்த ஆண்டில் இரு காரியங்களைச் செய்வதில் நான் சிரத்தை கொண்டேன். அவற்றைச் செய்வதில் எனக்கு விருப்பமும் ஆற்றலும் இருந்தன. அவற்றில் ஒன்று, ஜாலியன்வாலா பாக் படுகொலைக்கு ஞாபகார்த்தச் சின்னம். இதைச் செய்வதென்று காங்கிரஸில் மிகக் குதூகலத்தினிடையே ஒரு தீர்மானம் நிறைவேறி யிருந்தது. இதற்காக ஐந்து லட்சம் ரூபாய் நிதி திரட்ட வேண்டும். இந்த நிதிக்கு என்னையும் ஒரு தர்மகர்த்தாவாக நியமித்தார்கள். பொதுக்காரியங்களுக்குப் பிச்சையெடுப்பதில் மன்னர் என்று பண்டித மாளவியாஜி கீர்த்தி பெற்றிருந்தார். ஆனால், இந்தக் காரியத்தில் அவருக்கு நான் அதிகம் பின்வாங்கியவன் அல்ல என்பது எனக்குத் தெரியும். நான் தென்னாப்பிரிக்காவில் இருந்தபோதுதான் இத்துறையில் எனக்கு இருந்த ஆற்றலைக் கண்டுபிடித்தேன். என்றாலும், சுதேச மன்னர்களிடமிருந்து பெருந் தொகையை வசூலித்துவிடுவதில் மாளவியாஜிக்கு இருந்த இணையில்லாத ஜாலவித்தை என்னிடம் இல்லை. ஜாலியன்வாலா பாக் நினைவுச் சின்னத்திற்கு ராஜாக்களிடத்திலும் மகாராஜாக்களிடமும் பணம் கேட்பதற்கில்லை என்பதை நான் அறிவேன். ஆகவே, இதற்கு நிதி திரட்டும்முக்கியப் பொறுப்பு, நான் எதிர்பார்த்ததைப் போலவே, என்பேரில் தான் விழுந்தது. தாராள குணமுள்ள பம்பாயின் மக்கள் ஏராளமாகப் பணம் கொடுத்தார்கள். ஆகையால், இந்த ஞாபகார்த்தச் சின்னத்தின் டிரஸ்ட்டிடம் பாங்கில் இப்பொழுது பெருந் தொகை இருக்கிறது. ஆனால், ஹிந்துக்கள், முஸ்லிம்கள், சீக்கியர்களின் ரத்தங்கள் கலந்தோடிய அந்த இடத்தில் எந்தவிதமான புனித ஞாபகச் சின்னத்தை எழுப்புவது என்பதே இன்று நாட்டின் முன்பிருக்கும் பிரச்னை. இந்த மூன்று சமூகங்களும் ஒற்றுமையினாலும் அன்பினாலும் பிணைக்கப்பட் டிருப்பதற்குப் பதிலாக ஒன்றோடொன்று போராடிக் கொண்டிருப்பதாகவே தோன்றுகிறது. எனவே, நினைவுச் சின்ன நிதியை எப்படிப் பயன்படுத்துவது என்பது நாட்டு மக்களுக்கு இப்பொழுது புரியாமல் இருந்து வருகிறது.

தீர்மானங்களைத் தயாரிப்பதில் எனக்கு இருந்த ஆற்றல், காங்கிரஸ் பயன்படுத்திக் கொள்ளக்கூடிய மற்றொன்றாகும். எதையும் சுருக்கமாகக் கூறும் ஆற்றலை, நீண்ட கால அனுபவத்தினால் நான் பெற்றிருந்தேன். இதைக் காங்கிரஸ் தலைவர்கள் கண்டு கொண்டார்கள். அப்பொழுது இருந்த காங்கிரஸ் அமைப்பு விதிகள், கோகலே தயாரித்து வைத்துவிட்டுப் போன ஆஸ்தியாகும். காங்கிரஸ் யந்திரம் நடந்துகொண்டு போவதற்கு அடிப்படையாக இருக்கக்கூடிய சில விதிகளை அவர் அமைத்திருந்தார்.

இந்த விதிகளைத் தயாரித்ததைப்பற்றிய ருசிகரமான சரித்திரத்தைக் கோகலேயின் வாய்மொழியாலேயே நான் கேட்டிருக்கிறேன். காங்கிரஸின் வேலைகள் மிக அதிகமாகிவிட்ட இக்காலத்திற்கு இந்த விதிகள் போதுமானவைகளே அன்று என்பதை இப்பொழுது ஒவ்வொருவரும் உணர ஆரம்பித்துவிட்டனர். இவ்விஷயம் ஆண்டுதோறும் காங்கிரஸின் ஆலோசனைக்கு வந்துகொண்டும் இருந்தது. காங்கிரஸின் ஒரு மகாநாட்டிற்கும் மற்றொரு மகாநாட்டிற்கும் இடையிலும், ஓர் ஆண்டில் புதிதாக ஏற்படக்கூடிய நிலைமைகளிலும், வேலை செய்வதற்கு அச்சமயம் காங்கிரஸில் எந்தவிதமான ஏற்பாடும் இல்லாமல் இருந்தது. அப்பொழுதிருந்த விதிகளின்படி, காரியதரிசிகள் மூவர் உண்டு. ஆனால், அவர்களில் ஒருவர்தான் காங்கிரஸின் வேலைகளைக் கவனிப்பார். அவரும் முழு நேரமும் அவ்வேலையைக் கவனிப்பவரல்ல. அவர் ஒருவரே எவ்விதம் காங்கிரஸ் காரியாலயத்தை நடத்தி, எதிர்காலத்தைக் குறித்துச் சிந்தித்து, காங்கிரஸ் ஏற்றுக்கொண்டிருக்கும் பழைய பொறுப்புக்களை நிறைவேற்றி வைப்பதும் சாத்தியமாகும்? ஆகையால், அந்த ஆண்டில் இந்த விஷயம் மிக முக்கியமானது என்று எல்லோரும் கருதினர்கள், பொது விஷயங்களை யெல்லாம் காங்கிரஸ் மகாநாடே விவாதிப்பதென்றால், அவ்வளவு பெரிய கூட்டத்தைச் சமாளிப்பது கஷ்டம். காங்கிரஸுக்கு வரும் பிரதிநிதிகள் தொகை இவ்வளவுதான் என்பதற்கோ, ஒவ்வொரு மாகாணமும் இத்தனை பிரதிநிதிகளைத்தான் அனுப்பலாம் என்பதற்கோ, எந்த வரையறையும் விதிக்கப்படவில்லை. இவ்விதம் அப்பொழுதிருந்த குழப்பமான நிலைமையில் ஏதாவது அபிவிருத்தி செய்தாக வேண்டியது அவசியம் என்று ஒவ்வொருவரும் உணர்ந்தார்கள். காங்கிரஸின் விதிகளை அமைக்கும் பொறுப்பை, ஒரு நிபந்தனைபேரில், நான் ஏற்றுக்கொண்டேன். பொதுமக்களிடையே அதிகச் செல்வாக்குப் பெற்றிருந்த இரு தலைவர்கள் லோகமான்யரும் தேசபந்துவும் என்பதைக் கண்டேன். காங்கிரஸ் விதிகளை அமைக்கும் கமிட்டியில் மக்களின் பிரதிநிதிகளாக அவர்கள் இருவரும் இருக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டேன்; ஆனால், விதிகள் அமைப்பு வேலையில் நேரடியாகக் கலந்துகொள்ளுவதற்கு அவர்களுக்கு அவகாசம் இருக்காது என்பது தெரிந்ததே. ஆகையால், விதிகள் கமிட்டியில் என்னுடன் அவர்களுடைய நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்கள் இருவர் இருக்க வேண்டும் என்றும், கமிட்டியில் மொத்தம் மூவரே இருப்பதென்று செய்துவிட வேண்டும் என்றும் யோசனை கூறினேன். இந்த யோசனையைக் காலஞ்சென்ற லோகமான்யரும், காலஞ்சென்ற தேசபந்துவும் ஏற்றுக்கொண்டார்கள். முறையே தங்கள் பிரதிநிதிகளாக ஸ்ரீமான்கள், கேல்கர்,* ஐ. பி. ஸென் ஆகிய இரு பெயர்களையும் கூறினர். விதிகள் அமைப்புக் கமிட்டி உறுப்

---

* என். ஸி. கேல்கர் : லோகமான்ய திலகரின் நெருங்கிய உறவினர். திலகர் தொடங்கிய 'மராட்டா' என்னும் ஆங்கிலப் பத்திரிகைக்கும் 'கேஸரி' என்னும் மராத்திப் பத்திரிகைக்கும் ஆசிரியராயிருந்து மகாராஷ்டிரத்தில் நாட்டுப் பற்றை

பினர்கள் ஒரு தடவையேனும் ஒன்றுசேர முடியவில்லை. ஆனால், கடிதப் போக்குவரத்தின் மூலமே ஆலோசித்துக்கொண்டோம். முடிவாக ஒருமனதான அறிக்கையையும் சமர்ப்பித்தோம். இந்தக் காங்கிரஸ் அமைப்பு விதிகளைக் குறித்து நான் ஓரளவுக்குப் பெருமை அடைகிறேன். இந்த விதிகள் முழுவதையும் நாம் நிறைவேற்றிவைக்க முடிந்தால், இவற்றை நிறைவேற்றுவது ஒன்றின் மூலமே நாம் சுயராஜ்யத்தை அடைந்துவிட முடியும் என்று நான் கருதுகிறேன்; இந்தப் பொறுப்பை ஏற்றுக்கொண்டதன் மூலம் காங்கிரஸின் ராஜீய காரியங்களில் உண்மையில் நான் பிரவேசித்துவிட்டேன் என்றே சொல்லலாம்.

# 39

# கதரின் பிறப்பு

1908-இல் நான் எழுதிய 'இந்திய சுயராஜ்யம்' என்ற நூலில், இந்தியாவில் வளர்ந்துகொண்டு வரும் வறுமையைப் போக்குவதற்குச் சரியான மருந்து, கைத்தறி அல்லது கைராட்டினமே என்று எழுதினேன். அந்தச் சமயம் வரையில் கைத்தறியையோ, ராட்டினத்தையோ நான் பார்த்திருப்பதாக எனக்கு ஞாபகம் இல்லை. இந்திய மக்களை வாட்டி வரும் வறுமையைப் போக்குவதற்கு உதவியாக இருக்கும் எக்காரியமும் அதே சமயத்தில் சுயராஜ்யம் ஏற்படும்படி செய்யும் என்ற கருத்தை வைத்துக்கொண்டு அப்புத்தகத்தில் இப்படி எழுதினேன். தென்னாப்பிரிக்காவிலிருந்து 1915-இல் நான் இந்தியாவுக்குத் திரும்பிய போதும்கூட கைராட்டினத்தை நான் நேராகப் பார்த்ததில்லை. சாபர்மதியில் சத்தியாக்கிரக ஆசிரமத்தை ஆரம்பித்தபோது அங்கே சில கைத்தறிகளை வைத்தோம். அவற்றை அமைத்தவுடனே ஒரு பெரிய கஷ்டமும் எங்களுக்கு ஏற்பட்டது. ஆசிரமத்திலிருந்த நாங்கள் எல்லோரும் உத்தியோகம், வியாபாரம் முதலியவைகளில் ஈடுபட்டிருந்தவர்களே யன்றி எங்களில் யாரும் கைத்தொழில் தெரிந்தவர்கள் அல்ல. தறிகளில் நாங்கள் வேலை செய்வதற்கு முன்னால் நெசவு வேலையை எங்களுக்கு யாரும் சொல்லித்தரவில்லை. ஆனால், திகைத்துப் போய் எடுத்த காரியத்தை இலகுவில் விட்டுவிடுகிறவரல்ல மகன்லால் காந்தி.

---

வளர்க்கப் பாடுபட்டவர். சென்னையில் 1898-இல் நடந்த 14-வது காங்கிரஸில் செய்தித் தணிக்கையை ஆட்சேபித்துப் பேசினார். 1919-இல் நாட்டு நிலையை ஆங்கிலேயரிடம் எடுத்துச் சொல்ல வித்தல்பாய் பட்டேலுடன் தூது சென்றார். சுயராஜ்யக் கட்சியில் சேர்ந்து மத்திய சட்டசபைக்குச் சென்று அக்கட்சியுடன் மாறுபட்ட கருத்துக்கொண்டு ராஜிநாமாச் செய்தார் வறட்டு எதிர்ப்பை விட்டு, அரசாங்கம் இணங்கி வந்தால், அந்த அளவுக்கு நாம் ஒத்துழைக்க வேண்டும் என்ற கருத்து உடையவராதலால்தான் இவ்வாறு அபிப்பிராய பேதம் ஏற்பட்டது. 1925-இல் சுயராஜ்யக் கட்சியைச் சேர்ந்த தாம்பே என்பவர் மத்திய மாகாண நிர்வாக சபையில் பதவி ஏற்றதை இவரும் ஜெயகரும் ஆதரித்ததனால் இவர்கள் சுயராஜ்யக் கட்சியிலிருந்து விலகவேண்டி வந்தது.

யந்திர விஷயங்களில் இயற்கையாகவே அவருக்கு ஆற்றல் இருந்ததால், சீக்கிரத்திலேயே அக் கலையில் அவர் முற்றும் தேர்ச்சி பெற்றுவிட்டார். ஒருவர் பின் ஒருவராகக் கைத்தறியில் நெய்பவர்கள் பலரை ஆசிரமத்தில் புதிதாகப் பழக்கிவிட்டோம்.

எங்கள் கையால் நாங்களே நெய்துகொண்ட துணிகளைத் தான் நாங்கள் உடுத்த வேண்டும் என்பதே நாங்கள் கொண்ட லட்சியம். மில் துணியைப் போட்டுக்கொள்ளுவதை உடனே விட்டுவிட்டோம். இந்தியாவில் தயாரான நூலைக் கொண்டு கையினால் நெய்த துணிகளை மாத்திரமே அணிவது என்று ஆசிரமத்தைச் சேர்ந்தவர்கள் எல்லோரும் தீர்மானித்துக்கொண்டோம். இப் பழக்கத்தை மேற்கொண்டதால் எங்களுக்கு எவ்வளவோ அனுபவங்கள் ஏற்பட்டன. நெசவாளர்களின் வாழ்க்கை நிலையையும், எந்த அளவுக்கு அவர்கள் உற்பத்தி செய்கிறார்கள் என்பதையும் அறிந்தோம். தங்களுக்கு வேண்டிய நூல் கிடைப்பதில் அவர்களுக்கு இருக்கும் கஷ்டங்கள், எந்தவிதமாகப் பலவிதமான மோசடிகளுக்கும் அவர்கள் இரையாகின்றனர் என்பது, கடைசியாக, அவர்களுக்குச் சதா வளர்ந்து கொண்டே போகும் கடன் நிலைமை ஆகியவைகளையும், அவர்களுடன் நேரடியான தொடர்பு கொண்டதன் மூலம் நாங்கள் அறிந்துகொண்டோம். எங்களுடைய தேவைக்குப் போதுமான துணி முழுவதையும் உடனே நாங்களே தயாரித்துக்கொண்டு விடும் நிலையில் நாங்கள் இல்லை. ஆகையால் கைத்தறி நெசவாளர்களிடமிருந்து எங்களுக்குத் தேவையான துணிகளை வாங்கிக் கொள்ளுவதே நாங்கள் அடுத்தபடியாகச் செய்ய முடிந்தது. இந்திய மில் நூலைக் கொண்டு கைத்தறியில் தயாரான துணிகள், ஜவுளி வியாபாரிகளிடம் இருந்தோ, கைத்தறிக்காரர்களிடம் இருந்தோ சுலபமாகக் கிடைக்கவில்லை. இந்திய மில்கள் நயமான உயர்ந்த ரக நூல்களைத் தயாரிக்காததால், உயர்ந்த ரகத் துணிகளையெல்லாம் வெளிநாட்டு நூலைக் கொண்டே நெய்து வந்தார்கள். இன்றுகூட, உயர்ந்த ரக நூலை இந்திய ஆலைகள் ஒரு குறிப்பிட்ட அளவுதான் தயாரிக்கின்றன. மிக உயர்ந்த ரக நூலை அவர்கள் தயாரிக்கவே முடியாது. எங்களுக்காகச் சுதேசி நூலை நெய்வதற்கு ஒப்புக்கொள்ளும் நெசவாளரை அதிகச் சிரமத்தின் பேரிலேயே நாங்கள் தேடிப் பிடிக்க முடிந்தது. அவர்கள் நெய்யும் துணி முழுவதையும் ஆசிரமம் வாங்கிக் கொண்டுவிடுவது என்ற நிபந்தனையின் பேரிலேயே அவர்கள் இசைந்தார்கள். இவ்வாறு நம் ஆலைகளில் தயாரிக்கும் நூலைக் கொண்டு நெய்த துணிகளை மாத்திரமே நாங்கள் உடுத்துவது என்று தீர்மானித்து, நண்பர்களிடையே இதை நாங்கள் பிரசாரம் செய்ததன் மூலம், இந்திய நூல் ஆலைகளுக்காக வலிய வேலைசெய்யும் ஏஜெண்டுகளாக நாங்கள் ஆனோம். இதனால், எங்களுக்கு ஆலைகளுடன் தொடர்பு ஏற்பட்டது. அதன் காரணமாக அவர்களுடைய நிர்வாகத்தைப் பற்றிய சில விஷயங்களையும்,

அவர்களுக்கு இருந்த கஷ்டங்களையும் நாங்கள் அறிய முடிந்தது. தாங்கள் நூற்கும் நூலைக்கொண்டு தாங்களே நெய்துவிடவும் வேண்டும் என்பதே ஆலைகளின் நோக்கம் என்பதைக் கண்டோம். கைத்தறி நெசவாளர்களிடம் அவர்களுக்கு இருந்த ஒத்துழைப்பு, விரும்பி அளிக்கும் ஒத்துழைப்பல்ல என்பதையும், தவிர்க்க முடியாத நிலையில் தாற்காலிகமாக அளிப்பதே என்பதையும் கண்டோம். இந்த நிலைமையில் எங்களுக்கு வேண்டிய நூலை நாங்களே நூற்றுக்கொள்ள வேண்டும் என்பதில் அதிக ஆர்வம் கொண்டோம். இதை நாங்களே செய்துகொண்டு விட்டாலன்றி, ஆலைகளை நம்பியிருப்பது என்பது இருந்துகொண்டு தான் இருக்கும் என்பதும் தெளிவாகத் தெரிந்தது. நூல் நூற்கும் இந்திய ஆலைகளின் தரகர்களாகத் தொடர்ந்து இருந்து கொண்டு வருவதால், நாட்டிற்கு எந்தச் சேவையும் செய்ய முடியாது என்பதையும் உணர்ந்தோம்.

நாங்கள் சமாளித்து ஆகவேண்டியிருந்த கஷ்டங்களுக்கு முடிவே இல்லை. எப்படி நூற்பது என்பதை நாங்கள் கற்றுக் கொள்ளுவதற்குக் கைராட்டினமோ, நூற்பவரோ கிடைக்கவே இல்லை. ஆசிரமத்தில் நெய்வதற்கான நூலைக் கண்டுக ளாக்குவதற்கு ஒருவகை ராட்டினத்தை உபயோகித்து வந்தோம். ஆனால் இதையே நூற்கும் ராட்டையாகவும் உபயோகிக்கலாம் என்ற விஷயமே எங்களுக்குத் தெரியாது. ஒரு நாள் காளிதாஸ் ஜவேரி ஒரு பெண்ணைக் கண்டு பிடித்தார். நூற்பது எப்படி என்பதை அப் பெண் எங்களுக்குக் காட்டுவார் என்றும் சொன்னார். உடனே ஆசிரமவாசி ஒருவரை அந்தப் பெண்ணிடம் அனுப்பினோம். இவர், புதிய விஷயங்களை வெகு எளிதில் கற்றுக்கொண்டு விடும் ஆற்றல் படைத்தவர் என்று பெயர் பெற்றவர். ஆனால், இவரும் அக் கலையின் இரகசியத்தைத் தெரிந்துகொள்ளாமலேயே திரும்பி வந்துவிட்டார்.

இவ்விதம் காலம் போய்க்கொண்டே யிருந்தது. நாளாக ஆக நானும் பொறுமையை இழந்து வந்தேன். கையினால் நூற்பதைக் குறித்து ஏதாவது தகவலை அறிந்திருக்கக் கூடியவர்களாக ஆசிரமத்திற்கு வருவோர் போவோர்கள் இடமெல்லாம் அதைக் குறித்து விசாரித்துக்கொண்டு வந்தேன். இக்கலை பெண்களிடம் மாத்திரமே இருந்துவந்ததாலும், அது அநேகமாக அழிந்து போய்விட்டதாலும், ஒருவருக்கும் தெரியாத மூலை முடுக்குகளில் நூற்பவர்கள் யாராவது சிலர் இருப்பார்கள். அப்படி இருந்தாலும், அப்படிப்பட்டவர்கள் இன்னாரென்பதைப் பெண்கள் மாத்திரமே அறிந்திருக்க முடியும்.

புரோச் கல்வி மகாநாட்டில் தலைமை வகிப்பதற்காக 1917–இல் என்னுடைய குஜராத்தி நண்பர்கள் என்னை அங்கே அழைத்துச் சென்றனர். அங்கேதான் கங்காபென் மஜ்முதார் என்னும் அற்புதமான பெண்மணியைக் கண்டுபிடித்தேன். அவர் விதந்து என்றாலும் அவருக்கு எல்லையற்ற ஊக்கமும் முயற்

சியும் உண்டு. படிப்பு என்ற வகையில் பார்த்தால் அவர் அதிகம் படித்தவர் அல்ல. ஆனால், தீரத்திலும் பொது அறிவிலும் நமது படித்த பெண்களை அவர் எளிதில் மிஞ்சிவிடக் கூடியவர். தீண்டாமைக் கொடுமையை அவர் முன்னாலேயே விட்டொழித்திருந்தார். ஒடுக்கப்பட்ட மக்களிடையே அவர் தாராளமாகப் பழகி, அவர்களுக்குச் சேவை செய்து வந்தார். அவருக்குச் சொந்தத்தில் சொத்து உண்டு. அவருடைய தேவைகளோ மிகச் சொற்பம். நல்ல திடகாத்திரமான உடல் உள்ளவராகையால் எங்கும் துணையில்லாமலேயே போய் வருவார். சர்வ சாதாரணமாகக் குதிரைச் சவாரி செய்வார். கோத்ரா மகாநாட்டில் அவரைக் குறித்து இன்னும் நெருக்கமாக அறியலானேன். ராட்டினம் கிடைக்காததால் எனக்கு ஏற்பட்டிருந்த துயரை அவரிடம் முறையிட்டுக் கொண்டேன். ஊக்கத்துடன் விடாமல் தேடி ராட்டினத்தைக் கண்டுபிடித்துத் தருவதாக வாக்களித்து, என் மனத்திலிருந்த பளுவை அவர் குறைத்தார்.

# 40

# முடிவில் கண்டுகொண்டேன்!

குஜராத் முழுவதிலும் கங்காபென் தேடி யலைந்துவிட்டுக் கடைசியாகப் பரோடா சமஸ்தானத்தில் வீஜாப்பூர் என்ற இடத்தில் கைராட்டையை அவர் கண்டுபிடித்தார். அங்கே அநேகம் பேர் தங்கள் வீடுகளில் கைராட்டைகளை வைத்திருந்தார்கள். ஆனால், வெகு காலத்திற்கு முன்னாலேயே, அவையெல்லாம் ஒன்றுக்கும் ஆகாதவை என்று கருதி மரக்கட்டைகளோடு மரக்கட்டையாக அவைகளைப் பரண்களில் தூக்கிப் போட்டு விட்டார்கள். ஒழுங்காக யாராவது பட்டை போட்ட பஞ்சு கொண்டுவந்து கொடுத்து, நூற்ற நூலையும் வாங்கிக்கொள்ளுவதாக இருந்தால், தாங்கள் திரும்பவும் ராட்டையில் நூற்கத் தயாராக இருப்பதாகவும் அவர்கள் கங்காபென்னிடம் அறிவித்தனர். இந்த மகிழ்ச்சிகரமான செய்தியை கங்காபென் எனக்கு அனுப்பினர். பட்டை போட்ட பஞ்சுக்கு ஏற்பாடு செய்வது கஷ்டமாக இருந்தது. இதைக் குறித்துக் காலஞ் சென்ற உமார் ஸோபானியிடம் கூறினேன். அவர் தம்முடைய மில்லிலிருந்து பட்டை போட்ட பஞ்சைப் போதுமான அளவு கொடுப்பதாக உடனே கூறி, இக் கஷ்டத்தை நிவர்த்தி செய்துவிட்டார். உமார் ஸோபானியிடமிருந்து வந்த பட்டை போட்ட பஞ்சைக் கங்காபென்னுக்கு அனுப்பினேன். உடனே நூற்ற நூல் ஏராளமாக வந்து குவியத் தொடங்கிவிட்டது. அந்த நூலை என்ன செய்வது என்பது பிறகு ஒரு பிரச்னையாகிவிட்டது.

ஸ்ரீ உமார் ஸோபானி மிகுந்த தாராளமான குணமுடையவர் தான். ஆனால், அவருடைய தாராளத்தை எப்பொழுதுமே பயன்படுத்திக்கொண்டிருப்பது என்பது கூடாது. பட்டை

போட்ட பஞ்சைத் தொடர்ந்து அவரிடமிருந்து வாங்கிக்கொண்டிருப்பதென்பது என் மனத்திற்குக் கஷ்டமாக இருந்தது. மேலும், மில்லில் தயாரான இப்பஞ்சை உபயோகித்துக்கொள்ளுவது அடிப்படையிலேயே தவறுஎன்றும் எனக்குத் தோன்றிற்று. மில்லில் பட்டைபோட்ட பஞ்சை உபயோகிக்கலாமென்ருல் மில் நூலையே ஏன் உபயோகித்துக்கொள்ளக் கூடாது? முன் காலத்திலெல்லாம் கைராட்டையில் நூற்றவர்கள், வேண்டிய பஞ்சை பட்டை போட்டு எவ்வாறு தயாரித்துக்கொண்டு வந்தார்கள்? என் மனத்தில் எழுந்த இத்தகைய எண்ணங்களோடு கங்காபென்னுக்கு ஒரு யோசனை கூறினேன். பஞ்சு அடித்துப் பட்டை போட்டுக் கொடுக்கக் கூடியவர்களைக் கண்டு பிடிக்குமாறு அவரைக் கேட்டுக்கொண்டேன். அவரும் நம்பிக்கையோடு அவ்வேலையை ஏற்றுக்கொண்டார். பஞ்சு கொட்டிப் பட்டை போட்டுத் தரக்கூடிய ஒருவரை அவர் அமர்த்தினர். அந்த ஆசாமியோ, தமக்கு அதிகம் கொடுக்காவிட்டாலும் மாதம் முப்பத்தைந்து ரூபாய் கொடுக்க வேண்டும் என்ருர். அந்தச் சமயத்தில் அதற்கு எவ்வளவு பணம் கொடுத்தாலும் அதிகம் அல்ல என்று எண்ணினேன். கொட்டிய பஞ்சிலிருந்து பட்டை போடுவதற்குச் சில இளைஞர்களையும் கங்காபென் பழக்கினர். யாராவது பஞ்சு கொடுத்து உதவ வேண்டும் என்று பம்பாயைக் கேட்டுக்கொண்டேன். ஸ்ரீ யஷ்வந்த் பிரசாத் தேசாய் உடனே கொடுக்க முன்வந்தார். இவ்விதம் கங்காபென்னின் முயற்சி எதிர்பார்த்ததற்கு மேலாகவே பலன் தந்தது. வீஜாப்பூரில் தயாரான நூலை நெய்வதற்கும் நெசவாளர்களுக்கு அவர் ஏற்பாடு செய்தார். சீக்கிரத்தில் வீஜாப்பூர்க் கதர், புகழ் பெற்று விளங்கியது.

வீஜாப்பூரில் இந்த அபிவிருத்திகளெல்லாம் நடந்துகொண்டிருந்த சமயத்தில் ஆசிரமத்திலும் கைராட்டினம் துரிதமாக நிலை பெற்று வந்தது. மகன்லால் காந்தி, தமக்குள்ள யந்திர நுட்ப ஆற்றலையெல்லாம் பயன்படுத்தி ராட்டினத்தில் பல அபிவிருத்திகளைச் செய்தார். ராட்டினத்தின் சக்கரத்தையும் மற்றச் சாமான்களையும் ஆசிரமத்திலேயே தயாரிக்க ஆரம்பித்தார். ஆசிரமத்தில் தயாரான முதல் கதர், கெஜம் 17 அணு விலையாயிற்று. அதிக முரடாயிருந்த இந்தக் கதரை அந்த விலைக்கு நண்பர்களுக்குச் சிபார்சு செய்ய நான் தயங்கவே இல்லை. அவர்களும் மனமுவந்து அவ்விலையைக் கொடுத்து வாங்கிக்கொண்டார்கள்.

நான் பம்பாயில் படுத்த படுக்கையாக இருந்தேன். என்ருலும், அங்கேயும் ராட்டினங்களைத் தேடுவதற்கு வேண்டிய சக்தி எனக்கு இருந்தது. கடைசியாக நூல் நூற்கக் கூடியவர்கள் இருவர் தென்பட்டனர். ஒரு சேர், அதாவது 28 தோலா அல்லது சுமார் முக்கால் ராத்தல் நூலுக்கு ஒரு ரூபாய் விலை கொடுக்க வேண்டும் என்று அவர்கள் கேட்டார்கள். கதரின் பொருளாதாரத் தத்துவத்தைக் குறித்து அப்பொழுது எனக்கு எதுவுமே

தெரியாது. கையினுல் நூற்ற நூலுக்கு என்ன விலையும் கொடுக்கலாம் என்று எண்ணினேன். வீஜாப்பூரில் கொடுக்கப்படும் விலையையும் நான் கொடுத்த விலையையும் ஒப்பிட்டுப் பார்த்தபோது நான் ஏமாற்றப்பட்டேன் என்பதைக் கண்டேன். நூற்றவர்களோ, விலையில் எதுவும் குறைத்துக்கொள்ள மறுத்துவிட்டார்கள். ஆகையால், அவர்களை அனுப்பிவிட வேண்டியதாயிற்று. என்ருலும், அவர்களை அமர்த்தியிருந்ததால் பயனில்லாது போகவில்லை. ஸ்ரீமதிகள் அவந்திகாபாய், ரமீபாய், காம்தார், ஸ்ரீ சங்கர்லால் பாங்கரின் தாயார், ஸ்ரீமதி வசுமதி பென் ஆகியவர்களுக்கு அவர்கள் நூற்கக் கற்றுக் கொடுத்திருந்தார்கள். என் அறையில் ராட்டினம் ஆனந்தமாகச் சுழன்று, இனிய கீதத்தை எழுப்பிக்கொண்டிருந்தது. நான் நோயினின்றும் குணமடைவதற்கு அந்தக் கீதம் பெருமளவு துணை செய்தது என்று நான் கூறினுல், அது மிகையாகாது. அதனுல், உடலுக்கு ஏற்பட்ட நன்மையைவிட மனத்திற்கு ஏற்பட்ட நற்பலன் அதிகம் என்பதை ஒப்புக்கொள்ள நான் தயார். அப்படியானுல், மனிதனின் உடலில் மாறுதலை உண்டாக்குவதற்கு மனத்திற்கு அபார சக்தி இருக்கிறது என்பதையே இது காட்டுகிறது. நானும் ராட்டையில் நூற்க ஆரம்பித்தேன். ஆனுல், அச் சமயம் நான் அதிகமாக எதுவும் நூற்கவில்லை.

கையினுல் கொட்டித் தயாரித்த பஞ்சுப் பட்டைகளைச் சம்பாதிக்கும் பிரச்னை மீண்டும் பம்பாயிலும் ஏற்பட்டது. பஞ்சு கொட்டுகிறவர் ஒருவர், பஞ்சு கொட்டும் வில்லுடன், அந்த வில்லின் நாணிலிருந்து ஒலி எழுப்பிக்கொண்டு ஸ்ரீ ரேவாசங்கரின் வீட்டு வழியே தினம் போய்க் கொண்டிருப்பார். அவரைக் கூப்பிட்டனுப்பினேன். அவரை விசாரித்ததில் அவர் மெத்தைகளுக்குத் திணிக்கும் பஞ்சைக் கொட்டுகிறவர் என்று தெரிந்தது. நூற்பதற்குப் பஞ்சுப் பட்டைகள் போட்டுத் தர அவர் சம்மதித்தார். ஆனுல், அதிகமாகக் கூலி கேட்டார். என்ருலும் நான் கொடுத்தேன். இவ்வாறு நூற்ற நூலைப் பவித்திர ஏகாதசியன்று சுவாமிக்கு மாலை போடுவதாகச் சில வைஷ்ணவ நண்பர்கள் வாங்கிக்கொண்டார்கள். ஸ்ரீ சிவ்ஜி, நூற்கக் கற்றுக் கொடுக்கும் வகுப்பு ஒன்றைப் பம்பாயில் ஆரம்பித்தார். இந்தப் பரிசோதனைகளுக்கெல்லாம் அதிகப் பணம் செலவாயிற்று ஆனுல், கதரில் நம்பிக்கையுள்ள, தாய் நாட்டிடம் பக்தியுள்ள தேசாபிமானிகளான நண்பர்கள், இச் செலவை யெல்லாம் விருப்பத்தோடு ஏற்றுக்கொண்டார்கள். இவ்விதம் செலவான பணம் வீணுகி விடவில்லை என்பதே என்னுடைய பணிவான கருத்து. இதனுல் எங்களுக்கு அதிக அனுபவம் ஏற்பட்டதோடு கைராட்டையின் சாத்தியங்களும் எங்களுக்குத் தெரியலாயின.

நான் கதரை மாத்திரமே உடுத்த வேண்டும் என்ற பேரவா அப்பொழுது எனக்குப் பலமாக ஏற்பட்டது. அப்பொழுது இந்திய ஆலைகளில் தயாரான வேட்டியையே கட்டிக்கொண்

டிருந்தேன். ஆசிரமத்திலும் வீஜாப்பூரிலும் தயாரான முரட்டுக் கதர்த் துணி, முப்பது அங்குல அகலமே இருக்கும். ஆகையால், கங்கா பென்னுக்கு ஒரு முன்னெச்சரிக்கை செய்தேன். ஒரு மாத காலத்திற்குள் நாற்பத்தைந்து அங்குல அகலத்தில் எனக்குக் கதர் வேட்டி தயாரித்துக் கொடுக்காது போனால், அகலக் கட்டையாக இருக்கும் முரட்டுக் கதரையே கட்டிக்கொள்ளப் போகிறேன் என்று அவருக்குத் தெரிவித்தேன். இந்த இறுதி எச்சரிக்கை அவரைத் திடுக்கிடச் செய்துவிட்டது. ஆனால், அவரிடம் கேட்டதை அவர் நிறைவேற்றிவிட்டார். ஒரு மாதத்திற்குள்ளேயே 45 அங்குல அகலத்தில் ஒரு ஜதைக் கதர் வேட்டிகளை அவர் எனக்கு அனுப்பினார். இதன்மூலம் எனக்கு ஒரு சங்கடமான நிலைமை ஏற்பட்டுவிடாமல் அவர் காப்பாற்றிவிட்டார்.

அதே சமயத்தில் ஸ்ரீ லட்சுமிதாஸ், லாத்தியிலிருந்து ஸ்ரீ ராம்ஜி என்ற நெசவுக்காரரையும் அவர் மனைவி கங்கா பென்னையும் ஆசிரமத்திற்கு அழைத்துவந்து ஆசிரமத்திலேயே கதர் வேட்டி நெசவாகும்படி செய்தார். கதர் பரவுவதில் இத் தம்பதிகள் செய்திருக்கும் சேவை அற்பமானது அன்று. குஜராத்தில் மாத்திரமேயல்லாமல் வெளியிலும், கையால் நூற்ற நூலைக் கொண்டு நெய்வதற்கு அவர்கள் கற்றுக்கொடுத்திருக்கிறார்கள். கங்கா பென், தறியில் நெய்வதைப் பார்ப்பதே மிகவும் உற்சாகம் ஊட்டும் காட்சியாகும். எழுதப் படிக்கத் தெரியாத, ஆனால், ஆற்றல் மிக்க இச் சகோதரி, கைத்தறியில் வேலை செய்ய உட்கார்ந்துவிட்டால், அவர் மனம் முழுவதும் அதிலேயே ஆழ்ந்துவிடும். பிறகு அவர் மனத்தையும் கண்களையும் தறியிலிருந்து வேறு இடத்திற்குத் திருப்புவதென்பது மிகவும் கஷ்டமான காரியமே.

## 41

# அறிவூட்டிய சம்பாஷணை

கதர் இயக்கத்தையும் அப்பொழுது சுதேசி இயக்கம் என்றே சொல்லி வந்தனர். இந்த இயக்கத்தை ஆரம்பம் முதற்கொண்டே ஆலை முதலாளிகள் அதிகமாகக் குறைகூறி வந்தனர். காலஞ்சென்ற உமார் ஸோபானியே திறமைமிக்க ஆலை முதலாளிதான். தமது அறிவையும் அனுபவத்தையும் கொண்டு அவர் எனக்கு ஆலோசனைகள் கூறி வந்ததோடு, மற்ற ஆலை முதலாளிகளின் அபிப்பிராயங்களையும் அப்போதைக் கப்போது எனக்குத் தெரிவித்தும் வந்தார். அந்த ஆலை முதலாளிகளில் ஒருவர் சொன்ன வாதங்கள் அவர் மனத்தை அதிகம் கவர்ந்தன. அவரை நான் சந்திக்க வேண்டும் என்று உமார் ஸோபானி வற்புறுத்தினர். நானும் சம்மதித்தேன். அதன்பேரில் நாங்கள் சந்தித்துப் பேச அவர் ஏற்பாடு செய்தார். ஆலை முதலாளி, சம்பாஷணையைப் பின்வருமாறு ஆரம்பித்தார்.

"இதற்கு முன்னாலேயே சுதேசிக் கிளர்ச்சி நடந்துகொண்டு வருகிறது என்பதை நீங்கள் அறிவீர்கள் அல்லவா?"

"ஆம். அறிவேன்" என்றேன்.

"வங்காளப் பிரிவினைக் கிளர்ச்சியின்போது ஆலை முதலாளி களாகிய நாங்கள், சுதேசி இயக்கத்தை எங்கள் சொந்த லாபத் திற்கு முற்றும் பயன்படுத்திக்கொண்டோம் என்பதும் உங்களுக் குத் தெரியும். அந்த இயக்கம் உச்ச நிலையில் இருந்த சமயம், துணியின் விலையை நாங்கள் உயர்த்தினோம். அதையும்விட மோசமான காரியங்களையும் செய்தோம்."

"ஆம். அதைக் குறித்தும் கொஞ்சம் கேள்விப்பட்டிருக் கிறேன். அதுபற்றி நான் மனம் வருந்தியதும் உண்டு."

"உங்களுக்கு ஏற்பட்ட மனவருத்தத்தை நான் அறிய முடியும். ஆனால், அவ்வாறு வருத்தப்படுவதற்கு எந்தவிதமான காரணத்தையும் என்னால் காண முடியவில்லை. நாங்கள் பரோப கார நோக்கத்திற்காக எங்கள் தொழிலை நடத்திக்கொண் டிருக்க வில்லை. லாபத்திற்காகத் தொழில் நடத்துகிறோம். அதில் பங்கு போட்டிருப்பவர்களையும் நாங்கள் திருப்தி செய்ய வேண்டும். ஒரு பொருளின் விலை ஏறுவது, அப்பொருளுக்கு இருக்கும் கிராக் கியைப் பொறுத்தது. தேவைக்கும் சரக்கு விற்பனைக்கும் உள்ள சம்பந்தத்தைப்பற்றிய விதியை யார் தடுத்துவிட முடியும்? சுதேசித் துணிகளின் தேவையை அதிகரிப்பதனால் அத் துணி களின் விலை ஏறித்தான் தீரும் என்பதை வங்காளிகள் அறிந்தே இருக்க வேண்டும்."

நான் குறுக்கிட்டுக் கூறியதாவது : "என்னைப்போன்றே வங் காளிகளும் பிறரை எளிதில் நம்பிவிடும் சுபாவமுள்ளவர்களாக இருக்கிறார்கள். ஆலை முதலாளிகள், இவ்வளவு படுமோசமான சுயநலக்காரர்களாகவும் தேசாபிமானம் இல்லாதவர்களாகவும் இருந்துவிட மாட்டார்கள் என்று பரிபூரணமாக அவர்கள் நம்பி விட்டார்கள். தாய்நாட்டிற்கு நெருக்கடியான நிலைமை நேர்ந் துள்ள சமயத்தில் ஆலை முதலாளிகள், அவர்கள் செய்துவிட்ட தைப்போன்று, அந்நிய நாட்டுத் துணியைச் சுதேசித் துணி என்று மோசடியாக விற்றுவிடும் அளவுக்குப் போய்த் துரோகம் செய்துவிடுவார்கள் என்று அவர்கள் எதிர்பார்க்கவில்லை."

"பிறரை எளிதில் நம்பிவிடும் சுபாவமுள்ளவர்கள் நீங்கள் என்பது எனக்குத் தெரியும். அதனால்தான் என்னிடம் வரும்படி உங்களுக்குக் கஷ்டத்தையும் கொடுத்தேன். கபடம் இல்லாதவர் களான வங்காளிகள் செய்துவிட்ட அதே தவறை நீங்களும் செய்துவிட வேண்டாம் என்று உங்களை எச்சரிக்கை செய்யவே இங்கே வரும்படி செய்தேன்" என்றார், அவர்.

இவ்வாறு கூறிவிட்டு, பக்கத்தில் நின்றுகொண்டிருந்த தமது குமாஸ்தாவை அழைத்து, தமது ஆலையில் தயாராகும் துணிகளின்

மாதிரிகளைக் கொண்டுவரும்படி கூறினார். அதைச் சுட்டிக் காட்டி அவர் என்னிடம் கூறியதாவது: "இதைப் பாருங்கள். எங்கள் ஆலையில் இப்பொழுது கடைசியாகத் தயாரிக்கப்பட்டிருக்கும் துணியின் மாதிரி இது. இதற்குக் கிராக்கி ஏராளமாக இருந்துவருகிறது. வீணாகப் போகும் கழிவிலிருந்து இதைத் தயாரிக்கிறோம். ஆகையால், இயற்கையாகவே இது மலிவானது. வடக்கே ஹிமாலயப் பள்ளத்தாக்குகள் வரையில் இதை அனுப்பிக்கொண் டிருக்கிறோம். நாடெங்கும் எல்லா இடங்களிலுமே-உங்கள் குரலும், ஆட்களும் போகவேமுடியாத இடங்களிலும்கூட-எங்களுக்கு ஏஜெண்டுகள் இருக்கிறார்கள். ஆகவே, எங்களுக்குப் புதிதாக, அதிகப்படியான ஏஜெண்டுகள் தேவை இல்லை என்பதை நீங்கள் காணலாம். அதோடு, இந்தியாவில் இதன் தேவைக்குப் போதுமான அளவு துணி உற்பத்தியாகவில்லை என்பதையும் நீங்கள் அறிய வேண்டும். ஆகவே, சுதேசி இயக்கம், இங்கே துணி உற்பத்தி அதிகமாவதையே பெரிதும் பொறுத்திருக்கிறது. நாங்கள் உற்பத்தி செய்வதைப் போதிய அளவு அதிகரித்து, அவசியமாகும் அளவுக்கு அதன் தரத்தையும் எப்பொழுது அபிவிருத்தி செய்துவிடுகிறோமோ அப்பொழுதே அந்நியத் துணி இறக்குமதி, தானே நின்று போய்விடும். ஆகையால், நான் உங்களுக்குக் கூறும் யோசனை என்னவென்றால், நீங்கள் இப்பொழுது நடத்திவரும் முறையில் உங்கள் கிளர்ச்சியை நடத்திவர வேண்டாம்; ஆனால், புதிதாக ஆலைகளை அமைப்பதில் உங்கள் கவனத்தைச் செலுத்துங்கள் என்பதே. இப்பொழுது நமக்குத் தேவையெல்லாம் உற்பத்தியை அதிகப் படுத்த வேண்டியதே யன்றி எங்கள் சரக்குகளுக்குத் தேவையை அதிகப்படுத்தப் பிரசாரம் செய்வதன்று."

"அப்படியானால், நீங்கள் குறிப்பிடும் இதே காரியத்திலேயே இப்பொழுதே நான் ஈடுபட் டிருக்கிறேனென்றால், என் முயற்சியை நீங்கள் வாழ்த்துவீர்களல்லவா?" என்று கேட்டேன்.

கொஞ்சம் திகைத்துப் போய், "அது எப்படி முடியும்?" என்றார், அவர். "ஆனால், புதிய ஆலைகளை அமைப்பதைக் குறித்து நீங்கள் எண்ணிக்கொண் டிருக்கலாம். அப்படியானால், நிச்சயமாக உங்களைப் பாராட்ட வேண்டியதே" என்றார்.

"நான் இப்பொழுது செய்துகொண் டிருப்பது அதுவல்ல. ஆனால், கைராட்டினத்திற்குப் புத்துயிர் அளிப்பதில் நான் இப்பொழுது ஈடுபட்டிருக்கிறேன்" என்று அவருக்கு விளக்கிச் சொன்னேன்.

இன்னும் குழப்பமடைந்தவராகவே அவர், "அது என்ன விஷயம்?" என்று என்னைக் கேட்டார். கைராட்டினத்தைப் பற்றிய விவரங்களையும், அதைக் கண்டுபிடிப்பதற்காக வெகு காலம் தேடியலைந்ததைப்பற்றியும் அவருக்குச் சொல்லி நான் மேலும் கூறியதாவது: "இவ் விஷயத்தில் என் அபிப்பிராயம் முற்றும் உங்கள் அபிப்பிராயமே யாகும். ஆலைகளின் ஏஜெண்டாகவே நானும் ஆகிவிடுவதில் எந்த விதமான பயனும் இல்லை.

அப்படி ஆகிவிடுவதனல் நாட்டிற்கு நன்மையைவிடத் தீமையே அதிகமாகும். நம் மில் துணிகளை வாங்குகிறவர்கள் இன்னும் வெகுகாலம் வரையில் குறையவே மாட்டார்கள். ஆகையால், கையினல் நூற்ற துணி உற்பத்திக்கு ஏற்பாடு செய்து, அவ்வி தம் தயாரான கதர், விற்பனையாகும்படி பார்ப்பதே என் வேலை யாக இருக்க வேண்டும், இருந்தும் வருகிறது. எனவே, கதர் உற்பத்தியிலேயே என் முழுக் கவனத்தையும் செலுத்தி வருகி றேன். அந்த வகையான சுதேசியத்திலேயே நான் அதிக நம் பிக்கை கொண்டிருக்கிறேன். ஏனெனில், அரைப் பட்டினி கிடந்து, போதிய வேலையும் இல்லாமல் இருக்கும் இந்தியப் பெண்களுக்கு இதன் மூலம் நான் வேலை கொடுக்க முடியும். இந் தப் பெண்களை நூல் நூற்கும்படி செய்து, அந்த நூலைக்கொண்டு நெய்த துணியை இந்திய மக்கள் உடுத்தும்படி செய்ய வேண் டும் என்பதே என் நோக்கம். இந்த இயக்கம் இப்பொழுது ஆரம்பக் கட்டத்திலேயே இருக்கிறது. ஆகையால் இந்த இயக்கம் எவ்வளவு தூரம் வெற்றி பெறும் என்பது எனக்குத் தெரியாது. என்ருலும், இதில் எனக்குப் பூரணமான நம்பிக்கை இருக்கிறது. எப்படியும் அதனல் எந்த விதமான தீமையும் விளைந்துவிடப் போவதில்லை. அதற்கு மாருக, நாட்டின் துணி உற்பத்தி நிலையை அது அதிகமாக்கும் அளவுக்கு—அந்த அளவு மிகக் குறைவானதாகவே இருந்தாலும், அந்த அளவுக்கு—அத ஞல் நிச்சயமான நன்மையே உண்டு. ஆகவே, நீங்கள் குறிப்பிட்ட தீமை எதுவும் என் இயக்கத்தில் கிடையாது என்பதை நீங்கள் அறிந்துகொள்ளலாம்.''

அதன் பேரில் அவர் கூறியதாவது: ''உங்கள் இயக்கத்தை நீங்கள் நடத்துவதற்கு நாட்டின் துணி உற்பத்தியை அதிகரிப் பதே நோக்கமென்ருல், அதற்கு விரோதமாக நான் எதுவும் சொல்லுவதற்கில்லை. ஆனல், யந்திர யுகமான இந்தக் காலத் தில் கைராட்டினம் முன்னேற முடியுமா என்ற விஷயம் வேறு இருக்கிறது. என்ருலும், நீங்கள் வெற்றி பெற வேண்டும் என்றே நான் விரும்புகிறேன்."

## 42

# அதன் அலை எழுச்சி

கதர் இயக்கம் அடைந்த அபிவிருத்தியைக் குறித்து விவரிப் பதற்கு மேலும் சில அத்தியாயங்களை எழுதிக்கொண்டிருக்கக் கூடாது. நான் பற்பல காரியங்களில் ஈடுபட் டிருந்திருக்கிறேன். அவை பொதுஜனங்களுக்கு நன்ருகத் தெரிந்த பிறகு அவற்றின் சரித்திரத்தைக் குறித்து இந்த அத்தியாயங்களில் நான் கூறிக் கொண்டிருப்பது இவற்றின் நோக்கத்திற்கே புறம்பானதாகும். நான் செய்யும் காரியங்கள் ஒவ்வொன்றையும் எழுதிக்கொண் டிருந்தால், அதற்கே தனி நூல் எழுதவேண்டியிருக்கும். அதை

முன்னிட்டே அம் முயற்சியை நான் செய்யக்கூடாது. என்னுடைய சத்திய சோதனையின் ஊடே சில விஷயங்கள், தாமே வந்தவைகளைப்போன்றே எனக்கு எப்படி வந்து சேர்ந்தன என்பதை விவரிப்பதுதான் இந்த அத்தியாயங்களை நான் எழுதுவதன் நோக்கம்.

ஆகவே, ஒத்துழையாமை இயக்கக் கதைக்கே திரும்புவோம். அலி சகோதரர்கள் ஆரம்பித்த பலம் பொருந்திய கிலாபத் கிளர்ச்சி தீவிரமாக நடந்துவந்த சமயத்தில், அகிம்சை விதியை ஒரு முஸ்லிம் எந்த அளவுக்கு அனுசரித்து நடக்க முடியும் என்ற விஷயத்தைக் குறித்து மௌலானா அப்துல் பாரி முதலிய உலாமாக்களுடன் நான் விரிவாக விவாதித்தேன். இஸ்லாம், தன்னைப் பின்பற்றுகிறவர்கள் அகிம்சையைக் கொள்கையாக அனுசரிப்பதை தடுக்கவில்லை என்றும், அக்கொள்கையை அனுசரிப்பதென்று அவர்கள் விரதம் கொண்டிருக்கும் போது அந்த விரதத்தை அவர்கள் நிறைவேற்றக் கடமைப்பட்டிருக்கிறார்கள் என்றும் முடிவாக எல்லோரும் ஒப்புக்கொண்டார்கள். கடைசியாகக் கிலாபத் மகாநாட்டில் ஒத்துழையாமைத் தீர்மானம் கொண்டுவரப்பட்டு, நீண்ட விவாதங்களுக்குப் பிறகு நிறைவேறியது. ஒரு சமயம் அலகாபாத் கூட்டத்தில் இந்த விஷயத்தின்மீது இரவெல்லாம் விவாதம் நடந்தது, எனக்கு இன்னும் நன்றாக நினைவிருக்கிறது. 'அகிம்சையோடுகூடிய ஒத்துழையாமை, காரிய சாத்தியமாகுமா?' என்பதில் காலஞ்சென்ற ஹக்கீம் சாகிபுவுக்கு ஆரம்பத்தில் சந்தேகம் இருந்தது. ஆனால், அவருடைய சந்தேகம் நீங்கிய பின்னர் அந்த இயக்கத்தில் அவர் முழு மனத்துடன் ஈடுபட்டார். அவர் உதவி, இயக்கத்திற்கு மதிப்பிடற்கரிய பலனை அளித்தது.

அதற்குக் கொஞ்ச காலத்திற்குப் பிறகு குஜராத் ராஜீய மகாநாட்டில் ஒத்துழையாமைத் தீர்மானத்தை நான் கொண்டுவந்தேன் அதை எதிர்த்தவர்கள், பூர்வாங்கமாக ஒரு ஆட்சேபத்தைக் கூறினார்கள். இதைப்பற்றிக் காங்கிரஸ் ஒரு முடிவு செய்வதற்கு முன்னால், இத் தீர்மானத்தை நிறைவேற்றுவதற்கு ஒரு மாகாண மகாநாட்டுக்குத் தகுதி கிடையாது என்பது அவர்களுடைய வாதம் இந்த வாதத்தை எதிர்த்த நான், பின்னேக்கிப் போகும் இயக்கம் சம்பந்தமாகத்தான் இந்தத் தடை பொருந்தும் என்றும், முன்னேக்கிப் போகும் விஷயத்தில், அதற்குப் போதிய நம்பிக்கையும் உறுதியும் நம்மிடம் இருக்குமானால், இத்தகைய தீர்மானம் செய்யத் தகுதி இருப்பதோடு அப்படிச் செய்வது அவைகளின் கடமை என்றும் கூறினேன். தாய் ஸ்தாபனத்தின் கௌரவத்தை அதிகரிப்பதற்குச் செய்யும் முயற்சியை, ஒருவர் அம் முயற்சியைத் தமது சொந்தப் பொறுப்பிலேயே செய்வாராயின், அதற்கு அனுமதி எதுவும் தேவையில்லை என்றும் வாதித்தேன். பின்னர் அந்த

யோசனையின் தன்மைமீது விவாதம் நடந்தது. விவாதத்தில் சிரத்தை முக்கியமாக இருந்ததெனினும், 'இனிய நியாயத்திற்கு' ஏற்ற சூழ்நிலையிலேயே விவாதம் இருந்தது. முடிவில் தீர்மானத் தின்மீது வாக்கெடுத்த போது அது மிக அதிக ஆதரவுடன் நிறைவேறியதாக அறிவிக்கப்பட்டது. தீர்மானம் வெற்றிகரமாக நிறைவேறியதற்கு ஸ்ரீ வல்லபபாய், ஸ்ரீ அப்பாஸ் தயாப்ஜி ஆகிய இருவரின் செல்வாக்கே முக்கியமான காரணமாகும். ஸ்ரீ அப்பாஸ் தயாப்ஜியே அம் மகாநாட்டின் தலைவர். அவருடைய ஆதரவு முழுவதும் ஒத்துழையாமைத் தீர்மானத்திற்குச் சாதகமாகவே இருந்தது.

இந்த விஷயத்தைக் குறித்து விவாதிப்பதற்காகக் கல்கத் தாவில் *1920* செப்டம்பரில் காங்கிரஸ் விசேஷ மகாநாட்டைக் கூட்டுவது என்று அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி தீர்மானித் தது. அம் மகாநாட்டிற்காகப் பெருமளவில் முன்னேற்பாடுக ளெல்லாம் நடந்தன. லாலா லஜபதிராயை* அம் மகாநாட்டிற்குத் தலைவராகத் தேர்ந்தெடுத்தனர். பம்பாயிலிருந்து காங்கிரஸ், கிலாபத் ஸ்பெஷல் ரெயில்கள் சென்றன. கல்கத்தாவில் பிரதி நிதிகளும், வேடிக்கை பார்க்க வந்தவர்களும் ஏராளமாகக் கூடி யிருந்தார்கள்.

மௌலானா ஷவுகத் அலி கேட்டுக் கொண்டதன் பேரில் ஒத் துழையாமைத் தீர்மானத்தின் நகலை நான் ரெயிலிலேயே தயாரித் தேன். அச்சமயம் வரையில் நான் தயாரித்த நகல்களில் 'பலாத் கார மற்ற' என்ற சொல்லை அநேகமாக நான் தவிர்த்து வந்தேன். ஆனால், என்னுடைய பிரசங்கங்களில் மாத்திரம் அதை அடிக்

---

* லாலா லஜபதிராய்-

"நின்னையவர் கனன்றிந் நாட்டு
மண்ணகத்தே வாழாது புறஞ்செய்தும்
யாங்களெலாம் மறக்கொ ணாதெம்
எண்ணகத்தே, லாஜபதி! இடையின்றி
நீவளர்தற் கென்செய் வாரே?"

எனப் பாரதியார் பாடிய லாலா லஜபதிராய் பாஞ்சாலத்தில் பிறந்து நாட்டு விடு தலைக்கு உழைத்து உயிர்நீத்தவர். 1888–ஆம் ஆண்டிலிருந்து காங்கிரஸில் பணி ஆற் றியவர். 1889–ஆம் ஆண்டு காங்கிரஸில், அந்த ஸ்தாபன ஆண்டு விழாக் கூட்டத்தில் அரை நாளாவது தொழில், கல்வி விஷயங்களை ஆராய வேண்டும் என்று வற்புறுத் தினார். 1907–இல் நாடு கடத்தப்பட்டார். 1907–ஆம் ஆண்டு சூரத்காங்கிரஸில் மிதவாதி களுக்கும் தீவிரவாதிகளுக்கும் தகராறு ஏற்பட்டபோது திலகர், லாலா லஜபதி ராயையே அக்ராசனராகப் பிரேரித்தார். முதல் யுத்த காலத்தில் அமெரிக்காவில் அஞ்ஞாதவாசம் செய்தார். 1920-ஆம் ஆண்டு கல்கத்தாவில் கூடிய விசேஷ காங் கிரசுக்குத் தலைமை தாங்கினார். ஆனால், ஒத்துழையாமை இயக்கத்தை எதிர்த்தார். சர்க்கார் இவரைக் கைது செய்யத் தவறவில்லை. சுயராஜ்யக் கட்சியை ஆதரித்து மத்திய சட்டசபைக்குச் சென்றாலும், இவர் சுதந்திரமாகவே பணியாற்றினார். சைமன் கமிஷன் பகிஷ்காரத்தில் ஈடுபட்டிருக்கையில் போலீஸ் தடியடிபட்டுச் சிறிது காலத்திற்கெல்லாம் உயிர் நீத்தார். ஆரிய சமாஜத்தைச் சேர்ந்தவர். கல்வி மூலம் சமூக சேவை செய்தார்.

கடி உபயோகித்து வந்தேன். இவ் விஷயத்தைக் குறித்து உப யோகிக்க வேண்டிய சொற்களை நான் அப்பொழுதுதான் சேகரித் துக்கொண்டு வந்தேன். முற்றும் முஸ்லிம்களையே கொண்ட கூட்டத்திற்குப் 'பலாத்காரமற்ற' என்பதற்குச் சரியான சமஸ் கிருதச் சொல்லை உபயோகிப்பதனால், நான் கூறுவதன் பொருளை அவர்கள் சரியானபடி அறிந்துகொள்ளும்படி செய்ய முடியாது என்பதைக் கண்டேன். ஆகையால், அதற்குப் பொருத்தமான வேறு ஒரு சொல்லை எனக்குக் கூறும்படி மௌலானா அபுல் கலாம் ஆஸாத்தைக்* கேட்டேன். 'பா அமன்' என்ற சொல்லை அவர் கூறினர். அதே போல, ஒத்துழையா மைக்கு 'தர்க்-ஈ-மவாலாத்' என்ற சொற்றொடரை உபயோகிக் கலாம் என்று அவர் யோசனை கூறினர்.

இவ்வாறு ஒத்துழையாமை என்பதற்குச் சரியான ஹிந்தி, குஜராத்தி, உருதுச் சொற்றொடர்களைக் கண்டுபிடிப்பதிலேயே நான் தீவிரமாக ஈடுபட்டிருந்த சமயத்தில், அந்த முக்கியமான காங்கிரஸ் மகாநாட்டிற்கு நான் ஒத்துழையாமைத் தீர்மானத்தைத் தயாரிக்க வேண்டி வந்தது. அசல் நகலில் 'பலாத்காரமற்ற' என்ற சொல்லை நான் விட்டுவிட்டேன். இவ்வாறு விட்டுப்போய் விட்டதைக் கவனிக்காமல், அதே வண்டியில் என்னுடன் பிர யாணம் செய்த மௌலானா ஷவுகத் அலியிடம் அந்த நகலைக் கொடுத்தேன். அன்றிரவு தவறைக் கண்டுகொண்டேன். அச்ச கத்திற்கு நகலை அனுப்புவதற்கு முன்னல், விட்டுப்போனதைச் சேர்த்துவிட வேண்டும் என்ற செய்தியுடன் காலையில் மகா தேவை அனுப்பினேன். ஆனல், விட்டுப்போனதைச் சேர்த்து விடுவதற்கு முன்னலேயே நகல் அச்சாகிவிட்டது என்று எனக்கு ஞாபகம். விஷயாலோசனைக் கமிட்டி, அன்று மாலையே

---

* மௌலானா ஆஸாத்: அராபிய நாட்டிலிருந்து இந்தியாவில் குடியேறிய முஸ்லிம் குடும்பத்தில் பிறந்தவர். இஸ்லாமிய வேத சாஸ்திர விற்பன்னர். இஸ்லாமிய உலகிலேயே, இஸ்லாம் மார்க்க போதனை செய்வதில் சிறப்புற்றவர் எனப் பெயர் பெற் றவர். எகிப்தில் எலேஜர் (Elezer) பல்கலைக் கழகத்தில் படித்துப் பட்டம் பெற்றவர். வைதிக முஸ்லிமாயினும் மத ஆவேசம் சிறிதும் இல்லாது தேசப் பணி புரிந்தார். இன்முகம், இன்சொல், இனிமையாகப் பேசிப் பழகுதல், நற்குணம், நற்பண்பு ஆகிய யாவற்றிற்கும் அவர் உறைவிடம் எனச் சொல்லலாம். ஆஸாத் ஆதியில் பலாத் காரத்தில் நம்பிக்கை உள்ளவராதலால், முதல் உலக யுத்த காலத்தில் 1915–1919 வரை நான்கு ஆண்டுகளுக்கு இவரை அரசாங்கத்தார் காவலில் வைத்திருந்தனர்,

ஒத்துழையாமை தொடங்கியதும் அதில் தீவிரப் பங்கு கொண்டார். 1921-இல் தேசபந்து தாஸுடன் சிறையில் இருந்தார். 1928-ஆம் ஆண்டு டில்லியில் கூடிய காங் கிரசுக்குத் தலைமை தாங்கினர். 1940–இல் ராம்காரில் கூடிய காங்கிரசுக்குத் தலைமை வகித்தார். பின்னர் போராட்டக் காலங்களில் காங்கிரசின் தலைவரா யிருந்தார். இப்படித் தலைமை வகிக்கையில் ஸ்ரீ ஜின்னுவுக்கு இவர் கொடுத்த தந்திக்கு அவர், 'காங்கிரஸின் கையாள்' என இவரை ஏளனம் செய்தார். நாட்டு நலம் ஒன்றே குறியாகப் பணியாற் றிய வெகு சிலரில் ஆஸாத் தலை சிறந்தவர். மகாத்மாவின் ஆப்த நண்பராயிருந்தது போலவே ஸ்ரீ ஜவாஹர்லால் நேருவுக்கும் வலது கரமாக இருந்தார். சர்தார் வல்லப பாய்க்குப் பிறகு மத்திய அரசாங்கத்தில் துணைப் பிரதமராகவும் கல்வி அமைச்சராகவும் சிறந்த பணி ஆற்றி 1958 ஆரம்பத்தில் காலமானர்.

கூட வேண்டும். ஆகையால், அச்சான நகல் பிரதிகளில் அவசி யமான திருத்தங்களை நான் செய்ய வேண்டியிருந்தது. என்னுடைய நகலுடன் நான் தயாராக இல்லாதிருந்திருந்தால், அதிகக் கஷ்டம் ஏற்பட்டிருக்கும் என்பதைப் பின்னல் கண்டு கொண்டேன்.

என்ருலும், என் நிலைமை உண்மையில் பரிதபிக்கத் தக்கதாகவே இருந்தது. இத் தீர்மானத்தை யார் ஆதரிப்பார்கள், யார் எதிர்ப்பார்கள் என்பது பற்றி எனக்கு ஒன்றுமே தெரியவில்லை. லாலா லஜபதிராய் எந்தவிதமான போக்குக் கொள்ளுவார் என்பதும் எனக்குத் தெரியாது. பிரசித்தி பெற்ற போராட்ட வீரர்கள், போருக்கு ஆயத்தமாகப் பெருங்கூட்டமாக வந்து, கல்கத்தாவில் கூடியிருப்பது ஒன்றையே நான் கண்டேன். டாக்டர் பெஸன்ட், பண்டித மாளவியாஜி, ஸ்ரீ விஜயராகவாச்சாரியார், பண்டித மோதிலால்ஜி, தேசபந்து ஆகியோர் அவர்களில் சிலர்.

பாஞ்சால, கிலாபத் அநியாயங்களுக்குப் பரிகாரம் தேடிக் கொள்ளும் நோக்கத்துடன் ஒத்துழையாமையை அனுசரிப்பது என்று மாத்திரமே என் தீர்மானத்தில் கண்டிருந்தது. ஆனல், அது ஸ்ரீ விஜயராகவாச்சாரியாருக்குத் திருப்தி யளிக்கவில்லை. "ஒத்துழையாமைப் பிரகடனம் செய்வதென்ருல், குறிப்பிட்ட அநீதிகளைப் பொறுத்ததாக மாத்திரம் அது ஏன் இருக்க வேண்டும்? நாடு அனுபவித்துக் கொண்டுவரும் பெரிய அநீதி, அதற்குச் சுயராஜ்யம் இல்லாதிருப்பதே யாகும். ஆகையால், ஒத்துழையாமைப் போராட்டம் அந்த அநீதியை எதிர்த்து நடத்துவதாகவே இருக்க வேண்டும்" என்று அவர் விவாதித்தார். தீர்மானத்தில் சுயராஜ்யக் கோரிக்கையையும் சேர்த்துவிட வேண்டும் என்று பண்டித மாளவியாஜியும் விரும்பினர். அதற்கு நான் உடனே சம்மதித்து, சுயராஜ்யக் கோரிக்கையையும் தீர்மானத்தில் சேர்த்தேன். தீர்மானம், நீண்ட, விரிவான, ஓரளவுக்குக் கடுமையான விவாதத்திற்குப் பிறகு நிறைவேறியது.

இந்த இயக்கத்தில் முதலில் சேர்ந்தவர் மோதிலால்ஜி. தீர்மானத்தின் பேரில் அவருடன் நான் நடத்திய இனிமையான விவாதம் இன்னும் எனக்கு நினைவிருக்கிறது. சொல்லமைப்பில் சில மாற்றங்களை அதில் செய்ய வேண்டும் என்று அவர் யோசனை கூறினர். அவ்வாறே நான் செய்தேன். தேசபந்துவையும் இந்த இயக்கத்தில் தாம் சேர்த்துவிடுவதாகச் சொன்னர். தேசபந்துவின் உள்ளம் தீர்மானத்திற்கு ஆதரவாகவே இருந்தது. ஆனல், வேலைத் திட்டத்தை நிறைவேற்றிவைக்கும் ஆற்றல் பொதுமக்களுக்கு இருக்குமா என்பதில் அவருக்குச் சந்தேகம் இருந்தது. நாகபுரி காங்கிரஸில்தான் அவரும் லாலாஜியும் அதை முழு மனத்துடன் ஏற்றுக்கொண்டார்கள்.

லோகமான்யர் இல்லாததன் நஷ்டத்தைக் குறித்து விசேஷ மகாநாட்டில் நான் மிகுந்த மன வருத்தத்துடன் உணர்ந்தேன். லோகமான்யர் அன்று உயிரோடிருந்திருப்பாராயின், அச் சமயம் அவர் நிச்சயம் எனக்கு ஆசி கூறியிருப்பார் என்ற திடமான நம்பிக்கை எனக்கு இன்றும் இருக்கிறது. அது வேறுவிதமாக இருந்து, ஒத்துழையாமை இயக்கத்தை அவர் எதிர்த்திருந்தாலும், அவருடைய எதிர்ப்பை எனக்கு ஒரு பாக்கியமாகவும், போதனையாகவுமே நான் மதித்திருப்பேன். எங்களிடையே எப்பொழுதும் அபிப்பிராய பேதம் இருந்திருக்கிறது. ஆனால், அது மனக்கசப்பை உண்டாக்கியதே இல்லை. எங்களுக்குள் இருந்த பந்தம் மிகவும் நெருக்கமானது என்று நம்பிக்கொள்ளுவதற்கு அவர் எப்பொழுதும் என்னை அனுமதித்து வந்தார். இதை நான் எழுதும்போதுகூட, அவர் மரணத்தைப் பற்றிய சந்தர்ப்பங்கள் என் கண் முன்பு மிகத் தெளிவாக நிற்கின்றன. அப்பொழுது நடுநிசி நேரம். என்னுடன் அப்பொழுது வேலை செய்து வந்த பட்டவர்த்தன், அவர் மரணமடைந்தார் என்ற செய்தியை டெலிபோன் மூலம் எனக்கு அறிவித்தார். அச்சமயம் என்னுடைய சகாக்கள் என்னைச் சூழ்ந்து இருந்தனர். அச் செய்தியைக் கேட்ட மாத்திரத்திலேயே, "என் மிகப் பெரிய துணைவர் போய்விட்டார்'' என்பதை என் உதடுகள் தாமே ஒலித்தன.* அப்பொழுது ஒத்துழையாமை இயக்கம் முழு வேகத்துடன் நடந்துகொண்டிருந்தது. அவரிடமிருந்து ஆதரவையும் உற்சாகமூட்டும் சொல்லையும் நான் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். ஒத்துழையாமையின் முடிவான கட்டத்தைக் குறித்து அவருடைய போக்கு எவ்விதம் இருக்கும் என்பது, எப்பொழுதும் வெறும் ஊகமாகவும், அதைப் பற்றிச் சிந்திப்பது

---

* லோகமான்ய திலகர் காலமானர் எனக் கேள்விப்பட்டதும் காந்திஜிக்கு இருந்த மனநிலையையும், அவர் கூறியதையும் காகா காலேல்கர் தமது நூலில் பின்வருமாறு விவரிக்கிறார் :

''உடனே அவர் ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கிவிட்டார். அன்று இரவு முழுவதும் கட்டிலில் அமர்ந்தவாறே சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். அவர் அருகில் ஒரு விளக்கு எரிந்துகொண்டிருக்க விட்டுவிட்டுத் தீப ஒளியை நோக்கியவாறே யோசனை செய்துகொண்டிருந்தார்.

"மகாதேவ் இரவு பிற்பகுதியில் எழுந்திருக்கையில் பாபு அசையாமல் அமர்ந்து ஆழ்ந்த யோசனையில் இருப்பதைக் கண்டார். உடனே அவர் பாபுவை அணுகினர். பாபு தாமாகவே பேசினர் : 'சங்கடம் ஏற்படும் காலத்தில் இனி நான் யாரை யோசனை கேட்பேன்? மகாராஷ்டிரத்தின் உதவி தேவைப்படும்போது நான் இனி யாரை நாடி ஆதரவைப் பெறுவேன்?' என்றார். சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டு மீண்டும் கூறினர் : ''இதுவரையில் நான் சுயராஜ்யத்திற்காக உழைத்து வந்திருக்கிறேன். ஆனல், 'சுயராஜ்யம்' என்னும் பதத்தை உச்சரிக்கத் தயங்கியே வந்திருக்கிறேன். இனி லோகமான்யரின் சுயராஜ்யக் கோஷம் தழைத்தோங்கச் செய்ய நான் கடமைப்பட்டிருக்கிறேன். இதில் ஒய்வதற்கு இடமளிக்கலாகாது. இந்தத் தீரம் மிக்க வீரர் உயர்த்திய சுயராஜ்யக் கொடியை ஒரு நிமிஷங்கூடத் தாழ்த்தலாகாது.'

"அன்று நடந்த லோகமான்யரின் பிரேத ஊர்வலத்தில் காந்திஜி கலந்துகொண்டு அவர் சடலத்தைச் சுமந்தும் சென்றார்.''

வீண் வேலையாகவுமே இருக்க முடியும். ஆனால், அவருடைய மரணத்தால் ஏற்பட்ட ஈடு செய்ய முடியாத நஷ்டத்தைக் கல்கத்தாவில் கூடியிருந்த ஒவ்வொருவரும் அதிகமாக உணர்ந்து வருந்தினார்கள் என்பது மாத்திரம் நிச்சயம். நாட்டின் சரித்திரத்தில் ஏற்பட்டிருந்த அந்த நெருக்கடியான சமயத்தில் அவருடைய ஆலோசனைகள் கிடைக்காது போனதைக் குறித்து ஒவ்வொருவரும் வருந்தினார்கள்.

## 43

# நாகபுரியில்

காங்கிரஸின் கல்கத்தா விசேஷ மகாநாட்டில் நிறைவேறிய தீர்மானங்கள், நாகபுரி வருட மகாநாட்டில் ஊர்ஜிதம் செய்யப் பட வேண்டும். கல்கத்தாவைப் போலவே இங்கும் பிரதிநிதிகளும், வேடிக்கை பார்ப்போரும் ஏராளமாக வந்திருந்தார்கள். அப்பொழுதும் காங்கிரஸுக்கு வரும் பிரதிநிதிகளின் தொகை நிர்ணயிக்கப் படவில்லை. இதனால், அம்மகாநாட்டில் பிரதிநிதிகளின் தொகை பதினான்கு ஆயிரத்திற்கு வந்துவிட்டது என்பதே என் ஞாபகம். பள்ளிக்கூடப் பகிஷ்காரத்தைப்பற்றிய பகுதியில் சிறு திருத்தம் செய்ய வேண்டும் என்று லாலாஜி வற்புறுத்தினர். அதை நான் ஏற்றுக்கொண்டேன். அதேபோல் தேசபந்துவின் யோசனையின் பேரில் மற்றும் சில திருத்தங்களும் செய்யப்பட்டன. பிறகு ஒத்துழையாமைத் தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது.

காங்கிரஸ் அமைப்பு விதிகளின் மாற்றத்தைப்பற்றிய தீர்மானமும், காங்கிரஸின் இந்த மகாநாட்டிலேயே விவாதத்திற்கு வர இருந்தது. உப கமிட்டி தயாரித்திருந்த நகல், கல்கத்தா விசேஷ மகாநாட்டில் சமர்ப்பிக்கப்பட்டது. ஆகையால், விஷயம் முழுதும் அறிவிக்கப்பட்டு விவாதிக்கப்பட்டிருந்தது. முடிவாகத் தீர்மானிப்பதற்காக அது நாகபுரி மகாநாட்டின் முன்பு வந்தது. அம் மகாநாட்டிற்கு ஸ்ரீ ஸி. விஜயராகவாச்சாரியார் தலைவர். ஒரே ஒரு முக்கியமான மாற்றத்துடன் விஷய ஆலோசனைக் கமிட்டி, நகலை நிறைவேற்றியது. பிரதிநிதிகளின் தொகை 1,500 ஆக இருப்பது என்று நகலில் இருந்தது என்று நினைக்கிறேன். அந்தத் தொகைக்குப் பதிலாக அந்த இடத்தில் 6,000 என்பதை விஷயாலோசனைக் கமிட்டி சேர்த்தது. இவ்விதம் இத் தொகையை அதிகரித்தது, அவசரப்பட்டு முடிவுக்கு வந்ததன் பலன் என்பது என் முடிவு. இத்தனை வருடங்களின் அனுபவமும் என்னுடைய அக் கருத்தையே ஊர்ஜிதம் செய்கிறது. காரியங்களைச் சரியாக நடத்துவதற்குப் பிரதிநிதிகளின் தொகை அதிகமாக இருப்பது எந்த வகையிலும் உதவியாக இருக்கும் என்றோ, ஜனநாயகக் கொள்கையை அது பாதுகாக்கிறது என்றோ நம்புவது வெறும் மயக்கம் என்பதே

என் கருத்து. எப்படியும் தேர்ந்தெடுக்கப்பட்டுவிடும் ஆறுயிரம் பொறுப்பற்ற ஆசாமிகளைவிட, மக்களின் நன்மையில் தீவிர ஆர்வம் கொண்ட, விசாலமான மனப்போக்குள்ள, உண்மையான வர்களான ஆயிரத்து ஐந்நூறு பிரதிநிதிகளே ஜனநாயகத்திற்கு என்றும் சிறந்த பாதுகாப்பாவார்கள். ஜனநாயகத்தைப் பாது காக்க வேண்டுமானல், மக்கள் தீவிரமான சுதந்திர உணர்ச்சி யும், சுயமதிப்பும், ஒற்றுமை உணர்ச்சியும் உள்ளவர்களாக இருக்க வேண்டும். நல்லவர்களாகவும், உண்மையாளர்களாக வும் இருப்பவர்களையே தங்கள் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்றும் அவர்கள் வற்புறுத்த வேண்டும். பிரதிநிதி களின் தொகை விஷயத்தில் விஷயாலோசனைக் கமிட்டி ஏதோ மனக்கிலேசம் அடைந்திருந்ததால், ஆறுயிரம் என்ற எண்ணுக்கு மேலேயும் போக அது விரும்பியிருக்கக்கூடும். ஆகையால், ஆறுயிரம் என்ற எல்லை சமரசத்தின் பேரில் திட்டம் செய்யப் பட்டது.

காங்கிரஸின் லட்சியத்தைப்பற்றிய விஷயத்தில் பலமான விவாதம் நடந்தது. நான் சமர்ப்பித்திருந்த அமைப்பு விதிகளில், 'சாத்தியமானல் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்குள் அடங்கிய சுய ராஜ்யத்தை அடைவது, அவசியமானல் அதற்குள் அடங்காத சுயராஜ்யத்தைப் பெறுவது என்பதே காங்கிரஸின் லட்சியம்' என்று இருந்தது. காங்கிரஸிலிருந்த ஒரு கோஷ்டியினர் 'பிரிட் டிஷ் சாம்ராஜ்யத்திற்குள் சுதந்திரம் அடைவது என்பது மாத்தி ரம்' என்று காங்கிரஸின் லட்சியத்தைக் கட்டுப்படுத்திவிட வேண்டும் என்று விரும்பினர்கள். இக் கட்சியினரின் கருத்தைப் பண்டித மாளவியாஜியும் ஜின்னுவும் எடுத்துக் கூறினர். ஆனல், தங்களுக்கு ஆதரவாக அதிக வாக்குகளைப் பெற அவர்களால் முடியவில்லை. அதோடு, 'சுதந்திரத்தை அடைய அனுசரிக்கும் முறை, சமாதானத்தோடு கூடியதாகவும், நியாயமானதாகவும் இருக்க வேண்டும்' என்றும் அமைப்பு விதிகளின் நகல் கூறியது. இந்த நிபந்தனைக்கும் எதிர்ப்பு இருந்தது. அனுசரிக்கும் முறை யைப்பற்றி எந்தவிதமான தடையும் இருக்கக் கூடாது என்று, எதிர்த்தவர்கள் கூறினர்கள். இதைக் குறித்துத் தெளிவாக மனம் விட்டு விவாதித்த பிறகு, அசல் நகலில் கூறி யிருப்பதைக் காங்கிரஸ் அங்கீகரித்தது. இந்த அமைப்பு விதிகளை மக்கள் யோக்கியமாகவும், புத்திசாலித்தனத்தோடும், உணர்ச்சியோடும் நிறைவேற்றியிருந்தால், பொதுமக்கள் அறிவைப் பெறுவதற்கு அதுவே சக்தி வாய்ந்த ஆயுதமாக இருந்திருக்கும் என்பது என் அபிப்பிராயம். அதோடு, அதை நிறைவேற்றி வைப்பதற்குச் செய்யும் காரியங்களே நமக்குச் சுயராஜ்யத்தையும் கொண்டுவந் திருக்கும். ஆனல், இந்தக் கருத்தைக் குறித்து இங்கே விவாதிப் பது பொருத்தமற்றதாகும்.

இந்தக் காங்கிரஸ் மகாநாட்டில் ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை, தீண்டாமை ஒழிப்பு, கதர் ஆகியவைகளைப்பற்றிய தீர்மானங் களும் நிறைவேறின. அது முதற்கொண்டு காங்கிரஸின் ஹிந்து

உறுப்பினர்கள், ஹிந்து மதத்திலிருந்து தீண்டாமை என்னும் சாபக்கேட்டை ஒழித்துக் கட்டும் பொறுப்பை மேற்கொண்டிருக்கின்றனர். கதரின் மூலம், இந்தியாவிலிருக்கும் எலும்புக் கூடுகளான ஏழை மக்களுடன் உயிரான உறவுப் பந்தத்தையும் காங்கிரஸ் கொண்டுவிட்டது. கிலாபத்திற்காக ஒத்துழையாமைப் போராட்டத்தைக் காங்கிரஸ் மேற்கொண்டது, ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமைக்காகக் காங்கிரஸ் அதனளவில் செய்த பெரிய பிரத்தியட்ச முயற்சியாகும்.

# 44

# விடைபெற்றுக் கொள்ளுகிறேன்

இந்த அத்தியாயங்களை ஒரு முடிவுக்குக் கொண்டுவந்து விடவேண்டிய சமயம் இப்பொழுது வந்திருக்கிறது. இந்தக் கட்டத்திற்கு மேல் என்னுடைய வாழ்க்கை மிகவும் பகிரங்கமாக ஆகிவிட்டது. அதில் பொதுமக்களுக்குத் தெரியாதது எதுவுமே இல்லை. மேலும், *1921*-ஆம் ஆண்டிலிருந்து காங்கிரஸ் தலைவர்களுடன் அதிகமாக நெருங்கி யிருந்து வேலை செய்து வந்திருக்கிறேன். ஆகையால், அவர்களுடன் எனக்குள்ள உறவைப்பற்றிக் குறிப்பிடாமல் என் வாழ்க்கைச் சம்பவங்களில் எதையுமே அக்காலத்திற்குப் பிறகு நான் விவரிக்கவே முடியாது. சிரத்தானந்தஜி, தேசபந்து, ஹக்கீம் சாகிப், லாலாஜி ஆகியவர்கள் காலஞ் சென்றுவிட்டார்கள். என்றாலும், பிரபலமான காங்கிரஸ் தலைவர்கள் பலர் இன்னும் வாழ்ந்து, நம்முடன் இருந்து வேலை செய்துவரும் பாக்கியத்தை நாம் பெற்றிருக்கிறோம். நான் மேலே விவரித்துள்ளபடி, காங்கிரஸில் பெரும் மாறுதல்கள் ஏற்பட்ட பின்னரும் காங்கிரஸின் சரித்திரம் இன்னும் நிகழ்ந்து கொண்டு தான் வருகிறது. மேலும், சென்ற ஏழு ஆண்டுகளாக நான் செய்துவந்திருக்கும் முக்கியமான சோதனைகளையெல்லாம் காங்கிரஸின் மூலமாகவே செய்து வந்திருக்கிறேன். ஆகையால், மேற்கொண்டும் நான் செய்த சோதனைகளைப்பற்றி நான் கூறிக் கொண்டு போவதாயின், தலைவர்களுடன் எனக்குள்ள தொடர்பைப்பற்றிச் சொல்லுவதைத் தவிர்க்கவே முடியாது. நியாய உணர்ச்சியை முன்னிட்டேனும், இப்போதைக்காவது, அதை நான் செய்ய முடியாது. கடைசியாக, இப்பொழுது நான் செய்து வரும் சோதனைகளைப்பற்றிய முடிவுகள், திட்டமானவை என்று இன்னும் சொல்லிவிடுவதற்கில்லை. ஆகையால், இந்த வரலாற்றை இந்த இடத்தோடு முடித்துவிடுவதே என்னுடைய தெளிவான கடமை என்பதைக் காண்கிறேன். உண்மையில் என் பேனாவும், இயற்கையாகவே அதற்கு மேல் இதை எழுதிக் கொண்டு போகவும் மறுக்கிறது.

வாசகரிடமிருந்து இப்பொழுது நான் விடை பெற்றுக்கொள்ளுவதில் எனக்கு மன வருத்தம் இல்லாமலில்லை. என்னுடைய சத்திய சோதனைகள் அதிக மதிப்பு வாய்ந்தவை என்று நான்

கருதுகிறேன். அந்த மதிப்பு நன்ருகப் புலப்படும்படி நான் செய்திருக்கிறேனு என்பதை நான் அறியேன். உள்ளதை உள்ள படியே எடுத்துக் கூறுவதற்கு என்னுல் இயன்றவரை சிரமம் எடுத்துக்கொண் டிருக்கிறேன் என்று மாத்திரமே நான் கூற முடியும். எந்த விதமாக நான் சத்தியத்தைக் கண்டுகொண் டேனே அதே விதமாக அதை விவரிப்பதே என் இடையருத முயற்சியாக இருந்துவந்திருக்கிறது. இந்தப் பயிற்சி, அழித்து விடமுடியாத மனச் சாந்தியை எனக்கு அளித்திருக்கிறது. ஏனெனில், சந்தேகம் உள்ளவர்களுக்கும் சத்தியத்திலும் அகிம்சையிலும் அது நம்பிக்கையை உண்டாக்கும் என்று நான் ஆசையோடு நம்பிவந்திருக்கிறேன்.

சத்தியத்தைத் தவிர வேறு கடவுள் இல்லை என்பதை, ஒரே மாதிரியான என்னுடைய அனுபவங்கள் எனக்கு உறுதியாக உணர்த்தியிருக்கின்றன. சத்தியத்தைத் தரிசிப்பதற்குள்ள ஒரே மார்க்கம் அகிம்சைதான் என்பதை இந்த அத்தியாயங்களின் ஒவ்வொரு பக்கமும் வாசகருக்கு அறிவுறுத்தவில்லை யாயின், இந்த அத்தியாயங்களை எழுதுவதற்கு நான் எடுத்துக்கொண்ட சிரமமெல்லாம் வீணுயின என்றே கொள்ளுவேன். இந்த வகையில் என் முயற்சிகளெல்லாம் பலனற்றவையே என்று நிரூபிக்கப் பட்டுவிட்டாலும், அதன் குற்றம் என்னுடையதே யன்றி அம் மகத்தான கொள்கையினுடையது அல்ல என்பதை வாசகர்கள் அறிய வேண்டும். அகிம்சையை நாடுவதில் எவ்வளவுதான் உள்ளன்போடு நான் முயற்சிகள் செய்துவந்திருந்தாலும், அவை இன்னும் குறைபாடுடையவைகளாகவும், போதுமானவை அல்லாதனவாகவுமே இருந்து வருகின்றன. ஆகையால், சத்தியத் தோற்றத்தை அவ்வப்போது ஒரு கண நேரம் கண்டுகொண்டது, சத்தியத்தின் விவரிக்கவொண்ணுத பெருஞ் ஜோதியை நான் தெரிந்துகொண்டு விட்டதாகவே ஆகாது. நாம் தினந்தோறும் கண்ணுல் பார்க்கும் சூரியனைவிட, கோடி மடங்கு அதிகப் பிரகாசமுடையது சத்தியத்தின் ஜோதி. உண்மையில் நான் கண்டிருப்பதெல்லாம், அந்த மகத்தான பரஞ்ஜோதியின் மிகச் சிறிய மங்கலான ஒளியையே யாகும். ஆனுல், என்னுடைய எல்லாச் சோதனைகளின் பலனுகவும் ஒன்றை மாத்திரம் நான் நிச்சயமாகக் கூற முடியும். அகிம்சையைப் பூரணமாக அடைந்தால் மாத்திரமே சத்தியத்தின் பூரணமான சொரூபத்தையும் தரிசிக்க முடியும்.

பிரபஞ்சம் அனைத்திலும் நிறைந்து நிற்பதான சத்தியசொருபத்தை நேருக்கு நேராக ஒருவர் தரிசிக்க வேண்டுமாயின், மிகத் தாழ்ந்த உயிரையும் தன்னைப்போலவே நேசிக்க முடிந்தவராக அவர் இருக்கவேண்டும். அந்த நிலையை அடைந்துவிட ஆசைப் படுகிறவர் யாரும், வாழ்க்கையின் எந்தத் துறையிலிருந்தும்விலகி நின்றுவிட முடியாது. அதனுலேயே, சத்தியத்தினிடம் நான் கொண்டிருக்கும் பக்தி, என்னை ராஜீயத் துறையில் இழுத்துவிட்

டிருக்கிறது. சமயத்துறைக்கும் ராஜீயத்திற்கும் எந்தவிதமான சம்பந்தமுமே இல்லை என்று கூறுவோர், சமயம் என்பது இன்ன தென்பதையே அறியாதவர்களாவர். இதைக் கொஞ்சமேனும் தயக்கமின்றி, ஆயினும் முழுப் பணிவுடன் கூறுவேன்.

தன்னைத் தானே தூய்மைப்படுத்திக்கொண்டு விடாமல், எல்லா உயிர்களிடத்திலும் தன்னை ஒன்றுபடுத்திக்கொள்ளுவது என்பது முடியாத காரியம். தம்மைத் தாம் தூய்மைப்படுத்திக் கொள்ளாமல் அகிம்சா தருமத்தை அனுசரிப்போமென்பது வெறும் கனவாகவே முடியும். மனத்தூய்மை இல்லாதார் என்றுமே கடவுளை அறிதல் இயலாது. ஆகையால், தம்மைத் தாமே தூய்மைப்படுத்திக்கொள்ளுவது என்பது, வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் தூய்மையடைவதாகும். தூய்மைப்படுத்திக்கொள்ளுவது என்பது, வெகு விரைவில் மற்றவர்களுக்கும் தொத்திக்கொள்ளும் தன்மையுடையதாகையால், ஒருவர் தம்மைத் தாமே தூய்மைப்படுத்திக் கொள்ளுவதனால், அவசியமாகத் தம்முடைய சுற்றுச் சார்பையும் தூய்மைப்படுத்திவிடுவதாகிறது.

ஆனால், ஆன்மத் தூய்மைக்கான மார்க்கம் மிகவும் கஷ்டமானதாகும். பூரணத் தூய்மையை ஒருவர் அடைவதற்கு, எண்ணத்திலும் சொல்லிலும் செயலிலும் காமக் குரோதங்களை அறவே நீக்கியவராக அவர் இருக்க வேண்டும். அன்பு-துவேஷம், விருப்பு-வெறுப்பு என்னும் எதிர்ப்புச் சுழல்களினின்று அவர் வெளிப்பட்டவராகவும் இருக்க வேண்டும். அம் மூவகைத் தூய்மையையும் அடைவதற்காக இடைவிடாது நான் முயற்சி செய்து கொண்டு வருகிறேனாயினும், அந்த மூன்று தூய்மைகளும் இன்னும் என்னுள் இல்லை என்பதை நான் அறிவேன். இதனாலேயே தான் இவ்வுலகத்தின் புகழுரைகளெல்லாம் எனக்கு இன்பம் தருவதில்லை; உண்மையில் அவைகளினால் எனக்கு அடிக்கடி மனக் கஷ்டமே உண்டாகிறது. ஆயுத பலத்தைக்கொண்டு உலகத்தையே வெற்றிகொண்டு விடுவதைவிட, உள்ளுக்குள் இருக்கும் காமக் குரோத உணர்ச்சிகளை வென்றுவிடுவது அதிகக் கஷ்டமாக எனக்குத் தோன்றுகிறது. நான் இந்தியாவுக்குத் திரும்பியதிலிருந்து, என் உள்ளத்தினுள்ளே மறைந்துகொண்டு தூங்கிக் கிடக்கும் ஆசாபாசங்களை நான் அனுபவித்து வருகிறேன். அவை இன்னும் என்னிடம் இருந்துகொண்டுதான் இருக்கின்றன என்பதைப்பற்றிய எண்ணம், நான் தோல்வியுறும்படி செய்துவிடவில்லையாயினும், அவமானப்படும்படி செய்கிறது. அனுபவங்களும் சோதனைகளுமே என்னை நிலைபெற்றிருக்கச் செய்து எனக்கு ஆனந்தத்தையும் அளிக்கின்றன. ஆனால், இன்னும் நான் கடக்க வேண்டிய மிகக் கஷ்டமான பாதை என் முன்னால் இருக்கிறது என்பதை அறிவேன், என்னை நான் திரணத்திலும் திரணமாக்கிக் கொண்டுவிட வேண்டும். தன்னுடன்

உயிர் வாழ்வன எல்லாவற்றிற்கும் தன்னைக் கடையனுகத் தானே விரும்பி ஒரு மனிதன் வைத்துக்கொண்டுவிடாத வரையில் அவனுக்கு விமோசனமே கிடையாது. அடக்கத்தின் மிகத் தொலைவான எல்லையே அகிம்சையாகும்.

தற்போதைக்கே யாயினும் வாசகரிடம் நான் விடைபெற்றுக் கொள்ளுகிறேன். மன, வாக்கு, காயங்களில் அகிம்சை வரத்தை எனக்கு அருளுமாறு சத்தியமேயான கடவுளைப் பிரார்த்திக்கிறேன். அந்தப் பிரார்த்தனையில் என்னுடன் கலந்துகொள்ளுமாறு வாசகரைக் கேட்டுக்கொண்டு விடை பெற்றுக்கொள்ளுகிறேன்.

முற்றிற்று.

# காந்திஜியின் வாழ்க்கைக் குறிப்புகள்

## 1920-ஆம் ஆண்டிலிருந்து

[காந்திஜி, தமது சுய சரிதையை 1920-ஆம் ஆண்டு வரையில்தான் எழுதியுள்ளார். அதிலிருந்து அவர் அமரத்துவம் அடைந்தது வரை, மொத்தம் 28 வருட காலத்தில், அவரது வாழ்க்கையிலும், நாட்டு வாழ்விலும் நிகழ்ந்த முக்கியமான சம்பவங்களை வருடவாரியாக எழுதி இங்கே சேர்த்திருக்கிறோம். சுய சரிதையைப் படித்து முடித்த வாசகர்கள், காந்திஜியின் வாழ்க்கை முழுவதையும் தெரிந்துகொள்ளுவதற்கு இந்தக் குறிப்புகள் உதவியாக இருக்கும் என்று நம்புகிறோம்.

—ஆசிரியர்]

**1920 (வயது51):**

வைசிராயிடம் கிலாபத் தூதுகோஷ்டி செல்லுவது சம்பந்தமாக, ஜனவரி 18-ஆம் தேதியன்று டில்லியில் காந்திஜியை மௌலானா அபுல்கலாம் ஆஸாத் முதன் முதலில் சந்தித்தார். அங்கே திலகரும் உடன் இருந்தார்.

ஜனவரி 19-இல் தூதுகோஷ்டிக்குக் காந்திஜி தலைமை தாங்கி, வைசிராயிடம் சென்றார்.

மே மாதத்தில் ஹண்டர் கமிட்டி அறிக்கை வெளியாயிற்று. காந்திஜி மிகவும் அதிர்ச்சியடைந்தார். சர்க்காரின் ஒத்துழைப்பாளராக இருந்தவர், ஒத்துழையாமைக்காரர் ஆனார்.

துருக்கிமீது விதிக்கப்பட்ட சமாதான நிபந்தனைகளும், வைசிராயின் செய்தியும் மே 14-இல் அறிவிக்கப்பட்டன. அவற்றைக் குறித்து மகாத்மா விடுத்த தமது செய்தியில், நிபந்தனைகள் ஏமாற்றம் அளிக்கக் கூடியவையே என்று ஒப்புக் கொண்டிருந்த

போதிலும், தவிர்க்க முடியாதவற்றை ஏற்றுக்கொள்ளுமாறு முஸ்லிம்களுக்கு யோசனை கூறியிருந்தார்.

மே 18-இல் காந்திஜி, மௌலானா ஷௌகத் அலி, அபுல் கலாம் ஆஸாத் ஆகியோர் அடங்கிய கிலாபத் உப கமிட்டி, ஒத்துழையாமைத் தீர்மானத்தை நிறைவேற்றியது. ஜூன் 30-இல் அலகாபாத்தில் கூடிய முஸ்லிம் மகாநாடு அதை ஊர்ஜிதம் செய்து அங்கீகரித்தது.

காந்திஜி, வைசிராய்க்கு எழுதிய பகிரங்கக் கடிதத்தில், "மேன்மை தங்கிய தங்கள் சர்க்காருக்கு அளித்துவரும் ஆதரவை வாபஸ் பெற்றுக்கொள்ளும்படி, என் முஸ்லிம் நண்பர்களுக்கு ஆலோசனை கூறியிருக்கிறேன். அவர்களோடு ஹிந்துக்கள் சேர வேண்டுமென்றும் ஆலோசனை கூறியிருக்கிறேன்" என்று தெரிவித்தார். ஒத்துழையாமையை, "முட்டாள்தனமானது, எல்லா திட்டங்களையும்விட மிகவும் முட்டாள்தனமான திட்டம் இது" என்று வைசிராய் வருணித்தார்.

ஒத்துழையாமை ஆரம்பமாவதற்கு முன்னதாக ஜூலை 31-ஆம் தேதியன்று உண்ணாவிரதமும், பிரார்த்தனையும் நடைபெறும் என்று காந்திஜி அறிவித்தார்.

ஒத்துழையாமைக்குச் சகலமும் பக்குவமாக இருந்தது. அ. இ. கா. க. தீர்மானத்தின்படி நடப்பதாகத் திலகர் வாக்களித்தார். ஆனால், ஜூலை 31-ஆம் தேதியன்று இரவு அவர் காலமாகிவிட்டார். "என் மிகப் பெரிய துணைவர் போய்விட்டார்" என்று துக்கித்தார் காந்திஜி.

ஆகஸ்டு முதல் தேதியன்று காந்திஜி, வைசிராய்க்குக் கடிதம் எழுதி, தம்முடைய கெய்ஸர்-இ-ஹிந்த் தங்கப் பதக்கத்தையும், போயர் யுத்தப் பதக்கத்தையும் திரும்பக் கொடுத்து விடுவதாகத் தெரிவித்தார். கவிஞர் ரவீந்திரநாத் டாகுர் தமது 'ஸர்' பட்டத்தை உதறினர்.

இதற்கிடையே முஸ்லிம்கள் ஆப்கானிஸ்தானத்துக்கு ஹிஜ்ராத் பண்ண (ஓடிப்போக) ஆரம்பித்தார்கள். ஆகஸ்டில் 18,000 மக்கள் போய்க்கொண்டிருந்தபோது, ஆப்கன் அதிகாரிகள் அவர்களுடைய பிரவேசத்தைத் தடுத்தார்கள்.

செப்டம்பர் 4-இலிருந்து 9 வரை கல்கத்தாவில் காங்கிரஸின் விசேஷ மகாநாடு நடைபெற்றது. காந்திஜி, தீர்மானத்தில் சுயராஜ்யக் கோரிக்கையைச் சேர்த்தார். இயக்கத்தில் முதலாவதாகச் சேர்ந்தவர் மோதிலால் நேரு. ஸ்ரீமதி அன்னி பெஸன்ட், பண்டித மாளவியா, சி. ஆர். தாஸ் ஆகியோரும் பிரசன்னமாக இருந்தனர். நீண்ட விவாதத்திற்குப் பிறகு ஒத்துழையாமைத் தீர்மானம் நிறைவேறியது.

அகில இந்தியத் திலகர் ஞாபகார்த்த நிதியும், சுயராஜ்ய நிதியும் சேர்க்க அக்டோபர் 2-இல் அ.இ.கா.க. தீர்மானித்தது.

ஸ்ரீ பியாரிலால் அக்டோபரில் காந்திஜியிடம் வந்து சேர்ந்தார்.

நவம்பரில் காந்திஜி, குஜராத் தேசீய சர்வகலாசாலையை ஸ்தாபித்தார்.

டிசம்பர் 26-இல் நாகபுரி காங்கிரஸ், லாலா லஜபதிராயும், சி. ஆர். தாஸும் கூறிய யோசனைகளின்பேரில், சிறு மாறுதல்களுடன் ஒத்துழையாமைத் தீர்மானத்தை ஏகமனதாக ஊர்ஜிதம் செய்தது. தீர்மானத்தை ஸ்ரீ தாஸ் கொண்டுவந்தார். லஜபதிராய் ஆமோதித்தார். காங்கிரஸுக்கு ஸ்ரீ சி. விஜயராகவாச்சாரியார் தலைமை வகித்தார்.

காந்திஜி தயாரித்த காங்கிரஸ் விதிகள் ஏற்றுக்கொள்ளப்பட்டன. காங்கிரஸின் குறிக்கோள் பற்றிய, "சாத்தியமானால் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்குள் அடங்கிய சுயராஜ்யத்தை அடைவது, அவசியமானால் அதற்குள் அடங்காத சுயராஜ்யத்தைப்பெறுவது" என்பதுபற்றிக் கடுமையான விவாதம் நடந்தது. பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்குள் அடங்கிய சுயராஜ்யம் என்பதை மாளவியாவும், ஜின்னாவும் விரும்பினார்கள். ஆனால் காங்கிரஸ், அசல் தீர்மானத்தை நிறைவேற்றியது. ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை, தீண்டாமை ஒழிப்பு, கதரைப் பரப்புதல் ஆகியவற்றிற்கான தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

கொன்னாட் கோமகனுக்கு மரியாதை செய்வதற்காக நடக்கும் வைபவங்களில் கலந்துகொள்ள வேண்டாம் என்று தேசத்துக்குக் கோரிக்கை விடப்பட்டது. ஐரிஷ் சுதந்திரத்துக்காக 65 நாட்கள் உண்ணாவிரதம் இருந்து இறந்த கார்க் மேயர் மாக்ஸ்வினியின் நினைவுக்கு இந்தியா மரியாதை செலுத்தியது.

இந்தச் சந்தர்ப்பத்திலிருந்து, காந்திஜியும் காங்கிரஸும் ஒரு பொருள் குறிக்கும் இரு சொற்கள் என்ற நிலை ஏற்பட்டது.

தினந்தோறும் அரைமணி நேரம் நூற்பதற்கு முன் சாப்பிடுவதில்லை என்று காந்திஜி பிரதிக்ஞை எடுத்துக் கொண்டார்.

## 1921 (வயது 52) :

ராவ் பகதூர்ப் பட்டத்தை உதறிய ஜம்னாலால் பஜாஜ், ஜனவரியில் திலகர் சுயராஜ்ய நிதிக்கு ஒரு லட்ச ரூபாய் நன்கொடை அளித்தார்.

ஜனவரி மாத மத்தியில் தேசபந்து தாஸ் விடுத்த கோரிக்கையின்பேரில், ஆயிரக்கணக்கான மாணவர்கள் பாடசாலைகளையும் கல்லூரிகளையும் விட்டு வெளியே வந்தனர்.

பம்பாயில் முதலாவது காதி பந்தரை ஜனவரியில் காந்திஜி ஆரம்பித்து வைத்தார்.

காந்திஜி, கல்கத்தாவுக்கு விஜயம் செய்து பிப்ரவரி 4-ஆம் தேதியன்று தேசீயக் கல்லூரியைத் திறந்து வைத்தார். தேசீயக் கல்விக்கு உத்வேகம் அளித்ததன் பலனாக நான்கு மாதங்களுக்குள் அலிகார் தேசீய முஸ்லிம் சர்வகலாசாலை, குஜராத் வித்யா பீடம், பீகார் வித்யாபீடம், காசி வித்யாபீடம், வங்காள தேசீய சர்வகலாசாலை, திலகர் மகாராஷ்டிர வித்யாபீடம் ஆகியவையும், சகல தரங்களையும் சேர்ந்த ஏராளமான தேசீயப் பாடசாலைகளும் ஆயிரக்கணக்கான மாணவர்களுடன் தொடங்கப் பெற்றன.

மார்ச்சு 31-இலும், ஏப்ரல் 1-இலும் பெஜவாடாவில் காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டம் நடந்தது. திலகர் சுயராஜ்ய நிதிக்கு ஒரு கோடி ரூபாய் வசூலிக்கவும், ஒரு கோடி காங்கிரஸ் அங்கத்தினர்களைச் சேர்க்கவும், 20 லட்சம் ராட்டைகளில் நூற்பு வேலை நடைபெறும்படி செய்யவும் தீர்மானித்தனர். கிராமப் பஞ்சாயத்துக்களை ஏற்படுத்துவதற்கும், குடியை ஒழிப்பதற்கும் தீர்மானங்கள் நிறைவேறின. வரிகொடா இயக்கத் திட்டம் காந்திஜியால் ஒத்திப்போடப்பட்டது. வெள்ளை, பச்சை, சிவப்பு ஆகிய மூன்று வர்ணங்களுடனும், நடுவே ராட்டையுடனும் கூடிய ஒரு கொடி வைத்துக்கொள்ளும் யோசனையைக் காந்திஜி தெரிவித்தார். இது வரையிலும் உத்தியோக பூர்வமாக இது ஏற்றுக்கொள்ளப் படவில்லை என்றாலும் நாடெங்கும் உபயோகிக்கப் பட்டு வந்தது.

அரசாங்கம், தடை உத்தரவுகளைப் போடத் தொடங்கியது. மைமன்சிங்கில் பிரவேசிக்கக்கூடாது என்று தாஸுக்கும், ஆர்ராவில் பிரவேசிக்கக்கூடாது என்று ராஜேந்திரப் பிரசாத்துக்கும், பெஷாவரில் பிரவேசிக்கக்கூடாது என்று லஜபதி ராய்க்கும் மார்ச்சு இரண்டாவது வாரவாக்கில் சர்க்கார் தடை உத்தரவு போட்டது.

மே மாதத்தில் அஸ்ஸாம் தேயிலைத் தோட்டங்களில் 12,000 தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்தார்கள். அவர்களைக் கூர்க்கர்கள் தாக்கினார்கள். கிழக்கு வங்காளத்தில் போக்குவரத்துச் சாதனத் தொழிலாளிகளின் வேலை நிறுத்தங்கள் நடைபெற்றன. அமைதி நிலவுவதற்குக் காந்திஜி தம்மால் முடிந்ததையெல்லாம் செய்தார். புதிய வைசிராய் லார்டு ரீடிங்கை சந்தித்து நீண்ட நேரம் பேசிக்கொண்டிருந்தார்.

ஜூலை 8-இல் கராச்சியில் அகில இந்தியக் கிலாபத் மகாநாடு கூடியது. மௌலானா முகமது அலி, தலைவர். காந்திஜி அங்கே இல்லை. டிசம்பர் மாதவாக்கில் கிலாபத் சம்பந்தமாகப் பிரிட்டிஷ் மனப்போக்கு மாறவில்லையென்றால், ராணுவத்தில் எந்த ஒரு முஸ்லிமும் பணிபுரியக் கூடாது என்று தீர்மானித்தனர். அத்துடன்

சட்ட மறுப்புத் தொடங்கப்படும் எனவும், இந்தியக் குடியரசு பிரகடனம் செய்யப்படும் எனவும் கூறப்பட்டது.

ஜூலை 28-இலிருந்து 30 வரை பம்பாயில் அ.இ.கா.க. கூடியது. திலகர் சுயராஜ்ய நிதிக்கு ஒரு கோடிக்குச் சுமார் பதினைந்து லட்ச ரூபாய் அதிகப்படியாகவே சேர்ந்துவிட்டது. நூற்கும் ராட்டைகளின் எண்ணிக்கை 20 லட்சத்துக்கு உயர்ந்து விட்டது. அந்நியத் துணியையும், வேல்ஸ் இளவரசர் விஜயம் சம்பந்தப்பட்ட வைபவங்களையும் பரிபூரணமாகப் பகிஷ்கரிக்க வேண்டும் என்று கமிட்டி சிபாரிசு செய்தது.

ஆகஸ்டில் அந்நியத் துணியை எரிப்பதைக் காந்திஜி ஆமோதித்தார். நாடெங்கும் அந்நியத் துணிகள் மலைபோலக் குவித்து எரிக்கப்பட்டன. ஆகஸ்டு முதல் தேதியன்று திலகருடைய மரணத்தின் ஞாபகார்த்தமாகப் பம்பாயில் காந்திஜியின் முன்னிலையில், அந்நியத் துணிகள் பிரம்மாண்டமாகக் குவித்து எரிக்கப்பட்டன. இதைக் கவி டாகுரும், தீனபந்து ஆண்டுரூஸும் ஆட்சேபித்தார்கள்.

சம்பவங்கள் வேகமாக நிகழலாயின. செப்டம்பரில் அலி சகோதரர்கள் கைது செய்யப்பட்டனர். நவம்பர் முதல் தேதியன்று அவர்களுக்கு இரண்டு வருடச் சிறைவாச தண்டனை விதிக்கப்பட்டது.

அக்டோபர் 5-இல் பம்பாயில் காரியக் கமிட்டி கூடி, "எந்த ஓர் இந்தியனும் எந்த ஒரு சர்க்கார் உத்தியோகத்துக்கும் போவதோ, அல்லது அதில் இருப்பதோ தேசத்தின் கௌரவத்துக்கும், தேசத்தின் நலனுக்கும் மாறானதாகும்" என்று பிரகடனம் செய்தது. மாகாணக் காங்கிரஸ் கமிட்டிகளின் அதிகாரத்தின்கீழ், தனிப்பட்டவர்கள் சட்ட மறுப்பில் ஈடுபட அதிகாரம் அளித்தது.

அக்டோபர் 16-ல் காந்திஜியும், பிரதான காங்கிரஸ் தலைவர்களும் கராச்சித் தீர்மானத்தில் கையெழுத்திட்டனர். இந்தியா முழுவதிலும் ஆயிரக்கணக்கான மேடைகளில் இத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

நவம்பர் 17-இல் வேல்ஸ் இளவரசர் இந்தியாவுக்கு வந்து சேர்ந்தார். வந்த தினத்தில், கலகமும் ரத்தக்களரியுமாக இருந்தது. இது நான்கு நாட்கள் நீடித்தது. மீண்டும் அமைதி நிலவுவதற்குக் காந்திஜி 5 நாட்கள்—நவம்பர் 19-இலிருந்து 23 வரை—உண்ணுவிரதம் இருந்தார்.

தேசபந்துதாஸ் கைது செய்யப்பட்டார். டிசம்பர் 25-இல் வேல்ஸ் இளவரசர் கல்கத்தாவுக்கு விஜயம் செய்ய ஏற்பாடாயிற்று. லஜபதிராய், மோதிலால் நேரு, ஜவாஹர்லால் நேரு ஆகியோர் சிறை வைக்கப்பட்டனர்.

காங்கிரஸுக்கும் சர்க்காருக்கும் இடையே பேச்சு வார்த்தைகள் ஆரம்பமாயின. காந்திஜியும் ஸ்ரீ தாஸும், எல்லா அரசியல் கைதிகளையும் விடுதலை செய்யவேண்டும் என்றனர். மறியல் செய்யும் உரிமையும் வேண்டும் என்றார் காந்திஜி. பேச்சு வார்த்தைகள் தோல்வியுற்றன. ஸ்ரீ ஜின்னாவும், பண்டித மாளவியாவும் இரு சாராருக்கும் இடையே தூது சென்றனர்.

கதரைப் பரப்புவதில் காந்திஜி மிகவும் தீவிரமாக ஈடுபட்டார். நாடெங்கும் சுற்றுப் பிரயாணம் செய்தார். நாட்டின் வட கோடியிலிருந்து தென்கோடிவரை அநேக பெரிய நகரங்களுக்கும் ஒதுக்குப் புறங்களில் இருக்கும் எண்ணற்ற குக்கிராமங்களுக்கும் விஜயம் செய்தார். சென்னைக்கு வந்து செப்டம்பர் 17-ஆம் தேதி ராமேசுவரம் எக்ஸ்பிரஸில் புறப்பட்டுத் தமிழ்நாட்டுச் சுற்றுப் பிரயாணத்தைத் தொடங்கினார். தரங்கம்பாடி, கடலூர், கும்பகோணம் முதலிய நகரங்களுக்கு விஜயம் செய்துவிட்டுத் திருச்சிக்குச் சென்றார். திருச்சியில் செப்டம்பர் 19-ம் தேதி காந்திஜி பேசும்போது, அந்நியத் துணி பகிஷ்காரத்தை வற்புறுத்திவிட்டு மேலும் கூறியதாவது:

"தங்களிடமுள்ள அந்நியத் துணிகளையெல்லாம் உடனடியாகத் தூர எறிந்துவிடுவது அநேகருக்குக் கஷ்டமாக இருக்கும் என்பதை நான் அறிவேன். தூர எறியப்பட்ட துணிகளுக்குப் பதிலாகப் போதிய கதர் வாங்குவதற்கு இயலாதவாறு கோடிக்கணக்கானவர்கள் ஏழைகளாக இருக்கிறார்கள். அவர்கள் அரையில் மட்டும் ஒரு துணியைச் சுற்றிக்கொள்ளட்டும். நம்முடைய சீதோஷ்ண நிலையில், வெப்பமான மாதங்களில் நம் உடம்பை நாம் மூடிக்கொள்ள வேண்டிய அவசியமே இல்லை. உடை விஷயத்தில் சங்கோஜம் வேண்டாம். ஆண்கள் உடம்பு முழுவதையும் மூடிக்கொள்ளுவது பண்பாட்டின் சின்னம் என்று இந்தியா ஒருபோதும் வற்புறுத்தியது கிடையாது. அதனால், மற்றவர்களுக்கு ஓர் உதாரணமாக இருக்கும்பொருட்டு, குறைந்த பட்சம் அக்டோபர் 31-ஆம் தேதி வரையிலாவது என்னுடைய தொப்பியையும், அரைக் கோட்டையும் களைந்துவிட்டு இடுப்பில் ஒரு துணியை மட்டும் சுற்றிக்கொள்ளுவேன். உடம்பைப் போர்த்துக்கொள்ளவேண்டிய அவசியம் ஏற்படும் சமயத்தில், மேலுக்கு ஒரு நீளத் துண்டை மட்டும் போட்டுக்கொள்ளப் போகிறேன். இந்த மாறுதலை நான் கைக்கொள்ளுவதற்குக் காரணம், நான் பின்பற்றத் தயாராக இல்லாத ஒன்றை மற்றவர்களுக்கு உபதேசிக்க நான் எப்போதும் தயங்கி வந்திருப்பதுதான். மேலும், நான் வழி காட்டுவதன்மூலம், அந்நிய ஆடைகளைத் தூர எறிந்துவிட்டு மாற்றுத் துணிகள் வாங்கச் சக்தியில்லாதவர்களின் நிலையைச் சுலபமாக்குவதில் மிகுந்த அக்கறை கொண்டிருக்கிறேன். இந்தத் துறவு எனக்கு ஒரு துக்க அடையாளம் என்ற முறையிலும் தேவைப்படுகிறது. வெறுந் தலையும், வெற்றுடம்பும் என்னுடைய ஊர்ப்பகுதியில் துக்கச் சின்னங்களாக இருந்து வருகின்றன. நாம் மேலும் மேலும் துயர நிலையில்

இருந்துவருகிறோம் என்பது எனக்குப் புலனாகி வருகிறது. வருட முடிவு நெருங்கிக் கொண்டிருக்கிறது. அப்படி இருந்தும் நாம் இன்னும் சுயராஜ்யம் இல்லாமல் இருக்கிறோம். என் சக ஊழியர்களும், அரைக் கோட்டையும், தொப்பியையும் தூர எறிந்து விடவேண்டும் என்று நான் எதிர்பார்க்கவில்லை என்பதைத் தெளிவாகக் கூற விரும்புகிறேன். தங்களுடைய சொந்தப் பணிக்கு அவசியம் என்று கருதினாலொழிய, அவர்கள் அவற்றை எறியவேண்டியதில்லை. ஒவ்வொரு மாகாணமும், ஒவ்வொரு ஜில்லாவும், அங்கே போதிய உழைப்பாளிகள் இருந்தால், தனக்குத் தேவையானவற்றை ஒரு மாதத்தில் போதிய அளவு உற்பத்தி செய்துவிடலாம் என்பது என் உறுதியான நம்பிக்கை. சுதேசியைத் தவிர, பிற நடவடிக்கைகள் அனைத்தையும் நிறுத்தி வைக்கும்படி நான் ஆலோசனை கூறுகிறேன்."

செப்டம்பர் 21-ஆம் தேதி அன்று காந்திஜி மதுரையில் இருந்தார். காலை 10-மணிக்கு அவருக்கு க்ஷவரம் செய்ய ஒரு க்ஷவரத் தொழிலாளி அழைத்துவரப் பட்டார். மறுநாள் காலையில் 60 மைல் தூரத்திலுள்ள காரைக்குடிக்குக் காந்திஜி காரில் பிரயாணம் செய்ய வேண்டும். அதன்படி மறுநாள் அதிகாலையில் எழுந்திருந்தார். தம் உடைகளை மாற்றிக்கொள்ளப் போனார். தம்முடைய தொப்பியையும், அரைக் கோட்டையும் ஒதுக்கித் தள்ளினர். ஒரு சிறு கதர்ப் பையைத் தயாரித்தார். தம்முடைய கோட்டுப் பையில் வைத்துக்கொள்ளும் சாமான்களைக் கதர்ப் பைக்குள் வைத்தார். அப்புறம் ஒரு முழ அகலமுள்ள ஒரு கதர்த் துணியை எடுத்து இடுப்பில் சுற்றிக்கொண்டார். காந்திஜி இப்படிப்பட்ட உடையணிவதை நண்பர்கள் தடுக்க முயன்றார்கள். சந்நியாசி யாகிவிடும் உத்தேசம் தமக்கு இல்லை என்று அவர்களுக்குக் காந்திஜி உறுதி கூறினர். தாம் உடுக்கும் புதிய முறை உடையானது தென் இந்திய மக்களுக்குப் புதிதல்ல என்று கூறி, ஒரே உறுதியுடன் அந்தத் துணியைக் கட்டிக்கொண்டார். அதன் பின் காந்திஜி தமது வாழ்நாள் முழுவதிலும் இதே உடையிலேயே காட்சி யளித்தார்.

காந்திஜி தமிழ்நாட்டுச் சுற்றுப் பிரயாணத்தை முடித்துக் கொண்டு ஆந்திர ஜில்லாக்களின் வழியாகப் பம்பாய்க்குச் சென்றார்.

டிசம்பர் கடைசி வாரத்தில் அகமதாபாத் காங்கிரஸ் கூடியது. தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் சிறையில் இருந்தார். ஆகவே, ஹக்கீம் அஜ்மல்கான் தேர்ந்தெடுக்கப்பட்டார். டில்லியில் கூடிய ஹிந்து மகாசபை மகாநாடும் அவரைத் தலைவராகத் தேர்ந்தெடுத்தது.

சட்ட மறுப்பு இயக்கத்தில் ஒரே உற்சாகம் காணப்பட்டது. 20,000-த்துக்கு மேற்பட்டவர்கள் சட்ட மறுப்பில் இறங்கி ஏற்கனவே சிறை சென்றுவிட்டார்கள். காங்கிரஸுக்கு அரசியல்

விஷயங்களில் ஆலோசனை கூறுவதில் முஸ்லிம் மதத் தலைவர்கள் பிரதான பங்கெடுத்துக்கொண்டார்கள். காங்கிரஸின் நடைமுறை அமைப்புக் குலைந்துவிட்டால், அந்த ஸ்தாபனத்தில் புதிதாக ஒன்றை நியமிக்கும் அதிகாரத்துடன் கூடிய ஏகபோகமான நிர்வாக அதிகாரம் காந்திஜிக்குக் கொடுக்கப்பட்டது. ஆனால், காங்கிரஸின் அனுமதி பெற்றுத்தான் இயக்கத்தை நிறுத்திச் சமரசம் செய்துகொள்ள வேண்டும் என்று முடிவாயிற்று. காந்திஜி ஒவ்வொரு பிரதிநிதியின் முகாமுக்கும் சென்று சட்ட மறுப்பு முறையை விளக்கிக்கொண்டிருந்தார்.

## 1922 (வயது 53):

**1921**, டிசம்பர் மாதத்திலும், *1922*, ஜனவரி மாதத்திலும் சுமார் *30,000* பேர் தண்டிக்கப்பட்டனர். ஜனவரி *12*-இல் வரிகொடா இயக்கத்தைக் குண்டூர் பிரகடனம் செய்தது.

சமரசத்தை உண்டுபண்ண ஜனவரி *14*-இலிருந்து *16* வரை சர்வகட்சி மகாநாடு கூட்டப்பட்டது. அம் முயற்சி தோற்றது.

பிப்ரவரி முதல் தேதி காந்திஜி வைசிராய்க்குக் கடிதம் எழுதி, தமது சொந்த மேற்பார்வையில் பர்டோலியில் சட்ட மறுப்பைத் தொடங்க உத்தேசித்திருப்பதைத் தெரிவித்தார். அடக்குமுறைக் கொள்கை நியாயமானதே என்று கூறி சர்க்காரிடமிருந்து உடனடியாகப் பதில் வந்தது.

பிப்ரவரி *5*-ஆம் தேதி ஐக்கிய மாகாணங்களிலுள்ள சௌரி சௌராவில் *21* கான்ஸ்டேபிள்களையும் சப்-இன்ஸ்பெக்டரையும் ஜனக்கூட்டம் போலீஸ் ஸ்டேஷனுக்குள் தள்ளி நெருப்பு வைத்துக் கொளுத்திவிட்டது.

பிப்ரவரி *12*-இல் பர்டோலியில் காரியக் கமிட்டி கூடியது. சட்ட மறுப்பு இயக்கம் நிறுத்திவைக்கப்பட்டது. காந்திஜி *5*-நாள் உண்ணாவிரதத்தை மேற்கொண்டார்.

பிப்ரவரி *24*, *25*-ஆம் தேதிகளில் டில்லியில் நடைபெற்ற அ. இ. கா. க. கூட்டத்தில், தனி நபர் சட்ட மறுப்பை அனுமதித்துப் பர்டோலித் தீர்மானம் ஊர்ஜிதம் செய்யப்பட்டது.

*1920*, நவம்பர் *10*-ஆம் தேதியிலிருந்து காந்திஜி தாம் கைது செய்யப்படுவதை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். மார்ச்சு *9*-ஆம் தேதி அவர், "ரத்த ஆறு ஓடும்படி சர்க்கார் செய்தாலும், அது என்னைப் பயமுறுத்த முடியாது" என்று எழுதினார். தாம் கைது செய்யப்படுவதற்காக ஹர்த்தாலோ, ஆர்ப்பாட்டங்களோ செய்யக்கூடாது என்றும், நிர்மாணத் திட்டத்தை நிறைவேற்றிக்கொண்டு சட்ட மறுப்பு இயக்கத்தைப் பலப்படுத்த வேண்டும் என்றும் மக்களுக்குக் கோரிக்கை விடுத்தார்.

"எங் இந்தியா"வில் வெளியான மூன்று கட்டுரைகளுக்காக ராஜத்துவேஷக் குற்றம் சாட்டப்பட்டுக் காந்திஜியும், சங்கர்லால் பாங்கரும் மார்ச்சு *10*-ஆம் தேதி கைது செய்யப்பட்டனர்.

மார்ச்சு 18-இல் அகமதாபாத்தில் மாபெரும் விசாரணை ஆரம்பமாயிற்று. குற்றப்பத்திரிகை வாசிக்கப்பட்ட பின் காந்திஜி குற்றத்தை ஒப்புக்கொண்டு ஒரு வாக்குமூலம் கொடுத்தார். அதன் பீடிகையில், ''எங் இந்தியா''வுடன் தாம் தொடர்பு கொள்ளுவதற்கு முன்பே இன்றைய அரசாங்கத்திடம் விசுவாசமின்மை ஏற்படப் பிரசாரம் செய்யத் தொடங்கிவிட்டதாக காந்திஜி கூறினர். சென்னை, பம்பாய், சௌரி சௌரா ஆகிய இடங்களில் நடைபெற்ற சம்பவங்களுக்குத் தாமே முழுப் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டார். ''நான் நெருப்போடு விளையாடிக்கொண்டிருக்கிறேன் என்பதை அறிவேன். இன்னும் அதைத்தான் செய்வேன். நீதிபதியவர்களே, நீங்கள் செய்யக்கூடிய ஒரே காரியம் என்ன வென்ருல், உங்கள் பதவியை ராஜிநாமாச் செய்துவிட வேண்டும்; அல்லது எனக்குக் கடுமையான தண்டனை விதிக்க வேண்டும்'' என்ருர் காந்திஜி.

நீதிபதி புரூம்பீல்ட், காந்திஜிக்கு ஆறு வருடச் சிறைவாச தண்டனை விதித்து, ''உங்களை ஸ்ரீ திலகரோடு ஒன்ருக வைத்து எண்ணுவதைச் சரியல்ல என நீங்கள் நினைக்க மாட்டீர்கள் என்று கருதுகிறேன்'' என்ருர். தம்முடைய பெயரை லோகமான்யருடன் தொடர்புபடுத்துவதைப் பெரிய கௌரவம் என்று தாம் கருதுவதாகக்கூறி, நீதிபதிக்குக் காந்திஜி நன்றி தெரிவித்தார். மக்கள் அமைதியாக இருந்து நிர்மாணத்திட்டத்தில் முழுக் கவனத்தையும் செலுத்த வேண்டும் என்று ஸ்ரீமதி கஸ்தூரிபாய் காந்தி வற்புறுத்தினர்.

1922-இலிருந்து 1924 வரை சிறைவாசம் செய்தபோது தென்னுப்பிரிக்கச் சத்தியாக்கிரகத்தின் முதல் முப்பது அத்தியாயங்களை எழுதினர். சத்தியசோதனையின் வரலாற்றை (சுய சரிதையை)யும் காந்திஜி எழுதத் தொடங்கினர். தம்மோடு இருந்த ஓர் அரசியல் கைதியை எழுதும்படி சொல்லி, தாம் குஜராத்தி மொழியில் சொல்லிக்கொண்டு வந்தார். சிறையில் இருந்த போதும், வெளியே வந்த பிறகும் எழுதப்பட்ட சுய சரிதை ''நவஜீவன்'' பத்திரிகையில் தொடர்ச்சியாக வெளியிடப்பட்டது. இதை மகாதேவ தேசாயும், பியாரிலால் நய்யாரும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தனர். அதைக் காந்திஜி கவனமாகப் பரிசீலனை செய்தார். ஆங்கில மொழிபெயர்ப்புக்கு இறுதி வடிவம் கொடுப்பதில் மீராபென் (குமாரி ஸ்லேடு) உதவி புரிந்தார்.

சிறையிலிருந்து விடுக்கப்பட்ட ஒரே செய்தி, ''அமைதி, அகிம்சை, கஷ்டப்படுதல்'' என்பதாகும்.

1922-நவம்பர் கடைசிவாக்கில் கெமால் பாஷா துருக்கியில் ஆட்சி நிர்வாகத்தை எடுத்துக்கொண்டார். துருக்கி சுல்தான் பிரிட்டிஷ் கப்பலில் மால்டாவுக்கு ஓடினர். கிலாபத் பிரச்னை எதிர்பாராத விதமாக முடிவடைந்தது.

டிசம்பரில் கயாவில் கூடிய காங்கிரஸ் மகாநாடு காந்திஜியிடமும் ஒத்துழையாமையிடமும் விசுவாசம் தெரிவித்தது. சட்ட சபைகளில் பங்கெடுத்துக்கொள்ளுவதை எதிர்த்து 1740 வோட்டுகளும், ஆதரித்து 890 வோட்டுகளும் கிடைக்கவே அத்தீர்மானம் தோல்வியடைந்தது. முதலாவது கதர்க் கண்காட்சி அங்கே நடைபெற்றது. மகாநாட்டின் முடிவில் பிரிட்டிஷ் பத்திரிகைகளும், ஆங்கிலோ—இந்தியப் பத்திரிகைகளும் பொதுஜன இயக்கத்தின் முன்னேற்றத்தைக் கண்டு ஆச்சரியமும் ஏமாற்றமும் தெரிவித்தன.

## 1923 (வயது 54):

வகுப்புவாத வேற்றுமைகளால் அரசியல் சூழ்நிலையில் கறை படிந்தது.

மே, முதல் தேதியன்று காந்திஜி சிறைச்சாலை சூப்பரின்டெண்டென்டுக்கு எழுதி, மற்ற அரசியல் கைதிகளுக்கு விசேஷச் சலுகைகள் அளிக்கப்படாமலிருக்கும் வரையில் தமக்கும் சலுகைகள் வேண்டாம் என்று தெரிவித்தார்.

செப்டம்பர் மூன்றாவது வாரத்தில் டில்லியில் காங்கிரஸின் விசேஷ மகாநாடு நடைபெற்றது. மௌலானா ஆஸாத் தலைமை வகித்தார். சட்டசபைப் பிரவேசம் அனுமதிக்கப்பட்டது. சட்ட சபைப் பிரவேசத்தை எதிர்த்து நடந்துவந்த பிரசாரம் நிறுத்தி வைக்கப்பட்டது. நிர்மாணத்திட்டம் வற்புறுத்தப்பட்டது. வகுப்புக்களுக்கிடையே உள்ள உறவுகள் சம்பந்தமாகத் தமக்குத் தாமே கட்டுப்பாடு விதித்துக்கொண்டு எழுதுமாறு பத்திரிகைகளுக்கு ஆலோசனை கூறப்பட்டது. கதரை வாங்குவதன் மூலம் அந்நியத் துணியைப் பகிஷ்கரிக்க வேண்டும் என்று வற்புறுத்தப் பட்டது. சுதேசிச் சாமான்களை ஆதரித்து, பிரிட்டிஷ் சாமான்களைப் பகிஷ்கரிப்பதற்கான வழிவகைகளைத் தீர்மானிக்கக் கமிட்டி நியமிக்கப்பட்டது.

தமக்கு அளித்து வந்தது போன்ற உணவைச் சகோதரக் கைதி ஒருவருக்கு அளிக்காத காரணத்தால் தம்முடைய உணவையும் கட்டுப்படுத்தும்படி நவம்பரில் சிறை அதிகாரிகளைக் காந்திஜி கேட்டுக்கொண்டார்.

டிசம்பரில் காகிநடாவில் காங்கிரஸ் மகாநாடு நடைபெற்றது. மௌலானா முகம்மது அலி தலைமை வகித்தார். நிர்மாணத் திட்டத்தை நிறைவேற்றுவதற்கும், பலமான சட்ட மறுப்பு இயக்கத்துக்குத் தயாராவதற்கும் காங்கிரஸ் அழைப்பு விடுத்தது. சட்டசபைகளைப் பகிஷ்கரிக்க வேண்டுமென்பது திரும்ப ஊர்ஜிதம் செய்யப்பட்டது. அகில இந்தியத் தொண்டர்படை ஸ்தாபனத்திற்கு—ஹிந்துஸ்தான் சேவா தளத்துக்கு—அஸ்திவாரம் போடப்பட்டது.

## 1924 (வயது 55):

குடல் அனுபந்த நோயினால் காந்திஜி ஜனவரி 12-இல் திடீரென்று பீடிக்கப்பட்டார். இது நாடெங்கும் கவலையை உண்டு பண்ணியது. கர்னல் மாடாக், ஆபரேஷன் செய்தார். இந்த டாக்டர் அப்போது உபயோகித்த மின்சார விளக்கு, ஆபரேஷன் பாதி முடிந்துகொண்டிருந்த போது திடீரென்று நின்று விட்டது. ஆபரேஷன் முடியும் வரையில் நர்ஸ், அரிக்கன் லாந்தரைப் பிடித்துக்கொண்டு நின்றார். பிப்ரவரி 5-இல் காந்திஜி நிபந்தனையின்றி விடுதலை செய்யப்பட்டார். தேகாரோக்கியம் பெறுவதற்காக அவர் ஜுஹுவுக்குச் சென்றார். தேசபந்து தாஸும், மோதிலால் நேருவும் காங்கிரஸ் கொள்கைக்குப் புது அமைப்பைக் கொடுத்தனர். 1923-இல் சட்டசபைகளுக்கு நடைபெற்ற பொதுத் தேர்தல்களில் சுயராஜ்யக் கட்சியார் பெரும் வெற்றி பெற்றனர்.

மார்ச்சு 22-ஆம் தேதி ரொமேன் ரோலாந்துக்குக் காந்திஜி முதல் கடிதம் எழுதினார். இதுவே அவர்கள் நட்பிற்குப் பூர்வாங்கமாகும்.

ஏப்ரல் முதல் வாரத்தில் "எங் இந்தியா," "நவஜீவன்" ஆகியவற்றின் ஆசிரியர் பதவியைக் காந்திஜி திரும்பவும் ஏற்றுக் கொண்டார். சிறைச்சாலை நாட் குறிப்பும், சுய சரிதையும் தொடர்ச்சியாக வெளியிடப்பட்டன.

தேசபந்து தாஸும் மோதிலாலும் ஜுஹுவுக்குச் சென்று, புதிய நிலைமையைக் காந்திஜிக்குத் தெரிவித்தனர். ஆனால், அவர்களுடைய கருத்துடன் ஒன்றுபடக் காந்திஜி மறுத்துவிட்டார். அவர் மே மாதத்தில் வெளியிட்ட அறிக்கையில் கூறியதாவது: "சுயராஜ்யக் கட்சியார் என்ன செய்கிறார்கள் அல்லது என்ன சொல்லுகிறார்கள் என்பது பற்றி மாறுதல் வேண்டாதார் கவலைப்பட வேண்டாம் என்றும், தங்கள் முழு ஆற்றலையும் கவனத்தையும் செலுத்தி நிர்மாணத் திட்டத்தை நிறைவேற்றுவதன் மூலம் தங்கள் விசுவாசத்தை நிரூபிக்க வேண்டும் என்றும் நான் ஆலோசனை கூறுகிறேன்."

ஜூன் 27, 28-இல் அகமதாபாத்தில் கூடிய அ. இ. கா. க. கூட்டத்தின் தீர்மானத்திற்கு இது வழி செய்து கொடுத்தது. காங்கிரஸுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் எல்லோரும், ஒவ்வொரு மாதமும் ஒரே மாதிரி நூலாக 2,000 கெஜம் அனுப்ப வேண்டும் என்று கோரப்பட்டது. அந்நியத் துணி, கோர்ட்டுகள், பாடசாலைகள், கல்லூரிகள், பட்டங்கள், சட்ட சபைகள் ஆகியவற்றைப் பகிஷ்கரிக்க வேண்டுமென்பது மீண்டும் அழுத்தமாக வற்புறுத்தப்பட்டது. அரசாங்கத்தின் இரட்டைக் கொள்கை கண்டனம் செய்யப்பட்டது. ஏர்னஸ்ட் டேயை கோபிநாத் சஹா கொலை செய்ததைக் கண்டித்தும் ஒரு தீர்மானம் நிறைவேறியது. இத் தீர்மானத்தை எதிர்த்துச் சில சகபாடிகள் வோட்டளித்ததைக் கண்டு காந்திஜி ஏமாற்றம் அடைந்தார். பகிரங்கமாக அழுதார்.

டில்லி, குல்பர்கா, நாகபுரி, லட்சுமணபுரி, ஷாஜஹான்பூர், அலகாபாத், ஜபல்பூர், கோஹட் ஆகிய இடங்களில் வகுப்புக் கலவரங்கள் ஏற்பட்டன. கலவரங்கள் பற்றிக் காந்திஜியும் மௌலானு ஷௌகத் அலியும் அறிக்கை தயாரித்தனர்.

கோஹட் சம்பவங்களின் பலனுகக் காந்திஜி 21 நாள் உண்ணு விரதம் இருக்கத் தீர்மானித்தார். அவர், "நான் யாரையும் குற்றஞ்சாட்டவில்லை; என்னையே குற்றஞ் சாட்டிக்கொள்ளுகிறேன்" என்ருர். செப்டம்பர் 18-ஆம் தேதி முகம்மது அலியின் வீட்டில் உண்ணுவிரதத்தை ஆரம்பித்தார். செப்டம்பர் 26-இல் எல்லாச் சமூகங்களின் தலைவர்களும் டில்லிக்கு விரைந்தனர். ஏழு நாள் மகாநாடு நடத்தி, காந்திஜியின் தீர்மானங்களை அமல் செய்வதற்கும், அவற்றை மீறி நடப்பவர்களைக் கடுமையாகக் கண்டனம் செய்வதற்கும் உத்தரவாதம் அளிக்கத் தம்மால் இயன்றதை எல்லாம் செய்வதென்று பிரதிக்ஞை செய்துகொண்டார்கள்.

நவம்பர் 23, 24-இல் கூடிய அ. இ. கா. க. கூட்டத்தில், சட்டசபைப் பிரவேசம் சம்பந்தமாக தாஸ், மோதிலால் ஆகியோர் கருத்துக்குக் காந்திஜி இணங்கினுர்.

டிசம்பரில் நடைபெற்ற பெல்காம் காங்கிரஸுக்குக் காந்திஜி தலைமை தாங்கினுர். காங்கிரஸ் மகாநாடுகளின் தலைமை உரைகளில் இதுவே மிகவும் சுருக்கமானது. இதன் சுருக்கமே பகிரங்கக்கூட்டத்தில் வாசிக்கப்பட்டது. கதர் அணிவதையும் அந்நியத் துணியைப் பகிஷ்கரிப்பதையும் காந்திஜி வற்புறுத்தினுர். சட்டசபைப் பிரவேசத்தைக் காங்கிரஸ் அனுமதித்தது.

காந்திஜியின் யோசனைப்படி காங்கிரஸின் காரியதரிசியாக ஜவாஹர்லால் நேரு தேர்ந்தெடுக்கப்பட்டார். காங்கிரஸ் கூடுவதற்குச் சற்று முன்னதாகத் தாஸ் தம்முடைய சொத்துக்கள் அனைத்தையும் தேசத்துக்குக் கொடுத்துவிட்டார்.

## 1925 (வயது 56):

பெல்காம் காங்கிரஸுக்குப் பிறகு கத்தியவார், மத்திய இந்தியா, வங்காளம், மலபார், திருவாங்கூர் ஆகிய பகுதிகளில் காந்திஜி நீண்ட பிரயாணம் செய்தார். மார்ச்சு-ஏப்ரலில் தென் இந்திய விஜயம் நிகழ்ந்தது. வட இந்தியச் சுற்றுப் பிரயாணத்தை முடித்துக்கொண்டு, மார்ச்சு 7-ஆம் தேதி சென்னைக்கு வந்து, 9-ம் தேதி திருவாங்கூரிலுள்ள வைக்கத்துக்குச் சென்ருர். அங்கே அதற்கு ஒரு வருடகாலத்துக்கு முன்பிருந்தே சத்தியாக்கிரகம் தொடங்கி நடைபெற்று வந்தது. அதற்குக் காந்திஜியே ஆலோசனை கூறினுர். தீண்டாமையின் கொடுமையை முதல் முதலில் இந்தியாவுக்குத் தெள்ளத் தெளிவாக எடுத்துக் காட்டியது வைக்கம் சத்தியாக்கிரகமே. வைக்கத்திலுள்ள ஒரு பொதுப்

பாதையில் நடந்து செல்லத் தீண்டாதார் அனுமதிக்கப்படவில்லை. இதை எதிர்த்துச் சத்தியாக்கிரகம் நடைபெற்றபோது, வைதிக சமூகத்துக்குச் சமஸ்தான சர்க்கார் போலீஸ் உதவி அளித்தது. காந்திஜி அங்கே சென்றது, பிரச்னை தீருவதற்கு உதவி புரிந்தது. அந்தச் சமயத்தில் காந்திஜி திருவனந்தபுரத்துக்கும் கன்னியாகுமரிக்கும் விஜயம் செய்தார்.

அந்த அழகுமிக்க நாடு காந்திஜியின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. அங்கே ஆபரணங்களின்றி, தூய வெள்ளை உடையணிந்து வாழும் பெண்களை அவர் பாராட்டினர். "...அஸ்ஸாமைத் தவிர, இந்தியாவில் வேறு எங்கும் மலபார் மாதர்களைப் போல எளிமையாகவும், லாகவமாகவும் உடை உடுத்துபவர்களை நான் பார்த்ததில்லை...தங்கள் புடவைகளுக்குக் கரை இருக்க வேண்டுமென்றுகூட அவர்கள் விரும்பவில்லை. புடவையின் நீளமோ நான்கு கெஜங்கள்தான். கிழக்குக் கரையில் வசிக்கும் தமிழ்ச் சகோதரிகளுக்கோ, ஏறக்குறையப் பத்துக் கெஜத்தில் கெட்டிச் சாயப் புடவைகளாக வேண்டியிருக்கிறது. மலையாள மாதர்கள் எனக்குச் சீதையை ஞாபகப்படுத்தினர்கள். சீதை, தன் அழகிய வெறுங் கால்களால் நடந்து சென்று இந்தியாவின் வயல்களையும், வனங்களையும் புனிதப்படுத்தியபோது இப்படித் தான் உடை உடுத்தியிருந்திருக்க வேண்டும்" என்று காந்திஜி எழுதினர். மலையாளப் பெண்களைப்போல அவ்வளவு அதிகச் சுதந்திரத்தோடு வாழும் பெண்கள் இந்தியாவில் கிடையாது என்றும் கூறினர்.

தென் இந்தியாவிலிருந்து காந்திஜி கல்கத்தாவுக்குச் சென்றார். "ராட்டையின் பொருளாதார, ஆன்மிக மதிப்"பைப்பற்றி ரோட்டரி சங்கத்தில் சொற்பொழிவாற்றினர்.

மே, 29-ஆம் தேதி சாந்திநிகேதனுக்குச் சென்று டாகுரைச் சந்தித்தார்.

ஜூன் 16-இல் தாஸ் காலமானதற்காகக் குல்னவில் காந்திஜி உருக்கமான பிரசங்கம் செய்தார். வங்காளத்தில் தங்கும் காலத்தை அதிகப்படுத்தினர். தாஸின் வீட்டைப் பெண்களுக்கும் குழந்தைகளுக்குமான ஆஸ்பத்திரியாக மாற்றுவதற்குப் பத்து லக்ஷ ரூபாய் வசூலித்தார்.

செப்டம்பர் 22-இல் பாட்னவில் கூடிய அ. இ. கா. க. கூட்டம் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றி அகில பாரத சர்க்கா சங்கத்தை ஸ்தாபித்தது. கையினல் நூற்பதையும், கதரையும் அபிவிருத்தி செய்வதற்காகக் காங்கிரஸின் ஓர் அங்கமாக இது நிறுவப்பட்டது. இதற்குப் பிரதான ஆதரவாளர் காந்திஜி.

ஆசிரமத்தில் சில குறைகள் இருப்பதைக் காந்திஜி அறிந்தார். இதற்காக நவம்பர் 24-இல் ஏழு நாள் உண்ணுவிரதத்தை மேற்கொண்டார்.

டிசம்பர் 26-ல் கான்பூரில் காங்கிரஸ் மகாநாடு நடைபெற்றது. ஸ்ரீமதி சரோஜினி நாயுடு தலைமை வகித்தார். காந்திஜி தமது ஐந்தாண்டு வேலையை விமர்சனம் செய்து ஐந்து நிமிஷ நேரம் பேசினார்.

"மக்களிடத்தில் துடிப்பும் ஆவேசமும் இருக்குமென்றால், நான் இன்றே சட்ட மறுப்பு இயக்கத்தை ஆரம்பித்துவிடுவேன்" என்று சொன்னார். அரசியல் மௌனம் பூணுவதற்குப் பிரதிக்ஞை செய்து கொண்டார்.

காங்கிரஸ் மகா சபைக் கூட்டம், அ. இ. கா. க. கூட்டம் ஆகியவற்றில் ஹிந்துஸ்தானி மொழியை உபயோகிப்பது என்று தீர்மானம் ஆயிற்று. வெளிநாடுகளில் இந்தியர்களின் நலன்களை கவனித்துக்கொள்ளுவதற்காக வெளிநாட்டு இலாக்காக்களைத் திறக்க அ. இ. கா. கமிட்டிக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டது.

## 1926 (வயது 57) :

சீன மாணவர்களின் அழைப்பின்பேரில் காந்திஜி சீனாவுக்குப் போக நினைத்தார்; தமது சாத்விக எதிர்ப்பு முறைகளை அங்கே பரப்புவதற்கும் உத்தேசித்தார். ஆனால், இந்தியாவில் அவருக்கு இருந்த வேலைகள் சீன விஜயத்துக்கு அவகாசமில்லாமல் செய்துவிட்டன.

டிசம்பர் 26-இல் கௌஹாத்திக் காங்கிரஸ், ஸ்ரீனிவாச ஐயங்கார் தலைமையில் நடைபெற்றது. நோய்வாய்ப்பட்டுப் படுக்கையில் கிடந்த சுவாமி சிரத்தானந்தரை ஒரு முஸ்லிம் சுட்டுக்கொன்றதாகச் செய்தி வெளியாயிற்று. அவரது மரணத்துக்காகத் துக்கம் தெரிவிக்கும் தீர்மானம் ஒன்று, காங்கிரஸில் நிறைவேற்றப்பட்டது. இத் தீர்மானத்தைக் கொண்டு வந்தவர் காந்திஜி; ஆமோதித்தவர் முகம்மது அலி. சுதந்திரத் தீர்மானமும் கொண்டுவரப்பட்டது. இதைக் காந்திஜி எதிர்த்தார். காந்திஜியின் அரசியல் மௌனப் பிரதிக்ஞை கைவிடப்பட்டது.

## 1927 (வயது 58):

சைமன் கமிஷன் சம்பந்தமான அறிவிப்பைக் காந்திஜியிடம் வைசிராய் கொடுத்தார். "விஷயம் இவ்வளவுதானா!" என்று காந்திஜி கேட்டதற்கு, அவர், "ஆம்" என்று பதில் அளித்தார். அந்த அறிவிப்பு நவம்பர் 8-ஆம் தேதி பகிரங்கமாக வெளியிடப்பட்டது.

காந்திஜி பீகார், பேரார், மகாராஷ்டிரம், கொங்கணம் முதலிய பல பகுதிகளில் சுற்றுப் பிரயாணம் செய்துவிட்டு, ஏப்ரல் கடைசி வாரத்தில் மைசூரிலுள்ள நந்திமலைக்குச்

சென்றார். அங்கே ஓய்வு எடுத்துக்கொண்டார். உடல் நலம் பெற்ற பிறகு நந்திமலையிலிருந்து புறப்பட்டு ஜூன் மாத மத்தியில் பெங்களூருக்கு விஜயம் செய்தார். மைசூர் சமஸ்தானத்தில் அநேக ஊர்களுக்குச் சுற்றுப் பிரயாணம் செய்தார்.

ஆகஸ்டு 24-ஆம் தேதி தமிழ்நாட்டுச் சுற்றுப் பிரயாணம் ஆரம்பமாயிற்று. காந்திஜி பெங்களூரிலிருந்து வட ஆர்க்காடு ஜில்லாவுக்கு வந்தார். வேலூர், ஆரணி, ஆர்க்காடு, குடியாத்தம் முதலிய பெரிய ஊர்களுக்கும், மற்றும் சிறு கிராமங்களுக்கும் போய்விட்டு, செப்டம்பர் 3-ஆம் தேதி சென்னை நகருக்கு வந்து நான்கு நாட்கள் தங்கியிருந்தார். அப்போது 17 கூட்டங்களில் பேசினார். அந்தச் சமயத்தில் சென்னை நகரில் நீல் சிலையை அப்புறப்படுத்துவதற்கு இளைஞர்கள் முயன்று கொண்டிருந்தார்கள். 1857-ஆம் வருடப் புரட்சியின்போது அநேக மிருகத்தனமான கொடுமைகள் இழைத்ததற்குப் பொறுப்பாளியாக இருந்தவன் ஜெனரல் நீல்.

இளைஞர்களுக்குக் காந்திஜி ஊக்கமும் உற்சாகமும் அளித்தார். சத்தியாக்கிரகத்தில் இறங்கிய சில தொண்டர்கள் கைது செய்யப்பட்டார்கள். 30 பேருக்குத் தண்டனை கிடைத்தது. சத்தியாக்கிரகம் தோல்வியில் முடிந்தபோதிலும், 10 வருடங்களுக்குப் பிறகு சென்னை மாகாணத்தில் காங்கிரஸ் மந்திரிசபை ஆட்சி புரிந்தபோது, நீல் சிலை அப்புறப்படுத்தப்பட்டுக் கண்காட்சிச் சாலையில் கொண்டுபோய் வைக்கப்பட்டது.

சென்னையில் காந்திஜி பேசிய கூட்டங்களில், செருப்புத் தைக்கிறவர்களின் கூட்டமும் ஒன்று. காந்திஜி பிய்ந்த செருப்புக்களைப் போட்டுக் கொண்டிருக்கிறார் என்பதை அறிந்து இரண்டு தொழிலாளிகள் ஒன்று சேர்ந்து ஒரு ஜோடி செருப்புத் தைத்துக்கொண்டு வந்து அவருக்குக் கொடுத்தார்கள். மதுவிலக்கு வாதிகளின் கூட்டம் ஒன்றில் காந்திஜி பேசும்போது, மது அருந்தும் பழக்கத்தைமட்டுமன்றி, காபி, தேநீர் ஆகியவற்றைக் குடிப்பதையும், சுருட்டு, சிகரெட்டுகளைப் புகைப்பதையும் கண்டித்து, அந்தப் பழக்கங்களையும் அறவே விட்டொழிக்க வேண்டுமென்று வற்புறுத்தினார்.

காந்திஜி, தேவதாசிகளுடனும் பேசினார். தேவதாசிகள் என்ற பெயரே கடவுளின் திருநாமத்துக்கு மாசு கற்பிப்பதாகும் என்றும், சகோதரிகளை இப்படிப்பட்ட இழிதொழிலுக்கு அர்ப்பணம் செய்வது பெருங் குற்றம் என்றும் காந்திஜி கூறியதுடன், இந்தச் சகோதரிகளை மீட்டு நல்வாழ்வளிக்க வேண்டியது நாட்டு மக்களின் கடமை என்பதையும் சுட்டிக்காட்டினார்.

செப்டம்பர் 9-ஆம் தேதி காந்திஜி, சென்னையை விட்டுத் தெற்கே புறப்பட்டுக் கூடலூருக்கும், சிதம்பரத்துக்கும் சென்றார். சிதம்பரத்தில் நந்தனருடைய பெருமைகளை எடுத்துக் கூறி, அவரைப் பின்பற்றவேண்டும் என்றார்.

கூடலூரில் பேசுகையில், பிராமணர்-பிராமணரல்லாதார் என்ற வேற்றுமையும், பிணக்கும் இருக்கக் கூடாதென்று சொன்னார். இரு சாராருக்கும் தக்க புத்திமதிகளைக் கூறி ஒற்றுமையை வற்புறுத்தினார்.

கும்பகோணம், மன்னார்குடி, திருச்சிராப்பள்ளி முதலிய நகரங்களுக்கு விஜயம் செய்தபின், காந்திஜி செட்டிநாட்டுக்குச் சென்றார். கானாடுகாத்தானில் உள்ள ஒரு தனவந்தர் வீட்டில் காந்திஜி தங்கினார். அந்தச் சமயத்தில் செட்டியார்கள் சமூகம் முழுவதற்குமாகக் காந்திஜி கூறியதாவது:

"இங்கே நான் காண்பது என்ன? 1921-இல் நான் இங்கே கண்டது என்ன? உங்கள் வீடுகளில் வெளிநாட்டு மேஜை நாற்காலி முதலிய தளவாடங்களை அடைத்து வைத்திருக்கிறீர்கள். நானாவித வெளிநாட்டு அலங்கார சாதனங்களைக் கொண்டும் அலங்காரம் செய்திருக்கிறீர்கள். இந்தப் புண்ணிய பூமியில் இடம் பெறக்கூடாத அநேக சாமான்கள் உங்கள் வீடுகளில் இருக்கின்றன. இங்கே வருவதில் நான் மகிழ்ச்சியும், வருத்தமும் கொள்ளுவதாக உங்களுக்குச் சொன்னேன். அளவுக்கு மீறிய நாற்காலி, மேஜை முதலிய சாதனங்களால் நான் திக்குமுக்காடிப் போனேன். அவற்றின் நடுவே மூச்சுவிடக்கூட இடமில்லாமல் இருக்கிறது......உங்கள் மாளிகைகள் அனைத்தும், உங்களுக்குள் எவ்வித ஒத்துழைப்பு உணர்ச்சியின்றியும், சமூக நலனைப்பற்றிய எவ்வித உணர்ச்சியின்றியும் கட்டப்பட்டிருப்பதாகவே எனக்குத் தோன்றுகிறது. பொதுநலனுக்காகவும், உங்களிடையே வாழும் குடியானவர்களின் நலனுக்காகவும் நீங்கள் செட்டியார்கள் சங்கம் ஒன்றை அமைத்தால், செட்டிநாட்டை நீங்கள் ஒரு சுவர்க்க பூமியாக்கிவிட முடியும். உங்களிடையே நிலவும் அமைதியும், ஒழுங்கும் இந்தியா முழுவதிலுமிருந்து எல்லா மக்களையும் கவர்ந்து இழுக்கும்."

காந்திஜியின் ஆலோசனைப்படி, அதன்பின் அவர் தங்கியிருந்த வீடுகளில் நாற்காலி, மேஜை முதலிய தளவாடங்கள் குறைக்கப்பட்டு, அவருக்குப் பிடித்த முறையில் ஒழுங்கு செய்யப்பட்டிருந்தன.

அக்டோபர் முதல் வாரத்தில் காந்திஜி செட்டிநாட்டிலிருந்து விடைபெற்றுத் தெற்கே புறப்பட்டார். மதுரை, ராமநாதபுரம் ஜில்லாக்களில் சுற்றுப் பிரயாணத்தை முடித்துக்கொண்டு திருநெல்வேலி ஜில்லாவின் ஒரு பகுதியிலும் சுற்றுப் பிரயாணம் செய்தார். தூத்துக்குடி முதலிய நகரங்களுக்கும் விஜயம் செய்தார்.

ராஜபாளையத்தில் ராட்டை நூற்பவர்களும், நெசவாளிகளும் நிறைய இருந்தது காந்திஜிக்குப் பெருமகிழ்ச்சியும் ஆச்சரியமும் அளித்தது. அந்தப் பகுதியில் ஆயிரம் பேருக்குக் குறையாமல் ராட்டை நூற்றார்கள். நூறு நெசவாளிகள் இருந்தார்கள்.

திருநெல்வேலியிலிருந்து காந்திஜி நாகர்கோவிலுக்குச் சென்றூர். நாகர்கோவிலில் பேசும்போது, திருவாங்கூர் சமஸ்தானத்தில் உள்ள தீண்டாமையை வன்மையாகக் கண்டித்தார். அவ்விதமே திருவனந்தபுரத்திலும் கண்டித்துப் பேசினூர். ஆலப்புழையில் ஈழவர் தூதுகோஷ்டியுடன் பேசும்போது, தீண்டாமை சம்பந்தமாகச் சமஸ்தானத்துக்கு எச்சரிக்கை விடுத்தார்.

அக்டோபர் மத்தியில் கொச்சி சமஸ்தானத்துக்குச் சென்று எர்ணுகுளத்தில் பேசுகையிலும் தீண்டாமையையே கண்டித்துக் காந்திஜி பேசினூர். மாணவர் கூட்டம் ஒன்றிலும் பேசினூர்.

வைசிராய் லார்டு இர்வினுடைய அழைப்பின் பேரில் டில்லிக்குப் போகவேண்டி யிருந்ததால், காந்திஜி அவசர அவசரமாகத் தமது தென் இந்தியப் பிரயாணத்தை முடித்தார்.

மங்களூரிலிருந்து காந்திஜி 1200 மைல் பிரயாணம் செய்து டில்லிக்குச் சென்று வைசிராயைச் சந்தித்தார்.

அதற்கு முதல் நாள் இங்கிலாந்தில் காதரின் மேயோ எழுதிய ''மதர் இந்தியா'' என்ற புத்தகம் வெளியாயிற்று. இந்தியாவைப்பற்றி இழிவான முறையில் எழுதப்பட்ட அந்தப் புத்தகத்தை ''சாக்கடை இன்ஸ்பெக்டரின் அறிக்கை'' என்று காந்திஜி கூறினூர். கடவுளின் ஒவ்வொரு சிருஷ்டியிலும் நல்ல அம்சமும் கெட்ட அம்சமும் இருக்கின்றன என்றும், அன்னப் பறவை நீரை விலக்கிப் பாலை மட்டும் அருந்துவதைப்போல விவேகமுள்ளவர்கள் கெட்டதை நீக்கி நல்லதை மட்டும் எடுத்துக் கொள்ளுவார்கள் என்றும் எழுதினூர்.

டில்லியிலிருந்து புறப்பட்டு நவம்பர் 13-ஆம் தேதி கொழும்புக்குப் போய்ச் சேர்ந்தார். இலங்கையில் சுற்றுப் பிரயாணம் செய்து, கதர் வேலைக்காகப் பணம் வசூல் செய்தார். கொழும்பு நகரசபை அவருக்கு வரவேற்புப் பத்திரம் வாசித்து அளித்தது. 29-ஆம் தேதி யாழ்ப்பாணத்திலிருந்து இந்தியாவுக்குப் புறப்பட்டார்.

டிசம்பர் 26-இல் சென்னையில் டாக்டர் அன்ஸாரி தலைமையில் காங்கிரஸ் கூடியது. இந்திய மக்களின் லட்சியம் பூரண தேசீய சுதந்திரம் என்று, ஜவாஹர்லாலின் முயற்சியால் காங்கிரஸின் கோட்பாடு திருத்தம் பெற்றது.

டிசம்பர் 29-இல் ஹக்கீம் அஜ்மல்கான் காலமானூர்.

## 1928 (வயது 59) :

ஸர் ஜான் சைமனின் தலைமையில் பம்பாயில் ஒரு கமிஷன் வந்து இறங்கியதும் அதைப் பகிஷ்கரிப்பதில் சகல அரசியல் கட்சிகளும் ஒன்று சேர்ந்தன. அந்தத் தினத்தில் இந்தியா முழு

வதிலும் ஹர்த்தால் அனுஷ்டிக்கப்பட்டது. எங்கும் கறுப்புக் கொடிகள் காட்டி, "சைமனே, திரும்பிப்போ!" என்று கோஷித்தனர். இந்தியர்கள் ஒத்துழைத்தாலும் ஒத்துழைக்காவிட்டாலும் சைமன் கமிஷனின் விசாரணை நடைபெறவே செய்யும் என்று பிப்ரவரி 22-ஆம் தேதி லார்டு இர்வின் அறிவித்தார்.

பகிஷ்காரம் வெற்றிகரமாகவே நடந்தது. சர்க்கார் பலாத்காரத்தையும், பயங்கரமான அடக்குமுறையையும் பிரயோகித்தது. 64 வயதான லாலா லஜபதிராய், ஜவாஹர்லால் நேரு உட்பட ஏராளமானவர்கள் லத்திக்கம்பு அடி வாங்கினார்கள். அடிபட்டதன் காரணமாக நவம்பர் 17-இல் லஜபதிராய் காலமானார்.

பிப்ரவரி 12-இல் பர்டோலி சத்தியாக்கிரகம் ஆரம்பமாயிற்று. காந்திஜியின் ஆசீர்வாதத்துடன் வல்லபபாய் பட்டேல் தலைமை தாங்கிச் சத்தியாக்கிரகத்தை நடத்தினார். வரிகொடா இயக்கத்தை நசுக்கப் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் சகல சக்திகளும் பிரயோகிக்கப்படும் என்று பம்பாய் சர்க்கார் அறிவித்தது. ஆனால், சீக்கிரத்தில் சமரசம் காணப்பெற்றது.

நேரு கமிட்டி அறிக்கையைப் பரிசீலனை செய்ய ஆகஸ்டு 28-இலிருந்து 30 வரை லட்சுமணபுரியில் சர்வ கட்சி மகாநாடு நடைபெற்றது.

டிசம்பரில் கல்கத்தாவில் காங்கிரஸின் வருடாந்தரக் கூட்டம் நடைபெற்றது. தலைமை தாங்கிய மோதிலால் நேரு, குடியேற்ற நாட்டு அந்தஸ்து வேண்டுமென்று கோரினார். 1929 முடிவுக்குள் குடியேற்ற நாட்டு அந்தஸ்துக் கொடுக்கப்படாவிட்டால், பூரண சுதந்திரமே வேண்டுமென்று கோரி, ஜவாஹர்லால் நேரு, சுபாஷ் சந்திர போஸின் ஆதரவோடு தீர்மானத்தைச்சமர்ப்பித்தார். இதைக் காந்திஜி பிரரேபித்தார். காங்கிரஸ் மைதானத்தில் தேசீயக்கொடியின் கீழ் 50,000 ஊழியர்கள் அணிவகுப்பு நடத்தினர். சுதந்திரம் கோரும் தீர்மானத்தை அவர்கள் நிறைவேற்றிக் கொடி வணக்கம் செய்தார்கள்.

அ. இ. கா. க. காரியாலயத்தின் கிளையாகத் தொழிலாளர் ஆராய்ச்சி இலாகா திறக்கப்பட்டது.

## 1929 (வயது 60):

அழைப்பின் பேரில் 1929-இல் காந்திஜி ஐரோப்பாவில் சுற்றுப் பிரயாணம் செய்வதாக இருந்தது. ஆனால், பிப்ரவரி முதல் வாரத்தில் அவர் பின்வருமாறு கூறினார்:

"போகவேண்டுமென்று என் அந்தராத்மா கூறவில்லை. மேலும், காங்கிரஸின் முன் ஆக்ககரமான ஒரு தீர்மானத்தைச் சமர்ப்பித்து, அதற்கு அனைவருடைய ஆதரவையும் பெற்றுக் கொண்டபின், நான் இப்போது ஐரோப்பாவுக்குப் போனால் தீர்

மானத்தைக் கைவிட்டுவிட்ட குற்றத்துக்கு உள்ளாவேன் என்று தோன்றுகிறது.........எல்லாவற்றையும்விட, அடுத்த வருடப் போராட்டத்துக்கு நான் என்னைத் தயார் செய்துகொள்ள வேண்டும். போராட்டம் எந்த உருவத்தை மேற்கொண்டாலும் சரி.''

மார்ச்சு 20-ஆம் தேதி சர்க்கார் திடீரென்று தொழிலாளர் ஸ்தாபனத்தைத் தாக்கியது. பிரபலமான தொழிலாளர் தலைவர்கள் கைது செய்யப்பட்டார்கள். மீரத் சதி வழக்கு விசாரணை ஆரம்பமாயிற்று. இது நாலரை வருடங்கள் நடைபெற்றது.

காந்திஜி பர்மாவுக்குச் சென்றார். ரங்கூன் நகரசபை அவருக்கு வரவேற்புப் பத்திரம் வாசித்தளித்தது. பர்மாவுக்குப் புறப்படுவதற்கு முன், அந்நியத் துணி தகனம் சம்பந்தமாக அவர் மீது குற்றம் சாட்டப்பட்டது. அங்கிருந்து திரும்பி வந்த பின் அவருக்கு ஒரு ரூபாய் அபராதம் விதிக்கப்பட்டது.

சைமன் கமிஷனின் வேலைகள் ஏப்ரலில் முடிவடைந்தன. மே மாதத்தில் இங்கிலாந்தில் நடந்த பொதுத்தேர்தல்களில் கன்ஸர்வேடிவ் கட்சி தோல்வியுற்றது. ராம்ஸே மெக்டானல்டைப் பிரதமராகக் கொண்ட தொழிற்கட்சி மந்திரி சபை பதவி ஏற்றது.

சுபாஷ் சந்திர போஸும், மற்ற பிரபல காங்கிரஸ் தலைவர்களும் கைதாகி விசாரணையில் இருந்தார்கள். சிறைச்சாலைகளில் இந்தியர்களைப் பாரபட்சமாக நடத்துவதை ஆட்சேபித்து ஆகஸ்டில் உண்ணாவிரதம் தொடங்கிய ஜதீந்திர நாத் தாஸ் 61-ஆவது நாள், செப்டம்பர் 13-ஆம் தேதியன்று காலமானார்.

பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்குள் பொறுப்பாட்சி வழங்குவதே இந்தியாவில் பிரிட்டிஷ் கொள்கை என்று அக்டோபர் 31-ஆம் தேதியன்று இர்வின் பிரகடனம் செய்தார். லண்டனில் வட்ட மேஜை மகாநாடு கூட்டும் உத்தேசத்தையும் வெளியிட்டார். இந்தியாவுக்குக் குடியேற்ற நாட்டு அந்தஸ்து வழங்குவது அக்கிரமமான காரியம் என்று சர்ச்சில் பிரசாரம் செய்யத் தொடங்கினார்.

டிசம்பரில் ஜவாஹர்லால் நேருவின் தலைமையில் லாகூர் காங்கிரஸ் நடைபெற்றது. டிசம்பர் 31-ஆம் தேதி நள்ளிரவில் காந்திஜியினுடைய யோசனையின் பேரில், குடியேற்ற நாட்டு அந்தஸ்து என்ற அபிப்பிராயம் காலாவதி யாகிவிட்டதென்றும், காங்கிரஸ் கோட்பாட்டில் சுயராஜ்யம் என்பது பூரண சுதந்திரம் என்று பொருள்படும் என்றும் காங்கிரஸ் அறிவித்தது.

## 1930 (வயது 61):

ஜனவரி 25-ஆம் தேதியன்று சட்டசபையில் வைசிராய் பேசும்போது, சுயநிர்ணய உரிமை என்பது ஆகாத காரியம்

என்று தெளிவாகச் சொன்னர். அதற்கு "எங் இந்தியா"வில் காந்திஜி பதில் கூறும்போது, "சூழ்நிலையைத் தெளிவுபடுத்திய தற்காகவும், அவரும் நாமும் எங்கே நிற்கிறேம் என்பதை நாம் நிச்சயமாக அறிந்துகொள்ளும்படி செய்ததற்காகவும் வைசிராய், ஒவ்வொரு காங்கிரஸ்காரரின் நன்றிக்கும் பாத்திரமாகிருர்" என்று எழுதினர்.

ஜனவரி 26-ஆம் தேதியன்று நாடெங்கும் சுதந்திரப் பிரதிக்ஞை எடுத்துக்கொள்ளப்பட்டது. அதிலிருந்து ஒவ்வொரு வருடமும் ஜனவரி 26-ஆம் தேதி சுதந்திர தினமாகக் கொண்டாடப்பட்டு வந்தது. 1950-இல் அதே தேதியில் குடியரசு பிரகடனம் செய்யப்பட்டதால், அன்று முதல் ஜனவரி 26-ஆம் தேதி இந்தியக் குடியரசு தினமாகக் கொண்டாடப்பட்டு வருகிறது.

ஜனவரி 30-இல் 'எங் இந்தியா'வில் காந்திஜி தம்முடைய பதிஞேரு அம்சத் திட்டத்தை வெளியீட்டார்.

சுபாஷ் சந்திர போஸுக்கும் மற்றும் பதினெரு பேருக்கும் ஒரு வருஷக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது.

காங்கிரஸின் கட்டளைக்கு இணங்க, சட்டசபை அங்கத்தினர் பதவியைக் காங்கிரஸ்காரர்கள் ராஜிநாமாச் செய்தார்கள்.

பிப்ரவரி 14-இலிருந்து 16 வரை சாபர்மதியில் கூடிய காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டத்தில், பூரண சுயராஜ்யம் பெறுவதற்குச் சட்ட மறுப்பு இயக்கம் தொடங்கவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. உப்புச் சட்டத்தை மீறுவதுபற்றி அங்கத்தினர்களுக்குக் காந்திஜி பூர்வாங்க யோசனை கூறினர். "நான் கைது செய்யப்படும் பொழுது" என்ற கட்டுரையை பிப்ரவரி 27-ல் காந்திஜி எழுதினர். ஆனந்தபவன் மாளிகையை மோதிலால் நேரு காங்கிரஸுக்கு நன்கொடையாக வழங்கினர்.

மார்ச்சு 22-ல் இர்வினுக்குக் காந்திஜி "இறுதி எச்சரிக்கை" கொடுத்தார். அதன் தொடக்கத்தில் அவர், சட்டமறுப்பு இயக்கத்தைத் தொடங்குமுன் வைசிராயைச் சந்தித்து ஒரு வழி காண்பதையே தாம் விரும்புவதாகத் தெரிவித்தார். இந்தக் கடிதத்துக்கு இர்வின் பதில் கொடுக்கும்போது, "சட்டத்தை மீறுவதற்கு ஸ்ரீ காந்தி உத்தேசித்திருப்பதை அறிந்து" வருத்தமே தெரிவித்திருந்தார். "ரொட்டி வேண்டுமென்று மண்டியிட்டுக் கெஞ்சினேன். ஆனல் எனக்குக் கல்தான் கிடைத்தது" என்று காந்திஜி எழுதினர்.

மார்ச்சு முதல் வாரத்தில், ராஸ் என்ற இடத்தில் வல்லபபாய் பட்டேல் கைது செய்யப்பட்டார்.

உடனடியான சத்தியாக்கிரகத்துக்குக் காந்திஜி தம்மைத் தயார் செய்துகொண்டார். சாபர்மதிக் கரையில் நடைபெற்ற 75,000 பேர் கொண்ட கூட்டத்தில், அகிம்சையையே

அனுஷ்டிப்பது என்ற ஒரு நிபந்தனையின் பேரில் "சுதந்திரப் போராட்ட"த்துக்காகச் சட்ட மறுப்பில் கலந்துகொள்ளுமாறு காந்திஜி மக்களைக் கேட்டுக் கொண்டார்.

மார்ச்சு 12-இல், உப்புச் சட்டத்தை மீறுவதற்காக சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த தண்டி யாத்திரையைக் காந்திஜி தொடங்கினர். ஆசிரமத்தைச் சேர்ந்த 79 தொண்டர்கள் அவரோடு சென்றார்கள். காலை 6-30 மணிக்கு யாத்திரையைத் தொடங்கிய காந்திஜி, "உப்புச் சட்டத்தை ரத்துச் செய்வதில் நான் வெற்றிபெறும் வரையில் ஆசிரமத்துக்குத் திரும்புவதில்லை" என்ற உறுதியோடு சென்றார். "நான் எதை விரும்புகிறேனோ, அதோடு திரும்புவேன்; அல்லது என் சடலம் சமுத்திரத்தில் மிதக்கும்" என்று கூறினர். யாத்திரையில் பெண்கள் அழைத்துச் செல்லப்படவில்லை.

யாத்திரை தொடங்குவதற்கு முதல் நாள் உண்ணாவிரதம் அனுஷ்டிக்கப்பட்டது; பிரார்த்தனை நடந்தது. காந்திஜியின் தலைமையில் புறப்பட்ட அகிம்சைப் படையினர், மூவர்கொண்ட வரிசையாகத் தங்கள் மூட்டை முடிச்சுக்களைத் தூக்கிக்கொண்டு நடந்தனர். செல்லும் வழியில் அவர்களுக்குப் பூவும் தேங்காயும் கொடுத்து மக்கள் வரவேற்றார்கள். தெருக்களில் தண்ணீர் தெளிக்கப்பட்டு, கொடிகளால் அலங்கரித்திருந்தார்கள். காந்திஜியின் தரிசனத்துக்காகவும், அவருடைய நல்லுரையைக் கேட்பதற்காகவும் தூரப் பகுதிகளில் இருந்தெல்லாம் ஏராளமானவர்கள் வந்த வண்ணமாக இருந்தார்கள்.

காந்திஜி, தாம் தங்கும் ஒவ்வோர் இடத்திலும் பேசும்போது, கதர் கட்டவேண்டும் என்றும், குடியை நிறுத்த வேண்டும் என்றும், சர்க்காருடன் ஒத்துழைப்பதை நிறுத்திச் சத்தியாக்கிரகத்தில் சேரவேண்டும் என்றும் ஜனங்களை வற்புறுத்தினர். கிராம உத்தியோகஸ்தர்கள் 300 பேர் தங்கள் உத்தியோகங்களை ராஜிநாமாச் செய்துவிட்டார்கள்.

200 மைல் யாத்திரைக்குப் பிறகு ஏப்ரல் 5-ஆம் தேதி காலையில் காந்திஜியும் தொண்டர்களும் கடற்கரையிலுள்ள தண்டி என்ற கிராமத்துக்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

மார்ச்சு 21-ஆம் தேதி அலகாபாத்தில் கூடிய அ.இ.கா.க. கூட்டத்தில், காந்திஜி கைது செய்யப்பட்ட மாத்திரத்தில் சட்ட மறுப்பைத் தொடங்கவும், அல்லது அவர் கட்டளைக்கு இணங்க, கைது செய்யப்படுவதற்கு முன்பே தொடங்கவும் தீர்மானிக்கப்பட்டது.

ஏப்ரல் 6-ஆம் தேதி தண்டியில் நடைபெற்ற பிரார்த்தனைக் கூட்டத்தில் காந்திஜி பேசினர். தாம் கைது செய்யப்பட்டால், அப்பாஸ் தயாப்ஜியின் கட்டளைகளின்படியும், அதன்பின் சரோஜினி நாயுடுவின் கட்டளைகளின்படியும் காங்கிரஸ் நடந்து

மே மாதத்தில் அலகாபாத்தில் காரியக் கமிட்டி கூடி, சட்ட மறுப்பு இயக்கத்தை விஸ்தரித்தது.

உப்புச் சத்தியாக்கிரகம் தொடர்ந்து நடைபெற்றது. தென் ஆப்பிரிக்காவில் காந்திஜியின் பழைய சகபாடியாக இருந்த 63 வயதான இமாம் சாகிப்பின் தலைமையில் 2500 பேர் தர்ஸனு உப்பு டிப்போவை முற்றுகையிட்டனர். போலீஸ் தடியடியால் ஒருவர் கொல்லப்பட்டார்; 290 பேர் காயம் அடைந்தார்கள்.

வாடலா உப்பு டிப்போ பல முறை முற்றுகையிடப்பட்டது. உப்புச் சட்டத்தை மீறும் அதே சமயத்தில் தடை உத்தரவுகளையும் மீறினர். பேராரிலும், மற்ற இடங்களிலும் வனச் சட்டங்கள் மீறப்பட்டன. வரி கொடா இயக்கம் ஆரம்பிக்கப்பட்டது. அந்நியத் துணி பகிஷ்காரம், மதுபானக் கடை மறியல் ஆகியவை அதிக அளவில் நடைபெறலாயின. இதில் அதிகப் பங்கு எடுத்துக்கொண்டவர்கள் பெண்களே. பம்பாயில் மட்டும் ரூ. 30 கோடி பெறுமானமுள்ள அந்நியத் துணி காங்கிரஸால் முடக்கப்பட்டது. மதுபான வரிகளால் கிடைக்கும் வருமானம் 70 சதவிகிதம்—ரூ. 60 லக்ஷம்—குறைந்தது. வனங்களின் வருமானத்தில் 16 லக்ஷம் ரூபாய் குறைந்தது. நிலவரியில் ரூ. $5\frac{1}{2}$ லக்ஷம் வசூல் ஆகவில்லை. பர்டோலியில் குடியானவர்கள் சர்க்காருக்கு வரி செலுத்த மறுத்து, பயிர்களைக் கொளுத்திவிட்டுப் பரோடாவுக்குக் குடி பெயர்ந்து போனார்கள். மிதுனபுரியில் சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கும் ஆதரவாளர்களுக்கும் வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்கள் கிடைக்கவில்லை.

சர்க்கார் கடுமையான நடவடிக்கை எடுத்தது. வருடம் முடிவதற்கு முன்பாக வைசிராய் சுமார் 12 புதிய சட்டங்களைப் பிறப்பித்தார். நீதி மன்றங்களில் தண்டிக்கப்பட்டவர்களின் மொத்தத் தொகை ஒரு லட்சத்தையும் தாண்டிவிட்டது. இவர்களில் 12,000 பேர் முஸ்லிம்கள்.

ஜூன் மாதம் முதல் தேதியில் வாடலா முற்றுகையில் 15,000 தொண்டர்களும், முற்றுகையைப் பார்க்க வந்தவர்களும் கலந்து கொண்டார்கள்.

ஜூன் 30-ஆம் தேதி மோதிலால் நேரு கைது செய்யப்பட்டு, 6 மாதச் சிறைவாச தண்டனை விதிக்கப்பட்டார்.

பொதுக்கூட்டங்களுக்குத் தடை விதிக்கப்பட்டது. ஜூலை 15-இல் பெஷாவரில் துப்பாக்கிப் பிரயோகம் நடந்தது. கான் அப்துல் கபார்கான் தலைமையில் எல்லைப்புற மாகாணம் தீவிர நடவடிக்கைகளில் இறங்கியது. பெண்கள் முகத்திரைகளைக் களைந்துவிட்டு, ஆண்களோடு சரிநிகர் சமானமாக நின்று போராடினர். அடக்குமுறையின்போது, கார்வாலி சோல்ஜர்கள் சிலர் மக்களை நோக்கிச் சுட மறுத்ததால், அவர்களுக்கு ராணுவக் கோர்ட்டுகளில் தண்டனை விதிக்கப்பட்டது. பத்திலிருந்து பதினான்கு வருடச் சிறைவாசம் வரை அவர்களுக்கு விதிக்கப்பட்டது.

ஸர் தேஜ்பகதூர் ஸப்ரூ, ஸ்ரீ எம். ஆர். ஜெயகர் ஆகியோர் காந்திஜி, மோதிலால், ஜவாஹர்லால் ஆகியவர்களைப் பேட்டி காண்பதற்குரிய வசதிகளை வைசிராய் அனுமதித்தார். ஆகஸ்டு 14, 15-ஆம் தேதிகளில் பேட்டி கண்டார்கள். பேச்சு வார்த்தைகள் தோல்வியில் முடிந்தன.

நவம்பர் 12-இல் காங்கிரஸின் பிரதிநிதித்துவம் இல்லாமலே வட்ட மேஜை மகாநாடு கூடியது.

எல்லாத் தலைவர்களும் சிறையில் இருந்ததால், டிசம்பரில் காங்கிரஸ் நடைபெறவில்லை.

## 1931 (வயது 62):

ஜனவரி 4-ஆம் தேதி இங்கிலாந்தில் முகம்மது அலி காலமானார்.

முதலாவது வட்ட மேஜை மகாநாடு ஜனவரி 18-இல் முடிவடைந்தது. அதில் இந்தியாபற்றிய பிரிட்டிஷ் கொள்கையைப் பிரதம மந்திரி எடுத்துரைத்தார். மன்னர் அனுப்பியிருந்த செய்தியில், இந்தியாவின் வரலாற்றில் புதிய அத்தியாயத்தைத் தொடங்கியிருப்பதாகவும், காங்கிரஸ்காரர்களின் சேவைகளைப் பயன்படுத்திக்கொள்ள முயற்சி எடுக்கப்படும் என்றும் கூறப்பட்டிருந்தது.

ஜனவரி 21-இல் அலகாபாத் சுயராஜ்ய பவனத்தில் ராஜேந்திரப் பிரசாத் தலைமையில் காரியக் கமிட்டி கூடி, வட்ட மேஜை மகாநாட்டை அங்கீகரிக்கத் தயாராக இல்லை என்று அறிவித்தது. அக் கூட்டத்தில் மாளவியா பிரசன்னமாக இருந்தார்.

காந்திஜியையும், காரியக்கமிட்டி அங்கத்தினர்களையும் நிபந்தனையின்றி விடுவிப்பதாக ஜனவரி 25-ஆம் தேதியன்று லார்டு இர்வின் அறிவித்தார். மறுநாள் காந்திஜியும் சுமார் 30 தலைவர்களும் விடுதலை செய்யப்பட்டனர். காங்கிரஸ் ஸ்தாபனங்களுக்குச் சர்க்கார் விதித்திருந்த தடைகள் யாவும் வாபஸ் பெறப்பட்டன.

பிப்ரவரி 6-ஆம் தேதி லட்சுமணபுரியில் மோதிலால் நேரு காலமானார்.

பிப்ரவரி 17-ஆம் தேதி காந்தி-இர்வின் சந்திப்பு நடைபெற்றது. "அரை நிர்வாணப் பக்கிரி, வைசிராய் மாளிகையின் படிகளில் ஏறி நடப்பதா" என்று சர்ச்சில் சொன்னார். டாக்டர் அன்ஸாரியின் ஜாகையில் கூடிய காரியக் கமிட்டி, காந்திஜிக்கு முழு அதிகாரத்தையும் கொடுத்தது.

பிப்ரவரி 22-ஆம் தேதி முஸ்லிம் லீக் கவுன்சில் கூட்டத்தில் காந்திஜி பேசினர். 27-ஆம் தேதி வைசிராயைச் சந்தித்தார். 28-ஆம் தேதி காந்திஜி மறியல் பற்றிய குறிப்பை அனுப்பினர். வைசிராய், உத்தேச சமரசம் பற்றிய குறிப்புக்களை அனுப்பினர். மார்ச்சு முதல் தேதிக்குள் திட்டவட்டமான பதில் வேண்டு மென்று வைசிராய் கூறினர். திரும்பவும் போராட்டங்கள் நடை பெறுவதைத் தவிர்க்க முடியாது என்பதுபோலத் தோன்றியது. ஆனல், மார்ச்சு முதல் தேதியன்று வைசிராயின் மனப்போக்கு நல்லவிதமாக மாறியது. மார்ச்சு 4-ஆம் தேதி காந்தி-இர்வின் ஒப்பந்தம் கையெழுத் தாயிற்று. அதன்படி, பகிஷ்காரம் நிறுத் தப்படும் என்றும், ஆனல், சுதேசிச் சாமான்களை வாங்கும்படி பிரசாரம் செய்ய அனுமதி உண்டு என்றும் முடிவாயிற்று. அமைதி யான முறையில் மறியல் செய்வதும் அனுமதிக்கப்பட்டது. சட்டங்களை மீறுவது நிறுத்தப்பட வேண்டுமென்றும், தடுப்புச் சட்டங்களையெல்லாம் வாபஸ் பெறுவதென்றும், குற்றஞ் சாட் டப்பட்டுள்ள அனைவருக்கும் பொதுமன்னிப்பு வழங்குவதென் றும் ஒப்பந்தமாயிற்று. கடற்கரையில் வாழும் மக்களுக்கு உப் புக்காய்ச்சவும், விற்கவும் உரிமை அளிக்கப்பட்டது. வட்ட மேஜை மகாநாட்டில் காங்கிரஸ் பிரதிநிதித்துவம் வகிக்கத் தீர் மான மாயிற்று. அதனல் மேற்கொண்டு பேச்சு வார்த்தைகள் நடத்த வழி ஏற்பட்டது.

15 நாட்களுக்குள் வைசிராயைக் காந்திஜி 8 தடவைகள் சந்தித்தார். மொத்தம் சுமார் 24 மணி நேரத்தை அவருடன் கழித்தார்.

இதன் பலனக ஒப்பந்தம் செய்துகொள்ளப்பட்டது. பேச்சு வார்த்தைகளின்போது, பகத் சிங், ராஜகுரு, சுகதேவ் ஆகியோர், ஸாண்டர்ஸைக் கொலை செய்ததாக லாகூர்ச் சதி வழக்கில் குற்றம் சாட்டப்பட்டு மரண தண்டனை விதிக்கப்பட் டிருந்ததை மாற்றுவது சம்பந்தமாகவும் காந்திஜியும் இர்வினும் பேசினர்.

மார்ச்சு 19-ஆம் தேதி வைசிராயைக் காந்திஜிபேட்டி கண்டு, அரசியல் கைதிகளை விடுதலை செய்வது சம்பந்தமாக விவா தித்தார்.

பகத்சிங்கைத் தூக்கிலிடும் தேதி ரகசியமாக வைக்கப்பட் டிருந்தது. கலகங்கள் ஏற்படும் என்று அதிகாரிகள் பயந்தது தான் இதற்குக் காரணம். ஐரோப்பிய மாதர்கள் குறைந்த பட்சம் பத்து நாட்களுக்காவது, ஐரோப்பிய வட்டாரங்களுக் குள்ளேயே இருக்கவேண்டுமென்று எச்சரிக்கை கொடுக்கப்பட் டது. மார்ச்சு 23-க்கும் 24-க்கும் இடையே, இரவில் பகத்சிங் தூக்கில் இடப்பட்டார்.

கராச்சிக் காங்கிரஸில் காந்திஜியின் நிலைமை சிரமமானதாக ஆகிவிட்டது. அவர் கராச்சிக்கு வந்து சேர்ந்ததும், வாலிபப்

புரட்சிக்காரர்கள் கறுப்புக் கொடிகளுடன் அவரை வரவேற்று துக்கத்துக்கு அடையாளமாகக் கறுப்பு மலர்களை அவரிடம் கொடுத்தார்கள்.

காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்துக்கு முன்னதாகக் காந்திஜி நவஜவான் சபையின் தலைவரான சுபாஷ் சந்திர போஸுடன் பேசி அவரைக் காங்கிரஸின் கருத்துக்கு இணங்கும்படி தூண்டினர்.

மார்ச்சு 25-ஆம் தேதி நடந்த பொதுக்கூட்டத்தில் காந்திஜி பேசும்போது, "காந்தி சாகலாம்; ஆனல், காந்தியம் என்றென்றைக்கும் இருக்கும்" என்று கூறினர்.

மார்ச்சு 31-ஆம் தேதி கராச்சிக் காங்கிரஸ், திறந்த வெளியில் கூடியது. ஸர்தார் வல்லபபாய் பட்டேல் தலைமை தாங்கினர். மோதிலால் நேருவும், முகம்மது அலியும் காலமானதற்குத் துக்கம் தெரிவிக்கும் தீர்மானங்கள் நிறைவேறிய பின், பகத்சிங் பற்றிய தீர்மானம் எடுத்துக்கொள்ளப்பட்டது. இந்தியர் நலன்களுக்கு உகந்தவாறு அவசியமான மாறுதல்களுடன் பூரண சுயராஜ்யம் கோருவதற்கான அதிகாரத்துடன் வட்டமேஜை மகாநாட்டுக்குக் காங்கிரஸ் கோஷ்டியை அனுப்ப முடிவு செய்யப்பட்டது. காந்திஜியின் பதினேரு அம்சங்களுடன், ஜவாஹர்லால் நேரு தெரிவித்த ஒரு சில புது அம்சங்களையும் கொண்ட "மக்களின் ஜீவாதார உரிமைகள்" பற்றிய தீர்மானம் நிறைவேறியது.

ஏப்ரல் 7-ஆம் தேதியன்று ஒரு கூட்டத்தில் பேசிய காந்திஜி, சுயராஜ்யம் என்பது நீதியின் அரசாட்சி என்றும் அதனல் ஆங்கிலேயனுடைய உரிமைகளும் பாதுகாக்கப்பட வேண்டும் என்றும் சொன்னர்.

காந்திஜி அமிர்தசரசில் சீக்கிய லீக்குக்குப் போய்விட்டு அகமதாபாத்துக்குத் திரும்பி குஜராத் வித்யாபீடப் பட்டமளிப்பு விழாவுக்குத் தலைமை தாங்கினர்.

ஏப்ரல் 18-இல் லார்டு இர்வின் இந்தியாவை விட்டுச்சென்ருர். அவரைக் காந்திஜி பம்பாயில் வழியனுப்பினர். லார்டு வில்லிங்டன் வைசிராய் பதவி ஏற்ருர். புதிய வைசிராயைக் காந்திஜி சிம்லாவில் சந்தித்தார்.

ஜூன் 10-இல் காரியக் கமிட்டி கூடி, வட்டமேஜை மகாநாட்டுக்குக் காந்திஜியைக் காங்கிரஸின் ஏகப் பிரதிநிதியாக நியமித்தது.

ஆகஸ்டு முதல் தேதியன்று, காந்திஜியின் தேசீயக் கொடியைச் சிற்சில மாறுதல்களுடன் காரியக் கமிட்டி ஏற்றுக் கொண்டது. அதன்படி மஞ்சள், வெள்ளை, பச்சை ஆகிய மூவர்ணங்களும், வெள்ளை வர்ணப்பகுதியில் ராட்டை உருவமும் உடைய கொடி காங்கிரஸின் கொடியாயிற்று. மஞ்சள், தைரியத்

துக்கும் தியாகத்துக்கும் அடையாளம். அமைதி, சத்தியம் ஆகியவற்றின் சின்னம் வெள்ளை. பச்சை, விசுவாசத்தையும் சக்தியையும் குறிப்பது. ராட்டை, பொதுமக்களின் க்ஷேம நலனைச் சுட்டிக் காட்டும் அடையாளம். பம்பாயில் இந்தக் கொடியை அ. இ. கா. க. உத்தியோக பூர்வமாக அங்கீகரித்து ஏற்றுக்கொண்டது.

காந்திஜி இங்கிலாந்துக்குப் புறப்பட வேண்டிய தருணம் நெருங்கிக்கொண்டிருந்த சமயத்தில், காந்தி-இர்வின் ஒப்பந்த ஷரத்துக்களை மாகாண சர்க்கார்கள் மீறியதன் காரணமாக நாட்டின் நிலைமை கடுமையாகிக் கொண்டிருந்தது. ஆகஸ்டு 15-ஆம் தேதி லண்டனுக்குப் போவதற்காகக் காந்திஜியும், சரோஜினி நாயுடுவும், மாளவியாவும் வாங்கியிருந்த கப்பல் டிக்கெட்டுகளை ரத்துச் செய்துவிட்டனர். ஆகஸ்டு 11-ஆம் தேதியன்று வைசிராய்க்குக் காந்திஜி தந்தி கொடுத்தார். வில்லிங்டன் கல்கத்தாப் பிரயாணத்தைக் குறைத்துக்கொண்டு சிம்லாவுக்குத் திரும்பினர். காந்திஜி, பட்டேலுடனும் நேருவுடனும் சிம்லாவுக்குச் சென்றார். நீண்ட பேச்சு வார்த்தைகளுக்குப் பிறகு வில்லிங்டனும் காந்திஜியும் ஆகஸ்டு 27-இல் புதிய ஒப்பந்தம் செய்துகொண்டனர். நேரடியான பாதுகாப்பு நடவடிக்கையை மேற்கொள்ளும் உரிமையைக் காங்கிரஸ் வைத்துக்கொண்டது; பர்டோலி விவகாரம் சம்பந்தமாக விசாரணை நடத்தச் சம்மதம் அளிக்கப்பட்டது.

ஆகஸ்டு 27-இல் காந்திஜி விசேஷ ரெயிலில் சிம்லாவை விட்டுப் புறப்பட்டுப் பம்பாய்க்கு வந்து சேர்ந்தார். 29-ஆம் தேதி நடுப்பகலில் எஸ். எஸ். ராஜபுதானா என்ற கப்பல் லண்டனுக்குப் புறப்பட்டது. காந்திஜி இந்தியாவிலிருந்து புறப்படும்போது, வாயில்லாப் பூச்சிகளாக இருக்கும் கோடிக்கணக்கான மக்களின் நலன்களுக்கு முரண்படாத எதற்கும் தாம் பிரதிநிதித்துவம் வகிக்க முயல்வதாகவும், அந்த மக்களுக்காகவே காங்கிரஸ் இன்று இருந்துவருகிறது என்றும் ஒரு செய்தியில் கூறினர். அவரோடு மாளவியா, சரோஜினி நாயுடு, ஸர் பி. பட்டாணி, தேவதாஸ் காந்தி, மீராபென், மகாதேவ தேசாய், பியாரிலால், ஜி. டி. பிர்லா ஆகியோர் இங்கிலாந்துக்கு அதே கப்பலில் சென்றார்கள்.

ஏடனில் அராபியர்களும், இந்தியர்களும் இந்திய தேசீயக் கொடியின் கீழ் காந்திக்கு வரவேற்புப் பத்திரம் வாசித்ததுடன், 328 கினிகள் கொண்ட ஒரு பண முடிப்பும் கொடுத்தார்கள்.

"மாபெருந் தலைவர் அல் மகாத்மா காந்திக்கு" எகிப்தின் வாப்த் கட்சித் தலைவர் நஹாஸ் பாஷா வாழ்த்துத் தந்தி அனுப்பினர். சில பத்திரிகை நிருபர்களைத் தவிர எகிப்தியப் பொது மக்கள் காந்திஜியைப் பார்க்க அதிகாரிகள் அனுமதிக்கவில்லை.

போர்ட் செயித்தில் ஷௌகத் அலி வந்து காந்திஜியோடு சேர்ந்துகொண்டார்.

மார்ஸேல்ஸ் துறைமுகத்தில் காந்திஜியை, ஆண்டுரூஸ், பேராசிரியர் பிரிவாத், நோய்வாய்ப்பட்டிருந்த ரொமேன் ரோலாந்தின் சார்பில் அவருடைய சகோதரி ஆகியோரும், மாணவர்களும் வரவேற்றார்கள். மார்ஸேல்ஸிலிருந்து போலோனுக்குக் காந்திஜி ரெயிலில் சென்றார். போகும் வழியில் பத்திரிகையாளர்களின் கூட்டத்தில் பேசுவதற்காக வண்டியை நிறுத்தவேண்டியிருந்தது.

செப்டம்பர் 12-ஆம் தேதி காந்திஜி லண்டனுக்குப் போய்ச் சேர்ந்தார். நகரின் கிழக்குப் பகுதியில் கிங்ஸ்லி ஹால் கட்டடத்தில் குமாரி மூரியல் லெஸ்டருடன் தங்கினார். அவரைப் போப்லார் மேயர் வரவேற்றார். அவரைப் பார்ப்பதற்கென்றே நூற்றுக் கணக்கான ஏழைகள்—ஆடவர், பெண்டிர், குழந்தைகள் ஆகிய அனைவரும்—வந்து சூழ்ந்தார்கள். அவருடைய படம் தினசரிப் பத்திரிகைகளின் முதல் பக்கத்தை அலங்கரித்தது.

காந்திஜியைப்பற்றிப் பத்திரிகைகளில் கட்டுக்கதைகள் வெளியாகத் தொடங்கின. இந்தியாவுக்கு வந்த வேல்ஸ் இளவரசரின் முன் காந்திஜி கீழே விழுந்து வணங்குவதுபோல ஜார்ஜ் ஸ்லோகோம்ப் சித்திரம் வரைந்திருந்தார். காந்திஜி இதைப் பார்த்துவிட்டு, ''இது உங்களுடைய கற்பனை சக்திக்கும்கூடப் பெருமை அளிக்கக்கூடியதாக இல்லை. இந்தியாவில் பரம ஏழையான கக்கூஸ் சுத்தம் செய்பவர் முன்னிலையிலும், பரம ஏழையான தீண்டாதார் முன்னிலையிலும், அவர்களைப் பல நூற்றாண்டுகளாக நசுக்கி வந்ததில் பங்கெடுத்துக் கொண்டதற்காக நான் மண்டியிட்டு வணங்குவேன். அவருடைய கால்களைக் கழுவவும் கழுவுவேன். ஆனால், நான் மன்னரின் (சக்கரவர்த்தியின்) முன்னிலையில்கூட விழுந்து வணங்க மாட்டேன். அப்படியிருக்க, வேல்ஸ் இளவரசரை வணங்குவது எங்கே?'' என்றார். ''காந்தி மாமா"வைப் பார்ப்பதற்காகத் தினந்தோறும் கர்லையில் குழந்தைகள் திரண்டு வந்தார்கள்.

காந்திஜி லண்டனுக்குச் சென்ற இரண்டாவது நாள், அவருடைய பழைய நண்பரான பிஷர் பாதிரியாரின் வேண்டுகோளின்படி, காந்திஜி கிங்ஸ்லி ஹாலில் இருந்தபடியே அமெரிக்காவுக்கு அரை மணி நேர ரேடியோப் பிரசங்கம் ஒன்று செய்தார். அவருடைய முதல் ரேடியோப் பேச்சு அதுவே. “இதில்தான் நான் பேசவேண்டுமா?'' என்று மைக்ரோபோனைக் காட்டிக் காந்திஜி கேட்டார். அவருடைய பேச்சு அப்பொழுதே கலிபோர்னியாவில் பதிவு செய்யப்பட்டது. கண்களை மூடித் தலையைக் குனிந்தார். பிறகு பேசத்தொடங்கினார். ''பலாத்கார வழிகளின் மூலம் என் நாட்டுக்குச் சுதந்திரம் பெற முயல்வதைவிட, அதற்காக நான் தனிப்பட்ட முறையில்—அவசியமானால்—யுகக் கணக்கில் காத்திருப்பேன்'' என்றார் காந்திஜி.

செப்டம்பர் 15-ஆம் தேதி வட்டமேஜை மகாநாட்டுக் கமிட்டியில் பேசிய காந்திஜி, காங்கிரஸின் லட்சியங்களை எடுத்துக் கூறி, "பிரிட்டனுக்கும் இந்தியாவுக்கும் இடையே கௌரவமான, சமத்துவமான பங்காளித்துவம் ஏற்படப்போகிறது என்ற உறுதியான நம்பிக்கையுடன் திரும்பவே நான் விரும்புகிறேன்" என்றார்.

அக்டோபர் 2-ஆம் தேதி காந்திஜியின் பிறந்த நாள். கிங்ஸ்லி ஹாலில் ஒரே கோலாகலம். ஒரு ஸ்வீடிஷ் பெண்மணியால் பழைய ஆங்கில ராட்டை ஒன்று காந்திஜிக்கு அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்டது.

நவம்பர் 13-ஆம் தேதியன்று மைனாரிடிகள் கமிட்டியில் பேசும்போது, "தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குத் தனித்தொகுதி தேர்தல்கள் கூடாது. இதை என் உயிரைக் கொடுத்தும் எதிர்ப்பேன்" என்றார் காந்திஜி.

டிசம்பர் முதல் தேதியன்று மகாநாடு முடிவடைந்தது. தலைவருக்குக் காந்திஜி வந்தனோபசாரம் கூறினார். அப்போது காந்திஜி கூறியதாவது: "என்னுடைய வழி எந்தத் திசையில் செல்லும் என்பதை நான் அறியேன். அது எனக்கு முக்கியமல்ல. நேர் எதிர்த்திசையில் செல்ல நேர்ந்தாலும், நீங்கள் என் இருதய ஆழத்திலிருந்து வந்தனோபசாரம் பெறுவதற்கு உரிமை படைத்திருக்கிறீர்கள்."

காந்திஜியின் லண்டன் நடவடிக்கைகளில் வட்ட மேஜை மகாநாடு ஒரு சிறு பகுதியே. எல்லாப் பிரிவுகளையும், கோட்பாடுகளையும் சேர்ந்த பிரதிநிதிகளை காந்திஜி சந்தித்தார். பெர்னாட்ஷா காந்திஜியைச் சந்தித்துக் கை குலுக்கும்போது தம்மைச் "சின்ன மகாத்மா" என்று சொல்லிக்கொண்டார். இருவரும் ஒரு மணி நேரம் பேசிக்கொண்டிருந்தனர். காந்திஜிக்கும் மற்ற இந்தியப் பிரதிநிதிகளுக்கும் பக்கிங்காம் அரண்மனையிலிருந்து அழைப்பு வந்தது. மன்னரைச் சந்திப்பதற்குச் சம்பிரதாயமான உடையில்தான் செல்லவேண்டுமென்று காந்திஜியிடம் கூறியபோது அவர், தாம் வழக்கமாக உடுக்கும் முழங்கால் வேஷ்டியுடன் தான் மன்னரைப் பார்க்க முடியும் என்றும், அதை அனுமதிக்கவில்லை என்றால், அவரைப் பார்க்கப் போவதில்லை என்றும் சொல்லிவிட்டார். காந்திஜியைச் சந்தித்த ஐந்தாம் ஜார்ஜ் மன்னர், தாம் தென் ஆப்பிரிக்காவில் பார்த்தபோதும், அதற்குப் பிறகு 1918 வரையிலும் காந்திஜி "நல்ல மனித"ராக இருந்ததாகவும், அப்புறம் காந்திஜியிடம் ஏதோ குறை ஏற்பட்டுவிட்டதாகவும் சொன்னார். இதற்குக் காந்திஜி ஒரு பதிலும் சொல்லாமல் மௌனமாக இருந்தார். "நீங்கள் ஏன் என் மகனைப் பகிஷ்காரம் செய்தீர்கள்?" என்று ஜார்ஜ் மன்னர் கேட்டதற்கு, "உங்கள் மகனைப் பகிஷ்காரம் செய்யவில்லை. பிரிட்டிஷ் மகுடத்தின் உத்தியோக பூர்வமான பிரதிநிதியைத்தான் பகிஷ்கரித்தேன்" என்று காந்திஜி பதிலளித்தார். காந்திஜியின் முழங்கால்

துணியை, யாரோ குறிப்பிட்டபோது, காந்திஜி கண்ணைச் சிமிட்டிக் கொண்டு ''எங்கள் இருவருக்கும் சேர்த்து மன்னர் உடையணிந்திருக்கிறார்'' என்று சொன்னார். பிரிட்டிஷ் ராணியோடும் காந்திஜி பேசினார்.

ஜவுளித் தொழிலின் கேந்திர ஸ்தானமான மான்செஸ்டர் நகருக்குக் காந்திஜி விஜயம் செய்தபோது, நட்புறவோடும், அன்போடும் வரவேற்கப்பட்டார். அப்புறம் ஈட்டன், ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ் ஆகிய இடங்களுக்குச் சென்றார். பேராசிரியர்களும், மாணவர்களும் வரவேற்றார்கள். பெர்னாட்ஷா, ஆர்தர் ஹெண்டர்ஸன், லாயிட் ஜார்ஜ், கான்டர்பரி மதகுரு, நடிகர் சார்லிசாப்ளின், லார்டு இர்வின், ஹெரால்டு லாஸ்கி முதலிய பிரபலஸ்தர்களைச் சந்தித்தார். குழந்தைக் கல்வி பற்றிக் கலந்து பேசுவதற்கு அவரை மான்டிஸோரி அம்மையார் சந்தித்தார். காந்திஜியைப் பற்றிப் பெர்னாட்ஷாவிடம் அபிப்பிராயம் கேட்டபோது, அவர், ''காந்திஜியைப் பற்றி அபிப்பிராயம் கூறவா! இதைவிட இமய மலையைப் பற்றி அபிப்பிராயம் கூறும்படி நீங்கள் கேட்டிருக்கலாமே'' என்றார்.

அமெரிக்கா, பிரான்ஸ், ஜெர்மனி, இத்தாலி, பாலஸ்தீனம், எகிப்து, ஹங்கேரி, டென்மார்க், அயர்லாந்து ஆகிய நாடுகளுக்கு விஜயம் செய்யுமாறு காந்திக்கு அழைப்புக்கள் வந்தன. ஆனால், அவற்றை அவர் ஏற்றுக்கொள்ள இயலவில்லை.

டிசம்பர் 5-ஆம் தேதி காந்திஜி லண்டனை விட்டுப் புறப்பட்டார். அன்று மாலையில் பாரிஸ் நகரிலுள்ள மிகப் பெரிய சினிமாக் கொட்டகையில் ஒரு மேஜை மீது உட்கார்ந்துகொண்டு பிரெஞ்சு மக்களை நோக்கிக் காந்திஜி சொற்பொழி வாற்றினார். பாரிஸில் ஒரு நாள் தங்கினார். ஸ்விட்ஜர்லாந்துக்குப் புறப்பட்டார். வில்லனூவேயிலிருந்த ரொமேன் ரோலாந்தின் ஜாகைக்கு 6-ஆம் தேதி விஜயம் செய்து அவருடன் ஐந்து நாட்கள் தங்கினார்.

டிசம்பர் 12-ஆம் தேதி ரோம் நகரில் முஸோலினியைச் சந்தித்தார். போப்பைப் பார்க்க இயலவில்லை. ஆனால், வாடிகன் பொருட்காட்சிச் சாலைக்கும் நூல் நிலையத்துக்கும் விஜயம் செய்தார்.

டிசம்பர் 14-ஆம் தேதி காந்திஜியும் அவரது கோஷ்டியாரும் பிரிண்டிஸியை விட்டுப் புறப்பட்டு, 28-ஆம் தேதி காலையில் பம்பாயில் வந்து இறங்கினர்.

காந்திஜி வந்து சேருவதற்கு முன்னதாக, ஐக்கிய மாகாணக் காங்கிரஸ், வரிகொடா இயக்கத்தைப் பிரகடனம் செய்துவிட்டது. எல்லைப்புற மாகாணத்திலும், ஐக்கிய மாகாணத்திலும், வங்காளத்திலும் அவசரச் சட்டம் பிறப்பிக்கப்பட்டது. டிசம்பர் 25-இல் அப்துல் கபார்கானும் மற்றும் சிலரும் கைது செய்யப்பட்டனர். ஒரு வார காலத்துக்குள் ஆயிரத்துக்கு மேற்பட்ட

செஞ்சட்டைப் படையினருக்குக் கட்டுப்பாட்டுத் தடை விதிக்கப் பட்டது. ஜவாஹர்லால் நேரு கைதானார். 1930, 1931-ஆம் வருடங்களில் 10 மாத காலத்துக்குள்ளாக 90,000 பேர் சிறை சென்றனர்.

டிசம்பர் 28-ஆம் தேதி மாலையில் பம்பாய் ஆஸாத் மைதானத்தில் பிரம்மாண்டமான கூட்டத்தில் பேசிய காந்திஜி, தொண்டர்கள் கைது செய்யப்படுவதைப் பற்றிக் கூறும்போது, "இவற்றை நமது கிறிஸ்தவ வைசிராய் லார்டு வில்லிங்டன் கொடுக்கும் பரிசுகளாக நான் கருதுகிறேன். கிறிஸ்துமஸ் சமயத்தில் வாழ்த்துக்களையும் பரிசுகளையும் பரிமாறிக் கொள்ளுவது வழக்கம் அல்லவா ?" என்றார்.

டிசம்பர் 29-ஆம் தேதி வைசிராய்க்குக் காந்திஜி தந்தியடித்து, பேட்டியளிக்க வேண்டுமென்று கேட்டார். ராஜீய நிலைமை பற்றி விவாதிக்க வைசிராய் மறுத்துவிட்டார்.

## 1932 (வயது 63):

காந்திஜிக்கும் வைசிராய்க்கும் இடையே 6 நாட்கள் கடிதப் போக்குவரத்து நடந்தது. ஜனவரி 3-ஆம் தேதி காந்திஜி கடைசித் தந்தி கொடுத்தார். காரியக்கமிட்டி கடுமையான சட்ட திட்டங்களின் கீழ்ச் சட்ட மறுப்பை மீண்டும் தொடங்குமாறு தேசத்துக்கு அழைப்பு விடுத்தது. அத்துடன், இயக்கத்தின் முன்னேற்றத்தைக் கவனிக்குமாறு உலகின் சுதந்திர மக்களையும் அவர்களுடைய சர்க்கார்களையும் கேட்டுக்கொண்டது.

ஜனவரி 4-ஆம் தேதி சர்க்காரின் தாக்குதல் ஆரம்பித்தது. காங்கிரஸ் ஸ்தாபனங்களுக்குத் தடை விதிக்கப்பட்டது; அநேக காங்கிரஸ்காரர்கள் கைது செய்யப்பட்டார்கள். காந்திஜி, ஜனவரி 4-ஆம் தேதியன்று பம்பாயில் கைது செய்யப்பட்டு எரவ்டா சிறையில் பாதுகாவலில் வைக்கப்பட்டார்.

சுபாஷ் சந்திரபோஸ், வல்லபபாய் பட்டேல், டாக்டர் அன்ஸாரி முதலிய தலைவர்களும் பாதுகாவலில் வைக்கப்பட்டார்கள். அடுத்த சில தினங்களுக்குள் ஆசிரமங்களும், தேசீயப் பாடசாலைகளும், பிற தேசீய ஸ்தாபனங்களும் சட்ட விரோதமானவை என்று பிரகடனம் செய்யப்பட்டு, அவற்றின் சொத்துக்களும் கைப்பற்றப்பட்டன. அநேக பிரதான காங்கிரஸ்காரர்கள் சிறையில் வைக்கப்பட்டார்கள். பல இடங்களில் வரிகொடுக்க மறுத்தது, சட்ட மறுப்பு இயக்கத்தின் முக்கிய அம்சமாக இருந்தது. உப்புச் சட்டங்கள் மீறப்பட்டன. சட்ட விரோதமான பிரசுரங்கள் பெருவாரியாகப் பரவின. பிரிட்டிஷ் சாமான்கள் அதிக அளவில் பகிஷ்கரிக்கப்பட்டன. அரசியல் கைதிகள் மீது தடியடிப் பிரயோகம் செய்யப்பட்டது. தண்ட வரிகளும், கூட்டு அபராதங்களும் கடுமையாக விதிக்கப்பட்டன. துப்பாக்கிப் பிரயோகம் சர்வசகஜமான காரியம் ஆகிவிட்டது. எல்லைப்புற மாகாணம் அதிகக் கஷ்டத்துக்கு உள்ளாயிற்று.

வகுப்புப் பிரச்னை சம்பந்தமாக பிரிட்டிஷ் சர்க்காரின் முடிவு வெளியாகப் போகிறது என்று தெரிந்த சமயத்தில் மார்ச்சு 11-ஆம் தேதி ஸர் சாமுவேல் ஹோருக்குக் காந்திஜி கடிதம் எழுதி, "தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குத் தேர்தல்களில் தனித் தொகுதி அளிக்கச் சர்க்கார் தீர்மானித்துவிட்டால், நான் சாகும் வரை உண்ணுவிரதம் இருப்பேன்" என்று அறிவித்தார். இதை ஏற்கனவே லண்டனிலும் காந்திஜி அறிவித்திருந்தார்.

ஏப்ரல் மாதத்தில் டில்லியில், போலீஸ் கெடுபிடி அதிகமாக இருந்தும், காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்துக்கு 500 பிரதிநிதிகள் வந்திருந்தார்கள். இதற்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்த பண்டித மாளவியா வரும் வழியில் கைது செய்யப்பட்டார். மகாசபைக் கூட்டம் சாந்தினி சௌக்கில் உள்ள மணிக் கூண்டின் கீழ் நடைபெற்றது. இங்கே கூட்டம் நடைபெறப் போவதாக அறிவித்தது ஒரு தந்திரமே ஒழிய உண்மையல்ல என்று போலீஸார் நினைத்துக்கொண்டு, வேறிடத்தில் பிரதிநிதிகளை எதிர்பார்த்துக் கொண்டு நின்றார்கள்.

ஆகஸ்டு 17-இல் மெக்டானல்டின் வகுப்புத் தீர்ப்பு அறிவிக்கப்பட்டது.

ஆகஸ்டு 18-இல் காந்திஜி உண்ணுவிரதம் இருக்கத் தீர்மானித்தார். செப்டம்பர் 20-ஆம் தேதி மத்தியானத்திலிருந்து தாம் உண்ணுவிரதம் தொடங்கப் போவதாக அவர் பிரதமருக்கு அறிவித்தார். காந்திஜி தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குப் பாதகமான நோக்கத்தைக் கொண்டுள்ளார் என்று செப்டம்பர் 8-ஆம் தேதி மெக்டானல்டு பதில் எழுதினர்

செப்டம்பர் 9-ஆம் தேதி யன்று காந்திஜி தமது இறுதி முடிவைப் பிரதமருக்குத் தெரிவித்தார்.

செப்டம்பர் 12-இல் காந்தி-ஹோர்-மெக்டானல்டு கடிதப் போக்குவரத்து வெளியிடப்பட்டது.

செப்டம்பர் 15-இல் பம்பாய் சர்க்காருக்குக் காந்திஜி கடிதம் எழுதினர்.

செப்டம்பர் 19-இல் நாடெங்கும் பொதுக்கூட்டங்கள் நடைபெற்றன. ஹிந்து சமூகத்திலிருந்து தீண்டாதாரைத் தனியாகப் பிரிக்கும் தேர்தல் திட்டத்தை வாபஸ் பெறும்படி அக் கூட்டங்களில் கோரப்பட்டது.

செப்டம்பர் 20-ஆம் தேதி உபவாசமும், பிரார்த்தனையும் அனுஷ்டிக்கப்பட்டன.

உப்புக் கலந்த அல்லது கலக்காத தண்ணீரைத் தவிர வேறு எவ்வித உணவையும் உட்கொள்ளாத உண்ணுவிரதத்தைச் சாகும் வரை அனுஷ்டிக்கப் போவதாகக் காந்திஜி அறிவித்தார்.

செப்டம்பர் 19-இலிருந்து 24 வரை ஐந்து நாட்கள் சர்வ சமூகத் தலைவர்களும் பரஸ்பரம் கலந்து பேசினார்கள். காந்திஜியுடனும் கலந்து பேசினார்கள்.

கோவில்கள், கிணறுகள் முதலிய பொது இடங்களில் தினந்தோறும் ஹரிஜனங்கள் அனுமதிக்கப்பட்டு வந்தனர். "ஹரிஜனங்கள்" (கடவுளின் சொந்த ஜனங்கள்) என்ற பெயரும் அப்பொழுதிலிருந்து வழங்கலாயிற்று.

செப்டம்பர் 23-இல் காந்திஜியின் உடல் நிலை மோசமாகிவிட்டது. அவரை விடுதலை செய்ய வேண்டுமென்று ஷௌகத் அலி கோரிக்கை விடுத்தார்.

செப்டம்பர் 24-இல் காந்திஜியின் முன்னிலையில் எராவ்டா உடன்படிக்கையில் ஹரிஜனத் தலைவர்களும், ஹிந்துத் தலைவர்களும், காங்கிரஸ் தலைவர்களும் கையெழுத்திட்டார்கள். இது அதிகாரிகளுக்கு அனுப்பிவைக்கப்பட்டது. டாக்டர் அம்பேத்கார், எம். சி. ராஜா, மாளவியா, ராஜகோபாலாச்சாரியார், தக்கர் பாபா ஆகியோர் இந்த உடன்படிக்கை சம்பந்தமாகப் பங்கெடுத்துக் கொண்டார்கள். உடன்படிக்கையின்படி, தாழ்த்தப்பட்ட வகுப்பினர் தனித் தொகுதித் தேர்தல்களைக் கைவிட்டுவிட வேண்டும்; அதே சமயத்தில் அவர்களுக்கு ஜாதி ஹிந்துக்கள் முக்கியமான பாதுகாப்புகள் அளிக்கவேண்டும்.

செப்டம்பர் 24-ஆம் தேதி காலையில் காந்திஜி அபாய கட்டத்துக்கு வந்துவிட்டார். மாலை 4-15-க்கு அவரிடம் கொடுக்கப்பட்ட சர்க்கார் அறிக்கையொன்று அவருக்குத் திருப்தியை அளித்தது. பிரார்த்தனைகளுக்கும் மகிழ்ச்சிக் கொண்டாட்டங்களுக்கும் இடையே மாலை 5-15 மணிக்கு உண்ணாவிரதம் நிறுத்தப்பட்டது. ஹரிஜனங்களுக்கு இருந்து வரும் சமூகத் தடைகள், சமயத் தடைகள் முதலியவற்றைப் பரிபூரணமாகவும் குறிப்பிட்ட காலத்துக்கு உள்ளாகவும் ஒழிக்காவிட்டால், திரும்பவும் தாம் உண்ணாவிரதம் இருப்பது நிச்சயம் என்று ஹிந்துக்களைக் காந்திஜி எச்சரித்தார். காந்திஜியை ரவீந்திர நாத டாகுர் வந்து பார்த்தார். உடன்படிக்கையை ஏற்றுக்கொண்டு, இங்கிலாந்திலும், இந்தியாவிலும் ஏக காலத்தில் அறிக்கைகள் வெளியிடப்பட்டன. ஹிந்து சீர்திருத்த இயக்கத்துக்கு ரூ. 5,000 கொடுக்க முன்வருவதாகப் போபால் நவாப் அறிவித்தார்.

ஹரிஜனப் பணி சம்பந்தமாகக் காந்திஜிக்கு அளிக்கப்பட்டிருந்த எல்லாச் சலுகைகளும் செப்டம்பர் 30-ஆம் தேதி வாபஸ் பெறப்பட்டன. அவரைப் பார்க்க ஜெயகர் அனுமதிக்கப்படவில்லை. ஹரிஜனங்களுக்குச் சேவை செய்வதற்கான சகல சந்தர்ப்பங்களையும் திடீரென்று பறித்துக்கொண்டதைக் காந்திஜி ஆட்சேபித்தார். சர்க்காருடன் நீண்ட கடிதப் போக்குவரத்து நடத்திய பின் நவம்பர் 7-ஆம் தேதி எல்லாக் கட்டுப்பாடுகளும் நீக்கப்பட்டன.

குருவாயூர் ஆலயப் பிரவேசப் பிரச்னைமீது மற்றொரு உண்ணாவிரதம் தொடங்கச் சாத்தியம் உண்டு என்று காந்திஜி முதல் முதலாக அறிவித்தார்.

சிறைச்சாலையில் தோட்டி வேலை செய்ய அப்பா சாகிப் பட்டவர்த்தன் அனுமதி கேட்டதற்கு அதிகாரிகள் மறுத்துவிடவே அவர் உண்ணாவிரதம் இருந்தார். அவருக்கு அனுதாபம் தெரிவித்துக் காந்திஜியும் உண்ணாவிரதம் இருந்தார். ஆனால், இரண்டு நாட்களுக்குள் அதிகாரிகள் அனுமதிப்பதாக உறுதியளிக்கவே, உண்ணாவிரதம் நிறுத்தப்பட்டது.

மூன்றாவது வட்டமேஜை மகாநாட்டுப் பிரதிநிதிகளில் சாஸ்திரியார், பிரோஸ் சேத்னா, ஜின்னா ஆகியவர்கள் சேர்க்கப் படவில்லை.

## 1933 (வயது 64):

குருவாயூர்க்கோவிலை ஹரிஜனங்களுக்குத் திறந்து விடுவதற்காக உண்ணாவிரதம் இருந்த கேளப்பனுக்கு அனுதாபம் தெரிவித்து, தாம் உண்ணாவிரதம் இருக்கப் போவதாக ஜனவரி முதல் தேதியன்று காந்திஜி அறிவித்தார். ஆனால், மக்களிடையே வாக்கெடுப்பு நடத்தியதில் ஆலயப் பிரவேசத்துக்கு ஆதரவாக அபரிமிதமான வாக்குகள் கிடைக்கவே, உண்ணாவிரதம் தவிர்க்கப்பட்டது.

பிப்ரவரியில் ஹரிஜன சேவா சங்கம் அமைக்கப்பட்டது. ''ஹரிஜன்'' வாரப் பத்திரிகை ஆரம்பிக்கப்பட்டது.

தடை யுத்தரவின் கீழ் மார்ச்சு மாதத்தில் கல்கத்தா காங்கிரஸ் நடைபெற்றது.

காந்திஜி ஆன்ம பரிசுத்திக்காக மே மாதம் 8-ஆம் தேதியிலிருந்து 21 நாட்கள் உண்ணாவிரதம் இருக்க ஆரம்பித்தார். ஹரிஜனங்களின் நலனுக்காக இன்னும் அதிக விழிப்புடனும், கவனத்துடனும் வேலை செய்வதற்காகத் தாமும், தம் சகாக்களும் ஆன்ம பரிசுத்தி அடைவதற்குச் செய்யும் பிரார்த்தனை என்று உண்ணாவிரதத்துக்குக் காந்திஜி விளக்கம் கொடுத்தார். அதே தினத்தில் காந்திஜியைச் சர்க்கார் விடுதலை செய்தது. உண்ணாவிரத காலத்தைச் சட்ட மறுப்பு வேலைக்காகப் பயன்படுத்தப் போவதில்லை என்று காந்திஜி அறிக்கை விட்டார். அவருடைய ஆலோசனையின் பேரில், தாற்காலிகத் தலைவர் ஆனே மே மாதம் 9-ஆம் தேதியிலிருந்து 6 வார காலத்துக்குச் சட்ட மறுப்பு இயக்கத்தை நிறுத்தி வைத்தார். சட்ட மறுப்பை வாபஸ் பெறுவதற்காகவோ, கைதிகளை விடுதலை செய்வதுபற்றியோ காங்கிரஸுடன் பேச்சு வார்த்தைகள் நடத்தும் உத்தேசம் இல்லை என்று மே 9-ஆம் தேதி சர்க்கார் அறிவித்தது.

"காந்திஜி, சட்ட மறுப்பை நிறுத்தி வைத்தது, தோல்வியை ஒப்புக்கொள்ளும் காரியமாகும்......தீவிர சக்திகளைக்கொண்டே புதியதொரு கட்சியைக் காங்கிரஸுக்குள் ஆரம்பிக்க வேண்டும்" என்று விட்டல்பாய் பட்டேலும், சுபாஷ் சந்திர போஸும் வியன்னுவிலிருந்து அறிவித்தார்கள்.

காந்திஜியோடு நிலைமையை ஆராய்வதற்கு ஊழியர்கள் மகாநாடு ஒன்று கூட்டுவதற்குச் சட்ட மறுப்பு இயக்கம் மேலும் ஆறு வாரங்களுக்கு நிறுத்தி வைக்கப்பட்டது.

மே 29-ஆம் தேதி புனு "பர்ணகுடி"யில் காந்திஜி உண்ணு விரதத்தை முடித்தார்.

ஜூலை 12-இல் புனுவில் காங்கிரஸ்காரர்களின் பூர்வாங்க மகாநாடு நடைபெற்றது. வைசிராயிடம் பேட்டி கோருவதற்குக் காந்திஜிக்கு மகாநாடு அதிகாரம் அளித்தது. 15-ஆம் தேதி வைசிராய்க்குத் தந்தி கொடுக்கப்பட்டது. அவர் பேட்டியளிக்க மறுத்துவிட்டார். பொதுஜனச் சட்டமறுப்பு நிறுத்திவைக்கப் பட்டுத் தனி நபர்ச் சட்டமறுப்பு அனுமதிக்கப்பட்டது.

ஜூலை 26-இல், சட்டமறுப்பு இயக்கத்தில் சொத்துக்களை இழந்தவர்களுக்கு அனுதாபம் தெரிவிப்பதன் அடையாளமாகச் சாபர்மதி ஆசிரமத்தைக் கலைத்து தனிநபர் சத்தியாக்கிரகத்தைக் காந்திஜி தொடங்கினுர். ஆசிரம வாசிகளைத் தங்கள் நடவடிக்கைகளைக் கைவிட்டுப் போராட்டத்தில் இறங்கும்படி கூறினுர். ஆசிரமத்தின் பொருள்களை பொதுஜன உபயோகத்துக்குக் கொடுத்துவிட்டு, நிலம், கட்டடம், பயிர் முதலியவற்றைச் சர்க்காருக்குக் கொடுக்க முன்வந்தார். அவற்றைச் சர்க்கார் ஏற்றுக் கொள்ள மறுத்துவிடவே, ஹரிஜன இயக்கத்துக்குக் கொடுத்து விட்டார்.

ஆகஸ்டு முதல் தேதியன்று ராஸ் கிராமத்துக்கு யாத்திரை தொடங்கக் காந்திஜி உத்தேசித்திருந்தார். ஆனுல், முதல் நாள் இரவு அவரும், ஆசிரமவாசிகள் 34 பேரும் கைது செய்யப்பட்டனர். ஆகஸ்டு 4-ஆம் தேதி காலையில் காந்திஜி விடுதலை செய்யப் பட்டார். எராவ்டா கிராமத்தைவிட்டுப் போய்ப் புனுவில் வசிக்க வேண்டுமென்று அவருக்கு உத்தரவிடப்பட்டது. அதைக் காந்திஜி மீறினுர். ஆகவே, விடுதலையான அரை மணி நேரத்துக்குள் திரும்பவும் கைது செய்யப்பட்டு ஒரு வருடச் சிறைவாச தண்டனை விதிக்கப்பட்டார்.

எல்லா மாகாணங்களிலும் தனி நபர்ச் சட்டமறுப்பு ஆரம்பமாயிற்று. முதல் வாரத்திலேயே நூற்றுக்கணக்கான தொண்டர்கள் சிறை சென்ருர்கள். அகோலாவிலிருந்து புறப்பட்ட ஆனேயும், அவரைச் சேர்ந்த 13 பேரும் கைதாயினர். 1933 ஆகஸ்டிலிருந்து 1934 மார்ச்சு வரை எல்லா இடங்களிலும் காங்கிரஸ் ஊழியர்கள் சட்ட மறுப்பு இயக்கத்தில் ஈடுபட்ட வண்ணமாக இருந்தார்கள்.

சிறையில் இருந்துகொண்டு ஹரிஜன முன்னேற்றப்பணியைச் செய்துவரக் காந்திஜிக்கு வசதிகள் அளிக்கப்படவில்லை. இதை ஆட்சேபித்து, ஆகஸ்டு 16-ஆம் தேதி காந்திஜி உண்ணுவிரதம் தொடங்கினர். சீக்கிரத்திலேயே நிலைமை மோசமாகிவிட்டது. ஆகஸ்டு 20-இல் அவரை ஸாஸ்ஸூன் ஆஸ்பத்திரிக்குக் கொண்டு சென்றார்கள். அப்போதும் அவர் கைதியாகவே இருந்தார். 23-ஆம் தேதி அவரது நிலை இன்னும் மோசமாகி விடவே, நிபந்தனையின்றி விடுதலை செய்யப்பட்டார். தண்டனைக் காலம் முடியும்வரை—1934, ஆகஸ்டு 3-ஆம் தேதிவரை—சட்ட மறுப்பு இயக்கத்தில் இறங்குவதற்கான சுதந்திரம் தமக்கு இருப்பதாகத் தாம் கருதவில்லை என்று காந்திஜி தெளிவாக அறிவித்தார். ஆகவே, இடைக்காலத்தை ஹரிஜனப் பணிக்காகப் பயன்படுத்தத் தீர்மானித்தார்.

செப்டம்பர் 20-இல் டாக்டர் அன்னிபெஸன்ட் காலமானர்.

செப்டம்பர் 23-இல் விட்டல்பாய் பட்டேல் காலமானர்.

நவம்பர் 7-ஆம் தேதி வார்தா சத்தியாக்கிரக ஆசிரமத்திலிருந்து காந்திஜி ஹரிஜன நலனுக்காகச் சுற்றுப் பிரயாணத்தைத் தொடங்கினர்.

மத்திய மாகாணத்தில் சுற்றுப் பிரயாணம் செய்தபின் டில்லிக்குச் சென்று, அங்கிருந்து ஆந்திராவுக்குத் திரும்பினர். ஆந்திராவில் சுற்றுப் பிரயாணம் செய்யும்போது சென்னைக்கு டிசம்பர் 20-ஆம் தேதி விஜயம் செய்து மூன்று நாட்களுக்குப் பிறகு திரும்பவும் ஆந்திராவுக்குச் சென்றார். 1934, ஜனவரி 4-ஆம் தேதி மைசூர் சமஸ்தானத்துக்கு விஜயம் செய்தார். அங்கே சுற்றுப் பிரயாணம் முடிந்த பின் மலபாருக்குப் புறப்பட்டார். ஜனவரி 10-ஆம் தேதி பாலக்காட்டில் பேசினர். திருவனந்தபுரத்துக்கு அவர் விஜயம் செய்ததற்கு முந்திய தினத்தில், ஜனவரி 20-ஆம் தேதியன்று-ரோடுகள், கிணறுகள், சத்திரங்கள் முதலியவற்றை எல்லா வகுப்பு மக்களுக்கும் சமஸ்தான சர்க்கார் திறந்துவிட்டது. இதைக் காந்திஜி பாராட்டினர். பின்பு நாகர்கோவிலுக்குச் சென்றார். அவ்வூர் நகரசபை, சர்க்கார் உத்தரவை மீறிக் காந்திஜிக்கு வரவேற்புப் பத்திரம் வாசித்தளித்தது. கன்னியாகுமரிக்கு விஜயம் செய்தபின், திருநெல்வேலிக்கு வந்து 24-ஆம் தேதியன்று ஒரு கூட்டத்தில் பேசினர். அதன்பின் தமிழ் நாட்டில் காந்திஜி விஜயம் செய்த முக்கியமான ஊர்கள் தூத்துக்குடி, மதுரை, தேவகோட்டை, நீலகிரி, கோயமுத்தூர், கும்பகோணம், வேலூர், சென்னை முதலியன.

தென்னாட்டுச் சுற்றுப் பிரயாணத்தைக் குறைத்துக்கொண்டு மார்ச்சு 9-ஆம் தேதி இரவு பாட்னாவுக்குப் புறப்பட்டார்.

## 1934 (வயது 65):

வட பீகாரில் ஜனவரி 15-ஆம் தேதி பிற்பகல் 2-15 மணிக்குப் பயங்கரமான பூகம்பம் ஏற்பட்டுக் கடுமையான சேதங்களை

உண்டுபண்ணிவிட்டது.—மூன்று நிமிஷ நேரத்துக்குள் பல்லாயிரக்கணக்கானவர்கள் உயிர் இழந்தார்கள். 15,000 சதுர மைல்களுக்கு மேற்பட்ட பூமி பூகம்பத்தினுல் பாதிக்கப்பட்டுப் பாழாயிற்று.

ராஜேந்திரப் பிரசாத்தின் கடிதத்தைப் பார்த்துவிட்டு பீகாருக்குச் சென்ற காந்திஜி, பல இடங்களுக்கும் போய்க் கூட்டங்களில் பேசினர். அப்பொழுது அவர் கூறியதாவது: "இந்த நாசம் உங்களுக்கு என்ன கற்பித்திருக்கிறது? சர்க்காருக்கும் காங்கிரஸுக்கும் இடையிலும், ஹிந்துவுக்கும் முஸ்லிமுக்கும் இடையிலும், தீண்டப்படுவோருக்கும் தீண்டப்படாதோருக்கும் இடையிலும் வேற்றுமை பாராட்டிக்கொண்டிருக்க இது நேரமல்ல. நிவாரண நிதியிலிருந்து நீங்கள் பணம் பெற்றுக்கொண்டால், அந்தப் பணத்தைச் சம்பாதிக்க வழி பாருங்கள்."

பர்தா என்ற முகத்திரை அணிந்த பீகார்ப் பெண்களை நோக்கி, "இந்த நாசம் உங்களுக்கு எதையும் கற்பிக்கவில்லையா? ஏன் இந்த மடமை (பர்தா)?" என்று கேட்டார். மாதர்களிடமிருந்து, நகைகளை வசூலித்தார். பேசிய இடங்களி லெல்லாம், "வேலை செய்யுங்கள்! வேலை செய்யுங்கள்! பிச்சை எடுக்காதீர்கள்! ஆனால், வேலை செய்யுங்கள். வேலை கேளுங்கள். கிடைத்த வேலையை விசுவாசமாகச் செய்யுங்கள்" என்று கூறினர். கிராமங்கள் தோறும் நடந்து சென்றார். பீகாரில் ஒரு மாதம் சுற்றுப் பிரயாணம் செய்தபின் திரும்பவும் ஹரிஜனப் பணியை ஆரம்பித்தார்.

ஏப்ரல் 7-ஆம் தேதி காந்திஜி சட்ட மறுப்பு இயக்கத்தை நிறுத்தி வைத்தார். அநேக அரசியல் கைதிகள் விடுதலை ஆயினர். சத்தியாக்கிரகத்தின் பூரணமான நோக்கம் என்ன என்பது இன்னும் பொதுஜனங்களை எட்டவில்லை என்று கூறினர்.

எதிர்காலத்தில் சட்ட சபைகளுக்கு உள்ளேயும் வெளியேயும் காந்திஜியின் ஆசீர்வாதத்துடன் போராட்டம் நடைபெறும் என்று டாக்டர் அன்ஸாரி ஓர் அறிக்கையில் தெளிவாகக்கூறினர். மே 18, 19 தேதிகளில் பாட்னாவில் அ. இ. கா. க. கூட்டம் நடைபெற்றது. சட்ட சபைகளுக்குள் இருந்து போராடுவதற்காக, டாக்டர் அன்ஸாரியின் தலைமையில் இருந்த சுயராஜ்யக் கட்சி, காங்கிரஸின் ஓர் உறுப்பாக ஆயிற்று.

மே 17-ஆம் தேதி பாட்னாவில் ஆச்சாரிய நரேந்திர தேவ் தலைமையில் காங்கிரஸ் சோஷியலிஸ்ட் கட்சியின் முதல் மகாநாடு நடைபெற்றது.

ஹரிஜனப் பிரசார இயக்கம் எப்பொழுதுமே ஒரேமாதிரி சுமுகமாக நடந்துவிடவில்லை. ஜனவரி 25-ஆம் தேதியன்று பூனாவில், அடையாளம் கண்டுபிடிக்கப்படாத ஒருவன் காந்திஜி மீது குண்டு எறிய முயன்றான். காந்திஜியின் மோட்டார் என்று

நினைத்து வேறொரு மோட்டாரின்மீது குண்டை எறிந்துவிடவே அதன் பலனாக 7-பேர் காயம் அடைந்தனர். காந்திஜி வந்த மோட்டார் அப்புறம் வந்தது.

சுமார் இரண்டு வாரங்களுக்குப் பிறகு, சீர்திருத்தக்காரர் ஒருவர், கோபத்தினால் ஹரிஜன இயக்க விரோதி ஒருவரைத் தடியால் அடித்துவிட்டார். கருத்து வேற்றுமையுள்ளவர்கள் இவ்வாறு பரஸ்பரம் சகிப்புத்தன்மை யில்லாமல் நடந்து கொள்ளுவதற்குப் பிராயச்சித்தமாக காந்திஜி ஆகஸ்டு மாதத்தில் ஏழு நாட்கள் உண்ணாவிரதம் இருந்தார்.

அக்டோபர் 24-இல் பாபு ராஜேந்திரப் பிரசாத் தலைமையில் பம்பாய்க் காங்கிரஸ் நடைபெற்றது.

அக்டோபர் 26-இல் அகில இந்தியக் கிராமக் கைத்தொழில் சங்கம் அமைக்கப்பட்டது. கொஞ்சங்கூட அரசியல் சம்பந்த மில்லாமல், காந்திஜியின் நேர்ப் பார்வையின் கீழ் இது நடைபெற வேண்டும் என்பதற்காக இந்தச் சங்கத்தின் தலைமை நிலையம் வார்தாவுக்கு அருகில் உள்ள மகன்வாடியில் நிறுவப்பட்டது.

பம்பாய்க் காங்கிரஸில் நடைபெற்ற மிக முக்கியமான சம்பவம், 28-ஆம் தேதியன்று காந்திஜி காங்கிரஸிலிருந்து விலகியதே. சத்தியத்திற்கும் அகிம்சைக்கும் காங்கிரஸ் தயாராக இல்லாத நிலையைக்கண்ட காந்திஜி, நாலணா அங்கத்தினர் பதவி யையுங்கூட விட்டுவிட்டார். ஆனாலும், காந்திஜியின் தலைமை யில் தனக்குள்ள நம்பிக்கையை ஊர்ஜிதம் செய்து, காங்கிரஸ் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது.

கிராமக் கைத்தொழில்கள், ஹரிஜன முன்னேற்றம், ஆதாரக் கல்வி ஆகிய விஷயங்களில் காந்திஜி தீவிரமாக ஈடுபட்டார். காரியக் கமிட்டி அங்கத்தினர்களை இனிமேல், அ. இ. கா. க. தேர்ந்தெடுப்பதற்குப் பதிலாகத் தலைவரே தேர்ந்தெடுக்க வேண்டுமென்று காங்கிரஸ் விதிகளில் திருத்தம் செய்யப் பெற்றது.

பம்பாய்க் காங்கிரஸுக்குப் பிறகு, நாடெங்கும் மத்திய சட்ட சபைத் தேர்தல்கள் நடைபெற்றன. காங்கிரஸ் பெரும் வெற்றியை அடைந்தது.

## 1935 (வயது 66):

பிப்ரவரி முதல் தேதியிலிருந்து 4-ஆம் தேதி வரை வார்தா வில் நடைபெற்ற அகில இந்தியக் கிராமக் கைத்தொழில் சங்கக் கூட்டத்துக்குக் காந்திஜி சென்றார்.

பிப்ரவரி 15-ஆம் தேதி வெளிவந்த "ஹரிஜன்" பத்திரிகை யின் முதல் பக்கம் முழுவதையும், "பச்சைக் கீரைகளும் அவற்றின் உணவுச் சத்தும்" என்ற கட்டுரைக்கு ஒதுக்கியிருந்தார்.

“சுமார் ஐந்து மாத காலமாகச் சமைக்காத உணவுகளையே சாப்பிட்டு வருகிறேன். கிராம வாசிகள் தங்கள் சாப்பாட்டுடன் பச்சைக் கீரைகளைச் சேர்த்துக்கொண்டால், இப்போது அவர்களைக் கஷ்டப்படுத்தும் பல வியாதிகளை அவர்கள் ஒழித்துவிட முடியும்” என்று காந்திஜி எழுதினர். அரிசியைப்பற்றித் தலையங்கம் எழுதி, கைக்குத்தல் அரிசியைச் சாப்பிட வேண்டுமென்று கூறினர். பிப்ரவரி 22-ஆம் தேதி வெளிவந்த ‘ஹரிஜ’னின் முதல் பக்கத்தில் “பசுவின் பாலும், எருமைப் பாலும்” என்ற கட்டுரை இடம் பெற்றிருந்தது.

மார்ச்சு 2–ஆவது வாரத்தில், வார்தாவுக்கு அருகிலுள்ள கிராமங்களில் காந்திஜியின் நெருங்கிய சகபாடிகள் சுகாதார வேலையைச் செய்யத் தொடங்கினர்கள். பாக்கியாகக் கிடந்த வேலைகளை முடிப்பதற்காக மார்ச்சு 23-ஆம் தேதியன்று காந்திஜி நான்கு வார மௌன விரதத்தை ஆரம்பித்தார்.

ஏப்ரல் மாதத்தில் இந்தூரில் நடைபெற்ற ஹிந்தி இலக்கிய மகாநாட்டுக்குக் காந்திஜி தலைமை தாங்கினர். “இது (ஹிந்தி) நம் விவசாயிகளின் மொழி; நம் தொழிலாளிகளின் மொழி. அவர்கள் எளிதில் புரிந்துகொள்ளக் கூடிய மொழி. ஆகவே, அது பொதுப் பாஷையாகக் கூடிய மொழியாகும். மொழித் துறையில் இதுவே உண்மை ஜனநாயகமாகும்” என்று காந்திஜி கூறினர். அ. இ. கி. கை. தொ. சங்கத்தின் முதலாவது கண்காட்சியைக் காந்திஜி திறந்து வைத்து, “நம்மை நாகரிகம் அடைந்தவர்கள் என்று நினைத்துக்கொள்ளும் நாமேதான் நம் கிராமத் தொழில்கள் பாழானதற்கு முழுக்க முழுக்கப் பொறுப்பாளிகள்” என்று சொன்னர்.

ஆகஸ்டு 4-ஆம் தேதி இந்திய அரசியல் சட்டம், மன்னரின் சம்மதத்தைப் பெற்றது. அதைக் காங்கிரஸ் காரியக் கமிட்டி அடியோடு நிராகரித்துவிட்டது.

மகன்வாடியில் அக்டோபர் 11, 12, 13–ஆம் தேதிகளில் அகில இந்திய நூற்போர் சங்கக் கவுன்சில் கூட்டம் காந்திஜியின் தலைமையில் நடந்தது. நூற்பவர்களின் கூலிகள் கூட்டப்பட வேண்டுமென்றும், குறைந்த பட்ச வரையறை நிர்ணயிக்கப்பட வேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டது.

அக்டோபர் 22-ஆம் தேதி வார்தாவுக்கு அருகிலுள்ள சேவா கிராமத்தில் (அப்பொழுது அதற்கு ஷேகான் என்று பெயர்) ஒரு சிறு குடிசைக்கு அஸ்திவாரம் போடப்பட்டது. அக்டோபர் 16-இலேயே மீராபென் அதில் போய் வசிக்கத் தொடங்கினர்.

டிசம்பர் 28-இல் காங்கிரஸின் பொன்விழாக் கொண்டாட்டங்கள் நடந்தன. பட்டாபி சீதாராமையா எழுதிய “இந்திய தேசீயக் காங்கிரஸின் வரலாறு” என்ற புத்தகம் அ. இ. கா. க. சார்பில் வெளியிடப்பட்டது.

## 1936 (வயது 67):

ஜனவரி முதல் வாரத்தில் ஜப்பானியக் கவிஞர் யோனே நோகுச்சி, சேவா கிராமத்துக்கு வந்தார். சில வாரங்களுக்குப் பிறகு டாக்டர் தோமிகா கோரா, காந்திஜியை ஜப்பானுக்கு விஜயம் செய்யுமாறு அழைப்பதற்கு அங்கே வந்தார்.

கர்ப்பக் கட்டுப்பாடு இயக்கத் தலைவி ஸ்ரீமதி மார்கரட் சாங்கர் ஜனவரிக் கடைசி வாரத்தில் வார்தாவுக்கு வந்து காந்திஜியைப் பார்த்தார். "பெண்களுக்கும் சுதந்திரம் உண்டு என்ற உண்மையைப் பெண்களே உணரும்படி செய்ய என்னால் முடிந்தால் அப்புறம் இந்தியாவில் கர்ப்பக் கட்டுப்பாட்டுப் பிரச்னையே இராது" என்றார் காந்திஜி.

பத்து வாரங்களுக்கும் மேலாகவே காந்திஜிக்கு உடல் சோர்வு ஏற்பட்டிருந்தது.

மார்ச்சு முதல் வாரத்தில் சாவ்லியில் காந்தி சேவா சங்கத்தின் இரண்டாவது வருடாந்தரக் கூட்டம் நடைபெற்றது. அதற்குத் தலைமை வகித்த காந்திஜி, "காந்தியம் என்று ஒன்று இல்லை. எனக்குப் பின்னால் நான் எந்தப் புதியதோர் சமயத்தையும் விட்டுச் செல்ல விரும்பவில்லை" என்று கூறினார்.

மார்ச்சு இரண்டாவது வாரத்தில், நீக்ரோ தூது கோஷ்டிக்குப் பர்தோலியில் காந்திஜி இரண்டு மணி நேரம் பேட்டியளித்தார்.

மார்ச்சு முதல் வாரத்தில் லட்சுமணபுரியில் காங்கிரஸ் மகாநாடு நடந்தது. அப்போதுதான் ஐரோப்பாவிலிருந்து திரும்பி வந்த ஜவாஹர்லால் நேரு, அம் மகாநாட்டுக்குத் தலைமை வகித்தார். 1935-ஆம் வருடத்து சட்டம், மக்களின் உரிமைகளை நசுக்கும் அரசியல். அடக்குமுறைக்குத் துணையாகச் சுமத்தப்பட்ட ஒன்று அது எனக் கண்டனம் செய்யப்பட்டது.

மார்ச்சு 22-இல் லட்சுமணபுரியில் அகில இந்திய நூற்போர் சங்கமும், அகில இந்தியக் கிராமக் கைத்தொழில் சங்கமும் நடத்திய கதர், கிராமக் கைத்தொழில் கண்காட்சியைக் காந்திஜி திறந்து வைத்தார்.

காந்திஜி, சேவா கிராமத்துக்கு விஜயம் செய்து, அங்கேயே வாசம் செய்வதற்குத் தாற்காலிகமாக முடிவு செய்தார்.

ஏப்ரல் மாதக் கடைசியில் நாகபுரியில் அகில இந்திய இலக்கிய மகாநாட்டுக்குக் காந்திஜி தலைமை வகித்தார். "என்னிடத்தில் மட்டும் சக்தி இருக்குமென்றால், வகுப்பு வாதம், வெறி, துவேஷம் முதலியவற்றை வளர்க்கும் இலக்கியம் முழுவதையுமே சபித்து ஒழித்துவிடுவேன்" என்றார் காந்திஜி.

ஏப்ரல் 30-ஆம் தேதி அதிகாலையில் மகன்வாடியிலிருந்து சேவாகிராமத்துக்குச்—சுமார் 5 மைல் தூரமும்-காந்திஜி நடந்தே சென்றார். அவருடைய குடிசை இன்னும் தயாராகவில்லை. ஆகவே, உட்கார்ந்து வேலை செய்வதற்கு மூங்கில் பாய்களைக் கொண்டு மரத்து நிழலில் ஒரு தாற்காலிக இருப்பிடம் தயாரிக் கப்பட்டது. மறுநாள் மாலைப் பிரார்த்தனைக்குப் பிறகு கிராம வாசிகளுக்கு நூல் நூற்பது எப்படி என்பதைக் காட்டினார். டாக்டர் அம்பேத்காருக்குப் பேட்டி யளித்தார்.

மே 10-ஆம் தேதி டாக்டர் அன்ஸாரி காலமானார்.

மே மாதம் மூன்றாவது வாரத்தில் மகன்வாடியில் கிராம ஊழியர்களுக்குப் பயிற்சிப் பள்ளியைத் திறந்து வைத்தார்.

ஜூன் மாதத்தில் அப்பாஸ் தயாப்ஜி காலமானார்.

ஆகஸ்டில் காங்கிரஸ், பொது மக்களுக்கு தேர்தல் வேண்டு கோளை விடுத்தது.

அக்டோபரில் தேசீயக் கல்வி மகாநாட்டுக்குக் காந்திஜி தலைமை வகித்தார்.

நவம்பர் முதல் வாரத்தில் அகமதாபாத்தில் குஜராத்தி இலக்கிய மகாநாட்டுக்குத் தலைமை தாங்கினார். "கோடிக்கணக் கான மக்களோடு பேசக்கூடிய இலக்கியத்தையும், கலையையுமே நான் விரும்புகிறேன். நம்முடைய இலக்கியம், கஷ்டம் தரும் சமாசாரமாக இருக்கிறது" என்றார் காந்திஜி.

டிசம்பர் கடைசி வாரத்தில் பெயிஸ்பூர் காங்கிரஸின்போது அங்கே கதர் கிராமக் கைத்தொழில் கண்காட்சி நடைபெற்றது. அலங்கார வேலைகள், ஓவியர் நந்தலால் போஸிடம் ஒப்படைக்கப் பட்டிருந்தன. அதைக் காந்திஜி திறந்துவைத்தார். காங்கிரஸ் மகா சபை ஒரு கிராமத்தில் கூடுவது இதுதான் முதல் தடவை. இதில் பணிபுரிந்த தொண்டர்களும் கிராமங்களிலிருந்து திரட்டப்பட்ட வர்களே. ஜவாஹர்லால் நேரு மகாநாட்டுக்குத் தலைமை வகித் தார். ஐரோப்பாவில் பாஸிஸ அபாயம் வளருவதையும், ஸ்பெயின் உள்நாட்டுப் போரையும், இந்தியாவுக்கு அரசியல் நிர்ணய சபை வேண்டியதன் அவசியத்தையும், தொழிலாளிகளும் விவசாயிகளும் நல்வாழ்வு வாழ வகை செய்ய வேண்டும் என் பதையும் நேரு தமது தலைமைப் பிரசங்கத்தில் விவரமாக எடுத் துக் கூறினார்.

## 1937 (வயது 68) :

தீண்டாமை ஒழிப்புப் பணிக்காக ஜனவரியில் காந்திஜி திருவாங்கூருக்கு விஜயம் செய்தார். சாலைகளும், கோவில்களும் ஹரிஜனங்களுக்குத் திறந்துவிடப் பட்டன. கோவில்களில் காந்திஜி சொற்பொழி வாற்றினார். திருவனந்தபுரத்திலிருந்து கன்னியாகுமரிக்குச் சென்றார்.

விரும்பினால் விலகிக்கொள்ளும் உரிமையோடு கூடிய டொமினியன் அந்தஸ்து வழங்குவதாக இருந்தால் அதைத் தாம் ஏற்றுக்கொள்ளத் தயார் என்று பிப்ரவரியில் ஸ்ரீ போலக்குக் காந்திஜி எழுதினார்.

பிப்ரவரியில் நடந்த தேர்தல்களில் காங்கிரஸுக்கு அமோக வெற்றி கிடைத்தது. இந்தியாவின் 11 மாகாணங்களில் 8 மாகாணங்களில் காங்கிரஸ், ஆட்சிப் பொறுப்பை ஏற்பதற்கான பலத்தைத் தேர்தல்களில் சம்பாதித்தது.

நிர்வாகப் பொறுப்பை ஏற்பதற்கு அதிகாரம் அளிக்கும் தீர்மானம் ஒன்று மார்ச் மாதத்தில் நடந்த அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்டது. ஆனால், கவர்னர்கள் தங்களுடைய விசேஷ அதிகாரங்களை உபயோகித்துத் தலையிடமாட்டார்கள் என்ற உறுதி ஏற்படும் வரையில் மந்திரிப் பதவிகளைக் காங்கிரஸ் ஏற்றுக்கொள்ளக் கூடாது என்றும் தீர்மானிக்கப்பட்டது. இந்தச் செயல்முறையை காந்திஜியே வகுத்தார். காங்கிரஸின் சட்டசபை நடவடிக்கைகளை மேல்பார்க்கப் பார்லிமென்டரி உப-கமிட்டி அமைக்கப்பட்டது.

ஏப்ரல் மாதத்தில் சென்னையில் ஹிந்தி சாஹித்ய சம்மேளனத்தில் காந்திஜி பேசினார். பாரதீய சாஹித்ய பரிஷத்துக்குத் தலைமை வகித்தார். "மாகாண மனப்பான்மையையும், குறுகிய புத்தியையும் விட்டொழிக்கும் விஷயமே இது. இதில் கஷ்டங்களே இல்லை. இலக்கியத்தை இலக்கியத்துக்காக மட்டும் நான் விரும்பவில்லை" என்றார் காந்திஜி.

ஏப்ரலில், கர்னாடகத்தில் ஹுப்லி கிராமத்தில் காந்திஜி சேவாசங்க வருடாந்தரக் கூட்டத்தில் பேசியபோது, "சட்டசபைகளைப் பகிஷ்கரிப்பது, சத்தியத்தைப் போலவும், அகிம்சையைப் போலவும் நிரந்தரமான தத்துவமல்ல. அங்கே நமது சத்தியத்தையும், அகிம்சையையும் நாம் நிலைநிறுத்த வேண்டும்" என்று கூறினார்.

ஜுலை மாதத்தில் பல மாகாணங்களில் காங்கிரஸ், ஆட்சிப் பொறுப்பை ஏற்றது. "யோக்கியப் பொறுப்பும், தன்னலமின்மையும், உழைப்பும், விழிப்பும் உடைய மந்திரிகளுக்குக் கோடிக் கணக்கான ஏழை மக்களின் உண்மையான நல்வாழ்வுக்காகப் பாடுபடுவதற்கு மிகப் பெரிய சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது" என்று மகாத்மா சொன்னார்.

மதுவிலக்கு, குடியானவர்களுக்குக் கஷ்ட நிவாரணம், ஆதாரக் கல்வி, சிறைச் சாலைகளைச் சீர்திருத்தும் சாலைகளாக மாற்றுவது ஆகியவை அவசரமாகச் செய்யவேண்டிய சீர்திருத்தங்கள் என்று காந்திஜி கூறினார்.

அக்டோபர் முதல் தேதியிலிருந்து சேலத்தில் பரீட்சார்த்த மதுவிலக்குத் தொடங்கப்பட்டது.

அக்டோபரில் நடந்த அ. இ. கா. க. கூட்டத்தினிடம் காந்திஜிக்கு அதிருப்தி ஏற்பட்டது. அக் கூட்டத்தில், மைசூர் அடக்கு முறை சம்பந்தமாக வருந்தத்தக்க வார்த்தைகள் அடங்கிய தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. இதை 'ஹரிஜன்' பத்திரிகையில் காந்திஜி வன்மையாகக் கண்டித்தார்; ஜவாஹர்லால் நேரு ராஜிநாமாச் செய்துவிட நினைத்தார்.

கல்கத்தாவில் சுபாஷ் சந்திர போஸுடன் காந்திஜி தங்கியிருந்தபோது, ரவீந்திரநாத டாகுர், தாம் நோய்வாய்ப்பட்டிருந்துங்கூடக் காந்திஜியைப் பார்க்க வந்தார்.

அக்டோபர் 17-இல் லட்சுமணபுரியில் நடைபெற்ற அகில இந்திய முஸ்லிம் மகாநாட்டில், சுதந்திரமே அதன் லட்சியம் என்று தீர்மானிக்கப்பட்டது.

அக்டோபர் 22, 23 தேதிகளில் வார்தாவில் கல்வி மகாநாடு நடைபெற்றது. தலைமை வகித்த காந்திஜி, ஆதாரக்கல்விக் கொள்கையை விளக்கினர்.

நவம்பர் 20-ஆம் தேதி 'ஹரிஜ'னில் தொழிலாளர் தகராறுகளிலும், வகுப்புக் கலகங்களிலும் காங்கிரஸ் மந்திரி சபை பலாத்காரத்தைப் பிரயோகித்ததைக் காந்திஜி கண்டனம் செய்தார்.

தேகாரோக்கியத்துக்காக டிசம்பரில் சேவாகிராமத்திலிருந்து ஜுஹுவுக்குச் சென்ருர்.

டிசம்பரில் அகமதாபாத்தில் சாவர்க்கர் தலைமையில் நடந்த ஹிந்து மகாசபை மகாநாட்டில் பூரண சுயராஜ்யமே அதன் லட்சியம் என்ற தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

## 1938 (வயது 69) :

ஜுஹுவில் ஒரு மாதம் தங்கியபின் ஜனவரி 8-இல் காந்திஜி சேவாகிராமத்துக்குத் திரும்பினர். இன்னும், ரத்தக் கொதிப்பு நோயால் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்த போதிலும், அந்தமான் கைதிகள் பிரச்னைக்கும், வங்காளப் பாதுகாப்புக் கைதிகள் பிரச்னைக்கும், பரிகாரம் காணும் முயற்சியில் ஈடுபட்டார். கடிதங்கள் எழுதவோ, 'ஹரிஜன்' பத்திரிகையில் எழுதவோ டாக்டர்கள் அவரை அனுமதிக்கவில்லை.

ஜனவரியில், பம்பாய் சட்டசபை, ஹரிஜன ஆலயப் பிரவேச மசோதாவை நிறைவேற்றியது. மாகாணத்திலுள்ள யாருக்கும் மன்னரோ, வைசிராயோ எந்தப் பட்டத்தை வழங்கினலும் அது சட்டசபையின் விருப்பத்துக்கு விரோதமானதாகும் என்று ஜனவரி கடைசி வாரத்தில் அது ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது. மற்ற மாகாணங்களின் காங்கிரஸ் மந்திரி சபைகளும் இதைப் பின்பற்றின.

சேவா கிராமத்தில் லார்டு லோதியன் மகாத்மாவுடன் மூன்று நாட்கள் பேச்சு வார்த்தை நடத்தினர்.

பிப்ரவரியில் சுபாஷ் சந்திர போஸ் தலைமையில் ஹரிபுரா காங்கிரஸ் நடைபெற்றது. ஐக்கிய மாகாணத்திலும், பீகாரிலும் மந்திரி சபைகளில் ஏற்பட்டிருந்த நெருக்கடி பற்றிப் பரிசீலனை செய்யப்பட்டது. அரசியல் கைதிகளை விடுதலை செய்யும் விஷயத்தில் கவர்னர்கள் தலையிடுவதைக் காந்திஜி கண்டித்தார்.

மார்ச்சு 25-இலிருந்து 31 வரை பூரிக்கு அருகிலுள்ள தலாங் என்னும் இடத்தில் நடந்த காந்தி சேவா சங்கத்தின் நான்காவது மகாநாட்டில் பேசிய காந்திஜி, சுய பரிசோதனை செய்து கொள்ளுவதை வற்புறுத்தியதோடு, அகிம்சையின் ஆற்றலையும் அழுத்தம் திருத்தமாக எடுத்துக்கூறினர்.

ஏப்ரல் மாதத்தில் காந்திஜிக்கு ஜவாஹர்லால் நேரு கடிதம் எழுதி, காங்கிரஸ் அரசியலில் நிலைமைகளும் சந்தர்ப்பங்களும் மாறிவிட்டன என்று கூறித் தமது மனக் கஷ்டத்தைத் தெரிவித்திருந்ததுடன், "பழைய முறைப்படியே நிர்வாகத்தை மாற்ற அவர்கள் முயற்சி செய்கிருர்கள்; அதற்கு நியாயம் கற்பிக்கவும் முயல்கிருர்கள். நமக்கு அதிகாரம் கிடைத்துவிட்டது என்ற பிரமையினல் தவருன பாதையில் சென்றுவிடக் கூடிய நிலையில் நாம் இருக்கிருேம்" என்றும் கூறியிருந்தார்.

ஏப்ரலில் காந்திஜி, மகாதேவ தேசாயை எல்லைப்புற மாகாணத்துக்கு அனுப்பினர். அங்கே கான் சகோதரர்களைச் சந்திக்கும்படியும், நிலைமைகளை ஆராய்ந்து வரும்படியும் அவரிடம் சொல்லி அனுப்பினர்.

மே இரண்டாவது வாரத்தில் கான்சாகிப்புடன் மகாத்மா பெஷாவர் மாகாணத்தில் சுற்றுப்பிரயாணம் செய்தார். கிராமங்களில் பட்டாணியர்கள் மன மகிழ்ச்சியோடு காந்திஜியை வரவேற்றுர்கள். அவர்களிடம் மகாத்மா அகிம்சையை வற்புறுத்திக் கூறினர்.

மே மாதத்தில் மத்திய மாகாண மந்திரி சபையில் அபிப்பிராய பேதங்கள் ஏற்பட்டு, அதன் பலனக நான்கு மந்திரிகள் பிரதமர் டாக்டர் கரேக்கு ராஜினமாக் கடிதங்களை அனுப்பினர்கள். டாக்டர் கரே, காரியக் கமிட்டியின் கட்டளைக்கு விரோதமாக நடந்துகொண்டார். ஜூலை 18-இல் அவர் ராஜினமாச் செய்தார். மத்திய மாகாணக் கவர்னரின் நடவடிக்கையைக் காந்திஜி கண்டித்தார்.

செப்டம்பரில் சில ஹரிஜனங்கள் சேவா கிராமத்தில் 'சத்தியாக்கிரகம்' செய்ய ஆரம்பித்தார்கள். மத்திய மாகாணத்தில் ஒரு ஹரிஜன மந்திரியை நியமிக்க வேண்டுமென்பது அவர்களுடைய கோரிக்கை. இவ்வாறு நியமிப்பது தமது அதிகாரத்தில் இல்லை என்று காந்திஜி சொன்னர். அவர்கள் கஸ்தூரிபாய்

குடிசையில் உண்ணுவிரதம் இருக்கப் போவதாகப் பிடிவாத மாகக் கூறினுர்கள். காந்திஜி அதை மறுத்தார்.

அக்டோபர் 2, 3-ஆம் தேதிகளில் டில்லியில் மாகாண மந்திரிகளின் கூட்டம் சுபாஷ் சந்திரபோஸ் தலைமையில் நடைபெற்றது. தேசீயத் திட்டக் கமிட்டி நிறுவப்பட்டது.

செக்கஸ்லோவேகிய மக்கள் ஜெர்மனியிடம் சரண் அடைந்ததைப் பற்றிக் காந்திஜி பின்வருமாறு கூறினுர்: "ஆயுதங்கள் இல்லாமலும், மனத்தில் விரோத உணர்ச்சி இல்லாமலும், ஆடவரும், பெண்டிரும், குழந்தைகளும் அகிம்சை முறையில் எதிர்த்துப் போராடுவது அவர்களுக்குப் புதுமையான அனுபவமாக இருக்கும். நான் டாக்டர் பெனேசுக்கு, தைரியசாலிகளின் ஆயுதத்தையே பரிசளிக்கிறேனே ஒழிய, பலவீனர்களின் ஆயுதத்தை அல்ல."

மூனிச் ஒப்பந்தம்பற்றிக் காந்திஜி எழுதியதாவது: "மூனிச்சில் ஐரோப்பா அடைந்துள்ள சமாதானம், பலாத்காரத்தின் வெற்றி. அதுவே அதனுடைய தோல்வியுமாகும். கடைசி மனிதன் வரை போராடும் தைரியம் அதற்கு இப்பொழுது இருப்பது போலவே இருக்குமென்ருல், போராட மறுத்து, அதே சமயத்தில் அந்நியர்களுக்குச் சரணடையவும் மறுப்பது இன்னும் பெரிய தைரியமாகும் என்று நான் கூறுகிறேன்."

நவம்பர் 26-ஆம் தேதி 'ஹரிஜ'னில் காந்திஜி பின்வருமாறு எழுதினுர்: "என் அனுதாபங்களெல்லாம் யூதர்கள் பக்கமே. நான் ஜெர்மனியில் ஒரு யூதனுகப் பிறந்து, அங்கேயே ஜீவனத்தையும் தேடிக்கொண்டவனுக இருந்தால், யூதன் அல்லாத ஜெர்மானியனைப்போல நானும் ஜெர்மனி எனது தாயகம் என்று உரிமை கொண்டாடுவேன். என்னைச் சுடுமாறு அல்லது சிறையில் தள்ளுமாறு சவால் விடுவேன். நாடு கடத்தப்படுவதற்கோ, பாரபட்சமாக நடத்தப்படுவதற்கோ சம்மதிக்க மாட்டேன்."

டிசம்பர் 3-ஆம் தேதி காந்திஜி எழுதியதாவது: "மக்களின் நலனே தங்கள் நலன் என்று சமஸ்தானுதிபதிகள் கருதினுல், அவர்கள் காங்கிரஸின் உதவியை நன்றியறிதலோடு கோரி ஏற்றுக்கொள்ளவேண்டும். சமீப எதிர்காலத்திலேயே, தலைமை அதிகாரப் பீடத்தை அடையப்போகும் ஒரு ஸ்தாபனத்துடன், அவர்கள் தங்கள் சொந்த நலனைக் கருதி, நட்புறவுகளை வளர்த்துக்கொள்ள வேண்டியது அவசியமாகும்."

டிசம்பர் 17-இல் தேசீயத் திட்டக் கமிட்டியின் முதல் மகாநாடு நடந்தது. கமிட்டியின் தலைவர் ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு.

டிசம்பர் 24-இல் காந்திஜி, 'ஹரிஜன்' பத்திரிகையில் பின்வருமாறு எழுதினுர்: "எந்த உணர்ச்சியோடு மதுவிலக்கை அமலுக்குக் கொண்டுவர வேண்டுமென்று கருதப்பட்டதோ,

அந்த உணர்ச்சியோடு இப்போது காங்கிரஸ் மாகாணங்களில் அது அமலாகவில்லை. குடிக்கும், லாகிரிப் பழக்கத்துக்கும் நாம் அடிமைகளாக இருக்கும் வரை, நமது சுதந்திரம் அடிமைகளின் சுதந்திரமாகவே இருக்கும்.”

ஜப்பானியப் பார்லிமென்டின் அங்கத்தினர் டகாவோகா, சேவா கிராமத்துக்கு விஜயம் செய்தார். அவரிடம் காந்திஜி கூறியதாவது: “ஆசியா ஆசியர்களுக்கே என்ற சித்தாந்தம், ஐரோப்பிய எதிர்ப்பு உறவாக இருக்குமென்றால், அது எனக்கு உடன்பாடல்ல. ஜப்பான், புத்தருடைய உபதேசத்தை மீண்டும் கற்று அதை உலகுக்கு அளிக்க வேண்டும். நீங்கள் உங்கள் புராதனப் பிதுரார்ஜிதத்தின்படி ஒழுக வேண்டும் என்பதைத் தவிர, உங்களுக்கு நான் வேறு செய்தி எதையும் அளிப்பதற்கில்லை.”

சேவா கிராமத்தில் கிறிஸ்துமஸ் கொண்டாடப்பட்டது. “இந்தியாவுக்கு உலகம் முழுவதன் அனுதாபமும் கிடைக்கும் என்றால், சத்தியாக்கிரகம் என்ற இந்த அபூர்வப் பரிசோதனையைச் செய்துகொண் டிருக்கும்போதே அது கிடைக்கவேண்டும் என்று நான் விரும்புகிறேன்” என்றார் காந்திஜி.

## 1939 (வயது 70):

ஜனவரி 4-ஆம் தேதி மௌலானா ஷௌகத் அலி காலமானார். காந்திஜி துக்கத்துடன் கண்ணீர் வடித்தார்.

ஜனவரியில் டாக்டர் ககாவா என்ற ஜப்பானியக் காந்தி பக்தர் சேவா கிராமத்துக்கு வந்தார். காந்திஜியும் அவரும் கூட்டுறவு இயக்கம் பற்றி விவாதித்தனர்.

ஜனவரி 28-ந் தேதி ‘ஹரிஜ’னில், “சமஸ்தானங்களுக்குள் உரிமை இயக்கம் ஒரு புதிய கட்டத்தில் பிரவேசித்துக் கொண்டிருக்கிறது” என்று காந்திஜி எழுதினார்.

பிப்ரவரி 4-ஆம் தேதி ராஜ்கோட்டைப்பற்றிய ஒரு தலையங்கத்தில், “ராஜ்கோட்டில் உள்ள பிரிட்டிஷ் ரெஸிடெண்டினுடைய தூண்டுதலின்பேரில் மக்களின் உரிமைச் சாஸனத்தைச் சமஸ்தானாதிபதி மீறியது தவறு. இந்தத் தவறை வெகு சீக்கிரத்தில் சரிபண்ணியாகவேண்டும்” என்று காந்திஜி எழுதினார். கைது செய்யப்படுவதை எதிர்பார்த்துக் கஸ்தூரிபாய் காந்தி ராஜ்கோட்டுக்குள் பிரவேசித்தார்.

சுபாஷ் சந்திரபோஸ் மீண்டும் காங்கிரசுக்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டதைக் குறிப்பிட்டுப் பிப்ரவரி 4-ஆம் தேதி ‘ஹரிஜ’னில் காந்திஜி எழுதியதாவது: “காங்கிரஸுக்குள் இருப்பது யாருக்கு அசௌகரியமாகத் தோன்றுகிறதோ, அவர்கள் வெளியே வந்துவிடலாம். ஆனால், துவேஷத்துடன் வெளியே

வராமல், மேலும் அதிகப் பணியாற்றும் நோக்கத்துடனேயே வெளியே வரவேண்டும்.''

தமக்கு உருவச் சிலையொன்றை எழுப்பப் போவதாகக் கேள்விப்பட்டதும், ''இந்தக் காட்சிப் பொருள்களை வைப்பதை நான் மனப்பூர்வமாக வெறுக்கிறேன். என்னிடத்தில் நம்பிக்கை உடையவர்கள், நான் எதற்காகப் பாடுபடுகிறேனோ அதை நிறைவேற்றுவதற்கு உழைத்தால் அதையே எனக்குச் செய்த பெரிய கௌரவமாகக் கருதுவேன்'' என்று காந்திஜி எழுதினார்.

காந்திஜி அறிவித்த பிரகாரம் ராஜ்கோட் சட்டமறுப்பை பிப்ரவரி 25-ஆம் தேதி வல்லபபாய் பட்டேல் நிறுத்தி வைத்தார். பிப்ரவரி 27-ஆம் தேதி காந்திஜி சமாதானத் தூதராக ராஜ்கோட்டுக்குச் சென்றார்.

மார்ச்சு 2-ஆம் தேதி ராஜ்கோட் மன்னருக்குக் காந்திஜி கடிதம் எழுதி மறுநாளிலிருந்து சாகும்வரை தாம் உண்ணாவிரதம் இருக்கத் தீர்மானித்திருப்பதை அறிவித்தார். மக்களோடு செய்துகொண்ட புனித உடன்படிக்கையை மீறிவிட்டதாக ராஜ்கோட் மன்னரைக் காந்திஜி குற்றஞ்சாட்டினார்.

மார்ச்சு 3-ஆம் தேதி மத்தியானத்திலிருந்து உண்ணாவிரதம் ஆரம்பமாயிற்று. ராஜ்கோட் விவகாரத்தில் தலையிடும்படி கோரி மறுநாள் வைசிராய்க்குக் காந்திஜி கடிதம் எழுதினார்.

விவகாரத்தை இந்தியாவின் தலைமை நீதிபதி ஸர் மாரீஸ் குவையர் தீர்ப்புக்கு விட்டுவிடலாம் என்று மன்னரின் சம்மதத்துடன் வைசிராய் யோசனை கூறினார். மார்ச்சு 7-ஆம் தேதி உண்ணாவிரதம் நிறுத்தப்பட்டது.

மார்ச்சு மாதத்தில் திரிபுரா காங்கிரஸ் நடைபெற்றது. நெருக்கடியான சூழ்நிலை நிலவியது. தலைவர் ஸ்ரீ சுபாஷ் சந்திரபோஸ் நோய்வாய்ப்பட்டிருந்தார். தேசீய சுதந்திரக் கோரிக்கையை மீண்டும் வற்புறுத்தும் தீர்மானமும், சமஸ்தான மக்களின் இயக்கத்துக்குக் காங்கிரஸ் ஆதரவு தெரிவிக்கும் தீர்மானமும் நிறைவேற்றப்பட்டன. காந்திஜியிடமும், காரியக் கமிட்டியிலிருந்து ராஜினமாச் செய்த அங்கத்தினர்களிடமும் நம்பிக்கை தெரிவிக்கும் தீர்மானமும் நிறைவேறியது.

மார்ச்சு 15-இலிருந்து ஏப்ரல் 7 வரை காந்திஜி டில்லியில் தங்கினார். வைசிராயைப் பேட்டிகண்டார். ஏப்ரல் 3-ஆம் தேதி இந்தியாவின் தலைமை நீதிபதி, ராஜ்கோட் விவகாரத்தில் வல்லபபாய் பட்டேலுக்குச் சாதகமாகத் தீர்ப்புக் கூறினார். தீர்ப்பைத் தியாகம் செய்துவிடக் காந்திஜி தீர்மானித்தார். ஏப்ரல் 9-ஆம் தேதி ராஜ்கோட்டுக்குத் திரும்பவும் சென்றார்.

மே மாதத்தில் கல்கத்தாவில் அ.இ.கா.க. கூடியது. சுபாஷ் சந்திரபோஸ் காங்கிரஸ் தலைமைப் பதவியை ராஜினாமாச் செய்தார். 1939-40-க்கு பாபு ராஜேந்திரப் பிரசாத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

ராஜ்கோட் விவகாரத்தில் தாம் வைசிராயின் உதவியை நாடியது, அகிம்சை வழிக்கு மாறுபட்டதென்றும், தாம் குற்றம் புரிந்துவிட்டதாகவும் கூறி நீதிபதியின் தீர்ப்பைத் தியாகம் செய்ததுடன், வைசிராயிடமும், ராஜ்கோட் சமஸ்தானாதிபதி யிடமும், சம்பந்தப்பட்ட மற்றவர்களிடமும் காந்திஜி மன்னிப்புக் கோரினர்.

மே 7-ஆம் தேதி பிருந்தாவனத்தில் காந்தி சேவாசங்கக் கூட்டம் நடைபெற்றது. அங்கத்தினர்கள் தம்மைத் தாமே தூய்மைப் படுத்திக்கொள்ள வேண்டும் என்று காந்திஜி உபதேசித்தார்.

மே 21-ஆம் தேதி சுபாஷ் சந்திர போஸ் 'பார்வர்டு பிளாக்' கட்சியை ஸ்தாபித்தார்.

ஜூன் மாதத்தில் தேசீயத் திட்டக் கமிட்டியின் இரண்டா வது மகாநாடு நடைபெற்றது. சுதந்திர இந்தியாவுக்கு அரசியல் திட்டம் தயாரிக்க வேண்டும் என்று ஜவாஹர்லால் நேரு தெரி வித்தார்.

ஜூலை 13-இல் பம்பாயில் மதுவிலக்கைக் கொண்டு வர நடந்த முயற்சிகளை எதிர்க்க வேண்டாமென்று சுபாஷ் சந்திர போஸைக் காந்திஜி கேட்டுக் கொண்டார். எல்லைப்புற மாகாணத் தில் இரண்டு வாரங்கள் சுற்றுப்பிரயாணம் செய்தார்.

உலகத்தை யுத்தத்தில் மூழ்கடிக்க வேண்டாம் என்று கூறி ஜூலை மாதத்தில் ஹிட்லருக்குக் காந்திஜி பகிரங்கக் கடிதம் எழுதினர்.

ஆகஸ்டு முதல் தேதியன்று பம்பாய் மாகாணம் முழுவதிலும் மதுவிலக்கு அமலுக்குக் கொண்டு வரப்பட்டது.

ஆகஸ்டு 9-இலிருந்து 12 வரை வார்தாவில் நடைபெற்ற காரியக் கமிட்டிக் கூட்டம் பின்வருமாறு அறிவித்தது: "இந்த உலக நெருக்கடியில், காரியக் கமிட்டியின் அனுதாபங்கள் முழுக்க முழுக்க ஜனநாயகத்துக்கும் சுதந்திரத்துக்கும் பாடுபடும் மக்களின் பக்கமே இருக்கின்றன. ஐரோப்பா, ஆப்பிரிக்கா, ஆசியாவின் தூரக் கிழக்குப் பகுதி ஆகியவற்றில் பாஸிஸ்டு ஆக்கிரமிப்பைக் காங்கிரஸ் திரும்பத் திரும்பக் கண்டனம் செய் திருக்கிறது. யுத்தம் மூண்டுவிட்டால், இந்தியாவின் மீது யுத் தத்தைச் சுமத்துவதற்குச் செய்யும் சகல முயற்சிகளையும் எதிர்க் கத் தீர்மானித்திருப்பதையும் காங்கிரஸ் அறிவித்திருக்கிறது." முதல் நடவடிக்கையாக, மத்திய சட்டசபையில் அடுத்த கூட்டத் தில் காங்கிரஸ் அங்கத்தினர்கள் யாரும் கலந்துகொள்ளக் கூடாது என்று காரியக் கமிட்டி கட்டளையிட்டது. மேலும், பிரிட்டிஷ் சர்க்காரின் யுத்த முயற்சிகளுக்கு எந்த வகையிலும் உதவி புரியக் கூடாது என்றும் மாகாண சர்க்கார்களைக் கேட் டுக் கொண்டது.

அ. இ. கா. க. தீர்மானங்களை எதிர்த்து ஆட்சேபக் கூட்டங்கள் நடத்திக் கட்சிக் கட்டுப்பாட்டை மீறி நடந்துகொண்டதற்காக ஸ்ரீ சுபாஷ் சந்திர போஸ், மூன்று வருட காலத்துக்குக் காங்கிரஸில் எந்தப் பதவிக்கும் தேர்ந்தெடுக்கப்படுவதற்கு யோக்கியதாம்சம் இல்லாதவ ராக்கப்பட்டார். இந்தத் தீர்மானத்தின் வாசகத்தை காந்திஜி தயாரித்தார்.

ஆகஸ்டு 20-இல் இந்தியப் பாதுகாப்புச் சட்டம் என்ற அவசரச் சட்டம் மத்திய சட்ட சபையில் நிறைவேற்றப்பட்டது.

செப்டம்பர் 3-ஆம் தேதி யுத்தப் பிரகடனம் செய்யப்பட்டதைத் தொடர்ந்து, காந்திஜியைச் சிம்லாவுக்கு வரும்படி வைசிராய் அழைப்பு விடுத்தார். வைசிராயைச் சந்தித்துவிட்டு வெளியே வந்த காந்திஜி, தாம் வெறுங்கையோடு திரும்பியிருப்பதாகவும், இரு சாராரிடையிலும் உடன்பாடு ஏற்பட வேண்டுமானல், அது காங்கிரஸுக்கும் சர்க்காருக்கும் இடையில்தான் ஏற்பட வேண்டுமென்றும், தம் சொந்த அனுதாபங்கள் இங்கிலாந்தின் பக்கமே இருப்பதாக வைசிராயிடம் தெரிவித்திருப்பதாகவும் காந்திஜி கூறினர்.

செப்டம்பர் 8-இலிருந்து 15 வரை வார்தாவில் காரியக் கமிட்டி கூடியது. இதில் கலந்துகொள்ளுமாறு ஸ்ரீ ஜின்ன அழைக்கப்பட்டார். ஆனல், அவர் மறுத்து விட்டார். விசேஷ அழைப்பின் பேரில் சுபாஷ், ஆனே, நரேந்திர தேவ், ஜயப்பிரகாஷ் நாராயணன் ஆகியோர் வந்திருந்தனர். காரியக் கமிட்டி பின்வருமாறு அறிவித்தது: “இந்தியா சம்பந்தப்பட்ட மட்டில் யுத்தம், சமாதானம் என்ற விஷயங்களைப்பற்றி இந்திய மக்களே முடிவு செய்ய வேண்டும். ஜனநாயக சுதந்திரத்திற்காகவும், மக்கள் சுதந்திரத்திற்காகவும் நடைபெறுவதாகச் சொல்லப்படும் இந்த யுத்தத்தில் இந்தியா பங்கெடுத்துக்கொள்ளுவதற்கில்லை. ஏனென்றல், அதே சுதந்திரம் இந்தியாவுக்கு மறுக்கப்பட்டிருக்கிறது. ஆனலும், நெருக்கடியான நிலைமையைக் கருத்தில் கொண்டு முடிவான தீர்மானம் செய்துவிட வேண்டாம் என்று கமிட்டி விரும்புகிறது.”

நிலைமையைப் பரிசீலனை செய்வதற்காக ஜவாஹர்லால் நேரு, மௌலான ஆஸாத், வல்லபபாய் பட்டேல் ஆகியோர் அடங்கிய உப கமிட்டி ஒன்றைக் காரியக் கமிட்டி நியமித்தது.

காங்கிரஸ் அறிக்கையைப் பற்றிச் செப்டம்பர் 15-இல் சேவாகிராமத்திலிருந்து காந்திஜி பின்வருமாறு அபிப்பிராயம் தெரிவித்தார்: “பிரிட்டனுக்கு எப்படிப்பட்ட ஆதரவு கொடுத்தாலும் அதை நிபந்தனையின்றிக் கொடுக்க வேண்டுமென்று நினைப்பவன் நான் ஒருவனே. இது எனக்கு வருத்தத்தை அளிக்கிறது. ஆனல், காரியக் கமிட்டியின் அறிக்கைக்குக் காங்கிரஸ்காரர்களிடையே, எல்லாப் பிரிவினரிடமிருந்தும், ஏகமனதான

ஆதரவு கிடைக்கும் என்று நம்புகிறேன். பிரிட்டிஷ் ராஜ தந்திரிகளிடம் மனப் புரட்சி ஏற்பட வேண்டும். இதுதான் இப்போது தேவைப்படுவதாகும்.''

செப்டம்பர் 17–ஆம் தேதி மாகாண காங்கிரஸ் கமிட்டிகளுக்குக் காங்கிரஸின் யுத்த உப கமிட்டி அனுப்பிய சுற்றறிக்கையில், காங்கிரஸ் மாகாணங்களில் உள்ள பிரதமர்கள் தங்கள் அபிப்பிராயங்களை மாகாணச் சட்டசபைகளின் முன்னிலையிலும் கவர்னர்களின் முன்னிலையிலும் எடுத்துக் கூற வேண்டுமென்று தெரிவித்தது. வைசிராயுடன் காந்திஜி கடிதப் போக்குவரத்து நடத்திக் கொண்டிருந்ததால் காங்கிரஸ் எந்தக் காரியத்தையும் செய்யாமல் இருந்தது. தேசீயக் கோரிக்கைத் தீர்மானத்தின் பேரில் நடவடிக்கை மேற்கொள்ளுவதை நிறுத்தி வைக்குமாறு காங்கிரஸ் பிரதமர்களுக்கு உப கமிட்டி அறிவித்தது. இதற்கிடையே, மக்கள் நலனுக்கான நடவடிக்கைகளை விரைவில் மேற்கொள்ளுவதற்குக் காங்கிரஸ் பிரதமர்கள் தீர்மானித்தார்கள்.

லார்டுகள் சபையில் நடந்த இந்தியாவைப்பற்றிய விவாதத்தின் பிரதி ஒன்று முன் கூட்டியே காந்திஜிக்கு அனுப்பப்பட்டது. அதற்குப் பதில் கூறும் முறையில், செப்டம்பர் 28–இல் சேவாகிராமத்திலிருந்து காந்திஜி எழுதியதாவது: ''பிரிட்டனின் நண்பன் என்ற முறையில், பிரிட்டிஷ் ராஜதந்திரிகளுக்கு இந்தக் கோரிக்கையை விடுக்கிறேன்: அவர்கள் பழைய ஏகாதிபத்தியவாதிகளின் பாஷையை மறந்துவிட்டு, புதியதொரு அத்தியாயத்தை ஆரம்பிக்க வேண்டும்.''

அக்டோபர் 2-ஆம் தேதி காந்திஜியின் 70–ஆவது பிறந்ததின நூல் வெளி வந்தது. அதன் பதிப்பாசிரியர் டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன்.

அக்டோபர் 3-ஆம் தேதி ராஜேந்திரப் பிரசாத்துடனும் நேருவுடனும் வைசிராய் பேசினர். அக்டோபர் 9, 10 தேதிகளில் வார்தாவில் நடந்த அ. இ. கா. க. கூட்டம் காரியக் கமிட்டியின் அறிக்கைக்கு ஆதரவு தெரிவித்தது. 17–ஆம் தேதி வைசிராயின் அறிக்கை வெளிவந்தது. ''யுத்த முடிவில், மாட்சிமை தங்கிய மன்னர் சர்க்கார், இந்தியாவைக் கலந்து ஆலோசிப்பதற்கு மிகவும் தயாராக இருக்கும்'' என்பதுதான் அந்த அறிக்கையின் சாரம்.

அக்டோபர் 18-ஆம் தேதி காந்திஜி கூறினர்: ''வைசிராயின் அறிக்கை பெரிதும் ஏமாற்றம் அளிப்பதாக இருக்கிறது. காங்கிரஸ் ரொட்டி கேட்டதற்கு, கல் கிடைத்திருக்கிறது.''

அக்டோபர் 22, 23 தேதிகளில் வார்தாவில் காரியக் கமிட்டி கூடி, காங்கிரஸ் மந்திரிகளை ராஜிநாமாச் செய்யும்படி அறிவித்தது. நவம்பர் முதல் தேதியில் காந்திஜி, ராஜேந்திரப் பிரசாத்

ஜின்ஞ ஆகியோர் வைசிராயை ஒன்ருகச் சந்தித்தார்கள். பேச்சு வார்த்தைகள் வெற்றிபெறவில்லை என்று நவம்பர் 6-ஆம் தேதி யன்று வைசிராய் அறிவித்தார்.

நவம்பர் 8-இல் எல்லாக் காங்கிரஸ் மந்திரி சபைகளும் ராஜி நாமாச் செய்துவிட்டன. இவற்றின் ஸ்தானத்தில் வேறு மந்திரி சபைகளை அமைக்கச் சர்க்கார் அரைகுறை மனத்துடன் முயற்சி செய்தது. ஆனல், இறுதியில் இந்திய சர்க்கார் சட்டத்தின் 93-ஆவது பிரிவு அமலுக்குக் கொண்டுவரப்பட்டது.

நவம்பர் 19-இலிருந்து 23 வரை அலகாபாத்தில் கூடிய காரியக் கமிட்டி, ''எதிர்காலத்துக்கான காங்கிரஸ் திட்டத்தை யும், கொள்கையையும் பொதுமக்களுக்குக் காங்கிரஸ் விளக்கிக் கூறவேண்டும்'' என்று அறிவித்தது. அரசியல் நிர்ணய சபை அமைக்கவேண்டும் என்ற யோசனையை நவம்பர் 25-ஆம் தேதி 'ஹரிஜ'னில் காந்திஜி ஆதரித்தார்.

டிசம்பர் 18-இலிருந்து 22 வரை வார்தாவில் காரியக் கமிட்டி கூடியது. நிர்மாண வேலையைத் தீவிரமாகச் செய்து வர வேண்டுமென்றும், அழைப்பு வரும்போது தயாராக இருக்க வேண்டுமென்றும், காங்கிரஸ் கமிட்டிகள் கேட்டுக்கொள்ளப் பட்டன. 1940, ஜனவரி 26-ஆம் தேதி சுதந்திரதினம் கொண்டாட வேண்டும் என்பது சகல காங்கிரஸ் கமிட்டிகளின் கவனத்துக் கும் கொண்டுவரப்பட்டது.

## 1940 (வயது 71):

பிப்ரவரி 5-ஆம் தேதி வைசிராயைக் காந்திஜி பேட்டி கண் டார். அதன் இறுதியில், ''சமாதான பூர்வமான, கௌரவமான உடன்பாடு காண்பதற்குரிய சாத்தியம் எதுவும் எனக்குத் தென்படவில்லை'' என்று காந்திஜி தெரிவித்தார்.

பிப்ரவரி 17-இல் காந்திஜியும் கஸ்தூரிபாய் காந்தியும் சாந்திநிகேதனுக்கு விஜயம் செய்தார்கள். மறுநாள் ஒரு மாந்தோப்பில் கவி டாகுர் அவர்களுக்கு வரவேற்பு உபசாரம் நடத்தினர். விஸ்வபாரதி கலாசாலையைக் காந்திஜி தமது பாது காப்பில் வைத்துக்கொள்ள வேண்டுமென்று டாகுர் கேட்டுக் கொண்டார்.

பிப்ரவரி 21-இல் வங்காளத்திலுள்ள மால்கநந்தாவில் காந்தி சேவாசங்க வருடாந்தர மகாநாட்டில் பேசிய காந்திஜி, அந்த ஸ்தாபனத்தைக் கலைத்துவிட ஆலோசனை கூறியதுடன், தொடர்ந்து வேலை செய்வதற்கு 9 பேர் அடங்கிய ஒரு கமிட்டி யையும் நியமித்தார்.

மார்ச்சு 5-இல் சேகான் என்று வழங்கப்பட்ட கிராமத்துக்குச் சேவாகிராமம் என்று பெயர் மாற்றப்பட்டது.

மார்ச்சு மாதத்தில் மௌலானா ஆசாத் காங்கிரஸ் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 29, 30 தேதிகளில் நடந்த ராம்கார் காங்கிரஸ், காங்கிரஸ்காரர்களும், காங்கிரஸின் கருத்துகளைக் கொண்டவர்களும், யுத்தத்துக்கு ஆட்கள், பணம், சாமான்கள் ஆகியவை கொடுத்து உதவ முடியாது என்று அறிவித்தது. விஷயாலோசனைக் கமிட்டியில் பேசிய காந்திஜி, ஒவ்வொரு காங்கிரஸ் கமிட்டியும் சத்தியாக்கிரகக் கமிட்டியாக ஆகவேண்டும் என்றார்.

ஏப்ரல் 5-ஆம் தேதி காந்திஜியின் நெருங்கிய நண்பரான ஸ்ரீ சி. எப். ஆண்ட்ரூஸ் கல்கத்தாவில் காலமானார்.

ஜூன் மாதத்தில் பிரான்ஸ் வீழ்ச்சியுற்றது. ஜூன் 17–இலிருந்து 20 வரை வார்தாவில் கூடிய காரியக் கமிட்டிக் கூட்டத்தின் தீர்மானம் புதியதோர் அம்சம் உடையதாக இருந்தது:

"தூரத்தில் இருந்த பிரச்னைகளெல்லாம் இப்போது கைக்கெட்டினாற்போல அருகில் வந்துவிட்டன. விரைவில் இவற்றைத் தீர்க்க வேண்டிய நிலைமை ஏற்படலாம். தேச சுதந்திரத்தைப் பெறும் பிரச்னையோடு, சுதந்திரத்தை வைத்துக் காப்பாற்றும் பிரச்னையையும், வெளிநாட்டு ஆக்கிரமிப்பிலிருந்தும், உள்நாட்டுக் குழப்பத்திலிருந்தும் நாட்டைப் பாதுகாப்பதையும் சேர்த்து இப்போது ஆலோசிக்க வேண்டியிருக்கிறது. விளைவுகள் பலாத்காரமானவையாக இருக்குமா, அகிம்சா பூர்வமாக இருக்குமா என்பதைப்பற்றிச் சிந்திக்கும் அவசியமின்றி அரசியல் முடிவுகள் செய்யக் காரியக் கமிட்டிக்கு வார்தாத் தீர்மானம் சுதந்திரம் கொடுத்துவிட்டது. பிரிட்டன் இந்தியாவின் சுதந்திரத்தை அங்கீகரிப்பதற்கும், உடனடியாக இடைக்கால தேசீய சர்க்கார் அமைப்பதற்குமான யோசனையை அது சமர்ப்பித்திருக்கிறது. வெளிநாட்டு ஆக்கிரமிப்பு, உள்நாட்டுக் குழப்பம் ஆகியவை சம்பந்தமாகக் காங்கிரஸ் மேற்கொள்ளும் திட்டத்துக்கும், நடவடிக்கைக்குமான பொறுப்பிலிருந்து காந்திஜியைக் காரியக் கமிட்டி விடுவித்திருக்கிறது."

ஜவாஹர்லால் நேரு கூறியதாவது: "காந்திஜி உலகத்துக்கு அளிக்கும் தமது செய்தியை விட்டுக்கொடுக்கவோ, குறைத்துக் கொள்ளவோ இயலாதென்று கருதினால், அவர் கருதியது சரியாகவே இருக்கக் கூடும். இந்தச் செய்தியைத் தம் விருப்பப் பிரகாரம் அளிக்க அவருக்குச் சுதந்திரம் இருக்க வேண்டும். அரசியல் நிர்ப்பந்தங்களால் அவரைக் கட்டுப்படுத்தி வைக்கக் கூடாது. அவர் ஒரு வழியிலும், காங்கிரஸ் காரியக் கமிட்டி மற்றொரு வழியிலுமாகச் சென்றிருப்பது இதுதான் முதல் தடவை."

மறுபடியும் காந்திஜியை வைசிராய் அழைத்தார். சிம்லாவில் நீண்ட பேச்சு வார்த்தைகள் நடைபெற்றன. அகிம்சை முறையை ஏற்றுக்கொள்ளும்படி ஜூலை 2–ஆம் தேதியன்று ஒவ்வொரு பிரிட்டிஷ்காரருக்கும் காந்திஜி கோரிக்கை விடுத்தார்.

ஜூலை 3-ஆம் தேதியிலிருந்து 7-ஆம் தேதிவரை டில்லியில் காரியக் கமிட்டி கூடியது. வெளிநாட்டு ஆக்கிரமிப்பை எதிர்த்து அகிம்சை ஆயுதம் உபயோகிப்பதென்பது நிராகரிக்கப்பட்டது. தேசீய சர்க்கார் வேண்டுமென்று கோரப்பட்டது. காரியக் கமிட்டிக் கூட்டம் நடைபெறுவதற்கு முதல் நாள் மாலை ஸ்ரீ சுபாஷ் சந்திரபோஸ் கைது செய்யப்பட்டார். அகிம்சையை மிகக் கண்டிப்பாகப் பின்பற்றும் கொள்கை உடையவரான கான் அப்துல் கபார்கான் காரியக் கமிட்டியிலிருந்து ராஜிநாமாச் செய்தார்.

காந்திஜி கூறியதாவது: "ராஜாஜியின் தீர்மானம், ஆராய்ந்து முடிவு செய்த காங்கிரஸின் கொள்கைக்குப் பிரதிநிதியாக இருக்கிறது. என்னுடைய சமயத் தன்மையுள்ள சாயல் இல்லாமல், முழுக்க முழுக்க அரசியல் மனப்போக்கையே காங்கிரஸ் மேற்கொள்ள வேண்டுமென்று ஆவல் கொண்டிருந்த காங்கிரஸ்கார ரல்லாதாரும் இத் தீர்மானத்தை வரவேற்று முழு மனத்துடன் ஆதரிக்க வேண்டும். அவ்வாறே முஸ்லிம் லீக்கும், தங்கள் சமஸ்தானங்களைவிட இந்தியாவைப்பற்றி அதிகமாக நினைக்கும் மன்னர்களும் இதை வரவேற்று ஆதரவளிக்க வேண்டும்."

ஜூலை 25, 26, 27-ஆம் தேதிகளில் நடந்த காரியக் கமிட்டியின் அடுத்த கூட்டத்துக்குக் காந்திஜி போகவில்லை. 27, 28-ஆம் தேதிகளில் நடந்த அ. இ. கா. க. கூட்டத்திலும் கலந்துகொள்ளவில்லை. புனாவில் கூடிய அ. இ. கா. க. வார்தாவிலும். டில்லியிலும் நிறைவேற்றிய தீர்மானத்தை ஊர்ஜிதம் செய்தது.

"சர்க்காரின் விவேகம், ராஜாஜி என் விவேகத்தைப்பற்றிச் சொல்லிக் கொண்டதைப் போல, பிரிட்டிஷாருக்கு மங்கியிருந்தாலொழியச் சுதந்திரத்தை அவர்கள் கொடுக்காமல் இருக்க முடியாது" என்று காந்திஜி கூறினார்.

ஆகஸ்டு 8-ஆம் தேதி வைசிராய் வெளியிட்ட அறிக்கையில் தமது நிர்வாகக் கவுன்சிலில் சேருமாறு குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள இந்தியப் பிரதிநிதிகளை அழைக்கத் தாம் அதிகாரம் பெற்றிருப்பதாக அறிவித்தார். நிர்வாகக் கவுன்சிலில் சேரக் காங்கிரஸ் மறுத்துவிட்டது. தேசீய சர்க்கார் வேண்டுமென்ற காங்கிரஸின் கோரிக்கையைக் குறிப்பிட்டு, "அது உண்மையில் முடிவு காணப்பெறாத அரசியல் அமைப்புப் பிரச்னையையே கிளப்பும் கோரிக்கையாகும்" என்று இந்தியா மந்திரி அமெரி சொன்னார்.

ஆகஸ்டு 18-இலிருந்து 23 வரை வார்தாவில் கூடிய காரியக் கமிட்டி, "இந்தியாவை வாள் பலத்தைக் கொண்டு அடக்கி வைத்திருக்க வேண்டும் என்பதே பிரிட்டிஷ் சர்க்காரின் கருத்தாகும்" என்றது. காந்திஜியின் தலைமையில் நடவடிக்கையில் ஈடுபடக் காரியக் கமிட்டி உறுதி பூண்டதோடு, காங்கிரஸுக்கு வழிகாட்டிச் செல்லுமாறும் அவரைக் கேட்டுக் கொண்டது. காந்திஜி

கூறியதாவது: "இங்கிலாந்து, தோற்கடிக்கப் படுவதை நான் விரும்பவில்லை. இங்கிலாந்து தாழ்மைப்படுவதை நான் விரும்பவில்லை. தாங்களே அபாயத்தில் மாட்டிக்கொண் டிருப்பவர்கள், மற்றவர்களைக் காப்பாற்ற முடியாது. ஆனால், பொறுமை என்ற உயர்குணத்தை, தன்னைத் தானே அழித்துக்கொள்ளும் எல்லைவரையில் காங்கிரஸ்காரர்களிடையிலோ, காங்கிரஸ்காரரல்லாதாரிடையிலோ, எங்கெல்லாம் தேசீய உணர்ச்சி இருக்கிறதோ அங்கெல்லாம் கொண்டு செலுத்த முடியாது. பேச்சு, அதை ஒட்டிய செயல் ஆகியவற்றின் சுதந்திரம் ஜனநாயக வாழ்க்கையின் சுவாசமுமாகும். போர் புரியும் நாடுகள் இழிந்த காட்டுமிராண்டிச் செயலைச் செய்யும்போது, யுத்தத்துக்குப் பதிலாக அகிம்சையைக் கைக்கொள்ள வேண்டுமென்று பிரசாரம் செய்யும் சுதந்திரம், முற்றும் நியாயமானதேயாகும்."

செப்டம்பர் 27-ஆம் தேதி சிம்லாவில் வைசிராயைக் காந்திஜி சந்தித்தார். அதன்பின் காந்திஜி அறிவித்ததாவது: "உடனடியான பிரச்னை உயிர்வாழும் உரிமையாகும். விரிவான பொருளில் அதற்குப் பேச்சுச் சுதந்திரம் என்று அர்த்தம். காங்கிரஸ் அழியவேண்டிய நிலை ஏற்பட்டால், தனது கொள்கையைப் பிரகடனம் செய்யும் செயலில் அது அழிய வேண்டும்."

அக்டோபர் 11-இலிருந்து 13 வரை கூடிய காரியக் கமிட்டியின் அங்கீகாரத்தின்பேரில் தனி நபர் சத்தியாக்கிரகத்தைக் காந்திஜி தொடங்கினர். முதல் சத்தியாக்கிரகியாக வினோபா பாவே தேர்ந்தெடுக்கப்பட்டார். அக்டோபர் 17-ஆம் தேதியன்று வார்தாவுக்கு 17 மைல் தூரத்தில் கிராமவாசிகள் கூட்டத்தில் யுத்த எதிர்ப்புச் சொற்பொழிவாற்றி அவர் தார்மிக எதிர்ப்பு இயக்கத்தைத் தொடங்கிவைத்தார். அக்டோபர் 21-ஆம் தேதி தியோலியில் அவர் கைது செய்யப்பட்டார். வார்தாவில் விசாரணை நடந்தபின் அவருக்கு மூன்று மாதச் சிறைவாசத் தண்டனை விதிக்கப்பட்டது. சத்தியாக்கிரகிகள், தினந்தோறும் யுத்த எதிர்ப்புச் சுலோகங்களைக் கோஷித்துக்கொண்டு சென்றனர். அதன் பலனைக் கைது செய்யப்பட்டனர்.

அக்டோபர் 31-ஆம் தேதியன்று மாலை ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு கைதுசெய்யப்பட்டு, நான்கு வருடச் சிறைவாசத் தண்டனை விதிக்கப்பட்டார்.

அக்டோபர் 31-இல் 'ஹரிஜன்', 'ஹரிஜனபந்து', 'ஹரிஜன சேவக்' ஆகிய பத்திரிகைகளைக் காந்திஜி நிறுத்தி வைத்தார். சத்தியாக்கிரகப் போராட்டத்தின் செய்திகளை வெளியிடக் கூடாது என்று பத்திரிகைகளை அரசாங்கம் தடுத்தது.

டிசம்பர் 30-ஆம் தேதி அலகாபாத்தில் கைதான மௌலானா அபுல்கலாம் ஆஸாத்துக்கு 18 மாதச் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது.

1940 டிசம்பர் 25-ஆம் தேதியிலிருந்து, 1941 ஜனவரி 4-ஆம் தேதி வரை கிறிஸ்துமஸ் நல்லெண்ண அடையாளமாகச் சத்தியாக்கிரகத்தைக் காந்திஜி நிறுத்தி வைத்தார்.

## 1941 (வயது 72) :

1941-ஆம் வருடம் முழுவதிலும் இயக்கம் தொடர்ந்து நடந்ததுடன், இந்தியாவின் தூரப் பகுதிகளிலெல்லாம் சாவதானமாகப் பரவியது. ஜனவரி 5-ஆம் தேதி சத்தியாக்கிரகிகளின் ஜாபிதாவை ஸ்தல காங்கிரஸ் கமிட்டிகள் தயாரித்தன. அநேகர் சிறை சென்றனர்.

ஆகஸ்டு 7-ஆம் தேதி ரவீந்திரநாத டாகுர் காலமானார்.

இந்தியா முழுவதிலும் சத்தியாக்கிரகிகளை விடுதலை செய்யத் தீர்மானித்திருப்பதை டிசம்பர் 2-ஆம் தேதியன்று சர்க்கார் அறிவித்தது. ஏறக்குறைய 25,000 பேர் கைது செய்யப்பட்டுத் தண்டிக்கப்பட்டிருந்தனர்; மொத்தம் சுமார் 6 லட்சம் ரூபாய் அபராதம் விதிக்கப்பட்டது. அதே தினத்தில், "என்னைப் பொறுத்த வரையில், இந்திய சர்க்காரின் இந்தத் தீர்மானம் சிறிதளவு பாராட்டைக்கூடப் பெற முடியாது" என்று காந்திஜி கூறினார். எல்லைப்புற மாகாணத்திலும், வங்காளத்தில் சில பகுதிகளிலும் சத்தியாக்கிரகிகள் தங்கள் பணியைத் தொடர்ந்து செய்ய அனுமதிக்கப்பட்டார்கள்.

டிசம்பர் 7-ஆம் தேதி பேர்ள் ஹார்பரை ஜப்பான் தாக்கியது.

டிசம்பர் 8-ஆம் தேதியிலிருந்து ஒரு மாத காலம் காந்திஜி பர்டோலியில் வல்லபபாய் பட்டேலின் ஆசிரமத்தில் தங்கினார்.

டிசம்பர் 23-ஆம் தேதியிலிருந்து 30-ஆம் தேதிவரை காங்கிரஸ் காரியக் கமிட்டி பர்டோலியில் கூடியது. காந்திஜியின் வேண்டுகோளின்படி அவர் காங்கிரஸ் தலைமையிலிருந்து விலகிக்கொள்ளக் கமிட்டி சம்மதித்தது; அகிம்சையை வியாக்கியானம் செய்வதில் அடிப்படை வித்தியாசம் இருந்ததே இதற்குக் காரணம். அகிம்சையைச் சகல சந்தர்ப்பங்களிலுமே கைக்கொள்ளவேண்டும் என்பதுதான் காந்திஜியின் கருத்து. ஆனால், கமிட்டியோ, பின்கண்டவாறு முடிவு செய்தது: "தேசீய அடிப்படையிலேயே இந்தியா தன் பாதுகாப்புப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளமுடியும். யுத்தப் புயலினால் ஏற்படும் பெரிய பணிகளைச் செய்வதில் உதவியாக இருக்க முடியும்." பர்மாவில், குறிப்பாக ரங்கூன் நகரில் சமீபத்தில் நிகழ்ந்த "அசாதாரணமான நிகழ்ச்சிகள்" சம்பந்தமாகத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. தீர்மானத்தைப் பிரசுரிப்பதைச் சர்க்கார் தடை செய்துவிட்டது. மலாயா, பர்மா, கிழக்கு இந்தியத் தீவுகள் ஆகியவற்றின் மக்களுக்குக் கமிட்டி அனுதாபம் தெரிவித்தது. சீனாவுக்கும் ரஷ்யாவுக்கும் வாழ்த்துக்கள் அனுப்பியது. உணவுப் பயிர்களை அதிக

மாகச் சாகுபடி செய்யுமாறு கிராமவாசிகளுக்குச் சிபார்சு செய்தது. சரக்குகளைப் பதுக்கிக் கொள்ளை லாபம் அடிக்கக்கூடாது என்று வியாபாரிகளை எச்சரித்தது. அபாயத்தின் முன்னிலையில் அமைதியாகவும், கட்டுப்பாட்டுடனும் இருக்க வேண்டுமென்று மக்களுக்குக் கோரிக்கை விடுத்தது. தற்காப்பு, கஷ்ட நிவாரணம் ஆகிய துறைகளில் பயிற்சி பெறுவதற்கும் மக்களுக்கு உதவுவதற்கும் தொண்டர் ஸ்தாபனங்களைத் தொடங்கி நடத்தத் தீர்மானித்தது. *1940* செப்டம்பருக்குப் பிறகு நடைபெற்ற காரியக் கமிட்டியின் முதல் கூட்டம் இதுதான்.

## 1942 (வயது 73):

ஜனவரி *13, 14* தேதிகளில் வார்தாவில் காரியக் கமிட்டி கூடியது. *15, 16* தேதிகளில் அ. இ. கா. க. கூட்டம் நடைபெற்றது. காங்கிரஸை அதன் நிபந்தனைகளின்படியே தலைமை தாங்கி நடத்தக் காந்திஜி இசைந்தார். அந்தஅந்த ஸ்தலத்திலுள்ள ஸ்தாபனங்களைப் பலப்படுத்த வேண்டுமென்றும், தொண்டர்களைத் திரட்ட வேண்டுமென்றும், மக்களுடன் இன்னும் நெருங்கிய தொடர்பு வைத்துக்கொள்ள வேண்டுமென்றும், காங்கிரஸ்காரர்களுக்குக் காந்திஜி தெரிவித்தார். "ஒவ்வொரு கிராமத்துக்கும் காங்கிரஸின் செய்தி கிடைக்க வேண்டும்; ஏற்படக்கூடிய கஷ்டங்களைச் சமாளிக்க ஒவ்வொரு கிராமமும் தயாராக இருக்க வேண்டும்" என்றார் காந்திஜி.

ஜனவரி *18*-இல், *15* மாதங்களுக்குப் பிறகு, 'ஹரிஜ'னையும் அதைச் சேர்ந்த வாரப் பத்திரிகைகளையும் காந்திஜி திரும்பவும் ஆரம்பித்தார்.

ஜனவரி *21*-ஆம் தேதி காசி சர்வகலாசாலையின் வெள்ளி விழாப் பட்டமளிப்பு வைபவத்தில் மாணவர் கூட்டத்தில் பேசிய காந்திஜி, ஆசிரியர்களும், மாணவர்களும் பாட மொழியாக ஆங்கிலத்தைத் தேர்ந்தெடுப்பதைக் கண்டித்தார்.

பிப்ரவரி *11*-இல் ஸ்ரீ ஜம்னாலால் பஜாஜ் காலமானார்.

பிப்ரவரி *18*-இல் காந்திஜியை, மார்ஷல் சியாங்கே ஷேக், ஸ்ரீமதி சியாங்கே ஷேக் ஆகியவர்கள் கல்கத்தாவில் சந்தித்தார்கள். டில்லியில் மார்ஷல் சியாங்கே ஷேக்கைச் சந்திக்கக் காந்திஜிக்கு வைசிராய் அழைப்பு அனுப்பவில்லை. கல்கத்தாவில் சந்திப்பும் பேச்சும் நாலரை மணி நேரம் நீடித்தன. ஸ்ரீமதி சியாங்கே ஷேக் கதர்ப் புடைவை உடுத்தி, நெற்றியில் குங்குமம் வைத்துக் கொண்டு காந்திஜிக்கும் சியாங்கே ஷேக்குக்கும் இடையில் மொழி பெயர்ப்பாளராக இருந்தார்.

மார்ச்சு *7*-ஆம் தேதி ரங்கூன் வீழ்ச்சியடைந்தது.

மார்ச்சு *11*-ஆம் தேதியன்று, கிரிப்ஸ் தூதுகோஷ்டி வரப் போவதை அறிவித்த சர்ச்சில் சர்க்கார் பின் கண்டவாறு கூறி

யது: "ஜப்பானியர் முன்னேறி வருவதன் மூலம் இந்திய விவகாரங்களில் ஏற்பட்டுள்ள நெருக்கடியினால், படையெடுப்பாளனின் அபாயத்திலிருந்து தங்கள் நாட்டைக் காத்துக்கொள்ளுவதற்கு இந்தியர்களின் சகல சக்திகளையும் திரட்ட வேண்டுமென்று பிரிட்டன் முடிவு செய்திருக்கிறது."

மார்ச்சு 17, 18 தேதிகளில் வார்தாவில் காரியக் கமிட்டி கூட்டப்பட்டது. "பிரிட்டிஷ் சர்க்காரின் அறிக்கையைப் பற்றித் தீர ஆலோசிக்காமல் நாம் எந்தவித முடிவும் செய்துவிட விரும்பவில்லை" என்று மௌலானா ஆஸாத் ஒரே வரிகொண்ட அறிக்கை விடுத்தார்.

மார்ச்சு 22-ஆம் தேதி ஸர் ஸ்டாபோர்டு கிரிப்ஸ் கராச்சியில் வந்திறங்கினார். 23-ஆம் தேதி டில்லிக்கு வந்து, 25-ஆம் தேதியிலிருந்து கட்சித் தலைவர்களைப் பேட்டி காணத் தொடங்கினார்.

மார்ச்சு 27-ஆம் தேதி புது டில்லியில் கிரிப்ஸைக் காந்திஜி சந்தித்தார். கிரிப்ஸ் தெரிவித்த யோசனைகளை, "பின் தேதியிடப்பட்ட செக்" என்று காந்திஜி வருணித்தார். மார்ச்சு 29-ஆம் தேதி கிரிப்ஸ் தமது யோசனைகளை வெளியிட்டுவிட்டு, "எல்லாக் கட்சிகளும் விரும்பினாலும், இந்தியாவின் பாதுகாப்புப் பொறுப்பு இந்தியர்களிடம் ஒப்படைக்கப்படமாட்டாது" என்றார்.

முதல் இரண்டு பத்திரிகையாளர் கூட்டங்களிலும் கிரிப்ஸ் பேசும்போது, திட்டத்தில் எந்தவிதமான பெரிய அடிப்படை மாறுதல்களும் செய்யப்படமாட்டாது என்று கூறினார்.

அவருடைய யோசனைகளை எல்லா இந்தியக் கட்சிகளும் வெவ்வேறு காரணங்களுக்காக நிராகரித்து விட்டன. ஏப்ரல் முதல் தேதியன்று காரியக் கமிட்டி தனது அபிப்பிராயத்தைக் கிரிப்ஸுக்குத் தெரிவித்தது. பேச்சு வார்த்தைகளின்போது மௌலானா ஆஸாத்தும், ஜவாஹர்லால் நேருவும், ஜெனரல் வேவலையும், அமெரிக்க சர்க்காரின் விசேஷ இந்தியப் பிரதிநிதியான கர்னல் லூயி ஜான்ஸனையும் ஏப்ரல் 3-ஆம் தேதி சந்தித்துப் பேசினார்கள்.

ஏப்ரல் 5-ஆம் தேதி கொழும்பில் ஜப்பானிய விமானங்கள் குண்டு போட்டன. மறுநாள் இந்திய மண்ணில் விசாகப்பட்டணத்திலும், காகினாடாவிலும் முதல்முதலாக ஜப்பானியக் குண்டுகள் விழுந்தன.

ஏப்ரல் 10-ஆம் தேதி ஆண்டுரூஸ் ஞாபகார்த்த நிதி வசூலுக்காகக் காந்திஜி பம்பாய்க்குச் சென்றார். கிரிப்ஸ் யோசனைகளைக் காரியக் கமிட்டி இறுதியாக நிராகரித்துவிட்டது.

ஏப்ரல் 12-ஆம் தேதி கிரிப்ஸ் இங்கிலாந்துக்குப் புறப்பட்டார். பேச்சு வார்த்தைகள் தோல்வியில் முடிந்ததால் எங்கும் ஏமாற்றம் நிலவியது.



1931-இல் சாபர்மதி ஆசிரமத்தில் ஆழ்ந்த சிந்தனையிலிருக்கிறார் மகாத்மா



1942 ஆகஸ்டில் கைதியாகும் முன்பு மகாத்மாவின் குதூகலம்

பிரிட்டிஷ் திட்டம் எடுத்த எடுப்பிலேயே கேலிக்கூத்தாக இருக்கிறதென்றும், எந்த இடத்திலுமே அதை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள் என்றும் ஏப்ரல் 19-ஆம் தேதி 'ஹரிஜ'னில் காந்திஜி எழுதினர்.

ஏப்ரல் 23-ஆம் தேதி ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார், பெரும்பாலும் பழைய சென்னை சட்டசபை ஆதரவாளர்களைக் கொண்ட ஒரு சிறு கூட்டத்தில் பேசினர். அப்போது இரண்டு தீர்மானங்களை நிறைவேற்றினர். முதல் தீர்மானம், காங்கிரஸுக்கும் முஸ்லிம் லீக்குக்கு மிடையே சமரச உடன்பாடு காண்பதற்கு அடிப்படையாக, கொள்கையளவில் பாகிஸ்தான் கொடுக்கச் சம்மதிக்குமாறு சிபார்சு செய்தது; மற்றொரு தீர்மானம், சென்னையில் மீண்டும் பொறுப்பாட்சியை அமுலுக்குக்கொண்டுவர வேண்டுமென்று கூறியது. அ. இ. கா. க. கூட்டத்தில் சமர்ப்பிப்பதற்காக இந்த இரண்டு தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன. காங்கிரஸ்காரர்களிடையே இத் தீர்மானங்களுக்கு ஆதரவில்லை. காரியக் கமிட்டியிலிருந்து ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் ராஜிநாமாச் செய்தார்.

ஏப்ரல் 29-இலிருந்து மே 2-ஆம் தேதிவரையிலும் அகமதாபாத்தில் அ. இ. கா. க. கூடியது. ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் சென்னைத் தீர்மானத்தைக் கொண்டு வந்தார். 200 பேர் கொண்ட கூட்டத்தில் அதற்கு ஆதரவாக 15 வோட்டுகளே கிடைத்தன. அ. இ. கா. க. பின் வருமாறு ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது: "படையெடுப்பு நிகழுமென்றால், அதை எதிர்த்துப் போராட வேண்டும். இந்த எதிர்ப்பு அகிம்சாபூர்வமான ஒத்துழையாமை வடிவத்தில்தான் இருக்க முடியும். ஏனென்றால், மக்கள் தேசப் பாதுகாப்புக்கு எந்த வகையில் ஏற்பாடு செய்வதையும் சர்க்கார் தடுத்துவிட்டது." வேறு சில தீர்மானங்களைப் பிரசுரிக்கச் சர்க்கார் தடை விதித்துவிட்டது.

சாந்திநிகேதனில் ஆண்டுரூஸ் ஞாபகார்த்தச் சின்னம் கட்டுவதற்கு, மே 24-ஆம் தேதிவாக்கில் ஒரு வார காலத்துக்குள்ளாக காந்திஜி ஐந்து லட்சம் ரூபாய் வசூலித்துவிட்டார்.

மே 26-ஆம் தேதி அலகாபாத்தில் அ. இ. கா. க. காரியாலயத்தைச் சர்க்கார் சோதனைபோட்டு, காரியக் கமிட்டியின் விவாதக் குறிப்புகள் சிலவற்றைக் கைப்பற்றியது.

இப்போது காங்கிரஸைக் காந்திஜி தலைமை தாங்கி நடத்தினர். 'ஹரிஜ'னில் தொடர்ந்து பல கட்டுரைகள் எழுதிக் கொள்கையை விளக்கினர். சேவா கிராமத்தில் அமெரிக்கப் பத்திரிகையாளர்கள் அவரைப் பேட்டி கண்டார்கள். மே 24-ஆம் தேதி காந்திஜி கூறியதாவது: "இந்தியாவைக் கடவுளின் கையில் ஒப்படைத்துவிடுங்கள். நவீன பாஷையில் சொன்னல், அராஜக நிலையில் விட்டுவிடுங்கள். அதிலிருந்து

ஓர் உண்மையான இந்தியா உருவெடுக்கும். இப்போது நாம் காணும் பொய்யான இந்தியா மறையும்.''

ஜூன் 3-ஆம் தேதியிலிருந்து 10-ஆம் தேதி வரை பிரபல அமெரிக்கப் பத்திரிகையாளரும் நூலாசிரியருமான லூயி பிஷர் சேவா கிராமத்தில் காந்திஜியோடு தங்கியிருந்தார். தம்முடைய அனுபவங்களையும் அபிப்பிராயங்களையும் ''காந்திஜியுடன் ஒரு வாரம்" என்ற அவருடைய நூலில் தெரிவித்திருக்கிறார். அது 1942-இல் அமெரிக்காவில் வெளியாயிற்று. அதன்பின், லூயி பிஷரின் கட்டுரைகளைப் பிரசுரிப்பதற்கு முன் தணிக்கை செய்ய வேண்டுமென்று சர்க்கார் உத்தரவு பிறப்பித்தது.

ஜூலை 6-ஆம் தேதி வார்தாவில் காரியக் கமிட்டிக் கூட்டம் நடைபெற்றது. காந்திஜி பிரசன்னமாக இருந்த அக்கூட்டத்தில், ''இந்தியாவைவிட்டு வெளியேறு'' என்ற தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. ஜூலை 14-இல் அது பிரசுரிக்கப்பட்டது. போராட்டம் தொடங்கினால் காந்திஜி தலைமை தாங்கி நடத்துவது என்று தீர்மானிக்கப்பட்டது.

முஸ்லிம் லீக்கிடமோ, வேறு எந்தக் கட்சியினிடமுமோ பிரிட்டன் அதிகாரத்தைக் கைமாற்றிக் கொடுத்தாலும்—அது உண்மையான சுதந்திரமாக இருக்கும் பட்சத்தில்—தமக்கு ஆட்சேபம் இல்லை என்று ஆஸாத் கூறிய வாசகம் ஒன்றை அவருடைய சம்மதத்தைப் பெற்றுக் காந்திஜி மேற்கோள் காட்டி ஆகஸ்டு 2-ஆம் தேதியன்று எழுதினார்.

அ. இ. கா. க. கூட்டத்தில் சமர்ப்பிப்பதற்காக ஆகஸ்டு 5-ஆம் தேதியன்று காரியக் கமிட்டி ஒரு புதுத் தீர்மானத்தை நிறைவேற்றியது. சுதந்திர இந்தியா, ஐக்கிய நாடுகள் சபையின் நேச நாடாக இருக்கும் என்று அது கூறியது: ''அதிகாரம் கிடைக்கும் போது, அது இந்திய மக்கள் அனைவருக்கும் சொந்தமாக இருக்கும்'' என்றும் அந்தத் தீர்மானம் தெரிவித்தது. இந்திய மக்கள் அபாய கட்டங்களில் தைரியமாகவும், பொறுமையாகவும் நடந்துகொள்ளுவதுடன், காந்திஜியின் தலைமையில் ஒன்றுதிரண்டு, இந்திய சுதந்திரப் படை வீரர்களைப்போல அவருடைய கட்டளைகளை நிறைவேற்ற வேண்டும் என்றும் அந்தத் தீர்மானம் கேட்டுக்கொண்டது.

அ. இ. கா. க. கூட்டத்திற்கு முதல் நாள் மார்ஷல் சியாங்கே ஷேக்குக்கு காந்திஜி எழுதிய கடிதத்தில், ''சுதந்திர இந்தியாவும், சுதந்திரச் சீனாவும் ஒத்துழைக்கும் நாளை நான் எதிர்நோக்குகிறேன்'' என்று குறிப்பிட்டார்.

ஆகஸ்டு 8-ஆம் தேதி பம்பாயில் கூடிய அ. இ. கா. க. வில் "இந்தியாவை விட்டு வெளியேறு" என்ற தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. திட்டவட்டமான நடவடிக்கையை எடுப்பதற்கு முன் வைசிராய்க்குத் தாம் கடிதம் எழுத உத்தேசித்திருப்பதாகக் காந்திஜி தமது பிரசங்கத்தில் கூறினார்.

"காங்கிரஸ் சவால் விடுத்திருக்கும் இந்தச் சந்தர்ப்பத்தில் இந்திய சர்க்கார் தனது கடமையை நிறைவேற்றும்" என்று கவர்னர் ஜெனரலும் ஆலோசனைக் குழுவினரும் தீர்மானம் செய்தனர்.

ஆகஸ்டு 9-ஆம் தேதி யன்று, பொழுது விடிவதற்கு முன்பாகவே காந்திஜியும், காரியக் கமிட்டி அங்கத்தினர்களும், நூற்றுக்கணக்கான காங்கிரஸ் தலைவர்களும், ஊழியர்களும் இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின்கீழ்க் கைது செய்யப்பட்டார்கள்.

ஆகஸ்டு 10-ஆம் தேதி காங்கிரஸ் கமிட்டிகள் சட்ட விரோதமாக்கப்பட்டன.

ஆகஸ்டு 14-இல் வைசிராய் லின்லித்கோவுக்கு எழுதிய முதல் கடிதத்தில் காந்திஜி கூறியதாவது: "நெருக்கடியைத் துரிதப்படுத்திப் பெரிதாக்கியது இந்திய சர்க்காரின் தவறு. உங்கள் செயலை நான் எவ்வளவு அதிகமாக வெறுத்த போதிலும், முன்போலவே நான் உங்கள் நண்பனாகத்தான் இருக்கிறேன். கடவுள் உங்களுக்கு வழி காட்டுவாராக." ஆகஸ்டு 22-ஆம் தேதி வைசிராய் சுருக்கமாகப் பதில் அனுப்பினார்.

ஆகஸ்டு 15-ஆம் தேதி காந்திஜியின் காரியதரிசி மகாதேவ தேசாய், அவர் சிறை வைக்கப்பட்டிருந்த ஆகாகான் மாளிகையில் காலமானார். பத்திரிகைகளுக்குக் கடுமையான கட்டுத்திட்டங்கள் விதிக்கப்பட்டதால், அநேக பத்திரிகைகள் நிறுத்தி வைக்கப்பட்டன.

செப்டம்பர் 10-ஆம் தேதி யன்று பார்லிமெண்டில் சர்ச்சில் கூறியதாவது: "ஸ்ரீ காந்தி மிக நீண்ட காலமாகக் கொள்கையளவில் வற்புறுத்தி வந்த அகிம்சையைக் காங்கிரஸ் கட்சி இப்போது கைவிட்டு விட்டது. இப்போது அது பகிரங்கமாகப் புரட்சி இயக்கமாக வேலை செய்கிறது. அதிக அளவில் இந்தியாவுக்குப் படைகள் அனுப்பி வைக்கப்பட்டிருக்கின்றன. பிரிட்டிஷ் தொடர்பு ஏற்பட்ட பின் இந்த அளவுக்கு எந்தக் காலத்திலும் படைகள் அனுப்பப்பட்டது இல்லை. இந்தியாவின் நிலை கண்டு இப்போது கவலையோ, பீதியோ அடைய வேண்டிய அவசியமில்லை."

செப்டம்பர் 15-இலிருந்து 18 வரை நிலைமையைக் குறித்து மத்திய சட்டசபை விவாதித்தது. காந்திஜியையும் காங்கிரஸ் தலைவர்களையும் உடனடியாக விடுதலை செய்யவேண்டும் என்று கோரப்பட்டது. உள் நாட்டு மந்திரி, காங்கிரஸின்மீது குற்றஞ் சாட்டினார்.

செப்டம்பர் 22, 23, 24-ஆம் தேதிகளில் ராஜாங்க சபையில் விவாதம் நடந்தது.

செப்டம்பர் 23-இல் உள்நாட்டு இலாகாக் காரியதரிசிக்குக் காந்திஜி எழுதிய கடிதத்தில் பின்வருமாறு கூறியிருந்தார்: "நேர் மாருக எவ்வளவோ கூறப்பட்டிருந்தபோதிலும், காங்கிரஸ் கொள்கை சந்தேகத்துக்கு இடமின்றி, இன்னும் அகிம்சைக் கொள்கையாகவே இருக்கிறது என்று நான் சொல்லுவேன். ஏற்பட்டுள்ள நாசத்துக்குக் காரணம் சர்க்காரே ஒழியக் காங்கிரஸ் அல்ல என்று நான் கருதுகிறேன். அடக்குமுறைக் கொடுமை அதிருப்தியையும் கசப்பையும்தான் வளர்க்கும்.'' இந்தக் கடிதம் கிடைத்ததாகச் சம்பிரதாய பூர்வமான பதிலேச் சர்க்கார் அனுப்பிவைத்தது.

நாட்டில் போலீஸும், ராணுவமும் அத்துமீறிய காரியங்கள் செய்திருப்பதாகக் கூறப்படுவனவற்றை விசாரிக்க ஒரு கமிட்டியை நியமிக்க வேண்டுமென்று சிபார்சு செய்யும் தீர்மானம் ஒன்றைச் செப்டம்பர் 24-ஆம் தேதியன்று மத்திய சட்ட சபையில் ஸ்ரீ கே. சி. நியோகி கொண்டுவந்தார். அடுத்த வருடம் பிப்ரவரி 12-இல் இருந்து 18 வரை மீண்டும் விவாதம் நடந்தது. தீர்மானம் நிராகரிக்கப்பட்டது.

அக்டோபர் 10-ஆம் தேதியன்று சிந்து மாகாணப் பிரதமர் அல்லாபக்ஷ், ''சர்க்காரின் கௌரவப் பட்டங்களே உதறியதற்காக'' கவர்னரால் பதவியிலிருந்து நீக்கப்பட்டார். தேசீய சர்க்கார் அமைக்க வேண்டுமென்று அல்லாபக்ஷ் கோரினர்.

சிமூரில் நடந்த அக்கிரமங்களே ஆட்சேபித்து நவம்பர் 11-ஆம் தேதியன்று வைசிராய் நிர்வாகக் கவுன்சிலின் அங்கத்தினர் ஸ்ரீ ஆனேயின் வீட்டில் ஸ்ரீ பன்ஸாலி உண்ணுவிரதம் இருக்கத் தொடங்கினர்.

காந்திஜியைச் சந்திக்க வேண்டுமென்று ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் விடுத்த வேண்டுகோளே நவம்பர் 12-ஆம் தேதி வைசிராய் மறுத்துவிட்டார்.

நவம்பர் 16-ஆம் தேதியன்று மத்திய சர்க்காரின் கொள்கையை ஆட்சேபித்து வங்காளத்தின் நிதி மந்திரி டாக்டர் சியாமப் பிரசாத் முக்கர்ஜி தமது பதவியை ராஜிநாமாச் செய்தார். காந்திஜியையும், மற்ற காங்கிரஸ் தலைவர்களேயும் பேட்டி காண வேண்டுமென்ற அவரது வேண்டுகோள் நிராகரிக்கப்பட்டது.

## 1943 (வயது 74) :

பத்திரிகைகளுக்கு விதித்த கட்டுப்பாடுகளே ஆட்சேபித்து, ஜனவரி 6-ஆம் தேதியன்று எல்லா இந்தியப் பத்திரிகைகளும் ஹர்த்தால் அனுஷ்டித்தன.

பிப்ரவரி 10-ஆம் தேதி மத்தியானம், ஆகாகான் மாளிகையில் சிறை வைக்கப்பட்டிருந்த காந்திஜி, சர்க்காரிலிருந்து

கடவுள் வரை நீதி கோரி மூன்று வார உண்ணுவிரதத்தைத் தொடங்கினர்.

குழப்பங்களுக்கு யார் பொறுப்பாளி என்பதுபற்றிக் காந்திஜிக்கும் லின்லித்கோவுக்கும், காந்திஜிக்கும் உள்நாட்டுக் காரியதரிசிக்கும் நடந்த கடிதப் போக்குவரத்துக்கள் இந்திய சர்க்காரால் வெளியிடப்பட்டன. சர்க்கார்தான் பொறுப்பாளி என்பதைக் காந்திஜி தம் கடிதங்களில் வற்புறுத்திக் கூறியிருந்தார். வைசிராய் இதை மறுத்துக் காங்கிரஸையும் அதன் தலைவர்களையுமே குற்றம் சாட்டினர். உண்ணுவிரதத்தின் முதல் நாள் அன்று காந்திஜி உற்சாகமாக இருப்பதாகவே செய்தி வந்தது.

மூன்ருவது நாள், அவர் காலை நேரங்களில் வழக்கமாக நடப்பதையும், மாலை நேரங்களில் மகாதேவ தேசாயின் அஸ்தி அடக்கம் செய்யப்பட்டுள்ள இடத்துக்குப் போய்வருவதையும் நிறுத்தினர்.

பிப்ரவரி 13-ஆம் தேதி உள்நாட்டு இலாகாவின் அடிஷனல் காரியதரிசி ஸர் ரிச்சர்டு டாட்டன் ஹாம், "குழப்பங்களுக்குக் காங்கிரஸ் பொறுப்பாளி" என்ற புத்தகத்தை வெளியிட்டார். 1942-43-ல் நடந்த குழப்பங்களுக்குக் காந்திஜியும் காங்கிரஸ் மேலிடமுமே காரணகர்த்தாக்கள் என்று அந்தப் புத்தகத்தில் கூறப்பட்டிருந்தது.

பிப்ரவரி 15-இல் டாக்டர் பி. சி. ராய் புனுவுக்கு வந்து காந்திஜியின் உண்ணுவிரதம் முடியும் வரையில் கூடவே இருந்தார். அவருடைய உடல் நிலை பற்றிய அறிக்கைகள் நாளுக்குநாள் அதிகக் கவலையை அளிப்பனவாக இருந்தன. மத்திய சட்டசபை உண்ணுவிரதம்பற்றி விவாதித்தது.

காந்திஜியின் உடல்நிலை மேலும் மோசமாகிவிட்டதாக பிப்ரவரி 16-ஆம் தேதியன்று ஆறு டாக்டர்கள் அறிவித்தார்கள்.

அடிப்படைப் பிரச்னையின்பேரில்-காந்திஜியின் உண்ணுவிரதத்தின் பேரில்-ஸர் எச். பி. மோடி, என். ஆர். சர்க்கார், ஆனே ஆகியவர்கள் வைசிராய் நிர்வாகக் கவுன்சில் அங்கத்தினர் பதவியிலிருந்து பிப்ரவரி 17-ஆம் தேதி ராஜிநாமாச் செய்தார்கள்.

பிப்ரவரி 18-இல் காந்திஜியின் உடல்நிலை அதிகக் கவலையளித்தது. காலையிலிருந்து அவர் பேசக் கூடிய நிலையில் இல்லை. அன்று 30 பேர்தான் அவரைப் பார்க்க அனுமதிக்கப்பட்டார்கள்.

பிப்ரவரி 19, 20 தேதிகளில் டில்லியில் அகில இந்தியத் தலைவர்களின் மகாநாடு நடைபெற்றது. அதில் 200-க்கு மேற்பட்டவர்கள் கலந்து கொண்டார்கள். காந்திஜியை உடனடியாக விடுதலை செய்ய வேண்டுமென்று மகாநாட்டில் ஏகமனதாகத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. இந்த வேண்டுகோளைப் பிப்ரவரி 26-இல் வைசிராய் நிராகரித்துவிட்டார்.

காந்திஜியை விடுதலை செய்ய வேண்டுமென்று கோரி நாடெங்கும் மாபெரும் பொதுக்கூட்டங்கள் நடைபெற்றன.

பிப்ரவரி 21-இல் நிலைமை முற்றிவிட்டது. உண்ணாவிரதத்தை உடனடியாக நிறுத்தாவிடில், உயிரைக் காப்பாற்றுவது காலம் கடந்த செயல் ஆகிவிடக் கூடும் என்று டாக்டர்கள் கூறினார்கள். எலுமிச்சம்பழச் சாற்றுக்குப் பதிலாக ஆரஞ்சு ரசத்தைச் சாப்பிடும்படி காந்திஜியை டாக்டர்கள் கேட்டுக் கொண்டார்கள். உண்ணாவிரதத்தின்போது தண்ணீர் சற்றுச் சுவையாக இருக்க வேண்டும் என்பதற்காக எலுமிச்சை, ஆரஞ்சு போன்றவற்றின் சாற்றைச் சிறிது சேர்த்துக்கொள்ளுவது காந்திஜியின் கொள்கைக்கு உடன்பாடே. ஆகவே, அவர் ஆரஞ்சு ரசத்தைச் சேர்த்துக் கொள்ளுவதற்கு ஒப்புக்கொண்டார். இதைப் பற்றிப் பிரிட்டிஷ் பத்திரிகை நிருபர்கள் விஷமத்தனமான செய்திகளைப் பரப்பினார்கள். உண்ணாவிரதம் மரணத்தில் முடிந்தாலும், அதற்கும் சர்க்கார் தயாராகவே இருக்கிறது என்பதற்கான அறிகுறிகள் தென்பட்டன. போலீஸ், ராணுவ முன்னேற்பாடுகள் செய்யப்பட்டன.

அமெரிக்க ஜனாதிபதி ரூஸ்வெல்ட்டின் அந்தரங்கப் பிரதிநிதி வில்லியம் பிலிப்ஸ் பத்திரிகை நிருபர்களிடம், இந்திய நிலைமையைச் சமாளிக்கும் வேலையை அமெரிக்க, பிரிட்டிஷ் சர்க்கார்களின் உயர்தர உத்தியோகஸ்தர்கள் ஒன்று சேர்ந்து செய்து வருகிறார்கள் என்று சூசகமாகத் தெரிவித்தார்.

பிப்ரவரி 23-ஆம் தேதியன்று காந்திஜி மனத்தெளிவு பெற்றவராகக் காணப்பட்டார். ''நண்பர்கள் ஆம்புலன்ஸ் யூனிட்'' சார்பில் ஹொரேஸ் அலெக்ஸாண்டர் சமரசம் செய்து வைப்பதற்கு முயன்றார். இந்த மத்தியஸ்தத்தைச் சர்க்கார் உடனே நிராகரித்துவிட்டது.

பிப்ரவரி 27-இல் காந்திஜியை ஸ்ரீ ஆனே பார்த்தார்.

பிப்ரவரி 28-இல் காந்திஜி உற்சாகத்துடன் காணப்பட்டார்.

மார்ச்சு 3-ஆம் தேதி உண்ணாவிரதம் முடிவடைந்தது. சிறையில் காந்திஜியுடன் இருந்தவர்கள் காந்திஜிக்குப் பிரீதியான ''வைஷ்ண ஜனதோ'' கீதத்தையும், டாகுரின் கீதாஞ்சலியிலிருந்து 2 பாடல்களையும், ''ஒளியே, கருணையோடு வழிகாட்டு'' என்ற பாட்டையும் பாடினார்கள். ''என்னுடைய இறைவனைச் சந்திக்க எனது பிரார்த்தனை'' என்ற டாகுரின் பாட்டை ஸ்ரீமதி சரோஜினி நாயுடு பாடினார். காலை மணி 9-34க்குக் கஸ்தூரிபாய் தண்ணீரில் கலக்கப்பட்ட ஆறு அவுன்ஸ் ஆரஞ்சுப்பழச் சாற்றைக் காந்திஜிக்குக் கொடுத்தார். காந்திஜி அதைக் குடிக்க இருபது நிமிஷ நேரம் ஆயிற்று.

உண்ணாவிரதத்தின் கடைசி நாளன்று காந்தியைப் பார்ப்பதற்காவது, அவர் உண்ணாவிரதத்தை நிறுத்தும்போது அங்கே

இருப்பதற்காவது அனுமதி வேண்டுமென்று இந்தியப்பத்திரிகை நிருபர்களும், அந்நிய நாட்டு நிருபர்களும் அனுமதி கேட்டார்கள். ஆனால், சர்க்கார் மறுத்துவிட்டது. மாதம் முடியும்போது தம்மை டாக்டர் பி. சி. ராய் கடைசி முறையாக வந்து வைத்தியப் பரிசோதனை செய்வதை காந்திஜி விரும்பினர். ஆனால், சர்க்கார் அனுமதியளிக்க மறுத்துவிட்டது.

உண்ணுவிரதத்தை முடித்த தினத்தன்று காலையில், மகா தேவ தேசாயின் அஸ்தி இந்திராயணி நதியில் கரைக்கப்பட்டது.

மார்ச்சு 6 - ஆம் தேதி தண்ணீர் கலந்த ஆட்டுப்பாலையும் பழச் சாற்றையும், சில பழத்துண்டங்களையும் காந்திஜி சாப்பிட்டார். அப்புறம் உடல்நிலை குறித்து அறிக்கைகள் வரவில்லை.

காந்திஜியை விடுதலை செய்ய வேண்டுமென்றும், 'நிலைமையைப் புனராலோசனை செய்ய வேண்டுமென்றும் கோரி மார்ச்சு 10-ஆம் தேதியன்று 35 முக்கியஸ்தர்கள் கையெழுத்திட்ட அறிக்கை வெளியிடப்பட்டது.

உத்தேசிக்கப்பட்ட சப்ரூ மகாநாட்டின் தூதுகோஷ்டி, வைசிராய் விதித்த கட்டுதிட்டங்களின் காரணமாக அவரிடம் செல்லுவதைக் கைவிட்டு விட்டது. தலைவர்கள் காந்திஜியைச் சந்திப்பதற்கு வைசிராய் அனுமதிக்க வில்லை.

ஏப்ரல் 25-ஆம் தேதி அமெரிக்காவுக்குப் புறப்பட்ட பிலிப்ஸ், பத்திரிகை நிருபர்களிடம் பேசிக்கொண் டிருந்தபோது பின் வருமாறு தெரிவித்தார்: "ஸ்ரீ காந்தியைச் சந்தித்துப் பேச விரும்பினேன். அதற்கு அதிகாரிகளிடம் அனுமதி கேட்டேன். ஆனால், அவசியமான வசதிகளைச் செய்துகொடுக்கத் தங்களால் இயலவில்லை என்று அவர்களிடமிருந்து பதில் வந்தது."

மே 24-ஆம் தேதியன்று கட்சிப் பற்றற்ற தலைவர்கள், பாரபட்சமற்ற விசாரணை நடத்தப்பட வேண்டுமென்றும், காந்திஜியும் பிற காங்கிரஸ் தலைவர்களும் விடுதலை செய்யப்பட வேண்டுமென்றும் கோரினர்கள்.

மே 26-ஆம் தேதியன்று டில்லியிலிருந்து சர்க்கார் பத்திரிகைகளுக்கு விடுத்த அறிக்கையில் கூறியதாவது: "இந்திய சர்க்காருக்கு ஸ்ரீ காந்தியிடமிருந்து வந்த ஒரு வேண்டுகோளில், அவர் ஜின்னுவுக்கு எழுதியிருக்கும் ஒரு சிறு கடிதத்தை அவருக்கு அனுப்பி வைக்க வேண்டுமென்று கேட்டிருக்கிறர். ஸ்ரீ ஜின்னுவைச் சந்திக்க விரும்புவதாக அந்தக் கடிதத்தில் குறிப்பிட் டிருக்கிறர். கடிதத்தை அவ்வாறு அனுப்பிவைக்க இயலாது என்று இந்திய சர்க்கார் தீர்மானித்தது. இந்த விவரத்தை ஸ்ரீ காந்திக்கும், ஸ்ரீ ஜின்னுவுக்கும் அறிவித்திருக்கிறது."

மே 28-ஆம் தேதி ஸ்ரீ ஜின்னு ஓர் அறிக்கையில் கூறியதாவது:

"முஸ்லிம் லீக்கைப் பிரிட்டிஷ் சர்க்காருடன் மோதிக்கொள்ளச் செய்து, அதன் மூலம் தமது விடுதலைக்கு வழி செய்து கொள்ளுவதற்காகவே ஸ்ரீ காந்தி இந்தக் கடிதத்தை எழுதினுர் என்று கருதவேண்டும்."

ஜூன் 18-ஆம் தேதி வேவல் வைசிராயாக நியமிக்கப்பட்டார். "இந்தப் புதிய வைசிராயின் நியமனத்துக்கு, மன்னர் சர்க்காரின் நிலையான கொள்கையில் மாறுதல் எதுவும் ஏற்பட்டிருப்பதாக அர்த்தமல்ல" என்று ஜூன் 24-ஆம் தேதியன்று காமன்ஸ் சபையில் இந்தியா மந்திரி அமெரி அறிவித்தார்.

டிசம்பர் 4-ஆம் தேதி சர்க்கார் வெளியிட்ட ஓர் அறிக்கை, "ஸ்ரீமதி காந்திக்கு ஒரே வாரத்தில் மேற்கொண்டு இரண்டு முறை இருதயக் கோளாறு ஏற்பட்டிருக்கிறது" என்று கூறியது. கஸ்தூரிபாய் காந்தியின் வேண்டுகோளின்படி, அவருடைய புதல்வர்களும், பேரன்மாரும், அவரைப் பாதுகாவலில் வைத்திருந்த சிறை முகாமில் சந்திக்க இந்திய சர்க்கார் சம்மதம் அளித்தது.

டிசம்பர் 15-ஆம் தேதி லார்டுகள் சபையில் கஸ்தூரிபாயின் உடல்நிலை பற்றிய விஷயம் பிரஸ்தாபிக்கப்பட்டது. "ஸ்ரீமதி காந்தி தற்சமயம் இருக்கும் இடத்திலேயே இருப்பது அவருடைய நலனுக்கு உகந்ததாகும்" என்று உதவி இந்தியா மந்திரி பதில் அளித்தார்.

டிசம்பர் 20-ஆம் தேதி வெளியிடப்பட்ட ஓர் அறிக்கை, மற்றொரு முறை இருதயக் கோளாறு ஏற்பட்டதாகக் கூறியது.

டிசம்பர் 24-ஆம் தேதியன்று சர்க்கார், பத்திரிகைகளுக்கு அனுப்பிய ஒரு குறிப்பில் கூறியதாவது: "அவரை (கஸ்தூரி பாயை) விடுதலை செய்வதால், அவர் நோய்வாய்ப்பட்ட நிலையில் அவருடைய கணவரிடமிருந்து பிரியும்படி நேரும். ஆகாகான் மாளிகையிலிருந்து அவரை அப்புறப்படுத்துவது இரக்க மற்ற செயலாகும்."

## 1944 (வயது 75):

பிப்ரவரி 20-ஆம் தேதி வெளிவந்த சர்க்கார் அறிக்கை, "கடந்த சில நாட்களாக ஸ்ரீமதி காந்தியின் உடல் நிலை கெட்டுக் கொண்டு வந்து, இப்போது மிகவும் மோசமான நிலையில் இருக்கிறது" என்று கூறியது.

பிப்ரவரி 22-ஆம் தேதியன்று இரவு 7-35 மணிக்கு காந்திஜியின் வாழ்க்கைத் துணைவியும் மனைவியுமான ஸ்ரீமதி காந்தி, கஸ்தூரிபாய் ஆகாகான் மாளிகையில் காலமானுர். அன்று சிவராத்திரியாகும்.

பிப்ரவரி 23-ஆம் தேதி காலை 10-40 மணிக்குக் கஸ்தூரி பாயின் சடலத்துக்கு ஈமக்கிரியை செய்யப்பட்டது. கடைசிக் குமாரரான தேவதாஸ், அன்னைக்கு இறுதிக் கடன்களைச் செய்தார். காந்திஜியின் உறவினர்களும், நண்பர்களுமாக நூற்றுக்கு மேற்பட்டவர்கள் அப்போது அங்கே இருந்தார்கள்.

அநேக நகரங்களிலும், கிராமங்களிலும் ஹர்த்தால் அனுஷ்டிக்கப்பட்டது. பொதுக்கூட்டங்களும், ஊர்வலங்களும் நடத்துவதற்கு முயற்சி செய்ததன் பலனாக அநேகர் கைதாயினர்.

மாளவியாவின் வேண்டுகோளின்படி மார்ச்சு 5-ஆம் தேதி நாடெங்கும் கஸ்தூரிபாய் தினமாக அனுஷ்டிக்கப்பட்டது.

ஏப்ரல் 6-ஆம் தேதி பம்பாய் சர்க்கார் விடுத்த அறிக்கை கூறியதாவது: "கடந்த மூன்று நாட்களாக ஸ்ரீ காந்திக்கு மலேரியாக் காய்ச்சல். அவர் பலவீனமாக இருக்கிறார். ஆனால், அவருடைய பொதுவான நிலை எதிர்பார்க்கக் கூடியவாறு திருப்திகரமாக இருக்கிறது."

ஏப்ரல் 18-ஆம் தேதி அறிக்கை கூறியதாவது: "ஸ்ரீ காந்தியின் உடல் உஷ்ணம் கடந்த 48 மணி நேரமாக மாமூல் பிரகாரம் இருக்கிறது. அபிவிருத்தி திருப்திகரம்."

ஏப்ரல் 27-ஆம் தேதி காமன்ஸ் சபையில் கேள்விக்குப் பதிலளித்த அமெரி, மேற்கொண்டு தமக்குத் தகவல் வரவில்லை என்றார்.

ஏப்ரல் 28-ஆம் தேதி பம்பாய் சர்க்காரின் அறிக்கை: "ஸ்ரீ காந்திக்குத் திரும்பவும் ஜுரம் அடிக்காவிட்டாலும், எதிர்பார்த்தபடி அவர் தமது சமீபத்திய உடல் நலிவினின்றும் குணம் அடையவில்லை. அவருடைய பொதுநிலை பலவீனமாக இருக்கிறது; சிறிது கவலையளிப்பதாகவும் இருக்கிறது."

ஏப்ரல் 29-ஆம் தேதி அறிக்கை: "பம்பாய் சர்க்காரின் சர்ஜன்-ஜெனரலான மேஜர் ஜெனரல் கேண்டி ஐ. எம். எஸ்., ஸ்ரீ காந்தியைப் பரிசோதனை செய்தார். நேற்றிலிருந்து ஸ்ரீ காந்தியின் நிலை ஓரளவுக்கு நல்ல அபிவிருத்தியடைந்திருப்பதாக அவரது அறிக்கை தெரிவிக்கிறது. அவர் உற்சாகமாக இருக்கிறார். மேற்கொண்டு அதிகச் சத்துள்ள உணவும், டானிக்குகளும் அருந்த வேண்டுமென்று அவருக்கு ஆலோசனை கூறப்பட்டிருக்கிறது."

ஏப்ரல் 29-ஆம் தேதி அறிக்கை: "ஸ்ரீ காந்தியின் உடல்நிலை தொடர்ந்து அபிவிருத்தி அடைந்துவருகிறது. அவசியம் ஏற்பட்டாலொழிய உடல்நிலைபற்றி மேற்கொண்டு அறிக்கைகள் வெளியிடப்படமாட்டா. சந்தர்ப்ப வசமாய்ப் புனா வழியாகச் சென்ற டாக்டர் பி. சி. ராய், ஸ்ரீ காந்தியைப் பரிசோதனை

செய்ய அனுமதிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். அவருடைய வேண்டுகோள் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது.''

மே 2-ஆம் தேதி அறிக்கை: "மேற்கொண்டு விசேஷ நிபுணர்களின் பரிசோதனை நடந்துவருகிறது.''

மே 3-ஆம் தேதி: "ஸ்ரீ காந்தியின் ரத்தச் சோகை நிலை சிறிது மோசமாகியிருக்கிறது; ரத்த அழுத்தம் மேலும் குறைந்திருக்கிறது. அவருடைய பொதுவான நிலை திரும்பவும் மிகமிகக் கவலையை அளிக்கக்கூடியதாக இருக்கிறது.''

மே 4-ஆம் தேதி: "ஸ்ரீ காந்தியின் பொதுநிலையில் மாறுதல் இல்லை.''

காந்திஜியை விடுதலை செய்யவேண்டுமென்று நாடெங்கும் கிளர்ச்சி நடந்தது.

மே 6-ஆம் தேதி புதுடில்லி அறிக்கை கூறியதாவது: "ஸ்ரீ காந்தியின் தேகாரோக்கியம் சம்பந்தமாகக் கிடைத்த வைத்திய அறிக்கைகளைக் கருத்தில் கொண்டு, அவரை நிபந்தனையின்றி விடுதலை செய்யச் சர்க்கார் தீர்மானித்திருக்கிறது. முழுக்க முழுக்க உடல்நிலையை அடிப்படையாகக் கொண்டே இவ்விதமாக முடிவு செய்யப்பட்டிருக்கிறது மே 6-ஆம் தேதி காலை 8 மணிக்கு அவர் விடுதலையாகிறார்.'' சிறைச் சாலைகளின் இன்ஸ்பெக்டர் ஜெனரல், காந்திஜியை ஒரு மோட்டாரில் ஏற்றிப் "பர்ணகுடி"க்குக் கொண்டு சென்றார். டாக்டர் சுசீலா நய்யார், டாக்டர் கில்டர், பியாரிலால், மீராபென் ஆகியவர்களும் விடுதலை செய்யப்பட்டார்கள். காந்திஜி, சிறை முகாமை விட்டுப் போவதற்கு முன், மகாதேவ தேசாயின் அஸ்தியும், கஸ்தூரி பாயின் அஸ்தியும் அடக்கம் செய்யப்பட்டுள்ள இடத்துக்குச் சென்று மலர்களை வைத்தார்.

டாக்டர் கில்டரும், டாக்டர் சுசீலா நய்யாரும் கையெழுத்திட்ட வைத்திய அறிக்கை கூறியதாவது: "ஏப்ரல் 10-ஆம் தேதியிலிருந்து காந்திஜியின் உடல்நிலை கெட்டுவிட்டது. ஏப்ரல் 14-ஆம் தேதி அவருக்குத் திடீரென்று கடுமையான ஜுரமும், குளிர் நடுக்கமும் ஏற்பட்டன. மறுநாளும் உடம்பு காய்ந்தது. 16-ஆம் தேதி ஜுரம் மிகவும் உக்கிரமாகி, குளிர் நடுக்கமும் அதிகமாகி விட்டது. காய்ச்சல் பொரியும்போது, அவர் சுய நினைவை இழந்துவிடுகிறார். ஒரு நாள் விட்டு ஒரு நாள் முறைக் காய்ச்சல் அடிக்கும் மலேரியா அவருக்குத் தொத்தியிருக்கிறது என்பது ரத்தத்திலிருந்து தெரிகிறது. அவர் மிகவும் பலவீனமாகிவிட்டார். உற்சாகத்துடன் காணப்பட்டாலும் அவருடைய உடம்பும் உள்ளமும் களைத்திருக்கின்றன.

மே 8-ஆம் தேதியன்று ஆகாகான் மாளிகையைச் சுற்றியிருந்த ஆயுதம் தாங்கிய காவற்காரர்கள் அப்புறப்படுத்தப் பட்டார்கள்.

மே 11-இல் காந்திஜி பம்பாய்க்குச் சென்ருர். ஜுஹுவில் உள்ள காந்தி கிராமத்தில் தங்கினர்.

தொடர்ந்தாற்போல ஓய்வு பெறவேண்டும் என்பதற்காக மே 14-ஆம் தேதியிலிருந்து இரண்டு வாரம் மௌன விரதம் பூண்டார்.

மே 15-இல் டாக்டர்கள் காந்திஜியைப் பரிசோதித்து, அவருக்குக் கொக்கிப் புழு தொத்தியிருக்கிறது எனக் கண்டார்கள்.

பாதுகாவல் முகாமிலிருந்து 1943, மே 8-ஆம் தேதியன்று காந்திஜி, ஜின்னுவுக்கு எழுதிய கடிதம், இந்த மே 18-ல் பத்திரிகைகளில் வெளியிடப்பட்டது.

ஏப்ரல் மாதத்தில் பம்பாயில் வெடி மருந்து வெடித்ததனுல் நாசமான பகுதிகளை, மோட்டாரில் ஏறிக்கொண்டு 90 நிமிஷ நேரம் காந்திஜி சுற்றிப் பார்த்தார். அப்பொழுதுதான் ஜுஹு குடிசையிலிருந்து காந்திஜி முதல்முதலாக வெளியே வந்தார்.

மே 21-ஆம் தேதியன்று முதல் தடவையாக காந்திஜி ஒரு சினிமாப் படம் பார்த்தார். காந்தி கிராமத்தில் ''மாஸ்கோவுக்குத் தூது'' என்ற படம் அவருக்காகப் பிரத்தியேகமாகத் திரையிடப்பட்டது.

மே 22-ஆம் தேதி எட்மண்டு பிரிவாத்திடமிருந்து, "ரோலாந்து சௌக்கியம். எங்கள் இருவரின் அன்பு'' என்று ஒரு தந்தி வந்தது. இந்தத் தந்தியில் மார்ச்சு 15 என்று தேதி இடப்பட்டிருந்தது.

மே 29-ஆம் தேதி பிற்பகல் 3 மணிக்குக் காந்திஜி தம் மௌன விரதத்தை முடித்தார். அப்புறம் தாற்காலிகமாக நாள் ஒன்றுக்கு 20 மணி நேரம் மௌனமாக இருப்பது என்றும், பிற்பகல் 4 மணியிலிருந்து 8 மணி வரையில் மட்டுமே பேசுவதென்றும் முடிவு செய்தார்.

மே 30-ஆம் தேதி ஜெயகருக்கு அவர் எழுதிய கடிதத்தை, 31-ஆம் தேதி வெளியிட்டார். ''நாடு என்னிடமிருந்து அதிகமாக எதிர்பார்க்கிறது. நான் இப்போது விடுதலை செய்யப்பட்டிருப்பதுபற்றி நீங்கள் எவ்வாறு அபிப்பிராயப்படுகிறீர்கள் என்பதை நான் அறியேன். நான் கொஞ்சங்கூடச் சந்தோஷமாக இல்லை, எனக்கு அவமானமாகக்கூட இருக்கிறது. நான் நோய்வாய்ப்படக் கூடாது என்றுதான் முயற்சி செய்து பார்த்தேன். ஆனல், முடிவில் தோற்றுவிட்டேன். தற்போதைய பலவீனம் என்னை விட்டு நீங்கிவிட்டதாக அறிவிக்கப்பட்ட மாத்திரத்தில், என்னைச் சிறையில் வைத்துவிடுவார்கள் என்று கருதுகிறேன். அவர்கள் என்னைக் கைது செய்யாவிட்டால் நான் என்ன செய்யமுடியும்? 'ஆகஸ்டுத்தீர்மான'த்தை

என்னால் வாபஸ் பெற முடியாது. நீங்கள் கூறியது போலவே அது தீங்கற்றது. அதன் பலனைப் பற்றி நீங்கள் மாறுபட்ட கருத்துக்கொள்ளலாம். அது எனக்கு உயிர்ச் சுவாசமாகும்.''

காந்திஜி ஜுஹுவில் ஒரு மாத காலம் தங்கியிருந்துவிட்டு, டாக்டர் தின்ஷா மேத்தாவின் வைத்தியசாலையில் தங்குவதற்காக ஜூன் 15-ஆம் தேதி புனாவுக்குப் புறப்பட்டார்.

காந்திஜி சிறையில் இருந்தபோது லின்லித்கோவுடனும், வேவலுடனும் நடத்திய கடிதப் போக்குவரத்தின் ஒரு பகுதி பத்திரிகையில் வெளியாயிற்று.

காந்திஜியும் சர்க்காரும் பரஸ்பரம் எழுதிய கடிதங்கள் அடங்கிய துண்டுப் பிரசுரம் ஒன்றைச் சர்க்கார் வெளியிட உத்தேசித்திருப்பதாக ஜூன் 20-ஆம் தேதியன்று பத்திரிகைச் செய்தி கூறியது.

ஜூன் 17-ஆம் தேதியன்று தாம் எழுதிய கடிதத்தை வெளியிட அனுமதி கோரி வைசிராய்க்கு 27-ஆம் தேதியன்று காந்திஜி தந்தி கொடுத்தார்.

''சர்க்காருக்கு இல்லை என்பதே சுயராஜ்யத்துக்குத் திறவுகோல் ஆகும்'' என்று 29-ஆம் தேதி மகாராஷ்டிரக் காங்கிரஸ் ஊழியர்கள் கூட்டத்தில் 35 நிமிஷநேரம் பேசிய காந்திஜி கூறினார்.

ஜூன் 17-ஆம் தேதி காந்திஜி எழுதிய கடிதமும், ஜூன் 22-ஆம் தேதி வைசிராய் அனுப்பிய பதிலும் ஜூலை முதல் தேதி பத்திரிகையில் வெளியாயின. ''நம்முடைய அபிப்பிராயங்களில் தீவிரமான வேற்றுமை இருப்பதைக் கவனிக்கும் போது, நம்மிடையே தற்சமயம் சந்திப்பு நிகழ்வதனால் யாதொரு பலனும் இராது'' என்று வைசிராய் எழுதியிருந்தார்.

புனாவில் கஸ்தூரி பாய் தேசீய ஞாபகார்த்த நிதி தர்மகர்த்தாக்களின் கூட்டத்தில் காந்திஜி பேசியபோது, ''கஸ்தூரிபாய் நிதியின் நோக்கம், கிராமப் பெண்கள், குழந்தைகள் ஆகியவர்களின் நலனைப் பேணுவதே'' என்றார்.

ஜூலை 2-ஆம் தேதியன்று ஓய்வு பெறுவதற்காகக் காந்திஜி பஞ்சகனிக்குப் போய்ச் சேர்ந்தார்.

காங்கிரஸ்-லீக் சமரசத்துக்காக ஜின்னாவின் முன் ராஜகோபாலாச்சாரியார் சமர்ப்பித்த திட்டம் ஜூலை 9-ஆம் தேதி வெளியிடப்பட்டது. 1943, மார்ச்சில் அதைப்பற்றிக் காந்திஜியிடம் ராஜகோபாலாச்சாரியார் விவாதித்திருந்தார்.

''நியூஸ் கிராணிக்கிள்'' பத்திரிகை நிருபருக்குக் காந்திஜி அளித்த பேட்டி விவரம் ஜூலை 12-இல் பத்திரிகைகளில் வெளியிடப்பட்டது. காரியக் கமிட்டியுடன் தொடர்பு கொள்ள

வேண்டுமென்று காந்திஜி கேட்டார். தேசீய சர்க்கார் என்ற விஷயத்தை விளக்கும்போது, ''பொறுப்புள்ள மந்திரிகள் ஆலோசனை கூற, வைசிராய், இங்கிலாந்தின் மன்னரைப்போல ஆகிவிடுவார்'' என்ருர்.

ஜூலை 13-இல் காந்திஜி கூறியதாவது: ''லட்சியத்துக்காகவே நான் வாழ்கிறேன். நான் இறந்தால் லட்சியத்துக்காகவே இறப்பேன்.''

''கைதிகளை - அதிலும் வெறும் சந்தேகத்தின்பேரில் பாதுகாவலில் வைக்கப்பட்டோ, நடைமுறைச் சட்டத்தின் கீழ் குற்றவாளிகள் என்று தீர்மானிக்கப்பட்டோ இருக்கும் கைதிகளை- கருணையோடு நடத்தவேண்டும்'' என்று காந்திஜி கேட்டுக் கொண்டார்.

ஜூலை 16-இல் பத்திரிகை நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் அவர் கூறியதாவது: 'நேச நாடுகளின் நடவடிக்கைகளுக்காகத் தேவைப்படுகின்றவற்றைப் பூர்த்தி செய்யக்கூடியவாறு யுத்த முடிவு வரையில் சில வரையறைகளை விதித்துக் கொண்டு, இந்தியா முழுவதற்கும் உடனடியாகப் பூரண சுதந்திரம் அளிக்க வேண்டுமென்று என் திட்டம் கூறுகிறது. கிரிப்ஸ் திட்டமோ, உடனடி ஏற்பாடுகளைவிட எதிர்காலத்தைப்பற்றியே அதிகமாகக் கூறுகிறது.''

தமது திட்டம் நிறைவேறினுல், அது இந்த யுத்தத்தை, உலகின் சுரண்டப்பட்ட மக்களின் விடுதலைக்காக நடத்தப்படும் யுத்தமாக மாற்றிவிடும் என்று ஜூன் 19-ஆம் தேதியன்று காந்திஜி கூறினுர்.

ஜூலை 25-ஆம் தேதி லார்டுகள் சபையில், உதவி இந்தியா மந்திரி லார்டு மன்ஸ்டர் கூறியதாவது; ''கிரிப்ஸ் தூதைத்தகர்த்த அதே கோரிக்கையைத்தான் காந்தி இன்னும் வற்புறுத்திக் கொண்டிருக்கிருர். வைசிராயின் தற்போதைய அதிகாரங்களுடன் கூடிய ஓர் இடைக்கால சர்க்காரை அமைப்பதை ஏற்றுக் கொள்ள இன்றும் அவர் தயாராக இல்லை.''

1942-இல் சர்க்கார் கைப்பற்றிக்கொண்ட நவஜீவன் டிரஸ்ட் கட்டடத்தையும், அச்சகத்தையும், இந்த ஜூலை 26-இல் டிரஸ்டின் மானேஜர் ஜீவன்ஜி தேசாயிடம் சர்க்கார் ஒப்படைத்தது.

ஜூலை 28-ஆம் தேதி காமன்ஸ் சபையில் இந்தியா பற்றிய இரண்டு நாள் விவாதம் தொடங்கியது. உடனடியான நிலைபற்றி காந்திஜி தெரிவித்துள்ள கருத்துக்களே அவருடைய யோசனைகளாக இருக்குமென்ருல், வைசிராயுடனே, சிறைக்குள் இருக்கும் காங்கிரஸ் தலைவர்களுடனே பயனுள்ள வகையில் விவாதிப்பதற்கு எதுவுமே இல்லை என்று அமெரி பேசினுர். சர்ச்சில் இதில் கலந்து கொள்ளவில்லை. சபைக்கு வந்திருந்தவர்களோ மிகமிகச் சொற்பமானவர்கள்.

காந்திஜி பத்திரிகை நிருபர்களுக்கு அளித்த பேட்டியில், நிர்மாணத் திட்டத்தின் முக்கியத்துவத்தைத் திரும்பவும் வற்புறுத்திக் கூறியதோடு, தலைமறைவாக உள்ள காங்கிரஸ்காரர்கள் பகிரங்கமாக வெளியே வரவேண்டுமென்றும், சிறைவாசத்தை மேற்கொள்ள வேண்டியிருந்தால் அதற்கும் தயாராக இருக்க வேண்டுமென்றும், அப்படி மேற்கொள்ளும் சிறைவாசமானது சுதந்திர இயக்கத்துக்கு உதவி புரிவதாகக் கருத வேண்டுமென்றும் சொன்னார்.

ஜூலை 29-ஆம் தேதியன்று லீக் கவுன்சில், வகுப்புப் பிரச்னையில் உடன்பாடு காண்பதற்காகக் காந்திஜியுடன் பேச்சு வார்த்தைகள் நடத்த ஸ்ரீ ஜின்னாவுக்கு முழு அதிகாரமும் அளித்தது. காங்கிரஸின் 1942 ஆகஸ்டுத் தீர்மானம், முஸ்லிம்களுக்குத் தீங்கு பயக்கக்கூடியது என்றும், அந்தத் தீர்மானம் ஒழிய வேண்டுமென்றும், காங்கிரஸ்-லீக் ஒத்துழைப்புக்கு முன்னதாக நிபந்தனையின்றிப் பாகிஸ்தானை ஒப்புக்கொள்ள வேண்டுமென்றும், ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியாரின் திட்டம் உருச் சிதைந்து செல்லரித்துப்போன பாகிஸ்தானையே லீக்குக்கு அளிக்கச் சித்தமாக இருக்கிறதென்றும் ஸ்ரீ ஜின்னா கூறினார்.

ஜூலை 31-ஆம் தேதி காந்தி—ஜின்னா கடிதப் போக்குவரத்து பத்திரிகைகளில் வெளியிடப்பட்டது. பஞ்சகனியிலிருந்து ஜின்னாவுக்கு காந்திஜி எழுதிய ஜூலை 17 தேதியிட்ட கடிதம்: "சகோதரர் ஜின்னா, தாய்மொழியில் பேசுமாறு நான் தங்களைத் தூண்டிய காலம் ஒன்று உண்டு. இன்று அதே பாஷையில் தங்களுக்குத் தைரியமாக எழுதுகிறேன். நான் சிறையில் இருந்தபோது என்னை வந்து பார்க்கும்படி தங்களை அழைத்தேன். நான் விடுதலையானதிலிருந்து இதுவரையிலும் தங்களுக்கு எழுதவில்லை. ஆனால், தங்களுக்கு எழுதும்படியாக இன்று என் உள்ளம் சொல்லுகிறது. தாங்கள் விரும்புகிற சமயத்தில் நாம் சந்திப்போம். இஸ்லாத்துக்கோ. இந் நாட்டின் முஸ்லிம்களுக்கோ என்னை விரோதியாகக் கருதாதீர்கள். நான் தங்களுக்கு மட்டுமின்றி உலகம் முழுவதற்குமே நண்பன்; ஊழியன். என்னை ஏமாற்றி விடாதீர்கள். இந்தக் கடிதத்தின் உருது மொழி பெயர்ப்பை இத்துடன் அனுப்பியிருக்கிறேன் - தங்கள் சகோதரன், காந்தி."

ஸ்ரீ ஜின்னா 24-ஆம் தேதி ஸ்ரீநகரிலிருந்து பதில் அனுப்பினார்: "அன்புள்ள ஸ்ரீ காந்தி, பம்பாயிலுள்ள என் வீட்டில் தங்களை வரவேற்பதில் மகிழ்ச்சி கொள்ளுவேன் - தங்கள் அன்புள்ள, எம். ஏ. ஜின்னா."

ஆகஸ்டு முதல் தேதியன்று காந்திஜி சேவா கிராமத்துக்குச் செல்லும் வழியில் புனாவுக்கு வந்தார். ஆகஸ்டு முதல் தேதியிலிருந்து 6-ஆம் தேதி வரையில் கஸ்தூரிபாய் வாரம் கொண்டாடப்பட்டது.

ஆகஸ்டு 2-ஆம் தேதி கஸ்தூரிபாய், மகாதேவ தேசாய் இவர்கள் சமாதிகளுக்குக் காந்திஜி சென்று பிரார்த்தனை செய்த பின் மலர்களை வைத்தார். பிறகு வார்தாவுக்குப் புறப்பட்டார்.

ஆகஸ்டு 3-ஆம் தேதி காந்திஜியை வரவேற்பதற்காக வார்தா ஸ்டேஷனில் 6,000 பேர் கூடியிருந்தனர். அங்கிருந்து ஒரு மாட்டுவண்டியில் காந்திஜி சேவா கிராமத்துக்குப் போய்ச் சேர்ந்தார்; சேர்ந்தபோது காலை 9 மணி.

கஸ்தூரிபாயின் குடிசைக்கு விஜயம் செய்தார். அங்கே கஸ்தூரிபாயின் படம் தொங்கவிடப்பட்டிருந்தது. விளக்கு எரிந்து கொண்டிருந்தது. காந்திஜியின் துக்க மிகுதி வெளிப்படையாகத் தெரிந்தது.

காந்திஜி முதலிய தலைவர்கள் பம்பாயில் 1942-இல் கைது செய்யப்பட்ட ஆகஸ்டு 9-ஆம் நாளை இந்த வருஷம் கொண்டாடுவது பற்றி, ஆகஸ்டு 5-ஆம் தேதியன்று சேவாகிராமத்திலிருந்து காந்திஜி பின் கண்ட அறிக்கையை விடுத்தார்: "ஆகஸ்டு 9-ஆம் தேதி ஒரு விசேஷமான சந்தர்ப்பம். காங்கிரஸின் நோக்கம் குறித்தும், என்னுடைய நோக்கம் குறித்தும் மிகுந்த தப்பபிப்பிராயம் ஏற்பட்டிருக்கிறது. தவிர்க்கக்கூடிய, தீங்கு பயக்கத்தக்க, சந்தர்ப்பங்களை நான் தவிர்த்தாகவேண்டும். ஆகவே நான் கூறும் யோசனை என்னவென்றால், பம்பாயைத் தவிர மற்ற எல்லா இடங்களிலும், அன்றைத் தினம் போலீஸின் விசேஷத் தடையுத்தரவுகளை அலட்சியப்படுத்தக் கூடாது. பம்பாய்க்குப் பம்பாய் மேயர் மூலம் நான் ஏற்கனவே ஆலோசனை கூறிவிட்டேன். மிகவும் ஏற்ற இடமாக நான் பம்பாயைத் தேர்ந்தெடுத்ததற்குக் காரணம், நான் அங்கே போவது மிகமிகச் சுலபம் என்பதுடன், சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த 1942 ஆகஸ்டுக் கூட்டம் அங்கேதான் நடந்தது என்பதுமாகும். கட்டுப்பாட்டுடன் நடந்துகொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஆகஸ்டு 9-ஆம் தேதியன்று, தலை மறைவாயிருப்பவர்கள் வெளியே வரவேண்டும் என்றும் நான் விரும்புகிறேன். அன்று ஒவ்வொருவரும் செய்யவேண்டியது என்னவென்றால், அகிம்சையில் நம்பிக்கையிருந்தாலும் இல்லாவிட்டாலும், காங்கிரஸ்காரர்களாக இருந்தாலும் இல்லாவிட்டாலும், 14 அம்சத் திட்டம் முழுவதையுமோ, அல்லது ஒரு பகுதியையோ நிறைவேற்ற வேண்டும். உதாரணமாக, இந்தியாவின் நலனைக் கருதி ஒரு பொது உடன்பாட்டுக்கு வருவதற்குக் காயிதே ஆஜமுக்கும், எனக்கும் கடவுள் விவேகத்தைக் கொடுத்தருள வேண்டுமென்று ஹிந்துக்களும் முஸ்லிம்களும் சேர்ந்து கூட்டுப் பிரார்த்தனைகள் செய்யலாம். சேவை உணர்ச்சி எல்லா இடங்களிலும் நிலவவேண்டும். அவர்கள் (ஆங்கிலேயரும், அமெரிக்கரும்), ஆகஸ்டுத் தீர்மானம் வெறுப்பின் பேரில் உருவானதல்ல என்பதை உணரட்டும். அது நாட்டு

மக்களின் இயற்கையான உரிமையை அப்பட்டமாக வெளியிடும் அறிக்கையேயாகும்.''

லாகூரில் பத்திரிகை நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் ஜின்னு கூறியதாவது: ''பொதுமக்களில் ஒவ்வொரு பிரிவின ருக்கும் சுதந்திரம் இருக்கவேண்டும் என்பதே நமது விருப்பம். நாங்கள் வெகு சீக்கிரத்தில் சந்திக்கப் போகிருேம். நானும் காந்திஜியும் ஓர் உடன்பாட்டுக்கு வர உங்கள் ஆசீர்வாதங்களை வழங்குங்கள்.''

ஆகஸ்டு 8-ஆம் தேதியன்று வார்தா ஜில்லா மாஜிஸ்திரேட் 9, 10-ஆம் தேதிகளில் தமது முன் அனுமதியின்றிப் பொதுக் கூட்டங்களோ, ஊர்வலங்களோ நடத்தக்கூடாது என்று தடை உத்தரவு போட்டார்.

ரவீந்திர நாத டாகுரின் மூன்ருவது சிரார்த்த தினம் சேவா கிராமத்தில் பிரார்த்தனைகளோடு அனுஷ்டிக்கப்பட்டது.

ஆகஸ்டு 9-ஆம் தேதியன்று காலையில் பம்பாயில் ஊர்வல மாகச் சென்ற காங்கிரஸ்காரர்களைப் போலீஸார் கைது செய்து மாலை 7 மணிக்கு விட்டுவிட்டார்கள். ஹர்த்தால் வெற்றிகரமாக நடைபெற்றது. சேவாகிராம ஆசிரமவாசிகள் உண்ணுவிரதம் இருந்து நூல் நூற்ருர்கள்; பிரார்த்தனை செய்தார்கள். வார் தாவில் ஹர்த்தால் வெற்றிகரமாக இருந்தது. ஆர்ப்பாட்டங் கள் எவையும் நடைபெறவில்லை.

காந்திஜியின் உபதேசத்துக்கு இணங்க, 10-ஆம் தேதி யன்று தலைமறைவாக இருந்த அநேகக் காங்கிரஸ் ஊழியர்கள் தங்களுடைய இருப்பிடம் முதலிய விவரங்களைப் போலீஸாருக் குத் தெரிவித்தார்கள்.

ஆகாகான் மாளிகையில் காந்திஜி பாதுகாவலில் வைக்கப் பட்டிருந்தபோது அவருக்கு அனுப்பப்பட்ட ஆயிரக்கணக்கான கடிதங்கள் இப்பொழுதுதான் அவரிடம் சேர்ப்பிக்கப்பட்டன.

காந்தி—ஜின்னு சந்திப்பு வெற்றிபெற வேண்டும் என்று காங்கிரஸ்காரர்களும் முஸ்லிம் லீகர்களும் சேர்ந்து பிரார்த்தனை செய்தார்கள். அலகாபாத், ஆனந்தபவன் மாளிகையில் காங் கிரஸ், லீக் ஆகியவற்றின் முக்கியஸ்தர்கள் ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமைக்காகத் தீர்மானம் நிறைவேற்றினுர்கள்.

ஆகஸ்டு 17-ஆம் தேதியன்று காந்திஜிக்கு ஜின்னுவிட மிருந்து வந்த தந்தி: ''மிகவும் வருந்துகிறேன். ஜுரத்துடன் படுத்திருக்கிறேன். தங்களை 19-ஆம் தேதி சந்திக்க இயலாது என்று டாக்டர்கள் கூறுகிருர்கள். எனக்கு உடம்பு சௌக்கிய மானதும் தங்களுக்கு உடனடியாகத் தேதியை அறிவிக்கிறேன்.''

ஆகஸ்டு 15-ஆம் தேதியிட்ட வைசிராயின் கடிதம் காந்தி ஜிக்குக் கிடைத்தது.

ஆகஸ்டு 18-ஆம் தேதியன்று காந்தி-வேவல் கடிதப் போக்கு வரத்தைச் சர்க்கார் வெளியிட்டது. ஜூலை 15-ஆம் தேதியன்று காந்திஜி முதல் கடிதத்தை வைசிராய்க்கு எழுதினார். அதில், காரியக் கமிட்டியைத் தாம் கலந்து ஆலோசிப்பதற்கு வசதி யளிக்குமாறும், இல்லையென்றால் தமக்கு வைசிராய் பேட்டி அளிக்கவேண்டுமென்றும் கேட்டிருந்தார். அதற்கு ஜூலை 22-ஆம் தேதி வேவல் எழுதிய பதிலில், "நீங்கள் திட்டவட்ட மான, ஆக்ககரமான ஒருகொள்கையை என்னிடம் சமர்ப்பித்தால் அதை மகிழ்ச்சியோடு ஆராய்வேன்" என்று தெரிவித்தார். ஜூலை 17-இல் காந்திஜி எழுதிய கடிதம்: "அன்புள்ள நண்பரே! இதுதான் என் திட்டம்: உடனடியாக இந்தியாவுக்குச் சுதந் திரம் அளிப்பதாகப் பிரகடனம் செய்து, மத்திய சட்ட சபைக்குப் பொறுப்பான தேசீய சர்க்காரை அமைத்தால், நிலைமைகள் மாறியிருப்பதை முன்னிட்டு 1942 ஆகஸ்டுத் தீர் மானப்படி பொதுஜனச் சட்டமறுப்பு நடத்த இயலாது என்றும், யுத்த முயற்சிக்குக் காங்கிரஸ் பூரண ஒத்துழைப்பை அளிக்க வேண்டுமென்றும் அறிவிக்குமாறு காரியக் கமிட்டிக்கு நான் ஆலோசனை கூறத் தயாராக இருக்கிறேன். யுத்த களத்தில் இப்போதைப் போலவே ராணுவ நடவடிக்கைகள் தொடர்ந்து நடக்கவேண்டும். ஆனால், இந்தியாமீது நிதிப் பளுவைச் சுமத்தக் கூடாது. ஓர் உடன்பாடு காண்பதில் பிரிட்டிஷ் சர்க்காருக்கு விருப்பம் இருக்குமென்றால், கடிதப் போக்குவரத்துக்குப் பதிலாக நட்புணர்ச்சியோடு கூடிய பேச்சுவார்த்தைகள் நடை பெற வேண்டும். ஆனால், நான் உங்கள் கையில் இருக்கிறேன். கௌரவமான ஓர் உடன்பாடு காண்பதற்கான ஒரு சிறிது நம் பிக்கை இருக்கும் வரையிலும் நான் தொடர்ந்து கதவைத் தட் டிக்கொண்டிருப்பேன்."

ஆகஸ்டு 15-இல் வேவல் பதில் எழுதினார்: "நீங்கள் தெரி வித்திருப்பவை போன்ற யோசனைகள் முற்றும் ஏற்றுக்கொள்ள இயலாதவை யாகும். அவை உண்மையில் 1942 ஏப்ரலில் ஸர் ஸ்டாபோர்டு கிரிப்ஸிடம் மௌலானா அபுல்கலாம் ஆஸாத் தெரிவித்த யோசனைகளைப்போலவே இருக்கின்றன. ஆனாலும், ஹிந்துக்கள், முஸ்லிம்கள், முக்கியமான சிறுபான்மை வகுப் பினர் ஆகியவர்களுடைய தலைவர்கள் ஓர் இடைக்கால சர்க் காரை நிறுவுவதிலும், தற்போதைய அரசியல் அமைப்பின்கீழ் வேலை செய்வதிலும், ஒத்துழைக்கத் தயாராக இருந்தால் நல்ல முன்னேற்றம் காணலாம். இந்தியத் தலைவர்கள் இப் போதைவிட இன்னும் அதிக நெருக்கம் கொள்ளும் வரையிலும், நானே எந்த உதவியும் செய்ய முடியுமா என்று சந்தேகப்படு கிறேன். சிறுபான்மையோர் பிரச்னைகள் சுலபமானவை யல்ல என்பதையும் தங்களுக்கு நினைவூட்டுகிறேன். அவை எதார்த்த மானவை. பரஸ்பரம் விட்டுக்கொடுத்து, சகிப்புத் தன்மை காட்டுவதன் மூலமே அவற்றைத் தீர்க்க முடியும்."

காந்திஜிக்குப் பதில் கடிதம் வந்துசேர்ந்த அதே சமயத்தில் கடிதப் போக்கு வரத்து முழுவதையும் வைசிராய், பத்திரிகைகளில் வெளியிட அனுமதித்துவிட்டார். அதற்கு மறுநாள் காந்தி-ஜின்னு சந்திப்பு.

வைசிராயின் பதிலைப் பற்றிக் கேட்டபோது காந்திஜி கூறியதாவது: ''பொதுஜன ஆதரவைப் பெறும் நோக்கம் பிரிட்டிஷ் சர்க்காருக்குக் கிடையாது என்பதற்குச் சர்க்காரின் கடைசிக் கடிதமே தக்க சான்ருக இருக்கிறது.''

ஆகஸ்டு 30-இல் ஜின்னுவிடமிருந்து காந்திஜிக்கு வந்த தந்தி: ''தங்கள் தந்தி கிடைத்தது. எனது ஆகஸ்டு 26-ஆம் தேதிக் கடிதம் தங்களுக்குக் கிடைத்திருக்குமென நம்புகிறேன். தங்களுக்குச் சௌகரியமாக இருந்தால் செப்டம்பர் 7-ஆம் தேதியோ, அதற்குப் பிறகு எந்தத் தினத்திலுமோ தங்களைச் சந்திப்பதில் மகிழ்ச்சி கொள்ளுகிறேன். தயவு செய்து தகவல் கொடுங்கள்.''

செப்டம்பர் 1, 2, 3 தேதிகளில் சேவாகிராமத்தில் அகில இந்திய சர்க்கா சங்கக் கூட்டம் நடந்தது. அதில் காந்திஜி பேசினுர். அரசியலை மறந்துவிட்டு ராட்டையில் கவனம் செலுத்த வேண்டும் என்றும், அதுதான் உண்மையான அரசியல்-சாத்விக அரசியல்-என்றும், மிகமிகத் தாழ்ந்த நிலையில் இருப்பவர்களுக்குக் கஷ்ட நிவாரணமும் சந்தோஷமும் அளிக்கும் சுதந்திரம் அகிம்சையின் மூலமாக, அதாவது ராட்டையின் மூலமாகத்தான் கிட்டும் என்றும் காந்திஜி கூறினுர்.

செப்டம்பர் 9-ஆம் தேதி காந்திஜி பம்பாய்க்குப் போய்ச் சேர்ந்தார். பகல் 1 மணிக்கு ஸியோன் ஸ்டேஷனில் இறங்கிப் பிர்லா மாளிகைக்குச் சென்ருர். காலையிலிருந்து மலபார் ஹில் பகுதி முழுவதிலும் போலீஸ் பந்தோபஸ்தும், ராணுவப் போலீஸ் பந்தோபஸ்தும் செய்யப்பட் டிருந்தன.

4 மணி அடிக்க ஐந்து நிமிஷம் இருக்கும்போது காந்திஜி பியாரிலாலுடன் ஜின்னுவின் மாளிகைக்குச் சென்ருர். அவரை ஜின்னு வரவேற்று உடல் நிலைபற்றி விசாரித்தார். காந்திஜி ஜின்னுவின் தோளைக் கட்டிப் பிடித்துக்கொண்டார். தாம் சௌக்கியமாக இருப்பதாகச் சொன்னுர். படம் பிடிப்பவர்களுக்காகச் சற்று நிற்கும்படி காந்திஜியை ஜின்னு கேட்டுக் கொண்டார். அப்புறம் இருவரும் உள்ளே சென்று தனி அறையில் மாலை 7 மணி வரை பேசினர். பேசி முடிந்தபின் வெளியே வந்து, பத்திரிகையாளர்களிடம் ஜின்னு கூறியதாவது: ''நாங்கள் மூன்று மணி நேரம் சிநேக பூர்வமாக மனம் விட்டுப் பேசினேம். திங்கட்கிழமை மாலை 5-30 மணியிலிருந்து பழையபடியும் எங்கள் பேச்சைத் தொடருகிறேம். நாளை ரம்ஜானின் 21-ஆவது நாள். அதனுல் எல்லா முஸல்மான்களும் அந்தத் தினத்தை அனுஷ்டிக்க வேண்டும். ரம்ஜானின் 21-வது நாளில் பேச்சுவார்த்தைகள் வைத்

துக் கொள்ளாமல் இருக்கவேண்டும் என்பதற்குச் சம்மதிக்கும் படி ஸ்ரீ காந்தியை நான் கேட்டுக்கொண் டிருக்கிறேன்.''

“சம்மதிக்கும்படி ஸ்ரீ காந்தியை நான் கேட்டுக்கொண்டிருக் கிறேன்'' என்ற வார்த்தைகளை ஸ்ரீ ஜின்னு கூறியபோது, காந்திஜி புன்னகை புரிந்துவிட்டு, ''சம்மதிக்க அல்ல, சரண் அடையவே தயாராக இருக்கிறேன்'' என்ருர்.

செப்டம்பர் 11-ஆம் தேதி பேச்சு வார்த்தைகள் முடிந்த வுடன் நடந்த நிருபர் கூட்டத்தில் காந்திஜி கூறியதாவது : ''இந்தியா முழுவதற்கும் சுதந்திரம் பெறுவது எங்கள் லட்சியம். அதற்காகவே நாங்கள் பிரார்த்திக்கிருேம்; எங்கள் உயிரைப் பணயம் வைக்கவும் பிரதிக்ஞை செய்துகொண் டிருக்கிருேம். நாங்கள் எங்கள் பொறுப்பைப் பூரணமாக உணர்ந்து, ஓர் உடன்பாட்டுக்கு வருவதற்காகச் சகல முயற்சிகளையும் செய் கிருேம்.''

''பி. எம்.'' என்ற அமெரிக்கப் பத்திரிகைக்கு ஸர் ஸ்டா போர்டு கிரிப்ஸ் அளித்த பேட்டியில், காந்தி-ஜின்னு பேச்சு வார்த்தைகளைப்பற்றிக் கூறியதாவது : ''ஓர் ஒப்பந்தத்தை ஏற் றுக்கொள்ளும்படி காங்கிரஸையும், லீக்கையும் எந்த வெளிச் சக்தியும் நிர்ப்பந்தப்படுத்த முடியாது. இந்த இரண்டு பிரதான மான கட்சிகளும் ஓர் உடன்பாட்டுக்கு வந்துவிட்டாலும், முக்கிய மான சிறுபான்மைச் சமூகங்களுக்குப் புதிய அரசியல் அமைப்பில் தக்க பாதுகாப்பு அளிக்கப்படும் என்ற நம்பிக்கை ஏற்படும்படி செய்யவேண்டி யிருக்கும்.”

செப்டம்பர் 12-ஆம் தேதி காலை 10-30 மணியிலிருந்து 1-மணி வரையிலும், மாலை 5-30 மணியிலிருந்து 7 மணி வரையி லும் காந்திஜியும், ஸ்ரீ ஜின்னுவும் பேசினுர்கள்.

செப்டம்பர் 13-ஆம் தேதி, பேச்சு வார்த்தைகளின் நான்கா வது நாள். அன்று பகல் 11-மணியிலிருந்து 1-மணி வரையிலும், மாலை 5-30 மணியிலிருந்து 7-மணி வரையிலும் பேசினுர்கள்.

செப்டம்பர் 14-ஆம் தேதி ஹிந்துப் பஞ்சாங்கப்படி காந்திஜி யின் 75-வது பிறந்த நாள். அன்று பேச்சு வார்த்தைகள் மாலை 5-30 மணியிலிருந்து 7-மணி வரையிலும் நடைபெற்றன.

செப்டம்பர் 15-ஆம் தேதி மாலை 5-30 மணியிலிருந்து 7-மணி வரை பேச்சு வார்த்தைகள்.

செப்டம்பர் 16-ஆம் தேதி, ரம்ஜான் மாதத்தின் பெரு நாளானபடியால் அன்று விடுமுறை.

செப்டம்பர் 17-ஆம் தேதி மாலை 5-30 மணியிலிருந்து 7-மணி வரையிலும் பேசினர்.

செப்டம்பர் 18-ஆம் தேதி காந்திஜியின் மௌன தினம். மாலை 7-மணி வரையிலும் பேசமாட்டா ராதலால், அன்று பேச்சு வார்த்தைகள் நடைபெற வில்லை.

செப்டம்பர் 19-ஆம் தேதி மாலை 5-30 மணியிலிருந்து 7-மணி வரை காந்தி-ஜின்னு பேச்சு, தொடர்ந்து நடந்தது. ஈத் பண்டிகையை முன்னிட்டு 21-ஆம் தேதிக்குப் பேச்சு வார்த்தைகள் ஒத்திப் போடப்பட்டன.

செப்டம்பர் 21-ஆம் தேதியிலிருந்து திரும்பவும் தொடங்கி 27-ஆம் தேதி வரையிலும் பேச்சு வார்த்தைகள் நடத்தினர்கள். உடன்பாடு காண முடியாமல் பேச்சு வார்த்தைகள் தோல்வியுற்றன. "இது எங்கள் முயற்சியின் இறுதி முடிவல்ல என்று நம்புகிறோம்" என்று ஜின்னுவும், "பேச்சு வார்த்தைகள் காலவரையின்றி ஒத்திவைக்கப்பட்டிருப்பதாகவே கொள்ளவேண்டும்" என்று காந்திஜியும் கூறியபோதிலும் இருவரிடையிலும் மீண்டும் பேச்சு வார்த்தைகள் நடைபெறவே இல்லை. இருவரும் சந்தித்துப் பேசிய சமயத்தில் இருவரிடையிலும் நடந்த கடிதப் போக்குவரத்துக்கள் பகிரங்கமாக வெளியிடப்பட்டன. மொத்தம் 24 கடிதங்கள். முஸ்லிம் லீக்கின் லாகூர்த் தீர்மானப்படி தேசத்தைப் பிரிவினை செய்வது ஒன்றே முஸ்லிம்களுக்கும் ஹிந்துக்களுக்கும் நன்மை பயக்கக் கூடியது என்றும், பிரிட்டிஷார் வெளியேறுவதற்குமுன் பாகிஸ்தான் அமைக்கப்பட்டுவிட வேண்டுமென்றும் ராஜாஜியின் திட்டம் லாகூர்த்தீர்மானத்தை உருக்குலைத்து அங்கவீனம் ஆக்கிவிட்டதென்றும், அதுவும் காந்திஜியின் நிபந்தனைகளும் பாகிஸ்தான் கோரிக்கையை அடியோடு தகர்ப்பதற்காக யோசனை செய்யப்பட்டவை என்றும், ஜின்னு தமது கடிதங்களில் கூறியிருந்தார். மதம் மாறிய ஒரு கூட்டத்தாரும், அவர்களுடைய சந்ததிகளும் தங்களை தாய் இனத்தைச் சேராத வேறு தேசீய இனம் என்று கூறிக்கொள்ளுவது சரித்திரத்திலேயே தாம் கண்டறியாத புதுமை என்று காந்திஜி கூறினர். 22-ஆம் தேதியன்று அவர் ஜின்னுவுக்கு எழுதிய கடிதத்தில் பின்வருமாறு கூறியிருந்தார்: "பாதுகாப்பு, வெளிநாட்டு விவகாரம் போன்ற பொதுவான நலன்களை உத்தரவாதம் செய்யாத பிரிவினைக்கு நான் மனப்பூர்வமாக உடந்தையாக இருக்க முடியாது." ராஜாஜியின் திட்டத்தை ஜின்னு ஏற்றுக்கொள்ள மறுக்கவே காந்திஜி தமது சொந்தத் திட்டத்தைக்கூறினர். அதற்கும் ஜின்னு இணங்கவில்லை.

அக்டோபர் 2-ஆம் தேதி காந்திஜியின் 75-வது பிறந்ததினம். உலகமெங்கும் இந்த நாள் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அன்று ரங்கூனில் நடந்த கொடி வணக்கத்தின்போது இந்தியத் தேசீய ராணுவத்தின் தளபதி நேத்தாஜி சுபாஷ் சந்திரபோஸ் பேசுகையில், "எங்கள் நாட்டின் தந்தையே! இந்திய விடுதலைக்கான இந்தப் புனிதப் போருக்குத் தங்கள் ஆசீர்வாதங்களையும் நல்வாழ்த்துக்களையும் நாங்கள் வேண்டுகிறோம்" என்ருர்.

சேவா கிராமத்தில் கஸ்தூரிபாய் காந்தி தேசீய ஞாபகார்த்த நிதியின் தருமகர்த்தாக்களும், நிதியை வசூல் செய்தவர்களும் அடங்கிய கூட்டம் நடைபெற்றது. தருமகர்த்தாக்கள் தங்கள் தலைவராகக் காந்திஜியை நியமித்தனர். 80 லட்சத்துக்கு மேற்பட்ட தொகைகளுக்குரிய செக்குகளைக் காந்திஜியிடம் தருமகர்த்தாக்களின் சார்பில் ஸ்ரீமதி சரோஜினி நாயுடு அளித்தார்.

நவம்பர் 19-இல் அகில இந்திய ஆதாரக் கல்விப் பயிற்சி முகாம் சேவா கிராமத்தில் ஆரம்பித்து வைக்கப்பட்டது.

ஓய்வொழிச்சலில்லாத வேலைகளால் களைத்துப்போயிருந்த காந்திஜி டிசம்பர் 4-ஆம் தேதியிலிருந்து 31-ஆம் தேதிவரை தம்முடைய சகல பொது வேலைகளையும், பேட்டி யளிப்பதையும், கடிதங்கள் எழுதுவதையும், பத்திரிகைகள் படிப்பதையும் நிறுத்தி வைத்தார்.

## 1945 (வயது 76) :

காங்கிரஸ் தலைவர்களை விடுதலை செய்ய முடியாது என்ற அமெரியின் மறுப்போடு, இந்த வருடம் ஆரம்பமாயிற்று. "சிறைக்குள் இருக்கும் சத்தியாக்கிரகி ஒரு போதும் அழிவெய்த மாட்டான். சிறைவாசம் செய்வதன் மூலம் தன் லட்சியத்துக்காகவே அவன் பாடுபடுகிறான். ஆனால், வெளியில் இருப்பவர்கள் உள்ளே யிருப்பவர்களை மறந்துவிடக் கூடாது" என்றார் காந்திஜி.

ஜனவரி 11-இல் சேவாகிராமத்தில் ஹிந்துஸ்தான் தாலிமி சங்க மகாநாடு ஆரம்பமாயிற்று. இந்தியா முழுவதிலுமிருந்து 200 கல்வித்துறை நிபுணர்கள் இம் மகாநாட்டுக்கு வந்திருந்தார்கள். காந்திஜி தமது சொற்பொழிவில், பாடமொழியாக இருக்க வேண்டியது தாய்மொழியே என்பதை வற்புறுத்திக் கூறியதுடன் ஹிந்துஸ்தானி ஒன்றுதான் தேசீய மொழியாக இருக்க முடியும் என்பதையும் அழுத்தமாகக் கூறினார்.

பிப்ரவரி 15-ல் கஸ்தூரிபாய் ஞாபகார்த்தப் பணியில் சம்பந்தப்பட்ட 150 ஊழியர்கள் அடங்கிய கூட்டத்தில் காந்திஜி பேசினார். கஸ்தூரிபாய் ஞாபகார்த்த நிதியான ஒரு கோடியே 24 லட்சம் ரூபாயை வீண் விரயம் செய்யத் தாம் அனுமதிக்கப் போவதில்லை என்றும், கிராமங்களில் வாழும் பெண்கள், குழந்தைகள் ஆகியோரின் வைத்திய வசதி, கல்வி வசதி, பொருளாதார மேம்பாடு ஆகியவற்றிற்காகவே அது பயன்படுத்தப்படும் என்றும் கூறினார்.

பிப்ரவரி மாதக் கடைசியில் வார்தாவில் காந்திஜியின் தலைமையில் அகில இந்திய ஹிந்துஸ்தானி பிரசார சபையின் மகாநாடு நடைபெற்றது.

மார்ச்சு மாதக் கடைசியில் அகில இந்திய சர்க்கா சங்கக் கூட்டம் சேவாகிராமத்தில் நடந்தது.

ஏப்ரல் மாதம் 11-ஆம் தேதி பம்பாயில் கஸ்தூரிபாய் ஞாபகார்த்த டிரஸ்டின் ஆதரவில் நடந்த பெண் ஊழியர்களின் முகாமில் காந்திஜி பேசினர்.

மே 7-ஆம் தேதி நேச நாடுகளிடம் ஜெர்மனி நிபந்தனையின்றிச் சரணடைந்தது.

லண்டனில் சுமார் 10-வாரங்கள் ஆலோசனை நடத்திவிட்டு ஜூன் 5-ஆம் தேதி வேவல் இந்தியாவுக்குத் திரும்பினர். ஜூன் 15-ஆம் தேதி யன்று ரேடியோப் பேச்சு மூலம் சில யோசனைகளை வெளியிட்டார். கவர்னர் ஜெனரல், தலைமைச் சேனாதிபதி ஆகிய இரு பதவிகளையும் தவிர, இந்திய அரசியல் தலைவர்களையே அங்கத்தினர்களாகக் கொண்ட நிர்வாகக் கவுன்சில் அமைக்க வேண்டுமென்றும், ஜாதி ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் அதில் சமதையான எண்ணிக்கையுடன் ஸ்தானங்கள் கொடுக்கப்படுமென்றும், இந்தத் திட்டத்தைச் செயல்படுத்துவதற்குப் பூர்வாங்கமாகக் கட்சித் தலைவர்கள், மாகாணப் பிரதமர்கள், முன்னுள் பிரதமர்கள் ஆகியோர் அடங்கிய ஒரு மகாநாட்டை வைசிராய் கூட்டுவாரென்றும், மகாநாட்டில் பங்கெடுத்துக் கொள்ளுவோரிடம் நிர்வாகக் கவுன்சில் அங்கத்தினர்களாக நியமிக்கப்பட வேண்டியவர்களின் பெயர் ஜாபிதாக்களைக் கேட்பார் என்றும், அந்த ஜாபிதாக்களிலிருந்து வைசிராய் நிர்வாகக் கவுன்சில் அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுப்பார் என்றும் 'இன்றைய அரசியல் அமைப்பில் அதிகப்படி முன்னேற்றம் காண்பதற்கு இந்த யோசனைகளே சாத்தியமானவை' என்பது பிரிட்டிஷ் சர்க்காரின் அபிப்பிராயம் என்றும் வைசிராய் தமது பேச்சில் தெரிவித்தார்.

சிறையிலிருக்கும் காங்கிரஸ் காரியக் கமிட்டி அங்கத்தினர்கள் விடுதலை செய்யப்படுவார்கள் என்று அமெரி அறிவித்தார்.

இந்த யோசனைகள் சம்பந்தமாகக் காங்கிரஸின் கொள்கையை வகுக்க வேண்டியவர்கள் காரியக் கமிட்டி அங்கத்தினர்கள்தான் என்றும், தம்மால் ஆலோசனை மட்டுமே கூற முடியுமென்றும் ஜூன் 15-ஆம் தேதியன்று காந்திஜி ஓர் அறிக்கையில் தெரிவித்தார்.

வைசிராய், சிம்லாவில் கூட்டும் மகாநாட்டில் கலந்துகொள்ளுவதென ஜூன் 21-இல் பம்பாயில் கூடி காங்கிரஸ் காரியக் கமிட்டி தீர்மானித்தது. அதில் காந்திஜியும் கலந்துகொண்டார். ஜூன் 25-இல் சிம்லா வைசிராய் மாளிகையில் மகாநாடு கூடியது. வைசிராயின் அழைப்பின் பேரில் காங்கிரஸ் லீக் தலைவர்களும், தாழ்த்தப்பட்ட வகுப்பினர், சீக்கியர் முதலியோரின் பிரதிநிதிகளும், மாகாணப் பிரதமர்களும், முன்னுள் பிரதமர்களும் மகாநாட்டில் கலந்துகொண்டார்கள். காங்கிரஸுக்கும் லீக்குக்கும் இடையே ஏற்பட்ட அபிப்பிராய பேதத்தால் ஜூலை 14-ஆம் தேதிக்கு மகாநாடு ஒத்திவைக்கப்பட்டது. நிர்வாகக் கமிட்டியில்

முஸ்லிம் அங்கத்தினர்கள் அனைவரும் லீக் அங்கத்தினர்களாகவே இருக்கவேண்டுமென்று ஜின்னு பிடிவாதமாகக் கூறினர். இதனால் மகாநாடு தோல்வியில் முடிந்தது.

ஜூலை 26-இல் பிரிட்டனில் தொழிற்கட்சி பதவிக்கு வந்தது. புதிய பிரிட்டிஷ் பிரதமர் அட்லிக்குக் காங்கிரஸ் தலைவர் மௌலானு அபுல்கலாம் ஆஸாத் வாழ்த்துத் தந்தி அனுப்பினர்.

ஆகஸ்டு 14-இல் நேச நாடுகளிடம் ஜப்பான் சரணடைந்தது.

இந்தியாவில் கூடிய விரைவில் பொதுத்தேர்தல்கள் நடத்தப்படும் என்று அறிவிக்கப்பட்டது. செப்டம்பர் 19-இல் பிரிட்டிஷ் பிரதமரும் வைசிராயும், தேர்தல் விரைவில் நடைபெறும் என்றும், தேர்தல் முடிவுகள் வெளியானதும் நிர்வாகக் கவுன்சிலைத் தேர்ந்தெடுக்க வைசிராய்க்கு அதிகாரம் அளிக்கப்பட்டுள்ளது என்றும் ரேடியோப் பேச்சின் மூலம் அறிவித்தனர்.

செப்டம்பர் 21-ஆம் தேதியிலிருந்து பம்பாயில் அ. இ. கா.க. கூட்டம் நடைபெற்றது. கடைசி நாள் கூட்டத்தில் கொண்டு வரப்பட்ட ஒரு தீர்மானத்தில், வேவலின் யோசனைகள் தெளிவற்றவையாக இருப்பதுடன் திருப்திகரமாகவும் இல்லை என்று கூறப்பட் டிருந்தபோதிலும், தேர்தல்களில் போட்டியிடுவது என்று காங்கிரஸ் தீர்மானித்தது.

காந்திஜி, புனு இயற்கை வைத்தியச் சிகிச்சை ஆஸ்பத்திரியில் மூன்று மாதங்கள் தங்கியிருந்துவிட்டு, நவம்பர் 21-ஆம் தேதியன்று சேவாகிராமத்துக்குத் திரும்பினர்.

டிசம்பர் முதல் தேதி கல்கத்தா போய்ச் சேர்ந்து அன்றே வங்காள கவர்னர் ஸ்ரீ கேஸியைக் கண்டார். அதற்கு முன் பிரார்த்தனைக் கூட்டத்தில் பேசியபோது, வங்காளப் பஞ்சத்தினல் கஷ்டப்பட்டவர்களுக்கு ஆறுதல் அளிப்பதற்காகவே தாம் வந்திருப்பதாகவும், அரசியலில் பங்குகொள்ளுவதற்கு அல்ல என்றும் காந்திஜி தெரிவித்தார்.

டிசம்பர் 19-ஆம் தேதி சாந்திநிகேதனில் தீனபந்து ஆண்ட்ரூஸ் ஞாபகார்த்த ஆஸ்பத்திரியின் அஸ்திவாரக் கல் நாட்டும் வைபவத்தைக் காந்திஜி நடத்தினர்.

## 1946 (வயது 77):

ஜனவரி 9-ஆம் தேதி காந்திஜி கௌஹாத்திக்குச் சென்று அஸ்ஸாமில் ஒரு வாரம் தங்கினர்.

ஜனவரி 21-ஆம் தேதி காந்திஜி சென்னைக்கு விஜயம் செய்தார். 24-ஆம் தேதி நிர்மாண ஊழியர்கள் மகாநாட்டைத் திறந்து வைத்துப் பேசினர். அப்போது, இந்தியர்கள் தமக்குள் தாய்மொழியிலோ ராஷ்டிரபாஷையிலோதான் பேசிக்கொள்ள வேண்டுமென்றும் ஆங்கிலத்தில் பேசக் கூடாதென்றும் புத்திமதி கூறினர்.

ஜனவரி 25-ஆம் தேதி சென்னை ஹிந்தி பிரசார சபை என்ற பெயரை ஹிந்துஸ்தானி பிரசார சபை என்று மாற்றவேண்டுமென்று சிபார்சு செய்தார். இந்தியாவின் சுயராஜ்யத்துக்காக, இந்திய மக்களின் நலனுக்காக மக்கள் ஹிந்துஸ்தானியைக் கற்றுக்கொள்ள வேண்டுமெனக் கூறினர்.

ஜனவரி 26-ஆம் தேதி சுதந்திர தினம். மறு வருடம் ஜனவரி 26-க்குள் சுதந்திரம் பெற்றுவிடுவோம் என்று நம்புவோமாக என்று காந்திஜி பேசினர். தமிழர்-ஆந்திரர் போட்டி கூடாதென்றும், தமிழர்களும், ஆந்திரர்களும், கன்னடியர்களும், மலையாளிகளும் ஒரு மரத்தின் கிளைகள் போன்றவர்கள் என்றும், இதை உணர்ந்தால்தான் அவர்கள் சுதந்திரத்துக்குத் தகுதியானவர்கள் ஆவார்கள் என்றும் கூறினர்.

ஜனவரி 27-ஆம் தேதி ஹிந்தி பிரசார சபையின் பட்டமளிப்பு விழாவுக்குக் காந்திஜி தலைமை தாங்கினர்.

பிப்ரவரி 3-ஆம் தேதி மதுரைக்கும், 4-ஆம் தேதி பழனிக்கும் விஜயம் செய்தார்.

மூன்றரை வருஷங்களுக்குப் பிறகு பிப்ரவரி 10-ஆம் தேதி 'ஹரிஜன்' பத்திரிகை திரும்பவும் ஆரம்பிக்கப்பட்டது. முதல் இதழின் எல்லாக் கட்டுரைகளையும் காந்திஜியே எழுதினர்.

பிப்ரவரி 19-ஆம் தேதி காந்திஜி புனவுக்குப் போய்ச் சேர்ந்தார். அன்றைத் தினம் ராயல் இந்தியக் கடற்படையினர் தங்கள் கோரிக்கைகளைச் சமர்ப்பித்தனர். இதை எதிர்பார்த்தவர் போல ஒரு வாரத்துக்கு முன்பே காந்திஜி 'ஹரிஜ'னில் பின்வருமாறு எழுதினர்: "எங்கும் வெறுப்பு நிலவுகிறது. பொறுமையற்றவர்களாக உள்ள தேசபக்தர்கள் இந்த நிலையைப் பயன்படுத்திக்கொள்ளுவார்கள். முடிந்தால், நாட்டின் சுதந்திரத்துக்காகப் பலாத்கார வழியில் இறங்குவார்கள். அது எந்தச் சந்தர்ப்பத்திலும் எந்த இடத்திலும் தவறு என்று நான் கூறுவேன்."

20, 21-ஆம் தேதிகளில் இந்தியக் கடற்படையினர் பிரிட்டிஷாரால் சுடப்பட்டபோது, அவர்களும் பதிலுக்குச் சுட்டார்கள். இதன் காரணமாகப் பம்பாய் நகருக்குள்ளேயும் கலகங்கள் நடந்தன. அவை மற்ற நகரங்களுக்கும் பரவின. 22-ஆம் தேதி காந்திஜி விடுத்த ஓர் அறிக்கையில், "கடற்படையில் பணிபுரிவது தங்களுக்கு அவமானம் உண்டுபண்ணத் தக்கதாக இருந்தால் அவர்கள் ஏன் தொடர்ந்து அங்கே பணி புரிய வேண்டும்? அதிலிருந்து விலகிவிடுவது அகிம்சா பூர்வமான ஒத்துழையாமையாகும். ஆனல், இப்போது அவர்கள் செய்யும் காரியம் இந்தியாவுக்கு ஒரு கெட்ட உதாரணமாகவே இருக்கிறது" என்று கூறினர்.

மார்ச்சு 15-ஆம் தேதி பம்பாயில் காரியக் கமிட்டிக் கூட்டம் நடந்தது. அதில் காந்திஜியும் கலந்து கொண்டார்.

மார்ச்சு 30-ஆம் தேதி 'ஹரிஜ'னில் காந்திஜி எழுதிய ஒரு குறிப்பில், நேத்தாஜி உயிரோடு இருப்பதாகவே அதுவரை தாம் நம்பி வந்ததாகவும், ஆனல், பிறகு கிடைத்த ஆதாரங்களின்படி அவர் காலமாகி விட்டதாகத் தாம் கருதுவதாகவும் தெரிவித்தார்.

ஏப்ரல் முதல் தேதி காந்திஜி டில்லிக்குச் சென்று, ஹரிஜனங்கள் வசிக்கும் பகுதியில் தங்கினர். அதே தேதியில் பிரிட்டிஷ் மந்திரி சபையின் தூதுகோஷ்டியைச் சேர்ந்த லார்டு பெதிக் லாரன்ஸ், ஸர் ஸ்டாபோர்டு கிரிப்ஸ், ஸ்ரீ ஆல்பெர்ட் அலெக்ஸாண்டர் ஆகியோர் இந்தியத் தலைவர்களை முதல் முதலாகச் சந்தித்துப் பேசினர்கள்.

ஏப்ரல் 12-ஆம் தேதியிலிருந்து 18-ஆம் தேதிவரையிலும், 25-இலிருந்து 30 வரையிலும், டில்லியில் கூடிய காரியக் கமிட்டி, அரசியல் நிர்ணய சபையும் இடைக்காலத் தேசீய சர்க்காரும் ஏற்படுத்துவது சம்பந்தமாகப் பிரிட்டிஷ் தூது கோஷ்டியுடன் பேச்சு வார்த்தைகள் நடத்த வேண்டியதைப்பற்றி ஆலோசித்தது. மேற்கொண்டும் சிம்லாவில் பேச்சு வார்த்தைகள் நடத்துவதென்றும் ஏற்பாடாகி யிருந்தது.

மே 4-ஆம் தேதி காந்திஜி சிம்லாவிலிருந்து விடுத்த ஓர் அறிக்கையில், பிரிட்டிஷ் தூதுகோஷ்டியினர் இந்தியாவின் மீதுள்ள தங்கள் பிடியை விட்டுவிட வேண்டுமென்ற உறுதி கொண்டிருக்கிருர்கள் என்றும், அவர்கள் வார்த்தையைத் தாம் நம்புவதாகவும், அப்படியே எல்லோரும் நம்ப வேண்டுமென்றும் கூறினர்.

சிம்லா மகாநாட்டில் வெற்றி காணுதுபோகவே பிரிட்டிஷ் தூதுகோஷ்டியினரும், வைசிராயும், காங்கிரஸ்-லீக் தலைவர்களும் மே 12-ஆம் தேதி டில்லிக்குத் திரும்பினர்கள்.

மே 18-ஆம் தேதி பிரிட்டிஷ் கோஷ்டியின் அறிக்கை வெளி வந்தது. இந்த அறிக்கையில் கூறப்பட்டிருந்த யோசனைகளைக் காந்திஜி பாராட்டி வரவேற்ருர்.

தூது கோஷ்டியார், ஒரு சுதந்திரத் தனி ராஜ்யமாகப் பாகிஸ்தானை ஸ்தாபிக்கும் யோசனையை நிராகரித்துவிட்டனர். மாகாணங்களும் சமஸ்தானங்களும் அடங்கிய ஐக்கிய சுதந்திர இந்தியாவையே அவர்கள் ஆதரித்தனர். இந்த யோசனைகளை மாற்றுவது, நிராகரிப்பது முதலிய சகல பொறுப்புகளையும் இனிமேல் கூட்டவிருக்கும் அரசியல் நிர்ணய சபையின் பொறுப்பில் விட்டு விட்டனர். ஆகவே, கூடிய சீக்கிரத்தில் அரசியல் நிர்ணய சபையை அமைக்கவும், இடைக்கால சர்க்காரை நிறுவவும் வேண்டும் என்று அவர்கள் கூறினர்கள்.

தூது கோஷ்டியின் பேச்சு வார்த்தைகள் நடுவில் சிறிது காலம் நின்றிருந்தமையால், அந்த இடைக் காலத்தைப் பயன்

படுத்திக் கொண்டு தேகாரோக்கியம் பெறுவதற்காகக் காந்திஜி மே மாதக் கடைசியில் முஸௌரிக்குச் சென்றார். ஜூன் 8-ஆம் தேதி நள்ளிரவுக்குப் பின் அங்கிருந்து டில்லிக்குப் புறப்பட்டார். 9-ஆம் தேதியன்று டில்லியில் காரியக் கமிட்டி கூடியது.

மந்திரி சபை அமைப்பதில் வைசிராய்க்கு உதவிபுரியும்படி கோரி 14 பேருக்கு அழைப்புக்கள் அனுப்பப்பட்டிருப்பதாக ஜூன் 16-ஆம் தேதி அறிவிக்கப்பட்டது. காங்கிரஸும் லீக்கும் கருத்தொற்றுமை கொள்ளும்படி செய்வதில் தூதுகோஷ்டியார் தோல்வியடையவே, முட்டுக்கட்டையைத் தீர்க்க அவர்கள் வேறு வழியைக் கண்டுபிடிக்க வேண்டிய நிலை ஏற்பட்டது.

ஜூன் 29-ஆம் தேதி இரவு காந்திஜி டில்லியிலிருந்து புனுவுக்கு தனி ரயிலில் பிரயாணம் செய்துகொண் டிருந்த போது, நேராலுக்கும், கார்ஜத்துக்கும் இடையே தண்டவாளங் களின்மீது வைக்கப்பட் டிருந்த பாராங்கற்களில் ரெயில் மோதி யது. ரெயிலைக் கவிழ்க்க வேண்டுமென்ற நோக்கத்துடனேயே இந்தக் கற்கள் வைக்கப்பட் டிருந்தன. டிரைவர் உரிய காலத் தில் வண்டியை நிறுத்தியிராவிட்டால், வண்டி முழுவதும் நாச மாகி யிருக்கும்; பிரயாணிகளும் கொல்லப்பட் டிருப்பார்கள். நல்ல வேளையாக எஞ்சினுக்குச் சேதம் ஏற்பட்டதோடு நின்றது. இரண்டு மணி நேரத்துக்குப் பிறகு ரெயில் அங்கிருந்து புறப்பட் டுச் சென்றது. காந்திஜி அப்போது தூங்கிக்கொண்டிருந்தார். மறுநாள்தான் இந்தச் செய்தியைக் கேள்விப்பட்டார்.

ஜூன் 30-ஆம் தேதி புனுவில் நடந்த பிரார்த்தனைக் கூட்டத் தில் காந்திஜி பின்வருமாறு கூறினர்: "மரணத்தின் வாயி லிருந்து கருணை மிக்க ஆண்டவனல் நான் காப்பாற்றப்படுவது இது ஏழாவது தடவை என்று நினைக்கிறேன். நான் எந்த மனி தனுக்கும் தீங்கிழைத்த தில்லை; யாரிடத்திலும் பகைமை கொண்டது கிடையாது. அப்படியிருக்கும்போது, என்னைக் கொல்வதற்கு யாரும் எதற்காக விரும்பவேண்டும் என்பதுதான் எனக்குப் புரியவில்லை. இந்தக் கடைசி விபத்து, நான் 125 வயது வரை வாழலாம் என்ற என் நம்பிக்கையைப் பலப்படுத்து கிறது."

காரியக் கமிட்டிக் கூட்டத்தில் கலந்துகொள்ளுவதற்காக ஜூலை 5-ஆம் தேதி காந்திஜி பம்பாய்க்குச் சென்றார். அங்கே நடைபெற்ற அ. இ. கா. க. கூட்டம் ஜூன் 26-இல் காரியக் கமிட்டி நிறைவேற்றிய தீர்மானத்தை அங்கீகரித்தது. அதன் படி இடைக்கால சர்க்கார் அமைப்பதுபற்றிய பிரிட்டிஷ் தூது கோஷ்டியின் யோசனைகள் நிராகரிக்கப்பட்டன; அரசியல் நிர்ணய சபையை அமைப்பது ஏற்றுக்கொள்ளப்பட்டது.

ஜூலை 13-ஆம் தேதி காந்திஜி பஞ்சகனிக்குச் சென்றார். அங்கே இரண்டு வாரங்கள் தங்கிவிட்டு, புனுவுக்கு வந்து மூன்று நாட்கள் இருந்தார். புனுவில் நடைபெற்ற காங்கிரஸ் கல்வி

மந்திரிகளின் மகாநாட்டில், ஆதாரக் கல்வியை வற்புறுத்திப் பேசினர். பின்பு உருலிகாஞ்சன் கிராமத்துக்குச் சென்று 4 நாட்கள் தங்கி விட்டு, ஆகஸ்டு 6-ஆம் தேதி சேவாகிராமத்துக்கு வந்து சேர்ந்தார். அங்கே 8-ஆம் தேதி காரியக் கமிட்டிக் கூட்டம் நடைபெற்றது. அரசியல் நிர்ணய சபையில் பங்கெடுத்துக்கொள்ளுவதில்லை என்று முஸ்லிம் லீக் தீர்மானித்திருப்பது குறித்துக் காரியக் கமிட்டி வருத்தம் தெரிவித்தது.

உடனடியாக இடைக்கால சர்க்கார் அமைக்கும் வைசிராயின் யோசனையைக் காங்கிரஸ் ஏற்றுக்கொண்டது. கூட்டுச் சர்க்கார் அமைக்கலாம் என்று யோசனை தெரிவித்து ஜின்னுவுக்குக் காங்கிரஸ் தலைவர் என்ற முறையில் நேரு கடிதம் எழுதினர். ஆனல், லீக் செய்த முடிவை மாற்றுவதற்கில்லை என்று ஜின்னு பதில் எழுதிவிட்டார்.

ஆகஸ்டு 1-ஆம் தேதி முஸ்லிம் லீக் நேரடி நடவடிக்கை தினத்தை அனுஷ்டித்ததன் பயனுக கல்கத்தாவில் 90 பேர் கொல்லப்பட்டனர்; 1000 பேர் காயமடைந்தனர். மற்ற இடங்களிலும் பலாத்காரச் செயல்கள் நடைபெற்றன.

ஆகஸ்டு 24-ஆம் தேதி ஜவாஹர்லால் நேருவைத் தலைவராகக் கொண்ட முதலாவது தேசீய இடைக்கால சர்க்காரின் மந்திரிகளுடைய பெயர் ஜாபிதா அறிவிக்கப்பட்டது. முஸ்லிம் லீக் தனது தீர்மானத்தைப் புனராலோசனை செய்யவேண்டுமென்றும் பலாத்காரப் பேச்சுக்களையும் செயல்களையும் கைவிடவேண்டுமென்றும் வைசிராய் தமது ரேடியோப் பேச்சில் கேட்டுக்கொண்டார். இடைக்கால சர்க்காரில் ஒரு மந்திரியாக நியமிக்கப்பட்ட ஸர் ஷாபட் அஹமத்கானை ஆகஸ்டு 25-ஆம் தேதியன்று சில முஸ்லிம் இளைஞர்கள் குத்திக் காயப்படுத்தினர்கள்.

நேரடி நடவடிக்கை தினத்திலும், அதற்குப் பிறகும் நடந்த மிருகத்தனமான கொலைகளையும், மற்றப் பலாத்காரச் செயல்களையும் டில்லியில் ஆகஸ்டு 27-ஆம் தேதியிலிருந்து 30-ஆம் தேதி வரை கூடிய காரியக்கமிட்டி கண்டனம் செய்தது.

நேரு சர்க்காரை ஸ்தம்பிக்க வைப்பதே நேரடி நடவடிக்கையின் நோக்கம் என்று டில்லியில் கஸ்னுபர் அலிகான் கூறினர். லீக்கின் ஒத்துழைப்பின்றி அமைக்கப்பட்ட இடைக்கால சர்க்காரை முஸ்லிம்கள் தங்கள் ரத்தத்தைக் கொண்டு எதிர்ப்பார்கள் என்று பிரிட்டனை எச்சரித்து முஸ்லிம் லீக் கூட்டத்தில் ஒரு தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது.

செப்டம்பர் 2-ஆம் தேதி நேருவும் இடைக்கால சர்க்காரின் மற்ற மந்திரிகளும் பதவியேற்ருர்கள். இது பூரண சுயராஜ்யத்துக்கான ஒரே நடவடிக்கை என்று காந்திஜி கூறினர். நீண்ட நாள் பிரச்னையைச் சமாதான முறையில் தீர்த்த பிரிட்டிஷ் சர்க்காரையும் வாழ்த்தினர்.

பிறகு, முஸ்லிம் லீக் இடைக்கால சர்க்காரில் சேர்ந்தது.

கிழக்கு வங்காளத்தில் அக்கிரமச் செயல்கள் நாளுக்கு நாள் அதிகமாகிக்கொண்டு வந்தன. கொலே, கொள்ளே, பெண்களேக் கடத்தல், கட்டாய மதமாற்றம், கற்பழித்தல் போன்ற கொடுமைகளினுல் ஹிந்துக்கள் கஷ்டப்பட்டுக்கொண் டிருந்தார்கள். அக்டோபர் 28-ஆம் தேதி காந்திஜி கல்கத்தாவுக்குப் புறப்பட்டார். கல்கத்தாவுக்குப் போய்ச் சேர்ந்த பின் நோவாகாலிக்குப் புறப்பட ஆயத்தமானுர். இதற்கிடையில் பீகாரில் முஸ்லிம்கள் ஹிந்துக்களால் கொடுமைப்படுத்தப் படுகிருர்கள் என்ற செய்தி கிடைத்தது. உடனே காந்திஜி, பிரதம மந்திரி நேருவுக்குத் தந்தி கொடுத்தார். நேரு, மூன்று மந்திரிகளோடு பாட்னுவுக்குப் புறப்பட்டார்.

நவம்பர் 6-ஆம் தேதி காந்திஜி நோவாகாலிக்குப் புறப்படுவதற்குச் சற்றுமுன்னதாகப் "பீகாருக்கு" என்ற தலைப்பில் விடுத்த ஓர் அறிக்கையில், பீகார் வாசிகள் நல்ல விதமாக மாறி இந்தக் கொடுமைகளே நிறுத்தாவிட்டால், தாம் சாகும் வரை உண்ணுவிரதம் இருக்கப் போவதாகத் தெரிவித்தார்.

வங்காள சர்க்கார் ஏற்பாடுசெய்த தனி ரெயிலில் காந்திஜி நோவாகாலிக்குப் புறப்பட்டபோது, வங்காளத்தின் மந்திரி ஒருவரும், முதல் மந்திரியின் பார்லிமென்டரிக் காரியதரிசியும் அவரோடு புறப்பட்டுச் சென்றனர். நவம்பர் 6-ஆம் தேதி மாலே சாந்த்பூருக்குப் போய்ச் சேர்ந்தனர். அங்கே முஸ்லிம் லீகர்களின் தூதுகோஷ்டி ஒன்றும், ஹிந்துக்களின் தூது கோஷ்டி ஒன்றும் காந்திஜியைச் சந்தித்தன.

கொடுமைக்கு அஞ்சிக் கோழைகள் ஆகிவிடுவதோ, கிழக்கு வங்காளத்திலிருந்து வெளியேறுவதோ கூடாது என்றும், அகிம்சை வழியில் எதிர்த்து நிற்கத்தான் வேண்டுமென்றும், இப்போது நடக்கும் அக்கிரமங்களுக்காக ஹிந்துக்கள் வெட்கப் படவேண்டும் என்றும், இஸ்லாத்துக்கு இது அவமானத்தை உண்டுபண்ணுகிறது என்றும் காந்திஜி கூறினுர். நோவாகாலியில் முஸ்லிம்கள் செய்யும் அக்கிரமச் செயல்களுக்காக, பீகாரில் ஹிந்துக்கள் பழிவாங்குவது கோழைத்தனமான காரியம் என்றும் சொன்னுர்.

நவம்பர் 7-ஆம் தேதி சௌமுஹானிக்குக் காந்திஜி ரெயிலில் புறப்பட்டார். சாந்த்பூரிலிருந்து 30 மைல் தூரத்திலுள்ள லக்ஸம் என்ற ஊரில் அகதிகள் முகாம் ஒன்று இருந்தது. ரெயில்வே ஸ்டேஷனில் கூடியிருந்தவர்களே நோக்கிக் காந்திஜி பேசியபோது, அகதிகளே மனக்கண்முன் நிறுத்தியே பின்வருமாறு கூறினுர் : "பிரசாரம் செய்வதற்காகப் புயல் வேகத்தில் பிரயாணம் செய்ய நான் இங்கே வரவில்லே. உங்களோடு தங்கியிருக்க, உங்களில் ஒருவனுக இருக்கவே, நான் வந்திருக்கிறேன். என்னிடத்தில் மாகாண உணர்ச்சி எதுவும் கிடையாது. நான்

ஓர் இந்தியன். குஜராத்தியாக இருப்பதைப்போல ஒரு வங்காளி யாகவும் நான் இருக்கிறேன். இங்கேயே தங்கியிருக்கவும், அவசியமானல் இங்கேயே உயிரை விடவும் நான் பிரதிக்ஞை செய்து கொண்டிருக்கிறேன். கொடுஞ் செயல்கள் யாவும் இறுதியாகக் குழிதோண்டிப் புதைக்கப்படும் வரையில், ஒரு ஹிந்துப் பெண் தனிமையில் முஸ்லிம்களிடையே தாராளமாக உலாவுவதற்கு அஞ்சும் வரையில், நான் வங்காளத்தை விட்டுப் போகமாட்டேன். எனக்கு நீங்கள் செய்யக்கூடிய மாபெரும் உதவி, உங்கள் உள்ளத்திலிருந்து பயத்தைப் போக்குவதே."

நவம்பர் 7-ஆம் தேதி சௌமுஹானிக்குப் போய்ச் சேர்ந்து, அங்கே தாற்காலிகமாகத் தமது தலைமை நிலையத்தை வைத்துக் கொண்டார். அன்று நடந்த பிரார்த்தனைக் கூட்டத்துக்கு 15,000 பேர் வந்திருந்தனர். அவர்களில் 80 சதவிகிதத்தினர் முஸ்லிம்கள்.

நவம்பர் 8-ஆம் தேதி கோபேர்பாக் என்ற கிராமத்துக்குக் காந்திஜி மோட்டாரில் சென்றார். அங்கே ஹிந்துக் குடும்பங்கள் தங்கியிருந்த குடிசைகள் பாழாகிக் கிடந்தன. அங்கே வசித்தவர்களைக் கொன்று பிணங்களை முற்றத்தில் அடுக்கிக் கொளுத்தி விட்டார்கள். ரத்தக் கறைகளும் அங்கே காணப்பட்டன. ஒரு வீட்டிலிருந்து மூன்று பெண்கள் கடத்திச்செல்லப்பட்டிருந்தனர். அவர்களில் இருவர் இருக்கும் இடம் தெரியவில்லை.

நவம்பர் 9-ஆம் தேதி காந்திஜி தமது முகாமை தத்தபார்ராவுக்கு மாற்றினர். 11-ஆம் தேதி மௌன தினம். அப்படியிருந்தும் மோட்டாரிலும் படகுகளிலும் பிரயாணம் செய்து நோவாகாலா, சோனச்சகா, கீல்பாரா ஆகிய கிராமங்களுக்குச் சென்றார். நோவாகாலாவில் பதினைந்து வயதுப் பள்ளிச்சிறுவன் உட்பட 8 பேர் கொலை செய்யப்பட்டிருந்தனர். நான்கு மண்டை யோடுகள் கிடந்தன. வீடுகள் தீயிட்டுக் கொளுத்தப்பட்டிருந்தன. ஓர் ஊமையின் குடுமி கத்தரிக்கப்பட்டு அவன் பலவந்தமாக மதம் மாற்றப்பட்டிருந்தான். காந்திஜி சென்றபோது அங்கிருந்த பெண்கள் அழுதுகொண்டிருந்தார்கள். அன்று பிரார்த்தனைக் கூட்டத்தில் காந்திஜி பேசவில்லை. அதற்குப் பதிலாக அவர் எழுதியிருந்த பிரசங்கம் மற்றவர்களால் வாசிக்கப்பட்டது. இந்தப் பாதகச் செயல்களை முஸ்லிம் சகோதரர்கள் கண்டனம் செய்யவேண்டுமென்றும், ஹிந்துக்கள் திரும்பி வந்து தங்கள் வீடுகளைத் திரும்பக் கட்டும்போது முஸ்லிம்கள் உதவி புரிய வேண்டுமென்றும் காந்திஜி தமது சொற்பொழிவில் கூறியிருந்தார்.

நவம்பர் 13-ஆம் தேதி காலையில் காந்திஜி தம்முடன் பிரயாணம் செய்யும் கோஷ்டியினருக்குத் தமது முக்கியமான முடிவு ஒன்றை அறிவித்தார். அதாவது, தம் கோஷ்டியைச் சேர்ந்த ஆண் பெண் ஒவ்வொருவரையும் பாதிக்கப்பட்ட ஒவ்வொரு கிரா

மத்திலும் போய்த் தங்கியிருந்து, அவசியப்பட்டால் தங்கள் உயிரைக் கொடுத்தாவது ஹிந்து மைனரிடியினரைக் காப்பாற்ற வேண்டுமென்றும், தம்முடைய முடிவு யாரையும் கட்டுப்படுத்துவதல்ல என்றும், இதை விரும்பாதவர்கள் விலகிச்சென்று வேறு ஆக்க வேலைகளில் ஈடுபடலாம் என்றும் தெரிவித்தார்.

நவம்பர் 14-ஆம் தேதி காந்திஜி தத்தபாராவிலிருந்து காஸிர்கில்லுக்குத் தமது ஜாகையை மாற்றினர். போகும் வழியில் ஷஹாபூரில் ஒரு பொதுக்கூட்டத்தில் பேசினர். காஸிர்கில்லில் பேசியபோது, "ஒரு கிளாஸ் தண்ணீர் கொடுத்தவனுக்கு இரண்டு கிளாஸ் தண்ணீர் கொடுப்பதில் பெருமையில்லை. தீமை செய்தவனுக்கும் நன்மை செய்வதே பெருமை. அதைத்தான் சிறந்த பழிக்குப் பழியாக நான் கருதுகிறேன்" என்ருர்.

சில முஸ்லிம்கள் காந்திஜியைப் பார்த்து, "நீங்கள் ஏன் பீகாருக்குப் போகவில்லை?" என்று கேட்டார்கள். அதற்கு அவர் பதில் சொன்னபோது, பீகாரில் அப்போது அமைதி நிலவுவதாக நேரு முதலியவர்களிடமிருந்து தகவல் கிடைத்திருப்பதாகவும், அதனல் தாம் அங்கே போகவேண்டிய அவசியமில்லை என்று அவர்கள் தெரிவித்திருப்பதாகவும் கூறினர்.

தாம் ஒரு முஸ்லிம் லீகரின் வீட்டில் தங்கியிருக்க விரும்புவதாகவும் காந்திஜி தெரிவித்தார்.

நவம்பர் 17-ஆம் தேதி காஸிர்கில்லிலிருந்து இரண்டு மைல் தூரத்திலுள்ள தஸ்காரியா என்ற கிராமத்துக்குக் காந்திஜி சென்ருர். அங்கே ஏராளமான மாதர்கள் வந்து அவரைப் பார்த்தனர். பலவந்தமாக மதம் மாற்றப்பட்டிருந்த அம் மாதர்கள் பழையபடியும் தங்கள் சொந்த மதத்துக்கு இப்போது திரும்பினர்கள். கட்டாய மத மாற்றத்தைச் சட்டம் அங்கீகரிக்காது என்று ஜில்லா மாஜிஸ்திரேட் உத்தரவு பிறப்பித்திருந்தார்.

நவம்பர் 19-ஆம் தேதி மதுப்பூர்ப் பிரார்த்தனைக்கூட்டத்தில் காந்திஜி பேசினர்.

நவம்பர் 20-ஆம் தேதி காஸிர்கில்லிலிருந்து 4 மைல் மேற்கே உள்ள ஸ்ரீராம்பூருக்குப் படகில் புறப்பட்டுச் சென்ருர். அப்போது அவருடன் சென்றவர்கள் வங்காளி மொழி பெயர்ப்பாளர் ஒருவரும், மலபாரைச் சேர்ந்த ஒருவருமே. வேறு சகாக்கள் யாருமின்றிக் காந்திஜி தனியாகச் சென்று, பாழாக்கப்பட்ட அந்தக் கிராமத்தில் தங்கினர். பாலங்களையும் சதுப்புப் பகுதிகளையும் கடந்து செல்லுவதற்குக் காந்திஜி ஒரு மூங்கில் கழியை வைத்துக்கொண்டார்.

அந்த 77-ஆவது வயதில் காந்திஜி, நாள் ஒன்றுக்குப் பதினெட்டு மணி நேரம் வேலை செய்தார். காலை 4 மணிக்குத் துயி

லெழுந்து, பிரார்த்தனை செய்வார்; அப்புறம் 8 அவுன்ஸ் வெந்நீரில் 1 அவுன்ஸ் தேனையும், 5 கிரெய்ன் உப்புச் சோடா வையும் கலந்து குடித்துவிட்டு, மண்ணெண்ணெய் விளக்கு வெளிச்சத்தில் படிப்பார்; அல்லது எழுதுவார். அதன் பின் வங்காளி மொழி கற்றுக்கொள்ள உட்காருவார். ஆறரை மணிக்குத் தம் சகாக்களுடன் உலாவப் புறப்பட்டு ஒரு மணி நேரத்துக்குப் பின் திரும்புவார். ஸ்ரீராம்பூருக்கு வந்த பின் உலாவும் நேரத்தையும், வேகத்தையும் அதிகமாக்கிக் கொண்டார்.

9 மணிக்குத் திரும்பி வருவார். ஒரு மணி நேரம் அவருடைய உடம்பு பிடித்துவிடப்படும். அப்புறம் வெயிலில் இருந்துவிட்டு, வெந்நீரில் குளிப்பார். 11 மணிக்குச் சாப்பாடு. அவருடைய ஆகாரம், 8 அவுன்ஸ் ஆட்டுப்பால், வேகவைத்த காய்கறிகள், சுமார் 3 தோலா சப்பாத்திகள், சில பழங்கள் ஆகியவை யாகும். சில சமயங்களில் சப்பாத்திக்குப் பதிலாகச் சாதத்தோடு வேக வைத்த காய்கறிகளைச் சாப்பிடுவார்.

சாப்பிடும்போது கடிதம் எழுதும் வேலையைச் செய்து முடிப் பார். பிற்பகலில் அரைமணி நேரம் தூங்குவார். குறித்த காலத் தில் எழுந்து 12 அவுன்ஸ் இளநீர்த் தண்ணீரும், தேங்காய் வழுக் கையும் சாப்பிடுவார். இரண்டு மணிக்கு நூல் நூற்க ஆரம்பிப் பார். அப்போது பத்திரிகைகளை வாசிக்கச் சொல்லிக் கேட்பார்; அல்லது பார்க்க வந்தவர்களோடு சம்பாஷிப்பார். மூன்றரை மணிக்கு அன்றைய தினத்தின் கடைசி ஆகாரத்தைச் சாப்பிட்டு விட்டு, நான்கு மணிக்குப் பிரார்த்தனைக்குப் புறப்படுவார். பிரார்த்தனை முடிந்தபின் திரும்பவும் உலாவச் செல்லுவார். திரும்பி வந்ததும் வேலை செய்யத் தொடங்குவார். எட்டரை மணிக்குத் தூங்கப் போவார். அவர் காலை 4 மணிக்குத்தான் எழுந்திருப்பது வழக்கம். என்றாலும், சில நாட்களில் 2 மணிக்கே விழித்தெழுந்து கடிதங்களுக்குப் பதில் எழுதுவார்.

ஒவ்வொரு நாளும் கால் நடையிலோ, படகிலோ சென்று, பாதிக்கப்பட்ட பகுதிகளைப் பார்வையிடுவார். ஏழைகளை அவர் களுடைய குடிசைகளில் சென்று பார்ப்பார். அகதிகள் முகாம் களுக்குச் சென்று ஆறுதல் கூறுவார். ஒவ்வொரு கண்ணிலிருந்தும் கண்ணீரைத் துடைப்பதையே தமது லட்சியமாகக் கொண்டு வேலை செய்தார்.

ஸ்ரீராம்பூரில் சிறிது சிறிதாக ஹிந்துக்களுக்கு ஜீவன் பிறந் தது. கோவில்களில் மணிகள் முழங்கின. பிரார்த்தனையில் மக் கள் கலந்துகொண்டு கீதங்கள் பாடினார்கள். செத்த உயிர்கள் மீண்டதைக் கண்டு காந்திஜி மகிழ்ந்தார்.

டிசம்பர் 27-ஆம் தேதி நேரு அங்கே வருவதாகக் காந்திஜி கிறிஸ்துமஸ் தினத்தன்று கூறினார்.

நேருவும் ஆச்சாரிய கிருபளானியும் சென்று அரசியல் அமைப்புப் பிரச்னைகள் சம்பந்தமாகக் காந்திஜியுடன் கலந்து ஆலோசனை செய்துவிட்டு, அவருடைய யோசனைகளை ஏற்றுச் சென்றுர்கள்.

## 1947 (வயது 78):

ஜனவரி 2-ஆம் தேதி காலை $7\frac{1}{2}$ மணிக்குக் காந்திஜி ஸ்ரீராம் பூரிலிருந்து புறப்பட்டு, மூங்கில் கழியை ஊன்றிக்கொண்டு, சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த தமது யாத்திரையைத்தொடங்கினுர். அப்போது அவருடன் சென்றவர்கள் பேராசிரியர் நிர்மல குமார் போஸ், மனு, பரசுராம், ராமச்சந்திரன் ஆகியோர். செல்லும் வழியில் முஸ்லிம்களும் ஹிந்துக்களும் வந்து காந்திஜிக்குத் தங்கள் மரியாதையைத் தெரிவித்தனர். ஒன்பது மணிக்குச் சண்டிபூர் போய்ச் சேர்ந்தார். அங்கே தாம் மூன்று அல்லது நான்கு நாட்கள் தங்கப்போவதாகவும் அதன் பிறகுதான் தமது யாத்திரை ஆரம்பமாகும் என்றும் காந்திஜி சொன்னுர்.

ஜனவரி 4-ஆம் தேதியன்று, சண்டிபூரிலிருந்து ஒரு மைல் தூரத்திலுள்ள சங்கிர்காவன் கிராமத்தில் காந்திஜி ஒரு பாடசாலையைத் திறந்து வைத்தார்.

ஜனவரி 7-ஆம் தேதி, நாளொன்றுக்கு ஒரு கிராமம் வீதம் செல்லும் யாத்திரையைக் காந்திஜி மேற்கொண்டார். சண்டிபூரிலிருந்து காலை 7-25-க்குப் புறப்பட்டு இரண்டரை மைல் தூரம் நடந்து 9 மணிக்கு மாஸிம்பூருக்குப் போய்ச் சேர்ந்தார். அப்பொழுது காந்திஜி, தமது காலில் ஒரு வெடிப்பு இருந்துங்கூடச் செருப்புப் போடாமல் வெறும் கால்களுடனேயே நடந்து சென்றுர். மாலை 4 மணிக்கு அங்கே வழக்கம்போலப் பிரார்த்தனைக் கூட்டம் நடந்தது. அக் கூட்டத்திற்கு 2,000 பேர் வந்திருந்தனர். அதுவே தமது பாதயாத்திரையின் முதல் நாள் என்பதைக் காந்திஜி கூட்டத்தில் தெரிவித்தார்.

கிராம சேவா சங்கத்தார் தயாரித்த ஓர் அறிக்கை காந்திஜியிடம் கொடுக்கப்பட்டது. அந்த அறிக்கையில், ராம்கஞ்ச் போலீஸ் ஸ்டேஷன் பிரதேசத்தில் உள்ள ஒரு கிராமத்தில் 669 வீடுகள் கொள்ளையடிக்கப்பட்டன என்றும் ,அவற்றில் 334வீடுகள் தீ வைத்துக் கொளுத்தப்பட்டன என்றும், சொத்துக்களுக்கு ஏற்பட்டுள்ள சேதத்தின் மதிப்பு சுமார் 2 லட்சம் ரூபாய் என்றும், மைனரிடி வகுப்பினருக்கு உயிர்ச் சேதம் ஏற்படாமல் இருந்ததற்குக் காரணம் அவர்கள் மதம் மாற்றப்பட்டதுதான் என்றும் கூறப்பட்டிருந்தது.

ஜனவரி 8-ஆம் தேதி மாஸிம்பூரிலிருந்து காலை 7-40 மணிக்குக் காந்திஜி புறப்பட்டு வெறுங்காலுடனேயே நடந்து ஒரு மணி நேரத்துக்குப் பிறகு பத்தேபூருக்குப் போய்ச் சேர்ந்தார். போகும் வழியில் முஸ்லிம்கள் அவரைச் சலாம் செய்து வரவேற்றுர்கள்.

திட்டப்படி யாத்திரை தொடர்ந்து நடைபெற்றது. தஸ்பாரா, ஜகத்பூர், லம்சார், கர்பாரா, ஷஹாபூர், பாட்டியால்பூர், நாராயண்பூர், தஸ்காரியா முதலிய கிராமங்களில் ஒவ்வொருநாள் தங்கிப் பிரார்த்தனைக் கூட்டங்களில் நல்லுரை பகர்ந்துவிட்டு, ஜனவரி 19-ஆம் தேதி அதகோராவுக்குச் சென்று தங்கினர். அது அவரது பாத யாத்திரையில் பதின்மூன்ருவது கிராமமாகும். மறுநாள் ஷிராண்டி என்ற கிராமத்துக்குச் சென்ருர். ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமைக்காகக் கடந்த 24 நாட்களாக உண்ணுவிரதம் இருந்து வந்த அம்துஸ் சலாம் என்ற முஸ்லிம் பெண்மணியைப் போய்ப் பார்த்தார். அப் பெண்மணி, காந்திஜியின் ஆசிரமத்தைச் சேர்ந்தவர். அந்தப் பகுதியில் சமாதானத்தை நிலைநாட்டுவதாகச் சில முஸ்லிம் பிரமுகர்கள் எழுத்துமூலம் உறுதிமொழியளித்தபின், காந்திஜியின் ஆலோசனைப்படி அம்துஸ் சலாம் தமது உண்ணுவிரதத்தை நிறுத்தினர்.

ஜனவரி 21-ஆம் தேதி காலை 7-30 மணிக்கு ஷிராண்டியிலிருந்து புறப்பட்டு கெத்தூரி, பானியாலா, டால்ட்டா, முரைம், ஹீராபூர், பன்ஸா பல்லா, சத்கில், ஜோயாக், அம்கி, நவகிராம் ஆகிய ஊர்களுக்கு யாத்திரை செய்து பிப்ரவரி முதல் தேதி அமிஷபாராவுக்குப் போய்ச் சேர்ந்தார். அநேக ஊர்களில் முஸ்லிம்களின் வீடுகளிலேயே தங்கியிருந்தார். 2-ஆம் தேதி சத்கரியாவுக்கும், 3-ஆம் தேதி சதுர்கில்லுக்கும் போனர்.

பிப்ரவரி 6-ஆம் தேதி காலையில் காந்திஜியின் யாத்திரையில் இரண்டாவது கட்டம் ஆரம்பமாயிற்று. நோவாகாலி கிராமங்களில் யாத்திரை செய்வதற்குக் காலை 7-30 மணிக்குச் சதுர்கில்லிலிருந்து புறப்பட்டார். சுமார் 2 மைல் தூரத்திலுள்ள ஸ்ரீநகருக்கு ஒற்றையடிப் பாதையில் நடந்து சென்ருர். பிப்ரவரி 6-ஆம் தேதி தரம்பூரை அடைந்தார். தாம் செருப்பில்லாமல் நடப்பதைப் பற்றிப் பத்திரிகையாளர்களிடம் காந்திஜி கூறியதாவது: "வெறும் காலுடன் நான் நடப்பது பரபரப்பையோ ஆச்சரியத்தையோ உண்டுபண்ண வேண்டியதில்லை. எனக்கு அது கஷ்டமாக இல்லை. நோவாகாலியின் மண் வெல்வெட் மாதிரி இருக்கிறது. பசும்புல்லும் பிரமாதமான கம்பளத்தைப்போல இருக்கிறது. இந்த மண்ணிலும் புல்லிலும் நடக்கச் செருப்பே தேவையில்லை. குஜராத்தில் இப்படி நடந்திருக்க மாட்டேன் என்று நினைக்கிறேன். வெறும் காலுடன் தான் புனித யாத்திரை செய்வது வழக்கம். இந்தப் பிரயாணமும் எனக்குப் புனித யாத்திரைதான்."

பிரசாத்பூர், நந்திகிராமம், விஜயநகர், ஹம்சாடி, கபீலாதலி, கிழக்குக் கெரோவா, ராய்ப்பூர், தேவிப்பூர் ஆகிய கிராமங்களுக்கு யாத்திரை செய்துவிட்டு, பிப்ரவரி 18-ஆம் தேதியன்று நோவாகாலி ஜில்லாவைவிட்டு, திப்பேரா ஜில்லாவுக்குள் பிரவேசித்து அலுனியா என்ற ஊருக்குச் சென்ருர். ஒவ்வோர் ஊரிலும் பிரார்த்தனைக் கூட்டங்கள் நடந்தன. ஒற்றுமை,

அகிம்சை ஆகியவற்றை வற்புறுத்திக் காந்திஜி பேசியதுடன், கேள்விகளுக்கும் பதிலளித்து வந்தார்.

சார்டுகியா, சார்லாருவா, கமலாப்பூர், சார்கிருஷ்ணப்பூர், சார்ஸோலாடி ஆகிய ஊர்களுக்குச் சென்று பிப்ரவரி 24-ஆம் தேதி ஹைம்சாரை அடைந்தார். அந்தச் சமயத்தில் காந்திஜி பீகாரில் இருக்கவேண்டியது அவசியம் என்று பீகார் மந்திரி டாக்டர் சையத் முகமதுவிடமிருந்து காந்திஜிக்குக் கடிதம் கிடைத்தது. தாம் பீகாருக்குப் போகத் தீர்மானித்திருப்பதை பிப்ரவரி 28-ஆம் தேதி காந்திஜி வெளியிட்டார். அங்கே அப்போது முஸ்லிம்களை ஹிந்துக்கள் கொடுமைப்படுத்தி வந்தார்கள்.

காந்திஜி ஒரு ஜீப்பில் ஏறிச் சாந்த்பூருக்குப் போய்ச் சேர்ந்தார். அங்கிருந்து மார்ச்சு 2-ஆம் தேதி பீகாருக்குப் புறப்பட்டார்.

நோவாகாலிப் பகுதியில் மொத்தம் 7 வார யாத்திரையில் காந்திஜி வெறுங் கால்களோடு 166 மைல்கள் நடந்து 47 கிராமங்களுக்குச் சென்றுர். நோவாகாலி யாத்திரையை முடித்துச் செல்லும்போது, ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒற்றுமையோடு வாழவேண்டுமென நல்லுரை பகர்ந்துவிட்டு விடை பெற்றுர்.

பாட்னுவுக்குச் செல்லும் வழியில் கல்கத்தாவின் ஒரு பகுதியான ஸோடேப்பூரில் காந்திஜி பிரார்த்தனைக் கூட்டத்தில் பேசும்போது, நோவாகாலியில் தமது பணி முடிவடைந்துவிடவில்லை என்றும், ஆனுலும் பீகாரிலிருந்து வந்த அழைப்பைப் புறக்கணித்துவிடுவதற்கில்லை என்றும் தெரிவித்தார்.

மார்ச்சு 5-ஆம் தேதி காலையில் காந்திஜி பாட்னு போய்ச் சேர்ந்தார்.

நோவாகாலியில் ஹிந்துக்கள் எடுத்துக் கூறியவை போன்ற கொடுமைகளையே பீகாரில் முஸ்லிம்கள் கூறக் காந்திஜி கேட்டார். பயத்தையெல்லாம் உதறிவிட்டு ஆண்டவனிடம் நம்பிக்கை வைக்கும்படி நோவாகாலி ஹிந்துக்களிடம் கூறியதுபோல, பீகார் முஸ்லிம்களிடமும் காந்திஜி கூறினுர்.

பாதிக்கப்பட்ட முஸ்லிம்களுக்காகக் காந்திஜி கஷ்ட நிவாரண நிதி வசூலிக்கத் தொடங்கினுர்.

மார்ச்சு 11-ஆம் தேதிப் பிரார்த்தனைக் கூட்டத்தில் பேசியபோது, மறுநாள் தமது பிரயாணத்தைத் தொடங்கப் போவதாகவும், கிராமங்களில் பிரயாணம் செய்தாலும் அடுத்த சில தினங்களுக்குப் பாட்னு நகரிலேயே தமது ஜாகையை வைத்துக் கொள்ளப்போவதாகவும் தெரிவித்தார்.

மார்ச்சு 12-ஆம்தேதிபாட்னு நகரில் மங்களேஸ்டலாவோவுக்கு அருகில் பிரார்த்தனைக் கூட்டம் நடத்திவிட்டுத் திரும்பியபோது

கும்ரஹார் என்ற கிராமத்துக்குச் சென்ருர். அங்கே செயலாக வாழ்ந்து வந்த ஒரு முஸ்லிம் வீடு சூறையாடப்பட் டிருந்ததைப் போய்ப் பார்த்தார். புத்தகங்கள், மேஜை, நாற்காலிகள் போன்ற சகல உடைமைகளும் நாசம் செய்யப்பட்டிருந்தன. பக்கத்தி லுள்ள மசூதி இடிக்கப்பட்டிருந்தது. இதேபோலப் பாழாக்கப் பட்ட முஸ்லிம் வீடுகளைக் கண்டு காந்திஜி கண்ணீர் சொரிந்தார்.

மறுநாள் கான் அப்துல் கபார்கானுடன் காந்திஜி பாஸாவி லுள்ள முஸ்லிம் வீடுகளுக்குச் சென்ருர். அன்று பிரார்த்தனைக் கூட்டத்தில் பேசுகையில் காந்திஜி கூறியதாவது: ‘‘நோவாகாலி யில் நடந்தவற்றிற்காகப் பீகார் பழிவாங்குகிறது என்று யாரா வது நினைத்தால், அவர்களுக்கு நான் கூறுகிறேன்: பழிவாங்கும் முறை இதுவல்ல. இந்தியர்களில் ஒரு பிரிவினர் மற்ெருரு பிரி வினரை விரோதிகள் என்று நினைப்பது தற்கொலைச் செயலா கும்; அது அடிமை நிலையை நிரந்தரமாக்கத்தான் செய்யும்.’’

பஞ்சாப்புக்கு வந்து அங்கே சமாதானம் நிலவச் செய்ய வேண்டும் என்று காந்திஜிக்குப் பல அழைப்புக்கள் வந்தன. ஆனல், பீகாரிலும், வங்காளத்திலும் ஹிந்துக்களும் முஸ்லிம் களும் நட்புகொள்ளும் வரையிலும், தமது சேவையை எதிர் பார்க்கும் வரையிலும் தம்மால் வேறெங்கும் செல்ல முடியாது என்று காந்திஜி தெரிவித்தார். ‘‘என்னல் பஞ்சாப்புக்குப் போக இயலாவிட்டாலும், என் குரல் அந்த மாகாணத்திலுள்ள ஹிந்துக்களுக்கும், முஸ்லிம்களுக்கும், சீக்கியர்களுக்கும் கேட் கும் என்றே நம்புகிறேன். அர்த்தமற்ற காட்டுமிராண்டிச் செயல் களை அவர்கள் நிறுத்துவார்கள் என்றும் நம்புகிறேன்’’ என்ருர் காந்திஜி.

‘‘பீகாரில் நவம்பர் மாதத்தில் பெண்களும், குழந்தைகளும் கூட ஈவிரக்கமின்றிப் படுகொலை செய்யப்பட்டனர். இதோடு ஒப்பிடும்போது நோவாகாலியில் நடந்த அக்கிரமங்கள் குறைவு என்னும்படி இருக்கின்றன.’’ இவ்வாறு காந்திஜி கூறிவிட்டு, பீகார் ஹிந்துக்கள் உண்மையிலேயே தங்கள் தவறுக்கு வருந்து வதுடன், கஷ்ட நிவாரண நிதிக்குத் தாராளமாகக் கொடுக்க வேண்டும் என்றும் சொன்னர்.

பீகாரில் திரும்பவும் இப்படி அக்கிரமங்கள் நிகழுமானல், தாம் நெருப்பில் வெந்து சாக விரும்புவதாகவும், இப்படிப்பட்ட கொடூரமான, மானக்கேடான காட்சியைப் பார்த்துக்கொண் டிருக்கத் தம்மை உயிரோடு வைத்திருக்கக் கூடாது என்பதே தாம் கடவுளை நோக்கிச் செய்யும் பிரார்த்தனை யாகும் என்றும் முஸ்லிம் நண்பர்களிடம் காந்திஜி கூறினர்.

நோவாகாலியில் நிலைமை மோசமாகிக்கொண் டிருக்கிறது என்றும், ஆகவே அங்கே வரவேண்டும் என்றும் காந்திஜிக்கு அழைப்பு வந்தது. ஆனல், தாம் பீகாரைவிட்டு இப்பொழுது புறப்பட முடியாது என்றும், பீகாரில் தமது

முயற்சி வெற்றி பெற்ருல் அதன்மூலம் வங்காளத்திலும் நற்பலன் விளையும் என்றும் காந்திஜி பதில் அளித்தார். முஸ்லிம்களுக்காக காந்திஜி வசூலித்த கஷ்ட நிவாரண நிதிக்குப் பணம் மட்டுமின்றி நகைகளும் வந்து குவிந்தன. அநேக இடங்களில் நிலைமை திருந்தி, அக்கிரமச் செயல்கள் நின்றுவிட்டன என்று முஸ்லிம்களே காந்திஜியிடம் வந்து கூறினர்கள்.

மார்ச்சு 29-ஆம் தேதி காந்திஜி பேசுகையில், தாம் மறுநாள் டில்லிக்குப் போகப் போவதாகவும், நாலைந்து நாட்களுக்குள் திரும்பி வந்துவிடலாம் என்று நம்புவதாகவும் தெரிவித்தார்.

டில்லியில் ஏப்ரல் முதல் தேதி யன்று ஆசிய நாடுகள் மகாநாட்டில் காந்திஜி கலந்துகொண்டார். அன்று சில கேள்விகளுக்குப் பதிலளித்தார்.

மறுநாள் மகாநாட்டின் கடைசி நாள். பார்வையாளர்களும் பிரதிநிதிகளுமாக 20,000 பேர் அமர்ந்திருந்த கூட்டத்தில் காந்திஜி பேசினர். பெரிய நகரங்களில் காண்பது உண்மையான இந்தியா அல்ல என்றும், உண்மையான இந்தியாவைக் கிராமங்களில்தான் காண முடியும் என்றும் காந்திஜி தமது சொற்பொழிவில் கூறினர். வெளிநாடுகளிலிருந்து வந்திருந்த அநேக பிரதிநிதிகள் தங்கள் நாடுகளுக்குக் காந்திஜியிடமிருந்து செய்தி பெற்றுச் சென்ருர்கள்.

ஏப்ரல் 12-ஆம் தேதி காந்திஜி திரும்பவும் பீகாருக்குச் சென்ருர்.

ஏப்ரல் 14-ஆம் தேதி பாட்ன பிரார்த்தனைக் கூட்டத்தில் காந்திஜி பேசியபோது, நோவாகாலியில் நிலைமை மோசமாகிக் கொண்டு வருவதாகத் தாம் கேள்விப்படுவதாகவும், அங்கே நடக்கும் அக்கிரமங்கள் நிற்பதற்காகத் தாம் உண்ணுவிரதம் இருக்கும்படி நேரிடலாம் என்றும் குறிப்பிட்டார்.

அரசியல் நோக்கங்களைச் சாதித்துக்கொள்ளப் பலாத்காரச் செயல்களில் ஈடுபடுவதைக் கண்டித்தும், பலாத்காரத்தைக் கைவிடுமாறு கேட்டுக்கொண்டும் ஏப்ரல் 15-ஆம் தேதி விடுவிக்கப்பட்ட கூட்டறிக்கையில் காந்திஜியும், ஜின்னவும் கையெழுத்திட்டிருந்தனர்.

ஏப்ரல் 30-ஆம் தேதி நேருஜியின் அழைப்புக்கு இணங்கக் காந்திஜி மீண்டும் டில்லிக்குச் சென்ருர்.

மே 8-ஆம் தேதி பாட்னவுக்குத் திரும்பினர். பிரயாணம் செய்யும்போது வைசிராய் மவுண்ட்பேட்டனுக்குக் காந்திஜி எழுதிய ஒரு கடிதத்தில், தேசப் பிரிவினையோ, மாகாணப் பிரிவினையோ கூடாது என்றும், அவ்வாறு செய்ய உடன்தையாக இருந்தால் அது பிரிட்டனின் பெரிய தவறு என்றும் கூறினர்.

மே 9-ஆம் தேதி ஸோடேப்பூரில் காந்திஜி பேசினர்.

மே 12-ஆம் தேதி வங்கப் பிரமுகர் சுஹ்ரவர்த்தி, ஸோடேப் பூருக்கு வந்து காந்திஜியைச் சந்தித்தார்.

மே 15-ஆம் தேதி பாட்னுவுக்குத் திரும்பி, சில ஊர்களுக்கு விஜயம் செய்துவிட்டு, 25-ஆம் தேதி டில்லிக்குப் போய்ச் சேர்ந்தார்.

ஜூன் 2-ஆம் தேதியன்று அதிகார மாற்றத்திற்கான அறிக் கையை வைசிராய் வெளியிட்டதும், கலகங்கள் நடைபெறும் என்று பலமான வதந்தி பரவியது. பீகாரில் என்றும் காணுத வாறு படுகொலைகள் நடக்கும் என்றும் ஒரு செய்தி அங்கிருந்தே வந்தது. மேலும், லண்டனிலிருந்து வைசிராய் என்ன கொண்டு வருவார், அவருடைய அறிக்கையில் என்ன என்ன கூறப்பட்டிருக் கும் என்பவற்றை அறிய எல்லோரும் ஆவலோடு இருந்தார்கள். இந்த மனப்பான்மையைக் காந்திஜி கண்டித்து ஓர் அறிக்கை வெளியிட்டார். மக்கள் தங்களுடைய எதிர்கால நலனுக்கு லண் டனை எதிர்பார்ப்பதற்காகத் தாம் வருந்துவதாகக் காந்திஜி கூறி ஞர். ''நமக்குச் சுதந்திரம் கொடுப்பது அவர்கள் வேலை அல்ல; நம்முடைய முதுகிலிருந்து கீழே இறங்குவது ஒன்றைத்தான் அவர்கள் செய்ய முடியும். இதைச் செய்வதாக அவர்கள் வாக் களித்திருக்கிருர்கள்'' என்று தமது அறிக்கையில் காந்திஜி கூறி யிருந்ததோடு, கலகங்கள் நடந்தாலும் நடக்காவிட்டாலும், பிரிட் டிஷ் ஆட்சி குறிப்பிட்ட தேதியில் முடிவடையப் போவது நிச் சயம் என்றும் குறிப்பிட்டிருந்தார். கலகங்கள் நடக்குமோ என்ற பயம் தற்போது நிலவுவதற்கு ஆதாரமே இல்லை என்று தாம் நம்புவதாகக் காந்திஜி சொன்னர்.

ஜூன் மாதம் முதல் தேதியன்று வைசிராய், டில்லிக் குத் திரும்பினர்.

ஜூன் 3-ஆம் தேதி, வைசிராய், நேரு, ஜின்னு, பல்தேவ் சிங் ஆகியோர் ரேடியோவில் பேசினர். வைசிராய் தமது பேச்சில், பிரிட்டிஷ் சர்க்காரின் திட்டத்தை வெளியிட்டார். அதைக் கேட்டு ஹிந்துக்கள் வருந்தினர்கள். ஆனல், நேரு பேசும்போது, இந்தியா பிரிவினை செய்யப்படுவதைத் தாம் விரும்பாவிட்டாலும், இந்தியா தொடர்ந்து ரத்தம் சிந்திக்கொண்டிருக்கும்படி விடக் கூடாது என்றும், இப்போதுள்ள நிலையில் சஸ்திர சிகிச்சையை ஏற்றுக்கொள்ள வேண்டியதுதான் என்றும் கூறினர். பிரிட்டிஷ் சர்க்காரின் திட்டம், பாகிஸ்தான் கொடுக்கச் சம்மதித்தது. இதற்குக் காங்கிரஸும் இசைந்தது. பலாத்காரத்துக்குப் பணிந்து காங்கிரஸ் இவ்வாறு இசையவில்லை என்றும், ஆனல் சந்தர்ப்பங்களின் நிர்ப்பந்தத்துக்குப் பணிந்தே இசைந்தது என் றும் ஜூன் 4-ஆம் தேதி காந்திஜி கூறினர்.

ஆகஸ்டு 15-ஆம் தேதி பிரிட்டிஷார் இந்தியர் கையில் அதிகாரத்தை மாற்றிக் கொடுக்கும்போது, திருவாங்கூர், சுதந்திரத் தனியரசாகப் பிரகடனம் செய்துகொள்ளும் என்று திருவாங்கூர் திவான் ஸர் சி. பி. ராமசாமி ஐயர் அறிவித்ததை, ஜூன் 13-ஆம் தேதி காந்திஜி பிரஸ்தாபித்துப் பின்வருமாறு கூறினர்: ''பிரிட்டிஷ் மன்னர் இந்தியாவின் சக்கரவர்த்தியாக இருந்த வரையில் திருவாங்கூர் இந்தியாவில் இருந்துவருவது ஸர் சி. பி. ராமசாமி ஐயருக்குத் திருப்தியாக இருந்தது. ஆனால், அதிகாரம் இந்தியர் கைக்கு மாறியதும், திருவாங்கூர் இந்திய யூனியனில் சேரக் கூடாது என்று நினைக்கிறார். இது ஆச்சரியத்தை அளிக்கும் செய்தியாகும்.''

ஜூன் 14, 15 ஆம் தேதிகளில் நடந்த அ. இ. கா. க. கூட்டத்தில் காந்திஜி பேசும்போது கூறியதாவது: "இந்தியா இப்போது சுதந்திரத்தின் தலைவாசலில் நிற்கிறது. ஹைதராபாத்தும், திருவாங்கூரும் சுதந்திரத் தனியரசுகள் ஆவதுபற்றிப் பேசிக் கொண்டிருக்கின்றன. இது வீண் பேச்சு. சமஸ்தானாதிபதிகள் சுதந்திரத் தனியரசர்களாக ஆவதென்றால், சமஸ்தான மக்களின் சுதந்திரத்தைப் பறித்துத்தான் ஆக முடியும். எனக்குத் தெரிந்த வரையில் இந்தியா இதை ஒருபோதும் அனுமதிக்க முடியாது."

"இந்திய யூனியனிலிருந்து விலகி எந்தச் சமஸ்தானமும் சுதந்திரத் தனியரசாகப் பிரகடனம் செய்துகொள்ளும் உரிமையை அ. இ. கா. க. ஒப்புக்கொள்ள முடியாது'' என்று அ. இ. கா. க. கூட்டத்தில் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. பாகிஸ்தான் கொடுக்கும் பிரிட்டிஷ் திட்டத்தை ஒப்புக்கொண்டு ஒரு தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது. இதை ஆதரித்து 153 வோட்டுக்களும், எதிர்த்து 29 வோட்டுக்களும் கிடைத்தன. சிலர் வோட்டளிக்கவில்லை.

''1947, ஆகஸ்டு 15-ஆம் தேதியிலிருந்து இந்தியா, பாகிஸ்தான் என்ற இரண்டு சுதந்திர டொமினியன்கள் உதயமாகும்'' என்று ஜூலை 4-ஆம் தேதி பிரிட்டிஷ் பார்லிமென்டில் இந்திய சுதந்திர மசோதா கொண்டுவரப்பட்டது.

ஜூலை 18-ஆம் தேதி இந்திய சுதந்திர மசோதாவுக்கு மன்னர் சம்மதம் அளித்திருக்கும் செய்தி பிரிட்டிஷ் பார்லிமென்டின் லார்டுகள் சபையில் அறிவிக்கப்பட்டது.

ஜூலை 29-ஆம் தேதி, அசோக சக்கரத்துடன் கூடிய தேசீயக் கொடி அமைப்புப்பற்றிய தீர்மானத்தை அரசியல் நிர்ணய சபையில் நேருஜி கொண்டுவந்தார்.

காந்திஜி ஜூலை 29-ஆம் தேதி பிரார்த்தனைக் கூட்டத்தில், தாம் மறுநாள் காஷ்மீருக்குப் போகப் போவதாகவும், ஜவாஹர்லால் நேருவுக்கு முன்பு கொடுத்த வாக்குறுதியே இந்தக் காஷ்மீர் விஜயத்திற்குக் காரணம் என்றும் தெரிவித்தார்.

ஆகஸ்டு முதல் தேதியன்று காந்திஜி ஸ்ரீநகருக்குப் போய்ச் சேர்ந்தார். 4-ஆம் தேதி காலையில் அங்கிருந்து புறப்பட்டார். அன்று காந்திஜி ஜம்முவுக்குப் போய்ச் சேர்ந்தார். ஆகஸ்டு 15-இல் இந்தியா சுதந்திரம் பெறும்போது, காஷ்மீரின் நிலை என்ன என்று காந்திஜியிடம் கேட்டபோது, அது காஷ்மீர் மக்களைப் பொறுத்த விஷயம் என்று அவர் பதில் அளித்தார். காஷ்மீரில் காந்திஜி சொற்பொழிவுகள் நிகழ்த்தவில்லை. தமது பிரயாணம் அரசியல் கலப்பு இல்லாததாக இருக்கவேண்டுமென்று காந்திஜி விரும்பினர்.

ஜம்முவிலிருந்து பஞ்சாப்புக்குப் புறப்பட்டார். வரும் வழியில் பிண்டியில் அகதிகள் முகாமைப் பார்த்தார். மேற்குப் பஞ்சாப்பைச் சேர்ந்த அகதிகள் அதில் 9,000 பேர் இருந்தனர்.

ஆகஸ்டு 6-ஆம் தேதி லாகூரில் காந்திஜி கூறியதாவது: "என் உள்ளம் எப்பொழுதும் பஞ்சாப்பிலேயே இருக்கிறது. பஞ்சாப்பின் துன்பங்களை நான் நன்கு அறிந்திருக்கிறேன். என்னுடைய தற்போதைய இடம் நோவாகாலிதான். உயிரை இழக்க நேர்ந்தாலும், அங்கே நான் போவேன். நோவாகாலி வேலை முடிந்ததும் நான் பஞ்சாப்புக்கு வருவேன். வெகு சீக்கிரத்தில் நோவாகாலி வேலையிலிருந்து விடுதலை பெற்றுவிடுவேன் என்று நம்புகிறேன்."

ஆகஸ்டு 7-ஆம் தேதி காந்திஜி கல்கத்தாவை நோக்கிப் பிரயாணம் செய்தார். கல்கத்தாவுக்குப் போய்ச் சேர்ந்ததும் அவருடைய உடம்பை டாக்டர் சுனில் போஸ் பரிசோதித்து, சரீரம் மிகவும் ஆரோக்கியமாக இருக்கிறது என்று தெரிவித்தார்.

ஆகஸ்டு 9-ஆம் தேதி ஸோடேப்பூரில் பிரார்த்தனைக் கூட்டத்தில் காந்திஜி பேசியபோது, தாம் போகவேண்டிய இடம் நோவாகாலி என்றும், ஆனல் நாள் முழுவதும் கல்கத்தாவில் நடைபெறும் கலகங்களைப் பற்றிய செய்திகளைப் பற்றிக் கேட்டுக் கொண்டிருந்ததாகவும் கூறினர்.

ஆகஸ்டு 11-ஆம் தேதி சுஹ்ரவர்த்தி வந்து காந்திஜியைப் பார்த்து, வகுப்புக் கலகங்கள் நடக்கும் கல்கத்தாவில் அமைதி நிலவும் வரை தங்கியிருக்கும்படி கேட்டுக்கொண்டார். கலகங்களால் மிகவும் மோசமாகப் பாதிக்கப்பட்டிருக்கும் பகுதியில், தாமும் சுஹ்ரவர்த்தியும் ஒரே வீட்டில் தங்கியிருக்க வேண்டுமென்றும் காந்திஜி தெரிவித்தார். அதற்குச் சுஹ்ரவர்த்தியும் இணங்கினர்.

கல்கத்தா நகரில், கலகத்தால் மிகவும் பாதிக்கப்பட்ட பெலியகத்தா பகுதியில் உள்ள ஒரு முஸ்லிம் வீடு ஏற்பாடு செய்யப்பட்டது. ஆகஸ்டு 13-ஆம் தேதியன்று காந்திஜி அங்கே சென்றார். அவருடன் கல்கத்தா ஜில்லா முஸ்லிம் லீக் காரிய

தரிசியும், மேற்கு வங்காளப் பிரதமரின் ராஜீயக் காரியதரிசியும், குமாரி மனுகாந்தியும், ஸ்ரீமதி அவா காந்தியும் (காந்திஜியின் பேத்திகள்) சென்றூர்கள்.

காந்திஜி போய்ச் சேர்ந்த சிறிது நேரத்திற்குப் பிறகு அங்கே பல இளைஞர்கள் வந்து ஆர்ப்பாட்டம் நடத்தினர்கள். "சுஹ்ரவர்த்தியே, திரும்பிப் போ" என்று கோஷித்தார்கள். சென்ற வருடம் ஹிந்துக்கள் துன்பத்துக்கு உள்ளானபோது காந்திஜி ஏன் வரவில்லை என்று ஆர்ப்பாட்டக்காரர்கள் கேட்டார்கள்.

காந்திஜி, தாம் ஹிந்துக்களுக்கு விரோதியல்ல என்றும், ஹிந்துக்களையும் முஸ்லிம்களையும் ஒன்றுபோலவே தாம் கருதுவதாகவும் சொன்னர்.

ஆகஸ்டு 14-ஆம் தேதியன்று கல்கத்தாவில் யாதொரு அசம்பாவிதமும் நிகழவில்லை. கல்கத்தாவில் பாதிக்கப்பட்டிருந்த பல பகுதிகளில் ஹிந்துக்களும் முஸ்லிம்களும் நட்புடன் பழகத் தொடங்கினர்கள். அன்று பெலியகத்தாவில் ஒரு மாபெரும் கூட்டத்தில் காந்திஜி பேசினர். மறுநாள் சுதந்திர தினமாதலால் அனைவரும் உண்ணுவிரதம் இருந்து நூல் நூற்க வேண்டுமெனக் காந்திஜி கேட்டுக்கொண்டார்.

ஆகஸ்டு 14-ஆம் தேதி நள்ளிரவில் இந்தியா சுதந்திரம் பெறும் வைபவம் டில்லி அரசியல் நிர்ணய சபையில் சிறப்பாக நடைபெற்றது. தலைவர்கள் காந்திஜிக்கு அஞ்சலி செலுத்தினர்கள். ஆகஸ்டு 15-ஆம் தேதியிலிருந்து மவுண்ட்பேட்டன் சுதந்திர இந்தியாவின் கவர்னர் ஜெனரலாக இருப்பதென்றும் தீர்மானிக்கப்பட்டது. ஜவாஹர்லால் நேரு நாட்டு மக்களுக்கு விடுத்த செய்தியில், " இந்த நாளில் நமது சிந்தனைகள் சுதந்திரச் சிற்பியான தேச பிதாவிடம் செல்கின்றன. அவர் இந்தியாவின் பழம் பெரும் ஆன்ம உணர்வின் சொரூபமாக விளங்கி, சுதந்திர தீபத்தை ஏற்றிப் பிடித்து, சூழ்ந்து பரவியிருந்த இருளை நீக்கி ஒளியைப் பாய்ச்சினர்" என்று கூறினர்.

ஆகஸ்டு 15-ஆம் தேதி நாடெங்கும் சுதந்திரத் திருநாள் கோலாகலமாகக் கொண்டாடப்பட்டது. "மகாத்மா காந்திக்கு ஜே!" என்ற முழக்கம் நாள் முழுவதும், நாட்டின் ஒவ்வொரு மூலை முடுக்கிலும் கேட்டுக்கொண்டிருந்தது.

காந்திஜி மட்டும் கோலாகல வைபவங்களில் கலந்து கொள்ளவில்லை. அன்று நாட்டுக்கோ, உலகத்துக்கோ அவர் செய்தி விடுக்கவும் மறுத்துவிட்டார். அவர் தங்கியிருந்த இடத்துக்கு எண்ணற்ற மக்கள் யாத்திரை செய்வதுபோல வரவும், அஞ்சலி செலுத்தவுமாக இருந்தார்கள்.

காந்திஜி, சுதந்திர தினத்தன்று உண்ணுவிரதம் இருந்தார்; நூல் நூற்றூர். அன்று மகாதேவ தேசாய் தினமாதலால் அதி

காலையில் பிரார்த்தனை செய்தார். பிரார்த்தனைக் கூட்டத்தில் பேசும்போது, கல்கத்தாவின் ஹிந்துக்களும் முஸ்லிம்களும் நேச முறையில் பழகுவதைக் கண்டு தாம் மகிழ்வதாகக் கூறினர். அவர் முகத்தில் மகிழ்ச்சி தாண்டவம் ஆடியது. பிரார்த்தனைக்குப் பிறகு தமது உண்ணுவிரதத்தை முடித்தார். கல்கத்தா நகரையும் அன்று சுற்றிப் பார்த்தார்.

ஆகஸ்டு 17-ஆம் தேதி "இந்தியக் கவர்னர்" என்ற தலைப்பில் காந்திஜி எழுதிய ஒரு கட்டுரையில், சுதந்திர இந்தியாவின் ஒவ்வொரு கவர்னரும் நூல் நூற்கவேண்டும் என்றும், யாரும் தாராளமாகப் போய் வரக்கூடிய ஒரு குடிசையில் வசிக்க வேண்டுமென்றும், தமது தாய்மொழியையும் ஹிந்துஸ்தானியையும் பேச வேண்டுமென்றும் குறிப்பிட்டார்.

ஆகஸ்டு 18-ஆம் தேதி ஈத் தினம். அன்று முஸ்லிம்கள் காந்திஜியின் இருப்பிடத்துக்கு வந்து வாழ்த்துக் கூறினர்கள்.

ஆகஸ்டு 24-ஆம் தேதி காந்திஜிக்குக் கல்கத்தா நகர சபை வரவேற்புப் பத்திரம் வாசித்தளித்தது. இதற்கு முன் அந்த நகரசபை அவருக்கு இரண்டுமுறை வரவேற்புப் பத்திரம் வாசித்தளித்திருக்கிறது.

ஆகஸ்டு 31-ஆம் தேதி காந்திஜியின் சமாதானப் பணிக்கு விரோதமான ஆர்ப்பாட்டம் ஒன்று அவருடைய ஜாகையிலேயே நடைபெற்றது. அநேக இளைஞர்கள் கூச்சல் போட்டு அவரைத் தூங்க விடாமல் செய்ததுடன் அவரை நோக்கிக் கல்லும் வீசினர்கள். கதவுகளை உடைத்தார்கள். இந்த ஆர்ப்பாட்டத்தினல், செப்டம்பர் மாதத் தொடக்கத்தில் காந்திஜி நோவாகாலிக்குப் போக இருந்தது தடைப்பட்டது. அமைதி நிலவிய கல்கத்தாவில் திடீரென்று பலாத்காரச் செயல்களும், கொலைகளும் நடக்கத் தொடங்கிவிட்டன.

வகுப்பு ஒற்றுமைக்காகச் செப்டம்பர் முதல் தேதியிலிருந்து காந்திஜி உண்ணுவிரதம் இருக்கத் தொடங்கினர். மீண்டும் கல்கத்தாவில் அமைதி நிலவும் வரையில் தாம் உண்ணுவிரதத்தை நிறுத்தப் போவதில்லை என்று அறிவித்தார்.

மூன்று தினங்களுக்குள்ளாகக் கல்கத்தாவில் நிலைமை சீர்ப்பட்டுவிட்டது. காந்திஜி 73 மணி நேரத்திற்குப் பின், அதாவது, செப்டம்பர் 4-ஆம் தேதியன்று உண்ணுவிரதத்தை நிறுத்தினர். வகுப்புக் கலகத்தை நிறுத்திய காந்திஜியின் இந்த அரிய சாதனையை லண்டன் "டைம்ஸ்" பத்திரிகை வியந்து பாராட்டியது.

செப்டம்பர் 7-ஆம் தேதியன்று காந்திஜி டில்லிக்குப் புறப்பட்டார்.

9-ஆம் தேதி டில்லிக்கு வந்து சேர்ந்ததும் அங்கே நடைபெற்ற கலகங்களைப்பற்றிய செய்தி யறிந்து காந்திஜி அதிர்ச்சி யடைந்தார். டில்லியில் நிலைமை மகாமோசமாக இருந்தது.

10-ஆம் தேதி காந்திஜி 40 மைல் தூரம் சுற்றி டில்லியிலும், ஒக்லாவிலும் அகதிகளின் முகாம்களைப் பார்வையிட்டார். பல்லாயிரக்கணக்கான அகதிகள் டில்லியின் பல பகுதிகளிலும் நிரம்பியிருந்தார்கள். புராண கிலா என்ற கோட்டையில் மட்டும் 50,000 முஸ்லிம் அகதிகள் இருந்தார்கள். இதேபோல, ஹிந்துக்களும் வெவ்வேறு இடங்களில் பல்லாயிரக்கணக்கில் இருந்தார்கள். மேற்குப் பஞ்சாப்பிலிருந்து முஸ்லிம் அல்லாதார் மொத்தம் 8 லட்சம் பேர் கால்நடையாகக் கிழக்குப் பஞ்சாப்புக்குக் குடிபெயர்ந்து வந்தார்கள். இவ்வளவு அதிகமான பேர் பய பீதியோடு ஒரே சமயத்தில் குடிபெயர்ந்து கால்நடையாக வேறிடத்துக்குப் போனது இதற்கு முன் உலகில் எங்குமே நடைபெறாத சம்பவமாகும் என்று கூறப்படுகிறது.

டில்லியில் ஹிந்துக்களிடமும், சீக்கியர்களிடமும் முஸ்லிம்கள் அவதிப்பட்டுக்கொண்டிருக்கும் இந்தச் சந்தர்ப்பத்தில், எல்லைப் புற மாகாணத்தில் ஹிந்துக்கள் படுகொலை செய்யப்படுவதாகச் செய்திகள் வந்துகொண்டிருந்தன. பாகிஸ்தானின் மைனாரிடிகளைக் காப்பாற்றுவது ஜின்னாவின் கடமை என்று காந்திஜி பல முறையும் நினைவுபடுத்தினார். தினந்தோறும் பிரார்த்தனைக் கூட்டங்களில் வகுப்பு ஒற்றுமையை வற்புறுத்திவந்தார்.

அக்டோபர் 2-ஆம் தேதி காந்திஜியின் 78-ஆவது பிறந்த தினம். வெளி நாடுகளின் ஸ்தானீகர்கள், ஸ்ரீமதி மவுண்ட்பேட்டன் உட்பட எண்ணிறந்தவர்கள் வந்து காந்திஜிக்கு வாழ்த்துக் கூறிச் சென்றார்கள். தந்திகளும் வந்து குவிந்தன. அகதிகள் மலர்களை அனுப்பினார்கள். அன்று டில்லி காங்கிரஸ் கமிட்டி கூட்டிய பொதுக்கூட்டத்தில் பேசிய ஜவாஹர்லால் நேரு, ஸர்தார் பட்டேல், கிருபளானி ஆகியோர், காந்திஜி காட்டும் வழியில் செல்லுமாறு மக்களைக் கேட்டுக்கொண்டனர். "மகாத்மா காந்திக்கு ஜே!" என்று முழங்கிக்கொண்டே, சொந்தச் சகோதரர்கள் விஷயத்தில் துவேஷக் கொள்கையைக் கடைப் பிடிக்க முடியாது என்றார் நேரு.

டில்லியில் அடிக்கடி முஸ்லிம்கள் படுகொலை செய்யப்பட்டு வந்தனர். பாகிஸ்தானில் ஹிந்துக்கள் துன்புறுத்தப்படுவதற்காக, இந்தியாவிலுள்ள ஒரு பாவமும் அறியாத முஸ்லிம்களைக் கொலை செய்வது தங்களைத் தாங்களே இழிவுபடுத்திக் கொள்ளும் செயலாகும் என்று காந்திஜி கண்டித்தார்.

அக்டோபர் 27-ஆம் தேதி காஷ்மீர், இந்திய யூனியனில் சேர்ந்தது. உடனடியாக ஷேக் அப்துல்லா தலைமையில் ஒரு மந்திரி சபையை நியமிப்பதாகக் காஷ்மீர் மன்னர் வாக்களித்தார். ஆக்கிரமிப்பாளர்களிடமிருந்து உயிர்களையும் உடைமை

களையும் காப்பாற்றுவதற்காக இந்திய சர்க்கார் படைகளை அனுப்பியது. பாகிஸ்தான் சர்க்காருடைய தூண்டுதல் இல்லாமல் ஆப்ரிதிகள் போன்றவர்கள் காஷ்மீருக்குள் படையெடுத்திருக்க முடியாது என்று காந்திஜி அபிப்பிராயப்பட்டார். இந்திய சர்க்கார் படைகள் அனுப்பியதை ஆதரித்தார்.

ஜுனகட் சமஸ்தான மன்னர், மக்கள் ஆகியோரின் முழு அங்கீகாரத்தின் பேரில் அதன் திவான் கேட்டுக்கொண்டதற்கு இணங்க, அந்தச் சமஸ்தானத்தின் நிர்வாகத்தை நவம்பர் 9-ஆம் தேதி இந்திய சர்க்கார் ஏற்றுக் கொண்டது. இது பாகிஸ்தான் பிரதேசத்துக்குள் பலவந்தமாகப் பிரவேசித்ததாக ஆகும் என்றும், சர்வதேச சட்டத்துக்கு விரோதமானது என்றும் பாகிஸ்தான் சர்க்கார் கூறியது. இது சட்ட விரோதமான செயல் அல்ல என்று காந்திஜி கூறினர்.

## 1948 (வயது 79):

ஜனவரி 10-ஆம் தேதியன்று காந்திஜி பிரார்த்தனை ஸ்தலத்துக்கு நடந்துவந்தபோது, பஹாவல்பூரைச் சேர்ந்த அகதிகள் கோபாவேசத்துடன் கோஷங்களைக் கோஷித்துக்கொண்டு ஆர்ப்பாட்டம் நடத்தினர்கள். பஹாவல்பூரில் உள்ள 70,000 ஹிந்துக்களுக்கும் சீக்கியர்களுக்கும் உதவி புரிய வேண்டுமெனக் கோரினர். ஆனல், காந்திஜி பிரார்த்தனை மேடையில் உட்கார்ந்ததும் அவர்கள் அமைதியாக இருந்தார்கள். இதைக் காந்திஜி பாராட்டியதுடன், அவர்கள் பொறுமையை இழந்துவிடக் கூடாது என்றும், சாத்தியமான சகல உதவிகளையும் இந்திய சர்க்கார் செய்துவருகிறதென்றும் கூறினர்.

ஜனவரி 11-ஆம் தேதி பிரார்த்தனைக் கூட்டத்தில், ஆந்திராவில் இருந்து வந்த ஒரு கடிதத்தின் சில பகுதிகளை வாசித்துக் காட்டினர். சட்டசபையின் காங்கிரஸ் அங்கத்தினர்கள் லஞ்சம் வாங்குவதிலும், லைசென்சுகளை வாங்கி விற்பதிலும், கள்ளமார்க்கெட் வியாபாரம் நடத்துவதிலும், நீதி நிர்வாகங்களில் தலையிடுவதிலும் ஈடுபட்டிருக்கிறர்கள் என்றும், பொதுமக்கள் இதனல் கஷ்டப்படுகிறர்கள் என்றும் அக் கடிதத்தில் கூறப்பட்டிருந்தது. அந்தக் கடிதத்தில் கூறப் பட்டிருப்பனவற்றை ஊர்ஜிதம் செய்யும் கடிதம் ஒன்று ஆந்திராவின் முது பெரும் நண்பர் ஒருவரிடமிருந்து காந்திஜிக்குக் கிடைத்தது.

காங்கிரஸ்காரர்களானலும், கம்யூனிஸ்டுகளானலும், சோஷியலிஸ்டுகளானலும், எல்லோரும் தங்கள் சொந்த நலன்களைக் கவனிக்காமல், தேச நலனுக்கே பாடுபட வேண்டுமென்று காந்திஜி கேட்டுக்கொண்டார்.

டில்லியில் முஸ்லிம்களுக்கு, நடந்து திரிவதற்குக்கூடப் பாதுகாப்பில்லாமல் போய் விட்டது என்றும், அதே சமயத்தில் பாகிஸ்தானில் மைனரிடி சமூகத்தினர் படும் துன்பங்களைத் தாம்

நன்கு அறிந்திருப்பதாகவும், அவர்களுடைய துன்பத்தைத் தீர்க்கப் பாகிஸ்தானுக்குத் தாம் போக விரும்பினாலும், டில்லியில் முஸ்லிம்களுக்குப் பாதுகாப்பு இல்லாதபோது தாம் எந்த முகத்தோடு அங்கே போக முடியும் என்றும், தம்மால் எதுவும் செய்ய இயலாதிருக்கும் இந்த நிலையில் உண்ணாவிரதம் இருக்கப் போவதாக காந்திஜி அறிவித்தார். இந்த உண்ணாவிரதம் சம்பந்தமாக நேருவையோ பட்டேலையோ காந்திஜி கலந்து ஆலோசிக்கவில்லை. சமூக ஒற்றுமைக்காக ஜனவரி 13-ஆம் தேதியிலிருந்து காலவரையறையின்றி உண்ணாவிரதம் இருக்கப் போவதாக முதல் நாள் பிரார்த்தனைக் கூட்டத்தில் தெரிவித்தார். "என் முயற்சியை ஆதரித்து, எனக்காக என்னோடு பிரார்த்தனை செய்யுமாறு உங்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன்" என்றார் காந்திஜி. ஆந்திரா காங்கிரஸ் சட்டசபை அங்கத்தினர்களில் பலர் தகாத வழிகளில் ஈடுபட்டுப் பணம் திரட்டுவதில் இறங்கியிருப்பதாகத் தேசபக்த கொண்டா வெங்கடசுப்பையா எழுதிய கடிதத்தின் சில பகுதிகளைக் காந்திஜி வாசித்துக் காட்டினார்.

ஜனவரி 13-ஆம் தேதி காலை 11 மணிக்கு உண்ணாவிரதம் ஆரம்பமாயிற்று. அன்று நேரு, பட்டேல், ஆஸாத் ஆகியோர் வந்து காந்திஜியுடன் நெடுநேரம் பேசிக்கொண்டிருந்துவிட்டுச் சென்றனர். அன்று மாலை பிரார்த்தனைக் கூட்டத்தில் பேசிய போது, டில்லியில் உண்மையிலேயே அமைதி நிலவத் தொடங்கினால் தமது உண்ணாவிரதம் முடிவடையும் என்று காந்திஜி கூறினார்.

ஜனவரி 14-ஆம் தேதி பிரார்த்தனைக் கூட்டத்தில் காந்திஜி கூறியதாவது: "கராச்சியில் சீக்கியர்கள் கோழைத்தனமாகத் தாக்கப்பட்டதை நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள். ஒரு பாவமும் அறியாத ஆடவரும், பெண்டிரும், குழந்தைகளும் வெட்டி எறியப்பட்டிருக்கிறார்கள். அவர்களுடைய உடைமைகளைக் கொள்ளையடித்திருக்கிறார்கள். மற்றவர்கள் ஓடிவரவேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அகதிகளை ஏற்றிக்கொண்டு வந்த ஒரு ரெயில் குஜராத்தில் (பாகிஸ்தானைச் சேர்ந்த ஊர்) தாக்கப்பட்டு, ஏராளமானவர்கள் கொல்லப்பட்டதாகவும், பெண்கள் கடத்திச் செல்லப்பட்டதாகவும் செய்தி வந்திருக்கிறது. இது எனக்கு வேதனை அளிக்கிறது. எவ்வளவு காலத்துக்கு இதையெல்லாம் இந்திய யூனியன் சகித்துக்கொண்டிருக்க முடியும்? நான் உண்ணாவிரதம் இருந்தபோதிலும், எவ்வளவு காலத்துக்கு ஹிந்துக்கள், சீக்கியர்கள் ஆகியோரின் பொறுமைக்கு அணை போட முடியும்? இந்த நிலைமைக்குப் பாகிஸ்தான் முற்றுப்புள்ளி வைக்கவேண்டும்."

ஜனவரி 15-ஆம் தேதி வெளியிடப்பட்ட வைத்திய அறிக்கை காந்திஜி மிகவும் பலவீனம் அடைந்திருப்பதாகக் கூறியது. டில்லியிலும், பிற இடங்களிலும் சமாதானக் கூட்டங்கள் நடந்தன.

டில்லியில் ஒரு கூட்டத்தில் பேசிய நேரு, மகாத்மா காந்தியின் உயிரை இழப்பது, இந்தியாவின் ஆன்மாவை இழப்பதாகும் என்றும், சமூக ஒற்றுமையை நிலைநாட்டிக் காந்திஜியின் உயிரைக் காப்பாற்ற வேண்டுமென்றும் கூறினர்.

காந்திஜியின் உண்ணுவிரதம் இந்தியாவிலும் பாகிஸ்தானிலும் உள்ள மக்களின் கண்களைத் திறக்க வேண்டுமென்றும், தாங்கள் செய்த காரியங்களுக்காக அவர்கள் வெட்கித் தலை குனியும்படி செய்ய வேண்டுமென்றும் பாகிஸ்தான் அகதிகள்-மந்திரி கஸ்னுபர் அலிகான் கூறினர். அத்துடன், தகராறுக்குரிய காரணங்களைப் போக்குவதற்காக இந்திய, பாகிஸ்தான் தலைவர்களின் கூட்டு மகாநாடு கூட்டவேண்டும் என்றும் அவர் யோசனை கூறினர்.

ஜனவரி 15-ஆம் தேதி பிரார்த்தனை மேடைக்குக் காந்திஜியால் நடந்துவர முடியவில்லை. அவருடைய செய்தியின் ஹிந்தி மொழிபெயர்ப்பு, பிரார்த்தனைக் கூட்டத்தில் வாசிக்கப்பட்டது.

இந்தியா பிரிவினை செய்யப்பட்டபோது, சில சொத்துக்களுக்காகப் பாகிஸ்தானுக்கு 55 கோடி ரூபாய் கொடுக்க இந்திய சர்க்கார் சம்மதித்தது. காஷ்மீர் விவகாரத்தினல், அந்தப் பணத்தைக் கொடுக்காமல் இந்தியா நிறுத்தி வைத்திருந்தது. ஆனல், ஜனவரி 15-ஆம் தேதி இரவு, காந்திஜியின் முயற்சியினல், அந்தப் பணத்தைப் பாகிஸ்தானுக்குக் கொடுத்துவிட இந்திய சர்க்கார் முடிவு செய்தது.

ஜனவரி 16-ஆம் தேதி வழக்கம்போல மாலையில் பிரார்த்தனைக் கூட்டம் நடந்தது. ஆனல், காந்திஜி கூட்டத்துக்கு வர முடியவில்லை. தம்முடைய படுக்கையிலிருந்து கொண்டே ஒரு மைக்ரோபோன் மூலம் பேசினர். இந்தியாவிலும் பாகிஸ்தானிலும் அமைதி நிலவின லொழியத் தாம் உயிர் வாழ விரும்பவில்லை என்று காந்திஜி சொன்னர்.

ஜனவரி 17-ஆம் தேதியும் காந்திஜி படுக்கையில் இருந்து கொண்டே மைக்ரோபோன் மூலம் பிரார்த்தனைக் கூட்டத்துக்கு வந்தவர்களுக்காகப் பேசினர்.

ஜனவரி 18-ஆம் தேதி காலையில் டில்லி நகரில் உள்ள சகல ஸ்தாபனங்களின் பிரதிநிதிகளும் அகதிகளின் பிரதிநிதிகளும் டாக்டர் ராஜேந்திரப் பிரசாத்தின் தலைமையில் வந்து ஏழு அம்சப் பிரகடனம் ஒன்றில் கையெழுத்திட்டனர். அந்தப் பிரகடனத்தில் உண்ணுவிரதத்தை நிறுத்துவதற்குக் காந்திஜி விதித்திருந்த நிபந்தனைகள் அடங்கியிருந்தன. டில்லியில் முஸ்லிம்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதாகவும், இதற்கு முன் நடந்ததுபோன்ற சம்பவங்கள் இனிமேல் நடைபெறு வென்றும் அவர்கள் பிரகடனத்தில் உறுதிமொழி யளித்துக் கையெழுத்திடவே, அன்று பகல் 12-45 மணிக்குக் காந்திஜி தமது உண்ணுவிரதத்தை

நிறுத்தினர். அன்று பிரார்த்தனைக் கூட்டத்துக்கு வந்தவர்களுக்காக மைக்ரோபோனில் காந்திஜி பேசியபோது, தம்முடைய செய்தி கூட்டத்தில் வாசிக்கப்படும் என்று தெரிவித்தார்.

சமாதானம் நிலவுவதற்காகக் காந்திஜி உண்ணாவிரதம் இருந்ததைப் பாராட்டி மேற்குப் பஞ்சாப் மந்திரி சபை அவருக்கு ஒரு தந்தி கொடுத்தது. காந்திஜியின் உண்ணாவிரதத்தினால், இந்தியாவிலும் பாகிஸ்தானிலும் உள்ள மக்களுக்குப் பரஸ்பரம் நட்புறவு கொள்ள வேண்டுமென்ற ஆவல் ஏற்பட்டதாக ஐ. நா. சபை பந்தோபஸ்துக் கவுன்சிலில் பாகிஸ்தான் வெளிநாட்டு மந்திரி ஸர் ஜபருல்லாகான் கூறினர்.

ஜனவரி 20-ஆம் தேதி பிர்லா மாளிகையில் பிரார்த்தனை மேடையில் காந்திஜி பேசியபோது, அவர் மீது குண்டு எறிவதற்கு முயற்சி செய்யப்பட்டது. அவர் உட்கார்ந்திருந்த இடத்துக்கு 50 கஜ தூரத்துக்கு அப்பால் குண்டு வெடித்தது. மதன்லால் என்ற ஒரு ஹிந்து இளைஞன் கைது செய்யப்பட்டான். அவனிடம் இருந்த மற்றொரு கைக்குண்டு கைப்பற்றப்பட்டது. அவன் தன்னை ஓர் அகதி என்று சொல்லிக்கொண்டான். குண்டு வெடித்ததனால் காந்திஜியிடம் யாதொரு சலனமும் ஏற்படவில்லை.

தாம் பாகிஸ்தானுக்குப் போகக்கூடும் என்று ஏற்கனவே பிரஸ்தாபித்திருந்ததைக் காந்திஜி குறிப்பிட்டு, தம்மை ஒரு சமாதான புருடராகவும், முஸ்லிம்களுக்கு நண்பராகவும் பாகிஸ்தான் சர்க்கார் நம்பினால்தான் தாம் அங்கே போக விரும்புவதாகவும், ஆனாலும் பிரயாணத்துக்குத் தமது ஆரோக்கியம் இடம் கொடுக்கும்வரை தாம் காத்திருக்க வேண்டும் என்றும் சொன்னர். தமது உடல் நிலை சரியாவதற்கு மேற்கொண்டு பதினைந்து நாட்களாவது ஆகும் என்று டாக்டர்கள் கூறுவதாகவும் காந்திஜி சொன்னர்.

21-ஆம் தேதி பிரார்த்தனைக் கூட்டத்தில் பேசியபோது, முதல் நாள் குண்டு எறியப்பட்டதைக் காந்திஜி பிரஸ்தாபித்தார். குண்டு எறிந்த வாலிபனுக்குப் பின்னணியில் இருப்பவர்கள் இப்படிப்பட்ட செயல்களை விட்டுவிட வேண்டுமென்றும், ஹிந்து மதத்தைக் காப்பதற்கு இது வழியல்ல என்றும் கூறினர். குண்டு எறிந்த ஹிந்து வாலிபனைக் கஷ்டப்படுத்த வேண்டாம் என்று தாம் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரலிடம் கூறியிருப்பதாகவும் காந்திஜி சொன்னர்.

உண்ணாவிரதத்துக்குப் பிறகு காந்திஜி முதன் முதலாக 22-ஆம் தேதியன்று பிரார்த்தனை மேடைக்கு நடந்து வந்தார். சிறிது சிறிதாகத் தமது உடம்பு தேறி வலுப் பெற்று வருவதாகக் கூறினர்.

23-ஆம் தேதி சுபாஷ் சந்திரபோஸின் பிறந்த நாள். அவர் வகுப்பு வேற்றுமை, மாகாண வேற்றுமை முதலியவை இன்றி அரும்பணி யாற்றியதைக் குறிப்பிட்டுக் காந்திஜி பேசினர்.

25-ஆம் தேதிப் பிரார்த்தனைக் கூட்டம் பிரம்மாண்டமான தாக இருந்தது. டில்லியில் ஹிந்துக்களும் முஸ்லிம்களும் சிநேக பாவத்துடன் பழகுவதை அறிந்து தாம் மனம் மகிழ்வதாகவும், ஒவ்வொரு ஹிந்துவும் சீக்கியரும் குறைந்த பட்சம் ஒரு முஸ் லிமையாவது பிரார்த்தனைக் கூட்டத்துக்கு அழைத்துவரவேண்டு மென்றும் காந்திஜி கூறினர். டில்லி மக்கள் தம்மை வார்தாவுக் குப்போக விடுவார்கள் என்று நம்புவதாகவும், ஆனல், தாம் இல்லாத சமயத்தில் டில்லியில் நிலைமை நல்லவிதமாக இருக்கும் என்ற புனிதமான உத்தரவாதத்தின் பேரில்தான் தாம் போக முடியும் என்றும் சொன்னர்.

ஜனவரி 26-ஆம் தேதி சுதந்திர தினம். காந்திஜியின் பேச்சு, பிரார்த்தனைக் கூட்டத்தில் வாசிக்கப்பட்டது. கிராமவாசி, நகரங்களுக்கு அடிமைப் பணி புரிவதற்காகப் பிறந்தவன் அல்ல என்பதை அவனுக்கு எடுத்துக் காட்டவேண்டும் என்று காந்திஜி தமது பேச்சில் குறிப்பிட்டிருந்தார்.

ஜனவரி 27-ஆம் தேதி ஸ்ரீ கிங்ஸ்லி மார்ட்டினுக்கு அளித்த பேட்டியில், அகிம்சையின் ஆற்றலையும், பெருமையையும் காந்திஜி விவரித்துக் கூறினர். காஷ்மீரை இரண்டாகப் பிரித்து இந்தி யாவுக்கும் பாகிஸ்தானுக்கும் ஒவ்வொரு பகுதியைக் கொடுத்து விடுவதன் மூலம் காஷ்மீரப் பிரச்னைக்குப் பரிகாரம் காணும் யோசனையை மார்ட்டின் தெரிவித்தபோது, அந்த யோசனை சரியானது அல்ல என்று காந்திஜி நிராகரித்துவிட்டார்.

ஜனவரி 28-ஆம் தேதி மாலையில் ராஜகுமாரி அமிருதகௌரி வழக்கம்போல் காந்திஜியைப் பார்க்க வந்தார். "பாபு, உங்கள் பிரார்த்தனைக் கூட்டத்தில் ஏதேனும் இரைச்சல்கள் இருந் தனவா?" என்று அமிருதகௌரி கேட்டார். அதற்குக் காந்திஜி பின்வருமாறு பதிலளித்தார்: "இரைச்சல்கள் இல்லை. உங்கள் கேள்வியைப் பார்க்கும்போது, என்னைப்பற்றி நீங்கள் கவலைப் பட்டுக் கொண்டிருப்பதாகக் தெரிகிறது. ஒரு பைத்தியக் காரனின் துப்பாக்கிக் குண்டினல் நான் இறக்க நேரிட்டால், புன்னகை செய்துகொண்டே இறக்க வேண்டும். என்னிடத்தில் கோபமே இருக்கக் கூடாது. என் உள்ளத்திலும் உதடுகளிலும் இறைவன் குடிகொண்டிருக்க வேண்டும்."

ஜனவரி 29-ஆம் தேதி பன்னுவிலிருந்து சுமார் 40 அகதிகள் காந்திஜியைப் பார்க்க வந்தார்கள். அவர்கள் மிகவும் துன் பத்துக்கு உள்ளான ஏழைகள். தங்கள் துன்பங்களுக்குக் காந்தி ஜியே காரணம் என்று ஓர் அகதி சொன்னன். காந்திஜி இமயமலைக்குப் போய்விட வேண்டுமென்றும் கோபத்துடன் சொன்னன். சிலர் காந்திஜியைத் திட்டவும் ஆரம்பித்தார்கள்.

ஆனல், வந்திருந்தவர்களில் பலர் காந்திஜியின் முயற்சிகளைப் பாராட்டிப் பேசினர்கள். இந்த விஷயங்களைக் காந்திஜி அன்றையப் பிரார்த்தனைக் கூட்டத்தில் தெரிவித்துவிட்டுப் பின்வருமாறு கூறினர்: "யாரும் சொல்லி நான் மனித சமூகத்துக்குச் சேவை புரியத் தொடங்கவில்லை. யாரும் சொல்லி அந்தச் சேவையை நான் கைவிடப் போவதும் இல்லை. நான் எப்படி இருக்கவேண்டுமென்று கடவுள் விரும்புகிருரோ அப்படியே இருக்கிறேன். அவர் கட்டளைப்படி நடக்கிறேன். அவர் என் விஷயத்தில் தம் இஷ்டப்படி எது வேண்டுமானலும் செய்யட்டும். அவர் விரும்பினல், என்னைக் கொல்லலாம். அவருடைய கட்டளைப்படி நான் நடப்பதாகவே கருதுகிறேன். இமயமலையில் வசிப்பதை நான் பெரு மகிழ்ச்சியோடு அனுபவிப்பேன். அங்கே எனக்கு அன்ன பானதிகளுக்கோ, ஆடைக்கோ கஷ்டம் ஏற்படாது. அது அமைதியான இடமாகவும் இருக்கும். ஆனல், அப்படிப்பட்ட அமைதியை நான் விரும்பவில்லை. என்னுடைய இமயமலை இங்கே இருக்கிறது. நீங்கள் எல்லோரும் இமயமலைக்குச் சென்ருல், என்னையும் உங்களோடு அழைத்துச் செல்லலாம்."

ஜனவரி 29-ஆம் தேதி யன்று காந்திஜி அதிகமான வேலைகளில் ஈடுபட்டிருந்ததால், இரவில் மிகவும் களைத்துப் போய்விட்டார். காங்கிரஸின் புனரமைப்புக்காக அன்று மாலையிலிருந்து சட்ட விதிகளைத் தயாரித்துக் கொண்டிருந்தார். அவற்றை எப்படியும் தயாரித்து முடித்துவிட வேண்டும் என்று கூறி வேலையில் ஈடுபட்டிருந்தார். 9-15 மணிக்குப் படுக்கைக்குச் சென்ருர்.

## கடைசி நாள்

ஜனவரி 30-ஆம் தேதி,வெள்ளிக்கிழமை. காந்திஜி வழக்கம் போலக் காலை 3-30 மணிக்குத் தூக்கத்திலிருந்து எழுந்தார். 3-34 மணிக்குப் பிரார்த்தனை செய்துவிட்டு வேலை செய்ய உட்கார்ந்தார். 4-15 மணிக்கு எலுமிச்சம் பழ ரசமும் தேனும் கலந்த ஒரு டம்ளர் வெந்நீர் குடித்தார். 5 மணிக்கும் 6 மணிக்கும் இடையில் 16 அவுன்ஸ் மோசாம்பிச் சாற்றைப் பருகினர். சிறிது நேரம் படுத்து உறங்கி 6 மணிக்கு எழுந்து வந்தார். அமெரிக்காவுக்குச் செல்ல விருந்த ஸ்ரீமதி ராஜன் நேருவுக்குப் பேட்டியளித்தார். இதன் பின் அறைக்குள்ளேயே சிறிது உலாவினர். 8 மணிக்குப் பியாரிலாலிடம், காங்கிரஸின் புனரமைப்பு விதிகளைக் கொடுத்து, அவற்றை நன்ருகப் பரிசீலனை செய்து பார்க்கும்படி காந்திஜி கூறினர். எங்காவது விஷயங்கள் விடுபட்டிருந்தாலும் அவற்றைப் பூர்த்தி செய்யும்படி கூறினர்.

காந்திஜி மேஜையில் படுத்துப் பத்திரிகைகள் படித்துக் கொண்டிருந்தபோது அவருக்கு உடம்பு பிடித்து விடப்பட்டது. அரை மணி நேரத்துக்குப் பிறகு குளிக்கச் சென்ருர். அதற்கு முன்னதாகப் பியாரிலாலிடம், காங்கிரஸ் புனரமைப்பு விதிகளைப்

படித்துப் பார்த்தாகி விட்டதா என்று விசாரித்தார். சென்னை ராஜ்யத்தில் உணவுப் பிரச்னையைச் சமாளிப்பது எப்படி என்பது குறித்து, நோவாகாலி அனுபவத்தை ஒட்டி, ஒரு குறிப்புத் தயாரிக்கும்படி சொன்னார். அப்போது காந்திஜி கூறியதாவது: "உணவு மந்திரி காரியாலயம் பயப்படுகிறது. தென்னை, பனை, வேர்க்கடலை, வாழை ஆகியவற்றுடன் பலவிதமான கிழங்குகளையும் இயற்கை ஏராளமாக வழங்கி யிருக்கும் சென்னையைப் போன்ற ஒரு மாகாணத்தில், உணவுக்கான இயற்கை வளங்களை எப்படிப் பயன்படுத்துவது என்பதை மட்டும் மக்கள் அறிந்தால், அவர்கள் பட்டினி கிடக்க வேண்டியதில்லை என்றே நான் கூறுவேன்.

அடுத்து நடைபெறவிருந்த காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டத்துக்காகக் காந்திஜி தயாரித்திருந்த காங்கிரஸின் புனரமைப்பு விதிகளில் காங்கிரஸ் ஸ்தாபனத்தை லோக சேவா சங்கமாக மாற்றி, கிராமப் பஞ்சாயத்துக்களை அமைத்து, கிராம சேவைக்காக ஊழியர்களை நியமிக்கும் ஆலோசனை கூறப்பட்டிருந்தது. லோக சேவா சங்கத்தின் வேலைகளுக்குக் கிராம வாசிகளிடமும், மற்றவர்களிடமும், குறிப்பாக ஏழை மக்களிடமும், பணம் வசூலித்துக்கொள்ள வேண்டுமென்றும் காந்திஜி தாம் தயாரித்த விதிகளில் கூறியிருந்தார்.

குளித்துவிட்டு வந்து 9-30 மணிக்கு வங்காளிமொழிப் பாடங்களைக் கற்கலானார். நோவாகாலி யாத்திரையிலிருந்து காந்திஜி தினமும் வங்காளி மொழி கற்று வந்தார். பின்பு காலை உணவு அருந்தினார். 12 அவுன்ஸ் ஆட்டுப் பால், பச்சை முள்ளங்கி, தக்காளிப் பழங்கள் பச்சடி, நான்கு ஆரஞ்சுப் பழங்களின் ரசம், வேக வைத்த காய்கறிகள், இஞ்சிச்சாறு ஆகியவையே அன்று காந்திஜி உட்கொண்ட காலை உணவு. அப்பொழுது பியாரிலால் வந்து காங்கிரஸ் புனரமைப்பு விதிகளைக் கொடுத்தார். அதைக் காந்திஜி நுட்பமாகப் படித்துப் பார்த்தார். பியாரிலால் புதிதாகச் சேர்த்திருப்பவற்றையும், அவர் செய்திருந்த மாறுதல்களையும் நன்கு பரிசீலனை செய்தார். அதன்பின் படுத்து உறங்கினார். அவருடைய உள்ளங்கால்களில் நெய் தடவப்பட்டது.

12-மணிக்குக் காந்திஜி எழுந்து தேன் கலந்த வெந்நீர் ஒரு டம்ளர் குடித்தார். டில்லியின் முஸ்லிம் மதத் தலைவர்கள் சிலருக்குப் பேட்டியளித்தார். தாம் மறு நாள் சேவா கிராமத்துக்குப் போகப் போவதாகவும், பிப்ரவரி 2-ஆம் தேதி யன்று அங்கே ஒரு மகாநாடு நடைபெறப் போகிறதென்றும், பிப்ரவரி 14-ஆம் தேதி தாம் திரும்பவும் டில்லிக்கு வரப்போவதாகவும் காந்திஜி அவர்களிடம் கூறினார். அப்பொழுது, கடவுள் வேறு விதமாக நினைத்தாலொழிய, எதிர்பாராத விதமாக ஏதாவது நடந்தாலொழிய, தாம் டில்லிக்கு வெளியே சில நாட்கள்தான் இருக்கப் போவதாகக் காந்திஜி சொன்னார்.

பிஷன் என்பவரை அழைத்து, “எனக்கு வந்துள்ள முக்கியமான கடிதங்களைக் கொண்டுவா; இன்று அவற்றிற்கு நான் பதில் எழுதியாக வேண்டும். நாளை நான் இல்லாமல் போனாலும் போகலாம்” என்றார்.

சுதிர்கோஷுடனும் பியாரிலாலுடனும் காந்திஜி பேசிக் கொண்டிருந்தார்.

2-15 மணிக்கு நித்திய வழக்கம் போல காந்திஜி பேட்டிகள் அளிக்கத் தொடங்கினார். அன்று காந்திஜியைப் பேட்டி கண்டவர்களில் இலங்கையைச் சேர்ந்த டாக்டர் டி-சில்வாவும் ஒருவர். அவருடன் அவருடைய மகளும் வந்திருந்தாள். பிப்ரவரி 14-ஆம் தேதி யன்று இலங்கை சுதந்திரம் பெறுவதால், அன்றைத் தினத்துக்குக் காந்திஜியிடம் விசேடச் செய்தி பெற்றுச் செல்ல டாக்டர் டி-சில்வா வந்திருந்தார். அவருடைய மகள் காந்திஜியிடம் கையெழுத்து வாங்கினாள். காந்திஜி போட்ட கடைசிக் கையெழுத்து அதுதான்.

3-மணிக்குப் பேராசிரியர் ராதாகுமுத முக்கர்ஜி வந்து காந்திஜிக்குத் தம்முடைய புத்தகம் ஒன்றை அன்பளிப்பாகக் கொடுத்தார். ஒரு பிரெஞ்சுப் போட்டோகிராபர், காந்திஜிக்குப் போட்டோப் படங்களின் தொகுப்பு ஒன்றை அன்பளிப்பாகக் கொடுத்தார். வேறு சிலரும் வந்து பேட்டி கண்டார்கள். 4-மணிக்குப் பேட்டிகள் முடிந்தன. அப்போது சர்தார் வல்லபபாய் பட்டேல் வந்தார். காந்திஜியும் அவரும் தனியே உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது பட்டேலின் மகள் மணிபென் பட்டேலும் உடன் இருந்தார். 4-30 மணிக்குக் காந்திஜிக்கு ஸ்ரீமதி ஆபா காந்தி மாலை உணவு எடுத்துச் சென்றார். காந்திஜி 12 அவுன்ஸ் ஆட்டுப்பால், 12 அவுன்ஸ் மரக்கறி சூப், 3 ஆரஞ்சுப் பழங்களின் ரசம், வேக வைத்தவையும் பச்சையானவையுமான காய்கறிகள் ஆகியவற்றைச் சாப்பிட்டார்.

மாலை 5 மணி ஆயிற்று. காந்திஜி அப்போது பிரார்த்தனை மேடையில் இருக்க வேண்டும். ஆனால், பட்டேல் தொடர்ந்து பேசிக்கொண்டிருந்ததால் 10 நிமிஷம் தாமதமாகி 5-10 மணிக்குக் காந்திஜி எழுந்து செருப்பை மாட்டிக்கொண்டு வெளியே வந்தார். பேத்திகளான மனுகாந்தி, ஆபாகாந்தி ஆகிய இருவரின் தோள்களிலும் சாய்ந்துகொண்டு காந்திஜி நடந்து வரும்போது, ஆபா காந்தியுடன் தமாஷாகப் பேசிக்கொண்டு வந்தார். 10 நிமிஷம் தாமதம் ஆகிவிட்டதால் வேகமாகவும் நடந்தார். சுமார் 500 பேர் பிரார்த்தனைக் கூட்டத்துக்கு வந்திருந்தார்கள். புல் தரையில் காந்திஜி நடந்து வரலானார். பிரார்த்தனைக் கூட்டத்துக்கு வந்திருந்த பலர் எழுந்து நின்றார்கள். காந்திஜிக்கு வழி விலகிக் கொடுத்தார்கள். எல்லோரும் வணங்கவே, காந்திஜியும் கைகுவித்து நமஸ்கரித்துக்கொண்டு வந்தார்.

திடீரென்று ஒருவன் இடது பக்கத்திலிருந்து கூட்டத்தை விலக்கிக்கொண்டு வந்தான். அவன் காந்திஜியை நோக்கி வருவதைப் பார்த்ததும், காந்திஜியின் பாதங்களைத் தொட்டு நமஸ்கரிக்கவே அவன் வருவதாக நினைத்து, மனுகாந்தி அவன் கையைப் பிடித்துத் தடுக்க முயன்றார். பாதங்களைத் தொட்டு வணங்குவது காந்திஜிக்குப் பிடிக்காத காரியம். அவன் மனு காந்தியை அப்பால் தள்ளிவிட்டான். அந்தப் பெண்மணியின் கையிலிருந்த காந்திஜியின் நோட்டுப் புத்தகம், ஜபமாலை, எச்சில் படிக்கம் ஆகியவை கீழே விழுந்துவிட்டன. அவற்றைப் பொறுக்கி எடுப்பதற்காக மனுகாந்தி குனிந்தார். அப்போது அவன் காந்திஜிக்கு எதிரே இரண்டு அடி தூரத்தில் வந்து நின்றுகொண்டு கைத் துப்பாக்கியால் மூன்று முறை சுட்டான். மூன்று குண்டுகளும் காந்திஜியின் மார்பில் பாய்ந்தன. இரண்டு ஊடுருவிச் சென்றுவிட்டன. ஒரு குண்டு அவருடைய இருதயத்துக்குள்ளேயே இருந்துவிட்டது.

முதல் குண்டு பாய்ந்ததும் காந்திஜியின் கால் தடுமாறியது. நமஸ்கரித்த கரங்கள் கீழே சரிந்தன. இரண்டாவது குண்டு பாய்ந்ததும், "ஹே, ராமா" என்று இரண்டு முறை சொன்னார். அவருடைய உடையில் ரத்தக் கறை படிந்தது. முகம் வெளுத்துவிட்டது. மூன்றாவது குண்டு பாய்ந்ததும் கீழே ஈர மண்ணிலும் புல்லிலும் விழுந்து அமரத்துவம் அடைந்தார். அப்போது மணி 5-17. அவருடைய மூக்குக் கண்ணாடி கீழே விழுந்தது; செருப்புக்கள் பாதங்களிலிருந்து நழுவின. ஐந்தாறு நிமிடங்களுக்குள் இவ்வளவும் நடந்துவிட்டன.

காந்திஜியின் சடலத்தைப் பிர்லா மாளிகைக்குள் எடுத்துச் சென்றார்கள்.

சில நிமிடங்களுக்கு முன் அங்கிருந்து சென்ற வல்லபபாய் பட்டேல் திரும்பவும் வந்து, காந்திஜியின் நாடியைத் தொட்டுப் பார்த்தார். இலேசாக நாடி துடிப்பது போன்ற ஒரு பிரமை அவருக்கு ஏற்பட்டது. சுடப்பட்டபின் பத்து நிமிட நேரத்துக்குள் டாக்டர் டி. பி. பார்க்கவா வந்து சேர்ந்தார். அவர் வந்து பரிசோதித்துப் பார்த்து, காந்திஜி உயிர்நீத்துப் பத்து நிமிஷங்கள் ஆகிவிட்டன என்று தெரிவித்தார். அப்புறம் டாக்டர் ஜீவராஜ மேத்தாவும் வந்து காந்திஜியின் மரணத்தை ஊர்ஜிதம் செய்தார். ஜவாஹர்லால் நேரு விரைந்து ஓடிவந்தார். காந்திஜியின் அருகில் முழந்தாளிட்டு, காந்திஜியின் ரத்தம் படிந்த ஆடையில் தமது முகத்தைப் புதைத்துக்கொண்டு நேரு அழுதார். அதன் பின் காந்திஜியின் புதல்வரான தேவதாஸ் காந்தியும், மௌலானா அபுல்கலாம் ஆஸாத்தும், மற்றப் பிரமுகர்களும் வந்து சேர்ந்தார்கள்.

வெளியே நின்ற மாபெரும் ஜனத்திரள் காந்திஜியைப் பார்க்க வேண்டுமென்று துடித்துக்கொண்டிருந்தது. அதற்காக

அறைக்கு வெளியே சில மேஜைகளை நெருக்கமாகப் போட்டு, அதன்மேல் காந்திஜி வழக்கமாகப் படுத்து உறங்கும் பலகையை வைத்தார்கள். அதில் காந்திஜியின் சடலம் கிடத்தப்பட்டிருந்தது. ஆனால், இந்த ஏற்பாடு திருப்திகரமாக இல்லாது போகவே, பிர்லா மாளிகையின் மாடி முகப்புக்குக் காந்திஜியின் சடலத்தைக் கொண்டுசென்று, எல்லோரும் தரிசிக்கக்கூடிய முறையில் வைத்தார்கள். துக்க சாகரத்தில் மூழ்கிய மக்கள் மகாத்மாவுக்குத் தங்கள் கடைசி அஞ்சலியைச் செலுத்தினார்கள்.

நள்ளிரவில் சடலம் திரும்பவும் கீழே கொண்டுவரப்பட்டது. 2 மணிக்கு அவருடைய சடலத்துக்கு நீராட்டப்பட்டது. அப்போது அப்புறப்படுத்தப்பட்ட அவருடைய கம்பளிப் போர்வையில் துப்பாக்கிக் குண்டுகள் பாய்ந்த மூன்று சிறு துவாரங்கள் இருந்தன. அவருடைய அரைஞாண் கயிற்றில் நூலினால் கட்டித் தொங்கவிடப்பட்டிருந்த கைக்குட்டை ரத்தத்தால் நனைந்திருந்தது. கம்பளிப் போர்வையில் மண்ணும் புல்லும் ஒட்டிக்கொண்டிருந்தன.

நீராட்டிய பின் சடலத்துக்குக் கதராடை கட்டி, கழுத்தில் கதர் நூல் மாலையும், ஜபமாலையும் சூட்டினார்கள். நெற்றியிலும், கழுத்திலும் மார்பிலும் சந்தனமும், குங்குமமும் இடப்பட்டன. சடலத்தைச் சுற்றி ரோஜா இதழ்களைத் தூவி, தலைமாட்டில் "ஹே, ராமா" என்ற எழுத்துக்களையும், கால்மாட்டில் "ஓம்" என்ற எழுத்தையும் பூவிதழ்களால் அடுக்கினர். இரவெல்லாம் நெய் விளக்கு எரிந்துகொண்டிருந்தது.

சடலத்தை எண்ணெயில் இட்டு நிரந்தரமாக வைத்திருப்பது என்ற யோசனையையும், சில நாட்களுக்காவது வைத்திருப்பது என்ற யோசனையையும் தேவதாஸ் காந்தியும், பியாரிலாலும் ஆட்சேபித்துவிட்டனர். மறுநாளே சடலத்தைத் தகனம் செய்துவிட முடிவு செய்யப்பட்டது.

காலை 3-30 மணிக்கு, சடலத்தைச் சுற்றி அமர்ந்து அழுதுகொண்டிருந்தவர்கள் பிரார்த்தனை செய்யத் தொடங்கினார்கள். எப்பொழுதும் காந்திஜி பிரார்த்தனைக்காகக் கண்விழித்து எழும் நேரம் அதுதான்.

பிரார்த்தனை முடிந்தது; கீதை வாசிக்கப்பட்டது. அதன்பின் சீக்கியர் மதக் கிரந்தமான கிரந்த சாஹிப் வாசிக்கப்பட்டது.

## மறு நாள்

காலை ஆறு மணி. பல நாடுகளையும் சேர்ந்த ஸ்தானீகர்கள் வந்து காந்திஜிக்கு இறுதி மரியாதை தெரிவித்தார்கள். சிறிது நேரத்திற்குப் பிறகு, மக்கள் தரிசிப்பதற்காகக் காந்திஜியின் சடலம் திரும்பவும் மாடி முகப்பில் கொண்டுபோய் வைக்கப்பட்டது.

11 மணிக்குக் காந்திஜியின் மூன்ருவது குமாரர் ராமதாஸ் காந்தி நாகபுரியிலிருந்து விமானத்தில் வந்து சேர்ந்தார்.

சடலத்தைக் கீழே கொண்டு வந்து, மூவர்ணக் கொடியால் போர்த்து, ராணுவப் பீரங்கி வண்டியில் வைத்தார்கள். முகம் மட்டும் திறந்து வைக்கப்பட்டிருந்தது. அந்த வண்டியில் நேரு, பட்டேல் முதலிய தலைவர்களும், காந்திஜியின் நெருங்கிய சகபாடிகளும் இருந்தார்கள். இந்திய ராணுவம், கடற்படை, விமானப்படை ஆகியவற்றைச் சேர்ந்த 200 பேர் நான்கு கனமான கயிறுகளைப் பிடித்து வண்டியை இழுத்துச் சென்ருர்கள். 11-45 மணிக்குக் காந்திஜியின் அந்திம யாத்திரை ஆரம்பமாயிற்று. 2 மைல் நீள ஊர்வலத்தில் 15 லட்சம் பேர் நடந்துசென்ருர்கள். "மகாத்மா காந்திக்கு ஜே!" "தேசப் பிதாவுக்கு ஜே!" என்ற கோஷங்கள் வானைப் பிளந்தன. இடையிடையே, "ரகுபதி ராகவ" கீதத்தை ஆயிரக்கணக்கானவர்கள் பாடிக்கொண்டு சென்ருர்கள். மூன்று டகோட்டா விமானங்கள் ஊர்வலத்துக்கு மேலாக ரோஜா இதழ்களைத் தூவிக்கொண்டு பறந்தன. வண்டியின் முன்னும் பின்னும் நாலாயிரம் சிப்பாய்களும், ஆயிரம் விமானப் படையினரும், ஆயிரம் போலீஸாரும், நூறு கடற்படையினரும் நடந்து சென்றனர்.

ஊர்வலம் 5½ மைல் தூரம் சென்று மாலை 4-20 மணிக்கு யமுனை நதிக்கரைக்கு அருகில் உள்ள ராஜகட்டத்தை அடைந்தது. சந்தனக் கட்டைகளால் ஆன சிதையில் காந்திஜியின் சடலம் வடபக்கம் தலையை வைத்துக் கிடத்தப்பட்டது. 4-15-க்கு ராமதாஸ் காந்தி கர்ப்பூரத்தைக் கொளுத்திச் சிதைக்குத் தீ மூட்டினர். கூட்டத்தினர் அழுதனர். சில நிமிஷங்களுக்குள் சந்தனக் கட்டைகள் கொழுந்துவிட்டு எரிந்தன. மகாத்மாவின் பூத உடம்பு சாம்பலாயிற்று.

சிதை பதினன்கு மணி நேரம் எரிந்த பின் நெருப்பு தணிந்தது. அதுவரை தொடர்ந்து பிரார்த்தனை செய்தார்கள். கீதை முழுவதும் வாசிக்கப்பட்டது. இருபத்தேழு மணி நேரத்துக்குப் பின், நெருப்பு முழுவதும் ஆறிய பின், சாம்பலையும் எலும்புத் துண்டுகளையும் சேகரித்து, ஒரு கதர்ப்பைக்குள் வைத்தனர். அஸ்தியில் ஒரு துப்பாக்கிக் குண்டு அகப்பட்டது. யமுனையின் தீர்த்தத்தை எலும்புகளின் மீது தெளித்தனர். அஸ்தியை ஒரு ஜாடியில் வைத்து ராமதாஸ் காந்தி பிர்லா மாளிகைக்குச் சுமந்து சென்ருர்.

## பதினன்காம் நாள்

பர்மா, திபேத், இலங்கை, மலாயா ஆகிய நாடுகளுக்கும் சிறிது அஸ்தி அனுப்பப்பட்டது. பதினன்காம் நாள் இந்தியாவின் புண்ணிய நதிகளிலும், சமுத்திர கட்டங்களிலும் அஸ்தி கரைக்கப்பட்டது.

கங்கை, யமுனை, சரஸ்வதி ஆகிய மூன்று நதிகளும் கலக்கும் திரிவேணி சங்கமத்தில் நேரு, பட்டேல், ஸ்ரீமதி சரோஜினி நாயுடு, ஆஸாத் ஆகியோர் முன்னிலையில் அஸ்தி கரைக்கப் பட்டது. உலக மகா புருடரின் பூத உடல் பரிபூரணமாக உலகி லிருந்து மறைந்தது.

உலகநாடுகள் காந்திஜியின் நினைவுக்கு அஞ்சலி செலுத்தின. ஐக்கிய நாடுகள் சபை துக்கம் தெரிவிப்பதற்காகத் தனது கொடியை அரைக் கம்பத்தில் பறக்கவிட்டது. வெளிநாடுகளி லிருந்து இந்திய சர்க்காருக்குத் துக்கம் தெரிவித்து 3441 செய்திகள் வந்தன.

## பொய்யா விளக்கு

காந்திஜி சுடப்பட்ட சிறிது நேரத்திற்கெல்லாம் வானொலி யில் பேசிய நேரு பின்வருமாறு கூறினர்:

“நம்முடைய வாழ்வின் விளக்கு அணைந்துவிட்டது. எங்கும் இருள் சூழ்ந்திருக்கிறது.........நம்முடைய அன்புக்குரிய தலைவர், பாபு என்று நாம் அழைத்த தேசப் பிதா இப்போது இல்லை..... இத்தனை வருடங்களாக நாம் அவரைப் பார்த்ததுபோல் இனி மேல் பார்க்க முடியாது. ஆலோசனையையோ, ஆறுதலையோ நாடி அவரிடம் இனி நாம் போவதற்கில்லை. எனக்குமட்டும் அல்ல, இந்நாட்டின் கோடிக்கணக்கான மக்களுக்கும் இது பயங்கர மான அடி. நானே, மற்ற யாருமோ, உங்களுக்குக் கூறக்கூடிய எந்தப் புத்திமதியினலும் இந்த அடியின் வேதனையை மட்டுப் படுத்த முடியாது.

“விளக்கு அணைந்துவிட்டது என்று சொன்னேன். அது தவறுதான். ஏனென்றல், இந்நாட்டில் சுடர்விட்டு எரிந்த இந்த விளக்கு சாதாரண விளக்கல்ல. பல ஆண்டுகளாக இந்நாட்டுக்கு ஒளியூட்டிய இந்த விளக்கு இன்னும் பல்லாண்டு காலத்துக்கு இந்நாட்டுக்கு ஒளியைப் பெய்துகொண்டிருக்கும். ஆயிரம் வரு டங்களுக்குப் பிறகும் இந்தத் தேசத்தில் இந்த விளக்கைக் காண் போம்; உலகம் இதைக் காணும். இவ் விளக்கு எண்ணற்ற இதயங்களுக்கு ஆறுதல் அளிக்கும். ஏனென்றல், இந்த விளக்கு உயிர் வாழும் உண்மைக்குப் பிரதிநிதியாக விளங்கியது.........”

இவ்வாறு நேரு பேசினர்.

கீதையின் எட்டாவது அத்தியாயத்தில், ஐந்தாவது சுலோகத்தில் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா கூறுகிறர்:

“கடைசி நிமிஷத்தில் என்னை மட்டுமே நினைவில் கொண்டு சரீரத்தை உதறுகிறவன், என்னுடன் ஐக்கியமாகிறன். அதில் யாதொரு சந்தேகமும் இல்லை.”

காந்திஜி பூத உடலைத் துறந்தபோது, “ஹே ராமா!” என்று ராமநாமத்தையே இரண்டு முறை உச்சரித்தார்.

காந்திஜியின் வாழ்க்கைக் குறிப்புகள் முற்றிற்று.

# சத்தியாக்கிரகப் போராட்டங்கள்

## 1. தென் ஆப்பிரிக்காவில்

முதல் கட்டம்:

செப்டம்பர் 11, 1906: ஜோகன்னஸ்பர்க்கில் ஆரம்பிக்கப்பட்டது.

தென் ஆப்பிரிக்காவில் குடியேறிய ஆசியாக்காரர்களின் உரிமைகளை மேலும் குறைக்கும் நோக்கத்துடன் ஆசியர் சட்டத் திருத்த அவசரச் சட்டம் *1906*, ஆகஸ்டு *22*-ஆம் தேதியன்று டிரான்ஸ்வால் சர்க்கார் விசேட கெஜட்டில் வெளியிடப்பட்டது. *1906*, செப்டம்பர் *11*-ஆம் தேதி ஜோகன்னஸ்பர்க்கில் இந்தியக் குடியேற்றக்காரர்களின் பிரதிநிதிகள் சுமார் *3,000* பேர் ஒன்று கூடி, மேற்படி மசோதா சட்டமாக நிறைவேற்றப்பட்டால் அதை அகிம்சா பூர்வமான வழிகளில் எதிர்த்துப் போராடுவதற்கு, "கடவுளைச் சாட்சியாக வைத்து" பிரதிக்ஞை செய்துகொண்டார்கள். சட்ட மறுப்பு இயக்கம் நடைபெற்றது. காந்திஜியோடு *200* பேருக்கு வெவ்வேறு கால அளவுகளில் சிறைவாசத் தண்டனை விதிக்கப்பட்டது. *1907*, ஜனவரி *30*-ஆம் தேதியன்று காந்திஜிக்கும் ஜெனரல் ஸ்மட்ஸுக்கும் இடையே உடன்படிக்கை ஏற்பட்டது.

இரண்டாவது கட்டம்:

ஆகஸ்டு 16, 1908: ஜோகன்னஸ்பர்க்கில் திரும்பவும் ஆரம்பிக்கப்பட்டது.

இந்தியர்கள் தாமாக முன்வந்து பதிவு செய்து கொண்டால் அவசரச் சட்டம் ரத்துச் செய்யப்படும் என்ற வாக்குறுதியை ஸ்மட்ஸ் காப்பாற்ற முடியவில்லை. *1908*, ஆகஸ்டு *16*-ஆம் தேதியன்று, ஜோகன்னஸ்பர்க்கில் நடத்திய ஒரு பொதுக் கூட்டத்தில் *2000* குடியேற்றப் பத்திரங்களைக் கொளுத்திச் சத்தியாக்கிரகம் தொடங்கப்பட்டது. சத்தியாக்கிரகிகளுக்குச் சிறைவாசமும், அபராதங்களும் விதிக்கப்பட்டன. அவர்கள் பல விதமாகக் கொடுமைப்படுத்தப்பட்டார்கள். சுரங்கப் பகுதிகளில் அதிக அளவில் சத்தியாக்கிரகிகளுக்குச் சவுக்கடி கொடுக்கப்பட்டது; அவர்கள்மீது துப்பாக்கிப் பிரயோகமும் செய்யப்பட்டது.

மூன்றாவது கட்டம்:

அக்டோபர் 28, 1913: நியூகாஸிலிலிருந்து வோல்க்ஸ்ரஸ்ட்டுக்கு யாத்திரை:

நேட்டால் மாகாணத்திலுள்ள நியூகாஸிலிலிருந்து டிரான்ஸ்வால் எல்லையைத் தாண்டிச் சென்ற மாபெரும் அணிவகுப்பு

யாத்திரைக்குக் காந்திஜி தலைமை தாங்கினர். 6000-க்கு மேற்பட்ட சுரங்கத் தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்தார்கள். நூற்றுக் கணக்கானவர்கள் சிறை சென்றார்கள். சர்க்காருக்கு முன்னறிவிப்புக் கொடுத்துவிட்டு, 2037 ஆடவரும் 127 பெண்டிரும், 75 குழந்தைகளும் டிரான்ஸ்வால் பிரதேசத்துக்குள் தங்கள் அணிவகுப்பு யாத்திரையைத் தொடங்கினர்கள், காந்திஜியும், யாத்திரைக் கோஷ்டியினரும் கைது செய்யப்பட்டார்கள். இடைக்கால உடன்படிக்கை செய்துகொள்ளப்பட்டது. காந்திஜி விடுதலை செய்யப்பட்டார். ஜெனரல் ஸ்மட்ஸுடன் கடிதப் போக்குவரத்து நடத்திய பின், 1914, ஜனவரி 21-இல் சத்தியாக்கிரகம் கடைசித் தடவையாக நிறுத்தி வைக்கப்பட்டது.

இந்தியர் நிவாரணச் சட்டம் 1914, ஜூலையில் சட்டமாயிற்று. அதன் மூலம் 3 பவுன் வரி ரத்தாயிற்று; இந்தியக் குடியேற்றக்காரர்களின் கோரிக்கைகள் அநேகமாக எல்லாமே நிறைவேற்றப்பட்டன.

## 2. இந்தியாவில்

**1. வீரம்காம், குஜராத், 1914 :**

கத்தியவாருக்குச் செல்லும் பிரயாணிகள் சுங்க வரித் தொல்லைகளால் கஷ்டத்துக்கு உள்ளானர்கள். இவ் விஷயத்தில் காந்திஜி தலையிட்டு, வைசிராய்க்குக் கடிதம் எழுதி, பிரயாணிகளின் கஷ்டங்களைத் தெரிவித்ததுடன், சத்தியாக்கிரகத்துக்குத் தயாராக இருக்கும்படியும் மக்களைக் கேட்டுக்கொண்டார். மத்திய சர்க்கார் சுங்க வரிகளை நீக்கியது. சத்தியாக்கிரகத்துக்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டு வந்ததன் காரணமாக, சர்க்கார் சீக்கிரமாக இவ்வாறு நடவடிக்கை எடுத்தது.

**2. சம்பாரண், பீகார், ஏப்ரல், 1917 :**

சம்பாரண் விவசாயிகள் தங்கள் நிலங்களில் இருபதில் மூன்று பங்குப் பகுதியில் அவுரியைப் பயிர் செய்யவேண்டும் என்று, ஐரோப்பிய அவுரித் தோட்ட முதலாளிகள் கட்டாயப்படுத்தினர்கள்; விவசாயிகளுக்கு அநேக தீர்வைகளையும் விதித்தார்கள். சம்பாரண் குடியானவர்களுடைய கஷ்டங்களைக் கண்டறிவதற்காகக் காந்திஜி அங்கே சென்றார். மோதிகாரி ஜில்லாவைவிட்டு வெளியேறிவிட வேண்டுமென்று 1917, ஏப்ரல் 17-ஆம் தேதி அவருக்கு உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. அதைக் காந்திஜி மீறினர். இதற்காக அவர் விசாரிக்கப்பட்டாலும், தண்டிக்கப்படவில்லை. நிலைமையை விசாரணை செய்வதற்குச் சர்க்கார் ஏற்பாடு செய்தது; ஆறு மாதங்களுக்குள் குடியானவர்களின் கஷ்டங்களை நீக்கியது.

**3. பம்பாய், மே, 1917 :**

இந்தியர் குடியேற்றச் சட்டத்தை எதிர்த்துச் சத்தியாக்கிரகம். பிரிட்டிஷ் காலனிகளில் கரும்புத் தோட்டங்களில் வேலை

செய்வதற்குத் தொழிலாளர்களைத் திரட்டி ஒப்பந்தம் செய்தார்கள். ஒப்பந்தத் தொழிலாளிகளை அனுப்புவதை ரத்துச் செய்வதற்கான கடைசி நாளாக, பம்பாயில் கூடிய கூட்டம் மே 31-ஆம் தேதியைக் குறிப்பிட்டது. வைசிராய்க்கு மாதர் தூது கோஷ்டியை அனுப்ப முடிவு செய்யப்பட்டது. தொழிலாளிகளை ஏற்றிச் செல்லும் கப்பல்களை மறியல் செய்யக் காந்திஜி தீர்மானித்தார். சாத்விக எதிர்ப்புப் போராட்ட அபாயத்தை உணர்ந்து வைசிராய் செம்ஸ்போர்டு, காந்திஜியை அழைத்தார். மேற்கொண்டு தொழிலாளிகளைக் குடியேற்றுவது யுத்த காலம் முழுவதற்கும் பூரணமாக நிறுத்தப்பட்டது. ஒப்பந்தக் கூலி முறை 1920, ஜனவரி முதல் தேதியன்று ஒழிக்கப்பட்டது.

**4. அகமதாபாத், குஜராத், பிப்ரவரி, 26, 1918 :**

சம்பள உயர்வுக் கோரிக்கையை அமல் செய்யவேண்டுமென்பதற்காகத் தொழிலாளிகளின் 22 நாள் வேலை நிறுத்தத்தைக் காந்திஜி நடத்தினர். வேலை நிறுத்தம் செய்வோரின் மன உறுதி தளருவதுபோலத் தோன்றவே, காந்திஜி உண்ணாவிரதம் இருக்கத் தொடங்கினர். மூன்று நாட்களுக்குள் திருப்திகரமான சமரசம் செய்துகொள்ளப்பட்டது. தொழிலாளிகள் சம்பளம், 1917, ஜூலை மாதம் வாங்கிய சம்பள விகிதத்திலிருந்து 35 சத விகிதம் உயர்த்தப்பட்டது.

**5. கேடா, குஜராத், மார்ச்சு. 1918 :**

விளைச்சல் இல்லாதுபோகவே நிலவரியை வஜா செய்ய வேண்டுமென்று குடியானவர்கள் கோரினர்கள். அதிகாரிகள் மறுத்துவிட்டார்கள். நிலவரி செலுத்த வேண்டாமென்று மக்களுக்குக் காந்திஜி கூறினர். மக்கள் மிகுந்த கஷ்டத்துக்கு உள்ளான பின்னர், கோரிக்கைக்குச் சர்க்கார் இணங்கியது.

**6. ரௌலட் எதிர்ப்புச் சட்ட சத்தியாக்கிரகம், ஏப்ரல் 6, 1919 :**

இது காந்திஜி நடத்திய முதலாவது அகில இந்தியப் போராட்டம். ராஜத்துவேஷக் குற்றம் போன்றவற்றிற்காக விசாரணை செய்யப்படும் அடிப்படைப் பிரஜா உரிமைகளைப் பறிக்கின்ற ரௌலட் சட்டம் அமலாவதை எதிர்த்து இந்தச் சத்தியாக்கிரகம் தொடங்கப்பட்டது. 1919, மார்ச்சு 23-ஆம் தேதியன்று சென்னையிலிருந்து காந்திஜி கட்டளைகள் பிறப்பித்தார். உண்ணாவிரதம், பிரார்த்தனை, ஹர்த்தால், ஆட்சேபக் கூட்டங்கள் ஆகியவற்றை நடத்தவேண்டுமென்றும், சத்தியாக்கிரகிகள் பத்திரிகைச் சட்டத்தையும், தடை செய்யப்பட்ட பிரசுரங்கள் சம்பந்தப்பட்ட சட்டத்தையும் மீற வேண்டுமென்றும் கூறப்பட்டது. இந்த நடவடிக்கைகளுக்காக ஏப்ரல் 6-ஆம் தேதி இலிருந்து 13-ஆம் தேதி வரை ஒரு வாரம் ஒதுக்கப்பட்டது. ஆறு இடங்களில் போலீஸ் துப்பாக்கிப் பிரயோகமும் ஜனங்களின் பலாத்காரச் செயல்களும் நிகழ்ந்தன. அமிர்தசரஸ் ஜாலி

யன்வாலா பாக்கில் நிராயுதபாணிகளான சுமார் 20,000 பேர் ஆட்சேபம் தெரிவிக்கும் கூட்டத்தில் திரண்டிருந்தார்கள். ஜெனரல் டயரின் தலைமையில் இருந்த ராணுவம் ஜனங்களை நோக்கிச் சுட்டது. சர்க்காரின் கணக்குப்படி கொல்லப்பட்டவர்கள் 400 பேர்; காயம் அடைந்தவர்கள் ஆயிரத்திலிருந்து இரண்டாயிரம் பேர் வரை.

1919, ஏப்ரல் 18-இல் காந்திஜி போராட்டத்தை நிறுத்தி வைத்தார். தீய சக்திகளைத் தாம் தவருகக் கணக்கிட்டு விட்டதாகவும், "ஹிமாலயத் தவறு" செய்துவிட்டதாகவும் காந்திஜி கூறினர். சத்தியாக்கிரகத்திலுள்ள நம்பிக்கையைத் திரும்பவும் ஊர்ஜிதம் செய்து, சத்தியாக்கிரகமானது பலாத்காரத்துக்குக் காரணகர்த்தா அல்ல என்பதையும், ஆனல் அது கட்டுப்பாட்டுக்குள் நிறுத்தும் சக்தி என்பதையும் வற்புறுத்திக் கூறினர்.

**7. அகிம்சாபூர்வமான ஒத்துழையாமை, ஆண்டு, 1, 1920:**

இது இரண்டாவது அகில இந்தியப் போராட்டம். பஞ்சாப் படுகொலையையும், கிலாபத்துக்கு இழைத்த தவறுகளையும் எதிர்க்கவும், சுயராஜ்யம் பெறுவதற்காகவும் இந்தப் போராட்டம் தொடங்கப்பெற்றது. காந்திஜியின் வேலைத் திட்டத்தை கிலாபத் கமிட்டி கடைப்பிடித்தது. காந்திஜி தமது 'கெய்ஸர்-இ-ஹிந்த்' பதக்கத்தை ஆகஸ்டு முதல் தேதியன்று வைசிராயிடம் திருப்பி ஒப்படைத்துவிட்டு, ஒத்துழையாமையைத் தொடங்கி வைத்தார்.

செப்டம்பர் 4-இல் கல்கத்தாவில் நடைபெற்ற விசேடக் காங்கிரஸில் ஒத்துழையாமையை மேற்கொள்ளத் தீர்மானிக்கப் பட்டது. இந்தப் போராட்டத்தின் முக்கிய அம்சங்களாவன: பட்டங்களையும், கௌரவப் பதவிகளையும் உதறுதல்; சர்க்கார்ப் பாடசாலைகள், கல்லூரிகள், நீதி மன்றங்கள், தேர்தல்கள், சட்ட சபைகள் ஆகியவற்றைப் பகிஷ்கரித்தல்; தேசீயப் பாடசாலைகளைத் தொடங்குதல்; பஞ்சாயத்துக்களை ஏற்படுத்தல்; காங்கிரஸ் அங்கத்தினர்களின் தொகையைப் பெருக்குதல்; கதரைப் பரப்புதல்; சுயராஜ்ய நிதி வசூலித்தல்.

1921-ஆம் வருட முடிவு வாக்கில் சுமார் 30,000 பேர் சிறையில் இருந்தனர். ஒத்துழையாமையின் சகல நடவடிக்கைகளோடு வரி கொடுக்க மறுக்கும் போராட்டத்தையும் பர்டோலித் தாலுக்காவில் 1922, பிப்ரவரியில் நடத்தக் காந்திஜி தீர்மானித்தார். இதற்கிடையில் சௌரி சௌராவில் பலாத்காரச் சம்பவம் நிகழ்ந்தது; காந்திஜி பர்டோலிப் போராட்டத் திட்டத்தைக் கைவிட்டார். மார்ச்சு 10-ஆம் தேதி கைது செய்யப்பட்டு, 18-ஆம் தேதியன்று 6 வருடச் சிறைவாசத் தண்டனை விதிக்கப் பட்டார். 1922, நவம்பரில் ஒத்துழையாமைப் போர் நிறுத்தி வைக்கப்பட்டது. சட்டசபைப் பிரவேசத்துக்கு ஆதரவு கிடைக்க ஆரம்பித்தது. பொதுமக்களிடையே பிரமாதமான முறையில் விழிப்பு ஏற்பட்டது.

8. வைக்கம், திருவாங்கூர், 1924:

திருவாங்கூர் சமஸ்தானத்தில் வைக்கம் என்ற ஊரிலுள்ள ஒரு பொதுச்சாலையில் நடந்து செல்லத் தீண்டாதார் அனுமதிக்கப்படவில்லை. தீண்டாதாருடன் சேர்ந்து சாலையில் நடக்க முயற்சி செய்வதன் மூலம் தொண்டர்கள் சத்தியாக்கிரகத்தைத் தொடங்கினார்கள். சமஸ்தான அரசாங்கம் போலீஸ் உதவியுடன் வைதிக சமூகத்தினருக்கு ஆதரவளித்தது. சாலைக்குக் குறுக்கே தடுப்புகள் நிறுத்தப்பட்டு, போலீஸாரும் நிறுத்தப்பட்டனர். தடுப்புக்களுக்கு எதிராகத் தொண்டர்கள் மனத்துக்குள் பிரார்த்தனை செய்துகொண்டு நிற்க வேண்டுமெனக் காந்திஜி கூறினார். முடிவில் அரசாங்கம் தன் ஆதரவை வாபஸ் பெற்றது; வைதிக சமூகமும் விட்டுக்கொடுத்தது. 1936-இல் திருவாங்கூர் மகாராஜா சமஸ்தானத்தில் உள்ள எல்லாக் கோயில்களையும், தீண்டாதார் உட்படச் சகல ஹிந்துக்களுக்கும் திறந்துவிட்டார்.

9. சென்னை, ஆகஸ்டு, 1927:

சென்னையில் சில காங்கிரஸ்காரர்கள் சேர்ந்து நீல் சிலையை அப்புறப்படுத்த வேண்டுமென்று கோரிச் சத்தியாக்கிரகத்தை ஆரம்பித்தார்கள். நீல், 1857-ஆம் வருடச் சுதந்திரப் போராட்டத்துடன் சம்பந்தப்பட்ட ஒரு பிரிட்டிஷ் ஜெனரல். இந்தச் சத்தியாக்கிரகத்தை ஆதரித்துக் காந்திஜி "எங் இந்தியா" பத்திரிகையில் எழுதினார். சிறிது காலத்துக்குப் பிறகு சத்தியாக்கிரகம் நிறுத்தப்பட்டது. 1937-இல் காங்கிரஸ் மந்திரி சபை, நீல் சிலையை அப்புறப்படுத்திக் கண்காட்சிச் சாலையின் ஒரு மூலையில் கொண்டுபோய் வைத்தது.

10. பர்டோலி, குஜராத், பிப்ரவரி, 12, 1928:

பர்டோலித் தாலுகாவில் மறு செட்டில்மென்ட் அதிகாரிகளால் நிலவரி உயர்த்தப்பட்டதை எதிர்த்து வரிகொடா இயக்கம் ஆரம்பிக்கப்பட்டு 6 மாதங்களுக்கு மேல் நடைபெற்றது. குடியானவர்கள் மிகுந்த கஷ்டத்துக்கு உள்ளானார்கள். ஜப்திகள், பறிமுதல், கைதுகள் ஆகியவையெல்லாம் நடந்தன. நிலைமையை விசாரணை செய்யச் சர்க்கார் உத்தரவிட்டது. குடியானவர்கள் கூறியதுதான் நியாயம் என்றும், நிலவரியில் 22 சதவிகிதம் உயர்த்தியது "அசல் கொள்ளை" என்றும் புரூம்பீல்டு கமிட்டி அறிக்கை சமர்ப்பித்தது.

11. சட்ட மறுப்பு, மார்ச்சு 12, 1930:

மூன்றாவது அகில இந்திய சத்தியாக்கிரகப் போராட்டம். 1929, டிசம்பரில், பூரண சுதந்திரமே தனது லட்சியம் என்று காங்கிரஸ் பிரகடனம் செய்தது. 1930, ஜனவரி 26-ஆம் தேதி இந்தியா முழுவதிலும் சுதந்திர தினமாக அனுஷ்டிக்கப்பட்டது. சுயராஜ்யத்துக்காகப் போராட வேண்டுமென்று அனை

வரும் பிரதிக்ஞை செய்தனர். மார்ச்சு 12-ஆம் தேதி காந்திஜி அகமதாபாத்திலிருந்து தண்டிக்குச் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த 200 மைல் யாத்திரையை ஆரம்பித்தார். ஏப்ரல் 6-ஆம் தேதியன்று உப்புச் சட்டத்தை மீறுவதென்று தீர்மானிக்கப் பட்டது. லட்சக்கணக்கானவர்கள் சட்டத்தை மீறினர்கள்; சிறை சென்றூர்கள். தரஸ்ஞ, வாடலா, ஷிரோடா, ஸானேகட்டா ஆகிய இடங்களில் உப்புக் கிடங்குகள் முற்றுகையிடப்பட்டன. போலீஸார் தடியடிப் பிரயோகம் செய்தார்கள். தரஸ்ஞவில் 280 தொண்டர்கள் காயம் அடைந்தார்கள். மற்றச் சட்டங்களும் மீறப்பட்டன. 1931, மார்ச்சு மாத வாக்கில் 95,000 பேருக்கு மேல் சிறையில் தள்ளப்பட்டனர். ஆயிரக் கணக்கானவர்கள் தடியடிகளை அனுபவித்தார்கள். சில இடங்களில் துப்பாக்கிப் பிரயோகங்களும் நடைபெற்றன. சில பகுதிகளில் வரிகொடா இயக்கம் நடந்தது. மே மாதத்தில் காந்திஜி சிறைவைக்கப்பட்டார்.

சுமார் ஒரு மாதப் பேச்சு வார்த்தைகளுக்குப் பின் காந்தி—இர்வின் ஒப்பந்தம் 1931, மார்ச்சு 5-ஆம் தேதி கையெழுத்தாயிற்று. அவசரச் சட்டங்கள் வாபஸ் பெறப்பட்டன; உப்புச் சட்டம் தளர்த்தப்பட்டது. அதன் மூலம் ஏழை மக்கள் யாதொரு தடையுமின்றி உப்பு எடுத்துக்கொள்ள வழி பிறந்தது.

**12. சிர்ஸி, சித்தாப்பூர், ஹிரேகேரூர், மார்ச் 1931 :**

பயிர் விளைச்சல் இல்லாமல் போய்விடவே நிலவரியை வஜா செய்ய வேண்டுமென்று கர்னடகத்தின் மூன்று தாலுக்காக்களைச் சேர்ந்த குடியானவர்கள் சர்க்காரைக் கேட்டுக்கொண்டார்கள். அது அரசியல் நோக்கத்துடன் விடுக்கப்படும் கோரிக்கை என்று சர்க்கார் அதற்கு இணங்க மறுத்துவிட்டது. அது சட்ட மறுப்பு நடைபெற்று வந்த காலம். குடியானவர்கள் வரிகொடா இயக்கத்தை ஆரம்பித்தார்கள். அவர்களுடைய சொத்துக்கள் ஜப்தி செய்யப்பட்டன; பறிமுதல் செய்யப்பட்டன; அவர்கள் வேறு பல கஷ்டங்களுக்கும் உள்ளானர்கள். ஆனலும், குடியானவர்கள் உறுதி தளராமல் இருந்தார்கள். காந்தி—இர்வின் உடன்படிக்கைக்குப் பிறகும் போராட்டம் தொடர்ந்து நடைபெற்றது. அதற்குக் காந்திஜி தார்மிக ஆதரவு அளித்தார். சில சலுகைகளை அளிக்க 1931, மே மாதத்தில் அதிகாரிகள் இணங்கினர்கள். ஜப்தி செய்யப்பட்ட சொத்துக்கள் திருப்பியளிக்கப் பட்டன; பறிமுதல் உத்தரவுகள் வாபஸ் பெறப்பட்டன. கைதானவர்கள் விடுவிக்கப்பட்டார்கள். நடைபெற்றுவந்த வழக்குகள் ரத்துச் செய்யப்பட்டன. நவம்பரில் சிர்ஸிக்கும் சித்தாப்பூருக்கும் மேற்கொண்டும் சலுகைகள் வழங்கப்பட்டன.

**13. சட்ட மறுப்பு, டிசம்பர் 31, 1931 :**

**1931**, டிசம்பர் 28-ஆம் தேதி காந்திஜி வட்டமேஜை மகாநாட்டிலிருந்து இந்தியாவுக்குத் திரும்பி வந்தார். அந்தச் சமயத்

தில் ஐக்கிய மாகாணங்களிலும், எல்லைப்புற மாகாணத்திலும் அவசரச் சட்டங்கள் பிறப்பிக்கப்பட்டு, ஜவாஹர்லால் நேருவும், கான் அப்துல் கபார்கானும் கைதுசெய்யப்பட்டார்கள். அவசரச் சட்டங்களைப் பற்றியும், கைதுகளைப் பற்றியும் காந்திஜியுடன் கலந்து பேசுவதற்கு வைசிராய் மறுத்துவிட்டார். ஆகவே, டிசம்பர் 31-ஆம் தேதியிலிருந்து திரும்பவும் சட்ட மறுப்பைத் தொடங்குவதாகக் காங்கிரஸ் அறிவிக்கும் நிலை ஏற்பட்டது. வைசிராயுடன் பேசுவதற்குக் காந்திஜி மறுபடியும் முயற்சி செய்தார். ஆனால், வில்லிங்டன் பேட்டி கொடுக்க மறுத்துவிட்டார். 1932, ஜனவரி 4-ஆம் தேதி காந்திஜியும், வல்லபபாய் பட்டேலும் கைதாயினர். அவசரச் சட்டங்கள் பிறப்பிக்கப்பட்டன. காங்கிரஸ் கமிட்டிகளும், அநேக தேசீயப் பாடசாலைகளும், கிஸான் சபைகளும் சட்ட விரோதமானவை என்று பிரகடனம் செய்யப்பட்டன. ஆயிரக்கணக்கான காங்கிரஸ் ஊழியர்கள் பாதுகாவலில் வைக்கப்பட்டார்கள் அல்லது சிறைவாசத் தண்டனை விதிக்கப்பட்டார்கள். ஆயிரக் கணக்கானவர்கள் சட்டங்களை மீறினார்கள். அந்நியத் துணிகள், அந்நிய வர்த்தக நிலையங்கள் ஆகியவற்றைப் பகிஷ்காரம் செய்வது மேலும் கடுமையாக்கப்பட்டது. குஜராத், கர்னாடகம், வங்காளம் ஆகிய இடங்களில் வரிகொடா இயக்கம் தொடங்கப்பட்டது. 1932, செப்டம்பரில் காந்திஜியின் ஹரிஜன உண்ணாவிரதம். 1932-ஆம் வருடக் கடைசியில் ஒரு லட்சம் பேர் சிறையில் இருந்தனர். பிஷாவரிலும், மற்ற இடங்களிலும் துப்பாக்கிப் பிரயோகம். 1933, மே மாதத்தில் பொதுஜனச் சட்ட மறுப்பு நிறுத்தப்பட்டு, தனி நபர் சட்டமறுப்பு ஆரம்பிக்கப்பட்டது. இது 1934 ஜூலை வரையில் தொடர்ந்து நடந்தது. ஜூலையில் காந்திஜியின் ஆலோசனைக்கு இணங்க அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி, சட்ட மறுப்பு இயக்கத்தை நிறுத்தியது.

### 14. தனிநபர் சத்தியாக்கிரகம், அக்டோபர், 1940 :

**பேச்சுச்** சுதந்திரம் என்ற பிரச்னையின் மீது இந்தச் சத்தியாக்கிரகம் நடந்தது. யுத்தத்தைப் பற்றி ஒருவர் தமது அபிப்பிராயத்தைச் சொல்லவும், பிரசாரம் செய்யவும் உரிமை இருக்க வேண்டுமென்று காந்திஜி கூறினார். ஆனால், சர்க்கார் அதற்கு இணங்க மறுத்தது. பகிரங்கமாக யுத்த எதிர்ப்புப் பிரசாரம் செய்ய, முதல் சத்தியாக்கிரகியாக வினோபாபாவேயைக் காந்திஜி தேர்ந்தெடுத்தார். வினோபா கைது செய்யப்பட்டுத் தண்டிக்கப்பட்டார். சர்க்காருக்கு முன் அறிவிப்புக் கொடுத்து விட்டுச் சுமார் 30,000 பேர் சத்தியாக்கிரகத்தில் பங்கெடுத்துக் கொண்டார்கள். அவர்களுக்குத் தண்டனை அல்லது பாதுகாவல் சிறைவிதிக்கப்பட்டது. மாகாண சட்டசபைகளிலிருந்து சுமார் 400 பேரும், மத்திய சட்டசபையிலிருந்து சுமார் 30 பேரும், காரியக் கமிட்டி அங்கத்தினர்கள் அனைவரும் இந்தச் சத்தியாக்கிரகத்தில் பங்கெடுத்துக்கொண்டார்கள். இது, "பிரதிநிதித்துவ சத்தியாக்

கிரகம்.'' காந்திஜி மட்டும் கைது செய்யப்படவில்லை. *1941*–இல் எல்லாத் தனி நபர்ச் சத்தியாக்கிரகிகளையும் ஒரு சமிக்ஞையாகச் சர்க்கார் விடுதலை செய்தது. காங்கிரஸ் திரும்பவும் போராட்டத்தை ஆரம்பிக்கவில்லை. இந்தியாவின் எல்லையை ஜப்பான் நெருங்கிவிட்டதால், சுயதேவைப் பூர்த்தி, தற்காப்பு என்ற பிரச்னைகளில் காங்கிரஸ் கவனம் செலுத்தியது.

**15. ''இந்தியாவைவிட்டு வெளியேறு'' போராட்டம், ஆகஸ்டு, 1942:**

கிரிப்ஸின் பேச்சுவார்த்தைகள் தோற்றபிறகு, இந்தியாவை விட்டுப் பிரிட்டிஷ் சர்க்கார் வெளியேற வேண்டுமென்ற போராட்டத்தைக் காந்திஜி ஆரம்பித்தார். இந்தியாவின் சுதந்திரத்தை அங்கீகரிக்கவும், ஆட்சி அதிகாரத்தைக் கைவிடவும் பிரிட்டிஷ் சர்க்கார் மறுத்துவிட்டது. சுதந்திரம் பெறுவதற்காகக் காந்திஜியின் தலைமையில் பொதுஜன அகிம்சைப் போராட்டத்தை ஆரம்பிப்பதைத் தவிர இந்தியாவுக்கு வேறு வழியில்லை என்று *1942* ஆகஸ்டு மாதம் *8*-ஆம் தேதியில் பம்பாயில் கூடிய அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி அறிவித்தது. தீர்மானம் நிறைவேற்றப்பட்டபின், இயக்கத்தைத் தொடங்குவதற்கு முன்பாகத் தாம் வைசிராய்க்குக் கடிதம் எழுதப் போவதாகக் காந்திஜி கூறினர். ஆனல், சர்க்கார் காத்திருக்கவில்லை. ஆகஸ்டு மாதம் *9*-ஆம் தேதி காலையில் காந்திஜியையும், காரியக் கமிட்டி அங்கத்தினர்களையும், ஆயிரக்கணக்கான காங்கிரஸ்காரர்களையும் கைது செய்து பாதுகாவலில் வைத்தது. அவசரச் சட்டங்கள் பிறப்பிக்கப்பட்டன ; காங்கிரஸ் கமிட்டிகள் சட்டவிரோதமானவை என்று பிரகடனம் செய்யப்பட்டன.

# காந்திஜியின் உண்ணாவிரதங்கள்

**1913, போனிக்ஸ் :**

இந்தக் குடியிருப்பில் இருந்த ஒருவரின் ஒழுக்கத் தவறுக்குப் பிராயச்சித்தமாக ஒரு வாரம் உண்ணாவிரதம் இருந்தார். அடுத்த நாலரை மாதங்களுக்குத் தினமும் ஒரு வேளை ஆகாரம் மட்டுமே சாப்பிட்டு வந்தார்

**1914, போனிக்ஸ் :**

மேலே கூறப்பட்டது போன்ற காரணங்களுக்காகப் பதினான்கு நாட்கள் உண்ணாவிரதம் இருந்தார்.

**1918, மார்ச் 12, அகமதாபாத் :**

அகமதாபாத் வேலைநிறுத்தக்காரர்களின் பலவீனத்தைக் கண்டு காந்திஜி கூறியதாவது: "வேலை நிறுத்தக்காரர்கள் ஒன்று திரண்டு, ஓர் உடன்பாடு ஏற்படும் வரையில் வேலை நிறுத்தத்தைத் தொடர்ந்து நடத்தாவிட்டாலும், அல்லது வேலைக்குச் சென்றுவிட்டவர்கள் இனிப் போகாமலிருக்கும் வரையிலும் நான் எந்த உணவையும் தொடமாட்டேன்." மூன்று நாள் உண்ணாவிரதத்துக்குப் பிறகு உடன்பாடு ஏற்பட்டது.

**1919, ஏப்ரல் 13, சாபர்மதி :**

நதியாத்தில் தண்டவாளங்களைப் பெயர்க்க முயற்சி செய்யப்பட்டபோது, பிராயச்சித்தமாக மூன்று நாள் உண்ணாவிரதம் இருந்தார். இதே போல் ஒரு நாள் பிராயச்சித்த உண்ணாவிரதம் இருக்கும்படியாக மக்களைக் கேட்டுக்கொண்டார். பலாத்காரக் குற்றம் செய்தவர்களைக் குற்றத்தை ஒப்புக்கொள்ளும்படியாகச் சொன்னார்.

**1921, நவம்பர் 9–13, பம்பாய் :**

வேல்ஸ் இளவரசர் விஜயத்தின்போது ஏற்பட்ட கலகத்தைத் தொடர்ந்து ஐந்து நாட்கள் உண்ணாவிரதம்.

**1922, பிப்ரவரி, இரண்டாவது வாரம், பர்டோலி :**

சௌரி சௌரா சம்பவத்திற்காக ஐந்து நாட்கள் உண்ணாவிரதம்.

**1924, செப்டம்பர் 18, டில்லி :**

கோஹட்டில் ஹிந்து-முஸ்லிம் கலகங்கள் ஏற்பட்டதற்காக 21 நாட்கள் உண்ணாவிரதம்.

**1925, நவம்பர் 24, சாபர்மதி :**

ஆசிரமவாசிகளிடையில் தவறைக் கண்டு விடவே ஏழு நாட்கள் உண்ணுவிரதம்.

**1932, செப்டம்பர் 20, மத்தியானம், எராவ்டா சிறைச்சாலே :**

மெக்டானல்டின் வகுப்புத் தீர்ப்பை எதிர்த்து, "உப்பும் சோடாவும் கலந்தோ கலக்காமலோ தண்ணீர் குடிப்பதைத் தவிர எவ்விதமான உணவையும் உட்கொள்ளாமல் சாகும்வரை உண்ணுவிரதம்" இருக்கத் தொடங்கினர். செப்டம்பர் 26-ஆம் தேதி மாலே 5 மணிக்கு அவரிடம் கொடுக்கப்பட்ட சர்க்கார் அறிக்கையொன்று அவருக்குத் திருப்தியளிக்கவே, உண்ணு விரதம் நிறுத்தப்பட்டது.

**1932, டிசம்பர் 22, எராவ்டா சிறை :**

அப்பா சாகிப் பட்டவர்த்தன், தாம் கேட்டுக்கொண்டபடி சிறையில் தமக்குத் தோட்டி வேலே கொடுக்க அதிகாரிகள் மறுத்ததற்காக உண்ணுவிரதம் இருக்கத் தொடங்கியதற்கு அனு தாபம் காட்டும் முறையில் காந்திஜி உண்ணுவிரதம் இருந்தார். இரண்டு நாட்களுக்குள் உறுதிமொழி யளிக்கப்படவே உண்ணு விரதம் நிறுத்தப்பட்டது.

**1933, மே 8, எராவ்டா சிறை :**

ஆன்ம பரிசுத்தத்திற்காக 21 நாள் உண்ணுவிரதம். "ஹரிஜனப் பணி சம்பந்தமாக மேலும் அதிகக் கவனமும் சிரத்தையும் ஏற்படுவதற்காக நானும் என் சகாக்களும் தூய்மை பெறுவதற்கு உள்ளத்தால் செய்யும் பிரார்த்தனே" என்று இந்த உண்ணுவிரதத்துக்குக் காந்திஜி விளக்கம் கொடுத்தார். உண்ணுவிரதம் தொடங்கிய தினத்தன்றே காந்திஜியைச் சர்க்கார் விடுதலே செய்தது. மே 29-ஆம் தேதி புனுவிலுள்ள "பர்ணகுடி"யில் உண்ணுவிரதம் முற்றுப்பெற்றது.

**1933, ஆகஸ்டு 16, எராவ்டா சிறை :**

மே மாதத்தில் விடுதலே செய்யப்படுவதற்கு முன் அளித்த வசதிகளே இப்போது காந்திஜிக்கு அளிக்க மறுத்தனர். அவர் சிறைக்குள்ளிருந்து ஹரிஜன வேலே செய்ய அனுமதிக்கவில்லே. ஆகவே உண்ணுவிரதம் இருக்கத் தொடங்கினர். ஆகஸ்டு 20-இல் அவரை ஸாஸூன் ஆஸ்பத்திரிக்குக் கொண்டு சென்ருர்கள். அவர் கைதியாகவே இருந்தார். ஆகஸ்டு 23-இல் நிலேமை மோசமாயிற்று. நிபந்தனேயின்றி காந்திஜி விடுதலே செய்யப்பட்டார்.

**1934 ஜுலே :**

ஹரிஜன இயக்கத்துக்கு எதிரான ஒருவரைச் சீர்திருத் தக்காரர் ஒருவர் கோபத்துடன் தடிக்கம்பால் அடித்துவிட்டார்.

மாறுபட்ட கருத்துக்களை உடையவர்கள் பரஸ்பரம் சகிப்புத் தன்மையுடன் நடந்துகொள்ளாததற்குப் பிராயச்சித்தமாகக் காந்திஜி 7 நாள் உண்ணுவிரதம் இருந்தார்.

**1939, மார்ச்சு 3, மத்தியானம், ராஜ்கோட்:**

மக்களோடு செய்துகொண்ட புனிதமான உடன்படிக்கையை மீறியதாக ராஜ்கோட் சமஸ்தானுதிபதி மீது காந்திஜி குற்றம் சாட்டினர். உண்ணுவிரதம் இருந்தார். விவகாரத்தை இந்தியாவின் தலைமை நீதிபதி ஸர் மாரிஸ் குவையரிடம் மத்தியஸ்தத் தீர்ப்புக்கு விடலாம் என்று, சமஸ்தானுதிபதியின் சம்மதத்துடன் வைசிராய் யோசனை கூறினர். மார்ச்சு 7-ஆம் தேதி பிற்பகல் 2-20 மணிக்கு உண்ணுவிரதம் நிறுத்தப்பட்டது.

**1943, பிப்ரவரி 10, மத்தியானம், ஆகாகான் மாளிகை:**

உண்ணுவிரதத்துக்கு முன், வைசிராய்க்கும் பாதுகாப்பில் வைக்கப்பட்டிருந்த காந்திஜிக்கும் இடையே கடிதப் போக்குவரத்து நடைபெற்றது. 1942, ஆகஸ்டு மாதத்தில் காந்திஜி முதலிய தலைவர்கள் கைது செய்யப்பட்டபின் நாட்டில் நடந்த பலாத்காரச் சம்பவங்களுக்குக் காங்கிரஸையும் அதன் தலைவர்களையும் வைசிராய் குற்றம் சாட்டினர். இதைக் காந்திஜி மறுத்துத் திடீரென்று தலைவர்களைக் கைதுசெய்து, நெருக்கடியை உண்டு பண்ணிய சர்க்கார்தான் பலாத்காரச் சம்பவங்களுக்குப் பொறுப்பாளி என்று கூறினர். இதை வைசிராய் மறுத்தார். சர்க்காரிலிருந்து கடவுள் வரை நீதி கோரிக் காந்திஜி மூன்று வார உண்ணுவிரதம் இருந்தார்.

**1947, செப்டம்பர் 1, கல்கத்தா:**

ஹிந்து-முஸ்லிம் கலகங்களை நிறுத்துவதற்காகச் செப்டம்பர் முதல் தேதி இரவு 8-15 மணிக்குக் காந்திஜி உண்ணுவிரதம் இருக்கத் தொடங்கினர். "இரண்டு நாட்களுக்கு முன்பு இருந்ததுபோல் நிலைமை மாறிவிட்டால் நான் என் உண்ணுவிரதத்தை நிறுத்துவேன். அதற்கு முன் நிறுத்தப்போவதில்லை" என்று காந்திஜி தெரிவித்தார். 4-ஆம் தேதி கலகங்கள் தணிந்துவிட்டன. கடந்த 24 மணி நேரத்துக்குள் யாதொரு சம்பவமும் நிகழவில்லை என்று சர்க்காரும், தனிப்பட்டவர்களும் காந்திஜிக்குத் தெரிவித்தார்கள். கல்கத்தாவில் பாதிக்கப்பட்ட பகுதிகளில் ஹிந்துக்களும் முஸ்லிம்களும் சேர்ந்து ஊர்வலம் நடத்தினர்கள். இரு சமூகங்களையும் சேர்ந்த தலைவர்கள் மேற்கொண்டும் வகுப்புக் கலகங்கள் நேராமல் தடுப்பதாக எழுத்து மூலம் வாக்குறுதியளித்தார்கள். செப்டம்பர் 4-ஆம் தேதி இரவு 9-14 மணிக்குக் காந்திஜி உண்ணுவிரதத்தை நிறுத்தினர். இந்த விரதம் 73 மணி நேரம் நீடித்தது.

**1947, நவம்பர் 6, கல்கத்தா :**

பீகார் கலகங்களின் காரணமாக ஆகாரத்தைக் குறைத்து உட்கொள்ளத் தொடங்கினர். அப்புறம் பீகாருக்குப் புறப் பட்டுச் சென்றார்.

**1948, ஜனவரி 13, டில்லி :**

வகுப்புக் கலகங்களால் பாதிக்கப்பட்டிருந்த டில்லியில், எல்லாச் சமூகங்களுக்கிடையேயும் மன ஒற்றுமை ஏற்படு வதற்காகக் கால வரையறையின்றி ஜனவரி 13-ஆம் தேதி காலை 11 மணிக்கு உண்ணுவிரதம் இருக்கத் தொடங்கினர். 15-ஆம் தேதி மிகவும் பலவீனம் அடைந்து விட்டார். நிலைமை கவலை யளிப்பதாகவும் இருந்தது. டில்லியிலும் மற்ற இடங்களிலும் சமா தானக் கூட்டங்கள் நடந்தன. வகுப்பு ஒற்றுமையை நிலைநாட்டி காந்திஜியின் உயிரைக் காக்கும்படி நேருஜி நாட்டு மக்களைக் கேட்டுக்கொண்டார்.

டாக்டர் ராஜேந்திரப் பிரசாத்தின் தலைமையில் எல்லா ஸ்தாபனங்களின் தலைவர்களும், காந்திஜியின் நிபந்தனைகளுக்கு இணங்கச் சமூக நல்லுறவுக்கான ஏழு அம்ச வாக்குறுதி ஒன்றில் கையெழுத்திட்டுக் கொடுத்தபின் காந்திஜி ஜனவரி 18-ஆம் தேதி பகல் 12-45 மணிக்கு உண்ணுவிரதத்தை நிறுத்தினர்.

# காந்திஜியின் சிறை வாசங்கள்

1. தென் ஆப்பிரிக்காவில்

| | | |
|---|---|---|
| ஜனவரி 10, 1908 | ஜோகன்னஸ்பர்க் | இரண்டு மாத வெறுங்காவல் சிறைவாசத் தண்டனை. 1908 ஜனவரி 30-ஆம் தேதி விடுதலை செய்யப்பட்டார். |
| அக்டோபர் 15, 1908 | வோல்க்ஸ்ரஸ்டிலும் பிரிட்டோரியாவிலும் | வெவ்வேறு சிறைச்சாலைகளில் சுமார் இரண்டு மாதங்கள். |
| நவம்பர் 6, 1913 | பாம்போர்டு | கைது செய்யப்பட்டு ஜாமீனில் விடுவிக்கப்பட்டார். |
| நவம்பர் 8, 1913 | ஸ்டாண்டர்ட்டன் | கைது செய்யப்பட்டு ஜாமீனில் விடுவிக்கப்பட்டார். |
| நவம்பர் 9, 1913 | டீக்வொர்த் | கைது செய்யப்பட்டு விசாரணைக்காக டண்டிக்குக் கொண்டு போகப்பட்டார். |
| நவம்பர் 11, 1913 | டண்டி | ஒன்பது மாதக் கடுங்காவல் சிறைவாசத் தண்டனை. |
| நவம்பர் 17, 1913 | வோல்க்ஸ்ரஸ்ட் | மூன்று மாதக்கடுங்காவல் சிறைவாசத் தண்டனை; சில நாட்கள் சிறையில் வைக்கப்பட்டிருந்தார். |
| நவம்பர், 1913 | புளூம்பான்டீன் | வோல்க்ஸ்ரஸ்டிலிருந்து மாற்றப்பட்டார். 1913, டிசம்பர் 18-ஆம் தேதி விடுதலை செய்யப்பட்டார். |

1908, ஜனவரி 10-ஆம் தேதி ஜோகன்னஸ்பர்க்கில் முதல் சிறைவாசம். டிரான்ஸ்வாலை விட்டு வெளியேற வேண்டும் என்ற உத்தரவை மீறியதற்காக இரண்டு மாத வெறுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டார். சிறைச்சாலை உடையில் ஜோகன்னஸ்பர்க் கோட்டைக்குக் கொண்டுபோகப்பட்டு, நீக்ரோக்களுடனும் சாதாரணக் குற்றச் சட்டப்படி குற்றவாளிகளானவர்களுடனும் ஓர் அறையில் அடைக்கப்பட்டார். அவருக்கும் ஜெனரல் ஸ்மட்ஸுக்கும் இடையே ஏற்பட்ட உடன்படிக்கையின் பலனாக 1908, ஜனவரி 30-ஆம் தேதி விடுதலை செய்யப்பட்டார்.

ஜெனரல் ஸ்மட்ஸ் வாக்குறுதியை மீறியதற்காக 1908, ஜனவரி 16-ஆம் தேதி திரும்பவும் போராட்டம் ஆரம்பித்தது. 1908 அக்டோபர்—டிசம்பரில் இரண்டு மாதங்கள் சிறையில் வைக்கப்பட்டதைத் தவிர, 1913 நவம்பர் 6-ஆம் தேதி வரையில் காந்திஜி சிறையில் வைக்கப்படவில்லை.

நேட்டாலிலுள்ள நியூகாஸிலிலிருந்து டிரான்ஸ்வால் எல்லையைத் தாண்டி 2037 ஆடவரும், 527 பெண்டிரும், 57 குழந்தைகளும் கொண்ட யாத்திரை கோஷ்டியைத் தலைமை தாங்கி நடத்திச் சென்றபோது பாம்போர்டில் காந்திஜி கைது செய்யப்பட்டு உடனே ஜாமீனில் விடுவிக்கப்பட்டார்.

மறுபடியும் 1913, நவம்பர் 8-இல் ஸ்டாண்டர்ட்டனில் கைது செய்யப்பட்டு ஜாமீனில் விடுதலை செய்யப்பட்டார். திரும்பவும் நவம்பர் 9-ஆம் தேதி டீக்வொர்த்தில் கைதாகி, விசாரணைக்காக நவம்பர் 11-ஆம் தேதி டண்டிக்குக் கொண்டுபோகப்பட்டார். ஒப்பந்தத் தொழிலாளிகளை நேட்டாலை விட்டு வெளியேறும்படி தூண்டியதற்காக ஒன்பது மாதக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டார். தடுக்கப்பட்ட ஆட்கள் டிரான்ஸ்வாலுக்குள் பிரவேசிக்க உதவியதற்காகவும், உடந்தையாக இருந்ததற்காகவும் இரண்டாவது விசாரணைக்கு வோல்க்ஸ்ரஸ்டுக்குக் கொண்டு போகப் பட்டார். இரண்டாவது குற்றச்சாட்டின் பேரில் 1913-ஆம் வருடம் நவம்பர் 17-ஆம் தேதி மூன்று மாதக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டார். வோல்க்ஸ்ரஸ்ட் சிறைச்சாலைக்குக் கொண்டுபோகப்பட்டு அங்கே சில நாட்கள் வைக்கப்பட்டிருந்தார். இந்தியக் கைதிகளையும் அவரையும் தனியாகப் பிரிப்பதற்காக அவரை அங்கிருந்து ஆரஞ்சு பிரீ ஸ்டேட்டின் தலைநகரான புளும்பான்டீனுக்குக் கொண்டுபோய்ச் சிறையில் இட்டனர்.

ஒரு சமரசம் காண்பதற்குப் பேச்சு வார்த்தைகள் நடத்துவதற்காக 1913, டிசம்பர் 18-இல் விடுதலை செய்யப்பட்டார்.

**2. இந்தியாவில்**

| | | |
|---|---|---|
| ஏப்ரல் 17, 1917 | மோதிகாரி | வெளியேற்ற உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. ஆனால், கைது செய்யப்படவில்லை. |
| ஏப்ரல் 10, 1919 | கோஸி | கைது செய்யப்பட்டு, காவலுடன் பம்பாய்க்குத் திரும்பக் கொண்டுசெல்லப்பட்டார். |
| மார்ச்சு 10, 1922 | சாபர்மதி | ராஜத்துவேஷக் குற்றத்துக்காகக் கைது செய்யப்பட்டார். |

| | | | |
|---|---|---|---|
| மார்ச்சு | 18, 1922 | எராவ்டா | ஆறு வருடச் சிறைவாசத் தண்டனை விதிக்கப்பட்டு எராவ்டாவுக்குக் கொண்டு செல்லப்பட்டார். 1924, பிப்ரவரி 7-ஆம் தேதி விடுதலை செய்யப்பட்டார். |
| மே | 5, 1930 | எராவ்டா | கராடியில் கைது செய்யப்பட்டு எராவ்டாவுக்குக் கொண்டு போகப்பட்டார். 1931, ஜனவரி 26-இல் விடுதலை செய்யப்பட்டார். |
| ஜனவரி | 4, 1932 | எராவ்டா | பம்பாயில் கைது செய்யப்பட்டு எராவ்டாவுக்குக் கொண்டு போகப்பட்டார். 1933, மே 8-ஆம் தேதி விடுதலை செய்யப்பட்டார். |
| ஜூலை | 31, 1933 | எராவ்டா | கைது செய்யப்பட்டுப் பாதுகாவலில் வைக்கப்பட்டார். 1933, ஆகஸ்டு 4-ஆம்தேதி விடுதலை செய்யப்பட்டார். ஆனால், நடமாட்டத்தைக் கட்டுப்படுத்தும் உத்தரவு விதிக்கப்பட்டது. |
| ஆகஸ்டு | 4, 1933 | புனா | ஒருவருடச் சிறைவாசத் தண்டனை விதிக்கப்பட்டார். 1933, ஆகஸ்டு 23-இல் விடுதலை செய்யப்பட்டார். |
| ஆகஸ்டு | 9, 1942 | ஆகாகான் மாளிகை | பம்பாயில் கைது செய்யப்பட்டு, ஆகாகான் மாளிகையில் பாதுகாவலில் வைக்கப்பட்டார். உடல் நலமின்மையின் காரணமாக 1944, மே 6-ஆம் தேதி விடுதலை செய்யப்பட்டார். |

1917-ஆம் வருடம் ஏப்ரல் மாதம் 17-ஆம் தேதி இந்தியாவில் அதிகாரிகளுடன் முதல் மோதல். சம்பாரண் விவசாயிகளுடைய கஷ்டங்களைப்பற்றி விசாரித்து அறிவதற்காகக் காந்திஜி மோதிகாரிக்குச் சென்றார். அந்த ஜில்லாவை விட்டு வெளியேற வேண்டுமென்று அவருக்கு உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. காந்திஜி அதற்கு மறுத்தார். இதற்காக விசாரணை செய்யப்பட்டார்; ஆனால், தண்டிக்கப்படவில்லை. வழக்கு வாபஸ் பெறப்பட்டது.

1919-ல் சத்தியாக்கிரக வாரத்தின் போது—ஏப்ரல் 6-இல் இருந்து 13 வரை—அவசர அழைப்பின் பேரில் பஞ்சாப்புக்குப்



அமரர் மகாத்மா உயிர்நீத்த பின்னர் அம்மகானின் பூதவுடல்



டில்லி ராஜகட்டத்திலுள்ள மகாத்மாவின் சமாதி

# பின்சேர்க்கைப் பகுதி

## 1

## காந்திஜி குடும்ப மூதாதையர் வரலாறு

[மகாத்மா காந்தி தமது 'சுய சரிதை'யில் தம் குடும்ப வரலாற்றைச் சொல்லும்போது, தமது பாட்டனுரைப் பற்றி மாத்திரமே குறிப்பிட்டிருக்கிருர். ஆகையால், காந்தி குடும்பத்தைப் பற்றிய முந்திய வரலாற்றையும் அறிய விரும்புவோருக்குப் பயனுள்ளதாக இருக்கட்டும் என்பதற்காக அக் குடும்ப வரலாற்றைக் குறித்து, ஸ்ரீ பிரபுதாஸ் காந்தி எழுதியிருக்கும் ''காந்தியுடன் என் குழந்தைப் பருவம்" என்ற நூலிலிருந்து கீழ்க்கண்ட விவரங்களை எடுத்துக் கொடுத்திருக்கிரேம். காந்திஜியின் மூதாதையர், நேர்மை, சத்தியம், தீரம் ஆகியவைகளில் எவ்விதம் சிறந்து விளங்கியிருக்கிருர்கள் என்பதும் இந்த விவரங்களிலிருந்து தெளிவாகிறது.]

நான் சேகரிக்க முடிந்த தகவல்களிலிருந்து, எங்கள் குடும்ப சரித்திரத்தில் லால்ஜி காந்தியின் பெயர்தான் முதல் முதல் தெரிகிறது. லால்ஜி காந்தி குடும்பத்தில் ஐந்தாவது தலைமுறையாகப் பிறந்தவரான உத்தம சந்திர காந்தியே, காந்தி குடும்பப் பெயருக்குக் கௌரவத்தையும் கீர்த்தியையும் தேடித் தந்தார். ஏழாவது தலைமுறையில் பிறந்தவரே, மகாத்மா காந்தி.

லால்ஜி காந்தியின் குமாரர் ராம்ஜி காந்தி. இவர் தப்தாரியாக வேலை பார்த்தார். ஆகவே, போர்பந்தர் சமஸ்தான திவானுக்கு வலக்கரம்போல் இருந்தார். இப்பொழுது மந்திரி சபையில் உள்நாட்டு மந்திரிக்கு என்ன பொறுப்புக்கள் உண்டோ அவையே தப்தாரியின் பொறுப்புக்களாகும்.

ராம்ஜி காந்தியின் மகன் ரகிதாஸ் காந்தியும் போர்பந்தரில் தப்தாரியாக இருந்தார் எனத் தெரிகிறது. இவருக்கு ஜுனகட் நவாப், ஜுனகட்டில் கொஞ்சம் நிலத்தை இனமாகக் கொடுத்திருந்தார். இன்றும் அந்த நிலம் காந்தி குடும்பத்திற்குச் சொந்தமாக இருந்துவருகிறது. குடியாணவிலும் போர்பந்தரிலும் இருந்த குடும்பத்தின் வீடுகளை விற்றுவிட்டுச் சொத்துக்களைச் சகோதரர்கள் பிரித்துக்கொண்டுவிட்டனர். என்ருலும், இந்த நிலம் மாத்திரம் இன்றும் குடும்பத்தின் பொதுச் சொத்தாக இருந்து வருகிறது. இதிலிருந்து வரும் வருமானம், குடும்பக் கோயிலின் பராமரிப்புக்கு உபயோகிக்கப்பட்டு வருகிறது. இந்த நிலம் இரண்டு ஏக்கருக்குமேல் இல்லை; ஆயினும் இன்றும் இருந்துவரும் காந்தி குடும்பத்தின் பூர்விகச்சொத்து இது ஒன்றுதான்.

ரகிதாஸ் காந்திக்கு ஹரிஜீவன், தாமன் என இரு குமாரர்கள் இருந்தனர். ஹரிஜீவன் காந்தியின் குமாரரே உத்தம சந்திரகாந்தி. ஹரிஜீவன் காந்தியும் போர்பந்தரில் தப்தாரியே. பிறகு அவருடைய தம்பி தாமன் காந்தி, அப்பதவிக்கு வந்தார். மகாத்மா காந்தியின் பாட்டனுரான உத்தம சந்திர காந்தி, எங்கே படித்தார், என்ன படித்திருந்தார் என்பன பற்றி எதுவும் தெரியவில்லை. எழுதப் படிக்கத் தெரிந்து, கணக்குப் போடவும் கணக்குகள்

எழுதவும் தெரிந்தால், ஒரு வியாபாரியின் மகனுக்கு அதுவே போதும் என்று அக்காலத்தில் கருதப்பட்டு வந்தது.

ஆரம்பக் கல்வியைப் பெற்றதும் உத்தம சந்திர காந்தி, தாம் என்ன தொழிலை மேற்கொள்ளுவது என்று சிந்தித்தார். தமது தந்தையும் சிற்றப்பாவும் வகிக்கும் பதவிகளினின்றும் வேறான ஒன்றையே தாம் மேற்கொள்ளுவது என்று எண்ணினர். தமது தந்தை செய்துவந்த தொழிலில் அவருக்குப் பிரியமில்லை. அவருடைய சிற்றப்பா தாமன் காந்தியாலும் இவருக்கு ஏற்ற உத்தியோகத்தைத் தேடித்தர முடியவில்லை. மன்னரிடம் இதைக் குறித்துக்கேட்டுக் கொள்ளுவது சரியல்ல என்று தாமன் காந்தி எண்ணியிருக்கக்கூடும். அதனாலேயே வாலிப உத்தம சந்திரருக்கு அவர் ஒரு சுயேச்சையான வேலையைத் தேடிக் கொடுத்தார். போர்பந்தர் துறைமுகத்தில் சுங்க வசூல் கன்டிராக்டராக இருப்பதே அந்த வேலை.

சுங்கத் தீர்வை வசூலிக்கப்படும் இடத்திற்கு மிதி மாந்தவி என்று சொல்லுவார்கள். அக் காலத்தில்கூட போர்பந்தரில் இறக்குமதி ஏற்றுமதி அதிகம். அப்பொழுது ரெயில் இல்லாததனால் துவாரகைக்கும் சோமநாதத்திற்கும் யாத்திரை வருகிறவர்கள் கடல் மார்க்கமாகவே வருவார்கள். சுங்கத் தீர்வையைப் பிரயாணிகளிடமிருந்தும் வியாபாரிகளிடமிருந்தும் வசூலிப்பதென்பது, சமாளித்துவிடக்கூடிய சுலபமான காரியமல்ல. அவர்களிடம் நியாயமாகவும் நடந்துகொள்ள வேண்டும்; அதே சமயத்தில் தீர்வை வசூல் பொறுப்பில் இருப்பவர், சமஸ்தானத்திற்கு வருமானம் இல்லாது போய்விடாதபடியும் பார்த்துக்கொள்ள வேண்டும். இப் பொறுப்பை உத்தம சந்திர காந்தி ஏற்றுக் கொண்டபோது அவருக்கு இருபது வயதே இருக்கும். என்றாலும், மிகுந்த திறமையுடன் அவ் வேலையை நிர்வகித்தார். அதே சமயத்தில் தமது எதிர்காலத்தைப் பற்றிய விஷயத்திலும் அவர் அசட்டையாக இருந்துவிட வில்லை. ஓய்வு இருக்கும் நேரங்களில் தாமன் காந்தியின் காரியாலயத்திற்குப் போய் அங்கே ஒழுங்காகப் பயிற்சியையும் பெற்று வந்தார். சீக்கிரத்தில் தாமன் காந்திக்கு உதவிசெய்யும் ஆற்றலைப் பெற்றுவிட்டார். அப்பொழுது தாமன் காந்திக்கும் ஓய்வு தேவையாக இருந்ததால், சில வேலைகளை உத்தம சந்திரரைச் செய்யச் சொல்லுவார்.

உத்தம சந்திரர் பிரபலமானர். ஊரிலும் அரண்மனையிலும் இருந்த பெரியவர்கள், அவரை ஓதா அல்லது ஓதா காந்தி என்று அழைப்பார்கள், மற்றவர்கள் ஓதா பாபா என்று அழைப்பர். காந்தி குடும்பத்தில் திவான் பதவிக்கு முதல் முதல் நியமிக்கப்பட்டவர் இவரே. தாமே கஷ்டப்பட்டு உழைத்ததன் மூலம் அப் பதவியை அவர் பெற்றார்.

போர்பந்தர் மன்னரான ராணா கிமாஜி, ஒரு முக்கியமான பிரச்னையைச் சமாளிக்க வேண்டித் தாமன் காந்தியைக் கூப்பிட்டனுப்பினர். ஆள் வந்த சமயம் சிறிய தகப்பனாரின் காரியாலயத்தில் உத்தம சந்திர காந்தி மாத்திரமே இருந்தார். என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்துப்போய்த் தாமன் காந்தியைத் தேடி அலைந்துகொண் டிருக்காமல், உத்தம சந்திரர் தாமே ராணாவிடம் நேரில் சென்றார். தமது சிறிய தகப்பனார் இல்லாததால், இடும் கட்டளையைத் தாமே செய்வதாகவும் கூறினர். இளைஞர் காட்டிய நம்பிக்கையில் ராணாவுக்குத் திருப்தி உண்டாயிற்று. சாதாரணமாக, அனுபவமுள்ள

அதிகாரியிடம் ஒப்படைக்க வேண்டிய அந்த வேலையை ராணா, இவரிடம் ஒப்படைத்தார். அவ் வேலையைத்திறம்பட நிறைவேற்றி ராணாவின் நம்பிக்கைக்கு அவர் பாத்திரமானார்.

மறுநாளே ராணா, உத்தம சந்திரரை அழைத்து, ஒரு கஷ்டமான வேலையை மேற்கொள்ளத் தயாராயிருக்கிறாரா என்று கேட்டார். ராணாவின் ஆசீர்வாதமிருந்தால், செய்து முடிக்க முடியாதது எதுவுமே இல்லை என்று உடனே உத்தம சந்திரர் பதில் சொன்னார். வேலை இன்னது என்பதை ராணா பிறகு விளக்கிக் கூறினார். சுங்கத் தீர்வையை வசூலிப்பதற்காக மாதவப்பூரில் நியமிக்கப்பட்டிருந்த கன்டிராக்டர், வசூலித்ததைச் சரியாகச் செலுத்துவதில்லை. இம்மன்னரின் ஆட்சி பலவீனமானது என்று அந்தக் கன்டிராக்டர் எண்ணிவிட்டதால், அரசாங்க உத்தரவுகளுக்கும் உடன்பட்டு நடப்பதில்லை. இந்தக் கன்டிராக்டரை வழிக்குக் கொண்டுவர வேண்டும். மாதவப்பூருக்குப் போக உத்தமசந்திரர் உடனே ஒப்புக்கொண்டார்.

சௌராஷ்டிரத்திற்குள் தங்கள் அதிகாரத்தை நிலைநாட்டப் பிரிட்டிஷார் முற்பட்ட சமயம் அது. ஒரு மத்திய ஆட்சியின் நிர்வாகத்தின் கீழ் அது வந்து விடவில்லை. அதிகப் பலமுள்ள சமஸ்தானங்களான ஜூனாகட்டும், ஜாம்நகரும், பலவீனமான தமது பக்கத்துச் சமஸ்தானங்களின் பகுதிகளை விழுங்கிக்கொண்டிருந்தன. போர்பந்தர் மன்னரின் ஆட்சி எல்லையெல்லாம் சில கிராமங்களில்தான். இந்தச் சமஸ்தானப் பகுதிகளைப் பல இடங்களிலும் ஜூனாகட் பறித்துக் கொண்டுவிட்டது. போர்பந்தர் மன்னர் சில இடங்களில் மாத்திரமே நிலத்தீர்வை வசூலித்துக்கொள்ள முடியும்.

போர்பந்தருக்குச் சொந்தமான மாதவப்பூர் முக்கியமான வியாபார ஸ்தலம். ஆனால், அங்கே சுங்கத் தீர்வையை வசூலிக்கும் உரிமையை அதிகக் கஷ்டத்தின் பேரிலேயே போர்பந்தர் மன்னர் விடாமல் வைத்திருந்தார். ஜூனாகட்டின் ஆதரவின் பேரில் கன்டிராக்டர், போர்பந்தருக்குச் செலுத்த வேண்டிய பணத்தைச் செலுத்தாமல் ஏமாற்றிக்கொண் டிருந்தார். உத்தம சந்திர காந்தி மாதவப்பூருக்கு வந்ததும், கன்டிராக்டர்மீது நடவடிக்கை எடுத்துக்கொள்ளுவதற்குப் பதிலாகப் பிரச்னையை அதன் பேரிலேயே சமாளிக்க முற்பட்டார். ஜூனாகட்டிற்குள்ளிருந்த போர்பந்தரின் பகுதிகள் எவையெவை என்பதைக் கணக்கு எடுத்தார். அப் பகுதிகளைக் குறித்து ஜூனாகட் பிரதிநிதிகளுடன் சமரசப் பேச்சை நடத்தினார். மாதவப்பூரிலிருந்து போர்பந்தர் வரையிலுள்ள கடலோரப் பகுதிகளின்மீது எந்த உரிமையும் கொண்டாடுவதில்லை என்று ஜூனாகட் ஒப்புக்கொண்டால், ஜூனாகட்டிற்குள் திட்டுத்திட்டாக இருக்கும் போர்பந்தர் பகுதிகளின் உரிமையை, அங்கே வரி வசூலிக்கும் உரிமை உட்பட, விட்டுக் கொடுத்துவிடுவதாகப் பேரம் பேசினார். இவருடைய யோசனை ஒப்புக்கொள்ளப்பட்டது. கரையோரப் பகுதிகளின் உரிமைகளைப் போர்பந்தருக்கு அளித்துவிடுவது என்று ஜூனாகட் ஓர் ஒப்பந்தத்திலும் கையெழுத்திட்டது.

இப் பகுதி அச்சமயம் மணல்பாங்கான தரிசு நிலம். ஆனால், அப் பகுதியை நன்றாக அபிவிருத்தி செய்துவிட முடியும் என்ற தீர்க்கதரிசனம் உத்தம சந்திர காந்திக்கு இருந்தது. ஜூனாகட்டுடன் செய்துகொண்ட ஒப்பந்தத்தைக் குறித்து அவர் எழுதிய போது, பாதார் நதிக்கு ஓர் அணை கட்டிவிட்டால், அப் பகுதி முழுவதையும் நல்ல செழிப்பான இடம் ஆக்கிவிடலாம் என்றும், அதனால் அதிக வருமானம் கிடைக்கும் என்றும் எழுதினார்.

அவர் எண்ணியது அப்படியே உண்மையாகிவிட்டது. இந்தப் பகுதியில் நான் ஒரு சமயம் நடந்தே போய்கொண்டிருந்தேன். அப்பொழுது நான் பேசிக் கொண்டிருந்த வயதான விவசாயிகள், பாதார் அணையைக் கட்டியதால் அங்கே விளையும் விவசாயப் பொருள்களின் மதிப்பு ஆண்டுக்கு ரூ. 1,000-லிருந்து ரூ. 72,000-க்கு உயர்ந்து விட்டது என்று கூறினர். அப்பொழுது, முதல் உலக யுத்தத்திற்குப் பிறகு ஏற்பட்ட பொருளாதார மந்த சமயம். அங்கே விளையும் பொருள்களின் மதிப்பு இப்பொழுது அநேக மடங்கு அதிகமாக இருக்கும்.

உத்தமசந்திர காந்தியின் முயற்சியினால் ஏற்பட்ட மாதவப்பூர் ஒப்பந்தம் காரணமாக 3,600 சதுர மைல்கள் விஸ்தீரணமே உள்ளதான சிறு சமஸ்தான மாகிய போர்பந்தர், பிரிட்டிஷார் சௌராஷ்டிர சமஸ்தானங்களைத் தர வாரியாகப் பிரித்தபோது, முதல்தர சமஸ்தானங்களில் ஒன்றெனச் சேர்க்கப் பட்டது. இந்த ஒப்பந்தத்தினால் தொடர்ந்தாற்போல் இருந்த பகுதி அந்தச் சமஸ்தானத்திற்கு எல்லா உரிமைகளுடனும் கிடைத்தது. ஆண்டுகளுக்குச் சில ஆயிரமே என்று இருந்த வருமானம் ஆண்டுக்குப் பல லட்சங் களாயின.

உத்தமசந்திரர் மாதவப்பூரில் அடைந்த வெற்றியினால் அவர் உடனே போர்பந்தரின் திவானாக நியமிக்கப்பட்டார். அவர் கிழவராகும் வரையில் அப் பதவியை வகித்து வந்தார். அவர் திவானாக இருந்த காலத்தில் போர்பந்தர் சமஸ்தானத்திற்கும் நல்ல மதிப்பு உண்டாயிற்று. தமது சந்ததியினர் பின் பற்றுவதற்கு வழிகாட்டியவராகவும் இருந்தார்.

போர்பந்தர் தனது பகுதிகளை இழந்துவிட்டதைப் போன்றே அதன் செல்வ நிலையும் மோசமாக இருந்தது. ஒரு கட்ச் வியாபார ஸ்தாபனம், போர் பந்தர் ராஜாக்களுக்குக் கடன் கொடுத்துக்கொண்டிருந்தது. சுந்தர்ஜியின் ஸ்தாபனம் என்பது அதன் பெயர். நாளாவட்டத்தில் இக் கடன் பெருகிக் கொண்டே போய், சமஸ்தானம் முழுவதுமே அடமானம் ஆகிவிட்டது. இதனால் சமஸ்தானத்தின் வருமானத்தை யெல்லாம் அந்த வர்த்தக ஸ்தாபனம் எடுத்துக்கொண்டு அத்தியாவசியமான செலவுகளுக்கு மாத்திரம் போதுமானதை சமஸ்தானத்திற்குக் கொடுத்து வந்தது.

உத்தமசந்திர காந்தி திவானான சமயம், சமஸ்தானம் இத்தகைய மோசமான நிலைமையில் இருந்ததைக் கண்டார். அந்த ஸ்தாபனம் கொடுத்திருந்த 'கடனைப்பற்றிய தஸ்தாவேஜுகளை யெல்லாம் நன்றாகப் பரிசீலனை செய்தார். அடமானப் பத்திரத்தில் சமஸ்தானத்திற்கு உதவியான ஒரு விதியும் இருப்பதைப் பார்த்தார். அப் பத்திரத்தின் இறுதியில், 'கடன் கொடுத்தவர், நிலவரி, சுங்கத் தீர்வை ஆகிய முக்கியமான வருமானங்களிலிருந்தே கடனுக்கு ஈடு செய்யக்கேட்கலாம்' என்று இருந்தது. ஆகையால் ஸ்டாம்ப் கட்டணம், நிலம், சொத்து விற்பனைமீது விதிக்கும் வரி ஆகியவைகளின்மீது வரும் வருமானத்தைக் கடன்காரர் தம் கடனுக்கு ஈடு செய்யக் கேட்கக்கூடாது என்றே பத்திரம் கூறுகிறது என்று வாதித்தார். அப்பொழுதிலிருந்து இந்த இனங்களிலிருந்து வந்த வருமானம் சமஸ்தான கஜானாவுக்கே வந்தது. அதைக்கொண்டு கடனையும் மெள்ளத் தீர்த்துவிட்டார். இவ்வாறு அந்தச் சமஸ்தானம் ஓட்டாண்டி ஆகிவிடாதபடி உத்தம சந்திர காந்தி காப்பாற்றி விட்டார்.

ராணி ஆண்டபோது, அவருக்கு ஏற்பட்ட கோபத்தைப்பற்றிய வரலாறு மிகப் பிரபலமானது; மகாத்மா காந்தியும் இதைப்பற்றித் தமது 'சுயசரிதை'யின் முதல் அத்தியாயத்தில் குறிப்பிட்டிருக்கிறார். அதன் விவரம் இதுதான்:

சமஸ்தானத்தின் கஜானுக்காரராக இருந்த கிமா கோத்தாரி என்பவரே பண்டகசாலையின் அதிகாரியும் ஆவார். அவர் கண்டிப்பானவர்; கடமை உணர்ச்சியுள்ளவர். தக்க உத்தரவு இருந்தாலன்றி அவர் யாருக்கும் எப் பொருளையும் கொடுக்க மாட்டார். இதனால், ராணியின் வேலைக்காரர்களுக்கு அவரைப் பிடிக்காது. தாங்கள் கேட்பதெல்லாம் பண்டகசாலையிலிருந்து கிடைப்பதில்லையாகையால், அவர்மீது ராணியிடம் இல்லாததுபொல்லாததை எல்லாம் அவ் வேலைக்காரர்கள் சொல்லி வந்தனர். ஒரு நாள் கோத்தாரிமீது பெரும் புகார் ஒன்றை அவர்கள் கூறிவிடவே ராணிக்குக் கோபம் வந்துவிட்டது. கோத்தாரியைக் கைது செய்து தம் முன்பு கொண்டு வருமாறு உத்தரவு போட்டுவிட்டார்.

ராணியின் கோபத்தைக் குறித்துக் கோத்தாரி அறிந்ததும் உத்தம சந்திர காந்தியிடம் போய்த் தம்மைப் பாதுகாத்து நீதி வழங்கும்படி கேட்டுக் கொண்டார். இதை ராணி கேள்விப்பட்டதும், உத்தம சந்திரரைக் கூப் பிட்டு அனுப்பி, கோத்தாரியைத் தம் முன்பு கொண்டுவந்து நிறுத்தும்படி கூறினர். ஆனல், உத்தம சந்திரரோ, கோத்தாரியைக் கொண்டுவந்து ஒப் படைக்க மறுத்துவிட்டார். இதில் சரியாக விசாரித்து அறியவேண்டும் என் றும், கோத்தாரி தவறு செய்திருந்தால் அவர்மீது வழக்குத் தொடர வேண்டும் என்றும் கூறினர். ராணிக்குப் பிரமாதமாகக் கோபம் வந்துவிட்டது. தாம் முடிவு செய்வதே நீதி என்ருர். கோத்தாரியைத் தண்டித்தே ஆகவேண்டும் என்றும் அவரைத் தம்மிடம் ஒப்படைத் தாகவேண்டும்' என்றும் வற்புறுத்தினர்.

உத்தம சந்திரர் ராணிக்கு நியாயத்தை எடுத்துக் கூற முயன்ருர். ஆனல், அதற்கெல்லாம் செவி கொடுத்துக் கேட்க ராணி தயாராக இல்லை. கோத்தாரியைத் தம்மிடம் ஒப்படைக்காது போனல் உத்தம சந்திரர் அடிக் கப்படுவார் என்றும் பயமுறுத்தினர். ஆனல், அதற்கெல்லாம் பயந்துவிடு கிறவர் அன்று உத்தம சந்திரர். அவர் தம் முடிவில் உறுதியுடன் இருந்து விட்டார். ராணியோ பயமுறுத்திச் செய்திகளை அனுப்பிக்கொண்டே இருந் தார். சில நாட்கள் கழித்து ஒரு நாள், கோத்தாரியைப் பலவந்தமாகப் பிடித்துக்கொண்டு வருமாறு ராணுவப் படை ஒன்றை உத்தம சந்திரரின் வீட்டிற்கு ராணி அனுப்பினர். அவர் குடியிருந்த வீடு கருங்கற்களால் கட்டப் பட்டது; வெளிக் கதவும் அதிகப் பலமானது. ஆகவே உள்ளே பிரவேசிக்கச் சிப்பாய்களால் முடியவில்லை என்பதை அறிந்த ராணி, அவ் வீட்டின் வெளிச் சுவர்களைத் தகர்த்துவிட ஒரு பீரங்கியையே அங்கே அனுப்பினர்.

உத்தம சந்திர காந்தியின் வீட்டுக்கு முன்னல் காவலுக்கு இருந்த அரபுக் காவற்காரர்கள் கடைசி வரையில் வீரத்துடன் நின்று பாதுகாத்தனர். எதேச்சாதிகாரிகளாக இஷ்டம் போலெல்லாம் நடப்பவர்கள், அந்தக் கால ராஜாக்கள். ஆகையால், அவர்களிடம் உத்தியோகத்தில் இருப்பது என்றுமே ஆபத்தானதுதான். திவான்களாக நியமிக்கப்படுகிறவர்கள், ராஜாவின் விரோதம் வந்தாலும் தம்மைக் காத்துக்கொள்ளுவதற்காக யாரையாவது பாதுகாப்பாளராக நியமித்துக்கொள்ளுவார்கள். உத்தம சந்திர காந்தியின் மெய்காப்பாளர்களின் தலைவர் ஓர் அரபுக்காரர். குலாம் முகமது மக்ராணி என்பது அவர் பெயர். உத்தம சந்திரரைப் பாதுகாப்பதில் அவர் உயிரைத் துறந்தார். உத்தம சந்திரரின் வீட்டை அடுத்துள்ள வைஷ்ணவக் கோயிலில் இவருக்கு ஏற்படுத்திய ஞாபகச் சின்னம் இன்றும் இருக்கிறது.

வீட்டைப் பாதுகாக்கும் வேலையை அரபுகளிடம் உத்தம சந்திரர் விட்டுவிட்டார். என்ன வந்தாலும் சரி என்று உள்ளே அமைதியுடன் இருந்தார். சத்தியத்திற்காகத் தம் உயிரையும் தத்தஞ் செய்துவிடத் தயாரானர். வீட்டிலிருந்த தமது புதல்வர்கள் ஐந்து பேரையும் அருகில் அழைத்தார். தம் மனைவி, கோத்தாரி ஆகியவர்களையும் உடன் வைத்துக்கொண்டார். "சத்தியத்திற்காக உயிரை விடும் வாய்ப்பைக் கடவுள் அளித்திருக்கிறார். ஆகையால், அமைதியாகவும் அஞ்சாமலும் இருந்து சாவைச் சந்தோஷமாக எதிர்நோக்குவோம்" என்றார்.

பீரங்கிக் குண்டுகள் வீட்டின் வெளிச்சுவரின்மீது தாக்கிக்கொண்டிருந்த போது உள்ளே உத்தம சந்திரர், தாம் கொண்ட உறுதியில் தளராமல் இருக்கும் பலத்தைத் தமக்கு அருளுமாறு கடவுளைப் பிரார்த்தித்துக்கொண் டிருந்தார். இதற்கு மத்தியில் ராணியின் அக்கிரமச் செய்கையைப்பற்றிய செய்தி ராஜ்கோட்டிலிருந்த பிரிட்டிஷ் ராஜீய ஏஜெண்டுக்கு எட்டியது. அவர் குறுக்கிட்டதன் பேரில் ராணியின் நடவடிக்கை அத்தோடு நின்றது.

இச் சம்பவத்திற்குப் பிறகு உத்தமசந்திரர், ஜூனாகட் சமஸ்தானத்தில் குடியானா என்ற இடத்திலிருந்த தமது வீட்டிற்குத் திரும்பினர். அவர் சமஸ்தானத்திற்கு வந்திருக்கிறார் என்பதை அறிந்த ஜூனாகட் நவாப், அவரை அரண்மனைக்கு வரவழைத்தார். உத்தம சந்திரர், நவாப் முன்னால் வந்தபோது அவருக்குத் தமது இடக் கரத்தினால் சலாம் செய்தார். அதைப் பெரும் அவமதிப்பாகத் தர்பாரிலிருந்த எல்லோரும் கருதினர். அனுபவம் மிக்க ஒருவர் இவ்விதம் நடந்துகொண்டு விட்டது நவாபுக்கே ஆச்சரியமாக இருந்தது. அதைப் பற்றி நவாப் கேட்டபோது உத்தம சந்திர காந்தி கூறியதாவது: "வலது கை முன்பே போர்பந்தருக்கு ஒப்படைக்கப்பட்டுவிட்டது. நான் போர்பந்தரின் ஊழியன் என்பதை மறந்துவிட முடியாது. ஆகவே, அந்தச் சமஸ்தானத்தினிடம் விசுவாசமின்றி நடப்பதற்கில்லை. உங்களிடம் சேவை செய்ய எனது இடக்கரமே பாக்கியாக இருக்கிறது. ஆனால், நான் உத்தியோகம் பார்க்க வரவில்லை. ஓய்வு எடுத்துக்கொண்டு அமைதியாக வாழவே விரும்புகிறேன்.''

மரியாதைக் குறைவாக நடந்துகொண்டு விட்டதற்காக அவரைத் தண்டிக்க வேண்டும் என்றே நவாபின் தர்பாரில் இருந்தோர் விரும்பியிருப்பார்கள். ஆனால், நவாப் விஷயங்களை அறிந்தவர். உத்தம சந்திரரின் விசுவாசத்தையும், உறுதியையும், அவர் போக்கையும் பாராட்டினர். ராஜாங்க மரியாதைக்காகச் சிறு தண்டனை விதித்து, அதே சமயத்தில் ஏராளமான சன்மானங்களையும் கொடுத்தார். உத்தம சந்திரர் தமது காலில் செருப்பு இல்லாமல் வெளியில் பத்து நிமிட நேரம் நிற்க வேண்டும் என்பதே நவாப் விதித்த தண்டனை. அவருக்கு அளித்த சன்மானம், உத்தம சந்திரரும் அவர் சந்ததியாரும் குடியானாவில் வியாபாரம் செய்தால், அவர்களுக்குச் சுங்கத் தீர்வை கிடையாது என்பது. உத்தம சந்திரர் சில நிமிட நேரம் வெயிலில் நின்றுவிட்டுக் குடியானாவுக்குப் போய்விட்டார்.

பிறகு அவர் அமைதியான வாழ்க்கை நடத்தி வந்தார். தினமும் கொஞ்ச நேரம் குதிரையில் ஏறி வெளியே போய்வருவார். மற்ற நேரங்களைப் பிரார்த்தனையிலும் மத சம்பந்தமான விவாதத்திலும் கழித்து விடுவார். இவர் போர்பந்தர் திவானாக இருந்தபோது இவருக்கு 2,000 கோரி சம்பளம். (ரூபாய்க்கு நான்கு கோரிகள்) இதல்லாமல் உணவு தானியங்கள், கறி காய் முதலியவைகளைச் சமஸ்தான உக்கிராணம் கொடுத்துவிடும். இது அவ்வளவு பெரிய

சம்பளம் அல்ல. என்றாலும், தமது மூத்த குமாரர்களான வல்லபஜி, பீதாம்பரஜி ஆகியவர்களின் விவாகத்தின் போது, அக்கால வழக்கத்தை அனுசரித்து ஏராளமானவர்களை அழைத்திருந்தார். எல்லாச் சடங்குகளுட னும் விவாகம் நடந்தது. அவ்வூர் முழுவதையும் அழைத்திருந்தார். வழக் கத்தை அனுசரித்து அவ்வூர்க் கோட்டை வாசல்களில் அரிசியை ஒட்டி வைப்ப தன்மூலம் ஊர் முழுவதும் அழைக்கப்பட்டது. வந்தவர்களுக் கெல்லாம் சாப்பாடு. ஏழு நாட்கள் நடந்த இந்த வைபவத்தில் ராணாவும் முக்கியப் பங்கு எடுத்துக்கொண்டார்.

உத்தம சந்திரர் பொதுஜன ஆதரவைப் பெற்ற திவானாக இருந்ததால் சன்மானங்கள் ஏராளமாக வந்தன. கல்யாணத்திற்கு அவர் எவ்வளவு செல விட்டாரோ அவ்வளவும் சன்மானமாக வந்துவிட்டது. வேறு யாராவது என்றால், வந்ததையெல்லாம் தங்களுக்கு வந்தவையே என்று எடுத்துக்கொண் டிருப்பார்கள். ஆனால், உத்தம சந்திர காந்தி, கல்யாண வேலைகளெல்லாம் முடிந்த பிறகு, கல்யாணத்தில் வந்த பணத்தை யெல்லாம் ராணாவிடம் கொண்டு போனார். இவையெல்லாம் ராணாவின் குடிகளிடமிருந்தே வந்தவைகளாகை யால், அவை ராணாவுக்கே சொந்தமானவை என்று கூறி அவரிடம் ஒப்படைத் தார். இதைக் கண்டு மனமுருகிப் போன ராணா, அப்பணத்தைச் சமஸ்தான கஜானாவுக்கு அனுப்பிவிட்டுக் கல்யாணச் செலவு முழுவதையும் கஜானாவி லிருந்தே கொடுத்து வீடுமாறு உத்தரவிட்டார். "உங்கள் குமாரர்கள் என் குமாரர்களே" என்றும் கூறினார்.

போர்பந்தரில் ராணியின் கொடிய ஆட்சி தீர்ந்ததும், ராணா விக்ரமஜித் பட்டத்திற்கு வந்தார். சமஸ்தானத்தின் நன்மையை விரும்பியவர்கள், உத்தம சந்திர காந்தியைத் திரும்பவும் திவானாகக் கொண்டுவர முயன்றார்கள். ஆனால், ஓய்விலிருந்து திரும்பவும் திவான் பதவிக்குச் செல்ல அவர் விரும்பவில்லை. ஆனால், அவர்கள் முயற்சியினாலும், ராணா சிமாஜியின் வாக்குறுதிகளினாலும் ஒரு பலன் ஏற்பட்டது. உத்தம சந்திரரின் குமாரர்கள் எல்லோருக்கும் சமஸ்தா னத்தில் உத்தியோகங்கள் கிடைத்தன. ராணா சிமாஜியின் அந்திய காலத்தில் அவரிடமிருந்து எழுத்து மூலம் உத்தம சந்திரர் ஓர் உறுதிமொழி பெற்றிருந் தார்: "உத்தம சந்திர காந்தி, இந்தச் சமஸ்தானத்திற்கு மதிப்பிற்குரிய சேவையைச் செய்திருக்கிறார். எனக்கும் சமஸ்தானத்திற்கும் என்றும் விசுவாச மாகவும் இருந்திருக்கிறார். ஆகையால், அவருக்கு எந்தக் கஷ்டமும் ஏற்படாத படி, எனக்குப் பின்னால் பட்டத்திற்கு வருகிறவர்கள் கவனித்துக்கொள்ள வேண்டும். அதோடு உத்தம சந்திர காந்தியின் சந்ததியாருக்குச் சமஸ்தானத் தில் உத்தியோகங்களும் கொடுக்கவேண்டும்."

மைனராயிருந்த ராணாவுக்காக ராணி ஆட்சி நடத்திய காலத்தில் இந்த உறுதிமொழி பலனில்லாது போயிற்று. ராணா விக்கிரமஜித் வயதுக்கு வந்த தும் உத்தம சந்திரரின் குடும்பத்திற்கு நன்மை ஏற்பட்டது.

உத்தம சந்திர காந்திக்கு ஆறு குமாரர்கள். ஐந்தாவது குமாரரான கரம்சந்திர காந்தியே, மகாத்மா காந்தியின் தந்தை. இவரும், ஆறாவது குமார ரான துளசிதாஸ் காந்தியும் ஒருவர்பின் ஒருவராகப் போர்பந்தர் திவானாக இருந்தனர். உத்தம சந்திரரின் அறிவாற்றல், சத்தியத்தில் பக்தி, வீரம் ஆகியவைக ளெல்லாம் கரம்சந்திர காந்தியிடமே அதிகம் குடிகொண் டிருந்தன.

# 2

# லண்டன் நாட்குறிப்பிலிருந்து

[காந்திஜியின் சக ஊழியரும் உறவினருமான ஸ்ரீ சகன்லால் காந்தி 1909–இல் முதல் முதலாக லண்டனுக்குப் புறப்பட்ட போது அவரிடம் காந்திஜி தமது லண்டன் நாட்குறிப்பைக் கொடுத்தார். அது அவருக்கு நடைமுறையில் பயன்படக்கூடியதாக இருக்கும் என்று காந்திஜி கருதினுர்.

நாட்குறிப்பு சுமார் 120 பக்கங்கள் கொண்டது. அதை ஸ்ரீ சகன்லால் 1920 இல் ஸ்ரீ மகாதேவ தேசாயிடம் கொடுத்தார். ஆனுல், கொடுப்பதற்கு முன்னதாக அவர் கீழ்க்கண்ட பகுதியை, உள்ளது உள்ளபடியே, நகல் செய்து வைத்துக் கொண்டார். இந்தப் பகுதி, மூலப் பிரதியில் (காந்திஜியின் கையெழுத்தில்) சுமார் 20 பக்கங்கள் கொண்டது. மீதி 100 பக்கங்களும் தொடர்ச்சியாக எழுதப்பட்டவையல்ல. அவை, காந்திஜி லண்டனில் 1888-இலிருந்து 1891 வரை தங்கியிருந்தபோது நிகழ்ந்த சம்பவங்களைப் பற்றிய குறிப்புக்களே.

மூலப்பிரதி இப்போது எங்கே இருக்கிறது என்று கண்டு பிடிக்க முடியவில்லை. ஸ்ரீ சகன்லாலின் நகல்தான் இங்கே வெளியிடப்படுகிறது. இதில் அங்கொன்று இங்கொன்ருகச் சில வார்த்தைகள் மட்டுமே சேர்க்கப்பட்டுள்ளன. வாசிப்பதற்கு இலகுவாக இருக்கும்பொருட்டு, சில இடங்களில் பாராக்கள் பிரிக்கப்பட்டிருக்கின்றன.

காந்திஜி தமது 19–ஆம் வயதில் ஆங்கிலத்தில் இந்த நாட்குறிப்பை எழுதியிருக்கிருர். அப்போது காந்திஜியின் ஆங்கில நடை, வளரும் பருவத்தில் இருந்தது. அவர் எழுதியுள்ள பிரகாரமே இங்கே தமிழில் பெயர்த்துக் கொடுக்கப்பட்டிருக்கிறது.]

லண்டன்,
நவம்பர், 12, 1888

லண்டனுக்குப் போகவேண்டுமென்ற எண்ணம் எதனுல் உண்டாயிற்று? ஏப்ரல் மாதக்கடைசி வாக்கில், இந்த விஷயத்துக்குப் பீடிகை போடப்பட்டது. படிப்புக்காக லண்டனுக்கு வர வேண்டுமென்ற நோக்கம் உருவாவதற்கு முன், லண்டன் எப்படி இருக்கும் என்பதை அறிந்துகொள்ளும் ஆவலைப் பூர்த்தி செய்வதற்கே இங்கே வரவேண்டுமென்ற ரகசிய நோக்கம் என் உள்ளத்தில் இடம் பெற்றிருந்தது. பவநகர் கல்லூரியில் நான் படித்துக்கொண்டிருந்தபோது, இவ்விஷயம் பற்றி ஜயசங்கர் பூச்சுடன் பேசினேன். அந்தச் சமயத்தில், நான் ஸோரத் வாசி என்ற முறையில், லண்டனுக்குப் போவதற்காகக் கல்விச் சகாய நிதி (ஸ்காலர்ஷிப்) கொடுத்து உதவும்படி கோரி ஜுனகட் சமஸ்தானத்துக்கு மனுச் செய்துகொள்ளுமாறு எனக்கு அவர் ஆலோசனை கூறினுர். அதற்கு நான் என்ன பதில் சொன்னேன் என்பது எனக்குச் சரிவர ஞாபகமில்லை. சகாய நிதி பெறுவது இயலாத காரியம் என்று நான் அப்போது நினைத்திருக்கக் கூடும். அதிலிருந்து இந்நாட்டுக்கு வரவேண்டுமென்ற எண்ணம் எனக்கு உண்டாயிற்று. என் லட்சியத்தை அடைவதற்கான சாதனங்களைத் தேடலானேன்.

ராஜ்கோட்டில் விடுமுறையை உல்லாசமாகக் கழிப்பதற்காக நான் 1888, ஏப்ரல் 13-ஆம் தேதியன்று பவநகரை விட்டுப் புறப்பட்டேன். 15 நாள் விடுமுறைக்குப் பிறகு, என் தமையனும் நானும் பட்வாரியைப் பார்க்கப் போனோம். அங்கே போய்த் திரும்பி வரும்போது, "மாவ்ஜி ஜோஷி*யைப் பார்க்கப் போவோம்" என்று தமையனர் கூறினர். அப்படியே இருவரும் சென்றோம். மாவ்ஜி ஜோஷி வழக்கம்போல என் க்ஷேமலாபங்களை விசாரித்தார். அப்புறம் பவநகரில் நடைபெறும் என் படிப்பு சம்பந்தமாகச் சில கேள்விகள் கேட்டார். முதல் வருடத்தில் நான் பரீட்சையில் தேறுவதற்கான சந்தர்ப்பம் எதுவுமே இல்லை என்று வெட்ட வெளிச்சமாகச் சொன்னேன். பாடங்கள் எனக்கு மிகவும் கடுமையாக இருக்கின்றன என்றும் தெரிவித்தேன். இதைக் கேட்ட மாவ்ஜி ஜோஷி, சட்டக் கல்வி பயில்வதற்கு என்னைக் கூடிய சீக்கிரத்தில் லண்டனுக்கு அனுப்பும்படி என் தமையனருக்கு யோசனை கூறினர். அதற்கு ஐயாயிரம் ரூபாய்தான் செலவாகும் என்றும் சொன்னர். "இவன் கொஞ்சம் துவரம் பருப்பைக் கையோடு கொண்டு போகட்டும். அங்கே இவனே கைச் சமையல் செய்து சாப்பிட்டுக்கொள்ளலாம். ஆகவே, மத சம்பந்தமான ஆட்சேபணை எதுவும் இராது. இந்த விஷயத்தை யாரிடமும் சொல்லி விடவேண்டாம். சகாய நிதி வாங்குவதற்கு முயற்சி செய். ஜுனகட் சமஸ்தானத்துக்கும். போர்பந்தர் சமஸ்தானத்துக்கும் மனுச் செய். என் மகன் கேவல்ராமைப்† போய்ப் பார். பண உதவி பெறும் முயற்சியில் தோற்று விட்டால், உன் கையிலும் பணம் இல்லாவிட்டால், மேஜை நாற்காலி முதலிய சாமான்களை விற்றுவிடு. எப்படியும் மோகனதாஸை லண்டனுக்கு அனுப்பிவை. காலஞ்சென்ற உங்கள் தகப்பனரின் புகழைப் பேணிக் காப்பதற்கு அது ஒன்றே வழி என்று நான் நினைக்கிறேன்." மாவ்ஜி ஜோஷி எது சொன்னலும் அதில் எங்கள் குடும்பத்திலுள்ள அத்தனை பேருக்கும் மிகுந்த நம்பிக்கை உண்டு. என் தமையனரோ, சுபாவத்திலேயே எதையும் நம்பக் கூடியவர். ஆகவே, என்னை லண்டனுக்கு அனுப்பி வைப்பதாக வாக்குறுதி கொடுத்தார்.

விஷயத்தை ரகசியமாக வைத்திருப்பதாக வாக்குறுதி செய்து கொடுத்திருந்தும், அன்றைத் தினமே அதைக் குஷால் பாயிடம்‡ என் தமையனர் கூறினர். மதாசாரத்தை நான் விடாதிருக்கும் பட்சத்தில், என் லண்டன் பிரயாணத்தை அவர் ஆமோதிப்பதாகச் சொன்னர். அன்றே மேக்ஜி பாயிடமும்§ இவ்விஷயம் தெரிவிக்கப்பட்டது. எங்கள் யோசனைக்கு அவர் முற்றிலும் சம்மதம் அளித்தவுடன், ரூ. 5000 கொடுக்கத் தயாராக இருப்பதாகவும் கூறினர். அவர் கூறியதில் சிறிது நம்பிக்கை ஏற்பட்டிருந்தது. ஆனல், என் அன்புக்குரிய அன்னையிடம் இதைப் பற்றிச் சொன்னபோது, இப்படி நம்பி விடுவதற்காக அவர் என்னைக் கடிந்துகொண்டார். உரிய காலம் வந்ததும் அவரிடம் நான் கொஞ்சம்கூடப் பணம் பெறப் போவதில்லை என்றும் என் அன்னையார் கூறினர். உரிய காலம் வரப்போவதில்லை என்றே அவர் கருதினர்.

அன்று நான் கேவல்ராம் பாயிடம் போவதாக இருந்தது. அதன்படியே போய்ப் பார்த்தேன். அவரோடு பேசியது எனக்குத் திருப்திகரமாக இல்லை.

---

* மாவ்ஜி ஜோஷி: புரோகிதர்; காந்தி குடும்பத்துக்கு நண்பர்; ஆலோசகர்.

† கேவல்ராம்: கத்தியவாரின் வழக்கறிஞர்.

‡ குஷால்பாய்: காந்திஜியின் பெரிய தகப்பனருடைய குமாரர்; தென் ஆப்பிரிக்காவில் காந்திஜியோடு சேர்ந்து பணியாற்றிய சகன்லால், மகன்லால் ஆகியோரின் தந்தை.

§ மேக்ஜி பாய்: காந்திஜியின் பெரிய தகப்பனருடைய குமாரர்.

எனது நோக்கத்தை அவர் ஆதரித்தது உண்மைதான். ஆனால், "அங்கே நீ குறைந்தது பத்தாயிரம் ரூபாயாவது செலவழிக்க வேண்டியிருக்கும்'' என்று அவர் சொன்னார். இது எனக்குப் பெரிய அடியாக இருந்தது. அவர் மேலும் சொன்னார்: ''உன் மத ஆசாரங்களையெல்லாம்–அப்படி ஏதாவது இருந்தால்–நீ மூட்டைகட்டி வைத்துவிடவேண்டியிருக்கும். நீ மாமிசம் சாப்பிடவேண்டும்; குடிக்க வேண்டும். இது இல்லாமல் அங்கே நீ வாழ முடியாது. நீ எவ்வளவு அதிகமாகச் செலவழிக்கிறாயோ, அவ்வளவுக்குப் புத்திக் கூர்மை உடையவனாக இருப்பாய். இது ஒரு அதிமுக்கியமான விஷயம். நான் உன்னிடம் ஒளிவு மறைவில்லாமல் பேசுகிறேன். இதற்காக வருத்தப்பட்டுக் கொள்ளாதே. இதோ பார், நீ இளைஞன். லண்டனில் பற்பல கவர்ச்சிகள் உண்டு. அந்த வலைகளுக்குள் நீ அகப்பட்டுக் கொள்ளக் கூடும்.''

இந்தப் பேச்சைக் கேட்டதும் எனக்குச் சிறிது மனச்சோர்வு உண்டாயிற்று. ஆனால், நான் ஒன்றை எண்ணித் துணிந்தபின் அதைச் சுலபத்தில் விட்டுவிடக் கூடியவன் அல்ல. அவர் தமது கூற்றுக்கு ஸ்ரீ குலாம் முகமது முன்ஷியை உதாரணம் காட்டினார். உடனே நான் அவரிடம், சகாய நிதி பெறுவதற்கு எந்த வகையிலாவது உதவ முடியுமா என்று கேட்டேன். அவர் கை விரித்துவிட்டார். அதைத் தவிர வேறு எதையும் மிகுந்த சந்தோஷத்துடன் செய்வதாகக் கூறினார். இதையெல்லாம் ஒன்று விடாமல் என் தமையனாரிடம் கூறினேன்.

அப்புறம், என் அன்புமிக்க அன்னையிடம் சம்மதம் பெறும் காரியம் என்னிடம் ஒப்படைக்கப்பட்டது. அதை ஒரு கஷ்டமான காரியமாக நான் நினைக்கவில்லை. ஒன்றிரண்டு தினங்களுக்குப் பிறகு, என் தமையனாரும் நானும் ஸ்ரீ கேவல்ராமைப் பார்க்கப் போனோம். அப்போது அவர் வேலையில் பரபரப்போடு ஈடுபட்டிருந்த போதிலும் எங்களைப் பார்த்தார். அவரும் நாங்களும் இரண்டொரு தினங்களுக்கு முன் பேசியது போலவே அன்றும் பேசினோம். என்னைப் போர்பந்தருக்கு அனுப்பும்படி என் தமையனாருக்கு இவர் ஆலோசனை சொன்னார். இதற்குச் சம்மதித்து, நாங்கள் திரும்பி வந்தோம். இவ்விஷயம் பற்றி என் தாயாரிடம் தமாஷாக ஆரம்பித்தேன். ஆனால், இப்பொழுது தமாஷ் எதார்த்தமாகி விட்டது. அப்புறம் நான் போர்பந்தருக்குப் போவதற்கு ஒரு நாள் குறிக்கப்பட்டது.

இரண்டு மூன்று முறை நான் போகத் தயாராக இருந்தேன். ஆனால், ஏதாவது ஒரு கஷ்டம் வந்து தடங்கலாக நின்றது. ஒரு தடவை ஜவேர்சந்துடன் போவதாக இருந்தேன். ஆனால், புறப்படுவதற்கு ஒரு மணி நேரத்துக்கு முன் ஒரு கடும் விபத்து நடந்துவிட்டது. என் நண்பன் ஷேக் மேதாப்புடன்* நான் எப்போதும் சண்டை போட்டுக் கொண்டிருந்தேன். புறப்படும் தினத்தன்று இந்தச் சண்டையைப்பற்றிய சிந்தனையிலேயே மூழ்கியிருந்தேன். இரவில் நாங்கள் ஒரு சங்கீதக் கச்சேரி நடத்தினோம். அதை நான் நன்றாக ரஸிக்கவில்லை. இரவு சுமார் 10-30 மணிக்குக் கச்சேரி முடிந்தது. நாங்கள் எல்லோரும் மேக்ஜி பாயையும், ரமியையும் பார்க்கச் சென்றோம். செல்லும் வழியில், ஒரு புறம் லண்டனைப் பற்றிய பரபரப்பான சிந்தனைகளிலும், மறுபுறம் ஷேக் மேதாப்பைப்பற்றிய சிந்தனைகளிலும் ஆழ்ந்திருந்தேன். இந்தச் சிந்தனைகளின் நடுவே, நான் என்னை அறியாமலே ஒரு வண்டியில் மோதிக்

* ஷேக் மேதாப்: காந்திஜியின் பால்ய நண்பர். இவரைத் திருத்துவதற்குக் காந்திஜி பல வருட காலம் முயன்றும் முடியாமல் போய்விட்டது.

கொண்டேன். எனக்குச் சிறிது காயம் ஏற்பட்டது. ஆனாலும், நடந்து செல்லுவதற்கு நான் யாருடைய உதவியையும் ஏற்றுக்கொள்ளவில்லை. எனக்குத் தலை சுற்றி மயக்கம் வருவதுபோல இருந்தது. பிறகு நாங்கள் மேக்ஜிபாய் வீட்டுக்குள் நுழைந்தோம். அங்கே நான் திரும்பவும் என்னை அறியாமல் ஒரு கல்லில் மோதிக் கொண்டுவிட்டேன். அதனாலும் காயம் ஏற்பட்டது. நான் தன்னுணர்வையே இழந்துவிட்டேன். அதற்குப் பிறகு என்ன நடந்தது என்றே எனக்குத் தெரியாது. சில படிகள் தாண்டியதும் நான் கீழே விழுந்து விட்டதாக அப்புறம்தான் எனக்குச் சொன்னார்கள். ஐந்து நிமிட நேரம் எனக்குப் பிரக்ஞையே இல்லாமல் போய்விட்டது. நான் செத்துப்போய் விட்டதாகவே அவர்கள் நினைத்து விட்டார்கள். ஆனல், அதிருஷ்டவசமாக நான் விழுந்த இடம் மிருதுவான தரையாக இருந்தது. கடைசியில் எனக்குப் பிரக்ஞை வந்ததும் அவர்கள் எல்லோரும் மிக்க சந்தோஷம் அடைந்தார்கள். தாயாரை அழைத்து வரும்படி சொல்லி அனுப்பினர்கள். அவர் எனக்காக மிகவும் மனம் வருந்தினர். இந்தச் சம்பவம் என் காலதாமதத்துக்குக் காரணமாக அமைந்துவிட்டது. நான் சௌக்கியமாக இருப்பதாகச் சொல்லியும், ஒருவரும் என்னைப் போக அனுமதிக்கவில்லை. மனோதைரியம் கொண்ட என் அன்புமிக்க தாயார், நான் போவதற்கு அனுமதித்திருப்பார் என்பதை நான் பிற்பாடு அறியலானேன். ஆனல், அவரும் ஊராரின் பேச்சுக்குப் பயந்தார். கடைசியில் மிகுந்த கஷ்டத்தின்பேரில் சில நாட்களுக்குப் பிறகு ராஜ்கோட்டை விட்டுப் போர்பந்தருக்குப் போக எனக்கு உத்தரவு கொடுத்தார்கள். போகும் வழியில் அங்கும் நான் சில கஷ்டங்களைத் தாங்கிக் கொள்ள வேண்டியதாயிற்று.

ஒருவழியாக போர்பந்தருக்குப் போய்ச் சேர்ந்துவிட்டேன். இதில் எல்லோருக்கும் மகிழ்ச்சி. என்னை வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போவதற்காக லால்பாயும்,* கர்ஸன் தாஸும்† காடி பாலத்துக்கு வந்திருந்தார்கள். இப்போது நான் போர்பந்தரில் செய்ய வேண்டியது என்ன? என் சிற்றப்பாவிடமிருந்து சம்மதத்தைப் பெற்றாக வேண்டும். இரண்டாவதாக, சிறிது பண உதவி செய்யும்படி கோரி ஸ்ரீ லேலிக்கு‡ மனுச் செய்யவேண்டும். கடைசியாக, சமஸ்தானத்திலிருந்து திரவிய சகாயம் பெறும் முயற்சியில் தோற்றுவிட்டால், எனக்குச் சிறிது பணம் கொடுத்து உதவும்படி பரமானந்த பாயிடம்§ கேட்கவேண்டும். நான் செய்த முதல் காரியம், சிற்றப்பாவைப் பார்த்து, நான் லண்டனுக்குப் போவதை அவர் விரும்புகிறாரா, இல்லையா என்று கேட்டதுதான். வழக்கம்போல, நான் எதிர்பார்த்தபடியே, லண்டனுக்குப்போவதால் ஏற்படும் நன்மைகளைச் சொல்லும்படி அவர் என்னிடம் கேட்டார். என் சக்திக்கு இயன்றவாறு நான் எடுத்துச் சொன்னேன். அப்புறம் அவர் கூறியதாவது: "ஆமாம். இந்தத் தலைமுறையைச் சேர்ந்தவர்கள் இதை மிகவும் விரும்பத்தான் செய்வார்கள். ஆனல், என்னைப் பொறுத்த மட்டிலும் நான் இதை விரும்பவில்லை. எதற்கும், பின்னல் நாம் யோசித்துக் கொள்ளுவோம்." அவர் இப்படிப்

---

* லால்பாய்: காந்திஜியின் சிற்றப்பா பிள்ளை.

† கர்ஸன் தாஸ்: காந்திஜியின் தமையனார்.

‡ லேலி, போர்பந்தர் சமஸ்தானத்தின் இளவரசர். மைனராக இருந்தபோது சமஸ்தானத்தை நிர்வகித்து வந்த பிரிட்டிஷ் ஏஜெண்டு. இவருக்கு காந்திஜி எழுதிய கடித நகலும் இப் பகுதியில் பின்னல் கொடுக்கப்பட்டிருக்கிறது.

§ பரமானந்த பாய்: காந்திஜியின் சிறிய தகப்பனாருடைய குமாரர்.

பதில் அளித்ததைக் கண்டு நான் ஏமாற்றம் அடைந்து விடவில்லை. எப்படியும் அவர் அந்தரங்கத்தில் அதை விரும்பினர் என்பதை அறிந்து கொண்டதில் எனக்கு ஒரு திருப்திதான். நான் நினைத்தது சரி என்பதை அவருடைய காரியாதிகளும் நிரூபித்தன.

என் துரதிருஷ்டம் ஸ்ரீ லேலி போர்பந்தரில் இல்லை. துரதிருஷ்டங்கள் ஒவ்வொன்ருக வருவதில்லை (ஒன்று சேர்ந்தே வருகின்றன) என்பது முற்றிலும் உண்மை. அடுத்த ஞாயிற்றுக்கிழமை வரை அவருக்காகக் காத்திருக்கும்படி என் சிற்றப்பா கூறினர். அப்பொழுது அவர் வரவில்லை என்ருல், அவர் இருக்கும் இடத்துக்கு என்னை அனுப்பி வைப்பதாகவும் சிற்றப்பா சொன்னர். ஆனல், இவர் வெளியூரிலிருந்து ஞாயிற்றுக்கிழமையன்று வந்துவிட்டார் என்பதை இங்கே எழுதுவதில் நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். திங்கட்கிழமையன்று நான் அவரைப் பார்க்க வேண்டும் என்று ஏற்பாடாயிற்று. அப்படியே போய்ப் பார்த்தேன். என் வாழ்க்கையிலேயே முதல்முதலாக ஆங்கிலேய கனவானை அப்பொழுதுதான் பேட்டி கண்டேன். இதற்குமுன் அவரைச் சந்திக்க வேண்டுமென்ற துணிச்சல் எனக்கு ஒருபோதும் ஏற்பட்டதில்லை. ஆனல், லண்டனைப் பற்றிய சிந்தனைகள் என்னைத் தைரியசாலியாக்கி விட்டன. அவரோடு குஜராத்தியில் பேசினேன். அவர் மிகவும் அவசரத்தோடு இருந்தார். தமது பங்களாவின் மேல் மாடிக்குப் போகும் படிகளில் ஏறிக்கொண்டிருந்தபோது அவர் என்னைப் பார்த்தார். போர்பந்தர் சமஸ்தானம் மிகவும் ஏழ்மை நிலையில் இருப்பதாகவும், எனக்குப் பண உதவி எதுவும் செய்ய இயலாது என்றும் அவர் சொன்னர். ஆனலும், நான் முதலில் இந்தியாவிலேயே படித்துப் பட்டம் பெறவேண்டுமென்றும், எனக்கு ஏதாவது உதவி செய்ய முடியுமா என்று தாம் அப்புறம் பார்ப்பதாகவும் அவர் கூறினர். அவரிடமிருந்து இப்படிப்பட்ட பதில் வந்தது, உண்மையில் என்னை ஏமாற்றத்திற்குள்ளாக்கி விட்டது. அவரிடம் இம்மாதிரியான மறுமொழியை நான் எதிர்பார்க்கவே இல்லை.

இப்பொழுது நான் செய்ய வேண்டிய வேலை, பரமானந்த பாயைக்கண்டு எனக்கு ரூபாய் 5,000 கொடுக்கும்படி கேட்பதாகும். என் சிற்றப்பா நான் லண்டனுக்குப் போவதை ஆமோதித்தால் தாம் சந்தோஷமாகப் பணம் கொடுப்பதாக அவர் சொல்லிவிட்டார். சிற்றப்பாவின் சம்மதத்தைப்பெறுவது கொஞ்சம் கஷ்டமான காரியம்தான் என்று கருதினேன். ஆனலும், எப்படியும் சம்மதம் பெற்றுவிடுவது என்று உறுதி கொண்டேன். அவர் ஏதோ வேலையில் ஈடுபட்டிருந்தபோது, நான் போய்ப் பார்த்தேன். ''சிற்றப்பா! நான் போவதைப் பற்றி நீங்கள் உண்மையிலேயே என்ன நினைக்கிறீர்கள் என்பதை இப்போது சொல்லுங்கள். உங்கள் சம்மதத்தைப் பெறுவதுதான் நான் இங்கு வந்ததன் பிரதான நோக்கம்'' என்று சொன்னேன். அதற்கு அவர் கூறிய பதில்: ''அதை நான் ஆமோதிக்க முடியாது. நான் ஸ்தல யாத்திரை செய்யப் போகிறேன் என்று உனக்குத் தெரியாதா? அந்த நிலையில், நீ லண்டனுக்குப் போக வேண்டுமென்று நான் விரும்புவதாக மற்றவர்கள் சொன்னல், எனக்கு அவமானகரமான காரியம் அல்லவா? ஆனலும், உன் தாயாரும், தமையனும் விரும்பினல், நான் அதை ஆட்சேபிக்கவே இல்லை.''

''நான் லண்டனுக்குப் போவதற்கு நீங்கள் அனுமதி கொடுக்க மறுப்பதன் மூலம், பரமானந்தபாய் எனக்குப் பண உதவி செய்வதைத் தடுக்கிறீர்கள் என்பதை நீங்கள் அறியமாட்டீர்கள்'' என்று நான் சொன்னேன்.

நான் இந்த வார்த்தைகளைச் சொல்லவே, அவர் கோபக் குரலில், "அப்படியா? அவன் ஏன் அப்படிச் சொல்லுகிறான் என்று உனக்குத் தெரியாது, அப்பனே. நீ போவதற்கு நான் ஒருகாலும் சம்மதம் அளிக்க மாட்டேன் என்பதைத் தெரிந்து கொண்டுதான், அவன் அந்த சால்ஜாப்பை சொல்கிறான். உண்மை என்னவென்றால், உனக்கு எப்போதும் எந்தவித உதவியும் செய்ய அவன் தயாராக இல்லை. மற்றப்படி அவன் உதவி புரிவதை நான் தடுக்கவில்லை" என்றார். இவ்வாறு எங்கள் பேச்சு முடிந்தது. பிறகு நான் உற்சாகத்துடன் பரமானந்தபாயிடம் ஓடினேன். சிற்றப்பாவும் நானும் பேசிக்கொண்டதை வார்த்தை விடாமல் அவரிடம் சொன்னேன். இதைக் கேட்டதும் அவருக்குக் கோபம் வந்துவிட்டது. அதே சமயத்தில், ரூ. 5,000 கொடுப்பதாக வாக்குறுதியும் அளித்தார். அவர் வாக்குறுதி அளித்தபோது நான் பெருமகிழ்ச்சி அடைந்தேன். அதைவிட எனக்கு மகிழ்ச்சி அளித்தது என்னவென்றால், அவர் தம் மகன் மீது ஆணையிட்டு வாக்குறுதி அளித்ததுதான். அன்றிலிருந்து, நான் லண்டனுக்குப் போவது நிச்சயம் என்று நினைக்கத் தொடங்கினேன். அப்புறம் போர்பந்தரில் சில தினங்கள் தங்கியிருந்தேன். அங்கே இருந்தபோது நாளுக்குநாள் அந்த வாக்குறுதியிடம் எனக்கு நம்பிக்கை அதிகரித்துக்கொண்டு வந்தது.

நான் ராஜ்கோட்டில் இல்லாதபோது அங்கே நடந்த சமாச்சாரங்கள் இவைதான்: என் நண்பன் ஷேக் மேதாப்-அவனை ஓர் அண்டப் புரட்டன் என்றே நான் சொல்ல வேண்டும்-மேக்ஜிபாய்க்கு அவருடைய வாக்குறுதியை நினைவூட்டி, எனக்கு ரூ. 5,000 தேவையாக இருக்கிறது என்றும், இதே தோரணையில் வேறு சில வரிகளையும் நான் எழுதியதுபோல எழுதி, ஒரு பொய்க் கடிதத்தைத் தயாரித்து அவரிடம் சேர்ப்பித்துவிட்டான். கடிதத்தைப் பார்த்ததும் அது நான் எழுதிய கடிதம் என்றே அவர் நம்பிவிட்டார். அவருக்குப் பெருமை தாங்கவில்லை. எனக்கு ரூ. 5,000 கொடுப்பதாக சத்திய வாக்குறுதி கொடுத்துவிட்டார். இந்த விஷயம் நான் ராஜ்கோட்டுக்குப் போய்ச் சேரும் வரையில் எனக்குத் தெரிவிக்கப்படவில்லை.

இப்போது திரும்பவும் போர்பந்தருக்கே வருவோம். ஒரு வழியாக, நான் அங்கிருந்து புறப்படுவதற்கான தேதி குறிக்கப்பட்டது. என் குடும்பத்தைச் சேர்ந்தவர்களிடம் விடை பெற்றுக்கொண்டு, என்னுடைய தமையனார் கர்ஸன் தாஸுடனும், கஞ்சத்தனத்தின் அவதாரமாகவே விளங்கிய மேக்ஜியின் தகப்பனருடனும் ராஜ்கோட்டுக்குப் புறப்பட்டேன். ராஜ்கோட்டுக்குப் போவதற்குமுன், என் நாற்காலி மேஜை முதலிய தளவாடங்களை விற்பதற்கும், வீட்டுக்கு வாடகை கொடுப்பதை நிறுத்திவிடுவதற்கும் பவநகருக்குச் சென்றேன். இந்த வேலைகளை ஒரே நாளில் செய்து முடித்துவிட்டேன். அக்கம் பக்கத்தில் இருந்த நண்பர்களை விட்டுப் பிரிந்தபோது, அவர்களும் வீட்டுச் சொந்தக்காரியான அன்பான அம்மாளும் கண்ணீர் விட்டார்கள். நண்பர்களின் அன்பையும், அனுப்ராமின் அன்பையும், மற்றவர்களின் அன்பையும் நான் எந்தக் காலத்திலும் மறக்கமாட்டேன். இந்த வேலைகளை முடித்துக்கொண்டு, ராஜ்கோட்டுக்குப் போய்ச் சேர்ந்தேன்.

ஆனால், மூன்று வருடகால லண்டன் வாசத்துக்கு நான் புறப்படுமுன் கர்னல் வாட்ஸனை* நான் பார்க்க வேண்டியவனாக இருந்தேன். அவர் 1888,

* கர்னல் வாட்ஸன்: ராஜ்கோட்டை வாசஸ்தலமாகக் கொண்டிருந்த, கத்தியவாரின் ராஜீய ஏஜெண்டு.

ஜூன் 19-ஆம் தேதிதான் ராஜ்கோட்டுக்கு வருவதாக இருந்தது. நான் மே மாத ஆரம்பத்திலேயே ராஜ்கோட்டுக்குப் போய்விட்டேன். ஆகவே இதற்கும் அதற்கும் இடையே, என்னைப் பொறுத்த மட்டிலும், மிகவும் நீண்ட காலம் கழியவேண்டியதாயிற்று. இருந்தாலும் அதை என்னால் தவிர்க்க முடியவில்லை. கர்னல் வாட்ஸனிடம் என் தமையனார் மிகமிக நம்பிக்கை வைத்திருந்தார். இந்த நாட்கள் உண்மையிலேயே கஷ்டமான நாட்கள். இரவில் என்னால் சரியாகத் தூங்க முடியாது. எப்போதும் கனவுகள் வந்து மோதிக் கொண்டிருந்தன. சிலர் என்னை லண்டனுக்குப்போக வேண்டு மென்றும், சிலர் வேண்டாம் என்றும் சொன்னார்கள். சில சமயங்களில் என் தாயாரும் போக வேண்டாம் என்று என்னிடம் சொன்னார். மிகவும் ஆச்சரிய மான விஷயம் என்னவென்றால், என் தமையனாரும்கூட தம் மனத்தை மாற்றிக் கொண்டு விட்டதுதான். ஆகவே, நான் அந்தரத்தில் தொங்கிக்கொண்டிருந் தேன். ஆனால், நான் எந்த ஒரு காரியத்தைத் தொடங்கினாலும் அதை ஒருபோதும் விட்டுவிட மாட்டேன் என்பதை அவர்கள் அனைவரும் அறிந் திருந்ததால், ஒன்றும் பேசாமல் இருந்தார்கள். அந்தச் சமயத்தில், மேக்ஜி பாயின் வாக்குறுதி சம்பந்தமாக அவரது மனநிலையை அறிந்துவரும்படி என் தமையனார் என்னிடம் சொன்னார். அதன் பலன் ஏமாற்றம் தருவதாகவே இருந்தது. அத்துடன், அதிலிருந்து அவர் எப்போதும் ஒரு விரோதியாகவே நடந்துகொண்டார். யாரிடத்திலும், எவரிடத்திலும் அவர் என்னைப் பற்றி மோசமாகப் பேசிக்கொண்டு வந்தார். ஆனால், அவருடைய வசைமாரியைப் பொருட்படுத்தாமல் இருப்பதற்கான சக்தி எனக்கு இருந்தது. என் அன்பு மிக்க தாயார், அவரிடம் மிகுந்த கோபம் கொண்டிருந்தார்; சில சமயங்களில் பரபரப்பும் அடைந்தார். ஆனால், அவரை நான் சுலபமாகச் சமாதானப்படுத்தி விடுவேன். என் அன்புமிக்க தாயார் என் பொருட்டுக் கண்ணீர் சிந்திக் கொண்டிருக்கும்போது, நான் பல முறை அவரைச் சமாதானப்படுத்தி, மனம் விட்டுச் சிரிக்கும்படி செய்வதில் வெற்றி பெற்றிருக்கிறேன். கடைசியில், கர்னல் வாட்ஸன் வந்து சேர்ந்தார். அவரைப் பார்த்தேன். ''இதைப் பற்றி யோசிக்கிறேன்'' என்று அவர் சொன்னாரே ஒழிய, அவரிடமிருந்து எந்தவித உதவியையும் எப்போதும் நான் பெறவில்லை. கஷ்டத்தின் பேரிலேயே அவரிட மிருந்து ஒரு சின்னஞ்சிறிய அறிமுகக் குறிப்பை நான் பெறமுடிந்தது என்பதை வருத்தத்துடன் கூறுகிறேன். அந்தத் துண்டுக் காகிதம் லட்சம் ரூபாய் பெறும் என்று அவர் அதிகார தோரணையில் கம்பீரமாகக் கூறினார். அதை இப்போது நினைத்தாலும், எனக்கு உண்மையிலேயே சிரிப்பு வருகிறது.

அப்புறம் நான் புறப்படுவதற்கு நாள் நிச்சயம் செய்யப்பட்டது. முதலில் ஆகஸ்டு 4-ஆம் தேதியன்று முடிவு செய்யப்பட்டது. ஆனால், விஷயம் இப்போது நெருக்கடியான கட்டத்துக்கு வந்துவிட்டது. நான் இங்கிலாந்துக் குப் போக விரும்புகிறேன் என்ற செய்தி பத்திரிகை மூலமாகப் பரவிவிட்டது. என் பிரயாணத்தைப் பற்றி என் சகோதரரிடம் எப்போதும் சிலர் கேட்டுக் கொண்டிருந்தார்கள். இப்போதுதான், லண்டனுக்குப் போகும் உத்தேசத் தைக் கைவிடும்படி அவர் என்னிடம் சொன்னார். ஆனால், நான் அதற்கு ஒப்புக் கொள்ளவில்லை. அப்புறம் அவர் மே. த. ராஜ்கோட் தாகூர் சாகிப்*பைக் கண்டு எனக்குச் சிறிது பண உதவி செய்யும்படி கேட்டுக்கொண்டார். ஆனால், அவ்விடமிருந்தும் யாதொரு உதவியும் கிடைக்கவில்லை. அப்புறம் நான்

* ராஜ்கோட் சமஸ்தானாதிபதி.

கடைசித் தடவையாகத் தாகூர் சாகிப்பையும், கர்னல் வாட்ஸனையும் போய்ப் பார்த்தேன். இரண்டாமவரிடமிருந்து ஒரு அறிமுகக் குறிப்பையும், முதலாமவரிடமிருந்து ஒரு போட்டோவையும் பெற்றுக்கொண்டேன். இந்தச் சமயத்தில் நான் அளவுக்கு மீறி முகஸ்துதி செய்ய வேண்டியிருந்தது, எனக்குக் கோபத்தை உண்டாக்கிவிட்டது என்பதை இங்கே நான் எழுதியாகவேண்டும். எதையும் நம்பும் சுபாவம் படைத்த என் அன்புமிக்க சகோதரருக்காக நான் இவ்வாறு செய்ய நேர்ந்தது. இல்லையென்றால், இதுபோன்ற மட்டரகமான முகஸ்துதியில் நான் இறங்கியிருக்கவே மாட்டேன். கடைசியில் ஆகஸ்டு 10–ஆம் தேதி வந்தது. என் தமையனார், ஷேக் மேதாப், ஸ்ரீ நாதுபாய், குஷால்பாய் ஆகியோரும் நானும் புறப்பட்டோம்.

ராஜ்கோட்டிலிருந்து பம்பாய்க்குப் பயணமானேன். அது வெள்ளிக்கிழமை இரவு. எனக்கு என் பள்ளிக்கூடச் சகாக்கள் ஒரு பிரிவுபசாரப் பத்திரம் வாசித்தளித்தார்கள். அதற்குப் பதிலளிக்க நான் எழுந்தபோது, திக்குமுக்காடிப்போனேன். நான் பேச வேண்டியதில் பாதியைப் பேசும் போதே நடுங்கத் தொடங்கிவிட்டேன். நான் இந்தியாவுக்குத் திரும்பி வரும் போது இவ்வாறு நடுங்க மாட்டேன் என்று நம்புகிறேன். இரவில் என்னை வழியனுப்புவதற்கு அநேகர் வந்திருந்தனர். ஸ்ரீமான்கள் கேவல்ராம், சகன் லால் (பட்வாரி), விரஜ்லால், ஹரிசங்கர், அமுலக், மனேக் சந்த், லத்தீப், போபட், பான்ஜி, கிம்ஜி, ராம்ஜி, தாமோதர், மேக்ஜி, ராம்ஜி காளிதாஸ், நாரான்ஜி, ரஞ்சோத்தாஸ், மணிலால் ஆகியோர் வழியனுப்ப வந்தவர்களில் சிலர். ஜடாசங்கர், விஸ்வநாத் முதலியவர்களையும் சேர்த்துக்கொள்ளலாம். முதலாவது ஸ்டேஷன் கோண்டால். அங்கே டாக்டர் பாவ் வந்து பார்த்தார். கபூர்பாய் எங்களோடு வந்தார். நாதுபாய், ஜெட்பூர் வரையிலும் வந்தார். டோலாவில் ஸ்ரீமான்கள் நாரான்தாஸ், பிரான்சங்கர், நார்பேராம், ஆனந்த்ராய், விரஜ்லால் ஆகியோர் வழியனுப்ப வந்தார்கள்.

நான் பம்பாயைவிட்டுப் புறப்பட வேண்டிய நாள் 21–ஆம் தேதி. ஆனால், பம்பாயில் நான் சமாளிக்க வேண்டிய கஷ்டங்களை வருணிப்பது இயலாத காரியம். என்னுடைய சாதியைச் சேர்ந்தவர்கள், என் பிரயாணத்தை அங்கேயே தடுத்துவிடத் தங்களால் ஆன மட்டும் முயற்சி செய்தார்கள். அநேகமாக எல்லோருமே எதிர்க்கட்சியில் இருந்தார்கள். அத்துடன் கடைசி கடைசி என்று, என் சகோதரர் குஷால்பாயும், பட்வாரியும்கூடப் போக வேண்டாம் என்று எனக்குப் புத்திமதி கூறினார்கள். ஆனால், அவர்கள் புத்திமதிக்கு நான் செவி சாய்க்கவில்லை. அப்புறம் கடலின் பருவநிலை என் பிரயாணத்தைத் தாமதப்படுத்துவதற்கு ஒரு சாக்காக இருந்தது. பிறகு என் சகோதரரும், மற்றவர்களும் என்னை விட்டுச் சென்றார்கள். ஆனால், திடுதிப்பென்று 1888, செப்டம்பர் 4–ஆம் தேதியன்று நான் பம்பாயைவிட்டுப் புறப்பட்டேன். இந்தச் சமயத்தில், ஸ்ரீமான்கள் ஜகமோகன்தாஸ், தாமோதர்தாஸ், பேச்சார்தாஸ் ஆகியோருக்கு நான் மிகவும் கடமைப்பட்டிருந்தேன். சாமள்ஜிக்கும் நான் பெரிதும் கடமைப்பட்டவனே. ரஞ்சோத்லாலுக்கும் என்ன கைம்மாறு செய்வதென்றே எனக்குத் தெரியவில்லை. அது, கடமைப்படுவதை விட அதிகப்படியான ஒன்றாகும். ஸ்ரீமான்கள் ஜகமோகன்தாஸ், மன்சங்கர், பேச்சார்தாஸ், நாராயண்தாஸ் பட்வாரி, துவாரகாதாஸ், போபட்லால்,

காசிதாஸ், ரஞ்சோத்லால், மோடி, தாகூர், ரவிசங்கர், பிரோஸ்ஷா, ரத்தன்ஷா, சாமள்ஜி ஆகியோரும், மற்றும் சிலரும் கிளேட் என்ற கப்பலுக்குள் வந்து என்னை வழியனுப்பினர்கள். இவர்களில் பட்வாரி எனக்கு 5 ரூபாய் கொடுத்தார். சாமள்ஜியும் அதே தொகை கொடுத்தார். மோடி கொடுத்தது இரண்டு ரூபாய். காசிதாஸ் ஒரு ரூபாய்; நாராயண்தாஸ் 2 ரூபாய். மற்றும் சிலர் கொடுத்தார்கள். அவர்களை மறந்துவிட்டேன். ஸ்ரீ மான்சங்கர் எனக்கு ஒரு வெள்ளிச் சங்கிலி கொடுத்தார். பிறகு எல்லோரும் மூன்றுண்டுக் காலத்துக்கு என்னை வழியனுப்பி விட்டுப் புறப்பட்டார்கள். இதை முடிப்பதற்குமுன் நான் மற்ரென்றை இங்கே எழுதியாக வேண்டும். அதாவது, நான் இருந்த நிலையில் வேறொருவர் இருந்திருந்தால், அவர் இங்கிலாந்தைப் பார்த்திருக்கவே முடியாது என்று கூறுவேன். நான் சமாளிக்க வேண்டியிருந்த கஷ்டங்கள், இங்கிலாந்தை அருமையான ஒன்ருகச் செய்துவிட்டன.

4, செப்டம்பர், 1888. கடல் பிரயாணம். கப்பல் புறப்படும்போது மாலை 5 மணி இருக்கும். கடல் பிரயாணத்தை எண்ணி நான் மிகவும் கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன். ஆனல், அதிருஷ்டவசமாக அது எனக்கு ஒத்துக்கொண்டது. பிரயாணம் முழுவதிலும் எனக்கு மயக்கமோ, வாந்தியோ கொஞ்சம் கூட உண்டாகவில்லை. என் வாழ்க்கையில் நீராவிக் கப்பலில் பிரயாணம் செய்வது இதுவே முதல் தடவை. பிரயாணத்தை நான் மிகவும் அனுபவித்தேன். சுமார் 6 மணிக்குச் சாப்பாட்டு மணி அடிக்கப்பட்டது. மேஜைக்குப் போகும்படி கப்பல் வேலைக்காரர் சொன்னர். ஆனல், நான் அங்கே போகவில்லை. என் கையோடு கொண்டு வந்திருந்த உணவையே சாப்பிட்டேன். முதல் நாள் இரவு ஸ்ரீ மஜ்முதார் என்னிடம் உரிமையோடு மிகமிக சகஜமாக நடந்து கொண்டது எனக்குப் பெரிதும் ஆச்சரியமாகவே இருந்தது. நாங்கள் நீண்ட நாள் பழகியவர்களைப்போல அவர் என்னிடம் பேசினர். அவரிடம் கருப்புக் கோட் இல்லை. அதனல் சாப்பாட்டுக்குப் போக என்னுடைய கோட்டைக் கொடுத்தேன். அவர் மேஜைக்குப் போனர். அன்றிரவிலிருந்து நான் அவரை மிகவும் விரும்பினேன். தம்முடைய சாவிகளை அவர் என்னிடம் கொடுத்து வைத்திருந்தார். அன்றிரவிலிருந்தே அவரை என் தமையனைப் போலவே பாவிக்கலானேன். எங்களோடு ஒரு மராட்டிய டாக்டரும் கப்பலில் வந்தார். அவர் ஏடன் வரைக்கும் வருகிறவர். அவர் மொத்தத்தில் நல்ல மனிதர் போலவே காணப்பட்டார். இப்படியாக நான் கொண்டு வந்திருந்த பலகாரங்களையும் பழங்களையும் சாப்பிட்டு இரண்டு நாட்களைக் கழித்தேன். அப்புறம் கப்பலில் இருந்த சில பையன்களோடு பேசி எங்களுக்கு உணவு சமைக்கும்படி ஸ்ரீ மஜ்முதார் ஒரு ஏற்பாடு செய்தார். நானக இருந்தால் இப்படிப்பட்ட ஏற்பாட்டை ஒரு போதும் செய்து கொண்டிருக்க முடியாது. அப்துல் மஜீத் என்ற ஒருவரும் எங்களோடு வந்தார். அவர் முதல் வகுப்புப் பிரயாணி. நாங்கள் சலூன் பிரயாணிகள். பையன் சமைத்துக் கொண்டுவந்த உணவை ருசித்துச் சாப்பிட்டோம்.

இப்போது நீராவிக் கப்பலைப் பற்றிச் சில வார்த்தைகள். கப்பலில் செய்யப்பட்டிருந்த ஏற்பாடுகள் எனக்குப் பிடித்திருந்தன. காபின் (அறை) களிலோ, சலூன்களிலோ, நாங்கள் உட்கார்ந்திருக்கும்போது, அந்தக் காபின்களும், சலூன்களும் கப்பலின் ஒரு பகுதி என்பதையே மறந்துவிடுவோம், சில சமயங்களில் கப்பல் நகருவதாகவே எங்களுக்குத் தோன்ருது. தொழிலாளி

கள், கப்பல் ஓட்டுகிறவர்கள் ஆகியவர்களுடைய வேலைத்திறன் உண்மையி லேயே பிரமாதமானது. கப்பலில் சங்கீத வாத்தியங்களும் இருந்தன. நான் அவ்வப்போது பியானேவை வாசிப்பேன். கப்பலில் சீட்டுக்கட்டுகள், செஸ் பலகை, டிராப்ட்ஸ் பலகை* ஆகியவையும் இருந்தன. ஐரோப்பியப் பிரயாணி கள் எப்போதும் இரவில் ஏதாவது விளையாட்டுக்களை ஆடுவார்கள். கப்பலின் மேல் தட்டுகள் பிரயாணிகளுக்கு மிகவும் சுகமான இடங்களாகும். காபின் களில் உட்கார்ந்து கொண்டிருந்தால் பொதுவாகச் சலிப்புத் தட்டிவிடும். மேல் தட்டுகளில் சுத்தமான காற்றை அனுபவிக்கலாம். மனத்தில் துணிச்சல் இருந் தால், சகல பிரயாணிகளுடனும் ஒன்று சேர்ந்து பழகலாம்; பேசலாம், ஆகாயம் மாசு மறுவில்லாமல் இருக்கும்போது கடலின் காட்சி அழகாக இருக்கும். ஒரு நாள் இரவு நிலாக் காயும் போது நான் கடலை உற்றுப் பார்த்துக் கொண்டிருந் தேன். தண்ணீரில் சந்திரன் பிரதிபலிப்பதைப் பார்த்தேன். அலைகளின் காரணமாக, சந்திரன் இங்கும் அங்கும் நகர்ந்து கொண்டிருப்பது போலத் தோன்றியது. இருள் மண்டிய ஓர் இரவில் ஆகாயம் நிர்மலமாக இருந்தபோது நீரில் நக்ஷத்திரங்கள் பிரதிபலித்தன. எங்களைச் சுற்றியுள்ள காட்சி அப்போது மிக அழகாக இருந்தது. அது என்ன என்பதை முதலில் என்னல் ஊகிக்க முடியவில்லை. ஏராளமான வைரங்களைப்போல் அவை காட்சியளித்தன. ஆனல், வைரம் தண்ணீரில் மிதக்க முடியாது என்று எனக்குத் தெரியும். அப் புறம் அவை இரவு நேரத்தில் கண்ணுக்குப் புலனகும் ஏதேனும் பூச்சிகளாக இருக்க வேண்டும் என்று நினைத்தேன். இந்தச் சிந்தனைகளின் நடுவே நான் வானத்தை அண்ணந்து பார்த்தேன். உடனே, அவை நீரில் பிரதிபலிக்கும் நட்சத்திரங்களே ஒழிய வேறு எவையும் அல்ல என்று கண்டறிந்தேன். என் தவறை நினைத்து சிரித்துவிட்டேன். நட்சத்திரங்களின் பிரதிபலிப்பு நமக்கு வாணவேடிக்கை எப்படி இருக்கும் என்பதை எடுத்துக் காட்டுகிறது. ஒரு பங்களாவின் மாடியில் நின்று கொண்டு, கண்ணுக்கு முன்னல் வாண வேடிக் கைகள் நடத்தப்படுவதைக் காண்பதுபோல் நினைத்துக் கொள்ளுங்கள். இந்தக் காட்சியை நான் பன்முறையும் அனுபவித்து மகிழ்ந்தேன்.

சில நாட்கள் வரை நான் சகப் பிரயாணிகளுடன் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. நான் எப்போதும் காலை 8 மணிக்கு எழுந்து, பல்லைத் தேய்த்துக் கொண்டு, அப்புறம் கக்கூஸுக்குப் போவேன். அதன்பின் குளிப்பேன். ஆங்கிலேய முறையிலான கக்கூஸ் ஏற்பாடுகள் சுதேசிப் பிரயாணிக்கு ஆச்சரியத்தை உண்டுபண்ணின. அங்கே நமக்குத் தண்ணீர் கிடைக்காது. காகிதத் துண்டுகளையே உபயோகித்துக் கொள்ள வேண்டி யிருக்கிறது.

கடல் பிரயாணத்தில் சுமார் ஐந்து நாட்களை ஆனந்தமாகக் கழித்தேன். நாங்கள் ஏடனுக்கு வந்து சேர்ந்தோம். இந்த ஐந்து நாட்களிலும் நாங்கள் தரையையோ ஒரு மலையையோ பார்க்கவில்லை. அதனல் மாறுதலற்றிருக்கும் கடற்பிரயாணத்தினல் நாங்கள் அலுத்துப் போய்த் தரையைப் பார்க்கவேண்டு மென்று ஆவலாக இருந்தோம். கடைசியில் 6-ஆம் நாள் காலையில் நாங்கள் தரையைப் பார்த்தோம். எல்லோரும் குதூகலத்தோடும், உற்சாகத்தோடும் காணப்பட்டார்கள். காலை சுமார் 11 மணிக்கு ஏடனில் நங்கூரம் போட்டோம். சில பையன்கள் சிறு படகுகளோடு வந்தார்கள். அவர்கள் நீந்துவதில் மகா

* டிராப்ட்ஸ்: 24 காய்களை வைத்து விளையாடும் ஒருவகை செஸ் ஆட்டம்.

நிபுணர்கள். சில ஐரோப்பியர்கள் தண்ணீரில் காசுகளை எறிந்தார்கள். பையன்கள் நீரில் ஆழமாக மூழ்கிக் காசை எடுத்துக் கொண்டு வந்தார்கள். அப்படி நாமும் செய்தால் என்ன என்று ஆசைப்பட்டேன். இது ஒரு அழகான காட்சி. சுமார் அரை மணி நேரம் இந்தக் காட்சியை அனுபவித்துவிட்டு நாங்கள் ஏடனைப் பார்க்கச் சென்றோம். பையன்கள் காசுகளைக் கண்டு பிடித்து எடுத்து வந்ததை நாங்கள் பார்த்துக்கொண்டுதான் இருந்தோமே ஒழிய, நாங்கள் ஒரு தம்படியைக் கூட எறியவில்லை என்பதை இங்கே நான் சொல்ல வேண்டும். இந்தத் தினத்திலிருந்து, இங்கிலாந்தில் செலவினங்கள் எப்படி இருக்கும் என்பதை நாங்கள் ஒருவாறு உணரத் தொடங்கினோம். நாங்கள் மூன்று பேர் படகுக்கு இரண்டு ரூபாய் கட்டணம் கொடுக்க வேண்டியிருந்தது. கரைக்கு ஒரு மைல் தூரம்கூட இல்லை. 15 நிமிஷங்களுக்குள் நாங்கள் கரைக்குப்போய்ச் சேர்ந்துவிட்டோம். அப்புறம் ஒரு வண்டியை வாடகைக்குப் பிடித்தோம். குடிதண்ணீர்ச் சப்ளை நிலையத்தைப் போய்ப் பார்க்க உத்தேசித்திருந்தோம். ஏடனில் அது ஒன்றுதான் முக்கியமான இடம். ஆனால், துரதிருஷ்டவசமாக நேரமாகிவிட்டபடியால் நாங்கள் அங்கே போக முடியவில்லை. நாங்கள் ஏடன் முகாமைப் பார்த்தோம். அது நன்றாக இருந்தது; கட்டடங்களும் நன்றாக இருந்தன. அநேகமாக அவையெல்லாம் கடைகள்தான். அந்த கட்டடங்களின் அமைப்பு அநேகமாக ராஜ்கோட்டில் உள்ள பங்களாக்களைப் போல, குறிப்பாக ராஜீய ஏஜெண்டின் புதிய பங்களாவைப் போலவே இருந்தன. அங்கே ஒரு கிணற்றையோ, அல்லது சுத்தமான தண்ணீர் நிறைந்த எந்த ஒரு இடத்தையுமோ நான் பார்க்கவில்லை. குளங்கள் தான் சுத்தநீர் உள்ள ஒரே இடமாக இருந்தன என்று நினைக்கிறேன். சூரிய வெப்பம் மிகவும் அதிகம். நான் வேர்த்து நனைந்து விட்டேன். இதற்குக் காரணம், நாங்கள் செங்கடலுக்குப் பக்கமாக இருந்ததாகும். எனக்கு அதிக ஆச்சரியத்தைக் கொடுத்தது என்னவென்றால், நான் ஒரு மரத்தையோ, அல்லது பசுமையான ஒரு செடியையோகூடப் பார்க்கவில்லை. ஆட்கள் கழுதைகளின்மீதோ, கோவேறு கழுதைகளின்மீதோ ஏறிச்சென்றார்கள். நாங்கள் விரும்பியிருந்தால், கோவேறு கழுதைகளை வாடகைக்கு அமர்த்திக் கொண்டிருக்கலாம். முகாம், மலைமேல் இருந்தது. நான் குறிப்பிட்ட பையன்கள் சில சமயங்களில் காயம் அடைவதுண்டு என்று, நாங்கள் திரும்பி வரும்போது படகுக்காரன் சொல்லக் கேள்விப்பட்டோம். சிலருடைய கால்களும், சிலருடைய கைகளும் கடற்பிராணிகளால் துண்டிக்கப்பட்டிருந்தன. ஆனாலும், பையன்கள் ஏழைகளாக இருந்தபடியால், ஆளுக்கு ஒரு சிறு படகில் ஏறி உட்கார்ந்துகொண்டிருந்தார்கள். நாம் அவ்வாறு உட்காரத் துணிய மாட்டோம். நாங்கள் ஆளுக்கு ஒரு ரூபாய் படகுக் கட்டணம் கொடுக்கவேண்டியிருந்தது. பகல் 12 மணிக்குக் கப்பல் புறப்பட்டது. நாங்கள் ஏடனை விட்டுச் சென்றோம். ஆனால், இந்த நாளிலிருந்து நாங்கள் எப்போதும் தரையைப் பார்க்கலானோம்.

மாலையில் நாங்கள் செங்கடலுக்குள் பிரவேசித்தோம். வெப்பத்தின் தகிப்பை உணரத் தொடங்கினோம். ஆனால், பம்பாயில் சிலர் வருணித்தது போல அது அப்படியொன்றும் சுட்டுப் பொசுக்கக்கூடியதாக இல்லை என்றே எனக்குத் தோன்றியது. காபின்களுக்குள் இருப்பது உண்மையில் சகிக்க முடியாததாகவே இருந்தது சூரியனுக்கு எதிரில் நிற்கவும் முடியாது. காபினில் சில நிமிடங்கள்கூட உட்கார்ந்திருக்கப் பிடிக்காது. மேல் தட்டில் இருந்தால், சுத்தமான காற்று சுகமாக வீசுவதை நிச்சயம் அனுபவிக்கலாம். நான் அவ்வாறுதான் செய்தேன். அநேகமாக எல்லாப் பிரயாணிகளும்

மேல் தட்டில் படுத்து உறங்கினர்கள். நானும் அப்படியே செய்தேன். காலையில் உதயசூரியனின் உஷ்ணத்தைக்கூடத் தாங்கமுடியாது. மேல் தட்டில் இருப்பது எப்போதுமே பாதுகாப்பானது. பொதுவாக மூன்று நாட்களுக்கு இந்த உஷ்ணத்தை அனுபவிக்க வேண்டும். அப்புறம் நான்காம் நாள் இரவில் நாங்கள் சூயஸுக்குள் பிரவேசித்தோம். வெகுதூரத்தில் செல்லும்போதே சூயஸின் விளக்குகளைப் பார்க்கமுடியும். செங்கடல் சில இடங்களில் அகன்றும் சில இடங்களில் மிகவும் குறுகியும் இருந்தது. இரண்டு பக்கங்களிலும் கரையைப் பார்க்கக்கூடியவாறு அவ்வளவு குறுகலாக இருந்தது. சூயஸ் கால்வாய்க்குள் நுழைவதற்குமுன், நாங்கள் 'ஹெல்ஸ் கேட்டை' (நரக வாசலை)க் கடந்து சென்ரேம். ஹெல்ஸ் கேட் என்பது மிக ஒடுக்கமான நீர்நிலை. இரு பக்கங்களிலும் மலைகள். அந்த இடத்தில் அநேக கப்பல்கள் விபத்துக்குள்ளாகியிருப்பதால், அந்த இடம் அவ்வாறு (நரக வாசல் என்று) அழைக்கப்படுகிறது. செங்கடலில் விபத்துக்குள்ளான ஒரு கப்பலின் சிதிலத்தை நாங்கள் பார்த்தோம். சூயஸில் சுமார் அரைமணி நேரம் தங்கியிருந்தோம். இப்போது எங்களைக் குளிர் தாக்கும் என்று சொல்லப்பட்டது. ஏடனைக் கடந்து சென்றபின் மது தேவைப்படும் என்று சிலர் சொன்னர்கள். ஆனல், அதெல்லாம் பொய். இப்போது நான் சக பிரயாணிகளுடன் சிறிது பேச ஆரம்பித்தேன். ஏடனைவிட்டுச் சென்றபின் மாமிசம் தேவைப்படும் என்று அவர்கள் சொன்னர்கள். ஆனல், உண்மை அப்படியில்லை. என் வாழ்க்கையில் முதன் முதலாக நான் மின்சார விளக்கைப் பார்த்தேன். அது எங்கள் கப்பலின் முன் பாகத்தில் இருந்தது. வெளிச்சம் நிலவொளி மாதிரி தோன்றியது. கப்பலின் முன் பாகம், பார்ப்பதற்கு வெகு அழகாக இருந்தது. வேரேரிடத்திலிருந்து பார்க்கும் ஒரு மனிதனுக்கு அது இன்னும் அழகாகத் தோற்றம் அளிக்கும் என்று நினைக்கிறேன். மற்றவர்கள் நம்முடைய உடல் அழகைப் பார்க்க முடிவதைப் போல நாம் பார்க்கமுடியாதல்லவா? சூயஸ் கால்வாயின் கட்டுமானத்தை என்னல் புரிந்துகொள்ள இயலவில்லை. உண்மையில் அது அற்புதமானது. அதைக் கண்டுபிடித்த மனிதனின் மேதாவிலாசத்தை என்னல் நினைத்துப் பார்க்க முடியவில்லை. அவன் எப்படி இதைக் கட்டிமுடித்திருப்பான் என்று எனக்குத் தெரியாது. அவன் இயற்கையோடு போட்டி போட்டிருக்கிறுன் என்று கூறுவது முற்றிலும் சரி. இரண்டு கடல்களை ஒன்ருக இணைப்பது சுலபமான காரியமல்ல. ஒரு சமயத்தில் ஒரு கப்பல்தான் இந்தக் கால்வாயில் செல்லமுடியும். இதில் கப்பல் ஓட்டுவதற்கு மிகுந்த திறமை வேண்டும். மிகச்சாவதானமாகவே கப்பல் செல்லுகிறது. அது நகருவதாகவே நமக்குத் தெரியாது. கால்வாயின் தண்ணீர் மகா ஆபாசமானது. அதன் ஆழத்தை நான் மறந்துவிட்டேன். ராம் நகரத்திலுள்ள அஜி*யின் அளவுக்கு அது அகன்றிருந்தது. இரு புறங்களிலும் ஆட்கள் நடந்து செல்லுவதை நாம் பார்க்கலாம். கால்வாயின் அருகிலுள்ள பகுதி வெறும் பொட்டலாக இருந்தது. பிரெஞ்சுக்காரர்களுக்கு இந்தக் கால்வாய் சொந்தம். கப்பலை அழைத்துச் செல்லுவதற்கு இஸ்மெய்லியாவிலிருந்து மற்ருெரு வழிகாட்டிப் படகு வருகிறது. கால்வாய் வழியாகச் செல்லும் ஒவ்வொரு கப்பலுக்கும் பிரெஞ்சுக்காரர்கள் ஒரு குறிப்பிட்ட தொகையை வாங்கிக்கொள்ளுகிறுர்கள். வருமானம் மிக அதிகமாகவே இருக்கவேண்டும். கப்பலில் உள்ள மின்சார விளக்கோடு, இரு பக்கங்களிலும் 20 அடி தூரத்தில் விளக்குகள் காணப்படுகின்றன. இவை பலவிதமான வர்ண விளக்குகள். இந்த

---

* அஜி: ராஜ்கோட் அருகில் உள்ள நதி.

விளக்கு வரிசைகளைக் கடந்து கப்பல் செல்லவேண்டும். கால்வாயைக் கடந்து செல்ல சுமார் 24 மணி நேரம் ஆகிறது. அந்தக் காட்சியின் அழகை வருணிப்பது என் சக்திக்கு அப்பாற்பட்ட காரியம். அதைப் பார்த்தாலொழிய அதன் அழகை அறிய முடியாது. கால்வாயின் கடைசித் துறைமுகம் போர்ட்செயித். சூயஸ் கால்வாயைப் பொறுத்தே போர்ட் செயித்தின் வாழ்வு இருக்கிறது. மாலையில் போர்ட் செயித்தில் நங்கூரம் பாய்ச்சினோம். கப்பல் அங்கே ஒரு மணிநேரம் தங்கியிருக்க வேண்டும். ஆனால், போர்ட் செயித்தைப் பார்க்க ஒரு மணி நேரம் போதும். இங்கே, எல்லாம் ஆங்கில நாணயங்கள்தான். இந்திய நாணயம் இங்கு உபயோகமே இல்லை. படகுக் கட்டணம் ஆளுக்கு 6 பென்னிகள்! ஒரு பென்னியின் மதிப்பு ஒரு அணா. போர்ட்செயித் கட்டடங்கள் பிரெஞ்சு முறையில் கட்டப்பட்டிருக்கின்றன. இங்கே பிரெஞ்சு வாழ்க்கை முறையை ஓரளவு காணலாம். அங்கே சில காப்பிக் கடைகளைப் பார்த்தோம். முதலில் அது ஒரு தியேட்டர் என்று நான் நினைத்தேன். ஆனால், அது காப்பிக் கடையே ஒழிய வேறில்லை. ஒரு புறம் காப்பி, சோடா, தேனீர் முதலிய பானங்களில் ஏதாவது ஒன்றைக் குடித்துக்கொண்டு. மறுபுறம் சங்கீதத்தையும் கேட்கலாம். சில பெண்கள் பிடில் வாசித்துக் கொண்டிருந்தார்கள். இந்தக் கபேக்களில்—கபேக்கள் என்றே அவை அழைக்கப்படுகின்றன—ஒரு புட்டி லெமனேட் 12 பென்னிகள். பம்பாயில் இது ஒரு பென்னிக்கும் குறைந்த விலையில் கிடைக்கிறது. வாடிக்கைக்காரர்கள் இலவசமாகச் சங்கீதம் கேட்கலாம் என்று கூறப்படுகிறது. ஆனால், உண்மை அப்படி இல்லை. சங்கீதம் முடிந்ததும், ஒரு பெண் கைக்குடடையால் மூடப்பட்ட ஒரு தட்டுடன் ஒவ்வொரு வாடிக்கைக்காரருக்கும் முன்னால் வருகிறாள். அதற்கு, அவளுக்கு ஏதாவது கொடுக்கவேண்டும் என்று அர்த்தம். நாமும் ஏதாவது கொடுக்க வேண்டியவர்களாகிறோம். நாங்கள் கபேக்குச் சென்று 6 பெண்களுக்கு பென்னிகள் கொடுத்தோம். போர்ட் செயித் என்பது ஒரு சுகபோக நிலையமே. இந்தப் பெண்களும், ஆண்களும் மிகவும் கபடமானவர்கள். உங்களுக்கு வழிகாட்ட மொழி பெயர்ப்பாளர் பின்னால் தொடர்ந்து வருவார். ஆனால், அவர் தேவையில்லை என்று நீங்கள் தைரியமாகச் சொல்லிவிட வேண்டும். போர்ட்செயித் ராஜ்கோட்டின் பிரதான பாரா* அளவுக்குக்கூடப் பெரிதாக இல்லை. மாலை 7 மணிக்கு நாங்கள் போர்ட் செயித்தைவிட்டுப் புறப்பட்டோம்.

என்னுடைய சகப் பிரயாணிகளில் ஸ்ரீ ஜெப்ரீஸ் என்ற ஒருவர் என்னிடம் மிகவும் அன்பாக இருந்தார். மேஜைக்குப் போய் ஏதாவது சாப்பிடும்படி எப்போதும் அவர் என்னிடம் சொல்லுவார். ஆனால், நான் போகமாட்டேன். பிரிண்டிஸியைத் தாண்டிச் சென்றபின் குளிர் தாக்கும் என்று அவர் சொன்னார். ஆனால், அப்படித் தாக்கவில்லை. 3 நாட்களுக்குப் பிறகு இரவில் நாங்கள் பிரிண்டிஸியை அடைந்தோம். பிரிண்டிஸி துறைமுகம் அழகாக இருக்கிறது. கப்பல் கரையைத் தொட்டுக்கொண்டு நிற்பதால், கப்பலில் இணைக்கப்படும் ஏணிப்படி வழியாகக் கரையில் இறங்கிவிடலாம். இருட்டாக இருந்தபடியால் நான் பிரிண்டிஸியை அதிகம் பார்க்க முடியவில்லை. அங்கே ஒவ்வொருவரும் இத்தாலியமொழி பேசுகின்றனர். பிரிண்டிஸியின் ரோடுகளில் கற்கள் பாவப்பட்டிருக்கின்றன. தெருக்கள் சரிவாக உள்ளன. அவற்றிலும் கற்கள் பாவியிருக்கிறார்கள். விளக்குகளுக்கு கியாஸ் உபயோகிக்கப்படுகிறது. நாங்கள் பிரிண்டிஸி ஸ்டேஷனைப் பார்த்தோம். பி. பி. அண்டு சி. ஐ.

* பாரா—நகர்ப்புறம் என்று பொருள்படும் குஜராத்தி வார்த்தை.

ரெயில்வேயின் ஸ்டேஷன்களைப்போல அவை அழகாக இல்லை. ஆனால், ரெயில் பெட்டிகள் நம் நாட்டில் இருப்பதைவிட மிகப் பெரியனவாக இருக்கின்றன. போக்குவரத்தும் நன்றாக இருக்கிறது. பிரிண்டிஸியில் கரை இறங்கும்போது, நீங்கள் கருப்பு மனிதராக இருந்தால், உங்களிடம் ஒருவன் வந்து, "ஐயா, அழகான ஒரு 14 வயதுப் பெண் இருக்கிறாள். என் பின்னோடு வாருங்கள். அங்கே உங்களை அழைத்துச் செல்லுகிறேன். பணம் அப்படி ஒன்றும் அதிகமில்லை" என்பான். நீங்கள் உடனே குழப்பத்திற்குள்ளாகிவிடுவீர்கள். பெண் தேவையில்லை என்று அமைதியாகவும் தைரியமாகவும் சொல்லி அவனை அப்பால் போகச் சொல்லி விடுங்கள். அப்புறம் உங்களுக்கு அபாயம் இல்லை. ஏதேனும் கஷ்டத்துக்குள்ளாக நேரிட்டால், உடனே பக்கத்தில் நிற்கும் போலீஸ்காரனிடம் விஷயத்தைச் சொல்லுங்கள்; அல்லது ஒரு பெரிய கட்டடத்தினுள் நுழைந்து விடுங்கள், அங்கே பெரிய கட்டடம் நிச்சயமாக இருக்கும். ஆனால், அதற்குள் நுழைவதற்கு முன், அதன் பெயரை வாசித்துக் கொள்ளுங்கள். அதில் யார் வேண்டுமானாலும் பிரவேசிக்கலாமா என்பதையும் தெரிந்து கொள்ளுங்கள். இதை நீங்கள் உடனடியாகச் செய்துவிட முடியும். நீங்கள் ஒரு கஷ்டத்துக்குள்ளாகியிருப்பதாகப் போர்ட்டரிடம் சொல்லுங்கள். நீங்கள் என்ன செய்ய வேண்டும் என்று அவன் உடனே சொல்லுவான். நீங்கள் தைரியசாலியாக இருந்தால், தலைமை அதிகாரியிடம் உங்களை அழைத்துச் செல்லும்படி போர்ட்டரிடம் கூறுங்கள். அவரிடம் போய் விஷயத்தைத் தெரிவியுங்கள். பெரிய கட்டடம் என்று நான் சொல்லுவது, தாமஸ் குக், அல்லது ஹென்றி கிங், அல்லது இவர்களைப்போன்ற மற்ற ஏஜெண்டுகளுக்குச் சொந்தமான ஒன்றாகும். அவர்கள் உங்களைக் கவனித்துக் கொள்ளுவார்கள். அப்போது கஞ்சத்தனமாக நடந்துகொள்ள வேண்டாம். போர்ட்டருக்கு ஏதாவது பணம் கொடுங்கள். ஆனால், நீங்கள் ஏதேனும் ஆபத்தில் இருப்பதாக நினைக்கும்போதுதான் இந்த வழிகளைக் கடைப்பிடிக்க வேண்டும். ஆனால், இந்தக் கட்டடங்களை நீங்கள் கரையோரத்தில்தான் பார்க்க முடியும். கரையைவிட்டு மிகவும் தூரத்தில் இருக்கும் சமயத்தில், போலீஸ்காரனைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும். அது முடியாது போனால் உங்கள் மனச்சாட்சிதான் சிறந்த சர்வாதிகாரி. அதிகாலையில் நாங்கள் பிரிண்டிஸியை விட்டுப் புறப்பட்டோம்.

சுமார் 3 நாட்களுக்குப் பிறகு நாங்கள் மால்டாவுக்குப் போய்ச் சேர்ந்தோம். பிற்பகல் 2 மணி சுமாருக்குக் கப்பல் நங்கூரம் போட்டது. அங்கே கிட்டத்தட்ட நான்கு மணி நேரம் கப்பல் நிற்க வேண்டும். ஸ்ரீ அப்துல் மஜீத் எங்களோடு வருவதாக இருந்தார். ஆனால், எப்படியோ அவர் மிகவும் கால தாமதம் செய்துவிட்டார். நான் போக வேண்டுமென்று துடித்துக் கொண்டிருந்தேன். "ஸ்ரீ மஜீத்துக்காகக் காத்துக் கொண்டிருக்காமல், நாம் போவோமா?" என்று ஸ்ரீ மஜ்முதார் சொன்னார். "உங்கள் இஷ்டம்போல் செய்யுங்கள். எனக்கு ஆட்சேபணை இல்லை" என்றேன். அப்புறம் நாங்கள் இருவர் மட்டுமே சென்றோம். நாங்கள் திரும்பி வரும்போது, எங்களைப் பார்த்துக்கொண்ட அப்துல் மஜீத், நாங்கள் அவரை விட்டுவிட்டுப் போய்விட்டதற்காக வருத்தப்பட்டார். அதற்கு ஸ்ரீ மஜ்முதார், "போகவேண்டுமென்று துடித்துக் கொண்டிருந்ததும், உங்களுக்காகக் காத்திருக்க வேண்டாமென்று சொன்னதும் காந்திதான்" என்றார். ஸ்ரீ மஜ்முதார் இவ்வாறு நடந்து கொண்டது, என்னை மிகவும் புண்படுத்திவிட்டது. குற்றச்சாட்டை உதறுவதற்கு நான் முயற்சி செய்யாமல், மௌனமாக ஏற்றுக்கொண்டேன்.

நான் மட்டும் அப்துல் மஜீத்திடம், "உங்களுக்காகக் காத்திருக்க வேண்டு மென்று ஸ்ரீ மஜ்முதார் உண்மையிலேயே விரும்பியிருந்தால், நான் சொன்னபடி செய்யாமல் இருந்திருக்கலாமே" என்று குறிப்பிட்டால் போதும், குற்றச் சாட்டைப் போக்கியிருக்க முடியும் என்பதை அறிவேன். ஸ்ரீ அப்துல் மஜீத்தை விட்டுவிட்டுப் போனதில், என் பங்கு எதுவும் இல்லை என்பதை அவரிடம் நிரூபிக்க இவ்வாறு குறிப்பிட்டிருந்தால் போதும் என்று நினைக்கிறேன். ஆனால் அந்தச் சமயத்தில் இம்மாதிரி எதுவும் செய்ய நான் விரும்பவில்லை. எனினும் அன்று முதல், ஸ்ரீ மஜ்முதாரைப்பற்றிக் கீழ்த்தர மான அபிப்பிராயம் கொள்ளத் தொடங்கினேன்; அவரிடத்தில் எனக்கு உண்மையான மதிப்பும் இல்லாமல் போய்விட்டது. இது தவிர, வேறு இரண்டொரு காரியங்களும் நடந்து விட்டன. இவையெல்லாம் சேர்ந்து மஜ்முதாரிடம் நான் கொண்டிருந்த பிரியத்தை நாளுக்கு நாள் குறைத்துக் கொண்டு வந்தன.

மால்டா பார்க்க வேண்டிய ஒரு இடம். அங்கே பல விஷயங்கள் இருக்கின்றன. ஆனால் எங்களுக்கு இருந்த கால அவகாசம் போதுமானதாக இல்லை. நான் முன்னால் கூறியபடி ஸ்ரீ மஜ்முதாரும் நானும் கரைக்குப் போனோம். இங்கே ஒரு பெரிய அயோக்கியனைச் சந்தித்தோம். இதனால் நாங்கள் பெரு கஷ்டத்துக்கு ஆளாக நேர்ந்தது. படகின் நம்பரை நாங்கள் குறித்துக் கொண்டோம். நகரத்தைப் பார்ப்பதற்காக ஒரு வண்டியை வாடகைக்கு அமர்த்தினோம். அயோக்கியனும் எங்களுடனேயே இருந்தான். அரை மணி நேரத்திற்குப் பிறகு வண்டி செயின்ட் ஜுவான் தேவாலயத்தின் முன் நின்றது. ஆலயம் அழகாகக் கட்டப்பட்டிருந்தது. அங்கே சில பெரிய மனிதர்களின் எலும்புக் கூடுகளையும் பார்த்தோம். அவை மிகவும் பழமை யானவை. ஆலயத்தைச் சுற்றிக் காண்பித்த நண்பருக்கு நாங்கள் ஒரு ஷில்லிங் கொடுத்தோம். ஆலயத்துக்கு எதிரே செயின்ட் ஜுவானின் உருவச் சிலை இருந்தது. அப்புறம் வண்டியில் ஏறி நகருக்குச் சென்றோம். சாலைகளில் கற்கள் பாவப்பட்டிருந்தன. சாலைகளின் இருபுறங்களிலும், ஆட்கள் நடந்து செல்லக் கற்கள் பாவிய பாதைகள் இருந்தன. தீவு மிக அழகாக இருக்கிறது. அநேக பிரமாதமான கட்டடங்கள் இங்கே இருக்கின்றன. ஆயுதங்கள் வைக் கப்பட்டுள்ள மண்டபத்துக்குச் சென்றோம். அங்கே மிகப் பழைய சித்திரங் களைப் பார்த்தோம். உண்மையில் அவை வர்ணச் சித்திரங்களன்று; தையல் வேலைகளால் செய்யப்பட்ட ஓவியங்களே. ஆனால், யாரும் சொன்னாலொழிய, புதிதாகப் பார்க்கும் ஒருவர் அதைக் கண்டுகொள்ள முடியாது. மண்டபத்தில் பழைய போர் வீரர்களின் ஆயுதங்கள் இருந்தன. அவை அனைத்துமே பார்க் கத் தகுந்தவை. அவை பற்றி நான் குறித்து வைத்துக்கொள்ளாததால், எனக்கு இப்போது சரிவர ஞாபகமில்லை. 30 பவுண்டு எடையுள்ள தொப்பி ஒன்று இருந்தது. நெப்போலியன் போனபார்ட்டின் வண்டி மிக அழகாக இருந்தது. எங்களுக்கு மண்டபத்தைச் சுற்றிக் காண்பித்த ஆளுக்கு 6 பென் னிகள் கொடுத்துவிட்டு நாங்கள் திரும்பி வந்தோம். தேவாலயத்தையும், ஆயுத மண்டபத்தையும் பார்த்தபோது மரியாதைக்கு அடையாளமாக நாங்கள் எங்கள் தொப்பிகளை எடுத்துவிட்டோம். அதன் பிறகு அந்த அயோக்கியனின் கடைக்குப் போனோம். அவன் எங்கள் தலையில் எதையாவது வைத்துக் கட்டிவிட வேண்டும் என்று முயன்றான். ஆனால் நாங்கள் எதையுமே வாங்கவில்லை. கடைசியாக ஸ்ரீ மஜ்முதார் மால் டாவின் காட்சிகளைச் சித்திரிக்கும் படங்களை 2 ஷில்லிங் 6 பென்ஸுக்கு வாங்

கினர். இங்கே அயோக்கியன், எங்களோடு ஒரு மொழி பெயர்ப்பாளரை அனுப்பிவிட்டு, தான் வராமல் இருந்துகொண்டான். மொழி பெயர்ப்பாளர் நல்லவர். அவர் எங்களை ஆரஞ்சுத் தோட்டங்களுக்கு அழைத்துச் சென்ருர். நாங்கள் தோட்டத்தைப் பார்த்தோம். எனக்கு அந்தத் தோட்டங்களைப் பார்க்கப் பிடிக்கவே இல்லை. அந்தத் தோட்டங்களைவிட ராஜ்கோட்டில் உள்ள நமது பொதுஜனப் பூங்காவை மிகவும் விரும்புகிறேன். என்னைப் பொறுத்த மட்டிலும், இங்கே பார்க்கத் தகுந்தது ஒன்று உண்டானல், அது ஒரு சிறிய நீர்ப்பெட்டியில் அடைக்கப்பட்ட பொன்னிற மீன்களும், செந்நிற மீன்களுமே. அங்கிருந்து நகருக்குத் திரும்பி வந்து ஒரு ஹோட்டலுக்குப் போனேம். ஸ்ரீ மஜ்முதார் கொஞ்சம் உருளைக் கிழங்கைச் சாப்பிட்டுத் தேநீர் குடித்தார். நாங்கள் வரும் வழியில் ஒரு இந்தியரைச் சந்தித்தோம். மிகத் துணிச்சல்காரரான ஸ்ரீ மஜ்முதார், அந்த இந்தியரோடு பேசினர் அப்போது அவர் மால்டாவில் கடை வைத்திருக்கும் ஒருவருடைய சகோதரர் என்று தெரிய வந்தது. உடனே அந்தக் கடைக்குப் போனேம். கடைக்காரருடன் ஸ்ரீ மஜ்முதார் நன்ருகப் பேசிக் கொண்டிருந்தார். அங்கே சில சாமான்களை வாங்கினேம். கடையில் இரண்டு மணி நேரத்தைக் கழித்தோம். அதனல் மால்டாவை நாங்கள் அதிகமாகப் பார்க்க முடியவில்லை. மற்ருெரு தேவாலயத்தையும் நாங்கள் பார்த்தோம். அதுவும் மிக அழகாகவும், பார்க்கத் தகுந்ததாகவும் இருந்தது. நாட்டிய அரங்கத்தையும் நாங்கள் பார்ப்பதாக இருந்தது. ஆனல், அதற்கு நேரம் இல்லை. அந்த இந்தியரிடமிருந்து நாங்கள் விடை பெற்றுக்கொண்டோம். அவர் ஸ்ரீ மஜ்முதாரிடம் லண்டனிலுள்ள தம் சகோதரருக்குத் தமது கார்டைக் கொடுத்தார். நாங்கள் திரும்பி வரும் வழியில், பிற்பகல் 6 மணிக்கு, அயோக்கியன் மறுபடியும் எங்களைச் சந்தித்து எங்களோடு வந்தான். கரைக்கு வந்து சேர்ந்ததும் அயோக்கியனுக்கும், அந்த நல்ல மொழிபெயர்ப்பாளருக்கும், வண்டிக்காரனுக்கும் காசு கொடுத்தோம். கட்டணம் சம்பந்தமாக எங்களுக்கும் படகுக்காரனுக்கும் சண்டை வந்துவிட்டது. அதன் முடிவு வழக்கம்போலப் படகுக்காரனுக்குச் சாதகமாகவே இருந்தது. இங்கே நாங்கள் பெரிதும் ஏமாற்றப் பட்டு விட்டோம்.

மாலை 7 மணிக்குக் கிளைட் கப்பல் புறப்பட்டது. மூன்று நாள் பிரயாணத்துக்குப் பிறகு இரவு 12 மணிக்கு ஜிப்ரால்டருக்குப் போய்ச் சேர்ந்தோம். இரவு முழுவதும் கப்பல் அங்கேயே இருந்தது. நான் ஜிப்ரால்டரைப் பார்க்க விரும்பியதால், அதிகாலையில் எழுந்து மஜ்முதாரை எழுப்பி, கரைக்கு என்னேடு வர இயலுமா என்று கேட்டேன். வருவதாகச் சொன்னர். அப்புறம் ஸ்ரீ மஜீத்திடம் சென்று அவரை எழுப்பினேன். நாங்கள் மூவரும் கரைக்குச் சென்ரேம். எங்களுக்கு இருந்த கால அவகாசம் 1½ மணி நேரமே. அது அதிகாலை நேரமானதால் எல்லாக் கடைகளும் மூடியிருந்தன. ஜிப்ரால்டரில் சுங்கத்தீர்வை கிடையாதாகையால் புகைச் சுருட்டுகளின் விலை மிகவும் மலிவு என்று சொன்னர்கள். ஜிப்ரால்டர் ஒரு பாறையின்மேல் கட்டப்பட்டிருக்கிறது. உச்சியில் உள்ள கோட்டை அரணைப் பார்க்க முடியாமல் போனதில் எங்களுக்கு மிகுந்த வருத்தம். வீடுகள் வரிசை வரிசையாக இருக்கின்றன. முதல் வரிசையிலிருந்து இரண்டாவது வரிசைக்குப் போவதற்கு ஒரு படிக்கட்டில் இறங்கவேண்டியிருக்கிறது. அதை நான் மிகவும் விரும்பினேன். கட்டடங்களின் அமைப்பு அழகாக இருந்தது. சாலைகளில் தளவரிசை போடப்பட்

டிருக்கிறது. நேரம் இல்லாததால் நாங்கள் சீக்கிரமாகவே திரும்ப வேண்டிய தாயிற்று. காலை 8-30 மணிக்குக் கப்பல் புறப்பட்டது.

மூன்று நாட்களில் பிளிமவுத்துக்குப் போய்ச் சேர்ந்தோம். அப்போது இரவு 11 மணி. இது குளிர் மிகுந்த காலம். மாமிசமும், மதுபானமும் இல்லாவிட்டால் செத்துப் போய் விடுவோம் என்று எல்லாப் பிரயாணிகளும் சொன்னார்கள். ஆனால், எங்களுக்கு அப்படி ஒன்றும் நேரவில்லை. உண்மையில் குளிர் அதிகமாகவே இருந்தது. புயலைப் பற்றியும் சொன்னார்கள். ஆனால், நாங்கள் புயலைப் பார்க்க முடியவில்லை. உண்மையில் அதைப் பார்க்க மிக ஆவலோடு இருந்தும் பார்க்க முடியவில்லை. அது இரவு நேரமானதால், பிளிமவுத்தில் நாங்கள் எதையும் பார்க்க இயலவில்லை. அங்கே மூடுபனி அடைந்திருந்தது. கடைசியில் கப்பல் லண்டனுக்குப் புறப்பட்டது. 24 மணி நேரத்தில் நாங்கள் லண்டனை அடைந்தோம். கப்பலை விட்டு இறங்கி, தில்பரி ஸ்டேஷன் வழியாக 1888, அக்டோபர் 28-ஆம் தேதி பிற்பகல் 4-மணிக்கு விக்டோரியா ஹோட்டலுக்குப் போய்ச் சேர்ந்தோம்.

## 1888, அக்டோபர் 28, சனிக்கிழமையிலிருந்து நவம்பர் 23 வெள்ளிக்கிழமை வரை

ஸ்ரீ மஜ்முதாரும், ஸ்ரீ அப்துல் மஜீத்தும், நானும் விக்டோரியா ஹோட்டலுக்குப் போய்ச் சேர்ந்தோம். வண்டிக்காரனுக்கு உரிய வாடகையைக் கொடுத்துவிடும்படி விக்டோரியா ஹோட்டல் போர்ட்டரிடம் ஸ்ரீ அப்துல் மஜீத் கம்பீரமாகக் கூறினர். ஸ்ரீ அப்துல் மஜீத் தம்மைப்பற்றி ரொம்பப் பெரிதாக நினைத்துக்கொண்டார். ஆனால், அவர் அணிந்திருந்த உடை போர்ட்டரின் உடையைவிட மோசமாக இருந்தது என்பதை இங்கே எழுதுகிறேன். பெட்டி படுக்கைகளையும் அவர் கவனிக்கவில்லை. லண்டனில் நீண்டகாலம் இருந்தவரைப்போல ஹோட்டலுக்குள் அடியெடுத்து வைத்தார். ஹோட்டலின் வெளிச்சமும் பகட்டும் கண்ணைப் பறித்தன. என் வாழ்க்கையில் இப்படிப்பட்ட ஆடம்பரத்தை நான் பார்த்ததே இல்லை. இரண்டு நண்பர்களையும் மௌனமாகப் பின்பற்றிச் செல்வதுதான் என் வேலை. எங்கும் மின்சார விளக்குகளாக இருந்தன. ஓர் அறைக்கு அழைத்துச் செல்லப்பட்டோம். உடனடியாக அதனுள் சென்றவர் ஸ்ரீ மஜீத்தான். இரண்டாவது மாடியில் தங்குகிறீர்களா என்று அவரிடம் மானேஜர் கேட்டார். தினசரி வாடகையைப் பற்றி கேட்பது தம்முடைய கௌரவத்துக்குக் குறைவு என்று நினைத்து, "சரி" என்றார் ஸ்ரீ மஜீத். உடனே மானேஜர், எங்கள் ஒவ்வொருவருக்கும் நாளொன்றுக்கு 6 ஷில்லிங் வாடகைக்கான பில் ஒன்று கொடுத்தார். எங்களோடு ஒரு பையனும் அனுப்பப்பட்டான். இவ்வளவு நேரமும் நான் உள்ளுக்குள் சிரித்துக்கொண்டிருந்தேன். பிறகு நாங்கள் 'லிப்ட்' மூலம் இரண்டாவது மாடிக்குப் போகவேண்டும். 'லிப்ட்' என்றால் என்ன என்று எனக்குத் தெரியாது. பையன் உடனே எதையோ தொட்டான். அதைக் கதவின் பூட்டு என்று நான் நினைத்தேன். அது மணி என்று எனக்குப் பிற்பாடுதான் தெரிய வந்தது. 'லிப்ட்' டைக் கொண்டுவருவதற்காக வேலைக்காரனுக்கு அவன் மணி யடித்திருக்கிறான். கதவுகள் திறக்கப்பட்டன. அது நாங்கள் சிறிது நேரம் உட்கார்ந்திருக்க வேண்டிய அறை போலிருக்கிறது என்று நான் நினைத்தேன். ஆனால், நாங்கள் இரண்டாவது மாடிக்குக் கொண்டுவரப்பட்டது எனக்கு ஒரே ஆச்சரியமாக இருந்தது.

(முற்றுப்பெறவில்லை)

# 3
# லேலிக்கு எழுதிய கடிதம்

[போர்பந்தர் சமஸ்தானத்தில் பிரிட்டிஷ் ஏஜெண்டாக இருந்த ஸ்ரீ லேலிக்குக் காந்திஜி லண்டனில் மாணவராக இருந்தபொழுது எழுதிய கடிதத்தின் வாசகமே கீழே காணப்படுவது. இக் கடிதத்தை மகாத்மா, அந்த ஏஜெண்டுக்கு அனுப்பாமல், அங்கீகாரம் கோரி, தம்முடைய தமையனர் லட்சுமிதாஸ் காந்திக்கு அனுப்பினர். அத்துடன், தமையனருக்கு அவர் குஜராத்தி மொழியில் எழுதியனுப்பிய குறிப்பும் இங்கே கடைசியில் கொடுக்கப்பட்டுள்ளது.]

லண்டன்,
டிசம்பர், 1888.

அன்புள்ள ஐயா,

குறிப்பைப் பார்த்ததும் தாங்கள் என்னை அறிந்துகொள்ளுவீர்கள். எனக்குத் தங்களைக் காணும் சந்தர்ப்பம் கிடைத்தபோது, இந்தக் குறிப்பைப் பத்திரமாக வைத்துக்கொள்ளுவதாகத் தாங்கள் கூறினீர்கள்.

நான் இங்கிலாந்துக்குப் போவதற்குக் கொஞ்சம் பண உதவி செய்ய வேண்டுமென்று அப்போது தங்களைக் கேட்டேன். ஆனல், துரதிருஷ்டவசமாகத் தாங்கள் அவசரமாகப் போய்க்கொண்டிருந்தபடியால், நான் சொல்ல வேண்டியதை யெல்லாம் சொல்லுவதற்குப் போதிய நேரம் இல்லாமல் போய்விட்டது.

அப்போது நான் இங்கிலாந்துக்குப் போக வேண்டுமென்று மிகவும் துடித்துக் கொண்டிருந்தேன். ஆகவே, அந்தச் சமயத்தில் என்னிடமிருந்து சொற்பப் பணத்துடன் 1888, செப்டம்பர் 4-ஆம் தேதி நான் இந்தியாவை விட்டுப் புறப்பட்டேன். எங்களுக்கு-மூன்று சகோதரர்களுக்கு-என் தகப்பனர் வைத்துவிட்டுப் போனது உண்மையில் மிகவும் கொஞ்சம். என் சகோதரர் மிகுந்த கஷ்டத்தின்பேரில் சுமார் 666 பவுன்தான் எனக்குச் சமாளித்துக் கொடுக்க முடிந்தது. லண்டனில் நான் மூன்று வருடங்கள் தங்கியிருப்பதற்கு இந்தப் பணம் போதுமானது என்று நம்பி, இங்கிலாந்தில் சட்டக் கல்வி பெறுவதற்காக இந்தியாவை விட்டுப் புறப்பட்டேன். லண்டனில் கல்விக்கும் வாழ்க்கைக்கும் அதிகச் செலவாகும் என்பதை இந்தியாவில் இருந்தபோதே நான் அறிவேன். ஆனல், இப்போது லண்டனில் அடைந்த இரண்டு மாத அனுபவத்திலிருந்து, இந்தியாவில் இருந்தபோது நினைத்ததைவிட மிக அதிகமாகச் செலவாகிறது என்பதைக் கண்டறிந்தேன்.

இங்கே வசதியாக வாழவும், நல்ல கல்வி பெறவும் எனக்கு மேற்கொண்டு 400 பவுன் உதவி தேவைப்படுகிறது. நான் போர்பந்தர்வாசியானபடியால், இப்படிப்பட்ட உதவியை அந்த ஒரே இடத்திலிருந்துதான் நான் எதிர்பார்க்க முடியும்.

காலஞ்சென்ற மே. த. ராண சாகிப்பின் ஆட்சியில் கல்விக்கு மிக மிகக் குறைவாகவே ஊக்கம் அளிக்கப்பட்டது. ஆனல், பிரிட்டிஷ் நிர்வாகத்தின் கீழ் அதிக ஊக்கம் அளிக்கப்பட வேண்டும் என்று நாங்கள் இயல்பாகவே எதிர்பார்க்கலாம். அப்படி ஊக்கம் அளிக்கப்படும்போது அதைப் பயன்படுத்திக்கொள்ளக் கூடியவர்களில் நானும் ஒருவன்.

ஆகையால், தாங்கள் எனக்குச் சிறிது பண உதவியளித்து, அதன் மூலம் எனது பெருந்தேவையைப் பூர்த்தி செய்வீர்கள் என்று நம்புகிறேன்.

அதைப் பெற்றுக்கொள்ளும்படி என் சகோதரர் லட்சுமிதாஸ் காந்திக்கு எழுதியிருக்கிறேன். அவசியமானல் தங்களை நேரில் பார்க்கும்படியும் அவருக்குத் தெரிவித்திருக்கிறேன்.

என் வேண்டுகோளை நிறைவேற்றுவீர்கள் என்று நம்புகிறேன். மிகுந்த மரியாதைகளுடன்,

தங்கள்
மோ. க. காந்தி.

**குஜராத்தியில் தமையனருக்கு எழுதிய குறிப்பு பின்வருமாறு :**

இந்தக் கடித வாசகத்தை மூன்று வாரங்களுக்கு முன்னதாகவே நான் தயாரித்துவிட்டேன். அன்றிலிருந்து இதைப்பற்றியே சிந்தித்துக்கொண்டிருக்கிறேன். அவர் யாதொரு பதிலும் அனுப்பமாட்டார் என்றே எனக்கு நினைக்கத் தோன்றுகிறது. அதனுல் கடிதத்தின் வாசகத்தைத் தங்களுக்கு அனுப்புகிறேன். முழுத் தொகையும் வேண்டுமென்று கேட்பது நியாயமல்ல என்று கருதியே, நான் அவ்வாறு கேட்கவில்லை. மேலும், நான் அவருடைய உதவி ஒன்றையே நம்பிக்கொண்டிருக்கும் பட்சத்தில், உதவி கிடைக்கும் என்பதை உறுதி செய்துகொள்ளாமல் நான் இங்கிலாந்துக்குப் புறப்பட்டிருக்கக்கூடாது என்று அவர் நினைக்கக்கூடும். ஆனல், இங்கே வந்த பிறகு எனக்கு மேற்கொண்டும் பணம் தேவைப்படும் என்பதை அறிந்து, அந்தக் கூடுதல் தொகையை மட்டுமே நான் கேட்டிருக்கிறேன். நான் எந்த வகையிலும் என்னைக் கட்டுப்படுத்திக்கொண்டு விடவில்லை. ஏனென்ருல், அது அவசியம் என்று நான் நினைக்கவில்லை. அத்துடன் என் செலவுகளில் ஒரு பகுதியை மட்டுமே சரிக்கட்டக்கூடிய ஒரு தொகைக்காக என்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளுவதைச் சரியென்று நான் நினைக்கவும் இல்லை. அது ஒரு புறமிருக்க...

(கடிதம் முடியவில்லை)

# வாட்ஸனுக்கு எழுதிய கடிதம்

டிசம்பர், 1888.

கர்னல் ஜே. டபிள்யூ. வாட்ஸன்,
ராஜீய ஏஜெண்டு,
கத்தியவார்.

அன்புள்ள ஐயா,

நான் இந்த நாட்டுக்கு வந்து சுமார் ஆறு அல்லது ஏழு வாரங்கள் ஆகின்றன. இப்போது இங்கே சௌகரியமாகத் தங்கி, என் படிப்பையும் தொடங்கிவிட்டேன். சட்டப் பயிற்சிக்காக இன்னர் டெம்பிளில் நான் சேர்ந்திருக்கிறேன்.

இங்கிலாந்தில் வாழ்க்கைச் செலவு மிகவும் அதிகம் என்பது உங்களுக்கு நன்ருகத் தெரியும். ஆனல், என் சொற்ப அனுபவத்திலிருந்து இந்தியாவில் இருக்கும்போது நான் நினைத்ததைவிடவும் அதிகமாகச் செலவாவதைக்

கண்டேன். எனக்குள்ள பண வசதிகள் மிகக் கொஞ்சம் என்பது தாங்கள் அறிந்ததே. மேற்கொண்டு சிறிது உதவி வராமல், என் மூன்று வருடப் படிப்பையும் திருப்திகரமாகப் படித்துவிட முடியும் என்று நான் நினைக்கவில்லை. என் தகப்பனர் விஷயத்தில் தாங்கள் மிகுந்த அக்கறை எடுத்துக்கொண்டீர்கள். அவருக்குத் தாங்கள் நட்புக்கரம் நீட்டி உதவினீர்கள். இவற்றை நான் நினைவுபடுத்திப் பார்க்கும்போது, அவருக்குச் சிரத்தையுள்ள ஒரு விஷயத்தில் தாங்கள் அதே மாதிரி அக்கறை எடுத்துக்கொள்ளுவீர்கள் என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகம் இல்லை. இந்நாட்டில் நான் படிப்பதற்குப் பண உதவியைத் தேடி அளிப்பதில் தங்களால் முடிந்தவரை முயற்சி செய்வீர்கள் என்று நான் நம்புகிறேன். அதன் மூலம் தாங்கள் என்னுடைய பெருந்தேவையைப் பூர்த்தி செய்தவர்களாவீர்கள்.

சில தினங்களுக்கு முன் நான் டாக்டர் பட்லரைப் பார்த்தேன். அவர் என்னிடம் மிகவும் பிரியமாக இருக்கிறார். தம்மால் முடிந்த உதவியெல்லாம் எனக்குச் செய்வதாக வாக்களித்திருக்கிறார்.

பருவ நிலை இதுவரையிலும் அதிகக் கடுமையாக இல்லை. நான் சௌக்கியமாக இருக்கிறேன்.

மிகுந்த மரியாதைகளுடன்,

தங்கள் அன்புள்ள,
மோ. க. காந்தி.

# 4

# மீண்டும் இந்தியாவுக்கு

## கப்பல் யாத்திரை விவரங்கள்

[காந்திஜி மூன்றாண்டுகள் இங்கிலாந்தில் தங்கிச் சட்டக் கல்வி பயின்று பட்டம்பெற்ற பின்னர் இந்தியாவுக்குத் திரும்பினார். அப்போது தாம் செய்த கப்பல் பிரயாணம் பற்றிய விபரங்களை ஆங்கிலத்தில் இரண்டு கட்டுரைகளாக எழுதினார். அவை இரண்டும் 1892-ஆம் ஆண்டில் லண்டனிலிருந்து வெளியான "வெஜிடேரியன்'' பத்திரிகையில் வெளியாயின. அவ்விரண்டு கட்டுரைகளின் தமிழாக்கமே கீழே காணப்படுவது:]

இங்கிலாந்தில் மூன்று வருடங்கள் தங்கியிருந்துவிட்டு 1891, ஜூன் 12–ஆம் தேதி நான் பம்பாய்க்குப் புறப்பட்டேன். அன்றைத் தினம் அழகாக இருந்தது. சூரியன் துலாம்பரமாகப் பிரகாசித்தது. குளிர் காற்றைத் தாங்குவதற்கு கோட் எதுவும் தேவைப்படவில்லை.

11-45 மணிக்கு ஒரு எக்ஸ்பிரஸ் ரயில்வண்டி பிரயாணிகளை ஏற்றிக் கொண்டு லிவர்பூல் தெரு ஸ்டேஷனை விட்டு துறைமுகத்துக்குப் புறப்பட்டது.

பி. அண்டு ஓ. கம்பெனிக்குச் சொந்தமான 'ஓஷனா' என்ற நீராவிக் கப்பலில் கால் வைக்கும் வரையில், நான் இந்தியாவுக்குப் போகிறேன் என்பதை என்னால் நம்ப முடியவில்லை. லண்டன், அதன் சுற்றுப் புறங்கள் ஆகியவற்றில் எனக்கு அவ்வளவு பற்றுதல் உண்டாகிவிட்டது. யாருக்குத்தான் உண்டாகாது! கல்வி போதிக்கும் நிலையங்கள், பொதுஜன 'காலரிகள்', கண்காட்சிச் சாலைகள், நாடகக் கொட்டகைகள், விரிவான வர்த்தகம், பொதுஜனப்

பூங்காக்கள், சைவ உணவு விடுதிகள் ஆகியவற்ரேடு கூடிய லண்டன், மாணவனுக்கும், பிரயாணிக்கும், வியாபாரிக்கும், கொள்கைப் பைத்தியம் உடையவனுக்கும்-சைவ உணவுவாதியை அவருடைய எதிர்க்கட்சிக்காரர்கள் இப்படி அழைப்பார்கள்-பொருத்தமான இடமாகும். அதனல் ஆழ்ந்த வருத்தத்துடனேயே நான் பிரியமான லண்டனைவிட்டுப் புறப்பட்டேன். அதே சமயத்தில், இந்த நீண்ட காலத்துக்குப் பிறகு இந்தியாவில் உள்ள என் நண்பர்களையும், உறவினர்களையும் பார்க்கப் போகிறேம் என்பதால் எனக்குச் சந்தோஷமாகவும் இருந்தது.

'ஓஷனு' என்பது ஆஸ்திரேலியா கப்பல்; அந்தக் கம்பெனியின் மிகப் பெரிய கப்பல்களில் ஒன்று. அது 6188 டன் எடையும், 1200 குதிரை வேகமும் உடைய கப்பல். இந்த விசாலமான, மிதக்கும் தீவில் நாங்கள் கால்வைத்த போது எங்களுக்கு அருமையான, புத்துணர்ச்சி தரக்கூடிய, தேநீர் கொடுக்கப்பட்டது. அதை எல்லோரும் (பிரயாணிகளும், நண்பர்களும்) நன்ருகக் குடித்தார்கள். தேநீர் இலவசமாகக் கொடுக்கப்பட்டது என்பதை நான் குறிப்பிடாமல் விட்டுவிடக் கூடாது. இந்தச் சமயத்தில், எல்லோரும் 'ஹாய்'யாகத் தேநீர் குடித்துக் கொண்டிருந்ததால், அந்த எல்லோரையுமே பிரயாணிகள் என்றுதான் ஒரு புதிய ஆசாமி கருதியிருப்பார். (பிரயாணிகளும் நிறையப் பேர்கள் இருந்தார்கள்.) ஆனல், கப்பல் புறப்படப் போகிறது என்பதைப் பிரயாணிகளின் நண்பர்களுக்கு அறிவிப்பதற்காக மணி அடிக்கப்பட்டதும், கூட்டம் கணிசமாகக் கரைந்து விட்டது. துறைமுகத்தை விட்டுக் கப்பல் புறப்பட்டபோது சந்தோஷ ஆரவாரமும், கைக்குட்டைகளை ஆட்டுவதும் மிகுதியாக இருந்தன.

பம்பாய்க்குச் செல்லும் பிரயாணிகள் ஏடன் துறைமுகத்தில் கப்பல் மாறி, 'அஸ்ஸாம்' என்ற கப்பலில் ஏறிக்கொள்ள வேண்டும். 'ஓஷனு'வுக்கும் 'அஸ்ஸா'முக்கும் உள்ள வித்தியாசத்தை இங்கே கூறுவது பொருந்தும். ஓஷனுவில் உணவு பரிமாறுவது போன்ற வேலைகளைச் செய்பவர்கள் ஆங்கிலேயர்கள். அவர்கள் எப்போதும் சுத்தமாகவும், சொன்ன வேலைகளை மனம் கோணமல் உடனே செய்யக் கூடியவர்களாகவும், உதவியாகவும் இருப்பார்கள். ஆனல், அஸ்ஸாம் கப்பலில் இருந்த போர்ச்சுக்கீசிய வேலைக்காரர்களோ, ஆங்கில மொழியைக் கொலை செய்வார்கள்; எப்போதும் சுத்தத்திற்கு நேர் விரோதமாகவும், முறைத்துக்கொண்டும், அசமஞ்சமாகவும் இருப்பார்கள்.

மேலும், இந்த இரண்டு கப்பல்களிலும் கொடுக்கப்படும் உணவின் தரத்திலும் வித்தியாசம் இருந்தது. அஸ்ஸாம் பிரயாணிகள் முனகிக் கொண்டிருந்ததிலிருந்து இது தெளிவாகத் தெரிந்தது. இதுமட்டும் அல்ல. ஓஷனுவின் இருப்பிட வசதியும், அஸ்ஸாமில் இருப்பதைவிட எவ்வளவோ விசேடமாக இருந்தது. ஆனலும், கம்பெனியாரால் இதைத் தவிர்க்க முடியாது. ஓஷனு சிறந்த கப்பல் என்பதற்காக அஸ்ஸாமை அவர்கள் தூர எறிந்துவிட முடியாது.

கப்பலில் சைவ உணவுக்காரர்கள் எப்படிச் சமாளித்தார்கள்? இது ஒரு பொருத்தமான கேள்வியே.

ஆம், என்னைச் சேர்த்து இரண்டு சைவ உணவுக்காரர்கள்தான் கப்பலில் இருந்தோம். சிறந்த உணவு எதுவும் கிடைக்காவிட்டால், வேக

வைத்த உருளைக் கிழங்கு, கீரை, வெண்ணெ ஆகியவற்றைக் கொண்டு சமாளித்துக் கொள்ள நாங்கள் இருவரும் தயாராக இருந்தோம். ஆனல், அந்த எல்லை வரையிலும் போகும்படி நேரவில்லை. மிகவும் உதவிகரமான கப்பல் வேலைக்காரர், எங்களுக்குக் கொஞ்சம் காய்கறிக் குழம்பும், சாதமும், அவித்த பழங்களும், முதலாவது சலூனிலிருந்து புதுப் பழங்களும், கடைசியில் பழுப்பு ரொட்டியும் கொடுத்தார். பிரயாணிகளுக்கு நல்ல, போதுமான உணவு கொடுப்பதில் அவர்கள் மிகவும் தாராளமாக நடந்து கொள்ளுகிருர்கள் என்பதில் சந்தேகமில்லை. இதில் அவர்கள் அளவுக்கு மீறிய தாராளத்துடன் தான் நடந்துகொள்ளுகிருர்கள்; அல்லது அப்படி எனக்குத் தோன்றுகிறது.

இரண்டாவது சலூன் சாப்பாட்டு விவரங்களையும், பிரயாணிகளுக்கு எத்தனை தடவை உணவு அளிக்கப்படுகிறது என்பதையும் விவரிப்பது தவருகாது.

காலையில் முதல் முதலாக ஒரு பிரயாணிக்குச் சராசரி ஒரு கோப்பை அல்லது இரண்டு கோப்பைத் தேநீரும், சில பிஸ்கோத்துகளும் கிடைக்கும். 8-30 மணிக்குக் காலைச் சாப்பாட்டு மணி அடிக்கப்படும். அப்பொழுது பிரயாணிகள் சாப்பாட்டு அறைக்குப் போவார்கள். சாப்பாட்டுக்கு வருவதில் நிமிஷக்கணக்குக்கூட அவர்கள் தவறுவதில்லை. காலைச் சாப்பாட்டில் ஓட்ஸ் கஞ்சி, கொஞ்சம் மீன், துண்டுக் கறி, குழம்பு, ஜாம், ரொட்டி, வெண்ணெ, தேநீர் அல்லது காபி முதலியவை அடங்கியிருக்கும். இவை ஒவ்வொன்றும் விரும்பிய அளவு கொடுக்கப்படுகிறது.

கஞ்சி, மீன், குழம்பு, ரொட்டி, வெண்ணெ ஆகியவற்றைப் பிரயாணிகள் சாப்பிட்டுவிட்டு, மேற்கொண்டு இரண்டு அல்லது மூன்று கோப்பைத் தேநீர் குடிப்பதையும் நான் அடிக்கடி பார்த்திருக்கிறேன்.

காலை உணவை ஜீரணிப்பதற்கு முன்பாகவே 1-30 மணிக்கு மத்தியானச் சாப்பாட்டு மணி 'டாண்' என்று அடிக்கப்படும். மதிய உணவும் காலைச் சாப்பாட்டைப்போல நன்ருக இருக்கும். நிறைய ஆட்டுக்கறி, காய்கறிகள், சாதம், குழம்பு, ரொட்டி இன்னும் என்ன என்னவோ பரிமாறப்படும். வாரத்தில் இரண்டு நாள்-இரண்டாவது சலூன் பிரயாணிகளுக்கு-இந்தச் சாப்பாட்டுடன் பழங்களும், கொட்டைகளும் பரிமாறப்படும். ஆனல், இதுவுங்கூடப் போதுமானதல்ல. மதியச் சாப்பாடு மிகவும் சுலபமாக ஜீரணித்துவிடக்கூடிய தாகும். அதனல் பிற்பகல் 4 மணிக்கு "புத்துணர்ச்சி" கொடுப்பதற்காக ஒரு கோப்பைத் தேநீரும், பிஸ்கோத்துகளும் எங்களுக்குத் தேவைப்பட்டன. சாயங்காலக் காற்று, 'அந்தச் சிறு கோப்பை"த் தேநீர் அளித்த உணர்ச்சியை எல்லாம் வெகு சீக்கிரமாகவே போக்கடித்துவிடுவது போல் தோன்றியது. ஆகவே 6-30 மணிக்கு எங்களுக்குத் தேநீர் விருந்தளிக்கப்பட்டது. அப்போது ரொட்டியும், வெண்ணெயும், ஜாம் அல்லது ஊறப்போட்ட பழங்களும் அல்லது இரண்டும், ஸாலட், துண்டுக்கறி, தேநீர், காபி முதலியவையும் பரிமாறப்படும். கடற்காற்று மிகமிக ஆரோக்கியமானதாகத் தோன்றியபடியால், பிரயாணிகள் சிலர், மிகச்சிலர்-எட்டு அல்லது பத்து, அதிகமாகப் போனல் பதினைந்து — பிஸ்கோத்துகளையும் சிறிது பாலாடைக் கட்டியையும் கொஞ்சம் ஒயின் அல்லது பீரையும் சாப்பிடாமல் படுக்கப் போகமாட்டார்கள். இதையெல்லாம் பார்க்கும்போது, கீழ்க்காணும்

வரிகள் மிகவும் உண்மையானவையாகவும் எதார்த்தமானவையாகவும் இருக்கின்றன அல்லவா?

உங்கள் வயிறுதான் உங்கள் கடவுள்; உங்கள் ஆகாரப் பைதான் உங்கள் கோவில்; உங்கள் இரைப்பையே பூஜை மேடை. உங்கள் சமையற்காரன்தான் பூசாரி. ......சமையல் பாத்திரங்களில்தான் உங்கள் காதல் கொழுந்துவிட்டு எரிகிறது; சமையற் கூடத்தில்தான் உங்கள் விசுவாசம் தீவிரம் அடைகிறது; மாமிசப் பதார்த்தங்களில்தான் நம்பிக்கை முழுவதும் மறைந்திருக்கிறது.......அடிக்கடி விருந்திடுகிறவர், அதில் ஏராளமாகச் செலவிடுகிறவர், விருந்தில் நல்வாழ்த்துக் கூறுகிறவர்-இவர்களைப்போல் வேறு யாருக்கு நீங்கள் அதிக மதிப்பு வாய்ந்த ஸ்தானம் கொடுக்கிறீர்கள்?

இரண்டாவது வகுப்பு சலூனில் எல்லாவிதமான பிரயாணிகளும் இருந்தார்கள். சிப்பாய்கள், பாதிரிமார்கள், க்ஷவரத்தொழிலாளிகள், கப்பலோட்டிகள், மாணவர்கள், உத்தியோகஸ்தர்கள் ஆகியவர்கள் இருந்தார்கள். அத்துடன் புதுப்புது அருங்காரியங்களில் துணிவுடன் ஈடுபடும் ஆட்களும் இருந்திருப்பார்கள். மூன்று அல்லது நான்கு பெண்களும் இருந்தார்கள். முக்கியமாக, சாப்பிடுவதிலும், பானம் அருந்துவதிலுமாக நாங்கள் நேரத்தைப் போக்கினோம். மீதி நேரத்தை தூங்கியோ, பேசியோ கழிப்போம். சில சமயங்களில் விவாதங்களிலும், விளையாட்டிலும் பொழுது கழியும். ஆனால், இரண்டு மூன்று நாட்களுக்குப் பிறகு, விவாதங்கள், சீட்டுவிளையாட்டு வம்புப் பேச்சு ஆகியவற்றால் பொழுதைப்போக்கியுங்கூட ஒரு சாப்பாட்டுக்கும் மற்றொரு சாப்பாட்டுக்கும் இடையே நேரம் மிகவும் நீண்டிருப்பதைப்போலத் தோன்றியது.

எங்களில் சிலர் உண்மையிலேயே வேலை செய்வதில் மிக உற்சாகமாக ஈடுபட்டு, கச்சேரிகள், கயிறு இழுத்தல், ஓட்டப் பந்தயங்கள் ஆகியவற்றைப் பரிசுகளோடு ஏற்பாடு செய்தார்கள். ஒரு நாள் சாயங்காலம் கச்சேரிகளுக்கும், சொற்பொழிவுகளுக்கும் ஒதுக்கப்பட்டிருந்தது.

நானும் கலந்துகொள்ளுவதற்கு இதுதான் சமயம் என்று இப்பொழுது நினைத்தேன். இந்த நிகழ்ச்சிகளையெல்லாம் கண்காணித்து வந்த கமிட்டியின் காரியதரிசியிடம், சைவ உணவுப்ற்றிச் சுருக்கமாக ஒரு சொற்பொழிவாற்றுவதற்கு எனக்குக் கால்மணி நேரம் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டேன். காரியதரிசியும் என் வேண்டுகோளுக்கு இசைந்தார்.

நான் என் சொற்பொழிவைத் தயாரிப்பதில் தடபுடலாக ஈடுபட்டேன். நன்கு சிந்தித்து, அப்புறம் எழுதினேன். பிறகு அதைத் திருத்தி எழுதினேன். மாறுபட்ட கருத்துடையவர்களுடைய கூட்டத்தில் பேசவேண்டிய வனாக இருக்கிறேன் என்பதை நான் நன்கு அறிவேன். அதனால் என்னுடைய பேச்சைக் கேட்டு அவர்கள் தூங்கிவிடக் கூடாது என்பதிலும் நான் கவனமாக இருக்கவேண்டும். நகைச் சுவையோடு பேசவேண்டும் என்று காரியதரிசி சொன்னார். எனக்கு நடுக்கம் எடுத்தாலும் எடுக்குமே ஒழிய நகைச்சுவையோடு என்னால் பேச இயலாது என்று அவரிடம் சொன்னேன்.

கடைசியில் என் பேச்சு என்னவாயிற்று என்று நினைக்கிறீர்களா? இரண்டாவது தடவை கச்சேரி நடக்கவேயில்லை. ஆகவே என் பிரசங்கமும் நடைபெறவேயில்லை. இதனால் என் மனம் மிகவும் கஷ்டப்பட்டது. முதல்

நாள் மாலை நடந்த நிகழ்ச்சிகளை ஒருவரும் ரஸிக்கவில்லை என்று நினைக்கிறேன். ஏனென்றால் இரண்டாவது சலூனில் சிறந்த பாடகர்களோ பிரசங்கிகளோ இல்லை.

ஆனாலும் இரண்டு மூன்று பிரயாணிகளுடன் சைவ உணவு பற்றி நான் விவாதித்தேன். நான் சொல்லுவதை அவர்கள் அமைதியாகக் கேட்டார்கள். கடைசியில் அவர்கள் கூறியதாவது: "உங்கள் விவாதம் சரி என்று ஒப்புக் கொள்ளுகிறோம். ஆனால், நாங்கள் தற்போது சாப்பிடும் உணவு எங்களுக்கு மகிழ்ச்சியை அளித்துக் கொண்டிருக்கும் வரையில்—சில சமயங்களில் எங்களுக்கு அஜீரணம் ஏற்படுகிறது என்றாலும், அதைப்பற்றிப் பரவாயில்லை—நாங்கள் வேறு உணவைச் சாப்பிட்டுப் பரீட்சை பண்ண முடியாது."

அவர்களில் ஒருவர், எனக்கும் என் சைவ நண்பருக்கும் தினந்தோறும் அருமையான பழங்கள் கிடைப்பதைப் பார்த்து, சைவ உணவைச் சாப்பிட்டுப் பரீட்சை பண்ணுவதற்கு முன்வந்தார். ஆனால், துண்டுக் கறியின்மீது அவருக்கு இருந்த கவர்ச்சியை அவரால் போக்கமுடியவில்லை பாவம்!

## 2

பிரயாணிகளுக்கு இடையே இருந்த சமூகத் தன்மைக்கும், முதலாவது சலூன் பிரயாணிகளின் சகஜ பாவத்துக்கும் அடையாளமாக அவர்கள் அவ்வப்போது ஏற்பாடு செய்த நாடகங்களையும், நாட்டியங்களையும் பார்க்க இரண்டாவது சலூன் பிரயாணிகளை அடிக்கடி அழைப்பார்கள்.

முதலாவது வகுப்பு சலூனில் அருமையான சில பெண்மணிகளும் ஆடவரும் இருந்தார்கள். ஆனாலும், சண்டையில்லாமல் தமாஷ்கள் மட்டுமே நடந்து வரமுடியுமா? ஆகவே சில பிரயாணிகள் குடித்துப் போதை ஏற்றிக்கொள்ளலானார்கள். (ஆசிரியர் அவர்களே, மன்னிக்க வேண்டும். அவர்கள் அநேகமாக ஒவ்வொரு நாளுமே குடிப்பார்கள். ஆனால், குறிப்பிட்ட இந்தத் தினத்தின் மாலைப் பொழுதில் அவர்கள் குடித்து ஒழுங்கீனமாக நடந்து கொண்டார்கள்.) ஒரு கிளாஸ் விஸ்கியைக் குடித்துக்கொண்டு அவர்கள் ஒருவரோடு ஒருவர் விவாதித்துக் கொண்டிருந்தார்கள். அப்போது அவர்களில் சிலர் தகாத வார்த்தைகளை உபயோகித்தார்கள். அதைத் தொடர்ந்து வாய்ச்சண்டை ஆரம்பித்து, அடிபிடிச் சண்டையில் போய் நின்றது. இந்த விஷயம் காப்டனுக்கு அறிவிக்கப்பட்டது. அவர் அந்தக் குத்துச் சண்டைக் கனவான்களைக் கடிந்து கொண்டார். அதன்பின் எங்களிடையே சண்டை ஏற்படவில்லை.

இவ்வாறு, சாப்பிடுவதிலும், பொழுதுபோக்குகளிலும் நேரத்தைப் பகிர்ந்துகொண்டு, மேல்நோக்கி நகர்ந்து கொண்டிருந்தோம்.

இரண்டு நாள் பிரயாணத்துக்குப் பிறகு கப்பல் ஜிப்ரால்டரை ஒட்டிச் சென்றது. அங்கே நிற்கவில்லை. இது மிகுந்த ஏமாற்றத்தை அளித்தது. புகை பிடிப்பவர்களுக்கு இது அதிக ஏமாற்றமாக இருந்தது. ஜிப்ரால்டரில் கப்பல் நங்கூரம் போடும் என்று எங்களில் சிலர் நம்பிக்கொண்டிருந்தபடியால், அங்கே சுங்கத் தீர்வையில்லாமல் புகையிலை வாங்க அவர்கள் விரும்பினார்கள்.

அடுத்தபடியாக வந்து சேர்ந்த இடம் மால்டா. அது கப்பலுக்குக் கரிபோடும் நிலையம். அதனால் அங்கே கப்பல் சுமார் ஒன்பது மணி நேரம் நிற்கிறது. அநேகமாக எல்லாப் பிரயாணிகளுமே கரையில் இறங்கினார்கள்.

மால்டா ஒரு அழகான தீவு. லண்டன் நகரின் புகை அங்கே கிடையாது. வீடுகளின் கட்டுமான அமைப்பும் வேறு மாதிரியாக இருக்கிறது. கவர்னருடைய மாளிகையை நாங்கள் சுற்றிப் பார்த்தோம். ஆயுதச் சாலை பார்க்கத் தகுந்த இடம். நெப்போலியனுடைய வண்டி அங்கே காட்சியில் வைக்கப்பட்டிருக்கிறது. அங்கே சில அழகான ஓவியங்களையும் பார்க்கலாம். மார்க்கெட்டும் மோசமாக இல்லை. பழங்களின் விலை மலிவு. தேவாலயம் பிரமாதமாக இருக்கிறது.

வண்டியில் ஆறு மைல் தூரம் சுகமாகப் பிரயாணம் செய்து ஆரஞ்சுத் தோட்டத்துக்குப் போனோம். அங்கே ஆயிரக்கணக்கான ஆரஞ்சு மரங்களையும், பொன் நிற மீன்களைக் கொண்ட சில குளங்களையும் பார்க்கலாம். வண்டிக் கட்டணம் மிகவும் குறைவு; 2 ஷில்லிங் 6 பென்ஸ்தான்.

பிச்சைக்காரர்களுக்கு மால்டா எவ்வளவு படுமோசமான தீவாக இருக்கிறது! ஆபாசமான தோற்றமுடைய பிச்சைக்காரர்களின் கூட்டம் வந்து மொய்க்காமல் நீங்கள் ரோடு வழியாகப் போக முடியாது. சிலர் உங்களுக்கு வழிகளையும் இடங்களையும் காட்டுவதற்கு முன்வருவார்கள். சுருட்டும், மால்டாவின் பிரபலச் சர்க்கரைப் பண்டங்களும் வாங்கும் கடைகளுக்கு அழைத்துச் செல்ல வேறு சிலர் முன்வருவார்கள்.

மால்டாவிலிருந்து நாங்கள் பிரிண்டிஸிக்குப் போய்ச் சேர்ந்தோம். அது ஒரு நல்ல துறைமுகம். அவ்வளவுதான். சந்தோஷகரமான பொழுது போக்குடன் அங்கே ஒருநாளைக்கூடக் கழிக்கமுடியாது. எங்களுக்கு ஒன்பது மணி சாவகாசத்துக்கு மேலேயே அங்கே நேரம் இருந்தது. ஆனால், நான்கு மணி நேரத்தைக் கூட எங்களால் பயன்படுத்த இயலவில்லை.

பிரிண்டிஸிக்குப் பிறகு நாங்கள் போர்ட் செயித் போய்ச்சேர்ந்தோம். ஐரோப்பாவினிடமும், மத்தியதரைக் கடலினிடமும் நாங்கள் அங்கே கடைசி விடைபெற்றுக் கொண்டோம். போர்ட் செயித்தில்—சமூகத்தின் கீழ்த்தரமான ஆசாமிகளைப் பார்க்க விரும்பினலொழிய–பார்ப்பதற்கு வேறு எதுவுமே இல்லை. அங்கே அயோக்கியர்களும் காலிகளுமே இருக்கிறார்கள்.*

போர்ட் செயித்திலிருந்து கப்பல் மிகவும் சாவதானமாக நகருகிறது. ஏனென்றால் எம். தெ. லெஸ்ஸப்ஸின் சூயஸ் கால்வாயில் நாங்கள் பிரவேசிக்கிறோம். அது எண்பத்தேழு மைல் நீளம் உடையது. அந்தத் தூரத்தைக் கப்பல் கடப்பதற்கு அநேகமாக இருபத்து நாலுமணி நேரம் ஆகிறது. இருபுறமும் தரை எங்களுக்கு அருகாமையில் இருந்தது. தண்ணீர் உள்ள இடம் மிகக் குறுகலாக இருக்கிறது. குறிப்பிட்ட இடங்களைத் தவிர மற்ற இடங்களில் இரண்டு கப்பல்கள் ஜோடியாகப் போக முடியாது. இரவில், காட்சி கவர்ச்சிகரமாக இருக்கிறது. அங்கே எல்லாக் கப்பல்களும் முன்புறத்தில் மின்சார விளக்குகளை ஏற்றியாக வேண்டும். அவை மிகமிகப் பிரகாசமாக இருக்கின்றன. இரண்டு கப்பல்கள் ஒன்றை ஒன்று கடந்து செல்லும் காட்சி பரமானந்தமாக இருக்கும். எதிர்த்திசையிலிருந்து வரும் கப்பலின் மின்சார விளக்கைப் பார்க்கக் கண்கள் கூசும்.

---

* இது போர்ட் செயித் வாசிகளில் ஒரு பகுதியினரைத் தான் குறிக்கிறது என்பது வெளிப்படை.

நாங்கள் ''கங்கா'' என்ற கப்பலைக் கடந்துவந்தோம். அதைப் பார்த்து நாங்கள் மும்முறை ஆனந்த கோஷம் செய்தோம். ''கங்கா''வில் இருந்த பிரயாணிகளும் பதிலுக்கு மனக்களிப்போடு கோஷம் செய்தார்கள். கால்வாயின் மறுகோடியில் இருக்கிறது சூயஸ் நகரம். கப்பல் அங்கே அரைமணி நேரங்கூட நிற்பதில்லை.

இப்பொழுது நாங்கள் செங்கடலில் பிரவேசித்தோம். அது மூன்று நாள் பயணம். ஆனால் அது மிகக் கஷ்டமாக இருக்கிறது. அங்கே தாங்க முடியாத உஷ்ணம். கப்பலுக்கு உள்ளே இருப்பதே அசாத்தியம் என்பதோடு, மேல் தளத்திலுங்கூட மிக உஷ்ணமாக இருந்தது. வெப்பமான சீதோஷ்ண நிலையை அனுபவிக்க நாங்கள் இந்தியாவுக்குப் போய்க்கொண்டிருக்கிறோம் என்பதை இங்கே முதல் முதலாக உணர்ந்தோம்.

நாங்கள் ஏடனை அடைந்தபோது சிறிது காற்றடித்தது. இங்கே நாங்கள் (பம்பாய்க்குச் செல்லும் பிரயாணிகள்) ''அஸ்ஸாம்'' என்ற கப்பலுக்கு மாறவேண்டும். அது, லண்டனைவிட்டு மோசமான ஒரு கிராமத்துக்குப் போவதுபோல் இருந்தது. 'ஓஷன' கப்பலில் பாதியளவு கூட ''அஸ்ஸாம்'' இல்லை.

துரதிருஷ்டங்கள் தனித்தனியாக வருவதில்லை. ''அஸ்ஸாம்'' கப்பலில் பிரயாணம் செய்தபோது சமுத்திரம் புயலால் கொந்தளித்தது. ஏனென்றால் அது பருவ மழைக்காலம். பொதுவாக இந்திய சமுத்திரம் அமைதியாகவே இருக்கும். அதனால் பருவ மழைக் காலத்தில் அது பழிவாங்குவது போலப் புயலும் சூறுவளியுமாக இருக்கும். பம்பாய் போய்ச் சேருவதற்கு முன் நாங்கள் மேற்கொண்டு ஐந்து நாட்களைத் தண்ணீரில் கழிக்கவேண்டியிருந்தது. இரண்டாம் நாள் இரவில் உண்மையிலேயே புயல் அடித்தது. அநேகருக்கு மயக்கம் கண்டுவிட்டது. துணிந்து மேல் தளத்துக்குப் போனால் தண்ணீர் வந்து மேலே அடித்தது. 'நற நற' என்ற சத்தம் கேட்கும். ஏதாவது ஒன்று முறிந்திருக்கும். காபினுக்குள் அமைதியாகத் தூங்க முடியாது. கதவு தானாக அடித்துக் கொண்டிருக்கும். மூட்டை முடிச்சுகள் நாட்டியம் ஆடத் தொடங்கும். படுக்கையில் கிடக்கும் ஆளைப் புரட்டும். கப்பல் மூழ்கிக்கொண்டிருப்பதுபோலச் சில சமயங்களில் தோன்றும். சாப்பாட்டு மேஜை அருகே முன்னைப்போல் சௌகரியமாக உட்கார முடியாது. உங்கள் பக்கமாகக் கப்பல் புரளும். கரண்டிகளும், கவர்முட்களும் மடியில் வந்து விழும். புளிக்காடி, மிளகுத்தூள் முதலியவை வைக்கப்பட்டிருக்கும் புட்டிகளும், சூப் வைத்துள்ள கோப்பையுங்கூட மடியில் விழும். அதனால், மடியில் போட்டிருக்கும் முண்டுத் துணியில் மஞ்சள் சாயம் ஏறும். இப்படிப் பல காரியங்கள்.

உண்மையில் புயல் என்பது இதுதானா என்று கப்பல் வேலைக்காரரைப் பார்த்து ஒருநாள் காலையில் கேட்டேன். "இல்லை ஸார். இதுவெல்லாம் ஒரு புயலா?'' என்று இவர் கூறிவிட்டு, தம் கைகளை ஆட்டி உண்மையான புயலில் கப்பல் எப்படி ஆடும் என்பதை எனக்குக் காட்டினார்.

இவ்வாறு மேலும் கீழும் ஆடிக்கொண்டு நாங்கள் ஜூலை 5-ஆம் தேதி பம்பாய்க்கு வந்து சேர்ந்தோம். அன்று மழை மிகவும் பலமாகப் பெய்து கொண்டிருந்தது. அதனால் கரையில் இறங்குவது கஷ்டமாக இருந்தது. ஆனால், பத்திரமாக நாங்கள் இறங்கிவிட்டோம்; ''அஸ்ஸாம்'' கப்பலுக்கு விடையும் கொடுத்தோம்.

எப்படிப்பட்ட ஆட்களெல்லாம் "ஓஷனு"விலும், "அஸ்ஸா"மிலும் வந்தார்கள்! சிலர் பெரிய நம்பிக்கைகளோடு ஆஸ்திரேலியாவில் பொருள் ஈட்டுவதற்குப் போய்க்கொண் டிருந்தார்கள். சிலர், இங்கிலாந்தில் படிப்பை முடித்துக்கொண்டு நல்ல வருமானத்தைத் தேடுவதற்காக இந்தியாவுக்குப் போய்க்கொண் டிருந்தார்கள். சிலர் கடமை யுணர்ச்சியோடு திரும்பி வந்தார்கள். சிலர் ஆஸ்திரேலியாவிலோ, இந்தியாவிலோ தங்கள் கணவன்மாரைச் சந்திக்கப் போய்க்கொண் டிருந்தார்கள். துணிகரமான செயல்களில் இறங்குவதை விரும்பும் சிலர், தங்கள் தாய்நாட்டில் ஏமாற்றம் அடைந்து, தங்கள் அரிய சாகஸங்களை நடத்துவதற்காகப் போய்க்கொண் டிருந்தார்கள். அவர்கள் எங்கே போகிறார்கள் என்பது கடவுளுக்குத்தான் தெரியும்.

எல்லோருடைய நம்பிக்கைகளும் நிறைவேறினவா? அதுதான் கேள்வி. மனித உள்ளந்தான் எவ்வளவு நம்பிக்கையோடு இருக்கிறது. இருந்தும் எத்தனை தடவைகள் ஏமாற்றத்துக்கு உள்ளாகிறது! நாம் நம்பிக்கையில் தான் உயிர் வாழ்கிறோம்.

## 5

# நேட்டால் இந்தியர் காங்கிரஸ்

(ஸ்தாபிதம் : 22, ஆகஸ்டு, 1894)

[மேற்படி காங்கிரஸுக்குக் காந்திஜி தயாரித்த விதிகளும், காங்கிரஸின் தலைவர் முதலியவர்களின் பெயர் விபரங்களும் இதில் அடங்கியுள்ளன. கீழே காணப்படுவது காந்திஜி எழுதியதன் தமிழாக்கம்]

தலைவர் : ஸ்ரீ அப்துல்லா ஹாஜி ஆதம்.

உப தலைவர்கள் : ஸ்ரீமான்கள் ஹாஜி முகம்மது ஹாஜி தாதா, அப்துல் காதர், ஹாஜி தாதா ஹாஜி ஹபீப், மூஸா ஹாஜி ஆதம், பி. தாவ்ஜி முகம்மது, பீரான் முகம்மது, முருகேச பிள்ளை, ராமசாமி நாயுடு, ஹுசேன் மீரான், ஆதம்ஜி மியான்கான், கே. ஆர். நாயனு, அமோத் பாயத் (பி. எம். பர்க்), மூஸா ஹாஜி காஸிம், முகம்மது காஸிம் ஜீவா, பார்ஸி ருஸ்தம்ஜி, தவாத் முகம்மது, ஹுசேன் காஸிம் அமோத் திலி, துரைசாமி பிள்ளை, உமார் ஹாஜி ஆபா, உஸ்மான் கான் ரஹமத் கான், ரங்கசாமிப் படையாச்சி, ஹாஜி முகம்மது (பி. எம். பர்க்), கம்ருதீன் (பி. எம். பர்க்.)

கௌரவக் காரியதரிசி : ஸ்ரீ எம். கே. காந்தி.

காங்கிரஸ் கமிட்டி : தலைவர் : ஸ்ரீ அப்துல்லா ஹாஜி ஆதம்; கௌரவக் காரியதரிசி : ஸ்ரீ எம். கே. காந்தி; கமிட்டி அங்கத்தினர்கள் : உப தலைவர்கள் : ஸ்ரீமான்கள் எம். டி. ஜோஷி, நரசிராம், மாணிக்ஜி, தௌஜி மம்முஜி முதலா, முத்து கிருஷ்ண, பிஸ்ஸஸ்ஸார், குலாம் ஹுசேன் ரந்தேரி, ஷம்ஸுதீன், ஜி. ஏ. பாஸா, சராப்ஜித், எல். காபிரியேல், ஜேம்ஸ் கிறிஸ்தோபர், சுப்பு நாயுடு, ஜான் காபிரியேல், சுலைமான் வோராஜி, காஸிம்ஜி அமுஜி, ஆர். கந்தசாமி நாயுடு, எம். ஈ. கத்ரதா, இப்ரஹிம் எம். கத்ரி, ஷேக் பரீத், வரிண்ட் இஸ்மாயில், ரஜீத், பெருமாள் நாயுடு, பார்ஸி தஞ்ஜிஷா, ராயப்பன், ஜுஸப் அப்துல் கரீம், அர்ஜுன் சிங், இஸ்மாயில் பாடியா, ஈஸப் லாடுவா, முகம்மது ஈஸாக், முகம்மது ஹபேஜி, எம். பருக், சுலைமான் தாவ்ஜி, வி. நாராயணப் பத்தர், லக்ஷமண் பண்டாய், உஸ்மான் அகமத், முகம்மது தயூப்.

அங்கத்தினராவதற்குரிய நிபந்தனைகள்: காங்கிரஸின் பணியை ஒப்புக்கொள்ளும் எவரும் சந்தாச் செலுத்தி, அங்கத்தினர் பாரத்தில் கையெழுத்திடுவதன் மூலம் அங்கத்தினர் ஆகலாம். குறைந்த பட்ச மாதச் சந்தா 5 ஷில்லிங்; வருடச் சந்தா 3 பவுன்.

நேட்டால் இந்தியர் காங்கிரஸின் நோக்கங்கள் :

1. காலனியில் வசிக்கும் இந்தியர்களுக்கும் ஐரோப்பியர்களுக்கும் இடையே ஒற்றுமையை வளர்த்தல்.

2. செய்திப் பத்திரிகைகளுக்கு எழுதுதல், துண்டுப் பிரசுரங்களை வெளியிடுதல், பிரசங்கங்கள் செய்தல் ஆகியவற்றின் மூலம் இந்திய மக்களுக்கு (நிலைமையை) அறிவித்தல்.

3. ஹிந்துஸ்தானிகளை—குறிப்பாகக் காலனியில் பிறந்த இந்தியர்களை—இந்திய சரித்திரமும், இந்தியத் தொடர்புடைய இலக்கியமும் படிக்கும்படி தூண்டுதல்.

4. இந்தியரின் நிலைமைகளை விசாரித்து, அவர்களுடைய கஷ்டங்களைப் போக்குவதற்குத் தக்க முயற்சிகளை எடுத்தல்.

5. ஒப்பந்தத் தொழிலாளிகளின் நிலைமைகளை விசாரித்து, அவர்களுடைய துன்பங்களைப் போக்குவதற்குத் தக்க முயற்சிகளை எடுத்தல்.

6. ஏழைகளுக்கும், உதவியற்றவர்களுக்கும் நியாயமான ஒவ்வொரு வழியிலும் உதவி புரிதல்.

7. இந்தியர்கள் தார்மிக, சமூக, அரசியல் நிலைமைகளை அபிவிருத்தி செய்யக் கூடிய பணியைச் செய்தல்.

கமிட்டியால் திருத்தப்பட்டு அல்லது ரத்துச் செய்யப்பட்டு,
காங்கிரஸினால் அங்கீகரிக்கப்பட்ட விதிகள் :

1. மாதத்துக்கு 10 பவுனுக்கு மேற்படாத ஒரு தொகையில் பொதுக் கூட்டங்களுக்காக ஒரு ஹாலை வாடகைக்கு அமர்த்த அதிகாரம் கொடுக்கப்படுகிறது.

2. குறைந்தது மாதத்துக்கு ஒரு தடவையாவது கமிட்டி கூட வேண்டும்.

3. குறைந்தது வருடத்துக்கு ஒரு தடவையாவது காங்கிரஸின் பொது மகாநாடு கூட்டப்பட வேண்டும்—அது டர்பனில் கூட்டப்படவேண்டும் என்ற அவசியமில்லை.

4. காலனியின் பிற பகுதிகளிலிருந்து கௌரவக் காரியதரிசி, அங்கத்தினர்களை அழைக்க வேண்டும்.

5. விதிகளைத் தயாரித்து (அவற்றைத் தீர்மான ரூபத்தில்) நிறைவேற்றும் அதிகாரமும், சாதாரண நடைமுறை சம்பந்தப்பட்ட மற்ற சகல அதிகாரங்களும் கமிட்டிக்கு இருக்கவேண்டும்.

6. நியாயமான சம்பளத்தில், சம்பளம் வாங்கும் காரியதரிசி ஒருவரை நியமிக்கக் கமிட்டிக்கு அதிகாரம் இருக்க வேண்டும்.

7. காங்கிரஸ் நலனில் அக்கறை கொள்ளும் ஓர் ஐரோப்பியரை உப தலைவராக இருக்கும்படி கௌரவக் காரியதரிசி, தாம் விரும்பினால் அழைப்பார்.

8. கௌரவக்காரியதரிசி விரும்பினால், காங்கிரஸ் நூல் நிலையத்துக்குக் காங்கிரஸ் நிதியிலிருந்து செய்திப் பத்திரிகைகளுக்குச் சந்தா கட்டுவார்; புத்தகங்கள் வாங்குவார்.

9. ஒரு செக்கில் தாம் மட்டும் கையெழுத்திட் டிருக்கிறாரா, அல்லது மற்றொருவருடைய கையெழுத்துடன் கூட்டாகக் கையெழுத்திட் டிருக்கிறாரா என்பதைக் கௌரவக் காரியதரிசி கணக்குப் புத்தகத்தில் பதிவு செய்வார்

**கமிட்டி நிறைவேற்றிய விதிகள் :**

1. ஒவ்வொரு கூட்டத்துக்கும் (கமிட்டியின்) தலைவர் தலைமை வகிப்பார். அவர் வராதபோது கமிட்டியின் முதலாவது அங்கத்தினரும், அவரும் வராதபோது இரண்டாவது அங்கத்தினரும், அப்படியே ஒவ்வோர் அங்கத்தினரும் தலைமை வகிப்பார்கள்.

2. ஒரு கூட்டத்தின் தொடக்கத்தில் கௌரவக் காரியதரிசி முந்திய கூட்டத்தின் நடவடிக்கைகளை வாசிப்பார்; அதன்பிறகு, தலைவர் அதில் கையெழுத்திடுவார்.

3. காரியதரிசிக்கு முன் கூட்டி நோட்டீஸ் கொடுக்கப்படாத எந்த ஒரு யோசனையையும், அல்லது ஒரு தீர்மானத்தையும் கமிட்டி அங்கீகரிக்காமல் இருக்கலாம்.

4 கமிட்டியோ, காங்கிரஸோ பெற்றுக்கொண்ட அல்லது செலவழித்த பணத்துக்கு விவரமான கணக்கைக் காரியதரிசி வாசிப்பார்.

5. கமிட்டி அங்கத்தினர் ஒருவரால் கொண்டு வரப்பட்டு, மற்றோர் அங்கத்தினரால் ஆமோதிக்கப்பட்டாலொழிய ஒரு தீர்மானத்தைக் கமிட்டி கவனிக்காமல் இருக்கலாம்.

6. தலைவரும், காரியதரிசியும் அந்தப் பதவிகளை வகிப்பதன் காரணமாகக் கமிட்டி அங்கத்தினர்களாகக் கருதப்படுவார்கள். இரு சார்பிலும் சம எண்ணிக்கையில் வோட்டு அளிக்கப்பட் டிருந்தால், தலைவர் தமது விசேஷ வோட்டை அளிப்பார்.

7. கூட்டத்தில் பேசும்போது ஒவ்வோர் அங்கத்தினரும் தலைவரைப் பார்த்துப் பேசவேண்டும்.

8. ஒவ்வொரு கமிட்டி அங்கத்தினரும் கமிட்டிக் கூட்டத்தில் மற்றோர் அங்கத்தினரைக் குறிப்பிடும்போது 'மிஸ்டர்' என்ற வார்த்தையை உபயோகிக்க வேண்டும்.

9. குஜராத்தி, தமிழ், ஹிந்துஸ்தானி, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் ஒன்றிலோ, அல்லது அனைத்திலுமோ கமிட்டிக் கூட்டத்தின் நடவடிக்கைகள் நடைபெற வேண்டும்.

10. அவசியம் என்று கருதப்பட்டால், ஓர் அங்கத்தினரை மற்றோர் அங்கத்தினரின் பேச்சை மொழி பெயர்க்கும்படி தலைவர் கட்டளையிடுவார்.

11. ஒவ்வொரு தீர்மானமும் பெரும்பான்மை வோட்டுக்களால் நிறைவேற்றப்படும்.

12. காங்கிரஸிடம் குறைந்த பட்சம் 50 பவுன் இருக்கும் பொழுது, கௌரவக் காரியதரிசி அந்தத் தொகையைத் தாம் விரும்பும் எந்தப் பாங்கிலும் நேட்டால் இந்தியர் காங்கிரஸின் பெயரால் டிபாசிட் செய்யவேண்டும்.

13. பாங்கில் டிபாசிட் செய்யப்படாத எந்தத் தொகைக்கும் கௌரவக் காரிய தரிசி பொறுப்பேற்க வேண்டும்.

14. 5 பவுனுக்கு மேற்பட்ட எந்தச் சில்லறைச் செலவுக்கும் கமிட்டியின் அதிகாரத்தை முதலில் பெறவேண்டும். மேற்கண்ட தொகைக்கு அதிகமாகத் தலைவரோ, காரியதரிசியோ கமிட்டியின் உத்தரவும் அங்கீகாரமும் இல்லாமல் செலவழித்திருந்தால், அதை அவர் தமது சொந்தப் பொறுப்பில் செலவழித்ததாகக் கருதப்படும். 5 பவுன் வரையிலும் கௌரவக் காரியதரிசி செக்குகளில் கையெழுத்திடுவார். அதற்கு மேற்பட்ட தொகைக்கு கீழ்க் கண்ட அங்கத்தினர்களில் யாராவது ஒருவருடன் சேர்ந்து அவர் கையெழுத்திட வேண்டும். அந்த அங்கத்தினர்கள்: ஸ்ரீமான்கள் அப்துல்லா ஹாஜி ஆதம், மூஸா ஹாஜி காஸிம், அப்துல்காதர், குழந்தைவேலுப் பிள்ளை, பி. தாவ்ஜி முகம்மது, ஹுஸேன் காஸிம்.

15. ஒரு கூட்டம் நடவடிக்கையில் ஈடுபடுவதற்குத் தலைவர், காரிய தரிசி ஆகியோருடன் குறைந்த பட்சம் பத்து அங்கத்தினர்கள் அதற்கு வந்திருக்க வேண்டும்.

16. கூட்டம் நடைபெறுவதற்குக் குறைந்தபட்சம் இரண்டு நாள் முன்னதாகக் கௌரவக் காரியதரிசி அறிவிப்புக் கொடுக்க வேண்டும்.

17. எழுத்துமூலமான ஓர் அறிவிப்பு தபால் மூலமோ ஆள் மூலமோ அனுப்பி வைக்கப்பட்டால் 16-வது விதி அனுசரிக்கப் பட்டிருப்பதாகக் கருதப்படும்.

18. தொடர்ந்து ஆறு கூட்டங்களுக்கு வராத எந்தக் கமிட்டி அங்கத்தினரின் பெயரும் ஜாபிதாவிலிருந்து எடுக்கப்பட்டுவிடும்; (அதற்கு முன் பெயரை எடுக்கும் உத்தேசம் அறிவிக்கப்படும்). ஒரு கூட்டத்திற்கு ஒரு அங்கத்தினர் வரவில்லை என்றால், அவர் அடுத்த கூட்டத்தில் தாம் முந்திய கூட்டத்திற்கு வராததற்குக் காரணம் காட்டவேண்டும்.

19. நியாயமான காரணம் காட்டாமல், தொடர்ந்து மூன்று மாதங்களுக்குச் சந்தா கொடுக்காத எந்த அங்கத்தினரும் தமது அங்கத்தினர் பதவியை இழந்துவிடுவார்.

20. எந்தக் கமிட்டிக் கூட்டத்திலும் புகைபிடிப்பது அனுமதிக்கப்பட மாட்டாது.

21. இரண்டு அங்கத்தினர்கள் ஏககாலத்தில் பேசுவதற்கு எழுந்து நின்றால், யார் முதலில் பேசவேண்டும் என்பதைத் தலைவர் தீர்மானிப்பார்.

22. போதிய எண்ணிக்கையுள்ள அங்கத்தினர்கள் வந்திருந்தால், குறிப்பிட்ட நேரத்தில் கூட்டம் ஆரம்பம் ஆகிவிடும். ஆனாலும், குறிப்பிட்ட நேரத்திலோ, அல்லது அதற்குப் பிறகு அரை மணி நேரத்துக்குள்ளாகவோ போதிய எண்ணிக்கைக்குக் குறைவாக இருந்தால், கூட்டம் யாதொரு நடவடிக்கையிலும் ஈடுபடாமல் முடிந்துவிடும்.

23. ஹாலையும், நூல் நிலையத்தையும் நேட்டால் இந்தியர் சங்கம் யாதொரு கட்டணமும் செலுத்தாமல் உபயோகித்துக் கொள்ளலாம். அதற்குப் பதிலாக அவர்கள் எழுத்துவேலை முதலியன செய்வதைப் போன்ற நியாயமான சேவைகளைச் செய்யவேண்டும்.

24. காங்கிரஸின் எல்லா அங்கத்தினர்களும் காங்கிரஸ் நூல் நிலையத்தை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

25. கமிட்டி அங்கத்தினர்கள் அடைப்பான ஓர் இடத்திலும், பார்வையாளர்கள் வெளியிலும் உட்கார வேண்டும். கூட்ட நடவடிக்கைகளில் பார்வையாளர்கள் எவ்விதப் பங்கும் எடுத்துக்கொள்ளக் கூடாது. அவர்கள் கூப்பாடு போடுவது போன்ற ஏதாவது இடைஞ்சலை உண்டு பண்ணினால், ஹாலிலிருந்து அவர்களை வெளியேற்றும்படி நேரிடும்.

26. இந்த விதிகளை எதிர்காலத்தில் திருத்தம் செய்யக் கமிட்டிக்கு அதிகாரம் உண்டு.

(டைப் அடிக்கப்பட்ட ஒரு பிரதியின் போட்டோவிலிருந்து எடுத்துப் பிரசுரிக்கப் பெற்ற ஆங்கில மூலத்தின் மொழி பெயர்ப்பு இது. காந்திஜி, தம் கைப்பட எழுதிய பிரதியின் போட்டோப் பிரதியும் இப்போது இருக்கிறது.)

## 6

# நேட்டால் இந்தியர் காங்கிரசின் முதலாவது ஆண்டு அறிக்கை

[காந்திஜியால் எழுதப்பட்டதன் தமிழாக்கம்]

ஆகஸ்டு, 1895,

## அதன் தோற்றம்

**1894**-ஆம் வருடம் ஜூலை மாதத்தில் நேட்டால் சர்க்கார், வாக்குரிமைச் சட்டத் திருத்த மசோதா என்னும் ஒரு மசோதாவைச் சட்டசபையில் கொண்டுவந்தது. அது காலனியில் வாழும் இந்தியர்களின் ஜீவிதத்தையே பயமுறுத்தியது. இதைக் கண்டறிந்து மசோதாவை நிறைவேற்ற விடாமல் தடுக்க என்ன முயற்சிகளை எடுக்கவேண்டும் என்பதுபற்றி ஆராய ஸ்ரீமான்கள் தாதா அப்துல்லா அண்டு கோ கட்டடத்தில் கூட்டங்கள் நடத்தப்பட்டன. இரு சபைகளுக்கும் மகஜர்கள் அனுப்பப்பட்டன. டர்பனிலிருந்து பி. எம். பர்க்குக்குச் சென்ற ஒரு பிரதிநிதி, அச்சபைகளின் அங்கத்தினர்களைப் பேட்டிகண்டார். ஆனாலும் மசோதா இரு சபைகளிலும் நிறைவேறிவிட்டது. கிளர்ச்சியின் பயனாக, இந்தியர்கள் விஷயத்தில், காலனியில் முதலாவது பொறுப்பாட்சிச் சர்க்காருடைய பிற்போக்குத்தனமான சட்டசபை நடவடிக்கையைச் சமாளிக்கவும் இந்தியர்களின் நலன்களைப் பாதுகாக்கவும் கூடிய ஒரு நிரந்தர ஸ்தாபனத்தைத் தோற்றுவிக்க வேண்டிய அவசியத்தை இந்தியர்கள் உணர்ந்தார்கள்.

ஸ்ரீமான்கள் தாதா அப்துல்லா கம்பெனியாரின் கட்டடத்தில் சில பூர்வாங்கக் கூட்டங்கள் நடந்தபிறகு, ஆகஸ்டு 22-ஆம் தேதியன்று மிகுந்த உற்சாகத்தினிடையே நேட்டால் இந்தியர் காங்கிரஸ் சம்பிரதாய பூர்வமாகத்

தோற்றுவிக்கப்பட்டது. இந்திய சமூகத்தின் பிரதானஸ்தர்கள் அனைவரும் காங்கிரஸில் சேர்ந்தார்கள். முதல் கூட்டத்தில் எழுபத்தாறு அங்கத்தினர்கள் சேர்ந்தார்கள். இந்த ஜாபிதா படிப்படியாக 228-க்கு உயர்ந்தது. ஸ்ரீ அப் துல்லா ஹாஜி ஆதம் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். மற்ற முக்கிய அங்கத்தினர்கள் உபதலைவர்கள் ஆக்கப்பட்டார்கள். ஸ்ரீ எம். கே. காந்தி கௌரவக் காரியதரிசியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஒரு சிறிய கமிட்டியும் அமைக்கப்பட்டது. ஆனால், காங்கிரஸின் மற்ற அங்கத்தினர்கள், காங்கிரஸின் ஆரம்ப நாட்களில் கமிட்டிக் கூட்டங்களுக்கு வரவேண்டுமென்ற விருப்பத்தை தெரிவித்துக்கொண்டதால், கமிட்டி கலைக்கப்பட்டுவிட்டதாக அறிவிக்கப் பட்டு, கூட்டங்களுக்கு எல்லா அங்கத்தினர்களும் அழைக்கப்பட்டார்கள்.

## நிதி நிலைமை

மாதச் சந்தா குறைந்த பட்சம் 5 ஷில்லிங்; அதிகப் பட்சம் எவ்வளவு என்ற வரம்பு இல்லை. இரண்டு அங்கத்தினர்கள் தலா 2 பவுன் வீதம் மாதச் சந்தா செலுத்தினர்கள். ஒருவர் 25 ஷில்லிங்கும், பத்துப்பேர் 20 ஷில்லிங்கும் மூவர் 7 ஷில்லிங்கும் 6 பென்ஸூம், மூவர் 5 ஷில்லிங் 3 பென்ஸூம், இருவர் 5 ஷில்லிங் 1 பென்னியும், நூற்று எண்பத்தேழு பேர் 5 ஷில்லிங்கும் மாதந் தோறும் சந்தாச் செலுத்தினர்கள். அங்கத்தினர்களின் பற்பல பிரிவுகளையும் அவர்கள் செலுத்திய சந்தாக்களையும், செலுத்தப்படாத சந்தாக்களையும் கீழே காணலாம்.

| மாதச் சந்தா அடிப்படையில் பிரிவு | அங்கத்தினரின் எண்ணிக்கை | வருஷத்துக்கு ப—ஷி—பெ | கைக்கு வந்த வரவு பவுன்—ஷி—பெ | செலுத்தப்படாத சந்தாத் தொகை பவுன்—ஷி—பெ |
|---|---|---|---|---|
| 40 ஷில்லிங் | | 48—0—0 | 48—0—0 | இல்லை |
| 25 ,, | 1 | 15—0—0 | 15—0—0 | இல்லை |
| 20 ,, | 10 | 120—0—0 | 93—0—0 | 27—0—0 |
| 10 ,, | 22 | 132—0—0 | 88—0—0 | 43-15—0 |
| 7 ஷி 6 பெ | 3 | 13-10—0 | 8-12—6 | 4-17—6 |
| 5 ஷி 3 பெ | 2 | 6—6—0 | 3—8—3 | 2-17—9 |
| 5 ஷி 1 பெ | 2 | 6—2—0 | 5—6—9 | 0-15—3 |
| 5 ஷி | 187 | 559-10—0 | 273—5—0 | 286-15—0 |
| | | 900—8—0 | 535-17—6 | 366—0—0 |

ப 900—8—0 வருமானம் வந்திருக்க வேண்டியிருக்க, ப 500—17—6 தான், அதாவது 59 சதவிகிதந்தான் காங்கிரஸால் வசூலிக்க முடிந்திருக்கிறது என்பதை மேலே காணலாம். 5 ஷில்லிங் சந்தாதாரர்கள்தான் சந்தாச் செலுத் தாதவர்களில் பெரும்பான்மையோர். இதற்குக் காரணங்கள் பல. சிலர்

* கூட்டுத்தொகைகள் தவருக இருக்கின்றன. சந்தர்ப்பவசமாக நேர்ந்த தவருக இருக்க வேண்டும்.

மிகவும் பிற்பட்ட சமயத்தில் சேர்ந்தவர்கள். அதனால், இயல்பாகவே முழு வருடத்துக்கும் அவர்கள் சந்தாச் செலுத்தவில்லே. அநேகர் இந்தியாவுக்குப் போய்விட்டார்கள். சிலர், சந்தாச் செலுத்த முடியாத அளவுக்கு ஏழைகளாக இருக்கின்றனர். ஆனாலும், மிகப்பெரிய காரணம், சந்தாச் செலுத்த மனம் இல்லாததே என்பதை வருத்தத்துடன் குறிப்பிடவேண்டி யிருக்கிறது. சில ஊழியர்கள் முன்வந்து சிரமம் எடுத்துக்கொண்டால், வசூல் ஆகாத தொகை யில் 30 சத விகிதத்தை வசூலித்துவிடலாம். பென்னெட் வழக்குக்காகப் பொது நன்கொடைகளாகவும், விசேட நன்கொடைகளாகவும் கிடைத்த தொகை, நியூகாஸிலிலும் சார்லஸ் டவுனிலும் வசூலான சந்தாத் தொகை ஆகியவற்றிற்கான பட்டியல் கீழே கொடுக்கப்பட் டிருக்கிறது.*

பட்டியல் முழுவதுமே இங்கே கொடுக்கப்பட்டிருக்கிறது. ஏனென்றால் இந்தப் பெயர்கள் அச்சிட்ட பட்டியல்களில் இடம்பெறவில்லே.

மொத்த வரவுகளாவன :

| | |
|---|---|
| சந்தாக்கள் | ப 535—17—6 |
| நன்கொடைகள் | ப 80—17—0 |
| | ப 616—14—6 |

அச்சிட்ட பட்டியலின் அடிப்படையில் மேலே கணக்குக் காட்டப்பட் டிருக்கிறது.

இப்போது பாங்கியிலுள்ள டிபாசிட்டுகளின் மொத்தத் தொகை ப. 598—19—11. இத்துடன் ரொக்கச் செலவுகளேயும், வேறு கணக்குக்கு மாற்றப்பட்ட தொகைகளேயும் சேர்த்தால் மேற்கண்ட தொகை வரும்.

ரொக்கச் செலவுகள் ப 7—5—1. மாற்றப்பட்ட தொகைகள் மொத்தம் ப 10—10—0. இதில் 8 பவுன் ஸ்ரீ நாயுடுவுக்கு வாடகை. அந்தத் தொகை சந்தாவுக்குப் பதிலாக வரவு வைக்கப்பட்டது. ஸ்ரீ அப்துல் காதருக்குக் கொடுக்க வேண்டிய வாடகை 2 பவுனும், மூஸா எச். ஆதாமுக்குக் கொடுக்க வேண்டிய வாடகை 10 ஷில்லிங்கும் அவர்களுடைய சந்தாக்களுக்காக வரவு வைக்கப்பட்டன.

| | |
|---|---|
| இவ்விதமாக | ப 598—19—11 |
| | ப 7—5—1 |
| | ப 10—10—0 |
| | ப 616—15—0 |

இவ்வாறு, டிபாசிட்டுகளே, அச்சிட்ட பட்டியலுடன் ஒப்பிட்டுப் பார்க் கும்போது, 6 பென்ஸ் வித்தியாசம் வருகிறது. அந்த 6 பென்ஸ் வரவாகி, பட்டி யலில் குறிப்பிடப்படவில்லே. இதற்குக் காரணம், ஒரு அங்கத்தினர் ஒரு தடவை 2 ஷில்லிங் 6 பென்ஸும், மற்றொரு தடவை 3 ஷில்லிங்கும் செலுத்தி யதுதான். 3 ஷில்லிங் கொடுத்ததைப் பட்டியலில் தக்க முறையில் குறிப்பதற் குச் சாத்தியமில்லே.

* பெயர்களும், ஒவ்வொருவரும் கொடுத்த தொகைகளும் அடங்கிய பட்டியல் இங்கே சேர்க்கப்படவில்லே.

இன்றுவரை செக்குகள் மூலம் செலவான மொத்தத் தொகை ப. 151-11-1½. முழு விவரமும் இத்துடன் இணைக்கப்பட்டிருக்கிறது. இது போக இப்போது பாங்கியில் மீதி இருக்கும் தொகை ப. 447-8-9½. கொடுக்கப்பட வேண்டியவற்றை இன்னும் கொடுத்துத் தீர்க்கவில்லை. இமிகிரேஷன் மகஜர் டிக்கெட்டுகள் சம்பந்தமான செலவுகள் கீழே குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

செக்குகள் கொடுப்பது சம்பந்தமான விதிகள் கண்டிப்புடன் அனுசரிக்கப்பட் டிருக்கின்றன. 5 பவுன் வரையிலும் தாமே கையெழுத்திட்டுச் செக் கொடுப்பதற்குக் கௌரவக் காரியதரிசி அதிகாரம் பெற்றிருந்தபோதிலும், அந்த அதிகாரத்தை ஒரு தடவைகூட அவர் உபயோகப்படுத்தவில்லை. செக்குகளில் அவரும், ஸ்ரீ அப்துல் கரீமும், அவர் இல்லாத சமயத்தில் ஸ்ரீ துரைசாமி பிள்ளையும் ஸ்ரீ தௌஜியும், அவர்கள் இல்லாத சமயத்தில் ஸ்ரீ ஹுசேன் காஸிமும் கையெழுத்திட்டிருக்கின்றனர்.

**காங்கிரஸின் நடவடிக்கை: அதன் பணி; அதன் ஊழியர்கள்; அதன் கஷ்டங்கள்:** கடைசியாகச் சொல்ல வேண்டிய விஷயத்தை முதலில் கூறுவோம்: காங்கிரஸ் மிகுந்த கஷ்டங்களை யெல்லாம் கடந்து வந்திருக்கிறது. சந்தா வசூல் செய்வது மகா கஷ்டமாக இருந்தது என்பதை ஆரம்பத்தில் குறிப்பிட்டோம். வசூல் செய்வதற்குப் பற்பல யோசனைகளும் கூறப்பட்டன. ஆனால், எந்த யோசனையும் முழு வெற்றி தரவில்லை. கடைசியில் சில ஊழியர்கள் முன்வந்து பாடுபட்டதன் பலனாக, 448 பவுனாவது இருப்புக் காட்டுவது சாத்தியமாகி யிருக்கிறது. ஸ்ரீ பார்ஸி ருஸ்தம்ஜி, ஸ்ரீ அப்துல் காதர், ஸ்ரீ அப்துல் கரீம், ஸ்ரீ துரைசாமி, ஸ்ரீ தௌஜி, ஸ்ரீ கத்ரதா, ஸ்ரீ ரங்தேரி, ஸ்ரீ ஹுஸேன் காஸிம், ஸ்ரீ பீருன் முகம்மது, ஸ்ரீ ஜி. எச். மியான்கான், ஸ்ரீ அமோத்ஜீவா ஆகியோர் சந்தா வசூல் செய்வதற்கு அவ்வப்போது முயற்சி எடுத்திருக்கிறார்கள். எல்லோரும், அல்லது பெரும்பாலோர் ஒன்றுக்கு மேற்பட்ட தடவைகள் வசூலுக்காக வெளியிடங்களுக்குப் போயிருக்கிறார்கள். ஸ்ரீ அப்துல் காதர் மட்டும் தமது சொந்தச் செலவில் பி. எம். பர்க்குக்குப் போய்ச் சுமார் 50 பவுன் வசூலித்திருக்கிறார். அவர் வசூலித்திராவிட்டால், இந்தத் தொகுதியில் பெரும்பகுதி காங்கிரஸுக்குக் கிடைத்திராமலேயே போயிருக்கக்கூடும். ஸ்ரீ அப்துல் கரீம் தமது சொந்தச் செலவில் வெருலம் வரையிலும் போய்ச் சுமார் 25 பவுன் வசூலித்துக்கொண்டு வந்தார்.

செக்குகளில் கையெழுத்துப்போடுவது சம்பந்தமாகப் பிரதான அங்கத்தினர்களிடையே ஒரு கருத்து வேற்றுமையும் இருந்தது. கௌரவக் காரியதரிசியும், கீழ்க்கண்டவர்களில் ஒருவரும் சேர்ந்து அவற்றில் கூட்டாகக் கையெழுத்திட வேண்டும் என்பது அசல் விதி. அவர்களின் பெயர்கள்: ஸ்ரீ அப்துல்லா எச். ஆதம், ஸ்ரீ மூஸா ஹாஜி காஸிம், ஸ்ரீ பி. தௌஜி முகம்மது, ஸ்ரீ ஹுஸேன் காஸிம், ஸ்ரீ அப்துல் காதர், ஸ்ரீ துரைசாமி பிள்ளை. இரண்டு பேர் மட்டும் கையெழுத்திடுவது போதாது; மேற்கொண்டும் சிலர் கையெழுத்திட வேண்டுமென்று ஒரு யோசனை கூறப்பட்டது. ஒரு சமயத்தில் இந்தக் கருத்து வேற்றுமை காங்கிரசின் ஜீவியத்தையே பயமுறுத்தியது. ஆனால்,

* முழு விவரம் இங்கே சேர்க்கப்பட்டது.

அங்கத்தினர்களின் நல்லுணர்வும், இப்படிப்பட்ட ஒரு நாசத்தைத் தடுக்க வேண்டுமென்ற ஆவலும் சேர்ந்து இறுதியில் கருமேகத்தைக் கலைத்தன. மேலே குறிப்பிட்ட மாறுதலுக்கு ஏக மனதாகச் சம்மதம் அளிக்கப்பட்டது.

டர்பனில் காங்கிரஸ் போதிய அளவுக்கு ஸ்தாபிதமானதும் ஸ்ரீமான்கள் தௌத் முகம்மது, மூஸா ஹாஜி ஆதம், முகம்மது காஸிம் ஜீவா, ஸ்ரீ பார்ஸி ருஸ்தம்ஜி, ஸ்ரீ பீருன் முகம்மது, கௌரவக் காரியதரிசி ஆகியோர் அங்கத்தினர்கள் சேர்ப்பதற்காகத் தத்தம் சொந்தச் செலவில் பி. எம். பர்க் வரையிலும் சென்றார்கள். அங்கே ஒரு கூட்டம் நடைபெற்றது; சுமார் 48 பேர் அங்கத்தினர்களாகச் சேர்ந்தார்கள். இதே மாதிரி இரண்டாவது கூட்டம் ஒன்று வெருலத்தில் கூட்டப்பெற்றது. அங்கே 37 பேர் சேர்ந்தனர். ஸ்ரீ ஹுஸேன் காஸிம், ஸ்ரீ ஹாஜி, ஸ்ரீ தௌத், ஸ்ரீ மூஸா ஹாஜி காஸிம், ஸ்ரீ பார்ஸி ருஸ்தம்ஜி, கௌரவக் காரியதரிசி ஆகியோர் அங்கே போயிருந்தனர். பி. எம். பர்க்கில் ஸ்ரீமான்கள் அமோத் பாயத்தும், ஹாஜி முகம்மது, கம்ருதீன் ஆகியோரும், வெருலத்தில் ஸ்ரீமான்கள் இப்ராஹிம் மூஸாஜி அமோத், அமோத் மேத்தர், பி. நாயுடு ஆகியோரும் தீவிரமாக உதவி செய்தார்கள்.

ஸ்ரீ அமீருதீன் காங்கிரசின் அங்கத்தினர் அல்ல. என்றாலும், காங்கிரஸுக்குப் பெரிதும் தேவைப்பட்ட பணியைச் செய்திருக்கிறார். குஜராத்தி அறிக்கைக்கு ஸ்ரீ என். டி. ஜோஷி சுத்தமான பிரதி தயாரித்துக் கொடுத்து உதவினார்.

காங்கிரஸின் ஆரம்ப காலத்தில் ஸ்ரீ சோமசுந்தரம் பொதுக்கூட்டங்களில் மொழிபெயர்ப்பாளராக வேலை செய்தும், சுற்றறிக்கைகளை விநியோகித்தும் உதவி புரிந்திருக்கிறார். நியூகாஸிலிலும், சார்ல்ஸ்டவுனிலும்கூட வேலை செய்யப்பட்டிருக்கிறது. இரண்டாவது ஆண்டுக்கு அங்கத்தினர்கள் சந்தாச் செலுத்தியிருக்கிறார்கள்.

ஸ்ரீ முகம்மது சிதத்தும் ஸ்ரீ சுலைமான் இப்ராஹிமும், ஸ்ரீ முகம்மது மீரும் நியூகாஸிலில் அலுப்பு சலிப்பின்றி வேலை செய்திருக்கிறார்கள். அவர்களும் ஸ்ரீ தௌத் அம்லாவும் தங்கள் சொந்தச் செலவில் சார்ல்ஸ்டவுனுக்குப் போயிருக்கிறார்கள். சார்ல்ஸ்டவுன் மக்களிடம் பிரமாதமான வரவேற்பு இருந்தது. ஒரு மணி நேரத்துக்குள், தென்பட்டவர்கள் அனைவருமே அங்கத்தினர்களாகச் சேர்ந்துவிட்டார்கள். ஸ்ரீ டிண்டார், ஸ்ரீ குலாம் ரசூல், ஸ்ரீ வாண்டா ஆகியோர் மிகுந்த உதவி செய்தனர். வாக்குரிமை மகஜர், டிரான்ஸ்வால் மகஜர், இங்கிலாந்து அரசாங்கத்துக்கு அனுப்பிய இமிகிரேஷன் மகஜர் ஆகியவை சம்பந்தமாக இங்கிலாந்திலும் இந்தியாவிலும் உள்ள நண்பர்களுக்குக் கிட்டத்தட்ட 1000 கடிதங்கள் எழுதப்பட்டிருக்கின்றன.

ஒப்பந்தக் காலம் முடிவடைந்தபின் ஒவ்வொரு தொழிலாளிக்கும் 3 பவுன் வரி விதிப்பதற்காகக் கொண்டு வரப்பட்ட இமிகிரேஷன் சட்டம் கடுமையாக எதிர்க்கப்பட்டது. சட்டசபையின் இரு சபைகளுக்கும் மகஜர்கள் அனுப்பப்பட்டன.

டிரான்ஸ்வால் மகஜர் காங்கிரஸின் ஆதரவில் நேரடியாக அனுப்பப்பட்டதல்ல என்றாலும், காங்கிரஸ் பணிபற்றிய அறிக்கையில் அதைக் குறிப்பிடாமல் இருக்க முடியாது.

காங்கிரஸின் குறிக்கோளுக்கு ஏற்ப, இரு சபைகளின் அங்கத்தினர்களுக்கும் ஒரு பகிரங்கக் கடிதம் எழுதப்பட்டுக் காலனியிலும், தென் ஆப்பிரிக்

காவிலும் விரிவாக வினியோகிக்கப்பட்டது. பத்திரிகைகள் அதைப்பற்றி விரிந்த முறையில் குறிப்பிட்டன. அதன் காரணமாக மிகுந்த அனுதாபம் காட்டும் தனிப்பட்ட கடிதங்கள் வந்தன. நேட்டாலில் உள்ள இந்தியர்கள் நிலை பற்றிச் செய்திப் பத்திரிகைகளில் அவ்வப்போது கடிதங்களும் வெளியாயின. தபால் ஆபீஸில் ஐரோப்பியர்களுக்கும், சுதேசிகளுக்கும், ஆசியாக்காரர்களுக்கும் 'தனித்தனி வாசல்கள் வைப்பது' சம்பந்தமாகச் சர்க்காருடன் காங்கிரஸின் மாஜித் தலைவர் கடிதப் போக்குவரத்து நடத்தியிருக்கிறார்.

பலன், முழுக்கவே திருப்தியற்றதாக இருந்துவிடவில்லை. மூன்று சமூகத்தாருக்கும் இப்போது தனித்தனி வாசல்கள் வைக்கப்படும். ஒப்பந்தத் தொழிலாளிகளான இந்தியர்கள் இடையிலும் வேலை செய்யப்பட்டிருக்கிறது. தம்முடைய எஜமானரால் மோசமாக நடத்தப்பெற்ற பாலசுந்தரம், ஸ்ரீ ஸ்கியூவிடம் மாற்றப்பட்டிருக்கிறார்.

மொகரம் திருவிழா சம்பந்தமாகவும், கரிக்குப் பதிலாகக் கட்டை கொடுப்பது சம்பந்தமாகவும் ரெயில்வே இலாகாவில் உள்ள ஒப்பந்தத் தொழிலாளிகள் சார்பில் காங்கிரஸ் தலையிட்டது. விசாரித்த மாஜிஸ்திரேட் மிகுந்த அனுதாபம் காட்டினார்.

துவோஹை வழக்கும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். ஒரு பொது இடத்தில் இஸ்மாயில் அமோத்தின் தொப்பியைத் தூக்கி எறிந்தும் வேறு விதமாகவும் மோசமாக நடத்தினார்கள். அவருக்குச் சாதகமாகக் கோர்ட்டில் தீர்ப்பாகியிருக்கிறது.

பிரபலமான பென்னெட் வழக்கினால் காங்கிரஸுக்கு மிகுந்த செலவாயிற்று. ஆனால், பணம் வீண்விரயம் ஆக்கப்படவில்லை என்றே கருதப்படுகிறது. மாஜிஸ்திரேட்டுக்கு விரோதமான தீர்ப்பை நாம் பெறமுடியாது என்பது முன் கூட்டியே தெரிந்த விஷயந்தான். ஸ்ரீ மோர்க்கம் மாறுபட்ட அபிப்பிராயம் தெரிவித்திருந்தும் நாம் கோர்ட்டுக்குப் போனோம். அது நிலைமையை மேலும் அதிகமாகத் தெளிவாக்கியிருந்தது. எதிர்காலத்தில் இப்படிப்பட்ட வழக்கு நேரும்போது நாம் என்ன செய்யவேண்டும் என்பதைத் திட்டவட்டமாகத் தெரிந்துகொண்டிருக்கிறோம்.

இந்தியர்களின் கோரிக்கைக்குக் காலனியிலுள்ள ஐரோப்பியர்களிடம் அதிக ஆதரவு கிடைக்கவில்லை. அதே சமயத்தில் இந்தியாவிலும் இங்கிலாந்திலும் மிகுந்த அனுதாபம் காட்டப்பெற்றுள்ளது. லண்டன் ''டைம்ஸ்" பத்திரிகையும், ''டைம்ஸ் ஆப் இந்தியா''வும் தென் ஆப்பிரிக்க இந்தியர்களை ஆதரித்துள்ளன. தேசீயக் காங்கிரஸின் பிரிட்டிஷ் கமிட்டி மிகுந்த விழிப்புடன் இருந்து வந்திருக்கிறது. ஸர் ஹன்டர், எம். ஏ. வெப், கனம் பிரோஸ்ஷா மேத்தா, கனம் பஸல்பாய் விஸ்ராம் முதலியோரிடமிருந்து அனுதாபக் கடிதங்கள் வந்துள்ளன. மற்ற இந்திய, ஐரோப்பியப் பத்திரிகைகளும் நம்முடைய புகார்களைப்பற்றி நமக்குச் சாதகமான முறையில் அபிப்பிராயம் தெரிவித்துள்ளன.

காங்கிரஸ் கூட்டங்களுக்கு வந்த ஒரே ஐரோப்பியர் ஸ்ரீ ஆஸ்கியூதான். காங்கிரஸ் இன்னும் தன்னை உத்தியோக பூர்வமாகப் பொது மக்களுக்கு அறிவித்துக் கொள்ளவில்லை. ஏனென்றால், நிரந்தரமாக இயங்க முடியும் என்ற

நிச்சயம் ஏற்பட்டாலொழிய அவ்வாறு செய்வது உசிதமல்ல என்று கருதப்பட்டது. அது மிகவும் அமைதியாகப் பணியாற்றியுள்ளது.

காங்கிரஸின் பணியைப் பற்றிய இந்த அறிக்கை, மாஜி தலைவர் ஸ்ரீ அப்துல்லா ஹாஜி ஆதம் இந்தியாவுக்குப் புறப்பட்டபோது பாராட்டுப் பத்திரம் வாசித்தளிக்கப் பெற்றது என்று குறிப்பிடுவதோடு முற்றுப் பெறுவது பொருத்தமாகும்.

### காங்கிரஸுக்கு நன்கொடைகள்

நன்கொடைகள் பல; அவற்றின் வகைகளும் பல. இந்த விஷயத்தில் முதல்வராக இருப்பவர் ஸ்ரீ பார்ஸி ருஸ்தம்ஜி. அவர் காங்கிரஸுக்குக் கொடுத்தவை: மூன்று விளக்குகள், மேஜை விரிப்பு, ஒரு சுவர்க் கடிகாரம், ஒரு கதவுக் கண்ணாடி, மைக்கூடுகள், பேனாக்கள், மை ஒற்றும் காகிதங்கள், பூந்தொட்டி; அத்துடன் வருடம் முழுவதற்கும் எண்ணெய். கூட்டம் நடக்கும் நாட்களில் எல்லாம், மண்டபத்தைக் கூட்டிப் பெருக்கி, விளக்கு ஏற்றுவதற்குக் கொஞ்சங்கூடக் காலக்கிரமம் தவறாமல் தம்முடைய ஆட்களை அனுப்பி வைத்திருக்கிறார். மேலும், அவர் காங்கிரஸுக்கு 4000 சுற்றறிக்கைகளும் கொடுத்து உதவியிருக்கிறார். ஸ்ரீ அப்துல் காதர் அங்கத்தினர்களின் பெயர் ஜாபிதாவை அச்சிட்டுக் கொடுத்திருக்கிறார்.

ஸ்ரீ சி. எம். ஜீவா 2000 சுற்றறிக்கைகளை இனமாக அச்சிட்டுக் கொடுத்தார். அவற்றிற்கு ஸ்ரீ ஹாஜி முகம்மதுவும், ஸ்ரீ ஹுசேன் காஸிமும் காகிதம் கொடுத்தார்கள். ஸ்ரீ அப்துல்லா ஹாஜி ஆதம் ஒரு கம்பளத்தை நன்கொடையாகக் கொடுத்தார். ஸ்ரீ மாணிக்ஜி ஒரு மேஜை கொடுத்தார். ஸ்ரீ பிரக்ஜி பீமாபாய் 1000 கவர்கள் கொடுத்தார்.

கௌரவக் காரியதரிசி, காங்கிரஸ் விதிகளை இந்தியாவில் குஜராத்தியிலும், ஆங்கிலத்திலும் அச்சிட்டுக் கொடுத்திருக்கிறார்; பதினைந்து நாட்களுக்கு ஒரு முறை மாமூலாக அனுப்பும் சுற்றறிக்கைகளுக்கு ஸ்டாம்புகள், காகிதங்கள் முதலியவையும் கொடுத்துள்ளார். அங்கத்தினர் அல்லாத ஸ்ரீ லாரன்ஸ், சுற்றறிக்கைகளை வினியோகிக்கும் வேலையை அமைதியாகவும் உற்சாகமாகவும் செய்து வந்திருக்கிறார்.

### நானாவித விவரங்கள்

காங்கிரஸ் கூட்டங்களுக்கு மிகமிகச் சொற்பமானவர்களே வந்திருக்கிறார்கள். வேதனைப்படக்கூடியவாறு காலம் தவறி வந்திருக்கிறார்கள். காங்கிரஸ் பணியில் தமிழ் அங்கத்தினர்கள் அதிக ஊக்கம் காண்பிக்கவில்லை. அவர்கள் சந்தாக் கொடுப்பதில் காட்டிய குறைபாட்டை, காலம் தவறாமல் ஒவ்வொரு கூட்டத்துக்கும் வருவதன்மூலம் சரி செய்திருக்கலாம். சிறு நன்கொடைகளை வசூலிப்பதற்குச் சௌகரியமாக இருக்கும்பொருட்டு, ஸ்ரீ ஏ. எச். ஆதம், ஸ்ரீ அப்துல் காதர், ஸ்ரீ டி. பிள்ளை, கௌரவக் காரியதரிசி ஆகியோருடைய கையெழுத்தோடு கூடிய ஒரு ஷில்லிங், இரண்டு ஷில்லிங், இரண்டரை ஷில்லிங் டிக்கட்டுகள் தயாரித்து வெளியிடப்பட்டுள்ளன. இந்தத் திட்டத்தின் பலாபலன்களைக் குறித்து இப்போது எதுவும் கூறுவதற்கு இயலாது.

தீவிரமான ஊழியர்களை ஊக்குவிக்கும் பொருட்டு அவர்களுக்குப் பதக்கங்கள் கொடுக்க வேண்டும் என்று ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. அவை இன்னும் தயாரிக்கப்படவில்லை.

### மரணமும் பயணமும்

ஸ்ரீ டின்ஷா சில மாதங்களுக்குமுன் காலமானதைத் துக்கத்துடன் குறிப்பிடவேண்டும்.

சுமார் 10 அங்கத்தினர்கள் இந்தியாவுக்குச் சென்றிருக்கிருர்கள். அவர்களில் மாஜித் தலைவரோடு, ஸ்ரீ ஹாஜி முகம்மது, ஸ்ரீ ஹாஜி சுலைமான், ஸ்ரீ ஹாஜி தாதா, ஸ்ரீ மாணிக்ஜி, ஸ்ரீ முத்துகிருஷ்ண ஆகியவர்களையும் குறிப்பிடலாம். ஸ்ரீ ரஞ்சித்சிங் ராஜிநாமாச் செய்துவிட்டார்.

சுமார் 20 அங்கத்தினர்கள் ஒருபோதும் சந்தாச் செலுத்தவே இல்லை. அவர்கள் காங்கிரஸில் ஒருபோதும் சேரவில்லை என்றே கருதிவிடலாம்.

### யோசனைகள்

மிக முக்கியமாகக் கூறவேண்டிய யோசனை என்னவென்ருல், சந்தாத் தொகை எவ்வளவாக இருந்தாலும் அதை வருடம் முழுவதற்கும் சேர்த்து முன் கூட்டியே செலுத்திவிட வேண்டும்.

காங்கிரஸ் அனுமதித்திருந்தபோதிலும் சில செலவுகள் செய்யப்படவில்லை என்பதைக் குறிப்பிடவேண்டும். சிக்கனம் கண்டிப்பாக அனுசரிக்கப்பட்டு வந்திருக்கிறது. காங்கிரஸை ஒரு ஸ்திரமான அஸ்திவாரத்தில் நிறுவுவதற்குக் குறைந்த பட்சம் 2000 பவுனுவது தேவை.

(சாபர்மதி சங்கிரகாலயத்திலுள்ள ஒரு பிரதியிலிருந்து)

# 7

# இந்தியாவில் காந்திஜியின் முதல் சிறைவாச அனுபவம்

[மகாத்மா இந்தியாவில் முதல் முதலாக சிறைவாசத் தண்டனை விதிக்கப்பட்டு, எராவ்டாச் சிறைச்சாலையில் இருந்தபோது, 14—4—1922-இல் ஸ்ரீ ஹக்கிம் அஜ்மல்கானுக்கு எழுதிய கடிதத்தின் மொழிபெயர்ப்பு.]

“இந்தச் சிறைச்சாலையில் வாழ்க்கை நல்லவிதமாக இராது என்று பழைய கைதிகளிடமிருந்து நான் கேள்விப்பட்டிருந்தபடியால், எல்லாவிதக் கஷ்டங்களுக்கும் நான் தயாராக இருந்தேன். நான் நூற்பதை அவர்கள் தடை செய்தால், உணவு உட்கொள்ள மறுத்துவிடுவேன் என்று பாங்கரிடம் முன்னுல் சொல்லியிருந்தேன். ஏனென்ருல், நோயிலோ, பிரயாணத்திலோ இருந்தாலொழியத் தினந்தோறும் குறைந்தது ஒரு மணி நேரமாவது நூற்பது என்று ஹிந்து புதுவருட தினத்தன்று நான் ஒரு பிரதிக்ஞை எடுத்துக் கொண்டேன். நான் உண்ணுவிரதத்தை மேற்கொள்ளும்படி நேர்ந்தால், அவர் பரபரப்பு அடைய வேண்டியதில்லை என்றும், ஒருமைப்பாட்டைக் காட்டுவதாகத் தவருக எண்ணிக்கொண்டு என்னுடைய உதாரணத்தைப் பின்பற்ற வேண்டியதில்லை என்றும் அவரிடம் கூறினேன். இந்த விவகாரத்தைப்பற்றி நான் எப்படி அபிப்பிராயம் கொள்ளுகிறேன் என்பதை இவ்விதமாக அறிந்திருந்தார்.

“இந்த நிலையில், நாங்கள் சிறைக்குள் நுழைந்தபோது, எங்களுடைய ராட்டையையும், பழக்கூடையையும் அங்கேயே வைத்துவிடவேண்டும் என்று டைரக்டர் அறிவித்தபோது நாங்கள் ஆச்சரியப்படவில்லை. சாபர்மதிச்சிறையில்

இருந்தபோது தினந்தோறும் நூல் நூற்பதற்கு, எங்களை அனுமதித்ததாகவும், என்னுடைய பிரதிக்ஞையின்படி நான் நூற்றே ஆகவேண்டுமென்றும் அவரிடம் அழுத்தமாகச் சொன்னேன். அதற்கு, எராவ்டா, சாபர்மதியல்ல என்ற பதில் கிடைத்தது.

"உடல் நிலை காரணமாகச் சாபர்மதிச் சிறையில் நாங்கள் திறந்த வெளியில் தூங்குவதற்கு அனுமதிக்கப்பட்டதாகவும் சிறைச்சாலை டைரக்டரிடம் கூறினேன். ஆனால், இந்தச் சலுகையையும் நாங்கள் இங்கே எதிர்பார்ப்பதற்கு இல்லாமல் இருந்தது.

"எங்கள் மனத்தில் பட்ட முதல் அபிப்பிராயமே இவ்விதமாகச் சாதகமில்லாமல் இருந்தது. ஆனால், இதற்காக நான் என்னைக் கஷ்டப்படுத்திக் கொள்ளவில்லை. மேலும், கடந்த இரண்டு நாட்களாக நான் பட்டினி கிடந்துவிட்டது, இதனால் பாதிக்கப்படாமல் தடுத்தது. பாங்கருக்கு ஒவ்வொன்றும் மிகுந்த கஷ்டமாக இருந்தது. இரவு நேரங்களில் அவருக்குப் பயங்கரத் தோற்றங்கள் தென்படும். அதனால் இரவில் தனியாக இருக்க அவர் விரும்பவில்லை. அதுவும் தவிர, பாங்கருடைய வாழ்க்கையில் இதுதான் வேதனை தரும் முதல் அனுபவமாகும். நானோ, சிறைக் கூண்டில் இருந்து பழக்கப்பட்டவன்.

"அடுத்த நாள் காலையில், நாங்கள் எப்படி இருக்கிறோம் என்பதை விசாரிக்க டைரக்டர் வந்தார். அவரைப்பற்றி முதலில் கொண்ட அபிப்பிராயம் தவறானது என்பதைக் கண்டறிந்தேன். முந்திய நாள் இரவு அவர் ஒரு மாதிரி ஆத்திரத்தோடு இருந்தார். குறித்த நேரத்தில் நாங்கள் வந்து சேரவில்லை. தவிரவும், அவருக்கு அசாதாரணமாகத் தோன்றியிருக்கக் கூடிய என் வேண்டுகோள், அவர் எதிர்பார்க்காத ஒன்றாக இருந்தது. நான் ராட்டையை வைத்துக்கொள்ள விரும்புவது ஒரு வெறியல்ல, ஆனால் அது தார்மிகமான தேவை என்பதை அவர் இப்போது புரிந்து கொண்டார். எங்களோடு சம்பாஷணை செய்ததிலிருந்து, உண்ணாவிரதத்தைப்பற்றிய பிரச்னையே கிடையாது என்பதையும் அவர் கண்டறிந்தபோது, நாங்கள் இருவரும் ராட்டைகளை வைத்துக்கொள்ள அனுமதிக்க வேண்டுமென்று உத்தரவிட்டார். மேலும், நாங்கள் கேட்ட உணவு, எங்களுக்கு அவசியமானது என்பதற்கும் அவர் எதிரிடையாக நடந்துகொள்ளவில்லை. நான் கவனித்த வரையிலும், இந்தச் சிறையில் சரீரத் தேவைகள் நன்றாகவே கவனிக்கப்படுகின்றன. சூப்பரின்டெண்டெண்டும், தலைமை வார்டரும் சமயோசித புத்தியும், நட்புறவும் உடையவர்களாக இருக்கக் கண்டேன். ஆரம்ப நாட்கள் பொருட்படுத்தக் கூடியவையல்ல. இந்த இரண்டு அதிகாரிகளுடனும் எனக்குள்ள உறவு, ஒரு கைதிக்கும் வார்டர்களுக்கும் இடையே எவ்வளவு சாத்தியமோ, அவ்வளவு சுமுகமாக இருக்கிறது.

"ஆனாலும், நம்முடைய சிறைச்சாலை முறை அநேகமாக, அல்லது அறவே மனிதத் தன்மையில்லாமல் இருக்கிறது என்பதைத் தெள்ளத் தெளிவாகக் காண்கிறேன். என்னை ஒரு மாதிரியும், மற்றக் கைதிகளை ஒரு மாதிரியும் நடத்தவில்லை என்று சூப்பரின்டெண்டெண்ட் சொல்லுகிறார். அப்படியானால் கைதிகளின் சரீரத் தேவைகள் யாவும் பூர்த்தி செய்யப்படுகின்றன. ஆனால், மனிதத் தேவைகளைப்பற்றிச் சிந்தனையே இல்லை. சிறைச்சாலைச் சட்டங்கள் இதற்கு ஏற்றவாறு வகுக்கப்படவில்லை.

"உதாரணமாக, சிறைக் கமிட்டியின் மனப்போக்கிலிருந்தே இதைக் கண்டுகொள்ளலாம். அந்தக் கமிட்டியில் ஒரு நிர்வாக அதிகாரியும்,

பாதிரியாரும், மற்றும் சிலரும் இருக்கிருர்கள். நாங்கள் இங்கே வந்து சேர்ந்த பின், காலையில் அந்தக் கமிட்டி கூடும்படி நேர்ந்தது. அவர்கள் எங்களிடம் வந்து எங்கள் விருப்பங்கள் என்ன என்று கேட்டனர். பாங்கர் பயத்தின் காரணமாகக் கஷ்டப்படுகிருர் என்றும், அதனல் அவர் என்னுடைய அறையில் கதவைத் திறந்து வைத்துக்கொண்டு தூங்க வேண்டுமென்றும் அவர்களிடம் சொன்னேன். இந்த வேண்டுகோளைக் கொஞ்சங்கூட உணர்ச்சியின்றி எவ்வளவு பராமுகத்துடன் அவர்கள் அலட்சியம் செய்தார்கள் என்பதை என்னல் வருணிக்க இயலாது. அந்தக் கனவான்கள் போகும்போது, ''சுத்த அபத்தம்!'' என்று அவர்களில் ஒருவர் கேவலமாகச் சொன்னதைக் கேட்டேன். பாங்கரைப் பற்றியும் அவருடைய வாழ்க்கை அந்தஸ்தைப்பற்றியும், அவர் கற்ற கல்வியைப் பற்றியும் அவர்களுக்கு என்ன தெரியும்? நான் இவ்வாறு கேட்டுக்கொள்ளக் காரணமாக இருந்ததைக் கண்டறிவதற்கு அவர்கள் பாங்கரைப் பார்க்கக்கூடப் போகவில்லை. என் வேண்டுகோள் மிகவும் நியாயமானதாகவே எனக்குத் தோன்றியது. பாங்கருக்கு நல்ல சாப்பாட்டைவிட நிம்மதியான நித்திரை உண்மையிலேயே அதிக முக்கியமானதாக இருந்தது.

''இந்தச் சம்பாஷணை நடந்து ஒரு மணி நேரம் ஆனபிறகு, பாங்கரிடம் ஒரு வார்டர் சென்று, அவரை மற்ருெரு பகுதிக்கு மாற்றப் போவதாகத் தெரிவித்தார். தன் ஒரே குழந்தையைப் பறிகொடுத்த தாயைப்போல நான் துன்புற்றேன். பாங்கர் கைது செய்யப்பட்டு என்னேடு தண்டிக்கப்பட்டது சந்தோஷப்படத்தக்க விஷயமாகவே எனக்குத் தோன்றியது. நாங்கள் சாபர்மதிச் சிறைச்சாலையில் இருந்தபோது, பாங்கரை என்னேடு இருக்கும்படி விட்டால் அதை ஒரு விசேடச் சலுகையாகக் கருதுவேன் என்றும், நாங்கள் பரஸ்பரம் ஒருவருக்கு ஒருவர் உதவியாக இருப்போம் என்றும் நான் அதிகாரிகளுக்குத் தெரிவித்தேன். நான் அவருக்காக கீதை வாசித்தேன். அவர் என்னுடைய பலவீனமான உடம்பைக் கவனித்துக்கொண்டார். ஒரு சில மாதங்களுக்கு முன்புதான் பாங்கர் தம்முடைய தாயாரை இழந்தார். அந்த அம்மையார் காலமாவதற்குச் சில தினங்களுக்கு முன், தம்முடைய புதல்வர் எனது பாதுகாப்பில் இருப்பதால், மரணம் தமக்குக் கஷ்டமானதாக இராது என்று என்னிடம் சொன்னர். அவருடைய புதல்வரைப் பாதுகாக்க வேண்டிய கட்டத்தில் நான் எப்படி முழுக்க முழுக்கச் சக்தியற்றவனக இருந்தேன் என்பதை மேன்மைக் குணம் படைத்த அந்த மாதரசியால் கற்பனை பண்ணிப் பார்க்க முடியவில்லை. பாங்கர் என்னை விட்டுச் சென்றபோது, அவரை ஆண்டவன் பொறுப்பில் ஒப்படைத்துவிட்டு, கடவுள் தம் புதல்வர்களைக் காப்பாற்றுவார் என்று அவர் உள்ளத்தில் நம்பிக்கை ஏற்படும்படி செய்தேன்.

''அதன் பிறகு, அவர் தினந்தோறும் என்னிடம் வந்து எனக்குப் பஞ்சைப் பட்டைபோடுவதைக் கற்பிப்பதற்கு அனுமதி பெற்ருர். பட்டைபோடுவதில் அவர் மிகுந்த தேர்ச்சி பெற்றவர். நாங்கள் பட்டைபோடும்போது ஒரு வார்டர் வந்து அங்கே இருப்பார். எங்கள் வேலை சம்பந்தப்பட்ட அவசியமான விஷயங்களைத் தவிர வேறு எதையும் நாங்கள் பேசாமல் இருக்கும்படி பார்த்துக்கொள்ளுவதே அவருடைய வேலை. நாங்கள் இருவரும் ஒன்ருக இருக்கும் ஒரு சில நிமிஷ நேரத்தில் நாங்கள் கீதை படிக்க அனுமதிக்க வேண்டுமென்று இப்போது ஜெனரல் இன்ஸ்பெக்டரையும் சிறைச்சாலை சூப்பரின்டென்டென்டையும் கேட்டுக்கொண் டிருக்கிறேன். என் வேண்டுகோள் பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது.

''ஏழு புத்தகங்களை என்னோடு வைத்துக் கொள்ளுவதற்கு அனுமதி பெறுவதில் நான் என்னுடைய புத்தி சாதுரியத்தை உபயோகிக்க வேண்டியிருக்கிறது. அந்தப் புத்தகங்களாவன : முழுக்க முழுக்கச் சமய சம்பந்தமான ஐந்து புத்தகங்கள், நான் மிகவும் மதிக்கும் ஒரு பழைய அகராதி, மௌலானா அபுல் கலாம் ஆஸாத் எனக்குக் கொடுத்த உருதுப் பாடப் புத்தகம். சிறைச் சாலை நூல் நிலையத்திலிருந்து எடுக்கும் புத்தகங்களை மட்டுமே கைதிகள் படிக்கலாம் என்ற கண்டிப்பான உத்தரவு என் விருப்பத்துக்கு மாறானதாக இருக்கிறது! அதனால் அந்த ஏழு புத்தகங்களையும் நூல் நிலையத்துக்கு அன்பளிப்பாகக் கொடுத்துவிட்டு, பிறகு அவற்றை அதிலிருந்து எடுத்துப் படிக்கலாம் என்று எனக்குக் கூறப்பட்டது. அதற்கு நான் சூப்பரின்டெண்டெண்டிடம் நட்புமுறையில் கூறியதாவது: 'மற்றப் புத்தகங்கள் விஷயத்தில் நான் சந்தோஷமாக இவ்வாறு செய்வேன். ஆனால், இந்தப் புத்தகங்களைக் கேட்பதற்குப் பதிலாக நீங்கள் எனது வலது கையையே கொடுக்கும்படிக் கேட்கலாம். இவை எனக்கு அரிய நூல்களாக இருக்கின்றன. அதற்குக் காரணம், இவற்றில் அடங்கியுள்ள விஷயங்கள்; மற்றொரு காரணம், ஞாபகார்த்த அன்பளிப்புக்கள் என்ற வகையில் இவற்றிற்குள்ள முக்கியத்துவம்.' புத்தகங்களை என்னோடு வைத்துக் கொள்ளும்படி செய்வதற்கு மேலதிகாரிகளைத் தூண்ட சூப்பரின்டெண்டென்ட் என்ன என்ன முறைகளைக் கையாள வேண்டியிருக்கிறதோ, நான் அறியேன்.

''மடக்குக் கத்தியை உபயோகிக்கும் விஷயம் மற்றொரு பிரச்னையை உண்டுபண்ணியது. நான் ரொட்டியை வாட்டிச் சாப்பிடவேண்டுமானால்-வாட்டாமல் அதை என்னால் சாப்பிட முடியாது-அதைச் சிறு சிறு துண்டுகளாக வெட்ட வேண்டும். எலுமிச்சம் பழங்களைப் பிழிவதற்கு அவற்றை நறுக்க வேண்டும். ஆனால், மடக்குக் கத்தி ''மரணத்தை உண்டு பண்ணும் ஆயுத''மாகவும், அது ஒரு கைதியிடம் இருப்பது ஆபத்து என்றும் கருதப்படுகிறது. நான் சூப்பரின்டெண்டென்டிடம், 'ரொட்டியும் எலுமிச்சம் பழங்களும் கொடுப்பதை நிறுத்திவிடுங்கள் அல்லது கத்தி கொடுங்கள்' என்று கூறிவிட்டேன். பெரிய களேபரத்துக்குப் பிறகு, என்னுடைய சொந்தப் பேனாக்கத்தி எனது உபயோகத்துக்குக் கொடுக்கப்பட்டது. ஆனால், அது வார்டரிடந்தான் இருந்து வருகிறது; எனக்குத் தேவைப்படும்போதுதான் அது என்னிடம் கொடுக்கப்படுகிறது. தினந்தோறும் மாலையில் அதைத் தலைமை வார்டரிடம் கொடுத்து விட வேண்டும். காலையில் அதை அவர் கைதி-வார்டரிடம் திரும்பவும் கொடுப்பார்.

''இந்த வர்க்கம் உங்களுக்குப் புதுமையானதாக இருக்கும். கைதி வார்டர்கள் என்பவர்கள் பொதுவாக நீண்டகாலத் தண்டனை விதிக்கப்பட்ட கைதிகளே. நன்னடத்தைக்காக அவர்களுக்கு வார்டரின் யூனிபார உடை கொடுக்கப்படுகிறது. பெரும் பொறுப்பு இல்லாத வேலைகளும் அவர்களிடம் ஒப்படைக்கப்படுகின்றன; வார்டருடைய உடையை அணிந்துகொள்ள அவர்கள் அனுமதிக்கப்படுகிறார்கள். ஆனால், அவர்கள் தொடர்ந்து மேற்பார்வையின் கீழ் இருந்து வரவேண்டும். இந்த வார்டர்களில் ஒருவன் கொலைக்குற்றத்துக்காகத் தண்டிக்கப்பட்டவன். பகல் நேரத்தில் என்னைக் கவனித்துக்கொள்ள வேண்டியது இவன் பொறுப்பு. இரவில் இவனுக்கு உதவிசெய்ய ஒருவனை அனுப்புகிறார்கள். அவனுடைய தோற்றம் எனக்கு ஷௌகத் அலியை நினைவூட்டுகிறது. என்னுடைய அறைக் கதவைத் திறந்து வைத்துக்கொள்ளலாம் என்று ஜெனரல் இன்ஸ்பெக்டர் உத்தரவு கொடுத்தார். இங்கே மட்டும்

உதவிக்கு ஒருவன் அனுப்பப்பட்டான். இந்த இரண்டு வார்டர்களுமே கெடுதல் இல்லாத ஆசாமிகள். அவர்கள் எந்த வழியிலும் என் விஷயத்தில் குறுக்கிட்டுக் கஷ்டம் கொடுக்கவில்லை. நான் அவர்களோடு ஒருபோதும் பேச்சு வைத்துக் கொள்ளுவதில்லை. வார்டருடன் அவ்வப்போது சில வார்த்தைகளைப் பரிமாறிக் கொள்ளும்படி நேரும். அவன் பகல் நேரத்தில் என்னுடைய விருப்பங்களையும் தேவைகளையும் கவனிப்பவன். மற்றப்படி அவனோடு பேச்சுத் தொடர்பு எனக்குக் கிடையாது.

"முக்கோண வடிவமாக உள்ள ஒரு பிளாக்கில் இருக்கிறது என்னுடைய அறை. அந்தப் பிளாக்கில் நீளமான பகுதி மேற்கே பார்த்திருக்கிறது. அதில் பதினொரு அறைகள் உள்ளன. இதே பிரிவில் வைக்கப்பட்டுள்ள என்னுடைய சக கைதிகளில் ஒருவர் அராபிய ராஜாங்கக் கைதி. அவர் ஹிந்துஸ்தானி பேசக் கூடியவர் அல்ல. துரதிருஷ்டவசமாக எனக்கு அரபு மொழியில் தேர்ச்சி கிடையாது. எங்களுடைய பேச்செல்லாம் பரஸ்பரம் 'காலை வணக்கம்' சொல்லுவதுடன் நின்றுவிடும். முக்கோண வடிவப் பிளாக்கின் அடிப்பாகத்தில் ஒரு கடினமான சுவர் இருக்கிறது; முக்கோணத்தின் சிறு பகுதியில் ஒரு முள் கம்பி வேலி உண்டு. வேலியுள்ள கதவுக்கு அப்புறத்தில் விசாலமான ஒரு சதுக்கம் இருக்கிறது. முதலில் மையப் பிளாக்கின் உட்புறத்தில் உள்ள முக்கோண வடிவமான இடத்தில், நடுவே சாக் துண்டினல் கோடு போட்டு, நான் அதைத்தாண்டி அப்பால் போகக்கூடாது என்றார்கள். ஆகவே, சுமார் எழுபது அடி நீளமுள்ள இடம் எனக்கு ஒதுக்கப்பட்டது. அதில் நான் தாராளமாக நடமாடலாம். மேற்பார்வையிடும் ஒரு அதிகாரியான ஸ்ரீ கம்பாதா சமீபத்தில் இங்கே பார்வையிட வந்திருந்தபோது, நான் அவரிடம் அந்த வெள்ளைக் கோட்டைச் சுட்டிக்காட்டி, சிறை நிர்வாகத்தின் உத்தரவுகளில் மனித உணர்ச்சி இல்லை என்பதற்கு அது ஓர் அடையாளம் என்று சொன்னேன். இவ்வாறு கட்டுப்பாடு செய்வதை அவர் ஆதரிக்கவில்லை. இது சம்பந்தமாக அவர் புகார் செய்ததன் பலனாக முக்கோணப் பகுதி முழுவதிலும் நான் நடமாட அனுமதிக்கப்பட்டது. அதன் நீளம் சுமார் நூற்று நாற்பது அடி. இப்போது என் ஆசைகளெல்லாம், கதவுக்கு அப்பாலுள்ள சதுக்கத்தில் கவிந்திருக்கின்றன. ஆனால், அங்கே என்னை அனுமதிக்க இயலாதவாறு, ஒருவேளை அது மிக அதிகமான மனிதத் தன்மையுள்ள காரியமாக இருக்கக்கூடும். ஆனால், வெள்ளைக்கோடு அழிக்கப்பட்ட பிறகு, முள் கம்பி வேலியும்கூட கீழே விழும் என்றும், எனக்கு அதிக நடமாட்டச் சுதந்திரம் கிடைக்கும் என்றும் நான் நம்பலாம். அது டைரக்டருக்குக் கொஞ்சம் தர்ம சங்கடமான விஷயந்தான். அதைப்பற்றி யோசிக்க அவருக்கு அவகாசம் தேவைப்படும்.

"நான் தனியாகச் சிறை வைக்கப்பட்டிருக்கிறேன். யாரோடும் நான் பேசக்கூடாது. தார்வாட் கைதிகளில் சிலர் என்னுடன் இதே சிறையில் இருக்கிறார்கள். அவர்கள் யாரும் என் கண்ணுக்குத் தென்படவில்லை. என்னுடைய தொடர்பு அவர்களுக்கு எப்படிக் கெடுதல் செய்ய முடியும் என்று எனக்குத் தெரியவில்லை. அவர்களும் எனக்குத் தீங்கு செய்ய முடியாது. தப்பி ஓடுவதற்கு நாங்கள் ஏற்பாடுகளும் செய்யமாட்டோம்; அந்தக் காரியத்துக்காக நாங்கள் சதி செய்யப் போவதில்லை. மேலும், இப்படிப்பட்ட காரியம் செய்வதால், நாங்கள் சர்க்காருக்கு மிகப் பெரிய உதவியைச் செய்தவர்கள் ஆவோம். அவர்களை என்னுடைய அபாயகரமான கருத்துக்கள் தொற்றிவிடாமல் பாதுகாப்பதற்காக என்னைத் தனியே பிரித்து வைக்கிறார்கள்

என்ருல், அது காலம் கடந்த செயலாகும். ஏற்கனவே அவர்களை என் கருத்துக்கள் தொற்றிவிட்டன. இங்கே நான் ஒரே காரியத்தை மட்டுமே செய்ய முடியும். அதாவது, ராட்டை விஷயத்தில் அவர்கள் இன்னும் அதிக உற்சாகம் கொள்ளும்படி செய்திருப்பேன்.

"என்னைத் தனியே பிரித்து வைத்திருப்பதைப்பற்றி நான் கூறியதெல்லாம், புகார் செய்யும் நோக்கத்தோடு அல்ல. நான் சந்தோஷமாகவே இருக்கிறேன். என்னுடைய சுபாவமே தனிமையை விரும்புகிறது. நிசப்தமான அமைதியை நான் விரும்புகிறேன். மேலும், படிப்பதற்கு இப்போது எனக்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. வெளியுலகத்தில் இருக்கும்போது படிப்பதை நான் ஒதுக்கி வைக்கும்படியாக இருந்தது.

"ஆனல், எல்லாக் கைதிகளும் என்னைப்போல நினைக்கவில்லை. தனியே சிறை வைக்கப்பட்டிருப்பதை சந்தோஷமாக அனுபவிக்க முடியவில்லை. அது எப்படி மனிதத் தன்மையற்றதோ, அதேபோல அனுவசியமானதுமாகும். கைதிகளைத் தக்க முறையில் பிரித்து வைப்பதன் மூலம் அதைத் தவிர்த்து விடலாம். ஆனல், இப்போது எதேச்சாதிகாரத்துடன் கைதிகளை மொத்தமாகப் போட்டு அடைத்து வைத்திருக்கிருர்கள். எந்த டைரக்டரும், அவர் எவ்வளவுதான் மனித உணர்ச்சி கொண்டவராக இருந்தாலும், சுதந்திரமாகச் செயல் புரிவதற்கு உரிமை இல்லாதிருக்கும்போது, தம் பொறுப்பில் ஒப்படைக்கப் பட்டுள்ள பல திறப்பட்ட ஆடவர், பெண்டிர் அனைவருக்கும் நியாயமாக நடந்துகொள்ள அவரால் முடியாது. அதனல், கைதிகளின் சரீரத் தேவைகள் சம்பந்தமாகமட்டும் தம்மால் ஆனதை யெல்லாம் செய்கிருர்; அவர்களுடைய ஆன்மிகத் தேவைகளைக் கவனிக்காமல் இருக்கிருர்.

"அரசியல் காரியங்களுக்காகச் சிறைச்சாலைகளைப் பயன்படுத்துகிருர்கள் என்று கருதப்படுவதால், அரசியல் கைதி சிறைச்சாலைக்குள்ளேயும் இம்சையின்றிப் பாதுகாப்புடன் இருக்க முடியவில்லை.

"என்னுடைய தினசரி நடவடிக்கைகளைப் பற்றிய வர்ணனையுடன், என் சிறை வாழ்க்கை வர்ணனையை முடித்துவிடுகிறேன். என்னுடைய அறை சுத்தமான, காற்ருேட்டமுள்ள நல்ல அறைதான். எனக்குத் திறந்த வெளியில் படுத்து உறங்க அனுமதி கிடைத்தது, ஒரு பெரிய பாக்கியம்; ஏனென்ருல், நான் திறப்பான இடத்திலேயே உறங்கிப் பழக்கப்பட்டவன். பிரார்த்தனை செய்வதற்காகக் காலை நான்கு மணிக்கு நான் எழுந்திருக்கிறேன். காலைப் பிரார்த்தனை செய்வதையும், எனக்கு மனப்பாடமாக உள்ள சில பிரார்த்தனைக் கீதங்களைப் பாடுவதையும் நான் நிறுத்திவிடவில்லை என்பதை அறிந்து சத்தியாக்கிரக ஆசிரமவாசிகள் மகிழ்ச்சியடைவார்கள் என்று உறுதியாகக் கருதுகிறேன். ஆறுமணிக்கு நான் படிக்க ஆரம்பிக்கிறேன். எனக்கு விளக்குக் கொடுக்கப்படவில்லை. ஆனல், படிப்பதற்குப் போதுமான வெளிச்சம் வந்தவுடன், நான் படிக்கத் தொடங்கி விடுகிறேன். மாலை ஏழு மணிக்கு, படிக்க முடியாதவாறு இருட்டியதும், அன்றைய வேலையை நான் முடிக்கிறேன். ஆசிரமத்தில் வழக்கமாகச் செய்யும் பிரார்த்தனையை முடித்தபின், எட்டு மணிக்கு நான் எனக்கு ஓய்வு கொடுத்துக்கொள்ளுகிறேன். நான் படிக்கும் நூல்களில் குர்ஆனும், துளசிதாசரின் ராமாயணமும், கிறிஸ்தவ சமயத்தைப்பற்றிய புத்தகங்களும் வேறுபலவும் அடங்கியுள்ளன. உருதுமொழிப் பாடங்களும் படிக்கிறேன். இந்த இலக்கிய முயற்சிகளுக்கு நான் ஆறு மணி நேரத்தைச் செலவழிக்கிறேன். நூற்பதற்கும், பட்டை போடுவதற்கும் நான்கு மணிநேரம் ஒதுக்கி

யிருக்கிறேன். என் வசம் பஞ்சு கொஞ்சமாக இருந்தபோது என்னால் முப்பது நிமிஷ நேரம்தான் நூற்க முடிந்தது. ஆனால், இப்போது நிர்வாகத்தினர் எனக்குப் போதுமான பஞ்சு கொடுத்திருக்கின்றனர். இது மிகவும் அழுக்கடைந்த பஞ்சு. பட்டை போடக் கற்கும் ஒருவர் பயிற்சி பெறுவதற்கு இது மிகவும் ஏற்றது. பட்டை போடுவதில் ஒரு மணி நேரமும், நூற்பதில் மூன்று மணி நேரமும் செலவழிக்கிறேன். அனுசூயா பென்னும், மகன்லால் காந்தியும் எனக்கு நூல் கண்டுக் கட்டைகள் அனுப்பியிருந்தார்கள். இப்போதைக்கு அவற்றை மேற்கொண்டும் அனுப்ப வேண்டாம் என்று அவர்களுக்குத் தெரிவிக்கப் போகிறேன். அதற்குப் பதிலாகக் கொஞ்சம் சுத்தமான பஞ்சு அனுப்பினால் மிகவும் உதவியாக இருக்கும். ஆனால், ஒரு சமயத்தில் இரண்டு பவுண்டுகளுக்குமேல் அவர்கள் அனுப்பக் கூடாது. எனக்குத் தேவையான நூல் கண்டுக் கட்டைகளை நானே செய்துகொள்ள வேண்டும் என்பதில் குறியாக இருக்கிறேன். என்னுடைய கருத்தின்படி, நூல் நூற்கும் ஒவ்வொருவரும் பட்டைபோடக் கற்றுக்கொள்ள வேண்டும். அதை நான் ஒரு மணி நேரத்தில் கற்றுக் கொண்டேன். நூற்பதைவிட அது மிகவும் கஷ்டம். ஆனால், கற்றுக்கொள்ளுவது சுலபம்.

"நூற்பது நாளுக்கு நாள் எனக்கு ஆன்மிகத் தேவையாக ஆகி வருகிறது. ஒவ்வொரு நாளும் நான் ஏழைகளிலும் ஏழைகளாக உள்ளவர்களுக்கு அருகில் சென்றுகொண் டிருக்கிறேன்; அதன் மூலம் கடவுளை நோக்கியும் நெருங்கிச் செல்லுகிறேன். இந்த வேலைக்காக ஒதுக்கும் நான்கு மணி நேரம் மற்ற நேரங்களைவிட எனக்கு அதிக முக்கியமானதாக இருக்கிறது. என் உழைப்பின் பலன் என் கண் முன்னால் இருக்கிறது. இந்த நான்கு மணி நேரத்தில் அசுத்தமான எண்ணம் எதுவும் எனக்கு உண்டாவதில்லை. கீதையையோ, குர் ஆனையோ, ராமாயணத்தையோ வாசிக்கும்போது என் சிந்தனைகள் எங்கோ பறந்துவிடுகின்றன. ஆனால், நான் நூற்கும்போதோ, மண்வெட்டியால் கொத்தும்போதோ என் கவனமெல்லாம் ஒரே விஷயத்தில் செல்லுகிறது. ஒவ்வொருவர் விஷயத்திலும் ராட்டை இவ்வளவு முக்கியத்துவம் பெற்று விளங்க முடியாது. ஆனால் எனக்கு ராட்டையும், வறுமைப்பட்ட இந்தியாவின் பொருளாதார விமோசனமும் ஒன்றாக இருக்கின்றன. அதனால் எனக்கு ராட்டையானது, தனக்கே உரியதொரு கவர்ச்சியோடு விளங்குகிறது. ராட்டையும் புத்தகங்களும் என் உள்ளத்தை முன்னும் பின்னும் பற்றி இழுக்கின்றன. நூற்பதிலும் பட்டை போடுவதிலும் நான் இன்னும் அதிகமான நேரத்தைச் செலவழிக்கிறேன் என்று என் அடுத்த கடிதத்தில் உங்களுக்குத் தெரிவிப்பது எனக்கு அசாத்தியமானதாக இராது.

"மௌலானா அப்துல் பாரி தாம் நூற்கத் தொடங்கியிருப்பதாகச் சமீபத்தில் எனக்குத் தெரிவித்தார். அவர் என்னோடு சம வேகத்துடன் முன்னேறுவதில் நான் அக்கறை கொண்டிருக்கிறேன். அவருடைய சீரிய உதாரணம், பலர் இந்த முக்கியமான வேலையை ஒரு கடமையாகக் கொள்ளும்படி செய்யும். நான் முன்பு வாக்களித்த பிரகாரம் ஆரம்பப் பாடப்புத்தகத்தை*

*காந்திஜி எரர்வ்டாச் சிறையில் இருந்தபோது குழந்தைகளுக்காக எழுதிய குஜராத்திப் பாடப்புத்தகத்தில், பின்வருமாறு கூறியிருக்கிறார்: "இந்தப் பாடப் புத்தகத்தை அச்சிடும்போது நல்ல காகிதம், பெரிய எழுத்து, சர்க்காவைப் போன்ற தக்க சித்திரங்கள் ஆகியவற்றை உபயோகிக்க வேண்டும். இதைப் படிக்க ஆரம்பிக்கு முன்

நான் எழுதி யிருக்கிறேன் என்பதை ஆசிரமத்தில் இருப்பவர்களிடம் நீங்கள் கூறலாம். எனக்கு அனுமதி கிடைத்தால் அந்தப் புத்தகத்தை அவர்களுக்கு அனுப்புவேன். உத்தேசிக்கப்பட்ட சமயப் பாடப் புத்தகத்தையும், தென் ஆப்பிரிக்காவில் நாங்கள் நீண்ட நாள் போராடிய வரலாற்றையும் எழுதுவது எனக்குச் சாத்தியமாக இருக்கும் என்றே நம்புகிறேன்.

''ஒரு நாளை, நல்ல முறையில் பல பகுதிகளாகப் பிரித்துக்கொள்ளும் பொருட்டு, நான் மூன்று வேளைக்குப் பதிலாக இரண்டு வேளையே சாப்பிடு கிறேன். இது எனக்கு நன்ருகவே ஒத்துக்கொண்டுவிட்டது. சாப்பாடு விஷ யத்தில் சிறைச்சாலை சூப்பரின்டெண்டென்ட் மிகவும் வசதி செய்து கொடுக் கிருர். கடந்த மூன்று நாட்களாக எனக்கு ஆட்டுப் பாலும், வெண்ணையும் கொடுக்க அனுமதித்திருக்கிருர். சில நாட்களுக்குள் எனக்கு நானே சப் பாத்தி தயாரித்துக் கொள்ள முடியும் என்று நம்புகிறேன்.

''எனக்கு இரண்டு கம்பளிகளும், ஒரு பாயும், இரண்டு விரிப்புத் துணி களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அதற்குப் பிறகு ஒரு தலையணையும் கிடைத் திருக்கிறது. உண்மையில் தலையணை இல்லாமலே நான் சமாளித்துக்கொள்ள முடியும். இதுவரையிலும் என்னுடைய புத்தகங்களையோ, மிச்சத் துணி களையோ நான் தலையணையாக உபயோகித்து வந்தேன். ஆனல், ராஜகோபா லாச்சாரியார் தமது செல்வாக்கையெல்லாம் உபயோகித்து எனக்கு ஒரு தலை யணை கொடுக்கும்படி செய்திருக்கிருர். பூட்டோடு கூடிய ஒரு ஸ்நான அறை யும் இருக்கிறது. அதைத் தினமும் உபயோகிக்க என்னை அனுமதித்திருக் கிருர்கள். வேலை செய்வதற்காக எனக்கு ஒரு தனி அறையும் கொடுத்திருக் கிருர்கள். குறைந்த பட்சம் மற்றக் காரியங்களுக்குத் தேவைப்படாத சமயத் தில் அதை நான் உபயோகித்துக் கொள்ளலாம். சுகாதார ஏற்பாடுகளும் அபிவிருத்தி செய்யப்பட் டிருக்கின்றன.

''ஆகவே, என் நண்பர்கள் என்னைக் குறித்துக் கவலைப்பட வேண்டி யதே இல்லை. ஒரு பறவையைப்போல நான் சந்தோஷமாக இருக்கிறேன். சிறைக்கு வெளியே இருந்தபோது செய்த வேலையைவிட இங்கே குறைவாகச் செய்வதாக எனக்குத் தோன்றவில்லை. நான் இங்கே தங்கியிருப்பது எனக்கு

---

குழந்தை நூற்பதையும், எழுத்துக்களையும், எண்களையும் தெரிந்திருக்கவேண்டும். குழந் தைக்கும் தாய்க்கும் இடையே நடக்கும் சம்பாஷணை ரூபத்தில் இந்தப் புத்தகம் எழுதப் பட்டிருக்கிறது. எதிர்காலத்தில், இந்தியாவில் குழந்தைக்குத் தாய் குருவாக இருப்பாள் என்று நம்புகிறேன்.''

பாடப் புத்தகத்தின் முதல் நான்கு பாடங்களில் கூறப்பட்டிருப்பவை: அதிகாலை யில் நான்கு மணிக்கு எழுதல்; வேப்பங் குச்சியால் பல் துலக்கி வாயைச் சுத்தம் செய் தல்; சுத்தமான உடம்புடனும், ஒரு முகமான சிந்தனையுடனும் பிரார்த்தனைக்குத் தயா ராகுதல்; பிரார்த்தனை செய்தல்.

அடுத்த நான்கு பாடங்கள் : பிரார்த்தனைக்குப் பிறகு தேகாப்பியாசம் செய்ய வேண்டும் ; மூக்கு வழியாக மட்டும் சுவாசிக்க வேண்டும் ; நாள் தவருமல் நான்கு மணி நேரம் நூற்றல் ; நல்ல ராட்டையில் நூற்பதில் உண்டாகும் ஆனந்தம் ; நல்ல குளிப்பு, தூய ஆடைகள், சுத்தமான படுக்கை.

கடைசி நான்கு பாடங்கள் : சுகாதாரத்தில் கெட்ட பழக்கங்களை ஒழித்தல்; வயல் புறங்களில் உள்ள மரங்களைப்பற்றி அறிதல்; அறிவதில் மகிழ்ச்சி கொள்ளுதல்; வீட்டு வேலைகளில் உதவி செய்தல்; சூரியன்; சந்திரன், நட்சத்திரங்கள், இரவு பகல் போன்ற இயற்கையை அறிதல் ; பாராட்டுதல்.

ஒரு நல்ல பாடசாலையில் இருப்பதுபோலவே இருக்கிறது. என் சக ஊழியர்களிடமிருந்து நான் தனியே பிரிக்கப்பட்டிருப்பது, நமது இயக்கம் சுதந்திரமாகப் பரிணமித்து வளரும் இயக்கமா அல்லது ஒரு தனி நபரின் வேலைதானு, அதன் காரணமாக ஏதோ தோன்றி மறையக்கூடிய ஒன்ரு என்பதை நிரூபித்துவிடும். என்னைப் பொறுத்தமட்டிலும் பயம் எதுவும் கிடையாது. ஆனுல், வெளியே என்ன நடந்து வருகிறது என்பதை அறிந்து கொள்ளுவதில் நான் ஆவலாக இல்லை. என் பிரார்த்தனைகள் அந்தரங்க சுத்தியானவையாகவும், உண்மையான பக்தி யுள்ளத்திலிருந்து பிறந்தவையாகவும் இருந்தால், பரபரப்பான எந்த நடவடிக்கையையும்விட அவை அதிகப் பயனுள்ளவை என்பதில் எனக்குச் சந்தேகமே இல்லை.

''நமது நண்பர் தாஸின் உடல்நிலைபற்றி அறிய நான் ஆவலாக இருக்கிறேன். அவர் எப்படி இருக்கிருர் என்பதை எனக்குத் தெரிவிக்காததற்காக அவருடைய மனைவியை நான் கடிந்துகொள்ளுவதற்கும் தக்க காரணம் இருக்கிறது. மோதிலால்ஜியின் ஆஸ்த்மா இப்போது குணம் என்று நம்புகிறேன்.

''என்னுடைய மனைவி என்னை இப்போது வந்து பார்க்காமல் இருப்பது அவளுக்கு நல்லது என்பதை அவளுடைய மனத்தில் பதியும்படி செய்வதற்குத் தயவு செய்து முயற்சி செய்யுங்கள். தேவதாஸ் இங்கே வந்திருந்தபோது அழுது கூப்பாடு போட்டுவிட்டான். அவன் உள்ளே அனுமதிக்கப்பட்டபோது சூப்பரின்டெண்டென்டின் முன்னிலையில் நான் நின்றுகொண் டிருப்பதைக் காண அவனுக்குச் சகிக்கவில்லை. கௌரவமும் உணர்ச்சித் துடிப்பும் உடைய அந்தப் பையன் கண்ணீர்விட்டு அழ ஆரம்பித்துவிட்டான். அவனைச் சமாதானப் படுத்துவது எனக்குப் பெரும் பாடாகிவிட்டது. இப்போது நான் கைதி என்பதை அவன் முன்னமேயே உணர்ந்திருக்க வேண்டும். கைதி என்ற முறையில் சூப்பரின்டெண்டென்டின் முன்னிலையில் உட்காருவதற்கு உரிமை இல்லை. ஆனுல், ராஜகோபாலாச்சாரியாருக்கும், தேவதாஸுக்கும் உட்கார ஆசனங்கள் கொடுத்திருக்க வேண்டும். இவ்வாறு கொடுக்காமல் விட்டதற்குக் காரணம், மரியாதைக் குறைவல்ல. இந்த மாதிரிச் சந்திப்புகளின்போது சூப்பரின்டெண்டென்ட் கூட இருந்து பழக்கப்பட்டவர் அல்ல என்று நினைக்கிறேன். என் விஷயத்தில் இந்த அபாயகரமான காரியத்தைச் செய்து பார்க்க அவர் விரும்பவில்லை. என் மனைவி இங்கே வருவதன் மூலம் இந்த மாதிரியான ஒரு கட்டம் திரும்பவும் ஏற்படுவதையோ, அதைவிட என் விஷயத்தில் விதிவிலக்காக நாற்காலிகளைக் கொடுக்கவேண்டி நேருவதையோ நான் விரும்பவில்லை. நின்று கொண்டிருக்கும்போது கூட என் பெருமையை நான் காப்பாற்றிக்கொள்ள முடியும். ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும், சகல இடங்களிலும், இந்தியர்களாகிய நம்மிடம் நிர்ப்பந்தமில்லாத நட்புணர்ச்சியோடு மரியாதை காட்டும் அளவுக்கு ஆங்கில மக்கள் முன்னேறும் வரையிலும் நாம் சிறிது காலத்துக்குப் பொறுமையைக் கைக்கொள்ள வேண்டும். இது ஒருபுறம் இருக்க, என்னை யாரும் பார்க்க வரவேண்டுமென்று நான் ஆசைப்படவில்லை. இந்த விஷயத்தில் என் நண்பர்களும், உறவினரும் தங்களைத் தாங்களே கட்டுப்படுத்திக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்ள விரும்புகிறேன். காரியார்த்தமாக என்னை எப்போதும் பார்க்க வரலாம். இதற்கு புறச் சந்தர்ப்பங்கள் சாதகமாக இருந்தாலும் சரி; இல்லாவிட்டாலும் சரி; அவற்றைப் பொருட்படுத்த வேண்டியதில்லை.

"பஞ்சமஹால்ஸ், கண்டேஷ், ஆக்ரா ஆகிய இடங்களைச் சேர்ந்த ஏழை முஸ்லிம் மாதருக்குச் சோதானி மியான் சாஹிப் ராட்டைகளை வினியோகித்திருக்கிறார் என்று நம்புகிறேன். ஆக்ராவிலிருந்து எனக்குக் கடிதம் எழுதிய சமயசேவகியின் பெயரைத் துரதிருஷ்ட வசமாக நான் மறந்துவிட்டேன். அநேகமாக ஸ்ரீ கிறிஸ்தோதாஸுக்கு அது ஞாபகம் இருக்கக்கூடும்.

"நான் உருதுப் பாடப் புத்தகத்தை அநேகமாக முடித்துவிட்டேன். நீங்களோ, டாக்டர் அன்ஸாரியோ எனக்காக ஓர் உருது அகராதியையும் வேறு ஏதாவது ஒரு புத்தகத்தையும் தேர்ந்தெடுத்து அனுப்பினால் நான் மிகவும் நன்றி உடையவனாக இருப்பேன்.

"நீங்கள் சௌக்கியமாக இருக்கிறீர்கள் என்று நம்புகிறேன். அளவுக்கு மீறி வேலை செய்யவேண்டாம் என்று உங்களுக்குக் கூறுவது, சாத்தியமற்ற காரியத்தைச் செய்யச் சொல்லுவதுபோல ஆகும். உங்களுடைய எல்லாப் பணியிலும் கடவுள் உங்களுக்கு நலமும் பலமும் தந்து காப்பாற்ற வேண்டும் என்று நான் பிரார்த்தனை செய்யத்தான் முடியும்."

# 8
# சகோதரி நிவேதிதை

1927-ஆம் வருடம் ஜூன் மாதம் 30-ஆம் தேதி வெளியான 'எங் இந்தியா'வில் மகாத்மா காந்தி எழுதிய குறிப்பின் சுருக்கம் பின் வருமாறு:

'சத்திய சோதனை' மூன்றும் பாகம் பத்தொன்பதாம் அத்தியாயத்தில் சகோதரி நிவேதிதையைப்பற்றி வரும் பகுதியின்மீது 'மாடர்ன் ரிவியூ' பின் வரும் குறிப்பு வரைந்திருக்கிறது; "வேறு விவரம் எதுவும் சொல்லாமல் சகோதரி நிவேதிதையைச் 'சுற்றியிருந்த ஆடம்பரங்கள்' என்று குறிப்பிட்டிருப்பது, அவரது வாழ்க்கை முறையைப்பற்றி பிழைபட்ட எண்ணம் உண்டு பண்ணக் கூடியதாகும். உண்மை என்னவென்றால், ஸ்ரீ காந்தி, சகோதரி நிவேதிதையைப் பார்த்தபோது அவர் அமெரிக்க ஸ்தானாதிபதி காரியாலயத்தைச் சேர்ந்த மிஸ்ஸஸ் ஓல்புல், மிஸ் ஜோஸபைன் மக்லீட் என்னும் பெண்மணிகளின் விருந்தினராய் இருந்தார். ஆதலின் ஆடம்பரங்களுக்கு அவர் பொறுப்பாளி யல்லர். போஸ்பாரா சந்தில் பழைய காலத்து வீடு ஒன்றில் அவர் நடத்திய எளிய, தவவொழுக்க வாழ்க்கை அவருடைய நண்பர்களுக்கும் அவரை அறிந்தவர்கள் அனைவருக்கும் நன்கு தெரிந்ததாகும். ஸ்ரீ கோகலே, ஸ்ரீ காந்தியுடன் ஆங்கிலத்தில் பேசினாரா, அவர் Volatile என்னும் பதத்தை உபயோகப்படுத்தினாரா என்று நமக்குத் தெரியாது. ஏனெனில், 'எங் இந்தியா'வில் வருவது குஜராத்தியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்ட தாகும். அப் பதத்துக்கு யார் பொறுப்பாளியானாலும் அவர் சகோதரி நிவேதிதைக்கு அநீதி இழைத்திருக்கிறார். அப் பதத்துக்கு ஆங்கில அகராதியில், 'குதூகல இயல்புள்ள' 'உல்லாசமான' 'உறுதியில்லாத' என்னும் பொருள்கள் காணப்படுகின்றன. சகோதரி நிவேதிதை, குதூகல இயல்புள்ளவர் அல்லர். அவர் உள்ளம் உயரிய விஷயங்களிலேயே ஈடுபட் டிருந்தது. ஹிந்து மதத்தினிடமும், இந்தியாவினிடமும் அவர் வைத்திருந்த உறுதியான பக்தி பிரசித்திபெற்றது. 'ஹிந்து மதத்தினிடம் அவர் கொண்டிருந்த அளவிறந்த அன்பை'ப்பற்றி ஸ்ரீ காந்தி குறிப்பிட்டிருப்பது மிகவும் சரியானதும் நியாயமானது மாகும்."

இந்தத் திருத்தத்தை நான் மகிழ்ச்சியுடன் பிரசுரிக்கிறேன். 'மாடர்ன் ரிவியூ'வில் இந்தக் குறிப்பைப் பார்ப்பதற்கு முன்னல், நான் சகோதரி நிவேதிதையைச் சந்தித்த இடம், அவர் சொந்த இருப்பிடம் அன்று என்பதும், அவர் வேருெருவரின் விருந்தினராக இருந்தார் என்பதும் எனக்குத் தெரியாது. வாசகர்கள் என்னுடைய குறைகளை உணர்ந்துகொள்ள வேண்டும். நான் படித்திருப்பது மிகக் கொஞ்சம். எனக்கு எவ்வளவோ விருப்பம் இருந்த போதிலும், தற்கால இந்தியாவின் முன்னேற்றத்துக்குப் பெரிதும் காரணமாயிருந்த பெரியோர்களின் சரித்திரங்களைக்கூட நான் படித்ததில்லை. ஆனல், இப்படி என் படிப்பு, குறைவாயிருப்பதற்குக் காரணம் சோம்பேறித்தனம் அன்று என எண்ணி ஆறுதல் அடைகிறேன். என் வாழ்க்கை இளமைப் பருவத்திலிருந்து இடைவிடா உழைப்பும் போராட்டமும் நிறைந்த வாழ்க்கையாதலால் படிப்பதற்கு அதிக நேரம் கிடைக்கவில்லை. மொத்தத்தில் இதனல் நான் அடைந்தது லாபமா, நஷ்டமா என்பது எனக்கே இன்னும் நிச்சயப்படவில்லை. வாரந்தோறும் நான் எழுதிவரும் சரிதத்தில் பற்பல ஆண், பெண்களைப்பற்றி நான் சொல்வதெல்லாம் சத்திய ஆராய்ச்சியில் ஈடுபட் டிருக்கையில் அவ்வப்போது என் மனநிலையை விளக்குவதற்காகவே யன்றி வேறில்லை. இதற்கு அவசியமில்லாத எவ்வளவோ வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் பிற மனிதர்களைப்பற்றிய குறிப்புகளையும் அவை சுவையளிக்கக்கூடுமாயினும் விட்டுவிடுகிறேன். ஆதலின், நான் இக்கதையில் பிற மனிதர்களைப்பற்றி எழுதும் மதிப்புரையே அவர்களைப்பற்றி என்னுடைய முடிவான அபிப்பிராயம் என்ருவது, அதுவே உண்மை என்ருவது வாசகர்கள் கொள்ளுதல் அவர்களுக்கும் எனக்கும் அநீதி செய்வதாகும். பிறரைப்பற்றிய குறிப்புகள் அவ்வக் காலத்தில் என் மனத்தில் தோன்றிய எண்ணங்களைச் சொல்வன என்று மட்டுமே கருதப்பட வேண்டும். சகோதரி நிவேதிதை, சுவாமி விவேகானந்தர், மகரிஷி தேவேந்திரநாதர் முதலியோரைப்பற்றி நான் சொல்லப்புகுந்தது சத்தியத்தைத் தேடுவதில் எனக்கிருந்த அடங்கா ஆவலையும், அப்போதுகூடத் தென்னப்பிரிக்காவில் என் அரசியல் வேலையெல்லாம் சத்திய ஆராய்ச்சியில் ஒரு பகுதியே என்பதையும், அரசியல் வேலையை முன்னிட்டு அந்த ஆராய்ச்சியை நான் ஒரு நாளும் கைவிடவில்லை யென்பதையும் விளக்குவதற்காகவே யன்றி வேறல்ல. ஆதலின் 'மாடர்ன் ரிவியூ'க் குறிப்பைப் படித்ததும் அதை மிக மகிழ்ச்சியுடன் இங்கே எடுத்துப் போட்டிருக்கிறேன்.

'Volatile' என்னும் பதத்தைப் பொறுத்தவரையில் ஸ்ரீ மகாதேவ தேசாயே அதை மொழிபெயர்த்தவர் என்ருலும் மொழிபெயர்ப்பு நான் பார்த்தே பிரசுரிக்கப்படுவதால் நான் பொறுப்பைக் கழித்துக்கொள்ள முடியாது. ஆனல், நானவது, அவராவது அகராதியில் காணப்படும் பொருள்களைக் கருதவே இல்லை. கோகலே என்ன பதம் உபயோகித்தார் என்பது எனக்கு ஞாபகமில்லை. குஜராத்தியில் 'தேஜ்' என்னும் பதம் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. சகோதரி நிவேதிதைக்கும் எனக்கும் நடந்த சம்பாஷணை எனக்கு நன்ருக நினைவிருக்கிறது. ஆனல்; அதை நான் விவரிக்கப் போவதில்லை. மூலத்திலோ, மொழிபெயர்ப்பிலோ உள்ள எந்தத் தவறும், ஹிந்து மதத்தினிடமும் இந்தியாவினிடமும் அவ்வளவு அபார அன்பு வைத்திருந்த ஒருவருடைய பெயருக்குக் கேடு விளைவிக்க முடியாது. அவர் என்றென்றைக்கும் நன்றியறிதலுடன் போற்றப்பட்டு வருவார் என்பதில் ஐயமில்லை.

# பொருட் குறிப்பு அகரவரிசை

(எண்-பக்கத்தைக் குறிக்கும்)


ஹிந்துமதாபிமான சங்கம்
ஓம்
காரைக்குடி